

ஏப்ரல் 1964 : : மலர் 4 – இதழ் 1

# ஒருமைப்பாடு

கு. காமராஜ்

நாட்டின் ஐக்கியத்தைப் பாதுகாப்பதிலும் ஒற்றுமையோடு பாடுபடுவதிலுந்தான் நம் முன்னேற்றம் இருக்கிறது. ஒருமைப்பாட்டுடன் ஒன்றிய பலமான அரசாங்கமே நமக்கு நல்வாழ்வையும் பாதுகாப்பையும் அளிக்க வல்லதாகும்.

வரலாற்றைப் புரட்டிப் பாருங்கள். எந்தக் காலத்தில் பலமான மத்திய ஆட்சி நடை பெற்றதோ, அந்தக் காலத்தில்தான் நல்ல முன்னேற்ற வேலைகள் நடைபெற்று மக்கள் அமைதியோடும் நிம்மதியோடும் சுபிட்சத்தோடும் வாழ்ந்து வந்துள்ளனர் என்பதைக் காணலாம்.

பலமான மத்திய ஆட்சி பலவீனப்பட்டு, குட்டி ராஜாக்கள் ஏற்பட்டிருந்த காலங்களில் நாட்டில் சண்டை சச்சரவு ஏற்பட்டு அமைதியின்றி சுபிட்சம் கெட்டு மக்கள் திண்டாடியதைப் பார்க்கிறோம். இப்படிப்பட்ட சமயங்களில்தான் அந்நியர்கள் படையெடுத்து வந்துள்ளனர் என்பதையும் அறிகிறோம்.

இந்தியாவின் மத்திய ஆட்சி பலமற்று குட்டி ராஜாக்கள் அதிகரித்திருந்த காலத்தில்தான் வெள்ளைக்காரர்கள் நம் நாட்டை அடிமைப் படுத்தினர் என்பதையும் நாம் அறிவோம்.

காந்திஜியின் தலைமையில் சாதி மத மொழி பேதங்களை மறந்து நாம் எல்லோரும் ஒற்றுமையாக வெள்ளையனை எதிர்த்

துச் சுதந்திரம் அடைந்தோம். அந்தக் காலத்திலும் வெள்ளைக்காரன் கொடுத்துவிட்டுப் போன சர்வ சுதந்திரத்துடன் பல குட்டி ராஜாக்கள் நம் நாட்டில் இருந்தனர். அவர்களில் பலர் படை திரட்டிப் பக்கத்து ராஜ்யங்கள் மீது படையெடுத்துச் சண்டை போடவும் நாட்டின் அமைதியைக் குலைக்கவும் திட்டமிட்டனர். என்றாலும் காந்திஜியின் தலைமையின் மூலம் நமக்குக் கிடைத்த ஐக்கிய பலத்தாலும், ஒற்றுமை உணர்வாலும் காங்கிரஸ் அமைத்திருந்த பலமான மத்திய அரசாங்கம் எல்லாக் குட்டி அரசாங்கங்களையும் நல்ல முறையில் இந்தியாவுடன் இணைத்து ஒரே தேசமாகப் பலப்படுத்தியது. இதே மாதிரிதான் இந்தியாவிலிருந்த அந்நிய நாட்டுக் காலனிகளும் நம்முடன் சேர்க்கப்பட்டுள்ளன.

பலமான மத்திய ஆட்சி இருப்பதால்தான் பரந்த தேசத்தின் அடிப்படையில் பெரிய திட்டங்களைப் போட்டு அதற்கான மூலதனங்களைத் திரட்டவும், இயந்திர, தொழில் நுணுக்கச் சாதனங்களைச் சேகரிக்கவும் அவசியமான வெளிநாட்டு உதவிகளையும் வசதிகளையும் பெறவும் முடிகிறது.

ஒருமைப்பாட்டின் உயர்வையும் உன்னத லட்சியத்தையும் மறந்து சிலர் திராவிடநாடு என்று பேசுகிறார்கள். அதில் சென்னை ஆந்திரம், கேரளம், மைசூர் ஆகிய ராஜ்யங்கள் கூட்டாகச் சேர்ந்து இருக்கும் என்று விளக்கம் வேறு தருகிறார்கள். இந்தப் பேச்சை, சென்னை ராஜ்யத்தை நீக்கி ஏதோ மிகச் சில இடங்களைத் தவிர மற்ற தென் ராஜ்யங்களில் வேறு எங்கும் கேட்க முடியாது.

'முதலில் பிரித்துக் கொடு. மற்ற ராஜ்யங்கள் தானாகக் கூட்டுச் சேரும்,' என்கிறார்கள்.

தெருவில் போகும் ஒரு பெண்ணைப் பார்த்ததும் ஒருவன் அவளைத்தான் கல்யாணம் செய்துகொள்ளவேண்டும் என்று ஆசைப்படுகிறான். உடனே, 'எனக்கும் அவளுக்கும் கல்யாணம். எல்லோரும் வாருங்கள். வந்து ஆசி கூறுங்கள்,' என்று பேசினால் எப்படி இருக்கும்?

முதலில் அந்தப் பெண்ணின் சம்மதம் வேண்டும். பின் பெற்றோர் உடன்பாடு வேண்டும். பிறகு இருவருக்கும் குடும்ப வாழ்க்கை ஒத்துவரும் என்று தெரிந்தால்தானே கல்யாணம் நிச்சயமாகும். இதெல்லாம் ஒன்றும் செய்யாமல் 'கல்யாணம் எனக்குத் தேவை. அந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன் அவளுக்குச் சம்மதமா என்பதெல்லாம் கேட்காதீர்கள். தேதி வைத்தால் கல்யாணம் நடக்கும்,' என்று பேசலாமா? இது நியாயமா?

'ஏதோ கலியாணப் பைத்தியம் பாவம்,' என்று சிலர் நாலு வார்த்தை அனுதாபமாகக் கூறலாம். வேலையற்றவர்கள் கும்பலாக வேடிக்கை பார்ப்பார்கள். வாயைக் கிண்டிவிட்டு, 'கல்யாணப் பேச்சைக்' கேட்டுக் கைதட்டிக்கூட ரசிப்பார்கள்.

இனத்தையும் மதத்தையும் ஜாதியையும் ஜாதிக்குள்ளே உட்பிரிவுகளையும் அடிப்படையாக வைத்துப் பார்த்துக் கொண்டே போனால் பிரிவினைக் கொள்கைக்கு முடிவே இராது.

இன்று உலகில் பெரிய ராஜ்யங்களாக வாழவேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது. நாம் பெரிய ராஜ்யத்தில் வாழ்வதற்காகப் பெருமைப்படுவதோடு அமையாமல் பெரிய ராஜ்யத்தை பெருமை மிக்க ராஜ்யமாக ஆக்குவதற்கு அல்லும் பகலும் பாடுபடுதல் வேண்டும்.

நாம் எல்லோரும் ஒன்றாக இணைந்து வாழ முற்பட்டால் முன்னேற்றம் உறுதி. உலகில் நமக்கு முக்யத்துவம் ஏற்படுவது முற்றிலும் உண்மையே. ஒருமைப்பாட்டுக்கு ஊறுபாடு ஏற்படுமேல் தொழில் இல்லை; எழில் இல்லை; வளம் இல்லை; வசதி இல்லை—ஏன்—வாழ்வே இல்லை.

ஒன்று மட்டும் உறுதி. இந்திய மக்கள் எல்லோரும் ஒன்று இந்தியா ஒரே தேசம். இதைத்தான் காந்தி அடிகள் வலியுறுத்தி வந்துள்ளார். எனவே நாமும் அவரது வாசகங்களை மறவாமல் நாட்டின் ஒருமைப்பாட்டைப் பேணிப் போற்றிக் காத்து வருவோமாக.

---

கருத்து: மக்களாட்சி தொகுப்பாசிரியர். மு. நமசிவாயம் பழனியப்பா பிரதர்ஸ்—சென்னை-5.

# பிரிட்டிஷ் தேர்தலும் வெளிநாட்டுக் கொள்கையும்

பிரிட்டனில் பொதுத் தேர்தல் எப்போது நிகழும் என்பதை யாரும் அறுதியிட்டுக்கூற இயலவில்லை. எனினும் காமன்ஸ் சபையின் ஐந்தாண்டுக் கட்டளைக் கெடு 1964ம் ஆண்டு அக்டோபரில் பூர்த்தி அடைகிறது. பிரதமர் சர் அலெக் டக்ளஸ் ஹியூமைத் தலைவராகக் கொண்ட கன்சர்வேடிவ் கட்சியும்; ஹெரால்ட் வில்சனைத் தலைவராகக் கொண்ட எதிர்க் கட்சியான தொழிற் கட்சியும்; ஜனவரி மாதத்திலிருந்தே தேர்தல் பிரசாரத்தில் இறங்கிவிட்டன. ஜோ கிரிமாண்டை தலைவராகக் கொண்ட லிபரல் கட்சியும் பிரசாரத்தில் ஈடுபட்டிருக்கிறது.

### கன்வர்வேடிவ் கட்சி நிமிர்ந்தது!

தேர்தலில் வெற்றி பெறுவதற்கான வாய்ப்புகள் கன்சர்வேடிவ், தொழிற் கட்சி இரண்டுக்குமே இருக்கின்றன. சென்ற ஆண்டில் அரசாங்கத் தலைவர்களின் இடையே ஏற்பட்ட அவதூறு அசம்பாவிதங்களாலும் ஐரோப்பிய பொது மார்க்கெட்டில் சேர மாக்மில்லன் அரசாங்கம் முயன்று தோல்வி அடைந்ததாலும், கன்சர்வேடிவ் கட்சிக்கு ஏற்பட்டிருந்த சறுக்கல் இப்போது நிவர்த்தியாகி விட்டது. தற்போது சம்பள விகிதங்கள் நல்ல உயர்வை அடைந்திருப்பதுடன், வேலையில்லாத் திண்டாட்டம் 2 சதவிகிதத்திற்கும் கீழாகக் குறைந்துவிட்டது. நோயுற்றிருந்த மாக்மில்லனுக்குப் பதிலாகக் கடந்த அக்டோபரில் பிரதமர் பதவியை ஏற்ற சர் ஹியூம் தமது நிலையைப் பலப்படுத்திக் கொண்டார். பொது மார்க்கெட்டில் சேராமல் போனமைக்கு கன்சர்வேடிவ் கட்சி காரணமல்ல—பிரான்சின் அதிபர் டிகாலே காரணம் என்று உணரப்பட்டது.

### வெளியுறவுக் கொள்கையில் ஒற்றுமை:

வெளியுறவுக் கொள்கை, பாதுகாப்பு, அணுவாயுதங்கள், ஆகியவற்றைப் பொறுத்தவரை இரு பிரதான கட்சிகளுக்கிடையே வேறுபாடுகள் உள்ளன அவைதான் தேர்தல் பிரசாரத்தில் முக்கிய பிரச்சினைகளாக இருக்கும் என்று இருதரப்பினரும் சுட்டிக் காட்டியிருக்கின்றனர். எனினும், வெளியுறவுக் கொள்கையின் அடிப்படையில் இரு கட்சிகளுக்கிடையே அதிக வேறுபாடுகள் கிடையா. உலகின் நான்கு மூலைகளிலும் சிதறி

யிருக்கும் நாடுகளின் 70 கோடி மக்களைக் கொண்ட காமன்வெல்துக்கு பிரிட்டனே இன்னும் தலைமை வகிப்பதால், ஆளும் கட்சியின் வெளியுறவுக் கொள்கையை எதிர்க் கட்சி ஆதரிக்க இயலும். பிரிட்டனுக்கு வரும் தபால்களில்,—ஒவ்வொரு மூன்றுவது கடிதமும் கனடா, ஆஸ்திரேலியா, நியூஸிலந்து, அல்லது இந்தியாவிலிருந்தே வருகிறது. பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் மறைந்துவிட்டது. காமன்வெல்த் நாடுகள், லண்டனின் உத்தரவுகளை எதிர்பார்ப்பதில்லை. எனினும், புதிய நாடுகள் பிரிட்டனிடம் இனம் தெரியாத உறவுகளால் பிணைக்கப்பட்டு இருக்கின்றன. இந்தியாவின் சுதந்திரம் மிரட்டலுக் குள்ளாகிறதென்ருல், பிரிட்டனில் மாற்றுவிளைவுகள் ஏற்படுகின்றன. அத்தகைய அபாயத்தைக் களையப் பலர் முன்வரத் தயாராய் இருக்கிருர்கள். இந்த காமன்வெல்த் உணர்ச்சி, கட்சி வேறுபாடுகளைக் கடந்து, வெளியுறவுக் கொள்கையில் பொதுவான உடன் பாட்டைக் கண்டிருக்கிறது. அணுவாயுதங்கள் நிச்சயம் தேர்தல் பிரசாரத்தில் முக்கிய இடம் பெறும்.

*அணுவாயுதத் கனவில் கருத்து வேற்றுமை:*

பொதுவான அணுவாயுதக் களைவு ஏற்படும் வரை தனது சுயேச்சையான அணுவாயுதக் கொள்கையை பிரிட்டன் கைவிடக் கூடாது என்று கன்சர்வேடிவ் கட்சி நம்புகிறது. பிரிட்டனின் அணுவாயுதங்களுக்காகத் தற்போது ஆண்டுதோறும் செலவிடப்படும் 20 கோடி பவுன்கள், அணு குண்டு அல்லாத படைப் பெருக்கத்திற்குச் செல்லவேண்டும் எனத்தொழிற் கட்சி விரும்புகிறது. அணு வல்லரசுகளின் "அணு ஆயுத மன்றத்தில்" புதிய உறுப்பினர்கள் சேர்வதைத் தொழிற் கட்சி விரும்பவில்லை. பாதுகாப்பைப் பொறுத்தவரை, இரு கட்சிகளுக் கிடையே இருந்துவரும் கொள்கை வேறுபாட்டில் மற்ெருரு அம்சம், ஐக்கிய நாடுகள் அவை, அமைதிகாக்கும் படையைப் பெறுவது பற்றியதாகும். பொருத்தமான, பயனுள்ள காரியம் என்கிறது தொழிற் கட்சி-ஆனல் அத்தகைய நடவடிக்கை சாத்தியமற்றது, தேவையற்றது, என்கிறது கன்சர்வேடிவ் கட்சி.

—☼—

"சமூகப் பிரச்சினை" என்ன என்பதை ஆராய்வதில் மூளையைக் குழப்பிக் கொள்ளத் தேவையில்லை. ஏழைகளின் பிரச்சினை வறுமை. பணக்காரர்களின் பிரச்சினை சோம்பேறித்தனம்.

—பெர்னுட்ஷா.

# *கொன்ற சிரிப்பு!

சோழ சாம்ராஜ்யத்தின் கடைசி உயிர்ப்பு. அந்தகன் என்ற சோழன் பழைய வீர வம்சத்தின் கனவுகளையெல்லாம் பாழாக்கி - படாடோபத்திற்கும் வீண் மிடுக்கிற்கும் மட்டும் குறைவில்லை—பொம்மை அரசனாக அந்த வீரர்களின் சிங்காசனத்தை அபசாரம் செய்து கொண்டிருக்கிறான்.

தெற்கே பாண்டியர்கள் இவன் நாடுகளைக் கபளீகரித்து விட்டனர். மேற்கே சேரர்கள்... அவர்க்ள் எந்த நிமிஷத்தில் இவன் சிங்காதனத்தையே காலி செய்துவிடுவார்களோ! வடக்கே...அம்மம்ம! எத்தனையோ பெயர் தெரியாத அரசர்கள்! அவர்களில் புதிதாக என்னமோ மிலேச்சராம், துருக்கராம்! இன்னும் எத்தனையோ பேர்! அந்தகன், மனிதன் தனக்கு நித்திய வாழ்வு என்று மனப்பால் குடிப்பதுபோல், கவலையின்றி அரசாண்டு கொண்டிருக்கிறான். அதுவும், சம்பிரதாயமாக அவன் ஆட்சி செய்து கொண்டிருப்பதாகப் பாவனைதான்...

மருதனூர் என்பது ஒரு சிறு கிராமம். இயற்கையின் எழில் கொழிக்கும் ஒருதனி...என்ன சொல்வது? வனப்பை வருணிக்க அந்தக் கிராமத்தின் தவப் புதல்வன், அந்த இயற்கையன்னையின் தாய்ப்பால் பருகிய கானப்பிரியன்தான் பாட வேண்டும். என்றால் கூற முடியுமா? அவன் அங்கு யாருக்குப் பிறந்தான் என்று ஊராருக்குத் தெரியாது.

ஒரு நாள் இரவு குழந்தையொன்று காளிதேவியின் கோயில் வாசலில் தாயை நோக்கி அழுதது. எந்தத் தாயை நோக்கியோ! அந்தத் தேவிதான் அருளினாளோ என்னவோ! அதிலிருந்து காளி தோயில் பூசாரி எடுத்து வளர்த்தான். காளியின் புத்திரன், பூசாரியின் வளர்ப்புப் பிள்ளை...இதுதான் கானப்பிரியனின் இளமைச் சரிதம்.

அந்த மோகனமான பொழுதிலே இயற்கைத் தாயின் காளியின் கோர ஸ்வரூபத்திலே, குதூகலித்துக் குரலெழுப்பும் பறவைகளிடத்திலே, அவன் கல்வி கற்றான். அது கானமாகக் கவிதையாக எழுந்தது. எல்லோரும் கானப்பிரியன் என்றார்கள். அவனும் கானப்பிரியன் என்று தன்னை அழைத்துக் கொண்டான்.

எப்பொழுதும் அந்தத் தடாகத் துறையிலே என்ன அதிசயமோ! கானப்பிரியனை அங்கு காணுமல் இருக்க முடியாது. இல்லாவிட்டால் குரலெழுப்பும் குயில் கிளைகளின் அடியில் அவன் நின்று கவனித்துக் கொண்டிருப்பதைக் காணலாம். அப்பொழுது அவன் கண்கள் —அவை என்ன தெய்வ தரிசனத்தைக் கண்டனவோ! அவற்றில் என்ன கனவு, எவ்வளவு உற்சாகம்! என்ன என்ன என்று என்னுல் சொல்ல முடியுமா? கவிஞனைக் கேட்டுப் பார்க்கவும்.

கானப்பிரியன் சங்கோசப் பிராணி. மனிதர்கள் என்ருல் அவன் உற்சாகம் எல்லாம் எங்கோ பதுங்கி ஒடுங்கிவிடும். அதிலும் பெண்கள்...கேட்கவே வேண்டாம். அவனிடம் பேசுவது என்ருல் எல்லோருக்கும் ஆசை; அவனுக்கு மட்டும் கூச்சம். அவனைப் பார்ப்பதிலே ஒரு தனிப்பெருமை.

ஊர் அம்பலகாரரின் மகள் பெண்களின் இலட்சியமாயும் ஆண்களின் கனவாயும் இருந்தாள். அவள்தான் அவனை எப்படியோ பேசவைத்துவிட்டாள். அவன் உள்ளத்தை அறிந்தவள் அவள் ஒருத்தி தான். அவன் கவிதையின் கனிவைக் கண்டவள் அவளே.

அவனைச் சாயங்காலம் சந்தித்தால் கானப்பிரியனுக்குப் புதிய பாட்டுக்கள் தேவி அருள் புரிவாள். நாவில் ஸரஸ்வதி நர்த்தனம் செய்வாள். இவர்கள் கூட்டுக்களியிலே, தனிப்பட்ட கனவிலே, தேவியின் பாதுகாப்பிலே, உலகத்தின் இலட்சியம் மறைந்து வாழும்.

அவள் பெயர் காவேரி. அன்று காவிரியின் கன்னி எழில் கம்பனை வளர்த்தது. அது பழைய கதை. இப்போது காவேரி, இந்தக் காவேரி...

அன்று காவேரி ஜலம் எடுத்துவரச் சற்றுத்தாமதம். கானப்பிரியனுக்கு குயில் சொன்ன கதையையும், மலர் பாடிய பாட்டையும் அவளுக்குச் சொல்ல ஆவல். 'அந்தச் சூரியாஸ்தமனத்தை அவளிடம் காண்பிக்க...

அதோ அவள் வருகிருள், ஆசைக் காவேரி!

"கானு? வா. வா!" என்று குடத்தை ஜலத்தில் நழுவவிட்டு அவன்மீது சாய்கிருள்.

"இன்று ஏன் இவ்வளவு நேரம், போ! அந்தக் குயில்..."

"கானு, இன்று உனக்கு ஒரு சமாசாரம். நீ ஏன் உன் கவியைக்கொண்டு மன்னனிடம் பரிசு பெறக் கூடாது? இன்று யாரோ ஒரு கவியாம், போகிருனும்! அதைக் கேட்டுக் கொண்டிருந்தேன். நீ பாடுவதில் நூற்றில் ஒன்றுகூட இல்லை. வெறும் வார்த்தைக் குப்பை. நீயேன்..?"

"நானு! அரசனிடமா! நானு!"

"ஏன், கானு? நாம் இருவரும்..." என்று தழுவிக் குழைந்து அவன் கண்களில்

உற்று நோக்கினான். இருவரும் ஐக்கியப்பட்ட வாழ்க்கையின் கனவு அவன் கண்களில் தவழ்ந்தது.

"காவேரி! உனக்காக நான் போகிறேன்..."

"என்ன, கானு, எனக்காக வா?"

"இல்லை கண்ணே, நமக்காக..." சற்று மௌனம்.

இருவரும் தழுவி நிற்கின்றனர்.

அந்த மௌனத்தில் அவர்கள் அறிந்தது எவ்வளவோ!

## 2

சோழ சமஸ்தானம்.

அந்தகன் கொலுவில் உல்லாசமாக இருக்கிறான். பக்கத்தில் அவனது பிரியை—அதாவது, மரியாதையாக வைப்பு—வாஸந்திகை என்ற ஆந்திரப் பெண் - மற்றப் பக்கத்தில் அடைப்பைத் தொழில் புரியும் பணிப் பெண்கள். இடையில் மெல்லிய கலிங்கம் மேலே முத்து வடக்கச்சு.

சற்றுக் கீழே இவனுக்கு ஏற்ற மந்திரி, பிரதானிகள். அவன் நாட்டிலே மாதம் மூன்று மழை பெய்து வருகிறதா, திருடர் கொஞ்சமாகக் கொள்ளையடிக்கிறார்களா, அந்நியர் வசமாகாமல் இன்னும் எத்தனை பிரதேசங்கள் வரி வசூலிக்க இருக்கின்றன, என்பதைப் படாடோபத்துடனும் கூழைக் கும்பிடுடனும் சமூகத்தில் தெரிவித்துக் கொள்ளும் மந்திரிகள்!

சேவகன் ஒருவன் ஓர் ஓலையைக் கொண்டுவந்து அடி பணிந்து நிற்கிறான். அரசன் அதைத் தொட்டுக் கொடுக்க, சுற்றுச்சொல்லி பிரித்து, 'ராஜாதி ராஜ ராஜ கெம்பீர அந்தகச் சோழ மண்டலாதிபதி சமஸ்தானத்திற்குக் கானப்பிரியன் எழுதிக் கொண்டது. எனது கவியைச் சமூகத்தில் அரங்கேற்ற ஆசை-கானப்பிரியன்" என்று படித்தான்.

"என்ன வாஸந்திகா?"

"வரட்டுமே!"

"இந்த நடிகைகள் கொஞ்சம் நன்றாகப் பாடி ஆடுகிறார்களே"

"அவன்தான் வரட்டுமே.

"சரி, சேவகா! வரச்சொல்!"

கானப்பிரியன் உள்ளே வருகிறான். இயற்கையின் நிமிர்ந்த நடை, நேர்நோக்கு—கண்களிலே ஏதோ தோன்றி மறைந்த ஒரு கனவு. சபையைப் பார்க்கிறான். செயற்கையின் திறன், பெருமிதம், இறுமாப்பு - எல்லாம் சற்று மலைப்பை உண்டு பண்ணுகின்றன.

கவிஞன் அரசனைப் பார்க்கிறான். அந்தகன் கானப் பிரியனைப் பார்க்கிறான். வாஸந்திகை இருவரையும் நோக்குகிறாள். இருவரையும் வெல்ல ஒரு வலை வீச்சு. உலகத்தின் சக்தி அவள் காலின் கீழ். ஏன் உலகத்தின் இலட்சியம் அத்துடன் இருக்கக்கூடாது?

கானப்பிரியன் அவளைக் கவனிக்கவில்லை.

அரசனை நோக்கிப் பாடுகிறான்.

ஒரு காதற் பாட்டு.

அந்தக் காலத்திலே பாட்டுடைத் தலைவன் பரிசில் கொடுக்க வேண்டிய அரசனாக இருக்க வேண்டியது மரபு.

அதெல்லாம் நினைக்கவில்லை. ஏன்? தெரியாது.

அவனது காவேரியின் காதல் அவள் கன்னி எழில், வாழ்க்கைக் கனவு—எல்லாம் கவிதையாக வடிவெடுத்துப் பொங்குகிறது. கம்பீரமான, மோகனமான குரலிலே பாடுகிறான்.

அங்கிருக்கும் சிங்காதனம் கூட உருகிச் சிரக்கம்பம் செய்யும் போலிருக்கிறது. ஏன்? கம்பன் குரலைக் கேட்டது தானே?

அங்கு இரண்டு உள்ளங்களை அது தொடவில்லை. ஒன்று வெற்றியை நினைத்து வலை வீசிய கண்களையுடையது! இன்னொன்று, அவளைக் குறித்துப் பாடுவதாக, அவள்மீது அநாவசியமாகக் காதல் கொண்டு விட்டதாக நினைத்த நெஞ்சம்!

பாட்டு முடிந்தது!

எங்கும் நிசப்தம்.

திடீரென்று, ஆஸ்தான மண்டபமே எதிரொலிக்கும்படி எக்காளச் சிரிப்பு!

ஏளனத்திலே பொருளற்ற கேலிக் கூத்திலே, கீழ்த்தரக் காமச் சுவையிலே தோன்றி அலைமேல் அலையாயெழுந்த அந்தகனின் எக்காளச் சிரிப்பு!

"சபாஷ்! வென்று விட்டாயடி வாஸந்திகா!" என்று அவளுக்குக் கீச்சங் காட்டிக் கொண்டு, அவசரத்தில் எச்சிலை ஸ்படிகத்திற்குப் பதில் யார் முகத்திலோ உமிழ்ந்துவிட்டான். இருந்தாலும் உற்சாகம் ஓயக் காணோம். "என்ன, இருந்தால் உன் அழகு இப்படியல்லவா சபையில் இருக்க வேண்டும்! நூற்றில் ஒருபெண்! நீதான் என் அரசி!" என்று இன்னும் இடியிடி என்று ஒரு சிரிப்பு!

இது ஓயுமுன் கானப்பிரியன் அங்கு இல்லை.

## 3

கானப்பிரியனுக்கு உடலெல்லாம் குன்றி உயிர், உற்சாகம், கவிதை, யாவும் குவிந்தன.

நெஞ்சில்—இந்திர தனுசால் அடிபட்ட மாதிரி!

பொருளற்ற, அர்த்தமற்ற மிடுக்கு, படாடோபம். அரசியலாம், பரிசிலாம்...சீச்சீ!...

அன்று இருட்டிய பின்...

காளி கோயிலின்முன் கானப்பிரியன் தலைவிரி கோலமாகக் கிடக்கிறான். வெளியே இருந்த இருள் அவன் உள்ளத்தைக் கவ்வியது.

இருளில் ஓர் உருவம்.

"காவேரி!"

"கானப்பிரியா?"

பதில் இல்லை.

ஓடிவந்து தரைமீது கிடந்த தனது......எடுத்து மடிமீது கிடத்துகிருள், மார்புடன் அணைக்கிருள்.

“கானு! பிரியா!”

“உன் அன்பிலே, தேவி அருளிலே...” அவ்வளவுதான்! கானப்பிரியனின் உயிர் தேவியின் திருவருளை நாடிச் சென்று விட்டது.

“அடி காவேரி! உனக்கு வேண்டும் கம்பனையே பாடு படுத்திய சோழ பரம்பரையல்லவா! உனக்கு வேணும்! ஏன் உன் பிரியனை யனுப்பினுய்?

“அடி காவேரி...!”

— ❋ —

## சாவா மருந்து

முதலாளி தன் தொழிலாளிக்குக் கடன் கொடுத்தான். கடனைக் கடனுளியின் குண நலத்திற்கு ஏற்ப; சில காலத்திற்கு விட்டு வைத்திருந்தான். கடனுளிகள் ஒன்று கூடிச் சங்கம் அமைத்தனர். தீர்மானங்கள் ஏராளமாக நிறைவேற்றினர். வாங்கிய கடனைத் திருப்பிக் கொடாமல் இருக்க வழி இருக்கிறதா என்று தீவிரமாகச் சிந்தித்தனர். அரிய சாதனைகள் அத்தனையும் செய்து முடித்த அவர்களால் கடனை மட்டும் கொடுக்காமல் இருக்க வழி கண்டு பிடிக்க முடியவே இல்லை!

முதலாளி, கடனை விட்டுவைப்பதில் கருணை காட்டிலுைம் காட்டுவானே தவிர வசூல் செய்வதில் கண்டிப்பாகவே நடந்துகொள்ளுவான்.

முதலாளியின் தொழில் நாளுக்கு நாள் மும்முரமாகவே நடந்துகொண்டுதான் இருக்கிறது. என்ருே ஒரு நாள் முதலாளி, தன் தொழிலை அறவே மூடிவிடுவார் என்று சொல்லுகிருர்களே தவிர அதை உறுதியாக நம்புதற் கில்லை.

ஆனந்தமோ, அழுகையோ, விருப்போ வெறுப்போ இல்லாமல் முதலாளி காரியத்தில் கண்ணுய் இருக்கிருர். கடனுளிகளில் சிலர் கண்டபடியெல்லாம் பேசியும் ஏசியும் கலாட்டா செய்து வருகிருர்கள். சிலர் பணிந்து பக்குவமாகவும் நடந்து வருகிருர்கள்!

# சிறுவர் பகுதி

**ஆசிரியர்: நாக முத்தையா**

## கையெழுத்து

அழகு மிக்க பொருளென்றால்
அகத்தில் இன்பம் பிறந்திடுமாம்
எளிமை மிக்க வாழ்வென்றால்
என்றும் துன்பம் மறைந்திடுமாம்.

எழுதும் எழுத்தில் அழகுண்டேல்
எடுத்துப் படிப்போர் பலராவர்
எழுத்தின் அழகே நடத்தைக்கும்
ஏற்ற எடுத்துக் காட்டாகும்.

எளிமை செறிந்த வார்த்தைகளால்
இயலும் செயல்கள் பலவாகும்
அழகு சொட்டும் எழுத்தாலே
ஆகாச் செயல்கள் இலவாகும்!

  

## வேடிக்கைக் கணக்கு

*1942*-ம் ஆண்டு நமது விடுதலைப் போரின் இறுதிநிலை அல்லவா? அன்று, மகாத்மா காந்தியின் தலைமையில் நாட்டு மக்கள் அனைவரும் ஒன்று திரண்டு நின்றோம். "செயல் புரிவோம். அல்லது செத்து மடிவோம்." என வீரமுழக்கம் செய்து கொண்டு, போராட்டத்தில் குதித்தோம்.

அன்னிய அரசாங்கம் நமது தலைவர்களைக் கைது செய்தது; தொண்டர்களைக் கொடுமைக்கு உள்ளாக்கியது. அப்படியிருந்தும் நமது விடுதலை வேட்கையை அவர்களால் அடக்க முடியவில்லை.

அரசாங்கம் மேற்கொண்ட வன்முறையைக் கண்டிக்க ஒரு நாள் நாடெங்கும் ஊர்வலம் நடத்த ஏற்பாடாகி இருந்தது. மாநகரங்கள் முதல் சிற்றூர்கள் வரை அதற்கு ஆயத்தம் செய்யத் தொடங்கின.

அரசாங்கம் தடை உத்தரவு விதித்தது.

பருத்தியூர் சிறிய கிராமம். அது ஒரு ஆற்றின் கரையில் இருந்தது. எதிர்க் கரையில் தென்னைப்பட்டி என்ற ஊர் இருந்தது. அந்த வட்டாரத்தில் அதுவே பெரியது. ஆகவே, சுற்றுப்புறக் கிராமமக்கள் அனைவரும் தென்னைப்பட்டியில் கூடி ஊர்வலம் நடத்துவதென முடிவு செய்தனர். அரசாங்க அதிகாரிகளுக்குத் தெரியாமல் ஒவ்வொருவராக முதல் நாள் இரவே அங்கு சேர ஆரம்பித்தனர். ஆனால் பருத்தியூர் வாலிபர்களுக்கு ஒரு இடைஞ்சல் ஏற்பட்டது. ஆற்றின் குறுக்கே இருந்த பாலத்தில் போலீஸ் படைக் காவல் இருந்ததால் அவர்கள் அந்த வழியாகப் போக முடியவில்லை. நீந்திக் கடக்கவும் தயங்குகிறார்கள்.

பாலத்துக்கு அப்பால் ஒரு மாந்தோப்பு இருந்தது. அங்கே ஒரு படகுக்காரர் வசித்து வந்தார். அவர் ஒத்தாசை செய்தால், பருத்தியூர் வாலிபர்கள் எளிதாக அக்கரைக்குப் போய் விடலாம்.

அந்த எண்ணம் தோன்றியதும், அவர்களுடைய கவலை பறந்தது.

ஏறக் குறைய நடுநிசி வேளையில் அவர்கள் மாந்தோப்புக்குப் போனார்கள். கரையோரம் படகு இருந்தது. ஆனால் அதன் சொந்தக்காரர் வீட்டில் இல்லை. மாலையிலேயே அவர் தென்னைப்பட்டிக்குப் போய்விட்டார். கண்டன ஊர்வலத்தில் கலந்து கொள்ள அவரும் துடித்தார்.

வாலிபர்களைக் கண்டதும் படகுக்காரனின் இரு குழந்தைகள் விஷயத்தை ஊகித்துக் கொண்டனர். அவர்களை அக்கரை கொண்டு விடுவதாக உறுதி கூறினர். பாயைச் சுருட்டி வைத்துவிட்டு, அம்மாவிடமும் அனுமதி வாங்கிக் கொண்டு, படகு இருந்த இடத்தை அடைந்தனர்.

அப்போதுதான் அவர்களுக்கு ஒரு உண்மை புலப்பட்டது. அங்கே இருந்த படகு மிகவும் சிறியது. இரண்டு சிறுவர்கள் போகலாம்; அல்லது ஒரு பெரியவர் போகலாம். அதற்குமேல் ஏறினால் அது தாங்காது. வெள்ளத்தில் அமிழ்ந்து போகக் கூடும்.

பருத்தியூர் வாலிபர்கள் மொத்தம் பன்னிரண்டு பேர்கள் என்ன செய்வார்கள்? விடிவதற்குள் எப்படி அக்கரை போவார்கள்?

படகுக்காரரின் மக்கள், வயதில் சிறியவர்களே ஆனாலும் அனுபவ அறிவுமிக்கவர்கள். அனைவரும் அபாயம் இல்லாமல் ஆற்றைக் கடக்க அவர்கள் ஒரு திட்டம் வகுத்தார்கள்.

உடனே படகைக் கட்டவிழ்த்து மிதக்கவிட்டனர். அது அக்கரைக்கும் இக்கரைக்கும் பலமுறை சென்று திரும்பியது.

கடைசியில் பன்னிரண்டு வாலிபர்களும் அக்கரையில்

ஒன்று கூடித் தென்னைப் பட்டியை நோக்கி நடந்தனர்.

படகுக்காரன் மக்கள் இருவரும், முன்போல், இக்கரையில் படகைக் கட்டிவிட்டு உறங்கப் போயினர்.

விடுதலைப் போராட்டத்தில் பங்கு கிடைத்ததை எண்ணி அவர்கள் இன்றும் பெருமை கொள்கின்றனர். அன்றிரவு ஆற்றின் அக்கரைக்கும் இக்கரைக்குமாக அந்தச் சிறு படகு எத்தனை முறை போய் வந்ததென்பதைக்குறித்தும் சரியாகக் கணக்குச் சொல்லுகின்றனர்.

அந்தக் கணக்கை நீங்களும் போட்டுப் பார்க்கிறீர்களா?

  

## கருணை உள்ளம்

மரங்கள் அடர்ந்த ஒரு இடம். அதன் வழியாக, ஒருவர் போய்க் கொண்டிருக்கிறார்.

கீச்சுக் கீச்சென்று ஒலி கேட்கிறது. இரண்டு பறவைக் குஞ்சுகள் நிலத்தில் கிடக்கின்றன. பாவம், அச்சத்தால்அவை நடுங்குகின்றன.

வழிப்போக்கர் நிற்கிறார். குஞ்சுகளைக் கையில் எடுத்துக் கொள்கிறார். விரல்களுக்கிடையில் அவற்றை அன்புடன் அணைக்கிறார்.

அவை, கூட்டிலிருந்து தவறி விழுந்தவை, தாய்ப்பறவை இல்லாத நேரத்தில் அந்த விபத்து நேரிடுகிறது.

குஞ்சுகள் தவிக்கின்றன. அவை தாமாகப் பறந்து செல்லும் வலிமையற்றவை. இன்னும் அவற்றின் சிறகுகள் சரியாக வளர்ச்சி பெறவில்லை.

நடுங்கும் குஞ்சுகளைக் கையில் எடுத்துக்கொண்டே வழிப்போக்கர், ஒவ்வொரு மரமாகப் பார்க்கிறார். ஒவ்வொரு கூடாக ஆராய்கிறார்.

இறுதியில் சரியான கூடு தென்படுகிறது. குஞ்சுகள் இருந்த கூட்டைக் கண்டுபிடித்ததும், அவர் மரம் ஏறுகிறார். ஒரு கிளையிலிருந்து மற்றொரு கிளைக்கு மெதுவாக அடியெடுத்து வைக்கிறார். குஞ்சுகளைக் கூட்டில் விட்ட பின்னரே, அவர் மனம் அமைதி பெறுகிறது. மரத்தைவிட்டு இறங்கித் தம் வழியே போகிறார்.

அவர் கருணை உள்ளம் படைத்த மகான். அற்பமான பறவைக் குஞ்சுகளின் துன்பத்தைக் கூடக் காணச் சகிக்காதவர்.

மற்றும் ஒரு நிகழ்ச்சி.

அழுக்குப் படிந்த பன்றி ஒன்று சாக்கடையில் விழுந்துவிடுகிறது. அதற்கு விருப்பமான இடம்தான். ஆனால் சாக்

கடை வெகு ஆழமானது. பன்றி மேலே வர முடியாமல் தவிக்கிறது.

அதன் உறுமலைக்கேட்டு, சிறுவர்கள் கைதட்டிச் சிரிக்கிறார்கள். கல்லெடுத்துப் போடவும் துணிகிறார்கள். வயது முதிர்ந்தவர்களும் அந்த வேடிக்கையில் கலந்து கொள்கிறார்கள்.

பன்றி குறுக்கும் நெடுக்குமாக ஓடுகிறது. தெருவில் எழுந்த ஆரவாரம் அதன் குலையைத் தொளைக்கிறது.

அப்போது அந்த வழிப்போக்கர் அங்கே நடந்து வருகிறார். கூச்சலைக் கேட்டு நிற்கிறார். சாக்கடையில் குனிந்து பார்க்கிறார்.

மறுவிநாடி அவர் அதில் இறங்குகிறார். அவர் அணிந்திருந்த அழகான ஆடை சேறு படிகின்றது. பார்த்தவர்கள் அவரைப் பைத்தியக்காரர் என்று கருதுகிறார்கள். ஏளனம் செய்கிறார்கள்.

வழிப்போக்கர், அவர்களுடைய குறும்பைப் பொருட்படுத்தவே இல்லை. பன்றியை அணைத்து எடுத்து, மேலே விடுகிறார். அது உடம்பைக் குலுக்கிக் கொண்டு ஓடி மறைகிறது.

வழிப்போக்கர் கருணை உள்ளம் படைத்தவர். கேவலம், பன்றியின் துயரத்தைக்கூடப் பார்க்கப் பொறுக்காதவர்.

அவருடைய இளமைப் பருவத்தில் நடந்த ஒரு சம்பவமும் அதற்குச் சான்று கூறுகிறது.

ஒருநாள், சில சிறுவர்கள் ஒரு ஆமையைப் பிடித்துக் கொள்ளுகிறார்கள். அதை ஓட விட்டு வேடிக்கை பார்க்கிறார்கள். பிறகு அதன் முதுகில் நெருப்புத் துண்டுகளைக் கொண்டு வந்து வைக்கிறார்கள். ஆமை துடிக்கிறது. சூடு பொறுக்காமல் நெளிகிறது.

அந்த வேளை, ஒரு இளைஞன் அங்கே ஓடிவருகிறான். சிறுவர்களை அதட்டி விலக்குகிறான். ஒரு குச்சி எடுத்து, ஆமையின் முதுகிலிருந்து நெருப்புத் துண்டங்களைக் கீழே தள்ளுகிறான். அது தப்பிப் பிழைக்கிறது.

ஒரு பெரிய பையன் மட்டும், அந்த இளைஞனை முறைத்துப் பார்க்கிறான்.

ஆனால் இளைஞன் அஞ்சவே இல்லை. "நீ ஒரு கோழை" என்று பையனை இகழ்கிறான். "ஆமை வாயில்லாத பிராணி. எதிர்க்கும் ஆற்றல் இல்லாத ஜந்து. அதற்கு ஊறு செய்பவன் ஒரு கோழைதானே!" என்றான்.

இளைஞன், கருணை உள்ளம் படைத்தவன். வீரமும் கொண்டவன். திக்கற்ற ஆமைக்கு, உறுதுணையாக வந்து சேர்ந்தவன்.

அவன் சுமார் நூற்று ஐம்பது ஆண்டுகளுக்கு முன், அமெரிக்காவில் பிறந்து வளர்ந்தவன். உழுதுண்டு வாழ்ந்த ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவன். உழைப்பிலே ஆர்வம் மிக்கவன். உண்மையைப் பேச நினைத்தவன்.

அவன் பெயர் ஆபிரகாம் லிங்கன்.

ஆம். பிற்காலத்தில் அமெரிக்கக் குடியரசுத் தலைவராகவும் விளங்குகிறார் லிங்கன். அவர் பதவிக்கு வந்ததும் ஒரு அரிய காரியம் செய்ய முற்படுகிறார்.

அமெரிக்காவில் நீக்ரோ என்ற ஒரு இனம் உண்டு. முற்காலத்தில் அவர்கள் அடிமைகளாக வாழ்கிறார்கள். வெள்ளையர்கள் அவர்களை ஆடுமாடுகள் போல், வாங்கி, விற்கிறார்கள். அடிபட்டு, உதைபட்டு மனித உரிமைகள் அனைத்தையும் இழந்து நின்ற நீக்ரோக்களுக்கு விடுதலை கொடுக்கிறார் ஆபிரகாம்லிங்கன். அவர் அடிமை முறையை அறவே ஒழிக்கிறார்.

அவர் கருணை உள்ளம் படைத்த மகான். பறவைக் குஞ்சுக்கும் பன்றிக்கும் ஆமைக்கும் பரிவு காட்டி, வாழ்வு கொடுத்தவர். தம்மை ஒத்த மனிதருடைய துன்பத்தைக் கண்டு மனம் இரங்காமல் இருப்பாரா?

  

விடை

முதலில் சிறுவர்கள் இருவரும் படகில் ஏறி அக்கரை செல்கிறார்கள். ஒருவன் அங்கே நின்று கொள்கிறான். மற்றவன் திரும்பிவந்துஇக்கரையில் இறங்கிக் கொள்கிறான். படகு காலியாகிறது. வாலிபர்களில் ஒருவன், அதில் ஏறி ஆற்றைக் கடக்கிறான். அக் கரையில் இருந்த சிறுவன் மீண்டும் படகை இக்கரைக்குக் கொண்டு கிறான்.

இவ்வாறு ஒரு வாலிபன் ஆற்றைக் கடக்க, அந்தப் படகு நான்கு முறை பயணம் செல்லுகிறது.

12 பேர் கடக்க: $12 \times 4 =$ 48 முறை.

---

சிறுவர் பகுதிக்குக் கதை, கவிதை கட்டுரைகள் வரவேற்கப்படுகின்றன. பெரியோர்களும் சிறியோர்களும் தங்களின் சிறந்த படைப்புக்களைத் தெளிவாக, சுத்தமாக, தாளில் ஒரே பக்கத்தில் அழகாக எழுதி அனுப்ப வேண்டுகின்றோம்.

ஆசிரியர்,

அமைச்சன்

66 பெரியதெரு, சென்னை-5.

---

# தமிழ் மணக்கும் மூச்சு

மலர்ந்தபூ மென்மை காட்டும் மணித்தமிழ் நடையில் ஓர்பால்;
உலர்ந்தவாழ் வுற்ற பெண்ணின் உளத்துடிப் பொருபால் காட்டும்;
நலந்தரும் காதல் இன்பம் நாட்டிடும் ஒருபால்; வீரர்
பலந்தனைக் காட்டும் ஓர்பால் பாரதி தாசன் பாட்டே!

இளந்தமிழ் உள்ள மெல்லாம் எழுச்சிபெற் றார்வம் பொங்கிக்
கிளர்ந்தெழக் கவிதை செய்த கிழவனின் தோற்றம் கண்டால்
வளர்ந்ததோர் சிங்கம் போலும் வந்ததோர் பாண்டி நாட்டுப்
பழந்தமிழ் மன்னன் போலும் பாரதி தாசன் போலும்!

விரித்துநல் மணம்ப ரப்பும் மென்மலர்க் கூட்டந் தன்னில்,
சிரித்திடும் இயற்கைத் தாயைச் செந்தமிழ் வடிவ மாக்கி
வரிப்படும் பாட்டுத் தேரில் வைத்தனன்; அழகுக் காட்சி
பரப்பினன் வைய மெங்கும் பாரதி தாசன் தானே!

மடமையாம் இருள்கி ழிக்கும் மதியென வந்தான்; நாட்டின்
உடமையாம் மொழியைக் காக்க ஒருபெருந் தமிழி யக்கம்
கடமையாய்த் தோற்று வித்தான் காளையர் உள்ள மெல்லாம்
படிவமாய்ச் சமைந்து விட்டான் பாரதி தாசன் தானே!

மூச்செலாம் தமிழாய்க் கொண்டு முழக்கிய சிங்கம்; வாளின்
வீச்செனப் புரட்சி வாதம் விசையுறச் செய்து, மூடக்
கூச்சலை அடக்கி வைத்த குமுறிடி முரசம்; ஆர்வம்
பாய்ச்சியே தமிழ்வ ளர்த்த பாரதி தாச வேந்தன்!

நெஞ்சிலே தமிழ்உ ணர்ச்சி நினைப்பிலே தமிழ்வ ளர்ச்சி
அஞ்சிடா வீர மெல்லாம் அடங்கிய பாவின் வேந்தன்
துஞ்சினான் என்று சொன்ன சொல்லினை நம்பப் போமோ!
கொஞ்சமும் பொருத்த மில்லை கூற்றுவன் செய்கை யந்தோ!

எழுதிய பாட்டி லெல்லாம் இயற்கையின் அழகைப் போற்றிப்
பழுதிலாக் கவிப டைத்த பாரதி தாசன் நெஞ்சம்
முழுவதும் தமிழ்ம ணக்கும் மூச்சினை நிறுத்திப் பொல்லாப்
பழிதனைத் தேடிக் கொண்டான் பாதகன் கூற்று வன்னே!

பால்ஒளி நிலவின் தோற்றம் பாடுவார் இனிமேல் ஆரே?
வேல்விழி மாதர் காதல் விளம்புவார் அவன்போல் ஆரே?
மேலவர் கீழோர் என்னும் வேற்றுமை ஒழித்து வீரப்
பாவினை ஊட்டு வார்ஆர் பாரதி தாசன் போலே?

—நாரா நாச்சியப்பன்

மனித ஆசைகள் எல்லாவற்றையும் தூண்டி விடுகிறது சந்திரன்.

காதலர்கள் சந்திரனின் தண்ணொளி பட்டதும் களிப்படைகிருர்கள்.

சந்திரனின் பரப்பில் வைரங்களும், இரத்தினங்களும், பல அரிய கனிப் பொருள்களும் கிடைக்குமென்று அமெரிக்க விஞ்ஞானிகள் கருதுகிருர்கள்.

அங்கு பெட்ரோல் எண்ணெய் வகைகள் கிடைக்குமென்று ரஷிய விஞ்ஞானிகள் ஊகிக்கிருர்கள்.

ஆலமரப் பேரவையில் மேற்கூறிய செய்திகளெல்லாம் இந்த மாதம் விவாதிக்கப்பெற்றன.

# சந்திரனுக்கு செல்வோமா?

"சதுரம்"

ஐயா: யாரோ ஒரு ரஷிய வானவெளி வீரர் இந்தியாவுக்கு வந்து போனுராமே...உம்... அவர் பெயர் என்னவோ சட்டென்று ஞாபகத்துக்கு வரவில்லை...உம்...அவர் சந்திரனுக்குப் போகக்கூட ஆசைப் படுகிருராம்!

ரூபநாராயணன்: ஓ! நீங்கள் யூரிகாகரினைப் பற்றிக் கூறுகிறீர்கள் போலிருக்கிறது. அவர் மட்டும் என்ன!...நமக்கெல்லாம் கூடத்தான், சந்திரனுக்குச் செல்வதில் ஆர்வ மிருக்கிறது.

மனேகர்: காதலர்களின் மன வெழுச்சிகளைத் தூண்டக் கூடியது சந்திரன். ஆதலால், சந்திரனிலேயே காதலர்கள் வாழ முற்பட்டால், எப்படி இருக்கும்?

ஆகாச லிங்கம்: வானவெளி ஆராய்ச்சிகளை மேன்மேலும் நடத்துவதற்கு, இந்த பூமியைக் காட்டிலும் சந்திரன் மிகவும் பயன்படக் கூடியது. பூமியைச் சுற்றிக் காற்று மண்டலம்இருப்பதால், தொலைநோக்கி (Telescope) மூலம் வான வெளியை நன்ருகப் பார்க்க முடிகிறதில்லை. சந்திரனைச் சுற்றியோ, காற்று மண்டலமில்லை. ஆகையால், அங்கு சென்று, நட்சத்திர மண்டலங்களைப் பார்த்து, ஆராய்ச்சிகள் செய்

தால், பல நூதன விஞ்ஞானக் கருத்துக்கள் எழக் கூடும்.

கந்தன்: பூமிக்கு மட்டும் காற்று மண்டலம் இருக்கும் போது. சந்திரனுக்கும் ஏன் காற்று மண்டலம் இருத்தல் கூடாது?

ஆ.லிங்கம்: சரியான கேள்வி. ஆகர்ஷண சக்தி அல்லது ஈர்ப்பு விசை (Gravitational Force) என்று சொல்லுகிறோமே, அந்தச் சக்தியின் காரணமாக, பூமி, தன்னைச் சுற்றியிருக்கும் காற்றைத் தன்னோடு ஒட்டி வைத்துக் கொள்கிறது. பூமியின் ஆகர்ஷண சக்தியிலே சுமார் ஆறில் ஒரு பங்குதான் சந்திரனுக்கு உண்டு. ஆகையால், சந்திரனால், தனக்கென்று ஒரு காற்று மண்டலத்தை உருவாக்கித் தன்னருகில் அதை இழுத்துப் போர்த்திக் கொள்ள இயலவில்லை.

அப்புசாமி:சந்திரன் எப்படிப் பிறந்து உருவாகியது? அது தெரிந்தால்தானே, அதன் ஆகர்ஷண சக்தி ஏன் குறைந்துள்ளது என்பதை ஊகித்தறிய முடியும்?

ஆ. லிங்கம்: விஞ்ஞானிகளில் சிலர் "வாயுக் கோளம் ஒன்று வெகு காலம் சுழன்று சுழன்று இறுகிச் சந்திரனாகி விட்டது!" என்கிறார்கள்.

ரூப: சில விஞ்ஞானிகள், சந்திரன் பூமியிலிருந்து பிரிந்து போய், சுழன்று சுழன்று துணைக்கோளாகி விட்டது என்றும், பூமியிலிருந்து சந்திரன் பிரிந்த இடம்தான் பசிபிக் கடல் என்றும் கூறுகிறார்கள்.

மனோ: பூமி வேறு, சந்திரன் வேறு, என்ற ரீதியில் கிரகங்கள் தோன்றி, சந்திரன் பூமிக்கு அருகில் வந்ததும், பூமியின் ஈர்ப்பு விசையின் விளைவாக அது பூமியின் துணைக்கோளாக மாறிவிட்டிருக்கலாம் அல்லவா?

ஆ. லிங்கம்: ஆம், அவ்விதமாகவும் ஏற்பட்டிருக்கலாம். எனினும், வருங்காலத்தில்,இது பூமியின் பிடியிலிருந்து நழுவி விடத்தான் போகிறது!

ரூப: ஆம். இப்பொழுது பூமியிலிருந்து சுமார் இரண்டேகால் இலட்சம் மைல் தூரத்திலிருக்கும் சந்திரன், ஆண்டுக்குச் சுமார் ஏழு அடி வீதம், சூரியனை நோக்கி முன்னேறிச் செல்கிறது. இந்த முன்னேற்றம் தங்குதடையின்றி நடைபெற்றுக் கொண்டே யிருப்பதால், பூமியின் ஈர்ப்புப் பிடியிலிருந்து சந்திரன், என்றாவது ஒரு நாள் விடுதலை பெற்றுத்தான் தீரும்."

கந்தன்: அப்புறம் அதன் கதி?

ஆ. லிங்கம்: அப்புறம் அது சூரியனுடைய பிடிக்குள் அகப்பட்டுக் கொள்ளும்.

ஐயா: அதாவது, சந்திரனும், பூமியைப் போன்றே ஒரு கிரகமாக மாறிவிடும் என்கிறீர்களா?

ஆ. லிங்கம்: ஆம். அதன் விளைவாக, பூமியில் பல

பெருத்த மாறுதல்கள் ஏற்படும்.

மனோ: காதலர்கள் சந்திரனைக் காணாது திகைப்பார்கள்!

ஆ. லிங்கம்: கடல் அலைகள் அடங்கி ஒடுங்கி விடும். ஆனால், அம்மாதிரியான விபரீதம், இந்த யுகத்தில் நடக்காது!

மனோ: நல்ல வேளை...நமது ஆயுட்காலத்தில் சந்திரன் சந்திரனாகவே காட்சி தரும். இந்த வானவெளி யுகத்தில், யாராவது ஒரு மனிதன் அங்கு போய் விட்டு வரமாட்டானா, என்ன? அவன் திரும்பி வந்து கூறுவதைக் கேட்டாவது நாம் ரசிக்கலாமே!

ஆ. லிங்கம்: ஆமாம். இது வானவெளி யுகந்தான். வானவெளிப் பயண விழாவை 1957-ம் ஆண்டு அக்டோபர் 4-ம் தேதியன்று ரஷியா துவக்கி வைத்தது எனலாம். ஏனெனில், அன்றுதான் (Sputnik) 'ஸ்புட்னிக்' என்று அழைக்கப்படும் செயற்கைக் கோள், மணிக்கு, 18,000 மைல் வேகத்தில், வானைப் பிளந்து பாய்ந்து சென்று, பூமியைச் சுற்றி வந்தது.

ரூப: அதற்குப் பிறகு, செயற்கைக் கோள்கள் பலவற்றை, அமெரிக்காவும் ரஷியாவும், ஏவு கணைகள் மூலம் பறக்கவிட்டிருக்கின்றனவே.

ஆ. லிங்கம்: ஆமாம். அவ்வாறு ஏவப்பட்ட கணைகளில் ஒன்று, 2,36,875 மைல் தூரம் சென்று, சந்திரன் மேலேயே பாய்ந்து விட்டது!

ரூப: ரஷியாதான், 1959 செப்டம்பர் 12-ம் தேதியன்று, அக் கணையை ஏவி விட்டது. அதன் பெயர் "லூனிக்-2" (Lunik—II) என்று சொல்கிறார்கள். அது சந்திரன்மீது மோதும்போது, அதன் வேகம் விநாடிக்கு இரண்டு மைலாக இருந்ததாம்!

கந்தன்: சபாஷ்! புண்ணியவான்கள் சந்திரன் மேலேயே பிள்ளையார் சுழியை ("உ"வை) போட்டு விட்டார்கள்! இந்த சாதனை எப்படிச் சாத்தியமாயிற்று? ஆச்சரியமாக இருக்கிறதே!

ஆ. லிங்கம்: எல்லாம் கணக்குதான் என்றாலும் மிகையாகாது. கணித மேதைகள், வான நூல் ஆராய்ச்சியாளர்கள், ஏவு கணை வல்லுநர்கள், எல்லோருமே சேர்ந்து பாடுபட்டதன் விளைவுதான் இந்த சாதனை. சந்திரனின் குறுக்களவு 2,162 மைல். பூமியிலிருந்து சந்திரனுக்குச் செல்ல வேண்டிய சராசரி தூரம் 2,38,857 மைல். பூமியைச் சந்திரன் சுற்றும் நேரம் 27 நாட்கள் 7 மணி 43 நிமிஷம்...இம்மாதிரியான சந்திரனின் புள்ளிவிவரங்களையும், பூமியைப் பற்றிய புள்ளி விவரங்களையும், மற்றும் ஏவு கணை, சீதோஷ்ண நிலை, முதலியவை பற்றிய புள்ளி விவரங்களையும் வைத்துக் கொண்டு, சரியாகக் கணக்குப்

போட்டு, ஏவு கணையை ரஷியா விலிருந்து அனுப்பினார்கள்.

மனோ: நல்ல வேளை. ஜலவாயு குண்டை ஏவு கணையில் வைத்து அனுப்பாமல் போனார்களே!...ஏவுகணை மூலம் அணு குண்டு அங்கு சென்று வெடித்திருந்தால், வெண்ணிலவு கருநிலவு ஆகியிருக்குமே!

ரூப: நமது கண்களுக்கு, சந்திரனின் ஒளி, வெள்ளி போல் பளபளவென்று வெண்ணிறத்துடன் தோன்றினாலும், அது, பெரும்பாலும், சாம்பல் நிறமும் மஞ்சள் நிறமும் கலந்ததொரு கலப்பு நிறமாக இருப்பதாக, வான நூல் அறிஞர்கள் கூறுகிறார்கள். தொலை நோக்கி மூலம் பார்த்தால், பச்சை, சிவப்பு, காவி நிறங்களைக்கூட சந்திரனின் சில பகுதிகள் பிரதிபலிக்கின்றனவாம்!

கந்தன்: சந்திரன் தன்னைத் தானே சுற்றிக் கொண்டிருக்கும்போது, எந்தப் பகுதியில் ரஷியாவின் ஏவு கணை பாய்ந்திருக்கக்கூடும்?

ஆ. லிங்கம்: சந்திரன் தன்னைத்தானே சுற்றிக் கொண்டிருப்பது நமது கண்களுக்குப் புலப்படாது. அதுவுமன்றி, அதன் ஒரு பகுதி மட்டுமே நமது கண்களுக்குத் தெரிந்து கொண்டிருக்கிறது. அதன் மற்றொரு பகுதி, அதாவது அதன் பின் பகுதி எப்படியிருக்குமென்று நமது கண்களுக்குப் புலப்படவில்லை. இதற்குக் காரணம், பூமியை, சந்திரன் எந்த விகித வேகத்தில் சுற்றுகிறதோ, அதே விகித வேகத்தில் அது தானும் பம்பரம்போல் சுழன்று கொள்கிறது. இதுவும் இயற்கையின் விந்தையே. இந்த வேகத்தையும் கணக்கில் எடுத்துக்கொண்டு தான் ரஷியா, "லூனிக்-2" என்ற ஏவு கணையை அனுப்பியது.

கந்தன்: சந்திரனின் பின் பகுதியை ஒருவரும் பார்த்ததில்லையா?

ஆ. லிங்கம்: இல்லை, ஆனால், வான நூல் அறிஞர்களில் சிலர், சந்திரனின் பின்பகுதி பூராவும் குழிகுழியாக, அம்மை வார்த்த முகம்போல் தோற்றமளிக்கக் கூடுமென்றும், அதற்குக் காரணம் எரி நட்சத்திரங்கள் பல அப்பகுதி மீது வீழ்ந்து பாழ் பண்ணியிருக்கக் கூடுமென்றும் கருதுகிறார்கள். வேறு சிலர், சந்திரனின் பின் பகுதி, நமக்குத் தெரியும் அதன் முன்பகுதியைக் காட்டிலும், களங்கமற்ற சமபரப்புள்ளதாக இருக்குமென்று கூறுகிறார்கள். இதற்குக் காரணம், பூமியின் ஆகர்ஷண சக்தியால், பள்ளங்களும் குழிகளும் சந்திரனின் முன்பகுதியில் ஏற்பட்டு வருகின்றனவாம். ஆனால், அதன் பின்பகுதி, பூமியின் ஈர்ப்பு விசையால் அதிகமாகப் பாதிக்கப்படாததால், குழிகளும் பள்ளங்களும் அவ்வளவாக அங்கு இருக்காதாம்.

ரூப: வான நூல் அறிஞர்கள் இவ்வாறு விவாதம் செய்து

கொண்டிருக்கும்போது, ரஷியா, மற்ெறாரு ஏவுகணையை, சந்திரனை நோக்கி அனுப்பியது. அது மணிக்கு 25,000 மைல் வேகத்தில் 1959-ஆம் ஆண்டு அக்டோபர் 4-ஆம் தேதியன்று, ரஷியாவிலிருந்து கிளம்பியது. சந்திரனிலிருந்து சுமார் 40,000 மைல் தூரத்தில், இந்த ஏவு கணை சென்றுகொண்டிருக்கும்போது, பூமியிலிருந்தே, ரஷிய விஞ்ஞானிகள், அந்த ஏவு கணைக்குள்ளிருந்த* புகைப்படக் கருவியை, ரேடியோ சமிக்ஞைகள் மூலம், முடுக்கிவிட்டார்கள். சந்திரனின் பின்பகுதியில் முக்கால்வாசியை, அந்த புகைப்படக் கருவி போட்டோ பிடித்து, அப்புகைப் படங்களையும் ரஷியாவுக்கு அனுப்பி வைத்தது. அந்த ஏவு கணை, சந்திரனுக்கு அருகில், சந்திரனிலிருந்து சுமார் 4,373 மைல் தூரம் வரை சென்றுகூட போட்டோ பிடித்ததாம்! பிறகு அது செயற்கைத் துணைக் கோளாக மாறிவிட்டதாம். அதன் பெயர் (Lunik-III) "லூனிக்-3" என்று சொல்கிறார்கள்.

*கந்தன்: அந்தப் புகைப் படங்களிலிருந்து என்ன முடிவு செய்தார்கள்?

ஆ. லிங்கம்: அந்தப் படங்களில் சிலவற்றைப் பத்திரிகைகளில்கூட பிரசுரித்திருந்தார்கள். சந்திரனின் பின்பகுதியில், பள்ளங்களும் குழிகளும் தென்படுகின்றன. முன் பகுதியிலுள்ள குழிகள் பள்ளங்களைக் காட்டிலும், பின் பகுதியிலுள்ள குழிகளும் பள்ளங்களும், சிறிதளவு குறைந்தே உள்ளன.

ரூப: சோவியத் விஞ்ஞானிகள் சந்திரனின் பின் பகுதியில் தென்படும் பள்ளங்களையும் குழிகளையும், "மாஸ்கோ சமுத்திரம்"—"வானவெளி விமானி குடாக் கடல்"—"கனவுக் கடல்" (Mechta Sea) என்றெல்லாம், ரஷியப் பெயர்களையே வைத்து விட்டார்கள்!

மனோ: சபாஷ்! சந்திரனுக்குச் செல்வோம்!! கனவுக் கடலில் களியாட்டம் புரிவோம்!—என்றெல்லாம் பகற் கனவு காணலாம்.

ரூப: கனவு காண்பது மட்டுமல்ல, கூடிய சீக்கிரத்தில் விஞ்ஞான ஆராய்ச்சி செய்யவாவது, சில ரஷியர்கள் அங்கு போகத்தான் போகிறார்கள்!

மனோ: வெறும் குழிகளும் பள்ளங்களும் நிரம்பிய சந்திரனுக்குச் சென்றால், அவர்களால் கனவுதான் காணமுடியுமே தவிர, வேறு எதையும் சாதித்து விட முடியுமா?

ஆ. லிங்கம்: சந்திரனின் மேற்பரப்பில் கிடைக்கக் கூடிய தாதுப் பொருள்களை ஆராய்ந்து பார்த்து, அதன் மூலம், பூமி பிறந்த வரலாற்றை விஞ்ஞான ரீதியாக ஊர்ஜிதம் செய்ய இயலும் என்று வான நூல் அறிஞர்கள் கருதுகிறார்கள்!

கந்தன்: தாதுப் பொருள்கள் கிடைக்குமானால், அவை நமக்கும் பயன்படக் கூடும்.

ரூப: அமெரிக்க விஞ்ஞானிகளின் கருத்து மனிதனின் பேராசையைத் தூண்டிவிடக் கூடியது. சந்திரனின் பரப்பில், வைரங்களும் இரத்தினங்களும் மற்றும் அரிய கனிப்பொருள்களும் கிடைக்கக் கூடுமென்று அமெரிக்க விஞ்ஞானிகள் கருதுகிறார்கள்.

ஆ. லிங்கம்: ஆனால், ரஷிய விஞ்ஞானிகள், சந்திரனில் பெட்ரோல் எண்ணெய் வகைகள் கிடைக்குமென ஊகிக்கிறார்கள்.

அப்புசாமி: நீங்கள் சொல்வதெல்லாம் சரி. எண்ணெய்ச் சுரங்கங்களையும், வைரச் சுரங்கங்களையும் சந்திரனில் தோண்ட வேண்டுமானால், மனிதர்கள் அங்கு சென்று, சிறிது காலமாவது நிரந்தரமாக வாழ வேண்டுமே!

ஆ. லிங்கம்: ஆம், அதே காரணத்தால்தான், சந்திரனை அணுகி, அதன் பரப்பைத் தொட்டதுமே, மின்சாரத் தாக்குதல் ஏற்பட்டு, மனிதன் மரணமடையவும் நேரிடலாம்.

கந்தன்: அப்படி விபரீதம் நேரிடக்கூடும் என்றால், இன்னும் பல ஆராய்ச்சிகள் நடத்திய பிறகுதான், சந்திரனுக்குச் செல்லத் திட்டமிடவேண்டும் போலிருக்கிறது.

ஐயா: காந்த சக்தியோ மின்சார சக்தியோ சந்திரனிடம் இருப்பதாகச் சொல்கிறீர்கள். நமது முன்னோர்கள் சோதிடம், கைரேகை நூல்களின் மூலம், இக் கவர்ச்சியை வேறுவிதமாக எடுத்துக் கூறியிருக்கிறார்கள். கற்பனை உலகிலேயே சஞ்சரிக்கக்கூடிய மனிதர்கள் சந்திரனின் ஆதிக்கத்துக்கு உட்பட்டவர்களாம்!

மனோ: அப்படியென்றால், நான் சந்திரனுடைய கவர்ச்சிக்கு உட்பட்டவன் போலிருக்கிறது. எப்பொழுது பார்த்தாலும், என் மனத் திரையில், பற்பல இன்பக் காட்சிகள் தோன்றித் தோன்றி மறைகின்றனவே!

ஐயா: மொழி ஆராய்ச்சியாளர்கள், இசை மேதைகள், கவிஞர்கள், கதாசிரியர்கள் முதலானோர் சந்திர ஆதிக்கத்துக்கு உட்பட்டவர்களாம்!

அப்பு: சோதிடம் தவிர்த்து, சர நூல் கொண்டும் ஆருடம் பார்க்கலாமாம். சர நூலில்கூட சந்திரனுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டிருக்கிறது. இடது பக்க நாசியில் வரும் மூச்சுக்கு சந்திரகலை என்று பெயரிட்டிருக்கிறார்கள். நாம் சுவாசிக்கும்போது, சில சமயங்களில், இடது நாசி வழியாக மூச்சு வரும். வேறு சில சமயங்களில் வலது நாசி வழியாக மூச்சு வரும். சந்திரனின் கவர்ச்சியால் இடது நாசி வழியாக மூச்சு வரும்போது, விவாகம் செய்தல், வீடு வாங்குதல், புதிய ஆடைகளையும் ஆபரணங்களையும்

அணிதல் போன்ற காரியங்களைச் செய்வது சாலவும் சிறந்ததாம்!

ஐயா: யோக நூல்களிலும், சந்திரகலை எனப்படும் இடது நாசி மூலம் வரும் மூச்சுக்கு முக்கியத்துவம் அளித்திருக்கிறார்கள். இட நாசி, வல நாசி மூலம் மூச்சை உள்ளே இழுத்து ஒழுங்காக ஆழ்ந்து சுவாசிப்பதையே ஒரு கலை எனலாம்.

"வாயு வழக்கம் அறிந்து
செறிந்தடங்கில்
ஆயுட் பெருக்கமுண்டாம்"

—என்று ஒரு முதியவர் கூறியுள்ளார்.

மனோ: கனவுக் கடல்...கனவுக் கடல்!...இதுதான் எனது மூச்சாக இருக்கிறது. நீங்கள் சொல்லுகிற மூச்சு விவரங்களையெல்லாம் என்னால் கிரகிக்க இயலவில்லை!

ஐயா: சரிதான். சந்திரனுக்குச் சென்று அங்குள்ள கனவுக் கடலில் களியாட்டம் புரிய வேண்டுமென்று ஆசைப்படுகிறீர்கள் போலிருக்கிறது! அதற்குப் பதிலாக,

"சச்சிதானந்தக் கடலில்
வெண்ணிலவே! நானுந்
தாழ்ந்து விழ வேண்டுகின்றேன்
வெண்ணிலாவே!"

—என்று இராமலிங்க சுவாமிகள் பாடியதற்கிணங்க, அந்த ஆநந்தக் கடலை நாடுங்கள். நன்மை பயக்கும்!

(கூட்டம் கலைந்தது.)

— ❀ —

## "அஜாகளஸ்தம்"!

ஒரு சமயம், ஸ்பெயினிலிருந்து, ஒரு இளைஞர் பக்கத்து நாட்டுத் தூதுவராக அனுப்பப் பட்டார்.

அந்த நாட்டின் அரசர் இளைஞரைப் பார்த்துக் கிண்டலாகச் சொன்னார்:

"ஸ்பெயின் நாட்டில் மனிதர்களே இல்லை போலும்! அதனால்தான் ஸ்பானிய மன்னர் தாடி முளைக்காத ஒரு பையனைத் தூதுவராக அனுப்பியுள்ளாரென்று நினைக்கிறேன்!"

தூதுவர் கூறினார்: "அரசே! அறிவு தாடியில் இருப்பதாகத் தாங்கள் கருதுவது எங்கள் மன்னருக்குத் தெரியாது! தெரிந்திருந்தால், எனக்குப் பதிலாக ஒரு வெள்ளாட்டை அனுப்பியிருப்பார்!"

யானையின் காதல் அழகானது. கர்ப்பம் தரித்த யானையுடன் எப்பொழுதும் ஒரு கிழட்டுப் பெண்யானை துணையிருக்கும்.

சாவை நோக்கித் தனிமையில் செல்லும் யானை, தன்னைப் பாதுகாக்கும் இளம் யானைகளுக்குப் பல தந்திரங்களைச் சொல்லிக் கொடுக்கிறதாம்!

# யானைக் கதைகள்

யானையைப் பார்க்காதவர்கள் அநேகமாகத் தமிழ் நாட்டில் இருக்க முடியாது. ஆயினும், ஒவ்வொரு தடவையும் அதைப் பார்க்கும்பொழுது ஓர் ஆச்சரிய உணர்ச்சி ஏற்படுகிறது, —அலுப்புத் தட்டுவதேயில்லை.

***யானையும் மனிதனும் :***

யானைக்கும் மனிதனுக்கும் ஒரு வகையில் நெருங்கிய ஒற்றுமையுண்டு. மனிதனின் குணத்தை நிர்ணயிக்கவே முடியாது! ஒருவன் நமது நெருங்கிய நண்பனு யிருக்கலாம், - ஆனுல் எந்த ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையிலும் அவன் எவ்வாறு நடந்து கொள்வானென்று திடமாகக் கூற முடியாது. அதைப் போலவே யானையும்! ஒரு யானையின் குணத்தை அதைக் குழந்தையிலிருந்து வளர்த்துப் பழக்கிய பாகனுலும் எடை போட முடியாது. இதனுல்தானே என்னவோ, மனிதர்களுக்கு யானை மீது அளவுகடந்த ஆசை!

***அறிவுத் திறன் :***

யானையின் அறிவுத் திறனைப் பற்றி எத்தனையோ கதைகள் வழங்குகின்றன. சில கதைகளைக் கேட்கும்போது, நம்பவே முடிவதில்லை — அவ்வளவு வியப்படையச் செய்கின்றன!

காயம் பட்ட ஒரு யானை எழுந்திருக்க முடியாமல் கீழே விழுந்து கிடந்தது. அதைக் கண்ட இரண்டு யானைகள் கீழே குனிந்து, தங்கள் தந்தங்களை அதனடியில் நுழைத்து ஒன்று சேர்த்துப் பிணைத்து, ஒரு பொருளைத் தட்டில் வைத்துத் தூக்குவது போல் அந்த யானையைத் தூக்கிக் கொண்டு அடர்ந்த புதருக்குள் நுழைந்து மறைந்து விட்டனவாம்!

***நகைச்சுவை!***

கீழே தந்துள்ள நிகழ்ச்சி ஆப்பிரிக்கா கண்டத்திலுள்ள கென்யா நாட்டில் நடந்தது:

அந்த யானைக்கு நகைச்சுவை நிறைய உண்டு போலும்! மோட்டார் வருவதைக் கண்டதும், அது ஓடி வந்து, காதுகளை அகல விரித்துக் கொண்டு, வீறிட்டுக் கத்தும்! அந்தச் சத்தத்தைக் கேட்டதும், காரில் இருப்பவர்கள் எவ்வளவு

தைரியசாலிகளா யிருப்பினும், நடுநடுங்கிப்போய், காரை வேக மாகச் செலுத்த முயற்சிப்பார் கள்.

மேற்கண்டவாறு வீறிட்டுச் சத்தமிட்டபின், அந்த யானை மிகவும் சாதுவாக ஒரு ஓரத்தில் நின்று கொண்டிருக்கும்! கார் சென்றபின் சாவதானமாக நடந்து சென்று புதருக்குள் மறைந்துவிடும். யாருக்கும் எந்தத் தீங்கும் செய்யாது! ஆனால் அதன் சத்தத்தை ஒருமுறை கேட்டவர்கள் வாழ்நாள் முழுவதும் அதை நினைக்கும் போதெல்லாம் திகிலடைந்து நடுங்குவார்களாம்!

## யானைக் காதல்

யானை காதல் புரியும் முறை மிகவும் அழகானது, தூய்மையானது. இதை நன்கு கவனித்த ஒருவர் பின்வருமாறு கூறுகிறார்: "காட்டில் மந்தை மந்தையாக யானைக் கூட்டங்கள் சென்று கொண்டிருந்தன. மந்தையிலிருந்து ஓர் அழகிய ஆண் யானை வெளியே வந்து விலகிச் சென்றது...

"சில நிமிடங்களுக்கெல்லாம் ஒரு பெண் யானையும் மந்தையை விட்டு விலகி வந்து, அந்த ஆண் யானையை நோக்கிச் சென்றது. முதலிரவு தன் கணவனிடம் செல்லும் பெண் எவ்வளவு நாணத்துடன் செல்வாளோ, அதே போன்று அந்தப் பெண் யானையும் தலையை அந்தப்பக்கமும் இந்தப்பக்கமும் திருப்பி அசைத்துக் கொண்டு, தயங்கித் தயங்கிச் சென்றது...

"பெண் யானை தனக்கருகில் வந்ததும், அந்த ஆண் யானை, ஆசையுடன், துதிக்கையை நீட்டி, பெண்ணின் துதிக்கையோடு வளைத்துச் சுற்றி, தன்னிடம் அதை மெதுவாக இழுத்தது!...

"பிறகு தேர்வடம் போல் ஒன்றாகப் பிணைந்த துதிக்கைகள் மேலே எழும்பின. அதே நேரத்தில், இரண்டு யானைகளின் வாய்களும் ஒன்றோடொன்று சேர்ந்து அழுந்தப் பொருந்தின. இதுதான் யானைகளின் கூடுவதற்கு முன்னால் முத்தமிடும் முறை...

"பிறகு, பெண், ஆணின் முதுகில் விளையாட்டாக அடிக்கடி உராய்ந்து இடித்தது. சிறிது நேரத்திற்கெல்லாம் ஆண் பக்கத்திலிருந்த புல்லை அப்படியே கத்தையாகப் பிடுங்கி, உதறி, பெண்ணின் வாய்க்குள் திணித்தது. பிறகு அவைகளிரண்டும் கொஞ்ச தூரம் நடந்து சென்றன. அடிக்கடி நின்று, ஒன்றோடொன்று வாயைச் சேர்த்து முத்தமிட்டுக் கொண்டன. பிரிந்து சென்றுவிட்டன!...

"இவ்வாறு அவை ஒரு வாரம் அடிக்கடி சந்தித்து, தங்கள் காதலைக்கனியச் செய்தன. ஒரு நாள் இரவு இரண்டும் மரங்கள் அடர்ந்த இடத்தை நோக்கிச் சென்றன. ஆம், யானைகள்

கண்காணாத இடங்களில் மட்டுமே கூடுகின்றன.

சுமார் பத்து மாத காலத்திற்கு அடிக்கடி கூடுகின்றன. அவை அப்பொழுது மந்தையில் சேருவதில்லை. மந்தைக்குப் பக்கத்தில் பகலெல்லாம் தனியே நடந்து செல்லும். இரவு வந்ததும் இருட்டில் மரங்களடர்ந்த பகுதிக்குச் சென்று கூடும்.

### கருவுற்ற பின்...

பெண் யானை கர்ப்பம் தரித்த பின், முன் போல ஆணுடன் சேருவதில்லை. சிலமாதங்கள் சென்றதும், அது ஒரு கிழட்டுப் பெண்யானையுடன் சிநேகம் செய்து கொள்கிறது. பிரசவம் ஆகும் போது அந்தக் கிழயானை கூடவே யிருக்கும். பிரசவம் ஆவதற்கு 21 மாத காலம் ஆகிறது. பிரசவம் ஆகிறவரையில் அதனை யார் நெருங்கினாலும், கிழயானை உடனே ஓடி வந்து வீராவேசத்துடன் தாக்கும்!

யானைக் கன்றும் மற்றப் பிராணிகளைப் போலவேதான் வாயால் பால் குடிக்கிறது. துதிக்கையால் குடிக்கிறதென்று கூறுவது தவறு.

### பிரிவாற்றாமை:

யானை தனது கன்றிடம் காட்டும் பாசம் அளவு கடந்தது. க்லனல் டிரிம்மர் என்பவர் தான் கண்ணால் கண்ட ஒரு துயர நிகழ்ச்சியைக் கூறுகிறார்:

"ஒரு யானையின் கன்று செத்துவிட்டது. அதன் தாய் பக்கத்திலேயே நின்று கொண்டிருந்தது. இரை எதுவும் உண்பதில்லை. கிட்ட யார் போனாலும் தாக்கும். இவ்வாறு பல நாட்கள் கழிந்தன. பிறகு ஒரு நாள் அது மரத்தடியில் தானே குழி தோண்டி தன் கன்றை அதில் புதைத்து மண்ணைப் போட்டு மூடியது!"

### முடிவு நேரத்தில்...

யானையின் சராசரி வயது அறுபது. சாகும் நேரம் நெருங்கியதை உணர்ந்த கிழ யானை மந்தையிலிருந்து பிரிந்து விடும். இரண்டு மூன்று சிறிய ஆண்கள் அதைத் தொடர்ந்து செல்லும். கிழயானை சாகிற வரையில் அவைகள் அதனுடன் இருந்து பாதுகாக்கும். சாவதற்குமுன், அது அந்தச் சிறிய யானைகளுக்குத் தனக்குத் தெரிந்த இரகசியங்களை யெல்லாம் சொல்லிக் கொடுக்குமாம்!



### இறை மாட்சி

நான் இறைவனிடத்தில் அன்பு செலுத்துகிறேன். ஏனென்றால் தம்மையே மறுதலிக்கும் சுதந்தரத்தை எனக்கு அவர் அளித்துள்ளார். என்னிடத்தில் இறைவன் தன்னுடைய ஊழியனைக் காண விரும்பவில்லை; சகலருக்கும் ஊழியரான தம்மையே காண்கிறார்."

—இரவீந்திரநாத தாகூர்.

# வளரும் கரு

கண்ணுக்குத் தெரியாததொரு சிறிய கருத் துளி வளர்ந்து, அங்கஅவயவங்களைப் பெற்று முழு உருவாக வளரும் வரை தோன்றும் தாய்மைக்குரிய நிகழ்ச்சிகள், விந்தையான இரசாயன மாற்றங்கள், இவை யாவும் கருவின் வளர்ச்சியிலே மிகமுக்கியத்துவம் வாய்ந்தன. அதே நிகழ்ச்சிகள், விளைவுகள், நம்பமுடியாத சக்திவாய்ந்த நொதி அமைப்புகள், இவை மனித சமுதாயத்தின் நல்வாழ்வுக்கும், முன்னேற்றத்திற்கும் அடிகோலக் கூடும்.

''கருவின் வளர்ச்சியிலே இரசாயன மாற்றங்கள், நொதி அமைப்புகள், இவையே முதன் முதலில் தோன்றுகின்றன. பிறகு இந்த நொதி அமைப்புகளும், ''அண்டிஜென்'' என்று கூறப்படும் ''எதிர்ப்பொருள் உருவாக்கி''களும் தூண்டுவதனுல் கருவின் அங்கங்கள் உருவாகின்றன'' என்பதைக் கரு வளர்ச்சி ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்துள்ளனர்.

இந்த அண்டிஜென்களில் பல்லாயிரக்கணக்கான வகைகள் உள்ளன. இவற்றைப் பிரித்து, வகைப்படுத்தி ஆராய்வது இயலாத காரியமென்று சில விஞ்ஞானிகள் கருதிவந்தனர், ஆனுல், இந்த அண்டிஜென்களைப் பிரித்தெடுத்து, பகுத்தறிவது, சாத்தியமென இப்போது நிரூபித்துவிட்டார் 'ரேய்சா அவர்கைனு' என்ற ஆராய்ச்சியாளர். அவர் அண்டிஜென்களை மூன்று வகைகளாகப் பிரித்தார்.

முதல் வகை, அண்டிஜென் எந்தவகையான பிராணி அந்தக் குறிப்பிட்ட கருவிலிருந்து உருவாகும் என்பதை நிர்ணயிக்கும்.

இரண்டாவது வகை அண்டிஜென், 'அங்க அண்டிஜென்' எனப்படும். இந்த அங்க அண்டிஜென்களுடைய தூண்டுதலினுல்தான் எல்லா அங்கங்களும் வளர்கின்றன. ஒவ்வொரு அங்கத்திற்கும் ஒரு குறிப்பிட்ட அங்க அண்டிஜென் உண்டு. உதாரணமாக இதயத்திற்கு, இதய அண்டிஜென் ஈரலுக்கு, ஈரல் அண்டிஜென்.

கடைசி வகை அண்டிஜென், 'முக்கிய கட்ட அண்டிஜென்' எனப்படும். இந்த அண்டிஜென்கள் அங்கங்களின் வளர்ச்சியிலே ஒரு முக்கிய கட்டத்தில் தோன்றும். தங்களின் வேலை முடிந்த பிறகு மறைந்துவிடும். இந்த அண்டிஜென்கள் இதயத்தின் வளர்ச்சியை எவ்விதம் நடத்துகின்றன என்பதைப் பார்ப்போம்.

இதய அண்டிஜென்னின் தூண்டுதலின் பேரில் இதயம் ஒரு குழாய் போல் துவங்கு கிறது. பிறகு, சிறிது காலம் ஆனபிறகு, முக்கிய கட்ட அண்டிஜென் குழாய் போன்ற இதயத்தின் சுவர்களில்தோன்று கிறது. இந்த அண்டிஜென் னின் உதவியால் குழாய் இதயம் நான்கு அறைகள் உள்ள முழு வளர்ச்சி அடைந்த இதயமாக வளர்கிறது. குழாய் இதயம் முழு வளர்ச்சி அடைந்த இதய மாக மாறிவிட்ட பிறகு, முக் கிய கட்ட அண்டிஜென் மறைந்து விடுகின்றது.

### இறந்த கல்லீரலுக்குப் புது உயிர் :

இன்னு டிட்டோவ் என்ற ஆராய்ச்சியாளர் கரு வளர்ச்சி ஆராய்ச்சி சாலையில் புது மாதிரி யான சோதனை ஒன்று செய் தார். இந்தச் சோதனை மாத் திரம் வெற்றிபெற்று விட்டால் ஆயிரமாயிரம் நோயாளிகள் மர ணத்தின் பிடியிலிருந்து விடு தலை அடைவார்கள்.

டிட்டோவ் தனது சோதனை யில், கோழியின் மண்ணீரலில் இருந்து ஒரு அண்டிஜென் தயா ரித்தார். அந்த அண்டிஜெனை முட்டையின் உள்ளே ஊசி மூலம் புகுத்தினர். முட்டை அடைகாக்க வைக்கப்பட்டது. முட்டையில் கரு சிறிதளவு வளர்ந்ததும் உடைத்து ஆராய்ந்து பார்த்ததில், மண்ணீ ரல் அண்டிஜென் செலுத்தப் பட்ட முட்டைகளில் மண்ணீ ரல் ஆறு மடங்கு அதிகமாக வளர்ந்திருக்கக் கண்டனர்.

இந்தச் சோதனை முயற்சி மனிதர்களிலும் பயன் தருமா ஞல், அதனுல் ஆயிரக்கணக் கான நோயாளி மக்கள் பலனை அடைவார்கள். ஈரல்களில் உள்ள செல்கள் எனப்படும் உயிர் அறைகள் சில சமயங் களில் இறந்து விடுகின்றன. பெருவாரியான ஈரல் உயிரறை கள் இறப்பின், அந்த நோயாளி உயிர்வாழ்வது இயலாத காரி யம். அந்த நிலையில் ஈரல் உயிர றைகளுக்கு உயிர் கொடுக்க முடியுமென்ருல், அது எவ் வளவு அற்புதமான சாதனை என்று எண்ணிப் பாருங்கள்!

நாம், ஈரல் அண்டிஜெனை அத்தகைய ஒரு நோயாளிக்குச் செலுத்திஞல், ஈரல் அண்டி ஜென் ஈரல் செல்களைத் தூண்டி விடுகின்றது. புது ஈரல் செல் கள் உண்டாகின்றன அல்லது பழைய செல்களே புதிய ஈரல் செல்களைப் போல் வேலை செய் கின்றன, ஈரலின் பற்ருக்குறை தீர்க்கப்படுகின்றது.

இந்தச் சோதனை முயற்சி யில், இன்னமும் மனிதர்களைச் சோதனை பிராணிகளாகப் பயன் படுத்த வில்லை. கூடிய சீக்கிரம் இந்தப் புது உயிர் முயற்சி மனி தர்களிடத்திலும் பலன் தரும் என்று நம்பலாம்.

### சூலுற்ற பெண்களும் அறுவைச் சிகிச்சையும்:

அதே சோதனைச்சாலையில் மற்ருெரு நம்பமுடியாத

உண்மையொன்றையும் முரஷோவா என்ற ஆராய்ச்சியாளர் கண்டுபிடித்திருக்கிறார்.

சூலுற்று இருக்கும் வெள்ளெலியின் நுரையீரல்களில் ஒன்றை முரோஷோவா அறுவை வைத்தியத்தின் மூலம் எடுத்துவிட்டார். பல நாட்கள் கழித்து அந்த வெள்ளெலியின் கருப்பையில் வளரும் கருவை வெளியே எடுத்து ஆராய்ந்தார்கள். ஆராய்ச்சியின்போது கருவின் நுரையீரல்கள் சாதாரணமாக இருப்பதைவிட இரு மடங்கு பெருத்திருப்பதைக் கண்டனர். இந்த ஆராய்ச்சி மூலம் கருவின் வளர்ச்சி முழுவதும் அன்னையின் தீவிரமான ஆட்சியின்கீழ் இருக்கின்றது என்பது நிரூபிக்கப்பட்டது. ஆகவே அறுவைச் சிகிச்சைகள் செய்யும் பொழுது பெண்கள் கர்ப்பமில்லாமல் இருப்பது நல்லது.

### ஆர். எச். (Rh) அம்சமும் சிசு மரணமும்:

ஆயிரத்தில் ஒரு குழந்தை பிறந்தவுடனே இறந்து விடுகிறது. ஐநூற்றில் ஒரு குழந்தை பிறந்து சில நாட்களில் கடுமையான மஞ்சள் காமாலை வந்து இறந்துவிடுகின்றது. இவற்றுக்கெல்லாம் சாதாரணமாக Rh அம்சம் ஒத்துக்கொள்ளாமையே காரணமாக இருக்கின்றது.

இந்த Rh அம்சம் ஒரு அண்டிஜென். இது முதன்முதலில் கருவைச் சுற்றியுள்ள மெல்லிய சவ்வு போன்ற பகுதியில் தோன்றுகிறது. Rh அண்டிஜென், Rh அண்டிபாடி என்று சொல்லப்படும். Rh எதிர்ப்பொருளை தாயாரின் இரத்தத்தில் தோன்றும்படி செய்கிறது. இந்த Rh எதிர்ப்பொருள்கள் கருச்சவ்விலே தங்கி நின்று Rh அண்டிஜெனைத் தாயின் இரத்தத்தில் கலக்கவிடாமல் தடுக்கின்றன. இது ஒரு முன் எச்சரிக்கையான இயற்கையின் பாதுகாப்பு முறை.

இந்த இயற்கையான பாதுகாப்பு முறையை விஞ்ஞானிகள் பலப்படுத்த முயன்று வருகின்றனர். வால்கோவ்வும் அவரது தோழர்களும் இந்த ஆராய்ச்சியில்— இயற்கையான பாதுகாப்பு முறையை, செயற்கையாக அண்டிஜென்னையோ அல்லது அண்டிபாடி என்ற எதிர்ப்பொருளையோ கருச்சவ்வின்மேல் செலுத்திப் பலப்படுத்தும் முயற்சியில் தீவிரமாக உழைக்கின்றனர். கூடிய சீக்கிரம் குரங்குகளில் இந்தச் சோதனை நடத்தப்படும். இன்னும் சில காலத்தில் பிறக்கும் குழந்தையின் குணத்தையும் உருவத்தையும் வேண்டிய மாதிரிமாற்றி அமைக்க முடிந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை!

— ❋ —

உலகையே படைத்தவன் 'பிரமன்' என்றும், அழித்து ஆனந்தக் கூத்திடும் ஐயன் திரிபுரம் எரித்த விரிசடையன் என்றும், புராணங்கள் மொழிகின்றன. இன்றைய உலகை இடுகாடாக்க வேண்டுமெனில் விஞ்ஞானக் கண்டுபிடிப்புக்களே அதற்குப் பொறுப்பு. ஆயின், விஞ்ஞானிகள் தான் அழிவுக் கூத்தர்களா? எது அவர்கள் கடமை?

# விஞ்ஞானமும் விஞ்ஞானிகளும்

விஞ்ஞானம் என்ற சொல் 'அறிவு' என்ற மூல வார்த்தையினின்றே உலகமொழிகள் அனைத்திலும் தோன்றியிருக்க வேண்டும். அறிவைத் தேடுபவனே விஞ்ஞானி. இயற்கையிலும் சமூகத்திலும் இயங்கி வரும் பல்வேறு போக்குகளின், நியதிகளின் விதிகளை அவன் கண்டு பிடிக்கிருன். புதிய விதிகளை அவன் ஆராய்ந்து காண்கிருன். இயற்கை விதிகளின்படி, இயற்கையை மனித நன்மைக்குப் பயன்படுத்தவோ, அல்லது மனிதனுக்கு ஒவ்வாத நியமங்களை எதிர்த்து வெற்றி கொள்ளவோ வழிமுறைகளை வகுப்பவன் விஞ்ஞானி.

இயற்கையின் அளப்பரிய சக்தியினை மக்களின் சேவகனாக மாற்றுபவனே விஞ்ஞானி. அதனுலேயே ஒரு விஞ்ஞானியின் ஆராய்ச்சி நோக்கங்கள் என்னவென்பது அவனுக்கு நன்கு தெரிந்திருக்க வேண்டும். தனது ஆராய்ச்சியின் முடிவுகள் எவ்வாறு பயன்படுத்தப்படும் என்பது தெரிந்திருக்க வேண்டுவது அவசியம்தானே!

நமது சகாப்தத்தின் மிகப் பெரிய ஆராய்ச்சி முடிவின் மூலமாக சக்தி மிகுந்த ஒரு சக்தியை—அணு சக்தியை—நாம் நமது சேவகனைப் பெற்றுள்ளோம்.

ஆனல் இந்த அளவிடற்கரிய சக்தியை நாம் எவ்வாறு பயன்படுத்தப் போகிறோம் என்பதைப் பொறுத்தது, மனித குலத்தின் தலைவிதி. அந்தச் சக்தியை அழிவிற்காகப் பயன்படுத்தினல், யுகயுகமாக நாம் கட்டி வளர்த்த மனித நாகரிகத்தை ஒரு நொடியில் அழித்துவிடலாம். மாருக, ஆக்கவேலைக்குப் பயன்படுத்தினல் மனித இனத்தை நிரந்தர இன்பமான, வளமான வாழ்விற்கு அழைத்துச்செல்ல முடியும்.

மனித வரலாற்றில் போர்கள் நிகழாத காலமில்லை. வலியவன், மெலியவனை அடக்கி ஒடுக்கு தலே காலப்போக்கின் எழுதா நியமமாக இருந்து வந்துள்ளது.

ஆனால் இன்றோ......? பயங்கர, பூதாகார சக்தியான "அணுச் சிதைவுச்" சக்தி கண்டுபிடிக்கப்பட்டதால், உலக அழிவு நீண்ட காலம் தொடர்ந்து நடைபெறும் போரினால் தீர்மானிக்கப்பட வேண்டியிராது. மாறாக, அந்த அழிவுச் சக்தியின் விசையைத் தட்டிவிடும் ஒரு மனிதன் அதைத் தீர்மானித்து விடலாம். ஏதேனும் ஒரு கருவியில், எங்கேனும் ஏற்படும் தவறான கணிப்பு ஓர் உலகப் போரை மூட்டி விடலாம். இந்த நிலைக்கு யார் பொறுப்பு? யார்?

ஆம்! விஞ்ஞானிகளே பொறுப்புடையவர்கள் ஆகின்றனர். அவர்கள்தானே உலகத்தையே பற்றி எரியச் செய்யும் சாதனங்களைக் கண்டுபிடித்தவர்கள்!

யுரேனிய அணுவின் சிதைவு பற்றிய அடிப்படை ஆராய்ச்சி இரண்டாவது உலகப்போருக்கு முன்னரே கண்டு பிடிக்கப் பட்டுவிட்டது, உலக விஞ்ஞானிகள் அனைவரும் அதில் பங்கு கொண்டனர். எனினும், ஹிட்லரது கைகளிலே இந்த 'சக்தி' அகப்பட்டிருக்குமோ என்ற கவலை அனைவரது மனத்தையும் அன்று அரித்துக் கொண்டிருந்தது. ஹிட்லரின் கைகளிலே "கனத்தண்ணீரும், யுரேனியமும்" அகப்பட்டு விடாதவாறு, அன்று வீரப் பிரெஞ்சுப் புதல்வன் ஜோலியட் க்யூரி தடுத்தான்.

ஹிட்லரால் கட்டுண்ட ஐரோப்பிய நாடுகளின் விஞ்ஞானிகள் அமெரிக்காவில் கூடி, அணுகுண்டு தயாரிப்பில் அதிக வேகமாக ஈடுபட்டனர். பல்வேறு கொள்கைகள், கோட்பாடுகளைக் கொண்டவர்கள் அவர்கள். ஹிட்லரின் அழிவுத் தாண்டவத்தைத் தடுத்து நிறுத்தி, மனித நாகரிகத்தைக் காப்பாற்றுவது ஒன்றே அவர்களது பொதுக் குறிக்கோள்.

ஆம்! அந்த ஆயுதத்தைக் கண்டு பிடித்துவிட்டனர் அவர்கள்!

ஆனால் அதற்குள்ளாக ஹிட்லரின் முதுகெலும்பு முறிந்தது...ஹிட்லரின் தோல்விக்குப் பின்னர் அந்த ஆயுதம் தேவையா? அந்த ஆயுதத்தைப் பூர்த்தி செய்வதுடன் அதைச் சோதித்து பார்ப்பதும் அவசியம் தானா? இல்லை. ஆயினும் விஞ்ஞானிகள் எண்ணங்கட்கு மாறாக, துரதிருஷ்டம் பிடித்த அந்த ஆயுதம், நாகசாகி, ஹிரோஷிமாவில் வதியும் அப்பாவி மனிதர்களின்மீது சோதிக்கப்பட்டது.

அழிவின் எல்லையை அணுகியது உலகம். அணு ஆயுதங்களைப் படைத்த விஞ்ஞானிகள் இதனைத் தெளிவாக உணர்ந்தனர். மேற்கொண்டு 'அணுச் சிதைவு' ஆராய்ச்சியை நடத்தவு மறுத்த வீர விஞ்ஞானிகளும் உளர். ஹிரோஷிமா, நாகசாகியின் பயங்கரம் விஞ்ஞானிகளின் மனத்திலே ஓர் உணர்வைத் தோற்றுவித்தது. உணர்வு பூர்வமாகப் பிறந்த அந்த இயக்

கமே பிற்காலத்தில் 'பக்வாஷ்' இயக்கம் என்றழைக்கப்பட்டது. விஞ்ஞான மரத்திலிருந்து, விஷக் கிளை தோன்றுவதை வெட்டியெறிய முனைந்தனர் அவ்விஞ்ஞானிகள். "ஒரு விஞ்ஞானி சமூகத்தின்பால் தனக்குள்ள பொறுப்பை உணராவிடில்......அடுத்த விஞ்ஞானக் கண்டுபிடிப்பை மக்கள் கூக்குரலுடனும், ஒப்பாரியுடனும் வரவேற்கும் காலம் ஒன்று வரும்"—ஜெர்மானிய நாடகத்தில் ஒரு கதாபாத்திரமான கலிலியோவின் வார்த்தைகள் இவை.

**கடமைகள் :**

விஞ்ஞானியும் மனிதனே. சுற்றுப்புறம் அவனையும் அவனது நடவடிக்கைகளையும் உருப்படுத்தத்தான் செய்கிறது. அவனையும் மீறி, சந்தர்ப்பங்கட்கு அவன் இரையாவதும் சாத்தியமே. எனினும் விஞ்ஞானிகள் ஆக்கிரமிப்பு சக்திகளின் அடிமைகளாகிவிடக் கூடாது. தமது கண்டுபிடிப்புக்களை யார் உபயோகிக்கப் போகிறார்கள் என்பதையும் தெரிந்துகொள்ள வேண்டும்.

உலக நாடுகளிலுள்ள எத்தனையோ விஞ்ஞானிகள் அணு சக்தியை அழிவிற்குப் பயன்படுத்துவதை எதிர்த்துக் குரல் எழுப்பிவிட்டனர். இருந்தும் "விஞ்ஞானம் விஞ்ஞானக் கலைக்காகவே" என்ற போலிக் குரலெழுப்பி, விஞ்ஞானத்தை மனித சமூகத்திற்குள்ள கடமைகளினின்றும் விலக்கிச் செல்ல, பல ஆக்கிரமிப்புவாதிகள் விஞ்ஞான ஆராய்ச்சி உடையணிந்து நடமாடுகின்றனர்.

மிகப் பெரும் முன்னேற்ற சகாப்தத்தில் வாழ்கிறோம் நாம். விஞ்ஞான முன்னேற்றங்களை அழிவுக்காக ஒரு சிலர் பயன்படுத்துவதை நாம் அனுமதிக்க முடியாது. பிரதமர் நேரு கூறினார்: "குண்டுகளும், நகரங்களும் ஒன்றுக்கொன்று முரண்பட்டவை." ஆம்! நகரங்களும், வசதிகளும், இன்பம் கொழிக்கும் வாழ்வுமே நமக்குத் தேவை. இதற்கு விஞ்ஞானிகள் அனைவரும் தங்களாலான அனைத்தையும் செய்யவேண்டும்.

— ❋ —

ஒருவன் வசதியான நிலைமைக்கு வந்தவுடன் ஏற்கனவே தன்னை ஆதரித்தவர்கள் – பழைய நண்பர்கள் – ஆகியோரிடம் என்னென்ன குறைகள் இருக்கின்றன என்பதை ஆராயத் தவறுவதில்லை. முன்பு அவன் கண்ணை மூடிக்கொண்டு காணாதிருந்த குற்றங்களையெல்லாம் இப்பொழுது வரிசைப்படுத்தி பட்டியல் தயாரிக்கிறான். ஏனென்றால், அந்தப் பட்டியலை வைத்துத் தானே பழைய ஆதரவாளர்களையும் நண்பர்களையும் விலக்க வேண்டும்!

—வாவினர்கிஸ்

வரி சிறிதாக இருந்தால் அரசாங்கத்துக்குப் பொருள் பெரிதாகக் கிடைக்கும். சிறுதுளி பெரு வெள்ளம் என்ற உண்மையை வரி முறையில் காணலாம். வரி பெரிதானால், நாடு சீர் கேடடையும். இந்த மாபெரும் உண்மையைக் காட்டுவதுதான் பிசிராந்தையரின் பாட்டு:

# இறை வாங்கும் முறை

சங்க காலத் தமிழகத்தை ஆண்டு வந்த மிகச் சிறந்த அரசர்களுள் பாண்டியன் அறிவுடை நம்பி ஒருவனாவான். பாண்டிய மண்டலம் முழுவதும் அவன் ஆளுகையின் கீழ்க் கிடந்தது.

அவன் அறிவும் அழகும் ஒருங்கே வாய்க்கப் பெற்றிருந்தான். அவன் மிக்க அறிவுடையனாக இருந்த காரணத்தால் "அறிவுடை" என்ற அடைமொழியும், மிக்க அழகுடையவனாக இருந்த காரணத்தால் "நம்பி" என்ற பெயரும், அவனுக்கு இட்டு வழங்கப்பட்டன.

அவன் தீந்தமிழ்ச் செய்யுள் இயற்றும் புலமை மிக்கவனாகவும் திகழ்ந்தான். அவன் பாண்டிய மரபினைச் சார்ந்த அரசர் குடியில் தோன்றிய செம்மலாக இருந்த காரணத்தால், ஆண்மைத் திறத்திலும் சிறந்து விளங்கினான். இத்துணைச் சிறப்புகளோடு பொலிவுற்று விளங்கிய அறிவுடை நம்பியின் பெயரும் புகழும் தமிழகமெங்கணும் ஒளி வீசி நின்றன என்பதில் வியப்பொன்றுமில்லை.

அறிவுடை நம்பி கல்வி கேள்விகளில் வல்லவனாக இருந்தால், எப்பொழுதும் தமிழ்ப் புலவர் குழாம் புடைசூழ இருப்பதைப் பெரிதும் விரும்பி வாழ்ந்து வந்தான். அவனால் போற்றப்படக் கூடியவராகவும் அவனுக்கு அறிவுரை கூறக் கூடியவராகவும் இருந்த ஒரு சில புலவர்களிலே தலைசிறந்து விளங்கியவர் பிசிராந்தையார் ஆவார். அவர் பாண்டிய நாட்டைச் சேர்ந்த பிசிர் • என்ற ஊரில் வாழ்ந்த பெரும் புலவராவார். அவர் நிலபுலங்களையும், ஏவலாட்களையும் உடைய ஒரு பெரும் பண்ணையாராகவும் இருந்து வந்தார். அவர் பெரும்பாலும் பிசிர் என்ற ஊரிலேயே வாழ்ந்து வந்தார். எனினும்,ஓய்வும் ஒழிவும் ஏற்படும்போது, மதுரைமாநகர் சென்று அரசனையும், ஏனைய தமிழ்ப் புலவர்களையும் கண்டு அளவளாவி வருவது வழக்கம்.•

**நெறி தவறினான்:**

அறிவுடை நம்பி அறிவிற் சிறந்தவனாக இருந்த போதிலும், ஒழுக்கத்திலே நெறி தவறிய

வனுய்க் காட்சியளித்தான். அவன் காதல் மயக்கத்திற்கு அடிமையாகும் பண்புடையவனு கத் திகழ்ந்த காரணத்தாலும்; அவனது செல்வம், செல்வாக்கு, அழகு கண்டு அவனிடம் பல பெண்களும் காதல் கொண்ட காரணத்தாலும், அவனுக்குக் காதற்கிழத்திகள் பலர் நாளடைவில் ஏற்படலாயினர். அவன் அவர்கள் எல்லோரையும் தனித் தனி மாளிகையில் வைத்துக் காப்பாற்றி, அவர்களுக்குப் பெரும்பொருள் வழங்கவேண்டியிருந்ததோடு; அக்காதற்கிழத்திகளின் பெரும்பெருஞ் சுற்றத்தாரையும், அவர்கட்கு வேண்டும் பொருள் வழங்கிக் காப்பாற்ற வேண்டிய பெரும் பொறுப்புடையவனுகவும் இருந்து வந்தான். இதனல் அவனுக்குப் பெருஞ் செலவு ஏற்பட்டது. அவனது செல்வமெல்லாம் நாளுக்குநாள் கரைந்தது. அடிமையரசர்கள் செலுத்தும் கப்பமும், குடிமக்கள் செலுத்தும் வரிப்பணமும், அவனது விரிந்த செலவுக்குப் போதுமானவையாக இல்லாததால்; குடிமக்களிடமிருந்து பெறும் வரித்தொகையை மேலும் பெருக்க வேண்டியவனுனன்.

### புலவர் புறப்பட்டார்:

அரசனின் அறிவு, ஆற்றல் கண்டு மக்கள் எவ்வளவுக்கெவ்வளவு அவனைப் போற்றிப் புகழ்ந்தார்களோ, அவ்வளவுக்கவ்வளவு அவனது ஒழுக்கக்கேடான நிலைகண்டு அவனை அருவருக்கத் தலைப்பட்டார்கள். தடவைக்குத் தடவை தாம் செலுத்தும் வரித்தொகை உயர்ந்து கொண்டே போவது கண்டு குடிமக்கள் மிகவும் துயருற்றனர். நிலத்திலிருந்து கிடைக்கும் வருவாயில் பெரும் பகுதியை அரசனுக்குக்கொடுத்துவிட்டுச் சிறு பகுதியைத் தாம் வைத்துக்கொண்டு வாழவேண்டும் என்ற நெருக்கடி நிலை ஏற்பட்டபோது, குடிமக்கள் வாழும் வகை தெரியாது எங்கணும் வருந்தத் தொடங்கினர். இந்தக் குறையை அரசன் அறிவுடை நம்பியிடம் எப்படி எடுத்துச் சொல்வது என்று அஞ்சி உழவர் பெருமக்களும் நிலக்கிழார்களும் வாயடைத்துக் கிடந்தனர்.

நிலைமை தாங்க முடியாததாக ஆனபொழுது, உழுதுண்டு வாழும் குடிமக்கள் புலவர் பிசிராந்தையாரை அணுகித் தம் குறையை அறிவுடை நம்பியிடம் எடுத்துச் சொல்லி, மிகுவரி வாங்கும் கொடுமையை நீக்கவேண்டும் என்று கேட்டுக் கொண்டனர். பிசிராந்தையாரும் ஒரு பெரும் நிலக்கிழாராக இருந்த காரணத்தால் வரிக் கொடுமையை நன்கு உணர்ந்திருந்தார். நீதிக்குப் பாடு படவேண்டும் என்ற நேர்மையுள்ளமும், ஏழைக் குடிமக்களின் கண்ணீரைத் துடைக்கவேண்டும் என்ற கடமையுள்ளமும் தூண்ட; பிசிராந்தையார், மதுரைநகர் சென்று அறிவுடை நம்பியைப் பார்த்து, அவனை

இடித்துரைத்து அவனுக்கு அறிவுரை கூற வேண்டும் என்று எண்ணினார். அந்த எண்ணத்தோடு மதுரை நோக்கிச் சென்றார்.

**அரசனும் புலவரும்:**

பாண்டியன் அறிவுடை நம்பியின் நாளோலக்க மண்டபத்தில் பிசிராந்தையார் நுழைந்தவுடன், அறிவுடை நம்பி எழுந்து புலவரை வரவேற்று, வணக்கம் செலுத்தி, தனி இருக்கையில் இருக்கச் செய்து தானும் உட்கார்ந்தான். புலவர் வாய் திறவாமல் அப்படியே வீற்றிருந்தார்.

"புலவர் பெருமானே! ஏன் வாட்டமும் வருத்தமுமாக இருக்கிறீர்கள்?" என்று அரசன் வினவினான்.

"எல்லாம் உன்னால் ஏற்பட்ட விளைவுதான்!" என்று புலவர் சற்றுக் கடுகடுத்த முகத் தோற்றத்தோடு கூறினார்.

உடனே அரசன் திடுக்கிட்டுப் போய், "யான் செய்த பிழை என்ன?" என்று அச்சங் கலந்த குரலில் கேட்டான்.

"நீ செய்ய வேண்டியதெல்லாம் செய்துவிட்டு, என்ன பிழை செய்தேன் என்று கேட்கிறாய்? இனி நீ செய்யக் கூடிய பெரும் பிழை என்ன இருக்கிறது?" என்று புலவர் சினம் பொங்கக் கேட்டார்.

அரசன் நடுநடுங்கிப் போய் இருந்த இடத்தை விட்டு எழுந்து புலவரை நோக்கி வணங்கி நின்றான். "பிழை ஏதேனும் இருந்தால் மன்னிக்க வேண்டும்!" என்றான்.

"நீயோ ஒழுக்க நெறியினின்றும் தவறினாய்! கடமை நெறியை மீறினாய்! உன்னுடைய உயர்ந்த அறிவு, ஒழுக்க மேம்பாட்டைக் காப்பாற்றிக் கொள்ளவும், கடமை யுணர்ச்சியை நிலைநாட்டிக்கொள்ளவும் பயன்படவில்லையே!" என்று புலவர் சுட்டிக் காட்டினார்.

குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுத்த போதிலும், "பெருமைக்குரிய பெரியோரே! தாங்கள் எதைக் குறிப்பிடுகிறீர்கள் என்பது எனக்குப் புரியவில்லையே!" என்று அரசன் பணிந்து கேட்டான்.

"உன்னை இடித்துரைப்பார் யாரும் இங்கு இல்லாததால் உனக்கு எதுவும் புரியாதுதான்!" என்று புலவர் மறுமொழி பகர்ந்தார்.

"புலவர் பெருமானே! எனக்குப் புரியும்படி தாங்கள்தான் அறிவுறுத்த வேண்டும்!" என்று அரசன் தாழ்மையாய்க் கேட்டான்.

"நீ காதற் கிழத்திகளின் காம வலையில் சிக்கிச் சீரழிந்து கிடப்பதையும்; நீ நாள்தோறும் அக் காதற் கிழத்திகளின் தரம் தெரியாத ஆரவாரமிக்க சுற்றத்தார்களின் சொற்களைக் கேட்டுக் குடிமக்களின் அன்பு கெடும்படி, மிகவாக இறை (வரிப் பணம்) வாங்கும் நெறியற்ற

முறையையுந்தான் குறிப்பிடு கிறேன்!” என்று புலவர் கூறினார்.

புலவரால் இடித்துக் காட்ட வேண்டிய நிலைக்குத் தான் வந்து விட்டோமே என்பதை எண்ணி அரசன் நாணப்பட்டு, “சான்றோயே! என் பிழையெல்லாம் பொறுக்க வேண்டும்!” என்று கேட்டுக் கொண்டான்.

“நான் பொறுப்பது அல்ல முக்கியம்; நீ திருந்த வேண்டும் என்பதுதான் முக்கியம்!” என்று பிசிராந்தையார் கூறினார்.

“தாங்கள் சொல்லும் அறிவுரையின்படி இனி நடக்கிறேன்!” என்று கூறிக் கொண்டே அரசன் புலவரின் காலடியில் வீழ்ந்தான்.

நெறியறிந்து கொள்!

பிசிராந்தையார் சட்டென்று எழுந்து அரசனைத் தூக்கி நிறுத்தி; “முற்றிக் காய்ந்த நெல்லை அறுவடை செய்து காப்பாற்றி வைத்துக்கொண்டு, வாயளவு கொண்ட கவளம் கவளமாக அதனை யானைக்குக் கொடுத்துக் கொண்டு வந்தால்; ஒரு மாவுக்குக் குறைந்த நிலத்தில் விளைந்த குறைந்த அளவு நெல்லாக அது இருந்த போதிலும்; அது யானைக்குப் பல நாட்களுக்கு உதவக்கூடிய தீனியாக இருந்துவரும். ஆனால் யானை தானே வயலில் புகுந்து உணவு உண்ணத் தொடங்கினால், அந்த வயல் நூறுவேலி நிலப்பரப் புடையதாக இருந்தாலும் யானையின் வாயில் புகும் நெல்மணிகளைவிட, யானையின் காலில் பட்டுப் பாழ்படும் நெல்மணிகளின் அளவு ஏராளமானதாக இருக்கும் அல்லவா?” என்று புலவர் அரசனை நோக்கிக் கேட்டார்.

“ஆமாம்!” என்றான் அரசன்.

புலவர் மேலும் கூறும்போது: “அதுபோல, அறிவுடை வேந்தனாக இருக்கும் ஒருவன் வரி வாங்க வேண்டிய அரசு முறைப்படி வாங்கினால், அந்த முறை அவனுக்கு மிகுந்த பொருளை ஈட்டித் தருவதோடு, அவ்வரசனது நாட்டையும் தழைக்கச் செய்யும். ஆனால் அப்படிக்கில்லாமல் குடிமக்களின் அன்பு கெடும்படியாக வரி வாங்க முற்பட்டால், யானை புகுந்த வயல் போல குடி மக்களின் அமைதியான வாழ்வு சீர்குலையும்; யானையின் காலால் நெல்மணிகள் கெடுவதைப் போல, அரசனது கொடுமையால் குடிமக்களின் வரி கொடுக்கும் அன்புநிலை கெடும்; யானை எப்படித் தான் நெல்மணி உண்ண முடியாமற் போகிறதோ, அதுபோல நுகரமுடியாமற் போவான்; நெல் வயல் எப்படிப் பாழ்பட்டுப் போகுமோ, அதுபோலக் குடிமக்களும் பாழ்பட்டுப் போவர். இதனை நீ தெளிவாக உணர வேண்டும்!” என்று அறிவுறுத்தினார்.

“நான் செய்த பிழையெல்லாவற்றையும் மன்னிக்கவேண்டும்!

இனி ஒழுக்க நெறி தவறேன்! கடமை நெறி மீறேன்! இது உறுதி!" என்று அரசன் அறிவுடை நம்பி கூறப் பிசிராந்தையார் பெருமகிழ்வுற்றுத் தம்மூர் நோக்கித் திரும்பினார்.

❋ ❋ ❋

பெரும்புலவர் பிசிராந்தையார் புறநானூற்றுப் பாடலில் குறிப்பிட்டுள்ள உட்கருத்தைக் கொண்டு தீட்டப்பட்ட சொல்லோவியமே மேலே காணப்படுவதாகும்.

காய்நெல் அறுத்துக்
கவளம் கொளினே
மாநிறை(வு) இல்லதும்
பன்னாட்கு ஆகும்;
நூறுசெறு ஆயினும்
தமித்துப்புக்(கு) உணினே
வாய்புகு அதனினும்
கால்பெரிது கெடுக்கும்;
அறிவுடை வேந்தன்
நெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடு
பெரிது நந்தும்;
மெல்லியன் கிழவ
னாகி வைகலும்
வரிசை அறியாக்
கல்லென் சுற்றமொடு
பரிவுதப எடுக்கும்
பிண்டம் நச்சின்
யானை புக்க புலம்போலத்
தானும் உண்ணான்;
உலகமும் கெடுமே.

[புறநானூறு—184.]

[பொழிப்புரை: காய்ந்து முற்றிய நெல்லை அறுத்துக் கவளம் கவளமாகக் கொண்டால், ஒரு மாநிலத்துக்கும் குறைந்த நிலத்தில் விளைந்த நெல்லாக இருந்தாலும், அது யானைக்குப் பல நாட்களுக்குத் தீனியாக வரும். நூறு வேலி நிலமாக இருந்தாலும் யானை தானே புகுந்து உண்ணத் தொடங்கினால், யானையின் வாய்க்குள் புகும் நெல்லைக் காட்டிலும், யானையின் கால் மிகுதியான அளவு நெல்லைக் கெடுத்துப் போடும். அறிவுடைய அரசன் வரிவாங்கும் அரசு முறைப்படி வரியைக் கொண்டால், அந்த முறை மிகுந்த பொருளை ஈட்டித் தருவதோடு மட்டுமல்லாமல், நாட்டையும் பெருமளவுக்குத் தழைக்கச் செய்யும். காதற் கிழத்திகளுக்கு உரிமையுடையவனாகி, நாள் தோறும் தரம் அறியாத ஆரவாரம் மிக்க சுற்றத்தார்களின் தீய மொழி கேட்டு, மக்களின் அன்புகெட வாங்கும் வரிப் பணத்தை அரசன் விரும்புவானேயானால், அந்த முறையில், யானை புகுந்த வயல்போல, அவன் தானும் செல்வத்தின் பயனை நுகராதவனாக ஆவான்; குடிமக்களும் கெட்டுப் போவர்.

கவளம்-உணவுத் திரள்; மா-ஒரு மா, ஒரு வேலி நிலத்தில் இருபதில் ஒரு பங்கு; செறு-வயல்; நெறி-அரசு முறை; கோடி-மிகுந்தபொருள்; யாத்து-ஈட்டிக் கொடுத்து; நந்தும்-தழைக்கும்; மெல்லியல் கிழவன்-பெண் வழிச் சேர்ந்தவன்; வைகையிலும்-நாள் தோறும்; வரிசை-தரம்; கல்-ஆரவாரம்; பரிவு-அன்பு; தப-கெட; பிண்டம்-பொருள் தொகுதி, குவி

யல்; நச்சின்-விரும்பின்; புலம்—நிலம்.]

*புலவரின் செல்வாக்கு:*

பண்டைத் தமிழகத்தில் அறிவு சான்ற தமிழ்ப் பெரும் புலவர்கள் எவ்வளவு செல்வாக்குப் படைத்திருந்தனர் என்பதையும், நாடாளும் அரசன் தவறிய வழி, சிறிதும் அச்சங் கொள்ளாமல் அவனை எவ்வாறெல்லாம் இடித்துரைத்து அறிவு கொளுத்தினர் என்பதையும், நாட்டிற்கான நற்பணி புரிவதிலே அவர்கள் எவ்வளவு தணியா ஆர்வம் கொண்டிருந்தனர் என்பதையும், இச் செய்யுளின் மூலம் இனிது அறிந்து கொள்ளலாம்.

பிசிராந்தையார், வேறோர் புறநானூற்றுப் பாடலில், தமக்கு ஏவலாளர்கள் இருந்தனர் என்று குறிப்பிடுவதாலும், அரசன் இறை (நிலவரி) வாங்கவேண்டியதன் முறையை வற்புறுத்திக் கூறுவதாலும், மிக்க வரி வாங்குவதால் ஏற்படும் கொடுமையைச் சுட்டிக் காட்டுவதாலும், அவர் ஒரு பெருநிலக்கிழாராக வாழ்ந்தார் என்று கொள்ளுவதற்கு இடமிருக்கிறது. யானைக்குக் கவளம் கவளமாகத் தீனி போடுவதையும், யானை வயலில் புகுந்து தானே உண்ணுவதையும் அவர் உவமையாக்கி இச் செய்யுளில் கூறுவதிலிருந்து, அவர் யானை கட்டித் தீனிபோடும் அளவுக்குப் பெருநிலக்கிழாராக வாழ்ந்தார் என்று எண்ணுவது தவறாகாது.

இச் செய்யுளில் வந்துள்ள உவமை நயம் நினைந்து நினைந்து மகிழ்தற்குரியதாகும்.

புலவர், அரசனுக்கு அஞ்சாமல் அவனது குற்றத்தைச் சுட்டிக் காட்டி இடித்துரைக்கும் திறம், போற்றிப் பாராட்டுதற்குரியதாகும்.

---

## *சின்ன மீன்!*

ஒரு பெரியவரும், அவருடன் கூடவந்த சிறுவனும் சலூனில் புகுந்தனர்.

பெரியவருக்கு மயிர் வெட்டி முடிந்தவுடன், "பையனுக்கும் வெட்டிவிடு, இதோ வந்து விடுகிறேன்!" என்று சொல்லியபின் வெளியே சென்றார்.

கடைக்காரன் அவ்வாறே சிறுவனுக்கும் முடி வெட்டினான். வெகு நேரமாகியும் பெரியவர் திரும்பவில்லை. அவர் எப்பொழுது வருவாரென்று சிறுவனைக் கேட்டான்.

சிறுவன் கூறினான்: "எனக்குத் தெரியாது. "காசில்லாமல் முடிவெட்டிக் கொள்ள வருகிறாயா?" என்று கேட்டார். நான் சரியென்று அவருடன், வந்தேன்! எனக்கு வேறெதுவும் தெரியாது!"

# வானவெளி

**ந. சிதம்பரசுப்ரமண்யன்**

ஒரு நாள் ஒரு பையன் கடையிலே அழகானதொரு காலுறையைப் பார்த்தான். அதன் நிறம் அவன் கண்ணைக் கவர்ந்தது. அதை வாங்கிக் கொண்டு தன் தாயாரிடம் சென்றான். "அம்மா, உனக்கு ஒரு அன்பளிப்பு கொண்டுவந்திருக்கிறேன். உனக்குப் பிடித்திருக்கிறதா, பார்!" என்று அதைத் தாய்க்கு முன்பு நீட்டினான்

தாயார் பார்த்தாள், ஒரு நிமிஷம் முகம் மலர்ந்தது. மறு நிமிஷம், முகம் சிறிது சுருங்கியது. "மகனே, இது மிகவும் அழகாகத் தானிருக்கிறது. ஆனால் இந்த நிறத்தில் உள்ளதை நான் போட்டுக் கொண்டால், என்னைக் கேலி செய்வார்களே!" என்றாள்.

"ஏனம்மா அவர்கள் கேலி செய்வார்கள்? இது உயர்ந்த நீல நிறத்தில்தானே இருக்கிறது. இதைப் போல் நீலத்தை நீ அணிந்து கொண்டிருக்கிறாயே! அந்த தைரியத்தில்தான் நான் இதை வாங்கி வந்தேன்!" என்றான் பையன்.

"இல்லை அப்பா. இது நல்ல ரத்தச் சிவப்பாக அல்லவா இருக்கிறது!" இதைப் போய் நீலம் என்று சொல்லுகிறாயே!" என்று ஆச்சரியப்பட்டாள், தாயார்.

"இது என்னம்மா ஆச்சரியமாயிருக்கிறது! ஒரு சமயம் நான் பொடிக் கலரில் ஒரு கோட்டுத் தைத்துப் போட்டுக் கொண்டு போனேன். "இது என்னடா பச்சை நிறத்தில் கோட்டுப் போட்டு வந்திருக்கிறாய்!" என்று என் பள்ளி மாணவர்கள் பரிகாசம் செய்தார்கள்!" என்று ஆச்சரியப் பட்டான் பையன்...

இந்தப் பையன் தான் ஜான் டால்டன் என்ற பிரசித்தி பெற்ற விஞ்ஞானி. இரசாயனத்தையும், பௌதிகத்தையும் பிணைத்து, அணு சம்பந்தமான சில அரிய சாதனைகள் இரு நூறு வருஷங்களுக்கு முன்பே செய்து காட்டியவர். அவருக்கு நிறத்தைச் சரியாகக் கண்டு பிடிக்க முடியாத கோளாறு (Colour Blindness) இருந்தது. பிறருக்கு ஒரு நிறமாகத் தோன்றும் பொருள், இவருக்கு வேறு விதமாகத் தோன்றும்! அதனாலேயே அந்த வியாதிக்கே 'டால்டனிசம்' (Daltonism) என்ற பெயர் வரலாயிற்று.

### எது உண்மை?

ஒரு பொருள் ஒருவருக்கு ஒரு மாதிரியாகவும், மற்றவருக்கு வேறு மாதிரியாகவும் இருக்குமானால், அதில் எது உண்மை? எது உண்மையல்லாத தோற்றம்? ஒருக்கால், டால்டன் பார்த்தது தான் உண்மையான நிறமாகவும் மற்றவர்கள் கண்டதெல்லாம் போலி நிறமாகவும் இருந்திருக்கலாமல்லவா? ஒருவருக்கு ஒரு நிறமாக இருந்தது, பல பேருக்கு வேறு நிறமாக இருந்தது! என்று பெரும்பான்மை ஓட்டெடுத்து, அதனால், இதுதான் உண்மை, மற்றது சரியல்ல என்று முடிவு கட்ட முடியுமா? ஏன் அவர் ஒருவருக்குத் தோன்றியது உண்மை நிறமாகவும், மற்றவர்கள் கண்டது ஒருதினுசான கண்கோளாற்றினால் தோன்றிய நிறமாகவும் இருந்திருக்கலாம், அல்லவா?

### புலனறிவு?

இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்பு கிரேக்க நாட்டில் தோன்றிய ஞானியான, டெமாகிரிடஸ் (Democritus) என்பவர் சொன்ஞர்: "பச்சையும், சிவப்பும், இனிமையும், கசப்பும், உஷ்ணமும் சீதமும், ஒருவனுடைய அபிப்ராயங்களே தவிர, உண்மையானவையல்ல. பொருள்களின் மிகச் சிறிய துகள்களான அணுச்சாரம், சூன்ய வெளியில், அவ்வணுக்களின் இயக்கமுமே உண்மையானவை." அதாவது: வேற்றுமைகள், தன்மைகள் எல்லாம் புலன்களால் அறியப்பட்டு பேதங்களை உண்டு பண்ணுகின்றனவே ஒழிய, அறியப்படும் பொருளுக்கு இவ்வித பேதங்கள் இல்லை என்பதே அவர் கூற்று.

### மனத்தின் கற்பனை?

லீப்னிட்ஸ் (Liebnitz) என்ற ஜெர்மன் விஞ்ஞானி, இதைச் சிறிது விஸ்தரித்து விளக்கிஞர்: "நிறம், வெப்பம் முதலிய குணங்கள் மாத்திரமின்றி, பொருளின் உருவும், இயக்கமும் வெறும் தோற்றமே. இவை மனிதனுடைய புலன்களாலேயே அறியப்படுகின்றன. புலன் அறிவுக்கெட்டாதது பொருளே அல்ல. பொதுவாக, பொருள் என்று நாம் கூறுவது, பல குணங்களின் சேர்க்கை. இதை அறிவன புலன்கள். புலன்களை இயக்குவது மனம். ஆகவே, நமது மனம் தான் வெளிப் பொருளைப் பற்றிய குணங்களுக்கு ஆதாரம். அண்ட பிண்ட சராசரங்களாக விளங்கும் இப் பிரபஞ்சமே, மனத்தின் சிருஷ்டி. மனம் அறியா விட்டால் இப் பிரபஞ்சம் இல்லை!"

### மனத்தில் பதியும் எண்ணங்கள்?

மற்ருெரு தத்துவ ஞானியான பர்க்லியும் (Berkley) இதையே இன்னும் கொஞ்சம் அழுத்தமாகச் சொன்ஞர்: "நிறம், உரு, கனம், பரிமாணம், இதெல்லாம் நம் இந்திரியங்கள் மூலமாக மனத்தில் பதிவு செய்யப்படும் எண்ணங்கள். மனத்தையும் எண்ணத்தையும் தவிர வேறு ஒன்றுமே இல்லை!"

### புலனறிவும் உண்மையுருவும் வெவ்வேறு?

மற்ருெரு பெரிய ஞானியான காண்ட் (Kant) சொன்ஞர்: மனிதனல் அறியப்படுவன வெல்லாம் வெறும் தோற்றங்களே. அறியப்படும் பொருளுக்கும் தோற்றத்திற்கும் சம்பந்தம் கிடையாது. அறியப்படும் பொருளின் உண்மையான உருவத்தைப் புலன்களினல் அறிய முடியாது. நாம் எதை அறிந்து கொள்வதாக நினைக்கிறோமோ, அதனுடைய தோற்றம் (Phenomenon) வேறு, அதனுடைய உண்மை உருவம் (Noumenon) வேறு!" முதல் தடவையாக, இது வேறு அது வேறு என்று பிரித்துத் தெளிவு படுத்திக் காட்டிஞர்.

### சங்கரர் தத்துவம்:

ஆனல், அதற்கு மேலும் சென்று, அற்புதமான தத்துவத்தை நிலைநாட்டி யிருக்கிருர் ஆதிசங்கரர். அவருடைய மிகவும் பிரசித்தமான "பாம்பும் கயிறும்" என்ற உதாரணத்தையே பார்க்கலாம். பாம்பு என்று நினைத்ததனல், உடல் நடுங்கி, வியர்த்துக் கொட்டி நெஞ்சம் படபடத்துப் பதைக்கிறது. ஆனல், வெளிச்சத்தைக் கொண்டு வந்து பார்த்தவுடன், "சே! வெறும் கயிறு! இதற்குத் தானு இவ்வளவு நடுங்கிப் போய் விட்டேன்!" என்று நாமே ஆச்சரியப்படுகிறோம். இப்பொழுது, எது உண்மை? ஒரு சமயம் பாம்பாகத் தோன்றியது, மற்ருெரு சமயம் கயிருகத் தோற்றமளிக்கிறது!

அந்தப் பொருள் பாம்பா அல்லது கயிறு என்றால், இரண்டும் தான் என்கிறார் நம் லோக குரு. இது தான் "ஸத்அஸத் விலக்ஷணம்" என்கிறார். எப்படி?...

பாம்பு என்று பயந்ததும்; வியர்த்துக் கொட்டியதும்; உடல் நடுங்கியதும், உண்மையான அனுபவங்கள். வெறும் கயிற்றைக் கண்டு, நெஞ்சம் படபடக்காது, உடல் நடுங்காது. நமக்குப் பயத்தைக் கொடுத்து நடுக்க வைத்த வரையில், அது வெறும் கயிறல்ல. பாம்பே தான். ஆனால் உண்மை ஞானம் வந்தவுடன், உண்மை தெரிந்தவுடன், அது வெறும் கயிறாக இருக்கிறது. அது பாம்பேயல்ல, கயிறு தான், என்று நம் புத்திக்கு நன்றாகப் புலப்பட்டு விடுகிறது. 'இது பாம்பே அல்ல! கயிறுதான்! கயிறுதான்!' என்று எத்தனை தரம் வேண்டுமானாலும் சாதிக்கத் தயாராயிருக்கிறோம். இதன் உண்மைத் தத்துவம்தான் என்ன? பாம்பு கயிறாக மாற வில்லை. கயிறு பாம்பாகவும் மாறவில்லை. கயிறுகயிறாகவே தான் ஆதியிலும், மத்தியிலும், சுற்றத்திலும் இருக்கிறது. ஆயினும், கயிற்றை ஆதாரமாக, இருப்பிடமாக வைத்து, ஒரு பொய்யான பாம்பின் தோற்றம் ஏற்படுகிறது. பாம்புக்குக் கயிறு ஆதாரம், உறைவிடம். அது போலவே, உலகம் என்றதொரு மாயத்தோற்றம் பரம் பொருளின் அதிஷ்டானத்தில் உறைந்து கிடக்கிறது!

### மூலனின் யானை!

திருமூலர், இந்தத்தத்துவத்தை வெகு அழகாக ஒரு பாட்டில் வெளியிட்டிருக்கிறார்:

மரத்தை மறைத்தது
மாமத யானை
மரத்தில் மறைந்தது
மாமத யானை!
பரத்தை மறைத்தது
பார்முதல் பூதம்!
பரத்தில் மறைந்தது
பார்முதல் பூதம்!

ஒரு குழந்தையிடம் ஒரு பொம்மையைக் காட்டி "இதுஎன்ன?" என்று கேட்டால், "இது யானை" என்று சொல்லி அந்தப் பொம்மையைப் பிடுங்கிக் கொள்ளப் பார்க்கும். ஆனால் தச்சர் ஒருவர் வந்து பார்க்கும்பொழுது, "ஆகா! இது நல்ல கருங்காலி மரம் அல்லவா! வேலைப்பாடுரொம்ப நேர்த்தியாக இருக்கிறதே!" என்று மரத்தைத் தடவிப்பார்ப்பார். ஒருவர் யானையைப் பார்க்கிறார். மற்றொருவர் மரத்தைப் பார்க்கிறார். ஒன்றிலே ஒன்று மறைந்து கிடக்கிறது. ஒன்றை மற்றொன்று மறைக்கிறது. அது போலவே, உண்மைப் பொருளான பரம் பொருள், பார் முதலான பஞ்ச பூதங்களிலும் மறைந்து கிடக்கின்றது.

### பெற்ற மகனும், கனவு மகன்களும்:

இராமகிருஷ்ண பரமஹம்ஸர், உலக வாழ்வின் மாயத் தோற்றத்தைப் பற்றி அழகானதொரு கதை சொல்கிறார். ஓர் ஊரில், குடியானவன் ஒருவன் இருந்தான். அவன் நல்ல ஞானி. அவனுக்கு ஒரே மகன். செல்வமாக அந்த மகனைப் பாதுகாத்து வந்தான். ஒரு நாள் வயலில் வேலை செய்து கொண்டிருக்கும் போது மகன் இறந்து விட்டதாக அவனிடம் தகவல் வந்து சொன்னார்கள். வீட்டிற்குப் போனான். அங்கே மனைவியும் உறவினர்களும், துக்கத்தால் கதறிக் கொண்டிருந்தார்கள். அவர்களைத் தேற்றிவிட்டுத்

திரும்பவும் வேலைக்குச் சென்றான். இரவில் வீட்டிற்குத் திரும்பிய போதும், அவன் மனைவி அழுது கொண்டிருந்தாள்; அவளை மீண்டும் தேற்ற ஆரம்பித்தான். அவள்கோபத்துடன், "நீ, என்ன மனிதனா! உன் மனம் என்ன கல்லா! இறந்து போன உன்குழந்தைக்காக ஒரு பொட்டுக் கண்ணீர் விடாமல் என்னைத் தேற்ற வேறு வந்து விட்டாயே!" என்று மனக் கசப்போடு கடிந்து கொண்டாள். அவன் நிதானமாகச்சொன்னான்: "நான் ஏன் கண்ணீர்விட வில்லை தெரியுமா? நேற்று ஒரு கனவு கண்டேன். அதில் நான் ஒரு ராஜாவாக இருப்பதாகக் கண்டேன். எனக்கு எட்டுப் புதல்வர்கள் இருந்தார்கள். வாழ்க்கை சந்தோஷமாயிருந்தது. திடீரென விழித்துக் கொண்டேன். இப்பொழுது எனக்குள்ள பிரச்சினை, இழந்த ஒரு புதல்வனுக்காக வருத்தப்படுவதா, புதிதாகக் கிடைத்த எட்டுப் புதல்வர்களுக்காகச் சந்தோஷப் படுவதா, என்பது தான்!" என்றான். வாழ்க்கை என்பதும் கனவைப் போன்றதொரு நிலைதான் என்பதை அறிந்த ஞானி அவன். தூக்கம், கனவு, விழிப்பு என்பதைக் கடந்த ஒரு பரம நிலைதான் உண்மை நிலை என்பதையும் அறிந்து கொண்ட ஞானி அவன், அதனால்தான் அவன் துக்கத்தைக் கடந்தவனாக இருந்தான்.

**விஞ்ஞானப் பாதையில்:**

நாம் பார்க்கும் இந்தப் பிரபஞ்சமும் வாழ்க்கையும், தோற்றமா அல்லது உண்மைப் பொருள் தானா:— என்ற தத்துவஞானிகளின் விவகாரத்தை விட்டுவிட்டு விஞ்ஞானம் என்ற பூதக் கண்ணாடியைக் கொண்டு, இந்தப் பிரபஞ்சத்தைப் பார்க்கலாம். பூதக் கண்ணாடியும், தூரதிருஷ்டிக்கண்ணாடியும், மனிதனுடைய கண் பார்வையைப் பெருக்கி, புத்தியையே திகைக்க வைக்கிறது. வானவெளியும், இப்பிரபஞ்சமும், நட்சத்திர மண்டலமும், நம் கற்பனையையே திணற வைக்கின்றன. இப் பிரமாண்டமான பிரபஞ்சத்தின் முன்னே, ஆறடிக்கும் குறைவாயுள்ள மனிதன் எம்மாத்திரம்! மனித அறிவோ இப்பூமண்டலத்தையே பிளந்து கொண்டு போகிறதல்லவா. அதுவும் ஓர் ஆச்சரியந்தானே.

**பிரபஞ்சச் சக்கரம்!**

வானவெளியை அண்ணாந்து பார்த்தால், லட்சக்கணக்கான நட்சத்திரங்கள் தெரிகின்றனவல்லவா. அவை ஒவ்வொன்றும் ஒரு சூரியன்! ஒவ்வொன்றைச் சுற்றியும் பல்வேறு கிரகங்கள்! நம் கண்ணுக்குத் தெரியாத எத்தனையோ நட்சத்திர மண்டலங்கள்! இந்தப் பிரபஞ்சமானது ஒரு வண்டிச் சக்கரம் போல அமைந்திருக்கிறதாம்! நம் சூரிய மண்டலம், இந்தப் பிரபஞ்ச வெளியிலே ஓர் ஓரமாக அமைந்திருக்கிறதாம்!

**ஒளி வருஷம்:**

நம் நட்சத்திர மண்டலத்திற்கு அருகிலுள்ள அண்ட்ரோமிடா (Andromeda) என்றதொரு மண்டலம் 1500000 ஒளிவருஷ தூரத்தில் உள்ளது. வான சாங்குரத்தில், எல்லைகள் நம் பூமியில் உள்ளனவற்றைப் போல நமதுகணக்குக்கு உட்பட்டு வருவனவல்ல. பூமியிலிருந்து சூரியன் 93,000,000 மைல் தூரத்தில் உள்ளது. பூமிக்கு மிக அருகிலுள்ள நட்சத்திரம் என்பது 25,110,000,000,000, மைல் தூரத்தில் உள்ளது. இவ்வாறு, பூமிக்கு வெகு தூரத்திலுள்ள நட்சத்திரங்களைச் சொல்வதே, நாம் வழக்கத்தில் உபயோகித்துவரும் அளவுகளால் முடியாது. எனவே,

வெளிப் பிரதேசத்திலுள்ள நட்சத்திரங்களின் தூரத்தைச் சொல்வதற்கு "ஒளி வருஷம்" என்றதொரு அளவை உபயோகித்து வருகிறார்கள். அது பின்வருமாறு கணக்கிடப் பெற்று வருகிறது.— சூரிய ஒளியின் வேகம் ஒரு விநாடிக்கு 186271 மைல்கள். சூரியனிலிருந்து புறப்பட்ட ஒளி பூமிக்கு வந்து சேர 8 நிமிடங்கள் ஆகின்றன. இந்த ஒளி ஒரு வருஷத்தில் எவ்வளவு தூரம் செல்லும்? சூரிய ஒளி 63290 தடவைகள் எவ்வளவு தூரம் போகுமோ, அந்த அளவு தான் ஒளி வருஷம் என்ற தூரத்தின் எண்ணிக்கை. அதாவது $186271 \times 63290$ தூரம் மைல்கள் போனால், ஒரு ஒளி வருஷ தூரத்தை அடையலாம். பல நட்சத்திரங்கள் எத்தனையோ லட்சத்திற்கு மேலான ஒளிவருஷ தூரத்தில் இருக்கின்றனவென்று சொல்லும்பொழுது, இப் பிரபஞ்சத்தின் பரப்பு நம் கற்பனையைத் தாண்டி வெகு தூரம் போய் விடுகிறது. ஆனால், இந்த நட்சத்திரங்கள், கிரகங்கள் எல்லாம் ஒருவிதக் கட்டுப்பாட்டுக்கு (Cosmological Principle) உள்ளடங்கித்தான் இருக்கின்றன.

### பிரபஞ்சம் விரிகிறது?

தவிரவும், இந்தப் பிரபஞ்சம் பெரிதாகிக் கொண்டே வருகிறதாம்! பிரபஞ்சத்தை ஒரு பலூன் என்று வைத்துக் கொள்வோம். அதில் புள்ளிகள் வைத்து, அவை நட்சத்திரங்கள் என்று வைத்துக் கொள்வோம். பலூனை ஊதும் பொழுது, அதன் பரிமாணம் பெருகுகிறது. அது போலவே, இப்பிரபஞ்சத்தின் பரிமாணமும் விரிவடைகிறது என்று சொல்கிறார்கள்.

### இரண்டு கருத்துக்கள்

பிரபஞ்சத்தைப் பற்றி இரண்டு வித அபிப்ராயங்கள் இருந்து வருகின்றன. ஒன்று: முதலில், உருண்டு திரண்டு கனமான பொருளாக ஒன்று இருந்தது. அது எக் காரணத்தினாலோ பிளந்து சிதறியது. சிதறிச்சிந்திய பொருள்களே இந்த நட்சத்திர மண்டலம். இரண்டாவது கொள்கை: "தொடர் சிருஷ்டி" (Continual Creation) என்பது. பிரபஞ்சத்தின் மையத்திலிருந்து, ஒரு நட்சத்திர மண்டலம் சிறிது விலகி நகரும் பொழுது, அது இருந்த இடத்தின் கனம் குறைகிறது. கனம் குறையும் பொழுது, அங்கு ஜலவாயு (Hydrogen) உண்டாகிறது. ஜலவாயுதான் நட்சத்திரங்களின் மூலப்பொருள். இந்த ஜலவாயு, சிறிது சிறிதாகப் பெருகி, மற்றப் பொருள்களுடன் கலந்து, ஒரு சிறிய நட்சத்திர மண்டலத்தை உண்டாக்கி வைக்கிறது...

### மகத்தான நாடகம்!

ஒரு பலூன், காற்று அதிகமாகும்பொழுது வீங்கியும், குறையும் பொழுது சுருங்கியும் மாறுவது போலவே, பிரபஞ்சத்திலும் பழைய நட்சத்திரக் கூட்டங்கள் கழிந்து கொண்டும், புதிய நட்சத்திரக் கூட்டங்கள் புகுந்து கொண்டும் பிரபஞ்சத்தை மாற்றிக் கொண்டே போகின்றன. ஆக்கமும், அழிவும் முடிவில்லாமல் நடந்து கொண்டே இருக்கின்றன. ஒளியும், இருளும், தட்பமும்வெட்பமும், உருவும் அருவும், இந்த நாடகத்திற்கு ஜோடனைகளாக ஆகின்றன. இப்படிப் பட்ட ஒருமகத்தான நாடகத்தை, "உலகம் யாவையும் தாம்உள ஆக்கலும் நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா" அலகிலா விளையாட்டாகவும், பிரமிப்பூட்டும் ஜாலவித்தையாகவும் பார்ப்பதில் ஆச்சரியமில்லை யல்லவா!

**பரிபூரண ஆனந்தம்:**

இந்தஅற்புதஜாலவித்தையைத் தான், கவிஞராகவும் யோகியாராகவும், ஜீவன் முக்தராகவுமிருந்த தாயுமானவப் பெருமான்,—

மண்டலத்தின் மிசையொருவன்
செய்வித்தை அசோவெனவும்
வாரணுதி

அண்டமவை அடுக்கடுக்காய்
அந்தரத்தில் நிறுத்து மவ
தானம் போல

எண்தரும் நல் அகிலாண்ட
கோடியைத்தன் அருள்
வெளியில் இலக வைத்துக்

கொண்டு நின்ற அற்புதத்தை
எவராலும் நிச்சயிக்கக்
கூடா ஒன்றை—,

...கண்டு, பரிபூரண ஆனந்தத்தைக் கொண்டார்.

வானவெளியிலே நீந்தி நட்சத்திரங்களுடன் உறவு கொண்டாடும் யாருக்குத்தான் இந்த ஆனந்தம் வராமல் போகும்!

— ❋ —

## சப்ளையரின் "ரகசியம்"

சினிமா உலகின் தலைநகரான ஹாலிவுட்டிற்கு அருகில் "விக்டர் ஹூகோ" என்ற ஒரு பிரசித்தி பெற்ற ஓட்டல் இருக்கிறது.

இந்த ஓட்டலுக்கு பிரபல சினிமா நட்சத்திரங்கள், ஆசிரியர்கள், அரசியல் வாதிகள் அடிக்கடி விருந்துண்ண வருவார்கள். அவர்கள் எல்லோருமே, குறிப்பிட்ட ஒரு சப்ளையரின் திறமையைப் பற்றிப் பிரமாதமாகப் புகழ்ந்து பேசுவார்கள்.

ஏக காலத்தில் எத்தனை பேர் ஆர்டர் கொடுத்தாலும் அந்த சப்ளையர் சிறிதும் தயங்குவதில்லை!

அவன் ஒவ்வொருவரிடமும் சென்று என்ன வேணுமென்று மிகப் பணிவுடன் கேட்பான். அவரவரும் தங்களுக்கு வேண்டியதைக் கூறுவார்கள். அவன் எதையும் காகிதத்தில் குறித்துக் கொள்ள மாட்டான். பதினைந்து—இருபது பேர்களிடம் இவ்வாறு ஆர்டர் வாங்கிக் கொண்ட பிறகு உள்ளே செல்வான்.

சிறிது நேரத்தில் ஒவ்வொருவர் எதிரிலும் அவரவர் கேட்ட உணவு வகைகள் வைக்கப்படும்! ஒரு அயிட்டம் கூடத் தவறுமல் வைக்கப்படும்! சப்ளையரின் ஞாபக சக்தியை எல்லோரும் பாராட்டுவார்கள்!

"இவ்வளவு ஆர்டர்களையும் எப்படி ஞாபகத்தில் வைத்துக் கொள்கிருய்?" என்று கேட்பார்கள். அவன் சிரித்துக் கொள்வானேதவிர, பதில் கூற மாட்டான்.

சப்ளையரின் ஞாபக சக்திக்குக் காரணம் என்ன தெரியுமா? அவன் தனது சட்டைப் பைக்குள் ஒரு சிறிய "டேப்ரிகார்டர்" வைத்திருக்கிருன்! இந்த இரகசியத்தை அவன் யாரிடமும் சொல்வதில்லை!

ஜாதகா கதை 3:

# உழைப்பால் உயர்ந்தவன்

உண்மையும் உழைப்பும் ஒன்று சேர்ந்தால் எவ்வளவு பயன் கிடைக்கும்! புத்தர் ஜாதகக் கதைகளிலே ஒரு சிறுவன் பெருஞ் செல்வனை வரலாற்றை விளக்கும் இந்தக் கதை மிகவும் அற்புதமான கதை. வாழ்க்கையில் அனுசரிக்க வேண்டிய பலஉண்மைகளை விளக்குகிறது இது.

ஏ. வி. ஜயச்சந்திரன், எம். ஏ., பி. எல்.

கந்தன் ஒரு நாள் கடை வீதி வழியாகப் போய்க் கொண்டிருந்தான். திரண்டு பழுத்த ஒரு சாத்துக்குடி பழம் தெருவிலே கிடந்தது. அதைக் கையில் எடுத்துக்கொண்டு அக்கம் பக்கம் பார்த்தான். ஒருவரும் அங்கே காணவில்லை. இந்தப் பழத்தை யார் இங்கேபோட்டுப் போயிருக்க வேண்டும் என்று கந்தன் யோசித்தான்.

அந்தச் சமயத்தில் ஒரு முதியவர் அந்த வழியே வந்தார். கந்தன், அவரைப் பார்த்து, "ஐயா, யாரோ ஒருவர் இங்கே இந்தப் பழத்தைப் போட்டுவிட்டுப் போய் விட்டார்! இதை நான் என்ன செய்வது என்று தெரியவில்லை!" என்முன்.

பெரியவர் கந்தனின் நேர்மையையும், புத்திசாலித் தனத்தையும், தைரியத்தையும் கண்டு மனம் மகிழ்ந்தார். "அப்பா, இந்த பழத்தை யாரிடமாவது விற்று விட்டு, அந்தப் பணத்தில் நீ வியாபாரம் செய்!" என்றார். அவரை வணங்கினன் கந்தன்.

சாத்துக்குடிப் பழத்தை ஒரு பழக் கடைக்காரனிடம் விற்முன். அவனுக்கு நான்கணு கிடைத்தது. மட்டற்ற மகிழ்ச்சியுடன் சந்தைக்குச் சென்முன். பெரியவர் வார்த்தைகளைப் பின் பற்றி நடக்க வேண்டும், ஏழைத் தாயைக் காப்பாற்ற வேண்டும், தானும் படிப்பில் முன்னேற வேண்டும், என்ற ஒரே துடிப்பு அவனைச் செயலில் உந்தியது.

அவன் கையில் இருந்த நான் கணுவுக்கு வெட்டிவேர் வாங்கினன். வீட்டிற்குப் போய் பெரிய பாத்திரம் ஒன்றை எடுத்து,நன்ருகத் துலக்கி,அதில் வடிக்கட்டின குடி நீரை நிரப்பினன். வெட்டிவேரை அதில் போட்டு, பாத்திரத்தை மூடிச்

சாலையோரமாக வைத்துக் கொண்டான்.

அந்த வழியே பலர் சென்றனர். வெயிலின் கடுமை தாங்காது நடந்துகொண்டிருந்தனர். கந்தனின் நீர் வழங்கும் மரத்தடியில் சற்று இளைப்பாறினர். "பையா! எனக்குக் கொஞ்சம் தண்ணீர் கொடு!" என்றனர்.

கந்தன் கொடுத்த வெட்டிவேர் ஊறிய குளிர்ந்த தண்ணீர் அவர்கள் தாகத்தைத் தணித்தது. அவர்கள் உடல், உள்ளம் எல்லாம் குளிர்ந்தது. கந்தனுக்குக் காசு தந்தனர். அவன் காசை மறுத்து விட்டான். ஆகவே, கந்தனுக்கு அவர்கள் தாம் விற்பதற்குக் கொண்டு போகும் பொருள்களைப் பரிசாக வழங்கினர்.

சாயுங்காலத்திற்குள் தனக்குக் கிடைத்த பரிசுகளைப் பார்த்து ஆச்சரியப்பட்டான் கந்தன். விளையாட்டுப் பொம்மைகள், சீப்பு, கண்ணாடி, முதலிய எல்லா வகைச் சாமான்களும் இருந்தன. அவற்றை அப்படியே கடைத் தெருவுக்குக் கொண்டு போய் விற்றான். கிடைத்த தொகையைக் கண்டதும் பிரமித்துவிட்டான். நான்கணாவுடன் காலையில் கடையை ஆரம்பித்த அவனுக்கு ஏழு ரூபாய் கிடைத்தது சாயுங்காலத்தில்!

அடுத்த நாள் கந்தன், வெல்லம், ஏலக்காய், பெரிய பானை, வெட்டிவேர் எல்லாம் வாங்கி, நிறையப் பானகம் காய்ச்சி, கடையை வைத்தான் மரத்தடியில். இப்படி, கந்தன் ஒரு மாத காலம் கடை வியாபாரம் நடத்தினான். நூறு ரூபாய் பணம் சேர்ந்தது.

மழைக்காலம் வந்து விட்டதால், அவன் கடைக்குக் கூட்டம் வருவதில்லை. ஒரு நாள், பெரும் புயலால் பல மரங்கள் முறிந்து விழுந்தன. அவன் வசிக்கும் இடத்திற்கு அருகே ஒரு பெரிய சரக்கொன்றை மரம் வேரோடு சாய்ந்தது.

வீட்டுக்காரர் மரங்களை அகற்றிவிட வேண்டும் என்று துடித்தார். கந்தன் அவரைச் சென்று பார்த்தான். "ஐயா, நான் மரங்களை அப்புறப்படுத்தி விடுகிறேன். அதற்குக் கூலியாக அந்த மரங்களை எனக்குத் தருவீர்களா?" என்றான். வீட்டுக்காரரோ, மரங்கள் போனால் போதும் என்ற ஆத்திரத்தில், சரி என்றார்.

அன்று மாலை கந்தன் அருகாமையில் இருக்கும் பள்ளிக்கூடத்திற்குச் சென்றான். மாணவமாணவிகளைப்பார்த்துத் "தம்பி தங்கைகளே! உங்களுக்கு நிறைய சரக்கொன்றைப் பூ தருகிறேன். இலவசமாக நீங்கள் பறித்துக் கொள்ளலாம் ஆனால் ஒரு நிபந்தனை, பூ இருக்கும் கிளையில் உள்ள இலைகளையும் எடுத்துப்போக வேண்டும்!" என்றான். எல்லாப் பிள்ளைகளும் சரி என்றனர்.

குழந்தைகள் அத்தனை பேரும் அந்த வீட்டிற்குச் சென்றனர்.

பூவும், கிளையிலுள்ள இலையும் பறந்தோடின.

இதற்குள் கந்தன் விறகுக் கடைக்குச் சென்று, அடுப்பு எரிக்கச் சுள்ளி விறகு நிறைய தருவதாகச் சொல்லி, அதற்கு வேண்டிய விலையும் பேசிவிட்டான். விறகு வியாபாரி, தானே ஆட்களை அனுப்பி வெட்டிப் போவதாக ஒத்துக் கொண்டான்.

இரண்டு நாளில் கந்தன் மரங்களை அப்புறப்படுத்தி விட்டான். அந்த வீட்டுக்காரர் கந்தனின் சாமர்த்தியத்தை மெச்சி இருபது ரூபாய் பரிசு வழங்கினார். விறகு விற்ற பணத்தையும் சேர்த்து, கந்தன் ரூபாய் இருநூறு சேர்த்துவிட்டான்!

பணம் சேர்ந்தாலும் அவன் குணம் மாறவில்லை. மீண்டும் பானகத்தை எடுத்துக்கொண்டு, வயலில் வேலை செய்வோருக்கு அதை வழங்கினான். அவர்கள் தங்களுக்குக் கிடைத்த புல் கட்டுகளை அவனுக்குத் தந்தனர்: அந்த புல் கட்டுகளை விற்று, கந்தன் மேலும் பணம் சம்பாதித்தான்.

இப்படி, கந்தன் பலரை நண்பராக்கிக் கொண்டான், தன் திறமையால்.

ஒரு சமயம் துறைமுகத்தில் இருக்கும் ஒருவர், "கந்தா இன்னும் இரண்டு நாட்களுக்குள் இந்தத் துறைமுகத்தில் 500 குதிரைகள் 'வருகின்றன" என்று தகவல் தந்தார். கந்தன் உடனே புல் விற்கும் வியாபாரிகளிடம் சென்று, "ஐயா 500 கட்டு புல் எனக்கு வேண்டும், தருவீர்களா?" என்றான். அவர்களும் அதற்கு ஒத்துக் கொண்டனர்.

கந்தன், "ஐயா, நான் ஒரு நிபந்தனையுடன்தான் இந்தப் புல் கட்டுகளை எடுத்துக் கொள்ள முடியும்!" என்றான். அதற்கும் அவர்கள் ஒப்புக் கொண்டனர்.

"ஐயா நாளை கழித்த மறு நாள் என்னிடம் இருக்கும் புல் கட்டுகள் அவ்வளவும் சிலவான பிறகுதான் நீங்கள் புல் விற்க வேண்டும்!" என்றான் கந்தன்.

அவர்கள் சிரித்தனர். "இந்தப் பையன் எங்கே ஒரே நாளில் 500 கட்டுகளை விற்கப் போகிறான் என்று நினைத்து, "சரி" என்றனர்.

குறித்த நாளில் குதிரைகள் வந்தன. யாரும் குதிரை வியாபாரிக்குப் புல் விற்க மறுத்தனர். அந்த வியாபாரி கந்தனிடம் 500 கட்டுகள் புல்லை கந்தன் கூறின விலைக்குத்தான் வாங்க வேண்டி வந்தது. கந்தனின் வியாபார சாமர்த்தியத்தைப் பலர் புகழ்ந்தனர்.

மற்றொரு நாள், கந்தனுக்கு, துறைமுகத்திலிருந்து இன்னுமொரு செய்தி கிடைத்தது,— ஒரு பெரிய கப்பல் நிறையப் பொருள் வருவதாக.

உடனே, கந்தன் முதலில் துறைமுகத்தின் அதிகாரிகளையும், அப்பால் முதலாளிகளையும்

அனுகி, அவ்வளவு சாமான்களை யும் தானே வாங்குவதாகக்கூறி, முன் பணமாக ரூ. 1000 அவர்களிடம் கொடுத்தான்.

கப்பல் துறைமுகத்தை அடைந்தது. பல வியாபாரிகள் துறைமுகத்திற்கு வந்தனர். ஆனல் ஏமாற்றமடைந்தனர். மற்ருெரு பெரிய வியாபாரி அவ்வளவு சாமான்களையும் வாங்கி விட்டார் என்று கேள்விப்பட்டு, அந்தப் பெரிய வியாபாரி யார் என்று தெரிந்துகொள்ள முனைந்தனர்.

கந்தன் ஏற்கனவே சிலரிடம் கப்பல் வந்து சேரும் நாளில் என்ன என்ன செய்யவேண்டும் என்று சொல்லி வைத்திருந்தான். அன்று தான் ஒரு தனி அறையில் இருக்கப் போவதாகவும்; சாமான்கள் வாங்கும் வியாபாரிகள் வந்தால், மூவர் மூவராகத்தான் பார்க்கப் போவதாகவும்; அவர்களை உள்ளே அனுப்ப ஒரு வேலைக்காரனை அமர்த்தப் போவதாகவும் கூறியிருந்தான்.

அதன்படியே ஏமாந்த அத்தனை வியாபாரிகளும், கந்தனை மூவர் மூவராகச் சந்தித்தனர். கந்தன் அவர்களுடன் தரகு, பேசி; தான் விலை பேசிய பங்குத் தொகையும், ஒவ்வொரு வியாபாரியிடமிருந்தும் தலா ரூபாய்ஆயிரம் தரகுப் பணமும், பெற்றுக் கொண்டான்.

கந்தன் இன்று ஒரு பெரிய செல்வந்தனுகி விட்டான். தன் திறமையால் ஒரு லட்சம் பணம் சேர்த்துவிட்டான்.

அந்தப் பணத்துடன் தன் வீட்டிற்குச் சென்ருன். தாயின் காலில் விழுந்து வணங்கினுன். பிறகு, தனக்கு முதலில் வாழ்த்துக் கூறிய, வழி வகுத்த முதியவரைத் தேடிச் சென்ருன். அந்தப் பெரியவருக்கு முடி வணங்கி, "ஐயா! தாங்கள் கூறிய யோசனையால்தான் நான் இன்று ஒரு பெரிய செல்வந்தனுக ஆனேன். ஆகவே, இந்தப் பணம் உங்களைத்தான் சார்ந்தது!" என்ருன். முதியவர் புளகாங்கிதம் அடைந்து, கந்தனை வாழ்த்தினுர். தன்னுடைய பெண்ணையும் அவனுக்குத் திருமணம் செய்து தந்தார்.

—※—

## குற்றமும் தண்டனையும்

நம்பிக்கை யுள்ளவர்கள் குற்றம் செய்தால் அவர்களைத் தண்டித்துத் திருத்த முயல்கிருர் இறைவன். நம்பிக்கை யில்லாதவர்கள் எப்படிப் போனுலும் அதைப் பற்றி அவர் கவலைப் படுவதில்லை. நம்பிக்கையுள்ளவர்கள் துன்பமடைவதற்கு இது தான் காரணம்.

—யங்லேட்

கூத்திலே வரும் கோமாளி சிரிக்கச் செய்வான். சிரிப்பு மூட்டும் அவனே, சிந்திக்கவும் வைத்துவிட்டால், உலகம் சீர்திருந்திவிடும்.

ஜய பேரிகைக் கோமாளியும் சீர்திருத்த வாதியாகத் தான் இருக்கிறான்.

நாடகத்துக்குள்ளே ஒரு நாடகமாக வருகிறது இந்தக் காட்சி.

# "ஜயபேரிகை"

R. பார்த்தசாரதி

[சங்கரபுரத்தில் மிட்டாதார் நல்ல சிவம் பிள்ளை மனை. நல்ல சிவம் பிள்ளை நடு அறையில், ஊஞ்சலில், வெற்றிலை பாக்கு போட்டுக் கொண்டு உல்லாசமாக உட்கார்ந்திருக்கிறார். அவர் மகள், பட்டணத்தில் கலாசாலை மாணவி சாரதா: ஊருக்கு வருஷப் பிறப்புக்கு வந்திருக்கிறாள்; உள்ளே அவள் அம்மா அடுக்களையில் வேலையாக இருக்கிறாள். நல்லசிவம் பிள்ளை மருமகன், குமாரசாமி [குமார்] (அமெரிக்காவிலிருந்து திரும்பியவன்) அங்கு அவரைப் பார்க்க வந்திருக்கிறான். அவனுடன் நல்லசிவம் குசலப் பிரச்னம் விசாரித்துக் கொண்டிருக்கிறார்.]

நல்லசிவம்: பாப்பா, பாப்பா! ...பாப்பா! சாரதா!

(உள்ளே யிருந்து)

சாரதா: ஏன் அப்பா!

ந. சிவம்: குமாரு, எந்திருச்சி பல்துலக்கி, வந்து எத்தனை நேரம் ஆவுது! காப்பி பலவாரம் கொண்டாந்துவைக்கச் சொல்லு

சாரதா: இதோ கொண்டாறேன் அப்பா!

குமார்: நோ ஹர்ரி! டோண்ட் ஒர்ரி! நான் எயிட்டுக்குத்தான் சாப்பிடறது!

ந சிவம்: அதான் மணி எட்டுக்கு மேலே ஆவுதே தம்பி... கொண்டாம்மா, சாரதா.

(சாரதா பலகாரம் காப்பி கொண்டு வருகிறாள்.)

ந. சிவம்: கொண்ணாந்துட்டியா? இப்படி இந்த மேஜை மேலே வையம்மா

குமார்: உனக்கு ட்ரபிள் வேண்டாம்! நானே எடுத்துக்கிறேன்!

சாரதா: பரவாயில்லே, இப்படி சேரை இழுத்துப் போட்டுக்கிங்க.

குமார்: ஓ தாங்க் யூ! தாங்க் யூ! ஃபுல் லன்ச் மாதிரி இருக்கே! நான் இவ்வளவு சாப்பிட்டா, என் சிஸ்டம் எக்ரீ பண்ணாது!

ந. சிவம்: சும்மா சாப்பிடு தம்பி! இந்த வயசிலே கல்லை யும் செரிக்க வேண்டியது-என் னமோ மிரள்றயே! ஹா! நீ காலையிலே பலவாரம் சாப் பிடுவே இல்லை?

குமார்: நான் லைட் பிரெக்ஃ பாஸ்ட் பண்ணறது. வழக்கம்!

சாரதா: அவர் என்ன அப்பா! Toast, omlette eggs, இப்படி light ஆ breakfast பண் ணுவாரு...! நம்ம country பல காரம் பிடிக்குமா?

குமார்: பாத்தீங்களா! உங்க Daughterகுறும்பை!நம்மை சாப் பாட்டு ராமென்னு வச்சுட்டா! நான் காலையிலே ஹெவியா சாப்பிட்டா, அப்புறம் ஒர்க் ஒண்ணும் ஓடாது!

சாரதா: ஆமா அப்பா! அவ ருக்கு Field லே இறங்கி ஏர் புடிச்சு உழப்போறுரு- இல்லே மம்மட்டி புடிச்சு வெட்டப் போறுரு!

ந. சிவம்: ஏம்மா! ஏர் புடிக்க றதும் மம்மட்டி தூக்கி வெட் டறதும் அவ்வளவு கேவலம்னு நினைக்காதே அம்மா! இப்ப எல் லாம் படிச்சவர்கள் கூட அப் படி நினைக்கிறதில்லே!

ந. சிவம்: பேபி அப்படித் தான் தம்பி குறும்பா பேசும்... நீ சாப்பிடு...

குமார்: மிஸ் சாரதா! பார் டன் மீ! வாட் இஸ் திஸ் ஒன்?

சாரதா: ஸ்வீட்! ஷாக்க ரைப் பொங்கல்! ஸ்வீட் ரைஸ்! அது இட்லி! ஹி ஹி (சிரிக்கி ருள்) சாப்பிட்டுத்தான் பாருங் களேன்.

குமார்: ஸ்வீட் எதுக்கு? நான் வந்ததுக்கா மாமா?

(ஹ ஹ...)

ந. சிவம்: நீ வந்தது ஒண்ணு. அதோடே புது வருஷமும் வந் திருக்கு இல்லே. இன்னிக்கி...

குமார்: ஓ! ஐ சீ!

ந. சிவம்: சார்தா ரேடி யோவை நல்லா பெரிசாத் திருப் பிவையம்மா..

சாரதா: (ரேடியோ ஒலியைப் பெருக்குகிறுள். நாதஸ்வர இசைத் தட்டு இதுவரை மெல் லியதாக இருந்தது அதிகம் ஒலிக்கிறது... அவருடைய பண்ணையாள் சிவலிங்கமும் அவன் குழந்தை எட்டு வயதுப் பையன் முத்துவை அழைத்து வருகிறுன்.)

சிவலிங்கம்: ஐயா! கும்பிட றேனுங்க.

ந. சிவம்: சிவலிங்கமா! வாப் பா! வா! என்ன! இப்படிக் கிளம்பினே? எங்கே வந்தே? என்ன சங்கதி?

சி.லி. ஒன்னும் இல்லிங்க... சும்மா இப்படிக் கோயிலுக்குப் போய் சாமி கும்பிட்டிட்டு ஐயா வையும் பாத்துட்டுப் போவ லாம்னு வந்தேனுங்க... இன் னக்கி வருஷப்பிறப்பில்லே! நாளும் கிழமையா வந்துட்டுப் போவலாம்னு...

ந. சிவம்: ஓ! ரொம்பச் சந்தோஷம்! இது உன் மூத்த மவஞு...

சி.லி: ஆமாமுங்க.

ந.சிவம்: உன் பேரென்ன தம்பி!

முத்து: (வெட்கத்துடன்... மௌனம்)

சி.லி: (கீழ்க் குரலில்)! சொல்லு...பேரைச் சொல்! ஐயா கேக்கருங்க...சும்மா சொல்லு.

முத்து: முத்துசாமி.

ந. சிவம்: நல்ல பேரு. நல்ல முத்தாட்டமா பிள்ளை தான் அப்பா!— பையனை ஸ்கூலுக்கு அனுப்பறே இல்லே!

சி.லி: ஆமாங்க...போருன் ஸ்கூலுக்கு. நாலாவது படிக்கருன்...இஸ்கூல் இல்லாத நேரத்துலே இப்படி நமக்கும் கூட மாட களத்துலே ஒத்தாசை பண்ணுவான். நம்ம தொழிலும் தெரியணும் இல்லே!

ந. சிவம்: நல்லது தானப்பா; சும்மா வெட்டிக்கு பொழுது போக்காமே தொழிலிலே ஊக்கம் வராப்பிலே செய்யறது நல்லது தான். படிப்புக்குப் படிப்பும் வேணும், தொழிலும் ஏதானும் தெரிஞ்சுக்கறது நல்லது தானே. அதனலே படிப்பிலேயும் ஊக்கம் இருக்கும்.

சி.லி: ஆமாங்க. அது உண்மை தானுங்க. இப்ப பாருங்க...இந்த முத்துப் பய, என்னைவிட தமிழெல்லாம் நல்லாக் கத்துருக்கான்! தமிழ்ப் பாடல் எல்லாம் நல்லா பாடுவான்!

ந. சிவம்: ஓ! அப்படியா! எங்கே தம்பி, முத்து...ஒரு பாட்டு சொல்லம்மா கேக்கலாம்!

சி. லி: ஊம்...சொல்லு... ஐயா கேக்கருங்க.

முத்து: போப்பா...வராது அய்யா!

சி. லி: சும்மா வரும், பாடுடா கண்ணு...சும்மா பாடு...ஐயாவெல்லாம் நல்லா கேட்பாக...

ந. சிவம்: பாடு தம்பி! முத்து, பயப்படாமே பாடு!

(முத்து அருமையாகத் தேவாரம் பாடுகிருன்)

ந. சிவம்: பேஷ்! பேஷ்! நல்லா பாடருனே! இவனுக்கு பாட்டு கூட நல்லா வரும் போலிருக்கு சிவலிங்கம், குழந்தை நல்ல புத்திசாலி! அவனுக்கு நல்லா கத்துவை! அம்மா! பானு. சாரதா! நம்ம சிவலிங்கம், அவன் குழந்தைக்கு பலகாரம் எல்லாம் கொடுக்கச் சொல்லு.

சாரதா: சொல்றேன் அப்பா!

சி.லி. அதுக்கென்னங்க! அவசரமில்லே!... பட்டணத்து ஐயா நம்ம ஐயாவுக்கு மருமகன் தானே!

ந. சிவம்: ஆமா! நம்ம கொழுந்தியா மவன். பேரளம் பண்ணையாரு வகையரு. அவப்பாரு தான் பட்டணத்துலே பெரிய வக்கீலு. இவுரு இங்கே எல்லாம் பாஸ்பண்ணிட்டு அமெரிக்

ாவுக்குப் போய் அங்கேவேறே ஆராய்ச்சிஎல்லாம் கத்துக்கிட்டு பந்திருக்காரு!... குமார்! சிவ பிங்கம் நம்ம பண்ணையிலே தங்கமான ஆளு...

குமார்: oh! I see!

சி.லி: பட்டணத்து ஐயா அமெரிக்கா வெல்லாம் போய் வந்திருக்கருங்களா? அங்கே தானுங்களே என்னென்னமோ குண்டுங்கள்ளாம் செய்யருங்க ளாம்! ஒரு குண்டு போட்டா உலகமே நாசமாபோயிருங்கருங் களே! இவரு கூட அந்த குண்டு ஆராய்ச்சி கத்துவந்திருக் காருங்களா?

ந.சிவம்: (சிரித்துக்கொண்டு) பார்த்தயா தம்பி குமாரு! நம்ம சிவலிங்கம் எவ்வளவு அப்டு டேட் ஆக இருக்கான்னு!

குமார்: Oh yes! (சிரிக்கிருன்.)

ந. சிவம்: இல்லே சிவலிங்கம்! இவர் அப்படி எல்லாம் குண்டு போட கத்துக்கப் போகலே. நம்ம நாட்டுக்கு அது என்னத் துக்கு! நமக்குத் தேவையான நல்ல விவசாய முறைகளை அமெரிக்காவுலே கத்துக்கிட்டு வந்திருக்காரு!

சி. லி: ஓ அப்படீங்களா! நல் லது! அமெரிக்காவுலே விவசா யம் எல்லாம் கூடச் செய்யருங் களா? அங்கெல்லாம் ஒரே மிசி னே வச்சுல்லே எல்லாம் அடிச் சுப் புடருங்களாம்!

குமார்: மிஷின் எல்லாம் இருக்கு—நம்மை விட நிறைய இருக்கு. பல விஷயங்களுக்கு மிஷின் தான் உபயோகபடுத்த ருங்க... விவசாயத்துக்குக் கூட டிராக்டர், இன்னும் எவ்வள வோ புதிய மிஷின் எல்லாம் வச்சுதான் நடத்தருங்க!

சி.லி: நம்ம ஊருக்கு அதெல் லாம் ஏங்க! இதோ பக்கத்து பண்ணையிலே அந்த டாக்டரோ என்னமோ சொன்னீங்களே... பூதம் மாதிரிஒன்னு...அதை வச் சுத்தான் உழருங்க, இதெல் லாம் ஏழை பொழப்பை கெடுக்க வந்ததுங்க...

ந. சிவம்: அப்படி இல்லே சிவலிங்கம்...டிராக்டர் எல்லா இடத்துக்கும் தேவையில்லே. சில இடங்களிலே அவசியமா இருக்கு.. இப்ப பாரு நம்ம மேக்கு மோட்டுக் கழனிக் கெல் லாம் அந்த பம்பு செட் இல் லாமே சரிப்படுமா? பம்ப் செட் வந்தப்புறம் எவ்வளவு தரிசு நிலம் எல்லாம் இப்ப வளமா இருக்கு! ஆனு அதுக்காக ஆத் துப்பாச்சல் காவரபாச்சல் இருக் கிற எடத்துலேயும் படுகையி லேயும் போய் டிராக்டர், பம்பு, இதெல்லாம் வச்சு வீணுக்கு வாங்களா?

சி லி: அது உண்மைங்க... அதுசரிங்க! பட்டணத்து ஐயர் இருப்பாங்களில்லே பத்து நாளு...

குமார், oh, no! இங்கே கண்ட்றி சைடிலே இருந்து என்ன செய்யறது! நம்ம ஓர்க் குக்கு சூட் ஆகாது!

சி. லி: விவசாய ஆராச்சி செய்யறதா ஐயா சொன்னுங்

களே! நாட்டுப் புறத்திலே இருந்தாத்தானே நெல்லு எப்படி காய்க்குது புல்லு எப்படி வளருது! அது இது எல்லாம் ஆராச்சி செய்யலாம்!

குமார்: அதெல்லாம் நான் புக்ஸிலே படிச்சு தெரிஞ்சுக்கிறேன். இப்ப அக்ரிகல்ச்சரை இம்ப்ரூவ் செய்ய நம்ம கண்ட்ரியிலே என்ன செய்யணும் லபொரடரியிலே அதான் ரிசர்ச் செய்யறேன்... அது ஆரா்ய்ச்சி நடத்தணும்.

சி. லி: என்னங்க பரிகாசம் பண்ணறீங்களா? நம்நாட்டுலே விவசாயம் செய்யறதுக்கு பொஸ்தகத்துலே படிச்சு லாட்டரிலே ஆராச்சி நடத்துற தின்னு. கேலி செய்யருப்பல தானுங்க.

ந. சிவம்: அது இல்லே சிவலிங்கம்! இப்ப நமக்கெல்லாம் விவசாயத்துலே நேர் அனுபவம் இருக்கு. தம்பி மாதிரி படிச்சவங்க வெவ்வேறே நாட்டிலே புதுசு புதுசா என்ன செய்யருங்கன்னு படிச்ச அறிவு இருக்கு. இவங்களை போலே படிச்சு ஆராச்சி செய்றவங்க அறிவும், நம்மை போலே உழைச்சு வேலே செய்யறவங்க அனுபவமும் இரண்டும் சேர்ந்துதான் நம்ம நாடு முன்னேறணும் சிவலிங்கம்! புதுசு நவீனம்னுட்டு பழசை ஒரேயடியா தள்ளிடவும் கூடாது; தலைமுறை தலைமுறையாக கையாண்டுருக்கோம் என்கிற ஒரு காரணத்தாலே மட்டும் நாம் பழைய பஞ்சாங்கத்தையே படிச்சுகிட்டு இருந்தாலும் தற்காலத்துக்கு ஏற்காது இல்லையா?

சி லி: உண்மைதானுங்க... பழைய பஞ்சாங்கம் இன்னதும், நான் சொல்ல வந்தது நினைப்பு வருது. இன்னக்கி சாயங்காலம் கோயில்லே நம்ம ஸ்கூல் வாத்தியாரையா புது பஞ்சாங்கம் வாசிக்கரூரு. அவசியம் ஐயா, பட்டணத்து ஐயா, அம்மா சின்னம்மா, எல்லாரும் வந்துடணுங்க.

ந. சிவம்: ஓ! அதுக்கென்ன தாராளமாவரேும். ஆமா... அதென்ன கொட்டகை எல்லாம் தடபுடலா போட்டுகிட்டு இருந்தாங்க, கோவில் முன்னே?

சி.லி: அதாங்க, அதுவும் சொல்லவந்தேன் — பஞ்சாங்கம் படிச்சு முடிஞ்சதும், பாட்டு, கூத்து, நாடகம் எல்லாம் நடக்குதுங்க. அதுக்கு நீங்க எல்லாம் இருந்து நடத்தி வச்சிட்டு போவணுங்க.

ந. சிவம்: அடேடே அதென்னப்பா! பாட்டு கூத்து எல்லாம் தடபுடல்! இத்தனை வருஷமா இல்லாமே இந்த வருஷம்!

சி. லி: ஒண்ணுமில்லிங்க! இத்தனை வருடமா மானம் அடெச்சு பூமி வறண்டு கிடந்துதுங்க! ஏதோ போன வருடம் பெரியவங்க புண்ணியத்திலே கடவுள் கண் திறந்தாரு, நல்ல மழை பெஞ்சுது. ஊரு நல்லா ஆச்சு. பயிரும் நல்லா விளைச்ச கண்டிருக்குது.

இதெல்லாம் உத்தேசிச்சு ஊரு ஜனங்களுக்கு ஒரு உற்சாகம் தானுங்களே! அதோடே, பாருங்க...நம்ம ஊருக்குபோன வருடம் ஒரு ஐயா வந்தாங் களே, பரமானந்தரு...

ந. சிவம்: பரமானந்தர் ஆமாம். அவருதான் இங்கேயே குடிசை கட்டிக்கிட்டு கிராம முன்னேற்றத்துக்காக உயிரை விட்டு வேலே செய்யருரே! நீங் கெல்லாம் கூட முதல்லே ஆர்! இவரு? என்ன இங்கே வந்து தேர்தல்லே ஓட்டு வாங்க வேஷம் போடருரு! என்று பரி காசம் செஞ்சிங்க. அப்புறம் நீங்களே அவரு பின்னுலே சுத்திகிட்டு இருக்கிங்க!

சி. லி: அவரு ரொம்ப நல்ல வருங்க உண்மையிலேயேநம்ம கிட்டே எல்லாம் விசுவாசம் வச்சு நம் மோடையே உழைக் கருருங்க...அவரு வந்த பிற் பாடு ஊரிலே ஒரு குப்பை கோளம் இருக்குதா பாருங்க!

ந.சிவம்: இருந்தாத் தான் அவரே துடப்பத்தை எடுத்து கிட்டு பெருக்க வந்துடருரே!

சி.லி: ஆமாங்க... அவரு ஒரு நாடகம் எழுதியிருக்காரு, 'ஜய பேரிகைன்னு.'

ந.சிவம்: ஓ!-அவரு நாடகம் கூட எழுதருரா'

சி.லி: ஆமாமுங்க. அவருதான் இந்த கும்மி கோலாட்டம் எல் லாங்கூட வைக்க ஏற்பாடு செய் தாருங்க. நம்மு நாட்டுப் பாடல், ஆட்டம் எல்லாம் நம்ம ஊரிலே மறந்து போச்சுன்னு, அதை யெல்லாம் நாம் மறுபடி உயிர் கொடுக்கணும்னு, ரொம்ப கஷ் டப்பட்டு, நம்ப குடியானத் தெரு,—ஏன் சேரிலேருந்துகூட —பசங்களே ஒண்ணு சேத்து, எல்லாம் நல்லா செய்திருக் காருங்க. "ஜயபேரிகை" நாடக மும் அவருதான் சொல்லிக் கொடுத்து போட சொன்ன ருங்க.

ந. சிவம்: நீ நாடகத்துலே பார்ட் உண்டா?

சி.லி: (வெட்கத்துடன்) இருக்குதுங்க.

ந. சிவம்: என்ன ராஜ பார்ட் டா ஸ்த்ரீ பார்ட்டா?

சி. லி: அதெல்லாம் இல்லீங்க ...சும்மா காமிக்குங்க!

குமார்: what is comic?

ந. சிவம்: அதென்ன பார்ட் அப்பா?

சி. லி: அதாங்க நாடகங் களிலே பபூனும்பாங்க, ஜினி மாவுலே காமிக்கும்பாங்க. சும்மா தமாஷா! வேடிக்கை பார்ட்டுங்க!

ந. சிவம்: ஓ! கோமாளியா! comic?

சி.லி: அதானுங்க!

ந. சிவம்: சரிதான்! உனக்கு சரியான வேஷம்தான்!' நீ எப் பவுமே வக்கணேயா பேசற வனுச்சே!

சி லி: ஐயோ! எனக்கு என்ன தெரியுங்க...வேடிக் கையா நடிக்க...?

(தெருவில் பெண்கள் கும்மி அடித்துப் பாடிக் கொண்டு வரும் சத்தம். ஒலி வரவர அதிகமாகிறது.)

குமார்: what is that noise?

ந. சிவம்: என்னப்பா அது?

சி. லி: ஒண்ணும் இல்லீங்க! நம்ம பொம்பிளிங்க கும்மி அடிச்சிட்டு பாடிக்கிட்டு வருங்க...வீடுவீடா வந்து, மஞ்ச காணிக்கை வாங்கி போறது... அந்தக் காலத்து வழக்கங்க.

குமார்: oh! collection through celebration!

ந. சிவம்: அது ஒரு தினுசு கொண்டாட்டம் தானே! எல்லோரும் இன்னக்கி சந்தோஷமா இருக்கறத்துக்கு ஒரு அறிகுறி!

(கும்மிப் பாட்டு வீட்டு வாசல் முன் கேட்கிறது.)

ந. சிவம்: பேபி! சாரதா... அந்த பொண்டுங்களுக்கு அஞ்சு ரூபா எடுத்து கொடம்மா!

சாரதா: ஆகட்டும் அப்பா!

(ஒலி மறைகிறது.)

சி.லி: எல்லாரையும்தவறுமே சாயங்காலம் இட்டாந்திடுங்க ஐயா!

ந. சிவம்: கட்டாயம் வர்ரோம்; நீ வேறே காமிக் வேஷம் போடறே...நாங்க வந்து பாக்க வாணும்...ஏன், தம்பி குமாரு! நீயும் வரியில்லே!

குமார்: ஓ எஸ்! எனக்கு இந்த கிராமத்து டான்ஸ், கலை, எல்லாம்பாக்கிறத்திலே நிறைய இண்டெரஸ்ட் உண்டு. ஃபோக் டான்ஸ், கண்ட்றி டிராமா, ஒன்றும் நான் இதுவரை பார்த்ததில்லே.

சி. லி: சீமைலே எல்லாரும் நீங்க பாக்காத டான்சு கூத்தா? ஏதோ நாங்க நாட்டுப்புறம்... பட்டணத்து ஐயா பாத்து சிரிப்பாங்க!

ந.சி: நீ கோமாளி வேஷத்துலே ஆக்ட்பண்ணி அப்படியே நம்மை எல்லாம் சிரிக்க வைக்கப் போறே, ஏன் சிவலிங்கம்! தம்பி குமாரு! சிவலிங்கம் சொல்லறுப்பிலே நீ அமெரிக்காவுலே டான்ஸ¬ஸீன்ஸ் பாத்திருப்பே வாஸ்தவம். நம்ம ஊரிலேயும் பட்டணத்துலே இல்லாம இப்போதான் நாட்டியம், நாடகம் எல்லாம் போட்டு தொம்சமாடறுங்க! அதெல்லாம் ரொம்ப ஒசந்த கலைதான் தம்பி. ஆனுக்க, நம்ம நாட்டுப்புற கும்பி, கோலாட்டம் இதுங்களுக்கு ஒரு தனி அழகு இருக்குது! மேடையிலே ஆடற நாட்டியம் எல்லாம் ரொம்ப கஷ்டப்பட்டு, செலவழிச்சு கத்துக்கிட்டு, கத்துக்கிட்டபடி ஒரே தினுசா சொல்லிவைச்சபடி ஆடறுங்க. அது ஒரு தினுசு. நாட்டுப்புறக் கலையிலே, ஒரு உற்சாகம்—தானு உண்டாகிற உணர்ச்சி—இதுகளை இயற்கையா வெளியிடறுங்க. பத்துப் பேர் ஒன்று கூடி ஆடினு, அது ஒரு தனிக் குதூகலந்தான் கொடுக்கிது, இல்லையா!

குமார்: oh yes, yes!

சி. லி: அப்ப, நான் வர்றேனுங்க.

ந. சிவம்: சிவலிங்கம்! நீ எங்கே கழனி பக்கம்தானே போறே!

சி. லி: ஆமாங்க. அப்படியே போய் பார்த்துகிட்டு போவலாம்னுதான்...

ந. சிவம்: அப்ப இரு ஒருநிமிஷம். நீ முத்துவை அழைச்சிக்கிட்டு உள்ளே போய் பலவாரம் எல்லாம் சாப்பிட்டிட்டு வா. நான் அதுக்குள்ளே ரெடியாறேன்.

சி. லி: சரிங்க. வா முத்து! அம்மாவை பாத்து கும்பிட்டுகிட்டு போவலாம்...

ந. சி· பேபி! பேபி! சிவலிங்கத்தை உள்ளே அழைச்சிகிட்டு போய் பலவாரம் கொடு.

சாரதா: எல்லாம் ரெடியா இருக்கு அப்பா. வா சிவலிங்கம். உள்ளே வா. குழந்தையையும் கூட்டிக்கிட்டு வா.

ந. சிவம்: தம்பி குமாரு, நீயும் வாயேன். அப்படியே நம்ம நிலத்தையும் சுத்திப் பாக்கலாம்.

குமார்: ஓ எஸ், வருகிறேன்.

(சில நிமிடங்கள் சென்றபின்.)

ந. சிவம்: சிவலிங்கம்! சாப்பிட்டயா அப்பா?

சி. லி: ஆமாங்க. அம்மா பலவாரம் எல்லாம் கொடுத்தாங்க. சின்ன அம்மா காப்பி கொடுத்திச்சி. ரொம்ப நல்லா இருந்துதிங்க.

ந. சிவம்: குழந்தை சாப்பிட்டானு?

சி. லி: சாப்பிட்டிச்சுங்க.

ந. சிவம்: சரி பொறப்படு போவலாம்.

சி.லி: இது ஏங்க நீங்க! மம்புட்டியை தூக்கிக்கிட்டு கிளம்புறீங்க! இப்படிக் கொடுங்க! இண்ணக்கி நாளும் கிழமையுமா...இப்படிக் கொடுங்க!

ந. சிவம். ஏம்பா! நான் மம்மட்டி பிடிக்கக் கூடாதா? தகுதியில்லையா? புடிச்சதில்லையா? மம்மட்டி புடிக்க உனக்குத்தான் உரிமையா?

சி. லி: ஐயோ! அதுக்கு இல்லிங்க! உங்க கைக்கு மம்மட்டி புடிக்கலாமா? அவுங்க அவுங்க அந்தசத்துப்படி அவுங்க அவுங்க தொழிலே கவனிக்கணுங்க!

ந. சிவம்: சிவலிங்கம்! மம்மட்டிபுடிச்சா அந்தஸ்து குறையுமா? உழைப்பிலேதான் அப்பா அந்தஸ்து அதிகம்! இல்லையா?

சி. லி: அதுக்கில்லீங்க! இன்னக்கி நாளும் கிழமையுமா..உங்களுக்கேன் இது...

ந. சி: நல்ல நாளா இருக்கேன்னுதான் சிவலிங்கம் நல்ல காரியத்தைத் துவக்கினேன். அன்னக்கி நம்ம ஊர் "சங்கத்திலே என்ன தீர்மானம் செஞ்

பிட்டோம்? நம்ம ஊர் செழிச்சு நாம வெற்றிகரமாவாழணும்னு, நாம எல்லோரும் உழைக்கணும்னு எல்லாரும் சபதம் எடுத்துக்கிட்டமே! மறந்துட்டாயா! இன்னக்கி வருஷப் பிறப்பு, — புதுவருஷத்துலே நமக்கு நல்லா விளைச்சலும் சுபிட்சமும் சுகமும் உண்டாகி நாம சந்தோஷமா வாழணும், இல்லையா? அதுனாலே இன்னக்கி நாம துவக்கிற காரியம் வருஷம் பூராவும் ஜயமாகவே முடியணும்னுதான் நானே முதல்லே மம்மட்டியை எடுத்துகிட்டேன்! சரி, போவோம். குமாரு, வர்றயா தம்பி?

குமார் : ஓ எஸ், நான்ரெடி. சாரதா வரலே!

ந. சிவம்: அடேடே என்ன தம்பி! ஹாட்டு பூட்டு எல்லாம் போட்டு கிளம்பிட்டே!

சி. லி: பட்டணத்து ஐயா ஜாலியா வாக்கிங் போறாப்பிலே நினைச்சுக்கிட்டு ஆட்டுப் பூட்டிண்ணு வராப்லே இருக்கு!

குமார்: ஹாட் ஆக இருக்கும். சன் ஸ்ட்ரோக் வந்துடுத்துன்னு! அதுக்காக ஹாட் போட்டுகிட்டேன். ஃபீல்டுலே கல்லு முள்ளுகுத்தும் அதுக்காக பூட்டு...

சி. லி: அதென்னுங்க கண்ணுலே ரவை கண்ணாடி! நம்ம நாடவத்துலே வேஷம் போடறவ்ங்க மாதிரி...

குமார்: கிளேர் அடிக்காமல் இருப்பதற்காக கூலிங் கிளாஸ்!

ந. சிவம்: கையிலே என்னப்பா, அந்தப் பெட்டி?

குமார்: அதுலே magnifying glass, agrometer எல்லாம் இருக்கு.

ந. சிவம்: அதெல்லாம் எதுக்கு தம்பி?

குமார்: இந்த பக்கத்து லேண்டுகளில் உண்டாகிற பாடி ஸ்ட்ரெயின்ஸ் எப்படி இருக்குன்னு பார்க்கத்தான்...

ந. சிவம்: (சிரிக்கிறான்.) நெல்லு ஆராச்சி செய்யவா? ஹ ஹ ஹா!

சி.லி: இப்ப எதுங்க வயல்லே கதிரு? அறுவடை எல்லாம் ஆயிடுச்சே!

குமார்: சாயில் டெஸ்ட் செய்யலாமில்லே?

ந. சிவம்: அது செய்யலாம் தம்பி, வாங்க போவோம்.

[மாலை. கோவில் முன்னே. ஜனங்கள் கூட்டம். பேச்சு சத்தம். அதற்கு மேலே ஒலிக்கும் நாதசுர இசை.

கூட்டத்தில் குரல்கள்: எல்லாரும் உட்காருங்க...ஐயா! முண்டாசுக்காரரே, உட்காருங்க! அம்மா, நீங்க பொம்பளேங்க எல்லாம் ஒரு பக்கமா உட்காருங்க.

(பெண்கள் பேசும் கூச்சல்கள். எல்லோரும் ஒரே சமயத்தில் பேசுவது:) ஏ சொர்ணம்! இந்தா உன் புள்ளையை பிடி! அடியே ஆயா, மங்களம், எங்

கேடி போயிட்டே! இந்தா அஞ்சலே, வெத்திலே குடுங்கறேன்!

ஒரு கனத்த குரல்: ஏம்மா! ஏன் இப்படி கூச்ச போடறீங்க? உட்காருங்க ஒரு இடத்திலே கம்முனு! ஐயே, ஏ பொம்புளே! ஏன் இப்படி கூவுறே! பெரியம்மா உட்காரம்மா. சத்தம் போடாதீங்க.

[மணி அடிக்கும் சத்தம். கூட்டத்தில் கலகலப்பு மெல்ல ஓய்கிறது.]

சிவலிங்கம்: பெரியசாமிஐயா! அதோ ஐயா அவுங்க ஊட்டிலே எல்லாம் வர்றாங்க—போய் இட்டுகிட்டு வந்து இப்படி முன்னடி உக்காத்தி வையுங்க.

பெரியசாமி: அது யாரப்பா, கூட நாட்டு தொரை ஒருத்தரு வராறு?

சி. லி: அவருதாங்க நம்ம பண்ணே ஐயா அவுங்க கொழுந்தியா மவன். அவருக்கு மருமகனு வரப்போறவரு. அமிரிக்கா எல்லாம் போய் வந்திருக்காராம்.

பெரி: ஓ அப்படியா! நம்ம பண்ணையாரு மவளே கட்டிக்க போறவரா! நல்ல சோடிதான். அதுவும் படிச்ச பொண்ணு... வாங்க...ஐயா, இப்படி வாங்க, உட்காருங்க. ஒங்களுக்காகத் தான் காத்துகிட்டு இருக்கோம். சிவலிங்கம், நம்ம பரமானந்தரு எங்கே? வாத்தியார் ஐயாவை கூப்பிடு!

சி.லி: இதோ வர்ராங்கள்.

பெரி: உட்காருங்க பரமானந்த சாமி, இப்படி வாங்க. பண்ணே ஐயா ஊட்டுக்கு பட்டணத்து ஐயா வந்திருக்காரு... அவுங்க எல்லாம் கவனியுங்க. வாத்தியாரையா! சந்தனம் புஷ்பம், வெத்திலே பாக்கு எடுங்க...

பரமானந்தர்: நமஸ்காரம் பிள்ளைவாள்.

ந.சி: நமஸ்காரம் ஐயா!

பரமானந்தர்: நமஸ்காரம்...

குமார்: குட் ஈவினிங்! நமஸ்காரம்! நமஸ்காரம்!

பரமானந்தர்: உட்காருங்க.

குமார்: தாங்க்ஸ்! தாங்க்ஸ் வெரி மச்.

பரமானந்தர்: நமஸ்காரம் அம்மா, உட்காருங்க. என்ன பிள்ளைவாள், ஆரம்பிக்கலாமில்லே...

ந. சி: ஓ பேஷா...

பெரியசாமி: ஊம்! சிவலிங்கம்...நீ ஏன் இங்கே நிக்கறே? உள்ளே போய் வேஷம் போட்டுக்க. இரண்டாவது மணி அடி. வாத்தியாரையா! நீங்க ரெண்டு வார்த்தை பேசுங்க. முதல்லே என்ன செய்யறோம்...

வாத்தியார்: முதல்லே நம்ம ஊர் பள்ளிப் பிள்ளேங்க கடவுள் வணக்கம், நாட்டு வணக்கம் பாடுவாங்க. அதுக்கப்பறம், கும்மி. அப்புறம் ஒரு கோலாட்டம். அப்புறம் ஒரு சின்ன நடனம். அதுக்கப்புறம் பாட்டு.

அப்புறம் "ஜயபேரிகை" நாடகம்.

குமார்: ரொம்ப நீளமான புரோகிராம்!

பெரியசாமி: நாடகம் நம்ம வாத்தியார் ஐயாதான் எழுதியிருக்காரு...

குமார்: ஓ எஸ்! சிவலிங்கம் சொன்னான்.

[மணி அடிக்கிறது.]

பெரியசாமி: ஊம், வாத்தியார் ஐயா! நீங்க இரண்டு வார்த்தை ஜனங்களுக்கு சொல்லிடுங்க! போங்க, போய் சீக்கிரம் ஆரம்பிங்க.

வாத்தியார்: சபையோர்களே! கனவான்களே! சகோதர சகோதரிகளே! இன்றைக்கு இங்கு நாம் கூடியிருப்பது ஒரு நல்ல நாளில் நல்ல காரியத்தை உத்தேசித்து. அதாவது, புது வருஷம் இன்று பிறந்திருக்கிறது. இதை ஒட்டி நம் ஊரில் பல வருஷங்களாக இல்லாமல் முதல் முதலாக கூடி புது வருஷம் கொண்டாடுகிறோம். இன்றைய நிகழ்ச்சிகளைக் காண நீங்கள் ஏராளமாகக் கூடியிருப்பதற்கு மகிழ்ச்சி. அதைவிட மகிழ்ச்சி அக்கம் பக்கம் ஊர்களிலிருந்து பல பேர் வந்திருப்பது. இதையெல்லாம் விட இன்னொரு விசேஷம், இங்கே நம்ம பெரிய வீட்டு பண்ணையார் அவுங்க வீட்டுக்கு பட்டணத்திலிருந்து வந்திருக்கும் ஸ்ரீகுமார் அவர்கள் இங்கு விஜயம் செய்திருப்பது. அவர்கள் அக்கரைச் சீமை எல்லாம் போய் வந்தவர்கள். நம்ம நாட்டுப்புற கொண்டாட்டத்தைப் பாக்கவந்தது நமக்கெல்லாம் ரொம்ப சந்தோஷம். நீங்க எல்லாம் அமைதியா கடைசி வரை இருந்து எல்லா நிகழ்ச்சிகளையும் பார்த்துவிட்டு போகும்படி கேட்டுக் கொள்கிறேன். முதலில் முக்கியமாக நம்ம பழைய வழக்கப்படி புதுப் பஞ்சாங்கம் வாசிப்பாங்க, நம்ம பரமானந்தஸ்வாமி. அவுங்களைப் பத்தி உங்களுக்கெல்லாம் நல்லா தெரியும். அவுங்க நம்ம நாட்டுக்காக எவ்வளவோ தியாகம் எல்லாம் செய்தவங்க. நம்ம ஊருக்கு வந்து ஒரு வருஷத்துக்குள்ளே ஊரையே ஒரு புது மாதிரியா ஆக்கி நமக்கெல்லாம் புத்துணர்ச்சியும் ஊக்கமும் அளித்தவங்க. அவுங்க சிரத்தை எடுத்துகிட்டதுனாலேதான் இன்னக்கி இந்த புது வருஷ விழா நம்ம கொண்டாட முடிஞ்சுது. அவுங்க இப்ப புதுப் பஞ்சாங்கம் வாசிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

[கை தட்டல்.]

பரமானந்தர்: தாய்மார்களே! பெரியோர்களே! நான் உங்கள் முன் வந்து நிற்பது உங்கள் ஊழியன் என்ற முறையில். நான் அதிகப் பிரசங்கம் செய்யப் போவதில்லை. வாத்தியார் ஐயா கட்டளையை நிறைவேற்றும் முறையில் புதுப் பஞ்சாங்கத்தை வாசிக்கிறேன். "புத்தாண்டே வருக! புத்தாண்டுக்கு நல்வரவு. புது வருஷம் பிறந்த புண்ணிய தினத்தில்

கிரக பலங்கள் பூர்த்தியாக இருக்கின்றன. கிரக பலத்திடன் ஜனங்களின் மன பலமும் இருக்கும். இந்த புத்தாண்டு எல்லா விதத்திலும் நமக்கு வெற்றியையும், செல்வத்தையும் தரும். ஜனங்கள் தங்கள் புத்தி நுட்பத்தாலும், உழைப்பாலும் எல்லா இன்னல்களையும் சமாளித்து, வெற்றி அடைவார்கள். நாட்டில் நல்ல மழையும், நல்ல விளைச்சலும், அகவிலைகள் குறைந்தும், தனலாபங்கள் விருத்தியடைந்து சுபிட்சமாக இருக்கும். எல்லோரும் தங்கள் முயற்சியின் பயனுல் நல்வாழ்வு வாழ்வார்கள்.

[பரமானந்தர் புதுப் பஞ்சாங்கம் வாசித்த பிறகு, பள்ளி மாணவிகள் கடவுள் வணக்கம், நாட்டு வணக்கம் பாடியதிலிருந்து நாடகம் வரையில் எல்லா நிகழ்ச்சிகளும் நடந்தேறின. வாத்தியார் எழுந்து, "அடுத்தபடியாக நீங்கள் காணப் போவது ஓர் இசை நாடகம் — ஜயபேரிகை — என்று தெரிவித்ததும், ஜனங்கள் எல்லோரும் கைதட்டினுர்கள்.]

[நாடகம் பல வாத்திய முழக்கங்களுடன் ஆரம்பம்—வாத்தியத்தில் ஒரு சாதாரண நாட்டு மெட்டு இசை ஆரம்பத்தில் பேரிகை முத்தாய்ப்பு கடைசியிலும் அதுவே.]

கோமாளி: (கனத்த குரலில்) ஜய விஜயீ பவ! பராக்! பராக்! பராக்! தொண்டைமண்டல அண்டரண்ட ஜனன்டெ தண்ட சண்டமாருத கண்டராதித்த ஜண்ட வருசை ஜயங்கொண்ட ரதகஜ துரகபதாதி அணுகுண்டு ஜலகுண்டு வாயுகுண்டு பராக்ரமகேது ஜகவீர கஜமார்த்தாண்ட ரணவீர் ஜய விக்ரம மகாராஜாவுக்கு ஜே!

குரல் 2: அடேடே! கொஞ்சம் நில்லப்பா! என்னப்பா இப்படி கூச்சல் போடறே இந்த நேரத்துலே! நீ பேசினது என்ன பாஷை? உனக்கே புரியுதா?

கோமாளி: நிறுத்தப்பா! என்ன பாஷையா இருந்தா என்ன? புரியாட்டி நல்லது. புதுராஜா பட்டத்துக்கு வந்திருக்கார்! பட்டத்து ஜீப்பு மேலே பவனி வரார்! வழிவிடு! பராக்! பராக்! பராக்!

[மூன்று தரம் மோட்டார் ஹார்ன் சத்தம் செய்கிருன்.]

குரல் 2: ஓகோ! நவீன ராஜாவோ! எது மேலே பவனி வராரு?

கோமாளி: ஜீப்பு! ஜீப்பு மேலே!

குரல் 2: அதென்னப்பா? புது தினுசு மிருக வாகனமா? ரதமா?

கோமாளி: ஜீப் அப்பா, நாலு சக்கரத்து மேலே விசையிலே ஓடற ஜீப்!

[பாட்டு. நவீன வாகனம் பற்றி.]

குரல் 2: எங்கே அப்பா ராஜா வராருன்னே, நீ பாடி கிட்டு நிக்கறே!

கோமாளி: நம்ம ராஜாவெல் லாம் பாடிணுத்தான் வருவாரு! அதோ வராரு பாரு! பராக்! பராக்! பராக்!

[மோட்டார் ஹார்ன்]

குரல் 2: ஜய விஜயீ பவ! போரும்! நிறுத்து! ஹோல்ட் ஆன்! ஸ்டாப்!

ராஜா: வந்தோம்! வந்—தோம்! தோம் தோம்!

குரல் 2: இதென்னப்பா தோம் தோம் ராஜாவா! இருக் காரு!

கோமாளி: அவர் தோமாளும் ராஜா!

[ஜனங்கள் சிரிப்பு]

குரல் 2: ஓகோ, அவருக்கு நீ கோமாளி மந்திரியா?

ராஜா: மக்களே! பிரஜை களே! மகாஜனங்களே! நாம் இப்போது உங்களுக்கு நாம் பட்டத்துக்கு வந்த இந்த மக் கள் நாளை ஒட்டி—உங்களுக்கு நாம் என்ன வரன் வேண்டு மானும் அளிக்கிறோம்! கேளுங்கள்! பயப்படாமல் கேளுங்கள்!

குரல் 2: கோமாளி மன்னுதி மன்னவா! எங்கள் வீட்டு வாச வில் ஒரு ராந்தக் கம்பம் வேணும். அதில் சூரியன் குஞ்சு போலே ஒரு பூகரு லைட்டு வேணும்...

ராஜா: அளித்தோம்! வேறு யாருக்கு என்ன வேணும்?

குரல் 3: கன்றுக்குட்டிக்கு வாப்பூட்டு வேணும்!

குரல் 4: காராம் பசுவுக்கு பருத்திக்கொட்டை வேணும்!

குரல் 5: கறக்காத மாட்டுக்கு பாலு பவுடர் வேணும்!

குரல் 6: சிரிக்காத புள்ளைக்கு ஸ்லேட் புத்தகம் வேணும்!

குரல் 7: அடங்காத பெண் டாட்டிக்கு பட்டுக் குஞ்சரம், சிப்புக் கண்ணாடி, கொண்டை ஊசி வேணும்!

குரல் 8: வில்லு வண்டிக் குப் பதிலு மோட்டார்க்காரு வேணும்!

[எல்லோரும் சேர்ந்து பாடிக் கூச்சல் போடுகிறார்கள்.]

ராஜா: நிறுத்துங்கள்! மகா பிரஜைகளே! பிரஜை மகான் களே! இதற்காகவா என்னை ராஜாவாக பட்டம் சூட்டினீர் கள்? நான் என்ன உங்கள் வீட்டு வேலைக்காரனு? இல்லாத பொல்லாத தெல்லாம் கேக்கு றீங்க! மதிமயங்கி கூக்குரல் போடுறீங்க! நான் என்ன ராஜாவா, மனுசனு? தெய்வமா, வேதாளமா? கோமாளி! இந்த அதிகப்பிரசங்கி உதவாக்கரை பிரஜைகளை எல்லாம் வெளி யிலே தள்ளி உள்ளேபோடு!

கோமாளி: மகா—மகா—மகா ராஜாவே! அதெப்படி முடியும்? வெளியிலே தள்ளிணு உள்ளே எப்படிப் போடறது?

ராஜா: நம்ப அரண்மனையிலே ருந்து வெளியேற்றி, நமது ராஜாங்க அதிதிகளாக இவர் களை ஜெயிலுக்குள் போடு...

கோமாளி: ராஜா மகாராஜ்! இது நடக்காத காரியம்!

ராஜா: ஏன்? நான் சொல்லி ஒன்று எப்படி நடக்காது?

கோமாளி: முதலாவது இவர் கள் நம் பிரஜைகள்...

ராஜா: நம் பிரஜைகள்! யார் பிரஜைகள் உன் பிரஜைகளா?

கோமாளி: இல்லை, இல்லை! என் பிரஜைகள் இல்லை! நம் பிரஜைகள்... இல்லை... மாட் சிமை, மேன்மை, மகிமை எல் லாம் தங்கிக்கிடக்கும் தங்கள் பிரஜைகள்!

ராஜா: ஆகா! அப்படி சொல்!

கோமாளி: இவர்கள் நடக்க மாட்டார்கள்!

ராஜா: ஏன், காலில்லாப் பிராணிகளா?

கோமாளி: பாருங்கள், இப் பொழுதே உட்கார்ந்து விட்டார் கள்! இரண்டாவது இது அரண் மனை இல்லை என்பது மகா ராஜாவுக்கு மனதில் மறந்து போய்விட்டது... மகாராஜா பவனி வரும்போது அரண்மனை யைப் பின்னால் மறந்து விட்டு விட்டு வந்திருக்க வேண்டும். இது வீதி...வீதியிலிருந்து இவர் களை "வெளியில்" தள்ள இட மில்லை. மூன்றாவது, இந்த ராஜ் யத்தில் ஜெயில் இல்லை! இது வரை இல்லை. இனிமேல் மகா ராஜா ஆக்ஞாபித்தால்...?

ராஜா: ஜெயில் இல்லையா! சரி! அப்படியானு ஜெயில் உண்டாகக் கடவ! இங்கேயே, அவர்கள் இருக்குமிடமே ஜெயில் என்று இதோ கட்டளை யிடுகிறேன். கோமாளி! இவர் களை சுற்றி ஒரு கோடு போட்டு விடு...

கோமாளி: கோடு போட்டால் அதைத் தாண்டி விடுவார்கள்! இல்லாவிட்டால் நகர்த்திவிடு வார்கள்! இல்லாவிட்டால் அழித்து விடுவார்கள்!

ராஜா: அப்படியானுல் என்ன செய்யச் சொல்லுகிறுய்...?

கோமாளி: ஏதாவது நல்ல வார்த்தை சொல்லி வீட்டுக்கு போகச் சொல்லுங்கள்...

ராஜா: சரி, அப்படியே செய் கிறேன். அப்பா, பிரஜா கண் மணிகளே! நல்ல வார்த்தை சொல்கிறேன்... வீட்டுக்குப் போங்கள்.

குரல்கள்: போகமாட்டோம்!

ராஜா: பின் என்ன செய்யப் போகிறீர்கள்? என்ன தான் வேண்டும் உங்களுக்கு?

குரல்கள்: வரன் வேண்டும். உழைக்காத வரன்...நோகாத வரன். போகாத வரன்!

ராஜா: நல்ல புத்திசாலிகள்! உழைக்காமல், நோகாமல், உங் களுக்கு பலன் எப்படி அப்பா கிடைக்கும்? இந்தக் காலத்தில்

உழைப்புக்குத்தான் பலன் கிடைக்கும்! தெரியுமா?

குரல்கள்: தெரியும், ஆனால் நாங்கள் ஏன் உழைக்கணும்? மற்றவர்கள் உழைக்கட்டுமே!

ராஜா: இப்படி எல்லோரும் சொல்லிக் கொண்டிருந்தால்...?

கோமாளி: எல்லோரும் தனிக் காட்டு ராஜாக்கள்!

[சிரிப்பு]

ராஜா: நிறுத்து உன் கோமாளித்தனத்தை! ஆகும்வழி சொல்லு!

கோமாளி: மகாராஜா! நான் சொன்னா நீங்க கேட்பீங்களா?

ராஜா: கேக்கக் கூடியாதா யிருந்தாக் கேட்போம்.

கோமாளி: கோமாளி சொல் கொலு ஏறுமா?

ராஜா: சொல் சீக்கிரம்!

கோமாளி: மகாராஜா, ஒரு வசனம் கேள்விப்பட்டிருப்பீர்கள். ராஜா எப்படியோ அப்படியே பிரஜைகள் என்று...

ராஜா: சரி, அதுக்கென்ன?

கோமாளி: மகாராஜா, கோபிக்கக்கூடாது!

ராஜா: சரி, சொல் சட்புட்டுன்னு!

கோமாளி: ராஜா வழிகாட்டினா மக்கள் பின் பத்து வாங்க. ராஜா உழைச்சா மக்கள் உழைப்பாங்க, ராஜா நியாயமா இருந்தா, மக்கள் நியாயமாக இருப்பாங்க. ராஜா நல்லவரா இருந்தா, மக்கள் நல்லவுங்களா இருப்பாங்க.

அதுனாலே நான் சொல்றது, "ராஜாவே! சிம்மாசனத்துலே குந்திகிட்டு கோலை ஆட்டினா போதாது! ராஜாவும் மனிசன் தான்! கோலெடுக்கும் கை களவாடினா, ஏர் புடிக்கும் கை கன்னக்கோல் எடுக்கும். மகுடம் தரித்த மண்டை வீங்கினா, மக்கள் மனம் மாருட்டமா போயிடும்.

ராஜா: அதுனாலே என்ன சொல்றே?

கோமாளி: நீங்க நல்ல வழி காட்டினா, மக்கள் பின்பற்று வாங்க.

ராஜா: கோமாளி, நீ சொல்வது உண்மை! இப்போதுதான் எனக்கு விளங்குகிறது. நீ கோமாளியாயிருந்தாலும் கொஞ்சம் மூளை இருக்கிறது. உன் புத்தியை மெச்சினேன்!

கோமாளி: மகாராஜா உத்தரவு!

ராஜா: சரி, நீ சொல்றபடி நானும் நல்ல வழியில் நடக்கிறேன்!... மகா ஜனங்களே! எனது பிரிய நண்பர் கோமாளியார் விருப்பத்துக் கிணங்க, நான் இன்று முதல் உங்கள் ராஜாஇல்லை. (ஜனங்கள் ஆரவாரம்.) உங்களில் ஒருவனாக ஆகிவிட்டேன். இதோ என் செங்கோலை—அதாவது வாக்கிங் ஸ்டிக்கை—எறிந்துவிட்டு, மண்வெட்டியை எடுத்துக் கொள்கிறேன். உங்களுடன்

நானும் ஓர் உழைப்பாளி! எல்லோரும் நம் நாட்டுக்காக, உழைப்போம், வாருங்கள்!

குரல்கள்: (ஜயவிக்ரமனுக்கு ஜே! நீங்களே தலைவன்! உங்களையே பின்பற்றுவோம்!

[கை தட்டல். கூட்டத்தின் ஆரவாரம்]

பரமானந்தன்: சபையோர்களே! நமது வாத்தியார் ஐயா தயாரித்த ஜயபேரிகை நாடகத்தைப் பார்த்தீர்கள். அதில் உள்ள கருத்துக்கள் உங்கள் மனதில் பதிந்திருக்கும். இந்த சந்தர்ப்பத்தில் நம் ஊருக்கு வந்திருக்கும் இளம் கனவான் ஸ்ரீ குமார் அவர்கள் உங்களுக்கு ஓரிரண்டு வார்த்தைகள் சொல்லி இன்றைய விழாவை முடிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

[கை தட்டல்]

குமார்: ஃபிரண்ட்ஸ் அதாவது...சகோதர சகோதரிகளே! எனக்குத்தமிழ் அவ்வளவுகிளியராக வராது என்பதை வெட்கத்துடன் ஒப்புக்கொள்கிறேன். ஏதாவது மிஸ்டேக்ஸ் இருந்தால் எக்ஸ்கியூஸ் செய்துடுங்க. இன்றைக்கு இங்கே என்னை உங்கள் முன் ஸ்பீச் செய்ய கூப்பிடுவீங்கன்னு நான் எக்ஸ்பெக்ட் செய்யலே. இருந்தாலும் நீங்க என்னை இப்படி ஆனர், அதாவது கௌரவம் செய்ததற்குத் தாங்க்ஸ்—அதாவது வந்தனம். இங்கே இதுவரை நடந்த டான்ஸ் பாட்டு டிராமா எல்லாம் வெரிகுட்! ஏ ஒன்! நான் அமெரிக்காவுலே கூட இந்தமாதிரி பார்த்ததில்லே! டைம் ஆனதே தெரியலே. நான் ஏதோ இங்கே நம்ம uncle...Mr. பண்ணையபிள்ளைவாளை பாக்கவந்தேன். வந்த இடத்தில் நல்ல புத்திமதியைப் பெற்றேன். பரமானந்தர் உண்மையிலேயே உயர்ந்த மனிதர். அவரைப் போல் ஊருக்கு ஒருவர் இருந்தால் போதும். நாடு முன்னேறுவது உறுதி. நாட்டுக்கு நல்லது செய்ய விரும்புகிற பெரிய மனிசர்கள், பிறர் என்னென்ன செய்யவேணும்னு விரும்புகிறார்களோ அதையெல்லாம் தாங்களே செய்ய முன்வரணும். இதுதான் இந்த நாடகத்தின் படிப்பினை. எல்லோருக்கும் தாங்க்ஸ்.

(ஜயபேரிகைக் கீதம் முழங்குகிறது. பிறகு கூட்டம் இனிது கலைகிறது.)

— o —

மலை போன்ற உருவமுடையது யானை. கூரிய கொம்புகளும் அதற்கு உண்டு. இருந்தாலும் புலியைக் கண்டு நடுங்கும். ஊக்கமற்றவர் நிலையும் இது போன்றதுதான். அவர்கள் உடல் வலி பெற்றிருந்தும் பயனில்லை.

— திருவள்ளுவர்

# காலங் கருது

வே. தில்லைநாயகம், எம். ஏ., எம். எல். எஸ்., பி. டி.
(நூலகர், கன்னிமாரா நூலகம், சென்னை.)

***நான்காம் சீலம் :***

நூலால் உலகளக்கும் நூலக வியலின் சீலங்கள் ஐந்து. அவற்றில் முதற் சீலமான 'நூற்கள் படிப்பதற்கே' என்பது 'ஆளுக் கொரு நூல்[3] தரும் இரண்டாம் சீலத்திற்கு வழிகாட்டியது. இரண்டாம் சீலம் செயற்படும் போது 'நூலுக்கோர் ஆள்' காணும் மூன்றும் சீலம் உருவாகியது. இந்த மூன்று சீலங்களும் முழுமையடைய வேண்டுமானால் அதற்குக் காலம் கை கொடுக்க வேண்டும். எனவே அதையும் ஒரு சீலமாக்குவோம். அதைக் 'காலங் கருது' (Save the time of the reader) எனப் பெயரிடுவோம்.

***காலமும் கடவுளும்***

ஏனெனில் 'காலம்கருந்தனம்' என்கிறது ஒரு பழமொழி. அதாவது அது காலத்தைச் செல்வமாகக் குறிப்பிடுகிறது. 'காலம் வென்றான் கடவுளை வென்றான்' என்கிறது மற்றொரு பழமொழி. அதாவதுகட்டுக்கடங்கா்க்காலத்தை ஒருவன் கட்டுப்படுத்திச் செயற்பட முடியுமானால் அது கடவுளைக் கண்டதற்குச் சமம் என்கிறது. காலம் உலக வாழ்க்கையில் எவ்வளவு சிறப்பிடம் பெறுகிறது என்பதைக் குறிப்பிடுகிறது இது.

காலத்தைக் கணக்கிட்டு, திட்டமிட்டுப் பயன்படுத்திக் கொள்ள முடியுமானால் உலக வாழ்க்கையில் எட்டாததுமில்லை; கிட்டாததுமில்லை. எனவேதான் திருவள்ளுவர் அதற்காகத் தனது திருக்குறளில் தனியாக ஒரு அதிகாரமே வகுத்து,

> " அருவினை என்ப உளவோ கருவியான்
> 'காலம் அறிந்து செயின்?"

எனக் கடாவுகிறார். தொடர்ந்து,

> " ஞாலம் கருதினும் கைகூடும் காலம்
> கருதி இடத்தாற் செயின்"

என்று அவரே காலத்தின் திறம் விளக்கும் விடையும் தருகிறார்.

***இரண்டு பசிகள்***

இத்தகு காலம் மனிதனிடம் பலவிதப் பசிகளைத் தோற்றுவிக்கிறது. அப்பசிகளை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். அதில் முதல் வகையை உடற்பசி எனலாம். சான்றாக உடற்பசியின் ஒரு கூறான வயிற்றுப் பசி ஏற்பட்டவுடன் உணவு தேவைப்படுகிறது. அது கிடைக்கும்வரை அப்பசி அடங்காது. வயிற்றைக் கிள்ளும்; பிசையும்; புரட்டும். உணவு கிடைத்த பின்தான் அது அடங்கும். அது போலவேதான் தாகமும். தாக

வுணர்வு ஏற்பட்டால் தண்ணீரோ அல்லது வேறு பானமோ கிடைக்கும்வரை நாவரட்சி அடங்காது. மாற்றுக் கிடைத்தாலும் மாறுமேயொழிய தணிந்துவிடாது. ஆனால் தண்ணீர் கிடைத்தபின்தான் அது மாறும்.

ஆனால் இரண்டாம் வகையான பசியோ—அறிவுப்பசியோ—விசித்திரமானது. கணத்தில் தோன்றி மறையும். தோன்றும் நேரத்தில் கடும் வேகத்தில் செயற்படும். அப்போதே அதன் தேவை பூர்த்தி செய்யப்படவேண்டும். இன்றேல் மறைந்துவிடும்; மந்தித்துவிடும்; திரும்ப எப்போது தோன்றும் என்று சொல்லவும் இயலாது. சிலசமயம் திரும்பஎழுவதுண்டு. பெரும்பாலான சமயம் எழுவதேயில்லை; ஒரோரு சமயம் தடம்புரண்டு தவருன வழிச்சென்று தடுக்கி விழவும் கூடும்.

எனவே அறிவுப்பசி எழும்போது, அதற்கான அறிவுணவை ஆளறிந்து, அளவறிந்து, நிலைமையறிந்து, இடமறிந்து, பொழுதறிந்து நல்க வேண்டும் நூலகம்.

### அகமும் புறமும்

எனவே நூலகம் 'ஆளுக்கோர் நூல்' தரும்போதும், 'நூலுக்கோர் ஆள்' தேடும்போதும் காலங் கருத வேண்டும். அக்காலங் கருது நிலை அகநிலை நேரம் (Subjective time) என்றும் புறநிலைநேரம் (Objective time) என்றும் இரு வகைப்படும்.

சுவையாகச் சொல்ல வேண்டுமானல் தேர்வு எழுதிவிட்டு முடிவு தெரியக் காத்திருக்கும் அருள்வேலனைக் காணுங்கள். அன்று மாலை 3 மணிக்கு எம்.ஏ. தேர்வு முடிவு பல்கலைக் கழகக்கட்டடத்தில் வெளியிடப்படும் என்ற செய்தியைக் கண்டான் காலைச்செய்தித்தாளிலே. அவன் தேர்வில் வெற்றி பெறுவது நிச்சயம்; ஆனல் அது முதல் வகுப்பிலா அல்லது இரண்டாம் வகுப்பிலா என்று தெரிய வேண்டும்! ஆனல் தேர்வு முடிவு கண்ணுல் காணும் வரை ஒரு ஆவல்; பரபரப்பு. எனவே 2-30 மணிக்கே பல்கலைக் கழகம் வந்துசேர்ந்துவிட்டான்.

முடிவு வெளியிடப்படும் இடம் சென்று கண்ணோட்டினன். அங்கு ஒன்றுமில்லை. மூன்று மணிக்கல்லவா கொண்டு வந்து வைப்பார்கள். எனவே நூலகம் சென்ருன். பருவ வெளியீடுகள் பிரிவு (Periodicals Section) க்குச் சென்று ஓரிடத்திலமர்ந்தான். ஒன்றைப் பார்த்தான். அடுத்த நாற்காலியில் மாறி யமர்ந்தான். மற்ருெரு இதழைப் புரட்டினன். கடிகாரத்தைப் பார்த்தான். 2-50 மணி ஆயிற்று.

வெளியே வந்தான். அதற்குள் கூட்டம் பெருகியிருந்தது. கல்லூரி நண்பர்கள்சேர்ந்தனர். ஏதேதோ பேச்சுகள். அருள்வேலன் கண்கள் மீட்டும் முடிவு விவரப் பலகைகள் வைக்கு

மிடத்திலிருந்தன. சரசரப்பு; பரபரப்பு; பலகைகள் வரிசையாக வைக்கப்பட்டன.

உடனே பாய்ந்தான் அருள்வேலன். அங்கே அவன் நண்பர்களும் பின்தொடர்ந்தனர். அருள்வேலன் முதற்பலகையிலே முதல் வரிசையிலே, முதல் வகுப்பில் தேறியிருந்தான். அவன் மனம் மகிழ்ந்தான். ஒரு சுற்றுப் பருத்தது போலவும் தெரிந்தது. ஆனால் அவன் மற்றவர்கள் முடிவையும் தெரிந்து கொள்ளப் பலகை பலகையாய் நகர்ந்து கொண்டிருந்தான்.

மணி ஐந்து அடித்து ஓய்ந்தது பல்கலைக் கழகக் கடிகாரம்.' "போகலாமா, மரினா காண்டீனுக்கு?"-நண்பர்கள் அழைப்பு ஒருங்கே ஒலித்தது. அவனும் நண்பர்களும் நகர்ந்தனர்.

காலம் போக்கிரித்தனமானது இரண்டரை மணியிலிருந்து மூன்று மணிக்குள் — அந்த அரைமணி நேரத்திற்குள் அருள்வேலன் படாதபாடு பட்டான். நத்தையாய் நகர்ந்தது கடிகாரம், அவன் காத்திருக்கும் போது.

ஆனால் அதே பொல்லாத கடிகாரம் மூன்றிலிருந்து ஐந்துக்குப் போவதற்கு இறக்கை கட்டிக் கொண்டு பறந்திருக்க வேண்டும், அவன் தன்னை மறந்த பெயர்களைத் தேடிக் கொண்டிருக்கும்போது.

ஆம்; அப்படித்தான் நினைத்தான் அருள்வேலன். ஏன்? முடிவு வெளியிடுமுன் அவன் கழிக்க நேர்ந்தது—காத்திருக்க நேர்ந்தது — அகநிலை நேரம்; முடிவு வெளியானபின் அவன் கழிக்க நேர்ந்தது — தன்னை மறந்து பெயர்களைப் பார்த்துக் கொண்டு கழித்தது—புறநிலை நேரம்!

இந்நிலை அருள்வேலனுக்கு மட்டுமல்ல, உலகத்து மனிதர் ஒவ்வொருவருக்கு முண்டு. மனிதன் தனக்குவேண்டியதற்காகக் காத்திருக்கும் போது—அலுவலகத்திற்குப் போக இரயிலடியில் இரயிலுக்காகக் காத்திருக்கும்போது—அதுபோன்ற பிற நேரங்களில்—காலம் கடுமையாகத் தோன்றும்,அது அகநிலை நேரம்! தன்னை மறந்து ஒரு வேலையிலீடுபட்டிருக்கும்போது —தனக்கு வேண்டியவர்களிடம் மகிழ்ச்சியாகப் பேசிக் கொண்டிருக்கும்போது அல்லது அது போன்ற நேரத்தின்போது— காலம் கடந்ததே தெரியாது. அது புறநிலை நேரம்!

இந்த—அகநிலை நேரம், புறநிலை நேரம்—இரண்டினையும் நூலகப்பணியின்போது நினைவிலிருத்திக்கொண்டுகாலங்கருதிப் பணியாற்ற வேண்டும் நூலகப் பணியாளர்கள்.

மூடிய முறை

எனவே அதோ வருகிறாரே ஒரு வாசகர் அவருடனே நூலகத்திற்குள் நுழைவோம். திறந்தமுறை (Open access)இல்லாது மூடிய முறை (Closed System) கொண்ட நூலகமது.

மூடிய முறை கொண்ட நூலகத்தில் வாசகர் நேரடியாக நூற்களைப் பார்த்து எடுக்க முடியாது, எனவே ஒவ்வொரு வாசகரும் நூற்பட்டி (Catalogue) யைப் பார்த்து நூலின் பெயர் நூற்தலைப்பு, பகுப்பெண் முதலியவைகளை ஒரு சீட்டில் குறித்து நூலெடுத்துத் தருபவரிடம் தருகிருர். அவர் நூலடுக்குகளினுள் போய்விட்டுப் பத்து நிமிடங்கள் கழித்துத் திரும்பி வந்து வெறுங்கையைக் காட்டுகிருர். நூல் வெளியே போயிருக்கிறதாம். இது சரியான — உண்மையான — பதில்தானு? உண்மை என்போம்.

அடுத்து வாசகர் திரும்பப்பட்டியைப் பார்த்து மூன்று நூற்களின் விவரங்களைத் தருகிருர். நூலெடுத்துத் தருபவர் இரண்டு நூற்களைக் கொண்டு வருகிருர். ஒன்று பழங்காலத்தது. மற்ருென்றை எடுத்துக் கொண்டு படிக்குமிடம் செல்கிருர் வாசகர்.

இதற்குள் ஆனநேரம் அரை மணி. அதுவும் வாசகர் 'விவரமறிந்தவராயிருந்து, நூலெடுத்துத் தருபவரும் சுறுசுறுப்புள்ளவராய் இருந்தால் இது. வாசகர் கூட்ட மதிகமானுல், நூலெடுத்துக் கொடுப்பவர்கள் குறைவாயிருந்தால் அது தனிக்கணக்கு!

. இப்படி ஒரு நூல் பெறுவதற்கு ஒரு நூலகத்தில் அரை மணி செலவானுல் - இப்படி நூற்றுக்கணக்கான நூலகங்களில், நூற்றுக்கணக்கான நூற்கள் பெறுவதற்கு விரயமாகும் காலம் எவ்வளவு? இதற்கு ஏற்படும் காலவிரயம், அதனைக் கணித்தால் வரும் பணவிரயம், அதனுலேற்படும் தேசிய நட்டம் எவ்வளவு என்பதைக் கணக்கிட்டால் மூச்சே நின்றுவிடும்.

### திறந்த முறை

இதற்கு ஒரு மாற்றமில்லையா? ஏன் இல்லை? நிச்சயமாக உண்டு. அது என்ன? அது தான் திறந்தமுறை!

இதன் மூலம் வாசகர்களுடையவும் பணியாளர்களுடையவும் நேரம் எவ்வளவோ மீதப்படுகிறது. எனவே வாசகர்கள் நேரடியாக நூலடுக்குகளுள் நூற்களைத் தேர்ந்தெடுக்க அனுமதிக்கப்படுகிருர்கள்.

அப்படி அனுமதிக்கப்படுபவர்கள் அதன் அருமையை உணர்ந்து, பொதுச் சொத்திற்கு நட்டம் விளைவிக்காதபடி நடந்து கொள்ள வேண்டும்.

### அடுக்குமுறை

வாசகர்கள் நூலடுக்குகளிடையே அனுமதிக்கப்பட்ட மாத்திரத்திலேயே எல்லா நூல்களும் அவர்களால் பார்க்கப்பட்டுவிட முடியாது.

ஏனெனில் பழங்காலத்தில்— ஏன் இன்னுங்கூடப்பல நூலகங்களில்—நூற்கள் வாங்கப்பட்ட காலமுறைப்படி (chronological Sequence) அடுக்கிவைக்கப்பட்டுள்ளன. சில நூலகங்கள் நூற்களின் ஆசிரியர்களின் பெயர்

அகரவரிசைப்படி (Alphabetical sequence) அடுக்கப்பட்டுள்ளன. இது வாசகர்களுக்கும் சரி, நூலகப் பணியாளர்களுக்கும் சரி நல்ல முறையில் உதவியாயிருப்பதில்லை,

**பொருள் வரிசை**

இன்றைய நிலையில் பெரும்பாலோர் நூற்களின் பொருள் முறையிலேதான் நூற்கள்கேட்டும், தேடியும் வருகின்றனர். அப்படி இருப்பதே ஒழுங்கும் முறையுமாகும். எனவே நூற்கள் எல்லாம் ஒப்புக் கொள்ளப்பட்ட பகுப்பு முறைப்படி பொருள் வாரியாகப் பகுத்துத் தொகுத்துவைக்கப்படல் வேண்டும். அப்போது தான் வாசகர் நேரடியாகத் தனக்குவேண்டிய பகுதிக்குச் சென்று நூற்களை எடுத்துப் பயன்படுத்திக் கொள்ளமுடியும். அவ்வாறு செய்து கொள்ள முடியாதவர்களுக்கு நூலகப்பணியாளர்கள் எளிதில் உதவி செய்ய முடியும். அந்தப் பொருள் வரிசை அடுக்கும் உபயோகப்படுத்துவதற்கேற்ப – வாசகர்கள் வந்து செல்வதற்கு ஏற்றதாக – அடுக்கி வைத்தல் வேண்டும். சான்ருகச் சொன்னுல் எந்த நூலகத்திலும் அதிகமாக உபயோகப்படும் பிரிவு இலக்கியம் என்று சொல்லி விடலாம். அதற்கு அடுத்து பொருளியல், அரசியல் சட்டவியல், கல்வியியல் முதலிய சமூகவியல் துறைகளையும் அதற்கு அடுத்து அறிவியல் துறைகளையும் சொல்லலாம். எனவே நூலகத்தில் வாசகர் நுழைவு வாயிலுக்கருகில் இலக்கியமும் அதற்கடுத்துப்பிற துறைகளும் அடுக்கிவைக்கப்படலாம். இது வாசகர்கள் வந்துபோக எளிதாகவும், அவர்களைப் பார்த்து வேண்டியன செய்து தர நூலகப் பணியாளர்களுக்குச்சுலபமாகவும்இருக்கும்.

இதற்கு உதவியாக அடுக்குக் குறிப்பு (Stackroom guides) களும், தட்டுக் குறிப்பு (Shelf guides) களும் அமைக்கப்படுதல் வேண்டும். நூற்களின் முதுகுச் சீட்டுகள் (Book tags)தெளிவாக எழுதி அடிப்புறத்திலிருந்து ஒரு அங்குல உயரத்தில் ஒட்டப்படல் வேண்டும். நூற்களின் பெயர், ஆசிரியர் முதலிய விவரங்களடங்கிய சீட்டு நூலின் தலைப்புப் பக்கத்திலிருந்து கீழ்நோக்கி அமைந்திருக்கவேண்டும். இது தான் வாசகர்கள் கண்ணிற்கு அதிக வேலை தருவதாயில்லாமலிருக்கும்.

இப்படி நூலடுக்குப் பகுதியில் ஒவ்வொரு கட்டத்திலும் காலங்கருதிச் செயற்படவேண்டும். இது முதலெடுப்பில் சாதாரணமாகத் தோன்றினுலும், அதன் பயன் ஊன்றிப் பார்ப்பின் பெரும்மிச்சம் என்பதறியப்படும்.

**பட்டியமைப்பு**

இப்படி நூலடுக்குப் புகுந்தார் சில சமயம் தான் விரும்பிய நூற்களைக் காண முடியாவிட்டால் சாதாரணமாக ஒரு குறிப்பிட்ட நூல், நூலகத்தில்

உள்ளதா என்று ஐயம் எழும்பும். எனவே வாசகர் உடனே பட்டி(Catalogue)யை நாடுவார். என்வே அப்பட்டி நூலடுக்கறையின் அருகிலிருக்கவேண்டும். அப்போது தான் காலம் விரயமாகாமல் பட்டியைப் பார்க்கமுடியும். அந்தக் காலங் கருது நிலை நூலகப் பணியாளர்களுக்கும் உதவும்.

எனவே அப்பட்டியும் காலங் கருதி—முன்போல் எழுதி, ஒட்டிவைக்கப்படும் நூலகப் பட்டியா யில்லாமல் 'அச்சிட்ட நூலகப்பட்டியாயில்லாமல்,ஒவ்வொரு நூலுக்கும் தனித்தனியாகத் தயாரிக்கப்பட்ட / அட்டைப் பட்டி (Card catalogue) யாக விளங்குகிறது இன்றைய நாட்களில்.

இத்தகு பட்டியும் இன்று பெரும்பாலும் நூலுக்குத்தான் பட்டியாயுள்ளன. ஆனால் அது போதாது. இன்று பெரும்பாலான பெரு நூற்கள் ஒவ்வொன்றும் தன்னகத்தே பல சிறு பொருட் குறிப்புத் தொகுதிகளைக் கொண்டுள்ளன. அவைகளைப் பற்றியும் கூறு பாட்டுப் பதிவுகள் (Analytical entries) தயாரிக்கப்பட வேண்டும்.

## நூற்றொகை

அதுபோலவே பத்திரிகைகளில் வெளியாகும் கட்டுரைகளுக்கும் ஒரு பட்டி தயாரிக்கப் படவேண்டும் இது தனித் தனியாக ஒவ்வொரு நூலகத்திலும் அதனதன் தேவைக் கேற்ப தயாரிக்கப்படலாம். ஆனால் இத் தேவை நிரந்தரமானதாகவும், பல நூலகங்களுக்குத் தேவையானதாகவும் இருப்பின் அச்சிட்ட நூற்றொகை (Bibliography)கள்வெளி வர வாய்ப்பிருக்கின்றன. அப்படியிருப்பின் அவைகளை ஒவ்வொரு நூலகமும் வாங்கிப் பயன்படுத்திக்கொண்டு தனித் தனியாகப் பட்டிதயாரிப்பதைத் தவிர்த்துக் காலங் கருதலாம்.

இத்தகு தேவைகளை யெல்லாம் பட்டியாளர்கள் (cataloguers) நூலகத்தின் தேவையறிந்து, வாசகர்களின் தேவையறிந்து, நூற்களிருப்பையறிந்து கூடியமட்டும் குறைந்த முயற்சியில் நிறைந்த பயன் காணும் வண்ணம் காலங் கருதிப் பணியாற்ற வேண்டும்

## தகவலுதவி

பொருள்வாரியாக அடுக்கப்பட்ட நூற்களும்,திட்டமிட்டுத் தயாரான பட்டிகளும் மட்டும் வருவாரைத் திருப்திப் படுத்தி விடமுடியாது. ஏனெனில் இவையெல்லாம் அஃறிணை உதவிதான். உயர்திணை சார்ந்த மனிதனுக்கு உயர்திணை சார்ந்த மற்றொரு மனிதன் உதவி செய்ய முன்வரவேண்டும். அந்த உதவிதான் தகவலுதவி (Reference Service)

அத்தகு தகவலுதவியாளர் செல்வாசகர் ஓம்பி, வருவாசகர் காத்திருந்து உதவ வேண்டும். நூலகத்திற்கு வரும் ஒவ்வொருவரும் தான் நூலகம்

வந்ததும் தன்னைத் தனியாகக் கவனித்து வேண்டியன தந்து, கேட்டன உதவி, பணி புரிவ தாக உணரும் வகை செய்ய வேண்டும். இங்ஙனம் செய்வ தன் மூலம் தான் நூலகம் வரு வார் அகநிலை நேர உணர்வால் தான் அதிகம் நேரம் காத்திருந்த தாக எண்ணி அதிருப்தி ஏற் படாமல், வேண்டியன பெற்று அதிலே மூழ்கி புறநிலை நேரம் மறந்து பயனடையவேண்டும்.

### சேக்கிழார்

சான்றாகச் சொன்னால் ஒரு வாசகர் சேக்கிழார் பற்றிய விவரம் நாடி வருகிறார் என் போம். அவர் வேண்டிய சேக் கிழார் பற்றிய முழு விவரமும் தர எண்ணி அவரை ஓரிடத் தில் உட்காரச் சொல்லிவிட்டு நூலகத்திலிருக்கும் அத்தனை நூல்களையும் தேடி ஒன்று சேர்த்துக் கொண்டு அப்புறம் அனைத்தையும் கொண்டு போய் கொடுக்கலாம் என்றெண்ணிச் செயற்படக் கூடாது.

வாசகர் ஒரு குறிப்பிட்ட செய்தியறிய ஆவலாய் வந்திருக் கிறார். அவருக்கு செய்தியறியும் வரை ஒவ்வொரு கணமும்— அகநிலை நேரம்—காத்திருப் பது கடுமையாயிருக்கும். எனவே அதை மாற்றும் முறை யில் கலைக் களஞ்சியத்தை — சேக்கிழார் குறிப்பிருக்கும் பகு தியை—எடுத்துப் பார்க்கச் சொல்லிவிட்டு, அல்லது அபி தான சிந்தாமணியை எடுத்துக் கொடுத்துவிட்டு, மற்றவை களைத் தேடவேண்டும். அகப் படுவ தொவ்வொன்றையும் உடனுக்குடன் அவருக்குக் கொடுத்துக் கொண்டேயிருக்க வேண்டும். அது அவரைக்கவனத் திலிருத்திக் கொண்டிருக்கும். அப்போது அவரின் புறநிலை நேரம் தெரியாது அவர் செயற் பட்டுக் கொண்டிருப்பார். அவர் வேலை முடிந்ததும் மகிழ்ச்சி யாகச் செல்வார்.

### உடனடித் தகவலுதவி

இத்தகு தகவலுதவியை இரு பிரிவாகக் கொள்ளலாம். முதல் வகை உடனடித் தகவலுதவி (Ready reference service) எனப் படும். அதன்படி நூலகம் வரு வாரைச் சந்தித்து,—புதிதாக வந்தவரானால் — நூலக அமைப்பை, நூலடுக்கு முறையை, பிற பொதுநிலை களைச் சொல்லிவைத்து அவர் விரும்பும் நூல்களிலிருக்கும் பகுதிக்கு அழைத்துச் சென்று காட்டவேண்டும்.

வழக்கமாக வருபவரானால் அவர் விரும்பும் நூற்கள் வந் திருந்தால் அவைபற்றியும், அல்லது புதிதாக ஏதாவது விவரம் கேட்டால் அதுபற்றிய விவரம் தரும் நூற்களையும்கூறி, அந்நூற்களிருக்குமிடமும் கூறி வழி காட்டவேண்டும். பின் அவரே நூற்களைப் பார்த்துப் படித்துக் கொள்வார்.

வேறு சில வாசகர் அவசர மாகச்சில விவரங்களறிய விரும் புவார். சான்றாகச் சொன்னால் சென்னையிலிருந்து 'கல்கத்தா

வுக்கு இரயில் மூலம் தூரமும் கட்டணமும் அறிய விரும்பலாம். அவரைப் போய் நீங்களாக இரயில் கால அட்டவணையைப் பார்த்துக் கொள்ளுங்கள் எனவிரட்டக்கூடாது. தகவலுதவியாளர் அருகிலிருக்கும் கால அட்டவணையைப் புரட்டித் தூரத்தையும் கட்டணத்தையும் சொல்லலாம். மேலும் அதிகம் விவரம் வேண்டினால் அவரே பார்த்துக்கொள்ளத் தொடங்கி விடுவார். இது போல் எத்தனையோ சிறு கேள்விகள் நேரிலும், தொலைபேசியிலும் எழக் கூடும். அனைத்தையும் சுறுசுறுப்பாகக் கவனித்துப் பதில் சொல்லிப் பணிபுரிய வேண்டும்.

### தொடரும் தகவலுதவி

இம் முறையில் சற்று மாற்றங்களும் உண்டு. அத்தகு கேள்விகளை உடனுக்குடன் ஒருநாளில்—ஒரு மாதத்தில் கூட — முழுமையாகப் பதில் கூறி முடித்துவிட முடியாது. இச் சமயத்தில் தகவலுதவி தொடர் கதையாகநேரும். அதை தொடர் தகவலுதவி (Long term reference service) என்போம்.

சான்றாகச் சொன்னால் 'இருபதாம் நூற்றாண்டில் இங்கிலாந்து—இந்தியா ஏற்றுமதி இறக்குமதி' பற்றி ஆராய்ச்சி நடத்துவாருக்கு உடனடியாகப் பதில் சொல்லிவிட முடியாது. எனவே அப்பொருள் சார்ந்த நூற்றொகையும், பத்திரிகைக் குறிப்புத் தொகுதியும் கொடுத்துதவவேண்டும். இத்தகு நேரத்தில் பெரும்பாலும் வாசகரே உதவிசெய்து கொள்ளும் வகையில் தகவலுதவியாளர் உதவி செய்யவேண்டும்.

வேறொரு சமயத்தில் யாராவது கிராமத்திலிருக்கும் ஒரு வாசகர்—நகர நூலகத்திற்கு வந்து போக முடியாதவர்— ஏதோ ஒரு தலைப்பைப் பற்றி- ஒரு பெரியாரைப்பற்றி அல்லது ஒரு ஊரைப்பற்றி அல்லது ஒரு இலக்கியக் குறிப்புப்பற்றி அல்லது ஒரு அரசியல் கோட்பாடு பற்றி—கேட்கக்கூடும். அங்கிலையில் தகவலுதவியாளர் தான் செய்தியறிந்து பதில் தர முயலவேண்டும். அதையும் தொடர்ந்து வாசகர் வேலை முடியும் வரை தந்து வரவேண்டும்.

### வாசகர் வகை

இத்தகு தகவலுதவிவேண்டி வரும் வாசகர்கள் பலரகம்; ஒவ்வொருவரும் ஒரு ரகம்; அவர்கள் கேட்கும் தகவலும் பலரகம்; ஒவ்வொன்றும் ஒரு ரகம்; சான்றாகச் சொன்னால் கல்லூரி மாணவர்கள் தங்கள் தேர்வுக்கு உடனடியாக உதவும் குறிப்பு நூல்கள் கேட்டு வருவர். அதுவும் தேர்வுக்குப் போகும் வழியில். எனவே அப்போது தகவலுதவியாளர் சட்டென நூலைத் தேடியெடுத்து அனுப்பிவைக்க வேண்டும். ஒருவர் அலுவலகம் போகும் வழியில் ஒரு குறிப்பு அறிந்து கொள்ளவந்தால், வேண்டியதை அவரைத்

தேடச் சொல்லுவதைவிட, அவருக்குத் தேவையானது என்னவென்பதைக் கேட்டறிந்து நாமே அதைக் குறிப்பைப் பார்த்துக் கொடுத்துவிடலாம். ஏனெனில் இத்தகையோர் சட்டக் குறிப்புப்போன்றவைகளில் தான் நாட்டம் காட்டுவர். வேறு சிலர் தனக்கு வேண்டியதை விளக்கமாகச் சொல்லவும் தெரியாது தகவலுதவியாளரை நெருங்கிக் கேட்கவும் கூச்சப்படுவர். அத்தகையினரைத் தகவலுதவியாளர் பக்குவமாய் நெருங்கி, பட்டும் படாமலும் பேசி அவர்கள் விரும்புவதைப் பெற வழி காட்ட வேண்டும். இப்படியெல்லாம்—ஒல்லும் வகையெல்லாம் —காலங் கருது முறையில் செயற்பட்டால்தான் நூலகப் பணி பயனுள்ளதாகும்.

நூலீதல்

இப்படியாக வாசகர் வேண்டிய உதவியெல்லாம் செய்தால் அவர்கள் திருப்தியடைவர். நூலகத்தில் தனது வேலைமுடிந்ததும், வீடு திரும்பும் போது ஓரிரு நூற்கள் எடுத்துச் செல்ல நினைப்பர். அது ஒப்புதலாயின் அந்நிலையிலும் நூலீதல் (Issue method) முறையிலும் காலங் கருதிச் செயலாற்ற வேண்டும்.

சாதாரணமாக முன்னாட்களில்—ஏன் இன்றுங்கூடப் பல நூலகங்களில்—நூலீயும்முறையில் காலங்கருதுவதாகத் தெரியவில்லை. பேரேடொன்றைத் திருப்பி வாசகர் பெயர், அவர் விலாசம், எடுத்துச் செல்லும் நூற்களின் விவரங்கள் முதலியனவற்றை எழுதி அவரிடம் கையொப்பம் வாங்கிக்கொண்டு, பின்னர் நூற்களின் முதற் பக்கத்திலிருக்கும் தேதிச் சீட்டில் திருப்பித் தரவேண்டிய தேதியும், நூல் தந்த வரிசை எண்ணும் குறிப்பிட்டுக் கொடுக்கப்படுகிறது. பின் அதேபோல் நூற்கள் திரும்பத் தரப்படும் பொழுது பழைய நாள் குறிப்பைப் புரட்டி வரவு வைத்துக் கொள்வது வழக்கம்.

வாசகர் எண்ணிக்கை குறைந்திருந்தால் இது அவ்வளவு சிரமமாயிராது. மாறாக வாசகர் எண்ணிக்கையும், கொடுக்கப்படும் நூற்கள் எண்ணிக்கையும் அதிகமாகும்போது அதனால் ஏற்படும் காலவிரயம் மிக அதிகம். அதே சமயம் அந்நடைமுறையில்வாசகர்கள் காத்திருப்பதும், காத்திருக்கும்போது அவர்கள் அகநிலை நேரத் தவிப்பும், நூலகப் பணியாளர் படும் தொல்லையும் எழுதி விளக்க முடியாது; அனுபவப்பட்டே உணரவேண்டும்.

இரண்டு சீட்டுகள்

இந்த நிலை மாறவேண்டும்; மாற்றப்படவேண்டும். எனவே காலங்கருதி நூலகத் துறை இம் முறையிலே பல முறைகளைப் புகுத்தியிருக்கிறது. அம்முறை ஒவ்வொரு நூலகத்திலும் ஒவ்வொரு விதமாயிருக்கிறது. அனைத்திற்கும் அடிப்படையான கருத்து வாசகர்கள்

ஒவ்வொருவருக்கும் குறிப்பிட்ட எண்ணிக்கைச் சீட்டுகள் கொடுக்கப்படும்; படிக்காக கொடுக்கப்படும் ஒவ்வொரு நூலுக்கும் அந்நூலின் விவரமடங்கிய ஒரு சீட்டிருக்கும், ஒவ்வொரு நூலும் கொடுக்கப்படும்போது அந் நூலின் நூற் சீட்டை (Book ticket) யும், வாசகர் சீட்டை (Borrower's ticket) யும் இணைத்து நூலகத்தில் வைத்துக்கொள்வர். நூல் திருப்பித் தரப்படும் பொழுது சேர்த்துவைக்கப்பட்டிருந்த நூற் சீட்டைப் பிரித்து நூலில் வைத்துவிட்டு, வாசகர் சீட்டை வாசகரிடம் கொடுத்துவிடல் வேண்டும் இம் முறைக்கு பிரௌனி முறை (Browne method) என்று பெயர்.

இப்படி நூலியும் முறை எதுவாயினும் அது (1) ஒரு குறிப்பிட்ட நாளில் எத்தனை நூற்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன? (2) என்னென்ன நூற்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன? (3) எங்கெந்த நூல்கள் யாராரிடம் இருக்கின்றன? (4) என்றைக்கு அவை திரும்ப வரவேண்டும்? என்பனபோன்ற கேள்விகளுக்கு விடையிறுக்கும் வகையில் வரன்முறையாக அடுக்கி வைக்கப்பட்டிருக்க வேண்டும். அப்போது தான் நூலகத்தில்சேர்க்கப்பட்ட நூல்கள், நூலகத்தி லில்லையானால் யாரிடமிருந்து எப்போது வரக்கூடும் என்றறிந்து கொள்ள முடியும். அது வாசகர்களின் காலத்தையும், நூலகப் பணியாளர்களின் காலத்தையும் காப்பாற்றித் தர வழிவகுக்கும்.

### அட்டை யுகம்

இப்படி வாசகர்கள் காலத்தைக் காப்பாற்றினால் மட்டும் போதாது. நூலகத்தில் திரைக்குப் பின்னால் எத்தனை எத்தனையோ செயல்கள் நடக்க வேண்டியிருக்கின்றன. அனைத்தும் காகிதத்தில் எழுத்தாக—ஆவணமாக—நடத்த வேண்டியிருக்கின்றன. அப்படிப் பயன்படும் ஒவ்வொரு கட்டும் (Document) ஒவ்வொரு விதமாயிருக்கிறது. அவற்றை அடுக்குவதும்,காத்துப் போற்றுவதும், தொல்லையான வேலையாயிருக்கிறது.

இவைகளையெல்லாம் அட்டை முறை (Card system)யில்—முடிந்த அளவுக்கு—மாற்ற முடியுமானால் நலமெனத் தெரிந்து நூலகத் துறையில், அம்முறையில் நீண்ட காலத் திட்டமிட்டு நூலகத் துறைத் தந்தை மெல்வில்டூயி என்பவர் நூலகத் துறையில் பல வேலைகளுக்கு 5 அங்குல நீளமும் 3 அங்குல அகலமும் கொண்ட அட்டைகளைப் புகுத்தினார் சென்ற நூற்றாண்டின் இறுதியில். அம் முயற்சி ஒரு பெரும் புரட்சியை உண்டாக்கி விட்டது. சொல்லப் போனால் அட்டை யுகம் எனப்படும் முறையில் அது பரவிவிட்டது அங்கிங்கெனாதபடி.

ஒரு சீட்டே பல காரியங்களுக்குப் பயன்படும்படியாகத்

திட்டமிட்டுக் காலங் கருதப் பட்டது. சான்ருகச் சொன்ஞல் நூற்றேர்வு அட்டை (Book selection card) ஒன்றே, கட்டளை அட்டை (Order card) யாக நூற்சேர்க்கை அட்டை (Accession card)யாக, பின்னிழு அட்டை (withdrawal card) யாகப் பயன்படுகிறது. அது போன்றே சஞ்சிகைகள் வருகைப் பதிவுச், சீட்டையும் சஞ்சிகை வராமை நினைவூட்டு அட்டையும், சஞ்சிகை இருப்புக் காட்டு அட்டையும், பட்டி அட்டையும்,-பிற எத்தனையோ அட்டைகள்—எல்லாம் 5 அங்குல நீளம் 3 அங்குல அகலமும் கொண்ட அட்டைகள்—12.5 சென்டிமீட்டர் நீளமும் 7.5 சென்டிமீட்டர் அகலம் கொண்ட அட்டைகள்—அட்டைகளாகக் காட்சி தருகின்றன.

இந்த நூலகக் காலங் கருது புரட்சி நூலகத் துறை மட்டும் மல்லாது, மேலும் பல்வேறு தொழிற்றுறைகளிலும் புகுந்து பயன் தந்து வருறது அட்டை உருவிலே.

தாளில் எழுதியவைகளில் வேண்டியபடி அடுக்க—அகர வரிசையிலே —தேதிவாக்கிலே—வேண்டியது வேண்டாதது முறையிலே—பொருள் பிரிவிலே—நாட்டு வரிசையிலே —அடுக்க எளிதாக முடிவதில்லை. அதனுல் பெரும் கால விரயமும், தாள் விரயமும், ஆள் விரயமும் ஏற்படுகின்றன. ஆனல் அதற்கு மாருக அட்டைகளைப் பயன்படுத்தினுல்—ஒவ்வொரு பதிவும் ஒரு அட்டையிலே இருப்பதால்—வேண்டிய படியெல்லாம் அடுக்கிக்கொள்ள முடிகிறது. இது காலங் கருது நிலையில் பெருமுதவியாகவும், எளிதாகவு மிருக்கிறது.

மைய வேலை

இத்தகு காலங்கருது முயற்சி தனி நூலகத்திற்கு மட்டுமல்ல; நூலகப் பணி முயற்சி முழுமைக்குமே பொருந்துவதாகும். எடுத்துக்காட்டாகச் சொன்ஞல் இன்று இந்தியா முழுமையும் எண்ணிறந்த பொது நூலகங்கள் — மாநில மைய நூலகங்கள், மாவட்ட மைய நூலகங்கள், கிளை நூலகங்கள்—உள்ளன. ஒவ்வொரு நூலகமும் எண்ணிறந்த நூற்களை வாங்குகின்றன. ஒவ்வொரு நூலகத்தில் ஒவ்வொரு நூலையும் பகுத்துப் பட்டியிடும் வேலை நடைபெற வேண்டியிருக்கிறது. இந்த வேலைகளையெல்லாம் ஒரு மைய வேலை (Centralised agency) நிலையம் ஏற்றுக்கொண்டு செய்து முடிக்குமாஞல் எவ்வளவு மிச்சம் ஏற்பட வழி பிறக்கும்? அதையும் நூற்கள் வெளியாகும் முன்னரேயே பகுத்துப் பட்டியிடும் வேலை (Prenatal classification and cataloguing) யைச் செய்து முடிக்க முடியுமாஞல் நூற்றுக்கு எழுபத்தொன்பது விழுக்காடு இலாபம்—காலத்தில், பணத்தில், சக்தியில், ஆட்களில்—கிடைக்க வழியிருக்கிறது.

அதனை யுணர்ந்துதான் இங்கிலாந்து இவ் வேலையைப் பிரிட்டன் தேசிய நூற்றொகை (British National Bigliography) வெளியிடுவதன் மூலமும், அமெரிக்க ஐக்கிய நாடுகள் அமெரிக்கக் காங்கிரசு நூலகப் பட்டி அட்டைகள் (Library Congress Catalogue cards) வெளியிடுவதன் மூலம் செய்து வருகின்றன.

இந்தியா இம் முயற்சியின் அடிப்படையாக இந்திய தேசிய நூற்றொகை (Indian National Bibliography) வெளியிட்டு வருகிறது.

தமிழ் நாடு கல்வித்துறை இம் முறையிலே தமிழ்நாடு மாநில நூற்றொகை (Madras State Bibliography) ஒன்று 1951 ஆண்டிற்கு வெளியிட்டது. இப்போது தமிழ்நாட்டு குழந்தை நூற்றொகை (Madras State Bibliography of children's literatue-Tamil) ஒன்று வெளியிட்டுக் கொண்டிருக்கிறது.

## தனி முயற்சி

இவைகளைத் தவிர முதன் முதலாக இந்தியாவில்—தமிழ் நாட்டில்—அரசரும் புலவரும், நூலகப் பணி, குறிப்பேடு முதலிய நூல்கள் வெளியாகும் போதே பகுத்துப்பட்டியிடும் வேலையை முடித்துக் கட்டளை பட்டிப் பதிவுடன் வெளியாயுள்ளன. வேறு சில பதிப்பகங்கள் பகுப் பெண்ணை மட்டும் குறித்து வெளியிட்டு வருகின்றன.

சில பதிப்பகங்கள் பட்டியட்டைகளும் வெளியிட்டன.

## நூலக இருப்பிடம்

இம் முறையில் காலங் கருது முயற்சி மேலும் முன்னேற வேண்டும். அது நூலகத்திற்கு வந்தவர் நேரத்தைக் காப்பதோடில்லாது — நூலக உள் வேலைக் காலத்தைக் காப்பதோடில்லாது — நூலகத்திற்கு வரக்கூடியவர்கள் என்று கருதப்படுபவர்களூகாலத்தையும் காப்பாற்ற முயற்சி செய்ய வேண்டும். அது எப்படி முடியும்?

ஊரார் அனைவரும் வந்து போக ஏதுவாக ஊரின் மத்தியில் நூலகம் இருக்கவேண்டும். ஊர் பெரிதாயிருப்பின்—நகரமாயிருப்பின் — அது முடியாது போகலாம். அச் சமயத்தில் நகரத்தின் பல்வேறு பகுதிகளிலும் நாலைந்து வீதிகளுக்கொன்று விதம் நல்லதுவாய் வசதியதாய்க் கிளை நூலகங்கள் நிறுவி நூலகப் பணி தொடர வேண்டும். அந்நிலையில்கூட சிலர்—வயதானவர்கள் — எளிதாக நடமாட முடியாதவர்கள் — மகளிர் — குழந்தைகள், — நூலகத்திற்கு வந்து போகாத நிலையிலிருக்கக் கூடும். எனவே அவர்களுக்கும் நூலகப் பணி கிடைக்கும்படியாக வீட்டிற்கு வழங்கு முறை (Home delivery system) கடைப்பிடிக்க வேண்டும். அதுபோலவே, மருத்துவ நிலையங்களிலிருப்பாரும், சிறையிலிருப்பாரும், தொழிற்சாலை

யில் பணிபுரிவாரும் அவரவர் இடத்திலிருந்தே நூற்கள் பெற்றுப் படிக்க வழி செய்ய வேண்டும்.

நகர வாழ்க்கையில் இது முடிகிறது. கிராம வாழ்க்கையினருக்குக் கிளை நூலகங்கள் மூலம் நூற்கள் கிடைக்க வழியிருக்கிறது. இவற்றின் மூலம் வசதிபெறவாய்ப்பில்லாதபோது உந்து நூலகங்கள் (Libraclrines) மூலம் நூலகப் பணி நடக்க வேண்டும்.

இதனைக் கருத்திற் கொண்டு தான் 1931ம் ஆண்டிலேயே தஞ்சாவூர் மாவட்டத்தில் மன்னார்குடிக்கருகிலுள்ள மேலவாசல் என்னும் கிராமத்திலிருந்து நடமாடும் நூலகப் பணியைத் தொடங்கிவைத்தார், பொறியியலறிஞர் கனகசபை பிள்ளையவர்கள்.

அதையடுத்து 1937ல் மதுரை மாவட்டக் கழகத்தினர் 'ஞானரதம்' என்னும் உந்து நூலக உதவி கொண்டு மதுரை மாவட்ட மக்கள் நூற்கள் பெற வாய்ப்புத் தந்தனர்.

இன்று 1948ல் நிறைவேறிய சென்னை நூலகச் சட்டப்படி தமிழ்நாட்டு மக்கள் அனைவரும் நூலகப்பணி வசதி பெற வாய்ப்பேற்பட்டுப் பயனடைந்து வருகின்றனர்.

இப்படி நூலகப் பணியில் ஒவ்வொரு கட்டத்திலும் காலங் கருதிப் பணியாற்றினல் தான் காலம் மிச்சமாகி, பொருள் மிச்சமாகி, ஆள் உழைப்பு மிச்சமாகி, பணி பெருகிப் பயனடைய வழிபிறக்கும். அது வளரும் நூலகத்தின் பெருமையை யறிய உதவி செய்யும். அது எப்படி என்பதை அடுத்த திங்கள் காணலாம்.

# செய்திக் குறிப்புகள்

### பாராட்டுகிறோம்

கோவை—நீலகிரி மாவட்ட ஸ்தல ஸ்தாபனத் தொகுதிகளுக்கு 11–4–64 அன்று நடந்த தேர்தலில் திரு.K.K.கோதண்டராம கவுண்டர் அவர்களும் (தலைவர், பஞ்சாயத்துயூனியன், தூக்க நாயக்கன் பாளையம்) திரு.K. துரைசாமி நாயுடு அவர்களும்(தலைவர்பஞ்சாயத்து யூனியன் பெரியநாயக்கன் பாளையம்) பெருவாரியான ஓட்டுகளால் தேர்ந்து எடுக்கப்பட்டார் என்பதை அறிந்து மகிழ்ச்சியடைகிறோம். அவர்களின் சேவை நாட்டுக்குப் பெரிதும் தேவை என்பதைத்தெரிவித்து அன்னார் தம் சேவை சிறக்க வேண்டுமெனப் பாராட்டுகிறோம்.

❋ ❋ ❋

### வானமாதேவி யூனியன்

சிதம்பரம் வட்டம் காட்டுமன்னார் கோயில் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த வானமாதேவி பஞ்சாயத்திற்கு, தென்னார்க்காடு மாவட்ட ஆட்சித் தலைவர் திரு. எஸ். பி. அம்புரோஸ், ஐ. ஏ. எஸ்., அவர்கள் நேரில் சென்று பஞ்சாயத்து தலைவர் மற்றும் கிராமத்தார்களை சந்தித்தார்.

மாவட்ட ஆட்சித் தலைவர் அவர்களுக்குபஞ்சாயத்துச் சார்பில், தலைவர் மு. வேலாயுதம் மாலைகள் அணிவித்தார். சிதம்பரம் கோட்டாட்சி தலைவர் திரு ஆர். முத்துக்கண்ணு, பி. ஏ., அவர்கள் வந்திருந்தார்கள்.

❋ ❋ ❋

### காட்டுமன்னார் கோயில் யூனியன்

காட்டுமன்னார் கோயில் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த மாமங்கலம் கிராமத்தில் ஆசிரியை இல்லத் திறப்பு விழா, பஞ்சாயத்து யூனியன் தலைவர் திரு. முத்து செல்வகணபதி அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தென்னார்க்காடு மாவட்ட ஆட்சித் தலைவர் திரு. S. P. அம்புரோஸ் I. A. S. அவர்கள் ஆசிரியை இல்லத்தைத் திறந்து வைத்தார்கள்.

மாவட்ட ஆட்சித் தலைவர்களுக்கு அகர புத்தூர், சித்தமல்லி, அறந்தாங்கி பஞ்சாயத்துத் தலைவர்கள் மலர் மாலைகளை அணிவித்தார்கள்.

விழாவில் சிதம்பரம் கோட்டாட்சி தலைவர் திரு. R. முத்துகண்ணு B. A. அவர்களும் மற்றும் பல அதிகாரிகளும் கலந்துகொண்டனர்.

யூனியன் தலைவர் திரு. முத்து செல்வ கணபதி அவர்கள் நன்றி கூறினார்.

❋ ❋ ❋

**வீரபாண்டி வட்டாரம்**

**முடுதுரை யூனியன்**

16-3-64-ம் தேதி முடுதுரை பஞ்சாயத்து நாய்க்கம்பட்டியிலுள்ள பஞ்சாயத்து யூனியன் ஆரம்பப் பாடசாலையில் மாலை 4 மணிக்குக் குழந்தைகள் கண்காட்சி நடத்தப்பட்டது.

வீரபாண்டி பஞ்சாயத்து யூனியன் பெருந்தலைவர் திரு. டி. வி, திருமலைகவுண்டர் அவர்கள் தலைமையில் பொதுக் கூட்டம் நடத்தப்பட்டது. மாதர் சங்கத்தின் கண்வீனர் திருமதி கிருஷ்ண வேணி சண்முகம் அவர்கள் தேசீயக் கொடியை ஏற்றினார். பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் திரு இரா. சிவஞானம் விளம்பர அதிகாரி திரு. டி. வி. கேசவன், திருமதி சகுணா இரத்தினராஜ் ஆகியோர் குழந்தை வளர்ப்பைப் பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள்.மாதர் சங்கத்தலைவி திருமதி சிவகாமி பழனிசாமி அவர்கள் பரிசு வழங்கினார்கள்.

❋ ❋ ❋

**ஆட்டையாம்பட்டி யூனியன்**

18-3-64-ம் தேதி ஆட்டையாம்பட்டி பஞ்சாயத்தில் பாலர் பள்ளி மாலை 4 மணிக்கு ஆரம்பிக்கப்பட்டது.

மாலை 5 மணிக்கு வீரபாண்டி யூனியன் தலைவர் திரு. டி. வி. திருமலை கவுண்டர் அவர்கள் தலைமையில் பொதுக் கூட்டம் நடத்தப்பட்டது. பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் திரு இரா. சிவஞானம் அவர்கள் பாலர் வகுப்பைத் துவக்கி வைத்தார்கள். மாவட்ட மாதர் நல அதிகாரி, திருமதி பத்மா பாய் பி. ஏ. அவர்கள் சொற்பொழிவாற்றினார். ஆட்டையாம்பட்டி பஞ்சாயத்து அங்கத்தினர் திரு. வி. சி. பெருமாள், திரு.ராமசாமி அவர்களும்சேலம் அரசினர் கல்லூரி விரிவுரையாளர் திரு. திருமலை M. A.L.T. அவர்களும் சொற்பொழிவாற்றினார்கள். மாதர் நலக்குழுத் தலைவி திருமதி கமலா அவர்கள் நன்றி நவின்றார். நாட்டு வாழ்த்துடன் கூட்டம் இனிது முடிவுற்றது.

❋ ❋ ❋

**தலைவாசல் யூனியன்**

தலைவாசல் யூனியன் வட்டாரத்தில்13-4-64-ம்தேதி தமிழ்ப் புத்தாண்டு தினத்தன்று "பால் பெருக்கு தின விழா" தலைவாசல், புத்தூர், நாவக்குறிச்சி, தேளியாகுரிச்சி, சார்வாய், சதாசிவபுரம், சாத்தப்பாடி, வீரகலூர், புளியங்குறிச்சி, நாவலூர், நத்தக்கரை, இலுப்பநத்தம், புகவாசல், வெள்ளையூர், பகடப்பாடி, வத்துவாடி, காமக்காபாளையம், ஆரகலூர், பெரியேரி கோவிந்தம்பாளையம், கவர்பனை, தென்குமரை, காட்டுக்கோட்டை, மணிவிழுந்தான் முதலிய இடங்களில் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. திரு சிங்காரவேலு, விவசாய விஸ்தரிப்பு அதிகாரி,திரு. சுந்தரம், கால்நடை விஸ்தரிப்பு

அதிகாரி, திரு கே. ஜி. ராமலிங்கம் கல்வி விஸ்தரிப்பு அதிகாரி முதலியோர்கள் தேவியாகுரிச்சி கிராமத்தில் நடைபெற்ற பால் பெருக்கு தின விழாவில் கலந்து கொண்டு சிறப்பாக நடத்தினர். பள்ளி ஆசிரியர்கள் விழாவைச் சிறப்பாக நடத்த சிறந்த உதவி செய்தனர்.

❋ ❋ ❋

*வாலாசாபாத் யூனியன்*

வாலாசாபாத் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த பல கிராமங்களில் கிராமத்தொண்டர் படையினர் மாதர் அணியின் பயிற்சி முகாம்கள் நடைபெற்றன.

*7-3-64*-ந் தேதி வாலாசாபாத்தில் கால்நடைக் கண்காட்சி நடைபெற்றது. காஞ்சிபுரம் கோட்ட ஆட்சித் தலைவர் திரு. சுப்பிரமணியம் அவர்களால் மேற்படிக் கண்காட்சி ஆரம்பித்து வைக்கப்பட்டது. உத்திரமேரூர்த் தொகுதி எம். எல். ஏ. அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறந்த கால்நடைகளுக்கும் கோழிகளுக்கும் சுமார் ரூ 800-பெறுமான பரிசுகள் வழங்கப்பட்டன.

*14-3-64*-ந் தேதியன்று ஏகனும்பேட்டையில் உத்திரமேரூர் தொகுதி எம். எல். ஏ. திரு சீனிவாச ரெட்டியார் அவர்கள் தலைமையில் தமிழக ஸ்தல ஸ்தாபன அமைச்சர் திரு. என். எம். ஏ. மஜீத் அவர்களால் நீர்த்தேக்கத் தொட்டித் திறப்பு விழாவும், செங்கற்பட்டு மாவட்ட ஆட்சித் தலைவர் திரு என். கிருஷ்ணசாமி, ஐ. ஏ. எஸ்., அவர்களால் ஏகனும்பேட்டை பஞ்சாயத்து அலுவலகக் கட்டிடக் கால்கோல் விழாவும் நடைபெற்றது.

*16-3-64*-ந் தேதி தென்னேரியில் குழந்தைகள் காட்சி நடைபெற்றது.

வாலாசாபாத், பஞ்சாயத்து யூனியனை சேர்ந்த தென்னேரி, ஊத்துக்காடு, வாலாசாபாத், பரந்தூர், முதலிய கிராமங்களில் ஐந்தாண்டுத் திட்டப் பிரசார விழாக் கொண்டாடப்பட்டது.

*29-3-64*-ம் தேதி ஊத்துக்காடு பஞ்சாயத்து யூனியன் பள்ளியில் அதன் 51-வது ஆண்டு விழா நடைபெற்றது.

*30-3-64*-ம் தேதி வாரணவாசி கிராமத்தில் அரிஜன தினம் பஞ்சாயத்து உதவி தலைவர் திரு. தனபால் தலைமையில் கொண்டாடப்பட்டது. பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் திரு.என் மீனுட்சிசுந்தரம், சமூகக் கல்வி அமைப்பாளர் திரு எ. வெங்கட்ராமன், கிராமநல ஊழியர், திரு. சின்னையா, சமூகநல ஊழியர் திரு. தங்கவேலு ஆகியவர்கள் அரிசன தினம் கொண்டாடப்படுவதின் கருத்து, அரிஜன முன்னேற்றம், அவர்களுடைய கடமை ஆகியவை பற்றிப் பேசினர்கள்.

உலகப் 'பிரசித்தி பெற்ற நாவலாசிரிய ரான விக்டர் ஹூயுகோ எழுதிய 'ஹன்ச் பாக் ஆவ் நார்ட்டர் டாம்' என்ற கதை யின் சுருங்கிய தமிழ் வடிவம் இக்கதை.

# நாட்டியக்காரி

திருவிழா என்ருல் சந்தடிக் குச் சொல்லவா வேண்டும்? ஊரெல்லாம் ஒரே இரைச்சல். உள்ளமெல்லாம் உவகைப் பெருக்கு. பாரிஸ் நகரம் பள பளப்போடும் பரபரப்போடும் திகழ்ந்தது.

1482 ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் ஆரும் நாள். அன்று இரண்டு திருவிழாக்கள். 'எப் பினி' என்பது ஒன்று. 'மூடர் தினம்' என்பது மற்ளுென்று. முன்னதை விடப் பின்னதைப் பற்றித்தான் பெருமையும் பேச் சும் அதிகம் இருந்தன. 'மூடர் தினம்' என்பது மக்களின் முழுக் கவனத்திற்கு உரிய தாகத் திகழ்ந்தது. அதற்கு மற் ருெரு காரணமும் உண்டு. மூடர் தின விழாவிலே ஒரு நாட கம் நடை பெறுவது வழக்கம். அந்த நாடகத்தின் விசேஷம் என்ன வென்ருல், நாடகம் முடி வுற்றதும் மூடர்கள் எல்லோ ரும் ஒன்று கூடி ஒருவரைத் தேர்ந்தெடுப்பார்கள். அவர் தான் போப்பாண்டவர். மூடர் களின் போப்பாண்டவர் என் பது அவரது முழுப் பெயரா கும். இந்த நாடகத்தைக் காண நாட்டின் பல பாகங்களிலிருந் தும் மக்கள் திரள் திரளாகக் கூடுவது வழக்கம். பெரிய பெரிய அதிகாரிகள் கூட இதில் பங்கு பெறுவதற்கு முந்திக் கொண்டு வருவார்கள் என்ருல் நாடகத்தின் பெருமை யைப் பற்றி விளக்கிக் கூறவா வேண்டும்?

பாரிஸ் நகரில் நடைபெற விருந்த மூடர் தின விழாவுக்குப் பிளாண்டர்ஸ் நாட்டு அரசியல் அதிகாரிகள் பலர் முன்னதா கவே வந்து சேர்ந்துவிட்டனர்.

'நியாய மாளிகை' என்பது அரசாங்கத்திற்குச் சொந்தமான இடமாகும். அங்கேதான் வேடிக்கைகளும் கேளிக்கை களும் நடப்பது வழக்கம். எனவே மக்கள் கூட்டம் நியாய மாளிகையில் நிறைந்து விட் டது. நாடகம் நடைபெற வேண்டிய மண்டபத்தில் ஜன சமுத்திரம் அலை மோதி நின் றது. நாடகத்தை எதிர்பார்த்து

நகர மக்கள் ஆவலோடு கூடி இருந்தனர்.

நடிகர்கள் தங்கி இருந்த அறைக்கும் நாடகம் நடைபெற வேண்டிய அறைக்கும் இடையே இருந்த இடைவெளியைத் துணியைப் போட்டு மறைத்திருந்தார்கள். நாடக மேடையை அடைய விரும்பும் நடிகன் மேடைக்கு வந்து சேர வேண்டுமானால் ஒரு ஏணியில் ஏறி இறங்கித்தான் ஆக வேண்டும். திரை மறைவில் நடிகர்கள் இருப்பதாகப் பாவனை செய்து கொள்ளுவதைத் தவிர வேறு வழி இல்லை. ஏனெனில் எல்லா நிகழ்ச்சிகளும் பகிரங்கமாகவே தெரிந்தன.

காலம் நழுவியது. கூட்டம் பெருகியது. நாடகம் துவங்கவில்லை. அடைபட்டுக் கிடந்த மக்கள் ஆரவாரம் செய்யத் தொடங்கினர். கீழ்த்தர மக்கள் தங்கள் சுய ரூபத்தைக் காட்ட முனைந்தனர். சீழ்க்கை ஒலி எழுந்தது. சிரிப்பொலி மிகுந்தது. பேச்சொலி பிறந்தது. பேரொலி வளர்ந்தது.

மணி பன்னிரண்டு அடித்தது. மக்கள் பொறுமை இழந்தனர். மேடையில் நடிகர்களின் நாடகம் நடைபெறா விட்டால் மண்டபத்தில் நாடகத்தை மக்களே நடத்தத் தயாராக இருந்தனர்.

நல்ல வேளையாக பிளாண்டர்ஸ் நாட்டு அரசியல் அதிகாரிகள் வந்து சேர்ந்தனர். இன்னும் முக்கியமானவர்கள் முறையாக வந்து உட்கார்ந்தனர். பெரிய மனிதர்களைப் பார்த்ததும் சிறிய மனிதர்களின் சேட்டைகள் சிறிது ஓய்ந்தன.

மக்களின் கூக்குரலை மட்டுப்படுத்த நாடகக்காரர்கள் எவ்வளவோ முயன்றும், முயற்சிகள் முழுப்பயனை அளிக்கவில்லை. ஒரு நடிகன் நாடக மேடைக்கு வந்து சேர்ந்தான். திரை விலகியது என்பதற்காகவும் நாடகம் துவங்கப் படலாம் என்பதற்காகவும் மக்கள் கூச்சலைக் கொஞ்சம் குறைத்துக் கொண்டனர்.

'இன்னும் சில விநாடிகளில் நாடகம் தொடங்கும்,' என்று அவன் அறிவித்தான். என்ன சொல்லுகிறான் என்பதைப் புரிந்து கொண்ட பின்னர், மக்களால் சும்மா இருக்க முடியவில்லை.

'உடனே தொடங்கு, இல்லையேல் உங்களுக்கெல்லாம் இறுதிச் சடங்கு,' என்று ஒருவன் கூப்பாடு போட்டான்.

நாடகத்தை உடனடியாகத் தொடங்க வேண்டியதின் அவசியத்தை நடிகனுக்கு ஒரு பெரியவர் விளக்கிக் கூறினார். மக்களின் பரபரப்புக்குப் பயந்து திணறிய நடிகன், நாடகத்தை உடனே துவங்குதற்குச் சம்மதித்து விட்டான்.

'இதோ நாடகம் தொடங்கி விட்டது,' என்று அலறிக் கொண்டே நாடகத்தை ஆரம்பித்து வைத்தான் நடிகன்.

களிப்புக் கடலில் கத்தித் தீர்த்தனர் மக்கள். சப்தம் அடங்குதற்குள்ளாகச் சங்கீத ஒலி அரங்கத்தில் நிறைந்து நின்றது. நான்கு நடிகர்கள் மேடைக்கு வந்து விட்டனர்.

ஆட்டம் ஆரம்பமாயிற்று. ஆடைளும் அலங்காரங்களும் அனைவரின் உள்ளங்களையும் ஆனந்தக் கடலில் ஆழ்த்தின. நாடகத்தில் நடிப்பையோ, பேச்சையோ யாருமே கவனிக்கவில்லை. கவனிக்க வேண்டிய விருப்பமும் யாருக்கும் இல்லை. ஒரே ஒரு ஆசாமி மட்டும் உரையாடல்களை உன்னிப்பாக உற்றுக் கேட்டுக் கொண்டே வந்தார்.

அவர் பெயர் பீயரி கிரின் காயர். அவர்தான் அந்த நாடகத்தை எழுதியவர்.

நாடகம் நடைபெறத் தொடங்கி நகைச் சுவையோடு வளர்ந்து கொண்டே இருக்கும் பொழுது, பல பெரிய மனிதர்களும் தலைமைப் பாதிரியாரும் மண்டபத்திற்குள் நுழைந்தனர். எனவே நாடகம் சிறிது தடைப்பட்டது. நடிகர்கள் பெரிய மனிதர்களுக்கு வணக்கம் செலுத்தினர். இது கண்டு ஆத்திரம் அடைந்த சபையோர்கள் சங்கடம் உற்றனர். பெரிய மனிதர்களைப் பார்த்துக் கேலியும் கிண்டலும்செய்தனர். கேலியையும் கிண்டலையும் கண்டு கேட்டு ஆத்திரம் அடையாமல் பெரியோர்கள் உண்மையிலேயே பெரிய மனிதர்களைப் போலவே பேரமைதியோடு இருந்தனர். இதற்கு இன்னொரு காரணமும் உண்டு. அன்று நடைபெற்றது மூடர்களின் திருநாள்தானே? எனவே மூடர்கள் தங்கள் விருப்பம் போல அன்று எதையும் செய்ய அனுமதி பெற்றிருந்தார்கள். பேச்சு மூச்சில்லாமல் பேரமைதியோடு இருந்தார்கள்.

நாடகம் மீண்டும் தொடர்ந்தது. பெரிய மனிதர்களுக்கு நாடகம் சுவை அளிப்பதாக அமையவில்லை. மட்டரகமான நாடகத்தை மணிக் கணக்காகப் பார்த்துக் கொண்டிருக்க விரும்பாத பிளாண்டர்ஸ் நாட்டு அரசியல் அதிகாரி எழுந்து நின்றார்.

'சபையோர்களே, இத்துடன் நாடகத்தை முடித்துக் கொள்ளலாம். இனி போப்பாண்டவரைச் சபையோர்கள் தேர்ந்தெடுக்கலாம்.'

நாடகத்தில் சுவை இல்லாத காரணத்தால் நகரமக்கள் தலைவரின் வேண்டுகோளுக்குமகிழ்ச்சியோடு கைதட்டிச் சம்மதத்தைத் தெரிவித்தனர். நாடகம் நிறுத்தப் பட்டது. அமைதி நிலவியது.

தலைவர் திரும்பவும் எழுந்து நின்றார். அவர் தொடர்ந்து பேசினார்.

"எங்கள் ஊரிலும் இது போலத் திருவிழாக் கொண்டாடுவது உண்டு. மக்கள் எல்லோரும் ஒரு இடத்தில் கூடுவர். கூடிய மக்களில் கொடூரமான பார்வை உள்ள குரூபியைப்

போப்பாண்டவராகத் தேர்ந்தெடுப்பர் மக்கள். அதைப் போலவே, இங்கும் நாம் நம்முடைய போப்பாண்டவரைத் தேர்ந்தெடுக்கலாம்.''

இந்த யோசனையைச் சொல்லி விட்டுத் தலைவர் சபையைச் சுற்று முற்றும் பார்த்தார். தலைவரின் யோசனையைத் தடையின்றி ஏற்றுக் கொண்டனர் அங்கு கூடியிருந்த சபையோர்கள். 'அருமையான யோசனை'' 'அழகான கருத்து,' என்றெல்லாம் ஆரவாரக் குரல்கள் அரங்கத்தில் முழக்கமிட்டன.

மேடையின் அருகே ஒரு மேஜை இருந்தது. மேஜையின் பக்கத்தில் சிறு கோவில் இருந்தது. கோவிலுக்குள் நுழைந்து அங்கிருந்த சன்னலின் வழியாகத் தேர்தலுக்குப் போட்டி இடுபவர்கள் சபையோருக்குக் காட்சி அளிக்க வேண்டும். பார்ப்பதற்கு யார் குரூரமாகக் காட்சி அளிக்கின்றாரோ அவரே போப்பாண்டவராகத் தேர்ந்தெடுக்கப் படுவார்.

பல பேர்கள் போட்டியில் பங்கு கொண்டனர். ஆண்டவனின் படைப்பில் அவலட்சணங்கள் எப்படியெல்லாம் உருவெடுக்கின்றன என்பதை அங்கே காண முடிந்தது. அவலட்சணத்தில் அதிக அவலட்சணம் எது என்பதைத் தீர்மானிப்பது அவ்வளவு எளிய காரியம் இல்லை. யாரைத் தேர்ந்தெடுப்பது என்று எல்லோரும் யோசித்துக் கொண்டிருக்கும்போது சபையில் பரபரப்பு ஏற்படலாயிற்று.

உலகிலேயே மிகவும் குரூரமானவன் என்று கூறத்தக்க ஒரு கூனன் காட்சி அளித்தான். கண், காது, மூக்கு, நெற்றி எல்லா அங்கங்களுமே அவலட்சணத்தின் அவதாரங்களாக விளங்கின. அந்தக் கூனனே போப்பாண்டவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டான்.

கூனனின் பெயர் குவாசிமோடா. அவன் கோவிலில் வேலை பார்க்கும் மிக எளிய சிப்பந்தி. கோவிலின் மணியை வேளா வேளைக்கு அடிப்பது தான் அவனுடைய வேலை. ஆள் வாட்டசாட்டமாகப் பருத்தும் தடித்தும் விளங்கினான்.

அவனுக்குக் காது கேட்காது. செவிடன். ஒரு கண் தெரியாது. குருடன். ஒரு கால் குட்டையானது. நொண்டி. முதுகிலே ஒரு திண்டு இருந்தது. கூனன். அவலட்சணம் அனைத்துள்ளும் முதுகுத் திண்டு பிரதானமாக விளங்கியதால் கூனன் என்றே அவனை ஊரார் அழைத்து வந்தனர்.

போப்பாண்டவராகக் கூனன் தான் தேர்ந்தெடுக்கப்பட்டான். ஆகவே போப்பாண்டவரைப் போன்று அவனை அலங்கரிக்க மக்கள் முற்பட்டனர். தலையில் கிரீடம் ஏறியது. உடலைச் சுற்றி பட்டுத் சால்வை போர்த்தப் பட்டது. கூனனுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. முகங்களின்

விருப்பத்திற் கெல்லாம் ஏற்ப இசைந்து நின்முன்.

ஒரு பல்லக்குக் கொண்டு வரப்பட்டது. அதில் கூனனை ஏற்றினார்கள். பக்த கோடிகளான ஏழை மக்கள் போப் பாண்டவரைப் பல்லக்கோடு தூக்கிக்கொண்டு பவனி கிளம்பினர். நகர வீதிகளின் ஊடே நடந்து சென்றனர். கூனன் இன்பக்கடலில் மிதந்து கொண்டிருந்தான்.

நாடகம் பாதியிலே நின்று விட்டது. நாடகம் நின்று விட்டதற்காக யாருமே கவலைப்படவில்லை. ஒரே ஒரு ஆசாமிக்கு மட்டும் வருத்தம் இருந்தது. அந்த ஆசாமிதான் நாடகாசிரியர். எப்படியேனும் நாடகத்தை நடத்தி முடித்துவிட வேண்டும் என்று அவர் எடுத்துக்கொண்ட முயற்சி இடையிலேயே தடைப்பட்டு விட்டது.

இந்தச் சமயத்தில் எழுந்த 'எ ஸ் மெ ரா ல் டா,' 'எஸ்மெரால்டா,' என்ற குரல் அரங்கத்தில் இருந்த ஓரிரு மக்களையும் ஓடி விடும்படி செய்துவிட்டது. அக்குரல் அருகிருந்த சிறைச்சாலையில் இருந்து வந்திருக்க வேண்டும். அது ஒரு பைத்தியக்காரக் கிழவியின் குரலாகக் கூட இருக்கலாம்.

கூட்டம் கலைந்துவிட்டது. கலைந்த கூட்டத்தி - ரைக் கண்ணியமில்லாதவர் ள் என்றும் கல்வி அறிவு அற்றவர்கள் என்றும் கூறிவிட்டு நாடகாசிரியர் வீட்டை நோக்கி விரைய முற்பட்டார்.

நகரின் மத்தியில் கிரீவ் என்றொரு இடம் உண்டு. அவ்விடத்தில் சிறு கூட்டம் ஒன்று குழுமி இருந்தது. நாடகாசிரியர் இக்கூட்டத்தில் ஒருவராகச் சேர்ந்துகொண்டு வேடிக்கை பார்க்கலானார். தெருக்கூத்து என்றால் யாருக்குமே கவர்ச்சி ஏற்படுவது இயல்பே அன்றோ?

ஒரு பெண் நாட்டியமாடிக் காட்டினாள். அவள் பார்ப்பதற்கு அழகாகவே விளங்கினாள். நாடோடியைப் போலத் தோன்றினாலும் நல்ல எழிலும் அறிவும் உள்ளவளாகவே விளங்கினாள். நிறம் கறுப்புத்தான். இருப்பினும் கவர்ச்சி இருக்கவே செய்தது. ஒல்லியாக இருந்தாள். இருப்பினும் உற்சாகம் ஊட்டக்கூடியவளாகவே திகழ்ந்தாள்.

அங்கிருந்தோர் அனைவரும் அவளையே ஆவலோடு பார்த்துப் பார்த்துப் பசியாறிக் கொண்டிருந்தனர். நாடகாசிரியருக்கும் அவள் ஒரு நல்விருந்தாகவே விளங்கினாள்.

நாட்டியப் பெண்ணுக்கு உறுதுணையாக நின்ற பெருமை ஒரு ஆட்டுக்குட்டிக்குங்கூட இருந்தது. அவள் சொன்ன சொற்களுக்கெல்லாம் ஏற்றபடி அந்த ஆட்டுக்குட்டி அடி பணிந்து நின்றது. அது செய்த அற்புதச் செயல்கள் அநேகரை அதிசயிக்கச் செய்துவிட்டன.

'ஆடு கூட அற்புதமாக வேடிக்கை செய்கிறது என்றால் இதில் ஏதோ மாயாஜாலம் இருக்கிறது,' என்று சிலர் முணுமுணுக்கத் தொடங்கிவிட்டனர். 'பேய் பிசாசுகளின் சேட்டை,' என்றுகூட ஒரு பேச்சு எழுந்தது. நாட்டியக் காரியின் காதுகளிலும் இப் பேச்சுகள் இலேசாக விழத் தொடங்கின. இப்படியாகக் கூட்டத்தில் குழப்பம் ஏற்பட வேண்டிய நிலைமை உண்டாகி விட்டது.

திடீரென்று ஒரு பரபரப்பு ஏற்பட்டது. முன்பின் தெரியாத ஒரு ஆசாமி மூர்க்கத்தனமாகக் கத்தினான்.

'ஏ மூதேவி, நீ எங்கே வந்தாய்? இங்கிருந்து போகப் போகிறாயா, அல்லது உன்னைப் போக்கடிக்க வேண்டுமா?'

இப்படியாக அந்த முரடன் கூச்சல் போட்டுக் கொண்டிருக்கும்போது அங்கே வந்து சேர்ந்தது போப்பாண்டவரின் பல்லக்கு. கூனனைக் கண்டு குதூகுலம் அடைந்த சிலர் நாட்டியத்தை மறந்து பல்லக்கினரோடு ஐக்கியமாகி விட்டனர். கூனன் மட்டற்ற பெருமையோடு மமதை பெற்று மக்களைப் பார்த்து மகிழ்ந்தான். அவன் கைகளில் ஒரு செங்கோல் இருந்தது. அது ஒரு மரச் செங்கோல்.

மொட்டைத் தலையன் ஒருவன் கூட்டத்தினரை முண்டி அடித்து விலக்கிக் கொண்டு முன்னேறி வந்து பல்லக்கின் அருகே பாய்ந்து விட்டான். மின்னல் வேகத்தில் வந்து மரச் செங்கோலைப் பறித்துக் கொண்டான். கிரீடம் கிழித்து எறியப்பட்டது. ஆடைகள் பின்னப் படுத்தப்பட்டன. கூனன் கீழே இறக்கப்பட்டான். அவனது அலங்காரங்கள் பிய்த்து எறியப்பட்டன.

கூனன் நல்ல பலசாலிதான். மொட்டைத் தலையனைவிட மும்மடங்கு உருவாலும் வலுவாலும் பெரியவன்தான். இருப்பினும் நாய்க்குட்டி மாதிரி அடங்கி ஒடுங்கி நின்றான். மொட்டைத் தலையன் கூனனைக் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு விறுவிறு என்று விரைந்து நடந்தான்.

மூடர்கள் திருவிழாவில் பங்கு கொண்ட பக்த கோடிகள் இதுகண்டு பதறித் துடித்தனர். தங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட போப்பாண்டவருக்கு இழைக்கப்பட்ட தீங்குகள் தங்களுக்குத் தரப்பட்ட தீங்குகளே என்று எண்ணித் திகைப்பும் திணறலும் கொண்டனர்.

மொட்டைத்தலையன்யாரென்பதைச் சிலர் புரிந்துகொண்டு விட்டனர். அவ்வூர்க் கோவிலின் பாதிரியாருக்கு அடுத்த பாதிரியார் அவர். அவரை உபகுரு என்றே ஊர்மக்கள் அழைத்து வந்தனர். கிளாடி பிராலோ என்[illegible] அவருடைய பெயர்.

கூனனும் உபகுருவும் ஓட்டமும் நடையுமாக விரைந்து ஓதுப்புறத்திற்கு வந்து விட்டனர். நாட்டியக்காரியும் தன் திருவிளையாடல்களை முடித்துக் கொண்டு தெருக்கோடிக்கு வந்து விட்டாள்.

இரவு நேரம். எதற்கும் அஞ்சாமல் நாட்டியக்காரி நடந்து சென்று கொண்டிருந்தாள். மனித நடமாட்டம் இல்லாத இருண்ட தெருவிற்குள் அவள் நுழைந்தாள். நாடகாசிரியரும் நங்கையைப் பின் தொடர்ந்தார்.

ஒரு அலறல் கேட்டது. நாடகாசிரியர் நடுநடுங்கிப் போனார். அலறியவள் நாட்டியக்காரிதான். அலற வைத்தவன் ஒரு முரடன். நாட்டியக்காரியைப் பலவந்தப் படுத்தினான் அந்த முரடன். அவள் அலறினாள். ஆபத்தில் துணை செய்ய ஆசிரியர் முந்தினார். அதன் பயனாக அவர் அறைபட்டு அண்ணாந்து கீழே மயங்கி விழுந்தார். விழுந்த இடமோ சாக்கடை!

முரடன் அவளைத் தூக்கிக் கொண்டு ஓட முயன்றான். அப்போது நகரக்காவலர்கள் பன்னிரண்டு பேர்கள் அங்கு வந்து சேர்ந்தனர். முரடனின் கைப் பிடியிலிருந்து நாட்டியக்காரியைக் காப்பாற்றினர்.

அந்த முரடன் யார் தெரியுமா? அவன்தான் மூடர்களின் போப்பாண்டவர். அவலட்சணமே உருவான கூனன். கூனனோடு வந்த உபகுரு, கூனனைத் தூண்டிவிட்டுவிட்டு திரைமறைவில் இருந்து வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தான். கூனன் நாட்டியக்காரியைத் தூக்கி வரும்போது உவகை கொண்ட உபகுரு, கூனன் காவலர்களிடம் கையும் களவுமாகச் சிக்கிக் கொண்டபோது சினமும் சிரிப்பும் கொண்டான். பின் தான் தப்பித்தால் போதும் என்ற தாராளச் சிந்தையோடு தலை மறைவாய் ஓடிவிட்டான்.

நாட்டியக்காரி காப்பாற்றப் பட்டு விட்டாள். காப்பாற்றியவன் ஒரு காவல் வீரன். அவன் பெயர் பீபஸ். குதிரைச் சவாரியில் அவன் சாமர்த்தியசாலி.

அவனுக்கு அவள் நன்றி தெரிவித்தாள். அவன் மீது அவளுக்கு அளவற்ற காதலும் ஏற்பட்டு விட்டது. அவனை அடைந்து வாழ வேண்டும் என்று கூட அவள் அரை குறையாக நினைத்தாள். பிறகு இருளில் எங்கோ சிட்டாகப் பறந்து விட்டாள். வீரன் வெற்றிப் பெருமிதத்தோடு விடை பெற்றுச் சென்றான். பின் கூனனைத் தண்டிக்க விரும்பினான்.

சாக்கடையில் மயங்கி வீழ்ந்த ஆசிரியர் மெதுவாக விழித்தெழுந்தார். சுற்று முற்றும் பார்த்தார். மனித வாடையே இல்லை. எங்கும் இருளும் நிசப்தமுமே. தட்டுத் தடுமாறி நடக்க முற்பட்டார்.

ஒரு வீட்டில் வெளிச்சம் தெரிந்தது. அங்கு போய்த் தங்கலாம் என்ற நினைப்போடு கதவை மெதுவாகத் தட்டினர். கதவு திறக்கப்பட்டது. உள்ளே இருந்தவர்கள் யார்? மனிதர்களா அவர்கள்? இல்லை மாக்கள்—மாக்களின் பிரதிநிதிகள். திருடர்கள், கள்ளர்கள், முரடர்கள், தாசிகள் இப்படியாகப் பல பேர்கள் இருந்தனர். அவர்கள் எத்தகையோர் என்பதை அவர்களின் முகங்களே எடுத்துச் சொல்லின.

மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு உள்ளே நுழைந்தார் ஆசிரியர். அங்கே ஒரு பெரிய ஆசாமி பெருமிதத்தோடு வீற்றிருந்தான். அவன்தான் அந்தக் கூட்டத்தினரின் தலைவன்.

'இங்கே வா,' என்றான் முரடர் தலைவன். ஆசிரியர் வேர்த்து விறுவிறுக்கத் தலைவனின் முன் போய் நின்றார்.

'உனக்கு உயிர்வாழ இச்சை உண்டா?' என்றான் தலைவன்.

'ஆம்' என்றார் ஆசிரியர்.

'அப்படியாயின் ஒரு நிபந்தனை. இங்குள்ள பெண்களில் எவளையேனும் நீ மனைவியாக ஏற்றுக் கொள்ளவேண்டும்-இல்லை-எவளாவது உன்னைக் கணவனாக ஏற்றுக் கொள்ள வேண்டும். அப்போதுதான் உனக்கு உயிர்ப்பிச்சை அளிக்கப்படும். ஒருத்தியேனும் உன்னை மணந்து கொள்ள முன்வரவில்லை என்றால் நீ சாவதைத் தவிர வேறு வழி இல்லை,' என்றான் தலைவன்.

தலைவனின் கட்டளைக்கு ஆட்பட்டு, உயிர்வாழும் எண்ணத்தோடு ஆசிரியர் பெண்கள் இருந்த இடத்திற்குப் பரிதாபத்தோடு போய்ச்சேர்ந்தார். ஒருத்தியும் ஆசிரியரை ஏறிட்டுப் பார்க்க முன்வரவில்லை. பெண்களின் போக்கைப் பார்த்தவுடன் உயிர் வாழ்வதில் உள்ள உறுதியை இழந்துவிட்டார் ஆசிரியர்.

ஆசிரியரை முரடர் தலைவன் அழைத்தான். 'எவரும் உன்னை மணக்க ஒப்பவில்லை. எனவே நீ சாக வேண்டியதுதான் சட்டப்படி உனக்குத் தரப்படும் தீர்ப்பாகும்,' என்று சொன்னான். ஆசிரியர் தூக்கு மேடைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். தூக்குக் கயிறு தயாராக இருந்தது. கழுத்தில் அக்கயிறு மாட்டப்பட்டது.

'பாவம். அவரைக் காப்பாற்றுங்கள்,' என்ற சப்தம் அந்தச் சமயம் பேரிடிபோல ஒலித்தது. அந்தச் சப்தத்தைக் கேட்டு எல்லோரும் பிரமித்து நின்றனர். முரடர்களின் தலைவன், குரல்வந்த திசையைப் பார்த்தான். ஒருத்தி ஓடோடி வந்து கொண்டிருந்தாள். அவள் தான் அந்த நாட்டியக்காரி. நாட்டியக்காரியைப் பார்த்தவுடன் நாடகாசிரியர் மகிழ்வும் இன்பமும் கொண்டார். மற்றவர்களோ வியப்பும் வேதனையும் கொண்டனர்.

'நான் இவரைக் கணவராக ஏற்றுக் கொள்ளுகிறேன்,' என்று அங்கிருந்தோர்கள் ஆச்சரியப்படும்படியாக அவள் அறிவித்தாள். முரடர்களின் தலைவன் பேந்தப்பேந்த விழித்தான். கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்றும் குறிக்கோளுடன் ஆசிரியரை விடுதலை செய்து வெளியே அனுப்பினான்.

நாட்டியக்காரிக்கும் நாடக ஆசிரியருக்கும் சம்பிரதாயத்தை ஒட்டித் திருமணம் முடிந்தது. மணமகனுக்கு மணமகள் நல்ல வேலையாக முன்னெச்சரிக்கை செய்துவிட்டாள். கணவன்-மனைவி உறவு பெயரளவுக்குத்தான் என்பதையும் உடல் உறவு விரும்பினால் உயிர்க் கொலை நடக்கும் என்பதையும் உறுதியோடு அவள் சொல்லி விட்டாள். தன்னோடு திரிகின்ற ஆட்டுக்குட்டியைப் போலவே, கணவனையும் ஏற்றுக் கொண்டாளே தவிர, தனக்குத் துணையாளன் என்ற அளவில் அவனை அவள் ஏற்றுக்கொள்ள வில்லை. நாட்டியக்காரியைக் காப்பாற்றிய பீபஸ் என்ற காவலாளன், கூனனைக் கைது செய்து நீதிபதிகளின் முன் கொண்டு போய் நிறுத்தினான்.

இரவில் குழப்பம் விளைவித்தது, வாலிபப் பெண்ணை வலுக்கட்டாயமாகத் தூக்கிச் சென்றது, அரசியல் [illegible]வலர்களை எதிர்த்துப் [illegible]ட்டது ஆகிய மூன்று கு[illegible] சாட்டுக்கள் கூனனின்மீது சுமத்தப்பட்டன. கூனனை நாற்சந்தி கூடுமிடத்தில் கட்டிப் போட்டுச் சவுக்கடி கொடுத்தல் வேண்டும் என்று நீதிபதிகள் தீர்ப்பளித்தனர். கூனனை நாற்சந்திக்கு இழுத்துச் சென்றனர்.

அவ்விடத்தே ஒரு சிறைச்சாலை இருந்தது. இதில் குடூல் என்பவள் சிறைவாசம் செய்து வந்தாள். ஏறத்தாழ பதினான்கு ஆண்டுகள் அவள் அந்தச் சிறைச்சாலையில் உண்டு உடுத்து உறங்கி வந்தாள். அவளுடைய வரலாறு சுவை மிகுந்ததாகும். அவள் சிறு பிள்ளையாக இருக்கும்போது அழகியாகவே இருந்தாள். அழகை மூலப் பொருளாக வைத்து அவள் நடத்திவந்த வியாபாரத்தில் பேரளவு பணம் சம்பாதிக்க முடிந்தது. அழகு நிரந்தரப் பொருள் அல்லவே? அது மறையத் தொடங்கியதும் வருமானமும் குறையத் தொடங்கியது. அவளுடைய காதலன் கைவிட்டு விட்டு வெளியேறி விட்டான். அவன் அவளை விட்டு பிரியும்போது அவளுக்கு ஒரு பெண் இருந்தாள். பெண்ணின் மீது பிரியம் கொண்டு பிரிவை மறந்து தனித்து வாழ்ந்தாள் குடூல்.

ஒருநாள் குழந்தையைத் தொட்டிலில் போட்டு விட்டு வெளியே சென்றாள் குடூல். திரும்பி வந்து பார்த்தபோது குழந்தையைக் காணோம். குழந்தை படுத்திருந்த இடத்தில் ஒரு குரங்குப் பிள்ளை கிடந்தது. அதன் அருகில் ஒரு செருப்பு

மட்டும் கிடந்தது. திருடித் தூக்கிக் கொண்டு போகும் போது பெண் குழந்தையின் இரு செருப்புக்களில் ஒன்று நழுவி விழுந்திருக்க வேண்டும். குழந்தையை நாடோடிக் கூட்டத்துப் பெண்கள்தான் திருடிச் சென்றிருக்க வேண்டும்.

குடுல் கொண்ட கவலைக்கு எல்லையே இல்லை. பெற்றெடுத்த பிள்ளையைப் பறி கொடுத்த பின்பு பிசாசுக் குழந்தையை எப்படி வளர்ப்பது என்பது குறித்து அவள் வேதனைப் பட்டாள், பின்பு ஒரு முடிவுக்கு வந்தவளைப் போல, பிசாசுக் குழந்தையைக் கட்டிலில் போட்டு விட்டு பித்துப் பிடித்தவளைப் போல, தவறி விழுந்து கிடந்த செருப்பைப் பத்திரமாக எடுத்து வைத்துக்கொண்டு கால் வந்த போக்கில் நடை விரித்தாள்.

குடுல் வீட்டில் விட்டுவந்த குழந்தையை யாரோ எடுத்து வந்து நாட்டர் டாம் ஆலயத்தில் விட்டு விட்டுப் போய் விட்டனர். அந்தக்குழந்தையைப்பிசாசு என்றேகூறி அதனைக் கொன்று விடப் பல பெண்கள் முன்வந்தனர்.

இதனைக் கண்ட கோவில் பாதிரியார், ஓடோடி வந்து 'இந்தப் பிள்ளையை என் மகனாக ஏற்றுக் கொள்ளுகிறேன்,' என்று கூறினார். அன்றிலிருந்து அந்த அவலட்சணத்தின் உரு பாதிரியாரின் மகனாக மாறி வளர்ந்து வாழ்ந்து வந்தது.

அந்தப் பாதிரியாருக்கு ஒரு தம்பி இருந்தான். அவன் பெயர் ஜீகான். ஜீகானிடம் பாதிரியார் உயிரையே வைத்திருந்தார். அண்ணன் அவரை அறவாழியாக வளர்க்க விரும்பினான். தம்பியோ தறுதலையாக வளர்ந்து வந்தான். எனவே வேதனை கொண்ட பாதிரியார் வேதாந்தத் துறையில் வெகுவாக ஈடுபட்டார்.

தம்பியிடம் காண முடியாத குணநலங்களை அவலட்சணமே உருவாகிய குழந்தையிடம்காண விரும்பினார் பாதிரியார். அவலட்சணக் குழந்தையும் அவலட்சணத்தோடு வளர்ந்து பெரியவனாக மாறியது. ஆலய மணியை அடிப்பதுதான் அந்தக் குழந்தையின் வேலை. பாதிரியாரின் சொற்களுக்கு அடிபணிந்து நடப்பதில் அக்குழந்தை ஆர்வமும் ஆசையும் கொண்டு விளங்கியது. அந்தக் குழந்தையைத் தான் கூனன் என்று ஊர் மக்கள் அழைத்து வந்தனர்.

பாதிரியாரின் காமஇச்சைக்கு ஆளாக்கிவிட வேண்டும் என்பதற்காகவே கூனன் நாட்டியக் காரியைப் பலவந்தப்படுத்தித் தூக்கி வந்தான். வரும் வழியில் எதிர்பாராத விதமாக பீபஸ் என்னும் காவலாளியிடம் சிக்கிக் கொண்டான். குற்றஞ்சாட்டித் தண்டனையும் விதிக்கப்பட்ட கூனன் நா[illegible]தியில் நாட்டு மக்களின் முன்னிலையில் தண்

டனையை அனுபவிக்கத் தயாராக இருந்தான்.

அவனைக் காவலர்கள் சவுக்கால் அடித்துத்துன்புறுத்தினர். அவன் வாய்விட்டு அலறினன். அடிகளைப்பொறுத்துக்கொள்ள முடியாமல் தவியாய்த் தவித்தான். அவனது துடிப்பையும் தொல்லையையும் பொருட் படுத்தாமல் அடித்து நொறுக்கினர் அரசியல் அதிகாரிகள்.

இரத்தம் பளிச்சிட்டுப் பாய்ந்தது. சவுக்குகள் பிய்ந்து பின்னமுற்றன. அடிப்பவர்கள்கூட அயர்ந்து சோர்ந்து விட்டனர். சிறிது நேரம் அமைதி நிலவியது.

மூடர்கள் தினத்தன்று போப்பாண்டவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றுத் தெரு வழியாகப் பல்லக்கில் தூக்கிச் சுமக்கப்பட்டுச் சென்றவனுக்கு இன்று கசையடியும் கம்படியும் என்ருல் உலக வாழ்வை என்னென்று கூறுவது? ஊர் மக்களைத்தான் எப்படி நம்புவது?

அன்று பலரின் சிரிப்புக்குப் பாத்திரமாக விளங்கியவன் இன்று சிலரால் சித்திரவதைக்கு இலக்காகி நின்ருன். அவனைப் பார்த்து ஊர்மக்கள் நகைத்தனர்; நையாண்டி செய்தனர்.

அடிகள் ஓய்ந்து அமைதி நிலவிய நேரத்தில் அங்கே ஒரு ஆசாமி வந்தார். அவர்தான் அந்தப் [illegible]யார். பாதிரியாரைக் கண்டதும் கூனன் வலியைக் கூட மறந்து அவரது வரவை எண்ணி மகிழ்ச்சி கொண்டான். அவரால் தனக்கு நன்மைகள் விளையக் கூடும் என்று அவன் மனமார நம்பினன். அவனது நம்பிக்கையில் மண் விழுந்து விட்டது. பாதிரியார் வந்தது போலவே மீண்டு விட்டார். கூனனைத் தெரிந்ததாகக் கூடக் காட்டிக்கொள்ளவில்லை.

பாதிரியாரின் செயலைப் பார்த்த கூனனின் முதுகு மட்டுமல்ல உள்ளமும் கூடக் கூனி விட்டது. உடலில் பட்ட உதைகளை விட உள்ளத்தில் விழுந்த இந்த உதை பன்மடங்கு வேதனையைத் தரத் தொடங்கியது.

நாக்கு வரண்டு விட்டது. பேச்சுக் குழம்பி விட்டது. மூச்சு வெதும்பி நின்றது. ‘தண்ணீர், தண்ணீர்,’ என்று கத்தினன். உதவிக்கு யாரும் தயாராக இல்லை. மாருக உபத்திரவம் தர ஒரு சிலர் துடித்தனர்.

கூனனின் துயர் கண்டு உள்ளம் இறங்கிய ஒரு பெண் அந்த நேரத்தில் அங்கு வந்து சேர்ந்தாள் அவளைத் தொடர்ந்து ஒரு ஆட்டுக் குட்டி வந்தது. ஆட்டுக் குட்டிக்குப் பின்னே ஒரு ஆடவனும் வந்தான். அவள்தான் நாட்டியக்காரி. அவளைக் அந்தக் கூனன் அடையாளம் புரிந்து கொண்டு விட்டான். அவள் தன்னை நோக்கி வருவது [illegible]ழிக்குப்பழி

வாங்குவதற்காகத்தான் என அவன் எண்ணினான். தான் செய்த கொடுமையை அவள் மறந்து விடக் கூடியவள் அல்லள் என்பது அவன் கருத்து.

'ஐயோ என்னை நாட்டியக்காரியிடமிருந்து காப்பாற்றுங்கள்,' என்று அவன் வாய் விட்டு அலறினான். அவளோ அவனை அடிக்கவில்லை; அணைத்துக் கொண்டாள். உதைக்க விரும்ப வில்லை; உதவி செய்ய முன் வந்தாள். அவனுக்குக் குடிக்கத் தண்ணீர் தந்தாள். உடம்பில் வழிந்த இரத்தத்தைத் துடைத்துத்துப்புரவுசெய்தாள். அவளது செயல்களைக் கண்டு அவன் நாணினான்; கோணினான். உள்ளம் புழுங்கினான். உயர்த்திப் பேசினான்.

நாற் சந்தியில் நடந்து கொண்டிருந்த இந்தக் காட்சியை நாலாயிரக் கணக்கான மக்கள் பார்த்துப் பார்த்து மகிழ்ந்தனர். ஆனால் அருகிருந்த சிறையில் கைதியாக நின்ற குடூல் கிழவி மட்டும் வயிறு எரிந்து வெதும்பினாள். வாய்விட்டு அலறினாள்.

'அவனைக் காப்பாற்றாதே. அவலட்சணத்தை ஆதரிக்காதே. பெண் குலத்துப் பேயே, அங்கிருந்து போய்விடு!'

இவைதான் குடூலின் வார்த்தைகள். நாட்டியக்காரி நகைத்துக் கொண்டே அந்த வார்த்தைகளைக் கேட்டு மகிழ்ந்தாள். பின் சிறிது நேரம் அமைதி நிலவியது. எல்லோரும் கலைந்து விட்டனர். கூனனின் தண்டனையும் நிறைவேற்றப் பட்டு அவனுக்கு விடுதலையும் அளிக்கப்பட்டது.

விடுதலை பெற்ற கூனன் பாதிரியாரின் விபரீதச் செயலைக் கண்டு வேதனைப் படுவதற்குப் பதிலாக நாட்டியக்காரியின் நல்ல பண்பை எண்ணி எண்ணி மகிழ்ந்தான். இன்னாசெய்தார்க்கு நன்னயம் செய்வதால் கிட்டும் உள்ளத் திருப்தியை உணர்ந்து உணர்ச்சி வசப்பட்டு உவகையோடு திகழ்ந்தான்.

ஆலய மணியை அடிப்பது தான் அவனுடைய வேலை. அந்த வேலையை அவன் அழகுறச் செய்து வந்தான். பாதிரியாரிடம் இருந்த பிரியம் நாட்டியக் காரியிடம் மாறிவிட்டது. இதைத் தவிர்த்து அவனிடம் வேறு மாறுட்டம் எதுவுமே தென்படவில்லை.

நாட்டியக்காரி நடுத்தெருவில் நாட்டியம் ஆடிக் காசு சம்பாதித்து வாழ்வதையே தொழிலாய்க் கொண்டு விளங்கினாள். அவளது தொழிலுக்குத் துணையாக இருந்தது ஆட்டுக்குட்டி. நாடகாசிரியரும் கூடமாட ஒத்தாசை புரிந்தே வந்தார்.

பல நாட்கள் சென்றன. ஒரு நாள் பீபஸ் என்ற காவலாளியை நாட்டியக்காரி நடுத் தெருவில் சந்தித்தாள். ஒரு மட்டரகமான விடுதியில் இருவரும் மீண்டும் சந்திப்பதெனத் தீர்மானித்துக் கொண்டனர்.

பீபஸ் ஒரு குடிகாரன். அவனுக்கு ஒரு தோழன் இருந்தான். அவன் பெயர் ஜீகான். இவன்தான் பாதிரியாரின் உடன் பிறந்த தறுதலை. ஜீகானும் பீபஸும் நிறையக் குடித்துவிட்டுக் கட்டிப் புரண்டனர். அப்போது பீபஸ் தான் நாட்டியக்காரியைச் சந்திக்கப் போவது குறித்து விபரமாக ஜீகானிடம் கூறினன். இதை மறைந்திருந்து கேட்டுத் தெரிந்து கொண்டான் பாதிரியார்.

அளவு மிஞ்சிக் குடித்துவிட்டதால் அறிவிழந்து வீழ்ந்துவிட்டான் ஜீகான். பீபஸ் மட்டும் தனியனுக நாட்டியக்காரியைக் காண விரைந்தான். பாதிரியார் பீபஸைத்தொடர்ந்து சென்றுன். நாட்டியக்காரியும் பீபஸும் பேசிக்கொண்டிருக்கும்போது, பாதிரியார் தலைமறைவாக வந்து பீபஸைக் குத்திவிட்டு ஓடிவிட்டான்.

நாட்டியக்காரி கொலைக் குற்றம் சாட்டப்பட்டாள். காவலர்கள் தந்த கொடுமைக்குப் பயந்து தான் செய்யாத குற்றத்தைச் செய்ததாக ஒத்துக்கொண்டாள் அவள். அவளைச் சிறையிலே தள்ளிச் சித்திரவதை செய்தார்கள். பீபஸ் இறந்துவிட்டான் என்று அவளுக்குச் சொன்னுர்கள். காதலுக்குப் பாத்திரமானவன் இறந்த பிறகு தான்மட்டும் வாழ்வதில பயனில்லை என்[illegible] எண்ணிய நாட்டியக்கா[illegible], சாவையே பெரிதும் விரும்[illegible]ள்.

அவளைக் கோவிலில் ஒரு இருட்டறையில் அடைத்து வைத்திருந்தனர் அரசியல் காவலாளிகள். கோவிலில் பாதிரியாராகப் பணியாற்றிய கிளாடிக்கு நாட்டியக்காரியைத் தனிமையில் சந்திப்பது எளிதாக இருந்தது. அவளிடம் தனக்குள்ள காதலையும், அவளைக் கூனன் தூக்கிவரத் தான் காரணமாக இருந்ததையும், பீபஸின் சாவுக்குத் தான் காரணமாக இருந்ததையும் பாதிரியார் விவரமாக நாட்டியக்காரியிடம் சொன்னுன்.

'நீ இணங்கினல் இருவரும் தப்பி ஓடி கிராமப்புறத்தில் மகிழ்வோடு வாழலாம்,' என்று பாதிரியார் ஆசை வார்த்தைகள் கூறினன். சாவதற்குத் தயாராக இருந்தாளே தவிரப் பாதிரியாருடன் இணைந்து வாழ அவள் எள்ளளவும் இசையவில்லை.

நீதிபதிகள், குற்றத்தைத்தீர விசாரித்த பிறகு நாட்டியக்காரிக்குத் தூக்குதண்டனை தந்தார்கள். தூக்குமரத்தில் தொங்கப் போவதற்கு முன்பு பாதிரியார் மந்திரம் ஓதுவதற்காக வந்தார். அந்த நேரத்தில் கூட அவர் அவளை மணக்கவே விரும்பினர். அவள் அறவே மறுத்துவிட்டாள்.

மாதா கோவிலைச் சுற்றி முரடர்கள் கூடிவிட்டனர். கோவிலின் நுழை வாசலில் கூனன் உட்கார்ந்திருந்தான். அவன் கையில் ஒரு கயிறு இருந்தது. அந்தக் கயிற்றின் நுனி வீதியில்

உள்ள மேடை வரையில் நீண்டு தொங்கிக் கொண்டிருந்தது. கூனனையும் அந்தக் கயிற்றையும் யாருமே கவனிக்கவில்லை.

நாட்டியக்காரியைத் தூக்கு மேடையில் ஏற்றித் தூக்குக் கயிற்றைக் கழுத்தில் மாட்டுவதற்கு ஆயத்தம் செய்தார்கள். அவளும் தன் இறுதி வணக்கத்தைச் செலுத்திவிட்டுச் சாவை எதிர்நோக்கிச் சஞ்சலமின்றி இருந்தாள். கூட்டத்தினரை நோக்கி உற்றுப் பார்த்துக் கொண்டே வந்தாள்.

தூக்கில் தொங்கப்போகும் சமயத்தில் அவள் பீபஸைக் கண்டுவிட்டாள். அவன் சாகவில்லை. உயிரோடு இருக்கிறுன் என்பது அவளுக்குத் தெரியவே தெரியாது. 'பீபஸ்,' 'பீபஸ்,' என்று பெருங் கூச்சல் போட்டாள். அவன் அவளைக் கவனிக்காமல் மற்றொரு பெண்ணோடு மறைந்து விட்டான். இது கண்டு அவள் மயங்கி விழுந்துவிட்டாள்.

மயக்கம் தெளிந்ததும் அவளை மாதாகோவிலுக்கு அருகில் அழைத்து வந்தார்கள். இந்தச் சமயத்தில் கூனன் முண்டியடித்து முன்னே சென்று அவளைத் தூக்கித் தோளில் வைத்துக் கொண்டு கோவிலுக்குள் ஓடி ஒளிந்துகொண்டான். கோவிலுக்குள் நுழைந்துவிட்டால் சட்டம் தன் வலுவை இழந்துவிடும். எனவே அவள் பாதுகாப்போடு வாழ்ந்தாள். கூனன்தான் அவளுக்கு உதவி செய்து வந்தான்.

கோவிலின் உள்ளே ஒரு அறை இருந்தது. அந்த அறைக்குள்ளே நாட்டியக்காரியை ஒளிந்து கொள்ளும்படி கூனன் கேட்டுக் கொண்டான். அவளுக்கு உண்ண உணவும் படுக்கப் படுக்கையும் முன்னரே ஏற்பாடு செய்துவிட்டான்.

'இந்த அறையை விட்டுக் கூடுமானவரை பகலில் வெளியே வரவேண்டாம், இரவு நேரங்களில் கோவிலுக்குள்ளாக எங்கு வேண்டுமெனினும் நடந்து திரியலாம். ஒன்று மட்டும் நினைவில் வைத்துக் கொள். கோவிலை விட்டு வெளிப்புறமாக எந்தக் காரணத்தைக் கொண்டும் போகவே கூடாது. போக நேரிட்டால் உனக்குச் சாவு நிச்சயம். நீ செத்துவிட்டால் எனக்கும் சாவு நிச்சயம்,' இதுதான் கூனன் நாட்டியக்காரிக்குக் கூறிய மணிமொழிகள்.

தனிமையில் நாட்டியக்காரி தவித்துக் கொண்டிருக்கும் போது, அவளைத் தேடிக் கொண்டு ஆட்டுக்குட்டி எப்படியோ கோவிலுக்குள் நுழைந்து வந்து விட்டது. ஆட்டுக்குட்டியைக் கண்டதில் அவளுக்கு ஓரளவு திருப்தியே. அதனோடு அவள் ஆடிப்பாடிக் கொஞ்சிக் குழைந்து விளையாடினாள்.

உபகுருவான [illegible]பாதிரியார் கூனனின் செயல்[illegible] குமுறி

ஞர். கோவிலுக்குள் ஒளிந்து வாழும் வரையில் நாட்டியக் காரியையோ, கூனனையோ யாரும் எதுவும் செய்ய முடியாது என்பதை உபகுரு ஐயமற அறிந்திருந்தார்.

நாட்டியக்காரியைக் கோவிலிலிருந்து அப்புறப்படுத்த ஆயிரமாயிரம் யோசனைகள் செய்தார். ஒன்றும் பயன்தரவில்லை.

இறுதியில் பாதிரியாருக்கு ஒரு யோசனை தோன்றிற்று. நாடகாசிரியரைத் தூண்டிவிட்டு நாட்டியக்காரியைக் கோவிலை விட்டுக் கிளப்பிக் கொண்டுவர எண்ணினர். நாடகாசிரியர் ஒரு அப்பாவிப் பேர்வழி. அவருக்கு அளவுக்கு மிஞ்சிய பணம் தருவதாக ஆசை வெறியைத் தூண்டிவிட்டு நாட்டியக்காரியை அப்புறப்படுத்தத் திட்டங்கள் வகுத்துக் கொடுத்தார் பாதிரியார். பண ஆசை பிடித்த ஆசிரியரும் பாதிரியாரின் சூழ்ச்சியில் விழுந்து விட்டார்.

முட்டாளாகிய ஆசிரியர் முரடர்களின் துணைகொண்டு, கோவிலைத் தகர்த்து மனைவியை வெளியே அழைத்துவர முயன்றார். இதனையே சரியான மார்க்கம் என்று பாதிரியாரும் ஆமோதித்தார்.

பின் முரடர்களை ஏவிவிட்டுக் கோவிலைத் தகர்த்தெறிய முயற்சிகள் எடுக்கப்பட்[illegible]. நெடு நேரம் முரடர்க[illegible]ன் கூனன் போராடினன். [illegible] போராட்டம்

முகப்புப் படம்

உலகப் பெருங் கவிஞர்

## ஷேக்ஸ்பியர்

பெருங் கவிஞர் ஷேக்ஸ்பியரின் நானூறுவது பிறந்த நாள் உலகெங்கும் திருநாளாகக் கொண்டாடப் பெறுகிறது. ஷேக்ஸ்பியர் 1564-ம் ஆண்டு ஏப்பிரல் மாதம் 26-ம் நாள் இங்கிலாந்தில் ஆவான் நதிக் கரையில் உள்ள ஸ்டாட்ஃபோர்டு என்னும் சிற்றூரில் பிறந்தார். 1616-ம்ஆண்டு ஏப்பிரல் மாதம் 25-ம் நாளன்று அதே ஊரில் உயிர் துறந்தார். சரியாக ஐம்பத்திரண்டு ஆண்டுகள் வாழ்ந்த ஷேக்ஸ்பியர், முப்பத்தேழு நாடகங்களும் இரண்டு சிறு காவியங்களும் நூற்றைம்பது இசைப் பாடல்களும் எழுதியுள்ளார். வேறு யாரையும் விட ஷேக்ஸ்பியர் உலகப் புகழ் மிகப் பெற்றுவிளங்குகிறர். இதற்குக் காரணம், அவர் மனித உள்ளத்தின் ஆழத்தை யறிந்து அனுபவித்து அதன் உணர்ச்சிப் பெருக்குகளைத் தேனினும் இனிய தம் கவிதை நடையில் சித்திரித்திருப்பதுதான்.

உலகம் போற்றிக் கொண்டாடும் இம்மாபெருங் கவிஞரை நாமும் சேர்ந்து போற்றுவோம்.

# வெளிவந்த கதை

அண்ணுசாமி சாய்வு நாற்காலியில் வீற்றிருந்தார். அப்போது தான் குளிர்ந்த சர்பத்தைக் கொண்டு வரச் சொல்லிக் குடித்து விட்டு, வருகிறஇதழுக்கு விஷயங்களைத் தேடித் தேடிச் சேகரிக்கும் பணியில் தீவிரமாக ஈடுபட முயன்ருர்.

'சார் சார்!'

'உள்ளே வரலாம்.'

உலகநாதர் புன்சிரிப்போடு ஆசிரியரின் அறைக்குள் அடி எடுத்து வைத்தார்.

'சார்!'

'என்ன வேணும்?'

'என்னைத் தெரிகிறதா?'

'இல்லையே!'

'என் பெயர் உலகநாதன்!'

ஆம். இப்போது நினைவு வந்து விட்டது. சில மாதங்கட்கு முன்பு கதை அனுப்பி இருந்தீர்களே?

'ஆமாம். அதுபற்றித்தான்பேச வந்துள்ளேன். கதை எப்படி இருந்தது?'

'கதை ரொம்பப் பிரமாதம்!'

'வெளி வந்து விட்டதா?'

'ஆம். வெளி வந்து விட்டதே. நீங்கள் பார்க்க வில்லையா? இதோ தேடி எடுத்து ஒரு பிரதியைத் தரச் சொல்லுகிறேன்.'

'ரொம்ப நன்றி. நான் பார்த்தேன். என் கண்ணுக்குப் புலப்படவே இல்லை. அதற்குச் சன்மானம் உண்டோ?'

'சன்மானம்இல்லாமல் நாங்கள் எதையும் ஏற்றுக் கொள்ளுவதும் இல்லை; வெளியிடுவதும் இல்லை. அந்தக் கதைக்கு உரிய சன்மானத்தை நாங்கள் அப்போதே மணியார்டரில் அனுப்பி விட்டோமே. பெற்றுக் கொண்டதாக ரசீது கூட வந்து சேர்ந்து விட்டது என்று ஞாபகம்.'

'இல்லை சார். இல்லை எனக்குச் சன்மானம் கிடைக்கவே இல்லை; நான் ரசீது அனுப்பவும் இல்லை.'

'உங்களுக்குக் கொடுக்கவில்லை சன்மானத்தை, கதைக்குத்தான் கொடுத்தோம்.'

'புரியவில்லையே உங்கள் பேச்சு!'

'எனக்கும் தான் உங்கள் பேச்சுப் புரியவில்லை. இளநீரின் இனிப்பு என்று நீங்கள் அனுப்பிய கதையை 'தென்னந் தோப்பின் சுகம்' என்ற தலைப்போடு பத்து ஆண்டுகட்கு முன்னரே நாங்கள் வெளியிட்டுச் சன்மானத்தையும் கதை ஆசிரியரிடம் சேர்ப்பித்து விட்டோம்.'

உலகநாதர் வந்தவழியே திரும்பி விட்டார். இப்போது புரிந்து விட்டது அவருக்கு எல்லாமும்!

# தப்பாமல் பிறந்தது

நடுப்பாதையில் ஒரு சிறு குழந்தை அழுது கொண்டு கிடந்தது. அந்த வழியாகச் சென்று கொண்டிருந்தாள் ஒருபணக்காரி. பச்சைக் குழந்தையின் அலறலைக் கேட்டு அவள் நெஞ்சம் பதறியது. மோட்டார், சைக்கிள், லாரி ஏதாவது குழந்தையின் மேல் ஏறி விட்டால்...

அவளால் அந்தக்கொடுமையை நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லை. இரக்க உள்ளத்தோடு குழந்தையைத் தன் இருகைகளாலும் எடுக்க முயன்றாள். கழுத்துச் சங்கிலி குழந்தையின் முகத்தில் விழுந்து தொங்கியது. சங்கிலியைப் பிடித்துக் கொண்டு இழுத்தது குழந்தை. சங்கிலி அறுந்து விடாதபடி காப்பாற்றிக்கொண்ட பிறகு குழந்தையை ஓரமாகப் போட்டு விட்டு வீடு நோக்கி விரைந்தாள் அந்த அம்மா.

'பிள்ளையா, இது, பேய்! சங்கிலியை அறுத்து விட இருந்ததே. அதன் கைகளில்தான் எவ்வளவு வலிமை. அது உயிரோடு இருப்பதைவிட லாரியில் நசுக்குண்டு நாசமாவது நாட்டுக்குக் கூட நல்லதல்லவா?'

இப்படியே எண்ணிக்கொண்டு கைகளை இறுக்கிப் பிணைத்த போதுதான் அவளுக்குக் கையில் இருந்த மோதிரம் களவு போனது தெரிந்தது. ஓடோடிச் சென்று குழந்தையைப் பார்த்தாள். அது சிரித்துக் கொண்டு கிடந்தது. ஒரு கையை மட்டும் திறக்காமல் மூடியே வைத்திருந்தது. அதனைத் திறப்பதற்கு அவள் பட்டபாடு...! அம்மம்ம, அவளால் முடியவே இல்லை.

என்ன செய்வது என்று ஏங்கியபடியே நின்று கொண்டிருந்தாள். ஒரு பயங்கரமான ஆசாமி அவ்விடத்திற்கு வந்து சேர்ந்தான். குழந்தையைக் கண்டதில் அவனுக்கு ஆனந்தம். அவனைக் கண்டதில் குழந்தைக்கு ஆனந்தம். ஒரே ஆனந்த மயம்!

குழந்தையை நெருங்கினான் அவன். குழந்தை கையைத் திறந்தது. மோதிரம் ஒளிவிட்டுப் பிரகாசித்தது.

'அடபாவிக் குரங்கே!' என்று கூக்குரல் இட்டாள் மோதிரத்தைப் பறிகொடுத்தவள். குழந்தையைத் தூக்கிக் கொண்டு மாயமாய் மறைந்து விட்டான் முரட்டுப் பேர்வழி.

'அது குரங்கல்ல அம்மா, புலி. பயங்கரமான புலிக்குப் பிறந்த புலி அந்தப் பிள்ளை' என்றான் அனுபவத்தால் அறிந்து வைத்திருந்த ஒரு அப்பாவி.

அப்பனுக்குப் பிள்ளைத் தப்பவில்லை!

# செய்திக் குறிப்புகள்

**குறிப்பு :**

பஞ்சாயத்து யூனியன் பற்றிய செய்திகளை அனுப்பும் யூனியன் அலுவலர்களைக் கீழே காணும் குறிப்புக்களில் கவனம் செலுத்துமாறு அன்போடு கேட்டுக் கொள்ளுகிறோம்.

1. தெளிவாகப் புரியும்படியாக எழுதி அனுப்புதல் வேண்டும்.
2. தாளின் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுதி அனுப்புதல் நன்று.
3. செய்திகளைச் சுருக்கமாகவும், சிறு சிறு வாக்கியங்களாகவும் எழுதி அனுப்புதல் நன்று.
4. ஆணையாளர்களின் ஒப்புதல் பெற்றுச் செய்திகளை அனுப்புதல் சிறப்புடையதாகும்.

### கம்மாபுரம் பஞ்சாயத்து யூனியன்

கம்மாபுரம் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த வல்லியம் கார்மாங்குடி கிராமங்களில் பள்ளிக் கட்டிடங்களுக்கு சென்னை மாநில செய்தித்துறை அமைச்சர் கனம் கோ. பூவராகன் பி. எஸ். ஸி., (ஆனர்ஸ்) அவர்கள் 15-12-64 அன்று அடிக்கல் நாட்டுவித்தார்கள். தருமநல்லூர், சின்னக் கோட்டுமுளை ஆகிய கிராமங்களில் புதிதாக கட்டப்பட்டப் பள்ளிக் கட்டிடங்களைத் திறந்து வைத்தார்கள். இவ் விழாக்களுக்கு கூட்டுமன்ற பெருந்தலைவர் திரு டி. குப்புசாமி தலைமை வகித்தார்.

21-12-64 அன்று கம்மாபுரம் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த ஊத்தங்கால் கிராமத்தில் பள்ளிக் கட்டிடத்திற்குச் சென்னை மாநில செய்தித்துறை அமைச்சர் கனம் கோ. பூவராகன் பீ. எஸ். ஸி., (ஹானர்ஸ்) அவர்கள் அடிக்கல் நாட்டுவித்தார்கள். விழாவிற்கு கம்மாபுரம் பஞ்சாயத்து கூட்டு மன்ற பெருந்தலைவர் திரு டி. குப்புசாமி அவர்கள் தலைமை தாங்கினார்கள்.

17-1-65 அன்று சென்னை மாநில செய்தித்துறை அமைச்சர் கனம் கோ.பூவராகன் பி.எஸ்.ஸி. (ஹானர்ஸ்) அவர்கள் கம்மாபுரம் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த கீழப்பாலையூர் கிராமத்தில் புதிதாகக் கட்டப்பட்ட ஆரம்பப் பள்ளிக் கட்டிடத்தைத் திறந்து வைத்தார். அவர் அதிகாரிகளின் வேலைகளைப் பாராட்டினார்கள். மேலும் சேப்ளாநத்தம் தெற்கு, சேப்ளாநத்தம் வடக்கு, உய்யக்கொண்டராவி ஆகிய கிரா

மங்களில் ஆரம்பப்பள்ளி அடிக்கல் நாட்டுவித்தும், சேப்ளாநத்தத்தில் காந்திஜீயின் திருவுருவச் சிலையைத் திறந்தும் வைத்தார்கள். இவ்விழாவினுக்கு டி. குப்புசாமி கூட்டுமன்ற பெருந்தலைவர் அவர்கள் தலைமை தாங்கினார்கள்.

24-1-65 அன்று சம்மாபுரம் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த வேப்பங்குரிச்சிக் கிராமத்திற்கு சென்னைமாநில செய்தித்துறை அமைச்சர் கனம் கோ. பூவராகன் பி. எஸ். ஸி. (ஹானர்ஸ்) அவர்கள் வருகை தந்து புதிதாக கட்டப்பட்ட ஆரம்பப் பள்ளிக் கட்டிடத்தை திறந்து வைத்து சொற்பொழிவு ஆற்றினார்கள். அதற்கு கூட்டுமன்ற பெருந்தலைவர் திரு டி. குப்புசாமி அவர்கள் தலைமை தாங்கினார்கள்.

25-1-65 சென்னை மாநில செய்தித்துறை அமைச்சர் கனம் கோ. பூவராகன் பி.எஸ்.ஸி. (ஹானர்ஸ்) அவர்கள் கம்மாபுரம் கிராமத்தில் ஆரம்பப் பள்ளிக் கட்டிடத்தை திறந்து வைத்தார். விழாவினுக்குக் கூட்டுமன்ற பெருந்தலைவர் டி. குப்புசாமி தலைமை தாங்கினார்கள்.



## வானூர் பஞ்சாயத்து யூனியன்

வானூர் பஞ்சாயத்து ஒன்றிப்பு மன்ற இறுதி கூட்டம் 27-1-1965 மாலை 2 மணியளவில் பெருந் தலைவர் திரு ஏ. வி. நாராயணசாமி அவர்கள் தலைமையில் நடைபெற்றது. எல்லாத் தீர்மானங்களும் ஏகமனதாகத் தீர்மானிக்கப்பட்டது. கூட்ட முடிவில் பஞ்சாயத்து யூனியன் அலுவலர்கள் சார்பில் கமிஷனர் திரு ஒய். சாமுவேல், அவர்கள் பெருந்தலைவரையும், அங்கத்தினர்களையும் பாராட்டிப் பேசி மலர் மாலை அணிவித்தும், எலுமிச்சம் பழம் கொடுத்தும் கௌரவித்தார்கள். கவுன்சிலின் சேவைகளையும், பெருந்தலைவரின் அரிய குணங்களை பற்றியும் திரு ஏ. ஜி. பாலகிருஷ்ணன் எம்.எல்.ஏ., அவர்களும், திரு இ. சுப்ரமணியம், பஞ்சாயத்து தலைவர் நல்லாளவர் அவர்களும் சிறப்பு சொற்பொழி வாற்றினார்கள். பெருந் தலைவர்களால் மன்ற உறுப்பினர்களுக்கும், அலுவலர்களுக்கும் தேநீர் விருந்தளிக்கப்பட்டது.



வானூர் பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்தில் 26-1-1965 காலை 8 மணியளவில் குடியரசு தின விழா ஊர்வலத்துடன் ஆரம்பமானது. திரு கே. எஸ். ராமமூர்த்தி, தலைவர், காட்ராம்பாக்கம் ஊராட்சி மன்றம் அவர்களால் தேசியக்கொடி யேற்றுவிக்கப்பட்டது. விழாவிற்கு யூனியன் சேர்மன் திரு ஏ. வி. நாராயணசாமி அவர்கள் தலைமை தாங்கினார்கள். திரு ஒய். சாமுவேல், ஆணையாளர் அவர்களின் வரவேற்புரைக்குப் பின் குடியரசு தினத்தின் முக்கியத்துவத்தைப் பற்றி திரு டி. ஆர். ராஜாராம் (சேர்மன், மைலம் பஞ்சாயத்து யூனியன்) அவர்களால் சிறப்பு சொற்பொழிவு ஆற்றினார்கள். இறுதியில் திரு உத்திராபதி, சுகாதார ஆய்வாளர் அவர்கள் நன்றி கூறினார். குழுமியிருந்தவர்களுக்கு இனிப்பு வழங்கப்பட்டது. தேசீய கீதத்துடன் கூட்டம் இனிது முடிந்தது. மாலையில் திருச்சிற்றம்பலம் காந்தி உயர் நிலைப்பள்ளி மைதானத்தில்மாணவர்களுக்கு விளையாட்டுப் போட்டி நடத்தப்பட்டது. மேற்படி விளை

யாட்டுப் போட்டி விழாவிற்கு திரு ஏ. வி. நாராயணசாமி (சேர்மன், வானூர் பஞ்சாயத்து யூனியன்) அவர்கள் தலைமை தாங்கினார்கள். விழாவிற்கு வருகை தந்த பொது மக்களை திரு ஒய். சாமுவேல், ஆணையாளர் அவர்கள் வரவேற்றார்கள். போட்டியில் வெற்றி பெற்ற மாணவர்களுக்கு திரு டி. ஆர். ராஜாராம், சேர்மன், மைலம் பஞ்சாயத்து யூனியன் அவர்களால் பரிசு வழங்கப்பட்டது. திரு என். உத்திராபதி, சுகாதார ஆய்வாளர் அவர்களால் நன்றி கூறப்பட்டது. இனிப்பு வழங்கிய பின் தேசீய கீதத்துடன் கூட்டம் இனிது முடிந்தது.



### திருமருகல் பஞ்சாயத்துக் கூட்டுமன்றம்

1965ம் வருடம் பிப்ரவரி மாதம் 19ம் தேதி திருமருகல் வட்டாரத்தைச் சேர்ந்த திருக்கண்ணபுரத்தில் ஸ்ரீ சௌரிராஜப் பெருமாள் கோவில் குளத்தில் தெப்ப உற்சவம் நடைபெற்றது. அதை முன்னிட்டு, திருமருகல் பஞ்சாயத்து கூட்டுமன்றச் சார்பில் விவசாய கண்காட்சி ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. கண்காட்சியில் தீவிர விவசாயத் திட்டம் அமல் நடத்துவது பற்றியும், அதன் அரிய நன்மைகளையும் விளக்கப் படங்கள் மூலமும், பல நவீன கருவிகள் மூலமும் காண்பிக்கப்பட்டிருந்தது. மேலும் கால் நடை வளர்ச்சி, சிறு சேமிப்பு, குடும்பக் கட்டுப்பாடு, மாதர் நலம் போன்றவற்றின் முக்கியத்துவம் பற்றி விளக்கங்கள் கொடுத்தும் கைப் புத்தகங்கள் இலவசமாக வழங்கியும் மக்களுக்குக் காண்பிக்கப்பட்டது. மாதர் சங்கங்கள் வேலை செய்வது பற்றியும் தையல் கலை பற்றியும் வட்டார கிராம நல் ஊழியையும், தையல் பயிற்சி ஆசிரியையும் மாதர்களுக்கு விளக்கிக் கூறினர். மக்கள் திரள் திரளாக வந்து கண்காட்சிச் சாலையைப் பார்வை யிட்டனர். தஞ்சை மாவட்ட விளம்பர அதிகாரி திரு ஆர். வைகுந்தன் அவர்கள் நாகப்பட்டினம் கோட்டப் பொறியாளர் திரு ஏ. அண்ணாமலை அவர்கள் நாகப்பட்டினம் மாவட்ட விவசாய அதிகாரி, திரு ஜி. ராஜகோபாலன் அவர்கள் இந்தக் கண்காட்சியைப் பார்வையிட்டனர்.



### சமூகநல ஊழியர்கள் சங்க கூட்டம்

21-2-65ஆம் தேதி, உடுமலைப் பேட்டை தாலுகா சமூக நல ஊழியர்கள் சங்க கூட்டம் திரு K. A. சின்னுச்சாமி அவர்கள் தலைமையில் நடந்தது. அவ்வமயம் கீழ்க்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப் பட்டது.

தீர்மானம் 1.

நடப்பு ஆண்டிற்கு, இச்சங்கத்திற்கு திரு T.K. ஸ்ரீதரன் பிள்ளை அவர்கள் தலைவராகவும், திரு எஸ். பூலுார் அவர்கள் காரியதரிசியாகவும், பொருளாளராகவும் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர்.

தீர்மானம் 2,

கோவை மாவட்டத்திலுள்ள எல்லாத் தாலுகாக்களிலும், தாலுகா சமூகநல ஊழியர்கள் சங்கம் அமைக்குமாறும், தமிழ் நாடு சமூகநல ஊழியர்கள் சங்கம் அமைத்தல் சம்பந்தமாக, தென்

ஆற்காடு, மாவட்ட சமூகநல ஊழியர்கள் சங்கத்திலிருந்து வரலான பாரத்தைப் பூர்த்தி செய்து அனுப்பி வைக்குமாறும், இச் சங்கம் கேட்டுக் கொள்கிறது.



## குமராட்சி யூனியன்

இவ்வட்டாரத்தில் 8-1-65 வெள்ளிக்கிழமை அகரநல்லூர் பழையநல்லூர் ஆகிய இரு ஊர்களிலும், 19-1-65 செவ்வாய்கிழமை வக்காரமாரி கிராமத்திலும் பஞ்சாயத்து யூனியன் துவக்கப் பள்ளி கட்டிடம் கட்ட அடிக்கல் நாட்டுதல் வைபவம் நடந்தது. 19-1-65 அன்று மெய்யாத்தூரில் ரூ. 16000 செலவில் கட்டப்பட்ட உயர் துவக்கப் பள்ளி கட்டிடம் திறந்து வைக்கப்பட்டது. மேற்கொண்டு விழாக்களேயும் சிதம்பரம் கோட்டாட்சித் தலைவர் திரு ஆர். முத்துக்கண்ணு பி. ஏ. அவர்கள் இனிது நடத்திக் கொடுத்து அறிவுரைகள் வழங்கினார்கள். பஞ்சாயத்து யூனியன் பெருந்தலைவர் திரு எம். கே. தட்சிணாமூர்த்தி அவர்கள் விழாக்களில் தலைமை தாங்கி நடத்திக் கொடுத்தார்கள். சிதம்பரம் தாசில்தார் திரு. வெங்கடேசன் உதவி இன்சீனியர் திரு ரெங்கநாதன் முதலானோரும், சிதம்பரம் பெருநிலக்கிழார் திரு கல்யாணராம பிள்ளை அவர்களும் விழாக்களில் கலந்து கொண்டு சொற்பொழிவாற்றினார்கள். பள்ளிகளில் மதிய உணவு நன்முறையில் நடத்த மாதர் சங்க அங்கத்தினர்கட்கு சர்வோதயப் பாத்திரங்கள் வழங்கப்பட்டன. சிறுசேமிப்புத் திட்டத்தின் கீழ் ஒவ்வொரு ஊரிலும் 15 சேமிப்புப் பாத்திரங்கள் திறந்து வழங்கப்பட்டது. பஞ்சாயத்து தலைவர் திரு நாராயணசாமி, திரு கே. நமசிவாயம் திரு ராமசாமி பிள்ளை பஞ்சாயத்து யூனியன் ஆணையர் சிவகுருநாதன் மற்றும் யூனியன் அலுவலர்கள் விழாக்கட்கு சிறந்த ஏற்பாடுகள் செய்து சிறப்பித்தார்கள்.



## பாலக்கோடு பஞ்சாயத்து யூனியன்

17-1-1965ம் தேதி ஞாயிற்றுக் கிழமையன்று காலை 9-00 மணியளவில் பாலக்கோடு பஞ்சாயத்துத் தலைவர் திரு பி. எல். சையத் இப்ரஹிம் அவர்களால் கொடியேற்றி வைக்கப்பட்டது. மாலை 3-00 மணிக்கு பாலக்கோடு பஞ்சாயத்து யூனியனுக்காக கட்டப்பட்டுள்ள அலுவலக புதிய கட்டிடத்தை காறப்பாடி தொகுதி சட்ட மன்ற உறுப்பினர் திரு என் இராமசாமி உடையார் அவர்கள் தலைமையில் தமிழ்நாடு அரசாங்க உணவு, வருவாய், பொதுப்பணித் துறை அமைச்சர் கனம் திரு வி. இராமய்யா, பி.ஏ., எம்.எல் ஏ., அவர்கள் திறந்து வைத்தார். அதுசமயம் பாலக்கோடு பஞ்சாயத்து யூனியன் தலைவர் திரு எல்.எம். துரைசாமிக் கவுண்டர் அவர்கள் பஞ்சாயத்து யூனியன் சார்பில் வரவேற்புரையை அமைச்சருக்கு வாசித்தளித்தார். பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் திரு இ. பு. தர்மலிங்கம், பி. ஏ., அவர்கள் வட்டார முன்னேற்றம் குறித்த அறிக்கையை வாசித்தார். பஞ்சாயத்து யூனியன் அலுவலக புதிய கட்டிடத் திறப்பு விழாவை முன்னிட்டு தயாரிக்கப்பட்ட ''சிறப்பு மலரை'' மாவட்ட காங்கிரஸ் கமிட்டி பொதுச் செயலாளர் திரு என். நாகராஜ மணியக்கார் எம். ஏ., அவர்கள் வெளியிட்டார். மகாத்மா காந்தியின் திரு

வுருவப் படத்தைச் சேலம் திரு ஏ. மாரியப்பன் அவர்களும், ஜவஹர்லால் நேரு திருவுருவப் படத்தை அரூர் பஞ்சாயத்து யூனியன் தலைவர் திரு டி. என். தீர்த்தகிரி கவுண்டர் அவர்களும், நேதாஜி சுபாஷ் சந்திரபோஷ் திருவுருவப் படத்தைப் பென்னுகரம் பஞ்சாயத்து யூனியன் தலைவர் திரு கே. முருகேசன் அவர்களும் திறந்து வைத்தார்கள். அமைச்சர் அவர்கள் தம்முடைய உரையில் விவசாயத்தில் மக்கள் அதிக நாட்டம் கொள்ளவேண்டியதின் அவசியத்தைக் குறித்தும், பஞ்சாயத்து யூனியன் தற்போதைய நிலையில் செயலாற்ற வேண்டிய பணிகளைக் குறித்தும் விவரமாக வலியுறுத்தினர்.



## அவிநாசி பஞ்சாயத்து யூனியன்

அவிநாசி பஞ்சாயத்து யூனியனைச் சார்ந்த ஆரம்ப ஆதாரப் பள்ளிகள் அனைத்திற்கும் மேற்படி விழாவை முன்னிட்டு நேதாஜியின் உருவப்படம் வழங்கப் பெற்று 23-1-65 தேதி நேதாஜி தின விழா கொண்டாடப் பெற்றது. மேலும் இவ்வட்டாரத்தைச் சேர்ந்த அவிநாசி சேயூர், கருவலூர் ஆதாரப் பள்ளிகளில் ஊராட்சி ஒன்றிப்பு மன்றத் தலைவர் திரு கே. எம். ராமசாமி அவர்கள் தலைமையில் சிறப்புக்கூட்டங்கள் நடைபெற்றது. அவ்வமயம் நேதாஜி அவர்களின் உருவப் படத்தை திரு பி. ராமலிங்கம், பி. எஸ். ஸி., பி. டி. அவர்கள் திறந்து வைத்து அவருடைய நாட்டுப் பற்றை விளக்கிச் சொற்பொழிவாற்றினர். விளையாட்டு விழாவில் கலந்து கொண்டு வெற்றி பெற்றவர்களுக்கு திரு டி. எஸ். கிருஷ்ணசாமி ஆணையாளர், பஞ்சாயத்து யூனியன், அவிநாசி அவர்களால் பரிசுகள் வழங்கப் பெற்றன. நாட்டுப் பண்ணுக்குப் பிறகு கூட்டம் இனிது முடிவுற்றது.



## துரிஞ்சாபுரம் பஞ்சாயத்து யூனியன்

துரிஞ்சாபுரம் பஞ்சாயத்துயூனியனைச் சேர்ந்த 52 பாடசாலைகளிலும் குடியரசு தினவிழா 26-1-65ம் தேதி சிறப்பாக கொண்டாடப்பட்டது. கொத்தந்தவாடி பஞ்சாயத்து தலைவர் திரு ஜி. சிவராம ரெட்டியாரால் கொடி யேற்றப்பட்டது. துரிஞ்சாபுரம் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த ஊசாம்பாடி பஞ்சாயத்து தலைவர் திரு கே. வெங்கட்ராம ரெட்டியார் அவர்கள் தலைமை தாங்கி குடியரசு தினத்தில் நாடு நலம் பெற ஆற்றவேண்டிய கடமைகளை பற்றி விளக்கினர். குடியரசு நாடாக ஆனது பற்றியும் அதற்கு பாடுபட்ட பெரியோர்களின் வாழ்க்கை வரலாறு பற்றியும் நன்முக எடுத்துக் கூறினர். போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்கு திரு டி. திருவரங்கம் ஆணையாளர் அவர்கள் பரிசுகள் வழங்கினர்.



## நடுவஞ்சேரி பஞ்சாயத்து யூனியன்

அவிநாசி பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த நடுவஞ்சேரி பஞ்சாயத்துக் கருக்கன்காட்டுப் புதூரில் ஜனவரி மாதம் 14ம் தேதி சிறுசேமிப்பு விழா திரு கே. எம். ராமசாமி (பெருந்தலைவர், பஞ்சாயத்து யூனியன், அவிநாசி) அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

அதுசமயம் திரு டி. எஸ். கிருஷ்ணசாமி அவர்கள் ஆணையாளர், பஞ்சாயத்து யூனியன், அவிநாசி. வரவேற்புரைக்குப் பின் திரு என். மிருத்தியஞ்சனன், பி. எஸ். ஸி. அவர்கள் (மாவட்டக் கலெக்டரின் நேர்முக உதவியாளர், கோவை) சிறுசேமிப்பு விழாவைத் துவக்கி வைத்தும், நடுவச்சேரி பஞ்சாயத்தைச் சேர்ந்த கிராம விவசாயிகள், வியாபாரிகள் மற்றுமுள்ள கிராம மக்கள் தபால் நிலையச் சேமிப்பாக ரூ. 2710. புதிய சேமிப்பு கணக்குக்காக மாவட்டக் கலெக்டரின் நேர்முக உதவியாளர், கோவை அவர்களிடம் அளித்தனர். மேலும் அவரது உரையில் சிறுசேமிப்புத் திட்ட நோக்கம் பயன் மக்களின் பங்கு பற்றி சிறந்த முறையில் சொற்பொழிவாற்றினர். பின்னர் திரு என். ராமசாமி அவர்கள் சிறுசேமிப்புத் தாசில்தார் கோவை அவர்கள் சிறுசேமிப்புத் திட்ட நடைமுறை பற்றிய விரிவுரைக்குப் பின் திரு டி. எம். காளியப்பா, எம். ஏ. அவர்கள், மாவட்ட விளம்பர அதிகாரி, கோவை ''பணம் பத்திரம்'' என்ற நாடகத்தை துவக்கி வைத்து சிறப்புச் சொற்பொழிவு ஆற்றினர். ''பணம் பத்திரம்'' என்ற சிறுசேமிப்பு நாடகம் நடைபெற்றது. பின்னர் திரு ஈ. ரங்கசாமி நாடார் அவர்கள் உதவித் தலைவர், நடுவச்சேரி பஞ்சாயத்து நன்றி நவில நாட்டுப் பண்ணோடு கூட்டம் இனிது முடிவுற்றது.

  

### கால்நடைக் கண்காட்சி விழா

20-1-65 காலை 10 மணிக்கு இப்பஞ்சாயத்துக் கூட்டுமன்றத்தின் சார்பில் திருமருகலில் கால்நடைக் கண்காட்சி வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. இக் கண்காட்சியில் 300க்கு மேற்பட்ட கால்நடை இனங்கள் பங்கு கொண்டன. காலை முதல் திருமருகல் கால்நடை மருத்துவர் திரு சேஷகிரி அவர்களும், திருவாரூர் கால்நடை மருத்துவர், திரு டாக்டர் டி. கணேசகலே, பி. வி. எஸ். ஸி., அவர்களும், நாகப்பட்டினம் கால்நடை மருத்துவர் திரு டாக்டர் கே. ராமநாதசிங், பி.வி.எஸ்.ஸி., அவர்களும் கண்காட்சியை நன்கு அமைத்து கால்நடைகளைப் பார்வையிட்டார்கள். பரிசு பெறக்கூடிய கால்நடைகளை அவர்கள் பார்வையிட்டுத் தீர்ப்பாளர்களாக இருந்தார்கள். மாலை 6 மணிக்கு நாகை கோட்டாட்சித் தலைவர், திரு கே. பெரியநாயகம், எம். ஏ., அவர்கள் தலைமையில் பங்கு பெற்ற கால்நடைகளில் 47 பரிசுகள் பலவகைப்பட்ட நால்நடைகளுக்கு வழங்கப்பெற்றது. நாகை மாவட்ட கால்நடை அதிகாரி திரு என். ராமசாமி, பி. வி. எஸ். ஸி., பால்தரும் இனம் வளர்ப்பதன் அவசியம்பற்றி விரிவுரை ஆற்றினர். கூட்டுமன்றப் பெருந்தலைவர் திரு வ. சொக்கலிங்க முதலியார் அனைவரையும் வரவேற்றார். கூட்டுமன்ற கால்நடை விஸ்தரிப்பு அதிகாரி, திரு தீனதாளு இதற்கான ஏற்பாடுகளைச்சிறந்த முறையில் செய்தனர். இறுதியில் ஆணையர், திரு க. ரா. ராசாராமன் அனைவருக்கும் நன்றி கூறினர்.

  

### திருமருகல் பஞ்சாயத்து கூட்டுமன்றம்

திருமருகல் பஞ்சாயத்துக்கூட்டு மன்றத்தைச் சேர்ந்த நரிமனம் பஞ்சாயத்தில் கிராமப் பணித்

திட்டத்தின்கீழ் ரூபாய் 10,000 செலவில் கட்டப்பட்ட பள்ளிக் கூட கட்டிடம் 17-1-65 ஞாயிறு மாலை 3 மணிக்கு நாகப்பட்டினம் கோட்டாட்சித் தலைவர் திரு எம். பெரியநாயகம், எம். ஏ., அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. கூட்டுமன்றத் தலைவர் திரு வ. சொக்கலிங்க முதலியார் விழாவிற்குத் தலைமை தாங்கினார். கோட்டாட்சித் தலைவர் திரு பெரியநாயகம், எம். ஏ., ஆணையர், திரு. க. ரா. ராஜாராமன், பஞ்சாயத்துத் தலைவர் திரு. ரெத்தினசபாபதி, நாகப்பட்டினம் நகராட்சி உறுப்பினர் திரு. ராமசாமி செட்டியார் ஆகியோர் பேசினர். நாகை நகராட்சி உறுப்பினர் திரு. ராமசாமி செட்டியார் நேரு படத்தைத் திறந்து வைத்தார். கிராமநல ஊழியர் திரு நாகலிங்கம் நன்றி கூறினார்.

### சின்னமனூர் பஞ்சாயத்து யூனியன்

26-1-65 தேதியன்று சின்னமனூர் பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்தின் முன்பு உள்ள திடலின் பஞ்சாயத்து யூனியன் பள்ளிகளின் குழந்தைகளுடன், குடியரசுத் தினவிழா, பெரியகுளம் தொகுதி பாராளுமன்ற உறுப்பினரும், சின்னமனூர் பஞ்சாயத்து யூனியன் சேர்மனுமான திரு எம். மலைச்சாமி பி.'ஏ., எம். பி., அவர்கள் தலைமையில் சிறப்புடன் நடந்தது.

அவ்விழாவிற்கு உள்ளூர் பிரமுகர் திரு திரவியம், சின்னமனூர் பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் திரு வி. நாகராசன், சின்னமனூர் சரசு எலெக்டிரிக்கல் உதவி இஞ்சீனியர் மற்றும் ஆசிரியர்கள் திரு பொன்னையா, திரு அடைக்கலம் ஆகியோர்கள் குடியரசுத் தினம் குறித்தும், சுதந்திரத்தை காப்பதில் பொது மக்களின் கடமைகள் குறித்தும் மிகத் தெளிவாக அறிவுரை வழங்கினார்கள்.

பின்பு சின்னமனூர் கிராம சேவக் திரு மதுரநாயகம் நன்றி கூற, தேசீயகீதத்துடன் விழா இனிது முடிந்தது.



### திருமருகல் பஞ்சாயத்து கூட்டு மன்றம்

20-1-65 மாலை 1 மணிக்கு திருமருகல் பஞ்சாயத்து கூட்டு மன்றத்தின் கூட்டம் பெருந்தலைவர் திரு வ. சொக்கலிங்க முதலியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அது சமயம் பல தீர்மானங்கள் ஏகமனதாகத் தீர்மானிக்கப்பட்டன.

பின்னர் 3 மணிக்குக் கூட்டு மன்ற ஆண்டுவிழா சிறந்த முறையில் கொண்டாடப்பட்டது. அந்த ஆண்டு விழாவில் தஞ்சை மாவட்ட ஆட்சித்தலைவரின் நேர்முக உதவியாளர் திரு எம். முத்துக்காமாட்சி பி. ஏ. அவர்களும், நாகை கோட்டாட்சித் தலைவர் திரு கே. பெரியநாயகம் எம். ஏ. அவர்களும், நாகை மாவட்ட கால்நடை அதிகாரி திரு என். ராமசாமி பி. வி. எஸ்ஸி., அவர்களும் பங்கு பெற்று சொற்பெருக்காற்றினர். ஆணையர் திரு க. ரா. ராசாராமன் அவர்கள் இப்பஞ்சாயத்து கூட்டு மன்றத்தின் ஆண்டு அறிக்கை வாசித்துக் கொடுத்தார். அன்றியும் கூட்டு மன்றம் பல சாதனைகள் புரிய ஒத்துழைப்பு நல்கிய பெருந்தலைவர், உறுப்பினர்கள் அனைவருக்கும் ஒரு பாராட்டு இதழும் வாசித்தளித்தார். இதில் மாவட்ட சிறு

சேமிப்பு தாசில்தார் திரு எஸ். சீனுவாசன் அவர்களும், மாவட்ட குடும்பக் கட்டுப்பாடு தாசில்தார் திரு எஸ். இராசகோபாலன் அவர்களும் கலந்துகொண்டு சிறு சேமிப்புத் திட்டம், குடும்பநலத் திட்டம் இவைகளில் பஞ்சாயத்து களின் பொறுப்பு, மக்கள் பொறுப்புப் பற்றிச் சிறப்பு சொற் பொழிவாற்றினார்கள். திரு எம். முத்துக்காமாட்சி, பி.ஏ. மாவட்ட ஆட்சித்தலைவர் அவர்களின் நேர் முக உதவியாளரால் நற்சான்றிதழ்கள் வழங்கப்பட்டது.



## தர்மபுரி பஞ்சாயத்து யூனியன்

(1) தருமபுரி பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த புழுதிக்கரை சவுளூரில் ரூ. 8100 செலவில் கட்டப்பட்ட புதிய கட்டிடத்தைத் தருமபுரி பஞ்சாயத்து யூனியன் மன்றப் பெருந்தலைவர் திரு என். கே. காவேரி கவுண்டர் அவர்கள் தலைமையில் சேலம் மாவட்ட ஆட்சித் தலைவர் திரு ஏ. பத்மநாபன், ஐ. ஏ. எஸ். அவர்கள் 24-1-65 ஞாயிறன்று திறந்து வைத்தார்கள். விழாவில் தருமபுரி கோட்ட ஆட்சித் தலைவர் திரு. எம். எஸ். முத்துசாமி பி.ஏ., அவர்களும் கலந்து கொண்டார்கள். அவ்வமயம் ஆணையாளர் திரு. எஸ். ஆர். சாலமன்ராஜ், பி. எஸ்ஸி., அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார்கள், புழுதிக்கரைப் பஞ்சாயத்துத் தலைவர்திரு வெங்கட்ராமக் கவுண்டர் அவர்கள் நன்றி நவின்றார்கள். விழா நாட்டு வாழ்த்துடன் இனிது முடிந்தது.

(2) தருமபுரி பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த கிருஷ்ணபுரம் மோட்டுப்பட்டியில் ரூ. 7700 செலவில் கட்டப்பட்ட புதிய பள்ளிக் கட்டிடத்தை யூனியன் கவுன்சில் சேர்மன் திரு என். கே. காவேரி கவுண்டர் அவர்கள் தலைமையில் யூனியன் ஆணையாளர் திரு என். எஸ். ஆர். சாலமன்ராஜ், பி. எஸ்ஸி., அவர்கள் 24-1-65ம் நாள் ஞாயிற்றுக்கிழமை திறந்து வைத்தார்கள். விழாவிற்கு திரு சின்னசாமிக் கவுண்டர் அவர்கள் விரிவாக ஏற்பாடு செய்து சிறப்பாக நடத்திக் கொடுத்தார்கள். கிராம சேவகர் திரு சரகப்பிள்ளை நன்றி கூறினார். விழா நாட்டு வாழ்த்துடன் இனிது முடிந்தது.



நாட்டு நலமே நம்முடைய நலமாம். நாடு வாழ நாள்தோறும் பாடுபடுதல் நன்மைதரும் பணியாகும்.

நாட்டுக்கு உழைப்போம். நன்மைகள் பெருகப் பாடுபடுவோம். ஒற்றுமையாய் வாழ்வோம். ஒன்றுபட்டு நிற்போம். இதுவே நம் லட்சியம்.

நடந்துகொண்டு இருக்கும் போதே பாதிரியார் மாறு வேடத்தில் ஆசிரியருடன் கோவிலுக்குள் யாருமறியாமல் நுழைந்துசென்று அவளை ஏமாற்றி வெளியே அழைத்து வந்துவிட்டார்.

உள்ளே நடந்த குழப்பங்களையும், போராட்டங்களையும் கண்டு பயந்து நடுநடுங்கிய நாட்டியக்காரி, தன் கணவனின் விருப்பத்திற்கிணங்கி வெளியே அழைத்த வேற்று மனிதனுடன் கோவிலிலிருந்து வெளியேறி விட்டாள்.

வெளியே வந்த பிறகு வேற்று மனிதனாக நடித்த பாதிரியார் தன் சுய ரூபத்தை அவளுக்குக் காட்டினார். அவள் அவரைக் கண்டு கொண்டவுடன் அனலில் பட்ட புழுவாய்த் துடித்தாள்.

'நான் உன்னைக் காதலிக்கின்றேன். என்னிடம் நிறையப் பொருளும் பணமும் உள்ளன. நீ இணங்கினால் நான் உன்னைக் கிராமப் புறத்துக்கு அழைத்துச் சென்று அன்போடு பேணி ஆதரிக்கத் தயாராக இருக்கிறேன்,' என்று பாதிரியார் அவளிடம் தேனொழுகப் பேசினார்.

ஆனால் அவளோ அதற்கு இணங்கவே இல்லை. சாவதற்குத் தயாராக இருந்தாளே தவிரப் பாதிரியாரின் சல்லாபத்திற்கு அவள் இசையவே இல்லை. பாதிரியார் கடுங் கோபம் கொண்டார். தன் கோபத்தைத் தீர்த்துக்கொள்ளுதற்காக ஒரு முடிவு செய்தார்.

குடூல் என்ற பைத்தியக்காரக் கிழவியிடம் நாட்டியக்காரியை ஒப்புவித்து விட்டு அவர் முரடர்களை அழைத்துவரச் சென்றார். குடூல் தன் குடும்ப வரலாற்றை அவளிடம் கூறித் தன்னிடமுள்ள செருப்பை எடுத்துக் காட்டினாள். இது கேட்ட நாட்டியக்காரி தன் மார்பில் தொங்கிய மற்றொரு செருப்பையும் குடூலுக்குக் காட்டினாள். தாயும் மகளும் ஒன்றாய்ச் சேர்ந்து மகிழ்ச்சிக் கடலில் மிதந்தார்கள்.

இந்தச் சமயத்தில் அதிகாரிகள் வந்து விட்டனர். மகள் கைது செய்யப்பட்டு, தூக்கில் தொங்கவிடப்பட்டாள். அவள் தூக்கில் தொங்குவதைக் கண்டு மகிழ்ச்சிப் பெருக்கில் துள்ளினார் பாதிரியார். பாதிரியாரை மறைந்திருந்து கொன்றுவிட்டான் கூனன்.

நாட்டியக்காரி தூக்கேற்றப்பட்டு மறைந்து விட்டாள். பல ஆண்டுகள் கழித்து அவளது சவப் பெட்டியைத் திறந்து பார்க்கும்போது அதில் மற்றொரு முழு மனித எலும்புக் கூடு இருந்தது. அது அந்தக் கூனனுடை யதே!

ஆசிரியரும், வெளியிடுபவரும்: கண. இராமநாதன், 36, பெரியதெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5. அச்சிட்டோர்: ஐடியல் பிரிண்டர்ஸ், 97, பிராட்வே, சென்னை-. தொலைபேசி '84989.

# சிறுவர் பகுதி





## வேண்டும்

பொழுது புலர்ந்திட வேண்டும்
புதுமை மலர்ந்திட வேண்டும்
தொழுது புகழ்ந்திடு வண்ணம்
தூய்மை பரந்திட வேண்டும்



அன்பு விரிந்திட வேண்டும்
அழகு சொரிந்திட வேண்டும்
நண்பர் மெச்சிடு வண்ணம்
நலங்கள் சிறந்திட வேண்டும்



அறிவு தழைத்திட வேண்டும்
ஆண்மை முளைத்திட
வேண்டும்
உறவு வளர்ந்திடு வண்ணம்
உள்ளம் மலர்ந்திட வேண்டும்







# கப்பல் தோன்றிய கதை

'கிட்டுத் தம்பியை எங்கே காணேம்?'

'அதோ வீட்டு முற்றத்தில் கப்பல் விடுகிருனே தெரியவில்லே.'

'ஆம்' அங்கேதான் இருக்கிருன். மழையில் நனைந்தால் காய்ச்சல் வந்துவிடுமே என்றுதான் அவனேத் தேடினேன். அவனே மழைத் தண்ணீரில் கப்பல் விட்டுக் கொண்டிருக்கிருன்.

'ஆம், காகிதக் கப்பலேக் கிட்டு செய்துவிடுகின்ருனே; இதேபோல நிஜமான கப்பலே யார் முதன் முதலில் கண்டு பிடித்தது. அதை எப்படிக் கண்டுபிடித்தார்கள்? கப்பல் பிறந்த கதையை அறிந்து கொள்ள வேண்டாமா?

'அறிந்துகொள்ள வேண்டுவது அவசியமே. இதோ கப்பலின் கதையைச் சொல்லுகிறேன். கவனமாகக் கேளுங்கள்.'

பண்டைக் காலத்தில் குழந்தைகள் குளம், குட்டை, ஏரி, ஆறு முதலிய நீர் உள்ள இடங்களில் கட்டைகளே மிதக்க விட்டு வேடிக்கை பார்த்தனர். வேடிக்கையாக விடப்பட்ட கட்டைகள் பார்ப்பவர்களுக்கு வியப்பை ஊட்டின. மிதக்கும் கட்டைகளில்ஏறி உட்கார வேண்டும் என்ற ஆசை நாளாவட்டத்தில் தோன்றியது. கட்டைகளுக்குப் பதிலாகப் பெரிய மரங்களே நீரிலே மிதக்க விட்டனர். அம்மரங்கள் சவாரிக்குப் பெரிதும் பயன்பட்டன.

'மரத்தின் உதவியால் தண்ணீரின் மேல் மிதந்து செல்ல முடியும்', என்ற உண்மைதான் கப்பல் பிறந்த கதைக்குக் கருப்பொருளாகும்

அந்தக் காலத்து மக்கள் காய் கனிகளேத் தின்று வந்தனர். காய்கனி கிடைப்பது அரிதாக இருந்தபோது காட்டு விலங்குகளேயும், மீன் போன்ற நீரில் வாழ் உயிர்ப்பொருள்களேயும் ஆகாரமாகக் கொண்டனர். எனவே நதியைக் கடந்து காட்டுக்குப் போவதற்கும் நீரில் மீன் பிடிப்பதற்கும் மரக் கட்டைகள் பெரிதும் துணை புரிந்தன.

தனி மரத்தை நம்பி ஒருவனுகப் போவதைவிடப் பல மரங்களே ஒன்ருகப் பிணைத்துப் பலராகப் பயணம் போகும் பழக்கம் அனுபவத்தால் வந்து சேர்ந்தது. பல மரங்களே ஒன்ருகக் கட்டிய காரணத்தாலேயே 'கட்டு மரங்கள்' என்ற பெயர்கூடத்

தோணிகளுக்கு நிலைப்பதாயிற்று.

மூன்று அல்லது நான்கு மரங்களால் கட்டுமரங்களைக் கட்டுவது வழக்கம். இம் மரங்களின் இடை பெருத்தும், இரு முனைகள் சிறுத்தும் கூர்மை உள்ளதாகவும் இருக்கும். பிறகு மரங்களை ஒன்ருகச் சேர்த்து இரு கோடி முனைகளையும் கயிறு கொண்டு கட்டிவிடுவர். பிறகு ஒருவரோ, இருவரோ அதில் ஏறி கடலில் சென்று மீன் பிடிப்பது உண்டு. கட்டுமரங்களில் பெரிய பாய்மரம் ஒன்றும் இருப்பதுண்டு. கட்டப்படும் பாய் பெரும்பாலும் துணியால் ஆனதாக இருக்கும். முக்கோண வடிவங் கொண்டதாகவும் இருக்கும்.

மரத்தாலும் பல மரங்களாலும் கட்டப்பட்ட மரக்கலங்களைக் கண்டோம். மரப்பட்டைகளைக் கொண்டும் கலத்தைக் கட்டினர். ஆஸ்திரேலிய மக்கள்தான் மரப்பட்டைக் கலங்களை முதன்முதலில் கண்டனர். 'எகுலிப்டஸ்' என்ற மரப்பட்டையிலிருந்து கலங்களை உண்டுபண்ணினர். உடையாமல் உரியாமல் ஒதுக்கப்பட்ட பட்டைகளின் இரு நுனிகளையும் ஒன்ருகச் சேர்த்துக் குவித்துக் கயிறு கொண்டு கட்டிவிடுவர். சில மரக் குச்சிகளை இடையிடையே கொடுத்துக் கட்டிவிடுவதால் கலங்கள் விரைப்பாக இருக்கும். பச்சைப் பட்டைகளைக் கொண்டு படகுகளைக் கட்டிவிட்டால் பிறகு சுருக்க விழாமல் இருக்கும்.

ஆஸ்திரேலிய மக்களைப் போலவே, அமெரிக்கச் செவ்விந்திய மக்களும் 'பிரிச்' என்ற மரப்பட்டையிலிருந்து கலங்களை உண்டுபண்ணுகின்றனர். பிரிச் மரப்பட்டையைப் பசுமையாக எடுத்து ஒரு போர்வையைப் போல போர்த்துவிடுவர். இப் பட்டைப் போர்வை இணையும் பாகங்களைத் தோல் அல்லது நாரிழைல் பிணைத்துத் தைத்துவிடுவர். இப்படகுகள் அழகாகவும் கனமில்லாமலும் இருக்கும். நாளாக ஆக ஒரே மரத்திலிருந்து குடைந்து எடுக்கப்பட்ட குழிவுப் படகுகளை மக்கள் கண்டனர். இவ்விதப் படகுகள் செய்ய மிகவும் பெரிய அடிமரங்களை உடைய மரங்களே தேவையாகும். கல்லுளியால் பெரிய மரங்களைச் செதுக்கிக் கலங்களை ஆதிகாலத்தில் பண்ணினர். பிறகு தீயைக் கண்டு பிடித்ததும் அடி மரங்களில் தீ மூட்டி சிறுகச் சிறுக உட்கட்டையை எரித்துக் கரியாக்கிக் குடைந்து கலங்களைச் செய்தனர்.

மரக் காடுகளில் வாழ்ந்த மக்கள் மரத்தைக் கொண்டு கலங்களைக் கண்டனர். மரமற்ற நாடுகளில் வாழ்ந்த மக்கள் என்ன செய்திருக்க வேண்டும்?

நைல் நதிக் கரையில் வாழ்ந்த எகிப்து மக்கள் நாணல் புல்லைக் கொண்டு நல்லதொரு கலத்தைக் கண்டனர். நாணல் புல்லைக்

கட்டுக்களாகக் கட்டி, அக்கட்டு களை அடித்தளமாக்கி அதன் மேல் சிறுசிறு மரத் தடுக்குகளை விரித்துக் கலங்களைக் கட்டினர். நாணல் நீரை உறிஞ்சிக் கனத்து விடாமல் இருப்பதற்காகப் புல்லின் மீது தார் போன்ற பிசனை நன்கு பூசி விடுவர். பிறகு மிருகத்தின் தோல்களைக் கொண்டு நன்ருக மூடிவிடுவர். இவ்விதப் படகுகள் பல்லாயிரம் ஆண்டுகளாக வழக்கில் இருந்து வருகின்றனது.

மரமும் நாணலும் கிடைக்காத இடங்களில் வாழ்ந்து வந்தவர்கள் மிருகத்தின் தோல்களைக் கொண்டு தோணிகள் கண்டனர். டைக்கிரிஸ் நதி அருகே வாழ்ந்த இங்கிலாந்து தேச மக்கள் ஆதி காலத்தில் 'கோரகல்' எனப்படும் வட்டவடிவமான தோல் தோணிகளைப் பயன் படுத்தினர்.

இன்னெரு விதமான தோல் தோணியையும் இந்திய மக்கள் கண்டனர். அதாவது, பன்றி, மாடு, எருமை முதலியவற்றின் தோலைப் பதனிட்டு முன்னிருந்த உருவத்தின்படியே தைத்துவிடுவர். காற்றை நன்ருக அடைத்துத் தைத்து பலூனைப் போலச் செய்து நீரில் மிதக்கவிடுவர். பிறகு அதன்மீது ஏறிப் பக்குவமாகப் பயணஞ் செய்வர். இமய மலைச் சரிவில் சட்லஜ் நதிக் கரையில் இப்படகுகள் பழக்கத்தில் உள்ளன.

வட துருவத்தில் வாழ்ந்த மக்கள் பனிப் பாறைகளைக் கடந்து செல்வதற்காக சீல், வால்ரஸ் போன்ற நீர்வாழ் பிராணிகளின் எலும்புகளையும் வெண் கரடியின் தோலையும் கொண்டு ஒரு விதப் படகுகளைக் கண்டனர். ஏனெனில் பனிப் பிரதேசத்தில் மரமும் நாணலும் இருக்காதல்லவா? இந்தப் படகுகளுக்கு 'காயக்' என்று பெயர்.

மரம். மரப்பட்டை, தோல்பை, நாணல். மீன் எலும்புகள் இவற்ருல் கட்டப்பட்ட படகுகளே கப்பல் கலைக்கு வித்தாகும். மேலே கண்ட படகுகளின் உதவியால் மனிதன் நீர்ப் பிரயாணத்தை மேற்கொண்டான். அப்போது அவனுக்குத் துணையாக அமைந்தது துடுப்புகளே ஆம். துடுப்புகளைப் போலவே காற்றையும் பயன்படுத்தலாம் என்ற உண்மையை அவன் அறிந்து கொண்டான். இதுவே கப்பல் கலையின் முதற் கிளையாகும்.

பாய்மரக் கலங்கள் பழக்கத்திற்கு வந்தன. கூடைக் கம்புகள், தோல்கள், மூங்கில் கட்டைகள், நாணல் புற்கள் முதலியன பாய்களாகப் பயன்பட்டன. 'ஸாலமீஷியர்கள்' என்னும் தென் பசிபிக் பெருங் கடல் மக்களே முதன் முதலாகப் பாய்மரக் கலங்களைக் கண்டார்கள்.

ஆற்றைக் கடப்பதற்கும், ஆகாரத்தை அடைவதற்கும் கலங்களைக் கண்டுபிடித்த மனிதன் வியாபாரம் செய்யவும், வித்தைகளை வளர்க்கவும் கப்பல்

கலையைப் பெரிதும் வளர்க்க வேண்டிய நிர்ப்பந்தத்திற்கு ஆளானான்.

கப்பல் கலையில் ஆதிமுதற் கொண்டு ஆதிக்கம் செலுத்தி வந்தவர்கள் எகிப்தியர்களே யாகும். அடுத்தபடியாகக் 'கிரீட்' தீவினர் ஆவர்.

வியாபாரத் துறைக்குப் பயன் பட்ட கப்பல்கள், நாடு பிடிக் கும் வெறியையும் வளர்த்து விடவே, மன்னர்களுக்குக் கப் பல் படைகளை வைத்துக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது. படைபெடுப்பதற் கும், பாதுகாத்துக்கொள்வதற் கும் கப்பற்படை பெருந்துணை யாய் நின்றது.

கப்பல்படையைக் காப்பாற்று தற்காகக் கடற்கரைகளில் துறைமுகங்கள் கட்டப்பட்டன.

நாளாவட்டத்தில் ஆற்றைக் கடப்பதற்கு ஒருவிதக் கப்ப லும், கடலைக் கடப்பதற்கு ஒரு விதக் கப்பலும், சாமான்களை ஏற்ற' ஒருவிதக் கப்பலும், ஆட் களை ஏற்ற ஒருவிதக் கப்பலும், சண்டை செய்ய ஒருவிதக் கப்ப லும், சமாதானமாகப் பிரயா ணஞ் செய்ய ஒருவிதக் கப்ப லும் அறிஞர்களால் கண்டு பிடிக்கப்பட்டன.

காந்தம் ஏறிய இரும்பு அல் லது எஃகு ஊசியை தண்ணீரில் மிதக்க விட்டால் அந்த ஊசி எப்போதும் வடக்குத் தெற் காகவே திசை காட்டி நிற்கும் என்ற உண்மையை முதன்முத லில் ஐரோப்பியர்கள் கண்டனர். அவ்வுண்மையைக் கொண்டு கப்பலில் திசை அறியும் கருவி யைச் சீனர்கள் கண்டு சொன் ஞர்கள்.

அடுத்தபடியாகக் கப்பல் ஓடும்பொழுது, விரும்புகிற பக் கத்தில் கப்பலைத் திருப்புவதற் குரிய 'ரட்டர்' என்ற திசைத் திருப்பியை கப்பலின் பின்னே இணைத்து வலப்புறமும் இடப் புறமும் திருப்பக் கற்றுக் கொடுத்தவர்களும் சீனர்களே.

கப்பலைக் கடலில் நிறுத்துதற் குரிய 'நங்கூரம்' என்பதையும் நாளாவட்டத்தில் அறிஞர்கள் கண்டு தந்தனர்.

18ஆம் நூற்ருண்டில் பல நூதன சாதனங்கள் கண்டு பிடிக்கப்பட்டன. 1712ஆம் ஆண்டில் இங்கிலாந்தில் 'நியூ கோம்ஸ்' என்பவரால் நீராவி யந்திரம் கண்டுபிடிக்கப்பட் டது. உலோகப் பொருள்களைக் கொண்டு கப்பல்களைக் கட்டும் உண்மையையும் மக்கள் கண்ட னர்.

1736ஆம் ஆண்டில் 'ஜேம்ஸ் வாட்' என்பவர் நன் முறையில் இயங்கும் நீராவிக் கப்பலைக் கண்டுபிடித்தார். 1754ஆம்ஆண் டில் வில்லியம் மார்டக் என்பவர் நீராவியைக் கொண்டு நிலத்தில் ஓடும் வண்டி ஒன்றைக் கண்டு பிடித்தார். நீராவியின் பயனை நன்கு கண்டுகொண்ட பிறகு 1819 ஆம் ஆண்டில் 'சவாஞ' என்ற பெயருடன் அட்லாண்

டிக் மகாசமுத்திரத்தில் ஒரு கப்பல் கண்டுபிடிக்கப்பட்டது. பாய்மரமும் நீராவி இயந்திரமும் இணைந்த கலவைப் பொருள் தான் இந்தக் கப்பல்!

கப்பல் கட்ட மரக்கட்டைகளை விட இரும்புத் தகடுகள் பெரிதும் பயன்படும் என்பதை அதிகக் கனமான பொருள்களை ஏற்றிச் செல்ல விரும்பிய மக்கள் கண்டு கொண்டனர். 1822 ஆம் ஆண்டில் 'மாண்பி' என்னும் ஆங்கிலப் பெருமகனால் இரும்புக் கப்பல் கண்டுபிடிக்கப் பட்டது.

1856 ஆம் ஆண்டில் 'கன்னர்ட்' என்பவர் இங்கிலாந்திலிருந்து அமெரிக்கா சென்றுவர அட்லாண்டிக் மகாசமுத்திரத்தைக் கடக்க வல்ல இரும்புக் கப்பல் ஒன்றைக் கண்டுபிடித்து, செயல் முறையில் கடலில் செலுத்தியும் காட்டினார்.

1856 ஆம் ஆண்டில் 'மெஸ்ஸமர்' என்பவர் எஃகைக் கொண்டு எளிய முறையில் கப்பல் கட்டும் முறையைக் கண்டுபிடித்தார். பெரும்பெரும் கப்பல்களைக் கட்ட எஃகு பெருந்துணை புரிந்தது.

இப்படியாகத்தான் கப்பல் கலை இன்றுவரை வளர்ந்துள்ளது. கரி, மண்ணெண்ணெய், மின்சாரம் இவற்றைக் கொண்டு ஓட்டப்படும் கப்பல்களை இனிமேல் அணு சக்தியைக் கொண்டு ஓட்டப்படும் காலமும் விரைவிலேயே வரினும் வரக்கூடும். இன்னும் கப்பல் கலையில் நாம் என்னென்ன அதிசயங்களைக் காணப் போகிறோமோ தெரியவில்லை?

'அடடா! கிட்டுத் தம்பி கப்பல் விடும் மும்முரத்தில் வீட்டு முற்றத்தை விட்டு வீதிப் புறத்துக்கே ஓடிவிட்டானே!'

'ஆம். அவனைப் பிடித்துக் கொண்டு வாருங்கள்.'

'சரி வருகிறேன் வணக்கம்!'

---

கப்பல் நல்ல கப்பல்
காற்றும் மழையும் அடிக்க
தப்பித் தப்பி ஓடும்
தகடு போன்ற கப்பல்

அட்டைத் தாளி னாலே
அழகு போலச் செய்து
குட்டை நீரில் விட்ட
குளுமை யான கப்பல்

“குறும்பு, கொடுமை நிறைந்த தலைவனை விட, நேர்மையான சோம்பேறித் தலைவன் எவ்வளவோ மேல்” என்ற உண்மையை விளக்குகிறது இக்கதை.

# தவளை ராணி

**ஈசாப்புக் கதை**

ஒரு ஊரில் ஒரு சின்னக் குளம் இருந்தது. குளத்தின் கரையிலே நிழல்தரும் பெரிய ஆலமரம் இருந்தது. அந்த வழியே செல்லும் வழிப் போக்கர்கள் எல்லாம் குளக்கரையில் சிறிது உட்கார்ந்து விட்டுச் செல்வது வழக்கம். குளத்தின் தண்ணீரும் பால் போலத் தெளிவாகவும் சில் என்று குளிர்ச்சியாகவும் இருக்கும். குளத்தில் பாசியோ வேறு தூசியோ எதுவும் கிடையாது. காரணம் அந்தக் குளத்தில் சேரும் அழுக்குகளை எல்லாம் தவளைகள் தின்று குளத்தைச் சுத்தமாக வைத்திருந்தன.

அந்தக் குளத்தில் நூற்றுக் கணக்கான தவளைகள் இருந்தனவே தவிர வேறு பிராணிகள் எதுவுமே கிடையாது. மழை பெய்தால் தவளைகளுக்கு ஒரே கொண்டாட்டம். ‘கொடாக் கொடாக்’ என்று மகிழ்ச்சியுடன் துள்ளித் திரியும். அப்போது குளத்துக்கு புதுத் தண்ணீரில் புதிய தவளைகள், மீன்கள் வரும். மீன்களைத் தவளைகள் தின்றுவிடும்.

இப்படியே ஒரே நிலையாக இருந்த வாழ்க்கை தவளைகளுக்குப் பிடிக்கவில்லை. எங்கு எங்கோ எது எதுவோ நடக்கிறது, ஆனால் இங்கு ஒரு மாற்றமும் இல்லையே என்று வருந்தின. குளத்துக்குப் புதிதாக வந்த தவளை இதற்கு முன்பு ஆறு, கடலில், வாழ்ந்தது. அது கடல் வாழ்க்கை குறித்து கதை கதையாகப் பேசியது. “கடலிலே ஒரே கொண்டாட்டம் தான். அங்கு கடல் கன்னியிருக்கிறாள். அவள் தான் தவளை மீன்களுக்கு எல்லாம் ராணி. மிக அழகாக இருப்பாள். அந்த ராணியைப் பார்ப்பதற்கு ஆயிரம் கண்கள் வேண்டும். அவள் உத்தரவு போட்டால் திமிங்கலம் போன்ற யானை மீன்கள் எல்லாம் உடனே கீழ்ப்படியும் என்று புதிய தவளை கூறியது. இதைக் கேட்டதில் இருந்து தவளைகளுக்கு எல்லாம் ராணி ஆசை ஏற்பட்டது. நமக்கு ஒரு ராணி வேண்டும். அவள் சொல்படி நாம் நடக்க வேண்டும், தினசரி அந்த ராணி நமக்குக் காட்சி அளிக்க வேண்டும். அவள்

கையை நாம் முத்தமிட வேண்டும் என்று எல்லாத் தவளைகளும் கனவு கண்டன.

குளத்துக்கு அழகு அழகான பெண்கள் எல்லாம் தண்ணீர் எடுப்பதற்கு, குளிப்பதற்கு வருகிறார்கள். அவர்களில் ஒருவர் ராணியானால் எவ்வளவு இன்பமாக இருக்கும்? கடல் கன்னியைவிட நமது ராணி தானே அழகாக இருப்பாள் என்று எண்ணின.

ஒருநாள் மழை பெய்து ஓய்ந்த நேரம். மாலைச் சூரியன் தன் பொன் நிறக் கதிர்களைக் குளத்தில் பாய்ச்சிய வண்ணம் இருந்தான். அப்போது கரைக் கருகாமையில் தவளைகள் எல்லாம் ஒன்று கூடின. தவளைகளுக்கு ராணி வேண்டும் என்று கூட்டத்தில் தீர்மானம் நிறைவேறின. அதற்காகக் கடவுளை நோக்கித் தவம் செய்தன. ஒரு வாரம் எல்லாத் தவளைகளும் குளத்துக்கு அடியில் உண்ணுமல் உறங்காமல் வழிபாடு நடத்தின. 'திடீர்' என்று ஒருநாள் கடவுள் தோன்றினுர். "தவளைகளே, நீங்கள் ஏன் தவம் செய்கிறீர்கள்? உங்களுக்கு என்ன வேண்டும்." என்று கடவுள் கேட்டார்.

தவளைகள் எல்லாம் மகிழ்ச்சி அடைந்தன. "எங்களுக்கு எல்லாம் தலைவியாக ஒரு ராணி வேண்டும்" என்று கூறின. உடனே கடவுள் அப்படியே ஆகட்டும் என்று கூறினுர். கொஞ்ச நேரத்தில் மரத்தினுல் செய்த பொம்மை ஒன்றை குளத்தில் போட்டார். பொம்மை 'டமார்' என்று குளத்தில் விழுந்ததால் தவளைகள் எல்லாம் நடுங்கித் தண்ணீருக்கு அடியில் போய் ஒளிந்து கொண்டன. பிறகு கொஞ்ச நேரத்தில் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு தண்ணீர் மட்டத்துக்கு வந்தன. அங்கே பொம்மை மிதப்பதைக் கண்டவுடன், இவர்தான் நமது ராணி என்று வணங்கின. எல்லாத் தவளைகளும் ராணியைச் சுற்றிக் கொண்டு ஆடிப்பாடி மகிழ்ந்தன. இரவு வெகு நேரம் ஆனவுடன் எல்லாத் தவளைகளும் தண்ணீருக்கு அடியில் போய்த் தூங்கின. ராணி மட்டும் கீழே வரவில்லை. நமக்குப் பாதுகாப்பாக மேலே தூங்குகிருள் என்று தவளைகள் எண்ணின. நாட்கள் ஒன்று, இரண்டு, மூன்று என்று ஓடின. இருந்தும் ராணி பேசவே இல்லை. தவளைகளுக்கு ஒரு உத்தரவும் போடவில்லை. இதனுல், தவளைகளுக்குக் கவலை ஏற்பட்டது. பேசாமடந்தை ராணி நமக் கெதற்கு என்று எண்ணின. உடனே கடவுளை நோக்கி மறுபடியும் தவம் இருந்தன. "எங்களுக்கு உத்தரவு போடுகிற, எங்களை ஆட்டிப் படைக்கிற ராணி கொடுங்கள்" என்று கடவுளிடம் கூறின. தவளைகளின் தொல்லை கடவுளுக்குப் பொறுக்கமுடியவில்லை. எனவே தண்ணீரில் நீந்திச் செல்லும் தண்ணீர்ப் பாம்பு ஒன்றை

ராணியாகக் குளத்துக்கு அனுப்பினர்.

புதுராணி ஆல விழுதுபோல நீள உருண்டையாகவும் பளபளப்பாகவும் இருப்பதைப் பார்த்தவுடன் தவளைகளுக்குத் திருப்தியாக இருந்தது. புது ராணி நெளிந்து நெளிந்து தண்ணீரில் நீந்துவது, சர் என்று மின்னல் வேகத்தில் பாய்வது அவைகளுக்குப் புதுமையாக இருந்தது.

பகல் 12 மணி ஆனதும் புது ராணிக்கு பசி எடுத்தது போலும். 'லபக், லபக்' என்று ஒவ்வொரு தவளையாக விழுங்க ஆரம்பித்தது. உடனே குளத்திலே சோகக் குரல் கேட்டது. தவளைகள் எல்லாம் பொந்துகளில் பதுங்கின. இன்பக் கடலாக இருந்த குளத்தில் துன்பப் புயல் வீசியது. பாம்பு குளத்தில் இருப்பதால் பெண்கள்கூட குளத்துக்கு வர நடுங்கினர்கள். தவளைகளின் துன்பம் எல்லை மீறியது. உடனே "இறைவா, ஆளை விழுங்கும் கொடிய ராணியின் தொல்லை எங்களால் தாங்க முடியவில்லை. முதலில் கொடுத்த பொம்மை ராணியே இருக்கட்டும். இந்தப் புதிய ராணி வேண்டாம்" என்று கூறின. கடவுள் மீண்டும் வந்து, "உங்களுக்கு எந்த ராணியும் வேண்டாம். நீங்கள் எல்லோரும் இக் குளத்தின் ராணிகள்" என்று கூறினர். அன்றிலிருந்து தவளைகள் ராணி ஆசையை விட்டன.

நீதி: குறும்பு, கொடுமை, நிறைந்த தலைவனை விட நேர்மையான சோம்பேறித் தலைவன் எவ்வளவோ மேல்.

நன்றி-தமிழ் நாடு

எமிலி பிராண்ட்டி எழுதிய...

# உதரிங் ஹைட்ஸ்

தமிழில் தருபவர்:

ரகுநாதன்

இந்த நாவலின் ஆசிரியையான எமிலி பிராண்ட்டி (1818—1848) இலக்கிய கர்த்தாக்களான பிராண்ட்டி சகோதரிகளில் ஒருவர். இவரது மூத்த சகோதரி சார்லோட் பிராண்ட்டி எழுதிய 'ஜேன் அயர்' என்ற நாவலை நாம் ஏற்கெனவே அறிமுகம் செய்துள்ளோம். எமிலி சிறந்த கவிதைகள் பலவற்றை எழுதியுள்ளார். எனினும் அவர் எழுதிய நாவல் 'உதரிங் ஹைட்ஸ்' ஒன்றுமட்டும்தான். தனது மூத்த சகோதரியின் ஜேன் அயர் வெளிவந்த பின்னர் எமிலியின் இந்த நாவல் வெளியாயிற்று. எனினும் இந்த நாவலின் பெருமையை உலகம் உணர்ந்துகொள்ளப் பல வருடங்கள் ஆயிற்று. ஆனால் ஒரேயொரு நாவலை எழுதி, உலகத்தின் தலைசிறந்த நாவல் இலக்கிய கர்த்தாக்களின் வரிசையில் எமிலி நிரந்தரமான இடத்தைப் பெற்றுவிட்டார். அதிலும் 30 ஆண்டுக்காலம்கூட முழுமையாக வாழாத ஓர் ஆசிரியையின் படைப்பு இது என்னும்போது நமக்கு அவரது திறமை பெருவியப்பையே அளிக்கிறது. எனினும் இவரது திறமையை உலகம் இவர் இறந்த பின்னர்தான் உணர்ந்தது.

உதரிங் ஹைட்ஸ் என்ற இந்நாவல் இங்கிலாந்தின் கிராமச் சூழ்நிலையைப் பின்னணியாகக் கொண்டு படைக்கப்பட்டது. இதில் வருகின்ற பாத்திரங்களும் மலைநாட்டுக் கிராமிய மண்ணம் கமழ்பவர்களாகவே உள்ளனர். இந்தக் கதையின் முக்கியபாத்திரமான ஹீத்கிளிப்பை ஒரு விசித்திரமான படைப்பு எனக்கருதுவோர் உண்டு. வஞ்சம் தீர்க்கும்

WITHERING HEIGHTS—*By Emily Bronte*

# இலக்கண நூல்கள்

இலக்கணத்தை மிக எளிய முறையில், இனிமைச் சுவையோடு படிக்க வகை செய்யும் வண்ணம் அழகாக வெளிவந்துள்ள இலக்கண வரிசை நூல்களைக் கீழே தந்துள்ளோம். பண்டிதரும், பாமரரும் படித்துப் பயன் காண உதவும் பண்புடைய நூல்கள் இவை. பழுத்த தமிழறிஞரும், கலா நிலையம் கண்ட கல்வியாளரும் ஆகிய திரு. கே. ராஜகோபாலாச்சாரியார் அவர்கள் எழுதிய நூல்கள் இவை.

| | | | |
|---|---|---|---|
| 1. | எழுத்தியல் | ... | 2 00 |
| 2. | சொல்லியல் | ... | 2 50 |
| 3. | புணரியல் | ... | 3 50 |
| 4. | பொருளியல் | ... | 4 50 |
| 5. | யாப்பியல் | ... | 6 50 |
| 6. | அணி இயல் | ... | 6 50 |

ஆறு புத்தகங்களையும் ஒரே செட்டாக வாங்கினால் தபால் கூலி இல்லாமல் அனுப்பப்பெறும்.



த. பெ. எண். 423 போன்: 84989

ஸ்டார் பிரசுரம்

66, பெரிய தெரு,

திருவல்லிக்கேணி :: சென்னை-5.

மனோபாவத்தின் வடிவமாகவே அவன் காட்சியளிக்கிறன். "இரக்கம் என்றொரு பொருள் இல்லாத அரக்க" னைப் போலவே அவன் அதீதமாகத் தோற்றமளிக்கிறன். இப்படியும் ஒருவன் இருப்பானு என்றே நமக்கு அதிசயிக்கத் தோன்றும். ஆனல் இந்த அதீதமான குணச்சித்திரமே இந்த நாவலுக்கு வலுவூட்டுகிறது எனலாம். உலகத்தின் நாவல் வரிசையில் உன்னதமான இடத்தைப் பிடித்துக் கொண்டுள்ள இந்த நாவலின் கதையே இங்கு சுவை குன்றுத சுருக்கமாகத் தரப்படுகின்றது.

யார்க்ஷயரிலுள்ள உதரிங் ஹைட்ஸ் என்ற மாளிகையின் சொந்தக்காரரான எர்ன்ஷா லிவர்பூலுக்குச் சென்று திரும்பியபோது, அங்கு நடுத்தெருவில் கண்டெடுத்த ஓர் அனுதைச் சிறுவனையும் தூக்கிக் கொண்டு வந்து சேர்ந்தார். கன்னங்கரிய நிறமும் அழு மூஞ்சியும் கொண்ட அந்தப் புதிய விருந்தாளியை அவர் கொண்டு வந்தது அவரது பிள்ளைகளுக்குப் பிடிக்கவில்லை. பதினுன்கு வயதுச் சிறுவனுன அவரது மகன் ஹிண்ட்லே தனக்கு ஒரு பிடில் வாங்கி வருமாறு தந்தையிடம் கேட்டிருந்தான். அந்த அனுதைப் பையனைத் தூக்கி வந்த காரணத்தால், அந்தப் பிடில் வாத்தியம் உடைந்து நொறுங்கிப் போய் விட்டது. ஹிண்ட்லேயின் தங்கையான ஆறு வயதுச் சிறுமி காதரைன் தன் தந்தையிடம் தனக்கொரு குதிரைச் சவுக்கு வாங்கிவரச் சொல்லியிருந்தார். அந்த அனுதைப் பையனைத் தூக்கி வரும் கவனத்தில், அவர் அந்தச் சவுக்கை எங்கோ தொலைத்து விட்டார், தமக்குக் கிட்ட வேண்டிய பொருள்களைக் கிட்ட விடாது செய்த சனியன் என்ற எண்ணத்தில் அண்ணனும் தங்கையும் அந்த அனுதைப் பையனைக்கண்டு வெறுத்தார்கள்; ஆத்திரம் கொண்டார்கள். அவர்கள் அவனைத் தம் பக்கம் வரவோ, தமது அறைக்குள் நுழையவோ அனுமதிக்கவில்லை. மறு நாட்காலையில் எர்ன்ஷா எழுந்து வந்த போது, அந்த அனுதைப் பையன் தமது அறையின் வாசலருகே ஒடுங்கி முடங்கிப் படுத்துக் கிடப்பதைக் கண்டார். அவர் அன்புள்ளம் கொண்டவர். எனவே தமது பிள்ளைகள் அந்தச் சிறுவனை ஈவிரக்கமற்று அலட்சியமாக ஒதுக்கித் தள்ளுவதைக் கண்டு ஆத்திரம் கொண்டார். தமது பிள்ளைகளை நல்வழிப்படுத்துவதற்காக, அவர் அசட்டுத்தனமான, முரட்டுத்தனமான வழியைக் கடைப்பிடித்தார். அவர்களது செய்கையைக் கண்டித்து அவர்களைக் கன்னத்தில் அறைந்தார். ஆனல் இந்த வழி முறை அவர் எதிர்பார்த்ததற்கு மாறுன பலனைத்தான் அளித்தது.

எர்ன்ஷா அந்தப் பையனுக்குப் பால்ய வயதில் இறந்து

போன தமது பையன் ஒருவனின் பெயரை — ஹீத் கிளிம் என்ற பெயரை — ஞாபகார்த்தமாகச் சூட்டினர். நாளாக நாளாக ஹிண்ட்லே அனாதைச் சிறுவனை ஹீத் கிளிப்பை மிகவும் வெறுக்கத் தொடங்கினன்; அவனை அடித்தான்; சித்திரவதை செய்தான். ஆனல் ஹீத் கிளிப்போ தனக்கு இழைக்கப் படும் கொடுமைகளையெல்லாம் அழாமலும், கண்ணீர் சிந்தாமலும் மிகுந்த பொறுமையோடு சகித்து வந்தான். தனது மகன் ஹீத்கிளிப்புக்கு இழைத்து வரும் கொடுமைகளையும், ஹீத் கிளிப்பின் சகிப்புத் தன்மையும் கண்ட எர்ன்ஷா மிகுந்த ஆத்திரம் கொண்டார். இதனல் அவர் தமது மகனை முரட்டுத் தனமாகத் தண்டிக்க முனைந்தார்; அத்துடன் ஹீத்கிளிப் எதைச் சொன்னலும் அதையெல்லாம் அப்படியே நம்பவும் துணிந்தார். எனவே ஹீத்கிளிப் அந்த வீட்டில் கால் வைத்த நாளிலிருந்து, அவன் அங்குள்ள பிள்ளைகளின் மத்தியில் வெறுப்பைத்தான் சம்பாதித்து வந்தான். ஹிண்ட்லே செய்யும் கொடுமைகளையெல்லாம் மரக் கட்டை போன்று அவன் சகித்து வந்த போதிலும், ஹிண்ட்லேக்கு எதிராக, தான் என்ன கோள் சொன்னலும் பெரியவர் நம்பத் தயாராயிருக்கிருர் என்ற உண்மையையும் அவன் நன்ருக உணர்ந்து கொண்டிருந்தான். எனவே இந்தப் பயமுறுத்தல் ஆயுதத்தைப் பயன்படுத்தி, அவன் பல சமயங்களில் ஹிண்ட்லேயைத் தனக்கு பணியவைத்தான். ஹிண்ட்லேயிடமுள்ள விளையாட்டுப்பொருள்கள் முதலியவற்றை இந்த மிரட்டலைப் பயன்படுத்தியே பலமுறை பெற்றுக்கொண்டான். இதனல் ஹிண்ட்லே தனது தந்தையையே ஒரு கொடுமைக்காரராகக் கருதத் தொடங்கினன். மேலும், ஹீத்கிளிப் அந்த அண்ணன் தங்கையரிடையேயும் வேற்றுமையை உண்டாக்கி விட்டு விட்டான். மற்றவர்களைப் போலவே அழையாத விருந்தாளியாக வந்த அந்த அனாதைச் சிறுவனைக் காதரைனும் ஆரம்பத்தில் வெறுத்து வந்தது போக, இப்போது அவள் அந்த முரட்டுச் சிறுவனிடத்தில் ஏதோ ஒரு விசித்திரமான பாச உணர்ச்சி கொள்ளத் தொடங்கினள்.

காதரைனுக்கு எட்டு வயதாகும் முன்பே அவளது தாய் இறந்து விட்டாள். இதற்குள் காதரைன் ஒரு குறும்புக்காரத் துஷ்டப் பெண்ணக வளரத் தொடங்கிவிட்டாள். அவளுக்கு யாரையேனும் சீண்டித்தொல்லை கொடுப்பதில் ஓர் ஆனந்தம். அவள் மற்றவர்களைச் சீண்டி அழவைப்பாள். பிறகு தனக்கு ஏதோ நேர்ந்து விட்டது போல் மற்றவர்களைக் காட்டிலும் அவள் மிக உரத்து அழுவாள்; இதனல் மற்றவர்கள்தான் தமது அழுகையை நிறுத்திவிட்டு அவளைத் தேற்ற

முணேந்து விடுவார்கள். காதரைன் இவ்வாறு குறும்புத்தனம் மிகுந்தவளாக இருந்தாலும் அவள் அழகாக இருந்தாள். அவளது கண்கள் கவர்ச்சியாக இருந்தன; நடையிலே துறுதுறுப்பும் லாகவமும் மிகுந்திருந்தன. மேலும் காதரைன் தன்னேயும் மீறி, ஹீத் கிளிப்புடன் சேர்ந்து கொண்டு தன் அண்ணன் ஹிண்ட்லேயைத் தொல்லேப் படுத்தினுள். இதனுல் ஹிண்ட்லே அனுதைச் சிறுவனுன ஹீத் கிளிப்பை எந்த அளவுக்கு வெறுத்தானே, அதே அளவுக்குத் தன் தங்கையையும் வெறுத்தான். இதனுல் அவர்களின் தாய் இறந்த பிறகு காதரைன் முழுக்க முழுக்க ஹீத் கிளிப்பின் துணையிலேயே சில வருஷ காலம் வாழ நேர்ந்தது. இதற்கிடையில் எர்ன்ஷாவுக்கும் அவரது மகன் ஹிண்ட்லேக்குமிடையில் எப்போதும் மோதல்களும், அபிப்பிராய வித்தியாசங்களும் ஏற்பட்டு வந்தன. எனவே அவர் அவனே வெளியூரிலுள்ள கல்லூரிக்குப் படிக்க அனுப்பி வைத்து விட்டார். இதன்பின் ஹிண்ட்லே சில வருஷங்களாக வீட்டுக்கே வரவில்லே. இதற்கிடையில் முதியவரான எர்ன்ஷாவும் ஒரு நாள் இறந்து போனுர். அவர் இறந்து போன பின்னர்தான் ஹிண்ட்லே அங்கு அவரது வாரிசுதாரனுகத் திரும்பி வந்தான். வரும்போது அவன் வெளியூரில் மணந்த தனது மனேவியையும் கூட்டி வந்தான்.

வீடு திரும்பி வந்து, எர்ன்ஷாவின் சொத்துக்களுக்கெல்லாம் அதிபதியாகிவிட்ட ஹிண்ட்லே ஹீத்கிளிப்பைப் பழி வாங்கத் தொடங்கினுன். அவன் ஹீத்கிளிப்பை மாளிகையின் வேலேக்காரர்களோடு வாழ வைத்தான்; ஏனேய பண்ணேயாட்களோடு அவனேயும் வேலேகளேச் செய்யுமாறு நிர்ப்பந்தித்தான்; கோயில் குருக்களிடம் அவன் கற்றுவந்த கல்விக்கும் முற்றுப் புள்ளி வைத்தான். தனக்கிழைக்கப்படும் இந்த அவமானத்தையும் கொடுமையையும் ஹீத் கிளிப் ஆரம்பத்தில் எப்படியோ சகித்துக் கொண்டான்; ஏனென்ருல், காதரைன் அவனேடு சேர்ந்து வயல்களில் வேலே பார்த்தாள்; தான் கற்றுக் கொண்ட பாடங்களே அவளே அவனுக்குக் கற்றுக் கொடுத்தாள். இதனுல் ஹீத்கிளிப் சிறிது மனச்சாந்தியுடன் இருந்தான். ஆனுல், ஹிண்ட்லேக்கு இதுவும் பிடிக்கவில்லே; சகிக்கவில்லே. அவன் ஹீத்கிளிப்பை உலகம் தெரியாத அசட்டுப் பிறவியாக உருமாற்றிவிட வேண்டுமென்றும், தனது குடும்பத்துக்கும் அவனுக்கும் ஒட்டுமில்லே, உறவுமில்லே என்ற உணர்வை ஹீத்கிளிப்புக்குக் கற்றுக் கொடுத்து விடவேண்டுமென்றும் விரும்பினுன். இந்த விருப்பத்தை நிறைவேற்றுவதற்குச் சந்தர்ப்பமும் அவனுக்கு உதவி செய்தது; அவன் அதனே உடனே பயன்படுத்திக் கொண்டான்.

பானமும் வழங்கினார்கள்; விளையாட்டுப் பொருள்களையும்கூடக் கொடுத்தார்கள். ஹீத்கிளிப் அங்கிருந்து தன்னந்தனியனாகவே திரும்பிவர நேர்ந்தது. மேலும், அவன் அவ்வாறு திரும்புவதற்கு முன் அவன் கண்ட காட்சி! காதரைன் தன்னோடு வந்த ஹீத்கிளிப்பை முற்றிலும் மறந்தவளாய், அந்த வீட்டிலுள்ளவர்களோடு குஷியாகச் சிரித்துக் கலகலக்கும் காட்சியைத்தான் அவன் கண்டான்

காதரைனின் காயம்பட்ட கால் முற்றிலும் குணமாகும் வரையிலும், லிண்டன் குடும்பத்தார் கிட்டத்தட்ட இரண்டு மாத காலம் காதரைனைத் தமது வீட்டிலேயே வைத்துக் கொண்டார்கள். அந்த வீட்டிலிருந்து உதரிங் ஹைட்ஸ் மாளிகைக்கு அவள் திரும்பி வந்த போதோ, அவள் முற்றிலும் மாறியிருந்தாள். மூர்க்கத்தனமும், குறும்புச் செயலும் மிகுந்த சிறுமியாக இருந்த காதரைன் அற்புதமும் அழகும் நிரம்பிய பட்டுடை தரித்த அழகிய இளம் பெண்ணாகத் திரும்பி வந்தாள். இப்போதோ அவள் நாய்களைத் தன்னருகில் கூட வர விடுவதில்லை; நாய் வந்து விளையாடினால், தனது பட்டுடைகள் பாழாய்ப் போகும் என்று கருதுமளவுக்கு அவள் மாறிப் போயிருந்தாள். என்றாலும், அவள் வழக்கம் போலவே ஹீத்கிளிப்பை நோக்கி ஓடோடியும் வந்தாள்; அவனது கழுத்தைக் கட்டிக்கொண்டு, அவனை பலமுறை முத்தமிட்டாள். ஆனால் மறுகணமே அவள் அவனிடமிருந்து திடீரென்று விலகி நின்று, "நீ ஏன் இப்படி வேடிக்கையான உம்மணா மூஞ்சிப் பிறவி மாதிரி இருக்கிறாய்? அட்டுப் பிடித்தவன் மாதிரி இருக்கிறாய்? நீ மட்டும் உன் முகத்தையும் நன்றாகக் கழுவி, தலையையும்வாரிவிட்டுக் கொண்டால் எல்லாம் சரியாகி விடும். ஆனால் இப்போதோ நீ ஒரே அழுக்கும் அட்டும் படிந்தவனா யிருக்கிறாய்!" என்று கூறினாள், இவ்வாறு கூறி விட்டு, அவள் தான் தொட்டுப் பிடித்துக் கை குலுக்கிய அவனது கறுத்த கைவிரல்களையும், தனது அழகிய உடையையும் அர்த்த புஷ்டியோடு பார்த்துக் கொண்டாள். இதனைக் கண்டதும் ஹீத்கிளிப் தனது கையை வெடுக்கென்று பிடுங்கியவாறு, "நீ ஒன்றும் என்னைத் தொட்டிருக்க வேண்டாம் நான் அட்டுப் பிடித்தவனாகத்தான் இருப்பேன். அது என் இஷ்டம்!" என்று கோபத்தோடு கத்தியவாறு அங்கிருந்து வேகமாக வெளியேறி விட்டான்.

இந்தச் சம்பவத்தால் தனக்கேற்பட்ட அவமானத்தையும் வருத்தத்தையும் ஹீத்கிளிப் எண்ணி மனம் நொந்தான். ஆனால் அவனது மனவேதனை குறைவதற்கு முன்பே, லிண்டன் குடும்பத்தைச் சேர்ந்த பிள்ளைகளான எட்காரும், இஸ

பெல்லாவும் உதரிங்ஹைட்சுக்கு விருந்தாளிகளாக வந்து சேர்ந்தார்கள். விருந்தினருக்கு விருந்து நடத்தி முடியும் வரையிலும், ஹீத்கிளிப் அரங்கு வீட்டுக்குள்ளேயே அடங்கிக்கிடக்க வேண்டும் என்று ஹிண்ட்லே உத்தரவிட்டான். இந்த அவமானத்தால் ஹீத்கிளிப் ஆத்திரமும் ஆவேசமும் அடைந்தான். எனவே எட்கார் அவனைநோக்கி வாய்த் தவறுதலாகத் துடுக்கான வார்த்தையொன்றைச் சொன்னதும், அவனது ஆத்திரம் பொங்கியெழுந்தது. அந்த வேகத்தில் அவன் உடனே தன் கைக்கெட்டிய சூடான குழம்புப் பாத்திரத்தையெடுத்து எட்காரின்மீது விட்டெறிந்தான். இதனைக்கண்டதும் ஹிண்ட்லே அவனை உடனே எட்டிப் பிடித்து, அவனை அரங்கு வீட்டுக்குள் இழுத்துக் கொண்டு போய்த்தள்ளி, மிருகத்தனமாக அடித்தான்.

அன்றிரவில் கீழ்வீட்டிலுள்ள விருந்தினர்களெல்லாம் உண்டு களித்து உல்லாசமாக இருந்த நேரத்தில், காதரைன் மட்டும் மேலேயிருந்த அரங்கு வீட்டை நோக்கி யாருக்கும் தெரியாமல் மாடிப்படியேறிச் சென்றாள். அங்கு அடிபட்டுக் கிடந்த ஹீத்கிளிப்பைப் பலவாறு தேற்றிச் சமாதானப் படுத்தி, அவனைச் சமையற்கட்டுக்குள் அழைத்துச்சென்று, அவனுக்கு விருந்துப் பண்டங்களைப் பரிமாறினாள். ஆனால் அவனோ முழங்கால்களின்மீது கைகளை ஊன்றி, முகத்தைக் கைகளில் தாங்கியவனாய், அடுப்பு நெருப்பையே வெறித்து நோக்கிக் கொண்டிருந்தான். "இந்த ஹிண்ட்லேயைப் பழிக்குப்பழி வாங்கிச் சரியான பாடம் கற்பிக்காமல் நான் விடப்போவதில்லை. எத்தனை வருஷமானாலும் சரிதான். அதற்காகக் காத்திருந்து பழி வாங்கியே தீருவேன். அந்தக் காலம் வருவதற்குள் அவன் சாகாமல் இருக்க வேண்டும்!" என்று தனக்குத் தானே முனகிக் கொண்டிருந்தான்.

சீக்கிரத்திலேயே ஹிண்ட்லேயின் மனைவி ஒரு மகனைப் பெற்றுப் போட்டு விட்டு, பிரசவ காலத்திலேயே மாண்டு போய் விட்டாள். அவளது மரணத்துக்குப் பின்னர் உதரிங்ஹைட்ஸில் நிலைமைகள் வரவர மோசமாகி வந்தன. ஹிண்ட்லே உலகில் வேறு எதையும் நேசிக்காவிட்டாலும், தன் மனைவியை மட்டும் மிகுந்த ஆசையோடும் ஆர்வத்தோடும் நேசித்து வந்தான். எனவே அவன் தன் மனைவியை இழந்ததும். கடவுளையும் சரி, மனிதர்களையும் சரி, வைது நொந்தான்; இதன்பின் அவன் எதிலுமே பிடிப்பற்று வேதனைமிகுந்த விரக்திநிலைக்கு ஆளாகி விட்டான். இதனால் அவன் தனது மகனான ஹேர்டனைக் கூட ஏறிட்டுப் பார்ப்பதில்லை. அவனது மனைவி இறந்து சிலமாதங்கள் கழிவதற்

குள்ளாகவே, அவன் தனது வேதனையையும் விரக்தியையும் மறக்கடிப்பதற்காக, கண் மூக்குத் தெரியாமல் குடித்துவிட்டு மயங்கிக் கிடக்கும் குடிப் பழக்கத்துக்கு ஆளாகி விட்டான். மேலும், இதன்பின் அவன் ஹீத்கிளிப்பையும் நாயினும் கேடு கெட்டவனாக மதித்து அவனைப் பலவாறு கொடுமைப்படுத்தினான்; ஹீத்கிளிப்பின் பொறுமையைச் சோதித்து அவனது ஆத்திரத்தையும் ஆவேசத்தையும் வேண்டுமென்றே கிளப்பிவிட முயலும் வெறிச் செயலைப் போல், அவன் ஹீத்கிளிப்பை மோசமாக நடத்தி வந்தான்.

உதரிங்ஹைட்ஸ் மாளிகையே நரகலோகமாகிவிட்டது. வேலைக்காரர்களெல்லாம் ஒவ்வொருவராய் விலகிச் செல்லத்தொடங்கி விட்டனர். மனச்சாட்சிக்கு மதிப்புக் கொடுக்கும் கிழவனை ஜோசப்பும், ஹிண்ட்லேயையும் காதரைனையும் சிறு வயது முதலே எடுத்து வளர்த்த தாதியும் வீட்டு மேற்பார்வையாளியுமான நெல்லி டீனும் மட்டும் தான் அங்கிருந்து போகவில்லை. இந்தச் சூழ்நிலையில் கண்ணியமான மனிதர்கள் எல்லோரும் அந்த மாளிகைக்கு வராது ஒதுங்கி விட்டார்கள். கோவில் குருக்கள் கூட வருவதை நிறுத்திக் கொண்டு விட்டார். எட்கார் லிண்டன் ஒருவன் மட்டுமே அங்கு வந்து போய்க் கொண்டிருந்தான்; அவனும் காதரைனைச் சந்திப்பதற்காகவே அடிக்கடி வந்தான். காதரைன் இப்போது அந்தக் கிராமப்புறத்துக்கே ராணியாகிவிட்டாள். அழகிலும் அவளுக்கு ஈடு இணை யாரும் இல்லை; அதே போல் அகந்தையிலும், சிடுசிடுப்பிலும் கூட அவளுக்கு வேறு இணை இல்லை. ஹீத் கிளிப்பின் மீது அவள் கொண்டிருந்த விசுவாசமும் பற்றும் அற்றுப் போய் விடவில்லை. இருந்தாலும் லிண்டன் குடும்பத்தாரின் மாளிகைக்கு அவள் செல்லும் சமயங்களில், அங்குள்ளோர் ஹீத்கிளிப்பை முரடனென்றும், முட்டாளென்றும் பழித்துக் கூறுவதை அவள் ஆட்சேபிக்காது கேட்டாள்; அதேபோல் அவளது அறையில் அவளோடு சமமாக இருந்து பழகும் சலுகைக்காக, அவன் மீது அதிகப்படியான வேலைச்சுமையை ஹிண்ட்லே சுமத்திவருவதையும் அவள் தட்டிக் கேட்கவில்லை. ஹீத்கிளிப்போ இப்போது வரவரக் குன்றிக்கூனிய நடையும் மோசமான தோற்றமும் உள்ளவனாக மாறி வந்தான். மேலும் அவனது முகத்தில் வரவரக் கடுப்பும் கசப்பும் அதிகமாகக் குடிகொண்டன; தன்மீது பிறர் வெறுப்புக் கொள்வதை அவன் வரவேற்பதுபோலவும், அதிலே மகிழ்ச்சி கொள்பவன் போலவும் அவன் நடந்து கொண்டான். இந்த நிலையிலும் கூட, காதரைன் அவனைத் தனது தோழனாக்கிக் கொள்ளவே பெரிதும் முயன்றாள். ஆனால் அவள் அவனிடம் ஆசையோடும் பாசத்தோ

டும் அணுகும் போதெல்லாம் அவன் அவற்றை நம்பாத கோபாவேசத்தோடு அவளிட மிருந்து விலகி யொதுங்கி வந்தான். ஒருநாள் அங்கு எட்கார் லிண்டன் வரப்போகும் செய்தியை அவன் எப்படியோ அறிய வந்தான்; அவ்வாறு எட்கார் வந்தால் அவனைச் சந்திக்க மறுத்து, அவனை வெளியே அனுப்பிவிட வேண்டும் என அவளிடம் அவன் கோரினான். அவளோ அவனது கோரிக்கையை மறுத்தாள். இதனால் இருவருக்கும் வாக்குவாதம் முற்றியது. இந்தச் சமயத்தில் எட்காரே அங்கு வந்து விட்டான். உடனே ஹீத் கிளிப் வாய்க்கு வந்தபடி வைதுவிட்டு, அங்கிருந்து அகன்று விட்டான். இதனால் கோபாவேசமுற்ற காதரைன் இன்னதுசெய்வதெனத் தெரியாமல், தனக்கிருந்த ஆத்திரத்தையெல்லாம் ஹிண்ட்லேயின் மகனை ஹேர்டன்னைப் பாடாய்ப் படுத்துவதன் மூலம் தீர்த்துக் கொள்ள முனைந்தாள். அந்தக் குழந்தையை அவள் உலுக்கியெடுப்பதைக் கண்ட எட்கார் அதனைத் தடுத்து நிறுத்தமுயன்றான்; ஆனால் காதரைனோ எட்காரின் கன்னத்தோடு சேர்த்து அவனை அறைந்து விட்டாள். பின்னர் அவள் தரைமீது தொப்பென்று விழுந்து, இதயமே வெடித்துப் போவதுபோல் விம்மி விம்மி அழுதாள், அடிபட்ட எட்கார் கோபத்தால் முகம் சிவந்தான். எனவே அவன் அங்கிருந்து போய்விட நினைத்தான். ஆனால், அவன் வாசலை எட்டுவதற்குள் அங்கு தரையிலே அலங்கோலமாய் விழுந்து கிடந்து பொருமும் காதரைனைக் கண்டதும் அவனது மனம் இளகிவிட்டது. அவன் திரும்பி வந்து அவளருகே குனிந்தான். அவ்வாறு குனிந்த வுடனேயே அவனது வாலிபக் கூச்சமும் அற்றுப் போய்விட்டது. அதன் பின் அவன் காதரைனின் காதலனாகவே அங்கிருந்து எழுந்தான்!

அன்று மாலையில் ஹிண்ட்லே நன்றாகக் குடித்துவிட்டு வீடு திரும்பிவந்து. தன் கண்ணில் பட்டவர்களையெல்லாம் வாய்க்கு வந்தபடி திட்டினான்; தனது மகனை ஹேர்டன்னைக் கொன்று அவனது ஆவிக்கு விடுதலையளிக்கப் போவதாகப் பயமுறுத்தினான். பின்னர் அவன் தனது படுக்கையில் தொப்பென்று விழுந்து கிடந்தான். இதன் பின்னர் காதரைன் சமையற் கட்டிலிருந்த நெல்லியைத் தேடிச் சென்றாள்; அவளைச் சந்தித்து, தான் எட்காரை மணந்து கொள்ளப் போவதாகத் தெரிவித்தாள். "நெல்லி! எட்காரைப் போன்ற மனிதரைநான் கண்டதில்லை. இருந்தாலும் அவரை மணப்பதற்கு எனக்குக் காரணமில்லைதான். அதோ உள்ளே கிடக்கும் கொடுமைக் காரனை ஹிண்ட்லே ஹீத் கிளிப்பை இவ்வளவு மோசமான நிலைமைக்குக் கொண்டு வந்திரா விட்டால் நான் இந்தத் திருமணத்தைப் பற்றி நினைத்தே

இருக்க மாட்டேன். இப்போதோ ஹீத்கிளிப்பை மணப்பது எனக்கே கௌரவக்குறைவாகிவிடும். எனவே நான் அவரை எவ்வளவு தூரம் காதலிக்கிறேன் என்பதை அவன் என்றுமே தெரியாது போகட்டும்! எனினும் நான் எட்காரைத்தான் மணக்கப் போகிறேன்!" என்று கூறினாள்.

அவள் இவ்வாறு பேசிக் கொண்டிருந்த சமயத்தில், ஹீத்கிளிப் அடுப்புக்கு அருகிலுள்ள பெஞ்சின்மீது யார் கண்ணிலும் படாது படுத்துக் கிடந்தான்; காதரைன் பேசிக் கொண்டிருக்கும் போதே அவன் அங்கிருந்து அரவமின்றி எழுந்து வெளியே நழுவியோடினான். அவன் அவ்வாறு ஓடுவதை நெல்லி கண்டு கொண்டாள்: எனவே காதரைன் பேசியதெல்லாம் அவன் கேட்டுக் கொண்டிருந்த விஷயத்தை அவள் காதரைனிடம் தெரிவித்தாள். இதனைத் தெரிய வந்ததும், காதரைன் பதறிப்போய் ஹீத்கிளிப்பைத் தேடி ஓடினாள். ஆனால் அவனைக் காணாது திரும்பிவந்தாள். எனினும் அவளுக்கு இருப்புக்கொள்ளவில்லை. வெளியில் பெருத்த புயல் வீசத் தொடங்கிய நேரத்தில் அவள் மீண்டும் அவனைத் தேடி வெளியே சென்றாள். அவள் அவனைக் காணாது மீண்டும் திரும்பி வந்தபோது நள்ளிரவாகிவிட்டது. வந்தவள் அவன் படுத்திருந்த அதே பெஞ்சின் மீது தொப்பென்று விழுந்தாள்; அவளது உடம்பும் உடையும் மழையால் தெப்பமாக நனைந்திருந்தன; உடம்பெல்லாம் நடுங்கியது. அவளோ அப்படியே கிடந்தவாறு விம்மி விம்மி யழுதாள். பொழுது விடிகிற வரையிலும் அவள் அங்கேயேதான் கிடந்தாள். காலையில் அவளைப் பார்த்தபோதோ, அவள் தன்னிலையிழந்த நிலையில்தான் கிடக்கிறாள் என்பது புலனாயிற்று. அவள் வாய்க்கு வந்தபடி புலம்பினாள். பின்னர் டாக்டர் வந்தார்; அதற்குள் அவளுக்குள் ஜன்னி கண்டுவிட்டது. இந்த ஜன்னியும் ஜுரமும் அவளைப் பல வார காலம் வாட்டியெடுத்துவிட்டது. காதரைன் இவ்வாறு ஜுரத்தில் விழுந்து கிடந்தபோது, எட்காரின் தாய் அங்கு அடிக்கடி வந்து காதரையைக் கவனித்துக்கொண்டாள். காதரைனுக்கு ஜுரம் இறங்கிக் குணமான பின்னர், அவளது உடம்பைத் தேற்றுவதற்காக அந்த அம்மாள் அவளைத் தங்கள் மாளிகைக்கு அழைத்துச் சென்றாள். ஆனால், பாவம்! காதரையைப் பிடித்திருந்த விஷ ஜுரம் அந்த அம்மாளையும் அவளது கணவரையும் பிடித்துக் கொண்டது. அதிலிருந்து அவர்கள் மீளவே இல்லை. தம்பதிகள் இருவரும் ஒருவர் பின் ஒருவராகச் சில நாட்களில் மாண்டுவிட்டனர்.

த்ரஷ்கிராஸ் கிரேஞ்சிலிருந்து உதரிங் ஹைட்சுக்குத் திரும்பிவந்தபோது, காதரைன்

முன்னைக் காட்டிலும் முன்கோ பமும் அகந்தையும் மிக்கவளாக வந்து சேர்ந்தாள். ஹீத்கிளிப் பைப் பற்றித் தகவலே இல்லை. புயலடித்த அன்றிரவில் காணு மற்போனவன் போனவன்தான், மேலும் அவனைப் பற்றி ஏதா வது பேச்செடுத்தால்கூட, காத ரைனுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. அந்தப் பேச் சையே அவள் வெறுத்தாள். அத்துடன் அவள் ஹிண்ட்லே யிடமிருந்தும், அவனது குடிகா ரச் சகாக்களிடமிருந்தும் வில கியே இருந்தாள். அவளை அவள் போக்கிலேயே விட்டுவைக்க வேண்டுமென்றும், அவளோடு எந்தத் தகராறும் செய்து அவளை ஆத்திரமூட்டக்கூடா தென்றும் டாக்டர் எச்சரித் திருந்தார். எனவே அவளது சிடுசிடுப்புக்கும் முன்கோபத்துக் கும் முன்னால் வீட்டிலுள்ளவர் கள் எதிர் வார்த்தை எதுவும் பேசாமல் பணிந்து சென்றார் கள்.

எட்காரோ காதரைனின்மீது உயிரையே வைத்திருந்தான். அவனது பெற்றோர்கள் இறந்து மூன்றாண்டுகள் கழிந்த பின் அவன் அவளை கிம்மர்ட்டன் தேவாலயத்தில் திருமணம் புரிந்து கொண்டான். அப் போது அவன் எல்லையற்ற மகிழ்ச்சியை அடைந்தான். திரு மணத்துக்குப் பின்னர் காத ரைன் புருஷன் வீட்டுக்குச்சென் ருள். மேலும் அவளது சுபாவ மும் எவ்வளவோ மாறிவிட்டது. அவள் தனது கணவனையும், அவனது தங்கை இஸபெல்லா வையும் ஆழ்ந்த அன்புடனும் பாசத்துடனும் நேசித்தாள். அவளுக்கு வந்திருந்த ஜுரம் அவளது நரம்புகளையெல்லாம் மிகவும் பலவீனப்படுத்திவிட்ட தால், அவளைக் கோபத்துக்கோ ஆவேசத்துக்கோ ஆளாக்குவது ஆபத்தாக முடியும் என டாக் டர் எச்சரித்திருந்தார். எனவே எட்காரும் இஸபெல்லாவும் அவளை மிகுந்த கவனத்தோடும் தெளிவு சுழிவோடும் பாதுகாத்து வந்தனர். காதரைனுக்குத் திரு மணமாகி ஆறு மாதங்களாகி விட்டன. இந்த ஆறுமாத கால மும் அவள் ஆனந்தமாகத்தான் வாழ்ந்தாள். பின்னர் ஒருநாள் யாரோ ஒரு மனிதன் அவளைப் பார்க்க வந்திருக்கும் செய்தியை அவள் கேள்விப்பட்டு வெளியே சென்ருள். சீக்கிரமே அவள் திரும்பி வந்தாள். ஆனால் அவள் திக்குமுக்காடித் திகைத் துப் போய் வந்தாள். தன் கண வனை நோக்கி, "எட்கர்! எட்கர்! அவன்-அவன்தான் ஹீத்கிளிப்- வந்திருக்கிறான்!" என்று திண றிப் போய்ச் சொன்னாள். பின் னர் அவள் தனது கணவனின் கழுத்தைக் கட்டிக் கொண் டாள். இதனைக் கேட்டதும் எட்கார் வெறுப்போடு பேசி னான். ஆனால் காதரைனே ஹீத் கிளிப்பை உள்ளே வரவழைப்ப திலேயே ஆர்வம் காட்டினாள். எனவே எட்கார் ஹீத்கிளிப்பை உள்ளே அழைத்து வரச் செய் தான்.

மூன்று வருட காலத்தில் ஹீத் கிளிப்பின் தோற்றம் எவ்வளவோ மாறிப்போய்விட்டது. அவனது குன்றிக்கூனிய நடையும் தோற்றமும் மறைந்து, அவன் நல்ல உயரமும் விரிந்த மார்பும் கொண்ட ஆஜானுபாகுவாகக் காட்சியளித்தான். அவனது முகத்திலுங்கூட பழைய அவமான உணர்ச்சி இல்லை; மாறாக, அதில் ஒரு கம்பீரமும் புத்திக் கூர்மையும் பிரதிபலித்தன. என்றாலும் அவனது நெற்றியில் மட்டும் மூர்க்க சுபாவம் குடிகொண்டிருப்பதாகத் தோன்றியது; கண்களிலோ ஆத்திரமும் ஆவேசமும் நெருப்பாய்க் கனன்றன. எனினும் அவனது சுபாவம் முரட்டுத் தன்மைக்கு மாறான கண்ணியம் மிகுந்ததாகப் புலப்பட்டது.

காதரைனோ அவன் மீண்டும் எங்கே மறைந்துபோய்விடுவானோ என்றஞ்சியவளைப் போல், அவனை வைத்த கண் வாங்காது பார்த்தபடியே இருந்தாள். அவன் அவளை அடிக்கடி பார்க்கவில்லைதான்; என்றாலும் எப்போதாவது அவன் அவளைச் சட்டென்று நோக்கினான். அவ்வாறு நோக்கும்போது அவளது பார்வையை அப்படியே அள்ளிப் பருகும் ஓர் ஆனந்த பரவசம் அவனது கண்களில் பளிச்சிட்டது. அவர்கள் இருவரும் மீண்டும் சந்தித்ததில் பேரானந்தம் கொண்டார்கள்; எனவே அவர்கள் தம்மை மறந்து சகஜமாகப் பழகினார்கள். இதனைக் கண்டு எட்காரின் முகம் வெளுத்தது. அதிலும் காதரைன் தன்னை மறந்தவளாய் வாய்விட்டுச் சிரித்த வண்ணம் தனது இடத்தை விட்டு எழுந்துசென்று ஹீத் கிளிப்பின் கையைப் பற்றிப் பிடித்தபோது, எட்காரின் உள்ளக் கலவரம் உச்ச நிலையை அடைந்தது. எனினும் ஹீத் கிளிப் அங்கிருந்து சென்ற பின்னர், காதரைன் எட்காரிடம் அன்பாகப் பேசி அவனது கலவரத்தைப் போக்கினாள். அது மட்டுமல்ல. மறுநாள் இஸபெல்லாவையும் அழைத்துக் கொண்டு, உதரிங் ஹைட்ஸ் மாளிகைக்குச் சென்றுவர அவள் தன் கணவனிடம் அனுமதியும் வாங்கிவிட்டாள். ஆம். ஹீத்கிளிப் இப்போது உதரிங் ஹைட்ஸ் மாளிகையில் தான் தங்கியிருந்தான்; அது மட்டுமல்ல. அவன் இப்போது ஹிண்ட்லேயின் விருந்தாளியாகத் தங்கி இருந்தான். இந்த நிகழ்ச்சி அந்தக் கிராமப்புறத்திலேயே பேரதிசயமாகத் தென்பட்டது.

ஆனால் இந்த அதிசயத்துக்கான விடை சீக்கிரமே புலப்பட்டுவிட்டது. ஹீத் கிளிப்பிடம் இப்போது ஏராளமான பணம் இருந்தது. அந்தப் பணத்தை அவன் எங்கிருந்து எப்படிச் சம்பாதித்தான், என்ற ரகசியம் மட்டும் எவருக்கும் தெரியவில்லை. எனினும் அவனிடம் பணம் இருந்தது. மேலும் குடி

யிலும் சூதாட்டத்திலும் மூழ்கி மூழ்கிவிட்ட ஹிண்ட்லேக்கு இப்போது எதுவுமே மிச்சமில்லை; எனவே இந்தச் சூழ்நிலையில் அவன் ஹீத்கிளிப்பைத் தனது விருந்தாளியாக ஏற்றுக் கொண்டதில் வியப்பில்லை. என்றாலும் ஹீத்கிளிப்பும் ஹிண்ட்லேயும் இன்னும் ஒருவரையொருவர் பகைத்து வெறுக்கத் தான் செய்கிறார்கள் என்பது மட்டும் தெளிவாகத் தெரிந்தது. எனினும்கூட, விடிந்தது முதல் அவர்கள் இருவரும் ஒன்றாகச் சேர்ந்து குடித்துவிட்டுச் சூதாடுவதற்கு, இந்தப் பகைமையும் வெறுப்பும் குறுக்கே நிற்கவில்லை.

என்றாலும் த்ரஷ்கிராஸ் மாளிகைக்கு வருஞ் சமயங்களில், ஹீத்கிளிப் தான் ஹிண்ட்லேயுடன் சேர்ந்து நடத்தும் இத்தகைய மோசமான வாழ்க்கையை வெளிக்காட்டிக் கொள்ளவில்லை; அதனை அங்குள்ளவர்கள் அறியாத வண்ணம் அவன் மிகுந்த கவனத்துடன் நடந்துகொண்டான். ஆரம்பத்தில் அவன் அங்கு ஏகதேசமாகத்தான் வந்தான்; ஆனால் காலக்கிரமத்தில் தன்னை அங்குள்ளோர் எதிர்பார்க்கும் சூழ்நிலையை உருவாக்கி அடிக்கடி போய்வரத் தொடங்கினான். மேலும் எட்காருக்கும் அவனது வருகையைக் கண்டு முதலில் ஏற்பட்ட மனப்புழுக்கமும், கலவரமும் மங்கி மறைந்துவிட்டன. அங்குள்ளவர்கள் பொதுவாக அவனது வருகையை விரும்பினார்கள். அதிலும் எட்காரின் தங்கையான இஸபெல்லா ஹீத்கிளிப்பின் வருகையை ஆவலோடு எதிர்நோக்கத் தொடங்கினாள். ஹீத்கிளிப்பின் மீது அவளுக்கு ஓர் இனந்தெரியாத பற்றும் பாசமும் அதிகரித்து வந்தன. ஹீத்கிளிப்பின் மீது இவ்வாறு தணியாத வேட்கை கொண்ட இஸபெல்லாவின் ரகசியம் ஒருநாள் அம்பலமாகிவிட்டது. காதரைன் எப்போதும் ஹீத்கிளிப்போடு பேசிக்கொண்டிருப்பதாக, அவள் தனது பொறாமையுணர்ச்சியால் ஒருநாள் வாய்விட்டுக் கூறிவிட்டாள். இதனால் காதரைன் இஸபெல்லாவின் அந்தரங்கத்தைப் புரிந்து கொண்டுவிட்டாள். இதனை அறிந்ததும் காதரைனுக்கு அதிர்ச்சியும் ஆத்திரமும் ஏற்பட்டன. "ஹீத்கிளிப் மிகவும் மூர்க்கமானவன், மோசமானவன், ஈவிரக்கமற்றவன்!" என்று காதரைன் அவளை எச்சரித்தாள். மேலும், அவன் லிண்டன் குடும்பத்தாரை அடியோடு வெறுப்பதாகவும், எனவே அவனது கையில் இஸபெல்லா சிக்கினால் குருவிக் குஞ்சைக் கொல்வதுபோல் அவளை அவன் நசுக்கி விடுவானென்றும், அவனது உள்ளத்தில் குரோதமும் விரோதமும் படுமோசமாகக் குடிகொண்டிருக்கிறது என்றும், இத்தனைக்கும் மேலாக எட்காருக்கு ஆண் வாரிசு இல்லாது போனால், அவனது தந்தையின்

சொத்து முழுவதும் இஸபெல்லாவைத்தான் சேரவேண்டும் என்று அவளது தந்தை உயில் எழுதிவைத்துப் போயிருக்கும் செய்தி ஹீத்கிளிப்புக்கும் தெரியுமென்றும், எனவே ஹீத்கிளிப்பை அவள் விரும்புவது ஆபத்தென்றும் பலபட எடுத்துக்கூறி இஸபெல்லாவைக் காதரைன் கண்டித்தாள். ஆனால் இதைக் கேட்டு இஸபெல்லா ஆத்திரமும் கோபமும்தான் அடைந்தாள்; ஹீத்கிளிப்பைப் பற்றி அவதூறு சொல்வதாக அவள் காதரைனைக் குற்றம் சாட்டினாள். எனினும் இதன் பின்னர் காதரைன் சும்மா இருந்திருந்தால், ஒருவேளை அவளது எச்சரிக்கை பலனளித்திருக்கக் கூடும். ஆனால் அவள் தன்னை யறியாமலே ஒரு முட்டாள்தனமான காரியத்தைச் செய்தாள். ஒருநாள் ஏதோ ஒரு வெறியில் அவள் இஸபெல்லாவையும் முன்னால் வைத்துக்கொண்டே, ஹீத்கிளிப்பிடம் இஸபெல்லா அவன்மீது காதல் கொண்டுள்ள விஷயத்தை வாய் விட்டுச் சொல்லிவிட்டாள். இதனால் எதிர்பாராத பலன் தான் விளைந்தது. இஸபெல்லா இதனைக் கேட்டதும் வெட்கத்தால் உள்ளே ஓடிவிட்டாள். ஹீத்கிளிப் அவ்வாறு ஓடிச் சென்ற இஸபெல்லாவை விசித்திரமான புன்னகையோடு பார்த்தான். இதன்பின் சில நாட்கள் கழித்து, ஹீத்கிளிப் இஸபெல்லாவைத் தழுவி முத்தமிடும் காட்சியையே காதரைன் கண்ணால் கண்டாள். பின்னர் அவள் ஹீத்கிளிப்பைச் சந்தித்து, அந்தப் பெண்ணின் வாழ்க்கையோடு அவனை விளையாட வேண்டாமென்றும், அவளை மணந்து கொள்ளும் எண்ணத்தை மறந்து விடும்படியும் கேட்டுக்கொண்டாள்.

ஆனால் ஹீத்கிளிப்போ இதனைக் கேட்டதும் ஆவேசமும் ஆத்திரமும் கொண்டான். "நான் அவளை மணந்தால் உனக்கென்னவாம்? நான் உன்னிடம் சில உண்மைகளைக் கூறிவிட விரும்புகிறேன். நீ என்னை நரக வேதனைக்கு ஆளாக்கினாய்; என்னைப் படுமோசமாக நடத்தினாய். அவ்வாறு நீ நடத்தியதை நான் இன்னும் மறக்கவில்லை என்பதை மட்டும் நினைவில் வைத்துக்கொள். தெரிந்ததா? இனிய வார்த்தைகளைப் பேசி நீ என்னைச் சமாதானப்படுத்தி விடலாம் என்று நீ நினைத்தால் அது முட்டாள்தனம். ஆம். பழிக்குப்பழி வாங்காமல் நான் மனச்சாந்தி பெற்றுவிடுவேன் என்று நீ நினைத்தால் அது தவறு. ஆம், அவ்வாறு நினைப்பது எவ்வளவு தவறு என்பதை நான் உனக்கு நிரூபித்துக் காட்டுகிறேன், பார்!" என்று ஆக்ரோஷமாக உறுமினான்.

ஹீத்கிளிப் இவ்வாறு பேசி முடிக்கும் தருணத்தில் எட்கார் அங்கு வந்து சேர்ந்தான். ஹீத்கிளிப் கூறிய கடைசி வார்த்தைகள் மட்டும் அவன் காதில்

விழுந்தன. எனவே அவன் ஹீத்கிளிப்பினருகே அமைதியாக வந்து, அவனை வீட்டைவிட்டு வெளியேறுமாறு ஆணையிட்டான். ஆனால் ஹீத்கிளிப்போ எட்காரை ஏளனத்தோடு மேலும் கீழும் பார்த்தான். "காதரைன்! உன் புருஷன் என்னை மிரட்டிப் பார்க்கிறானே. என்னோடு மோதினால் அவனது மண்டைதான் சிதறும். ஆம், இதனை உன் புருஷனிடம் சொல்லிவிடு!" என்று அலட்சியமாகப் பதிலளித்தான். இதனைக் கேட்டு ஆத்திரம் கொண்ட எட்கார் தனது வேலைக்காரர்களை உதவிக்குக் கூப்பிட்டான். காதரைனோ "அப்படியெல்லாம் செய்யக்கூடாது!" என்று கத்தியவளாய், அறைக் கதவைச் சாத்தித் தாளிட்டாள். மேலும், அவள் தன் கணவனை நோக்கி, "உங்களுக்கு இவனைத் தாக்க முடியாதென்றால் பேசாமல் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுங்கள்; அல்லது இவன் கொடுக்கும் அடியை வாங்கிக்கொள்ளுங்கள்!" என்றாள். இதனைக் கேட்டதும், எட்கார் அப்படியே நாற்காலியில் சாய்ந்துவிட்டான்; அவனது முகமெல்லாம் வெளிறிப் போய்விட்டது. இதன் பின்னர் ஹீத்கிளிப் எட்காரைக் கோழையெனக் குற்றம் சாட்டிக் காதரைனிடம் கிண்டலாகப் பேசினான். இதனைக் கேட்டதும் எட்கார் தனது இடத்திலிருந்து துள்ளியெழுந்து, ஹீத்கிளிப்பின் கழுத்தில் ஓங்கி ஓர் அறை அறைந்தான். பின்னர் அவன் பக்கத்திலிருந்த வேறொரு வாசலின் மூலமாக வெளியே சென்று, தனது வேலைக்காரர்களை உதவிக்கு அழைக்கலானான்.

"போய்விடு, ஹீத்கிளிப்! போய்விடு!" என்று கத்தினாள் காதரைன்.

"போவதா? உன் புருஷன் அடித்த அடி இன்னும் என் கழுத்தில் வேதனை செய்யும் போது, நான் இங்கிருந்து போவேனென்றா நினைக்கிறாய்? அவனை நான் சடசடவென்று நொறுக்கித் தள்ளிவிடுவேன். இன்று நான் அவனைத் தரையோடு தரையாய்ப் போட்டு மிதிக்காவிட்டால், என்றாவது ஒருநாள் அவனைக் கொலையே செய்வேன்; அவனை மேலுலகத்துக்கு அனுப்பிவைக்கும் வெறி என்னுள் நாளுக்குநாள் வளர்ந்தே வருகிறது" என்று கர்ஜித்தான் ஹீத்கிளிப். ஆனால் எட்கார் முரட்டுப் பிறவிகளோடு வெறும் வாய்ச்சண்டை போடுவதை விரும்பவில்லை. எனவே அவன் தனது ஆட்களை ஹீத்கிளிப்பைத் தாக்குமாறு ஏவிவிட்டான். ஆனால் ஹீத்கிளிப்போ அடைத்திருந்த கதவின் தாழ்ப்பாளையே உடைத்துக்கொண்டு வெளியே ஓடி மறைந்துவிட்டான். எட்காரின் ஆட்கள் பக்கத்து வாசலின் வழியே உள்ளே நுழைந்த போது, அவர்கள் ஹீத்கிளிப் வெளியே ஓடிவிட்டதைத்தான் கண்டார்கள்.

ஹீத்கிளிப் ஓடிப்போன பின்னர், எட்கார் தன் மனைவியிடம் மிகுந்த கண்டிப்புடனும் கோபத்துடனும் பேசினான். ஆனால் அவளோ படுக்கையில் விழுந்துகிடந்து, தனது பற்களை நறநறவென்று பயங்கரமான விதத்தில் கடித்தாள். அதன்பின் அவளது உடம்பு திடீரென்று விரைத்து நீண்டது; கண்கள் ஏறச்சொருகின; முகமெல்லாம் நீலம் மாரித்துக் கறுத்தது. இந்த வலிப்பிலிருந்து மீண்டு அவள் தன்னுணர்வு பெற்றதும், அவள் தனது அறைக்குள் ஓடிச் சென்று கதவையும் தாளிட்டுக் கொண்டாள். பின்னர் அந்த அறைக் கதவைத் திறக்காமல், அங்கேயே மூன்று நாட்கள் அன்ன ஆகாரமின்றி அடைத்துக் கிடந்தாள். இதன் பின்னர் அவள் வெளியே வந்தாள்; ஆனால் அவளது புத்தியோ நிதானமிழந்துவிட்டது. அவளது முகத்தில் ஏதோ நெடுங்காலமாக நோயுற்றுக் கிடந்ததைப் போன்ற ஒரு பசலையும், கலையிழந்த தன்மையும் தென்பட்டன. இதனைக் கண்டதும் எட்கார் திடுக்கிட்டுப் பயந்து போனான்; இதனால் அவன் அவள்மீது கொண்ட காதலைக் தவிர, மற்றவற்றையெல்லாம் மறந்தான். அவன் அவளைப் பற்றிப் பிடித்தபோதோ, அவள் வெறி பிடித்தவளைப்போல் அவனது பிடியிலிருந்து மூர்க்கமாகத் திமிறினாள். பின்னர் அவளை அவர்கள் படுக்கையில் கொண்டு போய்க் கிடத்தினார்கள்; டாக்டர் எச்சரித்திருந்த மூளைக் காய்ச்சல் அவளுக்கு ஏற்பட்டு விட்டது. அது அவளது உயிரை நல்ல வேளையாகக் குடித்து முடித்துவிடவில்லை; எனினும், அந்த நோயிலிருந்து அவள் குணம் பெற்றபோதோ, அவளது மூளையே குழம்பிப் போய்விட்டது. அவளது குழம்பிய புத்தி தெளிவடைந்துவிடும் என்ற நம்பிக்கையில் எட்கார் அவளது படுக்கையருகிலேயே பல நாட்கள் மணிக்கணக்கில் காத்திருந்து கவனித்தான். ஆனால் அவனது நம்பிக்கை வீணாயிற்று. அவளது கர்வம் மிகுந்த கண்களின் பழைய ஒளி குடியோடிப் போய்விட்டது; மாறாக, அவற்றில் சோகத் தன்மையும் சொப்பன மயக்கமும் குடிகொண்ட பார்வைதான் தென்பட்டது. அந்தக் கண்கள் கண்ணெதிரிலுள்ள பொருள்களைக் காணாமல், அவற்றுக்கும் அப்பாலுள்ள எதையோ வெறித்து நோக்குவதைப் போன்ற வெறியைத்தான் புலப்படுத்தின. அவளது முகத்தில் சாவுக்களை தட்டிவிட்டாலும், அந்த முகமாறுதலில் ஏதோ ஓர் அபூதமான அழகுக் கவர்ச்சியும் குடிகொண்டிருப்பது போலத் தோன்றியது.

•

த்ரஷ்கிராஸ் கிரேஞ்சில் காதரைனுக்கு நேர்ந்த துன்பத்தோடு துயரங்கள் முடிந்துபோகவில்லை. அன்றிரவு நடந்த அந்த அடிதடிக்குப் பின்னர், அதே

இரவில் இஸபெல்லா ஹீத்கிளிப்புடன் ஓடிப்போய் விட்டாள். ஹீத்கிளிப் அவளை மணந்து கொண்ட பின்னர், அவளை உதரிங் ஹைட்ஸ் மாளிகைக்கு அழைத்துச் சென்ருன். இதன் பின்னர் அங்கிருந்து த்ரஷ்கிராஸ் கிரேஞ்சுக்கு ஒருகடிதம் வந்தது. அதன்மூலம் அங்கு இஸபெல்லா மிகுந்த கொடுமைக்கு ஆளாகி யிருக்கிருள் என்பதை அவர்கள் அறிய வந்தார்கள்.

மேலும், காதரைன் நோய்ப் படுக்கையில் கிடந்த காலத்தில், ஹீத்கிளிப் த்ரஷ்கிராஸ்கிரேஞ்ச் மாளிகைத் தோட்டத்திலே வந்து மரங்களுக்கிடையில் மறைந்திருந்தான்; நெல்லி அந்தத் தோட்டத்துக்குள் வரும் போதெல்லாம் அவள் மூலம் காதரைனின் உடல்நிலையைப் பற்றிய செய்திகளைக் கேட்டறிந்தான். காதரைனுக்கு உடம்பு ஓரளவுக்குக் குணமாகி அவளை மற்றவர்கள் தனியே சிறிது நேரம் விட்டுச் சென்ற காலத்தில், எட்கார் வீட்டிலில்லாத நேரம் பார்த்து, ஹீத்கிளிப் அந்த வீட்டினுள் நுழைந்து காதரைனின் படுக்கையறைக்கும் சென்று விட்டான். அவன் ஓடோடியும் சென்று, அவளைத் தனது கரங்களால் பற்றிப் பிடித்தான். அவ்ன் சில நிமிஷ நேரம் எதுவுமே பேசவில்லை; தனது பிடியையும் தளரவிடவில்லை. அதே நேரத்தில் அவன் அவளது முகத்தில் முத்தங்களை வாரிச் சொரிந்தான். காதரைனும் அதனைத் தடுக்கவில்லை; அவளும் அதற்கு இடம்கொடுத்தாள். பின்னரே அவளது மனம் அலைபாய்ந்தது. அவள் பின்னுல் சாய்ந்தவாறே அவனை நோக்கிப் பின்வருமாறு பேசினுள் : "நீங்கள்—நீயும் எட்காரும் சேர்ந்து என் இதயத்தையே நாசமாக்கி விட்டீர்கள். நீ எவ்வளவு பலம் வாய்ந்தவனுயிருக்கிருய்! நான் இறந்து போன பிறகும், நீ எத்தனை ஆண்டுக் காலம் நீ உயிர் வாழ நினைக்கிருய்? நீ ஏன் வேதனைப்படக் கூடாது. நான் வேதனைப்படுகிறேனே. நீ என்னை மறந்து விடுவாயா? நான் மண்ணோடு மண்ணுய்ப் போன பின்னரேனும் நீ மகிழ்ச்சி கொள்வாயா?"

ஹீத்கிளிப்போ அவளது பேச்சைக்கேட்டுப் பின்வருமாறு கத்தினுன் : "உன்னைப்போல் எனக்கும் பைத்தியம் பிடிக்கிற அளவுக்கு நீ என்னைச் சித்திரவதை செய்யாதே. நான் உன்னைக்கொன்று விட்டேன் என்று நீ சொல்வது பொய் என்பது உனக்கே தெரியும். காதரைன்! நான் என்னை மறந்தாலன்றி உன்னை மறக்க முடியாது என்பதும் உனக்குத் தெரியும். நீ அமைதியாக இருக்கும் வேளையில் நான் சித்திரவதைப்படுவது உனது படுமோசமான நீசத்தனமான சுயநலத்திஞல் விளைந்தது தானே. அது போதாதா உனக்கு?"

ஆனல் காதரைனே பின்வருமாறு முனகினள்: "எனக்கு ஒன்றும் அமைதி கிட்டப் போவதில்லை. ஹீத்கிளிப்! நான் படும் சித்திரவதையைக் காட்டிலும் பெரிய சித்திரவதை உனக்கு நேர வேண்டும் என்று நான் விரும்பவில்லை. இனியும் எனது வார்த்தை எதுவும் உனக்கு வேதனையளிக்குமென்றால், மண்ணுக்குள் மறையும் நானும் அதே வேதனையை உணர்வேன். எனவே எனக்காக நீ என்னை மன்னித்து விடு!"

இதனைக் கேட்டதும் அவன் அவளைத் தன்னோடு ஆரத் தழுவி அணைத்தவனாய், பின்வருமாறு பேசினன்: "காதரைன்! ஆறுதலான ஒரு வார்த்தையைக் கூட நான் பெறவில்லை. நீ ஏன் என்னை வெறுத்தாய்? உனது இதயத்துக்கே நீ ஏன் துரோகம் செய்தாய்? உனக்கு இது வேண்டும். நீயேதான் உன்னைக் கொன்று கொண்டாய். ஆம். நீ என்னை முத்தமிடலாம்; அழலாம். என்னிடமிருந்து முத்தத்தையும் கண்ணீரையும் பெறலாம். ஆனல் அவையே உன்னை வதை செய்யும்; உன்னை அழிக்கும்!"

மறுநாள் காதரைன் மாண்டு போனள். அப்போது அவளது நெற்றி மிருதுவாக இருந்தது; கண்ணிமைகள் நன்ருக மூடியிருந்தன; இதழ்களில் ஒரு புன்னகை குடி கொண்டிருந்தது. அமைதி தவழத் தூங்கும் அதி தேவதையைப்போல் அவள் அப்போது காட்சியளித்தாள்.

**ம**ாடியில் பிறந்த குழந்தையொன்றின் மெல்லிய அழுகைக் குரல் கேட்டது. ஆம். அது காதரைனின் மகளின் குரல் தான்; மரணப் பிடியில் சிக்கிய தாயின் வயிற்றிலிருந்து பிறந்து வந்த குழந்தை அது. ஆயுட் காலம் முழுதும் அமைதியற்றிருந்த அந்தத் தாயின் இதயம் இறுதியாக மண்ணுக்கடியில் அமைதி காண முனைந்த வேளையில், மண்ணுலகைக் காண வந்த மதலைக் குழந்தை அது. காதரைன் மாண்ட சமயத்தில்; ஹீத்கிளிப் தோட்டத்திலுள்ள மரங்களுக்குப் பின்னல் தான் ஒளிந்து கொண்டிருந்தான். காதரைன் அமைதியாக, வேதனையற்றுக் கண்ணை மூடிக் காற்ருேடு கலந்த செய்தியை நெல்லி அவனிடம் வந்து கூறினள். அதனைக் கேட்டதும் ஹீத்கிளிப் காலைத் தரையில் உதைத்தவனாய்ப் பின்வருமாறு கத்தினன்: "காதரைன்! நான் உன்னைக் கொன்று விட்டதாக நீ சொன்னய். அது உண்மையானல், நீ எந்த வடிவத்திலேனும் வந்து என்னைப்பற்றிக் கொள்! என்னை எப்போதும் அலைக்கழித்து, எனக்குப் பைத்தியம் பிடிக்குமாறு செய்துவிடு! ஆனல் உன்னை எங்குமே காண முடியாத இந்த அதளபாதாள நரகத்தில் மட்டும் என்னைத் தனியாக விட்டு விட்டுச் செல்லாதே, கடவுளே! என்னல்

இதைத் தாங்கமுடியாது! எனது ஆத்மாவை இழந்து என்னுல் வாழ முடியாது!"

இதனைக் கேட்டதும், பைத்தியக்கார மனிதனிடமிருந்து விலகியோடுவதைப் போல், நெல்லி பயபீதியோடு ஓடி விட்டாள். உண்மையில் அவனும் பைத்தியம் பிடித்த வெறி நிலையில்தான் இருந்தான். அவன் தனது வாழ்வே இருண்டு நிராதரவான நிலைக்கு ஆளாகி விட்டதைப்போல உணர்ந்து, வெறி கொண்ட நிலையில் தன் தலையை மரத்தோடு முட்டி மோதிக் கொண்டான். அதனுல் அவனது தலையில் காயம்ஏற்பட்டு ரத்தம் கசிந்தது. பின்னர் அவன் நிதானத்தையே இழந்தவனுய், வெறி கொண்ட ஆவேசத்தோடு உதரிங் ஹைட்சுக்குத் திரும்பி வந்தான்; அப்போது ஹிண்ட்லே அவனை ஒரு கத்தியால் தாக்க வந்தான். உடனே ஹீத்கிளிப் அவன்மீது பாய்ந்து விழுந்தான். ஹீத்கிளிப் ஏற்கெனவே நல்ல பலசாலி. அதிலும் அவனுக்கேற்பட்டிருந்த வெறியில் அவனது பலம் மேலும் அதிகரித்திருந்தது. எனவே அவன் ஹிண்ட்லேயின் கையிலிருந்த கத்தியைப் பிடுங்கி, அவனையே காயப்படுத்தி, உணர்ச்சியற்ற நிலையில் அவனைத் தரையில் உருட்டித் தள்ளி விட்டான். இஸபெல்லா அங்கிருந்து தப்பியோடி விட்டாள். அவள் தனது பழைய வீட்டுக்குச் சென்ருள்; பின்னர் அங்கிருந்து லண்டனுக் கருகிலுள்ள அமைதியான இடமொன்றுக்குக் குடி போனுள். அங்கு அவளுக்கு ஒரு மகன் பிறந்தான், அவனுக்கு அவள் லிண்டன் எனப் பெயர் வைத்தாள்.

சிறிது காலம் வரையிலும், த்ரஷ்கிராஸ் கிரேஞ்ச் மாளிகையில் ஏதோ ஒரு விதத்தில் அமைதி மீண்டும் குடிகொண்டு வருவதாகத் தோன்றியது. மனைவியை இழந்துவிட்ட எட்கார் தனது தோட்டத்துக்குள்ளேயே தனிமையான வாழ்க்கையை நடத்தினுன்; எப்போதாவது மட்டும் அவன் வெளியே கிளம்பி, கிராமப்புறத்தில் சுற்றித் திரிவான்; அல்லது தனது மனைவியின் சமாதிக்குச் சென்று வருவான். அவனது மனத்தில் காதரைன் மீது அவன் கொண்ட பெருங் காதல் உணர்வு மட்டுமே மிஞ்சியிருந்தது; ஏனைய நினைவுகளெல்லாம் அவனுக்குப் பொருளற்றுப் போய் விட்டன. எனவே அந்தக் காதலை மட்டும் அவன் பலமுறை நினைவு கூர்வான். இப்போதோ அவனுக்கு அவனது சின்ன மகளே உலகில் சர்வமும் ஆகி விட்டாள். அவன் ஹீத்கிளிப்பைப்பற்றிப் பேசுவதே இல்லை; அவனைப் பற்றிய எண்ணம் வந்தாலே அவன் குன்றிக் குறுகினுன். ஆனுலும், உதரிங் ஹைட்ஸ் மாளிகையில் நடைபெற்று வரும் சம்பவங்களைப் பற்றி ஊர் பூராவும் தெரிந்திருந்தது; அந்தச் செய்திகள்

த்ரஷ்கிராஷ் கிரேஞ்ச் மாளிகைக்கும் எட்டத்தான் செய்தன. ஹீத்கிளிப்பின் தூண்டுதலால் ஹிண்ட்லே மேலும் மேலும் தலை கால் தெரியாமல் குடித்து மயங்குவதோடு மட்டுமல்லாமல், குடிவெறியோடு ஹீத்கிளிப்புடன் சூதாட்டமும் ஆடி தனது சொத்துக்களையெல்லாம் ஹீத்கிளிப்பிடம் அடமானம் வைக்குமளவுக்கு எல்லாவற்றையும் தோற்று விட்டான் என்ற செய்தி ஊர் முழுவதும் தெரிந்திருந்தது,

ஹிண்ட்லேயின் மகனான ஹேர்டன் என்ற சிறுவன் ஹீத்கிளிப்பிடம் ஒரு விசித்திரமான, நாயின் விசுவாசம் போன்ற பாசத்தோடு ஒட்டிக்கொண்டிருந்தான். சொல்லப் போனால், தந்தைக்கும் மகனுக்கும் குறுக்கே நின்று, ஹீத்கிளிப்பே அந்தச் சிறுவனின் மனத்தில் அத்தகைய விசுவாசத்தை வளர்த்திருந்தான். ஹீத்கிளிப் அளித்து வந்த ஊக்கத்தினாலும் சலுகையினாலும் அந்தப்பையன் ஒன்றுக்கும் உதவாத சோம்பேறியாக, ஒன்றுமே அறியாத அறிவிலியாக வளர்ந்து வந்தான். அது மட்டுமல்ல. ஹீத்கிளிப்பின் போதனையினால், அந்தப் பையன் தனது தந்தையையே வாய்க்குவந்தபடி வசைமாரி பொழிந்து பேசுவதிலும் தேர்ந்திருந்தான். அவன் இவ்வாறு பேசுவதை, ஹீத்கிளிப் ஆர்வத்தோடும், குரோத உணர்ச்சி மிகுந்த குதூகலத்தோடும் பார்த்துக் கொண்டிருந்தான். ஹிண்ட்லே தன்னை எத்தகைய கொடுமைக்கும் அவமானத்துக்கும் அறிவின்மைக்கும் ஆளாக்கி, அதிலேயே தன்னை ஆழ்த்தி வதைத்தானோ, அதே வாதனைக்கும் வேதனைக்கும் ஹிண்ட்லேயின் மகனை ஆளாக்குவதில் ஹீத்கிளிப்புக்கு ஒரே ஆனந்தம். தான் எத்தகைய படுமோசமான நிலைமைக்கு ஆளாகிவிட்டோம் என்பதை ஹிண்ட்லே உணரத்தான் செய்தான்; என்றாலும் அந்த உணர்ச்சி அவனுக்குக் காலம் கடந்த காலத்தில்தான் ஏற்பட்டது. காதரைன் மறைந்து ஆறுமாத காலத்துக்குள் ஹிண்ட்லேயும் ஒருநாள் நல்ல குடிவெறியில் திடீரென்று இறந்து போய் விட்டான். அவன் இறந்தபின்னர், அவனது நிலபுலங்கள் அத்தனையும் தனக்கே அடமானமாக இருப்பதை நிரூபிக்கும் பத்திரங்களை ஹீத்கிளிப் அம்பலப்படுத்தினான். இதனால் ஹிண்ட்லேயின் மகன் சொத்துபத்தில்லாத அனாதையானான். அந்த வட்டாரத்திலேயே தலைசிறந்த பிரமுகராக விளங்கிய குடும்பத்தின் வாரிசாகப் பிறந்த ஹேர்டன் தனது தந்தையின் எதிரியின் தயவிலேயே முற்றிலும் வாழ நேர்ந்தது; அது மட்டுமல்ல. அவன் ஒரு பண்ணைக் கூலியாள் போலவேவாழ்க்கைநடத்தினான்; அவனுக்கு எழுதப் படிக்கவும் தெரியாது போய்விட்டது; நண்பர்களும் இல்லாது போய் விட்

டனர். இவ்வாறு ஹீத்கிளிப் ஹிண்ட்லேயின்மீது பழிதீர்த்துக்கொண்டான்.

பன்னிரண்டு ஆண்டுகள் கழிந்தன. காதரைனின் மகளான குட்டிக் காதரைன் தனது தாயைப் போலவே சிறந்த அழகியாக வளர்ந்தாள்; அதே சமயம் அவள் தன் தந்தையின் ஆழ்ந்த, இளகிய இதய உணர்ச்சியையும் கொண்டிருந்தாள். அவள் பெரும்பாலும் தனது மாளிகையிலும், அதன் தோட்டங்களிலும் தான் வளர்ந்து வந்தாள்; எனவே வெளியுலகத்தைப் பற்றி அவள் எதுவும் தெரிந்து கொள்ளவில்லை. ஒருநாள் இஸபெல்லாவும் இறந்து விட்டதாகத் தகவல் வந்தது. அதனால் அவளது மகனை லிண்டனை அழைத்து வந்து, தனது பராமரிப்பில் வைத்துக் கொள்வதற்காக, எட்கார் புறப்பட்டுச் சென்றான். அங்கு சென்று அவன் ஒரு நோஞ்சானும், கோழையுமான பையனை — இஸபெல்லாவின் மகனை அழைத்து வந்தான்; அந்தப் பையன் காதரைன் காட்டிய அன்பினால் அவளோடு ஒட்டிக்கொண்டான். ஆனால் அந்தப் பையன் த்ரஷ்கிராஸ் கிரேஞ்சுக்கு வந்து சேர்ந்த சிறிது காலத்திலேயே, அங்கு குடி கொண்டிருந்த அமைதி குடியோடிப் போய் விட்டது.

மூர்க்க வெறியும் வஞ்சம் தீர்க்கும் மனப்பான்மையும் கொண்ட ஹீத்கிளிப்பின் ஆவேசமும் ஆத்திரமும் இத்தனை வருஷமாகியும் சிறிதும் அடங்கவில்லை; மாறாக, அவனது இதயம் தான்பட்ட வேதனையால் மேன்மேலும் கறுத்துப் புழுங்கி கசப்பும் கைப்பும் நிறைந்ததாகத் தான் விளங்கியது. அவன்சாபத்துக்காளான ஆவியைப் போல், இரவு நேரங்களில் காதரைனின் சமாதியை நாடிச் சென்றான். இஸபெல்லாவுக்கும் தனக்கும் பிறந்த மகனை லிண்டன் த்ரஷ்கிராஸ் கிரேஞ்சுக்கு வந்து சேர்ந்ததைக் கேள்விப் பட்டதும், அவன் தனது எதிரியின் இதயத்தை மீண்டும் புண்படுத்துவதற்கு அது வொரு நல்ல சந்தர்ப்பம் எனக் கண்டான். எனவே அவன் தனது மகனைத் தன்னிடம்ஒப்படைக்குமாறு கோரினான். எட்காருக்கும் லிண்டனை ஹீத்கிளிப்பிடம் ஒப்படைப்பதைத் தவிர வேறு வழியில்லை. அந்தச் சோனியான, பயந்தாங் கொள்ளிப் பிள்ளையைப் பார்த்ததும், ஹீத்கிளிப் பின்வருமாறு வாய்விட்டே ஏளனமாய்ப் பேசினான்: "இந்தப்பையன் எப்படியிருந்தாலும் இவனை நான் உயிரோடு வளர்ப்பேன். இதனை த்ரஷ்கிராஸ் மாளிகையின் எஜமானனை எட்காரிடம் தெரிவித்து விடு. என் மகன் தான் எட்காரின் சொத்துக்கெல்லாம் எதிர்கால வாரீசு, எனவே எட்கார் இறக்கும் வரையிலும், இவன் இறப்பதை நான் விரும்பவில்லை. அதன்பின் நானே

எல்லாவற்றுக்கும் வாரிசுதாரனுகி விடுவேன். மேலும், எட்காரின் மாளிகையையும், அவனது மகளையும் எனது மகன் தனதாக்கி ஆள்வதையும் நான் காண விரும்புகிறேன். இந்த நாய்க்குட்டிப் பயலை எடுத்து வளர்க்கும் பொறுப்பை நான் ஏற்றுக் கொள்வதற்கான ஒரே காரணம் இதுதான்!"

எட்காரோ இதன்பின் மேலும் தனிமையில் வாழ்ந்து வந்தான். அவன் ஹீத்கிளிப்பைப்பற்றி எண்ணிப் பார்க்கக்கூடத் துணியவில்லை; எனினும், தனது மகளான குட்டிக் காதரைன் ஹீத்கிளிப்பை எவ்விதத்திலும் சந்தித்து விடக் கூடாது என்பதில் மட்டும் அவன் விசேடமான அக்கறையும் கவனமும் செலுத்தி வந்தான். ஆனுல் ஹீத்கிளிப்போ வேறு திட்டங்களைக் கடைப்பிடித்து, தனது கவனம் மிகுந்த சூழ்ச்சித் திறமையால், எட்காரின் அந்த நம்பிக்கையையும் பாழாக்கி விட்டான். சோனிச் சிறுவனுன லிண்டன் நாளுக்கு நாள்மெலிந்து, நோய் வாய்ப்பட்டு வந்தான். எனவே ஹீத்கிளிப் த்ரஷ்கிராஸ் மாளிகையின்மீது தனக்குள்ள பாத்தியதையை உறுதி செய்யும் நோக்கத்தோடு ஒருசூழ்ச்சியைக் கையாண்டான். அதன் மூலம் அவன் எட்காரின் இதயத்தைப் புண்படுத்தத் துணிந்தான். இதன்படி, அவன் அந்த நோயாளிச் சிறுவனைத் தன்னேடு அழைத்துக் கொண்டு சவாரி போனுன். காதரைனைச் சந்திப்பதுதான் அவனது நோக்கம். அவ்வாறே அவர்கள் காதரைனைச் சந்தித்தார்கள். அன்புள்ளம் படைத்த குட்டிக் காதரைன் தனது அத்தை மகனின் படுமோசமான உடல்நிலையைக்கண்டு பரிதாபம் அடைந்தாள்; மேலும், அவனை அவள் மீண்டும் மீண்டும் சந்திக்கவும் முன் வந்தாள். அவளுக்குத் தனது குடும்பத்தின் துயரமயமான வரலாறு எதுவும் தெரியாத காரணத்தால், ஹீத்கிளிப் சொன்னதையெல்லாம் அவள் நம்பினுள். தனக்கும் அவளது தந்தைக்கும் இடையில் விரும்பத்தகாத முறையில் குரோத விரோதம் உருவாகி விட்டதாக ஹீத்கிளிப் கூறினுன். எனவே தனது தந்தையின் மனம் புண்படாமல் இருக்க வேண்டுமென்பதற்காக, அவள் லிண்டனைச் சந்தித்து வருவதையும் தன் தந்தையிடமிருந்து மறைத்து வந்தாள்.

ஹீத்கிளிப் எவ்வளவோ முயன்று பார்த்தும், லிண்டனின் மனத்தில் காதரைனை நேசிக்கும் உணர்ச்சியை உண்டாக்க முடியவில்லை. ஆனுல் காதரைனின் அன்பும் ஆதரவும் குழந்தைத் தன்மையும் கள்ளங்கபடமற்றதாகவும் இருந்தது. இதனுல் தனது தந்திரோபாயத்தால் தான் வெற்றியடைவது சிரமம் என்பதையும் ஹீத்கிளிப் உணர்ந்தான். பலாத்கார வழி

யைக் கடைப் பிடித்துத்தான் தனது திட்டத்தைத் தான் சாதிக்க வேண்டியிருக்கும் என்பதையும் அவன் உணர்ந்தான்.

இதற்கான சந்தர்ப்பம் வந்த போது, காதரைன் பதினாறு வயதுக் குமரியாக இருந்தாள். இந்தச் சந்தர்ப்பத்தில் எட்கார் நோய்வாய்ப்பட்டுப் படுக்கையில் விழுந்து விட்டான்; அவன் பிழைத்தெழுவான் என்பதற்கான நம்பிக்கையே இல்லை. இந்த உண்மையை எட்கார் காதரைனிடமிருந்து எவ்வளவோ மறைக்கப் பாடுபட்டும், காதரைன் அதனை உணர்ந்து கொண்டு விட்டாள். அந்த நிமிஷத்திலிருந்து அவள் தனது தந்தையின் அருகிலேயே இருந்து வரத் துணிந்தாள்; அவ்வாறு இல்லாத நேரமெல்லாம் அவளுக்கு வேதனை தருவதாகவே இருந்தது. தந்தையைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்து வந்ததால், அவளது முகமும் கூட வெளுத்துப் பசலை பாய்ந்து விட்டது. அவளை அங்கிருந்து சென்று வேறு வேலைகளைக் கவனிக்குமாறு எட்கார் என்ன சொல்லியும் அவள் கேட்கவில்லை. அவளுக்குத் தன் தந்தை இருக்கும் அறையே உலகமாகி விட்டது. வேறு எதைப்பற்றிய சிந்தனையும் அவளுக்கில்லை.

ஒருநாள் எட்காரின் நிலைமை மிகவும் மோசமாகிக் கொண்டிருப்பது தெளிவாகத் தெரிந்தது. அப்போது அவளது அத்தைமகன் லிண்டனிடமிருந்து அவளை அவசரமாகப் பார்க்க வரச் சொல்லி யாரோ ஒரு கடிதத்தைக் கொண்டு வந்து கொடுத்தார்கள். அந்தப் பையனும் படுமோசமான நிலையில் இருக்கிறான் என்பதை அவள் அறிவாள். எனவே அவனை உடனே போய்ப் பார்த்து விட்டு வருவதற்காக, அவள் தன் தந்தையின் அறையை விட்டு வெளியேறிச் சென்றாள். உதரிங் ஹைட்ஸ் மாளிகைக்குள் அவள் போய் நுழைந்ததுமே, ஹீத்கிளிப் அவளை உள்ளே விட்டுக் கதவைச் சாத்திக் கொண்டு விட்டான். "காதரைன்! உனது குதிரையையும் நான் அவிழ்த்து ஓட்டி விட்டேன். இப்போது நீ அதோ கிடக்கும் அந்த அழுமூஞ்சியைத் திருமணம் செய்து கொண்டாலன்றி, நீ இங்கிருந்து வெளியேற முடியாது!" என்றான் அவன்.

"தயவு செய்து இப்போது என்னை வீட்டுக்குப் போக விடுங்கள்! நான் இவனை மணந்து கொள்ளச் சம்மதிக்கிறேன்; உறுதி கூறுகிறேன். ஆனால் என்னை மட்டும் இப்போது இங்கே நிறுத்தி வைக்காதீர்கள். நான் உடனே திரும்பிப் போகாவிட்டால், அப்பாவின் நிலைமை மிகவும் மோசமாகி விடும்!" என்று முறையிட்டாள் காதரைன்.

"பேசாதே! உன் தந்தை படு மோசமான நிலைக்கு ஆளாவதைக் கண்டு, எனக்குப் பெருத்த மகிழ்ச்சிதான் ஏற்படும். உன்னை இங்கேயே அடைத்து வைத்துக் கொள்வதற்கு, எனக்கு இதைக் காட்டிலும் சிறந்த காரணம் வேறு இருக்க முடியாது!" என்று கெக்கலித்தான் ஹீத்கிளிப்.

"பின்னே யாரையாவது அனுப்பி நான் பத்திரமாக இருக்கும் செய்தியையேனும் அப்பாவுக்குத் தெரிவியுங்கள். அல்லது நீங்கள் சொல்லும் திருமணத்தை இப்போதே முடித்து வையுங்கள். அப்பா! நான் என்ன செய்வேன்? என்ன செய்வேன்?" என்று காதரைன் முறையிட்டாள்; அழுது புலம்பினாள்.

ஹீத்கிளிப்போ அவளது வேதனையை எவ்விதச் சலனமுமின்றிக் கவனித்தான். தனது மகன் இறந்துகொண்டிருக்கிறான் என்பதையும், இனியும் அவன் பிழைத்தெழப் போவதில்லை என்பதையும் அவன் அறிவான். எனவே காதரைனை மணப்பதற்குமுன் அவன் இறந்துவிடக்கூடாது என்பதில் அவன் கண்ணும் கருத்துமாக இருந்தான்; ஏனெனில் ஒருவேளை எட்கார் பிழைத்தெழுந்துவிட்டாலும்கூட, அவனது சொத்தெல்லாம் தனது கைக்குள் வந்தாக வேண்டும் என்று விரும்பினான் அவன். இந்த எண்ணத்தை அவனது பேராசையுணர்ச்சி உருவாக்காவிட்டாலும்கூட, தனது எதிரிக்கு நேரக்கூடிய துன்பத்தைப் பற்றிய எண்ணமே, அவனை இத்தகைய வஞ்சம் தீர்க்கும் எண்ணத்துக்கு ஆளாக்கிவிட்டிருக்கும். எனவே தனது தந்தையைக் காணத் துடிக்கும் அந்தக் குமரி, அதற்காக எந்த ஒரு நிபந்தனைக்கும் ஒப்புக்கொள்ளும் வரையிலும் அவன் அவளைத் தவிக்கவிடவே துணிந்தான். அதன்படியே அவளும் அவனது கட்டளைக்கு இசைந்தாள். ஆம். அதன்பின் அவள் அங்கிருந்து விடுதலை பெற்றுப் பறந்தாள். அவ்வாறு தன் தந்தையை நோக்கிப் பறந்தோடிய அவள் ஸ்ரீமதி லிண்டன் ஹீத்கிளிப்பாகத்தான்-அதாவது அந்தச் சோனிப்பையனின் மனைவியாகத்தான்—திரும்பச் சென்றாள்!

அவள் தன் தந்தையின் படுக்கையருகே போய்ச் சேர்வதற்கும், அவளது தந்தையான எட்கார் கண்களை மூடுவதற்கும் சரியாக இருந்தது. ஆம். எட்கார் இறந்துபோனான். அன்று மாலை சவ அடக்கமெல்லாம் முடிந்த பின்னர், ஹீத்கிளிப் த்ரஷ்கிராஸ் மாளிகையினுள் அதன் சொந்தக்காரனைப்போல் புகுந்தான். உள்ளே புகுந்து காதரைனின் கரத்தை எட்டிப் பிடித்து, "நான் உன்னை வீட்டுக்கு அழைத்துச் செல்லத்தான் வந்திருக்கிறேன். உனது புரு

ஷனே உனக்குப் பிடித்தாலும் பிடிக்காவிட்டாலும் நீ அங்கு வந்துதானுக வேண்டும். இனி அவன் உன் பொறுப்பு. எனக்குப் பதிலாக நீதான் இனி அவனைக் கவனித்துக்கொள்ள வேண்டும்!'' என்று கூறி, அவளைக் கூட்டிவந்தான்.

ஆனால், அவளது கணவனோடு இருக்கும் பாக்கியம் அவளுக்குச் சிறிது நேரம்தான் கிட்டியது. அந்தப் பையன் இறந்து போய் விட்டான். அதன் பின்னர் ஹீத்கிளிப் இறந்துபோன அந்தப் பையன் கையெழுத்திட்டு விட்டுச்சென்ற உயிலைக் காதரைனிடம் எடுத்துக் காட்டினான். அந்த உயிலில் அவளுக்கும் அவளது தந்தைக்கும் உரிய சொத்துக்கள் அனைத்தும், தனது தந்தைக்கு உரிமையாக வேண்டும் என்று அவன் எழுதியிருந்தான். அவன் மைனர் பையனுதலால் நிலங்களை மட்டும் உயிலின் மூலம் தன் தந்தையின் பெயருக்கு விட்டுச் செல்ல இயலவில்லை. எனினும் ஹீத்கிளிப் அவற்றைத் தன் மனைவியின் பெயராலும், மகனின் பெயராலும் உரிமை கொண்டாடினான். இவ்வாருக, காதரைன் சொத்தும் சுகமும் உறவும் உற்ருரும் அற்ற அனுதையாக்கப்பட்டாள்!

உதரிங் ஹைட்ஸ் மாளிகை வாசம் குட்டிக் காதரைனுக்கு நரக வர்ழ்க்கையாகிவிட்டது. அவள் வாழ்வில் எல்லாச் சுகத்தையும் இழந்து கைதிபோல் வாழ்ந்து வந்தாள். ஹீத்கிளிப்போ தனது வஞ்சம் தீர்க்கும் விரதத்தைப் பூரணமாக நிறைவேற்றிக்கொள்ள முனையும் ஈவிரக்கமற்ற வெறியனைப் போல் அவளைச் சித்திரவதை செய்துவந்தான். அங்கிருந்த ஜோசப் என்னும் வேலைக்காரக் கிழவனே அவளைப் பற்றிக் குரோதவிதமான கோள்களையெல்லாம் ஹீத்கிளிப்பிடம் கூறி வந்தான். அவன் அவளது புத்தகங்களையும் திருடி, அவற்றை அழித்தான். ஹீத்கிளிப்போ அவளது ஆன்மாவையே நாசமாக்கி, அவளை ஒன்றுக்கும் உதவாத, என்றென்றும் துயரத்திலேயே அமுந்திக் கிடக்கும் பெண்ணுக ஆக்கிவிடக் கங்கனம் கட்டியவன் போல் நடந்துகொண்டான். சொல்லப்போனுல், உதரிங் ஹைட்ஸ் மாளிகையிலேயே ஒரேயொரு ஜீவன் மட்டும்தான் காதரைனிடம் பரிவும் பாசமும் காட்டியது. அந்த ஜீவன் வேறு யாருமல்ல; ஹிண்ட்லேயின் மகனுன ஹேர்டன் தான்.

அவன் அறிவற்றவனுகவும், அட்டுப்பிடித்தவனுகவும்இருந்த போதிலும், அவன் அழகான கட்டுமஸ்தான வாலிபனுக வளர்ந்திருந்தான். ஆனுல் அவளோ அவன் தன்னோடு நெருங்கிப் பழக முனைவதை வெறுத்தாள்' இதனுல் அவனும் தனது வழக்கமான தனிமைக்கு

ஆளாகி அவளிடமிருந்து பின் வாங்கிக்கொண்டான், சில சமயங்களில் அவனுக்கு அவள்மீது ஆசை மேலிடும்போது, அவன் அவளை வாய்க்கு வந்தபடி வைதுவிடவும் செய்வான், இல்வாறெல்லாம் இருந்தபோதிலும் அவன் அவளை அடைவதற்காக, ரகசியத்தில் எழுதப் படிக்கக் கற்றுவந்தான்; அத்துடன் சாப்பிடும் மேஜையில் அவள் எவ்வளவு நாகரிகமாகவும் நாசூக்காகவும் நடந்து கொள்கிருள் என்பதையும் ஆராய்ந்து அவளைப் போல் தானும் தயங்கித் தயங்கி நடக்கப் பழகினுன், இதன்மூலம் அவள் தன்னை ஏற்றுக்கொள்ளும் விதத்தில் தன்னைத்தானே உருவாக்கிக்கொள்ள அவன் முனைந்தான், ஒரு நாள் அவனது கைத்துப்பாக்கி வெடித்து விட்டது. அதனுல் காயமுற்ற அவன் வீட்டிலேயே இருக்க நேர்ந்தது; இந்தச் சமயத்தில் தனிமையில் களைத்துச் சோர்ந்து சலித்துப் போயிருந்த காதரைன் அவனுக்கு முதலில் உதவ முன்வரவில்லை, பின்னர் அவள் அவனுக்குப் பாடங்களைப் படித்துக் காட்ட முன்வந்தாள். மேலும் மறுநாள் அவனுக்குப் பாடம் கற்றுக் கொடுக்கவும் முன்வந்தாள், இவ்வாருக, அவர்களுக்குள் ஏற்பட்ட பழக்கம் விரைவிலேயே வலுவடையத் தொடங்கியது, ஹேர்டன்னைச் சீர்திருத்துவதில் காதரைனுக்கு எவ்வித அக்கறையும் இல்லை. என்ருலும் அவர்கள் இருவரது மனமும் ஒரே விஷயத்தில் ஈடுபட்டிருந்தது, ஒருவரது உள்ளம் மதிப்பையும் மேம்பாட்டையும் பெறவேண்டும் என்று விரும்பியது; மற்றவரது உள்ளம் மதிப்பையும் மேம்பாட்டையும் விரும்பியது.

சீக்கிரத்திலேயே காதரைனின் முகத்தில் களையும் ஒளியும் குடிகொள்ளத் தொடங்கின. மேலும், ஹீத்கிளிப் மோசமாக நடந்துகொள்ளும் போது அவனை எதிர்த்துப் போராடுவதற்கான அவளது பழைய தெம்பையும் திராணியையும் அவள் மீண்டும் பெற்று விட்டாள். ஒருநாள் அவள் அவனை மிகுந்த துணிச்சலோடு அலட்சியமாக எடுத்தெறிந்து பேசிய சமயத்தில், அவன் அவளை அடிக்கும் நோக்கத்தோடு அவளருகே நெருங்கிச் சென்ருன். அப்போது அவளது பயமிழந்த துணிச்சல் மிகுந்த கண்களைப் பார்த்தவுடனே, அவனது முகத்தில் திடீரென்று ஏதோ ஒரு மாறுதல் ஏற்பட்டது. அவன் அவளை அடிக்காமல், தனது கையால் நெற்றியைத் தடவியவாறே, அங்கிருந்து எதுவுமே பேசாமல் வெளியேறிவிட்டான்.

சில மாதங்கள் கழிந்தபின் ஒருநாள் ஹேர்டன்னும் காதரைனும் சமையலறையில் அமர்ந்து படித்துக் கொண்டிருப்பதை ஹீத்கிளிப் கண்டான். அடுப்பின் நெருப்பொளி அவர்

கள் இருவரின் தலைமயிரும் பட்டுப் பளபளத்தது. அறிவொளி பெற்றுத் துலங்கிவரும் ஹேர்டன்னின் முகத்தில் ஒரு பெருமிதமும் பிரகாசமும் குடிகொண்டிருந்தன. அதே போல் காதரைனும் கண்நிறைந்த அழகியாக தன் தாயைப் போலவே வடிவும் வனப்பும் பெற்றவளாகத் தோன்றினாள். அவர்கள் இருவருக்குமிடையில் பழக்கம் முற்றி வருவதை ஹீத்க்ளிப் ஆரம்ப முதலே வெறுத்தான். எனவே அவர்களது உறவை முளையிலேயே முறித்து விடும் எண்ணத்தில் அவர்கள் இருவரும் சேர்ந்திருக்கும் காட்சியைக் காண நேர்ந்தால், அவன் ஹேர்டன்னை அங்கிருந்து விரட்டியடித்து வந்தான். அன்றும் அவ்வாறு விரட்டுவதற்காகவே அவன் உள்ளே சென்றான். அப்போது அவர்கள் இருவரும் திரும்பிப் பார்த்தனர். அதே சமயம் நெருப்பின் சிவந்த ஒளியும் அவர்களது முகத்தில் பளிச்சிட்டது. அதனைக் கண்டதும் ஹீத்க்ளிப் அப்படியே நின்று விட்டான். அவனது ஓங்கிய கை நின்று விட்டது. முன்னைப் போலவே அவன் நெற்றியைத் தடவியவாறு வெளியேறினான்.

தன் உள்ளத்தில் ஒரு விசித்திரமான மாறுதல் ஏற்பட்டிருப்பதை ஹீத்க்ளிப் உணர்ந்தான். அதனைப் புரிந்து கொள்ள மாட்டாமல் தன்மீதே ஆத்திரம் கொண்டான். குரோத உணர்ச்சியோடு வஞ்சம் தீர்த்து மகிழ்ந்து வந்தவன் அவன். அவ்வாறு அந்த மகிழ்ச்சியில் திளைக்கவே அவன் விரும்பினான். ஆனால் இப்போதோ வஞ்சம் தீர்ப்பதில் மகிழ்ச்சி காணும் சக்தி தன்னிடம் அற்றுப் போய் விட்டதை அவன் கண்டான். ஹேர்டன்னின் தோற்றத்தில் ஏற்பட்டிருந்த மாறுதல்கள் அவனைத் திகைக்க வைத்தன. அவனது காதலி காதரைன் இளமைப்பருவத்தில் எவ்வாறு காட்சியளித்தாளோ, அதே போன்ற அங்க லாவண்யங்களை ஹேர்டன்னும் பெற்றிருப்பதாகத் தோன்றியது. இந்த ஒற்றுமையான தோற்றம் அவன் மனத்தைச் சித்திரவதை செய்தது. இருந்த போதிலும் அவனால் அந்த இளைஞனை விரட்டியடிக்க முடியவில்லை; விரட்டியடிக்கக் கையும் மனமும் பூரணமாகத் துணியவில்லை. அதனால் அவன் தனக்குத்தானே பின்வருமாறு முனகிக் கொண்டான்: "இவனது முகம் காதரைனின் முகத்தோடு எவ்வளவு ஒற்றுமை கொண்டிருக்கிறது! இதென்ன பயங்கரம்! எனினும் எது என்னில் அவளது நினைவை எழுப்பவில்லை? அவள் ஒருத்தி இருந்தாள், அவளை நான் இழந்துவிட்டேன் என்பதை நினைவுறுத்தும் பயங்கரமாகத் தானே இந்த உலகமே எனக்குக் காட்சி தருகிறது! அவளை இழந்ததற்காகப் பழி தீர்த்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில் நான் இரண்டு குடும்பங்களையே பூண்

டோடு அழித்துச் சர்வ நாசம் செய்ய வேண்டுமென்று துணிந்தேன். ஆனல் அதற்கான சூழ்நிலையெல்லாம் பூர்த்தியான பின்னரோ, அதனை முற்றுக நிறைவேற்ற எனக்கு முடியவில்லை. அதனை நிறைவேற்ற எனக்குத் துணிவில்லை; சக்தியில்லை. கடவுளே! எனது போராட்டம். நீண்ட நெடும் போராட்டம், இதற்கு முற்றுப் புள்ளி வைத்தாக வேண்டும்!''

இதன்பின்னர் அவன் எதிலுமே பற்றில்லாமல் இரவும் பகலும் எங்கெங்கோ சுற்றித் திரிந்தான். எனினும் அவனுக்கு ஒரேயொரு பற்று இருந்தது. காதரைனின் சமாதிதான் அது. அவன் அங்கு அடிக்கடி சென்று வந்தான். நாளுக்கு நாள் அவனுக்கு அன்ன ஆகாரமும் குறையத் தொடங்கிவிட்டது. இரவிலோ அவன் முன்னர் காதரைன் உபயோகித்துவந்த அந்த மாளிகையின் பழைய அறையொன்றில்தான் படுத்துத் தூங்கினுன். இவ்வாறு விரக்தியுடனும் நிராசையுடனும் பல நாட்களைக் கழித்துவந்த அவன் ஒரு நாள் காலையில் வெளியே வந்தான். அப்போது அவனது கன்னங்கள் ஒடுங்கிக் குழிந்திருந்தன; கண்கள் செக்கச் சிவந்திருந்தன; எனினும் அந்தக் கண்களில் ஒரு பேராவேசமான பிரகாசம் தென்பட்டது. ''நான் இப்போது மகிழ்ச்சியாக இருக்கிறேன்! மகிழ்ச்சியாக இருக்கிறேன்!'' என்று அவன் நெல்லியிடம் சொன்னுன். அவனுக்கெதிரே சில அடிதூரத்தில் தென்படும் ஏதோ ஒன்றை ஏறிட்டுப் பார்ப்பதுபோல் அவன் வெறித்து நோக்கினுன். அவன் எதைப் பார்த்தானே, அது அவனுக்கே வெளிச்சம். எனினும் அவனது பார்வையில் தாகத்தை மூட்டிய அந்த விஷயம் முகத்திலே ஒரு பரவசத்தையும் உண்டாக்கியது.

அவன் வாய் திறந்து பேசிக் கொண்டிருக்கும் போதும் அவனது கண்கள் அவ்வாறே நோக்கிக் கொண்டிருந்தன. நெல்லி அவனைச் சாப்பிட அழைத்தாள்; அவன் முன்னல் உணவைக் கொண்டுவந்து வைத்தாள். அவன் அந்த உணவைத் தொடுவதற்காகக் கையை நீட்டினுன். ஆனல் அவனது விரல்கள் மடங்கி இறுகின; அவை உணவை மறந்து மேஜைமீது மடித்தவாறே அசைவற்று நின்றன. அதே சமயம் அவனது கண்கள் அந்தக் கண்ணுக்குத் தெரியாத சூட்சுமமான பொருளை நோக்கின; அவனைப் பின் தொடர்ந்தன. அவன் பின்வருமாறு பேசினுன்: ''என் ஆத்மாவின் ஆனந்தமே என் உடம்பையும் கொன்று வருகிறது. இதனல், நான் இறந்தபின் நான் எவ்வாறு புதைக்கப்பட வேண்டும் என்பதும் எனக்கு நினைவுக்கு வருகிறது. எனது சவப்பெட்டியை அவளது சவப்பெட்டியோடு சேர்த்துப் புதைக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். அவளது பெட்டியின்

பக்கப் பலகையை நடுவில் அகற்றிவிடுவதற்கான ஏற்பாட்டையும் நானே செய்துவிட்டேன். ஒரு நாள் இரவில் நான் அவளது சமாதியைத் தோண்டி அவளது சவப்பெட்டியின் பக்கப் பலகையைக் கழற்றி விட்டேன். எனவே எனது உடம்பையும் புதைக்கும் காலத்தில் நாங்கள் இருவரும் சேர்ந்து இருக்க முடியும். எனது இந்த விருப்பத்தை நீங்கள் நிறைவேற்றியாகவேண்டும். இல்லையேல் இறந்தவர்கள் அழிந்து போவதில்லை என்ற உண்மையை உங்களுக்கெல்லாம் நிரூபித்துக் காட்டிவிடுவேன்!"

அன்றிரவில் அவன் வழக்கம் போல் காதரைனின் அறைக்குள் சென்று அங்கேயே படுத்துக் கொண்டான். மறுநாட் காலையில் அவர்கள் அங்கு இறந்து கிடப்பதையே கண்டார்கள். இறந்து போன ஹீத்கிளிப்பின் முகத்தில் ஒரு பயங்கரமான ஆனந்த பரவசம் குடிகொண்டிருந்தது. அவனுக்காக யாரும் அழவில்லை, அவனால் மிகுந்த கொடுமைக்கு ஆளான ஹேர்டன் ஒருவன் மட்டும்தான் அழுதான். பின்னர் அவனது விருப்பப்படியே அவனது சடலம் புதைக்கப்பட்டது. தனது அஸ்தியும் காதரைனின் அஸ்தியும் மண்ணோடு மண்ணாக ஒன்றாகக் கலக்கும் விதத்தில் தன்னைப் புதைப்பதற்காக, அவன் ஏற்கெனவே சமாதிக் குழி தோண்டுபவனுக்கு லஞ்சம் கொடுத்துச் சரிக்கட்டி வைத்திருந்தான்.

கிம்மர்ட்டன் தேவாலயத்தின் சமாதி ஸ்தலத்தில் மூன்று சமாதிகள் அடுத்தடுத்து இருந்தன. அவற்றில் முறையே எட்கார், காதரைன், ஹீத்கிளிப் ஆகியோரின் பெயர்களும் பொறிக்கப்பட்டிருந்தன. அங்கு நிலவிய அமைதியான சூழலில், அங்கு வீசிய மெல்லிய இளங் காற்றில், நிர்மலமான வானத்தின் நிச்சுவாசப் பேரமைதியில் அவர்கள் மூவரும் அமைதியாகத் துயில் கொண்டிருப்பதாகத்தான் எந்த ஓர் அன்னியனும் நினைப்பான். ஆனால் ஹீத்கிளிப் இறந்து பல வருஷங்கள் ஆன பின்னரும் கூட, அந்தக் கிராமத்து ஜனங்கள் அவன் இரவில் நடமாடித் திரிவதைக் கண்டதாகவே பேசி வந்தார்கள். வேலைக்காரக் கிழவனை ஜோசப்போ காதரைனின் அறை ஜன்னலின் வழியே காதரைனும் ஹீத்கிளிப்பும் வெளியே பார்த்துக் கொண்டிருப்பதைத் தானே பலமுறை கண்ணால் கண்டதாகச் சத்தியம் கூடச் செய்து வந்தான்.



ஆசிரியரும், வெளியிடுபவரும்: கண. இராமநாதன்,
66, பெரியதெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5. தொலைபேசி 84989
அச்சிட்டோர்: ஐடியல் பிரிண்டர்ஸ், 97, பிராட்வே, சென்னை-1.

# இலக்கியப் புத்தகங்கள்

இலக்கியம் என்பது சிறந்த கருத்துக்களின் அழகிய எழுத்து வடிவமாகும். படிப்போர் மனத்தை விரிவாக்கி குறைகளைப் போக்கி நல்வழிப்படுத்தும் இயல்புள்ளது இலக்கியமாகும். மக்களை நல்வழிப்படுத்தும் நன்னூற்கள் இலக்கியமாகும். இப்படியாகப் பல கருத்துக்கள் உலவி வருகின்றன. இவற்றை இலக்கணமாகக்கொண்டு இலங்கும் இலக்கியப் புத்தகங்களில் சிலவற்றைக் கீழே தந்துள்ளோம்.

| | | | |
|---|---|---|---|
| கீதாஞ்சலி | தாகூர் | 2 | 00 |
| காதற் கண்கள் | ,, | 2 | 00 |
| அஞ்சிறைத்தும்பி | மயிலை சீனி வேங்கடசாமி | 2 | 50 |
| கௌதம புத்தர் | ,, | 3 | 50 |
| திருக்குறள் பொருள் விளக்கம் | சாமி சிதம்பரனர் | 4 | 50 |
| கம்பன் கண்ட தமிழகம் | ,, | 2 | 50 |
| தொல்காப்பியத் தமிழர் | ,, | 2 | 50 |
| பத்துப்பாட்டும் பண்டைத் தமிழரும் | ,, | 3 | 50 |
| எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும் | ,, | 3 | 50 |
| பதினெண் கீழ்க்கணக்கும் தமிழர் வாழ்வும் | ,, | 3 | 50 |
| சிலப்பதிகாரத் தமிழகம் | ,, | 4 | 50 |
| மணிமேகலை காட்டும் மனித வாழ்வு | ,, | 4 | 00 |
| இலக்கியச் சோலை | ,, | 3 | 50 |
| வடலூரார் வாய்மொழி | ,, | 3 | 50 |
| பழந்தமிழர் அரசியல் | ,, | 3 | 00 |



★

த பெ. எண். 423 போன் : 84989

ஸ்டார் பிரசுரம்

66, பெரிய தெரு,

திருவல்லிக்கேணி :: சென்னை-5.



மே, 1964 : : மலர் 3 – இதழ் 2

# இலவசக் கல்வி

நடப்பு ஆண்டிலிருந்து எல்லா மாணவ, மாணவியர்கட்கும் இலவசக் கல்வி வழங்குவதென்று சென்னை அரசாங்கம் முடிவு செய்துள்ளது. அதன்படி தொடக்கப்பள்ளி முதல் உயர்நிலைப் பள்ளி வரையுள்ள வகுப்புக்களுக்கு யாரும் கட்டணம் கட்டத் தேவையில்லை. இது சுபிட்ச இந்தியாவின் சோஷலிச சமுதாயத்தை அமைக்கும் பணியில் முதற் படியாகும். இதன் மூலம் எல்லா மக்கட்கும் கல்வி பயில்வதற்குச் சமவாய்ப்பு அளிக்கப்படுகிறது.

இதே போன்று, கலைக் கல்லூரிகளிலும், மருத்துவ, பொறி இயற் கல்லூரிகளிலும் கட்டணம் இன்றிக் கல்வி பயிலும் நாள் விரைவில் வரவேண்டும் என்று எதிர்பார்க்கிறோம். இன்றில்லாவிட்டாலும், நமது நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதியில் இந்நிலை ஏற்பட்டால் மிகவும் மகிழ்ச்சிக்குரியதாகும்.

ஒரு நாடு வளமாக இருக்கிறது என்றால் அங்கு உணவு, உடை, குடியிருப்பு, கல்வி இவற்றிற்கு எல்லோருக்கும் சம வாய்ப்பு வேண்டும். அத்துறையில் படிப்படியாக நாம் முன்னேறி வருகிறோம் என்பதற்கு இலவசக் கல்வி பற்றிய அறிவிப்பு ஓர் எடுத்துக் காட்டாகும்.

இத்தகைய நல் வாய்ப்பை நமக்களித்த சென்னை அரசினரைப் பெரிதும் பாராட்டுகிறோம்.

# புரட்சி உள்ளம்!

பாவலர் பாரதிதாசன் கடலைப் பார்க்கின்றார். கடலின் ஓரத்தை நோக்கி, மணல் மெத்தையை நோக்கி, மெத்தை மேல் தாக்க வரும் அலைகளை நோக்குகின்றார். அலைகள் பெருகுகின்றன; ஏறி எழுகின்றன, வீழ்ந்து தாழ்கின் றன. அவற்றின் பூரிப்பும் ஏற்ற மும் வீழ்ச்சியும் புரட்சியும் கண் டார் பாவலர்.

பலகாலும் பார்த்துப் பார்த்துப் பழகிய மற்றொரு காட்சியும் அவர் கண்முன் உடன் தோன்றுகிறது. அதனைத் தான் உவமம் என்பது. அவர் பலகாலும் பழகிய காட்சி எது? அக்காட்சியில் அலைகளைப் போல் பூரித்தல், ஏறுதல், வீழ்தல், புரளுதல் அனைத்தும் உள்ள னவா?

அக்காட்சிதான் கல்வி நிலை யத்தில் இளைஞர் ஓடி ஆடி மகிழ்ந்து திளைக்கும் காட்சி.

'ஊருக்குக் கிழக்கே உள்ள
பெருங்கடல் ஓரம் எல்லாம்
கீரியின் உடல் வண்ணம்
போல்
மணல் மெத்தை; அம்
மெத்தை மேல்
நேரிடும் அலையோ, கல்வி
நிலையத்தின் இளைஞர் போலப்
பூரிப்பால் ஏறும் வீழும்
புரண்டிடும் பாராய் தம்பி!"

கடலைக் கண்டு மகிழும் உள்ளம் —இயற்கையின் அழகுச்சிரிப்பில் மயங்கிய உள்ளம் பள்ளிக்கூடத் துச் சிறுவர்களை நினைக்கின்றது— சிறுவர்களின் சுறுசுறுப்பை நினைக்கின்றது, அவர்களின் பூரிப்பையும் களிப்பையும் ஆடலை யும் நினைக்கின்றது! ஏன்? கடல் அலைகள் தரும் இன்பத்தைவிட, கல்வி நிலையச் சிறுவர்கள் பல மடங்கு பெருகிய இன்பம் தரு வதைப் பாரதிதாசன் நன்கு உணர்ந்தவர். அதனால் தான் அலைகளின் இன்பப் புரட்சி அவருக்கு சிறுவர்களின் வாழ்க் கைப் புரட்சியை நினைவூட்டுகின் றது.

சிறுவர்களின் சுறுசுறுப்பில், அழகைக் கண்டு இன்புற்ற உள்ளமே புரட்சியுற்ற உள்ளம். முதியவர்கள் சிறுவர்களைக் கண்டு எண்ணும் எண்ணத்தையும், பழங்கால ஆசிரியர்கள் பள்ளிக் கூடச் சிறுவர்களைக் கண்டு எண் ணும் எண்ணத்தையும், வீழ்த்தி வென்ற புரட்சியுள்ளம் இங்கே விளங்குகின்றது.

பாட்டுக்களில் புரட்சி என்றால், வெறுஞ்சொற்களில் மட்டுமோ? எதுகை, மோனைத் தொடைகளில் மட்டுமோ? உவமைத் திறங்களில் மட்டுமோ? இவையனைத்தும் புரட்சிகள் ஆகலாம்; ஆயினும் இவை போதிய பயன் தரா!

மக்கள் வாழ்க்கைக்கு இன்றி யமையாத புதிய கருத்துகளை எழுப்பிச் செம்மை செய்வதே சீரிய புரட்சி! அதனை இங்கே காணலாம்.

டாக்டர் மு. வீரதராசனார்



# பாரதிதாசன் பாக்கள் வாழ்க!

பொன்னையும் பாரான் புகழுரை வேண்டான்
தன்னலம் கருதித் தயங்கிட மாட்டான்
அமிழ்தினும் இனிதென ஆன்றோர் போற்றும்
தமிழ்மொழித் தொண்டே தவமெனத் தாங்கி
தாய்மொழிப் பண்பின் தனிமையைக் காக்கும்
வாய்மையே தன்னுடை வாழ்வின் உயிர்ப்பென
முதுமையிற் புகுந்துள முரண்களை மாற்றிப்
புதுமையிற் பாடும் புரட்சிக் கவிஞன்
கெடுதலை யெல்லாம் கிளர்ச்சியால் வெல்லும்
விடுதலை வேட்கை வெறிகொண்ட வீரன்
உள்ளொன்று வைத்துப் புறமொன் றுரைக்கும்
கள்ளத் தனங்களைக் கடிந்திகழ் புலவன்
பாரதி அவர்களின் பக்தனும் நண்பன்
பாரதிதாசன் பாக்கள் வாழ்க!

**நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளை**



*சென்ற இரண்டு ஆண்டுகளாக விண் வெளியிலே பல சித்து விளையாடல்கள் நடை பெறுகின்றன! ஆம், இவற்றைச் சித்து விளையாடல்கள் என்றுதான் கூற வேண்டும்! வானவெளியிலே உலவவேண்டும் என்று மனிதன் கொள்ளை ஆசை கொண்டுவிட்டான்! பிரபஞ்ச மர்மங்களை நேரில் கண்டறிய அவன் புறப்பட்டுவிட்டான்! இது வரை கனவாகவே இருந்தது இப்பொழுது நனவாக வருகிறது! அமெரிக்க கார்டன் கூப்பர், ரஷிய பைகாவ்ஸ்கி, வீராங்கனை தெரேஷ்கோவா, இம்மூவரின் விண்வெளிப் பயணங்களையும் இக்கட்டுரை விவரிக்கிறது.*

# விண்வெளியிலே சித்து விளையாடல்கள்

**எஸ். எஸ். ராமசாமி, பி. எஸ்ஸி., பி. எல்.**

**1961-ம்** ஆண்டு ஏப்ரல் 12-ம் தேதி ககன மார்க்கத்திலே ருஷ்ய வீரன் ககாரின் சென்று உலகத்தை அதிசயத்தில் ஆழ்த்தினன். இந்த வெற்றி அமெரிக்காவில் போட்டி உணர்ச்சியைத் தூண்டிவிட்டது. ஆகவே வெகு சீக்கரத்திலேயே அமெரிக்க வீரர் ஒருவர் விண்வெளியிலே அனுப்பப் பட்டார். இவ்வாறு இரண்டு வல்லரசுகளும் ஒன்றையொன்று முந்திக்கொண்டு இது வரை "வீரர்களை விண்வெளியிலே அனுப்பியுள்ளன. இவர்களுள் அமெரிக்க வீரர் அறுவர்; ருஷ்ய வீரர் ஐவர். இவ்வாண்டு மே மாதம் 15-ஆம் தேதி அமெரிக்க வானவெளி வீரர் மேஜர் கார்டன் கூப்பர், விண்வெளிக் கப்பலில் 22 முறை உலகத்தை வலம் வந்து அரிய சாதனை புரிந்தார். இவர் நடத்திய பரிசோதனைகள் வருங் காலத்தில் சந்திர மண்டலப் பயணத்திற்குப் பெரிதும் உதவும்.

கார்டன் கூப்பர் அமெரிக்க விமானப் படையில் மேஜராகப் பணிபுரிந்து வருகிறார். அவருடைய காலஞ் சென்ற தந்தையும் ஒரு விமானியே. அவருக்கு ஏழு வயதாக இருக்கும் பொழுதே தமது தந்தையுடன் விமானத்தில் அடிக்கடி சென்றிருக்கிறார். தந்தையின் மடியில் அமர்ந்து விமானம் ஓட்டும் கருவிகளை இயக்குவதுண்டு. இவ்வாறாகப் பறப்பதென்பது இளமையிலேயே அவருடன் ஒன்றிய கலையாகிவிட்டது.

அவர் பதினறு பிராயத்தை அடைந்ததும், தன்னந்தனியாக விமானம் ஓட்டிச் சென்றிருக்கிருர். இப்பொழுது அவர் சிறந்த பயிற்சியுள்ளவெள்ளோட்ட விமானியாக விளங்குகிருர்—அதாவது, புதுவகை விமானங்களை ஓட்டிப் பார்த்து அவை இயங்கும் திறனை மதிப்பிடுவது அவரது வேலை.

அவரது மனைவி பெயர் டிரடி. அவரும் நல்ல அனுபவம் வாய்ந்த விமானி. கூப்பர் தம்பதிகளுக்கு இப்பொழுது இரு புதல்விகள் இருக்கின்றனர்.

விண்வெளி விமான்யாகக் கூப்பர் தேர்ந்தெடுக்கப்பட்ட போது அவருக்கு வயது 31. "நாஸா" என்னும் விண்வெளி நிலையம் தேர்ந்தெடுத்த ஏழு பேர்களில் இவருக்குத்தான் குறைந்த வயது. இப்போது இவருக்கு வயது 35. இவரது எடை 150 ராத்தல். உயரம் 5 அடி 9 அங்குலம்.

1962 பிப்ரவரி 20-ம் தேதி விண்வெளி விமானி கிளென் பூமியை ஒரு தடவை சுற்றி வந்த போது, அவர் வெற்றிபெற உதவியவர்களில் கூப்பர் ஒருவர். அப்போது அவர் ஆஸ்டிரேலியாவில் மியூஸா என்னுமிடத்தில் விண்வெளித் தகவல் நிலையத்தில் பணியாற்றினர். அதே ஆண்டில் மே மாதம் 24-ம் தேதி ஸ்காட் கார்ப்பெண்டர் விண்வெளிப் பயணத்தை மேற்கொண்டபோது, மெக்ஸிகோவில் குவேமாஸ் என்னுமிடத்திலுள்ள தகவல் நிலையத்திலிருந்தபடியே, விண்வெளியில் பறந்த கார்ப்பெண்டருடன் இவர் உரையாடினர்.

இப்போது இவர் அமர்ந்த விண்வெளி விமானம் அட்லாஸ் ஏவுகணை மூலம் வானவெளியிலே செலுத்தப்பட்டது. இவ் விண்வெளி வாகனம் ஆலயமணியின் வடிவமுள்ள "மெர்க்குரி" முகப்புக் கூண்டாகும். இதன் பெயர் "நம்பிக்கை-7". ஏவுகணையும் விண்வெளிக் கப்பலும் சேர்ந்த நீளம், 95 அடி. புறப்படும் பொழுது ஏவுகணை, விண்வெளிக்கப்பல், இவற்றின் எடை 130 டன். வந்து இறங்கிய விண்வெளிக் கப்பலின் எடை ஒரு டன்.

ஆர்பி—1 எனப்படும் உயர்தர மண்ணெண்ணெயும், காற்றில்லாத விண்வெளியில் எரிபொருளை எரிய வைக்க திரவ நிலையிலுள்ள ஆக்ஸிஜனும் (லாக்ஸ்) அட்லாஸ் ஏவுகணைக்கு எரி பொருளாகப் பயன்படுகிறது. அட்லாஸ் ஏவுகணைப் பாகங்களின் எண்ணிக்கை 3 லட்சத்திற்கும் அதிகம்.

மே மாதம் 14-ம் தேதி புறப்பட வேண்டிய பயணம், ராடார் நிலையமொன்றில் ஏற்பட்ட இயந்திரக் கோளாறு காரணமாக 24 மணி நேரம் கழித்துத் தொடங்கியது. இந்திய நேரப்படி மே 15-ம் தேதி மாலை 6-34 மணிக்கு மேஜர் கூப்பர் விண்ணிலே கிளம்பினர். கனவரால் முனையிலிருந்து புறப்பட்ட கூப்பர் அட்லாண்டிக் பெருங்கடல், ஆப்ரிக்கக் கண்டம், இந்தியப் பெருங்கடல், மெக்ஸிகோ, அமெரிக்கத் தென் பகுதி இவற்றுக்கு மேலாக விண்வெளியில் பறந்தார்.

விண்வெளி விமானியொருவர் விண்வெளிக் கப்பலுக்குள்ளிருந்த வண்ணம் பயணம் செய்வதை டெலிவிஷன் மூலம் நேரில் காணும் வாய்ப்பு முதன் முதலாக இத்தடவை அமெரிக்க மக்களுக்குக் கிடைத்தது. கூப்பரையும், அவர் பிரயாணம் செய்த விண்வெளிக் கப்பலின் உட்புறத் தோற்றத்தையும், கூப்பர் வெளி

யே நீட்டும் டெலிவிஷன் காமிரா காட்டிய பூமியின் காட்சியையும் மக்கள் தங்கள் இல்லங்களில் இருந்தவாறே டெலிவிஷன் திரையில் கண்டு களித்தனர்.

### "நம்பிக்கை—7"

கூப்பர் தமது விண்வெளிக் கப்பலுக்கு "நம்பிக்கை—7" என்று பெயர் வைத்திருக்கிறார். கடவுளிடத்திலும் தாய் நாட்டின் மேலும் அவருக்குள்ள நம்பிக்கையை இது எடுத்துக் காட்டுகிறது. அவரும் அவரது சக விமானிகளும் தங்கள் ஸ்தாபனத்திடம் கொண்டிருக்கும் நம்பிக்கையை இது குறிப்பிடுகின்றது. ஆள் ஏறிச்செல்லும் விண்வெளிக் கப்பல் பயணம் வெற்றியடையுமாறு பணிபுரியும் பலருடைய ஒத்துழைப்புக்கு உறுதிகூறும் தன்னம்பிக்கையும் இது விளக்குகின்றது. முதன்முதலாக விண்வெளி விமானிகளாகப் பயிற்சி பெற்ற அமெரிக்கர் ஏழுபேர் என்பதைக் காட்டவும் 'நம்பிக்கை-7' என்று பெயரிட்டிருக்கிறார்.

### திகைப்பும், பரபரப்பும்

கூப்பரின் இருதயத் துடிப்பு, இரத்த அழுத்தம், மூச்சு வேகம் வெப்ப நிலை இவற்றைத் அளந்து பதிவு செய்து, முகப்புக் கூண்டிலுள்ள கருவிகள் பூமிக்கு அனுப்பி வந்தன. கூப்பருடன் வானொலி மூலம் பேசி வைத்திய நிபுணர்கள் அவருடைய உடல் நிலையையும், உள நிலையையும் உன்னிப்பாகக் கவனித்து வந்தனர்.

ஒன்பதாவது சுற்றுமுதல் 14 வது சுற்று முடிய சுமார் 7½ மணி நேரம் அவர் தூங்கினார். அவரது இருதயத் துடிப்பு நிமிடத்திற்கு 58 முதல் 60 வரையிருந்தது; திடீரென்று 12-வது சுற்றின் போது, இது 100 ஆக உயர்ந்த போது பூமியிலுள்ள வைத்திய நிபுணர்கள் திகைத்துப் பரபரப்பு அடைந்தனர். பின்னர் இது சகஜ நிலைமைக்குக் குறைந்தது. கூப்பர் கனவு கண்டிருக்க வேண்டும் என்றும், அதனால்தான் இருதயத் துடிப்பு அதிகரித்தது என்றும், வைத்தியர்கள் கருதினார்கள். ஆனால் பின்னர் கிடைத்த தகவலிலிருந்து கூப்பரின் வானவெளி உடையின் வெப்பநிலை 20 டிகிரி அதிகரித்ததாயும், இதனைக் கூப்பர் சீர்படுத்தி விட்டு மீண்டும் உறங்கியிருக்கக்கூடும் என்றும் கருதினர்.

### மலைபோலத் தோன்றிய இடையூறு......

கார்டன் கூப்பர் 22 தடவை சுற்றிய பின், விண்வெளியிலிருந்து மே 17-ம் தேதியன்று, இந்திய நேரப்படி அதிகாலையில் 4-52 மணிக்கு, மிட்வே தீவுக்கருகே பசிபிக் பெருங்கடலில் அவரது விண்வெளிக் கப்பல் வந்திறங்கியது.

விண்வெளிப் பயணத்தின் போது அவரது கப்பல் 29 மணி நேரம் எவ்வித இடையூறுமின்றி சரிவர பூமியைச் சுற்றி வந்தது. ஆனால் கடைசி 5 மணி நேரத்தில், பூமிக்குத் திரும்புவதற்கான ராக்கொட்டைச் சுடும் சமயத்தில் தான் ஆபத்து ஏற்பட்டது. தாமே இயங்கும் கருவிகளில் கோளாறு ஏற்பட்டது. ஆகவே கைகளால் இயக்கித்தான் அவர் பூமிக்குத் திரும்பி வரவேண்டும் என்று பூமியிலிருந்து கட்டளை அனுப்பப்பட்டது. கணப்பொழுதில் ஒரு முடிவுக்கு வரும் ஆற்றல் படைத்த கார்டன் கூப்பர், சிறிதும் மனங் கலங்காது, "சரி!" என்று பதில் குரல் கொடுத்து விட்டு, கருவிகளைத் தானே இயக்கி விண்வெளிக் கப்பலை காற்று மண்டலத்திலும் நளினமாக இறக்கி பூமிக்கு வந்து சேர்ந்தார். பூமியிலிருந்து கலனல் ஜான் கிளென்

இந்த ஆலோசனையைத் தெரிவித்தார். இந்த ஆபத்தான கட்டத்தில் கூப்பர், கிளென், ஆகிய இருவரிடையே நடைபெற்ற உரையாடல்களை அமெரிக்க மக்கள் தங்களுடைய ரேடியோ, டெலிவிஷன் சாதனங்கள் மூலம் கேட்டனர். இந்த ஆபத்தினின்றும் நீங்கி விண்வெளி விமானி கூப்பர் பத்திரமாகக் கீழே இறங்கப் பிரார்த்திக்குமாறு கேட்டுக்கொள்ளப்பட்டது.

காற்று மண்டலத்தில் விண்வெளிக்கப்பல் இறங்கும் பொழுது தான் பேராபத்து ஏற்படக்கூடும் என்பதை நாம் அறிவோம். செங்குத்தாக அல்லது முறை பிறழ்ந்து இறங்க நேரிட்டால் விண்வெளிக் கப்பல் காற்றில் உராய்ந்து சூடேறி எரிந்து சாம்பலாகி விடும். ஆனால் அதிக வெப்ப நிலையைத் தடுத்து இந்த விபத்தைத் தவிர்க்கும் பொருட்டு, தகடுகள் பொருத்தப் பட்டிருக்கின்றன. இத்தகடுகள் பாதுகாப்புத் தரும்படி சூக்குமமாக விண்வெளிக் கப்பலை இறக்க வேண்டும். இப்பெருஞ் சோதனையில் கார்டன் கூப்பர் வெற்றி அடைந்தார்.

விண்வெளிக் கப்பல் "நம்பிக்கை-7" தண்ணீரில் வந்து விழுந்ததும், "கியர் ஸார்ஜ்" என்னும் யு. எஸ். விமானந் தூக்கிக் கப்பல் அதனருகே வந்து நின்றது. முன்கூட்டி ஏற்பாடு செய்திருந்தபடி மீட்புப் படையைச் சேர்ந்த சிலர் தண்ணீரில் குதித்து விண்வெளிக் கப்பல் மிதப்பதற்கான கருவியைப் பொருத்தினர். கூப்பர் பத்திரமாக இருக்கிறார் என்பதை வெளியே தெரிவிக்கப் பச்சையொளி சுடப்பட்டது. பின்னர் விண்வெளிக் கப்பலிலிருந்து கூப்பர் சிரித்துக் கொண்டே வெளியே வந்துவிமானந் தூக்கிக் கப்பலின்தளத்தை அடைந்தார்.

ஜனாதிபதி கென்னடியும், கூப்பரின் மனைவியும் அவருடன் டெலிபோனில் பேசி அவரது அற்புத யாத்திரைக்குப் பாராட்டுத் தெரிவித்தார்கள். கூப்பரை வைத்திய நிபுணர்கள் பரிசோதித்து அவர் உடல் நிலை நன்றாக இருப்பதாகத் தெரிவித்தனர்.

கூப்பர் மொத்தம் 6 லட்சம் மைல்கள் பறந்திருக்கிறார். 105 நாடுகள் மீது சென்றிருக்கிறார். விண்வெளியில் அவர் 34 மணி, 24 நிமிட நேரம் இருந்திருக்கிறார்.

விண்வெளிப் பயணத்தின் போது அவர் தண்ணீர் நீக்கிய பொடி செய்யப்பட்ட உணவை உண்டார். அதில் தண்ணீர் சேர்த்து பக்குவம் செய்துகொண்டார். முன்னர் சென்ற விண்வெளி வீரர் போலவே தின்பண்டம் போன்ற உணவுகளை அவர் கடித்துத் தின்றார்.

இந்தியாவின் மீது அவர் பறந்தபோது, 160 மைல் உயரத்திலிருந்து இமயமலைத் தொடரைக் கூப்பர் கண்டதும் "ஆகா, என்ன அற்புதக் காட்சி! மறக்க முடியாத காட்சி! கிராமங்களிலிருந்து புகைப்படலம் வந்து கொண்டிருப்பதைக் காண்கிறேன்!" என்று விவரித்தார்.

## விண்வெளியில் பரிசோதனைகள்

விண்வெளியிலே கூப்பர் பல பரிசோதனைகளைச் செய்தார். விண்வெளிக் கப்பலிலிருந்து பந்து போன்ற ஒரு சிறிய கோளத்தை வெளியே செலுத்தினார். அதில் அணைந்து அணைந்து எரியும் இரண்டு விளக்குகள்

இருந்தன. இக்கோளம் தம்மை விட்டு 13 மைல் தூரம் விலகிச் சென்ற பிறகும் அதன் விளக்குகள் தமக்குத் தெரிந்தன என்று அவர் கூறினார். இப்பரிசோதனை, பின்னர் விண்வெளிக் கப்பல்களின் பாகங்களை இணைத்துப் பொருத்தும் ஏற்பாட்டுக்கு உதவும்.

தென் ஆப்ரிக்காமீது அவர் செல்லுகையில், 30 லட்சம் மெழுகு வத்திப் பிரகாசமுள்ள விளக்கொன்று அவர் சுழலும் பாதையை நோக்கி ஒளி வீசியது. இதனை அவர் கண்டுகொண்டார். விண்வெளியில் பயணம் செய்வோருக்கு தரை ஒளிப் பிழம்புகள் உதவுமா என்று கண்டறிவதே இச் சோதனையின் நோக்கமாகும்.

கதிரியக்கம் பற்றியும் அவர் ஆராய்ந்தார். நிறைய படப்பிடிப்பு வேலையும் இருந்தது. கிழக்கில் பொழுதுவிடியு முன்பும், மேற்கில் அடைந்த பின்பும் தோன்றும் விண்ணொளியைப் படம் பிடிப்பதக்கு அவர் விண்வெளிக் கப்பலுக்கு வெளியே வர்ணப் படக் காமிராவை நீட்டினார். அவ் விண்ணொளி, தூசியில் பட்டு ஒளிரும் சூரிய ஒளியே என்பது விஞ்ஞானிகளின் கருத்து. இது சரிதானா என்பதைக் கூப்பர் பிடித்த வர்ணப் படங்களைப் பார்த்து முடிவு கட்டலாம்.

சூரியனது ஒளியினால் பிரகாசிக்கும் பூமியின் அடிவான வட்டத்தையும், காற்று மண்டலத்தையும் விண்ணிலிருந்து 77 மில்லி மீட்டர் காமிரா கொண்டு அவர் படங்கள் பிடித்தார். சந்திரனுக்குச் செல்லும் விண்வெளி விமானிக்கு பூமியின் அடிவான வட்டம் வழிகாட்டியாக இருக்குமா என்று காண்பதே இச் சோதனையின் நோக்கமாகும். பூமியின் மேக மூடாக்கு முதலியன பற்றிப் படம் பிடித்ததும் அவர் செய்த பணிகளுள் ஒன்றாகும்.

விண்வெளிக் கப்பலின் வெளிப்புறத்தில் மூன்று இடங்களில் சதுரமாக மூன்றுவித வர்ணங்கள் பூசப்பட்டிருந்தன. எந்த வர்ணம் அதிக வெப்பம் தாங்கும் என்பதைக் காணவே இந்த ஏற்பாடு.

### பலூன் விரியவில்லை!

விண்வெளிக் கப்பலிலிருந்து நூறு அடிக் கம்பியின் நுனியில் ஒரு பிரகாசமான ஆரஞ்சு வர்ண பலூனை பறக்கவிட முயன்றார். அது விண்வெளியில் எப்படி மிதந்து வருகிறது என்று கூப்பர் விவரிக்க வேண்டும். அதேசமயம் ஒரு புகைப்படக் கருவியும் பலூனைப் படம்பிடித்துக்கொண்டிருக்கும். புகைப்படத்தையும், கூப்பரின் வர்ணனையையும் ஒப்பிட்டுப் பார்க்கவேண்டும் என்று திட்டமிட்டிருந்தனர். ஆனால் பலூன் விரியாமல் போயிற்று. கூப்பர் பன்முறை முயன்றும் பிரயோஜனமில்லை. ஆகவே இம் முயற்சியைக் கைவிட பூமியிலிருந்து கட்டளை அனுப்பப்பட்டது.

### ருஷ்யாவின் வியக்கத்தக்க சாதனை

ருஷ்யா இவ்வாண்டு ஜூன் 15-ம் தேதி இந்திய நேரம் மாலை 5.30 மணிக்கு 5-வது விண்வெளி வீரர் பைகாவ்ஸ்கியை வான வெளியிலே அனுப்பியது.

விண்வெளிப் பயணம் மனிதனுடைய உறுப்புகளை எவ்விதம் பாதிக்கக்கூடியது என்பதைக் கண்டறிவதும், நீண்ட காலம் பயணம் செய்யும் பொழுது வைத்திய ஜீவ இயல் ஆராய்ச்சி நடத்துவதும், விண்வெளிக் கப்பலை இயக்குவதற்குத் தகுந்தபடி அபிவிருத்தி செய்வதும், இந்தப் புது விண்வெளிப் பயணத்தின் நோக்கமாகும்.

கர்னல் பைகாவ்ஸ்கியின் வயது 29. இவருக்கு மனைவியும், 3 மாதத்தில் ஒரு குழந்தையும் உண்டு. 1952-ம் ஆண்டில் மாஸ்கோவில் செகண்டரி பள்ளிப் படிப்பை முடித்தார். அதே வருடத்தில் விமானகிளப்பில் சேர்ந்து பயிற்சி பெற்றார். பின்னர் ராணுவத்தில் அவர் சேர்ந்தார். இதன் பிறகு எஞ்சினீயரிங் கழகத்தில் பயின்று 1955-ம் ஆண்டில் விமானப் படைக் கல்லூரியில் பட்டம் பெற்றார். நான்கு வருடங்களுக்குப் பின், இவர் போர் விமானமோட்டியாகப் பணியாற்றத் தொடங்கினார். இவர் சென்ற விண்வெளிக் கப்பலின் பெயர் "வாஸ்டாக்-5".

## வானவெளியில் வனிதை

இரண்டு தினங்கள் கர்னல் பைகாவ்ஸ்கி உலகைச் சுற்றி வந்தபின், மற்றொரு விண்வெளிக் கப்பலில் ("வாஸ்டாக்-6") வாலன்டினா தெரேஷ் கோவா என்னும் பெயருடைய வனிதை அனுப்பப்பட்டாள். வானவெளியிலே சென்ற முதல் பெண்ணாக இவள் புகழ்பெற்றாள். இவளுக்கு வயது 26.

தனது 17-வது வயதில் இவள் டயர் தொழிற்சாலையில் வேலை பார்த்தாள். பின்னர் தாயார் வேலை செய்து வந்த பஞ்சாலையில் சேர்ந்தாள். 1959-ஆம் ஆண்டில் பயிற்சி கிளப்பில் சேர்ந்து பாரசூட்டிலிருந்து குதிக்கப் பழகிக் கொண்டாள். 126 தடவை பாரசூட்டிலிருந்து குதித்து சாதனை புரிந்தார். பின்னர் வானவெளிப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்தாள். இவ் விஷயம் ரகசியமாகவே வைக்கப்பட்டிருந்தது.

இவளது தகப்பனார் டிராக்டர் டிரைவர். அவர் இரண்டாவது உலக யுத்தத்தில் கொல்லப்பட்டார்.

முதல் விண்வெளி வீரர் யூரி ககாரின் விண்வெளியில் சென்ற செய்தி இவளது கவனத்தைக் கவர்ந்தது. அது முதல் விண்வெளியில் பறக்கவேண்டும் என்பது இவளது ஆசை. அந்த ஆசை இப்பொழுது நிறைவேறியுள்ளது.

பூமியிலிருந்து அதிவேகத்தில் விண்வெளிக் கப்பல் புறப்பட்டபோது ஏற்பட்ட அதிர்ச்சியையும், பின்னர் வானவெளியில் ஏற்பட்ட எடையற்ற நிலைமையையும் அவள் நன்றாகத் தாங்கிக் கொண்டாள். முதன்முதலாக ருஷ்யாமீது பறந்தபோது அவள் சிரித்துக்கொண்டே சென்றதை ருஷ்யர்கள் டெலிவிஷனில் கண்டனர்.

விண்வெளியில் பறக்கும் முதல் ருஷ்ய வனிதையை குருஷேவ் பாராட்டியதற்கு இவள் பதில் செய்தி அனுப்பினாள்.

பின்னர் 5-வதுவீரர் பைகாவ்ஸ்கியும், 6-வது வீரப் பெண்மணியான தெரேஷ் கோவாவும் கூட்டாக குருஷேவுக்குச் செய்தி அனுப்பினார்கள். வானவெளியில் சுற்றிக் கொண்டிருக்கும் பெண் தெரேஷ்கோவாவை டெலிவிஷனில் பார்த்தவர்கள் அவள் எதிரே ஒரு பென்ஸில் விரைந்து பாய்ந்து குட்டிக்கரணம் போட்டுக்கொண்டிருந்ததைக் கண்டனர். எடையற்ற நிலை காரணமாக பென்ஸில் அக்கப்பலில் மிதந்து கொண்டிருந்தது.

விண்வெளி இரட்டையர் தம்தம் விண்வெளிக் கப்பலில் குறித்த நேரத்தில் உறங்கி, 7 அல்லது 8 மணி தூக்கத்திற்குப்பின் விழித்தெழுந்தானர். வேளாவேளைக்கு உணவருந்தினர்.

இவ்விண்வெளிக் கப்பல்கள் ஒரு சமயம் நெருங்கி வந்தன. இடையே 3 மைல் தூரம்தான்

இருந்தது. ருஷ்யப் பெண் வான வெளியில் சென்றதை அறிந்த மக்கள் ஆனந்தக் கூத்தாடினார் கள்.

பைகாவ்ஸ்கியின் விண்வெளிக் கப்பல் 88-4 நிமிடங்களுக்கு ஒரு முறை பூமியைச் சுற்றி வந்தது. தெரேஷ்கோவாவின் வான வெளிக் கப்பல் 88.3 நிமிடங் களுக்கு ஒருமுறை பூமியைச் சுற்றியது.

பைகாவ்ஸ்கியின் கப்பல் பூமி யிலிருந்து 108 முதல் 137 மைல் உயரத்தில் சுற்றியது. தெரேஷ் கோவாவின் கப்பல் 113 முதல் 144 மைல் உயரத்தில் சுற்றி வந்தது.

வானவெளியிலிருந்து வாலன்டினாவின் குரலை தோடா பூரிலுள்ள அகில இந்திய ரேடியோவின் ஆராய்ச்சி நிலையம் பதிவு செய்து புது டில்லியிலிருந்து ஜூன் 18-ம் தேதி இரவு ஒலிபரப்பியது. இந்தியா அருகே வாலன்டினா பறந்தபோது இக்குரல் பதிவு செய்யப்பட்டது.

தெரேஷ்கோவா விண்வெளியி லிருந்து தனது அன்னைக்கு அனுப்பிய செய்தியொன்றில், தம் மைப் பற்றி தமது தாயார் கவலைப் படாதிருக்கும்படி தெரிவிக்குமாறு கேட்டுக்கொண்டாள்.

தனது வானவெளி கப்பல் நன்றாகச் சுற்றிவருவதாகவும், ருஷ்ய மக்களால் கட்டப்பட்ட இக் கப்பலில் தமக்கு முழு நம் பிக்கை உண்டுஎன்றும் கூறினாள். தனக்குப் பணித்த கடமையை உறுதியுடனும், முழுத் திறமை யுடனும் நிறைவேற்றப் போவ தாகவும் கூறினாள்.

பைகாவ்ஸ்கி 5 தினங்களும், வாலன்டினா 3 தினங்களும் விண் வெளிப் பயணம் செய்தபின் ஜூன் 19-ம் தேதி பத்திரமாக ஏற்கனவே நிர்ணயிக்கப்பட்ட பிரதேசத்தில் (காகண்டாவில்) தரையிறங்கினார்கள்.

பைகாவ்ஸ்கி பூமியை 82 தடவை சுற்றிவிட்டார். இவர் பிரயாணம் செய்த தூரம் சுமார் 21,87,500 மைல் 85 தடைவ சூரியோதயத்தைக் கண்டார். இவர் முந்திய சாதனைகள் யாவற் றையும் மிஞ்சிவிட்டார்.

தெரேஷ்கோவா 49 தடவை பூமியை வலம் வந்துவிட்டாள். பாபோவிச் சுற்றியதைவிட ஒரு தடவை அதிகமாகச் சுற்றினாள். இவள் பிரயாணம் செய்த தூரம் 12,40,000 மைல். பெண்களும் விண்வெளிப் பயணத்தில் ஆண் களுக்குச் சரிசமமாக சாதனை புரியமுடியும் என்பதை இவள் நிரூபித்துவிட்டாள். விண்வெளி இரட்டையர் பத்திரமாகத் தரை யிறங்கினர் என்ற செய்தியை ருஷ்ய மக்கள் சந்தோஷ ஆர வாரம் செய்து வரவேற்றனர்.

இவ் விண்வெளி வீரர்களின் அரிய சாதனை உலக விஞ்ஞானி களுக்கு மட்டுமின்றி நம்மைப் போன்ற சாதாரண மக்களுக்கும் சந்திரமண்டல யாத்திரை கை கூடிவருவதாக நம்பிக்கையளிக் கின்றது. 1968-ம் ஆண்டு மனி தன் சந்திரனில் இறங்கத் திட்ட மிட்டு வருகிறார்கள். இன்னும் 18 மாதங்களில் ஒரே விண்வெளிக் கப்பலில் இருவர் அமர்ந்து செல் லும் அமெரிக்க 'ஜெமினித்' திட்ட மும் உள்ளது.

இவ் விண்வெளிப் பயணத் தினால் ஒரு புதிய உலகம் உரு வாகிக் கொண்டிருக்கிறது என் இப் புதிய உலகில் அமைதியும், சுபீட்சமும் நிலவும் என்று நம்புவ தாகவும், இந்தியப் பிரதமர் நேரு குறிப்பிட்டிருப்பது உலக மக்க ளின் சிந்தனையைத் தூண்டும் என்பதில் ஐயமில்லை.

# உடம்பைப் பக்குவம் செய்தல்

டாக்டர் எல். என். ஜிச்சோரயேவா

உடல் நலம் குன்ருமல், நோய்களை எதிர்த்து நிற்கும் சக்தி பெற்று, நீண்ட ஆயுட் காலமுடையவராக வேண்டு மானுல், உடம்பைத் தக்கபடி பக்குவம் செய்வது அவசியம்,

புறச் சுற்றுச்சார்பில் ஏற்படும் மாறுதல்களுக்கு ஏற்ப உடம்பு தன்னைத் திருத்திக் கொள்வதற்கு அதற்குள்ள ஆற்றலை உயர்த்தும் பொருட்டு உடம்பைப் பக்குவம் செய்து கொள்வது அவசிமாகிறது.

பக்குவம் செய்வதற்கான முறைகளை ஒழுங்காகவும் தொடர்ச்சியாகவும் பின்பற்ற வேண்டும்.

பக்குவம் செய்வதற்கான முறைகளில் முக்கியமானதொன்று உடற் பயிற்சி. தினமும் தவருது உடற் பயிற்சி செய்ய வேண்டும். விளையாட்டுப் போட்டிகளில் பங்கெடுத்துக் கொள்ள வேண்டும், ஆலைகளிலும் அலுவலகங்களிலும் வேலைகளுக்கு இடையில் குறிப்பிட்ட நேரங்களுக்கு சில நிமிடங்களுக்கு சில வகை உடற் பயிற்சிகளை மேற்கொள்ள வேண்டும். வேலையின் போது ஓய்ந்திருக்கும் தசை நார்களுக்கு இப்பயிற்சிகள் வேலை கொடுப்பதாக இருக்க வேண்டும், வேலையின் போது மேற்கொள்ளப் படும் இப்பயிற்சிகள் வேலை ஆற்றலை அதிகரிக்கச் செய்வதுடன் அவரவரது வேலைகளின் காரணமாய் ஏற்படக்கூடிய நோய்களிலிருந்து பாதுகாப்பும் அளிக்கின்றன.

கதிரவன் ஒளியில் குளிப்பதால் வளர் சிதைவு மாற்றங்கள் துரிதப் படுத்தப் படுகின்றன. வியர்வையும் அதிகமாகிறது. இதனுல் இரத்த ஓட்டம் அதிகரிப்பதுடன், நரம்பு அமைப்பும் வலுவடைகிறது, வெறும் வயிற்றில் கதிரவன் ஒளியில் குளிப்பது நல்லதல்ல. காலை உண்டிக்குப் பின் ஒன்றரை மணி நேரம் கழித்து கதிரவன் ஒளியில் மல்லார்ந்து படுக்க வேண்டும். முதலில் 5 நிமிடங்கள் படுத்திருக்க வேண்டும். நாளடைவில் படிப்படியாக ஒரு மணி நேரம் வரை படுத்திருப்பதற்குப் பழகிக் கொள்ளலாம். உடம்பின் எல்லா பகுதிகளிலும் கதிரவன் ஒளி சீராகப் படும்படி மாறி மாறி மல்லார்ந்தும் குப்புறவும் படுத்துக் கொள்ளவேண்டும். வெப்ப நாடுகளில்காலரிகளில் வெப்பத்தைக் கணக்கிட்டு எவ்வளவு நேரம் இவ்வாறு கதிரவன் ஒளியில் படுத்திருக்க வேண்டு மென்

பதை நிர்ணயித்துக் கொள்ள வேண்டும்.

கதிரவன் ஒளியில் குளித்த பிறகு நிழலில் சில நிமிடங்கள் படுத்து காற்றிலே குளிப்பது நல்லது. இதன் பின் நீரில் (முடியுமானால் ஆறு அல்லது கடலில்) குளிக்க வேண்டும்.

காலை 7 மணி முதல் 9 மணி வரை கதிரவன் ஒளியில் குளிப்பது நல்லது. இவ்வாறு குளிப்பதால் உடல் நலம் அதிகரிக்கிறது, பசி அதிகரிக்கிறது, போதிய அளவு தூங்க முடிகிறது. தலை வலி, சோர்வு முதலியவை ஏற்படுமானால், கதிரவன் ஒளி அளவுக்கு மீறியதாகி விட்டது என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

வெறும் உடம்புடன் காற்றில் படுத்திருக்க வேண்டும். காற்றின் வெப்பம் 20 முதல் 22 டிகிரி சென்டிகிரேடிற்குக் குறைவாகக் கூடாது. இந்நிலையில் 10 முதல் 15 நிமிடங்கள் வரை காற்றிலே படுத்திருக்கலாம். சிறிது சிறிதாக நேரத்தை அதிகரித்துச் செல்லலாம். காற்றுக் குளிப்பால் வளர் சிதைவு மாற்றமும் இருதயமும் நரம்பு அமைப்பும் மேம்படுகின்றன. வேலை ஆற்றல் அதிகரிக்கிறது.

குளிர் நீரில் குளிப்பதானது உடம்பைப் பக்குவம் செய்வதற்கான சிறந்த வழிகளில் ஒன்றாகும். சளி பிடிப்பது குறைந்து போய்விடும். உடம்பை நன்றாகத் தேய்த்துக்குளிக்கவேண்டும். உடல் வெப்பத்திற்குச் சமமான வெப்பமுள்ள நீரில் குளித்துப் பழகிக் கொண்டு பிற்பாடு நீரின் வெப்பத்தைச் சிறிது சிறிதாகக் குறைத்துச் செல்ல வேண்டும்.

காலையில் உடற் பயிற்சிகளை முடித்துக் கொண்டு காற்றிலே குளிக்க வேண்டும். 12 டிகிரி செண்டிகிரேடுக்குக் கீழ் குளிராயுள்ள நீரில் நல்ல உடல் நலமும் பக்குவமு முள்ளவர்கள் மட்டுமே குளிக்க வேண்டும்.

நோய்களுக்கு இலக்காயினோர் டாக்டரைக் கலந்து கொண்டு தான், உடம்பைப் பக்குவம் செய்வதற்கான பயிற்சிகளை மேற்கொள்ளவேண்டும்.

— ❋ —

**நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்**
**வாய்நாடி வாய்ப்பச் செயல்**

—திருக்குறள்

பாரதியார் மூன்று தமிழ்ப் புலவர்களைப் பாராட்டிப் பாடினுர். அந்த மூவரிலே ஒருவர் மொழியை முன்னே வைத்துப் பாடினுர். மற்ருெருவர் நாட்டை முன்னே வைத்துப் பாடினுர். இன்னெருவரோ சமுதாயத்தை முன்னே வைத்துப் பாடினுர். இப்படி ஓர் இலட்சியத்தை வைத்துப் பாடுவதே இலக்கியம்!

# இலக்கியம்!

இலக்கியம் என்ருல் என்ன? உயர்ந்த குறிக்கோளைச் சிறந்த சொற்களால் அழகாக அமைப்பதே இலக்கியம். அது கவிதையாகவும் இருக்கலாம்; உரை நடையாகவும் இருக்கலாம். பேச்சு வழக்கிலும் இருக்கலாம்; அல்லது இவை கலந்தும் இருக்கலாம்,

இலக்கியம் எது?

அதை விளக்கிச் சொல்ல வடமொழிச் சொற்களால் கூற வேண்டியிருக்கிறது, இலட்சணம் என்பது இலக்கணம், இலட்சியம் என்பது இலக்கியம். இலட்சியம் என்பது குறிக்கோள். அரங்கின்றி வட்டாட முடியாது. அதைப்போல் இலட்சணம் வரம்பையுடையது, ஒரு சட்டதிட்டத்தோடு அமைக்கப் பட்ட இலக்கியம்தான் அழகு பெறும்.

அடுத்த கேள்வி, எது முந்தி? இலக்கணம் முந்தியா? இலக்கியம் முந்தியா?

கோழி முந்தியா? முட்டை முந்தியா? மரம் முந்தியா? விதை முந்தியா? என்பதைப் போல்தான் இதுவும். ஆனுல் நான் கண்ட முடிவுப்படி இலக்கியம்தான் முந்தி. இலக்கணம் பிந்தி. பல இலக்கியங்களைப் பார்த்த பிறகுதான் அறிஞர்கள் இது இது இருக்க வேண்டும், இது இது கூடாது என்று முடிவு செய்திருக்க வேண்டும். அத்தகைய வரம்பைத்தான் நாம் இலக்கணம் என்கிருேம்:

அடுத்தது எது நல்ல இலக்கியம்? யார் யாருக்கு எது எது பிடிக்குமோ அவையவை நல்ல இலக்கியங்களாகப் படலாம், சிறப்பாகச் சொல்லப் போனுல் நாட்டை முன்னே வைத்து, மொழியை முன்னே வைத்து, சமூகத்தை முன்னே வைத்து எழுதப்பட்ட இலக்கியங்களே நல்ல இலக்கியங்கள், அவை என்றும் அழியாமல் நிலைத்து நிற்கும்.

இதற்கு நான் சான்றில்லாமல் கூறவில்லை. பாரதியாரை உங்களுக்குத் தெரியும். தமிழ், சமஸ்கிருதம், ஆங்கிலம், இந்தி, பிரெஞ்சு முதலிய பல மொழிகள் தெரிந்தவர் அவர். அவர் கூறுகிறார் : "யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல், வள்ளுவர் போல், இளங்கோவைப் போல் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை! உண்மை; வெறும் புகழ்ச்சி யில்லை!" என்று. தமிழுக்கு உயர்வு தந்த அந்தக் கவிதையின் உள்ளே தேடத் தேட, அறிவுக்கு உணவு கிடைத்தது. மூன்று பேரை மட்டும் சிறப்பாகச் சொல்லுவானேன்? அவர்கள் மூவர்தான் இலக்கிய கர்த்தாக்கள்.

கம்பன் மொழியை முன்னே வைத்துக் காவியம் தீட்டிய புலவன்.* இளங்கோவடிகள் சேர, சோழ, பாண்டியத் தமிழகத்தை—நாட்டை முன்னே வைத்துக் காவியந் தீட்டிய கவிஞர். வள்ளுவர் மக்கள் சமூகத்தை முன்னே வைத்து இலக்கியம் செய்தவர். எனவே உண்மையான இலக்கிய அறிஞர்களைப் புகழ்ந்து கூறினான், பாரதி.

இனி இந்த இலக்கியங்களின் உள்ளே சென்று சில சுவைகளைக் காண்போம்: ஒரே ஒரு பொருள் பல புலவர்களிடம் புலவகையில் அகப்பட்டுத் திணறியதுண்டு, அதில் 'இமை'யும் ஒன்று, அந்த இமை இந்தப் புலவர்களிடம் என்ன பாடுபட்டிருக்கிறது என்பதைப் பார்ப்போம். முதலில் இந்த முப்பெரும் புலவர்களிடையே தேடுவோம்.

முதலில் கம்பன்,

யாகசாலையைக் காக்க விசுவாமித்திரன், தசரதனைக் கேட்டு இராம இலட்சுமணரை அழைத்துச் செல்கிறான். இராமனும் இலட்சுமணனும் அந்த யாக சாலையை எப்படிக்காத்தார்கள்? "கண்ணிணை இமை காப்பது போல்" காத்தார்களாம். தூசி முதலியன ஏதாவது வந்தால், இமை உடனே மூடிக் கொள்ளும், இதை நோக்கும் போது இமைக்கு ஒரு கண் தனியே இருக்கிறதோ என்ற ஐயப்பாடும் எழும். அபாயம் ஒன்றை கண் அறியுமுன்பே,கண்ணிமை அறியும். கீழ் இமை எப்போதும் இருந்த இடத்திலேயே இருக்கும். ஆனால் மேல் இமை இறங்கி வந்து கீழ் இமையைத் தொட்டுத் தொட்டுக் கண்ணீர் வராமல் காக்கும். அதைப் போல் இலட்சுமணன் யாகசாலை வாயிலில் நின்ற இடத்திலேயே நின்றானும். மேல் இமை அடிக்கடி இமைப்பது போல இராமன் அந்த யாகசாலையைச் சுற்றிச்சுற்றி வந்து, "தம்பீ! ஜாக்கிரதை, தம்பீ! ஜாக்கிரதை!" என்று ஒரு தட்டுத் தட்டி விட்டுப் போவானும். இதைவிட அழகான தோர் உவமையை வேறு யார் சொல்ல முடியும்?

அடுத்தது வள்ளுவன்.

தமிழர்களுக்குத் தெரிந்ததெல்லாம் காதலும், வீரமும் தானே! முதலில் காதலைக் காண்போம்.

தலைவி தன் தோழியிடம் கூறுகிறாள்: "அடீ! என் கணவர் என் கண்ணிலேயே இருக்கிறாரடீ, கண்ணுக்குள்ளேயும் போக மாட்டாரடீ, இமைத்தாலும் வருந்த மாட்டாரடீ. அவ்வளவு நுண்ணியர் என் காதலர்!"

"கண்ணுள்ளிற் போகார்,
இமைப்பிற் பருவரார்
நுண்ணியரெம்
காத லவர்."

எப்படி வள்ளுவரிடம் இமை படும் பாடு!

இனி வீரம்! "அடேய்!" என்று ஒருவன் விழித்து விறைத்துப் பார்த்து நின்றான். எதிரி உடனே அவனைப் பார்த்து வேல் ஒன்றை வீசினான். விழித்த கண்கள் வேலைக் கண்டு இமைத்தன. "கண் சிமிட்டி விட்டாய் என்னடா உன் வீரம்?" என்று உடனே எதிரி கேட்டு விட்டானாம். வேலைக் கண்டு கண் இமைப்பவனுக்கு வீரத்துடன் விழித்துப் பார்க்க உரிமை இல்லை என்பது வள்ளுவர் கருத்து.

"விழித்தகண் வேல்கொண்
டெறிய அழித்திமைப்பின்
ஒட்டன்றோ வன்கண்
அவர்க்கு?"

என்பது திருக்குறள்.

இனி இளங்கோவடிகளைக் காண்போம். ஆய்ச்சியர் குரவை. பெண்களெல்லாம் சேர்ந்து ஆடுங் கூத்து, ஒருத்தி சொல்லுகிறாள் :

"பெரியவனை, மாயவனைப்
பேருலக மெல்லாம்
விரிகமல உந்தியுடை
விண்ணவனைக் கண்ணும்
திருவடியுங் கையுந்
திருவாயுஞ் செய்ய
கரியவனைக் காணாத
கண்ணென்ன கண்ணே?

உயர்ந்த சொற்கள்; சிறந்த அமைப்பு; அழகான நயம்; மறுக்க முடியாத வாதம். உலகுக்கெல்லாம் பெரியவனைக் காணாத கண் என்ன கண்? என்கிறாள் அவள். அதற்கு மற்றொருத்தி என்ன பதில் சொல்லுவாள்?

"கண்ணிமைத்துக் காண்பார்தம்
கண்ணென்ன கண்ணே?"

எவ்வளவு நயம்! இமைத்துக் காண்கின்ற கண் என்ன கண்? இமையாது கண்டு மகிழவேண்டுமாம்!—இது இளங்கோவடிகளிடம் இமை படும்பாடு; இவை அனைத்தும் சிறந்த இலக்கியங்கள்.

"உலகில் வாள்முனையே வலிமையுடையது" என்று நெப்போலியன் சொன்னான். "பேனா முனையே உயர்ந்தது" என்று வால்டேர் சொன்னான். "நா முனையே சிறந்தது" என்று

நாவலர்கள் சொன்னுர்கள். பிறகு வந்த பெர்னுட்ஷா, மூன்றையும் விட "அறிவு முனையே வலிமையுடையது" என்று கூறினுர். ஆனுல் இவர்களுக்கெல்லாம் முற்பட்ட திருவள்ளுவர் சொன்னுர்: "ஒழுக்க முனையே வலிமையுடையது" என்று. 'ஒழுக்கம் ஒன்றே விழுப்பம் தரும்", 'ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை' என்ருர். இது அனைவரையும் விட ஒரு படி உயர்ந்தது, இவற்றிலிருந்து நான் சொல்லுகிறேன் :

"ஒழுக்கமில்லாதவன் வாளோ, ஒழுக்கமில்லாதவன் பேனவோ, ஒழுக்கமில்லாதவன் நாவோ, ஒழுக்கமில்லாதவன் அறிவோ—வலிமை பெருது, பெற்ருலும் நிலைத்து நிற்காது, நாட்டை, மொழியை, சமூகத்தை முன்னே வைத்து ஒழுக்கமுள்ளவன் செய்யும் தொண்டும் எழுத்தும், பேச்சும் நிலைத்து நின்று வெற்றி பெறும். "இது இலக்கியம் இயற்ற விரும்பும் எழுத்தாளர் மனத்திற்கொள்ள வேண்டிய கருத்தாகும்."

[சென்னை ஒய். எம். சி. ஏ. பட்டி மன்றத்தில், முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. வி. அவர்கள் ஆற்றிய சொற்பொழிவின் சில பகுதிகள், திரட்டியவர் : கெ. பக்தவத்சலம்.]

— o —

## உணவுண்ட தெய்வம்

பிள்ளை யில்லாத ஒரு பெண் ஒரு மரத்தைப் பிள்ளைப் பேறுவேண்டித் தொழுது வந்தாள். பிள்ளை பிறந்தது. அந்த மரத்தெய்வத்திற்குப் படைக்க அவள் சோறு கொண்டு போனுள். மரத்தின் அடியில் தெய்வக்களை பொருந்திய ஓர் ஆடவன் அமர்ந்திருந்தான். அந்த மரத்திற்குரிய தெய்வம் அவனே எனக் கருதிய பெண் சோற்றை அவன் முன் படைத்தாள். அவனும் அதை ஆவலோடு அள்ளியள்ளி யுண்டான்.

சோறு படைத்தவள் சுஜாதை. அள்ளி யுண்டவர் புத்த பெருமான்.

சுஜாதை அவரைத் தெய்வமென்று நம்பியது சரிதானே!

# சிறுவர் பகுதி





**கணபதி**

தொந்திக் கணபதி வாவாவா
தொல்லை தீர்ப்பாய் வாவாவா
சந்திக் கணபதி வாவாவா
சாந்தி கொடுப்பாய் வாவாவா

ஆனை முகனே வாவாவா
அன்பின் உருவே வாவாவா
பானை வயிற்றனே வாவாவா
பண்பின் திருவே வாவாவா

துதிக்கைக் கணபதி வாவாவா
துன்பம் தீர்ப்பாய் வாவாவா
துதிக்கும் கணபதி வாவாவா
தூய்மை கொடுப்பாய் வாவாவா











# ஆற்றுத்தேவன் மகள்

*நாரா நாச்சியப்பன்*

கிரேக்க நாட்டின் ஒரு பகுதியில் ஓர் ஆறு ஓடுகிறது. அந்த ஆற்றின் இரு பக்கத்திலும் அடர்த்தியான காடு ஒன்று இருக்கிறது. அந்த ஆற்றுத் தேவனின் மகள் பெயர் இயோ என்பதாகும். இயோவுக்கு அந்த ஆற்றங்கரைக் காட்டில் சுற்றித் திரிவதே பொழுது போக்காக இருந்தது.

வானுலகின் அரசனான ஜுபிடர் தேவன் பூவுலகிற்குஇறங்கி வந்த போது ஒருநாள் இயோவைச் சந்தித்தான். அவள் பேச்சும் அழகும் அவனைக் கவர்ந்தன. அதனால், அவன் அடிக்கடி வந்து அவளோடு கூடவே திரிந்து பேசிக்கொண்டிருந்துவிட்டுப் போவான். தன்னோடு பழகுபவன் ஜுபிடர் தேவன் என்பது இயோவுக்குத் தெரியாது. ஏனெனில் அவன் ஒரு பையனைப் போல் உருமாறி வந்து அவளுடன் திரிந்தான். தன் கூடச் சேர்ந்து சுற்றுவதற்கும் பேச்சுத் துணைக்கும் நல்ல பையன் கிடைத்தான் என்று எண்ணி மகிழ்ச்சி கொண்டிருந்தாள்.

வானுலகின் அரசியான ஜுனோவிற்கு இயோ மீது வெறுப்பேற்பட்டது, ஜுபிடர் தேவன் தன்னைத்தவிர வேறு எந்தப் பெண்ணுடன் பேசினாலும் பழகினாலும் அந்தப் பெண் அவளுக்குப் பகையாகி விடுவாள். ஒருநாள் ஜுனோதேவி, ஜுபிடர் தேவனும் இயோவும் ஒன்றாக இருக்கும்போது நேரில் பார்த்துவிட வேண்டுமென்று பூவுலகிற்கு இறங்கி வந்தாள். அவள் கோபத்தோடு முகத்தைச் சுழித்துக் கொண்டு வந்தபோது பூவுலகமே இருண்டு போய் விட்டது.

தேவதைகளுக்கு நடக்கப் போகும் நிகழ்ச்சிகளெல்லாம் முன்கூட்டியே தெரியும். ஜுபிடர் தேவனுக்கும் தன் மனைவி வருகிறாள் என்ற செய்தி முன் கூட்டியே தெரிந்து விட்டது. இயோவுடன் பேசிக் கொண்டிருந்த அவன், ஜுனோ அவளுக்கு ஏதாவது கெடுதல் செய்வாள் என்று எதிர்பார்த்து, அவளை உடனே ஒரு பசுவாக மாற்றிவிட்டான். ஜுனோதேவி ஆற்றங்கரையில் வந்து இறங்கியபோது, தன் கணவன் பக்கத்தில் ஒரு வெள்ளைப் பசு புல் மேய்ந்து கொண்டிருப்பதைத் தவிர வேறு எதையும் பார்க்க முடியவில்லை. அதனால் அவள் தன் கோபத்தை யடக்கிக் கொள்ள வேண்டி வந்தது.

ஆனால் ஜுனோ ஒரு நொடியில் உண்மையை உணர்ந்து விட்டாள். அவள் ஜுபிடர்



தேவனை நோக்கி அந்தப் பசுவைத் தனக்குப் பரிசாகக் தரும்படி கேட்டுக் கொண்டாள், அவன் கொடுக்க விரும்பாவிட்டாலும் மறுக்க முடியவில்லை.

பசு உருவில் இருந்த இயோவை ஜனோ பிடித்துக்கொண்டு போனாள். "பெண்ணே, இப்பொழுது நீ என்னிடம் அகப்பட்டுக் கொண்டாய்!" என்று அவள் அந்தப் பசுவைப் பார்த்துக் கூறினாள். பிறகு தன் வேலைக்காரனை ஆர்கஸ் என்பவனை அந்தப் பசுவுக்குக் காவல் வைத்தாள். ஆர்கஸ் சிறந்த காவலாளி, அவனுக்கு நூறு கண்கள் இருந்தன, அவற்றில் ஐம்பது கண்கள் திறந்திருக்கும் போது மற்ற ஐம்பது கண்கள் உறங்கும். அவை விழித்துக் கொள்ளும்போது மற்றவை உறங்கும். ஆகவே, அவன் எப்போதும் விழித்துக் கொண்டேயிருப்பான்.

பசு உருவில் இருந்த இயோ பகலில் எங்குவேண்டுமானாலும் மேயும்படி அவிழ்த்து விடப்பட்டாள். இரவில் ஒரு மரத்தில் கட்டிவைக்கப் பட்டாள். எப்போதும் ஆர்கஸ் அவளைப் பார்த்துக் கொண்டே இருந்தான்.

இயோ பகலில் தான் சுற்றித் திரியும் காட்டுக்கு வருவாள், அவள் தன் உரு மாறியதைக் கண்டு பெரும்பீதி கொண்டிருந்தாள், அவள் தோழிமாரான நீர்த்தேவதைகளுக்கு அவளை அடையாளம் தெரியவில்லை. அவள் தந்தையான ஆற்றுத் தேவனுக்கே அவளைத் தெரியவில்லை. அவளால் வாய்திறந்து சொல்லவும் முடியவில்லை. அவள் எப்போது வாய் திறந்தாலும் "அம்மா" என்பதைத் தவிர வேறு சொல் வெளிப்படவில்லை. ஆகவே அவள், ஆற்று மணலில் தன் காலால், தன் கதையை எழுதித் தன் தந்தைக்குக் காட்டினாள். அதைப்படித்துப் பார்த்துவிட்டு அவர் ஓவென்று கதறி இயோவின்

கழுத்தைக் கட்டிப் பிடித்துக் கொண்டு அழுதார். நடந்ததையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த ஆர்கஸ் உடனே அவர்களைப் பிரித்து விட்டான்.

இயோவை வேறொரு புல்வெளிக்கு ஓட்டிக் கொண்டு சென்று அங்கு மேய விட்டு விட்டு அவன் ஒரு மலையுச்சியில் போய் உட்கார்ந்து கவனித்துக் கொண்டிருந்தான்.

ஜூபிடர் தேவன் இயோவைக் காப்பாற்றிவிட வேண்டுமென்று எண்ணினார். ஆகவே, அவர் மெர்க்குரி தேவனை அழைத்து ஆர்கசைக் கொன்று விடும்படி கட்டளையிட்டார்.

மெர்க்குரி தேவன் ஓர் ஆட்டிடையன் போல் உருமாறி காட்டில் திரிந்த ஆடுகளையெல்லாம் ஓட்டிக் கொண்டு ஆர்கஸ் இருந்த இடத்திற்கு வந்தான். அங்கு வந்ததும் நாணல்தட்டையால் செய்த புல்லாங்குழலைஎடுத்து அவன் ஊதினான். அந்த இசையில் மனத்தைச் செலுத்திய ஆர்கஸ், "அடே இடைப்பையா! உன் ஆடுகள் இங்கேயே மேய்ட்டும். நீ என் அருகில் வந்து உன் குழலை ஊது" என்று கேட்டுக்கொண்டான்.

மெர்க்குரித் தேவன் அவன் அருகில் சென்று எவ்வளவு அருமையாகக் குழல் ஊதியும் அவன் நூறு கண்களையும் தூங்க வைக்க முடியவில்லை. ஆர்கஸ் அவனை நோக்கி, 'தம்பீ, இவ்வளவு அருமையாக இசை எழுப்பும் இந்த ஊதுகுழல் உனக்கு எப்படிக்கிடைத்தது?" என்று கேட்டான்.

ஊதுகுழல் ஏற்பட்ட கதையைப்பற்றி மெர்க்குரி தேவன் சொல்லத் தொடங்கினான்.

முன்னொரு காலத்தில் ஒரு காட்டில் ஒரு வனதேவதை இருந்தாள். அவள் பெயர் குழலி என்பதாகும். ஆட்டிடையர்களின் தெய்வமான பான்தேவன் ஒருநாள் அவளைக் கண்டான்.



அவள் அழகைக் கண்டு அவளோடு சிறிது நேரம் பேசிக் கொண்டிருக்கலாம், என்று அவன் அவளை நோக்கி வந்தான்.

அவனுடைய ஆட்டுக் கால்களை யும், விசித்திரமான காதுகளை யும், பயங்கரமான தோற்றத் தையும் கண்டு குழலி அங் கிருந்து ஓடினாள். அவன் விரட் டிக் கொண்டு ஓட, அவள் பயந்து அலறிக் கொண்டு ஓடினாள்.

ஓடிவந்த குழலி ஒரு சிற்ருே டைக்கு வந்து சேர்ந்தாள். அவள் அங்கிருந்த நீர்த்தேவ தைகளை உதவிபுரியும்படி வேண்டினாள். அந்தத் தேவ தைகள் உடனே அவளைத் தண் ணீருக்குள் இழுத்துக் கொண் டார்கள். மறுவினாடியில் அவள் மூழ்கி மறைந்த இடத்தில் நாணல் தொகுதியொன்று வளர்ந்து விட்டது. விரட்டிக் கொண்டு வந்த பான், ஓடையில் விழுந்த குழலியைப் பிடிப்பதற் காகக் கை நீட்டிய போது அவன் கையில் நாணல்கள்தான் பிடிபட்டன. அவளை யிழந்த துயரத்தில் அவன் ஒரு பெரு மூச்சு விட்டான்.



அந்தப் பெரு மூச்சு நாணல் தட் டைகளின் ஊடே புகுந்து ஓர் இனிய இசையை எழுப் பியது. அந்த இசை யில் மயங்கிய பான், அந்த நா ணல்களில் சிலவற் றை அறுத்தெடுத் து, மெழுகு வைத்து அடைத்து ஓர் இசைக் கருவியாக் கினான். அந்த இசைக் கருவிக்கு நீரில் மறைந்து போன குழலியின் நினைவாகக் குழல் என்று பெயர் வைத்தான்.

இந்தக்கதையில் சொக்கி, ஆர்கஸ் திறந்திருந்த ஐம் பது கண்களையும் மூடிக் கொண்டு நன்ருகக் குறட் டைவிட்டு உறங்



கிஞன். இதுதான் சமயமென்று மெர்க்குரித் தேவன் ஆர்கசின் தலையை வெட்டிக் கொன்று விட்டான்.

தன் நம்பிக்கைக்குப் பாத்திர மான வேலைக்காரன் இறந்தது குறித்து ஜுனே பெரிதும் வருத்தப்பட்டாள், இதற்குக் காரணம் இயோ தானென்று நினைத்து அவளை மேலும் துன் புறுத்த முடிவு செய்தாள். அதற்காக ஒரு பெரிய பயங்கர மான ஈயை அனுப்பிஞள். அது அந்தப் பசுவின் மேல் மொய்த்துப் பெரும் தொந்தரவு செய்தது. அதன் தொந்தரவு பொறுக்க முடியாமல் இயோ ஓடிஞள். அது அவள் எங்கு போனுலும் தொடர்ந்து வந்து தொந்தரவு செய்தது. கடைசி யில் எகிப்து தேசத்து நைல் நதிக் கரைக்கு வந்து சேர்ந்த இயோ, தன்னைத் துன்பங்களி லிருந்து விடுவிக்கும்படி தேவர் களை நோக்கி மனமுருகும்படி வேண்டிக் கொண்டாள்.

ஜுபிடர் தேவனுக்கே அவள் துன்பப்படுவது கண்டு பொறுக்க முடியவில்லை. அவன் இயோவின் மேல் இரக்கம் காட் டும்படி தன் அரசியான ஜுனே தேவியைக் கேட்டுக் கொண் டான். அவளை விடுவித்தால், தான் இனி அவளுடன் போய்ப் பேசுவதில்லை என்று வாக்களித் தான். அதன் பேரில் ஜுனே அரசி மிகவும் மனமிரங்கி இயோவைப் பழைய உரு அடை யுமாறு செய்தாள். நைல் நதிக் கரையில் புதிதாகத் தோன் றிய அந்தத் தெய்வ மகளை எகிப்து நாட்டு மக்கள் கண்டார் கள். அவளுடைய ஒளிவீசும் அழகையும் மனங்கவரும் அன் பையும் கண்டு அவர்கள் அவளைத் தங்கள் அரசியாக் கிஞர்கள்.

அவள் அந்த நாட்டை மிகச் சிறப்பாக ஆண்டாள். முதுமை வந்து இறக்கும் வரையில் அவள் நீதி தவருமல் அரசு புரிந்தாள்.

கடைசியில் அவள் இறந்த பிறகு, அவளுக்கொரு சிலை வடித்து அதைத் தங்கள் கோயிலில் நிலைநிறுத்தினார்கள், அந்தச் சிலையை அவர்கள் இசிஸ் என்று அழைத்தார்கள். இயோ இறந்து நூற்றுக் கணக்கான ஆண்டுகள் கழிந்தும், இன்றும் எகிப்து மக்கள் இசிஸ் சிலைமுன்னால் மலர் படைத்தும் பிற பொருள்களைப் படைத்தும் வணங்குகிறார்கள். அழகு மிகுந்த தங்கள் பழைய அரசியின்மேல் தங்களுக்குள்ள அன்பை இன்றும் அவர்கள் காட்டிக் கொண்டிருக்கிறார்கள்.





# உப்பில்லாத விருந்து

'ரேடியோ அண்ணா'



நெடுங் காலத்துக்குமுன், துருக்கியில் ஒரு அரசன் இருந்தான். அந்த நாட்டை ஆண்ட மன்னர்களில் அவன் மிகவும் கர்வம் பிடித்தவன்; தற்பெருமை கொண்டவன்,

அவனுக்கு மூன்று மக்கள் இருந்தனர். ஒருநாள் அவன் மூவரையும் தன் கொலுவுக்கு அழைத்தான். தன்னிடம் அவர்கள் வைத்துள்ள மதிப்பை அவன் அறிந்து கொள்ள விரும்பினான்.

முதலில் மூத்தவனே சொன்னான்:

"அப்பா, இந்த உலகத்திலுள்ள பொன், வைரம், மாணிக்கம், முதலான நவமணிகளைக் காட்டிலும் தாங்களே எனக்கு உயர்ந்தவர்," என்றான்.

நடுவலவன் இனிய பொருள் களை நினைத்துக்கொண்டான்.

"தந்தையே, தாங்கள் எனக்குத் தேனினும் இனியவர், கரும்பிலும் சுவைமிக்கவர்," என்றான்.

கடைசியாக, இளைய மகன் தன் இருக்கையைவிட்டு எழுந்தான். அரசனுக்கு வணக்கம் செலுத்தினான்.

"அப்பா, என்னைப்பொறுத்தவரையில், தாங்கள் உப்பை ஒத்தவர்," என்றான்.

உப்பு என்ற சொல்லைக்கேட்டதும், மன்னன் துள்ளி எழுந்தான், அவன் கண்கள் சிவந்தன. நரம்புகள் துடித்தன. கோபம்கொண்டு சீறினான்.

"நான் நாட்டை ஆளும் வேந்தன். இணையில்லாத பெருமை வாய்ந்தவன். உப்பு ஒரு அற்பமான பொருள். அது எனக்கு ஈடாகுமா?" என்று குதித்தான். தன்னைப் பலர் முன்னிலையிலும், இளைய மகன் இழிவுபடுத்திவிட்டதாக அவன் கருதினான்.

உடனே, வேந்தன், தன் படைவீரர்களை அழைத்தான், இளைய மகனைக் கட்டி இழுத்துக்கொண்டு போய்க் கொன்றுவிடும்படி ஆணையிட்டான்.

அவன் ஒரு முரடன். பிறர் சொல்லும் அறிவுரைக்குச் செவி சாய்க்கமாட்டான். ஆகவே கொலு மண்டபத்தில் கூடியிருந்த மக்கள் அனைவரும் வாய் மூடி மௌனமாக வீற்றிருந்தனர். இருந்தாலும், அவர்கள் நெஞ்சு பதைத்தனர். அரசனுடைய கட்டளையைக் கேட்டுத் திடுக்கிட்டுப் போயினர்.

படைவீரர்களும் வருத்தம் கொண்டனர், ஆனால் மன்னனிட்ட ஆணையை மீறி நடக்க முடியாதல்லவா?

இளைய மகனை அழைத்துக்கொண்டு அவர்கள் ஊரைவிட்டுப்போனார்கள். அருகிலிருந்த காட்டை அடைந்ததும் அவர்களுக்கு ஒரு எண்ணம் தோன்றியது. அதன்படி அவர்கள் அரசகுமாரனைக் கொல்லாமல் விட்டுவிட்டனர்.

"நாங்கள் உன் தந்தையிடம் பொய் வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளுகிறோம். நீ உடனே வேறு நாட்டுக்கு ஓடிப்போ," என்று இளைஞனை அவிழ்த்துவிட்டனர்.

பிறகு, அவர்கள் அவனுடைய ஆடைகளை மட்டும் வாங்கிக்கொண்டனர். ஒரு காட்டு மிருகத்தைகொன்று, அதன் குருதியில் ஆடைகளைத் தோய்த்தனர். அவற்றை எடுத்துச்சென்று அரசனிடம் காட்டினர்.

அவன் மகிழ்ந்தான், "தன்னை ஏளனம் செய்யத்துணிந்தவன் ஒழிந்தான்," என்று ஆறுதல் அடைந்தான்.

இளவரசன், நடுக்காட்டில், தனியாக நின்றான். சுற்றிலும் உயர்ந்த மரங்கள்; முட்புதர்கள்; வனவிலங்குகள்.

அவனுக்கு அச்சமாக இருந்தது. வழியும் தெரியவில்லை. ஆனால் எதிரே ஒரு குன்று உயர்ந்து நிற்கக்கண்டான்.

அதையே குறியாக வைத்து அவன் நடந்தான். உடல் வலிக்க, கால் நோக, அவன் மலைமேல் ஏறினன். மறுபுறம் இறங்கினன், அங்கே ஒரு அழகான ஊர் தென்பட்டது. ஊரின் எல்லையில் ஒரு கிழவியின் வீடு இருந்தது.

அவள் இளவரசனைக்கண்டதும் கூர்ந்து நோக்கினள். ''ஆஹா, எத்தனை அழகான முகம்,'' என்று வியந்தாள். பிறகு அவனை அழைத்து விவரம் கேட்டாள்.

இளவரசன் உண்மையைக் கொஞ்சம் மறைத்தே பேசினன். தான் திக்கற்ற ஏழை என்று அறிமுகம் செய்துகொண்டான்.

கிழவி அவனைத் தன்னுடனேயே இருக்கும்படி வேண்டினள். ''எனக்கு வேறு துணை இல்லை, நீயும் நானும் இந்த வீட்டில் நிம்மதியாக வாழலாம்,'' என்றாள்.

இளவரசனும் ஒப்புக்கொண்டான்.

சிலநாட்களுக்குப்பிறகு, அந்த ஊர் மன்னன் இறந்துபோனன். ஆகவே அடுத்த அரசனைத் தேர்ந்தெடுக்க ஊரார் திட்டமிட்டனர்.

அங்கே ஒரு அதிசயமான பறவை இருந்தது. மன்னனைத் தேர்ந்தெடுக்க, மக்கள் அதன் உதவியை நாடுவது வழக்கம்.

ஒரு குறிப்பிட்ட இடத்தில் அனைவரும் கூடுவார்கள். பறவையைக் கூண்டிலிருந்து திறந்து விடுவார்கள். அது வட்டமிட்டுப் பறக்கும். இறுதியில் ஒருவன் தலையில் உட்காரும். ஊரார் அவனையே சிம்மாசனம் ஏற்றி மன்னனகக் கொண்டாடுவார்கள்.

அந்தத் தடவையும், மன்னன் இறந்தபின், ஒருநாள் அனைவரும் கூடினர்கள். பறவையும் வந்து சேர்ந்தது.

கிழவியும் அவளுடைய வளர்ப்புப்பிள்ளையான இளவரசனும் வேடிக்கை பார்க்கப் போனர்கள்.

கூண்டிலிருந்து விடுபட்ட பறவை, அங்குமிங்கும் பறந்தது. மக்கள் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள். கடைசியில் அது இளவரசன் தலையை நாடி வந்தது. சிறகைக் குவித்து உட்கார்ந்தது.

''வெளியூர்க்காரனுக்கு இந்தப் பதவி கொடுக்கக்கூடாது,'' என்று ஒரு சிலர் கூச்சலிட்டார்கள். அவர்களைச் சமாதானம் செய்ய, மறுநாளும் ஊரார் கூட்டம் நடத்தினர்கள். அன்றும் இளவரசன் தலையிலேயே பறவை உட்கார்ந்தது. மூன்றும் நாளும் மக்கள் சோதனை செய்தார்கள். பறவை இளவரசனையே தேடிச் சென்றது.

இளவரசன் முடிசூடினான். அந்த ஊரின் தலைவன் ஆனான். குடிகளுக்குப் பல நன்மைகள் செய்தான். பெரும் புகழும் பெற்றான்.

அப்படி இருக்கையில், ஒரு நாள் அவனுக்கு ஒரு ஆசை உண்டாயிற்று. தன் தந்தைக்கு ஆளனுப்பி, அவரை வரவேற்று விருந்துகொடுக்க விரும்பினான். தந்தையும் வந்தான். அவனுடன் அமைச்சர், சேனைத்தலைவர் ஆகிய பலரும் இருந்தனர்.

ஆனால் ஒருவராவது இளைய மகனை அடையாளம் கண்டு கொள்ளவில்லை. அவன் விரும்பியதும் அதுவே.

இரவு பெரிய விருந்து நடந்தது. இலை நிறையக் காய்கறிகள் குவிந்துகிடந்தன. ஆயினும்



விருந்தினர் முகம் சுளித்துக் கொண்டனர். ஒருவருக்கொரு வர் மெல்லிய குரலில் பேசிக் கொண்டனர். பெரியஅரச னுடைய முகத்திலும் ஏமாற்றம் தோன்றியது.

மறுநாளே அவர்கள் புறப் பட்டுச்செல்ல முயன்றனர். ஆனால் இளைய மகன் சம்மதிக்க வில்லை.

ஒருவாரம் கழிந்தது. ஒவ் வொருநாளும் விருந்து நடந்தது.. ஒவ்வொருநாளும் விருந்தினர் முகம் சுளித்தனர். கடைசியில் வாய்திறந்து கேட்டே விட்ட னர்.

''உங்கள் அரண்மனைச் சமை யலில் ஏன் உப்பே போடுவ தில்லை?'' என்று பெரிய மன் னனே வினவினான்.

மகன் அந்தத் தருணத்தைத் தான் எதிர்பார்த்துக்கொண் டிருந்தான்.

''உப்பா? அது கேவலமான பொருள் ஆயிற்றே,'' என்றான்.

'உடனே தந்தைக்கு நினைவு வந்தது. இளைய மகனைப்பற்றிய எண்ணம் எழுந்தது. அத்துடன் ஒரு சந்தேகமும் தோன்றியது.

''நீ என் மகன் அல்லவா?'' என்றான்.

''ஆம், அப்பா, நான் உங்கள் மகனேதான்,'' என்று விடை யளித்தான் இளைஞன். ''தங் களுக்கு உப்பின் பெருமையை உணர்த்தவே இந்த ஏற்பாடு செய்தேன். உப்பில்லாப் பண் டம் குப்பையிலே,'' என்றான்.

தந்தைக்கு அறிவு வந்தது. ''நவமணியும், தேனும்கரும்பும் இல்லாமல் நாம் உயிர்வாழலாம். ஆனால் உப்பு இல்லாமல் உணவு உட்கொள்ளமுடியுமா? அறு சுவையில் உப்பே சிறந்தது. வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள் உப்பு,'' என்ற உண் மை அவனுக்கு விளங்கியது. மகனை ஆரத் தழுவி, அவன் மன்னிப்பும் கோரினான்.

— ❀ —

## அழியா உடம்பு

கலைமகளை வாழ்க்கைத் துணையாகக் கொண்டவன் பிரமதேவன். அதே கலைமகளைத் தங்கள் உற்ற துணை யாகக் கொண்டவர் தமிழ்ப் புலவர். இருவர்க்கும கலை மகள் துணையாக இருந்தாலும் பிரமதேவன் தமிழ்ப் புல வர்க்கு ஈடாக மாட்டான். ஏனெனில் பிரமதேவன் செய்யும் உடல்கள் விரைவில் அழிந்து விடுகின்றன. தமிழ்ப் புலவர் செய்கின்ற நூல்களோ அழியாது புகழ் பெற்று நிலைத்துவிடுகின்றன.

குமர குருபரர்

**நாற்பத்திரேண்டு கோடி இந்திய மக்களில் இருபத்தைந்து கோடி மக்களுக்கு நாளுக்கு 50 காசுதான் வரும்படி கிடைக்கிறது. இந்த நிலை நீடித்துக் கொண்டு போனால், இந்தியாவின் எதிர்காலம் என்னகும்? ஒவ்வொருவனும் மாதம் ஐம்பது அறுபது ரூபாய் சம்பாதிக்க முடியுமானால் அது ஒரு வரப்பிரசாதம் தானே! கதர் இயக்கம் மக்களுக்கு இந்த வாய்ப்பை அளிக்கிறது. இதன் உண்மையைத் தெளிவாக விளக்குகிறது இக்கட்டுரை.**



# கதரும் இலவச நெசவுத்திட்டமும்

**ஏஸ். கிருஷ்ணமூர்த்தி**

*நம் தேசப் பிதா மஹாத்மா காந்தி அடிகள், 'கிராமச் சீரமைப்பில், கதர் - கிராமக் கைத் தொழில்களுக்கு எவ்வளவு முக்யத்வம் கொடுத்து வந்தார் என்பதை நாட்டுப்பற்றுள்ள ஒவ்வொருவரும் நன்கு அறிவர். நாடு சுதந்திரம் பெற்றபின், நம் பாரத அரசாங்கம், கதர் - கிராமக் கைத் தொழில்கள் வளர வேண்டி, 1953-ல் அகில இந்திய கதர் கிராமக் கைத்தொழில் போர்டையும், 1957-ல் அகில இந்திய கதர்-கிராமக் கைத் தொழில் கமிஷன் ஒன்றையும் ஏற்படுத்தி, கதர்-கிராமக் கைத் தொழில்களை ஊக்குவிக்க எடுத்துவரும் முயற்சிகளையும், நாட்டின் பொருளாதார மேம்பாட்டிற்கு, கதர்-கிராமக் கைத் தொழில்களின் அவசியத்தை நன்குணர்ந்து, ஐந்தாண்டுத் திட்டங்களில் அதற்குரிய அந்தஸ்தை அளித்துள்ளதையும் பற்றி ஒவ்வொரு இந்தியனும் பெருமைப்பட வேண்டும். அப்படியிருக்க, கதர் - கிராமக் கைத்தொழில்களுக்காக சர்க்கார் அளித்துவரும் சிறு உதவி பற்றியும் ஓரளவு எதிர்ப்பு உண்டாகி*

வாதப் பிரதிவாதம் நடந்து வருவது நம் துர்பாக்கியம் என்று தான் கூறவேண்டும்,

நம் நாட்டு மக்களின் போதிய வேலையின்மையையும், அதனுல் வீணுகும் மனித சக்தியின் மதிப்பையும் ஆராயும் எவரும், சர்க்கார் கதர்-கிராமக் கைத்தொழில்களுக்கு அளித்துவரும் உதவி எவ்வளவு வேகமானது என்பதையும், தர்க்க ரீதியானது என்பதையும் ஒப்புக்கொள்ளத் தயங்க மாட்டார்கள். மேலும் அதிக அளவு சர்க்காரின் உதவி கிடைக்க வேண்டுமென்றே வாதாடுவர். சர்க்கார் அளித்து வ்ரும் உதவிதான் என்ன என்பதைச் சற்று ஆராய்வோம்.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில், மொத்த பட்ஜெட் தொகையில் 0·44 சதவிகிதமான 14-82 கோடி ரூபாயும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில், 1·24 சதவிகிதமான 84 கோடி ரூபாயும், மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில், 0-78 சதவிகிதமான 92·4 கோடி ரூபாயும்தான் கதர்-கிராமக் கைத்தொழில்களுக்கு ஒதுக்கப்பட்ட, பட்டுள்ள தொகைகளாகும், என்பதை இந்த சந்தர்ப்பத்தில் குறிப்பிட ஆசைப்படுகிறேன்.

அதாவது மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களிலும் செலவு செய்யப்படும் மொத்த தொகையான ரூ. 21,900 கோடி ரூபாயில் ·87 சதவிகிதமான 191·22 கோடி தொகையே, கதர்-கிராமக் கைத்தொழில்களுக்கென ஒதுக்கப்பட்டுள்ளது என்பதை நாம் மனதில் கொள்ளவேண்டும். இதை அதிகம் என்றோ, அனுவசியம் என்றோ கூறுவது பொருத்தமாகாதென்பது அனைவரும் ஒப்புக் கொள்வர்.

இங்கிலையில், கடந்த 10 ஆண்டுகளில் கதர்-கிராமக் கைத்தொழில்கள் அடைந்த அபிவிருத்தியைப் பற்றி சற்று ஆராய்வது அவசியம்.

1953-54-ல் உற்பத்தியான 115-63 லக்ஷம் சதுர கஜம் துணி 1962-63-ல், 896-12 லக்ஷம் சதுர கஜமாக உயர்ந்திருக்கிறது. அதாவது 676 சதவிகிதம், சுமார் 7 மடங்கு உற்பத்தி அதிகரித்திருக்கிறது. அஃதேபோல் கதர்த் தொழிலில் ஈடுபட்டுள்ளோர் எண்ணிக்கையிலும், 53-54-ல் 3·79 லக்ஷம் பேராக இருந்தது 62-63-ல் 25·35 லக்ஷமாக உயர்ந்துவிட்டது.

ஆனுல் ஆயிரமாயிரம் கோடிக் கணக்கில் முதலீடு செய்யப்பட்டு இயங்கிவரும் கனரகத் தொழில்களில் இன்றைய தேதியில் ஈடுபட்டுள்ளவர்கள் எண்ணிக்கை, நம் நாட்டு மக்கள் தொகையில் ஒரு சதவிகிதத்திற்கும் குறைவுதான். உதாரணமாக கடந்த 10 ஆண்டுகளில் மட்டும் கனரகத் தொழில்களில் சுமார் 817 கோடி பணம் அதிகமாக முதலீடு செய்தும், வேலை வாய்ப்பு கிடைக்கப்பட்டவர்களின் எண்ணிக்கை சுமார் 9·98 லக்ஷம் பேர்தான். இதிலிருந்து வேலை வாய்ப்பளிப்பதில், கதர்-

கிராமக் கைத்தொழில்களுக்குள்ள சக்தி எவ்வளவு மகத்தானது என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும்.

கதர் உற்பத்திக்கு விரோதமாகச் சொல்லப்படும் மற்றொரு காரணம், நூல் நூற்போருக்குப் போதிய ஊதியம் கிட்டுவதில்லையென்பது. இது பற்றி ஆராயும் போது, நம் நாட்டின் பிரத்யக்ஷ நிலைமையை நாம் சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

சமீபத்தில் எடுக்கப்பட்ட புள்ளி விபரங்களிலிருந்து, நம் நாட்டின் கிராமங்களில் வாழும் மிகக் குறைந்த வருமானம் பெறும் 10 சதவிகிதம் ஏழை மக்கள், மாதம் 1-க்கு செலவு செய்வது சராசரி ரூபாய் எட்டே தானென்றும் அதாவது நாள் 1-க்கு 27 காசுகள் எனவும் தெரியவருகிறது. கிராம மக்களை கணக்கில் கொண்டு பொதுவாகப் பார்த்தால், 70 சதவிகிதம் பேர் நாள் 1-க்கு 50 பைசாவுக்கும் குறைவாகவே செலவு செய்ய முடியுமென்றும் கணக்கிடப் பட்டிருக்கிறது. இதையே வேறு விதமாகச் சொல்லப் போனால், நம் நாட்டில் சுமார் 25.19 கோடி மக்களுக்கு நாள் 1-க்கு 50 காசுகளுக்குமேல் செலவு செய்ய வசதியில்லை என திட்ட வட்டமாகத் தெரிகிறது. நிலைமை இப்படியிருக்க, சாதாரணமாக, கிஸான் ராட்டையில் குறைந்தது மாதத்திற்கு 20 முதல் 25 ரூபாய் வரையிலும், அம்பர் ராட்டையில் 50 முதல் 65 ரூபாய் வரையிலும், சம்பாதிக்க இயலும் என்பதினால், அதை நாடெங்கும் பரப்புவது அவசியம் என்பதில் எவருக்கேனும் சந்தேகம் இருக்கக் கூடுமா?

அதோடுகூட நாட்டு மக்களுக்கு போதிய அளவு வேலை வாய்ப்பின்றி, மக்கள் தங்கள் சக்தியை வீணாக்கும் விபரீதத்தை நாம் எண்ணும்போது, நம் மனம் வேதனைப்படுகிறது. சமீபத்திய கணக்குப்படி, சுமார் 2 கோடி மக்களுக்கு நாள் ஒன்றுக்கு, ஒரு மணிக்கும் குறைவாகவே வேலையிருப்பதாகவும், 4-5 கோடி மக்களுக்கு நாள் 1-க்கு 4 மணிக்கும் குறைவாகவே வேலையிருப்பதாகவும் தெரிய வருகிறது. இதனால் நம் தேசத்திற்கு எவ்வளவு பெரிய நஷ்டம் என்பதை நாம் எளிதில் அறிந்து கொள்ளலாம்.

நம் நாட்டு மக்களின் வாழ்நிலை இப்படியிருக்க கிராம மக்கள் தங்கள் உடைத் தேவைக்காக, தாங்கள் உழைத்து சம்பாதித்த பெரும்பகுதி தான்யத்தை விற்க வேண்டியிருக்கிறது. இதனால் உணவுக்கே வசதியின்றி, வலிவு குன்றி விவசாயம்கூட சரிவர செய்ய முடியாது கடன் பட்டு அல்லல் படுகின்றனர். வேலையின்மை ஒரு புறம், கிராம மக்களிடம் சுரண்டல் மறுபுறம்.

இதையறிந்தே பூஜ்ய விநோபாஜி அடிகள், கதரின் இறுதிப் போர் எனக்கூறி, இலவச நெசவுத் திட்டத்தைப் புகுத்தியுள்

ளார். இதனுல், நம் நாட்டில் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளவர்களும், நூற்பை ஓர் உபதொழிலாகக் கொள்ளவும்,வேலையற்று இருப்போருக்கு வேலை வாய்ப்பளிக்கவும்கிராமங்களில் கதரின் விலையைக் குறைக்கவும் சாத்தியமாவதால் இதை ஓர் வரப் பிரசாதம் என்று சொன்னுல் மிகையாகாது.

### இலவச நெசவுத் திட்டம் என்றுல் என்ன?

இந்தத் திட்டத்தின் கீழ், ஒருவர் தானே பருத்தியையும் பயிர் செய்து, நூல் நூற்கவும் செய்தால், அதற்குண்டான துணி அவருக்கு 1 பைசாகூட செலவில்லாமல் கிடைக்கும். சாதாரணமாக 1 கிலோ பஞ்சிலிருந்து 30 சிட்டங்கள் நூற்கலாம். அதிலிருந்து 6 மீட்டர் துணி நெய்யலாம். இதை ஓர் வரப்பிரசாதம் என்று சொன்னுல் பொருத்தமாகாதா என்று கேட்கிறேன்.

இரண்டாவதாக, சொந்தமாக பருத்தி பயிர் செய்ய இயலாதவர்கள், பஞ்சை விலைக்கு வாங்கி நூற்றாலுங்கூட, இலவச நெசவு கிடைப்பதால், அன்னுருக்கு ஒரு சதுர கஜ துணிக்கு ஆகும் செலவு 37 பைசா தான்.

பெரும்பாலோர் தற்போது— கதருக்கு எதிரிடையாகப் பேசுவதன் காரணம் அது சற்று விலை கூடுதலாயிருக்கிறது என்பதே. இனி அந்த வாதமும் எடுபடாது போகும். ஏனெனில், கிராமங்களில் உற்பத்தியாகும் கதர்த் துணி கிராமங்களிலேயே விற்கப்படுவதால், இதன் பொருட்டு ஆகும் போக்கு வரத்துச் செலவு, பெருமளவில் கிட்டங்கி வசதிகள் அதற்குண்டான சிப்பந்திகள் கூலி முதலானவைகள் இருக்கமாட்டாதாதலால், நெசவுக்கு உண்டான செலவு முழுவதையும் சர்க்கார் ஏற்றுக் கொள்ளுகிறபடியால், கதரின் விலை பெருமளவுக்கு குறைந்து போகும். மீட்டர் 1-க்கு சுமார் ஒரு ரூபாய்க்கும் குறைவாகவே இருந்து வரும். நகரங்களிலும், ரிபேட் முறை நீக்கப்பட்டாலும், இலவச நெசவின் காரணத்தால், விலை இப்பொழுதுள்ளதைவிட அதிகமாகாது.

இலவச நெசவுத் திட்டத்தின் முக்கிய நோக்கம், கிராமங்களிலுள்ள கோடிக்கணக்கான வேலையற்றோருக்கு வேலை வாய்ப்பளிப்பதும், கிராம மக்களும் கதரை வாங்கும் வகையில் உற்பத்தி கேந்திரங்களில் கதரின் விலையைக் குறையச் செய்வதும், விவசாயத்தில் ஈடுபட்டுள்ளவர்கள், நூல் நூற்பை ஓர் உபதொழிலாகக் கொண்டு, ஓய்வு நேரங்களில் நூற்று தங்களுக்கு வேண்டிய உடைத் தேவையைத் தாங்களே பூர்த்தி செய்து கொள்வதுமாகும். இது மாத்திரமின்றி துணி வாங்குவதினுல், கிராமத்தை விட்டு வெளியே போகும் உணவுப் பொருள்களை கிராமங்களிலேயே நிறுத்தி வைப்பதன் மூலம், மக்கள் 3 வேளை வயிறார

உண்பதற்கும் வசதியேற்படும். விவசாயத்தில் ஈடுபட்டுள்ள மக்கள் சற்று அதிகமாகவே உடல் வலிமைபெற்று, உழைக்க விவசாயமும் அதிக அபிவிருத்தி அடையும். விவசாயமும்-கதர்-கிராமக் கைத்தொழில்களும் ஒன்றோடொன்று இணைந்து செயல்பட்டு, கிராம மக்கள் தங்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக் கொள்ள வேண்டுமென்ற நோக்கத்தோடு, தற்போது நம் பாரதத்தில் சுமார் 1500 இடங்களில் அமல் நடத்தப்படும் "கிராம எகாயி" திட்டத்தின் அடிப்படை அம்சங்களில் ஒன்றும் வெற்றிகரமாக நிறைவேற்ற இயலும்.

இந்தத் திட்டம் வெற்றிபெற கிராம மக்களிடையே கூட்டுப் பொறுப்பும், சமூக உணர்ச்சியும் ஏற்பட வேண்டும். சமூகத்தில் எளிய இழிவு நிலையிலுள்ள லக்ஷக் கணக்கான நூற்போரும் நெய்வோரும் வாழ வேண்டுமென்ற மனப்பான்மை ஏற்பட வேண்டும்.

இத்தருணத்தில் காந்திஜி அவர்கள் நமக்கு பூரண ஸ்வதேசி என்பதற்கு கூறிய விளக்கத்தை நம் நினைவில் கொள்வது மிகவும் அவசியமும், பொருத்தமானதுமாகும். அதாவது அண்டை வீட்டாருக்கு நாம் செய்ய வேண்டிய கடமையே ஸ்வதேசி என்பது, விலைகளில் சிறிது ஏற்றமிருந்தாலும், தரத்தில் ஓரளவு குறையிருந்தாலும் அதைப் பொருட்படுத்தாது, கிராமத்தில் உற்பத்தியாகும் கிராமப் பொருட்களையே நாம் உபயோகிக்க வேண்டுமென்ற உறுதியும், சங்கற்பமும் கொள்ளவேண்டும்.

நம் நாட்டில் கதரும்-கிராமக் கைத்தொழில்களும் வளர்ந்தால், அதன் மூலம் வர்க்க பேதமற்ற ஓர் ஒப்பில்லாத சமுதாயம் அமைந்து, காந்திஜி கண்ட கிராம ஸ்வராஜ்யம் ஏற்படும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.



# புதிய சிந்தனைகள்

மு. அண்ணாமலை

ஆண்டவனை உயர்ந்த நிலையில் வைத்துப் பாட வேண்டுமென்பதே அந்தக்காலத்து சம்பிரதாயமாக இருந்துவந்தது. மாணிக்கவாசகர் ஆண்டவனைக் காதலியாக வைத்துப் பாடினார். அதற்குப் பொருள் கூற முற்பட்டவர்களோ, இறைவனைக் காதலியாகக் கூற நடுங்கினர். தத்துவப் பொருள் கூற முற்பட்டனர். பாரதியாரோ ஆண்டவனைச் சேவகனாகவே கொண்டு பாடிவிட்டார். இந்தப் பெருமித உணர்வுக்கும் தெய்வீக உணர்வே காரணமாகும். பாரதியின் கவிதை முழுவதும் ஒரு காம்பீரியம் வெளிப்படுகிறது. இதற்கும் தெய்வீக உணர்வே காரணமாகும்.

'பாரதி இலக்கியத்தில் புதிய சிந்தனைகள்' என்று கூறிய வுடன் 'அவருக்கு முன்பு நிலவப் பெறாத சிந்தனைகளா?' என்று ஒரு கேள்வியைத் தூக்கிப் போட்டுத் தர்க்க ரீதியாகத் தாண்டிக்குதிக்கும் விற்பன்னர் களை விட்டுவிட்டு இத்தலைப் பின் உள்ளோட்டத்தை அனு தாபத்துடன் வாங்கிக் கொள் ளும் அன்பர்களின் முன்னர் இதனை எடுத்துரைக்கின்றேன்.

பழைய பாரம்பரியத்தை நன்கு மதித்து நெடுநாள் தொடர்ந்து வரும் வழிவழிப் பண்பாட்டை அறிந்து அதே நேரத்தில் புதிய சமுதாயத்தில் தோன்றிய நெருக்கடிகளையும் தேவைகளையும் அனுதாபத் தோடு உணர்ந்துகொண்டு பழைய எண்ணங்களை வேண் டிய வேண்டிய இடங்களிலெல் லாம் தீவிரமாகப் புதுப்பித்துக் கொண்ட பெருமை பாரதிக்கு உண்டு. பழைய எண்ணங்களை வேண்டாத இடத்தில் முற்றி லும் சாடித் தூக்கி எறிந்து விட்டுப் புதிய எண்ணங்களை நிலை நாட்டிய பெருமையும் அவ ருக்கு உண்டு. அவருடைய

காலத்தில் தலைதூக்கித் தளிர் விட்ட புதிய சிந்தனைகளை வர வேற்று திறந்த உள்ளத்தோ டும் ஆர்வத்தோடும் அவற்றை வாங்கிப் புரிந்துகொண்டு மிகத் துணிவாக எடுத்துக் கூறிய பெருமையும் அவருக்கு உண்டு.

`பாரதியாரிடம்காணப்பெறும் இத்தகைய போக்குகள் அவர் சிறுவருக்காகப் பாடிய ஆத்தி சூடியிலேயே பளிச்சென்று முளைவிட்டு முகிழ்த்திருப் பதனைக் காணலாம். "படை முகத்துநில்லாதே" என்பது முந் திய வாசகம். அக்கருத்தினைப் பாரதியாரால் ஒத்துக்கொள்ள முடியவில்லை. கோழைத்தனத் தைப் பச்சையாக எடுத்துச் சொல்லி அதற்கு அங்கீகாரமும் பாதுகாப்பும் தேடி இலட்சிய வலிமை ஏற்றிப் பெருமைப் படுத்திக் கொள்ளும் அவல முயற்சியை இத்தொடர் காட்டு கிறது. படை முகத்தின் முன் நின்று போரிடுவதில்லை என்று எல்லா வீரர்களும் முடிவு செய்துவிட்டால் தன்னுடைய பாதுகாப்பையும் தன் நலத்தை யுமே பெரிதாகக் கருதிவிட் டால், உயிரின் மீது உள்ள ஆசையால் வீரர்கள் அனைவரும் கோழைகளாகிப் பின் வரிசை களை அடைத்துக் கொண்டால் ஒரு நாட்டின் பாதுகாப்பு என் னாகும்? வீரர்கள்' எல்லாம் படைக்குப் பிந்துவது என்ற மகாமந்திரத்தை மேற்கொண்டு விட்டால் வீரத்தின் விளைவு தான் என்ன? எனவே படை முகத்து நில்லாதே என்ற உப தேசம் உண்மையில் சமுதாய நலத்திற்கு ஊறு விளைப்பதே ஆகும். இங்கே ஔவையாரின் கருத்தை மறுத்து பாரதியார் "முனைமுகத்து நில்", "போர்த் தொழில் பழகு", "தேசத்தைக் காத்தல் செய்" என்று ஆத்தி சூடியில் பாடினார். அது மட் டுமா? நாயைப்போல அடங்கி ஒடுங்கி வாழ்வதைப் பெருமை யாகக் கூறிக் கோழைத்தன மிக்க பணிவை அதியற்புதமான அணிகலனாக அணிந்துகொண்ட பழைய பாரம்பரியத்தைச்சாடிய பாரதி.

"ருமலி போல் வாழேல்
குன்றென நிமிர்ந்து நில்
கொடுமையை எதிர்த்து நில்
சூரரைப் போற்று
வெடிப்புறப் பேசு
கோல் கைக்கொண்டு வாழ்

எனப் பாடினார். கோல் என்பது அரசு. சுதந்திர உணர்ச்சியோடு வாழ்; உனக்கு நீயே தலைவன் என்றகருத்தையே பாரதியாரின் 'கோல் கைக்கொண்டு வாழ்" என்ற தொடர் விளக்குகிறது.

"வள்ளுவனும் புலவன், கம் பனும் புலவன்; நானும் ஒரு புல வனா; இந்த வையம் பொறுக் குமா? நானும் ஒரு பூனையைப் போன்றவன்; நாயைப் போன்ற வன்" என்று விலங்குகளின் பட்டியலில் தன்னைச் சேர்த்துக் கொண்டு அடங்கி ஒடுங்கி நான் என்ன பாடப் போகிறேன்? என்ற கேள்வியை எழுப்பிக் கொண்டு புலவர் கூட்டம் ஒதுங்கிநின்றது. அவை அடக்கம்

என்பது ஏதோ கேட்டுக் தொலைக்க வேண்டிய சடங்காக மாறி மக்கள் சலித்துப்போயிருந்த நேரத்தில் பாரதி "பாட்டின் திறத்தாலே இந்த வையத்தைப் பாலித்திட வேணும்" என்ற தன் பெருமிதமான ஆசையை மிடுக்காக இயம்பிக் காட்டினன். நாம் இங்கே காண வேண்டுவன இரண்டு. தன் பாட்டின் திறத்தினலே இந்த உலகத்தை ஆள வேண்டும் என்று நினைக்கிற காம்பீரியம் ஒன்று. அடுத்தது நெடுநாளாகக் கேட்டுச் சலித்துப் போயிருக்கும் மரபு ஒன்றைத் திடும் எனத் தாக்கி நிறுத்தி ஒரு குலுக்குக் குலுக்கி ஏதோ ஒரு புதிய மனேநிலையை அல்லது மாற்றத்தைக் கவிஞன் உண்டு பண்ணப் பார்க்கிருன் என்பதாகும்.

மக்களின் உரிமைகளும் நலன்களும் முக்கியத்துவம் பெற்று ஜனநாயக எண்ணங்கள் பரவிய காலத்தில் பாரதி வாழ்ந்தவர். ஆகையால் அவர் படைத்த பாண்டவ குலத்தோன்றல்கள் புதிய அரசியல் தத்துவங்களை எடுத்து அலசுகிருர்கள். புதிய எண்ணங்களின் வலிமையில் தோன்றிய அளவுகோலை வைத்துக்கொண்டு பழைய தருமனின் செய்கைகள் அளந்துவிமரிசனம் செய்யப் பெறுகின்றன. ஒரு நாட்டை வைத்துச் சூதாட, ஒரு பெண்ணை வைத்துச் சூதாட தருமனுக்கு என்ன உரிமை இருக்கிறது? என்று உரிமைப் பிரச்னையைக் கிளப்பி "சிச்சி, சிறியர் செய்கை செய்தான்' என்று முடிவு கட்டுகிற பாரதியின் குரலில் மலைக்கத்தக்க முரட்டுத் துணிச்சல் ஒன்று காணப் பெறுகிறது என்பது உண்மைதான். புது எண்ணங்களின் வலிமையால் அந்தத் துணிச்சலே கவிதைக்கு ஓர் அற்புதமான கவர்ச்சியையும் பொலிவையும் உண்டாக்கி விடுகிறது. புது சிந்தனைகளின் நியாய பலத்தால் நாமும் இதனை வரவேற்பதற்கு ஆயத்தமாகிறேம்.

பக்தி இலக்கியங்களில் கவிஞர்கள் இறைவனை எல்லா உறவுகளிலும் வைத்துக் கண்டிருக்கிருர்கள். ஆனல் அவர்களைக் காட்டிலும் பாரதி ஒரு படி மேற் செல்கிருர். கண்ணனைக் காதலனுகவும் காதலியாகவும் தலைவனுகவும் பல உறவுகளில் வைத்து நோக்கும் அவர் "கண்ணனை என் சேவகன்" என்று நினைந்து மகிழவும் தயங்கவில்லை. "கண்ணன் என் சேவகன்" என்று சொல்லும் போது பாரதியிடம் எந்தவித நடுக்கமும் இல்லை. அன்பின் கனத்தையும் அது ஆண்டவனையும் பக்தனையும் எவ்வளவு உறுதியாக இணைத்திருக்கிறது என்பதனையும் இங்கே கண்டு மகிழ வேண்டும்.

•

மணிவாசகர் பாடிய திருக்கோவையார் மிக மிகச் சுவை பயப்பதோர் அகப் பொருள் நூலாகும். மனிதனின் காதல் உணர்வுகளைச் சித்திரிக்கும் ஒரு

இலக்கியமாக மட்டும் அதனைக் கொள்ளச் சில ஆன்மிக மெய்யன்பர்களால் முடியவில்லை, திருக்கோவையாருக்குத் தத்துவப்பொருள் கூறியே ஆகவேண்டும் என்று கட்டாயம் ஏற்பட்டது. அவ்வாறு பொருள் விரித்துக் கூறியபோது, ஆண்டவனைக் காதலியாகவும் ஆன்மாவைக் காதலனாகவும் கூற வேண்டிய நிர்ப்பந்தம் நேர்ந்துவிட்டது. ஆண்டவனைக் காதலியாகச் சொன்னால் ஏதோ இழிவு வருவதுபோல் சிலர் அஞ்சினர். ஆண்டவனின் பரந்த மார்பிலே ஒடுங்கும் மெல்லிய பூங்கொடி ஆகிய மனிதப் பெண்ணை நினைத்துவிட்டு அதே சமயத்தில் ஆண்டவனைப் பெண்ணாகவும் ஆண்மை மிக்க காதலனாக மனிதனையும் நினைக்க அவர்கள் உள்ளம் சிறிது நடுங்கிற்று.

ஆண்டவனைக் காதலியாகக் கூட நினைத்துப் பார்க்க அஞ்சுகிற மனோ நிலையை இந்த இடத்தில் நினைத்துக்கொண்டு பார்த்தால்தான் பாரதியார் கண்ணனை என் சேவகன் என்று கூறும்போது அவரிடம் காணப்படும் மிடுக்கினை உணர முடியும். பாரதியாரிடம் காணப்படும்அப் பெருமிதஉணர்வுகூட தெய்வீக உணர்வின் வலிமையினாலும் நெருக்கத்தினாலும் பிறந்ததுவே ஆகும். எல்லா உறவுகளிலும் இறைவன் மனிதனோடு கலந்து நிற்கிறான் என்றால் நம் இக உலகப் பொருளாதார சமுதாய ஏற்றத்தாழ்வுகளை எண்ணிச் சில உறவுகளை மட்டும் இழிந்தன என்று ஏன் விலக்க வேண்டும்?

இனிப் பாரதி கண்ட பராசக்தியினைச் சிறிது காண்போம். கொற்றவை மிகப் பழைமையான தெய்வம். எனவே பழைய சமுதாயத்தின் அடையாள முத்திரைகள் அவள்மீது விழுந்திருப்பதனைக் காணலாம். இளங்கோ அடிகள் கற்றவர்களின் உள்ளத்தில் ஞானச் சுடராகவும் அன்பின் கொழுந்தாகவும்கொற்றவை நிற்கிறாள் என்பதனைக் கூறிவிட்டு அவள், கானக மக்களின் நடுவே எவ்வாறு காணப்படுகிறாள் என்பதனை வேட்டுவ வரியில் காட்டுகிறார். பண்பாடு பெறாத காட்டுமிராண்டிகளின் உள்ளத்தில் அல்லது கொள்ளை அடிப்பதனையே தொழிலாகவும் அதுவே அறநெறிக் கோட்பாடாகவும் அமைந்து விட்ட சமுதாயத்தில் உதயமாகிற பராசக்தி அவர்களின் லட்சியங்களை நிறைவேற்றிவைக்கும் ஆற்றலாகவும் அவர்களின் வாழ்க்கைத் தேர் உருண்டோட உதவும் அச்சாணியாகவுமே உருவாகிறாள். வேட்டுவ வரியில் காணப்பெறும் பராசக்தி கொள்ளையடிக்கப் போகும் மறவனுக்குத் துணையாகச் சேலையை வரிந்து கட்டிக் கொண்டு முன் வருகிறாள். நாணைத் தடவ வில்லைக் கையில் ஏந்திமறவன் ஓடும்போது கொற்றவை அவன்வில்லுக்குமுன்னே தன் கொடியைத் தூக்கிப்பிடித்துக்கொண்டு ஓடோடிச் செல்கிறாள். காட்டுமக்களின் வாழ்

வில் உதயமாகிற தெய்வம் அவர்களின் செயல் நல்லதோ கெட்டதோ அவர்களை வாழ் விக்க வேண்டி அவர்களோடு கலந்து ஏதோ ஒரு வகையில் பந்தப்பட்டுப் போய்விடுகிறது.

பாரதி கண்ட பராசக்தி அவர் காலத்தில் தூங்கிக் கிடந்த மக் களைத் தட்டி எழுப்பிஅடிமைத் தளையைப் பொடிப்பொடியாக் கக் கூடிய அதி அற்புதமான துணிகர சக்தியாக உருவெடுக்கி ருள். சுதந்திர தாகத்தை உண்டு பண்ணிப் பகையாற்றலை எதிர்த்து மோதுகிற திடத்தை யும் தெம்பையும் உடையவளாக தீராத சினத் தீயோடு குதித்துக் கொண்டிருக்கிருள். பாரதியின் துடிப்பும் துணிவும் மிக்க உள் ளத்திலிருந்து பராசக்தி தேசிய வெறியோடு வெளியே குதிக் கிருள். பராசக்திதான் பாரதத் தாயாக வடிவெடுத்துநிற்கிருள். பகைவர்களை விரட்டிச் சுதந்தி ரத்தைக் காப்பாற்ற வேண்டிய தேவை நேரும்போது சக்தியின் ஆங்காரமிக்க தரிசனம் எப்படி இருக்கிறது என்பதனைப் பாரதி காட்டுகிருர் பாருங்கள்,

"பேயவள் காண் எங்கள்
அன்னை - பெரும்
பித்துடையாள் எங்கள்
அன்னை
மாரதர் கோடி வந்தாலும்
கணம்
மாய்த்துக் குருதியில்
திளைப்பாள் — தனைச்
செறுவது நாடி
வருபவரைத் துகள்
செய்து கிடத்துவள்
தாய்
அல்லவராயின் அவரை
விழுங்கிப்பின்
ஆனந்தக்
கூத்திடுவாள்.

ஆங்காரமும் சினமும் மாறி அமைதியில் மக்கள் வாழ்க்கை நலம்அனைத்திற்கும் சக்தி பயன் பட்டு நிற்பதனையும் பாரதி காட்டுகிருர்.

மனித வாழ்வு நலம்பெற எவ் வெக் கூறுபாடுகளும் எவ்வெச் செயல்களும் வேண்டுமோ அவை அவையாகப் பாரதியின் பரா சக்தி நிற்கிருள். சுதந்திர தாகத்தை ஊட்டும் கனலாக உலகை வாழ்விக்கும் தொழி லாக, அன்பு கனிந்த கனிவாக எண்ணத்திருக்கும் எரியாக, சோம்பர் கெடுக்கும் துணிவாக பாம்பை அடிக்கும் படையாகப் பராசக்தி காணப்படுகிருள். பாரதி காணும் கடவுள் தத்து வம் மனித வாழ்வின் புதுத் தேவைகளுக்கு ஏற்பவும் சீர் திருத்த எண்ணங்களுக்கு ஏற்ப வும் இணைந்து அரிய வளர்ச்சித் தத்துவமாகவும் வாழ்விற்கு வழி காட்டும் தெய்வீக ஒளியாகவும் காட்சி தருகிறது. பெண்கள் உரிமைக்காகப் பலர் பாடுபட் டிருக்கலாம். அந்தச் சீர்திருத்த எண்ணங்கட்கெல்லாம் உயிர்த் துடிப்புள்ள கவிதை உருவம் கொடுத்து தமிழ் இலக்கிய மேடையில் ஏற்றி உலவ விட்ட வர் மகாகவி பாரதியே ஆவர்.

பித்தரே அனைத்துயிரும்
கடவுளென்று
பேசுவது மெய்யானுல்
பெண்டிரென்றும்

நித்தம் நுமதருகினிலே
குழந்தை என்றும்
நிற்பனவும் தெய்வ
மன்றோ நிகழ்த்துவீரே.

இங்கே நாம் காண வேண்டுவது ஒன்று உண்டு. அதாவது சீர் திருத்த எண்ணத்தை நிலை நாட்ட, தொன்றுதொட்டு வரும் ஆன்மீக உணர்வைப் பாரதியார் எவ்வளவு பக்கபலமாகப் பயன் படுத்திக் கொள்கிறார்; எவ்வளவு சாதுரியமாக அவற்றைத் தனக்கு ஆதரவாக்கிக் கொள் கிறார் என்பதுதான். பெண்மைக் குரிய பழைய இலக்கணத்தைத் தூக்கி எறிந்துவிட்டுப் புதுமைப் பெண்ணுக்குரிய இலக் கணத்தை பாரதியே புதிதாக எழுதிக் காட்டுகிறார்.



## உழைப்பின் பயன்.

படத்திலே ஒரு மல்லிகைப் பூ இருந்தது. பார்ப் பதற்குக் கவர்ச்சிகரமாக இருந்த அந்தப் பூவின் படத் தைக் கண்ணாடி போட்டுச் சுவரில் மாட்டி விட்டாள் பூங்கோதை. மணமே இல்லாத அந்த மல்லிகை பார்ப்பவர்களுக்கு மகிழ்ச்சியை மட்டும் ஊட்டி வந்தது.

தோட்டத்திலே ஒரு மல்லிகைப் பூ இருந்தது. முகர்ந்து பார்ப்பதற்கு மணம் அளித்து வந்த அந்தப் பூவை, பூங்கோதை மகிழ்வோடு பறித்துவந்து கூந்த லில் சூடிக் கொண்டாள். அது இரவெல்லாம் மணம் வீசி மகிழ்ச்சியை ஊட்டிவந்தது.

மறுநாட்காலை தோட்டத்து மல்லிகைப் பூ பொலி விழந்து விட்டது. பூங்கோதை அதைக் கசக்கி எறிந்து விட்டாள். வேலைக்காரி, அதைக் கூட்டி அள்ளிக் குப்பைத் தொட்டியில் போட்டுவிட்டாள்.

பயன்படாமல் படத்திலே இருந்த மல்லிகை, பயன்பட்டுப் பழாய்ப்போன மல்லிகையைப் பார்த்துப் பரிகசித்தது. இது உலக இயல்பு என்று தோட்டத்து மல்லிகை அழுதழுது அமைதி அடைந்தது!

உலகோற்பத்தியைப் பற்றி யாரார்ரோ, எப்படியெப்படியோ சிந்தித்துப் பார்த்துப் பேசித் தீர்த்துவிட்டார்கள். ஆனால் அந்த விவாதங்களெல்லாம் இன்னும் முற்றுப் பெற்றதாகத் தெரியவில்லை. உலகத்திற்கு ஒரு முடிவிருந்தால் அப்போதுதான் இந்த விவாதங்களுக்கும் முடிவிருக்கும் போலிருக்கிறது. ஆஸ்திக மனப்பான்மையோடு பல அறிஞர்களின் மேற்கோள்களைத் துணையாகக் கொண்டு காரண காரியத் தொடர்புகளை ஆராயும் இக்கட்டுரை சுவையாகவும் சில இடங்களில் நகைச் சுவையாகவும் இருக்கிறது.

# காரணமும் காரியமும்



## ந. சிதம்பர சுப்ரமணியம்



சார்லஸ் பிராட்லா (Charles Bradlargh) என்ற நாஸ்திகர், நண்பர் ஒருவரின் வீட்டிற்குச் சென்றிருந்தார். விருந்தினரை வரவேற்கும் அறையில் அழகானதொரு பூகோள உருண்டையை வைத்திருந்தார், வீட்டின் சொந்தக்காரர். நேர்த்தியாகச் செய்யப்பட்ட அந்த பூகோள உருண்டை (Globe) யின் உருவம் பிராட்லாவின் மனத்தைக் கவர்ந்தது, "மிகவும் அழகாகச் செய்யப்பட்டிருக்கிறதே. இதை யார் செய்தார்கள்?" என்று கேட்டார். பிராட்லாவின் கொள்கைகளை நன்கு அறிந்திருந்த நண்பர் "இதை ஒருவரும் செய்யவில்லை. இது தானே உண்டாயிற்று" என்று தயங்காமல் பதிலளித்தார்.

உலகம் எப்படி உண்டாயிற்று, என்பதற்குக் கடவுள் படைத்தார் என்று சுலபமாகச் சொல்லப்படும் மூடஜனங்களின் வாதத்தை ஒப்புக் கொள்ளாத பகுத்தறிவு வாதிகளான பிராட்லாவைப் போன்ற அறிஞர்களின் வாதம் "உலகமா! அது இயற்கை! அது தானே உண்டாயிற்று" என்று சொல்வதுதான். அந்த வாதத்தையே சமத்காரமாக, பிராட்லாவிடமே திருப்பி உபயோகித்தார் அந்த நண்பர்.

பிராட்லா பார்த்த உலக உருண்டையைப்போல, உலகத்

தில் உள்ள பொருள்கள் ஒன்றி யிருந்து ஒன்றாக உண்டாகி வரு கின்றன. அல்லது ஒருவரால் உண்டாக்கப்படுகின்றன. அப் படியிருக்க இந்த பிரபஞ்சத்தை உண்டாக்கியது யார்? எப்படி உண்டாக்கினர்? ஏன் உண்டாக் கினர்! இந்தக் கேள்விகள் பல பல தத்துவ ஞானிகளாலும் பல வேறு விதமாக வாதிக்கப்பட்டு வந்திருக்கின்றன. அவைகள் வெறும் ஹேஷ்யங்களே விஞ் ஞானத்தைப்போல ருசுப்படுத் திக் காட்ட முடியாதல்லவா? விஞ்ஞானம் நிதர்சனமாக நாம் கண்களால் காணக்கூடிய உண்மை நிலைகளை (Facts) ஆதாரமாகக் கொண்டது. தத்து வமோ, தர்க்கத்தின் முடிவில் காணக்கூடிய உண்மைகளை ஆதாரமாகக் கொண்டது. ஆகவே இரண்டும் ஒன்று சேரக் கூடிய நிலையை எதிர்பார்க்க முடியாதல்லவா?

ஒருவன் ஒன்றைச் செய் கிறான் என்றால், குயவன் மண் பாண்டங்களையும் பொம்மை களையும் பண்ணுவதுதான் நம் மனக் கண்முன் வந்து நிற்கும். இதைப் போலத்தான் கடவு ளும் இவ்வுலகத்தை உண்டாக்கி இருந்திருக்க வேண்டும் என்று கற்பனைக் கண்ணால் கண்டார் கள் பல கவிகளும், சித்தர் களும். அப்படிப்பட்டதொரு காட்சியைக் கண்ட உமர்காயம்

ஏனெனில் என் நினைவினிலே
யான் ஒரு நாள் வீதி வழிப்
போனதுவும் ஓர் குயவன்
புதுக் கோப்பை புனைவதுவும்
அஞ்சி அந்தக் கோப்பை
அழிந்தோடும் குரலிலே
மிஞ்ச மெல்ல மெல்ல என்று
கெஞ்சுவதும் தோன்றுதல்
காண்.

என்றும்,

பண்டை முதல் இன்று வரை
பல பல வாம் தலைமுறைகள்
கண்டது இதைப்போல் ஓர்
கதையன்றோ! பெருங்கடவுள்
குழைத்த களி மண்ணாலே
குழந்தைகளாய் பல உருவாய்
பிழைக்கவிட்டான் என்னும்
பெருங்கதைதான் காணாயோ?
(யோகியார் மொழி பெயர்ப்பு)

என்றும், பிசைந்து பிசைந்து பலப்பல உலகங்களையும் உண்டு பண்ணிக் கொண்டிருக்கும் மாயக் குயவனின் மாயா ஜாலங் களைக் கண்டு அதிசயிக்கிறார். இவரைப் போலவே சித்தர்களில் ஒருவரான, பாம்பாட்டிச் சித்தர் தான் கண்ட அனுபவத்தைச் சொல்லுகிறார்.

மரப்பாவை போல வொரு
மண்ணுருச் செய்து
வளமான சீவன் எனும்
சூத்திரம் காட்டி
திரைக்குள் இருந்தசைப்போன்
தீர்ந்த பொழுதே
தேகம் விழும் என்று தெளிந்து
ஆடு பாம்பே!

என்றும்,

ஆயிரத்தெட்டிதழ் வீட்டில்
அமர்ந்த சித்தன்
அண்டமெலாம் நிறைந்திடும்
அற்புதச் சித்தன்

காய மிலாது ஓங்கி வளர்
காரணச் சித்தன்
கண்ணுள் ஒளியானுன்
என்று ஆடு பாம்பே!

என்று உண்மை ஒளியைக் கண்டு, காயமிலாது ஓங்கி உலகெலாம் நிறைந்து நிற்கும் சித்தன் எப்படி மரப்பாவைபோல் ஒரு மண்ணுருச்செய்து அதற்கு ஒரு சூத்திரக் கயிறும் கட்டி, ஆட்டி வைக்கிறுன் என்பதை விளக்கியும் சொல்கிறுர்.

ஆயினும், பிராட்லா போன்ற பகுத்தறிவாளர்களைப் போலவே வெகுநாட்களுக்கு முன்பே, வேதத்தையும், 'ஸர்வேச்வரன் ஒருவன் இருக்கிறுன், அவன் தான் உலகத்தைச் சிருஷ்டித்தான், இவ்வுலகத்தை ஆக்கியவனும் அவனே. காப்பவனும் அவனே. அழிப்பவனும் அவனே, என்பன போன்ற ஹிந்து சமயக் கோட்பாடுகளையெல்லாம் தகர்த்து எறிந்து வாதம் செய்தனர் சமணர்கள். உலகம் தோன்றியதைப் பற்றியும், வைதிக மதத்தின் கோட்பாடுகளின் குறைகளைப் பற்றியும் ஜைனர்களின் புராணமான மகாபுராணம் பின்வருமாறு வாதிக்கின்றது.

கடவுள் இவ்வுலகத்தை உண்டு பண்ணியதாக சில அறிவிலிகள் சொல்லுகிறுர்கள்.

இவ் வுலகம் ஒருவரால் உண்டாக்கப்பட்டது என்பது ஒப்புக் கொள்ளப்பட வேண்டியதில்லை; உதறித் தள்ளப் படவேண்டும்.

கடவுள் உலகத்தை உண்டாக்கியிருந்தால், உலகம் தோன்றுவதற்கு முன் எங்கிருந்தார்?

உலகத்தால் கட்டுப்படாதவன் என்றுல், இப்பொழுது எங்கிருக்கிறுர்.

உலகத்தை உண்டு பண்ண ஒருவராலும் முடியாது

பொருளின் தன்மைக்கு மீறிய கடவுள் பொருளின் தன்மையைக் கொண்ட உலகை எப்படி உண்டாக்க முடியும்?

தன்னைப் போலவே, பொருளின் தன்மைக்கு மீறியதொரு உலகை சிருஷ்டித்தான் என்றுல் இந்தப் பிதற்றலை யார் நம்புவார்கள்?



காரணமில்லாமல்இவ்வுலகத்தை உண்டு பண்ணினுன் என்றுல் அது பொருத்தமற்றது. விளையாட்டிற்காக இவ்வுலகைப் படைத்தார் என்றுல், இது அசட்டுக் குழந்தையின் ஆபத்தான விளையாட்டு.

குணத்தை மீறியவன் என்றுல், படைப்புத் தொழில் செய்திருக்கமாட்டார்.

குணங்களோடு கூடியவர் என்றுல் அவர் கடவுள் இல்லை.



பிரபஞ்சம் காலத்தைப் போலவே, ஆதி அந்தம் இல்லாதது. உண்டாக்கப்படாதது. உயிருடன் கூடிய உயிர்த் தத்துவங்களுடன் இணைந்தது.

என்று கூறுகிறது மகாபுரா ணம்.

இதற்கு நேரிடையாக ஜெர் மன் தத்துவ ஞானியான காண்ட் சொன்னார்: 'இந்தப் பிரபஞ்சம் அநாதியாக இருந்து கொண் டிருக்கிறது என்பதை நாம் ஒப்புக் கொள்வதற் கில்லை. அப்படியின்றி, இந்த பிரபஞ் சம் ஏதோ ஒரு காலத்தில் உண் டாகியிருக்கவேண்டும்என்பதை யும் நாம் ஒப்புக் கொள்வதற் கில்லை. ஏனென்றால் யார் உண் டாக்கியது! எதை வைத்து உண்டாக்கப்பட்டது? என்ற கேள்விகள் பிறக்கின்றன! இது நம் புத்திக்கு எட்டாதது.இவை களைப்பற்றி நாம் திட்டமாகச் சொல்வதற்கில்லை' என்று சொன்னார்.

அறிவிற்கும் புலனுக்கும் எட் டாத விஷயமாயிருந்தாலும், இந்த விஷயங்களை இரண்டா யிரம் வருஷங்களுக்கு முன்பே, ஆராய முற்பட்டு, சில வழிகளை யும், சில காரணங்களையும் காட்டியிருக்கிறார் கிரேக்க ஞானியான அரிஸ்டாடில் (Aristotle) அவர் சொல்வதாவது 'எல்லாப் பொருள்களும் ஒவ் வொன்று, ஒவ்வொன்றில் தோன்றி உற்பத்தியாகின்றன. உதாரணமாக மரம் என்பது வித்திலிருந்து உண்டாகிறது என்பதை அறிகிறோம். ஆகவே மரத்திற்கு வித்து காரணம். (Material Cause) அதாவது அதன் கரு.'

இந்தக் கரு வளருகையில் அதனதன் இயற்கைக்கேற்ற உருவத்தையும் வளர்ச்சியையும் தான் அடைகின்றது. நெல் விதைத்தால் நெல்லே தான் விளைகிறது. தினை விதைத்தால் தினைதான் விளைகிறது. சோளம் விதைத்து விட்டு உளுந்தை ஒரு வரும் எதிர்பார்க்க மாட்டார் கள். அது ஒரு சட்டத்திற்கும் நியதிக்கும் உட்பட்டுத்தான் நடக்கிறது. இது ஒரு (Formal Cause) உருவென்னும் கார ணம்.

ஆனால், இந்த விதையை ஒரு வன் விதைப்பதால் தானே அது முளைக்கிறது. விதைப்பது என்பதை ஒருவன் கர்த்தாவாக இருந்து செய்யலாம். அல்லது; ஒரு காரணத்தின் மூலம் உண் டாவதாக இருக்கலாம். நாம் விதைக்க வேண்டும் என்ற நினைப்பில்லாமலேயே, குப்பை யிலே எறியும் ஒரு கொட்டை யோ, விதையோ முளைத்து விடு கிறது. நாம் அதை நினைத்துப் பயிரிட வேண்டும் என்ற எண் ணத்துடன் செய்யாத போதி லும், அதற்குக் காரணகர்த்தா நாம் தானே.அல்லது ஒரு குருவி ஒரு விதையை நல்ல பூமியில் கொண்டு வந்து போடுகிறது. அந்த விதை வளர்ந்து விடு கிறது. இப்படி ஒரு இயக்குவிக் கும் கர்த்தாவினாலே ஒருகாரியம் ஏற்படுகிறது. இதற்கு (Efficient Cause) இயங்கும் காரணம் என்று பெயர்.கடைசி யாக, இந்தப் பொருள், என்ன நிலையை அடைகிறதோ, அது கடைசிக் காரணம் (Final Cause) என்கிறார் அரிஸ்டாடில். அதா

வது மாங்கொட்டை கன்றாகி, மரமாகி, பூவாகி, பிஞ்சாகி, பழமாகும் நிலையிருக்கிறதல்லவா? அதுதான் அதற்குக் கடைசி நிலை. கொட்டையின் பரிணாமம், பழத்தில் வந்து முடிகிறதல்லவா, இந்தக் கடைசி நிலையை நோக்கித்தான் கொட்டையின் பரிணாமம் வளர்ந்து கொண்டு செல்கிறது.

அரிஸ்டாடில் மேலும் கூறுகிறார். ஒரு • இயந்திரத்தைக் கழட்டியும் பிரித்தும் அது எவ்விதமாகத் தொடுக்கப்பட்டு, செய்யப்பட்டிருக்கிறது என்பதை அறிந்து கொள்ளலாம். அரிஸ்டாடில் சொல்கிறார்:''ஒரு வஸ்துவின் தன்மையை அறிவதற்கு இப்படிப் பார்த்தால் மட்டும் போதாது. வளர்ந்து கொண்டும் மாறிக் கொண்டும் போகும், ஒரு பொருளின் அந்திம நிலையையும் வைத்துத்தான் நாம் அதை அறிந்து கொள்ள வேண்டும்'' என்கிறார். மாம்பழத்தின் தன்மையை அறிய வேண்டுமானால், மாங்காயையோ மாவடுவையோ தின்றால் நாம் அறிய முடியுமா? ''எல்லாப் பொருள்களும் ஒரு முடிவை நோக்கித்தான் போய்க் கொண்டிருக்கின்றன. அந்த முடிவுதான் அதன் உண்மை நிலை'' என்கிறார்.

''இந்த உலகத்திற்கு அந்திம நிலைதான் என்ன?'' என்று கேட்பதற்கு அரிஸ்டாடில் சிறிதும் சந்தேகமின்றிச் சொல்லுகிறார். ''உலகம் கடவுளிடம் கொள்ளும் வேட்கைதான்'' என்கிறார். பூமியிலும், காந்தத்திலும் இருக்கும் ஆகர்ஷண சக்தியைப் போலவே கடவுளிடமும் ஒரு ஆகர்ஷண சக்தி இருக்கிறதாம். ஆகவே இவ்வுலகும் மக்களும் கடவுளை அடைய வேட்கை கொள்கிறார்கள் என்கிறார், விஞ்ஞானத்திற்கு அடிகோலிய இந்தத் தத்துவ ஞானி. இவருடைய கொள்கைகள் கிறிஸ்துவ சமயத்தின் தெய்வீகக் கோட்பாட்டிற்கும் தத்துவ ஞானத்திற்கும் அஸ்திவாரமாகஅமைந்துள்ளன.

இந்த அண்ட சராசரத்தையெல்லாம் கடவுள் படைக்கிறான். ஆட்டி வைக்கிறான். அழித்தும் விடுகிறான் என்பதை வேத காலந்தொட்டு, நம் சமயாச்சாரியர்கள், தத்துவ ஞானிகள், கவிகள், யோகிகள் எல்லோரும் ஏகோபித்துச் சொல்லியிருக்கிறார்கள். தாயுமானவர் சொன்னார்.

சாட்டையில் பம்பர
  சாலம் போல் எலாம்
ஆட்டுவான் இறையென
  அறிந்து நெஞ்சமே
தேட்ட மொன்றற
  அருட்செயல் நிற்றியேல்

என்று.

அதையொட்டியே, திரிகூடராசப்ப கவிராயரும் சாட்டி நிற்கும் அண்டமெலாம் சாட்டையிலாப் பம்பரம்போல ஆட்டுவிக்கும் குற்றாலத்து அண்ணலார் நல்நாட்டில் என்று ஆண்டவன் புகழைப் பாடுகிறார்கள்.

ஆனாலும் ஆதி காலந் தொட்டு, இதற்கு ஆட்சேபமும் இருந்து வருகிறது என்பதை யும் பார்த்தோம். ஏன் இந்த ஆட்சேபம் என்று பார்ப்போ மானால், நாம் நேரில் பார்க்காத வரையில் நாம் வெகுவாகப் பல வற்றைஒப்புக்கொள்கிறதில்லை. கொம்புடன் கூடிய ஒரு சிங் கத்தைப் பார்த்தேன் என்றால் ஒருவரும் அதை நம்பமாட்டார் கள். அது எங்கிருக்கிறது அதைக் காட்டு என்று ருசுப் படுத்தச் சொல்வார்கள். அது போலவே, கடவுள் எங்கிருக் கிறார் என்றால் தூணிலும் இருக்கிறார் துரும்பிலும் இருக் கிறார் என்று பிரகலாதனைப் போல நாம் சொல்லலாம், ஆனால், கடவுள் நம்முன் தோன்றி அதை ருசுப்படுத்த நாம் பிரகலாதனைப்போல பக்தனுமில்லை. கேட் பவரும் ஹிரண்யகசிபைப் போன்ற தகுதி வாய்ந்தவரும் அல்ல. ஆகவே நேருக்கு நேரே கண்டறிய முடியாத விஷயமா யிருக்கிறது. ஆகவே வேறு வித உபாயங்களால்தான் இதை அறிந்து கொள்ளமுடியும்.

பொதுவாக நாம் ஒன்றை அறிய வேண்டுமானால், அது இவ்விதமான உபாயங்களினால் தான் முடியும். இவைகளுக்கு பிரமாணங்கள் அல்லது ருசுக்கள் என்று பெயர். பிரத்யக்ஷம் என்பது நாம் நேருக்கு நேர் பார்த்துக் கண்டுஅறிவது. ச்ருதி என்பது தேவவாக்கு. இது இரண்டாவது. மூன்றாவது அனு மானம். புகையிருந்தால் தீ யிருக்கும் என்று ஊகிக்கிறோம். இதைத் தவிர வேறு சில பிர மாணங்களையும் வேதாந்திகள் ஏற்றுக் கொண்டிருக்கின்றனர். (4) உபமானம் (5) அர்த்தா பத்தி (அதாவது ஹேஷ்யம்)(6 சுபாவம் இல்லாமை. இவைகளை வைத்துக் கொண்டு தங்கள் சித் தாந்தங்களை நிலைநாட்டி யிருக் கிறார்கள்.

தற்கால பகுத்தறிவு வாதி களும், முற்கால லோகாயதர் களும், சாரவாசர்களும், பிரத்ய க்ஷம் (அதாவது நாம் கண் கூடாகக் காண்பது) ஒன்றைத் தவிர மற்றவைகளைப் போது மான அளவு சாக்ஷியங்களாக அவர்கள் ஏற்க மறுத்தார்கள். மற்ற பிரமாணங்கள் நம்பத் தக் கவையல்ல வென்று ஆட்சேபித் தார்கள். மற்ற ப்ரமாணங் களால் நாம் உண்மையை அறிய முடியாது. அவைகளால் உண் மைக்குப் புறம்பான ஒரு விஷ யத்தைத்தான் நாம் அடைய முடியும் என்றும் சாதித்தார் கள். அதற்கு ஆதாரமாக அவர் கள் சொன்னார்கள். "இதோ பாருங்கள் நான் வழியிலே, நரி யின் காலைப் போல கோடுகள் கிழித்துக் கொண்டே போகி றேன். உங்கள் அனுமானத் தினால் நரி வந்து விட்டு போயி ருக்கிறதென்று ஊகித்துக் கொள்வீர்கள். இது எவ்வளவு அபத்தம்" என்று சவால் விட் டார்கள்.

ஆனாலும், நாம் 'ப்ரத்யக்ஷம்' ஒன்றுதான் ஆதாரம் என்று

ஏற்போமானால், அனேக விஷயங்களை நாம் அறிந்து கொள்ளவே முடியாது. நீதி மன்றம் கூட நீதியை வழங்க முடியாது. இப்பொழுது நீதி மன்றத்தில் கொலை செய்ததற்காக ஒருவனுக்குத் தூக்குத் தண்டனை விதிக்கிறார்கள். அந்த நீதிபதியோ, ஜுரர்களோ, வக்கீலோ, அந்தக் குற்றவாளி கொலை செய்ததை நேருக்கு நேர் பார்த்து விட்டுத்தான் தண்டனை வழங்குகிறார்களா? வழக்கை விசாரிக்கிறார்கள். குற்றவாளியைப்பற்றியும், அவன் எதற்காகக் கொலை செய்திருக்கக் கூடும் என்ற நோக்கத்தைப் பற்றியும், அவன் சூழ்நிலையையும் ஆராய்ந்து அறிகிறார்கள். பின்னர் ஒவ்வொன்றையும் தீர விசாரித்துத்தான் தீர்ப்பளிக்கிறார்கள், ''சந்தர்ப்ப சாட்சியம்'' என்பது சட்ட பூர்வமான ருசுவாக ஒப்புக் கொள்ளப்படுகிறது. சில சமயங்களில், விசித்திரமாக, நாம் நேருக்கு நேராகக் காண்பது, நம்மை இழுத்து தவறான முடிவுக்குச் செல்லலாம். அதற்காகத்தான் பெரியவர்கள் 'அப்பா, கண்ணாரக் காண்பதும் பொய். காதாரக் கேட்பதும் பொய். தீர விசாரித்து அறிவதே மெய்'' என்று அடிக்கடி சொல்வார்கள்.

ஒரு பையன் பம்பரத்தைச் சுற்றி விட்டு வெளியே போய் விடுகிறான். நாம் உள்ளே நுழையும் பொழுது, பம்பரம் மாத்திரம் சுழன்று கொண்டிருக்கிறது. தானாகவே சுழன்று கொண்டிருக்கிறது, சாட்டையில்லாமல், சுழற்றுபவன் இல்லாமல் சுழன்று கொண்டிருக்கிறது என்பதனால், அது தானாகவே தன்னை இயக்கிக் கொண்டு சுற்றுகிறது என்று பிரத்யட்சப் பிரமாணப்படி சித்தாந்தம் செய்து விடலாமல்லவா?

ஒரு நாள் ஒரு பையன் என்னைத்தேடி வந்தான். அவனை நான் கேட்டேன் ''உன் தகப்பனார் பெயர் என்ன?'' ''முத்து கிருஷ்ணன்'' ''பாட்டனார் பெயர் என்ன?'' ''ராம கிருஷ்ணன்.'' 'அவருடைய தகப்பனார் பெயர்என்ன?''ராஜகோபாலன்' ''சரி; இராஜகோபாலன் தகப்பனார் பெயர் என்ன?'' ''தெரியாது.'' ''அவர் எங்கிருந்தார். என்ன செய்து கொண்டிருந்தார், எப்படி இருந்தார் என்றுவது தெரியுமா?'' ''சார் அவரைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியவே தெரியாது.'' ''சரி போகட்டும் அவர் இருந்ததற்கு ஆதாரமாக ஏதாவது ருசுக் காட்ட முடியுமா உங்கள்வீட்டு தஸ்தவேஜுகளில்?'' ''எனக்கு சொத்து ஒன்றும் இல்லை. ஆகையினால், அவரைப் பற்றிய ஆதாரம் ஒன்றும் கிடையாது.''

இப்பொழுது, இந்தப் பையனிடம், பாட்டனார் இருந்தார் என்பதற்கு ஒரு ஆதாரமும், கிடையாது, ஒரு ருசுவும் கிடையாது. ஆகையால் அவர் இருந்திருக்கவே முடியாது. ஆகவே, ராஜகோபாலன் என்ற ஒரு மனிதர் தானாகவோ அல்லது இயற்

கையாகவோ உண்டாகியிருக்க வேண்டும், என்று சொல்ல லாம் அல்லவா! அப்படிப்பட்ட வாதம் தான் நாஸ்திகர்கள் வாதம்!

ஆனுல் கடவுள் என்ற பெரிய விஷயம் அறிவினுல் மாத்திரம் அறியப்பட வேண் டிய விஷயம் அல்ல. அது அறி விற்கு அப்பால் இருப்பது. அது அனுபவத்தால் உணரக்கூடிய விஷயம். அது, சாதாரணமாக, ஹோட்டலில் ஒரு புது தினு சான இனிப்புப் பலகாரத்தைச் சாப்பிடுகிருேம். அதன் பெயர் மறந்து விட்டது. இதைப்பற்றி நம் நண்பருக்குச் சொல்ல விரும்புகிருேம். நாம் எப்படிச் சொல்வது? அவர் எப்படி அறிந்து கொள்வது?

விவேகானந்த சுவாமிகள், சென்னை வந்திருந்த சமயத்தில், அவரை வரவேற்ற கனவான் தன் வீட்டிலே ரவா உப்புமா செய்யச் சொல்லி உத்தர விட் டாராம். அதைக் கேட்டுக் கொண்டிருந்த சுவாமிகள், "ரவை உப்புமா" என்ருல் என்ன என்று கேட்டராம். அதற்கு வீட்டுக்கார கனவான் சொன்னுராம்," சுவாமி, இது உப்புமா!

"ரவாகேசரி — சர்க்கரை + உப்பு
=ரவா உப்புமா

என்று கணக்குசாம்யம் போட்டு காட்டினுராம். அதாவது ரவா கேசரியில் இனிப்பைச் சேர்ப் பதற்குப் பதிலாக உப்பைச் சேர்த்தால் அது உப்புமா ஆகும் என்று விளக்கிக் காட்டினு ராம். ஆனுல், இப்படி விளக்கு வதால் உப்புமா என்ன என் பது விளங்கி விடுமா. தின்ருல் தான் அதன் தன்மைவிளங்கும். ஆகவே அனுபவிக்க வேண்டிய பொருளை அறிவினுல் அறிய முடியாது, அதனுல் தான் பெரி யவர்கள் அந்த அனுபவத்தைப் பற்றிக் கண்டவர் விண்டிலர் விண்டவர் கண்டிலர் என்று சொன்னுர்கள். உபநிஷதமும் எவ்வளவோ உதாரணங்களைக் காட்டி விட்டு, தாம்பத்ய உறவில் இரண்டறக் கலக்கும் நிலையை ஜீவாத்மா பரமாத்மா சேர்க்கைக்கு உதாரணமாகக் காட்டியுள்ளது.

ஆதிசங்கர பகவத்பாதர், அவ ருடைய சித்தாந்தத்தில் பரம் பொருள், ஈச்வரன், மாயை, உலகத்தின் தோற்றுவாய், என் பனவற்றையெல்லாம், தர்க்க ரீதிக்குப் பொருந்துமாறு, வெகு அழகாக அன்வயப்படுத்திச் சொல்லிக்கொண்டு போகிருர்.

பரம்பொருளைக் குறிப்பிடும் பொழுது நாம் அது இல்லை இது இல்லை என்று பிரித்து வந்தா லும், அது இல்லாத பொருள் அல்ல. உண்மைப் பொருள் (Positive) தான். அது 'சத்' தாகவும் 'சித்'தாகவும் இருக் கிறது, சிருஷ்டி, ஸ்திதி, சம் ஹாரம் முதலிய காரியங்களைச் செய்யும் பொழுது குணத்துடன் கூடிய ஈச்வர ரூபத்தை அடை கிறது. உலகம் என்று சொல் லப்படுவது, பிரும்மத்தின்

தோற்றமாக நிற்கிறது. எப்படி கயிற்றிலே பாம்பு என்ற தோற்றம் ஏற்படுகிறதோ அப்படியே, பிரும்மத்திலே உலகம் என்ற தோற்றம் ஏற்படுகிறது. கயிறுதான் உண்மையானதாயும் 'பாம்பு' என்பது இல்லாததொரு தோற்றமாகவும் இருக்கிறதோ, அவ்விதமே, பிரும்மமே மெய்ப் பொருளாகவுமிருக்கிறது. இந்த வாழ்விலே, நாம் காணும் காட்சிகள், நமக்கு ஏற்படும் அனுபவங்கள் எண்ணங்கள் செயல்கள் எல்லாம் நீர்க்குமிழியைப் போலவும், கனவைப் போலவும், சாரமற்ற உண்மை யல்லாத பிரமையான தோற்றமே'' என்கிறார் சங்கர பகவத் பாதர்.

''யாரை அறிந்தால், கயிற்றிலிருக்கும் பாம்பைப் போலவும், கானல்நீரில் தோன்றும் தண்ணீரைப் போலவும், சிப்பியில் தோன்றும் வெள்ளியைப் போலவும் இந்த உலகம் என்ற தோற்றம் உண்மையற்றதாகி விடுமோ, அப்பேற்பட்ட மகேச்வரனை வணங்குகிறேன்'' என்று ஸகந்தபுராணத் தோத்திரம் ஒன்று கூறுகிறது,

சமீபத்தில் காலஞ்சென்ற ஒரு கவி, ச. து சு. யோகியாரும் பாரில்லை, விண்இல்லை, பகிரண்டம் யாவுமில்லை, நீரில்லை, நெருப்பில்லை, நீண்டதொரு காரிருளில் யாருமிலா வேளையில் இவ்வண்டமெலாம் உண்டாக்க வேரில்லா வித்தாகி, விளையல்லாது இருந்தோய் நீ, என்று துதிபாடி சிருஷ்டி ரகஸ்யத்தையும் திறந்து காட்டுகிறார்.



## கால மோகினி

ஒருத்தி என்னைப் பார்த்து, 'டணார்' என்று சிரித்தாள். அவளை அண்ணாந்து பார்ப்பதற்குள் அவள் அப்பால் நகர்ந்துவிட்டாள். உலகை இலட்சியம் செய்யாமல் அவள் ஓடிக் கொண்டே இருந்தாள். நான் பின் தொடர்ந்து கொண்டே இருக்கிறேன்.

ஓசை எழுப்பிய நேரத்தில் அவள் காட்டிய ஒயிலை என்றால் இனி என்றுமே காணமுடியாது. 'போனால் வராது' என்ற ரகத்தைச் சேர்ந்த சரக்கு அவள். நான் பறிகொடுத்த நிலையில் கவலையோடு இருந்தேன்.

முன் சென்று மறைந்த மூத்தவளைப்போலவே, இளையவளும் 'டணார்' என்ற ஒலியோடு சிரித்துக் கொண்டே வந்தாள், நகர்ந்தாள். மறைந்துவிட்டாள். பின் தொடர்ந்தேன், பேதலித்தேன். பின்னமுற்றேன். பழைய கதையேதான்!

ஒவ்வொரு நாளும் இப்படியாக இருபத்து நான்கு பெண்கள் என்னை எள்ளி நகையாடிக் கேலி செய்கின்றனர். அவர்களுக்கு அதில்தான் ஏத்தனை ஆனந்தம்!

**பிள்ளைக் கனியமுதே, பேசும் பொற்சித்திரமே, சின்னஞ் சிறு கிளியே, செல்வக் களஞ்சியமே என்றெல்லாம் கொஞ்சி வளர்க்கும் குழந்தைக்கு கிரந்தி, செங்கிரந்தி போன்ற நோய்கள் வந்து விட்டால் என்ன செய்வது? என்ன செய்வதா? வைத்தியம்தான் செய்ய வேண்டும். சில வைத்திய முறைகள் கட்டுரையில் விளக்கப் படுகின்றன.**




*பழங்களை விரும்பாதார் யார்? உலகில் எல்லோராலும் விரும்பப்படுவது கனிவகையே யாகும். அதனுல்தான் பெற்றெடுத்த குழந்தைகளைப் பிள்ளைக்கனி என்று அறிஞர் அழைப்ப ராயினர். 'பிள்ளைக் கனி ஒரு தெவிட்டாத கனியே' ஆகும்.*

*காசிக்கும் கங்கைக்குமாகக் காசுபணம் செலவு செய்து நிற்பவர்களையும், சேதுக் கடலுக்கும் சிதம்பரக் கோயிலுக்குமாகச் சென்று வருபவர்களையும் அரசமரத்தையும் வேப்பமரத்தையும் விடியவிடிய வலம் வருபவர்களையும் கேட்டுப் பார்த்தால்தான் குழந்தைச் செல்வத்தின் மகத்துவம் தெரியவரும்.*

*''மக்கட் பேறில்லா மனை, நிலவொளி யில்லா இரவு; தென்றல் வீசாச் சோலை; இசை நரம் பில்லா வீணை'' என்பது உண்மையான அனுபவமே!*

*சின்னஞ்சிறு கிளியாகவும், செல்வக் களஞ்சியமாகவும் கலிதீர்த்து ஏற்றம் புரிய வந்த எழில் விளக்காகவும், பிள்ளைக் கனியமுதாகவும், பேசும் பொற்சித்திரமாகவும் அள்ளி அருந்திட ஆடிவருந் தேனுகவும் காட்சிதரும் கண்ணம்மாவைப் பார்த்துக் கவியமுதைப் படைத்தார் பாரதியார் என்ருல் அதற்*

குக் காரணம் என்ன? கண்ணம்மா கவின் செறிந்த குழந்தையாக இருந்தது தானே!

இத்தகைய குழந்தைச் செல்வங்களைக் குறைவற்ற செல்வங்களாக வளர்த்து வாழ வைப்பது பெற்றோர்களின் தலையாய கடமையாகும். இக்கடமையைப் பெற்றவர்கள் செய்து வருகிறார்கள் என்பதற்காகவே, 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்,' என்று குழந்தைகளுக்கு முன்னவர்கள் மூதுரை மொழிந்து போந்துள்ளனர்.

பிள்ளைகளைப் பிணியற்றவர்களாக வாழ வழி கண்டால் தான் குறைவற்ற செல்வத்தைக் கொண்டவர்களாகப் பெற்றவர்கள் பெருமை கொள்ளமுடியும். நோயற்ற வாழ்வுதானே குறைவற்ற செல்வம்?

குழந்தைகளை நோயற்றவர்களாகக் காப்பது கடினமான காரியமே. பழங்காலத்தில் பச்சையிலை மூலிகைகளைக்கொண்டு பிள்ளைகளுக்குரிய பிணிகளை, எல்லோரும் வியக்கும்படி, போக்கடித்துள்ளனர். பிள்ளைகளை என்னென்ன நோய்கள் பீடிக்கும், அவற்றிற்கு என்னென்ன முறையில் வைத்தியம் செய்ய வேண்டும் என்பதை இனிக் காண்போம்.

இரந்தி, செங்கிரந்தி, கருங்கிரந்தி, பட்சிதோஷம், மாந்தம், கணம் (கணை) பிரளி, கரப்பான், செவ்வாப்பு, தொண்டைக் கட்டு, அக்காரம், வைசூரி, முதலிய பல நோய்கள் குழந்தைகளுக்கு அடிக்கடி உண்டாகலாம்.

தாய்ப்பால் குடித்துவரும் குழந்தைகளுக்கு மாந்தம் என்ற நோய் அடிக்கடி உண்டாகும். கணம் (கணை) கர்ப்பச் சூட்டினால் உண்டாகின்றது. மற்றைய நோய்கள் பெற்றோர்களின் புணர்ச்சியினால் எழும் சூட்டினால் உண்டாகின்றன.

பாரே குழந்தைப்
 பிணிக்குறிப்பும்
பகரும் பட்சி
 தோஷமுடன்
நேரே மாந்தம்
 பதினெட்டும்
நேரே கிரந்தி
 தன்குணமும்
சீரே புணர்ச்சிக்
 காந்தலதுஞ்
சிறந்த கர்ப்பச்
 சூடுமுதல்
நேரே மாந்தர்
 அறியவென்று
நிறையாய் உரைத்த
 திதுவாமே!

சில சமயங்களில் தொண்டை கட்டிக் கொள்ளும். குழந்தைகள் அழுவதற்கே மிகவும் சிரமப்படும். பூனைக்குரல் போன்று ஒலி உண்டாகும். மூத்திரம் வெளிவராது. மலம் கட்டிக் கொள்ளும். இதன் காரணமாகவயிறுபெருத்துப் பலூனைப் போல ஊதிப்போய் நிற்கும். பாதங்களில் சிவப்பு நிறம் படர்ந்து காணப்படும்.

இந்த அறிகுறிகள் தென்பட்டால், குழந்தைக்குச் செங்கிரந்தி கண்டிருப்பதாக ஊகித்துக் கொள்ளலாம்.

பிறந்த பிள்ளை
பெருவயி றூதிடும்
சிறந்த பூனைக்
குரல்போ லழுதிடும்
மறந்த நீரும்
மலசலங் கட்டிடும்
திறந்தொலி கம்மி
சிவப்புறும் பாதமே!

செங்கிரந்தி என்னும் நோயைப் போக்குதற்கு உரிய மருந்து வகைகளை இனிக் காண்போம்.

கோரோசனை (மாட்டு மூத்திரம்) யைத் தாய்ப் பாலோடு கலந்து கொடுக்கலாம். கர்ப்பூர வல்லி இலை, குன்றிமணி இலை, சுருள்ளி இலை ஆகிய மூன்றையும் ஓரே அளவுள்ளதாக எடுத்துக் கொண்டு சாற்றைப் பிழிந்து முறித்து விட்டுக் கொடுக்கலாம். இவை உள்ளுக்குள் கொடுக்கும் மருந்துகளாம்.

செம்முள்ளி இலையைத் தண்ணீரில் போட்டு நன்கு சூடாக்கி அந்தச் சுடு தண்ணீரைக் குழந்தையின் உடல் முழுதும் ஊற்றிக் குளிப்பாட்டுவதாலும் அதிக நன்மை உண்டு.

சில சமயங்களில் குழந்தை ஓயாமல் தொடர்ந்து அலறி அழுது கொண்டே இருக்கும். பால் குடிக்கக் கூட மறுத்து விடும். குரல் கட்டிக் கொள்ளும், பேசவோ, கத்தவோ முடியாமல் குழந்தை சிரமப்படும். உடம்பில் சூடு கொதித்துக் கொண்டிருக்கும், மூர்ச்சித்து மயங்கி மயங்கிக் குழந்தை கீழே படுத்துக் கொள்ளும். வயிற்று வலியால் வேதனைப் படும். 'தண்ணீர்' தண்ணீர்' என்று தாகம் கொண்டது போலக் கேட்கும். ஆனால் எதையுமே உட்கொள்ள முடியாது. கண்களை ஒரு நிமிடங் கூடத் திறந்தபடி வைத்துக் கொள்ளாது; மூடியபடியேபடுத்துக் கிடக்கும். உடலில் கருமை படர்ந்திருக்கும்.

இந்த அறிகுறிகள் தென்பட்டால் குழந்தைக்குக் கருங்கிரந்தி கண்டிருப்பதாக ஊகித்துக் கொள்ளலாம்.

பாலன் அலறியழும்
பால்உண்ணுக் குரல்கம்மும்
சிலமுடல் வெம்புந்
திறமூர்ச்சை ஞாலமதில்
நாவரட்சி காணும்நவி
லும்வயிறு வாதையுறும்
காலவிழி திறவாது
காண்.

கருங்கிரந்தி நோயைப் போக்குதற்கு வழிகள்:

கழுதைப் பாலில் ஒரு காசு எடையளவுள்ள, ஓணின் இரத்தத்தைக் கலந்து கொடுக்கலாம். ஆனால் கடுமையான பத்தியம் இருக்கவேண்டும்.

தூய்மையான நீரை வடித்தெடுத்து அவுரியிலைச் சாறு, சிற்றாமணக்கு எண்ணெய் இவற்றில் சமமாகக் கலந்து, அந்தச் சாற்றில் வசம்பு, உள்ளி தட்டிப் போட்டு, நன்கு காய்ச்சி ஒரு சங்கின் அளவைக் குழந்தைக்குப் புகட்டலாம். கடுமையான பத்தியம் இருக்க வேண்டிய அவசியமே இல்லை.

நெய், சிற்ருமணக்கு எண் ணெய், நல்லெண்ணெய், சங் கிலேச்சாறு நான்கினையும் சம மாக எடுத்துக் கலந்து கொண்டு சுக்கு, மிளகு, திப்பிலி முதலிய வற்றை அரைத்துப் போட்டு நன்கு காய்ச்சிப் புடம்வைத்து, ஒரு பணத்தின் எடை அளவு உள்ளுக்குள்கொடுக்கலாம். உட லில் முழுதும் தேய்த்துக் குளிப் பாட்டலாம். மூக்கரைச் சாரணே முடக்கொத்தான் செப்பு நெருஞ்சி முத்தெருக்கஞ் செவி ஓரிதழ்த் தாமரை, ஈருள்ளி மயி லிறகு, இவற்றைத் தேடிச் சேர்த்து ஒரே அளவுள்ளதாக எடுத்து சிற்ருமணக்கு எண் ணெய்யில் போட்டுக் காய்ச்சி குழந்தைக்கு உள்ளுக்குள் கொடுக்கலாம்.

•

கிரந்தி என்னும் நோயில் 12 வகைகள் உண்டு. சூலே என் னும் நோயில் 18 வகைகள் உண்டு என்று தமிழ்நாட்டு வைத்தியர்கள் கண்டுபிடித் துள்ளனர். பொதுவாக இந் நோய்களேப் போக்குதற்குக் கீழே காணும் மருந்து வகைகள் பெரிதும் பயன்படுபவனவாகும்.

•

ஆமணக்கு எண்ணெய், தேங் காய்ப்பால், செம்பருத்திச் சாறு இவற்றில் ஒவ்வொரு படி வகைக்கு எடுத்து, ஒன்ருய் விட்டுக் கலக்கிக் காய்ச்சவேண் டும். பிறகு வடிகட்டி அதில் சுக்கு, கிராம்பு, ஏலம், திப்பிலி பூரம், மிளகு முதலியனவற்றை வகைக்கு ஒரு விராகன் எடை பொடி செய்துபோட்டு, குழந் தைகளுக்குக் கொடுக்கலாம்.

சில பிள்ளேகளுக்குச் சில சம யங்களில் மலங்கட்டிக் கொள் ளும். மேலும் வயிற்றுவலி தாளாமல் ஓயாது கத்தி அழுது கொண்டே இருக்கும். இச் சமயங்களில் கீழே காணும் மருத்துவ முறை நல்ல பலன் களேத் தரும்.

புன்னே, சிறு தேக்கு, கோஷ்டம், இவற்றைச் சமஞக அரைத்து, குழம்பு போலக் காய்ச்சி, குழந்தையின் அடி வயிற்றில் பூச வேண்டும். மேலும் அதிமதுரம், வேப்பங் கொழுந்து, சர்க்கரை மூன்றை யும் அரைத்து நெய்யில் கலந்து வேகவைத்துக் கொடுக்க வேண் டும். இப்படிச் செய்வதால் மலம் வெளிவரும்; வயிற்றுவலி பறந்து விடும்.

•

குழந்தைகளுக்குச் சிறுநீர் கட்டிக் கொண்டால், வெள்ளரி விதையை அரைத்து அடிவயிற் றில் பூசலாம். வெங்காரத்தைப் பொரித்து, தாய்ப்பாலில் கரைத் துப் புகட்டலாம்.

உரம் விழுதல் என்பது குழந் தைகளுக்கே உரிய தனி வியாதி யாகும்.

வெள்ளேப் பூண்டு பலம் 10, கடுகு பலம் 10 இரண்டையும் ஒன்ருய்க் கலந்து தைலம் இறக்கி உடம்பில் பூசலாம். இதனுல் குடல்வாத உரம்தீரும்.

சிறுதேக்கும், திப்பிலியும், பொடித்துக் கொண்டாவது அல்

லது திப்பிலியும் கடுகு ரோகணியும் பொடித்தாவது தேன் அல்லது நெய்யில் மத்தித்துக் கொங்கைகளில் பூசிக்கொண்டு பிள்ளைக்குப் பால் கொடுத்தால், குழந்தையின் வயிற்றுப் பொறுமல், விக்கலெடுத்தல் முதலிய நோய்கள் பறந்து விடும்.

குழந்தையின் வயிறு வீங்கி, குடித்தபால் வாந்தி எடுக்க, கொட்டாவி விட்டபடியே அழுது கொண்டிருக்குமாயின், அதிமதுரத்தைக் காபியில் அரைத்து வயிற்றில் பூச வயிற்று வீக்கம் தீரும். வெள்ளுள்ளியும், ஓமமும் வெதுப்பிக் கசாயஞ் செய்து கொடுக்க வாந்தி எடுப்பது நின்றுவிடும். கொட்டாவி விடுதலும் நின்று விடும். அதிமதுரத்தை முலைப் பாலில் அரைத்து முலைக்காம்பில் பூசிக் கொண்டு, குழந்தைக்குப் பால் கொடுத்தால் பலன்உண்டு.

தாய்ப்பால் நிறையச் சுரக்க வேண்டும் என்றால் கீழே காணும் மருந்துகளை உட்கொள்ளலாம்.

பூனைகத்தைப் பாலில் போட்டு கலந்து, எலுமிச்சங்காய்ப் பிரமாணம் அரைத்துப் பசுவின் பாலில் மூன்று நாட்கள் கொடுக்கலாம்.

நற்றுளியிலையை இளவெந்நீரில் போட்டுப் பிசைந்து மூன்று நாட்கள் கொடுக்கலாம்.

பாதிரி வேரையாவது, நெல்லி வேரையாவது அரைத்துப் பாலில் கலந்து கொடுக்கலாம்.

இனி, குழந்தைகளுக்கு உண்டாகும் முக்கிய வியாதியாகிய தோஷ வியாதிகளைப்பற்றி விரிவாக அடுத்த இதழில் காணலாம்.

(வளரும் கட்டுரை)



**கோலும் கொடுத்து நூலும் கொடுத்த கதை**

அழுக்குப் புழுதியில் ஆடலாமா?
வழுக்கு வழியில் ஓடலாமா?
என்றேன் எதிரில் நின்ற பேரனை.
அடிக்கக் கோலை எடுத்தேன். அவனோ
வில்லுக் கட்ட அக்கோலை வேண்டினான்!
கோலையும் கொடுத்துக் கட்ட
நூலையும் கொடுத்தேன் நாலு முழத்திலே!

—பாரதிதாசன்

''வளர்ச்சி இல்லாதது எதுவும் வாழ முடியாது.'' இந்த மாபெரும் தத்துவம் நூலகத்தைப் பொறுத்த வரையில் எவ்வளவு உண்மையாக இருக்கிறது! நூலகங்கள் எங்கெங்கே எப்படி யெப்படி எவ்வளவு வளர்ந்துள்ளன, வளர வேண்டும் என்றெல்லாம் விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

# நூலகம் வளரும்

வே. தில்லைநாயகம், எம். ஏ., எம். எல். எஸ்., பி. டி.
(நூலகர், கன்னிமாரா நூலகம், சென்னை.)

### ஐந்தாம் சீலம்

இதுவரை நூலகப்பணிக்கு அடிப்படையான பஞ்ச சீலங்களில் முதல் நான்கு சீலங்களை—1) நூற்கள் படிப்பதற்கே; 2) ஆளுக்கொரு நூல்; 3) நூலுக்கோர் ஆள்; 4) காலங் கருது என்ற சீலங்களைச் — சீர்தூக்கிப் பார்த்தோம். அதன் தொடர்பாக நூலகத்தின் கடமைகளைச் சுட்டிக் காட்டும் நூலகச் செயலை, நூலக ஆட்சியை-நூலினை மையமாகக்கொண்டெழுந்த முயற்சிகளை வாசகரை மையமாகக் கொண்டெழுந்த முயற்சிகளை-அதற்காகக் காலங்கருதிச் செய்த முயற்சிகளைக் கண்டோம்.

இப் பணி தொடர்ந்து நடந்து, வளர்ச்சியுற்று, பயன்தரத் திட்டமிட்ட செயல் தேவை; அமைப்பு முறை தேவை. அதனை உருவாக்கிக் காட்டுவது தான் ஐந்தாம் சீலமாகிய நூலகம் வளரும் (library is a growing organism) என்பதாகும்.

### உலகின் உயிர்

'நாம் வாழும் இந்த உலகக் குமிழி வளர்ந்து கொண்டே, மாறிக் கொண்டே, திருந்திக் கொண்டே, சிறந்து கொண்டே, விரிந்து கொண்டே இருக்கிறது' என்றார் அறிஞர் ஐன்ஸ்டீன்.

உலகத்திலுள்ள ஒவ்வொன்றும்—உயிருள்ளதாகக் கருதப்படும் ஒவ்வொன்றும்—வளரும் முறையில் பழையன கழித்து, புதியன ஈர்த்து, சூழ் நிலைக்கேற்ப மாறிச் சிறப்படைந்து கொண்டே வருகிறது. இந்த உயிர் வளர்ச்சி தான் உலக வாழ்வின் உயிர் நாடி.

கணக்கற்ற காலத்திற்கு முன் கருத்தின்றி, கண்ணின்றி, காலின்றி, தலையின்றி, உருவின்றி, ஓருயிராய்க் கிடந்த உயிர் மூலத்திலிருந்து தான் உலகை ஆட்டிப் படைக்கும் இன்றைய மனிதன் உருவாகியிருக்கிறான். இதற்கு அடிப்படை உயிர்வளர்ச்சிதான்.

வளர்ச்சி இல்லாதது எதுவும் வாழ முடியாது; நசித்து விடும்; நாசமாகிவிடும்; மங்கிவிடும்; மறைந்து விடும்; இறந்து விடும். இந்த உலக நியதிக்கு உட்பட்டதுதான் நூலகமும்.

நூலகம் என்னவோ உயிரற்ற சடப்பொருள்களாம் நூலும் பிறவும் கொண்டது தான்! எனினும் அந்த உயிரற்ற பொருளுக்குள் பொதிந்து கிடக்கும் கருத்துக்கள் உயிருள்ளவை; சாகாவரம் பெற்றவை; அது மட்டுமல்ல; காலந்தோறும் வளர்ந்துகொண்டே, திருந்திக் கொண்டே, சிறந்து கொண்டே, உயர்ந்து கொண்டே வரும் தன்மை கொண்டவை. அக்கருத்துக்கள் தான் மனிதனை —வரலாற்று ஆரம்பக் காலத்தில் தன் கருத்தைச் சொல்லத்திறமின்றி—இருக்க இடமின்றி—உடுக்கத் துணியின்றி—பிராணிகளோடு பிராணியாய்த் திரிந்தவனை—உலகை ஒரு நாளில் சுற்றி வரும் மனிதனாக—உருவாக்கியுள்ளன.

இத் தகு கருத்தினை—கருத்துக் குவியலை—அன்றிருந்து இன்று வரை மனிதனுக்குப் பாதுகாத்துத் தந்து வருவன ஏடுகள்; சுவடிகள்; நூற்கள். அதனைச் சேர்த்து வைத்து உதவி வருவது நூலகம்.

இந்த நூலகமும் — உயிர் வளர்ச்சி பெற்று வருவது போலவே—மனிதன் வளர்ச்சி பெற்று வருவது போலவே—வளர்ந்து கொண்டே திருந்திக் கொண்டே, உயர்ந்து கொண்டே வருகிறது.

## நூலகப் பரிணமம்

முதலில் நூலகம் என்பது நூற்களை மறைத்து வைக்கும் இடமாய் இருந்திருக்கிறது! ஆம்; சீன மொழியில் நூலகத்தைக் குறிப்பிடும் ஓவிய எழுத்து 'நூற்களை ஒளித்து வைக்கும் இடம்' என்ற பொருள்படும்படியாகத் தான் வரையப் படுகிறதாம்!

பின்பு நூலகம் என்பது நூற்களைப் பாதுகாத்து வைக்குமிடமாய் இருந்தது. ஆதி நாளில் காணப்படும் நூலகங்கள் இந்த முறையில்தான் கோயில்களின் பகுதியாய் இருந்திருக்கிறது. ஏனெனில் அக்காலச் சமுதாய வாழ்வில் கோயில் தான் மிகவும் பாதுகாப்பான இடமாக இருந்திருக்கிறது.

அடுத்து நூலகம் என்பது ஒரு நூலைப் பார்த்து மற்றொரு நூல் எழுதுமிடமாய் இருந்திருக்கிறது. எகிப்திய மன்னன் முதலாம் தாலமி நிறுவிய அலக்சாண்டிரியா நூலகம் இப்படிப் பணியாற்றியதாகச் செய்தி கிடைக்கிறது.

தொடுத்து நூற்களைத் தொகுத்தும் சேர்த்தும், வைக்குமிடமாய் இருந்திருக்கிறது. கிரேக்க நாட்டிலும், இத்தாலிய நாட்டிலும், நமது நாட்டிலும் இப்படிப் பல நூலகங்கள் இருந்திருக்கின்றன.

பின்னர் அறிவு மறுமலர்ச்சி ஏற்பட்டதின் காரணமாக கல்வி பரவியது. பலரும் நூற்களைப் பார்க்கவும், படிக்கவும், பயன்படுத்தவும் தேவை ஏற்பட்டது. எனவே சேர்த்து வைத்திருப்பதைக் கேட்கும்போது கேட்போருக்குக் கொடுத்துதவும் இடமாக இருந்தது. அப்போது நூற்கள் நூலடுக்குகளில் பிணைக்கப்பட்டு—துடுக்குக் கண்ணனை அவள்தாய் உரலில் பிணைத்து வைத்தது போல—இருந்தன. அப்பிணைப்புச் சங்கிலி அனுமதிக்கும் தூரத்திற்கே நூற்கள் வெளியே—அதாவது வெளிச்சம் இருக்கும் இடம் வரையே—எடுத்துச் செல்ல வாய்ப்புண்டு. பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதிவரை உலகின் பல்வேறு பாகங்களிலும் இத்தகைய நூலகங்களே இயங்கி வந்தன.

ஆனல் இன்றைய நூலகமோ —காலத்திற்கேற்ப மாற்றம் பெற்று— அறிவுக் கூடமாய்-ஆராய்ச்சி நிலையமாய்—பண்

பூட்டும் பல்கலைக் கழகமாய்—எல்லார்க்கும் எல்லாமென்றிருப்பதான சமுதாய மையமாய்—உருவாகி வருகிறது.

*முக்கூட்டணி*

இதனைக் கருத்தில் கொண்டு நூலகப் பணியின் முக்கூட்டணியினை— 1) நூற்கள் 2) வாசகர் 3) நூலகர் ஆகிய மூன்று அணியினை ஆராயவேண்டும். அப்போது தான் 'நூலகம் வளரும்' என்ற சீலத்தைச் சரியாக உணர முடியும்.

**உணராக் குறை**

இந்தக் கருத்தினை—நூலக வளர்ச்சியினை சரிவர உணராத காரணத்தால்தான் உலகின் வளர்ச்சிக்கு உறுதுணையாயிருக்கக் கூடிய நூலகங்களின் பணி, வளர்ச்சி, பயன் முதலியவைகளை சரிவர மதிப்பிடமுடியாது போய் விடுகிறது. ஆரம்ப சூரத்தனத்தோடு தொடங்கப்பெறும் நூலகங்கள் வளரும் என்ற கருத்தினை உணர்ந்து கொள்ளாமல் தொடங்கப் பெறும் நூலகங்கள்—வாசகர்கள் அதிகமாகும்போது—அதற்கேற்ப நூற்களை வாங்கி வைத்து, தேவையான நூலகப்பணியாளர்களை நியமித்துப் பணி செய்யாமல்—செய்ய முடியாமல் செய்யத் தெரியாமல்—கொஞ்ச காலத்திற்கப்புறம் இழுத்து மூடப்பட்டு விடுகின்றன. அதைத் தொடர்ந்து தொடங்கியவருக்கு அவப்பெயரும், • பணியாளர்களுக்கும் பழிச்சொல்லும், வாசகர்க்கு வசவும் வந்து சேர நூற்கள் எலிக்கும் கரையானுக்குமாகப் பாழாகின்ற இந்த நிலை மாறவேண்டும்; மாற்றவேண்டும், அது எப்படி? முதலில் முக்கூட்டணியின் முதலணியான நூற்களைக் காணலாம்.

**நூற்கள்**

நூலகப் பணியின் கருப்பொருள் நூற்களே. அவை ஆதிகாலத்தில் அருகியே வெளிவந்தன. காரணம் அதைத் தயாரிக்கக் காலமும் உழைப்பும் அதிகம் தேவைப்பட்டது. ஆனால் அறிவு முன்னேற்றத்தின் காரணமாக—அச்சுத் தொழில் முன்னேற்றத்தின் விளைவாக—பொழுதாயிர நூற்கள் வெளிவந்த வண்ணமாயுள்ளன இப்போது.

சரியாகச் சொல்லவேண்டுமானால் 1960ம் ஆண்டில் மட்டும் 3,41,000 நூற்கள் வெளியாகியுள்ளன. அவைகளில் பெரும் பகுதியை 16 நாடுகள் ஒவ்வொன்றும் ஐயாயிரத்திற்குக் குறையாமல்—வெளியிட்டுள்ளன. அவை யாவன:

| நாடு | நூற்கள் |
|---|---|
| ருசியா | 76,064 |
| செர்மனி | 26,734 |
| ஐக்கிய அரசு | 23,783 |
| சப்பான் | 23,682 |
| ஐக்கிய அமெரிக்கா | 15,012 |
| பிரான்சு | 11,872 |
| இந்தியா | 10,741 |
| நெதர்லாந்து | 7,893 |
| போலந்து | 7,305 |
| இத்தாலி | 7,297 |
| போர்ச்சுக்கல் | 6,646 |
| ஸ்பெயின் | 6,085 |
| சுவீடன் | 5,825 |
| ருமேனியா | 5,673 |
| யுகோசுலாவியா | 5,355 |
| அங்கேரி | 5,205 |

பிறநாடுகளை மறந்து இந்தியாவை மட்டும் பார்த்தால்கூட 1963 ஏப்ரலிலிருந்து 1964 மார்ச்சுக்குள்ளாக— கணக்குக் கிடைத்த வரை-13,412 நூற்கள் வெளியாயுள்ளன. அதன் விவரம் பின் வருமாறு.

| மாநிலம் | நூற்கள் |
|---|---|
| தில்லி | 2,737 |
| மகாராட்டிரம் | 2,353 |
| சென்னை | 1,992 |
| உத்தரப் பிரதேசம் | 1,530 |

| | |
|---|---|
| மேற்கு வங்காளம் | 991 |
| குசராத் | 740 |
| மைசூர் | 544 |
| ஆந்திரா | 532 |
| கேரளம் | 520 |
| பீகார் | 505 |
| பஞ்சாப் | 335 |
| மத்தியப் பிரதேசம் | 297 |
| ஒரிசா | 80 |
| அசாம் | 69 |
| இராசசுத்தான் | 45 |
| சம்மு-காசுமீர் | 12 |
| மைய அரசுப்பகுதிகள் | 130 |

இந்தியாவையும் மறந்து ஒரு தனிப்பட்ட நூலகத்தை (சென்னை கன்னிமாரா பொது நூலகத்தை- மட்டும் பார்த்தால் கூட நூற்கள் எப்படிக் குவிகிறது என்பதைக் கீழே காணலாம்.

| ஆண்டு | நூற்களிருப்பு |
|---|---|
| 1950-51 | 74,141 |
| 1955-56 | 86,176 |
| 1960--61 | 1,41,920 |
| 1963-64 | 1,63,805 |

'நூலகம் வளரும்' என்ற சீலத்தை மெய்யாக்கும் வகையில் நூற்கள் குவிகின்றன என்பதை அறியும் போது, அதற்கேற்ப அந்நூற்களை வைக்க நூலடுக்குகள் தேவைப்படுகின்றன.

எனவே அந்நூலடுக்குகளும்-வளரும் வகைக்கேற்ப அடுக்கிக் கொண்டு போக ஏதுவாக-ஒரே மாதிரியாக தயாரிக்கப்படவேண்டும். பழைய முறைப்படியான 'ப' வடிவ அடுக்கும் காலரிமுறை அடுக்கும் பயனற்றவைகளாகின்றன. எனவே புதிய முறைப்படி $6\frac{1}{2}$ அடி அகலமும் $1\frac{1}{2}$ அடி கனமும் 7 அடி உயரமும் கொண்ட நூலடுக்குகளே - இந்திய தர நிர்ணயக் கழகம் (Indian standards institution) அமைத்துள்ள விதிப்படியான நூலடுக்குகளே-பயன்படுத்தபட வேண்டும். அதன் தட்டுகளும் மேலும் கீழும் தேவைக்கேற்ப மாற்றியமைக்கும் வகையில் அமைக்கப்பட்டிருக்க வேண்டும்.

### பத்திரிகைகள் :

நூற்களைத் தொடுத்து பத்திரிக்கைகளின் வளர்ச்சியை நோக்கினுல் அது மிக வேகமாக முன்னேறுவதைக் காண்கிறோம். உலகம் முழுமையும் 1959ல் ஏறத்தாழ 8,000 செய்தித்தாள்களும், 83,230 பத்திரிக்கைகளும் வெளியானதாக யுனெசுக்கோ புள்ளி விவரக் குறிப்புக் கூறுகிறது.

இந்தியாவில் மட்டும் 1963ல் 9,211 பத்திரிக்கைகள் வெளியாகியுள்ளன. இவைகளில், பெரும்பாலனவை நூலகங்களுக்குச் செல்கின்றன. அதில் 247 செய்தித்தாள்களும் 1304 பத்திரிக்கைகளும் சென்னை கன்னிமாரா பொது நூலகத்தில் கிடைக்கின்றன.

இப்படி வந்த பத்திரிக்கைகளும் பிறவும் வாசகர்களுக்குப் பயன்பட வேண்டுமானுல் அவையனைத்தும் படிக்குமிடத்தில் முடிந்த அளவு ஒரே பார்வையில் பார்க்கும் வண்ணம் அமைக்க வேண்டும். அதற்கேற்ப நூலகத்தில் பத்திரிக்கைப் பிரிவில் போடப்படும் மேசைகள் நடுவில் பத்திரிக்கையிடுக்குப் பொருத்தப்பட்டு இருபுறமும் வாசகர்கள் வாய்ப்பாயமர்ந்து படிக்கும் வகை செய்யவேண்டும்.

### நூற்பட்டி

இப்படி வந்து குவியும் நூற்கள், பத்திரிக்கைகள், பிற வெளியீடுகள் பற்றிய குறிப்புகளைத் தரும் பொறுப்புடையது நூற்பட்டி (catalogue) யாகும். எனவே அதுவும் 'நூலகம் வளரும்' என்ற கருத்தை மறந்துவிடாமல் செயற்படவேண்டும்.

உதாரணமாக ஆண்டு தோறும் ஏறத்தாழ 6000 நூற்களைச் சேர்க்கும் நூலகம்-கன்னிமாரா பொது நூலகம் போன்றது-ஒரு அச்சு நூற்பட்டி (printed catalogue) தயாரிப்பதாக வைத்துக்கொள்ளுவோம். ஒரு நூலுக்கு ஒரு பதிவு வீதம் வைத்துக் கொண்டு, ஒரு பக்கத்திற்கு 20 பதிவுகள் என்று வைத்துக் கொண்டு கணக்கிட்டால் அதற்கு மட்டும் 300 பக்கங்களாகிவிடும். இந்த பட்டியையே பகுப்புப் பகுதி, அகரவரிசைப் பகுதி என்ற முறையிலே நூலகத் தரத்தில் வெளியிட வேண்டுமானல் அது 1800 பக்கங்களாகிவிடும். இந்த 1800 பக்க பட்டியை அச்சிட்டு முடிக்க குறைந்தது ஓராண்டாவது பிடிக்கும். அந்த இடைக்காலத்தில் சேர்க்கப்பட்ட நூற்கள் விடுபட்டுப்போகும். அப்படியும் வெளியானல் அந்த பட்டியின் விலை என்னவாகும்? குறைந்த விலைக்கு விற்றுல்கூட ரூ. 18 ஆகும். அதனை வாங்குவது யார்? யாருமிரார்? அப்படியானல் அதனை அச்சிடுவது ஏன்? அதற்காக காலத்தையும், உழைப்பையும், பணத்தையும் வீணுக்குவது ஏன்? எனவே இது ஆகாத காரியம்; போகாத ஊருக்கு இல்லாத வழியை தேடிப் பிடிப்பது போலாகும். அப்படியானல் அதற்கு மாற்று என்ன?

மூன்ளுட்களில் இடைவெளி விட்ட ஒட்டிச் சேர்க்கும் பட்டி (paste-down book form) பயன் பட்டது. அதுவும் பதிவுகள் அதிகமாக, அதிகமாகத் தொல்லை தருவதாயிருந்தது. எனவே அதில் திருத்தம் செய்து உதிரித் தாள் பட்டி (loose leaf book form) பயன்படுத்தப்பட்டது. இதில் ஒவ்வொரு தாளிலும் ஐந்து அல்லது ஆறு பதிவுகள் இருக்கும். தேவையான போது புதிய பதிவுகள் சேர்க்கப்படும். இதிலும் பல தொல்லைகள். எனவே இதிலும் திருத்தம் தேவைப்பட்டது. தனித்தாள் பட்டி (one leaf-one entry catalogue) உருவாயிற்று. இதில் ஒவ்வொரு தாளிலும்-சீட்டிலும்-ஒரு பதிவு மட்டுமே இருக்கும். எனினும் இது கையாளுவதற்குச் சிரமமாயிருந்தது. மேலும் திருத்தம் தேவைப்பட்டது. அட்டைப் பட்டி (card catalogue) உருவாக்கப்பட்டது. அதன்படி ஒரே அளவான-5 அங்குல நீளமும் 3 அங்குல அகலமும் கொண்ட - அட்டைகளில் ஒவ்வொரு நூலுக்கும் தனித்தனியாக-ஏறத்தாழ ஒவ்வொரு நூலுக்கும் ஆறு பதிவுகள் வீதம்-பட்டி தயாரிக்கப்பட்டது. இதனை ஏற்றுக் காட்ட புதுமுறை பட்டி அட்டைப்பெட்டிகள் (card cabinets) உருவாக்கப்பட்டன. அதனை எந்த அளவில் எந்த உருவில் எப்படி அமைத்துக் கொள்ளவேண்டும் என்பதை இந்தியதர நிர்ணயக் கழகம் நிர்ணயித்துள்ளது.

இப்படி உருவான பட்டி நூலகம் வளரும் வகையில் தானும் வளர்ந்து வருவார்க்குப் பயன் படும்.

## பகுப்பு முறை

இந்தப் பட்டி முறையைப் போலவே-நூலகத்தில் பயன்படும் பகுப்பு முறை (classification scheme)யும் வளரும் நூலகத்திற்கு ஏற்ப அமைக்கப்பட வேண்டும். அப்படிச் செய்தால்தான் நூலகத்திற்கு வந்த நூற்கள் வரன்முறையாக அடுக்கப்பட்டு வாசகர்கள் பார்க்க, பயன்படுத்த வசதி உண்டாகும்.

உலகில் தோன்றிய இரு பொருள்கள் ஒன்று போலிருப்பதில்லை; இருக்காது, இருக்க முடியாது; இருக்கக்கூடாது. அப்படி

யிருந்தால்தான் ஒவ்வொன்றை யும் அடையாளம் காண முடியும். இதனை அடிப்படையாகக் கொண்டு நூற்களை ஒரு குறிப்பிட்ட முறைப்படுத்தி அடுக்கி வைக்கச் செய்யும் ஏற்பாடுதான் பகுப்புமுறை.

இந்தபகுப்பு முறை பழங்கால நூற்களையும் சரி, இன்றைய நூற்களையும் சரி, எதிர்காலத்தில் வரக்கூடிய நூற்களையும் சரி- அனைத்தையும் ஏற்று, பகுப்பிட்டு, வைக்க ஏற்றதாயிருக்க வேண்டும். அதன் குறியீடு எளிதானதாக எல்லாரும் புரிந்துகொள்ளக் கூடியதாக இருக்கவேண்டும்.

இம்முறையிலே இன்று பல பகுப்பு முறைகள்-1. அமெரிக்காவிலே 1876ல் மெல்வில்டுயி என்பவரால் அமைக்கப்பட்ட தசாம்சப் பகுப்புமுறை (decimal classification) 2. ஐக்கிய அமெரிக்கா நாடுகளிலே 1904 ஆரம்பிக்கப்பட்ட காங்கிரசுப் பகுப்புமுறை (congress classification) 3. பெல்சியத்திலே 1896ல் தொடங்கப்பட்ட அனைத்துலக தசாம்சப் பகுப்பு முறை (universal decimal classification) 4. இந்தியாவில் 1933ல் இரங்கநாதன் அவர்களால் அமைக்கப்பட்ட கோலன் பகுப்பு முறை (Colon classification) 5. ஐக்கிய அமெரிக்க நாடுகளிலே 1935ல் பிளிஸ் என்பவரால் அமைக்கப்பட்ட நூற்றொகைப் பகுப்பு முறை (Bibliographic classification)-உள்ளன.

இவைகளில் நமது நாட்டில் அமைக்கப்பட்டதும், நமது நாட்டுத் தேவைக்கு ஏற்பானதும், இருக்கும் முறைகளில் சிறப்பானதுமான கோலன் பகுப்பு முறை கவனிக்கப்பட வேண்டிய தொன்றாகும்.

இம்முறையிலே ஏற்கப்படும் பகுப்பு முறை எதுவும் சிதைத்தும் மாற்றியும் பயன்படுத்தக்கூடாது. ஏற்றுக்கொண்டதை முழுமையாகப் பயன்படுத்தப் பழகவேண்டும். அப்போதுதான் நூலகத்து நூற்களை சரியான முறையில் அடுக்கிவைத்துப் பயன்படுத்தச் செய்யமுடியும்.

**வாசகர்கள்**

இங்ஙனம் நூலகத்திற்கு வந்த நூற்களை 'நூலகம் வளரும்' என்பதை உணர்ந்து பகுத்துப் பட்டியிட்டு பயன்படுத்த வைக்கப்படும்போது, அதனைப் பயன்படுத்திக் கொள்ளவாசகர்கள் வருவார்கள். அவர்கள் வரும்போது வரவேற்று, கேட்டது சொல்லி, வேண்டியது கொடுத்து, படிக்க வசதி செய்வோமானால் அவர்கள் எண்ணிக்கை அதிகமாகும்.

அதிகமாகும் வாசகர்கள் வேண்டிய நூலைப் பார்த்து, புரட்டி, எடுத்து வாசிப்பதற்கு ஏற்ப நூலகம் திறந்த முறை (open access) யானதாக இருக்க வேண்டும். அப்போதுதான் கால விரயம் இன்றி, உழைப்பு விரயமின்றி எல்லார்க்கும் எல்லாம் கிடைக்க வழி பிறக்கும். அப்படிச் செய்யும்போது நல்வாய்ப்பைத் தீயவழியில் சிலர் பயன்படுத்திக்கொண்டு விடாதபடி-நூலகப் பொருள்கள் களவுபோய்விடாதபடி-தக்க பாதுகாப்புகள் அமைக்கப்பட வேண்டும்.

இந்த வாய்ப்பு அதிகமாக அதிகமாக நூற்கள் அதிகமாகப் பயன்படும். நூலகத்திற்கு வரும் வாசகர்கள் அந்தந்த நூலகத்தில் உள்ள கட்டுத்திட்டப்படி உறுப்பினராகிக்கொண்டு நூலகத்திலிருந்து வீட்டிற்கு நூற்கள் எடுத்துச் செல்ல விரும்புவர். இந்த நிலையிலும் நூலகம் வளரும் என்பதைக் கருத்தில் கொண்டு பணியாற்றவேண்டும்.

ஏனெனில் முன்னாட்களில் நூலீதற்கு ஒரு பேரேடு வைத்

திருப்பர். அதில் தினசரி நூலெடுத்துச் செல்வார் பெயர், எடுத்துச் செல்லும் நூலின் பெயர் எழுதிக்கொண்டு எடுத்துச் செல்வாரின் கையொப்பமும் பெற்றுக் கொள்ளப்படும். அவர் திரும்ப நூலைக் கொடுக்கும்போது வரவு வைத்துக் கொள்ளப்படும். இம் முறையிலே ஒரு நூல் பெற, அல்லது திரும்பக் கொடுக்க குறைந்தது ஐந்து நிமிடங்களாவது ஆகும். இம்முறை வாசகர்கள் குறைவாயிருந்த காலத்தில் பரவாயில்லை.

## இரண்டு சீட்டுகள் முறை

ஆனால் அம்முறை இன்று பயனில்லை. சாதாரணமாக இன்று பெரும்பாலான நூலகங்களில் நாளொன்றுக்கு 300 பேராவது வருகிறார்கள்; 500 நூற்களாவது கொடுக்கப்படுகின்றன. இதனை பேரேட்டு முறைகளில் செய்வதானால் காலமும், உழைப்பும், பணமும் வீணாகும். வாசகர்கள் அதிருப்தி யடைவர். பணியாளர் தொல்லையுறுவர். எனவே இரண்டு சீட்டுகள் (two card system) முறை புகுத்தப்படவேண்டும். அதன்படி ஒவ்வொரு வாசகருக்கும் குறிப்பிட்ட எண்ணிக்கைச் சீட்டுக்கள் கொடுக்கப்படும். படிக்கக் கொடுக்கப்படும் ஒவ்வொரு நூலுக்கும், நூலின் விவரம் தரும் ஒரு நூற் சீட்டு இருக்கும். ஒவ்வொரு நூலும் கொடுக்கப்படும் போது நூற் சீட்டை எடுத்து வாசகர்கள் சீட்டுடன் இணைத்து நூலகத்தில் திருப்பித் தரவேண்டிய தேதிக்குப் பின் வைத்திருப்பர். நூல் திருப்பித் தரப்படும் பொழுது சேர்த்து வைக்கப்பட்டிருந்த நூற்சீட்டைப் பார்த்து நூலில் வைத்துவிட்டு வாசகர் சீட்டை வாசகரிடம் கொடுத்து விடுவர்.

## நூலகப் பணியாளர்

இங்ஙனம் பெருகிவரும் வாசகர்களுக்கு உதவி செய்ய நூலகப் பணியாளர்கள் தேவை. வாசகர் எண்ணிக்கை பெருகப் பெருக பணியாளர் எண்ணிக்கையும் பெருக வேண்டும். இதில் கவனம் செலுத்த மறந்தால்-வளரும் நூலகத்திற்கு பணியாளர்களும் வளரவேண்டும் என்பதை மறந்தால்-நூலகப் பணிக்குக் குறை வரும். எனவே அந்தக் குறை வராமல் வேண்டிய ஆட்களை-பயிற்சி பெற்ற ஆட்களை-வேலைக்கு வைத்துக்கொள்ள வேண்டும்.

சாதாரணமாக ஒரு பெரிய நூலகத்திற்கு - நூற்பகுதி (Acquisition section) ஆண்டில் வாங்கப்படும் ஒவ்வொரு 5000 நூற்களுக்கும் ஒரு ஆள்; பத்திரிக்கைப் பகுதி (Periodical section)க்கு வாங்கப்படும் ஒவ்வொரு 1000 பத்திரிக்கைகளுக்கு ஒரு ஆள்; பகுத்துப்பட்டியிடும் பகுதி (Classification of catalogue section)க்கு ஆண்டில் சேர்க்கப்படும் ஒவ்வொரு 2000 நூற்களுக்கும் ஒரு ஆள்; நூலீயும் பகுதி (lending secition)க்கு ஒவ்வொரு 1000 மணி நேர திறப்புக்கும் ஒரு ஆள்; இருப்புப் பகுதி (maintenance section)க்கு ஆண்டில் வாங்கப்படும் ஒவ்வொரு 2000 நூற்களுக்கும் ஒரு ஆள்; தகவலுதவிப்பகுதி(reference section)க்கு ஒவ்வொரு 100 வாசகருக்கும் ஒரு ஆள், நிர்வாகப் பகுதி (Administrative section)க்கு ஒரு கணக்கர் ஒரு தட்டெழுத்தர், ஒரு எழுத்தர்; மேற்பார்வை பகுதி supervision section)க்கு ஒரு நூலகர், ஒரு துணை நூலகர்-தேவைப்படலாம்.

'சிறு நூலகங்களுக்கு இதற்கு இத்தகு முழுத்தேவையிருக்காது. எனவே மேற்கண்டதை

மனத்தில் வைத்துக்கொண்டு தேவையான ஆட்களை நியமிக்க வேண்டும்.

இங்ஙனம் நியமிக்கப் பட்டுப் பணிபுரிபவர்கள் அனைவரும் கூட்டுணர்வோடு பணி புரிய வேண்டும். நூலக வேலையில் தனியுணர்வு பாராட்டி பேர்பெற முயலல் தவிர்க்கப்படவேண்டும். எல்லாவேலையும் எல்லாருக்கும் தெரிந்திருக்கவேண்டும். சரியாகச் சொன்னால் நூலகப் பணியாளர்கள் தேன்கூட்டில் தேனீத் தொகுதி வாழ்வு நடத்துதல் போல ஒருங்கிணைந்து பாடுபட வேண்டும்.

**நூலகம்**

இப்படியெல்லாம் நாளும், பொழுதும் நூற்கள் பெருக, நூற்களை உபயோகிக்கும் வாசகர் பெருக, வாசகர்களுக்கு உதவும் பணியாளர்கள் பெருக, நூலகமும்-நூலகக் கட்டிடமும்-பெருக வேண்டும்; வளர்ச்சி பெறவேண்டும்.

வளர்ச்சியிலே நான்குவித வளர்ச்சிகள் உண்டு. ஒவ்வொன்றும் ஒவ்வொருவித வளர்ச்சி. அவையாவன: முதல் வளர்ச்சி குழந்தை வளர்ச்சி (child growth) போன்றது. குழந்தை பிறந்தது முதல் மனிதநிலை (adulthood) அடையும் வரை உருவிலே, உயரத்திலே, பருமனிலே, எடையிலே, பிறவற்றிலே வளர்ந்து கொண்டே போகிறது. இக் காலப்பகுதியிலே வளர்ச்சிக்கு உதவும் உணவுச் சத்தில் ஒரு பகுதி குழந்தை நிலையிலிருந்து மனித நிலையடையப் பயன்படுகிறது. இவ்வளர்ச்சி மனிதநிலை அடைந்ததும் நின்றுவிடுகிறது. மற்றொரு பகுதி அன்றாடம் செலவாகும் சக்தியைத் திரும்பப் பெறுவதற்குப் பயன்படுகிறது.

அதுபோலவே நூலகமும் தொடங்கிய காலத்திலிருந்து ஒரு குறிப்பிட்ட நிலையடையும்வரை வளர்ந்து கொண்டே போகும். அதற்கேற்ப நூலகத் திட்டமும் வளர்ந்து கொண்டே போக வேண்டும்.

சரியாகச் சொன்னால் ஒவ்வொரு நாட்டின் தேசீய நூலகமும் இப்படிக் குழந்தை வளர்ச்சி போன்று வளர்ந்து கொண்டே தான் போகவேண்டும் அதற்கு ஒரு முடிவே இருக்க முடியாது. நமது நாட்டில் தேசீயமைய நூலகமும், இராஜ்யமைய நூலகங்களும் இப்படித்தான் வளர்ந்து கொண்டிருக்க வேண்டும். மாவட்டமைய நூலகங்களும் பிறகிளைகளும் இன்னும் இருபத்தைந்து ஆண்டுகளுக்குக் குழந்தை வளர்ச்சிதான் கொண்டிருக்கும்.

அதற்கேற்ப நூலகக் கட்டிடமும், அதற்கான தளவாடங்களும் திட்டமிட்டு இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து படிகளில் பெருகிக்கொண்டே போக வேண்டும்.

**மனித வளர்ச்சி**

இரண்டாவது வளர்ச்சி மனித வளர்ச்சி (Adult growth)யைப் போன்றதாகும். இந்நிலையில் மனிதன் ஒரு அளவுக்கு வளர்ந்த பிறகு மேலும் வளர்வதில்லை. எனவே அவன் உணவு முழுதும் அன்றாடம் செலவழியும் சக்தியைத் திரும்பப் பெறவும், உடலை நன்முறையில் பாதுகாத்து வைக்கவும் மட்டுமே பயன்படுகிறது.

பணிநிலை நூலகம் (Service library) இந்நிலையினதே. சரியாகச் சொன்னால் மாவட்டமைய நூலகங்கள் போன்றவை ஏறத்தாழ ஒரு இலட்சம் நூற்கள் கொள்ளும் நிலையடைந்து விட்டால்—கிளை நூலகங்கள் ஐம்பதினாயிரம் நூற்கள் கொள்ளும் நிலையடைந்து விட்டால் — போதும்,

மேலும் வளர வேண்டியதில்லை. பழைய நூற்களைக் கழித்துப் புதிய நூற்களைச் சேர்த்துப் பணி நிலை நூலகமாகப் பணியாற்ற வேண்டும்.

இந்நிலையில் மிகவும் முக்கிய மான—அருமையான — நூல் வேண்டுமாயின் அதனைத் தேசிய நூலகத்திலிருந்து பெற்றுப் பணி புரியலாம். அதுபோலவே கழிப்பதில் நன்னூலிருப்பின் தேசீய நூலகத்திற்கு அனுப்பி விடலாம்.

### கிளை வளர்ச்சி

மூன்றுவது • வளர்ச்சி கிளை வளர்ச்சி (phylogenesis) போன்ற தாகும். ஒரு பகுதி தானே தனியாக வளர்ந்து பெருகி நிற்கும். இன்று நூலகப் பணியின் பயனறிந்து பல்வேறு துறைகள் தங்களுக்குப் பயன் தரும் வகையில் தனி நூலகங்கள் அமைத்துப் பயன் காண்கின்றன. இம்முறையிலே சுவடி நிலையங்கள். (manuscript libraries), செய்திதாள் நூலகங்கள் (Newspaper libraries) துறை நூலகங்கள் (Departmental libraries) முதலியவைகளைக் கொள்ளலாம். இதில் பிறிதொரு முறையாக, பயன் படுத்துவார் அடிப்படையாக அமையும் குருடர் நூலகங்கள், மகளிர் நூலகங்கள், சிறுவர் நூலகங்கள் போன்றவைகளும் சேரும்.

### குடும்ப வளர்ச்சி

நான்காம் வகை வளர்ச்சி குடும்ப வளர்ச்சி போன்றதாகும். அதாவது வயதடைந்த ஒரு மனிதன் மணம் புரிந்து மக்களைப் பெறுகிருன். பிறகு அம்மக்களும் பெரியவர்களாகி மணம் புரிந்து மக்களைப் பெற்றுக் குடும்பத்தைப் பெருக்குகின்றனர். இந்நிலையில் குடும்பம் கொஞ்சங்கொஞ்சமாகப் பிரிந்து தனிக் குடும்பங்கள் உருவாகின்றன. எனினும் அவை தனியாகப் பிரிந்து போய் விடுவதில்லை. ஒருவருக்கொருவர் உதவி செய்துகொண்டு வாழ்கின்றனர். அவ்வப்போது தாத்தா பிள்ளைகளுக்கும் பேரர்களுக்கும் வழி காட்டி நிற்பார். எனினும் அவர்கள் குடும்ப வாழ்க்கையில் நேரடியாகத் தலையிடுவதில்லை.

அது போன்ற நிலை நூலக வளர்ச்சியிலும் உண்டு. சரியாகச் சொன்னல் இந்தியா போன்ற நமது நாட்டில் தேசீய நூலகம் தாத்தா நிலையிலும், இராஜ்ய மைய நூலகங்கள்—தாத்தாவுக்கு மக்கள் போலும், பேரர்க்கு அப்பாக்கள் போன்ற நிலையிலும், மாவட்ட நூலகங்கள் பேரர்கள் நிலையிலும் இருப்பதாகக் கொள்ளலாம்.

தேசீய நூலகம் இராஜ்ய நூலகங்களுக்கு உதவினும் வழி காட்டினும், அவைகளின் தினசரி வேலையில் குறுக்கிடாது. அது போன்றே இராஜ்ய நூலகங்கள் மாவட்ட நூலகங்களின் வேலையில் தலையிடாது. எனினும் ஒன்றுக் கொன்று உதவிக் கொள்ளும்.

இப்படி நூலகப் பணியின் ஐந்தாம் சீலமான நூலகம் வளரும் என்பதை ஒவ்வொரு நிலையிலும் கருத்தில் கொண்டு பணியாற்றினுல் தான் 'நூற்கள் படிப்பதற்கே' உண்மையாகும். அது 'ஆளுக்கோர் நூல்' தரச் செய்யும். அத்துடன் அது 'நூலுக்கோர் ஆள்' தேடச் சொல்லும். அதனை 'காலங் கருது' முறையில் செயற் படுத்தினுல் 'நூலகம் வளரும்'. •

அது மக்கள் அனைவரும் நூலுணர்வு பெறச் செய்யும். அந்த நூலுணர்வு அனைவரையும் 'நூலக உணர்வு' பெறச் செய்யும். அது எப்படி என்பதை அடுத்த திங்கள் காண்பாம்.

அகலமாக நீண்டிருக்கும்
கூர் விழிகளால்
அவள்
என்னை நோக்கும்போது
நானும்தான் பார்த்தேன்.
அதனால் அவள்
என் நெஞ்சைத் துளைத்ததோடு மட்டுமின்றி
ஒரு பட்டாளத்தையல்லவா
துணைக்கழைத்துவந்து
தாக்குவது போன்றிருக்கிறது.

# குறளில் கோதையர்

*1. அன்பை வளர்ப்பவள்!*

பொதிகை மலைச் சாரல்!

அங்கே பூந்தென்றல் அசைந்தாட-பூத்தமலர் நின்றுட-புள்ளிமான் துள்ளியோட-பொங்கிவரும் சிற்ருறு மண்மீது விளையாட-அதனுள் சேலாட-எழிலான மயில்கள் அழகான நடைபோட இன்பக் காட்சிகள் எங்கும் இணைந்து நின்றன!

இத்தகைய இன்பக் காட்சிகளையெல்லாம் கண்ட பறவையினம் இனிமைக் குரலிலே இன்னிசையெழுப்பிக் கொண்டிருந்தன.

எழிலைக் கொஞ்ச வைத்து—அதைக் காண்பவரை ஏங்கவைக்கும் இயற்கையின் விசித்திரங்களை ஒவ்வொன்ருகக் கண்டு ரசித்து வந்தாள் ஒரு சிற்றிடையாள்!

மலர்க்கூட்டத்தின் மதுரமான வண்ணங்களைக் காண தன் விழிகளை அப் பக்கம் திருப்பினுள் அந்த அழகி. அவளுடைய முகத்தைக் காண நாணியதோ என்னவோ அம் மலர்கள், தென்றல் தள்ளிவிட தலை திருப்பிக் கொண்டன மறுபக்கம்!

அழகிக்கு ஆத்திரம் பொங்கியது; "உங்களைவிட அழகாக இருக்கிறேன் என்ற பொருமையோ உங்களுக்கு? சரி போங்களேன்!" என்று சொல்லிக் கொண்டே வேறு பக்கம் சென்ருள், அங்கந்தில் தங்கநிறங் காட்டிக் கொண்டிருக்கும் அந்தத் தந்தப் பதுமை!

அங்கே குயிலினங்கள் கூவிக் கொண்டிருந்தன அதுவரை! ஆனல், இச் சிங்காரவல்லி அப் பக்கமாகச் சென்றதும் எவ்வொலியையும் கேட்கமுடியவில்லை அங்கு! 'உம்'மென்று உட்கார்ந்திருந்தன ஒவ்வொன்றும். ஓ... ஓ..! என் குரலினிமையில் சொக்கி உட்கார்ந்து விட்டீர்களா? அதற்கு நானென்ன செய்ய? என் குரல் அப்



படி!'' என்று கூறிக் கொண்டே மறுபக்கம் சென்ருள் அந்த மயக்கு விழிக்காரி!

அப்பக்கம் சிரித்து நின்ற மலர்களிலே வண்டினங்கள் தேனுண்டு—மயங்கி — போதையில் திளைத்து — படுத்துறங்கி விழித்தெழுந்து கொண்டிருந்தன மெல்ல மெல்ல!

அவற்றின் கண்களிலே பட்டது மற்ருெரு மலர்! மலருக்கு மலர் தாவுவது அவற்றின் இயல்பன்ருே? எனவே புறப்பட்டு விட்டன புதுமலரை நாடி!

அதுதான் அந்த அழகியின் மலர்முகம்!

பறந்து வந்தன வண்டுகள்; இதழ்களைத் திறந்திருக்கும் மலரென்று நெருங்கின நேரிழையின் முகத்தை நோக்கி; அச்சமுற்று அகன்றன அடுத்த வி நாடி!

இவ்விதமே அவள் முகத்தை நெருங்குவதும்—மீண்டும் அஞ்சிப் பறந்து பதுங்குவதுமாக அவளைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தன.

அவளுடைய விழிகள் கூரம்புகளாகவும், அவற்றின் மேல் விரிந்து வளைந்திருக்கும் புருவங்கள் இருவில்லாகவும் காட்சியளிக்கவே, விட்டதே போதுமென்று கொட்டமடிக்காமல் விரைந்தன ஒவ்வொன்றும்!

அந்தப் பட்டு நிகர்மேனியாள் சிரித்துச் செய்கையினைக் கண்டு வேர்த்தாள் — நடையை ஒவ்வொன்ருகக் கோர்த்தாள், ஒரு மரத்தின் நிழலிலே தன்னைக் கொண்டுபோய்ச் சேர்த்தாள்!

மரத்தின் உச்சிக் கிளையில் ஒரு பச்சைக்கிளி!

கனி ஒன்றினைத் தன் கூர் மூக்கால் கிழித்துக் கொண்டிருந்தது. இதற்குத்தான் அதற்குக் கிழியென்று பெயர் வந்து, அது ஒரு வேளை கிளி யென்று ஆகியிருக்குமோ? என்று எண்ணி அந்த மரத்துக் கிளியினை இம் மங்கைக் கிளி பார்த்தாள்!

அச்சம் அவள் உள்ளத்தைக் கவ்வியது. அங்கிருந்தும் விரைந்தாள் எங்கு தன் கன்னத்தைக் கனியென்று எண்ணிக் கிழிக்க வந்துவிடப் போகிறதோ என்றஞ்சி!

வனிதை வந்து கொண்டேயிருந்தாள்; வனப்புமிக்க வாலிபனொருவன் அவளைப் பார்த்துக் கொண்டேயிருந்தான். அவனுடைய இமைகள் 'படபட,வென அடித்துக் கொண்டன அவனையும் மீறி!

கன்னங்கரிய அவளின் கூந்தலும் — சின்னஞ்சிறிய அவளுடைய சிற்றிடையும்—வண்ணமுறும் அன்னத்தின் நடையும்—வாலிபனின் நெஞ்சத்தை எங்கெல்லாமோ இழுத்துச் சென்று இன்பத்தைக் கொட்டிக் காட்டிக் கொண்டிருந்தன!

ஆண்கள் இவளைக் கண்டு துடிதுடிப்பதற்கென்றே பிறப்பிக்கப்பட்ட தெய்வத் திருமகளோ?

வண்ணத் தோகையினை விதவிதமாய் விரித்தாடும் பச்சை மாமயிலோ?

இல்லை, பருவ எழிலாடும் கனமான குழையணிந்த மனிதப் பெண்ணுருவமோ?

ஐயோ! என் நெஞ்சம் மயங்கி நிலை குலைந்து தடுமாறுகிறதே! இதென்ன ஆச்சரியம்? அவளுடைய கண்களுக்கு இத்தனை சக்தியா? அகலமாக நீண்டிருக்கும் கூர் விழிகளால், அவள் என்னை நோக்கும் போது, நானும் தான் பார்த்தேன். அதனுல் அவள் என் நெஞ்சத்தைத் துளைத்ததோடு மட்டுமின்றி, ஒரு

பட்டாளத்தையல்லவா துணைக் கழைத்து வந்து தாக்குவது போன்றிருக்கிறது!

எமன் என்று சொல்லப்படுவதை இதற்கு முன் கண்டறியேன். ஆனால், அந்தப் பயங்கரத்தை இப்பொழுது இவளிடம் பார்க்கிறேன்! இது பெண் தன்மையுடன் போர் புரியும் கண்களை உடையது என்பதை!

மென்மையான பெண் தன்மை கொண்ட இந்தப் போதைப் பெண்ணின் கண்கள், கண்டவரின் உயிரை உண்ணும் நிலையிலே ஒன்றோடொன்று மாறுபட்டிருக்கின்றனவே!

இப் பெண்ணின் பார்வையை என்னவென்றே என்னால் தீர்மானிக்க முடியவில்லையே! அந்தக் கண்கள் ஆளைக் கொல்லும் எமனோ? அல்லது கண் தானோ? இல்லை பெண் மானோ? இம் மூன்றினையும் மாறிமாறிக் காட்டுகின்றனவே!

இவ்விதமான வியக்கத் தகுந்த கண்களை இவள் எங்கிருந்துதான் பெற்றாளோ?

பெண் மானின் துள்ளலும், துடிப்பும், இளம் பார்வையும், நாணமும், பெற்றிருக்கும் இவளுக்குத் தொடர்பில்லாத அணிகளையெல்லாம் அணியச் செய்தது ஏனோ?

அப்பப்பா! இந்தக் காதல் மிகவும் பொல்லாதது! கள் உண்டவரிடத்தில் மட்டுமே மயக்கத்தை உண்டுபண்ணுகிறது. ஆனால், இந்தப் பாழாய்ப்போன காதலோ கண்டவரிடத்தில் மயக்கமுறச் செய்துவிடுகின்றதே!

—என்றெல்லாம் எண்ணி யெண்ணி ஆச்சரியத்தில் மூழ்கியவனாய்க், கள்ளுண்டவன் போல் அக் கன்னியை உற்று நோக்கி நெருங்கிக் கொண்டிருந்தான் அவன்.

அவனைக் கண்டாள் அவள்; சுந்தரம் அவளைச் சொக்க வைத்தது; என்றாலும், திடீரென்று புனல் போலிருந்த கண்கள், தணல் போல் எரிய ஆரம்பித்து விட்டன!

"யார் நீ? எதற்காக என்னை இப்படிப் பார்க்கிறாய்? உனக்கு என்ன வேண்டும்?" என்று ஆத்திரத்துடன் கடுமையான குரலில் கேட்டாள்.

அவள் உதிர்த்த கடுஞ் சொற்களையும் கவனியாது அவளழகையே ரசித்துக் கொண்டு, ''வேண்டும்...வேண்டும்'' என்றான் எங்கோ தன் சிந்தனையைச் செலுத்திவிட்டு!

கேள்விக்குச் சரியான பதிலில்லாது போகவே, அவள் கண்களில் தீப்பொறி கிளம்பியது!

அவன் இதைக் கண்டு அஞ்சுபவனாகத் தோன்றவில்லை. அலட்சியப் புன்னகையோடு தான் நின்று கொண்டிருந்தான்!

''பகையில்லாத கடுஞ் சொற்களும், பகைவர் போல் பார்க்கும் பயங்கரப் பார்வையும், புறத்தே அயலார் போலிருந்து கொண்டு அகத்தே உறவாட அன்பு வளர்க்கும் செய்கை அது!''

—என்னும் வள்ளுவரின் வாய்மொழியை அவன் அறிந்தவன் போலும்! எனவேதான் அவள் அவ்விதம் கடுமையாகப் பார்த்தும், பேசியும் பதற்றம் கொள்ளாமல் நின்றிருந்தான்!

அழகிக்கு ஆச்சரியம் மேலிட்டது; அதற்கு மேலும் அவள் பாசாங்கு பலிக்கவில்லை!

செறாஅச் சிறுசொல்லும்
செற்றார்போல் நோக்கும்
உறாஅர் போன்று உற்றார்
குறிப்பு.

கோவலன் குறைகளே அவனது முடிவுக்குக் காரணமாயின என்பதை ஆதாரங்களுடன் காட்டுகிறார் ஆசிரியர்.

# கோவலன் குணமும் குறையும்

எஸ். ராமகிருஷ்ணன்



சிலப்பதிகாரக் காப்பியத் தலைவனான கோவலன், செல்வத்தால் சிறந்த குடியில் பிறந்த செவ்வேள் ஆவான். இரு நிதிக் கிழவனான மாசாத்துவானின் மகன், பண்தேய்த்த மொழியினர் ஆயத்தின் பாராட்டுக்குரிய அழகனாகத் திகழ்ந்தானென்று இளங்கோ அடிகள் அறிமுகம் செய்து வைக்கிறார்.

வருநிதியை வறியவர்க்கு வழங்கி மன நிறைவு எய்திய தந்தையைப் போலவே, கோவலனும் 'உள்ள எல்லாம் உவந்துஈயும்' வள்ளலாக விளங்கினான். பிறர் துயர் காணப்பொறாத மென்மையும் தன்னுயிர்க்கு அஞ்சாத வீரமும் ஒருசேரப் பெற்றவன் அவன்.

ஆனால் இதே கோவலன் மனையறம் மறந்து, மாதவியிடம் மையல் கொள்கிறான். எவர் துன்பத்தையும் காணச் சகியாத மென்னெஞ்சன், தனக்காகவே வாழும் கண்ணகியைத் தனிமைத் துன்பத்தில் ஆழ்த்துகிறான். முதல் நோக்கில், இத்திருப்பம் ஒரு புதிராகவே தோன்றுகிறது.

கண்ணகி கொழுநனது இச்சை வழி ஒழுகும் அடிமை என்றும், "ஊடுதல் காமத்திற்கு இன்பம்" என்பதை ஓர்ந்துணராத பேதை என்றும், கோவலன் மனையறம் துறந்ததற்கு அதுவே காரணம் என்றும் அறிஞர் சிலர் தெளிவுரை வழங்குவர். மாதவி ஊடலில் தேர்ந்தவளாக இருந்ததை அவர்கள் கோடிட்டுக் காட்டுவர்.

ஆனால் கதையின் முக்கியமான திருப்பத்துக்குக் கண்ணகியின் ஊடல் அறியாமையில் காரணம் காண்பது, காப்பியத்தின் உட்பொருளைக் கொச்சைப்படுத்துவதாகலாம். பார்க்கப்போனால், ஊடலால் விளையும் தீமையினை எடுத்துக்காட்டி எச்சரிப்பதே காப்பியத்தின் குறிக்கோள் என்றும் வாதிக்கலாம். கடற்கரையில், ஆற்றுவரியும் கானல்வரியுமாகிய இசைப் பாட்டுக்களைக் கோவலன் பாடக் கேட்டு ஊடிய மாதவியின் பாட்டுக்களே இருவரையும் பிரித்தன என்று சாற்றலாம்.

"கலவியான் மகிழ்ந்தாள்போல்
புலவியால் யாழ்வாங்கி"

மாதவி பாடியதைக் கேட்ட கோவலன், அவள் மாயமுடையாயாளென்று எண்ணி வெளியேறினான்.

கோவலன் கண்ணகியிடம் "நாமம் கெடாத இன்பம் எல்லாம்" துய்த்தானென்று அடிகளே கூறுவதால், கோவலனது புறநெறிக்குக் கண்ணகியின் குறை காரணமாகாதென்பது தேற்றம்.

ஆடல் பாடலையே நாடியே கோவலன் மாதவியிடம் சென்றான் என்பதும், உண்மை ஒன்றாக வேறொன்றைச் சாதிப்பதாக முடியும். இல்லறம் திறம்பாது, கலைகளைச் சுவைப்பதற்கு அன்றும் இன்றும் என்றும் வாய்ப்பு உண்டு. தசையின் நசையால் உந்தப்பட்டே, கோவலன் மாதவியிடம் சென்றான். மங்கல அணி ஒன்றிலேயே மகிழ்ச்சியினைக் காண்பவளாகக் கண்ணகி சாம்புவதற்குக் காரணமானான். கணிகையர் குலத்தில் பிறந்தபோதிலும் கற்புக்கரசியாக வளர்ந்த மாதவியையும் அப்போதைக்கப்போது தவிக்கச் செய்து காமுகரோடு ஊர் சுற்றியவன் கோவலன் என்பதையும் அடிகள் உய்த்துணர வைக்கிறார்.

ஓர் இலக்கியத்தில், தலைவியே தலைமைப் பாத்திரமாகச் சிறக்கும் போது, அவனைக் காதலால் கொண்டவனிடம் பழுது இருந்தால், அதனை இலைமறை காயாகவே உணர்த்துவது மரபு. சிலப்பதிகாரத்தின் முதன்மையான பாத்திரம் கண்ணகியே. கண்ணகியின் கணவனது தரக்குறைவையும் இலைமறை காயாகவே போகிற போக்கிலே உணர்த்த வேண்டும். இதனை அடிகள் நன்கு செய்து முடிக்கிறார்.

சில சமயங்களில் கோவலன் மாதவியைப் பிரிந்து வசித்தான் என்பதும் அப்போதெல்லாம் மாதவி அவனது உறவினரிடம் சென்று அவர்தம் நெஞ்சைப் பிணிக்கும் வகையில் தேர்ந்த சொற்களால் தன் பிரிவுத் துயரை எடுத்துரைத்து, அவர்களது உதவியால் அவனை அடைந்தாள் என்பதும், வேனிற் காதையில் வசந்தமாலையிடம் கோவலன்

உரைப்பதிலிருந்து தெரியவருகின்றன:

"பிரிந்துஉறை காலத்துப்
பரிந்தன ளாகி
என்உறு கிளைகட்குத்
தன் உறு துயரம்
தேர்ந்துதேர்ந்து உரைத்த
தேர்ச்சிவரி அன்றியும்"

என்பான் கோவலன்.

இந்திர விழவு ஊர் எடுத்த காதையில், இளி என்னும் இசையைப் பாடும் வண்டினோடும் இனிய இளவேனிலோடும் பொதிய மலையிலிருந்து வரும் இளந் தென்றல் உலவும் வீதிகளைக் கூறப் புகுந்த அடிகள், அதற்கு உவமை கூறும் முகத்தான்,

"குரல்வாய்ப் பாணரொடு நகரப்
பரத்தரொடு
திரிதரு மரபின் கோவலன்
போல"

என்றார்.

சிலப்பதிகார காலத்தில் பாணருக்கு ஏற்பட்டிருந்த இழிவையும் கருத்தில் கொண்டால், பாணரோடும் காமுகரோடும் வீதிகளில் திரிந்த கோவலனது இழிவு தெற்றெனப் புலனாகும்.

அநுபவத்தால் திருந்திய கோவலன், கொலைக்களக் காதையில் கண்ணகியிடம், "மக்களில் பதர் என்று சொல்லத்தக்க பயனில பேசுவாரோடும் புதிய புதிய காம நுகர்ச்சியைத் தேடி அலையும் தூர்த்தரோடும் காலம் தள்ளிக் கேலிக்கு உரியவனான எனக்கு, மெய்ப்பொருள் அறிந்த பெரியோர் விரும்பும் நல்லொழுக்கத்தினைத் துறந்த எனக்கு, நற்கதி உண்டாகுமோ?" என்று மனம் வெதும்பிப் பேசுகிறான். கோவலன் தசையின் நசையால் வசையுற்றவன் என்பது இவற்றிலிருந்து பெறப்படும். •

கோவலன் இயல்பாக நல்லுணர்ச்சி உடையவனே. மரணத்தைத் திருணமாக மதித்து வேழத்திடமிருந்து வேதியனையும் பூதத்திடமிருந்து புல்லனையும் காக்கத் தூண்டியது, அந்த நல்லுணர்ச்சி முனைப்பே. "அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு" என்ற குறள் நெறியின் விளக்கமாக அவன் செயற்படுவதைக் கண்டு நாம் உவகை அடைகிறோம். ஆனால் அறவழிப் பிழையாது வாழ்வதற்கு நல்லுணர்ச்சி மட்டும் போதாது. நல்லெண்ணமே நரகத்துக்குப் பாதை வகுத்துக் கொடுக்கும் என்ற ஆங்கிலப் பழமொழியில் உண்மை இருக்கிறது.

நாட்டு மாந்தரெல்லாம் ஆட்டு மந்தையாமென்று எண்ணும் அன்பில்லாத வன்னெஞ்சரால் விளையும் கொடுமை பெரிது. அன்னாருக்கு அஃகி அகன்ற அறிவும் எண்ணித் துணிந்து கருமம் இயற்றும் ஆற்றலும் அமைந்துவிட்டால், அவர்கள் அவனிக்கே கேடு சூழ்வர். கொடுமனக் கூனியும் சூர்ப்பணகையும் சகுனியும் விளங்கவைக்கும் உண்மை இது. ஆனால் அன்பால் மென்மையுற்ற மாந்தரும் அறிவின் திறமும் ஆற்றலும் அடையப் பெறாவிடில், தமக்கும் தம்மைச் சூழ்ந்தவர்கட்கும் துன்பம் தரக்கூடும்.

தக்க இன்ன, தகாதன இன்ன என்பதை ஓர்ந்துணரும் ஊற்றம் பெறாதவர், வாழ்வின் மேடுபள்ளங்களில் தடுமாறுவர். அவர்கள் நல்லாரைச் சேர்ந்து வாழ்ந்தால், நல்லொழுக்கத்தினை ஓம்புவர். அவப்பேறாக அவர்கட்குச் சிற்றினம் அமைந்துவிட்டால், அறம் திறம்பிக் கெடுவர். தெய்வக் கற்பினள் ஆன தூய கைகேயி, கூனியின் சேர்க்கையால் தீயவளாக மாறினள்.

கோவலனைக் கெடுத்தது அவனது சூழலே. பரத்தமையால் புழுத்துப் போன சமுதாயத்தில் பிறந்து வளர்ந்தான் கோவலன். அறிவின் ஊற்றம் பெறாத அவன், இந்தச் சூழலால் இழுக்குற்றான். அரங்கேற்று காதையில் பூம்புகாரின் கலைச்சிறப்பினை மட்டுமா பார்க்கின்றோம்? பொன்னால் இயன்ற பூங்கொடியைப் போல அகக்கூத்து புறக்கூத்துக்களை அவிநயம் தோன்ற ஆடிக் காட்டிய மாதவி, தலைக்கோல் பட்டம் பெறும் சிறப்பினை மட்டுமா அது சித்திரிக்கிறது? முரசு இயம்ப, பல் இயம் ஆர்ப்ப, அரசொடு பட்ட ஐம்பெரும் குழுவும் தேர் வலம் செய்து ஊர்வலம் நடத்துவதெல்லாம் கலைக்கு ஏற்றம் அளிப்பதற்கு மட்டுந்தானா? உடலின்பம் நாடுவார்க்குப் புதுப்பொருள் வந்திருப்பதை விளம்பரம் செய்வதாகவும் அவ்விழா அமையவில்லையா? அரசன் அளித்த பச்சை மாலைக்கு ஆயிரத்தெட்டுக் கழஞ்சு பொன் விலை நிச்சயித்து, அதனைக் கொடுப்பவன் மாதவியை அடையலா மென்று அறிவிக்கப் படவில்லையா? போருக்கு விலை கூறுவோள் போல, அப்பச்சை மாலையைக் கூனி வீதிக்கு எடுத்துச் செல்லவில்லையா?

"நகர நம்பியர் திரிதரு மறுகில்
பகர்வனர் போல்வதோர் [பான்மையின் நிறுத்த"

என்பது அடிகளின் கூற்று அன்றோ?

புகாரில் செல்வர்கள் வாழ்ந்த பட்டினப் பாக்கமென்னும் பகுதியில்,

"காவல் கணிகையர் ஆடல் கூத்தியர்
பூவிலை மடந்தையர்"

முதலியோர் வசித்தனர் என்று அடிகள் கூறுவதும் குறிப்பிடத்தக்கது.

மணிமேகலைக்குப் பெயர் சூட்டியபோது, கணிகையர் பலர் கூடியிருந்தனர் என்பான் மாடலன்.

"அணிமே கலையார் ஆயிரம் கணிகையர்
மணிமே கலையென வாழ்த்திய ஞான்று"

என்பது அவன் வாக்கு.

உருவிலாளன் (மன்மதன்) ஒரு பெருஞ்சேனை என்றே அடிகள் புகார் நகரின் பொது மகளிரைக் குறிப்பிடுவார். இந்திரவிழாவின் போது, காமப்பேய் கோர நர்த்தனம் ஆடியதையும் சித்திரிப்பார். நகர வீதிகளில், பதியிலாரைக் கண்ட நம்பியர், "நிறைமதியே முயலென்ற மறுவை நீக்கிக் கருமுகில் சுமந்து இரு கருங்கயலும் இடையில் குமிழும் எழுதி இங்கு வந்ததோ?" என்றனராம்.

"திங்களின் நிலத்தில் மகரக் [கொடி ஏந்திய மன்மதன்
வளர்த்த வானவல்லியே இங்கு வந்ததோ?"

என்றனராம். இவ்வாறெல்லாம் பேசி, அப் பொதுமகளிரின் ஊடலைத் தணித்து, அவர்களைத் தழுவினராம். அப்போது அம்மகளிரின் வரிக்கோலமெல்லாம் அக்காளையரின் உடலில் பதிந்ததாம். அதனைக் கண்டு மனைவிமார் ஊடுவாரென்று அஞ்சி, விருந்தினரோடு தத்தம் இல்லம் சென்றனராம். புகார் நகர வீதிகளிலேயே இத்தனை லீலைகள் நிகழ்ந்தனவென்றால், சிற்றின்ப வழிபாட்டால் சமுதாயம் எவ்வாறு சிறுமையுற்றிருக்கிறது என்பதை ஓர்ந்து கொள்ளலாம்.

பூம்புகாரில், அரசோ அவையமோ முறை திறம்பினால், கண்

ணீர் உகுத்துப் புலம்பும் பாவை மன்றம் இருந்தது. துறவிவேடம் தரித்துத் தீநெறியில் செல்வோரையும், கற்பு நெறி திறம்பும் இல்லற மகளிரையும், வஞ்சக அமைச்சரையும், பொய்ச் சான்று பகர்வோரையும், புறம் கூறுவோரையும் உண்ணும் பூதம் இருந்தது. ஆனல் மனையறம் துறந்து விலைமகளிரை நாடும் காமுகரைத் தண்டிக்கும் தெய்வம் யாதும் இல்லை. வரைவின் மகளிரை நாடிச்செல்வது அந்தச் சமுதாயத்தில் இயல்பான செய்கையாகக் கருதப்பட்டது. இந்தச் சுற்றுணர்ச்சியே கோவலனைக் கெடுத்தது.

பெற்றோர் வழங்கிய செல்வம் அனைத்தையும் இழந்த பின்பே கோவலன் புதிய பாதையை மேற்கொள்ளத் தொடங்குகிறன். நலம் நயந்து வந்த நம்பியரின் பொருளையெல்லாம் கவர்ந்து கொண்டு, அவர்களைக் கைவிடும் விலைமகளிர் அறத்தைக்கற்றிராதவள் மாதவி. எனினும் கோவலன் தனக்குப் பொருள் கொண்டு வந்து கொடுப்பதையும் அவள் தடுக்கவில்லை. எனவே, அறிவின் உரம் பெருத கோவலன், தன்னிடம் பொருள் இல்லாததால் மாதவி ஊடுகிறுளென்று பிழைபட உணர்ந்தான். அவனைப் பிரிந்து கண்ணகியிடம் சென்று,

"சலம்புணர் கொள்கைச்
சலதியொடு ஆடிக்
குலம்தரும் வான்பொருட்
குன்றம் தொலைந்த
இலம்பாடு நாணுத் தரும்"

[சலம் - பொய்; இலம்பாடு - வறுமை.]

என்ருன்.

பின்னர், கோசிகன் மூலம் மாதவி அனுப்பிய கடிதத்தைப் படித்தபோதே, மாதவி தீது இலள் என்பதையும் குற்றம் தன்னுடையதே என்பதையும் உணர்கிறன். கண்ணகியின் தியாக உணர்வும் கவுந்தியடிகளின் அறஉணர்வும் அவன் திருந்துவதற்கு உதவுகின்றன. 'நெறியிலிருந்து நீங்கிய நீர்மையேன் ஆகி, நறுமலர் மேனி உடைய கண்ணகி நடுங்குதுயர் எய்தச் செய்தேன்' என்று வருந்துகிறன். தன் குலத்தவரைக் கண்டு வருவதற்காக மதுரை நகருக்குள் சென்றவன், பொதுமகளிர் சூழலையே அங்கும் காண்கிறன். மதுரையும் புகாரின் மறுபதிப்புத்தான் என்பதை அடிகள் ஊர்காண் காதையில் புலப்படுத்துவதில் உட்பொருள் உள்ளது. மதுரை அழற் கடவுளுக்கு இரையாகத் தக்கதே என்பதும், அடக்கமோ அளவோ இல்லாமல் போகத்தில் ஈடுபட்டுச் செல்லரித்துப்போன சமுதாயத்தின் அழிவையே அது அறிவிக்கும் என்பதுந்தான் இந்த உட்பொருளாகும்.

மனையறம் படுத்த காதையில், கண்ணகியின் புற அழகில் ஈடுபட்டு அவளைப் பாராட்டினுன் கோவலன். இப்போது, கொலைக்களக் காதையில், அவளது குணச்சிறப்பினையும் அக அழகினையும் போற்றிப் புகழ்கிறன்.

"நாணின் பாவாய்! நீள்நில
விளக்கே!
கற்பின் கொழுந்தே! பொற்பின்
செல்வி!"

என்று அவளை ஏத்துகிறன். தன்னந்தனி ஆளாகக் கண்ணகி இல்லத்தில் உழைப்பதைக் கண்டு மனம் வெதும்பி, 'வருபனி கரந்த கண்ணன் ஆகி', சிலம்பு விற்று வருவேன் என்று சொல்லிச் செல்கிறன். சிலம்பு விற்கச் சென்றவன் சாவினைத் தழுவுகிறன்.

'திருந்தியவனுக்குச் சாவா?' என்று நாம் கண்ணழியக் கலுழ்கிறேம். பின்னர், நானிலம் வாழ்வதற்கு நல்லோர் தியாகம் பல

புரிதல் இன்றியமையாததாகிறது என்பதை ஓர்ந்து உணர்கிறோம். கற்பின் கனலியான சீதை அசோகவனத்தில் ஐயிரு திங்கள் கண்ணீரால் நனைந்தும் உடல் வெம்மையால் உலர்ந்தும் நோன்பிருந்தாள். இராவண வதம் நிறைவு பெறுவதற்கு அது முன் தேவையாக இருந்தது. அதே போல், மதுரை எரிவதற்குக் கோவலன் உயிர்த் தியாகம் செய்வது அவசியமாகிறது. நல்லுணர்ச்சிகளின் படிவமாகப் பொலிவு பெற்ற கோவலனை எந்தச் சமுதாயம் கெடுத்ததோ, அந்தப் பூம்புகாரின் மறு பதிப்பான மதுரை அழிவதற்கு அவன் உயிர் இழக்க வேண்டியிருக்கிறது. இவ்வாறு அமைதி கண்டு, மாசு நீங்கித் தூயராகிச் சமநிலை எய்துகிறோம்.

— ❋ —

## வழிவழி வந்த பழி

தொலை தூரத்திலே அந்த ஆற்றில் நீராடிக்கொண்டிருந்தாள் ஒரு பருவ மங்கை. அவள் காலில் ஏதோ உருண்டையாகத் தட்டிற்று. குனிந்து அதைக் கையில் எடுத்தாள். அது ஒரு பழுத்த மாங்கனி. நல்ல மணம் வீசிற்று. அவள் அதைக் கடித்துத் தின்று கொண்டிருந்தாள். மாங்கனியைத் தேடிச்சென்ற காவலர் அவளைக் கைப்பிடியாகப் பிடித்துக்கொண்டு அரசன் நன்னன் எதிரில் கொண்டு சென்றுவிட்டனர்.

நன்னன் அவளைப் பார்த்து, "ஏன் அப்பழத்தைத் தின்றாய்? என் உத்தரவு உனக்குத் தெரியாதா?" என்று அதட்டினான்.

"அரசே, ஆற்றின் அடியிலே உருண்டு வந்தது பழம். அது உங்கள் மரத்துக்கனியென்று தெரிந்தால் தின்றேயிருக்க மாட்டேன். மன்னிக்கவேண்டும்" என்று மன்றாடினாள் அந்த மங்கை.

அந்த மங்கையின் பெற்றோர்களும், நன்னனின் நண்பர்களும் அவளை மன்னித்துவிட வேண்டினர்.

நன்னன் யார் சொல்லையும் மதிக்கவில்லை. அப்பெண்ணுக்கு மரண தண்டனை விதித்தான்.

இந்தப் பெரும் பழி அவனுடைய குடியை ஏழேழு தலைமுறைக்கும் தொடர்ந்து நின்றது. அவன் வழி வந்தவர்கள் எல்லாரும் இப்பழிக்கு ஆளாயினர்.

—இலக்கியச்சோலை

# செய்திக் குறிப்புகள்

## குமளம்

ஏப். 26 குமளம் கிராமத்தில் தென்னார்க்காடு மாவட்டக் கலெக்டர் திரு. அன்புரோஸ் அவர்கள் மின்சார இயக்கு விழாவிற்குத் தலைமை வகித்தார். நாட்டின் நிலைமையைப் பற்றியும் மக்கள் நடந்து கொள்ளவேண்டிய விதத்தைப் பற்றியும் தெளிவாகப் பேசினார்.

சென்னை ராஜ்ய ஸ்தலஸ்தாபன அமைச்சர் திரு. மஜீத் அவர்கள் மின்விளக்குகளை இயக்கி வைத்து கிராம மக்களின் நலன்களைக் கருதித்தான் அரசாங்கம் பல ஆக்க வேலைகளைச் செய்கிறதென்றும், விவசாயப் பெருமக்கள் இது போன்ற அபிவிருத்தித் திட்டங்களுக்கு ஆதரவளிக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார்.

மற்றும் புதுவை ராஜ்ய பொதுப் பணித்துறை அமைச்சர் திரு. வெங்கிடசுப்பா ரெட்டியார் அ.இ. கா. கமிட்டி மெம்பர், திரு எஸ். எல். கிருஷ்ணமூர்த்தி, தொகுதி சட்டமன்ற உறுப்பினர் திரு. R. M. கிருஷ்ணன், மாவட்ட கூட்டுறவு வங்கித் தலைவர் திரு. திருமால், நாட்டுக் கவி தியாகராஜன் ஆகியோர்கள், கிராம மக்கள் ஒற்றுமையுடன் ஒத்துழைத்தால் உன்னதமாக வாழலாம் என்று எடுத்துரைத்தார்கள்.

அமைச்சர்கள் மேளதாளத்துடன் ஊர்வலமாக அழைத்து வரப்பட்டார்கள். கண்டமங்கலம் ப. யூ. சேர்மன் திரு. K. M. ரங்கநாதன் அவர்கள் அமைச்சர்களுக்கும் மற்ற தலைவர்களுக்கும், வரவேற்புரை வாசித்தார். ஆணையாளரும், சமூக கல்வி வளர்ச்சி அதிகாரி, ஜி. இ. முத்து அவர்களும் இந்த விழாவிற்கான ஏற்பாடுகளைச் சிறப்பாகச் செய்திருந்தனர்.



## காட்டுக்கோட்டை புதூர்

தலைவாசல் பஞ்சாயத்து யூனியன் வட்டாரத்தில் காட்டுக்கோட்டைபுதூர் பள்ளியின் 9வது ஆண்டு விழா 2—5—64 சனிக்கிழமையன்று திரு. ஆர். பாலுசாமி நாயுடு, காட்டுக்கோட்டை பஞ்சாயத்து போர்டு தலைவர் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திரு. சின்னங்குட்டி படையாச்சி கொடியேற்றினார். பொருட்காட்சியை திரு ஆர். பாலுசாமி நாயுடு திறந்து வைத்தார். திரு. முனுசாமி நாயுடு விளையாட்டு விழாவைத் துவக்கி வைத்தார். மாலை 7-மணிக்கு பொதுக்கூட்டம் நடைபெற்றது. திரு. ஆர். பாலுசாமி நாயுடு, பஞ்சாயத்து தலைவர் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். வரவேற்புரையும் ஆண்டறிக்கையும் தலைமை ஆசிரியர் அப்துல் அஜீஸ் வாசித்தார். பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் திரு. டி. ஜே. அந்தோணி, பி. ஏ., அவர்களும், திரு. எம். வீ. ஈஸ்வரன், பள்ளித் துணைத் தணிக்கையாளர், திரு. அரங்கன், டிப்டி சேவக், திரு. கே. ஜி. ராமலிங்கம் கல்வி விஸ்தரிப்பு அலுவலர் முதலியோர்

ஆண்டு விழாவின் முக்கியம், கல்வியின் அவசியம் பற்றியும் ஐந்தாண்டுத் திட்டங்களைப் பற்றியும் பெற்றோர் கடமை, பள்ளி முன்னேற்றம் பற்றியும் சொற்பொழிவாற்றினர்.

திருமதி புஷ்பம் அந்தோணி அவர்களால் விளையாட்டுப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கு பரிசுகள் வழங்கப்பட்டது. பள்ளி மாணவ மாணவிகளால் "நட்பு" "குழந்தை உள்ளம்" என்ற இரு நாடகமும் ஆத்தூர் கலைக் குழுவைச் சேர்ந்த கோவிந்தராஜ், முத்துலிங்கம் பார்ட்டியாரால் ஐந்தாண்டுத் திட்ட பிரசார நாடகமும், வெகு சிறப்பாக நடைபெற்றன.

விழாவைவெற்றிகரமாக நடத்த காட்டுக்கோட்டை பள்ளித் தலைமை ஆசிரியர் திரு செகராஜன், முஸ்தபா, பரசுராமன் கிராம சேவக் முதலியவர்கள் சிறந்த உதவி புரிந்தனர்.

திரு அய்யாசாமி (காட்டுக்கோட்டைபுதூர்) உதவி ஆசிரியர் எல்லோருக்கும் நன்றி கூறினர்.

❋ ❋ ❋

## அரிஜன தினவிழா

30—4—64-ம் தேதி அரிஜன தின விழா தலைவாசல் வட்டாரத்தில் பெரியேரி, நாவக்குரிச்சி, புளியங்குரிச்சி, காட்டுக்கோட்டை, புத்தூர், திட்டச்சேரி, ஆகிய இடங்களில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

பெரியேரி கிராமத்தில் திரு அம்பாயிரக் கவுண்டர் அவர்கள் தலைமையில் அரிசன தின விழாவும், பள்ளி ஆண்டு விழாவும் நடைபெற்றது. டி. ஜே. அந்தோணி, ஆணையாளர் திரு. ஈஸ்வரன், பள்ளி டிப்டி இன்ஸ்பெக்டர் முதலியவர்கள் சொற்பொழிவாற்றினர்.

தலைமை ஆசிரியர் திரு. எம்.வி. ராமச்சந்திரன் வரவேற்புரையும் உதவி ஆசிரியர் ஆண்டு அறிக்கையும் வாசித்தனர்.

❋ ❋ ❋

## கொடைக்கானல்

கொடைக்கானல் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் சாதாரணக் கூட்டம் 17—4—64 தேதி தலைவர் திரு. க. ம சு. கோ. பக்கிரிசாமிபிள்ளை அவர்களின் தலைமையில் நடைபெற்றது.

ஆணையாளர் திரு. பழ. கருப்பையா அவர்கள் கூட்டத்தில் கலந்து கொண்டார்.

❋ ❋ ❋

## மதுராபிள்ளையார் பாளையம்

திருவெண்ணை நல்லூர் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த தி. புதுப்பாளையம், மதுரா பிள்ளையார் பாளையம் கிராமத்தில் தொண்டர் படை அங்கத்தினர்களின் உழைப்பால் உருவாகிய ரூ. 500 பெறுமான விழல் வேய்ந்த கட்டிடத்தை 13—4—64 ஞாயிறு திருக்கோவிலூர் கோட்டாட்சித் தலைவர் திரு. ஜீவ. அருட்பிரகாசம், பி. ஏ., அவர்கள் கிராம வானொலி மன்றம், சமூகக்கல்வி நிலைய உபயோகத்திற்காக திறந்து வைத்தார்கள். மேற்படி கட்டிடத்தில் பிள்ளையார் பாளையம் கிராம வானொலி மன்றத்திற்கென்று ஒரு புது வானொலிப் பெட்டி இயக்கிவைக்கப்பட்டது.

❋ ❋ ❋

## துரிஞ்சாபுரம் யூனியன்

23—4—64 தேதி மாதர் குழந்தைகள் நலக் கூட்டம் துரிஞ்சாபுரம் பஞ்சாயத்து யூனியன் மன்றத்தில் மாவட்டத் தலைவர் ஸ்ரீ எஸ். பி. ஸ்ரீனிவாசன் ஐ. ஏ. எஸ். அவர்கள் தலைமையில் நடைபெற்றது. பஞ்சாயத்து யூனியன்

தலைவர் திரு. பி. சீனிவாச ரெட்டியார் வரவேற்புரை கூறினார். மாவட்டத் தலைவரின் மனைவியார் திருமதி ஜானகி ஸ்ரீனிவாசன் அவர்கள் மாதர் சங்க நன்மைகள் பற்றியும் செயல்பட வேண்டிய முறைகளையும் கூறினார். 10 மாதர் சங்கங்கட்கு தையல் மிஷின்கள் அன்னாரால் வழங்கப்பட்டது. ரூபாய் 5500 செலவில் கட்டப்பட்ட துரிஞ்சாபுரம் பெண் ஆசிரியை இல்லம் திருமதி ஜானகி ஸ்ரீனிவாசன் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. யூனியன் ஆணையர் திரு கே. வரதராஜன் அவர்கள் நன்றி கூறினார்.



## தலைவாசல்

தலைவாசல் பஞ்சாயத்து யூனியன் வட்டாரத்தில் 16—3—64 முதல் 22—3—64 முடிய ஐந்தாண்டு திட்ட பிரசார வார விழா காட்டுக்கோட்டை, ஆரகளூர், வெள்ளையூர், புளியங்குறிச்சி, வீரகனூர், லத்துவாடி, சாத்தப்பாடி, நாவக்குறிச்சி, சார்வாய்புதூர், வடகுமரை, தெற்குமரை. தேவியா குரிச்சி, சார்வாய், மணிவிழுந்தான் தெற்கு புதூர் ஆகிய இடங்களில் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.



தலைவாசல் பஞ்சாயத்து யூனியன் வட்டாரத்தில் மணிவிழுந்தான் தெற்குபுதூரில் ஐந்தாண்டு திட்ட விளம்பர வார விழா 16—3—64 முதல் 22—3—64 ஞாயிற்றுக்கிழமை வரை கொண்டாடப்பட்டது.

பஞ்சாயத்து தலைவர் திரு எஸ். ராமசாமி அவர்கள்தேசீயக்கொடியேற்றினார்.

பொதுக்கூட்டத்தில் திரு. சிங்காரவேலு, விவசாய விஸ்தரிப்பு அதிகாரி, திரு ராமலிங்கம், கல்வி விஸ்தரிப்பு அதிகாரி, பஞ்சாயத்து தலைவர் திரு எஸ். ராமசாமி, பஞ்சாயத்து உப தலைவர் பரசுராமன், பள்ளி ஆசிரியர் திரு முத்துலிங்கம் ஆகியோர் சொற்பொழிவாற்றினார்கள்.



## பூவிருந்தவல்லி யூனியன்

பூவிருந்தவல்லி யூனியன் வீரராகவபுரம் கிராமத்தில் 14-4-64ல் ஆசிரியை இல்லம், சிறுவர் பூங்கா, பால்வாடி, சிசு பராமரிப்பு முதலிய புதிய கட்டிடங்களின் திறப்பு விழா மாவட்ட ஆட்சித் தலைவர் திரு எஸ். கிருஷ்ணசாமி ஐ. ஏ. எஸ், அவர்களின் தலைமையில் நடைபெற்றது.

மேற்படி வைபவத்தில், தமிழ் நாடு முதலமைச்சர் திரு எம்.பக்தவச்சலம், மத்திய சமூகநல போர்டு துணைத் தலைவர் திருமதி சரோஜினி வரதப்பன், மேல்சபை அங்கத்தினர் திரு எம். சேஷாச்சாரி, ஷாவாலஸ் கம்பெனி மேனேஜிங் டைரக்டர், முதலானோர் கலந்து கொண்டு சொற்பொழிவாற்றினார்கள்.

யூனியன் தலைவர் திரு டி.. எஸ். கே. சாரி அவர்கள் முதல் மந்திரி திருமதி சரோஜினி வரதப்பன், கலெக்டர் முதலானோருக்கு வரவேற்பு இதழ் வாசித்து அளித்தார்.

ஷாவாலஸ் கம்பெனியார் மனமுவந்தளித்த 215 சீருடைகள் பள்ளி மாணவர்களுக்கும், பால்வாடி குழந்தைகளுக்கும் கலெக்டர் வழங்கினார்.

மேல்நிலைத் தொட்டிக்கு முதல் அமைச்சர் அடிக்கல் நாட்டினார்.

வீரராகவபுரம் பஞ்சாயத்து தலைவர் திரு எம். சுப்பா ரெட்டியார் நன்றி நவின்றார்.




**மதிப்புரை**

'நோயற்ற வாழ்வு குறைவற்ற செல்வம்,' என்பது கற்றவர் கருத்து. நோயற்ற வாழ்வு சீரிய சிறந்த வாழ்வுதான் என்றாலும் அந்த வாழ்வை அடைவது என்பது அரிய காரியமே. அரிய காரியத்தை அறிந்து நல்வழி நடக்க உறுதுணையாக உதவ வல்லன உயரிய நூற்களேயாம்.

வைத்திய நூல்கள்வாழ்வுக்கு ஏற்ற துணையாக வல்லன. அனுபவத்தை அறிவாக்கி, அறிவை அனைவரும் பகுத்துணர்ந்து ஆனந்தம் அடைய அழகிய நூற்களை ஆக்கித்தரும் ஆசிரியர்களை நாம் எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

திரு எஸ். ஏ. துரை ராஜா அவர்கள் தம்முடைய அனுபவத்தை யெல்லாம் அழகான தமிழில் தெளிவாக எழுதிய புத்தகமே 'பிள்ளை வைத்தியம்' என்பது,

குழந்தைகளுக்கு ஏற்படக் கூடிய சில வியாதிகளைப்பற்றிக் கூறி அந்த நோய்களுக்குரிய வைத்திய முறைகளை விளக்கி, வாழ்வைவளமுள்ளதாகஆக்கும் வழிவகைகளை இந்நூலில் ஆசிரியர் அழகுற எழுதி உள்ளார்.

குழந்தைகளுக்குக் கண்களில் ஏற்படும் வியாதிகள், பல் சம்பந்தமான வியாதிகள், காது சம்பந்தப்பட்ட வியாதிகள், வாய் சம்பந்தப்பட்ட வியாதிகள் வயிறு சம்பந்தப்பட்ட வியாதிகள், மற்றும் மூத்திரக் கோளாறு, மாந்தம், கணை ரோகம்,காய்ச்சல்,தோல்பற்றிய நோய்கள் குறித்து இந்நூல் விரிவாக எடுத்துரைக்கின்றது.

எளிய மருந்துகள், இனிய முறைகள், அரிய உண்மைகள். அனைவருக்கும் பயன்படக் கூடிய அரிய புத்தகம்.

இதன் விலை ரூபாய் மூன்று. கிடைக்குமிடம்: ஸ்டார் பிரசுரம், 66, பெரிய தெரு, சென்னை-5, (இந்நூலின் ஆசிரியர்: எஸ். ஏ. துரைராஜா)



பொதுவாகத் தன்னைப்பற்றி தாழ்வாகப் பேசிக் கொள்வதோ பணிந்து நடப்பதோ தாழ்வு மனப்பான்மை அல்ல. தனக்கு ஒருகுறிப்பிட்டுள்ள குறைபாடு இருந்து அந்தக் குறைபாடு பிறருக்குத் தெரிந்துவிடக்கூடாது என்பதற்காகச் சிலர் பலவகை குயுக்திகளைக் கையாள்வதுண்டு. அவ்வாறு தன் குறைபாட்டை மறைப்பதற்குச் செய்யும் மனப் பான்மையைத்தான் தாழ்வு மனப்பான்மை என்று மனோ தத்துவ அறிஞர்கள் குறிப்பிடுகிறார்கள். குறைகள் வெளிப் படாமல் இருக்க வேறுபல வழிகளில் தனது கெட்டிக்காரத்தனத்தை வெளியிட முயற்சி செய்வது தாழ்வு மனப்பான்மையின் தூண்டுதலால் ஏற்படுவதுதான். வீண்பெருமை அடித்துக்கொள்வது, அளவுக்கு மீறித் தலையை நிமிர்த்திக் கொண்டு நடப்பது, பலரது கவனத்தை இழுப்பதற்காக உரக்கப் பேசுவது, தனக்குப் பிடித்தவர்களை அளவுக்கு மீறிப் புகழ்வது, பிறர் செய்யும் அரிய செயல்களைப் பற்றித் துச்சமாகப் பேசுவது ஆகியவை எல்லாம் தன்னிடம் உள்ள முக்கியமான ஒரு குறைபாட்டை மறைப்பதற்காகவே செய்யப் படுகின்றன.

தோல்விகளினாலும் ஏமாற்றத்தினாலும் மனக் கசப்படைந்தவர்களிடம் தாழ்வு மனப் பான்மை இன்னும் பல வகைகளில் வெளிப்படுகிறது. தமக்கு கிடைக்காதனவெல்லாம் மனிதப் பிறவிக்கு வேண்டாதன வென்று அவர்கள் பேசுவர். தான் அனுபவிக்க முடியாத ஒன்றைப் பிறரும் அனுபவிக் காது இருந்தால்—அதாவது பிறரும் தனக்குள்ள குறைபாடுகளோடு இருந்தால் அதில் திருப்தி அடையும் நிலையில் — மனிதமனம் இயல்பாக இயங்குகிறது. இப்படியாக மனித மனத்தின் இயக்கத்தைப் பற்றியும் வாழ்க்கையில்மனப்போக்கு எப்படி இருக்கிறது என்பதை பற்றியும் 'மனமும் மனித வாழ்க்கையும்,' என்ற நூல் தெளிவாகச் சொல்லுகிறது.

மனிதனுக்குத் தேவைகள் பதினொன்று என்றும், அந்தத் தேவைகளின் உந்துதலால் வெளிப்படும் உணர்ச்சிகளே, பசி, தாகம், உறக்கம், பயம், காமம், காதல், தற்பெருமை கோபம், வெறுப்பு, நட்பு, அன்பு, ஆசை, உழைப்பு, திகைப்பு என்றும் ஆசிரியர் அழகுற எழுதி உள்ளார்.

'இந்நூலின் விலை ரூபாய் இரண்டு. கிடைக்குமிடம்: தொல்காப்பியர் நூலகம், 107, கனகசபை நகர், சிதம்பரம். (இந்நூலின் ஆசிரியர் திரு மாறன், திருச்சி)



தெலுங்கர்களின் கிராம வாழ்க்கையைப் பற்றித் தெளிவு படச் சித்திரிக்கும் இந்நாவல், 'வேயி படகனு' என்ற விசுவ நாத சத்திய நாராயணா அவர் களின் தெலுங்கு நூலின் சுருங்கிய தமிழ் வடிவமாகும். மூலக் கதை ஆயிரம் பக்கங்கள்

கொண்டது. மொழி பெயர்ப்பு ஆயிரம் பக்கத்தையும் அறுபத் தேழு பக்கங்களில் அழகுறக் கூறுகிறது.

சரளமான தமிழில், சலிப் பில்லாத முறையில் சல்லா இராதாகிருஷ்ண சர்மா அவர் கள் எழுதி உள்ளார்கள்.

தருமராவ் ஒரு சிறந்த கதைப் படைப்பு. அருந்ததியும் அழ கிய பாத்திரமே. ரங்காராவ் பணக்காரர்களின் பக்குவமான பிரதிபலிப்பு. குறி சொல்லும் கனுசாரி குறிப்பிடத்தக்க பாத் திரமாகவே திகழ்கின்ருள்.

வானொலியில் ஒலிபரப்பாகிய கதையை வாய் மனம் வழி படித்து மகிழ ஒரு வாய்ப்பை ஏற்படுத்தித் தந்த பாரிநிலை யத்தை நாம் பாராட்ட வேண்டும்.

இதன் விலை ரூபாய் 1-25 கிடைக்குமிடம்: பாரிநிலையம் 59 பிராட்வே, சென்னை-1, (இந்நூலின் தமிழ் மொழி பெயர்ப்புஆசிரியர்: சல்லா இராதகிருஷ்ண சர்மா)

— ❋ —

## துறந்தார் பெருமை

பொன்னையும் பொருளையும் துறந்தோர் தம் அகத்துறு கவலையெல்லாம் துறந்தோராவர். நெஞ்சைக் கலக்கும் துன்பங்களைத் தரும் செல்வத்தைப் பற்றிச் சிந்திப்பதை அவர்கள் மறந்து விடுவர். அவர்கள் காற்றுப் போல் எங்கும் உலவி வருவர். காட்டுப் பறவைகள் போலவும் விலங்குகள் போலவும், உணவிருக் கும் இடத்திலே உண்டு, நிழலிருக்கும் இடத் திலே உறங்கி நினைவுகள் அலையாத அமைதி நிறைந்த மனத்தோடு இருப்பர்.

—புத்தர்.




1879 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதி அன்று லண்டன் மாநகரில் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அறிவின் ஒளியாக அக்குழந்தை திகழ்ந்தது. கண்டதைக் கண்டவாறும், உள்ளதை உள்ளவாறும் உணர்ந்ததை உணர்ந்தவாறும் எழுதும் திறனை அது பெற்றுத் திகழ்ந்தது.

ஆங்கிலேயனாகப் பிறந்த அக்குழந்தை இந்தியாவுக்கு வந்தது. ஆங்கிலேயரின் ஆணவ வெறியை ஆட்சித் திமிரைக் கண்டு கலங்கியது கருத்தால் உணர்ந்ததைக் கதையாக எழுதியது. அந்தக் கதையே டாக்டர் அஜீஸ் என்ற இந்தக் கதை. இதன் ஆங்கிலத் தலைப்பு 'A PASSAGE TO INDIA,' என்பது இந்தக் குழந்தையின் பெயர்தான் E.M. போர்ஸ்டர்.

ஆங்கில நாவலாசிரியர்களுள் நல்ல அறிமுகமும் அதிகப் புகழும் பெற்று விளங்குபவர் இப்பெருமகன். இவருடைய இந்த நாவல் கல்லூரி மாணவர்கட்கு ஆங்கிலப் பாட நூலாகப் பன்முறை தேர்ந்தெடுக்கப் பெற்றுள்ளது.

பலரும் படித்துப் பயன் பெற வேண்டும் என்ற எண்ணத்தோடு தமிழில் சுருக்கி அளிக்கப்படும் இக்கதையில், ஆங்கில ஆட்சியில் இந்தியர்கள் என்னென்ன பாடு பட்டார்கள் என்பதையும், ஆங்கில மக்கள் இந்திய மக்களை எப்படி நடத்தி வந்தார்கள் என்பதையும் தெளிவாகக் காண முடியும்.

இக்கதையை எளிய இனிய தமிழில் சுருக்கமாக தமிழாக்கம் செய்தவர் திரு நாக முத்தையா அவர்களாவர்.

— **ஆசிரியர்.**

## முதல் பாகம்

கங்கை நதிக்கரையில் கலகலப்பாக ஒரு நகரம் விளங்கி வந்தது. அதுதான் சந்திரப்பூர். அந்த ஊருக்கு அவ்வளவு செல்வாக்கு ஏன் இருந்தது. என்பதை யாருமே அறியமாட்டார்கள். அவ்வூரிலிருந்து இருபது மைல் தொலைவில் மராபார் குகைகள் இருந்தன. இந்தக் குகைகளால் தான் சந்திரப்பூரின் புகழ் பெருகி இருக்க வேண்டும். இன்னும் சொல்லப் போனால் சந்திரப்பூரில் ஓடும் கங்கை யாற்றின் புனிதத் தன்மையைக் கூட புறக்கணித்து விட்டனர் மக்கள்.

சந்திரப்பூரில் ஒரு மருத்துவ விடுதி உண்டு. புகைவண்டி நிலையமும் உண்டு. புகை வண்டி நிலையத்தை அடுத்து பொருள் நிறைந்த வெள்ளையர்கள் வாழ்க்கை நடத்தி வந்தனர். மலை



வளம் நிறைந்த அவ்வூர் அந்நியர்களின் குடியிருப்பு நிலமாகப் பலகாலம் பயன்பட்டு வந்தது.

அவ்வூரில் ஒரு வாலிபன் வாழ்ந்து வந்தான். அவன் ஒரு மருத்துவன். அவன் பெயர் தான் அஜீஸ். அவனை டாக்டர் அஜீஸ் என்றே அவ்வூரா அழைத்து வந்தனர்.

டாக்டர் அஜீஸ் சைக்கிளில் ஏறிக்கொண்டு தன் நண்பனும், உறவினனுமான ஹமீதுல்லாவைக் காணச் சென்றான். அப்போது முகம்மது அலி என்பவர் ஹமீதுல்லாவோடு பேசிக்கொண்டிருந்தார். அவர் ஒரு வயதான வழக்கறிஞர்.

டாக்டர் அஜீஸ், ஹமீதுல்லா, முகம்மது அலி மூவரும் உரையாடத் தொடங்கினர். வேண்டியது வேண்டாதது என்ற வேறுபாடே இல்லாமல், கண்ட கண்ட விஷயங்களையெல்லாம் பற்றி அவர்கள் விவாதம் செய்தனர். 'ஆங்கிலேயன் இந்தியனோடு அந்நியோன்யமாகப் பழகுவானா?' என்பதுதான் இறுதியாக விவாதிக்கப் பட்ட பொருள்.

ஹமீதுல்லா 'பழகுவான்.' என்று கூற, வழக்கறிஞர் முகம்மது அலியோ, ஆங்கிலேயனைக் கடுமையாகக் கண்டித்தே பேசி வந்தார். ஹமீதுல்லாவுக்குக் கொஞ்சம் இளகிய மனம். ஆங்கில மக்களைக் கடுமையாகத் தாக்கும் அளவுக்குத் தைரியம் இல்லாதவர். அதற்கொரு காரணமும் உண்டு. அவர் இங்கிலாந்து சென்று திரும்பியவர். அதனால் தான் அவர், ஆங்கிலேயர்கள். நட்புக்கு உகந்தவர்கள்; நல்லவர்கள் என்றெல்லாம் சொல்லிச் சொல்லி வந்தார். முகம்மது அலி அதனை ஏற்றுக்கொள்ள வில்லை. 'ஆங்கிலேயன் இங்கிலாந்தில் நல்லவனாக இருக்கக் கூடும். ஆனால் அதே ஆசாமி இந்தியாவுக்கு வருவானாயின் ஆணவ வெறி அவனைப் பற்றிக்கொண்டு விடும்.' இதுதான் வழக்கறிஞரின் முடிவான எண்ணம். இதற்கும் ஒரு காரணம் உண்டு.

முகம்மது அலி ஒரு வழக்கறிஞர். அவரை ஒருமுறை மாஜிஸ்டிரேட் கண்டபடி கேலி செய்து அனுப்பிவிட்டான். அந்த மாஜிஸ்டிரேட் ஓர் ஆங்கிலேயன். அவன் ஆணவமும் ஆட்சி வெறியும் அதிகமுள்ளவன். அவன் பெயர் கியாஸ்லோப். கியாஸ்லோப்பை, 'செம்மூக்குச் சிறுவன்' என்று தான் முகம்மது அலி அழைப்பது வழக்கம்.

வரும்போது — இங்கிலாந்திலிருந்து வந்து சேரும் போது அடக்க ஒடுக்கமாகத் திகழ்ந்த கியாஸ்லோப், பழக்க வழக்கத்தாலும், பிற வெள்ளையர்களின் குணாதிசயங்களைக் கண்டு விட்டதாலும் வெறி பிடித்தவனாக மாறி விட்டான். 'சகவாச தோஷம்' அவனை ஆணவக்காரனாக ஆக்கி விட்டது.

பொதுவாகவே ஆங்கிலேயர்களைப் பற்றிய இந்தியர்களின் கருத்து இதுதான்.

'வெள்ளைக்காரன் இந்தியா வந்த இரண்டு வருடங்களில் இறுமாப்புக் கொண்டு விடுகிறான்; வெள்ளைக் காரிக்கோ ஆறு மாதங்களே போதும்.'

டாக்டர் அஜீஸ், ஆங்கிலேயர்களைப் பற்றி இன்னொரு அழகான உண்மையையும் அடிக்கடி எடுத்து உரைப்பதுண்டு.

"வெள்ளைக்காரன் லஞ்சம் வாங்குவான்; எதற்காக லஞ்சம் வாங்கினானோ அதனைச் செய்து முடிக்கவே மாட்டான். இந்தியன் லஞ்சம் வாங்குவான். எதற்காக லஞ்சம் வாங்கினானோ அதனை அழ

காகச் செய்து முடித்து விடுவான். 'ஆகவே தான் சட்டத்தின் இரும்புப் பிடிகளில் இந்தியன் அடிக்கடி சிக்கிக் கொள்ளுகிறான்; ஆங்கிலேயன் அகப்படாமலேயே தப்பி விடுகிறான்.''

ஊர் மக்கள் என்ன சொன்ன போதிலும் உற்றார் உறவினர் என்ன சொன்ன போதிலும் ஹமீதுல்லாவுக்கு மட்டும் ஆங்கிலேயர்களிடம் அலாதி அன்பு இருக்கவே செய்தது.

தத்தம் சொந்த அனுபவங்களையெல்லாம் எடுத்துச் சொல்லி ஆங்கிலேயனின் குணத்தை முடிவு கட்ட முயன்றவர்கள், இறுதியில் ஒரு முடிவுக்கு வந்தனர்.

'பொதுவாக ஆங்கிலேயன் ஆணவ வெறி மிக்கவன் என்றாலும், அவர்களுள் ஓரிரு நல்லவர்களும் இருக்கவே செய்கிறார்கள்.'

இப்படியாக ஒரு முடிவை உறுதி செய்த பின்னர் டாக்டர் அஜீஸ் 'ஹமீதுல்லாவின் தோட்டத்திற்குள் காற்றுவாங்க விரைந்தார். தோட்டத்துப் பூக்கள் நறுமணம் வீசின. தென்றல் தேக சுகத்தை வாரி வழங்கிற்று. உள்ளம் உவகைக் கடலில் மிதந்தது. பெர்சிய மொழியில் பெரும் புகழ் படைத்த புலவர்களின் பாடல்களில் இரண்டொரு அடிகளை வாய்விட்டுப் பாடினார் டாக்டர்.

தோட்டத்திற்குள் சுற்றித் திரிந்துவிட்டு, வீட்டுக்குள் நுழையும் போது டாக்டர் அஜீசை ஹமீதுல்லா உள் வீட்டிற்குள் அழைத்துச் சென்று தன் மனைவியிடம் அறிமுகப்படுத்த விரும்பினார்.

முகத்திரையிட்டு மூடி மறைந்து வாழும் முகம்மதியப் பெண்ணிடத்தில் ஓர் ஆண்மகன் அவ்வளவு எளிதில் பேசிப் பழகிவிட முடியாது என்றாலும்கூட ஹமீதுல்லா பேகத்தோடு, டாக்டர் அஜீஸ் அன்பொழுகப் பேசத் தொடங்கி விட்டார். அதற்குக் காரணம் அவர்களுக்குள் இருந்து வந்த தூரத்துப் பந்த பாசமே.

'டாக்டர்' அஜீஸ் விரைவில் மற்றொரு பெண்ணை மணந்து கொள்ள வேண்டும்,' என்ற தன்னுடைய விருப்பத்தைப் பேகம் தெரிவித்தாள். டாக்டர் தன் முதல் மனைவியைப் பறிகொடுத்து விட்டுத் தன்னந்தனியாக வாழ்ந்து வந்தார். டாக்டர் தனித்து வாழ்வதைப் பேகம் விரும்பவில்லை. மற்றொருத்தியை மணந்து வாழ வேண்டும் என்று பேகம் சொல்லுவதை டாக்டர் விரும்பவில்லை. 'ஒருவேளை ஒருமுறை போதும்,' என்று தன் அதிருப்தியை வெளியே காட்டினார் அவர். டாக்டருக்கு இரண்டு பையன்களும் ஒரு பெண்ணும் இருந்தனர். அவர்கள் அப்போது பாட்டியாரின் வீட்டில் வாழ்ந்து வந்தனர்.

மணத்தை மறுத்து உரைக்கும் ஆண்மக்களைப் பற்றியும், மணம் ஆகாமல் வாழ்ந்துவரும் பெண் மக்களைப் பற்றியும் பலப்பலவாக பேகம் எடுத்துச் சொன்னாள். சமுதாய வளர்ச்சிக்குத் திருமணம் அவசியம் என்பதும், மணவினையை மறுத்து வாழ்வது இறையன்புக்கு இழைக்கப்படும் அநீதி என்பதும் பேகத்தின் அசைக்க முடியாத கருத்துக்களாகும்.

பேகம் பேசியதையெல்லாம் பேசாமல் செவிமடுத்த டாக்டர், பதில் சொல்ல மனமில்லாமல் பிரிந்து செல்ல விடை பெற்றுக் கொண்டார். விடை பெற்றுக் கொள்ளும்போது, 'பிறகு பார்க்கலாம்,' என்று பெரிய மனிதர்களைப்போல சமாதானம் சொல்லத் தவறவில்லை.•

டாக்டர் அஜீஸ், அன்று ஹமீதுல்லாவின் வீட்டிலேயே விருந்துண்டு மகிழ்ந்திருந்தார். அந்த விருந்தில் முகம்மது அலி பங்கு கொள்ளவில்லை. ஏதோ அவசர வேலையின் காரணமாக வீட்டுக்குப் போய்விட்டார்.

விருந்துண்ட மயக்கத்தில் டாக்டர் மகிழ்ச்சியோடு சோர்ந்து படுத்துறங்க விரும்பிய போது ஒரு வேலைக்காரன் அங்கு வந்து சேர்ந்தான். மருத்துவ மனையில் குற்றேவல் புரிந்துவரும் அந்த வேலைக்காரன் பெரிய டாக்டரிடமிருந்து ஒரு கடிதத்தைக் கொண்டு வந்திருந்தான். மேஜர் காலண்டர் என்பவர்தான் மருத்துவ மனையின் பெரிய டாக்டர். அஜீஸ் அவருக்குக் கீழே தான் அரசாங்க உத்தியோகம் பார்த்து வந்தார்.

கடிதத்தை வாங்கிப் படித்ததும் அஜீஸ் சிறிது ஆத்திர முற்ருர். ஓய்வு பெற விரும்பிய நேரத்தில் உபத்திரவம் ஊட்டுவதாக அமைந்தது அந்தக் கடிதம்.

'உடனே என் வீட்டுக்குப் புறப்பட்டு வரவேண்டும்,' என்பது தான் கடிதத்தில் கண்டிருந்த கட்டளை. 'ஏன் வர வேண்டும், எதற்காக வர வேண்டும்' என்பன போன்ற கேள்விகட்கு விளக்கமே இல்லாமல் 'உடனே வர வேண்டும்,' என்று உத்தரவு போடுவது வெள்ளையர்களின் வெறி உணர்ச்சிக்கு ஓர் எடுத்துக் காட்டாகும்.

'அவசர வேலையாக இருக்கலாம். அரசாங்க உத்திரவை அடிபணிந்து மதிக்க வேண்டுவது அவசியம்,' எனக் கூறித் தன்னுடைய சைக்கிளைத்தர முன் வந்தான் ஹமீதுல்லா.

மணியும், தடுத்து நிறுத்த பிரேக்கும் இல்லாத சைக்கிள் வண்டியில் மேஜரின் வீட்டுக்கு டாக்டர் சென்ருர். போகும் வழியில் சைக்கிளின் டியூப் தெறித்து விட்டது. அவசரத் தோடு ஆத்திரமும் ஒன்று சேரவே, அழ மாட்டாத குறையோடு சைக்கிளை அருகிருந்த நண்பனின் வீட்டில் தூக்கி எறிந்து விட்டு, குதிரை வண்டியில் ஏறிக் கொண்டு மேஜரின் வீட்டுக்கு விரைந்தார்.

மேஜரின் வீட்டுக்குச் சற்றுத் தொலைவிலேயே குதிரை வண்டியினின்று இறங்கி, காலால் நடந்து வீட்டினுள் நுழைந்தார் டாக்டர். மேல் அதிகாரியின் வீட்டுக்குள் கீழ் அதிகாரி குதிரை வண்டியில் செல்லுவது குற்றமென்று கருதப்பட்ட காலம் அது. ஆகவேதான் டாக்டர் பயந்து நடந்து கொண்டே வீட்டினுள் நுழைந்தார்.

வீடு இருந்ததே தவிர, வீட்டினுள் மேஜர் இல்லை. வீட்டு வேலையாள் 'எஜமானன் வெளியே போய் விட்டார்,' என்று டாக்டரின் கேள்விக்கு விடை தந்தான். 'ஏதேனும் தகவல் சொல்லிவிட்டுப் போனுரா?' என்று டாக்டர் மீண்டும் கேட்டார். இம்முறை பதில் சொல்லாமல் டாக்டரை முறைத்துப் பார்த்தான் வேலையாள். 'அவனுக்கு முன்பொரு தடவை கைப் பணம் தரவில்லை,' என்பது டாக்டருக்கு நினைவு வரவே, வேலையாளின் முறைப்பில் உள்ள பொருளை அவர் எளிதில் உணர்ந்துகொண்டார்.

என்ன செய்யலாம் என்று எண்ணிக் கொண்டே இங்கு மங்கும் நடந்து கொண்டிருக்கும் போது இரண்டு வெள்ளைக்காரப் பெண்மணிகள் அங்கே வந்து சேர்ந்தனர். ஒருத்தி மேஜர் காலண்டரின் மனைவி, மற்றொருத்தியின் பெயர் வெஸ்லே. அவர்கள், டாக்டரைப் பற்றி லட்சியமே செய்யவில்லை. ஏனெனில் அவர்

கள் ஆங்கிலேயர்கள்—ஆளும் கட்சியினர்; அவரோ இந்தியர்-அடிமை!

பெண்மணிகள் இருவரும் டோங்காவில் ஏறிக் கொண்டனர். கிளப்பை நோக்கி டோங்காவை ஓட்டச் செய்தனர். டாக்டர், வீட்டுக்குள் நுழைந்தார். வேலைக்காரனிடம் வெள்ளி ரூபாய்கள் இரண்டைக்கொடுத்து விட்டு, 'ஏதேனும் தகவல்கள் உண்டோ?' என்று மீண்டும் கேட்டார். வேலையாளின் முகத்தில் புன்சிரிப்பு ஊடாடியது. எனினும் அவன் தந்த விடை டாக்டரைத் திருப்திப்படுத்துவதாக இல்லை. உபயோகமில்லாத பதிலை சிரித்துக் கொண்டு சொன்னால் என்ன, சினந்து கொண்டு சொன்னால்தான் என்ன?

டாக்டர் வெளியே விரைந்து வீடு நோக்கிப் புறப்படப்போகும் போது, வேலையாள் சிரித்துக் கொண்டே சொன்னான்: 'ஐயா, நீங்கள் வந்தால் என்ன சொல்ல வேண்டும் என்று நான் கேட்டேன். அதற்கு அவர் 'முட்டாள் அஜீஸ்,' என்று முனுகிக்கொண்டே போய்விட்டார்'

இதனைக் கேட்டதும் ஆத்திரமுற்ற அஜீஸ் இரண்டொரு சொற்றொடர்களை எழுதித் தன் உள்ளத்தைத் தெரியப்படுத்த விரும்பினார். எனினும் ஆங்கிலேயர்கள் ஆணவம் பிடித்தவர்கள், இந்தியர்கள் அடங்கிவாழவே பிறந்தவர்கள் என்ற அரசியல் உண்மையைப் புரிந்துகொண்டு, 'நான் வந்து போனதாக எஜமானனிடம் எடுத்துச் சொல்,' என வேலையாளிடம் வேண்டிக் கொண்டு வெளியேறினார்.

வழியில் ஒரு மசூதி இருந்தது. மனத்திற்கு மகிழ்ச்சி ஊட்டும் மகத்தான இடம் மசூதி. எனவே அங்கு சென்று ஆண்டவனைச் சிந்திக்க விரும்பிய அஜீஸ் ஒரு மூலையில் ஒதுப்புறமாக உட்கார்ந்து கொண்டார். பெர்சிய மொழிப் பாடல் ஒன்றை அவரது வாய் முணுமுணுத்தது.

அந்தச் சமயம் அங்கே ஓர் ஆங்கில மாது தோன்றி அவரது அமைதியைக் கலைத்துவிட்டாள். அவளை யாரென்று சற்று உற்றுப் பார்க்கும்போது அவள் ஓர் ஆங்கில மூதாட்டி என்பது தெளிவாயிற்று. கால்களில் அணிந்திருந்த செருப்புக்களோடு அவள் மசூதியினுள் நுழைய முயன்றாள். அது கண்டு பொறாத அஜீஸ் இரைந்து கத்தினார்:

'அம்மா, இது ஒரு மசூதி. இங்கு ஆங்கிலேயர்களின் ஆணவம் செல்லுபடி ஆகாது. காலில் உள்ள அணிகளை அகற்றிவிட வேண்டும். இது முஸ்லிம் மக்களின் புனிதமான இடம்!'

டாக்டரின் கூச்சலுக்கு உடனடியான மரியாதை அளித்து விட்டாள் அந்த மூதாட்டி. காலணிகளைக் கழற்றி அப்புறப்படுத்தி விட்டு அவரின் அருகே சென்று அன்பு கனிந்த குரலில், 'இனி நான் உள்ளே செல்லலாமா?' என்று கேட்டாள். ஏனைய ஆங்கிலப் பெண்மணிகளைப் போல ஆட்சித்திமிர் இல்லாமல் அடக்க ஒடுக்கமாக விளங்கிய ஆங்கில மாதினைக் கண்டதும் ஆச்சரியமுற்ற அஜீஸ், அவளை வாயாரப் புகழ்ந்தார். பலரிடமும் ஆங்கில மாதின் அடக்கம் பற்றிப் பேசப் போவதாகத் தெரிவித்தார்.

'நீங்கள் இந்தியாவுக்கு சமீபத்தில்தான் வந்தீர்களோ?' என்றார் டாக்டர். 'ஆம்' என்றாள் ஆங்கில மூதாட்டி. 'இனிமேல் தயவு செய்து தனிமையில் நடமாட வேண்டாம். பொல்லாத மனிதர்களும், பொல்லாத விலங்குகளும் இங்கு அதிகம். எதவாக நடந்து

கொள்ள வேண்டுவது உங்கள் பொறுப்பாகும்,' என்று எச்சரித்தார் டாக்டர்.

எச்சரிக்கையை இன்முகத்தோடு ஏற்றுக் கொண்ட அம்மூதாட்டி, 'நீங்கள் மட்டும் தனிமையில் திரியலாமோ?' என்று திருப்பிக் கேட்டாள். 'நான் இந்தியன். இத்தகைய வழக்கங்கட்கு ஆட்பட்டவன். மேலும் மருத்துவன். என்னை பாம்புகளோ மிருகங்களோ நெருங்க மாட்டா,' என்று சிரித்துக் கொண்டே பதில் தந்தார். இப்படியாக உரையாடல் நீடித்தது. இறுதியில் இருவரையும் பாசம் என்னும் கயிறு பிணைத்து நெருக்கி விட்டது.

தான் யாரென்பதை அம் மூதாட்டி அஜீஸிடம் உரைத்து விட்டாள். கியாஸ்லோப் என்னும் மாஜிஸ்டிரேட்டின் தாயார் அவள். அவளின் பெயர் திருமதி மூர். மகனைக் காண்பதற்காக இந்தியாவுக்கு வந்தவள். கியாஸ்லோப் அவளுடைய முதல் கணவனுல் பிறந்த மூத்த குமாரன். அவளுக்கு மற்ெருரு மகனும் மகளும்கூட இருந்தனர். ரால்ப், ஸ்டெல்லா என்பன அவர்களின் பெயர்கள். அவர்கள் இங்கிலாந்தில் வாழ்கிருர்கள். ரால்ப் என்பது மக



னின் பெயர். ஸ்டெல்லா என்பது மகளின் பெயர். இவர்கள் இருவரும் இரண்டாம் கணவனுல் பெற்றெடுக்கப் பெற்ற மக்களாவர்.

இதுதான் அந்த மூதாட்டியின் சுருங்கிய வரலாறு. இதை அறிந்த டாக்டர் இன்முகங் காட்டி மகிழ்ந்தார். அவரது மகிழ்ச்சிக்குரிய அந்தரங்கக் காரணம் இதுதான்.

திருமதி மூர் மூன்று பிள்ளைகளுக்குத் தாயார், திரு அஜீஸ் மூன்று பிள்ளைகளுக்குத் தகப்பன். திருமதி மூர் கணவனில்லாத தனிப்பெண். திரு. அஜீஸ் மனைவியில்லாத தனி ஆண்.

திருமதி மூரை அழைத்துக் கொண்டு டாக்டர் ஆங்கிலேயர்களுக்கென்று அமைக்கப்பட்ட 'கிளப்' வாசல்வரை சென்றுர். பின் பிரியா விடைபெற்றுக் கொண்டு வீடு நோக்கி விரைந்துவிட்டார். திருமதி மூருக்கு டாக்டரை கிளப்பிற்குள் அழைத்துச் செல்ல ஆசை உண்டு எனினும், ஆங்கிலேயரைத் தவிர வேறு யாரும் உள்ளே எட்டிக்கூடப் பார்க்கக்கூடாது என்று நடைமுறை விதி இருக்கும்போது அதனை யாரால் மீறக் கூடும்.



திருமதி மூர் கிளப்பில் நுழைந்த போது ஆங்கிலப் பெண்களும் ஆண்களும் ஆடிப்பாடிக்கொண்டும் குடித்துக் கும்மாளம் அடித்துக்கொண்டும் இருந்தனர். அங்கே ஓர் அழகிய சிறுபெண் மூரின் வருகைக்காகக் காத்துக் கொண்டிருந்தாள். அவள் தான் குமாரி குயிஸ்டெட். தன்னுடைய மகன் மாஜிஸ்டிரேட் க்யாஸ்லோப்புக்கு குமாரி குயிஸ்டெட்டை மணம்முடித்துவைக்கவேண்டும் என்பதற்காகவே திருமதி மூர் அச் சிறுபெண்ணை இங்கிலாந்திலிருந்து அழைத்து வந்திருந்தாள்.

'இந்தியாவைப் பற்றி நான் தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறேன்,' என்று தன் தணியாத ஆசையை வெளிப்படுத்தினுள் குமாரி. இதைச் செவிமடுத்த அருகிருந்த ஆங்கிலேயர் திரு பீல்டிங் என்பவர் 'இந்தியர்களோடு பழகினுல் போதும்; இந்தியாவைப் பற்றி முழுக்க முழுக்கத் தெரிந்து கொள்ளலாம்' எனக் குறிப்பிட்டார். அவர் அங்குள்ள கல்லூரியில் முதல்வராகப் பணியாற்றி வந்தார்.

இதுகேட்டுச் சிரித்த சில பெண்கள், 'இந்தியர்களோடு பழக வேண்டுமெனில் அவர்களுக்குப் பிடித்தமான செயல்களை நாம் செய்ய முற்பட வேண்டும்' என்று கூறினர். அச்சமயத்தில் மேஜர் காலண்டர் குறுக்கிட்டு, 'இந்தியர்களுக்குப் பிடித்தமான செயல், அவர்களை உடனடியாகச் சாக அனுமதிப்பதுதான்,' என்று வெறி உணர்வை வெளிப்படுத்தினுன். இப்படியாக இந்தியர்களைப் பழித்தும் பாராட்டியும் பேச்சுக்கள் வளர்ந்தன. இருள் சூழ்ந்தது. சிறிது நேரத்திற்குள் கூட்டமும் கலைந்தது.

திருமதிமூர், தன் மகன் மாஜிஸ்டிரேட்டிடம் மாலையிருளில் நடைபெற்ற மசூதி விஷயங்களை விளக்கிக் கூறினுள். டாக்டர் அஜீஸைப் பாராட்டி அவள் பேசுவதைக் கேட்டதும் அனலில் பட்ட புழுவைப் போல அலறித் துடித்தான் கியாஸ்லோப். ஓர் உத்தியோகஸ்தனின் தாயாரை உதாசீனப் படுத்திவிட்டதாக அவனின் நினைப்பு. 'காலணிகளைக் கழட்டச் சொல்வதற்கு அவனுக்கென்ன நெஞ்சழுத்தம்?' என்று கத்தினுன். 'இன்றே மேஜரிடம் கூறி அவனைச் சரியானபடி தண்டிக்கிறேன்,' என்று கூப்பாடு



போட்டான் அநியாயமான முறையில், நியாயத்தை இந்திய மண்ணில் நிலைநாட்ட வந்த மாஜிஸ்டிரேட்!

திரு டர்டன் என்பவர் கலெக்டராகப் பணி புரிந்து வந்தார். ஆட்சி வெறி அளவுக்கு மிஞ்சிப் பிடித்திருந்த டர்டன் துரைக்கு இந்தியர்கள் என்ருலே இணையில்லாத வெறுப்பு உண்டு. கவர்னரின் கட்டாயத்துக்கு இணங்கிய கலெக்டர், இந்தியர்களுக்கு ஒரு விருந்தளிக்க வேண்டிய நிர்ப்பந்தத்திற்கு ஆளானர். நகரில் உள்ள 'பெரிய மனிதர்' களாகக் (இந்தியர்களால்)கருதப்பட்ட இந்தியர்களுக்கு அழைப்புக்கள் அனுப்பப்பட்டன.

அழைப்புக்களுக்கு இணங்கி விடக்கூடாது என்று முழக்கமிட்டனர் சிலர். இன்னுஞ் சிலரோ 'அழைப்பினை ஏற்றுக் கொள்ளுவதால் அந்தஸ்து உயரும்,' என்று வாதஞ் செய்தனர்.

திரு கிரேய்ஸ்போர்ட் என்ற முதியவரும் திரு கோர்லே என்ற இளைஞனும் இந்தியர்களின் நன்மையையே குறிக்கோளாகக் கருதி இந்திய மண்ணில் பணிபுரிந்து வந்தனர். அவர்கள்கூட ஆங்கிலேயர்களின் வெறி உணர்ச்சியையும், உயர்வு மனப்பான்மையையும் அடிக்கடி கண்டித்துத் தான் வந்தனர்.

மனிதர்களுக்குள் வெள்ளையர் என்றும் கருப்பர் என்றும் வேறுபாடு இருத்தல் கூடாது என்ற கொள்கையுடையவர் திரு கிரேய்ஸ்போர்டு. உயிரினங்களுக்குள்ளேயே வேறுபாடு இருத்தல் கூடாது என்ற கொள்கையுடையவர் திரு கோர்லே.

விருந்து தொடங்கியது. இந்தியர்கள் பலரும் வந்து பங்கு கொண்டனர். வெள்ளையர்கள் சரியான முறையில் இந்தியர்களை நடத்தவில்லை. வேண்டா வெறுப்போடு வரவேற்று, தீண்டாத மக்களைப் போல நடத்தித் திருப்பி அனுப்பிவிட்டனர். டாக்டர் அஜீஸ் அந்த விருந்தில் பங்கு பெறவில்லை. பல வேலைகளே அதற்குக் காரணம்.

குமாரி குயிஸ்டெட்டுக்கு இந்த விருந்து மன நிறைவை ஊட்டவில்லை. கல்லூரி முதல்வரான பீல்டிங்கை நெருங்கி, 'டாக்டர்

அஜீஸ் என்பவரை உங்கட்குத் தெரியுமா?' என்று கேட்டான். 'தெரியாது,' என்று தெரிவித்த பீல்டிங், தன்னுல் டாக்டர் அஜீஸ் என்பவரைக் கண்டுபிடித்துச் சந்திப்புக்கு ஏற்பாடு செய்ய முடியும் என்பதைக் கூறி முடித்தார்.

வரும் வியாழக்கிழமை மாலை விருந்து ஒன்று ஏற்பாடு செய்து அதற்கு டாக்டரை வரச் செய்து சந்திப்புக்கு ஏற்பாடு செய்து தருவதாக பீல்டிங் உறுதி அளித்தார்.

விருந்து ஒருவாறு முடிந்ததும் வெள்ளையர்களும் விடுகளுக்குத் திரும்பிவிட்டனர். குமாரி குயில்டெட் இந்தியர்களின் மீது இணையற்ற பிரியம் வைத்திருந்தாள். மூர் இவ் விஷயத்தைத் தன் மகனிடம் தெரியப்படுத்தினுள். கியாஸ்லோப்பிற்கு இந்தியர்கள் என்ருலே வெறுப்பு.

'இந்தியாவில் பாடுபட்டு உழைத்து, நீதியையும் ஆட்சியையும்பரிபாலிக்கவேவெள்ளையர்கள் வந்துள்ளார்கள். களிப்புக்கும் கடவுள் வணக்கத்துக்கும்இந்திய மண்ணில் இடம் கிடையாது,' என்று மாஜிஸ்டிரேட் கியாஸ்லோப் பொழிந்து தள்ளினுன்.

'உலகில் எந்த மண்ணுனுலும் சரி, மக்கள் மகிழ்ச்சியோடு வாழ வேண்டும் என்பதுதான் ஆண்டவனின் விருப்பம். ஆண்டவன் இங்கிலாந்தில் இருப்பதைப் போலவேதான் இந்தியாவிலும் இருக்கிருர்,' என்று பதிலுக்குப் பொழிந்துதள்ளினுள் திருமதி மூர்.

பெற்றெடுத்த தாய் என்பதற்காகவும் வயதானவள் என்பதற்காகவும் அவளுடைய வார்த்தைகளைத் தட்டிப் பேசாமல் கேட்டுக்கொண்டிருந்தான் செம்மூக்குச் சிறுவனுன மாஜிஸ்டிரேட்.

டாக்டர் அஜீஸ், இறந்துபோன தன் மனைவியின் இனிய குணங்களை எண்ணி எண்ணி இன்பமும் துன்பமும் கொண்டார். அவளை இழந்துவிட்ட பின்பு தானும் இறந்துவிடுவதே நல்லது என்று துணிந்து தற்கொலையைப் பற்றிக் கூட பல சந்தர்ப்பங்களில் நினைத்திருக்கிருர்.

மருத்துவ மனையில் இடையருது வேலை செய்வதன் மூலமும், மாலை நேரங்களை மசூதியில் கழிப்பதன் மூலமும் வாழ்நாளைக் கழித்து வந்தார் டாக்டர். விருந்து நடந்த அதே நாளில் டாக்டரின் வீட்டுக்கு ஒரு கடிதம் வந்து சேர்ந்தது. அதில் அரசாங்க முத்திரையும் இருந்தது. 'விருந்துக்கு வராத காரணத்தால் தன்னை வேலையினின்று விலக்கி இருப்பார்கள்,' என்று கூறிக்கொண்டே கடிதத்தைப் பிரித்தார் டாக்டர். என்ன ஏமாற்றம். வேலை போகவில்லை; மாருக மற்ருெரு விருந்துக்கு அழைப்பு இருந்தது. கல்லூரி முதல்வர் பீல்டிங் என்பவரிடமிருந்து வந்த அழைப்புத் தான் அது.

கல்லூரி முதல்வரோடு கலந்து பழக விரும்பிய டாக்டர் விருந்துக்குப் போவதென்று எடுத்த எடுப்பிலேயே முடிவு செய்துவிட்டார். பீல்டிங் கல்லூரியின் முதல்வராக வருவதற்குள்ளாகவே, அஜீஸ் படிப்பை முடித்துவிட்டார். அஜீஸ் டாக்டராக வந்த பிறகு பீல்டிங் ஆஸ்பத்திரிப் ப்க்கம் போவதையே விட்டுவிட்டார். உடல் உழைப்பும் உள்ளக் களிப்பும் மிகுந்த பீல்டிங் எதற்காக மருத்துவ மனைக்குப் போகவேண்டும்?

'பீல்டிங் நோய்வாய்ப் படமாட்டாரா? மருத்துவ உதவிக்குத் தன்னிடம் வரமாட்டாரா?' என்று கூட நட்பின் காரணமாக அஜீஸ் நினைத்ததுண்டு.

குறிப்பிட்ட வியாழக்கிழமை வந்தது. விருந்துக்கு டாக்டர் முன்னதாகவே வந்துவிட்டார். குமாரி குயிஸ்டெட்டும், திருமதி மூரும் முறையே வந்து சேர்ந்தனர். கல்லூரி முதல்வரின் கண்ணியமான வரவேற்பு டாக்டரைப் பெரிதும் களிகூரச் செய்தது. டாக்டரும் கல்லூரி முதல்வரும் அண்ணன் தம்பியரைப் போல அன்னியோன்யமாகப் பழகினர். குமாரிக்கு டாக்டர் அறிமுகப்படுத்தப்பட்டார். டாக்டரின் நேர்மையான பேச்சிலும், நிதானமான போக்கிலும் மட்டற்ற மகிழ்ச்சி கொண்டாள் குமாரி. திருமதி மூர் அவரை வெகுவாகப் பாராட்டிப் பேசினுள்.

டாக்டர் தன்னுடைய பங்களாவுக்கு திருமதி மூரையும் குமாரி குயிஸ்டெட்டையும் அழைத்தார். அவர்களும் பிறிதொரு முறை வருவதாக ஒப்புக்கொண்டனர்.

குமாரி குயிஸ்டெட்டுக்கு இந்தியர்களின் பால் பாசம் வளர்ந்தது. ஆங்கிலேயர்களின் அசம்பாவிதமான போக்கு அருவெறுப்பை ஊட்டியது. குறிப்பாக மாஜிஸ்டிரேட் கியாஸ்லோப், இந்தியர்களைத் தூற்றியும் துச்சமாகவும் பேசுவதை அவளால் பொறுத்துக் கொள்ளவே இயலவில்லை.

கியாஸ்லோப்பை மணந்து கொள்ள அவளுக்கு விருப்பமே இல்லை. ஒருநாள் அவனிடம் தன் கருத்தை ஒளிவு மறைவில்லாமல் அவள் அப்பட்டமாகக் கூறிவிட்டாள். முதலில் ஆத்திரம் அடைந்த போதிலும் பின் தன்னைத்தானே அமைதிப் படுத்திக் கொண்டான் கியாஸ்லோப். பின் அவளை எப்படியும் தன் வயப் படுத்திவிடவேண்டும் என்ற நினைப்பில் மலைப் பிரதேசத்திற்குக் காரில் அழைத்துச் சென்றுன். அவனது நடைபாவனைகளில் நளினம் இருப்பதை உணர்ந்த குயிஸ்டெட் தன் கருத்தை மாற்றிக் கொண்டு, அவனை மணந்து கொள்ளத் தான் விரும்புவதாக உரைத்தாள். 'பெண்புத்தி பின் புத்தி தான்,' என்று கூறிவிட்டு அவளது விருப்பத்தில் தனக்கும் விருப்பம் உண்டு என்பதை அவன் புன்சிரிப்போடு சொல்லிக் காட்டினுன்.

இருவரும் இன்முகத்தோடு விளங்கினர். வீட்டுக்குள் நுழைந்த போது திருமதி மூர் திருப்தியற்ற நிலையில் காட்சி அளித்தாள். அவள் இந்தியாவை விட்டுவிட்டு விரைவில் இங்கிலாந்து செல்ல விரும்பினுள்.

கியாஸ்லோப் என்றுமில்லாத கலகலப்போடு திகழ்ந்தான். குயிஸ்டெட் தன்னை மணந்து கொள்ள முன்வந்த செய்தி அவனைப் பெரும் மகிழ்ச்சிக்கு ஆளாக்கிவிட்டது.

டாக்டர் அஜீஸ் விருந்தை முடித்துக்கொண்டு வீடு போனுர். அவரது உடம்பில் அவரை அறியாமலேயே நோய் பிடித்திருந்தது. எழுந்து நடமாட முடியாமல் படுத்தபடுக்கையாகவே இருந்தார். காய்ச்சல் லேசாக இருந்தது. அவருக்குக் கல்கத்தா செல்லவேண்டும் என்ற ஆசை இருந்தது. அங்கு போய் அழகிய பெண்களோடு ஆடிப்பாடித்திரிய வேண்டும் என்று கூட ஆசைப் பட்டார். பெற்றெடுத்த பிள்ளைகளின் வருங்கால வாழ்வை நினைத்து, வழி தவறிய நெறிகளில் போக எண்ணியமைக்காகப் பெரிதும் வருந்தினுர்.

•

இந்தச் சமயத்தில் அவரைத் தேடிக் கொண்டு அவரது நண்பர்கள் சிலர் அங்கு வந்து சேர்ந்தனர். ஹமீதுல்லாவும் அங்கு வந்திருந்தார். பீல்டிங் கூட அஜீஸைக் கண்டு உடல் நலம்

குறித்து அறிந்து போக ஆசையோடு வந்திருந்தார். கடவுள் நல்லவர் என்று தான் நம்புவதைப் போலவே நோய் கொடியது என்றும் தான் நம்புவதாக அவர் தெரிவித்தார். டாக்டர் அஜீஸ் அதை ஆமோதிக்கவே செய்தார். 'கொடியதை ஒழித்துக் கட்ட நல்லவரின் துணையை நாட வேண்டும்,' என்று கூறி விட்டு நட்புரிமையோடு விடை பெற்றுக் கொண்டார் பீல்டிங்.

பின் ஒவ்வொருவராக விடை பெற்றுச்சென்றனர். நோய்வாய்ப் பட்டவனுக்கு அமைதியைத் தந்து அரட்டை செய்வதை அடக்கிக் கொள்ளுவதைப்போல பிறிதொரு அறச் செயல் இருக்கவே முடியாதல்லவா? அதனால் தான் அந்த நண்பர்கள் டாக்டரின் வீட்டைவிட்டு விரைவிலேயே வெளியேறி விட்டனர்.

'வாயின் இனிமைக்கு இனிப்பு வேண்டும். மனத்தின் இனிமைக்கு மசூதி வேண்டும்,' என்ற நினைவோடு டாக்டர் ஓய்வெடுத்துக் கொண்டார்.

## இரண்டாம் பாகம்

மராபார் குகைகளுக்கு மகத்தான பெருமை உண்டு. புத்த பெருமானின் மனத்தைக் கவர்ந்த பெருமை இந்தக் குகைகளுக்கு உண்டு என்பது அந்த ஊர் மக்களின் கர்ண பரம்பரைச் செய்தி ஆகும்.

மராபார் குகைகள் ஏறத்தாழ எல்லாம் ஒரே மாதிரியாகத்தான் இருக்கும். எண்ணிக்கையில் அவை பலவாகும். எட்டடி நீளமும் ஐந்தடி உயரமும், மூன்றடி அகலமும் கொண்டு அந்தக் குகைகள் அழகோடு திகழ்ந்தன.



ஒரு குகையைப் பார்த்துவிட்டு மற்றொரு குகையைப் பார்த்தால் வேறுபாடு தோன்றவே தோன்ருது. எல்லாம் ஒரே மாதிரியாக இருந்தமையால் மனத்தில் மயக் எழுவது இயற்கையே.

குகைளில் ஒரே இருட்டுத்தான் இருக்கும்; ஒளியைக் காண்பதே அரிது, வெளிச்சம் இல்லாமல் குகைக்குள் நுழையவே முடியாது.

டாக்டர் அஜீஸின் நோய் குணமாகிவிட்டது. குயிஸ்டெட்டையும் மூரையும் அழைத்து விருந்தளிக்க விரும்பிய டாக்டர் பீல்டிங்கின் உதவியை நாடினுர். விருந்தளிப்பதைவிட, மராபார் குகைகளுக்குச் சுற்றுலா அழைத்துச் செல்லுவதையே வெள்ளையர்கள் பெரிதும் விரும்பக்கூடும் என்று யோசனை கூறினுர் பீல்டிங். டாக்டரும் பீல்டிங்கின் யோசனையை ஏற்றுக் கொண்டார்.

பீல்டிங் குமாரி குயிஸ்டெட்டைத் தனியே அழைத்து அஜீஸின் ஆசையைத் தெரியப்படுத்தினுர். சுற்றுலா செல்லும் திட்டம் ஒருமுகமாக ஏற்றுக்கொள்ளப் பட்டது. கியாஸ்லோப்பிற்கு இது பற்றி முதலில் எதுவுமே தெரியாது என்ருலும், பிறகு விஷயம் வெளிப்பட்ட பின்னர், பீல்டிங்கும் இந்த ஏற்பாடுகளில் பங்கெடுத்துக் கொண்ட காரணத்தால் அமைதியாக இருந்து விட்டான்.

சுற்றுலாவை வெற்றிகரமாகவும் திருப்திகரமாகவும் முடித்துத் தரவேண்டும் என்பதற்காக அஜீஸ் பெரு முயற்சி எடுத்துக் கொண்டார். மேஜர் காலண்டரிடம் சென்று அரை நாள் விடுமுறை வாங்கிக் கொண்டார். முகம்மது அலியிடம் கைத்துப்பாக்கியைக் கடஞகப் பெற்றுக் கொண்டார். மதுப் பொருள்களையும், பழ வகைகளையும் அரும்பாடுபட்டு சேகரித்துக் கொண்டார். எல்லாவற்றிற்கும் மேலாக இறைவனின் ஆசியை இறைஞ்சிக் கொண்டார்.

சுற்றுலா தொடங்கியது. குறிப்பிட்ட இடத்துக்கு குயிஸ்டெட்டும், மூரும் தான் முந்திக் கொண்டு முதன் முதலில் வந்து சேர்ந்தனர். அஜீஸ் அவர்களை அன்போடும் ஆசையோடும் வரவேற்று உபசரித்தார். பீல்டிங்கைக் காணவில்லையே என்று எல்லோரும் எதிர்பார்த்து நின்றனர்.

சந்திரப்பூரிலிருந்து மராபார் குகைகளுக்குப் புகை வண்டியில் தான் போயாக வேண்டும். அய்யர் வரும்வரை அமாவாசை காத்திருக்குமா? பீல்டிங் வரும் வரை புகைவண்டி காத்திருக்குமா, என்ன?

குறிப்பிட்ட நேரத்தில் புகை வண்டி புறப்பட்டுவிட்டது. திருமதி மூர், குயிஸ்டெட், அஜீஸ் இன்னும் சிலரும் ரயிலில் ஏறிக் கொண்டனர். பீல்டிங் வந்து சேரவில்லை. ரயில் நகர்ந்து பின் மெதுவாக விரைந்தது. ஸ்டேஷனை அடுத்திருந்த சாலையில் குறுக்குக் கதவு மூடப்பட்டுவிட்டதால் பீல்டிங்கால் குறித்த காலத்தில் வந்து சேரமுடியவில்லை. குறுக்குக் கதவுக்கு அப்பால் பீல்டிங் காரில் இருந்து கொண்டு ரயிலைப் பார்த்துக் கொண்டிருந்தார். அஜீஸ் கையை வீசி ஆட்டியதை அவரால் காணமுடிந்தது.

பீல்டிங் ஏதோ இரைந்து கத்திஞர். அஜீஸின் காதில் அவ்வார்த்தைகள் விழவே இல்லை. ஏனெனில் இரயில் பெருங் கூச்சல் போட்டுக்கொண்டே விரைந்தது சென்றது. பீல்டிங் கூடவே வராமல் போனது டாக்டருக்கு வருத்தத்தைத் தந்தது எனினும் வெள்ளைக்காரிகளைப் பொறுத்த

மட்டில் எவ்விதக் கவலையுமே இல்லை.

மராபார் குகைகளை நோக்கி ரயில் விரைந்தது. பிரயாணிகளோ மராபார் குகைகளை எண்ணி மகிழ்ச்சிக் கடலுள் மிதந்தார்கள்.

மராபார் ஸ்டேஷனில் ரயில் வந்து நின்றது. அஜீஸ் நண்பர்களுக்கு வணக்கம் கூறிக் கீழே இறங்கி வருமாறு வேண்டிக் கொண்டார். இளங் கன்றினைப் போல இன்முகத்தோடு துள்ளிக் குதித்துக் கீழே இறங்கினாள் குமாரி குயிஸ்டெட். மூதாட்டி மூரோ முற்றிலும் களைத்துச் சோர்ந்து போயிருந்தாள். எல்லோரும் ரயிலை விட்டு இறங்கினர்.

ஸ்டேஷனின் வாசலில் பழக்கப் பட்ட யானைகள் நின்றன. யானைச் சவாரி செய்தனர் எல்லோரும். யானைகள் குகைகளை நோக்கி நடந்தன. வழியெல்லாம் பாறையும், பாழிடங்களுமே தென் பட்டன.

டாக்டர் அஜீஸ் மொகலாய மன்னர்களின் முக்யத்துவத்தைப் பற்றி பலப்பலவாகப் புகழ்ந்து பேசிக்கொண்டே வந்தார். பாபரின் பெருங் குணத்தைப் பற்றிச் சொன்னார். மகனின் வாழ்வுக் காகத் தன் உயிரையே தர வந்த தாராள குணத்தை யார் தான் மெச்சாமல் இருப்பர்.

குமாரி குயிஸ்டெட், இடை மறித்து அக்பரைப் பற்றி ஆவலோடு பல விவரங்களைக் கேட்டாள். "அக்பர் முழு முகமதியர் அல்லர். அரை ஹிந்து ஆவார். அக்பர் புதிய மதத்தை உண்டுபண்ணியது உயர்ந்த குணத்தை உடையவர் அல்லர் என்பதை எடுத்துக்காட்டுகிறது. அக்பரின் மதம் அபத்தமானது." இதுதான் அக்பரைப் பற்றிய அஜீஸின் கருத்து.

குமாரி குயிஸ்டெட்டோ அக்பரைப் பற்றி உயர்ந்த கருத்துடையவளாக இருந்தாள். உலக ஒருமைப்பாட்டுக்கு அக்பரின் மதக் கொள்கையே சாலச் சிறந்தது என்பதுஅவளுடைய கருத்து. இப்படியாகப் பேச்சு வளர்ந்து கொண்டே இருக்கும்போது குமாரி குயிஸ்டெட், தான் கிராஸ் லோப்பை மணந்து கொள்ளப் போவதாக டாக்டரிடம் கூறினார். டாக்டரும் அந்தச் செய்தியைக் கேட்டு அளவிலா ஆனந்த முற்றார். மணமகளிடம் தன் மன மகிழ்ச்சியை வாய்விட்டுக் கூறி வாழ்த்துரையும் தந்தார்.

பின் குகை வாசல் நெருங்கவே மலைக்கற்களின் மீது ஏறிப் பலரும் பல திசைகளில் நடக்க முற்பட்டனர்.

திருமதி மூருக்கு மராபார் குகைகள் மகிழ்வை ஊட்டவில்லை. வயது நிறைந்துவிட்டமையால் உடல் தளர்ந்துவிட்டது. குமாரி குயிஸ்டெட் டாக்டரோடு விரைந்து நடந்தாள். எங்கும் உருளும் பெரும் பாறைகளும் மயக்கும் இருண்ட இருளும் சூழ்ந் திருந்தமையால் டாக்டரை அழைத்துக்கொண்டு குமாரி மட்டும் குகைகளை எல்லாம் பார்த்துவரச் சென்றுவிட்டாள். திருமதி மூர் திரும்பிச் சென்று குகையின் நுழை வாசலில் காத் திருப்பதாக ஒப்புக்கொண்டாள். அவளால் நடக்கவேமுடியவில்லை. இங்கிலாந்தில் இருக்கும் தன் மக்களுக்குக் கடிதம் எழுதுவதில் அவள் கருத்தைச் செலுத்தினாள்.

குமாரியும் டாக்டரும் குகைகளுக்குள் நுழைந்தனர். தனித் தனியாக இருந்த குகைகளையெல்லாம் நுழைந்து நுழைந்து பார்த்து மகிழ்ந்தனர். விருந்தினர்

களுக்கு உணவு கொடுக்க வேண்டும் என்ற நினைப்புத்தான் டாக்டரின் உள்ளத்தில் ஊடாடிக் கொண்டே இருந்தது.

குமாரி குயிஸ்டெட்டுக்கோ, கியாஸ்லோப்பைப் பற்றிய நினைப்புத்தான் திருமண உணர்வை ஊட்டிக் கொண்டே இருந்தது.

'தங்களுக்கு மணம் ஆகிவிட்டதா?,' என்று கேட்டாள் குமாரி. 'ஆம்' என்றார் டாக்டர். 'நீங்கள் தான் பல பெண்களை மணந்து கொள்ள முடியுமே, உங்களுக்கு எத்தனை மனைவிகள்?' என்றாள் மீண்டும் குமாரி. சிறிது கோபம் கொண்ட டாக்டர் குமாரியின் கேள்விக்கு, 'எனக்கு ஒரே மனைவிதான் உண்டு,' என்று கூறிவிட்டு ஒதுங்கி நடக்க முற்பட்டார்.

திருமணத்தைப் பற்றியே நினைத்துக் கொண்டு நடைபயின்ற குயிஸ்டெட், டாக்டரை விட்டுவிட்டு வேறு வழியாக ஒரு குகைக்குள் நுழைந்து விட்டாள். டாக்டரும் கோபத்தோடு முன்னே நடந்து போனவர் குமாரியின் வரவைக் கவனமாகக் கவனித்துக் கொள்ளவே இல்லை. ஆம். இருவரும் தடம் புரண்டு விட்டனர்.

அஜீஸ் காத்திருந்து பார்த்தார். காலம் நழுவியதே தவிர, குயிஸ்டெட்டைக் காணமுடியவில்லை. கவலை அவரை ஆட்கொண்டது. வாய்விட்டு உரத்துக் கத்தினார், அருகிருந்தவர்களையும் கூப்பாடு போடச் செய்தார். பலன் கிட்டவில்லை. அவள் திரும்பிப் போயிருக்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு, நுழைவாசலுக்கு ஓட்டமும் நடையுமாக வந்து சேர்ந்தார், டாக்டர் வரும் வழியில் குமாரியின் தொலைநோக்கிக் கண்ணாடி சிதறிக் கிடந்ததைக் கூட அவர் கண்டார். அதை எடுத்துக் கொண்டு அவசர அவசரமாக வாசலுக்கு வந்தார். வாசலில் பீல்டிங் நின்று கொண்டிருந்தார். வெகு சிரமங்களுக்கிடையே பீல்டிங் வந்து சேர்ந்திருந்தார் என்பதை அவரது தோற்றமே எடுத்துக் காட்டிற்று.

களைத்துப் போயிருந்த டாக்டரைப் பார்த்து பீல்டிங் கேட்டார், 'குமாரி குயிஸ்டெட் எங்கே?' என்று. டாக்டர் பதில் சொல்ல முடியாமல் விழித்தார். ஏதோ நடக்கக் கூடாதது நடந்திருக்க வேண்டும், என்று பீல்டிங் தீர்மானித்துக் கொண்டார். அவர்கள் திரும்பிப் பார்த்தபோது சந்திரப்பூரை நோக்கி ஒரு கார் விரைந்தது. அதில் வெள்ளைக்காரிகள் இருப்பது தெளிவாகவே தெரிந்தது. விஷயம் புரிபடாமல் டாக்டரும் பீல்டிங்கும் திருமதி மூர் இருந்த இடத்துக்குப் போனார்கள்.

'குமாரி குயிஸ்டெட் திரும்பிப் போயிருக்க வேண்டும்,' என்று அரைகுறையாகச் சொல்லி முடித்தார் டாக்டர். முழு விபரமும் சொல்லப்பட வேண்டும் என்று கேட்டுக் கொண்ட மூர், டாக்டரின் நடத்தையில் சந்தேகங் கொள்ளத் தலைப்பட்டாள்.

அஜீஸ் நூற்றுக் கணக்கான ரூபாய்களைச் செலவழித்து ஏற்பாடு செய்திருந்த சுற்றுலா, அதிருப்திகரமான நிலையில் முடிவுறப் போவதை எண்ணுகையில் அவரால் அழாமல் இருக்க முடியவில்லை.

•

சுற்றுலாவை முடித்துக் கொண்டு மராபார் ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தனர் நண்பர்கள். அங்கிருந்து சந்திரப்பூருக்குப் போக முற்படும்போது போலிஸ் இன்ஸ்பெக்டர் ஹக் என்பவர்

அஜீஸின் முன் தோன்றி அவரைக் கைது செய்தார். ஏன் கைது செய்தார் என்பது இன்ஸ்பெக்டருக்கே தெரியாது. 'செய்த குற்றத்தைக் கூருமல் தண்டனையைத் தருவது சட்ட முறையான செயல் இல்லை' என்ருர் பீல்டிங்.

'மேலிடத்து ஆணை. அதற்கு அடிபணிய வேண்டுவது என் கடமை;' எனக் கூறிவிட்டு ஹக், டாக்டரைக்கைதியாக்கிவிட்டார். 'தொல்லைக்குப் பயப்பட வேண்டாம்; நான் துணை செய்கிறேன்,' என்று பீல்டிங் டாக்டருக்கு ஆறுதல் சொன்னுர்.

டாக்டரைப் போலிஸ் இன்ஸ்பெக்டர் அழைத்துச் செல்லும் போது, மூதாட்டி மூரை, கியாஸ்லோப் அழைத்துப்போக அங்கே வந்திருந்தார்.

டாக்டர் அஜீஸ் குகைகளில் நுழைந்து சென்ற போது குமாரி குயிஸ்டெட்டைக் கையைப் பிடித்துப் பலவந்தம் செய்தார் என்பது தான் அவர் மீது சாற்றப்பட்ட குற்றமாகும். குமாரி குயிஸ்டெட்டே போலிஸில் புகார் செய்து டாக்டரைக் கைதியாக்க ஏற்பாடுகள் செய்து விட்டாள்.

டாக்டரை போலிஸ் அதிகாரிகளின் பிடியில் சிக்கிக் கொண்டு படாதபாடு படுத்தினர். போலிஸ் நிர்வாகத்தில் இருந்த ஆங்கிலேயர்களுக்கு இந்தியர்களைத் துன்புறுத்துவது என்ருல் இனிப்புத் தின்பதைப் போல! 'இந்தியர்கள் அனைவருமே திருடர்கள்,' என்பது அவர்களின் திருவாசகம்.'

பீல்டிங் வெகு சிரமப்பட்டு வழக்கு விபரங்களை அறிந்து கொண்டார். பின் அதிகாரிகளைச் சந்தித்து, டாக்டர் நல்லவர் என்றும், ஆர அமர யோசிக்காமல் அவரைத் தண்டிப்பது சட்டத்திற்குச் செய்யப்படும் துரோகம் என்றும் கூறினுர். பீல்டிங்கின் வார்த்தைகளை நம்ப யாருமே தயாராக இல்லை. பீல்டிங், குமாரி குயிஸ்டெட்டைக் காண விரும்பினுர். அதற்குக் கூட அதிகாரிகள் அனுமதி தர மறுத்துவிட்டனர்.

வழக்கறிஞர் முகம்மது அலி சிறைச் சாலைக்கு வந்து சேர்ந்தார். டாக்டர் அஜீஸைக் கண்டு பேச ஆசை கொண்டார்.

குமாரி குயிஸ்டெட்டின் தொலை நோக்கிக் கண்ணுடி சிதறுண்ட நிலையில் டாக்டரின் பைகளில் இருந்ததும், கல்கத்தாவில் விபசார விடுதி நடத்தி வந்த ஒருவருக்கு டாக்டர் தான் கல்கத்தா வர விரும்புவதாக எழுதிய கடிதங்களும் டாக்டர் குற்றவாளி தான் என்பதற்கு சாட்சிகளாக விளங்கின.

யார் என்ன சொன்ன போதிலும் அஜீஸ் நிரபராதி என்றே தீர்மானமாக நம்பினுர் பீல்டிங். இந்த வழக்கில் பீல்டிங் சம்பந்தப்படக் கூடாது என்று ஆங்கிலேயர்கள் பல முறை அவரை எச்சரித்து விட்டனர். டாக்டரைக் காப்பாற்ற வேண்டும் என்ற உணர்ச்சியோடு இந்தியர்கள் பலர் முனைந்து வேலை செய்யத் தொடங்கினர். ஹமீதுல்லா, முகமது அலி, முதலியோர் குறிப்பிடத் தக்கவர்கள். பீல்டிங்கும் மிகுந்த பிரயாசைகள் எடுத்துக் கொண்டார்.

இந்திய நண்பர்கள் கொண்ட தொல்லைகளைக் கண்ட பீல்டிங், 'இந்தியர்கள் அனைவருமே கோழைகள். அற்ப விஷயங்களுக்குக் 'கூட ஆகா ஊகூ' என்று அவதிப்படுகிருர்கள்,' என்று தனக்குள்ளாக நினைத்துக் கொண்டார்.

அந்தச் சமயம் கல்கத்தாவில் அமிர்த ராவ் என்ெருரு பிரபலமான வக்கீல் இருந்தார். அமிர்தராவின்

திறமையில் ஆங்கிலேயர்களுக்கு அபார நம்பிக்கை இருந்தது. அவரைக் கண்டதும் அஞ்சி நடுங்கியதாகக்கூட ஆங்கிலேயர்களைப் பற்றிப் பலர் அடிக்கடி கூறுவதுண்டு. அஜீஸின் வழக்குகளை எதிர்த்து வாதாட அமிர்த ராவ் அழைத்து வரப் பட்டார்.

ஆங்கிலேயர்கள் அனைவரும் ஒன்று கூடி விட்டனர். அஜீஸைப் பழிவாங்குவதென அவர்கள் முடிவு கட்டிவிட்டனர். இது பீல்டிங்குக்குப் பிடிக்கவே இல்லை. எனவே ஆங்கிலேயர்களின் சகவாசத்தை அவர் அறவே நீக்கிக் கொண்டார். கிளப்புக்குப் போவதைக் கூட நிறுத்திவிட்டார்.

குமாரி குயிஸ்டெட்டுக்குப் பீல்டிங் விபரங்கள் குறித்துக் கடிதம் எழுதி இருந்தார். நோய்வாய்ப் பட்டிருந்தமையால் அவள் மிகவும் சோர்ந்து மெலிந்து வாழ்ந்து வந்தாள். திருமதி மூரைத் தவிர அவள் யாரோடும் பேசுவதோ பழகுவதோ இல்லை. 'டாக்டர் அஜீஸ் குற்றவாளியாக இருக்க முடியாது,' என்று கூட அவள் சில சமயங்களில் சிந்திப்பதுண்டு. பீல்டிங்கின் கடிதத்தைப படித்த பிறகு அஜீஸின் பேரில் குற்றம் சாட்டுவதைத் தவறென்று அவள் தீவிரமாகச் சிந்திக்க முற்பட்டாள்.

'ஒரு பெண்ணை ஓர் ஆண் கையைப் பிடித்து இழுத்தது 'பெருங் குற்ற மாகாது,' என்று கருதிய மூர், டாக்டருக்கு எதிராகச் சாட்சி சொல்லக் கூட விரும்பவில்லை. அவளது விருப்பமெல்லாம் விரைவில் இங்கிலாந்து போய்விட வேண்டும் என்பது தான்.

'அஜீஸ், நல்லவர்' என்பது மூரின் முடிவு. 'அஜீஸ் அப்பாவி,' என்பது தற்போதையஎண்ணம். குமாரி குயிஸ்டெட்டைப் பொறுத்த வரையில், வழக்கைத் தொடர வேண்டாம் என்று கியாஸ்லோப்பிடம் அவர்கள் வேண்டிக் கொண்டனர். ஆனல் ஆங்கிலேயர்களோ அதற்கு இணங்கவே இல்லை. வழக்குத் தீவிரமாகியது.

அஜீஸ், குற்றமற்றவராக வெளியேறி விட வேண்டும் என்று இறைவனைத் தொழுது கொண்டே கோர்ட்டுக்குக் குமாரி குயிஸ்டெட் வந்திருந்தாள்.

போலீஸ் அதிகாரிகள் குமாரி குயிஸ்டெட் கோர்ட்டில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்றெல்லாம் கிளிப்பிள்ளைப் பாடமாகப் போதித்திருந்தார்கள். கோர்ட்டில் ஏகக் கூட்டம். 'வெள்ளையனே, வெளியேறு,' என்ற கோஷம் வானைப்பிளந்தது. ஏறத்தாழ ஏராளமான மக்கள் டாக்டர் அஜீஸின் அனுதாபிகளாகவே இருந்தனர்.

ஆங்கிலேயர் - இந்தியர் போராட்டமாக விளங்கியது அன்றையக் காட்சி. அமிர்தராவும் முகம்மது அலியும் அழகாக வாதாடினர். குமாரி குயிஸ்டெட் தன்னை அறியாமலேயே வழக்கில் டாக்டருக்கு அனுகூலமாகப் பல கேள்விகளுக்குப் பதில் அளித்து விட்டாள். தன் கையைப் பிடித்து இழுத்தது அஜீஸ் தான் என்று உறுதியாகச் சொல்ல இயலவில்லை என்று கூட அவள் உரைத்து விட்டாள்.

வழக்கு முடிந்தது. டாக்டர் அஜீஸ் குற்றமற்றவர் என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

குமாரி • குயிஸ்டெட்டைத் தகுந்த முறையில் பாதுகாக்க வேண்டிய பொறுப்பை ஆங்கிலேயர்கள் கோபங் காரணமாக உதறிவிட்டு விட்டமையால், பீல்டிங் ஏற்றுக்கொள்ள வேண்டியவரானர். டாக்டர் அஜீஸுக்கு வேண்டாதவர்கள் அனைவரும்

நாட்டு மக்களின் வெறுப்புக்கு ஆளாகி விட்டனர்.

இந்தியர்கள் அனைவரும் கூடி டாக்டர் அஜீஸைப் பாராட்டிப் பேசினர். பெரிய விருந்தொன்றும் அளித்தனர். அந்த விருந்தில் பங்கு கொண்ட பெருமை, ஒரே ஆங்கிலேயரான பீல்டிங்குக்கு உண்டு.

திருமதி மூர் வழக்கு முடிந்த வுடனேயே தாய்நாட்டுக்குத் திரும்பிவிட்டாள். போகும்வழியில் நடுக் கடலில் அவள் இறந்து போனதாக மாஜிஸ்டிரேட் கியாஸ்லோப் தெரிவித்தார். பெற்றவளின் பிரிவு பிள்ளைக்கு இருக்கவே செய்தது.

திருமதி குயிஸ்டெட்டிடமிருந்து இருபதாயிர ரூபாய் நஷ்ட ஈடு கோரி, அமிர்தராவ் டாக்டரின் சார்பில் வழக்குத் தொடர விரும்பினர். இந்தச் செய்தி பீல்டிங்குக்குப் பீதியை ஊட்டியது. டாக்டரிடம் நேரில் சென்று நஷ்ட ஈடு சம்பந்தமான வழக்கைத் தொடர வேண்டாம் என பீல்டிங் கேட்டுக் கொண்டார். டாக்டர் மூரைக் கலந்து முடிவுகட்ட விரும்பினர். மூர் இறந்துவிட்ட செய்தியை அவரால் நம்பமுடியவில்லை. இதற்குள்ளாக ஒரு வதந்தி கிளம்பி விட்டது. அதாவது அஜீஸைக் காப்பாற்ற திருமதி மூர் முனைந்தமையால் கியாஸ்லோப் அவளைக் கொன்றுவிட்டான் என்று ஊர்ப் பேச்சுக் காட்டுத் தீயாகப் பரவியது.

குமாரி குயிஸ்டெட், தன் குற்றங்களுக்காக மனம் வருந்தி டாக்டரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டாள். மனம் இளகிய டாக்டர் வழக்கை வாபஸ் பெற்றுக்கொள்ள முன்வந்தார்.

வழக்கு கைவிடப்பட்ட பின்னர், சில காலம் பீல்டிங்கோடு தங்கி இருந்த குமாரி, இந்தியாவினின்று இங்கிலாந்திற்கே திரும்பிவிட விரும்பினள். அவளின் விருப்பமும் ஈடேறி விட்டது.

டாக்டர் அஜீஸ் ஆங்கிலேயர்களின் கீழ் அடிமையாகப் பணிபுரிய விரும்பவில்லை. இயல்பாகவே அவருக்கு இலக்கியங்களில் ஈடுபாடு உண்டு. 'பாடித்திரியும் பாவல'னாக அவர் தம்முடைய வாழ்நாளைக் கழிக்க விரும்பினார்.

பீல்டிங்கைப் பற்றி இந்தியர்கள் முதன் முதலாக ஒரு கருத்துக் கொண்டிருந்தனர். அதாவது ஆங்கில வெறியனாக இல்லாமல் இந்திய அனுதாபியாக இருந்தார் என்பது அவரைப் பற்றிய புகழுரைக்குக் காரணமாகும். பின்னர் குமாரி குயிஸ்டெட்டோடு அவர் நெருங்கிப் பழக ஆரம்பித்த பின்னர், 'தன்னலம் ஒன்றையே குறியாகக் கொண்டு—அதாவது குமாரியைத் தான் மணந்து கொள்ளவேண்டும் என்பதற்காகவே-அவர் அஜீஸோடு நெருங்கிப் பழகினார் என்று இந்திய நண்பர்கள் எண்ணத் தலைப்பட்டுவிட்டனர். நஷ்ட ஈடு சம்பந்தப்பட்ட வழக்கை வாபஸ் பெறவேண்டுமென்று டாக்டரிடம் பீல்டிங் வேண்டிக்கொண்டது இக் கருத்தை வலியுறுத்தியது. மேலும் குமாரி குயிஸ்டெட் இங்கிலாந்து சென்ற இரண்டொரு வாரங்களிலேயே பீல்டிங்கும் இங்கிலாந்துக்குப் புறப்பட்டுப் போய்விட்டார்.

பீல்டிங்கும் குமாரியும் திருமணம் செய்துகொள்ள நிச்சயம் செய்துவிட்டனர் என்ற பேச்சு இந்தியாவில் பரவிற்று.

மராபார் குகைகளினுல் வாழ்வில் ஏற்பட்ட இருண்ட குகைகளைக் கடந்து டாக்டர் அஜீஸ் சுதந்திரப் பறவையைப் போல ஆடிப்பாடி வாழ்ந்தார்.

## மூன்றும் பாகம்

டாக்டர் அஜீஸ் ஹிந்து மத நெறிகளை அறிந்து கொள்ள விரும்பினார். மத வேறுபாடு இல்லாமல் எல்லோருடனும் கலந்து பழகினார். மசூதிகளுக்குப் போவதைப் போலவே கோயில்களுக்கும் போய்வந்தார்.

இங்கிலாந்து சென்ற பீல்டிங் கால் இந்தியாவை மறந்து வாழ முடியவில்லை. விரைவிலேயே இந்தியாவுக்குத் திரும்பிவிட்டார். போகும்போது தனி மனிதனாகப் போனார். திரும்பி வரும்போது திருப்தி ஊட்டுதற்காக ஒரு மனைவியோடு வந்திருந்தார்.

டாக்டர் அஜீஸ் பீல்டிங்கின் வருகையைக் கேள்விப்பட்டவுடன் உள்ளூரக் கோபமே கொண்டார். அவரைக் காண வேண்டும் என்றோ, அவரோடு கலந்து பழக வேண்டும் என்றோ அவருக்கு அக்கரையும் இல்லை; ஆசையும் கிடையாது. குமாரி குயிஸ்டெட்டைத் தான் பீல்டிங் மணந்திருக்க வேண்டும் என்று டாக்டர் கருதினார். அதுதான் அவருடைய கோபத்திற்கு ஆணிவேராகும்.

இந்தச் சமயத்தில் டாக்டர் அஜீஸ் ஒரு ஹிந்து மகாராஜாவின் அரண்மனையில் அரண்மனை வைத்தியனாகப் பதவி ஏற்றுக் கொண்டார். 'ஒரு ஹிந்து ஒரு முஸ்லீமை ஏற்றுக் கொள்ளக்



கூடாது,' என்று ஆங்கிலேயர்கள் மகாராஜாவுக்குத் துர்ப்போதனை செய்தனர். மகாராஜாவோ துர்ப் போதனைகளுக்குச் செவி சாய்க் கவே இல்லை. டாக்டர் அஜிஸை அவர் மனமார நம்பி வேலைக்கு வைத்துக் கொண்டார்.

டாக்டர் அஜிஸை எப்படி யேனும் கவிழ்த்துவிடவேண்டும் என்று ஆங்கிலேயர்கள் அல்லும் பகலும் ஆலோசித்துக்கொண்டே இருந்தனர்.

அஜிஸ் அழகழகாகப் பாடல் கள் எழுதித்தள்ளினார். 'முகத் திரை இடும் வழக்கம் நீங்கவேண் டும், வீர உணர்ச்சி கொண்டு இந்தியர்கள் விளங்கவேண்டும். தீமைக்கு அஞ்சவேண்டும். தீமை புரிவோரைத் தீவிரமாக எதிர்க்க வேண்டும்,' என்றெல்லாம் இனிய கீதங்களை இசைத்துக் கொண்டி ருந்தார் டாக்டர்.

மக்களைக் காண்பதில் குடும்பத் தில் ஈடுபாட்டோடு வாழ்வதிலும் இணையற்ற இன்பம் கிட்டும் என்றெண்ணிய டாக்டர், தம் மக்களைத் தம்மோடு வாழவைத்து வளமான வாழ்க்கையைத் தொடங்கி இருந்தார்.

கோயில் குளம் என்று முதிய வர்கள் வயதான காலத்தில் பிர யாணம் செய்வதால் உண்டாகும் இன்பத்தை அனுபவமாக அறிந் துணர்ந்த டாக்டர் கோயில்களை இன்பக் களஞ்சியங்களாக எண்ணி மகிழலானார்.

ஒரு முறை 'இரட்டை முகடு' என்னும் மலைக் கோவிலுக்கு டாக்டர் தம் மகளோடு போய் இருந்தார். அங்கு தற்செயலாக பீல்டிங் என்பாரைச் சந்தித்தார். பீல்டிங் தன் மனைவியோடு அங்கு வந்திருந்தார்.

பீல்டிங்கின் மனைவி குயிஸ் டெட்டாகத்தான் இருக்கவேண் டும் என்றெண்ணிய டாக்டர் பீல்டிங்கோடு நெடுநாட்கள் பகை யுணர்வு கொண்டிருந்தார். பல கடிதங்களுக்குப் பதில் எழுதா மலேயே வாளா இருந்ததுமுண்டு.

மலை முகட்டில் சந்தித்தபோது தான் பீல்டிங்கின் மனைவி குயிஸ் டெட் இல்லை என்று அறிந்தார்.

பீல்டிங் திருமதி மூரின் மகளான ஸ்டெல்லாவை மணந்திருந்தார். திருமதி மூரிடம் டாக்டருக்கு அளவு கடந்த அன்பு உண்டு. அதன் காரணமாக அன்பிற்குரிய வளின் மருமகனை-பீல்டிங்கை நண்பனாக ஏற்றுக் கொள்ள டாக்டர் ஆசைப்பட்டார்.

மனித அபிமானம் இருவரையும் இணைத்து வைப்பதில் குறியாக இருந்தபோதிலும்தேசஅபிமானம் இந்தியரையும் வெள்ளையரையும் வேறுபடுத்தி வைப்பதில்தான் நாட்டமாக வளர்ந்தது.

குகைகளைச் சுற்றிப் பார்க்க விரும்பியதால் ஏற்பட்ட வாழ்வின் கசப்பினை, கோயில்களைச் சுற்றிப் பார்ப்பதின் மூலம் போக்கிக் கொண்ட டாக்டர் வானம்பாடி யைப் போலப் பாடிக்கொண்டே பாக்கி உள்ள வாழ்நாட்களைப் போக்கி விட முனைந்தார்.

வெறி உணர்வு கொண்ட வெள்ளையர்கள் நெறி உணர்வு கொண்டு நீதிக்கு அடிபணிய முன்வந்தனர். நீதி பெரிதென்ற நினைப்பு எழுகின்றபோது சாதி பற்றிய பூசல்களுக்கு இடமேது?

'எல்லோரும் ஓர்குலம்; எல் லோரும் நாடாளும் மன்னர்கள்,' என்ற உண்மையை ஆள்பவர் களும் ஆளப்படுபவர்களும் ஒத் துக்கொண்ட பிறகு உபத்திரவத் திற்கு வழியேது, வாழ்வேது?

---

ஆசிரியரும், வெளியிடுபவரும்: கண. இராமநாதன், 66, பெரியதெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5. அச்சிட்டோர்: ஐடியல் பிரிண்டர்ஸ், 97, பிராட்வே, சென்னை-1. தொலைபேசி 84989.



ஜூன், 1964 மலர் 3 – இதழ் 3

# பண்டித நேரு

—கண. இராமநாதன்.

கால ஏட்டிலே கறைபடிந்த நாள் மே 27. உலகம் போற்றிய உத்தமன் ஒருவனைக் காலதேவன் கைநீட்டி அழைத்துக் கொண்டு விட்டான். எவனுடைய சொல்லைத் தட்டாதும் தவறாதும் கேட்டு நடக்கவேண்டுமென்று நாம் கங்கணம் கட்டிக்கொண்டு நின்றோமோ அவன் நம்முடைய சொல்லைத் தட்டியும் தவறியும் கடந்து சென்று காலதேவனின் கைநீட்டலுக்கு ஆட்பட்டு விட்டான். அவனுடைய சொற்களைக் கேட்டு நாம் ஆனந்த பரவசம் கொண்டு வாழ்ந்தோம். நம்முடைய சொற்களைக் கேளாமல் அவன் நம்மைக் கவலை கடலுள் ஆழ்த்திவிட்டான்.

கண்களுக்கு விருந்தாகி நின்ற கண்ணியம் மிக்க மனிதன் இனி நம் கருத்துக்கு விருந்தாகிக் காலமெல்லாம் வாழ்வான். பூத உடலை ஆட்கொண்ட காலதேவன் புகழ் உடலைத் தொட்டுக்கூடப் பார்க்கமுடியாத அளவுக்குத் தோல்வியையே கண்டுள்ளான். ஒரு நேரு மறைந்தார். ஓராயிரம் நேருக்கள் தோன்றியாகவேண்டும். திருவிளக்கு ஒன்று பெருவிளக்கு ஆயிரம் பிறப்பதற்கு வழிவகுக்கும். வாழ்விழக்கும் வாழை வழித்தோன்றலைத் தராமல் போவதில்லை. இது உலக நியதி.

ஒருவன் விழித்திருந்தான். நாற்பது கோடி மக்கள் அயர்ந்திருந்தனர். இன்று அவன் அயர்ந்துவிட்டான். எனவே நாற்பது கோடி மக்களும் விழித்துக் கொள்ளத்தானே வேண்டும்?

நாம் தொல்லைகள் நிறைந்த குடும்பத்தில் பிறந்தோம். தொல்லைகள் நம்மை அணுகா வண்ணம் எல்லையில் காவலனாக நின்றான். தொல்லைகள் இல்லாத தூயவன் தொல்லைகளைத் தாங்கிக் கொண்டான். எல்லையில் நின்றவன் இப்போது இல்லை. நம் உள்ளத்தில் வாழ்கிறான். இனித் தொல்லைகளை நாமே தான் துரத்தி அடிக்கவேண்டும். நம்முடைய துடிதுடிப்பைப் பார்த்து உள்ளத்தில் வாழும் உத்தமன் மனம் மகிழவேண்டும்.

இதுதான் மாண்டவனுக்கு நாம் செய்யும் மரியாதை. மாண்டவன் என்ற சொல்லுக்கு மாட்சிமை பெற்றவன் என்ற பொருள் உண்மையானால் 'நேருவும் மாண்டவரே' என்பதை நாம் ஒப்புக் கொள்ளலாம்.

' நேரு அபாயமானவர்; நினைத்தால் சர்வாதிகாரியாகக் கூடியவர்; பதவியில் ஒட்டிக் கொண்டிருக்க விரும்பும் பதவிப்பித்தர்; தற்பெருமை மிக்கவர்; அவர் தொடர்ந்து பதவியிலிருப்பது நாட்டிற்குக் கேடு தரும்' என்றெல்லாம் ஒருவர் நேருவைத் தாக்கி எழுதியுள்ளார். இந்தக் கட்டுரையைப் படித்தவர்கள் ஆத்திரங்கொண்டனர். ஆனால், பத்திரிகையில் வெளியான இக் கட்டுரையைப் படித்தபோது நேருவின் உதட்டில் ஒரு புன்சிரிப்பு நெளிந்தது. அவருடைய உள்ளத்தில் ஓர் இன்பக் குறுகுறுப்பு ஏற்பட்டது.

தம்மைத் தாக்கி எழுதப்பட்ட கட்டுரை அவருக்கு இன்பந்தரக் காரணம் என்ன?

கட்டுரையின் முடிவில் இப்புதிருக்கு விடையிருக்கிறது.

# ராஷ்டிரபதி!

ராஷ்ட்ரபதி (காங்கிரஸ் அக்கிராசனர்) ஜவாஹர்லால் கி ஜய்! காத்திருந்த கூட்டத்தைக் கடந்து வேகமாகச் சென்ற ராஷ்டிரபதி திரும்பிப் பார்த்தார். கைகளை உயர்த்திக் குவித்து நமஸ்காரம் செய்தார். அவருடைய வெளிறிய கடுமையான முகத்தில் புன்முறுவல் படர்ந்தது. அது அன்பு நிறைந்த புன்னகை. அதைக் கண்டமக்கள் பதிலுக்குத் தாங்களும் புன்முறுவல் பூத்து ஆரவாரம் செய்தனர்.

கூட்டத்தில் சந்தோஷ ஆரவாரத்தைத் தூண்டிய அந்தப் புன்சிரிப்பு அந்த உணர்ச்சி வெள்ளத்தின் மத்தியிலேயே மறைந்து முகம் மீண்டும் கடுகடுப்பாகி விடுகிறது. அந்தப் புன் சிரிப்பிலும், அதோடு சேர்ந்து வந்த சமிக்ஞையிலும் உண்மை இல்லை என்று தோன்றுகிறது. அவர் மீது அன்பைப் பொழியும் ஜனக் கூட்டத்தின் நல்லெண்ணத்தைப் பெறுவதற்காக அவர் கையாளும் வெறும் வியாபார தந்திரம் அது. அப்படித் தானே?

மீண்டும் அவரைக் கவனியுங்கள். பிரும்மாண்டமான ஊர்வலம் நடக்கிறது. பதினாயிரக்கணக்

கான மக்கள் அவர் காரைச் சூழ்ந்துகொண்டு ஆனந்த ஆரவாரம் செய்கின்றனர். காரின் ஆசனத்தில் ஆடாமல் அசையாமல், விறைப்பாக, நெட்டையானவர் போல், கூட்டத்தின் ஆரவாரத்திஞல் பாதிக்கப்படாத ஒரு தேவதை மாதிரி சாந்தமாக நிற்கிருர். மீண்டும் அந்தப் புன்முறுவல், அல்லது மகிழ்ச்சி நிறைந்த சிரிப்புத் தோன்றுகிறது. கடுகடுப்பு மறைந்துவிட்டதாகத் தோன்றுகிறது. கூட்டமும் எதற்காகச் சிரிக்கிருேமென்று தெரியாமலே அவருடன் சேர்ந்து சிரிக்கிறது. இப்பொழுது அவர் தேவதை போல் இல்லை, சாதாரண மனிதன் போல், தம்மைச் சுற்றியுள்ள பல்லாயிரக்கணக்கான மக்களுடன் உறவு கொண்டாடுகிருர். கூட்டம் மகிழ்ச்சியுடனும் நேசத்துடனும் அவருக்குத் தன் உள்ளத்தில் இடம் கொடுத்து விடுகிறது. ஆஞல் அந்தப் புன்சிரிப்பு அகன்று, முகத்தில் மீண்டும் அந்த வெளிறிய கடுகடுப்பு வந்து விடுகிறது.

### உண்மையா, நடிப்பா ?

இவையெல்லாம் இயற்கையா அல்லது ஒரு பொதுஜனத் தலைவனின் திட்டமிட்ட தந்திரம்தாஞ? இரண்டும் இருக்கலாம். நீண்ட காலப் பழக்கம் இப்பொழுது இரண்டாவது இயற்கைக் குணமாகிவிட்டது. நடிப்பென்று தெரியாமல் நடிப்பதுதான் மிகச்சிறந்த நடிப்பு. நடிகனின் முகப் பூச்சும் பௌடரும் இல்லாமலே ஜவாஹர்லால் நன்ருக நடிக்கக் கற்றுக் கொண்டுவிட்டார். பொதுமேடையில் பூரண கலை அழகுடன் அவர் அனுயாசமாக நடிக்கிருர். இந்த நடிப்பு அவரையும் நம் நாட்டையும் எங்கு கொண்டுபோய் விடப் போகிறது? அவர் இப்படி ஒரு குறிக்கோள் இல்லாதது போல் தோன்றுவதன் •உண்மை நோக்கம் என்ன? அந்த வெளித் தோற்றத்திற்குள் என்னென்ன ஆசைகள், என்ன அதிகாரப் பித்து, என்னென்ன ஆவல்கள் மறைந்து கிடக்கின்றன?

எப்படியிருப்பினும் இந்தக் கேள்விகள் ரசமானவை. ஏனெனில் கவனத்தை ஈர்க்கும் பேர்வழி ஜவாஹர்லால். இந்தக் கேள்விகள் நமக்கு முக்கியமானவை. ஏனெனில் அவர் இந்தியாவின் நிகழ்காலத்துடனும் எதிர்காலத்துடனும் பிணைக்கப்பட்டிருக்கிருர். இந்தியாவுக்கு மகத்தான நன்மை செய்வதற்கோ அல்லது பெருந்தீங்கு விளைவிப்பதற்கோ வேண்டிய சக்தி அவரிடம் உள்ளது. ஆகையால் இந்தக் கேள்விகளுக்கு நாம் பதில் கண்டு பிடித்தாக வேண்டும்.

இப்பொழுது கிட்டத்தட்ட இரண்டு வருஷங்களாக அவர் காங்கிரஸ் அக்கிராசனராக இருக்கிருர். அவர் காரியக் கமிட்டியைப் பின்பற்றுபவரென்றும், மற்றவர்கள் அவரை அடக்கிக் கட்டிப்பிடித்து வைத்திருப்பதாகவும் சிலர் நினைத்திருக்கின்றனர். இருந்தாலும் அவர் பொது மக்களிடையேயும், பலதரப்பட்ட கோஷ்டிகளிடையேயும் தம் சொந்தச் செல்வாக்கைப் படிப்படியாக உயர்த்திக்கொண்டே போகிருர். விவசாயிகளுடனும் தொழிலாளர்களுடனும், முதலாளிகளுடனும் வர்த்தகர்களுடனும் தலைச்சுமை வியாபாரிகளுடனும், பிராம்மணருடனும், தீண்டாதாருடனும், முஸ்லிம்கள், சீக்கியர், பார்ஸிகள், கிறிஸ்தவர், யூதர் முதலிய இந்திய வாழ்க்கையை உருவாக்கும் பலதரப்பட்டவர்களுடனும் அவர் தொடர்பு ஏற்படுத்திக் கொள்கிருர். அவர்களுடைய ஆதரவைப் பெற வேண்டுமென்பதற்காக அவர்கள் ஒவ்வொருவருடனும் ஒவ்வொரு மாதிரி பேசுகிருர்.

அவருடைய வயதுக்கு, அவர் பிரமிப்பூட்டும் சக்தியுடன் இந்த நாடு முழுவதிலும் சுற்றித் திரிகிறார். எங்கு சென்றாலும் அவருக்கு மாபெரும் வரவேற்புகள் கிடைக்கின்றன. வடகோடியிலிருந்து கன்யாகுமரி வரை அவர் வெற்றி கண்ட சீசரைப்போல் பவனி வருகிறார். இவையெல்லாம் அவருக்கு ஒரு தற்காலிகமான விளையாட்டா? அன்றி ஏதாகிலும் உள் நோக்கத்துடன் செய்கிறாரா? அல்லது அவரே அறியாத ஏதாவது ஒரு சக்தி இப்படியெல்லாம் ஆட்டி வைக்கிறதா? அவர் சுயசரிதையில் குறிப்பிடும் அதிகார ஆசைதான் அவரை இப்படி ஒரு கூட்டத்திலிருந்து மற்றொரு கூட்டத்திற்குத் தள்ளிக்கொண்டு போகிறதோ? "இந்த ஜன சமுத்திரங்களை என் கைக்குள் இழுத்துக்கொண்டு, என் விருப்பத்தை வான்முகட்டில்நக்ஷத்திரங்களால் எழுதினேன்" என்று அவர் உள்ளூற நினைக்கக்கூடும்.

## அபாயகரமானவர்

கற்பனை திரும்பி விட்டால் என்ன செய்வது? பெரிய நல்ல காரியங்களைச் செய்வதற்கான சக்தியுடன் கூடிய ஜவஹர்லால் போன்றவர்கள் ஜனநாயகத்தில் அபாயகரமானவர்கள். அவர் தம்மை ஜனநாயகவாதி என்றும் சோஷலிஸ்ட் என்றும் சொல்லிக்கொள்கிறார். இப்பொழுது அவர் மனப்பூர்வமாகவேஅதைச் சொல்கிறார் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் எப்பொழுதுமே மனம் ஹிருதயத்திற்கு அடிமை என்பதையும், மனிதனின் அடக்க முடியாத ஆசைகளுக்குப் பொருத்தமான தர்க்க வாதங்களைக் கண்டு பிடிக்க முடியும் என்பதையும் மனோதத்துவ சாஸ்திரிகள் அனைவரும் அறிவார்கள். ஒரு சிறு மாற்றம் போதும்—ஜவஹர்லால் நிதானமாக நகரும் ஜனநாயக சம்பிரதாயங்களையெல்லாம் தூக்கி எறிந்து விட்டு சர்வாதிகாரியாகி விடுவார். அப்பொழுதும் அவர் ஜனநாயக, சோஷலிஸ கோஷங்களை எழுப்பிக்கொண் டிருக்கக்கூடும். பாஸிஸம் எங்ஙனம் இந்த பாஷையை உபயோகித்துக் கொழுத்து வளர்ந்தது என்பதும், கடைசியில் அதை வெறும் பயனற்ற குப்பை எனத் தூக்கி எறிந்ததுஎன்பதும் நமக்குத் தெரியும்.

நம்பிக்கையிலோ அன்றி மனப்பாங்கிலோ நேரு பாஸிஸ்ட் அல்லர். கோரமான,ஆபாசமான பாஸிஸத்தை ஏற்க முடியாத அளவுக்கு அவர் பெரியமனிதர்."தனி இடத்தில் காணும் பொது முகங்களைவிடப் பொது இடத்தில் காணும் தனி முகங்கள் மேன்மையாகவும் அழகாகவும் இருக்கின்றன" என்பதை அவருடைய குரலும் முகமுமே வெளியிடுகின்றன.

சர்வாதிகாரியின் முகம் பொது முகம். அது அந்தரங்கத்திலோ வெளியிலோ இன்முகமாக இருப்பதில்லை. ஜவஹர்லாலின் முகமும் குரலும் நிச்சயமாக அந்தரங்கமானவை.ஒரு கூட்டத்தின் மத்தியில் இருந்தால்கூட அதைத் தவறுக நினைக்க முடியாது. தவிர பொதுக் கூட்டங்களில் அவர் பேசும்பொழுது அவர் குரல் ஒவ்வொருவருடனும் தனிப்பட்ட முறையில் பேசுவது போன்ற அந்தரங்க சுத்தியுடன் ஒலிக்கிறது. அவர் குரலைக் கேட்கும் பொழுதும் உணர்ச்சி மிகுந்த அந்த முகத்தைப் பார்க்கும்பொழுதும் அவற்றிற்குப் பின்னால் என்னென்ன எண்ணங்களும், ஆசைகளும், விசித்திரமான மனப்பாங்குகளும், மனஅடக்கங்களும் அடக்குவதன் மூலம் சக்தியாக மாற்றப்படும் உணர்ச்சிகளும், அவரே ஒப்புக்கொள்ளத் துணியாத ஏக்கங்களும்மறைந்து கிடக்கின்றன என்று யோசிக்கத்

தோன்றுகிறது. பொதுக் கூட்டங்களில் பேசும்பொழுது சிந்தனைத் தொடர் அவரைத் தன்வசப்படுத்திக் கொள்கிறது. மற்ற நேரங்களில் அவர் பார்வையே அவரைக் காட்டிக்கொடுத்துவிடுகிறது அவருடைய மனம் எங்கோ விசித்திரமான உலகங்களிலும் கற்பனைகளிலும் அலைகிறது. ஒரு கணம் தம் பக்கத்தில் இருப்பவர்களைக்கூட மறந்து கற்பனையில் சிருஷ்டித்த பிறவிகளுடன் மௌனசம்பாஷணை நடத்துகிறார். கரடு முரடான தம் வாழ்க்கைப் பாதையில் அவர் ஏற்படுத்திக் கொள்ளத் தவறிவிட்ட மனித உறவுகளைப் பற்றி அப்பொழுது சிந்திக்கிறாரா? அல்லது தம் எதிர்காலம் பற்றியும், போராட்டங்கள் பற்றியும் வெற்றிகள் பற்றியும் கனவு காண்கிறாரா? அவர் தேர்ந்தெடுத்துள்ள பாதையில், ஓய்வுக்கு இடமில்லை என்பதையும், வெற்றி கிடைத்தால்கூட அதனால் சுமைதான் அதிகரிக்குமென்பதையும் அவர் உணர்ந்திருக்க வேண்டும். அராபியருக்கு லாரன்ஸ் கூறியதுபோல், "புரட்சிக்கு ஓய்விடம் கிடையாது; மகிழ்ச்சியும் பகிர்ந்து கொடுக்கப்படாது."

அவருக்கு மகிழ்ச்சி கிடைக்காமலிருக்கலாம். ஆனால் அதை விடப் பெரியதான வாழ்க்கை லக்ஷியத்தின் ஈடேற்றம் கிடைக்கலாம்.

### சர்வாதிகாரியின் தன்மைகள்

ஜவாஹர்லாலால் ஒரு பாஸிஸ்டாக ஆக முடியாது. ஆனால் ஒரு சர்வாதிகாரியின் அம்சங்கள் அனைத்தும் - பொது மக்களின் பேராதரவு ஒரு குறிப்பிட்ட லக்ஷியத்தை அடைய வேண்டுமென்ற மன உறுதி, சக்தி, தற்பெருமை, ஸ்தாபனத் திறமை, ஆற்றல், கடினம், கூட்டத்தை விரும்பிய போதிலும் மற்றவர்களிடம் சகிப்புத்தன்மையில்லாமை, பலவீனத்தின் மீதும், திறமையின்மை மீதும் வெறுப்பு முதலிய எல்லாம் அவரிடம் உள்ளன. அவருடைய முன்கோபம் பிரசித்தமானது. அதை அவர் அடக்கிக்கொண்டால்கூட உதட்டின் வளைவின் மூலம் அது வெளியாகி விடும். காரியத்தைச் செய்து முடிப்பதிலும் தமக்குப் பிடிக்காதவற்றை ஒதுக்கித் தள்ளிப் புதிதாக நிர்மாணிப்பதிலும் அவருக்கு உள்ள அடங்காத ஆவல், ஜனநாயகத்தின் நிதானப் போக்கை அதிக நாள் சகித்துக்கொண்டிராது. ஜனநாயகத்தை அவர் வைத்துக் கொள்ளலாம். ஆனால் அது அவர் இஷ்டப்படி வளைந்து கொடுக்குமாறு செய்து விடுவார். சாதாரண காலத்தில் அவர் வெற்றிகரமான, திறமையுள்ள ஒரு நிர்வாகியாக இருப்பார்! ஆனால் இந்தப் புரட்சி யுகத்தில் சீஸரிஸம் (சர்வாதிகாரம்) எப்பொழுதுமே தலைவாசலில் காத்துக் கொண்டிருக்கிறது. ஜவஹர்லாலும் தம்மை ஒரு சீஸராக நினைத்துக்கொண்டு விடுவது சாத்தியமில்லையா?

ஜவாஹர்லாலுக்கும் இந்தியாவுக்கும் ஏற்படக்கூடிய அபாயம் அதுதான். சீஸரிஸத்தின் மூலம் இந்தியா சுதந்திரம் அடைய முடியாது. தயையும் திறமையும் பொருந்திய சர்வாதிகார ஆட்சியின்கீழ் இந்தியா சிறிது அபிவிருத்தி அடைய முடியுமென்றாலும், அதன் வளர்ச்சி தடைபட்டுவிடும். மக்களின் விடுதலையும் தாமதப்படும்.

### தனி நபரைப் போற்ற வேண்டாம்

ஜவாஹர்லால்சேர்ந்தாற்போல் இரண்டாண்டுகள் காங்கிரஸ் தலைவராக இருந்தாகி விட்டது. சில விஷயங்களில் அவர் தம்மைத் தவிர்க்க முடியாதவராகச் செய்து

கொண்டு விட்டார். ஏற்கெனவே பலர் அவரை மூன்றும் முறையும் காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்று கூறுகின்றனர். ஆனால் நாட்டிற்கும் ஜவாஹர்லாலுக்கும் இதைவிட அதிகத் தீங்கு இழைக்கக்கூடிய காரியம் வேறு இருக்க முடியாது. அதன் மூலம் காங்கிரஸ் ஸ்தாபனத்தைப் புறக்கணித்து, ஒரு தனி நபரை உன்னத ஸ்தானத்திற்கு உயர்த்தி விடுவோம்; சீஸரிஸம் பற்றி மக்கள் நினைக்கும்படிச் செய்து விடுவோம். ஜவாஹர்லாலிடம் உள்ள கெட்ட குணங்களுக்கு ஊக்கமளித்து, அவருடைய தற்பெருமையையும் அதிகப்படுத்தி விடுவோம். இந்தச் சுமையைத் தாங்கவும், இந்தியாவின் பிரச்சினைகளைத் தீர்க்கவும் தம் ஒருவரால்தான் முடியும் என்று நினைத்து விடுவார். வெளிப் பார்வைக்கு அவர் பதவி மோகம் இல்லாதவர்போல் தோன்றினாலும், சென்ற பதினேழு ஆண்டுகளாக அவர் காங்கிரசில் முக்கியமான பதவிகளைப் பிடித்துக் கொண்டு இருந்திருக்கிறார் என்பதை நாம் ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். அவர் தம்மை இன்றியமையாதவராகக் கருதுவார். யாருமே தம்மைப்பற்றி அப்படி நினைக்க இடந்தரக்கூடாது. சேர்ந்தாற்போல் மூன்றாவது வருஷமும் அவர் காங்கிரஸ் அக்கிராசனராக ஆகும்படி இந்தியா விடக்கூடாது.

இதற்கு அவரைப் பற்றித் தனிப்பட்ட முறையில் கூறவேண்டிய மற்றொரு காரணமும் உண்டு. அவர் ஜம்பமாகப் பேசினாலும் அவர் களைத்துப் போய், சுவையிழந்து விட்டார் என்பது வெளிப்படை. அவர் தொடர்ந்து தலைவராக இருந்தால் மேலும் சீரழிந்து விடுவார். அவரால் ஓய்வுகொள்ள முடியாது. ஏனென்றால் புலியின் மேல் சவாரி செய்பவன் கீழே இறங்கினால் ஆபத்து. ஆனால் அளவுக்கு மீறிய சுமையினாலும் பொறுப்பினாலும் அவர் வழிதவறிச் செல்லாமலும், அறிவின் தரம் குறையாமலுமாவது நாம் பார்த்துக் கொள்ளலாம். எதிர்காலத்தில் அவர் நன்றாக வேலை செய்ய வேண்டுமென்று எதிர்பார்க்க நமக்கு உரிமை உண்டு.

[இந்தக் கட்டுரை நேருஜியாலேயே எழுதப்பட்டு, ''மாடர்ன் ரெவ்யூ'' பத்திரிகையில் வெளியாயிற்று. இதை எழுதியவர் யாரென்று தெரியாமலிருக்கும் பொருட்டு, ''சாணக்யா'' என்ற புனை பெயருடன் நேருஜி இதை எழுதினார்.



## மறு உலகமா...

*மறு உலகத்தைப் பற்றி எனக்குச் சிரத்தையில்லை என்பதை நான் ஒத்துக்கொள்ளத்தான் வேண்டும். இந்த உலகில் நான் செய்ய வேண்டிய வேலைகளிலேயே என் மனம் ஆழ்ந்து கிடக்கிறது. இந்த உலகத்தில் என் வழி எனக்குத் தெளிவாகப் புரிந்துவிட்டால், அதுவே போதும். இங்கே எனக்குள்ள கடமையை நான் தெளிவாக உணர்ந்து கொண்டுவிட்டேனானால் வேறு எந்த உலகத்தைப் பற்றியும் நான் கவலைகொள்ளவே மாட்டேன்.*

— நேரு, 'உலக சரித்திரம்'

# அணைந்ததோ தர்மதீபம் !

எஸ். டி. சுந்தரம்

சீரிளமைப் பேரொளியே செந்துருவ தாரகையே
காரிருளை நீக்குகின்ற கனகமணி ரத்தினமே
பாரதத்தின் பொற்கடலே பறந்தாயோ எமக்கெல்லாம்
வீரத்தின் வழிகாட்டி விரைவாகச் சென்றாயோ !

நீண்டநாள் இருப்பேன் என்று நம்பிக்கை வார்த்தை கேட்டு
மூண்டதோர் பெரு மகிழ்ச்சி முடிந்ததோ முடியாச்சோகம்
மீண்டதோ முதல்வா உன்றன் மலர்முகம் எங்கே என்று
ஈண்டுஎம்குழந்தை கேட்டால் என்னதான் சொல்வதய்யா !

துணிந்ததோ விதியின் காலம் தொட்டதோ தலைவா உன்னை!
இணைந்ததோ இனிய ஜீவன் இறுதியின் எல்லைக்கோட்டில்
தணிந்ததோ உனது தாகம் தாழ்ந்ததோ கொடிகள் எங்கும்
அணைந்ததோ தரும தீபம் அன்புயிர் ஞான தீபம் !

விளைந்ததோ கொடிய சோகம் வீழ்ந்ததோ வீர நாதம்
கலைந்ததோ கதிரோன் வானம் காரிருள் வெறியின் வேகம்
அலைந்ததோ அமைதி எங்கும் ஆருயிர் எரியு தந்தோ
அணைந்ததோ! அறத்தின் தீபம்! ஆசிய ஞான தீபம்!



# நான் அழவேண்டும்

கண்ணதாசன்

தனியே எனக்கோர் இடம்வேண்டும்—தலை
சாயும் மட்டும் நான் அழவேண்டும்.
வானகம் போய்வர வழிவேண்டும்—எங்கள்
மன்னனை நான் பார்த்து வரவேண்டும்.

தாயே எனக்கொரு வரம்வேண்டும்—என்
தலைவனை மீண்டும் தரவேண்டும்.
தமிழே எனக்கொரு மொழிவேண்டும்—அவன்
தன்மையைச் சொல்லி நான் அழவேண்டும்.

இருப்பேன் பலநாள் என்றானே—எம்மை
ஏய்த்தது போல் இன்று சென்றானே—அவன்
சிரிக்கும் அழகைப் பார்ப்பதற்கே—அந்தத்
தேவன் அருகினில் அழைத்தானே.

பறக்கும் பறவைக் கூட்டங்களே—எங்கள்
பண்டித நேருவைக் காண்பீரோ—இங்கே
துடிக்கும் கோடி உள்ளங்களை—அந்தத்
தூயவனிடம் கொண்டு சேர்ப்பீரோ—அம்மா

# என்ன தவறு புரிந்தோம்?

சௌந்தரம் கைலாசம்

இன்னும் பலப்பல நாளிருப்பேன் எனச்சொன்ன தென்ன?
சொன்ன இரண்டொரு நாட்களில் நீமனம் சோர்ந்த தென்ன?
என்ன தவற்றினை யாம் புரிந்தோம் எமை ஏன் பிரிந்தாய்?
நின்னை நினைத்தழும் நெஞ்சமும் கோடி நினைந்திலையே!

தெய்வமெனத் தகும் பாரத தேவியின் நேருமகன்
பொய்யறி யாதவன் புண்ணியன் நெஞ்சப் பொலியுடையான்
வையகங் கலங்கக் குலைந்தது செங்கதிர் வானிலென
மெய்யினை நீத்தனன் விண்ணடைந் தானென்ன வேதனையே?

கலகத்து மாந்தர் கவலை மறைந்திடக் காலமெல்லாம்
நலந்தனக் கென்னும் நினைவு மறந்திட நன்குழைத்த
தலைவரெம் நேரு தரையில் விழுந்ததும் தான்நடுங்கி
உலகத்து நாயகி விம்மி அழுதாள் உளமுடைந்தே!



# அந்த வைரம்!

டி. எஸ். கிருஷ்ணமூர்த்தி

காந்தித்தாத்தா கண்டெடுத்த
கண்ணைக் கவரும் வைரமது.
சாந்தம், திறமை, அறிவுடனே
சத்திய ஒளி மிகு வைரமது.
உலகம் தன்னைக் கவர்ந்து விட்ட
உயர்வு மிகு நல் வைரமது.
உலகம் இருளினில் சிக்காமல்
ஒளிதனைப் பரப்பிய வைரமது.
நலிந்த அடிமை நாட்டவர்க்கு
நல்வழி காட்டிய வைரமது.
மெலிந்து வாடும் ஏழைக்கும்
மேன்மை தேடிய வைரமது.
காலம் தன்னை வென்று, ஒளி
காட்டப்போகும் வைரமது.
காலன் நம்மை ஏமாற்றிக்
கவர்ந்து சென்ற வைரமது.
நேர்மை, நீதி, அமைதிக்காய்
நிமிர்ந்து உழைத்த வைரமது.
நேரு—எங்கள் நெஞ்சத்தில்
நீங்காதிருக்கும் வைரமது.

# ஏதைப் பாடுவது

நாக முத்தையா

பாசத்தைப் பாடுவதோ
பண்பிணைத்தான் பாடுவதோ
நேசத்தைப் பாடுவதோ
நிமிர் நடையைப் பாடுவதோ
தேசத்தை நீஆண்ட
திறத்தினைத்தான் பாடுவதோ
மாசற்ற உள்ளத்தின்
மகத்துவத்தைப் பாடுவதோ?

பற்றுள்ளம் பாடுவதோ
படையெடுப்பைப் பாடுவதோ
முற்றறிவைப் பாடுவதோ
முதுவாழ்வைப் பாடுவதோ
பெற்றவரைப் பாடுவதோ
பெருநிதியைத் தந்திட்ட
நற்றவத்தைப் பாடுவதோ
நற்குணத்தைப் பாடுவதோ?

அச்சமற்ற வீரத்தை
அழகழகாய்ப் பாடுவதோ
துச்சமனப் பகையினத்தைத்
தூற்றுதலைப் பாடுவதோ
பச்சையிளம் குழந்தைகளைப்
பாராட்டல் பாடுவதோ?
மெச்சுகிற அருங்குணத்தை
மெல்லிசையில் பாடுவதோ?

பாடுதற்குப் புலவருண்டு
பாராட்ட மக்களுண்டு
கூடுதற்குச் சபைகளுண்டு
கூறுதற்குச் சொற்களுண்டு.
நீடுதமிழ் மொழியுமுண்டு
நினைத்தவற்றைச் சொல்லுதற்கு
வாடுதற்கு வலிமைஇல்லை
வண்மகனைப் பிரிந்ததனால்!

# எழுத வார்த்தை இல்லை

கண்ணதாசன்

காவிய மல்ல; கண்ணீர் ஓவியம்
கப்பல் தலைவனின் ஒப்பிலா வாழ்வை(ப்)
பாவிய லாக்கும் பக்தனின் முயற்சி!

* * *

அவனோர் தெய்வம்; அதற்குமே லவன்
சிறப்பினைக் கூறத் திறம்எனக் கில்லை!
அவனைப் பற்றி ஆயிரம் கவிதை
எழுதி எழுதிநான் எழுத்தை நேசித்தேன்
இலக்கண வரம்போ இலக்கிய மரபோ
எதையும் பார்த்துநான் எழுதவே இல்லை
தோன்றிய அனைத்தும் சொன்னேன்; மன்னவன்
ஊன்றிய நெஞ்சை உலகில் விரித்தேன்.

* * *

மலடி பெற்ற மகனென உலகம்
மன்ன வனைத்தன் மகனாய்ப் பெற்றது
ஆய்ந்தவிந் தடங்கிய அறிவின் ஊற்று
பாய்ந்தெதிர் வெல்லும் பகைவர் கூற்றம்
ஓய்வொழி வின்றி உருளும் சக்கரம்
காய்த்துக் கனிந்த கருணைக் கனிமரம்
வற்றாதோடும் வளப்பெரும் கங்கை
முற்றிய முடிபு; முதிர்ந்த தெளிவு
அன்பில் வணங்கும் அழகிய நாணல்
நிமிர்ந்த புகழில் நிலைபெறும் வானம்
மதங்களுக்கெல்லாம் மதமவன் வாழ்வு
மறப்போர ழித்தோன்; மரணந் தவிர்த்தோன்
மலர்களில் ரோஜா; மலைகளில் இமயம்
அமைதி வானத்தின் அருள்பொழி நிலவு
நாற்பது கோடியும் நானென வைத்தோன்
கூனற் குரங்குகள் குரலில் வீழா
ஞானத் தலைவன்; நாநயச் செல்வன்
கொடும்புலி தனைத்தன் குளிர்ச்சியால் வென்றோன்

“ எவ்வ துறைவ துலகம், உலகோ(டு)
அவ்வ துறைவ தறி”வெனத் தேர்ந்தோன்
ஆடவர் வியக்கும் ஆண்மைத் துணிவு
பெண்மை நயக்கும் பெண்மையின் குழைவு
பிள்ளை பழகும் கள்ளமில் உள்ளம்
“ தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்”
பிறப்பில் இவன்போற் பிறந்தவர் இல்லை
சிறப்பில் இவன்போற் சிறந்தவர் இல்லை
இறப்பில் இவன்போல் இறந்தவ ரில்லை
உலகம் கூடி ஒருகுரல் கூட்டி
அழுத கண்ணீரே ஆற்றின் பெருக்கம்
கடல்சூழ் உலகைப் பகைசூ ழாமற்
காத்தவ னாதலின் கடலும் அழுதது.
மனிதத் தன்மையை மதமெனச் சமைத்தோன்
ஆதலின் மதங்கள் ஆற்ரு தழுதன!
சின்னஞ் சிறியஎன் கவிதைச் சிறகும்
துடித்த தந்தத் தூயனை எண்ணி!
சாவிலும் வாழும் தலைவன் பெயரை
வாழ்விலும் சாவோர் மறப்பதற்கில்லை
விடுதலை வீரன் விடுதலை பெற்ருன்
என்ரே ஓர் நாள் இன்னெரு நேரு
பிறப்பான்! அது நம் பிள்ளைகள் நாளில்
நடந்தால் இறைக்கு நன்றியைச் சொல்வோம்.
அழுத கண்ணீர் ஆறு முன்னாலே
எழுத வார்த்தை இதற்குமே வில்லை!

— ❁ —

வீட்டுக் கொருவிளக்கு ;
வெம்புலிபோல் போராடி
நாட்டுக் குழைக்கவந்த
நல்வீரன்;—எட்டுலகம்
போற்று மொருமேதை ;
புன்மூடக் கொள்கையெலாம்
மாற்றவந்த நேரு
மணி.

—‘ அம்மான் ’

# இணைதான் யாரே?

என். எஸ். சிதம்பரம்

சாந்தநற் காந்தி யன்று சாற்றிய நேரு வென்னும்
மாந்தருள் மாணிக் கந்தான் மறைந்திடச் செய்த தீய
பாந்தமில் விதியை எண்ணிப் பதைக்குது நெஞ்ச மையா!
ஏந்திய கொள்கை வீரன் எழில் நேருக் கிணைதான் யாரே?

ஆசியச் சுடராம் நேரு அணைந்தது கண்டே இந்தக்
காசினி மக்கள் கொண்ட கடுந்துயர் பெரிதா மையா!
நேசநல் லமைதி யுற்று நிலமெல்லாம் இலங்கித் தூய
பாசமுற் ளேங்கச் செய்த பண்பினுக் கிணைதான் யாரே?

காந்தியர் மறைந்த அந்நாள் கண்ணொன்று போன தென்றுள்;
காந்தியின் வழியில் நின்ற கனம் நேரு மறைந்த இந்நாள்
சார்ந்த, தன் மற்றக் கண்ணும் தரணியிற்போன தென்னும்
தேர்ந்த இந்தியத் தாய்மைந்தன் திரு நேருக்கிணை தான்யாரே?



# மறைந்துவிட்டாரா?

குண்டத்தூர், என். எஸ். வாஸன்

மனிதருள் மாணிக்கம் மறைந்துவிட்டாரா
மனிதரின் இதயத்தில் உறைந்துவிட்டாரா
புனிதரில் சிறந்தவன் பறந்துவிட்டானு
புவியினர் உள்ளத்தில் புகுந்துவிட்டானு?

தாழ்ந்தவர் உயர்ந்தவர் பேதம் மறந்தவன்
வாழ்ந்தவன் என்பதால் வையகமெங்கிலும்
ஆழ்ந்தனர் துயரத்தில் அனைவரும் அவன்பால்
சூழ்ந்தனர் டெல்லியில் சோர்வுடன் மானிடர்

யாருக்கும் தீங்குகள் செய்தறியாதவன்
போருக்குத் துணிவதும் சரியில்லை யென்றவன்
பாருக்கும் இதையவன் பலமுறை சொன்னவன்
நேருக்கும் நேர்தனில் நீதிகள் புகன்றவன்

# இறந்தது நேருவோ ?

மு. பாவாணன்

நிலமகள் இருதயம் பிளந்ததே!
நிறையொளி திடுமென மறைந்ததே!
உலகினில் அருள்மனம் படைத்தவன்
ஒருவனை இயற்கைவந் தழித்ததே!
அமைதியில் அவன்செயல் நிலைத்திடும்
அழிவினை அவனுளம் தவிர்த்திடும்
நமைப்புது உலகிடை யமர்த்திட,
நலந்தர அவன்மனம் நினைத்திடும்.
ஒருமுது நிலந்தனில் ஒருமகன்
உலகைத் தழுவிட ஒருமகன்
பெருமைகள் நிகழ்த்திட வருமகன்
பெயர்ந்தனன்; உலகினிப் பிழைக்குமோ
இயற்கையில் அவனொரு இயற்கையே!
எழுச்சியில் அவனொரு எழுச்சியே!
வியத்தகு திறமைகள் உடமையாய்
விளைத்தவன்; நிலமெலாம் விளைந்தவன்
பாரத மண்ணெனில் அஃதவன்
பாரதப் பண்பெனில் அஃதவன்
பாரத உயிரெனில் அஃதவன்
பார்தனக் கினியவன் நேருவே!
இறந்தது நேருவோ? யாங்களோ?
இருநிலப் புன்னகைத் தோற்றமோ?
இறந்தது மகிழ்வெலாம் இறந்ததே!
எமக்கினித் துணையெவர் இயற்கையே!



# "மறைந்த வெண்புரு"

அப்துற்ரகீம்

அன்பமுதைப் புவிக்கெல்லா மளித்த புத்தன்
அகம்சார்ந்த தத்துவமே! வெண்புருவே!
மின்னலென ஓர் நொடியில் மறைந்திட் டாயே!
மீண்டுமொரு உன்னுருவை காண்போமென்றோ?
என்செய்வேன், இறங்குவது கண்ணீர் வெள்ளம்
இனிஇன்பப் புன்சிரிப்பை, தர்மத் தாயை
சென்றோடி யெங்கலேவேன் உன்னைப் போல
செகத்தினிலே மற்றுமொரு பிறவி உண்டோ?
களங்கமில்லா நிலவைநிக ருள்ளங் கொண்டாய்
கருணையதன் கோட்டையாக்கி நிமிர்ந்து நின்றாய்
அளப்பரிய சோகமதை யளித்து விட்டு,
அடித்தசிலை யென நம்மை யாக்கிச் சென்றாய்
விளக்கானாய், மணியானாய், தாயா யானாய்,
விண்புகழ நம்நாட்டுத் தலைவ னானாய்
வெளியுலகம் உன்பண்பைப் பாடி நிற்கும்
வெளியான உன் சேவை சாகா நிற்கும்.

# நினைவுச் சின்னம்

ரமணீயன்

கடலோரம் காந்திமகான் சிலையைப் போலே
கரையருகில் சிலையமைக்க வேண்டும்—அண்ணல்
படமெங்கும் மாட்டி அதில் சிவப்பு ரோஜாப்
பூவிதழும் தூவிவர வேண்டும்—நல்ல
இடமாகப் பார்த்தவரின் நினைவுக்காக
இனியதொரு மண்டபத்தை அமைக்கவேண்டும்
புடம்போட்ட தங்கத்தின் நினைவுச் சின்னம்
புண்ணியனை நினைவுறுத்த வேண்டும்; வேண்டும்.
தப்பாமல் அவர் உருவை அஞ்சல் வில்லை
தனில் அமைத்து வெளியிட்டே தீரவேண்டும்.
ஒப்பாரும் இல்லாத உயர்குணத்தான்
உண்டாக்கி வைத்தபல நூலை எல்லாம்,
அப்பாலே அவன்பேசிச் சென்ற பேச்சில்
அழகாகப் பொதிந்துள்ள சிறப்பை எல்லாம்
இப்போதே அச்சிட்டு உலகம் எங்கும்
இலவசமாய் வினியோகம் செய்தல் வேண்டும்.
சென்னையிடைச் செல்கின்ற மவுண்ட்ரோடு
சாலைஅவர் பெயராலே மாறல்வேண்டும்.
தண்ணீரைத் தேக்கிவரும் அணையுள் ஒன்றைத்
தலைவர் அவர் நினைவாலே அழைக்கவேண்டும்.
கண்மணிகள் படிக்கின்ற பள்ளி ஒன்றைக்
கண்ணியனின் பெயர்கொண்டு திறக்கவேண்டும்.
என்றெல்லாம் நமக்குள்ள ஆசைவேறு!
ஏந்தலுக்கு ஏற்புடைய சின்னம் வேறு
பாரெல்லாம் புகழ்கின்ற நேருவென்றும்
பண்பாளன் நினைவென்றும் எண்ணிவந்த
போரில்லாச் சமுதாயம் சமைத்து இந்தப்
புவியெங்கும் பரவவிட நினைத்தால்—நம்மில்
வேரூன்றிப் போயுள்ள வேற்றுமையை
வெளியிழுத்துப் போட்டுவிட உறுதிகொண்டால்
நேருவின் நினைவுக்கு அதுதான் சின்னம்!
நேர்மைமகன் நினைவுக்கு அதுவே சின்னம்!!

**நேருவுடன் ஒரு சகாப்தம் முடிகிறது.**
**ஒரு புதிய பராம்பரியமும் தொடங்குகிறது.**

# நேரு சாகவில்லை

**கே. பாலதண்டாயுதம்**

நம்ப முடியவில்லை. நேருவுக்குமா சாவு? நேரு இல்லாமல் நாட்டிற்குக் களை ஏது?

'எல்லா பைல்களையும் தஸ்தாவேஜுகளையும் பார்வையிட்டு விட்டுப் பைசல் செய்துவிட்டேன்' என்று கூறிவிட்டு இரவு உறங்கச் சென்ற நேரு மீளாத் துயிலில் ஆழ்ந்துவிட்டார்!

நாட்டிற்கு ஆபத்து வந்த போதெல்லாம் 'நேரு இருக்கிறார் நமக்கு என்ன கவலை' என்று வாழ்ந்து பழகி விட்டோம் நாம். செல்லப் பிள்ளைகளுக்குப் பொறுப்பு ஏது?

நமக்கு அதிர்ச்சி வைத்தியத்தின் மூலம் பொறுப்புணர்ச்சி யூட்டும் பொருட்டு இப்படித் திடீரென்று மறைந்து விட்டாரோ?

நேரு இருக்கும்பொழுது உலகமே நம்மிடம் கேள்வியைக் கேட்டுக் கொண்டிருந்தது.

நேருவுக்குப்பின் யார்?

'நேருவுக்குப்பின்?' என்ற எண்ணமே நமக்கு எழவில்லை.

நாட்டைப் போல் நேருவையும் நிரந்தரம் என்றே நினைத்தோம்.

'நேருவுக்குப் பின்?' என்ற கேள்வியை நேருவே தனக்குத் தானே கேட்டிருப்பாரா?

நிச்சயம் கேட்டிப்பார்! நாட்டு நலனில் நாட்டங்கொண்டு அண்டத்தையே அன்பினால் அரவணைத்த அரியோன், தான் இல்லாதபோது உலகம் எப்படி இருக்கும் என்பதைப் பற்றி எண்ணிப் பார்க்காமலா இருந்திருப்பார்? தனக்கு முன் மக்கள் வாழ்ந்தனர். தன் வாழ்நாளிலும் மக்கள் சக்தியே தன் சக்தி; தனக்குப் பின்னும் மக்கள்தான் சக்தி என்பதில் நேருவுக்குத் திட நம்பிக்கை இருந்திருக்கிறது. இல்லையென்றால் நேரு இவ்வளவு நிம்மதியாகத்துயில் கொள்வாரா?

ஒரு நாளைக்கு நான்கு மணி நேரத்திற்கு மேல் துயில்கொள்ள மனமில்லாத மாவீரன் இப்படி நிரந்தரமாகத் துயில்கொள்ளத் துணிந்திருப்பானா?

உலக வரலாற்றை ஓர்ந்துணர்ந்த அறிஞன் சரித்திரத்தின் வளர்ச்சிப் போக்கில் அசையாத நம்பிக்கை வைத்ததில் ஆச்சரியமில்லை.

நேருவின் ஜனநாயக உள்ளத்திற்கு ஊறு செய்கிறோம் என்று உணராமலேதான் வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுவதுபோல் 'உங்கள் வாரிசைத் தேர்ந்தெடுத்து விட்டீர்களா?' என்று பலர் அவரைக் கேட்டனர்.

இந்தியப் பண்பாட்டின் இமயமான நேரு 'இன்னும் பத்தாண்டு வாழ்வேன்' என்று அந்த கேள்விக் கணையை இங்கிதத்தோடு ஒதுக்கித் தள்ளினார்.

இருப்பினும்நேருவுக்குபின்யார்? என்ற வினவுக்கு விடை பகருவது போல் நேருவுக்கு நினைவுச் சின்னம் என்ற சோகச் செய்திகள் வருகின்றன.

நேருவுக்குச் சிறந்த நினைவுச் சின்னம் 'யுத்த மில்லாத உலகம்' சாத்தியமே ஏன் இன்றியமையாததும் கூட! நேரு வாழ்ந்ததே அதற்குத்தான். அந்த நினைவுச் சின்னத்தைநாம் நிச்சயம் எழுப்ப முடியும்.

ஆனால் யுத்தமில்லாமல் நிரந்தரமான சமாதானம் நிலவினால் மட்டும் போதுமா?

யாருக்குச் சமாதானம் மனித குலத்திற்கல்லவா?

யுத்தமில்லாத உலகத்தில் மனிதன் முழு மனிதனாக வாழவேண்டும்.

அதற்குத் தேவையான முப்பெரும் லட்சியங்கள் மனிதாபிமானம் சமூக முன்னேற்றம் சமாதானம் ஆகியவைகளாகும். இம் மூன்று லட்சியங்களின் வெற்றியே நேருக்குச் சிறந்த நினைவுச் சின்னமாகும். அமெரிக்கா அதிபர் தொடுத்ததை சோவியத் அதிபர் குருஷேவ் அவர்கள் முடித்திருக்கிறார்கள்.

நேரு சாகவில்லை. நேருவுக்குச் சாவில்லை; நாடு போல் என்றென்றும் வாழும் நாட்டு மக்களின் இதயத்திலே நீடூழி வாழ்கிறார் நேரு.

உண்மை. நேருவின் இதயத் துடிப்பு நின்றது; நெருக்கடி மிகுந்த நேரத்தில் நேருவின் இதயத் துடிப்பு நின்று நெருக்கடியுடன் நெருக்கடியைச் சேர்த்தது வாஸ்தவம்.

ஆனால், நான் இருக்கும் வரை இந்த நாட்டில் மக்களிடையே மெத்தனமும் இருக்கத்தான் செய்யும் என்று நேரு உள்ளம் நொந்தாரோ? நெஞ்சு உடைந்தாரோ?

நான் மறைந்து 'நானே நாடாக வேண்டு'மென்று அருளினரோ!

நேருவின் ஜோதி நாற்பது கோடி மக்களின் உள்ளத்திலும் ஒளிவீசும்! நேரு நாற்பது கோடி தீபங்களுக்கு ஒளி தந்துள்ளார்.

நேருவுடன் ஒரு சகாப்தம் முடிகிறது என்றார் இந்திய ஜனாதிபதி. ஆம்!

ஆனால் நேருவுடன் ஒரு புதிய பாரம்பரியம் துவங்குகிறது.

ஐம்பதாண்டு காலமாக அவர் தேச விடுதலை இயக்கத்தில் குதித்த நாளிலிருந்து கடைசி நாள்வரை இந்திய தேசீயக் காங்கிரசின் அயல்நாட்டுக் கொள்கைத் தீர்மானங்களை தன்கைப்பட எழுதி தானே பிரேரேபித்து அமுல் நடத்தித்தான் அயல் நாட்டு மந்திரியாக அரசோச்ச அருகதை பெற்றார் என்பதை அறிந்தவர்கள் எத்தனை பேர்?

திட்டமிட்ட பொருளாதாரத்திற்கு தளபதியாகத் தகுதி பெற முப்பது ஆண்டுகளுக்கு முன்பே சுதந்திரம் என்பது வெறுங்கனவாக இருந்த காலத்திலேயே தேசீயத் திட்டக் கமிஷனைத் தோற்றுவித்து அதற்குத் தலைவராக இருந்து அதில் தோய்ந்து வளர்ந்தார் என்பதை அறிந்தவர்கள் எத்தனை பேர்?

விருப்பம் வேறு வினை வேறு. நேருவைப்போல் நாடே வாழ முயற்சி வேண்டும்; முனைப்பு வேண்டும். நேருவைப் போல் நாடு வாழ நேருவின் பாரம்பரியத்தை நாட்டில் முன்கொண்டு செல்ல நேருவின் வழியில் நேருவைப்போல் காலமெல்லாம்நாட்டு மக்கள் உழைக்கப் பயிலவேண்டும். நேருவே நாட்டின் ஆதர்சம். நேருவின் பெயரால்இச்சபதத்தை நாமனைவரும் ஏற்போமாக!

# ஒரு சகாப்தம் முடிந்தது

நமது தலைமுறையில் தோன்றிய உன்னத புருஷர்களில் ஒருவர் ஜவஹர்லால் நேரு. ஒப்பற்ற ராஜதந்திரி. மனித இன விடுதலைக்காக அவர் புரிந்த சேவை மறக்க முடியாதது.

**ராஷ்டிரபதி ராதாகிருஷ்ணன்**

நாட்டை முற்போக்கான, விஞ்ஞான, வகுப்புவாதமற்ற அடிப்படையில் நிலைபெறச் செய்ய நேரு முயற்சித்தார். சமூக, அரசியல் ஸ்தாபனங்களுக்குப் புதிய உத்வேகத்தை ஊட்டினார்.

உலக சமாதானத்திலும், ஒரே உலக சமுதாயம் என்ற கோட்பாட்டிலும் அதிகநம்பிக்கையைக் கொண்டிருந்தார் நேரு. ஐ. நா. சாஸனத்திடம் நேருவைக் காட்டிலும் அதிக விசுவாசமும், நம்பிக்கையும் காட்டியவர்கள் வேறு யாருமில்லை,

நேருவின் தைரியம், விவேகம், பண்பாடு ஆகியவை நமது நாட்டை ஒன்றுபடுத்தி வைத்திருந்தன. இப் பண்பாடுகளைப் போற்றி வளர்க்கவேண்டும். அவரது லட்சியங்களுக்காக பாடுபடுவதைக் காட்டிலும் அவருக்கு அஞ்சலி செலுத்துவது வேறெதுவும் இல்லை.

நமது தலைமுறையில்தோன்றிய உன்னத புருஷர்களில் ஒருவர் ஜவஹர்லால் நேரு. ஒப்பற்ற ராஜதந்திரி, மனித இன விடுதலைக்காக அவர் புரிந்த சேவை மறக்கமுடியாதது. விடுதலைப் போராட்ட வீரர் என்ற ரீதியில் அவர் ஒப்பற்றவர். நவ இந்தியாவின் சிற்பி என்ற ரீதியில் அவரது சேவைகள் இணையற்றவை. அவரது வாழ்க்கையும், பணியும் நமது சிந்தனைப் போக்கிலும், சமுதாய அமைப்பிலும், புத்தி வளர்ச்சியிலும் சிறந்த பயனை விளைவித்தன. தீவிர, ஊக்கந்தரும் அவரது தலைமையின்றி இந்தியாவை சிந்தித்துப் பார்ப்பது கடினம். நமது நாட்டின் வரலாற்றில் ஒரு சகாப்தம் முடிந்துவிட்டது.

நேரு தமது பிரசங்கங்களின் மூலம் தமது கோட்பாடுகளை மக்கள் உணர்ந்து அறியுமாறு செய்தார். அவரது சக்தி வாய்ந்த குரல் இந்திய மக்களை அவர் போற்றி வந்த கொள்கைகளிடம் விசுவாசம் கொள்ளுமாறு செய்தது.

உலகின் இதர நாடுகளிலிருந்து இந்தியாவைத் தனித்து நோக்க முடியாது என்று உறுதியாக நம்பினார் நேரு. உலக மக்கள் அனைவருடைய சுதந்திரத்திலும் அவர் ஆர்வம் காட்டினார். ஆப்பிரிக்கா, ஆசியா, தென் அமெரிக்கா ஆகியவற்றில் நிகழ்ந்த விடுதலை இயக்கங்கள் அனைத்துக்கும் ஆதரவும் தெரிவித்தார்.

# அழியாத உருவம்

*நேருஜி உயர்ந்த கலைப் பொருள். நமக்கு அவர் இனி வெற்றுருவமல்ல. நமது கருத்து முழுமைக்குமோர் உள்ளமாவார்.*

**உபராஷ்டிரபதி ஜாகீர் ஹுசேன்**

நமது ஜனநாயகக்குடியரசுக்கு கடந்த பதினேழு ஆண்டுகளாக வழிகாட்டி வந்த மேதையும், நமது காலத்திலேயே மிகவும் அருமையான புருஷனுமான தலைவருக்கு அஞ்சலிசெலுத்துகிறோம். என்ன நேர்ந்ததென்பதை முழு அளவுக்கு உணர சிறிது காலம் பிடிக்கும்; அவ்வளவு பெரிய அதிர்ச்சி இது.

நேருஜியை உறுதியான அஸ்திவாரமாகக் கொண்டு நாம் தன் னம்பிக்கையை வளர்த்துக் கொண்டோம். நேரு நம்மிடையில் இல்லை. ஆகையால் நம் உள்ளங்களில் அவரது அழியாத உருவத்தைப் பொறித்துக் கொள்வோமாக.

### ஜனநாயகப் பண்பு

பிறவியில் பிரபு; பெரிய மனிதமனமுள்ளவர். ஆனால் முழு அளவுக்கு, சந்தேகத்துக்கு இடமில்லாமல் ஜனநாயக லட்சியங்களுக்கும் ஜனநாயக ஸ்தாபனங்களுக்கும், ஜனநாயக நடைமுறைகளுக்கும் கட்டுப்பட்டு நடந்தார்.

சமூக நீதி, பொருளாதார அபிவிருத்தி ஆகிய ஆக்க அம்சங்களுடன் கூடிய பரிபூரண சுயராஜ்யம் மக்கள் அடையவேண்டுமென்று 34 ஆண்டுகளுக்கு மேலாக நேரு பாடுபட்டார். க்ஷேமநல அரசாங்கமென்ற லட்சியத்தை மக்களடைய இடைவிடாமல் உழைத்தார்.

### உரிமை உணரச் செய்த ஆசான்

நமது சகாப்தத்தின் மாபெரும் பிரசாரகர் நேரு. பொதுமக்கள் தங்கள் உரிமைகளையும், கடமைகளையும் உணரச் செய்தார். பொது நலனுக்கு அரசாங்கக் கொள்கை உதவியாகவிருக்கும் சாதனத்தை உண்டாக்கினார்.

அவரது உணர்வு, தீர்க்கதரிசனம், அவரது அற்புதக் கூர்மை அவரை உயர்த்தின.

சமாதான உலக சமுதாயம் எழுவதற்கான முன்னோடி சிற்பிகளில் நேரு ஒருவராகிவிட்டார். பூமண்டலத்தில் சமாதானத்தை முழு அளவுக்கு நிலைநாட்டும் தன்மை வாய்ந்த அயல்நாட்டுக் கொள்கையை வகுத்துத்தந்தார்.

நேருஜி உயர்ந்தகலைப்பொருள். அவரது முகவிலாசத்தை நாம் காணமாட்டோம். இது பெரும் நஷ்டம். அவர் எதற்குப் பாடுபட்டாரோ அப்பண்புகள் எந்நாளுமிருக்கும்; அவற்றை நாம் கடைப்பிடிக்கும்படி கோரும். நமக்கு அவர் இனி வெற்றுருவமல்ல. நமது கருத்து முழுமைக்குமோர் உள்ளமாவார்.

வளரும் தேசிய வாழ்வில் கடமைகள் பலபல. தலைவரின் மறைவால் அவை நிற்பதில்லை. அவற்றைப் பூர்த்திசெய்யவேண்டும்.

# அவரே இந்தியா

தேசபிதா அளித்துவிட்டுப் போன சுதந்திர ஒளி விளக்கை அவர் மங்காமல் உயர்த்திப் பிடித்துக் கொண்டிருந்தார். தேசத்தின் லட்சியங்களுக்கு அவர் ஒரு புது அர்த்தங் கொடுத்தார்.

**திரு. நந்தா.**

"மகத்தான ஒரு துக்கத்தின் நிழலில் இன்று நாம் கூடியிருக்கின்றோம். தாங்கமுடியாத ஒரு துக்கம் நமக்கு ஏற்பட்டுவிட்டது. தேசம் பூராவுமே அதிர்ச்சியடைந்திருக்கிறது. தேசம் பூராவிலும் ஆண்கள், பெண்கள், குழந்தைகள் யாவரும் தமக்கு ஒரு சொந்த துக்கம் ஏற்பட்டுவிட்டது போல் வேதனையடைந்திருக்கிருர்கள். இந்தச் சர்ந்தர்ப்பத்தில் எனக்குப் பேசவே கஷ்டமாக இருக்கிறது.

ஸ்ரீ. ஜவாஹர்லால்நேருவுக்குத் தனது மரியாதையைத் தெரிவித்துக் கொள்ளுவதற்காக பார்லிமெண்ட் இன்று கூடியிருக்கிறது. புதன்கிழமை பார்லிமெண்ட் கூட்டம் ஆரம்பமாயிற்று. அதில் கலந்துகொள்வதற்காக முதல் நாளிரவே அவர் வந்துவிட்டார். ஆனுல், கூட்டத்தில் அவர் கலந்து கொள்ளவில்லை. நம்முடைய அன்புத் தலைவர் காலமானதால் நமக்கேற்பட்டுள்ள துக்கத்தை வர்ணிப்பதற்கு வார்த்தைகள் இல்லை. உலகம் பூராவுமே இந்த துக்கத்தைப் பகிர்ந்து கொண்டிருக்கிறது. உலகின் பல பாகங்களிலிருந்தும் வந்துள்ள செய்திகள் நமக்குச் சிறிது ஆறுதல் அளிக்கின்றன. ஜவாஹர்லால்நேரு, இந்தியாவுக்கு மட்டும் சொந்தமானவரல்லர். மனித வர்க்கம் பூராவுக்குமே அவர் சொந்தமானவராக இருந்தார்.

### மனித குலத்திற்கே சேவை செய்தார்.

இந்தியா மூலம் அவர் மனித குலத்திற்கே சேவை செய்தார். இந்தியாவின் பிரச்னைகளும், அபிலாஷைகளும் மனித குலத்தின் பிரச்னைகளான சுதந்திரம், சமாதானம், சமூக நீதி, மனிதனின் கண்ணியம் ஆகியவற்றின் ஒரு பகுதி என்று அவர் நினைத்தார்.

தேச பிதா அளித்துவிட்டுப் போன சுதந்திர ஒளி விளக்கை அவர் மங்காமல் உயர்த்திப் பிடித்துக்கொண்டிருந்தார். தேசத்தின் லட்சியங்களுக்கு அவர் ஒரு புது அர்த்தம் கொடுத்தார். எவ்வளவோ கஷ்டங்கள், சோதனைகளுக்கிடையே, காந்திஜி போதித்த சத்யமார்க்கத்தை விட்டுத்தாண்டாமல்பணியாற்றினுர். சரியான மார்க்கங்கள் கடைசி வரை வெற்றிபெறும் என்ற காந்திஜியின் போதனையைப் பின்பற்றி நடந்துவந்தார்.

### ஒன்றும் புரியவில்லை

நாம் உபயோகிக்கும் அடைமொழிகளும், கூறும் புகழ்மாலை

களும் ஜவாஹர்லாலின் மகத்தான பணிகளுக்குப் போதுமானவைகளாக இருக்கமுடியாது. பல வருஷங்களுக்கு அவரே இந்தியாவாக இருந்தார். ஆகையால் இன்று அவர் போய்விட்டார் என்பதைப் பார்க்கும்போது என்ன செய்வதென்று ஒன்றுமே புரியாமலிருக்கிறது. தேசிய சுதந்திரம் இன்னும் விரிவான எதிர்காலத்தின் ஒரு சிறு பகுதி என்றே அவர் நினைத்தார். இந்திய சுதந்திரப் போராட்டத்தில் நமது மாபெரும் தலைவராக இருந்த ஜவாஹர்லால் பின்னர் சுதந்திர இந்தியாவின் சிற்பியாக மாறினார். ஓய்ச்ச லொழிவில்லாமல் 17 வருஷ காலம் அவர் நமக்குப் பணியாற்றினார். ஜவாஹர்லால் நேரு ஒரு புது இந்தியாவைச் சிருஷ்டித்தார். இந்தியாவின் சிந்தனைகளையும், அபிலாஷைகளையும் அவர் உருவாக்கினார். இந்திய மக்களின் உள்ளங்களுக்கே அவர் பிரதிநிதியாக இருந்தார். மக்களுக்கு நம்பிக்கையையும், தெம்பையும் ஊட்டினார். புது வழிகளைக் காட்டினார்.

### ஈடு இணையில்லாத பாரம்பரியம்

ஈடு இணையில்லாத சில உன்னதமான பாரம்பரியங்களை அவர் நமக்கு விட்டுச் சென்றிருக்கிறார். இந்தியாவுக்காகவும், மனிதவர்க்கத்திற்காகவும் அவர் ஆயுள் பூராவும் உழைத்தார். அவருடைய வாழ்க்கையே இன்னும் பல தலைமுறைகளுக்கு ஒரு கலங்கரை விளக்காக இருக்கும்.

ஒரு மனிதனால் எவ்வளவு அளிக்க முடியுமோ அவ்வளவையும் அவர் நமக்கு அளித்தார். இந்தத் தலைமுறையைச் சேர்ந்த நாம் அவர் நமக்கு விட்டுச் சென்றுள்ள பாரம்பரியங்களுக்குத் தகுதியுள்ளவர்களாக இருக்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

### நெருக்கடியான தருணத்தில் போய்விட்டார்

மிகவும் நெருக்கடியான ஒரு தருணத்தில் அவர் நம்மை விட்டு விட்டுப் போய்விட்டார். இந்த தேசத்தின் வாழ்விலும், உலகத்தின் வாழ்விலும்கூட இது ஒரு நெருக்கடியான சமயமாகும்.

உள்நாட்டு விவகாரங்களிலும், சர்வதேச விவகாரங்களிலும் சில கொள்கைகளையும், செயல் முறைகளையும் அவர் பின்பற்றி வந்தார். அதே கொள்கைகள் இனியும் தொடர்ந்து நமது அடிப்படைகளாயிருக்கும். மகத்தான பொறுப்புகள் நம்மை எதிர்நோக்கி நிற்கின்றன.

இந்திய மக்களின் உறுதிக்கும், விருப்பங்களுக்கும் இந்த பார்லிமெண்ட் பிரதிநிதியாக இருக்கிறது. இந்தியாவைக் கட்டிக் காப்பதற்கும் நியாயமான ஒரு சமூக அமைப்பை ஏற்படுத்துவதற்கும், சுதந்திரத்தையும், ஜனநாயகத்தையும் ஸ்திரப்படுத்துவதற்கும் நமது முயற்சிகளை திருப்பி, அரசியலமைப்பில் விதிக்கப்பட்டுள்ள லட்சியங்களை நிறைவேற்றப் பாடுபடுவோமாக. ஜவாஹர்லாலுக்கு நாம் செலுத்தக்கூடிய மரியாதை இதுதான்.

ஜவாஹர்லால் நேருவைப்பற்றி இந்தியா பெருமைப்படுகிறது. அவருக்கு நாம் நன்றி செலுத்துகிறோம். அவருடைய பணியைப் பூர்த்திசெய்யவும் முயற்சிசெய்வோம்.



# புண்ணியமூர்த்தி

புனிதமான குழந்தை உள்ளம் கொண்ட புண்ணியமூர்த்தி நமது நேருஜி. அதனுல்தான். குழந்தைகளோடு அவர் மனங்கலந்து உறவாடினுர். குழந்தைகளின் கண்மணியாகத் திகழ்ந்தார். எதிர்கால உலகம், சாந்தம் நிலவும் உலகமாகத் திகழவேண்டுமென்று அவர் கனவு கண்டார்.

முதலமைச்சர் **எம். பக்தவத்சலம்**

சுதந்திர பாரதத்தின் தனிப் பெரும் தலைவராய், 16 ஆண்டுகள் ஓயாது உழைத்த உத்தமர், பண்டித ஜவஹர்லால் நேரு, அமரராகி விட்டார். நமது தேசப்பிதா மகாத்மா காந்தியின் கட்டளையை தம் வாழ்நாள் முழுவதும் திறம்பட நிறைவேற்றி விட்டு, மனிதர் குல மாணிக்கம், அமரர் உலகம் சென்று விட்டார். 74 வயது வரை இடைவிடாமல் உழைத்த அவர் உடலுக்கு, விடுமுறை கிடைத்து விட்டது. மண்ணுலகில் உலவி வந்த மாபெருந் தலைவர், மக்கள் மனத் திரையில் ஒளி உருவம் பெற்று விட்டார்.

மரணம் என்பது இயற்கை நியதி. இயற்கை, தனது கடமையைச் செய்துவிட்டது. ஆனுல், நாம் அகதிகளானேம். உணர்ச்சி வசப்பட்ட நம்மை, உலக மக்களின் கண்ணீர், மிகுந்த ஆறுதல் தந்து, நமது எதிர்காலப் பொறுப்பை நினைவூட்டுகிறது.

தன்னுடைய புகழ் மட்டுமின்றி, பாரதத்தின் புகழையும், வானளாவ உயர்த்திய மாவீரர், நேருஜி. அவர் வாழ்வு, நமக்கெல்லாம் வழிகாட்டும் துருவநட்சத்திரம். மகாத்மாவின் உயர்ந்த லட்சியங்களை நிறைவேற்றும் கர்மவீரராய், நேருஜி வாழ்ந்தார். அவரைப்போலவே நாமும், அவருடைய உயர்ந்த கொள்கைகளை உறுதியாகக் கடைப்பிடித்து, முன்னேற வேண்டும். இதுவே, நாம் அவருக்குச் செலுத்தும், சிறந்த காணிக்கை யாகும்.

சுமார் அரை நூற்றுண்டு காலம், பாரத நாட்டின் அரசியல் அரங்கில், தலைசிறந்த ஜனநாயகவாதியாக, நேருஜி திகழ்ந்தார். பொருளாதாரத் துறை

யில், ஏழை மக்கள் வாழ்வுக்கு விமோசனம் ஏற்பட வேண்டும் என்று அவர் விரும்பினுர். இந்தியாவின் சுதந்திரப்போராட்டத்தில், முன்னணித் தலைவராய் விளங்கிய நேருஜி. சுதந்திர பாரதத்தை சோஷலிஸப் பாணியில் அமையும் தனிப் பெரும் ஜனநாயக சமுதாயமாக உருவாக்கினுர். பொதுவாழ்வில் அவர் செய்த தியாகங்களும், கடைப்பிடித்த லட்சியங்களும், ஓயாது பாடுபட்ட உழைப்பும், உலகநாடுகளின் பாராட்டுதலை, அவருக்கு பரிசாகத்தந்துள்ளன. அவர் குடும்பம்முழுவதும், தியாக வேள்வியில் பங்கு கொண்டது. பாரத நாட்டின் அபிவிருத்தித் திட்டங்களுக்கு, மூல கர்த்தாவாக விளங்கிய பொருளாதார மேதை, அவர். உலகநாடுகளிடையே, பாரதத்துக்கென சிறப்பான அயல் நாட்டுக்கொள்கையை உருவாக்கிய சிற்பி, அவர்.

நேருஜியின் உள்ளத்தில், தமிழ் நாட்டிற்கு எப்போதும், ஒரு தனியிடம் உண்டு. தமிழ் நாட்டிற்கு வரும் ஒவ்வொரு சமயத்திலும், அவர் இங்குள்ள மக்களின் அறிவு வளத்தையும், பண்பின் சிறப்பையும், பாராட்டத் தவறியதேயில்லை. தமிழ் நாட்டு மக்களும், தம்முடைய உளமார்ந்த அன்பை, அவருக்கு எப்போதும் அளித்து வந்தார்கள். லட்சக்கணக்கில் கூடி, அவர் பேச்சை, அமைதியாகக் கேட்டுப் பயனடைந்திருக்கிருேம். கணீரென்று அவர் பேசும் பேச்சில் இந்தியாவின் இதயமே ஒலித்தது. பாரத நாட்டை, ஒப்பில்லாத ஒரு சமுதாயமாக—உலகத்துக்கே ஒரு சிறந்த உதாரணமாக விளங்கும் உயர்ந்த சமுதாயமாக—உருவாக்க எண்ணிய அவரது உற்சாகத்தையும் ஆசைகளையும் அவர் பேச்சில் கண்டோம். அவருடன் ஒன்று பட்டோம். அவர் நமக்குக் காட்ட விரும்பிய உயர்ந்த லட்சியங்களை, தெளிவாகக் கண்டுகொண்டோம். அவற்றை நடைமுறையில்நிறைவேற்ற உறுதி கொண்டோம்.

சிறப்பாக, கிராமங்களின் அபிவிருத்திக்காக, பாரத நாடெங்கும் சமுதாய நலத் திட்டங்களை, 1952-ம் ஆண்டில் தொடங்கி வைத்தார் நேருஜி. கிராமங்களின் மறுமலர்ச்சி தொடர்ந்து நடைபெறுவதற்காக, புதிய பஞ்சாயத்து ஆட்சி தோன்றியது. சுமார் 3 ஆண்டுகளுக்கு முன்பு, தமிழ் நாட்டின் பஞ்சாயத்து மாநாடு, சென்னையில் நடைபெற்றது. அதை ஆரம்பித்து வைத்தவர், நேருஜி. தமிழ் நாட்டின் எல்லாப் பஞ்சாயத்துத் தலைவர்களும், சுமார் 12 ஆயிரம் பேர், அங்கே திரண்டிருந்தனர். சட்டசபை உறுப்பினர், பாராளுமன்ற அங்கத்தினர், பல்வேறு அதிகாரிகள் ஆகிய அனைவரும், ஒன்றுகூடியிருந்த அம் மாபெரும் மாநாட்டில், நேருஜி பேசிய பேச்சு காந்தியடிகளின் கொள்கைகளுக்குச் சிறந்த விளக்கமாக அமைந்து இருந்தது. சமீபத்தில்

அவர் மதுரையை அடுத்துள்ள காந்தி கிராமத்திற்கு வந்திருந்த போது, கிராமப் பொருளாதார மேம்பாட்டுக்கான வழி முறைகளை, விரிவாக எடுத்துரைத்தார். சிறப்பாக, விவாசாயம் வளரவும், மற்ற கைத்தொழில்கள் பெருகவும், எல்லோரும் ஒத்துழைக்க வேண்டுமென்று விளக்கினார். தேசிய ஒருமைப்பாட்டுக்கான கருத்தரங்கில் பங்குகொண்டார்.

எதிர்பாராத வகையில், நம் நாட்டின்மீது சீன ஆக்கிரமிப்பு ஏற்பட்டபோது, நாட்டின் பாதுகாவலராக, நேருஜி பணியாற்றினார். அவருடைய வீர கர்ஜனை, நமது மக்களின் ஆக்க சக்திகளையெல்லாம் ஒன்று திரட்டியது. எல்லை காக்கும் பணியில், பாரதநாடு முழுவதும் தீவிரமாக ஈடுபட்டதை, உலகம் கண்டு வியந்தது. குறிப்பாக, எல்லாப் பஞ்சாயத்துக்களிலும், "கிராமத் தொண்டர் படை" அமைக்கும் திட்டத்தை சென்ற ஆண்டு, குடியரசு நாளில், அவரே ஆரம்பித்து வைத்தார்.

'ஒற்றுமையே' அவர் வற்புறுத்தும் உயர்ந்த நெறி. "வேற்றுமையில் ஒற்றுமை காணவேண்டும்" என்பதே, அவர் உலகுக்களித்த உயர்ந்த தத்துவம். பல்வேறுவகையிலும் பிளவுபட்டுக் கிடக்கும் உலக நாடுகளானாலும் சரி, தலைவர்களானாலும் சரி, பகைமையை நீக்கி விட்டு, அன்பை அடிப்படையாகக் கொண்ட ஒற்றுமைக்கு வழி கோல வேண்டுமென்று, அவர் வற்புறுத்தினார்.

புனிதமான குழந்தை உள்ளம் கொண்ட புண்ணியமூர்த்தி நமது நேருஜி. அதனால்தான், குழந்தைகளோடு அவர் மனங்கலந்து உறவாடினார். குழந்தைகளின் கண்மணியாகத் திகழ்ந்தார். எதிர்கால உலகம், சாந்தம் நிலவும் உலகமாகத் திகழ வேண்டுமென்று, அவர் கனவு கண்டார்.

நேருஜி வாயிலாக இந்தியாவுக்குக் கிடைத்துள்ள உயர்ந்த ஸ்தானத்தை, நாம் நிலைநிறுத்தியாக வேண்டும். அவர் உருவாக்கிய பாரத நாட்டின் ஒருமைப்பாடு, மேலும் வலிமைபெற வேண்டும்.

புதிய பிரதமர் திரு. லால்பகதூர் சாஸ்திரி அவர்களை, ஏகமனதாகத் தேர்ந்தெடுத்த சமயத்தில் நமது தலைவர் திரு காமராஜ் அவர்கள், சொன்ன அறிவுரை, நாம் என்றும் போற்றத் தக்கது. அதாவது, "நமது மாபெரும் தலைவர் நேருஜியின் இடத்தை, எந்த ஒரு தனிப்பட்ட மனிதராலும் நிரப்ப முடியாது. கூட்டுப்பொறுப்பின் மூலமாகத்தான், அதை ஓரளவு பூர்த்தி செய்யமுடியும். எனவே பாரத நாட்டின் நல்வாழ்வில் நாட்டம் கொண்ட அனைவரும் ஒன்றுபட்டுப் பணியாற்ற வேண்டிய அவசியம் இப்போது ஏற்பட்டுள்ளது"

# தியாக குடும்பத்துச் செம்மல்

**எஸ். செல்லபாண்டியன்**

பாரதம் மிகப் பெரிய ஜன நாயக தேசம். இத்தேசத்தின் விடுதலைப் போராட்டத்திற்காக பாடுபட்ட தேசபிதா; காந்திஜி யின் உத்தமத் தொண்டர் நமது ஜவகர்லால் அவர்கள். நேரு அவர்கள் செல்வந்தர் குடும்பத் திற் பிறந்து வளர்ந்தார். வெளி நாட்டுக் கல்வி கற்று, நவீன நாகரீக இளைஞராகத்தான் விளங்கினார். ஆனால் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டதும், தன் சுகபோகங்களை எல்லாம் ஒதுக்கித் தள்ளிவிட்டு, முழு மூச்சுடன் மக்களோடு கலந்து விட்டார்.

இளமையிலேயே அறிவும் ஆற்றலும் உடைய வீரராகத் திகழ்ந்தார். அஞ்சாத நெஞ்ச மும், அயராது உழைக்கும் திற மையும் பெற்றார். உலகிலேயே சிறந்த ஜனநாயகவாதியாகவும், சமாதானத் தூதராகவும் தோன் றினார். சுதந்திரம் அடைந்த பின்பு, நாட்டு மக்கள் முன் னேற்றத்திற்காகப் பல திட்டங் களையும் சிறந்த தீர்க்க தரிசனத் துடன் ஏற்படுத்தினார். இந்திய மக்கள் மட்டும் அல்லாமல் உலக மக்கள் எல்லோரும் வாழ வேண் டும் என்ற பரந்த நோக்கத்தை வற்புறுத்தி வந்தார். உலகத் தில் யுத்தம் ஏற்பட்டு அணு குண்டால் அழிவு ஏற்பட்டால், மனித சமுதாயமும், மனித நாக ரீகமும் மறையும் என்று பறை சாற்றி வந்தார். எனவே எல்லா நாடுகளுடனும் நட்புரிமை ஏற் படத் தக்க நடுநிலைமைக் கொள் கையை உருவாக்கினார்.

அண்டை நாடுகளிடையே அன்பையும் நட்பையும் விரும் பினார். சைனாவுடன் நெருங்கிப் பழகினார். சைனாவும் இந்தியா வும் ஒற்றுமையுடன் வளர்ச்சி யடைந்தால் உலகத்திற்கு நன்மை ஏற்படும் என்று நம்பி னார். ஆனால் 1961-ல் சீனா இந்தியா மீது ஆக்கிரமிப்பு நடத்தவும், நேருஜி மிகுந்த ஏமாற்றமும் வருத்தமும் அடைந் தார். அவரது நடுநிலைமைக் கொள்கையும் சோதனைக்கு உள்ளாகியது. அதோடு நம் மோடு இருந்து பிரிந்த பாகிஸ் தான் நமது எதிரியுடன் சேர்ந்து கொண்டு சமீபகாலத்தில் செய்து வரும் இடைஞ்சல்கள் அவருக்கு மிகுந்த கவலையை அளித்தன.

நமது ஒப்பற்ற தலைவரின் பொன்மொழிகளும், வீரம் செறிந்த பேச்சுக்களும் நம் காது களில் ஒலித்துக் கொண்டிருக் கின்றன. எனவே அவரது கொள்கைகளைப் பின்பற்றி அவர் விட்டுச் சென்ற வேலை களைத் தீரமுடன் செய்வதற்கு நாம் ஒவ்வொருவரும் நம்மை அர்ப்பணம் செய்து கொள்வோ மாக.

## மனிதகுல மாணிக்கத்துக்கு உலகத்துத் தலைவர்களின்

# புகழ் மாலை

***ஒரு குலம் கண்ட உத்தமா***

நாடு உயர்ந்தால்தான் நாம் உயர்வடைய முடியும். இதற்கு வேற்றுமை மனப்பான்மை இல்லாமல், ஒற்றுமை உணர்ச்சியோடு காந்திஜி, நேருஜி காட்டிய வழிகளில் பணிபுரிய முன்வருதல் வேண்டும். எந்த வெறிக்கும் இடந்தருதல் கூடாது. இவன் தமிழன், இவன் கன்னடியன், இவன் மகாராஷ்டிரன், இவன் வடநாட்டான், இவன் தென்னுட்டான் என்று பேசுதல் வேண்டாம். எல்லோரும் இந்தியர்கள், ஒரு தாய் மக்கள் என்ற பரந்த எண்ணம் வேண்டும். வேறுபாட்டை மனத்தில் இருத்தி இவன் இந்து இவன் முஸ்லிம் என்று சண்டைகள் போட்டுத் தான் 200 வருடங்கள் அடிமையாய் இருந்தோம். மீண்டும் இத்தகைய நிலையை நாம் உருவாக்கிக் கொள்ளக்கூடாது.

இந்து, முஸ்லிம், கிருஸ்தவன், நாடார், தேவர், பிள்ளை என்பன போன்றமத, இனசாதி பேதங்கள் பாராட்டுதல் கூடாது. பேதத்தைப் போதித்து, பிழைப்பை நடத்துதற்காக ஆங்காங்கே சிலர் இருக்கத்தான் செய்வார்கள். இம்மாதிரியான மக்களிடத்து நாம் ஜாக்கிரதையாகப் பழக வேண்டும்.

நேருஜிக்குப் பாகுபாடு கிடையாது. அதுபோலவே மகாத்மாவுக்கும் வேறுபாடு கிடையாது. நாடு ஒன்று. நாமெல்லாம் இந்தியர் என்ற எண்ணத்தை வலுப்படுத்தவே நேருஜியும் மகாத்மா ஜியும் பாடுபட்டு வந்தனர்.

குறைகளையே பற்றிப் பேசாமல், குறைகளை நீக்கவும் நிறைகளை ஆக்கவும் நாம் பாடு படுதல் வேண்டும். உழைப்பும், முயற்சியும்தான் இறந்த தலைவர்களுக்கு நாம் செய்யும் மரியாதை ஆகும்.

நாம் குற்றங்கள் செய்திருக்கலாம். அப்போதெல்லாம் நேருவின் பெயர் நமக்குக் கவசமாக நின்று துணைபுரிந்து வந்தது. இன்று நேரு இல்லை. எனவே நாம் சிறு தவறுதல்களைச் சிந்தை கூடச் செய்யக்கூடாது. நேர்மையாக நின்று அல்லும் பகலும் நாட்டின் வளர்ச்சிக்காகப் பாடு படுவதுதான் நாம் நேருவுக்குச் செய்யும் மரியாதை ஆகும். இதை மனதில் கொண்டு, மகத்தான வாழ்வுக்குப் பாடுபடுவோமாக!

திரு. கு. காமராஜ்.
(கருத்துகளின் தொகுப்பு.)

***கப்பல் தலைவன்***

"கடந்த பல மாதங்களாக பயந்து வந்தது நடந்தே விட்டது. கப்பல் தலைவன் நம்மிடையே இல்லை. மக்களை அனுதையாக விட்டுவிட்டு தலைவர் சென்று விட்டார். இம்மாபெரும் தலைவரிடம்

உண்மையான பற்று உடையவர்களாக நாம்இருந்தால்கட்டுப்பாட்டுடனும் தைரியத்துடனும் ஒன்றுபட்டு மனம் தளரவிடாது இருக்க வேண்டும். அப்போதுதான் புயல் நிறைந்த கடலில் கப்பலைப் பத்திரமாக ஓட்டிச் செல்ல இயலும்.''

—சர்வோதயத் தலைவர்
ஸ்ரீ ஜெயபிரகாஷ் நாராயண்.

## துரதிருஷ்டவசமான செய்தி

மேன்மை தங்கிய ஸ்ரீ ஜவாஹர்லால் நேருவின் துரதிருஷ்ட வசமான மரணச் செய்தி அறிய வருத்த மடைந்தேன். என்னுடைய ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவிக்க விரும்புகிறேன்.

சீன மக்களுக்கும், இந்திய மக்களுக்கும் பெரும் பரம்பரை நட்பு இருந்துவந்தது. நம்மிரு நாடுகளுக்கிடையில் இன்னமும் சில கருத்து வேற்றுமைகள் இருந்து வருகின்றன. இத் துரதிருஷ்டவசமான நிலவரம் தற்காலிகமானது. இரு நாடுகளின் மக்களுக்கு மிடையில் நட்புறவு மீண்டும் ஏற்படுவது நிச்சயமென்றும், பஞ்சசீல அடிப்படையில் வளருமென்றும் நம்புகிறேன்.

—சூ-யென்-லாய்.

## நிலைத்து வாழும் நினைவு

''இந்தியத் தலைநகர் டில்லியிலிருந்து வந்துள்ள துயரச் செய்தியை இங்கு நான் குறிப்பிடாமல் இருக்க முடியவில்லை—நமது காலத்தின் தலைசிறந்த ராஜீயவாதியும் சோவியத் நாட்டின் மாபெரும், மெய்யான நண்பருமான பிரதமர் நேரு காலமாகி விட்டார்.

''நண்பரையும், விவேகமிக்க தலைவரையும், இந்திய சுதந்திரத்திற்கும், தேசியப் புனரமைப்பிற்கும் போராடியவரையும் இழந்து ஆற்றொணுத் துயரில் மூழ்கியிருப்பது இந்திய மக்கள் மட்டுமல்ல. பிரதமர் நேருவின் மறைவால் முற்போக்கான மக்கள் அனைவருமே துயருறுகிறார்கள். வாழ்வின் கடைசி நிமிடம் வரை தனது ஆற்றல்கள், ராஜீய அறிவு, அனுபவம் அனைத்தையும் மனிதாபிமானம், சமாதானம், முன்னேற்றம் ஆகிய உன்னத இலட்சியங்களுக்குச் சேவை புரிந்திட அர்ப்பணித்த பிரதமர் நேருவின் மறைவு கேட்டு முற்போக்கு மனிதகுலம் முழுதுமே கண்ணீர் வடிக்கிறது.

''மாபெரும் இந்த ராஜீயவாதியைச் சந்திக்கும் வாய்ப்பு எனக்குப் பல தடவை கிடைத்தது. சோவியத், இந்திய நட்புறவும் ஒத்துழைப்பும் இவ்விரு தேசங்களின் மக்களுக்கும், சமாதானத்தை வலிமையுறச் செய்வதற்குப் போராடும் எல்லா சக்திகளையும் ஒன்று திரட்டுவதற்கும் எத்தகைய முக்கியத்துவம் வாய்ந்தது என்பதை அவர் மிகத் தெளிவாக உணர்ந்திருந்ததை நான் அவரைச் சந்தித்த ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் காண முடிந்தது.

'' துயரத்தில் ஆழ்ந்துள்ள அவரது குடும்பத்தினருக்கும் இந்தியக் குடியரசின் ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணனுக்கும் இந்திய சர்க்காருக்கும் இந்திய மக்கள் அனைவருக்கும் சோவியத் மக்களின் சார்பிலும், சோவியத் சர்க்காரின் சார்பிலும், என் சொந்த முறையிலும் ஆழ்ந்த துக்கத்தைத் தெரிவித்துக் கொள்வதுடன், அவர்களுக்கு எங்கள் இதயத்திலிருந்து எழும் அனுதாபங்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

''பிரதமர் நேருவின் நினைவு சோவியத் மக்களின் இதயங்களி

லும், சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்கு மிடையே நேச வுறவைப் போற்றுவோர் அனே வரது உள்ளங்களிலும் என்றும் நிலைத்து வாழும். சோவியத் மக்களாகிய நாங்கள் இந்த நட்பை எப்பொழுதும் போற்றிப் பாதுகாத்து வந்துள்ளோம்.''

—என். எஸ். குருஷேவ்.

### சமாதானத் தலைவன்

''நேருவின் மறைவுச் செய்தி கேட்டுப் பெரிதும் துக்கமடைகிறேன். காமன்வெல்த் நாடுகளும், சமாதானத்தை நேசிக்கும் நாடுகளும் அவரது மறைவு குறித்துத் துக்கம் அனுஷ்டிக்கும்.

உங்களுக்கும், இந்திய மக்களுக்கும், எனது கணவரும், எனது குடும்பத்தினரும் என்னுடன் சேர்ந்து ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகின்றனர்.''

—ராணி எலிஸபெத்.

### சுதந்திர ஏணி

நேரு மறைவுச் செய்தி கேட்டு பெரிதும் துக்கமடைகிறேன். இந்தியாவுக்கு அவரது மறைவு ஒரு பெருநஷ்டம். சுதந்திர உலகுக்கு மிகப் பெரிய துரதிருஷ்டம்.

—பிரதம மந்திரி, ஈடன்.

### நேசக் கரம் நீட்டியவர்

எனது மிகச் சிறந்த நண்பர்களில் ஒருவரான ஜவஹர்லாலின் இறுதிக்கிரியையில் கலந்து கொள்வதற்காக டில்லி செல்கிறேன். 1947-48-ல் அவருடன் தொடர்பு கொண்டிருந்தது பெரும் பாக்யமாகும். அப்போது அவரை நன்கு அறிந்து கொண்டேன். அவரை மதிக்கவும், போற்றவும் கற்றுக் கொண்டேன்.

பிரிட்டிஷ்காரர்களால் பல ஆண்டுகள் சிறையில் வைக்கப்பட்டிருந்தும் சிறிதுகூட மனக்கசப்பு காட்டாத உன்னத புருஷர் அவர். தேசிய விடுதலைப் போராட்ட வீரர். அவரது வாழ்க்கை லட்சியம் ஈடேறியதும், பிரிட்டனுடன் நேசக் கரம் நீட்டிய பெருந்தகை அவர்.

—மவுண்ட்பேட்டன்.

### சிறந்த நினைவுச் சின்னம்

''ஒரு மாபெரும் தலைவரின் மரணம் குறித்து மீண்டும் துக்கப்படும் நிலை நமக்கு ஏற்பட்டுள்ளது. இந்தத் தடவை உங்கள் தலைவர் நேரு மறைந்து விட்டார்.

அவரது மறைவு குறித்து எங்களது மன வேதனையைக் குறிப்பிடச் சொற்கள் இல்லை. அவர் நம்மிடையே இல்லை என்பதை நம்புவது கூட தற்போது அசாத்தியமானதாகத் தோன்றுகிறது.

எனினும் அவரது ஆத்மா வாழ்கிறது. அவர் விட்டுச் சென்ற பண்பாடு, மனித சமுதாயத்திடம் அவர் பணி ஏற்கனவே வரலாற்றில் இடம் பெற்றுள்ளன.

சமாதானத்துக்காக அவரைப் போல் ஆர்வம் காட்டிய உலகத் தலைவர் வேறு யாரும் இருக்க முடியாது. யுத்தம் இல்லாத உலகுக்காக அவர் பாடுபட்டது மனித சமுதாயமனைத்துக்கும் உதவியது.

காந்திஜீயைப் போன்று ஜவஹர்லால் நேருவுக்கும் சமாதானம் குறிக்கோளாக இருந்தது. உலகுக்கு அவர் விடுத்த செய்தியும் அதுவே.

யுத்தம் இல்லாத உலகமே அவருக்குச் சிறந்த நினைவுச் சின்னமாக இருக்க முடியும்.

அவரது லட்சியத்தை நனவாக்க உலக ராஜதந்திரிகள் தங்

களை அர்ப்பணித்துக் கொள்வர் என்பது என் நம்பிக்கை, எங்கள் நாடு இந்த லட்சியத்துக்கு உறுதி கூறுகிறது. உங்கள் மறைந்த மாபெரும் தலைவருக்கு அஞ்சலி யாக இப்பிரதிக்ஞையை மீண்டும் கூறுகிறோம்.

—அமெரிக்க ஜனாதிபதி ஜான்சன்.

### தகுதிவாய்ந்தவர்

கிழக்கு மேற்கு நாடுகளி டையே நல்ல ஒற்றுமை ஏற் படுத்துவதற்கு நேருவைக் காட்டி லும் சிறந்த தகுதி உடைய மனி தர் யாருமே கிடையாது.

நேருவிடம் காணப்பட்ட மிக வும் குறிப்பிடத்தக்க ஒரு சிறப்பு அவரின் சகிப்புத் தன்மை ஆகும். அவர் ஒரு மிகப் பெரிய உலக அரசியல் ஞானி. அவரது மர ணத்தால் உலகம் முழுதும் கோடிக் கணக்கான மக்கள் துய ரத்தில் ஆழ்ந்துள்ளனர்.

—மாஜி பிரிட்டிஷ் பிரதமர், அட்லி.

### சாதனை புரிந்தவர்

நேருவைப் போன்ற மனிதர் கள் வெகுகாலத்திற்கு ஒரு முறை தான் பிறக்கிறார்கள். அவரது மறைவு, உண்மையிலேயே இந் தியாவின் மிகவும் கொடூரமான பெரிய நஷ்டம். அது தேசத் திற்கே நேர்ந்த விபரீதமாகும். கடந்த 17 ஆண்டுகளாக இந்தி யாவுக்கு ஒரு ஸ்திரமான நிர்வா கத்தை அளித்த சாதனை நேரு வையே சாரும். இந்தியாவின் திட்டவட்டமான முன்னேற்றத் திற்கும் அபிவிருத்திக்கும் அவர் தான் காரணம். அவருக்கு ஒரு வாரிசைஇந்தியா கண்டுபிடிக்கும் என நான் நம்புகிறேன்.

—பாக். அதிபர் அயூப்கான்.

### நாடுகள் போற்றும் நாயகர்

அமரர்கள் வரிசையில் தனக் குரிய இடத்தை நேரு தேடிக் கொண்டு விட்டார். நாம் அவரை நினைத்துத் துக்கத்தில் ஆழ்ந் துள்ளோம். நாம் அவருக்குச் செலுத்தக்கூடிய மிக உயர்ந்த மரியாதை அவரது சீரிய லட்சி யங்களான உலக சமாதானத் திற்கு ஓய்வின்றிப் பாடுபடுவது, மனித குலத்தின் நல்வாழ்வில் ஆழ்ந்த அக்கரை காட்டுவது ஆகியவற்றை செயலில் நிறை வேற்ற நாம் கடுமையாக உழைப் பதே ஆகும்.

நேரு மிகவும் உறுதியுடனும் உரத்த குரலுடனும் எடுத் துரைத்துவந்த லட்சியங்களும் அவர் அருமையுடன் போற்றிப் புகழ்ந்து வந்த நம்பிக்கைகளும் இந்தியாவில் மட்டுமின்றி உலகம் எங்குமுள்ள மக்களின் லட்சிய மாகவும் நம்பிக்கையாகவும் இருந்து வந்தன.

அவரிடம் நிறைந்து விளங்கிய சிறந்த பண்புகள் அவரது மனி தாபிமான உணர்வு, சாதாரண பாமர மக்கள் மீது அவர் இடை யறாது வைத்திருந்த ஆழ்ந்த பரி வும் கவலையுமாகும். இந்தப் பண்புகளே உங்கள் மகத்தான குடியரசில் உள்ள மக்களிடையே அவரைச் சிறந்த தொரு தலைவ ராகச் செய்தன.

உலகப் பெரும் சபைகளில் அறி வொளி வீசிய ராஜ தந்திரியாக விளங்கிய அவர் அந்தச் சபை களில் ஆசியாவின் புதிய நாடு களுக்கு இதுவரை தெரிந்திராத மதிப்பைத் தேடித் தந்தார்.''

—இலங்கைப் பிரதமர்
திருமதி சிறிமாவோ பண்டார நாயகா.

### இந்திய அன்பு இதயம்

மிகவும் மென்மையான இதய மும் கடுகடுப்பும், தலையிடும் சுபா வமும், உல்லாசப் போக்கும், சஞ்சலப்படும் தன்மையும் அனைத் தும் ஒருங்கே உருவாகிய இந்த

மனிதரிடம் இந்திய நாடு காட்டும் அன்பு அளவில்லாதது. இந்த அன்பு அவருக்கு மிகப் பெரிய சக்தியை ஒரு தேசத்தின் இதயத்தையே ஆட்சி செய்யும் சக்தியை அவருக்கு அளித்தது.

மக்களின் இத்தகைய பேரன்பை மற்ற சாதாரண தலைவர்கள் அவர்களை அடக்கி யாளவே பயன்படுத்தி வந்திருக்கிறார்கள். ஆனால் நேருவோ அவ்வாறு செய்யவில்லை. அவர் விரும்பியிருந்தால் லேசில் ஒரு சர்வாதிகாரியாக ஆகியிருக்கலாம். அத்தகைய சந்தர்ப்பங்கள் சில அவர் மீது வலிய வந்து நிகழவும் செய்தன. ஆனால் நேருவோ முற்றிலும் மறுத்துவிட்டார்.

நேரு யார்? அவர் எத்தகைய மனிதர்? எதில் நம்பிக்கை கொண்டவர்? அவர் காலமாகி மறையும் வரையில் இந்தக் கேள்விகள் கேட்கப்பட்டுக் கொண்டே இருந்தன என்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

நேருவை சிலர் சரியானபடி உணர்ந்து கொள்ள முடியாததற்குக் காரணம், அவரை அல்ஜீரியா, சீட்டோ, ஹங்கேரி விவகாரங்கள் போன்ற கண்ணாடிகளின் மூலம் பார்க்க முயன்றதேயாகும். இதில் இரண்டு முக்கியமான விஷயங்களை விட்டு விட்டார்கள். ஜவாஹர்லால் நேரு ஒரு இந்தியர்; ஒரு புரட்சியாளர்.

நேரு ஒரு இந்தியர். வெளிநாடுகளில் படித்து, ஏராளமாக சுற்றுப் பிரயாணம் செய்திருக்கிறார் என்ற போதிலும், அவர் இந்திய மண்ணில் இருக்கும் போதே இன்பத்தைக் கண்டார். எதைச் செய்தாலும் இந்தியாவுக்காக, இந்தியாவை நினைத்தே செய்தார். நேரு, காந்தியின் சீடர், ஒரு புரட்சியாளர். வெளிநாட்டு ஆட்சியை எதிர்த்துப் புரட்சி செய்தவர். அத்துடன் தமது சொந்த மக்களின் மூட நம்பிக்கை, வறுமை, நோய், பட்டினி போன்றவற்றையும் எதிர்த்துப் போராடியவர். ராணுவ பலம் வாய்ந்த நாடுகளும் தன் சொல்லைக் கேட்கும்படி செய்த மாபெரும் புரட்சியாளர்.

தேசத்தின்பால் தமக்குள்ள கடமையை என்றும் மறவாத மனித குல மாணிக்கம் என்று போற்றிய நேரு இப்போது மறைந்துவிட்டார். அவர் இந்தியாவை நேசித்தார்; அந்த அன்புப் பிணைப்பிலேயே அவரது ஆவி பிரிந்தது.

—நியூயார்க் டைம்ஸ்.

### சுதந்திரப் பணியாளர்

ஒப்பற்ற ராஜீயவாதியும், நாட்டின் விடுதலைக்காகத் தன்னலங் கருதாது போராடிய வீரரும், நாட்டின் சுதந்திரத்திற்கும், சுபிட்சத்துக்கும் பாடுபட்ட தேச பக்தருமான ஜவாஹர்லால் நேரு திடீரென அகாலமாய் மறைந்து இந்திய தேசம் ஆற்றொணாத் துயரில் ஆழ்ந்துள்ள இந் நேரத்தில், எனது இதயத்தின் அடிமட்டத்திலிருந்து எழும் இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

உலக சமாதானத்தை உறுதிப்படுத்த அவர் மேற்கொண்டு வந்த அயராத முயற்சிகளுடனும், அவமானகரமான காலனியாதிக்கத்தின் ஒழிப்பிற்காகவும் பஞ்சசீலத்தின் வெற்றிக்காகவும் அவர் ஆற்றிய நிரந்தரமான பணியுடனும் நமது நினைவில் ஜவாஹர்லால் நேருவின் பெயர் இணைந்துள்ளது.

இந்திய-சோவியத் உறவுகளின் பன்முக வளர்ச்சிக்காகவும், நமது இரு நாடுகளின் மக்களிடையே

நட்புறவை வளர்ப்பதற்காகவும் பாடுபட்டவராக, சோவியத் நாட்டின் நண்பராக சோவியத் மக்களின் நினைவில் என்றென்றும் பசுமையுடன் இருப்பார்.

ஜனாதிபதி அவர்களே, என்னுடைய சார்பிலும், இந்திய சகோதரர்களுடன் சேர்ந்து துக்கம் கொண்டாடும் இந்தியாவிலுள்ள எல்லா சோவியத் பிரஜைகளின் சார்பிலும் ஆழ்ந்த வருத்தத்தையும் அனுதாபத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

—ஐ. பெனதிக்தோவ்.
இந்தியாவிலுள்ள சோவியத் தூதுவர்.

### மிகப் பெரிய மனிதர்

"நேரு அவருடைய காலத்தில் மிகப் பெரிய மனிதர் என்று சரித்திரத்தில் இடம் பெற்று விட்டார்.

நேருவினுடைய மரணம் இந்தியாவுக்கு மட்டும் நஷ்டம் அல்ல. உலகத்தில் உள்ள பலகோடி மக்களுக்கும் பெரிய நஷ்டமாகும். உலக சமாதானத்துக்காக அவர் எடுத்துக்கொண்ட முயற்சிகளே இதை எடுத்துக் காட்டும் சான்றாகும்."

—மக்காரியஸ் (சைப்ரஸ் அதிபர்)

### நல்ல தலைவன்

"நேருவின் மரணத்தால் இந்த உலகம் நல்ல ஒரு தலைவனையும் அரசியல்வாதியையும் இழந்து விட்டது. காரணம் அவர் வாழ்க்கையையே சுதந்திரத்துக்காகவும், உலக சமாதானத்துக்காகவும் அர்ப்பணித்து இறந்தார்."

—பெயர்போர்ட் (உகாண்டா பிரதமர்)

### பிரகாசமுள்ள

'நேருவின் மறைவினால் இந்தியா தனது மிகவும் புகழ்பெற்ற தவப்புதல்வர் ஒருவரையும், மலேசியா தனது பலமான நண்பரையும் இழந்து தவிக்கின்றன.

ஒரு மாபெரும் தேச பக்தர் என்ற முறையிலும் உன்னத லட்சியங்கள் உலக சமாதானத்திலும் நல்வாழ்விலும் நாட்டம் ஆகியவற்றைக் கொண்டும் அவரது பெயர் உலக வரலாற்றில் என்றென்றும் பிரகாசத்துடன் விளங்கும்.'

—சிங்கப்பூர் பிரதமர் லீகுவான்யூ.

### உலகத் தலைவர்

'உலகமே ஒரு மாபெரும் தலைவரையும் ராஜ தந்திரியையும் இழந்துவிட்டது.'

—ஜோமோ கென்யாட்டா.
(கெனியாவின் பிரதமர்)

### குறிப்பிடத் தக்கவர்

'நேரு இந்தியாவின் வரலாற்றுப் புகழ் பெற்ற ஒரு பெரியார். இந்த யுகத்திலேயே மிகவும் குறிப்பிடத்தக்க அரசியல் தலைவர்.'

—திரு. அப்துல்லா மாலிக்யார்.
(ஆப்கானிஸ்தானத்தின் தற்காலிக பிரதமர்)

### பேரிழப்பு

"நேருஜி காலமானதால் ஏற்பட்டுள்ள நஷ்டத்தை விவரிக்க என்னிடம் சொற்களில்லை. செய்தி கேட்டு மிகமிக வேதனைப் பட்டேன். உலகம் மாபெரும் ராஜ தந்திரியையும், இந்தியா 'தன் தலைவனையும் இழந்துவிட்டது."

—கானா அதிபர் எக்ருமா.

### உன்னதத் தோற்றம்

"பிரதமர் நேருவின் மரணச் செய்தி கேட்டு நாம் மிகவும் துயர் உறுகின்றோம்.

இளம் மாணவராக இருந்த போது 1908 ஆம் ஆண்டு முதல்

முதலர்க நேரு நார்வேக்கு வந்திருந்தார். மலைப் பகுதிகளில் சுற்றுப் பிரயாணம் செய்தார். பிறகு இந்தியாவின் பிரதமர் என்ற முறையில் 1957ஆம் ஆண்டு நம் நாட்டுக்கு வந்தார். அவருடைய உன்னததோற்றமும் உயர்ந்த லட்சியமும் யாரையும் உடனே வசப்படுத்திவிடும். அவரது மறைவு உலகுக்கே ஈடு செய்ய முடியாத பெரும் நஷ்டம்''

—நார்வே பிரதமர்.

### சரித்திரத்தில் நிலைத்திருக்கும்

சிறந்த மனிதாபிமானியும் மகத்தான அரசியல் ஞானியும் சுதந்திரம் சமாதானம் ஆகிய லட்சியங்களுக்காக அயராது பாடுபட்ட வீரருமான நேருஜியின் பெயர் சரித்திரத்தில் என்றும் நிலைத்திருக்கும்.

சுதந்திரம் சுபிட்சம் ஆகியவற்றுக்காகப் பாடுபடும் பல்வேறு நாடுகளுக்கும் நேருஜியின் கொள்கைகளும் லட்சியங்களும் சிறந்த ஆதர்சங்களாக விளங்கி வரும்.

—சிக்கிம் மன்னர்.

### மகா மேரு

ஜவஹர்லால் நேருவைப் பாராட்ட நாம் யார்? மகாமேருவைப் போன்ற அவரைப்பற்றிப் பேச அற்ப மனிதர்களாகிய நமக்கு என்ன தகுதி யிருக்கிறது. அவரது பெருமைகளை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளத்தான் முடியும். அவருக்காக, கண்ணீர் விடத்தான் முடியும். அவர் வழி காட்டி நடத்திய 17 ஆண்டுகளை நேரு சகாப்தம் என்று கூறுவோம். அவருடைய மறைவு நாட்டுக்கும் உலகுக்கும் நஷ்டம்.

கப்பல் தலைவனை இழந்து விட்டது எனினும் கடல் எவ்வளவு கொந்தளித்தாலும் கப்பல் ஓட்டத்தான் வேண்டும், புதிய தலைவர் யாராக இருந்தாலும், நேருவின் பெயரும் ஞாபகமும் வீசும் ஒளியில் அவர் கப்பலைச் செலுத்திக் கொண்டு போக முடியும்.

—திரு. சக்ளா.

### பிளவகற்றிய பெரியோன்

''உலகப் பெருந்தலைவர்கள் வரிசையில் சிறப்பான இடம் பெற்று இந்தியத்துணைக் கண்டத்திற்குத் தனிப் புகழைத் தேடித்தந்து நாடு பிளவுகளாலும் பூசல்களாலும் சேதமடையாமல் காத்து பொருளாதார சீர்குலைவு ஏற்படாமல் காத்துவந்த மாபெரும் காவலர் நேரு, திடீரென மரணமடைந்த செய்தி கேட்டுத் திடுக்கிட்டுப் போனேன். இது நாட்டுக்கு ஒரு பெரிய இழப்பாகும். உலகிற்கு அதிர்ச்சியாகும்.''

—சி. என். அண்ணுதுரை.

### காலன் வென்றுன்

''ஆங்கில ஏகாதிபத்தியத்தால் வெல்ல முடியாத மாவீரனைக் காலன் வென்று விட்டான்! குபேரக் குடும்பத்தில் பிறந்திருந்தும் கோவணுண்டிகளுக்காகப் பாடுபட்ட ஏழைபங்காளர் இறந்து விட்டார்.

நேருவின் மறைவால், நான் என் தலைவனை இழந்து அழுகிறேன்! பாரதம் தன் பிரதமரை இழந்து அழுகிறது! ஆசியா தன் வழிகாட்டியை இழந்து தவிக்கிறது. உலகம் சமாதானத்தின் காவலரை இழந்து கலங்குகிறது!

காந்தி மறைந்தபோது நேருவை நினைத்து ஆறுதல் அடைந்தேன். அந்த மேதை நேரு இன்று மறைந்துவிட்டார். இன்றைய நிலையில் நான் யாரை நினைத்து நிம்மதி அடைவது?

திடீரென்று எதிர்பாராமல் இப்படியொரு துக்கச் செய்தி கிடைக்

கும் என்று நான் நினைத்துப் பார்த்ததுகூட இல்லை.

ஆம், தூண்டாமணி விளக்கு அணையாப் பெருவிளக்கு, ஆசியாவின் ஜோதி அணைந்துவிட்டது. இருளில் தவிக்கிறேன்! எண்ணி எண்ணி அழுகிறேன்! நான் என்ன? 45 கோடி மக்கள் ,ங்கள் 90 கோடிக் கண்களிலேயே நீர் பெருகத் தேம்பி அழுகின்றனர்!

—ம. பொ. சி.

## ஜோதி மறைந்துவிட்டது

"ஆசியாவின் வான ஜோதி மறைந்துவிட்டது. இது உலகெங்கும் ஒளிவீசிய நட்சத்திரம். நம்முடைய துக்கம் தாங்கொணாதது. நமது அன்புக்குரிய பிரதமரின் மறைவை விட இந்தியாவுக்கு வேறொரு சோகம் இருக்க முடியாது. அவரது ஆத்மா சாந்தி அடையட்டும்.

—ஸ்ரீமதி ஜோதி வெங்கடாசலம்.

## உன்னத புருஷன்

"இந்தியாவின் உன்னத புருஷன் போய்விட்டார். ஆயுள் பூராவும் நாட்டுக்காக வாழ்ந்தார். மிகப் பெரும் பொறுப்பைச் சுமந்தார். உலகம் பூராவும் போற்றும் நிர்வாக முறையை உருவாக்கித் தந்தார்.

சர்வதேச உறவை வளர்ப்பதில் அவர் கொண்ட பங்கு நீண்ட நாள் மறக்க முடியாததாகும். உலக சமாதானத்தின் சிற்பிகளில் ஒருவர் அவர்.

—மந்திரி ஆர். வி.

## பாதுகாவலன்

நேருஜி மறைவுக்கு துக்கம் தெரிவிக்கும் செய்தி ஒன்றை பெல்ஜியத்தில் உள்ள சர்வதேசப் பத்திரிகையாளர் சம்மேளனத்தின் செயலாளர் டி. ஹெச். டி. பொகார்ட்ஸ், கல்கத்தாவில் உள்ள இந்தியப் பத்திரிகையாளர் சம்மேளனத்தின் தலைவர் திரு. ஏ. சி. பானர்ஜிக்கு அனுப்பியுள்ளார்.

செய்தியில் அவர் கூறியிருப்பதாவது: "ஈடும் இணையுமற்ற அரசியல்வாதி நேரு. பத்திரிகை சுதந்திரத்தின் உறுதி மிக்க பாதுகாவலன். பத்திரிகையாளர்கள் நெஞ்சங்களில் அவரது நினைவு என்றும் பசுமையாக விளங்கும்."

—டி. ஹெச். டி. பொகார்ட்ஸ்.

---

## ஜாதி முறை

ஜாதியைப் பொறுத்தவரை அதன் மீது எனக்கு நேசம் கிடையாது. சென்ற பல நூற்றாண்டுகளாக இந்தியாவின் சாபத்தீயாக ஜாதி முறை இருந்து வந்திருக்கிறது என்பது என் கருத்து. அது இந்தியாவைப் பலவீனப் படுத்தியது. அது இந்தியாவைச் சீரழித்தது. நம்மை அந்நியர்களுக்கு அடிமைப்படுத்தியது. ஜாதி முறை நம்மிடையே பிளவுகள் ஏற்படுத்தியதுதான் இதற்குக் காரணம். நமது ஐக்கிய உணர்வை அது ஒழித்தது. நம் நாட்டினருள் ஏராளமான பேரை ஜாதி முறை இழிவுபடுத்தியது. நம்முள் பலர் இந்த இழிவை மற்றவர்கள் மீது சுமத்தினோம். இந்த நிலையைப் பலர் ஏற்றும் கொண்டனர். கடந்த காலத்தில் ஜாதி முறையில் என்னதான் நன்மைகள் இருந்திருந்தாலும் இன்றைய உலகத்தில் அந்த முறைக்கு இடமே கிடையாது. அது நீடித்திருந்தால் நம்மைப் பலவீனப்படுத்தி, நமது குறிக்கோளை நாம் அடைய முடியாமல் தடுத்து விடும்.

8-12-57 மதுரையில் நேரு பேசியது.

# பண்பின் உருவம்

நம் எல்லோரிலும் பண்பில் மிகச் சிறந்தவர் பிரிந்துவிட்டார். அவர் போல் பண்பு தெரிந்தவர் நம்மில் அதிகம் இல்லை.

என்னைவிடப் பதினொரு பிராயம் சிறியவர், நாட்டுக்கு என்னைவிடப் பதினொரு மடங்கு முக்கியமானவர், நாட்டு மக்களின் அன்பைப் பதினோராயிரம் மடங்கு பெற்றவர். நேரு அவர்கள் நம்மை எல்லாம் திடீரெனப் பிரிந்து சென்று விட்ட சோகச் செய்தியைக் கேட்க நான் டெலிபோன் பக்கம் நின்றேன். அதிர்ச்சியைத் தாங்கிக் கொண்டு வாழ்கிறேன்.

சிதறிப் போன சிந்தனையை என்னால் இன்னும் ஒரு முகப்படுத்த இயலவில்லை. தவறான அரசியல் கொள்கைகள் எனக் கருதியவற்றை எதிர்த்து இந்தப் பத்தாண்டுகளாக ஸ்ரீ நேரு அவர்களுடன் போராடி வந்தேன். நேரு ஒருவரால் தான் அவற்றைத் திருத்தமுடியும் என்று முழுவதும் நம்பியே போராடினேன். வேறு யாரும் இத் தவறுகளைத் திருத்த முடியாது. நேருஜி போய்விட்டார். போராட்டத்தில் என்னை முன்னிலும் பலவீன மாக்கிவிட்டு மறைந்து விட்டார்!

போராட்டம் ஒரு பக்கம் இருக்கட்டும். அருமை நண்பர் மறைந்து விட்டார். பழைய காவல்நாயகர்களின் அறை முற்றிலும் காலியாகி விட்டது. நம் எல்லோரிலும் பண்பில் மிகச் சிறந்தவர் பிரிந்து விட்டார். அவர் போல் பண்பு தெரிந்தவர் நம்மில் அதிகம் இல்லை. எங்களில் பலருக்கு அவர் இல்லாத இந்தியா பழைய இந்தியாவாகவே இராது.

ஆண்டவன் நம்மைக் காப்பாற்றுக!

**சக்கரவர்த்தி ராசகோபாலாச்சாரி**

# தியாகத்தின் சின்னம்

அவர் ஒரு சிறந்த தியாகி. தனக்கென்று எதையும் செய்து கொள்ளாதவர். தியாகம் என்று சொல்வதற்கே பொருள் தனக்கென்று எதையும் செய்து கொள்ளாமல் தொண்டாற்றுவதுதான்.

**பெரியார் ஈ. வெ. இராமசாமி**

இன்றைய தினம் நாட்டுக்கு இதுவரை ஏற்பட்டிருக்காத மாபெரும் கேடு ஏற்பட்டு விட்டது என்று சொல்லும் வண்ணம் நமது நேரு அவர்கள் முடிவுச் செய்தியமைந்துள்ளது. பூகம்பம், இடி, புயல் முதலியன ஓரே சமயத்தில் வருவதைவிடக் கொடுமையானது. அவை வந்தால், வந்த பகுதிக்குத்தான் கேடுவிளையும். ஆனால் நேரு அவர்களின் முடிவானது இவைகளை எல்லாம்விட மாபெரும் கேடாக இந்த நாட்டின் 45 கோடி மக்களையும் நாட்டையும் பெரும் துக்கத்தில் ஆழ்த்தக் கூடியதாக உள்ளது. நேரு முடிவு எய்திய செய்தியினைக் கேட்ட உடனே பெரும் அதிர்ச்சியும் தாளமுடியாத துக்கமும் அடைந்தேன். இப்போது என்ன பேசுவது என்றே எனக்குத் தோன்றவில்லை.

பிரதமர் நேரு அவர்களை இழந்ததன் மூலம் நமது நாட்டிற்குப் பரிகரிக்கமுடியாத ஒரு நிலை ஏற்பட்டுவிட்டது. நேரு அவர்களின் இடத்தைப் பூர்த்தி பண்ணக்கூடியவர்கள் வருவார்கள் என்பதே சந்தேகம்! அவர் விட்டுச் சென்றதை எடுத்துச் செய்யக் கூடியவர்கள் தோன்றுவார்களா என்பதை எண்ணிப் பார்க்கவே முடியவில்லை. நேரு அவர்கள் எடுத்துக்கொண்ட காரியமானது மாபெரும் காரியமாகும்.

இதனை நிறைவேற்ற அவரால்தான் முடியும். மீண்டும் கூறுகிறேன். அவர் விட்டுச் சென்ற காரியம் இனி நிறைவேறுமா என்று எண்ணிப் பார்க்கவே வேதனையாக உள்ளது. நாட்டின் பெரியவர்கள் என்று யாரைக் கூறுவார்கள் என்றால், மக்கள் சமுதாயத்தில் செயற்கரிய காரியத்தைச் செய்தவர்களைத்தான் கூறுவார்கள், அதன்படி நேரு அவர்கள் மிகப் பெரியவர் ஆவார்.

நேரு அவர்களைக் கொஞ்சகாலமாகவே தங்களுக்குப் பிறகு வார்சு யார் என்று கேட்டுத்

தொல்லை கொடுத்து வந்தார்கள். அது கண்டு அவர் தனக்குப்பிறகு யாரும் தோன்ற மாட்டார்கள்; தோன்றவும் முடியாது என்று சொன்னால் மக்கள் எங்கு தப்பாக நினைப் பார்களோ என்று நினைத்துத் தான் 'நான் இப்போது சாக மாட்டேன்' என்று கூறினார் என்று நினைக்கிறேன். எப்போதும் செயற்கரிய காரியங்களைச் செய்தவர்களுக்கு வாரசு ஏற் படுவதில்லை; அவர் விட்டுச் சென்ற காரியத்தை பெரியவர் கள் தோன்றிச் செய்வார்கள் என்று கருதிக்கொண்டு இராமல் அவர் அடிச்சுவட்டைப் பின்பற்ற எல்லோரும் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். நேரு அவர்கள் அருமையான திட்டத்தை நிறைவேற்ற முற்பட்டது அவருடைய திறமை என்றோ அல்லது அவருக்கிருந்த செல்வாக்கு, வசதி, வாய்ப்பு காரணமாக என்றோ மாத்திரம் கூற மாட்டேன்.

### சிறந்த தியாகி நேரு

இவைஎல்லாவற்றையும் விட அவர் ஒரு சிறந்த தியாகி; தனக் கென்று எதையும் செய்து கொள்ளாதவர், தியாகம் என்று சொல்வதற்கே பொருள் தனக் கென்று எதையும் செய்து கொள்ளாமல் தொண்டாற்று வதுதான்.

தியாகத்தைக் கூறிப் பலன் பெறப்பார்ப்பது வெறும் கூலித் தொண்டாகும்.

நேரு அவர்கள் விட்டுச் சென்ற காரியத்தை, காமராசர் அவர்கள் எடுத்துச் செய்வார். அவரும் நேருவைப் போலவே தனக்கென்று எதையும் சேர்த் துக் கொள்ளாத தியாகியாவார். காமராசர் நேருவைப்போல அவ் வளவு விளம்பரமான தியாகி யாக, இல்லாவிட்டாலும், நமது நாட்டைப் பொறுத்தவரையில் அவர் ஒரு பெரிய தியாகி ஆவார்.

நேரு அவர்களின் முடிவுகள் காரணமாக எனது தொண்டும் கூடத் தடைப்படக் கூடும் என்று கருதுகிறேன்.

"இனி நான் என்ன தொண்டு செய்வது? நமது தொண்டுதான் அவரும் செய்கிறார்" என்று கருதியே கண்ணை மூடிக்கொண்டு அவரது கட்சியை ஆதரித்தேன். உங்களையும் ஆதரிக்கும்படி வேண்டிக்கொண்டேன். நேரு அவர்கள் விட்டுச் சென்ற காரியம் வெற்றிபெறப் பொதுமக்களாகிய நீங்களும் கண்ணை மூடிக்கொண்டு காங்கிரஸ் கொள்கையை ஆதரிக்கவேண்டும், காங்கிரசுக்கு நாட்டில் இருக்கும் எதிர்ப்புச் சக்திக்கு ஆதரவு தரக்கூடாது.

---

பாருளார் போற்றப் பலகாலும் பாடுற்ற
நேருதான் வாழ்வார் நிலைத்து.

# ஒளிவிளக்கே, ஏன் அணைந்தாய்?

உன்னோடு இருந்து பழகிவிட்ட நாட்டின் நாற்பத்தைந்து கோடிபேர் நீயின்றி சிறு பிரச்சினைகளைக்கூடச் சமாளிக்கத் திகைப்போமே, அதை நீ எண்ணிப் பார்க்கவே இல்லையா?

**ஈ. வெ. கி. சம்பத்**

*தன்னலம் என்பதே இன்னதென அறியாது வாழ்ந்த நேருவே உனது மரணத்தில் தன்னலம் காட்டி விட்டாய்!*

*நீ அமைதி பெற உலகில் உள்ள அனைவரையும் அமைதி இழக்கச் செய்து விட்டாய்!*

*இன்னும் எத்தனை நாள் நீ வாழ்ந்திருப்பினும் இந்த நாடு உனக்கு ஓய்வே தந்திருக்காது!*

*இதனை நீயும் அறிவாய் அறிந்து, ஒப்பி நீ வாழ்ந்திருந்தாயே! எமைப் பாதுகாத்து நின்றாயே!*

*அந்தப் பாதுகாப்பு நிம்மதியில்தானே, உன்னையே சீண்டியும், உன்மீது மண்ணிறைத்தும், வசவிறைத்தும் விளையாடத் தலைப்பட்டோம்.*

*நீ கோபித்துக்கொண்டாயா- எங்கள் விளையாட்டை வினையாகக் கருதி முகம் சுளித்தனையோ!*

*நீ எங்களுக்குரியவனல்லவா? எங்களுக்கே உரியவனல்லவா?*

*இருட்காட்டை ஒளி மயமாக்கிக்கொண்டிருந்த ஒரு விளக்கே, ஏன் அணைந்தாய் என் செய்தோம்? இனி என் செய்வோம்?*

*உனது எண்ணங்கள் உணர்ந்தோம். ஏற்றோம். நாங்கள் அவற்றைச் செயல்படுத்தி முழக்கவும் உன்னையன்றோ, பெருந்துணையாக நம்பியிருந்தோம்.*

*"இலக்கினைச் சுட்டி, வழி வகுத்து, திசை காட்டிய பின்னும் வழிநடக்கத் துணைவேறோ? தன்னம்பிக்கையோடு தனிநடை முடுக்குங்கள்" எனக் கழந்தனையோ?*

*உன்னோடு இருந்து பழகிவிட்ட நாட்டின் 45 கோடிப்*

பேர் நீயின்றி சிறு பிரச்சினைகளைக்கூடச் சமாளிக்கத் திகைப்போமே, அதை நீ எண்ணிப் பார்க்கவே இல்லையா?

உழைத்துழைத்து உன்னை அழித்துக்கொண்டனையே.

நீ இரு-அதுபோதும் உன்னைப் பார்த்துக்கொண்டே பலம் பெறுகிறோம்—தெளிவு பெறுகிறோம் என்று உறுதியளித்தோமே.

வரலாற்றின் போக்கை மாற்றி வரலாறு சமைத்தவனே, குணக்குன்றே, அணித்தேரே, புதுமை உலகின் பெருமையே, உத்தமனே உன் நினைவு உலகில் நிலைக்கும். உன் நினைவு எம்மை ஆளாக்கிவிடும். உன் நினைவில் இந்தியா வழி புரிந்துகொள்ளும்.

நீ விரும்பும் வகையிலேயே உனது மறைவைக் கருதிடும் பான்மை வளரட்டும்.

உன் வழி நடை விரிப்போம் - உய்வோம்.

நாங்கள் அழுது புலம்புவது உனக்குப் பிடிக்காது. எங்களின் இன்றைய அழுகை உன்து உள்ளத்தை நாங்கள் பெற்று விடச்செய்யும் பெரு முயற்சியேயன்றி வேறில்லை.

எங்கள் உள்ளத்தே சுதந்திரம் காக்கும் பதைப்புணர்ச்சி-சமதர்ம-சமாதானப்பேருணர்ச்சி என நீ எழுப்பிய உணர்ச்சி மாளிகை பல இடங்களிலும் கலனாகி உள்ளது. உனது மறைவு கேட்டு உருக்கின்ற கண்ணீரும், உருகுகின்ற தசையும் கலந்து சாந்தாகி சலனை பகுதிகளைச் செப்பனிட உதவுகின்றன.

உனக்காகச் சிந்தும் ஒவ்வொரு துளிக் கண்ணீரும் இந்தியாவுக்குப் பலம் சேர்க்குமே தவிர ஊறு தேடாது!

உலகில் சமாதானம் நிலை பெறும். இந்தியாவில் சமதர்மம் தழைக்கும்-சமத்துவம் நிலவும். உன் நினைவின் துணைகொண்டு இச் சாதனைகளை நாங்கள் புரிவோம்.

ஐயா! உடலை ஒளித்துவிடலாம். ஆனால் நினைவை நீக்கக் கூடுமோ?

— ❀ —

## பலாத்காரம் அழியவில்லை

பலாத்கார சகாப்தம் முடிந்து விட்டதென்றோ சீக்கிரத்திலே முடிந்துவிடுமென்றோ, யாரும் கூறமுடியாதென்று நினைக்கிறேன். என்றுமில்லாத வேகத்துடன் அளவற்ற அழிவுச் சக்தியுடன் அது இன்று தலைவிரித்தாடுகிறது. ஒன்று அது அழிய வேண்டும். அல்லது உலகத்தின் பெரும் பகுதியை அது அழித்துவிடும்.

மடைமையை மறைக்கவே மடையர் உருவினார் உடைவாளதனை.

—நேரு. 'இந்தியாவின் ஐக்கியம்'

# கீதம் நின்றதோ!
# கீர்த்தி நிலைத்ததோ!

இமயம் முதல் குமரிவரையில் உள்ளோர் இதயங்களில் எல்லாம் இடம் பெற்றிருக்கும் உரிமையை உத்தமர் காந்தியாருக்குப் பிறகு பெற்றிருந்த ஒரே மனிதர் —ஒரே தலைவர்—பண்டித நேரு.

**மு. கருணாநிதி**

*மே திங்கள் இருபத்தி ஏழாம் நாளன்று நம் செவிகளை அந்தச் சோகச் செய்தி தாக்கிற்று; செய்தியல்ல அது; செந்தீ! ஜன நாயகப் பாதுகாவலர் ஜவகர் காலமாகிவிட்டார்.*

*நம்பத்தான் முடியவில்லை!... ஆனால் நடந்துவிட்டதே!*

*"மறைவது இயற்கை—மண்ணுவது திண்ணம். மனிதர்கள் வருகிறார்கள்— போகிறார்கள்!"...இப்படி எந்த ஆறுதல் வார்த்தைகளாலும் அணைபோட்டுத் தடுக்க முடியாத சோக வெள்ளம் பெருக்கெடுத்தோடுகிறது.*

*அத்தகைய பெருஞ் செல்வத்தை இழந்திருக்கிறோம்...நம்பிக்கை நட்சத்திரம் மறைந்து விட்ட ஏமாற்றத்தில் பெருமூச்சு விடுகிறோம்...கடும் புயலில் சிக்கிய படகாகித் தவிக்கிறது நாடு!...உலகத்தாய் கண்ணீர் வடிக்கிறாள்.*

*ஜவகர்,...*

*தொல்லைகள் தொடமுடியாத வீட்டில் பிள்ளையாகப் பிறந்தார்....*

*ஆனால் நாட்டுக்காக அவர் தாங்கிக் கொண்ட தொல்லைகள் ஏராளம்...*

*கொழிக்கின்ற செல்வக் குடும்பத்தில் வளர்ந்தார்...*

*சிரிக்கின்ற நாட்டைக் காண வேண்டுமென்று வெப்பம் தகிக்கின்ற பொதுவாழ்வில் புகுந்தார்.*

*எழுபத்துநான்கு ஆண்டுகள் வாழ்ந்தார்.*

*ஒன்பது ஆண்டுகள் சிறைக் கைதியாக!*

*பதினேழு ஆண்டுகள் இந்தியப் பிரதமராக,*

இந்தப் பதினேழு ஆண்டுகளை எதிர்பார்த்து அந்த ஒன்பது ஆண்டுகளை ஏற்றுக் கொள்ள வில்லை.

''கைமாறு கருதாமல், கடமையைச் செய்வோம்; நடப்பது நடக்கட்டும்'' என்று களத்தில் இறங்கிய கர்ம வீரர் அவர்.

தொடுத்த போராட்டங்கள் அனைத்தும் எடுத்த எடுப்பில் வெற்றி தரும் என எண்ணவும் இல்லை.

ஏற்பட்ட தோல்வி கண்டு துவளவும் இல்லை.

இன்றில்லையேல் நாளை - நாளை தவறினால் மறுநாள்-அல்லது—என்றோ ஒருநாள்-லட்சியம் சித்திபெறும் என்ற உள்ள உறுதியோடு ஆயுத மேந்திய போர் வீரர் அவர்!

பாரதத் தலைவர் ஆனார்-தரணி போற்றும் மனிதர் ஆனார்!

அடக்குமுறைகள் கட்ட விழ்த்து விடப்பட்ட நேரத்திலும்—எதிர்பாராத இழப்புக்கள் ஏற்பட்ட வேளையிலும்—

வீடு வாசல்-மாடுமனை-மக்கள் சுற்றம்-என்று பாராமல் நாடு 'நாடு' என முழங்கிடும் தியாக மணிவிளக்குகளின் தலைசிறந்த வரிசையில் தக்கதோர் இடம் பெற்ற மாணிக்க விளக்காவார் மறைந்த மாவீரர்!

அவருக்கு,
மனச்சாட்சியே ஆண்டவன்
மக்கள் நெஞ்சமே ஆலயம்
பொதுத் தொண்டே பூசை நைவேத்யம்
பூட்டிய சிறைக் கோட்டங்களே புண்ணிய ஸ்தலங்கள்

இத்தகைய இனியவரின் பிரிவால் இதயத்தில் ஏற்பட்ட காயம் ஆறக் கூடியதா?

''அவருக்கு என் பாஷை புரியவில்லை; எனக்கு அவர் பாஷை புரியவில்லை என்று கூறுகிறார் நேரு... ஆனால் ஒன்று; எனக்குப் பிறகு என் பாஷைதான் பேசுவார் நேரு!''

—என்று 1942-ல் உத்தமர் காந்தியார் குறிப்பிட்டார்.

பேசிய மொழி எதுவாயினும் ஜவஹர் நடந்தவழி காந்திய வழி! அண்ணல் வகுத்த அற வழி!...

உலகம், வல்லூறுகளின் வேட்டைக் காடாக—நாய் நரிகள் விருந்துண்ணும் ரணகளமாக-மாறிவிடக்கூடாது எனப் பாடுபட்டு அவர் பறக்கவிட்ட வெண் புறா சிறகடித்துத் துடிதுடிக்கிறது சீலர் மறைந்த சேதிகேட்டு!

இமயம் முதல் குமரி வரையில் உள்ளோர் இதயங்களில் எல்லாம் இடம் பெற்றிருக்கும் உரிமையை உத்தமர் காந்தியாருக்குப் பிறகு பெற்றிருந்த ஒரே மனிதர்-ஒரே தலைவர்-பண்டித நேரு!.

அவர் இன்றில்லை... அவர் பேணி வளர்த்த ஜனநாயகக் கொள்கை இருக்கிறது!...

அதனை மேலும் சீர்பெறச் செயல்படுத்துவதுதான் இருப்பவர்கள் மறைந்தவருக்குச் செலுத்தும் மரியாதையாகும்.

மறைந்தவர், இந்த மண்ணுக்கு ஆற்றிய பணிகள் ஏராளம். இன்னும் ஆற்றவேண்டிய இன்றியமையாத பணிகளும் இருக்கின்றன.

உற்சாகம் பொருந்திய மக்கள்
உரிமைகள் கொழிக்கும் நாடு
உடமைகள் பொதுவான சமுதாயம்
ஏற்றத் தாழ்வில்லாப் பொருளாதாரம்
மதப்பூசல் இல்லாத மனவளம்
எங்கெங்கும்— இன்பம்— எழில்—ஒளி!

உலகம் விரும்புகின்ற இந்த நிலைகளோடு இந்த நாட்டையும் ஒப்பிட்டுக்காட்ட அவர் எடுத்துக்கொண்ட மனமார்ந்த முயற்சிகள் முற்றுப் பெறவில்லை; அதற்குள் மறைந்துவிட்டார்.

அவர் தொட்ட பணிகளைத் தொடர்ந்து வெற்றிகாண்பது தான் அவருக்கு உளமார அமைக்கும் நினைவுச் சின்னமாகும்.

ஜனநாயகச் சோலையில் பகுத்தறிவு மேடை கட்டி சமாதானக் கொடியை உலகம் அறிய உயர்த்திப் பிடித்தவர்-மறைந்த உத்தமர்.

அவருக்கு நாம் காட்டுகின்ற நன்றி, அந்தச் சோலை வாடாமல்—மேடை சரியாமல் பாதுகாப்பதே யாகும்.

இன்னும்; எத்தனையோ வேலைகளை நாடு அவரிடம் எதிர்பார்த்தது-அதற்குள் 'இயற்கை' தன் வேலையை முடித்துக் கொண்டது!...

கீதம் நின்றுவிட்டது—
கிரீடம் நொறுங்கிவிட்டது—
கீர்த்தி நிலைத்துவிட்டது!
வாழ்க நேருவின் புகழ்!

— ❋ —

## உலக அரங்கில் நம் சாதனை

*சுதந்தரமான இந்தியா, தன் ஏராளமான வளங்களைக் கொண்டு உலகத்துக்கும், மனித சமுதாயத்துக்கும் மகத்தான சேவை செய்ய முடியும். என்றுமே இந்தியாவினால் உலகுக்கு ஒரு தனிப்பலன் உண்டு. நாம் மகத்தான காரியங்களைச் சாதிக்கவேண்டும் என்று விதி எதிர்பார்க்கப்படுகிறது. வீழ்ந்தோமானால், பாதாளத்தில் வீழ்ந்து விடுகிறோம். ஆனால் எழுந்தோமானால் உலக அரங்கிலே நமக்குரிய பாகத்தைச் சாதிக்கத்தான் செய்கிறோம்.*

—நேரு, 'இந்தியாவின் ஐக்கியம்'

# சிந்தனை கலங்குகிறது

பருவக் காற்றில் உதிர்ந்து விட்ட அந்த ரோஜாவின் நறுமணத்தை நம் இதயங்கள் சுமந்து கொள்ளட்டும்.

நமது தலை முறையின் மகா மனிதன் இறக்கி வைத்து விட்டுப்போன பெருஞ் சுமைகளை நாம் நம்முடைய தலைச்சுமைகளாக ஏற்றுக் கொள்வோம்.

**கண்ணதாசன்**

*வரலாற்றில் ஒரு சகாப்தம் முடிந்து விட்டது.*

*மனித நாகரிகத்தின் பெருங் கணக்கு முடிவு செய்யப்பட்டு விட்டது.*

*அஸ்தமிக்காத ஏகாதிபத்திய சூரியனைக்கூட அஸ்தமிக்க வைத்த பாரத சூரியன், தானும் அஸ்தமித்து விட்டான்.*

*அடிமைக் குரல்களுக்கெல்லாம் அபயங் கொடுத்த குரல், அடங்கி விட்டது.*

*உலக சமாதானத்துக்காக விழித்துக் கொண்டிருந்த கண்கள் மூடிவிட்டன.*

*கலகங்களையும் மயக்கங்களையும் தெளிவிப்பதற்காகப் பயணம் சென்ற கால்கள், நிரந்தரமான அமைதி கொண்டு விட்டன.*

*உலகைக் காப்பது தன் கடமையென்று அவன் காத்துக் கொண்டிருந்தான்.*

*அவனை எடுத்துக்கொள்வது தன் கடமையென்று, மரணம் எடுத்துக்கொண்டது.*

*எரிப்பது தன் கடமையென்று நெருப்பும் எரிந்து விட்டது. இனி-நம் கடமை என்னவென்பதுதான் நமக்குப் புரியவேண்டும். நீண்ட நெடிய விடுதலை வரலாறு, மயங்கிச் சாய்கிறது.*

*எதிர்காலத்தைப்பற்றிய ஏக்கமே எங்கும் குடிகொண்டிருக்கிறது.*

*காவல்காரனின் காவல் திறமையை நம்பித்தான் மனிதர்கள் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தார்கள்.*

*இவ்வளவு காலம் நான் மட்டுமே விழித்துக் கொண்டிருந்தேன். இனி-நீங்கள் எல்லோருமே விழித்துக் கொண்டிருங்கள் என்று சொல்லிவிட்டு*

அவன் மட்டும் தூங்கிவிட்டான்.

நிம்மதியை நாம் வைத்துக் கொண்டு, சஞ்சலங்களை அவனிடம் கொடுத்து வைத்திருந்தோம்.

இப்போது, சஞ்சலங்களை நமக்குத் தந்துவிட்டு, நிம்மதியை அவன் எடுத்துக்கொண்டு பறந்து விட்டான்.

சாதாரணச் சாவுகளில் அழுத கண்ணீர் ஆறும்.

இதில் ஆருது. ஆறு இது!

நெடிய கங்கையின் பிரவாகத்திற்கு-இப்போதுதான் ஒரு உதாரணம் கிடைத்திருக்கிறது.

நாற்பத்துநாலுகோடி மக்கள் -அநாதைகளாக நிற்பதுபோலவே நமக்குத் தோன்றுகிறது.

மாற்றி மாற்றி நினைத்துப் பார்த்தும்-மறு நினைவு வர மறுக்கிறது.

பற்றற்ற கோலமே இருதயத்தை ஆட்கொள்கிறது.

சிந்தனை கலங்குகிறது.

எழுத்து மயங்குகிறது.

உலகம் முழுவதையும் பார்த்து-"நேரு இருந்தபோது காட்டியது போலவே இனியும் எங்களிடம் பரிவு காட்டுங்கள்" என்று அழுது கேட்கத் தோன்றுகிறது.

பாரதத்தின்உருவம்-மெலிந்து விட்டது போல், ஒரு பயம் பிறக்கிறது.

கடல் மட்டத்திற்குக் கீழே குடி வாழ்கின்ற மக்கள்-கடல் எப்போது பொங்குமோ என்று கவலைப்படுவதுபோல் — இனந் தெரியாத கவலையொன்று நெஞ்சை வாட்டுகிறது.

ஜவாகரின் மரணம் பாரத தேசத்துக்குப் பதில் இல்லாத கேள்வியாகவே ஆகிவிட்டது.

மனிதர்கள் மரணமடைவது இயற்கைதான்.

ஆனல் - தெய்வங்களுக்கும் மரணம் உண்டு என்பதை நாம் இப்போதுதான் காண்கிறோம்.

'இனி என்ன—? இனி—என்ன?' இதையேதான் எல்லோரும் திருப்பித் திருப்பிக் கேட்கிறோம்.

கிளிகள் 'அக்கா' என்றும் குயில்கள் 'குக்கூ' என்றும் பசுக்கள் 'அம்மா' என்றும் ஒரே வார்த்தையைக் கற்று வைத்துக்கொண்டு ஊரெங்கும் பேசுவதுபோல்-பாரத மக்கள் அனைவரும்-இன்று ஒரே வார்த்தையைத்தான் பேசுகின்றனர்.

'இனி—என்ன?'

எனக்குத் தெரிந்தது இது தான்!

நேருவின் மறைவினல் ஏற்பட்ட சூனியத்தை-இனியொரு தனிமனிதன் நிரப்புவதற்குப் பலகாலம் பிடிக்கும்.

அதுவரை - நாற்பத்துநாலு கோடி அணுக்கள் சேர்ந்து ஒரு புதிய நேருவை உண்டாக்க முடியும்.

தேசத்தின் எதிர்காலத்தைப் பற்றிய கவலை-எல்லோருக்கும் இருந்தால்தான் சாத்தியமாகும்.

சூலாயுதத்தின் மூன்று முனைகள்போல்-உலக சமாதானம்-ஜனநாயக சமதர்மம்—தேச ஒற்றுமை—இவை மூன்றும் நமக்குக் கிடைத்திருக்கின்றன.

நேருவின் வாழ்க்கை முடிந்த இடத்தில்—இந்த மூன்று தத்துவங்களும் நமக்கு நம்பிக்கையூட்டுகின்றன.

நேருவின் காலத்திலேயே-நேருவின் கண் முன்னாலேயே-இந்தத் தத்துவத்தின் மீது, சந்தேகங்களும் கேள்விகளும் எழுந்தன.

அந்தச் சந்தேகங்களையெல்லாம் அவர் தீர்த்து வைத்து இருக்கிறார்.

அந்தக் கேள்விக்களுக்கெல்லாம் அவர் பதில் சொல்லியிருக்கிறார்.

கொடிய சோதனைகள் ஏற்பட்டாலும் சரியே, இவை மாற்றிக் கொள்ளக்கூடியவை அல்லவென்று அவர் உறுதியாக நம்பி இருக்கிறார்.

சீனப்படையெடுப்பு நிகழ்ந்த நேரத்தில் அவராலே உருவாக்கப்பட்டதும்-அவரால் உறுதியாகக் கைக்கொள்ளப்பட்டதுமான—நடு நிலைமைக் கொள்கைக்குப் பெருத்த சோதனை வந்தது!

அந்தச் சோதனைகளில் அவர் வெற்றி பெற்றார் என்பது மட்டுமல்ல·அதற்குப் பிறகு, அந்தக் கொள்கைக்குப் பெரும் உலக மரியாதையும் கிடைத்து விட்டது.

கூட்டுச் சேர்ப்பதைத் தம் கொள்கையாகக்கொண்ட நாடுகள்கூட மனந்திறந்து-அவரது கூட்டுச்சேராக் கொள்கையைப் பாராட்டி விட்டன.

ஆகவே—தீர்க்கமாகச் சிந்தித்து ஒரு முடிவுக்கு வந்த பிறகுதான்-எந்த ஒரு தத்துவத்தையும் அவர் உருவாக்கியிருக்கிறார் என்பது தெளிவு.

தற்காலிக நிகழ்ச்சிகளை வைத்துக் கொண்டு-அவரது தத்துவங்களை யாரும் சந்தேகித்து விட முடியாது.

இறுதியிலும் உறுதியாகவும் அவை வெற்றி பெறும் என்பதில் சந்தேகமில்லை.

ஒரு பெரியவர் சொன்னது போல்—ஏசுவுக்குப் பிறகு இன்னொரு ஏசு இல்லை!

ஆனால்—ஏசுவின் சிந்தனைகள் காப்பாற்றப்படுகின்றன.

புத்தனுக்குப்பிறகு இன்னொரு புத்தன் இல்லை!

ஆனால்—புத்தனின் தத்துவங்கள் மேற்கொள்ளப்படுகின்றன.

காந்திக்குப்பிறகு இன்னொரு காந்தி இல்லை. காந்தியின் சிந்தனைகள் வேரூன்றிவிட்டன.

அதுபோல்-நேருவுக்குப்பிறகு இன்னொரு நேரு இல்லை!

ஆனால் —

அவரது தத்துவங்களும் வெற்றி பெறாமல் போவதில்லை.

என் சகோதரர்களே!

பருவக்காற்றில் உதிர்ந்து விட்ட அந்த ரோஜாவின் நறுமணத்தை-நமது இதயங்கள் சுமந்து கொள்ளட்டும்.

நமது தலைமுறையின் மகா மனிதன் இறக்கிவைத்துவிட்டுப் போன பெருஞ்சுமைகளை நாம் தலைச் சுமைகளாக ஏற்றுக் கொள்வோம்.

பெரும் புயல்களையும் சமாளிக்கும் கப்பல்களாக நாம் ஆகிக்கொள்வோம்.

எத்தனை இடிகளையும் தாங்கும் இடிதாங்கிபோல்—இறைவன் நம் உள்ளத்தை ஆக்கி அருளட்டும்!

இந்த சூன்யத்தின் மூலம்—எந்தத் துன்ப அனுபவமும் ஏற்பட்டுவிடாமல் இப்பொழுதே நாம் எச்சரிக்கையாக இருப்போம்.

இந்த ஜனநாயக மேடையில் நாம் எவ்வளவோ ஆடினோம்—பாடினோம்.

அந்த ஆட்டத்திற்கும் பாட்டிற்கும்—நேரு என்ற தாளம் இருந்தது.

இப்போது தாளம் போய் விட்டது.

இனி — ஆடுகிறவர்கள் தான் எச்சரிக்கையாக ஆடவேண்டும்.

சொற்களின் மூலம் உணர முடியாததை அனுபவம் வந்து உணர்த்திவிடும்.

அனுபவித்தேதான் ஒவ்வொன்றையும் உணர்வது என்று முடிவு கட்டிவிட்டால்-அடுத்த கட்டம்-அடிமைத்தனமே தவிர வேறில்லை!

நேரு இல்லாத பாரதநாடு—வேறுபாடு இல்லாத ஒற்றுமையைக் காட்டிக்கொண்டால்—எந்தப் பகையும் நம்மை எதுவும் செய்யமுடியாது.

ஒருமுகமான சிந்தனையில் இருந்து—ஓரளவு நாம் முரண்பட்டாலும், கடவுள்கூட நம்மைக் காப்பாற்ற முடியாது!

நேருவின் ஆவி — இதைத்தான் நமக்கு அறிவுறுத்துகிறது!

வாழ்க நம் தலைவனின் திருப்பெயர்!

வாழ்க நம் தாயின் மணிக்கொடி!

வாழ்க பாரதம்!

— ❀ —

## மனிதனை, மறுக்க முடியாது

ஆமாம். மனிதனிடத்தில் நாம் நம்பிக்கை இழக்க முடியாது. கடவுளைக்கூட மறுக்கலாம்! மனிதனை மறுக்க முடியாது. மனிதனை மறுத்துவிட்டு எல்லாம் சூன்யம் என்ற நிலைக்கு வந்துவிட்டோமானால், அப்புறம் நமக்கு ஆதாரம்தான் என்ன?

—நேரு, 'டிஸ்கவரி ஆப் இந்தியா'

ஐக்கிய நாடுகள் சபையில்

# அண்ணலுக்கு அஞ்சலி

அண்ணல் நேரு மறைந்தார் என்றவுடன் ஐ. நா. சபையின் நீல வண்ணக் கொடி அரைக்கம்பத்திற்கு இறக்கப்பட்டது. உலகப் பிரதிநிதிகள் அனைவரும் அண்ணலின் பெருமைகளை எடுத்துக் கூறி அவரை நினைத்து நெஞ்சு விம்ம அஞ்சலி செய்தனர்.

ஐ. நா. மெம்பர் நாடுகளின் கொடிகள் உயர கம்பத்தில் பறந்து கொண்டிருக்கையில் ஐ. நா. வின் நீலநிறக்கொடி மாத்திரம் அரைக் கம்பத்தில் பறந்து கொண்டிருந்தது. ஒரு நாட்டின் பிரதமருடைய மரணத்திற்காக ஐ. நா. கொடி தாழப்பறக்க விடப்படுவது என்பது இதுவே முதல் தடவையாகும். ஐ. நா. காரியதரிசி ஊதாண்டின் உத்திரவுப்படி இது நடந்தது.

### கவுன்சில் தலைவர்

பந்தோபஸ்து கவுன்சிலின் தலைவரான ஸ்ரீ ரோகர் ஸ்ரீ டோவ் (பிரான்ஸ்) முதல்வர் நேருவுக்குப் பாராட்டுதலைத் தெரிவித்தார். "ஒரு மாபெரும் பிரதமரை உலகம் இழந்திருப்பது மாத்திரமல்ல. இந்த நூற்றாண்டின் சரித்திரத்திலேயே தன் பெயரைப் பொறித்துள்ள ஒரு மாண்புமிக்க மனிதரை உலகம் இழந்துவிட்டது" என்றார் ஸ்ரீ டோவ்.

### ஊ-தாண்ட்

அடுத்தபடியாக ஐ. நா. தலைவர் ஊதாண்ட் பேசினார். "நேருவைப் போல வேறு எந்தத் தலைவர்களும் இந்தக் காலத்தில் தமது நாடுகளின் சரித்திரத்தில் அவ்வளவு சிறப்பான இடம் பெற்றதில்லை."

### சர் பாட்ரிக் டீன்

பிரிட்டன் பிரதிநிதி சர் பாட்ரீக் டீன் பேசுகையில் பின்வருமாறு குறிப்பிட்டார். "ஐ. நா. வுக்கும் உலக சமாதானத்திற்கும் நேரு புரிந்துள்ள சேவை மகத்தானது. அவருக்கு நமது மரியாதையும், அன்பும், நன்றியும் உரியவை."

### மொராக்கோ பிரதிநிதி

மொராக்கோவின் பிரதிநிதி ஸ்ரீ. அகமத் பென்ஹமா பேசுகையில் குறிப்பிட்டதாவது:- "ஆசியா, ஆபிரிக்கா பிரதேசத்தில் நேருஜி தார்மீக நெறியின் சிற்பியாக விளங்கினர். அவருக்குத் தான் அந்த ஸ்தானம் கொடுக்கலாம். யாரும் அதை ஆட்சேபிக்க முடியாது."

### சோவியத் பிரதிநிதி

சோவியத் பிரதிநிதி டாக்டர் என். எப். டொரொங்கோ பின்

வருமாறு கூறினர்:— உலகில் சமாதானமும் பரஸ்பர நல்லெண்ணமும் நிலவுவதற்கு இடைவிடாது போராடிய வீரர் நேரு. அவருடைய பிரிவு மனித வர்க்கத்திற்கு ஈடுசெய்ய முடியாத நஷ்டமாகும்.

### ஸ்டீவென்சன் புகழ் உரைகள்

### அலாதியான நிலை

"இந்தியப் பிரதமர் நேரு அலாதியானவர். அவர் தமது காலத்து மக்கள் அனைவரின் உள்ளத்தையும் கவர்ந்த தலைவர் என்பது மாத்திரமல்ல; அவர் அந்த நிலைக்கும் அப்பாற்பட்டவர். அவரைப் பற்றி இன்னும் அதிகமாகச் சொல்ல வேண்டிய திருக்கிறது. அவரைப் பற்றி என்ன சொல்வது? அவருடைய பிரிவுக்காக துக்கம் ஏற்பட்டிருப்பதாகக் கூறுவதா? கவலை ஏற்பட்டிருப்பதாகக் கூறுவதா? அப்படிச் சொன்னால் மாத்திரம் போதாது. அன்னாருக்கு உலகம் முழுவதும் அஞ்சலி செலுத்தப் படுகிறது என்று சொல்வது பொருத்தமுடையது என்று சொல்லலாம். ஆனால் லட்சக்கணக்கான மக்களைப் பொறுத்தவரை, இந்திய பிரதமர் நேரு அவர்களுடைய உள்ளத்தில் கோயில் கொண்டிருக்கிறார்.

ஏனெனில் அவர் மனிதவர்க்கத்தின் பிரிக்க முடியாத அம்சமாக விளங்கினார்.

இன்று நாம் சென்ற காலத்தைப்பற்றி-நேருவின் இடைவிடாத உழைப்பு மிகுந்த வாழ்க்கையைப் பற்றி சிந்திக்கிறோம். அவருடைய வீரச் செயல்கள் மிகுந்த, தியாகங்கள் நிறைந்த வாழ்க்கையைப் பற்றி சிந்திக்கிறோம். அவர் சுமந்த பெரும் பொறுப்புகளைப் பற்றியும், அவர் புரிந்த இணையற்ற சாதனைகளைப் பற்றியும் சிந்திக்கிறோம். ஆம், அவர் பூர்த்தி செய்ய எண்ணி, ஆனால், பூர்த்தி செய்யாமல் விட்டுப்போயுள்ள மனத்தைத் திணற அடிக்கச் செய்யும் மலை போன்ற அலுவல்களைப் பற்றியும் நாம் சிந்திக்கிறோம்.

### கர்ம வீரர்

இந்தியாவின் ஆத்மிகத் தலைவர் அமரர் மகாத்மா காந்தியின் உறுதுணையுடன் பிரதமர் நேரு, நவ இந்தியாவைச் சிருஷ்டித்தார். லட்சக்கணக்கான மக்களுக்குத் தேசிய உணர்ச்சியை ஊட்டினர். அவர் தனது மாபெரும் நாட்டை மகத்தான இன்னல்களுக்கிடையே திறமையாகப் பரிபாலித்தார். இந்தியா சுதந்திரமடைந்த ஆரம்பக் கட்டத்தில் எவ்வளவோ கண்டங்களும் இடுக்கண்களும் ஏற்பட்டன. அப்போது மிகவும் திறமையாக நாட்டிற்கு வழி காட்டினர். பிரதமர் நேரு கௌரவமாகப் பெற்ற ஓய்விலோ அல்லது ஒழிவிலோ இறக்கவில்லை. அவர் கடமையாற்றுகையில் இறந்தார். அதுவும் சாதாரணக் கடமையா? நாலா பக்கங்களிலும் சூழ்ந்து கொண்டு இன்னல்களும் இடுக்கண்களும் முற்றுகை போட்டுக் கொண்டிருந்தபோது கடமையைச்செய்துகொண்டிருக்கையில் பிரதமர் நேரு இறந்தார்.

### உலகம் முழுவதும் புகழ்

பிரதமர் நேரு அவருடைய நாடாகிய இந்தியாவில் மாத்திரம் புகழ் பெற்றிருந்தார் என்பதில்லை. அவர் ஆசியா-முழுவதுக்கும், புதிய சுதந்திர நாடுகளுக்குத் தலைவராக விளங்கினர். ஆசியா நாடுகளும் மற்றுபுதிய சுதந்திர நாடுகளும் பல முற்போக்கான நடவடிக்கைகளில் ஈடுபட்டிருப்பதற்குப் பெரும்பாலும் உதவியவர் நேருவே. மற்றும் உலகின் மற்றப் பகுதிகளிலும் அவருடைய புகழ் ஒளி பரவியிருந்தது. ஆத்மிக லட்சியங்கள்,

அபிலாஷைகள் எல்லாவற்றிலும் நேரு முழுமூச்சுடன் ஈடுபட்டிருந்தார் என்பதை உலகம் முழுவதும் அறியும்.

### நல்லது கெட்டது

பல வருடங்கள் நான் பிரதமர் நேருவுடன் நெருங்கிப் பழகியிருக்கிறேன். நான் அவரை எனது நண்பர் என்று அழைக்கும் யோக்கியதையைப் பெற்றிருக்கிறேன். இந்த நிலையில் அவருடைய செல்வாக்கை மதிப்பிட்டுக் கூறுவது எனக்கு மிகவும் கடினம்.

பிரதமர் நேரு அமெரிக்காவுக்கு விஜயம் செய்தபோது, நாங்கள் இருவரும் ராஜதந்திரம் பற்றியும் பேச்சு சாதுரியம் பற்றியும் பேசினோம். அவர் என்னிடம் கூறினார்:—எது சரி, எது தவறு என்பதை நாம் சுலபமாகத் தெரிந்துகொள்ளலாம். அவற்றை வர்ணப்பூச்சு இன்றி நமக்கு தெரிவிக்க வேண்டும். ஆனால் பெரும்பாலும் அப்படி நடப்பதில்லை. ஏனெனில் வெண்மைக்கும் கருமைக்குமிடையே சிறு வேற்றுமைகளுடன் எத்தனையோ வர்ண ஜாலங்கள் நமது கண்களை ஏமாற்றுகின்றன. வாழ்க்கையின் மாபெரும் முடிவுகளிற் பெரும்பாலானவை முழு வெண்மையிலோ அல்லது முழுக் கருமையிலோ தீட்டப்படவில்லை எனினும் அவை, இனம் தெரிய முடியாதபடி பலவர்ண ஜாலங்களில் காட்டப்படுகின்றன என்றும் நேருவுக்குத் தெரியும்.

### ராஜ தந்திரி யார்?

உறுதி காட்டும் புத்திசாலியே ராஜதந்திரி என்றும், அழியும் பாதையில் உறுதி காட்டுகிறவன் மதியீனன் என்றும் சொல்லப்படுவதுண்டு. உறுதியும், வளைந்து கொடுக்கும் தன்மையும் உள்ள தலைவர் களிடையே உலகத்தின் சுபீட்சம் பொறுத்திருக்கிறது. இந்த இரு பண்புகளும் நேருவிடம் பரிமளித்தன.

காந்திய நெறிப்படியே நேருஜி நடந்து கொண்டார். எல்லா நாடுகளின் கலாசாரங்களும் நமது நாட்டில் உலாவ வேண்டும். இறைவனால் படைக்கப்பட்ட அற்ப உயிர்களுக்கும் நமது நாட்டில் இடம் வேண்டும். அத்தகைய நவ இந்தியாவையும் உலகத்தையும் சிருஷ்டிக்க வேண்டும் என்று காந்திஜி தியானம் செய்து கொண்டிருந்தார். அவர் காட்டிய நெறியையே நேருவும் கடைப்பிடித்தார்.

### மாபெரும் சிருஷ்டி

நமது காலத்தில் இறைவனின் மாபெரும் சிருஷ்டிகளில் பிரதமர் நேருஒருவர். அவருடைய ஞாபகார்த்தமாக இருப்பன அவருடைய நாட்டு மக்களும், எல்லோருக்கும் சுதந்திரம், எல்லோருக்கும் சுபீட்சம் என்று அவர் கண்டு கொண்டிருந்த கனவுமே யாகும்.

அவருடைய மகத்தான லட்சியம் ஐ. நா. சபையில் நமது லட்சியமாகவும் இருக்கட்டும்.

### ஸ்வீடிஷ் பிரதமர் அனுதாபச் செய்தி

ஸ்வீடிஷ் பிரதமர் ஏர்லாண்டர் ராஷ்டிரபதி ராதாகிருஷ்ணனுக்கு அனுப்பி வைத்துள்ள தந்தியில், நேருவின் மறைவு எல்லோருக்குமே ஏற்பட்டுள்ள மிகப் பெரிய நஷ்டமாகும் என்றார். நேருவின் வாழ்க்கையும், பணியும், இந்தியாவுக்கு, மட்டுமின்றி உலகம் பூராவுக்குமே முக்கியத்துவம் வாய்ந்ததாய் விளங்கியது என்றார்.

# நேருவுக்கு அஞ்சலி

நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளை

மேரு மலைபோன்ற-எங்கள்
நேரு மறைந்துவிட்டார்
யாரினிமேல் அவர்போல்-காந்தி
வாரிசு ஆகவல்லார்?

சாந்தமும் சத்தியமாய்-அண்ணல்
காந்தியின் பண்புகளே
ஏந்திப் பணிபுரிந்தார்-ஜவஹர்
மாந்தருள் மாணிக்கமே.

வீரத் தளபதியாய்-விடுதலைப்
போரை நடத்தி வென்று,
தீரத்துறந்த எங்கள்-நேரு
தியாகச் சிகரமன்றோ!

ஆசிய ஜோதியென-ஒளி
வீசி வழிகாட்டி
தேசியச் சக்திகளை-வெகு
பாசமுடன் வளர்த்தார்.

உலகம் முழுவதிலும்-யுத்தக்
கலகம் வராதபடி
பலமிக்க காவலனாய்-நின்ற
தலைவன் எங்கள் நேரு.

கூட்டுகள் சேராமல்-எல்லா
நாட்டுக்கும் நேசக்கரம்
நீட்டிய நேருவைப்போல்-கதை
ஏட்டிலும் கண்டதில்லை.

வெள்ளையர் நாடுகளில்-நேரு
கொள்ளைச் செல்வாக்கடைந்தார்
அள்ளிக் கொடுத்துதவி-செய்யத்
துள்ளி மகிழ்ந்தார்கள்.

நீதி தவறாமல்-நேர்மை
வாதில் வழுவாமல்

ஜாதி மதச் சலுகை-என்ற
ஏதும் அணுகாமல்

தாழ்ச்சிகள் எண்ணாமல்-யார்க்கும்
காட்சிக் கெளியவனாய்
ஆட்சி புரிந்தவராய்-உலகில்
மாட்சிமை மிக்கவராம்.

ஏழைகள் பங்காளன்-அவர்கள்
வாழ்வுவளம் பெறவே
ஊழியம் செய்வதுதான்-தன்
ஊதியம் என்றுழைத்தான்.

வேற்றுமை உள்ளவரை-நேரு
தூற்றி இகழ்ந்ததில்லை.
போற்றிப்புகழ்ந்தாலும்-கொள்கை
மாற்றி மயங்கி விடான்.

இப்படிப் பட்டவரை-இழந்து
எப்படிநாம் சகிப்போம்
ஒப்பருந் துக்கம் இதைச்-சகிக்க
மெய்ப்பொருளைப் பணிவோம்.

நேரு மறைந்தாலும்-அவர்
பேரும் பெருங் குணமும்
யாரும் மறப்போமா-மனம்
தேறித் திடப்படுவோம்.

தெய்வத்தைப் போற்றிசெய்து
-நேரு
கைவைத்த திட்டங்களைச்
செய்ய முனைந்திடுவோம்-இந்த
வையகம் வாழ்வுபெறும்.

இமயமலை முதலாய்-தெற்கில்
குமரி முனை வரைக்கும்
நமது திருநாட்டின்-ஒருமை
அமைதியைக் காத்திடுவோம்.

# நேருவின் கதை

அணியிற் சிறந்த பொன்நகையாய்
கனியிற் சிறந்த மாங்கனியாய்

குணத்தால் உயர்ந்த மாமலையாய்
மணத்தால் உயர்ந்த மென்மலராய்

மனிதர் போற்றும் மாமணியாய்
தனிமைப் புகழின் உறைவிடமாய்

வாழ்ந்து மறைந்த மாவீரன்
வாழ்வின் கதையைப் படித்திடலாம்

— **நாக முத்தையா**





# உலகத்தில் ஒருவர்

வாழ்வு என்பதைப் பிழைப்பு என்றுதான் அறிஞர்கள் கூறி வந்துள்ளனர். பிழைப்பு என்பது தவறு அல்லது குற்றம் என்ற பொருளை உடையதாகும். மனித வாழ்வு குற்றங்களால் பிணைக்கப்பட்டுத்தான் இருந்து வருகிறது. இங்ஙனம் குற்றம் சூழ்ந்த ஒன்றைக் குற்றமற்றதாக, ஒருவன் செய்து முடிக்க முற்பட்டு முயற்சி செய்து முழு வெற்றியும் பெற்றுவிடுவான் என்றால் அவனை உலகம் ஒருமித்த கருத்தோடு உவந்து உவந்து கொண்டாடும் என்பது திண்ணம். இவ்வுண்மைக்குச் சிறந்த எடுத்துக்காட்டு நம் ஜவகர்லால் நேரு அவர்களே ஆவர்.

உலகத்தில் தோன்றிய பொருள்கள் அனைத்தும் என்றேனும் ஒருநாள் அழிந்துதான் தீரவேண்டும். அந்த நியதிப்படி பார்த்தால் இந்த உலகம் அழியுந் தன்மைக்கு ஆட்பட்டதே. அப்படி இருக்க ஏன் இந்த உலகம் இன்னும் அழியவில்லை. உலகத்தின் அழியாமைக்கு உற்ற காரணம் எதுவாக இருக்க முடியும்?

இந்தக் கேள்வியைப் பன்னெடு நாட்களுக்கு முன்பாகப் பண்டைய மக்கள் கேட்டுவந்துள்ளனர். கேள்விக்கு ஏற்ற பதிலைப் புறநானூற்றுப் புலவன் ஒருவன் தெளிவாகக் கூறி உள்ளான். பதில் இதுதான்:

*"இந்திரனின் அமுதமே கிடைப்பதாயினும் அதனை இனியது எனக் கருதித் தாமே தனித்து உண்ணார்; யாரோடும் வெறுப்புக் கொள்ளார்; பிறர் அஞ்சுவதற்கு அஞ்சிச் செயலற்றுச் சோம்பி இரார்; புகழ் என்றால் உயிரையும் கொடுப்பார்; பழி என்றால் உலகம் முழுவதும் தருவதாக இருந்தாலுங் கூடப் பெற்றுக்கொள்ளார். அத்தகைய மாட்சிமைப்பட்ட தன்மை உடையவரே சான்றோர் எனப்படுவர். அவர் தன்னலம் கருதாத இயல்பினர்; பிறர்க்கென்றே பிறவி எடுத்ததாகக் கருதிப் பெருமுயற்சி உடையோராவர். அத்தகைய அரும் பிறவிகள் இருப்பதனால்தான் இவ்வுலகம் நிலைபேற்று உரிமையோடு நின்று நிலவுகிறது."

இதுதான் உலகம் அழியாமல் இருப்பதற்கு உரிய பெரிய

---

*இது புறநானூற்றுப் பாடல். பாடல் இயற்றிய புலவனின் பெயர் இளம்பெருவழுதி.

காரணம் என்று புறநானூற்றுப் புலவன் புவியோரை நோக்கிக் கவிமுரசு கொட்டி உள்ளான்.

புறநானூற்றுப் பாடலின் சொல்லுக்கு உற்ற பொருள் விளக்கமே நம் ஜவகர்லால் நேரு. அவர் தனக்கெனவாழாமல் பிறர்க்கென வாழ்ந்த பெருந்தகை. அவர் மக்களின் வாழ்வுக்காகத் தன் வாழ்வைப் பறி கொடுத்த பண்பின் திருவுரு. அவர் தன்னலம் என்பதே இன்னதென எண்ணியும் பாராத பொன்னொளி.

1964ஆம் ஆண்டு மே மாதம் இருபத்தேழாம் நாள் நம்மை ஒரு சோகச் செய்தி பலமாகத் தாக்கிற்று. இடியென மாறி அது ஓர் இன்னலைத் தந்தது. புயலென மாறி அது ஒரு புலம்பலைத் தந்தது. அந்தச் செய்திதான் 'ஜவகர்லால் மறைந்து விட்டார்' என்ற வாசகம். வார்த்தைகள் இரண்டே எனினும் வாழ்வே இருண்டு விட்டது.

மனிதர்களைப் படைத்தும் காத்தும் அழித்தும் ஆனந்தம் கொள்ளும் ஆண்டவன் மனிதர்களில் மாணிக்கங்களாக விளங்கும் ஒளி விளக்குகளைப் படைத்தும் காத்தும் அழிக்காமல் விட்டு வைத்தால் என்ன என்று எண்ணி எண்ணி விம்மி விம்மி அழுதோம். நமக்காக-நாம் படும் தொல்லைகளுக்காக — ஒருவன் அயராது ஆருது கண்ணீர் வடித்துச் கொண்டு நம்மைக் காத்து நின்றுன். அவன் அழு கையை முடித்துக் கொண்டு அமைதியைத் தேடிவிட்டான். அதன் விளைவு, நாம் அழத் தொடங்கி உள்ளோம். நம்மிட மிருந்த அமைதி புதியதோர் புகலிடம்தேடிப் புறப்பட்டு விட்டது.

கன்னியா குமரியிலிருந்து கங்கையாறுவரை கடல்போலப் பரந்து கிடக்கும் மக்களின் மனத்திலே மதிப்புள்ள தெய்வமாக வீற்றிருக்கும் பேற்றைக் காந்தி அடிகளைப் போலவே ஜவகர்லாலும் பெற்றிருந்தார். அவர் கண்களுக்குத் தெரியாமல் மறைந்து விட்டார் எனினும் கருத்துக்கு விருந்தளித்துக் கொண்டுதான் வாழ்கிருர்.

'அஸ்தமிக்காத ஏகாதிபத்திய சூரியனைக் கூட அஸ்தமிக்க வைத்த பாரத சூரியன் அஸ்தமித்து விட்டான்.' இனி அந்தச் சூரியனுக்கு வெளி இடங்களில் வாழ்வில்லை. மனித உள்ளத்தின் உள்ளே நின்று ஒளி பரப்புவான். அந்த ஒளியைப் பின்பற்றி நடந்தால் உயர்வுண்டு.

பூகம்பம், இடி, புயல் முதலியன ஒரே சமயத்தில் தோன்றி ஒரு பகுதியைச் சீரழித்தால் அதனுல் விளையும் கேடுகள் எப்படி இருக்குமோ, அப்படி இருந்தது 'நேரு மறைந்து விட்டார்' என்ற செய்தியின் விளைவு.

பூகம்பம், இடி, புயல் முதலியன ஒரே சமயத்தில் தோன்றினுல், தோன்றிய இடத்துக்கு

மட்டுமே தொல்லைகளும் துயரங்களும் ஏற்படும். ஆனால் நேருவின் மறைவு குறித்த செய்தியோ இந்த உலகத்தையே சோகக் கடலுள் ஆழ்த்தி விட்டது. காரணம் அவர் உலகத்தின் ஒரு மனிதராக விளங்கி வந்தது தான். அல்லல் உற்றோர்க்கு ஆறுதல் அளிக்க அவர் அவனி முழுதும் பவனி வரத் தயாராக இருந்தார். ஆகவே தான் அவரை உலக மக்கள் அனைவரும் தம்மவராகக் கருதித் தலைவணங்கி நின்றனர்.

நேருவின் எழுத்தைப் படித்து மகிழ்ந்து பாராட்டிய உலக மக்கள் பலர். அவரின் பேச்சைக் கேட்டு மகிழ்ந்து பாராட்டிய உலக மக்கள் பலர். அவரின் போக்கைப் பார்த்து மகிழ்ந்து பாராட்டிய உலக மக்கள் பலர்.

''இலக்கியத் துறையில் புகழை நாடுபவர்கள் சொற்களின் மதிப்பை நுண்ணுணர்வால் அறிந்து அவற்றைச் சொற்றொடர்களாக அமைத்து ஒவ்வொரு வரியிலும், படிக்கின்றவர்கட்கு உண்மையான இன்பம் உண்டாகும்படி செய்யக் கூறிய திறமை உண்டு என்பதைத் தாங்கள் காட்டாவிட்டால் வெகு விரைவிலேயே இலக்கிய உலகத்திலிருந்து விரட்டப்பட்டு விடுவார்கள். நேருவிடம் எழுத்தாளனுக்குரிய திறமை இயல்பாகவே அமைந்திருந்தது. அது மட்டுமல்ல, எழுதுவதில் அவருக்குள்ள சொல்லாண்மைக்கு நிகரே இல்லை. யாரையும் குற்றம் சாட்டுவதிலோ, சாந்தப்படுத்துவதிலோ, இடிமுழக்கம் போன்ற கோபத்தைக் காட்டுவதிலோ, தேவகானம் போன்று செவிக்கினிமையை அளிப்பதிலோ அவருடைய எழுத்துக்கள் நிகரற்றவை.''

இது நேருவின் எழுத்தைப் படித்து மகிழ்ந்து பாராட்டிய திருமதி சியாங்கே ஷேக்கின் கருத்துரையாகும்.

''பேச்சுத் திறன் ஜவகரின் தனிச்சிறப்பு. அவருடைய பேச்சு கேட்டாரைப் பிணிக்கவும், கேளாதாரை வேட்கையுறவும் செய்யும் இயல்புடையது. நெஞ்சில் பட்டதை நேர் நின்று பேசும் பாங்கு அவரின் அஞ்சாமைக்கு எடுத்துக்காட்டு. சொல்ல வேண்டியதைச் சொல்லாமல் பேச்சை முடிக்கமாட்டார். சொல்ல வேண்டாததைச் சொல்லிப் பேச்சைக் கெடுக்கவும் மாட்டார். கேட்பவர் உள்ளமறிந்து, சொல்லவேண்டிய கருத்துக்களை ஆணித்தரமாகவும் அழகாகவும் பேசி முடிக்கும் பெரிய மனிதர் அவர். அவர் எழுதியதைவிடப் பேசியன அதிகம். எழுத்தால் சாதித்ததைவிட எதிர்த்து நின்று பேச்சால் சாதித்த சாதனைகள் ஏராளம். அவரை உலகப் பேச்சாளர்களுள் ஒருவராக ஏற்றுக் கொள்ளுவதில் தடையும் இருக்காது; தடங்கலும் நேராது.''

இது நேருவின் பேச்சைப் படித்து மகிழ்ந்து பாராட்டிய ஹோராஸ் அலெக்ஸாந்தர் இன்னும் பல மேனாட்டார்களின் கருத்துக் கோர்வையாகும்.

''பிரதமர் நேரு அவருடைய நாடாகிய இந்தியாவில் மாத்திரம் புகழ்பெற்றிருந்தார் என்பதில்லை. அவர் ஆசியா முழுவதுக்கும் புதியசுதந்திர நாடுகளுக்கும் தலைவராக விளங்கினார். ஆசிய நாடுகளும் மற்ற புதிய சுதந்திர நாடுகளும் பல முற்போக்கான செயல்களில் ஈடுபடுதற்குப் பெரும்பாலும் துணை நின்றவர் பண்டித நேருவே.

காந்தீய நெறிப்படியே நேருஜி நடந்து வந்தார். எல்லா நாடுகளின் கலாசாரங்களும் இந்தியாவில் உலவவேண்டும். இறைவனால் படைக்கப்பட்ட எந்த உயிருக்கும் இந்த நாட்டில் இடம் தரப் பெறல் வேண்டும். அத்தகைய பாரதத்தையும் உலகத்தையும் படைக்க வேண்டும் என்பதுதான் காந்தியடிகளின் தியாகம். அந்தத் தியாகத்தின் செயல்முறைச் சின்னமே நேருஜி.

நம் காலத்தில் இறைவனின் மாபெரும் படைப்புகளில் பிரதமர் நேரு ஒருவர்.''

இப்படியாக அவருடைய போக்கைப் பார்த்து மகிழ்ந்து பாராட்டிய ஸ்டீவென்சன் (ஐ.நா வில் உள்ள யு. எஸ். பிரதிநிதி) கூறி உள்ளார்.

நேரு இந்தியத் தாயின் இணையற்ற புதல்வன் என்பதில் எவ்வளவு பூரிப்பை ஓர் இந்தியன் அடைகின்றானோ, அவ்வளவு பூரிப்பை ஓர் உலகமகன், 'நேரு உலகத்தாயின் ஒப்பற்ற புதல்வன்,' என்று கூறுவதில் அடைய முடியும்; அடைந்து வருகிறான்.

அமெரிக்காவில் குண்டு வெடித்தால் நேருவின் நெஞ்சு வலிக்கும். ஜப்பானில் வறுமைப் பிணி என்றால் நேருவின் வயிறு வலிக்கும். சிங்கப்பூரில் சிரமம் பெருகிவிட்டது என்றால் நேருவின் சிந்தையில் வேதனை பெருக்கெடுக்கும். ஆப்பிரிக்காவில் அக்கிரமம் என்றால் நேருவின் அங்கங்கள் அலறித் துடிக்கும். உலகத்தில் எங்கெங்கு கேடுகள் விளைந்தாலும் உடனே துடிதுடிப்பவர் நேருதான், உலகத்தில் எங்கெங்கு நன்மைகள் விளைந்தாலும் உடனே உள்ளங்களித்து உவகை கொள்பவர் நேருதான். நல்லது கேட்க மகிழ்வார். அல்லது கேட்க வருந்துவார். இது அவரியல்பு.

எனவேதான் அவரை உலகத்தில் ஒருவராக (ஒப்பற்றவராக) உலகமக்கள் போற்றிப் புகழ்ந்து பெருமை கொள்கின்றனர்.

உலக வாழ்வுக்கு ஓயாதும் அயராதும் உழைத்து வந்த உத்தமனை உலகத்தில் ஒருவன் என்று சொன்னால்தான் உண்மையை உரைத்ததாகக் கருத முடியும். ஆம். நேரு உலகத்தில் ஒருவரேதான்.



செல்வம் கொழிக்கும் பெற்றோர்களுக்குச் சிறப்பளிக்கும் ஒரே பிள்ளையாக இருந்தால் அந்தப் பிள்ளை அநேகமாக உருப்படாமல் போவது இயற்கையே. சிறப்பாக இந்தியாவில் இது அனுபவ உண்மையாகும். அதுவும் அந்தப்பிள்ளை பெற்றோர்களுக்கு ஒரே பிள்ளை என்ற பேற்றோடு பதினொரு ஆண்டுகள் ஏகபுத்திரனாக விளங்கினால் அப்பிள்ளைக்கு அமோகமான வாழ்வு கிட்டும் என்பது தவறான கருத்தேயாகும். தொல்லைகள் தொடராத நல்லதொரு குடும்பத்தில் பிறந்தவர் நேரு. அவர், பெற்றோர்களுக்கு ஒரே பிள்ளையாகப் பதினொரு ஆண்டுகள் விளங்கினார். பின்னர்தான் அவருக்கு இரண்டு சகோதரிகள் பிறந்தனர். எனவே குழந்தைப் பருவத்தில் அவர் தனித்து வாழவேண்டியவரானார். அவருக்கு விளையாட்டுத் தோழர்கள் கூட அப்போது கிடைக்கவில்லை,

அவர் எத்தகைய ஆரம்பப் பள்ளிக் கூடத்துக்கும் அனுப்பப்படாத காரணத்தால் பள்ளித் தோழர்களும் இல்லாமல் தனிமையிலேயே வளர்ந்து வரலானார். பணக்காரக் குடும்பத்தில் பிறந்தமையால் தனியாசிரியரின் பொறுப்பில் இளமைக் கல்வி போதிக்கப்பட்டு வந்தது. உற்றார் உறவினர்களின் பிள்ளைகள் கூடக் கல்லூரி மாணவர்களாகவே இருந்தார்கள். ஆகவே பெரும்பாலும் தனியராய் எதையாவது சிந்திப்பது அல்லது விளையாடுவதுதான் அவருடைய வேலை.

நேரு, பிறப்பால் காஷ்மீரி ஆவார். பூலோக சொர்க்கம் என்று புகழப்படும் காஷ்மீர தேசத்தில் சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு ராஜ்கால் என்றொரு பெரியவர் வாழ்ந்து வந்தார். அவர் பன்மொழிப் புலவராக விளங்கினார். பாரசீகம், வடமொழி முதலிய பலமொழிகளில் அவர் பண்டிதராகத் திகழ்ந்தார், அவர் ஒரு கவிஞருங் கூட, சுற்றுப்புற மக்களின் பாராட்டுதலுக்கு அவர் உரியவராகத் திகழ்ந்ததால், 'பண்டிதர்' என்னும் பட்டப் பெயர்—இல்லை - பாராட்டுப் பெயர் அவருக்கு உரிய பெயராக மாறி விட்டது.

அந்த நேரத்தில் டில்லியின் ஆட்சி மொகலாயர்களிடம் இருந்தது. மொகலாய மன்னன் அவு

ரங்கசீப் இறந்து போகவே பருக்ஷியர் என்பவர் பட்டம் ஏறினார். அவர் ஒருமுறை காஷ்மீரம் சென்றார். அங்கே ராஜ்காலின் புலமையைக் கேட்டறிந்தார். அறிவுடைய ஒருவனை அரசனும் விரும்புவான் என்பது அறிஞர் கூற்று. அக் கூற்றிற்கேற்ப, பருக்ஷியர், ராஜ்காலைப் பெரிதும் விரும்பினார். காஷ்மீரத்திலிருந்து டில்லிக்கு வந்து விடும்படி வேண்டிக் கொண்டார். மன்னரின் வேண்டுகோளை ஏற்றுக் கொண்ட ராஜ்கால், 1716 இல் டில்லிக்கு வந்து சேர்ந்தார்.

வந்து சேர்ந்த விருந்தாளிக்கு மன்னர் சகல வசதிகளும் செய்துதர முன்வந்தார். கால்வாய்க் கரையின் அருகே காற்றோட்டமுள்ள இடத்தில் ஒரு வீடு கட்டிக் கொடுத்தார். மேலும் சாகீர் ஒன்றும் தரப்பட்டது. கால்வாய் என்பதை நஹர் என்று உருது மொழியில் சொல்லுவார்கள். எனவே ராஜ்கால் குடும்பத்தாரை நஹர்குடும்பத்தார் என்றே நகர மக்கள் அழைத்து வந்தனர்.

நஹர் என்பது நாளாவட்டத்தில் 'நெஹ்ரு' என அழைக்கப்பட்டது. நெஹ்ரு என்பதைத் தமிழ்மக்கள் நேரு என்றே அழைக்கலாயினர். இந்தப் புகழ்பெற்ற நேருக் குடும்பத்தில்பிறந்தவர்தான் ஜவகர்லால் நேரு. நேரு என்பது குடும்பப் பெயர். குடும்பப்பெயரைத் தனக்கே சொந்தப் பெயராக ஆக்கிக் கொண்ட பெருமை பண்டித நேருவின் தனிச் சிறப்பாகும்.

இன்பமும் துன்பமும் வாழ்வின் இரு தூண்களாகும். இன்பமாக வாழ்ந்து வந்த நேரு குடும்பத்தார்கள் பல இன்னல்களுக்கு ஆளாகி நின்றனர். காலப்போக்கில் ஜாகீரின் வருமானம் குறைந்து கொண்டே வந்து இறுதியில் எதுவும் இல்லை என்ற நிலைமை ஏற்பட்டு விட்டது. 1857 ஆம் ஆண்டு ஒரு கிளர்ச்சி நடந்தது. அதை 1857 இந்தியக் கிளர்ச்சி என்று சரித்திர ஆசிரியர்கள் அழைப்பர். அக்கிளர்ச்சியின் பயனாக டெல்லி அரசர்களுக்கும் நேருவின் குடும்பத்தாருக்கும் இருந்த உறவு அறுந்து விட்டது. முக்கியமான பத்திரங்கள் கூட தீக்கிரையாகி விட்டன. ஏறத்தாழ எல்லாச் சொத்துக்களையும் இழந்து விட்ட நேரு குடும்பத்தார் டெல்லியை விட்டு வெளியேறி ஆக்ராவில் குடிபுகுந்தனர். அவ்வாறு ஆக்ராவில் அமைதியாக வாழ்ந்து வரும் போது 1861 ஆம் ஆண்டு மே மாதம் ஆறும் நாளில் ஒரு குழந்தைநேருவின் குடும்பத்தில் பிறந்தது. அந்தக் குழந்தையின் பெயர்தான் மோதிலால் நேரு, கவிஞர் இரவீந்திரநாத்தாகூரும் இந்த ஆண்டில் இதே மாதத்தில் இதே நாளில் தான் பிறந்தார் என்பது குறிப்பிடத் தக்க சம்பவமாகும்.

மோதிலால் நேரு பிறக்கும் போது, குடும்பத்தின் செல்வ

நிலை வெகுவாக முன்னேறியே இருந்தது. எனவே அவர் மேனாட்டு மோகங் கொண்டவராகத் திகழ்ந்தார். குறும்புக்காரராக இருந்தும் ஆங்கிலப் பேராசிரியர்களின் அன்புக்கு உரியவராகவே திகழ்ந்தார். அவர்கள் மோதிலாலின் குணத்தையும் அறிவுத் திறனையும் வெகுவாக விரும்பினார்கள். பள்ளிப் படிப்புகளில் மோதிலால் முதல்வராகத் திகழவில்லை எனினும் வகுப்புகளில் ஆண்டு தோறும் வெற்றி பெற்றே வந்தார்.

பி. ஏ. இறுதித் தேர்வு எழுதினார். முதல்நாள் தேர்விலேயே அவர் நம்பிக்கை இழந்து விட்டார். அடுத்த நாள் தேர்வுக்குச் செல்லவில்லை. தேர்வு நேரத்தை, தாஜ்மகாலைச் சுற்றிப் பார்ப்பதில் கழித்துவிட்டார். முடிவுகள் அறிவிக்கப்பட்டபோது முதல் நாள் தேர்வில் வெற்றி பெற்றுவிட்ட விஷயம் வெளியாயிற்று. இதுகுறித்து மோதிலால் வருந்தினார். அவருடைய ஆசிரியர் கடுமையாகக் கோபித்துக் கொண்டார். இப்படியாகக் கல்லூரிப் படிப்பு முடிந்தது. அவர் பி. ஏ. பட்டம் பெறவே இல்லை.

பட்டம் பெறவில்லையே தவிர ஏதேனும் பதவியில் இருந்து பலரும் மெச்ச வாழ வேண்டுமென அவர் விரும்பினார். அக்காலத்தில் பலரும் மெச்சும்படியாக விளங்குதற்கு ஏற்ற தொழில்துறை ஒன்றே ஒன்றுதான். அதுதான் சட்டத்துறை. சட்டத்துறைக்குப் படித்தார். அதில் முதல் மாணவராக வெற்றி பெற்றுத் தங்கப் பதக்கமும் பெற்றார். சட்டத்துறை அவருக்குச் சலிப்பில்லாத துறையாகவும் சரியான துறையாகவும் அமைந்தது.

கான்பூரின் மாவட்ட நீதி மன்றத்தில் வழக்கறிஞராக வாழ்க்கையைத் தொடங்கினார். வருவாயை நாடி வருந்தி வருந்தி உழைத்தார். உழைப்பு, தகுந்த ஊதியத்தைத் தந்தது. இச்சமயத்தில் குடும்பத்தின் முழுப் பொறுப்பையும் அவரே தாங்க வேண்டியவரானார்.

மூன்று ஆண்டுகள் கான்பூரில் கடினமாக உழைத்தபின் அலகாபாத் வந்து தன் சகோதரருடன் இணைந்து நின்று உயர் நீதி மன்ற வழக்குகளைக் கவனிக்கலானார். இளமையிலேயே இணையற்ற வழக்கறிஞராக விளங்கினார். வேலை, வேலை, சதா வேலைதான். புகழும் பொருளும் மலைபோல் குவிந்தன. இந்த நேரத்தில் தேசிய காங்கிரஸ் மக்களின் மத்தியில் வேரூன்றி வளரலாயிற்று. வழக்கறிஞரும் தேசிய இயக்கத்தில் சிந்தையைச் செலுத்தலானார். தொழில் கெட்டுவிடும் என்பதற்காகத் தொட்டும் தொடாமலும் அரசியலில் ஆர்வம் காட்டிவந்தார். தீப்பொறி சிறிதெனினும் சிறிது நேரத்திற்குள் கனல் பிழம்பாக மாறிவிடும் என்பதை யாரே மறுக்க முடியும்?

வருவாய் வளர்பிறை போல வளர்ந்து வந்தது. வருமானம் பெருகப் பெருக, செலவும் மிகுந் தது. பாடுபட்டுப் பணத்தைத் தேடுவது செலவு செய்வதற்கே என்பது தான் மோதிலால் நேரு வின் முடிவான கருத்து வேண் டிய அளவுக்கு வேண்டிய நேரத்தில் பொருளீட்டும் திறமை இருக்கும்போது பணத் தைச் சேமித்து வைக்கக் கூடாது என்ற எண்ணத்தால் செலவு களும் விரிந்து வளர்ந்தன. வர வுக்கு ஏற்ற செலவு வாழ்க்கை முறையை மேனாட்டுப் பாணி யில் மோதிலால் ஏற்றுக் கொண் டார்.

இத்தகைய சூழ்நிலையில்தான் 1889 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 14-ஆம் நாள் ஜவகர்லால் பிறந்தார்.

அணையாத ஜோதியாக - அழி யாத செல்வமாக நேரு அவதரித் தார். அவரைத் தீராத பேரொளி என்றே உற்றோரும் மற்றோரும் பெற்றோரும் போற்றிப் புகழ்ந்து மகிழ்ந்து வந்தனர். தீராத பேரொளி தெவிட்டாத தேனாக இனிமையை ஊட்டி வந்தது.

## இளமைப் பருவம்

'ஆளுபவர்களுக்கும் ஆளப்படு பவர்களுக்கும் அடிக்கடி சண் டைகள் நிகழ்ந்து வந்தன. ஆளு பவர்கள் ஆங்கிலேயர்கள். ஆளப்படுபவர்கள் இந்தியர்கள். இந்தியர்கள் ஒருமுகமாக ஆங்கி லேயர்களை அடக்கி ஒடுக்க ஆர் வங் கொண்டு நின்றனர். இந்த நேரத்தில்தான் நேரு இளைஞராக வாழ்வைத் தொடங்கினார். 'இந் தியர்களிடம் ஆங்கிலேயர் உதை பட்ட போதெல்லாம் அவர் மகிழ்ந்தார். ஆங்கில ஆதிக் கத்தை அறவே வெறுத்தார். விடுதலை வேட்கை அவருடைய விருப்பமாயிற்று நாட்டுப்பற்று அவருக்கு நல்லதோர் அணிகல னாக விளங்கியது. தன்னலத்தை மறந்தார். பொது நலத்துக்குப் பாடுபடப் பூரிப்போடு நின்றார்,

அப்போது முன்ஷி முபாரக்அலி என்பவர் கணக்குப்பிள்ளையாக அவருடைய குடும்பத்தில் பணி புரிந்து வந்தார். அலி, உயர்ந்த குடும்பத்தில் பிறந்தவர். 1857 ஆம் ஆண்டில் நடந்த இந்தியக் கிளர்ச்சியின்போது அவருடைய குடும்பம் சீரழிந்து விட்டது. ஆங்கில வெறியர்கள் அக்குடும் பத்தில் பலரைக் கொன்று விட் டனர். பல கொடுமைகளுக்கு ஆளாகிய அலி புடம்போட்ட தங்கத்தைப் போல பொறுமை யின் சின்னமாகத் திகழ்ந்தார். இன்னல்கள், பலரை இணையற்ற வீரர்களாகவும் பலரை இழிந்த வீணர்களாகவும் ஆக்கி இருக் கின்றன என்பதை அனுபவம் அறிவுறுத்துகின்றது. முபாரக் அலி அவர்களைத் துன்பங்கள் தூய ஒளிவிளக்காக ஆக்கி விட்டன.

தாடி வளர்ந்திருந்த முன்ஷி முபாரக் அலி, ஓடிவந்து சிறுவ னாக நேருவைக் கட்டிப் பிடித் துக் கொண்டு கதை கதையாக

வீரவரலாறுகளைப் போதித்து வந்தார். நேருவுக்கு அலியின் கதைகள் என்றால் அபாரப் பிரியமுண்டு. நாட்கணக்கில் கதை கேட்கத் தயாராக இருந்தார். அவருடைய நினைவு நேருவின் நெஞ்சத்தில் நீங்காத இடம்பெற்று விளங்கியது என்றால் அலியின் பெருமையை யாரே சொல்ல வல்லார்?

கதை சொல்லுவதில் முபாரக் அலியைப் போலவே நேருவின் அம்மாவும் பெரியம்மாவும் திறமைசாலிகளாக விளங்கினர். பெண்களுக்கு என்ன கதை சொல்லத் தெரியும்? அவர்கள் அறிந்ததெல்லாம் புராணக் கதைகள், ஆகவேதான் நேருவுக்கு அவர்கள் இராமாயணம், மகாபாரதம் முதலிய காவியக் கதைகளையே கருத்து மகிழுமாறு சொல்லி வந்தனர். நேருவோ அவர்களைப் பற்றிக் கூறும் போது, 'கதைக் களஞ்சியங்கள்' என்றே குறிப்பிட்டுள்ளார் என்றால் அவர்களின் கதை சொல்லும் கலையைக் கேட்கவா வேண்டும்?

இளமைப்பருவத்தில் நேருவுக்கு இன்பமளித்து வந்த செயல்களில் குறிப்பிடத் தக்கது என்று, கங்கையில் அவர் நீராடுவதில் கொண்ட நீங்காத ஆசையைத்தான் சொல்ல வேண்டும். நீந்தித் திரிவதில் அவருக்கு நீங்காத ஆர்வமுண்டு.

நேருவுக்குத் திருவிழா என்றால் ஒரே திருப்திதான். மகிழ்ச்சியோடு வாழ வேண்டும் என்பது தான் அவருடைய மகத்தான லட்சியம். அவருடைய உள்ளத்திற்கு உவகை ஊட்டிய திருநாட்கள் பலப்பலவாம். ஒருவர் மேல் ஒருவர் தண்ணீரை ஊற்றிக் கொண்டு உவகையோடு ஓடி ஆடும் ஹோலிப் பண்டிகை - வீடுகள் தோறும் விளக்குகள் ஏற்றி விரும்பிய பலகாரங்கள் செய்து வேண்டிய மட்டும் தின்று திருப்தி கொள்ளும் தீபாவளித் திருநாள் - சிறையில் நள்ளிரவில் கிருஷ்ணன் பிறந்ததைக் கொண்டாடும் ஜென்மாஷ்டமி நன்னாள் - இராமச்சந்திரனின் பழைய கதையையும் அவனுடைய இலங்கை வெற்றியையும் கொண்டாடும் தசராவும், ராமலீலையும் ஆகிய திருநாட்கள் - இவை போக, மொகரம் பண்டிகை, ஈத் பண்டிகை, இப்படியாகப் பலப்பல திருநாட்களைக் கொண்டாடுவதில் தீவிரமான இன்பத்தைக் கண்டு மகிழ்ந்தார் நேரு.

இந்தத் திருநாட்களை எல்லாம் விட நேரு விரும்பி வரவேற்ற திருநாள் ஒன்று உண்டு. அத்திருநாளில் நடுநாயகமாகத் திகழ்பவர் பண்டித நேருவே ஆகும். அதுதான் அவருடைய பிறந்த தின விழா. அது ஆண்டுக்கு ஒரு முறைதான் வரும். அறியாத இன்பத்தைத் தரும். அன்று அதிகாலையிலே நேரு எழுந்து விடுவார். குளிப்பாட்டிச் சீருடைகள் தரப்பட்டுச் சிங்காரமாகி விளங்குவார், பின் ஒரு பெரிய தராசில் நிறுத்தி அவரளவு எடையுள்ள கோதுமை

முதலிய பொருள்களை வைத்து நிறுத்து, அப்பொருள்கள் ஏழை எளியவர்கட்கு வழங்கப்பெறும் அன்று நேருவுக்கு ஏராளமான வெகுமதிகள் கூட வந்து சேரும். இனிப்பும் காரமும் உள்ள தின் பண்டங்கள் நிறையக் கிடைக்கும். போதாக்குறைக்குச் சுவை மிகுந்த விருந்தும் உண்டு. இவ்வளவு தடபுடலான திருநாள் ஆண்டுக்கு ஒருமுறைதானே வருகிறது என்று நேரு பெரிதும் வருந்துவார். 'பிறந்த நாட்கள் நெருங்கி வரும் முதுமைக் காலத்தின் நினைவுச் சின்னங்கள்' என்பதை அப்போது அவர் அறியவில்லை.

இளமையில் நேரு ஆசை தீர விளையாடுவார். குறும்புகள் செய்வார். குறும்புகளுக்காக பலரின் வெறுப்புக்கு ஆளானதும் உண்டு. அடி உதைகள் கூட அடைந்திருக்கிறார். ஆனால் அதற்காக அவர் குறும்புகளைக் குறைத்துக் கொள்ளவே இல்லை.

இளமையில் நேருவுக்குக் குதிரைச் சவாரி என்றால் நிரம்பவும் ஆசை உண்டு. அப்போது அவருக்கு ஏழு அல்லது எட்டு வயதிருக்கும். அலாகாபாத்திலிருந்த குதிரைப் படை வீரர் ஒருவரோடு நாள் தோறும் அவர் குதிரைச் சவாரி செய்வது வழக்கம். ஒருநாள் அவர் வழியில் விழுந்து விட்டார். அவருடைய விலையுயர்ந்த அழகிய குதிரை நேருவைக் கீழே தள்ளி விட்டு நேரே வீட்டுக்குப் போய் விட்டது. அப்போது டென்னிஸ் விளையாடிக் கொண்டிருந்த நேருவின் தந்தையார் தனியாகக் குதிரை மட்டும் வருவதைக் கண்டு பதைபதைத்து விட்டார். நாலாபுறமும் ஆட்களை அனுப்பி நேருவைத் தேடச் செய்தார். வழியிலே விழுந்த காயங்களோடு நேரு நடந்து வருவதைக் கண்டனர்.

தன்னைத் தேடி ஒரு பட்டாளமே புறப்பட்டு வருவதைக் கண்டதும், தீரச் செயல்களைப் புரிந்த வீரனைப் போல நேரு வீரநடை நடக்கலானார்.

நேருவுக்குத் தன் தந்தையாரிடம் தணியாதபாசம் உண்டு. தந்தைக்கும் மகனிடம் தனிப்பட்ட பிரியம் உண்டு. ஒரு முறை நேருவின் தந்தையார், நேருவை நன்கு உதைத்து விட்டார். அது ஒரு ரசமான சம்பவமாகும்.

நேருவுக்கு ஐந்து அல்லது ஆறு வயதிருக்கும். மோதிலால் நேரு தன்னுடைய மேசையின் மீது இரண்டு பேனாக்களை வைத்து விட்டு வெளியே போய் இருந்தார். பேனாக்களைக் கண்டவுடன் நேருவுக்கு ஒரு பேனாவை எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசை பிறந்துவிட்டது. ஒருவருக்கு ஒரே சமயத்தில் எதற்காக இரண்டு பேனாக்கள் என்று எண்ணினார். எனவே ஒரு பேனாவை எடுத்துக் கொண்டு விட்டார். தந்தையார் வந்தார். பேனாவைக் காணவில்லை. கடுங்கோபம் கொண்டார். 'யார் எடுத்தது?' என்று

நேருவுக்கு வயது பத்துநடந்து கொண்டிருந்தது. பழைய வீட்டிலிருந்து புதிய வீட்டுக்குக் குடிபுகுந்தனர். புது வீட்டின் பெயர்தான் ஆனந்த பவனம். அதில் ஒருபெரிய தோட்டமும் நீச்சல் குளமும் இருந்தன. நீந்தி ஆடுவதில் நேருவுக்கு நீண்ட ஆசை உண்டு. கோடை காலத்தில் நாள் ஒன்றுக்குப் பலமுறை நீந்திக் குளித்துள்ளார்.

இச்சமயத்தில்தான் நேருவுக்கு ஒரு குட்டித் தங்கை பிறந்து விட்டாள். எல்லோருக்கும் தங்கையோ தம்பியோ இருக்கும்போது தனக்கு மட்டும் தம்பியும் தங்கையும் இல்லை என்ற குறை நேருவுக்கு நெடு நாட்களாக இருந்து வந்தது. அக்குறையை நிவர்த்தி செய்தாள் அவருடைய தங்கை. தங்கை பிறக்கும்போது தந்தையார் ஐரோப்பாவில் இருந்தார். குழந்தை பிறந்த செய்தியை அறிவித்த மருத்துவர், 'பங்காளி பிறக்கவில்லை. உனக்குக் கொண்டாட்டந்தான்'' என்று நேருவிடம் கூறினார். அந்தக் காலத்தில் தகப்பன் சொத்தில் பெண்களுக்குப் பங்கு இல்லை என்பதைச் சுட்டிக் காட்டிய மருத்துவரை நேரு கடிந்து கொண்டார். பணத்திலோ, பொருளிலோ நேருவுக்கு எப்போதும் அதிக ஆசை இருந்ததே கிடையாது. அவருடைய ஆசை எல்லாம் நாடு நல்ல முறையில் வாழ வேண்டும் என்பதுதான்.



நேருவும் அவரது அருமைத் தங்கையும்

கதறினர், கதறினர். யாரும் பதில் பேசவில்லை. கடைசியில் பேனா கண்டு பிடிக்கப்பட்டு விட்டது. எடுத்தவர் நேரு என்பதும் தெரிந்து விட்டது. தந்தை மகனை நையப் புடைத்து விட்டார். வலிஒருபுறம், வெட்கம் மறுபுறம். நேரு அழுது கொண்டே அன்னையிடம் தஞ்சம் புகுந்தார். இந்த நிகழ்ச்சியின் பலனாகப் பல நாட்கள் வரையில்தான் வலி இருந்தது. ஆனால் 'திருடக் கூடாது' என்ற நல்லெண்ணம் அவர் வாழ்நாள் முழுதுமே இருந்தது! தந்தையிடம் பெற்ற வேதனை குற்றத்திற்கேற்ற தண்டனை தான் என்று நேருவே ஒப்புக் கொண்டுள்ளார்.

நேருவுக்குச் சுமார் பதினொரு வயதிருக்கும். பள்ளிக் கூடத்தில் சேர்ந்து அவர் படிக்கவே இல்லை. வீட்டிலேயே இருந்து பாடம் சொல்லிக் கொடுக்க ஆசிரியர் ஒருவர் அமர்த்தப் பட்டார். அவர் பெயர் பர்டினெண்டு டீ. புரூக்ஸ், அவர் தீவிர பிரம்ம ஞானி. அன்னிபெசண்டு அம்மையாரின் சிபார்சின் பேரில் அவர் நேருவுக்கு ஆசிரியராக அமர்த்தப்பட்டார். அவர் நேருவின் மதிப்புக்கு உரியவராகவே விளங்கினர். புரூக்ஸின் தொடர்பால் அவர் பல புத்தகங்களைப் படிப்பதில் ஆர்வம் கொண்டார். சிறுவர் இலக்கியங்களைச் சிறப்புறப் படித்து அறிந்தார்.

லூயிஸ் காரல் என்பவர் எழுதிய புத்தகங்களையும், கிப்ளிங் எழுதிய காட்டு நூல்களையும், கிம் என்ற நூல்களையும், படித்தார். டான் குவிக்சாட் என்ற நூலுக்கு குஸ்டவ் டோரே என்பவர் எழுதிய விளக்கப் படங்கள் அவரை வெகுவாகக் கவர்ந்தன. பிரிட் ஜாப் நான்சன் எழுதிய வட கோடியிலே என்ற புத்தகம் அவரை வீரஉலகுக்கு அழைத்துச் சென்றது. ஸ்காட், டிக்கன்சன், தாக்கரே முதலியோரின் புத்தகங்களை முழு விருப்போடு படித்தார். மார்க் டுவைன், பெர்னுட் ஷா, எச். ஜி. வேல்ஸ் முதலியோர் எழுதிய புத்தகங்கள் அவருக்கு நல் விருந்தாயின. ஷெர்லக் கோம்ஸின் துப்பறியும்கதைகளை ஆசையோடு படித்தார். ஜெண்டாக் கைதி என்ற புத்தகம் அவரை மெய் சிலிர்க்க வைத்து விட்டது, ஜே. ஜரோம் எழுதிய ஒரு படகிலே மூவர் என்ற புத்தகத்தை நகைச்சுவைக்காகவே பன்முறை படித்துள்ளார். டுமாரியே என்பவர் எழுதிய டிரில்பி என்ற நூலும் பீட்டர் இப்பெஸ்டன் என்ற நூலும் அவர் நினைவை விட்டு அகலவே இல்லை. குறிப்பாகச் சொன்னுல் புரூக்ஸின் உறவால் நேரு கவிதைப் பித்தராக மாறி விட்டார். கவிதையைச் சுவைத்துப் படிக்கும் பழக்கத்தை அவ



ரால் மாற்றிக் கொள்ளவே முடியவில்லை. அவர் கவிதையின் பக்தனுகவே வாழ்நாள் முழுதும் வாழ்ந்து வந்துள்ளார்.

இளமையில் படிக்கத் தொடங்கிய அவர் வாழ்நாள் முழுதும் படித்துக் கொண்டே தான் இருந்தார். படிக்கும் பழக்கத்துக்கு அவர் ஓர் அடிமை என்ருல் அதில் தவறே இருக்க முடியாது.

புரூக்ஸ்ஆசிரியராக இருக்கும் வரையில் நேரு ஒரு பிரம்ம ஞானியாகவே விளங்கினுர். புரூக்ஸின் தொடர்பு நின்றது. பிரம்ம ஞானமும் நேருவை விட்டு நீங்கியது, நேருவுக்குப் புதிதாகத் தோன்றியது தேச ஞானமே. அதைத்தான் ஆயுட் காலம் முழுதும் அன்போடும் ஆர்வத்தோடும் பாதுகாத்து வந்தார்.

## ஹாரோவும் கேம்பிரிட்ஜும்

நேருவுக்கு அப்போது வயது பதினைந்து.

1905-ஆம் ஆண்டு மே மாதத்தில் அவர் தன் தாய் தந்தை தங்கையரோடு இங்கிலாந்துக்குச் சென்ருர். ஹாரோ கல்லூரியில் சேர்த்துவிடப்பட்டார். வெளிநாட்டார்களின்மத்தியிலே விடப்பட்ட நேரு சில நாட்கள் தத்தளித்தார். தனிமையால் வாடினுர். வீட்டு நினைவு வேறு வேதனை ஊட்டியது. சிரமப்பட்டார். படிக்க வேண்டும் என்ற ஆசையும் இருந்தது. நாளாவட்டத்தில் புதிய சூழ்நிலை அவரை ஆட்கொள்ளவே படிப்பில் ஈடுபடலானுர். விளையாட்டுக்களிலும் வெண்டிய அளவுக்குப் பங்கெடுத்துக் கொண்டார்.

நேருவுக்கு லத்தீன் தெரியாது. எனவே கீழ்வகுப்பில் தான் சேர்த்துக் கொள்ளப்பட்டார். ஆனுல் வெகு விரைவிலேயே மேல் வகுப்புக்கு மாறிக் கொண்டார். பல பாடங்களில் சிறப்பாகப் பொது அறிவில் அவரே முதல்வராகத் திகழ்ந்தார். மற்ற மாணவர்களைக் காட்டிலும் செய்தித்தாட்களையும் புத்தகங்களையும் அதிகமாகப் படித்தமையே அதற்குக் காரணமாகும்.

படிக்கும் காலத்தில் நேருவுக்கு இரண்டு துறைகளில் ஆர்வமுண்டு. ஒன்று அரசியல் மற்ருென்று விஞ்ஞானம். விண்வெளிப் பயணத்தில் அவர் வெகு சிரத்தை காட்டி வந்தார். 'வெகு விரைவில் வாரக் கடைசியில் இந்தியாவுக்கு விமானத்தில் வந்தாலும் வருவேன்,' என்று கூட அவர் தன் தந்தையாருக்குக் கடிதம் எழுதி உள்ளார்.

ஹாரோ அவருக்குப் பிடித்து விட்டது. அக்கரையோடு படித்து வந்தார். ஆங்கிலேயனைப் போலவே ஆங்கில ஆடைகள் அணிந்து அறிவோடும் துணிவோடும் திகழ்ந்தார் நேரு.

1906, 1907 ஆம் ஆண்டுகளில் இந்தியாவிலிருந்து உள்ளத்தை உருக்கும் செய்திகள்



வெளிவரலாயின. ஆங்கிலச் செய்தித் தாட்களிலிருந்து கொஞ்சந்தான் தெரிந்து கொள்ள முடிந்தது எனினும் அந்தக் குறைந்த செய்திகளிலிருந்தே பஞ்சாபிலும், மகாராஷ்டிரத்திலும் புரட்சிகள் நடந்து வருவதை நேரு புரிந்து கொண்டார். லாலா லஜபதி ராய், அஜித்சிங் இருவரும் நாடு கடத்தப்பட்ட செய்தி திலகரைச் சிறையில் அடைத்த செய்தி வங்காளக் கிளர்ச்சி பற்றிய செய்தி அந்நியப் பொருள்களைப் பயன்படுத்த மறுத்த செய்தி—இவை அனைத்தும் நேருவைத் துடிதுடிக்கச் செய்தன. செய்திகளைக் கேட்டறிந்த நேரு செந்தீயில் சூடுண்டவரைப் போலத் துடிதுடித்தார். தன்னோடு வாழ்ந்த பிற இந்திய மாணவர்களிடம் தன் உள்ளத்தைத் திறந்து காட்டி உணர்ச்சி வயப்பட்டார்.

கல்லூரியில் கருத்தோடு பயின்றமைக்காக நேருவுக்குப் பரிசு கிடைத்தது. பரிசுப் பொருள் ஒரு புத்தகமாகும். ட்ரிவெல்யன் என்பவர் எழுதிய கரிபால்டியின் வாழ்க்கை வரலாறு அந்தப் புத்தகம். அந்தப் புத்தகம் நேருவைப் பெரிதும் கவர்ந்தது. கரிபால்டியின் வரலாறு முழுவதையும் அறிய விரும்பினார். எனவே பல புத்தகங்களைக் காசு கொடுத்து வாங்கிப் படித்தார். கரிபால்டி இத்தாலி தேசத்தின் விடுதலைக்காகப் போரிட்ட வீரன். அவனுடைய வீர வரலாறு நேருவையும் ஒரு வீர வரலாற்றின் தலைவனாகவே ஆக்கிவிட்டது.

ஹாரோவில் இரண்டு ஆண்டுகள் ஓடி மறைந்து விட்டன. நேரு கேம்பிரிட்ஜ் போக விருப்பப்பட்டார். தந்தையாரும் சம்மதம் அளித்துவிட்டார். ஆகவே 1907-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் நேரு கேம்பிரிட்ஜ் சென்றார். டிரினிட்டிக் கல்லூரியில் சேர்ந்துகொண்டார். அப்போது அவருக்கு வயது பதினேழு.

கேம்பிரிட்ஜ் கல்லூரியில் மூன்று ஆண்டுகள் படித்தார். பல பெரிய மனிதர்களின் நட்புக்கு உரியவராகத் திகழ்ந்தார்.

இரசாயனம், புவியியல், தாவர இயல் முதலிய பாடங்களில் ஹானர்ஸ் பட்டம் பெற்ருர். இவை போக அவர் தாமாகவே அரசியல், பொருளாதாரம், இலக்கியம், வரலாறு முதலிய துறைகளிலும் நல்ல பயிற்சி பெற்று விளங்கினுர்.

1907, 1908-ஆம் ஆண்டு களில் இந்தியாவில் புரட்சி மனப்பான்மை கொழுந்துவிட்டு எரியத் தொடங்கியது. நேரு, அரசியலில் துணிந்து இறங்க விரும்பினுர். அரசியலில் அவ ருக்கு இருந்த ஆர்வத்தை அணையவிடாமல் காப்பாற்றிய புத்தகம் மெரிடித் டவுன் சென்டு என்பவர் எழுதிய 'ஆசியாவும் ஐரோப்பாவும்' என்பதேயாகும்.

தொடக்கத்தில் நேரு திலகர் கொள்கையைப் பின்பற்றுபவ ராகவே இருந்தார். அதாவது தீவிரவாதியாகத் திகழ்ந்தார்.

கேம்பிரிட்ஜிலிருந்த இந்திய மாணவர்கள் 'மாஜலிஸ்' என்ற சங்கம் ஒன்றை நடத்தி வந்தார் கள். அதில் அடிக்கடி அரசியல் பிரச்சினைகள் ஆராயப்படுவ துண்டு. பல்கலைக்கழக மாணவர் மன்றத்தையும், பாராளு மன்றத் தையும் முன்மாதிரியாகக் கொண்டு பின்பற்றி நடப்பது தான் அச்சங்கத்தின் நடை முறையாகும். நேரு அச்சங்கக் கூட்டங்களுக்கு ஆர்வத்துடன் சென்று வந்தார். ஆனுல் ஒரு நாள் கூடப் பேசியதே இல்லை. பேச்சுத் துறையில் அவருக்குத் தன்னம்பிக்கை இல்லாத நேரம் அது. அத்துடன் மேடைக் கூச் சமும் அவருக்கு இருந்து வந்தது.

பல்கலைக் கழக மாணவர் மன்றத்தில் கூட நேரு பேசி யதே இல்லை. கூட்டங்களுக்குப் போவாரே தவிர, மேடை யேறிப் பேசவே மாட்டார். அந்த மன்றத்தில் ஒரு காலப் பகுதியில் ஒரு முறை கூடப் பேசாத மாணவர்கள் இருந்தால் அவர்கள் அபராதம் செலுத்த வேண்டும் என்பது கல்லூரியின் விதி. இந்த விதிக்கு உட்பட்டு நேரு பலமுறை அபராதங்கூடச் செலுத்தி இருக்கிருர் என்ருல் அவருடைய மேடைப் பிரசங் கத்தை என்னென்று கூறுவது!

இப்படியாக மேடைக்கு அஞ் சிய மாணவர்தான் அரசியல் வாதியாக மாறிய பின்னர் நாள் ஒன்றுக்கு நாலைந்து கூட்டங் களுக்குக் குறையாமல் சொன் மாரி பொழிந்து வந்துள்ளார்.

பிபின் சந்திர பால், லாலா லஜபதி ராய், கோபாலகிருஷ்ண கோகலே முதலானேர் இங்கி லாந்துக்கு வந்தபோது அவர் களோடு நேரு நெருங்கிப் பழகும் வாய்ப்பைப் பெற்றிருந்தார். இச்சமயத்தில் நேருவின் தந்தை யார் இந்திய அரசியலில் ஈடுபட லானுர். தந்தையின் கொள்கை களை முழுக்க முழுக்க ஏற்றுக் கொள்ள மறுத்த நேரு, தந்தை யார் அரசியலில் ஈடுபட முன் வந்த கொள்கையை முழுக்க முழுக்க ஏற்றுக் கொண்ட துடன் போற்றிப் புகழவும் முற் பட்டார். தந்தை மிதவாதி;

மகனோ தீவிரவாதி. எப்படி இருவருக்கும் ஒன்றுபட்ட கொள்கைகள் இருக்கமுடியும்?

அரசியலில்தீவிரமாக நுழைய வேண்டும் என்ற ஆசை ஒரு புறம் இருக்க, அவரின் கேம்பிரிட்ஜ் படிப்பு ஒருவழியாக முடிந்து விட்டது. படிப்பு முடிந்தவுடன் என்ன தொழில் மேற்கொள்ளலாம் என்ற கேள்விகளுக்குப் பதில் காண வேண்டிய நிலையில் இருந்தார்.

அப்போது இந்திய சிவில் சர்விஸ் (I. C. S.) உத்தியோகத்தில் மக்களுக்கு ஆர்வம் இருந்துவந்தது. அத்துறையில் பயிற்சி பெற விரும்பிய நேரு, சூழ்நிலை சுற்றநிலை காரணமாக விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள இயலவில்லை.

கேம்பிரிட்ஜில் பட்டம்பெற்ற போது அவருக்கு வயது இருபது. 1910-ஆம் ஆண்டில்தான்



பட்டம் பெற்றார். பிள்ளையை உத்தியோகத்திற்கு அனுப்பி விட்டுத் தனிமையில் வாழ விரும்பாத பெற்றோர்கள்', நேருவையும் வழக்கறிஞராக ஆக்கித் தம்மோடு வைத்துக் கொள்ளுவதையே பெரிதும் விரும்பினர்.

நேருவும் சட்டம் படிக்க விரும்பினார். எனவே சட்டத்துறையில் பயிற்சி பெறுவதற்காக அவர் கேம்பிரிட்ஜிலிருந்து லண்டனுக்கு வந்து சேர்ந்தார். அங்கே இரண்டு ஆண்டுகள் சட்டம் பயின்றார். அத்துறையில் வெற்றி பெற்றார்.



லண்டனில் இருக்கும்போது அவரது உள்ளத்தைக் கவர்ந்து விட்டன பேபியன் சோஷலிஸக் கொள்கைகள். 1910-ஆம் ஆண்

டில் அயர்லாந்தில் தொடங்கப் பெற்ற ஷின்பேன் சுதந்திர இயக்கக் கருத்துக்களும் அவரின் கருத்துக்கு விருந்தூட்டின. இப்படியாக நேரு, சோஷலிஸக் கொள்கைகளோடு இடையுறாத பற்றுக் கொள்ளும்படி பிற்கால வாழ்வுக்கு அவருள்ளத்தில் வித்திட்ட பெருமை லண்டன் மாநகரையே சாரும்.

ஏறத்தாழ இங்கிலாந்தில் ஏழு ஆண்டுகள் தங்கிப் படிப்பை முடித்துக் கொண்ட நேரு 1912-ஆம் ஆண்டு கோடைக் காலத்தில் இந்தியாவுக்குத் திரும்பினர்.

## இருமுறை தப்பினர்

நேருவுக்கு உல்லாசப் பயணம் என்ருல் உயிர். அவர் அடிக்கடி பல நாடுகளுக்குப் போய் வருவார். அவர் போகாத நாடில்லை. பேசாத நகரில்லை. பாராத இடமில்லை. உலகம் சுற்றிய இந்தியர் என்று சொன்னல் அது நேருவுக்குத்தான் நேர்மையான பெயராக அமையமுடியும்.

1910 ஆம் ஆண்டு நார்வே நாட்டுக்குச் சென்ருர். வேடிக்கையாக ஊர் சுற்றிப் பார்ப்பது தான் அவருடைய நோக்கம். மலைப்பிரதேசங்கள் இருந்தன. அவற்றை நண்பர்களோடு சுற்றிப் பார்த்துக் கொண்டே வந்தார். குறிவைத்து ஓர் இடத்தை அடைய விரும்பினர். அவ்விடத்தைப் போய்ச் சேர்ந்தவுடன் களைப்பு அதிகமாக இருந்தது. உடலில் வியர்வைத் துளிகள் மழை நீரைப்போல வழிந்தோடின. குளிக்க விரும்பினர் நேரு. சென்ற இடமோ சிறிய தொரு விடுதி (ஹோட்டல்) ஆகும். அங்கே உள்ளவர்கள் குளித்தல் என்ருல் என்ன என்பதையே அறிய மாட்டார்கள். நேரு குளிக்க விரும்பினர். குளித்தலின் பொருள் தெரியாமல் அங்குள்ளவர்கள் திகைத்தனர்.

உடலில் நீரை ஊற்றிக் கொள்ளுதற்கு அந்த ஹோட்டலில் வசதிகள் செய்யப்படவில்லை. எனவே அவர்கள் அருகிருந்த நீரோடையைக் காட்டி அங்கு சென்று குளித்துவரச் சொன்னர்கள். விடுதிக்காரர் உடலைத் துடைத்துக் கொள்ள துண்டுகளைக் கொடுத்தனுப்பினர். துண்டுகளை எடுத்துக் கொண்டு நேருவும் மற்ருெரு ஆங்கில இளைஞரும் ஓடையை நோக்கி ஓடினர்.

நீரோடை கரடுமுரடான மலைச்சரிவில் பேரிரைச்சலோடு ஓடிவருவதைக் கண்டார்கள். முதலில் துணிச்சல்காரரான நேரு தண்ணீரில் குதித்தார். ஆழமில்லாத பகுதி அது. ஆனல் குளிருள்ளதாக விளங்கியது. தரை, வழுக்கல் பிரதேசமாக இருந்தது. நேரு வழுக்கி விழுந்து விட்டார். பனிக்கட்டியைப் போல குளிர் உள்ள தண்ணீர், அவரது உடலை உணர்ச்சி இல்லாத கட்டையாக மாற்றி விட்டது. கால் கைகள் விளங்கவே இல்லை. உருண்டோடிய

தண்ணீர் நேருவையும் உருட்டிக் கொண்டு ஓடியது.

நல்ல வேளையாக, ஆங்கிலேயத் தோழன் கரைவழியாக ஓடிவந்து நேருவின் கால்களைக் கைகளால் பிடித்திழுத்துக் கரையில் போட்டான். அவன் அன்று காப்பாற்றி இராவிட்டால் நேரு நீர்வீழ்ச்சியின் அழைப்புக்கு ஆளாகி நீண்டதோர் பரலோகப் பயணத்தையே மேற்கொண்டிருக்கக் கூடும். இறையன்பு, இந்தியாவுக்கு நன்மை செய்யக் கருதி நேருவைக் காத்துத் தந்தது. இப்படியாக அவர் ஒரு முறை உயிர் தப்பினார்.

1916 ஆம் ஆண்டு டில்லி மாநகரில் நேருவுக்குத் திருமணம் நடைபெற்றது. வசந்த பஞ்சமி அன்றுதான் அவருடைய விவாகம் விமரிசையாக நடந்தது. அவருடைய மனைவியின் பெயர் கமலா நேரு. அழகிலும் அறிவிலும் நேருவுக்கு நேரான சிறப்புடையவர் கமலா.

திருமணம் ஆன உற்சாகத்தில் நேரு மகிழ்ச்சியோடு விளங்கினார். குடும்பத்தாரைக், காஷ்மீரில் ஒரு பள்ளத்தாக்கில் விட்டு விட்டு, அவருடைய பெரியப்பாவின் பிள்ளை ஒருவனோடு பல வாரங்கள் மலைப்பகுதிகளில் சுற்றித் திரிந்தார். 'லாடக்' சாலைவழிகளில் அலைந்து திரிந்தனர். மலைச்சரிவுகளின் மூலமாகத் திபெத்து நாட்டிற்குப் போகும் ஒடுக்கமான ஒற்றையடிப் பாதைகளும் ஒடுங்கிக் கிடந்த பள்ளத்தாக்குகளும்



விண்ணில் இருப்பன போன்று தோன்றின. இக்காட்சிகள் இடையறாத இன்பத்தை ஊட்டி வந்தன.

நேரு ஒடுக்கமான பள்ளத்தாக்குப் பாதையின் வழியாக மலையின் பிரமாண்டமான உச்சியை எட்டிப் பிடிக்க முயன்றார். மலைச்சிகரங்களில் அடர்ந்த பனி. உறைந்த பனிக்குன்றுகள் சிறிது சிறிதாகக் கரைந்து உச்சியிலிருந்து உருண்டோடி வந்தன. காற்றும் வாடைக்காற்றாக வீசியது. அது வலுவுள்ள காற்றாகவும் இருந்தது.

வெகு சிரமங்களுக்கிடையே ஜோகிலாக் கணவாயைக் கடந்து மாட்டயன் என்ற இடத்தை அடைந்தார் நேரு. அந்த இடத்

திலிருந்து அமரநாத் குகை எட்டு மைல் தொலைவில் இருந்தது.

இடையிடையே பனிப் பாறைகள் இருந்தன. நேருவின் பேரார்வம், பேராபத்துக்களை மறைத்து விட்டது. கடல் மட்டத்துக்கு மேல் 11, 500 அடி உயரம் சென்று விட்ட நேரு இன்னும் உயர்ந்து கொண்டே போக விரும்பினார். அவ்வட்டாரத்தைச் சேர்ந்த ஆட்டிடையர்களில் ஒருவனைத் துணைக்கு அழைத்துக் கொண்டு மலையேறும் பயணம் தொடரப் பட்டது.

கயிறுகளைப் பிடித்துக் கொண்டே பல பனியாறுகளைக் கடந்து விட்டார் நேரு. உயரே செல்லச் செல்ல உடம்பு வலி கொண்டது. மூச்சு வாங்கவோ விடவோ முடியாத நிலை ஏற்பட்டது. பளுவில்லாத மூட்டைகளைச் சுமந்து வந்த கூலியாட்கள் கூட இரத்தம் இரத்தமாக வாந்தி எடுத்து விட்டனர். பனி மழை பெய்தது. பனியாறுகள் வழுக்கி விட்டன.

இடைஞ்சல்கள் எண்ணற்றனவாக இருந்த போதிலும் நேரு முயற்சி உடையவராகவே திகழ்ந்தார். இப்போது அவர் கடல் மட்டத்துக்கு மேல் 15,000 அடி உயரத்தில் இருந்தார். இன்னும் உயர்ந்து செல்லவே விரும்பினார்.

நேரு ஓரிடத்தில் எதவாகக் காலெடுத்து வைத்தார். மேலாகத் தெரிந்த பனிப்படலம் விலகிவிட்டது. ஆழ்ந்து அகன்ற பெரிய பள்ளத்தாக்கில் அவர் விழுந்து விட்டார். நல்லவேளையாகக் கயிற்றைப் பற்றி இருந்த கைப்பிடி நழுவவில்லை. பள்ளத்தின் பக்கச் சுவரில் காலை உதைத்துக் கொண்டு கஷ்டத்தோடு நின்றுகொண்டிருந்தார். துணைக்குச் சென்றவர்கள் அவரை மெதுவாகத் தூக்கிக் கரை சேர்த்தனர்.

ஆபத்தால் அதிர்ச்சி அடைந்த போதிலும் நேரு முயற்சியைக் கைவிடத் தயாராக இல்லை. பள்ளங்கள் அடுத்தடுத்து இருந்ததாலும், பயணத்தைத் தொடர்ந்து நடத்துதற்குரிய சாதனங்களோ கருவிகளோ இல்லாததாலும் மலையேறும் முயற்சியை மலையேற விட்டு விட்டு வீடு திரும்பினார் நேரு.

அமரநாத் குகையை அடைய விரும்பிய நேரு ஆபத்தில் சிக்கி, கைலாசத்தையே காண வேண்டியவரானார். அப்போதும் இறையன்பு, இந்தியாவுக்கு நன்மை செய்யக் கருதி நேருவைக் காத்துத் தந்தது. இப்படியாக அவர் இரண்டாம் முறையும் உயிர்தப்பினார்.

இரண்டு முறைகள் இளவயதில் இறைவனால் காத்துத் தரப்பட்ட ஒளிவிளக்கை எழுபத்தைந்தாவது வயதில் இறைவன் கவர்ந்து சென்றுவிட்டான். படைத்தவனே எடுத்துக் கொண்டான். கொடுத்தவனே திருப்பிக்கேட்கும்போதுகொண்டவன் என்ன செய்வான்?

# அரசியல்  ஞானி

நேருவுக்கு வேட்டை யாடுவதில் விருப்பம் அதிகம். அவருடைய விருப்பத்திற்குக் காரணம் பொழுது போக்கும் எண்ணமே தவிர, விலங்குகளைக் கொன்று குவிக்க வேண்டும் என்ற எண்ணம் அல்ல. தெளிவாகச் சொன்னுல் 'கொல்லாத வேட்டையாடி' என்று அவரைக் கூறலாம். சில சமயங்களில் விலங்குகளைக் கொன்றும் உள்ளார். ஒருமுறை காஷ்மீரத்தில் வேட்டையாடும்போது குருட்டடியாக ஒரு கரடியைக் கொன்று விட்டார். மற்ருெருமுறை தற்செயலாக ஒரு மானின் மீது அவர் சுட்ட குண்டு பாய்ந்து விட்டது. தீங்கறியாத அந்த மான்குட்டி அலறித் துடித்துக் கொண்டு நேருவின் காலடியிலே வந்து வீழ்ந்தது. கண்களில் நீர்வடிய அந்த மான் கஷ்டப்பட்டுத் துடிதுடிப்பதைக் கண்ட நேருவும் கண்ணீர் வடித்தார்; கஷ்டப்பட்டார்; துடித்தார். வேட்டையாடுவதில் இருந்த ஆர்வம் அவரை விட்டு அகன்றது.

பொழுது போக்குக்காக வேட்டை யாடுவதை விரும்பினுர். வேட்டை ஆடுவதால் பொழுதுமட்டும் போகவில்லை; விலங்குகளின் உயிரும் போகின்றது என்பதைக் கண்டார். வேட்டையாடுவதில் வெறுப்புக் கொண்டார். இனிப் பொழுது போக என்ன செய்வது?

நீதிக்குப் போராடுவதில் நேரு நிகரற்றவர். வேட்டையாடுவதை விட்டு விட்ட பின்னர் நீதிக்குப் போராடக் கச்சை கட்



புலியோடு விளையாட்டு



(கொல்லாத வேட்டையாடியான
நேரு - இளவயதில்.)

டிக் கொண்டு நின்றார். அப் போது இந்தியாவுக்கு ஆங்கி லேயர்கள் இழைத்த அநீதிகள் கொஞ்ச நஞ்சமல்ல.

அந்நாட்களில் சரோஜினி தேவியார் ஆற்றிய சொற் பொழிவுகள் அவரின் உள்ளத் தைக் கொள்ளை கொண்டன. நாட்டுப்பற்றையும் தேசிய உணர்வையும் நேருவுக்கு ஊட் டிய பெருமை சரோஜினி தேவி யாரின் பேச்சுக்களுக்கே உண்டு.

1916 இல் அயர்லாந்தில் சுதந் திரக் கிளர்ச்சி நடைபெற்றது. ரோஜர் கேஸ்மண்டு என்பவர் தூக்கு மேடைக்கு அனுப்பப் பட்டார். அவருடைய தூக்கு மேடைப் பிரசங்கம் அடிமை நாட்டு மக்களின் உணர்ச்சியை எடுத்துக் காட்டிற்று. ஒரு நாட் டின் விடுதலை உணர்ச்சியை படைப் பலத்தாலும், பணப் பலத்தாலும் அடக்கி விட முடி யாது என்ற உண்மை அம்பல மாக்கப்பட்டது. இவ்வுண் மையை அறிந்து உலகத்தில் உள்ள அடிமை மக்கள் விடுதலை கருதி வீராவேசம் கொண்டனர். நேருவுக்கும் விடுதலை உணர்வு வீறிட்டு நின்றது.

புதிய நூல்களைப் படித்துக் கொண்டே இருந்தார். ஆழ்ந்த படிப்பு அகன்ற அறிவை ஊட் டிற்று. அரசியல் துறையில் சிறந்த அறிஞராகத் திகழ்ந்தார். பெர்ட்ரண்டு ரஸ்ஸல் எழுதிய புத்தகங்கள் நேருவுக்கு உலப் பிலா இன்பத்தை ஊட்டி வந்தன.

இந்தச் சூழ்நிலையின் காரண மாக அவருக்கு அரசியல் துறை யில் ஆர்வமும், சட்டத்துறை யில் சலிப்பும் தோன்றின. சட் டத்துறையை ஒதுக்கித் தள்ளி விட்டு அரசியல் துறையில் அடி எடுத்து வைப்பதற்குரிய தரு ணத்தைக் காத்துத் தவங் கிடந் தார்.

சர் ராஷ் பிகாரி கோஷ் என்ப வர் அக்காலத்தில் கல்கத்தாவில் புகழ் பெற்ற வழக்கறிஞராகத் திகழ்ந்தார். அவர் நேருவின் பேரில் அக்கறை காட்டத் தொடங்கினர். சட்டத்துறை யை விட்டுவிடக்கூடாது என்று

புத்திமதிகள் கூறி வந்தார். சிறப்பாக, சட்ட நூல்கள் எழுதுமாறு தூண்டி வந்தார். நூல் எழுதுவதற்கு வழிகாட்டுவதாகவும், எழுதியதைத் திருத்தித் தருவதாகவும் கூறிவந்தார். அவ்வளவு அறிவுரைகளும் ஆசை உரைகளும் விழலுக்கிறைத்த நீராயின. நேருவுக்கு அரசியலில் இருந்த ஆர்வம் வளர்பிறைச் சந்திரனைப் போல வளர்ந்து வந்தது.

நேருவுக்குப் பொருள் ஈட்ட வேண்டும் என்ற ஆசையோ நிர்ப்பந்தமோ இருந்திருந்தால், சட்டநூல் எழுதும் பணியில் ஈடுபட்டிருக்கக் கூடும். பணத்தைச் செல்வமாகக் கருதாமல் சிரமமாகக் கருதிய சீர்மை நேருவின் தனிஉடைமை ஆகும். நகைகளை, நாணயங்களை ஆவலோடு அவர் எதிர்பார்த்தவரே அல்லர்.

அவருடைய ஆசையெல்லாம் நாட்டின் நல்ல காலத்தைப் பற்றியே இருந்தன. அரசியலில் இருந்த ஆர்வம் பொருள்களில் இருந்ததே இல்லை. செல்வத்தைப் பெரிதும் விரும்பவில்லை எனினும் மக்கட் செல்வங்களிடம் மகத்தான அன்பை என்றும் கொண்டிருந்தார். பேரன்மார்களோடு பேரன்பு கொண்டு விளையாடிய அவரை மக்கட் செல்வத்தின் மகத்தான தலைவன் என்று எப்படிக் கூறாமல் இருக்க முடியும்?



1915 ஆம் ஆண்டு. அப்போதுநேருவுக்கு வயது இருபத்தைந்து. ஆங்கில அரசாங்கம் இந்தியர்களின் எழுத்துரிமையை எதிர்த்துச் சட்டங்கள் கொண்டு வந்தது. அதை எதிர்த்து ஆங்காங்கே கிளர்ச்சிகள் எழுந்தன. அலகாபாத்தில் மாபெரும் கூட்டம் ஒன்று கூட்டப்பட்டது. டாக்டர் தேஜ் பகதூர் சாப்ரு அக்கூட்டத்துக்குத் தலைமை தாங்கினர்,

அந்தக் கூட்டத்தில்தான் முதன் முதலாகப் பண்டித நேரு பங்கெடுத்துக் கொண்டார். பேச்சு ஆங்கிலத்தில் அமைந்திருந்தது. சிறிது நேரம்தான் பேசினர் என்றாலும் சிந்தையைத் தொடும்வண்ணம் தூய்மையாகவும் தொடர்பாகவும் பேசினர். பேச்சாளரைத் தலைவர் பிரியத்தோடு அணைத்துக் கொண்டு, 'இனி நீ ஒரு சிறந்த பேச்சாளனுகத் திகழ்வாய்,' என்று ஆசி கூறினர். ஆசி பொய்க்கவில்லை. அகில உலக



பேரரோடு விளையாடும் பெரியோன்!

மக்கள் போற்றும் வண்ணம் அற்புதமான பேச்சாளராகவே அவர் விளங்கி வந்தார்.

1918 ஆம் ஆண்டு உலக மகா யுத்தம் முடிந்து விட்டது. ஆங்கில அரசாங்கத்தார் இந்திய மக்களுக்கு ஏராளமான நன்மைகள் செய்து தருவதாக வாக்களித்திருந்தனர்.

நன்மைகள் செய்து தருவதாகச் சொன்னவர்கள் சொன்னபடி செய்யாமல் இருந்துவிட்டால் கூடப் பாதகமில்லை; அதற்கு மாறாக இந்தியர்களைப் பலவகையாலும் இன்னல்படுத்த முன் வந்தனர். அடக்குமுறைச் சட்டங்கள் பல அமுலாக்கப் பட்டன. இவைதான் ஆங்கிலேயர்களின் அரசியல் அகராதியின் படி நன்மைகளோ, என்னவோ!

1918 ஆம் ஆண்டு ஜூலை மாதம் ஒரு மோசமான சட்டம் அமுலுக்கு வந்தது. அச்சட்டத்தின் பெயர் 'ரௌலட் சட்டம்'. இச் சட்டத்தின்படி அரசாங்கம், யாரைக் குற்றவாளி என்று கருதுகிறதோ அவனை விசாரணை செய்யாமலேயே கைதியாக்கிச் சிறைச்சாலைக்கு அனுப்பி வைக்கலாம். இதைக் காந்தி அடிகள் கடுமையாகக் கண்டித்தார். எதிர்ப்புக்குத் தயாராகநின்றார். இன்னும் பல தேசியத் தலைவர்கள் இச்சட்டத்தை எதிர்த்துப் போராடத் தயாராக இருந்தனர். போராட்டத்தைத் தடுக்கக் கருதிய அரசாங்கம் சில சலுகைகள் தர முன்வந்தது. அவற்றுள் முக்கியமான சலுகை அச்சட்டத்தின் ஆயுட் காலத்தை மூன்றே ஆண்டுகள்

தான் என்று அறிவித்தது தான்!

ரௌலட் சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்த அரசாங்கம், யாரையும் அச்சட்டத்தின் பேரால் துன்புறுத்தவே இல்லை. இதிலிருந்து மக்கள் புரிந்து கொண்ட உண்மை இது தான்.

"ஆங்கில அரசாங்கம் மக்களின் எதிர்ப்பைப் பொருட்படுத்தாமல் ரௌலட் சட்டங்களை நிறைவேற்றியதின் நோக்கம் அவைகளைப் பயன்படுத்தவேண்டும் என்பதல்ல; நாட்டில் அச்சத்தை விளைவிக்க வேண்டும் என்பதே."

1919ஆம் ஆண்டின் தொடக்கம், காந்தி அடிகள் கடுமையான நோயால் கஷ்டப்பட்டார். உடலைப்பற்றி இருந்த நோயை விட அவரைக் கஷ்டப்படுத்தியது அவரின் உள்ளத்தைப் பற்றி எரிந்த ஆங்கில ஆதிக்க வெறி என்னும் நோய்தான். பிணியை மறந்தார், நாட்டுப் பணியை மேற்கொண்டார். சட்டமறுப்பு இயக்கத்தைத் தொடங்கினார். சத்தியாக்கிரகச் சபையை நிறுவினார். 'சட்டத்தை எதிர்க்க வேண்டும். அதனால் சிறைச்சாலை செல்லவும் தயாராக இருக்க வேண்டும்.' இதுதான் சத்தியாக்கிரகச் சபையின் முக்கிய நிபந்தனை.

இந்த ஏற்பாட்டைச்செய்தித் தாட்களில் படித்தறிந்த நேரு தேனுண்ட வண்டினைப் போல, சிந்தை மகிழ்ந்தார்; உள்ளத்தை உறுத்திக் கொண்டிருந்த சுமைகுறைந்துவிட்டது போன்ற உணர்வைப் பெற்றார். வெகுகாலமாக எதிர்நோக்கி இருந்த நேரடியான, வெளிப்படையான, வன்மையான ஒரு செயல்முறைத் திட்டம் கிடைத்து விட்டதாகக் கருதிமகிழ்ச்சி உற்றார். ஆர்வம் பொங்கி வழிந்தது. சத்தியாக்கிரகச் சபையில் உடனடியாகச் சேரத் துடிதுடித்தார்.

நேருவின் தந்தையாருக்கு நேருவின் போக்குப் பிடிக்கவே இல்லை. தந்தைக்கும்மகனுக்கும் வேறுபட்ட எண்ணங்கள். அவற்றின் விளைவாக இருவர் உள்ளங்களிலும் இடையறாத போராட்டங்கள் நடந்து வந்தன. ஒருவருக்கொருவர் எவ்வளவு தூரம் விட்டுக்கொடுக்க முடியுமோ அவ்வளவு தூரம் விட்டுக் கொடுக்க முயற்சி செய்தார்கள். தந்தையாரின் உள்ளம் புண்ணாகக் கூடாது என்ற எண்ணம் நேருவுக்கு. நேருவின் போக்கு மாறிவிடக் கூடாதே என்ற மனக்கவலை மோதிலால் நேருவுக்கு. தாய்நாட்டுப் பற்று இருவருக்குமே இருந்துதான் வந்தது.

நேருவுக்கு நாட்டுப்பற்று மட்டுமே இருந்தது. மோதிலாலுக்கோ நாட்டுப்பற்று மட்டுமன்றி பிள்ளைப்பற்றும் பிணைந்து இருந்தது. அரசியலில் சேர்ந்து அல்லல்பட்டு சிறையில் அவதிப்பட நேரிடும்நிலைமையை அவர் மகனுக்கு ஏற்படுத்தக்

கூடாது என்று பெரிதும் கலங்கினார். சிறையில் அடைபட்டால் வெறும் தரையில் படுத்து மகன் எப்படிக் கஷ்டப்படுவான் என்பதை நினைத்துப் பார்த்துப் புரிந்துகொள்ள முடியாத மோதிலால், ஒருநாள் தன் வீட்டில் தரையிலேயே படுத்துக் கிடந்து அனுபவத்தால் அறிய முயற்சி செய்தார் என்றால் அவருடைய பிள்ளைப் பாசத்தை எவ்வாறு விளக்கிக் கூற முடியும்?

நிலைமை தர்ம சங்கடமாகப் போய்க்கொண்டிருந்தது. மோதிலால் நேரு, காந்தி அடிகளுக்குக் கடிதம் எழுதினார். காந்தி அடிகளும் அலகாபாத் வந்து சேர்ந்தார். இருவரும் நெடுநேரம் பேச்சுவார்த்தைகள் நடத்தினர். பின், காந்தி அடிகள் நேருவை அழைத்து, 'தந்தை சொல் மிக்க தோர் மந்திரம் இல்லை. எனவே நீ தந்தையின் மனம்நோகும்படி நடக்கக் கூடாது' என்று அறிவுரை கூறினார். இவ்வறிவுரை நேருவுக்கு மகிழ்ச்சியைத் தரவில்லை. இருப்பினும் பெரியோர் வார்த்தைகளுக்கு மதிப்பு தந்து அமைதியாக இருந்தார்.

நல்ல வேளையாக, நேரு சத்தியாக்கிரகச் சபையில் சேர இயலாதுபோய்விட்டது. ஏனெனில் அச்சபையில் அரசியல் சூழ்நிலைகள் காரணமாகத் தன் அலுவல்களை அச்சபை நிறுத்திக் கொண்டு விட்டது.

காந்தி அடிகளின் கருத்துக்களில் சுதந்திரப் பேருண்மை ஒளி விடுவதைக் கண்ட நேரு காந்தியின் பிரதம சீடராகவே அரசியலில் வாழ விரும்பினார். இந்தியாவின் பலகோடி மக்களுக்குத் தலைவராக விளங்கினார் நேரு, அவருடைய தலைவராக விளங்கியவர் காந்தி அடிகள். இருவரும் முதன் முதலாக 1916 ஆம் ஆண்டு இலட்சுமணபுரியில் நடந்த காங்கிரஸ் கூட்டத்தில் தான் சந்தித்தனர். காந்தி அடிகளின்முகப்பொலிவு நேருவின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தது. சான்றோர்களின் நட்பு இருநிலம் பிளக்க வேர் ஊன்றும் மரத்தின் இயல்பினதாகையால் காந்தி - நேருவின் நட்பு அழுத்தமானதாகவும் ஆழமானதாகவும் அமைந்திருந்தது.

1919ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் ஆறும் நாள் சத்தியாக்கிரகத் தினக் கொண்டாட்டத்தைக்காந்தி அடிகள் கொண்டாடத் தொடங்கினார். அதுகண்டு ஆத்திரமுற்ற அரசாங்கம் அவரைக் கைது செய்தது. காந்தி அடிகளின் சிறைவாசமோ பல தேசபக்தர்களைக் கிளர்ந்தெழச் செய்தது. அடிகளாரைப் பின்பற்றி அநேக தலைவர்கள் அடக்குமுறைக்கு ஆளானார்கள்-சிறைச் சாலைக்குள் தள்ளப் பட்டார்கள்.

தேச மக்களின் கிளர்ச்சி அடக்கப்படுவதற்குப் பதிலாக ஆர்த்தெழ வாய்ப்புக்கள் பெருகிவிட்டன, பஞ்சாபில் கலவரம் பெருகியது. அந்தக்

கல்வரம் நாட்டுமக்களின் உள்ளத்தில் தேசிய உணர்ச்சியைப் பெருக்கியது.

அமிரசரஸ் என்றொரு நகரம். அங்கே ஜாலியன்வாலா பாக் என்றொரு இடம் உண்டு. அங்கு பொதுக் கூட்டம் ஒன்று தேசியத் தலைவர்களால் கூட்டப்பட்டது. அக்கூட்டத்தைக் கலைக்கவேண்டும் என்று கடுமையான உள்ளத்தோடு ஜெனரல் டயர் என்பவன் கண்மூடித்தனமாக, மிருகத்தைப்போல நடந்துகொண்டான். 'சுட்டுவிட்டேன்,' என்று கூப்பாடு போட்டுக்கொண்டே பல மக்களைக் குண்டுக்கு இரையாக்கி விட்டான். மக்களின் கொதிப்புக்கு ஈடு இணையே கிடையாது.

பஞ்சாப் படுகொலைக்குப்பிறகு அது பற்றிய விசாரணை நடந்தது. அந்த விசாரணையின்போது காந்தி அடிகள் தெரிவித்த கருத்துக்கள் நாட்டு மக்கள் எல்லோருக்கும் நல்லதோர் விழிப்புணர்ச்சியை ஊட்டின.

பஞ்சாப் விசாரணையால் விழித்துக் கொண்டார் மோதிலால் நேரு. அவர் மிதவாதக் கொள்கைகளிலிருந்து மாறித் தீவிரவாதியாகத் தோன்றினார். அரசியலில் அதிகப் பங்கு கொள்ளவேண்டும் என்ற ஆர்வம் அவருக்கு ஏற்பட்டுவிட்டது. தான் கலந்து கொள்வதுடன் நில்லாமல் தன் மைந்தனையும் (நேருவையும்) கலந்து கொள்ளச் செய்ய வேண்டும் என்று தீர்மானித்துவிட்டார்.

பின்னர் காந்தி அடிகள் தொடங்கிய ஒத்துழையாமை இயக்கத்தில் தந்தையும் மகனும் தாராளமாகக் கலந்து கொண்டனர். காந்தியைத் தன் தலைவராக நேரு ஏற்றுக்கொண்டதைப் போலவே, காந்தி அடிகளும் நேருவைத் தன் வாரிசாக ஏற்றுக்கொண்டார். நேருவைப் பற்றிய காந்தி அடிகளின் கருத்து இதுதான்.

(நேரு) பளிங்கு போலப் பரிசுத்தமானவர். சந்தேகத்திற்கு இடமில்லாத அளவுக்கு வாய்மை உடையவர். தந்தையாகவும், சகோதரனாகவும், எழுத்தாளனாகவும், தேசத் தொண்டனாகவும் - ஏன்-தேசாபிமானியாகவும் நேரு விளங்குகிறார். இன்னும் சொல்லப்போனால் தன் நாட்டின் விடுதலை மேலுள்ள அந்தரங்க ஆசையின் காரணமாகத் தன்னுடைய இதர சுகங்கள் யாவற்றையும் கூடத் தியாகம் செய்யத் தயங்கமாட்டார். அவரைத் 'தியாக வீரர்,' என்றே சொல்லவேண்டும். அவருக்கு இருக்கும் நாட்டுப் பற்று - சர்வதேசப் பற்று- இரண்டும் ஒன்றுக்கொன்று இளைத்தவையோ - சளைத்தவையோ அல்ல. இரண்டும் சமனுடையவையே ஆகும்.

'இதந்தரு மனையின் நீங்கி
இடர்மிகு சிறைப்பட் டாலும்
பதந்திரு இரண்டும் மாறிப்
பழிமிகுந் திழிவுற் றாலும்
விதந்தரு கோடி இன்னல்
விளைந்தெனை அழித்திட்
டாலும்

சுதந்திர தேவி, நின்னைத்
தொழுதிடல் மறக்கி
லேனே!'

இது பாரதியார் தந்து சென்ற இலக்கியம். இதற்கு இலக்கணமே பண்டித நேரு தான். சொல்லாலும் எழுத்தாலும் சொல்ல முடியாத அளவுக்குத் தொல்லை நிறைந்தது அந்த நாட்களில் சிறைவாசம். அத்தகைய தொல்லைகளை நாட்டு நலங்கருதி ஏற்றுக்கொண்டார் நேரு.

1920 ஆம் ஆண்டு, வரலாற்று முக்கியத்துவம் பெற்ற வருடமாகும். அப்போது தான் காந்தி அடிகளின் ஒத்துழையாமை இயக்கத்தைத் தீர்மானத்தின் மூலமாக காங்கிரஸ் மகாசபை ஏற்றுக் கொண்டது. 1921 ஆம் ஆண்டு ஒத்துழையாமை இயக்கம் முழுவடிவம் கொண்டு திகழ்ந்தது, இவ்வியக்கத்தில் நேரு முழு மூச்சுடன் ஈடுபட்டார். தன்னை மறந்தார், தாயை மறந்தார். தந்தையை மறந்தார் தாரத்தைக்கூட மறந்தார் -ஏன் -தேசம் ஒன்று நீங்கலாக பிற அனைத்தையுமே மறந்தார்.



நாட்டுப்பற்றின் மனித வடிவமாகத் திகழ்ந்தார் நேரு. அரசாங்கம் அட்டூழியத்தின் வடிவமாகத் திகழ்ந்தது. மக்கள் தியாகச் சின்னங்களாகத் திகழ்ந்தனர். தேசத்தலைவர்கள் சுதந்திர தேவியின் உருவங்களாகத் திகழ்ந்தனர்.

இந்த நேரத்தில்தான் வேல்ஸ் இளவரசர் இந்தியாவைச் சுற்றிப் பார்க்க வந்தார். அவருக்கு வரவேற்பளிக்கக் கூடாது என்பது காங்கிரஸ் மகாசபையின் முடிவு. நிலைமையைமூடிமறைக்கக் கருதிய அரசாங்கம் அரசியல் தலைவர்களை அக்கிரமமான முறையில் சிறையில் அடைத்து வைத்தது. இந்தச் சமயத்தில் தான் மோதிலால் நேருவும் பண்டித நேருவும் ஒருசேர ஒரே சிறையில் ஆறுமாத காலத் தண்டனைபெற்று அடைபட்டுக்கிடந்தனர். இருப்பினும் மூன்றே மாதங்களில் நேரு விடுவிக்கப் பெற்றார்.

விடுதலை ஆன நேரு, காந்தி அடிகளைக் காண விரைந்து சென்றார். ஆமதாபாத் சென்ற நேரு, காந்தி அடிகளைச் சபர்மதி சிறைச் சாலையில் தான் சந்திக்க

முடிந்தது. ஏனெனில் காந்தி அடிகளும் கைது செய்யப்பட்டு விட்டதுதான் காரணம். காந்தி தரிசனத்தை முடித்துக்கொண்டு நேரு நேராக அலகாபாத் திரும்பினர்.

அவர் விடுதலை ஆகி ஆறு மாதங்கள் தான், வெளியே வாழ்ந்தார். பின் அன்னியத் துணிக்கடை ஒன்றில் மறியல் செய்த 'மாபெரும் குற்ற'த்திற்காக 21 மாதங்கள் சிறைத்தண்டனை விதிக்கப் பட்டார். இதுதான் நேருவின் இரண்டாவது சிறைவாசம். சிறைவாசம் நேருவின் சீர்திருத்தக் கருத்துக்களை உருவாக்கிக் கொடுக்கும் மனை வாசமாகத் திகழ்ந்தது. சிறையின் கொடுமைகளை மறப்பதற்காக ஓய்வு ஒழிவில்லாமல் உள்ளத்தைப் படிப்பதிலே பயன் படுத்தினர். 1923 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் விடுதலை கிடைத்தது.

அரசியல் வாழ்வு அவரைப் பொறுத்த மட்டில் சிறைவாழ்வாக அமைந்திருந்தது. 1921ஆம் ஆண்டிலிருந்து 1945 ஆம் ஆண்டுவரை அவர் அரசியலில் சுதந்திரப் போராட்டம் நடத்தினர். இந்த இருபத்து நான்கு ஆண்டுகளில் பெரும்பகுதியைச் சிறைச்சாலையிலேயே கழித்துள்ளார். அவர் ஒன்பது முறைகள் சிறைச்சாலைக்குச் சென்றுள்ளார். பலம் மிகுந்த அரசாங்கத்தைக் கண்டோ, அடக்கு முறைகளின் அநியாயத்தைக் கண்டோ நேரு பயப்படவே இல்லை.



நேரு, கமலா நேரு, இந்திரா காந்தி.
(நேருவின் குடும்பம்)

ஆனல் நேருவைக் கண்டு அரசாங்கம் பயப்பட்டுச் செத்துக் கொண்டே இருந்தது.

இதற்கிடையில் 1925 ஆம் ஆண்டு நேருவின் மனைவி கமலா நேரு ஒரு கொடிய நோய்க்கு இலக்காகி விட்டாள். சிகிச்சைக்காக எவ்வளவோ பாடுபட்டும் இந்திய மருத்துவர்களால் எதுவும் செய்ய முடியாத நிலையில், நேரு மனைவியை அழைத்துக் கொண்டு சுவிட்சர்லாந்து சென்றார். 1926 ஆம் ஆண்டு மார்ச் மாதம் ஜவகரும், மனைவி கமலாவும், மகள் இந்திராவும் ஐரோப்பாவுக்குப் புறப்பட்டனர்.

1927 ஆம் ஆண்டு செப்டம்பரில் மோதிலால் நேருவும் ஐரோப்பா சென்றார். ஆக நேரு

வின் குடும்பமே அச்சமயம் ஐரோப்பாவில்தான் இருந்தது.

எல்லோரும் இங்கிலாந்துக்கும் ஐரோப்பிய நாடுகளுக்குமாகச் சுற்றிச் சுற்றித் திரிந்தார்கள். அச்சமயத்தில் நேருவுக்கும், மோதிலால் நேருவுக்கும் ருஷ்ய அரசாங்கம் அழைப்பு விடுத்து வரவழைத்தது. குடும்பத்தாரோடு நேரு மாஸ்கோ சென்றார். விழாவில் பங்கு கொண்டு விடுதலை உணர்வோடு தாயகம் திரும்பினார். ருஷ்யாவுக்குச் சென்று திரும்பிய நேரு பல புதிய கொள்கைகளை ஏற்றுக் கொண்ட இயல்பினராக விளங்கினார்.

ஐரோப்பியப் பிரயாணம் கமலாவின் நோயைப் பேரளவுக்குக் குணப்படுத்தி விட்டது. முற்றுங் குணமாகவில்லை எனினும் முகமலர்ச்சிக்குரிய குணம் ஏற்படவே செய்தது. எனவே ஜவகர்லால் நேரு தாயகம் திரும்பியதும் மீண்டும் முன்போல அரசியலில் தீவிரமாக ஈடுபடலானார்.

சைமன் கமிஷன் இந்தியாவுக்கு வந்த சமயம். அதை முழுக்க எதிர்த்துப் போராடுவது என்று காங்கிரஸ் மகாசபை தீர்மானித்தது.

எங்கே பார்த்தாலும் கறுப்புக் கொடிகள். 'சைமனே, திரும்பிப்போ.' என்ற கோஷங்கள். அரசாங்கம் போலிஸ் வீரர்களைக் காவல் வைத்துக் கடுமையான விதிகளை அமுலாக்கி இருந்தது.

கமிஷன் லாகூருக்குப் போகும்போது ஒரு பெரிய சம்பவம் நிகழ்ந்தது. பாஞ்சாலச் சிங்கம் என்று புகழப்படும் லாலா லஜபதி ராய் அவர்களின் தலைமையில் ஒரு பொதுக் கூட்டம் நடக்க இருந்தது. ஆங்கிலப் போலிஸ்காரன் ஒருவன் லாலாஜியின் மார்பில் தடிகொண்டு தாக்கி விட்டான். இது கேட்ட மக்கள் வெகுண்டு எழுந்தனர்.

கமிஷன் இலட்சுமணபுரிக்கு வந்தது. ஊர்வலங்கள் தடுக்கப்பட்டன. எடுத்ததற்கெல்லாம் தடை உத்திரவுகள் பிறப்பிக்கப்பட்டன. பண்டித நேரு தடையை மீறி ஒரு பொதுக் கூட்டத்துக்குத் தலைமை தாங்கச் சென்றார்.

அப்போது குதிரை வீரர்கள் துரத்திக் கொண்டு வந்தனர். அவர்கள் தங்களின் ஆயுதங்களால் ஊர்வலத்தில் கலந்து கொண்டவர்களை உதைத்து விரட்டினர். ஒரு முரடன் ஜவகரை நோக்கி ஓடி வந்தான். நேரு அஞ்சாமல் நிமிர்ந்து நின்றார். 'நடத்து, உன்காரியத்தை,' என்று உரக்கச் சொன்னார். குதிரையில் வந்த முரடன், தான் குதிரையை விட மட்டமான விலங்கு என்பதை நிரூபித்து விட்டான். முதுகில் இருமுறை அடித்து விட்டான். மறுநாளும் இதுபோலவே அடிபட்டார் நேரு இம்முறை நேரு பட்ட அடிகள் பலமான அடிகளாகும்.

இந்தச் சந்தர்ப்பத்தில் நேருவுக்கு ஓர் எண்ணம் எழுந்தது.

குதிரைப் படைமீது இருந்த போர் வீரனைக் கீழே தள்ளி விட்டுத் தான் குதிரைமீதுஏறிக் கொள்ளலாமா என்றுகூட எண்ணினார். எண்ணத்தைச் செயலாற்றக் கூடிய ஆற்றல் அவரிடம் இருந்தது என்றாலுங்கூட அகிம்சைக்கு அடிபணிந்து அடி உதைகளை வாங்கிக் கொண்டு அமைதியாக இருந்தார். நெஞ்சுறுதியைக் கண்டு பூரிப்படைந்த தோழர்கள் அவரை அங்கிருந்து தூக்கிச் சென்று விட்டனர். இல்லையேல் நேருவைக் கொன்றாலும் கொன்றிருப்பர் அக்கொடியவர்கள்!



*1929* ஆம் ஆண்டு மோதிலால் நேரு காங்கிரஸ் மகா சபைக்குத் தலைவர் ஆனார். அவரைத் தொடர்ந்து அடுத்த தடவையாகக் காங்கிரஸ் மகா சபைக்குப் பண்டித நேருவும் தலைவர் ஆனார்.



*1930* ஆம் ஆண்டு உப்புச் சத்தியாக்கிரகத்தில் சேர்ந்தார். ஆறு மாதம் சிறைத் தண்டனை பெற்றார்.

*1931* ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் நேருவின் தந்தை மோதிலால் நேரு காலமானார். அவர் சாகும்போது காந்தி அடிகளிடம் தீர்க்க தரிசனம் கூறினார். அது இதுதான்.

'மகாத்மாஜி. கூடிய சீக்கிரம் நான் இறந்து விடுவேன். விடுதலை பெற்ற நாட்டைக் காண நான் இங்கே இருக்க மாட்டேன். ஆனால் அதை நீங்கள் காணமுடியும். உங்கள் பெருமை உலகம் உள்ள அளவும் நிலைத்து நிற்கும்'

மோதிலாலைப் பறிகொடுத்து பிரிவுத் துயரால் வாடிக் கொண்டிருக்கும்போது மேலும் இரு சோகச் சம்பவங்கள் நிகழ்ந்தன.

1936 ஆம் ஆண்டு மனைவி கமலா நேரு காலமானார்.

1938 ஆம் ஆண்டு தாயார் சொரூப ராணியும் காலமானார்.

இவ்வளவு துயரங்களையும் தாங்கிக் கொண்டு, நேரு தாய் நாட்டையே பெரிதென்று கருதி தளராமல், தயங்காமல் விடுதலைக்காகப் போராடி வந்தார். இடையருத போராட்டத்திற்கு ஏற்ற பலனை அவர் அடைவதற்குரிய மார்க்கம் 1946 ஆம் ஆண்டுக்குப் பிறகுதான் கிட்டியது.

1946 ஆம் ஆண்டு இடைக்கால சர்க்கார் ஏற்படுத்தப்பட்டது. அதில் பிரதமமந்திரியாகப் பதவி ஏற்ருர். அது ஒரு தற்காலிக ஏற்பாடே ஆகும். பின்னர் பாகிஸ்தான் பிரிந்தது.

1947 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15ஆம்தேதி பாரதம் தனி உரிமை பெற்று விளங்கியது நேரு பாரதத்தின் பிரதமமந்திரி ஆனார். அன்றிலிருந்து 1964ஆம் ஆண்டு மே மாதம் 27ந் தேதி வரை பிரதம மந்திரியாகவே இருந்தார். பின் அமரராக மாறி விட்டார்.

மகாத்மா மறைந்தபோது நேரு சொன்னார்.

"ஜோதி மறைந்தது. இல்லை இல்லை அது அணையாத ஜோதி. என்றென்றும் வழி காட்டும் பேரொளி. அது அழியவே அழியாது. அனைவருக்கும் வழிகாட்டும் ஒளிவிளக்காக அது திகழும்."

இதே வாசகத்தைத் தான் நேருவின் மறைவு குறித்துப் பேசும் போதும் நாம் நினைவில் கொள்ளவேண்டும்.

ஆம் நேரு மறையவில்லை. அவர் ஒளிமயமாகிவிட்டார். இனி நமக்கு வழிகாட்டியாக விளங்குவார். அவர் அணையாத ஜோதி. அந்த ஜோதி அழியவே அழியாது. அனைவருக்கும் வழிகாட்டும் ஒளிவிளக்காக என்றென்றும் நின்று திகழும்.



ஆசிரியரும், வெளியிடுபவரும்: கண. இராமநாதன்,
66, பெரியதெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5. தொலைபேசி 84989.
அச்சிட்டோர்: ஐடியல் பிரிண்டர்ஸ், 97, பிராட்வே, சென்னை-1.

# புதுமைப்பித்தனின் புத்தகங்கள்

"புத்தக ஆசிரியர்களுக்கு ஒட்டக் கூத்தன். வலுவற்றுக் கிடந்த தமிழ் வசனத்துக்கு வாலிபம் தந்த சஞ்சீவி. உலக இலக்கிய சத் சங்கத்திலே தாமாகவே இடம் பிடித்துக்கொண்ட மேதை. சிறுகதை இலக்கியத்தின் ஆசிய ஜோதி. இளம் எழுத்தாளர்களின் லட்சியம், யதார்த்தவாதிகளின் முன்னோடி. தமிழ் நாட்டில் எழுதிப் பிழைப்பது என்பது எத்தனை அபாயகரமானது என்பதைத் தமது உயிரையே பணயம் வைத்துக் காட்டிச் சென்ற உதாரணம்—இவர்தான் புதுமைப்பித்தன்.''

தன் உயிரைத் தந்து, இலக்கியத்துறைக்கு உயிரை ஊட்டிய திரு. **புதுமைப்பித்தனின்** படைப்புக்கள் பயில்தோறும் சுவையூட்டும் இயல்பின.

| | | | |
|---|---|---|---|
| புதுமைப்பித்தன் கட்டுரைகள் | ... | 2 | 50 |
| புதுமைப்பித்தன் கவிதைகள் | ... | 2 | 00 |
| புதுமைப்பித்தன் கதைகள் | ... | 3 | 50 |
| புதிய ஒளி | ... | 3 | 50 |
| அன்று இரவு | ... | 3 | 50 |
| சித்தி | ... | 2 | 00 |
| மணி ஓசை | ... | 1 | 50 |
| தெய்வம் கொடுத்த வரம் | ... | 2 | 00 |
| உலக அரங்கு | ... | 1 | 25 |
| முதலும் முடிவும் | ... | 1 | 25 |
| பளிங்குச் சிலை | ... | 1 | 00 |
| ஆண்மை | ... | 1 | 00 |
| சிற்றன்னை | ... | 1 | 50 |
| பிரேத மனிதன் | ... | 1 | 00 |
| நாரத ராமாயணம் | ... | 1 | 00 |
| நிச்சயமா நாளைக்கு | ... | 1 | 00 |
| வாக்கும் வக்கும் | ... | 1 | 50 |



த. பெ. எண். 423 போன்: 84989

ஸ்டார் பிரசுரம்

66, பெரிய தெரு,

திருவல்லிக்கேணி :: சென்னை-5.



ஜூலை, 1964 : : மலர் 3 – இதழ் 4

# வாழ்க சோஷலிசம்

கண. இராமநாதன்.

இன்று தமிழ்நாட்டின் தவப்புதல்வர் காமராஜின், இந்தியாவின் இன்றையத் தலைவரின், 62வது பிறந்தநாள். இதை ஜனநாயக சோஷலிச நாளாகக் கொண்டாடும் பெரும் வாய்ப்புக் கிடைத்துள்ளது நமக்கு.

தாழ்வகற்றி நாட்டை விடுதலைபெறச் செய்து, நம்மை மனிதர்களாய் ஆக்கி, தான் பெண்டுபிள்ளையுடன் கூடிய துறவியாய் வாழ்ந்தார் தேசப்பிதா மகாத்மா காந்தி. அந்தத் துறவி நமது எதிர்கால வாழ்வின் வளத்தைத் தனது ஏகவாரிசான குபேரன் வீட்டுப்பிள்ளையிடம் ஒப்புவித்துச் சென்றார். அக்குபேரன் சோஷலிச சமுதாயத்தை வகுத்து, அதன் வளர்ச்சிக்கான திட்டங்களைத் தீட்டி அவற்றைச் செயல்படுத்தி நமது வாழ்க்கைத்தரத்தை உயர்த்தி வந்தார்.

இந்நிலையில் அவர் சோஷலிச சமுதாயத்தின் முழுப்பயனையும் நாம் பெறுதற்கு உரிய தலைவரை நமக்குச் சொல்லாமற் காட்டித் தனது வாழ்வினை முடித்துக் கொண்டார். அந்தத் தலைவர்தான் இன்று நம் கொண்டாட்டத்திற்குரிய பெண்டு பிள்ளையுமற்ற பரிபூரணத்துறவி, பற்றற்ற ஞானி திரு. காமராஜ். தசரத சக்கரவர்த்தியின் சாம்ராஜ்யத்தை, எல்லாப்பற்றும் அற்ற நிலையில் நடத்திச் சென்ற வசிஷ்டமகாமுனிவன் போல வாழ்கிறார் காமராஜ்.

அவரது ஆலோசனையின்படி "எல்லோரும் எல்லாப் பெருஞ் செல்வமும் உடையராகி, உள்ளார் இல்லார் என்ற பேதமற்ற சமுதாயத்தை, கம்பன் கண்ட அந்த ராமராஜ்யத்தை" நாம் அடைவோம் என்ற பூரணநம்பிக்கையுடன் காமராஜுக்கு நல் வாழ்த்துக் கூறுகிறோம்.

வாழ்க காமராஜ், வாழ்க சோஷலிசம், வாழ்க வறுமையற்ற பாரத சமுதாயம்!

ஏதோ சில கட்சிகள் கூடி கூட்டணி அமைத்து தேர்தலில் வெற்றி பெற்றால், நிலையான அரசாங்கம் எப்படி அமையும்!

சர்க்கசில் சிங்கம், புலி, குரங்கு, நரி ஆகியவை கூண்டில் அடைபட்டு, அடங்குவது போல, ஒன்றுக்கொன்று முரண்பட்ட கொள்கைகளையுடைய கட்சிகளது கதம்ப சர்க்கார் தானே நடக்கும்?

# நிலையான அரசாங்கம்

கு. காமராஜ்

சுதந்திரம், தர்மம், தனி மனித உரிமை முதலியவற்றைச் சர்க்கார் அழித்து வருவதாகவும் இந்தக் கொடுமையிலிருந்து மக்களைக் காப்பாற்றப் போவதாகவும் ஒரு புதுக் கட்சி—சுதந்திராக் கட்சி—உருக்கமாகப் பேசி வருகிறது. இப்படிப் பேசியே பொது மக்களிடம் சர்க்கார் மீது அதிருப்தி ஏற்படுத்தி விடலாம் என்று கூட அது கனவு காண்கிறது. எதற்காக இந்த வீண் வேலை?

எல்லாத் தொழில்களையும் தனிப்பட்டவர் இஷ்டப்படி நடத்த வேண்டும். இதற்கு வேண்டிய வசதிகளையும், பாதுகாப்பையும் மட்டும் சர்க்கார் செய்து தரவேண்டும் என்றுகூட அக்கட்சி சொல்கிறதே! சரியா?

அளவுக்கதிகமாகச் சம்பாதிப்பவனுக்கு அதற்கேற்ப அதிக வரி போடாதே! தனிப்பட்டவன் நிறையப் பணம் சம்பாதித்தால் ஏழை வாழத் தர்மம் செய்வானாம்! எவ்வளவு உருக்கம் பாருங்கள்!

ஏழை ஏழையாகவே இருக்கக் கூடாது. பணக்காரன் மேலும் அதிகம் சம்பாதித்துக் கொண்டே போகக் கூடாது. பொருளாதார நிலையில் ஒரு சரிசமநிலை ஏற்படுத்த வேண்டாமா?

திட்டங்களைக் கைவிட்டு விடு. எல்லாம் டம்பாச்சாரி திட்டங்கள் என்று கேலி செய்கிறது, புதுக்கட்சி. இதற்கு என்ன அர்த்தம்?

இருப்பதை மாற்றாதே! அவரவர் இஷ்டம்போல் சம்பாதிக்க விடு. திட்டம் போட்டு ஏழையை முன்னேற்றாதே என்பது தானே?

ஏழைகளது வாழ்விலும் வயிற்றிலும் மண்ணைப்

போடும் வேலையைச் செய்யவே ஒரு கட்சியா? இதைச் செய்வது தான் தர்மமா?

ஏழைகளுக்குப் படிப்பில்லை, நிலமில்லை, தொழிலோ வியாபாரமோ செய்யப் பணமும் இல்லை. இந்த மூன்றில் ஏதாவது இருந்தால் ஒரு அளவுக்காவது பிழைக்க முடியும். சர்க்கார் ஏழைக்கு இந்த வசதிகளைத் திட்டம் போட்டு முடிந்த அளவுக்குச் செய்து வருகிறது. இது கூடாதா?

மந்திரிகளையும், காங்கிரஸையும் பழிப்பதாலே பதவியை விட்டு நீக்குவதாலே ஒன்றும் கெட்டுப் போகாது. ஆனால், அரசியல் சட்டப்படி ஆட்சியில் மெஜாரிட்டி பலம் உள்ள கட்சியே அமர முடியும். காங்கிரஸை விட்டால், தனிப்பட்ட எந்தக் கட்சிக்கு இந்தப் பலம் இருக்கிறது?

ஏதோ சில கட்சிகள் கூடி கூட்டணி அமைத்து தேர்தலில் வெற்றி பெற்றால், நிலையான அரசாங்கம் எப்படி அமையும்?

சர்க்கசில் சிங்கம், புலி, குரங்கு, நரி ஆகியவை கூண்டில் அடைபட்டு, அடங்குவது போல, ஒன்றுக்கொன்று முரண்பட்ட கொள்கைகளையுடைய கட்சிகளின் கதம்ப சர்க்கார்தானே நடக்கும்?

## பிறந்த தின விழா

நமது நாட்டிற்கு பலாத்காரமற்ற முறையில் சுதந்திரம் வாங்கிக் கொடுத்து விட்டே மறைந்தார் காந்தி மகான். மக்களுக்காகவே, அதிலும் குறிப்பாக ஏழை எளியவர்களுக்காகவே அப்படிப்பட்ட உத்தம வாழ்க்கை வாழ்ந்து, மடிந்த மகான் காந்தியின் பிறந்த தினத்தை வருடாவருடம் கொண்டாடி வருகிறோம்.

காந்தி ஜெயந்தி கொண்டாடுவது ஏன்? அவர் பேரைச் சொல்லி வெறும் விழா நடத்தி முடிக்கவா? இல்லை.

அவருடைய உயரிய எண்ணங்களை நாமெல்லாம் பார்க்கவும், அவரது சீரிய இலட்சியங்களைக் கற்று அவ்வழியைக் கடைப்பிடித்து, நிறைவேற்றவுந்தான் காந்தி ஜெயந்தி கொண்டாடப்படுகிறது.

காந்தியின் உயரிய எண்ணங்கள் நனவாக்கப்படல் வேண்டும். அவரது நல்ல இலட்சியங்களைக் கொண்டு எல்லோரும் நல்வாழ்வு பெறப் பாடுபடல் வேண்டும்.

இந்த நல்ல நோக்கத்தோடு, அவரது கருத்துக்களை நல்லபடி பரப்பத்தான் காந்தி ஜெயந்திக் கொண்டாட்டங்கள் பயன்படுகின்றன. இந்த முறையில் தான் விழாக்கள் நடத்தப்பட வேண்டும்.

— *கு. காமராஜ்*

நாட்டில் அமைதியும் ஒழுங்கும் இருக்குமா? மக்களது பிரச்சினையைக் கவனிக்க முடியுமா? பொது மக்கள் யோசிக்க வேண்டும்.

காங்கிரசையும், அரசாங்கத்தையும் எப்படியாவது கவிழ்க்க நினைப்பது ஏழைகளை அழிப்பதாகும். இதனை உணர்ந்து பொதுமக்கள் எச்சரிகையுடன் நடக்க வேண்டும்.

"மகன் செத்தாலும் பரவாயில்லை, மருமகள் தாலியறுந்தால் போதும்" என்று கூடச் சில மாரியார்கள் இருப்பதுண்டாம். இதைப் போல மக்கள் எக்கேடு கெட்டால் என்ன? காங்கிரஸ் கவிழ வேண்டும். அரசாங்கம் மாற வேண்டும் என்று கட்சிகள் நடக்கின்றனவே! நல்லதா?

காங்கிரஸ் இருப்பதுவும், நிலையான அரசாங்கம் நடப்பதுவும் பொது மக்களின் விருப்பு வெறுப்பைத்தான் பொறுத்தது. பதவி வெறி எங்களுக்கு இல்லை. ஆனல் மக்களுக்காகப் பெற்ற சுதந்திரத்தை மக்களுக்குப் பயன் படுத்தத்தான் பொறுப்பு வகிக்கிறோம்.

யாரோ சொல்வதற்காகப் பயந்துகொண்டு கொள்கைகளைக் காற்றில் பறக்கவிட மாட்டோம். ஆதரவு பெற்றுப் பதவியில் அமர்ந்தவுடன் மக்களுக்குத் தொண்டு செய்யத் தயங்கமாட்டோம். நாடுதான் எங்கள் குடும்பம். இக் குடும்பத்தைக் கட்டிக் காத்து நல்லபடி வாழ வைத்தே தீருவோம். நமக்கென்ன என்று இருப்பதா? முடியாது! நம் காலத்தில் சொந்த அரசாங்கம் இருக்கிறது. வாழ்வளிக்கும் பொறுப்பை—நாமே தான் சுமக்க வேண்டும். அந்தச் சுமையை நமது சந்ததிகள் தலையில் வைத்து விட்டுப் பொழுது போக்கமாட்டோம். இது உறுதி.

நம்மை யாரும் அடிமையாக்க முடியாது. நாமும் யாரையும் ஆதிக்கம் செலுத்த விரும்பவில்லை.

" நாமார்க்கும் குடியல்லோம்" என்ற தன்னம்பிக்கையும் தைரியமும் நம்மிடம் உள்ளன. நமது சக்திகளை ஒன்று படுத்தி நம் காலத்திலேயே ஏழ்மையை ஒழிப்போம். எல்லோரையும் வாழ்விப்போம். அனைவரும் அன்புடன் ஆதரவு தாருங்கள்.

---

'நாமார்க்கும் குடியல்லோம்'
தொகுப்பு : மு. நமசிவாயம்.






மே மாத இதழில் கிரந்தி நோய்களைப் பற்றிப் படித்தோம். இவ்விதழில் தோஷ வியாதிகளைப் பற்றிப் படிக்கலாம்.

குழந்தைகளை நோய் நொடி இல்லாமல் வளர்க்க விரும்புகிறவர்களுக்கு கிராம வைத்தியம் எப்படி உதவ முடியும் என்பதை இப் பகுதியைப் படிப்பவர்கள் நன்கு உணரலாம்.

## தோஷ வியாதிகள்

### *பட்சி தோஷம்*

குழந்தை, பால் உண்ணாது, தண்ணீரைப் போல மலம் வெளியேறும். அடிக்கடி வாந்தி வரும். கண்களில் குழி விழுந்துவிடும். பீளை நாறும். உடலில் வெப்பம் அதிகமாக இருக்கும். முகம் சிறுத்துவிடும். அடிக்கடி அலறி அழும்.

இந் நோயின் பெயர் பட்சி தோஷம். இதைக் குணப்படுத்த வேண்டுமாயின் மணத்தக்காளி வேர், ஈருள்ளி இவற்றை நறுக்கி, சிற்றாமணக்கு எண்ணெயில் போட்டு நன்கு கலக்கிக் குழந்தைகளுக்குக் கொடுக்கலாம். தலையின் உச்சியிலும் தேய்க்கலாம். அப்படிச் செய்வதால் குணம் ஏற்படுவது உறுதி.

### பறவை தோஷம்

தலையில் சூடு ஏறும். உடல் நொந்து வெதுப்பும். நாக்கு உலர்ந்து விடும். வலிப்பு எடுக்கும். இளைப்புத் தோன்றும். அடிக்கடி திடுக்கிட்டு எழுந்து சீறி அழும். விழிகள் வெளுத்து விடும். முகம் மஞ்சள் நிறங் கொள்ளும்.

இந்நோயின் பெயர் பறவை தோஷம்.

இதைக் குணப்படுத்த சீரகம், ஈருள்ளி, வரப்பிலா வேர் இவற்றைச் சமமாக எடுத்துக் கஷாயம் செய்து கொடுத்தால் போதும். விரைவில் குணம் காணலாம்.

### எட்சி தோஷம்

இரத்தத்தில் கனல் ஏறும். உடம்பு இளைக்கும். துர்நாற்றம் வீசும். கண்ணில் பீளை வடியும். வயிற்றுப் போக்கு இருக்கும். மேலும் அக் குழந்தை தாய்ப் பாலை வெறுக்கும். கண்களைப் பிசையும். மயங்கிப் புரளும். பதறிப் பதறி அழும்.

இந்நோயின் பெயர் எட்சி தோஷம்.

இதைக் குணப்படுத்த வில்வ இலையையும், சீரகத்தையும் கியாழம் செய்து கொடுக்கலாம். மேலும் வில்வ இலையையோ அல்லது நிலவிளா இலையையோ அரைத்து நீரில் கலக்கிக் குளிப்பாட்டலாம். இதனால் நல்ல குணம் காண முடியும்.

### வீங்குபுள்ளின் தோஷம்

குழந்தை அடிக்கடி வாந்தி எடுக்கும். பால் போன்றும், பச்சை நிறத்தோடும் மலம் வெளியேறும். பின்கைகளால் முகத்தைத் தேய்த்துக் கொள்ளும். நாக்கு வரண்டு அழுது கண்ணீர் சிந்தும்.

இந்நோயின் பெயர் வீங்கு புள்ளின் தோஷம்.

இதைக் குணப்படுத்த மதுரம், அதிவிடையம், கடுக்காய்,வசம்பு, தேவதாரு, மஞ்சள் முதலிய வற்றை வகைக்குக் கொஞ்சம் ஒரே அளவில் எடுத்துக்கொண்டு சாறு போல அரைத்து உருண்டைகளாகச் செய்து தாய்ப்பாவில் கலந்து கொடுக்கவேண்டும்.

### தூங்கு புள்ளின் தோஷம்

குழந்தைக்கு வயிற்றுப்போக்கு அதிகமாக இருக்கும். அது வாந்தி எடுத்துக்கொண்டே இருக்கும். மயங்கி மயங்கித் தூங்கும். வீறிட்டு அலறி எழுந்திருக்கும். தாயின் முகம் பார்த்து அழுது தண்ணீர் கேட்கும். அதன் முகம் வேறுபட்டுக் காணும். கண்கள் இருண்டு சோர்வு கொள்ளும். அது பற்களை நறநறவென்று கடித்துக் கொள்ளும். அதன் தலை உச்சியில் பள்ளம் விழுந்திருக்கும்.

இந்நோயின் பெயர் தூங்கு புள்ளின் தோஷம்.

இதைக் குணப்படுத்த மஞ்சள், வசம்பு, ஏலம், வேப்பீர்க்கு, ஓமம், குட்டிவிளா இவற்றை நறுக்கி வெதுப்பிக் கியாழம் செய்து, அந்தக் கஷாயத்தில் கோரோசனையைக் கலக்கி உள்ளே அருந்த வேண்டும். உடம்பின் மேலும் பூசிக் குளிப்பாட்டலாம். இப்படிச் செய்தால் விரைவில் நன்மை கைகூடும்.

இந்நோயைக் குறித்து ஒரு பழம் பாடல் ஒன்றும் உண்டு. அது இதுதான்.

மங்கையே, வயிறு கழியும்
  வாந்தி பண்ணும்
மயக்கமாய் நித்திரையும்
  அதிக மாகும்
அங்கமாய் வீறிட்டு
  எழுந்தி ருக்கும்
அன்னையின் முகம்பார்த்துத்
  தண்ணீர் கேட்கும்
துங்கமுகம் வேறுபட்டுக்
  கண்கள் சோரும்
துடிதுடித்து நெறுநெறெனப்
  பற் கடிக்கும்
புங்கமாய் உச்சி பள்ளம்
  விழுகும் பாராய்
புத்திரற்கு தூங்கு புள்ளின்
  தோஷ மாமே!

### விளக்கொளிக் கண் புள்ளின் தோஷம்

குழந்தை, பாலை வாந்தி எடுக்கும். அதன் உடலில் காய்ச்சல் அடிக்கடி தோன்றும். அது, தாகம் கொண்டு தவியாய்த்

தவித்து அழுது கண்ணீர் வடிக்கும்.

இந்நோயின் பெயர் விளக்கொளிக் கண் புள்ளின் தோஷம்.

இதைக் குணப்படுத்த சின்னி, வசம்பு, குட்டிவிளா, இவற்றை அரைத்துக் குழந்தையின் உடம்பில் தேய்த்துக் குளிப்பாட்டினுல் போதும். நோய் பறந்து விடும்.

### வெங்கண் புள்ளின் தோஷம்

குழந்தையின் மலம் பால்போல இருக்கும். உடல் காய்ச்சல் கொள்ளும். வயிற்றில் இரைச்சலும் வலியும் இருக்கும்.

இந்நோயின் பெயர் வெங்கண் புள்ளின் தோஷம்.

இதைக் குணப்படுத்த, கற்ருழஞ் சோற்றில் கடுக்காயின் பொடியைத் தூவிப் பிசைந்து வைத்தால் நீர் ஊறும். அதில் திப்பிலியை வறுத்துப் பொடித்துத் தூவிக் கொடுத்தால் நோய் தீர்ந்துவிடும்.

### கருடக் கண் புள்ளின் தோஷம்

குழந்தையின் வாயிலிருந்து நீர் வடியும். அது அடிக்கடி வாந்தி எடுக்கும். இரண்டு கண்களும் இருண்டு மயங்கும். கண்களில் பீளை சேரும்.

இந் நோயின் பெயர் கருடக் கண் புள்ளின் தோஷம்.

இதைக் குணப்படுத்த, அதிமதுரம், திப்பிலி, இவற்றை அரைத்துக் கோரோசனை, முலைப் பாலோடு கலந்து ஒரு சங்கு கொடுத்தால் நல்ல குணம் ஏற்படும்.

### செங்கண் புள்ளின் தோஷம்

குழந்தையின் கண்கள் சிவப்பாக இருக்கும். தலையில் குளிர்ச்சி இருக்கும். அது தரையில் சேர்ந்து விழும். கைகளால் முகத்தைத் துடைத்துக் கொள்ளும். வெப்ப நீராய் மலம் கழியும்.

இந்நோயின் பெயர் செங்கண் புள்ளின் தோஷம்.

இதைக் குணப்படுத்த, அதிமதுரம், சீரகம், ஏலம், பத்திரி, சாதிக்காய், கிராம்பு, செண்பகப் பூ, லவங்கப்பட்டை வகைக்கு ஒரு வராகன் எடை எடுத்துக் கொள்ளவேண்டும். மொசு மொசுக்கை இலை, பொன்னுங் காணிச் சிறுகீரை, சீந்தில் வேர் வகைக்கு ஒரு பலம் எடுத்துக் கொள்ளவேண்டும். மேலும் ஈருள்ளிச் சாறு கால் படியும் ஆவிரை வேர் ஒரு பலம் எடுத்துக்கொண்டு எல்லாவற்றையும் அரைத்து இரண்டுபடி சிற்ருமணக்கு எண்ணெயில் போட்டுக் காய்ச்சிக் கொடுக்கவேண்டும். இப்படிச் செய்வதால் சிறந்தபலன் கிடைக்கும்.

### அந்திப் புள்ளின் தோஷம்

குழந்தை உடல் வெளுத்துவிடும். காய்ச்சல் இருக்கும். காலும் கையும் குளிர்ந்து கிடக்கும். வாந்தி எடுக்கும்.

இந்நோயின் பெயர் அந்திப் புள்ளின் தோஷம்.

இதைக் குணப்படுத்த, சின்னி, குட்டிவிளா, நொச்சி, சீந்தி, வேம்பு, வசம்பு, உன்னி இவற்றை அரைத்து உடல் எங்கும் பூசி, அதே மருந்தைச் சிறு பொட்டலமாய்க் கட்டிக் கண்டத்திலும், காலிலும் கட்டிக்கொள்ளவேண்டும். சிறந்த பலன் கிட்டும்.

### நீர்ப்புள்ளின் தோஷம்

குழந்தையின் நெஞ்சு வரண்டு வாடும். கண்கள் குழிவிழுந்து வெளுத்திருக்கும். குழந்தை பெருமூச்சுவிடும். அதன் உடம்பில் வியர்வை வடியும். இரவும் பகலும் இடையருமல் அது அழும்.

இந்நோயின் பெயர் நீர்ப்புள்ளின் தோஷம்.

இதைக் குணப்படுத்த, விஷ்ணு கரந்தையும், சீரகமும் கூட்டிக் கஷாயமாகச் செய்து கொடுக்க வேண்டும்.

நெஞ்சு வரளும் கண்குளிர்ந்து
நெடுமூச் செய்து
பால்உண்ணு
துஞ்சும் இரவும் பகலும் அழும்,
துய்ய பாலன்
முகம்வெளுக்கும்
மிஞ்ச உடலும் தான் வேர்க்கும்
மீறி அழுகும் தோவிமதால்
கஞ்ச மலராள் குழலாளே
களர்நீர்ப் புள்ளின்
தோஷமிதே!

### புள்ளின் தோஷம்

குழந்தையின் உச்சியும் கண்ணும் குழிவிழிந்து தோன்றும். குடித்த பால் பச்சை நிறத்தோடு வாந்தி ஆகிவிடும். பறவையின் குரலைப் போலக் குழந்தை குரல் கொடுத்து அழும். மெய்ம்மறந்து சோரும். தண்ணீர்த் தாகத்தால் வாட்டமுறும். இளைத்து நிற்கும்.

இந்நோயின் பெயர் புள்ளின் தோஷம்.

இதைக் குணப்படுத்த, ஓரிதழ்த் தாமரை,வெந்தயம், விடத்தலை வேர், சுக்கு, வால்மிளகு இவற்றை ஓரளவாக எடுத்துக் கொண்டு கஷாயங் காய்ச்சிக் கொடுத்தால் போதும். எதிர்பார்க்கும் பலன் கிடைத்துவிடும்.

மாதவிடாய் ஆனவர்கள் குழந்தையை எடுத்தால் மேனி வாடும். வேறுபட்டுத்தோன்றும். குழந்தைக்கு வாந்தி எடுக்கும். உச்சியும் கண்ணும் குழி விழுந்து இருக்கும். நாக்குக் கறுத்து விடும்.

இந்நோயின் பெயர் முட்டு தோஷம்.

இதைக் குணப்படுத்த, மயிலிறகு, திரிகடுகம், சீரகம் முதலியவற்றைக் கியாழஞ் செய்து கொடுக்க வேண்டும்.

### குளிர்தோஷம்

குழந்தையின் உச்சியும் கண்ணும் குழிவிழுந்து தோன்றும். குழந்தைக்கு அடிக்கடி மலக் கழிவு ஏற்படும். கால்கள் வீங்கி விடும். கண்களில் நீர்ச் சொரிவு ஏற்படும். குழந்தையின் தேகம் தணல் போலக் காயும். நெஞ்சு உலர்ந்து காணும்.

இந்நோயின் பெயர் குளிர் தோஷம்.

இதைக் குணப்படுத்த, குட்டி விளா, வேம்பு, சோம்பு, மஞ்சள், வசம்பு, சுக்கு, முதலியவற்றை அரைத்துத் தாயின் உடம்பிலும் குழந்தையின் உடம்பிலும் தேய்க்க வேண்டும். வாகை இலையைத் தண்ணீரில் போட்டுக் காய்ச்சிக் குளிப்பாட்ட வேண்டும் பின் பசு நெய் சிறிதும், நல்லெண்ணெய் கால் படியும், நன்னாரி, தண்ணீர் விட்டான், கரந்தை, பொன்னாங்காணி முதலியன வகைக்கு ஒரு பலமும் ஏலரிசி, சீரகம் வகைக்கு மூன்றுகழஞ்சும் எடுத்துக் கொண்டு பால் விட்டு அரைத்துப் பதமாகக் காய்ச்சி சிறுகரண்டி அளவில் கொடுத்தால் போதும். நல்ல பலன் கிடைக்கும்.

வேப்பங் கொழுந்து ஒரு பிடியும், மிளகு, வசம்பு, சுக்கு, மலை தாங்கிவேர் வகைக்கு ஒரு விராகன் எடையும் எடுத்துக் கொண்டு விளக்கெண்ணெயில் போட்டுக் காய்ச்சிக் கொடுத்தாலும் நல்ல பலன் கிடைக்கக் கூடும்.

### கர்ப்பம் அழிந்த தோஷம்

குழந்தைக்கு உடம்பு நொந்து சிவக்கும். இளைக்கும், நாற்றம்

எடுக்கும் நெஞ்சு உலர்ந்துதோன்றும். கை கால்களில் அழுக்கு ஏறும். கால்கள் ஒன்றோடொன்று பின்னும். விழிகள் மருட்சி கொள்ளும். அடிக்கடி மலம் வெளியேறும்.

இந்நோயின் பெயர் கர்ப்பம் அழிந்த தோஷம்.

இதைக் குணப்படுத்தப் பருத்தி வேரையும் பனைவெல்லத்தையும் ஒன்றாகக் கலந்து சாறு காய்ச்சிக் கொடுத்தால் நன்மை கிட்டும்.

உடம்பு நொந்து நாசிசிவக்கும்
உறையும் மேனி தான்நாறும்
திடமா மசதி நெஞ்சுலரும்
தேகம் இளைக்கும்
கால்பின்னும்
படமாய்க் கழியும்விழிசொருகும்
பாங்காய்க் கைகால்
அழுக்கேறும்
சடமாம் புந்தி தான்மயங்கும்
சாற்றும் கர்ப்ப ரோகமிதே!

என்பது பழம் பாடல்களுள் ஒன்று.

### தேரை தோஷம்

குழந்தையின் உடம்பு உலர்ந்து வற்றும். வெளுக்கும். நெஞ்சு உலர்ந்து கூடும். கண் சிறுத்துக் காணப்படும். கைகால்கள் வற்றிச் சுருங்கி முடங்கும். வயிறு பொருமும். மலம் தீயும். நாக்கு உலரும். முகம் வாடும், தாகம் எடுக்கும்., மூச்சு வாங்கும்.

இந்நோயின் பெயர் தேரை தோஷம்.

இதைக் குணப்படுத்த, சிறுபுள்ளடி, சிறுகீரை, நீராரை காணி, நீர்முள்ளி இவற்றின் சாற்றினோடு களா, காட்டுமல்லி, அவரி, கரிசலாங்கண்ணி, நிலக்குமிழ் முடக்கொத்தான், இவற்றின் வேர்களை ஓர் நிறையாக இடித்து மூன்றுபடி நீரில் கலக்கி நான்குக்கு ஒன்று என்னும் விகிதத்தில் வற்றக் காய்ச்சவேண்டும். இப்படி வற்றிய நீரில் அதிமதுரம், திப்பிலி, ஏலம், மிளகு இவற்றை வகைக்குக் கால் பலம் பசும் பாலில் போட்டரைத்துச் இரண்டுநாழிப் பசு நெய்யில் பதமாகக் காய்ச்சி, சிறுகரண்டி வீதம் கொடுக்க வேண்டும்.

தேரை தோஷத்தைப் பற்றிக் கூறிய புலவரின் பாடலைக் கீழே காண்போம்.

பாரப்பா உடம்பு லர்ந்து
தேகம் வற்றும்
பதிவாக நெஞ்சு லர்ந்து
கண்சி றுக்கும்
நேரப்பா கைகால்கள்
வற்றிப் போகும்
நேர்மையால் நரம்பொடுங்கி
வயிறு பொருமும்
நீரப்பா மலந்தீயும்
நாவுலரும்
நெடுந்தாகம் முகம்வாடும்
மேனி வெண்மை
ஆரப்பா செவி தாழும்
மூச்சு வாங்கும்
அழுத குரல் படும்பிள்ளை
தேரு தென்னே!

### திருஷ்டி தோஷம்

எழில் நிறைந்த அறிவு நிரம்பிய குழந்தையைப் பார்த்து பிறர் புகழ்ந்து பேசுவதால் ஏற்படும் தோஷத்துக்குத் 'திருஷ்டி தோஷம்' என்று பெயர். இதனைக் கண்ணெறிதல் என்றும் கூறுவர். மேலைநாட்டார் 'விக்கெட்—ஐ' என்று கூறுவர்.

பொதுவாகத் தோஷங்களுக்கு நிவர்த்தி காண விரும்பினால் மணத் தக்காளிச் சாறு, அதிமதுரம், மஞ்சள், வசம்பு, கடுக்காய், வேம்பு, சீந்தில், இவற்றைக் கைவசம் வைத்துக் கொள்ளல் நல்லதாகும். வெள்ளாட்டுப் பாலும் நன்மைகளை விளைவிக்க வல்லதாகும். —வளரும்.

# செய்திக் குறிப்புகள்

**சத்தியமங்கலம் யூனியன்**

பாரதப் பிரதமர் திரு ஜவஹர்லால் நேரு அவர்கள் மறைவு குறித்து இந்தச் சபை ஆருத துயரத்தை அடைந்துள்ளது. அன்னாருடைய ஆன்மா சாந்தி அடைய இறைவனைப் பிரார்த்திப்பதுடன் அன்னாருடைய குடும்பத்தினருக்கு இம் மன்றம் ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக்கொள்ளுகிறது. திரு ஜவகர்லால் நேரு அவர்கள் மறைவின் நினைவாக இம் மன்றத்தின் நடப்புக் கூட்டம் ஒத்திவைக்கப்பட்டுள்ளது.

அங்கத்தினர்கள் இரண்டு நிமிஷம் எழுந்து நின்று மௌன அஞ்சலி செலுத்தினர்கள்.

❖ ❖ ❖

**சென்னையில் புதிய செங்கல் தொழிற்சாலை**

சென்னையை அடுத்துள்ள ஓரக்காடு என்னுமிடத்தில் ஆசியாவிலேயே மிகப் பெரிய இயந்திரச் செங்கல்தொழிற்சாலையை மே 19ல் முதலமைச்சர் பக்தவத்சலம் அவர்கள் ஆரம்பித்து வைத்தார்.

200 ஏக்கரா நிலப்பரப்பில் அமைந்திருக்கும் இத் தொழிற்சாலையில் நாளொன்றுக்கு ஒரு லட்சம் செங்கல்லும், 20 ஆயிரம் ஓடுகளும் உற்பத்தி செய்ய முடியுமாம். சதர்ன் பிர்க் ஒர்க்ஸ் நிர்வாகி கே. டி. கோசல்ராம் எம். எல். ஏ. அவர்கள் அமைச்சரையும் விழாவிற்கு வந்திருந்த மற்ற அனைவரையும் வரவேற்ருர். களிமண்ணைத் தோண்டி எடுப்பது முதல் செங்கல்லாக்கி உலரவைக்கும் இடத்திற்குக் கொண்டு செல்லும் வரையில் இயந்திரங்களினுலேயே இயக்கப்படும் தொழிற்சாலை இந்தியாவிலேயே இதுதான் என்று எடுத்துரைத்தார்.

❖ ❖ ❖

**ரிஷிவந்தியம்**

மே. 20 அன்று பஞ்சாயத்து யூனியன் கவுன்ஸில் கூட்டம் தலைவர் ஸ்ரீ, இ. ஆர் சீதாராம ரெட்டியார் தலைமையில் நடைபெற்றது.

யூனியன் ஆபீஸிற்கும், பஞ்சாயத்துகளுக்கும் 64-65ம் வருடத்திற்கு தேவையான பாரங்கள் வாங்கவும், பல சிறுபாலங்கள் சீர்படுத்தவும் சாலைகள், பள்ளிகள், ஆசிரியர் விடுதிகள் கட்டவும் கிராமத்தொண்டர் படை, குடும்பக் கட்டுப்பாடு சம்பந்தமாக தீவிர முயற்சிஎடுத்துச் சென்ற ஆண்டைவிட சிறப்

பாக செய்வதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

❋ ❋ ❋

**முகையூர் ப. யூ. ஆண்டுவிழா.**

பஞ்சாயத்து யூனியன் இரண்டாவது ஆண்டு நிறைவு விழா. மே, 20-ல் திருக்கோவிலூர் சட்டமன்ற உறுப்பினர் ஸ்ரீமதி லட்சுமி நரசம்மா தலைமையில் மேல்சபை உறுப்பினர் ஸ்ரீ. எம். ராஜகோபாலன் விழாவைத் துவக்கிவைத்துப் பேசினார். தென்னாற்காடு மாவட்ட ஆட்சித் தலைவர் ஸ்ரீ. எஸ். பி. அம்புரோஸ் சிறப்பு மலரை வெளியிட்டுப் பேசினார். யூனியன் தலைவர் ஸ்ரீ எஸ். கே. கணபதி அவர்கள் அனைவரையும் வரவேற்றார். ஆணையாளர் திரு. சுவாமிநாதன் அவர்கள் ஆண்டு அறிக்கையை வாசித்தார். கல்வி விஸ்தரிப்பாளர் திரு. ராமனுதன் அவர்களும் மற்ற விஸ்தரிப்பாளர்களும் விழாவிற்கான ஏற்பாடுகளைச் சிறப்பாகச் செய்திருந்தனர்.

❋ ❋ ❋

**காட்டுமன்னார் கோயில் யூனியன்**

மே, 24 காட்டுமன்னார் கோயில் பஞ்சாயத்து யூனியன் குருளை ஆசிரியர்கள் பயிற்சி முகாம் எய்யலூர் பொது மராமத்து இலாகா விடுதித் தோட்டத்தில் நடைபெற்றது,

சாரணீயக்கொடியை திரு எம். ஆர். ரத்தினம் மாவட்ட உதவி கமிஷனர் (சாரணர்) ஏற்றுவித்தபின், பஞ்சாயத்து யூனியன் ஆணையர் திரு ஐ. அமரர் பேர்பெற்றான் அவர்கள் முகாமைத் துவக்கிவைத்து முகாமின் அவசியம் பற்றி விளக்கிக் கூறினார்கள்.

முகாம் அதிகாரிகள் திரு முத்து வேலாயுதம்பிள்ளை, திரு கே. மாதவன், திரு என். விஜயம் ஆகியோர் பயிற்சியின் அவசியம் பற்றிப் பேசினார்கள்.

திரு எஸ். ஆனியப்பன்,கல்வி விரிவாக்க அலுவலர் நன்றி நவில விழா இனிது நடைபெற்றது.

❋ ❋ ❋

**மாமங்கலம் உயர் தொடக்கப் பள்ளி ஆண்டுவிழா**

மே 2. காட்டுமன்னார்கோயில் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த மாமங்கலம் உயர் தொடக்கப் பள்ளியின் ஆண்டு விழா யூனியன் சேர்மென் திரு. முத்து செல்வ கணபதி அவர்கள் தலைமையில் மாலை 5.00 மணி அளவில் நடந்தது. கிராமத் தொண்டர் படையினர் 25 பேர்கள் தெருவைச் சுத்தம் செய்து விழா நடைபெறும் பந்தல் அமைத்தனர். பள்ளி ஆண்டறிக்கையை திரு வேல்முருகன் அவர்கள் வாசித்தார்கள். யூனியன் சேர்மென் திரு. முத்து செல்வ கணபதியவர்கள், திரு சோ. முனியப்பன் சமூகக் கல்வி அமைப்பாளர், திரு. தி. பகவத் சிங் பள்ளித் துணை ஆய்வாளர், திரு சு. தணிகாசலம் கிராமநல ஊழியர், ஆகியோர் சொற்

பொழிவாற்றினுர்கள். ஊராட்சி மன்றத் தலைவர் திரு. எஸ். சதாசிவப்பண்டாரம் அவர்கள் பரிசு வழங்கினுர்.

இரவு மாணவமாணவிகளால் கலாநிகழ்ச்சி நடத்தப்பட்டது.

திரு குழந்தைசாமி நன்றி நவில நாட்டு வாழ்த்துடன் விழா இனிது முடிந்தது.

* * *

**ஆண்டிப்பாளையம் ஆரம்பப் பள்ளி ஆண்டுவிழா**

மே 4.—காட்டுமன்னுர் கோயில் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த ஆண்டிப்பாளையம் ஆரம்பப்பள்ளி ஆண்டுவிழா யூனியன் தலைவர் திரு. முத்து செல்வகணபதி அவர்கள் தலைமையில் மே 4ந் தேதி மாலை 5.00 மணியளவில் நடந்தது. தலைமை ஆசிரியர் திரு. ராமமூர்த்தி அவர்கள் ஆண்டறிக்கை வாசித்தார்கள். திரு. ஐ. அ. பேர்பெற்ருன் யூனியன் ஆணையாளர், திரு முத்து செல்வகணபதி அவர்கள் (யூனியன் பெருந்தலைவர்,) திரு சோ. முனியப்பன் (சமூகக் கல்வி அமைப்பாளர்) அவர்கள், கிராமநல ஊழியர் திரு. சா. தணிகாசலம் ஆகியவர்கள் சொற்பொழிவாற்றினுர்கள்.

கிராமநல ஊழியர் திரு. சா. தணிகாசலம் நன்றிநவில நாட்டு வாழ்த்துடன் விழா இனிது முடிந்தது.

* * *

**நத்தமலை கிராமத் தொண்டர் படையினர் சிரமதான வேலை**

காட்டுமன்னுர் கோயில் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த நத்தமலை கிராமத்தில் மே 6 புதன் கிழமை அன்று நத்தமலை கிராமத் தொண்டர் படையினரும், மனியாம் ஆடூர் கிராமத் தொண்டர் படையினரும் 215 பேர்கள் சேர்ந்து சின்ன மதகு வாய்க்காலில் தூர்வாரிச் சுத்தம் செய்தனர். இந்த வேலையை யூனியன் கல்வி விரிவாக்க அலுவலர் திரு சோ. முனியப்பன் அவர்கள் ஊராட்சிமன்றத் தலைவர் திரு ஆர். கோவிந்தசாமி, ஆணையாளர் திரு ஐ. அ. பேர் பெற்ருன் அவர்கள், யூனியன் சேர்மென் திரு. முத்துசெல்வ கணபதி அவர்கள் மற்றும் விஸ்தரிப்பு அதிகாரிகள் முன்னிலையில் துவக்கிவைத்தார்கள்.

விராணம்ஏரி வறண்டுவிட்டதால் சின்னமதகிற்குத் தண்ணீர் கொண்டுவர 4 பர்லாங் நிலத்தில் ஒரு புதிய வாய்க்கால் விராணம் ஏரியின் மத்தியிலிருந்து வெட்டி அதன் வழியாகச்சின்ன மதகிற்குத் தண்ணீர் வந்து கொண்டிருக்கிறது.

* * *

**நத்தமலைப் பள்ளி இரண்டாம் ஆண்டுவிழா.**

மே. 6. காட்டுமன்னுர்கோயில் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த நத்தமலை பள்ளியின் இரண்டாம் ஆண்டு விழா யூனியன் தலைவர் திரு. முத்துசெல்வ

கணபதி அவர்கள் தலைமையில் நடந்தது.

காலையில் ஊராட்சி மன்றத் தலைவர் திரு. ஆர். கோவிந்தசாமி படையாச்சி அவர்கள் விளையாட்டு விழாவைத் துவக்கி வைத்தார்கள்.

விழாவில் காட்டுமன்னார் கோயில் கழக உயர்நிலைப்பள்ளி தமிழாசிரியர் திரு பி. முருகேசனார், யூனியன் பெருந்தலைவர் திரு. முத்து செல்வகணபதி அவர்கள், ஆணையாளர் திரு. ஐ. பேர்பெற்றான் அவர்கள். சமூக கல்வி அமைப்பாளர் திரு. சோ. முனியப்பன். கிராமநல ஊழியர் திரு. ச. சுப்பிரமணியன் ஆகியோர்கள் சொற்பொழிவாற்றினார்கள்.

ஆணையர் திரு ஐ. அ. பேர்பெற்றான் அவர்கள் கிராம விளையாட்டுப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கும் பள்ளி விளையாட்டுப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கும் பரிசுகள் வழங்கினார். பஞ்சாயத்துச் சார்பில் ஆணையர், சேர்மென் ஆகியவர்களுக்கு வரவேற்பிதழ்கள் வாசித்தளித்தனர்.

* * *

பெருந்துறை-2 பஞ்சாயத்து யூனியன்

பெருந்துறை-2 பஞ்சாயத்து யூனியனில் துடுப்பதி பஞ்சாயத்து பாலக்கரை என்னும் ஊரில் ஆசிரியர்களுக்கு குருநிலையர் பயிற்சி முகாம் சிறப்பான முறையில் நடத்தப்பட்டது.

35 ஆசிரியர்களடங்கிய இப்பயிற்சி முகாம் 2-5-64ம் தேதி மாலை பெருந்துறை 2 வட்டார வளர்ச்சி அதிகாரியவர்களின் ஆரம்ப உரையுடன் தொடங்கியது. பயிற்சி முகாமிற்கு திரு ஜெகநாதன், ஏ.டி.சி.சி. அவர்கள் தலைமை போதகராக இருந்தார்.

பயிற்சி முகாமின் இறுதி நாளுக்கு முதல்நாள் கோவை ஜாயிண்ட் கலெக்டரின் தனி உதவியாளர் திரு ஆர். ஞானம், பி. ஏ. பி. எல். அவர்களின் தலைமையில் நிறைவு விழா கொண்டாடப்பட்டது. திரு. நமசிவாயம், பி. ஏ., ஈரோடு கோட்டாட்சித் தலைவர் அவர்கள், மற்றும் பஞ்சாயத்துத்தலைவர்கள், ஊர்ப் பொது மக்கள் விழாவில் கலந்து கொண்டனர்.

* * *

கள்ளக்குடி பஞ்சாயத்து யூனியன்

கள்ளக்குடிப் பஞ்சாயத்து யூனியனின் சாதாரணக்கூட்டம் 26-6-64ம் தேதியன்று யூனியன் தலைவர் திரு. ரா. ப. சேதுராமத் தேவர் தலைமையில் நடைபெற்றது. கமிசனர் திரு. ச. கா. அமீர்பாட்சா வந்திருந்தார்.

பிரதேச வரியை 40 சதவீதத்திலிருந்து 60 சதவீதமாக உயர்த்துவது பற்றி ஆணையாளர் யாளர் ச. கா. அமீர்பாட்சா விளக்கிக்கூறிய பின்னர் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இந்த ஆண்டில் விவசாயிகள் சுற்றுலா செல்வதென்று முடிவு செய்யப்பட்டது.

**பஞ்சாயத்து யூனியன் அலுவலகம் வாலாசாபாத்**

1. ஆட்டுப்புத்தூர் பஞ்சாயத்திலும், திம்மையன் பேட்டை பஞ்சாயத்திலும் இரண்டு மாதர் சங்கங்களும் கீழொட்டிவாக்கம். கோவிந்தவாடி பஞ்சாயத்துகளில் இளம் விவசாயிகள் சங்கங்கள் ஆரம்பிக்கப்பட்டன.

2. 12-6-64 தேதியன்று வேளியூர் கிராமத்தில் பஞ்சாயத்து யூனியனல் கட்டப்பட்ட ஆசிரியை இல்லம் பெருந்தலைவர் திரு. சி. மா. லோகநாதன் அவர்கள் தலைமையில் செங்கைஜில்லா காங்கிரஸ் கமிட்டி உபதலைவர் திரு. சி. ஆர். உமாபதி அவர்களால் திறந்து வைக்கப்பட்டது.

3. வாலாசாபாத் பஞ்சாயத்து யூனியனைச்சேர்ந்தஊஞ்சம்பாக்கம் வேளியூர், புதுப்பாக்கம், ஊவேரி கோவிந்தவாடி, புள்ளலூர். கொட்டவாக்கம் ஆகிய 8 கிராமங்களிலும் கிராமத்தொண்டர் படை அங்கத்தினர்களுக்கான பயிற்சி முகாம்கள் நடைபெற்றன அவ்வமயம் விவசாய விஸ்தரிப்பு அலுவலர் திரு. பழனிமுத்து, கூட்டுறவு விஸ்தரிப்பு அலுவலர் திரு. ராஜகோபாலன் கல்வி விஸ்தரிப்பு அலுவலர் திரு. வெங்கட்ராமன் தொழில் விஸ்தரிப்பு அலுவலர் திரு. ஜம்புநாதன் கால்நடை விஸ்தரிப்பு அலுவலர் திரு. ராஜு. கம்போஸ்ட் உர அபிவிருத்தி ஆய்வாளர் திரு. வெங்கடராமன். யூனியன் ஓவர்சீயர் திரு. நாகரத்தினம் ஆகியோரால் விவசாய அபிவிருத்தி கால்நடை பராமரிப்பு பற்றி வகுப்புகள் எடுக்கப்பட்டன.

4. 30-6-64 தேதியன்று நாயகன் குப்பம் பஞ்சாயத்தைச் சேர்ந்த சின்னிவாக்கம் கிராமத்தில் மேற்படி பஞ்சாயத்து தலைவர் திரு. ராஜகோபலய்யங்கார் தலைமையில் ஹரிஜன தினம் கொண்டாடப்பட்டது. அவ்வமயம் ஆணையாளர் திரு. சமீனாட்சி சுந்தரம், கல்வி விஸ்தரிப்பு அலுவலர் திரு. வெங்கடராமன், கிராமநல ஊழியர் திரு. சேஷாத்திரி, சமூகநல ஊழியர் திரு. தங்கவேலு ஆசிரியர் திரு. ஜோசப் ஆகியோர்கள்சொற்பொழிவாற்றினார்கள். தேசியகீதத்திற்குப்பிறகு விழா இனிது முடிந்தது.

**அமரர் நேருஜி அவர்களது சிரார்த்த தினம்**

அமரர் நேருஜி அவர்களது சிரார்த்த தினம் 8-6-64 காலை தாளவாடியில் நல்ல முறையில் அனுஷ்டிக்கப்பட்டது. தாளவாடி பஞ்சாயத்து யூனியன் கூட்ட மன்றத்தில் யூனியன் தலைவர் உறுப்பினர்கள், பொது மக்கள் யூனியனைச் சேர்ந்த பள்ளிச் சிறுவர்கள், உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்கள் மாணவர்கள் யூனியன் அலுவலர்கள் எல்லோரும்கூடி அலங்காரம் செய்யப்பட்டிருந்த நேருஜியின் திருவுருவப்படத்திற்கு மரியாதை செலுத்தினர். பின்னர் பிரார்த்தனைப் பாடல்கள்பாடப்பட்டன. கூட்டம் வந்திருந்தவர்கள் அனைவரும் 5 நிமிடம் மௌனமனுஷ்டித்து மரியாதையாக எழுந்துநின்றனர். பின்னர் அலங்கரிக்கப்பட்டிருந்த நேருஜியின் திருவுருவப்படத்துடன் ஒரு மௌன ஊர்வலம் தாளவாடி பஞ்சாயத்து யூனியன் தலைவர் திரு சி. ஆர். ராசப்பா அவர்களது தலைமையின் கீழ் தாளவாடியின் முக்கிய வீதிகளின் வழியேசென்று பஞ்சாயத்து யூனியனை அடைந்தது. ஊர்ப் பொதுமக்களும் ஊர்வலத்தில் கலந்துகொண்டனர். பின்னர் சுமார் 2000 ஏழை மக்களுக்கும் மாணவர்களுக்கும் உணவு வழங்கப்பட்டது. தாளவாடியில்

இமேபசாக மழைபெய்துகொண்டி நந்தபோதிலும் இதுவரையில்லா மல் பெருந்திரளான மக்களும் வெளியூரிலிருந்து வந்திருந்தவர் களும் ஊர்வலத்தில் கலந்து கொண்டனர்.

## கிராமத் தொண்டர்படை பயிற்சி முகாம்

கொண்டாமுத்தூர்பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த தித்தி பாளையம் பஞ்சாயத்தில் கிராமத் தொண்டர்படை பயிற்சி முகாம் 26-6-1964-ந் தேதியன்று, கோவை மாவட்ட கலெக்டர் அவர்களின் நேர்முக உதவி யாளர் திரு எஸ். மிருத்யூஞ்சயன் அவர்களால் துவங்கிவைக்கப் பட்டது. கிராமத்தொண்டர் (யூனிபார்ம்) சீருடையணிந்து அணிவகுப்பு மரியாதை செய் தனர். பஞ்சாயத்துத் தலைவர் திரு. நஞ்சப்பகவுண்டர் தலைமை வகித்தார். திரு எஸ். தியாக ராஜன், வட்டார வளர்ச்சி அதி காரி அவர்கள் சிறப்புரையாக, கிராமத் தொண்டர்படையின் நோக்கம் பற்றி விரிவுரை ஆற்றி ஞர்.

கோவை கலெக்டர் அவர் களின் நேர்முக உதவியாளர் திரு மிருத்யூஞ்சயன் அவர்கள், கிரா மத் தொண்டர்படை பயிற்சியின் அவசியம், நோக்கம் பற்றியும், சேவை செய்யும் முறைகள் பற்றியும் விளக்கமாகக் கூறினர்.

சிறப்புரையில், வட்டார வளர்ச்சி அதிகாரி அவர்கள், கிராமத் தொண்டர்படையினர், வருங்காலத்தில், அவர்கள் ஆற்ற வேண்டிய பணிகள் பற்றியும், எதிர்கால இந்தியாவை நிர்ணயம் செய்யும் பொறுப்பு அவர்களிடம் உள்ளதை வலியுறுத்திஞர்கள்.

தொண்டர் படைத் தளபதி நன்றி நவில, விழா இனிது முடிவு பெற்றது.

## தொண்டர் படை பயிற்சிமுகாம், திருவெண்ணைநல்லூர்.

தென்ஞற்காடு ஜில்லா திரு வெண்ணைநல்லூர் பஞ்சாயத்து யூனியனில் கீழ்க்கண்ட 15 பஞ் சாயத்துக்களில் நடந்த ஒரு மாத மாகக் கிராமத்தொண்டர்படை பயிற்சி முகாம் வெகுசிறப்பாக மூன்று நாட்களுக்கு நடைபெற் றது. பயிற்சியில் தொண்டர் படையின் அம்சங்கள், நடை முறை, தொண்டர்படை அங்கத் தினர்களின் உணவு உற்பத்தி பொதுச் சொத்து பாதுகாப் பிற்கு எடுத்துக்கொள்ளவேண் டிய ஆர்வம் விரிவாக விளக்க மான முறையில் கல்வி விஸ்தரிப்பு அதிகாரி, விவசாய விஸ்தரிப்பு அதிகாரி, கலவை உர ஆய்வா ளர், மற்ற விஸ்தரிப்பு அதிகாரி களாலும், எடுத்துக்கூறப்பட்டன. 1. ஆணைவாரி. 2. அருங் குருக்கை, 3. சித்தலிங்கமடம், 4. இளந்துரை. 5. கண்ணரம் பட்டு, 6. மேலமங்கலம், 7. மணக் குப்பம், 8. பெண்ணைவலம், 9. சரவணப்பாக்கம், 10. செம்மார், 11. சித்திலங்கமடம், 12. தடுத் தாட்கொண்டூர், 13. கொணல வாடி, 14. எடையார். 15. தென் மங்கலம். பயிற்சி முகாம்களை திருக்கோவிலூர் கோட்டாட்சித் தலைவர், பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் அவர்கள் துவங்கி வைத்து சொற்பொழிவாற்றப்பட் டன.

## பஞ்சாயத்து யூனியன், மரக்காணம்

1964ம் ஆண்டு மே திங்களில் 27ம் நாள் உலகம் போற்றும் உத்தமர் நமது பிரதமர் ஜவஹர் லால்நேரு அவர்கள் உயிர் துறந் ததை முன்னிட்டு 28-5-64ல் பஞ்சாயத்து யூனியன் ஆணையர் திரு கே. ஏ. பீமராஜ், அவர் களும், மற்றும் அலுவலக சிப்பந்

திகள் அனைவரும் பஞ்சாயத்துத் தலைவர் திரு ஆர். ரெத்தினசிகாமணி முதலியார், மண்டல காங்கிரஸ் கமிட்டி தலைவர் திரு ராஜ மாணிக்கமுதலியார் அவர்களும் கிராம முக்கியஸ்தர்களும் ஆசிரியர்களும், பெண்களும் காலை 6-30 மணிக்கு வானொலி நிலையத்திலிருந்து மௌன ஊர்வலம் புறப்பட்டு கரிப்பாளையம் முக்கிய வீதிகளை அடைந்து மறுபடியும் வானொலி நிலையத்தை அடைந்து சுமார் 15 நிமிடம் வரை மௌனமாக நின்று ஆத்மா சாந்தி அடைய இறைவனை வணங்கினார்கள்.

### துரிஞ்சாபுரம் பஞ்சாயத்து யூனியன்

துரிஞ்சாபுரம் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த ஊசாம்பாடி கிராமத்தில் 15-6-64ம் தேதி புதிய பள்ளிக்கட்டிட திறப்பு விழா திரு டி. வி. தேவராஜ முதலியார், எம். எல். சி. அவர்கள் தலைமையில் நடைபெற்றது. பஞ்சாயத்து தலைவர் திரு கே. வெங்கட்ராம ரெட்டியார் அவர்கள் அனைவரையும் வரவேற்றார். திருவண்ணாமலை கோட்டாட்சித் தலைவர் திரு எஸ். ஆர். சுப்பிரமணியம் அவர்கள் பள்ளிக்கட்டிடத்தைத்திறந்து வைத்து கல்வியின் அவசியம் பற்றிச் சொற்பொழிவாற்றினார். திருவண்ணாமலையில், கல்லூரி ஒன்று திறக்கும் அவசியத்தைப் பற்றி வலியுறுத்தினார். திரு ஆர். உலகநாதன் உதவிப் பொறியாளர் நெடுஞ்சாலை திருவண்ணாமலை அவர்கள் காந்திஜியின் படத்தையும் மாவட்ட கல்வி அதிகாரி திரு எம். சுல்தான் மொஹிதீன் பி. ஏ. எல். டி. அவர்கள் ஜனாதிபதி படத்தையும், பஞ்சாயத்து யூனியன் பெருந்தலைவர் திரு பி. சீனுவாச ரெட்டியார் அவர்கள் நேருஜியின் படத்தையும், பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் திரு கே. வரதராஜன் அவர்கள் நேத்தாஜியின் படத்தையும், கொத்தந்தவாடி பஞ்சாயத்து தலைவர் திரு ஜி. சிவராம ரெட்டியார் அவர்கள் காமராஜ் அவர்களின் படத்தையும் திறந்து வைத்து தலைவர்களைப் பற்றி சொற்பொழிவாற்றினார்கள். பஞ்சாயத்து அங்கத்தினர் திரு எஸ். தியாகராஜன் நன்றி கூற விழா இனிதே முடிவடைந்தது.

### கிராமத் தொண்டர்படை பயிற்சி முகாம்

கொண்டாமுத்தூர் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த பேரூர் செட்டிபாளையம் பஞ்சாயத்தில் கிராமத் தொண்டர்படை பயிற்சி முகாம் 26-6-1964-ந் தேதியன்று, கோவை மாவட்ட கலெக்டர் நேர்முக உதவியாளர் திரு. எஸ். மிருத்யூஞ்சன் அவர்களால் துவக்கிவைக்கப்பட்டது. கிராமத் தொண்டர்படையினர் (யூனிபார்ம்) சீருடையணிந்து, அணிவகுப்பு மரியாதை செய்தனர். பஞ்சாயத்துத் தலைவர் திரு. நடராச கவுண்டர் தலைமை வகித்தார். திரு. எஸ். தியாகராஜன், வட்டார வளர்ச்சி அதிகாரி அவர்கள் சிறப்புரையாக, கிராமத் தொண்டர்படையின் நோக்கம் பற்றி விரிவுரை ஆற்றினார்.

கோவை கலெக்டர் அவர்களின் நேர்முக உதவியாளர் திரு. மிருத்யூஞ்சன் அவர்கள், கிராமத் தொண்டர்படை பயிற்சியின் அவசியம் நோக்கம் பற்றியும், சேவை செய்யும் முறைகள் பற்றியும் விளக்கமாகக் கூறினார்.

சிறப்புரையில், வட்டார வளர்ச்சி அதிகாரி அவர்கள், கிராமத் தொண்டர்படையினர், வருங்காலத்தில், அவர்கள் ஆற்ற வேண்டிய பணிகள் பற்றியும், எதிர்கால இந்தியாவை நிர்ணயம் செய்யும் பொறுப்பு நம்மிடத்தில் உள்ளதென்றார்.

வாசகர்களில் பெரும்பாலோர் நல்லவர்கள், ஒழுங்கானவர்கள். தெரியாதபோது கேட்பார்கள். சொன்ஞல் தெரிந்து கொள்வார்கள். தெரியாமல் தவறு செய்து விடுவார்கள். எடுத்துக் காட்டிஞல் திருந்தி விடுவார்கள். இவர்களோடு பழகுவதும் பணி புரிவதும் எளிது; இனிமையாகவும் இருக்கும்.

# நூலகவுணர்வு

**வே. தில்லைநாயகம்**, எம். ஏ., எம். எல். எஸ்., பி. டி.,
(நூலகர், கன்னிமாரா நூலகம், சென்னை,)

***நூலகப் பூச்சி***

அதோ தெரிகிறதே முசுக்கட்டை மரம், அதன் இலைகளைச் சற்று ஊன்றிப் பாருங்கள்! அதில் புள்ளி புள்ளியாகத் தெரிகிறதா? அது ஒவ்வொன்றும் தட்டையாக வெண்மையாகத் தோன்றுகிறதா? ஆம்; அது ஒரு வகை முட்டை. ஒருவார காலத்தில் அம் முட்டையிலிருந்து கால் அங்குல நீளமுள்ள புழு வெளிவரும். அது முசுக்கட்டை இலைகளை ஆவலுடன் தின்னும். மூன்று நான்கு வாரங்களில் மூன்று அங்குல நீளம் வரையில் வளரும். இப்போது மஞ்சள் நிறம் கொண்டு உரோம மில்லாமலிருக்கும். புழு வளர வளர அதன் தோல் நான்கு தடவை உரியும். பிறகு இரை தின்ஞது ஒரே இடத்தில் நிலையாக நின்றுவிடும். தன் வாய்க்கருகிலுள்ள இரு துவாரங்களின் வழியாக வெளிவரும் ஒருவித மஞ்சள் திரவத்தைக் கொண்டு ஒரு வகை நூலை நூற்கும். இந்த நூலால் தன்னைச் சுற்றி ஒரு கூடு கட்டிக் கொள்ளும். அடுத்த மூன்று வாரங்களில் அதனைத் துளைத்துக்கொண்டு வெளிவருவதென்ன தெரியுமா? அதுதான் கண்ணையும் கருத்தையும் கவரும் பளபளக்கும் பட்டைத் தரும்-பட்டுப்பூச்சி!

அந்த பட்டுப்பூச்சியின் வாழ்க்கையைப் போன்றதுதான் நூலக வளர்ச்சியும் என்று சொல்லலாம். ஒரு காலத்தில் கேட்பாரற்று, கவனிப்பாரற்று, பழையதைச் சேர்த்து வைக்கும் இடமாய்க் கிடந்த நூலகம், எத்தனையோ மாற்றங்கள் பெற்று இன்று சமுதாய மையமாய் விளங்கி நிற்கிறது.

***பெரியார் பேச்சு***

அதன் பெருமையும் சிறப்பும் சொல்லித் தொலையாது. எனினும் பெரியார்கள் என்ன சொல்கிருர்கள் தெரியுமா?

“எனது நூலகமே எனக்குப் போதிய பெருஞ் செல்வமாகும்”-ஷேக்ஸ்பியர்.

"நூலகங்கள் பண்டை உலகின் சின்னங்கள்; இக்கால உலகின் புகழ்க்கொடிகள்" லாங்பெல்லோ.

"இக்கால உண்மைப் பல்கலைக் கழகம் நூற்களின் தொகுதி தான்"—கார்லைல்.

"படிப்படியாக நான் தேர்ந்து திரட்டிய நூலகமே என் பணிக்கு அடிப்படை. அது உள்ளத்தே இன்பமும், புறத்தே ஆறுதலும் தருகிறது"—கிப்பன்.

"அறிவுப்போராட்டத்திற்கான படைக்கலங்கள் செய்யும் படை வீடு நூலகம்"—இங்கர்சால்.

"நூலில்லா வீடும், உயிரற்ற உடலும் ஒன்றுதான்"

——பிளேடோ.

"நூற்களில்லா வீடு சாளர மில்லா வீடு; நூற்களில்லா வீட்டில் குழந்தைகளை வளரவிடக் கூடாது"—ஹோரேஸ்பான்.

"நூலகத்தில் கிடைப்பதை எண்ணிப்பார். ஆதிநாளிலிருந்து ஆறிஞர்களின் அறிவுரை செறிந்து கிடக்கிறது. தோழனுக்காகக்கூட திறந்து சொல்லாக் கருத்துகள், உனக்காகத் தெளிவாக விளக்கப்பட்டுக் காத்திருக்கின்றன"—எமர்சன்.

"நூலகம் உண்டாக்கப்படுவதில்லை. அது வளரவேண்டும்" —பிரல்.

"நான் ஒரு பல்கலைக் கழகம் அமைத்தால் முதலில் ஒரு நூலகம் அமைப்பேன்"—லீகாக்.

"உனது சொர்க்கமாம் நூலகத்தில் நீ எவ்வளவு சுறுசுறுப்பாய் இருப்பாய் என்பதை நானறிவேன்"—ஏராஸ்மஸ்.

### பஞ்சசீலம்

இத்தகு கருத்துகளை மக்கட்குத் தரும் முயற்சியில் தான் நூலகப் பஞ்சசீலம் எழுந்தது. முதற் சீலமான நூற்கள் படிப்பதற்கே என்பது நூற்களிருப்பு, நூலக இருப்பிடம், நூலக நேரம், நூலக உபகரணங்கள் முதலிய துறைகளில் ஒரு மாற்றம் விழைக்கிறது.

அது 'ஆளுக்கொரு நூல்' என்ற இரண்டாம் சீலத்தை உருவாக்கி,ஏழைபணக்காரர்என்னும் பாகுபாடு போக்கி, ஆண் பெண் வித்தியாசம் மாற்றி, பட்டணத்தார் கிராமத்தார் இணைப்பு ஏற்படுத்தி, நல்லார் நலிந்தார் பேதம் குறைத்து அனைவரும் படிக்க வழி செய்கிறது.

இதற்கப்புறமும் கவனிக்கப் படாத நூல் எதுவும் இருக்கக் கூடாது. நூலுக்கோர் ஆள் வேண்டும் என்ற மூன்றும் சீலம் முனைந்து செயலாற்ற அடி கோலுகிறது.

அவையனைத்தும் காலமறிந்து செயலாற்றிப் பயன்காண 'காலங் கருது' என்ற நான்காம் சீலம் பிறந்தது. அது நூலகப் பணியின் ஒவ்வொரு கட்டத்திலும் முன்னேற்றம் உண்டாகச் செய்கிறது.

அது 'நூலகம் வளரும்' என்ற ஐந்தாம் சீலத்தைச் சுட்டிக் காட்டுகிறது. அதன் தொடர்பாக நூலகத்தின் பல்வேறு வளர்ச்சிகளை—குழந்தை வளர்ச்சியை, மனித வளர்ச்சியை, கிளை வளர்ச்சியை, குடும்ப வளர்ச்சியை— நுணுகி யாராய்ந்து அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் நிறைந்து நிற்கும் நூலகப் பணியின் விரிவை எடுத்துக் காட்டுகிறது.

### நூலகவுணர்வு

இந்தப் பஞ்ச சீலங்கள் வெற்றி பெறவேண்டுமானால் இப்பணியில் சம்பந்தப்பட்ட இரு சாராரும்—நூலகத்தைப் பயன்படுத்தும் வாசகர்களும், அதற் குறுதுணையாய்ப் பணிபுரியும் நூலகர்களும்-

நூலகவுணர்வு கொண்டவர்களாயிருக்க வேண்டும்.

நூலகவுணர்வு என்றால் என்ன? மக்களால் மக்களே, மக்களுக்காக நடத்தி வருவது நூலகம். சமுதாய அமைப்பில் ஒரு பகுதி. சமுதாய வாழ்வு சரிவர நடக்க சில கட்டு திட்டங்கள் இருப்பது போலவே நூலகப் பணி நடக்கவும் சில கட்டு திட்டங்கள் வேண்டும். அக்கட்டு திட்டங்கள் நூலகத்தின் நோக்கம், செயல் முறை, முடிபு முதலியவைகளை வரையறுத்துக் கூறுகின்றன. எனவே அக்கட்டு திட்டங்களைச் சரியாக அமுல் நடத்தவேண்டும் அப் பொறுப்பேற்றவர்கள். அக் கட்டு திட்டங்களைச் சரியாகப் போற்றிப் புரக்கவேண்டும். அதனைப் பயன்படுத்துபவர்கள் இங்ஙனம் நூலகத்தின் நோக்குக்கேற்ப, நடைமுறைகளைச் சரியாகப் பின்பற்றி, பயன்பெற முனைவதே நூலகவுணர்வு எனக் கொள்ளப்படும்.

### வாசகர்

நூலகப் பணியில் பெரும்பங்கு கொண்டவர்கள் வாசகர்கள். வாசகர் தான் நூலகப் பணியின் உரிப் பொருளாவர். வாசகர் இன்றேல் நூலகப் பணியேது? ஏனெனில் நூலகத்தின் கருப்பொருளாம் நூற்கள் மட்டும் இருந்தால் போதாது நூலகப் பணி நடக்க. கருப்பொருளைப் பயன்படுத்த உரிப்பொருள் தேவை. அத்தகு வாசகர்கள் பல ரகம். ஒவ்வொருவரும் ஒரு ரகம். எனவே அவர்களைப் பற்றி—அவர்கள் கொள்ள வேண்டிய நூலகவுணர்வு பற்றி—முதலில் காணலாம்.

### நூலக விதிகள்

ஒவ்வொரு நூலகமும் அதன் நடைமுறை வேலையைப்பற்றி—வாசகர்களை அனுமதிக்கும் முறை உறுப்பினராகும் முறை, நூற்கள் கொடுத்து வாங்கும் முறை, பிற காரியங்கள் பற்றி—நீண்ட அனுபவத்திற்கும் சிந்தனைக்கும் பிறகே விதிகள் நிர்ணயித்துள்ளன. இந்த விதிகள் காலத்திற்கேற்ப, தேவைக்கேற்ப மாற்றப்படவேண்டும்.

புதிதாக நூலகம் வருவார் ஒவ்வொருவரும் அந்த விதிகளை வாங்கிப் படித்துத் தெரிந்து கொள்ள வேண்டும். தனியாகக் கொடுக்கப்படாவிட்டால் 'அறிவிப்புப் பலகை'யில் படித்துத் தெரிந்து கொள்ளவேண்டும். அதுவும் முடியாவிட்டால் நூலகப் பொறுப்பாளரை நேரடியாகக் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டும்.

இந்த அடிப்படை கூடத் தெரியாமல் சிலர் நூலகத்தில் நுழைந்து தனது மனம் போல் ஏதாவது செய்துகொண்டு இருக்கும்போது நூலகப் பணியாளர்கள் நன்முறையைச் சொன்னால், அது பற்றி தனக்குத் தெரியாது என்றும், தன்னிடம் சொல்லவில்லையென்றும் பேச ஆரம்பிக்கிறார்கள்.

அந்நிலையிலும் நூலகப்பணியாளர்கள் அமைதியாக, மெதுவாக நிலையைச் சொல்லி நூலக விதிகளை வாசகர்கள், பின்பற்றும் படி செய்ய முயலவேண்டும். அதனை வாசகர்களும் உணர்ந்து ஒத்துழைக்க முன்வரவேண்டும்.

### கலைமகள் பக்தர்

அதோ நூலகம் நோக்கி வருகிறாரே அர்த்த நாரீசுவரம் பிள்ளை அவர்களைச் சந்தியுங்கள். கல்வி என்றவுடன் அவருக்கு வெள்ளைக் கலையுடுத்தி, வெள்ளைப் பணி பூண்டு, வெள்ளைத் தாமரைப் பூவில் வீணையுடனமர்ந்திருக்கும் சரசுவதி தேவிதான் முன்நிற்பாள். தெருவில் நடந்து போகும் போது காற்றடித்து வந்த காகிதம் காலில் பட்டு விட்டால்கூட

குனிந்து, அதையெடுத்துக் கண்ணில் ஒற்றிப்போட்டு விட்டுத்தான் அப்புறம் நகர்வார். அவருக்கு அத்தனை பக்தி, நம்பிக்கை அவருக்கு அச்சிட்ட காகிதத்தில்-புத்தகத்தில்.

அவர் முதல் முதலாக நூலகத்திற்கு வந்தார் அன்று. வாயிற்படியில் நூலகத்திற்கு வருவார் கையொப்பமிட வைத்திருக்கும் ஏட்டைக் கவனியாது உள் நுழைந்தார். வாசலில் நின்ற பணியாள் "ஐயா, இதில் கையெழுத்து..." என்றான். அவருக்குக் கோபம் பொங்கிவிட்டது. கலைமகள் கோயிலில் இடையே இந்தத் தரகன் யார் என்ற எண்ணம் போலும்! அந்நேரத்தில் அப்பக்கம் வந்த நூலகரைக்கண்டதும் முறையிட்டார். நூலகர் அமைதியாக அதன் அவசியத்தை—நூலகம் வருபவர்கள் எண்ணிக்கையறியவும், வந்தவர்கள் விவரமறியவும், நூலக விதிப்படி நடப்பதாக ஒப்புதல் தருவதாகவும் எழுதுவதே அதன் நோக்கம் என்பதை—எடுத்துரைத்த பின்னர் சாந்தியடைந்தார். கலைமகள் பக்தர்களின் பட்டியலில்-நூலகம் வந்துபோன பெரியவர்களின் பட்டியலில்-தன் பெயரும் இருக்கட்டும் என்று ஒப்பியிருக்க வேண்டும். பின் கையொப்பமிட்டு உள்ளே சென்றார்.

ஒவ்வொரு நூலகத்தின் வாசலிலும் வாசலேடு (Gate Register) ஒன்றிருக்கும். வருவார் ஒவ்வொருவரும் அவரவர் பெயர், முகவரி முதலியவைகளைத் தெளிவாக எழுதிவிட்டு. நூலகத்திற்குள் செல்லவேண்டும். குடை, பை, முதலியன கொண்டு வந்திருந்தால் வாசலிலிருப்பாரிடம் கொடுத்துவிட்டு அதற்கான சீட்டு ஒன்றைப் பெற்றுக் கொண்டு உள்ளே செல்லவேண்டும். இது நூலகத்துக்கு வருவார் பொருள்களைத் தவற விட்டு விடாமலும், நூலகத்துள் எடுத்துச் செல்வதால் பிறருக்கு இடைஞ்சலாயிருப்பதையும் அவருக்கே தொல்லையாயிருப்பதையும் தவிர்க்கவே உதவியாகச் செய்யப்படுகிறது. இதனை வாசகர் ஒவ்வொருவரும் உணர்ந்து நூலகப் பணியாளரிடம் விவாதிக்காமல் கையெழுத்திட்டு உட்செல்ல வேண்டும்.

### கூச்சப்படுவார்கள்

இதனை ஒப்பியே வருகிற வாசகர் பலர். அவர்கள் ஒவ்வொருவரும் ஒரு ரகம். ஒரு சாரார் கூச்சப்படும் தன்மையினர். அவர்களாக எதையும் கேட்கமாட்டார்கள். பொது இடத்தில் எதையும் தவருக செய்துவிடக்கூடாது என்று தயங்குவார்கள் அத்தகையவர்களைக் குறிப்புதவியாளர்(Reference Assistant)மெதுவாகப் பேச்சுக்கொடுத்து வேண்டியதறிந்து சொல்லி உதவவேண்டும்.

### எல்லாமறிந்தார்கள்

வாசகர்களிலே மற்ருெரு பிரிவினர் எல்லா மறிந்தாராகக் காட்டிக் கொள்வார்கள். அவர்களுக்கு நூலகத்தில் ஏதாவது தேவைப்படும். ஆனால் அதைத் தேடியறியும் வழி தெரியாது. நூலக உதவியாளர்களிடம் கேட்டுப் பெறவும் தன் மதிப்பு இடங்கொடாது. அப்படியும் இப்படியும் போய்கொண்டு திண்டாடுவார்கள். இத்தகையவர்களையும் குறிப்புதவியாளர் மெதுவாய் அணுகி உதவவேண்டும்.

### ஷாவைக் காணும்

வாசகர்களிலே இன்னெரு ரகம் அதோ வருகிருரே திருமலை! புதிதாகப் பட்டணத்துக் கல்லூரியில் சேர்ந்திருப்பவர். இன்றுதான் நூலகத்திற்கு வருகிருர். வந்ததும் 'கேட்லாக்' எங்கே என்கிருர்

நூலகப் பணியாளர் போன்ற ஒருவரிடம். அவர் எதிர் வரிசையிலிருந்த நூலகப் பட்டிப் பெட்டியைக் காட்டி விட்டுப் போகிருர். அவர் பரக்கப் பரக்க விழிக்கிருர். பிறகு குறிப்புதவியாளரிடம் போகிருர். அவரிடம்கேட்கிருர். பள்ளிகளில் புத்தக உருவில் அச்சு நூற்பட்டி வைத்திருப்பதை நினைத்துக் கொண்டு கேட்டவர் மாணவர். அதனைப் புரிந்து கொண்ட குறிப்புதவியாளர் அவரை யழைத்து பட்டியை இழுத்து விவரம் கூறுகிருர்.

மாணவர் கொஞ்சநேரம் கார்டுகளை மேலும் கீழும் புரட்டுகிருர் சலிப்பும் கோபமும் குடிகொண்டன அவர் முகத்தில். கிட்ட வந்தார். ''ஏன் சார்? இவ்வளவு பெரிய நூலகத்திலே பெர்ஞர்டு ஷா புத்தகம் ஒன்றும் கிடையாதா? எங்கள் பேராசிரியர் என்னமோ எடுத்ததற்கெல்லாம் நூலகத்திற்குப் போ என்கிருர். இங்கு பார்த்தால்.........? பொரிந்தார். அவர் எழுதியதனைத்தும் இருக்கிறதென்ருர் குறிப்புதவியாளர். பின் நூற்பட்டியிலே|காணவில்லையே'' என்கிருர் மாணவர். மாணவரை அழைத்து 'ஷா, பெர்ஞர்டு' என்று தலைப்பில் நூற்களைக் காட்டுகிருர் உதவியாளர். 'தெரியாது கோபித்துக் கொண்டேன்' என்று தன் வேலையிலீடுபடுகிருர் மாணவர்.

### வெட்கம் வேண்டாம்

கோபித்துக் கொள்வது இவர் மட்டுந்தான ஆயிரமாயிரம் பேர்! நூலகத்திற்கு வருபவர்கள் உயர் படிப்பாளராயினுஞ் சரி,சாதாரண நிலையிலுள்ளவராயினுஞ் சரி. கொஞ்ச நாட்களுக்கு நூலக அமைப்பை—நூலகப் பகுப்பு முறையை—நூலகப் பட்டியமைப்பை-நூற்கள் கொடுத்து வாங்கும் முறையை—குறிப்பு நூல்கள் வைத்துதவும் போக்கை—வெட்கப்படாமல் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டும். இதில் மதிப்புக் குறைவு ஏதுமில்லை. தெரியாது குழம்பினுல்தான் தவறு. இதனையுணர்ந்து நூலக உதவியாளர்களும் புதிதாக வருபவர்களுக்கு நூலக வேலை முறையைப் படிப்படியாகச் சொல்லித் தரவேண்டும்.

### சுயநலக்காரர்

வாசகர்களிலே இன்னெரு ரகம் சுயநலக்காரர். அவர் நூலகத்திற்கு வந்து வேண்டியதைப் படித்து விட்டுச் செல்வார். சில சமயம் படிக்க எடுத்த நூலை படித்து முடித்திருக்கமாட்டார். நாளை அதைத் திரும்ப வந்து படிக்க எண்ணம். அதே சமயம் நாளை வந்தால் கிடைக்குமோ என்ற ஐயம் வேறு. எனவே சுருக்கு வழியாக—சுயநலம் மேலிட்டு—தான் எடுத்த 'பொருளியல்' நூலை 'இலக்கியப்பகுதி' யின் நடுவில் ஒளித்து விட்டுச் சென்று விடுவார். மறுநாள் வந்து எடுத்துக் கொள்வார். சில சமயம் அவரே எடுக்க முடியாமல் அது வேறு எங்காவது கலந்து விடவும் கூடும். அப்போது அது அவருக்கும் பயன்படாது பிறருக்கும் பயன்படாது போகிறது. நூலகத்தில் இடம் தவறி வைக்கும் நூல் காணுமற்போன நூலுக்கொப்பாகும்.

இந்த நிலைமை மாறவேண்டும். வாசகர் தான் எடுத்துப் படித்த நூலை மேசையிலேயே விட்டுவிட வேண்டும். நூலகப் பணியாளர்கள் அதை எடுத்துத் தக்க இடத்தில் வைத்துக் கொள்வர். அப்படி ஏதாவது வேண்டுமாயின் வாசகர் நேரடியாக நூலை எடுத்துச் சென்று குறிப்புதவியாளரிடம் கொடுத்து வைத்திருந்து மறுநாள் பெற்றுக் கொள்ளலாம். இதனுல் நூல் தவருன இடம் போய்ச்

சேராமல் வேண்டியபோது பயன் படும்.

### திருடர்கள்

வாசகர்கள் பல ரகம். அதில் ஒரு ரகம் நூற்களை எந்நிலையிலும் திருடமாட்டார்கள். அவர்களைப் பற்றிக் கவலையில்லை. மற்றொரு ரகம் எந்நிலையிலும் திருடுவார்கள். அவர்களைப் போலிசார் உதவி கொண்டு கண்டு பிடித்து நூலகத்திற்குள்ளேயே நுழையாதபடி தடுத்து விடவேண்டும். மூன்றுவது ரகம் வாய்ப்பு கிடைத்தால் திருடுவார்கள். இவர்கள் நல்லவர்கள்போல் படிக்க வருவார்கள். நூற்களைப் புரட்டிக் கொண்டிருப்பார்கள். அக்கம் பக்கம் பார்த்து அட்டையைக்கிழித்துவிட்டு இடுப்பில் சொருகிக் கொள்வார்கள். அல்லது கத்தியால், கத்திரியால் நூலின் பக்கங்களை வெட்டி இடுப்பில் சொருகிக்கொள்வார்கள். இக்குழுவிலே கல்லூரி மாணவர்கள் சிலரையும் காணும்போது வருந்தமாயிருக்கிறது.

இவர்களைப் பற்றி நூலகப் பணியாளர்கள் விழிப்பாயிருக்கவேண்டும். வாசகர் யாரும் ஐயப்படத்தக்க நிலையில் செயலாற்ற இடந்தரக்கூடாது. எப்போதும் நூலகப் பணியாளர்கள் நூலடுக்கு, வாசிப்புப் பகுதியில் கண்ணோட்டமாயிருக்க வேண்டும். இந்நிலை தவறு நேராமல் தடுக்க வழி செய்யும்.

### ஒழுங்கானவர்கள்

வாசகர்களில் பெரும்பாலோர் நல்லவர்கள்; ஒழுங்கானவர்கள். தெரியாதபோது கேட்பார்கள். சொன்னால் தெரிந்து கொள்வார்கள். தெரியாது தவறு செய்வார்கள். எடுத்துக் காட்டினால் திருந்திக் கொள்வார்கள். இவர்களோடு பழகுவதும் பணி புரிவதும் எளிது; இனிமையாகவுமிருக்கும்.

### பொது இடம்

இப்படி வந்து படிக்கும் வாசகர்கள் அனைவரும் ,தாங்கள் வந்திருப்பது பொது இடம்; தங்களைப் போல இன்னும் பலர் அதே இடத்திற்குப் படிக்க வந்திருக்கிறார்கள்; தங்களுக்கு நூலகத்தில் என்னென்ன உரிமை இருக்கிறதென்று நினைக்கிறார்களோ அது போலவே பிறரும் உரிமை கொண்டாடுவர்கள் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். தாங்கள் எப்படிக் கவனிக்கப்பட வேண்டுமென்று நினைக்கிறார்களோ, அது போலவே பிறரும் கவனிக்கப்பட வேண்டும் என்பதை எண்ணிப் பார்க்கவேண்டும்.

### ஒருவர்பின் ஒருவர்

எனவே வாசகர் ஒவ்வொருவரும் நூலகவுணர்வு கொண்டவராய் நூலகத்தில் நடந்துகொள்ள வேண்டும். நூலகத்தில் நுழையும் போது வாசலில் கையொப்பமிடும் இடத்தில் கூட்டமிருப்பின் ஒருவர் பின் ஒருவராய் வரிசையாய் நின்று நகர்ந்து கையொப்பமிட்டுச் செல்லவேண்டும். சொந்த மானவை, குடைபோன்றவைகளை வாசலிலிருப்பாரிடம் ஒப்படைத்து விட வேண்டும்.

### நூலடுக்கிடையே

பின் நூலடுக்குக்குச் சென்று நூலெடுக்கும் போது நூற்களை கண்டபடி புரட்டிப் போட்டு விடாமல், அடுத்து நிற்பாருக்கு இடைஞ்சலா யில்லாமல் அமைதியாக நகர்ந்து நூலெடுத்துக் கொண்டு படிக்குமிடம் செல்ல வேண்டும். நூலடுக்கின் மத்தியின் நின்று கொண்டு படிக்க ஆரம்பித்து விடுதல் கூடாது. அது வாசகருக்கும் பிறருக்கும் இடைஞ்சல் என்பது நினைவிருக்க வேண்டும்.

### வாசிப்புப் பகுதியில்

வாசிப்புப் பகுதியில் அமரும் போது காலியாயிருக்கும் நாற்காலியை மெதுவாக நகர்த்தி வைத்து அமரவேண்டும். அம்முறை அடுத்து உட்கார்ந்திருப்பாருக்கு இடைஞ்சலா யிருக்கக் கூடாது. அதில் ஏதாவது சங்கடமிருப்பின் நூலகப்பணியாளர்களிடம் சொல்லிச் சரிப்படுத்திக் கொள்ளல் வேண்டும். உட்காரும் போதும் அடுத்திருப்பார், எதிரமர்ந்திருப்பார் மேல் கை, கால் படாமல் நேராக உட்கார முயல வேண்டும். ஒரு நாற்காலியிலிருந்து கொண்டே அடுத்த நாற்காலி மீதோ, மேசை மீதோ, பெஞ்சு மீதோ காலை நீட்ட முயலக் கூடாது.

### பொதுச்சொத்து.

அடுத்து நூற்களைப் படிக்கும் போது நூற்களை கண்டபடி புரட்டி ஏடுகளை மடிக்காமல் மெதுவாகப் புரட்டப் பழகவேண்டும். மறந்தும் ஏடுகளைப் புரட்ட விரல் வாயின் உதவியை நாடக்கூடாது. படிக்கும் நூற்களில் கோடு கிழிக்கவும், படங்களில் திருத்தம் செய்யவும், ஓரங்களில் குறிப்பெழுதவும் முயலக் கூடாது.

ஒரு நூலில் அடுத்தவர் அப்படிச் செய்திருப்பதைக் காணும் போது, நாம் முகஞ் சுளிப்பது போல,? வெறுப்படைவது போல, பிறரும் நமது தவறு கண்டு முகஞ் சுளிப்பார் என்பது நினைவிருக்க வேண்டும்.

### நீராட்டு

வீட்டிற்கு எடுத்துச் செல்லப் படும் நூற்களில் சில எண்ணெய் தேய்த்துக் குளித்து, மஞ்சள் குங்குமம் வைத்துக் கொண்டு திரும்பி வருவதைப் பார்க்கிறோம். சில குழந்தைகளின் கொஞ்சுதலால் அலங்கோல முற்றும் திரும்புவதுண்டு.

இத்தகு குறைபாடுகளை வாசகர்கள் விழிப்போடிருந்தால்-நூலகவுணர் வோடிருந்தால்—மாற்றி விடமுடியும்.

### நூலகச்சுகாதாரம்

இதனைப் போலவே நூலகத்திற்கு வருவோர் பட்டி அட்டைகளைப் புரட்டவும், ஏடுகளைப் புரட்டவும்சிறு பிள்ளைகள் போல பெரியவர்கள் கூட-கையை வாய்க்கு விரட்டுகின்றனர். இது மாற வேண்டும்.

அதைப் போலவே நூலகத்தில் எச்சில் உமிழ்த்தல், சளி சிந்துதல், நகம் பிய்த்தல், சிக்கெடுத்தல், பென்சில் சீவுதல், குப்பை போடுதல், மை உதறல் போன்ற பழக்கங்களை மாற்றிக் கொள்ள வேண்டும்.

### உறுப்பினர்

இத்தகு குறைகளை யெல்லாம் நாளடைவில் விட்டொழித்தவர்கள்-நல்லவர்கள்-நூற்களை வீட்டிற்கு எடுத்துச் சென்று படிக்க விரும்பினுல் அவர்களை மகிழ்ச்சியுடன் நூலக விதி முறைப்படி உறுப்பினராக்கிக் கொள்ள வேண்டும்.

### எத்தனை நூல்கள் ?

உறுப்பினராய் ஏற்றுக் கொள்ளப்பட்டவர் ஒவ்வொருவருக்கும் குறிப்பிட்ட வாசகர் சீட்டுகள் (Borrower's Tickets) கொடுக்கப் படும். சாதாரணமாக சென்னை கன்னிமாரா நூலகத்தில் 3 சீட்டுகளும், பல்கலைக்கழகத்தில் 3 சீட்டுகளும், தல நூலகக் குழு நூலகங்களில் ஒன்று அல்லது இரண்டு சீட்டுகளும் தரப்படுகின்றன. சில சமயங்களில் குறிப்பிட்டவர்களுக்குக் குறிப்பிட்ட காரணத்திற்காகக் குறிப்பிட்ட காலத்

திற்குக் கூடுதல் சீட்டுகள் கொடுக்கப்படும்.

உறுப்பினர் யாராயினும் ஒப்புக் கொள்ளப்பட்ட சீட்டுகளுக்கு அதிகமாக நூற்கள் எடுத்துச் செல்ல முயற்சி செய்யக்கூடாது; அதற்காக வாதாடக் கூடாது; அது முறையாகாது. இதில் நூலகப் பொறுப்பாளர்கள் கண்டிப்பாயிருக்கவேண்டும்.

### பதிஞன்கு நாட்கள்

இப்படி ஒப்புக் கொள்ளப்பட்ட சீட்டுகளின் கணக்குப்படி நூற்கள் வீட்டிற்குப் படிக்க எடுத்துச் செல்லலாம். கொடுக்கப்பட்ட நூல் ஒவ்வொன்றும் பதிஞன்காம் நாள் திருப்பித் தரப் பெறுதல் வேண்டும். அந்த நூல் மேலும் படிக்கத் தேவைப்பட்டால், நூலகத்திற்கு முன்கூட்டியே தெரிவித்து-திருப்பிக் கொடுக்க வேண்டிய தேதிக்கு முன்னரேயே தெரிவித்து-மேலும் மூன்று பதிஞன்கு நாட்கள் வைத்துப் படிக்கலாம்.

அம்முறையில் கேட்கப்பட்டது நூலகத்திற்கு ஒப்புதலில்லாமல்-வேறு யாரும் கேட்பதால்-திருப்பிக் கொடுக்கப்படுமாறு செய்தி வந்தால் உடனே திருப்பிக் கொடுத்து விடவேண்டும். இதில் எவ்வித மாற்றமும் இருக்கக் கூடாது.

### தாமதமானுல்

திருப்பிக் கொடுக்கவேண்டிய புத்தகம் குறிப்பிட்ட தேதியில் திருப்பிக் கொடுக்கப்படா விட்டால் தாமதமாகும் ஒவ்வொரு நாளைக்கும் ஒவ்வொரு நூலுக்கும் 6 பைசா தாமதக்கட்டணம் (Overdue charges) வசூலிக்கப்படும்.

இந்த வாய்ப்பைச் சிலர் தவருகப் பயன்படுத்தி நூலை வேண்டிய மட்டும் வைத்திருந்து விட்டு நூலைக் கட்டணத்தோடு திருப்பித்தர முன் வருகிருர்கள். கட்டணத்தைக் கொடுத்து விட்டால் தவறு சரியாகி விடுகிறது என்று வாதாடவும் முன் வருகிருர்கள்.

பையில் பணத்தை வைத்துக் கொண்டு காரை வேகமாக ஓட்டிச் சென்று தவறிழைத்து விட்டு அபராதம் கட்டத் தயராகும் காரோட்டியை யாரும் ஒழுங்கானவனுக ஒப்புக் கொள்வதில்லை.

அதைப் போலவே தாமதக்கட்டணம் தருவதாக நூலைத் தாமதித்துத் தருவதை ஒப்புக் கொள்ளக்கூடாது. அது தவருனது; தவருனது மட்டுமல்ல, படிக்க விரும்பும் மற்றவர்களைத் தடுத்து நிறுத்தும் குற்றமுமாகும். எனவே இம்முறைகண்டிப்பாய்த் தடுக்கப்படுகிற தென்பதைப் பொறுத்துத் தான் நிர்ணயிக்கப் பட வேண்டும்.

ஒரு நூலகத்தின் பெருமை-நூலக உறுப்பினர்களின் நூலகவுணர்வு-நூற்கள் எந்த அளவுக்கு குறைந்த எண்ணிக்கையில் தாமதமாகத் திருப்பிக் கொடுக்கப்படவேண்டும்.

### காணும்

வீட்டிற்கு எடுத்துச் சென்று படித்துவிட்டுத் திருப்பித் தர வேண்டிய காலத்தில் நூற்களைக் காணும் என்று சிலர் முறையிட்டுக் கொண்டு வருகின்றனர். இதில் உண்மை ஒரு பகுதிதான். அவர்கள் ஏதோ தவிர்க்க முடியாக் காரணத்தால் தவறிபோக, வந்து உண்மையைச் சொல்கிருர்கள். ஆனல் பெரும் பகுதி பொய்யும் புளுகுமாகத்தான் இருக்கிறது.

நல்ல நூல்கள் சிலவற்றை வெளியே கிடைக்காத காரணத்தால் — தனக்குச் சொந்தமாக

வைத்துக் கொள்ளும் சுயநலத்துடன்-தேடிப் பிடித்து அதிக விலை கொடுத்து வாங்கிச் சிரமப்படுவதைவிட நூலகத்து நூலைக் காணோம், என்று சொல்லி விலையைக் கொடுத்து விடுவது எளிது என்ற எண்ணத்துடன்—தான் விரும்பி நாடுவதுப் போல பிறரும் அந்த நூலை நாடிப்படிக்க விரும்பி வரக்கூடும் என்று எண்ணிப் பார்க்காத குறை நோக்குடன்-சிலர் காணோம் என்று வந்து சொல்கிறார்கள்.

காணாமற்போன நூலைப் புதிதாக வாங்கித் தருமாறும், அப்படித்தரும்வரை தாமதகக் கட்டணமும் தரவேண்டும் என்றால் பெரும்பாலான காணாமற் போனதாகக் கூறப்பட்ட நூற்கள்-நூற்றுக்குத் தொண்ணூறு நூற்கள்-எப்படியோ ஒரு காரணத்தைச் சுமந்து கொண்டு திரும்பிவந்து சேர்கின்றன.

இந்தச் சுயநலப் பான்மையை வாசகர்கள் விட்டொழிக்க வேண்டும். அப்போதுதான் நூலகம் எல்லாருக்கும் பணிபுரிய முடியும்.

### தடுக்கப்பட்டவை

நூலகங்களில் சில நூற்கள்—தடுக்கப்பட்ட நூற்கள்-கலைக் களஞ்சியங்கள், அகராதிகள், ஆண்டேடுகள், குறிப்பு நூல்கள், பழம் புத்தகங்கள், ஓவியம் நிறைந்தவைகள், மெல்லியதாள்களை கொண்டவைகள், அவை போன்ற பிற நூற்கள்-வீட்டிற்குப் படிக்கக் கொடுக்கப்படுதலில்லை.

அவை எப்பொதும் நூலகத்திலேயே இருக்கவேண்டும். ஏனெனில் இந்நூற்கள் நாள்முழுதும் ஒருவர் மாற்றி ஒருவருக்குப் பயன்படக்கூடும். நூலகத்துத் தனி நூற்களில் காண முடியாச் செய்திகள் இத்தகு களஞ்சியங்களில், அகராதிகளில், ஆண்டேடுகளில்காணக்கிடைக்கும். எனவே அவை ஒருவரின் உபயோகத்திற்காக வெளியே போனால் பலரும் படிக்கும் வாய்ப்புப் பாழாகிவிடும். எனவே அத்தகு நூற்கள் கடனாகக் கொடுக்கப்படக் கூடாது. ஒருவர் சுகமாக சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டு நான்கு பக்கங்களைப் படிப்பதற்காக நாற்பது வாசகர்களைத் திண்டாடவிடக் கூடாது.

### நுண்கலை நூற்கள்

மேற்கண்ட நூற்களைப் போன்றே பழைய, விலையுயர்ந்த, இப்போது கிடைக்க முடியாத ஓவிய நூற்கள், சிற்ப நூற்கள், இசை நூற்கள் கடனாகக் கொடுக்கப்படுதல் கூடாது. அதன் விலையும், மதிப்பும் அந் நிர்பந்தத்திற்காளாக்குகின்றன. அதனை வீட்டிற் கெடுத்துச் செல்ல விரும்புபவர்களிடம் இந் நிலையைச் சொல்லி நூலகத்திலேயே பார்க்கச் சொல்ல வேண்டும்.

### பத்திரிகைகள்

தடுக்கப்பட்ட வரிசையில் வரும் மற்றொரு பகுதி பத்திரிகைகள் ஒவ்வொரு இதழும் அப்போதைக் கப்போதைய அண்மைக் கருத்துகளைக் கொண்டு விளங்குகிறது. வாசகர்கள் பலரும் அதனைக் காண விழைவர். எனவே அதனையும் நூலகத்திலிருந்தே படிக்கச் சொல்லவேண்டும்.

அதைப்போலவே அதன் பின் தொகுதிகளும் பலரால் பார்க்கக் கூடியவை. தவறினால் வாங்க முடியாதவை. எனவே அவைகளும் வெளியே கொடுக்கக் கூடாதவைகளாகும்.

ஆனால் அதே சமயம் எதற்காக அவை நூலகத்திலிருந்து வெளியே போகக்கூடாது எனத் தடுக்கப்பட்டதோ அதனையுணர்ந்து பத்திரிகை இதழ்களும், பின் தொகுதிகளும் வரு

வர் அனைவருக்கும் கொடுக்கும் வகையில் வாய்ப்பாக வைக்கப் பட்டிருக்க வேண்டும்.

**உரிமை உறுப்பினர்**

இப்படியெல்லாம் எல்லார்க்கும் எல்லாம் கிடைக்க வேண்டுமென் பதற்காகப் பாடுபட்டு-நூலகவாச கர் ஒவ்வொருவரையும் நூலக வுணர்வாளராக மாற்றப் பாடு பட்டு வரும்போது ஒரு சிலர்—உரிமை உறுப்பினர்—அத்தனையும் மறந்து விட்டு, மறைத்து விட்டு-அவருக்குமட்டும் நூலக விதிகளை யெல்லாம் தளர்த்த வேண்டி வரு வர்.

நூலகங்களின் சட்டதிட்டங்கள் எல்லாம் வேண்டியது தான். ஆனால் எனக்கு மட்டும் அதை நிறைவேற்றுதீர்கள். அந்த நூல கத்தில் அப்படித்தான் எனக்கு உரிமை கொடுக்கப்பட்டிருக் கிறது. என்று பந்தார் ஒருவர் ஒரு நூலகரிடம். வந்தது மட்டு மல்ல; நூலகப் பஞ்ச சீலத்தி தில் 'நூற்கள் படிப்பதற்கே' என்று இருப்பதையும் 'ஆளுக் கோர் நூல்' என்று இருப்பதையும் சுட்டிக்காட்டி தனி உரிமை வேண் டினார். நூலகரும் அதிலுக்கு, இரண் டாம் சிலத்தின் கடைசிப்பகுதி யில் தனியுரிமை கேட்பது தவறு என்று போட்டிருப்பதை எடுத்துக் காட்டினார். அப்புறம் பேசவில்லை இருவரும் அதுபற்றி. மற்றவை பற்றிப் பேசினார்கள்.

இதுவரை சுட்டிக் காட்டிய சில நிகழ்ச்சிகளைப் போல, எத்த னையோ நிகழ்ச்சிகள் நூலகத்தில் நடக்க வேண்டியிருக்கின்றன. அவை ஒவ்வொன்றிலும் வாசகர் கள் நூலக வுணர்வுடன் நடக்கத் தொடங்கினால் மேலும் பணி சிறப்படைய வழி பிறக்கும். எல் லாம் எல்லாருக்கும் கிடைக்கும்.

**சனநாயக சோசலிசம்**

சரியாகச் சொன்னால் 'சன நாயக சோசலிசம்' நடைமுறை யில் காணக்கூடிய ஒரே இடம் நூலகந்தான். இங்கு ஏழை பணக் காரர் வித்தியாசம் கிடையாது. வசதிக்காகச்சிறுவர் பகுதிமகளிர் பகுதி என்றிருக்கிறதேயன்றிபால் வேறுபாட்டாலோ, வயது வேறு பாட்டாலோ அல்ல. பட்டணத் தாருக்கு ஒரு சட்டமும், கிராமத் தாருக்கு ஒரு விதியும் என்றில்லை இங்கு. இங்குயாவரும் விரும்பிய அளவு படிக்கலாம். தேவையான அளவு உதவி செய்யப்படும்.

இப்படி நூலகவுணர்வு கொண்டு முன்னேறும் வாசகர் களுக்கு, ஒல்லும் வகை யெல் லாம், உதவிசெய்ய வேண்டும் நூலகவுணர்வு கொண்ட நூலகப் பணியாளர்கள். அதற்கு அவர் கள் தகுதியும், திறமையுங் கொண்டு'என்கடன் பணி செய்து கிடப்பதே' என்று பணியாற்ற முன் வரவேண்டும். அது எப்படி என்பதை அடுத்த திங்கள் காண லாம்.



*" சம்பாதிப்பது பெரிய காரியமல்ல. சம்பாதித்த சொத்துக்களைப் பாதுகாத்து நல்ல முறையில் பயன் படுத்துவதுதான் கஷ்டம். அரசாங்கத்தை நடத்து வதைவிடக் குடும்பத்தை நடத்துவது சிரமமான காரியமாகும். "*

—கு. காமராஜ்

# சிறுவர் பகுதி





## தீராத பேரொளி

அ. ஜ்வாலா

பாரதத்துச் செந்நெறியே
பாருலகின் பேரொளியே
நேருவெனும் மாமுடியே
நிகரில்லா நித்திலமே

அன்புவழி நீ ஆனாய்
அருள்வழியும் நீ ஆனாய்
இன்பமெலாம் பிறர்கொள்ள
இடர் விரும்பி ஏற்றவனே





சந்தனத்து விறகடுக்கிச்
சஞ்சயனும் தீமூட்டச்
செந்தழலைத் தேராக்கித்
தெய்வநிலம் சென்றாயோ?

தந்தை எதிர்வந்தாரோ
தாயும் உனைக் கண்டாளோ
சொந்தமுடன் காந்திமகான்
தோளணைத்துக்கொண்டாரோ?





விழியெல்லாம் ஆறாக
மெய்யனைத்தும் விழியாக
அழுகின்ற பாரதத்தை
ஐயா, நீ பாராயோ?

கொஞ்சி வரும் சிறுமதலைக்
குரலினிமை கொண்டவனே
நெஞ்சமெனும் கோயிலிலே

இளமையில் சுட்டித்தனங்கள் பண்ணும் பிள்ளைகள் முதுமையில் முற்றுப் பெற்ற கெட்டிக்காரர்களாக விளங்குவார்கள் என்பது வரலாறு காட்டும் அனுபவ உண்மையாகும்.

நேரு இளவயதில் எவருக்கும் அடங்காத பிள்ளையாக-எதற்கும் அஞ்சாத சிங்கமாக-விளங்கி வந்தார். அவருடைய வாழ்க்கை வரலாற்றைப் படிப்பவர்களுக்கு அவரின் வீர நெஞ்சம் தெற்றென விளங்கும். நீரில் மூழ்குவதையும் நிலத்தில் வேட்டையாடுவதையும் மலையில் ஏறுவதையும் அவர் பொழுது போக்காக, விளையாட்டுச் சம்பவங்களாக ஏற்றுக் கொண்டுள்ளார் என்பதை அவர்தம் வீர வரலாறு விரிவாக விளக்கும்.

நேருவுக்கு வயது ஆறு அல்லது ஏழு இருக்கலாம். வீட்டிற்குள் நுழைந்தார். மேசையை உற்று நோக்கினார். மேசையின் மீது இரண்டு பேனாக்கள் இருந்தன. இரண்டும் அழகிய விலை உயர்ந்த பேனாக்கள்.

பேனாக்களைப் பார்த்து மகிழ்ச்சி உற்ற நேரு, தனக்கென ஒரு பேனாவை எடுத்துக் கொள்ள விரும்பினார். அழகிய பேனாவை அடைய வேண்டும் என்ற எண்ணம் அவரைப் படாதபாடு படுத்திவிட்டது. 'எதற்காக ஒருவருக்கு இரண்டு பேனாக்கள் வேண்டும்? தேவைக்கு மேல் சேர்த்து வைப்பது தீய செயல் அல்லவா?' இப்படியாக நேருவின் பிஞ்சு உள்ளம் எண்ணி எண்ணி உழன்றது.

பிறகு துணிந்து விட்டார் நேரு. யாரும் அறியாதபடி இரண்டு பேனாக்களில் ஒன்றை எடுத்துக்கொண்டு விட்டார். மேசையின் மீது ஒரு பேனா மட்டும் கிடந்தது. மற்றொரு பேனா மறைந்துவிட்டது.

சிறிது நேரத்தில் நேருவின் தகப்பனார் மோதிலால் நேரு வெளி வேலைகளை முடித்துக் கொண்டு வீடு திரும்பினார். மேசையின் பக்கம் சென்றார். எழுத விரும்பிய மோதிலால் எதிரே ஒரு பேனா மட்டும் இருப்பதை உற்றுப் பார்த்தார். மற்றொரு பேனாவுக்கு ஏற்பட்ட கதியை அறிய ஆசைகொண்டார்.

'பேனா எங்கே?'

மோதிலால் நேரு முரட்டுச் சுபாவம் உள்ளவர். எனவே இரைந்து கத்தினார்.

'பேனா எங்கே?'

பதில் இல்லை. யாருக்கும் பதிலே சொல்லத் தெரியவும் இல்லை; தெரிந்தாலும் துணிவும் இல்லை.

ஒரே நிசப்தம். மோதிலால் மட்டும் ஓயாமல் கத்திக் கொண்டே இருந்தார்.

'பேனா எங்கே?' 'பேனா எங்கே?'

நிசப்தம் மறைந்தது. வீடு முழுதும் இரைச்சலும் சந்தடியும் எழுந்தன. தொலேந்து போன பேனுவுக்காக எல்லோரும் இரைச்சல் போடுகிருர்கள் என்பதை நேரு தெளிவாகப் புரிந்துகொண்டார். உள்ளத்தில் பயம்; உடம்பில் நடுக்கம்; உதட்டில் குழப்பம்.

ஏதோ, மன்னிக்கக் கூடாத மாபாதகத்தைப் புரிந்துவிட்ட உணர்வு நேருவின் உள்ளத்தில் தோன்றிவிட்டது. இருப்பினும் தந்தையாரின் கோபத்துக்கு அஞ்சி, குற்றத்தை ஒப்புக் கொள்ள முடியாத நிலேயில் குழம்பிக்கொண்டு நின்ருர் நேரு.

நேரு எங்கு ஒளித்து வைத் திருந்தாரோ அங்கிருந்து பேனுவை எடுத்து வந்து விட்டனர் வீட்டார். தொலேந்த பேனு கிடைத்து விட்டது. இனியேனும் அமைதி நிலவக் கூடாதா? மோதிலால் நேரு, ஜவகர்லால் நேருவைப் பறபறவென்று இழுத்து வந்தார். அப்பாவுக்குப் பிள்ளேயின் மீது அடக்க முடியாத ஆத்திரம். ஆத்திரம் தீர அடித்து நொறுக்கிவிட்டார். திருடியது ஒரு குற்றம்; திருட்டை மறைத்துப் பொய் கூறியது மற்ருெரு குற்றம். இரண்டு குற்றங்களுக்குமாக இரண்டு மடங்கு தண்டனே தரப்பட்டது.

அடிபட்டு அறியாத நேரு உதைபட்டு இழுபட்டவுடனே 'ஐயோ, ஐயோ,' என்று அலறித் துடித்தார்.

'சுட்டிப்பயலுக்கு இதுவும் வேண்டும்; இன்னமும் வேண்டும்,' என்ருர் மோதிலால் நேரு.

சுட்டிப்பயல்தான் என்ருலும் சொந்தப் பிள்ளே அல்லவா? அதனுல்தான் நேருவின் தாயார், ஓடிவந்து நேருவை அணேத்துக் கொண்டார். அப்பாவின் உதைகளுக்கு அம்மாவின் அன்பு மருந்தாகியது.

தன்னுடைய சுட்டித்தனத்துக்காகத் தந்தையார் தன்னே அடித்ததுபற்றி நேரு தன்னுடைய சுய சரிதையில் குறிப்பிட்டுள்ளதை நாம் படித்துப் பார்த்தால் நேருவின் நேரிய உள்ளம் நமக்கு நன்கு தெரிய வரும்.

"தகப்பனுர் என்னே அடித்ததால் எனக்கு அவரிடம் வருத்தம் ஏற்படவே இல்லே. குற்றம் செய்தவன் தண்டிக்கப்பட வேண்டியவனே. தண்டனே நியாயம்தான். ஆனுல் என் தந்தை அதைக் கொஞ்சம் அதிகப்படுத்தி விட்டார்."

இங்ஙனம் இளவயதில் சுட்டிப்பயலாகத் திரிந்த நேருதான் முதுமையில் தேசத்தின் சிறந்த தலேவருக - வழிகாட்டியாக - விளங்கினுர் என்பதை நாம் அறியவேண்டும். நேருவின் வரலாறு வருங்கால மக்களுக்கு வழிகாட்டியாக விளங்க வல்ல சிறந்ததொரு நூலாகும்.

—**மணிவண்ணன்**

# நிலத்து மீன்

ரா. அய்யாசாமி எம். ஏ.,

வெகுகாலத்துக்கு முன், ருஷ்ய நாட்டில், ஒரு ஏழைக் குடியானவன் வயலில் வேலை செய்துகொண்டிருந்தான். குழி தோண்டுவதற்காக அவன் மண்வெட்டி எடுத்து வெட்டினான். அப்போது 'ணங்' என்று ஓசையொன்று கிளம்பிற்று.

குடியானவன் மண்ணைக் கிளறிவிட்டுக் குனிந்து பார்த்தான். பூமிக்கு அடியில் ஒரு இரும்புப் பெட்டி இருக்கக் கண்டான்.

உடனே அவன் தன் மனைவியைக் கூப்பிட்டான். இருவருமாக இரும்புப் பெட்டியை வெளியே எடுத்தனர். உள்ளே பொன்னும்வெள்ளியும் நவமணியும் குவிந்து கிடந்தன.

குடியானவன் மகிழ்ந்தான். அவனுடைய மனைவி எல்லையில்லாத ஆனந்தம் கொண்டாள்.

இருவரும் நாள் முழுதும் பெட்டியின் அருகிலேயே காவல் இருந்தனர். பொழுது விடிந்த பிறகு, நன்ருக இருள் பரவியதும், அவர்கள் பெட்டியை எடுத்துக்கொண்டு வீடு திரும்பினர். ஒருவர் கண்ணிலும்படாமல், மெள்ள நடந்து சென்றனர்.

அவர்களுடைய அரசன் பேராசைக்காரன். புதையல் கிடைத்த செய்தி அவன் காதுக்கு எட்டினுல், வந்தது ஆபத்து. அவன், பொருள் அனைத்தையும் பறிமுதல் செய்துகொள்வான்.

ஆகவே குடியானவனும் அவன் மனைவியும் இரும்புப் பெட்டியை நிலத்தின்கீழ் புதைத்து வைக்க முடிவு செய்தனர். வீட்டுக் கூடத்தில் ஒரு குழி தோண்டினர். அதில் பெட்டியை இறக்கினர். பிறகு குழியைமூடிச் சமன் செய்தனர்.

ஆயினும் அன்றிரவு குடியானவனுக்கு உறக்கம் வரவில்லை. அவன் கவலைகொண்டான். அவள் வாய் சும்மா இராது. மறுநாள் இல்லாவிட்டால், அதற்கு மறுநாள், அவள் புதையலைப் பற்றிய செய்தியை ஊராரிடம் சொல்லிவிடுவாள். அது அவளுடைய இயற்கை.

இரவு முழுவதும் குடியானவன் ஆலோசனை செய்தான். கடைசியில் ஒரு தீர்மானத்துக்கு வந்தான்.

ஒவ்வொரு நாளும் அதிகாலையில் அவனுடைய மனைவி கிணற்றுக்குப் போவதுவழக்கம். சென்றுவர ஒரு நாழிகை பிடிக்கும்.

குடியானவன் அந்தத் தருணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். குடத்தை எடுத்துக்கொண்டு, அவள் வாயிற்படியைக் கடந்ததும், அவன் மாட்டுத் தொழுவத்துக்கு விரைந்தான். அங்கே ஒரு குழி தோண்டினுன். வீட்டுக் கூடத்தில் இருந்த இரும்புப்பெட்டியை எடுத்து வந்து, அதில் புதைத்தான். குழியை மூடிப் பழையபடி நிலத்தைச் சரி செய்தான். அதன்பின்னர், அவன் நிம்மதியாகத் தன் வேலைகளைக் கவனிக்கச் சென்ருன்.

குடியானவன் மற்ருெரு திட்டமும் உருவாக்கினுன். கிணற்றிலிருந்து மனைவி வந்ததும், "இன்று மாலை நாம் வனத்துப் போகவேண்டாமா?" என்ருன்.

"எதற்கு?" என்று கேட்டாள் அவள்.

"மீன் பிடிக்கத்தான். வனம் முழுவதும் மீன்கள் துள்ளித் திரிகின்றன. போனுல் அள்ளிக்கொண்டு வரலாம்," என்ருன் குடியானவன்.

மனைவி சிரித்தாள், "நிலத்தில் மீன் திரியுமா?" என்று வினவினுள்.

குடியானவன், "உனக்கு ஐயம் இருந்தால், என்னுடன் வந்து பார்," என்ருன்.

உச்சி வேளைக்குப்பின் பொழுது சாய்ந்ததும், அவன் மனைவிக்குத் தெரியாமல் கடைத்தெருவுக்குப் போனுன். சில மீன்களை விலைக்கு வாங்கினுன். ஒரு முயல் குட்டியையும் பணம் கொடுத்துப் பெற்றுக்கொண்டான். பிறகு பலகாரக் கடைக்குச் சென்று, இருபது பணியாரங்களை வாங்கி மூட்டைகட்டினுன். ஒரு தூண்டிலையும் எடுத்துக் கொண்டான்.

அங்கிருந்து, அவன் நேராகக் காட்டுக்குச் சென்ருன். பணியாரங்களை மரக்கிளைகளில் ஒட்ட வைத்தான். மீன்களை நிலத்தில் வீசி எறிந்தான். முயல் குட்டியைத் தூண்டிலில் கோத்து அங்கிருந்த ஒரு ஓடையில் போட்டான்.

சூரியன் மறைந்ததும் குடியானவன் வீடு நோக்கி ஓடினுன். மனைவியை அவசரப்படுத்தினுன். அவள் இரண்டு மூன்று கூடைகளை எடுத்துக் கொண்டு கிளம்பினுள்.

வனத்தின் எல்லையிலேயே குடியானவன், ஒரு மரத்தைச் சுட்டிக் காட்டினுன். அதைப் பார்த்ததும் மனைவி வியப்பினுல் சிலையாக நின்றுவிட்டாள். மரக்கிளைகளில் பணியாரங்கள் தொங்கிக் கொண்டிருந்தன.

"சற்றுமுன் இங்கே பணியார மழை பெய்தது. அதன் பலன் இவை," என்ருன் குடியானவன். பிறகு ஒவ்

வொரு பணியாரமாக எடுத்து மனைவியின் கையிலிருந்த கூடையில் போட்டான்.

"ஆஹா, என்ன மணம்! என்ன அழகு!" என்று அவள் அதிசயப்பட்டாள்.

அங்கிருந்து சில அடி நடப்பதற்குள், அவள் தன் காலடியில் ஒரு மீனைப் பார்த்தாள்.

"ஆம், இதுதான் நிலத்து மீன்," என்றான் குடியானவன்.

அவனுடைய மனைவி, நிலை கொள்ளாமல் ஓடினாள். பல மீன்கள் அவள் கைக்குக் கிடைத்தன. எல்லாவற்றையும் எடுத்துக் கூடையில் போட்டுக்கொண்டாள்.

கடைசியாகக் குடியானவன் அவளை ஓடைக் கரைக்கு அழைத்துப் போனான். இங்கே தயாராக இருந்த தூண்டிலைப் பிடித்து இழுத்தான். கயிற்றின் முனையில் ஒரு முயல்குட்டி சிக்கிக் கொண்டிருந்தது.

மனைவி, "ஐயோ, இது என்ன விந்தை!" என்று வாய்விட்டுக் கூவினாள்.

"இது தண்ணீரில் வாழும் முயல். ஓடை முயல்," என்றான் குடியானவன்.

இறுதியில் இருவரும் காட்டைவிட்டுப் புறப்பட்டு வீடு வந்து சேர்ந்தனர். மனைவிக்கு ஒரே கொண்டாட்டம். பாடிக்கொண்டே விருந்து சமைத்தாள். கணவனுக்குப் பரிமாறினாள். தானும் வயிறார உண்டு மகிழ்ந்தாள்.

சில நாட்கள் கழிந்தன. அதற்குள் ஊர் மக்கள் அனைவரும் புதையலைப்பற்றிப் பேச ஆரம்பித்துவிட்டனர்.

குடியானவன் ஆச்சரியப்படவில்லை. அவன் எதிர் பார்த்தபடியே செய்தி வெளியாகிவிட்டது. அதற்குக் காரணம் தன் மனைவி என்பதையும் அவன் உணர்ந்து கொண்டான். ஊர்வாயை மூடினாலும் அவள் வாயை மூட முடியாது!

அரசன் ஆள் அனுப்பினான். குடியானவன் கொலுமண்டபத்துக்குப் போனான். அங்கே ஏற்கெனவே அவனுடைய மனைவி இருப்பதைக் கண்டான்.

"இவள் சொல்வது உண்மைதானா? எங்கே அந்தப் புதையல்?" என்று அதட்டினான் அரசன்.

குடியானவன் மிகப் பணிவாக நின்றான். ஆனால் அச்சமின்றியே விடை கூறினான். "புதையலா? எனக்கு ஒன்றுமே தெரியாது!" என்றான்.

அரசன் சினம் கொண்டான். அதிகாரத்துடன் பேசினான். "நீ பொய் சொல்லுகிறாய். உன் வீட்டுக்கூடத்தில் ஒரு இரும்புப்பெட்டி நிறையப் பொன்னும் வெள்ளியும் நவமணியும் புதைத்து வைத்திருக்கிறாய். எல்லா

விவரத்தையும் உன் மனேவி தெரிவித்துவிட்டாள்,'' என்ருன்.

குடியானவன் சிரித்தான். "மன்னவ, என் மனேவி மனது தடுமாறியிருக்கிருள். பாவம், அவளுக்குப் பைத்தியம் பிடித்துப் பல நாட்கள் ஆகின்றன,'' என்ருன்.

அதைக் கேட்டதும், குடியானவனுடைய மனேவி சீறினள். கணவனே நோக்கிப் பாய்ந்தாள். "நாளு பைத்தியக்காரி?'' என்று உறுமினள். அரசனேப் பார்த்து, "ஐயா புதையல் கிடைத்த தினத்தையும் நான் குறிப்பிட்டுச் சொல்லமுடியும்,'' என்ருள்.

"சொல்,'' என்று கட்டளேயிட்டான் மன்னவன்.

"காட்டில் ஒருநாள் பணியார மழை பெய்ததல்லவா? அதற்கு முந்தின தினம்தான் நாங்கள் இரும்புப் பெட்டியை வீட்டில் புதைத்தோம்,'' என்ருள் அந்தப் பெண்.

குடியானவன், "அரசே, எங்கேயாவது பணியார மழை பெய்வது உண்டா?'' என்று கேட்டான்.

"நான் சொல்வது உண்மை,'' என்று வாதாடினள் மனேவி.

"அன்று, காட்டில்கிடந்த நிலத்து மீன்களேயும் நாங்கள் பொறுக்கினேம். ஓடை முயல் ஒன்றையும் தூண்டில் போட்டுப் பிடித்தோம்,'' என்ருள்.

அரசன் திகைத்தான். அவன் தலே சுற்றியது. "பணியார மழை! நிலத்து மீன்! ஓடை முயல்'', என்று சொல்லிச்சொல்லிப் பார்த்துக் கொண்டான்.

"சந்தேகமில்லே. இந்தப் பெண்ணுக்குப் பைத்தியம் தான் பிடித்திருக்கிறது. குடியானவன் சொல்வது பொய்யல்ல,'' என்று முடிவு கட்டினன்.

ஆயினும் அவன் மற்ருெரு சோதனேயும் செய்ய விரும்பினன். தன் ஆட்களே அனுப்பிக் குடியானவனுடைய வீட்டுக் கூடத்தைத் தோண்டிப் பார்த்தான். இரும்புப் பெட்டி கிடைக்கவில்லே.

•

குடியானவன் முன் யோசனேயாக, அதை அப்புறப்படுத்தி மாட்டுத் தொழுவத்தில் புதைத்து விட்டான் அல்லவா?

இறுதியில் குடியானவன், தன்னுடைய மனேவியை அழைத்துக்கொண்டு வீடு திரும்பினன். வழி நெடுக அவளுடைய பேதமையை எண்ணி வருந்தினன். எனினும், அவன் செய்த தந்திரம் பலித்துவிட்டது. அவன் ஆடின "நிலத்து மீன்'' நாடகம் வெற்றி கொடுத்துவிட்டது. புதையலே அவன் தனக்கே சொந்தமாக்கிக் கொண்டான்.

நம் பண்டையக் கிராமங்களில் விவசாய மும் அதை ஒட்டிய கிராமக் கைத் தொழில்களும் நன்கு வளர்ந்து வந்தன. சொல்லப் போனால் விவசாயமும் கிராமக் கைத்தொழில்களும் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டிருந்தன.

அந்த நிலை மீண்டும் உருவாக வேண்டும் இதற்கு நாட்டு மக்களும், அரசாங்கமும் உறுதுணையாக இருத்தல் வேண்டும். இதுவே கிராமப் பொருளாதாரப் வளர்ச் சிக்கு அடிகோலுவதாகும்.

# விவசாய உற்பத்தியைப் பெருக்குவது எப்படி?

ஆங்கிலம் : கோ. வைத்தியநாதன்
(டைரக்டர், முழுவளர்ச்சித் திட்டம், பம்பாய்)

தமிழில் : எஸ். கிருஷ்ணமூர்த்தி

நாடெங்கிலும் இன்றையப் பேச்சு விவசாய உற்பத்தியை எப்படிப் பெருக்குவது என்பதைப் பற்றியதே. இன்றைய நிலையில் தொடர்ந்து இருந்து வரும் உண வுப் பற்றுக்குறை, உலகிலுள்ள எல்லா நாடுகளிலிருந்தும் உணவு தானியங்களை இறக்குமதி செய்ய அவசியமாக்குகிறது. இது மகிழ்ச் சிக்குரிய விஷயமல்ல. ஒரு நாட் டின் சுபீட்சம் அந்நாட்டிலுள்ள உணவுத் தானியங்களின் விளைச் சலைப் பொறுத்தேயுள்ளது. உண வுப் பொருட்களுக்காக மற்ற நாடு களை நம்பியிருப்பது, அவர்கள் எவ்வளவு தான் நட்பும், நல் லெண்ணமும் கொண்டிருந்தா லும் விவேகமானது அல்ல. இச் செயல் நாம் எதிர்பாராத விபரீதங் களை உண்டாக்கினாலும் உண் டாக்கலாம். ஆகவே நம் நாட் டிலேயே உணவுப்பொருட்களின் உற்பத்தியை அதிகரிக்கச் செய்து பற்றுக்குறையைப் போக்குவது மிகவும் அவசிய மும், அவசரமுமாகும். இதுவே நம் மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களின் நோக்கமுமாகும்.

ஆயிரமாயிரம் கோடிக்கணக் கில் முதலீடு செய்து, மிகப் பெரிய நீர்த் தேக்கங்கள், நிலச் சீர் திருத் தம், உர உற்பத்தித் தொழிற்சாலை கள் போன்ற பல வகைத் திட்டங் கள் தீட்டப்பட்டதின் நோக்கம் விவசாய உற்பத்தியைப் பெருக்கு வதே ஆகும்.

கடந்த 13 ஆண்டுகளில் எவ்வளவோ மகத்தான காரியங்களைச் செய்து முடித்திருக்கிறோம். ஆனாலும் ஒரு ஏக்ரா நிலத்தில் சராசரியாக உற்பத்தியாகும் தானியம் கணிசமான வகையில் அதிகரிக்கவில்லை எனக் கூறப்படுகிறது. அமெரிக்கா, ஜப்பான் போன்ற நாடுகளில் உற்பத்தியாகும் அளவை நம் நாட்டு உற்பத்தியோடு ஒப்பிட்டுப் பேசுவதற்கே இல்லை. உலகத்திலேயே ஒரு ஏக்ராவில் மிகக்குறைந்த அளவில் உற்பத்தியாகும் ஒருசில நாடுகளில் இந்தியாவும் ஒன்று.

இந்தியாவின் ஜனத்தொகை அதிகரித்துக் கொண்டே வருகிறது. சாகுபடிக்குக் கொண்டு வரத் தக்க நிலங்கள் இனி அதிகம் இல்லை. மேலும் அதிக அளவில் நீர்ப்பாசனத் திட்டங்களை நிறைவேற்ற நாட்டில் மூலதனமும் இல்லை. நாட்டின் கால் நடைச் செல்வம் எண்ணிக்கையில் அதிகமாக இருந்தாலும் வலிவுற்றதாயில்லை. நம் நாட்டில் சாகுபடியாகும் நிலம் பல்லாயிரம் ஆண்டுகளாகப் பயிரிடப்பட்டு, நமக்கு உணவு அளித்து வருகிறது. உற்பத்திக் கேற்ப நிலத்தை நாம் நல்ல உரமிட்டு வளப்படுத்துவதில்லை. இதனால் பாரத பூமி சக்தி குன்றியிருக்கிறது. இந்நிலையில், விவசாய உற்பத்தியை அதிகரிக்கச்செய்வதென்பது ஒரு பெரிய பிரச்னையாகி விட்டது.

பண்டைய இந்தியாவில் கிராமங்களில் விவசாயத்துடன் கிராமக் கைத்தொழில்களும் சேர்ந்து, செழுமையுடன் இருந்து வந்தன.

கிராம மக்கள் தங்களுக்கு வேண்டிய உணவுப் பொருட்களைத் தங்கள் கிராமங்களிலேயே உற்பத்தி செய்து வந்தனர். உபரியாக இருப்பதைக் கிராமத்தை விட்டு வெளியே போகச் செய்தனர். ஆனால் கடந்த நூறு ஆண்டுகளில், பெருந்தொழில்கள் (கனரகத் தொழில்கள்) நாடெங்கிலும் ஏற்படுத்தப்பட்டன. மக்களுக்குத் தேவைப்படும் பொருட்கள் பெருமளவில் பெருந்தொழில்கள்மூலம் உற்பத்தியாக்கப்பட்டன. இவை கிராமக் கைத்தொழில்களுடன் மோதிப் போட்டியிட்டு, கிராமக் கைத்தொழில்களை ஒரு மூலையில் ஒதுக்கி விட்டன. கிராமங்களில் உள்ள தொழிலாளிகள் தாங்கள் செய்துவந்த தொழில்களை விட்டு விட வேண்டியதாயிற்று. நகர்ப்புறங்களில் வேலை கிடைத்தவர்கள் கிராமங்களை விட்டு வெளியேறினர். ஆனால் வெளியே சென்றவர்களின் எண்ணிக்கை மிகக் குறைவே. மற்றவர்கள் விவசாயத்தையே மேற்கொள்ளலாயினர். இத்தகைய காரணங்களினால், விவசாய நிலங்கள் மேலும் மேலும் துண்டிக்கப்பட்டு, விவசாயத்தையே நம்பி வாழும் மக்களுக்கு விவசாயம் லாபகரமாக இல்லாமல் போய் விட்டது.

ஆகவே விவசாயத்தையே நம்பி உயிர் வாழும் மக்கள், போதிய உணவின்றியும், சத்துள்ள சாப்பாடில்லாமலும் அவல நிலையில் வாழ்கின்றனர். சத்தற்ற உணவும் அரைப்பட்டினியும் விவசாயிகளை வருடா வருடம் மேலும் மேலும் பலவீனமாக்கிக் கொண்டே வருகின்றன. இத்தகையநிலை,கடந்த சுமார் நூறு ஆண்டுகளாகவே இருந்து வருகின்றது.

சுமார் 4,5 தலைமுறைகளில் பிறந்திருக்கிற குழந்தைகள், இயற்கையாகவே, தங்கள் பெற்றோர்களைக் காட்டிலும் பலஹீனமாகக் காணப்படுகின்றனர். ஆகவே கடந்த ஐந்து தலை முறைகளாக, போதிய உணவின்றி வாழும் இத்தகைய மக்களின் கையில் தான் விவசாயத்தொழில் இருந்து வருகிறது. சத்தற்றதும் பற்றுக்குறையுமான உணவு, விவ

சாயிகளின் திறனிலும் குறையை உண்டாக்கி அவர்களிடத்திலே தன்னம்பிக்கையை இழக்கச் செய்து வாழ்க்கையிலேயே ஏமாற்றத்தையும், தன்னம்பிக்கை யின்மையையும் உண்டாக்குகின்றது. இத்தகைய நிலைமையிலுள்ள விவசாயிகளின் கையில் விவசாயத் தொழில் இருந்து வரும் வரை, அவர்கள் வாழ்க்கைத்தரம் உயர்த்தப்பட்டு, அவர்கள் மனத்திலே நம்பிக்கை ஊட்டாத வரையில் விவசாயம் அபிவிருத்தி அடையுமென்றோ, உற்பத்தி அதிகரிக்குமென்றோ எதிர்பார்ப்பது பெருந் தவறாகும்.

சமீபத்தில் எடுக்கப்பட்ட புள்ளி விவரங்களின்படி ஒரு சதவிகித நிலச் சுவான்தார்கள் கையில், நாட்டில் சாகுபடியாகும் நிலத்தில் 20% இருப்பதாகவும், 20% நிலச் சுவான்தார்கள் ஏறக்குறைய 50% நிலத்தைத் தங்கள் கையில் வைத்திருப்பதாகவும் தெரிய வருகிறது. ஆக 80% நிலச்சுவான்தார்கள் 50% நிலத்தை வைத்திருக்கிறார்கள். மேலும் மேலே குறிப்பிட்ட 1% நிலச்சுவான்தார்களும் 20% நிலச் சுவான்தார்களில் பெரும்பான்மையானவர்களும், தாங்களே நிலத்தைப் பயிரிடுவதில்லை. மேலே குறிப்பிட்ட 3 வது பிரிவைச் சேர்ந்தவர்களும் தாங்களே பயிர் செய்வதில்லை. மேற்படி நிலங்களை முதன் முதலில் குறிப்பிட்ட போதிய அளவு உணவும், சத்துள்ள சாப்பாடும் கிடைக்காத விவசாயக் கூலிகளாலும், குத்தகைக்காரர்களாலும் தான் பயிர் செய்யப்பட்டு வருகின்றன. அவர்களுக்கு அதிகவிவசாய உற்பத்தியில் முழுக்க முழுக்க ஊக்கமிருக்குமென்று சொல்ல முடியாது. விவசாயத்திற்கு வேண்டிய மனித சக்தி வலிவு குன்றி வருவதோடு அன்றி விவசாயத்திற்கு இன்றியமையாத கால்நடைச் சக்தியும் தலைமுறை தலைமுறையாகக் குன்றிக் கொண்டு வருகிறது. கால்நடைகளின் எஜமானனான விவசாயியே தனக்கு வேண்டிய உணவு கிடைக்க வழியில்லாமல் தவிக்கும் போது, அவனிடமுள்ள கால்நடைகளுக்குப் போதிய அளவு தீனி கிடைக்குமென்று நினைப்பது முட்டாள் தனமே ஆகும். ஆக இன்றைய விவசாயம் போதிய உணவின்றித் தவிக்கும் ஏழை மக்களால், வலிவற்ற கால் நடைகளைக் கொண்டு வளமற்ற நிலத்தில் செய்யப்பட்டு வருகிறது.

ஆகவே ஏர் பிடிக்கும் விவசாயி தக்க வலிவு பெற்று, ஏரில் பூட்டப்பட்டிருக்கும் எருதுகள் திடமுள்ளதாக இருந்து, நிலவளமும் சரியாக இருந்தாலன்றி, விவசாய உற்பத்தி அதிகரிக்க முடியாதென்பதை நாம் நன்கு ஊகித்துக்கொள்ளலாம். ஆகவே தற்போதையப் பிரச்னை அவசியமான மாறுதலை எவ்வாறு செய்வதென்பதே. திட்ட நிபுணர்களின் கவனம் இது விஷயத்தில் திருப்பப்படவேண்டும்.

நாம் ஏற்கனவே குறிப்பிட்டபடி நம் பண்டையக்கிராமங்களில் விவசாயமும், அதை ஒட்டிய கிராமக்கைத்தொழில்களும் நன்கு வளர்ந்து வந்தன. சொல்லப்போனால் விவசாயமும் கிராமக் கைத்தொழில்களும் ஒன்றோடொன்றிணைக்கப் பட்டிருந்தன. கிராமக் கைத்தொழில்கள் சீரழியவே விவசாயம் தனது மேன்மையை இழந்துவிட்டது. இருந்த போதிலும் விவசாயம், கிராமக் கைத்தொழில்களால் பிரிந்து போகப்பட்ட போதிலும் ஒரு சிறந்த தாயைப் போன்று தன் மக்களுக்கு உணவைக் கொடுத்துக்கொண்டே இருக்கிறது. ஆனால் அந்தத் தாயின் முகத்திலிருந்த புன்னகை மறைந்து விட்டது. ஆனாலும் குழந்தைகள்மீது

அவள் எரிந்து விழுவதில்லை. இயற்கையாக அவளிடம் இருக்க வேண்டிய லக்ஷ்மி கடாக்ஷம் தற்போது அவளிடம்இல்லை. ஆகவே இன்றைய தேவை பிரிந்துபோன கிராமக் கைத் தொழிலையும் விவசாயத்தையும் மீண்டும் ஒன்று சேர்க்க வேண்டியதே. இதுநடந்தால் ஓய்வு நேரங்களில் விவசாயிக்கு வேலை கிடைக்கும். அநேகர் கிராமக் கைத் தொழில்களையே முக்கிய தொழிலாகக் கொண்டு, தற்போது விவசாயத் தொழிலில் மிக அதிகமாக ஈடுபட்டிருப்பவர்களின் எண்ணிக்கையைச் சற்று குறைக்கவும் செய்யலாம். இதனால் கிராமப்பொருளாதாரம் விருத்தியடையும். மேலும், தற்போது மக்கள் தங்களுக்குத் தேவையான பொருட்களை வாங்குவதன் மூலம் கிராமத்தை விட்டு வெளியே போகும் உணவுப் பொருட்கள் கிராமத்திலேயே தங்கும்படி செய்யக்கூடும். இந்த நிலை ஏற்படின் கிராம மக்களுக்குப் போதிய உணவு கிடைக்க ஏதுவாகும். இதோடுகூட ஐந்தாண்டுத் திட்டங்களால் மக்களுக்குக் கிடைக்கும்பல்வேறு உதவிகளால் உற்பத்தியும் அதிகரிக்கும்.

ஒருகால், கிராமத்தில் விளையும் பொருட்கள் கிராமத்தை விட்டு வெளியேருமல் கிராமத்திலேயே இருந்து விட்டால் நகரங்களில் உணவுத் தட்டுப்பாடு உண்டாகலாம். இந்தநிலை தற்காலிகமானதாகவே இருக்கும். ஏனெனில் நாளடைவில் கிராமத்தில்உணவு உற்பத்தி அதிகரித்து நகரங்களுக்கும் அனுப்ப இயலும். அதுவரை நாம் நகரங்களுக்குத் தேவையான உணவுப் பொருட்களை வெளிநாடுகளிலிருந்து வாங்கித்தான் ஆகவேண்டும். நம் முன்னுள்ள மிக முக்கியமான, அவசரமான வேலை, கிராமக் கைத் தொழில்களை அபிவிருத்தி செய்வதுதான்.

தற்காலத்தில் மக்கள் மனோபாவம் மில்லில் உற்பத்தியாகும் பொருட்களை அதிகமாக விரும்பி ஆதரிப்பதாயிருக்கிறது. கிராமக் கைத்தொழில் பொருட்களை விற்கப் போதுமான வசதியில்லை. ஆகவே கிராமக் கைத் தொழில் பொருட்களையே வாங்கும்படி செய்யக் கிராம மக்களுக்கு நல்ல திட்டமிட்ட படிப்பினைவேண்டும். கிராமக் கைத்தொழில் பொருள்களுக்குஅரசாங்கத்தின்மூலம்சலுகைகள் தரப்பட வேண்டும். அவசியமானல் பெருந் தொழில்கள் மூலம் ஏற்படும் போட்டியினின்று தவிர்க்கத்தக்க சட்டங்கள் இயற்றப்படவேண்டும் இதையெல்லாம்விட மிக அதிகம் தேவைப்படுவது கிராம மக்களிடையில் சமுதாயஉணர்ச்சியே. அவர்களிடம் வேண்டிய இது உடனே வளர்க்கப்பட வேண்டும். கிராமக் கைத்தொழில் வளர்ச்சி மக்களுடையபொறுப்பாகிவிடவேண்டும். கிராமக் கைத்தொழில்களைவளர்க்கக் கிராம மக்கள் ஊக்குவிக்கப் படவேண்டும்.

கிராம தான இயக்கம், சுலப கிராம தான இயக்கம் போன்றவைகள் மேற்சொன்ன குறிக்கோளை அடைய வேண்டிய மார்க்கங்களேயாகும். கிராம எகாயி திட்டமும் அந்தநோக்கத்தையொட்டியதே. இந்தியசர்க்காரால் அமல் நடத்தப்படும் வளர்ச்சித் திட்டங்களின் குறிக்கோளும் அதுவேயாகும். ஆனல் துரதிருஷ்டவசமாக நாம் எதிர்பார்த்தபடி ஆரம்பக் காலங்களில் கிராமக் கைத் தொழில்களை அபிவிருத்தி செய்ய சமுதாய வளர்ச்சித் திட்டம் தவறிவிட்டது. ஆகவே இனி யாவது சுலப கிராமதானம், ‘‘கிராம எகாயி’’ திட்டம், சமுதாய வளர்ச்சித் திட்டம் முதலிய

முப்படைகள் மூலம் தற்போதைய கிராமப் பொருளாதாரத்தை முன்னேற்றமடையச் செய்ய முற்படின், கிராம மக்களின் சிந்தனையிலும் மனப்பான்மையிலும் நல்லதொரு மாற்றத்தை உண்டாக்க முடியும். மக்கள் விவசாயத்தையும்கிராமக்கைத்தொழில்களையும் அபிவிருத்தி செய்து, கிராம மக்களுக்கே தங்கள் உற்பத்தியைப் பயன்பெறச்செய்து, கிராமங்களில் நல்ல சூழ்நிலையை ஏற்படச் செய்வார்கள். இதை மனத்தில் கொண்டே பூஜ்ய வினோபாஜி கிராமதானக் கிராமங்களில் கிராமக் கைத்தொழில்கள் மூலம், அஹிம்சையை அடிப்படையாகக் கொண்டதொரு சமுதாயத்தை ஏற்படுத்த விரும்புகிறார்.

ஆகவே என் வேண்டுகோள், அனைவரும், கிராமதான, கிராம எகாயி திட்டங்களுக்குத் தங்கள் மனப் பூர்வமான முழு ஆதரவை அளிக்கவேண்டும். அது ஒன்றே கிராம ஸ்வராஜ்யத்தை ஏற்படுத்தும். மகாத்மாஜீ அவர்கள் வாக்குப்படி கிராம ஸ்வராஜ்யம் என்றால் ராம ராஜ்யம் என்பதே. ராம ராஜ்யத்தில் ஒவ்வொரு குடிமகனுக்கும் தேவையான அளவு உணவும், உடையும், இருக்க இடமும், தகுந்த கல்வி வசதியும், வைத்திய வசதியும் பெற்றுப்பெரு வாழ்வு வாழ்வான்.



## பூகோளப்படிப்பு

*"என்னைக் கல்லூரிகளில் படிக்காதவன். பூகோளம் தெரியாதவன் என்றெல்லாம் சொல்லுகிறார்கள். கல்லூரி போனவன் என்றோ, பூகோளம் படித்தவன் என்றோ நான் எப்போதும் சொன்னதில்லை. ஆயினும் எனக்குப் பூகோளம் தெரியும் நாட்டிலுள்ள ஊர்களையெல்லாம் பெரும்பாலும் நான் அறிவேன். அவற்றிற்குப் போகிற வழிகள், இடையில் குறுக்கிடும் ஆறுகள், முக்கிய ஏரிகள், அவற்றின் உபயோகங்கள் பற்றியெல்லாம் எனக்குத் தெரியும். மேலும் எந்தெந்த ஊரில் எப்படி எப்படி மக்கள் வாழ்ந்து வருகிறார்கள், என்ன என்ன தொழில்களைச் செய்து வருகிறார்கள் என்பனவெல்லாம் எனக்குத் தெரியும். வடஇந்தியாவிலும் பல இடங்களை நான் நேரிலே சென்று பார்த்துள்ளேன். இவையெல்லாம் பூகோள அறிவுக்குள் அடங்காவென்றால், கோடுகள் இழுத்துப் படம் போட்ட புத்தகந்தான் பூகோளம் என்றால், அந்த அறிவு எனக்கு இல்லாததாகவே இருக்கட்டும்."*

—காமராஜின் சொற்பொழிவு (1959)

திருப்பாவாடை செய்வதற்குத் தூய்ய நெய், புத்துருக்கு நெய், கற்கண்டு, சீனி, சர்க்கரை முதலியபொருள்கள் வேண்டும் என்று ஸ்ரீரங்க மகத்துவம் கூறுகிறது. பழஅரிசி மணிப்பருப்பு, சர்க்கரை, தேங்காய், பலாப்பழம் முதலிய பொருள் களைக் கொண்டு திருப்பாவாடை செய்ய வேண்டும் என்று தில்லைச் சாசனம் கூறுகிறது.

# பாவாடை

(சொல் ஆராய்ச்சி)

---

**மயிலை. சீனி. வேங்கடசாமி**

தில்லைச் சிதம்பரத்திலே, சிற்றம்பலத்திலே நடராசப் பெருமானுக்குப் பாவாடைச் சிறப்பு நடப்பதாகக் கேள்விப்பட்டேன். இதனைத் திருப்பாவாடைத் தரிசனம் என்றும் கூறுகிறார்கள். பாவாடை என்றால், சிறுமிகள் உடுத்துகிற உடை அல்லவா? பாவாடைச் சிறப்பு என்றால், சிதம்பரம் கோயிலிலே தில்லைச் சிவகாமசுந்தரிக்குப் பட்டுப் பாவாடை சார்த்திச் சிறப்புச் செய்வார்கள் போலும் என்று எண்ணினேன்.

திருப்பாவாடைச் சிறப்பு என்று இந்தக் கோவிலிலேதானே கேள்விப்படுகிறோம். வேறு கோவில்களிலே திருப்பாவாடைச் சிறப்பு என்று கேட்டதில்லையே! எல்லாக் கோவில்களிலும் அம்பிகைக்குப் பாவாடை சார்த்துவது வழக்கமாக இருந்தாலும், திருப்பாவாடைத் தரிசனம் என்று கூறுவதில்லையே என்கிற ஐயம் என் மனத்தில் இடங்கொண்டது. பாவாடை என்றால் என்ன? அது திருப்பாவாடைதானா, அல்லது இதற்கு வேறு ஏதேனும் பொருள் உண்டா? நெடுநாள் சென்றும் என் ஐயம் தீரவில்லை.

"தென் இந்திய சாசனங்கள்" என்னும் புத்தகங்களைப் படித்துக் கொண்டிருந்தேன். அப்போது அச் சாசனங்கள் ஒன்றில், திருப்பாவாடைச் சிறப்பு என்னும் வாசகத்தைக் கண்டேன். கண்டதும், முன்னமே மனத்தில் தங்கியிருந்த ஐயம் நினைவுக்குவந்தது. அந்தச் சாசனத்தைப் படித்தேன். அது தில்லை நடராசர் கோவிலில் உள்ள சாசனந்தான். சகல புவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ அவனியாளப் பிறந்தாரான கோப்பெருஞ் சிங்க தேவர் என்னும் அரசனின் ஆறுவது ஆண்டில் அந்தச் சாசனம் எழுதப்பட்டது. அந்தச் சாசனத்தில், வேறு செய்திகளுடன்,

"திருப்பாவாடை புறத் திருநாமத்துக் காணியாகவும்" என்றும்,

"நிலம் அறுமாவரையும் திருப் பாவாடைப் புறத்திருநாமத்துக் காணியும் தில்லை நாயகன் பெரும் பண்டாரத்துக்கு முதலாகப் போனகப் படிநெல்லு அளக்க வும்"

என்றும் எழுதப்பட்டிருந்தன.

இந்தச் சாசனத்திலிருந்து, அந்தக் காலத்திலேயே சிதம் பரம் கோவில் திருப்பாவாடைச் சிறப்புக்காக நிலம் தானம் செய் யப்பட்டிருந்தது தெரிகிறது.

அதே கோவிலில் இருக்கின்ற இன்னொரு சாசனம், திருப்பா வாடைச் சிறப்புக்காக நிலம் தானங் கொடுக்கப்பட்டதைக் கூறுகிறது. மற்றொரு சாசன மும் அதே நிலத்தை குறிப்பிடு கிறது. ஆனால், இந்தச் சாசனம் திருப்பாவாடை என்று சொல்லா மல், திருப்பாவடை என்று கூறு கிறது. இதைக் கண்ட பிறகு இன்னொரு ஐயம் ஏற்பட்டது. அதாவது பாவாடையா? அல்லது பாவடையா? இதில் எது சரியான வாசகம் என்னும் ஐயம் ஏற்பட் டது. பாவாடை என்றால் சிறுமி கள் உடுத்தும் ஆடை. பாவடை என்றால் பொருள் என்ன? பாவடை என்பது பிசகாக எழுதப் பட்ட வாசகமாக இருக்குமோ?

சிதம்பரக் கோவிலில் உள்ள இன்னொரு சாசனம் இவ்வாறு கூறுகிறது:

"திருத் தைப்பூசத் திரு நாளிலே திருப்பாவாடைச் சிறப் பாக அமுதுபடிக்கு ஊர் இளங் காலாலே பதின் கலனுக்குப் போனகப் பழவரிசியும் இருகல மணிப் பருப்பும் நாலுநிறை சர்க் கரையும் நூறு தேங்காயும் பத் துப் பலாக்காயும்......இருநூறு வழுதிலைக் காயும் குலோத்துங்க சோழத் திருமடைப்பள்ளி பண் டாரத்திலே முதலிடவும் கயிலாய தேவன் திருப்பாவாடைப்புறம் என்று திருமாளிகையிலே கல் வெட்டுவிந்து..."

என்று எழுதப்பட்டிருக்கிறது.

இதிலிருந்து தெரிவது என்ன வென்றால், அரிசி, பருப்பு, சர்க் கரை, தேங்காய், பலாப்பழம் முதலியவற்றைக் கொண்டு சர்க் கரைப் பொங்கல்போன்ற திருவ முது செய்வதற்கு நிலம் தானம் செய்யப்பட்டது தெரிகிறது. ஆனால்: திருப்பாவாடைக்குப் பட்டு ஆடை வாங்குவதுபற்றி இதில் ஒன்றும் கூறப்படவில்லை. பட்டு ஆடை இல்லாமல் திருப் பாவாடைச் சிறப்பு எப்படி நடக்கும்?

ஆனால், இன்னும் ஐயம் அகல வில்லை. பாவாடைச் சிறப்பா, பாவடைச் சிறப்பா? எது சரி யான வாசகம்? பாவடை என்றால் பொருள் என்ன?

ஒருநாள் எனக்கு ஒரு சிறு நூல் கிடைத்தது. அது 1878-ஆம் ஆண்டு அச்சிடப்பட்ட பழைய நூல். அந்நூலின் பெயர், "யாழ் வல்லோனாகிய நாரத முனிக்குச் சிவபெருமான் உரைத்த ஸ்ரீரங்க மகத்துவம்" என்பது. அதில் ஸ்ரீரங்கநாதருக்கு என்னென்ன உணவு, சிற்றுண்டி களைப் படைத்தார்கள் என்று கூறும் பகுதியில் ஒரு பட்டியல் எழுதப்பட்டிருந்தது.

"...பொங்கல், சர்க்கரைப் பொங்கல், அக்காரவடிசில், ததி யோதனம், புளியவரை, மிளக வரை, கடுகவரை தருவி சாதம் என்று சொல்லப்பட்ட முப்பத் திரண்டு வகைப் பொங்கலும், தோசை, வடை, அப்பம், எள்ளு ருண்டை, அதிரசம், மனோகரம், சுகியம், தேன் குழல், கோதுமை ரொட்டி, யானையடியப்பம் முத லான கச்சாய வர்க்கங்களும்... தூய்ய நெய், புத்துருக்கு நெய், கற்கண்டு சீனி சருக்கரை முத

லானதுகளும் சொரிந்து கமகம வென்று பரிமளிக்கும்படி திருப் பாவடையும் செய்து...''

திருப்பாவடை என்னும் சொல் லைக் கண்டவுடன் என் மனம் துள்ளிக் குதித்தது. மனத்தில் புதிய எழுச்சி உண்டாயிற்று. இந்தப் பகுதியை மீண்டும் கருத் தூன்றிப் படித்தேன்.

''துய்ய நெய், புத்துருக்கு நெய், கற்கண்டு சீனி சருக்கரை முதலானதுகளும் சொரிந்து கமகமவென்று பரிமளிக்கும்படி திருப்பாவடையும் செய்து''என்று எழுதப்பட்டிருப்பதைக் கண் டேன். நெடுநாளாக மனத்தில் குடிகொண்டிருந்த ஐயம் நீங்கி விட்டது. பாவாடையா, பாவ டையா? எது சரியான வாசகம் என்று உள்ளத்தில் ஆராய்ந்து கொண்டிருந்த கேள்விக்கு விடை கிடைத்துவிட்டது. திருப்பாவா டை அல்ல, திருப்பாவடைதான் சரியான வாசகம் என்பது விளங் கிற்று.

பேச்சுவழக்கில் திருப்பாவாடை என்று சொல்லப்படுகிறது. கல் வெட்டுச் சாசனத்திலும் திருப் பாவாடை என்றுதான் எழுதப் பட்டிருக்கிறது. ஒரு சாசனத்தில் மட்டும் திருப்பாவடை என்று எழுதப்பட்டிருந்தது. இந்த ஸ்ரீரங்க மகத்துவம் என்னும் புத்தகத்திலும் திருப்பாவடை என்றுதான் எழுதப்பட்டிருக் கிறது. திருப்பாவாடைச் சிறப்பு என்றால் அம்பிகைக்குப் பட்டுப் பாவாடை உடுத்தும் சிறப்பாக இருக்குமோ என்று நான் கருதி யிருந்த கருத்துத் தவறானது என்றும், திருப்பாவடை என்றால் சர்க்கரைப் பொங்கல் போன்ற இனிப்புப் பலகாரம் என்றும் அறிந்தேன். திருப்பாவடை என் னும் இனிப்புப் பலகாரம் தில்லை நடராசப் பெருமானுக்கும், திரு வரங்கம் அரங்கநாதருக்கும் தொன்றுதொட்டு நிவேதம் செய் யப்பட்டு வரும் ஒரு சிறந்த பல காரம் என்பது தெரிகிறது.

திருப்பாவாடை செய்வதற்குத் துய்யநெய் புத்துருக்கு நெய் கற் கண்டு சீனி சர்க்கரை முதலிய பொருள்கள் வேண்டும் என்று ஸ்ரீரங்க மகத்துவம் கூறுகிறது. பழஅரிசி மணிப்பருப்பு சர்க்கரை தேங்காய் பலாப்பழம் முதலிய பொருள்களைக் கொண்டு திருப் பாவடை செய்யவேண்டுமென்று தில்லைச் சாசனம் கூறுகிறது. இவ் விரண்டையும் ஒன்று சேர்த்துப் பார்த்தால் திருப்பாவடை என்பது சர்க்கரைப் பொங்கலை விட மிக உயர்ந்ததான, இனிப்பும் சுவை யும் மிகுந்த ''கமகம வென்று பரிமளிக்கிற'' பலகாரம் என்பது நன்கு தெரிகிறது. சாப்பிட்டால் மிகச் சுவையுள்ளதாக இருக்கும் என்பதில் சற்றும் ஐயம் இல்லை. ஆனால், பாவடை என்று ஏன் பெயர் வந்தது? பாவடை என்றால் பொருள் என்ன என்னும் ஐயம் தோன்றிவிட்டது.

தலைவலி போய் திருகுவலி வந்தது என்று பழமொழி கூறு வார்கள். பாவாடையா, பாவ டையா என்கிற ஆராய்ச்சியில் நெடுநாள் கழிந்து, கடைசியில், பாவடை என்பதுதான் சரியான வாசகம் என்பதும் பாவடை என்பது ஒரு பலகாரத்தின் பெயர் என்பதும் நெடுநாளைக்குப் பிறகு அறிந்துகொண்ட எனக்கு, இப் போது புதிய ஐயம் ஏற்பட்டது. பாவடை, சுவை மிகுந்த இனிப் புப் பலகாரம். சரி, இதற்கு ஏன் பாவடை என்று பெயர் வைத்தார் கள்? காரணப் பெயரா, இடுகுறிப் பெயரா? இந்த ஆராய்ச்சியில் மனம் ஊக்கிவிட, மூளை வேலை செய்தது.

பாவடை! பாவடை என்றால் என்ன? அதை எப்படிப் பிரிப்பது? பாவு + அடை = பாவடை. பொருள்

இல்லையே! ஓகோ! பாகடையாக இருக்குமோ? பாகு + அடை = பாகடை. சரி, சரி; பொருள் சரியாய் விளங்குகிறது. பாகடை - பாவடை-பாவாடை.

வெல்லம், சர்க்கரை, கற்கண்டு இவற்றை நெய்யுடன் கலந்து பாகு காய்ச்சினால் மிக இனிமையாகவும் கமகமவென்று பரிமளிக்கவும் செய்யும். நெய்யுடன் சர்க்கரையைக் கலந்து பாகு காய்ச்சி, அதனுடன் பருப்பு மாவைக் கலந்து மைசூர்பாகு செய்கிறார்கள் அல்லவா? அதிரசம் செய்வதற்கு அரிசி மாவைக் கலந்து வெல்லப் பாகு கிளறுகிறார்களே, அதுபோல. புத்துருக்கு நெய்யுடன் கற்கண்டுப் பொடியைக் கலந்து பாகு காய்ச்சி வைத்துக் கொண்டு, பழவரிசியுடன் மணிப் பருப்பையும் சக்கரையையுங் கலந்து பலாப்பழத்தைத் துண்டு துண்டாக நறுக்கிப் போட்டுச் சர்க்கரைப் பொங்கல் செய்து, முந்திரிப்பருப்பும் திராட்சைப்பழமும் ஏலக்காயும் குங்குமப்பூவும் இட்டு, நெய்விட்டுக் கிளறி, இதனுடன், முன்பு காய்ச்சிவைத்திருக்கும் கற்கண்டுப் பாகையும் சர்க்கரைப் பாகையும் அடைத்துக் (கலந்து) கிளறிப் பாகடை செய்தால், அதற்குப் பாகடை என்றுதானே பெயர் சூட்ட வேண்டும்!

இவ்வாறு இனிப்புப் பாகுகளையும் உருசியுள்ள சுவைப் பொருள்களையும் அடைத்துச் (கலந்து) செய்யப்பட்ட பாகடை, அதன் பெயருக்கேற்ப மிக இனிய சுவையுள்ள பலகாரமாகத்தான் இருக்கும். இந்தப் பாகடை என்னும் பெயர், பேச்சு வழக்கில் பாவடை ஆகி, காலப்போக்கில் பாவாடையாக மாறி, சொல் ஆராய்ச்சியில் சிலஐயங்களை உண்டாக்கி ஒரு கட்டுரை எழுதவும் காரணமாகி விட்டது.



## மழையின் மகத்துவம்

*தண்ணீர் மழையாகப் பெய்யுது. ஆறாக ஓடுது. அதை அணைகட்டித் தேக்கி வைக்கிறோம். பிறகு வாய்க்கால் வெட்டி விவசாயத்திற்கு அனுப்புகிறோம். கொஞ்சம் தண்ணீர் சமுத்திரத்திற்குப் போகிறது. பிறகு என்ன ஆகிறது? இந்த மழைநீர் வற்றி மேகமாக மேலே போய் மறுபடியும் மழையாகக் கொட்டுகிறது. இப்படித்தானே அது பழையபடி சுற்றிக் கொண்டே வருகிறது. அதைத் தடுத்து நிறுத்த முடியுமா, என்ன? அதுபோலத்தான் பணமும். சுத்திச்சுத்தி வரணும். மழைக்கு அவ்வளவு பெருமை எப்படி ஏற்பட்டதோ, அதே மாதிரிதான் பணத்திற்கும், மழையைப் போலவே பணமும் சுத்திச்சுத்தி வரவேண்டும். மழை எல்லா இடத்திலேயும் இருக்கிற மாதிரி எல்லா இடத்திலேயும் பணமும் இருக்க வேண்டும்.*

—காமராஜர்.

கடந்த அரை நூற்றாண்டு காலமாக் இந்த நாட்டின் மனச்சாட்சிக்குக் காவல ராக நேரு விளங்கி வந்தார்.

இந்த நாட்டின்மக்கள்—அவருக்குத் தங்கள் உள்ளத்தில் தனிக்கோயில் கட்டிக் கொடுத்து இருந்தார்கள்.

# உள்ளக் கோயிலின் உருவம்

டாக்டர் எஸ். விஜயலட்சுமி

'காந்தி' யென்ற மூன்று எழுத்துக்களுக்குப் பிறகு, இந்த பரந்த நாட்டை ஒருமைப் படுத்திய பெருமை "நேரு" என்ற இரண்டு எழுத்துக்களுக்கு உண்டு. அவரை ஒரு தனி மனிதர் என்று கூறலாமா? ஒருஸ்தாபனம் என்று அவரைக் கூற முடியுமா? இல்லை—ஒரு சகாப்தத்தையே தனது அற்புதமான செல்வாக்கால் அவர் இயக்கி வைத்துக் கொண்டிருந்தார்.

அடிமை இருள் கவிழ்ந்திருந்த பழைய தலைமுறை கழிந்தது—சுதந்திர வாழ்வு தேடி, புது உலகை நோக்கி இந்தத் தலைமுறையை அழைத்துச் சென்ற பெருமைப் மிக்க செயல்கள்—அவருடைய தலைமையில் நிகழ்ந்தன.

இன்றைக்கு சுமார் 20ஆண்டுகளுக்கு முன்னேயே "இந்திய விடுதலையின் மூலம் ஆசிய ஆப்பிரிக்க நாடுகளின் விடுதலை வரலாறு தொடங்கும்" என்று அவர் கூறினார்.

இன்று ஆசிய—ஆப்பிரிக்க நாடுகளின் பூகோளப் படமே மாறியிருக்கிறது. அடிமைப் பட்ட மக்கள், புதுவாழ்வு வாழ்ந்து வருகிறார்கள்.

இந்த வீர வரலாற்றுக்குமற்ற யாரையும் காட்டிலும் நேருவே நாயகமாக விளங்கி வந்தார்.

அவருடைய எண்ணங்கள் ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் இயங்கவில்லை. "தொல்லுலக மக்கள் எல்லாம் ஒன்றே" என்னும் அன்பு உள்ளம் அவரிடத்தே இருந்தது.

உலகில் எந்த மூலையிலாவது போர் என்றால்—வெடிச்சத்தம் கேட்டால்—டெல்லியில் அமர்ந்துள்ள அவருடைய உள்ளம் துடித்தது. •

பெரும்கொலைவழியாம் போர் வழி இகழ்ந்த அருங்குணம் குடிகொண்டிருந்ததால்அவர்—அமைதிச் செய்தியைப் பரப்ப அகில மெங்கும் சென்றார்.

மேற்கையும் கிழக்கையும் இணைக்கும் அன்புப் பாலத்திற்கு அஸ்திவாரம் போட்டவர் அவர்தான்.

மக்களிடத்திலிருந்து அவர் ஒரு நாளும் தனியாக விலகி நின்றது இல்லை. அவர்களில் ஒருவராக – அவர்களாகவே— ஆகிவிட்ட பெருமை அவருக்கு உண்டு.

வகிக்கின்ற பதவி என்னும் பெருஞ்சுமையின் காரணம் காட்டிப் பலர் மக்களை மறந்திருப்பர். நேருவோ பதவிக்குச் சென்ற பின்னரும்கூட முன்னைக் காட்டிலும் அதிகமாக மக்களுடன் இருந்தார்.

கலவரம்—பூகம்பம் — வெள்ளம்—விபத்து—என்று எங்கே எது நடந்தாலும் அடுத்த கணம் — ஆறுதல் கூறிட—அஞ்சேல் என்று அபயம் அளித்திட— அவர் என்றும் தவறியதில்லை.

அப்படிப்பட்ட ஒரு வீர வரலாறு, ஒரு பெருவாழ்வு, ஒரு சகாப்தம், ஒரு அற்புதமான காவியம் முடிந்துவிட்டது.

அடையாத நெடுங்கதவு அடைக்கப்பட்டுவிட்டது.

அவர் தனது உடலின் இறுதி அணுக்கள் ஒவ்வொன்றும் இந்த நாட்டின் மண்ணோடு— காற்றோடு—கடலோடு—கலக்க வேண்டும் என்று விரும்பிய விருப்பம் நிறைவேறிவிட்டது.

. கடந்த அரை நூற்றாண்டு காலமாக இந்த நாட்டின் மனச்சாட்சிக்குக் காவலராக அவர் விளங்கி வந்தார்.

இந்த நாட்டின் மக்கள்— அவருக்கு தங்கள் உள்ளத்தில் தனிக் கோயில் கட்டிக் கொடுத்து இருந்தார்கள்.

காஷ்மீர் முதல் கன்னியா குமரி வரை பரந்து விரிந்து கிடந்த இந்தப் பெருநிலமே அவருடைய வீடாகத் திகழ்ந்தது.

இந்த நாட்டின் 45 கோடி மக்களும் அவருடைய குடும்பத்தினராகத் திகழ்ந்தனர்.

மனித இனம் முழுவதுமே அவருடைய சுற்றமாகத் திகழ்ந்தது.

சாந்தியும் சமாதானமும் அவருடைய மதமாகத் திகழ்ந்தன.

பசி ஆற்றுதல்—பிணி தீர்த்தல் - அறியாமையைப் போக்குதல்—சமதர்ம நல்வாழ்வு முதலியன அவருடைய லட்சியங்களாக விளங்கின.

சிறியன சிந்தியாத சிந்தனையாளர்; எழுச்சிக்கு வித்திட்ட எழுத்தாளர்; அடக்கப்பட்டுள்ள மக்களின் விடுதலைக்கு வழிகாட்டி; அமைதிக்கு வழிவகுத்த அன்பு அண்ணல்.

செயல், சிந்தனை, எண்ணம், எழுத்து எல்லாவற்றிலும் நாட்டையும் மக்களையும் நேசித்த புனிதப் பெருமான்!

இந்த நூற்றாண்டின் தலைசிறந்த மனிதர் அவர்தான்!

கொடிய அடக்கு முறைக்கு ஆளாகி அவர் புரிந்த தியாகம்—

விடுதலைக்குப்பின் அவர் ஏற்றுக்கொண்ட மெய்வருத்தம் பாராத உழைப்பு—

தாய்நாட்டின் துன்பம் தீர்க்கத் தன்னையே அளித்துவிட்ட தீரச் செயல்-

இவற்றுக்குச் சரித்திரத்தில் ஒப்புவமை கிடையாது.

அவர் மேற்கொண்ட குறிக்கோள்களால் அவர் போராடிய லட்சியங்களால் அவர் விசுவரூபம் பெற்றுவிளங்கினார்.

"உங்களுடைய எழுத்துக்களில் மனிதாபிமான வெள்ளம் பெருக்கெடுத்தோடுகிறது.

உங்களுடைய செயல்களைக் காட்டிலும் நீங்கள் மகத்தானவராக விளங்குகிறீர்கள்.

உங்களுடைய சுற்றுச்சார்புகளைக் காட்டிலும் நீங்கள் தூய்மை நிறைந்தவராக விளங்குகிறீர்கள்."

என்று நேருவைப் பற்றி கவியரசர் தாகூர் கூறினார்.

சுமார் 28 ஆண்டுகளுக்கு முன் கூறப்பட்ட இந்த சொற்கள் இன்று எவ்வளவு உண்மையாகிவிட்டன?



## தெய்வத்திற்கு மலர்கள்

1947 நவம்பரில் நடைபெற்ற ஒரு சம்பவம் நினைவுக்கு வந்தது. இந்திய ராணுவம் காஷ்மீருக்குள் சென்ற சில தினங்களுக்குப் பிறகு இது நடந்தது. பிரதம மந்திரி ஸ்ரீநகருக்குப் போனார். பாராமுலா வரையில்கூடப் போனார். பாராமுலாவில் ஒரு மாதாகோவில் இருக்கிறது. கொள்ளைக்காரர்கள் இந்த இடத்தில் தான் பெண்களை மானபங்கப்படுத்தினார்கள். உள்ளூர் காங்கிரஸ் தலைவர் ஒருவரையும் சித்திரவதைக்குள்ளாக்கினார்கள். இந்த இரு இடங்களையும் பார்த்தார். எல்லைக் கப்பாலிருந்து வந்த கொள்ளைக்காரர்களின் கொடூரங்களைப் பற்றி அவரிடம் கதைகதையாகச் சொல்லப்பட்டது.

எல்லாவற்றையும் அவர் கேட்டுக்கொண்டார். புறப்படும் சமயத்தில் கீழே குனிந்து சில மலர்களைப் பொறுக்கிக்கொண்டார். "இந்த மலர்களைக் கையில் வைத்திருங்கள்?" என்று என்னிடம் கொடுத்தார். "இதை யெல்லாம் டில்லிக்கா எடுத்துக் கொண்டு போகப் போகிறீர்கள்? எதற்காக?" என்று கேட்டேன். "பாராமுலாவில் இந்த மலர்களிடம் மட்டும் தான் கண்யமும், கம்பீரமும் எஞ்சியிருக்கின்றன. இவற்றை இன்றிரவு காந்திஜியினிடம் கொடுக்க விரும்புகிறேன்" என்று அவர் பதிலளித்தார். அந்த புஷ்பங்களை என்னிடம் கொடுப்பதற்கு முன்பு அவற்றை முகர்ந்து பார்த்து விட்டார். "ஆண்டவனின் பாதங்களில் சமர்ப்பிப்பதற்கு முன்பு மலர்களை முகர்ந்து பார்ப்பது எங்கள் பக்கத்தில் வழக்கமில்லை" என்று நான் சொன்னேன். ஒரு நிமிஷம் என்னைப் பார்த்தார். மறுவார்த்தை பேசாமல் மீண்டும் கீழே குனிந்து வேறு சில மலர்களைப் பொறுக்கி என்னிடம் கொடுத்து, "இதை வைத்துக் கொள்ளுங்கள்" என்றார். டில்லிக்குத் திரும்பிய பிறகு அந்த மலர்களை என்னிடமிருந்து வாங்கிக் கொண்டு காந்திஜியைப் பார்க்க நேராகப் பிர்லா மாளிகைக்குச் சென்றார். —எச். வி. சி.

இந்தியாவில் பண்டைக் காலத்தில் மனித வாழ்க்கை மரங்களுடன் நெருங்கிய தொடர்புடையதாக அமைந்திருந்தது. மொகஞ்சதாரோ, ஹரப்பா நாகரிகங்கள் வனப்பிரதேசங்களில் சிறப்புற்று விளங்கின. விவசாயத்தை ஊட்டி வளர்க்கும் தாயாக வனத்துறை கருதப் படல் வேண்டும். மரங்களால்தான் மக்களின் வாழ்வு மாண்புறுதல் முடியும்.

# மரங்கள்

காற்றுக்கும் தண்ணீருக்கும் அடுத்தபடியாக இயற்கை நமக்கு அளித்திருக்கும் ஓர் அரிய அன்பளிப்பு தாவரங்களாகும். நிலக்கரிச் செல்வம், உணவை அள்ளி வழங்கும் நிலவளம், பாசனத்திற்குத் தண்ணீர்ஏன், நாம் சுவாசிக்கும் காற்றின் தூய்மை ஆகியவற்றுக்கெல்லாம்மூலகாரணங்களாக விளங்குவது மரங்கள்தாம். மண் அரிப்பைத் தடுப்பதற்கும் அவை பயன்படுகின்றன. மண் அரிப்பைத் தடுப்பதற்கு மரங்களை விடச்சிறந்த ஆற்றல்சிக்கனமான சாதனம் இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை, என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

உலகத்தின் கோதுமைக் களஞ்சியம் என்று புகழப்படும் கானடா பண்ணை நிலங்களையொட்டிபரந்த அளவில் மரங்கள் வளர்க்கப்பட்டுள்ளன. நிலஅரிப்பைத் தடுப்பதற்காக பண்ணை நிலங்களைசுற்றி மரங்களை வளர்ப்பது ரஷியாவில் சிறப்பானதொருஅம்சமாக விளங்குகிறது.

### தொன்மைச் செல்வம்

இந்தியாவில் பண்டைக்காலத்தில் மனித வாழ்க்கை மரங்களுடன் நெருங்கிய தொடர்புடையதாக அமைந்திருந்தது. மொஹெஞ்சதாரோ ஹரப்பா நாகரிகங்கள் வனப் பிரதேசங்களில்சிறப்புற்று விளங்கின. அழகு மரங்கள் நிறைந்த சோலைகளில் புத்தமடாலயங்கள் எழும்பின.

சமீப காலம் வரையில் இந்தியக் கிராமங்கள் தோப்பும் துரவுமாகக் காட்சியளித்ததை நாமே நேரில் கண்டிருக்கிறோம். அத்தோப்புக்களில் பச்சிளங்குழந்தைகளின் மகிழ்ச்சி ஆரவாரம் ஒலித்துக்கொண்டே இருந்தன.கிராமப் பெருமக்கள் கூடிச் சிக்கல்மிகுந்த வழக்குகளை அமைதியான முறையில் தீர்த்து வைத்ததும் அந்த காந்த வனங்களில்தான். கால்நடையாக நடந்து, வெயிலின் கொடுமைக்கு உள்ளாகித் தவிக்கும் யாத்திரிகர்களுக்கு களைப்பை நீக்கிச் சாந்தி யளிக்கும் பெரும் மரங்கள் எழிலூட்டிய நெடும் சாலைகளோ கணக்கிலடங்கா.

### பாழ் நிலங்கள்

இயற்கைச் செல்வம் பூத்துப் பெருகுகிறது. ஒரு காலத்தில் ஜனத் தொகைப் பெருக்கத்தின் காரணமாக இச்செல்வத்தை

வெகுவாக இழந்து விட்டிருக்கிறோம். சாலையோரங்களும் குளக்கரைகளும், கிராமப்புறங்களும் இன்று மரங்களே அற்ற வெற்றுநிலங்களாகக் காட்சியளிக்கின்றன. மரங்கள் யாவும் வரம்புவரையின்றி வெட்டப்படுவதே இதற்கு முக்கிய காரணமாகும்.

இதன்விளைவாகக்கிராமங்களில் விறகுப் பஞ்சம் ஏற்பட்டுள்ளது. பண்ணை நிலங்களுக்குச் சிறந்த தோர் எருவாக உள்ள மாட்டுச் சாணம் இன்று எரி பொருளாக அடுப்புக்கு பயன்படுத்தப்படுவது வருந்தத் தக்கதாகஉள்ளது. நமக்குத் தேவைப்படும் ரசாயன உரத்தில் சிறியதொரு பகுதி தான் இப்பொழுது நாட்டில் உற்பத்தி செய்யப்படுகிறது. நிலைமை இவ்வாறு இருக்கும்போது சிறந்ததோர் இயற்கை எருவை வீணடிப்பது சிறிதும் நல்லதல்ல. இதைத் தவிர்க்க வேண்டுமாயின், கிராமப் பகுதிகளில், குறைந்த விலையில் விறகுகள் நிறையக் கிடைப்பதற்கு வகை செய்யவேண்டியது அவசியமாகும். எனவே அதற்கு வகையாக மரங்களை வளர்ப்பதையே முக்கிய பணியாகஇந்திய விவசாயிகள் மேற்கொள்ளவேண்டியது பெரிதும் அவசியமாகும்.

### மரமும் தொழிலும்

மரங்களை வரம்புவரையின்றி வெட்டுவதனுல் பல்வேறுதொழில் துறைகள் மிகவும் பாதிக்கப்படுகின்றன. மரங்கள் கிடைப்பது அரிதாகி வரும் காரணத்தினுல், பொதுஉபயோகத்திற்குத்தேவையானமரச்சாமான்களைக்குறைந்த செலவில் தயாரிப்பதற்கு முடியாமல் மரத்தை மூலப் பொருளாகக் கொண்ட தொழில்கள் பலவும் நாளடைவில் மறைந்து வருகின்றன. கிராமத் தொழிலாகஇருந்து வந்த காகிதத் தொழில் மீண்டும் தலைதூக்க வேண்டுமென்ருல், கிராமப் புறங்களில் காடுகளை மீண்டும் உயிர்ப்பிக்க வேண்டும். முசுக்கட்டைச் செடிகளை கிராமங்களில் வளர்ப்பதன் மூலம், விவசாயிகள் துணைத் தொழிலான பட்டுத் தொழில் வளம் பெறும். கிராமங்களில் அரக்கு மரங்களை வளர்ப்பதற்கு நிறைய வாய்ப்புகள் இருக்கின்றன. வேப்பமரங்களினுல், சோப்புத் தொழில் செழிப்புற்று ஓங்கும்.

கிராமங்களில் மரங்கள் வெட்டப்படுவது, பக்கத்திலுள்ள காடுகளுக்கும் பரவஆரம்பித்துள்ளது. இதனுல்காடுகளும் சிறிதுசிறிதாக மறைந்து வருகின்றன. இதைத் தவிர, இருப்புப் பாதைகள், நெடுஞ்சாலைகள் ஆகியவை போடப்படுவதனுலும், விவசாயமும் பிற தொழில்களும் விரிவடைந்து வருவதனுலும் இவ்வழிவு ஏற்பட்டு வருகிறது. ஜல மின்சாரத் திட்டங்கள், நீர்ப்பாசனத் திட்டங்கள், சுரங்கத் திட்டங்கள், மற்றும் மறுவாழ்விப்புத் திட்டங்கள் ஆகியவையும் காடுகளை விழுங்கி வருகின்றன. நிலங்கள் காய்ந்து போய், மண்ணரிப்பு ஏற்பட்டு இறுதியில்விறகு விஷயத்தில் தீராப் பற்ருக் குறை ஏற்படுவதற்கு இவையனைத்துமே காரணங்களாகும். நாட்டின் பொருளாதாரமும் இதனுல்பாதிக்கப்பட்டுள்ளது.

### விவசாயத்தின் செவிலித்தாய்

விவசாயத்தை ஊட்டி வளர்க்கும் தாயாக வனத்துறை கருதப்பட்டுவருகிறது. இருப்பினும, நமது தேவைக்கேற்ற வகையில் வனத்துறை வளரவில்லை. நமது நாட்டிலுள்ள காடுகளின் மொத்தப் பரப்பு மூன்று லட்சம் சதுரமைல் தான். நாட்டின் மொத்த நிலப் பரப்பில் 24 சதவிகித அளவுதான் இது. குறைந்தது மூன்றில் ஒரு பங்கு நிலப்பரப்பையாவது காடுகள் கொண்டிருந்தால்தான் அவற்றின் முழுப்பயனையும் பெற முடி

யும். மரம், விறகு விஷயத்தில்பற்றுக்குறை 1975-ல் பத்துக்கோடி டன்னுக்கு உயரும் என மதிப்பிடப்பட்டுள்ளது. காட்டு நிலப் பரப்பில் குறைந்தபட்ச அளவை யாவது எட்டினுல் தான் இதைச் சமாளிக்க முடியும்.

கிராமத்தில் கிடைக்கும் பொருளைப் கொண்டே ஏந்த வீடு கட்டப்பட வேண்டு மென்று கருதினர் மகாத்மா காந்தி. மரங்களிலிருந்து பெறப்படும் பொருள்களைத் தான் அவர் அவ்வாறு எண்ணியிருக்க வேண்டும் என்பது தெளிவு. ஆயினும் இன்று எத்தனை கிராமங்கள் அவற்றைப் பெற்றுள்ளன? ரயில், மோட்டார் அல்லது விமானத்தில் செல்லும் போது வறண்ட நிலப்பரப்பைத் தான் நாம் திரும்பத்திரும்பகாண்கிறேம். இந்நிலை நீடித்தால், அப்பிரதேசங்கள் மீண்டும் செழிப்படையும் என்ற நம்பிக்கையும் தேய்ந்து போகும்.

### அழிவுக்குச் சான்றுகள்

மனித வாழ்க்கை மரங்களுடன் நெருங்கிப் பிணைக்கப்பட்டுள்ளது என்ற உண்மை நன்கு உணரப்படவில்லை. ஒன்றை அழிக்காமல் மற்றதை அழிக்க முடியாது. காட்டுப் பிரதேசங்களில் ஒரு காலத்தில் நாகரிகம் மேன்மையுற்று விளங்கியது. காடுகளின் அழிவு காரணமாக நில வறட்சி ஏற்பட்டு, சூரியனின் வெம்மைக் கதிர்களுக்கு இலக்காகி எத்தனையோ நகரங்களும் பட்டணங்களும் பாழ்பட்டுப் போயிருக்கின்றன. மொஹஞ்சதாரோவும், ஹரப்பாவும் இதற்குச் சான்றுகளாக நிற்கின்றன.

காடுகளை அழித்தல், மரங்களை வெட்டுதல் போன்ற பொறுப்பற்ற செயல்களினுல் வெள்ளமும் புழுதிப் புயலும் அடிக்கடி ஏற்படுவதுடன் மண் அரிப்பும் துன்பமூட்டும் வகையில் அதிகரித்து விடும்.

### உள்ளார்ந்த நோக்கம்

நிலத்தைப் பாழடையாமல்காப்பதற்கு மிகச் சிறந்த வழி மேலும் நிறையமரங்களைவளர்ப்பதுதான். இந்த நோக்கத்துடன் தான் 1950-ம் ஆண்டில் வனமகோற்சவம் துவக்கப்பட்டது. சாலை நெடுகிலும் நிழல் தரும் மரங்களை வளர்த்தல், பாழ் பட்டுப்போன தோப்புக்களைப் புதுப்பித்தல், வெற்று நிலங்களிலும், புல்வெளிகளிலும், திறந்த வெளிகளிலும் மரங்களை வளர்த்தல், வெளிச்சத்தை அதிகம் தடுக்காமல்இளம் நிழலைத்தரும் கருவேல மரம் போன்றவற்றை வயலோரங்களில் வளர்த்தல்; ஆகியன இவ்விழா கொண்டாடப்படுவதன் பிரதான நோக்கங்களாகும். வீடுகள், விவசாயக் கருவிகள், மாட்டு வண்டிகளின் உறுப்புகள், கிராமப்புறங்களுக்கு வேண்டிய விறகுகள் ஆகியவற்றுக்குத் தேவையான மரங்களை அதிக அளவில் பெற்று வாழுதற்கு இது வகை செய்யும். வனமகோற்சவம் இப்பொழுது தேசிய வைபவமாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. ஒவ்வொரு ஆண்டும் அதிக அளவில் வனமகோற்சவம் கொண்டாடப்படுதல் வேண்டும். 1950-லிருந்து, 1961 வரையிலான காலத்தில் கிட்டத்தட்ட 41 கோடி மரங்கள் நடப்பட்டன. அவற்றில் பாதிக்கும் மேற்பட்டவை துளிர்த்துப் பிழைத்துள்ளன. மரங்களிடத்தும் அபிமானம் காட்டுமாறு மக்களுக்கு உணர்த்துவதே இவ்வாண்டில் கொண்டாடப்படும் வனமகோற்சவவைபவத்தின் உள்ளார்ந்த நோக்கமாகும். பெருமளவில் மரங்களை வளர்த்து, நாட்டின் இயற்கைச் செல்வத்தைப் பெருக்கப் பாடுபடுவோமாக. (நன்றி — தினமணி)

# காமராஜரின் கதை

பள்ளி சென்று வரலாறு
படிக்க வில்லை என்றாலும்
பள்ளி செல்லும் பிள்ளையெலாம்
படிக்கப் பாடம் தான் ஆனான்

அரசியல் என்றால் என்னவென
ஆசான் சொல்லப் படியாதான்
அரசியல் உலகில் ஜோதியென
அகிலம் போற்ற வாழுகிறான்

புதுமை நிறைந்த போக்குடையான்
புரியும் தமிழில் வாக்குடையான்
கதையைச் சற்று படித்திடலாம்
கற்றே இன்பம் உற்றிடலாம்.

—நாக முத்தையா



## குணசாலி

ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து..........

ஒழுங்காகவும் பிழை யில்லாமலும் எண்ணிக் கொண்டே போனால், ஒன்று நூறாகவும், ஆயிரமாகவும், லட்சமாகவும், கோடியாகவும், பெருகிக் கொண்டே வளர்வதைக் காணலாம்.

12345678



அதுபோலத்தான் சான்றோர்களின் வாழ்வும் திகழும். சிறிதிலிருந்து பெரிதாகி, பெரிது பெருமைக்குரியதாய் இலங்கும் வாழ்வு சான்றோர் வாழ்வாகும். பிறப்பு, எல்லா உயிர்க்கும் ஒருமைத்தாக இருக்குமெனினும் சிறப்பு, செய்கின்ற தொழிலுக்கு ஏற்பத்தான் அமையும். படிப்படியாக, பண்பு நெறி தவறாமல் வளர்ந்து வருகின்றவனுக்கு வாழ்வு இருக்கும்; வீழ்வு இருக்காது. அப்படியன்றி பண்பு திரிந்து படிபிறழ்ந்து வளர்ந்து வருகின்றவனுக்கு வாழ்வு இருக்கும்; அதனைத் தொடர்ந்தே வீழ்வும் இருக்கும்.

உண்மையை ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்தவர்கள் உண்டு. அவர்களைச் ‘சத்திய சீலர்கள்’ என்று உலகம் போற்றும்.

உழைப்பை ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்தவர்கள் உண்டு. அவர்களை ‘உழைப்பால் உயர்ந்தோர்’ என்று உலகம் போற்றும்.

படிப்பை ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்தவர்கள் உண்டு. அவர்களைப் ‘படிப்பாளிகள்’ என்று உலகம் போற்றும்.

குணத்தை ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்தார்கள் உண்டு. அவர்களைக் ‘குணசாலிகள்’ என்று உலகம் போற்றும்.

பலத்தை ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்தவர்கள் உண்டு அவர்களைப் ‘பலசாலிகள்’ என்று உலகம் போற்றும்.

பணத்தை ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்தவர்கள் உண்டு அவர்களைப் ‘பணக்காரர்கள்’ என்று உலகம் போற்றும்.

உண்மை, உழைப்பு, குணம், சார்பு முதலியவற்றை ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்தவர்களைப் போற்றுகிற அளவுக்கு பலம், பணம், படிப்பு முதலியவற்றை ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்தவர்களை நாம் போற்றிப் பேசுவது கிடையாது. குணசாலிகளுக்கு என்றுமே குறைவற்ற வாழ்வு உண்டு. இது சரித்திரப் பாடம்.

காமராஜர் ஒரு குணசாலி, அருமையான குணங்கள் பல படைத்தவர். தன்னலம் பேணாதவர். நாட்டுப் பற்று மிக்குடையவர். பண ஆசை அற்றவர். அஞ்சாத நெஞ்சுடையவர். அன்புக்கு அடிபணிபவர். ஆரவாரத்தில் அக்கறை கொள்ளாதவர். அமைதியாகச் செயல் முடிப்பவர். அதனால்தான் அவருடைய வாழ்வு பிறர் பின்பற்றுதற் கேற்றதொரு பாடமாக அமைந்தியங்குகிறது.

## விருதுபட்டி

அந்தக் காலத்தில் விருதுபட்டி என்பது ஒரு சிறு கிராமமாகத்

தான் இருந்து வந்தது. பட்டி என்பதே பட்டிக்காட்டைக் குறிக்கும் சொல்தான் அன்ருே?

காமராஜ நாடார் பிறந்தபோது அந்த ஊரின் பெயர் விருதுப்பட்டி. அவர் தலைவராக உயர்ந்த நேரத்தில் அந்த ஊரின் பெயரும் விருதுநகர் என உயர்ந்தது. சாதாரண மனிதன் தலைவனாக உயரும்போது பட்டிமட்டும் நகராக மாருமல் இருக்குமா, என்ன? வேப்பிலைப்பட்டி, துலுக்கர்பட்டி, நாயக்கர்பட்டி, ரெட்டியார்பட்டி, முதலிய ஊர்கள் இன்னும் பட்டிகளாகவே இருக்க விருதுபட்டி மட்டும் விருதுநகராக மாறிவிட்டது என்ருல் அது குறிப்புக்குரிய விஷயந்தானே?

விருது என்ருல் சிறப்பு என்று பொருள். விருதுநகர் என்ருல் சிறப்புள்ள நகர் என்று பொருளாகும். அந்த ஊருக்குச் சிறப்புள்ள நகர் என்று பெயர் அமையக் காரணம் என்ன? காமராஜர் போன்ற பல பெரியவர்களின் பிறப்பிடமாக அவ்வூர் அமைந்திருப்பதே அவ்வூருக்குள்ள சிறப்பாகும்.

விருதுபட்டியில் நாடார்கள் மிகுதியாக வாழ்ந்து வருகிருர்கள். ஊரின் நடுவே தெப்பக்குளம் ஒன்றுண்டு. அதன் கீழ்ப் பகுதியிலும், மேல் பகுதியிலும் நாடார்களின் வீடுகள் நிரம்ப இருந்தன. குமாரசாமி நாடார் என்பவர், நாடார்களிடையே நல்ல செல்வாக்கோடு வாழ்ந்து வந்தார். நல்ல குணங்களும், நாடும் இயல்புகளும் நிரம்பப் பெற்றவர். கூச்சம் மிக்குடையவர்; குறும்பு செய்தறியாதவர். இரைந்து கூடப் பேசமாட்டாராம்.

குமாரசாமி நாடாருக்கும் சிவகாமி அம்மாளுக்கும் சிறப்பாகத் திருமணம் நடந்தது. திருமண மக்கள் ஒருமன மக்களாக ஒற்றுமையோடு வாழ்வைத் தொடங்கினர்.


திரு-காமராஜர்

### காமராஜர் பிறந்தார்

1903 ஆம் ஆண்டு ஜூலை மாதம் பதினைந்தாம் தேதி ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தைக்குப் பெற்றவர்கள் காமாட்சி என்று பெயரிட்டனர். அன்னை சிவகாமி அம்மாள், அன்போடு காமாட்சியை வளர்த்து வந்தார். பாட்டி பார்வதி அம்மாளுக்குக் காமாட்சியைக் காணவிட்டால் உணவு செல்லாது; உறக்கம் கொள்ளாது,

ஒரு நாள் காமாட்சி தொட்டிலில் உறங்கிக் கொண்டிருந்தான். அப்போது பக்கத்து வீட்டு அம்மாள் வந்தாள். 'என்ன காமாட்சி தூங்குகிருனு?' என்று கேட்டாள். சிவகாமி அம்மாளுக்குத் திடீரென்று ஞானோதயம் பிறந்துவிட்டது. 'இனி என் மகனின் பெயர் காமாட்சி இல்லை; காமராஜ் ஆகும்,' என்று தனக்குள்ளாகச் சொல்லிக் கொண்டாள். தான் மனத்திற்குள் சொல்லிக் கொண்டதையே எல்லோரிடமும் இரைந்து சொல்லி வந்தார் சிவகாமி அம்மாள். இதுதான் காமாட்சி, காமராஜராக மாறிய கதை. எனவே இனி நாமும் காமாட்சி



# சிவகாமி அம்மையார்

யைக் காமராஜ் என்றே அழைத்து வருவோம்.

**நல்ல குடும்பம்**

காமராஜ் நல்ல குடும்பத்திலே பிறந்தவர். அவருடைய தாய் வழிப் பாட்டனுரான சுலோசன நாடார் விருதுப்பட்டியின் நாட்டாண்மைக்காரராக இருந்தார். மேலும் விருதுப்பட்டியை அடுத்துள்ள முத்துராம்பட்டியின் மணியக்காரராகவும் (கிராம முனிசீப்) இருந்தார். அவருடைய தந்தை வழிப் பாட்டனுரான சின்னப்ப நாடார் ஊரார் போற்றும் உத்தமராகத் திகழ்ந்தார். இராமாயணக் கதைகளை அவர் படிக்கக் கேட்பதில் ஊர் மக்களுக்கு விருப்பம் அதிகம். அவ்வளவு சுவையாகப் படித்துக் கதை சொல்லுவார். போதாக் குறைக்கு அவர் கைதேர்ந்த சோதிடக் காரரும் கூட!

அவருடைய தந்தையார் குமாரசாமி நாடார் தேங்காய் வியாபாரத்தில் தேர்ச்சி உள்ளவர். அவர் ஒரு மொத்த வியாபாரியும் கூட. பல கிடங்குகளை வைத்துப் பெரிய வியாபாரம் செய்து பேறும் புகழும் பெற்று விளங்கினர்.

இத்தகைய குடும்பத்தில் காமராஜ் பிறந்திருந்தார். அவர் செல்வம் படைத்த குடும்பத்தில் பிறந்து சீரும் சிறப்போடும்தான் வாழ்ந்து வந்தார் என்பதை யாரும் மறுக்க முடியாது.

**செல்லப் பிள்ளை**

காமராஜர் பெற்றேர்களின் பிரியத்துக்கு உரியவராகத் திகழ்ந்தார். அவரைச் செல்வக் குழந்தை என்று அழைப்பதைவிடச் செல்லக் குழந்தை என்று கூட அழைக்கலாம். பாட்டி கொடுத்த செல்லத்திற்கு அளவே கிடையாது.

பேரனை இடுப்பில் வைத்துக் கொண்டு பராக்குக் காட்டிப் பாலூட்டுவதில் பாட்டி சாமர்த்தியசாலி. ஆட்டுப் பாலில் மலை வாழைப் பழத்தைப் பிழிந்து கலக்கி அடிக்கடி பேரனுக்கு ஊட்டுவதில் பாட்டி பேரின்பம் கண்டு வந்தாள். தவழ்ந்து விளையாடிய பேரனுக்குத் தாய்மாமன் வீட்டிவிருந்து 'தள்ளுவண்டி' (நடைவண்டி) வந்து சேர்ந்தது. தள்ளு வண்டியை முன் வைத்து, காமராஜரை பின் நிறுத்தி வண்டியை ஓட்டச் சொல்லிப் பெற்ரேர்கள் வேடிக்கை பார்த்தனர். முதன் முறையாக வண்டியோட்டப் பழகும் குழந்தை, தட்டுத் தடுமாறி தரையில் விழுந்து எழுவது இயற்கையேயாகும். அதுபோலவே காமராஜரின் தள்ளுவண்டிப் பழக்கமும் அமையும் என்று எல்லோரும் எதிர்பார்த்தனர். ஆனுல்; என்ன அதிசயம்? வண்டி விழவுமில்லை. வண்டியோட்டி தடுமாறவும் இல்லை. எடுத்த எடுப்பிலேயே தள்ளுவண்டி, தடையற்ற வண்டியாகக் கைகொடுத்துக் காமராஜரின் பெருமையைப் பெற்ரேர்களுக்கு எடுத்துக் காட்டியது. வழுக்கி விழாமல், முறுக்கோடு முன்னேறி வாழும் வாழ்வைக் காமராஜர் அடைவார் என்பதைத் தள்ளுவண்டியே பறை சாற்றி விட்டது!

## இளமைத் தோற்றம்

காமராஜரின் இளமைத் தோற்றம் எப்படி இருந்தது தெரியுமா?

கழுத்திலே ஒரு கெவுடு போட்டிருப்பார். கையிலே காப்பு அணிந்திருப்பார். இடுப்பிலே பட்டாடை திகழும். முதுகிலே பின்னி வாரிவிடப்பட்ட சடை நெளியும். (ஆம் இளமையில் காமராஜர் குடுமி வைத்திருந்தார்.)

'ஆஸ்திக்கு ஓர் ஆண் மகன்,' என்பதற்கேற்ப காமராஜ் வளர்ந்து வரும்போது 'ஆசைக்கு ஒரு பெண்ணும்' பிறந்தாள். அவள் பெயர் நாகம்மாள். தங்கை மீது காமராஜருக்குத் தணியாத பாசம் உண்டு. 'பாப்பா,' 'பாப்பா,' என்றுதான் தங்கையை அண்ணன் அழைப்பது வழக்கம். அண்ணனும் தங்கையுமாகச் சேர்ந்து செய்கின்ற அட்டகாசங்களுக்கு அளவே இருக்காது.

## சடுகுடு ஆட்டம்

காமராஜ் இயல்பாகவே குறும்புக்காரன். ஓடுவதும் ஆடுவதும் அவனுடைய உடன்பிறப்புக்களாம். குழந்தை பிற்கால வாழ்க்கைக்குத் தன்னை தயார் செய்துகொள்ளவே விளையாடுகிறது என்று உள நூலார் உரைப்பர். மேலோட்டமாகப் பார்த்தால் சிறு வயதில் சுட்டித்தனங்கள் செய்யும் பிள்ளைகள் பிற்காலத்தில் பெரிய மனிதர்களாகத் திகழ்வதைக் காணலாம். காமராஜ் சுட்டிப்பயல்தான். அவனுக்குச் சடுகுடு என்றால் சந்தோஷம் பிறந்துவிடும்.

'சடுகுடு மலையிலே ரெண்டானை
தவறி விழுந்தது கிழட்டானை
கிழட்டானை கிழட்டானை'

என்று வீர முழக்கத்தோடு



சடுகுடு ஆடுவதில் யாருக்குத் தான் ஆனந்தம் பிறக்காது?

"பட்டம் பட்டம்
பறங்கிப் பட்டம்
பன்னிரெண்டு கப்பல்
ஏற்றி வெச்சான்
இரும்பினாலே கோட்டைகட்டி
இழுத்தடிச்சான் நவாப்பு
நவாப்பு, நவாப்பு, நவாப்பு"

என்று பாடிக்கொண்டே, மூச்சை அடக்கி முழு நேரமும் ஆடிக்கொண்டிருக்கும் சிறுவர்களின் மத்தியில் காமராஜை நிச்சயமாகக் காணமுடியும். சடுகுடு ஆட்டத்தில் காமராஜ் சாமர்த்திய சாலி என்பது ஒருபுறம் இருக்க, சிறுவர்களுக்கு மத்தியில் அவனுக்குச் செல்வாக்கு மிகுதியாக இருந்தது என்பதையும் நாம் அறிந்துகொள்ளுதல் வேண்டும்.

விளையும் பயிர் முளையில் தெரியும் என்பார்கள். விருதுபட்டிச் சிறுவன் காமராஜ் விருது பெற்ற தலைவனாகத் திகழ்வான் என்பதை அவனுடைய இளமைப் பருவ நிகழ்ச்சிகளே எடுத்துக் காட்டுகின்றன.

## ஏட்டுப்படிப்பு

விருதுப்பட்டியில் வேலாயுதம் என்றொருவர் பள்ளிக்கூடம் நடத்திவந்தார். அவரது பள்ளிக்கூடத்தை 'நொண்டி வாத்தியார் பள்ளிக்கூடம்,' என்றே அவ்வூரார்



அழைத்து வந்தனர். அங்குதான் காமராஜ் படிப்பதற்காகச் சேர்த்து விடப்பட்டான்.

வாத்தியார் ராகம் போட்டுப் பாடம் சொல்லுவார். பிள்ளைகள் அதே ராகத்தில் பாடத்தைத் திரும்பச் சொல்ல வேண்டும். புத்தகங்கள் நிறைய இல்லாத காலம் அது. ஆகவே புத்தியைக் கொண்டுதான் பிழைக்க வேண்டும். மனப்பாடமாக எல்லாப் புத்தகங்களும் போதிக்கப் படும். ஆத்திசூடி, கொன்றை வேந்தன், உலகநீதி முதலியன ராகத்தோடு போதிக்கப்படும். இதற்குத்தான் அந்தக் காலத்தில் 'ஏட்டுப் படிப்பு' என்று பெயர்.

"மணலில்தான் விரல்கொண்டு எழுதிப் பழகவேண்டும். பழக்கம் வந்த பிறகு எழுத்தாணியைக் கொண்டு ஏட்டில் எழுத வேண்டும். மாணவனின் படிப்பு வாத்தியாருக்கு மகிழ்ச்சி அளிக்க வில்லை என்றால் மாணவன் பாடு அதோகதிதான். அடி விழும்; குட்டு விழும், உதை விழும். இவை சாதாரணத்தண்டனைகள். தூக்கு மாட்டுதல், முட்டுக்களில் அடித்தல், இவை சற்று உயர்ந்த தண்டனைகள். இன்னும் உயர்ந்த தண்டனைகளும் உண்டு. அவற்றை இன்று நினைத்துப் பார்த்தால்கூட நெஞ்சு வலிக்கும். அவ்வளவு கொடுமை நிறைந்தன அவை.

அந்தக் காலத்தில் ஏட்டுப் பள்ளிக்கூட வாத்தியாரின் பார்வையில் ஏழை, பணக்காரன் என்ற வேறுபாடே இருப்பதில்லை. அவர் நீதி வழுவாத நெறியாளர். தவறு என்றால் தண்டனைதான். காமராஜ் பலமுறை தண்டனைக்கு ஆளாகிவிட்டான். அடிபட்டு உதைபட்டு அவதிப்படுவதைக் காமராஜ் விரும்பவில்லை; அது போலவே பெற்றோர்களுக்கும் அவன் அவதிப்படுவதில் விருப்பமே கிடையாது. எனவே ஏட்டுப்படிப்பு முடிந்தது.

## பள்ளிப்படிப்பு

காசுக் கடைத் தெருவில் ஸ்ரீஜத் ஏனாதிநாத நாயனார் வித்யா சாலா என்றொரு பள்ளிக்கூடம் இருந்தது. அதனை முருக வாத்தி யார் பள்ளிக்கூடம் என்று ஊரார் சுருக்கிச் சொல்லுவதுண்டு. இங்கு ஏறத்தாழ ஓராண்டு காலம் படித்த காமராஜ், பிறகு 'பிடி அரிசி'ப் பள்ளிக்கூடம் என்று அழைக்கப்பட்ட க்ஷத்திரிய வித்யாசாலாவுக்கு அனுப்பப் பட்டான்.

விருதுப்பட்டியில் உள்ள சத்திரிய வித்யாசாலா தனிச் சிறப் புடையதாகும். இவ்வூரில் உள்ள நாடார்குல வியாபாரிகள் மகமை வசூலித்து ஒரு நிதியை உருவாக்கி வந்தனர். இலாபத்தில் ஒரு பகுதியைத் தான தருமத்துக்குச் செலவு செய்வதைத்தான் மகமை என்று சொல்லுவது வழக்கம். இப்படி வசூலிக்கப்பட்ட மகமை யைக் கொண்டு உருவாக்கப்பட்ட நிதியின் மூலம் சத்திரிய வித்தியா சாலா என்ற உயர்நிலைப்பள்ளி செவ்வையாக நடைபெற்று வந்தது; வருகிறது. இப்பள்ளி யில் எல்லா மாணவர்களும் சம்பளம் இல்லாமலேயே படிக்க லாம். 'இலவசக் கல்வி' என்று தற்போது அமுலாக்கப்படும் திட்டம் இப்பள்ளியைப் பொறுத்த வரையில் இருபத்தைந்து ஆண்டு கட்கு முன்னரே அமுலாக்கப் பட்டு விட்டது.

இப்பள்ளியில்தான் காமராஜ் சேர்த்து விடப்பட்டார்.

## தந்தை மறைந்தார்

ஒரு நாள் கடையில் வியாபாரம் மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. அன்று மொத்த வியாபாரிகளின் நாளாகும். குமாரசாமி நாடார் வியாபாரத்தில் வெகுவாக ஈடுபட்டு வீட்டை மறந்துவிட்டார். சாப்பாட்டைக் கூட மறந்துவிட்டார். மாலை மூன்று மணி அளவில் சற்று ஓய்வு கிடைத்தது. பசி வயிற்றைக் கிள்ளியது. எனவே வீட்டுக்குப் போனார். திடீரென்று மயக்கம் வந்தது. படுத்துக் கொண்டார். உடல் கொதித்தது. இதை அறிந்த வீட்டார்களின் உள்ளமும் கொதித்தது. மருத்துவர்கள் அழைத்துவரப் பட்டனர். மருந்துகள் பயன் அளிக்கவில்லை. மருத்துவர்களால் பயத்தை ஒழிக்கவும் முடியவில்லை. முடிவில் எமன் வென்றான். குமாரசாமி நாடார், காமராஜைத் தமிழகத்துக்குத் தந்துவிட்டு தரை வாழ்வை முடித்துக் கொண்டார்.

## குடும்பத்தில் தொல்லை

காமராஜ் சிறுபிள்ளை, நாகம்மாள் விவரம் தெரியாத பெண். இவர்கள் இருவரையும் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு அன்னை சிவகாமியிடம் தரப்பட்டது. பொறுப்பை ஏற்றுக்கொண்ட பின்னர் பிழைப்பை எப்படி நடத்தலாம் என்று எண்ணிக் கொண்டிருக்கும்போது, சிவகாமி அம்மாளின் தந்தை சுலோசன நாடார் என்பவரும் இறந்து விட்டார். இடியின்மேல் இடி விழுந்தது. 'துன்பம், தொடர்ந்து வருவதில்தான் இன்பம் காணுகிறது,' என்ற வாசகம் சிவகாமி அம்மாளின் வாழ்வில் மெய்யாகவே காட்சி அளித்தது.



சிவகாமி அம்மாளின் தந்தையார் சுலோசன நாடாருக்குக் கருப்பையா நாடார் என்றொரு மகனும் உண்டு. அவர் சிவகாமி அம்மாளுக்கு மூத்தவர். மூத்தவர், இளையவளை நோக்கி, 'காமராஜ் கெட்டிக்காரன். பெரிய வியாபாரியாகி விடுவான். நீ கவலைப்பட வேண்டாம்,' என்று அடிக்கடி ஆறுதல் கூறி வந்தார். சிவகாமி அம்மாளுக்கும் காமராஜின் எதிர்காலத்தில் நம்பிக்கை உண்டு என்றாலும் நிகழ் காலத்தை எப்படிப் போக்குவது என்ற சிந்தனை சிந்தையை விட்டு அகலவே இல்லை.

## நகைகள் பணமாயின

கணவனை இழந்த சிவகாமி அம்மாள். வெள்ளைக் கலைஉடுத்து, வெள்ளை உள்ளத்தோடு பிள்ளைகளை வளர்ப்பதில் ஈடுபட்டார். நகைகளை எல்லாம் கழற்றிவிட்டார். காதில் மட்டும் பாம்படம் தொங்கியது. கழற்றிய நகைகளைப் பெட்டியில் வைத்து பூட்டி வைக்காமல், விற்றுக் கொள் முதல் செய்து, மூவாயிர ரூபாய்களைக் கைமேல் வைத்துக் கொண்டார். நகைகள் பணமாக மாறின. நம்பிக்கை மிகுந்த நல்லவர்களிடம் பணத்தை வட்டிக்குக் கொடுத்து, துன்பத்தைத் துரத்தி ஓட்டினார். மாதாமாதம் கிடைத்து வந்த வட்டிப்பணம், வாழ்க்கைச்



செலவுக்குப் போதுமானதாகவே இருந்தது.

### தந்தையொடு கல்விபோம்

காமராஜ் பள்ளிக்கூடத்துப் படிப்பைத் தொடர்ந்து படிக்க வேண்டும் என்று விரும்பிய அன்னை, அவனைப் படித்து வரும் படி கேட்டுக்கொண்டார். பள்ளிப்படிப்போ காமராஜுக்கு வேப்பங்காயாகக் கசந்தது. சுதந்திரமாக ஆடிப்பாடித் திரிவதில் உள்ள ஆனந்தத்தை அவன் பறிகொடுக்கத் தயாராக இல்லை.

'தந்தையோடு கல்விபோம்,' என்பது மூதுரை. அதற்கு இலக்கணமாக விளங்கினான் காமராஜ். குமாரசாமி நாடார் இறந்த பிறகு பள்ளிப்படிப்பையே துறந்துவிட்டான் காமராஜ். அதற்குப் பல காரணங்கள் உண்டு. உடல் நோயும் அவற்றுள் ஒன்றாகும். நாற்பது நாட்களுக்கு மேல் 'டைபாயிட்டு'க் காய்ச்சலினால் காமராஜ் பாடுபட்டுள்ளான். உடம்பு சரியில்லை என்றால் பள்ளிக்கூடம் போகவேண்டாம் என்ற உண்மையை இப்போது தான் காமராஜ் புரிந்துகொண்டான். அதன் பிறகு அடிக்கடி 'வயிற்றுவலி' வரும். பள்ளிக்கூடத்துக்குப் போகமாட்டான். இப்படியாகப் பள்ளிப்படிப்பு முடிந்தது.

### நாட்டுப்பற்று

அடிமைப்பட்டுக் கட்டுண்டு கிடப்பதைக் காமராஜ் விரும்பியதே இல்லை. தான் எப்படிச் சுதந்திரமாகத் திரியவேண்டும் என்று எண்ணினானோ அது போலவே இந்திய மக்கள் அனைவரும் விடுதலை உணர்வோடு திரியவேண்டும் என்று எண்ணினான். அவனுடைய எண்ணத்துக்கு வலியூட்டின தேசியத் தலைவர்களின் வாசகங்கள்,

'சுதந்திரம் எங்கள் பிறப்புரிமை,' என்ற லட்சியம் காமராஜைப் பெரிதும் கவர்ந்தது.

வந்தே மாதரம்-ஜய
வந்தே மாதரம்
ஜயஜய பாரத ஜயஜய பாரத
ஜயஜய பாரத ஜயஜய பாரத
—வந்தேமாதரம்
ஆரிய பூமியில் நாரியரும்நர
சூரியரும்சொல்லும் வீரிய
வாசகம்
—வந்தேமாதரம்
நொந்தே போயினும்
வெந்தே மாயினும்
நந்தே சத்தர்உ
வந்தே சொல்வது
— வந்தே மாதரம்
ஒன்றாய் நின்றினி
வென்றாயினுமுயிர்
சென்றாயினும்வலி
குன்றா தோதுவம்
— வந்தே மாதரம்.

என்று பாடிக்கொண்டே நாட்டின் விடுதலை இயக்கத்தில் நாட்டங் கொண்டான் காமராஜ். திருநெல்வேலியிலிருந்து அவ்வப்போது தேசிய அறிக்கைகள், சுவரொட்டிகள் விருதுப்பட்டிக்கு வரும். அவற்றோடு தொண்டர்களும் வந்து சேர்வார்கள். தொண்டர்களின் பேச்சுக்களில் மயங்கி விடுவான் காமராஜ்.

### நல்ல பையன்

ஒரு நாள் ஞாயிற்றுக் கிழமை. அன்றோ திருநாளாகும். கோயி

வில் ஏகப்பட்ட கூட்டம். திருவிழா என்றால் வேடிக்கைகளுக்குக் கேட்கவா வேண்டும்? 'பாம்பே ஷோ' நடந்தது. அதில் இறுதிக் காட்சி. தரையில் மிகவும் ஆழமுள்ள பள்ளம், அதில் 40 அடி அகலமான தகரத் தொட்டியின் விளிம்பு வரையில் தண்ணீர் இருந்தது. இதன் அருகே 144 அடி உயரமுள்ள கம்பம். கம்பத்தின் உச்சியில் ஒரு ஆள் நின்று கொண்டு வேடிக்கை காட்டினான். ஒரு டின் நிறைய இருந்த மண்ணெண்ணெயைத் தலையில் கொட்டிக் கொண்டான். உடம்பில் நெருப்பை பற்றச் செய்து எரியவிட்டான். கண்மூடித் திறப்பதற்குள் தண்ணீர்த் தொட்டியில் குதித்து விட்டான். தீ அணைந்து விட்டது. தரைக்கு வந்தான். அவன் பெயர்தான் வில்சன். சுற்றி இருந்த மக்கள், நகரமே தகர்ந்து விடும்படி கைதட்டி ஆர்ப்பரித்தனர். மாலைகள் அவன் கழுத்தில் விழுந்தன. பாராட்டுரைகளுக்கும் பரிசுகளுக்கும் அளவே இல்லை.

ஒரு மூலையிலிருந்து ஏழெட்டுச் சிறுவர்கள் வெளிப்பட்டனர். வில்சன் கழுத்தில் ஒரு மாலை விழுந்தது. மாலை முறுக்கு மாலை; போட்டவன் காமராஜ்.

'வாட் நான்சென்ஸ்' என்று கூறிக்கொண்டே சிறுவன் காமராஜை வில்சன் பிடித்துக் கொண்டான். சுற்றி இருந்தவர்கள் என்ன நேருமோ என்று பயந்தனர். காமராஜ் தைரியசாலி, கொஞ்சமும் பயப்படாமல்முறுக்கு மாலையிலிருந்து ஒரு முறுக்கை ஒடித்து வில்சனின் வாயருகே நீட்டினான். முறுக்கின் சுவையை ருசித்து உணர்ந்த வில்சன், காமராஜைக் கீழே இறக்கி விட்டு விட்டு, 'நீ நல்ல பையன்,' என்று பாராட்டிப் பேசி அனுப்பி வைத்தான்.



இது போலப் பல நிகழ்ச்சிகள். காமராஜின் இளவயதில் நடந்துள்ள இரண்டொரு சம்பவங்கள் இடையறாத இன்பம் அளிப்பனவாகும்.

### காப்பி அடித்தான்

காமராஜ் மூன்றாம் வகுப்புப் படித்துக் கொண்டிருந்தான். கணக்கு வாத்தியாரின் பெயர் தங்கையா. அவர் மனக் கணக்கு போட்டுக் கொண்டிருந்தார். ஒன்று, இரண்டு மூன்று என்று சொல்லி முடிப்பதற்குள் சிலேட்டில் விடையை மாணவர்கள் எழுதிவிட வேண்டும்.

கணக்குப் போட்டார் ஆசிரியர். ஒன்று, இரண்டு, மூன்றுஎன்றும் சொல்லி விட்டார். காமராஜ் அருகிலிருந்த பையனின் சிலேட்டையே பார்த்துக் கொண்டிருந்தான். அடுத்தவன் எழுதிமுடித்த மறுவிநாடியே காமராஜும்விடையை எழுதிச் சிலேட்டை மூடி வைத்து விட்டான்.

'ஏன் காப்பி அடித்தாய்?' என்று காமராஜை வாத்தியார் கண்டித்தார். பிரம்படியும் கொடுத்தார். பிறகு அடுத்த பையனின் சிலேட்டையும் காமராஜின் சிலேட்டையும் திருப்பிப் பார்த்தார். இரண்டு சிலேட்டுக்களிலும் வெவ்வேறு விடைகள் இருந்தன. காமராஜ் போட்டிருந்த விடை சரியானதாகவும் அடுத்த பையன் போட்டிருந்த விடை தப்பானதாகவும் இருந்தன.

'காமராஜ் காப்பி அடிக்கவில்லை,' என்பதை ஆசிரியர் ஒப்

புக்கொண்டார். இது ஒரு சம்பவ மாகும்.

### சிவவேடம்

மற்றொரு ரசமான சம்பவமும் உண்டு.பள்ளிக்கூடத்தில் ஆண்டு விழா. மாணவர்கள், 'மார்க்கண் டேயன்' நாடகம் நடத்தினர். அதில் காமராஜ் நடித்தான். அவன் ஒரு சிறந்த நடிகன் என் பதை அன்று நிரூபித்துவிட்டான்

மார்க்கண்டேயன் சிவபக்தி யில் மூழ்கி இருந்தான். எமதர் மன் பாசக் கயிற்றோடு தோன்றி னன். 'சிவசிவ' என்று பக்தன் கூப்பாடுபோட்டான். எமதர்மனே பாசக்கயிறைச் சுழற்றினன். அவ் வளவுதான் லிங்கம் வெடித்தது. சாம்பல் பூசிய உடம்போடும், புலித்தோல் போர்த்திய உடலோ டும், கழுத்தில் பாம்போடும் சிவ பெருமான் அவதரித்தார்.



'விட்டு விடு மார்க்கண்டே யனை!' என்று கூப்பாடு போட் டார் சிவபெருமான். கொட்ட கையே கிடுகிடுத்து விட்டது. எமன் பயந்தே போனன். இருப் பினும் எதிர்த்துப் பேச முற்பட் டான். சிவனுக்குக் கோபம் மிகுந்து விட்டது. எமனை எட்டி மிதித்தார். எருமையை ஓங்கி அடித்தார். அடி பொறுக்க மாட் டாமல் அட்டையைப் பிய்த் தெறிந்து விட்டு அலறிக் கொண் டே எருமையாக நடித்தஇளைஞன் ஓடி விட்டான். அவனைப் பின் தொடர்ந்தோடினன் எமனாக நடித்த இளைஞனும்.

சபையில் ஏகக் கரகோஷம். அன்று சிவவேடம் தாங்கியவன் காமராஜ். எல்லோரையும் சிரிக்க வைத்தவனும் அவனே. நாடகம் இத்தோடு முடிவுற்று விட்டது. ஏனெனில் சிவபெருமானின் சீற் றத்திற்கு ஆளாகி அடிபட அங்கு யாருமே தயாராக இல்லை.

### தொழிலில் ஈடுபாடு

எழுதப் படிக்கத் தெரிந்தாலே ஒருவனுக்குப் போதும். மேலும் தொடர்ந்து படிப்பதை விடத் தொழில் நடத்துவது பணஞ் சம் பாதிக்கும் வழிகளில்ஒன்று என்று ிங்கள் எண்ணி வந்த காலம் அது. மேலும் காமராஜுக்குப் பள்ளிப்படிப்பில் பற்றுதலேகிடை யாது. போதாக் குறைக்குத் தந்தை இறந்து விட்டமையால் தாயைக் காப்பாற்ற வேண்டும் என்ற பொறுப்பு காமராஜுக்கு ஏற்பட்டு விட்டது.

காமராஜின் தாயோடு பிறந் தவர்கள் இருவர். ஒருவரின் பெயர் கருப்பையாநாடார். அவர் விருதுப்பட்டியிலே துணிக்கடை ஒன்றை நடத்தி வந்தார். மற் றொருவரின் பெயர் காசிநாராயண நாடார். அவர் திருவனந்தபுரத் தில் மரக்கடையொன்றை நடத்தி வந்தார்.

படிப்பை ஒதுக்கித் தள்ளிவிட்ட பிறகு தாய்மாமனின் துணிக் கடையில் காமராஜ் வேலைக்குச் சேர்ந்தான். வியாபாரத்தில் அவனுக்கு வெகு விருப்பந்தான். ஆர்வத்தோடும் அக்கறையோடும் துணிக்கடையில் வேலைகள் தொடங்கின. பெற்றோரும் மற்றோரும் இது கண்டு மகிழ்ந்தனர். கடையில் வேலையுள்ளபோது அயராது அலுக்காது வேலை செய்து வந்த காமராஜ், வேலையில்லாத போது விருப்பத்தோடு தினசரி இதழ்களைப் படித்து வந்தான். தேசியச் செய்திகளைப் படிப்பது என்றால் அவனுக்குத் தேன்குடிப்பதுபோல.

அச் சமயத்தில் ஐரோப்பாவில் முதலாவது உலகப்போர் நடந்து கொண்டிருந்தது. அது பற்றிய செய்திகள் அடிக்கடி வரும். போரைத் தொடர்ந்து விடுதலைக்காகத் தேச வீரர்கள் கிளர்ச்சிகள் புரியத் தொடங்கினர். டாக்டர் வரதராசுலு நாயுடு, திரு. வி. கலியாணசுந்தரனர், கப்பலோட்டிய தமிழர் சிதம்பரம் பிள்ளை, ஜார்ஜ் ஜோசப், சத்தியமூர்த்தி பாரதியார் போன்ற தேசியத் தலைவர்களின் சொற்பொழிவுச் சுருக்கங்களையும், ஆவேச வேண்டுகோள்களையும், அற்புதமான கவிதைகளையும் காமராஜ் படித்துப் படித்து மகிழ்ந்தான்.

## பாரதியின் பாட்டு

பறைய ருக்கும் இங்கு தியர்
புலைய ருக்கும் விடுதலை
பரவ ரோடு குறவ ருக்கும்
மறவ ருக்கும் விடுதலை
திறமை கொண்ட தீமை யற்ற
தொழில்பு ரிந்து யாவரும்
தேர்ந்த கல்வி ஞானம் எய்தி
வாழ்வம் இந்த நாட்டிலே.
ஏழை என்றும் அடிமைஎன்றும்
எவனும் இல்லை ஜாதியில்
இழிவு கொண்ட மனித ரென்ப
திந்தி யாவில் இல்லையே.
வாழி கல்வி செல்வம் எய்தி
மனம்ம கிழ்ந்து கூடியே
மனிதர் யாரும் ஒருநிகர்
சமான மாக வாழ்வமே.
மாதர் தம்மை இழிவு செய்யும்
மடமையைக் கொழுத்
துவோம்
வைய வாழ்வு தன்னில் எந்த
வகையினும் நமக்குளே
தாதர் என்ற நிலைமை மாறி
ஆண்க ளோடு பெண்களும்
சரிநி கர்ச மான மாக
வாழ்வம் இந்த நாட்டிலே!

இது பாரதியாரின் பாடல். இதில் உள்ள கருத்துக்களை செயல் முறைப் படுத்த வேண்டும் என்பதுதான் காமராஜ் இளமையிலேயே எடுத்துக் கொண்ட சபதம்.

நாடு விடுதலை அடையவேண்டும். பறையன், புலையன், குறவன், மறவன் என்ற வேறுபாடு இல்லாமல் எல்லோரும் விடுதலை பெறவேண்டும். தீமையில்லாத திருந்திய தொழில்களில் ஈடுபட்டு நாட்டு மக்கள் கல்வி அறிவோடு திகழ வேண்டும்.

ஜாதி வேறுபாடு கூடாது. ஏழை பணக்காரன் என்ற பிரிவுப் பாகுபாடு கூடாது. இழிவு கொண்டவன் இந்தியாவில் இருக்கக் கூடாது. மக்கள் எல்லோரும் சமம்.

பெண்களை முன்னேற்றமடையச் செய்யவேண்டும். ஆணும் பெண்ணும் சரிநிகர் சமானமாக வாழவேண்டும்.

இந்தக் கருத்துக்களே காமராஜை நாட்டுப் பணியில் ஈடுபடச் செய்து அவனுக்கு ஏற்றத்தை வாங்கித் தந்தன.

### பிறருக்காக வாழ்வு

இத்தகைய கருத்துக்கள் இத யத்தில் வேரூன்றி விட்ட பிறகு காமராஜரால் எப்படித் தனக் காக வாழ்வதில் விருப்பம் இருக் கும். பிறருக்காக வாழ வேண்டும் என்ற பிடிவாதமான கருத்து அவனைப் பிடித்துக் கொண்டது. துணிக் கடையில் இருந்த ஆர்வம் அரசியலில் சேரவேண்டும் என்ற துணிச்சலால் சிதறுண்டது.

மாலை நேரங்களில் தேசியத் தலைவர்களின் கூட்டம் நடை பெறுவது வழக்கம். அந்தச் சம யத்தில் காமராஜரால் கடையி னுள்ளே அடைபட்டுக் கிடக்க முடியவில்லை. இரவு விளக்கேற் றிய பின்னரே நாட்டுப் புறத்து மக்கள் துணியோ, சாமான்களோ வாங்குதற்காகப் புறப்பட்டு வரு வார்கள். அதாவது வியாபாரம் 'சூடு பிடிக்கிற நேரம்,' இரவு ஏழு மணிக்குமேல் ஒன்பது மணி வரைதான். இந்த நேரந்தான் அரசியல் கூட்டங்களும் நடை பெறுதற்குத் தகுந்த நேரமாகும்.

'துணிக் கடையில் இருப்பதா? கூட்டத்துக்குப் போவதா?' இது தான் நாள்தோறும் நடந்து வந்த போராட்டம். காமராஜின் தனிப் பட்ட குணங்களின் விசேஷம் என்னவென்றால், அவன் எதைத் தொட்டாலும் துலங்கும். துணிக் கடையில் அவன் கைராசிக்கார னாகக் கருதப்பட்டான். அவன் கைபட்ட பிறகு கடையில் இலா பம் மிகுதியாகவே குவிந்தது.

'வேலை பார்க்கக் கூட வேண் டாம். வெறுமனே கடையில் வீற்றிருந்தால் கூடப் போதும். அவன் கைராசியைப் போலவே முகராசியாலும் அதிக லாபம் சம் பாதிக்கலாம் என்பது பெற்றோர், உற்றோரின் பேச்சுக்கள். தாய் மாமன் எவ்வளவோ எடுத்துச் சொன்னார். காமராஜால் அரசி யல் கூட்டங்களுக்குப் போகாமல் இருக்க முடியவில்லை.

ஒருமுறை டாக்டர்வரதராஜுலு நாயுடுவின் கூட்டம் நடைபெற் றது. அதற்குப்போக விரும்பிய காமராஜ், மாமனுக்குத் தகவல் தெரிவித்து விட்டான். கடையைப் பார்த்துக் கொள்ள யாரையாவது அனுப்பி வைக்குமாறும் கேட்டுக் கொண்டான். கூட்டம் தொடங் குகிற நேரம் வந்து விட்டது. கடையைப் பார்த்துக் கொள்ள யாருமே வரவில்லை. காமராஜ் அதற்காகக்கவலைப்படவோ, ஆத் திரம் கொள்ளவோ இல்லை. சாவி யை எடுத்தான். கடையைப் பூட் டினான். தாய் மாமனிடம் சாவி யைக் கொடுத்துவிட்டு அரசியல் கூட்டத்துக்கு ஆவலோடு பறந்து விட்டான்.

### விளக்கேற்றி வைத்தான்

மற்றொரு நாள் இன்னொரு ரச மான சம்பவம் நடந்தது.

மதுரையில் மாண்போடு வழக் கறிஞராகப் பணிபுரிந்து வந்த ஜார்ஜ் ஜோசப் என்பவர் காமரா ஜின் ஊரில் பொதுக்கூட்டம் ஒன் றில் தலைமைதாங்கினார். அவரைப் பிரசார இயக்கத்தின் பிதா என்றே மக்கள் கருதி வந்தனர். அவருடைய கூட்டத்திற்குக் காம ராஜ் வராமல் இருப்பானா,என்ன? ஒருமூலையில் ஆர்வத்தோடுகூட்ட நிகழ்ச்சிகளைக் கூர்ந்து கவனித் துக் கொண்டிருந்தான்.

நல்ல இருட்டு நேரம். அறி யாமை என்னும் இருளை அரசியல் தலைவர்கள் ஓட்டிக் கொண்டிருந் தனர். இரவு நேரத்து இருளை 'கியாஸ்விளக்கு' ஓட்டிக்கொண் டிருந்தது. தலைவரை அடுத் திருந்த 'கியாஸ் விளக்கு' ஒளி இழந்து ஒடுங்கிக் கொண்டே இருந்தது. அணைய வேண்டிய நேரம். அப்போது அவ்விடத்தை நோக்கித் தாவிக்குதித்தான் காம

ராஜ். கியாஸ் விளக்கின் கண்ணுடிக் கூண்டுக்கு வெளியே நீட்டிக் கொண்டிருந்த திரிக்கு எண்ணெய் வந்து சேரும் துவாரத்தை மூடிக் கொண்டிருந்த - திருகு கம்பியை ஆட்டி ஆட்டி அசைத்தான். காற்றின் காரணமாகப் பறந்து வந்த தூசி, துவாரத்தை அடைத்துக் கொண்டிருந்தது. அதனை அப்புறப்படுத்திவிட்டான் காமராஜ். அணைய இருந்த விளக்கு அணையா விளக்காக நின்று ஒளி பரப்பியது.



காமராஜின் துணிவையும், நுண்ணறிவையும் கண்டு 'விளக்கேற்றியவன்' என்ற பெருமிதத்தோடு காமராஜைக் கட்டிப் பிடித்துக் கொண்டு பாராட்டினர் தலைவர் ஜார்ஜ் ஜோசப்.

### யானையை அடக்கியவன்

காமராஜ் நுண்ணறிவுடையவன். துணிச்சல்காரனுங்கூட!

திருமங்கலம் குமரன் கோவில் சன்னிதியில் ஒருமுறை மாபெரும் பொதுக் கூட்டமொன்று நடந்தது. ஜார்ஜ் ஜோசப் பேசினர். அக்கூட்டத்திற்குக் காமராஜ் சென்றிருந்தான். கூட்டம் முடிந்தது. அரசியல் ஆவேச உணர்ச்சியோடு விருதுநகருக்குத் திரும்பினன்.

அப்போது ஊரில் அம்மன் கோவில் மைதானத்தில் ஒரே கலவரம்.

கோயில் யானைக்கு மதம் பிடித்து விட்டமையால் ஊர்மக்கள் கூப்பாடுபோட்டனர். பாதையில் நடக்கவேண்டாம்; பதுங்கிக் கொள்ளுங்கள் என்று எங்கும் எச்சரிக்கைகள் பறந்தன.

ஊரார் ஓடி ஒளிந்து கொள்ள முயலும்போது காமராஜ் மட்டும் நேராகக் கோவிலுக்குப் போய் யானையைக் கட்டிப் போடும் சத்தியச் சங்கிலியை எடுத்துக் கொண்டு வந்தான்.

யானையை நோக்கி வரும் காமராஜை 'வரவேண்டாம்.' என்று கூச்சல்போட்டுத் தெரிவித்தான் யானைப்பாகன். இருப்பினும் அஞ்சா நெஞ்சோடு இருபது அடிக்கு அப்பால் நின்றபடியே சங்கிலியை யானையின் முன் வீசி எறிந்தான் காமராஜ். யானை தன் கொட்டத்தை அடக்கிக்கொண்டு அமைதியோடு சங்கிலியைத்துதிக் கையால் தூக்கிக் கொண்டு நடந்தது. யானைப்பாகன் யானையின் திடீர் மாற்றத்தைக் கண்டு மனம் மகிழ்ந்தான். யானைக்கு மதம் பிடிக்கவில்லை; சங்கிலியைக் காணுத காரணத்தால் கோபம் பிடித்துக் கொண்டது என்ற உண்மையை அறிந்த ஊர்மக்கள் காமராஜின்துணிச்சலையும், நுண்ணறிவையும் போற்றிப் புகழ்ந்தனர்.

மண்டபத்தில் கட்டிக்கிடக்கும் போது சத்தியச் சங்கிலி யானையின் முன்பு எப்போதுமே கிடப்பதுண்டு. அதைத் துதிக்கையில் எடுத்துக் கொண்டுதான் அது வெளியே கிளம்பும். அது சங்கிலியை மறந்து விட்டாலுங்கூட, அதை மறக்காதபடிசெய்யவேண்



டியது பாகனின் கடமையாகும். பாகனின் மறதியால், யானைக்குக் கோபம் வந்து விட்டது. கோபத்தை அடக்கச் சங்கிலி தேவை என்பதைப் பாகனுல் கூடப் புரிந்து கொள்ள முடியவில்லை; காமராஜால் கண்டு கொள்ள முடிந்து விட்டது என்ருல் காமராஜின் நுண்ணறிவை எவ்வளவு பாராட்டினும் தகும் அல்லவா?

### சுசீந்தரப் போராட்டம்

இங்ஙனம் ஊர் ஊராகச் சுற்றிச் சுதந்திரப் போராட்டக் கூட்டங்களில் கலந்து கொண்டு காமராஜ் அலைவதை விரும்பாத பெற்ருேர் பெருங்கவலைகொண்டனர். விருது நகரிலிருந்து வெளியூருக்கு அனுப்பி விட்டால் மனம் மாறக் கூடும் என்றெண்ணியபெரியோர்கள், காமராஜை திருவனந்தபுரத்திலிருந்த மற்ருெரு தாய்மாமனின் மரக்கடைக்கு அனுப்பி வைத்தனர். அங்கு சென்றுங்கூட காமராஜ் அரசியலை மறக்கவே இல்லை. வைக்கத்திலும் சுசீந்திரத்திலும் நடைபெற்ற அறப்போர்களில் ஆனந்தமாகப் பங்கு கொண்டான். ஊர் மாற்றத்தாலும் மன மாற்றத்தை உண்டுபண்ண முடியாது என்பதைப்புரிந்துகொண்ட சுற்றத்தார்கள், காமராஜைத் திரும்பவும் விருதுநகருக்கே கொண்டு வந்தனர். பின் போடி நாயக்கனூர் போனுர். அப்புறம் எங்கெங்கோ அனுப்பப்பட்டார்.

தனக்கென வாழும் வாழ்வை வெறுத்து ஒதுக்கி விட்ட காமராஜால் பிறர்க்கென வாழும் பெருவாழ்வை ஏற்றுக் கொள்ள முடிந்ததே தவிர தன்னல வாழ்வைத் தாங்கிக்கொள்ள முடியவில்லை. 'என் கடன் பணி செய்து கிடப்பதே,' என்று கூறிக் கொண்டு பொதுப்பணிக்குத் தன்னைத் தானே அர்ப்பணித்துக் கொண்டு விட்டார்.

### ஊராரின் வெறுப்பு

காமாராஜ், பொதுப் பணிகளில் ஈடுபட்டு, அரசாங்கத்துக்கு எதிராகச் செயல்புரிவதை நாடார்கள் விரும்பவே இல்லை. நாடார்களுக்கு இயல்பாகவே ஆங்கில அரசாங்கத்தாரிடம் அன்பும் பற்றும் இருந்து வந்தன. நாடார் சமூகத்தைப் பூண்டோடு தொலைப்பதற்குக் கங்கணம் கட்டிக் கொண்டு சிலர்கேடு சூழ நினைத்த போது ஆங்கில அரசாங்கம்தான் நாடார்களுக்குத் துணையாக நின்று எதிரிகளை அடக்கிக் காப்பாற்றியது. இந்த ஒரு செயலுக்காகவே அச்சமூகம் ஆங்கிலேயர்களின் அனுதாபிகளாக வாழ்ந்து வந்தது. அவர்களுக்குக் காமராஜின் போக்குக் கடுகடுப்பையே அளித்தது.

### புதுவழி

காமராஜை அரசியலில் ஈடுபடாமல் தடுப்பதற்கு ஏற்ற வழிகளையெல்லாம் பெற்ருேரும் உற்ருேர்களும் ஆய்ந்து வந்தனர். 'அவனுக்குத் திருமணம் செய்து வைத்து விட்டால், பெண்டாட்டியும் குடித்தனமுமாக அடங்கி விடுவான்,' என்று அன்னை சிவகாமி எண்ணினுர். பெண்ணைக் கூடப் பார்த்து முடிவு செய்து விட்டனர். காமராஜ் இதை அறிந்தான். எரிஉண்டவனைப் போல எழுச்சி கொண்டு கொதித்தான். 'இனி யாரேனும் என்னுடைய திருமணம் குறித்துப் பேச்சைத் தொடங்கினுல் நான் வீட்டிற்குள்

காலடி கூட எடுத்து வைக்க மாட்டேன்,' என்று உறுதியோடும் ஊக்கத்தோடும் கூறி விட்டான் காமராஜ். அரசியல் மோகத்தை அப்புறப் படுத்துதற்குக் கையாண்ட 'புதுவழி'யும் பயன் தரவில்லை. காமராஜ் தன் பழைய வழியிலேயே நடந்து வந்தான்.

'ஊருக் குழைப்பதுதான் உத்தமம்! இதுதான் அவனுடைய லட்சியம். 'தான் வாழ நாடு இருப்பதைவிட நாடு வாழுதற்கே தான் வாழ வேண்டும்,' என்ற எண்ணத்தோடு செயல்களில் ஈடுபட்டான்.

## நாட்டுப் பணி

தேசியத் தலைவர்களின் பேச்சுக்களில் பூரித்து நின்ற காமராஜ், தானும் அத்தலைவர்களின் சொற்படி நடந்து நாடு போற்றும் நல்லவனாக விளங்க விரும்பினான். கூட்டங்களைத் தவறாமல் கேட்டுப் பழகியவன், கூட்டங்களைத் தானே கூட்டவும், கூட்டங்களில் முன்னின்று செயல் புரியவும், சொற்பொழி வாற்றவும் உறுதி கொண்டான்.

கூட்டங்கள் கூட்டுவது என்றால் சாமான்யமான காரியமல்ல. பேச்சாளர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அவருக்குச் செலவுக்குப் பணம் கொடுக்க வேண்டும். கூட்டம் நடக்கும் இடத்தில் விளக்கு, ஒலி பெருக்கிகள் அமைக்க வேண்டும். இப்படியாகப் பல செலவுகள் உண்டு. இவற்றையெல்லாம் சமாளிக்கக் காமராஜ் ஒருவனால் எப்படி முடியும்?

அரசாங்கத்தை எதிர்த்துப் போராடுவதில் விருப்பமில்லாத ஊர்மக்கள் உதவி செய்வார்கள் என்று எப்படி எதிர்பார்க்க முடியும்? எப்போதுமே தொல்லைகளைச் சமாளிப்பதில் காமராஜ் வல்லவன். அவனுடைய வெற்றிகளின் ரகசியமே அதுதான். புகைவண்டி நிலையங்களுக்குச் செல்வான். போவோர் வருவோரிடம் நிதி வசூல் செய்வான். பக்கத்து ஊர், அடுத்த ஊர் இப்படியாக அலைந்து திரிந்து பணவசூல் நடைபெறும். பணக்குறை ஏற்படாமல் பார்த்துக் கொள்வது அவனுடைய வேலை. அவனுடைய சேவை உள்ளத்திலும், தேசபக்தியிலும் நம்பிக்கை கொண்ட பலர் அவனுக்குப் பக்கபலமாக இருந்து வந்தனர். முயற்சி மெய்வருந்தக் கூலி தரும் என்பது அவனுடைய வாழ்க்கையில் அனுபவப் பாடமாகும்.

## கல்நெஞ்சும் கருணை கொள்ளும்

காமராஜின் சேவை ஊர் மக்களை எப்படி வசியப்படுத்தி இருந்தது என்பதற்கு ஒரு நிகழ்ச்சியை மட்டும் கூறினாலே போதும்.

தங்கப்ப நாடார் என்றொருவர் வாழ்ந்து வந்தார். அவர் படு கஞ்சப் பேர்வழி. காலணாவைக் கூடச் செலவு செய்வது என்றால் கால்மணி நேரம் யோசித்து விட்டுத் தான் செலவு செய்வார். பிராணனைக் கொடுத்தாலும் கொடுப்பாரே தவிரப் பைசாவைக் கொடுக்க மாட்டார். அவருக்கு மிளகாய் வியாபாரம். ஒருநாள் மிளகாய் வாங்கி வண்டியில் அனுப்பிவிட்டு, ஊருக்குத் திரும்ப வேண்டியவரானார். பஸ்ஸில் வருவதானால் பணம் செலவாகும். வண்டியில் வரலாம் என்றால் வாடகை கொடுக்க வேண்டும். அதற்காகவே பயந்து கடும் வெயிலில் கால் நடையாக வீடு வந்து சேர்ந்தார். அத்தகைய கஞ்சப் பேர்வழி காமராஜைத் தேடிக் கொண்டு விருதுநகரிலிருந்து சென்னைக்கு வந்தார், நடந்து அல்ல ரயிலில்! ஏன் தெரியுமா? காமராஜைக் காப்பாற்ற; அவனுக்கு உதவி செய்ய. அவனைப் போலிஸார் கைது செய்த செய்தி

அறிந்து கலவரப்பட்டுக் கஷ்ட முற்றுக் கலங்கி உதவி செய்யும் எண்ணத்தோடு சென்னைக்கு ஓடோடி வந்தார். அவரால் அவனைச் சந்திக்க முடியவில்லை. எனவே நண்பர் ஒருவரிடம் ஐம்பது ரூபாயைக் கொடுத்துக் காமராஜுக்கு உதவுமாறு கூறிவிட்டு வீடு திரும்பினார்.

இப்படி எத்தனையோ கல்நெஞ்சுக்காரர்களின் உள் நெஞ்சத்தில் கருணை பெருக்கெடுத்து ஓடும்படி செய்துள்ள சிறப்பு காமராஜின் சேவைகளுக்கு உண்டு.

## கள்ளுக்கடை மறியல்

1920 ஆம் ஆண்டு காந்தி அடிகளின் ஒத்துழையாமை இயக்கம் முழு உருப் பெற்று விளங்கியது. இளைஞர்கள் பலர் அதில் பங்கு கொண்டனர். காமராஜும் அவ்வியக்கத்தில் ஆர்வத்தோடு கலந்து கொண்டார். (இது வரை இளைஞராக விளங்கிய காமராஜை இனிக் காமராஜர் என்றே அழைப்பது தான் நியாயம். ஏனெனில் அவர் அரசியல் வாழ்வில் தீவிரமாக நுழைந்து விட்டார் அல்லவா?)

கள்ளுக்கடை மறியல் நடத்த வேண்டும் என்று தேசியத் தலைவர்கள் கேட்டுக் கொண்டார்கள். காரமராஜர் ஆர்வத்தோடு அப்பணியில் இறங்கினார். அரசாங்கம் மறியல் செய்தோர் அனைவரையும் கைது செய்து சிறையில் அடைத்தது. ஆனால் காமராஜர் மட்டும் அப்போது எப்படியோ தப்பித்து விட்டார்.

## நாகபுரிக் கொடிப் போராட்டம்.

நாகபுரி என்ற நகரில் கொடிப் போராட்டம் ஒன்றைத் தேசியத் தலைவர்கள் நடத்தினர். அதாவது நகரத்துத் தெருக்களின் வழியாகத் தேசியக் கொடியைக் கொண்டு செல்லக்கூடாது என்ற அரசாங்க உத்திரவை எதிர்த்து நடத்திய போராட்டம் அது. இப்போராட்டத்தில் பங்கு கொள்ள இந்தியாவின் பல பாகங்களிலிருந்து பட்டாளங்கள் புறப்பட்டன. காமராஜரும் ஆசையோடு நாகபுரி நோக்கி விரைந்தார். ஆனால் அவர் நாகபுரியை அடைவதற்கு முன்னரே, போராட்டம் நிறுத்தப்பட்டு விட்டது. ஆகவே காமராஜர் இம்முறையும் சிறை வாழ்வினின்று தப்பித்துக் கொண்டார்.

## வாள் போராட்டம்

1927 ஆம் ஆண்டு நாகபுரியில் மற்றொரு போராட்டம் தொடங்கியது. அதன் பெயர்தான் வாள் போராட்டம். 'கைகளில் வாட்களை ஏந்திச் செல்ல அனுமதி பெறவேண்டும்,' என்று அரசாங்க உத்திரவு. அதனை எதிர்த்து வாளொடு வீதிகளில் உலவுவதுதான் இப்போராட்டத்தின் நோக்கம். மதுரையில் காங்கிரசுத் தொண்டராகத் திகழ்ந்த சோமயாசுலு அவர்களின் தலைமையில் வாட்போராட்டம் நடந்தது. காமராஜர் அதில் கலந்து கொண்டு, பட்டாக்கத்திகளோடு நகரை வலம் வந்தார்.

## சைமன் குழு எதிர்ப்பு

ஆங்கில அரசாங்கம் 1927 ஆம் ஆண்டு சைமன் குழு ஒன்றை நியமனம் செய்து இந்தியாவுக்கு அனுப்பி வைத்தது. சைமன் குழுவைப் புறக்கணிக்க வேண்டும் என்று தேசியத் தலைவர்கள் முடிவு செய்தனர். 'சைமனே திரும்பிப்போ' என்ற வாசகம் தேசபக்தர்களின் வாய்ப்பாட்டாக விளங்கிற்று. காமராஜர் இந்தப் போராட்டத்திலும் திறம்படக் கலந்து கொண்டு செயலாற்றினார்.

### சிறைவாழ்வு

இப்படியாக இன்னும் பலப்பல போராட்டங்களில் காமராஜர் கலந்து கொண்டாலுங் கூட சிறை வாழ்வை அனுபவிக்காமலேயே தப்பித்து வாழ்ந்து வந்தார். 'பல நாள் திருடன் ஒருநாள் அகப்படுவான்,' என்பது பழமொழி, 'பல நாள் தொண்டன் ஒருநாள் சிறை செல்வான்' என்பது ஆங்கில அரசாங்கக் காலத்தின் அனுபவ மொழி.



1930 ஆம் ஆண்டு நாடெங்கிலும் உப்புச் சத்தியாக்கிரகப் போர் நடைபெற்றது. அரசாங்கத்தின் அனுமதியைப் பெருமல் உப்புக் காய்ச்சுவது தான் இந்தப் போராட்டத்தின் கொள்கை. இதில் காந்தி அடிகளின் கட்டளையைத் தலைமேற்கொண்டு காமராஜர் கலந்து கொண்டார். அதனுல் அவரை அரசாங்கம் சிறை செய்தது. இதுதான் காமராஜரின் முதல் முதலான சிறைவாசம். ஏறத்தாழ ஓராண்டு காலம் அலிபுரம் சிறையில் அவதிப்பட்டு விட்டு 1931 ஆம் ஆண்டு காந்தி-இர்வின் உடன்படிக்கையின்படி விடுதலை பெற்று வெளியேறினுர்.

### இரண்டாவது சிறைவாழ்வு

1931 ஆம் ஆண்டு காந்தி அடிகள் லண்டனில் வட்ட மேசை மாநாட்டில் கலந்து கொண்ட பின்னர் இந்தியா திரும்பினுர். இந்த மாநாட்டில் இந்தியாவின் தலைவிதியை நிர்ணயிக்கக் கூடிய பல விஷயங்கள் விவாதிக்கப்பட்டன. காந்தி அடிகளுக்கு ஆங்கிலேயர்களின் போக்கும் பேச்சும் அறவே பிடிக்கவில்லை. இது கண்ட அரசாங்கம், காந்தி அடிகளின் தூண்டுதலால் இந்தியாவில் கிளர்ச்சிகள் நிகழக்கூடும் என்றெண்ணிக் காங்கிரஸ் தொண்டர்களையும், தலைவர்களையும் கண் மூடித்தனமாகக் கைது செய்து சிறையில் தள்ளியது. அப்போது காமராஜும் கைது செய்யப்பட்டு, இரண்டாவது முறையாகச் சிறைக்குள் தள்ளப்பட்டார். இம்முறை அவர் வேலூர் சிறையில் வேதனைப்பட்டார்.

### மூன்ருவது சிறைவாசம்

விடுதலை பெற்ற காமராஜர் விருதுநகர் சென்ருர். அப்போது விருது நகரில் ஒரு கலவரம் நிகழ்ந்தது. அதாவது அவ்வூர் அஞ்சல் நிலையத்தின்மீதும், வில்லிபுத்தூர் ஊர்க்காவல் நிலையத்தின் மீதும் வெடிகுண்டுகள் வீசப்பட்டன. இந்தக் கிளர்ச்சிக்குக் காமராஜர்தான் மூல காரணம் என்றெண்ணிய அரசாங்கம் அவரைக் கைது செய்து மூன்ருவது முறையாகச் சிறைக்குள் தள்ளியது. இந்தச் சமயத்தில் பிரபலமான வக்கீலாகவும் பிரியத்திற் காளான தேசத்தலைவராகவும் விளங்கிய ஜார்ஜ் ஜோசப் என்பவர் காமராஜருக்காகப் பரிந்து வழக்கை எதிர்த்து வாதாடி வெற்றி பெற்ருர். காமராஜரும் விடுதலையாகி வெளியேறினுர்.

### நான்காவது சிறைவாசம்

1940 ஆம் ஆண்டு மகாத்மா காந்தி அடிகள் தனிப்பட்டவர் சத்தியாக்கிரத்தை ஆரம்பித்து நடத்தினுர். அச்சமயத்தில்தான் இரண்டாம் உலகப்போர் மும்முரமாக நடந்து கொண்டிருந்தது.

யுத்தத்தில் இந்தியர்கள் கலந்து கொண்டு ஆங்கில அரசாங்கத் துக்கு உதவி புரியக் கூடாது என் பது தான் தனிப்பட்டவர் சத்தி யாக்கிரகத்தின் நோக்கம். இப் போராட்டத்தை எப்படி நடத்த லாம் என்பது குறித்துக் காந்தி அடிகளைச் சந்தித்துப் பேச விரும் பினர் காமராஜர். அதுகுறித்து வார்தாவுக்கு ரயிலில் பயண மானர். ரயில்வண்டி கூடூர் நிலை யத்தை அடைந்ததுமே கூடூர்ப் புகைவண்டி நிலையத்தில் அவர் அரசாங்கத்தினரால் கைது செய் யப்பட்டார். இம்முறையும் அவர் வேலூர்ச் சிறையில்தான் அடைத்து வைக்கப்பட்டார். ஓராண்டு காலம் சிறையில் அடைபட்டு அவதி உற்றார். பின் விடுதலை ஆகி வெளியே வந்தார்.

### ஐந்தாவது சிறைவாசம்

இரண்டாவது உலகப் போருக் காக அரசாங்கம் பொதுமக்களி டம் நிதி வசூல் செய்தது. அதை எதிர்த்துக் காமராசர் கிளர்ச்சி கள் நடத்தினர். பணக்காரர்களை அணுகிப் போராட்ட நிதிகளுக் குப் பணம் தரவேண்டாம் என்று பணிவோடு கேட்டுக்கொண் டார். காமராசரின் போக்குக் கண்டு பதறிய அரசாங்கம், 'போர் நிதி வசூலுக்குத் தடை யாக இருந்தார்,' என்று கார ணங் காட்டி ஐந்தாம் முறை அவருடைய சிறைவாழ்வுக்கு வழி வகுத்தது.

### ஆறுவது சிறைவாசம்

1942ஆம் ஆண்டு வரலாற்றுச் சிறப்புள்ள வருடமாகும். 'வெள்ளையனே வெளியேறு,' என்று நாட்டு மக்கள் ஒருமனத் தோடு ஆங்கில அரசாங்கத்தை எதிர்த்துப் போராடிய வருடம் அதுதான். அந்த வருடம் ஆகஸ்டு மாதம் நாடெங்கிலும் ஒரே கலவரம். பாலங்கள் இடிக் கப்பட்டன. தந்திக் கம்பிகள் துண்டிக்கப்பட்டன. தபால் நிலை யங்கள் கொளுத்தப்பட்டன. அர சாங்க அலுவலகங்கள் ஆக்கினை கள் செய்யப்பட்டன. 'விடுதலை, இல்லையேல் வீரச் சாவு,' இது தான் ஒவ்வொரு இந்தியனின் உறுதிமொழியாகும்.

போராட்டம் தொடங்குதற்கு முன்னரே தலைவர்கள் கைது செய்யப்பட்டனர். காமராஜரும் ஆறுவது முறையாகக் கைது செய்யப்பட்டு வேலூர்ச் சிறைக் குள் தள்ளப்பட்டார்.

இங்ஙனம் பன்முறைகள் சிறைச்சாலைக்குள் அவதிப்பட்டும் நாட்டு நலத்தையே பெரிதாக எண்ணி, அவதியை மறந்து ஆனந்தத்தை நினைத்து மகிழ்ச்சி கொண்ட பெருமை காமராஜ ரையே சாரும்.

### தலை மறைவு

1942ஆம் ஆண்டு ஆகஸ்டு புரட்சி சரித்திரப் பிரசித்தபெற்ற சம்பவமாகும். அதில் ஈடுபட்ட பெருமை காமராஜருக்கும் உண்டு. இந்திய விடுதலைக்கு வித்திட்ட புகழ் ஆகஸ்டு புரட்சி யையே சாரும். ஆகஸ்டு புரட்சி யை எப்படி நடத்துவது என்பது குறித்துத் தேசியத் தலைவர்கள் பம்பாயில் முடிவெடுத்தனர். இதைக் குறிப்பால் உணர்ந்து கொண்டவுடனேயே அரசாங் கம் தற்காப்பு நடவடிக்கைகளில் தீவிரக் கவனம் செலுத்தத் தொடங்கிவிட்டது.

காந்தி அடிகள் கைது செய்யப் பட்டார். நேருவையும் கைது செய்துவிட்டனர். இன்னும் பல பெரிய தலைவர்கள் அடக்கு முறைக்கு ஆளாக்கப்பட்டுச் சிறைக்குள் தள்ளப்பட்டனர். பம் பாய் சென்று தலைவர்களுடன் ஆலோசனைகள் நடத்திவிட்டுச்

சென்னையை நோக்கி விரைந்தார் காமராஜர். இந்தச் சமயத்தில்தான், கைது செய்யும் நிகழ்ச்சிகள் தீவிரமாக நடைபெறலாயின. சென்னைக்குச் சென்றால் தன்னை வெளியே விட்டுவைக்க மாட்டார்கள் என்பதைப் புரிந்து கொண்டார் காமராசர். தன்னைக் சிறையில் அடைத்துவிடுவார்கள் என்பது குறித்துக் கூடக் கவலை கொள்ளாத காமராசர், பம்பாயில் போட்ட திட்டப்படிச் செயல்கள் நடைபெறாமல் தடைப்படக் கூடுமே என்ப தெண்ணிப் பெரிதும் பயந்தார். அந்த நேரத்தில் தமிழ் நாட்டுக் காங்கிரஸ் தலைவர் அவரேதான். தலைவர் இல்லாமல் தொண்டர்களால் என்ன செய்ய முடியும் என்ற கவலை தலைவருக்கு. தலைவரை விட்டுவிட்டு, தொண்டர்களைத் தொல்லைப்படுத்துவதில் என்ன பலன் கிட்டும் என்ற கவலை அரசாங்கத்துக்கு. ஆகவே அன்னிய அரசாங்கத்தைக் கவிழ்த்து சுய உரிமையை நிலை நாட்ட விரும்பினார் காமராசர். காமராசரைக் கவிழ்த்து தன்னுரிமையை நிலைநாட்ட விரும்பியது அன்னிய அரசாங்கம்! இந்தச் சூழ்நிலையில் காமராசர் சென்னைக் குச் செல்லும் எண்ணத்தைப் பாதிவழியிலேயே செல்ல விட்டு விட்டார். ஆம். தலைமறைவாகப் பிரயாணம் செய்வதுதான் தாய் நாட்டு விடுதலைப் போராட்டத் துக்குத் தக்க பணியாகும் என்று உறுதிகொண்டுவிட்டார்.

## இரவில் இராணிப்பேட்டை

'இரயிலில் அவரோடு பிரயாணம் செய்த மற்றொரு தலைவர் சஞ்சீவி ரெட்டி ஆவர். 'இருவருமாக ஆந்திரா சென்று அங்கிருந்து காமராசர் மட்டும் தலைமறைவாகத் தமிழகம் வரவேண்டும்,' என்று ஓர் எண்ணம் உருவாயிற்று. ஆனால் அச்சமயத்தில் சஞ்சீவி ரெட்டியைக் கைது செய்து சிறையில் தள்ள போலிஸார் தீவிர முயற்சிகள் எடுத்துள்ளனர் என்ற செய்தி காமராசரின் காதுகளுக்கு எட்டியது. உடனே ஆந்திரா செல்லவேண்டும் என்று உருவாகிய எண்ணம் உருக்குலைந்தது.

காமராசர் மட்டும் சஞ்சீவி ரெட்டியை ஆந்திராவுக்கு அனுப்பிவிட்டு அரக்கோணம் வந்து சேர்ந்தார். அரக்கோணத்தில் போலிஸார்கள் இருந்தார்கள் என்றாலும் அவர்களுக்குக் காமராசரைக் கைது செய்ய வேண்டும் என்பது தெரியாது. எனவே அமைதியாக அடக்க ஒடுக்கத்தோடு ரயிலை விட்டு இறங்கி அவர் வெளியேறினார். இவரோடு இரவாக இராணிப் பேட்டைக்குச் சென்றார். அங்கு அவருடைய நண்பர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவருக்குக் காமராஜர் என்றால் உயிர். (அவர் பெயர்தான் கலியாணராம அய்யர்) எனவே உயிர்தோழர் உதவி செய்வார் என்ற உறுதியோடு காமராசர் அவரது வீட்டிற்குச் சென்று கதவைத் தட்டினார். கதவு திறக்கப்பட்டது. நண்பர்கள் இருவரும் நள்ளிரவில் ஒருவரையொருவர் அன்போடு பார்த்துப் பேசி மகிழ்ந்தனர்.

காமராசர் தன்னுடைய நிலைமையை விளக்கிக் கூறித் தன் நண்பரிடம் உதவியை எதிர்பார்த்தார். கலியாணராம அய்யரும் கஷ்டத்தில் கைகொடுப்பதாக உறுதி அளித்தார். இருப்பினும் நண்பருக்குப் பயம் ஒருபுறம் இருக்கவே செய்தது. 'காமராசரோடு தன்னையும் கைது செய்தாலும் செய்யக்கூடும்,' என்ற கவலை மற்றொருபுறம். 'கஷ்டத்தில் உதவி செய்வது போன்ற கண்ணியமான செய்கை வேறொன்றும் இல்லை,' என்ற

அறச் சிந்தனை வேறொருபுறம். பாவம், அய்யர் உற்ற அவதிகளுக்கு அளவே இல்லை.

இருப்பினும் உள்ளத்தை உறுதிப்படுத்திக்கொண்டு காமராசரை அழைத்துக்கொண்டு ஊரின் ஒதுப்புறமாக இருந்த தன்னுடைய சிறு வீட்டுக்குச் சென்றார். காமராசர் அங்கே தங்கலாம் என்றும் அறிவித்தார். இரவு முழுவதும் தனி வீட்டில் பொழுதைப் போக்கிய காமராசரைக் கண்டு பேசும் ஆவலோடு அய்யர் மறுநாள் பொழுது விடிந்ததும் புறப்பட்டு வந்தார். அவரைத் துரத்திக் கொண்டு போலிஸாரும் அங்கு வந்து சேர்ந்தனர்.

நண்பர்கள் இருவரும் நடு நடுங்கி விட்டனர். போலிஸ்காரர்கள், காமராசரைப் பற்றியோ, காங்கிரஸைப் பற்றியோ எதுவும் குறிப்பிட்டுப் பேசாமல், மாவட்டப் போலிஸ் அதிகாரி வரப் போவதாகவும் அவருக்குத் தங்கி இருக்க அந்தத் தனி வீட்டைத் தரவேண்டும் என்றும் தயவோடு கேட்டுக்கொண்டனர். கேள்விக்குப் பதில் கிடைப்பதற்கு முன்னரே, வீட்டை முழுதும் சுற்றிப் பார்த்துவிட்டு, 'எங்கள் அதிகாரிக்கு இவ் வீடு போதாது,' எனக் கூறிக்கொண்டே போலிஸார் போய்விட்டனர்.

காமராஜருக்கு இனியும் இராணிப் பேட்டையில் தங்கி இருக்க விருப்பமில்லை. போலிஸார் மத்தியில் வாழ்வதை அவர் புறக்கணிக்க எண்ணினார். எனவே வேலூர் நோக்கி விரைந்தார். அங்குள்ள தேசியத் தொண்டர்களைப் பார்த்துத் தெரிவிக்க வேண்டிய திட்டங்களைத் தெளிவாகக் கூறிவிட்டு இரவில் தன் பயணத்தைத் தொடர்ந்து நடத்தித் தஞ்சாவூர் சென்றார். அங்கும் காண வேண்டிய பெருமக்களைக் கண்டு பேசிவிட்டு, திருச்சிக்குப் புறப்பட்டுப் போனார்.

காங்கிரஸ்காரர்கள் காமராசரை மறைத்து வைத்து விட்டனர் என்று அரசாங்கம் கருதியது. அரசாங்கம் காமராசரை மறைத்து வைத்து விட்டது என்று காங்கிரஸ்காரர்கள் கருதினர். பொதுமக்களுக்கோ உண்மை தெரியவில்லை. இந்த நிலையைக் கண்ணாரப் பார்த்துப் புரிந்து கொண்ட காமராசர், தக்க ஏற்பாடுகளுடன் திருச்சியிலிருந்து மதுரை வந்து சேர்ந்தார். மதுரைப் பெருமக்களையும் பார்த்து மகத்தான புரட்சித்திட்டம் குறித்து மகிழ்ச்சியோடு தெரிவித்து விட்டு இன்னும் மதுரையை அடுத்துள்ள ஊர்களுக் கெல்லாம் சென்று அங்குள்ளோர்களிடம் செய்ய வேண்டிய செயல் முறைத் திட்டங்களைச் செவ்வையாக விளக்கிக் கூறினார்.

## விருதுநகர் வேடிக்கை

கடைசியாக விருதுநகர் வந்து சேர்ந்தார். அலைந்து திரிந்த அலுப்புத் தீரச் சற்று ஓய்வெடுத்துக் கொண்டார். உடல் ஓய்வை ஏற்றுக்கொண்ட போதிலும் உள்ளம் ஓய்வை ஏற்றுக்கொள்ளவே இல்லை. எனவே அமைதியில்லாத உள்ளத்தோடு, போலிஸ் நிலையத்திற்குத் தன்னைப்பற்றி தகவலைச் சொல்லி அனுப்பினார். அங்கிருந்த போலிஸ் அதிகாரி, காமராசரின் மீது அன்பும், காங்கிரஸ் கட்சியின் மீது கருணையும் கொண்ட தேசியவாதி ஆவார். எனவே அவர் காமராசரின் வீட்டுக்கு ஓடோடி வந்து சேர்ந்தார். காமராசர் கைகளை நீட்டினார் விலங்கு மாட்ட! அதிகாரியோ கைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு கருணை பொங்கக் காமராசரைத் கட்டித் தழுவிக் கொண்டார். விலங்கு மாட்டப்படுதற்குப் பதி

லாக வெற்றி மாலையை வார்த்தைகளால் சூட்டிச் சென்றார் அதிகாரி. பின் காமராசரே கேட்டுக் கொண்டதின் பேரில் அவரை அவர் கைதி செய்து வேலூருக்கு அனுப்பிவைத்தார்.

இந்த நிகழ்ச்சியைக் கொண்டு, காமராசர் சிறைக்கு அஞ்சி ஒதுங்காதவர் என்பதையும், செயல் முடிக்கும் தீரர் என்பதையும், சிரமங்களுக்குப் பயந்து ஒதுங்காத பண்பாளர் என்பதையும் நாம் அறிதல் வேண்டும்.

### காந்தி அடிகளிடம் பக்தி

காமராசருக்கு உண்மைத்தெய்வமாக விளங்கிய பெருமை காந்தி அடிகளுக்கு உண்டு. காந்தி அடிகளிடம் மாறுத அன்பும், குறையாத பக்தியும் காமராசருக்கு உண்டு. காமராசரின் அன்பு எத்தகையது என்பதைக் கீழேகாணும் நிகழ்ச்சி ஒன்றே தெளிவுபடுத்துவதாகும்.



1939 ஆம் ஆண்டு காங்கிரஸ் தலைவர் பதவிக் குரிய தேர்தல் நடைபெற்றது. அந்தத் தேர்தலில் இருவர் போட்டியிட விரும்பினர். ஒருவர் ஓமந்தூர் பி. இராமசாமி ரெட்டியார், மற்றொருவர் வழக்கறிஞர் எஸ். சீனிவாச அய்யங்கார்.

எஸ். சீனிவாச அய்யங்கார், காமராசரின் உதவியை நாடினர் தேர்தலில் வெற்றி பெறுவதற்காக. சீனிவாச அய்யங்கார் சிறந்த வழக்கறிஞர். சிறப்பு மிக்க தேசத்தலைவர். சேவையில் ஆர்வங் கொண்டவர். இருப்பினும் காமராசரின் உதவியை எதிர்பார்த்தார்.

### ஏன் தலைவர் பதவி ?

காமராசர் நுண்ணறிவுடையவர். சீனிவாச அய்யங்காரைப் பற்றி அவர் நன்கு அறிவார். ஒரு முறை காங்கிரஸை விட்டுக் கருத்து வேறுபாடு காரணமாக வெளியேறியவர் என்பதும் அவருக்குத் தெரியும். தெரிந்த விஷயங்களோடு தெரியாத விஷயங்களையும் தெளிவாகப் புரிந்து கொள்ள விரும்பிய காமராசர், அஞ்சா நெஞ்சோடு அய்யங்காரிடம் நேரிலேயே கேட்டார்.

'ஏன் நீங்கள் காங்கிரஸில் சேர்ந்து தலைமைப் பதவிக்காகப் போராட விரும்புகிறீர்கள்?' இதுதான் காமராசரின் கேள்வி. 'காந்தி அடிகளின் கருத்துக்கள் எனக்குப் பிடிக்க வில்லை. நான் அவரோடு போராட விரும்புகிறேன்.' இதுதான் அய்யங்காரின் பதில். இது கேட்ட காமராசர் அதிர்ச்சி உற்றார். அசையாமல் சிறிது நேரம் நின்று விட்டார்.

'என்றால் உங்களுக்கு உதவி புரிய முடியாது. நான் காந்தி அடிகளிடம் பூரண நம்பிக்கை உள்ளவன். நீங்களோ அவரிடம் அவநம்பிக்கை உள்ளவர்கள். இருவரும் அடிபடையிலேயே வேறுபட்டு நிற்கிறோம். வேண்டாம் உங்களி சகவாசம்,' எனக் கூறி விட்டார் காமராசர்.

காமராசரின் காந்தி விசுவாசத்தைத் தெளிவாகப் புரிந்து கொண்ட சீனிவாச அய்யங்கார் காந்தி அடிகளை எதிர்க்கும் எண்

ணத்தையே விட்டு விட்டதோடு அமையாமல், தலைவர் பதவிக்கும் போட்டி போட முன் வரவில்லை. ஆகவே ஓமந்தூர் ரெட்டியார் அந்தத் தேர்தலில் தலைவராக ஏற்றுக் கொள்ளப் பட்டார்.

## ஒருநாள் தலைவர்

இன்று பன்னெடுங் காலத் தலைவராக விளங்க வேண்டும் என்று பல்லோராலும் விரும்பப்படும் காமராசர் 'ஒருநாள் தலைவராக' விளங்கிய நிகழ்ச்சியும் ஒன்று உண்டு.

1941 ஆம் ஆண்டு காமராசர் சிறையில் அடைப்பட்டுக் கிடந்தார். அப்போது விருதுநகரில் நகரசபைத் தேர்தல் நடைபெற்றது. அத்தேர்தலில் காமராசரை நகர மக்கள் தலைவராகத் தேர்ந்தெடுத்து விட்டனர். இதுகண்ட காமராசர் விருது நகர் மக்களுக்குத் தன் மரியாதையையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொண்டார். இது நடந்த சின்னாட்களில், அவர் சிறையினின்று விடுதலை அடைந்தார். விடுதலை ஊக்கத்தோடும், விருது நகர் மக்களின் விசுவாசத்திற்கு நன்றி தெரிவிக்கும் வீர உணர்வோடும் காமராசர் விருதுநகர் வந்தார். தலைவர் பதவியில் ஒரு நாள் மட்டுமே இருந்தார். மறுநாள் பதவியை விட்டு விட்டு, 'நான், நாடு முழுதும் பணிபுரிய வேண்டும். எனவே நகரப்பணிக்கு இன்னொருவரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்,' என்று நன்றி உணர்வோடு தெரிவித்து விட்டார்.



## சத்திய மூர்த்தி

காமராசரின் மதிப்புக்குரிய பல தலைவர்களில் சத்திய மூர்த்தியும் ஒருவர். காமராசருக்குக் குருவாகவும், உற்ற துணையாகவும் சத்திய மூர்த்தி விளங்கி வந்துள்ளார்.

சத்தியமூர்த்தி ஒரு சிறந்த பேச்சாளர். காமராஜர் மேடைப் பேச்சென்றால் விரும்பாதவர். இருவரும் எப்படி இணைந்து நின்றார்கள் என்பதே வியப்புக்குரிய விஷயந்தான். 'தேச விடுதலை' என்ற ஒருமித்த கருத்து இருவரையும் இறுக்கிப் பிணைத்து வைத்து விட்டது. சத்தியமூர்த்தியைக் காணமல் காமராசரால் இருக்கவே முடிந்ததில்லை. எவ்வளவு நேரமானாலும் வீட்டு முகப்பில் காத்திருந்து சத்தியமூர்த்தியைப் பார்த்துப் பேசிவிட்டுப் போகும் பழக்கம் காமராசருக்கு நெடுநாட்கள் இருந்து வந்தது.

சட்டப்படிப்பும், பட்டப்படிப்பும் உள்ளவர்களே அரசியல் உலகில் முன்னுக்கு வரமுடியும் என்று எண்ணிய நேரம் அது. அப்போதுதான் எந்தப் படிப்பும்

இல்லாத காமராசர், சத்தியமூர்த்தியிடம் அரசியல் தொண்டன் என்ற முறையிலே அன்போடு பழகி வந்தார். தொண்டர்களின் தனிப்பட்ட திறமையைப் போற்றிப் புகழ்ந்து நல்ல வழி காட்டும் தலைவர்கள் மிகச் சொற்பமாகவே இருந்தனர். தங்களைப் பின்பற்றுபவர்கள் தங்களின் நிழலாகவும், எதிரொலியாகவும் இருக்கவேண்டும் என்று பலர் நினைத்து வந்தனர். ஆனால் சத்தியமூர்த்தியோ, தொண்டர்களைத் தோழர்களாகவும், வழிகாட்டிகளாகவும், கருதிப் பழகும் இயல்புடையவராகத் திகழ்ந்தார்.

### குருவுக்கு மிஞ்சிய சிஷ்யன்

காமராசர் — சத்திமூர்த்தியின் உறவைப் புரிந்துகொள்ளமுடியாத சிலர் 'குரு-சிஷ்யர்' உறவு என்று கூறி வந்தனர். சத்தியமூர்த்தி வெள்ளை உள்ளம் கொண்டவர். எதிரிகளை வீரத்தோடு தாக்குவார் எனினும் நண்பனைப் போல நடிக்கும் எதிரியிடம் எளிதில் ஏமாந்துவிடுவார். இதைப் புரிந்து கொண்ட பலர் சத்தியமூர்த்தியிடம் நண்பரைப்போலப் பழகி நயவஞ்சகங்கள் பல புரிய முயற்சி செய்ததுண்டு. அம்மாதிரி நேரங்களில் காமராசர் கை கொடுத்துக் கஷ்டங்களைச் சம்பவிக்கவிடாமல் சத்தியமூர்த்தியைக் காப்பாற்றி உள்ளார். சில சமயங்களில் சத்தியமூர்த்திக்கே குருவைப்போல நின்று கொள்கை விளக்கம் செய்த பெருமையும் காமராசருக்கு உண்டு. எனவே அவரை சிஷ்யன் என்று கூறுவதைப் போல குருவுக்கு மிஞ்சிய சிஷ்யன் என்றும் நல்ல எண்ணத்துடன் கூறமுடியும். சத்தியமூர்த்தி பல சந்தர்ப்பங்களில் காமராசரைக் கலந்து ஆலோசிக்காமல் காரியங்களைச் செய்ய முற்பட்டது கூடக் கிடையாது.

காமராசர் கருத்தாழமும், காரிய ஊக்கமும் சிந்தனைத் தெளிவும் உள்ளவர். இதை முதலில் உணர்ந்து கொண்டவர் சத்தியமூர்த்தியே. அதனால்தான் அவர் காமராசரை முழுக்க முழுக்க நம்பினார்.

### ஆங்கில ஆட்சி எங்கே நடக்கிறது?

சத்தியமூர்த்தியின் பேச்சாற்றலில் மயங்கிய மக்கள், பலாப்பழத்தில் ஈ மொய்ப்பதுபோல அவரை மொய்த்து நின்றனர். அவரின் சொற்பொழிவுகளைக்கேட்டுவிட்டு இரவு என்று கூடப் பாராமல் நடந்து திரியும் மக்களை அரசாங்கம் அயோக்கர்களைக் கொண்டு அடிக்கவும், உதைக்கவும் செய்தது. இது கண்டு பொறுத சத்தியமூர்த்தி ஒருமுறை கேட்டார். ''பகலில் காங்கிரஸ் தலைவர்களாகிய எங்களின் ஆட்சி நடக்கிறது. இரவில் அயோக்கியர்களின் ஆட்சி நடக்கிறது. ஆங்கில அரசாங்கத்தின் ஆட்சி எங்கே நடக்கிறது?''

•

இங்ஙனம் தீர உணர்வுடனும் தியாக உணர்ச்சியுடனும்திகழ்ந்த சத்தியமூர்த்திக்கு நேரிய தோழனாகவும், நெருங்கிய தொண்டனாகவுமே காமராசர் தன் தொடக்க கால அரசியல் வாழ்வைத்துவக்கி உள்ளார்.

### தொடக்க காலம்

காமராசர் 1936 ஆம் ஆண்டில் தமிழ்நாடு காங்கிரசுக் குழுவுக்குச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அந்த ஆண்டு தலைவராக விளங்கியவர் திரு. சத்தியமூர்த்தியே ஆவர். இதுதான் காமராசர் காங்கிரஸில் சேர்ந்த பிறகு பெற்ற முதல் பதவி. 1937 ஆம் ஆண்டு நடைபெற்ற தேர்தலில் சாத்தூர் தொகுதியிலிருந்து காமராசர் தேர்ந்தெடுக்கப் பெற்

ருர். அதன் பயனாக அவர் சட்ட சபை உறுப்பினரானார்.

1940 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 15ஆம் நாள் காமராசர் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் பதவியை எட்டிப் பிடித்தார். அதன்பிறகு பல ஆண்டுகள் தொடர்ந்து காமராசர்தான் அந்தப் பதவியைத் திறம்பட வகித்து வந்தார்.

## முதல் அமைச்சர்

1954ஆம் ஆண்டு குடியாத்தம் தொகுதி உபதேர்தலில் பெருவாரியான மக்களின் விருப்பப்படி சட்டமன்ற உறுப்பினரானார். அதே ஆண்டு தமிழக அமைச்சரவையில் முதல் அமைச்சராகத் திகழ்ந்தார். பாராளுமன்ற உறுப்பினர் பதவியை உதறித் தள்ளிவிட்டு குடியாத்தம் தேர்தலில் சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு முதல் அமைச்சராகத் திகழ்ந்த செயல் திறத்தை அரசியல் நுணுக்கம் தெரிந்தவர்களால் மட்டுமே அதிகமாகப் போற்றிப் புகழ்ந்து பேச முடியும்.

முதல் அமைச்சராக ஆவதற்கு அவர் உபதேர்தலில் நின்றிருக்கவே தேவை இல்லை. கவர்னரிடம் சொல்லி மேல் சபை உறுப்பினராக நியமனம் பெற்று சிரமமில்லாமல் முதல் அமைச்சராக ஆகி இருக்க முடியும்.

பதவியில் இருப்பவர்களின் தயவு முறையைப் பின்பற்ற விரும்பாத காமராசர் மக்களின் ஆதரவு முறையைப் பின்பற்றியே அமைச்சரவையில் அமர எண்ணினார். விருதுநகரிலே பிறந்தார். சாத்தூர்த் தொகுதியில் பாராளுமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். குடியாத்தம் தொகுதியில் கொள்கை உறுதியோடு நின்றார். தேர்தலில் வென்றார். தமிழகத்தின் முதல் அமைச்சராகத் திகழ்ந்தார்.

## மக்கள் தலைவர்

காமராசர் மக்களுக்காகவே மக்களோடு மக்கள் எண்ணத் திறந்து, மதிப்புத்தந்து வாழ்பவர். ஆகவேதான் அவரை அனைவரும் மக்கள் தலைவர் என்று மதிப்போடு பேசிப் போற்றுகின்றோம்.

இராமநாதபுர மாவட்டத்தில் ஏற்பட்ட பெரும் புயலால் மக்கள் மயங்கி நின்ற நேரத்தில், ரயிலில் அரிசி மூட்டைகளுடன் சென்று ஆபத்தால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவி செய்த பெருமையைப் போற்றிப் பேசாதவர்களே கிடையாது. அதுபோலவே வெள்ளத்தால் வேதனைகொண்ட மக்களுக்கு வேண்டிய அளவு உதவிகள் புரிந்துள்ளார். வண்டி போகாத இடங்களுக்குக்கூடத்தானே வலிய நடந்து சென்று ஏழைகளின் துயரத்தைத் துடைத்துள்ளார்.

பொதுத் தொண்டைப் புனிதத் தொண்டாகக் கருதிப் பாடுபட்டு வந்துள்ளார்—இன்னமும் அது போலவே பாடுபட்டு வருகிறார்.

ஆயிரக்கணக்கான நட்சத்திரங்களைக் காணுவதால் ஏற்படும் மகிழ்ச்சியை விட ஒரே ஒரு நிலவைக் காணுவதால் ஏற்படும் மகிழ்ச்சி உயர்ந்ததல்லவா? அது போலவேதான் அநேக அமைச்சர்களைக் கண்டதால் பெற்ற பாக்கியத்தைவிட காமராஜராகிய அமைச்சரைக் கண்டதால் பெற்ற பாக்கியம் ஏழைகளைப் பொறுத்த மட்டும் எண்ணிக்கையில் அடங்காது. யாத்திரிகர்களுக்குப் பாலைவனத்திடையே கிட்டிய பசுந் தண்ணீரைப் போல, துன்பங்களால் குழப்பட்ட ஏழை மக்களுக்குக் காமராசர் விளங்குகிறார்.

*ஏழைபங்காளன்*

ஏழைகளின் வாழ்வு உயர வேண்டும். ஏழையாகப் பிறந்தவன் ஏழையாகச் சாகக்கூடாது என்பன போன்ற கருத்துக்களை லட்சியமாகக் கொண்டு கடமை ஆற்றுபவர்தான் காமராஜ். அதனால்தான் அவரை ஏழை பங்காளன் என்று எல்லோரும் போற்றுகிறார்கள்.

*தமிழன்பர்*

காமராஜருக்குத் தமிழ் மொழியிடத்துத் தளராத பற்றுதல் உண்டு. மேலும் மேலும் தமிழை வலிமை உள்ள மொழியாக ஆக்குதற்குப் பாடுபடவேண்டும் என்று அவர் அடிக்கடி கூறுவதுண்டு. தமிழில் மொழிபெயர்ப்பைப் பற்றி அவர் அழகாகக் கூறி உள்ளார்.

'பல அறிஞர்கள் அந்நிய மொழிகளில் உள்ள நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்து வருகின்றனர். நிறைய நூல்கள் தற்போது வெளிவந்துள்ளன. அது மட்டும் போதாது. மொழிபெயர்ப்பின்றி தமிழிலேயே சிந்தித்து எழுதப்பட்ட மூல நூல்கள் நிறைய எழுதப்படுதல்வேண்டும். தமிழ் மொழிக்கு அத்தகுதி இல்லையா? அல்லது தமிழ்எழுத்தாளர்களுக்கு அச்சக்தி இல்லையா? நாம் எதற்காகப் பிறமொழிகளிலிருந்து கடன் வாங்கவேண்டும்? பிறர் நம் மொழியிலிருந்து கடன்' வாங்கக்கூடிய நிலையில் தமிழை நம்மால் வளர்க்க முடியாதா, என்ன? இப்படியாக விரிந்த மனப்பான்மையோடு நாம் தமிழ் மொழியை வளர்க்க முற்பட்டால்தான் தமிழகம் தலை சிறந்து விளங்கும்.''

கல்வி அறிவை மாணவர்களுக்குத் தமிழ் மொழியின் மூலம் புகட்டுவதால் நிரம்பிய நன்மைகள் உண்டு என்னும் அவருடைய கருத்தைக் கீழேகாணும் அவர் நம் சொற்பொழிவு நன்கு புலப்படுத்துவதாகும்.

"நம் தாய் மொழியை நம்முடைய மாணவர்களுக்குப்பள்ளிகளில் பயிற்சி மொழியாக்கி, அதன் மூலம் எல்லா விஷயங்களையும் கற்றுக் கொடுக்கவேண்டும். இதை நாம் விளக்கிச் சொல்லும் போது படிக்காதவர்களுக்கும், படித்தவர்களுக்கும் கருத்து முரண்பாடு ஏற்படுவதைப் பார்க்கிறோம். இருந்தாலும், தாய் மொழியிலேயே பாடங்களைக் கற்றுக் கொடுப்பதுதான் நல்லது; நன்மை தரக்கூடியது. மக்களுக்குப் புரியாத மொழியில்நாம் பேசினால் எது வேண்டுமானாலும் பேசிக் கொண்டே போகலாம். மக்களை ஏமாற்றுவதற்குப் புரியாதமொழியில்பேசுதல்கைகண்ட தந்திரமாகும். எல்லோரும்புரிந்து கொள்ளக்கூடிய மொழியில் பேசினால் யாரையுமே எளிதில் ஏமாற்றமுடியாது. உடனே உண்மையைக் கண்டுபிடித்துவிடுவார்கள். இந்த நிலைமையைப் புரிந்து கொள்ளுவோமாயின் நம்முடைய தாய் மொழியிலேயே நல்ல புத்தகங்கள் வெளிவரல் வேண்டும் என்பதை யாவரும் எதிர்பார்க்கவே செய்வோம்.

தமிழ் மொழியாகிய தாய்மொழியைப் பயிற்சி மொழியாக்கி நம்முடைய மாணவர்களுக்குக் கல்வி கற்றுக் கொடுக்கவேண்டுமென்று சொல்லும்போது சிலர் அதற்கு ஆட்சேபணையை-எதிர்ப்பு அல்ல, எதிர்ப்பாக இருக்கமுடியாது—சப்தம் போட்டுச் சொல்லுகிறார்கள். தாய்மொழியை வேண்டாமென்று சொல்லமுடியுமா? சில சமயங்களில் கலைச் சொற்கள் இல்லை, புத்தகங்கள் இல்லை, பயிற்சி அளிக்கமுடியாது, பயிற்சி பெற்ற உபாத்தியாயர்கள் கிடையாது என்று வேண்டுமானால் சொல்ல

லாம். அந்தக் குறையை நீக்கு வதற்குத்தான் தமிழில் எல்லாப் பாடங்களையும் சொல்லிக் கொடுக்கும் நோக்கத்தோடு புத்தகங்களை வெளியிடுவதற்கு அரசாங்கத்தார் தக்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இனித் தமிழுக்கு வளர்ச்சியே தவிரத் தளர்ச்சி இல்லை.''

இப்படியாகப் பல கருத்துக்களைக் கொண்டு விளங்கும் காமராசரைவிடத் தமிழுக்குச் சிறந்த தொண்டன் வேறு யார் இருக்க முடியும்?

### தமிழ்நாடு

சென்னை மாகாணத்துக்குத் 'தமிழ்நாடு' என்ற பெயர் ஊர்ஜிதப்படுத்தப்பட்டு எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட சம்பவம் காமராஜரின் ஆட்சிக் காலத்தே தான் நிகழ்ந்துள்ளது என்பதை நினைவில் கொள்ளல் நல்லது.

### பல முன்னேற்றங்கள்

காமராசர் ஆட்சியில் இருந்த போது தமிழகம் கணக்கற்ற முன்னேற்றங்களைக் கண்டுள்ளது. ஏராளமான கிராமங்களுக்கு மின்சார வசதிகள் செய்து தரப்பட்டன. வயதான கிழவர்களுக்கு அரசாங்க உதவிகள் கொடுக்கப்பட்டன. உழவர்களின் நலங்கள் பாதுகாக்கப் பட்டன. ஏழைகளின் படிப்புக்காக ஏற்பாடுகள் செய்யப் பட்டன. ஹரிசன மக்களின் முன்னேற்றத்துக்கு வழி வகைகள் காணப்பட்டன.

### பதவித்துறப்பு

நாட்டு நலன் கருதி ஆளுங் கட்சியாக விளங்கும் காங்கிரஸ் பல சீர்திருத்தங்களைக் கொண்டு வர முற்பட்டது. 'முதிர்ந்த அனுபவம் உள்ள தலைவர்கள் பதவிகளைத் துறந்துவிட்டு நாட்டுப் பணிகளில் நாள் முழுதும் ஈடுபட வேண்டும்,' என்ற திட்டம் நாட்டு நலங் கருதி, காமராசரால் உருவாக்கப் பட்டுப் பண்டித நேருவால் பரப்பப்பட்டது. அந்தத் திட்டத்தின் பெயரே 'காமராஜ் திட்டம்.'

இத்திட்டத்தின் பயனாகக் காமராசர் தன்னுடைய தமிழக முதல் அமைச்சர் பதவியைத் தானாகத் துறந்து விட்டு இந்திய நாட்டுப் பணியில் ஈடுபட முன்வந்தார்.



### பதவியும் பெருமையும்

எந்த ஒரு பதவியினையும் ஆசைக்காகவோ, அந்தஸ்துக் கருதியோ காமராசர் விரும்பிய தில்லை. அவர் எப்போதுமே பதவிப் பித்தராக இல்லாமல் இருந்தார் என்பதை விட பதவித் துறப்பராகவே இருந்துவந்துள்ளார் எனக.

தொண்டராக நுழைந்து போராட்டத் தோழராக வளர்ந்து, அமைச்சராய் வாழ்ந்து அகில இந்தியத் தலைவராகத் திகழும் காமராசர் பதவியைப் பின் தொடர்ந்து போனதே கிடையாது. பதவிகள் தாம் அவரைப் பின் தொடர்ந்து வந்துள்ளன. அவராக ஒதுக்கித் தள்ளினால் அன்றி அப்பதவிகள் அவரை ஒதுக்கித் தள்ளியதாக வரலாறே

கிடையாது. பதவியால் பதவியைப் பெற்றவர் முக்கியத்வம் பெறுவதுதான் உலக நியதி. ஆனால் காமராசரைப் பெற்றதால் பல பதவிகள் முக்கியத்வம் பெற்றுள்ளன. இது காமராசரின் தனிச் சிறப்பாகும்.

### நேருவின் மறைவு

1964 ஆம் ஆண்டு மே மாதம் 27 ஆம் நாள் நேரு திடீரென்று மறைந்து விட்டார். இறக்கும் முன்பு நேருவுக்குத் துணையாகவும் தோழராகவும் நின்று நாட்டு நலனைக் காப்பாற்றப் பாடுபட்ட காமராசர், நேருவின் மறைவுக்குப் பின் மகத்தான பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டியவரானார்.



நாட்டுக்கு ஏற்பட்ட நஷ்டந்தைத் ஈடு செய்ய, காமராசர் தன் தலையை ஈடு கொடுத்தார். அதிகமான பொறுப்புக்களைத் தாங்கிக் கொள்ள முன்வந்தார்.

### துன்பம் துடைக்கும் மருந்து

துன்பம் வந்த போதெல்லாம், துடைப்பதற்காகக் துணைக்கரங்களை விரிக்கத் துணிவோடு நிற்பவர் காமராசர். அதனால் தான். ஆபத்து என்றவுடன் ஆபத் சகாயனாக விளங்கும் காமராசரை இந்தியா எதிர் நோக்கி நிற்கின்றது. இப்படி ஆபத் சகாயனாக விளங்கும் காமராசரை நாம் துன்பம் துடைக்கும் மருந்து என்று கூறுவது தான் சாலப் பொருந்துவதாகும்.

### உலகத்து உதவியாளன்

இன்னும் கொஞ்ச நாட்களில் உலகத்தில் எப்பகுதியிலேனும்சங்கடங்கள் நேருமாயின், உடனே காமராசர் அழைக்கப்படலாம். சமய சஞ்சீவியாக நின்று சகலருக்கும் நன்மைகளைக் கூட்டுவிக்கும் நல்ல மனிதர் அவர் தானே?

'இங்கிலாந்தில் இன்னல் உடனே வருக,' 'அமெரிக்காவில் ஆபத்து அவசரமாக வருக,' 'ஆசியாவில் அக்கிரமம் அதி விரைவில் வருக,' என்றெல்லாம் காமராசர் உலக மக்களால் அழைக்கப் படலாம்.

இன்னல்களை, இடைஞ்சல்களை, துன்பங்களை, துயரங்களைத் துடைப்பதற்கு காமராசர் இருக்கிறார் என்ற துணிவோடு நாம் இன்னல், இடைஞ்சல், துன்பம் துயரங்களை உண்டாக்காமலும் உண்டுபண்ண உதவாமலும் ஒருமைப்பாட்டோடு உயர்ந்த வாழ்வுக்கு நடைவிரிப்போமாக.

•

நமக்கு நல்வழி காட்டவும், நன்மைகள் கூட்டவும் அல்லும் பகலும் பாடுபடும் காமராசர் இன்னும் பல்லாண்டு வாழப் பகவானை வேண்டுவோம். வாழ்ககாமராசர். வாழிய பாரதம்.

மாபெருந் தேசபக்தரான காலஞ் சென்ற திரு ஸ்ரீனிவாச ஐயங்காரின் அருமைப் புதல்வியும் மாதர் நிலை உயர்வதற்காக அரும்பணியாற்றி வருகிறவருமான திருமதி. எஸ். அம்புஜம்மாள் தென்னாடு தந்த தலைவர் திரு காமராஜ் பெண்கள் சமூகம் மேம்பாடு அடைய வேண்டும் என்பதில் கொண்டுள்ள ஆர்வத்தை இக்கட்டுரையில் விவரிக்கிறார். தலைவரின் மிக உயர்ந்த குண விசேஷங்களையும் எடுத்துரைக்கிறார்.

# தென்னாட்டுத் தலைவர்

பத்மஸ்ரீ ஸ்ரீமதி **எஸ். அம்புஜம்மாள்**

**பா**ரத நாட்டின் விடுதலைக்காக இந்நாட்டிலே எண்ணற்றவர்கள் இளமையிலேயே ஈடுபட்டுத் தம் வாழ்வை வழங்கியதுண்டு. தம் இளமை எதிர்கால வாழ்வு வாழ்வின்பம், மனைவாழ்வு பெற்றோர் சுற்றத்தார் நிலை போன்றவற்றை சிறிதும் சிந்தியாது தாய்நாட்டின் விடுதலையே தம் வாழ்வாக வாழ்வின் பயனாக குறிக்கோளாகக் கொண்ட பலருண்டு. அத்தகையோரில் இன்று பாரத நாட்டின் அரசியலுக்கே கலங்கரை விளக்காய்த் திகழும் காமராஜும் ஒருவர். சிற்றூராக அந்நாளில் எண்ணப்பட்ட விருதுநகரிலே சாதாரண குடும்பத்திலே பிறந்த காமராஜர் இன்று அசாதாரண மனிதராக மட்டுமல்லாது, அகில உலகமுமே மூக்கில் விரல் வைத்து வியக்கும் அளவில் தீராத அரசியல் பிரச்னைகளை எல்லாம் தீர்த்து வைக்கும் திறமை பெற்றுவிளங்குகிறார். இதற்கு அவர் தம் தாய் நாட்டுப் பற்று தன்னலமற்ற தன்மை ஓயா உழைப்பு உலையா ஊக்கம் எளிய வாழ்வு எவரோடும் பழகும் இதயம் எதையும் முடிக்கலாம் என்னும் உறுதியான உள்ளம் ஆகியவையே காரணம் எனில் மிகவும் பொருந்தும்.

மாடு, மனை, மக்கள், சுற்றம், அணி, மணி என்றில்லாது தாம் பிறந்த பொன்னாட்டின் வாழ்வே-ஏழைகளின் வாழ்வே தம் வாழ்வாக மதித்து, மனைவாழ்வையே கருதாது அன்று தொட்டு இன்று வரை பாடுபட்டு வரும் திரு. காமராஜரை தியாகி என்றுபேசுவதா? மக்கள் துயர் துடைக்க வந்த மாபெரும்தீரர் எனவாழ்த்துவதா? யான் அறியேன்.

## அற்புத மனிதர்

எண்ணிறந்த மக்கள் ஏழைகளாய் நாயினும் மிக நலிந்து பஞ்சத்திலும் துன்பத்திலும் படாத பாடுபட்டுக் குற்றுயிராய் இந்நாட்டிலே கிடந்த நிலையிலே மனைவி

மக்களைத் துறந்து காவி கட்டி, சடை தரித்துக் காட்டிலேஇருந்து மூச்சைப் பிடித்து மூச்சை அடக்கி யோகத்திலே அமரும் வாழ்வைத் திரு காமராஜர் விரும்பவில்லை. பாட்டாளிகளாகப் பாதைகளிலே கல்லுடைத்துப் பணியாற்றும் பல்லாயிரக்கணக்கான மக்களிடையே ஆண்டவன் பொலிகின்ருன் என்ற கவிதை மன்னன் தாகூரின் பொன் மொழிப்படி தரித்திர நாராயணராய் வயல்களிலே நிலங்களிலே புலங்களிலே பாதைகளிலே மலையடிவாரங்களிலே உழைத்து ஒட்டிய வயிற்றினராய் ஒடுங்கிய கன்னத்தவராய் பணியாற்றிப் பட்டினியாய்க் கிடந்த பாரத தேச மக்கள் நிமிர்ந்துவாழ நெஞ்சம் குளிர்ந்துவாழ வாழ்வை வழங்கிய தம்மை அர்ப்பணித்த அற்புத மனிதர் திரு. காமராஜர் எனில் மிகவும் பொருந்தும்.

மன்னருக்கு நிகரான செல்வ மரபிலே பிறந்து இளமையிலேயே இங்கிலாந்தில் கல்வி கற்று பாரிஸ்டர் பட்டம் பெற்றுத் தாய் நாடு திரும்பிய தலைவர் முடிசூடா மன்னர் நேருவின் சிந்தைபொன்னையும்புகழையும் நாடவில்லை;தாய்த் திருநாடு அந்நியர் ஆட்சியில் அல்லலுறுவதைக் கண்டு கலங்கியது; இந்நாட்டுப் பலகோடி மக்களின் விடுதலையில் ஈடுபட்டது. அதற்காகவே தம் இறுதி மூச்சு உள்ளவரை உழைத்தார். அவ்வாறே தென்னகத்தே மக்கள் துயர் கண்டு மனம் துடித்தார் காமராஜ்; அவர்தம் வறுமையும் ஏழ்மையும் கண்டு சிந்தை கலங்கினர்; அறியாமை கண்டு வருந்தினர். இவற்றை யெல்லாம் நீக்கி இனிய தமிழ்நாட்டை, இன்பப் பாரதத்தைக் காணுதலே தம் பிறவியின் பெரு நோக்கமாக வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டார். அன்று முதல் இன்றுவரை அதற்கெனவே பாடுபட்டு வருகிருர்.

## பதவித் துறவு

தமது சலியா உழைப்பால், தன்னலம் துறந்த தன்மையால் தியாகத்தால், தம்மையே தம் வாழ்வையே, நாட்டிற்காக அர்ப்பணித்த நற்பணியால் முதல் அமைச்சர் பதவி அவரைத் தேடி அடைந்து பெருமை பெற்றது. இதுகாறும் வரலாறு காணு வகையில் மாற்ருரும் போற்றும் முறையில் மக்கள் தலைவராய் அவர் ஆட்சி செலுத்திவந்தார். இந்நிலையில் பதவியைத் துறந்து மக்களோடு மக்களாய் ஏழையோடு ஏழையாய் தோள் கொடுத்துத் தொண்டாற்றி வாழ விரும்பிய நிலையில் தம் முதல்அமைச்சர் பதவியை 'துறவிக்கு மன்னர் பதவியும் ஓர் துரும்பு' என்பதுபோலத் துறந்தார். அவரது பதவித்துறவு பாரத நாட்டு மக்கள் மனத்தை மட்டுமல்லாது, பாரிலுள்ள அரசியல் தலைவர்களை, அறிஞர்களை, தத்துவ ஞானிகளை—ஏன் - எல்லோரையுமே கவர்ந்தது.

சேவை செய்தற்குப் பதவி ஒரு கருவியாக இருத்தல் உண்மை எனினும் சேவை செய்வார்க்குப் பதவி இன்றியமையாததன்று என்ற உண்மையை திரு. காமராஜர் நன்கு உணர்ந்தவர். ஆதலாலேயே பதவியைத் துறக்க முன்வந்தார். தமிழ்நாட்டுத் தலைமைப் பதவியைத் துறந்த அவரைப் பாரத நாட்டுத் தலைமைப் பதவியே நாடி வந்தது. "வேண்டாமை வேண்டவரும்" எனும் திருக்குறளுக்கு எடுத்துக் காட்டாக அவர் வாழ்வு விளங்குகிறது.

## ஏழையின் தோழர்

திரு. காமராஜர் காட்சிக்கு எளியவர். சுருக்கமான சொல்லும், விரிவான செயலும் உடையவர். ஏழையின் தோழர்; எளியவரின் நண்பர்; ஏழை விவசாயிகளின் பிரதிநிதி. தம்முடன் பழகியவர்

எவராயிருப்பினும் தம்நிலை, பதவி சிறப்பு அனைத்தையும் மறந்து அவரை மறவாது, அவர் தம் நட்பைப் போற்றுபவர்; அவர் தம் குலத்திடம் நன்றியுடைய வர். தம்முடன் வாழ்ந்த காலஞ் சென்ற திரு. சத்தியமூர்த்தி அவர்களிடம், அவர் குடும்பத் தினரிடம் அவர் கொண்டிருந்த அன்பும் பாசமுமே இதற்குச் சான்று. கனம் சத்தியமூர்த்தி அவர்கள் மண்ணைவிட்டு மறைந் தாலும் திரு. காமராஜரின் மனத்தை விட்டு இன்றும் மறைய வில்லை. இவ்வாறே இளம் பருவந் தொட்டுத் தம்முடன் பழகிய பல ரையும் அவர் மறந்ததில்லை.

### மாதர்நிலை உயர விரும்புகிறவர்

நாட்டின் சுதந்திரப் போராட் டத்திலே பங்கு கொண்ட பலருள் என் தந்தை திரு ஸ்ரீனிவாச ஐயங் காரரும் ஒருவர். சென்னையிலே வழக்கறிஞராய் வாழ்ந்த அவர் தம் வாழ்வை நாட்டின் விடுதலைக் காக அர்ப்பணித்த செயல் நல் லார் பலரைக் கவர்ந்தது. திரு. காமராஜர் என் தந்தையின் பணி கண்டு, தியாகம் கண்டு, தொண் டுள்ளம் உணர்ந்து அவரிடம் ஈடு பட்டிருந்தார். ஆதலாலேயே ஆவடிக் காங்கிரஸின் வரவேற் புக் குழுத் தலைவியாய் என்னை ஏகமனதாய்த் தேர்ந்தெடுத்தார். இது அவர் என் தந்தைமீது வைத் திருக்கும் மதிப்பைக் காட்டுவது மட்டுமல்லாது, மாதர்கள் இந் நாட்டிலே சிறந்த நிலை அடைய வேண்டும் என்ற அவர் தம் எண் ணத்தையும் எடுத்துக் காட்டு கிறது.

திரு. காமராஜர் கல்வி, அரசி யல் முதலிய பலவகைத் துறை களிலும் மாதரினம் முன்னேற்ற முற வேண்டுமெனும் நன்னோக் கம் கொண்டவர், சிறப்பாகப் பட்டிதொட்டிகளிலே கிராமங் களிலே பாடுபடும் பெண்களும் குழந்தைகளும் சிறந்த நிலை அடையவேண்டும் என்ற சிறந்த எண்ணம் படைத்தவர். எனவே, மாதர் குழந்தைகள் நலக் கூட் டங்கள் மகாநாடுகள் ஆகியவற் றிற்கு அவரை அழைக்கும் போதெல்லாம் அவர் தயங்காது வந்து அறிவுரை தந்ததுண்டு; ஆலோசனைகள் வழங்கியதுண்டு. பஞ்சாயத்து ராஜ்யமாக நாட்டை மாற்ற முயன்றபோது பஞ்சாயத் திலே உறுப்பினராகவும், மற் றும் பல நிலையிலும் மாதர்கள் பங்குகொள்ள வேண்டும் என நான் அவரிடம் கூறியபோது அதை அவர் வரவேற்றதுடன் அவ்வாறு மாதர்கள்பங்குகொள்ள வழி வகைகளை வகுத்தார்.

### பஞ்சாயத்து மாதர்கள்

அண்மையிலே சென்னையில் பஞ்சாயத்து மகாநாடு நடந்ததை எவரும் மறந்திருக்க முடியாது. அரசியல் வரலாற்றிலேயே அது என்றும் அழியாததொரு நிகழ்ச்சி தெற்கே கன்னியாகுமரி முதல் சென்னை வரையிலுமுள்ள பஞ்சா யத்துக்கள் அனைத்தும் பங்கு கொண்டன. தள்ளாத முதிய தாய்மார்களும் அதில் ஆர்வத் துடன் கலந்துகொண்டனர். அம் மகாநாட்டிலே பஞ்சாயத்து ஆட வர்களை நேரில் கண்டு அவர் தம் நிலையை உசாவி அறிந்த திரு. காமராஜர், பஞ்சாயத்து மாதர் கள் குறைகளையும் அறிய வந் தார். அத்தாய்மார்களுடன் தமக்கே உரிய எளிய முறையில் ‘நீங்கள் அனைவரும் செளக்கியமா? உங்கள் பஞ்சாயத்து எப்படி நடக் கிறது? அது நடைபெறுவதில் உங்களுக்கு ஏதேனும் முட்டுக் கட்டைகள் உண்டா? அரசாங்கம் உங்களுக்கு வேறு என்ன செய்ய வேண்டும்?’’ என்றெல்லாம் அன் போடு வினவியது இன்னும் என் மனத்தை விட்டு அகலவில்லை.

நன்றி—நவசக்தி

# பாரதத் தலைவன்

**கண்ணதாசன்**

தீந்தமிழ்ச் சாறு; தெளிந்த நல்லாறு
செய்முறை நேர்த்தி தெரிந்தநல் லறிஞன்
ஆன்றவிந் தமைந்த அன்புடை வள்ளல்
அன்னைநா டுயரத் தன்னையிங் களித்தோன்
கல்லாமை தனைக் கருவறுக் கின்றவன்
இல்லாமை தனை இல்லா தாக்குவோன்
நல்லோர் இதயம் நாடும் நாயகன்
நாவசைக் காமலே நாடமைக் கின்றவன்
மானத் தமிழர் மன்றிடைத் தோன்றிய
ஞான மாணிக்கம்; நறுமணத் தென்றல்
நேருதம் வாரிசாய் நிலைத்து நிற்பவன்
பாரதத் தேருக்குப் பண்புசால் சாரதி
ஒடிந்து விழுந்த உலக்கைத் துண்டுகள்
தாக்குவ தனைத்தும் தாங்கும் மன்னவன்!
ஏழ்மையிற் பிறந்து ஏழ்மை உணர்ந்து
ஏழைகள் உயர இதயம் விரித்தவன்
குழம்பும் குட்டையிற் குதிக்க நினைத்தவர்
குழம்பிச் சோர்வுறக் குழப்பம் தீர்த்தவன்!
படித்தவ னல்லன்; பல்கலைக் கல்வி
முடித்தவ னல்லன்; முழுதுணர்ந் தவன்போல்
நடித்தவ னல்லன் நால்வகை வேதம்
குடித்தவ னல்லன்; கொள்கை நிலத்தில்
வெடித்து வந்தவன்; வெள்ளை நெஞ்சினன்!
அவனால் பாரதம் அமைதி யுற்றது
அவனால் பாரதம் அழிவு நீங்கிற்று!
அறுபத் திரண்டு ஆண்டுகள் எய்தியும்
இருபத் திரண்டு போல் தோன்றும் இளைஞன்
பாரத தேசம் பட்டினி ஒழிந்து
பாரில் உயரப் பறக்குநாள் வரைக்கும்
வாழிய வென்று வாழ்த்துமிப் பாட்டு
ஏழைக் கவிஞனின் இதயத் துடிப்பு.



## தலைவன் அவனே!

புதுமை என்பர் ஒருசாரார்
புதிராம் என்பவர் ஒருசாரர்
எதிலும் சிறந்தோன் ஆதலினல்
எப்பேர் சொல்லி
அழைத்தாலும்
நிதமும் நிலைத்த புகழுடனே
நிற்கும் தலைவன் அவனே
தான்!

## புதிரும் புதுமையும்

பல்கலைக் கழகத்தில் பயின்று பட்டம் பெற்றவர்களுக்கு அவர் புதுமை. அப்படிப் பட்டம் பெற்ற வர்கள் தான் புத்திசாலிகள், அவர்கள்தான் அரச தந்திரிக ளாகவோ, அமைச்சர்களாகவோ செயலாற்றத் தகுதி படைத்தவர் கள் என்று கருதிக் கொண்டிருக் கிறவர்களுக்கு அவர் புதிர். இதற்குக் காரணம், இவர்கள் படித்த படிப்புக்கும் காமராஜ் படித்த படிப்புக்கும் வெகு வித்தி யாசம் இருப்பதுதான். இவர்கள் ஏட்டிலே படித்தவர்கள். காமராஜ் உலகத்தில் படித்தவர். பரந்து கிடக்கின்ற எப்போதும் திறந்து கிடக்கின்ற உலகமென்னும் பள்ளி, போதித்த பாடங்களையே போதித்துக் கொண்டிராமல் புதிய புதிய பாடங்களைப் போதித் துக் கொண்டிருக்கிறது. வாழ்க் கையை வாழ்ந்து காட்ட வழி வகுத்துக் கொடுக்கிறது. அனு பவத்தோடு கூடிய அறிவையும், அன்போடு இணைந்த அஞ்சாமை யையும், தன்னம்பிக்கையோடு இழைந்த தெய்வ நம்பிக்கை யையும் நன்குகக் கூட்டிக் குழைந்து, தன்னிடம் பயில் வார்க்கு அள்ளி அள்ளி ஊட்டு கிறது.

இத்தகைய பள்ளியில் படித்த காமராஜ், தங்கள் ஏட்டறிவைக் கொண்டு உலகத்தை அண் ணுந்து உயரப் பார்க்கிறவர்களும் அளந்து பார்க்கிறவர்களும் ஆன புத்திசாலிகளுக்குப் புதுமையாக வும் புதிராகவும் தென்படுவதில் ஆச்சரியமென்ன இருக்கிறது.

—வெ. சாமிநாத சர்மா.
(காமராஜ் வரலாறு - நூலின்—அணிந்துரை).

---

ஆசிரியரும், வெளியிடுபவரும்: ..கண். இராமநாதன்,
~~உஉ~~ பெரியதெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5. தொலைபேசி 84989.

# புதுமைப்பித்தனின் புத்தகங்கள்

புத்தக ஆசிரியர்களுக்கு ஒட்டக் கூத்தன். வலுவற்றுக் கிடந்த தமிழ் வசனத்துக்கு வாலிபம் தந்த சஞ்சீவி. உலக இலக்கிய சத் சங்கத்திலே தாமாகவே இடம் பிடித்துக்கொண்ட மேதை. சிறுகதை இலக்கியத்தின் ஆசிய ஜோதி. இளம் எழுத்தாளர்களின் லட்சியம். யதார்த்தவாதிகளின் முன்னோடி. தமிழ் நாட்டில் எழுதிப் பிழைப்பது என்பது எத்தனை அபாயகர மானது என்பதைத் தமது உயிரையே பணயம் வைத்துக் காட்டிச் சென்ற உதாரணம்—இவர்தான் புதுமைப்பித்தன்.''

தன் உயிரைத் தந்து, இலக்கியத்துறைக்கு உயிரை ஊட்டிய திரு. **புதுமைப்பித்தனின்** படைப்புக்கள் பயில்தோறும் சுவை யூட்டும் இயல்பின.

| | | | |
|---|---|---|---|
| புதுமைப்பித்தன் கட்டுரைகள் | ... | 2 | 50 |
| புதுமைப்பித்தன் கவிதைகள் | ... | 2 | 00 |
| புதுமைப்பித்தன் கதைகள் | ... | 3 | 50 |
| புதிய ஒளி | ... | 3 | 50 |
| அன்று இரவு | ... | 3 | 50 |
| சித்தி | ... | 2 | 00 |
| மணி ஓசை | ... | 1 | 50 |
| தெய்வம் கொடுத்த வரம் | ... | 2 | 00 |
| உலக அரங்கு | ... | 1 | 25 |
| முதலும் முடிவும் | ... | 1 | 25 |
| பளிங்குச் சிலை | ... | 1 | 00 |
| ஆண்மை | ... | 1 | 00 |
| சிற்றன்னை | ... | 1 | 50 |
| பிரேத மனிதன் | ... | 1 | 00 |
| நாரத ராமாயணம் | ... | 1 | 00 |
| நிச்சயமா நாளைக்கு | ... | 1 | 00 |
| வாக்கும் வக்கும் | ... | 1 | 50 |





ஆகஸ்டு, 1964 மலர் 3 – இதழ் 5

# பர்மா அகதிகள்

—கண. இராமநாதன்

அகதிகள் என்றவுடன் பாகிஸ்தானில் இருந்து மதவெறிக்கு ஆளாகி ஓடிவந்தவர்களைத்தான் நாம் அறிவோம். ஒன்றாயிருந்த நாட்டைப் பிரித்து, மத, இனவெறிகளை யூட்டி மக்கட்கு இம்சை அளித்து வந்ததை நாம் அறிவோம். அந்த மக்களுக்கு நம் நாட்டில் புகலிடம் தந்து, அவர்கள் வாழ வழிவகை வகுத்துக் கொடுத்தது நம் அரசாங்கம்.

இன்று அந்நிய நாட்டிலிருந்து இந்தியர் அகதிகளாக அனுப்பப்படுகின்றனர். பல ஆண்டுகளாக அங்கேயே தங்கி, அந்த நாட்டின் அபிவிருத்தியிலேயே கண்ணுங் கருத்துமாக இருந்த ஏராளமான பேர்கள் இப்போது அகதிகளாக வருகின்றனர். தங்கள் வாழ்நாளின் பொற்காலத்தை அந்நிய நாட்டின் வளர்ச்சிக்குப் பயன்படுத்திவிட்டு, தள்ளாத காலத்தில், தான் பிறந்த ஊர், சுற்றத்தார், யாரென்று கண்டுபிடிக்க வேண்டிய நிலையில் பலர் இங்கு வந்துள்ளனர். அவர்களின் நிலைமை மிகவும் பரிதாபமாக உள்ளது.

பல ஆண்டு காலம் அங்கு உழைத்த உழைப்புக்கு, உழைப்பின் பயனுக்கு எவ்வகையான ஊதியமும் இன்றி, சொத்துக்கட்கு நஷ்ட ஈடு எதுவுமின்றி இங்கு வந்துள்ளனர். நேற்றுவரை செல்வந்தர்களாகவும், நல்வாழ்வு உள்ளவர்களாகவும் உள்ளவர்கள் இன்று அகதிகள் என்று தாய்நாடு வந்துள்ளனர்.

தேசீயம், தேசப்பற்று என்பது மனிதாபிமானத்தோடு கூடியதாக இருக்கவேண்டும். மனிதாபிமானம் அற்ற தேசப்பற்று வெறியாக மாறி மனித சமுதாயத்துக்குத் தீங்கு விளைவிப்பதாக அமைகிறது. இதற்குப் பர்மா அகதிகள் ஒரு எடுத்துக்காட்டு. எந்தப் பற்றும் மனிதாபிமானத்துடன் கூடியதாக இருக்கவேண்டும் என்பதை நாம் அனைவரும் உணர்ந்தால்தான் மனித சமூகம் முன்னேற்ற மடையும். உலகில் சுபிட்சமும் அமைதியும் நிலவும்.



தலைவர் திரு. கு. காமராஜ் அவர்களின் பிறந்தநாள் சிறப்பிதழாக வெளிவந்த அமைச்சன் ஜூலை இதழை, ஆசிரியர் திரு. கண. இராமநாதன் தலைவரிடம் வழங்கும் போது எடுத்த படம். உடனிருப்பவர், திரு. எஸ். கிருஷ்ணமூர்த்தி, ரீஜனல் ஆர்கனைசர், கிராம முழுவளர்ச்சி திட்டம். (திரு. எஸ். கிருஷ்ணமூர்த்தி, கிராம முழுவளர்ச்சித் திட்டம் பற்றிய விளக்கக் கட்டுரைகளை அமைச்சனில் தொடர்ந்து எழுதி வருகிறார்.)

# இளைஞர் பொறுப்பு

துன்ப வாழ்க்கை இந்தத் தலைமுறையோடு முடிந்துபோக வேண்டும். வருங்காலத் தவர் இந்தக் கஷ்டத்தை அனுபவிக்காமல் இருக்கும்படி செய்யவேண்டும். இந்த மகத்தான பொறுப்பு இளைஞர்களுக்கும் உண்டு. — கு. காமராஜ்

நேருவின் மறைவுக்குப் பிறகு நாம் ஒற்றுமையாய் இருப்பதால் தான் வெளிநாடுகள் இந்தியாவைப் பாராட்டுகின்றன. நாம் ஒன்றுபட்டதால் சுதந்திரம் பெற்ருேம். இனி அடுத்து சமதர்ம சமுதாயம் அமைக்க வேண்டும். சோஷலிச இலட்சியத்தை ஈடேற்ற வேண்டும். இது மிகப் பெரிய பொறுப்பாகும். இதற்கும் மக்கள் ஒன்று பட்டால் தான் காரியம் ஆகும். எதிர்க்கட்சிகள் பல கதைகள் சொல்லுவார்கள். அவை எல்லாம் வெறும் கதைகள் தாம்.

இளைஞர்கள் விஷயம் புரியாது அவைகளை நம்பி தவருன வழியில் தங்கள் வாழ்நாளைப் பாழாக்கிக் கொள்கிருர்கள். ஆரவாரத்தைக் கண்டு மயங்கி விடக் கூடாது. உதாரணங்களைக் கேட்டு இளம் இதயத்தில் விஷக் கருத்துக்களுக்கு இடம் தந்து விடக் கூடாது.

தற்கால வசதியுள்ள இளைஞர் பலர் அரட்டை அடிப்பவர்களாக இருக்கிருர்கள். இப்படியே நாளை ஓட்டி விடலாம் என்று கருதுகிருர்கள். சமூகத்தில் புரட்சி, குழப்பம் ஏற்பட்டால் இந்த வசதியுள்ள இளைஞர்கள்; தான் பாதிக்கப்படுவார்கள். ஏழைகள் பாதிக்க படமாட்டார்கள்.

இளைஞர்கள் மிகவும் பக்குவப் படவேண்டியிருக்கிறது. நாட்டைப் பற்றியும், சுதந்திரம் பற்றியும் நன்கு புரிந்து வைத்துக் கொள்ள வேண்டும். பல நாட்டு அரசியலையும் படித்து உணர வேண்டும். இங்குள்ள சில அடுக்கு மொழி அரசியல் வாதிகள் ஒப்புவிக்கும் சிறு கதைகள் தான் அரசியல் என்று நம்பி விடக் கூடாது.

எதிர்காலம் இளைஞர்களுடையது. அதற்கு இப்போதிருந்தே நல்ல அடிப்படையுடன் பாடுபட வேண்டும்.

துன்ப வாழ்க்கை இந்தத் தலைமுறையோடு முடிந்து போக வேண்டும், வருங்காலத்தவர் இந்தக் கஷ்டத்தை அனுபவிக்காமல் இருக்கும்படி செய்ய வேண்டும். இந்த மகத்தான பொறுப்பு இளைஞர்களுக்கும் உண்டு.

நம் காலத்திலே இதற்கு எல்லாம் ஒரு முடிவு கட்ட வேண்டும். நம்முடைய சந்ததியை கஷ்டத்தில் வைக்க எந்தப் பெற்ருேரும் விரும்ப மாட்டார்கள். அப்படி விரும்பினுல் அவர்கள் பெற்ருேர்

கள் ஆவார்களா? எனக்குப் பிள்ளை இல்லை! கஷ்டம் நமது கட்டையோடு போகட்டும், ஒவ்வொரு பெற்றோரும் இதனை உணர்ந்து தங்கள் பிள்ளைகளுக்கு இளமையிலே தேசபக்தியை ஊட்ட வேண்டும்.

இன்று நாடு இருக்கும் நிலைமை உணர்ந்து தேசத்திற்காகப் பாடு பட இளைஞர்கள் முன் வர வேண்டும்.

சுதந்திரத்தைப் பெறுவதற்காக எத்தனையோ, இளைஞர்கள் எவ்வளவோ தியாகம் செய்திருக்கின்றனர். அதனை யெல்லாம் படிக்க வேண்டும். எதிர்கால இந்தியாவில் ஏற்றத் தாழ்வுகளை ஒழித்து சோஷலிச சமுதாயத்தை நிறுவ ஆட்சிக்கு ஒத்துழைப்புத் தர வேண்டும்.



## கூந்தல் பராமரிப்பு

கூந்தலுக்கு விட்டமின்கள் அவசியமாகும். ஸ்பினைச் கீரை, முட்டைகோஸ், எலுமிச்சம் பழச்சாறு இவற்றைச் சமபங்குகளில் சேர்த்துத் தேய்ப்பது மெல்லிய முடிகளுக்கு நல்லது.

கூந்தல் வளர்ச்சி குறைவாக இருந்தால், காரட், எலுமிச்சம் பழச்சாறு இவற்றைச் சேர்த்து தலையில் தேய்க்க வேண்டும்.

தலையின் தோலை நன்கு தேய்த்துவிட்டால் முடிகள் நன்கு வளரும். இதைப் பின்வருமாறு செய்யவேண்டும். இரு கட்டை விரல்களையும் நெற்றிப்பொட்டில் வைத்து அழுத்தி இதர விரல்களின் நுனிகளால் நெற்றியிலிருந்து தொடங்கி தலையின் பின்புறம் வரையில் சுற்றிச் சுற்றி 10 நிமிடங்கள் அழுத்திவிட வேண்டும். பிறகு கெட்டியான சீப்பால் வாரிவிட வேண்டும்.

சத்துள்ள கலவைகளைத் தேய்த்துக் கொள்ளுவது நல்லது. சுத்தமான ஆலிவ் எண்ணெயில் ஐந்து மேஜைக் கரண்டி எடுத்து சிறிதளவு சுட வைத்து ஒரு எலுமிச்சம் பழ மூடியின் சாற்றைப் பிழிந்து கலந்துகொண்டு, அதை இரவில் தலையின் தோலில் தேய்த்துக் கொள்ள வேண்டும். காலையில் கழுவிவிட வேண்டும். மாதம் இவ்வாறு மூன்று நான்கு முறை தேய்க்கலாம்,

மற்றொரு கலவையையும் உபயோகிக்கலாம். இரண்டு முட்டைகளின் மஞ்சள் கருவுடன் அரை எலுமிச்சம் பழத்தின் சாற்றையும் ஒரு மேஜைக் கரண்டி ஆல்மண்டு எண்ணெயும் கலந்து தலைத்தோலில் தேய்த்து அரைமணி நேரத்திற்குப் பின் கூந்தலைக் கழுவிச் சுத்தம் செய்யவேண்டும். (நன்றி - சோவியத் நாடு)

திரு.

# கோ. வேங்கடாசலபதி

## அவர்கள் சேவைக்குப் பாராட்டு



*30-7-64* சென்னை ராஜாஜி ஹாலில் நடைபெற்ற பஞ்சாயத்து யூனியன் தலைவர்கள் இரண்டாவது மாநாட்டில் 16வருடங்களாக அபிவிருத்திக் கமிஷனராக சேவை செய்து ஓய்வு பெற்றுள்ள, திரு. கோ. வேங்கடாசலபதி அவர்களைப் பாராட்டி விழா நடைபெற்றது. அப்போது தமிழ்நாடு பஞ்சாயத்து யூனியன் தலைவர், ஸ்ரீ. கே. ராஜாராம் அவர்கள், 'வெங்கிடாசலபதி அவர்கள் தேசபக்தர், மதுரை ஜில்லா போர்டு உபதலைவராக இருந்தவர், சிறை சென்றவர், காந்தீயத்தில் உண்மையான பற்றுக் கொண்டவர், இந்தியாவிலேயே சென்னை ராஜ்ஜியத்தில் அபிவிருத்தி வேலைகள் சிறப்பாக நடைபெறுவதற்கு காரணமாக இருந்தவர் என்றால் மிகையாகாது' என்று குறிப்பிட்டார்.

மாநாட்டின் சார்பில்பாராட்டுத் தீர்மானம் ஒன்று பலருடைய அன்பு ஆரவாரத்தோடு நிறைவேற்றப்பட்டது.

தீர்மானத்தை ஆதரித்து ஜில்லாவிற்கு ஒரு பிரதிநிதியாகப் பேசினார்கள். ப. யூனியன்கள் மூலம், கிராமங்களை முன்னேறச் செய்ய வேண்டுமென்ற உண்மை நம்பிக்கையுடன் உழைத்தவரென்றுசெங்கற்பட்டு ஜில்லாவின் சார்பாக வில்லிவாக்கம் ப. யூ. தலைவர் திரு. ராஜகோபாலன் அவர்கள் கூறினார்.

வட ஆர்க்காடு ஜில்லாவின் சார்பாக துரிஞ்சாபுரம், ப. யூ. தலைவர் திரு. சீனிவாஸ ரெட்டியார் அவர்கள் "கிராம முன்னேற்றத்தைப்பற்றி கோ. வெ. பேசினாரென்றால் காலம் போவது கூடத் தெரியாமல் கேட்டுக் கொண்டேயிருக்கலாம், காந்தியடிகள் நினைத்த கருத்துக்களை சிறந்த முறையில் எடுத்துரைக்கும் ஆற்றலுள்ளவர்; நாம் உபயோகிக்கும் பொருள்கள் நம்முடைய நாட்டிலேயே உற்பத்தியானதாக இருக்கவேண்டுமென்று வற்புறுத்தும் இயல்புடையவர்," என்று குறிப்பிட்டார்.

தென்னார்க்காடு ஜில்லாவின் சார்பாக மரக்காணம் ப. யூ. தலைவர் திரு. வேணுகோபாலக் கவுண்டர் பேசுகையில், "எளிய வாழ்க்கை மேற்கொண்ட உயர் தர அதிகாரி, நாட்டின் வளர்ச்சியில் கண்ணுங் கருத்துங் கொண்டவர், பிரிந்து செல்வதைநினைத்து வருந்துகிறோம்." என்றார்.

சேலம் சார்பாக ஊத்தங்கரை ப. யூ. தலைவர் K. R. கிருஷ்ணன் 'காந்தியடிகளின் நிர்மாணத் திட்டத்தைப்பற்றி அவர் பேசிய பேச்சைக் கேட்டு, உற்சாகமும் ஊக்கமும் கொண்டேன். எனக்கு ஓர் எழுச்சியும் ஏற்பட்ட' தென்றார்.

கோவை ப. யூ. தலைவர் குமாரசாமி அவர்கள் "புதிய கருத்துக்களை ப. யூ. மூலம் பரப்பியவர். இளமையிலேயே அபிவிருத்தி வேலைகளில் ஆர்வம் கொண்டவர்; இந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டது மிகப் பொருத்தம்; அவர் ஓய்வு பெற்றுச் செல்வது மிகப் பெரிய வருத்தம்" என்றார்.

நீலகிரி கோத்தகிரி ப. யூ. தலைவர் நஞ்சாக்கவுடர் 'அதிகாரிகளுக்கே மனமாற்றம் ஏற்படச் செய்தவர்; எந்த நேரத்தில் சென்றாலும், குறைகளைக் கேட்டு ஆவன செய்யக்கூடியவர். கிராம சேவக்குகள் மீது மிகுந்த கவனம் செலுத்தியவர்,' என்றார்.

திருச்சி பெரம்பலூர் ப யூ. சேர்மன் V. ரத்தினம் பிள்ளை பஞ்சாயத்து யூனியன்களின் வரலாற்றிலே முக்கிய இடம் பெற்றவர் இன்று ஓய்வு பெற்றுச் செல்வதை நினைத்து தாயை இழந்த கன்றைப் போல் வாடுகிறோம் என்றார்.

தஞ்சை கோட்டூர் ப. யூ. தலைவர், திரு எஸ்.ஜி.முருகையன் தம் உரையில், "படாடோபமின்றிப் பணியாற்றியவர்; கடமை வீரர், சந்தேகங்களைத் தீர்த்து வைக்கக் கூடியவர். ப. யூனியன்களுக்கு ஆசானாக விளங்கியவர்," என்றார்.

மதுரை சேடபட்டி. ப. யூ. தலைவர் திரு. எஸ். அருணாசலம் அவர்கள் பேசுகையில், "மனத்திடம் கொண்டவர், ஆக்க வேலைகளில் நம்பிக்கையுடன் பணியாற்றுபவர்," என்றார்.

இராமநாதபுரம், கமுதி. ப. யூ. தலைவர் காதர்பாஷா என்ற வெள்ளைச்சாமி, அவர்கள், தம் உரையில் "நாணயமானவர், சட்டை போட்ட காந்தி, சொல்வன்மை பெற்றவர், ஒழுக்கத்துடன் பணியாற்றிய உயர்தர அதிகாரி" யென்றார்.

நெல்லை ஜில்லா, கடையநல்லூர் ப. யூனியன் தலைவர் திரு. ஏ. ஆர். சுப்பையா முதலியார், 'அவர் சேவையை சர்க்கார்தான் இழந்து விட்டது. நாம் இழக்கவில்லை, நமக்கு என்றும் உறுதுணையாக இருந்து வருவார்,' என்றார்.

கன்னியாகுமாரி தோவாளை ப. யூ. தலைவர் திரு ராஜாப் பிள்ளை மனிதாபிமானம் கொண்ட அதிகாரி எங்களுடைய ஐயத்தை நீக்கியவர் என்றார். அமைச்சர் திரு மஜீத் தன்னுடைய உரையில், "வெங்கடாசலபதி அவர்கள் தன்னுடைய சக்தியை உணர்ந்து பணியாற்றியவர், அதிகாரத்தில்லாதவர்களுடைய பிரதிநிதியாக சேவை செய்து வந்தவர்," என்றார்.

பாராட்டுரைகளுக்குப் பிறகு திரு. கோ. வெங்கிடாசலபதி அவர்கள், அன்பர்கள், நண்பர்கள், அலுவலர்கள், அமைச்சர்கள் அனைவருக்கும் தக்கமுறையில் பதில் உரைத்து, நன்றியைத் தெரிவித்துக் கொண்டார்.

தொகுத்தவர் : **குண்டத்தூர் என். எஸ். வாசன்**

—o—

ஒன்றா உலகத்(து) உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன்(று) இல்.

—திருக்குறள்

பஞ்சாயத்து யூனியன் தலைவர்கள்

# இரண்டாவது மாநாடு

30-7-64ம் நாள் சென்னை சர்க்கார்மாளிகையிலுள்ளபாலர் அரங்கில் ஆரம்பமாயிற்று. இறை வணக்கத்திற்குப்பின், தமிழ்நாடு பஞ்சாயத்து யூனியன் தலைவர். ஸ்ரீ. கே. ராஜாராம், எம்.எல்.ஸி. அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார். அவர், "பஞ்சாயத்து ராஜ்ஜிய நிர்வாகத்தில் நமது மாநிலம் முன் நிற்கிறது என்பதைப் பெருமையுடன் கூறிக் கொள்ள ஆசைப்படுகிறேன்என்றும்எல்லா பஞ்சாயத்து யூனியன்களிலும் நிர்வாகம் அமைதியுடன் நடைபெற்று வருகிறதென்றும் ஜனநாயக முறையின் வாளாயுதமான நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேற்ற பஞ்சாயத்துச் சட்டத்தில் வழி செய்யப்பட்டிருந்தும் ஒரு யூனியனிலும் அத்தகைய தீர்மானங்கள் நிறைவேற்றப்படவில்லை என்றும் இணக்கமான முறையில் கலந்து பேசிப் பொறுப்புணர்ச்சியுடன் யூனியன் நிர்வாகம் நடந்து வருகிறதென்பதற்கு இதுவே சான்றாகும் என்றும் கூறினார்.

நமது ராஜ்ய பஞ்சாயத்து நிர்வாகம் திறம்படச் செயல்படுவதற்கு முன்னாள் பிரதமகாரியதரிசி, ஸ்ரீ. ஆர்.ஏ. கோபால்சாமி I. C. S. அவர்களும் இணை அபிவிருத்திக் கமிஷனர், ஸ்ரீ. கோ. வேங்கடாசலபதி அவர்களும் எடுத்துக் கொண்ட முயற்சிகளே காரணம் என்றும் கூறினார்.

தமிழகப் பஞ்சாயத்து யூனியன் தலைவர்கள் மாநாட்டைத் துவக்கி வைத்து முதலமைச்சர். திரு. எம். பக்தவத்சலம் அவர்கள் பேசினார்.

"அதிகாரங்களைப் பரவலாக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் தான் பஞ்சாயத்து ராஜ்ய முறையை நாம் பின்பற்றினோம். இப்பொழுதுள்ள ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியனும் ஒரு ஸ்தல ஸ்தாபனமென்றே மனத்தில் கொள்ளவேண்டும். அதனால் தான் நாம் ஜில்லா போர்டுகளை எடுத்துவிட்டோம்" என்று அவர் உரையில் குறிப்பிட்டார்.

ஜில்லா அபிவிருத்திக் கவுன்ஸில்களின் அந்தஸ்து உயர்த்தப்பட வேண்டுமென்று அடிக்கடி கோரப்படுவது பற்றி முதலமைச்சர் கூறியதாவது, ஜி. ஆ. கவுன்ஸில் ஒரு ஆலோசனைக் குழு வாகத்தான் இருந்துவர வேண்டுமென்று குறிப்பிட்டார். நிர்வாக அதிகாரங்களுடன் கூடிய, பஞ்சாயத்து யூனியன்கள் இருக்கும் போது அதே போன்ற அதிகாரங்களை அபிவிருத்தி கவுன்ஸிலுக்கும் அளிப்பதில் அர்த்தமில்லையென்றார்.

நாட்டின் அபிவிருத்திக்கான ஆர்வம் அடிமட்டத்திலிருந்தே, தோன்ற வேண்டுமென்பதுதான் பஞ்சாயத்து ஆட்சிமுறையின் அடிப்படை நோக்கமாகுமென்றும், நிர்வாகத்தில் உள்ள பல்வேறு பிரிவுகளும் மொத்தமாக மக்களின் நலனுக்காகத் தான் என்பதை நினைவில் கொள்ள வேண்டுமென்றும் குறிப்பிட்டார்.

யூனியன் தலைவர்கள் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட

வேண்டு மென்ற கருத்தை ஏற்றுக் கொண்டார். அதனுல் கிராமப் பஞ்சாயத்துக்களுக்கு அளிக்கப்பட்ட முக்கியத்துவம் போய் விடு மென்றும் முதலமைச்சர் எச்சரித்தார்.

மாநாட்டுக்குத் தலைமை வகித்த திரு எஸ். எம். மஜீத் (அமைச்சர் ஸ்தல ஸ்தாபனத்துறை) பின் வருமாறு குறிப்பிட்டுப் பேசினுர்.

காந்தியடிகளின் கனவை நனவாக்கும் வகையில், இந்தியாவின் அரசியல் அமைப்புச் சட்டத்திலே, பஞ்சாயத்து ஆட்சிக்கு சிறப்பிடங் கொடுக்கப்பட்டது. அரசியல் சட்டத்தில் கண்டுள்ள இந்தக் கொள்கையை அமுல் நடத்துவதற்கு எல்லா இராஜ்யங்களும் தக்க முறையில் சட்டங்கள் இயற்றியுள்ளன. தமிழ்நாட்டைப் பொறுத்த வரையில், 1958-ம் ஆண்டு நிறைவேறிய பஞ்சாயத்துச் சட்டம், மிகவும் சிறப்பு வாய்ந்ததாகும். ஏனெனில், இந்தச் சட்டம். தமிழ்நாடு சட்டப் பேரவையில் உள்ள அரசியல் கட்சியினர் அனைவருடைய முழு ஆதரவுடன், ஏக மனதாக நிறைவேறியது. எனவே பஞ்சாயத்துச் சட்டத்தை எதிர்ப்பவரும், குறை கூறுவோரும் யாரும் இருக்க முடியாது.

புதிய பஞ்சாயத்துச் சட்டத்தின் முன்னுரையில், இரண்டு முக்கிய விஷயங்கள் வற்புறுத்தப்பட்டுள்ளன. உங்களுக்கு இவை நன்ருகத் தெரியும். அதாவது, முதலாவதாக, உணவு உற்பத்தியைப் பெருக்கவேண்டும். இரண்டாவதாக, மக்கள் தொகை பெருகி வருவதைக் குறைக்க வேண்டும். இந்த இரண்டு குறிக்கோள்களும், எவ்வளவு முக்கியமானவை என்பதை, இப்போது அனுபவத்தில் கண்டு வருகிருேம். பண்டங்களின் விலைகள் பெருகிக் கொண்டே போகும் நிலையில், மக்கள் அனைவரும் கவலைப்பட்டு வருகிருர்கள். எல்லா மக்களுக்கும் போதுமான அளவு பண்டங்களின் உற்பத்தி இல்லாததே இந்த நெருக்கடியின் மூல காரணமாகும். அதே சமயத்தில், மக்களின் தொகை வேகமாக அதிகமாகிக் கொண்டே போவதால், ஜனங்களின் தேவைகளும் பல மடங்காகப் பெருகுகின்றன. இந்த நிலைமை, மாற வேண்டும். மக்கள் தொகை, ஒரு கட்டுப்பாட்டிற்குள் வந்து, உணவுப் பொருட்களின் உற்பத்தி பன்மடங்கு அதிகரித்தால், நாட்டில் சிறந்த வளம் உண்டாக முடியும். இந்த உயர்ந்த கொள்கையை நிறைவேற்றுவதே, பஞ்சாயத்து ஆட்சியின் செயல் திட்டமாகும். இதற்காகவே, ஒவ்வொரு கிராமத்திலுள்ள பஞ்சாயத்தும், ஒவ்வொரு வட்டாரத்திலுள்ள பஞ்சாயத்து யூனியனும் தக்க வகையில் பாடுபட்டு வருகின்றன. சுருங்கச் சொன்னுல், கிராமங்களில் வாழும் பெரும்பாலான மக்களின் குறைகளைப் போக்கக்கூடிய வழிவகைகளை, நீங்கள் ஆராய்ந்து செயல்படுத்த வேண்டும்.

குறைகளைப்பற்றியே அதிகமாகப் பேசிக் கொண்டிருந்தால், அவை நீங்கி விட மாட்டா. குறைகளைத் தீர்ப்பதற்கான வழிகளைக் கண்டுபிடிக்க வேண்டும். இதை, ஒருவரால் மட்டும் செய்துவிட முடியாது. என்னுலோ அரசாங்கத்தாலோ மட்டும், செய்துவிட முடியாது. அதேபோல, ஒரு பஞ்சாயத்து யூனியன் தலைவரோ, அல்லது பஞ்சாயத்துத் தலைவரோ, சட்டசபை உறுப்பினரோ, பாராளுமன்ற அங்கத்தினரோமாத்திரம், இக்குறைகளைத் தீர்த்துவிட முடியாது. ஆகவே தான், நாம் அனைவரும், அதாவது அரசாங்க அதிகாரிகள், பொதுஜனங்களால் தேர்ந்தெடுக்

கப்பட்ட தலைவர்கள் ஆகிய இரு சாராரும், ஒன்றுகூடி, இந்தப் பிரச்சினைகளைத் தீர்க்க முயல வேண்டும்.

புதிய பஞ்சாயத்துச் சட்டத்தின்படி, சில முக்கிய பொறுப்புகள், சட்ட பூர்வமாக உங்களுக்குத் தரப்பட்டுள்ளன. அவற்றை மிகவும் வெற்றிகரமாக நீங்கள் நிறைவேற்றியிருக்கிறீர்கள் என்பதை, மகிழ்ச்சியோடு நான் தெரிவித்துக் கொள்கிறேன். குறிப்பாக, ஒவ்வொரு பஞ்சாயத்திலுமுள்ள ஆரம்பப் பள்ளிகளின் நிர்வாகம், உங்களிடம் ஒப்படைக்கப்பட்டது. புதிதாகப் பிள்ளைகளை பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பும் வகையில், எல்லாப் பஞ்சாயத்துக்களும் சிறந்த பணியாற்றியுள்ளன. பள்ளிக்குச் செல்லும் சிறுவர் சிறுமிகளின் எண்ணிக்கை, மிகவும் அதிகரித்துள்ளது. இது பாராட்டுக்குரிய நல்ல செய்தியாகும். அத்துடன், மதிய உணவு அளிக்கும் பொறுப்பையும், எல்லாப் பஞ்சாயத்து யூனியன்களும் திறம்பட நடத்தி வந்துள்ளன. தமிழ்நாட்டின் வரலாற்றிலேயே, இது ஒரு புது முயற்சியாகும். கிராமங்களில் வாழும் பெரும்பாலான ஏழை எளியவர் வீட்டுக் குழந்தைகள் கல்விச் செல்வம் பெறுவதற்கு, நீங்கள் பெரிதும் உதவி வருகிறீர்கள். இந்த உதவி, மேலும் தொடர்ந்து, சிறப்பான வகையில் நடைபெறும் என நம்புகிறேன்.

உள்துறை அமைச்சர், திரு. கக்கன் அவர்கள் பேசுகையில், கிராமங்களில் சிறு சேமிப்புத் திட்டத்தை ஊக்குவிக்குமாறும், வேளாண்மை வளர்ச்சி பெற முயற்சி செய்யுமாறும் கேட்டுக் கொண்டார்.

சபாநாயகர், திரு. செல்லப் பாண்டியன், அவர்கள் க்ஷேம நலத்திட்டங்களை நிறைவேற்றும் நிர்வாகக் கிளை எப்படியிருக்க வேண்டும் என்பதைப்பற்றி, மேல் நாடுகளில் தான் கண்டுவந்த விஷயங்களை எடுத்துரைத்து, தயவு தாட்சண்யமின்றி நேர்மையுடன் பணிபுரிய வேண்டுமென்றார்.

செய்தித்துறை அமைச்சர், திரு. பூவராகன், மீன் வளர்ப்பு பற்றியும், அதைப் பயன்படுத்தும் முறை பற்றியும் கூறி விட்டு, ப.யூ. வேலை இதுவரை நாம் எப்படிச் செய்து வந்திருக்கிறோம், இனி எப்படிச் செய்ய வேண்டும் என்பதையும் விளக்கினார்.

உணவு மந்திரி, திரு. மன்றாடியார் பேசுகையில் கிராமங்களில் நீங்கள் ஆற்றிவரும் பணிகளைப் பொறுத்துத்தான், வளர்ச்சி இருக்கின்றதென்று கூறினார்.

சுகாதார மந்திரி திருமதி ஜோதியம்மாள் அனுப்பிய செய்தியில், கிராமங்களில், தொத்து நோய் பரவாமல், பெரியம்மை தடுப்பு, மலேரியா ஒழிப்பு திட்டம் ஆகியவை வெற்றிபெற பாடுபடவேண்டுமென்று தலைவர்களைக் கேட்டுக் கொண்டார்.

த. நா. கா. தலைவர். திரு. ரா. கிருஷ்ணசாமி பேசுகையில்,

பஞ்சாயத்து யூனியன்கள் மூலமும், கூட்டுறவு சங்கங்களின் மூலமும், கடையனுக்கும் கடைத்தேற்றம், ஏற்பட பாடுபட வேண்டும், நாம் வாழவேண்டும், பிறரை வாழவிட வேண்டும், வாழத் தெரியாதவனுக்கு, வாழக்கற்றுக் கொடுக்கவும் வேண்டும் அந்தக் காலத்திலே எப்படியிருந்தோம், அபிவிருத்தி வேலைகள் எப்போது, எப்படி ஏற்பட்டது என்பதையும் மக்களுக்கு, குறிப்பாக வாலிபர்களுக்கு எடுத்துரைப்பதையும், ப. யூ. தலைவர்கள் தங்கள் கடமையாகக் கருதவேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

சாஸ்திரியின் வெற்றிரகசியம் இதுதான். சிக்கல்களைத் தீர்ப்பதில் நாசூக்காக நடந்துகொள்வார். பேச்சுவார்த்தைகள் நடந்துகொண்டே யிருக்கும். இருதரப் பினரும் பேசித் தீர்வுகண்டதுபோல் சாஸ்திரி காணும் பைசலே இறுதியில் மேலோங்கி நிற்கும்.

# லால்பகதூர் சாஸ்திரி வரலாறு

ஐம்பத்தொன்பது ஆண்டுகளுக்கு முன்பு லால்பகதூர் பிறந்தார். மகாத்மா காந்தி பிறந்த தேதியில் இவரும் உதித்தார். ஆனால் இவர் இவ்வளவு மேம் பதவிகளை யெல்லாம் பெறுவாரென்று இவரது ஜாதகத்தைப் பார்த்த எவரும் ஜோசியம் சொல்லி யிருக்க முடியாது.

லால்பஹதூரின் தந்தை எளிய பள்ளி ஆசிரியர். வாரணாசிக்கருகில் ராமநகர் என்ற ஊரில் இருந்தார்.

## பதினாறில் பெற்ற பேறு

லால்பகதூர் வாரணாசியில் ஹரிச்சந்திரா உயர்நிலைப்பள்ளியில் படித்து வந்தார். 1920-ல் அவருக்கு 16 வயதிருக்கலாம். மகாத்மா காந்தியின் ஒத்துழையாமை இயக்கம் அவரை இழுத்துக் கொண்டது. லால்பகதூர் கைது செய்யப்பட்டார். ஆனால் சில மணி நேரத்திற்கெல்லாம் இளம்பிள்ளை என்று விடுதலை செய்யப்பட்டார்.

பிரிட்டிஷ் அரசாங்கம் நடத்தும் பள்ளிகளில் அல்லது அரசாங்க மான்யம் பெறும் பள்ளிகளில் படிக்கலாகாது என்பதுசத்தியாக்கிரஹ இயக்கத்தின் ஒரு பகுதியாகும். அதனால் லால்பகதூர் மறுபடியும் பள்ளிக்கூடத்தில் சேரவில்லை. சமூக சேவையில் பற்றுக்கொண்டு லோக் சேவா மண்டலில் சேர்ந்தார்.

சில ஆண்டுகள் கழிந்தன. பள்ளிக்கூட பகிஷ்காரத்தினால் கல்வி வாய்ப்பை இழந்தவர்களுக்காக காசி வித்யா பீடம் துவக்கப்பட்டது. லால்பகதூர் இதில் சேர்ந்தார். 22 அல்லது 23 வயதில் கல்வியில் தேறினார்; அவருக்கு "சாஸ்திரி" பட்டம் வழங்கப்பட்டது. இது இன்றைய பி. ஏ. பட்டத்துக்குச் சமம். அந்நாள் முதல் லால்பகதூர் என்ற பெயருடன் சாஸ்திரி என்ற பட்டமும் ஒட்டிக் கொண்டது.

காசி வித்யா பீடத்தில் லால்பகதூர் படித்த நாளில், ஆசிரியர்களாக இருந்து வந்தவருள் காங்கிரஸ் சோஷலிஸ்டு இயக்கத்தின் ஸ்தாபகரான ஆசாரிய நரேந்திர தேவாவும், உத்திரப் பிரதேச முதல் மந்திரியாகப் பணியாற்றிய டாக்டர் சம்பூரணாநந்தும் குறிப்பிடத் தக்கவர்கள்.

## சிறையும் சேவையும்

1931-ல் சட்ட மறுப்பு இயக்கத்தில் தான் சிறைவாச அனுபவம்

முதல் முதலாகக் கிடைத்தது. 1940-ல் தனி நபர் சத்யாக்கிர ஹம் வந்தது; இவர் சிறை புகுந் தார். 1942-ல் ''வெள்ளையனே வெளியேறு'' இயக்கம் வந்தது; லால்பகதூரை வலித்துச் சென் றது.

1936-ல் மந்திரி பதவி ஏற்பது என்று காங்கிரஸ் முடிவு செய் தது. 1937-ல் காங்கிரஸ் மந்திரி சபை அமைத்தது. ஐக்கிய மாகாணத்தில் மந்திரிகளில் ஒரு வரானார் லால்பஹதூர் சாஸ்திரி. காங்கிரஸ் பதவிகளைத் துறக்கும் வரை இருந்தார். 1946-ல் காங் கிரஸ் மீண்டும் மந்திரி சபை அமைத்தது. உள்துறை மந்திரி யானார் லால்பகதூர். 1951-ல் பாபு டண்டன் காங்கிரஸ் அக்ரா சனர் பதவியை விட்டு விலகி ஓராண்டுக்குப் பின்னரும் லால்பக தூர் காங்கிரஸ் பொதுக் காரிய தரிசிப் பதவியை ஏற்றார். அப் போது நேரு பிரதமராகவும், காங் கிரஸ் அக்ராசனராகவும் இருந் தார்.

லால்பகதூர் திறமைக்குச் சோதனை வந்தது. பொதுத் தேர் தலுக்கு காங்கிரஸ் அபேட்சகர் களைப் பொறுக்கி எடுக்கும் பெரும் பொறுப்பை வகித்தார். 3000 அபேட்சகர்களை நியமித்தார். பலர் தள்ளப்பட்டனர். அவரிடம் எவருக்கும் மனத்தாங்கல் ஏற்பட வில்லை. இணக்கவாதி; சமரச வாதி; ஆக்கத் திறன்மிக்க பிரத் யட்சவாதி; இவ்வாறெல்லாம் புகழ் பெற்றார். இன்முகத்தினால் வெல்லும் ராசி உள்ளவர்.

பண்டித பந்த் இறந்ததை யடுத்து உள்நாட்டு மந்திரி பத வியை ஏற்றார். மிகவும் சர்ச் சைக்கிடமான ஆட்சி மொழி மசோதாவை பார்லிமெண்டில் கொணர்ந்து நிறைவேற வைத் தார்; இவரது புகழ் மேலும் ஓங்கி யது.

லால்பகதூரிடம் பலமான தார் மீக உணர்ச்சி உண்டு! (அவர் உறுதியான மதப் பற்றுள்ளவர். இதில் நேருஜியிலிருந்து வேறுபட் டவர்.) 1952-ல் ரயில்வே மந்திரி பதவி யேற்ற சிறிது காலத்திற் கெல்லாம் பெரிய ரயில் விபத்துக் கான பொறுப்பை தாமே ஏற்றுக் கொண்டு பதவியிலிருந்து விலகியது அவரது நியாய உணர்ச்சிக்குச் சான்று; அவருக் கும் விபத்துக்கும் சம்பந்த மில்லை யென்றாலும் விலகினார்.

### உறுதியோடு நயமும் உண்டு

இரண்டு ஆண்டுகளுக்கு முன் பொதுத் தேர்தல் நடந்தது; உள் துறை மந்திரிப் பதவிக்கு திரும்பி னார். காமராஜ் திட்டத்தின் கீழ் இதை விடும் வரையில் பதவி வகி த்து வந்தார். நயம்பட உரைத்து திருப்பும் சமரச பாவத்துடன் உறுதியும்படைத்தவர், அஸ்ஸாம் மொழி கலகம்; பஞ்சாப் சீக்கியர் மொழிக் கிளர்ச்சி கேரளத்தில் காங்கிரஸ் பி. சோ. சிக்கல் இவற்றை யெல்லாம் நாசூக்காகக் கையாண்டார். சாஸ்திரியின் வெற்றியின் ரகசியம் இதுதான்: பேச்சு வார்த்தைகள் நடந்து கொண்டே இருக்கும், இரு தரப் பினரும் பேசித் தீர்வு கண்டது போல சாஸ்திரி காணும் பைசல் இறுதியில் மேலோங்கி நிற்கும். சாஸ்திரி வெற்றி பெறும் வழி இது வே யாகும்.

லால்பகதூர் இப்போது பெற் றுள்ள ஸ்தானத்தில் நீடிப்பதற்கு சமய சந்தர்ப்பங்கள் உறுதுணை யாக நிற்கின்றன. தலைமை, சாஸ்திரி போன்றவர்கள் கைக்கு மாறினால் கடந்த 16ஆண்டு அனு பவத்தில் ஊறிய அடிப்படை ஜன நாயகப் பண்புகளுக்குக் கட்டுப் பட்டவர்களைக் காணலாம். இவர் கள் ஆட்சியில் ஜனநாயகக் கருத்துக்கள் வளரும். வாழ்க சாஸ்திரி!

மத்திய, மாநில அரசுகள், தங்களிடமுள்ள அரசாங்க அதிகாரத்தைப் பரவலாக்கி, கிராம மக்களிடமே ஒப்படைக்க வேண்டுமென்ற கொள்கை, நாம் செயல்பட விரும்பும் கிராம முழுவளர்ச்சித் திட்டங்களுக்கு மிகவும் உதவியாக இருக்கும்.

# கிராம முழு வளர்ச்சித் திட்டம்

**எஸ். கிருஷ்ணமூர்த்தி**

(தென் பிராந்திய அபிவிருத்தி அதிகாரி)
கதர் - கிராமக் கைத்தொழில் கமிஷன்.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில், அகில இந்திய கதர்-கிராமக் கைத்தொழில்கள் கமிஷனின் வேலைத் திட்டங்கள், கிராம முழு வளர்ச்சித் திட்டத்தின் அடிப்படையிலேயே இருந்து வர வேண்டுமென்ற முடிவின் படியே, மாநிலங்களில் இயங்கி வரும் கதர் கிராமக் கைத்தொழில்கள் போர்டுகள் பெரும் ஸ்தாபனங்கள் செயல் புரிந்து வருகின்றன. கிராம முழு வளர்ச்சித் திட்டத்தின் செயல் முறைகளைப் பற்றி சற்று ஆராய்வோம்.

முக்கியமாக, இதுகாறும், ஆங்காங்கே, வேலையற்றிருக்கும் மக்களுக்கு வேலை வாய்ப்பளிக்கும் வகையில் ஆரம்பிக்கப்பட்டுள்ள கதர்-கிராமக் கைத்தொழில்கள், இனி, அவ்வாறின்றி, சமூக நல் வாழ்வுக்கான இதர அம்சங்களையும் கொண்டதொரு புதிய திருப்பத்தை ஏற்படுத்தும் வகையில் ஒரு குறிப்பிட்ட பிராந்தியத்தின் முழு வளர்ச்சியையும் காணும்நோக்கத்தோடு அமைந்ததாயிருக்கும்,

ஆகவே இன்று பாரதம் முழுவதிலும் சுமார் ஒருலட்சம் கிராமங்களில்நடைபெற்றுவரும்கதர் கிராமக் கைத் தொழில்கள் திட்டங்கள், தனித்தனியே ஒன்றுக்கொன்று தொடர்போ இணைப்போயின்றி இயங்காமல், கமிஷனின் வரம்பிற்குட்பட்ட அத்தனை கிராமக் கைத்தொழில்களையும் எவ்வளவுக்கு அதிகமாக ஏற்படுத்த முடியுமோ அவ்வளவையும் புகுத்தி, கிராமங்களில் கோர தாண்டவமிடும்வேலையின்மையைப் போக்கி, கிராமப் பொருளாதாரத்தை உயர்த்த வேண்டுமென்பதே நம் லட்சியமாகும். இவ்வாறான திட்டங்களை நன்கு நிறைவேற்ற, தற்போதையப் படியே நிதி உதவி தொடர்ந்து தரப்படும்.

கதர்-கிராமக் கைத்தொழில்களில் ஈடுபட்டுள்ளோருக்கு, ஏறக்குறைய விவசாய வேலைகளில் கிடைக்கும் அளவுக்காவது ஊதியம் கிடைக்கும்படி இருக்க வேண்டும். இதற்கேற்ப, கதர்-கிராமக் கைத்தொழில்கள் உற்பத்தி செய்யும் வகைகளில் பெருமளவு ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டு, உற்பத்திச் சாதனங்கள் விஞ்ஞான ரீதியில் அபிவிருத்தி செய்யப்பட வேண்டும். இது விஷயத்தில் நாம் மற்ருெரு விஷயத்தையும் மறந்து விடலாகாது. நாம் செய்யும் விஞ்ஞான முன்னேற்ற முறைகள் மூலம், கிராமங்களிலுள்ள பாமர மக்களின் உழைப்பு சக்தி சுரண்டப்படுவதோ அல்லது, ஏற்கனவே கதர்-கிராமக் கைத்தொழில்களில் ஈடுபட்டுள்ளோர், வேலையற்றுப் போகும் நிலைமையை உண்டாக்குவதாகவோ செய்யக் கூடாது.

எங்கெங்கெல்லாம் தேவைப்படுகிறதோ, மக்களிடத்திலே ஆர்வம் காணப்பட்டால், அங்கெங்கெல்லாம், உள்ள நிலைமைகளை , அனுசரித்து, கிராமக் கைத்தொழில்களைப்புகுத்துவது மிகவும் வேண்டப்படுவதுதான். உதாரணமாக, சாதாரணமாக, அநேக இடங்களில், அம்பர் ராட்டை, மட்பாண்டம் செய்தல், தேனீ வளர்ப்பு, தோல் செப்பனிடுதல் போன்ற கிராமத் தொழில்கள் தேவையிருக்கும். இவைகளை ஸ்தாபிப்பதற்குமுன்பாக, சம்பந்தப்பட்ட இடங்களின் சமூக - பொருளாதார புள்ளி விவரங்களை எடுப்பது மிகவும் அவசியமாகும். திட்டங்கள் வகுக்கும் போது மற்ருேர் பிரச்னையையும் மனத்தில்கொள்ளவேண்டும். கிராமக் கைத்தொழில்கள், உற்பத்தி செய்யப்பட்ட பிறகு, அவைகளை விற்பனை செய்வதில் பெருத்த சிரமம் ஏற்படாதவாறு பார்த்துக் கொள்ள வேண்டும்.

நாம் ஏற்கனவே குறிப்பிட்டபடி, 3 வது ஐந்தாண்டுத் திட்டத்தில், கிராம முழுவளர்ச்சித் திட்டமானது ஒரு முக்கிய பாகமாக இருந்து வருகிறது. நம் நோக்கம், கிராமமக்கள் தாங்களாகவே தற்போது செயல்பட்டு வரும் பல்வேறு ஸ்தாபனங்களுடைய உதவியையும், உற்ற ஒத்துழைப்பையும் கொண்டு, கிராமங்களில் சகல துறைகளிலும் முழு வளர்ச்சி ஏற்படும் வகையில், திட்டங்களைத் தீட்டவேண்டுமென்பதே அதாவது, கிராம மக்கள் தங்கள் சமுதாயம் முழுவதும் சமூக பொருளாதார மேம்பாடு அடையத்தக்க பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டு மென்பதே இதன் கருத்து. மக்கள் இத்தகைய சமூகப் பொறுப்பை ஏற்றுக் கொண்டு, அதற்கேற்ப உணர்ச்சி கொள்வார்களாளுல், மக்களுக்குத்தேவையான அடிப்படை வாழ்க்கை வசதிகளும், தேவைகளும் தாளுகை கிடைக்கப் பெறும். தற்போதைய வேறு

பாடுகள் நீங்கி, சமூக நீதியும் நிலைநாட்டப்படும்.

மத்திய, மாநில அரசுகள், தங்களிடமுள்ள அரசாங்க அதிகாரத்தைப் பரவலாக்கி, கிராம மக்களிடமே ஒப்படைக்க வேண்டுமென்ற கொள்கை நாம் செயல்பட விரும்பும் கிராம முழு வளர்ச்சித் திட்டங்களுக்கு மிகவும் உதவியாக இருக்கும். பொதுவாக அபிவிருத்தித் திட்டங்கள் மாவட்ட அளவிலேயே வகுக்கப்பட வேண்டுமென்று எதிர்பார்க்கப் பட்டபோதிலும்,எல்லாமாநிலங்களிலும் அபிவிருத்தித் திட்டங்கள் வட்டார அளவிலேயே அமைய வேண்டுமென்ற முடிவுக்கு வந்துள்ளன. இதன் கருத்து, பஞ்சாயத்துக்களும், வட்டாரங்களும் தங்கள் தங்கள் திட்டங்களைத் தாங்களே வகுத்து, மாவட்டத் திட்டங்களுக்கு ஏற்ப நிறைவேற்றப் பட வேண்டுமென்பதே.

நாம் மேலும் ஒருபடி அதிகமாகச்செல்கின்றோம். ஒவ்வொரு வட்டாரமும் சுமார் 10 முதல் 20 வரை எண்ணிக்கையை யுடைய கிராம முழு வளர்ச்சித் திட்ட (கிராம எகாயி) பகுதிகள் கொண்டதாயிருக்கும். அத்தனைப் பகுதிகளையும் ஒரே சமயத்தில் தொடங்குவதென்பது காரிய சாத்யமற்றதாயிருக்கலாம். நல்ல வாய்ப்புள்ள வட்டாரத்திலும், 'கிராம எகாயி' பகுதிகளிலும் வேலைகள் முதலில் தொடங்கப் படலாம். இரண்டு மூன்று ஆண்டுகளுக்குள் வட்டாரம் முழுவதையுமே முழு வளர்ச்சித் திட்டத்தின் கீழ் எடுத்துக் கொள்ள முயற்சிக்கலாம்.

அது போன்றே, திட்டத்தின் வெற்றியைப் பொறுத்து, நாளாவட்டத்தில், டிவிஷன், மாவட்டம் முழுவதையுமே 'கிராம முழு வளர்ச்சித் திட்டத்தின்' அடிப்படையிலேயே அமைக்கத் தக்கவாறு திட்டங்கள் வகுத்துக் கொள்ளலாம்.

இந்த அடிப்படை நோக்கத்தோடு, சம்பந்தப்பட்ட ஊழியர்கள் அனைவரும் பாடுபட்டு, நாட்டில் தற்போது நிலவி வரும் சமூகப் பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் அறவே ஒழிந்து, ஜாதி பேத மற்ற-வர்க்க பேத மற்ற-சத்தியத்தையும் அஹிம்சையையும் கொண்ட ஓர் சமுதாயம் ஏற்படஇறைவன் அருள் புரிவானாக.



உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேரா தியல்வது நாடு

— திருக்குறள்

# ஆட வாரேன்!

நாக முத்தையா

ஆட வாரேன்—உன்னோ டாட வாரேன்.
பாடுமெழில் மன்னவனே!—ஆட வாரேன்
கூடுமுறை தானறிந்து கூடிடுவாய் கோமகனே.
குன்றுயர்த்த இன்றமிழே! கூடியபின் பாடிடலாம்!

—ஆடவாரேன்!

இட்டமுடன் உன்னுடலைக் கைத்தலங்கள் பற்ற
'அட்டி இலை' என்றுநீயும் என்னுடலைச் சுற்ற
சுற்றியுள மாந்தரெலாம் 'சுந்தர'மென்ரூர்ப்ப
'சொந்தமடா இன்ப'மெனச் சிந்தைநலஞ் சேர்ப்ப

—ஆடவாரேன்!

கொஞ்சுமெழில் முகத்தினிலே மிஞ்சுவளம் காண
அஞ்சவெழும் காலினிலே அழகமுதைப் பேண
பிஞ்சுமனப் பான்மையது பெருங்குணத்தால் மாண
'குஞ்சரமே' எண்றெண்ணிக் கோழையர்கள் நாண

—ஆடவாரேன்!

துள்ளியெழும் வீரத்தைத் துணைக்கரங்கள் காட்ட
அள்ளிவரும் ஆர்வத்தை நெஞ்சுரந்தான் கூட்ட
கிள்ளிவரும் துன்பத்தைக் கேள்விநலம் ஓட்ட
மெள்ளவரும் இன்பத்தை மிக்கநிலை நாட்ட

—ஆடவாரேன்

# பஞ்சாயத்துக்களுக்குச்

## சில யோசனைகள்

### மாதர் நலம்

ஒவ்வொரு கிராமத்திலுமுள்ள பெண்களுக்கென 40, அல்லது 50 பேர்களுக்குத் தனிப் பயிற்சி வகுப்புகள் நடத்தி துப்புரவு—தொத்து வியாதிகளுக்குக் காரணம்—வியாதி வராமல் தடுப்பதெப்படி—முதல் உதவி—சம சத்துணவு உட்கொள்ளல்—இலகு வைத்தியம் — சிறுசேமிப்பு—விவசாயம்—பொறுக்கு விதை—பயிர் பாதுகாப்பு—பூச்சி மருந்துகள்—ஓய்வு நேரத்தை பயனுள்ளதாகக் கழித்தல்—குடும்பநலத் திட்டம் ஏன் வேண்டும்—முதலியவற்றை எளிதான முறையில் கேள்வி ஞானத்தின் மூலம் சௌகர்யமான, வீட்டு வேலையில்லாத நேரமாகப் பார்த்துத் தினமும் மூன்று மணி நேரம் வீதம் ஒரு வாரம் அல்லது பத்துத் தினங்களில் வகுப்புகளை முடிக்கலாம். மீண்டும் மற்ற பெண்களுக்கு புதிய வகுப்புகள் நடத்தலாம். மாதர் நல இலாக்கா இம்முயற்சியை மேற்கொள்ளச் செய்தல் நலம்.

### உணவு உற்பத்தியைப் பெருக்க ஊக்கமளித்தல்

பஞ்சாயத்துக்கள் உணவு உற்பத்தி விஷயத்தில் மேலும் அதிகக் கவனம் செலுத்த வேண்டும். விவசாயிகளுக்கு வேண்டிய கொழுக்கம்பி, வண்டிப்பட்டா, மண்வெட்டி, பிக்காக்ஸ், கடப்பாரை முதலிய கருவிகள் அடக்க விலைக்கு பஞ்சாயத்துக்கள் மூலம் விவசாயிக்குக் கிடைக்கச் செய்ய வேண்டும். அதேமாதிரி, புண்ணக்கு, உரம், பொறுக்குவிதை, பூச்சி மருந்து ஆகியவற்றை முற்கூட்டியே திட்டமிட்டுப் பஞ்சாயத்து யூனியன் கிட்டங்கியில் சேமித்து வைத்து உரிய காலத்தில் கிடைக்கச்செய்யவேண்டும். மண்ணில் உள்ள பூசாரத்தை அறிந்து, அதற்குத் தகுந்த பயிரைச் சாகுபடி செய்ய வழி செய்து கொடுக்கவேண்டும்.

### ஆசிரியர்கள்

பாடசாலை ஆசிரியர்கள் தங்கள் பொறுப்பையும். கடமையையும் உணர்ந்து எதிர்கால சமுதாயம் நல்ல பண்புள்ள சமுதாயமாக அமைய, பிள்ளைகளைப் பேணிக் காத்து தேசப் பற்றுடன் வாழக் கற்பித்தால்தான் நாடு உண்மையிலேயே சீர்பெற முடியும். இல்லையேல் அரசு, அரசியல் கட்சிகள், ஆகியவற்றின் பணி, விஞ்ஞானத்தின் பயன் ஆகியவையெல்லாம் வீணுவதோடு எதிர்காலச் சந்ததிகளின் சாபத்திற்கு இன்றையச் சமுதாயம் ஆளாக வேண்டி வரும் என்பதை ஒவ்வொருவரும் உணர வேண்டும்.

### நிதிநிலையை அபிவிருத்தி செய்தல்

பஞ்சாயத்துக்களுடையவும், பஞ்சாயத்து யூனியன்களுடையவும், நிதி நிலையை அபிவிருத்தி செய்ய, தினசரி அல்லது வாராந்தரச் சந்தைகள் சினிமாக்கள், அரிசி மில்கள் ஆகியவற்றை நடத்துதல், பஸ் ரூட்டுகளைக் கொடுத்து பஸ் ஓட்டச் செய்தல் முதலியவற்றை மேற்கொள்ளச் செய்யலாம். இம்மாதிரியான வருவாய் வரத்தக்க இனங்களை மேற்கொள்ள வசதியாகக் கடன் கொடுத்து உதவ ராஜ்ய ரீதியில் ஒரு நிதிக் கார்ப்பரேஷன் அமைக்கப் படல்வேண்டும்.

—கே. ராஜாராம்.

'நூலகர் என்பவர் யார்? அவர் எப்படி வாசகர்களிடம் நடந்துகொள்ளவேண்டும்?' என்னும் கேள்விகட்குச் சிறந்த முறையில் விளக்கங்கள் தந்துள்ளார் இக் கட்டுரையாளராகிய நூலகர்.

சிறுமைகள் மாய, உயர்வு பொங்க, அறிவு தங்க, சங்கப் பொருளாகிய நூலகத்திற்கு நம்மை அழைக்கும் நூலகரின் அழைப்பை ஏற்றுக்கொண்டு, இக் கட்டுரையைப் படிக்க முற்பட்டால் பல அரிய உண்மைகள் மிக எளிய முறையில் எடுத்து விளக்கப்பட்டிருத்தலைக் காணலாம்.

# நூலகர்

வே. தில்லைநாயகம், எம். ஏ.,
(நூலகர், கன்னிமாரா நூலகம், சென்னை.)

### முதலாள்

நூலால் உலகளக்கும் நூலகப் பணியில் முதலிடமும் சிறப்பிடமும் பெறக் கூடியவர்-பெற வேண்டியவர்-பெறுபவர் நூலகர்-நூலகப்பணியாளர்! ஆம்; இது வரை சொல்லப்பட்ட நூலகப் பஞ்ச சீலங்களை உருவாக்கி, செயற்படுத்தி 'வளரும் நூலகத்தில், காலங்கருதி, நூலுக் கொரு ஆள் கண்டு, ஆளுக்கொரு நூல் தந்து, நூற்கள் படிப்பதற்கே' என்னும் உண்மையை நிறுவிக் காட்டியவர்-காட்டுகிறவர்-காட்டுபவர் அவரே! நூலகத்தை உருவாக்கி நடத்தி, நூலகப்பணியை நெறிப்படுத்தி, அறிவாக்கம் அமைத்துப் பாடுபடுபவர் அவரே! எனவே அவரும் நூலுணர்வு கொண்டவராய் - நூலகவுணர்வு கொண்டவராய் - பணிபுரிய வேண்டும்.

### வைத்திருப்பவர்

நூற்கள் படிப்பதற்கே என்ற கருத்து உருவாகுமுன் 'நூற்கள் பத்திரப்படுத்துவதற்கே' என்றிருந்த காலத்தில் நூலகரின்பணி எளிது; சுலபமானது. அப்போதைய பணி நீரிலிருந்து-நீர் படாமல்-ஈரம் படாமல்-ஈரப்பட்டுக் கெட்டுப் போகாமல்-காக்க வேண்டும். நெருப்பிலிருந்து-தீப்பட்டு வெந்து போகாமல்-காக்க வேண்டும். பூச்சியிலிருந்து-அந்து, கரையான், கரப்பான், பாச்சை, எலி முதலிய

வைகள் கடித்துக் கொதறி உண்டு பாழ்படுத்தி விடாமல்-காக்கவேண்டும். மனிதனிடமிருந்து-மனிதன் புரட்டி, காகிதம் கிழித்துப் பாழாக்கி விடாமல் காக்கவேண்டும். எனவே நூலகத்தை நாளுக்குக் கொஞ்ச நேரம் திறந்திருந்து பார்த்து விட்டு மூடிவிட்டால் போதும். நூற்கள் பத்திரமாயிருக்கும். எனவே அப்போதைய காவலாள் நூற்களைப் பத்திரமாக வைத்திருப்பது வேலையாயிருந்தார் - எனவே அவர் 'வைத்திருப்பவர்' 'வைத் திருப்பவர்' (Keeper) என்று அழைக்கப்பட்டார். இந்த வைத்திருக்கும் வேலை பாதுகாக்கும் பொறுப்புடைய அனைத்து வேலைக்கும் பொதுவாயிருந்தது. இதனை தமிழ்நூற்கள்(பண்டாரகர் (பண்டங்களை வைத்திருப்பவர்) என்று குறிப்பிடுகின்றன.

## நூலகர்

காலம் மாறியது. கருத்து வளர்ந்தது. அறிவுபரவியது. விஞ்ஞானம் சிறந்தது. அச்சுக்கலை வந்தது. காகிதக்கலை முன்னேறியது. நூற்கலை பிறந்தது. நூற்கள் நூறுக் கணக்காக, ஆயிரக்கணக்காக வெளியாயின. அவை பயன்படுத்துவதற்காக ஓரிடத்தில் சேர்த்து வைக்கப்பட்டன. அவைகளைப் பயன்படுத்தப் பலர் தேடி வந்தனர். எனவே வேண்டு வார்க்கு வேண்டியதை, வேண்டிய நேரத்தில், வேண்டிய விதத்தில் தர ஆள் வேண்டியதாயிற்று. அதை இருந்து, பார்த்து, கொடுத்து, கண்காணிக்க வேண்டியிருந்தது. எனவே அவ்வேலையைச் செய்யமுன் வந்தவர் -நூலக வேலைகளைச் செய்யவந்தவர்-நூலகர் (Librarian) ஆனார்.

## சிறப்புப்பணியாளர்

ஒவ்வொரு துறைப்பணிக்கும் அந்தந்தத் துறைக்கேற்ற சிறப்புப் பணியாளர் (Special staff) இருப்பது போல-அவசியம் போல -நூலகத்துறைக்கும் சிறப்புப்பணியாளர் - நூற்களை வந்தபோது வாங்கிவைக்க, அதை நூலகத்தில் சேர்த்துக் கணக்கு வைக்க, பகுத்துப் பட்டியிட்டு வைக்க, கேட்டது எடுத்துக் கொடுக்க, தூசி தும்பு தட்டிச் சுத்தமாய் வைக்கச் சிறப்புப்பணியாளர் தேவையாயிற்று. அவரே நூலகர் சிறப்புப் பணியாளர் ஆனார்.

எனினும் நீண்ட காலம்வரை உலகின் பல்வேறு பகுதிகளிலும் சிறப்புப் பணியாளர் சிறப்புப் பணியைச் செய்யவில்லை. அவர் தனக்குக் கீழ்ப்பட்ட ஒருவரை-வேறு வேலை இல்லாத நேரத்தில் இந்த வேலையைச் செய்பவராக-இதையன்றி வேறுபல வேலைகளையும் செய்பவராக-வைத்திருந்தார். எனவே நியமிக்கப் பட்ட நூலகர் அந்த வேலையை, எப்படிச் செய்ய வேண்டும், எதற்காகச் செய்ய வேண்டும் என்று அறிந்தாரில்லை. அவரை நியமித்தவர்களும் அறிந்திருக்கவில்லை.

எனவே இந்தப் பகுதி நேர வேலையை யாராவது ஒருவர்-பெரும்பாலும் தாய்நிலையத் தலைவரின் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஆள்-அல்லது தாய் நிலையத்தில் எந்த வேலைக்கும் இலாயக்கற்ற ஆள்-எனினும் இரக்கத்தின் காரணமாக வெளியே அனுப்பி விடப்படாது இங்கு தள்ளிவிடப் பட்ட ஆள்-கூன், குருடு, செவிடு, ஊமை, நொண்டியான ஆள்-நூலகரா யிருந்தார்.

## படித்தபணியாளர்

இந்த நூலகருக்குப் படிப்போ இல்லை; பயிற்சியோ கிடையாது. இரக்கத்தால் இங்கு வந்த சேர்ந்த ஆள் என்ன பணியாற்ற முடியும்?

நூற்களோ நூலகத்திற்கு அதிகமாய் வரத் தொடங்கின. அதனுள் பொதிந்து கிடக்கும் கருத்துகளோ ஏராளம்! அதனைத் தெரிந்து சொல்லி உதவவோ ஆள் கிடையாது.

எனவே நூலகரின் படிப்பு நிலையில் ஒரு மாற்றம் தேவையாயிற்று. பணிமகனை நூலகராக்குவது மாறியது. அரைக் குறைப் படிப்புடைய ஆளை போடும் நிலை பிறந்தது. அதுவும் பயனில்லை.

படித்தபணியாளர்- குறைந்தது பல்கலைக் கழகத்தில் ஒரு பட்டம் பெற்றவர்-பள்ளியில், கல்லூரியில், பல்கலைக்கழகத்தில் குறைந்தது பதினைந்து ஆண்டுகளாவது பயின்று பட்டம் பெற்றவர்-போட்டால்தான் பணி நடக்கும் என்ற நிலை பிறந்தது.

'நூலகத்தில் நூற்கள் ஏராளமாயுள்ளன, எனவே நூற்கள் வாங்கச் சிறிதளவு செலவழி. ஆனால் இருக்கும் நூற்களில் பொதிந்து கிடக்கும் கருத்துகளை வெளியே எடுத்துச் சொல்ல படித்தவர்கள் தேவை, அவர்களை நூலகராக்கு. பயன் கிட்டவழியுண்டு' என்று ஆர்னல்ட் பென்னட் போன்றவர்கள் வழி காட்டினர்.

எனவே காலப் போக்கில் பட்டம் பெற்ற பணியாளர் (Learned staff) ஆனார் நூலகர்.

### பயிற்சி பெற்ற பணியாளர்

பட்டம் பெற்ற பணியாளர் நூலகரான பின்பும் நூலகவேலை சரியாக நடக்கவில்லை. காரணம்? பட்டம் பெற்றவர் ஏதோ ஒரு சில முறைகளில் 'மட்டுமே பரிச்சயம் கொண்டவராயிருந்தார். சில சமயம் நல்ல அறிவும் கொண்டிருந்தார். எனவே தான அறிந்த துறைகளில் சுமாராகப் பணிபுரிய முடிந்தது. ஆனால் அறியாத் துறைகளில் அளவிறந்த அல்லற்பட்டார்.

இதற்கு ஒரு மாற்றம் வேண்டியிருந்தது. சாதாரணமாக ஒரு துறையில் ஒருநிலை வரை படித்தவர்-மற்றைய துறைகளிலும் நூலக வேலைக்குத் தேவையான அளவு-அறிவுபெற வேண்டியிருந்தது. அத்துடன் நூலகத் துறைப் பணி முறையிலும் பயிற்சி தேவைப்பட்டது.

பொறியியற்றுறை வேலைக்கு வருபவர் ஒரு குறிப்பிட்ட காலம் அத்துறையில் பயிற்சி பெற்றுப் பொறியர் ஆவது போல-மருத்துவத்துறையில் பயின்று மருத்துவர் ஆவது போல-நூலகத்துறையில் ஒரு குறிப்பிட்ட காலம்-பல்கலைக் கழகத்தில் ஓராண்டாவது-பயிற்சி பெற்ற பின்னரே நூலகராக வேண்டும். இம்முறையிலே பயன் பெற்ற பணியாளர் (Trained staff) ஆனார் நூலகர். இதில் முயற்சி படிப்படியாக முன்னேறி வருகிறது. அதன்படி பல்கலைக் கழகத்தில் பொதுப்பட்டம் ஒன்றும் நூலகத்துறை பயிற்சிப் பட்டம் ஒன்றும் பெறாதயாரும் 'நூலகர்' என்ற சொல்லை பதவிப் பெயர் (designation) ஆக உபயோகிக்க அனுமதிக்கக்கூடாது. அரசாங்கப் பதவிப் பெயர்களும் இதனைக் கருத்திலிருத்தியே அமைக்கப்பட வேண்டும். அப்போது தான் புதிய துறையான நூலகத் துறையும் ஒரு நல்லிடம் பெறமுடியும்.

### நல்லூதியப் பணியாளர்

இப்படி யெல்லாம் நூலகர்-சிறப்புப்பணியாளராக - படித்த பணியாளராக-பயின்ற பணியாளராக-முன்னேறிப் பணிபுரிய முன் வந்தாலும் அதைச் சரியாகப் புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை, மக்கள். ஏன்?

எதையும் காசால் கணக்கிடும் காலமிது! 'ஏழைசொல் அம்பலம் ஏருது' என்பது தமிழ்ப் பழமொழி. சரியாகவோ, தவருகவோ இன்று சமூகம் ஒரு மனிதனை அவன் வைத்திருக்கும் சொத்தைக் கொண்டோ, அல்லது அவன் வாங்கும் ஊதியம்-சம்பளம்-கொண்டோ தான் கணக்கிடுகிறது. இதை மறைக்க மாற்று விளக்கங்கள் சொல்லிப் பயனில்லை.

அதன்படி நூலகத்திற்கு வரும் பல்வேறு மக்கள்-வாசகர் - பல்வேறு படிப்பு நிலையினர்-செல்வ நிலையினர்-ஊதிய நிலையினர்-வருகின்றனர். அவர்கள் தங்கள் ஊதிய நிலையோடு நூலகரின் ஊதிய நிலையை ஒப்பிட்டு நூலகரைக் குறைவாகவே மதிப்பிடுகின்றனர். அது நூலகரின் பணியையும் குறைத்து எடைபோடச் செய்கிறது. அது நூலகப் பணியையே முன்னேற விடாமல் தடுக்கிறது.

• இந்த நிலைமாற வேண்டும்; மாற்றவேண்டும். மற்ற துறைகளில் பணியாற்றுபவரின் ஊதியம்-அவர் படிப்பு, பயிற்சி, பணிப் பரப்பளவு, பணிமுறை முதலியவைகள் கொண்டு நிர்ணயிக்கப் படுவது போலவே - நூலகரின் ஊதியமும் நிர்ணயிக்கப் படவேண்டும். அவர் நல்லூதியப் பணியாளர் (Well paid staff) ஆக வேண்டும்.

### சம்பளமா ?

போனநூற்ருண்டில் பிரிட்டிஷ் மியூசிய நூலகருக்குச் சம்பளம் அதிகமாக்கப்பட வேண்டும் என அப்போதையப் பிரதமர் கிளாட்ஸ்டனுக்கு வேண்டுகோள் வந்ததாம்! அப்போது அவர் 'நூலகத்திற்குப் பணந்தான் செலவாகிறது;வரும்படி ஒரு பென்னி கூட இல்லை இப்போது கொடுக்கப்படும் சம்பளமே அதிகம்; சொல்லப் போனுல் நூலகர் பயன்படுத்தும் நூற்களுக்காக அவரிடம் கட்டணம் கூட வாங்க வேண்டும்' என்ருராம் வேடிக்கையாக. அதை உண்மையாக நம்பிக் கடைப் பிடித்து வரும் நம் நாட்டு நிலை மாறவேண்டும்.

### நகாய்க் கல்வெட்டு

இந்த நல்லூதியப் பணியாளர் தேவையை 900 ஆண்டுகட்கு முன்னரேயே நம்மவர் உணர்ந்திருக்கின்றனர்! சாளுக்கிய அரசர் இராய நாராயணனின் படைத்தலைவரும் மந்திரியுமான மதுசூதனன் உணர்ந்திருந்ததாக கி. பி. 1058 டிசம்பர் 24 ல் நகாய் (Nagai) க்கிராம 'அறுபது கம் படக்குடி' என்ற கோயிலில் செதுக்கப்பட்ட கன்னடக் கல்வெட்டுக் கூறுகிறது.

'அதன்படி மது சூதனன் ஏற்படுத்திய' கடிகாசாலா, என்னும் குடியிருப்புக் கல்லூரியில் 200 மாணவர்கள் வேதம் படித்தனர். 52 மாணவர்கள் சாஸ்திரங்கள் படித்தனர். அவர்களைப் பயிற்ற 3 வேத ஆசிரியர்களும், 3 சாஸ்திர ஆசிரியர்களும்....6 நூலகர் (சரசுவதி பண்டாரிகர்) களும் இருந்தனர்.

'அதில் வேலை பார்த்த பிரபாகர தர்சனப் பேராசிரியருக்கு 48 மட்டர் (Mattar) அளவு நிலமும், பட்டனதர்சனப் பேராசிரியருக்கு 35 மட்டர் அளவு நிலமும், நியாயப் பேராசிரியருக்கு 30 மட்டர் அளவு நிலமும், நூலகர் ஒவ்வொருவருக்கும் 30 மட்டர் அளவு நிலமாக ஆறு நூலகர்களுக்கும் அளிக்கப்பட்டன.

இதனைப்படிக்கும் போது கல்லூரி ஒவ்வொன்றிற்கும் எத்தனை நூலகர்கள் இருந்திருக்கிருர்கள் என்றும், அவர்கள் நிலை பேராசிரியர்களுக்கு ஒப்பாக இருந்திருக்

கிறது என்றும் எவ்வளவு தூரம் நூலகங்கள் கல்லூரியின் சிறப்பாயமைந்திருந்தன என்றும் அறிய முடிகிறது.

அதே சமயம் இப்போதைய நூலகர்கள் நிலை; அவர்கள் ஊதியநிலை; அவர்களைப் பற்றிச் சமூகத்தில் உள்ள கருத்து முதலியவைகளை அறியும் போது இன்னும் நாம் எவ்வளவு முன்னேற வேண்டியிருக்கிறது என்று புலனாகிறது.

### பணமா ? பணியா ?

ஆனால் அதற்காக பணம் போதவில்லை யென்ற காரணத்திற்காக நூலகர் சோர்ந்து விடுதல் கூடாது! அன்பர் பணி செய்ய என்னை ஆளாக்கி விட்டு விட்டால், இன்ப நிலை தானே வந்து எய்தும் பராபரமே என்ற தாயுமானவரின் அடிச்சுவட்டில் முன்னேற வேண்டும்.

அதற்கான சூழ்நிலை நாட்டில் மெல்லமெல்ல-ஆனால் நிச்சயமாக -உருவாகி வருவதைக் காண்கிறோம். அந்த நிலை மேலும் விரைவுபட-விரைவுபடுத்த-நூலகர்-நூலகப்பணியாளர் - அயராது - தொடர்ந்து-பணிபுரிய முன்வர வேண்டும். அதுவும் எப்படி ?

### நூலகர் இலக்கணம்

நூலகர்சிறப்புப்பணியாளராய்-படித்த பணியாளராய்-பயிற்சி பெற்ற பணியாளராய்-நல்லூதியம் பெறுபணியாளராய்-இருக்க வேண்டும். ஆனால் அதுமட்டும் போதாது. பவணந்தி முனிவர் செப்பியது போல் 'கலைபயில் தெளிவு' கட்டுரை வன்மை, நில, மலை, நிறை கோல், மலர் நிகர் மாட்சியும், உலகியலறிவோடுயர்குண மிணையவும் அமைய வேண்டும் நூலகர்.

### கலைபயில் தெளிவு

நூலகர் தான் கற்றுத் தேறிய துறைகளிலே, ஆழ்ந்த அறிவும், அகன்ற பயிற்சியும் கொண்டிருக்க வேண்டும். அத்துறையின் பழைய வரலாறும், இன்றைய நடை முறையும், எதிர்கால வளர்ச்சித் திட்டமும் உணர்ந்திருக்க வேண்டும். அத்துறை நூல்கள் அறிவும் நூற்றொகை உணர்வும் கொண்டவரா யிருக்க வேண்டும்.

### கட்டுரை வன்மை

நூலகப்பஞ்ச சீலத்தின் அடிப்படை, கருத்து, செயல் திட்டம், கிட்டும்பயன் முதலிய அனைத்தையும்-ஆசிரியர் மாணவர்களுக்கு முறையாகச் சொல்லித்தருவது போல-வாசகர்களுக்கு நூலகர் சொல்லிவைக்க வேண்டும். அதன்படி நடப்பதால்-நூலுணர்வோடு நடப்பதால்-வரும் பயனையும், பெருமையையும் அனைவரும் அறியச் செய்யவேண்டும். கனன்று வந்த வாசகரும் கனிந்துருகிச் செல்லும் வகையில் நூலகப் பணியை-அதன் காரணத்தால் ஏற்படும் கட்டுத்திட்டங்களுக்குட்பட்டால் தான்-வாசகர்கள் ஒத்துழைத்தால்தான்-நல்ல பணிசெய்யமுடியும் என்பதற்காக நூலகர் செய்யவேண்டிய பணியை-எடுத்துரைக்க வேண்டும்.

### நிலமாட்சி

> தெரிவரும் பெருமையுந்திண்மையும் பொறையும்
> பருவ முயற்சி யளவிற் பயத்தலும்
> மருவிய நன்னில மாண்பா கும்மே.

நிலம் ஓரிடத்தில் நின்று பார்த்து முடிப்பதற்கு அரியதாகப் பரந்தது. உருவத்தில் பெரியது. பெரிய பாரத்தைத் தன் மேல் நெருக்கி வைப்பினும் கலங்காத வலிமையுடையது. தன்னைத் தோண்டுவார் மேல் கோபியாது அறிந்து முயல்வார்க்கும் பயன்தரும். காலமறிந்து முயன்றால் நல்ல பயனைத் தரும்.

அதுபோல பிறரால் கண்டறிய முடியாத கல்வியறிவு, பெருவாதம் செய்து நெருக்கி வருவாரைக் கண்டு கலங்கா வல்லமை, தன்னை யடுத்து நிற்கும் பணியாளரும் வாசகரும் அறியாமையால் இகழும் போதும் முனியாத பொறுமை, வாசகர் வேண்டுமளவுக்கு நூற்களும், செய்தியும், பிறவும் கொடுக்கும் நல்லெண்ணம் முதலியன கொண்டிலங்க வேண்டும்.

### மலைமாட்சி

அளக்க லாகா வளவும் பொருளுந்
துளக்க லாகா நிலையுந் தோற்றமும்
வறப்பினும் வளந்தரும் வண்மையு
மலைக்கே.

அளத்தற்கு ஏலாத பெருவடிவமும், பல்வகைப் பொருட்களைத் தன்னிடத்தே கொண்டிருந்தலும், எப்படிப் பட்டவர்களாலும் அசைக்க முடியாத உருநிலையும், எட்டிநின்று காணினும் காணக்கூடிய உயர்வும், மழை வரண்டாலும் தான் வரளாது ஊற்று நீரால் கொடைதரும் குணமும் கொண்டது மலை.

அது போல நற்சான்றிதழ்களால் மட்டும் அளவிட முடியாத கல்வியறிவு, பல்துறைப் பயிற்சி, எத்துறையினரானும் அவர்களுக்கு வேண்டியது தந்துதவக் கூடிய நூலகப் பயிற்சி, வெளியிடத்தி லிருப்பாரும் போற்றும் வகையில் பணிபுரி நோக்கம், தன்னிட மில்லாத தன் நூலகத்தில்லாத-கருத்துகளை அல்லது நூற்களைக் கேட்டுவந்தபோதிலும் இல்லை யென்னாது பிற நூலகங்களிலிருந்து பெற்றுக் கொடுக்கும் கொடை எண்ணம் கொண்டிருக்க வேண்டும் நூலகர்.

### நிறைகோல் மாட்சி

ஐயந்தீரப் பொருளை யுணர்த்தலும்
மெய்ந்நடு நிலையு மிகுநிறை கோற்கே.

நிறுக்கப்படும் பொருளைச் சந்தேகத்திற் கிடமின்றிச் சரியாக அளந்து காட்டலும், இருதட்டுக்கும் மத்தியிருந்து எப்பக்கமும் சாயாமல் நிற்றலும் தராசின் குணமாம்.

அதுபோல வினவப் பட்ட சொற்பொருள் நிலையை ஐயத்திற்கிடமின்றி அறிவிக்கச் செய்தியும் நூலும் தருதலும், மாறுபட்ட கருத்துகள் எதிலும் இருப்பதாயின், அதனையும் கேட்டார்க்கு தந்துதவும் நடுநிலைமையும்-ஒரு சார் கருத்துக்கு ஏற்ப விளக்கந் தராது நிலையும்-தன்னைச்சார்ந்த பணியாளர்களில் ஒருவரை விரும்பியும், ஒருவரை வெறுத்தும் நடக்காத நடுநிலையும் கொண்டிலங்க வேண்டும் நூலகர்.

### மலர்மாட்சி

மங்கல மாகி யின்றி யமையாது
யாவரு மகிழ்ந்து மேற்கோள் மெல்கிப்
பொழுதின் முகமலர் வுடையது பூவே

நற்செயல்களுக்குரியதாய், அலங்கரிக்கும் தாளில்லாமல் எதுவும் நடக்கக் கூடாததாய், கண்டார் விரும்பிச் சூட்டிக் கொள்ளக் கூடியதாய், மென்மையாய், மலர வேண்டிய பருவத்தில் மலரும் தன்மையுடையதாய் விளங்கும் பூ!

அதுபோலசமுதாயப் பணியாளராகிய நூலகர், சமூகத்தில் நடக்கும் காரியங்கள் அனைத்திலும் தொடர்புகொள்பவராய், அக்காரியங்களில் தன்னால் முடிந்த அளவு உதவுபவராய், வாசகரெல்லாம் விரும்புவராய், எந்நேரமும் பணி செய்யக் காத்திருக்கும் பண்பினராயிருக்க வேண்டும் நூலகர்.

### கடமையாளர்

இத்துடனமையாது நூலகர் கடமையுணர்வுள்ளவராய் - வாசகர்களுக்குக் கடமைப்பட்டவராய் நூற்களுக்குக் கடமைப்பட்டவராய்-தொழிலுக்குக் கடமைப்பட்டவராய்-தன்னோடு பணியாற்

றும் பணியாளர்களுக்குக் கடமைப்பட்டவராய்-தனக்கே கடமைப் பட்டவராய் - பணியாற்ற வேண்டும்.

### வாசகர்க்குக் கடமை

நூலகப்பணியில் நூலகர்க்கு அடுத்தஇடம் பெறுபவர் வாசகர். அவருக்கும் நூலகர்க்கும் உள்ள பிணைப்பு அறுக்கமுடியாத-அறுக்கக்கூடாத-பிணைப்பு. நூலகரில்லாத நூலகத்தைப் வாசகர்பயன் படுத்த முடியாது. வாசகர் இல்லாதநூலகம் பயனற்றது. எனவே நூலகர் வாசகர்க்கு நண்பராய், வழி காட்டியாய், ஆசானாய் விளங்கவேண்டும்.

எனவே நூலகம் வரும் ஒவ்வொரு வாசகரையும், ஒவ்வொரு உறுப்பினரையும் நூலகர் நேரடியாக அறிந்திருக்க வேண்டும், உணர்ந்திருக்கவேண்டும். வளர்ந்து வரும் நூலகத்தில் வளர்ந்து வரும் வாசகர்களை யெல்லாம் அறியமுடியுமா? நூலகர் அறிந்து கொள்ள முடியாதுதான்.

வீட்டிற்குவரும் விருந்தினரை வீட்டின் தலைவரில்லாவிட்டால் அடுத்தவர் வரவேற்று உபசரிப்பதில்லையா? அதனை வீட்டாரோ விருந்தினரோ தவறாய்க்கொள்வதில்லை. அதுதான் முடியக் கூடியது.

அதுபோலவே நூலகரால் முடியாதபோது-அவருக்கு அடுத்த நிலையிலுள்ளோர் முதல் கடைநிலை ஊழியர்வரை வாசகரை வரவேற்கலாம்; வரவேற்க வேண்டும். அமைதியான, அன்பான வரவேற்பு அனைவரையும் கவரும்.

### வாசகர் பலரகம்

அங்ஙனம் வரும் வாசகர்கள் பலரகம். ஒவ்வொருவரும் ஒரு ரகம். எனவே ஒவ்வொருவரையும் அவர்போக்கிலே கவனிக்க வேண்டும். அப்படியானால் அதற்காக உளவியல் பயிற்சி பெறுவதா எனக் கேள்வி எழலாம். சரியாகச் சொன்னால் நூலகர்-நூலகப்பயிற்சி பெறும் போது-சிறிது பயிற்சி பெறுவது அவசியம் என்று கூடச் சொல்லலாம். ஆனால் அது பெறவில்லை என்பதற்காக யாரும் வருந்தவேண்டியதில்லை.

தேவையே கண்டு பிடிப்பின் தாய் என்பது ஒருபழமொழி. அம்முறையிலே நாள்தோறும் பல் வேறுவாசகர்களைக் கண்டுகண்டு உளவியல் பயிற்சி பெற்று விடலாம். அம்முறையிலே நூலகத்திலிருக்கும் ஒவ்வொரு கணமும் வாசகரைத் திருப்திபடுத்த இருக்கிறோம் நாம் என்ற எண்ணப் போக்கு வந்துவிடின் அனைத்தும் வந்துவிடும். முயன்றால் முடியாத தொன்றில்லை.

வாசகர்களில் ஒரு ரகம் பயந்த சுபாவத்தினர். எதையும் கேட்கக் கூச்சப்படுவர். அமைதியாக அவர்களிடம் பேசினால் பயம் மறையும். பின்வேண்டியது கேட்டுக்கொடுத்து உதவலாம்.

வாசகர்களில் ஒருரகம் எல்லாமறிந்ததாக எண்ணுபவர்கள். அதை ஏன் மறுக்கவேண்டும் நாம்? அவர்களிடம் மெல்ல ஒன்றுந் தெரியாதவர்கள் போல நாமணுக வேண்டும். அவர்களுக்காகவே நாம் இருப்பதாக-சொன்னது கேட்க இருப்பதாக-அணுகினால் பயன்தரும். ஓடும்மாட்டை விட்டுப் பிடிப்பது போல, சிறிது நேரம் அவர் போக்கிலே விட்டுப் பிடித்தால் எல்லாம் சரியாகி விடும். பின்னர் நம்வழிக்கு வந்து விடுவார். பின் நம்மையே வாழ்த்துவார்.

### மகளிர்

வாசகர்களில் மற்றொரு ரகம் மகளிர். மாறிவரும் சமுதாயத்தில் பெண்கள் முன்னேறி வருகின்ற

னர். எனவே அவர்களும் அச்சமின்றி ஆண்களோடு பெண்களும் நூலகத்தில் பயன் பெறமுடியும் என்ற நம்பிக்கை யெழும் வண்ணம் அடக்கமாக, பணிவாக அவர்களை அணுகி வேண்டியது செய்ய வேண்டும். இதற்குதவியாக ஒவ்வொரு நூலகத்திலும் ஓரிரு பெண்பணியாளர்கள் பணிபுரியும் வகை செய்யலாம்.

### தொடங்கிவை

இப்படி யெல்லாம் வரவேற்ற வாசகர்கள் ஒவ்வொருவரும் ஆளுக்கொருநூல் பெறும் வண்ணம் நூலக அமைப்பை, நூலகப் பட்டி, அமைப்பைநூல் அடுக்கும் அமைப்பை, உறுப்பினராகும் முறையை, நூலீயும் முறையை, பிற நூலகப்பணி விவரங்களை எடுத்துக் கூறிநூலகப்பணியினைத் தொடங்கி வைக்க வேண்டும்.

வாசகர் ஒவ்வொருவரும் குறிப்புதவி பெற வாய்ப்புச் செய்ய வேண்டும். அது நூலுக்கொரு ஆள்கிடைக்க வழி செய்யும். அடுத்து ஒவ்வொரு கட்டத்திலும் வாசகர் தனது நேரத்தை வீணாக்காமல்-வீணாக்குவதாக நினையாமல்-நூலக நடைமுறையை அமைத்து அவர்கள் எண்ணிக்கையை அதிகமாகச் செய்ய வேண்டும். அது நூலகம் வளரவழி செய்யும்.

### நூலகப்பாங்கன்

தலைவன் யாருக்கும் அஞ்சாதவன். ஆனால் ஒரு நாள் எங்கோ சென்று மீள்கையிலே ஒரு அணங்கைக் கண்டான், அன்றிருந்து அவன் போக்கு, தகிக்கும் வெயிலில் கொதிக்கும் பாறையிலுருகும் வெண்ணெயை எடுக்க விரும்பிய கையில்லூமை, போன்றவனானான் நண்பன்-பாங்கன் - மெதுவாகத் தலைவனோடு பேசினான். விவரமறிந்தான். தலைவியைக் கண்டதும் பிறவும் அறிந்தான். தலைவியின் பாங்கியை யணுகினான். நிலைமை சொன்னான். தலைவனும் தலைவியும் சந்தித்தார்கள். கொஞ்ச காலத்தில் மணம் கொண்டு மக்களும் பெற்றுவிட்டனர். இருவரும் பாங்கனைப் போற்றினர். பாங்கன் தலைவனும் தலைவியும் சந்தித்து மணம் கொண்டு குடும்பம் தொடர்ந்ததை எண்ணுவதிலே பெருமை கொண்டான்- என்கின்றன சங்ககாலக் காதற் காவியங்கள்!

அந்த பாங்கன் இன்று நூலகர்; வாசகர்தான் தலைவன்; நூற்கள் தான் தலைவி; அவர்கள் குடும்பம் தான் புதிய கருத்துக்கள்!-என்று சொன்னால் தவறாகுமா ? ஆகாது.

எனவே அன்றையப் பாங்கன் போல-இன்றைய நூலகர்-வாசகர் நாடிவரும் குறிப்பறிய-நூலறிய -உதவி செய்யவேண்டும். நூற்கள் கிடைப்பின் வாசகர் மகிழ்வார், ஊன்றிப்படிப்பார். சிந்தனை பிறக்கும், புதுக்கருத்துகள் தொடங்கும்; அறிவு வளரும்; ஆராய்ச்சி பெருகும்; உலகம் முன்னேறும். எனவே வாசகர்கடமையை முடித்து அடுத்த கடமையைக் காணலாம்.

### நூற்களுக்குக் கடமை

நூலகத்தின் கருப்பொருள்யாது ?
நங்காலத் தன்றிமுன்னர் வாழ்ந்திருந்த
நல்லவர்கள் அறிஞர்கள் கருத்தை
யெல்லாம்
பொங்கார்வத் தோடறிய அன்னார் ஈந்த
புத்தகங்கள் நமக்குதவி யாக நிற்கும்!
எங்கே நாம் இருந்தாலும் இடத்தால்
காலத்
தியல்பினால் விலகினர்தம் கருத்தை
யெல்லாம்
மங்காம லறிந்து கொள்ளும் கருவியாக
மாநிலத்தில் இருப்பவைநூற் குவையே
யன்றோ !

இத்தகு நூற்கள் ஒவ்வொன்றிற்கும் உடலுண்டு; உயிருண்டு. எனவே அவ்வுடலும் உயிரும்

சேர்ந்து வாழ்ந்து இருந்தால்தான் மக்கள் பயன்பெறமுடியும். எனவே நூலகர் தன் உடம்பை நலமே பேணி, உயிரைப் பேணி பணி புரிவது போல நூற்களையும் பேண வேண்டும்.

எனவே நூற்கள்—உடம்புகள் நீரால், நெருப்பால், புழுபூச்சி களால், மனிதமோசடிகளால் கெடாமல், கெட்டுப் பாழாகாமல் பாதுகாக்கவேண்டும். ஒவ்வொரு நூலும் நூலகத்திற்கு வந்தவுடன் கட்டுக் (binding)கட்டி நூலடுக்கு களில் வைக்கவேண்டும். அங்ஙனம் அடுக்கப்பட்டவைகள் ஆபத்திற்குள்ளாகமல் மேலிருந்து கீழே விழுந்து முதுகு வளையாமல், அட்டைகள் ஒடியாமல், காகிதங்கள் கிழியாமல், புழு பூச்சி அரிக்காமல்-எடுத்துச் சென்ற வாசகர் எண்ணெய் தேய்த்துக் குளிபாட்டி மஞ்சள் குங்குமமிட்டு, காணுமற்போக்கி கையறு நிலை பாடி விடாமல் - பாதுகாக்க வேண்டும்.

உயிர் உண்டு என்பது அவன் பொருளடக்கத்தைக் குறிப்பதாகும். அந்த உயிர் நூலகத்தின் பண்பைக் கெடுக்காமல் - சமுதாயத்தின் வாழ்வைக் குலைக்காமல்- மக்களின் வாழ்வை பறிக்காமல்- இருப்பதாகப் பார்த்து நூற்கள் வாங்கவேண்டும். இங்கு நூலகரின் விருப்பு, வெறுப்புத் தலைக் காட்டாமல் சமுதாய நலமொன்றே கருத்திலிருக்க வேண்டும்.

அப்படி வாங்கப்பட்ட நூல் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வாசகராவது பெறவேண்டும். இல்லாவிட்டால் சங்க காலத் தலைவி வாட்டமறிந்து, தலைவியின் மனங் கவர்ந்த தலைவனைக் கண்டு பேசி, சந்திக்கச் செய்து மண முடித்து வைத்ததாகக் கூறப் படும் பாங்கிபோல நூலகர் ஒவ்வொரு நூலுக்கும் ஒருவாசகரைக் கண்டு பிடித்து நூல் பயன்படச் செய்யவேண்டும்.

எனவே அதற்கேற்ற முறையில் திறந்தமுறை, நூலகப்பட்டியின் பகுதிப் பொருள் பதிவு, குறிப் புதவி, விளம்பரம் முதலிய தந்திரங்களைக் கையாளவேண்டும்.

அப்போது தான் நூல் பிறந்ததின்-நூலகம் வந்ததின்-பயனைப் பெற்றதாகும். இல்லாவிட்டால் அதற்குச் செலவழித்த பணம் வீணாகும். நூலுக்கொரு ஆள் என்ற சீலம் பொய்யாகி விடும். எனவே அந்நிலை வராமல் நூலுக் கொரு ஆள் காண முயலவேண் டும் நூலகர். அப்போது தான் நூற்களுக்குக் கடமை செய்தவராவர் நூலகர்.

## தொழிற் கடமை

'நூலகரின்தொழில்உத்தமமான பணி; ஆனால் உருப்படாத தொழில்' என்றார் நூலகர் ஒருவர். அது அவர் நூலகப் பணியில் கொண்டுள்ள நம்பிக்கையையும், பெருமையையும் அதே சமயம் அத்தொழில் உலகில் எத்தகையதாக-மட்டமானதாகக் கருதப்படுகிறது என்பதை உணர்ந்த நிலையையும் எடுத்துக் காட்டுகிறது. நூலகர்தொழில்சிறப்புப்பணியாக படித்தவர் பணியாக—பயிற்சி பெறுபணியாக-இருப்பினும் நல் லூதியம் பெறாததால் அப்படிக் கூறப்படுகிறது என்பதை மறந்து விடக்கூடாது.

நூலகர் தொழில் ஒரு புதிய தொழில்! மருத்துவர், பொறியர், வழக்குரைஞர் போன்ற தொழில் கள் எல்லாம் ஆரம்பத்தில் காலத் தோடு போராடிப் போராடித்தான் இன்று முன்னேற்றங் கண்டிருக் கின்றன; ஒரு நாளில், ஒரு மாதத் தில், ஒரு ஆண்டில், ஒரு நூற் றாண்டில் அல்ல என்பதை நினைவி லிருத்திக் கொள்ளவேண்டும்.

எனினும் அத்தொழிலுள்ளவர்கள்கூட நூலகத் தொழிலை சரியாக மதிப்பிடுவதாகத் தெரியவில்லை. தனக்குத் தெரியாததெல்லாம் ஒன்றுக்கும்பிரயோசனமில்லை என்றெண்ணுவது மனித இயல்பு. எனவே நாம்இந்தத் தவருன எண்ணத்தை மாற்ற முயல வேண்டும்.

எனவே அதற்கு முதலில் நூலகர் ஒவ்வொருவரும் தன்னம்பிக்கை கொண்டவராய், செய்யுந் தொழிலில் பெருமை கொண்டவராய் மாறவேண்டும். பிறகு நூலகர்கள் ஒன்ருகச் சேர்ந்து நூலகக் கழகம் காணவேண்டும். நூலகக் கழகம் அமைத்தபின் நூலகப்பணியின் தன்மையை—அதிலீடுபட்டுள்ள நூலகர் பணியின் தன்மையை-பையப் பையத் திட்டமிட்டு-நூலகம் நூலகமாக, கல்லூரி கல்லூரியாக, ஊர் ஊராக எடுத்துச் சொல்லவேண்டும். அம் முறையிலே அதற்காக சொற்பொழிவுகள் நடத்தலாம். மாநாடுகள் கூட்டி கருத்துப் பரிமாறிக் கொள்ளலாம். இதழ்கள் நடத்தலாம். இதனையெல்லாம் நாடும் அரசாங்கமும் உணரச் செய்யலாம். அப்போது மக்களும், அரசும் அதனை ஏற்பர்.

இம்முறையிலே அமெரிக்காவில் அமெரிக்க நூலகக் கழகம் அமைக்கப்பட்டது. இங்கிலாந்தில் பிரிட்டிஷ் நூலகக் கழகம் அமைக்கப்பட்டது. சப்பானில் ஒரு நூலகக் கழகம் அமைக்கப்பட்டது. அதுபோலவே இன்னும் பல நாடுகளில் நூலகக் கழகங்கள் அமைக்கப்பட்டு பணியாற்றி வருகின்றன. அதன் பயனுகத்தான் மேனுடுகளிலெல்லாம் நூலகர் என்ருல் மதிப்பும், மரியாதையும், நல்லூதியமும் கொடுக்கப்பட்டு போற்றப்படுகின்றனர்.

அது போலவே இந்தியாவிலும் 1933-ல் இந்திய நூலகக் கழகம் ஆரம்பிக்கப்பட்டதென்ருலும், அதன் முன்னேற்றம் மேனுடுகளைப் போன்று சரியாகவளர்ந்து வரவில்லை. புதிய தலைமுறையினர் இதில் கவனம் செலுத்த வேண்டும்.

இம்முறையில் அமையும் நூலகக்கழகம் நூலகர்கள் ஆற்ற வேண்டியபணி, அதற்கான அமைப்புமுறை, செயல் திட்டம் முதலியவைகளைத் தரவேண்டும். அது நூலகப்பணி முன்னேற—நூலகர் நலமடைய—வழி செய்யும்.

## பணியாளர்களுக்குக் கடமை

நூலகர் எந்தப் பணியையும் தனியாய்ச் செய்வதில்லை; செய்யக் கூடாது. எனவே நூலகப்பணி முழுதும்—நூலகர்பணி முழுதும்—கூட்டுப்பணிதான் ... தனிப்பட்ட பணிக்கு வழியில்லை; கூடாது.

இதற்குச் சான்ருகச் சொல்ல வேண்டுமானுல் தேன் கூட்டைத்தான் சொல்லவேண்டும் ஒவ்வொரு கூட்டிலும் ஒரே ஒரு இராணி ஈதான் உண்டு. சில ஆண் ஈக்கள் ஆயிரக்கணக்கான அலி—பணி ஈக்களும்—இருக்கும் பணி ஈக்கள் நாள் முழுதும் காடெல்லாம் சுற்றி, கழனியெல்லாம் பறந்து, மலரெல்லாம் அமர்ந்து, தேன் மொண்டு வந்து கூடுகட்டும். தேன் சேர்க்கும் தானுண்ணும். இராணி ஈ உண்ணக் கொடுக்கும். பெருகும் குடும்பத்தைப் பேணும். அப்பணியினை நெறிப்படுத்தி வரும் இராணி ஈ. பலன் கூடெல்லாம் தேன்; சுவையான தேன்; மலர்த் தேன். இப்பணியிலே மேலில்லை; கீழில்லை; தனிமதிப்பில்லை; தனி வாழ்வில்லை. ஒன்ருய் வாழும்; நன்ருய் வாழும்.

அது போலத்தான் நூலகப் பணியும். ஒவ்வொரு நூலகத்திற்கும் ஒருவரே நூலகராக

இருக்க முடியும். அவருக்கு உதவியாகப் பணியாளர்—பல நிலையினர்—இருப்பர். நூலகர் நெறிப்படுத்த நூலகப் பணியாளர்கள் பணி புரிய நூலகப்பணி நடக்கும்; நடக்கவேண்டும் இதில் தனி ஒருவர் புகழ் பெற எதுவும் இல்லை; கூடவும் கூடாது.

இந்நிலையிலே நூலகர் நூலகப் பணியாளர்களுள் பேதம்பாராட்ட விருப்பு வெறுப்புக்காட்ட—வழியில்லை; கூடாது. நீண்டநாள்பணியினால் தனியுரிமை கோரக் கூடாது. குறைந்த சம்பளம் மட்டமான வேலைக்கு காரணமாகக் கூடாது. தலைவர் தவறு கண்ட போது கண்டிக்கவும் தண்டிக்கவும் வேண்டும். அது போதே நல்லவழி சொல்லவும் வேண்டும். பணியாளர் பணியில் சங்கடம் நேரும் போது நூலகரிடம் சொல்லவேண்டும். மாற்றும் வழி தனக்குந் தெரிந்தால்சொல்ல வேண்டும். கலந்து பேசவேண்டும், முடிவெடுத்தபின் அதன்படி நடக்கவேண்டும்.

### தன் கடமை

நூலகர் ஒவ்வொருவரும் நூலகராகப் பணியாற்றும்தகுதியுடையவராக—படித்த பணியரளாக—பயிற்சி பெற்ற பணியாளராக—சிறப்புப் பணியாளராக—ஆனபின்பு வந்த தொழிலிலே நம்பிக்கை கொள்ளவேண்டும். அப்பணியிலே மதிப்பிருக்கவேண்டும் வந்து விட்ட பணியைச் செவ்வனே நடத்த முன்வர வேண்டும்.

அதன்படி முதன் முதலாக நூலகப் பஞ்ச சீலத்தில் நம்பிக்கைக் கொள்ளவேண்டும். அதன்படி நடக்க—நடத்தத் தயாராக வேண்டும். நடத்திப் பார்க்க வேண்டும். நல்லதெனத் தெரிந்தவைகளை — உணர்ந்தவைகளை — தொடர்ந்து நடத்த வேண்டும். தவறெனத் தெரிந்தவைகளை மாற்றிக் கொள்ளவேண்டும். நாளும் முன்னேற நல்லதென எண்ணுபவைகளை நடத்திப் பரிசீலிக்க வேண்டும்.

(வாசகரோடுதொடர்புகொண்டு விரையாது, வெகுளாது, விரும்பி, முகம்மலர்ந்து, கொள்வோன் கொள்வகை யறிந்த தவனுளங் கொளக் கோட்டமில் மனத்தின் நூல் கொடுக்க வேண்டும்.

நூற் சேர்க்கையில் விருப்பு வெறுப்பின்றி நாட்டிற்கு நல்லதெதுவோ அதனைச் செய்யும் ஆவலில் பணியாற்ற வேண்டும்.

தொழிலைத் தொழிலாக மட்டும் கருதாமல் கடமையாக, வாழ்வாகக் கருதிப் பணியாற்றினால் தொல்லையில்லை; துயரமில்லை; எந்நாளும் இன்பமே காண வழி பிறக்கும்.

பணியாளர்களோடு பணியாளனுகக்கலந்து, ஆனால்கொடுத்த பணியின் முதற்பணியாளனாக, அல்லாதது விலக்கி, நல்லது எண்ணி, பேசி, செய்து, பணி புரிய வேண்டும்.

அத்தகு பணி மக்கள் அனைவரையும் 'நூலகம் வாரீர்' என்றழைக்கவேண்டும். எதற்காக? சுவையாகச் சொல்ல வேண்டுமானால்...

அறியச் செய்வார் நூலகர்
அறியா அனைத்தும் உலகத்தார்
அறியச் செய்வார்......

மண்ணில் தொடங்கி வானத் தீருய்
மண்டும் எண்ணக் குவிய லனைத்தும்
எண்ணத் தொலையா ஏட்டி லடக்கி
என்றும் தருவார் நூலகம் வாரீர்!
அறியச் செய்வார்......

உலகத் தாய்வை ஒன்று யிணைத்து
உண்மை யறிவை எடுத்துக் காட்டி
உலகம் வியக்க உவக்கும் மொழியில்
ஒப்பத் தருவார் நூலகம் வாரீர்!
அறியச் செய்வார்......

மங்கா துழைக்கும் நூலகந் தன்னில்
மாயும் உமது சிறுமை களைத்தும்
பொங்கு முயர்வு தங்கும் அறிவு
சங்கப் பொருளாம் நூலகம் வாரீர்!
அறியச் செய்வார்......

ஜாதகா கதைகள் :

# நேர்மை வெல்லுமா?

ஏ. வி. ஜயச்சந்திரன்

நெடு நாட்களுக்கு முன்பு கந்தன் என்ற பழைய பாத்திரக் கடைக்காரன், கண்ணியமாகவும், நேர்மையுடனும் காசியில் கடை வைத்திருந்தான். அவனுடைய குணமும், பண்பும் மக்களை அவன் பால் ஈர்த்தன, அவனுடைய பொருளாதார நிலை நாளுக்கு நாள் ஓங்கியும் அவன் கர்வம் கொள்ளாது மிகவும் தாழ்மையுடன் தன் வியாபாரத்தை நடத்தி வந்தான். சேத்தன் என்ற அயலூர் பழைய பாத்திர வியாபாரி காசிக்கு வந்தான். கந்தன் வியாபாரத்தில் முன்னேறுவதைக் குறித்து அவனுக்கு ஒரு எண்ணம் உதித்தது. அதன்படியே தானும் கந்தன் கடைக்குப் பக்கத்தில் ஒரு புதிய கடையைத் திறந்தான். கடை திறந்த மறு நாள் அவன் கந்தன் கடையில் சற்று உட்கார்ந்து வியாபார நுணுக்கம் பற்றிப் பேசினான். கடைசியில் கந்தனைப் பார்த்து சேந்தன் ''கந்தா! நீ பத்தாம் பசலியப்பா! வியாபாரத்தில் நேர்மையாவது கண்ணியமாவது. இதெல்லாம் சரி வராதப்பா. சமயத்திற்குத் தக்கவாறு நாம் நடந்து கொண்டு பொருள் சேர்ப்பதில் கருத்தாக இருக்க வேண்டும். தேவைக்கும், பொருள் கிடைப்பதைப் பொறுத்தும் விலையை கூட்டியோ, குறைத்தோ விற்றால் தான் வியாபாரத்தில் ஊதியம் பெற முடியும்'' என்றான். கந்தன், 'சேந்தா உன் புத்தி மதிக்கு என்னுடைய நன்றி. ஆனால் ஏதோ ஒரு கொள்கையைப் பின்பற்றுகிறவன் நான். நமக்குப் பொருள் கிடைப்பதோ, நஷ்டமாவதோ எல்லாம் நம்முடைய கையில் இல்லை, நம்மைப் படைத்த பரந்தாமனைப் பொறுத்தது என்ற விஷயத்தில் நம்பிக்கை கொண்டவன் நான். ஆகையால் என் போக்கில் போக என்னை விட்டுவிடு'' என்றான், பிறகு இருவரும் ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டனர். அதன்படி, காசிப் பட்டினத்தை இரு பகுதிகளாகத் தங்கள் வியாபாரத்திற்கெனப் பிரித்துக் கொண்டனர். வட பகுதியிலுள்ள தெருக்களுக்கு, கந்தன் சென்று, பழைய பாத்திரம் வாங்கும்போது, சேந்தன் தென் பகுதியில், பழைய பாத்திரங்களை வாங்கச் சுற்றிக் கொண்டிருப்பான். அடுத்த நாள் தென் பகுதியில் கந்தனும், வட பகுதியில் சேந்தனும்

சுற்றுவார்கள். இம் முறைப்படி, நடந்தால், போட்டியகலும், சமாதானமாக இருவரும் வியாபாரம் நடத்தலாம் என்று அவர்கள் நினைத்தனர்.

காசியில் பெரும் பணக்காரர்களாக வாழ்ந்து நொடித்த குடும்பம் ஒன்று இருந்தது. அவர்கள் வீட்டில் ஏற்பட்ட கடும் சோதனைகளால் எல்லோரும் க்ஷீண நிலைக்கு வந்து கடைசியில் ஒரு கிழவியும், ஒரு பருவ மங்கையுமே எஞ்சி இருந்தனர். அவர்கள் வீட்டில் சாப்பிடுவதற்கே அன்று பணமில்லாமல் போய்விட்டது. ஏதோ இருந்ததைப் பொங்கி அன்றையப் பொழுதைக் கடத்தினார்கள். சாயங்காலம், பாட்டியும் பேத்தியும் தங்கள் விதியை நொந்து தெருத் திண்ணையில் உட்கார்ந்து இருக்கையில் சேந்தன் அந்த வழியாகச் சென்றான். பேத்தி உள்ளே போய் ஒரு பழைய அழுக்கடைந்த பாத்திரத்தைக் கொண்டு வந்தாள். சேந்தன் அதை வாங்கிப் பார்த்தான். எடை மிகவும் அதிகமாக இருக்கவே, ஒரு ஓரத்தை தேய்த்துப் பார்த்தான். அந்த பாகம் மின்னியது. "சரி, இது தங்கக் கிண்ணம். இதை பாட்டியிடம் சொல்லிவிட்டால் பெரும் பணம் கேட்பாள். ஆகவே அவளை ஏமாற்றி அபகரித்துக் கொண்டு போகவேண்டும்" என்று எண்ணினான்.

பரம்பரைச் செல்வத்தில் ஒன்று மறியாமல் வளர்ந்த அவர்களுடைய பரிசுத்த உள்ளத்தில் ஒரு களங்கமும் இல்லை. அவர்களுடைய முகங்களைப் பார்த்தான் சேந்தன். இவர்கள் ஏமாளிகள் என்ற முடிவுக்கு வந்து விட்டான். அவர்களெதிரே பாத்திரத்தை விட்டெறிந்தான். "ஒரு காசுக்கும் உதவாத இந்தப் பாத்திரத்தை என்னிடம் கொடுக்கிறீர்கள். இதற்கு என்ன பணம் கிடைக்கும்?" என்று கோபம் வந்தவன் போல் நடித்து அந்த இடத்தை விட்டுப் போய்விட்டான்.

அடுத்த நாள் அந்த வீதி வழியாகக் கந்தன் வந்தான். கந்தனின் சாந்த முகத்தைப் பார்த்த பேத்திக்கு அவன்பால் நம்பிக்கை ஏற்பட்டது. "பாட்டி! பாட்டி! இதோ போகும் வியாபாரியிடம் நாம் பாத்திரத்தைக் காட்டலாமே. எப்படியும் விற்பதற்குப் பாத்திரத்தைத் தவிர வேறு ஒன்றுமில்லை. நாம் இன்றும் எப்படியோ பொழுதைக் கழித்து விட்டோம், நாளைக்கு சாப்பாட்டிற்குத் திண்டாட்டம் தான்" என்றாள். பாட்டி "சரி" என்று கூறவே பேத்தி கந்தனை அழைத்தாள்.

கந்தன் பாத்திரத்தைக் கையில் எடுத்த உடனே அதன் எடை அதிகமாக இருப்பதைக் கண்டான். "பாட்டி இது என்ன பாத்திரம்?" என்று கேட்டுக்கொண்டே பாத்திரத்தைப் பரிசோதித்தான். பாத்திரம் பத்தரை மாற்றுத் தங்கத்தால் செய்தது என்ற முடிவுக்கு

வந்ததும், "பாட்டி! இது பொன் பாத்திரம். இதன் விலை ரூ. 1000-க்கு குறையாது. மிகவும் வேலைப்பாடமைந்த பாத்திரம்," என்ருன்.

பாட்டி, "வியாபாரி! இது பொன் பாத்திரமா? நேற்று வந்த வியாபாரி ஒருவன் இதைப் பார்த்து, ஒரு காசுக்குக் கூட உதவாது என்று கூறிவிட்டு போனுன். எனக்கோ இதை விற்றுத்தான் ஆகவேண்டும். இதை எடுத்துக்கொண்டு ஏதாவது பணம் கொடேன்" என்ருள். கந்தன் யோசித்தான். பாட்டியைப் பார்த்து, "பாட்டி என்னிடம் ரூ. 1000 இல்லை. என் கையில் ரூ. 500 தான் இருக்கிறது. என்னிடம் இருக்கும் பாத்திரங்கள் ரூ. 500-க்கு மதிப்பு போகும். உனக்கு என்னிடம் இருப்பவைகளைக் கொடுக்க ஒரு ஆக்ஷேபமும் இல்லை. ஆனுல் எனக்கு ரூ. 80-ம் என்னிடமுள்ள தராசும் வேண்டும்" என்ருன். பாட்டி 'சரி' என்று கூறவே, தன்னிடம் இருக்கும் ரூபாய்களையும் பாத்திரங்களையும் கொடுத்துவிட்டு, ரூபாய் 80 ஐயும், தராசையும், தங்க பாத்திரத்தையும் மட்டும் எடுத்துக் கொண்டு போய்விட்டான்.

கந்தன் நேராகத் தன் கடைக்குப் போனுன். சேந்தன் பாட்டியை ஏமாற்ற நினைத்ததையும் அப்படித் தன்னுல் பாட்டி ஏமாருமல் தப்பினுள் என்பதையும் நினைத்து நினைத்துப் பார்த்தான். காசியில் தான் இருந்தால், சேந்தன் தன்னை ஒழித்து விடுவான் என்று தோன்றியது அவனுக்கு. தீய எண்ணங் கொண்டவனின் தொடர்பு இல்லாமல் போவதே மேல் என்றும் யோசித்தான். கடையை விற்று வேறு ஊர் செல்வதுதான் சிறந்தது என்று கடையை விற்பதில் முனைந்தான். அன்றிரவே கடைக்கு விலை பேசி, கடையில் உள்ள சாமான் உள்பட எல்லாவற்றையும் விற்று அடுத்த நாள் காலையில் வேற்றூர் பயணமாஞன்.

சேந்தனுக்கு ஒன்றும் தெரியாது. அவன் எண்ணமெல்லாம் பாட்டியைஏமாற்றித் தங்க பாத்திரத்தை அபகரிப்பதில் தான் இருந்தது. காலையில் எழுந்து பாட்டி தெருவில் வியாபாரம் செய்வது அவனுடைய முறையாகையால் அந்தத் தெருவிற்குப் போனுன். பாட்டியும், பேத்தியும் மிகவும் சந்தோஷமாக இருப்பதைப் பார்த்தான். அவர்கள் வீட்டின் முன்புறம் ஒரு கடை வைப்பதற்கு ஏற்பாடு செய்திருப்பதைப் பார்த்தான். அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. பாட்டியைக் கூப்பிட்டு "பாட்டி நேற்றைக்கு முந்தின நாள் காட்டிய பாத்திரத்தை கொடுங்கள் அதற்கு ஒரு அணு தருகிறேன்" என்ருன். பாட்டிக்கு கடுங்கோபம் வந்துவிட்டது. "அயோக்கியனே, என்னுடைய தங்க பாத்திரத்தைஅபகரிக்க இந்தக் கபட

நாடகம் நடித்தாயா. உன்னை என்ன செய்கிறேன் பார். நேற்று ஒழுக்கத்தின் சின்ன மான ஒரு வியாபாரி வந்தான். ஒன்றுக்கும் உதவாது என்று நீ விட்டெறிந்த பாத்திரத்திற்கு அவன் ரூ. 1000 தந்தான். அவனுடைய யோக்கியதை எங்கே, உன்னுடைய கயவாளித்தனம் எங்கே?'' என்று பாட்டி கடிந்தாள்,

சேந்தன் அந்த இடத்தை விட்டு ஓடோடியும் வந்து விட்டான். கந்தன்தான் அந்த பாத்திரத்தை வாங்கியிருக்க வேண்டும். அதை வாங்கியதுமல்லாமல் எனக்குக் கெட்ட பேர் வேறு உண்டாக்கி விட்டுப் போய் விட்டானே என்று கோபம் கொண்டான். அவன் மேல் துவேஷம்கொண்டான். அவனை எப்படியும் ஒழித்துவிட வேண்டும் என்று கங்கணம் கொண்டான்.

நேரே கந்தன் கடைக்குப் போனான். ஆனால் அங்கு கந்தன் இல்லை. அவன் கடையை விற்று வேற்றூருக்குப் போய் விட்டதாகக் கேள்விப் பட்டான். வெதும்பிப் போனான். சேந்தனின் அயோக்கியத்தனமும், குரோதமும் அவனை நல்ல வழிக்குக் கொண்டு செல்லும் என்று நினைக்கின்றீர்கள்? நேர்மை வென்றதா?



## அமிஞ்சிக்கரை

சென்னைக்கு அருகேயுள்ள ஒரு பேட்டைக்கு 'அமிஞ்சிக்கரை' என்ற பெயர் உண்டு. 'அமிஞ்சிக்கரை' என்பது தவறு; 'அமுஞ்சிக்கரை' என்றழைப்பதுதான் சரி. 'அமைந்தகரை' என்பதும் தவறு. 'அமுஞ்சி' என்ற சொல், கூலி இல்லாத வேலையைக் குறிக்கும் சொல் ஆகும். கோயில்களில் சில தொண்டர்கள் எந்தவிதமான ஊதியத்தையும் பெருமல் வேலை செய்வார்கள். அவர்களை 'அமுஞ்சி'யில் வேலை செய்பவர்கள் என்பார்கள். இன்றும் ஸ்ரீரங்கம் கோயிலில் 'அமுஞ்சி' என்ற சொல் வழக்கத்தில் இருந்து வருகிறது. 'அமுஞ்சிக்கரை' அருகேயுள்ள ஆற்றுக்கு கரை அமைக்கும் போது, வேலை செய்தவர்கள் எவ்வித ஊதியத்தையும் பெருமல் இனமாகக் கரையைக் கட்டினர்கள். அதனுல் அந்த இடத்திற்கு 'அமுஞ்சிக்கரை' என்ருயிற்று. இப்பொழுதும் நாம் 'அவன் அமுஞ்சியிலேயே சாப்பிட்டுப் போகிருன்' என்று சொல்லக் கேட்கிருேமன்ருே?

ஆனந்தம் இல்லாத இடமும், நேரமும் இல்லவே இல்லை; எங்கும் எப்போதும் அது பரந்து கிடக்கிறது.

ஆனந்த சுத்தியே மனிதனின் லட்சியம் மனித லட்சியம் ஆனந்த சித்தி அல்ல. ஆனந்தத்திற்கு அடக்கம் தேவை. ஆனந்தத்தைத் தன்னலமாகக் கொள்ளாமல் பொதுநலமாக்குதற்குத் தயங்கக் கூடாது.

இவ்வுண்மைகளை மிகத் தெளிவாகக் கூறும் இக்கட்டுரையை சர்வோதய இதழிலிருந்து எடுத்துத் தந்துள்ளோம்.

# ஆனந்தம்

**விநோபாபவே**

**ஆ**ண்டவன் கோடி கோடி இன்பங்களைப்படைத்திருப்பதைக் கூறி அதற்காகப் பாரதியார் நன்றி கூறுகிருர். மனிதனுக்காக மட்டுமல்ல, உலகிலுள்ள ஒவ்வொரு ஜீவராசிக்குங்கூட ஆண்டவன் இன்பத்தைப் படைத்திருக்கிருர் என்பதுதான் பக்தி நிலை கூறும் உண்மை.

உண்மையில் ஆனந்தம் என்பது நம் உருவந்தான். ஆத்மாவின் சொருபமே ஆனந்தம். ஆனந்தம் இல்லாமல் ஒருகணங்கூட உயிரோடிருக்கும் பிராணி உலகில் இல்லை. ஒவ்வொரு கணமும் நாம் ஆனந்தத்தை அனுபவித்தாலும், அப்படி ஆனந்தத்தை அனுபவிக்கிறேம் என்ற உணர்வு எப்போதும் இருப்பதில்லை. நல்ல காற்று நிரந்தரமாக நமக்குக் கிடைத்துக்கொண்டிருப்பதே ஒரு பெரிய ஆனந்தமாகும். ஆனல் இதை நாம் உணர்வதில்லை. சுவாசிப்பதற்குக் காற்றுக் கிடைப்பது பெரிய ஆனந்தம் என்பதை நாம் உணர்வதில்லை.

காற்று அல்லாத அறையில் சிறிதுநேரம் பூட்டி வைத்தால் அப்போது தான் வெளியில் வுவ்

வளவு சுகமான காற்றுக் கிடைத்தது என்று உணர்வோம். ஈரல் கெட்டு, க்ஷயம் பீடித்து, மூச்சுத் திணறும்போது தான், முன்பு எவ்வளவு நல்ல முறையில் சுவாசித்தோம் என்ற ஆனந்த உணர்வு ஏற்படுகிறது. இரவில் நன்ருகத் தூங்கிய நோயாளி, காலையில் ஆனந்தத்தை உணர்கிருன். ஆனுல் நோயற்ற பிறருக்குத் தூக்கத்தில் ஆனந்த உணர்வு ஏற்படுவதில்லே. ஏனென்ருல், அவர்கள் தினந்தோறும் நல்ல தூக்கம் கொள்கிருர்கள். நம்மை முற்றும் ஆனந்தம் சூழ்ந்திருக்கிறது. மேலும், கீழும், எல்லாப் பக்கமும் எங்கு நோக்கினும் ஒரே ஆனந்தமே.

நீர்குடிப்பது, பால்குடிப்பது, பழம் சாப்பிடுவது, பட்டினியாக வந்தவனுக்குச் சோறு போடுவது, ஏகாதசியன்று உபவாசம் கிடப்பது இந்த அனைத்திலும் ஆனந்தம் அடைகிருேம். பீடி குடிப்பதில் ஆரம்பித்து ஏகாதசி உபவாசம் வரையில் எல்லாம் ஆனந்தத்தின் பல முறைகளே. ஆனந்தத்தின் ரூபம் ஒன்றுதான். அதில் ஒன்றி விடுகிருேம். பீடி குடிப்பவர்கள் அதிலுள்ள இன்பத்தில் ஏகாக்கிரமாகி விடுகிருர்கள். பீடியிலிருந்து சுருள் சுருளாகப் புகை மேலே கிளம்பக் கிளம்ப அதன் பின்னுலேயே குடிப்பவர்களும் மேலே போவதைப் போல உணர்ச்சி கொள்கிருர்கள். அதாவது, புகை விடுவதிலுள்ள ஆனந்தத்தில் அவர்கள் இரண்டறக் கலந்து விடுகிருர்கள். என்னே வரவேற்கும்போதுகூடச் சிலர் புகைபிடிப்பதைப் பார்க்கிறேன். அதைப்பார்த்து எனக்கு மிகவும் சந்தோஷம். பீடி குடிப்பதில் பொதுவாக ஜனங்கள் வெட்கப்படுவார்கள், அந்த வெட்கத்தைக் கூட மறந்துவிட்டுப் புகை விடும் ஆனந்தத்தல் லயித்து விடுகிருர்களல்லவா? அதைப்பார்த்து எனக்குச் சந்தோஷமே.

ஆனந்த சுத்தியே மனிதனுடைய இலட்சியம். ஆனந்த சித்தி மனித இலட்சியமல்ல. பெரியவேதாந்திகள்கூட அனைவருக்கும் ஆனந்தம் கிடைப்பதற்கான முயற்சி வேண்டும் என்று கூறுகிருர்கள். விஷயம் புரியாமல்தான் அப்படிக் கூறுகிருர்கள். ஆனந்தத்தை அடைய எவ்விதக் கஷ்டமும் யாரும் படவேண்டியதில்லே. ஆனந்தம் அடைய முயன்ருல் துன்பந்தான்விளேயும். "தூங்குவதற்கு எவ்வளவோ முயற்சி செய்தும் தூக்கம் வரவில்லேயே" என்று ஒரு சகோதரர் என்னிடம் குறைப்பட்டார். அவர் தூக்கத்திற்கு முயற்சி செய்வதால்தான் தூங்கமுடியவில்லே. முயற்சி என்பது தூக்கத்திற்கு எதிரி. "தூக்கம் இல்லேயே என்ற கவலேயை விடுங்கள். உடனே தூக்கம் வரும்"என்று அவருக்குப் பதில் கூறினேன். அதே போல, அறிவு வேண்டும் என்று முயலும் போதும் துன்பமே, விளேகிறது. மனிதர்கள் ஆனந்தம் அடைய வேண்டும் என்ற முயற்சியில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிருர்கள். அதற்காக அனேவரும் அழுகிருர்கள். "என் வாழ்வில் பரிசுத்தமான ஆனந்தம் அடைகிறேன்" என்று சொல்பவரை இந்த உலகில் பார்ப்பதே துர்லபமாகி விட்டது. இன்பத்தை அடைய முயன்று துன்பமே அடைகிருர்கள்.

மக்களுக்கு ஆனந்தம் சுத்தமான முறையில் கிடைக்கவேண்டும். தன்னேத்தானே வெட்டிக் கொள்ளாத ஆனந்தமே சுத்தமானது. பீடி குடிப்பதில் அதிக ஆனந்தம் இருக்கிறது. ஆனுல் நாளடைவில் பீடி குடிப்பதால் ஈரல் கெடுகிறது. 'கான்ஸர்' (புற்று நோய்) வந்துவிட்டது

என்று வைத்தியர் கூறுகிறார். கான்சர் வருகிறதோ, இல்லையோ ஈரல் கெடுவது நிச்சயம். பீடி குடிப்பதிலுள்ள ஆனந்தம் ஆனந்தத்தையே அழித்து விடுகிறது.

தற்கொலை செய்து கொள்ளாத ஆனந்தமே சுத்தமான ஆனந்தம். இந்தக் காலத்தில் நமக்குக் கிடைக்கும் அற்ப இன்பம் ஆனந்தத்தையே அழிப்பதாக இருக்கிறது. இரவில் கண்விழித்து சினிமா பார்க்கிறோம்; நாவல் படிக்கிறோம் அதனால் கண் கெடுகிறது. கண்ணுக்கு உண்டான பார்வை ஆனந்தம் அழிகிறது. கள் குடிப்பதால், மூளை கெடுகிறது. காசு செலவழிகிறது. அண்டை அயலாருடன் சண்டை. மனைவியுடன் குஸ்தி, வீட்டில் தகராறு, குழந்தைகளின் மீது வெறுப்பு - இவையே அதனால் ஏற்படும் பலன்கள். குடிப்பதிலுள்ள ஆனந்தம் மூல ஆனந்தத்தையே ஒழித்து விடுகிறது. ஆகவே, எந்த ஆனந்தம் ஆனந்தத்தையே அழிக்காதோ, அதுதான் சுத்தமானது. இதற்கு அடக்கம் தேவை.

காய்கறியில் உப்புச் சேர்த்தால் ருசியாக இருக்கிறது...ஆனால் 'எவ்வளவு அதிகம் உப்பு கூடுகிறதோ அவ்வளவு ருசியும் அதிகமாகிறது' என்று சொல்ல முடியாது. ஆனால் அதற்கு ஓர் எல்லை இருக்கிறது. அந்த எல்லைக்குள் உப்புச் சேர்ப்பதை மட்டுப்படுத்தினால்தான் காய்கறி நன்றாயிருக்கிறது. இனிப்புச் சாப்பிடுவதில் மிகவும் பிரியமுள்ள ஒரு சகோதரர் தம் மனைவியிடம் நிலக்கடலை லட்டு பண்ணச் சொன்னார். நன்றாகவே லட்டு செய்து மனைவி கொடுத்தாள். "வெல்லம் குறைவாக இருக்கிறது; அதனால் லட்டு அவ்வளவு சரியாக இல்லை" என்று அந்தச் சகோதரர் குறை கூறினார். மறுநாள் வெல்லத்தை அதிகமாகச் சேர்த்து லட்டு செய்து மனைவி கொடுக்கவே, சாப்பிட்டுப் பார்த்து, "கொஞ்சம் தேவலை" என்றாராம் அவர். அதைக் கேட்ட மனைவி, "கொஞ்சந்தானா தேவலை? இன்று நிலக்கடலையே சேர்க்காமல் வெறும் வெல்லத்தைத்தானே லட்டுபண்ணிக் கொடுத்தேன்!" என்றாளாம் அவள். இனிப்பையே அதிகமாகச்சாப்பிட்டுச்சாப்பிட்டு ருசி கெட்டுப் போய் கடைசியில் இனிப்பையே இனிப்பு அழித்து விட்டது. ஒரு ரூபாய் லாட்டரியில் போட்டுப் பத்தாயிரம் ரூபாய் இனாம் கிடைத்தால், கிடைத்த அதிர்ச்சியில் இருதயம் நின்று போகிறது. இதில் உண்டான ஆனந்தம் ஆதார ஆனந்தத்தையே அழிக்கிறது. ஆகவே, ஆனந்தத்தை ஓர் எல்லைக்குள் கட்டுப்படுத்த வேண்டும். ஆனந்தம் சுத்தமாக வேண்டுமென்றால், அதற்கு ஓர் எல்லை வேண்டும்.

அதிகமாக உற்பத்தியைப் பெருக்கினால் ஆனந்தம் அடையலாம் என்றும் இந்தக் காலத்தில் கூறுகிறார்கள். அமெரிக்காவில் உற்பத்தி அபரிமிதமாகப் பெருகியிருக்கிறது. இருந்தாலும் அங்கே ஆனந்தம் பெருகவில்லை. தற்கொலைகள் அங்கேதான் அதிகம். மற்ற நாடுகளைக் கண்டு பயந்து எப்போதும் யுத்த முஸ்தீப்புக்கு வேண்டிய ஏற்பாடுகளை அமெரிக்கர் செய்து கொண்டிருக்கிறார்கள். ஆகவே, வளர்த்துக் கொண்டே போனால் ஆனந்தம் கிடைக்காது. ஆனந்தத்துக்கு ஓர் எல்லை தேவைப்படுகிறது. அந்த எல்லையை மீறினால் ஆனந்தம் தன்னையே அழித்துக் கொண்டு விடும்.

ஆனந்த சுகத்திற்கு அடக்கம் வேண்டும். அப்போது தான் ஆனந்தம் நிலைக்கும். அடக்கம் என்பது ஆனந்தத்தின் பிரா

ணன். அடக்கம் என்ருல் துன்பப் படுவது என்றும், ஆனந்தத்தைத் தடைப்படுத்துவது என்றும் கூறு வது அறிவீனம். ஆனந்தத்துக்கு எல்லைகட்டி, அடக்கத்தின் தந்தி ரத்தைக் கற்றுக் கொள்ள வேண் டும். இதுவே சமூகத்தில் கடைப் பிடிக்க வேண்டிய யுக்தியாகும் எந்த சமூகத்தில் அடக்கத்தைப் பற்றிய படிப்பினை இருந்ததோ, அங்கே ஆனந்தம் நிலையாகும்.

ஆனந்த சுத்திக்கு இன்னொரு காரியமும் இருக்கிறது. ஆனந் தத்தில் எல்லாரும் பங்கு கொள் ளும்படி செய்யவேண்டும். உங் களுக்குக் காற்றுக் கிடைக்காமல் நீங்கள் துன்பப்படும்போது, எனக்குமட்டும் நல்ல காற்றுத் தடையில்லாமல் கிடைக்குமே யானல் எனக்கு ஆனந்தம் ஏற்படாது. எனக்கு முன்னுல் ஒருவன் பட்டினியால் துடிக்க, எனக்கு மட்டும் நல்ல ஆகாரம் கிடைக்குமேயானுல் எனக்கு ஆனந்தம் இல்லை. சுத்தமான ஆனந்தம் கிடைக்க, ஆனந்தத் தில் மற்றவர்களையும். பங்காளி களாகச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

எந்த ஆனந்தத்தில் மற்றவர் களுக்குப் பங்கு இல்லையோ அந்த ஆனந்தம், ஆனந்தத் தையே அழித்து விடும். பின்பு துன்பந்தான் விளையும். 'எத்தனை கோடி இன்பம் வைத்தாய், இறைவா' என்று பாரதியார் பாடு கிருர். ஆனுல், கடவுள் துன்பத் தைத் தான் படைத்திருக்கிருர் என்ற அனுபவமே மக்களுக்கு ஏற்படுகிறது. எது உண்மை என்று பார்க்க வேண்டும், அழ கான மாம்பழத்தை ஆண்டவன் சிருஷ்டித்திருக்கிருன். அதை அதிகமாகச் சாப்பிட்டு நோய் வாய்ப்படுகிறேம். இது கடவு ளின் குற்றமா? ஆனந்தத்தைச் சிருஷ்டிப்பது ஆண்டவனுடைய பெருமை! அவர் அமிர்தமாகப் படைத்ததை, நமது திறமையால் விஷமாக்கிக் கொண்டோம். மாம் பழத்தால் நோய் ஏற்படச் செய் யும் காரியம் மனிதனுல் தானே முடியும்? அழகான மாம்பழத்தை ஆண்டவன் படைத்திருக்கிருன். அதைக் கொஞ்சம் அடக்கத் தோடு சாப்பிட்டிருந்தால் திருப்தி ஏற்பட்டிருக்குமே? நாவடக்கம் இல்லாததால் நோய்ஏற்படுகிறது.

பக்கத்திலுள்ளவர்கள் துன்பப் பட்டுக் கொண்டிருக்கும் போது, நாம் மட்டும் இன்பம் அனுபவித் தால் அதிகநாள் நிலைக்காது. நாம் வெட்கம் இல்லாமல் இருக் கும் வரைக்கும் இன்பமாய் இருக்க லாம். ஆனுலும் பக்கத்திலுள்ள துன்பம் நம்மிடமும் பிரதிபலிக்கத் தான் பிரதிபலிக்கும். கிடைத்த மாம்பழத்தை நம் குழந்தைகளுக் குக் கொடுத்துச் சாப்பிட்டால், அதிக ஆனந்தம் ஏற்படுகிறது. மற்றவர்களுடன் பகிர்ந்துகொள் ளும்போது வளர்கிறது. அப் போது தான் இன்பம் நிலைக்கும். மற்றவர்களோடு மோதிக் கொண்டே இருக்கும்போது இன் பம் நிலைக்காது. சமூகத்தில் மோதலும் சண்டையும் பெருகும் போது ஆனந்தத்தை இழப்போம் ஆனந்தத்தைச் சுத்தப்படுத்த அடக்கமும், பகிர்ந்து கொண்டு வாழும் தன்மையும் வேண்டும். குழந்தைகளுக்கு முதலில் கொடுத்துவிட்டு எஞ்சியதைச் சாப்பிடுவதில் தான் தாய்க்கு ஆனந்தம். குழந்தைகளைக் கவ னிக்க வேண்டிய பொறுப்பு தாயி டம் இருக்கிறது. முதலில் தாய் சாப்பிட்டு விட்டுப் பின்புதான் குழந்தையைக் கவனிக்க வேண் டும் என்று எந்தத் தாயாவது சொல்கிருளா? ஆனுல், இன்றைய தேச சேவகர்கள் இந்த முறை யைத்தான் கையாளுகிருர்கள். தேசத்துக்கு ஊதியம் செய்வதால்

முதலில் தமக்கு நல்ல உணவு கிடைக்க வேண்டும் என்கிறார்கள் இப்படி ஒரு தாய் கூறினால், அந்தத் தாயைப்பற்றி எந்தக் கவிஞன் பாடுவான்? தாயின் பெருமை முதலில் குழந்தைக்குத் தருவதில் தான் இருக்கிறது. அதில்தான் அவள் ஆனந்தம் அடைகிறாள். ஆகவே, இன்பத்தை எல்லோரும் மற்றவர்களோடு பகிர்ந்து கொள்ளவேண்டும். அப்படிப் பகிர்ந்து கொண்ட பின்னும் மீதியை அடக்கம் இல்லாது அனுபவித்தாலும் துன்பமே விளையும். அடக்கம் அவசியம். இந்த இரண்டு விஷயங்களையும் கவனித்துப் பாதுகாத்தால், ஆனந்தம் சுத்தியாகும்.



## கண் திறந்தது

இங்கிலாந்தில் ஒரு பிரபல டாக்டரைச் சந்தித்தேன். அவர் காரியாலயத்தில் ஒரு கண்ணாடி அலமாரிக்குள் ஒரே ஒரு உடைந்த பொம்மை மட்டிலும் காட்சிப்பொருளாக வைக்கப்பட்டிருந்தது. அந்த டாக்டர் அதைப் பற்றிய கதையை எனக்குச் சொன்னார்.

அந்த டாக்டர் கைநிறையப் பணம் வாங்கக் கூடிய நிபுணர். அவரிடம் வைத்தியத்துக்கு வந்த கண் பார்வை இழந்த சிறுமியோ பரம ஏழை. லயன்ஸ் கிளப் அங்கத்தினர்கள் அளித்த உதவி காரணமாகத்தான் அவள் அங்கு வந்து சேரமுடிந்தது. இல்லாவிட்டால் அந்த நர்ஸிங் ஹோமில் அவள் அடி எடுத்துக்கூட வைத்திருக்க முடியாது. அவள் கையில் ஒரே ஒரு பொம்மை மட்டும் இருந்தது.

அந்தப் பெண் தன் ஒரே உடைமையான அதனிடம் மிகுந்த அன்பு வைத்து விளையாடிப் பொழுதைப் போக்கினாள்.

நாட்கள் சென்றன. அபாரமான சாமர்த்தியத்துடன் டாக்டர் சஸ்திர சிகிச்சை செய்தபிறகு அந்தச் சிறுமி தன் பார்வையைப் பெற்றாள். மகிழ்ச்சியால் துள்ளிய அவள் டாக்டரிடம், "உங்களுக்கு நான் ஒரு பரிசு தருவேன். ஏற்றுக் கொள்வீர்களா?" என்று கேட்டாள்.

"இந்த ஏழைச் சிறுமி எனக்கு என்ன தந்துவிடமுடியும்?" என்று நினைத்துச் சிரித்தார் டாக்டர்.

சிறுமியோ விலை மதிக்க முடியாத அளவுக்குத் தான் அன்பு செலுத்தி வந்த அந்தப் பொம்மையை டாக்டரிடம் நீட்டினாள்.

மனம் நெகிழ்ந்து போனார் டாக்டர். "உன் கண்களை நான் திறந்ததாக நினைத்துப் பெருமைப்பட்டுக் கொண்டிருந்தேன். நீதான் என் கண்களைத் திறந்திருக்கிறாய்" என்றார்.

சமூகத் தொண்டாற்றத் தமக்கு நேரமில்லை என்று அன்று வரை கூறி வந்த டாக்டர் மறு நாள் முதல் ஏழை எளியவரின் துயர் தீர்க்கவென்று விலை மதிக்க முடியாத தமது நேரத்தில் சிறு பொழுதை ஒதுக்கிக் கொண்டார்.

—டாக்டர் வெங்கடேசன் லயன்ஸ் கிளப் கூட்டத்தில் கூறியது.

நாட்டு வளர்ச்சிக்குப் பல துறைகளில் அரசாள்வோர் கவனம் செலுத்துதல் வேண்டும். நாடா வளந்தரும் இயல் பினதே நாடு என்பர் அறிஞர். அதை அரசாள்வோர் உண்மையெனக் கொண் டால் நாட்டுக்குப் பல துறைகளிலும் பாடுபட்டு வளத்தைச் சேர்க்க வேண்டுவ தவசியமாகும்.

மக்களைக் காப்பாற்றுவதைப் போல, ஆடு மாடுகளைக் காப்பாற்றுவதைப் போல, மண் வளத்தையும் காப்பாற்ற வேண்டும் மண் வளமே மக்கள் நலமாக மாறும் அடித்தளமாகும். எனவேதான் மண் வளத்தின் அவசியத்தை இக்கட்டுரை மேலெழுந்தவாறு விளக்குகிறது.

# மண் வளப் பாதுகாப்பு

உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டிய இன்றியமை யாமைபற்றிவிரித்துரைக்க வேண் டிய அவசியமில்லை. உற்பத்திப் பெருக்கத்திற்கான நமது திட்டத் தில் இன்று மண்வளப் பாதுகாப்பு முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது. உழவு நிலங்களின் வளத்தைக் காப்பாதும், நீர்த்தேக்கங்களில் வண்டல் படிந்துவிடாதவாறு பாதுகாப்பதும் மிகவும் அவசிய மாகும். நிலத்தை விஞ்ஞான ரீதி யில் பயன்படுத்திக் கொள்ளவும், விவசாய உற்பத்தியைப் பெருக்க வும் மண்வளப் பாதுகாப்பு வழி கோலுகிறது. மண் அரிப்பைத் தவிர்த்து நிலவளத்தைப் பாது காக்கிறது.

ஆற்றுப் பள்ளத் தாக்குத் திட் டங்களின் நீர்ப் பிடிப்புப் பிர தேசங்கள் பொதுவாக மலைப் பிராந்தியங்களில் உள்ளன. இவற் றில் சுலபத்தில் மண் அரிப்பு ஏற் பட்டு விடுகிறது. கடந்த காலத் தில் கேட்பாரற்ற முறையில் ஏரா ளமான மரங்கள் வெட்டப் பட்ட தாலும், ஆடுமாடுகள் மேய்க்கப் பட்டதாலும், இடம் விட்டு இடம் பெயர்ந்து சாகுபடி செய்தல் போன்றவற்றுலும் பெரிய அள வில் மண் அரிப்பு ஏற்பட்டு விட் டது. சுதந்திரத்திற்கு முற்பட்ட காலத்தில், பல் பயன் ஆற்றுப் பள்ளத்தாக்குத் திட்டங்களை வேக மாக நிறைவேற்றியதால் மண் வளப் பாதுகாப்பில் போதிய கவ னம் செலுத்தப்படவில்லை. எனவே நீர்ப் பிடிப்புப் பகுதிகளில் மண் வளத்தை நீடிக்கச் செய்வது உட னடி நடவடிக்கையாயிற்று. வண்

டல்களை அகற்றி, நீர்த்தேக்கங்களில் பயனை மிகுவிக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்பட்டது.

### மண்வளம் காக்கப்படுவது எவ்வாறு ?

மண்வளப் பாதுகாப்பு வேலையைத் திட்டமிடும் பொழுது, அதிகமாக வண்டலைக் கொண்டு வந்து சேர்க்கும் உப நதிகளைக் கண்டறிதல் அவசியம். உபநதிகளின் முகத்தில் சேரும் வண்டல், நீர் வெளியேற்ற அளவுகளைக் கொண்டு இதைக் கண்டு பிடிக்கலாம். இந்த உப நதிகளின் நீர்ப்பிடிப்புப் பகுதிகளில் உள்ள வண்டல் ஆதாரங்களை அறிய, ஆகாய விமானத்தின் மூலம் நீர்ப்பிடிப்புப் பகுதிகளின் புகைப் படங்களைப் பிடிக்க வேண்டும். இவ்வாறுசேகரிக்கப்பட்ட புள்ளி விவரங்கள், பிற ஆராய்ச்சிக் குறிப்புகளைக் கொண்டு, வேலைத் திட்டங்களை உருவாக்க வேண்டும். பிரச்னையின் அளவு, பல்வேறு கால கட்டங்களில் நிறைவேற்ற வேண்டிய பணி, இடம், செலவு, ஆகிய விவரங்கள் அவற்றில் இடம் பெற வேண்டும். இத்தகைய ஒரு திட்டத்தைச் சுமார் 25 திட்டப் பகுதிகளில் நிறைவேற்ற வேண்டியுள்ளன. இவற்றின் மொத்த நீர்ப்பிடிப்புப் பகுதி 2,95,000 சதுர மைலாகும். நீர்ப் பிடிப்புப் பகுதியில் 10 சதவிகிதப் பரப்பில் மண்வளப் பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற் கொள்ள வேண்டுமென்று வைத்துக் கொண்டால், சுமார் 30,000 சதுர மைல் பரப்பில் அந்த நடவடிக்கைகளை நிறைவேற்ற வேண்டியிருக்கும்.

### சாதனை விவரம்

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் மண்வளப்பாதுகாப்பு முயற்சி எதுவும் மேற்கொள்ளப்படவில்லை. இரண்டாவது திட்டத்தில், நதிகளின் நீர்ப் பிடிப்புப் பிரதேசங்களில் மண்வளப் பாதுகாப்புத் திட்டங்கள், ராஜ்யத் திட்டங்களின் பகுதியாக நிறைவேற்றப் பட்டன. தாமோதர் பள்ளத்தாக்கு, பக்ரா, மச்குந்த், ஹிராகுட், சம்பல் திட்டங்களில் சுமார் 218 சதுர மைல் பரப்பளவில் மண்வளப் பாதுகாப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. காடுகளை வளர்த்தல், கரைகளை உயர்த்துதல், விவசாய நிலங்களில் மேடு கட்டுதல் முன்னோடி விளக்கத் திட்டங்கள் சிலவற்றை ஏற்படுத்துதல் ஆகியவை இந்நடவடிக்கைகளின்கீழ் நிறை வேற்றப்பட்டன. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில், பதின்மூன்று ஆற்றுப் பள்ளத்தாக்குத் திட்டங்களில் மண்வளப் பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கான மத்திய சர்க்கார் திட்டங்களின் கீழ் 1,100 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. 1,025 சதுர மைல் பரப்பில் மண்வளப் பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ளத் திட்டமிடப்பட்டுள்ளது. காடுகளை வளர்த்தல், தீவனம் வளர்த்தல் போன்ற காரியங்கள் இவற்றில் அடங்கும். வண்டல் அளவுகளைப் பற்றி ஆராய்ந்து நீர்ப்பிடிப்புப் பகுதிகளின் முன்னுரிமையை நிர்ணயிப்பதற்கும், மண்வளப் பாதுகாப்பு நடவடிக்கைகளின் கீழ் பலன்களை பிந்திய காலத்தில் மதிப்பீடு செய்வதற்கும், பல்வேறு நீர்ப்பிடிப்புப் பகுதிகளிலும் 136 வண்டல் ஆய்வுப் பகுதிகள் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன. இது வரை 37 ஆய்வுப் பகுதிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இதுவரை சுமார் 8,000 சதுர மைல் பரப்பில் ஆகாய விமானப் புகைப்படங்கள் எடுக்கப்பட்டு, வண்டல் ஆதாரங்களை அறிய ஆராயப்பட்டு வருகிறது. நிலத்தை விஞ்ஞான ரீதியில் பயன்படுத்துவதையும், சரியான

முறையில் விவசாயம் செய்யும், எருவிடும் முறைகளையும் அபிவிருத்தியடையச் செய்வதற்காக பக்ரா, சம்பல், மச்குந்த், ஹிராகுட், துங்கபத்ரா, குந்தா ஆகிய நீர்ப்பிடிப்புப் பகுதிகளில், அனைத்திந்திய மண்வளம் மற்றும் நில உபயோக சர்வே நிறுவனம் விரிவான மண்வள சர்வேக்களை நடத்தி வருகிறது. தாமோதர் பள்ளத்தாக்கு கார்ப்பரேஷனும் மண்வள சர்வேக்களை நடத்தி வருகிறது. இதுவரை சுமார் 11,000 சதுர மைல் பரப்பளவில், மண்வள சர்வேக்கள் மேற் கொள்ளப்பட்டுள்ளன. மூன்றுவது திட்ட முதல் இரு ஆண்டுகளில் 245 லட்ச ரூபாய் செலவில் 240 சதுர மைல் பரப்பில் மண்வளப் பாது காப்பு நடவடிக்கைகள் நிறைவேற்றப்பெற்றுள்ளன. 1963-64-ம் ஆண்டில் 235 லட்ச ரூபாய் செலவில் 200 சதுர மைல் பரப்பில் மண்வளப் பாதுகாப்பு நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்படும். மூன்றுவது திட்ட இறுதி இரண்டு ஆண்டுகளில் 600 சதுர மைல் பரப்பில் மண்வளம் காக்கப்படும்.

### லட்சியப் பயணம்

மண்வளப் பாதுகாப்புப் பிரசினையின் மற்றோர் அம்சம், அவசியமான சட்டங்களை நிறைவேற்றுவது, மண்வளப் பாதுகாப்புப் போர்டுகளை நிறுவுவது ஆகியவை சம்பந்தப்பட்டதாகும். அவசியமான சட்டங்களை இயற்றவும் தற்போதுள்ள சட்டங்களில் தேவையான திருத்தங்களைச்செய்யவும் ராஜ்ய சர்க்கார் இப்பொழுது நடவடிக்கை எடுத்து வருகின்றனர். மண்வளப் பாதுகாப்பு நடவடிக்கைகளுக்கு வழி காட்டுவதற்காக, பலவிடங்களில் தனியே ராஜ்ய போர்டுகள் அமைக்கப்பட்டுள்ளன. ஒன்றுக்கு மேற்பட்ட ராஜ்யங்களில் அமைந்துள்ள சம்பல், ஹிராகுட், நீர்ப்பிடிப்புப் பிரதேசங்கள் போன்ற இடங்களில், மண்வளப் பாதுகாப்பு நடவடிக்கைகளை இணக்கமாக ராஜ்யங்களுக்கிடையேயான நிறுவனம் ஒன்றைக் காண ராஜ்ய சர்க்கார்கள் முயன்று வருகின்றனர். பக்ரா, தாமோதர் பள்ளத்தாக்குமச்குந்த் ஆகிய விடங்களில் ஏற்கெனவே ராஜ்யங்களுக்கிடையேயான நிறுவனங்கள் உள்ளன.

ஆற்றுப் பள்ளத்தாக்குத் திட்டங்களின் நீர்ப்பிடிப்புப் பகுதிகளில் அடுத்த 20, 25 ஆண்டுகளில் மண்வளப் பாதுகாப்பு நடவடிக்கைகள் பூர்த்தி செய்யப்பட வேண்டும் என்று பொதுவாக ஒப்புக் கொள்ளப் பட்டுள்ளது. இந்தலட்சியத்தை அடைய மண்வளப் பாதுகாப்பு நடவடிக்கைகளைத் துரிதப்படுத்த வேண்டியது அவசியமாகும் தொழில் நுட்ப அலுவலர் குறைவு, ஏற்றநிறுவன அமைப்பு இல்லாமை போன்ற குறைபாடுகள் இருந்த போதிலும் அவை சமாளிக்கப்பட்டு வெற்றி கொள்ளப்பட வேண்டும். வண்டல் ஆய்வுப் பகுதிகளை ஏற்படுத்துதல், விமான மூலம் புகைப்படம் பிடித்தல், புகைப் படத்தைக் கொண்டு ஆராய்தல், வேலைத் திட்டங்களை உருவாக்குதல், ஏற்ற சட்டங்களை நிறைவேற்றுதல், மண்வளப் பாதுகாப்புப் போர்டுகளையும் ராஜ்யங்களுக்கிடையேயான நிறுவனங்களையும் ஏற்படுத்துதல், மண்வளப் பாதுகாப்புப் பணியில் போதுமான அளவில் விவசாய அலுவலர்களுக்குப் பயிற்சி அளித்தல் ஆகியதிட்டங்களைக்கூடிய விரைவில் மேற்கொள்ள வேண்டும். அத்துடன், அவசியமான நிறுவன அபி விருத்திகளும் செய்யப்பட வேண்டும்.

நன்றி—தினமணி




## 2. ஏசிப் பார்ப்பவள்!

கதிரவன் மலைவாசலில் நுழைந்து கொண்டிருந்தான் ஒரு புறம்—தென்றல் நறுமணத்தைச் சுமந்து கொண்டு மந்தகாசத்தில் தவழ்ந்து—குளிர்ச்சியில் மிதந்து வந்து கொண்டிருந்தது மற்றொரு புறம்!

சோலை நிழலும்—மாலைப் பொழுதும் சும்மாவிருக்க விடுமா இளங் கன்னியரை?

அதிலும், அந்த இன்பம் எத்தனை இனிமையானது என்பதை முன்னால் அறிந்து—உணர்ந்து—திளைத்தும் இருந்திருப்பவர்களைப் பற்றிக் கேட்கவே வேண்டியதில்லை!

மாலைப் பொழுதினைத் தங்களுக்குச் சொந்தமாக்கிக் கொண்டிருந்த இருவண்ணக் காதலர்களைப் பிரித்து விட்டது காலம், தொழில் என்கின்ற காரணங் காட்டி!

அவளுக்குச் சொந்தமுடைய அவன், அயலூர் சென்று விட்டான் வாணிபத்தின்காரணமாக!

வஞ்சியிடம் கொஞ்சி மகிழ வேண்டிய காதலனின் பிரிவைக் காரிகையால்பொறுத்துக்கொள்ள இயலவில்லை!

அவன், உடனிருந்த நாட்களில் மாலைப் பொழுதில் அவர்கள் நடத்திய காதற் களியாட்டங்கள் அத்தகையது! நாள்தோறும் மாலை வரும் போது, அந் நிகழ்ச்சிகளை அவளுக்கு நினைவூட்டிச் சென்று கொண்டிருந்தது ஒவ்வொரு நாளும்!

இது அவளுடைய இளநெஞ்சத்தைப் பெரிதும் வாட்டியது! வேதனைச் சுழலில் சிக்கியவள் அதனின்று மீள முடியாமல் தவித்துக் கிடந்தாள்!

"இந்த மாலைப் பொழுது இத்தகைய பயங்கரமான துன்பத்தை விளைவிக்க வல்லது என்பதை, என் காதலர் என்னைப் பிரியாமல் என்னுடனிருந்த நாட்களில் நான் அறியாது போனேன்!

இந்தப் பாழாய்ப் போன காதல் நோயோ, காலையில் அரும்புகின்றது—பகற் பொழுதெல்லாம் பேரரும்பாய் வளர்கின்றது—மாலைப் பொழுதிலோ மலராய் மலர்ந்து விடுகின்றது!

பனி தோன்றிப் பசந்த நிறங் கொண்ட இந்த மாலைப் பொழுது என்னைக் காதல் நோயால் வருத்தி, வாட்டி எடுக்கவே வந்து போய்க் கொண்டிருக்கின்றது!

நான் காலைப் பொழுதுக்குச் செய்யும் நன்மைதான் என்ன? இல்லை, என்னை இந்தக் கொடுமைக்கு ஆளாக்கும் இந்த மாலைப் பொழுதுக்குச் செய்யும் கொடுமை தான் என்ன? எனக்கு ஒன்றுமே புரிய வில்லையே!

கொலை செய்யுமிடத்திற்குப் பகைவர்கள் பதுங்கிச்சூழ்ந்து வருவதைப் போலல்லவா என் உயிரைக் கொல்ல சூழுகின்றது இந்த மாலைப் பொழுது!

மந்தகாசத்தை எழுப்பிக் கொண்டு வரும் பொழுதே! நீ மாலைப் பொழுதல்ல! காதலருடன் சேர்ந்திருந்து பின்னர் ஒரு சமயம் பிரிந்து வாழும் பெண்களின் உயிரை உண்ணுகின்ற முடிவுக் காலமாக இருக்கின்றாய்!

தீயைப் போல் தீய்க்கும் தீய மாலைப் பொழுதிற்குத்தூதுபோல, ஆயனுடைய குழலாகவும் வருகின்றது போலும் என்னைக் கொல்லும் படை!

அவர் என்னைப் பிரிந்தபோது பிரியாத உயிர்—அவரை நினைந்து நினைந்து வருந்தும் இந்த மாலைப் பொழுதில் மாய்கின்றதே!''

—என்றெல்லாம் பொழுது கண்டு புலம்புகிறாள் ஒரு பூவை. அவளுக்குத் திடீரென்று ஒரு சந்தேகம் வந்து விட்டது!

''பிரிந்து சென்ற பிரியர், நம்மை ஒரு வேளை மறந்திருப்பாரோ? நாம் அவர் நெஞ்சில் எந்நேரமும் இருந்திருந்தால் இத்தனைக் காலம் நம்மை பிரிந்திருப்பாரா? தன் நெஞ்சில் என்னை வர விடாது காவல் காத்து நிற்கும் காதலர், என் நெஞ்சில் மட்டும் இந்த மாலைப் பொழுதில் ஓயாது வருவதைப் பற்றி - வந்து இன்பத்தைத் தூண்டுவதைப் பற்றி - தூண்டிவிட்டு அதில் நான் புழுவாய்த் துடிப்பதைக் கண்டு வேடிக்கைப் பார்க்கும் அவருக்கு நாணமிராதோ?

தந்நெஞ்சத்து எம்மைக்
கடிகொண்டார் நாணார்கொல்
எந் நெஞ்சத்து ஓவா வரல்.



## 3. தீயைக் கொண்டவள்.

''நெஞ்சமோ நெருப்பிலிட்ட வேதனை கொள்கிறது!

உணர்ச்சி யெல்லாம் பொங்க - உள்ளமோ துடித்து வெடிக்கின்றது!

நேற்றும் வரவில்லை அந்த நேரிழை! இன்றாகிலும் தன் அழகு முகங்காட்டி அந்த ஆரணங்கு வருவாளோ?

என் நினைவு அவள் நினைவில் நிழலாடுமா? அந்தக் கானகத்து அழகு ரோஜா—வந்து வீழுமோ இந்த ராஜாவின் மடியிலே?

இதயத்தில் கோயில் கொண்டு விட்ட அவளின் கோமள உருவத்தைக் காணாது, கண்களோ குருடாகி—நினைவு யாவும் அவளுருவே நின்று நின்று நிலைகலங்கச் செய்யுதையோ? அவளின் பிரிவு என்னைத் தீப்பிழம்பாய்த் தீண்டிச் சுடுகின்றதே!

ஆகா! அதோ அசைந்தாடி வரும் என் அழகு மயில்!

அவள் அன்ன நடையிலே வருவது குளிர்ச்சோலை போலல்லவா வெப்பநிலை மாறுகிறது! பனிப் பாறையின் அருகே நிற்பவன் போலல்லவா உணருகிறேன்!

எங்கே இதுவரை என்னைச் சுட்டெரித்த வெந்தழல்? இருந்த இடம் தெரிய வில்லையே! அந்த மலர்க்கொடி என்னை. நெருங்க நெருங்க மந்த மாருதமல்லவா வீசி என்னை மகிழ்விக்கின்றது!



எழிலரசி என்னை நோக்கி வர வர தேன் மழையல்லவா கொட்டுகின்றது!

புவனமெல்லாம் தீக்காடாயிருந்த எனக்கு-இப்போது எழில் சொட்டும் பூக்காடாகவல்லவோ காட்சி யளிக்கின்றது!

சித்திரத்தில் எழுதாத அந்த அற்புத ஓவியத்தின் வருகை பொதிகைச் சாரலாகிப் பொங்குகிறதே இன்பம்!

ஆகா! என்னே இவளின்சக்தி! இவள் என்னை நீங்கினால்—அங்கமெல்லாம் சூடேறிச் சுடுகின்றது! ஆனால், நெருங்கினாலோ நெஞ்சமெல்லாம் குளிர்ச்சி கொண்டு மகிழ்ச்சியை அள்ளித் தருகின்றது!

இவ்விதப் புதுமையான தீயை-இவள் எங்கிருந்து எப்படித்தான் பெற்றாளோ?

தலைவன் தலைவியைக் காணாது வாடி — அவள் வருகையினால் மகிழ்ச்சி கொள்ளும் நிலையே இது.

நீங்கின் தெறூஉம்
குறுகுங்கால் தண்ணென்னும்
தீயாண்டுப் பெற்றாள் இவள்.



## 4. காதலனைக் காப்பவள்!

கணவனுக்கோ — காதலனுக்கோ துன்பம் வந்துற்றது என்றால், மனைவியோ—காதலியோ அனற் புழுவெனத் துடித்துத் துவளுபவர்களைத் தாம் நாம் இது வரையில் கண்டிருக்கிறோம்; கேட்டிருக்கிறோம்!

தொல்லையுற்று அல்லலுக்குள்ளாகி யிருக்கிறான் காதலனென்றால், காதலியின் கண்கள் உறங்கா -காதுகள் எந்தஒலியையும் ஏற்கா-பசியுமிருக்காது, அந்தப் பாழ் நெஞ்சம் தன் காதலன்பால் கொண்டிருக்கும் பாசத்தால்!

இன்னுயிர்க் காதலன் தன்னைப் பிரியும் நிலை வந்துற்றால், நீரினைப் பிரிந்த மீனைப்போல் உள்ளந் துடிக்கும் கன்னியர்களைக் கண்டிருக்கின்றோம். துயர் — பிரிவுத் துயரல்லவா? அதை அனுபவிக்கும்போதுதான், துன்பங்கள் அத்தனையிலும் மிகக் கொடியது அது என்பது விளங்கும்!

இத்தகைய கன்னியர்களையெல்லாம் மிஞ்சுகிறாள் ஒரு கன்னி!

தன் காதலனுக்கு ஏற்படும் தண்டனையிலிருந்து அவனைக் காப்பாற்றும் ஒரு விசித்திரமான காதலியை நமக்கு அறிமுகப்படுத்துகிறார் வள்ளுவப் பெருந்தகை!

தாய்க்குத் தன் மகள் சூடான உணவையே உட்கொள்ள மாட்டேன் என்கிறாளே, என்கின்ற வருத்தம். ஒரு நாள் தன் மகளைப் பார்த்து, "சூடான உணவுப் பொருள்களே சுவைகெடாமலிருக்கும். நீ மட்டும் ஏனம்மா சூடாற்று, சுவை கெட்டு உண்ணுகிறாய்?" என்று கேட்டாள் தாய்.

உடனே அவள் தன் தாயிடம் சொன்னாள்:

"இருக்கின்றது அம்மா! நான் சூடான உணவை உட்கொண்டால், என் நெஞ்சில் வாழும் காதலரின் கதி என்ன ஆவது? அந்த வெப்பத்தைத் தாங்கிக் கொள்ள அவரால் முடியுமா? துடித்துவிட மாட்டாரோ அந்தச் சூட்டினால்! எனவேதான் நான் எப்போதும் சூடில்லா உணவையே புசிப்பது!"

இதைக்கேட்ட தாய், சிரிப்பின் எல்லையைத் தீண்டி விட்டு, அங்கிருந்து சென்றாள்.

நெஞ்சத்தார் காத
லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக்கு அறிந்து

## 5. கண் பேச்சுக்காரி!

கானகத்தே வேட்டைக்கென வந்த மறவனொருவன், மேடு பள்ளங்களைக் கடந்து, செடி புதர் இவற்றுள் நுழைந்து, வேட்டையாடிக் கொண்டிருந்தான்!

காலம் வேகமாக விரைந்து சென்று மறைந்து, மாலைப் பொழுதில் நின்றது; மந்தாரமிட்டுக் கொண்டிருந்தது வானம்!

அன்றைய தினம் களைப்பு. அவனை வெகுவாகக் கவ்விக் கொள்ளவே, வேட்டையை அத்துடன் நிறுத்திக் கொண்டு புறப்பட்டு விட்டான் அப் புலிநிகர் வீரன்!

வழியிலே ஒரு பூக்காடு!

அதிலே மலர்கள் பூத்துக் குலுங்குவதை, தவழ்ந்து வரும் தென்றல் உணர்த்திக் கொண்டே சென்றது!

அவனுக்கோ காடு மேடுகளைச் சுற்றிய களைப்பு உடலிலே— அதன் பொருட்டு சிறிது நேரம் குளிர்ச்சி காணலாமே என்ற நினைப்பு அவன் நெஞ்சிலே!

நினைப்பு நெஞ்சிலே குடியேறிய பிறகு யாரதைத் தடுக்க முடியும்? உடனே கால்களுக்குக் கட்டளை! அடுத்த கணம் கால்கள் சோலையை நோக்கிச் செல்ல ஆரம்பித்தன.

மலர்ச் சோலையில் நுழைந்த அவன், வண்ண மலர்களின் வர்ண ஜாலங்களைக் கண்டு குதூகலத்தோடு சென்று கொண்டிருந்தான்.

மலர்களிலேயுள்ள தேனை மொண்டு செல்ல வந்து கொண்டிருக்கும் வண்டினங்களின் ரீங்காரத்தைக் கானமாக்கிக்கொண்டிருந்தது தென்றல்!

தென்றல் தரும் கானமும், தேன் மலர்களின் எழில் நிரம்பிய காட்சியும் அவன் உள்ளத்தில் ஒரு விதமான கிளர்ச்சியை உண்டாக்கிக் கொண்டிருந்தன.

அச்சமயம் சோலையிலே ஒரு சிலைவடிவுச் சிங்காரி ஒருத்தி, புள்ளி மானெனத் துள்ளி வந்து கொண்டிருந்தாள்!

கண்டான் அக் கட்டழகு படைத்தவளை; நின்றான் அப்படியே தன் சுயநிலை மறந்து; அனுபவித்தான் அவளழகை உச்சி முதல் உள்ளங்கால் வரை; இறுதியில் இன்ப மயக்கத்தில் திளைத்து நின்றான்!

அவனைக் கண்ட அந்த அழகுச் சிலையும் அசையாது நெடுமரமென நின்று விட்டாள்! இவ்வித எழில் நிறைந்த சுந்தராங்கதனை இதுவரைக் கண்டதில்லையே! என்று திகைக்கிறாள் அவள். மேலும் அவளால் ஓரடிகூட எடுத்து வைக்க முடியாமல், சிற்பி செதுக்கிய சிலையாக நின்றாள்!

இந் நிலை நெடுநேரம் நீடித்தது!

இருவர் உள்ளங்களிலேயும் கொப்புளித்துக் கொண்டுவரும் எண்ணக் குவியல்களைக்கொட்ட நினைக்கின்றனர். ஆனால், வார்த்தைகள் நெஞ்சோடு நின்று இருவரும் ஊமைகளாகக் காட்சியளித்துக் கொண்டிருந்தனர்!

அவளின் விழி என்ன மொழிகிறது என்பதை அறிய தன் விழியை அதன்பால் செலுத்திக் கொண்டிருந்தான் அவன்.

"இவ்விதமானதோர் எழில் நிரம்பிய ஆணழகரை அடையத்தான் இதுவரையில் நான் ஏங்கி எதிர்பார்த்துக் கிடந்தேன்— என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டவர் கிடைத்து விட்

டார்!'' என்பதை அந்த வேல் விழியாள் தன் விழிமூலம் மொழி கின்றுளாம்!

அதற்குப் பதிலளிக்கும் வகையாக அவனும், ''கொஞ்சும் என் அஞ்சுகமே! கோமளத் தாமரையே! அஞ்சாதே! என் எண்ணத்திலே நிழலாடும் எழிலுருவம் நீயேதான். இனி இவ் வையத்து இன்பமெல்லாம் நமக்குத்தான் சொந்தம்!'' என்று வாரியணைக்கின்றுனும் அவ் வையபத்துத் தாரகையைத் தன் விழிமூலம்!

கண்ணோடு கண் இணைந்து உறவாடும் நேரத்தில்—வாய்ச் சொற்களுக்கு எவ்விதப் பயனுமில்லாமற் போய் விடுகின்றன!
கண்ணோடு கண்இணை
நோக்குஒக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல.

— ❋ —

*இன்ஸ்பெக்டர்: இந்த மனிதன் உம் பொருள்களைத் திருடிவிட்டதாகச் சொல்கிறீர். இங்கே உள்ள பொருள்களில் உம்முடையதைக் கண்டு பிடிக்க முடியுமா?*

*புகார் கொடுத்தவர்: இதோ இந்தக்கைகுட்டை 'வி' என்று மார்க் போட்டிருக்கிறதே.*

*இன்ஸ்பெக்டர்: அந்த ருஜு போதாது. என்னிடம்கூடத்தான் 'வி' என்று குறியிட்ட கைக்குட்டை இருக்கிறது.*

*புகார் கொடுத்தவர்: இருக்கலாம் எனது இரண்டு கைக்குட்டைகளை அல்லவா காணோம்.*

☼ ☼ ☼

*''நீ நிரபராதி! என்கிருய் நீ திருடியதைப் பார்த்தாக ஆறு சாட்சிகள் இருக்கிருர்களே!''*

*''அதற்கென்ன, நான் திருடியதைப் பார்க்கவில்லை என்பதற்கு ஆயிரம்பேரைச் சாட்சியாக அழைத்து வருவேனே!''*

# செய்திக் குறிப்புகள்

## செஞ்சி பஞ்சாயத்து யூனியன்

செஞ்சிபஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த சிறுகடம்பூர், கிங்கவரம் கிராமங்களில் உள்ள நான்கு ஏரிகளுக்கு தண்ணீர் வரத்துவரும் ஐந்து மைல் நீளமுள்ள சிறுகடம்பூர் வரத்து கால்வாயில் புதர் நீக்கி, தூர் வாரி, ஆழப்படுத்தும் சிரமதான வேலையை 23-7-64-ந் தேதி 2500 கிராமத் தொண்டர் படையினர் ஆரம்பித்து செய்தார்கள். செஞ்சி பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த 40 க்கு மேற்பட்ட கிராமங்களிலிருந்து தொண்டர் படையினர் ஆண்களும், பெண்களும், கால்நடையாகவும், மாட்டு வண்டியிலும், சைகிள்களிலும், பஸ்களிலும், வந்து சேர்ந்தார்கள். சிறுகடம்பூர் பெரிய ஏரியில் கூடுபட்டு அணைக் கட்டு வாய்க்கால் வந்து சேரும் இடத்தில் மிகப் பெரிய பந்தல் அமைக்கப்பட்டிருந்தது. வழி நெடுக வரவேற்பு வளைவுகளும், தோரணங்களும், கொடிகளும் கட்டப்பட்டிருந்தன.

காலை 8 மணிக்கு பந்தலுக்கு எதிரில் உள்ள மைதானத்தில் தொண்டர்படை அணி, மாதர்கள் அணி, மாணவர் அணி, அணிவகுத்து நின்றனர். பல கிராமத்திலிருந்து திரண்டுவந்த ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் விழாவைப் பார்க்க திரளாகக் கூடியிருந்தனர். மேளவாத்தியங்கள், தாரை, தப்பட்டிகள் முழங்க, தென்னாற்காடு மாவட்ட ஆட்சித் தலைவர் உயர்திரு எஸ். பி. அம்புரோஸ், ஐ. ஏ. எஸ்., அவர்களை அழைத்து வரப்பட்டது. இவ் விழாவில் திருதிரு. டி. ஆர். ராஜகோபலன், பி. ஏ., மாவட்ட ஆட்சித் தலைவரின் தனி உதவியாளர், திரு ஜே. சிவகுமார், ஐ. ஏ. எஸ்., திண்டிவனம் துணை ஆட்சித் தலைவர், திரு கே. சின்னராஜ்., பி.இ., திண்டிவனம் நீர்ப் பாசனத் துறை உதவி பொறியாளர், திரு டி. எஸ். மூர்த்தி ராவ், செஞ்சி நெடுஞ்சாலை உதவிப் பொறியாளர், திரு. கிருஷ்ணமூர்த்தி, மாவட்ட பிரச்சார அதிகாரி, செஞ்சியில் உள்ள பல அதிகாரிகள், பிரமுகர்கள், பத்திரிகை ஆசிரியர்கள் கலந்துகொண்டு சிறப்பித்தார்கள்.

மாவட்ட ஆட்சித் தலைவர் தேசியக் கொடியை ஏற்றிவைத்து மாதர் அணி, மாணவர்கள், கிராமத் தொண்டர்படையினர் அணிவகுப்பை ஏற்றுக்கொண்டார்கள். பஞ்சாயத்து யூனியன் பெருந்தலைவர் திரு ஆர். எஸ். பெரியண்ணக் கவுண்டர் மாவட்ட ஆட்சித் தலைவருக்கு வரவேற்புரை வாசித்தளித்தார்.

மாவட்ட ஆட்சித் தலைவர் அவர்களுடைய தலைமை உரையில் இந்த செஞ்சி பஞ்சாயத்து யூனியன் பிற்பட்ட பகுதியாக இருந்தபோதிலும் மக்கள் ஒற்றுமையாகவும், உற்சாகமாகவும், உழைப்பதையும், இவ்வாறு திரண்டு சேவை செய்ய வந்துள்ளதையும் பாராட்டினர். பல கிராமங்களிலிருந்தும் சிரமத்தைப் பாராது அதி காலையிலேயே

திரண்டுவந்த தொண்டர்களை யும் கிராம மக்களையும், இவ்விழா விற்கு அதிகாரிகளுடன் ஒத் துழைத்து விழாவை சிறப்பிக்க பேருதவி அளித்த விவசாய பேங்க் தலைவர் திரு வி. பெருமாள் அவர்களையும் பாராட்டினர். நாட் டின் தற்கால நிலையில் உழைப் பின் முக்கியம் பற்றி விரிவாக எடுத்துரைத்தார்.

செஞ்சி தொகுதி சட்டமன்ற உறுப்பினர் உயர்திரு ஜி. ராஜா ராம், எம். ஏ. பி. எல்., அவர் களும், சத்தியமங்கலம். தொகுதி சட்டமன்ற உறுப்பினர் உயர்திரு கே. கோபால் கவுண்டர், எம். எல். ஏ. அவர்களும் திரண்டு வந்த கிராமத் தொண் டர்படையினரை பாராட்டிப் பேசி னர்கள்.

மாவட்ட ஆட்சித் தலைவர் குத்து விளக்கு ஏற்றி வைத்து வாய்க்கால் வெட்டும் வேலையை தானே வெட்டி துவக்கி வைத் தார், வெடி சப்தம் கேட்டவுடன் வாய்க்காலில் பல பகுதிகளில் நிறுத்தப்பட்டிருந்த தொண்டர் படையினர் அவர்கள் வேலையை ஆரம்பித்தார்கள். மாவட்ட ஆட்சித் தலைவர் இதர அதிகாரி களுடன் கிராமத் தொண்டர் படையினர் வேலை செய்வதை வாய்க்கால் முழுவதும் சென்று பார்வையிட்டார். வேலை தொடர்ந்து மாலை வரையில் செய்யப்பட்டது.

மாலை சிரமதானக் குழுவினர் நீர்ப்பாசன உதவி பொறி, யாளர், நெடுஞ்சாலை உதவிப் பொறியாளர், கமிஷனர், இன் னும் இதர அதிகாரிகள் கிராமத் தொண்டர் படையினர் செய்த வேலையை மதிப்பிட வாய்க்கால் நெடுகச்சென்று பார்வையிட்டார் கள். சுமார் ரூ. 3000-பொறு மான வேலை இந்த ஒரே நாளில் செய்யப்பட்டதாக மதிப்பிடப் பட்டது. சிரமதான வேலை மாலை 5-30 மணிக்கு முடிந்தது.

திரு வை. வேதம், பி. ஏ., செஞ்சி பஞ்சாயத்து யூனியன் கமிஷனர், மாவட்ட ஆட்சித் தலை வருக்கும், ஏனைய அதிகாரிகளுக் கும், உதவி செய்த பிரமுகர்களுக் கும் சிரமதானத்தில்பங்கெடுத்துக் கொண்ட எல்லா கிராமத்தொண் டர் படையினருக்கும், இதர ஊழியர்களுக்கும், பொது மக்க ளும், நன்றி தெரிவித்தார்கள். பொது மக்கள் கிராமத் தொண் டர் படையினரின் மகத்தான சேவையைப் பெரிதும் பாராட்டு கிறார்கள். இந்த மாவட்டத்தில் பெரிய அளவில் கிராமத் தொண் டர்படை சிரமதான வேலை செய் வது செஞ்சியில்தான் முதல் முதலாகத் துவக்கப்பட்டுள்ளது.

### லத்தூர் பஞ்சாயத்து யூனியன்

லத்தூர் பஞ்சாயத்து யூனிய னைச் சேர்ந்த செய்யூர் கிராமத் தில் 11-6-64 வியாழக்கிழமை மாலை 6-மணி அளவில் மேல்சட்ட மன்ற உறுப்பினர் உயர்திரு வி. கே. இராமசாமி முதலியார் அவர்கள் தலைமையில், தமிழ் நாடு முதலமைச்சர் கனம். எம். பக்தவத்சலம் அவர்கள் ரூ 12,000-மதிப்பில் கட்டப்பட் டுள்ள பஞ்சாயத்து யூனியன் தொடக்கப்பள்ளியின் பிரதான கட்டிடத்தைத் திறந்து வைத்த துடன், மேட்டுக் குடிநீர் தேக்கத் தொட்டி கட்டடத்திற்கு அடிக் கல் நாட்டியும், அமரர் நேருஜி யின் திருவுருவப்படத்தைத் திற ந்து வைத்தும், லத்தூர் பஞ்சா யத்து யூனியனில் நெல் அறு வடை போட்டியில் வெற்றி பெற் வர்களுக்குப் பரிசுகளும் வழங் கினர்.

தமிழ்நாடு அரசாங்கம் செய்தித் துறை அமைச்சர் கனம். ஜி. பூவராகன் அவர்கள் ரூ 5400-

மதிப்பில் கட்டப்பட்டுள்ள பஞ்சாயத்து அலுவலகக் கட்டடத்தைத் திறந்து வைத்தும், அலுவலகக் கட்டடத்திற்கு பொருத்தப்பட்டுள்ள மின்விளக்கை ஏற்றிவைத்தும், தேசத் தலைவர்களின் படங்களைத் திறந்து வைத்தார்.

லோகல் நூல்நிலயக் குழுவின் தலைவர் உயர்திரு டி. புருஷோத்தம் அவர்கள் நூல் நிலயக் கட்டடத்திற்கு அடிக்கல் நாட்டினர்.

உயர்திரு ஓ. வெங்கடசுப்பா ரெட்டியார் எம். எல். ஏ. அவர்களும் உயர்திரு பி. பரமேஸ்வரன், எம். எல். ஏ., அவர்களும் பஞ்சாயத்து யூனியன் தொடக்கப் பள்ளிக்கு ரூ 6000-மதிப்பில் கட்டப்பட்டுள்ள இரண்டு இணைப்புக் கட்டடங்களையும் திறந்து வைத்தார்கள்.

செங்கை மாவட்ட ஆட்சித் தலைவர் உயர்திரு எஸ். கிருஷ்ணசாமி, ஐ. ஏ. எஸ்., அவர்கள் வானொலிமன்ற வானொலிப்பெட்டியை இயக்கி வைத்தார்.

லத்தூர் பஞ்சாயத்து யூனியன் தலைவர் உயர்திரு எம். இராமகிருஷ்ண ரெட்டியார் அவர்கள் செய்யூர் பஞ்சாயத்தைச் சேர்ந்த மேற்குக் காலனியில் ரூ. 3000-மதிப்பில் கட்டப்பட்டுள்ள புதிய கட்டடத்தைத் திறந்து வைத்தார்.

பிறகு உயர்திரு வி. கே. இராமசாமி முதலியார், எம். எல். ஸி., அவர்கள் தலைமையில் பொதுக்கூட்டம் நடந்தது. கூட்டத்தில் கனம். எம். பக்தவச்சலம், கனம். பூவராகன், பி. பரமேஸ்வரன், எம். எல்.ஏ., திரு.ஓ. வெங்கடசுப்பா ரெட்டியார், எம். எல். ஏ., திரு. டி. புருஷோத்தம் முதலியவர்கள், கல்வியின் அவசியம், மக்கள் அறிவை விருத்தி செய்ய நூல் நிலயங்களின் அவசியம், பஞ்சாயத்து யூனியன்கள் ஏற்பட்ட பிறகு கிராமங்களின் முன்னேற்றம் முதலியவைபற்றி மிக விளக்கமாகப் பேசினர், ஆணையர் திரு எல். சுந்தரராஜன், பி.எஸ்ஸி., (அக்.) டி. எச்., அவர்கள் நன்றி கூறிய பின் தேச வாழ்த்துடன் விழா இனிது முடிந்தது.

## பெருந்துறை-2 பஞ்சாயத்து யூனியன்

பெருந்துறை-2 பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த விஜயமங்கலம் பஞ்சாயத்து யூனியன் ஆரம்பப்பள்ளியில் 17-7-64-ம் தேதியன்று, விஜயபுரிப்பஞ்சாயத்துத் தலைவர் திரு. கே. பி. நடராஜன் அவர்கள் தலைமையில் நடந்த விழாவில் பெருந்துறை-2 வட்டாரத்திற்குட்பட்ட பள்ளிகளில் படிக்கும் ஏழைக்குழந்தைகளுக்கு இலவசமாக புத்தகங்களும், சிலேட்டுகளும் வழங்கப்பட்டன.

மூங்கில்பாளையம் பஞ்சாயத்துத் தலைவர் திரு எம். கே. மூர்த்தி ரெட்டியார் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினுர்கள். ஈரோடு சரகம் பள்ளி இளந் துணைத் தணிக்கையாளர் சொற்பொழிவாற்றினுர். ஏழைக் குழந்தைகளுக்கு இலவசமாக கல்விப் பொருள் கொடுத்து ஊக்குவிப்பதனுல் எல்லாப்பள்ளி வயதுக் குழந்தைகளும் கல்வி கற்க ஆர்வங்கொள்ள ஏதுவாகுமெனக் குறிப்பிட்டுள்ளார். அவர் மேலும் குறிப்பிடுகையில் கல்வி வளர்ச்சிக்கு இது ஒரு சிறந்த சாதனமென்றும் பஞ்சாயத்து யூனியனுல் கல்வி வளர்ச்சிக்கு இது எடுத்துக்காட்டாகு மென்றும் குறிப்பிட்டார்.

அடுத்து விஜயமங்கலம் உயர்நிலைப்பள்ளித் தலைமை ஆசிரியர் திரு பீமசேனராவ் பி. ஏ. பி. டி. அவர்கள் சொற்பொழிவாற்றுகை

யில் பொருளாதாரத் துறையில் சற்றுப் பின் தங்கிய நம் நாட்டு மக்கள் வறுமையில் வாடுகின்றனர். அவர்கள் தமது குழந்தைகளைக் கல்வி பயிற்றுவிக்க மிகவும் கஷ்டப்படும் இந்நிலையில் இவ்வட்டாரத்தில் செய்யக்கூடிய இத்தகைய காரியம் மிகவும் உன்னதமானதென்றும் கேடில்லா விழுச் செல்வத்தை வளர்க்கப் பணிபுரியும் இத்தகைய செயலை மிகவும் பாராட்டிப்பேசினார்கள்.

### அன்னூர் பஞ்சாயத்து யூனியன்

அன்னூர் வட்டாரத்தில் கிராமத்தொண்டர் பயிற்சி முகாம் அக்கரை செங்கப் பள்ளியில் 6, 7, 8-7-64-ல் நடைபெற்ற கூட்டத்தில் கடைசி நாள் இந்திய செய்தித்துறை பிராந்திய விளம்பர அதிகாரி கலந்துகொண்டார். இரவு இசை நிகழ்ச்சி ஏற்பாடு செய்யப்பட்டது. நூற்றுக் கணக்கான மக்கள் கூடினர். இசை நிகழ்ச்சியும் விளம்பர அதிகாரியின் நேருஜியின் வாழ்க்கைக் குறிப்புகள் என்ற சொற்பொழிவும் வட்டார வளர்ச்சி அதிகாரியின் தொண்டர்களின் கடமைகள் என்ற சொற்பொழிவும் திரளான மக்களிடையே நல்ல ஒருதிருப்பத்தையும் திருப்தியையும் உண்டாக்கின.

அன்னூர் வட்டாரம் குப்பனூர் கிராமத் தொண்டர் படை பயிற்சி முகாமில் பஞ்சாயத்து யூனியன் தலைவர் திரு கே. நஞ்சப்ப கவுண்டர் தலைமை வகித்தார். பஞ்சாயத்துத் தலைவர் திரு ரங்கே கவுண்டர் எல்லோரையும் வரவேற்று உரை நிகழ்த்தினார். வட்டார ஆணையாளர் திரு. டி. கே. ரங்கராஜன் ஆரம்பித்து வைத்து உரை நிகழ்த்தினார். மாவட்ட விவசாய அதிகாரி திரு கே. சிவராம கிருஷ்ணன் பி. எஸ்ஸி. அவர்கள் விவசாயத் துறையில் நவீன கருவிகள் மருந்துகள், மற்றுமுள்ள உதவிகள் உலகமே விவசாயிகளை நம்பி வாழுகிறது என்றும் தெளிவாக சிறப்புரை வழங்கினார். 10 குக்கிராமங்களிலிருந்து சுமார் 60 தொண்டர்கள் (விவசாயிகள்) கலந்து கொண்டனர். மற்றும் அலுவலக விஸ்தரிப்பு அதிகாரிகள் விவசாயம், கல்வி, உரம் ஏனையோர் வந்திருந்தும் சொற்பொழிவாற்றினர்.

அன்னூர் வட்டாரத்தில் இந்திய செய்தித் துறையின் ஆதரவில் 13-7-64 முதல் 17-7-64 முடிய 5 நாட்களில் ஐந்து இடங்களில் படக்காட்சி ஏற்பாடு செய்யப்பட்டு அந்த வட்டார குக்கிராமங்களிலிருந்து திரளாக மக்கள் வந்து பார்த்துக் களித்தனர்.

### அவிநாசி பஞ்சாயத்து யூனியன்

அவிநாசி பஞ்சாயத்து யூனியன் உபதலைவர் திரு ஏ. ஆர். சுப்பைய கவுண்டர் அவர்கள் தலைமையில் பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்தில் உலக சுகாதார தின விழா நடைபெற்றது. அது சமயம் அவிநாசி ஆரம்ப சுகாதார நிலைய மருத்துவர் திரு ஏ. வி. நஞ்சுண்டசாமி. எஸ். பி. எஸ். அவர்களால் க்ஷயரோகம் பரவும் விதத்தையும் அதைத் தடுக்கும் விதத்தைப் பற்றியும் சுகாதார ஆய்வாளர் திரு டி. எஸ். ரங்கநாதன் அவர்களால் க்ஷயரோகம் பரவும் விதத்தை படவிளக்கமாகவும் பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் திரு டி. எஸ். கிருஷ்ணசாமி சொற்பொழிவு ஆற்றினார்கள். விழாவில் விஜயம் செய்து சிறப்பித்த அனைவருக்கும் கல்வி விஸ்தரிப்பு அலுவலர் திரு ஏ. அவிநாசியப்பன் நன்றி கூறியபின் நாட்டு வாழ்த்துடன் கூட்டம் இனிது முடிவுற்றது.

# சிறுவர் பகுதி





## தென்னை

தின்னத் தின்ன இனித்திடும்
சிறந்த காயை அளித்திடும்
தென்னை நல்ல தென்னையாம்
சேர நாட்டுத் தென்னையாம்

வானை நோக்கி வளர்ந்திடும்
வண்ண வண்ணத் தென்னை
யாம்

தேனைப் போல நீர் தரும்
சிறப்பு மிக்க தென்னையாம்

கொட்டகைக்குக் கீற்றுகள்
கூரை கட்ட வாரைகள்
அட்டி யின்றித் தந்திடும்
அழகு மிக தென்னையாம்

காற்றில் ஓலை ஆடிட
கண்ணைக் கவரும்வண்ணமாய்
ஆற்றங் கரையில் நிற்குமாம்
அதனில் உள்ளம் சொக்குமாம்

—'புவனை கலைச்செழியன்'













# மலைப் பாம்பு

ஹேமலதா:

நாதர் முடி மேலிருக்கும்
    நாகப் பாம்பே
நச்சுப் பையை வைத்திருக்கும்
    நல்ல பாம்பே
பாதலத்தில் குடிபுகும்
    பைகொள் பாம்பே
பாடிப்பாடி நின்றுவிளை
    யாடு பாம்பே
ஆடு பாம்பே, ஆடு பாம்பே!

சுந்தரம்: போதும் ஹேமலதா, உன் பாட்டுப் போதும். பாம்பைப் பற்றித் தானு பாட வேண்டும்? வேறு பாட்டு உனக்குத் தெரியாதா?

ஹேமலதா: ஏன், தம்பி இப்படிக் கோபித்துக் கொள்கிறுய். வரும் வழியில் ஒரு 'பாம்பாட்டியைப் பார்த்தேன். அவன் ஒரு பெரிய பாம்பை வைத்து வேடிக்கை காட்டிக் கொண்டிருந்தான். அதனுல் தான் பாம்பைப் பற்றிப் பாடத் தொடங்கி விட்டேன்.

சுந்தரம்: பாம்பு என்றுலே எனக்கு ரொம்பப் பயம். நீயோ பெரிய பாம்பைப் பார்த்ததாகக் கூறுகிறுய். பாம்புகளில் பெரிய பாம்பு எது, ஹேமலதா?

ஹேமலதா: பாம்புகளில் மிகப் பெரியது மலைப்பாம்பு தான். உலகத்தில் ஏறத்தாழ 3,000 வகையான பாம்புகள் இருக்கின்றன. இந்தியாவில் மட்டும் 400 வகையான பாம்புகள் இருக்கின்றன.

சுந்தரம்: அப்படியாயின் தமிழ் நாட்டில் எத்தனை வகைப் பாம்புகள்?

ஹேமலதா: சுமார் 200 வகையான பாம்புகள் இருப்பதாக அறிஞர்கள் கூறுகின்றனர். ஆனுல் அந்த 200 பாம்புகளுமே கொடிய பாம்புகள் என்று கூறிவிட முடியாது. ஆறே ஆறு விதப் பாம்புகள் தான் ரொம்பவும் விஷமுள்ளனவாகும். பெரும்பாலான பாம்புகள் விஷமில்லாத பாம்புகளே.

சுந்தரம்: விஷமுள்ள பாம்புகள் எவை எவை?

ஹேமலதா: விஷப் பாம்புகள் என்று, நாகப் பாம்பையும், வைபர் பாம்பையும், விரியன் பாம்பையும், பவளப் பாம்பையும், மாம்பா என்ற பாம்பையும், சில கடற்பாம்புகளையும் தான் சொல்லுகிறுர்கள்.

சுந்தரம்: மிகப் பெரிய பாம்பு என்று மலைப்பாம்பைச் சொன்னுயே. அது விஷப் பாம்பில்லையா?

ஹேமலதா: இல்லை. மலைப் பாம்பைக் கொடிய விஷப் பாம்பு என்றுகூற முடியாது. மலைப்பாம்புகள் எதிரியை விஷத்தால் கொல்லுவதை

விட கட்டி இறுக்கிக் கொண்டு நசுக்கிக் கொல்லுதல் தான் வழக்கம்.

சுந்தரம்: அப்படியாயின் மலைப் பாம்புகளின் உணவுப் பொருள்கள் என்ன ஹேமலதா?

ஹேமலதா: மலைப் பாம்புகளில் பைதான் என்னும் சாதிப் பாம்புகள் தான் மிக மிகப் பெரியதாகும். அந்தப் பாம்பு மிருகங்களை சுற்றிப் பிடித்து நசுக்கிக் கொன்று விழுங்கி விடும், சீனு தேசத்தில் ஒரு பைதான் பாம்பு இருந்ததாம். அது ஒரு சிறு குழந்தையை உயிரோடு விழுங்கி விட்டதாம்.

சுந்தரம்: அடே அப்பா, அப்படியென்றால் சிறு குழந்தைகளாகிய நாம் ரொம்ப சாக்கிரதையாக இருக்க வேண்டும் என்று சொல். குழந்தைகளையும், மிருகங்களையும் விழுங்குவதற்கு ஏற்றபடி பைதான் என்ற மலைப் பாம்பின் உடலமைப்பு எப்படி இருக்கிறது என்று உனக்குத் தெரியுமா?

சுந்தரம்: ஓ, எனக்குத் தெரியுமே. இதோ சொல்கிறேன் கேள். பைதான் என்னும் மலைப் பாம்பிற்குக் கீழ்த் தாடை உண்டு. அதன் இரு பக்கங்களிலும் எலும்புகளுண்டு. அவை பந்தகத்தோடு இணைந்துள்ளன. பந்தகமோ இரப்பர் போல நீட்டவும் சுருக்கவும் கூடிய உறுப்பாகும். இதுதவிர மேல் தாடையில் உள்ள எலும்புகள் வாய் நன்றாக விரிந்து கொள்ளுமாறு ஒன்றோடொன்று தளர்ச்சியாகப் பூட்டப்பட்டுள்ளன. மேலும் பற்கள் பின்புறமாக வளைந்துள்ளன. அதனால் பாம்பு தன் இரையைக் கொக்கி போலப் பற்றிக்கொண்டு மெல்ல மெல்ல உள்ளுக்குள் இழுத்துக் கொள்ள முடிகிறது. இரை எவ்வளவு பெரியதாயினும் பாம்பின் உடல் நன்றாக விரிந்து கொடுத்து உணவை உள்ளுக்குள் அடக்கிக் கொள்ளும். பாம்புக்கு மார்பெலும்பு இல்லாததால் அது தன் உடலை வேண்டிய அளவு விரித்துக் கொள்ள இயலுகிறது. இரையை விழுங்கும் போது பாம்பு பெரும் பாடுபடும். இதனாலேயே இரையை விழுங்கியதும் வெகுநேரம் வரையில் பாம்பு ஒரே இடத்தில் ஆடாது அசையாது மந்தமாகக் கிடக்கின்றது. இதைக்கொண்டுதான், பெருந்தீனி தின்றுவிட்டு நடப்பவனைப் பார்த்து இரை தின்ற பாம்புபோல் நகர்கின்றான் என்று கேலி செய்வதுகூட வழக்கமாகி விட்டது.

சுந்தரம்: பைதான் என்னும் பாம்பு எப்போது இரையைத் தின்னும்? அது எந்தப் பகுதியில் வாழும்?

ஹேமலதா: பைதான் என்னும் பாம்பு இரவு நேரங்களில் தான் இரையைப் பிடித்துத் தின்னும். அது இரவில் தான் நடமாடுவது வழக்கம். மங்கிய இருளில் கூட நன்ருய்ப் பார்ப்பதற்கு ஏற்றபடி அதற்குப் பூனைக் கண்கள் உண்டு. இந்தப் பாம்புகள் மலைப்பாங்கான பிரதேசங்களில் நீர்க் கசிவுள்ள ஓடைகளை அடுத்து அதிகமாக வாழ்கின்றன என்று அறிஞர்கள் கூறுகின்றனர்.

சுந்தரம்: மலைப் பாம்புகளில் பைதான் பெரிதென்று சொன்னுயே அதன் நீளம் எவ்வளவு இருக்கும்?

ஹேமலதா. பைதானில் பல வகை உண்டு. ரீகல் பைதான் என்னும் பாம்பு 28 அடி நீளமும் 200 பவுண்டு கனமும் உள்ளதாக இருந்ததை அறிஞர்கள் அறிந்து சொல்லி உள்ளனர். சில அனுமானங்களைக் கொண்டு, அந்தப் பாம்பின் அதிகபட்ச நீளம் 33 அடிகள் இருக்கக்கூடும் என்றும் கருதுகிருர்கள். இப் பாம்புகள் தென்கிழக்கு ஆசியாவிலும், மலேயா தீபகற்பத்திலும், பிலிப்பைன் தீவுகளிலும் வாழ்கின்றவாம்!

சுந்தரம்: நம் நாட்டில் பைதான் பாம்புகள் உண்டா இல்லையா?

ஹேமலதா: உண்டு, இந்தியாவில் உள்ள பைதான் என்னும் மலைப் பாம்பின் நீளம் 20 அடிகளாகும். பொதுவாக பைதான் பாம்புகள் ஆசியா, ஆப்பிரிக்கா, ஆஸ்திரேலியா, கண்டங்களில்தான் அதிகம். ஆப்பிரிக்காவில் லேன் விக்டோரியா நயான்சா என்னும் பகுதியில் ஒரு பெண் ஓடையில் துணி துவைத்துக் கொண்டிருந்தாளாம். அவளை ஒரு பைதான் பாம்பு அப்படியே விழுங்கி விட்டதாம். அப் பாம்பைக் கொன்று கிழித்துப் பார்த்தபோது அதன் வயிறு மட்டும் 15 அடி இருந்ததாம்.

சுந்தரம்: ஆமாம் அந்தப் பைதான் பாம்புகள் குட்டிப் போட்டுப் பால் கொடுக்கும் இனத்தைச் சேர்ந்ததா அல்லது முட்டையிட்டுக் குஞ்சு பொறிக்கும் இனத்தைச் சேர்ந்ததா?

ஹேமலதா: பைதான் பாம்புகள் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும் இனத்தைச் சேர்ந்தன. குட்டி போட்டுப் பால் கொடுக்கும் பாம்புகளும் உண்டு. வைபர், கடற்பாம்பு, பச்சேலைப் பாம்புகள் குட்டி போட்டுப் பால் கொடுக்கும் இனத்தவை ஆகும். பைதான் பாம்பு ஒன்று மட்டும் ஏறத்தாழ 106 முட்டைகள் இடும் என்று சொல்லுகிருர்கள்.

சுந்தரம்: நீ சொல்வது ரொம்ப ஆச்சரியமாகத் தான் இருக்கிறது. பாம்பைப் பற்றி இன்ெனுரு ஆச்சரியமான செய்தி

யும் சொல்லுவார்களே, அதாவது பாம்பிற்கு கண்ணும் காதும் ஒன்றுதான் என்று. அது உண்மையா?

ஹேமலதா: பாம்பிற்குக் காதுகளும் இல்லை. கண்களும் இல்லை என்று கூறுவது உண்டு. அதனால்தான் 'கட்செவி' என்று பாம்பிற்குப் பெயர். பாம்பிற்குப் புறச்செவி, செவித்துவாரம், செவிப்பறை என்ற உறுப்புகளே கிடையாது, ஆனால் உட்செவிகள் மட்டுமுண்டு. உட்செவிதான் ஒலியை வாங்கிக் கொள்ளும் முக்கிய உறுப்பாகும். பாம்புக்குச் செவிப்பறைகள் இல்லாத காரணத்தால் ஒலியலைகள் காற்று வழியாகச் சென்று காதில் தாக்க முடிவதில்லை. பாம்புக்கு உட்செவி மட்டுமே இருக்கிறபடியால் நிலத்தின் வழியாகவோ, அல்லது வேறு ஏதேனுமொரு திடப்பொருள் மூலமாகவோ ஒலி அலைகள் சென்றால்தான் பாம்பினால் ஒலியைக் கேட்டறிய முடியும்.

சுந்தரம்: இதையெல்லாம் கண்டுபிடித்தவர் யார் ஹேமலதா?

ஹேமலதா: மேஜர் வால் என்பவர் இது பற்றிப் பெரிய பரிசோதனை ஒன்று நடத்தினாராம். அவர் சில நாகப் பாம்புகளின் கண்களைப் பிளாஸ்திரியினால் மூடி அவற்றை, ஒரு தாழ்வாரத்தில் விட்டு வைத்தாராம். பிறகு பெரிய தகர டப்பிகளை குச்சியால் தட்டியும் குழல் ஊதியும் சப்தத்தை உண்டு பண்ணினாராம். ஆனால் அச்சப்தத்தைப் பாம்புகள் கேட்டதாகவே தெரியவில்லையாம். ஆனால் தாழ்வாரத்திலிருந்து ஒரு நாற்காலியை இழுத்தும் தடியினால் நிலத்தில் அடித்தும் ஓசை உண்டாக்கியபோது, அவை தம் தலையை நிமிர்த்துப் படமெடுத்து ஆடினவாம்,

சுந்தரம்: நீ சொல்வதை நம்பவே முடியவில்லை. பாம்புகள் பாம்பாட்டியின் மகுடியைக் கேட்டுப் படமெடுத்து ஆடுகின்றனவே அதற்குக் காரணம் என்ன?

ஹேமலதா: பாம்பு இசையில் மயங்கி ஆடுவது இல்லை என்றும் பாம்பாட்டியின் கைகால் அசைவுகளைக் கண்டே ஆடுகிறது என்றும் நிபுணர்கள் கூறுகிறார்கள். அது ஆராய்ச்சிக்குரிய விஷயமே.

சுந்தரம்: பாம்புக்குக் கண்ணிருந்தாலும் சரி இல்லாவிட்டாலும் சரி. பல் இல்லாமல் இருந்தால் தான் உலகத்திற்கு நன்மை. பல் இல்லாத பாம்பு இருக்கிறதா? இருந்தால் அந்தப் பகுதிக்கு நான் போய் விடலாம் என்று பார்க்கிறேன்.

ஹேமலதா: பல்லில்லாத பாம்பு கிடையவே கிடையாது. ஆனால் பல்லுள்ள பாம்பைப்

பிடித்துப் பல்லைப் பிடுங்கி விடுகிறார்கள் பாம்பாட்டிகள். பாம்பிற்குப் பயந்து சாகும் நீ, பாம்பே இல்லாத இடத்திற்குப் போய் விடுவதுதான் உத்தமம்.

சுந்தரம்: பாம்பிற்கு நான் மட்டும் தானா பயப்படுகிறேன். பாம்பென்றால் படையும் நடுங்கும், விரியனைக் கண்டால் வீரனும் அஞ்சுவான் என்ற பழமொழிகளை நீ அறிய மாட்டாயா, என்ன?

அது சரி ஹேமலதா பாம்பே இல்லாத இடம் உலகத்தில் இருக்கிறதா. அது எது ஹேமலதா?

ஹேமலதா: அயர்லாந்து தேசத்தில் பாம்புகளே கிடையாதாம். அதற்குக் காரணம் பாட்ரிக் என்னும் ஞானியார் அந்தத் தேசத்தை விட்டுப் பாம்புகளை விரட்டி விட்டார் என்று புராணக்கதை ஒன்று உண்டு. ஆனால் விஞ்ஞானிகள் கூறுகின்ற காரணம், அயர்லாந்து நாட்டின் அதி குளிர்ச்சி நிலை பாம்புகளின் உயிர் வாழ்வுக்கு உகந்தது அல்ல என்பது தான்.

சுந்தரம்: காரணம் எதுவாக இருந்தாலும் சரி, நான் இப்போதே அயர்லாந்துக்குப் புறப்பட்டாக வேண்டும், போய் வரட்டுமா ஹேமலதா?

ஹேமலதா: போய் வா, தம்பி. போய் வா.

வணக்கம்!

# இறக்கை கட்டிப் பறந்தவர்கள்

ஏதன்ஸ் என்பது உலகத்திலேயே மிகப் பழைமையான பெரிய நகரம். அங்கு டேடலஸ் என்ற பெயருடைய ஒரு சிற்பி இருந்தான். அழகழகான பல சிலைகளையும், நௌிவு சுழிவான பல சித்திரச் சிற்பங்களையும் அவன் படைத்திருக்கிறான். அத்தோடு அவன் கட்டிடக் கலையிலும் மிகத் தேர்ச்சி பெற்றவன். கிரீட் தீவில் அவன் அமைத்த வரிகாணை முடியாத அதிசயச் சுழற்பாதை உலகப்புகழ் பெற்றது.

டேடலசுக்கு ஒரு மருமகன் இருந்தான். அவன் பெயர் பெர்டிக்ஸ். அவன் தன் மாமனைப்போல் சிற்பக்கலையில் புகழ்பெற வேண்டுமென்று விரும்பினான். தன் விருப்பத்தை மாமனிடம் சொன்னபோது அவனும் மகிழ்ச்சியுடன் அக்கலையைக் கற்றுக் கொடுக்கத் தொடங்கினான். பெர்டிக்ஸ் மிகச் சிறந்த அறிவு நுட்பம் வாய்ந்தவன். எனவே அவன் தன் மாமனிடம் கல்வி கற்று வெகு விரைவில் பெருந்திறமை



பெற்றவனாகி விட்டான். பொருள்களை எளிதாக அறுக்கும் இரம்பத்தையும், வளைவு போடும் கருவியையும் அவன் மாணவனாயிருக்கும் போதே புதிதாகக் கண்டு பிடித்து விட்டான். ஆசிரியரை மிஞ்சும் மாணவனாக அவன் வரக்கூடிய அறிகுறிகள் தோன்றியதும், டேடலசுக்கு மருமகன் பெர்டிக்சின் மேல் பொருமை வளரத் தொடங்கியது.

ஒரு நாள் மாலை நேரத்தில் டேடலசும் அவன் மாணவனான மருமகனும் பேசிக் கொண்டே கடலை ஒட்டியிருந்த செங்குத்துப் பாறைகளின்மேல் நடந்து சென்று கொண்டிருந்தார்கள். பெர்டிக்ஸ் தன் மாமனின் மனக் கருத்தையறியாமல் அவன் தன் புகழைக் கண்டு பெருமையடைவான் என்று எண்ணிக் கொண்டிருந்தான். பின்னாளில் தான் கண்டு பிடிக்க எண்ணியுள்ள அற்புதக் கருவிகளைப்பற்றியும், தான் செய்ய நினைத்துள்ள அருஞ்செயல்களைப் பற்றியும் அவன் பெருமையாகச் சொல்லிக் கொண்டு வந்தான். அவன் சொல்லச் சொல்ல டேடலசின் நெஞ்சில் பொருமைத் தீ வளர்ந்துகொண்டே வந்தது. திடீரென்று அவன் தன் மருமகனைப் பிடித்துக் கடலுக்குள் தள்ளிவிட்டான்.

அறிவுத் தெய்வமான மினர்வா தேவதைக்கு பெர்டிக்ஸ் மேல் அளவற்ற அன்பிருந்தது. ஆகவே, அவள் கடலில் விழுந்த அந்த இளைஞனை ஒரு கவுதாரியாக மாற்றிவிட்டாள். அவன் பறந்து சென்று தப்பினான். இல்லாவிட்டால் கடலில் வீழ்ந்து இறந்து போயிருப்பான்.

டேடலசுக்குப் பயம் ஏற்பட்டுவிட்டது. தான் தன் மருமகனைக் கொன்ற செய்தி தெரிந்தால் ஏதன்ஸ் நகர மக்கள் தன்னை எப்படித் தண்டிப்பார்கள் என்று நினைத்துப்பார்க்கவே அவன் நெஞ்சம்நடுங்கியது. ஆகவே அவன் இரவோடிரவாகத் தன் மகன் இக்காரசையும்

அழைத்துக்கொண்டு ஊரை விட்டு ஓடிவிட்டான்.

அவன் கிரீட்தீவிற்கு வந்து சேர்ந்தான். அந்தத் தீவின் அரசன் மினேஸ் அவனை அன்போடு வரவேற்றுத் தன் அரண்மனையிலேயே வைத்துக் கொண்டான்.

அங்கு போய்ச் சேர்ந்த சில நாட்களிலேயே அவன் அரண்மனையில் ஏதோ குற்றம் செய்துவிட்டான். அந்தக் குற்றத்திற்காக அரசன் மினேஸ், சிற்பி டேடலசை யும் அவன் மகனையும் கைதிகளாக்கிவிட்டான். கைதியாக வாழும் வாழ்க்கை டேடலசுக்குக் கசப்பாக இருந்தது. எப்படியாவது அந்தத் தீவிலிருந்து தப்பியோட வேண்டும் என்று எண்ணினான். ஆனால், கைதியாக உள்ள அவனுக்கு கடலைக்கடந்து தப்பியோடப் படகு எங்கிருந்து கிடைக்கும்? கடல் நடுவில் தொலைவில் மிதந்து செல்லும் மரக்கலங்களைப்பார்த்தபடி அவன் பல நாட்கள் ஏங்கி நின்றான்.

ஒரு நாள் அவன் மகன் இக்காரஸ் வானத்தைப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான். திடீரென்று அவன் தன் தந்தையை அழைத்துக் கூவினான். "அப்பா, அதோ பாருங்கள். கடலில் மிதந்து செல்லும் அந்தப் பாய்மரப் படகுகள் எப்படியிருக்கின்றன! அந்தப் பறவைகள் இறக்கையை அடித்துக் கொண்டு வானத்தில் பறக்கின்றன. இந்தப் படகுகள் தங்கள் வெண்மையான பாய்களின் உதவியால் அலைகளில் எளிதாக மிதந்து செல்கின்றன. இரண்டும் ஒன்றுபோல் இல்லையா?" என்று கேட்டான்.

சிறுவனின் இந்தச் சொற்கள் சிற்பி டேடலசின் சிந்தனையை இயக்கியது. அவனுக்கு ஒருவழி தோன்றியது.



தனக்கும் தன்மகனுக்கும் இறக்கைகள் செய்து கொண்டு, அவற்றின் உதவியால், பறந்து அந்தத்தீவிலிருந்து தப்பிவிடுவதென்று முடிவு செய்தான்.

அன்றே அவன் வேலையைத் துவக்கிவிட்டான். பறவைகளின் இறகுகளையெல்லாம் பொறுக்கிவந்து ஒன்றாகக் கோர்த்தான். பிறகு, பறவைகளின் இறக்கையைப் போல் வடிவாக்கினான். அந்த இறக்கைகளை



மென்மையான மெழுகினால் தன் இருதோள்களிலும் தன் மகனின் தோள்களிலும் ஒட்டினான்.

எல்லா வேலையும் முடிந்த பிறகு, அவன் தன் மகனை நோக்கி, "இக்காரஸ், என்னைப் பார்த்துக் கொண்டு, என் பின்னாலேயே பறந்து வா. நீ வானத்தில் அதிக உயரம் பறந்து சென்றாயானால், கதிரவனுடைய வெப்பம் அதிகமாகி, மெழுகை உருக்கிவிடும். மிகத்தாழ்ந்து பறந்தாயானால், கடல் நீர் பட்டு இறக்கைகள் நனைந்து விடும்" என்று எச்சரித்தான். பிறகு, வழியில் எவ்விதமான இடையூறுகளும் ஏற்படக்கூடாதென்று தெய்வங்களை வேண்டிக்கொண்டு அவர்கள் பறக்கத் தொடங்கினார்கள்.

இரண்டு பெரிய பறவைகளைப் போல் அவர்கள் மெல்ல மெல்ல வானில் ஏறிப் பறந்தார்கள். அவர்கள் கடந்து சென்ற ஊர்களில் இருந்த மனிதர்கள், தேவர்கள் யாரோ பூவுலகைச் சுற்றிப் பார்க்க இறங்கி வருகிறார்கள் என்று எண்ணி ஆங்காங்கே விழுந்து விழுந்து கும்பிட்டார்கள். சீராகவும் நேராகவும் ஒரே வேகத்தோடு ஒரே உயரத்தில் வேகமாக அவர்கள் பல கடற் பகுதிகளையும் நிலப்பகுதிகளையும் கடந்து சென்று கொண்டிருந்தார்கள். டேடலஸ் தன் மகன் வருகிறானா என்று திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு பறந்தான்.

தொடக்கத்தில் சிறிது பயத்துடன் இக்காரஸ் தன் தந்தையைத் தொடர்ந்தே பறந்து சென்று கொண்டிருந்தான். பிறகு பறக்கப் பறக்க அவனுக்கு பயம் போய் ஊக்கம் பிறந்து விட்டது.

தன் தந்தை பார்க்காத சமயம் பார்த்து உயர உயரப் பறந்து சென்றான். உயரே தெரியும் நீலவானத்தைத் தொட்டுப் பார்த்து விட வேண்டும் என்று அவனுக்கு ஆசையுண்டாகிவிட்டது.

ஆனால், பாவம்! அவன் மேலே செல்லச் செல்லச் சூரிய வெப்பம் அதிகமாகியது. வெப்பம் தாங்காமல் மெழுகு உருகியது. உடனே ஒட்டிக் கொண்டிருந்த இறக்கை அவன் தோளிலிருந்து நழுவிக் கீழேவிழுந்தது. அதைத் தொடர்ந்து அவனும் பிடிதரம் எதுவுமில்லாமல் கீழே விழுந்தான். அப்படி விழும்போது அவன் அலறிய குரல் கேட்டு டேடலஸ் திரும்பிப் பார்த்தான். கீழே உள்ள பரந்த கடலின் நடுவில் தன் மகனுடைய தலை அமிழ்ந்து கொண்டிருப்பதையும் அவன் இறக்கைகள் அலையில் மிதந்து கொண்டிருப்பதையும் கண்டான்.

டேடலஸ் அந்த இடத்தை நோக்கிக் கீழிறங்கி, கடலினுள் கையை நீட்டித் தன் மகனின் உடலைத் தூக்கினான். அருகில் இருந்த தீவிற்குக் கொண்டு சென்றான். நெஞ்சையழுத்தும் துயரத்தோடு ஒரு குழி தோண்டி அதில் அவன் இக்காரஸைப் புதைத்தான்.

அவன் தன் மகனைப் புதைத்துக் கொண்டிருக்கும் பொழுது, வானத்தில் ஒரு கவுதாரிப் பறவை வட்டமிட்டுக் கொண்டிருந்தது. அதைக் கண்டதும் அவனுக்குத் தன் மருமகனின் நினைவு வந்தது. அவனைக் கொன்ற பாவத்திற்காகத்தான் தன் மகனை இழக்க நேரிட்டது என்று அவன் நினைத்துக் கொண்டான்.

அன்று முதல் இக்காரஸ் புதைக்கப்பட்ட தீவு இக்காரஸ் தீவு என்றும் அதையடுத்துள்ள கடல் இக்காரியன் கடல் என்றும் பெயர் பெற்றன.

—*நாரா நாச்சியப்பன்*.



**வண்ணங்கள் எழுப்பும் எண்ணங்கள்**

*பச்சை — நன்மை*

*சிவப்பு — ஆபத்து*

*நீலம் — அன்பு*

*மஞ்சள் — மங்கலம்*

*கருப்பு — துக்கம்*

*வெள்ளை — தூய்மை*

# கானக்குயில்

தமிழில் : ரகுநாதன்

இந்த நாவலின் ஆசிரியை ஜார்ஜ் ஸாண்ட் (1804-76) பிரஞ்சு நாட்டினர். இவரது இயற் பெயர் அரோரி டூப்பின் என்பதாகும். இவர் முதன் முதலில் ஜூலஸ்ஸாண்டியூ என்பவரோடு கூட்டாகச் சேர்ந்து எழுத்துத் துறையில்ஈடுபட்டார். அதன்ஞாபகார்த்தமாக, தமது பெயரை ஜார்ஜ் ஸாண்ட் என மாற்றிக் கொண்டார். இவரது வெற்றிகரமான முதல் நாவலான 'இண்டியானு' என்பதே இந்தப் புனை பெயரில்தான் வெளியாயிற்று.

இவர் முதலில் டூடேவாண்ட் என்ற சீமானை வசதிக்காக மணந்து சீமாட்டியானுர்; இரு பிள்ளைகளுக்கும் தாயானுர். ஆனுல் இந்த மணவாழ்க்கை விவாகரத்தில் முடிந்தது. இதன் பின் இவரது வாழ்க்கையில் ஏற்பட்ட காதல் விவகாரங்கள் பலவாகும். இவரது ஆரம்பகால நாவல்கள் இந்த அனுபவங்களின் இன்ப துன்பங்களைப் பிரதிபலிப்பவையாக இருந்தன. இவரது காலத்தின் அரசியல் மற்றும் கலையுலக வாழ்க்கையில் இவர் ஒரு முக்கிய நபராக இருந்தார். இளமைக் காலத்தில் இவர் கிராமப் புறத்தில் வளர்ந்தவர்; கிராமிய வாழ்க்கையை நன்கறிந்தவர். எனவே கிராமிய வாழ்க்கையைச் சித்திரிப்பதில் இவர் திறமை பெற்று விளங்கினுர். மேலும் இவரது சமூக நாவல்கள் சமுதாயத்தை நோக்கிக் கேள்விக் கணை விடுக்கும் துணிச்சலான கருத்துக்களைப் பெற்றவையாக விளங்கின. விவாகரத்துக்குப் பின்னர் இவர் எழுதுவதையே தொழிலாகக் கொண்டு விட்டார்.

தமது ஆயுட் காலத்தில் இவர் எண்பது நாவல்கள் எழுதியுள்ளார். இவை தவிர நினைவுக் குறிப்புக்கள் முதலிய படைப்புக்களும் உண்டு. இவர் ஒரு குறிப்பிட்ட திட்டத்தோடு எழுத முனையாவிட்டாலும், இவரது படைப்பில் ஒரு மத்தியமான கருத்து அல்லது பிரச்னை இருக்கும். அதனைச் சுற்றியே இவரது பாத்திரங்கள் வளையவரும்; கதையும் தன்போக்கிலே வளரும். கான்சுலோ இவரது சிறந்த நவீனங்களில் ஒன்ருகும். இந்தப் பிரசித்தமான கதை உள்ளத்தை உருக்கும் உணர்ச்சிகளும் சம்பவங்களும்நிறைந்ததாகும். இந்தச் சிறந்த நாவலின் கதையே இங்கு சுவை குன்ருமல் சுருக்கமாகத் தரப்படுகிறது.

☼ ☼ ☼

# 1

வெனிஸ் நகரத்தில் அழகிய கடல் சிப்பிகளைக் கடலில்மலர்ந்த மலர்கள் என்று கவிநயத்தோடு குறிப்பிடுவார்கள். அத்தகைய கடல் மலர்கள் சிலவற்றைக் கோத்து, கண்டசரமாகக் கட்டிக் கொண்டிருந்தான் ஆன்ஸோலெட்டோ. அவன் கடற்கரைப் பாறையில்அமர்ந்து. நிலநிறமான கடல்நீருக்குள் கால்களைத்தொங்க விட்டுத் துழாவியவாறே அதனைத் தட்டிக் கொண்டிருந்தான்.

அவனுக்குக் கிட்டத்தட்ட பத்தொன்பது வயதாகி விட்டது. மேலும் புராதனமான கிரேக்க நாட்டுப் பொற்காலத்துத் தேவதைகளைப் போல் அவன் அழகும் இளமையும் நிறைந்து விளங்கினான். என்றாலும் அவனது கன்னங்கரிய கருவிழிகளில் மட்டும் ஏதோ ஒரு துடிப்பும் துணிச்சலும் குடிகொண்டிருந்தன. இந்தத் தோற்றம் அவனது ஆசிரியரான போர்ப் போராவுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. போர்ப் போரா மிகவும் பிரபலமான சங்கீத வித்வான். அவர் அவனை இரண்டு காரணங்களுக்காக மிகவும் கண்ணும் கருத்துமாக மதித்து வந்தார். இலவசச் சங்கீதப் பள்ளியில் படித்து வந்த மாணவ மாணவியரில் ஆன்ஸொலெட்டோவே அவருக்கு மிகவும் பிடித்தமான மாணவன். இது ஒரு காரணம். மேலும், சான் சாமுவேல் என்ற பெயருள்ள சங்கீத மண்டபத்தை நிர்வகித்து, அதில் ஈடுபட்டிருந்த சங்கீத ரசிகரான ஜுஸ்டினியானி பிரபு என்பவருக்கும் ஆன்ஸொலெட்டோவின் விஷயத்தில் அக்கறை இருந்தது. அவனை இன்னும் சில வருஷங்களில் சிறந்ததொருபாடகனாக அறிமுகப்படுத்த வேண்டும் என்பது அவரது எண்ணம்; எனவே அவர் அந்த இளைஞனிடம் தனிக் கவனம் செலுத்துமாறு போர்ப் போராவிடம்கேட்டுக் கொண்டிருந்தார். இதுவும் ஒரு காரணம்.

கான்சுலோ என்ற யுவதியும் ஆன்ஸொலெட்டோவுடன் சங்கீதம் கற்று வந்தாள். அவளும் அப்போது அவனுடன் கடற்கரையில் இருந்தாள். அந்தச் சமயம் போர்ப் போராவும், அந்த பிரபுவும் அங்கு வந்தார்கள். உடனே அவர்களுக்கு எழுந்து வணக்கம் செலுத்தினான் ஆன்ஸொலெட்டோ. அதே சமயம், ''நான் இந்தக் கடல்சிப்பிகளைக் கொண்டு மாலை கட்டுகிறதேனென்றால், அது இதோ இந்தக் கான்சுலோவுக்குத்தான்'' என்று கூறியவாறே, தான் கட்டிய அந்தக் கண்டசரத்தைஅவளிடம் வழங்கினான்.

கான்சுலோ நல்ல யுவதி; அதாவது கண்ணிறைந்து தோற்றும் இளமையின் கனிவும் செழுமையும் நிறைந்த தோற்றத்தோடு விளங்கினாள் அவள். மங்கைப் பருவம் அவளது மேனிமுழுவதும் பொங்கி வழிந்தது. எனினும் உண்மையில் கான்சுலோ ஒன்றும் அத்தனை அழகும் கவர்ச்சியும் கொண்டவளல்ல. ஆனாலும் அவளது குரல் மட்டும் தேவ கானமாக, அமுத மழையாக இருந்தது. அவள் பிரார்த்தனைக்கூடத்தில் பாடுவதை அந்தப் பிரபுவும் பலமுறை கேட்டிருந்தார். அவளது குரலினிமையை யுணர்ந்த அவர், இலவசப் பள்ளியில் அவளது சங்கீதப் பயிற்சி முடிந்த பின்னர், அவளைத் தமது சங்கீத மண்டபத்தில் ஒரு பாடகியாக்கிக் கொள்ள வேண்டும் என்றும், அதற்காக, அவளது ஆசிரியர் போர்ப் போராவுடன் பேசி முடிக்க வேண்டும் என்றும் அந்தரங்கத்தில் நினைத்

திருந்தார். மேலும் கான்சுலோ—ஆன்ஸொலெட்டோ ஜோடியின் மூலம் தமது சங்கீத மண்டபத்துக்கே அமோகமான பேரும் புகழும் வருவாயும் அதிகரிப்பது நிச்சயம் என்றும் அவர் கனவு கண்டு, அந்த எண்ணத்தை அசைபோட்டு மகிழ்ந்திருந்தார்.

கான்சுலோ நாடோடியான ஒரு பாடகியின் மகள். அவளது தாய் ஸ்பெயின் நாட்டைச் சேர்ந்தவள்; அவள் ஒரு மூர்ஜாதிப் பெண். கான்சுலோவுக்குத் தன் தந்தை யாரென்பது தெரியாது. என்றாலும் கார்ட்டி மினெல்லி என்ற இடத்திலுள்ள அட்டும் அழுக்கும் படிந்த ஒட்டுக்குடிசையில் அவளது தாய் உயிரைவிட்ட காலத்தில், தனக்குப் பின்னர் தன் மகளை ஆன்ஸொலெட்டோ காப்பாற்றுவான் என்ற திடமான நம்பிக்கை அவளுக்கிருந்தது. இந்த விஷயம் கான்சுலோவுக்கு மட்டுமல்ல; ஆன்ஸொலெட்டோவுக்கும் தெரியும். எனவே அந்த யுவனும் யுவதியும் இதனையுணர்ந்து ஒருவருக்கொருவர் ஆதரவாகவும் அன்பாகவும்தான் இருந்தார்கள். காலக்கிரமத்தில் அவர்கள் இருவரும் கணவன் மனைவியாவதற்கும் தயாராக இருந்தார்கள். எனினும் அவர்கள் அது விஷயத்தில் அவசரம் ஏதும் கொள்ளவில்லை. என்றாலும் அவர்கள் இருவரும் ஒருவரையொருவர் மிகவும் ஆர்வத்தோடு நேசித்து வந்தார்கள். ஆனால் திருமண விஷயமாக அவ்வளவொன்றும் அலட்டிக் கொள்ளத் தேவையில்லை என்றே அவர்களுக்குப்பட்டது. குறைந்த பட்சம் ஆன்ஸொலெட்டோ மட்டும் அப்படித்தான் நினைத்திருந்தான்.

## 2

கடைசியில் ஒருமட்டும் ஆன்ஸொலெட்டோவுக்கும் வயது இருபத்தி மூன்று ஆயிற்று. அன்று அந்தப் பிரபு அவனைக் கண்ணைப் பறிக்கும் ஆடையலங்காரங்களால் அலங்கரித்து, ஜுஸ்டினியானி அரண்மனையில் கூடியிருந்த பிரமுகர்களின் சந்நிதியில் கொண்டு வந்து நிறுத்தினார்; அவனைப் பாடச்செய்தார். அன்று அவனது குரலும் பாட்டும் அத்தனை கவர்ச்சிகரமாக இல்லாது போயிருந்தாலும்கூட, அவனது அழகும் தோற்றமும் எல்லோரது மனத்தையும் அள்ளிக் கொண்டு போவதாக இருந்தது. தமது ஆதரவிலே வளர்ந்து உருவான அந்த இளைஞனின் பாட்டைக் கேட்டு, பிரபுவுக்கு ஒரே மகிழ்ச்சி. தமது ஆசையும் கனவும் வீண் போகவில்லை என்ற ஆனந்தம் அவருக்கு.

அன்று கிட்டிய வெற்றியினால், ஆன்ஸொலெட்டோவும் ஆனந்த வெள்ளத்தில் தன்னை மறந்து மிதந்தான். என்றாலும் அந்தநிலையிலும் அவன் அந்தக் கார்ட்டி மினெல்லியைச் சேர்ந்த கன்னியை - கான்சுலோவை மறந்துவிடவில்லை. அவன் தனது போஷகரான அந்தப் பிரபுவிடம் பேசும் போது பின்வருமாறு தெரிவித்தான்: "நீங்கள் என்னை ஒப்பந்தம் செய்து கொள்ளும்போது, கான்சுலோவையும் சேர்த்து ஒப்பந்தம் செய்து கொள்வீர்கள் என்றே நினைக்கிறேன். பிரபுவே! எங்களுக்குள் நிச்சயதார்த்தம் ஆகியுள்ளது என்பதையும், நாங்கள் இருவரும் சீக்கிரத்திலேயே மணந்து கொள்ள இருக்கிறோம் என்பதையும் நீங்கள் அறிவீர்கள். சான் சாமுவேல் சங்கீத மண்டபத்தில் நாங்கள் இருவரும் சேர்ந்தே முதன்முதலில் மேடையில் தோன்ற வேண்டும். அப்படித்தான் நாங்களும் நினைத்திருக்கிறோம்."

இதனைக் கேட்டதும் அந்தப் பிரபு "ஹூம்!" என்று உதட்

டைப் பிதுக்கினுர். "நீ யாரைச் சொல்கிருய்? அந்த அழகில்லாத பெண்ணையா? அவள் என்னமோ தேவகானமாகப் பாடத்தான் செய்கிருள். என்ருலும்......"என்று இழுத்தார். பின்னர் அவர் அவனை நோக்கி, "சரி. பார்க்கலாம். என்ருலும், உனது கான்சுலோ-அவள் மிகவும் அவலட்சணமாகத் தோற்றுகிருள் என்பதுதான் உண்மை. எனவே அவள் பிரதானப் பாடகியாகிஇருக்க லாயக்கற்றவள்தான்" என்று கூறி முடித்தார்.

இந்த எதிர்பாராத தடையும் அதிர்ச்சியும் ஆன்ஸொலெட்டோவின் குறுகிய இதயத்தில் பயபீதியைத்தான் விளைவித்தது. எனவே கார்ட்டி மானெல்லியை நோக்கி அவசர அவசரமாகச் சென்ற காலத்தில், அவன் தனக்குத் தானே பின்வருமாறு முணுமுணுத்துக் கொண்டான்: "அழகில்லையா? அவள் அவலட்சணமானவளா? அவலட்சணம்— நினைக்கவே பயங்கரமாக இருக்கிறதே, ஒரு வேளை அந்தப் பிரபுதான் தப்புக் கணக்குப் போட்டுவிட்டாரோ?..."

அவன் அவளது அறைக்குள் நுழைந்ததும், கான்சுலோ அவனை நோக்கிப் பின் வருமாறு கேட்டாள்: "என்னை ஏன் அப்படி வெறித்துப் பார்க்கிருய்? இதற்கு முன் நீ என்னைப் பார்த்ததே இல்லை என்பது போல் புதுமையாகப் பார்க்கிருயே. அப்படி என்ன பார்க்கிருய்?"

"சொல், கான்சுலோ, என்னிடம் சொல். நானீ அழகாயிருக்கிறேனு? நீ என்ன நினைக்கிருய்?"

"ஆமாம். நீ அழகாய்த்தான் இருக்கிருய். மேலும் நான் உன்னைக் காதலிப்பதால் நீ எனக்கு அழகாகத்தான் தோற்றுகிருய்."

"ஆனுல்—நீ காதலிப்பதால் நான் அழகாகத்தோற்றுகிறேனு? இல்லை, உண்மையிலேயே நான் அழகாயிருக்கிறேனு?"

"அது—அது எனக்கெப்படித் தெரியும்?"

"கான்சுலோ! நீ அவலட்சணமானவளா? உண்மையைச்சொல் நீ அவலட்சணமானவளா?"

"ஏன்? நீயே என்னைப்பார்த்துத் தெரிந்து கொள்ளேன். ஏன்? உனக்குந் தெரியவில்லையா?"

"இல்லை."

"அப்படியென்ருல், நான் போதுமான அளவுக்கு அழகுள்ளவள்தான்."

"ஆனுல் உண்மையைச்சொல். எனக்கு உண்மை தெரிய வேண்டும். நீ அவலட்சணமானவளா?" என்று அந்த இளைஞன் மீண்டும் கேட்டான்.

"இல்லை. நான் அவலட்சணமானவளில்லை" என்று புண்பட்டுப் போன புழுக்க உணர்ச்சியோடு சொன்னுள்: "நான் சிறு குழந்தையாக இருக்கும் போது அழகற்றவளாகத்தான் இருந்தேன். என்ருலும் காலமும் பருவமும் என்னிடம் கருணை காட்டி, என்னை லட்சணமானவளாக மாற்றியிருக்கத்தான் செய்கின்றன. நான் ஒன்றும் பேரழகியல்ல; என்ருலும் நான் குரூபியல்ல; அவலட்சணமானவளல்ல. என்ருலும் எனக்கென்ன தெரியும்? என்னைப் பற்றி நான் என்ன சொல்ல?"

கான்சுலோ உண்மையைத்தான் சொன்னுள். குழந்தைப் பருவத்தில் அவலட்சணமாக இருப்பவர்கள்கூட, வயது ஏற ஏற, அழகானவர்களாக மாருவிட்டாலும் கவர்ச்சியும் மெருகும் பெற்றுக் கனிந்து தோற்றுவார்

கள். அவளும் அப்படி வளர்ந்து உருவானவள்தான். உண்மையில், கான்சுலோவின் வெளிறிய, வருத்தம் தோய்ந்த முகத்தில், கவர்ச்சியைக் காட்டிலும்மேலான ஓர் அறிவின் கனிவும், ஆழமும் தென்பட்டன. சொல்லப்போனால் அது ஒருவரது உள்ளத்தில் பதிந்துவிடும் முகத் தோற்றம்; அதாவது எடுத்த எடுப்பில் பார்க்கும் முதல் பார்வையில் அலட்சியமான தோற்றமாகப் பட்டாலும், பின்னர் நனவிலும் கனவிலும் கண்முன் தோன்றி மறக்க முடியாதவாறு உறுத்தும் சக்தி கொண்ட முகத்தோற்றம் அது.

மறுநாள் ஆன்ஸொலெட்டோ தனது போஷகரைத் தேடிச் சென்றான்; கான்சுலோ ஒன்றும் அவலட்சணமானவளல்ல என்று அவரிடம் சொல்லப் போனான்.

''இருக்கலாம்''என்று அழுத்தமாகப் பதிலளித்தார் அந்தப் பிரபு, என்றாலும் அந்த யுவதி எவ்வளவு அழகாகப் பாடுவாள் என்பதையும் அவர் நினைவு கூர்ந்தார். எனவே தமது அரண்மனையில் கூடியிருக்கும்விமர்சகர்களின் சந்நிதானத்தில் அவளை அழைத்து வந்து பாடவைப்பதற்கான உத்தரவுகளை வழங்கினார். அவளும் வந்தாள்; கானமிர்தமாகப் பாடினாள். அதன் பின்னர் அந்தப் பிரபுவுக்கு கான்சுலோவின் மீது மிகுந்த பற்றும் ஈடுபாடும்ஏற்பட்டு விட்டன. அந்த ஈடுபாட்டில் அவர் ஆன்ஸொலெட்டோவின் மீது தாம் கொண்டிருந்த ஆர்வத்தைக்கூட ஓரளவுக்கு மறந்து விட்டார்.

## 3

**ஆ**ன்ஸொலெட்டோவும்,கான்சுலோவும் சான் சாமுவேல் சங்கீத மேடையில் தோன்றினார்கள்; தோன்றிய அன்றே அவர்களது பாட்டுக் கச்சேரி அமோகமான பெரு வெற்றியை ஈட்டித் தந்து விட்டது. அது வரையில் அந்த மேடையில் பிரதானப் பாடகியாக விளங்கி வந்த கோரில்லா என்ற பாடகி, புதிதாக வந்த கானக் குயிலான கான்சுலோவினால் மவுசும் ஸ்தானமும் இழந்து போனாள்; அதனால்ஏற்பட்ட ஆத்திரத்தாலும் மனக்கொதிப்பினாலும் அவள் நோய்வாய்ப்பட்டுப் படுக்கையில் விழுந்தாள்; வெனிஸ் நகரத்திலுள்ள ஆண் பாடகர்கள் அத்தனை பேருக்கும் ஆன்ஸொலெட்டோவின் மீது பொறாமையும் பொச்சரிப்பும் தோன்றின. அவர்கள் அவனைக் குத்திக் கொல்லக்கூடத் தயாராக இருந்தார்கள்.

சங்கீத ஆசிரியரான வயோதிகர் போர்ப்போரா கான்சுலோவைத் தமது சொந்த மகள் போலவே கருதிவந்தார். அவரோ கான்சுலோவை நோக்கிப் பின்வருமாறு உபதேசித்தார்: ''ஊஹூம். நீ அந்த ஆன்ஸொலெட்டோவைத் திருமணம் செய்யவே கூடாது. அவன் ஒரு சுயநலக்காரன். அவனுக்குக் கொள்கை, கோட்பாடு, கட்டுப்பாடு எதுவும் கிடையாது. அவன் என்னவோ நன்றாகப் பாடமட்டும் செய்கிறான். அவன் அழகாகத்தான் இருக்கிறான்; ஆனால் அந்த அளவுக்கு மோசமானவனாகவும் இருக்கிறான். ஊஹூம் இனியும் நீ அவனோடு எந்த உறவும் வைத்துக் கொள்ளக் கூடாது.''

உண்மையில் அவளும்அவனும் சேர்ந்து பாடியதால் கிட்டிய அந்த வெற்றிக்குப்பின்னர், ஆன்ஸொலெட்டோவின் மனத்தில் கான்சுலோவைப் பொறுத்தவரையில் இரண்டுபட்டுக் குழம்பிய ஏதேதோ உணர்ச்சிகள் தான் நிரம்பியிருந்தன. தனக்குக்

கிட்டிய வெற்றியைக் காட்டிலும், அவளுக்கே பெரு வெற்றி கிட்டியுள்ளது என்ற உண்மையையும் அவன் பார்க்கத் தவறவில்லை. மேலும் அவன் ஆண்மகனாக இருந்த போதிலும், அவனுக்கு அந்தப் பெண்ணின்மீது பொருமையுணர்ச்சியே மேலோங்கியது. என்ன இருந்தாலும், தொழில் துறையில் அந்த யுவதி தனக்கும் மேம்பட்ட ஒரு சிறந்த பாடகி என்ற எண்ணத்தையே அவனால் தாங்கிக் கொள்ள, சகித்துக் கொள்ள முடியவில்லை. மேலும், அதே சமயம் அவனுக்கு அந்தப் பிரபுவின்மீதும் பொருமையுணர்ச்சி ஏற்பட்டது. அவர் கான்சுலோவிடம் அத்துமீறிய அக்கறையும் கவனமும் செலுத்தி வருவதாக அவன் கருதினான்.

பதவியிழந்துபோன பழைய பிரதானப் பாடகியான கோரில்லா, ஆன்ஸொலெட்டோவின் பலவீனமான மனோசக்தியையும், சுயநலம் மிகுந்த தன்னலகங்காரத்தையும் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு, சூழ்ச்சியும் சூதும் புரியத் தொடங்கினாள். இப்போதெல்லாம் அவன் அவளோடுதான் பெரிதும் காலம் கழித்தான். கான்சுலோவோ தனது காதலன் மனம் மாறிப் போயிருப்பதை உணர்ந்தாள்; என்றாலும் அவள் அவனையே இன்னும் நம்பினாள்; குருட்டுத்தனமாக நம்பினாள். அந்தப் பிரபுவும் அவள்மீது ஆசை கொண்டு அவளிடம் நெருங்கிப் பழக முயன்று கொண்டிருந்தார். என்றாலும் தனது மனோதிடத்திலும் உறுதியிலும் நம்பிக்கையும் தெளிவும் கொண்டிருந்த கான்சுலோ அவரது முயற்சிகளைச் சட்டைசெய்யவில்லை; அவற்றைக் கண்டு பயப்படவும் இல்லை.

ஒரு நாள் கிழவரான போர்ப்போரா அவளை நோக்கிப் பின் வருமாறு சொன்னார்: "வா, குழந்தாய், வா. இந்தமாதிரியான விஷயங்களுக்கெல்லாம் நீ முடிவு காணவேண்டிய காலம் வந்துவிட்டது. ஆன்ஸொலெட்டோவோ உனக்கு விசுவாச காதகம் செய்து விட்டான்; பொய்யனாகி விட்டான். பிரபுவோ உன்னைக் கெடுத்துச் சீரழிக்கப் பார்க்கிறார், என்னது? நான் சொன்னால் உனக்கு நம்பிக்கையில்லையா? அப்படியே வைத்துக் கொள். என்றாலும் இன்றிரவு நீ என் வீட்டுக்கு வா. நான் உனக்குத் தகுந்த சான்றுகளைக் காட்டுகிறேன்."

அன்றிரவு போர்ப்போராக் கிழவர் கான்சுலோவை ஒரு சிறிய மேன் மாடத்துக்கு அழைத்துச் சென்றார். அங்கிருந்து பார்த்தால் கோரில்லாவின் வீட்டுக்குள் நடப்பதெல்லாம் நன்றாகத் தெரிந்தது. கான்சுலோ அங்கு நின்றவாறு, கோரில்லாவின் வீட்டினுள் விளக்கெரிந்து கொண்டிருந்த அந்த அறையை நோக்கினாள். அங்கு ஆன்ஸொலெட்டோ கோரில்லாவின் காலடியில் விழுந்துகிடந்தான்!

"ஐயோ! ஆசிரியரே! நீங்கள் சொன்னது சரிதான்!" என்று புலம்பி அழுதாள் கான்சுலோ; "இனிமேல் நான் எந்த வொரு சங்கீத மேடையின்மீதும் ஏறப் போவதில்லை. ஏறமாட்டேன். நான் வெனிஸ் நகரத்தை விட்டு இன்றே, இந்த க்ஷணமே வெளியேற வேண்டும். ஆம். நான் வேறு எங்காவது போயாக வேண்டும். இனியும் நான் இங்கிருக்க முடியாது. நீங்கள் சொன்னது சரிதான். ஆன்ஸொலெட்டோ ஓர் ஒழுக்கங்கெட்ட மனிதன் தான்!"

மறுநாள் மாலையில் ஆன்ஸொலெட்டோ கோரில்லாவை நாடிச்

சென்ருன்; அந்தச் சமயத்தில் அவள் அவனை இரு கைகளாலும் வாரி யணைத்து வரவேற்ருள். மேலும் அவனை நோக்கிக் குதூகலத்தோடு பின்வருமாறு கத்தினுள்: ''சந்தோஷமான செய்தி! கான்சுலோ போய்விட்டாள். அவள் வியன்னுவுக்குப் போய் விட்டாள். போர்ப்போரா தான் அவளை அங்கு அனுப்பிவைத்திருக்கிருர்; அவரும் அவளைத் தொடர்ந்து சீக்கிரமே அங்கு போய் விடுவார். பசப்புக்காரி! அவள் நம் எல்லோரையுமே ஏமாற்றிவிட்டாள். அவளைச் சக்கரவர்த்தியின் சங்கீதமேடைக்காக ஏற்பாடு செய்திருக்கலாம். போர்ப்போரா புதிதாக அரங்கேற்ற நினைத்துள்ள சங்கீத நாடகத்தில் அவள் பங்கெடுக்க வேண்டும் என்பது அவரது ஆசையாம்!''

''ஒரு வார்த்தை கூடச் சொல்லாமல் போய் விட்டாளே!'' என்று கத்தினுன் ஆன்ஸொலெட்டோ. எனினும் அவன் கோரில்லாவை நோக்கிப் பின்வருமாறு சொன்னுன்: ''சத்தியமாய்ச் சொல்கிறேன். உன்னைப் பொறுத்தவரையில் நீ நினைத்ததை, நீ சாதித்துக் கொண்டுவிட்டாய். ஆனுல், அதே சமயம் நீ என் உயிரை—என் வாழ்க்கையையே பறித்தெடுத்து விட்டாய்'' இவ்வாறு கூறி முடிக்கவும், அவன் அந்தக் கோரில்லாவின் வீட்டில் விரிக்கப்பட்டிருந்த ரத்னக் கம்பளத்தின் மீது தொப்பென்று மயங்கி விழுந்தான்.

## 4

**ஆ**னுல் கான்சுலோ உண்மையில் வியன்னுவுக்குச் செல்லவில்லை.

பொஹிமியாவையும் பவேரியாவையும் பிரித்து நிற்கும் கார்பேத்திய மலைத் தொடருக்கு மேற்கில் பரந்த பரப்புடைய ஒரு பழைய பிரதேசம் இருந்தது. ஏதோ ஒரு பழைய, மறந்துபோன மரபின் பெயரால் அந்தப் பிரதேசம் 'ராக்ஷஸர்களின் கோட்டை' என அழைக்கப்பட்டு வந்தது. அங்கு ரூடால்ஸ்டாட் வம்சத்துப் பிரபுக்கள் ஆட்சி செலுத்தி வந்தார்கள். அந்தப் பிரபுக் குடும்பத்தின் தலைவரின் பெயர் கிறிஸ்டியன் பிரபு; அவரது மனைவி இறந்துபோன காலந் தொட்டு, வென்ஸெஸ்லாவா என்ற பெயருள்ள அவரது வயதான சகோதரி ஒருத்திதான் அவரது மாளிகையை நிர்வகித்து வந்தாள். இப்போது அங்கு அவரோடு அவரது சகோதரரான பிரடெரிக் பிரபு என்பவரும் தங்கியிருந்தார்; இந்தப் பிரபுவுக்கு வேட்டை ஒன்றில்தான் நாட்டம்; இவர் ஒரு 'டுப்' பேர்வழி, என்ருலும் நல்ல மனிதர். இந்தப் பிரடெரிக் பிரபு அந்த கோட்டைக்குந் தமது அழகான புத்திரியான அமீலியா என்பவளையும் அழைத்து வந்திருந்தார். கிறிஸ்டியன் பிரபுவின் மகனும் வாரிசுமான ஆல்பெர்ட் பிரபு என்ற இளைஞருக்கு அவளை மணம் முடித்துக் கொடுக்கவேண்டும் என்று அவரது எண்ணம்.

ரூடால்ஸ்டாட் குடும்பத்தாரின் பழம் பெரும் நண்பர் போர்ப்போரா. எனவே போர்ப்போரா தமது 'மாணவி கான்சுலோவை இந்தக் கோட்டைக்குத்தான் அனுப்பி வைத்திருந்தார். அமீலியா தனக்கொரு சங்கீத ஆசிரியர் தேவை எனக் கோரி யிருந்தாள். இதனுல் சங்கீதம் கற்றுக்கொள்வதில் அவளுக்கு மிகுந்த விருப்பம் இருந்தது என்று அர்த்தமல்ல. அந்தப் பழம் பெரும் கோட்டையில் தன்னந் தனிமையாக அடைபட்டுக் கிடப்பது

அவளுக்கு அலுப்பும் சலிப்பும் தருவதாக இருந்தது. எனவே தான் கிறிஸ்டியன் பிரபு போர்ப் போராவுக்கு விண்ணப்பித்துக் கொண்டார். அதன் விளைவாக இப்போது கான்சுலோ அந்தக் கோட்டைக்கு வந்து சேர்ந்திருந் தாள்.

இந்தக் காலத்திலெல்லாம் சுற்று வட்டாரங்களிலே யுள்ள பிரபுத்துவக் குடும்பத்தார் எவருமே 'ராக்ஷஸர்களின் கோட்டை' என்ற அந்தப் பழம் பெரும் கோட்டைக்கு வருவதில்லை. அந்தக் கோட்டையிலிருந்த பிரபுக் குடும்பத்தார் தமக்குள் தாமே தனிமையில் வசித்து வந்தார்கள்; மேலும் அவர்கள் தமது இளம்பிரபுவான ஆல்பெர்ட் என்ற இளைஞனின் விசித்திரமான போக்கை உலகத்தார் கண்டறிந்து விடாதவாறு மூடி மறைப்பதிலும் கவனம் செலுத்தினார்கள். எனவே அவர்களது தனிமை அவர்களே வலிய ஏற்படுத்திக் கொண்ட ஒன்றாகவே இருந்தது.

ஆல்பெர்ட் என்ற அந்த இளைஞனின் முகத்தில் அறிவொளி வீசத்தான் செய்தது; என்றாலும் அவனிடத்தில் அருவருப் பூட்டும் ஏதோ ஒன்று, பயமுறுத்தும் ஏதோ ஒன்று தென்படுவதாகத் தோன்றியது. நாள் முழுவதிலும் அவன் வாயைத் திறந்து ஏதேனும் பேசிவிட்டால் அது ஒரு பெரிய அதிசயம். அநேகமாக அவன் பேசுவதே இல்லை. அப்படியே அவன் ஏதாவது பேசினால், உடனே அவனது உறவினர்கள், மற்றும் மாளிகையில் உள்ளவர்கள் அத்தனை பேர்களும் அவனையே பார்ப்பார்கள். அவர்கள் அத்தனை பேரின் முகத்திலும் ஏதோ ஓர் ஆழ்ந்த ஆதங்கமும், பரிவும் வேதனையும் மிகுந்த பச்சாத்தாபமும் பிரதிபலிக்கும். சமயங்களில் அந்த இளைஞனுக்கு மயக்கம் கண்டு விடும்; அந்த மயக்கம் காணும் வேளைகளில் அவன் பேச்சு மூச்சற்றுக் கிடப்பான். பின்னர் அவன் மூர்ச்சை தெளிந்து நிதானமாக இருக்கும் வேளைகளிலோ, அவன் திடீரென்று அந்தக் கோட்டையிலிருந்தே மாயமாக மறைந்து விடுவான்; நாள் கணக்கில், சமயங்களில் வாரக் கணக்கில் கூட, அங்கு திரும்பி வரமாட்டான். பிறகு திடீரென்று அதே மாயம்போல் திரும்பவும் தோன்றுவான்; மேலும் எதுவுமே நடக்காதது போல் அத்தனை அமைதியோடும் பொறுமையோடும் தோற்றமளிப்பான். சுருங்கச் சொன்னால், ஆல்பெர்ட்டைக் கண்டவர்கள் யாரும் அவனை ஒரு பைத்தியம் என்றுதான் முடிவு கட்டுவார்கள்.

கான்சுலோ அந்த மாளிகைக்கு வந்து சேர்ந்த அன்று மாலையில், ஆறுதல் தேவதையை வாழ்த்திப் பாடும் ஸ்பானியப் பாடலொன்றைப் பாடிக்கொண்டிருந்தாள். அந்தப் பாட்டு "கான்சுலோ டி மி ஆல்மா" என்று தொடங்குவதாகும்; இந்த அடிக்கு 'எனது ஆத்மாவுக்கு ஆறுதலே' என்று அர்த்தம். அவள் இவ்வாறு பாடிக்கொண்டிருந்த போது திடீரென்று அங்கு அறைக் கதவு திறந்தது; அங்கு ஆல்பெர்ட் காட்சியளித்தான். அவன் திடீரென்று முழங்காலிட்டு வணங்கி, தனது கண்ணீர் கசிந்து மல்கிய, பெரிய கரிய கண்களை அவளை நோக்கி உயர்த்தியவாறு, பின் வருமாறு ஸ்பானிய மொழியில் சொன்னான்: "ஆ! கான்சுலோ! கான்சுலோ! ஒருமட்டும் நான் உன்னைக் கண்டு கொண்டேன்!"

"கான்சுலோவா?" என்று அந்த யுவதியும் வியப்புற்றவாறு மொழிந்தாள்: நீங்கள் ஏன்

என்னை அந்தப் பெயரால் அழைக்கிறீர்கள்?'' என்றும் கேட்டாள். ஆம். அவள் கேட்டதில் அர்த்தமுண்டு. ஏனெனில் அவளை அந்தக் குடும்பத்தினர் 'போர்ப்போரினு' என்றுதான் – (போர்ப்போரா என்பதன் பெண்பாற் பெயர் போர்ப்போரினு) – அதாவது போர்ப்போராவின் வளர்ப்பு மகள் என்றுதான் அறிந்திருந்தார்கள்.




''ஏனெனில் எனது இருண்ட ஆத்மாவுக்கு ஓர் ஆறுதல் வழங்கப்பட்டுள்ளது. அந்த ஆறுதல் நீயேதான். எனது இருளும் ஏகாந்தமும் நிறைந்த வாழ்க்கையில் கடவுள் வழங்கிய வரப்பிரசாதமே நீ!'' என்றான் ஆல்பெர்ட். இவ்வாறு சொன்னவுடன் அவன் தடாலென்று கீழே மயக்கமாக விழுந்தான். உடனே அவனை அவனது அறைக்குத் தூக்கிச் செல்ல வேலைக்காரர்கள் வரவழைக்கப்பட்டார்கள்.

கான்சுலோ பயந்தே போனாள். என்றாலும் நாட்கள் செல்லச் செல்ல, ஆல்பெர்ட்டின் மனத்தின் மீதுதான் எத்தனை ஆதிக்கம் செலுத்திவர முடிகிறது என்பதை அவளே கண்டறிந்தாள். அதன் பின் அவன் ஆழ்ந்து கிடந்த அந்தப் பைத்திய நிலையின் அதல பாதாளத்திலிருந்து அவனைக் கரையேற்றி, அவனை அறிவுத் தெளிவும் நிதானமும் மிகுந்த சகஜமான வாழ்க்கையில் மீண்டும் ஈடுபடுத்தத் தன்னால் முடியும் என்று அவள் கொஞ்சங் கொஞ்சமாக நம்பத் தொடங்கினாள். ஆல்பெர்ட்டைத் தான் மணந்து கொள்ள முடியாது என்று அமீலியா எதிர்ப்புத் தெரிவித்து வந்தாள். என்றாலும் ஆல்பெர்ட் இப்போதெல்லாம் கான்சுலோவிடம் அதிக ஈடுபாடும் கவனமும் செலுத்துவதைக் கண்டு, அமீலியாவுக்கு மனம் புண்படத்தான் செய்தது. எனவே அவள் தன் தந்தையிடம் தன்னை அங்கிருந்து அழைத்துச் சென்று விடும்படி வற்புறுத்தி வந்தாள். தமது அழகிய புத்திரியின் வேண்டுகோளை என்றுமே மறுக்காத அந்தப் பிரபுவும் அவ்வாறே அவளை அழைத்துச் சென்று விட்டார்.

கிறிஸ்டியன் பிரபுவும் அவரது சகோதரியும் திடுக்கிட்டுப்

போனார்கள். ரூடால்ஸ்டாட் பிரபுக் குடும்பத்தின் வாரிசான ஆல்பெர்ட் ஓர் ஊர்பேர் தெரியாத அனாதையான பாடகியை மணப்பதா? சேச்சே! அப்புறம் அவர்களது குடும்பக் கௌரவம் என்னாவது? ஆனாலும் அவள் மட்டும் அவனை மீண்டும் புத்தி சுவாதீனத்துக்குக் கொண்டு வந்து விட்டால்! அவனது பைத்தியத்தை அவள் தெளியவைத்து விட்டால்! அப்படியானால், அவர்கள் அதற்காக எதையும் தியாகம் செய்யச் சித்தமாக இருந்தார்கள்.

ஆல்பெர்ட் மீண்டும் ஒருமுறை மாயமாக மறைந்துபோக நேர்ந்த போது, அவன் எப்படி மாயமாக மறைந்து போகிறான் என்ற ரகசியத்தைக் கான்சுலோ கண்டு பிடித்துவிட்டாள். அவன் ஒரு பழைய கிணற்றின் வழியாகத் தான் தப்பிச் சென்றான்; அதாவது அந்தக் கிணற்றிலுள்ள தண்ணீரை விருப்பப்படி திறந்து விடவும், அடைக்கவும் அந்தக் கிணற்றில் ஓர் யந்திரக் கருவி இருந்தது. அவன் அவ்வாறு தப்பிச் சென்றபோது, கான்சுலோவும் அவனைப் பின் தொடர்ந்து சென்றாள். எத்தனையோ ஆபத்துக்கள் நிறைந்த அந்த வழியைக் கடந்து சென்ற பின்பு, அவள் அந்தப் பைத்தியக்கார இளைஞனை பெரிய பாறைக் கடியில் தென்பட்ட ஒரு குகையில் கண்டாள். அந்த வட்டாரத்தில் அந்தப் பாறைக்குப் 'பயபீதிப் பாறை' என்று பெயர். ஹஸ்ஸைட்டுகள் நடத்திய பழைய மதப்போர்களில் ஆல்பெர்ட்டின் மூதாதையர்களில் ஒருவரால் சுட்டுப் பொசுக்கப்பட்ட ஒரு கிராமம் இருந்த இடம் அது.

பூமிக்கடியில் இருந்த அந்த இருண்ட குகையில் அசட்டுப் பிறவியான ஒரு குள்ளன்தான் ஆல்பெர்ட்டுக்குத் துணையாக இருந்து, அவனது தேவைகளைக் கவனித்தான். ஆல்பெர்ட்டோ அந்தக் குகைக்குள் தன்னந்தனியனாக இருந்துகொண்டு, தனது வெறிபிடித்த மனோவிகாரங்களை யெல்லாம் வெளிப்படுத்திக் கொண்டிருந்தான். கான்சுலோ தனது சக்திகளையெல்லாம் பிரயோகித்து, அவனது இருண்ட மனத்தில் ஒளி பாய்ச்ச முயன்றாள்; பிறகு அவனை எப்படியோ மீண்டும் கோட்டைக்குஅழைத்து வந்தாள். அவளால் அவனைப் பரிபூரணமாகத் தெளிவுறச் செய்து, புத்தி சுவாதீனத்துக்குக் கொண்டுவர முடியவில்லைதான். என்றாலும் அவனுக்கேற்பட்டிருந்த புத்தித் தெளிவைக் கண்டு, அவனது குடும்பத்தாருக்கு மகிழ்ச்சிதான். 'என் மகனின் புத்தியைத் தெளியவைக்க, நீ உனது அபாரமான சக்திகளையெல்லாம் பயன்படுத்தி வெற்றி கண்டிருக்கிறாய். எனவே நீயும் அவனும் இணைந்து ஒன்றுபட்டு வாழவேண்டும். இதனை நான் ஏதோ உனக்கு அனுமதி கொடுக்கும் காரியம் என்று எண்ணாதே, நீ என் குடும்பத்துக்குச் செய்யும் உபகாரம் என்றே நான் அதனை மதிக்கிறேன். நீதான் அவனை அந்தப் பைத்திய நிலையிலிருந்து, பாதாளத்திலிருந்து காப்பாற்றி வைத்திருக்க முடியும்'' என்று முதியவரான கிறிஸ்டியன் பிரபு மிகவும் உருக்கத்தோடு கான்சுலோவை வேண்டிக் கொண்டார்.

ஆல்பெர்ட்டின் மனோ நிலை நாளுக்கு நாள் தேறிவந்தது; இறுதியில் அவனது புத்தி மாறாட்டம் முற்றிலும் மறைந்து அவனுக்குச் சித்தத் தெளிவு ஏற்பட்டு விட்டதாகவே தோன்றியது. மேலும் அந்த இனந் தெரியாத பாடகியோடு, ரூடால்ஸ்டாட் குடும்பத்தின் வாரிசான ஆல்

பெர்ட் மணம் முடிக்கப்போகும் விஷயமும் அநேகமாக முடிந்து போன விஷயம் போலவே இருந்து வந்தது. எனினும் கான் சுலோவுக்கு மட்டும் மன நிம்மதி இல்லை. தான் உண்மையிலேயே ஆல்பெர்ட்டைக் காதலிக்கிறோமோ இல்லையா என்ற கேள்வியை, அவள் தனக்குத்தானே பன்முறை கேட்டுக் கொண்டாள். என்றாலும் அந்தக் கேள்விக்கான திட்டவட்டமான, தெளிவான விடை அவளுக்குப் புலப்படவே இல்லை. அவளது இதயம் அதற்கான விடையை வழங்கவே இல்லை.

## 5

ஒரு நாள் யாரோ ஒருவர் வந்து, அவளது சகோதரன் அவளைக் காண வந்திருப்பதாகவும், அந்த மனிதன் விருந்தினர் கூடத்தில் அவளுக்காக காத்துக் கொண்டிருப்பதாகவும் அவளிடம் சொன்னார்கள். ஆர்வமும் ஆதங்கமும் மிகுந்த உள்ளத்தோடு கான்சுலோ புறப்பட்டு வந்தாள்; வரும்போதே வந்திருப்பது யாராயிருக்கும் என்றும் ஓரளவுக்கு ஊகித்துக் கொண்டாள். அவள் அந்தக் கூடத்தினுள் பிரவேசித்ததுமே, அவள் எதிர்பார்த்தது போலவே அகந்தையும் அலட்சியமும் தோன்ற அந்த நபர் அங்கு அமர்ந்திருந்தான். ஆம். அங்கு இருந்தது ஆன்ஸொலெட்டோதான்! ஜீஸ்டினியானி பிரபுவோடு அவனுக் கேற்பட்ட ஒரு சண்டையின் விளைவாக, அவன் வெனிஸ் நகரத்தில் தான் செய்து வந்த சேவைக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டான். மேலும், சாகசக்காரியான அத்தக் கோரில்லாவையும், அந்தப் பிரபுவையும் மூழ்கடித்துக் கொல்வதற்காக அவர்கள் சென்ற படகைக் கவிழ்த்து விட்டு, அவன் ஜெர்மனிக்கு ஓடிப்போய் விட்டான். பிறகு அவன் அந்த வட்டாரத்தில் சுற்றித் திரிந்த காலத்தில், இந்தக் கோட்டையைப் பற்றிய வதந்திகளையும் வரலாறுகளையும் கேள்விப் பட்டான். போர்ப் போரினு என்ற பெயரோடு அங்கு யாரோ இருப்பதாகக் கேள்விப் பட்டதும், அவன் கான்சுலோ தான் அந்த நபர் என்பதை உடனேயே தீர்மானித்துக் கொண்டு விட்டான்.

கான்சுலோ அவனைத் தனிமையில்தான் சந்தித்தாள். அந்த நன்றி கெட்ட இளைஞனே தனது வாக்குச் சாதுர்யத்தை யெல்லாம் காட்டி, கான்சுலோவைக் கவர முயன்றான். நடந்து போனவற்றுக்காகத் தன்னைத் தானே கண்டித்துக் கொண்டான்; தன்னைத் தானே நொந்து கடிந்து தாழ்த்திக் கொண்டான்; கண்ணீர் விட்டுக் கரைந்தான்; அழுதான்; தனது துன்பங்களையும் துயரங்களையும் விரக்தியையும் விளம்பரப் படுத்தினான்; கான்சுலோ தன்னை மீண்டும் அவனது இதயத்தில் ஏற்று, தனக்கு வாழ்வளிக்க வேண்டும் என்று கசிந்து கண்ணீர் மல்கி வேண்டினான். ஆனால் அவனது பேச்சின் மாய்மாலத் தன்மைகளை யெல்லாம் கான்சுலோ கண்டு கொண்டாள்; எனவே அவள் அவனை வெறுக்கத்தான் செய்தாள். என்றாலும் அதே சமயத்தில் ஆல்பெர்ட்டின் முன்னிலையில் வாய்மூடி ஊமையாகக் கிடந்த அவளது இதயம் ஆன்ஸொலெட்டோவைக் கண்டவுடன் மட்டும், வாய்திறந்து ஏதோ பகர்வதையும் பதில் சொல்வதையும் கண்டு, அவள் பயந்தாள்; நடுங்கினாள். ஆம். என்ன தான் இருந்தாலும், அவன் அவளிடம் நயவஞ்சகமாக நடந்து விட்ட போதிலும், அவளது இதயத்துக்குள் இன்னும் ஆன்ஸொ

லெட்டோவின் மீது அவள் கொண்டிருந்த காதலுணர்ச்சி லேசாக ஊடாடிக் கொண்டுதான் இருந்தது. என்றாலும், அவள் தனது சக்தியையும் உறுதியையும் ஒன்றுதிரட்டி, அந்த உணர்ச்சியை எதிர்த்துப் போராடினுள்; அதற்குத் தான் எந்த விதத்திலும் பணிந்து விடக்கூடாது எனத் தீர்மானித்தாள்.

"நான் ஏற்கெனவே உன்னை மன்னித்து விட்டேன். மேலும், நான் உன்னிடமிருந்து மேற்கொண்டு எதுவும் கேட்க விரும்பவில்லை. என்னோடு நேரில் பேசி என்னைச் சமாதானப் படுத்துவதற்காக, நீ உனது பிரயாணத்தைத் தள்ளிப் போட்டுவிட்டு இங்கு வந்ததாகச் சொன்னுய். அந்த மட்டுக்கும் உன் அன்புக்கும் ஆர்வத்துக்கும் நன்றி. ஆனல் நீ கேட்கும் மன்னிப்பை நான் என்றோ, எப்போதோ உனக்கு வழங்கி விட்டேன். எனவே இப்போது நீ போகலாம்" என்று நிதானமாகப் பேசினுள் கான்சுலோ.

"என்ன சொன்னுய்? நான் உன்னை இப்படியே விட்டு விட்டுச் செல்வதா?" என்று ஆத்திரத்தோடு கத்தினுன் ஆன்ஸொலெட்டோ. மேலும், "உன்புதிய காதலனுக்கு உன்னைப் பற்றிய விஷயம் இன்னும் தெரியாது போலிருக்கிறது. நான் அவனிடம் உன் விஷயத்தைச் சொல்கிறேன். என்னை அந்த நிலைமைக்கு ஆளாக்கி வெறி கொள்ளச் செய்ய மாட்டாய் என்று நம்புகிறேன். இல்லையானுல்..."என்று பயமுறுத்தவும் செய்தான்.

"ஓஹோ! மிரட்டிப் பார்க்கிருயா? ஆன்ஸொலெட்டே! இறுதியில் நீ எப்படிப்பட்டவன் என்பதை நான் இன்று கண்டு கொண்டேன். அதிலே எனக்கு மகிழ்ச்சிதான். உனது மாய்மாலத்தைக் களைந்து, உனது உண்மை சொரூபத்தை வெளிக்காட்டியதற்காக உனக்கு நன்றி செலுத்துகிறேன். இனி உனக்காக நான் என்றும் வருந்தவும் மாட்டேன்; அனுதாபப் படவும் மாட்டேன். உன்னுடைய கீழ்த்தரமான எண்ணத்தையும், வெறுக்கத்தக்க காதலையும் நான் புரிந்து கொண்டு விட்டேன். அவமானப்படுத்துவதில் நீ நிபுணன்தான்; அதே போல் அவதூருக எதையும் சொல்வதிலும் நீ நிபுணருக இருந்தாலன்றி, நீ என்னை யொன்றும் தலைகுனியச் செய்யமுடியாது!" என்று பதிலுக்கு ஆக்ரோஷத்தோடு பேசி முடித்தாள் கான்சுலோ.

அவள் அந்த அறையை விட்டு வெளியேற முனையும் நேரத்தில் அறைக் கதவு திறந்தது; அங்கு கிறிஸ்டியன் பிரபு காட்சியளித்தார். ஆனலும் ஆன்ஸொலெட்டோவைக் காட்டிக் கொடுப்பதைக் கான்சுலோ வெறுத்தாள். இவ்வளவெல்லாம் பேசிய பின்னருங்கூட, அவளது இதயத்தின் மூலையில் அவன்மீது அவள் கொண்ட காதல் இன்னும் கொஞ்சம் இருக்கத்தான் செய்தது. அதனை உணர்ந்ததும், அவள் அதற்காகத் தன்னைத்தானே வெறுத்தாள். ஆனலும், அவளுக்குச் சிந்திக்க அவகாசம் வேண்டும்; இப்போது அவள்முன் எழுந்துள்ள பிரச்னைக்கு முடிவு காண, அதன் சகல அம்சங்களையும் பரிசீலித்துப் பார்க்க அவளுக்கு அவகாசம் தேவை. எனவே அவள் நயவஞ்சகனை ஆன்ஸொலெட்டோவைத் தனது சகோதரன் என்றே அந்தப் பிரபுவிடம் அறிமுகம் செய்தாள்; அதன்மூலம் மாளிகையில் அவன் தங்கியிருக்கவும் வழி செய்தாள். ஆன்ஸொலெட்டோவும் இந்தச் சந்தர்ப்பத்தை நழுவ விட விரும்பவில்லை,

ஒருகாலத்தில் அவனுக்கே முழு தும் சொந்தமாக விருந்த கான் சுலோவின் இதயத்தை மீண்டும் கவரும் முயற்சியில் இந்தச் சந் தர்ப்பத்தைப் பெரிதும் பயன் படுத்திக் கொள்ள முனைந்தான், அவன்.

அந்தப் பிரபுக் குடும்பத்தினர் அனைவரும் அவனைக் கண்ணியத் தோடு நடத்தினார்கள். அந்தப் பழம் பெரும் மாளிகையின் வாரி சுக்குச் சீக்கிரத்திலேயே மனைவி யாகப் போகும் பெண்ணின் சகோதரன் என்ற முறையில், அவனுக்கு எல்லாவிதத்திலும் மதிப்பும் கௌரவமும் அளித்தார் கள். ஆனால் ஆல்பெர்ட் மட்டும் அவனை உம்மென்று முறைத்துப் பார்த்தவாறே இருந்து வந்தான். மேலும் அந்த இளம் பிரபுவின் பழைய பைத்தியமும் மீண்டும் திரும்புவது போலத் தோன்றியது எனவே கான்சுலோ தனது பழைய காதலனை எச்சரித்தாள். அதாவது ஆல்பெர்ட்டுக்கு உண்மை தெரிந்து அவன் ஏதா வது சந்தேகப்பட முனைந்தால், ஆன்ஸொலெட்டோவின் உயி ருக்கே ஆபத்து நேரும் என்று அவள் சொன்னாள். இந்த எச் சரிக்கையைக் கேட்டு ஆன்ஸொ லெட்டோ வாய்விட்டு அலட்சிய மாகச் சிரிக்கத்தான் செய்தான்; என்றாலும் அந்தரங்கத்தில் அவன் மனம்பயத்தாலும் சஞ்சலத்தாலும் அலைக்கழியவே செய்தது.

ஆன்ஸொலெட்டோ எப்படிப் பட்டவன் என்பதை இப்போது கான்சுலோ தெரிந்து கொண் டாள். இரண்டுமூன்று நாட்க ளாகத் தனக்குள்தானே தர்க் கித்து முடிந்தபின் அவள் நிம்மதி கண்டாள். அதாவது தான் ஏமாற் றப்படவில்லை என்றும், தற்போது அவனைத் தான் நிச்சயம் காத லிக்கவில்லை என்றும் தெரியவந் தாள். என்றாலும் எதிர்காலத் தைப்பொறுத்தவரையிலும் அவள் அவனை வெறுத்தாள்; அவனைக் கண்டு பயந்தாள். ஆனால் கடந்த காலத்தை எண்ணிப் பார்க்கும்போதோ, அவள் அந்தப் பழங்காலத்தை நெஞ்சினுள் போற்றினாள். எனவே சென்று போன இன்பத்தைச் சித்திரிக்கும் ஒரு சித்திரம் போலவே அவன் அவளுக்கு இப்போது தோற்றி னான்.

கான்சுலோவை மீண்டும் கவர்ந்து, அவளது காதலைப் பெற முடியாது என்பதை ஆன்ஸொ லெட்டோ மேலும் மேலும் உணர்ந்தான். எனவே கான் சுலோ தனது பிரிவை யெண்ணிச் சில காலம் தவித்துப் பார்க்கும் சந்தர்ப்பத்தை உண்டாக்குவதற் காக, அவன் அந்த மாளிகையை விட்டு வெளியேறத் தீர்மானித் தான். அவனது பிரிவை யெண்ணி அவள் தவியாய்த் தவித்து, தனக்குத்தானே வருந் தும் சமயத்தில் திடீரென்று அவன் திரும்பி வந்தால், அவள் அப்படியே வியப்புற்று அவனை ஏற்றுக் கொள்வாள்!— இப்படி எண்ணமிட்டான் அவன். இந்த நம்பிக்கையில் அவன் அவளிடம் தனது திட்டத்தையும் வாய் விட்டுக் கூறிவிட்டான். ஆனால் அவன் இவ்வாறு கூறக் கேட்ட தும், அவள் தனக்குத்தானே வேறொரு திட்டத்தை வகுத்துக் கொண்டு விட்டாள். தான் ஆல் பெர்ட்டைக் காதலிக்கிறோமா இல்லையா என்ற கேள்விக்கு அவ ளுக்கு இன்னும் விடை கிடைக்க வில்லை; அதைப் பற்றி நிச்சயப் படுத்தவே முடியவில்லை. எனவே அது பற்றி நிச்சயப்படுத்தும் வரையில், தான் ஆல்பெர்ட்டை மணக்கப் போவதில்லை என்று கருதினாள் அவள். ஆன்ஸொ லெட்டோ ஒருநாள் பொழுது விடிந்ததும் புறப்பட்டுச் செல்ல

வேண்டும் என்று அதற்கான ஏற்பாடுகளை யெல்லாம் செய்து முடித்தான். ஆனால் அன்றையப் பொழுது விடிவதற்குள், அதற்கு முந்திய நாள் இரவிலேயே கான்சுலோ அந்த மாளிகையை விட்டு யாருக்கும் தெரியாமல் ஓடிப் போய் விட்டாள்!

## 6

ஆன்ஸொலெட்டோவும் தானும் அந்த மாளிகையை விட்டு வெளியேறிய பின்னர், ஆல்பெர்ட்டின் கைக்குக் கிடைக்குமாறு கான்சுலோ ஒரு கடிதத்தை எழுதி முடித்தாள். பின்னர் தன்னிடமிருந்த கொஞ்சப் பணத்தை எடுத்துக் கொண்டு, மீண்டும் தன்னந்தனியளாகப் பரந்த உலகத்தினுள் பிரவேசித்து விட்டாள்.




ஆன்ஸொலெட்டோ எந்தத் திசையில் சென்றானோ, அதற்கு நேர் எதிரான திசையில் அவள் புறப்பட்டுச் சென்றாள். ஆனால் அவளிடமிருந்த குறைந்த பணமும் சீக்கிரமே கரைந்து போயிற்று. என்றாலும், அவளும் ஒரு நடோடிப் பாடகியின் மகள் தானே? அவளது உடம்பில் நாடோடி ஜாதியின் ரத்தம் எதுவும் ஓடாவிட்டாலும், அவளது தாய்க்குள்ள திறமை அவளுக்கும் சிறிது இல்லாமலா போய் விடும்? சின்ன வயதில் தனது தாயின் கையைப் பிடித்துக் கொண்டு, ஊர் ஊராக அலைந்து திரிந்த காலத்தில் அவள் பட்ட அதே சிரமங்களை, இப்போது மட்டும் அனுபவிக்கவும் தாங்கிக் கொள்ளவும் முடியாதா என்ன? எனவே இத்தகைய சிரமங்களை மேற்கொண்டவாறு, அவள் வியன்னாவை நோக்கிப் பயணப் பட்டாள். ஏனெனில் அந்த நகரத்தில் தான் இப்போது போர்ப்போரா இருப்பதாக அவள் கேள்விப் பட்டாள். மேலும் இப்போதைய நிலையில் அவளுக்கு இந்த உலகத்திலுள்ள ஒரே நண்பரும் ஒரே நம்பிக்கையும் அவர் தான்.

ஒருநாள் அவள் ஓர் ஊற்றுக் கருகில் சிறிது நேரம் ஓய்வெடுக்க முனைந்த சமயத்தில், அங்கு ஒரு பையனைச் சந்தித்தாள். அவனும் அவளைப் போன்ற ஒரு நாடோடி தான். என்றாலும் அவன் அவளிடம் வந்து பேசிய பணிவையும் கனிவையும் கண்டு, அவள் அவனது பரிசயத்தை உடனே ஏற்றுக்கொண்டு விட்டாள்.

“சரி. உன் பெயரென்ன?” என்று கேட்டாள் கான்சுலோ.

“ஜோசப் ஹேடின்” என்றான் அந்தப் பையன். பிறகு அவன் தன்னைப் பற்றிய விவரங்களைச் சொன்னான்: “நான் வியன்னுவுக்குப் போகிறேன். ஆனால் அதற்கு முன்பு நான் முதலில் 'ராக்ஷஸர்களின் கோட்டை' என்ற மாளிகைக்குச் செல்ல வேண்டும். ஏனெனில் அங்கே போர்ப் போரினு என்ற ஓர் அற்புதமான பாடகி இருப்பதாகச் சொல்கிறார்கள். அவளைச் சந்தித்து, பழைய ஆசிரியரான போர்ப் போராவைக் காண, அவளிடம் ஒரு சிபாரிசுக் கடிதம் பெற வேண்டும். அவள் தருவாள் என்று நம்புகிறேன். பிறகு நான் போர்ப் போராவிடம் செல்வேன்; அவர் எனக்குச் சங்கீதம் கற்றுத் தருவார்.”

“அப்படியா, தம்பி!” என்றாள் கான்சுலோ. பின்னர் அவள் பின்வருமாறு சொன்னாள்; “நீ சொன்ன அந்தப் போர்ப்போரினு இப்போது அந்தக் கோட்டையில் இல்லை. சரி, எதற்கும் நீ என்னோடு வியன்னுவுக்கு வா, அந்தப் போர்ப்போராவை எனக்கும் தெரியும், ஒருவேளை நான்கூட உனக்கு உதவ முடியும்.”

“உங்களுக்குப் போர்ப் போராவைத் தெரியுமா?” என்று அப்படியே அதிசயித்தான் அந்தப் பையன். இதே பையன் பிற்காலத்தில் உலகத்தையே அதிசயத்தில் ஆழ்த்தும் சங்கீத வித்வானானன். அதுவேறு கதை. இப்போதோ அவன் அவளை நோக்கிப் பின் வருமாறு கூறினான்: “நல்லது. பின்னே சீக்கிரம் புறப்படுவோம். ஆனால், நீங்கள் இப்போதுள்ள உடையில் பிரயாணம் செய்ய முடியாது. இதோ என் பையில் ஒரு குடியானவ உடை - ஒரு பையனின் உடை- இருக்கிறது. பக்கத்துத் தோப்புக்குள் சென்று, அதனை அணிந்து கொண்டு வாருங்கள். அப்புறம் நீங்களும் நானும் இரண்டு பையன்களைப் போலவே போவோம். உங்களுக்கு அந்த உடையைஅணிந்தால், நீங்களும் ஒரு பையனாகவே தோன்றுவீர்கள். ஆனால் உங்களைப் போன்ற இளம்பெண் இப்படித் தன்னந்தனியாகப் பிரயாணம் செய்வது சரியல்ல; அற்புறம் உங்களுக்கும் பாதுகாப்பிராது.”

எனவே அந்தப் பையனின் யோசனைப்படியே, கான்சுலோ ஆண்வேடம் போட்டுக் கொண்டாள். பிறகு அவளும் ஹேடினும் ஆஸ்ட்ரியாவின் தலைநகரான வியன்னுவுக்கு வந்து சேர்ந்தார்கள். அப்போது அங்கு ராணி மரியா தெரிசி ஆட்சி செலுத்தி வந்தாள். ஹேடின் தான் தேவாலயத்தின் சங்கீதக் கோஷ்டியில் பாடிக் கொண்டிருந்த காலத்தில் தான் தங்கியிருந்த ஒரு க்ஷவரத் தொழிலாளியின் வீட்டுக்குக் கான்சுலோவை அழைத்துச் சென்றான். அந்தத் தொழிலாளியின் மகள் கான் சுலோவுக்கு நல்லதுணிமணிகளை வழங்கினாள். பின்னர் கான் சுலோ தான் யார் என்ற உண்மையை, ஹேடின்னிடம் வெளியிட்டாள்; அத்துடன் தனது வரலாற்றையும் அவனுக்குச் சிறிது சொன்னாள்.

பின்னர் அவர்கள் இருவருமாகப் போர்ப்போராவைத் தேடிச் சென்றார்கள். அந்தக் கிழவர் தமது வளர்ப்பு மகளைப் பரவசத்தோடும் பாசத்தோடும் வரவேற்றார்; அவள் அவரிடம் சொல்லிய விவரங்களை யெல்லாம் ஆழ்ந்த கவனத்தோடும் அக்கறையோடும் காது கொடுத்துக் கேட்டார்.

“அப்படி யென்றால் நீ ஆல்பெர்ட்டுக்கு எழுதிவைத்து விட்டு

வந்த கடிதத்தில், நீ அவனைக் காதலிப்பதாக உணர்ந்தால், நீயே திரும்பிச் சென்று அவனை மணந்து கொள்ள வருவதாகவா எழுதிவைத்தாய்? அசட்டுப் பெண்ணே! கூடாது; கூடவே கூடாது. நீ ஒன்றும் பிரபுக் குடும்பத்தில் மணம் புரியக் கூடாது. உனக்குரிய பணியும் இடமும் நாடக மேடைதான். பாட வேண்டும். அதுதான் உன் பணி. நீ யார் தெரியுமா? நீ போர்ப் போரினு, வேறு எந்தக் காரணத்துக்காக இல்லாவிட்டாலும், உனது பழைய குருவின் விருப்பம் என்ற காரணத்துக்காக வேனும் நீ மீண்டும் மேடை யேறத்தான் வேண்டும். உன்னைக்கதாநாயகியாகவும் பிரதானப் பாடகியாகவும் பெற்ருல், நான் இங்கு, வியன்னுவில், ஒரு பெரிய வெற்றியையே சாதித்து விடுவேன். நீ இல்லா விட்டால், நான் அந்த வெற்றியைப் பெறுவதென்னவோ சந்தேகம் தான்!'' என்று அவளிடம் அன்பும் அழுத்தமும் தொனிக்கப் பேசினுர் போர்ப் போரா.

எனவே கான்சுலோ மீண்டும் கண்ணைப் பறிக்கும் ஆடையலங்காரங்களைப் பூண்டு, மேடையேறினுள்; வியன்னு நகரத்தின் பிரமுகர்களால் பெரிதும் வரவேற்கப் பட்டாள்; மீண்டும் பெரிய பாடகியானுள்; பேரும்புகழும் பெற்ருள். போர்ப் போரா அந்தப்பையன் ஹேடின்னைத் தமது மாணவராக ஏற்றுக் கொண்டார். ஹேடின் பிற்காலத்தில் எய்திய பெரும் புகழுக்குரிய பாதையில் அவனை நடை போட வைக்க முனைந்தார்.

## 7

ஆன்ஸொலெட்டோவை அதன் பின் கான்சுலோ பார்க்கவும் இல்லை; அவனைப் பற்றிக் கேள்விப் படவும் இல்லை. அவன் அவள் வாழ்விலிருந்து நிரந்தரமாக மறைந்து போய் விட்டான். வெனிஸ் நகரத்தின் கால்வாய்கள், அமைதி கொண்ட நீலக் கடல் பரப்பு மற்றும் தனது இளமைக் காட்சிகள் ஆகியவற்ருேடு சம்பந்தப்பட்ட ஒரு நினைவுக் கீறலாகத் தான் அவனது மனத்தில் அவன் இடம் பெற்றிருந்தான். வியன்னுவில் போர்ப் போராவுக்கும், அவரது மாணவி கான்சுலோவுக்கும் பெரும்புகழ் கிட்டியது. அந்தப் புகழ் மணம் ஜெர்மனிக்கும் எட்டி விட்டது. அப்போது யுத்தங்களுக்கிடையில் சிறிது ஓய்வு பெற்றிருந்த ஜெர்மானிய மன்னரான பிரடெரிக் பிரபலமான கலைஞர்களையும், எழுத்தாளர்களையும், பாடகர்களையும் ஒன்று கூட்டி அழைத்து, ஆதரவளித்து வந்தார். இந்தச் சமயத்தில் போர்போராவுக்கும் அவர்து மாணவிக்கும் ஜெர்மனியின் தலைநகரான பெர்லினிலிருந்தே அழைப்பு வந்து சேர்ந்தது.

மகா மன்னரான பிரடெரிக்கினுல் அழைக்கப் படுவதென்பதே பெரிய கௌரவம்; மேலும் அங்கு சென்ருல் ஏராளமான பொன்னும் பொருளும் வேறு பரிசாகக் கிடைக்கும். ஏனெனில் அப்போது நடந்த யுத்த யுத்தங்களால், ஆஸ்ட்ரிய நாடு பஞ்சப் பட்டு போயிருந்தது; ஆனுல் பெர்லினிலோ செல்வம் பொங்கி வழிந்தது, ஆனுல் கான்சுலோவுக்கு இரண்டும் கெட்ட மனசாக இருந்தது. அவளது ஒரு மனமோ ராக்ஷஸர்களின் கோட்டைக்குத் திரும்பச் செல்ல விரும்பியது; மறு மனமோ தனது குருநாதரோடு பெர்லினுக்குச் செல்லத் தயங்கியது. எனினும் அவள் மனத்தில் இறுதியில் குருநாதரின் பால் கொண்ட கடமையுணர்ச்சியே வெற்றிபெற்றது. எனவே அவள் போர்ப் போராவுடன் பிரஷ்ஷியாவை நோக்கிப் புறப்பட்டாள்.

அவர்கள் பிரஷ்ஷிய நாட்டின் எல்லைக்கு வருவதற்கு முன்னுல், வழியில் அவர்கள் ஹோடிட்ஸ் பிரபு என்பவரின் மாளிகையில் தங்கினுர்கள், அந்தப் பிரபு ஒரு கலாபிமானி; அவரை அவர்கள் வியன்னுவிலிருந்த காலத்தி லேயே நன்கு தெரிந்து கொண் டிருந்தார்கள். அந்தப் பிரபு சமீப காலத்தில்தான் மார்கிராவைன் என்ற ஒரு வயதான பெண் மணியை மணம் முடித்திருந்தார்; அந்த மனைவியால் அவரது அந் தஸ்துக்கூட இப்போது கூடியிருந் தது, மார்க்கிராவைன் என்ற அந் தச் சீமாட்டி மறுநாட்காலையில் அவரது மாளிகைக்கு வருவதாக இருந்தது, கடமையுணர்ச்சி மிகுந்த கணவரான அந்தப் பிரபு தமது மனைவியைச் சங்கீத நிகழ்ச் சிகளோடும், வேறு பல கோலா கலங்களாலும் வரவேற்கத் திட்ட மிட்டிருந்தார். எனவே போர்ப் போரா, கான்சுலோ ஆகியோ ரின் வரவு அவருக்கு அதிருஷ்ட வசமாகக் கிட்டிய அரிய வாய்ப் பாக அமைந்தது. அந்த நிகழ்ச்சி களை அமைப்பதில் அவர்கள் இரு வரும் எவ்வளவோ ஆலோசனை கள் கூறலாமே!

அந்தக் கோட்டையில் கூடி யிருந்தவர்கள் காலையுணவு அருந் திக் கொண்டிருந்த வேளையில், இரண்டு பிரஷ்ஷிய அதிகாரிகள் அங்கு வரவிருப்பதாகக் கூறப் பட்டது; உடனே அவர்களை வர வேற்க, மேஜைமுன் இருந்தவர் கள் தயாராளுர்கள். அந்த அதி காரிகளும் உள்ளே வந்தார்கள். முதலில் வந்த அதிகாரி குட்டை யான சிறு மனிதராக இருந்தார்; அவரது முகத்திலும் ஏதோ ஒரு விரும்பத் தகாத பாவம் பிரதி பலித்தது. அவரது தோள்கள் கவர்ச்சியற்ற வடிவத்தில் உரு ண்டு தோற்றின. மேலும் அவ ருக்கு வயது முப்பதுக்கு மேலிரா விட்டாலும், அவரது தோற்றத் தில் வயதுக்கு மீறிய சோர்வும் தளர்ச்சியும்தென்பட்டன. ஆனுல் அவரது நடை விறைப்பாக இருந் தது; நெற்றி கம்பீரமாகத் தோற் றியது; கண்களிலோ அதீதமான உத்வேகமும், ஒளியும் குடி கொண்டிருந்தன. அவருக்குப் பின் வந்த அதிகாரியோ ஏதோ ...ள்ளுக்குள் புழுங்கித் தவிப்பவர் போலக் காட்சியளித்தார், அவ ரைப் பார்த்தால், மகாமன்னர் பிர டெரிக்கிடம் சேவை செய்யும் எல்லாவிதமான அதிகாரிகளை யும் போலவேதான் இருந்தார். புதுமை எதுவும் அவரிடம் காணப் படவில்லை. அந்த இரண்டு அதிகாரிகளும் தாம் அந்தப் பக்கத்தில் குதிரைகளை விலைக்கு வாங்க வந்ததாகவும், அந்தப் பிரபுவின் லாயத்தில் விற் பனைக்குரிய குதிரைகள் ஏதே னும் இருந்தால் அவற்றைத் தாம் பார்வையிட விரும்புவதாகவும் தெரிவித்தார்கள். அந்தப் பிரபு விடம் குதிரைகள் எதுவும் விற் பனைக் கில்லை. என்ருலும் அவர் வந்த விருந்தாளிகளைத் தமது மனைவி வந்து சேருமட்டும் தன் ளுேடு தங்கிவிட்டுச் செல்லுமாறு மிகவும் வருந்திக் கேட்டுக் கொண்டார்.

அன்றிரவு விருந்துண்ணும் நேரத்தில், அந்த இரண்டு அதி காரிகளுக்குள்ளும் மேலதிகாரி யாகத் தோற்றிய, அந்த விசித் திரமான தோற்றம் கொண்ட மனிதர் போர்ப் போராவுடனும் கான்சுலோவுடனும் உரையாடு வதில் மிகுந்த உற்சாகமும் உவ கையும் கொண்டார். அந்த மாளிகையைச் சேர்ந்த பிரபு தாராளமாக ஊற்றி வழங்கிய ஒயின் மதுவை, போர்ப் போரா வும் தாராளமாகவே குடித்திருந் தார். தம்மை க்ருட்ஸ் பிரபு என அறிமுகப்படுத்திக் கொண்ட அந்

தப் பிரஷ்ஷிய அதிகாரி போர்ப் போராவை நோக்கிச் சில கேள்விகள் கேட்டார். அதாவது ராஜ குடும்பத்தைச் சேர்ந்த ஒருமாணவர் சங்கீதம் கற்கும்போது அபசுரமாக ஏதாவது பாடிவிட்டால் அந்த மாணவரைப் போர்ப் போரா எப்படி நடத்துவார் என்பதைப் பற்றிக் கேட்டார். போர்ப் போரே அதற்குப் பின்வருமாறு பதிலளித்தார்; ''மகா மன்னர் பிரடெரிக்கை மட்டும், அவர் அபசுரமாகப் பாடினுல் ஏதோ ஒன்றிரண்டு முறை நான் மன்னிப்பேன். என் முன்னுல் அவ்வாறு அபசுரமாகப் பாடுமளவுக்கு அவருக்கு அகந்தை இருந்தாலும் கூட, அவர் அவற்றை உடனேயே திருத்திக் கொள்வாரானுல் நான் அவரை மன்னித்து விடுவேன்.''

''ஆனுல் அவர் அப்படித் திருத்திக் கொள்ளாவிட்டால்?'' என்று கேட்டார் பிரபு.

''அப்படியானுல், அவர் என் தலையையே வெட்டினுலும் சரி, நான் அங்கிருக்க மாட்டேன். அவரையே கைகழுவி விட்டு நான் புறப்பட்டு விடுவேன்'' என்ருர் போர்ப்போரா. கான்சுலோ அவரைத் தடுத்து நிறுத்தப் பலமுறை முயன்றும்கூட, போர்ப்போரா இதே பாணியில் மேலும்மேலும் பேசிக்கொண்டே போனுர். அந்தப் பிரஷ்ஷிய அதிகாரிக்கோ இதனைக் கண்டு ஒரே குஷி. அவரோ போர்ப் போராவை மேலும் மேலும் கேள்விகள் கேட்டு, அவரைக்கிண்டிக் கிளறி விட்டுக் கொண்டே யிருந்தார். போர்ப்போராவும் மன்னரை அலட்சியப் படுத்திய வாறு ஏதேதோ பதில் கூறிக் கொண்டே யிருந்தார்.

அன்றிரவு அந்தப் பிரஷ்ஷிய அதிகாரிகள் இருவரும் விடைபெற்றுக் கொண்டு குதிரையில் ஏறிச் சென்ருர்கள். அவர்கள் சென்றதுமே அந்த மாளிகையின் பிரபு போர்ப்போராவையும் நோக்கிப் பின் வருமாறு சொன்னுர்: ''வந்தவர் யாரென்று உங்களுக்குத் தெரியுமா? வந்தவர் வேறு யாருமல்ல. மகா மன்னர் பிரடெரிக்கேதான் எனக்கு இந்த உண்மை ஆரம்பத்திலேயே தெரிந்து போய் விட்டது. என்ருலும் தமது மாறு வேடத்தைக் கடந்து, தம்மை யாரென்று இனம் கண்டு கொள்பவர்களைக் கண்டால், அவருக்கு அசாத்தியமான கோபம் பொத்துக்கொண்டு வரும். எனவே தான் நான் சும்மா இருந்தேன்!''

## 8

போர்ப்போரா அவ்வளவு தூரம் எடுத்தெறிந்து அலட்சியமாகப் பேசியதைக் குறித்து, கான்சுலோ மிகவும் வருத்தப்பட்டாள். ஆனுல் போர்ப்போராவோ அதனைப் பற்றிக் கவலையே கொள்ளவில்லை. பிரடெரிக் வேண்டுமானுல், பிரஷ்ஷியாவின் மகா மன்னராக இருக்கலாம்; ஆனுல் அவரோ சங்கீதச் சக்கரவர்த்தியாயிற்றே! அவர் அப்படித்தான் கருதினுர்.

மறுநாட் காலையில் அவர்கள் மீண்டும் தமது பயணத்தைத் தொடர்ந்தார்கள். அன்று குளிரும் அதிகமாக இருந்தது; மேலும் அவர்கள் பிராக் நகருக்கு வந்து சேர்ந்த பொழுது, இரவும் வந்து விட்டது. புனிதர் ஜான் நெப்போமக்கின் பெரிய உருவச்சிலை நிற்கும், மோல்டா நதிக்கு மேலுள்ள பெரிய பாலத்தை அணுகியதும், அவர்களது வண்டிக் குதிரைகளில் ஒன்று கால்வழுக்கி, அந்தச் சிலையின் முன்னுல் விழுந்தது. உடனே வண்டிக்காரன் ''அட,

கடவுளே! இது அபசகுண மாச்சே!'' என்று கத்தினுன். பின்னர் அந்த விபத்தைக் காண் பதற்காக, போர்ப்போராவும், கான்சுலோவும் வண்டியை விட்டு இறங்கினுர்கள். அந்தச் சமயத் தில் குதிரைமீது வந்த ஒருவன் அவர்கள் பக்கமாக நெருங்கி வந்து, அவர்களை உற்று நோக்கி ஞன். அங்கு வந்த நபர் வேறு யாருமல்ல. ரூடால்ஸ்டாட் வம் சத்தைச் சேர்ந்தவரான பிரடெ ரிக் பிரபுதான்! அதனைக் கண்டு அவர்கள் பேராச்சரியத்தில்மூழ்கி விட்டார்கள்.

அந்தப் பிரபு பின்வருமாறு சொன்னுர்: ''உங்களை இங்கு தான் சந்திக்க வேண்டும் என்று எனக்குச் சொல்லி யனுப்பினுர் கள். என்னுேடு வாருங்கள். நான் எல்லாவற்றையும் விளக்குகி றேன். எல்லாம் ஆல்பெர்ட் விஷ யம்தான். அவன் உங்களுக் காகக் காத்திருக்கிருன்.'' பின் னர் அவர் தம்மால் முடிந்த மட்டி லும் விரைவாகத் தாம் சொல்ல வேண்டியதையெல்லாம் விறு விறென்று அவர்களிடம் சொன் னுர். அதாவது கான்சுலோ புறப் பட்டுச் சென்ற பின்னுல். ஆல் பெர்ட்டுக்கு உடம்புக்கு மிகவும் முடியாமல் போய் விட்டது. கான் சுலோ திரும்பி வருவாள், வரு வாள் என்ற நம்பிக்கையிலேயே அவன் காத்துக் காத்துக் கண் விழித்திருந்ததால் அவனது உடம் பும் இளைத்து உருக்குலைந்துபோய் விட்டது. இப்போதோ அவன் செத்துக் கொண்டிருக்கிருன். சில நாட்களுக்கு முன்னுல் அவ னுக்கு ஒரு தரிசனக் காட்சி தோன்றியது. அதில் அவன் இந்தச் சிலையின் முன்னுல் இந்தக் குதிரை தடுக்கி விழுவதைக் கண் டிருக்கிருன். மேலும் அவன் கண்டதெல்லாம் அப்படியே இப் போது இங்கு நடந்திருக்கிறது. அவன் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் இந்தப் பாலத்துக் கருகில் காத் திருந்து, கான்சுலோவை இங்கே சந்திந்து அவளைத் தன்னிடம் அழைத்து வருமாறு தனது சிற் றப்பாவுக்கு எழுதியுள்ளான்...

இந்த விவரங்களையெல்லாம் அந்தப் பிரபு அவர்களிடம் சொல்லி முடித்தார். மேலும் அவர் பிரயாணத்துக்கான எல்லாத் தயாரிப்புக்களுடனும் வந்திருந் தார். எனவே மறுநாட் காலையில் பொழுது விடியும் தருணத்தில் கான்சுலோ மீண்டும் அந்த ராக்ஷசர்களின் கோட்டை என்ற மாளிகையின் கூட கோபுரங் களைக் கண்டாள். மாளிகைக்கு வந்ததும் அங்குள்ள கூடத்தில் ஆல்பெர்ட் ஒரு நாற்காலியில் அமர்ந்திருப்பதை அவர்கள் கண் டார்கள். அவன் அங்கேயே ஒருமாத காலமாக வீற்றிருந் தான்; காத்திருந்தான்; காத்துக் காத்து, இப்போது செத்துக் கொண்டிருந்தான். பிரபுவின் சகோதரியான வென்ஸெஸ் லாவா கதவைத் திறந்தாள்; அவள் கான்சுலோவை நோக்கிப் பின்வருமாறு சொன்னுள்: ''அவ னிடம் ஓடிப்போ. நீ திடும் மென்று செல்வதால், அவன் திடுக்கிட்டு அதிர்ச்சியடைவான் என்று அஞ்சாதே. ஏனெனில் அவன் உன்னை எதிர்பார்த்துக் கொண்டே இருக்கிருன்; நீ இங்கு வந்து கொண்டிருப்பதைக் கூட ஒருமணி நேரத்துக்கு முன்பே அவன் கூறி விட்டான்!'' கான்சுலோ ஆல்பெர்ட்டை நோக்கிப் பாய்ந்தோடினுள்; அவ னது காலடியிற்போய் விழுந் தாள். ஆங்கு அவள் ஒரு மனித உருவைக் காணவில்லை; மாருக அங்கோர் அதிசயமே வீற்றிருப் பதுபோல் தோன்றியது அவ ளுக்கு.

ஆல்பெர்ட் தனது காலடியில் வந்து விழுந்த தனது காதலியின்

தலையின்மீது தனது வாடி வதங்கி மெலிந்த கரத்தை மெல்லப் போட்டான். பின்னர் அவன் பின்வருமாறு பேசினான்: ''இப்போதுதான் நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன். நீ என்னைப் புறக்கணித்து விட்டுப் போய் விட்டதாக நான் நம்பினேன். அதனால் நான் வெறுப்பும் விரக்தியும் அடைந்து போனேன். ஆனால் சென்ற எட்டு நாட்களாகத்தான் நான் எனது புத்தி சுவாதீனத்தைத் திரும்பவும் பெற்றேன். ஆனால் இதைத்தான் மற்றவர்கள் எனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதாகக் கூறுகிறார்கள். மற்றவர்கள் புத்தகங்களைப் படித்துப் பார்ப்பதைப் போல், நான் இதயங்களையே படித்துப் பார்த்து விடுகிறேன். நான் ஒரே பார்வையில் கடந்த காலம், நிகழ் காலம், எதிர்காலம் மூன்றையுமே கண்டறிந்து விடுகிறேன். சுருங்கச் சொன்னால், — கான்சுலோ! நீ விசுவாசமாக இருந்தாய் என்பதை நான் கற்றறிந்தேன். நீ என்னைக் காதலிக்க முயன்றாய்; கொஞ்சகாலத்தில் அதில் நீ வெற்றியும் கண்டாய். கான்சுலோ! இப்போது நாமிருவரும் தேவாலய முறைப்படி திருமணம் செய்து கொள்ள நீ சம்மதிக்க வேண்டும்; ஏனெனில் அது ஒன்றுதான் மனிதர்களின் மத்தியில் தனது ஸ்தானத்தை இழக்காமல் பெற்றிருக்கிறது. உன்னை மணந்த அந்தத் திருப்தியுணர்வோடு நான் எனது சமாதியை அடைய வேண்டும்.''

இவ்வாறாக, செத்துக் கொண்டிருந்த ஆல்பெர்ட்டுக்கும், கான்சுலோவுக்கும் திருமணம் நடந்தது. அதன்பின் அவன் அந்தப் புராதனமான மாளிகையின் கூடத்தில், கான்சுலோவின் மார்பின்மீது தலையைச் சாய்த்து உட்கார்ந்தவாறே, உயிர் விட்டான். இவ்வாறு ரூடால்ஸ்டாட் வம்சத்தினரின் கடைசிக் கொழுந்தான ஆல்பெர்ட் மணம் கண்டு பிணமானான்.

எல்லாம் முடிந்து போய் விட்டது. ஆல்பெர்ட்டின் சடலம் தேவாலயத்தில் கிடத்தப்பட்டது. அந்தச் சமயத்தில் கிறிஸ்டியன் பிரபுவின் சகோதரியான வென்ஸெஸ்லாவா கான்சுலோவிடம் வந்து, உணர்ச்சியற்ற கண்டிப்புடன் பின்வருமாறு கூறினாள்: ''எல்லாம் ஒழுங்கு செய்யப்பட்டாய் விட்டது. ஆல்பெர்ட்டின் விதவை மனைவி என்ற முறையில் எனது மருமகனுக்குரிய சொத்துச் சுகங்கள் அனைத்துக்குமுரிய உரிமைப்பத்திரங்கள் உன்னிடம் இப்போதே ஒப்படைக்கப்படும். மேலும் ரூடால்ஸ்டாட் மாளிகையிலுள்ள எல்லா உடைமைகளுக்கும் இப்போது நீயேதான் சொந்தக்காரி; நீதான் வாரிசு. இதுவும் உனக்குத் தெரியும் என நினைக்கிறேன்.''

ஆனால் கான்சுலோவோ பின்வருமாறு பதிலளித்தாள்: 'அம்மா! என்னை மன்னித்து விடுங்கள். எனக்கு ஏற்கெனவேபோதுமான செல்வம் இருக்கிறது. மேலும் எனது தேவைகளும் குறைவு; அத்துடன் எனக்கு உழைத்துப் பாடுபடுவதிலும் ஈடுபாடு உண்டு. எனவே ரூடால்ஸ்டாட் குடும்பத்துக்கு அமீலியாதான் வாரிசு. எல்லாவற்றையும் அவளிடம் ஒப்படையுங்கள். நான் எனது பயணத்தை உடனேயே மீண்டும் தொடங்கியாக வேண்டும். பெர்லினில் பாடுவதற்காக நான் ஏற்கெனவே ஒப்பந்தம் செய்யப்பட்டிருக்கிறேன். எனவே எனக்குப் போக விடை தாருங்கள்.''

ஆனால் அந்தச் சீமாட்டியோ இதனைக் கேட்டதும் பின்வருமாறு கத்தினாள்: ''என்னது? ரூடால்ஸ்டாட் குடும்பத்தின்

சீமாட்டி மேடையேறிக் கச்சேரி செய்வதா?''

''இல்லையம்மா, உங்களைத் தவிர, ரூடால்ஸ்டாட் குடும்பத்தின் சீமாட்டி இப்போது யாரும் இல்லை. நீங்கள்தான் அதற்கு உரிமையுள்ளவர்'' என்று கனிவோடு கூறினாள் கான்சுலோ.

இதனைக் கேட்டதும் அந்தச் சீமாட்டிக்கு அப்படியே மனம் உருகிக் கரைந்துவிட்டது. அவள் விம்மி விம்மி யழுதவாறே கான்சுலோவைக் கட்டியணைத்தாள். அணைத்தவாறே பின்வருமாறு தேம்பினாள்; ''கான்சுலோ! என் அருமை மகளே! நீ எங்களுடனேயே இருந்து விடு. உன் இதய விசாலமும் பரந்த மனப்பான்மையும் யாருக்குமே வராது. நீ எங்களை விட்டு மீண்டும் போய் விடாதே!''

கான்சுலோ அந்த மூதாட்டியான சீமாட்டியை முத்தமிட்டாள். என்றாலும் தனது தீர்மானத்தில் உறுதியாக நின்றாள்.

அன்றிரவில் ஒரு வண்டி அவளையும் போர்ப்போராவையும் மீண்டும் பிரஷ்ஷிய நாட்டின் எல்லை நோக்கிச் சுமந்து சென்றது.

## 9

இதற்கிடையில் மகா மன்னரான பிரடெரிக் தமது அரண்மனையில் அமர்ந்து, ஹோடிட்ஸ் பிரபுவின் கோட்டையில் நடந்த சம்பவங்களை நினைவு கூர்ந்து கொண்டிருந்தார். அப்போது தமது மெய்க் காவலரைநோக்கிப் பின்வருமாறு கேட்டார்: 'என்ன, புட்டன்பிராக்! நமது சங்கீத வித்வானான அந்த மகா வித்வான் போர்ப்போராவைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?'

''அரசே! அவர் அசட்டுத்தனமும் தன் கைங்காரமும் படபடத்த குணமும் கொண்ட ஒரு மனிதராகவே எனக்குத் தோற்றுகிறார்'' என்று பதிலளித்தார் அந்த அதிகாரி.

ஆனால் பிரடெரிக்கோ அதற்குப் பின்வருமாறு பதிலளித்தார்: ''நான் சொல்கிறேன். அவர் அபாரமான சாதனைகளைச் சாதித்த மேதை. நிறைந்த புத்திக்கூர்மை மிகுந்தவர்; அத்துடன் வேடிக்கையான நபரும் கூட சரி. அவர் தமது மாணவியோடு நமது நாட்டின் எல்லைக்கு வருஞ்சமயம், அவரைச் சந்திப்பதற்காக ஒரு வசதியான வண்டியை அனுப்பிவை. மேலும் நீயும் உடன்சென்று அவரைச் சந்தித்து, அவரை அந்த வண்டியில் தனியே கை கொடுத்துஏற்றி விடவேண்டாம் சொல்வது புரிகிறதா? ஆனால், அதேசமயம் நீ அவரைஎல்லாவிதமானமரியாதையுடனும் மதிப்புடனும் நடத்த வேண்டும். தெரிந்ததா?''

''நல்லது, அரசே. அதன்பின் என்ன செய்யவேண்டும்? அவரை பெர்லினுக்கு அழைத்துவந்துவிட வேண்டுமா?'' என்று கேட்டார் அந்த அதிகாரி.

''உனக்கு இன்று கொஞ்சம் கூடப் புத்தி இருப்பதாகத் தெரியவில்லையே!'' என்று சட்டென்று பதிலளித்தார் மகா மன்னர். ''அவரை டிரெஸ்டென்னுக்கு அனுப்பி வைக்க வேண்டும்; அங்கிருந்து அவர் விரும்பினால் பிராகுக்கு அனுப்பவேண்டும்; இல்லையெனில் வியன்னாவுக்கே திரும்பவும் அனுப்பிவிட வேண்டும். அத்தகையதொரு பெருந்தகுதி வாய்ந்த மனிதரை நான் அவரது தொழிலிருந்து பிரித்துக்கொண்டு வர முனைந்தேன்; எனவே அவரை எப்படிப்பட்ட ஸ்தானத்திலிருந்து அழைத்தேனோ, அப்படிப்பட்ட சிறந்த ஸ்தானத்திலேயே அவரை நான் விட்டு வைக்க வேண்டும். சரி. நான்

சொன்னவை அனைத்தும், அவருக்கு எவ்விதக் கஷ்டமும் நஷ்டமும் நேராமல் நடந்தேற வேண்டும். தெரிந்ததா? ஆனல் அவர் மீண்டும் எனது ராஜ்யத்தில் காலடி எடுத்து வைக்கமட்டும் அனுமதித்து விடாதே. அவர் நமக்கு மிஞ்சிய அறிவாளி. நமக்கு அது ஒத்துவராது.''

''நல்லது, அரசே. அவரது மாணவி கான்சுலோவை என்ன செய்வது?''

''அவள் விரும்பினுலும் சரி. விரும்பாவிட்டாலும் சரி, அவளைத் தக்க பாதுகாவலோடு சான்ஸ் சூஸிக்கு அழைத்துச் செல்ல வேண்டும். அந்தக் கோட்டையில் அவளுக்கென ஒரு பகுதியை ஒதுக்கிவிட வேண்டும். பார்பெரினி இருந்துவந்தமாளிகையை ஒதுக்கி விட்டால் போதுமானது. இப்போதோ பார்பெரினி பெர்லின் நகரத்திலேயே இல்லை. எனவே பார்பெரினிக்குரிய சகலவிதமான சன்னத்துக்கள், சன்மானங்கள் எல்லாவற்றுக்கும் இனி கான்சுலோவே உரிமைக்காரியாவாள். ஆம். கான்சுலோ மிகச் சிறந்த பாடகி; கானக்குயில். அவளுக்கு நல்ல காலம் பிறந்து விட்டது. சரி. நான் சொன்ன இத்தனை காரியங்களும் இனிதே நிறைவேற வேண்டும். தெரிந்ததா?''

அந்த மெய்க்காவல் அதிகாரி புறப்பட்டுச் சென்ருர்; மகா மன்னர் உத்தரவிட்ட படியே எல்லாம் இனிதே நிறைவேறி முடிந்தன.




ஆசிரியரும், வெளியிடுபவரும்: கண. இராமநாதன்,
66, பெரியதெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5. தொலைபேசி 84989.
அச்சிட்டோர்: ஐடியல் பிரிண்டர்ஸ், 97, பிராட்வே, சென்னை-1.



செப்டம்பர், 1964 : : மலர் 3 – இதழ் 6

# பாரதியாரின் பெருமை

பாரதி தமிழகத்தில் பிறந்தான். பாரதத்தின் பெருமைக்குப் பாடுபட்டான். அகில உலகத்தின் புகழுக்கு ஆளாகிவிட்டான்.

புதியன விரும்பு, பெரிதினும் பெரிது கேள் என்று இளங் குழந்தைகளுக்கு ஏற்றத்தை ஊட்ட விரும்பியவன் பாரதி. அவன் வாழ்ந்த காலம் மிகமிகச் சிறிது. அவன் சாதித்த சாதனைகள் மிகமிகப் பெரிது. அவனுடைய கவிதையை அவனுடைய வார்த்தைகளாலேயே மதிப்பிடவேண்டுமென்றால், 'சுவை புதிது, பொருள் புதிது, வளம் புதிது, சொல் புதிது' என்று கூறலாம்.

தனி ஒருவனுக்கு உணவு இல்லை என்ற நிலைமை ஏற்படக் கூடாது. எல்லோரும் சரிநிகர் சமானமாக வாழவேண்டும், ஏழை என்றும் எளியவர் என்றும் எவனுமே அவனியில் இருக்கக் கூடாது. இப்படியாக அவன் கண்ட கனவுகள் பலப்பலவாகும்.

ஒன்று பட்டால் உண்டு வாழ்வே-நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே
நன்றிது தேர்ந்திடல் வேண்டும்-இந்த
ஞானம் வந்தால் பின்நமக் கெது வேண்டும்?

நாட்டின் ஒற்றுமையில்—நலியாத பாரதத்தின் ஒருமைப்பாட்டில் அவனுக்கிருந்த ஊக்கத்தை உணர்வைச் சொல்லிமுடியாது.

பாரதியார் தினத்தில் அவரது கனவுகளை நனவாக்கவேண்டும் என்ற எண்ணத்தோடு நாம் நம் கடமைகளையும் செய்ய முற்படுவோமாக. வாழ்க பாரதியின் நாமம்! வாழிய பாரத தேசம்!

— கணா. இராமநாதன்

# பாரதி யார்?

"தாழ்வுற்று வறுமையினுல்
தட்டழிந்து கெட்டழிந்து
பாழ்பட்டுக் கிடந்திட்ட
பாரதத்தை விழிப்பூட்டி

வாழ்விக்க வந்தவொரு
வைராக்யம் கொண்டவனுய்!
சூழ்கலியைக் கொன்ருெழிக்க
சூளுரைத்து நின்றவனுய்

ஏழை அடிமையென்றே
யாருமிலாப் பாரதத்தை
வாழையடி வாழையென
வாழ்விக்க வந்தவனுய்

தருமம் அழிவெய்திச்
சத்தியமும் பொய்யாகும்
மருமத்தைக் கண்டறிந்து
மருந்துரைத்த பண்டிதனுய்

முப்பத்துக் கோடிமக்கள்
முழுமைக்கும் புதுவாழ்வை
ஒப்பமிட்டுத் திட்டமிட்டு
உருவாக்கித் தந்தவனுய்

சாதி மதச் சழக்குகளை
சாத்திரத்துப் பொய்மைகளை
ஊதிப் பறக்கடிக்கும்
ஊழிப் பெருங்காற்றுய்

மேழி பிடிப்பவரும்
வேறுதொழில் செய்பவரும்
வாழியரோ வாழியென
வாக்குரைத்த பல்லாண்டாய்

பாட்டுத் திறத்தாலே
பாரையெலாம் பாலிக்கும்
தேட்டம் மனங்கொண்டு
செம்மாந்து நின்றவனுய்

வந்துதித்த நந்தமது
வரகவிஞன் பாரதியே!"

— **திருச்சிற்றம்பலக் கவிராயர்**

# ஜனநாயக சோஷலிஸம்



கு. காமராஜ்

நம் நாடு அந்நிய ஆட்சியிலிருந்து சுதந்திரம் பெற்று இன்றோடு 17 ஆண்டுகள் பூர்த்தியாகின்றன. இந்தச் சுதந்திர தினத்தில் நம்முடைய மாபெருந் தலைவர் நேருஜி நம்மிடையே இல்லை. இதை நினைத்துப் பார்க்கும்போது நமக்கு ஒருபுறம் துக்கம் ஏற்படுகிறது. மறுபுறம் நம்முடைய பொறுப்புகளையும் கடமைகளையும் பற்றிய நினைவு வருகிறது. நாட்டின் பொறுப்புகளையெல்லாம் நம் தலைவர் நேருஜி ஏற்றிருந்தார். 'அவர் இருக்கிறார். எல்லாவற்றையும் கவனித்துக்கொள்வார்' என்று நாம் கவலையின்றி இருந்தோம். ஆனால், இன்று நிலைமை அடியோடு மாறியிருக்கிறது. நேருஜி நம்மிடையே இல்லாத நிலையில் நாடு சம்பந்தப்பட்ட எல்லா பொறுப்புகளையும் நாம் அனைவருமே ஏற்றாகவேண்டிய நிலையில் இருக்கிறோம். இந்நாட்டில் வாழும் ஒவ்வொருவருடைய பொறுப்பும் பன்மடங்கு அதிகமாகி விட்டது. இதை உணர்ந்து செயலாற்றினால்தான் நமக்கும் நாட்டுக்கும் சிறந்த எதிர்காலம் உண்டு என்பதை இந்தச் சுதந்திர தினத்தில் ஒவ்வொருவரும் உணர வேண்டியது அவசியம்.

நமக்குச் சுதந்திரம் வாங்கித் தந்த மகாத்மா காந்தியும் சுதந்திரம் பெற்றபின் 17 ஆண்டு காலம் நமக்கு வழிகாட்டி நாட்டை முன்னேற்றப் பாதையில் நடத்திச் சென்ற நேருஜியும் இன்று இல்லாவிடாலும் அவர்கள் நமக்குக் காட்டிய வழிகள் இருக்கின்றன. அந்த வழிகளில் நாம் அனைவரும் ஒன்றுபட்டு முன்னேறிச் சென்றால், நமது நாடு எல்லாத் துறைகளிலும் மேல் நிலையை அடைவது திண்ணம்.

### காந்திஜி காட்டிய வழி

காந்திஜி நமக்கு தேசபக்தியையும், தியாக உணர்ச்சியையும் ஊட்டினார். ஏழைமக்கள் நல்வாழ்வு பெறுவதற்காகப் பாடுபட்டார். பலாத்கார முறைகளை ஒழித்து சமாதானமான மார்க்கங்களைக் கடைப்பிடித்து எந்த லட்சியத்தையும் அடையலாம் என்ற நம்பிக்கையையும் ஊட்டினார். காந்திஜியின் வாரிசான நேருஜி ஏழைமக்கள் மேம்பாடு அடைந்து அனைவரும் சரிநிகர் சமானமாக வாழ்வதற்கு சோஷலிஸ லட்சியத்தை நமக்கு அளித்திருக்கிறார். நம் மாபெருந் தலைவர்களின் அறிவுரைகளுக்கு ஏற்றபடி நாம் ஜனநாயக சோஷலிஸத்தை நமது லட்சியமாகக் கொண்டிருக்கிறோம். பிற நாடுகளில் பலாத்காரவழிகளில் சோஷலிஸத்தை அடைந்தார்கள். அஹிம்சை வழியில் வந்த நாமோ ஜனநாயக முறையில் சோஷலிஸத்தை அடையத் தீர்மானித்திருக்கிறோம். அவர்கள் எதிரிகளைக் கொன்று சோஷலிஸத்தை நிலை நாட்டினார்கள். நாம் நம்மையே தியாகம் செய்வதன் மூலம் சோஷலிஸத்தை

அடையவேண்டும். இதுதான் காந்திஜி நமக்குக் காட்டிய வழியாகும்.

அந்நிய ஆட்சிக் காலத்தில் நமக்கு அரசியல் சுதந்திரமே பிரதான லட்சியமாக இருந்தது. ஏனென்ருல் பொருளாதார சுதந்திரத்துக்கு அரசியல் சுதந்திரமே அடிப்படையாகும். அரசியல் சுதந்திரம் பெற்றுவிட்ட இந்தியாவுக்கு இன்று லட்சியமாக இருப்பது ஜனநாயக சோஷலிஸமாகும். சோஷலிஸமே நமக்குப் பொருளாதார சுதந்திரத்தைக் கொடுக்ககூடியது.

சுதந்திர இந்தியாவில் கடந்த 17 ஆண்டுகளாக எத்தனையோ துறைகளில் நாம் முன்னேற்றம் கண்டிருக்கிருேம். இந்த முன்னேற்றவேகத்தைக் கண்டு பிற நாட்டவர்களும் வியக்கிருர்கள். ஆனால் இந்த முன்னேற்றம் போதாது. இன்னும் எவ்வளவோ முன்னேற வேண்டியிருக்கிறது என்பதை நாம் உணர்கிருேம். அதற்காக முன்னேற்றத்துக்கான திட்டங்களைத் தீட்டி நிறைவேற்றியும் வருகிருேம்.

நம் நாட்டில் கோடிக்கணக்கான மக்கள் அந்நிய ஆட்சிக் காலத்தில் உணவுக்கும் துணிக்கும் வழியின்றித் தவித்தார்கள். ஏழைக் குழந்தைகள் பள்ளிக் கூடத்தையே எட்டிப் பார்க்க முடியாதவர்களாக இருந்தார்கள். இன்று நிலைமை எவ்வளவோ மாறி, உணவுக்கும் உடைக்கும் பட்ட கஷ்டங்கள் குறைந்து பெரும்பாலானவர்கள் நன்ருக உண்டு உடுத்து வாழ்வதைக் காண்கிருேம். மாணவ மாணவிகளின்தொகைபன்மடங்கு அதிகமாகியிருக்கிறது. ஏழைக் குழந்தைகள் கல்வி கற்க முடியாது என்ற நிலை இன்று அடியோடு மறைந்துவிட்டது. இப்படிப் பல துறைகளில் முன்னேறியிருந்த போதிலும், இன்னும் கூட வறுமையால் வாடிக்கொண்டிருக்கும்ஏராளமான மக்களுக்கு நல்வாழ்வு அளிக்க வேண்டியிருக்கிறது. வறுமையை அறவே ஒழித்து, எல்லோரும் சௌக்கியமாக வாழ வழி செய்வதுதான் சோஷலிஸமாகும். இந்த லட்சியத்தை அடைய நாம் கடுமையாக உழைத்தாக வேண்டும். இன்று லட்சியத்துக்காக நாம் அனுபவிக்கும் கஷ்டங்கள், நம்முடைய பின் சந்ததிகளின் சுபிட்சத்துக்கு அஸ்திவாரங்களாகும் அதனல் நாம் கஷ்டங்களைச் சகித்துக் கொள்ளவேண்டும்.

### பிற்போக்குச் சக்திகள்

சோஷலிஸத்தை நோக்கி முன்னேறும்போது பொது மக்கள் தங்களுக்குள் இருக்கும் எல்லா வேற்றுமைகளையும் மறந்து ஒத்துழைக்கவேண்டும். ஆனல் நாட்டில் உள்ள பிற்போக்குச் சக்திகள் நம்முடைய மக்களைத் தவருன வழிகளில் திருப்ப முயல்கின்றன. அதன் மூலம் நமது முன்னேற்றத்துக்குத் தடங்கல் செய்யப்பார்க்கின்றன. பிற்போக்குச் சக்திகள் இருந்துகொண்டுதான் இருக்கும். அன்று சுதந்திரப் போராட்டத்தின் போதும் பிற்போக்குச் சக்திகள் இருந்தன. முட்டுக்கட்டை போட்டன. அவர்களுடைய இடைஞ்சல்களைப் பொருட்படுத்தாமல் நாம் போராடி வெற்றி பெற்ருேம். அது நமது ஒற்றுமையினுலும் தியாகத்தினுலும் சாத்தியமாயிற்று. இன்னும் அதே ஒற்றுமையினுலும் தியாகத்தினுலும் சோஷலிஸ லட்சியத்தை அடைய முடியும். பிற்போக்கு சக்திகள் செய்யும் இடைஞ்சல்களைக்கண்டு நாம் ஆத்திரமடையவோ, மனம் தளரவோ வேண்டியதில்லை மக்களுக்கு சோஷலிஸ லட்சியத்தை நன்கு எடுத்துரைத்து அனைவரையும் சிந்திக்

# கிராம முழுவளர்ச்சித் திட்டம்

**எஸ். கிருஷ்ணமூர்த்தி**
(தென் பிராந்திய அபிவிருத்தி அதிகாரி)
கதர் - கிராமக் கைத்தொழில் கமிஷன்.

கிராம முழுவளர்ச்சித் திட்டத்தின் கீழ், கதர் கிராமக் கைத்தொழில்கள் தவிர, விவசாயம், கால்நடை பராமரிப்பு, சுகாதாரம் கல்வி வசதி போன்றவைகளும் சமூக கலாச்சார அபிவிருத்தித் திட்டங்களும் மேற்கொள்ளப்படும். கதர் கிராமக் கைத்தொழில் கமிஷனின் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் கிராம முழுவளர்ச்சித் திட்டம் முக்கிய இடம் பெற்றுள்ளது. கிராம முழுவளர்ச்சித் திட்டத்தின் வேலை முறைகளும் அதன் வெற்றியும், சம்பந்தப்பட்ட பல்வேறு ஸ்தாபனங்கள்—இலாக்காக்களின் ஒத்துழைப்பைப் பொறுத்தே இருக்கிறது. இந்தத் துறையில் மாவட்ட அபிவிருத்திக் கௌன்சில்கள், பஞ்சாயத்து யூனியன்கள் மூலமாகவே நாம் விரும்பும் நல்லதொரு இணைப்பும், ஒருமைப்பாடும் உண்டாக வேண்டுமென எதிர்பார்க்கப்படுகின்றது. அகில இந்திய கதர், கிராமக் கைத்தொழில் கமிஷன், நாள்தோறும் ஒருமைப்பட்ட வேலை முறைகள் நடைபெற முயற்சி எடுத்துக் கொள்ளுமென்ற போதிலும், கதர் கிராமக் கைத் தொழில்கள் சம்பந்தப்பட்ட மட்டிலுமே, திட்டங்கள் வகுக்கவும் செயல்படுத்தவும் பொறுப்பேற்றுக்கொள்ளும். ஏனெனில் தற்போதைய சட்டதிட்டங்கள்படி மற்ற வேலைகளுக்கு, கமிஷன்மூலம் நிதிவசதி அளிக்க இயலாது என்பதே. கமிஷனின் வேலைத் திட்டங்கள், தற்போது

---

கத் தூண்டினால் பிற்போக்காளர்களின் பகட்டு வார்த்தைகளுக்கு யாரும் மயங்க மாட்டார்கள். ஆனால் இந்தச் சமயத்தில் ஒரு முக்கியமான விஷயத்தைக் குறிப்பிடவேண்டும். வெறும்பிரசங்கத்தாலும் உபதேசத்தாலும் மட்டும் மக்களின் ஒத்துழைப்பைப் பெற்றுவிட முடியாது பிரசங்கத்துக்கு மயங்குகிறவர்கள் தியாகம் செய்யவோ, கஷ்டப்பட்டு உழைக்கவோ முன்வர மாட்டார்கள். நாம் கஷ்டப்படுவதன் மூலமும் தியாகம் செய்வதன் மூலமுமே மக்களின் ஒத்துழைப்பை பூரணமாகப்பெறமுடியும். சொல்கிறபடி யாரும் செய்யமாட்டார்கள். செய்கிறபடி தான் செய்வார்கள். இந்த உண்மையை சுதந்திரப் போராட்ட காலத்தில் கண்டோம். இதை நினைவில் கொண்டு சோஷலிஸ லட்சியத்தையுடைய எந்த இன்னல்களையும் தாங்கிக்கொள்வதற்கும், எந்த எதிர்ப்புக்களையும் சமாளிப்பதற்கும் எவ்விதத் தியாகங்களையும் செய்வதற்கும் நாம் இன்று உறுதி கொள்வோமாக.

ஜே ஹிந்த்!

கிராமங்களிலுள்ள முழு நேரம் அல்லது பகுதி நேரம் வேலையற்றிருப்போருக்கு வேலை கொடுக்கத் தக்கதாகவும், ஏற்கெனவே கதர் கிராமக் கைத்தொழில் வேலைகளில் ஈடுபட்டுள்ளோர் பெறும் ஊதியம், விவசாயத்தில் ஈடுபட்டுள்ளோர் பெறும் ஊதியத்திற்குச் சமமானதாகவாவது இருக்கச் செய்யும் வகையிலேயே நிறைவேற்றப்படும்.

கிராம முழு வளர்ச்சித் திட்டத்தின் வெற்றி, அப்பகுதிகளிலுள்ள மக்களின் ஊக்கம், உற்சாகம், ஒத்துழைப்பு முதலானவைகளைப் பொறுத்தே யிருக்கும். ஒரு சில பகுதிகளில் நடக்கும் வேலைகள், மற்ற பகுதிகளில் நடக்கும் வேலைகளுக்கு எடுத்துக்காட்டாகவும், வழி காட்டியாகவும் இருக்கும். இதுவரையில் பாரதம் முழுவதிலும் சுமார் 1500 தேர்ந்தெடுக்கப்பட்ட பகுதிகளில் கிராம முழு வளர்ச்சித் திட்டம் செயல்பட்டு வருகிறது. அவை பல இடங்களிலும் சிதறி இருந்து வருகிறது. ஆகவே அங்குள்ள மக்களின் ஒத்துழைப்பு அந்த அளவுக்கு இருக்கிறதென்பதை அறிந்து கொள்வதும் கடினமாகவே யிருக்கிறது. இனி தேர்ந்தெடுக்கப்படும் இடங்களிலாவது அவ்வாறின்றி, மக்கள் ஒத்துழைப்புத் தேவையான அளவு இருக்கும் பகுதிகளையே தேர்ந்தெடுப்பது மிகவும் அவசியமாகும்.

## முழுவளர்ச்சித் திட்டப் பகுதிகளைத் தேர்ந்தெடுத்தலும் அதன் வழிமுறைகளும்

பல ஆண்டுகளாக நம் நாட்டின் பல பாகங்களிலும் பல்வேறு ஸ்தாபனங்களின் மூலம் நடைபெறும் ஆக்க வேலைகளின் பயனாக, மக்களிடையே கிராம நல் வாழ்விற்காகவும், சமூக பொருளாதார வாழ்விற்காகவும் திட்டம் தீட்ட வேண்டிய வகையில் எழுச்சியும் பொறுப்புணர்ச்சியும் உண்டாகி யிருப்பது கண் கூடு. இதுகாறும் சர்வோதயசங்கங்கள், பூதான, கிராமதான இயக்கத்தைச்சேர்ந்தஊழியர்கள் சமுதாய நலத்திட்ட இலாக்காவின் வேலைத் திட்டங்கள், கூட்டுறவு இயக்கங்கள் போன்றவைகளினால், கிராம மக்களிடையே கிராமப்பணி புரியும் ஆற்றல் கொண்ட தலைமை, பலரும் பாராட்டும் வகையில் ஏற்பட்டுள்ளது. முழு வளர்ச்சித் திட்டப்பகுதிகளைத்தேர்ந்தெடுக்க இதுகாறும் ஆங்காங்கே நடைபெற்ற வேலைகளை மதிப்பீடு செய்வது மிகவும் அவசியமாகும். நாடு முழுவதிலும் நன்கு திறம்பட செயல்படும் சமுதாய அபிவிருத்தி வட்டாரங்களிலேயே வட்டார அளவில் கிராம முழு வளர்ச்சித் திட்டவேலைகள் துவக்கப்பட வேண்டும் என்பதே கமிஷனின் கருத்தாகும்.

ஆகவே கிராம எகாயி அல்லது கிராம முழுவளர்ச்சித் திட்டவேலைகளுக்குத் தேர்ந்தெடுக்கத்தக்க அடிப்படைத் தேவைகள் பின் வருமாறு:-

1) கிராம மக்களில் பெரும்பாலோர், கிராம மக்கள் அனைவருக்கும் அவர்களுக்கு வேண்டிய வாழ்க்கையின் அடிப்படைத் தேவைகளை அளிக்க ஒப்புக்கொண்டு, அதைஅவர்களுடைய கூட்டுப் பொறுப்புணர்ச்சி என அறிந்து, அதற்கேற்ப ஒரு சங்கற்பத்தை—(உறுதி மொழியை) எடுத்துக்கொள்ள வேண்டும்.

2) அது போலவே, எகாயி பகுதியிலுள்ள பெரும்பான்மையான மக்கள் அங்குவாழும் அனைவருக்கும் சமூகநீதி ஏற்படவேண்டிய வகையில் முயற்சி எடுத்துக்கொள்வர். இதற்கு முதற்படியாக, எகாயி பகுதிகளில் வாழும் ஏழை மக்கள் வயிறார உண்பதற்

கும், மனமார உடுப்பதற்கும் போதிய அளவு வாழ்க்கைத்தரம் உயருமளவுக்கு வேலை வாய்ப்பு அளிக்க கிராம மக்களே சிந்தித்துச் செயல்பட்டுத் திட்டங்களை வகுப்பார்கள். பஞ்சாயத்து யூனியன்கள் இத்தகைய குறைந்த அளவு நிபந்தனைகளை ஒப்புக்கொண்டே ஏகாயி வேலைத் திட்டத்தை ஏற்று நடத்த முன்வரும் ஸ்தாபனங்களின் கோரிக்கையைச் சிபாரிசு செய்யும்.

ஏகாயி பகுதிகள் தேர்ந்தெடுக்கத் தேவையான சூழ்நிலையும், யோக்கியதாம்சங்களும் பின் வருமாறு:-

1) சேவா கூட்டுறவு சங்கம்:- தொழிலாளர்கள், உற்பத்தியாளர்கள், பல் நோக்கு கூட்டுறவுச் சங்கங்கள், கூட்டுப் பண்ணைகள் போன்ற கூட்டுறவு இயக்கத்தின் அபிவிருத்தி வேலைகள் நன்கு நடைபெறுதல்.

2) சமுதாய நலத்திட்ட வேலைகள் நல்ல முறையில் செயல்படும் வட்டாரங்கள்.

3) காந்தி நினைவு நிதி, கஸ்தூரிபா தேசீய நினைவுநிதி சர்வோதய மண்டல்கள், சமூக நல போர்டுகள், பாரத்சேவா சமாஜம் போன்ற ஸ்தாபனங்கள் அல்லது கதர் அபிவிருத்தியில்ஈடுபட்டுள்ள ஸ்தாபனங்கள் நன்கு செயல்படும் இடங்கள்.

4) அகில இந்திய கதர் கிராமக் கைத்தொழில் கமிஷன் மூலம் நடைபெறும் தீவிர அபிவிருத்தி வேலை கேந்திரங்கள், கிராமதான பிரதேசங்கள், மற்றும் கதர்—அம்பர்—கிராமக் கைத்தொழில்கள் முதலானவைகள் சிறந்த வகையில் நடைபெறும் இடங்கள்.

5) நல்ல முறையில் திறம்பட நடைபெறும் கிராமப் பஞ்சாயத்துக்களும், பஞ்சாயத்து யூனியன்கள் போன்றவைகள்.

மேலே குறிப்பிட்ட பொதுவான நிபந்தனைகள் தவிர, கீழே குறிப்பிடப்பட்டிருக்கும், பிரத்யேக அம்சங்களும் இருக்கின்றனவா என்பதையும் பரிசீலித்துப்பார்க்க வேண்டும்.

1) வேலை வாய்ப்பு அளிக்க வேண்டிய தேவைகள்.

2) கிராமங்களில் விளையும் மூலப்பொருள்களை படிப்படியாக அதிக அளவு உபயோகித்து கிராமங்களிலேயே சுயதேவைப் பூர்த்தி செய்யும் வகையில் கிராமத்தில் உற்சாகத்தையும், ஊக்கத்தையும் ஏற்படுத்தத்தக்க சாதகமான சூழ்நிலை.

3) கிராமங்களிலுள்ள வசதிகளைக்கொண்டு கிராமமக்களுக்கு அவசியமான கல்வி, சமூக, கலாச்சார அபிவிருத்தி வேலைகள் மேற்கொள்ளத்தக்க ஆர்வத்தை, மக்கள் மனத்திலே உண்டாக்கத்தக்க சாத்தியக் கூறுகள்.

4) ஏகாயி பகுதிகளிலோ அதைச் சுற்றிலுமுள்ள கிராமங்களிலோ கிராமக் கைத்தொழில்களை மேற்கொள்ளத் தேவையான மூலப்பொருட்கள் கிடைப்பது.

5) பல்வேறு தொழில்களை நடத்த பயிற்சி பெற்ற அல்லது பயிற்சியடையத் தயாராகவுள்ள ஊழியர்கள் கிடைக்கப் பெறுவது.

இவைகளேயன்றி ஐக்கிய அமெரிக்காவின் P. L. 480 திட்டத்தின் கீழ் கூட்டுறவு முன்னோடித் திட்டங்கள் மூலம் அபிவிருத்தி வேலைகள் நிறைவேற்றப்பட்டு வரும் இடங்களும், முழு வளர்ச்சித்திட்ட வேலைகளுக்குத் தேர்ந்தெடுக்கப்படப் பொருத்தமானவைகளே யாகும்.

எப்படியும் முழுவளர்ச்சித்திட்ட வேலைகளுக்குத் தேர்ந்தெடுக்கப் பட மேலே குறிப்பிட்டுள்ள மிகக் குறைந்த நிபந்தனைகள் பூர்த்தி செய்யப்படவேண்டும்.

a) அதிக வேலை வாய்ப்பு அளிக்க வேண்டிய அவசியம் மிக மிகத் தேவையாக இருந்துவரும் நிலைமை.

b) முழுவளர்ச்சித்திட்ட வேலை களை மேற்கொள்ளவும் திட்ட மிட்டுச் செயல்படுத்தவும் இருக்க வேண்டிய தலைமை.

c) தேர்ந்தெடுக்கப்படும் பகுதி களில் உற்பத்தியாகும் கதர் 25 சதவிகிதமாவது எகாயி பகுதிகளி லேயே உபயோகிக்கப்படத் தக்க அளவு மக்களிடையே தேவை யான மனப்பான்மையோ, அல் லது எகாயி பகுதிகளில் வாழும் மக்கள் நபர் 1க்கு சராசரி குறைந் தது 1 கஜமாவது கதர் அணிவது என்பது எகாயி பகுதிகளில் உற் பத்தியாகும் கிராமக் கைத்தொ ழில் பொருட்களில் 25 சத விகி தமோ அல்லது அங்குள்ள மக் களுக்குத் தேவையான பொருட் களில் 50 சத விகிதமாவது கிரா மக் கைத்தொழில் மூலம் பூர்த்தி செய்வதோ, இரண்டில் ஒன்று.

d) கூட்டுறவு சங்கங்கள் போன்ற ஸ்தாபனங்களை ஏற்று நடத்த கிராமங்களில் தகுந்த ஊழியர்கள் கிடைக்கப் பெறுவது.

மேற்சொன்ன நிபந்தனைகள், பூதான, கிராமதான இடங்களி லும், ஆதி வாசிகள் வாழும் பிர தேசங்களிலும் அனுஷ்டிக்கப்பட மாட்டாது. அவைகளைப் பிரத் யேகமாகக் கவனித்தல் வேண் டும். ஆனாலும் அத்தகைய இடங்களில் இனி நடைபெறும் அபிவிருத்தி வேலைகளும், கிராம முழுவளர்ச்சித்திட்ட அடிப்படை யிலேயே இருக்கவேண்டும். கிராம எகாயி பகுதிகள் தேர்ந் தெடுக்க கோரிக்கைகள் சம்பந் தப்பட்ட பஞ்சாயத்து அல்லது யூனியன் சிபாரிசு கொண்டதாக வும், மாநில கமிட்டி மூலமாக அனுப்பப்பட்டதாகவும் இருக்க வேண்டும்.

மேலும் மற்றொரு முக்கியமான விஷயம், இனி தேர்ந்தெடுக்கப் படும் எகாயி பகுதிகள், வட்டாரத் திற்கு ஒன்று என்று சிதறிக் கிடக்காமல் செவ்வனே திட்ட மிட்டுச் சீரிய முறையில் செயல் பட, முழுவளர்ச்சித்திட்ட வேலை களுக்கு, ஒரு வட்டாரம் முழு வதுமே எடுத்துக்கொள்ளப்பட்டு இரண்டு, மூன்று ஆண்டுகளில் வட்டாரம் முழுவதிலும் பரவும் வகையில், தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். ஏற்கனவே அங்கீ கரிக்கப்பட்டு நல்ல முறையில் வேலை செய்யாத எகாயிகளை மேலும் தொடர்ந்து நீடிக்க விடா மல், ரத்து செய்வதும் மிக அவசி யமாகவும், கிராம சகாயக்குகள் நியமிக்கப்பட்டு ஏதோ ஓரிரு வேலைகள் ஆரம்பிக்கப்பட்ட போதிலும் பரவாயில்லை. அத் தகைய, சரிவர வேலை நடை பெறுத சிதறுண்ட எகாயிகளை நீக்கி விடுவது என்பதே சாலச் சிறந்தது. இதுவே அவசியமும், அவசரமானதும் கூட.



*துன்பம் தருவது கவலை; அதைவிடத் துன்பம் தருவது சந்தேகம்.* — டென்ஹாம்

*உழைப்பால் உடல் தேயும் எனப் பயப்படுபவர்கள் துருப்பிடிப்பதை வரவேற்பவர்கள்.* — கம்பர்லாண்டு.

# கைத்தறி பற்றி நேருவின் நினைவு



எம். பி. நாச்சிமுத்து

**அ**ரசியல் விடுதலையால் மட்டும் நாட்டு மக்களின் நல்வாழ்வு மலர்ந்து விட முடியாது. அது ஒரு முதல் படிதான். பொருளாதாரத் துறையில் நாடு முன்னேறு விட்டால் அரசியல் சுதந்திரத்திற்குப் பொருளே கிடையாது.

இதனை நேருஜி பரிபூரணமாக உணர்ந்திருந்தார். அதனால் தான் இருப்பவன், இல்லாதவன் என்ற பேச்சுக்கே இடமில்லாத நவபாரதத்தை உருவாக்க அல்லும் பகலும் அரும் பாடுபட்டார். பல ஐந்தாண்டுத் திட்டங்கள் போடப்பட்டு அவரது காலத்திலேயே நாட்டின் எதிர்கால பொருளாதார சுபிட்சத்திற்குப் பலமான அஸ்திவாரம் அமைக்கப்பட்டது.

### வாங்கும் சக்தி

ஒரு நாட்டில் பொருளாதார சுபிட்சம் ஏற்பட வேண்டுமானால் அதற்கு முதல் தேவை அந்நாட்டில் பொருள்களின் உற்பத்தி பெருகவேண்டும் அதற்கு நாடு தொழில் மயமாக்கப் பட வேண்டும். உற்பத்தி பெருகுவதினால் மட்டுமே பூரணசுபிட்சம் ஏற்பட்டு விடுமென்று சொல்லிவிட முடியாது. உற்பத்தியாகும் பொருள்களைத் தேவையான அளவு வாங்கி உபயோகிக்க நாட்டு மக்களின் வாங்கும் சக்தியும் அதிகரித்தாக வேண்டும் வாங்கும் சக்தி அதிகரிக்க வேண்டுமானால் நாட்டு மக்களுக்குப் போதுமான வருவாய்க்கு வழி செய்யப்படவேண்டும். தனி ஒரு மனிதன்கூட வேலை இன்றி இல்லை என்ற நிலை எந்த நாட்டில் நிலவுகிறதோ அங்குதான் உற்பத்திப் பெருக்கத்தோடு வாங்கும் சக்தியும் பெருகி உண்மையான பொருளாதார சுபிட்சம் நீடித்து நிலவ முடியும்.

இதிலிருந்து ஒரு நாட்டில் உண்மையான சுபிட்சம் ஏற்படுவதற்கு வேலையில்லாத் திண்டாட்டத்தை அடியோடு ஒழித்துக்கட்ட வேண்டியது எவ்வளவு அவசியம் என்பது சொல்லாமலே விளங்கும்.

சுதந்திரம் பெற்று இத்தனை ஆண்டுகள் ஆகியும்கூட, நாடு வேறு பல துறைகளில் எவ்வளவோ முன்னேறியிருந்தும், வேலையில்லாக் கொடுமையை நாம் அடியோடு ஒழித்துக் கட்டி விட்டோம் என்று கூற முடியாது.

### மக்கள் பெருக்கம்

இந்த நிலையில் மக்கள் பெருக்கத்தின் காரணமாகவும், நாட்டில் வேலையற்றிருப்போரின் எண்ணிக்கை பெருகிக் கொண்டே போகிறது. இதிலிருந்து மேலும் புதிது புதிதாக வேலை வாய்ப்புக்களை உண்டாக்க வேண்டியது எவ்வளவு அவசியமென்பது விளங்கும். வேலை வாய்ப்புக்களைப் பெருக்க [illegible]ரகத் தொழில்கள் மட்டும் பெருகினால் போதாது. குடிசைத் தொழில்களும் பேணிப் பாதுகாக்கப்பட வேண்டும்.

பலகோடி ரூபாய் மூலதனத்தோடு எண்ணற்ற தொழிற்சாலைகளை நாம் அமைத்தாலும் கூட

ஒரு மிகச் சிறிய தொகையினருக்குத்தான் அதனுல் வேலே வாய்ப்பு ஏற்பட முடியும். எனவேதான் வேலேயில்லாத் திண்டாட்டத்தைக் குறைப்பதற்குப் பல லட்சக் கணக்கான மக்களுக்கு வேலே வாய்ப்பளித்துக் கொண்டிருக்கும் பண்டைச் சிறப்பு வாய்ந்த குடிசைத் தொழில்களே நாம்-பேணிக்காக்க வேண்டியது கடமையாகிறது. இதனுல்தான் காந்தியடிகள் கிராமக் குடிசைத் தொழில்களே வளர்ப்பதின் அடிப்படை அவசியத்தை தன்னுடைய பொருளாதாரத் திட்டங்களில் ஆரம்ப முதலே வலியுறுத்தி வந்திருக்கின்ருர்.

## கைத்தறி தொழில்

நாட்டு மக்களில் சுமார் 75 லட்சம் பேர்களுக்கு நேரடியாகவும், அதே தொகையுள்ள மக்களுக்கு மறைமுகமாகவும் கைத்தறி நெசவுத் தொழில் தற்போது வேலே வாய்ப்பு அளித்துக்கொண்டு வருகிறது. வேலேக்கான வாய்ப்புக்கள் பெருகுவதற்கும் நாட்டின் உண்மையான சுபிட்சத்திற்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டு.

இதை நன்ருக உணர்ந்திருந்த ஜவாஹர்லால் நேரு கைத்தறித் துணிகளேப் பற்றிக் குறிப்பிடும் போது "நம்முடைய தேசிய பொருளாதாரத்தில் கைத்தறிகள் எந்த உயர்ந்த ஸ்தானத்தில் இருக்க வேண்டுமோ அந்த ஸ்தானத்தை மறுபடியும் அடைய ஆரம்பித்திருக்கின்றன. சமீபத்தில் நடந்த கண்காட்சிகளில் எல்லாம் கைத்தறித் துணிகளின் எழில் எல்லோரின் கவனத்தையும் பாராட்டுதல்களேயும் பெற்று வருகின்றது. உலகம் மீண்டும் கைத்தறிகளேப் பற்றி அதிக அளவு உணர்ந்து வருகிறது. கைத்தறிகளுக்கு ஒரு நல்ல எதிர்காலம் நிச்சயமாக இருக்கிறது என்று எண்ணுகிறேன். அதனுடைய வளர்ச்சிக்கு எல்லாவிதமான உதவியும் செய்யப்படுமென்றும் நம்புகின்றேன்" என்று கூறியிருக்கின்ருர்.

## மக்கள் ஆதரவு

நேருஜி குறிப்பிட்டிருப்பது போல் கைத்தறித்துணி அதற்குரிய உன்னத ஸ்தானத்தை அடைய வேண்டுமானுல் அரசாங்கத்தின் உதவி மட்டும் இருந்தால் போதாது. பொது மக்களின் ஆதரவும் ஆசியும் அதற்கு வேண்டும். கைத்தறி ஆடைகளே வாங்குவதற்காகத் தரப்படும் ஒவ்வொரு காசும் ஏழை நெசவாளர்களின் வாழ்க்கையை வளப்படுத்த உபயோகப்படுகிறது என்பதைப் பொதுமக்கள் உணர வேண்டும்.

கைத்தறி ஆடைகளே வாங்கி அணிவதால் நெசவாளர்களுக்கு வேலே வாய்ப்பளித்து நாட்டின் வேலேயில்லாத் திண்டாட்டத்தைக் குறைக்க நமது பங்கு பணியையும் செய்கிருேம் என்ற ஆத்ம திருப்தியோடு நீடித்து உழைக்கக் கூடிய, விலே மலிவான எழில் ஆடைகளே வாங்கி அணிகிருேம் என்ற மனத் திருப்தியையும் பொதுமக்கள் பெறமுடியும்.

இந்த சுதந்திரத் திருநாளன்று நேருஜி கனவு கண்ட சுபிட்ச இந்தியாவை உருவாக்கக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கும் ஒவ்வொருவரும் நேருஜி குறிப்பிட்டிருப்பதுபோல், தேசீயப் பொருளாதாரத்தில் கைத்தறி நெசவுத் தொழில் தனக்குரிய உயர்ந்த ஸ்தானத்தை அடைய எல்லாவிதமான உதவிகளேயும் செய்ய முன்வர வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

(நன்றி நவசக்தி)

—o—

# செய்திக் குறிப்புகள்

### நெல்லிக்குப்பம் பஞ்சாயத்து யூனியன்

1964-ம் ஆண்டு ஆகஸ்டுமாதம் 19, 20, ஆகிய இரு தேதிகளிலும் மாளிகைமேடு கிராமத்தில் ஐந்தாண்டுத் திட்டப் பொருள்காட்சியும், கண்காட்சியும் நடத்தப்பட்டன. பொருள்காட்சியை மாளிகைமேடு பஞ்சாயத்து தலைவர் திரு. ராமு ரெட்டியார் தலைமையில் நெல்லிக்குப்பம் பஞ்சாயத்து யூனியன் தலைவர் ஹாஜி அ. அ. அமீது அவர்கள் திறந்து வைத்தார்கள். ஐந்தாண்டு திட்டப் பொருட்காட்சி கண்காட்சி ஆகியவைகளின் முக்கியத்துவமும் மக்களின் கடமையும் பற்றி யூனியன் ஆணையாளர் திரு. பிச்சப்பன் அவர்களும் யூனியன் கல்வி வளர்ச்சி அலுவலர் திரு. கி. து. அப்பர் சுவாமியும் சொற்பொழிவாற்றி மக்களனைவரும் வந்து மேற்படி காட்சிகளைக்கண்டு பயனடையுமாறு வேண்டிக் கொண்டனர்.

### திருச்செங்கோடு பஞ்சாயத்து யூனியன்

திருச்செங்கோடு பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்தில் 18-8-64-ந் தேதி நடைபெற்ற முழுக்கடன் திட்டம் துவக்க விழாவை சேலம் கூட்டுறவு மத்திய பாங்கித்தலைவர் திரு கே.என் சுப்ரமணியகவுண்டர்,எம்.எல்.ஏ. அவர்கள் துவக்கி வைத்தார்கள். திருச்செங்கோடு பஞ்சாயத்து யூனியன் மன்ற அக்ராசனர் திரு க. ராமச்சந்திரன் அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினர். சேலம் கூட்டுறவு துணைப்பதிவாளர் திரு கே. துரைசாமி பிள்ளை அவர்கள் முழுக்கடன் திட்டத்தின் அவசியம்பற்றியும், அதனால் பொதுமக்கள் அடையும் நன்மைகள் பற்றியும் விரிவாக எடுத்துரைத்தார்கள். திரு சு.சண்முகம், பி. ஏ. ஆணையாளர் அவர்கள் மூன்ருவது ஐந்தாண்டுத்திட்டத்தில் கூட்டுறவின் சாதனையையும், நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் கூட்டுறவின் மூலம் செயலாக்கப்படும் இலக்குகளைப் பற்றியும் விரிவாக எடுத்துரைத்து 'முழுக்கடன்திட்டத்தை' செம்மையாக செயல்படுத்துமாறு கூட்டுறவாளர்களைக் கேட்டுக்கொண்டார்.

### வேதாரண்யம் பஞ்சாயத்து யூனியன்

15-8-64-ம் நாள் வேதாரண்யத்தில் சுதந்திர தின விழா சிறப்பான முறையில் கொண்டாடப்பட்டது. முதலில் ''சத்தியாக்கிரக நினைவு மண்டபத்தில்'' விவசாய வளர்ச்சி அலுவலர் திரு த. கன்னையா,பி.எஸ்.ஸி.(உழவியல்) அவர்கள் கொடி யேற்றுவித்தார்கள். பின்பு ஊராட்சி மன்றத்தில் திரு வே. அப்பாக்குட்டி அவர்கள் கொடியேற்றினர்கள். கூட்டு மன்ற ஆணையர் திரு இ. செல்வராஜ் அவர்கள் அனைவரையும் வரவேற்ருர். பெருந்தலைவர் திரு. பெ. வெங்கடாசலத் தேவர், எம். எல். சி. அவர்கள் கொடியேற்று விழா செய்தார்கள். அனை

வருக்கும் இனிப்பு வழங்கப்பட்டது. திரு ஏ. எல். தாயுமான சாமி அவர்கள் இராமகிருஷ்ண புரத்தில் கொடியேற்றினுர்கள்.

இராஜாஜி பூங்காவில் தவப் பெருந்திரு வே. க. சோமசுந்தர பண்டார சந்நதி அவர்கள் கொடியேற்றினுர்கள். சமூக நல ஊழியர் திரு ஆ. ஞானசுந்தரம் நன்றி கூறினுர்.

### வலையபாளையம் பஞ்சாயத்து யூனியன்

22-8-64-ம் தேதி வலையபாளையம் பஞ்சாயத்து யூனியன் ஆரம்பப்பள்ளியில் திரு. S. இராமசாமி கவுண்டர் அவர்கள் தலைமையில் கொடியேற்று வைபவம் நடைபெற்றது. திரு கிருஷ்ணசாமி அவர்கள் தலைமையில் ஆசிரியர்களுக்கு "இலக்கியச்சுவை" என்ற தலைப்பில் பேச்சுப் போட்டி நடைபெற்றது. பின் திரு. குருசாமி கவுண்டர் அவர்கள் தலைமையில் விளையாட்டுவிழா நடைபெற்றது.

விழாவிற்கு திரு C. K. கந்தசாமி முதலியார் அவர்கள் தலைமை தாங்கினுர். திரு. திருநாவுக்கரசு அவர்கள் இறைவணக்கம் பாடினுர். வரவேற்புரை திரு. க. ப. முத்துசாமி தலைமை ஆசிரியர். அனைவரையும் வரவேற்ருர். உயர் திரு. க. கு.கோதண்டராமகவுண்டர் M. L. C. அவர்கள் (அக்கிராசனர் பஞ்சாயத்து யூனியன் அலுவலகம் தூ. நா. பாளையம்) துவக்க உரையை நிகழ்த்தி சொற்பொழிவாற்றினுர்.

உயர்திரு. K. S. முருகைய கவுண்டர் அவர்கள் சிறப்புரை நிகழ்த்தினுர். திரு. N. நடராஜன் B. Com. அவர்கள் ஆணையர், பஞ்சாயத்து யூனியன் அலுவலகம். தூ.நா. பாளையம், "பெற்ருேர் கடமை" யைப்பற்றி உரையாற்றினுர்கள். திரு. K. M. சொக்கலிங்கம் அவர்கள் (தலைவர் பழைய மாணவர் சங்கம், கன்னிப்பட்டி) "மாணவர் கடமை" என்ற பொருள்பற்றிப் பேசினுர். திரு. K. S. மாரப்பன் அவர்கள் ஆசிரியர் உயர்நிலைப்பள்ளி, கன்னிப்பட்டி, 'பள்ளியின் வளர்ச்சி' யைப்பற்றி பேசினுர். உயர்திரு K. S. முருகைய கவுண்டர் அவர்கள் விளையாட்டுகளில் வெற்றி பெற்ற மாணவ, மாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கினுர்.

திரு. K. B. முத்துசாமி, தலைமை ஆசிரியர், அவர்கள் பள்ளியின் ஆண்டறிக்கை வாசிக்க உதவி ஆசிரியர் திரு. A. குப்புசாமி அவர்கள் நன்றி கூறினுர்.

### தூக்கநாயக்கன் பாளையம் பஞ்சாயத்து யூனியன்

தூக்கநாயக்கன் பாளையம் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த காசிபாளையம் கிராமத்தில் கடந்த ஓராண்டு காலமாக நடைபெற்றுவந்த தையல் பயிற்சி நிலையத்தில் பயிற்சி பெற்றவர்களுக்குப் பஞ்சாயத்து யூனியன் உப-தலைவர் உயர்திரு க. கு. கோதண்டராம கவுண்டர் எம். எல். ஸி., அவர்களால் நற்சான்றிதழ் வழங்கப்பட்டது. பஞ்சாயத்து யூனியன் ஆணையர் திரு என். நடராஜன், பி. காம்., அவர்கள் பயிற்சியாளர்கள் பயிற்சிக்குப் பின் எப்படி தங்களுடைய வருமானத்தை அதிகரித்துக்கொள்ள முடியும் என்பதைப் பற்றியும் பயிற்சியின் நன்மைகளைப்பற்றியும் எடுத்துக் கூறியபின், கிராம சேவக் திரு மாணிக்கம் நன்றி கூறினுர்.

### பஞ்சாயத்து யூனியன்— தூக்கநாயக்கன் பாளையம்

15-வது சுதந்திர தின விழா, தூக்கநாயக்கன் பாளையம், பஞ்

சாயத்து யூனியன் அலுவலகத்தில், எளிய முறையில் கொண்டாடப்பட்டது. பஞ்சாயத்து யூனியன் ஆணையர் திரு. என். நடராஜன், பி. காம்., அவர்கள் தேசீயக் கொடியை ஏற்றி வைத்தார்கள். முன்னுள் ஆணையர் திரு பி. நல்லுசாமி அவர்கள் தலைமை தாங்கினார்கள்.

### மொடக்குறிச்சி பஞ்சாயத்து யூனியன்

ப. யூ. கூட்டம் உப-தலைவர் ஸ்ரீ கே. நைனுமலைக் கவுண்டர் தலைமையில் நடந்த போது மொடக்குறிச்சி பஞ்சாயத்தை இரண்டாகப் பிரிக்கும் யோசனை அங்கீகரிக்கப்பட்டது. சிவகிரிரெவினியூ பிர்க்காவில், உள்ளபஞ்சாயத்துக்களுக்கு தனி யூனியன் அமைக்க வேண்டும் என்று கோரும் ஸ்ரீ கே. ஆர். நல்லசிவம், எம்.எல்.ஏ யின் கோரிக்கை விவாதத்திற்குப் பின் ஒத்திவைக்கப்பட்டது.

ஆவல் பூந்துறையில் 30 ஆயிரம் செலவில் உயர்நிலைப்பள்ளிக் கட்டிடம் கட்ட ப. யூ. அனுமதி வழங்கியது. பாதி ப. யூனியன் மான்யத்துடன் பொது மக்கள் நன்கொடையின் பேரில் இக்கட்டிடம் கட்ட உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. உஞ்சபாளையத்தில் 10 ஆயிரம் செலவில் ஆரம்ப பாடசாலைக் கட்டிடம் கட்டுவதற்கும் கவுன்ஸில் அனுமதி வழங்கியது.

### அகதீஸ்வரம் பஞ்சாயத்து யூனியன்

அகதீஸ்வரம் ப. யூ. கூட்டம் ஸ்ரீ. ஆர். எஸ். ராமசாமி அவர்கள் தலைமையில் நடைபெற்றது. யூனியன் தலைவர் ஸ்ரீ ஞான சிகாமணியும் கூட்டத்தில் கலந்து கொண்டு ஆலோசனைகள் கூறினார்.

பாடசாலை நோட்டுப் புத்தகங்களின் அட்டைகளில் கவர்ச்சிப் படங்கள் போட்டிருப்பதால், மாணவர்களிடையே ஒழுக்கக் கேடும் குணவேறுபாடும்ஏற்பட்டு விடுமாதலால் அவற்றை அனுமதிக்கக் கூடாதென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளப்பட்டது.

### காவேரிப்பாக்கம் பஞ்சாயத்து யூனியன்

காவேரிப்பாக்கம் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்தசேரி கிராமத்தில் பஞ்சாயத்து அலுவலகக் கட்டிடத்தை யூனியன் தலைவர் ஸ்ரீ. கே. முனுச்சாமி முதலியார் அவர்களுடைய தலைமையில் ஆணையாளர் திரு. ஜெகதீஸ்வரன் அவர்களால் திறந்து வைக்கப் பெற்றது.

### ஆத்தூர் பஞ்சாயத்து யூனியன்

ஆகஸ்டு 12 தேதி ஆத்தூர் சேலம் பஞ்சாயத்து யூனியனில் முழுக்கடன் திட்ட விழாவை இன்று சேலம் ரெவினியூ டிவிஷனல்அதிகாரி ஸ்ரீ ஆர் பத்மனுபன் அவர்கள் துவக்கி வைத்தார் திரு. ஏ. துரைச்சாமி எம். எல். ஏ. அவர்கள் திரு. எம். ஆறுமுகம் ப. யூ. தலைவர் வரவேற்புரை வழங்கினார்.

மானேஜர் ஸ்ரீ. எம். ஜி. கிருஷ்ணன் தலைவர்களுக்கு மாலை சூட்டினார்.

டிப்டி ரிஜிஸ்திரார், ஸ்ரீ புஷ்பராஜ், எஸ். அங்கமுத்து நாயக்கர் எம். எல். ஏ., திரு. சாம்பசிவ ரெட்டியார் எம். எல். ஸி., கூட்டுறவு பண்டகசாலைத் தலைவர் திரு. எம். சீனுவாச ரெட்டியார், ஆத்தூர் தாலூகா பஞ்சாயத்து யூனியன் பண்டகசாலைக் கூட்டுறவு சங்கத் தலைவர், திரு, வெங்கிடாசலம் செட்டியார், கூட்டுறவு யூனியன் செயலாளர் சீனிவாச

ரெட்டியார், ஆகியோர் பேசினர். ஆணையாளர் ஸ்ரீ. பி. எ. சுவாமி நாதன் நன்றி கூறினர்.

### மந்திரி மன்ருடியார் பெரும்பாலம் அணைக்கு அடிக்கல் நாட்டினர்

ஈரோடு பஞ்சாயத்து யூனியனை சேர்ந்த சுமார் 2545 ஏக்கருக்கு பாசன வசதி தரக்கூடிய பெரும் பாலம் அணைக்கு உணவு மந்திரி, ஸ்ரீ என். எஸ். எஸ். மன்ருடியார் அவர்கள் இன்று அஸ்திவாரக்கல் நாட்டினர் இந்த விழாவிற்கு விவ சாய மந்திரி, ஸ்ரீ. பி. கக்கன் தலைமை வகித்தார். மராமத்து மந்திரி, ஸ்ரீ. வி. ராமய்யா தேசீ யக்கொடி ஏற்றுவித்தார்.

### திருச்செங்கோடு பஞ்சாயத்து யூனியன்

திருச்செங்கோடு பஞ்சாயத்து யூனியன் எல்லைக்குட்பட்ட மொளசி பஞ்சாயத்தில் 23-7-64 முதல் 25-7-64 முடிய கிராமத் தொண்டர்படை பயிற்சி முகாம் நடைபெற்றது. 25-7-64-ந் தேதி யன்று நடைபெற்ற பயிற்சி முகா மில் கலந்துகொண்ட 40 தொண் டர்கள் கிராமத்திலுள்ள முக்கிய தெருக்களையும் சுத்தம் செய்தார் கள். கிராம வாசிகள் இந்த தொண்டை மிகவும் பாராட்டினார் கள்.

### சர்வோதயப் பாத்திரங்கள் வழங்கும் விழா.

நண்பகல் உணவுத் திட்டத் திற்குப் பொது மக்களின் உத வியை, பிடி அரிசி சர்வோதய பாத் திரங்கள் வழங்கி அரிசியாகப் பெறுவதற்காக சர்வோதயப் பாத் திரங்கள் வழங்கும் விழா, கண்ட மங்கலம் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த சிறுவந்தாடு கிராமத்தில் தென்னாற்காடு மாவட்ட ஆட்சித் தலைவர் திரு எல். பி. அன்புரோஸ், ஐ. ஏ. எல். அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திருமதி பத்மினி அம்புரோஸ் அவர்கள் 101 பிடி அரிசிப் பாத்திரங்களை சிறுவந் தாடு–மோட்சகுளம் மாதர் சங்க அங்கத்தினர்களுக்கும் மற்றும் குடும்பத் தலைவியருக்கும் வழங்கி னர். சிறுவந்தாடு பஞ்சாயத்து தலைவர் திரு வைத்திலிங்கா ரெட்டியார் அனைவரையும் வர வேற்றார். திரு எல். எல். கிருஷ்ண மூர்த்தி, எம். ஏ அவர்கள் நன்றி கூறினர். கண்டமங்கலம் யூனி யன் தலைவர் திரு கே. எம். ரங்க நாதன் கலக்டரின் தனி உதவி யாளர் திரு ராஜகோபாலன், திருக்கோவலூர் கோட்டாட்சித் தலைவர் திரு ஜே. ஆர் ராமநா தன், விழுப்புரம் மாவட்ட விவ சாய அதிகாரி திரு சுப்ரமணியம், மாவட்ட மாதர் நல அதிகாரி திரு மதி லக்ஷ்மிநாராயணன் ஆகி யோர் விழாவில் கலந்து கொண் டனர். சிறுவந்தாடு பஞ்சாயத்து தலைவரும் மோட்சகுளம் பஞ்சா யத்து தலைவர் திரு பராம ரெட்டி யாரும் வந்திருந்த அனைவருக்கும் தேநீர் விருந்தளித்து உபசரித் தனர்.

### திருவையாறு வட்டாரத்தில் தேசீய பெரியம்மை ஒழிப்புத் திட்டம்.

திருவையாறு பஞ்சாயத்து யூனியனில் இன்று தேசீய பெரி யம்மை ஒழிப்பு திட்டம் ஆரம் பித்து வைக்கப்பட்டது. திட்டத் தின் துவக்கவிழா பெரமூர் பஞ் சாயத்தில் நடைபெற்றது. பெர மூர் பஞ்சாயத்துத்தலைவர் விழாத் துவக்கத்தில் அனைவரையும் வர வேற்றுப் பேசியபின் பஞ்சாயத்து விஸ்தரிப்பு அதிகாரி அம்மை ஒழிப்பின் அவசியம் பற்றிக் குறிப் பிட்டார். பின்பு திருவையாறு பஞ்சாயத்து யூனியன் கமிஷனர் திட்டத்தைத் துவக்கிவைத்தார்.

**காருகுடியில் நெல் விளைச்சல் போட்டி.**

பிப்ரவரி மீ 2,3 தேதிகளில் திருவையாறு தீவிர சாகுபடி திட்டத்தைச் சேர்ந்த காருகுடி திரு சேஷாத்ரி அய்யரின் மாவட்ட நெல் விளைச்சல் போட்டி அறுவடை நடைபெற்றது. தஞ்சாவூர் மாவட்ட விவசாய அதிகாரி, தஞ்சை கோட்டாட்சியர் ராயம் பேட்டை திரு வரதராஜன், தஞ்சாவூர் திரு பரிசுத்தநாடார் ஆகியோர் நீதிபதிகளாக யிருந்து அறுவடை வேலைகளைப் பார்வையிட்டு மகசூல் கணக்கெடுத்தனர். 50 செண்டுநிலம் அறுவடை செய்யப்பட்டு எடைபோடப்பட்டதில் ஏக்கருக்கு 6000பவுண்ட் விளைச்சல் ஆகியுள்ளது. இந்த வட்டாரத்தில் மாவட்ட விளைச்சல் போட்டியில் கலந்துகொண்ட திரு சேஷாத்ரி அய்யரின் மகசூல், சென்னை மாநில விளைச்சல் போட்டியில் கலந்துகொண்ட மற்ற இருவர்களின் மகசூலைவிட அதிகமாக உள்ளதென்பது குறிப்பிடத்தக்கது. முயற்சி திருவினையாக்கும் என்பதற்கு எடுத்துக் காட்டாக நிற்கும். திரு சேஷாத்ரி அய்யரின் சாதனை ஏனைய விவசாயிகளுக்கு ஓர் சவாலாக அமைந்துள்ளது.

**திருவையாறு வட்டாரத்தில் எலி ஒழிப்பு இயக்கம்.**

தஞ்சாவூர் மாவட்ட ஆட்சித் தலைவரின் உத்திரவுப்படி திருவையாறு வட்டாரமெங்கணும் அறுவடைமுடிந்த தருவாயில் எலி ஒழிப்பு தீவிர இயக்கம் மேற்கொள்ளப்பட்டு நடைபெற்று வருகிறது. 3-3-64 தேதியன்று பெருமூர், திருவாலம் பொழில், ஆகிய கிராமங்களில் நடைபெற்ற எலி ஒழிப்பு இயக்கவிழாவில் தஞ்சை கோட்ட ஆட்சித்தலைவர் திரு திருமலையப்பன், பி. ஏ. பி. எல். அவர்களும். தஞ்சை மாவட்ட விவசாய அதிகாரி திரு ஷண்முக நாயினுர் அவர்களும் கலந்து கொண்டனர். கிராமப்பஞ்சாயத்தும், பொது மக்களும், கிராமத் தொண்டர் படையினருமாகச் சேர்ந்து அன்றையதினம் மட்டும் 1500 எலிகளுக்கும் மேல் வேட்டையாடினுர்கள். மாலையில் நடைபெற்ற விழாவுக்கு தலைமை வகித்த தஞ்சைகோட்ட ஆட்சியரும், மாவட்டவிவசாய அதிகாரியும், எலிஒழிப்பின் அவசியம் குறித்து மக்களுக்கு எடுத்துரைத்தார்கள். திருவையாறு வட்டார வளர்ச்சி ஊழியர்களும் யூனியன் தலைவரும் விழாவில் பங்கு கொண்டனர்.

திருவையாறு தொழில் பயிற்சி நிலையத்தைச் சேர்ந்த பெண்கள் தீவிர சாகுபடித்திட்டம் பற்றிய கலைநிகழ்ச்சி ஒன்று நடத்தினுர்கள்.

**திருச்செங்கோடு சோப்பு உற்பத்தி நிலைய திறப்பு விழா.**

திரு ஏ. பத்மநாபன் ஐ. ஏ. எஸ் மாவட்ட ஆட்சித்தலைவர் சேலம் திருச்செங்கோட்டை அடுத்துள்ள கொல்லபட்டியில் ஒரு சோப்பு உற்பத்தி நிலையத்தைத் திறந்து வைத்தார். திரு க. இராமச்சந்திரன், அக்ராசனர் பஞ்சாயத்து யூனியன் திருச்செங்கோடு தலைமை தாங்கினுர். திரு பத்மநாபன் ஐ. ஏ. எஸ் உதவி கலெக்டர், சேலம். திரு ஏ. வி. நரசிம்மன் பி. ஏ. கோட்டாட்சித் தலைவர் சங்ககிரி முதலியோர் சிறுதொழில் குடிசைத்தொழில் முதலியவற்றின் முக்கியத்துவத்தைப் பற்றிப் பேசினுர்கள். பலர் மாவட்ட ஆட்சித் தலைவரிடமிருந்து சோப்புபார்களை விலைக்கு வாங்கிக் கொண்டார்கள்.

திரு சண்முகம் பி. ஏ., ஆணையாளர் பஞ்சாயத்து யூனியன்

திருச்செங்கோடு நன்றி கூறினர். தேசீய கீதம் இசைத்து விழா இனிது முடிந்தது.

### திருச்செங்கோடு, பள்ளிக் கட்டிடத் திறப்பு விழா.

திரு ஏ. பத்மநாபன் ஐ. ஏ. எஸ் திருச்செங்கோட்டை அடுத்துள்ள கருமாபுரத்தில் ஓர் ஆரம்பப் பள்ளிக் கட்டிடத்தை திறந்து வைத்தார். அவர் பேசுகையில் குழந்தைகள் எல்லோரையும் குறிப்பாக பெண் குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்ப வேண்டுமென்றும் பஞ்சாயத்தார் எல்லோரும் ஒற்றுமையாக கிராமத்தின் சுபிட்சத்துக்குப் பாடுபடவேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்.

பஞ்சாயத்துத் தலைவர் திரு எஸ் சின்னகவுண்டர் நன்றி கூறினர். தேசிய கீதம் இசைத்து விழா இனிது முடிந்தது.

### பாலவாக்கம் பஞ்சாயத்து யூனியன்

15-8-64ந் தேதி சனிக்கிழமை பஞ்சாயத்து அலுவலகத்தில் திரு S. கோவிந்தசாமி நாயுடு அவர்களால் தேசீயக்கொடி ஏற்றப்பட்டது. பாலவாக்கம் உயர்தர ஆரம்பப்பள்ளியில் திரு. செல்வராயன் அவர்கள் தேசீய கொடிய ஏற்றினர் ஊத்துக்கோட்டை பஞ்சாயத்து யூனியன் பெண்கள் தையல் பயிற்சி நிலையத்தில் திரு. K. சுப்பரமணிய ரெட்டியார் (சேர்மன்) அவர்களால் தேசீயக் கொடி ஏற்றப்பட்டது. பின் ஒரு பொதுக் கூட்டம் திரு. K. பால சுப்பிரமணியரெட்டியார் (தலைவர் பாலவாக்கம் பஞ்சாயத்து) தலைமையில் நடந்தது.

### திருவெண்ணை நல்லூர் பஞ்சாயத்து யூனியன்

திரு வெண்ணைநல்லூர் தென்னார்க்காடு மாவட்டம் பஞ்சாயத்து யூனியன் அலுவலக தணிக்கையை தென்னார்க்காடு மாவட்ட ஆட்சித் தலைவரின் தனி உதவியாளர் திரு. டி. ஆர். ராஜகோபாலன் பி. ஏ., அவர்கள் 7-3-64 லும், 8-3-64ல் கிராமத்தில் நடைபெற்ற அபிவிருத்தி வேலைகளையும் கீழ்க்கண்ட கிராமங்களில் பார்வையிட்டார்கள். 1. காரப்பட்டு, 2. கண்ணாரம்பட்டு, 3. ஆணைவாரி, 4. தி. எடையார், 5. சி. மெய்யூர், மேற்கண்ட கிராமங்களில் நல்ல முறையில் மக்களின் பூரண ஒத்துழைப்புடன் நடந்த பாடசாலைக்கட்டிடம், ஆற்றுத் தரைப்பாலம், மக்கள் மனமகிழ் மன்றம் பஞ்சாயத்து பழத்தோட்டம், நூல் நிலையம், தொண்டர் படையினர் மாதர் சங்கத்தினர்களின் நல்ல வேலைகளைப்பார்வையிட்டு சந்தோஷமடைந்து பாராட்டினர்.

### சுதந்திரதின விழா

அளிந்திக்கோட்டை, K. M. V. உயர் தொடக்கப் பள்ளியில் திரு த. சுப்பிரமணியத்தேவர் அவர்கள் தலைமையில் சுதந்திர தின விழா கொண்டாடப்பட்டது.

தலைவர் தேசியக்கொடி ஏற்றினர். பின் பள்ளிமாணவர்கள் சு. பழனிச்சாமி, நாகரெத்தினம் கோவிந்தசாமி, மு. சண்முகம், ஆசிரியர், V. கணபதி M. S. அம்புரோஸ்சாமி, தலைமையாசிரியர் R. செகநாதன் பள்ளிநிர்வாகி இ. குழந்தைச்சாமி ஆகியோரும் பேசினர். கைத்தொழில் ஆசிரியர் R. காளித்து நன்றி கூறினர்.

—✠—

நூலகங்களிலே வாசகர்கள் படிப்பதற் கான நல்ல நூல்களைத் தர வேண்டியது நூலகத்தாரின் பொறுப்பாகும். நல்ல நூல்களை நூலகரோ நூலகத்தாரோ தேர்ந்தெடுப்பது எப்படி? எல்லா நூல் களையும் படித்துப் பார்த்துத் தேர்ந் தெடுக்க முடியுமா? அதற்குரிய எளிய வழிகள் என்னென்ன? ஒவ்வொரு துறை நூல்களும் எப்படிப்பட்டனவாய் அமைய வேண்டும்? இப்படிப்பட்ட பலபிரச்சினை களைத் தமக்கேயுரிய சிந்தனைத் தெளி வுடன் ஆசிரியர் விரிவாக ஆராய்ந்து விளக்குகின்றார்.

# நூற்கள்

**வே. தில்லைநாயகம்**, எம். ஏ., எம். எல். எஸ்., பி. டி.
(நூலகர், கன்னிமாரா நூலகம், சென்னை.)

*முக்கூட்டணி*

(வாசகர்கள், நூலகர்கள், நூற்கள் என்ற மூன்று அணிகள்—முக்கூட்டணி — கொண்டியங்குவது நூலகப் பணி. சூலை இதழிலே வாசகர்கள் பற்றி—அவர் தம் தரம் பற்றி, நிலை பற்றி, குணம் பற்றி, செயல்பற்றி, உரிமைபற்றி, கடமைபற்றி—விளக்கம் கண்டோம். அடுத்து ஆகஸ்டு இதழிலே அவர்க்குதவும் நூலகர்கள் பற்றி—அவர் தம் தரம் பற்றி, தகுதி பற்றி நிலைபற்றி, நினைப்புப்பற்றி, வளர்ச்சி பற்றி, கடமைபற்றி — விளக்கம் கண்டோம். தொடுத்து நூலகப் பணியின் முதற்பொருளும் கருப்பொருளுமான நூற்கள் பற்றி அறியலாம்.)

*நூற்கள் ஆக்ரமிப்பு*

இன்று நூற்கள் பதினாயிரக்கணக்கில் உலகின் பல்வேறு பகுதிகளிலிருந்து, பல்வேறு மொழிகளில், பல்வேறு துறைகளில் வெளிவந்து கொண்டிருக்கின்றன. அவற்றில் பெரும்பகுதி நூலகங்களுக்குச் செல்கின்றன. எனவே இவைகளைப் பெறுவதும், பெறுவதைப் பயன்படுத்துவதும் பயன்படக் கூடியதைப் பேணுவதும் பெருவேலையாகி வருகிறது. இப்படியே விட்டுக் கொண்டு போனால் உலகை நூற்களே ஆக்ரமித்துக் கொள்ளும் போலும்! அப்படியானால் அதை நிர்வகிப்பது எப்படி?

*நூற்றேர்வு*

"நூற்கள் படிப்பதற்கே" — என்கிறது நூலகப் பஞ்ச சீலத்

தின் முதற்சீலம்!' உலகில் வெளியாவதனைத்தும்—உண்டாவதனைத்தும் - நிரந்தரமா யிருப்பதில்லை; நல்லது—வல்லது — நிலைக்கிறது; —முடியாதது—மாய்கிறது; என்கிறது பரிணாமவாதம்.

எனவே நல்லதை—பயன்படக்கூடியதைத் தேர்ந்தெடுத்தும், வேண்டாததை-பயன்படக்கூடாததைத்—தள்ளிவிட்டும் செயலாற்றுவது நம் கடமையாகும். அதாவது நூற்றேர்வு (Book selection) — கொள்ளவேண்டியதைக் கொண்டு, தள்ளவேண்டியதைத் தள்ளிவிடும் செயல்முறை—வேண்டும்.

அது எப்படி? நூலகப்பணியை ஆராயும்போது நூலகப் பஞ்சசீலத்தை அளவுகோலாகவைத்து ஆராய்ந்தது போல நூற்றேர்வையும் ஆராயலாம். அதன்படி முதற்சீலமான 'நூற்கள் படிப்பதற்கே' என்பதை அடிப்படையாகக் கொண்டு பார்க்கலாம். அது நூல் என்றால் என்ன என்கிறது.

### நூல் என்றால் என்ன?

நூல் ஒருவர் கருத்தை அடுத்தவருக்கு எடுத்துரைக்கும் கருவியாய், ஒரு குறிப்பிட்ட உருவில் அடங்கியதாய், ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு எடுத்துச் செல்ல வசதியதாய் அமைவதாகும்.

அந்நூல் வாழ்வின் அடிப்படையான அன்பு—இன்பம்—பற்றி, பொருள் — வாழ்க்கை—பற்றி, அறம்—ஒழுக்கம்—பற்றி, எழுமதம் தழுவி, ஐயிரு குற்றமகற்றி, அழகு பத்தும் அணைத்து, முப்பத்திரண்டு உத்திகள் கொண்டு விளங்க வேண்டும்.

### மூவுரு

இங்ஙனம் அமைந்த நூல் ஒவ்வொன்றும்—பிற உலகத்துப் பொருட்கள்போலவே-மனிதனைப் போலவே—மூவுரு (Trinity)க் கொண்டது. அவையாவன.

1. பருவுடல் (Gross body=Physique)—காகிதம், அச்சு, கட்டு முதலிய அம்சங்களைக் கொண்டதாகும்.

2. நுண்ணுடல் (Subtle body =Language, Style and Standard) மொழி, நடை, தரம் முதலிய அம்சங்களைக் கொண்டதாகும்.

3. உயிர் (Soul=Thought content or Subject matter)—பொருளடக்கம் கொண்டதாகும்.

### பருவுடல்: கவர்ச்சி.

மேற்சொன்ன மூவுருவையும் தன்னுள் பிணைத்துக்கொண்டிருக்கும் பருவுடல் காண்பவரைக் கவரவேண்டும். காணாது அதைப் பற்றிக் கேட்டவரும் காண ஆசைப்படவேண்டும். அப்போது தான் அது முதல் பார்வையிலேயே வாசகரைக் கவரும்; காதல் கொள்ளச் செய்யும். அது நூலை நேசிக்கத் தூண்டும். அது நூலின் உள்ளடக்கத்தை பொருளடக்கத்தை—க் காணத் தூண்டும்.

### கையாள வசதி

அத் தூண்டுதல் நூலைக் கையாளச் சொல்லும். எனவே அதற்கேற்ப சராசரி மனிதன் ஒவ்வொருவரும் நூலைத் தொட்டு, புரட்டி, பார்த்து, படித்து, எடுத்துச் செல்ல வாய்ப்புள்ளதாக—நூலின் உருவமும், அளவும், எடையும் கையாள வசதியுள்ளதாக (Handling)—இருக்கவேண்டும்.

### உருவம்

நூற்களின் உருவம் (Shape) பலவகைப்பட்டதாகும். நமது பண்டைய நூற்கள் செப்பேடுகளாக, ஓலைச் சுவடிகளாக,

காகிதக் கையெழுத்துப் பிரதிகளாகப் பல உருவில் காட்சியளிக்கின்றன; மேனுடுகளில். பாபிரசுத்தாளில், தோற்தாளில் சுருணை (roll)களாகக் காட்சியளிக்கின்றன. 135 அடி நீளமும் 17அங்குல அகலமுமுள்ள பாபிரசு சுருணை ஒன்று இலண்டன் பொருட்காட்சி யகத்திலுள்ளது. இவை ஒவ்வொன்றும் அதன் உருவம் காரணமாக எடுத்துக் கையாளச் சிரமமாயிருக்கிறது. எனவே அந் நிலை மாறவேண்டும்; மாற்றவேண்டும்; மாறிவருகிறது.

எனவே ஒவ்வொரு நூலும் நீளம், அகலம் பருமன் என்ற மூவளவுரு (Cuboid) கொண்டதாக இருக்கவேண்டும்.

## அளவு

நூல் மூவளவுருவோடிருந்தால் மட்டும் போதாது. நூலின் அளவு (Size)ம் பொருத்தமானதாயிருக்க வேண்டும். இன்று தீப்பெட்டிஅளவில் திருக்குறள் வெளியீடுகளைக் காண்கிறோம். அது போலவே பைபிள், குரான் போன்ற பிற நூற்கள் சிற்றளவில்—உள்ளங்கையினுள் வைத்துக்கொள்ளும் வகையில், சட்டைப் பையில் வைத்துக்கொள்ளும் முறையில்—வெளிவருகின்றன. இவையெல்லாம் ஏதோ அழகுக்காக, விந்தைப் பொருளாக வைத்துக் கொள்ளலாமே தவிர அவற்றை நிரந்தரமான பயன்படு நூற்களாகக்கொள்ளமுடியாது; நிச்சயமாக நூலகங்களில் பயன்படுத்தமுடியாது.

இதைப்போலவே வேறு சில நூற்கள் பெரிய அளவில்—இரண்டு, மூன்றடி உயரமும், இரண்டடி அகலமும், ஓரடிப் பருமனுங் கொண்ட நூற்ககளாக—காணக்கிடைக்கின்றன. இவைகளும் எளிதாகப் பயன்படுத்த முடியாதவைகளே யாகும்.

எனவே பொதுவாக நூற்கள் 15 முதல் 25 சென்டிமீட்டருக்குள்ளான நீளமும், நீளத்தில் 70% இருக்கும் அகலமும் கொண்டிருக்கவேண்டும். அதைப் போலவே பருமனும் அளவானதாக இருக்கவேண்டும். சரியாகச் சொன்னால் உயரம், அகலம், பருமன் ஆகிய மூன்றும் முறையே 15: 10: 2 என்ற விகிதத்திலிருக்கவேண்டும்.

## எடை

உருவமும், அளவும் மட்டும் சரியாயிருந்தால் மட்டும் போதாது. நூல் ஒவ்வொன்றும், வாசகர் ஒவ்வொருவரும்—சிறுவரும், முதியோரும், நலிந்தோரும், பெண்களும்—எளிதாக எடுத்துப் படிக்க வசதியாக அதிகக் கனமில்லாமல்—ஆனால் அதே சமயம் அதிக நொய்தானதாகவுமில்லாமல் — இடைப்பட்ட எடை (Weight) கொண்டதாக — ஒன்றரைக் கிலோகிராம்களுக்கு அதிக மில்லாததாக—இருக்கவேண்டும்.

## உழைப்பு

நூலின் உருவமும், அளவும், எடையும் மொத்தமாய் அமைந்துவிட்டால் போதாது. நூல் ஒவ்வொன்றும் கையாளலைத் தாங்கக்கூடியதாக—நீடித்து உழைக்கக் கூடியதாக (Durability)—இருக்க வேண்டும். அது நூல் அமையும் காகிதத்தையும் கட்டு (Binding) முறையையும் பொருத்ததாகும்.

## காகிதம்

இன்று நூற்கள் பல்வேறு முறைக் காகிதங்களில்—பல்வேறு முறைகளில், பல்வேறு மூலப் பொருள்களைக் கொண்டு தயாரான காகிதங்களில்—அச்சடிக்கப்படுகின்றன. காகிதத்தின் திண்மையும், உழைக்குந்திறனும் காகிதம் செய்யப்படும் மூலப்

பொருள்களின் தன்மையையும், தயாரிக்கும் முறைகளையும் பொறுத்தமைகிறது.

பிரிட்டானியக் கலைக் களஞ்சியம் பயன்படுத்தும் இந்தியக் காகிதம் (India Paper) போன்றவை மென்மையானதாக, பல முள்ளதாக உள்ளன. சில காகிதங்கள் கெட்டியாகவும், பல மற்றதாகவும் உள்ளன. எனவே நூலகத்திற்கு வாங்கப்படும் நூற்கள் கூடியமட்டும் நல்ல காகிதத்தில் அச்சானதாக இருக்க வேண்டும்.

## கட்டு

அந் நூற்களும் வாசகர்கள் கையாளலைத் தாங்கக்கூடியதான 'கட்டு'க் கொண்டதாக இருக்க வேண்டும். இன்று பொதுவாக நூற்கள் காகிதக்கட்டு, துணிக் கட்டு, தோற்கட்டு முதலிய கட்டுகள் பெற்று வெளியாகின்றன. இதில் துணிக்கட்டு நல்லது. அத் துணிக்கட்டும் நூலகக்கட்டு (Library binding) முறையில் அமைந்திருப்பின் நன்றுயிருக்கும். அல்லது நூலகமே திரும்ப வேண்டியபடி நூலகக் கட்டு கட்டிக்கொள்ள வேண்டும்.

## வாசிப்புக் கேற்பு

இங்ஙனம் நல்ல காகிதத்தில் நன்றாய்க் கட்டிக் கொடுத்து விட்டால் மட்டும் போதாது. நூலில் அமைந்துள்ள அச்சமைப்பு நூல் வாசிப்புக் கேற்பு (Readability)டையதாக இருக்க வேண்டும்.

அச்சுக் கலையில் நீண்ட நாள் அனுபவமிருப்பதால், மேனாட்டு நூற்கள் நல்ல அச்சமைப்பில், அழகான முறையில், கண்ணை உறுத்தாமல் வெளிவருகின்றன.

அச்சுக்கலை என்னவோ இந்தியாவில்—அதுவும் தமிழகத்தில் 1679ஆண்டிலே செயற்படத் தொடங்கியிருப்பினும் இன்னும் போதுமான முன்னேற்றமில்லை. சொல்லப்போனால் இன்னுங்கூட சித்திர அரிச்சுவடி சிறுவர் சித்திர அகராதி (பம்பாய், பெர்ல் பப்ளிகேஷஸ் நூற்கள்) போன்ற சிறுவர் நூற்கள் கூட நெதர்லாந்தில் அச்சாகி வந்து கொண்டிருக்கின்றன. இந்த நிலைமை மாற வேண்டும்; மாற்றப்படவேண்டும்.

## அச்சமைப்பு

ஒரு நூலினை சிறப்பாகவெடுத்துக் காட்டுவது அச்சமைப்புதான். எனவே அதிலே அதிகக் கவனம் செலுத்தவேண்டும் நாம். பொதுவாக 14 முதல் 25 சென்டிமீட்டருக்குள்ளான நீளங்கொண்ட நூற்கள் 12 புள்ளி அச்சு (12 point type) அமைப்பில் இருக்கவேண்டும். இது காகிதம், அச்சு முதலியவைகளின் காரணமாகச் செலவை அதிகமாக்குமாயின் 10 புள்ளி அச்சு பயன்படுத்தலாம். ஆனால் குழந்தைகளுக்கான நூற்களும், முதியோர் கல்வி நூற்களும் பெரிய அளவு எழுத்துகளால் தான் அச்சடிக்கப் படவேண்டும். அப்படி அமைப்பதுடன் வரிகளுக்கிடையே நல்ல இடைவெளி கொண்டிருக்கவும் வேண்டும்.

அப்படி அமையும் வரிகளின் நீளமும் அளவோடிருக்க வேண்டும். சரியாகச் சொன்னால் 12புள்ளி அச்சின் வரி நீளம் 4 அங்குலங்களுக்கு மேலிருக்கக் கூடாது. 12 புள்ளி அச்சின் வரி நீளம் 3 அங்குலங்களுக்கு மேற்படாமலும் 6 புள்ளி அச்சின் வரி 2 அங்குலங்களுக்கு மேற்படாமலும் இருக்கவேண்டும்.

## நூலோரம்

அடுத்து ஒவ்வொரு நூலும் நல்ல நூலோரம் (Margin) கொண்டிருக்க வேண்டும். அப்

போதுதான் நூல் பார்க்க எடுப்பாயிருக்கும். மேலும் நூற்கள் திரும்புகட்டுக்குப் போய் வரும் போது எழுத்துக்கள் வெட்டுப் படாமல் இருக்க உதவியாயிருக்கும்.

இதனைக் கருத்தில் கொண்டு தயாரான பண்டைய நூற்கள் நூலோரத்தில் அலங்கார வேலை பாடுகள் கொண்டு கண்ணையும் கருத்தையும் கவர்ந்து நிற்பதை இன்றும் காணமுடிகிறது.

**ஓவியம்**

அடுத்து நூல் ஒவ்வொன்றும் நல்ல ஓவியங்கள் (Illustrations) கொண்டிருக்கவேண்டும். இன்றைய எழுத்தே ஓவியத்திலிருந்து பிறந்தது தான். எனவே அந்தப் பழையவுணர்வு நமக்கு இன்னுமிருக்கிறது. அதனால் ஓவியங் கொண்ட நூற்கள் தான் கண்ணைக் கவர்கின்றன; கருத்தை ஈர்க்கின்றன. சிறப்பாக குழந்தைகள் இதில் அதிகம் கவனம் செலுத்துவதைக் காணலாம்.

எனவே ஓவியங்களும் நல்ல ஓவியங்களாக—வண்ண ஓவியங்களாக—கருத்தை விளக்கும் ஓவியங்களாக — அமைய வேண்டும்.

**நுண்ணுடல்**

இப்படியாகக் கவர்ச்சி, கையாளும் வசதி, உருவம், அளவு, எடை, உழைப்பு, காகிதம், கட்டு, வாசிப்புக்கேற்பு, அச்சமைப்பு, நூலோரம், ஓவியம் கொண்ட பருவுடல் நூற்கள் ஏராளமாய் காணக் கிடைக்கின்றன.

நூலகத்திற்கு வாங்கப்படும் நூற்கள் இவைகளை மட்டும் கொண்டிருந்தால் மட்டும் போதாது. அதன் நுண்ணுடலும் நன்றுக்கக் கவனிக்கப்படவேண்டும். அதாவது நூற்களின் மொழி, நடை, தரம் முதலியவைகளும் கவனிக்கப்பட வேண்டும்.

**மொழி**

மொழி வளர்ந்து வரும் ஒரு சாதனம். ஒரு மனிதன் தன் கருத்தை அடுத்தவருக்கு எடுத்துரைக்க உதவும் ஒரு கருவி. அக் கருவி தன் செயலைச் சரிவரச் செய்ய நூலை ஒரு கருவியாகக் கொள்கிறது. எனவே நூலகத்திற்கு வாங்கப்படும் நூற்கள்—இன்றைய மொழியைக் கொண்டதாக, வாசகர்கள் பயன்படுத்தும் மொழியைக் கொண்டதாக அமைய வேண்டும்.

பொதுவாகச் சொன்னால் தமிழ் நாட்டு நூலகங்கள் தமிழ் நூற்கள்—தாய்மொழி நூற்கள் — வாங்கவேண்டும். அடுத்து உலக மொழியான ஆங்கிலத்தில் நூற்கள் வாங்கவேண்டும். அதையடுத்து சென்னை போன்ற நகரங்களில் இந்தி, மலையாளம், தெலுங்கு, கன்னடம், குசராத்தி, மராத்தி, பெங்காலி முதலிய பிற மொழி நூற்களும் வாங்கலாம்.

**நடை**

ஒப்பிய மொழியில் வாங்கிய நூற்களும் நல்ல நடை (Style) யில்—அழகிய நடையில், இனிய நடையில், எளிய நடையில் — இருக்கவேண்டும். அதற்கேற்ப சொற்கள் பொருளுடையதாக, இனிமையானதாக; எளிதானதாக அமைய வேண்டும். அச்சொற்களும் சொற்றொடர்களாக மாறும்போது குறுகியதாக, ஒட்டமுள்ளதாக், தெளிவானதாக அமையவேண்டும். சொற்றொடர்களும் பகுதி பகுதியாகப் பிரித்து அடுக்கிக் காட்டப்பட வேண்டும். அப்போது அந்நடை வாசகர்களைக் கவரும். அந்த ஈர்ப்பு நூற்களின் கருத்தில் சாரும்.

### ஓவியம்

மனிதனுக்குப் பிடித்தமானவை களில் ஓவியமும் ஒன்று. எனவே ஒப்பிய நடையில் வாங்கும் நூற்களும் தேவையான ஓவியங்களை, தேவையான முறையில், தேவையான இடத்தில், தேவையான வண்ணங்களில் கொண்டிருக்க வேண்டும். இதில் எழுத்தாளர், ஓவியர், பதிப்பாளர், நூலகர் முதலிய நால்வரும் கவனம் செலுத்த வேண்டும்.

இதிலும் தரமறிந்து—உபயோகிப்பவரின் தரமறிந்து—ஓவியங்கள் சேர்க்கப்படவேண்டும். குழந்தை நூற்களிலும் முதியோர் கல்வி நூற்களிலும் சொல்லும் கருத்தை விளக்குவதாக ஓவியம் அமைய வேண்டும். அதுவும் தவறின்றி அமையவேண்டும். ஆராய்ச்சி நூற்களி லமையும் ஓவியங்கள் ஆராய்ச்சியாளரின் சிந்தனையை ஊக்குவதாக அமைய வேண்டும்.

### தேசப் படங்கள்

பெரும்பாலும் வரலாறு, பூகோளம், சமூகவியல் முதலிய துறைகளில் வெளியாகும் நூற்களில் தேசப்படங்கள் சிறப்பிடம் பெறுகின்றன. அவை பல்வகைப் பொருளை சில வகைக் கோட்டடையால் விளக்கிக் காட்ட மிகவும் அவசியம். எனவே அவையும் தேவைக் கேற்ப அமைந்திருக்க வேண்டும்.

### சொற்குறிப்பு

ஒரு நூலைத் தொடர்ந்து படித்து முடித்துவிடுவது மட்டும் படித்து விட்டதாகிவிடாது. நூலில் ஒரு குறிப்பைக் கேட்கும் போது அதைச் சட்டெனச் சொல்ல முடிந்தால்தான் படித்ததாகக் கருதமுடியும். இது எல்லாராலும் முடியாது. எல்லாராலும் முடிய வேண்டுமானால் என்ன செய்ய வேண்டும்? ஒவ்வொரு நூலும் சொற்குறிப்பு (Index)க் கொண்டதாக அமையவேண்டும். அதுவும் தொடர்ந்து சொற்குறிப்பு (Relative index)க் கொண்டதாக, தனிக் கருத்தறிவிப்புச் சொற்குறிப்பு (Expressive index)க் கொண்டதாக இருக்கவேண்டும்.

### தரம்

இங்ஙனம் அமையும் நூற்களின் தரம் (Standard) பல திறத்தன. அவைகளில் முதலிடம் பெறுவது கருமூலங் கொண்ட நூற்கள் (Seminal materials). அதனையடுத்து வருபவை ஆராய்ச்சி நூற்கள் (Research materials). தொடுத்து வருபவை விளக்கவுரை நூற்கள் (Expository materials). கடைசியாக வருபவை தொடக்க நிலை நூற்கள் (Elementary materials). இவைகளைத் தவிர இப்போது அறிக்கை நூற்கள் (Reporting materials) காண்கிறோம்.

இத்தகு பலதரத்து நூற்களையும் சரியாகத் தரப்படுத்தவேண்டும். இதற்கு நூலகர் முயல வேண்டும். தேசீயக் கழகங்கள் தங்கள் தங்கள் துறைகளில் தர நிர்ணயம் செய்து காட்டவேண்டும்.

### உயிர்

இதுவரை பருவுடல் பற்றியும், நுண்ணுடல் பற்றியும், கண்டோம். இனி நூலின் உயிர் பற்றிக் காண்போம். ஒவ்வொரு நூலும் ஒரு குறிப்பிட்ட கருத்தை அல்லது கருத்துகளைக் கொண்டு தான் உருவாகியது. அக் கருத்து தான் அந்நூலின் உயிராகும். அக் கருத்தினை மூவகையாகப் பிரிக்கலாம். அவையாவன:

1. தகவல் தருபவை (Informative books)

2. புத்துயிர் அளிப்பவை (Recreative books)

3. உயிர்பு ஊட்டுபவை (Inspirative books)

ஆனால் ஒவ்வொரு நூலும் ஒன்றை மட்டும் கொண்டிருப்பதில்லை. ஏனெனில் ஒன்றுக்கொன்று தொடர்புள்ளவை; இணைபவை; பிணைபவை. சான்ருகச் சொன்னல் திருக்குறள், பைபிள், குரான் போன்ற நூல்கள் மூவகைக் கருத்துகளையும் கொண்டவை. அதனாற்ருன் இம்மூன்றும் காலங்கடந்து, மொழி தாண்டி, இனம் தவிர்த்து, இடம் பெயர்ந்து உலக நூற்களாக நின்றிலங்குகின்றன.

எனவே ஒவ்வொரு நூலையும், ஆய்ந்து பார்த்து, அதில் உயர்ந்து நிற்கும் கருத்தினைக் கொண்டு அதனைத் தரம் பிரிக்கலாம். இது ஒவ்வொன்றும் தனித்தனியாகவும், ஒன்ருேடொன்று இணைந்தும், பிணைந்தும் வாசகர்களுக் குதவும். எனவே அவை ஒவ்வொன்ருய்க் காணலாம்.

### தகவல் நூற்கள்

தகவல் தரும் நூற்கள் தகவல் நூற்கள் என்று பெயர் பெற்றன. அவை ஒவ்வொன்றும் தான் கொண்டிருக்கும் தகவல்களை வேண்டியவருக்கு வேண்டிய போது தருகின்றன. இவைகளை உடனடிக்குறிப்பு நூற்கள் (Ready reference books) என்றும் பொது நூற்கள் என்றும் இருவகையாகப் பிரிக்கலாம்.

### உடனடிக் குறிப்பு நூற்கள்.

கலைக் களஞ்சியங்கள் (Encyclopedias), வழி நூற்கள் (Guide books) புள்ளி விவர நூற்கள் (Statistics), ஆண்டேடுகள் (Year books), வாழ்க்கை நூற்கள் (Biographies), அகராதிகள் (Dictionaries), தேசப்பட நூற்கள் (Atlases), நூற்றொகைகள் (Bibliographies), செய்தித் தொகுதிகள் (Gazeteers), சொல்லடைவுகள் (Concornances) முதலியன உடனடிக் குறிப்பு நூற்களாகும்.

### கலைக் களஞ்சியங்கள்

உலக அறிவனைத்தையும் பிழிந்து தர முயல்கிறது. இதில் வரும் குறிப்புகள் அந்தந்தத் துறையில் வல்லுநர்களைக் கொண்டு தயாரிக்கப்பட்டு ஒரு குறிப்பிட்ட முறையில் கொடுக்கப் பட்டிருக்கின்றன. பிரிட்டானியக் கலைக் களஞ்சியமும், அமெரிக்கக் கலைக் களஞ்சியமும் இதில் சிறப்பானவைகளாம். தமிழில் தமிழ் வளர்ச்சிக் கழகம் வெளியிட்டுள்ள கலைக் களஞ்சியம் முதலிடம் பெறுகிறது. இன்று இந்திய மொழிகளனைத்திலும் கலைக் களஞ்சியங்கள் தயாராகி வெளிவந்து கொண்டிருக்கின்றன.

இவைகளில் எப்போதும் அண்மையில் வெளிவந்ததே தேர்ந்தெடுக்கப்படவேண்டும். ஏற்கனவே நூலகங்களில்பழையபதிப்புகள் இருப்பின் அவைகளை பழஞ் செய்தியறியப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

### புள்ளி விவர நூற்கள்

இன்று எதையும் புள்ளி விவரங்களைக் கொண்டே கணக்கிட முன் வருகிருேம். எனவே புள்ளி விவர நூற்கள் முழு விவரம் தருபவைகளாக, நம்பிக்கையுள்ளவைகளாக, ஆதார பூர்வமானவைகளாக, அதிகார பூர்வமானவைகளாக, அண்மைய நூற்களாக தேர்ந்தெடுக்கப்படவேண்டும். பழைய நூற்களிருப்பின் அவைகளை பழஞ் செய்தியறியப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

### ஆண்டேடுகள்

ஆண்டுதோறும் வெளிவருவன ஆண்டேடுகள் எனப் பெயர் பெற்றன. இவை அண்மையச் செய்திகளை. அதிகார பூர்வமான

செய்திகளாக, ஆதாரமுள்ள செய்திகளாக, உள்ளனவா என்று பார்க்கவேண்டும். அதிலுள்ள செய்திகளின் இடப் பரப்பு, கால வரம்பு முதலியவைகளையும் பார்த்து வாங்கவேண்டும்.

### வாழ்க்கை நூற்கள்

பெரியார்களின் வாழ்க்கை விளக்கம் தருவன வாழ்க்கை நூற்கள் எனப்படும். இது பிற்காலச் சந்ததியாருக்கு ஒரு வழி காட்டியாக, அறிவுரையாக, உற்சாகமும் ஊக்கமும் தருவதாக உதவும். இதில் தன் வாழ்வைப் பற்றியே ஒருவர் எழுதி வெளி வருவது தன் வாழ்க்கை (Auto-biography) நூல் என்றும், ஒருவர் பற்றி மற்றொருவர் எழுதி வருவது வாழ்க்கை நூல் (Biography) என்றும் இருவகைப்படும்.

நூற்கள் தரும்விவரம்கொண்டு, அவை தரும் நூற்றொகை கண்டு, எழுதியவர் தகுதி கொண்டு, எழுதப்படுவர் திறம் கண்டு வாழ்க்கை நூற்கள் அண்மையினதாகத் தேர்ந்தெடுக்கப்படவேண்டும்.

### அகராதிகள்

அகரத்தை ஆதியாகக் கொண்டு அமைத்த சொற்பொருள் தொகுதி அகராதி எனப் பெயர் பெற்றது. இவை மொழி அகராதி, பொருள் அகராதி என இருவகைப்படும்.

ஒரு மொழியின் சொற்களுக்கு, சொற்றொடர்களுக்குப் பொருள், விளக்கம், மேற்கோள் முதலியன தருவன மொழி அகராதியாகும்.

ஒரு குறிப்பிட்ட பொருள்பற்றிய சொற்களுக்குப் பொருள், விளக்கம், மேற்கோள் முதலியன தருவன பொருளகராதிகளாகும்.

இவ்வகராதிகள் ஒரு தொகுதி அல்லது பல தொகுதிகளாக இருக்கும். இவைகளைத் தேறும் போது பதிப்பாசிரியர், பதிப்பகம், தரம் முதலியன கவனித்து அண்மையானதாகப் பார்க்கவேண்டும்.

### தேசப்பட நூற்கள்

நாட்டு நிலையைப் படங்கள் மூலம் விளக்குபவை தேசப்பட நூற்கள். இவை நில அமைப்பைப் பற்றிக் கூறலாம். தட்பவெப்ப நிலையை விளக்கலாம். தாவர வியலைச் சொல்லலாம். கனிவளத்தை இயம்பலாம். தொழிற்றுறை முன்னேற்றங்களைப் பகரலாம். மக்கள் வாழ்க்கையை வர்ணிக்கலாம். அரசியல் நிலைகளை அளவிடலாம்.

இந்நூற்களைத்தேர்ந்தெடுக்கும் போது அவை தரும் இடப்பரப்பு, காலவரம்பு, சொற்குறிப்பு, ஆதாரம், அண்மைய நிலை முதலியன கவனிக்கப்படவேண்டும்.

### நூற்றொகைகள்

பல தலைப்புகளின் விவரங்களை—பல நூற்களின் தலைப்பு, ஆசிரியர் முதலிய விவரங்களை—ஒரு பொருள் பற்றிச் சம்பந்தப்பட்ட பல குறிப்புகளடங்கிய விவரங்களைத் தொகையாகத் தொகுத்து தருவன நூற்றொகைகளாகும்.

இவைகளைத் தேறும் போது அவைகளின் மொழி, இடப்பரப்பு, காலவரம்பு முதலின கவனிக்கப் படவேண்டும்.

### செய்தித் தொகுதிகள்

ஆரம்பத்தில் பூகோளக்குறிப்புகளடங்கியதே செய்தித் தொகுதி (Gazetteers)கள் என்ற பெயரில் வெளிவந்தன. அவை பூகோளக் குறிப்புகளோடு நின்றுவிடாமல், மக்கட்தொகை, அவர் தொழில், கல்வி நிலை, சுகாதார நிலை முதலிய பல்வேறு செய்திகளைத் தந்து வந்தன.

இன்று இந்தப் பெயர் பிற பொருள் துறைகளுக்கும் பரவி

அந்தந்தத் துறைச் செய்தித் தொகுதிகளாக—இலக்கியச்செய் தித் தொகுதி (Literary Gazetteer) என்பது போல—வெளி வருகின்றன.

இவைகளைத்தேறும்போது நூற்கள் தரும் நிலப்பரப்பு,காலவரம்பு, செய்தி நம்பிக்கை முதலிய விவரங்களைக் கவனிக்கவேண்டும்.

### சொல்லடைவுகள்

சொற்களை ஒரு குறிப்பிட்ட முறையில் அமைத்துத் தருவது—அடைவு செய்வது — சொல்லடைவு எனப் பெயர்பெற்றது. ஒரு குறிப்பிட்ட நூலின் சொற்கள் அல்லது ஒரு குறிப்பிட்ட எழுத்தாளரின் சொற்களை அடைவுபடுத்துதல் இதன் பாற்படும். இம் முறையிலே ஆங்கிலத்தில் பல சொல்லடைவுகளுள்ளன. ஷேக்ஸ்பியர் சொல்லடைவு இதில் முதலிடம் பெறுகிறது. தமிழில் சாமி வேலாயுதம் பிள்ளையின் திருக்குறள் சொல்லடைவு குறிப்பிடத்தக்கது.

இலக்கியம் தவிர்த்த பிற துறைகளில் சமயம் முதலிடம் பெறுகிறது. பல்வேறு சமய நூல்கள்—புராண நூற்கள் இன்று சொல்லடைவு பெற்றுவருகின்றன.

சொல்லடைவு பெறும் நூல், சொல்லடைவு பெறும் ஆசிரியர், சொல்லடைவு செய்யும் ஆசிரியர், அது கொள்ளும் இடப்பரப்பு, காலவரம்பு முதலியவைகளைக் கவனித்துச் சொல்லடைவுகள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

இதுபோன்றே பிற உடனடிக் குறிப்பு நூற்களை நன்கு படித்துத் தேவைக்கேற்ப தேர்ந்தெடுக்கப் படுதல்வேண்டும்.

### பொது நூற்கள்

குறிப்பு நூற்களைத் தவிர, எத்தனை எத்தனையோ பொது நூற்கள் உள்ளன. அவை ஒவ்வொன்றையும் முடிந்தமட்டில் பரிசீலனை செய்து நூலகம் வரும் வாசகர்கட்கேற்ப பயன்படும் நூற்களை வாங்கவேண்டும்.

### புத்துயிர் தரு நூற்கள்

மேற்கண்ட தகவல் நூற்களைத் தவிர, நூற்களிலே பிறிதொரு வகையுண்டு. அவைகளில் தகவல்கள் குறைவு. ஆனால் அவை படிப்போருக்கு ஒரு புதிய உணர்வை—களைப்பை மாற்றி ஒருவித எழுச்சியை — ஒரு பொழுதுபோக்கு நிலையை—நிகழ் நிலையிலிருந்து கற்பனை யுலகிற்கு அழைத்தும் செல்லும் பாங்கைத் தருகின்றன. அத்தகு நூற்கள் படிப்பதன் காரணமாக புத்துயிர் தருதலால் புத்துயிர் தரு நூற்கள் எனப் பெயர்பெறுகின்றன.

புதினங்கள், கதைத் தொகுதிகள், பயண நூற்கள் வாழ்க்கை நூற்கள் முதலியன இவ் வகையைச் சார்ந்தவைகளாகும்.

### உயிர்ப்பூட்டு நூற்கள்

மேற்சொன்ன இரு வகைகளோடு மூன்றாவதொரு வகையுமுண்டு. அவை மனிதனின் அறிவைத் தூண்டுகின்றன. சிந்தனை செய்யச் செய்கின்றன. அது மனிதனை முன்னேறச் செய்கிறது. அச் சமுதாயம் முன்னேற வழி பிறக்கிறது. இத்தகு நூற்கள் உயிர்ப்பூட்டு நூற்கள் எனப் பெயர் பெறும்.

ஒவ்வொரு நூலகமும் இத்தகு நூற்களைத் தருவதில் பெருங் கவனம் செலுத்தவேண்டும். தானே இந்நூற்களைத் தேடி வருவாருக்குத் தாமதமின்றி தந்துதவ வேண்டும். தத்தித் தடுமாறி முன்னேறி வருவாருக்கு உதவி செய்ய வேண்டும். பொழுதுபோக்கில் காலந் தள்ளுவாருக்கும் இதன்

சுவையைக் காட்டியிழுக்கவேண்டும்.

இப் பணியில் பண்டைய இலக்கிய நூற்கள்—எட்டுத் தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க் கணக்கு, காப்பியங்கள் போன்றவைகள் — சமய நூற்கள்—திருமந்திரம், திருவாசகம் திருவருட்பா போன்றவைகள்—நன்கு பயன் படுத்தப்படவேண்டும். அது போன்றே ஒவ்வொரு துறையிலும் காலங்கடந்து உயர்ந்து நின்று பயன்தரு நூற்களைக் கண்டறிந்து பயன்படுத்தவேண்டும்.

## பொது மதிப்பீடு

இதுவரை கண்ட பருவுடல், நுண்ணுடல், உயிர் முதலிய மூன்றையும் இணைத்துவைத்துப் பார்த்துத்தான் நூலகத்திற்கு நூற்களைத் தேர்ந்தெடுக்கவேண்டும். அதற்கு ஆழ்ந்த அறிவும், அகலத் திறனும், சிந்தனையுயர்வும், சமூக உணர்வும், நடுநிலைமை எண்ணமும் வேண்டும். இங்ஙனம் செய்வதில் பலவகை முறைகள் உள்ளன. அவை யாவன: 1. தனிப்பட்ட பரிசீலனை 2. விமர்சனம் 3. உருவாகும் வகை 4. பதிப்பு 5. அகநிலை 6. ஊகம் அல்லது தற்கோள்.

## தனிப்பட்ட பரிசீலனை

ஒவ்வொரு நூலையும் நேரடியாகத் தொட்டு, பார்த்து, படித்துத் தேர்ந்தெடுப்பதே நூற்றேர்வில் சிறந்த முறையாகும். இது தனிப்பட்ட ஒருவர் தானே செய்து முடிப்பதாகும். இது தனிப்பட்ட பரிசீலனை (Personal inspection) யாகும். இது நடக்க முடியுமானால் நல்லமுறைதான். மேனாடுகளில் நூல் வெளியீடுகள் சில நகரங்களில் — அந்தந்த நாட்டுத்தலைநகரங்களில் அல்லது முக்கியமான இரண்டொரு நகரங்களில் — நடந்து வந்தன. எனவே அதிபர்களிடமிருந்து நூற்களைப் பெற்றுக் பரிசிலனை செய்ய முடிந்தது. ஆனால் நமது நாட்டு நிலை இன்று அப்படியில்லை. முக்கியமான நகரங்களில் மட்டுமில்லாது, நாட்டின் நாலு பகுதிகளிலும், கிராமங்களிலிருந்து கூட நூற்கள் வெளியாகின்றன. பதிப்பாளர்கள் மட்டுமல்ல; தனிப்பட்டவர்கள் கூட இன்று நூற்களை வெளியிட்டு வருகின்றனர், இவைகளையெல்லாம் தொகுத்துக் காண்பது எப்படி? நூல்விற்பனையாளர்கள் நூல்களைச் சேர்த்துத் தரலாம். ஆனால் அவர்கள் தங்கட்கு இலாபம் வரக்கூடிய தலைப்புகளை மட்டுமே தேடித் தருவார்கள். அவையனைத்தும் நல்லவை என்று சொல்ல முடியாது. அதைப் பரிசீலிக்கக் கிடைக்கும் நேரமோ மிகக்குறைவு. எனவே நேரடிப் பரிசீலனை—தனிப்பட்ட பரிசீலனை—கஷ்டமாயிருக்கிறது.

## விமர்சனம்

இந்தத் தொல்லையை மாற்ற வேண்டுமானல் விமர்சனம் உதவிக்கு வரவேண்டும். விமர்சனம் என்றால் என்ன? ஒரு நூலின் தன்மையை மற்றொருவர்—நூல் சார்ந்ததுறையில் வல்லவர்—நடுநிலையோடு பரிசீலனை செய்து அதன் உயர்வு தாழ்வை மதிப்பீடு செய்வதாகும்.

இன்று மதிப்பீடுகள் செய்தித்தாள்களிலும், பத்திரிக்கைகளிலும் அடிக்கடி வெளிவருகின்றன. சாதாரணமாக இம்மதிப்பீடுகள் காலந்தாழ்த்தே வருகின்றன. அப்படி வரும் மதிப்பீடுகளும் தரமுடையதாக இல்லை. எனவே அதை நம்பி நூற்கள் நூலகங்களுக்கு வாங்கமுடிவதில்லை.

எனினும் தரமான மதிப்பீடுகள் வராமலும் இல்லை; வருகின்றன. ஆனால் மிகக் காலந்தாழ்த்து வருகின்றன. அதைக்கண்டு நூற்



கள் வாங்குமுன், நூற்கள் விற்பனையாகி விடுகின்றன.

'இதற்கு ஒரு மாற்றுக யாராவது ஒருவர்—அல்லது ஒரு நிறுவனம்—இத்தகு பணியைச் செய்ய முன்வந்தால் நலமாயிருக்கும். இம்முறையிலே விர்ஜினியா திர்குஸ் என்ற அம்மையார் ஒரு நிறுவனமே நிறுவி விமர்சனப் பணி செய்து வருகிறார். அப்பணியில் ஏறத்தாழ இரண்டாயிரம் உறுப்பினர்கள் — நூற்பதிப்பகங்கள், நூல் விற்பனையாளர்கள், நூலகங்கள்-கலந்து கொண்டிருக்கின்றனர். இது மாதிரி நம் நாட்டிலும் நடக்கமுடிந்தால்...?

அதுவரை நாம் என்ன செய்வது?

### உருவாகும் வகை

தனிப்பட்ட பரிசீலனை பயன்பட முடியாதபோது, விமர்சனம் உதவ முடியாதபோது நூற்கள் உருவாகும் வகை (genesis)—எழுத்தாளர், பதிப்பாளர் தரம்—கொண்டுதான் நூற்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். பொதுவாக அரும்பிவரும் புதுஎழுத்தாளர்களை விட்டு விட்டால் ஒவ்வொரு துறையிலும் பண்பட்ட எழுத்தாளர்கள் நல்லெழுத்தாளர்கள் — உண்மையான எழுத்தாளர்கள்—பல்வேறு துறைகளிலும் இருப்பதைக் காண்கிறோம். அவர்கள் நூற்களைத் தேர்ந்தெடுக்கலாம்.

அடுத்து பிரபல பதிப்பகங்கள்—மாக்மில்லன் ஆக்ஸ்போர்டு, லாங்மன்ஸ், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் போன்றவை—வெளியிடும் நூற்கள் தரமானதாகக் கொள்ளலாம் மேலும் ஒவ்வொரு பதிப்பகமும் ஒவ்வொரு துறைக்கும் ஒருவரிசை வைத்துள்ளன. அப்படி வரும் நூற்களும் தரமானதாகக் கருதப்பட வேண்டும்.

இதைத் தவிர சில பிரபல வரிசைகள் (series) உலக உயரிலக்கிய வரிசை (world classics) புத்துலக வரிசை (modern world series) பொதுமக்கள் நூலக வரிசை(Everymans Library series) போன்றவைகள்—நல்ல நூற்களைக் கொண்டுள்ளன. அவைகளிலிருந்து நூற்கள் தேர்ந்தெடுக்கலாம்.

### பதிப்புகள்

ஒருகுறிப்பிட்ட நூலைஒரு தனிப்பட்டமனிதர்—ஒரு துறையில் வல்லவர்—அல்லது ஒரு குறிப்பிட்ட பதிப்பகம்—ஒரு துறையில் பெயர் பெற்றது — பதிப்பித்து அப்பதிப்பாசிரியர் அல்லது பதிப்பகத்தின் பேரால் வெளிவருவது பதிப்பு (Edition) ஆகும் இது பதிப்பாசிரியர் அல்லது பதிப்பகத்தின் மதிப்பைப் பொறுத்து உயர்வு பெறுகிறது. இங்கு அச்சாகும் ஒவ்வொரு முறையும் ஒரு பதிப்பு என எண்ணுவதை நினைத்துக் குழப்பக் கூடாது.

இம்முறையிலே ஷேக்ஸ்பியர் நூல்கள் பலபதிப்புகளாக வெளி வந்திருக்கின்றன. இது போலவே திருக்குறள் பல பதிப்புகளாக வெளி வந்திருக்கின்றன. இது போலவே வேறு பல நூற்களும் பல பதிப்புகள் பெற்று வெளியாகியுள்ளன.

இம்முறையில் வெளிவரும் ஒவ்வொரு பதிப்பும் பதிப்பாசிரியர் அல்லது பதிப்பகத்தின் தரம் பார்த்து வாங்கப்படவேண்டும்.

### அங்கில மதிப்பீடு

நூலகங்களுக்கு நூற்கள் வாங்கும்போது நூலகரின்—நூலகக் குழுவினரின்—நூலக அதிகாரிகளின்—தனிப்பட்ட விருப்பு வெறுப்பு இடம்பெறக் கூடாது. மேலும் நூற்றேர்வினல் ஏற்படும் வேலைப்பளுவைக் குறைக்கும்

எண்ணத்தில் பொறுப்பற்று நூற்களை வருடக் கடைசியில் ஏதோ ஓரிரு கடைகளுக்குச் சென்று வாங்கிவிடும் எண்ணம்—போக்கு மாறவேண்டும்.

### தற்கோள்

நூற்றேர்வில் முன் கண்ட முறைகள்—நேரடிப் பரிசீலனை, விமர்சனம், உருவாகும் முறை, பதிப்புகள், அகநிலைக மதிப்பீடு—நூற்களைச் சரிவரத் தேர்ந்தெடுப்பதில் பல குறைகள், தடைகள், சங்கடங்கள் ஏற்படுகின்றன. ஆனால் அதற்காக நூற்றேர்வு நின்று விடமுடியாது; கூடாது, நடப்பதுவும் ஓர் அடிப்படையில் நடக்கவேண்டும். அது எப்படி?

அறிவுத்துறையில் ஒவ்வொரு புதுமை காணமுற்படும் போதும், இருக்கும் நிலைகளை இணைத்து ஒரு தற்தோள் (Hypothesis) கற்பித்துக் கொண்டு செயலாற்றித்தான் வெற்றி காணமுடிகிறது. அது போலவே நூற்றேர்விலும் காண முயன்றால்......?

### மனிதப்பண்பு

மனிதப்பண்பு இயங்காற்றல் கொண்டது. அது கணந்தோறும் இயங்கிக் கொண்டே இருக்கிறது. அந்த இயக்கத்தின் போக்கில் போய் மனப்பண்பைப் பண்படச் செய்வதுதான் கல்வி முயற்சி. பொதுவாக ஒவ்வொரு மனிதனும் மூவகை யுணர்வுகள்—உடல் உணர்வு, உள்ள உணர்வு, ஆன்ம வுணர்வு—கொண்டிருக்கிறன் அவை பாரம்பரியத்தால், சூழ்நிலையால், உள்ளுணர்வால் பாதிக்கப் பட்டு சிறப்புறுகின்றன, அல்லது சீரழிகின்றன.

அதில் உடலுணர்வு நம்மால் எளிதில்காணமுடிகிறது. அதனைத் தேவையானல் அறிவியல் முறைகளில் பண்படுக்கலாம். ஆனல் ஆன்ம வுணர்வோ நம்மால் உணர முடிவதில்லை. எனவே அதனைப் பண்படுத்துதல் ஏலாது. இரண்டுக்கு மிடைப்பட்ட உள்ள உணர்வை நாம் உணர முடிகிறது. அதை சூழ்நிலையால் பண்படையச் செய்ய முடியும்.

மனிதன் வாழ்வில் முன்னேற வேண்டுமானல் உடலுணர்விலிருந்து முன்னேற வேண்டும். உடலுணர்வுக்கும் உள்ள வுணர்வுக்கும் இடைப்பட்ட பொது மனவெழுச்சிகள் உயர்த்தப்பட வேண்டும். அது உள்ளம் பண்படைய வழி கோலும். அது மனிதனின் உள்ளவுணர்வுக்கும் ஆன்ம வுணர்வுக்கும் இடைப்பட்ட நல்ல மன வெழுச்சிகளைத் தூண்டும். அத்தூண்டுதல் ஆன்ம வுணர்வு மேலுமுயர வழிவகுக்கும்.

வளர்ந்துவரும் மனித சமுதாயம் இன்று மேற்கூறிய ஐந்து நிலைகளில்—உடலுணர்வு, பொது மன வெழுச்சி, உள்ள உணர்வு, நல்மன வெழுச்சி, ஆன்ம வுணர்வு—முதல் நிலையைத் தாண்டிவருகிறது. ஆனல் கடைசி நிலைக்குச் செல்ல வழி தெரியாது திகைக்கிறது. எனவே மக்கள் இடைநிலையிலிருக்கின்றனர். அவர்களை நல்ல முறையில் உயர்த்தவேண்டுமானல் நடுநிலை உள்ள உணர்வைத் தொடவேண்டும்; உள்ள உணர்வைத்தொடும் நூற்களைக் கொடுக்கவேண்டும்.

பொதுவாக உடலுணர்வு விரைவில் உணர்ச்சி கொள்ளும். கொண்ட உணர்ச்சி தணிய நீண்டகாலம் பிடிக்கும். ஆனல் உள்ளத்துணர்வோ உணர்ச்சி பெறக் காலம் பிடிக்கும். ஆனல் விரைவில் உணர்ச்சி தணியும். ஆன்மவுணர்வோ உணர்வு பெற நீண்டகாலம் கொள்ளும். உணர்வு பெற்று விட்டாலோ

மாருத இன்பம்-களைப்பற்ற இன்பம்—பெறும்.

இதனை யுணர்ந்து நாம்—நூலகப்பணியாளர்கள்—உள்ளவுணர்வை ஓர் இயக்க அடித்தளமாகக் கொண்டு, ஆதாரமாகக் கொண்டு, பணியாற்ற வேண்டும். அப்படிச் செய்தால் அது மனிதனைக் கீழ் நிலையிலிருந்து உயர்த்தும்.

இதனை அடிப்படையாகக் கொண்டு இன்றைய வாசகர்களை மூன்று பிரிவாகக் கொள்ளலாம். அதில் முதல் வகையினர் பொது மன வெழுச்சிகள் மூலம் அறிவு பெறக் கூடியவர்கள். இரண்டாவது வகையினர் எவ்வித உதவியுமின்றி, இருக்கும் நிலையில் அனுபவம் பெற்று முன்னேறக் கூடியவர்கள். மூன்ருவது வகையினர் பண்பியலான எண்ணங்களில் உலவி கருத்தின்பம் பெற்று முன்னேறக் கூடியவர்கள்.

இம் மூவகையினருக்காகவே உலக அறிவு இருக்கிறது. இதனை இவர்களுக்காகத் தரம்பிரிக்கலாம். அப்படிப் பிரிக்கப்படும் அறிவுத்தரம் நான்கு வகையாகும் அவையாவன.

1. மன்பதை இயல் நூற்கள் (Humanitres)

2. சமூகவியல் நூற்கள் (social sciences)

3. பயன்படு அறிவியல் நூற்கள் (applied sciences)

4. தூய அறிவியல் நூற்கள் (pure sciences)

மனிதனுகப் பிறந்த ஒவ்வொருவனும் அவனுள்ளிருக்கும் மூவகையுணர்வுகள் காரணமாக, ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு தரநூற்களைக் காண விரும்புகிருன். சான்ருகச் சொன்னுல் சாதாரண மனிதன் பொது மனவெழுச்சி காரணமாக புதினங்கள் பயண நூற்கள் தேடுபவன்கூட சில சமயம் அறிவியல் காணவிரும்புகிருன். அதுபோலவே பண்பியலில் உலவும் விஞ்ஞானிக்குக்கூட சில சமயம் பொழுது போக்கும் புதினம் வேண்டும். இதனைக் கருத்தில் கொண்டு நாம் இனி நூற்றேர்வு நடத்தும் முறையில் ஒவ்வொரு துறையாக ஆராயலாம்.

## *மன்பதை இயல் நூற்கள்*

புனைகதை (Fiction), வாழ்க்கை (Biography), பயணம் (Travel), நாடகம் (Drama), செய்யுள் (poetry) உரைநடை (prose), மொழியியல் (Linguistics) சமயம் (Religion) தத்துவம் (philosophy) முதலிய துறைகளை மன்பதை இயலில் அடக்கலாம். இத்துறை நூற்களில் பண்பியல் (abstraction) உணர் வோட்டம் (emotional appeal) அதிகம். அது அறிவுக் கூர்மை நிலையை மாற்ற உதவும். எனவே இவை உலகு முழுதும் எல்லா நிலை மக்களும் அதிக சிரமமில்லாமல் படித்தறிந்து கொள்ள ஏதுவாகும். ஆயையால் பொது நூலகங்களில் இத்தகு நூற்கள் நிரந்தரமாக, பேரளவு இடம் பெற வேண்டும். ஏன் தெரியுமா?

## *புனைகதை*

கதைமனிதனின் தொடக்கத்திலிருந்து இன்றுவரை சிறப்பிடம் பெறுகிறது. குழந்தையாயினும் சரி, பெரியவர்களாயினும் சரி, முதியோராயினும் சரி, கதை என்ருல் விரும்பிப் படிப்பர். மனிதன் ஓய்வு பெறும்போதும், பிற நேரங்களிலும், கதைகளைக் கேட்க, படிக்க, சொல்ல விரும்புகிருன். அதையும் புனைகதையாக இலக்கிய நயம்பட அமைத்து விட்டால் கிராக்கிக்குக் கேட்கவே வேண்டாம்.

இதைப் பயன்படுத்தியே முன்னுளில் சமயக்கருக்குகளை யெல்

லாம் கதையுருவில் காப்பியவுருவில், புராண உருவில் நம்முன்னோர் தந்தனர். இன்னும் அதற்கு இடம் இருக்கிறது. அதைப் பின்பற்றி அன்று காதல் பற்றி, போர்பற்றி, காதலும் போரும் கலந்த நிலைபற்றி நூற்கள் வெளியாயின. இன்றும் அந்த நிலை தொடர்கிறது.

இன்றும் அதைச் சாதகமாகக் கொண்டு பல்வேறு துறை—அறிவியல், தொழிலியல், அரசியல்—நூற்கள் புனைகதை உருவில் வெளியாகி மக்களறிவை முன்னேற்ற உதவி புரிகின்றன.

இந்த வாய்ப்பை நூலகர் நன்கு பயன்படுத்திக் கொண்டு, குழந்தை, முதியோர் அனைவரும் பண்பியற் கருத்துகளையும் புனைகதை யுருவில் ஏற்றுப்படித்து முன்னேற வழி செய்யவேண்டும். அதற்குத் தேர்ந்தெடுக்கப்படும் நூற்கள் மனிதன் உணர்வை நல்ல வழியில் வளர்த்து முன்னேற்றுவதாக விருக்க வேண்டும்.

### வாழ்க்கை நூற்கள்

புனைகதைக்கு அடுத்து நல்ல பயன்தருவன வாழ்க்கை நூற்களாகும். இது தனிமனிதர் தன் உடல்திறமையால், அறிவுத் திறத்தால் பெருஞ் செயல்கள் செய்து முன்னேறிப் பெருமை பெறுவதை எடுத்துக் காட்டுகின்றது. இதை மேலும் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் உலகத்துறைகள் ஒவ்வொன்றிலும் தன்னிடம் நிறுவிச் சென்ற பெரியார்களின் வாழ்க்கை வரலாற்றைக் கூறும் நூற்களை நூலகத்தில் சேர்க்க வேண்டும்.

இது படிப்பாரின் உள்ளத்திலே ஒரு சிலிர்ப்பைத் தந்து, தானும் அம்முறையிலே ஓரளவாவது முன்னேறலாம் என்ற உணர்வை ஊட்டும். சிறப்பாக இது சிறுவர்களுக்கு மிக நன்றாகப் பயன்படுத்தப்படலாம்.

ஒருவர் வரலாற்றை மற்றொருவர் எழுதலாம் அல்லது ஒருவரே தனது வரலாறு எழுதலாம். இப்படி எழுதப்படுவதில் இலக்கிய நயமும், ஊக்குணர்வும் இயைந்து விட்டால் அவை நிரந்தர நூற்களாகிவிடும், சான்று வேண்டுமா? காந்தியடிகளின் சுயசரிதையையும் நேருவின் வாழ்க்கை வரலாற்றையும் பார்க்கலாம்.

### பயண நூற்கள்

புனைகதையின் கவர்ச்சியும் வாழ்க்கை வரலாற்றின் சிறப்பும் இணைத்துத் தருவன பயண நூற்கள். அதிலும் சற்று இலக்கிய நயமும், ஆய்வுணர்வும் சேர்ந்து விட்டால் போதும், அது தனியொருமனிதன் தன்னிருப்பிடத்திலேயே உலகைச் சுற்றிவர உதவும்; உலக நடப்பை அறிய வழிகோலும் அது உலகநாகரிகத்தின் முன்னேற்றத்தை, தொழிலபிவிருத்தியின் வேகத்தை, அறிவியலின் அணைப்பை எடுத்துக் காட்ட உதவும். இது உலகமக்களிடையே ஒரு பிணைப்பையும் ஊட்டும். அது மட்டுமல்ல; பிற துறை நூற்களைப் படிக்கவும் தூண்டும்.

### வரலாற்று நூற்கள்

பண்டைய நிலையைப் படித்து, இன்றைய நிலையை யாய்ந்து, நாளைய வாழ்வுக்குத் திட்டமிட உதவுவது வரலாறு. அது சற்று பண்பியலாயினது தான். எனினும் உப்புச் சப்பற்று வாழ்ந்து மறைந்தவர்களின் பிறப்பு, அரியணை யேற்ற இறக்கம் முதலியனவே வரலாறு என்று எண்ணி விடாமல், மக்களின் சமூகவாழ்வு, கலாச்சார முன்னேற்றம், பொருளியல் வளர்ச்சி அரசியல் தெளிவு, இலக்கியச் செறிவு முதலியவைகளையும்

இணைத்தெழுதப்படும் நூல் நல்ல வரலாறாகும். அது மக்கட்கும் பயன்படும். கவர்ச்சி தந்து எழுச்சியூட்டும். உலகவரலாற்றை சுருக்கித்தரும் நூற்களைத் தேர்வதோடு நின்றுவிடாது ஒவ்வொரு நாட்டின் வரலாற்றையும் சேர்த்து வைக்கவேண்டும்.

### நாடகம்

நாடகம் — கூத்து — மனிதன் தொடக்க கால முதல் இருந்து வரும் ஒரு துறையாகும். மனிதர் ஒவ்வொருவரும் நாடகம் படிக்க பார்க்க, கேட்கவிரும்புவர். இந்த நிலை உலகம் முழுமைக்கும் பொருந்தும். எல்லா நிலையினருக்கும் பொருந்தும்.

சிலர் நாடகத்தைப் பார்க்கப் போகுமுன் நாடக நூலைப்படிக்க விரும்புவர். சிலர் நாடகத்தைப் பார்த்தபின்பு படிக்க விரும்புவர். சிலர் நாடகத்தைப் பற்றிக் கவலைப் படாமல் நாடகநூலை மட்டும் படித்து மகிழ்ச்சி கொள்ள விரும்புவர்.

எனவே இதற்கேற்ப நூற்கள் எல்லாத் துறையினரும், எல்லா நிலையினரும் பயன்படும் வகையில் நூற்கள் சேர்த்து வைக்கப் பட வேண்டும்.

இந்த வுணர்வை எழுத்தாளர்கள் நன்கு பயன் படுத்திக் கொண்டு எல்லாத்துறை நிகழ்ச்சிகளையும் நாடக உருவில் தர முன்வரலாம். அது பண்பும், பயனும், இலாபமும் தரும். இம்முறையிலே பயன்படும் வானொலி நாடகங்கள் நூலுருவில் வந்தால் நல்ல பயன்தரக் கூடும்.

### செய்யுள் நூற்கள்

பல்வகைப் பொருளை, சில்வகையெழுத்திற் காட்டி படிப்போர் மனத்திலே ஒரு வித எழுச்சியையும், பண்பையும், பயனையும் தருவன செய்யுள் நூற்கள். இவை முன் கூறிய நூற்களைப் போன்றதல்லாவிடினும் மனிதனின் அறிவையும் உணர்வையும் நல்வழிப் படுத்தும் பான்மையின. இந் நூற்கள் படித்துணர நல்ல பண்பியல் வளர்ச்சி வேண்டும். அது அமைந்து விட்டால் எழுத்தாளனின் இலட்சியத்தையும் அனுபவத்தையும்உணர்ந்துஅனுபவிக்க இயலும். படிக்கப் படிக்க இன்பந் தரும். புதுச் செய்திகளைத் தரும் இதனையே 'நவில் தொறும் நூல் நயம்' என்றார் வள்ளுவரும்.

வால்மீகியின் இராமாயணம், ஹோமரின் இலியாது, விர்சிலின் இனியாது, திருவள்ளுவரின் திருக்குறள் போன்ற நூற்களும் பிறவும் ஒவ்வொரு நூலகத்திலும் இடம் பெறவேண்டும்.

### உரைநடை நூற்கள்

உரைநடை நூற்கள் காலத்தால் பிந்தியன. படிக்கவும் எழுதவும் எளியன. செய்யுள் நூற்களுக்கு அடுத்த கட்டத்தில் வைக்கத் தக்கன—இன்று ஒவ்வொரு மொழியிலும் புதுப்புது உரை நடை நூற்கள் தோன்றி வருகின்றன. அவைகளில் மொழிக்குச் சிறப்புத்தரும் வகையில் இலக்கணம் திறம்பாமல், ஆனால் அதே சமயம் எளிமையாய் அமைந்து, படிப்பாரின் அறிவையும், மொழியையும், நடையையும் உயர்த்தும் வகையிலமைந்து நிற்பன கண்டு வாங்கி வைக்கவேண்டும்.

### பிறதுறை நூற்கள்

மேற்கூறியவைகளைத் தவிர்த்து இன்று, பல்வேறு துறைகளில்—ஓவியம், இசை, சிற்பம் போன்ற கவின் கலைகளில்—சித்திரம், சமயம், தத்துவம் முதலிய ஆன்மவுணர்வு கலைகளில்—ஏராளமாக நூற்கள் வெளிவருகின்றன. அவைகளும் மக்களால் வேண்

டப்படுபவைகளே நூலகத்தில். எனவே அத்துறை நூற்களேயும் —அத்துறை வல்லார் உதவி கொண்டு—நூலகத்தில் வாங்கி வைக்க வேண்டும். அதிலும் ஒரு முறைச் சார்பாக மட்டும் நூற்களைக் குவித்து விடாது, எல்லா முறைகளும் வேண்டிய அளவு இடம் பெறுமாறு செய்ய வேண்டும்.

**துணை நூற்கள்.**

மேற்கூறிய துறைகளில் நூற்கள் தேர்ந்தெடுக்கும் போது மூல நூற்கள் (originals) வாங்குவதோடு நின்று விட்டால் காணுது. ஏனெனில் மூல நூற்களைப் படிக்க துணை நூற்கள் (auxiliaries)- மூல நூலைப் பொருளறிந்து படிக்க, மதிப்பிட்டுப் படிக்க, இரசித்துப் படிக்க உதவும் துணை நூற்கள்—அத்துறையில் செயற்பட எண்ணும் மனிதன் அடிப்படை அறிந்து கொள்ள உதவும் துணை நூற்கள் — தேவைப்படுகின்றன. எனவே அவைகளும் வாங்கி வைக்கப்பட வேண்டும்.

**மொழிபெயர்ப்புகள்.**

மேற்கூறிய துறை நூற்களனைத்தும் உலகளாவும் பான்மையின. எல்லா நிலையினருக்கும் பயன் படக்கூடியன. எனவே அவைகளில் காலங் கடந்து நிற்பவைகளை, மொழிதாண்டி பயன்படக் கூடியவைகளை, இனம் கடந்து உதவுபவைகளை, இடம் தாண்டி இருக்கக் கூடியவைகளை எல்லாரும் பெறவழி செய்யவேண்டும். அது எப்படி? மொழிபெயர்ப்புகள் —ஒரு மொழியிலிருந்து மற்றொரு-மொழியில் மாற்றப் பட்டவைகள் —இந்தப் பணியைச் செவ்வனே செய்ய முடியும். இந்த மொழி பெயர்ப்புகளும் மொழி பெயர்ப்பாய் மட்டு மிருந்து விடாமல் பொருள் பெயர்ப்பா யமைய வேண்டும். அப்போது தான் அது அந்தந்த இடத்தில் நல்ல பயன் தர முடியும்.

இம்முயற்சி உலக மக்களிடையே ஒருமைப் பாட்டையும், பிணைப்பையும் ஏற்படுத்தி ஒன்றுபடச் செய்யும். இதனை யுணர்ந்து 'யுனெசுகோ' அமைப்பு இத்துறையில் பெருமுயற்சி செய்து வருகிறது. அதனை நாமு முணர்ந்து கூடிய மட்டிலும் தேவையான அளவு ஒவ்வொரு நூலகத்திலும் மொழி பெயர்ப்பு நூற்களும் இடம் பெறச் செய்யவேண்டும்.

**சமூகவியல் நூற்கள்.**

மன்பதை வியல் நூற்கள் பொதுமையாக விவரணம் தந்தன; அனுபவமுழுமையிலிருந்து பகுதிக்குப் போயின. அதுவும் பருப்பொருள் நிலைமையிலிருந்து பண்பியல் நிலைமைக்கு நகர்ந்தன. ஆனால் சமூகவியல் நூற்களோ மாறுபட்ட நிலையின. இங்கு ஆய்வுப் பகுதியிலிருந்து முழுமையை நோக்கிச் செல்லும் பண்பியல் நிலையினவாகும்.

சமூகவியல்கள் கல்வி, நிலவியல், அரசியல், பொருளியல், சமூகம், சட்டம் முதலிய இயல்களைக் கொண்டதாகும். இவ்வியல்களின் கருப்பொருள் மனிதனும், மனிதன் செயற்களுமாகும். எனவே இங்கு ஆராய்ச்சி தூய அறிவியற்றுறையில் செய்யப்படுவது போல எதையும் குறிப்பிட்ட கட்டுதிட்டங்களுக்கு உட்படுத்தி செயலாற்ற முடியாது. மனிதனின் விருப்பத்தையும் எண்ணத்தையும் தனிப்படுத்திப் பரிசீலனை செய்யமுடியாது. எனவே இந்நிலையில் செய்யும் ஆராய்ச்சி எதுவும் விளக்கமாக மட்டும்தான் அமையமுடியும்.

எனவே இத்துறைகளில் ஆரம்ப கால நூற்கள் விளக்கவுரை (descriptive) களாகவே இருந்தன. இவை சிறப்பறிவு கொண்ட

வருக்கும்ஏற்றவைகளாயிருந்தன. அடுத்த காலக் கட்டத்தில் இத் துறை நூற்கள் சிறப்பறிவு பெற்றவர்கள் மட்டுமே பயன்படுத்தக் கூடியவைகளாயிருந்தன. இந் நிலை மெதுவாக இப்போது மாறி வருகிறது. இந் நிலையில் வரும் நூற்கள் கொள்கை பரப்பு நிலையினவாயுள்ளன அவைகளை யெல்லாம் இன்றையஅரசாங்கங்களும், பிற உலக மன்றங்களும் தொகுத்து அடிப்படைக் கொள்கைகளை விளக்கிவருகின்றன.

காலப்போக்கில் அறிவியல் முறை சார்ந்த ஆராய்ச்சி சமூக வியல்களிலும் பயன்படத் தொடங்கியுள்ளதன் விளைவாக வேறுபட்ட பாணிகள் (School of thought) அரும்பியுள்ளன. ஒவ்வொரு துறையும் பல பாணிகளைக் கொண்டுள்ளன. சான்ருகச் சொன்ஞல் பொருளியல் துறையில் பொதுவுடமைப்பாணி, ஜனநாயக சோசலிசப்பாணி, தனியுடமைப் பாணி முதலிய பாணிகளைப் பார்க்கிறேம். அரசியலில் குடியாட்சிப் பாணி, சர்வதிகாரப் பாணி தனியாள் அரசுரிமைப் பாணி எனக் காண்கிறேம்.

இதுமட்டுமல்லாது சமூகவியல் துறைகளில் அவ்வப்போது சில பிரச்சினைகள் தோன்றி மறைகின்றன. அந்நிலையிலே சில பல கருத்து விளக்கங்கள், தத்துவங்கள், அடிப்படைக் கொள்கைகள் கட்டுரைகளாக, துண்டு வெளியீடுகளாக, நூற்களாக உருப் பெறுகின்றன.

இவையனைத்தையும் ஒவ்வொரு நூலகமும் தத்தம் கருத்திலிருத்தி, மக்கள் தேவைக்கேற்ப நூற்களும், பிறவும் தேடி வாங்கிப் பணி புரியவேண்டும்.

**பயன்படு அறிவியல் நூற்கள்**

பொறியியல், நுணுக்கத் துறை இயல், விவசாயம், கால்நடைப் பரிபாலனம், சுகாதாரம் முதலிய துறைகள் இப்பிரிவிலடங்கும். இத் துறைகளில் ஏற்படும் மாறுதல்கள், முன்னேற்றங்கள். விளைவுகள் மக்கட்கு நேரடியாகத் தெரியும். எனவே அவை பற்றிய நூற்கள் மக்களுக்கு அவ்வப்போது தேவைப்படும்.

அவைகளைப் படித்துணரும் வகையில் இன்று கேள்வி காட்சி (audio-visual) வசதி உதவியுள்ளன. அதன் மூலம் வாசகர்கள் படம் பார்த்து, மேற்கோள் விளக்கம் கண்ணுரக் கண்டு, விளக்கத் தட்டு பேச்சுக் கேட்டு அறிவு பெறலாம்.

இன்று இத் துறையில் நூற்றுக்கணக்கான பிரிவுகள் உள்ளன. சான்ருகச் சொன்ஞல் அச்சுக் கலை, சமையற் கலை, புகைப்படக் கலை, தச்சு வேலை, நூற்றல், நெய்தல், ஆடை தயாரித்தல், பாய் பின்னுதல், கூடை பின்னுதல், பிரம்பு வேலை, பாசி பின்னுதல், மட்பாண்டவேலை, தோற்பொருட் தயாரித்தல், பொம்மை செய்தல், பட்டுப்பூச்சி வளர்த்தல், பால் பண்ணை, கோழிப் பண்ணை, தேனீ வளர்த்தல், மீன் பிடித்தல், மலையேற்றம், எழுது பொருளாக்கம் முதலிய எத்தனையெத்தனையோ உண்டு.

இத்துறைகளிலீடுபட்ட ஒவ்வொருவரும் தத்தம் தொழிலுக்கு உதவியாக அறிவு பெற,—அறிவு பெறுவதற்கான நூற்கள் பெற—நூலகம் நாடுவர். அவர்களுக்கெல்லாம் நூற்கள் உதவ வேண்டும். அதற்கான நூற்கள் உள்ளதா என்ருல்?—பெருமூச்சுத் தான் விடவேண்டும்!

வேகமாக முன்னேறிவிட்ட மேனுடுகளில் இதுபோன்ற துறைகளுக்கான நூற்கள் ஆயிரக் கணக்கிலுள்ளன. நம்மிடமோ ஏதுமில்லை. ஆஞல் வாளாயிருக்க

லாமா? இருக்கமுடியுமா? எனவே நாம் நம் மொழியில் நூற்கள் தயாரிக்கும் வரை ஆங்கில மொழி நூற்களைத் தான் வாங்கியாக வேண்டும். அப்படி வாங்குபவைகளும் ஆங்கிலமும் பிற இந்திய மொழியும் தெரிந்தவர்கள் பயன்படக்கூடிய வகையில் வாங்க வேண்டும். அந் நூற்கள் தற்போதைக்கு விவரமறியவும், எதிர்காலத்தில் நம் மொழி நூலாக்கத்திற்கு உதவுவதாகவும் அமைய வேண்டும்.

இப்படி வாங்கப்படும் நூற்களும், அப்போதைக்கப்போது புதியதாக—அண்மையில் வெளியானதாக — வாங்கப்படவேண்டும். ஏனெனில் பயன்படு அறிவியலில் கருத்து மாற்றங்கள் முறை மாற்றங்கள், பயன் நிலைகள் முதலியன வெகு வேகமாக முன்னேறி வருகின்றன. அந்த வேகத்திற்கேற்ப நூலகமும் விரைந்து செயற்பட்டு ஆண்டு தோறும் புதிய நூற்கள் வாங்கியும், பருவ வெளியீடுகள் (Periodicals) வாங்கியும் பணி புரிய முன் வரவேண்டும்.

### தூய அறிவியல் நூற்கள்

நமது பரிசீலனையிலே தூய அறிவியல் கடைசியில் வந்த போதிலும் அறிவுலகிலே முதலிடம் பெறுவதாகும். ஏனெனில் அறிவியல் முன்னேற்றத்தில்தான் உலக முன்னேற்றம் அடங்கியுள்ளது. அந்த அறிவியலின் அடிப்படை அறிவு, அதற்குக் கற்பனையும் உள்ளுணர்வும் உதவு கருவிகளாயமையலாம், எனவே அறிவு ஒன்றைப்பற்றி, ஒன்றைச் சொல்வதற்கு முன் ஒவ்வொரு துளியையும் கண்டு, பார்த்து, தொட்டு, அமுக்கி, ஒட்டி, வெட்டி, இணைத்து, இழைத்து, பிரித்து, துருவி, ஆராய்ந்து ஒரு கருத்தை உருவாக்கியாகவேண்டும். அந்தக் கருத்து உண்மையாகிறது. உண்மை உயர்வு தருகிறது. உயர்வு பயன் தருகிறது. பயன் மேலும் ஆய்வுகளைத் தூண்டுகிறது; தொடர்கிறது அறிவு மேலும் முன்னேறிக் கொண்டேயிருக்கிறது.

இத்தகு தூய அறிவியல் இரு வகைப்படும். முதல் வகை இயற்கை அறிவியல் (Natural Sciences) எனப்படும். அது உயிரியல், புவியியல், தாவரவியல், விலங்கியல், மருந்தியல் முதலியவைகளை உள்ளடக்கும். இரண்டாம் வகை இயற்பியல்கள் (Physical Sciences) எனப்படும். அது கணக்கு, இயற்பியல், பேதியியல் முதலியவைகளை உள்ளடக்கும்.

இத்துறைகளில் முன்னேற்றம் அணு அணுவாக, படிப்படியாக, மெதுவாக, ஆனால் நிச்சயமாக முன்னேறி வருகிறது. எனவே இக் கருத்துகள் முதலில் பருவ வெளியீடுகளில் கட்டுரைகளாகத் தான் வெளிவருகின்றன. கருத்து நிச்சயமான பின்பு, தெளிவடைந்த பின்பு தனிக் கட்டுரை நூலாக, செய்தி அறிக்கையாக வெளிவருகிறது: இதற்கடுத்த நிலையில் அக் கருத்துக்கள் நூலுருவில் வெளியாகின்றன.

இதனை மனத்திலிறுத்தி நூலகர் ஒவ்வொருவரும் நூலகம் நாடி வருவார் ஒவ்வொருவரும் வேண்டியது பெறுமுறையில் பருவ வெளியீடுகளும், தனிக் கட்டுரை நூற்களும், செய்தி அறிக்கைகளும், நூற்களும் தேடிப்பிடித்துவாங்கிப் பணி புரிய முன்வர வேண்டும்.

அப்போதுதான் 'நூற்கள் படிப்பதற்கே' என்ற முதற்சீலம். நூற்களைப் பொறுத்தமட்டில் உண்மையாக முடியும்.

சிறுகதை

# ஸ்டேஷன் மாஸ்டர்

செர்கி அந்தனேவ்

பாசஞ்சர் ரயில் நெருங்கி வந்துவிட்டது என்ற செய்தி வந்ததும், ஷிச்செகலொவோவின் ஸ்டேஷன் மாஸ்டர் வாசிலி இவானேவிச் நாற்காலியிலிருந்து எழுந்தார்.

அப்பொழுது சரியாக இரவு பதினொரு மணி......

பிரேக்குகள் கிரீச்சிட ஸ்டேஷனுக்கு எதிரே வந்து நின்றது ரயில்.

வாசிலி இவானேவிச், கையில் விளக்கைப் பிடித்துக் கொண்டிருந்த கார்டின் அருகே சென்றார்.

"வணக்கம், நாதியா" என்றார்.

"வணக்கம், வாசிலி இவானேவிச்"

"மாஸ்கோவில் என்ன விசேஷம்?"

"ஒரு புதிய திரைப்படம் வந்திருக்கிறது. வசந்தம் என்று பெயர். காதலர்கள் இருவர் யாவற்றையும் குழப்பி அமளி செய்வதைக் கூறுகிறது இது. தமாஷாக இருக்கிறது."

"அவர்களுடைய காதல் மெய்யானதாக இருக்குமானால் அப்படிக் குழப்பம் ஏற்படாது," என்றார் வாசிலி இவானேவிச். "மெய்யான உணர்ச்சி யாரையும் தவறான பாதையில் அழைத்துச் செல்லாது."

"ரயில் தாமதமாகவா வந்திருக்கிறது?" என்று நாதியா விசாரித்தார்.

"ஆம். பன்னிரெண்டு நிமிடம் தாமதமாக வந்திருக்கிறது."

"அப்படியோ! இதற்குக் காரணம் வொரோனெஷ் ஸ்டேஷனில் உள்ளே செல்ல எங்களுக்கு அனுமதி கிடைக்க நேரமாகிவிட்டது. இனிச் சற்று வேகமாகச் சென்று இதைச் சரிசெய்து விடுவோம்...நீங்கள் எப்படி இருக்கிறீர்கள்?"

"நன்றாகத்தான் இருக்கிறேன். நீங்கள் சொன்ன அந்த இருவருக்கும் மெய்யாகவே..."

ரயில் கிளம்பிச் சென்ற பிறகு வாசிலி இவானேவிச் நிலையத்திற்குத் திரும்பினார்.

அவருடைய பெரிய அறைக்குள் சென்று சுவரில் தொங்கிய அட்டையின் மீது பார்வையைச் செலுத்தினார். இருக்கையிலும் சாய்மானத்திலும் வரிசையாகத் துவாரங்கள் போடப்பட்டிருந்த கனத்த பெஞ்சைப் பார்த்தார். பெஞ்சின் ஒரு மூலையில், பதினைந்து வயது கோஸ்கா தனது வழக்கமான இடத்தில் அமர்ந்திருந்தான். லகைகாட்டியை இயக்கும் நிக்கிபோரின் மகன் அவன். தபால்களை ரயிலிலிருந்து பெற்றுக் கொள்வது அவன் வேலை.

"தபால்களை வாங்கிக் கொண்டாயா?"

"தபால் ஒன்றும் அதிகம் இல்லை. செய்தித் தாள்களும் ஒரு

கடிதமும்தான் வந்திருக்கின்றன.''

''கடிதம் அயனேவிற்கா?"

''ஆம். இங்கு வேறு யாருக்குக் கடிதம் வரப் போகிறது?''

உதவி ஸ்டேஷன் மாஸ்டரான அயனேவிற்கு ஒரே மாதிரியான மேலுறையுடன் தினந்தோறும் ஒரு கடிதம் வரும்.

''யாராவது என்னைப் பார்க்க வந்தால் அலுவல் அறையில் இருக்கிறேன் என்று சொல்.''

''யார் உங்களைப் பார்க்க வரப் போகிறார்கள்?'' என்று கேட்டான், கோஸ்கா.

உண்மையில் யாரும் வரமாட்டார்கள். ரயில் நிலையத்திலிருந்து கிராமம் பதினறு கிலோமீட்டருக்கு அப்பால் இருந்தது. எல்லோரும் அவரவர் வீட்டிலே நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். சைடிங்கின் கோடியில் கூண்டில் உட்கார்ந் திருந்த கைகாட்டி இயக்கும் நிக்கிபோரைத் தவிர சுற்றுவிட்டாரத்தில் வேறு யாருமே இல்லை.

''போதும் வாயை மூடு! நீ ஒரு சிறுவன், உனக்கு இதெல்லாம் புரியாது!'' என்று வாசிலி இவானேவிச் கடிந்து கொண்டார்.

பாசஞ்சர் ரயில் வந்து சென்றதும் ஸ்டேஷன் மாஸ்டருக்கு ஏன்தான் குணம் இப்படிக் கெட்டுப் போக வேண்டும் என்பது கோஸ்காவிற்கு விளங்காதபுதிராயிருந்தது.

மூன்று நாட்களுக்குப் பிறகு இரண்டு மணி பத்து நிமிடத்திற்குப் பாசஞ்சர் ரயில் திரும்பி வந்தது.

''வணக்கம். வாசிலி இவனேவிச்'' என்று நாதியாவின் குரல் இருளில் ஒலித்தது.

''வணக்கம் நாதியா! ரோஸ் தோவ் எப்படி இருக்கிறது?...

அதற்குள் பிரதம கார்டு அங்கு வந்து ''நேரமாகிவிட்டது!'' என்றார்.

''சரி...கிளம்புங்கள்'' என்று வாசிலி இவானேவிச் கூறினர்.

ரயில் பெட்டிகள் உலுங்கின; ரயில் புறப்பட்டது. நாதியா ஏதோ கூறியது, ரயிலின் இரைச்சலுக்கிடையே அவருக்குப் புரியவில்லை.

நகர்ந்து சென்ற ரயிலுடன் கூடவே அவரும் சில தப்படிகள் நடந்தார்.

''மன்னிக்க வேண்டும்...நீங்கள் தான் ஸ்டேஷன் மாஸ்டரா?'' என்று யாரோ ஒருவர் பின்னலிருந்து கேட்டது அவர் காதில் விழுந்தது.

வியப்புடன் இவானேவிச் திரும்பிப் பார்த்தார். ஒரு கிழவர் நின்று கொண்டிருப்பதைக் கண்டார்.

''நான்தான் இங்கு ஸ்டேஷன் மாஸ்டர்'' என்றார் வாசிலி இவானேவிச். ''நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்?''

''இந்த ரயிலில்தான் வந்தேன். உங்களைப் பார்க்க வேண்டும்.''

கிழவர் அவரிடம் கொடுத்த உறையில் இரண்டு பேப்பர்கள் இருந்தன. ஒன்று ரயில்வே பிரதம அதிகாரியின் முத்திரை பொறிக்கப்பட்ட பளபளப்பான கடிதம், மற்றொன்று சவ்வு போன்ற மெல்லிய காகிதம். வாசிலி இவனேவிச்சின் கையிலிருந்த விளக்கின் வெளிச்சத்தில், ''மெய்ப் பிரதி'' என்று மையால் எழுதப்பட்டிருந்ததை மட்டும்தான் படிக்க முடிந்தது.

மேலும் அதில் எழுதப்பட்டிருந்ததை அலுவலகத்திற்குச் சென்று படித்தார்.

ஸ்டேஷன் மாஸ்டர் ரெப்ரோவ் தனது பதவியையும் ஸ்டேஷனின் சகல அலுவல்களையும் மேலே குறிப்பிட்ட தோழரிடம் (கடிதத்தை அவரிடம் கொடுத்த கிழவரிடம்) கொடுத்து விட்டு ஜுலை 14க்குள் பிரிதோன்ஸ் காயா மார்ஷலிங் யார்டிற்குச் சென்று டிஸ்பாட்சர் பதவியை ஏற்றுக்கொள்ள வேண்டு மென அதில் கண்டிருந்தது.

வாசிலி இவானேவிச்சிற்கு இது பதவி உயர்வுதான் என்ருலும், "இன்று பதினைந்தாம் தேதி... பதினாலாம் தேதிக்குள் அங்கே சென்று டிஸ்பாட்சர் பதவி ஏற்க வேண்டுமாம்!...அவர்கள் வேலை செய்யும் இலட்சணம் எப்படி இருக்கிறது!'' என்று அலுத்துக் கொண்டார்.

ஸ்டேஷனில் இருந்த எல்லோரும் அவருடைய சாமான்களைச் சேகரித்துக் கொடுத்து மறுநாள் காலையில் அவர் புறப்படுவதற்கு உதவி செய்தனர். வாசிலி இவானேவிச் அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு பிரிதோன்ஸ் காயா மார்ஷலிங் யார்டிற்குப் புறப்பட்டார்.

அவருக்கு இந்தப் புதிய வேலை பிடிக்கவில்லை. காலி டிராலிகளை, கரி அள்ளி வருவதற்காக நிலக்கரிச் சுரங்கங்களுக்கு அனுப்புவதும், நிலக்கரி ஏற்றிச் செல்லும் ரயில்களின் மார்க்கத்தை நிர்ணயிப்பதும்தான் அவருடைய வேலை.

வாசிலி இவானேவிச் ஷிப்ட் முடிந்ததும் தனது அறைக்குச் சென்று ஓய்வு எடுத்துக் கொள்வார். படுக்கையில் படுத்தபடி ஷிசெக்லொவோவைப் பற்றிக் கனவு காணத் தொடங்கி விடுவார்.

ஷிச்செகலொவோவின் அழகிய தோட்டமும், சுவர்த் தாள்கள் உரிந்து தொங்கும் சிறிய அலுவலகமும் அவர் மனக் கண் முன்னே தெரியும். நாதியாவுடன் தான் பேசிய பேச்சுகளும், பேசாது விட்டுப் போனவைகளும் அவர் சிந்தனையில் தோன்றின.

பழைய பதவிக்கே தன்னை மாற்றிவிடும்படி இரண்டு வாரங்களுக்குப் பிறகு அவர் விண்ணப்பித்துக் கொண்டார்; ஆனால் அவ்வாறு செய்வதற்கில்லை என்று மேலிடத்திலிருந்து பதில் வந்து விட்டது.

ஷிச்செகலொவோவில் எதுவும் மாறிவிடவில்லை, ஆப்பிள்கள் பழுக்கத் தொடங்கியுள்ளன என்று கோஸ்கா அவருக்குக் கடிதம் எழுதியிருந்தான். "நான் இப்போது ஷிச்செகலொவோவில் இருந்தால் இரண்டு அறைகளுள்ள ஒரு சிறிய வீட்டைக் கட்டிக் கொள்வேன். தோட்டத்தின் பக்கம் சன்னல்கள் இருக்கும். மரங்களின் கிளைகள் சன்னல்களில் உராயும்படி வீட்டை அமைத்துக் கொள்வேன். பிறகு என்னைத் திருமணம் செய்து கொள்ளும்படி நாதியாவைக் கேட்பேன். அவள் இதற்கு இசைவாள் என்பதில் சந்தேகமே இல்லை. அவள் என்னைத் திருமணம் செய்து கொள்ள மாட்டேன் என்று சொல்வதற்கு காரணமே இல்லை.''

அவர் தன்னை மாற்றி விடும்படி மறுபடியும் கேட்டுக் கொண்டார். இந்தத் தடவை அவரது வேண்டுகோள் பூர்த்தி செய்யப்பட்டது. அந்தக் கிழவர் நோயுற்று விட்டதினால், ஷிச்செகலொவோவின் ஸ்டேஷன் மாஸ்டர் பதவி அப்போது காலியாகவே இருந்தது.

வாசிலி இவானேவிச் சாமான்களை அவசர அவசரமாகக் கட்டினார். அவரை வழியனுப்ப ரயில் நிலையத்திற்கு யாரும் வரவில்லை.

ப்ரிதோன்ஸ் காயர மார்ஷலிங் யார்டில் யாருடனும் அவர் பழக வில்லை.

நாதியாவின் நாற்பத்து நான் காம் எண் ரயில் வர வேண்டிய தினத்தன்று அவர் ஷிச்செகலொ வோவிற்கு வந்து சேர்ந்தார்.

அவர் திரும்பி வந்ததும், நிகி போர் முதன் முதலில் அவரைச் சந்தித்து வரவேற்புத் தெரிவித் தார். அவர் இளைத்துப்போய் முதுகும் கூனல் விழுந்திருப் பதைக் கண்டு நிகிபோருக்கு வியப்பாயிருந்தது. சற்று நேரத் திற்குள்ளாக ஸ்டேஷன் ஊழியர் களும் பழைய நண்பர்களும் பிளாட்பாரத்தில் அவரைச் சூழ்ந்து கொண்டு விட்டனர். இரண்டொரு நாட்களுக்கு ஓய்வு எடுக்குமாறு அவருக்கு ஆலோ சனை கூறினார்கள். ஆனால் அவர், அன்று மாலை நாற்பத்து நான் காம் எண் ரயிலை ஸ்டேஷனில் தானே எதிர் கொண்டழைக்க வேண்டுமென்று அயனேவிடம் பிடிவாதமாகக் கூறினார்.

பாசஞ்சர் ரயில் சரியாகப் பதி னொரு மணி பதினைந்து நிமிடத் திற்கு வந்து சேர்ந்தது.

வாசிலி இவானேவிச் பழைய நிதானத்தை இழந்தவராய், அவ ருக்கு நன்கு பழக்கமான அந்த ரயில் பெட்டியை நோக்கி விரைந் தார்.

சாதாரணமாக முகமன் கூறு வதற்குக் கூட மறந்து "மாஸ் கோவில் என்ன விசேஷம்?" என்று விசாரித்தார்.

"மாஸ்கோ நன்ருகத்தான் இருக்கிறது. அதற்கு எவ்விதத் தீங்கும் நேரிட்டு விடவில்லை. தெருக்களில் மரங்களை நட்டுக் கொண்டிருக்கிருர்கள்."

வாசிலி இவானேவிச் கையிலி ருந்த விளக்கை மேலே தூக்கிப் பிடித்தார். அந்த 2ம் எண் பெட் டியில் வாசற் படிகளில் வயதான ஒரு அம்மையார் நின்று கொண் டிருந்தார். கம்பளிக் குல்லாயை அவர் காது வரை இழுத்து விட்டி ருந்தார்.

"நாதியா எங்கே?"

"நாதியாவா, யார் அது?"

நாளைய தினம் வரப் போகும் நாற்பத்து நான்காம் எண் ரயில் இன்றே வருவதாக தவருக நினைத்து விட்டோமோ என்று அவருக்கு ஒரு கணம் குழப்பம் ஏற்பட்டது.

"ஓ, அந்த நாதியாவைப் பற் றியா கேட்கிறீர்கள்?" என்ருர் கார்டாக இருந்த அந்த அம்மை யார். "அந்தச் சிறு பெண்ணின் இடத்திற்குதான், நான் வந்திருக் கிறேன். அவள் ஏதோ மேற் படிப்புப் படிக்க போயிருக்கிருள்"

"என்ன படிப்பு என்று தெரி யுமா?"

"அது என்ன படிப்போ, எனக் குத் தெரியாது. பிரதம கார்டாக வேண்டும், அல்லது இன்னும் பெரிய பதவி பெற வேண்டும் என்று ஆசை அவளுக்கு. நீங்கள் அவளைப் பார்க்க விரும்பினல் நீண்ட தூரம் பயணம் செய்தாக வேண்டும்."

"உங்கள் ரயில்ரொம்பத் தாமத மாக வந்திருக்கிறது?" என்று இவானேவிச் திடீரென்று கடுமை யான குரலில் கூறினர்.

ஷிக்செகலொவோவில் பாசஞ் சர் ரயில் அன்றிரவு நெடுநேரம் நின்றதாகத் தோன்றியது அவ ருக்கு.

ரயில் பெட்டிகள் ஒரு உலுக்கு உலுக்கி விட்டு மெள்ள நகர்ந் தன...கடைசிப் பெட்டியின் பின் புறத்தில் சுடர்விட்ட சிவப்பு விளக்கு மென்மேலும் தொலைவிற் குப் போய்க் கொண்டிருந்தது.

இஞ்சினின் நிலக்கரிப் புகை மெள்ளப் பரவிக் காற்றிலே மறைந்தது. தொலேவில் போகும் ரயிலின் சிவப்பு விளக்கு கண் சிமிட்டியபடி இருட்டிலே மறைந்ததை வாசிலி இவானேவிச் பார்த்தார். காட்டுப் பகுதியின் சலனமற்ற அமைதி ஸ்டேஷனில் திரும்பவும் அரசோச்சத் தொடங்கியது.

அந்த அமைதியைக் கவனித்த அவர், வாழ்க்கை, விசாலமான, கடினமான, இன்பமயமான வாழ்க்கை தன்னேக் கடந்து விரைந்து ஓடுவதாக எண்ணினுர். அது தன்னேயும் உடன் இழுத்துச் செல்ல முயலுவதாகவும் என்ன காரணத்தினுலோ தான் முரட்டுத்தனமாக எதிர்த்துக் கொண்டு தனியே பின்னல் நிற்பதாகவும் எண்ணினுர்.

ரயில் நியத்திற்குத் திரும்பி வந்ததும், கோஸ்கா பெஞ்சில் ஒரு மூலேயில் செய்தித் தாள்களே வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்ததைக் கண்டார்.

"எதற்காக இங்கே உட்கார்ந்திருக்கிருய்?" என்று கடு கடுப்புடன் கேட்டார். "ஆயுள் பூராவும் இங்கேயே உட்கார்ந்திருக்க ஆசைப்படுகிருயா?" உன்னுடன் கொஞ்சிக் கொண்டிருக்க நான் எப்பொழுதும் இங்கு இருப்பேன் என்ற நினேப்பா? அயனேவை என் இடத்தில் அமர்த்தி விடுவார்கள். பிறகு நீ அயனேவின் வேலேயைச் செய்தாக வேண்டும். போக்குவரத்துக் குறிப்பு ஏட்டில் எப்படிப் பதிவு செய்வது என்று சொல்லித் தருகிறேன், இங்கே வா!"

கோஸ்கா சிறிதும் வியப்படையவில்லே. அவனுக்குத்தான் தெரியுமே, பாசஞ்சர் ரயில் வந்து சென்றதும் ஸ்டேஷன் மாஸ்டருக்குக் குணம் கெட்டுப் போகுமென்று......

(நன்றி—சோவியத் நாடு)

**பாரத நாட்டின் விடுதலைக்கு இளைஞர்களை ஊக்குவித்தவர் அரவிந்தர். அதன் பயனாக ஏற்பட்ட உற்சாகத்தினின்று தோன்றியது பலாத்கார இயக்கம். ஆனால், அரவிந்தர் விரும்பியது பலாத்கார இயக்கமல்ல; சாத்விக முறைப் போராட்டமே!**

# அரவிந்தர் நினைவுகள்

**(எஸ். கே. பானர்ஜி)**

ஆகஸ்ட் 15உ சுதந்திர தினம். அதுவே ஸ்ரீ. அரவிந்தரின் பிறந்த நாள். இன்றைக்கு 92 ஆண்டுகள் முன்னர் அவர் பிறந்தார். இந்திய விடுதலைக்கு அவர் ஆற்றிய தொண்டு மகத்தானது. "பிறர் கண்டறியக் கூடிய புற வாழ்க்கையை நான் நடத்தவில்லை" என்று அவர் கூறியுள்ளார். ஆனால் அதைப்பற்றி நாடறிந்த சில உண்மைகளே அவரது சேவை எத்தன்மையது என்பதைப் புலப்படுத்தும்.

### ஆசாபங்கம்

அரவிந்தர் தோன்றியபோது எங்கும் ஆசாபங்கம் மிகுதியாக இருந்தது. மக்கள் அடிமை நிலைக்குத் தாழ்ந்து விட்டனர். காங்கிரஸ் தேசிய அபிலாஷைகளை சுதந்திர அடிப்படையில் அப்பொழுது உருவாக்க முற்படவில்லை. மனு செய்துகொண்டு இந்தியாவின் வளர்ச்சிக்குப்பிரிட்டிஷ் தயவை நாடுகின்ற நடைமுறைதான் அப்பொழுது சகஜமாக இருந்து வந்தது. பதினான்கு வருஷ காலம் இங்கிலாந்தில் தங்கியிருந்த பிறகு 1893-ல் ஸ்ரீ. அரவிந்தர் தாய்நாடு திரும்பினார். மக்கள் உறக்கமுற்றிருந்தனர். சுதந்திர ஆர்வம் உருப்பெறவில்லை. தேசத்தை விடுவித்தாக வேண்டுமென்ற உணர்வு மங்கிக் கிடந்தது. பிரிட்டிஷ் ஆட்சியின் கீழிருந்து, தொழில்களை வளர்த்து, சமூக சீர்திருத்தங்களைச் செய்து, கல்வியை வளர்த்து, தகுதியைப் பெற்ற பின்னர், பிரிட்டிஷ் பாதுகாப்பின் கீழ் சுயாட்சி பெற வேண்டுமென்ற எண்ணமே இருந்து வந்தது.

### வங்கப் பிரிவினை

இச்சூழ்நிலையில்தான் வங்கப் பிரிவினையை அறிவித்து தேசிய எழுச்சிக்கு ஒரு வைசிராய் காரணமாகிவிட்டார்.

மனுச் செய்துகொண்டிராமல், பேசிக் காலந் தள்ளாமல், செயலில் இறங்குவதற்கான தருணமிது என்று உணர்ந்தார் ஸ்ரீ. அரவிந்தர். 'ஸஞ்ஜீவிதி', 'வந்தே மாதரம்' பத்திரிகைகளில் தேச விடுதலையைப் பிரச்னையாக்கி, அதற்காக நடவடிக்கைகளில் இறங்கும்படி இளைஞர்களை அழைத்தார். வணிகர்களான

ஆங்கிலேயரை வழிக்குக் கொண்டு வருவதற்கு அவர்களுடைய பொருட்களைப் பகிஷ்கரிப்பதுதான் சரியான நடைமுறை என்று அவர் முழக்கினார்.

### தேசிய முறைகள்

பிரிட்டிஷார் நியாய உணர்வு அற்றவர்கள், அவர்களுடைய கல்வி முறை இந்தியாவுக்கு உதவாது. தேசியக் கல்வி முறையும் தேசியத் தொழில் வளர்ச்சியும் முதன்மையானவை என்று அவர் பிரசாரம் செய்தார். நாம் சுதந்திரமடைந்த நிலையில்தான் இவை உருப்பெற முடியும் என்றார். சமூக ஏற்றத் தாழ்வுகளும், மத வேறுபாடுகளும், மொழி வித்தியாசங்களும் தேசிய ஒருமைப்பாட்டுக்கு இடையூறுகளல்ல என்றுசொல்லி, தேசபக்திக் கனலை மூட்டினார். இந்தியாவுக்கு என்று ஒரு தனிப் பணி உண்டு. ஆன்மீகத் துறையில் உலகிற்கே அது தலைப்பீடமாக அமைய வேண்டும். சுதந்திரச் சூழ்நிலையில்தான் அவ்வாறு ஏற்றம் காண முடியும் என்று சொல்லி மக்களை ஒன்றுபடுத்திச் செயலில் ஈடுபடுத்தினார்.

### இளைஞருக்கு வழிகாட்டி

இளைஞர்கள்தாம் பாரத நாட்டின் வருங்கால சிற்பிகள். ஆதலால் அவர்களைப் பக்குவ மனத்தினராக்குவதில் ஸ்ரீ. அரவிந்தர் விசேஷ சிரத்தை காட்டினார். அவர் ஊக்குவித்த உற்சாகத்தினின்று கிளைத்தது, பலாத்கார இயக்கம். இதற்குத் தாம் ஒரு வகையில் காரணம் என்பதை ஸ்ரீ. அரவிந்தர் மறைக்க முயலவேயில்லை. அமைதியான முறைகள் பலிக்கத் தவறியபோது எல்லாம் பயங்கர இயக்கத்தினர் சுறுசுறுப்புக் காட்டினர். அவர்கள் விடுதலை இயக்கத்துக்குக் கொடுத்தவேகத்தைக் குறைத்து மதிப்பிட முடியாது.

எனினும் பலாத்கார இயக்கத்தின் நியதிகளை வரம்புகளை நன்கறிந்தவர் ஸ்ரீ. அரவிந்தர். சாத்துவீக முறைகளையே கையாள வேண்டும் என்று முதலில் திட்டிச் சொன்ன பெருமை ஸ்ரீ. அரவிந்தரைச் சாரும். 1906 முதல் 1910 வரை சுதேசி இயக்க காலத்தில் உரையாற்றியும், எழுதியும், பயனுள்ள உபாயங்களை அவர் உருவாக்கிப் பிரசாரப்படுத்தினார். அவரது பகிஷ்கார யோசனை தான் பிறகு காந்திஜி தலைமையின்கீழ் ஒத்துழையாமையாக உருவெடுத்தது. சாத்துவீக எதிர்ப்பு, இறுதியாக வரிகொடா இயக்கம், அரசாங்க கல்வி ஸ்தலங்களின் பகிஷ்காரம், கோர்ட்டுகளை விலக்கி வியாஜ்ஜியங்களைப் பஞ்சாயத்துப் பைசல் மூலம் முடிவு செய்துகொள்வது ஆகியவை இக்காலத்தில் ஸ்ரீ. அரவிந்தரால் வற்புறுத்தப்பட்டன. விடுதலைக்காக பயனுள்ள வகையில் உழைக்க வேண்டுமாயின் காங்கிரஸ் ஸ்தாபனம் எவ்வாறு அமைக்கப்பெற வேண்டும் என்றும் அவர் திட்டமிட்டிருந்தார்.

### ஆன்மாவுக்கு விடுதலை

பாரத நாட்டின் விடுதலையை அவர் கோரியது, இந்தியாவின் உலகப்பணி, ஆன்மீக மறுமலர்ச்சித் தொண்டு சிறக்க வேண்டுமென்பதற்காகத்தான். இழந்துவிட்ட ஆன்மாவை மீண்டும் பாரத அன்னைக்கு அவர் அளித்தார். அவரது சேவையின் முழுப் பயனும் பின்னால் வெளிப்படுவதாக இருக்கலாம். (ஆங்கிலக் கட்டுரையின் சுருக்கம்).



மன்னர்கள் ஆண்ட காலத்தில் எல்லோரும் பள்ளிக்குப் போகவில்லை; ஒரு சிலர் தான் படித்தார்கள். ஆங்கிலேயர் காலத்திலும் யாவரும் படிக்கவில்லை; படிப்போர் எண்ணிக்கை கூடியது. ஆனால் நாடு விடுதலையடைந்தபின் இந்தப் பதினேழு ஆண்டுகளில் கல்வி வளர்ந்திருக்கும் அளவை நினைத்துப் பார்த்தால் நெஞ்சு பூரிக்கிறது. விரைவில் எல்லோரும் கற்றவர் என்ற நிலை உருவாகிவிடும் என்ற நம்பிக்கை தோன்றுகிறது.

# பெரிய சாதனை

(ஒரு கல்வித்துறை நிபுணர்)

இந்தியா விடுதலை பெற்று ஆண்டுகள் பதினேழு ஆகின்றன. இப்பதினேழு ஆண்டுகளில் நாம் கண்டது என்ன? விழிப்பு, துடிப்பு, கோரிக்கை, முன்னேற்றம் ஆகியவை. இவற்றைப் பல துறைகளிலும் காண்கிறோம்.

வளர்ச்சிகளுக் கெல்லாம் ஆணிவேர், கல்வி. அத்துறையில் நம் நிலையென்ன?

மன்னர்கள் ஆண்ட முற்காலத்தில் மக்கள் அனைவரும் படித்தார்களா? இல்லை. அந்நியர் ஆட்சிக் காலத்திலாவது எல்லோரும் படித்தார்களா? இல்லை. நம் மன்னர்கள் ஆண்ட காலத்தில் சிலர் படித்தார்கள். அந்நியர் ஆட்சியில் மேலும் சிலர் படித்தார்கள். இந்நிலையில்தான் நமக்கு விடுதலை கிடைத்தது. பின்னர் என்ன நடந்தது?

1947 ஆம் ஆண்டு நம் தமிழ் நாட்டில் இருந்த தொடக்க நிலைப் பள்ளிகளின் எண்ணிக்கை 15000. அவற்றில் படித்தவர்கள் 10,55,000 ஆண்கள் 5, 76,000 பெண்கள். பள்ளிகளின் எண்ணிக்கை வளர்ந்தது. வேகமாக அல்ல; மெள்ளவே. 1954-ஆம் ஆண்டில் தொடக்க நிலைப் பள்ளிகளின் எண்ணிக்கை 17000 மட்டுமே. ஏழு ஆண்டுகளில் எண்ணிக்கை உயர்வு 2000. அத்தனை பள்ளிகளிலும் படித்த சிறுவர் 14,24,000 சிறுமியர் 7,78,500.

### அடுத்த கட்டம்

அடுத்த கட்டம் விரைவான வளர்ச்சிக் கட்டம். இன்று ஆரம்பப் பள்ளிகளின் எண்ணிக்கை 30,000-க்கு மேலாகி விட்டது. இன்று, 300 மக்கள் உள்ள சிற்றூரில் கூட ஓர் ஆரம்பப்பள்ளி இருக்கிறது. ஆகவே, சின்னஞ்

சிறு குழந்தைகள் எளிதாகப் போக முடிகிறது. அருகில் பள்ளிக் கூடம் இருப்பது மட்டுமல்ல இங்கே நடுப்பகல் உணவு கிடைக்கிறது. பல பள்ளிகளில் சீருடையும் கிடைக்கிறது. இவை யெல்லாம் பள்ளிக்குச் செல்லத் தூண்டுகோல்களாக உள்ளன. இன்று ஆரம்பப் பள்ளிகளில் படிப்போர் எண்ணிக்கை 30,00,000 (முப்பது இலட்சம்) சிறுவர்கள்; 21,00,000 (இருபத்தொரு இலட்சம்) இவற்றில் மதிய உணவு பெறுவோர் 15 இலட்சத்திற்கு மேல். இலவச சீருடை பெற்றோர் 7 இலட்சம் பேர்கள்.

## உயர்நிலைப் பள்ளிகள்

விரைவான வளர்ச்சியை உயர்நிலைப்பள்ளிகளிலும் காணலாம். 1947-ல் 471 உயர்நிலைப்பள்ளிகள் இருந்தன. அவை 1954-ல் 764 ஆக உயர்ந்தன. இன்று, 2100 ஆக உயர்ந்துள்ளன. சுதந்திரம் பெற்றபோது உயர்நிலைப்பள்ளிகளில் படித்தவர்கள் 1,89,000 ஆண்கள். 47,000 பெண்கள். 1954-ல் உயர்நிலைப்பள்ளிகளில் படித்தவர் 3 இலட்சத்து 8 ஆயிரம் ஆண்கள், 83 ஆயிரம் பெண்கள். இன்று அவற்றில் படிப்போர் எண்ணிக்கை 85 லட்சம் ஆண்கள்; 35 லட்சம் பெண்கள்.

## கல்விப் புரட்சி

இன்று தமிழ்நாட்டில் ஓர் கல்விப் புரட்சி நடந்துள்ளது. பதினோராவது வகுப்புவரை எல்லா சாதியினருக்கும் எல்லா சமயத்தவருக்கும் இலவசக் கல்வி உண்டு. வருவாய் வரம்புகூட இல்லாமல் எல்லோருக்கும் உயர்நிலைப்பள்ளி முடிய இலவசக் கல்வி என்பது இவ்வாண்டு தான் நடைமுறைக்கு வந்துள்ளது. இதன் முழுப்பலனையும் சில ஆண்டுகளில் காணலாம்.

## கல்லூரிகள்

அடுத்து கல்லூரிக் கல்வி நிலையைப் பார்ப்போம். 1947-ல் 24 கலை விஞ்ஞானக் கல்லூரிகள் இருந்தன. அவற்றில் 15,000 ஆண்களும் 1200 பெண்களும் படித்தனர். 1954-ல் அவற்றின் எண்ணிக்கை 44 ஆயிற்று. அப்போது அவற்றில் 28,000 ஆண்களும், 4,000 பெண்களும் படித்தனர். இன்றே 80 கல்லூரிகள் உள்ளன. அவற்றில் 51,000 ஆண்களும் 14,000 பெண்களும் படிக்கிறார்கள். கல்லூரியில் படிக்கும் பெண்கள் எண்ணிக்கை 12 பங்காக வளர்ந்துள்ளதைப் பார்த்து மகிழலாம்.

1947-ல் 450 பட்டதாரிகளே ஆசிரியப் பயிற்சி பெற்று வந்தனர். இன்றே 1800 பட்டதாரிகள் ஆசிரியப் பயிற்சி பெறுகின்றனர்.

தொடக்கநிலைப் பள்ளிகளுக்கான ஆசிரியப் பயிற்சியிலும் முன்னேற்றத்தைக் காண்கிறோம். சுதந்திரம் பெற்றபோது 7,200 பேர்கள் இந்நிலைப் பயிற்சி பெற்றார்கள். இப்போது 20,000 பேர்கள் பயிற்சி பெறுகிறார்கள்.

## பெரிய சாதனை

சுதந்திரம் பெறுவதற்குமுன் ஒரு நூற்றாண்டு பாடுபட்டு அடைந்த சாதனைகளைவிடப் பெரிய சாதனைகளை சென்ற பதினேழு ஆண்டுகளில் பெற்றுவிட்டோம். 'ஏழைக்கும் கல்வி; பெருமளவு கல்வி' என்ற நன்னிலையை நோக்கிப் பெருநடை போடுகிறோம். வழியோ நீண்ட வழி. வழியிலே மயங்கி நிற்கலாமா?

# சிறுவர் பகுதி





## வட்ட நிலா

வட்ட நிலா! வட்ட நிலா!
வானத்திலே பார்!
தட்டு நிலா! தட்டு நிலா!
தவழுவதைப் பார்!

விந்தை நிலா! விந்தை நிலா!
துள்ளுவதைப் பார்!
வெள்ளி நிலா! உள்ள மதை
அள்ளுவதைப் பார்!

பந்து நிலா! பந்து நிலா!
பதுங்குவதைப் பார்!
பட்டு நிலா! மெல்ல எட்டிப்
பார்க்கிறதைப் பார்!

—'புவனை கலைச்செழியன்'











# அழகி அந்திரோ மீடா

கிரேக்க நாட்டுக்கு அருகில் உள்ள ஒரு தீவில் கசியோப்பியா என்று ஒரு பெண்மணி இருந்தாள். அவள் மிக மிக அழகானவள். அவள் தன் அழகைப் பற்றி மிகவும் தற்பெருமை கொண்டிருந்தாள். ஒருநாள் அவள், கடல் தேவதைகளில் கூட தன்னைக் காட்டிலும் அழகான தேவதை ஒன்று கூட இல்லை யென்று தற்புகழ்ச்சியாகப் பேசினுள். கடல் தேவதைகள் உள்ளபடி மிகவும் அழகானவை. அவற்ருல், சாதாரண மனிதப் பெண்ணுகிய கசியோப்பியா தன்னேடு தங்களை ஒப்பிட்டுப் பேசுவதைக் கேட்டுப் பொறுத்துக் கொண்டிருக்க முடியவில்லை. அவற்றிற்குப் பெரும் கோபம் ஏற்பட்டது.

அவை கசியோப்பியாவைத் தண்டிப்பதற்காகக் கடல் நாகம் ஒன்றை அவள் தங்கி இருந்த தீவிற்கு அனுப்பின. அந்த நாகம் தீவுமக்களுக்குப் பெரும் தொந்தர வளித்தது. அந்தத் தீவு மக்கள் அனைவரும் அந்த நாகத்திற்குப் பயந்து கதிகலங்கிப் போனுர்கள். கடைசியில் போய் சாமியழைத்துக் கேட்கலானுர்கள்.

அந்த நாட்களில் கோயில்களில் சில சாமியார்கள் இருப்பார்கள். அவர்கள் மூலம் தெய்வங்கள் பேசும் என்று மக்கள் நம்பினுர்கள். தெய்வங்களின் கருத்தை ய்றிவதற்கு, அவற்றிற்கு ஏதாவது பலி அல்லது தத்தம் கொடுப்பதாகச் சொல்லி வேண்டிக்கொள்வார்கள், அதன் பேரில் சாமியார்கள் மூலம் தெய்வங்கள் எச்சரிக்கை அல்லது ஆலோசனைகள் கூறும்.

அந்தத் தீவு மக்கள் கோயிலில் சென்று சாமியழைத்துக் கேட்ட போது, சாமியார் மூலம் தெய்வங்கள் கீழ்க்கண்டவாறு கூறின: "கசியோப்பியாவின் தற்பெருமை காரணமாகவே இந்தத் தொந்தரவு ஏற்பட்டது, அவள் தன் மகள் அந்திரோமீடாவை அந்தக் கடல் நாகத்திற்குச் கொடுத்து விட்டால் கடல் தேவதைகள் மன அமைதி யடையும். அதன் பிறகு எவ்விதமான தொந்தரவும் ஏற்படாது."

இந்த மொழிகளைக் கேட்டுத் தீவுமக்கள் பெருந்துயருற்ருர்கள். சிறுமி அந்திரோ. மீடா மிகமிக நல்ல குணங்களுடையவள். அந்தத் தீவு மக்கள் எல்லோருடைய அன்பையும் பெற்றவள். தன் தாயான கசியோப்பியாவைக் காட்டிலும் மிக அழகுடையவள். தாயின் குற்றத்திற்காக மகள் பலியாவதை அவர்கள் விரும்பவில்லை.

கசியோப்பியா தெய்வமொழி பற்றிக் கேள்விப்பட்டபோது அதை நம்பவில்லை. அவள் கோயிலுக்கு ஓடோடிச் சென்று, நெடுஞ்சாண்கிடையாக விழுந்து, மகளைக் கடல் நாகத்திற்குப் பலி கொடுக்கவேண்டு மென்ற அந்

தக் கட்டளையை நிறுத்திவிட்டால் தான் எதை வேண்டுமானாலும் தத்தம் புரியக் காத்திருப்பதாகக் கூறி வேண்டினாள். ஆனால், மீண்டும் இரக்க மற்ற அதே தெய்வ மொழிதான் பிறந்தது. ''இந்த ஊரும் ஊர் மக்களும் நன்றாக வாழ வேண்டும் என்று நீ விரும்பினால், உன் மகளைக் கொடுத்துத்தான் ஆக வேண்டும்'' என்று தெய்வகட்டளை பிறந்தது.

கசியோப்பியா துயரத்தோடு தன் வீட்டுக்குத் திரும்பி வந்து தன் அறைக்கதவைத் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டாள். தன் மகள் முகத்தில் விழிக்கவே அவளுக்குப் பயமாக இருந்தது. அப்போதுதான் அவள் தன் தற்பெருமையினால் ஏற்பட்ட துன்பத்தை யுணர்ந்து வருந்தினாள்.

இதற்கிடையில் அத்தத் தீவு மக்கள் எல்லோரும் கூடி அந்திரோமீடாவைக் கடற்கரைக்கு அழைத்துச் சென்றார்கள். எல்லோருக்கும் மனவேதனையாக இருந்த போதிலும், தெய்வ கட்டளையை மீற முடியாமல் அவளைச் சங்கிலியில் கட்டிச் கடலோரமாக இருந்த செங்குத்துப் பாறையொன்றில் தொங்க விட்டார்கள். கடல்நாகம் வந்து அந்த அழகியை விழுங்கும் நேரத்தை எதிர்ப்பார்த்துக் காத்திருந்தார்கள்.

அந்திரோமீடாவிற்கு உள்ளுக்குள் நடுக்கம் அதிகமாக இருந்






தது, ஆனல் தன் தாயின் துயரத்தைக் குறைப்பதற்காகச் சிறிதும் பயமில்லாதவள் போலவும், உயிரைப் பற்றிக் கவலைப் படாதவள் போலவும், நடந்து கொண்டாள். ஊர் மக்கள் அவள் துணிச்சலைக் கண்டு வியந்தபடி, திகைப்புடன் நின்று கொண்டிருந்தார்கள்.

கடல் நீரின் மேலே திடீரென்று கருப்பாக ஏதோ ஒன்று தோன்றியது. அது அந்தப் பயங்கரமான கடல்நாகம் தான். தன் வால்புறத்தால் நீரை யடித்துக் கொண்டு அது மெல்ல மெல்லக் கரையை நோக்கி வந்து கொண்டிருந்தது.

அந்திரோமீடா தொங்கிக் கொண்டிருந்த பாறையை அது அணுகிவிட்டது. அதைக் கண்டதும் வீலென்று பயங்கரமாக அவள் ஒரு கூச்சலிட்டாள். நடக்கப் போகும் பயங்கரக் காட்சியைக் காணப் பொறுக்காதவர்களாய் மக்கள் தங்கள் கண்களை மூடிக் கொண்டார்கள்.

அப்போது ஏதோ ஒன்று கரிய மேகம் போன்று வானத்தில் வந்து கொண்டிருந்தது. காற்றில் அம்பு போல் பறந்து வந்து கொண்டிருந்த அது கடல் நாகத்தை நெருங்கியது. வளைந்த கூரிய வாள் ஒன்று கடல் நாகத்தின் கழுத்தின் பதிந்தது.

பெர்சியஸ் என்ற வீரன்தான் அப்படிப் பறந்து வந்து கொண்டிருந்தான். அவன் மெடுசா என்ற அரக்கியைக் கொன்றுவிட்டு மெர்க்குரித் தேவனின் இறக்கை முளைத்த காற்செருப்புகளில் ஏறிப் பறந்து வந்து கொண்டிருந்தான். வரும் வழியில் ஓர் அபலைப் பெண் கடல் நாகத்திற்குப் பலியாவதைத் தடுக்கவே அவன் குறுக்கிட்டான்.

அவனுக்கும் அந்தப் பறவை நாகத்திற்கும் சிறிது நேரம் பயங்கர மான சண்டை நடந்தது. கடைசியில் அவன் தன் வளை கத்

தியால் அதன் உடலைக் கிழித்து எறிந்தான். அது கடலில் உயிரற்ற பிணமாக மிதந்தது. அந்தத் திடீர் வீரனின் வெற்றியைக் கண்டு மக்கள் பெரிய ஆரவாரம் எழுப்பினார்கள். அவன் அந்திரோமீடாவின் கட்டுக்களை அவிழ்த்துவிட்டு அவள் பெற்றோரிடம் அழைத்துச் சென்றான்.

அவன் சில நாட்கள் கசியோப்பியாவின் விருந்தினனாகத் தங்கினான். அந்திரோமீடாவின் அழகும் குணங்களும் அவனைக் கவர்ந்த படியால், தனக்குத் திருமணம் செய்து தரும்படி கேட்டான். அந்திரோமீடாவும் அவனை விரும்பியதால், உடனே திருமண ஏற்பாடுகள் நடந்தன. திருமண விழாவிற்கு அந்தத் தீவு மக்கள் எல்லோரும் அழைக்கப் பெற்றிருந்தார்கள்.

சில நாட்களுக்குமுன் அந்தத் தீவில் இருந்த ஒரு முரட்டுக் கிழவன் அந்திரோமீடாவைத் தனக்குத் திருமணம் செய்து தர வேண்டுமென்று கேட்டிருந்தான். அவனுக்குப் பயந்து பெற்றோர்கள் மறுப்புரைக்காமல் இருந்தார்கள்.

திருமண வீட்டில் அந்தக் கிழவன் தன்படை வீரர்களுடன் நுழைந்து அவள் தனக்குத்தான் உரியவளென்று வாதிட்டான். அவளைத் தராவிட்டால் பெர்சியசைக் கொன்று விடுவதாகக் கூறி மிரட்டினான்.

“அந்திரோமீடா இப்போது என் மனைவி, நீ அவளைக் கேட்பது பொருத்த மற்றது” என்று பெர்சியஸ் கூறினான்.

அவன் இதையெல்லாம் கேட்காமல் பெர்சியசை நோக்கி ஓடி வந்தான். திருமணம் சச்சரவில் முடியப் போகிறதே என்று எல்லோரும் பயந்து கொண்டிருந்தார்கள். அப்போது ஓடிவந்த அந்த முரட்டுக் கிழவன் பாதி வழியில் எதையோ வியப்புடன் பார்த்து அப்படியே நின்றான். ஆடாமல் அசையாமல் நின்றவன் அப்படியே கல்லாகி விட்டான். அரக்கி மெடுசாவின் முகத்தைப் பார்த்தவர்கள் கல்லாகி விடுவார்கள். பெர்சியஸ் கொண்டு வந்த தலையைப் பார்த்துத் தான் கிழவன் கல்லாகிவிட்டான். அவன் கல்லான உடன் படைவீரர்கள் பீதியுடன் திரும்பி ஓடிவிட்டார்கள். திருமணம் சிறப்பாக முடிந்தது. பெர்சியஸ் அந்திரோமீடோவைத் தன்னுடையதீவிற்கு அழைத்துச் சென்று அவளுடன் இன்பமாக வாழ்ந்தான்.



ஒருவனின் வாய்ப் பேச்சைக் காட்டிலும் மௌனம் அதிக எண்ணங்களைப் பிரதிபலிக்கும்.

—ஷேக்ஸ்பியர்

பிறர் உன்னிடம் எவ்வாறு நடக்க வேண்டும் என்று நீ விரும்புவாயோ அவ்வாறே பிறரிடம் நட.

—செஸ்டர் ஃபீல்டு

காந்திஜீ கனவு கண்ட 'ராமராஜ்யம்' கிராம சுயராஜ்யமாகி, பஞ்சாயத்து ராஜ்யமாக உருவாகி யுள்ளதை, அடிஷனல் அபிவிருத்தித்துறை கமிஷனராகப் பணியாற்றி ஓய்வு பெற்றுள்ள திரு. கோ. வெங்கடாசலபதி இக்கட்டுரையில் விவரிக்கிருர்.



# பஞ்சாயத்து ராஜ்யம்

கோ.வெங்கடாசலபதி

இந்தியா சுயராஜ்யம் பெற்ற பிறகு அது ராமராஜ்யமாக ஆக வேண்டுமென்று காந்தியடிகள் விரும்பினுர் என்பதை உலகம் அறியும். 'ராம ராஜ்யம்' என்ருல் என்ன? என்று பத்திரிகை நிருபர்களும், மற்றவர்களும் கேட்ட கேள்விகளுக்கு காந்தியடிகள் பல முறை தெளிவாகப் பதில் சொல்லி யிருக்கிருர்.

## லட்சிய ராஜ்யம்

காந்தியடிகளுடைய வாக்கு மூலமாக ராமராஜ்யம் என்பதைப் பார்ப்போமாளுல், அது இறைவனுடைய ஏகாதிபத்திய ஆட்சி என்று சொல்லலாம். சாதாரண பாஷையில் சொல்லுவதாயிருந்தால் சர்வ ஜனங்களின் சம்மதம் பெற்று நடை பெறக்கூடிய பூரண ஜனநாயக ஆட்சி முறை என்று சொல்லலாம். அந்த ராம ராஜ்யத்தில் சொத்துரிமையிலும், சுக வாழ்க்கையிலும் ஏற்றத் தாழ்வு ஏதும் இராது. மக்கள் எல்லோரும் மன்னர்களாகி விடுவார்கள். அங்கு பால் ,வேற்றுமை இன வேற்றுமை என்று எதுவும் இல்லை. ஜாதி மதப் பூசல் இராது என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற நியதி இருந்து வரும்.எழுதுவதில், பேசுவதில், இறைவனைத் தொழுவதில், எல்லோருக்கும் சுதந்திரம் இருக்கும். எளிதாகவும் விரைவாகவும் எல்லோருக்கும் நீதி கிடைக்கும். இதைத்தான் 'ராம ராஜ்யம்' என்றும் 'சர்வோதய சமுதாயம்' என்றும் காந்தியடிகள் சொல்லியும் எழுதியும் வந்தார். இத்தகைய ஒப்பில்லாததும், புதுமையானதுமான சமுதாய அமைப்பு ஏற்பட வேண்டுமாளுல் மக்கள் சிறுசிறு கூட்டமாக அதாவது கிராம சமுதாயமாக வாழ வேண்டும். தத்தம் கடமைகளைத் தாமே அறிந்து செய்பவர்களாகவும், தங்களுடைய காரியங்களைத் தாங்களே நிர்வகித்துக் கொள்ளுகின்ற வாய்ப்பும், வசதியும் திறமையும் பெற்றவர்களாகவும் இருக்க வேண்டும் என்பது காந்தியடிகளின் கருத்து. சுருங்கக் கூறின் மனித சமுதாயம் பரிபூரண ஜனநாயக சோஷலிஸமாகவேண்டும்.

அதற்குரிய வழி ராஜ்யம் பரவல் முறையில், பஞ்சாயத்து ராஜ்யங்களாகப் பரிணமிப்பதேயாகும் என்பதை ஐயத்திற் கிடமின்றிப் பலமுறை சொல்லி வந்துள்ளார். இந்திய சுயராஜ்யம், கிராம சுய ராஜ்யமாக ஆனலன்றி, அதாவது பஞ்சாயத்து ராஜ்யமாக ஆனல்தான் இந்தியாவிலுள்ள கோடானுகோடி கிராமங்களுக்கு க்ஷேமமுண்டு; விமோசனமுண்டு என்பதைப் பற்றி பல முறை பேசியும் எழுதியும் வந்துள்ளார். 'கிராம ராஜ்யம்' என்ருல் என்ன? இந்தக் கேள்வியை காந்தியடிகள் உயிரோடிருக்கும் போது பல பேர்கள் கேட்டிருக்கிருர்கள். இந்தக் கேள்விக்கு காந்தியடிகள் பலமுறை விடையளித்திருக்கிருர். ஐயன் காந்தியடிகள் திருவாய்மொழி மூலம் கிராம சுயராஜ்ய விளக்கத்தைக் கேட்போம்.

### கிராமக் குடியரசு

"கிராம சுய ராஜ்யம் என்ருல் அது ஒரு பரிபூரண குடியரசுதான் என்பது என்னுடைய கருத்து. ஜீவாதாரமான தேவைக்கு அது அக்கம் பக்கத்துப் பிரதேசங்களை நாடியிருக்காது. ஆயினும் வெளியூர்களை நாடிப் பெற வேண்டிய தேவைகள் ஏதேனும் இருப்பின் அந்த உறவு பரஸ்பரத் தன்மை வாய்ந்ததாக இருக்கும். ஒவ்வொரு கிராமமும் தனக்கு வேண்டிய உணவுப் பொருள்களையும், ஆடைகளுக்கு வேண்டிய பருத்தியையும் உள்ளூரிலேயே உற்பத்தி செய்து கொள்ளும். ஆடு மாடுகளுக்கு வேண்டிய மேய்ச்சல் நிலங்கள் தனியாக இருக்கும். பெரியவர்கள் உல்லாசமாகப் பொழுது போக்க இடமிருக்கும். விளையாட்டு மைதானங்களும் இருக்கும். இதற்கெல்லாம் வேண்டியது தவிர மீதி இருக்கும் நிலங்களில் உபயோகமுள்ள பணம் தரும் பயிர்களை (கஞ்சா, புகையிலை, அபினி முதலியவை தவிர) பயிரிடலாம். கிராமத்திற்கு ஒரு நாடகமேடை, பள்ளிக் கூடம், பிரசங்க மண்டபம் எல்லாம் இருக்கும். கிணறுகள், குளங்கள் இவைகளை எப்படி உபயோகிக்க வேண்டும் என்று கட்டுப்பாடு செய்வதின் மூலம் சுத்தமான தண்ணீருக்கு ஏற்பாடு செய்யப்படும்.

ஆதாரக் கல்வித் திட்டத்தின் கடைசி வகுப்பு வரை எல்லோரும் படித்தாக வேண்டுமென்ற கட்டாயக் கல்விமுறை அமுலிலிருக்கும். கூடுமானவரையில் எல்லாக் காரியங்களும் கூட்டுறவு, பரஸ்பர ஒத்துழைப்பு முறையிலேயே நடந்தேறும். தற்காலத்தில் நிலவுகின்ற படிப்படியான பல ரகத் தீண்டாமை முறையை வளர்க்கும் ஜாதிப்பாகுபாடு இருக்காது.

சத்தியாக்கிரகம், ஒத்துழையாமை என்ற ஆயுதங்களுடன் கூடிய அகிம்சையே கிராம சமூகத்தின் அதிகாரக் கருவியாக இருக்கும். கிராமக் காவல் வேலை கட்டாய முறையாக இருக்கும். ஒரு ஜாபிதா வைத்துக் கொண்டு, ஒவ்வொருவருக்கும் சிறிது காலம் கிராமக்காவல் வேலைகளை ஏற்றுக் கொள்ளும்படி ஒரு திட்டம் வகுக்கலாம்.

### பஞ்சாயத்து நிர்வாகம்

கிராம ராஜ்யம் பஞ்சாயத்து மூலமாக நடைபெறும். குறைந்த பட்ச யோக்கியதாம்சங்களைக் கொண்ட வயது வந்த ஆண்களும், பெண்களும் வருடமொரு முறை கூடி, பஞ்சாயத்துக்கு ஐந்து பேர்களைத் தேர்ந்தெடுப்பார்கள். இந்தப் பஞ்சாயத்து கிராம நிர்வாகங்களை நடத்தும். கிராம நிர்வாகத்திற்குத் தேவையான எல்லா அதிகாரங்களும் இந்தப் பஞ்சாயத்தினிடம் இருக்கும். சாதாரணமாக நாம் இப்

பொழுது பார்க்கின்ற தண்டனை முறைகள் எதுவும் இருக்காதாகையால், சட்டம் இயற்றல், நீதி பரிபாலனம், நிர்வாகம் இம்மூன்றும் பஞ்சாயத்தினிடம் இருக்கும்.

இது தனி மனித சுதந்திரத்தை ஆதாரமாகக் கொண்ட ஜனநாயகம். தனி மனிதனே தன்னை ஆளும் சர்க்காரை நிர்ணயித்துக் கொள்ளுகிறான். அவனையும் அவனது அரசையும் ஆள்வது அகிம்சா தர்மமல்லவா? எனவே அவனும், அவனது கிராமமும் ஒன்று பட்டால், உலகத்தையே எதிர்த்து நிற்க முடியும். ஏனென்றால் தன்னுடைய மரியாதைக்காகவும், தன்னுடைய கிராமத்தின் மரியாதைக்காகவும் தன் உயிரையும் தியாகம் செய்ய வேண்டுமென்பதே ஒவ்வொரு கிராமவாசியும் மேற்கொள்ள வேண்டிய வாழ்க்கைத் தத்துவம்.

காந்தியடிகள் மேலே வரைந்துள்ளது ஒரு கிராம சுய ராஜ்யத்தின் சித்திரம் அல்லது வருணனை எனலாம். பாரத தேசம் உலகம் இதுவரை கண்டிராததும், ஒப்பிலாததும் புதுமையானதுமான ஒரு சமுதாயமாக நிர்மாணம் செய்ய விரும்புபவர்கள் இதை எப்பொழுதும் மறந்து விடாமல் மனதிருத்தி சிந்திக்கவும், செயல்படுத்தவும் வேண்டிய புதிய சமுதாய சித்திரம் இதுவேயாகும்.

## காந்திக்கு ஒரு நேரு

புத்தருக்கு ஒரு அசோகன் போல ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சருக்கு ஒரு விவேகானந்தர் போல, காந்திக்கு ஒரு நேருவாக அவதரித்து இந்திய மக்களின் உள்ளங் கவர்ந்தவராக, சுதந்திர இந்தியாவின் ஒப்பற்ற சிற்பியாகவும், பாதுகாவலராகவும் நேற்றுவரை நம்முடன் வாழ்ந்த பண்டித ஜவாஹர்லால் நேரு பஞ்சாயத்து ராஜ்யம் பற்றி நினைத்தவற்றை சுதந்திர தினமாகிய இன்றேனும் நாம் அனைவரும் நினைவிலிருத்தக் கடமைப் பட்டுள்ளோம்.

(உலகம் சாந்தியும், சமாதானமும் நிறைந்த இடமாக வேண்டும். அதற்கு பாரதம் புதியதொரு மார்க்கத்தைக் காட்ட வேண்டும் என்று அல்லும் பகலும் எண்ணி வந்த பண்டித ஜவஹர்லால் நேருவின் அந்திம மந்திரச் சொற்கள் ஜனநாயகமும், சோஷலிஸமும் என்பதை நம்மில் அறியாதார் யார்?)

## ஜனநாயக சோஷலிஸம்

உலகமே ஜனநாயக சோஷலிஸமாக வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்த தலைவர்களின் தலைவர் பண்டித ஜவஹர்லால் நேரு. பஞ்சாயத்துக்களைப் பற்றி 1962 ஆகஸ்டு மூன்றாம் தேதி மாநில சமுதாய நலத் திட்ட மந்திரிகளின் வருடாந்திரக் கூட்டத்தில் கூறியதாவது: ''அரைக் கூரை வீடு என்பது இருக்க முடியாது. மக்களை நீங்கள் முழுமையும் நம்பத்தான் வேண்டும்; அல்லது முழுதும் நம்பாதிருங்கள்; அரை குறையாக நம்புதல் ஒரு லட்சியத்தையும் நிறைவேற்றாது. அவர்கள் வளருவதற்கு அதிகாரம் முழுவதும் அவர்களிடம் தான் இருக்க வேண்டும். அரசாங்கக் கட்டுப்பாடும் தலையீடும் கூடாது'' மேலும் ஜனநாயகத்தின் நோக்கத்தையும் லட்சியத்தையும், பரவல்முறை ஜனநாயகத்தின் முக்கியத்துவத்தையும் பற்றிப் பேசும் போது, ''ஜன நாயகத்தின் நோக்கம் தனிமனிதனின் வளர்ச்சியாகும். நாம் எந்தக் கொள்கையைக் கொண்டிருந்தாலும், தனி மனித வளர்ச்சிக்குத் தடையாக உள்ளதை ஏற்றுக் கொள்ளக் கூடாது. தனி மனித வளர்ச்சி, தன்னிறைவு, படைப்புத்

திறன், ஆகியவைகள் வளர்ப்ப தற்கு வேண்டிய ஏற்பாடுகளை நாம் செய்ய வேண்டும். இதற்கு ஏற்றவழி தனி மனிதனைப் பொறுப் புள்ளவனுக ஆக்குவதே. பஞ்சாயத்து ராஜ்யம் அத்தகைய பொறுப்புகளை அளிக்கும் என நம்புகிறேன்" என்ருர். அவர் மேலும் கூறும்போது:-

### ஜனநாயகம் என்பதென்ன?

''ஜனநாயகம் என்பது பாராளுமன்றமோ அல்லது ராஜ்யங்களோ அல்ல; அல்லது மக்கள் டில்லி லோகசபைக்கும், ராஜ்ய சட்டசபைகளுக்கும், உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதினுல் மட்டும், உண்மை ஜன நாயகம் செயல்பட்டு விட்டது என்று கருத முடியாது. ஜன நாயகத்தின் பாதையிலேயே அது ஓர் அடியாகுமே தவிர ஜனநாயகத்தின் உண்மை உருவமாகி விட முடியாது. ஒவ்வொரு மனிதனுடைய இதயத்திலும் ஒரு வேகத்தை ஊக்குவிக்கும் சக்தியே ஜன நாயகம். அந்த வேகம் அவன் தனது உரிமைகளை பெற்றுக் கொள்ளவும், கடமைகளை நிறைவேற்றவும் தூண்ட வேண்டும். பஞ்சாயத்து ராஜ்யம் இம்மாதிரியான ஒரு தூண்டு கோலாக அமையும். இந்தியாவிலுள்ள ஒவ்வொரு தனி மனிதனும் பிரதம மந்திரியாகும் தகுதியைப் பெற வேண்டும் என்பதே என் அவா'' என்ருர். ஜவஹரின் இந்தக் கனவு எவ்வளவு உயர்ந்தது-மேலானது. 'மே' மாதம் 27-ம் தேதியுடன் இந்தக் கனவு மறைந்து விடக் கூடாது.

### வழி என்ன?

எந்தத் தலைவர்களின் விடா முயற்சியால் ஆகஸ்ட் 15-ந் தேதி பாரத நாட்டிற்கு விடுதலை கிடைத்ததோ அந்த இருபெரும் தலைவர்களின் லட்சியமாகிய பரிபூரண ஜனநாயக சோஷலிஸமே இன்று பாரத தேசத்தின் லட்சியமாக இந்திய மக்கள் ஒப்புக் கொண்டிருக்கிருர்கள். தேசத்தின் இப் புதிய ஜன நாயக சோஷலிஸ லட்சியத்தை நடை முறையில் அடைவதற்குரிய மார்க்கம் எது வென்பதையும், நம் தலைவர்கள் எடுத்துக் காட்டி விட்டுச் சென்றுள்ளார்கள். அவர்கள் காட்டிய அந்த பஞ்சாயத்து ராஜ்யம் என்னும் ராஜ பாட்டையின் மூலமாக நடந்து, புதிய பாரத சமுதாயத்தை நிர்மாணிப்பதற்குச் சுதந்திர தினத்தில் நம்மை மீண்டும் அர்ப்பணித்துக் கொள்ளுவோமாக.

### தமிழ் நாட்டில்

தமிழ் நாட்டைப் பொறுத்த வரை பஞ்சாயத்து ராஜ்யங்கள் நல்ல விதமாக ஆரம்பமாகி யிருக்கின்றன என்று சொல்லலாம். இந்த ராஜ்யம் 375 வட்டாரங்களாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு வட்டாரத்திலும் ஒரு பஞ்சாயத்து யூனியன் அமைக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியனிலும் சுமார் 40 கிராமப் பஞ்சாயத்துகள் இருந்து வருகின்றன. இந்த நாற்பது பஞ்சாயத்து தலைவர்களும் அந்தந்தப் பஞ்சாயத்து யூனியன் அங்கத்தினர்கள் தாம். ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியனும் அந்த வட்டார எல்லைக்குள் உள்ள கிராமங்களின் அபிவிருத்தி வேலைகளுக்குப் பொறுப்பேற்றிருக்கிறது. முக்கியமாக விவசாயம், கால் நடை பராமரிப்பு, கல்வி, சுகாதாரம், சிறு கைத்தொழில்கள், வேலை இல்லாதவர்களுக்கு வேலை வாய்ப்பு தருவது ஆகிய இந்தப் பணிகளை மேற் கொண்டிருக்கிறது. இந்த வேலைகளைச் செய்வதற்காக ஒவ்வொரு யூனியனுக்கும் வருஷம் ஒன்றுக்கு சுமார் 10 லட்ச ரூபாய் செலவினங்களுக்காக ஒதுக்கப்

பட்டிருக்கிறது. இந்த அபி விருத்தி வேலைகளுக்குரிய யோசனைகள் செய்வதற்காகப் பயிற்சி பெற்ற அலுவலர்களும் நியமிக்கப் பட்டிருக்கிறார்கள். என்னென்ன இனங்களுக்கு எவ்வளவு செலவு செய்ய வேண்டுமென்ற நியதியும், யார் யாருடைய அங்கீகாரத்தைப் பெற வேண்டுமென்ற விதிகளும் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன. பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் அனுமதியோ அங்கீகாரமோ இல்லாமல் யாருக்கும் தம் இஷ்டம் போல் பணத்தைச் செலவிடுவதற்கு அதிகாரமில்லை. சுருங்கக் கூறின் ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியனும் ஒரு சிறிய ராஜ்யஅமைப்பு போலஏற்பாடாகியிருக்கிறது. சட்ட ரீதியாக இந்தப் பஞ்சாயத்து யூனியன்கள் என்னென்ன வேலைகள் செய்ய வேண்டுமென்று சட்டமும் இயற்றப் பட்டிருக்கிறது. அத்துடன் ராஜ்ய சர்க்கார் செய்ய வேண்டிய வேலைகளைச் சர்க்காரின் ஏஜண்டுகளாக இருந்து, பஞ்சாயத்து யூனியன்கள் வேலைகளைச் செய்து வருவதற்கு வேண்டிய வாய்ப்பும், வசதியும் செய்து தரப் பட்டிருக்கிறது. தேர்ந்தெடுக்கப் பட்ட பஞ்சாயத்து சபைத் தலைவர்களுக்கு, யூனியன் சேர்மன்களுக்கும், சர்க்காரால் நியமிக்கப்பட்டுள்ள கமிஷனர்களுக்கும், இதர அலுவலர்களுக்கும் நல்ல விதமான ஒரு தொடர்பு நம்முடைய ராஜ்யத்தில் இருந்து வருகிறது.

## இன்னும் அதிகப் பொறுப்பு

பஞ்சாயத்து யூனியன்களை நம்பி இன்னும் அதிகமான பொறுப்புக்களையும் நிதி வசதியையும், ராஜ்ய சர்க்கார் செய்து கொடுப்பார்களானால் உணவுப் பிரச்னையையும், மற்றப் பிரச்னைகளையும் சுமுகமாகத் தீர்த்து, ராஜ்ய சர்க்காருக்கு எந்த விதமான சிரமமும் இல்லாமல், பஞ்சாயத்து யூனியன்கள் திறம்பட வேலை செய்யும் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகம் இல்லை.

ஜனநாயக சோஷலிஸம் நம்முடைய தேசத்தில் உருவாக வேண்டுமென்று நினைப்பவர்கள் எல்லோரும் பஞ்சாயத்துக்களும், பஞ்சாயத்து யூனியன்களும் சக்தி வாய்ந்த ஸ்தாபனங்களாக மாறி இன்று செய்வதை விட இன்னும் பல மடங்கு அதிகமாக நல்ல முறையில் வேலை செய்வதற்கு வேண்டிய ஆதரவு தரக்கடமைப் பட்டவர்கள் ஆவார்கள். அது போல கிராமவாசிகள் எல்லோரும் பஞ்சாயத்துகளைத் திறம்பட நடத்தி தேசத்திற்கு வேண்டும் பொருள் உற்பத்தியை அதிக அளவில் செய்து, பஞ்சாயத்துக்களுக்குள் சண்டை சச்சரவுகள் இல்லாமல் ஒவ்வொரு பஞ்சாயத்தையும், பஞ்சாயத்து யூனியனையும் இந்தியக் குடியரசின் ஜீவனுள்ள அங்கங்களாக நினைத்து வேலை செய்தால், ஜனநாயக சோஷலிஸம் நம் நாட்டில் நல்ல முறையில் உருவாக உதவி செய்தவர்கள் ஆவார்கள். அது மட்டுமல்ல; நல்ல பஞ்சாயத்துக்களை இந்த நாட்டில் தோற்றுவிப்பதுதான் காந்தியடிகளுக்கும், அண்மையில் நம்மை விட்டுப் பிரிந்த தலைவர் ஜவாஹர்லால் நேரு அவர்களுக்கும் செலுத்தக் கூடியஅன்பு நிறைந்த காணிக்கையாகும்.

இந்த நற்பணியை நல்ல முறையில் செய்வதற்கு நம்மை அர்ப்பணித்துக் கொள்வோமாக!

(நன்றி-தினமணி)






விக்டர் ஹ்யூகோ (1802—1885) உலகப் புகழ்பெற்ற பிரஞ்சு நாவலாசிரியர்; கவிஞர். அந்தஸ்துள்ள குடும்பத்தில் பிறந்த அவர் இருபதாவது வயதிலே தமது முதற் கவிதைத் தொகுதியை வெளியிட்டார். அப்போது அவருக்கு ராஜ வம்சத்திடம் மிகுந்த ஈடுபாடு, எனவே ராஜ வம்சமும் அவரைப் பெருங் கவிஞராக மதித்தது. எனினும் அவரது ராஜ விசுவாசம் சிறுகச் சிறுக மறைந்து, அவரது மனத்தில் ஜனநாயகக் கருத்துக்கள் உரம் பெறலாயின. இதனல் அவர் ஜனநாயகவாதியாகவும், பிரஞ்சு மறுமலர்ச்சிஇலக்கியப்பரம்பரையின் முன்னேடியாகவும் திகழ்ந்தார். இந்தக் காலத்தில்தான் அவர் தமது மனிதாபிமானம் மிகுந்த 'நார்ட்டிடாம் கூனன்' என்ற நாவலை எழுதி முடித்தார். பின்னர் அவர் சிறிது காலம் அரசியலிலும் தீவிரமாக ஈடுபட்டார். இதன் விளைவாக, அவர் இருபதாண்டுக் காலம் நாடு கடத்தப்பட்டார். இந்தக் காலத்தில்தான் அவர் தமது மிகவும் பிரசித்தி பெற்ற நாவல்களான 'ஏழை படும்பாடு', 'கடலும் மனிதனும்' ஆகியவற்றை எழுதினர். மேலும் தமது இறுதிக் காலம் வரையிலும் ஏராளமான சிறந்த படைப்புக்களை எழுதிக் குவித்தவர் ஹ்யூகோ.

'கடலும் மனிதனும்' அவரது அற்புதமானதொரு படைப்பாகும். இயற்கையோடு போராடி வெற்றிபெறும் மனிதனின் வீர சாகசத்தையும், மனோ வலிமையையும் அற்புதமாக வெளியிடும் படைப்பு இது. 'நூற்றிரண்டு மலைகளைச் சாடுவோம், நுண்ணிடைப் பெண்ணொருத்தி பணியிலே' என்ருன் தமிழ்க் கவிஞன் பாரதி. இதே

Victor Hugo's... TOILERS OF THE SEA

போல், இந்நாவலில் வரும் கில்லியட் என்னும் இளைஞன் கன்னியொருத்தியின் கடைக் கண் வீச்சுக்காக எண்ணிறந்த துன்பங்களை ஏற்றும், ஏற்ற கடமையில் வெற்றியும், எதிர் பார்த்த காதலில் தோல்வியும் பெறும் காட்சியைக் காணும் போது, எவருள்ளமும் கலங்காமல் போகாது. இந்த நாவல் முழுவதிலும் கடலின் குமுறலும் கொந்தளிப்பும்தான் பெரிதும் நமக்குக் கேட்கின்றன. இதனைப் படித்து முடிக்கும் போதோ, அந்தக் குமுறலும் கொந்தளிப்பும் நமது இதயத்துக்குள்ளேயே புகுந்து இரையத் தொடங்கி விடுகின்றன.

மானுடத்தின் வெற்றியையும், தியாகத்தையும், மனிதாபிமானத்தின் மேன்மையையும் வெளியிடும் இந்த அருமையான நாவலின் கதை இங்கு சுருக்கமாகத் தரப்படுகிறது.

❋ ❋ ❋

குயர்ன்ஸே தீவிலுள்ள ஸெயிண்ட் ஸாம்ப்சன் என்னும் ஊரில், மெஸ் லெத்தியர்ரி என்ற பெயருள்ள கப்பல் கட்டும் தொழிலாளி ஒருவன் இருந்தான். அவன் மிகுந்த திறமைசாலி; பலசாலியும்கூட. அவன் முன்னூறு ராத்தல் எடையுள்ள தனது இரும்புப் பட்டறையை ஒற்றைக் கையாலேயே தூக்கி விடுவான். இத்தகைய கடல் வாழ்க்கையில் அவன் ஐம்பதாண்டுகளைக் கழித்து விட்டான். அதன் பின்னர் ஒருநாள் அவனால் அந்தப் பட்டறையை முன்போல் தூக்க இயலாது போனதைக் கண்ட பிறகுதான், தனது உடம்பில் வலிமையும் இளமையும் குன்றி, வயோதிகம் குடி புகுந்துவிட்ட உண்மையை அவன் சட்டென்று உணர்ந்தான். பொங்கிப் புடைத்து ஆர்ப்பரிக்கும் கடலில் சிக்கியுடைந்த கப்பல்களை நோக்கி, அலைவீச்சையும் அபாயத்தையும் பொருட்படுத்தாமல், அடர்த்து நுரைக்கும் பிடரிமயிர்கொண்ட ஆண் சிங்கம் போல், துணிச்சலோடும் திட சித்தத்தோடும் கடலின்மீது செல்வது அவனுக்கு மிகவும் பழகிப்போய் விட்ட ஓர் அனுபவம். தனது உடம்பில் முதுமை தட்டிய பின்னரும், அவன் அதே திடசித்தத்தோடும், தீர்மானத்தோடும் பாடுபட்டுச் செல்வத்தைச் சேர்க்க முனைந்தான். இதற்கு அவனது தன்னலமோ, பேராசையோ காரணம் அல்ல. அவனுக்கு ஒரு மருமகள் இருந்தாள். கண்ணை இழுத்து நிறுத்தும் கவர்ச்சியும் அழகும் மிகுந்த அந்தப் பருவக் கன்னியின் பெயர் டெரூச்செட். அவளுக்காகத்தான் அவன் தன் முதுமையையும் எண்ணிப் பார்க்காமல் பாடுபட்டுச் செல்வம் சேர்த்தான். சொல்லப் போனால், டெரூச்செட்டுக்காக அந்தக் கிழவன் தனது உடல், பொருள், ஆவி அனைத்தையுமே எந்த விதத் தயக்கமும் மயக்கமுமின்றித் தியாகம் செய்து விடுவான்.

அவனுக்கு அவள்மீது அத்தனை பாசம்; அத்தனை பிரியம்.

இந்தச் சமயத்தில்தான், அந்தக் காலத்தில் மிகவும் துணிச்சலான, பயங்கரமான காரியம் எனக் கருதக்கூடிய ஒரு முயற்சியில், டெரூச்செட்டின் மீது தான் கொண்டிருந்த பிரியத்தின் காரணமாக, அந்தக் கிழவன் தான் மிகவும் சிரமப்பட்டுச் சேர்த்து வைத்திருந்த செல்வத்தையெல்லாம் துணிந்து முதலீடு செய்தான்; மேலும் அந்த முயற்சிக்குத் தேவைப்பட்ட தொகையையும் துணிந்து கடன் வாங்கினான். அதாவது அந்தக் காலத்தில் மக்கள் பயபக்தி மிகுந்த பரவசத்தோடும், பரபரப்போடும் ஒரு புது விதமான கப்பலைப்பற்றிப் பேசி வந்தார்கள். அந்தப் புது ரகமான கப்பல் பாய்மரங்களின் உதவியால் ஓடவில்லையாம்! அதற்கு மாறாக, கொதிக்கும் தண்ணீரிலிருந்து எழும்பும் ஒரு விசித்திரமான சக்தியால் ஓடியதாம்! நீராவிக் கப்பலைப் பற்றிய இந்தப் பேச்சை லெத்தியர்ரியும் கேள்விப்பட்டான்; உடனே தானும் அப்படியொரு கப்பல் கட்டினால் என்ன என்ற எண்ணமும் அவனுக்கு ஏற்பட்டது. எனவே அதுபற்றி அவன் ஆலோசித்தான்; ஆராய்ந்தான். பின்னர் அவன் சீக்கிரத்திலேயே பெரிய மரப்பலகையால், ஒரு விசித்திரமான கப்பலையும், அதன் உட்பாகத்தையும் கட்டத் தொடங்கிவிட்டான். அவனது இந்த அசுர முயற்சியில் கப்பல் கட்டும் வித்தையில் தான் கற்றுக் கொண்ட திறமையையெல்லாம் அவன் பயன்படுத்தினான். கப்பல் உருவாக, உருவாக அதன்மீது அவன் கொண்டிருந்த ஆசையும் பாசமும் பெரிதும் வளர்ந்தன. இறுதியில் அந்தக் கப்பலுக்குத் தேவையான அந்த அற்புதமான யந்திரங்கள் பிரான்சிலிருந்து வந்து சேர்ந்தன. அவன் அவற்றைக் கப்பலின் உட்பாகத்தில் ஒழுங்காகப் பூட்டி முடித்தான். தனது பெருமைக்கும் மகிழ்ச்சிக்கும் உரித்தான அந்தக் கப்பலுக்கு 'டுராண்டி' என்று பெயரிட்டான். தனது மருமகள் டெரூட்செட்டை அவன் எவ்வாறு போற்றிப் புகழ்ந்தானோ, நேசித்தானோ, அதேபோல் அவன் அந்தக் கப்பலையும் போற்றிப் புகழ்ந்தான்; நேசித்தான்.

லெத்தியர்ரி தன்னிடமிருந்த கடைசிக் காசையும் அந்தக் கப்பலுக்காகச் செலவழித்து முடித்த நிலையில், அந்தக் கப்பல் ஒருநாள் கடலில் செல்லத் தயாராயிற்று. அந்தத் தீவிலுள்ள மக்களெல்லாம் என்ன நேருமோ என்ற பயபீதியோடு, சிலுவைக்குறி கீறித் தெய்வத்தைத் தொழுத வண்ணம், பாறைகள் மிகுந்த கடற்கரையிலே திரளாகக் கூடி நின்று, அந்தக் கப்பல் புறப்பட்டுச் செல்லும் பயங்கரமான அதிசயத்தைப் பார்த்தார்கள். பிரம்மாண்டமான உருவம்

பெற்ற அந்தக் கப்பல் ஊளை யிட்டு ஒலித்தது; பெருமூச் செறிந்தது; அதன் பயங்கர மான யந்திரம் காட்டு மிருகத் தைப் போல் கர்ஜித்தது; எரி மலையைப் போல் புகையைச் சுருள் சுருளாகக் கக்கியது; பின்னர் தனது வாயைத் திறந்து, தொண்டைக் குழியிலிருந்து செந்தழல் நாக்குகளை வெளியே நீட்டித் துழாவியது; தனது இறக்கைத் துடுப்புக்களை நீரில் பயங்கரமாக அடித்தவாறு கட லின்மீது விர்ரென்று பாய்ந்து சென்றது. அன்று முதற் கொண்டு, அந்த ராக்ஷஸப் படைப்பை, குயர்ன்ஸே தீவி லுள்ள மக்கள் 'பிசாசுப் படகு' என்றே அழைத்தார்கள்.

என்றாலும் அந்தப் பிசாசுப் படகு ஒன்றும் பிசாசுக் குணம் கொண்டதாக இல்லை; மாறாக, அது மிகவும் பயனுள்ளதொரு படைப்பாகவே இருந்து வந் ததை அங்குள்ள மக்கள் கண் டுணர்ந்தார்கள். அந்தத் தீவைச் சேர்ந்த எந்தவொரு பெரிய கப்பலையும் விட, டுராண்டி என்ற அந்தப் புதிய கப்பல் நான்கு மடங்கு அதிகமான சரக்குகளை ஏற்றிச் சென்றது; மேலும், அதன் வேகமும் ஏனைய கப்பல்கள் முதலியவற் றைக் காட்டிலும் நான்கு மடங்கு அதிகமாக இருந்தது. எனவே அந்தக் கப்பல் உண் மையிலேயே பெரிதும் பய னுள்ள ஒரு வெற்றிச் சாதனை யாகவே விளங்கியது. எனி னும் ஊரிலுள்ள ஜனங்களுக்கு அந்த ராக்ஷஸப் பிறவியைப் பற்றிய பயம் முற்றிலும் நீங் கிப் போய்விட வில்லை. நம்பத் தகுந்த சில பேர் அந்தக் கப்ப லின் துடுப்புப் பெட்டிகளுக்கு இடையிலேயிருந்து, அந்தப் பைசாசத்தின் பயங்கரமான கொம்புகள் வெளியே நீட்டிக் கொண்டிருந்ததைக் கண்ணாரக் கண்டதாகச் சாதித்தார்கள்; மேலும், பரம பிதா உலகத்தைப் படைத்த காலத்தில் நீரையும் நெருப்பையும் விலக்கிவைத்தே படைத்தாராதலால், நீரையும் நெருப்பையும் இணைத்துச்செயல் படும் அந்தக் கப்பல் ஒரு பயங் கரமான பாவத்தின் சின்னம் தான் என்று நிரூபிக்கும் உப தேசங்களும், உபந்நியாசங் களும் ஊரிலுள்ள தேவாலயங் களில் மத குருமார்களால் ஓதப் பெற்றன. என்றாலும்கூட, பயன்மிகுந்த அந்தக் கப்பலின் படைப்பால், லெத்தியர்ரியின் வருமானம் அமோகமாக அதி கரித்தது. அதனால் அவன் சீக்கிரத்திலேயே தான் வாங்கி யிருந்த கடன்களையெல்லாம் அடைக்கத் தொடங்கி விட் டான்.

❋ ❋ ❋

கிழவன் லெத்தியர்ரிக்கு வாத நோய் கண்டு, அவனால் வேலை செய்ய முடியாது போன காலம் வரையிலும் அவன் தான் தனது கப்பலை ஓட்டி வந்தான். பின் னர் அவன் அந்தக் கப்பலின் தலைமைப் பொறுப்பை சியூர்

கிளபின் என்பவனிடம் ஒப்படைத்தான். கிளபின் பார்வைக்குக் குமாஸ்தாவைப் போலத்தான் இருந்தான். என்றாலும் அவன் ஓர் அற்புதமான மாலுமி. அத்துடன் அவன் பிரபலமான நீச்சல் வீரனும் கூட. மேலும் அவன் கடற் பாறைகளைப் போல் அழுத்தமும், வாயடக்கமும் கொண்ட பேர்வழி. தனது கட்டுப்பாடும் அமைதியும் கொண்ட நேர்மையின் காரணமாக, ஜனங்கள் மத்தியில் அவன் நாணயஸ்தன் என்று நல்ல பெயர் வாங்கியிருந்தான். 'கிளபினைப் போன்ற நாணயத் தன்மை' என்று ஜனங்கள் சொல்லுமளவுக்கு அவன் அவர்கள் பார்வையில் உதாரண புருஷனாகத் திகழ்ந்தான். என்றாலும் அந்தரங்கத்தில் அவன் அப்படிப்பட்டவன் அல்ல, சில்லறை விஷயங்களில் மிகுந்த சிரத்தையோடும், சிரமத்தோடும் நடந்து, தனது நபர் நாணயத்தைப் பல ஆண்டுகளாக நிலைநிறுத்தி, மற்றவர்களெல்லாம் பெருமையும் பொறுமையும் கொள்ளும் விதத்தில், அவன் நாணயஸ்தன் என்று பெயர் வாங்கியிருந்தது உண்மை. என்றாலும் ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும் வாடி யிருக்கும் கொக்கைப் போலத்தான் அவன் நல்லதொரு சந்தர்ப்பத்தை எதிர்நோக்கி யிருந்தான். சில்லறை விஷயங்களில் நேர்மையாக நடந்து விட்டுக்கொடுத்ததற்கெல்லாம் பிரதியாக, ஒரு பெரிய தொகையைத் தட்டிக் கொண்டு போய்விட வேண்டும் என்பதும், தன்னை நல்லவன் என்று மதித்தவர்களை யெல்லாம் ஏமாறச் செய்யவேண்டும் என்பதும்தான் அவனது அந்தரங்கமான நெடுநாள் திட்டம்.

ஒருநாள் அவன் வழக்கம் போல் ஸெயின்ட் மாலோ என்ற துறைமுகத்துள் டுராண்டியைச் செலுத்திக் கொண்டு போன காலத்தில், அவன் நெடுநாளாக எதிர்பார்த்திருந்த அந்த அரிய சந்தர்ப்பம் தன்முன் உருவாகி வருவதாக அவன் கண்டான். அதாவது அன்றிரவில் அவன் அங்கு ஒரு தேசாந்திரியான மனிதனைச் சந்தித்தான்; அந்தத் தேசாந்திரி அமெரிக்காவிலிருந்து ஒரு புதுமையான, விசித்திரமான கருவியைக் கொண்டு வந்திருந்தான். கிளபின் அந்தத் தேசாந்திரியிடம் அந்த அற்புதமான கருவியை ரகசியமாக விலை பேசி முடித்து அதனை வாங்கிக் கொண்டான். அந்தக் கருவி வேறொன்றுமல்ல, அது ஒரு சுழல் துப்பாக்கி; ஓர் ரிவால்வர். இந்தக் கைத் துப்பாக்கி கைக்கு வந்ததும், அவன் மறுநாள் ஸெயிண்ட்மாலோவுக்கு அருகிலுள்ள ஒரு பெரிய பாறையை நோக்கிச் சென்றான். அந்தப் பாறை படுபயங்கரமான பேராழம் மிகுந்த கடலுக்குள்ளிருந்து செங்குத்தாக உயர்ந்து நின்றது. அந்தச் செங்குத்தான பாறையின் தலையைக் கிறுகிறுக்க வைக்கும் முனையில் அன்று ஒரு கடற்கரைக் காவ

லாளி நின்றுக் கொண்டிருந் தான். அவன் கரைக்கப்பால் நங்கூரமிட்டு நின்ற ஒரு கப்ப லைக் கண்கொட்டாமல் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தான். சிறிது நேரத்தில் அந்தக் கப்பலி லிருந்து ஒரு படகு கீழே இறங்கி நீரைத் தொட்டது. பின்னர் அந்தப் படகு அந்தச் செங்குத்தான பாறையை நோக்கி விரைவாக வரத் தொடங்கியது.

அந்தச் சமயத்தில் அந்த நெடிய பாறைச் சரிவிலிருந்த ஒரு மறைவான பொந்துக் குள் ளிருந்து ஆஜானுபாகுவான ஒரு மனித உருவம் வெளிப் பட்டது. அந்த மனிதன் பதி யிட்டு நடந்து வந்தான்; பாறை யின் உச்சியில் நிற்கும் காவ லாளியை நோக்கி, அவனுக்குத் தெரியாமல், விரைவாகவும் கவ னமாகவும் நெருங்கி வந்தான். பின்னர் அந்தக் காவலாளியின் முதுகுப் புறத்தை அந்த மனி தன் நெருங்கியதும், திடீரென்று அவனது இரு முஷ்டிகளும் நீண்டு பாய்ந்தன; காவலாளி யின் பிடரியின் மீது திடீ ரென்று தாக்கின. மறுகணமே அந்தக் காவலாளி எவ்விதமான சத்தமுமின்றி, அந்தக் கடலின் பேராழத்துக்குள் தலை குப்புற உருண்டு விழுந்தான்.

அந்த ஆஜானுபாகுவான மனி தன் மிகுந்த அமைதியோடு பாறையின் முனைக்குச் சென்று, கடல் பரப்பின் மீது வளைய மிட்டுப் பரவும் அலை வரிசை



களையும், பின்னர் அந்த அலை வளையங்கள் இருண்டு தோற் றும் கடல் நீருக்குள்ளேயே ஐக்கியமாகி மடிவதையும் சிறிது நேரம் பார்த்தான். பச்சைப் பசிய நிறங்கொண்ட கடல் நீருக் குள் ஒரு கரிய உருவம் முங்கி மூழ்கி மங்கி மறைவதையும் அவன் கண்டான். பின்னர் அதுவும் மறைந்து விட்டது. கடல் மட்டுமே தோன்றியது.

அந்தச் சமயத்தில் திடீ ரென்று மிருதுவான குரல் ஒன்று ஒலித்தது. "நீ ஒரு மனிதனைக் கொன்று விட்டாய். இல்லையா, ராண்டெய்ன்?" என்றது அந்தக் குரல். அந்த மனிதன் கிறுகிறுத்துத் திரும் பிப் பார்த்தான். அப்போது அவனெதிரில் கிளபின் தனது கையில் அந்த அமெரிக்க ரிவால் வாரை ஏந்திப் பிடித்தவாறு நிற்பதை அவன் கண்டான்.

ராண்டெய்ன் என்ற அந்த மனிதன் ஓரடி முன்னுல் வந்தான். ஆனுல் மறுகணமே ஒளபினிடமிருந்து எச்சரிக்கை குரல் பிறந்தது; "அசையாதே, அங்கேயே நில். இந்தத் துப்பாக்கியில் ஆறு குண்டுகள் இருக்கின்றன. அவை உன்னைக் கொன்றுவிடும்; அல்லது பக்கத்திலுள்ள கடற்கரைக் காவலாளி எவனையாவது சத்தம் போட்டு வரவழைத்து விடும், ஜாக்கிரதை!"

"சரி, உனக்கு என்னதான் வேண்டும்?" என்று கேட்டவாறு ராண்டெய்ன் மேலும் ஓரடி முன்னே வர முனைந்தான்; ஆனுல் துப்பாக்கியிலிருந்து எழுந்த கிளிக்கென்ற சத்தம் அவனை மீண்டும் தடுத்து நிறுத்தி விட்டது.

ஒளபின் மிருதுவான, நாசூக்கான குரலில் பின்வருமாறு பேசினுன்:

"ராண்டெய்ன்! எனக்கு எல்லாம் தெரியும், நேற்று நீ பணம் மாற்றிக் கொடுக்கும் வட்டக் கடைக்காரனிடம் சென்ருய், அவனிடம் நீ எழுபத்தி ஆருயிரம் பிராங்கு நாணயங்களை எண்ணிக் கொடுத்தாய்; அதற்குப் பிரதியாக, அந்தக் கடைக்காரன் இங்கிலாந்தின் ஆயிரம் பவுன் நோட்டுக்கள் மூன்றை உன்னிடம் கொடுத்தான். நீ அவற்றை இரும்பாலான ஒரு சுருட்டுப் பெட்டிக்குள் மடித்து வைத்தாய், பிறகு, அதோ தெரிகிறதே அந்தக் கப்பலின் தளபதியுடன் பேசினுய்; உன்னை இங்கிருந்து அழைத்துச் சென்றுவிடும்படி, அவனேடு ஒப்பந்தம் செய்தாய்; அதன்மூலம் நீ தப்பித்து ஓட நினைத்தாய், ஏனெனில், நீ அந்தப் பணத்தை லெத்தியர்ரியிடமிருந்து திருடிக் கொண்டு வந்துவிட்டாய். இவையனைத்தும் எனக்குத் தெரியும். இதெல்லாம் உண்மையல்ல என்று சொல்லி, வீணில் மழுப்பப் பார்க்காதே. பைக்குள்ளே கையை விட்டு அந்தப் பணத்தை எடு; பணம் இருக்கும் அந்தப் பெட்டியை என்னிடம் விட்டெறிந்துவிடு."

ராண்டெய்ன் முனகினுன்; வாய்க்குள் சபித்துக் கொண்டான். பிறகு மேலும் ஓரடி முன்னேற முனைந்தான். ஆனுல் கிளபின்னே அவனை நோக்கிக் கவனமாகக் குறிபார்த்துத் துப்பாக்கியைத் தூக்கிப் பிடித்தான். இதனைக் கண்டதும் ராண்டெய்ன் "இப்படியொரு துப்பாக்கியை வைத்துக் கொண்டு மிரட்டினுல் என்னதான் செய்வது?" என்று முணுமுணுத்தபடி, தன்னிடமிருந்த அந்தச் சுருட்டுப் பெட்டியை எடுத்து, கிளபினிடம் விட்டெறிந்தான். கிளபினும் அந்தப் பெட்டியைத் திறமையோடு திறந்து, அதில் அந்தப் பவுன் நோட்டுக்கள் அனைத்தும் இருப்பதை நிச்சயப்படுத்திக் கொண்டான். தனது கையிலிருந்த துப்பாக்கியின் குறியும் நிலையும் மாருமலே, அவன் இந்தக் காரி-

யத்தை ஒற்றைக் கையாலேயே செய்து முடித்தான். பிறகு, "உனது படகு அருகில்தான் இருக்கிறது. நீ போகலாம்" என்று ராண்டெய்னை நோக்கிக் கூறினன் கிளபின்.

ராண்டெய்ன் அந்தப் படு பயங்கரமான செங்குத்தான பாறையின் வழியாக, ஒரு வார்த்தைகூடப் பேசாமல் இறங்கிச் சென்றான். கீழே சென்று படகிலே ஏறியமர்ந்ததும் அவன் மேலே நோக்கிப் பின்வருமாறு சத்தமிட்டான்: "கிளபின்! நீ நாணயஸ்தன். ஆனால், லெத்தியர்ரிக்குரிய அந்த மூவாயிரம் பவுனையும் உன்னிடம் கொடுத்துவிட்டதாக லெத்தியர்ரிக்கு எழுதி விடுகிறேன். அதனால் உனக்கொன்றும் ஆக்ஷேபணையில்லையே, இங்கே ஸெயிண்ட் மாலோவிலுள்ள மற்றொரு மாலுமியும் எனக்குச் சாட்சி சொல்வான். அவன் தனது பயணத்தை முடித்துக்கொண்டு வந்ததும், நான் கூறியதை அவனும் உறுதிப் படுத்துவான், சரிதானா?"

❋ ❋ ❋

குரோத பாவமும், பழி வாங்கும் எண்ணமும் குடிகொண்டிருந்த ராண்டெய்னின் குத்தலான பேச்சு மனோவுறுதி குறைந்த எந்தவொரு மனிதனையும் பயப்படவே வைக்கும்; தான் பறித்தெடுத்த பணத்தையும் கூடத் திருப்பிக் கொடுக்கச் செய்துவிடும். ஆனால் கிளபினோ இந்தப் பேச்சைக் கேட்டுப் பயந்துவிடவில்லை. எடுத்த காரியத்தை முடிப்பதற்குத் தனக்கு இன்னும் கொஞ்சம் துணிச்சல் தான் தேவை என்று தீர்மானித்தான் அவன். அவன் உடனே துறைமுகத்துக்குத் திரும்பி வந்தான்; டுராண்டியைக் காலையிலேயே அங்கிருந்து புறப்படச் செய்வதற்கான ஏற்பாடுகளைக் கவனிக்கத் தொடங்கினன்.

"நீங்கள் புறப்படுவதற்காக ஏற்பாடு செய்கிறீர்கள்? போகவா போகிறீர்கள்? நாளைக்குக் கடலில் பெரிய பனிமூட்டம் கவிவதற்கான அறி குறிகள் தென்படுகின்றனவே!" என்று துறைமுகத்திலுள்ள மக்கள் சொன்னார்கள்.

என்றாலும் மறுநாள் காலையில் டுராண்டி கடல்மீது புறப்பட்டுப் போகத்தான் செய்தது. அதன் பயணம் தொடங்கிப் பல மணி நேரம் ஆகியுங்கூட, வானம் நிர்மலமாகப் பளிச்சிட்டுக் கொண்டுதான் இருந்தது. எனவே பனிமூட்டம் கவியப் போகிறது என்ற பயமுறுத்தல் கூட அர்த்தமற்றதாகத்தான் தோன்றியது. ஆனால் திடீரென்று அடிவானத்தில் ஏதோ கரை தெரிவது போலிருந்தது; அந்தக் கரை அப்படியே விம்மிப் பெருகி வளர்வதாகத் தோன்றியது; ஒரு மணி நேரத்துக் குள்ளாகவே அது ஒரு சுவர் போலே வளர்ந்து பரவியது; அடுத்த ஒரு மணி நேரத்துக்குள் அவ்வாறு எழுந்த பனி

மூட்டம் டுராண்டியைச் சுற்றி லும் மூடிக் கவிழ்ந்து, அதனைத் தன்னுள் ஆட்கொண்டு விட்டது.

கப்பலின் யந்திரங்களுக் கருகில் நின்றுகொண்டிருந்த ஒரு பிரயாணியின்காதில்ஏதோ பேச்சுக்குரல் விழுந்தது. அப்போது கப்பலின் யந்திர நிபுணன் தனது சகாவிடம் பின்வருமாறு சொன்னான்: "காலையில் சூரியவொளி நன்ருக இருக்கும் போது, நாம் மெதுவாகத்தான் வந்தோம்; இப்போதோ, இந்தப் பனி மூட்டத்தில், கப்பலை முழு வேகத்தில் ஓட்ட வேண்டுமாம். மாலுமி உத்தரவு!"

திக்குத் திசாந்திரம் தெரியாது கவிந்திருந்த பனி மூட்டத்தினுள் கண்மூடித் தனமாக விரைந்து சென்ற அந்தக் கப்பல், சிறிது நேரத்தில் திடீரென்று கடலுக்குள்ளிருந்து துள்ளி யெழுந்து வந்து வழி மறித்தது போன்ற ஒரு பெரிய பாறையை நோக்கித் தலைதெறிக்கச் சென்று முட்டி மோதியது.

அவ்வளவுதான் மறுகணமே முட்டுண்ட கப்பலின் முன் பகுதி உடைந்து வாயைப் பிளந்தது; கடல்நீர் அந்த உடைப்பின் வழியாகச் சர்ரென்று கப்பலுக்குள் பயங்கரமாகப் பாய்ந்தது. கிளபின் வெறுமனே வார்த்தையாடிக் கொண்டிருக்கவில்லை. திட்டமிட்டபடி காரியங்களைக் கவனிக்கத் தொடங்கினுன். அவனது உத்தரவின் பேரில் ஒரு பெரிய படகு கப்பலிலிருந்து கடலுக்குள் இறக்கப் பட்டது. பிரயாணிகளும், கப்பல் வேலைக்காரர்களும் அந்தப் படகில் அவசர அவசரமாக ஏறிக்கொண்டார்கள். எல்லோரும் ஏறி முடித்த பின்னர், அவர்கள் கிளபினையும் தம்மோடு வந்து ஏறிக்கொள்ளுமாறு அழைத்தார்கள். ஆனுல் கிளபினே அந்த வேண்டுகோளைப் பெருமிதத்தோடு மறுத்து விட்டான். "நீங்களெல்லாம் போங்கள். நான் இங்கேயே இருக்கிறேன். எப்போது கப்பல் நாசமாயிற்ருே, அப்போது அதன் தலைவனும் இறந்தமாதிரி தான். அதுதான் என் கடமை" என்று வீரனைப்போல் பேசி விட்டான்.

கிளபின் தம்மோடு வரப் போவதில்லை என்பதைத் திட்டவட்டமாக உணர்ந்ததும், படகிலுள்ளவர்கள் அவனுக்கு வாழ்த்துக் கூறிவிட்டு, படகை ஓட்டிச் சென்று விட்டார்கள். அவர்களை யெல்லாம் விட்டுப் பிரிந்து, தன்னந்தனியனுக இருந்ததுமே கிளபினின் முகத்தில் ஒரு தெளிவும் திருப்தியும் தோன்றின. ஆனுல், திடீரென்று அந்தப் பெரிய பனிமூட்டத்தில் ஒரு சின்னஞ்சிறு இடைவெளி தெளிந்து தெரிந்தது; அதனைக் கண்டவுடனேயே கிளபினின் முகத்தில் அசடும், ஏமாற்றமும் வழிந்தன. அவனது கண்ணெதிரே இரட்டைத் தூண்களைப் போன்று இரண்டு மாபெரும் குத்துப் பாறைகள்

நிமிர்ந்து நின்றன. அவற்றைப் பார்த்தவுடனேயே அவன் அவற்றை அடையாளம் கண்டு கொண்டான். அவைதான் படு பயங்கரமான டோவ்ரெஸ் பாறைகள்!

அப்போதுதான் கிளபினுக்குத் தான் செய்துவிட்ட தவறு புரிந்தது. அவன் டுராண்டியை ஹான்வே பாறைகளுள்ள இடத்துக்குத்தான் ஓட்டிச் செல்லத் திட்டமிட்டிருந்தான். ஏனெனில் அந்தப் பாறைகளிலிருந்து ஒரு மைல் தூரத்தில் கடற்கரையின் ஆளரவமற்ற ஓர் ஒதுக்குப்புறமான பகுதி இருந்தது. அந்தத் தூரத்தை நீந்திக் கடந்து விட்டால், அங்கேயே தனக்குத் தேவையான துணிமணிகளையும், தான் ஓடிப் போவதற்குத் தேவையான பிற பொருள்களையும் பெற்றுக்கொண்டு விடலாம். இதுதான் அவனது திட்டம், ஆனால் இப்போதோ அந்தத் திட்டம் தடம் புரண்டு, கப்பல் டோவ்ரெஸ் பாறைகளில் முட்டி மோதிக் கொண்டு விட்டது. டோவ்ரெஸ் பாறையிலிருந்தோ கடற்கரை இருபத்தைந்து மைல் தொலைவில்தான் இருக்கிறது. கிளபின் பிரபலமான நீச்சல் வீரன்தான். என்றாலும் அவ்வளவு பெரிய தூரத்தை அவனுவது, கடப்பதாவது? நீந்திக் கடப்பதென்பது அவனுக்குச் சாத்தியமானதாகத் தோன்றவில்லை. திட்டமிட்டதற்கு மாறாக, எதிர்பாராத விதத்தில் திடீரென்று இந்தச் சங்கடம் ஏற்பட்டு விட்டது. இனி என்ன செய்வது? கிளபின் உள்ளுக்குள் நடுங்கினான்; எனினும் அந்த நிலையிலும் கூட அவன் அதைரியப்பட்டு விடவில்லை. அவன் கப்பலிலிருந்தவாறு சுற்று முற்றும் பார்த்தான். அந்தச் சமயத்தில் அவனுக்கு மீண்டும் நம்பிக்கையளிப்பது போல், ஒரு பெருங்காற்று வீசியது. பனிமூட்டம் கலைந்து நகரத் தொடங்கியது. கள்ளக் கடத்தல்காரர்களின் கப்பல்கள் டோவ்ரெஸ் பாறைகளின் கண்ணெட்டும் தொலைவில் அடிக்கடி வருவதுண்டு என்ற விஷயம் கிளபினுக்குத் தெரியும். என்றாலும் கூட, ஜல சமாதியையே பரிசாக வழங்கக்கூடிய அந்தப் படுபயங்கரமான இரட்டைப் பாறைகளின் அருகே, கள்ளக் கடத்தல்காரர்களின் கப்பல்களோ, வேறு படகுகளோ வரத் துணிவதில்லை என்பதையும் அவன் அறிவான். அப்படிப்பட்ட கள்ளக் கடத்தல் கப்பல்கள் ஏதேனும் வந்தால், அந்தக் கள்ளக் கடத்தல் பேர்வழிகள் தன்னைக் காப்பாற்றிக் கரைக்குக் கூட்டிச் செல்லக்கூடும் என்று அவன் தீர்மானித்தான். அவர்கள் வந்தால் நல்லதுதான். அவர்கள் என்ன, ஏது என்று எந்த விவரத்தையும் *துளைத்துக் கேட்க மாட்டார்கள்; மேலும் எங்கும் போய் அவனைக் காப்பாற்றியதைப் பற்றி வம்புப் பேச்சுகளையும் வதந்திகளையும் பரப்பவும் மாட்டார்கள். அவர்களுக்குக்

கொடுக்கின்ற கூலியை மட்டும் கணிசமாகக் கொடுத்துவிட்டால் போதும். அவர்கள் அத்துடனேயே திருப்தியடைந்து விடுவார்கள். கிளபின் இவ்வாறு எண்ணமிட்டுத் தைரியம் பெற்ருன்.

ஆனல் கப்பல் ஏதேனும் வருகிறதா என்று அடிவான விளிம்பை ஏறிட்டுப் பார்ப்பதற்கோ, அந்த இரட்டைப் பாறைகளில் மிகவும் உயரமான பாறையின் உச்சியில் ஏறி நின்ருல்தான் அவ்வாறு பார்ப்பது சாத்தியம். இதனை உணர்ந்ததும், கிளபின் தனது உடைகளை வேண்டுமட்டும் களைந்தான். தனது இடுப்பில் ஒரு கனத்த, உறுதியான பெல்ட்டையும் இறுகக் கட்டிக் கொண்டான்; அந்தப் பெல்ட்டில் தன்னிடமிருந்த அந்த இரும்புச் சுருட்டுப் பெட்டியையும் சேர்த்து இறுகக் கட்டிக் கொண்டான். பின்னர் நீரில் பாய்ந்து அந்தப் பாறைக்குச் செல்வதற்காக, கப்பலிலிருந்து கடலுக்குள் தலைகுப்புறப் பாய்ந்தான். பாய்ந்த வேகத்தில் நீருக்குள் மிகவும் ஆழத்துக்குள் சென்று விட்டான்; பாறைப் பரப்பாக இருந்த தரையையும் தொட்டு விட்டான்; பின்னர் அங்கு நீருக்குள் மூழ்கித் தென்பட்ட ஒரு குத்துப் பாறையை இனம் கண்டு, அதில் காலைக் கொண்டு மிதித்து, நீர் மட்டத்துக்கு வருவதற்காக உந்தி உதைத்துத் தாவினன்.

அந்தச் சமயத்தில் அவன் தனது காலொன்றை யாரோ பற்றிப் பிடிப்பது போல் சட்டென்று உணர்ந்தான்.



அன்றிரவு செயிண்ட் ஸாம்சனில் ஒரே கூச்சலும் ஆரவாரமுமாயிருந்தது. டுராண்டியிலிருந்து இறக்கிய அந்த நீண்ட படகில் ஏறித் தப்பித்த பிரயாணிகளும், கப்பல் வேலைக்காரர்களும் கரைசேர்ந்து, அங்கு திரும்பி வந்துவிட்டார்கள். லெத்தியர்ரி சுவரோடு சுவராய்ச் சாய்ந்து நின்றவனய், அவர்கள் சொன்ன கதைகளை யெல்லாம் ஆடாமல் அசையாமல் பிணம் போல் கேட்டுக் கொண்டிருந்தான். அவனது நரைத்த தலைமயிர் முகத்தின் மீது விழுந்து கிடந்தது. அவனது முஷ்டிகள் இரண்டும் இறுக மூடியிருந்தன. அவனது ஆசைக்கும் அன்புக்கும் உரிய கப்பல் அழிந்து போய்விட்ட தானது, அவனே அழிந்து போனதற்குச் சமானம்தான். அந்தக் கிழவன் அந்த விபத்தை அப்படித்தான் உணர்கிருன் என்பதை எவரும் கண்டுகொள்ள முடியும். அந்த அளவுக்கு அவன் நிலைகுலைந்து போயிருந்தான். கப்பல் அழிந்து விட்டது. இனி என்ன இருக்கிறது? அவனது வாழ்க்கையே பாழாகிவிட்டது. இனி வாழ்க்கையைப் புத்தம் புதிதாகத் தொடங்குவதென்ருலும், அதற்கும் அவனுக்கு வயது அதிகமாகி விட்டது. இவ்

வாறு லெத்தியர்ரி குழைந்து குழம்பிப் போயிருந்த நிலையில், ஒரு கத்திக் கப்பலைச் சேர்ந்த மாலுமி ஒருவன் அங்கு வந்து சேர்ந்தான்.

அவன் தனது கப்பலில் வந்த போது கண்ட காட்சிகளை விவரித்தான். அதாவது கடற் பரப்பிலிருந்து எருமை மாடுகள் முக்காரமிட்டு முனகுவது போன்ற சப்தம் வந்ததாகவும், அந்தச் சப்தம் வந்த திக்கை நோக்கித் தனது கப்பலைச் செலுத்திச் சென்றபோது டுராண்டிக் கப்பல் பாறைகளுக் கிடையில் சிக்கிக் கொண்டிருப் பதைக் கண்டதாகவும் தெரிவித் தான். ஆனல் டுராண்டியில் கிளபின் அல்லது வேறு யாரும் இருந்ததாகத் தெரியவில்லை. அந்த மாலுமி தனது கப்பலைத் திருப்பப் போகும் நேரத்தில் திடீரென்று ஒரு பெரும் மோதல் சப்தம் கேட்டது. அப்போது எழுந்த ஒரு மாபெரும் அலை, உடைந்துபோன டுராண்டியை அப்படியே அல்லாக்காகத் தூக்கி, அதனை டோவ்ரெஸ் இரட்டைப் பாறைகள் இரண் டுக்கும் மத்தியில் கொண்டு போய் நிறுத்திவிட்டது. எனவே அந்தக் கப்பல் இரு பாறைகளையும் தொட்டாற் போல் சிக்கி, அவற்றுக்கிடையே தொங்குபால மிட்டதுபோல் அந்தரத்தில் தொங்கிக்கொண்டு விட்டது. அதனல் அது மூழ் கிப் போய்விட வில்லை. இவற் றையெல்லாம் அந்த மாலுமி தனது தொலைநோக்கின் வழி யாகத் தெளிவாகக் கவனித் திருந்தான். மேலும், அந்தக் கப்பலின் முகப்பு உடைந்து விரிசல் கண்டு விட்ட போதி லும், முன்பாகம் படுமோசமாக நொறுங்கிவிட்ட போதிலும், கப்பலின் யந்திரங்கள் எதற்கும் எவ்விதமான சேதமும் விளைந்த தாகத் தெரியவில்லை யென்றும், கப்பலின் புகைபோக்கி முதலி யன யாவும் உடையாமல் உறுதி யாக இருப்பதாகவும் அவன் நிச்சயமாகக் கூறினன்.

இதனைக் கேட்ட பின்னர் தான் லெத்தியர்ரிக்கு முகத்தில் களை தட்டியது. அவன் தலை நிமிர்ந்தான். அவனது கண் களில் ஒரு புத்தொளி தோன்றி யது. என்றாலும் அந்த ஒளி தோன்றிய அதே வேகத்தி லேயே, அது மறைந்தும் போயிற்று. ஆம், டுராண்டி தொங்குபாலமிட்டுத் தொங்கிய அந்த உயரமான பாறைகளில் எவனொருவனும் கால் வைத்து நிற்பதற்குக்கூட இடமில்லை. எனவே அங்கு ஒரு கப்பலையும், அத்துடன் சில தொழிலாளிகளை யும் அனுப்பி, உடைந்த கப்ப லின் யந்திரங்களை மீட்டுக் கொண்டு வருவதென்பது பகற் கனவாகத்தான் முடியும், மேலும், பெரும் புயலும் காற் றும் தொடங்கக் கூடிய பருவ காலமும் நெருங்கி விட்டது. அத்தகைய பருவ காலத்தில் டோவ்ரெஸ் பாறைகளின் மீது மோதிச் சிதறும் ராக்ஷஸ அலை

களோ, எந்தவொரு கப்பலின் நங்கூரச் சங்கிலிகளைக் கூட அறுத்தெறிந்து விடக் கூடியவை. எனவே அந்த இடத்துக் கருகில் எந்தவொரு கப்பலையும் நங்கூரமிட்டு நிறுத்தவும் முடியாது; மேலும், அந்தப் பாறைகளுக்குச் செல்லும் மனிதர்களும் உயிரோடு திரும்புவதும் அரிது. இத்தனைக்கும் மேலாக, அந்தப் பாறைகளிலே காலூன்றி நிற்பதற்கு இடம் கிடைத்தாலும்கூட, அதில் ஒரே சமயத்தில் ஒரு மனிதனுக்குமேல் நின்று வேலை பார்ப்பதற்கும், அங்கு இடம் கிடையாது. எனவே அந்த யந்திரங்களை மீட்பது என்பது அசாத்தியம்தான். அந்தக் கப்பலின் யந்திரங்களையெல்லாம் கடலுக்கே இரையாக்கிக் கை கழுவுவதைத் தவிர வேறு வழியில்லை. லெத்தியர்ரியின் சிந்தனை இப்படியெல்லாம் அலைபாய்ந்தது. அதே சமயத்தில் லெத்தியர்ரியின் சிந்தனையை அப்படியே பிரதிபலிப்பது போல், அந்தக் கத்திக் கப்பலின் மாலுமியும் பின்வருமாறு சொன்னான்:

"எல்லாம் முடிந்த மாதிரிதான். அந்த இடத்துக்குச் சென்று, கப்பலின் யந்திரங்களை மீட்டுக்கொண்டு வரக்கூடிய மனிதன் இந்த உலகத்தில் இல்லை!"

இதனைக் கேட்டதும் டெரூச்செட் துள்ளி யெழுந்தாள்; அவள் தனது அழகான முகத்தை அங்கு கூடி நின்ற ஜனத்திரளை நோக்கித் திருப்பினாள். "அப்படி ஒரு மனிதன் இருந்தால், நான் அவனையே திருமணம் செய்து கொள்வேன்!" என்று வாய்விட்டுச் சொன்னாள்.

அவள் இவ்வாறு கூறியதும் கூட்டத்திலிருந்து ஓர் உயரமான இளைஞன் எழுந்து முன்னால் வந்தான்; ஆர்வமும் ஆதங்கமும் நிறைந்த முகத்தோடு அவளருகில் வந்து நின்றான்.



"அப்படிப்பட்ட மனிதனை நீ மணந்து கொள்வாய், நிச்சயம் தானே?" என்று மெல்லிய குரலில் கேட்டான்.

அந்த இளைஞனின் பெயர் கில்லியட்; அவன் ஒரு செம்படவன். அங்கு குழுமியிருந்தோர் அனைவரது பார்வையும் அவன் பக்கம் திரும்பியது. லெத்தியர்ரி நிமிர்ந் தெழுந்து நின்றவனாய்,

அவனை நோக்கிப் பின்வருமாறு உறுதியோடு சொன்னான் :

"ஆம். அப்படிப்பட்ட மனிதனுக்கே டெருச்செட் உரிமையாவாள். இதனைக் கடவுள் மீது ஆணையாகச் சொல்கிறேன்!"



மறுநாள் இரவில் ஆழமும் அகலமும் மிகுந்த வடிவம் கொண்ட, உறுதியாகக் கட்டப் பெற்ற ஒரு சிறு பாய்மரப் படகு கடற்பரப்பின் பயங்கரமான பாறை வழிகளினூடே பாய்ந்து சென்றது. கடற்கரையிலிருந்த கலங்கரை விளக்கங்களின் காவல்காரர்களும், செம்படவர்களும் அந்தப் படகு செல்வதைப் பார்த்தார்கள். அந்த அந்தகாரமான இரவில் பயங்கரமான பாறைக் கூட்டங்களின் அபாயங்களையும் பொருட்படுத்தாமல், அந்தப் படகை ஓட்டிச் செல்லத் துணிபவன் பைத்தியக்காரனாகத்தான் இருக்க வேண்டும் என்று அவர்கள் தீர்மானித்தார்கள்.

அந்தப் பைத்தியக்காரன் வேறு யாருமல்ல; கில்லியட் தான். அவன்தான் அந்த நல்லிரவில் டோவ்ரெஸ் பாறைகளை நோக்கி மிகவும் குறுக்கான பாதையில் தனது படகை வேகமாகச் செலுத்திச் சென்றான். ஏனெனில் உடைந்து போன கப்பல்கள் யாருடைய வரவுக்காகவும் மேலும் உடைந்து மூழ்காமல் காத்திருப்பதில்லை என்பதையும், கைக்கெட்டியதை யெல்லாம் விழுங்கித் தீர்ப்பதில் கடல் சளைப்பதில்லை என்பதையும் அவன் நன்கறிவான். மேலும் அவனது மனக் கண்ணின் முன்னால், டெருச்செட்டின் எழில்வாய்ந்த வதனமும் நிழலாடிக் கொண்டிருந்தது; எனவே அவளை அடைவதில் தனக்குப் போட்டியாக வேறு எவனும் வந்துவிடக் கூடாதே என்ற ஒரு பயமும் அவனுக்கு இருந்தது. சொல்லப்போனால் அது ஒன்றுதான் அவனது பயம்; அந்தப் பயமே அவனை அத்தனை துணிச்சலோடும் துரிதத்தோடும் நள்ளிரவிலே புறப்பட்டுச் செல்லத் தூண்டியது.

அந்த அத்துவானமான, ஆளரவமற்ற பாறைகளின் அருகே அவன் போய்ச் சேர்ந்த போது, பொழுது நன்றாகப் புலர்ந்து சூரிய ஒளி தகதகக்கத் தொடங்கி விட்டது. அங்கு தென்பட்ட குடா வளைவிலிருந்து, டோவ்ரெஸ் இரட்டைப் பாறைகள் இரண்டும் பிரம்மாண்டமான ராக்ஷஸக் கரங்களைப் போல் மேல்நோக்கி நின்றன; அவற்றுக் இடையிலே சிக்கியிருந்த டுராண்டிக் கப்பலை அந்தக் கரங்கள் புயலின் பார்வைக்குத் தூக்கிப் பிடித்துக் காட்டுவதுபோல் இருந்தன. அந்த ராக்ஷஸக் கரங்களின் தோற்றம். கில்லியட் தனது படகைவிட்டுப் பாறைமீது தாவிக் குதித்து, உடைந்த கப்பலை நோக்கி மேலே ஏறத் தொடங்கினான்.

அவன் அந்தக் கப்பலில் ஏறிப் பார்த்தான். அந்தக் கத்திக் கப்பலின் மாலுமி சொன்னதைப் போலவே, அந்தக் கப்பல் இரண்டு பாறைகளுக்கு மிடையில் ஒரு பிரம்மாண்டமான சுத்தியலால் ஓங்கியறைந்ததுபோல் புகுந்து மாட்டியிருந்தது. கப்பலின் முன்பகுதி உடைந்து சிதறித் தூளாகிப் போய்விட்டது. எனினும் அதன் பின் பாகமும், அதிலுள்ள யந்திரங்களும், துடுப்புச் சக்கரங்களும் உடையாமல் அப்படியே இருந்தன. கில்லியட் துடுப்புச் சக்கரப் பெட்டியின் உச்சியின்மீது ஏறி நின்று, சுற்றுமுற்றும் பார்த்தான். அதன் எல்லாப் பாகங்களிலும் வளைகுடாவைப் போல் கடல் சூழ்ந்திருந்தது; கிழக்குப் பக்கத்தில் மட்டும் பாறைகள் சுவரைப்போல் தெத்தும் குத்துமாக நின்றன. இந்த வளைகுடாவுக்குள் தனது படகைக் கொண்டுவந்து நிறுத்திக் கொள்ளலாம் என்று எண்ணமிட்டான் அவன். பின்னர் அவன் அவசர அவசரமாகக் கீழே இறங்கி, மிகுந்த ஜாக்கிரதையோடு தனது படகை அந்தப் பயங்கரமான, பேராபத்தான வளைவுக்குள் செலுத்தினான். அதன் பின் அந்தப் படகை அங்குப் பதனமாக நங்கூரமிட்டு நிறுத்தினான். பிறகு தனக்கும் ஒரு பாதுகாப்பான இடம் வேண்டுமெனத் தேடிப் பார்த்தான். கடலில் இறங்கலையாகத் தண்ணீர் தாழ்ந்திருக்கும் போது, அந்தப் படகுக்கும், கப்பலைத் தாங்கிக் கொண்டிருக்கும் பாறைகளுக்கும் மத்தியிலுள்ள தூரத்தைக் குத்துப் பாறைகளின் வழியாகத் தாவித் தாவிக் கடக்க முடியும் என்பதைக் கண்டான். ஆனால் ஏறலையாகத் தண்ணீர் விம்மி வரும் போது, அந்தத் தூரம் முழுவதும் கடல்தான் பரவி நிற்கும் என்பதையும் கண்டறிந்தான். அந்த உடைந்த கப்பலிலேயே தங்கிக் கொள்ளலாம் என்றாலோ, அது ஒன்றும் அத்தனை உறுதியாகவும், ஆட்டம் காணாததாகவும் இருக்கவில்லை. எனவே தான் தங்கிக் கொள்வதற்கு அந்தப் பாறையை விட்டால் வேறு போக்கிடமில்லை என்றே அவன் தீர்மானித்தான். அந்த இரட்டைப் பாறைகளில் உயரமான பாறைமீது ஏறுவதே நல்லது என அவனுக்குப் பட்டது. உடைந்த கப்பலிலிருந்து சுருக்காங் கண்ணி போட்ட ஒரு கயிற்றால், ஒரு பாதாளக் கரண்டியைக் கட்டி, அந்தப் பாறையின் உச்சிமீது விட்டெறிந்து, அதனைப் பற்றிப் பிடித்துத் தொங்க முடிந்தால், அந்தப் பாறைக்கும் கப்பலுக்குமாக அந்தக் கயிற்றின் வழியாகச் சென்று வரலாம் என்று அவனுக்குத் தோன்றியது. இந்தப் படுபயங்கரமான கயிற்று வித்தைச் சாகசத்தைச் செய்வது பேராபத்தானதுதான். என்றாலும் அந்தக் கட்டழகு பெட்டகமான கன்னி டெருச்செட்டின் ஒரேயொரு புன்னகையைப் பெறுவதற்காக, அவன் இதைக்

காட்டிலும் பேராபத்தான சாகசச் செயல்களைக் கூடச் செய்வதற்குச் சித்தமாக இருந்தான்.

அன்றிரவில் அவன் அந்தப் பாறையின் இடுக்கொன்றில் தென்பட்ட ஒரு பொந்துக்குள் நன்ருகப் படுத்துத் தூங்கினுன். மறுநாட் காலையில் அவன் கண் விழித்தபோது, கடற்காற்று தனது படகிலிருந்த உணவுப் பண்டங்களை யெல்லாம் கடலுக்குள் கொட்டிக் கவிழ்த்து விட்டுப் போயிருப்பதைக் கண்டான். அதனை உணர்ந்ததும், அந்த உணவுப் பொருள்களை விழுங்கித் தீர்த்து விட்ட கடலை நோக்கி, அவன் வெறுமனே தலையைமட்டும் ஆட்டினுன். கடலுக்கும் தனக்கு மிடையே குரோத பாவம் கொண்ட விரோதமும் போராட்டமும் தொடங்கி விட்டது என்பதையும் உணர்ந்தான். பின்னர் பாறைகளில் ஒட்டிக் கிடக்கும் சின்னச் சிப்பி மீன்களைப் பேர்த்தெடுத்து, அவற்றை உண்டு தீர்த்து, காலையுணவை முடித்தான். அதன் பின் தன் வேலையில் கவனம் செலுத்தினுன். வேலை என்ருல் சாமானியமான வேலையா? அந்த மாதிரியான பேராபத்தான, பயங்கரமான காரியத்தை அவனுக்கு முன் எந்தவொரு மனிதனும் மேற்கொண்டதில்லை; மேற்கொள்ள வேண்டிய சந்தர்ப்பமும் இருக்கவில்லை. ஏனெனில் அந்த ரகமான கப்பலே அந்த வட்டாரத்துக்குப் புதுசு. அதிலுள்ள யந்திரங்களோ புதுமையானவை; புதிரான அவற்றையெல்லாம் எந்த விதச் சேதமும் ஏற்படாமல், பூட்டுப்பூட்டாகக் கழற்ற வேண்டும். மேலும், இவற்றையெல்லாம் தன்னந்தனியனுய், ஒற்றைக் கொருவனுய் இருந்து செய்யவேண்டும். அத்துடன் அவனிடம் அதற்கான கருவிகளும், ஆயுதங்களும்கூட இல்லை. வேலை ஒரு புறமிருக்க, வேலை பார்ப்பவனுக்கு அங்கு உணவுக்குக்கூட வழியில்லை, சொல்லப் போனுல், கடற்பாறைகளிலும், கடல் நீருக் கடியிலும் கிடைக்கக் கூடிய பாசி பச்சைகளையும், மீன்களையும் தின்றுதான் அவன் பசியாற்றிக் கொள்ளவேண்டும்.

அவன் முன் காட்சியளித்த அந்தக் காரியம் உண்மையிலேயே மலைபோன்ற ராக்ஷஸ முயற்சியாகத்தான் தோன்றியது. எனினும் அவன் துணிந்து செயல்பட்டான். அவன் முன் தோன்றிய முதல் வேலை, அந்தப் பாறைகளில் தென்பட்ட குகைப் பொந்தொன்றில் ஒரு கொல்லுப் பட்டறையை உருவாக்கி முடிப்பது தான். கில்லியட் செம்படவன் தான்; எனினும் அவன் திறமை வாய்ந்த மாலுமியும்கூட. மாலுமி மட்டும் அல்ல; திறமை வாய்ந்த தொழிலாளியும் கூட. தொழிலாளிமட்டுமல்ல; அவன் ஒரு பிறவிக் கலைஞனும்கூட; யந்திர நுணுக்கங்களைத் தெரிந்துகொள்ளும் நிபுணனும் கூடத்தான். எனவே அவனது

இத்தனை திறமைகளும் அப்போது விழிப்புற்றுச் செயலாற்றத் தொடங்கின. அவன் தனது தொழில் திறமையால், அந்தப் பாறைகளைப் பேர்த்தெடுத்தே அவற்றிலிருந்து ஒரு பட்டறையையும், ஊதுலையையும் உருவாக்கினான்; தனது யந்திரத் தொழில் நுணுக்க அறிவைப் பயன்படுத்தி, கடலிலிருந்து வீசும் காற்றையே ஊதுலைக்கான துருத்தியின் வேலையைச் செய்யுமாறு பயன்படுத்திக் கொண்டான். தனது மீன் பிடிக்கும் திறமையைப் பயன்படுத்தி, உடைந்துபோன கப்பலிலிருந்து கடலில் சிதறி மிதந்த ஆயிரக் கணக்கான மரத்துண்டுகளையும், கட்டைகளையும் அலைகளோடு போராடி ஒன்று திரட்டிக் கரை சேர்த்தான்; தனது மாலுமித் திறமையைப் பயன்படுத்தி, உதவாக்கரையான சாதனங்களின் உதவியோடேயே அந்த மகத்தான, மாபெரும் கடமையைச் செய்ய முனைந்தான்.

  

**அ**வனது முதல் வேலை துடுப்புச் சக்கரங்களைக் கழற்றி எடுப்பதுதான். இந்த வேலையே பலருக்குச் சிரம சாத்தியமான காரியம்தான். ஆனால், திறந்த உடம்போடு பாறைமீது நின்று தனது பணியைத் தொடங்கிய அந்த இளைஞனுக்கோ, அந்தக் காரியம் தனது பணியின் தொடக்கமாகவே இருந்தது. அவன் ராக்ஷஸனைப் போல்,



வெறிவேகம் கொண்டவனைப் போல், இளைப்புக் களைப்பு ஏதுமின்றி அயராது வேலை செய்தான். அதன் மூலம் மிகவும் வியப்பூட்டத்தக்க முறையில், மிகவும் குறைந்த நேரத்திலேயே அந்தத் துடுப்புச் சக்கரங்களைத் தனித்தனியாகக் கழற்றி எடுத்தான்; மேலும் அவற்றுக்கெல்லாம் வரிசையெண்ணிட்டு, அவற்றைக் கட்டியும் வைத்தான். அவனது கையிலிருந்த ஆயுதங்களோ ஒரு பெரிய சுத்தியல், ஒரு கோடரி, ஒரு கத்தி ஆகியவைதாம். அந்த ஏழைச் செம்படவன் இந்த மூன்று ஆயுதங்களைத் தான் கொண்டு வந்திருந்தான். இவற்றைக் கொண்டே அவன் ஆரம்பத்தில் அபாரமான காரியங்களைச் செய்து முடித்தான். பின்னர் அவன் அந்த உடைந்த கப்பலின் நொறுங்கிய பகுதிகளிலிருந்து, தனக்கு வேண்டிய

ரம்பங்கள், அரம், உளி முதலியவற்றையும் உருவாக்கிக் கொண்டான். அவ்வாறு உருவாக்கிய கரடுமுரடான ஆயுதங் தங்களைக் கொண்டே, அவன் அந்தக் கப்பலைக் கொஞ்சம் கொஞ்சமாக பிரித்தான். கடைசியாக, கப்பலின் வயிற்றுக்குள்ளிருந்த யந்திரப் பகுதிகள் அவன் முன்னால் திறந்த மேனியாகத் தென்பட்டன. ஆனால் அவற்றைப் பார்த்ததும், அவன் கையிரண்டையும் கட்டியுட்கார்ந்து, தன்முன்னிருந்த பிரம்மாண்டமான பணியை எப்படிச் செய்து முடிப்பது என்று எண்ணமிட்டான். அந்தப் பணியை எண்ணிப் பார்க்கும் போது, அதற்கு முன் செய்து முடித்த காரியங்களெல்லாம் மிகச் சாதாரணமாகவே தோன்றின.

வால்வுகள், சுருள் கம்பிகள், குழாய்கள், செம்புக் கம்பிகள் மற்றும் எத்தனையெத்தனையோ விதமான சிக்கலான பாகங்களைக் கொண்ட அந்த அற்புதமான யந்திரத்தைப் பூட்டுப் பூட்டாகப் கழற்றியெடுப்பது சாதாரண வேலையல்ல. நீராவிக் கப்பலின் சூட்சுமத்தையும், யந்திர நுணுக்கத்தையும் தெரிந்தவர்களும்கூட, பல்வேறுவிதமான ஆயுதங்களையும் கருவிகளையும் துணையாகக் கொள்பவர்களுக்கும்கூட, அந்தக் காரியத்தைச் செய்து முடிப்பது சுலபமான வேலையல்ல; அதற்குத் திறமையும், கவனமும் மிக மிகத் தேவை. கில்லியட்டுக்கோ அந்த யந்திரத்தின் சூட்சுமம், அதன் நுணுக்கங்கள் முதலியவை எதுவும் தெரியாது; மேலும் அவனிடம் சரியான ஆயுதங்களும் இல்லை. எனவே அவன் பாறை மீது அமர்ந்து ஆலோசனை செய்தான். சுற்றுச் சூழ்ந்திருக்கும் கடலின் மத்தியில், தன்னந்தனியனாக நின்று அவன் ஆலோசித்தான். அப்போது அவன் மனத்தில் ஒரு யோசனை தோன்றியது. அந்த யோசனையே ராக்ஷஸத்தனமான யோசனைதான். அதாவது, அந்த யந்திரத்தைப் பாகம் பாகமாகக் கழற்றாமல், அப்படியே மூட்டோடு பேர்த்தெடுத்து. அதனைக் கப்பலிலிருந்து தூக்கி, பின்னர் அதனைத் தனது படகில் இறக்கி விட்டால் என்ன என்பதுதான் அந்த யோசனை! இந்த யோசனை தோன்றியதும், அவன் தனது படகின் மேல் தளத்தை அளந்து பார்த்தான். அதன் அகலம் அந்த யந்திரம் ஆக்கிரமித்துக் கொண்டிருந்த அஸ்திவாரத்தின் குறுக்களவைக் காட்டிலும் இரண்டடி அகலமாகவே இருந்தது. அப்படியானால், அந்த யந்திரத்தை அவனது படகில் ஏற்றி வைத்துவிடலாம். ஆனால் எப்படி ஏற்றுவது? அதுதான் பிரச்னை.

இதனை யோசித்ததும், அவன் தனது குகைக்குள் சென்றான். அங்கு தான் சேமித்து வைத்திருந்த பெரிய மரக்கட்டைகள் நான்கை வெளியே இழுத்தான். அந்தக் கட்டைகளைப் பாய்

மரக் கயிறுகளைச் சுருட்டிக் கட்டும் உருளைக் கயிற்ருேடு கட்டி மேலே தூக்கிஞன்; பின்னர் அவற்றை உடைந்து போன கப்பலுக்குச் சிறிதே மேலாக, அந்த இரட்டைப் பாறைகளுக்குமிடையே பாலம் போட்ட மாதிரி திருப்பிப் போட்டான். அந்த நான்கு கட்டைகளோடும் அவன் கப்பிச் சக்கரங்களைக் கட்டிஞன்; அவற்றின் மூலம் கம்பிகளைத் தொங்க விட்டு, சாமான்களைத் தூக்கியெடுக்கும் ஒரு கருவியை உண்டாக்கிக் கொண்டான். பின்னர் அவன் கப்பலின் தளத்தில் யந்திரப்பகுதிக்குமேலாக நான்கு பெரிய தொளைகளை வெட்டிஞன்; அதே போல், முன் தளத்திலும் தொளைகள் போட்டான். இவற்றுக்கு நேராக, கப்பலின் அடித்தளத்திலும் எட்டுத் தொளைகள் போட்டு முடித்தான். பின்னர், அவன் கட்டியிருந்த நான்கு கப்பிச் சக்கரங்களோடு இணைந்திருந்த கம்பிகளை, மேல் தளத்திலுள்ள தொளைகளின்வழியே இறக்கி—, பின்னர் கீழ்த்தளத்திலுள்ள தொளைகளின் வழியாகவும் செலுத்திஞன்; அதன்பின் கீழே கொண்டு சென்ற கம்பிகளை, இயந்திரங்களுக்கு அடிப்புறம் வழியாக, மறுபுறத்திலுள்ள தொளைகளின் வழியே மறுபடியும் கீழ்த் தளத்தின் தொளைகள் வழியாகவும் மேல் தளத்தின் தொளைகள் வழியாகவும் மேலே இழுத்தான்; மேலே இழுத்த கம்பிகளைத் தொங்கு பாலமிட்டிருந்த மரக்கட்டைகளிடம் மீண்டும் கொண்டு வந்து முடித்தான். இவ்வாருக அந்தக் கம்பிகள் அனைத்தும் இறுதியில் ஒரே கப்பிச் சக்கரத்தில் வந்து முடியுமாறு மேலும் கீழும் கட்டி முடித்தான். இவ்வாறு கட்டி முடித்ததால், அந்தக் கம்பியின் ஒரு புறத்தைப் பிடித்து ஒரு கையால் இழுத்தாலும்கூட, அந்தக் கப்பியந்திரத்தை இயக்க முடியும் என்ற நிலைமை ஏற்பட்டது. இதன்மூலம் அவன் ஒற்றைக் கப்பியை இயக்கியவாறே, தான் விரும்பிய வண்ணம் எல்லாவற்றையும் இயக்க முடியும் என்பதை நிச்சயப்படுத்திக் கொண்டான்.

இந்த வேலைகளையெல்லாம் செய்து முடித்த பின்னர், அவனது படகை உடைந்த கப்பலுக்கு நேராகக் கீழே கொண்டு வந்து நிறுத்துவதற்குப் பதிலாக, அவன் வேண்டாத, பயனற்ற ஒரு காரியத்தைச் செய்தான். அதாவது டோவ்ரெஸ் பாறைகளின் அடிப்புறத்தில் பத்துப் பெரிய ஆணிகளை முளையறைந்து நட்டான். பின்னர் உடைந்த கப்பலில் ஒரு பெரும் பலகைப் பகுதியை சிரமத்தோடு இழுத்து வந்து, அதனை அந்த இடத்தில் ஒரு மதகுக் கதவைப் போல் கட்டிவைத்தான். அதன்பின்னர் அவன் தனது படகின் நங்கூரத்தை மேலிழுத்துவிட்டு, அதனை அந்த இரட்டைப் பாறைகள் இரண்டுக்கும் இடை

வெளிப் பிரதேசத்துக்குள் ஓட்டி வந்தான்.

இத்தகைய சிரம சாத்திய மான காரியங்களையெல்லாம் சாதித்து முடித்த அந்த இளை ஞனின் தோற்றமே படுபயங்கர மாக மாறிவிட்டது. அவனது தாடியும் மீசையும் தலைமயிரும் நீளமாக வளர்ந்துவிட்டன. அவனது உடம்பெல்லாம் காயம் பட்ட வடுக்கள் மலிந்திருந்தன. இத்தனைக்கும் மத்தியில் அவனைப் பசியும், தாகமும், குளிரும் வாட்டியெடுத்தன. இரண்டு மாத காலத்துக்கும் மேலாக, அவன் சிப்பி மீன்களை மட்டுமே உணவாக உண்டு வந்தான்! குடிப்பதற் கான நல்ல தண்ணீருக்கும் அங்கு வழியில்லை, எனினும், அங்குள்ள பாறைகளின் குண்டு குழிகளில் தேங்கி நிற்கும் மழை நீரையும், பனித்துளிகளையும் சேகரித்துத்தான் அவன் தன் தாகத்தைத் தீர்த்துக் கொண் டான். அந்தப் படுமோசமான பாறைகளோ அவனது உடம் பையும் உயிரையுமே அறுத்துத் தின்று வந்தன. ஆனால், இத் தனை சிரமங்களுக்கும் துன்பங் களுக்கும் பின்னால்,இப்போதோ எல்லாம் ஒரு மட்டிலும் தயா ராகி முடிந்துவிட்டன. அவ னது படகும் உடைந்துபோன கப்பலின் யந்திரப் பகுதிக்கு நேர்கீழாகக் கொண்டு வந்து நிறுத்தப்பட்டாகிவிட்டது. கப் பலின் எல்லாப் பக்கத்தின் பல கைகளும் வெட்டப்பட்டிருந் தன; எனவே யந்திரங்கள் மேலேயிருந்து கீழே இறங்கு வதற்குத் தடையேதும் இருக்க வில்லை. மேலும் யந்திரத்துக்கு நேர் அடிப்புறத்திலுள்ள அடித் தளத்தின் பலகையும் சதுரமாக வெட்டப்பட்டிருந்தது; எனவே யந்திரத்தை இறக்கும்போது, அந்த அடித்தளத்தின் சதுரப் பலகையும் யந்திரத்தைத் தாங் கிக் கொண்டே, அப்படியே கீழே இறங்கமுடியும். ஆனால் அந்த மாபெரும் யந்திரத் தின் பயங்கரமான பாரம் முழு வதும் இப்போது ஒற்றைச் சங்கிலியின் பலத்தில் தான் சார்ந்திருந்தது. அந்தச் சங்கிலி யின் ஏதாவதொரு கண்ணியை அறுத்துத் துண்டாடிவிட்டால், அந்தப் பாரம் முழுவதும், அக் கப்பிக் கம்பிகளின் பலத்தைச் சார்ந்து தொங்க ஆரம்பித்து விடும். அதன்பின் கேந்திர மான அந்த ஒற்றைக் கப்பியைத் திறமையாக இயக்குவதன் மூலம், அந்தக் கம்பிகள் கீழிறங் கும்; அத்துடன் அவற்றின் பலத்தில் தொங்கி நிற்கும் யந்திரப் பகுதியும் கொஞ்சங் கொஞ்சமாகக் கீழே இறங்கி, படகில் வந்து அமர்ந்துவிடும்.

கில்லியட் உடைந்த கப்பலின் மீது தொத்தி ஏறினான்; கேந் திரமான அந்த ஒற்றைக் கப்பி யின் கம்பியை ஒரு கையால் பிடித்துக் கொண்டான்; மறு கையினால் அந்த ஒற்றைச் சங்கி லியின் கண்ணியொன்றை அரத் தால் அறுக்கத் தொடங்கினான்.

திடீரென்று படாரென்ன ஒரு பெருத்த ஓசை கேட்டது. அந்தக் கண்ணியைப் பாதியளவுக்கு அறுத்து முடியுமுன்பே, அது பட்டென்று முறிந்து அறுந்தது. வெட்டுப்பட்டுத் தொங்கிய சங்கிலி ஊஞ்சலாடி, பாறையின் மீது சென்று மோதியது. கப்பிக் கம்பிகள் அனைத்தும் விறைத்து முறுக்கேறின. அந்தப் பெரும் யந்திரம் கப்பலிலிருந்து இடம் பெயர்ந்தது; யந்திரத்தின் இரும்பு அஸ்திவாரம் கீழ்த் தளத்துக்கும் அடியில் தெரிந்தது. திட்டமிட்டபடியே அந்தக் கனத்த யந்திரம் மெதுவாகவும், நிதானமாகவும் இறக்கப்பட்டது. பின்னர் அந்தக் கப்பிச் சக்கரங்கள் சுழல்வதும்நின்றன. இவ்வாறாக, அந்த யந்திரம் எந்தவிதச் சேதமுமின்றி, நேராகவும் முழுமையாகவும் அந்தப் படகின் மேல் தளத்தில் பத்திரமாக இறங்கியமர்ந்தது!



எல்லாம் பூர்த்தியாகிவிட்டன. இனி கில்லியட் புறப்பட வேண்டியதுதான். ஆனால் அந்த நேரத்தில் கடற்பரப்பின் மீது திடீரென்று ஒரு பெரும் காற்று வீசியது. கடலலைகள் துள்ளாட்டம் போட்டன. ஆம். வெகு கால மாக வராதிருந்த புயற்காற்று வருவதற்கான அறிகுறி அது. அவன் எல்லாக் காரியத்தையும் செய்து முடித்தவுடன், அவன் மீது குரோதம்கொண்ட அந்தக் கடலானது அவனை முழுமையாகப் பழிவாங்கித் தனது விரோதத்தைத் தீர்த்துக்கட்டுவதற்காகவே அத்தனை காலமும் காத்திருந்தது போலத் தான் தோன்றியது, அந்தக் காட்சி.

கில்லியட் தனது மதகுக் கதவை நோக்கி விரைந்தான். அதனை வேகமாக இழுத்து அடைத்தான். பின்னர் அந்தக் கதவைச் சங்கிலிகளாலும் கம்பிகளாலும் பின்னப் பிணைத்து, மிகுந்த சிரமத்தோடு கட்டி முடித்தான். அதன்பின் தண்ணீரில் பாய்ந்து நீந்தி, பாறைகளின் இடைவெளிக்கு முன்னாலிருந்த வெளிப்புறக் குத்துப் பாறைகளை நோக்கி, மேலும் பல கட்டைகளையும் சங்கிலிகளையும் இழுத்து வந்து சேர்த்தான். அவற்றைக் கொண்டு அங்கு அலைவீச்சைத் தடுத்துப் பாதுகாக்கும் ஓர் அரணை உருவாக்கினான். மணிக் கணக்கில் நேரம் பிடிக்கக்கூடிய இந்த அசுரத்தனமான வேலைகளையெல்லாம், அவன் வெறிபிடித்தவன்போல் ஒருமணி நேரத்திற்குள்ளாகவே செய்து முடித்தான். பின்னர் அங்கு உருவாயிருந்த அந்தச் சுவரின் மீது முதுகைச் சாய்த்தவாறு, புயலை நேருக்கு நேர் எதிர் நோக்கியவனாக நின்றான்.

புயலும் வந்தது! மழை, காற்று, மின்னல், இடி, குமுறல், கொந்தளிப்பு, அலை, நுரை, ஆரவாரம், கர்ஜனை, கூச்சல், குழப்பம் எல்லாம் திடீரென்றுகட்டவிழ்த்துவிட்ட ராக்ஷஸ மிருகங்களைப் போல்

தறிகெட்டுப் போய் பேயாட்டம் போட்டன. பரந்து விரிந்த கடற்பரப்பில் எழுந்த கொந்தளிப்பு முழுவதும் டோவ்ரெஸ் பாறைகளை நோக்கிப் பாய்ந்தோடி வந்தது. நுங்கும் நுரையுமான அலை வெள்ளம் பாறைகளின் மீதெல்லாம் வழிந்தோடியது. கண்ணுக்கெட்டிய தூரம் வரையிலும் கடலே வெண்ணுரைப் படலமாகக் காட்சியளித்தது. ஏதோ கண்ணாடியாலான ஒரு பெரிய சுவரே எழுந்து நிற்பதுபோல், கடல் வீங்கி விம்மிப் புடைத்தெழுந்தது. அந்தச் சுவர் முன்னேக்கிப் பாய்ந்து வந்தது. அந்த நீர்ச் சுவர் நுரையற்றுப் பசிய நிறமாகத் தோற்றியது. அந்தத் தோற்றம் கடற்பரப்பெல்லாம் பரந்து தோன்றியது. சொல்லப்போனுல், ஒரு பிரம்மாண்டமான ராக்ஷஸ உருவைப் போல், பேரலை கடல்மீது உருண்டு வந்தது.

அவ்வாறு உருண்டு வந்த ராக்ஷஸப் பேரலை அந்த அரண் சுவரின்மீது பலத்த அதிர்ச்சியோடும், ஆரவாரத்தோடும் புடைத்து மோதியது. அந்த அரணும் அதன் சுற்றுப்புறமுமே கர்ஜித்துக் குமுறும் ஒரு அலை வெள்ளமாகியது. சிறிது நேரம் அந்த அலை வெள்ளத்தில் எல்லாமே மூழ்கி மறைந்திருந்தன. பின்னர் அந்த அலை வடிந்த பின்பு, அந்த அரண் உடைபடாமல் இன்னும் உறுதியாக இருப்பது தெரிந்தது. எனினும் அடுத்து ஒரு பேரலை; மற்றும் ஒரு பேரலை; பின்னும் ஒரு பேரலை; மேலும் ஒரு பேரலை! அலைமேல் அலையாகப் பல அலைகள் படையெடுத்தன. கடைசியில் எல்லாவற்றை மிஞ்சும் விதத்தில் ஒரு மாபெரும் அலை உருண்டோடி வந்தது. அந்த அலை பாறைகளின் மீது மோதிச் சிதறிய போது, அந்தப் பாறைகளே அதிர்ந்து குலுங்கின. இத்தனை தாக்குதலுக்கும் பின்னர் அந்த அரணும் தாக்குப்பிடித்து நிற்க முடியாமல் தளரத் தொடங்கியது. உடனே கில்லியட் அதனைப் பாதுகாப்பதற்காகப் பாய்ந்தோடினுன். ஒரு பெரிய மரக்கட்டையினுல், அவன் ஒரு பாறையைப் பேர்த்தெடுத்து, அதனைப் பொங்கிப்புடைக்கும் கடலுக்குள் உருட்டித் தள்ளினுன். பின்னர் தொங்கிக் கொண்டிருந்த டுராண்டிக் கப்பலிலிருந்து ஒரு பெரும் பகுதியை உடைத்து, அதனை அந்த அரணின் மறுபக்கத்தில் அணைப்பாக விழுந்து, அதற்கு அரண் செய்யும் விதத்தில், கீழே தள்ளிவிட்டான். இவ்வாறு அந்தக் கொடிய புயலோடு போரிட்டு, தனது புத்தி சாமர்த்தியத்தையெல்லாம் பயன்படுத்தி, தனது பலத்தையெல்லாம் பிரயோகித்து, மல்லாடினுன். இவ்வாறு கடலோடும் புயலோடும் ஒருநாள் முழுவதும் ஓய்வு ஒழிச்சலின்றிப் போராடினுன். பின்னர் திடீரென்று வானம் வெளி வாங்கியது; நிர்

மலமான நீல விண் பரப்பாகத் தெளிந்தது.

இறுதியில் கில்லியட் வெற்றி பெற்றுவிட்டான்.



கில்லியட் தனது படகின் மேல் தளத்தின் மீது அப்படியே விழுந்து கிடந்து உறங்கினான். அவன் விழித்தெழுந்து பார்த்த போது, கடல் இன்னும் பூரண மாக அடங்கவில்லை என்பதைக் கண்டான். இன்னும் அதில் கொந்தளிப்பு இருக்கத்தான் செய்தது. அத்தகைய கொந் தளிப்பில், தனது படகிலுள்ள அருமையான சரக்கை, பரிசைப் படகோட்டிக் கொண்டு செல் வது பேராபத்தானது என்பதை யும் அவன் உணர்ந்தான். ஆக்கப் பொறுத்தவன் சிறிதே ஆறவும் பொறுக்கக் கூடாதா? எனவே அவன் மேலுடையையெல்லாம் களைந்துவிட்டு, கடலுக்குள் உள்ளே தெத்துக் குத்தான சிப் பிப் பாறைகளின் மீது சென்று, அங்கு தனக்கு வேண்டிய உணவைத் தேட முனைந்தான். அங்கு சிப்பி மீன்களும், நண்டு களும் மிகமிக அரிதாகத்தான் தென்பட்டன. இறுதியில் நெடு நேரம் வேட்டையாடித் திரிந்த பின், அவன் ஒரு பெரிய நண் டைக் கண்டு கொண்டான். ஆனால் அந்த நண்டோ ஒரு பாறைக்கடியிலுள்ள பெரிய மடிப்புக்குள்ளே போய் பதுங் கிக் கொண்டது. அந்தப் பாறை மடிப்புக்கு அடியில் அவனும் சென்றான். ஆனால் அங்கு சென் றதும், அங்கு கண்ட காட்சி யைக் கண்டு, அவன் அப்படியே வியப்புற்று நின்றான். அது ஒரு பாதாளக் குகை. அந்தக் குகைக் குள் மர்மமான, பசிய நிறங் கொண்ட ஒரு சிறு குளம் தென்பட்டது. அந்தக் குளத் துக்குள்ளிருந்து பிரம்மாண்ட மான பாறைத் தூண்கள் மேல் நோக்கிச் சென்றன. அவற் றின் சிகரங்கள் பாறைக் குகை யின் முகட்டில் தென்பட்ட காரிருளோடு ஐக்கியமாகிக் கண்ணுக்குத் தெரியாமல் இருந் தன. எங்கு பார்த்தாலும் வகை வகையான கடற்பாசி இனங் கள் தொங்கிக் கொண்டிருந் தன. அந்தப் பசிய நிறமான நீர்த் தேக்கத்தினுள்ளும் பல் வேறு மென்மையான பாசியும் பச்சையும் தலைதூக்கி நின்று அசைந்தாடிக் கொண்டிருந்தன.

அந்தப் பெரிய நண்டு அங் குள்ள இடுக்குகளின் ஒன்றில் தான் புகுந்து ஒளிந்திருக்க வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது. எனவே அவன் அந்த நீரில் இறங்கி நடந்து, அந்த நண்டை அங்கு நிலவிய இருட்டில் இனம் கண்டுபிடிக்க முனைந்தான். அப்போது திடீ ரென்று ஏதோ ஒன்று தன் கையை எட்டிப் பிடிப்பதாக உணர்ந்தான் கில்லியட்!

சுரசுரப்பும், குளிர்ச்சியும், மெலிவும் பொருந்திய ஏதோ ஓர் உயிர்ப் பிராணி அவனது மணிக் கட்டைப் பற்றிப் பிடித் துச் சுற்றி வளைத்தது. பின்னர்

அந்தப் பிராணி சுற்றி முறுக்கி இறுகும் கயிற்றைப்போல் மெல்ல மெல்ல ஊர்ந்து அவனது மார்பின் பக்கமாக நெருங்கியது. பிறகு அதன் இறுக்கம் மெல்ல நெகிழ்ந்து கொடுத்தது. எனினும் அவனால், அந்த இடத்தை விட்டு நகரமுடியவில்லை. அங்கேயே முளையறைந்து நிறுத்தி விட்டாற்போன்று, அவன் அசையாமல் நின்றான். அவனைப் பற்றிப் பிடித்த அந்தப் பிராணி உருக்கைப்போல் உறுதியாகவும், இரவைப் போல் குளிர்ச்சி மிக்கதாகவும், தோலைப்போல் வழவழப்பாகவும் இருந்தது. பின்னர் பாறை இடுக்கிலிருந்து நீண்டு ஒடுங்கிய கூர்மையான கரம் போன்ற ஒன்று நாக்கைப் போல் வெளியே தலை காட்டியது. அதுவும் அவனது உடம்பின்மீது தாவி யூர்ந்து அவனைச் சுற்றி வளைத்தது. அதே சமயம் அவன் என்றுமே அனுபவித்திராத கொடியதொரு வேதனை அவனது உடம்பில் தோன்றியது. அந்த வேதனையில் அவனது தசைக் கோளங்களெல்லாம் தளர்ந்து குன்றின. தனது உடம்பில் வட்டமும் தட்டையுமான எத்தனையோ பொருள்கள் அப்பிக் கொள்வதைப் போல் அவன் உணர்ந்தான். அவை யனைத்தும் எண்ணற்ற அட்டைப் பூச்சிகளைப் போல் அவனது உடம்பில் அப்பி, அவனது ரத்தத்தையே உறிஞ்சிக் குடிக்க முனைவது போல் தோன்றின. பின்னர் பாறையிலிருந்த பொந்துக்குள்ளிருந்து மூன்றாவது கையும் வெளிப்பட்டது; பிறகு நான்காவது கை; அதன்பின் ஐந்தாவது கை. அவையும்அவனது உடலைச் சுற்றி வளைக்கத் தொடங்கின. இறுதியாக, பாறைக்கடியிலிருந்து ஒரு பெரிய, உருண்ட, சதைப் பண்டமான உருவம் வெளிப்பட்டது. அந்த ராக்ஷஸப்பிராணிகளின் ஏனைய மூன்று கைகளும் மறுபக்கத்தில் தென்படுவதையும் அவன் கண்டான். அந்தக் கைகளின் முனைகள் இன்னும் வெளிப்படாமல் பாறைக்கடியிலேயே இருந்தன. அந்தச் சதைப் பிண்டமான உருவத்தின் மத்தியில் இரண்டு கண்கள் தென்பட்டன. அந்த இரண்டு கண்களும் கில்லியட்டையே கூர்ந்து நோக்கின. அப்போதுதான் அவன் அந்தப் பிராணி எட்டுக் கைகள் கொண்ட ராக்ஷஸக் கடல் மீன் தான் என்பதைக் கண்டறிந்தான்.

அந்தப் பிராணி சிலந்தி ஈயைப் பிடிப்பதுபோல் தனது கைகளால் அவனை இறுகப் பிடித்தது. அப்போது அவன் அந்த நீர்நிலையில் இடுப்பளவு ஆழத்தில் நின்றுகொண்டிருந்தான். அவனது பாதங்களோ பிடிதாரமற்று வழுக்கும் வழவழப்பான பாறைகளின் மீது நின்றன. அவனது வலது கையோ அந்தப் பிராணியின் பிடிக்குள் சிக்கி, வலுவும் பலமும் இழந்து போயிருந்தது.

அந்தப் பிராணியின் தரத்திலுள்ள நூற்றுக்கணக்கான உறிஞ்சிகள் அவனது உடம்பைப் பற்றிப் பிடித்து, அவனை வேதனைக்கும் அருவருப்புக்கும் ஆளாக்கிக்கொண்டிருந்தன. அந்தப் பிராணியின் மாபெரும் கரங்களின் பிடியில் அவன் நன்ருகச் சிக்கியிருந்தான்; அந்தக் கரங்களின் விரல்கள் மட்டுமே ஒவ்வொன்றும் ஒரு கஜ நீளம் இருக்கும் போலிருந்தது; அந்த விரல்களில் ஊசி முனைகளைப் போல் உடலுக்குள் இறங்கி வேதனை செய்யும் எண்ணற்ற முட்களும் இருந்தன. தனது பிடியில் அகப்பட்ட அவனை நோக்கி, அந்தப் பிராணி வேகமாக முன்னேறி வரத் தொடங்கியது. இந்தச் சமயத்தில் அவன் ஏதாவது செய்தாக வேண்டும். இல்லாவிட்டால், அந்தப் பிராணியின் அகன்ற வாய் அவனது உடலைக் கவ்விப் பிடித்துவிட்டால்,பிறகு கில்லியட்டுக்கு விமோசனமே இல்லை. அதற்கு இரையாக வேண்டியதுதான். கில்லியட் தனது கத்தியைக் கொண்டு அந்தப் பிராணியைத் தாக்கினுன். கண்மூடித் திறக்கும் வேகத்தில் தன் கத்தியைச் சுழற்றி, அந்தப் பிராணியின் கண்கள் இரண்டையும் குத்தி வட்டமாகத் தோண்டியெடுத்தான்; அத்துடன் அதன் பயங்கரமான தலை மீதும் ஓங்கிக் குத்தினுன். மறுகணமேஅவனைப் பிடித்திருந்த பிடிகள் எல்லாம் தளர்ந்து விடுபடத்தொடங்கின.

அந்தப் பிராணியிடமிருந்து தப்பித்துக்கொண்ட கில்லியட் அங்கிருந்து வெளியே ஓடிவருவதற்காகத் திரும்பினுன். அப்போது அருகிலுள்ள ஒதுக்கமான இடமொன்றில் ஏதோ ஒன்று தன்னை நோக்கிப் புன்னகை புரிவது போல் தோற்றியதைக் கண்டான். அது ஒரு மனிதனின் மண்டையோடு. அவன் அதனருகில் சென்ருன். அந்த மனித எலும்புக்கூடு நண்டு ஓடுகளின் குவியலுக்கிடையே புதைந்தும்புதையாமலும் கிடந்தது. அந்த எலும்புக் கூட்டின் இடுப்பில் ஒரு பெல்ட் இருப்பதையும் கில்லியட் கண்டான். அவன் அதனைப் பற்றிப் பிடித்து இழுத்தபோது, அது அறுந்து விழுந்தது. அப்போது அத்துடன் கட்டப்பட்டிருந்த ஒரு சிறிய இரும்புச் சுருட்டுப் பெட்டியும் விழுந்தது. அவன் அந்தப் பெட்டியை எடுத்துத் திறந்து பார்த்தான். அதற்குள் சில காகிதங்கள் இருந்தன; அவை மூவாயிரம் பவுன் மதிப்புள்ள மூன்று ஆயிரம் பவுன் நோட்டுக்களாக இருப்பதையும் அவன் கண்டான்.

☼ ☼ ☼

இரண்டு நாட்களுக்குப் பின்னர், பொழுது மயங்கி இருள் சூழ்ந்து வரும் நேரத்தில், கில்லியட் தனது படகைமெல்ல லெத்தியர்ரியின் கடற்கரை வீட்டை நோக்கி வேகமாகச் செலுத்தி, அங்கு வந்து சேர்ந்தான். அந்



தீப் படகில் டுராண்டிக் கப்பலின் யந்திரமும் பத்திரமாக வந்து சேர்ந்துவிட்டது. கரையில் இறங்கிய கில்லியட் ஓர் அடர்த்தியான புதரின் பக்கமாக மெதுவாகவும் அமைதியாகவும் சென்று, லெத்தியர்ரியின் வீட்டுத் தோட்டத்துக்குள் எட்டிப் பார்த்தான். அங்கு அவள்-அந்தக் கட்டழகுக் கன்னி டெருச்செட்-இருப்பதை அவன் கண்டான். ஆனால் அவள் தனியாக இருக்கவில்லை. யாரோ ஓர் அன்னியனும் அவளுடன் இருந்தான். அந்த மனிதன் அவளைத் தன் இரு கைகளாலும் வாரியணைத்திருந்தான். அவளும் அவனது அரவணைப்பில் மகிழ்ந்து சொக்கிப் போயிருந்தாள். இதனைக் கண்ட பின்னர் அங்கிருந்து நிழலைப் போல் பதுங்கி அப்பால் சென்றுவிட்டான், கில்லியட்.

மறுநாள் காலையில் லெத்தியர்ரி தனது யந்திரத்தைக் கண்ணால் கண்டான். அவனுக்கு ஆனந்தம் சொல்லிமுடியாது. வெறிபிடித்தவன் போல் அவன் நடந்து கொண்டான். அவன் விம்மினான்; பொருமினான்; சிரித்தான்; பாடினான்; என்னதான் பேசுகிறோம் என்பதே தெரியாமல் ஏதேதோ புலம்பினான்: கில்லியட்டை எப்படியெல்லாமோ வாயார வாழ்த்தினான்; போற்றினான். இறுதியில் அந்தக் கிழவன் கில்லியட்டை நோக்கி, "சரி, இனி நீ டெருச்செட்டை மணந்து கொள்ள வேண்டியதுதான்!" என்று கூறினான்.

ஆனால் கில்லியட்டோ சாய்ந்தவாறு ஒரே வார்த்தையில் பதில் சொன்னான்: "இல்லை!"

அதன் பின்னர் சீக்கிரத்திலேயே ஒரு நல்ல நாளன்று ஸெயிண்ட் ஸாம்ப்சன் துறைமுகத்திலிருந்து ஒரு சிறு கப்பல் மெதுவாகக் கடலை நோக்கிப் புறப்பட்டுச் சென்றது. அந்தக் கப்பலின் மேல் தளத்தில் கட்டழகி டெருச்செட்டும், அவளது கணவனும் காட்சியளித்தார்கள்.

அந்தத் துறைமுகத்துக்கு வரும் பிரவேச வாயிலினருகே இருந்த பாறையில், கில்லியட் அசைவற்றுச் சிலைபோல் அமர்ந்திருந்தான். அந்தக் கப்பலும், கட்டழகியும் அந்தப் பாறையைத் தாண்டிச் செல்லும் போது, அவனால் அவளது அந்த அழகிய முகத்தை நன்கு காண முடிந்தது. அந்த முகத்திலே பதிந்த அவனது கண்கள் அதன் பின் வேறு எதையுமே நோக்கவில்லை. அதனையே அவன் இமை கொட்டாத கண்களால் தொடர்து பார்த்துக் கொண்டிருந்தான்.

காற்று அசைந்தது; பின்னர் பலத்து வீசத் தொடங்கியது. அந்தக் கப்பல் அதன் போக்கில் மிதந்து சென்றது. காற்றின் வீச்சினால் கடலலைகள் விம்மியெழுந்தன. எனவே பாறை மீதிருந்த கில்லியட்டின் இடுப்பு வரையிலும் தண்ணீர் ஏறி விட்டது.

கப்பலில் சென்று கொண்டிருந்த டெருச்செட் தன் கணவனை நோக்கிப் பின்வருமாறு சொன்னாள்:

"அதோ பாருங்கள். அந்தப் பாறை மீது யாரோ ஒரு மனிதன் இருப்பது போலத் தெரிகிறது. இல்லையா?"

இதன் பின் அலை வெள்ளம் மேலும் பொங்கியது; கடல் நீர் அமைதியாக விம்மிப் பரவியது. அவ்வாறு பரவிய வெள்ளப் பெருக்கு அந்தப் பாறையையும் மூழ்கடித்தது. அதனால் கடலின் நீர்மட்டம் கில்லியட்டின் கழுத்து வரையிலும் ஏறிவிட்டது. ஆனால் அப்போதும்கூட, அவனது கண்கள் அந்தக் கப்பலை நோக்கியே பதிந்திருந்தன. அந்தக் கண்களின் ஆழம் காண முடியாத அமைதிக்கும், சோகத்துக்கும் அப்பால், ஏதோ ஓர் அபூர்வமான, விசித்திரமான பிரகாசமும் பளிச்சிட்டது. அவனது ஆசைக் கனவுகளுக்கெல்லாம் மிகமிக அப்பாற்பட்டுப்போன ஒரு முடிவை அமைதியோடு ஏற்றுக்கொள்ளும் ஓர் அந்தரங்க பாவமே அந்த ஒளியில் பிரதிபலித்தது.

இப்போதோ அந்தக் கப்பல் வெகு தொலைவுக்குச் சென்று விட்டது. அதன் தோற்றம் அடிவான விளிம்பில் ஒரு கரும் புள்ளி போலவே தோன்றியது. பின்னர் அந்தக் கரும்புள்ளியும் மங்கி மறைந்து சூனியமாயிற்று. அவ்வாறு அந்தக் கப்பல் கண் மறைந்துபோன அதே நேரத்தில், கில்லியட்டின் தலையில் கடல் நீருக்குள் மறைந்து போய் விட்டது...

அதன்பின் அங்கு கடலைத் தவிர வேறு எதுவுமே கண்ணுக்குத் தென்படவில்லை...

ஆசிரியரும், வெளியிடுபவரும்: கண. இராமநாதன்,
66, பெரியதெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5. தொலைபேசி 84989.
அச்சிட்டோர்: ஐடியல் பிரிண்டர்ஸ், 97, பிராட்வே, சென்னை-1.

## ரகுநாதன்

எழுதிய

# இறவாத இலக்கியங்கள்

"இலக்கியம் என்பது இந்திய பீனல் கோடும் அல்ல; மனுநீதி சாஸ்திரமும் அல்ல. அது வம்புகளைக் கடந்து நின்று இதய நீதி கூறுவது. ஒப்புக்கொள்ளப்பட்ட, விரும்பப்பட்ட அபிப்ராயம் என்பதையும் கடந்து நின்று புதுப் புது விஷயங்களை புரட்சிகரமான கருத்துக்களைப் படைக்கக் கூடியது. ஆகவே, நிரூபணம் செய்யப்பட்ட விஷயங்களுக்கு அப்பாற்பட்ட விஷயங்களை லகுவில் ஒதுக்கிவிட முடியாது. அந்த விஷயத்தின் தன்மையை, பாரபட்சமற்று உணர்ந்து அதற்குரிய மதிப்பைச் செலுத்தியே ஆகவேண்டும்."

இவ்வுண்மையை நினைவில் வைத்துக்கொண்டு திரு. ரகுநாதன் அவர்களின் புத்தகங்களைப் படிக்கத் தொடங்கினால் இலக்கியத்தில் ரகுநாதனுக்கு உள்ள தனித் தன்மையைத் தெளிவாக உணர முடியும்.

| | | | |
|---|---|---|---|
| இலக்கிய விமர்சனம் | ... | 2 | 50 |
| ரகுநாதன் கவிதைகள் | ... | 3 | 00 |
| கன்னிகா | ... | 2 | 00 |
| சிலை பேசிற்று | ... | 3 | 00 |
| புயல் | ... | 1 | 50 |
| நான் இருவர் (மொழிபெயர்ப்பு) | ... | 1 | 50 |
| பஞ்சும் பசியும் | ... | 4 | 50 |
| சேற்றில் மலர்ந்த செந்தாமரை | ... | 2 | 00 |
| புதுமைப்பித்தன் வரலாறு | ... | 3 | 00 |
| மருது பாண்டியன் | ... | 2 | 00 |



# வாழ்க்கை
# வரலாற்று நூல்கள்

பெரியோர்களின் வாழ்வு முறைகளைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளுவதால் பல நன்மைகள் விளைய வழிகள் உண்டு. வாழ்வின் வெற்றி, பெரியோர்களின் வாழ்க்கை வரலாறுகளைப் படித்துப் புரிந்து கொள்ளுவதின் மூலம் கிட்டுகிறது. பெரியோர்களின் அனுபவம், படிப்பவர்களுக்கு அறிவாக அமையும் தன்மையுடையதாகும். நேரிய வாழ்வுக்கு நெறி வழுவாத பெரியோர்களின் வாழ்க்கை வரலாறுகள் உதவக்கூடும் என்ற திட்டத்தோடு வெளிவந்துள்ள சிறந்த நூல்களைக் கீழே தந்துள்ளோம்.

**நாக முத்தையா** எழுதிய நூல்கள்

| | |
|---|---|
| பாரதியாரின் கதை | 1-00 |
| மகாத்மாவின் கதை | 1-00 |
| நேருவின் கதை | 1-00 |
| தாகூரின் கதை | 1-00 |
| காமராசரின் கதை | 1-00 |



**த. பெ. எண். 423** போன் : 84989

ஸ்டார் பிரசுரம்

**66, பெரிய தெரு,**

**திருவல்லிக்கேணி : : சென்னை-5.**

## சுவையூட்டும்

# இலக்கிய நூல்கள்

பண்டைய இலக்கியத்தைப் படித்துப் பார்ப்பதன் மூலம், பழங்கால மக்களின் எண்ணங்களை, வாழ்வு முறைகளை நாம் அறிந்துகொள்ள முடியும். பண்டைய இலக்கிய நூல்கள் பெரும்பாலும் செய்யுள்களாகவே இருப்பதால் நேரடியாகப் படித்துப் புரிந்து கொள்ளுதல் சற்று சிரமமாகும். சிரமமே இல்லாமல் சிறந்த முறையில் பண்டைய இலக்கியங்களை எல்லோரும் படித்து இன்புற வேண்டும் என்ற எண்ணத்தோடு வெளிவந்துள்ள சிறந்த நூல்களைக் கீழே தந்துள்ளோம்.

திரு **சாமி சிதம்பரனார்** எழுதிய நூல்கள்

| | |
|---|---|
| திருக்குறள் பொருள் விளக்கம் | 4-50 |
| கம்பன் கண்ட தமிழகம் | 2-50 |
| தொல்காப்பியத் தமிழர் | 2-50 |
| பத்துப்பாட்டும் பண்டைத் தமிழரும் | 3-50 |
| எட்டுத் தொகையும் தமிழர் பண்பாடும் | 3-50 |
| பதினெண் கீழ்க்கணக்கும் தமிழர் வாழ்வும் | 3-50 |
| சிலப்பதிகாரத் தமிழகம் | 4-50 |
| மணிமேகலை காட்டும் மனித வாழ்வு | 4-00 |
| இலக்கியச் சோலை | 3-50 |
| வடலூரார் வாய்மொழி | 3-50 |
| பழந் தமிழர் அரசியல் | 3-00 |



த. பெ. எண். 423 போன் : 84989

ஸ்டார் பிரசுரம்

66, பெரிய தெரு,

திருவல்லிக்கேணி : : சென்னை-5.



அக்டோபர், 1964 : : மலர் 3 – இதழ் 7

# உழைப்பின் வடிவம்

ஏறத்தாழ நாற்பத்தாறு ஆண்டுக்கால அரசியல் அனுபவமும், பதினெட்டு வருட நிர்வாக அனுபவமும் உடைய திரு. பக்தவத்சலம், காந்திய சகாப்தத்தில் நடைபெற்ற எல்லா விடுதலைப் போராட்டங்களிலும் கலந்து கொண்டவர். தடியடிகளையும், சிறைவாசங்களையும் புன்னகையுடன் ஏற்றவர். இன்றைய தமிழகத்தின் மூத்த தேசியத் தலைவர்களிலே ஒருவராக மிளிர்பவர்.

ஐந்து வயதிலேயே தந்தை கனகசபாபதி முதலியாரை இழந்துவிட்ட சிறுவன் பக்தவச்சலம் அவனது தாயார் மல்லிகா அம்மாளுடன் நசரத் பேட்டையில் தாய்மாமன் வீட்டில் வளர்ந்தான். மாமன்மார் இருவரும் தேசியாவாதிகள். மூத்தவர்—எவளப்ப முதலியார்—செங்கற்பட்டு ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் முதல் தலைவர். இளையவர், தமிழகத்தின் கடந்த தலைமுறையைச் சேர்ந்த முன்னணித் தலைவர்களிலே ஒருவரான சி. என். முத்துரங்க முதலியார்,

பக்தவத்சலத்தின் மீது நிரம்பப் பாசம் கொண்டிருந்த முத்துரங்க முதலியார் மறுபடியும் அவனைச் சென்னைக்கழைத்து வந்து மயிலாப்பூரில் குடிவைத்தார். (முகவரி 13, சந்நிதித் தெரு) மயிலாப்பூர் பி. எஸ். உயர்நிலைப்பள்ளியில் சேர்ந்த பக்தவத்சலம் 1915-ல் எஸ். எஸ். எல். சி., பரீட்சையில் தேறினன்.

திரு. பக்தவத்சலம் இன்டர்மீடியட் வகுப்பில் படித்தபோது மகாமகோபத்தியாய உ. வே. சாமிநாதய்யர் அவனுக்கு டியூடராக இருந்தார். கல்லூரியில் படிக்கும்போதே அவன் நிறையக் கட்டுரைகள் எழுதுவதுண்டாம்.

1920-ல் பக்தவத்சலம் பி. ஏ., பரீட்சையில் தேறினர். அதே ஆண்டில் சிர. எம். பக்தவத்சலம் சௌ. ஞானசுந்தரம் அம்மையாரை வாழ்க்கைத் துணைவியாக்கிக் கொண்டார். (மணமகனுக்கு வயது 23; மணமகளுக்கு வயது 17)

திருமணத்திற்குப் பிறகு பக்தவத்சலம் சென்னை சட்டக் கல்

லூரியில் சேர்ந்தார். சட்டப் படிப்பை வெற்றிகரமாக முடித்துக்கொண்டு காலஞ்சென்ற அல்லாடி கிருஷ்ணசாமி அய்யரவர்களிடம் ஜூனியராக வழக்கறிஞர் தொழில் புரிய ஆரம்பித்தாலும் பக்தவத்சலத்தின் மனம் அதில் ஈடுபடவில்லை. தேசத்தின் அழைப்புக்குரல் அவரது காதுகளில் விழுந்துவிட்டதே!

என்றுமே பக்தவத்சலம் தமது குடும்பத்தைப் பற்றிக் கவலைப் பட்டதில்லை; கவனித்ததுமில்லை. அவர் அரசியலில் தீவிரமாக ஈடுபட குடும்பத்தில் யாரும் தடையாக இருந்ததில்லை. ஏனென்றால் அவர் பிறந்த இல்லமும், பெண் எடுத்த வீடும் "தேச விடுதலை காண வேண்டும்" என்ற இலட்சியத்தைக் கொண்டவை ஆயிற்றே!

திரு. பக்தவத்சலத்தின் அரசியல் தொடர்புகள் அவருடைய கல்லூரி நாட்களிலேயே முளைவிடத் தொடங்கின. கல்லூரியில் படிக்கும்போது சென்னையில் நடைபெற்ற ஹோம்ரூல் இயக்கக் கூட்டங்களுக்கும், அடையாறு தியாசாபிகல் சொஸைடி விவாதங்களுக்கும் அவர் போவார்.

1919-ல் வெளியான ரௌலட் மசோதாக்களை எதிர்த்து நாடெங்கும் கிளர்ச்சி நடைபெற்றது. காந்தியடிகள் தமது பிரசித்தி பெற்ற சத்தியாக்கிரகப் போராட்ட முறைகளை இந்தியாவில் அப்போதுதான் தொடங்கினர். காந்திய சகாப்தம் ஆரம்பமாகி விட்டது.

சென்னையிலும் ரௌலட் சட்டங்களைப் பலமாக எதிர்த்தார்கள். மயிலாப்பூர் கபாலீஸ்வரர் கோயிலிலிருந்து மாபெரும் கண்டன ஊர்வலமொன்றை பக்தவத்சலமும் பிறரும் நடத்தினர்கள். ஊர்வலம் கடற்கரைக்குச் சென்றது. இப்போது திலகர் கட்டம் என்று அழைக்கப்படும் இடத்தில், ஒரே சமயத்தில், ஆறு மேடைகளில், ஆறு பொதுக் கூட்டங்கள் நடைபெற்றன!

1923-ம் ஆண்டு, டிசம்பர் மாதம் காகிநடாவில் காங்கிரஸ் மகாசபை நடந்தது. பக்தவத்சலம் முதன் முதலாகச் சென்று கலந்து கொண்ட அகில இந்திய காங் மகாநாடு அதுதான். அதற்குப் பிறகு காந்தியடிகள் கதர்ப்பிரசாரம் செய்வதற்காக தமிழ்நாட்டுக்கு வந்தபோது செங்கற்பட்டு ஜில்லா சுற்றுப்பயணத்தில் பக்தவத்சலம் அவருடன் சென்றார்; காந்திய நிர்மாணத் திட்டப் பணிகளிலும் பங்கு கொண்டார்.

1927-ம் ஆண்டு, டிசம்பர் மாதம் சென்னையில் காங்கிரஸ் மகாசபையின் வருடாந்திர மகாநாடு நடைபெற்றது. காங்கிரசின் வரலாற்றில் அது ஒரு முக்கியமான மகாநாடு. டாக்டர் எம். ஏ. அன்சாரி அவர்கள் தலைமையில் நடந்த அந்த மாநாட்டில் தான் நேருஜி பூரண சுதந்திரத் தீர்மானத்தை முன்மொழிந்து பேசினர். அன்னி பெசன்ட் அம்மையார் உட்பட அனைவரின் ஆதரவோடு அது நிறைவேறியது.

வரலாற்றுச் சிறப்புமிக்க அந்த மகாநாட்டு வரவேற்புக் குழுவின் தலைவர் சி. என். முத்துரங்க முதலியார்; காரியதரிசி பக்தவத்சலம்.

வெகுஜன சட்டமறுப்பு இயக்கத்தின்போதுதான் திரு. பக்தவத்சலம் முதன் முதலாகச் சிறை சென்றார். சிறையிலிருந்த போதே செங்கற்பட்டு ஜில்லா போர்டு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். சிறையிலிருந்து வெளிவந்ததும் பக்தவத்சலம் மதுவிலக்குப் பிரசாரத்தில்

ஈடுபட்டார் (மதுவிலக்குக் குழுவிற்குக் கன்வீனர் பக்தவத்சலம்; தலைவர் ராஜாஜி) தமிழ்நாடு ஹரிஜன சேவாசங்கத்தின் துணைத் தலைவராகவும் பணியாற்றினார். (தலைவர் டாக்டர் டி. எஸ். ராஜன்.)

1934 35-ல் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி ஸ்தல ஸ்தாபனங்களுக்குப் போட்டியிடுவதென்று தீர்மானித்தது. அதற்காக ஏற்படுத்தப்பட்ட 'தமிழ்நாடு சிவிக் போர்டு'' என்ற அமைப்பின் கூட்டுக் காரியதரிசி பக்தவத்சலம்.

1935-ல் சத்தியமூர்த்தி, சென்னை மாகாணக் காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அப்பொழுது பக்தவத்சலம் உபதலைவர். 1936-ல் சத்தியமூர்த்தி தமிழ்நாடு காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டபோது காமராஜ், பக்தவத்சலம் ஆகியோர் காரியதரிசிகள்.

பக்தவத்சலம் சிறிது காலம் சென்னை மாநகராட்சி மன்றத்தில் உறுப்பினராக இருந்திருக்கிறார். 1937-ல் பக்தவத்சலம் சென்னை மாநகராட்சியின் துணை மேயராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்!

சென்னை மாகானத்தில் ராஜாஜி தலைமையில் காங்கிரசாட்சி ஏற்பட்டதும் பக்தவத்சலம் ஸ்தல ஸ்தாபன இலாகாவுக்குப் பார்லிமெண்டரி காரியதரிசியாக நியமிக்கப்பட்டார். பக்தவத்சலம் தமக்கு அப்பதவி வேண்டாம் என்று முதலில் மறுத்தார். ராஜாஜி விடவில்லை. "நீங்கள் இருக்கத்தான் வேண்டும்" என்று வற்புறுத்தி அழைத்துக் கொண்டார். அந்தப் பொறுப்பில் பக்தவத்சலம் ஸ்தல ஸ்தாபன விவகாரங்களை நன்கு ஆராய்ந்து தயாரித்து அளித்த அறிக்கை இன்றைய ஸ்தல ஸ்தாபன அமைப்புக்கே அடிப்படை என்று கூறப்படுகிறது.

இரண்டாம் உலக மகாயுத்தம் தொடங்கியதும், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் முடிவுப்படி நாடெங்கிலும் இருந்த காங்கிரஸ் மந்திரிசபைகள் ராஜினுமா செய்தன. மகிழ்ச்சியுடன் பதவியை உதறிய திரு. பக்தவத்சலம் காங்கிரஸ் மகாசபை தொடங்கிய தனிநபர் சத்தியாக்கிரகப் போராட்டத்தில் இறங்கி, திருவள்ளூரில் கைதானார். ஒன்பது மாதச் சிறையும், இருநூற்றைம்பது ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டு திருச்சி சிறையில் வைக்கப்பட்டார். அங்கே சிறையிலிருந்த போது ராஜாஜியுடன் நாலாயிரத் திவ்யப் பிரபந்தமும் வால்மீகி ராமாயணமும் படித்தார்!

சிறையிலிருந்து வெளிவந்ததும் பக்தவத்சலம் ஊர்காப்புச் சங்கம் அமைத்துத் தொண்டாற்றினார்? ராஜாஜி காங்கிரசிலிருந்து விலகி பாகிஸ்தான் பிரிக்கப்பட வேண்டுமென்று பிரசாரம் செய்யத் தொடங்கினார்! அவருக்கு எதிராக காமராஜ், பக்தவத்சலம், சி. சுப்பிரமணியம் முதலானவர்கள் காங்கிரசின் நிலையைப் விளக்கிப் பிரசாரம் செய்தார்கள். யுத்த நிதிக்காகக் கட்டாய வசூல் செய்யப்பட்டதைக் கண்டித்தும் பிரசாரம் செய்தார்கள்.

பிரசித்திபெற்ற ஆகஸ்ட் இயக்கத்தைத் தீர்மானித்த பம்பாய் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்திலும் பக்தவத்சலம் கலந்து கொண்டார். அங்கிருந்து திரும்பியதும் சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனிலேயே அவர் கைது செய்யப்பட்டார்.

வடக்கே அமராவதி என்னும் ஊரில் மாட்டுக் கொட்டகை

போன்றதொரு இடத்தில் இரண்டரை ஆண்டுகள் பக்தவத்சலம் பாதுகாப்புக் கைதியாக வைக்கப் பட்டார்.

"உங்களைப் பாதுகாப்புக் கைதியாக வைத்திருப்பதற்கு ஆட்சேபம் ஏதும் உண்டா?" என்று கேட்டது அரசாங்கம். பக்தவத்சலம் பதிலே எழுதவில்லை; அவரது தைரியத்தை மெச்சாதவர்கள் இல்லை.

பாதுகாப்புக் கைதியாக இருந்தபோதுதான் சிறிது சமையல் செய்ய பக்தவத்சலம் கற்றுக் கொண்டார். அத்துடன் எம். அனந்தசயனம் அய்யங்காரிடம் வால்மீகி இராம்ாயணம் படித்தார்.

1944-ல் திரு. பக்தவத்சலம் விடுதலை செய்யப்பட்டார். 1946-ல் அமைந்த திரு. பிரகாசம் மந்திரிசபையிலும், அதற்குப் பிறகு தொடர்ச்சியாக ஓ. பி. ராமசாமி ரெட்டியார், பி. எஸ். குமாரசாமி ராஜா, ராஜாஜி, காமராஜ் ஆகிய அனைவரது அமைச்சரவைகளிலும் இடம்பெற்றுத் தொண்டாற்றினார்.

காமராஜ் திட்டப்படி, சென்ற ஆண்டு, அக்டோபர் மாதம் 2-ந் தேதியன்று காமராஜ் முதலமைச்சர் பதவியிலிருந்து விலகிக் கொண்டார். அதேதினம் பக்தவத்சலம் அவர்களை முதலமைச்சராகக் கொண்ட மந்திரிசபை பதவியேற்றது.

பக்தவத்சலம் மக்களுக்கு ஆற்றியுள்ள பணிகள் எவை?

நிச்சயமற்ற தன்மைகளை விலக்கி, நிதரிசனக் கண்ணோட்டத்தோடு கூடிய தமது கல்வி முறையை உருவாக்கியிருக்கிறார் பக்தவத்சலம்.

அவரது கல்வித்திட்டப்படி கல்வி பயிலும் காலம் பதினொரு ஆண்டுகளாக ஆக்கப்பட்டுள்ளது. ஆங்கிலம் தொடக்க வகுப்புகளிலேயே போதிக்கப்பட வேண்டும் என்று தீர்மானிக்கப் பட்டுள்ளது.

புதிய திட்டப்படி வரலாறும், நில நூலும் மீண்டும் பாட போதனையில் இடம் பெற்றுள்ளன. ஆசிரியர்கள் இதனை ஒருமுகமாக வரவேற்கிறார்கள். தமிழ், ஆங்கிலம், இந்தி ஆகிய மூன்று மொழிகளிலும் தமிழ்க் குழந்தைகள் புலமை பெற்று விளங்க வேண்டும் என்கிறது அவருடைய மும்மொழித்திட்டம். "இந்த ஆண்டு முதல் எல்லாக் குழந்தைகளுக்கும் எஸ். எஸ். எல் சி.வகுப்பு வரை இலவசக் கல்வி தருவேன்" என்று பிரகடனம் செய்து நல்ல பெயரைத் தட்டிக் கொண்டு விட்டார் திரு. பக்தவத்சலம்!

அவர் விவசாய அமைச்சராக இருந்தபோதுதான் இந்தியாவிலேயே அரிசி உற்பத்தியில், ஏகரா விளைச்சலில், தமிழகம் முதலிடம் பெற்றது.

தொழிலாளர் அமைச்சர் என்ற வகையில் தொழிலாளர் நலனுக்காக ஏராளமான சட்டங்களை பக்தவத்சலம் நிறைவேற்றியிருக்கிறார்—'தொழிலாளர் விடுமுறைச் சட்டம்' அவற்றுள் ஒன்று. தொழில் தகராறுகளை மத்தியஸ்தம் மூலம் சுமுகமாகத் தீர்த்துக் கொள்ளும் ஏற்பாட்டினை உருவாக்கியவரும் அவரே.

முதுகுளத்தூரில் கலவரம் ஏற்பட்டபோது, அன்றைய உள்துறை அமைச்சரான பக்தவத்சலம் அதனை முளையிலேயே கிள்ளியெறிந்து அமைதியையும், ஒழுங்கையும் நிலைநாட்டினார்.

அறநிலையப்பாதுகாப்புத் துறை அமைச்சராக பக்தவத்சலம் ஒரு மாபெரும் புரட்சியையே நடத்தி

விட்டிருக்கிருர் எனலாம். 1959-ல் அறநிலையச் சட்டத்தை அவர் திருத்தியமைத்த பிறகு சமய விவகாரங்களில் பல அருமையான செயல்கள் நிகழ்ந்துள்ளன. ஆலயங்கள் புதுப்பிக்கப் பட்டுள்ளன; கோயில் பணியாளர்களுக்கு முறையான பயிற்சி தரப்படுகிறது; சிற்பம், சித்திரம், விக்கிரக வார்ப்பு, ஆகமம், தத்துவம், சமய அற நூல்கள் முதலிய பலவற்றுக்குப் புத்துயிர் அளிக்கப் பட்டுள்ளது.

திரு. பக்தவத்சலம் தொழிலமைச்சராக இருந்தபோதுதான் நெய்வேலித் திட்டம் உருவம் பெற்றது. தமிழகத்தில் தொழில் திறமை படைத்த எளியவர்களும் தொழில் துவக்க இடமளிக்கும் தொழிற்பண்ணைகளை - காலனிகளை-அரசாங்கமே கட்டித்தரும் திட்டத்தைக் கொணர்ந்து நிறைவேற்றியவரும் அவரே.

பக்தவத்சலம் வெறும் அரசியல் தலைவர் மட்டுமல்லர். பல்வேறு துறைகளில் அவர் ஈடுபாடு கொண்டு உழைத்து வருகிருர்.

காந்தியடிகளார் விட்டுச் சென்ற பணிகளைச் செய்வதற்காக தொடங்கப்பட்டுள்ள காந்தி ஸ்மாரக் நிதியின் தமிழ்நாடு கிளைக்குத் தலைவராக பக்தவத்சலம் பணியாற்றி வருகிருர். சிறந்த எழுத்தாளரான அவர் பல நூல்களையும் எழுதியிருக்கிருர். இந்தியா, பாரததேவி ஆகிய பத்திரிகைகளைச் சிறிது காலம் நடத்தியிருக்கிருர்.

சென்னையில், கலாசார சுதந்திரத்திற்கான இந்தியக் கமிட்டி கூடியபோது பக்தவத்சலம் அதன் வரவேற்புக் குழுத் தலைவராக இருந்து செயலாற்றினுர்.

1949-ல் பர்மாவில் இந்தியர் நிலங்கள் தேசிய உடைமையாக்கப்பட்டபோது அது குறித்து பர்மிய அரசினரோடு விவாதிக்க பக்தவத்சலம் பர்மா சென்ருர். அது அவரது முதல் வெளிநாட்டுப் பயணம். 1956-ல் ஜெனிவாவில் நடைபெற்ற அகில உலகத் தொழிலாளர் மகாநாட்டில் இந்திய அரசாங்கப் பிரதிநிதிகளின் தலைவராக பக்தவத்சலம் சென்று கலந்து கொண்டார். 1960-ல் சோவியத் அரசினர் அழைப்பின் பேரில் சென்ற தூதுக் குழுவில் தமிழக அரசினரின் பிரதிநிதியாக பக்தவத்சலம் சென்று வந்தார். 1963-ல் அமெரிக்காவில் நடைபெற்ற உலக உணவு மகாநாட்டில் இந்திய கோஷ்டிக்கு முதலில் முன்னுள் உணவு அமைச்சர் பாடீல் தலைவராக இருந்தார். பிறகு பக்தவத்சலம் தலைவராக இருந்து இறுதிவரை மாநாட்டு நடவடிக்கைகளில் பங்கு கொண்டார். அந்த மாநாட்டில் பேசிய போது பக்தவத்சலம் திருக்குறளை மேற்கோளாகக் காட்டி விளக்கிய சம்பவம் செய்தித்தாள்களில் சுவையான தகவலாக வெளியாயிற்று!

மாமிச உணவைத் தவிர்ப்பதற்காகப் பிரசாரம் செய்து வரும் உலக வெஜிடேரியன்காங்கிரசின் இந்தியக் கிளைக்கு பக்தவத்சலம் துணைத் தலைவர். சென்னை சங்கீத வித்வத் சபையின் (Music Academy) ஆரம்பகால நடவடிக்கைகளில் பக்தவத்சலம் பெரிதும் ஈடுபாடு கொண்டு உழைத்திருக்கிருர். தமிழக அரசாங்கம் ஒரே ஒரு தமிழ்ப் புலவனுக்குத்தான் விழாவெடுத்திருக்கிறது — அதற்கும் இவரே காரணம். 1963-ல் பாரதியாரின் 81-வது பிறந்தநாளை ஒரு மாபெரும் மக்கள் விழாவாக இவரது தலைமையில் அமைந்த வரவேற்புக் குழு நடத்திக் காட்டியது.

‘‘இறைவனே என் தந்தை; இயற்கையே எனது தாய்; உல

கமே எனது நாடு; இந்தியா எனது வீடு; மக்கள் அனைவரும் என் உறவினர்; மனச்சாட்சியே எனது மதம் என்று சொல்லுவது மனித உறவின் மிக விரிந்தநிலை'' என்கிறார் பக்தவத்சலம். எவ்வளவு உயர்ந்த குறிக்கோள்!

சைவ உணவாளரான பக்தவத்சலம் தூய்மையான தனிவாழ்க்கையுடையவர். ஒழுக்கத்திற்கும், அடக்கத்திற்கும் பிரசித்தி பெற்றது அவருடைய குடும்பம். எப்போதும் நிதானமாகவே பேசும் இயல்புடையவர் பக்தவத்சலம். கோபம் வந்து அவர் உரத்த குரலில் பேசியதைக் கண்டவர்களே இல்லை!

அவரை எப்போது வேண்டுமானாலும் பார்க்கலாம். இரவு பன்னிரண்டு மணி வரை பீமண்ணன் பேட்டையிலுள்ள அவரது இல்லத்திற்கு அவரைப் பார்ப்பதற்காக சாரி சாரியாக மக்கள் வந்தபடியிருப்பார்கள். செல்வாக்குடையவர்களானாலும், சாதாரண மக்களானாலும் அவரைத் தாராளமாகப் பார்க்கலாம். குறைகளைத் தெரிவித்துப் பரிகாரம் காண முற்படலாம்.

ஓர் அருமையான ஏற்பாட்டைச் செய்திருக்கிறார் பக்தவத்சலம்—அவர் இல்லத்திற்குப் போகும் எல்லோரையும் கூப்பிய கரங்களுடன் வரவேற்று, 'வாருங்கள், உட்காருங்கள்' என்று அங்குள்ள சேவகர்கள் கூறுவார்கள். யார் வேண்டுமானாலும் பரிசோதனை செய்து பாருங்கள்!

'எங்கேஜ்மென்ட்ஸ்' ஒப்புக்கொள்ளுவதிலும் பக்தவத்சலம் வஞ்சனை காட்டுவதில்லை. சட்டமன்றம் கூடுகின்ற நேரமானால் அந்தப் பணியையும் கவனித்துக்கொண்டு, வழக்கமான அலுவல்களையும் அலுப்புச் சலிப்பில்லாமல் பார்த்துக்கொண்டு, இடையே தினசரி குறைந்தது ஏழு, எட்டு நிகழ்ச்சிகளிலேனும் கலந்து கொள்ளுவார். (ஏழு, எட்டு என்பது குறைவான கணக்கு!) அதற்குப் பிறகு பொதுக் கூட்டங்களுக்குப் போவார்!

ஆபீசில் வேலை குறைவோ என்று எண்ணுகிறீர்கள். மலை போலக் குவிந்து விடும் நூற்றுக்கணக்கான 'பைல்'களை, அசுர வேகத்தில், பார்த்து தக்க குறிப்புகள்—உத்தரவுகளுடன் அனுப்புவதில் அவருக்கிணை யாருமில்லை என்று அடித்துச் சொல்லலாம்.

பக்தவத்சலம் சிறந்த தமிழ்ப் புலமையுடையவர். ஆங்கிலத்தில் அற்புதமாகப் பேசும் ஆற்றல் படைத்த அவர், பலர் பொதுக் கூட்டங்களில் தமிழில் பேச அஞ்சிய அந்தக் காலத்திலேயே தமிழில் சொற்பொழிவுகளை நிகழ்த்தியிருக்கிறார்.

1962 முதல் பக்தவத்சலம் தமிழக சட்டமன்றத் தலைவராக இருக்கிறார். சட்டசபையில் அவரது விவாதங்கள் பளிச்சென்று இருக்கும்; நேராகச் சென்று எதிரியைத் தாக்கும். தழப்பமோ, சந்தேகமோ அவற்றில் காண முடியாது.

பக்தவத்சலம் உழைப்பே உழைப்பின் பலன் என்று கருதி வாழ்கிறார். தலைவர் திரு. காமராஜ் அவர்களுக்கு உறுதுணையாக இன்றைய தினம் விளங்குகிறார். அவர் நீண்டகாலம் வாழ்ந்து தமிழகத்திற்குத் தொடர்ந்து சேவை செய்ய வேண்டும் என்று எல்லோரும் விரும்புகிறோம்.

வாழ்க திரு. பக்தவத்சலம்!

—கருப்பையா

(இக்கட்டுரையாளர் கிராமமுழுவளர்ச்சித் திட்டங்களால் விளைந்துள்ள பல நன்மைகளையும் நேரில் கண்டு களிப்புறும் வாய்ப்புப் பெற்றவராவர். நாட்டு வளர்ச்சியில் நல்லார்வங் கொண்ட திரு எஸ். கிருஷ்ணமூர்த்தி அவர்கள் தொடர்ந்து இதுபோன்ற பல கட்டுரைகளை—பல மாவட்டங்களுக்குச் சென்று கண்டு, கணக்கிட்டு—புள்ளி விவரங்களோடு எழுதி வர இசைந்துள்ளார்.)

**கன்யாகுமரி மாவட்டத்தில்**

# கிராம முழுவளர்ச்சித் திட்டத்தின் மாபெரும் சாதனை

எஸ். கிருஷ்ணமூர்த்தி
*(கிராம அபிவிருத்தித் திட்ட அதிகாரி)*

கிராம முழுவளர்ச்சித் திட்ட வேலைகளில், தமிழ் நாட்டிற்கே ஓர் எடுத்துக் காட்டாக, அகஸ்தீஸ்வரம், கொட்டாரம் பகுதிகளில் நடைபெற்றுவரும் நற்பணிகள் பற்றி அறிந்து கொள்ள, ஆக்க வேலைகளில் ஈடுபாடுள்ள அனைவரும் விரும்புவர் என்பதில் ஐயமில்லை. கன்யாகுமரி மாவட்டத்தில் இந்த இரு பகுதிகளிலும் உள்ள வாழ வசதியற்ற ஏழை எளிய மக்கள் எவ்வாறு தாங்களாகவே தங்களுக்குள் சீட்டு முறையை ஏற்படுத்திக்கொண்டு தங்கள் பொருளாதாரத்தை மேற்படுத்தத்தக்கமுறைகளைக் கையாண்டு கொண்டு வருகின்றனர் என்பதை அறிய ஆச்சரியமாக இருக்கிறது.

அகஸ்தீஸ்வரம் கிராம எகாயி பகுதியில் சுமார் 865 வீடுகளும் 4071 மக்களுமே இருக்கின்றனர். சமீபத்தில் எடுத்த புள்ளி விவரப்படி அப்பகுதியில் சுமார் 2400 மக்கள் போதிய வேலையின்றி இருந்து வருகின்றனர் என்பது தெரியவருகின்றது. ஏற்கெனவே இந்தப் பகுதியில்

மாநில கதர்-கிராமக் கைத் தொழில் போர்டாரால் கதர் உற்பத்தி வேலை கணிசமான அளவு நடைபெற்று வருகிறது. ஆனால் தற்போதைய சட்ட திட்டப்படி கழிவுத் தொகை போக மீதி உள்ள பணத்தைக் கட்டினாலொழிய ஏழைகளாக இருந்தாலும் மக்களுக்கு இராட்டை வழங்க இயலாது. ஆகவே மக்கள் வேலையற்றிருந் தும் வறுமை காரணமாக இராட்டை உட்பட வாங்க வசதியின்றி ஏதோ அங்கும் இங்கும் சென்று கூலி வேலை செய்து அரைவயிறு உண்டு காலம் கழித்து வந்தனர் அந்தப் பகுதி மக்கள்.

இந்த நிலையில் தான் அகஸ் தீஸ்வரம் பகுதியை 1962, மே மாதத்தில் கிராம எகாயி திட் டத்தின் கீழ் எடுத்து வேலை செய்ய மாநில முழு வளர்ச்சித் திட்டக் கமிட்டி முடிவு செய் தது. திரு. முத்துசாமி என்பவர், கிராம ஊழியராகப் பணியாற்ற ஒப்புக்கொண்டார். நண்பர் திரு. S. பெருமாள், உதவி அமைப்பாளராக வேலை பார்த்து வருகிறார்.

உடனே ஊர் மக்கள் அனை வரும் ஒன்றுகூடி கிராம எகாயி திட்ட வேலைகளைப்பற்றி நன்கு அறிந்து கொள்ளவும், மக்கள் முன்னுள்ள பிரச்னைகளை அறிய வும், மக்கள் அனைவரும் ஒன்று பட்டுச் சிந்தித்துச் செயல்படவும் வேண்டி ஆலோசனைக் குழு ஒன்றை அமைத்தார்கள். 1968ம் ஆண்டு ஜனவரி மாதம் 20ம் தேதி கூடிய கூட்டத்தில் சுமார் 60 சர்வோதய பாத்திரங் களை வழங்குவதெனவும், அதன் மூலம் வசூலாகும் தானியத்தைக் கொண்டு பாலர் இல்லத்தை நடத்துவதெனவும் தீர்மானிக் கப்பட்டது. உடனே 60 சர் வோதய பாத்திரங்கள் வழங்கப் பட்டன. மாதந்தோறும் 30 படிக்கும் குறையாமல் கிடைக் கும் அரிசியைக் கொண்டு ஒரு ஆசிரியையால் பாலர் இல்லம் நன்கு நடந்து வருகின்றது. முதலாண்டில் இல்லத்தில் 36 ஆக இருந்து வந்த பாலர்களின் எண்ணிக்கை இரண்டாவது ஆண்டு 43 ஆக உயர்ந்து விட்டது. வசூலாகும் அரிசியின் மூலமே குழந்தைகள் விளையாடு வதற்கான சுமார் ரூபாய் 150 மதிப்புள்ள கருவிகள் வாங்கப் பட்டுள்ளன. மேலும் மேற்படி இல்லத்தையும் ஊர் மக்களே தங்கள் சொந்தச் செலவிலேயே கட்டி முடித்தனர் என்பதும் பாராட்டத்தக்கது.

இந்த எகாயி பகுதியில் நடை பெற்றுவரும் மற்றொரு எடுத்துக்காட்டாக இருந்துவரும் வேலை முறை, சீட்டுப் போடு தல்.

முழுவளர்ச்சித் திட்ட ஆலோ சனைக் குழு 17-3-63ல் நடந்த கூட்டத்தில் கையிலிருந்து ஒரே சமயத்தில் ரூபாய் 3-50 ந. பை கூடக் கொடுத்து ராட்டை வாங்க இயலாமலிருக்கும் ஏழை மக்களைப் பற்றிச் சிந்திக்கப்

பட்டது. வாரந்தோறும் 25ந.பை வீதம் கொடுக்கும் 14 பேர்களைக் கொண்ட சீட்டு முறை ஏற்படுத்தி வாரந்தோறும் சீட்டுக்கள் குலுக்கப்பட்டு, சீட்டு விழும் நபருக்கு ராட்டை வழங்க முடிவு செய்யப்பட்டது. இந்த முறையின்படி '62-63'ல் ராட்டைகள் வாங்க 14 நபர்களைக் கொண்ட சீட்டு முறைகள் 4 இடங்களில் ஆரம்பிக்கப்பட்டு அதன் மூலம் 56 ஏழைகளுக்கு ராட்டைகள் வழங்கப்பட்டன. இதே முறை அடுத்த ஆண்டிலும் '63-'64லிலும் தொடர்ந்து நடைபெற்று சீட்டு முறை 14 இடங்களில் ஆரம்பிக்கப்பட்டு அதன் மூலம் 196 ராட்டைகள் வழங்கப்பட்டு நூற்பு வேலை ஒழுங்காக நடைபெற்று வருகிறது. இந்தச் சீட்டு முறை மூலம் ராட்டைகள் பெற்று நூல் நூற்று வயிறு வளர்க்கும் பல ஏழைக் குடும்பங்களை நான் நேரில் சந்தித்துக் கேட்ட பொழுது சுமார் 2 ஆண்டுகளுக்கு மேலாக ரூபாய் 3-50 சேர்த்துவைக்க விரும்பியும் கூடாமல் போன அவர்களுக்குச் சீட்டு முறை ஒரு வரப் பிரசாதம் என்றே சொன்ணர்கள். இது இல்லாவிட்டால் நாங்கள் ஊரைவிட்டே ஓட வேண்டியிருக்கும் எனவும் ஒப்புக் கொண்டார்கள்.

நாளடைவில் இந்தச் சீட்டு முறை கதர்த் துணி விற்பனையாவதற்கும் புகுத்தப்பட்டு, தற்போது அதற்கும் மேலான நல்ல சுகாதாரமானமுறை (Flush out) கக்கூஸ் கட்டுவதற்கும் அதாவது மாதம் ரூபாய் 10 வீதம் கட்டும் 20 நபர்களைக் கொண்டு ஆரம்பிக்கப்பட்டு 2 கக்கூஸ்களும் கட்டுப்பட்டுள்ளன.

அகஸ்தீஸ்வரம் எகாயி பகுதியில் எவ்வாறு கதர் வேலை ஆண்டு தோறும் அபிவிருத்தி அடைந்து வந்திருக்கிறது என்பதைக் கீழேகுறிக்கப்பட்டுள்ள புள்ளி விவரங்களிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

| இயங்கிவரும் ராட்டைகள் | 61-62 | 62-63 | 31-3-64 வரை |
|---|---|---|---|
| 1. கிஸான்ராட்டை | 1005 | 1193 (+188 ie 18.7%) | (1421) (+228 ie 19%) |
| 2. அம்பர் | 16 | 16 " | 44 (12 நபர் தேர்ச்சி பெறுகின்றனர்) |
| 3. கிஸான் நூல் உற்பத்தி | 3,22,314 சிட்டங்கள் | 391883 சிட்டங்கள் (+21.58%) | 4,68,413 சிட்டங்கள் (+22%) |

4. அம்பர் ,,

9110 சிட்டம் 10,931( + 19.91) 10,950

5. கதர் தறி நெசவாளர்கள்

5 6 8

6. கதர் உற்பத்தி

1927மீட்டர் 2291 மீட்டர் (+ 19.3%) 2360மீட்டர் (+1%)

7. கதர் உற்பத்தி விற்பனை

51,29,200 விநியோகம் 51,300 Rs +1% 68,531 (+33%)

8. கதர் கட்டுபவர்கள்

783 784 860

9. வேலையிலிடுபட்டவர்

1057 1269 1437

அதேபோல் கிராமக் கைத்தொழில்கள் உற்பத்தியைப் பற்றி சற்றுப் பார்க்கலாம்.

| உற்பத்தியாகும் கிராமக் கைத் தொழில் | உற்பத்தி | | விற்பனை விநியோகம் | | வேலையிலிடு பட்டுள்ளோர் எண்ணிக்கை குடும்பங்கள் |
|---|---|---|---|---|---|
| | 62-63 | 63–64 | 62-63 | 63-64 | |
| சோப்பு | 223500 | 55 ) 600 | 3,971 | 4,395-10 | 10 |
| பனைவெல்ல கருப்பட்டி | 30000 | 33000 | 3000 | 33000 | 80 |
| சுண்ணம்பு | 8640 | 13250 | 8640 | 13250 | 16 |

மேற்கூறியவைகள் தவிர, கிராம அபிவிருத்தி வேலைகளை கிராம மக்களே செய்யும் வகையில் 20 நபர்களைக் கொண்ட "அகஸ்தீஸ்வரம் எகாயி கிராம அபிவிருத்திச் சங்கம்,' என்ற ஸ்தாபனமும் ஏற்படுத்தப்பட்டு பதிவு செய்யப்பட்டிருக்கிறது.

இந்தச் சங்கத்தின் மூலம் மற்றொரு முக்கிய விஷயமும்

குறிப்பிடத் தக்கது. ஒவ்வொரு மாதமும் 27ந்தேதி, மேற்படி சங்கம் நேரு அஞ்சலி என்ற தலைப்பில் ஒரு சிறு வெளியீட்டை அச்சடித்து அவைகளைச் சில குறிப்பிட்ட வீடுகளின் முன்பு தொங்கவிடுகிறார்கள். வெளியீடுகளில் கைக்குத்தல் அரிசியின் அவசியம், சத்துள்ள காய்கறிகளின் உணவு சக்தி, சுகாதாரம் போன்றவைகளைப் பற்றி, விவரிக்கப்பட்டுள்ளன. மேற்படி வீடுகளில் வசிக்கும் மக்கள் கூடுமான வரையில் வெளியீடுகளில் குறிப்பிடப்பட்டுள்ள அனைத்தையும் அனுஷ்டிக்க முற்படுகின்றனர். அதற்கேற்ப அவசியமாயின் ஓரளவு உதவியும் தரப்படுகிறது. உதாரணமாகக் காய்கறி விதைகள் விநியோகிக்கப்படுகின்றன. சீட்டு புகுத்தப்படுவதின் மூலம் மற்ற மற்ற பல உதவிகளும் அளிக்கப்படுகின்றன.

மேற் குறிப்பிட்ட அனைத்தும் மக்களுடைய பொறுப்புணர்ச்சியையும், அனைவரும் சேர்ந்து சிந்தித்துச் செயல்படும் முறையையும் பிரதிபலிக்கச் செய்கிறது என்பது சொல்லாமலேயே விளங்கும்.

இனி கொட்டாரம் பகுதிக்குள் சற்று சென்று பார்ப்போம். கொட்டாரம் பகுதியிலும் 1-12-62 முதல் கிராம முழு வளர்ச்சித் திட்டம் அமலுக்கு வந்தது. இந்த எகாயிலும் சீட்டு முறை மூலம் 62-63ம் ஆண்டில் 140 இஸான் ராட்டைகள் வழங்கப்பட்டன. சீட்டு முறை தொடர்ந்து நடைபெற்றும் வருகின்றது. ராட்டைகள் மாத்திரமன்றி, மக்கள் பெருமளவில் கதரணியச் செய்யும் பொருட்டு கதர் சிட்டங்கள் வசூல் மூலம் சீட்டு முறை ஆரம்பிக்கப்பட்டு, ஏறக்குறைய சுமார் 200 நபர்கள் புதிதாகக் கதரணிய முற்பட்டனர்.

கொட்டாரம் பகுதியில் நடைபெற்றுவரும் மற்றுமொரு சிறந்த காரியம், மக்கள் கைக்குத்தல் அரிசியைப் பெருவாரியாக உபயோகித்து வருவது. கொட்டாரத்திலேயே இரண்டு நெல் அரைக்கும் மிஷின்களிருந்தும், மக்கள் அங்குள்ள கிராம ஊழியர் வீட்டிற்குச் சென்று தங்களிடமுள்ள நெல்லைக் குத்திக்கொண்டு செல்கின்றனர். அதற்கு அரைவு கூலி 1:14 மாதந்தோறும் சராசரி சுமார் 500 படி நெல் குத்தப்பட்டு வருவது குறிப்பிடத் தக்கதோர் அம்சமாகும்.

கொட்டாரம் பகுதியிலும் சுமார் 60 சர்வோதய பாத்திரங்கள் வழங்கப்பட்டு, அதன் மூலம் வசூலாகும் தான்யத்தைக் கொண்டு, பாலர் இல்லம் ஒன்று மிகச் சிறந்த முறையில் நடைபெற்று வருகிறது. பாலர் இல்லத்தில் முதல் வருடம் படித்த குழந்தைகளின் எண்ணிக்கை 26 ஆக இருந்தது. அடுத்த வருடத்தில் 40 ஆக உயர்ந்து விட்டது.

கோட்டாரம் பகுதியில் நடைபெற்றுவரும் கதர் அபிவிருத்தி கணிசமான அளவு அதிகமாகி வருவது கீழே குறிப்பிடப்பட்டுள்ள புள்ளி விவரங்களால் தெரியவரும்.

| ராட்டைகள் விபரம் | 1961-62 | 63—64 | 31—3—64 |
|---|---|---|---|
| கிஸான் | 600 | 787 (+187 ie 31%) | 1,456(+480 ie 60%) |
| நூல் உற்பத்தி | 1,52,817 சிட்டங்கள் | 1,53,814 சிட்டங்கள் | 2,56,431 (+40%) |
| கதர் நெசவாளர்கள் | 21 | 21 | 27 |
| கதர் உற்பத்தி | ரூ. 32923 | ரூ. 36,987 | ரூ. 35343 |
| விற்பனை | ரூ. 18,311 | ரூ. 19690 | ரூ. 27036 |
| கதர் அணிபவர்கள் | 450 | 530 | 960 |
| வேலை வாய்ப்பளிக்கப் பட்டவர்கள் எண்ணிக்கை | 621 | 808 | 1483 |

கிராமக் கைத்தொழில்கள் உற்பத்தி விற்பனையிலும், இந்தப் பகுதியில் சிறந்த அபிவிருத்தி ஏற்பட்டிருப்பது கீழே தரப்பட்ட விவரங்களின் மூலம் தெரிந்து கொள்ளலாம்.

| | 62—63 | 63—64 |
|---|---|---|
| நாட்டு செக் எண்ணெய் உற்பத்தி | ரூ. 1,37,600 | ரூ. 1,39,600 |
| பனைவெல்லம் உற்பத்தி | ரூ. 35,000 | ரூ. 37,000 |
| சுண்ணும்பு | ரூ. 30,500 | ரூ. 30,800 |
| தேன் உற்பத்தி | 195 பவு. | 215 பவு. |

இப் பொருட்கள் அனைத்தும் அங்கேயே விற்பனையாகி விடுகின்றன.

கொட்டாரத்தில்எகாயிவேலை மோஹஞஸ்ரமம் என்ற ஸ்தாபனத்தின் மூலம் நடைபெறுகிறது. கிராம ஊழியரான திரு: இராமலிங்கம் நல்ல அனுபவமும் ஆக்க வேலைகளில் மிகுந்த ஈடுபாடும், நிர்மாணத்திட்ட வேலைகளில் நம்பிக்கையும் உள்ளவர்,

தமிழ் நாட்டில் தற்போது சுமார் 207 பகுதிகளில் கிராம எகாயி திட்டம் இயங்கி வருகின்றன. இவை 76 பஞ்சாயத்து யூனியன்களில் அடங்கியுள்ளன. இவைகளில் எல்லா இடங்களிலும் முழு வளர்ச்சித் திட்ட வேலை மிகவும் கடினமானது. ஆயினும்அகஸ்தீஸ்வரம்,கொட்டாரம்பகுதிகளில் நடைபெற்று வரும்வேலைகள் நம்பிக்கையூட்டுவனவாக உள்ளன.

''போரே இல்லாத உலகம்தான் ஜவகர் லால் நேருவுக்குச் சிறந்த நினைவுச் சின்னமாகும்'' இந்தக் கருத்தை நினை வில் கொண்டு நாட்டு நலத்தைக் காக் கும் பொறுப்பை மேற்கொண்டுள்ளார் நம்முடைய இன்றையப் பிரதமர் திரு **லால்பகதூர் சாஸ்திரி.** அவருடைய கருத் துக்களில் சிலவற்றை இங்கே காணலாம்.

# நாடு நலமுற

### தேசீய ஒருமைப்பாடு

நாம் செய்யவேண்டிய பெரு வாரியான பணிகளில் நம் மக்களி டையே ஐக்கியத்தையும் ஒரு மைப் பாட்டையும் உருவாக்கு வதைத் தவிர அதிமுக்கியமானது எதுவும் இல்லை. நாட்டிற்கு அபா யம் ஏற்பட்ட காலத்தில் நம் மக் கள் மலைபோல் உறுதியுடன் ஒன்று பட்டிருந்தார்கள். நம் மக் களிடையே காணப்படும் பல் வேறு வேற்றுமைகளிலும் ஒற் றுமை நிலவி வந்திருக்கிறது இருந்தாலும் முற்றிலுமாக தேசீய ஐக்கியமும், ஒருமைப்பாடும் நமக் குக் கிடைத்து விட்டதாகக் கொள்ளமுடியாது. நமது பாரத சமுதாயத்தில் சில சமயங்களில் ஒற்றுமையைக் குலைக்கக் கூடிய சம்பவங்கள் நடந்திருக்கின்றன. வகுப்பு ஒற்றுமைக்காகவும் சகிப் புத் தன்மையை உண்டாக்கவும் அயராது தம் வாழ்நாள் முழு வதும் பாடுபட்ட நேருஜீக்கு இவை அதிர்ச்சியும் வேதனையை யும் அளித்ததை நான் அறிவேன். நாட்டில் ஒற்றுமை உணர்ச்சியை வளர்க்கவும், தேசீய சம்பந்த மான பணிகளைச் செய்யவும் நாம் விடா முயற்சி கொள்ளவேண் டும்.

### ஜனநாயகம்

ஜனநாயகம் பாரதத்தில் நல்ல முறையில் செயல்பட்டு வருவது ஒரு அரிய சாதனையாகும். ஜன நாயகத்தை அரசாங்க முறையாக வும் வாழ்க்கைப் பாதையாகவும் கருதி அதனிடம் ஆழ்ந்த பற்றுக் கொண்டிருந்தார் நேருஜி. அதற் காக நாம் அவருக்கு மிகவும் கட மைப் பட்டிருக்கிறோம் நமது புரா தன கலாச்சார மரபுகளில் சில விசேஷ அம்சங்கள் உண்டு. மனித குலத்திற்கு மரியாதை, சகிப்புத் தன்மை போன்ற பண் புகள் பாரத மக்களுடைய வாழ்க்கையிலே அதிக முக்கியத் துவம் வாய்ந்தன. ஜனநாயகம் நல்ல முறையில் செயல்பட வேண்டுமானல் ஒருவருக்கு ஒரு வர் விட்டுக் கொடுக்கும் தன்மை யும், மற்றவர்களை இணங்கச் செய்வதும், எந்தப் பிரச்னைக்கும் சமாதான முறையில் தீர்வுகாண வழி துறைகளைக் கண்டு பிடிப்பது மான முயற்சிகள் வேண்டுமென் பதில் எனக்குச் சந்தேகமில்லை.

இவைகளை மனத்தில் கொண்டு என்னுடைய கடமையும் பொறுப்பையும் நிறை வேற்றுவதற்கு என்னை அர்ப்பணித்துக் கொள்ளுகிறேன்.

### சீரான சமூக அமைப்பு

நம்மை நோக்கியுள்ள பல பிரச்னைகளில், கோடிக்கணக்கான நமது மக்கள் வறுமையால் வருந்துவதைவிடத் துன்பத்தைக் கொடுக்கக் கூடியது வேறு எதுவுமில்லை. நமது மக்களின் வறுமையின் கொடுமையைக் குறைப்பதற்கு எனக்கு முடிந்தால் எவ்வளவு நலமாக இருக்கும் என்று நினைக்கிறேன். விசேஷமாக, பல நூற்றாண்டுகளாக புறக்கணிக்கப் பட்டும் கஷ்டங்களை அனுபவித்தும் வரும் தாழ்த்தப்பட்ட சாதியினர், பின் தங்கிய வகுப்பினர் முதலியோரது உரிமைகளை நான் ஒருபொழுதும் மறக்க முடியாது. இன்னும் அதிகச் சீர் அமைந்த சமூக அமைப்பை ஏற்படுத்தும் பணியைச் செய்வது எனக்கு ஒரு பெருமை தரக்கூடிய சிலாக்கியமாகும்.

தற்சமயம் நமது தற்காப்பைப் பலப்படுத்தும் பணியில் நாம் ஈடுபட்டிருக்கிறோம் இது கஷ்டங்கள் நிறைந்த ஒரு மகத்தான பொறுப்பு. சமீபத்தில் நடந்த சம்பவங்களினால் நமக்கு வேறு எந்த வழியும் இருக்கவில்லை. நமது தற்காப்பைப் பலப்படுத்தும் இந்தப் பணியில் எவ்விதமான தளர்ச்சியும் கூடாது. ஆனால் நமது பொருளாதார அபிவிருத்திக்கு நாம் முதலிடம் கொடுக்க வேண்டும் என்னும் நம் தீர்மானத்தை இது எந்த விதத்திலும் பாதிக்கக் கூடாது. நமது திட்டங்களையும் கொள்கைகளையும் செயலாற்றுவதற்கு வேண்டிய உத்வேகத்தையும் திறமையையும் எப்படிப் புகுத்துவது என்பதுதான் இப்பொழுது நம் முன்னால் உள்ள முக்கிய பிரச்னை.

### நிர்வாகச் சீர்திருத்தங்கள்

நிர்வாகத்துறையில் திறமையும் நேர்மையும் இருக்கவேண்டிய தின் அவசியத்தைக் கவனிக்க வேண்டும். பொதுப்படையாக நமக்குச் சுதந்திரம் கிடைத்ததி லிருந்து பொதுத்துறை ஸ்தாபனங்கள் தம்முடைய கடமைகளைச் சரியாக நிறை வேற்றி வந்திருக்கின்றன. பொருளாதார அபிவிருத்திப் பணியும் சமூக புனர் அமைப்பு வேலைகளும் நிறைவேற்றப்பட வேண்டுமானால் பரந்த அளவில் நிர்வாகச் சீர்திருத்தம் ஏற்படவேண்டியது அவசியமென்று மக்களின் அபிப்ராயம் நிலவி வருகிறது. ஜனநாயக ஆட்சியில் தனிப்பட்ட பிரஜைகளின் எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் பொது ஸ்தாபனங்கள் உணர்ந்து இயங்கவேண்டியது யென்பது அவசியமாகிறது. எல்லாச் சூழ்நிலைகளிலும் இந்த ஸ்தாபனங்கள் மரியாதையோடு மட்டுமல்லாமல் சேவை மனப்பான்மை, அனுதாபம் மனுஷ்யத் தன்மை முதலியவற்றுடன் பணியாற்ற வேண்டும். பொருளாதார மாறுதலை உண்டு பண்ணுவதற்குரிய முக்கிய கருவியாக இந்த ஸ்தாபனங்கள் ஏற்படவேண்டுமானால், நிர்வாக அமைப்பும், முறைகளும் நவீனமாக்கப்படவேண்டும். நிர்வாகத் துறையில் வேண்டிய சீர்திருத்தங்களைச் செய்வதற்கு நான் என்னால் ஆன முயற்சியை எடுப்பேன்.

### ஒன்றுபட்டுச் செயலாற்றுதல்

நாட்டைப் பலமுள்ளதாகவும் உறுதியுள்ளதாகவும் வைத்திருப்

பதற்கு நம் மக்கள் உற்சாகம் உள்ளவர்களாயும், அனேக தியாகங்கள் புரியத் தயாராக உள்ளவர்களாகவும் இருக்கிறார்கள் என்று எனக்குத் தெரியும். ஆனால் சில சமயங்களில் அவர்கள் பொறுமை இழந்தவர்களாகி மற்றவர்களுக்குத் துன்பம் கொடுக்கக்கூடிய நிலையில் அசர்ந்தர்ப்பமான செயல்களில் ஈடுபட்டு வருகிறார்கள். ஒழுங்கும், ஒன்று சேர்ந்து செயல்படுதலும் ஆகியவைதான் நாட்டின் உண்மையான பலத்திற்கு ஆதாரமாக இருக்கின்றன. நாட்டின் புனருத்தாரண வேலைகளில் உதவி அளிக்கும்படி பல்வேறு அரசியல் கட்சிகளைச் சேர்ந்த அங்கத்தினர்களுக்கு நான் வேண்டுகோள் விடுக்கிறேன்.

இதுவரையில் செய்து வந்த மாதிரி பத்திரிகைகளும் இந்தத் துறையில் முக்கிய பங்கு எடுத்துக் கொள்ள முடியும். பொதுஜன நலனுக்காகப் பத்திரிகைகள் தங்கள் செல்வாக்கையும் சக்தியையும் பயன்படுத்த முடியும்.

பல்வேறு பிரிவுகளைச் சேர்ந்த நாம் பல்வேறு விதங்களில் மக்களின் சேவை ஒன்றையே லட்சியமாகக் கொண்டு உழைக்கிறோம் இந்த வேற்றுமைகளுக்கு நான் மதிப்பளிக்கிறேன் ஆனால். நம்முடைய லட்சியத்தின் ஒரே தன்மையில் அதிக முக்கியத்வம் கொடுத்து வற்புறுத்த விரும்புகிறேன்.

### கூட்டுச் சேராக் கொள்கை

நம்முடைய வெளிநாட்டு விவகாரங்களில் எந்த அரசியல் அமைப்புக்கள், கொள்கைகள் இருந்தாலும் எல்லா நாடுகளுடனும் நேச உறவையும் சம்பந்தங்களையும் நாம் ஏற்படுத்திக் கொள்ள முயற்சி செய்து வருவோம். உலகப் பிரச்னைகளிலும் மற்ற நாடுகளுடனும் கொண்டுள்ள உறவுகளிலும் கூட்டுச் சேராக் கொள்கை நமது அடிப்படைக் கொள்கையாக இருந்து வரும். அண்டை நாடுகளுடன் உள்ள உறவை இன்னும் வலுப்படுத்துவது நமது தனிப்பட்ட முயற்சியாகும். அநேக அயல் நாடுகளுடன் சிநேகமாகவும் கூட்டுறவோடும் இருந்து வருவோம். சில நாடுகளுடன் இருக்கும் பிரச்னைகளுக்கு நாம் சமாதானமான முறையிலும் கண்ணியமான முறையிலும் தீர்வு காண விரும்புகிறோம்.

### இந்தியா—பாகிஸ்தான் உறவு

பொதுவான சரித்திரத்தாலும் பாரம்பரியத்தினாலும் இரு பெரும் நாடுகளான பாரதமும் பாகிஸ்தானும் ஒன்றாக இணைக்கப்பட்டுள்ளன. நல்லெண்ணம், நேச உறவு, ஒருவருக்கொருவர் உதவி புரிதல் முதலியவை இந்த இரு நாடுகளிடையே ஏற்படுவதினால், அநேக நல்ல பலன்கள் ஏற்படுவதோடுகூட, ஆசியாவில் சமாதானத்தை நிலைநாட்டவும் வளத்தைப் பெருக்கவும் உதவும். இந்தியா பாகிஸ்தான் உறவு நெடுநாளாகவே நல்லமுறையில் இருந்து வரவில்லை. இதனால் இரு தேச மக்களுக்கும் அநேக கஷ்டங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இதை நிறுத்த வேண்டுமானால் இருநாடுகளையும் சேர்ந்த மக்களிடமும் அரசாங்கங்களிடமும் திட சங்கல்பமும் விவேகமும் இருந்தாகவேண்டும். பாகிஸ்தான் ஜனாதிபதி சமீபத்தில் நிகழ்த்திய ரேடியோ உரை விவேகமும் நல்லெண்ணமும் நிரம்பியதாக இருக்கிறது. தக்க தருணத்

திலும் அது நிகழ்த்தப் பட்டிருக்கிறது.

### சீனன் ஆக்கிரமிப்பு

சைனுவோடு சிநேக பாவத்துடன் தொடர்பு வைத்துக்கொள்ளும் விருப்பம் நமக்கு எப்பொழுதும் இருந்திருக்கிறது. ஆனால் சீன மக்களின் செய்கையால் நம்முடைய எல்லா முயற்சிகளும் வீணுயின. முன்னேற்பாட்டுடன் செய்யப்பட்ட ஆக்கிரமிப்பால் சைனு நமது நாட்டிற்கும் அரசாங்கத்திற்கும் எதிராகத் தீங்கு இழைத்து விட்டது. அவர்களின் ஆக்கிரமிப்பிற்கு நமது பலமான எதிர்ப்பை தெரிவித்த போதிலும், கொழும்பு பிரேரணைகளை ஏற்றுக்கொண்டதினுல் சுமூகமான முறையில் தீர்வு காணுவதற்கு நம்முடைய விருப்பத்தைத் தெரிவித்திருக்கிறேம். சைனு இந்தப் பிரேரணைகளை மறுபடியும் யோசனை செய்து, ஒப்புக்கொள்ள வேண்டியது அதன் கடமை ஆகும்.

### காலனி ஆதிக்கம்

இந்த நூற்றுண்டின் பெரும் பகுதியில் காலனி ஆதிக்கத்திலிருந்து சுதந்திரம் பெறுவதற்கு அடிமையான மக்கள் ஆரம்பித்த இயக்கத்தின் சின்னங்களாக காந்திஜீ நேருவின் பெயர்கள் விளங்கி வந்திருந்தன. சுதந்திரத்திற்காகப் பாடுபட்டுப் போராடிய நாமும் மற்ற தேசங்களில் மக்கள் சுதந்திரத்திற்காக போராடுவதை கண்டு அனுதாபப்படாமல் இருக்க முடியாது. ஐக்கிய நாட்டு சபையிலும் மற்ற நாடுகளின் கூட்டங்களிலும் அடிமை நாடுகளின் சுதந்திரப் போராட்டத்திற்காக நமது நாடு ஆதரவு அளித்திருக்கிறது. துரதிருஷ்டவசமாக உலகத்தின் சில பாகங்களில் காலனி ஆதிக்கம் இன்னும் நிலைபெற்று வருகிறது. அதிகப்படியான மக்களுக்குச் சுதந்திரமும் ஆதார உரிமைகளும் மறுக்கப் படுகின்றன. நம்முடைய ஆதரவையும் உதவியையும் அளித்துக் காலனி ஆதிக்கத்தையும் ஏகாதிபத்தியத்தையும் ஒழிப்பது நம்முடைய முக்கிய கடமையாகும்.

### உலக சமாதானம்

மனிதகுலத்தை இன்று எதிர்நோக்கியுள்ள பிரச்னைகளுக்கெல்லாம் முக்கியமான பிரச்னை போரை ஒழிப்பதும், சமாதானத்தை நிலை நாட்டுவதும் தான். தலைமுறை தலைமுறையாக மனிதகுலம் சமாதானத்திற்காகப் பாடுபட்டு வந்திருக்கிறது. ஐக்கிய நாட்டை எதிர்நோக்கியுள்ள தலையாய பணி போரை ஒழிப்பது மட்டுமல்ல போர் ஏற்படாத சூழ்நிலையை உருவாக்குவதுமாகும். ''போரே இல்லாத உலகம்தான் ஜவஹர்லால் நேருஜிக்குச் சிறந்த ஞாபகார்த்தச் சின்னமாகும். உலகில் சமாதானமாக வாழும் மற்ற நாடுகளின் ஒத்துழைப்புடன், சமாதானத்தை நிலைநாட்டும் லட்சியத்திற்காக நாங்கள் எங்களை அர்ப்பணித்துக் கொள்ளுகிறேம்'' என்று அமெரிக்க ஜனுதிபதி ஜான்சன் குறிப்பிட்டிருக்கிறுர்.

அதையே நாமும் நோக்கமாகக் கொண்டு உலக சமாதானத்துக்காக ஓயாமல் ஒழியாமல் பாடுபடுதல் வேண்டும்.



# விவசாயத்தில் விஞ்ஞானம்

எம். எஸ். ரந்தாவா, ஐ. ஸி. எஸ்.

இந்தியாவில் விவசாயத் தொழிலை விஞ்ஞான ரீதியில் ஆராய்ச்சி நடத்தி வளர்க்கும் முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டு இன்னும் ஐம்பது ஆண்டுகள் கூட ஆகவில்லை. பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியில் இந்தியாவில் அடுத்தடுத்து உணவு உற்பத்திப் பற்றுக்குறையும் பஞ்சமும் வந்து கொண்டிருந்தன. அதனைத் தடுக்கும் நோக்கத்துடன் பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் 1880ஆம் ஆண்டில் பஞ்சத்தடுப்பு ஆலோசனைக் குழு ஒன்றினை நியமித்தார்கள். அந்தக் குழுவினர் உணவுப் பஞ்சத்தை அடியோடு தவிர்க்க வேண்டுமென்றுல் திருந்திய முறை விவசாயத்தை நாடு முழுவதும் பரப்புவதுதான் ஒரேவழி என்று கண்டு சிபாரிசு செய்தார்கள். இச்சிபாரிசை நிறைவேற்றுவதற்கு முதல் நடவடிக்கையாக 1889ஆம் ஆண்டில் பூனவில் ஒரு கால்நடை ஆராய்ச்சி நிலையம் நிறுவப்பட்டது. அதனை அடுத்து 1905ஆம் ஆண்டில் பூனவில் விவசாய ஆராய்ச்சி ஒன்றும் ஏற்படுத்தப்பட்டது. இந்த நிலயத்தை உண்டாக்குவதற்கு அமெரிக்க நாட்டைச் சேர்ந்த ஒருவர் பெரும் பொருள் உதவினர். அதன்பின் பூன, கான்பூர், நாகபுரி, கோயம்புத்தூர், சாபூர் முதலான பல இடங்களில் விவசாயக் கல்லூரிகள் தோற்றுவிக்கப்பட்டன. 1921ஆம் ஆண்டில் இந்தியப் பருத்தி அபிவிருத்திக் குழு நியமிக்கப்பட்டது. அதனை அடுத்து 1929ஆம் ஆண்டில் தற்போது இந்திய விவசாய ஆராய்ச்சிக் கழகம் என்று அழைக்கப்பட்டு வரும் நிறுவனம் தோற்றுவிக்கப் பெற்றது. 1931ஆம் ஆண்டு முதல் 1949ஆம் ஆண்டுக்குள் சணல், கரும்பு, தேங்காய், எண்ணெய் வித்துக்கள், பாக்கு முதலான பல்வேறு உற்பத்திப் பொருள்களின் விளைவைப் பெருக்குவதற்குத் தனித் தனிச் சரக்குக் குழுக்கள் ஏற்படுத்தப் பட்டன. இவ்விதம் சுமார் 50 ஆண்டுகளுக்குள் தொடங்கப் பட்ட விவசாய ஆராய்ச்சி நிலையங்கள் இன்று நாட்டில் பல துறைகளிலும் வளர்ந்து பெருகி விவசாயிகளுக்கு எண்ணற்ற உதவிகள் புரிந்து வருகின்றன.

## புதிய பயிர்கள் அறிமுகம்

இந்தியாவில் வெளி நாடுகளிலிருந்து பல பயிர்கள் அறிமுகமாயிருக்கின்றன. அவற்றில் கம்பும் சோளமும் ஆதி காலத்தில் ஆப்பிரிக்காவிலிருந்து இந்

தியாவுக்கு அறிமுகமானவை களாகும். திராட்சை பதினைன் காம் நூற்றாண்டின் ஆரம்பத் தில் முஸ்லிம்படையெடுப்பாளர் களால் ஆப்கானிஸ்தானத்தி லிருந்து இந்தியாவில் அறிமுகம் செய்யப்பட்டது. பூந்தோட்டம் அமைப்பதில் பெரு விருப்ப முடையவர்களான மொகலாயச் சக்கரவர்த்திகள் காலத்தில் பாப் ளார் மரங்களும், செனர் மரங் களும் மத்திய ஆசியாவி லிருந்து இந்தியாவில் அறி முகம் ஆயின. மேற்கு நாடுகளிலிருந்து பல வகையான பயிர் வகைகளை இந்தியாவிற்கு அறிமுகம் செய்த பெருமை போர்த்துக்கீஸியர்களைச் சாரும். மிளகு, வாசனைத் திரவியங்கள் ஆகியவற்றை வாங்கிச் செல் வதற்காக இந்தியாவிற்குப் பதி னேழாம் நூற்றாண்டில் மிகுதி யாக வந்து சென்ற அவர்கள் புகையிலை, நிலக்கடலை, சர்க் கரை வள்ளிக்கிழங்கு, மக்காச் சோளம், பப்பாளி, பைன் ஆப் பிள் முதலான பல பயிர் களை இந்தியாவிற்குக் கொண்டு வந்து அறிமுகம் செய்வித்தார் கள். கிழக்கு இந்தியக் கம் பெனியாராலும் பல பயிர்கள் இந்தியாவில் அறிமுகம் ஆயின. இவ்விதம் பல காலத்திற்கு முன் பிருந்தே இந்தியாவில் வெளி நாட்டாரின் தொடர்பால் இன் னும் பற்பல பயிர்களும் அறி முகப்படுத்தப்பட்டு வந்திருக் கின்றன. இவ்விதம் புதிய பயிர்களை நாட்டில் மேலும் மேலும் அறிமுகப்படுத்த ஆராய்ச்சி நிலையங்கள் முயற்சி செய்ய வேண்டும்.

**நீர்ப்பாசனம்**

இந்தியாவில் நீர்ப்பாசன முறை முதன் முதல் தென்னிந் தியாவில் தான் கையாளப்பட்டி ருக்க வேண்டும். நமக்குத் தெரிந்த வரை மிகப் பழங் காலத்தில் ஏற்படுத்தப்பட்ட நீர்ப்பாசன அணைக்கட்டு தென் னிந்தியாவில் தான் இருக்கிறது. காவிரியாற்றின் குறுக்கே 'பெரிய அணைக்கட்டு' என்ற பெயரால் கட்டப்பட்டிருக்கும் இந்த அணைக்கட்டு கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் ஏற் பட்டது. அதையொட்டிய காலத்தில் தென்னிந்தியாவில் ஏராளமான நீர்ப்பாசனக் குளங் களும் ஏரிகளும் தோன்றியிருக் கின்றன. வட இந்தியாவில் வாய்க்கால் பாசன முறையைப் புகுத்தியவர்கள் முஸ்லிம் ஆட்சி யாளர்களாவார்கள். மேற்கு யமுனைக் கால்வாய் பதினைன்கா வது நூற்றாண்டில் துக்ளக் வம் சத்தாரால் கட்டப்பட்டது. 1850-ஆம் ஆண்டுக்கு முன்பு இந்தியாவில் பாசன நீர் வசதி பெற்ற நிலத்தின் பரப்பு 30 லட் சம் ஏக்கர்கள் மட்டுமே ஆகும். ஆனல் பிரிட்டிஷார் ஆட்சிக் காலத்தில் அவர்கள் பெரிய நீர்ப்பாசன அணைகளைக் கட்டிச் சுமார் 5 கோடி ஏக்கர்களுக்குப் பாசனநீர் வசதி கிடைக்கும்படி செய்துவிட்டனர். இந்திய சுதந் திரத்திற்குப் பிறகு நீர்ப்பாசன

வசதி மேலும் பல மடங்கு அதிகப்படுத்தப்பட்டது இந்த ஆண்டுகளில் சிறிதும் பெரிதுமான 19 அணைகள் இங்குக் கட்டப்பட்டன. முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் ஒரு கோடி ஏக்கர் நிலம் புதிதாகப் பாசனவசதி பெறும்படிசெய்யப் பட்டது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் மேலும் இரண்டு கோடி ஏக்கர் நிலத்திற்குப் பாசன நீர் கிடைப்பதற்குத் திட்டம் வரையறுக்கப்பட்டது. திட்டக்குழுவின் மதிப்பீட்டின்படி மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட கால முடிவில் நாடு முழுவதிலும் 10 கோடி ஏக்கர் நிலம் பாசன வசதி பெற்றுவிடும். இந்தியாவின் நீர்ப்பாசன அணைகள் அனைத்தின் திறமையையும் பரிபூரணமாகப் பயன்படுத்திக் கொள்ளும் காலம் வரும்போது ஏறத்தாழ 17 கோடி ஏக்கர் நிலம் நீர்ப்பாசன வசதி பெறும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது, எனவே இந்திய விவசாயத்திற்கு மூல ஆதாரமாகவும் நம்பிக்கையாகவும் இருந்து வருகின்ற நீர்ப்பாசன வசதியைப் பெருக்குவதற்கு நாம் இன்னும் எவ்வளவு முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும் என்பது இதிலிருந்து தெரிய வேண்டும்.

### பயிர் வளர்ப்பு

நுண் பொருள்களை அறியும் மைக்ராஸ்கோப் என்ற கருவியைக் கொண்டு பத்தொன்பதாம் நூற்ருண்டின் ஆரம்பத்தில் பயிர்களின் அமைப்பு முறை ஆராயப்பட்டது. அந்த ஆராய்ச்சியின் பயனாக விலங்குகளில் ஆண் பெண் என்ற கரு உற்பத்திச் 'செல்'கள் இருப்பது போலவே செடி கொடிகளிலும் இரு பாலுக்கும் உரிய உற்பத்தி செல்கள் இருக்கின்றன என்று கண்டு பிடிக்கப்பட்டது. இந்த உண்மை தெரிந்த பிறகு பயிர் வளர்ப்புமுறையில் ஏராளமான முன்னேற்றங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. பிரிட்டிஷ் விஞ்ஞானிகளான பார்பர், ஹோவார்ட் முதலியோர் இந்தியா முன்னேற்றங்கள் காண்பதற்கு ஆராய்ச்சிகள் பல நடத்தியிருக்கிருர்கள். நடப்பு நூற்ருண்டின் ஆரம்ப காலத்தில் இந்திய விஞ்ஞானிகளும் இவ்வித விவசாய ஆராய்ச்சியில் கருத்துச் செலுத்தத் தொடங்கினுர்கள். பிரபல கரும்பு நிபுணரான டி.எஸ், வெங்கட்ராமன் கரும்பு வளர்ப்பு ஆராய்ச்சியில் பல மகத்தான சாதனைகளை உண்டாக்கினுர். அவரால் தோற்றுவிக்கப்பட்ட கோயம்புத்தூர்க் கரும்பு வகைதான் இன்று இந்தியாவிலுள்ள சர்க்கரை ஆலைகள் அனைத்திலும் 90சதவிகிதத்திற்கு மேல் பயன்படுத்தப்பட்டு வருகிறது. இப்போது குஜராத் மகாராஷ்டிரம், சென்னை ஆகிய பிரதேசங்களில் ஏராளமான திருந்திய ரகப் பருத்திகள் பயிரிடப்பட்டு வருகின்றன. சிறு தானியங்கள், நெல் ஆகியவை உற்பத்தியிலும்இப்போது திருந்

திய ரகங்களைப் பல இடங்களிலும் பயிரிட்டு வருகிறார்கள். மக்காச் சோளத்தில் இரு பிறவி ரகங்கள் இப்போது மிகவும் பிரசித்தி பெற்றிருக்கின்றன. இப்புதிய ரகங்கள் ஏற்கெனவே உள்ள நாட்டு ரகங்களைக் காட்டிலும் 30 முதல் 50 சதவிகிதம் அதிக உற்பத்தி கொடுக்கின்றன.

## இரசாயன உரங்கள்

வயலில் உற்பத்தியைப் பெருக்குவதற்குத் தழை எரு முதலானவற்றை இடுகின்ற பழக்கம் மனித நாகரிகம் தோன்றிய காலத்திலிருந்தே இருந்து வருகிறது. ஆனால் இரசாயன உரங்களின் மூலம் வயலின் வளத்தைப் பெருக்கும் பழக்கத்தை மனிதன் மேற்கொண்டு சுமார் நூறு ஆண்டுகளே ஆகியிருக்கின்றன. முதல் உலகப் போருக்குப் பிறகு உற்பத்தியைப் பல மடங்கு பெருக்கும் தேவை அதிகரித்தது. இதனால் உலகில் பல நாடுகளில் அம்மோனியம் சல்பேட், அம்மோனியம் நைட்ரேட் முதலான நைட்ரஜன் உர உப்புக்களைப் பெரிய அளவில் உற்பத்தி செய்யத் தொடங்கினார்கள்.

இந்தியாவில் இரசாயன உரம் 1896-ஆம் ஆண்டில்தான் முதன் முதல் அறிமுகம் ஆயிற்று. 1920-30 ஆம் ஆண்டுகளில் இம்பீரியல் கெமிகல் இரசாயன உர உற்பத்தித் தொழிற்சாலையார் இங்கும் பல பரிசோதனைகளை நடத்திப்பார்த்தார்கள். 1938-ல் மைசூரிலும் 1947-ல் கேரளத்திலும் அம்மோனியம் சல்பேட் உர உற்பத்திச் சாலைகள் தோற்றுவிக்கப்பட்டன. சிந்திரி உரஉற்பத்திச் சாலை 1951-லும் நங்கல் உர உற்பத்திச் சாலை 1961-லும் ஏற்பட்டன. சென்ற ஆண்டு ரூர்கேலாவிலும் ஒருஉரஉற்பத்தித் தொழிற்சாலை தோன்றியது.

இந்தியாவில் பழங் காலந் தொட்டு விவசாயமே முக்கியத் தொழிலாக இருந்து வருவதால் மண்வளம் மிகவும் நசித்துப் போயிருக்கிறது. பல இடங்களில் நைட்ரஜன் தேவை மிகுதியாகக் காண்கிறது. 75 சத விகிதம் நிலப்பரப்பில் பாஸ்பரஸ் பற்றுக் குறையாக இருக்கிறது. பொட்டாசியம் பல இடங்களில் மிகக் குறைவாக இருக்கிறது. தற்போது இந்தியாவில் உற்பத்தியாகும் இரசாயன உரங்கள் பத்தில் ஒரு பங்கு தேவைக்குக் கூடப் போதாமல் இருப்பதால் நாலாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் இவ்வகையில் இன்னும் அதிகக் கவனம் செலுத்த வேண்டும்.

## விவசாயத்தில் இயந்திரங்கள்

காலம் இன்று மாறி வருகிறது. விவசாயத்தில் நவீன இயந்திரக் கருவிகளை அதிகமாகப் புகுத்துவதன் மூலம் உற்

பத்தியை அதிகரிக்கச் செய்ய முடியும். சிறிய டிராக்டர் இயந்திரங்களை மாடுகளுக்குப் பதிலாக உழுதல் முதலிய காரியங்களுக்குப் பயன் படுத்தலாம். இடையுழவு, விதைப்பு, உரமிடுதல், முதலான பல வற்றுக்கும் புதுப் புதுக் கருவிகள் கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றன. மாடுகளைக் கொண்டு உழுகின்ற வயல்களில் இந்தக் கருவிகளைப் பயன் படுத்துவது அவ்வளவு சாத்தியமில்லை.

நவீன கருவிகளைப் பயன் படுத்துவதற்கு விவசாயிகளிடையே சிறிது நூலறிவும் திறமையும் தேவைப்படும். இதனுல் படித்து வீட்டில் வேலையில்லாமல் இருப்பவர்களுக்கு விவசாயத் தொழிலில் ஈடுபட வாய்ப்புக்கள் உண்டாகலாம். பிரிட்டன், ஜப்பான் முதலான வெளிநாடுகளில் நவீன இயந்திரக் கருவிகளை அதிகமாக உபயோகப் படுத்தி விவசாயத்தில் பெரு வெற்றி கண்டிருக்கிருர்கள்.

கூட்டுறவு விவசாயத்தை ஊக்குவிப்பதற்கு டிராக்டர்கள் போன்ற நவீன கருவிகளை உபயோகித்தே ஆகவேண்டும். ஆதி காலத்திய விவசாய முறைகளைப் பின்பற்றிக் கொண்டு விவசாயத் தொழிலில் முன்னேற்றம் காண்பதோ பெரிய மாறுதல்களை உண்டாக்குவதோ இயலாது. இத்தொழிலில் ஜப்பானும், பிரிட்டனும், வியக்கத்தக்க முன்னேற்றம் அடைந்ததற்கு முக்கியக்காரணம் அந்நாடுகள் நவீன இயந்திரக் கருவிகளை அதிகமாகப் பயன் படுத்தியும் விவசாயத்தில் விஞ்ஞான முறைகளை அனுசரித்தும் வந்ததேயாகும்.

இந்தியா விவசாயத் தொழிலில் முன்னேறி, கிராமங்கள் செழிப்படைய வேண்டுமானுல் முதலாவதாக விஞ்ஞான முறைகளை விவசாயத்தில் கடைப் பிடிக்க நாம் சிறிதும் தயங்கக் கூடாது. டிராக்டர் முதலான நவீன கருவிகளை எங்கும்பரப்ப வேண்டும். உற்பத்திப் பொருள்களை முறையாக விற்பதற்கான விற்பனைத் தலங்களை உண்டாக்க வேண்டும். எல்லா விவசாயிகளுக்கும் விஞ்ஞான ரீதியில் விவசாயம் செய்யும் முறையைக் கற்பிக்க வேண்டும்.

-இந்திய விவசாய ஆராய்ச்சிக் கழகம்.



*தொழில்கள் ஆயிரம் வளர்ந்தனவாம்*
*துரிதமாய் இயந்திர உதவியினுல்*
*உழவுக்கும் கருவிகள் ஆயிரமே*
*உண்டாக்குவோம்நாடு செழித்திடவே!*

# செய்திக் குறிப்புகள்

**குறிப்பு :**

பஞ்சாயத்து யூனியன் பற்றிய செய்திகளை அனுப்பும் யூனியன் அலுவர்களைக்கீழே காணும் குறிப்புக்களில் கவனம் செலுத்துமாறு அன்போடு கேட்டுக் கொள்கிறோம்.

1. தெளிவாகப் புரியும்படியாக எழுதி அனுப்புதல் வேண்டும்.
2. தாளின் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுதி அனுப்புதல் நன்று.
3. செய்திகளைச் சுருக்கமாகவும், சிறு சிறு வாக்கியங்களாகவும் எழுதி அனுப்புதல் நன்று.
4. ஆணையாளர்களின் ஒப்புதல் பெற்றுச் செய்திகளை அனுப்புதல் சிறப்புடையதாகும்.

### தஞ்சை கலெக்டர் சுற்றுப் பிரயாணம்

தஞ்சைகலெக்டர், ஸ்ரீ. பி. என், வேதநாராயணன் அவர்கள், கீழ்வேலூர், பஞ்சாயத்து யூனியன் வட்டாரத்தில் சுற்றுப்பிரயாணம் செய்து பல நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டார். சமுதாய நலத்திட்டங்களையும், சர்க்காரின் சாதனைகளையும், பொதுமக்களுக்கு எடுத்துக் கூறினார்.

17-9-64ஆந்த குடிகிராமத்தில் ரூ 12500 செலவில் கட்டப்பட்ட கூட்டுறவுச் சங்கக் கிடங்கை யூனியன் தலைவர் ஸ்ரீ எஸ். சண்முக சுந்தரம்பிள்ளை தலைமையில் திறந்து வைத்தார்.

ஸ்ரீ. எம். கோபாலசாமி தென்கொண்டார் எம். பி. தலைமையில், தேவூர் பிரதம சுகாதார நிலையத்தைத் திறந்து வைத்தார். பஞ்சாயத்தாரால் கட்டப்பட்ட மீன் வளர்ப்புத் தொட்டியையும் கலெக்டர் அவர்கள் திறந்துவைத்தார்கள். மணலூர் பஞ்சாயத்தில், பசுந்தாள் உர உற்பத்திப் பண்ணையை விதை தெளித்து ஆரம்பித்து வைத்தார். மாதிரி கிராமமான சிகார் கிராமத்தில், மாதிரிக் காய்கறித் தோட்டத்தைத் திறந்து வைத்தார்.

ஆந்தகுடி-வலிவலம் சாலையில் கட்டப்பட்ட, எடையாறு பாலத்தைத் திறந்துவைத்து, ஓர்குடி கிராமத்தில் ஆரம்ப பாடசாலைக் கட்டிடத்திற்கு அஸ்திவாரக் கல் நாட்டினார். ப. யூ, சார்பில் தச்சு, கொல்லு, பயிற்சி நிலையம் ரூ 25000செலவில் கட்டப்பட்டு வருவதைகலெக்டர் பார்வையிட்டார். மாவட்ட விவசாய அதிகாரி, மாவட்ட விசேஷ செய்தித்துறை அதிகாரி, ப. யூ. தலைவர், ஆணையாளர், தொழில் துறை அலுவலர், ஆகியோர் கலந்து கொண்டு திட்டத்தின் நன்மைகளைப் பற்றிப் பேசினர்.



## இராமநாதபுரம் கலெக்டர்சுற்றுப் பிரயாணம்

செப் 11ல் பரமக்குடி பஞ்சாயத்து யூனியன் வட்டாரத்தில் இராமநாதபுரம் மாவட்ட கலெக்டர். திரு. எம். எம். ராஜேந்திரன் அவர்கள் சுற்றுப் பிரயாணம் செய்து வட்டார அபிவிருத்தி வேலைகளைப் பார்வையிட்டார். பல நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டார்.

தென்னை அபிவிருத்தித் திட்டத்தின் சார்பாக தெளிச்சாத்நூர் கிராமத்தில் 20 ஏக்கரில் தென்னங்கன்றுகள் நடப்பட்டிருந்ததைப் பார்வையிட்டு இதர இடங்களிலும் இது போன்று நட வேண்டுமென்று குறிப்பிட்டார். தென்னங்கன்றுகளுக்கு இடைவெளியில் உற்பத்தி செய்யப் பட்டிருக்கும், சணப்புப் பயிரைப் பார்த்து இதுபோல எல்லா இடங்களிலும் செய்ய வேண்டுமென்று வற்புறுத்தினர்.

பின்னர் சுத்தனேந்தல் கிராமத்தில், விணுகும் மனித சக்தி திட்டத்திலிருந்து கால்வாய் வெட்டு வேலையைப் பார்வையிட்டு வேலையைச் சீக்கிரம் முடித்துவிட வேண்டுமென்று கூறினர். பெருங்கரை கிராமத்திற்குச் சென்று பள்ளிக் கட்டிட வேலையைப் பார்வையிட்டார்.

பார்த்திபனூர் பஞ்சாயத்தில், பெண்கள் தையல் வேலைநிறுவனத்தையும், பள்ளி மாணவிகளால் செய்த பூ வேலைப்பாடுகளைப் பார்த்துவிட்டு, இம்மாதிரியான வேலைகளை லாபகரத்துடன் நடத்த முயற்சிசெய்ய வேண்டுமென்று கூறினர். புலிக்குளம் கிராமத்தில், புதுப்பட்டி கூட்டுறவுப் பண்ணைத் தலைவர். ஸ்ரீ. டி. சீனிவாஸன் கலெக்டர் அவர்களை வரவேற்றார். தீவிர தென்னை அபிவிருத்தி திட்டத்திலிருந்து 10 ஏக்கர் தென்னங்கன்றுகள் உற்பத்தி செய்திருந்ததைப் பார்வை யிட்டார். மீதமுள்ள 10 ஏக்கரில் தென்னை உற்பத்தி செய்வதற்கு கலெக்டர் ஒரு கன்றை நட்டு வைத்து, இந்தப் பிராந்தியம் பாறை இல்லாத பிரதேசமாக இருப்பதால் அதிக அளவில் தென்னை உற்பத்தி செய்ய வேண்டுமென்று வட்டார வளர்ச்சி அதிகாரிகளுக்கு உத்தரவிட்டார். சிவகங்கை ரெவினியூ டிவிஷனல் அதிகாரி, ஸ்ரீ. எம், பிராணப்பன், வட்டார வளர்ச்சி ஆணையர் ஸ்ரீ வைரமுத்து, தாசில்தார் ஸ்ரீ. குருசாமி ஆகியோர்களும், கலெக்டருடன் சுற்றுப் பிரயாணம் செய்து தென்னங்கன்றுகளை நட்டார்கள்.



## ஆசிரியைகளுக்கு விடுதிகள்

செப் 20-ல் மாதவரம் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த வடபுறம் பாக்கம் பஞ்சாயத்தாரால் ஆசிரியைகளுக்காக கட்டப் பட்ட விடுதியை முதன் மந்திரி, திரு. எம். பக்தவத்சலம் திறந்து வைத்தார் ப. யூ. சேர்மன் திரு. டி. கோவிந்தசாமி நாயுடு அவர்கள் வரவேற்புரை வாசித்தளித்தார். செங்கற்பட்டுமாவட்டக் கலெக்டர் திரு. எஸ். கிருஷ்ணசாமி, ஐ. ஏ. எஸ். தலைமை வகித்தார். விடுதியைத்திறந்தபின்னர், முதலமைச்சர் அவர்கள் ஷெ பஞ்சாயத்து அலுவலகக் கட்டிடத்திற்கு அடிக்கல் நாட்டினர். அவ்வமயம் செங்கற்பட் ஸ்தலஸ்தாபன தொகுதி, உறுப்பினர் திரு. வி. கே. ராம சாமி முதலியார் எம். எல், ஸி, அவர்கள் விழாவில் கலந்து கொண்டார். தென்னை வளர்ப்புத் திட்டத்தின் கீழ் அதிகப்படியாக சாகுபடி செய்த மாதவரம் பஞ்

சாயத்து யூனியன் ஸ்ரீ. பிறைக பாணிக்குப் பரிசு வழங்கினர்.

மாதவரம் தொகுதி சட்டசபை அங்கத்தினர் திரு. ஆர். கோவிந்தராஜு நாயுடு விழாவில் கலந்து கொண்டு பேசினர். சைதாப் பேட்டை கோட்ட ஆட்சியாளர், ஸ்ரீ. ஆர் கிருஷ்ணமூர்த்தி பஞ்சாயத்தின் சார்பில், வாலிபர்களுக்கு விளையாட்டுக் கருவிகள் வழங்கினர். பஞ்சாயத்து யூனியன் உதவி சேர்மன் ஸ்ரீ. ஆர். வீரராகவன் அனைவருக்கும் நன்றி கூறினர்.



### கிள்ளியூர், பஞ்சாயத்து யூனியன்

செப் 17. தேதி கன்னியா குமரி ஜில்லா கிள்ளியூர் ப. யூ. கூட்டம் தலைவர். திரு. ரஸல் ராஜ் தலைமையில் நடைபெற்றது. யூனியன் எல்லையிலுள்ள பல கிணறுகளை அபிவிருத்திசெய்யவேண்டுமென்றும் அதற்கு ஏற்படும் செலவு தொகைகளை அனுமதிப்பதென்றும் தீர்மானம் நிறை வேற்றப் பட்டது.

### முதுகுளத்தூர் பஞ்சாயத்து யூனியன்

செப் 15 தேதி முதுகுளத்தூர், பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த செல்லூர் பஞ்சாயத்துத் தலைவர் ஸ்ரீ. சேதுராமன் தலைமையில், செல்லூர் கிராமத்தில் மின் விளக்கு ஏற்று விழா நடை பெற்றது. விழாவிற்கு ஏராளமான கிராம மக்களும், பஞ்சாயத்து மெம்பர்களும் வந்திருந்தனர்.



### மடத்துக்குளம் பஞ்சாயத்து யூனியன்

செப் 14 தேதி. ப. யூ. கவுன்சில் கூட்டம் சேர்மன் ஸ்ரீ. எஸ். திருமலை சாமிக்கவுண்டர் தலைமை நடைபெற்றது. கழுகரை கிராமப் பள்ளிக்கட்டிட மராமத்து வேலைகளுக்காக ரூ 1400 மதிப்பீடு அங்கீகரிக்கப்பட்டது. குமாரலிங்கத்தில் கிராமிய மருத்துவமனை கட்டுவதற்கு மதிப்பீடு ரூ 24000 க்கு அங்கிகாரமளிக்கப் பட்டது. குடிதண்ணீர்த் திட்டம், புதிய சாலை நிறுவுதல், பழைய சாலைகள் பள்ளிக் கட்டிடங்கள் பராமரிப்பு ஆகிய வகைகளுக்கு இந்த ஆண்டு ஏப்ரல் முதல் ஜூன் முடிய ரூ 23136 செலவழிக்கப்பட்டிருப்பதாகச் சபைக்குத் தெரிவிக்கப் பட்டது.



### ரசாயன உரங்கள் விலை குறையும்

சர்க்கார் ஆலோசனை அமைச்சர் தகவல்.

செப் 23. புதுடெல்லி

திட்டக்கமிஷன் நிபுணர் குழுவின் பேரில் ரசாயன உரங்களின் விலையைக் குறைப்பது பற்றி அரசாங்கம் ஆலோசித்து வருவதாக இன்று ராஜ்யசபையில் திட்ட மந்திரி ஸ்ரீ. பீ. ஆர். பகத் கூறினர்.



### கிராம ஜாகை வசதி திட்டம்

புதுடெல்லி செப் 23.

கிராம ஜாகை வசதித் திட்ட அமல் செலவு முழுவதையும் மானியமாகத் தரமத்திய சர்க்கார் முடிவு செய்து அதை 1962 செப்டம்பரில் ராஜ்யங்களுக்கு தெரிவித்தும், பெரும் பாலான ராஜ்யங்கள் இன்னும் இத்திட்டத்தை அமல் நடத்தவில்லை யென்று யூனியன் மராமத்து ஜாகை வசதி மந்திரி ஸ்ரீ மேஹர் சந்த் கன்ன இன்று ராஜ்ய சபையில் தெரிவித்தார்.

### மரக்காணம் யூனியன்

1964 வருஷம் ஆகஸ்டு மாதம் 15-ந் தேதி மரக்காணம் பஞ்சாயத்து யூனியன் பகுதியில் உள்ள எல்லா பஞ்சாயத்துக்களில் பள்ளி ஆசிரியர்களும், மாணவ மாணவிகளும், தொண்டர் படையினர்களும் கலந்து ஊர்வலங்கள் வந்து சுதந்திர தின விழாவை விமரிசையாகக் கொண்டாடினார்கள். திரு. M. E. ராசமாணிக்க முதலியார் மண்டல காங்கிரஸ் கமிட்டி உறுப்பினர் அவர்களால் தேசியக் கொடி யேற்றி விழா கொண்டாடப்பட்டு திரு. K. A. பீமராஜ் அவர்களால் நம் நாடும் சுதந்திரமும் என்பதைப் பற்றி பேசப்பட்டு பிள்ளைகளுக்கு இனிப்பு வழங்கப்பட்டு இனிது முடிவு பெற்றது.

### திருவெண்ணைநல்லூர் யூனியன்

27-8-64 திருவெண்ணைநல்லூர் பஞ்சாயத்து யூனியன் உயர் தொடக்கப் பள்ளி முன்பாக சென்னை கல்வி இலாகாவினரால் ஏற்பாடு செய்யப்பட்ட சமூகக் கல்விப் படக் காட்சி காண்பிக்கப் பட்டது. 6000 மக்கள் கண்டு பயன் அடைந்தனர்.

### சித்தாமூர் யூனியன்

1. தொண்டர் படை:

சித்தாமூர் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த கிராமங்களில் புதிதாக 35 தொண்டர்கள் சேர்க்கப் பட்டனர்.

2. ஹரிஜன தினம்:

வட்டார ரீதியிலான ஹரிஜன தினம் கடுக்கரூர் கிராமத்தில், பஞ்சாயத்து தலைவர் திரு சுப்பிரமணிய ரெட்டியார் தலைமையில் நடைபெற்றது. ஆணையாளரும், கல்வி விஸ்தரிப்பு அலுவலரும் ஹரிஜன நலன் பற்றியும் தீண்டாமை விலக்கல் பற்றியும் நன்கு விளக்கினர். அனைவர்க்கும் சிற்றுண்டி சமபோஜனம் அளிக்கப் பட்டது.

3. கிராமிய விளையாட்டுப் போட்டியும், குழந்தைகள் காட்சியும்.

கடுக்கரூர் கிராமத்தில் 30-8-64-ல் கிராமிய விளையாட்டு போட்டி நடத்தப்பட்டது. குழந்தைகள் காட்சி ஒன்றும் நடத்தப் பட்டது. விளையாட்டுகளில் வெற்றி பெற்றவர்களுக்கும், சிறந்த குழந்தைகளுக்கும் ஆணையர் திரு ஏ. வெங்கடேசன் பி.ஏ., அவர்களால் பரிசுகள் வழங்கப் பட்டன. கடுக்கரூர் தொகுதி கிராமசேவக் திரு. என். சுப்பய்யா அனைவர்க்கும் நன்றி கூறினார்.

### காட்டுமன்னார்கோயில் யூனியன்

காட்டுமன்னார்கோயில் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த வீரானந்தபுரம்பஞ்சாயத்தில் கேந்திர கிராம கிளை நிலையத் திறப்பு விழா நடைபெற்றது. விழாவிற்கு தமிழ் நாடு செய்தித்துறை அமைச்சர் கனம் ஜி. பூவராகவன் பி.எஸ்.சி. (ஆனர்ஸ்) அவர்கள் தலைமை வகிக்க தமிழ்நாடு உள்துறை அமைச்சர் கனம் பி. கக்கன் அவர்கள் கிளை நிலையத்தைத் திறந்து வைத்தார்கள். காட்டு மன்னார்கோயில் பஞ்சாயத்து யூனியன் பெருந்தலைவர் திரு முத்து. செல்வகணபதி அவர்கள் காமராஜர்படத்தையும் தென்னாற்காடு மாவட்ட ஆட்சித் தலைவர் திரு வி. என். சுப்பையா ஐ. எ. எஸ்., அவர்கள் நேரு படத்தையும் திறந்து வைத்தார்கள். தமிழ் நாடு சட்டமன்ற உறுப்பினர் திரு எம். ஆர். கிருட்டினமூர்த்தி அவர்கள் வானொலியை இயக்கி வைத்தார்கள். கிராம மக்களின் சார்பிலும் பஞ்சாயத்துச் சார்பிலும் அமைச்சர்களுக்கு வரவேற்பு கொடுக்கப்பட்டது.

காட்டுமன்னார்கோயில் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த வீரானந்தபுரம் பஞ்சாயத்தில் கிராம மக்களின் உதவியால் கட்டப்பட்ட பஞ்சாயத்து நூலகக் கட்டிடத்தை, தமிழ்நாடு உள்துறை அமைச்சர் கனம் பி. கக்கன் அவர்கள் தலைமையில் தமிழ்நாடு செய்தித்துறை அமைச்சர் கனம் ஜி. பூவராகவன், பி.எஸ்.சி. (ஆனர்ஸ்) அவர்கள் திறந்து வைத்தார்கள். விழாவிற்கு வந்திருந்த அனைவரையும் தமிழ் வித்வான் திரு இலக்குமணன் வரவேற்றார். கிராம மக்கள் சார்பில் அமைச்சர்களுக்கு வரவேற்பு கொடுக்கப்பட்டது.

## கீழக்கடம்பூர் யூனியன்

காட்டுமன்னார்கோயில் பஞ்சாயத்து யூனியன் எல்லைக்குட்பட்ட கீழக்கடம்பூர் பஞ்சாயத்தில் ஹரிஜன நலப்பள்ளிக்கட்டிடத்திறப்பு விழா நடைபெற்றது. மேற்படி விழாவிற்கு தமிழ்நாடு செய்தித்துறை அமைச்சர் கனம் ஜி. பூவராகவன், பி.எஸ்.சி. (ஆனர்ஸ்) அவர்கள் தலைமை வகிக்க, தமிழ்நாடு உள்துறை அமைச்சர் பி. கக்கன் அவர்கள் மேற்படி புதியகட்டிடத்தைத்திறந்துவைத்தார்கள். மத்திய அரசாங்க சமுதாயப்பாதுகாப்புத் துணை அமைச்சர் திரு உருவப் படத்தை திறந்து வைத்ததுடன் அரசாங்கம் ஹரிஜனங்களுக்குச் செய்யும் சலுகைகள் பற்றி விளக்கமாக எடுத்துக் கூறினார்கள். பஞ்சாயத்துத்தலைவர் திரு எம். பாலகிருஷ்ணன் விழாவிற்கு வந்திருந்த அனைவரையும் வரவேற்றார். விழாவில் பஞ்சாயத்து யூனியன் தலைவர் திரு. முத்து. செல்வகணபதி அவர்கள், மாவட்ட நல அதிகாரி மற்றும் பல பிரமுகர்களும் கலந்து கொண்டார்கள்.

## திருநாவலூர் யூனியன்

9-9-64 அன்று திருநாவலூர் பஞ்சாயத்து யூனியன் அலுவலக எல்லாச் சிப்பந்திகளும் மற்ற எல்லா அரசாங்க அலுவலர்களும் சேர்ந்து தங்களது ஒருநாள் ஊதியத்தைக் கொடுத்து அலுவலக சார்பாக ஒரு விநாயகர் கோவில் நிறுவப்பட்டு அன்றைய தினம் நடைபெற்ற அபிஷேக ஆராதனைகளில் பங்கு கொண்டு சிறப்பாக நடத்தப்பட்டது.

## திருச்செங்கோடு யூனியன்

திருச்செங்கோடு பஞ்சாயத்து யூனியனில் 30-8-64-ந் தேதி அனிமூர் கிராமத்தில் ஹரிஜன தின விழாவும் குழந்தைகள் கண்காட்சியும் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டன.

ஹரிஜன காலனிகளிலுள்ள தெருக்களும், வீடுகளும் சுத்தம் செய்து அலங்கரிக்கப்பட்டு, குழந்தைகளையும் சிங்காரித்துகுழந்தைகள் கண்காட்சிக்குக் கொண்டு வரப்பட்டு, மேற்படி விழா மாலை 5 மணிக்குப்பஞ்சாயத்துயூனியன் ஆணையாளர் திரு. சு. சண்முகம் பி. ஏ. அவர்களால் துவங்கப்பட்டது. பஞ்சாயத்துத் தலைவர் திரு பொன்னுசாமிக் கவுண்டர் அவர்கள் மேற்படிவிழாவிற்குத்தலைமை தாங்கினார். ஹரிஜன நல முன்னேற்றம் என்ற பொருள் பற்றி மிகவும் தெளிவாகவும், விரிவாகவும் திரு. சு. சண்முகம், பி. ஏ., ஆணையாளர் அவர்களால் சொற்பொழிவாற்றப்பட்டது. முக்கிய சேவிகா திருமதி. கண்ணம்மாள் 'ஹரிஜன நல முன்னேற்றம்' குழந்தைகள் கண்காட்சி ஆகிய பொருள்பற்றி சொற்பொழிவாற்றினார். ஆரோக்கியமான சுறுசுறுப்பான, சுத்தமான குழந்தைகள் தேர்ந்தெடுக்கப்பட்டு குழந்தைகளுக்கு திரு. சு. சண்முகம், பி. ஏ. ஆணையாளர் அவர்களால்

பரிசு வழங்கப்பட்டது. கிராம நல ஊழியர் திரு. சிங்காரவேலு நன்றி கூறியபின்னர் நாட்டு வாழ்த்துடன் கூட்டம் இனிது முடிந்தது.

## திருச்செங்கோடு பஞ்சாயத்து யூனியன்

1964-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 7-ம் தேதி மாலை 4-30 மணிக்கு திருச்செங்கோடு மார்க்கெட்டிங் சொசைட்டியில் ரசாயன உர விழா உயர்திரு டி. எம். காளியண்ணன், எம். ஏ., பி.காம் எம். எல். ஏ. அவர்கள் தலைமையில் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

விழாவிற்கு விவசாயப் பெருங்குடி மக்களும் பொது மக்களும் திரண்டு வந்திருந்தார்கள். விழாவிற்குச் சிகரம் வைத்தாற்போல் விவசாயக் கண் காட்சி காண்பவர் உள்ளம் மகிழக்கவர்ச்சிகரமாகவும் பயனுள்ளதாகவும் அமைந்திருந்தது.

உயர்திரு. டி. எம். காளியண்ணன் எம். ஏ., பி. காம், எம். எல். ஏ. அவர்கள் அவரது தலைமையுரையில் மக்களின் உணவு பற்றுக்குறையை போக்க உணவு உற்பத்தி அதிகரிக்க வேண்டுமென்றும், அதற்குநவீன முறையைக் கையாண்டு நல்ல இயற்கை உரமும், ரசாயன உரமும் பயன்படுத்தினால் விளைச்சல் அதிகம் கிடைக்கும் என்றும் அதனால் தங்களுக்கும், நாட்டிற்கும் பெரிய சேவை செய்தமாதிரி இருக்கும் என்றும் கூறினார்.

கண்காட்சியை மாவட்ட கலெக்டர் உயர்திரு ஏ. பத்மநாபன், ஐ. ஏ. எஸ்., அவர்கள் திறந்து வைத்து விவசாயிகள், பலவித ரசாயன உரம், யூரியா, அம்மோனியம் சல்பேட் இவை போன்ற உரங்களை நல்ல முறையில் பயன்படுத்த வேண்டுமென்றும் விளைச்சலை அதிகப்படுத்த ரசாயன உரம் இன்றியமையாதது என்றும் வலியுறுத்திச் சொன்னார்.

சாதாரண உரங்களினால் வளர்ந்த செடியையும், நல்ல முறையில் ரசாயன உரமிட்ட வயலில் தழைத்த நெல், கரும்பு காய்கறிகளையும் கண்காட்சியில் மக்கள் கண்டுவித்தியாசத்தை உணர்ந்து நவீன முறையைக் கையாண்டு உற்பத்தியைப் பெருக்கவேண்டுமென்று உணர்ந்தார்கள்.

மாவட்ட வேளாண்மை அதிகாரி நோயின் தன்மையை எவ்விதம் டாக்டர் அறிகிறரோ அதே மாதிரி பூமியின் வளத்தை விவசாய அதிகாரிகளால் அறிய வாய்ப்பு இருக்கிறதென்றும், விவசாயிகள், அதிகாரிகளை அணுகி, விதை, உரம், நோயைத்தடுக்கும் பூச்சி மருந்து இவைகளைப் பயன் படுத்தவேண்டுமென்றும்கேட்டுக் கொண்டார்.

கோட்டாட்சித் தலைவர் திரு ஏ. வி. நரசிம்மன், பி. ஏ. விவசாயிகள் பயன்பெற ஒவ்வொரு பயிருக்கும் ஏக்கர் வாரியாக எவ்வளவு உரம் இடவேண்டுமென்று எழுதி ஒவ்வொரு கிராமத்திலும் முக்கியமான இடங்களில் வைக்கும்படி வட்டார வளர்ச்சி அதிகாரிக்கு அறிவுரை வழங்கினார்.

பஞ்சாயத்து யூனியன் சேர்மன் திரு. க. ராமச்சந்திரன் எல்லோரையும் வரவேற்றுப் பேசினார். இரவில் திரைப்படக் காட்சியை ஏராளமான பொதுமக்கள் கண்டு களித்தனர்.

திரு எஸ். சண்முகம், பி. ஏ., திருச்செங்கோடு பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் நன்றி கூறக் கூட்டம் இனிது முடிவு பெற்றது.

**பள்ளிபாளையம் யூனியன்**

1. பள்ளிபாளையம் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த காடச்சநல்லூர் ஊராட்சியில் 13-9-64-ம் தேதி காலை 10-00 மணியளவில் பெண் ஆசிரியை குடியிருப்பு மனை திறப்பு விழா நடைபெற்றது. விழாவிற்கு திருச்செங்கோடு தொகுதி சென்னை சட்டசபை உறுப்பினர் திரு டி. எம். காளியண்ணன், எம்.ஏ. பி.காம்., எம். எல். ஏ. அவர்கள் தலைமை வகித்தார். சேலம் மாவட்ட ஆட்சித் தலைவர் திரு அ. பத்மநாபன் ஐ. ஏ. எஸ். அவர்கள் குடியிருப்பு மனை கட்டிடத்தைத் திறந்து வைத்தார். சங்ககிரி கோட்டாட்சித் தலைவர் திரு அ. வீ. நரசிம்மன், பி. ஏ. அவர்கள் சொற்பொழிவாற்றினர். பள்ளிபாளையம் பஞ்சாயத்து யூனியன் பெருந்தலைவர் திரு கே. பழனிசாமி அவர்கள் தேசியக்கொடியேற்றினர். பள்ளிபாளையம் பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் திரு எஸ். பாரிஜாதம் பி. ஏ. பி. டி., அவர்கள் விழாவிற்கு வருகைதந்த அனைவரையும் வரவேற்று வரவேற்புரை நிகழ்த்தினர். கிராம நல ஊழியர் திரு வெங்கட்ரத்தினம் அவர்கள் நன்றி கூற நாட்டுப்பாடலுடன் விழா இனிது முடிவுற்றது.

2. பள்ளிபாளையம் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த சமய சங்கிரி அக்ரஹாரம் ஊராட்சிக்குட்பட்ட செங்குட்டபாளையம் கிராமத்தில் 19-9-64-ம் தேதி காலை 11-00 மணியளவில் பஞ்சாயத்து யூனியன் ஆரம்பப்பள்ளிக் கட்டிடத் திறப்பு விழா நடைபெற்றது. விழாவிற்கு திருச்செங்கோடு தொகுதி சென்னை சட்டசபை உறுப்பினர் திரு டி. எம். காளியண்ணன் எம்.ஏ., பி. காம்., எம். எல். ஏ. அவர்கள் தலைமை வகித்தார். சேலம் மாவட்ட ஆட்சித் தலைவர் திரு அ. பத்மநாபன் ஐ. ஏ. எஸ். அவர்கள் சொற்பொழிவாற்றினர். பள்ளிபாளையம்கூட்டுறவு பண்டகசாலைத் தலைவர் திரு என். இ. மணி அய்யர் அவர்கள் காந்திஜீ அவர்களின் திருவுருவப் படத்தை திறந்து வைத்தார். பயிற்சியில் இருக்கும் துணை ஆட்சித் தலைவர் நேருஜி அவர்கள் படத்தைத் திறந்து வைத்துப் பேசினர். பள்ளிபாளையம் பஞ்சாயத்து யூனியன் பெருந்தலைவர் திரு கே. பழனிசாமி அவர்கள் தேசீயக் கொடியை ஏற்றி வைத்தார். பள்ளிபாளையம் பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் திரு எஸ். பாரிஜாதம், பி., ஏ. பி. டி., அவர்கள் விழாவிற்கு வருகை தந்த அனைவரையும் வரவேற்றுப் பேசினர். கல்வி விஸ்தரிப்பு அலுவலர் திரு வெங்கட்ராமன் அவர்கள் நன்றி கூற நாட்டுப்பண்ணுடன் விழா இனிது முடிவுற்றது. விழாவில் பஞ்சாயத்து தலைவரும் உறுப்பினர்களும் கலந்து கொண்டனர்.

**தொகுத்தவர் : குண்டத்தூர் எஸ். எஸ். வாசன்**

---

உலகத்து மனிதர்கள் பல ரகப்பட்டவர்கள். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வகைப்பட்ட புத்தகங்கள் தேவைப்படும். ஒருவருக்கு இலக்கியம் என்றால் உயிர், இன்னொருவருக்கு இலக்கணம் என்றால் உயிர், இப்படியாகப் பலரும் பல வகைப்பட்ட துறைகளில் விருப் பம் காட்டுவர். இதனை நுணுகி அறிந்து நூற் களைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று கட்டுரையாளர் அழகுற விளக்குகின்றார். நூலகருக்கும் வாசகர்களுக்கும் பயன் தரும் கட்டுரை இது.

# நூற்றேர்வு

வே. தில்லைநாயகம், எம். ஏ., எம். எல். எஸ்., பி. டி.
(நூலகர், கன்னிமாரா நூலகம், சென்னை.)

'உலகில் உண்டாவதனைத் தும்—உண்டாக்கப் படுவதனைத் தும்—பயன் கருதிந்தான்; எனவே ஒவ்வொன்றையும் நுணுகிப் பார்த்துத் தேர்ந்து பயன்படுத்திக் கொள்ளவேண்டும் மனிதன்' என் கிறது பயனீட்டு வாதம்.

அதுபோலவே உலகில் வெளி யாகும் நூற்களையெல்லாம் நுணு கிப் பார்த்து, நல்ல நூற்களை— பயன்படு நூற்களை — தேர்ந் தெடுத்துக் கொண்டு, வேண் டாத நூற்களை—பயன்படக் கூடாத நூற்களை—ஒதுக்கிவிட வேண்டும் நூலகர். இச் செயல் முறை நூல் தேர்வு—நூற்றேர்வு (Book selection)—எனப்படும்.

இதற்கடிப்படையாகப் போன திங்களிலே நூலின் இலக்கணம், நூலின் அமைப்பு முறை, நூலின் வகை முறை முதலியவைகளை நூற்கள் படிப்பதற்கே என்ற முறையிலே ஆராய்ந்தோம். அப் படிப்பட்ட நூற்களை ஆளுக்கொரு நூல் தரும் வகையில் எப்படித் தேர்ந்தெடுப்பது என்பது பற்றி இப்போது பார்க்கலாம்.

## நூல் தேவை

'உலகத்து மனிதர் ஒவ்வொரு வரும் ஒவ்வொரு ரகம். ஒவ் வொருவர் தேவையும் காலத்திற் கேற்ப, இடத்திற்கேற்ப, செய்யுந் தொழிலுக் கேற்ப, வாழும் சூழ் நிலைக்கேற்ப மாறிக்கொண்டே இருக்கும். இத்தகு தேவையை இன்றையத் தேவை, நேற்றை யத் தேவை, உள்ளார்ந்த தேவை, நாளையத் தேவை என நான்கு

பெரும் பிரிவுகளாகப் பார்க்க லாம்.

### இன்றையத் தேவை

அறிவுப் பசி இறகு கட்டிக் கொண்டு பறக்கும் தன்மையது. எனவே அதன் தேவையை உடனே நிறைவேற்ற வேண்டும். அதற்கு பசிகொண்டோர் தனது தேவையைச்சரிவரக்குறிப்பிட்டுச் சுட்டிக் காட்ட முடிவதில்லை. எனவே அதைச் சரிக்கட்ட உலக நூற்களனைத்தையும் அவர் முன் கொண்டு வந்து நிறுத்தவேண் டும். இது முடியக் கூடியதா? இல்லவே யில்லை! எனினும் அதற்கு மாற்றுவழியாக நூல் பட்டியைத்தான் காட்ட வேண் டும். இதிலும் பல முறைகள் உள்ளன.

### தட்டுத்தூக்கி

•

இன்று நகர்ப் புறங்களில் வாழ்க்கைத் தேவைக்கான உண வுப் பொருள்களையும், நுகர் பொருள்களையும் தட்டில்வைத்துக் கொண்டு தட்டுத் தூக்கி தெருத் தெருவாக, கூவி விற்பதைக் காணலாம். பொருள்கள் நேரடி யாக வாசலில் வரும்போது இருந்த இடத்திலிருந்தவாறே அலைச்சலின்றி—வாங்க முடிகி றது. அதையே பெரும்பாலும் விரும்புகிறோம் நாம்.

அதைப் போலவே நூலகப் பணியாளர் நூற்பட்டி யொன்றை எடுத்துக்கொண்டு வீடு வீடாகச் சென்று மக்களின் தேவையறிய லாம். ஓரிரு சமயம் மாதிரி மதிப் பீடு அறிய இப்படி நடக்கவும் செய்கிறது. ஆனால் இது கால முழுதும் நடக்க முடியாத தொன்று. அப்படியானால் அதற்கு மாற்றுவழி யென்ன?

### கடைக்காரர்

தட்டுத்தூக்கி மூலதனம் காணாதபோது சில பொருள்களை மட்டுமே தூக்கிச் சென்று விற்று வருகிறான். ஆனால் வாய்ப்பும் வசதியும் கிடைக்கும்போது தட் டுத் தூக்கி ஓரிடத்தில் நிலையாக கடைபோட்டு கடைக்காரர் ஆகி விடுகிறார். கூடியமட்டும் எல்லாப் பொருள்களும் வாங்கி வைத்து வரும் மக்களுக்குக் காட்டி வணி கம் நடத்துகிறார். மக்கள் கடை தேடிச் சென்று வேண்டியதைப் பெறுகின்றனர்.

அதைப் போலவே நூலகப் பணியாளர் வீடு வீடாய்ச் சென்று தேவை யறிய முடியாதபோது கடைக்காரரைப் போல நூலகத் திலேயே நூற்றொகையை வைத் துக் கொண்டு வாசகர்களைச் சந் திக்கலாம். வாசகரின் தேவையை யறிந்து நூலகத்திற்கான நூற் களை வாங்கலாம். இங்கிலாந்து, டென்மார்க் போன்ற நாடுகளில் இத்தகைய முயற்சி நடந்து வருகி றது. இதைச் செய்வதற்குத் தனியாக ஆட்கள் வேண்டும். அவர்களுக்குச் சம்பளம் கொடுக்க வேண்டும். அதற்கு நிறையப் பணம் வேண்டும். அஃதில்லாத போது என்ன செய்வது?

### குறிப்புதவியாளர்

நூலகம் ஒவ்வொன்றிலும் வாச கர்க் குதவி செய்யக் குறிப்புதவி யாளர் ஒருவர் இருப்பார். அவர் வாசகர்கள் தேவையைக் கேட் டறிந்து உதவி செய்யும்போது ஒவ்வொருவரின் தேவையை யுணர முடியும். அவ்வப்போது அதனைக் குறிப்பு வைத்துக் கொண்டு நூலகத்திற்குத் தேவை யான நூற்களை — நூலகத்திலில் லாத நூற்களை—வாங்க முயற்சி செய்யலாம்.

## கருத்தறிவிப்பு

இஃதல்லாமல் வாசகர் ஒவ்வொருவரும் தன் தேவையைத் தானே நூலகத்திற்குத் தெரிவிக்கலாம். அதனை, தனித்தாளிலோ, அல்லது கருத்தறிவிப்பேடு (Suggestion book) ஒன்றிலோ குறித்துக் கொடுக்கலாம். இப்படிக் கொடுப்பது பொறுப்புணர்வுடன் இருக்கவேண்டும். அதற்கு நூலகப் பணியாளர்கள் வழி காட்டவேண்டும்.

இங்ஙனமெல்லாம் ஒவ்வொருவரின் கருத்தாக அறிந்து நூற்கள் வாங்குவதென்பது எல்லாச் சமயத்திலும் நடக்க முடியாது. ஏனெனில் கருத்தறிவிப்பதிலும், கருத்தறிவதிலும் காலம் அதிகம் பிடிக்கும். கருத்தறிந்ததும் ஒரு நிலையானதாயிருப்பதில்லை. எனவே இதற்கு ஒரு மாற்று முறை காணவேண்டும். அது எப்படி?

## நேற்றையத் தேவை

எளிதானதும் நிச்சயமானதுமாக இருக்கவேண்டுமானால் நேற்றையத் தேவையைப் பரிசீலனை செய்யவேண்டும். அதற்கு நூலகத்திலிருந்து ஒவ்வொருவருக்கும், ஒவ்வொரு நாளும் கொடுத்த ஒவ்வொரு நூலையும் கணக்கிட வேண்டும். அந்த நிலை இன்று நடக்கக் கூடியதில்லை. காரணம்? அதற்குக் கணக்குகள் இன்று நாம் வைத்துக் கொள்வதில்லை. நூலக வளர்ச்சியில் அதைப் பின்னுக்குத் தள்ளி விட்டோம். அப்படியானால் இப்போது வழி?

## பொருள்வகை

இன்று ஒவ்வொரு நூலகமும் அன்றன்று கொடுக்கும் நூற்களுக்குப் பொருள்வாரியாகக் கணக்கு வைத்து வருகிறது (கணக்கு வைக்காத நூலகங்கள் உடனே செய்ய முயலவேண்டும்).

இக் கணக்கை வாரத்திற்கொரு முறை, திங்களுக் கொருமுறை, ஆண்டுக் கொருமுறைக் கணக்காக மாற்றிக்கொள்ள வேண்டும். அதனை நோக்கினால் ஒரு ஆண்டில் ஒரு குறிப்பிட்ட பொருளில் (subject) எத்தனை நூற்கள் கொடுக்கப் பட்டிருக்கின்றன என்று தெரிந்து கொள்ளலாம். இது மேலும் பல்வேறு பொருள்களுக் கிடையேயுள்ள தொடர்பையும் வெளிப்படுத்தும்.

இந்தத் தேவையைப் புரிந்து கொண்டு, அந்தத் தேவையைப் பூர்த்தி செய்யும் முறையில் புது நூற்களை வாங்கி வைக்கலாம். அது வாசகர்கள் ஒவ்வொருவரும் பயனடைய வழிகோலும். இம் முறையிலே ஒவ்வொரு நூலகமும் முயலலாம். முயன்றால் முடியாத தொன்றில்லை. அம் முறையில் முயன்ற கணக்கு—1963-64 ஆண்டில் கன்னிமாரா நூலகம் முயன்ற கணக்கு—இதோ!

(கணக்கு மறுபக்கம்)

மறுபக்க அட்டவணையை நோக்கினால் தேவையில் இலக்கியம் முதலிடம் பெறுவதையும் அதையடுத்துப் பொருளாதாரம், சமயம், பொறியியல், சட்டம், வரலாறு, மருத்துவம், கணக்கியல், அரசியல், வாழ்க்கை வரலாறு முதலிய பொருள்கள் இடம் பெறுவதையும் காணலாம்.

அதை அடிப்படையாகக் கொண்டு கூடிய மட்டில் இலக்கியம், சமயம், பொருளாதாரம், வாழ்க்கை வரலாறு, வரலாறு, அரசியல், பொறியியல், சமூக வாழ்வு, மருத்துவம், தத்துவம்

| கொடுக்கப்பட்டவை | | | பொருள்வகை | சேர்க்கப்பட்டவை | | |
|---|---|---|---|---|---|---|
| வரிசை | சதவீதம் | நூற்கள் | | நூற்கள் | சதவீதம் | வரிசை |
| 24 | 0.69 | 851 | பொதுவியல் | 68 | 1.15 | 16 |
| 29 | 0.36 | 450 | பொது அறிவியல் | 21 | 0.35 | 28 |
| 8 | 3.33 | 4,136 | கணக்கியல் | 86 | 1.45 | 15 |
| 21 | 0.81 | 1,007 | வானியல் | 46 | 0.77 | 23 |
| 34 | 0.03 | 32 | காலநிலையியல் | 2 | 0.03 | 34 |
| 25 | 0.52 | 641 | நிர்வாகக் கலை | 63 | 1.06 | 19 |
| 4 | 5.19 | 6,438 | பொறியியல் | 233 | 3.94 | 7 |
| 12 | 2.62 | 3,252 | இயற்பியல் | 67 | 1.14 | 17 |
| 14 | 2.21 | 2,739 | இயைபியல் | 46 | 0.77 | 22 |
| 32 | 0.12 | 148 | கனிப்பொருளியல் | 30 | 0.23 | 30 |
| 28 | 0.39 | 480 | புவியியல் | 11 | 0.18 | 31 |
| 30 | 0.31 | 387 | இயற்கை வரலாறு | 6 | 0.11 | 32 |
| 22 | 0.80 | 996 | தாவரவியல் | 20 | 0.33 | 29 |
| 27 | 0.43 | 539 | விவசாயம் | 61 | 1.03 | 27 |
| 18 | 1.25 | 1,553 | விலங்கியல் | 31 | 0.52 | 26 |
| 7 | 3.55 | 4,400 | மருத்துவம் | 192 | 3.26 | 9 |
| 23 | 0.73 | 911 | புதைபொருளாய்வு | 27 | 0.45 | 27 |
| 11 | 3.02 | 3,741 | தத்துவம் | 188 | 3.20 | 10 |
| 3 | 5.25 | 6,517 | சமயம் | 488 | 8.28 | 2 |
| 19 | 1.00 | 1,242 | மானிடவியல் | 54 | 0.91 | 21 |
| 13 | 2.27 | 2,811 | சமூக வாழ்வு | 199 | 3.38 | 8 |
| 2 | 10.20 | 12,659 | பொருளாதாரம் | 439 | 7.45 | 3 |
| 9 | 3.14 | 3,899 | அரசியல் | 243 | 4.11 | 6 |
| 5 | 4.13 | 5,121 | சட்டம் | 11 | 2.68 | 11 |
| 20 | 0.93 | 1,152 | கல்வி | 141 | 2.39 | 12 |
| 1 | 33.99 | 42,161 | இலக்கியம் | 2,064 | 35.00 | 1 |
| 6 | 4.02 | 4,989 | வரலாறு | 274 | 4.67 | 5 |
| 17 | 1.27 | 1,570 | நிலஇயல் | 95 | 1.63 | 13 |
| 26 | 0.50 | 616 | பொழுதுபோக்கு | 37 | 0.62 | 25 |
| 15 | 1.90 | 2,357 | க்வின்கலைகள் | 91 | 1.55 | 14 |
| 16 | 1.63 | 2,017 | தொழில் நுணுக்கம் | 64 | 1.08 | 18 |
| 33 | 0.06 | 73 | காட்சிசாலையியல் | 6 | 0.11 | 33 |
| 31 | 0.27 | 336 | நூலகவியல் | 39 | 0.67 | 24 |
| 10 | 3.08 | 3,819 | வாழ்க்கை வரலாறு | 326 | 5.50 | 4 |
| | 100.00 | 1,24,040 | மொத்தம் | 4,859 | 100.00 | |

முதலிய துறைகளில் நூற்கள் வாங்கப்பட்டுள்ளன.

இந்த இரண்டு வரிசையிலும் ஏற்றத் தாழ்வுகள் இருக்கின்றன. காரணம்? குறிப்பிட்ட பொருளில் நூற் குறை இருப்பதைத் தவிர்க்கவும், நிறைந்த நூற்கள் இருக்கும் துறையில் நூற்கள் வாங்குவதைக் குறைத்ததும் காரணமாகும். இந்தக் குறை நிறை முயற்சி நூலகப் புள்ளியியல் அடிப்படையில் நடக்க வேண்டும்.

## மொழி வகை

இங்ஙனம் பொருள்வகை அடிப்படை முயற்சி மட்டும் நூற்றேர்வை முழுமையாக்கிவிட முடியாது. ஏனெனில் இது ஒரு குறிப்பிட்ட மொழியில் எல்லா நூற்களும் இருந்துவிட்டால் சரியாகிவிடலாம். ஆனால் நிலைமை அப்படியில்லையே?

வாசகர்கள் ஒரே மொழியினராக இருந்துவிடுவதில்லை. சென்னை, பம்பாய், ஐதராபாத், கல்கத்தா, தில்லி, நாக்பூர் போன்ற நகரங்களில் எல்லா மொழியினரும் இருக்கக் காண்கிறோம். எனவே ஒவ்வொரு மொழியினரும் அவரவர் மொழியில் எல்லா நூற்களும் கிடைக்க வகைசெய்யவேண்டும்.

## உள்ளார்ந்த தேவை

மேற்கண்ட முறையில் கண்டறிந்த நேற்றையத் தேவையும், இன்றையத் தேவையும் மட்டும் நூலகத் தேவையைப் பூர்த்தி செய்துவிட முடியாது. ஏனெனில் இந்த இருமுறைகளிலும் வெளியிடப்படாத—முடியாத — உள்ளார்ந்ததேவை (Potential wants) யும் இருக்கிறது மக்களிடையே.

## குறிப்புதவு நூற்கள்

இன்றுஒவ்வொருவரும் ஒருகுறிப்பிட்ட செய்தியைப் பற்றியறிய நூலகத்தை நாடுகின்றனர். நூலகத்தில் கிடைக்கும் குறிப்புதவு நூற்கள் (Reference books) மூலம் தங்கள் தேவையை முடிக்கின்றனர். ஆனால் இன்றுநூலகத்தில் காணக்கிடைக்கும் பெரும்பாலான நூற்கள் ஆங்கிலத்தில் தான் இருக்கின்றன. ஆங்கிலம் தெரியாதவர்கள் நிலை என்ன?

குறிப்பாகச் சொன்னால் இன்று தமிழில்குறிப்புதவுநூலாகக் கலைக் களஞ்சியமும், சில அகராதிகளுந் தாம் இருக்கின்றன. ஆங்கில மொழியில் கிடைப்பது போன்று ஆண்டேடுகள், சொல்லடைவுகள், வணிக வழிகாட்டிகள், புள்ளி விவர நூற்கள், தேசப்பட நூற்றிரட்டைகள், செய்தித் தொகுப்புக்கள் இல்லை. இத்தகு குறைபாடுகளை — நூற்களில்லா குறைபாடுகளை — நூலகங்கள் எழுத்தாளர்களுக்கும்,பதிப்பாளர்களுக்கும் தெரிவிக்கவேண்டும். தெரிவித்து அத்துறைகளில் நூற்கள் வெளிவர வழிவகை காட்ட வேண்டும்.

## நூற்கள்

குறிப்புதவிநூற்களைப்போன்றே சாதாரண நூற்களுக்கும் இன்று பஞ்சமாக இருக்கிறது. அறிவுத் துறை ஒவ்வொன்றுக்கும் ஆயிரமாயிரம் நூற்கள் தேவை. ஆனால் நூற்களைக் காணமுடிவதில்லை; அச்சாவதில்லை. சரியாகச் சொன்னால்பாடநூற்களை ஒதுக்கிவிட்டுக் கணக்குப் பார்த்தால் புவியியல், நுணுக்கத் துறையியல், விலங்கியல், தாவரவியல், நில இயல், உள்ள இயல், மொழியியல், இசையியல், உயிரியல் போன்ற துறைகளில் நூற்கள் அருகியே காணப்

படுகின்றன. தமிழில் நூற்களே இல்லை என்று சொல்லும் நிலையாகவுள்ளது. இந்த நிலை மாற வேண்டும்; மாற்றப்படவேண்டும்.

### பருவ இதழ்கள்

அதாவது நூற்கள் துறையிலே இருக்கும் அவல நிலைதான் பருவ இதழ்கள் துறையிலும் காணமுடிகிறது. எனவே இருக்கும் இதழ்கள் தொடர்ச்சியாக வர முயற்சி செய்யப்படவேண்டும். அதுவும் அறிவின் ஒவ்வொரு துறைக்கும் ஒரு இதழாவது இருக்கவேண்டும். அந்த இதழும் செய்தித் தொகுப்பாயில்லாமல் அறிவு விளக்க இதழாக அமையும்படி பார்க்க வேண்டும்.

தமிழில் பருவ இதழ்கள் செய்தியால் நிறையாது அறிவு விளக்கத்தால் பெயர் பெறும் இதழ்கள்—மிகக் குறைவு. எனவே அவைகளைக் கூர்ந்து நோக்கி ஒவ்வொரு துறைக்கும் ஒரு இதழ் வாங்க முயலவேண்டும்.

### செய்தித்தாட்கள்

இன்று காலையில் எழுந்ததும் கண்ணில் பார்ப்பதும், பார்க்க முயலுவதும் செய்தித்தாள்களை தான். அவைதான் இன்று எல்லா நிலையினரும் பெற்றுப் படித்துக் கொள்ளும் நிலையிலுள்ளன. எனவே அவைகளை நாடி மக்கள் பலரும் நூலகம் வருவர். அந்த எதிர்பார்ப்பை உணர்ந்து நூலகம் ஒவ்வொன்றும் ஒன்றுக்கு மேற்பட்ட செய்தித் தாள்களை வாங்கி வைத்துப் பணி புரிய வேண்டும்.

அப்படி வாங்கப்படும் செய்தித் தாள்கள் ஒருதலைப்பட்சமாயில்லாமல் நாட்டின் எல்லா பகுதிச் செய்திகளையும், எல்லாவகைக் கருத்துக்களையும், எல்லா மொழியினருக்கும், எல்லா நிலையினருக்கும் கொடுக்கும் வகையில் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

### எதிர்காலத் தேவை

உள்ளார்ந்த தேவையைக் கணித்துப் பணிபுரிவதைப் போலவே எதிர்காலத்தேவையையும் உய்த்துணர்ந்து பணி செய்ய வேண்டும்.

ஒவ்வொரு பொது நூலகமும், அது அமைந்திருக்கும் பகுதி மக்களின் வாழ்வையறிந்து, விழாக்களைத் தெரிந்தெடுத்து, தொழில்களைக் கண்டறிந்து, பிற தேவைகளை உணர்ந்து அதற்கேற்ப முன்கூட்டியே பணம் கொடுத்தோ, இரவல் பெற்றோ நூல்களை வாசகர்களுக்காகத் தயாராக வைத்திருக்க வேண்டும்.

பெரியார்களின் மணிவிழா, நூற்றுண்டு விழா, தேசீய விழாக்கள் போன்ற விழாக்களின் சார்பாக உதவும் நூற்களை முன்கூட்டியே வாங்கி வைத்திருக்க வேண்டும்.

### பயன்படா நூல்

இதுவரை ஆளுக்கொரு நூல் என்ற முறையிலே நூற்றேர்வு கண்டோம். இனி நூலுக்கோர் ஆள் என்ற அடிப்படையிலே பார்ப்போம்.

நூலகத்தில் வாங்கப்படும் ஒவ்வொரு நூலும் வாசகர்க்குப் பயன்படவேண்டும். அப்படிப் பயன்படாத நூல் என்றால் அதை வாங்க முயலக்கூடாது. சான்றாகச் சொன்னால் மதுரை நூலகத்திற்கு அபிசீனிய மொழி நூல் பயன்தராது. சின்னமனூர் நூலகத்திற்கு சில்வியில் நைட்ரேட் சேகரிப்பது எப்படி என்ற நூல் உதவ முடியாது.

ஆனால் நூலகத்தில் இருக்கும் பயன்படாத நூல் ஒன்றை மற்றொரு புதிய நூல் வாங்குவதால் பயன்படச் செய்ய முடியும் என்றால் அத்தகு நூலை வாங்கலாம். சான்றாகச் சொன்னால் பண்டை இலக்கிய நூற்கள், சமய நூற்கள் முதலியன பொருட் செறிவு காரணத்தால் பின்தங்கியிருக்கலாம். அதனைப் புரியவைக்கும், உரை நூல் வாங்கிவைத்து பழைய நூற்களை நடமாடச் செய்யலாம். புதிய மொழிபெயர்ப்பு நூல் ஒன்றால், அதன் மூல நூலை மூலையை விட்டு நகரச் செய்யலாம். விமர்சன நூலொன்றால் முடங்கிக் கிடந்த மூலத்தை முன்னேறச் செய்யலாம்.

### காலங்கருது

இப்படியெல்லாம் நூலகத்தில் எண்ணிறந்த நூற்கள் சேர்கின்றன! இவையெல்லாம் மக்களுக்குப் பயன்பட வேண்டுமானால் மக்களின் காலத்தைக் கருதி, நூலகப் பணியாளர்களின் காலத்தைக் கருதிப் பணி செய்யவேண்டும். ஏன்?

### நூற்றொகை

இன்று நூலகத்தில் வந்து ஒருவர் ஒரு நூலைப்பற்றிக் கேட்டால் நூலகப் பட்டியைப் பார்த்து பகுப்பெண் அறிந்து நூலை எடுத்துக் கொடுக்கிறோம்.

முழு நூலாயிருந்தால் இது முடியும். வந்தவர் நூலின் ஒரு பகுதிச் செய்தியை மட்டும் கேட்டால் என்ன செய்வது? இதைப் பூர்த்திசெய்ய பகுதிப் பொருள் பதிவு எழுதிவைத்து உதவிசெய்து வருகிறோம்.

இப்படி ஒவ்வொரு நூலுக்கும் பகுதிப்பொருள் விளக்கம் கேட்டு வாசகர் வந்தால் என்ன செய்வது? இப்படி ஒவ்வொரு நூலகத்திற்கும் தேவை ஏற்படுமானால் என்ன செய்வது? காலங்கருத வேண்டும்! எப்படி?

அதுதான் நூற்றொகை! ஒரு பொருளைப் பற்றியோ அல்லது ஒரு ஆசிரியரைப் பற்றியோ அல்லது ஒரு தலைப்பைப் பற்றியோ அல்லது ஒரு நூலைப் பற்றியோ அதனதன் தொடர்பான செய்திகளைத் தொகுத்துத் தருவது நூற்றொகையாகும்.

இத்தகு நூற்றொகைகள் சுருக்க நூற்றொகைகள், விளக்க நூற்றொகைகள், பட்டி நூற்றொகைகள் என்று மூவகைப்படும். அது ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட முறையில் ஆசிரியர் பெயர் அகர வரிசைப்படி அல்லது நூற்கள் வெளியான கால வரிசைப்படி அமைக்கப்பட்டிருக்கும். அவைகளையெல்லாம் நூலகம் வாங்கி வைத்திருக்க வேண்டும். அத்துடன் அதன் அமைப்பு முறைகளை நூலகர்கள் படித்துணர்ந்து வாசகர்களுக்கும் தெரியப்படுத்த வேண்டும்.

### குறிப்புதவு நூற்கள்

இவைகளைத் தவிர காலங்கருதும் முறையில் ஒவ்வொரு துறையிலும் கிடைக்கக்கூடிய எல்லாக் குறிப்புதவு நூற்களையும் வாங்கி வைத்து வாசகர்கள் கேட்டவுடன் காலதாமதமின்றிச் செய்தியறியும் வகை செய்யவேண்டும்.

### தொகுப்பு நூற்கள்

குறிப்புதவு நூற்களைப் போன்றே ஒவ்வொரு துறையிலும் தனித்தனிப் பொருள்பற்றிய தொகுப்பு நூற்கள் (Anthologies) இன்று ஏராளமாயுள்ளன. அவை

களனைத்தும் நூலகத்தில் இடம் பெறச் செய்யவேண்டும்.

### மேதகு இலக்கியங்கள்

இவைகளைத் தவிர்த்து ஒவ்வொரு துறையிலும், ஒவ்வொரு மொழியிலும் பல மேதகு இலக்கியங்கள் (Classics) உள்ளன. ஒவ்வொன்றிற்கும் பல்வேறு உரைகளுள்ளன. பல்வேறு பதிப்புகள் உள்ளன. அவையனைத்தையும் நூலகம் வாங்கித்தர முயல வேண்டும்.

### வளர்நிலை

நூலகப்பணியில் காலங்கருதினால் மட்டும் போதாது. ஏனெனில் நூலகம் வளர்ந்துகொண்டே போகிறது. நூற்கள் பெருகிக் கொண்டே போகின்றன. வாசகர்கள் பெருகிக்கொண்டே போகின்றனர். எனவே அதை மனதிலிருத்திப் பணிபுரிய வேண்டும்.

இந்த வளர்ச்சி இருநிலையானது. முதல் வகை வளர்ச்சி குழந்தை வளர்ச்சி. தேசீய நூலகங்கள் இம்முறையிலே தடையின்றி தொடர்ந்து வளர்ந்து கொண்டே போகும். அப்படிப் பெருகும் நூற்களின் பருவுடல் பாதுகாக்கப்பட வேண்டும். அது முடியாதபோது பருவுடல் புதுவுருவம்—காகித உருவிலிருந்து மைக்ரோபிலிம் உருவம்—பெறச் செய்யலாம்.

அத்தகு நூற்கள் இன்று ஒரு குறிப்பிட்ட மொழியிலிருப்பதால் பிறமொழியினருக்குப் பயன் படாதிருக்கலாம். ஆனால் காலப் போக்கில் எதிர் காலத்தினர் பல மொழி அறிவு பெறும் போது அது பயன் படலாம். எனவே அதற்கும் வசதியாக நூற்கள்—எல்லா மொழி நூற்களும்—பாதுகாத்து வைக்கப்பட வேண்டும்.

அத்தகு நூற்கள் இன்று பொருட்செறிவுடன் பயன்படாதிருக்கலாம். ஆனால் வளர்ந்து வரும் எதிர்கால மக்களின் அறிவுத்திறம் அதிகமாகும். அப்போது இன்றைய செறிவு நூற்கள் நன்கு பயன் படலாம். எனவே அதற்காக இன்றைய நூல் நாளைக்கும் பயன்படும்வகையில் பாதுகாக்கப் படவேண்டும்.

### பஞ்சசீலச் சண்டை

நூற்றேர்வின்போது இதுவரை தனித் தனியாக ஒரு சீலத்தை அடிப்படையாகக் கொண்டு ஆராய்ந்தோம். அதன் முயற்சியும் பலனும் கண்டோம். ஆனால் ஐந்து சீலங்களையும் சுற்றி வைத்து நடுவில் நூலை வைத்துப் பார்த்தால் சண்டை போடும் போலிருக்கின்றன.

### ஒன்றும் இரண்டும்

சான்ருகச் சொன்னல் நூற்கள் படிப்பதற்கே என்ற முதற்சீலம் ஒவ்வொரு நூலும் சமுதாய நலத்திற்காகப் படிக்கப் படவேண்டும் என்கிறது. அப்போது கீழ்நிலை நூற்களை மக்கள் படிக்கக்கூடாது என்று அறிவுறுத்துகிறது. ஆனால் இரண்டாம் சீலமோ ஆளுக்கொரு நூல் வேண்டும். எனவே அதனைப்படி இதனைப் படிக்காதே என்று சொல்லாதே என்று எதிர்த்து நிற்கிறது. இதனை ஒத்துக்கொண்டால் சிலர் கெட்டுப் போக நேரும்.

### மூன்றும் நான்கும்

நான்காம் சீலம் காலங் கருது முறையில் ஒரு குறிப்பிட்ட விறுவிறுப்பான புதினத்திற்கு அதிக கிராக்கி வரும்போது, இருபது படிகளை வாங்கிப் போடச் சொல்கிறது. கொஞ்ச நாட்களுக்கு

அந்நூற்கள் வேகமாகக் கை மாறும். அப்புறம் கேட்பாரற்றுக் கிடக்கும். அப்போது நூலுக்கோர் ஆள் என்ற மூன்ரும் சீலம் "இந்த நூற்களுக்கு வாசகர்கள் எங்கே? இல்லையா? அப்படியானல் ஏன் வாங்கினீர்கள்?" என்று கேள்வி எழுப்புகிறது.

### ஐந்தும் மூன்றும்

'நூலகம் வளருந்தன்மையது. எனவே இன்றில்லா விட்டாலும் நாளை நின்று ஒவ்வொரு நூலுக்கும் ஒரு வாசகர் வரக்கூடும். எனவே காணும் நூல் ஒவ்வொன்றையும் வாங்கிக் குவி' என்கிறது ஐந்தாம் சீலம். ஆனல் மூன்ரும் சீலமோ 'இந்தப் பரம்பரையில் கேட்பாரற்றுக் கிடக்கவா நூல் வாங்க வேண்டும்? இதை எதிர்க்கிறேன்' என்கிறது.

### ஐந்து விரல்கள்

அதைத் தவிர்த்து ஐந்து சீலங்களையும் ஒரு கையின் ஐந்து விரல்களைப் போல் சேர்த்துப் பார்த்தால் சண்டை நின்றுவிடும். அவைகளை இணைத்துக் காலம், இடம், ஆள் என்ற முறையில் பார்த்தால் சண்டையே இல்லையென்ருகி விடுகிறது.

### காலம்

ஒரு குறிப்பிட்ட நூலகம் எவ்வளவு காலமிருக்கும் என்று பார்ப்போம். அது பணி நூலகமாக இருந்து நெடுங்காலத் திட்டம் கொண்டு பணியாற்ருத போது, பரம்பரையாக நூற்கள் சேர்க்கப் போவது இல்லை. ஐந்தாம் சீலம் அங்கு தலைகாட்டாது அப்போது.

### இடம்

ஒரு நூலகத்தின் நூலடுக்கு நீளம் வரையறுக்கப்பட்டு விட்டால், அது நிறைந்ததும் மேற்கொண்டு நூற்கள் வாங்கப் போவதில்லை. அப்போது எந்தச் சீலமும் பேச வழியில்லை.

### ஆள்

நூற்கள் வாங்கவும், அதனை பயன்படுத்தச் செய்யவும் பணியாளர்கள் தேவை. நூற்கள் சேர்க்கப்படும் முறைக்கேற்ப ஆட்கள் அதிகமாக இல்லையானல் சரியாக வேலை நடக்காது. நூலில்லையானல் பணியில்லை. பணியில்லாத போது சீலமெதற்கு?

### பண வேதாளம்

பணம் பத்தும்செய்யும் என்பது பழமொழி. பணமின்றேல் எதுவும் செய்ய முடியாது. ஏனென்ருல் இது வரை நாம் பார்த்த முயற்சிகள் எல்லாம் முன்னேற வேண்டுமென்ருல் அதற்குப் பணம் தேவை. நூலகம் காலங்கடந்து வாழ வேண்டுமா? பணம் வேண்டும். வாங்கிய நூற்களை அடுக்க நூலடுக்குகள் வேண்டுமா? பணம் வேண்டும். நூலடுக்குகள் வைக்க புதிய கட்டிடங்கள் வேண்டுமா? பணம் வேண்டும். வைத்தவைகளைப் பரிபாலனம் செய்ய ஆட்கள் வேண்டுமா? பணம் வேண்டும். சுருக்கமாய்ச் சொன்னல் பஞ்ச சீலமும் பணத்திற்குள் அடக்கம்!

பணம் ஒரு வேதாளம்! வேதாளத்தைப் படைத்த மனிதன் வேதாளத்திற்கு அடிமையாய்ப் போனன். அதுமனிதனை ஆட்டிப் படைக்கிறது; ஏன்? அகிலத்தையே ஆட்டிப் படைக்கிறது. அதன் முருங்கை மரமேறும் குணத்திற்கு நாம் திருத்தம்காண முடியாது. எனவே நாம் தான்

திருந்திக் கொள்ள வேண்டும் அது எப்படி?

### சிக்கன முறைகள்

கிடைத்த பணத்தை—நூலகப் பணிக்குக் கிடைத்த பணத்தை-சிக்கனமாகச் செலவு செய்து கொள்ளப் பழகிக் கொள்ளவேண்டும். அது பலவகைப்படும். அவை யாவன:

### ஒன்று போதும்

நூலகத்தில் எந்த நூலும் ஒரு நூல் போதும்; அதனை விரும்புவார் ஒருவருக்கு மேலிருந்தால் ஒவ்வொருவருக்காக வரிசைப்படி கொடுத்து வரலாம். அது முடியாத போது இரவல் தரும் காலத்தை—பதினான்கு நாட்களிலிருந்து ஏழு நாட்களுக்கு, மூன்று நாட்களுக்கு, ஒரு நாளைக்கு, ஒரு இரவுக்கு—குறைத்துக் கொடுக்கலாம். அதுவும் முடியாத போது குறிப்புதவு நூலாக மாற்றி நூலகத்திலேயே மாற்றி மாற்றி வாசகர்கள் ஒவ்வொருவரும் படிக்க வழி செய்யலாம்.

### ஒன்று விட்டு ஒன்று

நூலகத்தில் குறிப்புதவும் நூற்களாகப் பயன்படும் விவரத் திரட்டு, யாரார், ஆண்டேடுகள், தொடரேடுகள் முதலியவற்றை ஆண்டுதோறும் வாங்குகிறோம் இதனைச் சற்று மாற்றி ஒன்று விட்டு ஒரு ஆண்டாக அல்லது மூன்று ஆண்டுகட்கொரு முறையாக வாங்கிக் கொள்ளலாம். இதன் மூலம் பெருவிலை கொண்ட நூற்கள் வாங்கும் பணம் மிஞ்சும்.

### கருத்துரைப் பருவ இதழ்கள்

இன்று அறிவோட்டத்திற்கேற்ப அறிவு பெறும் முறையில் பல்வேறு பருவ இதழ்கள் நூலகங்களில் வாங்கப் படுகின்றன. அவை முழுதும் எல்லாருக்கும் பயன்படுவதில்லை. விலையும் அதிகம். இதனை மாற்றும் வழியில் கருத்துரைப் பருவ இதழ்கள் (Abstracting Periodicals) வாங்கலாம். இதில் தேவையைப் பார்த்துக்கொண்டு வேண்டிய கட்டுரையைக் குறைந்தசெலவில் பெற்றுக் கொள்ளலாம்.

### கூட்டுறவு

இன்று நூற்களும் பருவ இதழ்களும் ஆயிரக் கணக்கில் வெளிவந்த வண்ணமாயுள்ளன. இவையனைத்தையும் எந்த ஒரு தனிப்பட்ட நூலகமும் வாங்கி, வைத்திருந்து, பயன் காண முடியாது. எனவே ஒவ்வொரு நூலகமும் அந்தப் பகுதியிலுள்ள நூலகத்தோடு தொடர்பு கொண்டு—மாவட்ட நிலையில்—மாநில நிலையில்—நாட்டுநிலையில்— இணைப்புக் கொண்டு ஒன்றுக்கொன்று நூற்களைக் கொண்டு, கொடுத்து உதவி புரிந்து கொள்ள வேண்டும். ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்கு உதவி தேவைப்படுமாயின் அந்தந்த நாட்டுத் தேசீய நூலகத்தின் மூலம் உதவி பெற்றுக் கொள்ள வேண்டும்.

### கொள்கை வேண்டும்

இப்படியெல்லாம் சிக்கன முறைகளைக் கையாண்டு விடுவதால் மட்டும் நூற்றேர்வு முழுமை யடைந்துவிட முடியாது. தொடர்ந்து நூலகப்பணி முறையில் சில அடிப்படைக் கொள்கைகளை நாம் கையாள வேண்டும். இது பொழுது போக்கு நூற்கள் வாங்குவது, செய்தி யறிவிப்பு நூற்கள் வாங்குவது, வாசகர்களிடையே வேறுபாடு கொண்டு பணி புரிவது போன்ற துறைகளில் கையாளலாம்.

### நூலுக்கோர் ஆள்

பணத்தட்டு ஏற்பட்டதும் முதலில் நூலகத்திற்கு வாங்கப்படும் ஒவ்வொரு நூலும் உடனுக்குடன் பயன்படுமா என்று பார்க்க வேண்டும். அம்முறையிலே சிறப்பு நூற்கள் வேண்டுவோரை அந்தந்த நூற்கள் கிடைக்குமிடத்திற்குத் திருப்பி விட்டு விட வேண்டும். கிடைக்கும் பணத்தில் பலருக்கும் பயன்படும் நூற்களை மாத்திரமே வாங்க வேண்டும்.

### பொழுது போக்கு நூற்கள்

புதினங்கள் போன்ற பொழுது போக்கு நூற்கள் வாங்குவதில் ஒரு கொள்கையை நிர்ணயிப்பதும், நிர்ணயித்ததை நிறைவேற்றும்முயற்சியும்எளிதல்ல.தகவல் நூற்களையும் ஊக்கு நூற்களையும் எளிதில் ஒரு திட்டவட்டமாக பரிசீலனை செய்து பயனுக்கேற்றவாறு வாங்க முடியும். ஆனால் பொழுது போக்கு நூற்களை அப்படி எளிதில் மதிப்பிட்டு விடமுடியாது. எது தேவை என்பதை வாக்கெடுத்தும் முடிவு செய்ய முடியாது. ஏனெனில் இந்தக் கணிப்பில் உணர்வுதான் தலை தூக்கி நிற்குமே தவிர அறிவு சரியாய் உபயோகப்படுவதில்லை.

எனவே பொழுதுபோக்கு நூற்கள் வாங்கப்படும்போது அது பொதுவாக சமூகத்தை உயர்த்தும் வகையில் படிப்பாரின் எண்ணத்தை உயர்த்த உதவுமா என்று பார்க்க வேண்டும். உயர்த்தாவிட்டாலும் கெடுக்காதிருக்குமா என்றுவது நிச்சயம் பார்க்கவேண்டும். இந்த முயற்சி ஒரு நாளில், ஒரு திங்களில், ஓராண்டில் முடிந்துவிடாது. சமூகம் மெல்ல மெல்ல முன்னேற முன்னேறத்தான் இது முடியும் அதற்கு எழுத்தாளர்களும், பதிப்பகங்களும்,நூலகர்களும்,வாசகர்களும், அரசாங்கமும் ஒருங்கிணைந்து செயற்படவேண்டும்.

இந்தக் கட்டுபாடு நிரந்தரமாக வேண்டியதில்லை. ஏனெனில் சமூகத்தில் தாழ்நிலையிலுள்ளவர்கள் தங்கள் பொழுது போக்கை நல்ல முறையில் செலவிடச் செய்வது சமூகத்தின் கடமை. அதை செயலாற்றுவது நூலகத்தின் பொறுப்பு. பணம் கிடைத்த போது அத்தகு நூற்களும் தந்து, நூலகத்திற்கு அவர்களை ஈர்த்து, படிப்படியாக அவர்களும் மேனிலை அடையச்செய்ய வேண்டும்.

### செய்திதரு நூற்கள்

நூலகத்திற்குப் பணத்தட்டு ஏற்படும்போது மேலும் பாதிக்கப்பட அனுமதிக்கக்கூடியது செய்தி தரு நூற்கள் (Materials for mass Commumication) பகுதியாகும் இவை இருவகைப்படும். அவை யாவன:

### செய்திதாள்கள்

நூலகச் செலவில் ஒரு குறிப்பிட்ட பகுதியைப் பெறுவது செய்த்தாள்களாகும். மக்களை ஈர்த்து, படிக்கவழி செய்து, உயர்த்த உதவக்கூடியது செய்தித்தாள்கள். இதில் பெரும்பகுதி செய்தியும், செய்திக் கருத்தும், விளம்பரமும் தான் இருக்கும்.

இவையெல்லாம் இன்று வானொலி மூலமும், காட்சிகேள்வி (audio-visual) சாதனங்கள் மூலமும் பெரிதும் கிடைக்கவழியிருக்கிறது. அதனால் நூலகத்திற்கும் சங்கடமில்லாமல் வாசகர்களுக்கும் வருத்தமில்லாமல் பணத்தட்டு ஏற்படும்போது செய்

த்தாள்களைக் குறைத்துக்கொள்ளலாம்.

## செய்தி இதழ்கள்

செய்தித்தாள்களை போலவே செய்தி இதழ்கள் (Magazines) பணத்தட்டின்போது குறைக்கப் படலாம். இந்த நூலகமுயற்சிக் குறையை முன் கூறிய பிற சாதனங்கள் நிறைவுறச் செய்யும். இது போன்றே பிற செய்தி நூற்கள் வாங்குவதையும் பணத்தட்டின் போது குறைத்துக் கொள்ளலாம்.

## வாசகர்களுக்குள் வேறுபாடு

மேற்கூறிய முறையில் குறைக்கப்பட்டவைகள் எல்லாம் பெரிதும் அறிவுநிலையில் கடைநிலையிலுள்ளவர்களைப் புறக்கணிப்பது போன்றும் இடைநிலையினரைப் பெரிதும் பாதுகாப்பது போன்றும் தெரியும். உண்மையும் அதுதான். தேவையும் அப்படித்தான் அமைந்து விடுகிறது. இது ஏன்?

## வரண்டநிலம்

ஒருவருக்கு 50 ஏக்கர் நிலம் இருக்கிறதென்று வைத்துக் கொள்வோம். நீர் நிறையக் கிடைக்கும் போது எல்லாப்பகுதியும் பயிரிடப்படுகின்றது. சென்ற கோடையில் மழை இல்லாது நீர் பஞ்சம் ஏற்பட்டது. அப்போது 50 ஏக்கர் நிலத்திற்கும் பாய்ச்ச நீர் கிடைக்கவழியில்லை. 20 ஏக்கர் நிலத்திற்குப் பாய்ச்சப்போதுமான நீர் மட்டுமே கிடைக்கிறது. என்ன நடக்கும். கிடைத்த நீரை எல்லாப்பகுதிக்கும் பாய்ச்சி எல்லாப் பயிரையும் வாடி வதங்கி கெட்டுப்போக விட மாட்டார் நல்ல வேளாளர். கிடைத்த நீரை செழிப்பான பகுதியில் நன்ருய் வளர்ந்த பகுதிக்குப் பாய்ச்சிப் பலன் காண்பார். நீர் ஏருத வரண்ட பகுதியை ஒதுக்கி விடுவார். பாய்ந்தவரை நல்ல பலன் கிடைக்கும் அந்தப் பணத்தைக் கொண்டு அடுத்த விவசாயத்திற்கு தயாராவார் வேண்டுமாயின் வரண்ட நிலத்திற்கும் நீர் பாய்ச்ச கிணறு தோண்டவும் ஏற்பாடு செய்வார். எல்லாப் பகுதிக்கும் சமஅளவு நீர் என்று சமத்துவம் பேசி சங்கடத்திற்காளாகி விடமாட்டார்.

அதுபோலவேதான் பணத்தட்டுக் காலத்தில் நூலகம் சமூகத்தில் கடை நிலைத் தேவையைச் சற்றுக் குறைக்க நேரிடும். ஆனால் இது அந்நிலையினரை புறக்கணிப்பது என்ற பொருளல்ல; அரசியல் அறத்திற்கு மாறுபட்டதுமல்ல!

## அரசியல் அறம்

இன்று அரசு சமூகநல் அரசாக மாறிவருகிறது. முன்காலத்தைப் போலத் தடுப்பு முறைகளில் ஈடுபடுவதோடு-அயலார் படை எடுப்பைத் தடுப்பது, தனிமனிதரின் உடமையை அடுத்தவர் பறித்துக் கொள்ளாது தடுப்பது, ஒருவருக்கொருவர் தூக்கிக் கொள்ளாது தடுப்பது போன்றவைகளோடு—நின்று விடவில்லை. மக்களின் ஒவ்வொரு செயலையும் கவனித்து, பெரும்பாலான மக்களின் நன்மையைக் கருத்தாகக் கொண்டு பாடுபட்டுவருகிறது. ஒரு சில தனிப்பட்டவர்கள் தங்களுக்காக ஏதும் வேண்டுமாயின் பொது நன்மைக்கு மாறுபடாதவகையில் அதைப் பெற்றுக் கொள்ளவழி செய்யப் பட்டிருக்கிறது.

## இடைநிலையினர்

இதனை நூலகப்பணிக்கும் பொருத்திப் பார்த்தல் வேண்டும். அப்படிச் செய்தால் சமூகத்

தில் அறிவுமட்டத்தில் உயர் நிலையில் கால்பகுதியும் கடை நிலையில் கால் பகுதியும் இருப்பர். பாக்கிப்பகுதி இடைநிலையினரே. இவர்களே சமூகத்தின் முக்கியப் பகுதியினர். இவர்களே சமூக முன்னேற்றச் செயல்களில் பெரும் பகுதியை நிறைவேற்றுபவர்கள். இன்றையச் சமுதாயத் தலைவர்களில் பெரும்பாலர் இடை நிலையைச் சார்ந்தவர்களே யாகும். அறிவு மட்டத்தில் உயர்நிலையினர் செய்யும் நற்செயல்களை அனைவருக்கும் பரவ, கீழ்நிலையினருக்கும் பயன்படச் செய்யப் பாடுபடுபவர்கள் நடுநிலையினரே.

உலக வரலாற்றைப் புரட்டிப் பார்த்தால் ஒவ்வொரு துறையிலும் பொருளியல் துறை, அரசியல் துறை, சமயத்துறை, ஒரு மாற்றம் முன்னேற்றம்—ஏற்படக் காரணமாயிருப்பவர்களும், அதற்காகப்பாடு பட்டு உழைப்பவர்களும் இந்த இடை நிலையினராகத்தான் இருக்கிறார்கள் என்று அறிகிறோம்.

இந்நிலையிலே இன்று நூலகத் துறையிலும் இருந்து வருகிறதென்றால் உயர்வு நவிற்சியாகாது. இந்த நிலையை நூலகம் நன்குணரவேண்டும்; நூலகர்கள் நன்குணர வேண்டும். நூலக ஆட்சியாளர்கள் நன்குணர வேண்டும்.

இதனை உணர்ந்தால் நூலகப் பணி 'எல்லார்க்கும் எல்லாமென்றிருப்பதான' இடமாகநூலகத்தை மாற்றியமைக்க முடியும்; மாற்றியமைக்க வேண்டும்; மாற்றியமைத்து வருகிறோம்.

இந்த முயற்சி சரிவர நடந்தேற ஒரு திட்டம்—நூலகத் திட்டம்—தேவை. அது எப்படி என்பதை அடுத்த திங்கள் காண்போம்.

## சமாதானப் புறாக்கள்

இரு சமாதானப் புறாக்கள் வெவ்வேறு திக்குகளிலிருந்து வந்து ஒரு மரத்தில் அமர்ந்து இளைப்பாறிக் கொண்டிருந்தன. கடல் கடந்த நாடுகளைச் சேர்ந்தவைஅவை. இரண்டும் அறிமுகம் செய்து கொண்டன. ஓரினமாக இருப்பதில் அவற்றுக்குப் பெருமிதம். ஒன்றாகவே உணவு கொண்டு, ஊர்சுற்றிப் பார்த்துவிட்டு ஒன்றாகவே உறங்கின.

களைப்புத் தீர்ந்து, புத்துணர்வு பெற்றதும் இரு புறாக்களும் அளவளாவத் தொடங்கின. முதல் புறா பேச்சோடு பேச்சாக, "தம்பி, என் எஜமானருக்கு இருக்கிற படைப் பலம் உன் காவலரிடம் இருக்க முடியாது" என்றது.

இதைக்கேட்டதுமே, இரண்டாவது புறாவுக்குக் கோபம் வந்துவிட்டது. "வெறும் பொய்! என் எஜமானரிடம் உள்ள படைப் பலத்தில் பாதி கூட உன் சொந்தக்காரரிடம் இருக்காது. ஏன் புளுகுகிறாய்?" என்று மட்டந்தட்டியது.

அவ்வளவுதான்; மறுகணமே இரு சமாதானப் புறாக்களும் மூர்க்கத்தனமாகச் சச்சரவிட்டன. ரணகளமாகிக் குற்றுயிராய்க் கீழே சாயும் வரைக்கும் இரண்டும் தம் உண்மைக்காகப் போராடிக் கொண்டுதான் இருந்தன.

—பர்மியக்கவி ஊபா - பே

# சிறுவர் பகுதி





## மழை

மழை பொழிந்தால் நல்லது
மரம் செடிகள் வளர்ந்திடும்
உழவர் மனம் களித்திடும்
உயிர்களெல்லாம் தழைத்திடும்

குளங்களெல்லாம் நிறைந்திடும்
குளிக்க நீரும் கிடைத்திடும்
வளங்களெல்லாம் சேர்ந்திடும்
வயல்களெல்லாம் செழித்திடும்

குடிக்க நீரும் கிடைத்திடும்
குடிநீர்ப் பஞ்சம் ஒழிந்திடும்
அடை மழையே பொழிந்திடு!
ஆற்று நீரைப் பெருக்கிடு!

— பி. வி. கிரி.













# மணியனின் கடை

—ஸ்ரீ ரஞ்சனி

மைலாப்பூரில் மணியன் என்று ஒருவன் இருந்தான். அவன் பெரிய போக்கிரி. ரொம்பப் பொல்லாதவன். அவன் ஒரு கடை வைத்தான். அது என்ன கடை தெரியுமா? மளிகைக் கடை. அரிசி, உப்பு, புளி, இப்படி எல்லாச் சாமானும் அங்கே கிடைக்கும். மைலாப்பூரில் எல்லோரும் மணியன் கடையில் தான் சாமான் வாங்குவார்கள்.

கடையில் சாமான்களை நிறுக்க வேண்டும், பொட்டலமாகக் கட்டித் தர வேண்டும் இல்லையா? அதற்காக மூன்று வேலையாட்கள் இருந்தார்கள். அவர்களின் பெயர் ராமன், கிருஷ்ணன், கோவிந்தன்.

மணியன் அவர்களிடம் பிரியமாக இருக்கமாட்டான், எப்போதும் கோபித்துக் கொள்வான். நிறைய வேலை செய்யச் சொல்லி தொந்தரவு செய்வான். அவர்கள் மிகவும் கஷ்டப்பட்டார்கள். அதிலிருந்து தப்பிக்க அவர்களுக்கு நல்லவழி கிடைத்தது. வடக்கே இமயமலை என்று ஒரு மலை. அங்கே சீனாக்காரன் வந்து சண்டை போடுகிறானாம். அவனோடு சண்டை போடச் சிப்பாய்கள் வேண்டுமாம்.

இந்தச்சமாச்சாரத்தைராமன், கிருஷ்ணன், கோவிந்தன் மூன்று பேரும் தெரிந்து கொண்டார்கள். ஒருநாள் அவர்கள் பட்டாளத்தில் சேர்ந்து விட்டார்கள். ரயிலில் ஏறி வடக்கே உள்ள ஊருக்குப் போய் விட்டார்கள். மணியனுக்கு இந்த விஷயம் தெரியவே தெரியாது, பாவம்.

மூன்று பேர்களும் வேலைக்கு வருவார்கள், வருவார்கள் என்று அவன் காத்துக் கொண்டே இருந்தான். ஒரு நாள் ஆயிற்று. இரண்டு நாட்கள் ஆயின. மூன்று நாட்களும் ஆயின. அவர்கள் வரவே இல்லை. அப்புறம்தான் மணியனுக்கு ஒரு கடிதம் வந்தது.

'நாங்கள் வீரர்களாகி விட்டோம். சண்டையில் சேர்ந்து விட்டோம். உன்னுடைய மளிகைக் கடைக்கு வரவே மாட்டோம். பொட்டலங்கள் கட்ட மாட்டோம்' என்று அவர்கள் எழுதியிருந்தார்கள். மணியனுக்கு என்ன செய்வது என்று புரியவில்லை, விழித்தான்.

விழித்துக் கொண்டே இருந்தான். அதனால் தூக்கம் வந்தது. உட்கார்ந்தபடியே தூங்கிப் போய் விட்டான்.

கொஞ்சநேரம் ஆனது. மணியன் காலை யாரோ மெள்ளப் பிறாண்டினார்கள். காலில் 'குறு குறு' என்றது. மணியன் 'சடக்'

கென்று விழித்துக் கொண்டான். காலின் பக்கமாக ஒரு சின்னஞ் சிறு சுண்டெலி நின்று கொண்டிருந்தது.

"ஐயா! ஐயா" என்று அந்தச் சுண்டெலி கூப்பிட்டது.

மணியன் சுண்டெலியை முறைத்துப் பார்த்தான்.

"உங்கள் கடையில் என்னைச் சேர்த்துக் கொள்ளுங்கள். வேலை செய்கிறேன். ஒழுங்காக செய்கிறேன். சம்பளமே வேண்டாம்" என்று சுண்டெலி சொல்லியது.

மணியனுக்கு ரொம்பச் சந்தோஷம். சம்பளம் கொடுக்க வேண்டாமல்லவா? பணம் மிச்சமாகும் இல்லையா? உடனே சுண்டெலியை வேலைக்குச் சேர்த்துக் கொண்டான்.

"ஐயா! ஐயா! என்று சுண்டெலி மறுபடியும் கூப்பிட்டது. மணியன் சுண்டெலியைப் பார்த்தான்.

"என்ன?" என்று கேட்டான்.

"கடையில் நல்ல சாமானே இல்லையே. நல்ல சாமான்கள் வாங்கி வையுங்கள். அப்போது தான் நிறைய வியாபாரம் ஆகும்." என்றது சுண்டெலி.

"நல்ல சாமானா? எது நல்ல சாமான். சொல் பார்க்கலாம்" என்றான் மணியன்.

"முந்திரிப்பருப்பு, கல்கண்டு, திராட்சைப் பழம் இதெல்லாம் நிறைய வாங்குங்கள். நல்லதாக வாங்குங்கள். எல்லாரும் பாயசம் வைக்கவும், பொங்கல் செய்து சாப்பிடவும் நிறைய வாங்குவார்கள்" என்றது.

"நல்ல யோசனை" நீ கெட்டிக்காரச் சுண்டெலிதான்!" என்றான் மணியன்.

சுண்டெலி கடைக்குள்ளே போய் உட்கார்ந்து கொண்டது. அன்று சாயங்காலம் மணியன் ஒரு டின் முந்திரிப்பருப்பு, ஒரு டின் நிறையத் திராட்சை, ஒரு டின் நிறைய கல்கண்டு எல்லாம் வாங்கிக் கொண்டு வந்தான். கடையில் அழகாக அடுக்கி வைத்தான்.

மறுநாள் காலை, மணியன் கடைக்கு வந்தான். சாவியால் பூட்டைத் திறந்து, கடைக்குள்ளே நுழைந்தான். அவனுக்கு ஒரே ஆச்சரியமாகப் போய் விட்டது. முந்திரிப் பருப்பு டின், திராட்சைப்பழ டின், கல்கண்டு டின் எல்லாம் காலியாக இருந்தன. உள்ளுக்குள் ஒன்றுமே இல்லை!

மணியனுக்கு ஒன்றுமே புரியவில்லை. மாயமாக மறைந்து போய் விட்டதே என்று அழுகை வந்தது. வேலை செய்யும் சுண்டெலியைக் கூப்பிட்டு, விசாரிக்கலாம் என்று, சுண்டெலியைத் தேடினான்.

சுண்டெலியைக் காணோம். திராட்சை காணோம், முந்திரிப் பருப்பு இல்லை. கல்கண்டு காலி ...சுண்டெலியையும் காணோம்!

சாமான்கள் வைக்கும் அறையில் நன்ருகத் தேடினுன் மணியன். அரிசி மூட்டைக்குப் பக்கத்தில் 'திருட்டுவிழி' விழித்துக் கொண்டு சுண்டெலி பதுங்கிக் கொண்டிருந்தது.

'கல்கண்டு எங்கே ?' என்று கேட்டான்மணியன். சுண்டெலி பேசவில்லை.

"திராட்சை எங்கே?--என்று கேட்டான்.

சுண்டெலி அதற்கும் பேசவில்லை.

"முந்திரிப்பருப்பு எல்லாம் எங்கே?" என்று கேட்டான்.

அதற்கும்கூடச் சுண்டெலி வாயைத் திறக்கவில்லை.

மணியனுக்குக் ஒரே கோபமாக வந்தது.

ஒருசின்னக்குண்டாந்தடியை எடுத்துக் கொண்டு சுண்டெலியை அடிக்க ஓங்கினுன்.

'அடிக்காதே' என்று சுண்டெலி கத்தியது. அப்போது அதன் வாய்க்குள்ளிருந்து நிறைய திராட்சை, முந்திரி, கல்கண்டு எல்லாம் கீழே விழுந்தன.

சுண்டெலி தான் எல்லாவற்றையும் தின்று விட்டது. இந்த விஷயம் இப்போது மணியனுக்குத் தெரிந்து போய் விட்டது.

'பொல்லாத சுண்டெலி, உன்னை விட்டேனு பார் 'என்று அதை அடிக்க ஓடினுன் மணியன். அங்கிருந்த ஓட்டையின் வழியாகச் சுண்டெலி 'குபுக்' கென்று புகுந்து, வெளியே ஓடிப் போய்விட்டது.

மறுநாள் மணியன் கடைக்குப் போனுன், வாசலில் ஒரு நாய் நின்று கொண்டிருந்தது, மணியன் அந்த நாயை முறைத்துப் பார்த்தான்.

"என்ன வேண்டும் உனக்கு?" என்று கோபமாகக் கேட்டான்.

"எனக்கு ஒன்றும் வேண்டாம், உங்கள் கடையில் என்னை வேலைக்கு வைத்துக் கொள்ளுங்கள் ... சம்பளமே வேண்டாம்" என்றது நாய்.

"போ. போ. இப்படித்தான் ஒரு சுண்டெலி வந்தது, என்னை ஏய்த்துவிட்டுப் போய்விட்டது. ...போ." என்று விரட்டினுன் மணியன்,

"கோபிக்காதீர்கள் ... நான் ரொம்ப நல்ல நாய்... நன்றியுடன் இருப்பேன்" என்று நாய் கெஞ்சியது.

மணியன் 'சரி' யென்று சொன்னுன். நாய் வேலைக்குச்

சேர்ந்தது. கடையில் இருந்த சாமான்களைப் பார்த்தது.

"நல்ல சாமான்களே இல்லையே. ரொட்டி, பிஸ்கட் இவை இல்லையே. இவை இருந்தால் பையன்கள் வாங்குவார்கள். நிறைய வியாபாரம் ஆகும். லாபம் வரும்" என்றது நாய்.

"திராட்சை, கல்கண்டு, முந்திரி என்றால் வாங்க மாட்டேன், ஏமாறவும் மாட்டேன், பிஸ்கட், ரொட்டி என்றதால் சரி என்கிறேன்" என்றான் மணியன்.

மறுநாள் நிறைய பிஸ்கட்டும், ரொட்டியும் வாங்கிவைத்தான். நாய் கடையைப் பார்த்துக் கொண்டிருந்தது, மணியன் சாப்பிட வீட்டுக்குப் போனான்.

சாப்பிட்டு விட்டுக் கொஞ்சம் தூங்கிவிட்டு, அப்புறம் கடைக்கு வந்தான்.

கணேஷ் ஐந்து பைசாக் கொடுத்து 'நெய் பிஸ்கட் தா' என்று கேட்டான். மணியன் தகர டப்பாவிற்குள் கையை விட்டுப் பார்த்தான்.

டப்பா காலி!

அடுத்த டப்பாவைப் பார்த்தான்.

அதுவும் காலி!

நாயைக் கூப்பிட்டுக் கேட்கலாமே. நாயைக் கூப்பிட்டான் மணியன். நாய் வரவில்லை. உள்ளே எட்டிப்பார்த்தான். நாய் கண்ணில் படவில்லை. விளக்கைப் போட்டுப் பார்த்தான்.

ஒரு பெரிய மூட்டைக்குப் பின்னால் நாய் ஒளிந்து கொண்டிருந்தது.

'பிஸ்கட் எல்லாம் எங்கே' என்று மணியன் கேட்டான்.

நாய் பேசவில்லை.

'ரொட்டி எல்லாம் எங்கே' என்றான்.

நாய் அதற்கும் பதில் சொல்லவில்லை.

மணியனுக்குக் கோபம் வந்துவிட்டது. கழியை எடுத்து நாயை அடிக்கப் போனான்.

'அடிக்காதே' என்று கத்தியது நாய், அப்படிக் கத்துவதற்கு வாயைத் திறந்ததும் ரொட்டியும் பிஸ்கட்டும் கீழே விழுந்தன, நாய்தான் அதை வாயில் அடக்கிக் கொண்டிருந்தது.

'என்னை ஏமாற்றினாயா. நாயே' என்று அதை அடிக்கப் போனான் மணியன்.

'ளொள்' என்று குரைத்துக் கொண்டே நாய் ஓடிப் போய் விட்டது.

'அடுத்த நாள் காலை. அழகான காளைமாடு ஒன்று மணிய

னின் மளிகைக் கடைக்கு வந்தது.'

''என்ன வேண்டும்'' என்று கேட்டான் மணியன்.

'நாய் வேலையைவிட்டுப் போய்விட்டது இல்லையா. அதற்குப்பதிலாக நான் வேலை செய்கிறேன்' என்றது மாடு.

'வேலைசெய்கிருயா?' என்றுன் மணியன்.'

'ஆமாம், எனக்கும் சம்பளமே வேண்டாம்,' என்றது மாடு.

'சரி, ஆனுல் முந்திரி, திராட்சை, கல்கண்டு, ரொட்டி, பிஸ்கட் இதெல்லாம் வாங்கி வைக்கமாட்டேன், தெரியுமா. என்னை ஏமாற்ற முடியாது' என்றுன் மணியன் பெருமையாக.

'நல்ல வேலை. அதெல்லாம் வாங்கி வைத்தால் தின்று விட்டுப் போய் விடுவார்கள். வாங்கி வைக்க வேண்டாம்' என்றது மாடு,

''நீ ரொம்ப நல்லமாடு! என்று சந்தோஷப்பட்டான் மணியன்.

''பிண்ணுக்கு, தவிடு, இவைகளை வாங்கி விற்கலாம். யாரும் எடுக்கமாட்டார்கள்'' என்றது மாடு, மணியனுக்கு ரொம்பச் சந்தோஷம், யாரும் ஏமாற்ற முடியாது என்று எண்ணினுன்.

மறுநாள் ஒரு மூட்டை தவிடு, ஒருமூட்டை பிண்ணுக்கு இரண்டும் வாங்கி வந்தான். கடைக்குள் பத்திரமாக வைத்தான்.

அன்றைக்கு பண்டிகை. மணியன் வீட்டில் நல்ல விருந்து, வடை, பாயசம் எல்லாம் செய்திருந்தார்கள். சாப்பிட்டவுடன் அவனுக்குத் தூக்கம் வந்துவிட்டது. படுத்துத் தூங்கி விட்டான். சாயங்காலம் தான் விழித்துக் கொண்டான். மணி ஏழு ஆகிவிட்டது.

''ரொம்ப நேரம் ஆகிவிட்டது. கடைக்குப் போகவேண்டும்'' என்று அவன் கடைக்கு வந்தான். முன்பக்கம் உட்கார்ந்தான்.

ஒரு ஆள் வந்தான். தவிடு வேண்டும் என்று கேட்டான். மணியன் எழுந்திருந்து தவிடு எடுக்கப் போனுன்.

தவிட்டு மூட்டையில் தவிடு இல்லை. பிண்ணுக்குச் சாக்கைப் பார்த்தான். அதுவும் காலி. அதிலும் ஒன்றும் இல்லை. மாட்டைக் கேட்கலாமே என்று மாட்டைக் கூப்பிட்டான்

மாட்டைக் காணுேம். மாடு கடைக்குப் பின்புறம் நின்று கொண்டிருந்தது. ஒரு தொட்டியில் இருந்த தண்ணீரைக் குடிக்க நின்றுகொண்டிருந்தது.

'தவிடு எங்கே' என்று கேட்டான் மணியன். மாடு பேசவில்லை.

'பிண்ணுக்கு முழுதும் என்ன ஆயிற்று' என்று கேட்டான். அதற்கும் மாடு பேசவில்லை.

மணியனுக்குக் கோபம் வந்து விட்டது. கழியை எடுத்து அடிக்க ஓங்கினுன். மாடு கொம்பை ஆட்டிக் கொண்டு திரும்பிப் பார்த்தது. அதன் வாயில்நிறைய தவிடு, நிறையப் பிண்ணுக்கு இருந்தது. அந்த மாடுதான் இரண்டு மூட்டைகளேயும் காலி செய்திருக்கிறது! மணியன் மாட்டை அடிக்க ஓங்கினுன்.

கொம்பைப் பலமாக ஆட்டிக் கொண்டு, மாடு அவனே முட்ட வந்தது. மணியன் பயந்து கொண்டு கடைக்குள்ளே ஓடிப் போனுன். மாடு பின்பக்கமாகப் போய்விட்டது.



மறுநாள் மணியன் கடைக்கு வந்து, கதவைத் திறந்தான். தூசியெல்லாம் தானே தட்டினுன். எல்லா இடங்களேயும் தானே பெருக்கிச் சுத்தம் செய்தான். சாமான்கள் வாங்க வருபவர்கள் ஆச்சரியப் பட்டார்கள்.

"பேஷ், மணியனின் கடை ரொம்பச்சுத்தமாகஇருக்கிறதே. சாமான்கள் சுத்தமாக இருக்கின்றன. இனிமேல் எல்லோரும் மணியன் கடையிலே தான் வாங்கவேண்டும்" என்ருர்கள்.

சாமான்களே மணியன் தானே எடுத்து தராசில் வைத்து நிறுப்பான். தானே காகிதம் எடுத்து, பொட்டலம் கட்டிக் கொடுப்பான். எல்லா வேலேகளேயும் தானே செய்து விடுவான்.

வியாபாரம் நிறைய ஆயிற்று. மணியன் வேறு யாரையும் வேலேக்கு வைக்கவில்லே. சுண்டெலி, நாய், மாடு எல்லாம் ஏமாற்றியதை அவன் மறக்கவே இல்லே. மறுபடியும் ஏமாந்து போவதில் அவனுக்கு ஆசை இல்லே. தானே வேலே செய்தால் உடம்புக்கும் பலம். வேலேயும் சீக்கிரம் ஆகிறது. ஏமாறவும் வேண்டாம்.

மணியன் கடையில் வியாபாரம் நிறைய நிறைய ஆகி, பணமும் நிறையச் சேர்ந்தது. கடைக்குச் சாமான் வாங்க வரும் சின்னப் பையன்களுக்கு ஓம மிட்டாய், பொட்டுக்கடலே, வெல்லச் சர்க்கரை எல்லாம் கொடுக்கிருன் அவன். அந்த ஊர்ப் பிள்ளேகள் எல்லாரும் சாமான் வாங்க, இப்போது எந்தக் கடைக்கு வருகிருர்கள் தெரியுமா? மணியன் வைத்த மளிகைக் கடைக்குத் தான்! இனிமேல் மணியனே யாரும் ஏமாற்ற முடியாது, வேறு யாருக்கும் அங்கே இனிமேல் வேலேயும் கிடைக்காது!

# கடல் தேவன் கிளாக்கஸ்

ஏழைச் செம்படவன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் கிளாக்கஸ். நாள்தோறும் மீன் பிடித்து விற்று வரும் பணத்தைக் கொண்டு அவன் வயிறு வளர்த்து வந்தான். ஒரு நாள் அவன் வலை வீசிய போது, அதில் ஏராளமான மீன்கள் சிக்கின. வலையை இழுத்து அந்த மீன்களை யெல்லாம், கரையில் புல்லடர்ந்த தரையில் கொண்டு போய்க் கொட்டினுன். சாதாரணமாக மீன்கள் தரையில் உயிருடன் இருப்பதில்லை. தரையின் மேல் போட்ட மீன்கள் சிறிதுநேரம் துடித்துக் கொண்டிருந்து விட்டு விறைத்துப் போய்விடும். ஆனால், அவன் அன்று பிடித்துப் போட்ட மீன்கள், தரையில் பச்சைப் பசேல் என்று வளர்ந்திருந்த புல்லைக் கொறித்துத் தின்று விட்டு மீண்டும் தண்ணீரை நோக்கித் துள்ளிவந்து கடலுக்குள் குதித்து நீந்தித் தப்பிவிட்டன.

இதைப் பார்த்த கிளாக்கசுக்கு முதலில் வியப்பாக இருந்தது. பிறகு, ''இந்தப் புல்லில் தான் ஏதோ அதிசய ஆற்றல் இருக்க வேண்டும்'' என்று தோன்றியது. அவன் கை நிறையப் புல்லைப் பறித்து அதைக் கடித்து மென்றுன். அந்தப் புல்லின் சாறு அவன் தொண்டையில் இறங்கிச் சென்று உள்ளேயுள்ள இரத்தத்தில் கலந்தவுடன் ஒரு விதமான பரபரப்பான உணர்ச்சி ஏற்பட்டது. அவனுக்குத் தண்ணீரில் மூழ்கவேண்டு மென்ற வேட்கை கிளர்ந்தெழுந்தது. என்ன செய்கிறோம் என்று தெரியாமலே கிளாக்கஸ் கடலினுள் இறங்கிவிட்டான்.

கடல் தெய்வமான நெப்டியூன் எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்தான். கிளாக்கஸ் தண்ணீருக்கடியில் மூழ்கிய உடனே, நெப்டியூன் தேவின் போய் அவன் தோளைப் பற்றினுன். அப்படியே அவனைக் கடல் அரண்மனைக்கு இழுத்துக் கொண்டு சென்றுன். சாதாரணச் செம்படவனுக இருந்த அவனை நெப்டியூன் ஒரு கடல் தேவனுக மாற்றிவிட்டான்.

கிளாக்கஸ் அன்று முதல் கடலிலேயே—தான் ஒரு செம்படவனுக இருந்த காலத்தில் மிகமிக விரும்பிய தண்ணீரிலேயே முற்றிலும் வாழத் தொடங்கினுன். அவனுடைய தாடி, கடற் பாசிபோல் நீண்டு வளர்ந்தது.' அவனுடைய தலைமுடி கடல் அலையைப் போலவே மாறிவிட்டது. அவன் மீன் பிடிக்கும் செம்படவர்களுக்கெல்லாம் தெய்வமாக ஆக்கப் பட்டான். தான் செம்படவனுக இருந்தபோது ஏற்பட்ட



தொல்லை துயரங்களை யெல்லாம் எண்ணிப் பார்த்து, அவன் ஏராளமான ஏழைச் செம்படவர்களின் வலைகள் நிறைய மீன் அகப்படச் செய்தான். அவர்கள் இன்பமாக வீடு திரும்புவதைக் கண்டு அவனும் இன்பமடைந்தான்.

அவன் கடல் தேவனாக மாறி நெடுநாட்கள் சென்ற பிறகு ஒரு நாள் அவன் அலைகளின் மேல் உல்லாசமாக மிதந்து கொண்டிருந்தான். அப்போது கரை யோரமாக ஓர் அழகான பெண்மணி நடந்து கொண்டிருப்பதைக் கண்டான்.

அவளுடைய அழகு அவன் மனத்தில் ஒரு சலனத்தை ஏற்படுத்தியது. அவன் அவளைத் தொடர்ந்து சென்றான். அவள் நடந்து நடந்து ஒரு குன்றின் அடிவாரத்திற்குச் சென்றாள். குன்றின் மேல் ஏறிச் சென்று உச்சியில் நின்று தனக்குப் பிடித்தமான கடலைத் திரும்பிப் பார்த்தாள். தன்னை ஓர் இருண்ட முகம் கவனிப்பதை அவள் பார்க்கவில்லை. பிறகு அவள் குன்றின் மறு புறமாக இறங்கிச் சென்று மறைந்து விட்டாள்.

கிளாக்கஸ் பெருமூச்சு விட்டுக் கொண்டே கடலின் அடியில் தன் இருப்பிடம் நோக்கி மெல்ல மெல்ல நீந்திச் சென்றான்.

மறுநாள் அதே நேரத்திற்கு அதே இடத்திற்கு வந்தான் கிளாக்கஸ். முன் போலவே அந்தப் பெண்மணியும் அதே இடத்தில் நடந்து கொண்டிருந்தாள். அவளைப் பின்



தொடர்ந்து மறையும் வரை பார்த்திருந்து மீண்டும் ஏக்கத்தோடு கடலடிக்குத் திரும்பினான், கிளாக்கஸ்.

இப்படியே பல நாட்கள் நடந்தன. நாளுக்கு நாள் கடல் தேவனான கிளாக்கஸுக்கு, வன தேவதையான ஷீலாவின் மேல் இருந்த அன்பு மேன்மேலும் வளர்ந்தது. கடைசியில் ஒரு நாள் மாலை ஷீலா அந்தக் குன்றின் மேல் ஏற அடியெடுத்து வைக்கும்போது, கிளாக்கஸ் அவளை கூவி அழைத்தான். திரும்பிப் பார்த்த அவள் தன்னெதிரில் பாதி மனிதனும் பாதி மீனுமாக நின்ற அந்த அதிசய உருவத்தைக் கண்டு வியப்படைந்து நின்றாள்.

அவள் நீரருகிலே நெருங்கி வந்து நின்று, "ஐயா, நீங்கள் யார்? மனிதன் தானா? அல்லது ஒரு கடல் மிருகமா?" என்று கேட்டாள். கிளாக்கஸ் தன் வரலாறு முழுவதையும் எடுத்துக் கூறிக் கடைசியில் தான் அவள் மீது எவ்வளவு அன்பு வைத்திருக்கிறான் என்பதையும் கூறினான். ஆனால், அவள் அவனுடைய சொற்களை இலட்சியப் படுத்தவில்லை. அவன் கொண்டிருந்த உருவம் அவளுக்கு ஒரு விருப்பம் ஏற்படுத்தக் கூடியதாயில்லை. அவள் எவ்விதமான பதிலும் கூறாமல், அவனை நம்பிக்கை யிழந்து மனமுடையச் செய்து விட்டுச் சென்றுவிட்டாள்.

பின் பல நாட்கள் கிளாக்கஸ் அந்த இடத்திற்குத் தொடர்ந்து சென்று கொண்டிருந்தான். ஆனால் ஷீலா அங்கு சென்று நடக்கும் வழக்கத்தை நிறுத்திக் கொண்டு விட்டாள். எனவே கிளாக்கஸ் வேறு வழியில்

அவள் அன்பைப் பெற முயன்ருன்.

அவனுடைய இருப்பிடத்திற்கருகில் சர்ஸ் என்ற பெயருடைய மந்திரக்காரி ஒருத்தி இருந்தாள். அவன் அவளுடைய மாளிகைக்கு விரைந்து சென்ருன். அவளிடம் தன் கதையைக் கூறி தேவதை ஷீலா தன்னைக் காதலிக்கச் செய்யும்படியான வசிய மருந்து ஒன்று செய்து தரும்படி கேட்டுக் கொண்டான், அந்த மந்திரக்காரி சர்ஸ், நெடுநாட்களாக கிளாக்கஸ் மீது காதல் கொண்டிருந்தாள். ஷீலா காதலிக்கத் தக்க அருகதை யுடையவள் அல்ல என்று அவள் கூறிஞள். கிளாக்கசைத் தன் மாளிகையிலேயே இருக்கும்படி அவள் கேட்டுக் கொண்டாள். அவ்வாறு தன் மாளிகையிலேயே இருந்துவிட்டால், வாழ்வு முழுவதும் இன்பமாகக் கழிக்கலாம் என்று அவள் கூறிஞள். தன்னுேடு இருந்து விடும்படி அவள் எவ்வளவோ கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள். ஆனுல் ஷீலா இருக்கும் வரையில் அவள்மீது தான் கொண்டிருக்கும் காதல் மாறவே மாருது என்று உறுதியாகக் கூறிஞன். அதன் பின், அவள் அவனுக்கு வசிய மருந்து ஒன்று செய்து தருவதாக ஒப்புக் கொண்டாள்.

ஷீலாவின் மேல் அவளுக்கு ஒரே வெறுப்பாக இருந்தது. அவளுக்கு ஏதாவது கொடுமை செய்ய வேண்டும் என்று அவள் மனத்துக்குள் முடிவு செய்து கொண்டாள். அவள் ஒரு மருந்துப் புட்டி நிறைய நிறமற்ற ஒரு திரவத்தை அடைத்து கிளாக்கஸிடம் கொடுத்தாள். ஷீலா வழக்கமாகக் குளிக்கும் தண்ணீரில் அதை ஊற்றிக் கலந்து விடுமாறு அவனிடம் கூறிஞள்.

கிளாக்கஸ் பெருமகிழ்ச்சியோடு அந்த மருந்துப் புட்டியை வாங்கிக் கொண்டு திரும்பிஞன். ஷீலா வழக்கமாகக் குளிக்கும் சுனையைத் தேடிக் கண்டுபிடித்தான். ஆனந்தத்தோடு அந்தத் திரவத்தை அதில் ஊற்றிக் கலந்தான். இனி ஷீலா என்னை விரும்புவாள் என்று மனத்தில் நினைத்து மகிழ்ச்சி கொண்டவாறு தன் இருப்பிடம் சேர்ந்தான். பாவம்! மந்திரக்காரி செய்த சூழ்ச்சி அப்போது அவனுக்குத் தெரியவில்லை.

அன்று மாலை ஷீலா வழக்கம் போல் அந்தச் சுனைக்கு நீராடச் சென்ருள். தன் மேலாடைகளைக் கழற்றிவிட்டு நீரில் இறங்கிஞள். குளுகுளு வென்றிருக்கும் சுனையில் குளித்துக் கலகலவென்ற உடலொடு எழுந்திருக்க நினைத்த ஷீலா தண்ணீரில் காலை வைத்தவுடன் பயந்து உதறிஞள்.

அவள் கால் தண்ணீரில் பட்டவுடன், காலின் உருவம் மாறத் தொடங்கியது. மாறி மாறிக்




கடைசியில் பெருத்த வாயும், கொடூரமான தோற்றமுங் கொண்ட ஆறு பயங்கரமான நாய்கள் அவள் கால்களில் தோன்றின. அவள் பயந்து கூச்சலிட்டுக் கொண்டு தன் காலை வெளியில் இழுத்தாள்.

முதலில் அவள் தண்ணீருக்குள் தான் அவ்வாறு தோன்றுகிறதென்று நினைத்தாள். ஆனால், கரைக்கு வந்தவுடன், அந்தப் பயங்கர நாய்கள் தன் உடலின் ஒரு பகுதியாகவே இருக்கக் கண்டு பெருந்திகில் கொண்டாள். அலறிக் கொண்டே மலையுச்சிக்கு ஓடினாள். அங்கிருந்தவாறு அலை வீசிக் கொண்டிருக்கும் கடலை நோக்கிப் பாய்ந்தாள். அப்படியே தலைகீழாகக் கடலுக்குள் வந்து விழுந்தாள்.

அவள் ஒரு பாறையாக மாறினாள். அன்று முதல் அந்தப் பக்கத்தில் கப்பல் போக முடியாமல் போயிற்று. கடலினடியில் உள்ள அந்தப் பாறையில் கப்பல் மோதி உடைந்துவிடக் கூடும் என்று எந்தக் கப்பலும் போவதில்லை. தப்பித் தவறி அந்தப் பகுதியில் போய், மிகவும் கஷ்டப்பட்டுத் தெய்வத்தின் உதவியால் தப்பிப்பிழைத்து வந்த கப்பல்காரர்கள், பாறையின் அடியிலிருந்து நாய்கள் குரைக்கும் பலமான ஓசை கேட்கிறதென்று கூறுகிறார்கள்.

பாவம், கிளாக்கஸ் ஷீலாவை நினைத்து நினைத்துப் பல நாட்கள் அழுது கொண்டிருந்தான். அந்தக் கொடுமைக்காரியான மந்திரக்காரி சர்சை அவன் மீண்டும் போய்ப் பார்க்கவேயில்லை. இன்றும் மத்தியதரைக் கடல் இடையில் ஷீலா என்ற பெயருடைய அந்தப் பாறை நின்றுகொண்டிருக்கிறது. ஆம், அந்தப்பகுதியில் கப்பல் போக்குவரத்தைத் தடுத்து நிறுத்திக் கொண்டு நிற்கிறது அந்தப் பாறை.

**நாரா. நாச்சியப்பன்**

ஜோகன் ருடால்ப் வைஸ் எழுதிய ...

# ஸ்விஸ் ராபின்சன் குடும்பம்

தமிழில் தருபவர் :

**ரகுநாதன்**

இந்த நாவலின் ஆசிரியரான ஜோகன் ருடால்ப் வைஸ் (1781-1830) ஸ்விட்சர்லாந்து நாட்டுக்காரர். அந்நாட்டில் பெர்ன் என்னுமிடத்தில் பிறந்தார். அதே நகரைச் சேர்ந்த அகாடமியில் தத்துவப் பேராசிரியராகவும், நூலகத்தின் தலைமைப் பொறுப்பாளராகவும் பணியாற்றியவர். பல தத்துவ நூல்கள், பிரயாண நூல்கள் ஆகியவற்றை எழுதியவர். ஸ்விட்சர் லாந்தின் நாடோடிக் கதைகளையும் நாட்டுப் பாடல்களையும் சேகரித்தவர். ஸ்விட்சர்லாந்தின் தேசிய கீதத்தை இயற்றியவரும் இவரே.

இவர் தமது நாவலை டானியல் டீபோ எழுதிய 'ராபின்சன் குருஸோ' என்ற பிரபலமான நாவலைப் படித்ததன் விளைவாக எழுதினார். தமது நாவலின் முதற் பாகத்தை மட்டுமே இவர் எழுதி முடித்தார்; அதனை மேற் கொண்டும் தொடர்ந்து எழுது முன்னர் அவர் காலமாகிவிட்டார். எனினும் மோண்ட்டோலோ சீமாட்டி என்பவள் இதே கதையை அதன் ஆசிரியரின் நடையையும் பாணியையும் அப்படியே பின்பற்றி, தொடர்ந்து எழுதி முடித்தாள். தான் எழுதிச் சேர்த்த பகுதியை

SWISS FAMILY ROBINSON—*By Johann Rudolph Wyss*

இனம் கண்டு கொள்ள முடியாத அளவுக்கு, அவள் அந்தப் பணியை அத்தனை திறமையாகச் செய்து முடித்தாள்.

இந்த நாவல் உலகின் பல மொழிகளிலும் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது. இந்தக் கதை சிறுவர் சிறுமி யருக்கு மிகவும் சுவை தருவதாகும்; அதே சமயம் பெரிய வர்களுக்கும் இன்பம் பயப்பதாகும். பள்ளி மாணவர்கள் இந்தக் கதையை முழுமையாகப் படித்து ரசிக்க வேண்டும். அத்தனை சுவையும் இன்பமும் தரும்கதை இது. இந்தக் கதையைப் பிரபல அமெரிக்கத் திரைப் படத் தயாரிப்பாளரான வால்ட் டிஸ்னி அற்புதமான வண்ண ஓவியமாகத் திரைப்படம் ஆக்கியுள்ளார். அந்தத் திரைப்படமும் சிறுவர் சிறுமியருக்கு மட்டுமல்லா மல், பெரியவர்களுக்கும் பெருங் களிப்புத் தருவதாகும்.

இந்தச் சுவையான கதையின் சுருக்கமே இங்கு தரப் படுகிறது. தமிழில் தருபவர் திரு. ரகுநாதன்.

**1798**-ம் ஆண்டில் நிகழ்ந்த புரட்சியின்போது, ஸ்விட்சர் லாந்தைச் சேர்ந்த மதபோதகர் ஒருவர் தமது சொத்துச் சுகங் களில் பெரும்பகுதியை இழக்க நேர்ந்தார்; எனவே அவர் தம் மிடம் மிஞ்சியிருந்த கொஞ்ச நஞ்சப் பணத்தோடும், தமது மனைவியோடும்,நான்கு புதல்வர் களோடும் இங்கிலாந்து நாட்டுக் குத் தப்பியோடிச் சென்றார். அங்கு சென்றதும், தம்மிட மிருந்த பணத்தைக் கொண்டு, பல்வேறு விதமான தானிய வித்துக்களையும், சில கன்று காலிகளையும் விலைக்கு வாங் கினர்; ஆஸ்திரேலியாவுக்குச் சென்று அங்கு ஒரு சுதந்திர மான குடியேற்றக் காரனாகக் குடியேறி, தம்து வாழ்க்கை யைப் புதிய பாதையில் புனர மைத்துக் கொள்ளவேண்டும் என்பது அவரது திட்டம். எனவே அவர் தமது குடும்பத் தாரோடும், உடமைகளோடும் ஆஸ்திரேலியாவிலுள்ளபோர்ட் ஜாக்ஸன் என்ற துறைமுகத் துக்குப் பயணப்பட்டுச் செல் வதற்காக, ஒரு சிறு கப்பலில் ஏறினர்.

அவர்களது கப்பற் பிர யாணம் ஆரம்பத்தில் மிகவும் சுகமாகவும், சுமுகமாகவும்தான் இருந்தது. ஆனல் நியூ கினியா வின் கடற்கரைப் பகுதியருகே சென்ற சமயத்தில், எதிர்பாராத விதமாக, திடீரென்று கடலில் பெரும்புயலும் கொந்தளிப்பும் ஏற்பட்டன. அந்தப் பயங்கர மான புயல் ஆறு நாட்கள் நீடித்தது. அந்தப் புயலில் பரி

தாபமாகச் சிக்கி அலைப்புண்டு தத்தளித்த அவர்களது கப்பல் திக்குத் திசையெல்லாம் தடுமாறிப் போய், எங்கெங்கோ அடித்துச் செல்லப்பட்டது. இறுதியில் ஏதோ ஓர் இனம் தெரியாத தீவுக்கருகில் ஒரு பெரிய பாறைமீது அலைப்புண்டு மோதியது. மோதிய வேகத்தில் அந்தக் கப்பல் படாரென்று இரண்டாகப் பிளந்து போய் விட்டது.

கப்பல் மாலுமிகளோ அந்த மதபோதகரின் குடும்பத்தாரைக் கப்பலின் மேல்தளத்தில் தனியே தவிக்க விட்டுவிட்டு, தாம் மட்டும் படகுகளில் ஏறி உயிர் பிழைத்து ஓட எண்ணினர்கள். ஆனல் நம்பி வந்தவரை நடுக் கடலில் விட்டுச் சென்ற அந்த மாலுமிகள் தமது கடமை மறந்த செயலின் பலனையும் விரைவிலேயே கைமேல் கண்டார்கள். ஆம். அவர்கள் தப்பிச் செல்ல முயன்ற படகுகள் கவிழ்ந்தன; அதனல் அந்த மாலுமிகள் கடலில் மூழ்கி மாண்டார்கள். மதபோதகரின் குடும்பத்தார் கப்பலின் மேல் தளத்தில் மாட்டிக்கொண்ட போதிலும், அவர்களுக்கு உயிராபத்து எதுவும் நேர்ந்துவிடவில்லை. ஏனெனில் அவர்களது கப்பல் உடைந்து பிளந்துபோய் விட்டாலும்கூட, அது மூழ்கி விடவில்லை. அந்தக் கப்பல் இரண்டு பாறைகளின் இடுக்கிலே புகுந்து மோதியிருந்ததால் அந்தப் பாறைகளே அந்தக் கப்பலை நீருக்குள் மூழ்கிவிடாமல் இருபுறமும் தாங்கிப் பிடித்துக் கொண்டிருந்தன. எனவே அந்தக் கப்பலும் தண்ணீருக்குமேல் தலை தூக்கியவாறே நின்று கொண்டிருந்தது.

ஆறு நாட்களுக்குப் பின்னர் புயல் அடங்கியது. மேகத் திரளும், வெண்பனி மூட்டமும், வாரியடித்துச் சிதறும் நீர்ப் பெருக்கமும், புயலால் கவிந்த இருளும் அடங்கி வானமும் காட்சியும் தெளிவுபெற்ற பின்னர், அவர்கள் தமது கப்பலிருந்த இடத்துக்கு அருகில், சிறிது தூரத்தில் மிகவும் தாழ்ந்து தணிந்து தோன்றிய ஒரு நிலப்பரப்பு தென்படுவதைக் கண்டார்கள். அது ஒரு சிறு தீவு. எனவே அவர்கள் அந்த உடைந்த கப்பலிலிருந்து வெளியேறி, அந்தத் தீவின் கரைக்குச்செல்லத் திட்டமிட்டனர்; அதற்காக, அவர்கள் தமது கப்பலிலிருந்த மரத் தொட்டிகள், பலகைகள் ஆகியவற்றைக் கொண்டு, தற்காலிகமாகச் சமயத்துக் குதவும் ஒரு மிதப்புத் தெப்பத்தையும் தயாரித்தனர்; கரை சேர்ந்தனர்.

அந்த ஸ்விட்சர்லாந்துக் குடும்பத்தார் அனைவருமே 'ராபின்சன் குரூஸோ' என்ற நாவலைப் படித்திருந்தார்கள்; அந்தக் கதையும் அவர்களுக்கு மிகவும் பிடித்திருந்தது. எனவே தாங்களும் ராபின்சன் குரூஸோவைப் போலவே வெளியுலகத்தி

விருந்து துண்டிக்கப் பெற்று, தன்னந் தனிமையாக ஒரு தீவிலே வந்து தஞ்சம் புக நேர்ந்ததைக் கண்டதும், அவர்கள் ராபின்சன் குரூஸோவுக்கு நேர்ந்த சங்கடங்களும் சந்தர்ப்பங்களும் தமக்கும் நேர்ந்திருப்பதை ஒப்பிட்டுப் பார்த்தார்கள்; தம்மையும் அந்த ராபின்சனோடு ஒப்பிட்டு, அவனைப்பற்றி அதிகமாகப் பேசிக் கொண்டார்கள். இதன் காரணமாக, அந்தக் குடும்பத்தாருக்கே 'ஸ்விஸ் நாட்டு ராபின்சன் குடும்பம்' என்று பெயர் ஏற்பட்டு விட்டது.



அந்த ஸ்விஸ் நாட்டு மத போதகர் தேக ஆரோக்கியமும் திடகாத்திரமும் மிகுந்த, நல்ல நடுத்தர வயதினர்; அவரது மனைவி அவரைக் காட்டிலும் சில வயது இளையவள். அவர்களது மூத்த புதல்வனை ஃபிரிட்ஸ் சுருண்ட தலைமயிர் கொண்ட பதினைந்து வயது இளைஞன்; துறுதுறுப்பும், அறிவுக் கூர்மையும், புத்திசாலித்தனமும் நிறைந்தவன். இரண்டாவது மகன் எர்னெஸ்டுக்குப் பன்னிரண்டு வயது; விவரம் தெரிந்தவன்; புத்தி சாதுர்யம் மிக்கவன்; எனினும் கொஞ்சம் சுயநலம் மிக்கவன்; அத்துடன் சோம்பேறி. மூன்றாவது பையனை ஜாக் என்பவனுக்கு வயது பத்து; ஊக்கமும் துணிச்சலும் மிகுந்தவன்; அத்துடன் உபயோககரமான நபரும்கூட. நான்காவது சிறுவன் பிரான்சிஸ்; அந்த இனிய சுபாவமுள்ள பாலகனுக்கு வயது ஆறு.

அவர்கள் ஏறிவந்த கப்பல் மோதியுடைந்து, கப்பலிலிருந்த மாலுமிகள் அவர்களைக் கை விட்டு விட்டு வெளியேறிச் சென்றுவிட்ட பின்னர், மறு நாட் காலையில் அந்தக் குடும்பத்தார் தம்மைச் சுற்றி நிலவும் சூழ்நிலையைப் புரிந்துணரத் தொடங்கினார்கள்; தமக்கு நேர்ந்துவிட்ட இன்னலிலிருந்து மீள்வதற்கான வழிவகைகளைப் பற்றி ஆராய முனைந்தார்கள்.

கடலின் கொந்தளிப்பு அடங்கி விட்டது. காற்றும் ஓய்ந்து அமைதி கொள்ளத் தொடங்கியது; வானம் வெளிரிட்டு நிர்மலமாகியது; அமைதி சூடி கொள்ளத் தொடங்கியது; அதே சமயம் அவர்களின் நெஞ்சத்தில் நம்பிக்கையொளி ஏற்றுவது போல் சூரிய ஒளியும் மேலெ ழும்பி வந்தது.

"நாம் எல்லோருமே வேலை செய்தாக வேண்டும். இது வரையிலும் மனிதனைக் காட்டிலும் மேம்பட்ட ஒரு மகத்தான சக்தி நம்மையெல்லாம் காப்பாற்றித் தந்து விட்டது. இனி நாம் தான் நம்மைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். 'தனக்குத் தானே உதவிசெய்து கொள்பவனுக்குக் கடவுளும் உதவி செய்வார்' என்ற பொன்மொழியை

நினைவூட்டிக் கொள்ளுங்கள்'' என்று அந்த மதபோதகர் தம் குடும்பத்தாரை நோக்கிச் சொன்னார்.

பின்னர் அவர்கள் அனைவரும் அந்த உடைந்த கப்பலில் அங்குமிங்கும் சென்று, தமக்குத் தாமே உதவிக்கொள்ள முனைந்தார்கள். மதபோதகர் கப்பலின் பண்டகக் கிடங்குக்குள்சென்று தண்ணீர் ஜாடிகளையும், மற்றும் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களையும் தேடியெடுக்க முனைந்தார். அவரது மனைவி கப்பலிலிருந்த கன்று காலிகளைக் கவனித்தாள்; அந்த வாயில்லாப் பிராணிகள் பல நாட்களாகப் பட்டினி கிடந்து வாடிப் போயிருந்தன; எனவே அவள் அவற்றுக்குத் தீனி வைத்தாள். ஃபிரிட்ஸ் ஆயுதங்களையும், ஆயுதத்தளவாடங்களையும்தேடியெடுத்தான். எர்னெஸ்ட் தச்சு வேலைக்கான கருவிகளையெல்லாம் சேகரித்துக் கொண்டு வந்தான். ஜாக் கப்பல் தளபதியின் அறையை உடைத்துத் திறந்தான். ஆனால் அவன் அதனைத் திறந்ததுமே அங்கிருந்து இரண்டு பெரிய நாய்கள் வெளியே பாய்ந்தோடி வந்தன. எனினும் அவை ஜாக்கின் முன்னால் பணிவோடு வந்து,அவனது கைகளை நக்கிக் கொடுத்தன. முதலில் நாய்களைக் கண்டு பயந்து போன ஜாக் பின்னர் பயம் தெளிந்து போனான்; எனவே, அந்த நாய்களில் மிகவும் பெரிதாகவிருந்த ஒன்றின் முதுகின்மீது சவாரி போட்டுக் கொண்டு, தன் தந்தை இருந்த இடம் நோக்கிக் குஷியாக வந்தான்.

அந்தக் குடும்பத்தினர் எல்லோரும்மீண்டும் ஒன்றுகூடினார்கள். ஃபிரிட்ஸ் சில வேட்டைக் கருவிகளையும், சில கருமருந்துப் பைகளையும், கொம்புக் குப்பிகளையும் தேடிக் கண்டுபிடித்துக் கொண்டு வந்தான். எர்னெஸ்ட் கோடரி, சுத்தியல், கத்திரிக்கோல், பற்றுக் குறடு, துளைபோடும் உளி ஆகியவற்றைச் சுமந்து கொண்டு வந்து சேர்ந்தான். பிரான்ஸிஸ் சில மீன் பிடிக்கும் முள் கொக்கிகளைக் கண்டெடுத்தான்.

''என்னைப் பொறுத்தவரையில் நான் உங்களுக்கெல்லாம் நல்லதொரு செய்தியைத்தான் கொண்டு வந்திருக்கிறேன்.அதாவது நாம் கொண்டு வந்த கன்று காலிகளில் ஒரு பசு,ஒரு கழுதை இரண்டு வெள்ளாடு, ஆறு செம்மறியாடு, சினையான ஒரு பன்றி முதலியன யாவும் இன்னும் உயிரோடு இருக்கின்றன'' என்று உற்சாகமாகச் சொன்னாள் அவர்களின் தாய்.

பிறகு அவர்கள் தாம் சேகரித்த மரத் தொட்டிகளையும், பலகைகளையும் கொண்டு தாம் கரை செல்வதற்குதவும் தெப்பத்தை உருவாக்க முனைந்தார்கள்; அதனை உருவாக்கி முடித்ததும், தமக்கு உடனடியாகத்

தேவைப்படும் பொருள்களையும், தேவையான உணவையும் அதில் ஏற்றினார்கள்; பின்னர், உடைந்து போன அந்தக் கப்பலுக்குக் கண்ணெட்டுந் தூரத்தில் தெரிந்த, அந்த ஆளரவமற்ற தீவுக்கு அந்தத் தெப்பத்தின் உதவியால் பயணப்பட்டுச் சென்றார்கள்.

கரையை நெருங்கியதும், தாம் கரை சேர்வதற்குத் தக்கவாறு அமைந்த கரைப் பகுதியை மிகுந்த ஆவலுடன் கண்டறிய முனைந்தார்கள். ஆனால் அந்தக் கரையருகிலோ அலைகள் மேலே உயர்ந்து முட்டி மோதிச்சிதறிக் கொண்டிருந்தன; கண்ணைப் பறிக்கும் சூரிய ஒளியில் அந்த அலைகள் பளிச்சிடும் வெண்ணுரைத் திறலை வீசியெறிந்து குதியாட்டம் போட்டுக் கொண்டிருந்தன. கடைசியில் அவர்கள் ஒரு வளைந்த குடாப் பகுதியை அங்கு கண்டார்கள்; அந்தக் குடாப் பகுதியில் தீவிலிருந்து ஓடி வந்த ஒரு சிற்றாறு கடலோடு கலந்து கொண்டிருந்தது. அவர்கள் அந்தச் சங்கமமுகத்தை நோக்கித் தமது தெப்பத்தைச் செலுத்தி, அலையலையாய்ப் படிந்திருந்த கடற்கரை மணலில் கரை சேர்ந்தார்கள்.

உடைந்த கப்பலிலிருந்து வெளிவந்த தெப்பத்திலேறி அவர்கள் செல்லத் தொடங்கியதை, கப்பலிலிருந்த இரண்டு நாய்களும் கண்டு கொண்டன. உடனே அவையும் கடலுக்குள் தாவிப் பாய்ந்து, அந்தத் தெப்பத்தைத் தொடர்ந்து நீந்தி வரத் தொடங்கின. அவை நீந்திக் கடக்க வேண்டிய தூரம் என்னவோ அதிகம் தான். எனினும் அந்த நாய்கள் தமக்குக் களைப்புத் தட்டும் போதெல்லாம் அந்தத் தெப்பத்தைப் பிணைத்துக் கட்டியுள்ள கயிற்றுச் சுருள்களின்மீது தமது முன்னங் கால்களை ஊன்றி ஓய்வு எடுத்தவாறே தெப்பத்தைத்தொடர்ந்து வந்தன. இறுதியில் அந்தக் குடும்பத்தார் கரை சேர்ந்த அதே நேரத்தில் அந்த நாய்களும் கரை சேர்ந்து, அவர்களைக் குதியாட்டம் போட்டு வரவேற்றன.

அவர்கள் கரை சேர்ந்ததும், அந்தப் புதிய இடத்தைப் பார்வையிட்டார்கள். அவர்கள் கரையேறிய அந்த இடம் முக்கோண வடிவமாக இருந்தது; அதன் முனைப் பகுதி, பாறைகள் மத்தியில் கலந்து போயிருந்தது; அதன் அடிப்பகுதி கடலோடு கலந்திருந்தது. அந்தப் பாறைகளுக்கப்பால், பல மரங்கள் வளர்ந்தோங்கி நிற்பதை அவர்கள் கண்டார்கள். அவற்றுக்கிடையே பல தென்னை மரங்களும் தென்பட்டன. எனவே தமக்கு வேண்டிய மட்டும் இளநீரும், தேங்காயும் கிடைக்கும் என்ற மகிழ்ச்சியோடு அவர்கள் மனம் பூரித்தார்கள். மேலும் அந்த உடைந்த கப்பலின் தளத்தில் தென்பட்ட வாத்துக்கள், தாராக்கள் பெட்

டைக் கோழிகள் முதலியனவற்றையும் அவர்கள் தம்மோடு கரைக்குக் கொண்டு வந்திருந்தார்கள். அவற்றையெல்லாம் அவர்கள் கரைக்கு வந்ததும் கட்டவிழ்த்து விட்டு விட்டார்கள். கட்டவிழ்த்து விடுபட்ட அந்தப் பறவைகள், மற்றும் சிறுவர்கள், கடற்கரைமீது பறந்து திரிந்த கடற் பறவைகள், பாறைகளின் மீதமர்ந்திருந்த கடல் நாரைகள் முதலிய எல்லாமாகச் சேர்ந்து எழுப்பிய சத்தங்களால், அந்தக் கடற்கரைப் பிராந்தியமே கலகலவென்று ஒலித்தது.

அவர்கள் அந்த நிலப்பரப்பில் எங்கேனும் மனிதப் பிறவிகள் தென்படுகிறார்களா என்று பார்த்தார்கள்; ஆனால் அவர்களைத் தவிர அங்கு வேறு யாரையுமே காணோம். பின்னர் அந்தக் குடும்பத் தலைவர் தமது பிள்ளைகள், மனைவி ஆகியோரின் உதவியோடு, தம்மோடு கொண்டு வந்திருந்த கப்பலின் பாய்மரத் துணி, மற்றும் கம்புகள் முதலியவற்றின் துணை கொண்டு, கூடாரம் போன்ற ஒரு அமைப்பை உருவாக்கினார். அந்தப் பிள்ளைகள் கடற்கரையிலிருந்துஅள்ளிக்கொண்டு வந்த பாசி, மற்றும் பழுத்து திர்ந்த இலைகள் முதலியவற்றை பரப்பி, மெத்தென்று படுக்கை சமைத்தார்கள்; சிற்றாற்றின் கரையிலிருந்து எடுத்து வந்த சில கற்களால் அடுப்பு ஒன்றையும் ஆக்கி முடித்தார்கள்.

குடும்பத் தலைவர் முன் யோசனையோடு தம்மோடு ஒரு சக்கிமுக்கிக் கல்லையும் எடுத்து வந்திருந்தார்; எனவே அவர் சில சுள்ளிகளைப் பொறுக்கு வந்து, அந்தக் கல்லின் உதவியால் சீக்கிரத்திலேயே நெருப்பைப்பற்ற வைத்தார். பின்னர் கப்பலிலிருந்து தாம் எடுத்து வந்திருந்த பெரிய இரும்புச் சட்டியொன்றை அடுப்பின்மீது வைத்தார்; அதனடியில் காய்ந்த விறகுக் கட்டைகளைப் போட்டு அடுப்பை மூட்டினார்; அந்த இரும்புச் சட்டியில் சிற்றாற்றிலிருந்து மொண்டு வந்த நல்ல தண்ணீர் கொதிக்கத் தொடங்கியது. அவரது மனைவி உணவுப் பண்டங்களை வெளியே எடுத்து, சாப்பாட்டுக்கான ஏற்பாடுகளை கவனிக்கத் தொடங்கினாள். இத்தகைய சூழ்நிலையில் அங்கு குதூகலமும் மகிழ்ச்சியும்பொங்கித் ததும்பின.

அந்தச் சிறுவர்களுக்கோ தம்மை எதிர்நோக்கியுள்ள அபாயங்களைக் குறித்த உணர்வோ, எண்ணமோஇல்லை; அவர்களது தாய் தந்தையருக்கோ ஏற்கெனவே ஏற்பட்ட பேராபத்திலிருந்து மீண்டுவந்துவிட்ட மகிழ்ச்சி. எனவே அவர்கள் அனைவரின் மத்தியிலும் குதூகலத்தைத் தவிர வேறு உணர்ச்சிக்கே அப்போது இடமில்லை. அவர்கள் அந்தக் குதூகலத்தோடு அந்த இனம் தெரியாத தீவிலமர்ந்து தமது 'புதுவீட்டுச் சாப்பாட்டை' முதன் முறை

யாக உண்ணத் தொடங்கினார்கள். அவர்களது தாயார் சூப்பைத் தயாரித்து முடித்த பின்னர்தான் அவர்கள் அந்தச் சூப்பை அருந்துவதற்கான கரண்டிகளையோ, வேறு பாத்திரங்களையோ கொண்டுவரவில்லை என்பதைக் கண்டறிந்தார்கள், ஆனால் எர்னெஸ்டோ தான் ஒரு பாறையின்மீது சிப்பிகள் அப்பிக் கொண்டிருப்பதைப் பார்த்ததாகச் சொன்னான்; பிறகு அவர்கள் அந்தச் சிப்பிகளில் சிலவற்றைப் பேர்த்தெடுத்துக் கொண்டு வந்து, அதனைப் பிளந்து, அவற்றைக் கரண்டிகளாகப் பயன்படுத்திக் கொண்டார்கள்.

சிப்பிகளைப் பேர்த்தெடுத்து வரப்போன எர்னெஸ்ட் பின் வருமாறு சொன்னான்: "நான் வரும் போது கொஞ்சம் உப்பும் எடுத்துக் கொண்டு வருகிறேன். கடற்கரைப் பாறை இடுக்குகளில் ஏராளமான உப்புப் படிந்திருப்பதை நான் பார்த்தேன், கடல் நீர் வடிந்து காய்ந்ததால் ஏற்பட்ட உப்புப் போலத் தோன்றுகிறது."

"சபாஷ்! புத்திசாலிதான் நீ. அந்த உப்பு அப்படித்தான் விளைந்திருக்கும். பின்னே வேறு யார் அதனை அங்கு விட்டுச் சென்றிருக்க முடியும்? சரி. வரும்போது நிறைய உப்பு எடுத்துக் கொண்டு வா. ஏனெனில் நாம் கப்பலிலிருந்து உப்பு எதுவும் எடுத்தே வரவில்லை" என்று சொன்னார் அவனது தந்தை.

இவ்வாறாக, அவர்கள் தமது உணவை நல்ல பசியோடும், நிறைந்த இதயத்தோடும் உண்டு முடித்தார்கள். அவர்கள் அந்தச் சிப்பிகளிலிருந்து எடுத்த கிளிஞ்சல் உணவையும் உண்டிருக்கக் கூடும்; ஆனால் அதனை ருசி பார்த்த பின்னர், அவர்களில் எவருக்குமே அந்த உணவு பிடிக்க வில்லை எனத் தெரிந்தது. மதபோதகரும் அவரது மனைவியும் ஐரோப்பாவிலிருந்த காலத்தில் அத்தகைய கிளிஞ்சல் உணவைப் பார்த்திருக்கிறார்கள்; அதனை மக்கள் உண்பதையும் கண்டிருக்கிறார்கள். என்றாலும், அந்தக் காலத்தில் அது அவ்வளவு பொதுவான உணவாகஇல்லை; மேலும் ஸ்விட்சர்லாந்து வாசிகளுக்கோ அந்த உணவு பழக்கமே இல்லை. அவர்களெல்லாம் அந்த உணவைத் தவளையின் கால்களையும் நத்தைகளையும் தின்னும் ஏதோ ஓர் அநாகரிகமான பழக்கம் போலத்தான் கருதினார்கள்.

எவ்வாறாயினும் அவர்கள் அந்தப் பெரிய இரும்புச் சட்டியில் இருந்த சூப்பை நல்ல பசியோடு அள்ளியள்ளிக் குடித்தார்கள்; மேலும், அடுத்தபடியாக உணவுக்கு அமருமுன் எல்லோரும் தனித்தனிப் பாத்திரங்களில் அருந்தும் வண்ணம் அதற்குள் ஏதாவது சில புதிய 'பாத்திரங்க'ளைக் கண்டுபிடித்து

விடுவதாகத் தமக்குத் தாமே ஒருவருக்கொருவர் உறுதி கூறிக்கொண்டார்கள். பின்னர் தமக்குக் கிடைத்த சிப்பிகளில் பெரியனவாகத் தேர்ந்தெடுத்து, அதில் சூப்பை ஊற்றி நிரப்பி, அந்த நாய்களின் முன்னேவைத் தார்கள். அவை குடிக்கக் குடிக்க மேலும் மேலும் அந்தச் சிப்பிகளைச் சூப்பால் நிரப்பி அவற்றை அருந்தவைத்தார்கள்.

அன்றையப் பொழுது அவர் களுக்கு மிகவும் அலுப்பும் களைப்பும் தருவதாக இருந்தது; பகற் பொழுது கழிந்ததும், அந்தத் தீவில்இரவு திடீரென்று வரத் தொடங்கியது; உஷ் ணப் பிரதேசங்களிலேயேஇருள் அப்படித்தான் கவிவது வழக் கம். இருள் சூழ்ந்த பின்னர் அவர்கள் அந்த அத்துவானமான கடற்கரையில் தமது பிரார்த் தனைகளைக் கூறி முடித்தார்கள்; பின்னர் தமது கூடாரத்தில் எல் லோருமாக ஒண்டி ஒடுங்கிப் படுத்துக் கொண்டார்கள், நிறைந்த வயிறும், களைப்பும் கொண்டிருந்த அவர்கள் யாவரும் அன்றிரவு நன்றாக மெய்மறந்து தூங்கினார்கள், அங்கிருந்த வாத்து, கோழி முத லியனவெல்லாம் அவர்கள் உண்ட இடத்தில் சிந்திக்கிடந்த மிச்சம் மிஞ்சாடிகளைப் பொறுக் கித் தின்று விட்டு, பள்ளி கொள்ளத் தொடங்கின. வாத் துக்களும், தாராக்களும் சிற்றாற் றின் கரையருகே யிருந்த புதர் களிலும், நாணல் காட்டிலும் புகுந்து படுத்தன. கப்பலி லிருந்து அவர்கள் கொண்டு வந் திருந்த சில புறாக்கள் அக்கம் பக்கத்திலுள்ள பாறைகளில் சென்றமர்ந்து இரவைக் கழித் தன.



மறுநாள் அந்த மதபோதகர் தமது மகன் ஒருவனையும் ஒரு நாயையும் உடனழைத்துக் கொண்டு, அந்தத் தீவைச் சுற் றிப் பார்த்து ஆராயப் புறப் பட்டுச் சென்றார், அப்போது அவர் அந்தத் தீவானது இடையே குறுக்கிட்டு நிற்கும் சிறிய குன்றுகளின் பாறை வரி சையால் இரண்டு பிரிவாகத் தென்படுவதைக் கண்டார். அந்தச் சமயத்தில் அவர் தாங் கள் அனைவரும் கரை சேர்ந்த அந்தப் பகுதியை மேம்போக் காகத்தான் கண்டிருந்தார். இப் போதோ அந்தத் தீவானது மிக வும் பரந்து விரிந்த நிலப்பரப் பைக் கொண்டதுதான் என்ப தைக் கண்டார். மேலும் அவர் கள் கண்டறிந்த அந்தத் தீவுப் பகுதி நல்ல கனிவர்க்கங்களைத் தரும் நிலப்பகுதி என்பதையும் கண்டார். மேலும், இவ்வாறு பலமுறை சுற்றிச் சுற்றிப் பார்த்ததிலிருந்து அந்த நிலப் பரப்பில் காட்டு நெல்லும், கரும்பும், தென்னையும், மற்றும் பலாப்பழ மரங்களும் விளைந்து வளர்ந்திருப்பதையும் அவர்கள் கண்டார்கள். அத்துடன் அங்கு மூங்கிற் காடுகளும், மற்றும்

உஷ்ணப் பிரதேசத்தின் வேறு பல செடி கொடிகளும் ஏராளமாகத் தென்பட்டன. அந்தச் சுரைக்காய்களிலிருந்து குடுவைகளையும், பாத்திரங்களையும் லகுவில் தயாரிக்க முடியும் என்பதையும் அவர்கள் கண்டு கொண்டார்கள். அந்த நிலப் பகுதி மிகவும் செழுமையான மண்வளத்தைப் பெற்றிருப்பதையும், அதில் சாகுபடி செய்தால் எல்லாவிதமான ஐரோப்பியக் காய் கனிகளையும், தானியங்களையும், அமெரிக்க நாட்டுச் சோளத்தையும் ஏராளமாகப் பயிர் செய்யலாம் என்றும் அவர்கள் உணர்ந்தார்கள்.

ஆனால் இவ்வளவு செழிப்பான அந்தப் பிரதேசத்தில் மனித நடமாட்டத்துக்கான அறிகுறியே இல்லை. தமது கப்பலிலிருந்து தப்பிச் சென்ற மாலுமிகளில் யாரேனும் உயிர் பிழைத்து, அந்தப் பக்கத்தில் கரையேறியிருக்கக்கூடும் என்ற எண்ணத்தில் அவர்கள் பல முறை விட்டுவிட்டு, தமது துப்பாக்கிகளைச் சுட்டு வேட்டு வெடி கிளப்பிப் பார்த்தார்கள். ஆனால் அந்த வெடிச் சப்தங்களுக்குப் பதிலாக அந்தப் பக்கத்திலிருந்து வேட்டு வெடியோ, வேறு சப்தமோ எதுவும் வரவில்லை.

அவர்கள் அங்கு கடற்கரையில் ஒரு உயரமான பெரிய பாறை கடலுக்குள் தலை நீட்டிக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். உடனே அதன் மீது ஏறிச்சென்று, அங்கிருந்து கடலிலும் தரையிலும் கண்ணெட்டும் தூரம் வரையிலும் பார்வையைச் செலுத்தினார்கள். கப்பலிலிருந்து வெளியேறிச் சென்றவர்கள் எவரேனும் கண்ணில் படுவார்களா என்று பார்த்தார்கள். அந்தக் குடும்பத்தின் அமைதி நிறைந்த அறிஞனும், விஞ்ஞானியுமான எர்னெஸ்ட் தான் கப்பலை விட்டு வெளியேறிய காலத்தில், அங்கிருந்து முன் யோசனையோடு ஒரு தொலைநோக்கிக் கருவியையும் எடுத்து வந்திருந்தான்; தனது கோட்டுப் பைக்குள் வைத்திருந்த அந்தத் தொலைநோக்கியை எடுத்து, அவனும் எட்டின மட்டும் நோட்டம் விட்டுப் பார்த்தான். ஆனால், அப்போதும் அவன் கண்ணில் யாருமே படவில்லை. எனவே ஸ்விஸ் ராபின்சன் குடும்பத்தாரான தம்மைத் தவிர, அந்தக் கப்பல் விபத்திலிருந்து வேறு யாருமே உயிர் பிழைத்துச் செல்லவில்லை என்பதை அவர்கள் ஊர்ஜிதம் செய்தார்கள்; இப்போதோ அந்த மனித சஞ்சாரமற்ற தீவில் அவர்கள் மட்டுமே தன்னந்தனிமையில் இருந்தார்கள். மேலும் அந்தத் தீவும் எந்தப் பக்கத்தில் இருக்கிறது என்பதும் அவர்களுக்குத் தெரியவில்லை. பகற்பொழுதின் நேரம், இரவிலே நட்சத்திரங்களின் ஸ்தானம் ஆகிய இவற்றைக் கொண்டுதான் அவர்கள் அந்தத் தீவின் காலத்தையும்

இடத்தையும் தீர்மானிக்க வேண்டியிருக்கிறது. இறுதியில் அவர்கள் அந்தத் தீவு பூமத்திய ரேகையை ஒட்டிய பிரதேசத்தைச் சேர்ந்ததுதான் என்றும், பூகோள வரைப்படத்தில் நிலப் பகுதிகள் எதுவும் சுட்டிக் காட்டப்படாத பசிபிக் மகா சமுத்திரத்தின் பரந்த பகுதி யொன்றில் இடம்பெற்றுள்ள சின்னஞ்சிறிய நிலப்பகுதிதான் என்றும் முடிவுகட்டினார்கள்.

பின்னர் அவர்கள் தாம் கண்டறிந்த அந்தத் தீவின் பகுதிகளுக்குப் புதிய பெயர்களைச் சூட்டினார்கள்; கடற்கரையிலே தாம் ஏறி நின்று, கப்பலிலிருந்து உயிர் பிழைத்துச் சென்றவர்கள் யாராவது தென்படுகிறார்களா என்று பார்த்து, ஏமாற்றம் அடைந்த அந்தப் பாறைக்கு 'ஏமாற்ற முனை' என்று பெயரிட்டார்கள். அன்றிரவு ஃபிரிட்ஸ்ும் அவனது தந்தையும் தமது பயணத்திலிருந்து அலுத்துக் களைத்துத் திரும்பி வந்தார்கள்; எனினும், அந்தத் தீவின் இயற்கை வளத்தையெல்லாம் கண்டறிந்து வந்ததில் அவர்களுக்குப் பெரு மகிழ்ச்சிதான். அவர்கள் தாம் அமைத்திருந்த கடற்கரைக் கூடாரத்துக்கும் 'கூடார வீடு' என்று பேரிட்டார்கள்; எனினும் பின்னர் அவர்கள் தமது வாசஸ்தலத்தைப் பக்கத்துப் பாறைகளுக்கிடையே தென்பட்ட ஒரு பெரிய குகைக்கு மாற்றிக் கொண்டார்கள்; அந்தக் குகையைப் பல அறைகளாகத்தடுத்து மறைத்து, அதனைத் தமது செளகரியத்துக் கேற்ப வீடு போல் அமைத்துக் கொண்டார்கள். எனினும் இந்தப் புதிய வாசஸ்தலத்துக்கும் அவர்கள் 'கூடார வீடு' என்ற அந்தப் பெயரையே வைத்துக் கொண்டார்கள்.

மேலும் கடலும் காற்றும் சாந்தமெய்தி அமைதியுற்றிருக்கும் வேளைகளில் அவர்கள் பல முறை அந்த உடைந்த கப்பலுக்குச்சென்று, அதிலிருந்த பண்டம் பாத்திரங்களையும், ஆஸ்திரேலியாவுக்குச் சென்று குடியேறுவதற்காகக் கொண்டுவந்திருந்த சாமான்களையும், கன்று காலிகளையும் கரைக்கு எடுத்து வந்தார்கள். சொல்லப்போனால் தமது புதிய குடியிருப்பில் தமக்கு எந்த விதத்திலேனும் உதவக்கூடிய எந்தவொரு பொருளையும் அவர்கள் அந்தக் கப்பலில் விட்டுவைக்கவில்லை. அவர்கள் அனைவருமே கப்பலிலிருந்து எடுத்து வந்த பொருள்களையும், அந்தத் தீவில் கிடைத்து வந்த பொருள்களையும் எப்படி எப்படிப் பயன்படுத்துவது, என்னென்ன புதிய செளகரியங்களை உருவாக்கிக் கொள்வது என்பனவற்றிலெல்லாம் தமது புத்தி சாதுர்யத்தையும், கெட்டிக்காரத் தனத்தையும் பயன்படுத்தி, தமது வாழ்க்கையை மேலும் வளப்படுத்த வழிவகைகண்டார்கள். மேலும், அவர்கள் அந்த உடைந்த கப்பலின் பண்டகக் கிடங்கில் ஒரு

இரட்டைப் படகின் பலகைகளும், பாகங்களும் இருப்பதைக் கண்டார்கள். அந்தப் பலகைகள், பாகங்கள் ஆகியவற்றுக்கு முறையாக எண் வரிசை இடப்பெற்றிருந்ததால், அவர்கள் அவற்றை ஒழுங்காக இணைத்து அந்தப் படகையும் உருவாக்கி முடித்தார்கள்; பின்னர் அந்தப் படகை நீரில் செலுத்தி, தாம் முதன் முதலில் கரையேறிய அந்தச் சங்கம முகத்துக்கு—அவர்கள் 'பாதுகாப்புக் குடா' என்று பெயரிட்டிருந்த அந்தக் குடாப்பகுதிக்கு—வந்து சேர்ந்து கரையேறினார்கள்.

பின்னர் அவர்கள் கடற்கரைக்குச் சிறிது தூரத்திலிருந்த, அடர்த்தியான மரங்கள் செறிந்த ஒரு தோப்பில், மரங்களின், மீது கிளைகளுக்கு மத்தியில் ஒரு பரண்வீட்டையும் விசாலமான முறையில் கட்டியமைத்துக் கொண்டார்கள்; தமது கூடார வீடான குகையில் வசிக்க இயலாத அளவுக்கு உஷ்ணநிலை அதிகரிக்கும் காலங்களில் அவர்கள் அந்தப் பரண்வீட்டில் வந்து வசித்தார்கள். பிறகு அவர்கள் தோட்டங்களையும் துரவுகளையும் உருவாக்கி, ஆஸ்திரேலியாவுக்குச் சென்று அங்கு விதைத்துப் பயிரிட எண்ணிய விதைகளையும் அவற்றில் விதைத்துப் பயிர் செய்தார்கள்; அந்தத் தீவில் அலைந்து திரிந்து கொண்டிருந்த காட்டுக் கோழிகளையும் பிடித்து, அவற்றையும் பழக்கித் தம்மோடு வைத்துக்கொண்டார்கள். மேலும் அவர்கள் தம்மிடமிருந்த பசுவையும் கழுதையையும் பாரம் சுமக்கவும் தாம் கட்டியமைத்த வண்டிகளை இழுக்கவும் பழக்கப் படுத்தி, அவற்றையும் பயன் படுத்தினார்கள்.

அவர்கள் கட்டியமைத்திருந்த தொட்டிகளாலான தெப்பம் தீவுப் பக்கமாக அடித்த ஒரு பெருங்காற்றில் அறுந்து உடைந்து அழிந்துபோய் விட்டது; எனினும் அவர்கள் ஒரு பெரிய மரத்தின் அடிப் பாகத்தைக் குடைந்தெடுத்து, அதனைத் தென் கடற் தீவுகளிலுள்ள காட்டுமிராண்டிகள் செய்வதைப் போன்று, அதனையே ஒரு கட்டை மரப் படகாக மாற்றிப் பயன்படுத்தத் தொடங்கிவிட்டார்கள். மேலும் அந்தத் தீவிலே கிடைத்து வந்த தாது பொருள்களிலிருந்தும், உப்புக்களிலிருந்தும் அவர்கள் துப்பாக்கிக்கான கருமருந்தையும் தோட்டாக்களையும் கூடத் தாமே உற்பத்தி செய்து கொண்டார்கள். பின்னர் ஒரு நாள் அவர்கள் அந்தத் தீவை இரண்டாகப் பிரித்து நிற்கும் குன்றுகளுக்கப்பால் சென்றபோது, அந்தப் பிரதேசத்தில் பல எருதுகள் மந்தையாக மேய்வதைக் கண்டார்கள்; உடனே அவர்கள் அவற்றில் ஒன்றைப் பிடித்து வந்து, அதனையும் அடித்து வசக்கிப் பழக்கி,

தமக்கு வேலை செய்ய வைத்துக் கொண்டார்கள்.

சொல்லப்போனால், அந்த அழகிய, அற்புதமான தீவில் அவர்களுக்கு விரும்பிய பொருளெல்லாம் வேண்டிய மட்டும் கிடைப்பது போலிருந்தது. கடலிலிருந்து சிப்பிகளும், மீன்களும், இரால் மீன்களும், நண்டுகளும் ஏராளமாகக் கிடைத்தன; காடுகளிலிருந்து இளநீர், தேங்காய், பலாப்பழம் முதலிய பல்வேறு பழவர்க்கங்களும் கிடைத்தன; மேலும் பொழுதைப் போக்குவதற்கும், விளையாடுவதற்கும் அந்தக் காடுகள் இனிமையான சூழலையும் வழங்கின.

மேலும் அங்கு கிடைத்து வந்த ஒரு நார்ப்பதமான செடியிலிருந்து ஒருவிதமான நீண்ட சணலையும் அவர்கள் பெற முடிந்தது; அந்தச் சணலைக் கொண்டு அவர்களது தாய் துணிமணிகள் செய்தாள்; மேலும் அந்தச் சணலைக் கொண்டு அவர்கள் தமக்குத் தேவையான கயிறு முதலியவற்றையும், தையல் நூலையும் உருவாக்கிக் கொண்டார்கள்.

அவர்கள் கப்பலிலிருந்து கொண்டு வந்திருந்த சினையான பன்றியும் சில நாட்களில் பல குட்டிகளை ஈன்றெடுத்தது; அந்தப் பசுவும் ஒரு காளைக் கன்றை ஈன்றது. இவ்வாறாக, அந்தப் பிராணிகளும் தமது இனத்தை அந்தத் தீவில் விருத்தி செய்யத் தொடங்கி விட்டன. அந்தப் பிராணிகளைக் கப்பலிலிருந்து கரைக்குக் கொண்டு வந்ததே ஒரு வேடிக்கையான அனுபவம்தான். வீட்டுப் பிராணிகளான அந்த வாயில்லா ஜீவன்களுக்குக் கடலில் நீந்தத் தெரியாது. எனவே அவற்றைத் தண்ணீர் உள்ளே புகாத பீப்பாய்களோடும் ஜாடிகளோடும் சேர்த்துக் கட்டி, அவற்றைத் தண்ணீரில் மிதக்க விட்டு, அந்தப் பீப்பாய்களோடு சேர்த்துக் கட்டிய நீண்ட கயிறுகளால் அந்தப் பிராணிகளைக் கரையை நோக்கி இழுத்துத் தான் அவற்றைக் கரை சேர்த்தார்கள். இவ்வாறு கரை வந்து சேர்ந்த அந்தப் பிராணிகள் தாம் பிழைத்ததோடு மட்டுமல்லாமல், தமது வம்சத்தையும் பிழைக்க வைத்துவிட்டன.

இவ்வாறாக, அவர்கள் அனைவரும் பல வழிகளிலும் தமது இருப்பிடத்தையும், பயிர் நிலங்களையும், தோட்டம் துரவுகளையும் மேலும் மேலும் வளப்படுத்தினார்கள். பாதுகாப்புக்குடா வருகே இருந்த தமது கூடார வீட்டை அவர்கள் உண்மையிலேயே சிறந்ததொரு இல்லமாக மாற்றியமைத்தார்கள். அதன் முன்னால் மரத்தாலான ஒரு முன்கூடத்தைக் கட்டினார்கள்; அதில் பூங்கொடிகளைச் சுற்றிப் படர்ந்து வளரவிட்டார்கள்; அந்த அழகிய கூடத்திலிருந்து வானை

யும் கடலையும் கண்டு களிக்கும் அவர்களுக்குப் பரமானந்தமாக இருந்தது, அந்த முன் கூடத்தின் இரு கோடிகளிலும் அவர்கள் ஒவ்வொரு அலங்காரப் பந்தல் அமைத்திருந்தார்கள். அந்த அலங்காரப் பந்தலில் ஒரு பெரிய புரிவளைச் சங்கின் வாயிலிருந்து ஒரு நீரூற்று அழகாகப் பொங்கி வழிந்தது; அவ்வாறு பொங்கி வழியும் நீர் ஒரு பெரிய ஆமை ஓட்டின்மீது வழிந்து விழுந்தது. இதனை அவர்கள் தமது குழாய்த் தண்ணீர்த் திட்டத்தின் மூலம் சாதித்திருந்தார்கள். அதாவது, சிற்ருற்றின் ஒரு பகுதியைக் கட்டித் தேக்கி, அதனை ஒரு நீர்த்தேக்கமாக்கி, அந்த நீர்த் தேக்கத்திலிருந்து ஓட்டை போடப்பட்ட பல்வேறு மூங்கில் குழாய்களின் மூலம் அவர்கள் தமக்குத் தேவையான குழாய்த் தண்ணீருக்கும் குடிநீருக்கும் ஏற்பாடு செய்திருந்தார்கள்.



சுருக்கமாகச் சொன்னல், அந்த மதபோதகர் கப்பல் விபத்துக்கு ஆளான போதிலும், அந்தத் தீவில் குடியேறியபின்பு அதன் தனிக் காட்டு ராஜாவாக விளங்கினர்; அந்தத் தீவில் தன் குடும்பத்தாரோடு அமோகமான வளத்தோடும் நலத்தோடும் வாழ்ந்து வந்தார். அவர்களிடத்தில் பணத்துக்கு மட்டும்தான் பஞ்சம்; மற்ற எல்லாச் செல்வங்களும் அவர்களுக் கிருந்தன. மேலும் அவர்களிடம் பணம் இருந்தாலும்கூட, அந்தப் பணத்துக்கு அங்கு தேவையுமில்லை; வேலையும் இல்லை.

ஆனல் இந்தக் காரியங்கள் எல்லாம் ஏதோ ஒரு நாளில் அல்லது ஒரு வருஷத்தில் நிறைவேறி விடவில்லை. மேலே சொன்ன காரியங்களையெல்லாம் நிறைவேற்றி, அவர்கள் தமக்குத் திருப்திதரத்தக்க விதத்தில் தமது வாழ்க்கையை அமைத்துக் கொள்வதற்குள் ஆண்டுகள் நான்கு கழிந்து விட்டன. இந்த நான்காண்டுக்காலமும் அவர்கள் தமது கரத்தையும் கருத்தையும் கொண்டு பட்டபாடும், உழைத்த உழைப்பும் கொஞ்சமல்ல; எனினும் அத்தனை உழைப்பிலும் பாட்டிலும் அவர்கள் நல்ல தேகாரோக்கியத்தோடும் திருப்தியோடும்தான் இருந்தார்கள்.

அந்தப் பிள்ளைகளெல்லாம் அந்த இயற்கையோடிசைந்த வாழ்க்கைச் சூழ்நிலையில் மதமதவென்று வளர்ந்து பெரியவர்களானர்கள்; அவர்களது பெற்றேர்களும் அவர்களிடம் கண்ட குற்றம் குறைகளைப் பக்குவமாகத் திருத்திப் போக்கினர்கள்; மேலும் அவர்கள் வாழ்ந்து வந்த அந்தத் தீவின் சூழ்நிலையே அந்தப் பிள்ளைகளை நல்லபடியாக வளரவும் உருவாகவும் உதவிபுரிந்தது. அங்கு கண்ணையும் மனத்தையும் கவர்ந்திழுத்துக் கெடுக்கும் மாயக் கவர்ச்சிகள் இல்லை; வஞ்சகப் படுகுழி

கள் இல்லை; சுருங்கச் சொன்னால், அங்கு ஐரோப்பா இல்லை. 'நாகரிக யுக'த்தின் எந்தவொரு சக்தியும் அவர்களது வாழ்க்கையில் குறுக்கிட்டு, அவர்களது ஆரோக்கியமான உடலையும் உள்ளத்தையும் கெடுத்துவிடவில்லை.

அவர்களெல்லோரும் திடகாத்திரமும், பலமும், சுதந்திரமும், துணிச்சலும் பெற்ற இளைஞர்களாக உடலிலும் உள்ளத்திலும் பரிணமித்து வளர்ந்தார்கள். தமது புத்திர பாக்கியங்கள் இவ்வாறு வளர்ச்சி பெறுவதைக் கண்டு, அந்த மதபோதகருக்கு ஒரே மனப்பூரிப்பு. அவர்களைப் பார்க்கும்போதெல்லாம் "இப்போது தான் மனம் நிறைந்திருக்கிறது" என்று அவர் தமக்குத் தாமே சொல்லிக் கொள்வார்.

அந்தத் தம்பதிகள் இருவருக்கும் ஐரோப்பாவும் அதன் நாகரிகமும் தொல்லைகளையும் சிரமங்களையுமே தந்திருந்தன. எனினும் கூட, அவர்கள் அந்தத் தீவுக்குக் குடிவந்த புதிதில் ஐரோப்பாவையும் அதன் நாகரிகத்தையும் எண்ணிப் பார்த்தார்கள்; அவற்றை இழந்துவிட்டு வந்த ஓர் ஏக்க உணர்ச்சியும்கூட அவர்களுக் கிருந்தது. அந்த மதபோதகருக்கு ஐரோப்பாவில் உறவினர்கள் எவரும் இல்லை. அவரது மனைவிக்கு மட்டும் அங்கு அவளது தாயும் இரண்டு சகோதரர்களும் இருந்தார்கள். எனவே அவள் முதலில் தனது தாயையும் சகோதரர்களையும் காணப் பெரிதும் வேட்கை கொண்டாள். ஆனால் ஸ்விட்சர்லாந்தை விட்டு அவள் வெளியேறிய காலத்தில், அவளது தாய்க்கு உடல் நலமில்லாதிருந்தது; மேலும் அந்தத் தாய் தனது மகளின் பிரிவை அவ்வளவாகத் தாங்கிக்கொள்ளச் சக்தியற்றவளாகவே அப்போதிருந்தாள். எனவே அந்தத் தாயும் இவ்வளவு காலம் உயிரோடு இருக்க மாட்டாள்; அவளும்கூட இதற்குள் இறந்துதான் போயிருப்பாள். மதபோதகரின் மனைவி இவ்வாறு தனக்குத்தானே எண்ணி முடிவு கட்டிக் கொண்டாள். இந்த முடிவுக்குப் பின்னர் அவளுக்கும் ஐரோப்பாவுக்குத் திரும்பிச் செல்லும் எண்ணம் கொஞ்சம் கொஞ்சமாக மங்கி மடிந்துவிட்டது.

மேலே குறிப்பிட்ட நான்கு வருஷகாலமும் கழிந்த பின்னர், திடீரென்று ஒருநாள் அந்தக் குடும்பத்தினர் அந்தக் கடற்கரையை நோக்கித் தூரத்தில் ஒரு கப்பல் வந்து கொண்டிருப்பதைக் கண்டார்கள்; அந்தப் புதுமையைக் கண்டு அவர்கள் பரபரப்பும் பரவசமும் அடைந்தார்கள். அது ஒரு ஆங்கிலேயப் போர்க் கப்பல். மதபோகரும், அவரது மகன் ஃபிரிட்ஸூம் தமது படகிலேறி, அந்தக் கப்பலருகே சென்றார்கள்; அந்தக் கப்பலின் தளபதியை நோக்கி, நங்கூரம் இடுவதற்குச் சிறந்த

இடம் எது என்பதைக் கூறினர் கள். அந்தக் கப்பல் எப்படியோ காற்றின் வேகத்தில் திசைமாறி வந்துவிட்டதாகத்தான் தோன் றியது; மேலும் பூகோள வரைப் படத்தில், அந்தக் கடற்பகுதி யில் எந்தவொருநிலப்பகுதியுமே குறிப்பிடப்படாதிருக்கும்போது அங்கு ஒரு தீவு தென்படுவதைக் கண்டு, அந்தக் கப்பல் தலைவன் அதிசயித்தான்; அதைக் காட்டி லும் அந்தத் தீவில் ஐரோப்பிய நாட்டைச் சேர்ந்தவர்கள் குடி யிருக்கும் புதுமையைக் கண்ட போதோ, அவனது வியப் புணர்ச்சி மேலும் பெருகியது.

அந்தக் கப்பலின் பெயர் 'திக் விஜயா'; அதன் தலைவனை லெப்டினெண்ட் பெல் என்ப வன் ஒரு படகில் ஏறி, தீவுக்கு வந்தான்; அங்கு தென்பட்ட கூடார வீட்டையும், மற்றும் அங்கு சாதிக்கப்பட்டிருந்த காரி யங்களையும் பெரும் வியப் போடும் அதிசயத்தோடும் பார்த்து மகிழ்ந்தான்.

அந்தத் தீவில் கால்வைத்த நாள்தொட்டு, தாம் முறையாக எழுதிவந்த தமது நாட் குறிப்பை, மதபோதகர் அந்தத் தலைவனிடம் கொடுத்தார்; அந் தத் தலைவனே அதனைப் பெற் றுக்கொண்டு, தான் மறுநாள் தனது கப்பலின் தளபதியுடன் அங்கு திரும்பவும் வருவதாக வாக்குறுதியளித்துவிட்டு, கப் பலுக்குத் திரும்பிச் சென்றான். அன்று மாலையில் மதபோதகர் தோப்புக்குள்ளிருந்த பரண் வீட்டில் தங்கியிருந்த தமது குடும்பத்தாரை மீண்டும் ஐரோப்பாவுக்கு அழைத்துச் செல்லச் சம்மதித்திருப்பதையும் கூறினர். ஆனால் அவரது மனைவியோ அதைக் கேட்டுப் பின்வருமாறு பதிலளித்தாள்:

"நாம் ஏன் இந்தத் தீவை விட்டுப் போகவேண்டும்? இங்கே தான் நாம் வேண்டிய செல்வத் தோடும் மகிழ்ச்சியோடும் இருக் கிறோமே. இதனை விட்டுவிட்டு, நாம் ஏன் மீண்டும் ஐரோப்பா வின் வறுமைக்கும் துயருக்கும் திரும்பிச் செல்லவேண்டும்? எனது, தாயும் எப்போதோ இறந்துபோயிருப்பாள். அதில் எனக்குச் சந்தேகம் இல்லை. மேலும் எனக்கு ஐரோப்பாவுக் குத் திரும்பச் செல்வதென்றாலே பயமாக இருக்கிறது. நமது பிள்ளைகள் இங்கே நல்ல திட காத்திரர்களாகவும், நல்ல பண் புள்ளவர்களாகவும் வளர்ந்து வருகிறார்கள். அவர்களது இளமை வாழ்க்கையை நாம் ஏன் உலகத்தின் சோதனைகளுக் கும் வேதனைகளுக்கும் ஆளாக்க வேண்டும்?"

தாயைப் போலவே அவளது பிள்ளைகளும் ஐரோப்பாவுக்குத் திரும்பிச் செல்வதை விரும்ப வில்லை. ஆனால் தந்தை மட்டும் அவர்கள் அங்கேயே மகிழ்ச்சி யாகவும் அமைதியாகவும்வாழ்ந்த போதிலும்கூட, வெளியுலகத்தி லிருந்து நான்காண்டுக் காலத்

துக்கும் மேலாகத் தனிமைப் பட்டு வாழ்ந்துவிட்ட அந்த வாழ்க்கையை மேலும் வாழமுடியாது எனக் கருதினர். எனவே திரும்பிப் போவதை அவர் ஆதரித்தார். மேலும் அந்தப் பையன்களும் உலகத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும்; அதன் அபாயங்களையும் ஆபத்துக்களையும் தாமே நேர் நின்று சமாளிக்கவேண்டும்; அத்துடன் அவர்கள் நல்ல நிலைமைக்கு வந்து, திருமணம் முதலிய கடமைகளை நிறைவேற்றி நல் வாழ்வு வாழவேண்டும்.

அவர் இவ்வாறெல்லாம் வாதித்தார். என்றாலும் இந்தப் பிரசினைக்குரிய முடிவை அவர்கள் காணவில்லை; ஆனால் இயற்கைச் சக்திகள் இதற்கோர் முடிவைக் கண்டுவிட்டன. அதாவது அன்றிரவில் ஒரு பெரும் புயல் வீசத் தொடங்கியது; மேலும் அன்று முதல் பல நாட்களுக்குப் பலத்த சூறைக்காற்றும் தொடர்ந்து வீசியது. இந்தக் காலக் கோளாறினால், அந்த ஆங்கிலேயக் கப்பல் மீண்டும் கடலுக்குள் வெகு தொலைவுக்கு அடித்துச் செல்லப்பட்டது; புயல் அடங்கி ஓய்ந்த நேரத்தில் அந்தக் கப்பல் அந்தத் தீவுக்கு மிகவும் தொலைவான இடத்தில் தென்பட்டது; எனவே அந்தக் கப்பலின் தளபதி மீண்டும் அந்தத் தீவைக் கண்டுபிடித்துக் கரை சேரும் எண்ணத்தைக் கைவிட்டு, உடனே ஐரோப்பாவுக்குத் திரும்பிச் சென்று தனது கப்பலுக்கு நேர்ந்த பழுதுகளைச் சீராக்கத் தீர்மானித்து விட்டான்.

எனவே, அந்த மதபோதகர் தமது குடும்பத்தோடு ஐரோப்பாவுக்குத் திரும்பிச் செல்லத் தீர்மானித்திருந்த போதிலும், விதி அவரது தீர்மானத்தை மாற்றி விட்டது. இதனால், அவர்கள் மீண்டும் தமது பழைய வாழ்க்கையை மேற்கொண்டார்கள்; தமது செல்வங்களையும் வசதிகளையும் மேலும் பெருக்குவதில் கவனம் செலுத்தத் தொடங்கினார்கள். உடைந்து போன கப்பலிலிருந்து அவர்கள் புத்தகங்கள் நிறைந்த ஒரு பெட்டியையும் கரைக்குக் கொண்டுவந்து சேர்த்திருந்தார்கள்; அந்த மதபோதகர் அந்தப் புத்தகங்களின் துணைகொண்டு, தம் புதல்வர்களுக்குத் தினம் தினம் சிலமணி நேரம் கல்விப் பயிற்சியும் அளித்து வந்தார்.



இவ்வாறாக, சுமார் ஓராண்டுக் காலம் ஓடி மறைந்தது. அதன் பின் ஒருநாள் அந்த ராபின்சன் குடும்பத்தார் திடீரென்று சற்றும் எதிர்பாராத விதத்தில் மீண்டும் பிற மனிதர்களைச் சந்திக்க நேர்ந்தது. ஆனால் அந்தச் சந்திப்பு மிகவும் விசித்திரமான, வேறுபட்ட முறையில் ஏற்பட்டது.

அந்தக் காலத்தில் அவர்கள், தமது கூடார வீட்டில் தங்கி

யிருந்தார்கள். அந்த வீட்டின் வாயிலில் காட்டு மிருகங்கள் முதலியவற்றிலிருந்து உள்ளே யிருப்பவர்களைப் பாதுகாப்பதற்காக அவர்களது நாய்களில் ஒன்ருன ஃபிளோரா காவல் புரிந்தது. அந்த நாயைக் காவலுக்கு வைத்துவிட்டு, குடும்பத் தலைவரும் அவரது மூத்த புதல்வர்களும் குன்றுகளுக்கப்பாலுள்ள அந்தத் தீவின் மறுபகுதியைக் கண்டறிந்து வருவதற்காகச் சென்றுவிட்டார்கள். அவர்கள் செல்லும்போது தமது கட்டை மரப்படகைத் தம்முடன் கொண்டு சென்ருர்கள். அதனைக் கடற்கரையிலுள்ள ஒரு சிறு குடாப் பகுதியின் அருகில், கரையிலிருந்த ஒரு மரத்தோடு கயிற்ருல் கட்டிப்போட்டுவிட்டு, அவர்கள் தீவுக்குள் பிரவேசித்தார்கள். அங்கு சுற்றித் திரிந்துவிட்டு அவர்கள் திரும்பி வந்தபோது, அங்கு கட்டிப் போட்டிருந்த அந்தக் கட்டை மரப்படகை காணவில்லை. அதனை அறிந்து அவர்கள் பெரும் வியப்பும் கலவரமும் கொண்டார்கள். மரத்தின்மீது கயிற்ருல் கட்டிய அடையாளம் மட்டுமே மிஞ்சியிருந்தது. ஆனல் கடற்கரை மணலின் மீதோ மனிதப் பாதங்களின் சுவடுகள் தெரிந்தன.

அப்போதோ அவர்கள் தமது கூடார வீட்டுக்குச் சில மைல்களுக்கப்பால் இருந்தார்கள். படகைக் காணுததாலும், மனிதர்களின் காலடிச் சுவடுகளைக் கண்டதாலும் ஏற்பட்ட கலவர உள்ளத்தோடும் கவலையோடும் அவர்கள் அவசர அவசரமாகத் தமது வாசஸ்தலத்துக்குத் திரும்பிவந்தார்கள். ஆனல் அந்த வீட்டில் யாருமே இல்லை; வீடே வெறிச்சோடிக்கிடந்தது. ஆனல் அங்கும் கடற்கரை மணலில், மனிதர்களின் காலடிச் சுவடுகள் தென்பட்டன. எனவே அவர்கள் உரக்கக் குரல் கொடுத்துக் கூப்பிட்டுப் பார்த்தார்கள். ஆனல் அந்தக் குரலுக்கும் பதிலே வரவில்லை, எனினும் அவர்கள் பரபரப்போடு அங்குமிங்கும் ஓடித் தேடிப் பார்த்தார்கள். ஆனல் ஒருவரையுமே காணவில்லை.

அப்போதுதான் அவர்களுக்கு மனத்தில் அந்த உண்மை—குடும்பத் தலைவியையும் கடைக்குட்டிப் பையன் பிரான்சிஸையும் காட்டு வாசிகள் கடத்தித் தூக்கிக் கொண்டு போய்விட்டார்கள் என்ற விஷயம்—புலப்பட்டது. அங்கு காவலுக்கிருந்த நாயையும் காணும். அதுவும் தனது பிடிபட்டுப் போன கடைக்குட்டி எஜமானனையும், எஜமானியம்மாளையும் பின்தொடர்ந்து சென்றிருக்க வேண்டும் என்றே தோன்றியது.

முதலில் அந்த மதபோதகர் தமது குடும்பத்துக்கு நேர்ந்துவிட்ட இந்த எதிர்பாராத விதமான துன்பத்தைக் கண்டு,

மனம் குலைந்து போய் அப்படியே கடற்கரை மணலில் குமைந்து உட்கார்ந்து விட்டார். அவரது மக்களோ அவரைச் சுற்றிலும் அமர்ந்து தேம்பித் தேம்பி அழத் தொடங்கி விட்டார்கள். என்றாலும் அவர் சீக்கிரத்திலேயே தம்மைத்திடப் படுத்திக் கொண்டு, அந்த இடத்தை விட்டு எழுந்தார். "பிள்ளைகளே! கலங்காதீர்கள். புறப்படுங்கள்! நாம் போய் அவர்களை எப்படியும் காப்பாற்றி மீட்டு வருவோம்!" என்று கூறினார் அவர்.

அவர்கள் கப்பலிலிருந்து எடுத்து வந்த அந்த இரட்டைப் படகு அவர்கள் ஒளித்து வைத்திருந்த அந்தக் கடற்கரைப் பாறை இடுக்கிலேயே பத்திரமாக இருந்தது. அவர்கள் அந்த இரட்டைப் படகை வெளியே இழுத்து, அதில் தமக்குத் தேவையான உணவு முதலியவற்றை எடுத்துக் கொண்டு, அதில் ஏறித் தமது திக் விஜயத்தைத் தொடங்கினார்கள். ஆனால் எந்தத் திக்கில் செல்வதென்பது அவர்களுக்கே தெரிந்திருக்க வில்லை.

முன்னர் அங்கு வந்த ஆங்கிலேயக் கப்பல் புயலால் அடித்துச் செல்லப்பட்ட பின்பு, புயல் ஓய்ந்து அமைதி கண்டிருந்த வேளையில், அவர்கள் கடற்கரையில் ஒரு பெரிய பேழை ஒதுக்கப்பட்டுக் கிடப்பதைக் கண்டார்கள். அந்தப் பேழைக் குள் பாசிமணிகள், முகம் பார்க்கும் கண்ணாடிகள், மற்றும் நூதனப் பொருள்கள் பலவும் நிறைந்திருந்தன. அத்தகைய சாமான்களைக் காட்டு வாசிகளுக்குப் பரிசளித்து, அவர்களது நட்பையும் உதவியையும் பெறுவது கடற்பிரயாணிகளின் வழக்கம். எனவே அந்தப் பேழையையும் தற்போது எடுத்துச் செல்வது நல்லது என்றும், தனது தாயையும் தம்பியையும் தூக்கிச் சென்ற காட்டு வாசிகளைக் கண்டால், அவர்களிடம் அந்தப்பொருள்களைக்கொடுத்து, தனது குடும்பத்தாரை மீட்டு வரலாம் என்றும் எர்னெஸ்ட் ஆலோசனை கூறினான். எனவே அவர்கள் அந்தப் பேழையையும் தம்மோடு எடுத்துச் சென்றார்கள். பின்னர் அவர்கள் துணிந்து தைரியத்தோடு கடலுக்குள் தமது படகைச்செலுத்தினார்கள்; கடலின் தொலைவில் அடிவானத்தின்மீது கண்களைப் பதித்துக் கொண்டு, எங்கேனும் நிலப் பகுதி தென்படுகிறதா என்று கூர்ந்து பார்த்தார்கள். கடைசியில், அடிவானத்தில் வெகு தொலைவில் ஏதோ ஒரு சிறிய புள்ளி தெரிந்தது; உடனே அதனை நோக்கிப் படகைச்செலுத்தினார்கள். அவர்கள் அதன் அருகில் சென்றதும் அங்கும் ஒரு தீவு இருப்பதைக் கண்டார்கள். அந்தத் தீவு கடல் மட்டத்துக்கு மேல் நன்குஉயர்ந்திருந்தது; மேலும் அது அடர்த்தியான மரச்செறிவும் நிறைந்ததாக விளங்கியது. அதன் கரை

யோரப்பகுதியில் அங்குமிங்கும் தமது படகைச் செலுத்தி, தாம் கரையிறங்கக் கூடிய ஒரு தகுந்த குடாவளைவை அவர்கள் கண்டறிந்தார்கள். பின்னர் அவர்கள் அந்த இடத்தில் தமது படகைச் செலுத்திக் கரை இறங்கினார்கள்.

பின்னர் அவர்கள் ஃபிரிட்ஸை யும் ஜாக்கையும் தீவுக்குள் அனுப்பி, தேடி வரச் சொன்னார்கள்; எர்னெஸ்டும் மதபோதகரும் கடற் கரையிலேயே யிருந்து, கடற் பக்கமிருந்து யாரேனும் வருகிறார்களாஎன்று காவல் காத்து நின்றார்கள். அவர்கள் தமது இரட்டைப் படகை எவர் கண்ணிலும்பட்டு விடாதபடி அதனைக் கரையோரத்தில் மறைவாக இழுத்து நிறுத்தினார்கள்; கரைமீதிருந்த மரங்களிலிருந்து வெட்டிக் கொணர்ந்த கிளைகளாலும் இலைகளாலும் அந்தப் படகை மூடி மறைத்து வைத்தார்கள். இந்த வேலையைச் செய்து முடிக்கச் சிறிது நேரம் பிடித்தது. இதனைச் செய்து முடிக்கும் தருணத்தில், ஒரு பாறையின் உச்சியில் ஏறி வேவு பார்த்துக் கொண்டிருந்த எர்னெஸ்ட் திடீரென்று தன் தந்தையைநோக்கி, "அப்பா! ஒரு படகு வருகிறது! படகு வருகிறது!" என்று கத்தினான். தந்தையும் அந்தக் குரலைக் கேட்டு ஓடிச் சென்று பார்த்தார். அங்கே கடற்கரைப் பாறைகளுக்கப்பால் ஒரு படகு தெரிந்தது. அந்தப் படகில் காட்டு வாசிகள் பலர் நிறைந்திருந்தார்கள். அந்தப் படகு மிகவும் விரைவாகச் சென்றது; சீக்கிரத்திலேயே அது ஒரு நிலப்பகுதியின் முனைக்கப்பால் மறைந்து விட்டது.

எர்னெஸ்ட் தனது தொலை நோக்கியையும் கொண்டு வர மறக்கவில்லை. எனவே அவன் அதன் உதவியால் அந்தப் படகைக் கூர்மையாக நோட்டம் விட்டுப் பரிசீலித்தான். அது கண் மறைந்து போன பின்னர் அவன் தன் தந்தையிடம் ஓடி வந்தான். அந்தப் படகை ஓட்டிச் சென்ற காட்டு வாசிகளின் மத்தியில் உடுப்பு அணியாத வெற்று உடம்போடு ஒரு வெள்ளை நிறத்துப் பையன் இருப்பதைத் தான் கண்டதாகத் தெரிவித்தான். அதே சமயத்தில் தீவின் காட்டுப் பகுதிக்குள்ளிருந்து ஃபிரிட்ஸ் ஓடி வந்தான்; தன்னந் தனியனாக ஓடி வந்தான்! ஆம். அவனுடன் சென்ற ஜாக்கைக் காணவில்லை. பின்னர் அவன் மிகவும் பயந்து நடுங்கிப் போனவனாய், அந்தக் காட்டு வாசிகள் ஜாக்கையும் தூக்கிக் கொண்டுபோய் விட்டார்கள் என்ற செய்தியைத் தயங்கித் தயங்கித் தெரிவித்தான். மேலும், அதைக் காட்டிலும் விபரீதமான சம்பவமும் நடந்துவிட்டிருந்தது. ஜாக்கைத் தூக்கிச் செல்லும் அந்தக்காட்டு வாசிகளை நோக்கி, ஃபிரிட்ஸ் தனது துப்பாக்கியால் சுட்டான். ஆனால் அதிலிருந்து

பாய்ந்தகுண்டோ அந்தக்காட்டு வாசிகளில் எவரையும் காயப் படுத்தாமல், அவனது தம்பி ஜாக்கின் தோள்பட்டையில் பாய்ந்து அவனைக் காயப்படுத்தி விட்டது! அவர்கள் இருவரும் அந்தக் காட்டு வாசிகளை அந்தத் தீவின் தென்பகுதிக் கடற்கரை யருகே சந்தித்தார்கள். ஆரம்பத் தில் அந்தக் காட்டு வாசிகள் சுமுகமாகத்தான் நடந்துகொண் டார்கள். ஆனால் அவர்களுக் குள் சிறிது நேரம் குசுகுசு வென்று பேசிக் கொண்ட பின் னர், அவர்கள் ஜாக்கை மட்டும் எட்டிப் பிடித்து, அவனைத் தூக்கிக் கொண்டு தமது படகை நோக்கிச் சென்று விட்டார்கள்.

அப்படியென்றால், கடலில் சென்ற படகில் எர்னெஸ்ட் கண்ட அந்த வெள்ளை நிறத்துப் பையன் ஜாக்கைத் தவிர வேறு யாருமில்லை. சந்தேகமே வேண் டாம்! அவர்கள் இவ்வாறு முடிவு கட்டினார்கள். மேலும் ஃபிரிட்ஸ் வேறுசில விஷயங் களையும் தெரிவித்தான். அதா வது அந்தக் காட்டு வாசிகளின் தலைவன் தலையில் ஒரு பளிச் சிடும் வர்ணக் கச்சையொன் றைக் கட்டியிருந்ததாகவும், அந்தக் கச்சை தனது தாயினு டையதுதான் என்பதைத் தான் இனம் கண்டு கொண்டதாகவும் கூறினான். மேலும், அவனது தாயும் தம்பி பிரான்சிசும் இன் னும் உயிரோடு இருப்பார்களே யானால், அவர்கள் நிச்சயமாக அந்தத் தீவில்தான் இருக்க வேண்டும். ஏனெனில் காணா மற் போனவர்களோடு காணா மற் போய் விட்ட அந்த ஃபிளோரா என்ற நாயையும் அவன் அந்தத் தீவில்கண்டான். ஃபிரிட்ஸும் ஜாக்கும் தம் முடன் அழைத்துச் சென்றிருந்த மற்றொரு நாயுடன் அந்த நாயும் சேர்ந்து சென்றதையும், அவர் கள் இருவரும், அந்தக் காட்டு வாசிகளோடு பேசிக் கொண்டி ருந்த காலத்தில், அந்த நாய்களி ரண்டும் காட்டுக்குள் ஓடி மறைந்து விட்டதையும் அவன் கண்டிருந்தான்.

ஃபிரிட்ஸ் இவ்வாறு தான் கண்டறிந்த விஷயங்களைச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, அவர்கள் மூவரும் தாம் மறைத்து வைத்திருந்த இரட் டைப் படகின் மீது போடப் பட்டிருந்த கிளைகளையும் தழை களையும் விலக்கி, மீண்டும் கட லில் செல்லத் தயாரானார்கள். படகு தயாராகி முடிந்ததும் அவர்கள் அதில் ஏறிக்கொண்டு கடலில் கண்மறைந்து சென்ற அந்தக் காட்டு வாசிகளின்படகு தெரிந்த திக்கை நோக்கிப் பய ணப் பட்டார்கள். சிறிது நேரத்தில் அவர்கள் அந்தப் படகு கண்மறைந்து போன நிலத்தின் முனைப் பகுதியைச் சுற்றிக்கடந்தார்கள்; அப்போது அங்கே பெரியதொரு குடாப் பகுதி தென்பட்டது. அவர்கள் அந்தக் குடாப் பகுதியை நோக்கிப் படகைச் செலுத்தி னார்கள்; அந்தக் குடாப்பகுதியி

லிருந்து ஒரு ஒடுங்கிய கழிமுகம் நீண்டு சென்றது. அதனுள் தமது படகை ஓட்டினார்கள்,

அங்கே அவர்கள் அந்தக் காட்டு வாசிகளின் படகைக் கண்டார்கள்; ஆனால் அதில் யாருமே இல்லை. அந்தக் காட்டு வாசிகளில் எவரும் அக்கம் பக்கத்திலும் கண்ணில் தென்படவில்லை. ஆனால் அந்தப் படகு நின்ற பகுதியில், தரைமீது அந்தக் காட்டு வாசிகள் அமர்ந்து உண்டு களித்து விட்டுப் போனதற்கு அடையாளமாக, அங்கு துண்டுதுக்காணிகளாக உணவுப் பொருள்கள் சிந்திக் கிடந்தன,

அவர்கள் அந்தப் படகுகளை அங்கேயே விட்டு விட்டு, அந்தக் காட்டு வாசிகள் அந்தத் தீவில் எந்தப் பக்கமாகச் சென்றிருக்கக்கூடும் என்பதை ஊகித்தார்கள்; பின்னர் தம் மனத்தில் பட்ட ஊகத்தின்படி, அந்தத் திக்கை நோக்கிப் புறப்பட்டுச் சென்றார்கள். அவர்கள் சில காடுகளையும் வனப் பிராந்தியங்களையும் கடந்து, மணற்பாங்கான ஒரு சமவெளிப் பிரதேசத்துக்கு வந்து சேர்ந்தார்கள். ஆனால் அங்கு சென்றதும் அவர்களுக்கு ஆச்சரியமும் வியப்பும் ஊட்டும் ஒரு காட்சி தென்பட்டது. கறுப்பு நிறமான அங்கியைத் தரித்த ஒரு வெள்ளைக்காரர்—ஓர் ஐரோப்பியர்-அவர்களை நோக்கி வருவதை அவர்கள் கண்டார்கள்!



"நான் உங்களைத் தான் தேடிக் கொண்டிருக்கிறேன்!" என்று அந்த வெள்ளைக்காரர் ஆங்கிலேய மொழியில்பேசினார். மதபோதகருக்கும் அவரது குடும்பத்தாருக்கும் ஆங்கில மொழி நன்றாகத் தெரியும்; புரியும்.

அந்த மனிதர் தாம் ஒரு பாதிரியார் என்றும், அந்தத் தீவில் வசித்து வருபவர் என்றும், மேலும், ராபின்சன் குடும்பத்தாரில் காணாமற் போனவர்களைப்பற்றி எந்தப் பயமும் கவலையும் கொள்ள வேண்டாம் என்றும், அவர்கள் பத்திரமாகவே இருக்கிறார்கள் என்றும் தெரிவித்தார். மேலும், "உங்களது இரட்டைப் படகு குடாப் பகுதிக்குள் வந்துள்ள செய்தி காட்டு வாசிகளுக்கும் அவர்களது தலைவனுக்கும் ஏற்கெனவே எட்டி விட்டது. இந்தத் தீவின் மன்னனான அந்தத் தலைவன் இன்னும்சிறிது நேரத்தில் அங்கு வரக்கூடும்" என்றும் அவர் அவர்களிடம் கூறினார்.

பின்னர் அவர்கள் வில்லிஸ் என்ற அந்தப் பாதிரியாரோடு தமது படகை நோக்கித் திரும்பினார்கள். படகின் அருகில் வரும் போதே அங்கு காட்டு வாசிகளின் கும்பல் ஒன்றுகூடி நிற்பதை அவர்கள் கண்டார்கள். அந்தக் காட்டு வாசிகள் தமது உபதலைவனான பராவரி என்பவனின் தலைமையில் கூடி

யிருந்தார்கள். அந்த உபதலைவனும் அவனது மனைவியும் அந்தப் பாதிரியாரின் முயற்சியால் மதம் மாற்றப் பட்டவர்கள்.

ராபின்சன் குடும்பத்தார் தாம் கொண்டு வந்திருந்த பேழையைத் திறந்து, அதிலிருந்த நூதனப் பொருள்கள் சிலவற்றை எடுத்து, அவற்றை அந்தக் காட்டு வாசிகளுக்குப் பரிசாக வழங்கினார்கள், அவற்றைக் கண்டு, அந்தத் தீவின் வாசிகளுக்கு மிகுந்த மகிழ்ச்சியும் பரவசமும் ஏற்பட்டன. திடீரென்று அந்தக் காட்டு வாசிகளின் மத்தியில் பரபரப்பும் சலசலப்பும் ஏற்பட்டன. சிறிது நேரத்தில் அங்கே அவர்களது மன்னனை பராரோ தமது காவல் வீரர்களோடுவந்து சேர்ந்தார். அரசனைக் கண்டதும் அந்தக் காட்டு வாசிகள் அனைவரும் தரை வரையிலும் குனிந்து வணக்கம் செலுத்தினார்கள்.

ஆஜானுபாகுவான தோற்றமும் கறுப்பு நிறமும் கொண்ட அந்தக் காட்டு ராஜாவின் தோள்மீது ஒரு சிறுவன் இருந்தான். அவன் வேறு யாருமல்ல. பிரான்சிஸ்தான்! அவன் அந்தக் காட்டு வாசிகளின் எளிய உடையைத் தரித்திருந்தான். அங்கே தனது தந்தையும் அண்ணன்மார்களும் நிற்பதைக் கண்டதும் அவன் குதூகலத்தால் கைகளைத் தட்டி, கூச்சல் எழுப்பி ஆரவாரித்தான்.

பின்னர் தீவின் வாசிகளுக்கு மேலும் பல பரிசுப் பொருள்கள் வழங்கப்பட்டன. அந்தப் பாதிரியார் ராபின்சன் குடும்பத்தாருக்கும், காட்டுவாசிகளுக்குமிடையே மொழிபெயர்ப்பாளராகப் பணியாற்றினார். அதன் பேரில் அவர்களுக்குள் பல விஷயங்கள் பரிமாறப் பட்டன; அதன்மூலம் ராபின்சன் குடும்பத்தாருக்குப் பல செய்திகள் வந்தன.

வில்லிஸ் என்ற அந்தப் பாதிரியார் தாம் அங்கு வசித்து வந்த காலத்தில், அந்தத் தீவு வாசிகளில் சிலரைக் கிறிஸ்தவ மதத்துக்கு மாற்றி, நாகரிகப்படுத்திய தாகவும், மற்றவர்களை இன்னும் நாகரிகப் படுத்தும் முயற்சியில் ஈடுபட்டிப்பதாகவும் தெரிவித்தார். அந்தத் தீவிலுள்ள வெள்ளையர்களில் அந்தப் பாதிரியாரைத் தவிர, வேறு சிலரும் கடந்த ஐந்தாண்டுக் காலமாக வசித்து வந்தார்கள். அவர்கள் அனைவரும் பெண்கள்; அதாவது மாடம் ஹெர்ட்டெல் என்ற பெண்மணியும், அவளது புத்திரிகளான சோபியா, மாட்டில்டா ஆகியவர்களே அவர்கள். அவர்களும் கப்பல் விபத்துக் காளாகி, ராபின்சன் குடும்பத்தாரைப் போலவே அந்தத் தீவில் ஒதுக்கப் பட்டவர்களே. அந்தத் தீவு வாசிகள் அந்தப் பாதிரியாரிடம் விசுவாசத்தோடு நடந்து கொண்டதைப் போலவே ஹெர்ட்டெல்லின் குடும்பத்தாருடனும் நடந்து வந்

தார்கள். ஆனால் மாடம் ஹெர்ட்டெல் தனது தனிமையைப் பெரிதும் உணர்ந்து, அதனால் விசனமும் விரக்தியும் எய்தியிருந்தாள். இதனால் அவர்கள் அவளுக்கு ஒரு துணையான நபரைத் தேடிக் காண விரும்பினார்கள். பக்கத்துத் தீவில் சில வெள்ளையர்கள் வந்து குடியேறியிருப்பதைக் கண்டறிய நேர்ந்த அவர்கள், ராபின் குடும்பத்தார் வசித்து வந்த அந்தத் தீவுக்குச் சென்றார்கள். அங்கிருந்து மத போதகரின் மனைவியையும், கடைக்குட்டி மகனையும் கடத்திக் கொண்டு வந்தார்கள். அந்தத் தாயும் மகனும் தமது தீவிலுள்ள ஹெர்ட்டெல் குடும்பத்துக்குத் தக்க துணையாக அமைவார்கள் என்பதே அவர்கள் எண்ணம்.

ஜாக்கை அவர்கள் கடத்தித் தூக்கிவந்ததற்கும் ஒருகாரணம் இருந்தது. கடைக்குட்டிப் பையனை பிரான்சிசின் மீது அவர்களது மன்னன் பராரோவுக்கு அளவு கடந்த பிரியம் ஏற்பட்டு விட்டது. மேலும், அந்த மன்னனுக்குப் புத்திர பாக்கியம் இல்லை. எனவே பராரோ பிரான்சிசைச் சுவீகாரம் செய்து, அவனைத் தனது வாரிசாக நியமிக்க விரும்பினார். இதனால், பிரான்சிசுக்குப் பதிலாக, ஜாக்கை அவனது தாய்க்குத் துணையாகக் கொண்டு செல்லும் நோக்கத்தோடுதான் அவர்கள் ஜாக்கையும் தூக்கிச் சென்று விட்டார்கள். பராரோ, சிறுவன் பிரான்சிசைத் தமது குடிசையான அரண்மனைக்குத் தூக்கிச் சென்று, அவன் அணிந்திருந்த உடைகளைக் களைந்து விட்டு, தமது நாட்டு உடைகளைத் தரிக்கச் செய்தார்; அதன்பின்னர் தமது நாட்டின் கரைக்கு வந்துள்ள அந்த வெள்ளையர்கள் ராபின்சன் குடும்பத்தாரைக் காணப் புறப்பட்டு வந்தார்கள்.

அந்தச் சிறுவனின் தந்தைதான் வந்திருக்கிறார் என்ற உண்மையை வில்லிஸ் தீவுத் தலைவனான பராரோவிடம் எடுத்துரைத்தார்; மேலும் அந்தச் சிறுவனை அந்தத் தீவின் இளவரசனாக்குவதை அவர் மிகவும் ஆட்சேபிப்பதாகவும் எடுத்துக் கூறினார். இதன் பின்னர் அவர்களுக்குள் பலத்த வாக்குவாதம் நடந்தது. இறுதியில் தீவின் மன்னனான பராரோ வேண்டா வெறுப்பாக, பிரான்சிசை அவனது தந்தையிடம் ஒப்படைத்தார். பிறகு ராபின்சன் குடும்பத்தார் தமது தீவுக்குத் திரும்பிப் போகுமுன்னர், தமது அரண்மனைக் குடிசைக்கு விஜயம் செய்து விருந்தாடி விட்டுச் செல்ல வேண்டும் என்றும் வற்புறுத்திக் கேட்டுக் கொண்டார்.

ராபின் குடும்பத்தாரின் படகைத் திருடியதற்கும், ஜாக்கின் ஆடையணிகளைக் கழற்றியதற்குமான காரணத்தையும் வில்லிஸ் விளக்கினார். அந்தத் தீவு வாசிகளை அவர் எவ்வளவுதான் நாகரிகப்படுத்த முயன்றாலும்,

திருடுவது என்பது அவர்களது பிறவிக் குணமாக இருக்கிறது என்றும், அதன் காரணமாகவே இவை நிகழ்ந்தன என்றும் கூறினர். அந்தப் பிறவிக் குணத்தின் விளைவாகவே அவர்கள் அந்தப் படகைத் திருடினர்கள்; ஜாக்கின் உடைகளையும் அவற்றின் கவர்ச்சியைக் கண்டே திருடிக் கொண்டார்கள்; திருடிய உடைகளை ஆளுக்கொன்ருக எப்படியோ அணிந்து கொண்டார்கள், என்ருலும் இப்போதே அவர்களிடமிருந்து அந்த உடைகளில் சிலவற்றை வில்லிஸ் திரும்பவும் பெற்றுத் தந்து விட்டார்.

பின்னர் அவர்கள் எல்லோரும் மரங்கள் அடர்ந்த ஒரு சிறிய பள்ளத்தாக்கினுள் சென்ருர்கள். அங்குதான் வீடாக மாற்றப்பட்டிருந்த ஒரு சிறு குகையில் மாடம் ஹெர்ட்டெல் வாழ்ந்து வந்தாள். அந்தப் பாதிரியாரின் குடிசையும் அருகிலேயே இருந்தது; அந்தத் தீவு வாசிகள் அந்தக் குடிசையை அவருக்காகக் கட்டிக் கொடுத்திருந்தார்கள்.

மாடம் ஹெர்ட்டெலின் வீட்டில்தான் ஜாக்கும் இருந்தான்; அவனுக்கு ஏற்பட்ட குண்டுக் காயத்தைக் கழுவி, மருந்து போட்டுக் கட்டியிருந்தார்கள். மேலும் அவனது தாயும் அங்குதான் இருந்தாள். தனது கணவரையும் மக்களையும் கண்டு அவள் மிகுந்தபரவசமும் மகிழ்ச்சியும் கொண்டாள். மாடம் ஹெர்ட்டெலின் புத்திரிகளான சோபியாவும் மாட்டில்டாவும் அங்கு தென்பட்டார்கள். சோபியாவுக்கு வயது பன்னிரண்டு; அவளது தங்கை அவளைக் காட்டிலும் ஒரு வயது இளையவள். இரண்டு பேருமே நல்ல வளர்த்தியும், அழகும், தேகாரோக்கியமும் கொண்டவர்களாகத் தோன்றினர்கள். ஹெர்ட்டெலின் கணவர் கப்பல் விபத்தில் மூழ்கி மாண்டுபோய் விட்டார். ஹெர்ட்டெலும், அவளது புதல்வியரும் தான் எப்படியோ உயிரோடு கரையில் ஒதுக்கப்பட்டு பிழைத்தெழுந்தார்கள். இரண்டு பிள்ளைகளுக்குத் தாயாகிவிட்ட பின்னரும்கூட, ஹெர்ட்டெல் இன்னும் இளமை குன்ருத யுவதி போலவே காட்சியளித்தாள்.

ஹெர்ட்டெலும் அவளது புதல்விகளும் ராபின்சன் குடும்பத்தாரோடு அவர்களது தீவுக்கே குடிவந்து விடுவது என்று தீர்மானிக்கப்பட்டது. அதன்பின் ஜாக்குக்குக் காயம் குணமாகி அவன் நலம் பெற்று எழுந்தவுடன் அவர்கள் எல்லோரும் தமது தீவை நோக்கிப் புறப்படச் சித்தமானுர்கள். தீவின் மன்னன் பராரோ அவர்கள் அனைவருக்கும் சிறந்ததொரு விருந்தை அளித்து, அவர்களிடமிருந்து திருடிய படகையும் திருப்பிக் கொடுத்து, அவர்களுக்குப் பிரியாவிடை கொடுத்து வழியனுப்பி வைத்

தார். மேலும் ராபின்சன் குடும்பத்தோடு தனது குலத்தின் உபதலைவனாக விளங்கிய பராபெரியும், அவனது மனைவியும், மற்றும் சில தீவு வாசிகளும் செல்லவேண்டும் எனவும், அங்கு சென்று ராபின்சன் குடும்பத்தார் உண்டாக்கியுள்ள கழனிகளிலும், தோட்டங்களிலும் அவர்கள் துணையாக நின்று உழைக்க வேண்டும் எனவும் ஆணையிட்டார்.

இவ்வாறாக, அவர்கள் அனைவரும் ஸ்விஸ் ராபின்சன் குடும்பத்தாரின் தீவுக்கு வந்து சேர்ந்தார்கள். அங்கு மாடம் ஹெர்ட்டெலுக்கும் அவளது புத்திரிகளுக்கும் தனியாக ஒரு வீடு கட்டிக் கொடுக்கப்பட்டது. குடியேறி வந்த அந்தத் தீவு வாசிகள் தோட்டக் காடுகளில் அமைக்கப் பெற்ற பண்ணை வீடுகளில் வாசம் புரிந்தார்கள். அவர்களது ஒத்துழைப்பால் அந்தத் தீவு முன்னைக் காட்டிலும் செழிப்பும் செல்வமும் விளைந்து சிறக்கத் தொடங்கியது.

* * *

மேலும் ஓராண்டுக் காலம் சென்று கழிந்தது. அதன் பின்னர் ஒருநாள் ஒரு ருஷ்யக் கப்பல் அந்தத் தீவின் கரைப் பக்கமாக வந்து சேர்ந்தது. அந்தக் கப்பலின் தளபதி அவர்கள் அனைவரையுமே ஐரோப்பாவுக்கு அழைத்துச் செல்வதாகக் கூறினான். ஆனால் அவர்களுக்கோ பூலோக சொர்க்கம் போல் விளங்கிய அந்தத் தீவை விட்டுச் செல்வதற்கே மனமில்லை; விருப்பமும் இல்லை.

என்றாலும், அந்தக் குடும்பத்திலிருந்த புத்திசாலியான எர்னெஸ்டை மட்டும் அந்தக் கப்பலில் அனுப்பிவைப்பதென்றும், அவன் தனது பூர்வீகமான நாட்டுக்குச் சென்று அங்கு தனது கல்வியை முடித்துத் திரும்பி வரவேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது. அதன்படியே அவனும் அந்தக் கப்பலில் ஐரோப்பாவுக்குப் புறப்பட்டுச் சென்றான். இரண்டாண்டுகளுக்குப் பின்னர் அவன் அங்கு தன் படிப்பை முடித்துக் கொண்டதோடு மட்டுமல்லாமல், தனது தாயின் மருமகளான, ஹென்ரீட்டா பாய்னெர் என்ற ஓர் அழகிய ஸ்விஸ் நாட்டுக் குமரியையும் அங்கேயே மணம் முடித்துக்கொண்டு, தம்பதி சமேதராக அந்தத் தீவுக்கு வந்து சேர்ந்தான்.

காலக் கிரமத்தில் அந்தத் தீவில் மேலும் மூன்று திருமண நிகழ்ச்சிகள் நடைபெற்றன. மாடம் ஹெர்ட்டெல் ஃபிரிட்ஸைக் காட்டிலும் சில வயது மூத்தவள்தான்; என்றாலும் அவள் ராபின்சன் குடும்பத்தாரின் மூத்த புதல்வனை ஃபிரிட்ஸைத் தனது கணவனாக ஏற்று மணந்து கொண்டாள். ஜாக்கும், பிரான்சிசும் நன்கு

வளர்ந்து வாலிபர்களாகிவிட்டார்கள்; அதன்பின் அவர்களும் முறையே சோபியாவையும் மாட்டில்டாவையும் மணந்துகொண்டார்கள். இந்தத் திருமணங்களை முன்னின்று நடத்திவைக்க, வில்லிஸ் தமது தீவிலிருந்து வந்து சேர்ந்தார்; அந்தத் தீவின் வயோதிக மன்னனுன பராரோவும் வந்தார்; அவர் இப்போது நாகரிகம் எய்தி, கிறிஸ்தவராக மாறிவிட்டார்; அந்தத் திருமண வைபவங்களில் அவரே பிரதான மான விருந்தாளியாகத் திகழ்ந்தார்.

இவ்வாருக, 'ஆனந்தத் தீவு' என்று ராபின்சன் குடும்பத்தார் அருமையாகப் பேரிட்டிருந்த அந்தத் தீவில் அவர்கள் ஆனந்த வாழ்க்கை நடத்திஞர்கள்; துன்பங்களுக்கும் துயரங்களுக்கும் வறுமைக்கும் வாதனைக்கும் அவர்கள் தமது வாழ்நாட் காலத்தில் ஆளாகி, தனிமையிலே வசிக்க நேர்ந்தபோதிலும், தமது விடாமுயற்சியினுலும், கடும் உழைப்பினுலும், புத்தி சாதுர்யத்தாலும், ஊக்கத்தாலும் தாம் வாழ்ந்து வந்த பூமியையே பூலோக சொர்க்கமாக்கி, தமது வாழ்வில் செல்வமும் செழிப்பும் கொழிக்கச் செய்தார்கள்.



## ஏழை சொல்

'ஏழை சொல் அம்பலம் ஏருது' என்பது பழமொழி. வறியோர் வார்த்தை செல்வர் சபையிலே செல்லாது என்று இதற்குப் பொருள் சொல்லுகின்றனர். இது இக்காலத்தில் இயம்பும் பொருள். பண்டைக் காலத்திலே இதன் பொருள் வேறு. அறிவற்றவனுக்வே ஏழை யென்று பெயர். அறிவற்றவன் சொல், அறிவுடையோர் சபையிலே செல்லாது, என்பதே இதன் பொருள், ஆதலால் பண்டைக் காலத்திலே அறிவுடைய புலவர்களை யாரும் வறியவர்களாக எண்ணியதில்லை. இந்த உண்மையை விளக்குவதற்குச் சங்க நூல்களிலே பல வரலாறுகள் உண்டு. புலவர்கள் பலரின் நடத்தைகளைக் கொண்டு அவர்களுடைய வீரத்தையும், ஆண்மையையும் காணலாம்.

— சாமிசிதம்பரனுர்
(இலக்கியச் சோலை)

ஆசிரியரும், வெளியிடுபவரும்: க்ண. இராமநாதன்,
66, பெரியதெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5. தொலைபேசி 84989.
அச்சிட்டோர்: ஐடியல் பிரிண்டர்ஸ், 97, பிராட்வே, சென்னை-1.

# ரகுநாதன்

எழுதிய

# இறவாத இலக்கியங்கள்

"இலக்கியம் என்பது இந்திய பீனல் கோடும் அல்ல; மனுநீதி சாஸ்திரமும் அல்ல. அது வம்புகளைக் கடந்து நின்று **இதய நீதி** கூறுவது. ஒப்புக்கொள்ளப்பட்ட, விரும்பப்பட்ட அபிப்ராயம் என்பதையும் கடந்து நின்று புதுப் புது விஷயங்களை புரட்சிகரமான கருத்துக்களைப் படைக்கக் கூடியது. ஆகவே, நிரூபணம் செய்யப்பட்ட விஷயங்களுக்கு அப்பாற்பட்ட விஷயங்களை லகுவில் ஒதுக்கிவிட முடியாது. அந்த விஷயத்தின் தன்மையை, பாரபட்சமற்று உணர்ந்து அதற்குரிய மதிப்பைச் செலுத்தியே ஆகவேண்டும்."

இவ்வுண்மையை நினைவில் வைத்துக்கொண்டு திரு. **ரகுநாதன்** அவர்களின் புத்தகங்களைப் படிக்கத் தொடங்கினால் இலக்கியத்தில் ரகுநாதனுக்கு உள்ள தனித்தன்மையைத் தெளிவாக உணர முடியும்.

| | | | |
|---|---|---|---|
| இலக்கிய விமர்சனம் | ... | 2 | 50 |
| ரகுநாதன் கவிதைகள் | ... | 3 | 00 |
| கன்னிகா | ... | 2 | 00 |
| சிலை பேசிற்று | ... | 3 | 00 |
| புயல் | ... | 1 | 50 |
| நான் இருவர் (மொழிபெயர்ப்பு) | ... | 1 | 50 |
| பஞ்சும் பசியும் | ... | 4 | 50 |
| சேற்றில் மலர்ந்த செந்தாமரை | ... | 2 | 00 |
| புதுமைப்பித்தன் வரலாறு | ... | 3 | 00 |
| மருது பாண்டியன் | ... | 2 | 00 |



த. பெ. எண். 423 போன்: 84989

ஸ்டார் பிரசுரம்

66, பெரிய தெரு,

திருவல்லிக்கேணி :: சென்னை-5.

# வாழ்க்கை
# வரலாற்று நூல்கள்

பெரியோர்களின் வாழ்வு முறைகளைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளுவதால் பல நன்மைகள் விளைய வழிகள் உண்டு. வாழ்வின் வெற்றி, பெரியோர்களின் வாழ்க்கை வரலாறுகளைப் படித்துப் புரிந்து கொள்ளுவதின் மூலம் கிட்டுகிறது. பெரியோர்களின் அனுபவம், படிப்பவர்களுக்கு அறிவாக அமையும் தன்மையுடையதாகும். நேரிய வாழ்வுக்கு நெறி வழுவாத பெரியோர்களின் வாழ்க்கை வரலாறுகள் உதவக்கூடும் என்ற திட்டத்தோடு வெளிவந்துள்ள சிறந்த நூல்களைக் கீழே தந்துள்ளோம்.

**நாக முத்தையா** எழுதிய நூல்கள்

| | |
|---|---|
| *பாரதியாரின் கதை* | *1-00* |
| *மகாத்மாவின் கதை* | *1-00* |
| *நேருவின் கதை* | *1-00* |
| *தாகூரின் கதை* | *1-00* |
| *காமராசரின் கதை* | *1-00* |



**த. பெ. எண் 423** போன் 84989

ஸ்டார் பிரசுரம்

**66**, பெரிய தெரு,

**திருவல்லிக்கேணி** : : சென்னை-5.



நவம்பர், 1964 மலர் 3 – இதழ் 8

# பதவி பெரிதல்ல.

நாம் எதற்காக உயிர்வாழ்கின்றோம்! பொதுமக்களைக் காப்பாற்ற வேண்டும் என்பதுதானே நம்முடைய எண்ணம். இவ்வெண்ணம் உண்மையானால், பொதுமக்களின் நன்மைகளை நன்கு யோசித்து அதற்காகப் பாடுபடுதல் வேண்டுமன்றோ? பொதுநலம் என்ற மனப்பான்மை வலுவுற்றுவிடுமேல், தன்னலம் நசுங்கி இல்லாது ஒழிதல் கண்கூடு. தன்னலம் மறந்தவன் பிறருக்காக அஞ்சவோ, அகமகிழவோ மாட்டான், கருமமே கண்ணாகக் கருதிக் காரியவாதியாகத் திகழ்வான்.

இறையன்பு, நாட்டுப்பற்று. மொழி உணர்வு கொண்டவர்களின் வீரவரலாறு தன்னலத்தின் ஒடுக்கத்தையும் பொதுநலத்தின் பெருக்கத்தையும் காட்டுவதாகும். தன்னைத்தானே காப்பாற்றிக்கொள்ள வேண்டும் என்று எண்ணுபவன் **பயந்தாங்கொள்ளியாக** இருப்பான். நாட்டைத்தானே காப்பாற்ற வேண்டும் என்று எண்ணுபவன் **வீராதி வீரனாக** இருப்பான். இது வரலாறு காட்டும் பாடம்.

ஒருவன் — நாட்டு நலத்துக்காகப் பாடுபடுபவனாக இருக்க வேண்டும் என்றால் — அவனுக்கு பதவி உள்ளம் வேண்டுவதில்லை. தொண்டு செய்யும் உள்ளம் இருந்தாலே போதும். மந்திரியாகவோ — முதல் மந்திரியாகவோ ஒருவன் எவ்வளவு நாட்களுக்குத்தான் இருக்க முடியும்? மந்திரியாக இருப்பவன்கூடப் பலருக்குப் பதில்

சொல்லவேண்டிய நிலையில்தான் இருக்கிறான். எனவே தனி மனிதனுக நின்று தன்னலம் மறந்து பொதுநலங்கருதும் நல்லவனின் முன்னர் பட்டம் பதவிகள் நிறைந்த பெரு மனிதன் வலியற்றவனே ஆவான்.

நல்ல காரியமாக இருக்கிறவரையிலும் உண்மையிலேயே மக்களுக்காகச் சேவை செய்யவேண்டும் என்ற ஆர்வம் இருக்கிற வரையிலும் யாரும் எதற்குமே பயப்படத் தேவை இல்லை. பதவி பெரிதல்ல; பண்புதான் பெரிது.

இதை நினைவில் கொண்டு, எத்தனை தொல்லைகள் வரினும், எத்தனை துன்பங்கள் வரினும் சலியாது நாட்டு நலம் ஒன்றையே கருதி உழைக்க வேண்டும். உழைப்புத்தான் உயர்வுக்கு வழியாகும்.

கருத்து: **கு. காமராஜ்.**

*அட்டைப்படம் :*

## மந்திரி ஆர். வி. வெங்கட்ராமன்

தமிழ்நாடு எப்படியெல்லாம் விளங்கினுல் உலகப் புகழ்பெற்று விளங்க முடியும் என்று பலப்பல கனவுகள் கண்டு கவிதைகளாக வடித்துத் தந்தார் மகாகவி பாரதியார். பாரதியார் பாடல்களை வழிகாட்டியாகக் கொண்டு, பரந்து விரிந்த தமிழகத்தைப் பல்வகையாலும் மேம்படுத்தும் பணியில் மும்முரமாகத் திகழ்பவர் நம் மதிப்புக்குரிய அமைச்சர் திரு. வெங்கட்ராமன் ஆவர்.

புதியன விரும்பு; பூமி இழந்திடேல், போர்த்தொழில் பழகு, வானநூற் பயிற்சி கொள்; வையத் தலைமை கொள்; என்பன பாரதியாரின் ஆத்திசூடி. இதற்கு இலக்கியமாய் விளங்குபவர் நம் அமைச்சர்.

தொழில்கள் ஒரே இடத்தில் குவிந்துவிடாமல், பல இடங்களிலும் பரவலாக விரிந்து பயன் பெருகுமாறு தொழில்துறையில் வளங்களை விரிவுபடுத்தி வருபவர் திரு. வெங்கட்ராமன் ஆவர். அவர் தம் முயற்சி சிறக்கவும், பெருமை பரவவும் எல்லாம் வல்லான் அருள் கூட்டுவானுக.

# மத்திய கரும்பு ஆராய்ச்சி நிலையம்

D. R. ரங்கநாதன்

தென்னார்க்காடு மாவட்டத்தின் தலை நகரம் கடலூரின் வடமேற்குப் பகுதியில் மத்திய கரும்பு ஆராய்ச்சி நிலையம் இருக்கிறது. முன்னாள் சென்னை மாநிலத்தில் ஆந்திரப் பிரதேசம் பிரிவதற்கு முன்பு, அனகாபள்ளியில் மத்திய கரும்பு ஆராய்ச்சி நிலையம் இருந்துவந்தது. 1953ம் ஆண்டு சென்னை மாநிலம் பிரிவினை செய்யப்பட்டபொழுது இம் மத்திய ஆராய்ச்சி நிலையம் 1955ம் ஆண்டில் பாலூரில் துவங்கப்பட்டது. இவ்வூரில் இத்தகைய ஆராய்ச்சி நிலையம் நிறுவப் போதுமான நிலங்கள் கிடைக்கப்பெறுமையால் 1957ம் ஆண்டு கடலூரில் துவங்கப்பெற்று நடைபெற்று வருகிறது. இவ்வாராய்ச்சி நிலையத்தை யொட்டியுள்ள பண்ணை 136 ஏக்கர் பரப்பில் நிறுவப்பட்டுள்ளது. அவ்வாண்டிலேயே திருச்சி மாவட்டத்தில் குமாரமங்கலம் என்னும் ஊரில் ஒரு துணை நிலையம் துவங்கப்பட்டது. இங்கு நிலவளம் சரியாக இல்லாத காரணத்தால் அதே மாவட்டத்தில் உள்ள சிறுகுமணிக்கு மாற்றப்பட்டுள்ளது. இவைதவிர அமராவதி நகர், லட்சமாங்குடி, படாளம் போன்ற கரும்பாலைப் பகுதிகளில் கரும்பு வட்டாரப் பண்ணைகள் நிறுவப்பட்டுள்ளன.

இத்தகைய ஆராய்ச்சிப் பண்ணையின் குறிக்கோள் கரும்பின் தரத்தையும் விளைச்சலையும் உயர்த்துவதாகும். நல்ல தரமுள்ள கரும்பு விதைகளைப் பொறுக்கி வெவ்வேறு நிலங்களுக்குத் தகுதியான தரத்தைப் பயிரிட்டு அளித்தல், கரும்பின்கண் தோன்றும் பூச்சிகள் வியாதிகள் இவற்றினின்று பாதுகாப்பும் தடுப்பு முறைகளும் காணுதலும் இத்தகைய நிலையத்தின் குறிக்கோள்.

1934ம் ஆண்டில் வெளியான Co 419 என்ற கரும்பு எந்த சூழ் நிலையிலும் எத்தகு நிலவளத்திலும் விளையும் கரும்பினமாகும். இது குறைந்தது 40 முதல் 45 டன்கள் வரை பலன் கொடுப்பதுடன் நல்ல தரமுள்ள சாற்றினை (10% ccs) கொண்டது. அது விளைச்சலில் பெரும் பகுதியான இடங்களைப் பெற்றுள்ளது. இன்றளவும் மொத்த விளைச்சலில் 84 சதவிகிதம் இக் கரும்புதான் விளைகிறது. இருப்பினும் இன்று வளர்ச்சிக் கேந்திரங்களில் இதன் விளைவைக் குறைத்திருக்கின்றனர். இக் கரும்பு மெலிவானதாயும் சீக்கிரம் பூச்சிகளுக்கு இடமளிக்கும் வகையிலும் உள்ளது.

மேற்கண்டவைகளைப் போன்ற குறைபாடுகளுக்கென ஈடுபாடு கொடுக்கக்கூடிய வகையில் Co 449 என்னும் கரும்பு காணப்பட்டது. இது நல்ல நீர் வசதிக் குறைவான இடங்களிலும் விளையும். இருந்தாலும் Co. 419ஐ விட அதிகமான கரும்புப் பலன் அளிக்கும்.

இவ்வாராய்ச்சி நிலையத்தின் கண் இத்தகைய கரும்பு நிலைகளை இளம் வித்து நிலைமுதல் பலனளிக்கும் நிலைவரை நன்கு பாதுகாத்து ஆராய்ந்து வருகின்றனர். அவ்வப்போது மக்களிடம் தங்களது

முடிவை வெளியிட்டு ஊக்கம் கொடுக்கின்றனர்.

மத்திய ஆராய்ச்சி நிலையத்தின் கண் ரசாயனப் பகுதி, பூச்சி மற்றவைகளின் ஆராய்ச்சிப் பகுதி, ஆராய்ச்சிப் பண்ணை, மாதிரிப் பண்ணை, நிலவள ஆராய்ச்சி முதலியன உண்டு. இவையாவும் தனித்தனி நிபுணர்களின் கை வயப்பட்டு இயங்குகின்றன. இரசாயனப் பகுதியின் கண் கரும்பு பயிரிடவும், வளர்ந்து நன்கு பாதுகாக்கப்படவும் வேண்டிய ரசாயன முறைகளை ஆராயவும் மண் வளத்தின் தரமறிந்து அதற்கான இரசாயன வகைகளையும் எடுத்துக் காட்டிப் பணிபுரிகின்றது, உயிரணுப் பகுதியின் கண் கரும்பு பயிர்களின் கண் எத்தகைய பூச்சிகள் காணப்படுகின்றன அவைகள் செய்யும் அபாயகரமான நஷ்டங்கள், அவைகள் எவ்வாறு உண்டாகின்றன, அவைகள் வாழ்முறை இவைகளை நன்கு ஆராய்ந்து அவைகளைப் போக்குவதற்கான வகைககளையும் காண்கிறோம். அடுத்தொரு பகுதியில் இத்தகைய பூச்சிகளின் கொடுமையை வெறுத்து அடக்கிவிட என்ன செய்தல் வேண்டும், எதிர் பூச்சிகளை தயாரித்தல் போன்ற ஆராய்ச்சிகள் நடத்துகின்றனர். பண்ணைகளில், பல்வேறு பாசன, மண்வள சூழ்நிலையில், பலதரப்பட்ட கரும்புகள் பயிரிடப்பெற்று அவற்றினுல் கிடைக்கும் பலாபலன்களை ஆராய்ந்தறிகின்றனர். இங்கு நல்ல தரமுள்ள பலனளிக்கும் கரும்புகளின் விதைகளும் தயாரித்து விவசாயிகளுக்கு அளிக்கப்படுகின்றன.

அண்மையில் உரமிடும் முறையில் ஒருமுறை நன்கு பரிசீலனை செய்யப்பட்டு பலன் காணப்பட்டது. இதுவரை கரும்புப் பயிருக்காக 250 பவுண்டு நைட்ரஜன் உரம் ஒரு ஏகர் நிலப்பயிருக்கிடப்பட்டு வந்தன. தற்போதைய முறைப்படி 150 பவுண்டு உரத்திலேயே அந்தப் பலனை நாம் அடைந்துவிட முடியும் எனக் காணப்பட்டது. இம்முறையில் மண்ணுடன் 100 பவுண்ட் உரம் கலக்கப்பட்டு, மேலும் 50 பவுண்ட் உரத்தினை திரவ நிலையாக்கி மருந்துத் தெளிப்புக் கருவி மூலம் தெளிக்கப்படுகிறது. இம்முறையில் தெளித்தால் மண்ணுடன் கலப்பதைவிட இரு மடங்கு பயன் காணப்பட்டுள்ளது. இத்தகைய ஆராய்ச்சிகள் பலவுள.

இவ்வாராய்ச்சி நிலையத்தின் கண் பல்வேறு சோதனைகளும் முடிவுகளும் காணப்படுவதை மக்களுக்கு விவசாய விளம்பரத் துறையினர் எடுத்துச் செல்கின்றனர். இருப்பினும் இதனைப் பற்றி மக்கள் நன்கு அறிந்திலர் எனக் கொள்ளுதலும் கூடும். அதற்கு முயற்சியில் இதன்கண் செயல்படும் பல்வேறு பகுதிகளின்கண் நடைபெறும் சோதனைகள், அவற்றின் நல் முடிவுகள், பயன்தரும் பலன்கள், விவசாய முன்னேற்றத்தைக் காட்டும் வகை முறைகள், கரும்புப் பயிரினுக்குறும் நோய்கள், அவைகளைக் களையவும் தடுக்கவும் வேண்டிய முறைகள் இவற்றை நன்கு மக்கள் பயன்பெற முயற்சித்தலே இக்கட்டுரையின் முதற்கண் நோக்கம்.

மத்திய கரும்பு ஆராய்ச்சி நிலையம் சென்னை விவசாயத் துறையின் இயக்குநர் நேர் பார்வையில் இயங்குகிறது எனினும் இதன்செலவினங்கள் பெரும்பகுதி கரும்பு செஸ் நிதியிலிருந்துதான் ஒதுக்கீடு செய்யப்படுகிறது. இம் மாநிலத்தில் கடலூரில் மத்திய ஆராய்ச்சிப் பண்ணையும், குடி-

யாத்தம், சிறுகுமணி, என்ற இரு விடங்களில் துணை நிலையங்களும், அமராவதி நகர், லட்சமான்குடி, படாளம் போன்ற இடங்களில் வட்டாரப் பண்ணைகளும் நிறுவப் பட்டுள்ளன. இவையாவும் மத்திய ஆராய்ச்சி நிலையத் தலைவரான கரும்பு நிபுணர் அவர்களின் நேரடிப் பார்வையில் இயங்குகின்றன. இவரது ஆராய்ச்சிகளுக்கு உறுதுணையாக விவசாயத்துறையின் நிபுணர்களின் உதவி உள்ளது. மத்திய ஆராய்ச்சி நிலையத்தில் ரசாயனப் பகுதி, நிலவளப்பகுதி, பூச்சியாராய்ச்சிப் பகுதி, உயிரணுப் பகுதி, என்னும் பகுதிகளில் தனி நிபுணர்கள் இப்பெருநிபுணரின் கீழ் பணியாற்றுகின்றனர். அண்மையில் நிலத்தரம் ஆராய்வதற்கென தனியொரு பகுதியும் இங்கு நிறுவப்பட்டுள்ளது.



## சோஷலிஸம்

''வேலை, வீடு, கல்வி, உணவு உடை ஆகியவை இல்லாமல் கோடிக்கணக்கான மக்கள் இன்னும் கஷ்டப் பட்டுக்கொண்டுதான் இருக்கிறார்கள். இந்த அவல நிலைமையை நாம் மாற்றியாக வேண்டும். எனவேதான் புதியதொரு சோஷலிஸ சமுதாயம் அமைப்பதை நாம் லட்சியமாகக் கொண்டிருக்கிறோம்.

— காமராஜ்

## காங்கிரஸின் சாதனை

''நாட்டிற்கு சுதந்திரம்பெறும் பெரும்பொறுப்பை அன்று காங்கிரஸ் ஏற்றுக்கொண்டதைப் போலவே, புதிய சோஷலிஸ சமுதாயத்தை அமைக்கும் பெரும் பொறுப்பையும் காங்கிரஸ் இன்று ஏற்றுக்கொண்டுள்ளது. சுதந்திரம் பெறுவதற்கு நாம் என்னென்ன தியாகங்களைச் செய்தோமோ அதேபோல தேசத்தின் முன்னேற்றத்திற்கும் பல தியாகங்களைச் செய்வதற்கு நாம் தயாராக இருக்கவேண்டும். சோஷலிஸ லட்சியத்தைநோக்கி நாம் முன்னேறியிருக்கிறோம். சோஷலிஸ சமுதாயத்தை ஏற்படுத்துவதற்கு காங்கிரஸ் கொடியின் கீழ் ஐக்கியத்துடனும் உறுதியுடனும் நாம் அனைவரும் பாடுபட வேண்டும்.

— காமராஜ்

# மக்கட் தொடர்பு

**வே. தில்லைநாயகம், எம். ஏ., எம். எல். எஸ்., பி. டி.**
*(நூலகர், கன்னிமாரா நூலகம், சென்னை,)*

எல்லார்க்கும் எல்லாமென்றிருப்பதான இடம் நோக்கி நடக்கின்ற இந்த வையம் இன்று. எனவே நாட்டு நடவடிக்கை ஒவ்வொன்றும் மக்கள் அனைவருக்கும் பயன் தருவதாக அமைய வேண்டும். அதுவும் மக்களுக்காக, மக்களால், மக்களே நடத்துவதாக இருக்க வேண்டும். அப்போது தான் மக்கள் ஒவ்வொருவரும் தங்களைத் தாங்கள் ஆட்சி செய்து கொள்வதிலே பங்கேற்கிறோம் என்ற நினைப்புப் பெற—மக்கள் தொடர்பு இருக்க—வழி பிறக்கும்.

வாழ்வுத் துறைகளில் ஒன்றாக நூலகத் துறையும் அவ்வாறே செயற்படவேண்டும். அப்படி இருந்தால்தான் நூலால் உலகளக்கும் நூலகப் பணி பண்புடையதாக, பயனுடையதாக அமையும். அதற்கு வழி என்ன? நூற்கள் படிப்பதற்கே; ஆளுக்கொரு நூல்; நூலுக்கோர் ஆள்; காலங்கருது; நூலகம் வளரும் என்ற பஞ்சசீலம் நூற்கள், வாசகர்கள், நூலகர்கள் என்ற முக்கூட்டணியால் செயற்படும் போது மக்கள் அனைவரையும் அதில் ஈடுபாடு கொள்ளச் செய்யவேண்டும். இப்படி மக்களைப் பணியில் ஈடுபடச் செய்யும் முயற்சி 'மக்கட் தொடர்பு' எனப்படும்.

**தொடர்பு ஏன்?**

நூலகம் — நூலகப்பணி — இன்னும் நாட்டு மக்களில் பெரும்பாலோருக்கு எட்டாக் கனியாகவே தோற்றமளிக்கிறது. இது ஏன்?

"நூலகம் ஏதோ ஒரு நெருங்க முடியாத இடம்; மேதாவிகள், விற்பன்னர்கள், பண்டிதர்கள், பெரிய மனிதர்கள் மட்டுமே செல்லக் கூடிய இடம்; சாதாரண மனிதனுக்கு அங்கு இடமில்லை" என்று முன்னுள் நூலக நிலையையே எண்ணிக் கொண்டு ஒதுங்கி விடுகின்றனர் பலர்.

"நூலகத்தில் காண்பது வாழ்க்கைக்குப் பயன்படாது; அங்கு செல்வது வெட்டி வேலை; பொழுது போக்கற்றவர்களும், பொல்லாங்கு பேசித் திரிபவர்களும் கூடிக் குந்திக்கிடக்கும் இடம் அது" என்று விலகிவிடுகின்றனர் சிலர்.

"நூலகம் சென்றால், நூலிரவல் பெற வேண்டுமானால் கட்டணம் கட்டவேண்டும்;

கட்டணம் கட்டி, படித்து அறிவுபெற்றுச் செய்ய போவது ஒன்றுமில்லை'' என்று பின் தங்கி விடுகின்றனர் சிலர்.

''பள்ளியில் படித்தாகிவிட்டது; கல்லூரிக் கல்வி முடிந்தாயிற்று; வேலைக்கு வந்து சம்பளமும் ஏதோ கிடைக்கிறது; இனி நாம் படித்துத் தெரிந்துகொள்ள ஒன்றுமில்லை; படிக்கவேண்டியதில்லை'' என்ற நினைப்பில் அலட்சியப்படுத்தி அகன்றுவிடுகின்றனர் பலர்.

இவர்களைப் போலில்லாமல் நூலகம் பயனுள்ளது என்று அறிந்து பயன்படுத்துவோர் கூட நூலகங்களின் பணியைச் சரிவர உணர்ந்து பயன்படுத்திக் கொள்வதில்லை. தமிழ்நாட்டில் பல்கலைக்கழகப் பட்டம் பெற்றவர்களில் எத்தனை பேர் திங்கட்கொரு தடவையாவது நூலகங்களுக்குச் சென்று வருகின்றனர்?

அறிவுக்கூடமாய் — ஆய்வு நிலையமாய்—சமுதாய மையமாய் பண்பூட்டும் பல்கலைக் கழகமாய்—எல்லார்க்கும் எல்லாமென்றிருப்பதான இடமாய்— இருந்துவரும் நூலகம் இப்படிக் கவனிக்கப்படாது இருப்பதின் காரணம் என்ன?

நூலகங்களின் அமைப்பு, நடைமுறை, பணிமுறை, பயன் முதலியன தெரியாமல், தெரிந்துகொள்ளமுயலாமல், தெரிந்துகொள்ளமுடியாமல், தெரிந்துகொள்ளச் செய்யாமையால் — மக்கட் தொடர்பு இன்மையால் — நூலகப்பணி மக்களுக்கு எட்டவில்லை சரியாக எட்டும் வழி?

## விளம்பரம்

முதல்வழி விளம்பரம் என்னலாம். உடனே பூக்கடைக்கு விளம்பரமா என்ற கேள்வி எழும். எழுந்தால் ஆம்; ஆம் மட்டுமல்ல அத்தியாவசியமும் கூட என்றுதான் சொல்ல வேண்டும். ஏனெனில் இன்று மக்கள் வாழ்வுமுன்போல் ஒன்றியில்லை; விரிந்துவிட்டது; பரவிவிட்டது. இப்போது ஒருவருக்கொருவர் நெருங்கிய தொடர்பு இல்லை கிராமங்களை விட்டுவிட்டால். எனவே அதை மாற்ற மக்கட் தொடர்பு ஏற்படுத்த ஒரு தானம் தேவை. அப்போது தான் பணியின் நோக்கமும் முறையும், பயனும் பலரும் அறியமுடியும்; அறிந்து தொடர்பு கொள்ள முடியும்; தொடர்பு கொண்டு பங்கேற்க முடியும்; பங்கேற்றுப் பயனடைய முடியும். இத்தகு விளம்பரம் பொதுமுறை, தனிமுறை என்று இருபிரிவாகும்.

## பொதுமுறை

இன்று நாம் 'ஐக்கிய நாடுகள் அவை தினம்' கொண்டாடுவது போல, 'ஒருமைப் பாட்டுத் தினம்' அனுசரிப்பதுபோல, 'ஐந்தாண்டுத்திட்டம்' பற்றி விளக்கிக் கூறுவது போல், 'கைத்தறி வாரம்' நடத்துவது போல், 'கல்வி வாரம்' கடைப்

பிடிப்பதுபோல், 'நூலக வாரம்' நடத்தலாம்.

அப்போது நூல் என்றல் என்ன? நூற்களின் வகையாது? நாடு திருத்திய நந்நூற்கள் யாவை? நூலகம் என்றல் என்ன? நூலகப் பணி என்றல் என்ன? ஏன் நூலகப் பணி நடக்கிறது? எப்படி நூலகப் பணி நடக்கிறது? உலக நூலக இயக்கம் எப்படி நடக்கிறது? இந்திய நூலக இயக்கம் எப்படிச் செயற்படுகிறது? தமிழ் நூலக இயக்கத்தின் நிலை என்ன? உலகில் ஒவ்வொரு நாட்டின் பரப்பு, மக்கட் தொகை, படித்தவர்கள் எண்ணிக்கை, அவைகளிலிருக்கும் நூற்களின் எண்ணிக்கை, பயன்பட்ட நூற்களின் எண்ணிக்கை, தலைக்குப் பயன்பட்ட நூற்கள் எண்ணிக்கை, அதற்குத் தலைக்குச் செலவான தொகை, அதற்குப்பொதுச் செலவுக்கும், கல்விச் செலவுக்குமுள்ள விழுக்காடு என்ன? என்பது போன்றவைகளையும் நூலகப் பணியிலே குறிப்பிடத் தக்க முறையிலே பணியாற்றிய நூலகங்களின் முயற்சி, நூலகர்களின் முயற்சி, நூலகத்தார்களின் முயற்சி, நூலகப்பயனல் முன்னேறியவர்களின் முயற்சி முதலியவைகளையும் விளக்கலாம்.

இதற்குத் துணையாக மடல்கள், சுவரொட்டிகள், நினைவு மலர்கள், துண்டுப் பிரசுரங்கள் வெளியிடலாம். இப்பணிக்குச் செய்தித்தாள்கள், பருவத்தாள்கள், பருவ இதழ்கள், வானெலி, தொலைக் காட்சி முதலிய சாதனைங்களைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

இத்தகு விளம்பரத்தை நூலகக் கழகங்கள் முன்னின்று தொடங்கவேண்டும். அரசின் ஆதரவையும் பெற்றுக்கொள்ள வேண்டும். அடுத்து அந்த விளம்பரத்தைத் திட்டமிட்டுத் தொடர்ந்து, புதுப்புது வழிகளிலே, தெளிவாக, உள்ளத்தைத் தொடும்படி செய்ய வேண்டும். இம் முறையிலே ஐக்கிய அமெரிக்க நூலகக் கழகமும், சப்பான் நூலகக் கழகமும், பிரிட்டன் நூலகக் கழகமும்பாடுபட்டுவருகின்றன. இந்திய நூலகக் கழகம் இது பற்றி என்று நினைக்குமோ?

### தனிமுறை

பொதுமுறையில் ஈர்க்கப்பட்ட மக்கள் நூலகம் வரத் தொடங்குவர். வந்தவர் தொடர்ந்துவர, வரவேண்டியவர் வருவதற்காக நூலகம் ஒவ்வொன்றும் தனிப்பட்ட முறையிலே—அதனதன் பணியை, பணி முறையை, பணி வெற்றியை—விளக்கிக் கொண்டேயிருக்கவேண்டும். ஏனெனில் தூங்கா விளக்குக்கும் தூண்டு கோல் வேண்டியிருக்கிறது. அது எப்படி?

### செய்தித்தாள்

குறைந்த செலவில் கூடிய பயன் பெறு முறை செய்தித்

தாள்களைப் பயன்படுத்திக் கொள்வதாகும். இதற்குத் தலச் செய்தித்தாள்கள் ஒத்துழைப்புக் கிடைக்கும். கிடைக்கும் போது நேரடித் தொடர்பு வைத்துக் கொண்டு நூலகச் செய்திகளை—புதுப் பணிகளை —அண்மையச் சேர்க்கைகளை — வந்த வாசகர் விவரங்களை — பயன்பட்ட நூற்கள் எண்ணிக்கை விவரங்களை-பொருத்தமாக, சுருக்கமாக, உடனே அச்சுக்குப் போவதற்கேற்ப எழுதியனுப்பி வெளியிடச் செய்யலாம். முடியுமானுல் நூலகத் தொடர்பான துணுக்குகளை, கட்டுரைகளை அவ்வப்போது வெளியிட முயலலாம்.

### செய்தி

இதற்கடுத்து ஒவ்வொரு நூலகமும்தன் நிலைக்கேற்பத்தங்கள் செய்தி (news sheet)களை — நூலகச் சிறப்புச் செய்திகளை — புதுப் பணிகளை — அண்மையச் சேர்க்கைகளை — சிறு சிறு நூற்குறைகளை — பகர்ப்புப் பொறிப்படி (mimeographed) களாகத் தயாரித்து நூலக உறுப்பினர்களுக்கும், வாசகர்களுக்கும் கொடுத்து வரலாம்.

### செய்தியறிக்கை

வாய்ப்பும் வசதியுங்கொண்ட நூலகங்கள், தங்கள் பணிகளை விளக்கிச் செய்தியறிக்கை (Bulletin) வெளியிடலாம்.இதற்கும் காலமும், பணமும், ஆளும் அதிகம் பிடிக்கும்.

### சுவரொட்டிகள்

ஒவ்வொரு நூலகமும் ஆண்டுக் கொருமுறை நூலக வாரம் கொண்டாடும்போது சுவரொட்டி (Poster)கள் வெளியிடலாம். அவை ஊரின் முக்கிய இடங்களிலே - நாற்சந்திகளிலே —கல்வி நிலையங்களுக்கருகிலே —இளைஞர் சங்கங்களிலே— பிற கழகங்களிலே—எடுப்பாக ஒட்டப்பட அல்லது வைக்கப் படவேண்டும்.

### நூலக விசிறி

கோடைகாலத்தில் நடக்கும் திருவிழாக்களிலே வணிக விளம்பரம் பொறிக்கப்பட்ட பனை அல்லது தென்னை ஓலை விசிறிகள் மக்களுக்கு வினியோகமாவதைப் பலர் பார்த்திருக்கலாம். அதுபோல நூலக விளம்பர விசிறிகளை வரும் நூலக வாரக் கொண்டாட்டத்தின் போது கொடுக்க முயன்ருல் என்ன? நூலகத்தால் முடியாவிட்டாலும் நூலக அன்பர்கள் உதவி கொண்டு செய்ய முடியாதா?

### வீட்டளவை

இப்போதெல்லாம் எந்த ஒரு காரியத்தையும் — தேர்தல் ஆகட்டும், கொசு ஒழிப்பு ஆகட்டும், அம்மை குத்தும் முயற்சி ஆகட்டும்—வீடுவீடாகச் சென்று வீட்டளவை (House survey) நடத்திச் செயலாற்றுவதைக் காண்கிரோம். அதுபோலவே ஒவ்வொரு நூலகமும் தங்கள் பணியாளர்களை—

அல்லது நூலக அன்பர்களை— வீடுவீடாக அனுப்பி படித்தவர்கள் எண்ணிக்கை, அவர் தம் தரம், அவர்கள் தேவை முதலியவைகளைத் தெரிந்து கொண்டு நூலகப்பணியை விரிவுபடுத்தலாம்.

### நேரடிப் பேச்சு

எதையும் நேரடிப் பேச்சால் முடிப்பது எளிது. இதனை மனத்தில் கொண்டு நூலகப்பணியாளரொருவரை—பேச்சு முறை அறிந்தவரொருவரை-ஒவ்வொரு வாசகரையும் — நூலகத்திற்கு வரும் வாசகரையும்—நூலகத்திற்கு வரக்கூடிய வாசகரையும் கண்டு பேசச் செய்யலாம். அவர் ஊரில் நடக்கும் கல்வி நிலையநிகழ்ச்சிகள், நூற்பதிப்பு, விற்பனையாளர்கள் சங்க நிகழ்ச்சிகள், பிற பொது நிலைய நிகழ்ச்சிகள் முதலியவைகளில் கலந்து கொண்டு இடமறிந்து, காலமறிந்து நூலகப் பணியை விளக்க முயற்சி செய்யலாம்.

### சன்னல் காட்சி

இன்று பெரும்பாலான வியாபார நிலையங்கள் தங்கள் பொருள்களைக் கண்ணாடிச் சன்னல்களில் வைத்து—கண்ணாடிச் சுவர்களின் பின்னே வைத்து—இரவில் வண்ண விளக்குகளும் இணைத்து — விளம்பரம் செய்வதைப் பார்க்கிறோம். தெருவில் போவார் கண்ணையும் கருத்தையும் கவர்ந்துவிடுகின்றன இக் காட்சிப் பொருள்கள்.

இம் முறையை நூலகங்களும் கையாளலாம். முடியுமானால் நூலகத்தின் ஒரு பகுதியை—தெருப் பக்கப் பகுதியை—கண்ணாடிச் சுவராக அமைத்துவிடலாம். அது நூலகப்பணியை உள்ளிருந்தவாறே வெளியில்—நடைபாதையில் — செல்வாருக்கு அறிவுறுத்தும். சுவரின் கடைப் பகுதிகளிலே காட்சியாக நூற்களை—நூலகப் பணி வெற்றியை—புள்ளிவிவரமாக, ஓவிய விளக்கமாக — நடக்கவிருக்கும் நிகழ்ச்சி நிரல்களை - வைத்துக் காட்டலாம்.

இம் முயற்சியைச் சென்னை மௌண்டுரோடில் அமர்ந்திருக்கும் ஐக்கிய அமெரிக்க நாடுகள் தகவல் நூலக அமைப்பில் காணலாம். அதற்கருகே அமைந்திருக்கும் சென்னை மாவட்ட மைய நூலகமும் அம்முறையிலே செயற்பட முடியுமானல்...?

### மிகுவிருப்புப் பகுதிகள்

ஒவ்வொரு நூலகத்திலும் செய்தித்தாள் பகுதியும், பருவ மலர்ப் பகுதியும் எந்நேரமும் கூட்டமாயிருப்பதைக் காணலாம். காரணம் அப்பகுதி வாசகரில் பெரும்பாலோர் விரும்பும் —மிகுவிருப்பைப் பூர்த்தி செய்யும்—செய்தித்தாளும், பிறவும் கிடைக்கச் செய்வது தான். எனவே அப்பகுதிக்கு வரும் வாசகர்களைக் குறிப்புதவியாளர் தனித்தனியாகச் சந்தித்து உயரிலக்கியங்கள் படிக்க ஊக்க வேண்டும். இது மெதுவாக

நூலகத்தின் பணியையும், நூலகரின் தரத்தையும் உயர்த்தும்.

**வசதி**

நூலகம் வருகிற வாசகர் ஒவ்வொருவரும் வசதியாக அமர்ந்து படிக்க ஏற்ற வகையில் இருக்கைகள்—மேசைகள், நாற்காலிகள்—இருக்க வேண்டும். நாற்காலிகள் பிரம்புத் தளமிட்டு, கைப்பிடிகள் கொண்டு, சாய்ந்து அமர ஏற்பாயிருக்கவேண்டும். மேசைகளின் ஓரங்கள் கூராயில்லாமல், மழுக்கப்பட்டு, இடைவெளியில்லாமல், நாள்தோறும் துடைத்துச் சுத்தப்படுத்த வாய்ப்பாக இருக்கவேண்டும். வெளியே ஓடிக்கொண்டிருக்கும் வெப்பநிலை உள்ளிருப்பாரைத் தாக்காவண்ணம் மின்விசிறிகளும் பிறவும் அமைக்கப்பட்டிருக்க வேண்டும்.

**அமைதி**

நூலகம் இருக்குமிடம் அமைதியாக இருக்கவேண்டும். நூலகம் சுறுசுறுப்பாக வேலைசெய்து கொண்டிருக்கும் போதும், நூலகம் வந்தவர் அமைதியாக இருந்து படிக்க வாய்ப்பாயிருக்க வேண்டும். அதற்கேற்ப நூலகப் பணியாளர்கள் உதவி செய்ய வேண்டும்.

**கவர்ச்சி**

நூலகத்தின் ஒவ்வொரு பகுதியும் தூசி தும்பின்றிச் சுத்தமாயிருக்கவேண்டும். மேசை, நாற்காலிகள் நூலகம் திறந்ததும் சுத்தமாக்கப் படவேண்டும். நூலகத்தில் வைக்கப்பட்டிருக்கும் வழிகாட்டி அட்டைகளும், அறிவிப்புப்பலகைகளும்பிறவும் கவர்ச்சியாக அமைக்கப்பட வேண்டும். அறிவிப்பு பலகைகளில் புதிதாய் வந்திருக்கும் நூற்களின் விவரங்கள் நூலட்டைகள், நூலகப் புள்ளி விவரங்கள் முதலியவைகளை இணைத்து வைக்கப்படவேண்டும் நூலகம் ஒவ்வொரு நாளும், முடியாவிட்டால் வாரமொரு முறை, அல்லது திங்களொரு முறை, அதுவும் முடியாவிட்டால் ஆண்டிற்கொரு முறையாவது ஒரு புதுக்கவர்ச்சியைக் கூட்டவேண்டும்.

**இளைப்பாற வாய்ப்பு**

இப்படி யெல்லாம் கவரப்பட்டு நூலகம் வந்த வாசகர் படித்துக் களைத்தபோது இளைப்பாற (relaxation) வாய்ப்பிருக்க வேண்டும், முடியுமானால் காக்கப்பட்ட திறந்த புல்வெளியில் உடலாரச் சாய்ந்து கொள்ளச் சாய்வு நாற்காலிகள் இருக்க வேண்டும். வானொலிப் பெட்டி இருக்கலாம். சிற்றுண்டிச்சாலையருகிலிருக்க வேண்டும், சிறு நீர் கழிக்க வசதியும், முகம், கை, கால் கழுவிக்கொண்டு தலை வாரிக்கொள்ள கண்ணாடியமைந்த சிற்றறை வசதியும் கட்டாயம் வேண்டும்.

**விரிவுப் பணி**

மக்கட் தொடர்பு விளம்பரத்தோடு நிறைந்து விடாது. நல்ல பணி நல்லதொரு விளம்பரம் என்பதை மறந்துவிடக் கூடாது.

அந்தப் பணியும் நூலகத்தோடு நின்றுவிடுவதில்லை. வெளியி லும் தொடரப்படவேண்டும். அப்படித் தொடரும் பணி விரிவுப்பணி (Extension services) எனப் பெயர்பெறும். நூலகத்திற்கு வரமுடியாமல், வந்து பயனடைய முடியாமல் இருப்பவர்களும் பலனடையச் செய்ய வேண்டும். அவை யாவன ;

### படியாதாருக்கு

இன்று இந்தியாவில் நூற்றுக்கு இருபத்தைந்து பேரே எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள். பிறரெல்லாம் கண்ணிருந்தும் குருடராய் உள்ளனர். எனவே அவர்களும் பலனடையும் வண்ணம் நூலகங்களில் செய்தித்தாள்களும், பிறவும் படித்துக்காட்டப்படவேண்டும். இன்று ஊரெல்லாம் அமைந்துவரும் சமூகக் கல்வி நிலையங்களை—சமூகக் கல்வி நிலையப் பணியாளர்களை — இதற்குப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

ருசியாவில் புரட்சிக்குப் பின் இந்த முயற்சியால்தான்—நூலகப் பணியால்தான்—பெரும்பாலான மக்கள் கல்வியறிவும் கருத்துயர்வும் பெற்றனர்.

### படித்தவருக்கு

இதைத் தொடர்ந்து படித்தவர்களோடு மேலும் தொடர்பு கொள்ள இரசிகர் மன்றங்கள் அமைக்கலாம், அவை மூலம் நூலக உதவியுடன் பொதுச் செய்திகளை—இலக்கியங்களை — விஞ்ஞான முன்னேற்றங்களைப் பற்றித் தெரிந்துகொள்ள அடிக்கடி கூட்டங்கள் நடத்தலாம். தில்லிப் பொது நூலகம் இம்முயற்சியில் ஈடுபட்டு வருகிறது.

### மகளிருக்கு

நம் நாட்டில் படித்தவர்கள் குறைவு. அதில் பெண்களில் படித்தவர்கள் மிகவும் குறைவு. அவர்களும் சமூக அமைப்பால் - குடும்பப் பொறுப்பால்—இயற்கையான அடக்கத்தால் வீட்டை விட்டு வெளியேறி நூலகம் வந்து போக முடிவதில்லை. எனவே அவர்களும் பலனடைய வேண்டும். அதற்கு நூலகம் வழிகாண வேண்டும்.

அம்முறையிலே இன்று சில இடங்களிலே ஆசிரியைகள் தங்கள் பொறுப்பிலே நூலகங்களிலே நூற்கள் பெற்று, தங்கள் இருப்பிடத்திற் கருகிலிருக்கும் பெண்களுக்குக் கொடுத்துதவி வருகிறார்கள். இது ஊரெங்கும் பரவும் வகை செய்தல் வேண்டும்.

### சிறுவருக்கு

இன்றையச் சிறுவரே நாளைய மன்னர்கள். எனவே அவர்கள் இன்றே படித்து முன்னேற வழி வேண்டும். அவர்களுக்குதவியாக இன்று சில இடங்களில் குழந்தைகள் பகுதி இருக்கின்றன. இது எல்லா இடங்களிலும் பரவவேண்டும். அது மட்டுமல்ல. பள்ளிகளிலே படிப்பதற்கும் உதவியாகப் பள்ளிகளோடு தொடர்பு கொண்டு நூற்கள் கடனாகத் தந்துதவ

வேண்டும். இப்படித் தரப்படும் நூற்கள் திங்கட்கொருமுறை மாற்றப்பட வேண்டும்.

### பிணியாளர்களுக்கு

உடல் நலம் பாதிக்கப்பட்டு படுத்தபடுக்கையாய், நடமாட முடியாமல் கிடப்பவர்களுக்கும் நூலகம் உதவ முன் வரவேண்டும். இம்முறையிலே இன்று சில மாவட்ட மைய நூலகங்கள் மருத்துவமனை நூலகப் பணியை நடத்தி வருகின்றன. இது எல்லா இடங்களுக்கும் பரப்பப் படவேண்டும்.

### குற்றவாளிகளுக்கு

நூலகப் பணி நல்லவர்களுக்கு மட்டும் உரியதல்ல. காலக் கோளாறால் குற்றவாளிகளாய் சிறைகளிலே வாடுபவர்களும் உதவிக்கு — நூலக உதவிக்கு உரியவர்களே. அவர்கள் திருத் தப்பட வேண்டும். அதற்கு நல்ல முயற்சி நூலகப் பணி தான். எனவே முடிந்தமட்டும் ஒவ்வொரு நூலகமும் அதது அமைந்திருக்கும் வட்டார சிறை வாழ் மக்களுக்கும் நூலகப் பணியை எட்டவிட வேண்டும்.

### பிற முயற்சிகள்

இப்படி ஒல்லும் வகையெல் லாம் நூலகப் பணி நடக்க நூலகப் பணியாளர்கள் பிற துறைப் பணியாளர்களோடு தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு சமயம் வாய்க்கும்போதெல்லாம் நூலகக் கருத்துக்களை அறி வித்து வரவேண்டும்.

அம்முறையிலே புலவர்களின் உதவிகொண்டு கவி யரங்கம் கூட்டி நூலகம் பற்றிப் பாடச் செய்யலாம். அதையே வானொலி மூலம் ஒலி பரப்பச் செய்யலாம். அடுத்து அதனையே நூலாக்கி வெளியிடலாம்.

இசைஞர்களின் உதவி கொண்டு 'வில்லுப் பாட்டு' முறையால், காலட்சேப முறை யால், இசையரங்கு முறையால் நூலகக் கருத்தைப் பரப்பலாம்.

### சமூக உணர்வு

இதுவரை மக்கட் தொடர்பு கொள்ள நூலகம் மக்களின் தனி உணர்வைத் தொட்டு இசைத்துப் பயன்பெறு முறை யைக் கண்டோம். மக்களின் தனியுணர்வே இவ்வளவு உதவு மானல் மக்கட் தொகுதியின் சமூக உணர்வு எவ்வளவு பயன் படக் கூடும்! அதையும் ஒரு ஊக்கி (activating force) யாகப் பயன்படுத்த முடியுமானல்? நமது முன்னோர்கள் அப்படித் தான் செயற்கரிய செயல்களைச் செய்து முடித்திருக்கிறார்கள்.

### சமய உணர்வு

சமூக வுணர்வுகளில் சிறப் பிடம் பெறுவது சமயவுணர்வு. அச்சமய வுணர்வைப் பயன் படுத்தித்தான் நமது முன்னோர் கள் பெரும் பெரும் கோயில் களைக் கட்டி முடித்திருக்கிறார் கள். அஃதில்லாது போனல் உச்சிக் காலத்தின் நிழலைக் கீழே படவிடாது அகன்றமைந்த தஞ் சைப் பெருவுடையார் கோயி

லும், மதுரை மீனாட்சியம்மன் கோயிலும், அதுபோன்ற பிற கோயில்களும் எழுந்திருக்க முடியாது.

இன்றுங்கூடத் திருவிழாக் காலங்களில் பெரும்பாலான ஊர்களில் ஊரார் எல்லாம் ஒன்று சேர்ந்து ஊதிய மேது மில்லாது கோயில் வேலைகளைச் செய்து முடிப்பதைக் காணலாம். அத்தனைக்கும் முத்தாப்பு வைப்பது போல விழாவின் கடைசிக் கட்டமாம் தேரிழுக்கும் காட்சியே காட்சி!

## ஆளுமை யுணர்வு

சமய வுணர்வுக்குப் பின்புறத்தில் ஒவ்வொரு பெரும் செயலையும் ஒரு பெரிய தலைவர் தன் ஆளுமை (Personality) யால் செய்து முடித்திருப்பதைக் காண்கிறோம். இவ் வுணர்வு அந்தந்தக் காலத்து மக்கள் தங்கள் தலைவரின் பால் கொண்ட பக்தி உணர்வால் — ஆளுமை யுணர்வின் பலத்தால்—அவர்கள் காலாலிட்ட வேலைகளைத் தலையாலே செய்து முடித்திருக்கிறார்கள்.

அன்றென்ன? இன்று நமது தலைமுறையில் வெள்ளையரை விரட்ட காந்தியடிகளின் தலைமையில் நாடே திரண்டெழுந்ததைக் காணவில்லையா நாம்! இது எப்படி? ஆளுமை யுணர்வு தானே?

## பணி யுணர்வு

இத்தகு ஆளுமை யுணர்வை எங்ஙனம் பெற்றார் காந்தியடிகள்? பணப்பெருக்காலா? இல்லை; உடல் பலத்தாலா? சொல்ல முடியாது! அறிவுத் திறத்தாலா? அவரைவிட அறிவாளிகள் அநேகருண்டு. பின் எப்படி? பணித்திறத்தால்! கத்தியின்றி இரத்தமின்றி யுத்தமொன்று நடத்தினார் வெள்ளையரை எதிர்த்து! அதுவும் எதற்காக? தாழ்வுற்று வறுமை மிஞ்சி, விடுதலை தவறிக் கெட்டு பாழ்பட்டு நின்றதாமோர் பாரதந் தன்னை வாழ்விக்க வரிந்து கட்டிக் கொண்டு முன் வந்தார். அதுவும் எப்படி? தத்துவம் பேசியா? இல்லை; போதனை தந்தா? அதுவுமில்லை. தானே நடந்து காட்டினார் சொல்லிய படியே. அது மக்களைக் கவர்ந்தது. அவர் நாவசைய நாடே அசைந்து செயற்பட்டது. நல் வாழ்வுக்கான சுதந்திரம் பெற்றது.

அம் முறையிலே நூலகப் பணி முயற்சியும் — நோக்கத்தை முயற்சியை — பயனை — நடத்திக் காட்டி வெற்றி பெற முடியுமா? பலருக்குச் சந்தேகம் தான் எழும். ஆனால் நூலகப் பணி நடத்திக் காட்டி வெற்றிபெற்றிருக்கிறது, நாம் சுதந்திரம் பெற்ற காலத்தில் தொடங்கி! ஆம்! உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை.

## நூலகப்பணி முயற்சி

1947-ஆம் ஆண்டு! பணம் நிறைந்த, கல்வியறிவு நிறைந்த, நல்ல முயற்சிகள் நிறைந்த நாடு! ஒரு அம்மையார் செய்தித்தாள்

படித்துக் கொண்டிருந்தார். அதில் ஒரு மூலையிலே சின்ன எழுத்திலே சாதாரணச் செய்தி ஒன்று. அதுவும் எப்படி?

"இந்த மாநிலத்தில் மக்களில் நூற்றுக்கு எண்பது பேர் கிராமப் பகுதிகளிலே வாழ்கின்றனர். அவர்களுக்கு எந்த விதமான நூலகப் பணி உதவியும் கிடைக்க வழியில்லை."

இந்தச் செய்தி அம்மையாரின் கண்கள் வழியாகக் கருத்தைத் தொட்டது. உள்ளம் உறுத்தப் பெற்றது. சிந்தனை சிந்திக்கத் தொடங்கியது. மனிதரின் உள்ளத்திலே உறங்கிக் கிடக்கும் சமூகவுணர்வு--பணியுணர்வு — விழித்துக் கொண்டது.

"நூலகம் என்பது ஆமை-அதில்
நுடங்கிக் கிடக்கும் உண்மை-நாடி
தேடக் கிடைக்கும் பாதி-பணி
தொடங்கக் கிடைக்கும் மீதி"

என்று பாடவில்லை.

ஆனால் எண்ணிக்கொண்டது.

"எனக்கோ ஓய்விருக்கிறது. நூலகத்தைப் பற்றி—நூலகப் பணியைப் பற்றித் தெரிந்த ஒருவர் எனக்குத் துணையாகக் கிடைத்தால் என்னால் உதவ முடியாதா?"—என்று தனக்குத் தானே சொல்லிக்கொண்டார்.

எண்ணம் செயலாயிற்று. தன் இருப்பிடத்தைச் சுற்றியுள்ள கிராமங்களுக்குச் சென்று வந்தார். கல்வி நிலையைக் கணக்கிட்டார். நூலகப்பணி பற்றி உசாவியறிந்தார். அந்த மாநில நூலகக் கழகம் நூலகப் பணிக்காக—நூலக உதவிக்காக—சட்டமியற்ற முயன்று கொண்டிருந்தது. ஆனால் அதற்குப் பலத்த எதிர்ப்பு இருந்தது.

பணியால்—பணியுணர்வு முயற்சியால் — பண அரசைப் பணியச் செய்யத் திட்டமிட்டார். நூலக நண்பர்கள் கழகம் ஒன்று உருவாயிற்று. கழகம் நூலகப் பணிக்கு உதவிசெய்ய முன் வந்தது. மாநில மைய நூலகத்தோடு தொடர்பு கொண்டது. தனியார் உதவியைப் பெறக்கூடாதென்று தடையேது மில்லை. எனவே கூட்டுறவு ஏற்பட்டது.

பழைய மோட்டார் ஒன்று விலைக்கு வாங்கப்பட்டது. அது வந்து நூலகமாய் மாற்றப்பட்டது. அன்பளிப்பாய்ப் பெறப்பட்டன ஆயிரக் கணக்கான நூற்கள். அவை பல துறையின. இல்லாத் துறைக்கான நூற்கள் வாங்க நூலக நண்பர்கள் கழகம் பணம் தந்தது. மாநில நூலகமும் நூற்கள் கடன் தந்தன. பட்டி தொட்டியெல்லாம் உந்து நூலகம் உலா வந்தது.

பணி தொடர்ந்தது, உதவி பெருகுகிறது. உந்து நூலகம் ஒன்றிலிருந்து நூறாகப் பெருகத் திட்டமிடப் பட்டது. அரசும் உதவி செய்ய முன் வந்தது. மக்கட் தொடர்புக் கலையில் கைவந்த ஒருவர் ஒரு நூலகச்

செய்திப் படமே தயாரித்துத் தந்துதவினர்.

உந்து நூலகம் ஊரைவிட்டுப் புறப்பட்டு ஒவ்வொரு இடமாய் போவது; அது வந்ததும் தள்ளாடி நடக்கும் முதியோரும், துள்ளியோடும் சிறுவரும், அன்னநடை மகளிரும் ஒருங்கு கூடி நூற்கள் வாங்கிச் செல்வது; சிறுவர்கள் தமக்கேற்ற ஓவியம் நிறைந்த உயிர்ப்பூட்டும் நூற்களைப் படிப்பது; படுத்த படுக்கையி லிருப்பவர் நண்பர் மூலம் நூல் வாங்கிப் படித்து அமைதி பெறுவது; இளைஞர் ஒருவர் இதில் நூல் வாங்கிப் படித்து அறிவடைந்து பெரிய வேலை பெற்று மகிழ்வது போன்ற எத்தனையோ காட்சிகளைத் தெள்ளத் தெளிவாக எடுத்துக் காட்டியது. நூலுதவும் நூலகம் தன் பணியையும் காட்டிச் சென்றது.

அதைத் தொடர்ந்து சமூகப் பணியாளர்கள் பலர் தங்கள் சொல்லால், செயலால், உடலால், பணத்தால் உதவி செய்ய முன் வந்தனர். மாநிலம் முழுதும் நூலகப் பணி காட்டுத் தீயெனப் பரவியது. எதிர்பாராத இடங்களிலிருந்தெல்லாம் உதவி வந்து குவிந்தது. ஆரம்பத்தில் உதவ மறுத்த அரசாங்கம் ஆசி தெரிவிக்க முன் வந்தது. ஆறு ஆண்டுகளில் அறியாமைப் பிணி முப்பது விழுக்காடு குறைந்தது.

1953-ம் ஆண்டு அந்த மாநிலப் பல்கலைக் கழகம் அந்த ஆண்டு சிறப்புக் குடிமகனுக்கு பதக்கமும் பாராட்டும் அளிக்கும் வகையில் 1947 நூலகப் பணியைத் தொடங்கி வைத்த அம்மையாருக்கு மரியாதை காட்டிப்பதக்கம் தந்தது;பாராட்டுத் தெரிவித்தது. ஆச்சரியமாயில்லையா இது!

இது நடந்த இடம் எங்கே! ஐக்கிய அமெரிக்க நாட்டு மாநிலங்களில் ஒன்ருகிய கெண்டகி மாநிலமாகும்!

கெண்டகி என்ற சொல்லைப் படித்ததும், 'ம்! அது மேனுடு ஐயா! இங்கே அப்படியெல்லாம்' ...என்று இழுக்கலாம் பலர்; இழுக்க நினைப்பவர் சிலர். அப்படி யாருமிருப்பின் அவர்கள் உலகமறிந்து ஊரையறியாதவர்கள் என்போம். ஏனெனில் அம்மையார் பாராட்டுப் பெற்ற மறு ஆண்டில் தமிழகத்திலும் பணியுணர்வு முயற்சியொன்று தொடங்கி வெற்றி கண்டிருக்கிறது தெரியுமா உங்களுக்கு? அது எது?

### கல்விப் புரட்சி

பள்ளி மேற்பார்வைக்கு சென்ற கல்வி இயக்குநர் பள்ளி மாணவர் கூட்டத்திற் கிடையே மாணவர் மயங்கி விழக் கண்டார். காரணத்தை ஆராய்ந்தார். அவருள்ளத்தே இயற்கையாய் இருக்கும் சமூக வுணர்வும், பணி உணர்வும், கல்வியுணர்வும் ஒன்று சேர்ந்தன. சிலருக்கு என்று இருந்த கல்வி பலருக்கும் ஆனது மட்டும் காணுது, பலருக்கு என்று ஆனதும் தரமானதாயிருக்க வேண்

டும். அந்தத் தரமான கல்வி அனைவரும் பெற வறுமை தடையாயிருக்கக் கூடாது என்று அறிந்தார். எனவே சமூகவுணர்வை—பணி யுணர்வை—துணையாகக் கொண்டு இலவசப் பகலுணவுத் திட்டம் ஒன்று வெளியிட்டார்.

நல்லது செய்வதில் நாளும் முன்னிற்கும் தமிழ்நாடு உடனே அத்திட்டத்தை ஆதரிக்க முன் வந்தது. ஆயிரமாயிரம் மாணவர்கள் இலவசப் பகலுணவு பெற வழிவந்தது. எதிர்பாராத இடங்களிலிருந்தெல்லாம் உதவி வந்தது. அரசும் அதை ஆதரித்து நிரந்தரப் பணியாக்கியது. அமெரிக்க அரசாங்கங்கூட துணைக்கு வந்திருக்கின்றது இன்று. இன்று அம்முறையிலே 30,024 பள்ளிகளிலே 15,51,361 மாணவர்கள் இலவசப் பகலுணவு பெறுகின்றனர்.

அதை யடுத்துப் பள்ளிக்கு வந்த மாணவர்கள் சரியாகப் படிக்க வேண்டிய சூழ்நிலை உருவாக்க வேண்டிய தாயிற்று. பள்ளிச் சீரமைப்புத் திட்டம் உருவாயிற்று. தமிழகப் பள்ளிகள் எல்லாம் புதுப்பார்வை பெற்றன. அம் முறையிலே இதுவரை 218 பள்ளிச் சீரமைப்புத் திட்டங்கள் நடந்தேறியுள்ளன. பயன்பெற்ற பள்ளிகளோ 30,698 அதன் மதிப்பீடு ரூ. 9 கோடிக்கும் மேலாகிறது.

பகலுணவு பெற்றுப் பள்ளி வந்தால் மட்டும் போதாது. வந்த மாணவர்களும் தங்களிடையே ஏற்றத்தாழ்வு உணர்வின்றிப் படிக்கச் செய்யவேண்டும். எனவே பள்ள நேரத்திலாவது அவர்கள் ஒன்றுபோல இருக்க வேண்டும் என்று பள்ளிச் சீருடைத் திட்டம் பிறந்தது. அதன்படி இன்று 20,75,980 பள்ளி மாணவர்கள் சீருடை பெற்றுள்ளனர். அதன் மதிப்பீடு ரூ. 131,06,477.

உணவும் உடையும் மட்டும் கிடைத்தால் போதுமா? பள்ளிக்கு வந்தவர்கள் படிப்பது சரியாயிருக்க வேண்டாமா? கல்வியறிவுற்ற பெற்றோர்களுக்குப் பிள்ளையாய் பிறந்துவிட்டவர்களும் சரியாய்ப் படித்து முன்னேற வேண்டாமா? மேற்பார்வைப் படிப்புத் திட்டம் பிறந்தது. அதன்படி இன்று ஏராளமான பள்ளிகள் மேற்பார்வைப் படிப்புத் திட்டத்தை நடத்தி வருகின்றன.

மேற்பார்வைப் படிப்புத் திட்டம் அமுலில் படிக்க வந்த மாணவர்களும் அவர்களுக்கு உதவி புரிந்து வரும் ஆசிரியர்களும் தங்களுக்கு வழிகாட்டியாக சிலரை—சில ஆசிரியர்களை—சில பள்ளிகளைக் கொண்டால் தான் படிப்புத் தொடர வழி பிறக்கும். அதற்கென்ன செய்வது? அதற்குப் பதில் தான் ஞானத் தந்தைத் திட்டம். இன்று இம் முறையிலே பல பல பள்ளிகள் பயன் பெறுகின்றன.

இங்ஙனம் கல்விப் புரட்சியை உண்டாக்கித் தந்தவர் யார்? நாடறியும்; நானிலமறியும் நல்ல பணிகளையே தன் குறிக்கோளாகக்கொண்டவர் அறிஞர் **சுந்தரவடிவேலு அவர்கள்** என்று! அதை உறுதிப்படுத்தும் முறையில் தான் இந்திய அரசாங்கம் கடந்த ஆண்டில் அவருக்கு பத்மஸ்ரீ என்ற விருது அளித்துக் கௌரவித்தது. அதை ஆமோதிப்பது போல் அமெரிக்க அரசாங்கமும் அவரை அமெரிக்காவிற்கு அழைத்துச் சென்று கௌரவித்து அனுப்பியது.

அவரின் பெரு முயற்சியின் காரணமாக இன்று தமிழகம் முழுதும் 1964 செப்டம்பர் 3ல் இருந்த நூலகங்கள் — பணி முனைகள் — பின்வருமாறு:

| | |
|---|---|
| மாநிலமைய நூலகம் | 1 |
| மாவட்ட மைய நூலகங்கள் | 12 |
| கிளை நூலகங்கள் | 762 |
| வழக்கு நூலகங்கள் | 739 |
| நகராட்சிமன்ற நூலகங்கள் | 12 |
| ஊராட்சி நூலகங்கள் | 654 |
| கிராமசங்க நூலகங்கள் | 83 |
| உதவிபெறும் நூலகங்கள் | 171 |
| ஆகமொத்த நூலகங்கள் | 2434 |

இந்த நூலகங்களில் இருந்த 27,17,664 நூற்களை மக்கள் படித்துப் பயன்பெற்றிருக்கின்றனர். அதற்காகும் செலவு ரு 54 இலட்சங்கள்.

குடிமை யுணர்வு

மக்கள்—வாசகர்கள்—உறுப்பினர்கள்—ஒவ்வொருவரும் இவ்வுலகில் நன்கு வாழ ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ள வேண்டும். தன் உரிமையை நிறுவும்போது. அடுத்தவர் உரிமை பாதிக்கப்படாமல் இருக்கும் வகையில் பார்த்துக் கொள்ளவேண்டும் அதே சமயம் பெரும்பாலானோர் நன்மையை — சிறுபான்மையினரை புறக்கணித்துவிடாமல் கவனத்தில் கொள்ளவேண்டும் இது குடிமையுணர்வு எனப்படும். இந்தக் குடிமையுணர்வை நூலகப்பணியைப் பயன்படுத்திக்கொள்வதிலும் கடைப்பிடிக்கவேண்டும்.

நூலகம் ஒரு பொது நிலையம்; சமூக மையம். எனவே நூலகப் பொருள்களை நூற்கள் உட்பட எல்லாப் பொருள்களையும் பொறுப்புணர்வு கொண்டு பயன்படுத்தவேண்டும். நூலகத்து நூற்களைத் திருடுவதும், பக்கங்களைக் கிழிப்பதும், பக்கங்களில் கண்டபடி கிறுக்கிவைப்பதும் மாறவேண்டும். தவறு செய்பவர்களைப் பொதுமக்களே திருத்த முயலவேண்டும்.

அதுபோலவே நூலகக் கட்டுதிட்டங்களை — நூலகத்தில் நுழையும் போது வாசற்சீட்டில் கையொப்பமிட்டுச் செல்வது, நூலகத்திற்குள் எடுத்துச் செல்லக்கூடாதவைகளை வாயிற் காப்பவரிடம் ஒப்படைப்பது, நூலடுக்கிலிருக்கும் போது அடுத்தவருக்கு இடைஞ்சல்

இல்லாது நடந்து கொள்வது, படிக்கும் இடத்தில்அமைதியாக இருந்து படிப்பது, எடுத்துச் செல்லும் நூற்களை குறிப்பிட்ட நேரத்தில் பத்திரமாகத் திருப் பிக் கொடுப்பது போன்றவை களை—ஒழுங்காக நிறைவேற்ற முயல வேண்டும்.

### நூலக வேலை

இதையெல்லாம் திட்டமிட்ட படி செய்ய மக்களைப் பயிற்றும் வேலை — மக்கட் தொடர்பு வேலை—நூலகத்தைச் சார்ந்த தாகும் இன்று. ஏனெனில் இன்று நாம் பொதுநல அரசு (welfare state) ஆட்சிக் காலத்தி லிருக்கிறோம். அரசனுக்காக மக்கள் என்ற காலம் மாறிப் போயிற்று. எல்லாம் மக்களுக் காக என்னும் காலமிது.

### கல்விப் பணி

அத்தகு பணிகளில் முத லிடம் பெறுவது கல்விப் பணி. எல்லாரையும் புலமையாளர் களாக்கிவிடமுடியாது. அப்படி யில்லாவிட்டாலும் எல்லாரையு மாவது கல்வியறிவுள்ளவர் களாக—எழுதப்படிக்கத் தெரிந் தவர்களாகவாவது--வைத்திருக்க வேண்டும் இது இரண்டாவது நிலைப் பணியாகும். அதற்கு இன்று நாம் பாடுபட்டு வருகி றோம். இது தவிர மூன்றாவ தொரு பணியிருக்கிறது. அது தன் கல்வி (self education) எனப்படும். அதன்படி சிறிது எழுதப்படிக்கத் தெரிந்தவரும், நன்றாகப் படித்துக் கொண்ட வரும், புலமையாளரும் மேலும் தங்கள் நிலையை அபிவிருத்தி செய்துகொள்ள உதவி செய்ய வேண்டும். இதற்கு வழி என்ன?

### நூலகப் பணி

நூலகப்பணி தான். நூலகம் மக்கள் ஒவ்வொருவரும் தங்கள் நிலையை—உடல் நிலையை, உள்ள நிலையை, உணர்வு நிலையை—நன் முறையில் வைத்துக்கொள்ள உதவிசெய்ய வேண்டும். அதன் காரணமாகத் தான் இன்று உலகம் முழுதும் நூலகப்பணி முன்னேறுவதற் காக அரசாங்கங்கள் பெரும் முயற்சி எடுத்து வருகின்றன.

இத்துடன் இன்று அறிவின் முன்னேற்றத்தின் காரணமாக மக்கள் ஒவ்வொருவரும் நல்ல ஓய்வு நேரம் பெறுகின்றனர். அந்த ஓய்வு நேரம் நல்லமுறை யில் பயன்படுத்தப்படவேண்டும் அதற்கேற்ற சாதனங்களில் ஒன்று நூலகப்பணியாகும்.

எனவே இத்தகு நோக்கங் களை—குறிக்கோள்களை — ஆர் வங்களை நிறைவேற்றிவைக்கும் பெரும் பொறுப்பு இன்று நூலகங்களிடம் ஒப்படைக்கப் பட்டிருக்கிறது. அந்த எண் ணங்கள் சரிவர நிறைந்தேற மக்கட் தொடர்பு உண்மை யானதாக, உறுதியானதாக, உத்தரவாதமானதாக இருக்கும் வகையில் பணியாற்றவேண்டும் நூலகங்களும் மக்களும்.

ஜாதகா கதைகள் :

சந்தர்ப்பம் கிடைக்கும் போது அதைப் பயன் படுத்திக் கொள்ளுபவன் சிறந்த வனு ? பயன்படுத்திக் கொள்ளாதவன் சிறந்தவனு? எவனை நல்லவன் என்று சொல்லுவது?

# ஏது சிறந்தது?

ஏ. வி. ஜயச்சந்திரன்

பிரமதத்தன் காசிப் பட்டினத்தை ஆண்ட சமயம். சோமநாத சர்மா அவனது குல குருவாக விளங்கினுர்.கல்வி கேள்விகளில், சாத்திர நுண்ணறிவில், தர்க்கம், வைத்தியம், பல்வேறு கலைகளில், பாண்டித்தியம் பெற்று, தனிச் சிறப்பெய்தி இருந்தார். அரசனுக்கு அவர் மீது ஒரு தனிப் பற்றுதல், மரியாதை, அரசாங்கக் காரியமானுலும் சரி, சமுசார பிரச்னையானுலும் சரி அவரைக் கலந்தாலோசிக்காமல் அவைகளில் ஈடுபட மாட்டான். கல்விமான் மட்டுமில்லாமல், அவர் நல்லொழுக்கச் சீலரர்கவும் திகழ்ந்தார்.

அவருடைய மனத்திலே நெடு நாட்களாக ஒரு சந்தேகம் புகுந்திருந்தது. "அரசன் எதை மதிக்கிருன்? "அறிவையா? நன்னடத்தையையா?" என்று. நாட்டைப் பரிபாலனம் செய்யும் மன்னனுக்கு, தர்மம் தான் சிறந்தது, அறிவுக்கும் ஆற்றலுக்கும் பலன் உண்டு தான், ஆனுல் ஒரு சில விஷயங்களில் தான். தர்மத்திற்கும், நீதிக்கும் சிறப்பிட மளிக்காத மன்னன் சீரழிவான். அவன் நாடு நசித்து, மக்கள் துன்புறுவர் என்பது சோமநாத சர்மாவின் கருத்து. இதை எப்படியாகினும் மன்னனுக்குத் தெரிவிக்க வேண்டும், அவனை நன்ருக உணர வைக்க வேண்டுமென்பது அவருடைய அபிலாசை.

கடைக்குச் சென்ற சோமநாத சர்மா ஒருநாள் கடைக்காரன் பெட்டியிலிருந்து ஒரு ரூபாய் எடுத்தார். கடைக்காரன் இதைக் கவனித்தான். அவனுக்கோ ஆச்சர்யம். பெரிய படிப்பாளி என்றும், பண்புடையவர் என்றும் பெயரெடுத்த இவரா

இதைச் செய்வார் என்று பிரமித்தான். சில நாட்களுக்குப் பிறகு மீண்டும் கடைக்காரன் பெட்டியிலிருந்து ஒரு ரூபாய் சர்மா எடுத்தார். இந்தச் சமயமும், ஒன்றும் கூருமல் வாளா இருந்து விட்டான் கடைக்காரன். மூன்ரும் முறை சோமநாத சர்மா பெட்டியிலிருந்து ஒரு ரூபாய் எடுத்ததும் கடைக்காரனுக்குக் கோபம் வந்து விட்டது. சர்மாவைத் திருடும்போது கையும் களவுமாகப் பிடித்தோம் என்ற சந்தோஷம். அவர் குல குருவாயிற்றே, அவருக்கு "திருட்டு"ப் பட்டம் எப்படி சாட்டுவது என்று திகில். ஆனுலும் கையும் களவுமாகத் திருடனைப் பிடித்த பிறகு அரசனிடம் நீதிக்கு முறையிடுவது தான் சரி. படித்தவன் என்ருல் என்ன படியாதவன் என்ருல் என்ன, நீதிக்குமுன் எல்லாம் சமம் என்று கருதினுன் கடைக்காரன்.

சர்மாவின் கைகளைக் கட்டி அரசனது அவைக்கு கடைக்காரன் கொண்டு போனுன். போகிற வழியிலே பாம்பாட்டி ஒருவன் பாம்பின் வாலைப் பிடித்துத் தூக்கி தன் கழுத்தில் மாலையாகச் சுற்றிக் கொண்டு வேடிக்கை காட்டினுன். அவனைச் சுற்றிப் பலர் அமர்ந்திருந்தனர்.

பாம்பாட்டியைப் பார்த்து சர்மா சிரித்தார். பாம்பாட்டி, "கையில் கட்டுப் போட்டு இழுத்துச் செல்லும் உமக்குக் கூடச் சிரிப்பு வருகிறதே" என்ருன்.

மீண்டும் புன்னகைப் பூத்தார் ஐயர். அந்த புன்னகையில் ஒரு கவர்ச்சி இருந்தது. அவருடைய உள்ளச் சுத்தத்தை அது பிரதிபலித்தது. மடியில் கனமிருந்தால் தானே பயப்பட வேண்டும்.

ஐயர் பாம்பின் நிலையை உணர்ந்தார். மனிதரிடையே உள்ள பாம்பு நெஞ்சைக் கண்டு சிந்தனையிலாழ்ந்தார்.

"பாம்பாட்டி! இந்த பாம்பு விஷப் பாம்பாயிற்றே. இதைக் கழுத்தில் சுற்றிக் கொண்டால் அது கடித்து விடுமே.அப்போது பேராபத்து உமக்கு விளையுமே" என்ருர்.

"ஐயரே!உம்முடைய வழியே போம். பாம்பு சாந்தகுணமுடையது. உம்மைப் போல் திருட்டுப் பட்டம் கட்டிக் கொண்டு அரசவைக்குப் போகாமல், நற்பண்புகளுடையது" என்ருன்.

மூர்க்கனிடத்தில் என்ன பேச்சு என்று சர்மா வாளா யிருந்தார். அரசவைக்கு அவரைக் கொணர்ந்தனர். கையில் விலங்குடன் நிற்கும் சர்மாவைப் பார்த்த அரசன் சற்று நிதானம் இழந்தான். சர்மாவின் களங்கமில்லா முகத்தைப் பார்த்து என்ன மர்மமோ தெரியவில்லை என்று ஏங்கினுன்.

"மந்திரி! என்ன வழக்கு? உடனே எடுத்துக் கூறட்டும்" என்ருன்.

கடைக்காரன் நடந்தவற்றைச் சொன்னான்.

"ஆம் அரசே! அவை யாவும் நடந்தவை. திருடும் நோக்கத்துடன் அல்ல, உலகம் எதை மதிக்கிறது என்பதைக் கண்டு பிடிக்கச் செய்த சோதனை இது" இரண்டு முறை ரூபாய் எடுக்கும்போது, கடைக்காரன் கவனிப்பதைப் பார்த்திருந்தேன். அவன் நான் திருடுவேனா என்ற திகைப்பில் ஒருவருக்கும் கூறாமல் விட்டு விட்டான். இது தவறு. ஆனால் மூன்றாம் முறை அதை உணர்ந்து என்னை விலங்கிட்டான்" என்றார் சர்மா.

கடைக்காரன் தான் இருமுறை கவனித்ததை அறிந்திருந்தார் சர்மா என்பது கேட்க ஆச்சரியப்பட்டான்.

"பிறகு ஏன் இக்குற்றம் இயற்றினார்" என்பது அவனுக்கு விளங்கவில்லை.

சர்மா "அரசே ஒரு நல்ல பாம்பு இருக்கிறது. அதற்குப் பால் விடுகிறார்கள், பூஜை செய்கின்றனர். நாகராஜனின் பிரஜைகள் எனக் கருதுகின்றனர். ஆனால் அது கடித்து விட்டாலோ அதை அடித்துக் கொல்லுகின்றனர். ஆகவே நீதியின் கண்களிலே, தெய்வீகம் பெரிதல்ல, அறிவு ஆற்றல் பெரிதல்ல, நன்னடத்தை தான் பெரிது."

"ஒருவனுக்கு அளவு மிஞ்சிய மரியாதை அளிப்பதற்கு முன் ஆற்றலில் மட்டுமல்ல, நடத்தையிலும் சிறந்தவனா என்று கண்டுகொள்ள வேண்டும். சிலரைத் தீயது செய்யச் சந்தர்ப்பங்கள் இல்லாததால் நல்லவர் என்று கூறுதல் தவறு. நல்லவர், நன்னடத்தையுள்ளவர் எவரெனில் சந்தர்ப்பங்கள் இருந்தும் அந்த சந்தர்ப்பங்களைப் பெறுமளவிற்குத் யார் சாதகமாக்கிக் கொள்ளாமலிருக்கிறார்களோ அவர்கள் தான்.

இந்தப் பேருண்மையை உணர்ந்த அரசன் சர்மாவின் ஆற்றலை, நுண்ணறிவை, நன்னடத்தையை மீண்டும் புகழ்ந்தான்.



பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்.

— திருக்குறள்

# செய்திக் குறிப்புகள்

**குறிப்பு:**

பஞ்சாயத்து யூனியன் பற்றிய செய்திகளை அனுப்பும் யூனியன் அலுவர்களைக் கீழே காணும் குறிப்புக்களில் கவனம் செலுத்துமாறு அன்போடு கேட்டுக் கொள்கிறேம்.

1. தெளிவாகப் புரியும்படியாக எழுதி அனுப்புதல் வேண்டும்.
2. தாளின் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுதி அனுப்புதல் நன்று.
3. செய்திகளைச் சுருக்கமாகவும், சிறு சிறு வாக்கியங்களாகவும் எழுதி அனுப்புதல் நன்று.
4. ஆணையாளர்களின் ஒப்புதல் பெற்றுச் செய்திகளை அனுப்புதல் சிறப்புடையதாகும்.

### தூக்கநாயக்கன் பாளையம் யூனியன்

தூக்கநாயக்கன் பாளையம் பஞ்சாயத்து யூனியன் சார்பாக 30-9-64-ம் தேதி உரத் திருநாள் யூனியன் அலுவலகத்தில் பஞ்சாயத்துத் தலைவர் திரு ஏ. ஆர். ரங்கசாமிக் கவுண்டர் அவர்கள் தலைமையில் கொண்டாடப்பட்டது. தூ. பா. சர்க்கரை அவர்களால் கொடியேற்றப்பட்டது. விவசாய அதிகாரி திரு டி. ஏ. சையத் முகமத், பி. எஸ்ஸி., அவர்களும், திரு டி. ஏ. அட்டிக் கவுண்டர் திரு என். நடராஜன், பி. காம்., ஆணையர் அவர்களும், உரத் திருநாளைப் பற்றி சொற்பொழிவாற்றினர்கள். கல்வி விஸ்தரிப்பு அதிகாரி திரு பி. எம். அப்துல் லத்தீவ் நன்றி நவில தேசிய கீதத்துடன் கூட்டம் இனிது முடிந்தது.



### வாழப்பாடி யூனியனில் குழந்தைக் காட்சி

வாழப்பாடி பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த நீர்முள்ளிக் குட்டை பஞ்சாயத்தில் செப்டம்பர் 20ல் குழந்தைக் காட்சி நடைபெற்றது. ஊர் பெரியவர், திரு மாணிக்கக் கவுண்டர் தலைமை வகித்தார். முக்கிய சேவிகா குமாரி சரோஜா குழந்தைகள் நலனைக் குறித்தும், புதிய திட்டங்களையும் விளக்கிக் கூறினர். மாதர் நலக்குழுத் தலைவர் திருமதி இருசாயம்மாள், வெற்றி பெற்ற குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கினர். கிராம சேவிகா குமாரி நாகலக்ஷ்மியும், முக்கிய சேவிகா திருமதி சரோஜாவும் விழாவிற்கான ஏற்பாடுகள் செய்தனர். கிராம நல ஊழியர் திரு துரைராஜ் நன்றி நவில விழா இனிது முடிவடைந்தது.



### உரவினியோக விழா

வாழப்பாடி பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த மன்னூர்பாளையம் கிராமத்தில் இரசாயன உரவினியோக வாரவிழா நடைப்பெற்றது. மேற்படி விழா மன்னூர்பாளையம் விவசாய பேங்க் தலைவர் திரு வி. தங்கவேல் உடையார் தலைமையில் நடைபெற்றது. மன்னூர்பாளையம் பஞ்சாயத்துத் தலைவர் திரு என். ஜானகிராமன் அவர்கள் இரசாயன உரத்தின் அவசியம்பற்றி எடுத்துக்கூறினர். கிராம நல ஊழியர் திரு ஆர். இராசகோபால் கூட்டுறவும் விவசாயமும் என்பதைப்பற்றி விளக்கிக்கூறி தற்போது கூட்டுறவு ஸ்தாபனம் விவசாயிகளுக்குச் செய்யும் நன்மைகளைப் பற்றியும், இரசாயன உரம் உபயோகிக்கும் முறைகளைப்பற்றியும் விளக்கிக்கூறினர். விவசாய பேங்க் காரியதரிசி திரு பி.செல்வராஜ் நன்றி கூறினர்.

❋ ❋ ❋

### மாதர் கல்வி சுற்றுலா

வாழப்பாடி பஞ்சாயத்து யூனியவிருந்து 50 பேர்களைக்கொண்ட மாதர் கல்வி சுற்றுலா 29-8-64 அன்று அதிகாலை 4.00 மணிக்கு புறப்பட்டது. நெய்வேலி பழுப்பு நிலக்கரி சுரங்கவேலை முதலியவைகளைப் பார்த்துவிட்டுவடலூர், சிதம்பரம், பாண்டி, காஞ்சீபுரம், மஹாபலிபுரம், முதலிய இடங்களையும் பார்த்து விட்டு, சென்னையை அடைந்து தாம்பரம் சேவையில்லம் போன்ற மாதர் நலத் திட்டப் பணிகளைக் கண்டு, பிறகுஏரோடிரோம்முதலிய இடங்களையும் பார்த்து விட்டு 29-8-64 அன்று இரவு வாழப்பாடியைத் திரும்ப அடைந்தனர்.

❋ ❋ ❋

### குழந்தைகள் கண்காட்சி

வாழப்பாடி பஞ்சாயத்து யூனியனைச்சேர்ந்த விலாரிப்பாளையம் பஞ்சாயத்தில் — குழந்தைகள் கண்காட்சி நடைபெற்றது. மேற்படி விழா வாழப்பாடி பஞ்சாயத்து யூனியன் இணை ஆணையாளர் திரு என். எஸ். ஆர். சாலமன்ராஜ் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. குழந்தைகள் நலம்பற்றி திரு விட்டோபா அவர்கள் விவசாய விஸ்தரிப்பு அதிகாரி சொற்பொழிவாற்றினர். குமாரி ஆர். சரோஜா முக்கிய சேவிகா அவர்கள் விழாவின் அவசியம் பற்றியும், குழந்தை வளர்ப்புப் பற்றியும் எடுத்துக்கூறினர். பிறகு தேர்ந்தெடுக்கப் பட்ட குழந்தைகளுக்கு, இணை ஆணையாளர், பரிசுகள் வழங்கினர். கூட்டத்தின் முடிவில் இனிப்பு வழங்கப்பட்டது. கிராம நல ஊழியர் திரு ஆர். இராசகோபால் நன்றி கூறினர்.

❋ ❋ ❋

### குழந்தைக் கண்காட்சி

வாழப்பாடி பஞ்சாயத்து யூனியனைச்சேர்ந்தசேஷஞ்சாவடி பஞ்சாயத்தில் குழந்தைகள் கண்காட்சி நடைபெற்றது. மேற்படி விழாவிற்கு ஊர்ப் பெரியவர் திரு காசிராமலிங்கம்அவர்கள்தலைமை வகித்தார். இணை ஆணையாளர் திரு சாலமன்ராஜ் சிறப்பு சொற்பொழிவாற்றினர். முக்கிய சேவிகா குமாரி சரோஜா விழாவின் முக்கியத்தைக்குறித்து எடுத்துக்கூறினர். பின்பு தேர்ந்தெடுக்கப்பட்ட குழந்தைகளுக்கு பஞ்சாயத்து தலைவர் திரு கூத்தப் படையாச்சி அவர்கள் பரிசுகள் வழங்கினர். திரு வேதநாயகம் கிராம நல ஊழியர் நன்றி கூறக் கூட்டம் இனிது முடிவடைந்தது. கிராம சேவிகா திருமதி—கமலம் விழாவிற்கானஏற்பாடுகளைச்செய்தார்.

❋ ❋ ❋

## நடவாச்சேரி யூனியன்

நகராட்சிப் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த நடவாச்சேரியில் தொடக்கப்பள்ளிப்புதியகட்டிடம் 17-9-64 காலை 8-30மணியளவில் தென்னார்க்காடு மாவட்ட ஆட்சித் தலைவர் திரு வி. எஸ். சுப்பையா ஐ. ஏ. எஸ். அவர்கள் தலைமையில் தமிழ்நாடு செய்தித்துறை அமைச்சர் கனம் ஜி. பூவராகன், பி. எஸ். சி. ஆனர்ஸ் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. கிராம மக்களுக்கு அறிவுரைகள் வழங்கினார்கள். சிதம்பரம் கோட்டாட்சித் தலைவர் திரு ஆர். முத்துக்கண்ணு, பி. ஏ. அவர்கள் பாரத ஜனாதிபதி அவர்களின் திருஉருவப்படத்தைத் திறந்து வைத்துச் சொற்பொழிவாற்றினார்கள். நகராட்சி பஞ்சாயத்து யூனியன் தலைவர் திரு எம். கே. தட்சிணாமூர்த்தி அவர்களும் மற்றும் பல பஞ்சாயத்துத் தலைவர்களும் விழாவில் கலந்து கொண்டார்கள். அமைச்சர் அவர்கள் சிறு சேமிப்புத் திட்டத்தைப்பற்றி மிக மெதுவாகப் பேசி எல்லா பொது மக்களும் இத்திட்டத்தில் தீவிரமாகப்பங்குகொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொண்டார். சேமிப்புத் திட்ட இயக்கத்தின் அறிகுறியாக அமைச்சர்அவர்கள் முன்னிலையில் 11 நபர்கட்கு தபாலாபீஸ் சேமிப்புப் பாஸ் புத்தகங்கள் திறந்து வைக்கப்பட்டது. கடலாச்சேரி கிராம மாதர் சங்க அங்கத்தினர்கள் 15 பேர்கள் அவ்வூரில் பள்ளியில் மதிய உணவுத் திட்டத்திற்கு அரிசி கொடுத்து உதவுவதாக ஒப்புக் கொண்டதன் பேரில் அமைச்சர் அவர்கள் சர்வோதயப் பாத்திரங்கள் வழங்கினார்கள்.

தேசிய கீதத்துடன் கூட்டம் இனிது முடிவு பெற்றது.



## சிரகிழந்தநல்லூர் யூனியன்

குமராட்சி பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த சிரகிழந்தநல்லூரில் புதிதாகக் கட்டப்பட்டிருக்கும் அரசினர் ஆசிரியை இல்லக் கட்டிடத் திறப்பு விழா தென்னாற்காடு மாவட்ட ஆட்சித் தலைவர் திரு ஜி. எஸ். சுப்பையா, ஐ. ஏ. எஸ். பி. எஸ்சி ஆனர்ஸ், அவர்களால் நடத்தப் பெற்றது.

கிராம மக்கள் அனைவரும் திரண்டு வந்து கூட்டத்தை சிறப்பித்தார்கள்.

கிராம மக்கள் பொருளாதார நிலையில் மேற்பட நல்ல முறையில் பாடுபட வேண்டும். ஈட்டிய பொருளை நல்முறையில் செலவு செய்து ஒரு பகுதியை மீத்து வைக்கும் சிறந்த குணமும் பொறுப்பும் ஒவ்வொரு நேரமும் வளர வேண்டும். சிறுசேமிப்பு இயக்கத்தில் ஒவ்வொருவரும் சேர வேண்டும். சேமித்து வைக்கும் பழக்கமும் புதிதல்ல. நம்முன்னோர்களிடம் பிடி அரிசிசேர்த்தல், பணத்தை உண்டியலில் சேர்த்து வைத்தல்முதலிய நற்பழக்கங்கள் இருந்து வந்தது என்று கூறி சர்வோதயப் பாத்திரம் 20 பேர்கட்கு வழங்கினார்கள். சேமிப்பு நிதிக்கணக்கில் 10 நபர்கட்கு கனம் அமைச்சர் அவர்கள் பாஸ் புத்தகங்கள் திறந்து வைத்தார்கள். மண் உண்டியல்கள் 20 பேர்கட்கு வழங்கப்பட்டன. உழைப்பு தானத்தால் கட்டப்பெற்ற வள்ளுவர் மன்ற வாசக சாலை கட்டிடத்தை அமைச்சர் அவர்கள் திறந்து வைத்தார்.

சிதம்பரம் கோட்டாட்சித் தலைவர் திரு ஆர். முத்துக்கண்ணு, பி. ஏ., குமராட்சி பஞ்சாயத்து ஒன்றிப்புத் தலைவர் திரு எம். கே. தட்சிணாமூர்த்தி அவர்

களும் அறிவுரைகள் வழங்கினர் கள்.

நாட்டு வாழ்த்துக்குப் பின் கூட்டம் முடிவுற்றது.

※ ※ ※

**ஒலக்கூர் யூனியன்**

தென்னார்க்காடு மாவட்ட ஆட்சித் தலைவர் அவர்களின் உத்திரவிற்கிணங்க 7-9-64 முடிய பஞ்சாயத்து வரிகள் சம்மந்தமாக பாக்கியிருக்கும் தொகையையும் 30-9-64 முடிய உள்ள நடைமுறை அரையாண்டு வரி பாக்கியையும் வசூலிப்பதற்கு ஒலக்கூர் பஞ்சாயத்து யூனியன் வட்டார அளவில் ரெவின்யூ அதிகாரிகளின் பூரண ஒத்துழைப்புடன் ஓர்தீவிர வரி வசூல் பணி துவக்கி வெற்றிகரமாக நடத்தி முடிக்கப்பட்டது. நடைமுறை அரையாண்டிலும் நிலுவையிலும் இருந்த பாக்கித் தொகை ரூ. 22,379.76 பூராவையும், இவ்வட்டாரத்திலுள்ள 52 பஞ்சாயத்துக்களும் வசூல்செய்து விட்டன. மாநிலத்திலுள்ள வட்டாரங்களில் பஞ்சாயத்து வரியை 30-9-64 அரையாண்டு முடிய பூரா வசூலித்த வட்டாரங்களில் இவ்வட்டாரமும் ஒன்ருக இருக்கும். பஞ்சாயத்துக்கள் தங்களது திட்டங்களை துரிதமாக நிறைவேற்றுவதற்கு வசூலிக்கப்பட்ட வீட்டு வரி போன்று சம பங்கு அரசினரிடமிருந்து வீட்டு வரி இணை மான்யமாகப் பெறும்.

பஞ்சாயத்து வரி வசூலில் திறமையுடன் வசூல் பணியில் ஈடுபட்ட கிராம அதிகாரிகளை பெருமைப்படுத்த 7-10-64-ல் திண்டிவனம் துணை ஆட்சித் தலைவர் திரு. ஜே. சிவகுமார், ஐ. ஏ. எஸ்., அவர்கள் பாராட்டுரை வழங்கி நற்சான்றிதழ் வழங்கினர்கள்.

※ ※ ※

**எரங்காட்டூர் யூனியன்**

16-9-64-புதன் கிழமை யன்று எரங்காட்டூர் பஞ்சாயத்து யூனியன் ஆரம்பப் பள்ளியில் திரு க. கு. கோதண்டராம கவுண்டர் M. L. C. அக்கிராசனர். தூக்க நாயக்கன் பாளையம் யூனியன் அவர்களுடைய தலைமையில் முதல் ஆண்டு விழாவும், பள்ளித் திறப்பு விழாவும் நடைபெற்றன. திரு. P. K. முத்து வேலப்பகவுண்டர் M. L. A. அவர்கள் பள்ளிக் கட்டிடத்தைத் திறந்து வைத்தார். அது சமயம் திரு. K. K. சரவணராஜுக் கவுண்டர் அவர்கள் நேரு படத்தைத் திறந்து வைத்தார். திரு. C. K. கந்தசாமி முதலியார் அவர்கள் திருவள்ளுவர் படத்தைத் திறந்து வைத்தார்.

திரு. செ. சு. பழனிச்சாமி B. A. Hons B. T. அவர்கள் "நெஞ்சில் ஓர் ஆலயம்" என்ற தலைப்பில் சிறந்த சொற்பொழிவாற்றினர். திரு. K. S. மாரப்பன் அவர்கள் "வாழ்வு வளம் பெற" என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றினர்.

திரு. N. நடராஜன் B.Com ஆணையர் தூக்க நாயக்கன் பாளையம் அவர்கள் பரிசு வழங்கினர்.

திரு. சங்கரபாஸ்கரன் தலைமை ஆசிரியர் எரங்காட்டூர் அவர்கள் ஆண்டறிக்கை படித்தார். திரு. S. கருப்பணன் ஆசிரியர் அவர்கள் நன்றி நவின்ருர். திரு G. K. செல்லமுத்து, B. சுப்பிரமணியம் அவர்கள் நாட்டுப்பண்பாட கூட்டம் இனிது முடிவுற்றது.

திரு. K. A. கோபாலன் குழுவினரால் "ஒளி மயம்" என்ற நாடகம் நடை பெற்றது.

※ ※ ※

**குடிமங்கலம் யூனியன்**

குடிமங்கலம் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த வடுக பாளையம்

கிராமத்தில் 29-9-64 தேதி யன்று மாலை 5 மணியளவில் ஹரிஜன தின விழாவும், மாதர் சங்கசெயல் முறைக் கூட்டமும் பஞ்சாயத்துத் தலைவர் திரு. R. கெங்கசாமி நாயக்கர் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அது சமயம் கல்வி விஸ்தரிப்பு அதிகாரி திரு. ஏ. கருப்பையா அவர்கள் "ஹரிஜன குழந்தைகளின் கல்வி, சுகாதாரம்" என்பதுபற்றிச் சிறப்புரை நிகழ்த்தினுர். கிராம சேவிகா குமாரி கே. பவானி, ஜி. பாலாமணி ஆகிய இருவரும் "செயல் முறை" விளக்கம் செய்து பொது மக்களுக்கு எடுத்துரைத்தனர்.

குடும்பக் கட்டுபாடு, அறுவைச் சிகிச்சை பற்றியும்—ஹரிஜன தின விழாவின் முக்கியத்துவம் பற்றியும் சமூகநல ஊழியர் திரு. எஸ். பூலூர் அவர்கள் சொற்பொழிவாற்றினுர்.

தலைவர் முடிவுரையுடன் நன்றி நவில நாட்டுப்பண்பாடக்கூட்டம் இனிது முடிவடைந்தது.

⁂ ⁂ ⁂

### புவனகிரி யூனியன்

2—10—64 வெள்ளிக்கிழமை யன்று காலை 9-30 மணியளவில் புவனகிரி பஞ்சாயத்து யூனியன் ஆதரவில் காதி கிராமோதய பவனில் கிளைக் கடை ஒன்று புவனகிரியில் பஞ்சாயத்துக் கூட்டுமன்றத் தலைவர் திரு. ஆர். திருநாவுக்கரசு அவர்கள் தலைமையில் ஆணையாளர் திரு. எம். வேல்முருகன், பி. ஏ., அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. காந்தி ஜெயந்தியை முன்னிட்டு விசேஷத் தள்ளுபடி கதர்ப்பட்டு ரகத்திற்கு ரூபாய்க்கு 10 காசும் நூல் ரகத்திற்கு ரூபாய்க்கு 5 காசுகளும் கொடுக்கப்படுகிறது.

⁂ ⁂ ⁂

### காந்தி ஜெயந்தி விழா

2-10-64 வெள்ளிக்கிழமை யன்று காலை 7-30 மணியளவில் புவனகிரி பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்தில் "காந்திஜெயந்தி விழா"வும் "தேசீய ஒருமைப் பாட்டு விழா"வும் மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

அது சமயம் புவனகிரி பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் திரு. எம். வேல்முருகன், பி. ஏ., அவர்கள் முன்நிலையில் கூட்டு மன்றத் தலைவர் திரு. இரத்தின திருநாவுக்கரசுப் பிள்ளை அவர்களால் அலுவலகத்தில் தேசீயக் கொடி உயர்த்திவைக்கப்பட்டது.

பின்னர் தேசீய ஒருமைப் பாட்டு விழா, காந்தி ஜெயந்தி விழா பற்றி திரு. ஆர். திருநாவுக் கரசு பிள்ளை, திரு. அ. திருநாவுக் கரசு பிள்ளை, திரு. க. பக்கிரிசாமி மற்றும் திரு. உ. கோவிந்தன் மற்றும் மணிவண்ணக்கண்ணன் முதலியோர் பேசினர். ஆணையாளர் திரு. எம். வேல்முருகன் தேசீய ஒருமைப்பாட்டு உறுதி மொழி எடுத்து உறுதி மொழிப் பத்திரத்தில் கையொப்பம் செய்தார். ஆசிரியர்கள், பொது மக்கள், கூட்டு மன்ற உறுப்பினர்கள் மற்றும் அலுவலர்கள் விழாவில் கலந்து கொண்டார்கள். நாட்டு வாழ்த்துடன் கூட்டம் இனிது முடிந்தது.

⁂ ⁂ ⁂

### பெரியம்மை ஒழிப்பு

2-10-64 வெள்ளிக்கிழமை யன்று மாலை 6-30 மணியளவில் புவனகிரி அஞ்சாயத்து யூனியன் ஆதரவில் தேசீய பெரியம்மை ஒழிப்பு வாரவிழா புவனகிரியில் மிகவும் சிறப்பாகக் கொண்டா டப்பட்டது.

கூட்டு மன்றத் தலைவர் திரு. இரத்தின திருநாவுக்கரசுப்பிள்ளை

விழாவிற்குத் தலைமை தாங்கினர். கூட்டுமன்ற ஆணையாளர் திரு. எம். வேல்முருகன், பி. ஏ., அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர். சுகாதார ஆய்வாளர் திரு. கு. முத்துகுமரசாமி, கல்வி விரிவாக்க அலுவலர், திரு. அ. இராமலிங்கம் கிராமப்பாளையம் சுகாதார ஆய்வாளர், திரு. எம். ஏ. நாகராஜன் முதலியோர் பெரியம்மை ஒழிப்பின் அவசியமும் முக்கியத்துவமும் பற்றி விளக்கிப் பேசினர்: தலைவரின் முடிவுரைக்குப்பின் கிராம நல ஊழியர் திரு. ஏ. சீத்தாராமன் நன்றி கூற நாட்டு வாழ்த்துடன் கூட்டம் இனிது முடிந்தது.

※ ※ ※

### பெரியம்மைத் தடுப்பு வாரவிழா

30-9-1964-ம் தேதி தூக்கநாயக்கன் பாளையத்தில், பெரியம்மைத் தடுப்பு வாரவிழா திரு ஏ. ஆர். ரங்கசாமிக் கவுண்டர் அவர்கள் தலைமையில் கொண்டாடப்பட்டது. பஞ்சாயத்து யூனியன் ஆணையர் திரு என். நடராஜன், பி.காம்., அவர்களும், ஆரம்ப சுகாதார நிலைய ஹெல்த் இன்ஸ்பெக்டர் திரு. ஷண்முகம் அவர்களும், அம்மை தடுப்பு பற்றியும், அம்மை குத்திக் கொள்வதின் அவசியத்தைப் பற்றியும் எடுத்துக் கூறினர்கள். கல்வி விஸ்தரிப்பு அதிகாரி திரு பி. எம். அப்துல் லத்தீவ் நன்றி கூற கிராம சேவக் திரு குஞ்சாமணி அய்யர் அவர்கள் தேசிய கீதம் பாடக் கூட்டம் இனிது முடிந்தது.

※ ※ ※

### காந்தி ஜெயந்தி விழாவும் தேசிய ஒருமைப்பாடு விழாவும்

தூக்கநாயக்கன் பாளையம் பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்தில் 2-10-64 காலையில் காந்தி ஜெயந்தி விழாவும் தேசிய ஒருமைப்பாட்டு விழாவும் நடைபெற்றன.

பாடசாலை மாணவர்கள் காந்தியடிகளின் உருவப்படத்தை ஊர்வலமாக எடுத்துச் சென்றனர். யூனியன் அலுவலகத்தில் ஆணையர் திரு N. நடராசன் B.com அவர்களால் கொடியேற்றுவிக்கப்பட்டது. விழாவிற்கு யூனியன் தலைவர் திரு கே. கே. கோதண்டராமன் எம். எல். சி. அவர்கள் தலைமை தாங்கினர். அவர் பேசுகையில் காந்தியடிகளின் வாழ்வு வள்ளுவர் நூலுக்கே ஒரு இலக்கியமாக அமைந்தது. வாழ்வாங்கு வாழ்ந்த காந்தியடிகள் வானுறையும் தெய்வத்தில் ஒன்ருக வைக்கத் தக்கவர் என்று கூறி அடிகளாரின் சிறப்பான லப பண்புகளை எடுத்துக்கூறினர்.

அடுத்து பழம் பெரும் தியாகி திரு. கே. என். பொன்னம்பலம் அவர்கள் தண்டியாத்திரையில் காந்தியடிகளுடன் கலந்து கொண்ட தம் அனுபவங்களை எல்லாம் எடுத்துக் கூறினர்.

பின்பு ஆணையர் அவர்கள்பேசுகையில் காந்தியடிகள் பற்றி மேனுட்டு அறிஞர்கள் போற்றும் கருத்துக்களை விளக்கினர்.

தொடர்ந்து பாடசாலை மாணவர்களால் காந்தியடிகளின் பற்பல குணநலங்களைப் பற்றிப் பேசப்பட்டது. முடிவில் தேசிய ஒருமைப்பாடு உறுதி மொழியைத் தலைவர் வாசிக்கக் கூட்டத்தினர் கையொப்பமிட்டுஉறுதிமொழியை ஏற்றுக்கொண்டனர்.

விழாவில் ஆசிரியர்களும் பெரியோர்களும் கலந்து கொண்டனர். நாட்டுப்பண்ணுடன் விழா இனிது முடிவுற்றது.

※ ※ ※

### அவிநாசி யூனியன்

அவிநாசி பஞ்சாயத்து யூனியன் குப்பாண்டாம்பாளையம்

உயர்தர ஆதாரப் பள்ளியில் 28-9-64ம் தேதி பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் திரு. டி. எஸ். கிருஷ்ணசாமி அவர்கள் தலைமையில் பாரதி சர்வோதய விழாக் கொண்டாடப் பெற்றது. அது சமயம் பள்ளித் துணை ஆய்வாளர் உயர்திரு பி. ராமலிங்கம், பி. எஸ்ஸி. பி. டி. அவர்களால் பாரதி கண்ட பாரத சமுதாயம் என்னும் பொருள் பற்றியும் பஞ்சாயத்து விஸ்தரிப்பு அலுவலர் திரு. என். தங்கவேலு, பி. எஸ்ஸி. அவர்களால் பாரதி கவிதை இன்பம் என்னும் பொருள் பற்றியும் கல்வி விஸ்தரிப்பு அலுவலர் திரு ஏ. அவினாசியப்பன் அவர்களால் சர்வோதய உலகில் நமது பங்கு என்னும் பொருள் பற்றியும் உரை நிகழ்ந்தது. குப்பாண்டாம்பாளையம் பள்ளி மாணவ மாணவிகளின் கலை நிகழ்ச்சிக்குப் பின் தலைமையாசிரியர் திரு பாலசுப்ரமணியம் விழாவிற்கு வருகை தந்துள்ள அனைவருக்கும் நன்றி கூற நாட்டுப் பண் பாடக் கூட்டம் இனிது முடிவுற்றது.

அவனாசி பஞ்சாயத்து யூனியன் சேயூர் கண்ணகி தியேட்டரில் 27-9-64 தேதி பஞ்சாயத்து யூனியன் பெருந்தலைவர் திரு கே. எம். ராமசாமி அவர்கள் தலைமையில் உர விழாக் கொண்டாடப் பெற்றது. அவ்வமயம் கோவை மாவட்ட விவசாய அலுவலர் உயர்திரு கே. சிவராமகிருஷ்ணன், பி. எஸ்ஸி. (விவ) அவர்கள் "உரமும் நிலமும்" என்னும் பொருள் பற்றியும் திருவாங்கூர் உர ஸ்தாபன நிர்வாகி திரு கே. வி. சீனிவாசன் அவர்களால் "உரமும் விளைச்சலும்" என்னும் பொருள் பற்றியும் சொற்பொழிவாற்றப் பெற்றன. விழாவிற்கு வருகை தந்துள்ள அனைவருக்கும் பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் திரு டி. எஸ். கிருஷ்ணசாமி அவர்களால் நன்றி கூறப் பெற்றது. நாட்டு வாழ்த்துடன் கூட்டம் இனிது முடிவுற்றது.



### வேதாரண்யம் யூனியன்

2-10-1964ம் நாள் வெள்ளிக் கிழமை வேதாரண்யம் வடமறைரஸ்தாவில் காந்திஜெயந்தி விழாவும், கழகக் கல்விநிலையத் திறப்பு விழாவும் வேதாரண்யம் பெருநிலக் கிழார் திரு சி. சு. சுப்பையா பிள்ளை அவர்கள் தலைமையில் நடைபெற்றது. காலையில் திருப்பெருந் திரு வே. க. சோமசுந்தர பண்டார சந்நதி அவர்கள் தேசீயக் கொடி ஏற்றுவித்தார்கள். பள்ளியில் கிராம சேவக் திரு எம். ஏ. இராதாகிருஷ்ணன் அவர்கள் கொடி ஏற்றுவித்தார்கள். மாலையில் வேதாரண்யம் அரங்கசாமி சோமாஸ்கந்தம் அவர்களின் நாதஸ்வர கச்சேரி நடைபெற்றது. வேதாரண்யம் பஞ்சாயத்துக் கூட்டு மன்றப் பெருந்தலைவர் திரு பெ. வெங்கடாசலத் தேவர், எம். எல். சி. அவர்கள் கழகக் கல்வி நிலையத்தினைத் திறந்து வைத்தார்கள். திரு பு. சுந்தரம் அவர்கள் வரவேற்புரை வாசித்தார்கள். திருப்பெருந் திரு வி. செவந்திநாத பண்டார சந்நதி அவர்கள் அண்ணல் காந்தியின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்தார்கள். தஞ்சை பொதுப் பணித்துறை உதவி பொறியியலாளர் திரு சபாரெத்தினம், பி. இ., அவர்கள் நேருஜியின் திருவுருவப்படத்தை திறந்து வைத்தார்கள். கோயில் நிர்வாக அலுவலர் திரு டி. நாகராஜன், பி. எஸ்ஸி., பஞ்சாயத்து நிர்வாக அலுவலர் திரு கிருஷ்ணன், விவசாய வளர்ச்சி அலுவலர், திரு த. கன்னையா, பி. எஸ்ஸி. (விவ), பள்ளித்துணை ஆய்வர் திரு. து.

துரைராஜி, பி.ஏ., பி.டி. தொழில் வளர்ச்சி அலுவலர் திரு. ம. சத்தியநாராயணன், பி. எஸ்ஸி., கல்வி வளர்ச்சி அலுவலர் திரு கே. நாராயணசாமி, சமூக நல ஊழியர் திரு ஆ. ஞானசுந்தரம் ஆகியோர் சொற்பொழிவாற்றி னர். இரவு 8 மணிக்கு திரு எம். வி. தம்புசாமிப் பிள்ளை அவர்கள் தலைமையில் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. கூட்டத்திற்கு வந்திருந்த அனைவரும் தேசீய ஒருமைப்பாடு உறுதிமொழி எடுத் துக் கொண்டனர்.

இறுதியாகக் கன்வீனர் திரு ஜி. கார்த்திகேசன் அவர்கள் கலை நிகழ்ச்சிகள் தயாரித்த பள்ளி ஆசிரியர்களையும், முக்கிய சேவிகா குமாரி சு. நாகலெட்சுமி அவர்களையும் பாராட்டியதுடன் அனைவருக்கும் நன்றி கூறினர்.



## அம்மாபேட்டை யூனியன்

கோவை மாவட்டம் அம்மா பேட்டை பஞ்சாயத்து யூனியன் சார்பில் அக்டோபர் 2-ந் தேதி காந்திஜியின் 75வது பிறந்த தின விழாவும் தேசீயத் துப்புரவு தின விழாவும் மிகச் சிறப்பாகவும், பய னுள்ள வகையிலும் கொண் டாடப்பட்டன. அன்று காலை ஊர்ப் பொது மக்களும், பள்ளிப் பிள்ளைகளும் திரண்டு காந்திஜி படத்துடன் ஊர்வலம் வந்தனர். கொடி யேற்றத்திற்குப் பின்பு, 8-15 க்கு தேசிய ஒருமைப்பாடு தின விழா யூனியன் தலைவர் திரு எம். பி. பழனிவேல் கவுண்டர் தலைமையில் நடைபெற்றது. கூட்ட முடிவில் ஒருமைப்பாடு உறுதிமொழிப் பத்திர கையெழுத் தியக்கம் நடைபெற்றது. பின் னர் இரண்டரை மணி நேரம் ஹரிஜனச் சேரித் துப்புரவு நடை பெற்றது. ஹரிஜனக் குழந்தை களுக்கு எண்ணெய் சீயக்காய் இலவசமாக அளித்துக்குளிப்பாட் டப்பட்டனர். வீட்டுத் துப்புரவுப் போட்டியும், குழந்தைக் காட்சி யும் நடத்தப்பட்டன. முற்பகல் 12 மணிக்கு நூற்புப் போட்டி நடைபெற்றது. பிற்பகல் உள் ளூர் பெருநிலக் கிழார் திரு ஏ. பெரியதம்பி கவுண்டர் 500 ஏழைப் பிள்ளைகளுக்கு உண வளித்தார். அன்று பிற்பகல் காந்தீயம், சர்வோதயம் பற்றிய பேச்சு. பாட்டுப் போட்டிகளும், விளையாட்டுப் போட்டியும் நடந் தன. மாலை நடந்த சர்வோதயப் பிரார்த்தனையில் ஊரார் பெருந் திரளாகக் கூடியிருந்தனர், மாலை யில் திரு எம். பி. பழனிவேல் கவுண்டர் தலைமையில் பொதுக் கூட்டம் நடைபெற்றது. முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் திரு ஜி. ஜி. குருமூர்த்தி கதர் விற்பனை யைத் துவக்கி வைத்தார். கோபி கோட்டாட்சித் தலைவர் திரு ஆர். தங்கவேலு பி.ஏ., பள்ளிப் பிள்ளை களுக்கு இலவசமாக வசூலிக்கப் பட்டிருந்த சிலேட்டு, புத்தகங்கள் சீருடைகள் வழங்கி தக்க அறி வுரைகள் வழங்கினர். பவானி தாசில்தார் திரு ஏ. இசக்கி அவர் கள் நூற்புப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கும், யூனியன் கமிஷனர் திரு பி. துரைராஜ் பி. ஏ., அவர்கள், பேச்சு பாட்டுப் போட்டிகளில் வெற்றி பெற்றவர் களுக்கும், அம்மாபேட்டை பஞ்சாயத்து தலைவர் திரு பி. எஸ். பழனிசாமிக் கவுண்டர் அவர்கள் வீட்டை சுத்தமாக வைத்திருந் தவர்களுக்கும், திரு கே. தேவ ராஜ செட்டியார் ஆரோக்கிய மாக வளர்க்கப்பட்ட குழந்தை களுக்கும் பரிசுகள் வழங்கி உரை யாற்றினர்கள். திரு. கிருஷ்ண ராஜ், கல்வி விஸ்தரிப்பு அதிகாரி நன்றி கூற நாட்டுப் பண்ணுடன் விழா முடிவடைந்தது. அன்று இரவு ஒலகடம் கலைவாணி கலா மன்றத்தாரால் நடத்தப்பட்ட

வில்லுப்பாட்டு நிகழ்ச்சிக்குப் பொதுமக்கள் பெருந்திரளாக வந்திருந்து கேட்டு மகிழ்ந்தனர்.



### திருச்செங்கோடு யூனியன்

திருச்செங்கோடு பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த வட்டூர் பெத்தாம் பட்டியில் 28-9-64 திங்கட்கிழமை மாலையில் ஆரம்பப் பள்ளித் திறப்பு விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. பஞ்சாயத்து யூனியன் உப தலைவர் திரு டி. ஏ. இராஜவேல், அவர்கள் கொடி ஏற்றி வைக்க, யூனியன் சேர்மென் திரு க. இராமச்சந்திரன் அவர்கள் திறப்பு விழா நிகழ்ச்சிக்குத் தலைமை வகித்தார்கள். சங்ககிரி கோட்டாட்சித் தலைவர் திரு ஏ. வி. நரசிம்மன், பி. ஏ. அவர்கள் பள்ளிக் கட்டிடத்தைத் திறந்து வைத்துச் சுதந்திர இந்தியாவில் கல்வியின் முன்னேற்றம் பற்றி அரியதொரு சொற்பொழிவாற்றினார்கள். நாமக்கல் மாவட்ட விவசாய அதிகாரி திரு நஞ்சப்ப மணியகாரர் அவர்கள் கல்வியும் விவசாய வளர்ச்சி பற்றியும் பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் திரு. க.சண்முகம் அவர்கள் கல்வியும் பஞ்சாயத்துகளின் கடமைகள் பற்றியும் விரிவாகப் பேசினார்கள். பஞ்சாயத்துத் தலைவர் திரு. பி. மாரப்ப கவுண்டர் நன்றி கூறக் கூட்டம் இனிது முடிவுற்றது.



### செம்பனார்கோயில் யூனியன்

29-9-64 செவ்வாய்க் கிழமை மாலை 5 மணிக்குச் செம்பனார் கோவில் பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்தில், மேற்படி யூனியன் தலைவர் திரு. க. ராமலிங்கம் அவர்கள் தலைமையில் உரவார விழா கொண்டாடிய சமயம் திரு. வெங்கடசுப்பிரமணியம், பி. எஸ். சி., (விவசாயம்) தஞ்சை மாவட்ட விவசாய அதிகாரி திரு. சண்முகசுந்திரம், மாவட்ட விவசாய அதிகாரி அவர்களும் விவசாயத்தின் புதுமுறைகள் பின்பற்றுதல் உர உபயோகம், பூச்சி மருந்துகளால் ஏற்படும் நன்மைகள் குறித்து விரிவுரை ஆற்றிய பின், பரசலூர் தலைவர் கோதண்டபாணி, மிராசுதார் எம். விசுவனுதய்யர் அவர்களால் விவசாய அனுபவம் குறித்தும் கூறப்பட்டது. பின்பு தலைவர் முடிவுரையில் விவசாயிகள் உணவுப் பஞ்சத்தை ஒழிக்க நடக்கவேண்டிய முறைகள் பற்றி விரிவாக அறிவுரை வழங்கிய பின், தலைவர்

---

அவர்களால் நன்றி கூறப்பட்டு விழா இனிது முடிந்தது.

28-9-64 திங்கள் கிழமை மாலை 6 மணிக்கு செம்பனார்கோவில் பஞ்சாயத்து யூனியன் தலைவர் திரு. சு. ராமலிங்கம் தலைமையில் செம்பனார்கோவில் ஒழுங்குமுறை மார்க்கட்டிங் சொஸைட்டி தஞ்சை மாவட்ட ஆட்சியாளர் அவர்களால் திறக்கப்பட்டது. அது சமயம் செம்பனார்கோவில் யூனியனைச் சேர்ந்த திருவிளையட்டம், மருதப்பள்ளம், கீழையூர் ஆகிய பஞ்சாயத்துகளுக்குக்காங் கேயம் பொலிகாளைகள் தஞ்சை மாவட்ட ஆட்சித் தலைவர் திரு. பி. எஸ். வேதநாராயணன் ஐ. ஏ. எஸ். ஆல் வழங்கப்பட்டன. மாவட்ட கால்நடை அதிகாரி திரு. ராமசாமி, கால்நடை பாது காப்பு பற்றி விளக்க உரை நிகழ்த் தினார். பின் ஆக்கூர் டி. ஆர். அகோரம் ஐயர் அவர்களால் நன்றி கூறப்பட்டு தேசீய கீதத் துடன் விழா இனிது முடிந்தது.

பின் மாவட்ட விளம்பர அதி காரியால் ஐந்தாண்டுத் திட்டம், நேருஜி மறைவு சம்பந்தமான படக்காட்சிகளும் நடைபெற்றன.

செம்பனார்கோவில் பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்தில், காலை 9 மணிக்கு யூனியன் தலைவர் திரு. சு. ராமலிங்கம் அவர்களால் தேசீய கொடியேற்றப்பட்டு மேற் படியார் தலைமையில் மாயவரம் கோட்டாட்சித் தலைவர் திரு. ச. ஆறுமுகம், பி. ஏ. அவர்களால் காந்தி ஜெயந்தி விழாவின்போது தேசீய ஒருமைப்பாடு விழா தீவிர கதர் திட்ட விழா, துவக்கிவைத்து மேற்படி திட்டங்களின் அவசி யம், மக்களது கடமை குறித்து விரிவாகச் சொற்பொழிவு ஆற்றி னார்கள். அதைத் தொடர்ந்து பல பஞ்சாயத்து தலைவர், ஆசிரியர் விரிவான சொற்பொழிவுகள் மேற் கண்ட விழாக்கள் குறித்து நடந் தன. பின்பு தலைவர் அவர்கள் தனது முடிவுரையில் மக்களது கடமை, தேசப்பற்று, திட்டங் களுக்கு ஆதரவு கொடுத்தல், உணவுப் பஞ்சத்தைப் போக்க தியாக மனப்பான்மையின் அவசி யத்தை கூறி, நாடு முன்னேற காந்திஜியின் வாழ்க்கையை பின் பற்ற வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். பிறகு நன்றி கூறப் பட்டு தேசீய கீதத்துடன் விழா இனிது முடிவுற்றது. ❋

—o—

## அடிக்கடி தூக்கம்வருமா ?

சிலருக்கு அடிக்கடி தூக்கம் வரும். பகலெல்லாம் தூக்கம் வரும். இரவு முழுவதும் நன்றாகத் தூங்கியிருந் தால்கூட, பகலிலும் தூங்கம்வந்து கண்ணை அழுத்தும். இப்படித் தூக்கம் வருவதற்குப் பலகாரணங்கள் உண்டு. மூளை பாதிக்கப்பட்டிருந்தால்தான் இப்படித் தூக்கம் வரும். ஆகையால், முதலில் டாக்டரைக் கண்டு தூக்கத்தின் காரணத்தைக் கண்டுபிடிக்கச் சொல்லவேண்டும். உடம்பில் வைட்டமின் பி சத்துக் குறைந்திருந்தாலும் அடிக்கடி தூக்கம்வரும். நிறைய ஆரஞ்சுப்பழம் சாப்பிட்டால், வைட்டமின் சத்து நிறையக் கிடைக்கும். வைட்டமின் பி மாத்திரைகளை சாப்பிடுவதைவிட இச்சத்து நிறைந்துள்ள பச்சைக் காய்கறிகளையும் ஆரஞ்சுப் பழங்களையும் சாப்பிடுவதே மிக நலம் பயக்கும்.

# இல்லத்தில் தந்தையின் இடம்

ஸி. ஆர். ஆண்டர்சன், எம். டி.

''எங்குத் தாய் இருக்கிருளோ, அதுதான் இல்லம்'' என்பது பழமொழி. இந்த எளிய வார்த்தைகளில் ஆழ்ந்த பொருள் பொதிந்துள்ளது. இல்லத்தைப்பற்றி நாம் நினைக்கும்போதெல்லாம் தாயின் நினைவுதான் முதலில் வரும். எனினும் மிகவும் முக்கியமான, நம்மால் அலட்சியப்படுத்த முடியாத வேறு ஒருவரும் இருக்கிருர். அவர்தான் தந்தை. வளர்ந்த பெரிய பிள்ளைகள் இளைஞர்கள் முதலியோர் தகாத ஒழுக்கம் நிறைந்தவர்களாக இருக்கும் இன்றைய நாளில் தந்தையின் பொறுப்பு மகத்தானது, அதிகாரிகளிடம் மரியாதை காட்ட வேண்டிய நல்ல பழக்கம் சிறு வயதிலேயே வர வேண்டும். அறிவு மிகுந்த, முன் மாதிரியான தந்தையால்தான் இந்தப் பழக்கத்தைக் கொண்டுவர இயலும்.

பெற்ருேரில் ஒருவர் இடத்தை மற்றவர் நிரப்ப முடியாது. அதாவது, நல்ல இல்லத்திற்கு இவர்கள் இருவருமே சரிவிகிதமாகத் தேவைப்படுகிருர்கள். குறிப்பாக, குழந்தைகள் வளரும் பருவத்தில் அவர்களை நல்லொழுக்கத்தில் பயிற்றுவிக்க இவர்கள் இருவருமே தேவைப்படுகிருர்கள். வாழ்க்கையின் உண்மைகளை உணர்ந்துகொள்வதற்கு இந்த இருவர் பணியும் இன்றியமையாத தேவையாக இருக்கிறது. இதில் ஒவ்வொருவரும் பலன் பெறுகிருர்கள்.

நல்ல பெற்ருேரின் குழந்தைகள் சில சமயங்களில் கெட்டவர்களாக இருக்கிருர்கள். இது எப்பொழுதுமே பெற்ருேரின்குற்றமல்ல. வளரும் பருவத்தில் வரும் சில பழக்கங்கள் குழந்தைகளை நல்லவர்களாக்க முடியாதவாறு செய்து விடுகின்றன. பணம் சம்பாதிப்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருக்கும் அனேகத் தந்தைமார் தம் குழந்தைகட்கு நல்ல பழக்கத்தைக் கற்பிக்கத் தவறி விடுகின்றனர். இப்படிப்பட்டோர் வாணிப உலகில் எவ்வளவுதான் சிறந்தவர்களாக இருப்பினும் நல்ல பெற்ருேராக மாட்டார்கள், நல்ல பெற்ருேர் தம் குழந்தைகளை நற்பண்பில் பயிற்றுவிக்கத் தமது நேரத்தைச் செலவிடுவர். குழந்தைகளை அவர்கள் வழியில் விட்டுவிடாமல் இருப்பதுதான் குழந்தையை வளர்க்கும் சிறந்த முறை. ஒவ்வொரு பையனும் இயற்கையாகவே வீர வணக்கம் செய்யும் இயல்பினன். தன்

பெற்ருேரால் செய்ய இயலாத செயல் ஒன்றுமே உலகில்இல்லே என்பது அவன் எண்ணம்.

தந்தையே, உமது மகன் இவ் விதமாகவே உம்மை வீரர்என்று எண்ணுவதற்குரிய வாய்ப்பை அவனுக்கு அளியும். உம் மைப்பற்றி அவன்கொண்டுள்ள இந்த உயர்ந்த எண்ணம்உமக்கு நன்மை பயக்கும். நீர் அவன் வாழ்விலே முக்கியத்துவம் பெற் றவர். நீர்உண்மையிலே அவனே நேசிக்கிறீர். அவனேடு நீர் என் றும் இருக்க வேண்டும் என்று அவன் விரும்புகிருன். அவனுக் காக நீர் ஒரு சில மணித் துளி களே ஒதுக்குக. அவனேடு விளே யாடுக. அவனுக்குச் சில எளிய உண்மைகளே உணர்த்துக. உமது வாழ்வில் அவனுக்கும் ஒரு பங்கு உண்டு என்பதை அவன் உணர்ந்துகொள்ளுமாறு நடந்து கொள்க. அவனே ஒதுக்கி விடாதீர். விலே மதிக்க வொண்ணுத இந்த நாட்கள் விரைவில் சென்று விடும்; மீண் டும் திரும்பி வரா. இன்று நீர் அவனுக்குச் செய்வது அவன் பிற்கால வாழ்வை வகுத்துக் கொள்ளப் பெரிதும் துணே புரியும்.

இல்லத்தில் தந்தை வகிக்கும் இடம் குடும்பத்தினரின் தேவை களே அறிந்து கொள்வதற்கு அதிகமாக உதவும். இல்லத்தி லேயே கற்றுக்கொள்ளும் இந்த அடிப்படைக் கல்விதான் சிறு வர்களே எதிர்காலத்தில் நல்ல குடிமக்களாகச் செய்யும். அவர் கள் வளர்ந்த பின் அவர்கள் அதிகாரத்தைவகிக்கும் ஆற்றல் பெறுகிருர்கள், பள்ளியிலும் இந்த அடிப்படைக் கல்விதான் தரப்படுகிறது. தெருக்களிலே அதிகாரத்தை வகிப்பவர்கள் போலிசார். வேலே செய்யும் இடங்களில் இந்த அதிகா ரத்தை யுடையவர்கள் இருக் கிருர்கள். வாழ்க்கை முழு வதற்கும் பார்த்தால், இந்த அதி காரத்தை அமுல் நடத்துகிறவர் கள் அரசியலார். பெரியவர் களாக வளர்ந்த பின் அவர்கள் எங்கு வாழ்ந்தாலும் பதவியை அவர்கள் தைரியத்தோடு ஏற்று கொள்கிருர்கள். அவர்களுக்கு ஒரு நல்ல தந்தை இருந்து அவரை நேசிக்கவும், அவரை நம்பவும் அவர்கள் கற்றுக் கொண்டால், எதிர்காலத்தின் எல்லாப் பிரச்சினேகளுக்கும் தீர்வு கண்டு கொள்வர்.

ஆனுல் அவர்கள் தம் இளம் வயதில் அநீதியாக நடத்தப்பட் டாலோ, அல்லது அலட்சியப் படுத்தப்பட்டாலோ அவர்கள் ஏற்கும் பதவிகளில் கோபம் மிகுந்தவர்களாகவே இறுதி வரையில் இருப்பார்கள். இப் படிப்பட்டவர் எல்லாம் சபல சித்தமுள்ளவர்களாகவும், இருக் கும் வேலேயை விட்டுவிட்டு வேறு வேலேக்குப்போகும் தன் மையுடையவர்களாகவும், உண் மையை உணர்ந்து கொள்ள முடியாதவர்களாகவும் இருப் பார்கள். அவர்கள் முன் கோபமே அவர்களேக் கெடுத்து

விடும். பலர் மது அருந்துபவர்களாகவும், சிலர் வேறு குற்றங்கள் இழைக்கக் கூடியவராகவும் மாறி விடுகிருர்கள்.

சில பெற்ருேர் சரியான ஆசிரியர்களாக இருப்பது இல்லே. காரணம் அவர்களே இந்த அடிப்படைத் தத்துவத்தைக் கற்றுக் கொள்ளவில்லே. ஒரு வேளே அவர்கள் கொடிய பெற்ருேரிடம் வளர்ந்தவர்களாக இருக்கலாம். பெற்ருேர் அதிகக் கண்டிப்பு மிகுந்தவர்களாக இருந்தால், அவர்களது பிள்ளேகள் விதிகளேயும் நிபந்தனேகளேயும் வெறுப்பர். கண்டிப்பே இல்லாத பெற்ருேரிடம் வளரும் பிள்ளே ஒழுங்கற்றதாக இருக்கும். இந்த இரண்டுவித வளர்ப்பும் சரியல்ல. இந்த உலகம் அவர்களுக்கு ஒரு வேலே தேடித் தர வேண்டுமென்று கூட நினேக்கத் துவங்குவர்.

நல்வாழ்க்கையின் அடிப்படைத் தத்துவத்தை நமது வீட்டிலேயே நமது பிள்ளேகளுக்குக் கற்றுத் தந்துவிட வேண்டும். இந்த மாதிரி அடிப்படைக் கல்வி வீட்டிலேயே பெருத ஒரு குழந்தை வாழ்விலே நல்ல விதமாக இருக்கலாம். காரணம் அவனே அறியாமலே அவன் இவ்வித நல்ல பயிற்சி கொடுப்பவர்களேப் பின்பற்றி இருக்கலாம். நல்ல பயிற்சி பெருத இளேஞர்கள் கொடிய குற்றவாளிகளாக இருக்கிருர்கள் என்பதைத் தற்கால நீதிமன்றங்கள் நிருபித்து வருகின்றன. முன்பு எப்பொழுதுமே இல்லாத குற்றங்கள் பல இப்பொழுது நிகழ்கின்றன. இவ்விதக் குற்றவாளிகளில் பல இளேஞர் நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவர். தற்காலம் வீட்டில் நல்ல பழக்கம் பயிற்றுவிக்கப்படவில்லே என்பதற்கு இது ஒரு சான்று. சமூகத்தின் நல்வாழ்விற்கு வீட்டிலேயே நல்ல பயிற்சி தேவைப்படுகிறது.

இந்தக் குறைபாடுகளுக்குளெல்லாம் தந்தை ஒரு விதத்தில் காரணமாகிருர். அவர் வேறு பல காரியங்களில் கவனத்தைச் செலுத்துகிருர். தம் குடும்பத்தைக் கவனிக்க அவருக்கு நேரம் இல்லே. தந்தையின்பொறுப்பை தாயார் எடுத்துக்கொள்கிருள். இது குழந்தைக்கு நல்லதே அல்ல. நல்ல தந்தை தமது நேரத்தைத் தமது பிள்ளேகளுக்காகச் செலவிடுவார். தந்தை உடல் உறுதி மிக்குடையவராகவும், அறிவு நிறைந்தவராகவும் இருந்தால், அவர் நிறையச் சம்பாதிக்கா விட்டாலும் பிள்ளேகள் அவரை நேசிப்பார்கள். வாழ்க்கையில் சில காரியங்கள் பணத்தை விட முக்கியத்துவம் பெறுகின்றன. விடுமுறை நாட்களே வீட்டிலேயே குடும்பத்திலுள்ளவர்களிடம் செலவிடாது, வெளியில் நண்பர்களோடு செலவிடும் தந்தையைப் பிள்ளேகள் அலட்சியப் படுத்துவர்.

இளங் குழந்தைகளே நல்ல விதமாக வளர்ப்பதற்கு உறுதியான உடலும், சக்தி மிகுந்த குரலும் இன்றியமையாதவை.

உணர்ச்சி வயப்படாத, நம்பத் தகுந்த தந்தை அவர்களுக்குத் தேவைப்படுகிறது. அதிகக் கோபப்பட்டுக் கத்திக்கொண்டிருக்கும் தந்தையைப் பிள்ளைகள் விரும்பவே மாட்டார்கள். தந்தைக்கு இது ஒரு விதப் பலவீனம் என்றுதான் சொல்ல வேண்டும். அன்பு மிகுந்தவரின் அதிகாரத்திற்குத்தான் குழந்தைகள் மதிப்புத் தருவர். இந்த மாதிரிக் குணமுள்ள தந்தையால் தான் அம்மாவும் மகிழ்ச்சி பெறுவாள். அவளும் அவரையே சேர்ந்து வாழவேண்டியவள். அவளது பொறுப்பின் பெரும் பகுதியைக் கணவரே எடுத்துக் கொள்வதால், அவளது வாழ்வும் சுலபமாக இருக்கிறது.

குழந்தைகள் விளையாட்டை விரும்புவர். ஒரு சார்பாகச் சார்ந்து கொள்ளும் தன்மையை வெறுப்பர். ஒரு தந்தை, தம் ஒவ்வொரு குழந்தையிடமும் அன்பைப் பகிர்ந்துகொடுப்பதில் கண்ணும் கருத்துமாய் இருக்க வேண்டும். தந்தையே, உமது மகன் வாழ்வில் வளம்பெற வேண்டுமானல், நீர் அவனுக்கு ஒரு தோழனாய் இரும். அவன் உம்மோடு வேலை செய்யட்டும். உம்மோடு உரையாடட்டும். நீர் அவனுக்கு உண்மையான தோழன் என்பதை அவன் உணரட்டும். அவனை விட்டுப் பிரிந்து விடாதீர். உண்மையையும், தன்னலமின்மையையும் அவனுக்குக் கற்றுத் தாரும். அவன் பிறருக்கு முன்மாதிரியாக விளங்குமாறு செய்யும். அவன் நல்ல குடிமகனாக விளங்க அவனுக்கு உதவி புரியும். அவன் வளர்ந்தவுடன் இந்த மனிதத் தன்மையைப் பெற்று விட்டதற்காகப் பெருமைப்படுவான்.

உயர்ந்த குணம் ஒரே நாளில் வந்து விடாது. அநேக ஆண்டுகட்குப் பிறகுதான் உருவாகும். அதனால்தான் நல்ல தந்தை ஒவ்வொரு குடும்பத்திற்கும் இன்றியமையாதவராக இருக்கிருர். வாழ்க்கைப் போராட்டத்தில் நாம் எப்படி உண்மை மனிதனைப் போராட வேண்டும் என்பதைக் கற்றுத் தரத் தந்தை மிகத் தேவைப்படுகிருர். பிள்ளைகளை அளவிற்கதிகமாகக் கவனித்தால், அவர்களாகவே நற்குணங்களை வளர்த்துக் கொள்ளத் தக்க வாய்ப்பை இழந்து விடுவர். அவர்கள் பள்ளத்தாக்கில் வளர்ந்த மரங்களைப்போன்றவர். அவை பார்வைக்கு நன்ருக இருக்கலாம். ஆனல் புயல் வந்தால், அவை வீழ்ந்துவிடும்—வலிமை மிகுந்த வேர்கள் இல்லாததால்.

ஆனல் மலை உச்சிமீது வளர்ந்துள்ள மரங்கள் உறுதியானவை. அவை இளமரமாயிருந்த போது, பயங்கரக் காற்றைக் கண்டவை. அவற்றின் வேர்கள் ஆழமாகப் பதிந்துள்ளன, அவை நிலத்தின் ஆழத்தில் சென்று தண்ணீரையும் உணவையும் நிறையப் பெற்றுக்

கொண்டுள்ளன. இந்த மாதிரி மரங்கள் பயங்கரக் காற்றுக்கு முன் வளைந்து கொடுக்கும். ஏன் தெரியுமா? அவை சிறு மரமாக இருக்கும் போதே, புயலிலே அடிபட்டுப் பலப்பட்டு விட்டன.

இது மனிதருக்கும் பொருந்தும். மிகுதியான பாதுகாப்பு உள்ளவர்கள் எளிதில் தோற்கடிக்கப் பெறுவர். தற்கால வாழ்விலே போராடப் பக்குவமற்றவராகி விடுகின்றனர். வாழ்க்கையில் போராடுவதை இளவயதிலேயே தம்பெற்றோரிடமிருந்து கற்றுக் கொண்ட பிள்ளைகள் எதைக்கண்டும் பயப்படுவது இல்லை. அவர்கள் வாழ்வில் ஏற்படும் புயலைக் கண்டு அஞ்சுவதில்லை. சிறுவயதிலேயே கீழ்ப்படிதலையும் தன்னடக்கத்தையும் கற்றுக்கொண்ட காரணத்தால் இவ்விதக் குணங்களைச் சிறு வயதிலேயே பிள்ளைகளுக்குக் கற்றுத் தரவேண்டிய பொறுப்பு தந்தையினுடையது. இது இலகுவான பணியல்ல. எவ்வளவு விரைவில் இந்த அடிப்படைத் தத்துவத்தை அவர்கள் கற்றுக் கொள்கிறார்களோ, அவ்வளவுக்கு அவர்கள் மகிழ்வாக இருப்பார்கள்.

இல்லத்தில் தந்தையின்இடம் மிக மிகத் தேவையான ஒன்று. தம்மைச் சார்ந்துள்ளவர்களுக்காகச் சம்பாதிப்பது அவரது முதற் கடமை. ஆனால் இது மாத்திரமே அவரது கடமையாகி விடாது. உண்மை அன்பை அவர் தமது பிள்ளைகளிடமிருந்து விலை கொடுத்து வாங்க முடியாது. சரிவிகிதமாகத் தம் அன்பை இல்லத்திலுள்ள பிள்ளைகளுக்குப் பகிர்ந்து கொடுப்பதன் வாயிலாகத்தான் அவர் இதை அடையலாம். அவரிடமிருந்து தான் குழந்தை வாழ்வின் அடிப்படைக் கல்வியைக் கற்றுக் கொள்ளமுடியும்.

இவ்விதத் தந்தைதான் தமது பிள்ளைகளிடமிருந்து மரியாதையையும், நம்பிக்கையையும் பெற முடியும். பிள்ளைகள் வருங்காலத்தில் தமது தந்தையிடமிருந்து பெற்ற உதவிகளுக்கும், நல்வழி காட்டியாக அவர் இருந்ததற்கும் என்றும் அவருக்கு நன்றியுள்ளவர்களாக இருப்பார்கள்.

—நன்றி-நல்வழி.



"விடுதலை ஆர்வத்தால் கருத்து வேறுபாடுகள் மறைந்தன. நாட்டுக்காகவே உழைக்கும் வேகம் பெருகியது. எண்ணிய எண்ணம், கண்ட கனவு பலித்துவிட்டது. ஆனால் கொண்ட குறிக்கோள் நிறைவேறிவிட்டது என்று சொல்ல முடியவில்லை. தன்னலம் இல்லாத மனம் கொண்டவர்களால்தான் குறிக்கோளை நிறைவேற்ற முடியும். இந்தியா எல்லா வளமும் கொண்ட நாடாக விளங்கும் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. பொறுமையும், உண்மையும், உறுதியும் கொண்டவர்கள் பலராகச் சேர்ந்து நல்ல எண்ணங்களை அடிப்படையாகக் கொண்ட செயல்களைச் செய்வோம்!"

—காந்திஜீ




**6. கனவுலகுக் கன்னி!**

அவளைப் பிரிந்து விட்டான் அவன்!

அவளோ அனற்புழுவெனத் துடித்துத் துயர் கொள்கிறாள்!

கடந்த கால நினைவுகள் கன்னியை அல்லற்படுத்தி-ஆறாத் துயரில் ஆழ்த்திவிடுகின்றன!

சிந்தையைக் கிளறும் விந்தைப் பருவத்தாள் வேதனைக்குள்ளானாள்—உள்ளம் எதையெதையோ எண்ண ஆரம்பித்துவிட்டது!

"இதோ வருகிறேன்," என்று சொல்லிச் சென்ற என் காதலர், நாட்கள் இத்தனை ஓடியும் இன்னும் காணவில்லை! நானோ நாட்கள் செல்லச் செல்ல அவர் நினைவால் நலிந்தும் மெலிந்தும் வருகின்றேன்!

நனவில் வந்து அன்பு செய்யாத காதலரைத் தேடிப் பிடித்து அழைத்துக் கொண்டு வருவதற்காகவே, கனவில் அவரைப் பற்றிய காதல் நிகழ்ச்சிகள் தோன்றுகின்றன!

அவர் என்னுடனிருந்த நாட்களில் கண்ட இன்பம், அப்போது மட்டுமே இருந்ததாயிற்று. இப்போது காணும் கனவும் கண்ட போது மட்டுமே இன்பம் பயப்பதாக உள்ளது!

நனவில் நேராக வந்து எனக்கு இன்பத்தைக் கொடுக்காத கொடியவர்—கனவில் மட்டும் வந்து அடிக்கடி என்னை வருத்துவது எதற்காக?

நனவு என்று கூறப்படுகின்ற ஒன்று இல்லாதிருக்குமானால், வந்து என்னிடம் கொஞ்சிக் குலவும் என்னுடைய காதலர் என்னை விட்டுப் பிரியாமல் இருப்பார்!

அவருடைய பிரிவால் நான் துயர்கொண்டு துயில் கொள்ளும் சமயம்—என்னவர் அனுப்பிய தூதோடு வந்த கனவுக்குரிய விருந்தாக நான் என் செய்து உதவுவேன்?

நனவில் வந்து என்னை மகிழ்விக்காத காதலரை, நான் கனவில் காண்பதால்—கண்டு மகிழ்வதால்—மகிழ்ந்து இன்புறுவதாலேயே இன்னும் என்னுடைய உயிர் என்னைவிட்டுப் பிரியாமலிருக்கின்றது!

என்றாலும், இந்தக் கனவு மிகவும் பொல்லாதது. நான் தூங்கும் சமயத்தில் கனவில் வரும் கண்ணாளன் என் தோள்மீது தொட்டு விளையாடுகிறார்!



அந்த இன்ப உணர்ச்சியில் நான் விழித்துக்கொள்ளும் சமயம் அவரை என்னிடமிருந்து பிரித்து விடுகின்றது கனவு. இதுதான் சமயமென்று அவரோ—விரைந்து வந்து என் நெஞ்சில் நின்றுவிடு கிருர்!

துஞ்சுங்கால் தோள்மேல ராகி
விழிக்குங்கால்
நெஞ்சத்தர் ஆவர் விரைந்து.

❋ ❋ ❋

## 7. அமைதியை அழிப்பவள்!

''ஆகா! இவ்வஞ்சிக் கொடியின் அழகை வடித்தெடுக்க—இளமை யென்னும் உளியை அளித்து—பருவமென்னும் சிற்பியைவிட்டு—என்ன பக்குவமாகச் செதுக்கி நடமாடச் செய்திருக்கிறது இயற்கை!

காண்போர் கணைபாய்ந்த வேதனை கொள்ளும் கூர்விழிகள்!

கள்வெறி கொள்ளச் செய்யும் புருவங்கள்!

முத்தோ...! முல்லையோ...! அல்லது முதிராத மொட்டோ வெனத் திகைக்க வைக்கும் பல்வரிசை!

வெடித்த மாதுளை போன்ற துடித்த அதரங்கள்!

கன்னங்கள் கண்ணுடியல்ல—கற்பனைக்கும் எட்டாத எழில் சொட்டும் இன்பத்திட்டு!

இந்த அசைந்தாடும் பூங்கொடிக்கு இப்புவனத்தையே பணயம் வைக்கலாமே! ஐயோ, இது என்ன விந்தை! அந்த அழகோவியத்தின் முன்னர் என் ஆற்றலும் வலிமை குன்றுகிறதே!

எதிரிகள் எக்காளமிட்டு வரும் நேரங்களில் அவர்கள் மேல் வேங்கையெனப் பாய வீறிட்டிருக்கிறேன்!

களவொலியைக் கானமாக ரசித்ததுண்டு?

பிளறி வரும் களிறுகளைக்கண்டு அஞ்சியதில்லை நான்-அதை என் வேல் கொண்டு வீழ்த்தியிருக்கிறேன்!

குதிரைக் குளம்புகளின் முத்திரைகள் ஏராளம் என் உடலிலே!

திரண்டு வரும் படை நடுவே புரண்டு வரும் புகை மண்டலத்துள் புகுந்திருக்கிறேன்!

இரண அரங்கத்திலே ரீங்காரமிட்டு வரும் வேல்—அந்நியரின் ஆத்திரத்தைச் சுமந்து வரும் வாள்! இவற்றில் எதைக் கண்டுமே அஞ்சாத என் தோள் வலிமையைக் கண்டு, மாற்ருரும் வேற்ருரும் மருண்டு வெகுண்டோடியிருக்கின்றனர் என் தீரத்தைச் செபித்தபடி!

ஆனுல், இந்த அற்புத வடிவத்தின் முன்—என் வலிமை குன்றி தோற்று அழிந்ததே!

களத்திலே சதிராடும் காளையொருவன், ஓர் உயிரோவியத்தைக் கண்டு—சொல்லுகிருன் இப்படி!

ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள் நண்ணருும் உட்கும்என் பீடு.

❋ ❋ ❋

## 8. காரணம் கேட்பவள்!

முத்துக்களைப் பொதிப் பொதியாய்க் குவித்துக் கொண்டு—யவனத்திற்கும் ஏனைய புவனத்திற்கும் கடல் கடந்து பொருளீட்டச் சென்ருன், தமிழ் நாட்டு வணிகனொருவன்!

கடல் கடந்தான்!

பொருளை விலையாக்கினுன்!

பொருள் சேர்த்தான்!

இப்படி ஈராறுத் திங்களைக் கழித்துவிட்டு, குவித்த செல்வத்தைக் குதூகலத்தோடு எடுத்துக்

கொண்டு புறப்பட்டான், தன் தாய்நாடு நோக்கி!

"தன் இன்பவல்லிக்கு எது பிடித்தமானது? என்னென்ன அவளுக்காக வாங்குவது? எதை வாங்கினால், அவளின் உள்ளம் மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்ளும்?" என்பன போன்ற கேள்விகளுக்கிடையே சிக்கியவாறு வந்து கொண்டிருந்தான் வழி நெடுக அவன்!

"காதலர் வருவதாய்ச் சொல்லிச் சென்றாரே அடுத்தூர் வணிகர். மலர் முகங்காட்டி மகிழ்விக்க வேண்டுமே அவரை!" என்கின்ற எண்ணத்தில் தன்னைச் சீவிச் சிங்காரித்துக் கொண்டு—புத்தாடைப் பூண்டு—புதுமணங் கமழ மலர்ச்சூடி—மல்லிகைக் கொல்லையிலே கொஞ்சிக் குலவ அன்று துடித்து நின்றாள், கதைவனைப் பிரிந்திருந்த அந்தக் காரிகை!

"வழியில் கண்டாயோ என் காதலனை?" என்று பறந்து வந்த கிள்ளையைக் கேட்டாள்!

அது ஏதோ 'கர்கர்' என்று கத்தி விட்டுச் சென்றது.

அவள் கேட்டதற்குப் பதில் சொல்லிச் சென்றதாக அவள் நினைத்துக் கொண்டாள்!

வழி மீது விழி வைத்தாள்; விநாடிக்கு விநாடி தன் விழிகளைச் சுழலவிட்டுக் காத்து நின்றாள்!

கன்னி காணத் துடித்து நின்ற காதலன் வந்தான்! கண்டாள்; களிப்புக் கடலில் மூழ்கி நின்றாள்!

"அன்பே! வழி நெடுக உன் நினைவே வாங்கி வந்த பொருளனைத்தும் பார்! உனக்கு விருப்பந்தானே?" என்று கேட்டான் தன் உள்ளத்து உவகையோடு!

"ஆ...! என்ன சொன்னீர்? ஊருக்குத் திரும்பும்போதுதான் என்னை நினைத்தீரா? அப்படியானால் அதற்கு முன்னால் எப்படி மறந்தீர்—ஏன் மறந்தீர்?" என்று காரணங்கேட்டுத் தன் காதலனைத் தழுவாமல் ஊடல் செய்கின்றாளாம் அந்த ஊர்வசி! உள்ளினேன் என்றேன்; மற்று ஏன் மறந்தீர் என்றென்னைப் புல்லாள் புலத்தக் கனள்.



## 9. ஊடல் கொள்பவள்!

காதலனுக்காக நீண்ட நேரம் காத்துக் கிடந்தாள் காதலி!

வருகிறேன் என்று சொன்ன நேரத்தில் அவன் வரவில்லை!

அவளுக்கு ஆத்திரம் பொங்கி வழிந்தது உள்ளத்தில்—சற்று அப்படியும் இப்படியுமாக உலவிக் கொண்டிருக்கிறாள் சோலை நடுவே!

சாலை யோரத்தில் பூத்துக் குலுங்கிக் கொண்டிருந்த புது வண்ண மலர்கள் சிரித்துக் கொண்டிருந்தன!

மலர்களைக் கண்டு விட்ட மகிழ்ச்சியில் சிட்டாகப் பறந்து வந்து கொண்டிருந்தன ரீங்கார மிடும் வண்டுகள்!

இக் காட்சியினைக் கண்ட அவளுக்கோ—எரியும் நெருப்பில் எண்ணெயை ஊற்றினாற் போல் ஆகிவிட்டது!

இந்த வண்டுகளுக்கு இருக்கும் அக்கறைக் கூட இவருக்கு இருக்காது போலிருக்கிறதே!" என்று எண்ணியவளாய் மேல் நோக்கிப் பார்த்தாள்—அங்கோ ஜோடிப் புறுக்கள் கொஞ்சிக் கொண்டிருந்தன!

அதைக் கண்டதும் அவளுக்கு ஆத்திரம் அளவு கடந்து சென்றது.

"இன்று வரட்டும் அவர்! அவரிடம் பேசப் போவதேயில்லை!"

என்ற வீரசபதம் ஏற்றுக் கொண்டு 'உம்' மென்று உட்கார்ந்திருந்தாள் அவள்.

அப்போதுதான் அவளுடைய காதலன் அவசர அவசரவாக வந்து கொண்டிருந்தான்.

கண்ணுக்கினியவளைக் கண்டான்—நெஞ்சில் இன்பங்கொண்டான்—நேரிழையின் முன் வந்து நின்ருன்!

அவளோ இவனை ஏறெடுத்தும் பார்க்கவில்லை!

எட்ட இருந்தவன் கிட்டத்தில் நெருங்கி, "என் கோகிலத்திற்குக் கோபமோ? நான் என்ன செய்வேன், உன்னைக் காண வரும் சமயத்தில்தான் பல தொல்லைகள் வந்து குறுக்கிட்டு விடுகின்றன! அவற்றினை ஒருவாறு சமாளித்து விட்டு வருவதற்குச் சிறிது தாமத மேற்பட்டு விட்டது. இம் முறை என்னை மன்னித்து விடு—இனிமேல் வெகு எச்சரிக்கையுடன் இருந்து கொள்வேன். என் கண்ணல்ல...கண்ணின் மணியல்ல...!" என்றெல்லாம் அவளுக்குத் துதிபாடி அவளுடைய ஊடலைத் தவிர்த்தாலும், அவள் இவனை விடுவதாக இல்லை!

"இப்படிப் பெண்களை மயக்க எங்கு கற்றீர்? உங்களுடன் பேசக்கூடாது என்று தானிருந்தேன் இதுவரை—ஆனல், என்னல் பேசமாலிருக்க முடியவில்லை! என்னைப் பேச்சால் மயக்கி தன் வசமிழுத்துக் கொள்ளும் தாங்கள், மற்ற பெண்களிடமும் இப்படி ஏன் இருக்கக்கூடாது? மற்ற மகளிர்க்கும் தாங்கள் இத்தன்மை யானவரே என்பதில் எனக்குக் சந்தேகமே யில்லை!" என்கிருள். ஊடலைத் தவிர்த்தும்-அதற்கொரு கற்பனையைக் காட்டும் கன்னி!

தன்னை உணர்த்தினும் காயும்
பிறர்க்குநீர்
இந்நீரர் ஆகுநிர் என்று.

—o—

"நாட்டைக் காப்பாற்றும் பணியில் "நான், நீ" என்று போட்டியிட்டுக்கொண்டு வரும் தேசப்பற்று நமக்கு இருக்கவேண்டும். நம் வாழ்க்கைத்துறை எதுவானலும் அதில் நம் கடமையை நேர்மையுடன் செய்ய வேண்டும். நாட்டு மக்கள் எல்லோரும் ஒன்றுபட்டால்தான், எந்த ஆபத்து வந்தாலும் அதை உரங்கொண்ட நெஞ்சத்தோடு ஏற்கத் தயாராக இருந்தால்தான் அந்த நாட்டை யாருமே தாக்க முடியாது என்பது மட்டுமல்ல, தாக்க நினைக்கவும் முடியாது என்பதை நாம் தெரிந்து கொள்ள வேண்டும். ஒவ்வொருவரும் எதைப் பேசினலும், எதைச் செய்தாலும் அதற்கு முன் "என்னுடைய இந்தச் செயல் நாட்டுக்குப் பயன் தருமா?" என்று கேட்டுக்கொள்ள வேண்டும். அப்போதுதான் நன்மைகள் பெருகும். தன்னைக் காத்துக்கொள்ள ஆயத்தமாயிராத ஒரு நாடு, சுதந்திரமாயிருக்கும் உரிமையை இழந்துவிடுகிறது என்பதை நாம் உணர்ந்து, நல்லனவே செய்து, மகிழ்வோமாக!"

—நேருஜீ

# சவ்வாதுப் புலவர்

நாகமுத்தையா

தமிழுக்கு தனி மதிப்பிருந்த காலம் அது. ஆகையால்தான் தமிழ் கற்றவர்களால் தரித்திர மின்றி வாழ வழி இருந்தது. கவிதையைக் காசாக்கிக் காலத் தைக் கடத்துவதற்கு ஏற்ற சூழ் நிலைகள் ஏராளமாக இருந்தன. பணம் படைத்தவர்கள், படித்த வர்களுக்குப் பரிசு தருவதைக் கௌரவமாகக் கருதி வந்தனர். படித்தவர்களும் பணக்காரர்களை அண்டிப் பிழைப்பதை ஒரு பேரு கக் கருதிப் பெருமை கொண் டிருந்தனர். 'செல்வத்துப் பயன் சிறந்த புலவர்களை ஆதரித்தல்,' என்ற எண்ணம் நாடெங்கும் பரவிக் கிடந்தது.

அந்தச் சமயத்தில் சிவகங்கைச் சீமையைச் சீரோடு ஆண்டுவந்த வன் இரகுநாத சேதுபதி ஆவர். அவனுக்குத் தமிழிடத்துத் தணி யாத காதல் உண்டு. புலவர் களைப் புரப்பதற்காகவே பிறந் திருப்பதாகக் கூடக் கருதி வந் தான். அவனால் தமிழும் தமி ழால் அவனும் சிறப்புற்றிருந்த கதையை வரலாறு கூறும். 'தேவேந்திர தாரு'வைப் போன் றவன் இரகுநாத செயதுங்கன் என்பது படிக்காசுப் புலவரின் வாக்கு.

இரகுநாத சேதுபதி சிவகங் கையை அரசோச்சி வந்த நேரத் தில், எட்டையபுரத்தை அர சாண்டு வந்தவன் சங்கரேஸ்வர எட்டன் ஆவன். அவன் ஒரு குருநில மன்னனே. எட்டனுக்கு இயல்பாகவே துட்டத் தனங்கள் மிகுதி. எவரையும் பொருட்படுத் தாமல் இழிவு பேசுதல் அவனது பிறவிக் குணமாக அமைந்து விட்டது. 'ஆத்திரக்காரனுக்கு புத்தி மட்டு,' என்பது முதுமொழி. ஆனால் அயோக்கியனுக்குங் கூடப் புத்தி மிக மட்டரகமாகத் தான் இருக்கும் என்பதற்கு எட் டனே தகுந்த சான்று. அஞ்சு தல் அஞ்ச வேண்டும் என்பது தான் தமிழ் வீரனுக்குச் சான் றோர்கள் தந்து சென்ற அறிவுரை. ஆனால் எதற்குமே அஞ்சாமல் இருந்துவந்தான் எட்டன்.

வில்லிபுத்தூர் என்றொரு ஊர் உண்டு. அது சிவகங்கை அரச னின் ஆளுகைக்கு உட்பட்டு இருந்தது. அங்கு கனிப் பொருள் கள் மிகுதியாக விளைந்து வந்தன. அவற்றைக் கவர்ந்து வரும்படி தம் மக்களை ஏவி, பொல்லாத கொடுமைகளுக்கு வில்லிபுத்தூர் மக்களை ஆளாக்கி வந்தான் எட்டன். எட்டனின் துட்டத்தனங் கள் நாளுக்கு நாள் அதிகரிக்கத் தொடங்கியது. மக்கள் மன்ன னிடம் முறையிட்டனர். சிவ கங்கை மன்னன் சீற்றங் கொண் டான். எட்டனைத் தண்டிக்கத் திட்டமிட்டான். எடுத்த எடுப்பி லேயே தண்டித்தல் வேண்டாம் என்று தமிழறிவு அவனைத் தடுத்து நிறுத்தியது. கற்றோர்களின் பழக் கத்தால் ஏற்பட்ட பண்பு அது.

அப்போது மன்னனின் அவைக்களத்தே அறிஞராக விளங்கியவர் சவ்வாதுப் புலவ ராகும். அவரை அழைத்து, எட்டனுக்குப் புத்தி புகட்டி வரு மாறு புகன்றான் பூமிக்குரியவன்.

மன்னனின் கட்டளையைச் சிர மேற்கொண்டு, வேண்டுகோளைச் செயலாற்றப் புறப்பட்டார் புலவர் சிங்கம். வீடு தேடி வந்தவனை 'வா' வென்று அழைக்கக்கூட எட்டன் தயாராக இல்லை. புலவர் கொண்ட சீற்றத்திற்கு அள வில்லை எனினும், பொறுமைக்கும் ஓர் அளவு காண வேண்டும் என் பதற்காகப் புலவர் பொறுத்திருந் தார்.

நாட்கள் தோன்றித் தோன்றி மறைந்தனவே அன்றி எட்டனின் துட்டத் தனங்கள் மறையாமல் வளர்ந்துகொண்டே இருந்தன. வந்தவனை அழைத்து விபரம் கேட்பான் என்ற நம்பிக்கையைச் சவ்வாதுப் புலவர் இழந்துவிட் டார். தெளிவாகச் சொன்னால் எட்டனின் போக்கு புலவரை நம் பிக்கை இழக்கும்படி செய்து விட் டது. தனிப்பட்டவனின் முரட் டுக் குணத்துக்காக நாட்டு மக்க ளைத் தண்டிக்கக் கூடாது என்ப தற்காகச் சவ்வாதுப் புலவர் சர்வ ஜாக்கிரதையாக நடந்து கொண் டார்.

ஓர் நாள் மன்னன் அரண்மனை யிலிருந்து திரும்பும்போது சவ்வா துப் புலவர் தன் வருகையைச் சொல்லி அனுப்பினார். காதில் கேட்டுக் கொள்ளாதவன் போல ஏகிவிட்டான் எட்டன். மற் றொரு முறை அரண்மனையில் இருக்கும்போது சொல்லி அனுப் பினார். அவ்வமயம் சவ்வாதுப் புலவரை மட்டுமன்றி இரகுநாத சேதுபதியையும் சேர்த்து நையாண்டி செய்தான் எட்டன்.

புலவர் பொறுமை இழந்துவிட் டார். 'எட்டனை எப்படியும் சந் தித்துப் புத்திமதி சொல்லாமல் எழுவதில்லை,' என்று உறுதி செய்து கொண்டார் அவர். தரு ணத்தைக் காத்திருந்தார், ஓடு மீன் ஓட உறுமீன் வருமளவும் வாடி இருக்கும் கொக்கைப் போல!

தருணம் வாய்த்து விட்டது. ஒருநாள் அரசன் அரசு கட்டிலில் அமர்ந்திருக்கும்போது அஞ்சாத நெஞ்சோடு கொஞ்சமும் பயமே இன்றி உள்ளே நுழைந்தார் புலவர். 'நீண்டநாட்களாகச் சந்திக்க ஆசை. தூர விலக வேண்டிய உங்களோடு உறவாட வேண்டும் என்பது என் ஆசைக்கு அடிப்படை என்று எண்ணிவிட வேண்டாம். சிவகங்கை மன்ன னின் சீரையும் சிறப்பையும் உங் கட்கு எடுத்துச் சொல்லவேண் டும் என்ற ஆசைதான் சந்திப்புக் குரிய அடித்தளமாகும்.'

புலவர் வேகத்தோடும் விவே கத்தோடும் பேசிக் கொண்டே போனார். வேகத்தைப் பின் தொடர முடிந்ததே தவிர எட்ட னால் விவேகத்தைப் பின் தொடர முடியவில்லை. புலவரை மேலும் பேச வொட்டாமல் தடுத்து,'ஐயா, உம்மோடு பேச்சு வார்த்தைகள் நடத்தநான் தயாராக இல்லை. நீர் போய் உம் மன்னனை அனுப்பும். நீர் இங்கிருந்து உடனே போய் விடும்,' என்று புத்தியின்மையை வெளிப்படுத்தினான் — இல்லை. முட்டாள் தனத்தைத் தெரியப் படுத்தினான்.

'போய் வருகின்றேன். ஆனால் போகும் முன்பு ஒன்று மட்டும் கூறிவிட்டுப் போக விரும்புகின் றேன். எம்முடைய அரசன் நீர் நினைத்திருப்பதுபோல அவ்வளவு சாமானியன் அல்லன். சர்வ கலை களும் கற்ற சமர்த்தன். அவனது கோபம் உம்முடைய நாசத்துக்கு அறிகுறி என்பதை மறந்து விட வேண்டாம்.'

'ரொம்பச் சரி. அந்த முடி மன்னனை இங்கே வரச் சொல் லும். நீர் போகலாம்.'

'எம்முடைய முடிமன்னனின் தலை முச் செயல்களுக்கு மட்டுமே வணங்கும். உம்முடைய சீற்றத்துக்கு வணங்காது. நிமிரும். நிமிர்ந்தால் உங்கள் நிலை குழுறும். அவர்க்குப் புகழ் பெருகும்; உங்கட்கு அழிவு விரியும்.'

'நல்லது, மூன்று செயல்களுக்காக மட்டும் முடிவணங்க வேண்டிய காரணம் என்னவோ? அதை மட்டும் சொல்லிவிட்டுப் போம்.' மன்னனின் மமதை மிக்க கேள்விக்குப் புலவர் தந்த பதில் பாட்டாகவே அமைந்து விட்டது.

'கிளையாளன் சேது பதிரகு
நாயகன் கிஞ்சுகவாய்
இளையார் கலவி இடத்தும்
நமது ஈச ரிடத்தும் அன்றி
வளையாத பொன்முடி சற்றே
வளையும் மகுட மன்னர்
தளையாயிடக் கையில் காளாஞ்சி
ஏந்தும் சமயத்துமே!

(உற்றார் உறவினர், சுற்றமெல்லாம் சூழ வாழ்ந்து வரும் சேதுபதி இரகுநாத நாயகனின் தலைமுடி (1) காதல் கிழத்தியருடன் கலவி செய்யக் காத்திருக்கும் போதும் (2) எல்லாம் வல்லான் இறைவனைத் தொழுகை புரியக் காத்திருக்கும் போதும் (3) முடிபுனைந்த சிற்றரசர்கள் காளாஞ்சி ஏந்தி நிற்கின்ற சமயத்தில் தாம் பூல எச்சிலைத் துப்புகின்ற போதும் வணங்கும்.)

பாடலில் உள்ள எல்லாச் சொற்களும் ஈட்டிகளாக மாறி எட்டனைத் துளைத்துக் கொண்டிருந்தன. புலவர் புறப்பட்டுப் போய்விட்டார்.

புலவரின் சொற் சூட்டுக்கு ஆளாகித் துடித்த எட்டன், வீரர்களின் விற் சூட்டுக்குப் பயந்து அடங்கி நிற்க மறந்தவனாய், மேலும் மேலும் கேடுகள் செய்து சிவகங்கைச் சீமானின் சீற்றத்திற்கு ஆளாகி நின்றான்.

திருக்குற்றாலத்து வாய்க்காலைத் தடுத்து சிவகங்கைச் சீமைக்குள் தண்ணீர் புகாதவாறு கேடு செய்தான் எட்டன். இன்னும் இதுபோன்ற கேடுகள் பலவற்றை அடுத்தடுத்துச் செய்தான்.

பருவ மழை தொடங்கியது. வாய்க்காலைத் தடுத்துப் போடப் பட்ட அணைக்கட்டுப் பனித்துளி போலச் சிதறிவிட்டது. எட்டனின் கேடுகள் தீமை பயப்பதற்குப் பதிலாக நன்மை பயந்து கொண்டே இருந்தன சிவகங்கை மக்களைப் பொறுத்த மட்டில்! பிறரை அழிக்க வெண்ணிச் செய்யப்பட்ட செயல்கள் தன்னைத் தானே அழிப்பதற்கு வழிவகுப்பதாக முடிந்து விட்டது எட்டனைப் பொறுத்த வரையில்!

எட்டனுக்குப் பல தொல்லைகள் தொடர்ந்து வரலாயின. தொல்லைகளுக்கு முடிவு காண்பதற்காக எட்டன் சிவகங்கை மன்னனிடம் ஓடோடி வந்தான். வந்தவனை வரவேற்று உபசரித்தார் சவ்வாதுப் புலவர். தீமை செய்தார்க்கும் நன்மை செய்யவேண்டும் என்பது தானே தமிழ் நூற்கள் படித்தவர்களுக்குச் சொல்லித் தந்த-தருகிற பாடம்! சவ்வாதுப் புலவர் மட்டும் எப்படித் தமிழ் நெறிக்கு மாறாக நடந்து கொள்ள முடியும்? அவர் தமிழ் கற்ற புலவர் அல்லவா?

எட்டனுக்குச் சவ்வாதுப் புலவரைக் கண்டதும் சங்கடமாக இருந்தது. எனவே வாய்த்துடுக்காகக் கூறினான், 'சிலவற்றை மன்னனும் மன்னனுமே நேரடியாகப் பேசி முடிவு கட்டவேண்டும். அதனால்தான் உங்களோடு பேச்சு வார்த்தைகள் நடத்த மறுத்து விட்டேன்,' என்றான் எட்டன். 'முல்லை பூவினத்தைச்

சேர்ந்தது; அதுபோல முருக்கம் பூவும் பூவினத்தைத்தான் சேர்ந்தது. இருப்பினும் முல்லையும் முருக்கம் பூவும் ஒன்ருகி விடுமா,' என்ருர் சவ்வாதுப் புலவர்.

எட்டன், சவ்வாதுப் புலவரின் சாமர்த்தியத்தைக் கண்டு சந்தோஷப் படுவதற்குப் பதிலாகச் சங்கடப்பட்டுக் கொண்டிருந்தான். சவ்வாதுப் புலவர் சரியான பாடம் கற்பிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் திரும்பவும் ஒரு பாடலை எழுதி எட்டனின் கையில் கொடுத்தார்.

'அன்பட்ட திக்கெங்கும் போற்றும்
தென்கோட்டுக் கதிபதியாய்ப்
பொன்பட்டம் சூடும் ரகுநாத
பூப இப் பூதலத்தில்
நிற்பட்ட மேபட்டம் நீயேதுரை
மற்றின் னீணிலத்தில்
தன்பட்டம் என்பட்டம் தோலால்
அடித்திடும் தம்பட்டமே!'

என்பதுதான் பாடல்.

'இரகுநாத சேதுபதி அவர்களே! நீங்கள் அணிந்திருக்கும் பட்டம் பொன்பட்டம். அது அரசாளும் தகுதியைக் குறிப்பதாகும். பிறர் அணிந்திருக்கும் பட்டம் இருக்கிறதே அது பறையர்கள் அடிக்கின்ற தம்பட்டமே அன்றி அரச பட்டம் ஆகாது,' என்பதுதான் பாடலின் உட்பொருள்.

இரகுநாத சேதுபதி எட்டனின் துயரைக் கண்டு வருந்தி சவ்வாதுப் புலவருக்குத் தகவல் அனுப்பி எட்டனை இனிக் கேலி பண்ண வேண்டாம் எனக் கேட்டுக் கொண்டார். எட்டனும் இனிப் புலவரோடு பொருதிக் கொண்டு நிற்பது பொல்லாதது என்பதைப் புரிந்துகொண்டு,சவ்வாதுப் புலவரோடு சரிநிகர் சமானமாக சிரித்துப் பழகத் தொடங்கினர்.

இங்ஙனம்' அறிவை முன் வைத்து, அரசனையும் அடங்கச் செய்த பெருமை சவ்வாதுப் புலவருக்கே சொந்தம். அறிவினல் எதனையும் சாதிக்க முடியும் என்பதற்குச் சவ்வாதுப் புலவரின் வாழ்க்கை சரியான சான்ருகும்.

சேதுபதி முன்னர் ஒரு முறை நச்சுச் சுரங் கண்டு படுத்த படுக்கையாகக் கிடந்தார். அப்போது மருத்துவர்கள் எல்லோருமே, 'மன்னன் பிழைக்கமாட்டான்,' என்று உறுதியாகக் கூறிவிட்டனர். ஆனல் புலவர் மட்டும் மன்னனைப் பிழைக்க வைக்க முடியும் என்று திண்ணமாக நம்பினர். 'இராசராசேசுவரி பஞ்சரத்தினம்' என்ற துதிப் பாடல்களைப் பாடிக் கடவுளைத் தொழுதார் புலவர்.

மன்னனும் வியாதியினின்றும் தப்பிப் பிழைத்தான். புலவரின் நம்பிக்கையே தன்னைக் காப்பாற்றியது என்பதில் நம்பிக்கை பெரிதுங் கொண்ட மன்னன், புலவருக்கு சுவாத்தன் என்னும் விளை புல நிலத்தை முற்றூட்டாக வழங்கினர்.

தன்னைக் காப்பாற்றியதைக் காட்டினும், தன்மேல் ஆசை வைத்திருந்த பண்பிற்காகவே புலவருக்கு மன்னன் பெரும் பரிசைத் தந்தான் என்று சொல்லுவதில் தவறே இருக்க முடியாது.

முகைதீன் ஆண்டவர் பிள்ளைத் தமிழ் என்ற நூலை எழுதி சிவகங்கையிலே அரங்கேற்றினர் சவ்வாதுப் புலவர். இன்னும் பல நூற்கள் எழுதி இருக்கிருர்.

சிவகங்கையில் சமஸ்தானத்துப் புலவராக இருந்தாலும் பல ஆஸ்தானங்களுக்கும் போய் பாட்டுக்கள் பாடி பரிசில்கள் பெற்று வந்துள்ளார். திருவாங்கூர் சமஸ்தானத்து மன்னன், சவ்வாதுப் புலவரின் திறமையைப் போற்றிப் பரிசில்கள் வழங்கி உள்ளான்.

புதுக்கோட்டை மன்னன் சவ்வாதுப் புலவரைப் போற்றவும் இல்லை; பரிசில் தரவும் இல்லை. தன்னைப் புகழாவிட்டாலும் பாதகமில்லை, தமிழையேனும் புறக்கணிக்கக் கூடாது என்பதற்குச் சவ்வாதுப் புலவர் ஒரு பாட்டுப் பாடினார்.

"காயாத பாலும் இல்லை
பாயாத புலியும் இல்லை
ஆயாத வேந்தர் இல்லை
மடிகனத்தால் வழிபயம்
உண்டாகுங் கண்டாய்
சாயாத முடிவேந்தர் ரகுநாத
தொண்டைமான்
சாற்றக் கேண்மோ
நியாதி சேட னொப்பாய்
கற்றிருந்துங்
கேள்வியில்லை நிசஞ் சொன்
னேமே!"

சந்திரசேகரப் பிள்ளை என்னும் வள்ளல்மீது சந்திரசேகர வண்ணம் என்றொரு பாமாலை பாடிப் பெரும் பொருளைப் பரிசாகப் பெற்றுள்ளார். புதுமை ஆனந்தரங்கப் பிள்ளையைப் புகழ்ந்து பாடிப் பெரும் பரிசு பெற்றுள்ளார். இப்படிப் பல பணக்காரர்களின் பரிசுப் பொருள்களுக்கு வாரிசாக விளங்கினார் சவ்வாதுப் புலவர்.

இவர் பாண்டிய நாட்டில் பரம்பைக்குடிக்கு அருகில் உள்ள எமனேசுவரம் என்னும் சிற்றூரில் பிறந்தவர். முகமதிய குலத்தைச் சார்ந்தவர். பிறந்த நாள் எதுவென்று சரியாகக் கூற முடியவில்லை. அவரோடு தொடர்புடைய மக்களைக் கொண்டு ஆராயும்போது அவர் பதினாறும் நூற்றாண்டின் தொடக்க காலத்தில் பிறந்திருக்கக் கூடும் என்றுதான் ஊகிக்க முடிகிறது.

முஸ்லிம் மக்கள் தமிழுக்குப் பல தொண்டுகள் புரிந்து வந்தனர் வருகின்றனர். பிற மதத்தவர்களை ஒருமுகப்படுத்தி, தமிழுக்குத் தொண்டுபுரிந்ததை மட்டும் கணக்கெடுத்துப் பார்த்தால் முஸ்லீம் புலவர்கள் தமிழுக்குப் புரிந்திருக்கும் தொண்டு அளப்பரிதாகத்தான் இருக்கும்.

சவ்வாதுப் புலவர் தற்புகழ்ச்சி உடையவராகத் திகழ்ந்துள்ளார் என்பதை அவரது பாடல்களே எடுத்துச் சொல்லுகின்றன :

"சொல்லக் கணக் கவிதை
சூட்டுவோர் நாவலரை
வெல்லக் கணக் கவிதை
வீசுவோம்—நல்ல
தனிச்சவா துப்புலவன்
சாற்றுகவி எல்லாம்
இனிச்சாவா துப்புதுமை யே"

'கவிமதங் கொண்டிரு சவாதுக்
கவி சரப காம்பீர்ய துங்கன்'

என்ற ஒரு அடியில் தற்பெருமையின் சிகரத்தையே காண முடிகிறது.

'தம் சிறப்பை எவனொருவன்
அறியவில்லையோ அவனிடத்தில்
தம்மைப் புகழ்தலும் புலவர்க்குத்
தகும்,'

என்பது இலக்கண விளக்கமாகும். இதன்படி பார்த்தால் சவ்வாதுப் புலவரின் தற்புகழ்ச்சியில் கூட தவறு இருக்க நியாயமே இல்லை.

"தொட்டான் அயல்போய வேலை
மகளையோர் சோரனிடம்
கட்டாயமாகக் கலவிசெய்யச்
சொன்ன காரிகையில்
கட்டாடை தன்னைக் களவாடி
என்னில் கரந்ததும்
பட்டாங் கதன்றோ ரகுநாத
சேதுபதி மன்னனே!"

என்ற பாட்டை வைத்துக் கொண்டு பலவிதமான கதைகள் சவ்வாதுப் புலவரின் வாழ்க்கையோடு உறவாடுகின்றன.

உண்மை எதுவென்று கூற இயலவில்லை.

சவ்வாதுப் புலவர் நேர்மையாளர் என்பதையும், இறையன்பு மிக்குடையவர் என்பதையும், நட்புக்கு இலக்கணமாக விளங்கியவர் என்பதையும், தற்புகழ்ச்சி உடையவர் என்பதையும், அஞ்சா நெஞ்சினர் என்பதையும், அறிவுக்குத் தலை வணங்குபவர் என்பதையும அவரது வரலாறு தெரிவிக்கின்றது. இத்தகைய பெரியவர் எப்போது இறந்தார் என்பதைப் பற்றி எதுவும் தெரியவில்லை. உடல் இருந்தால் என்ன, இல்லாவிட்டால்தான் என்ன? அவருடைய கவிதைகள் தாம் சாகா வரத்தோடு விளங்குகின்றனவே, அது போதும்!



## கல்லூரியில் நடந்தது

சரித்திரப் புரொபஸரின் வகுப்பு. மாணவர்களைக் கேள்வி கேட்கத் தொடங்கினார் புரொபஸர்.

"அதோ, அங்கே ஜன்னல் அருகில் நின்றுகொண்டிருப்பவன் பதில் சொல்லட்டும் : பாபர் எப்போது இந்தியாவுக்கு வந்தார் ?"

"எனக்குத் தெரியாது."

"தெரியாதா? சரி ; இதற்காவது பதில் சொல் : மூன்றாவது பானிபத் போர் எப்போது நிகழ்ந்தது ?"

"தெரியாது சார்."

"வாழ்ந்தது போ! அக்பருக்கு முக்கிய எதிரி யார்? இதுவாவது தெரியுமா, தெரியாதா?"

"தெரியாது, சார்."

"மூந்தாநாள் தானே இதெல்லாம் சொல்லிக் கொடுத்தேன். நேற்று நீ என்ன செய்தாய்?"

"எங்க சகபாடிகளோடு போய் சாராயம் குடிச்சேன், சார்"

"என்னது! என் எதிரிலேயே இப்படிச் சொல்லிக்கொள்ள உனக்கு வெட்கமாக இல்லை? இந்த வருஷம் பரிட்சையிலே நீ தேறிவிடலாமென்று கனாக் கண்டு கொண்டிருக்கிறாயே ?"

"புரொபஸர் சாரே ? நான் உங்க ஸ்டூடண்டு இல்லீங்க ஜன்னல் கதவைத் துடைச்சு வைக்கிற ப்யூனுங்க."

— 'காதம்பினி'

# கழுவி உண்ணும் கரடி

'கந்தையானாலும் கசக்கிக்கட்டு
கூழானாலும் குளித்துக் குடி'

என்பது முதுமொழி. உணவைக் கழுவிய பின்பே உண்ணும் விலங்கினம் ஒன்று உண்டு. அதுவே ரகூன் என்ற அமெரிக்கக் கரடி.

கூர்மையான மூக்கு; வளைய மிட்ட மயிர் அடர்ந்தவால்; கொள்ளைக்காரனின் முகமூடியைப் போல் முகத்தின் குறுக்கே கண்ணுள்ள பகுதியில் ஓர் கருமையான பட்டை, குறுகுறுக்கும் பார்வை. இவையாவும் கொண்ட இக்கரடிதான் உண்ணும் உணவை முக்கியமாக ஊன் உணவைத் தண்ணீரில் பலமுறை கழுவிய பின்பே உண்ணத் தொடங்கும். தான் உண்ணும் ஆகாரத்தை சுத்தம் செய்வதற்காக உண்ணும் உணவை நீரில் கழுவுவதில்லை என்று சிலர் கூறுகின்றனர். விளையாட்டுத்தனத்தால் உணவை இவ்விதம் நீரில் கழுவுகிறது என்கிறார்கள்.

இவை சுமார் இருபது முப்பது பவுண்டு எடை இருக்கும். இவ்வளவு பருமனான உடல் புகக்கூடிய மரப்பொந்துகளில் இவை வாழத் தொடங்கும். மரப் பொந்துகள் கிடைக்காத இடங்களில் பாறைகளின் இடுக்கு மழைநீருக்கான ஜலதாரைகள் இவைகளையும் தம் இருப்பிடமாக்கிக் கொள்ளும்.

காலை நேரங்களை இவை தூக்கத்தில் கழிக்கும். இராக்காலங்களில் இரை தேடத் தொடங்கும். பழம், தானியம், கொட்டை தினுசுகள், பூச்சி புழுக்கள், நத்தை, நண்டு, மீன், முட்டை, பறவை, சிறு ஜீவன்களையும் உணவாகக் கொள்ளும்.

இக் கரடிகள் தடவைக்கு 6 குட்டிகள் பெற்றெடுக்கும். இக் குட்டிகள் 18 நாட்களில் கண்ணைத் திறந்து சுமார் இரண்டு மாதங்களில் தாயுடன் நடமாடத் தொடங்கிவிடும். பூனையைப் போல் இத்தாய்களும் தம் குட்டிகளுக்கு வேட்டையாடவும் விரோதிகளிடமிருந்து தப்பும் வழிகளையும் கற்பித்துக் கொடுக்கும்.

இது பெரும்பாலும் அமெரிக்கா கண்டத்தில் காணப்படுகின்றது. இதன் உடலில் உள்ள அழகிய ரோமத்திற்காக இதை அந்நாட்டவர் அதிகமாக வேட்டையாடுகின்றனர். ஆனால் இதைத் துரத்த ஆரம்பித்தால் இது எளிதில் சிக்கிக்கொள்ளாது. நரியைப் போல் பல தந்திரங்களைக் கையாண்டு தன்னை வேட்டையாடுபவர்களை ஏமாற்றி தப்பி ஓடிவிடும். பல மைல்கள் சுற்றிவளைத்துச் சென்று வேலிகளைத் தாண்டி நீர்நிலைகளை நீந்தி மரங்களின் வழியே தாவிச்சென்று விரோதிகளிடம் சிக்காமல் தப்பி ஓடிவிடும்.

எரு விடுதலின் பயனை எளிய முறையில் இனிய தமிழில் எடுத்து விளம்பும் இக் கட்டுரை உழவுத் தொழிலில் ஊக்கம் உடையோர்க்குச் சிறந்த விருந்தாகும். உழவே உயர்ந்த தொழில். உழவுக்கு எருவே சிறந்த உயிர்ப் பொருள்.

# ஏரினும் நன்றும் எருவிடுதல்

சி. க. ராமசாமி

எரு செய்யும் உதவியை யாரும் செய்யார் என்பது பழமொழி. ஏரினும் நன்றும் எரு விடுதல் என்று தமிழ் மறையும் கூறுகின்றது. தான் உண்ணும் உணவை, சூலில் உள்ள கருவுக்குக் கொடுத்து வளரச் செய்வது போலவே, நிலம் தன் சத்துப் பொருள்களை ஊட்டிப் பயிர்களை வளர்க்கின்றது. நிலத்தில் மீண்டும் மேலும் மேலும் பயிர் செய்ய முனையும்போது, அதற்கேற்ற மாதிரியில் எரு விட வேண்டும். தவிர, அதிகமான தரமான விளைச்சல் எடுக்கவேண்டும் என்றாலும் சிறந்த எரு வகைகளைப் பயன் படுத்துவது முக்கியமாகும். அப்படி எருப்போட்டால் தான் வித்திட்டது ஆயிரமாக விளையும்.

போதிய எருப் போடாவிட்டால் நிலத்தின் மண்வளம் குன்றும். பயிர்கள் சிறுத்து மெலிந்து அற்பமான பலனே கொடுக்கும். சாகுபடி செலவுகளுக்கே கூடக்கட்டாமல்போய் குடியானவர்களுக்குப் பெரு நஷ்டம் உண்டாக்கிவிடும். எரு அதிகம் போடப்போட அதிகமான லாபம் வளர்ந்துகொண்டு போகும். எரு குறையக் குறைய லாபம் குறைவது மட்டுமல்ல; நஷ்டமும் அதிகரிக்கும்.

இயற்கை எரு தான் எல்லா எருக்களிலும் மிகச் சிறந்தது. அதாவது கால் நடைகளின் சாணம், மக்கிய தழைகள், வண்டல் மண் முதலியவைகளை நமது குடியானவர்கள்பரம்பரை பரம்பரையாகப் பயன்படுத்தி

வருகிறார்கள். சென்ற 40, 50 ஆண்டுகளுக்கு மேலாக மழை மாரி குறைந்து, இப்போது நமது நாட்டில் கால் நடைப் பெருக்கம் குன்றிவிட்டது. கால் நடைச் சாணங்களை வறட்டி முதலியனவாகப் பயன்படுத்தும் போக்கு அதிகரித்துவிட்டது. மழை இல்லாததால் வனவளம் குறைந்தது. தழைகளின் மணிச் சத்து குறைந்தது. வண்டல் மண் வரவு குறைந்தது. எனவே தான் வனமகோற்சவத் திட்டம் என்று வைத்து மரவளர்ப்பை விசேஷமாகக் கவனிக்கிறார்கள்.

### செயற்கை உரம்

சாணமும் இயற்கை உரங்களும் குறைந்துவிட்டால் அதற்கு ஈடு செய்யப் புது மார்க்கம் கண்டுதான் ஆகவேண்டும். அதைக் காண்பதற்கான முயற்சிகள் இரண்டு வகைகளில் மேற்கொள்ளப்பட்டன.

முதலாவதாக ரசாயன உரம் என்று சொல்லும்படியான செயற்கை உரங்களின் இறக்குமதியை அதிகரித்தார்கள். அந்தச் செயற்கை உரங்களை நம் நாட்டிலேயே உற்பத்தி செய்ய, பெரிய ஆலைகளை ஏற்படுத்தி, பெருமளவில் உற்பத்தி செய்து வருகிறார்கள். இந்த வகையில் 'ஸிந்திரி' உரத் தொழிற்சாலை ஒரு பெரிய சாதனையாகும்.

அகலப் பரந்து கிடக்கும்நமது நாட்டுக்குத் தொழிற்சாலைமூலம் மூட்டை மூட்டையாக உற்பத்தி செய்கின்ற எரு எவ்வளவு இருந்தாலும் அது போதாது. தவிர செயற்கை உரம் என்றால் அதற்கு ஈரப் பாங்கு, நீர் வளம், உதவுபடியான இதர இயற்கை உரம் எல்லாம் சீராக அமையவேண்டும். இல்லை என்றால் செயற்கை உரங்களால் கெடுதலே கூட ஏற்பட்டுவிடும். எனவே தான் செயற்கை உரங்களுடன் கிராமங்களில் உள்ள கச்சா எரு வசதிகளை நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ளத் திட்டம் உருவாக்கப்பட்டது.

கிராம எருப் பெருக்குத் திட்டமானது மத்திய அரசாங்கத்தின் ஆலோசனையையும் உதவியையும் கொண்டு 1957 ஆம் ஆண்டிலிருந்து செயல்பட்டு வருகின்றது. இத் திட்டத்தின் மூலம், தேர்ந்தெடுக்கப்பட்ட அபிவிருத்தி வட்டாரம் ஒவ்வொன்றிலும் ஒரு கலவை உர அபிவிருத்தி அதிகாரி வேலைசெய்து வருகிறார். ஒவ்வொரு வட்டாரத்திலும் நூறுக்கு மேற்படாத விவசாயிகளுக்கு இயற்கை எருத் தயாரிப்புகளில் இவர்கள் பயிற்சி அளிக்கிறார்கள். பயிற்சியாளருக்குப் பயிற்சிக் காலத்தில் நாள் ஒன்றுக்கு ரூ. 1. 50 வீதம் படியும், பிரயாணச் செலவுக்ென்று ரூ 5ம் தரப்படுகின்றது இவ்வாறு பயிற்சி பெற்ற விவசாயிகளைக் கொண்டு கிராமங்களில் கலவை எரு, தொழு

உரம்முதலியவற்றைச் சரியான முறையில் தயாரிக்க விவசாயிகளுக்கு உதவிபுரிகிறார்கள்.

### அரசாங்க மானிய உதவி

பஞ்சாயத்து யூனியன்கள் அமைக்கப்பட்ட பின்னர்கலவை உரம் தயாரிக்க அரசாங்க மானியமும் தரப்படுகிறது. பஞ்சாயத்து யூனியன்கள் தெருப் பெருக்குவோரை நியமித்து மலம், குப்பை முதலியவைகளைச் சேகரம் செய்து சரியான உரமாக்கி, கலப்பு உரத்தை விவசாயிகளுக்கு நியாயமான விலையில் வழங்கவும் வழி செய்யப்பட்டிருக்கிறது.

இப்படி எரு வளத்தைப் பெருக்குவதில் பஞ்சாயத்தாருக்கு அரசாங்கம் வேண்டுமான உதவிகளை அளிக்கின்றது இப்பணிக்காக அரசாங்கம் பஞ்சாயத்தாருக்குக் கடன் கொடுக்கிறது. அப்பணத்தைக்கொண்டு எருத் தயாரிப்புக் குழிகள், குப்பை வண்டி, மலச் சேகரிப்புத் தொட்டிகள், குப்பைத் தொட்டிகள், இதரக் கருவிகள் சேகரித்துக் கொள்ளலாம். எரு தயாரிப்பில் ஆலோசனை கூற அதிகாரிகளின் உதவி இருக்கிறது; கருவிகள் வாங்கப் பணமும் கிடைத்து விடுகிறது. இனி மக்களுக்கு வேண்டியதெல்லாம் ஊக்கம், உழைப்பு முயற்சி தான்.

### புதுவகைத் தொழுவங்கள்

தேர்ந்தெடுக்கப்பட்ட சில வட்டாரங்களில் சிறந்த முறையில் மாட்டுக் கொட்டகைகள் அமைத்துக் கால் நடைகளின் சிறுநீரையும் சாணத்தையும் கொண்டு தொழு உரம் தயாரிக்கும் திட்டமும் நடைபெற்று வருகின்றது. கால் நடைகளின் சிறு நீரை, மண்ணில் ஊறி வீணாகும்படி விடாமல் வடிகால்கள் மூலம் சிறு தொட்டிகளில் சேர்த்துப் பயன்படுத்த, இந்தக் கொட்டகைகளில் வழி வகை செய்யப்பட்டிருக்கிறது. இத் திட்டத்தின் கீழ் விவசாயிகளுக்கு, திருந்திய முறை மாட்டுத் தொழுவம் கட்டுவதற்கு ரூ 150 கடனாக வழங்கப்படுகிறது. விதி முறைகள் மாறாமல் குறித்த காலத்துக்குள் தொழுவம் கட்டி முடித்துவிட்டால் ரூ 50 அரசாங்க மானியமாக வழங்கப்படுகிறது.

### ஆராய்ச்சி முடிவுகளின் உதவி

விவசாய ஆராய்ச்சி நிபுணர்கள் காலம் காலமாகப் பொறுமையாக உட்கார்ந்து ஆராய்ந்து எவ்வளவோ கண்டுபிடிப்புகள் செய்திருக்கிறார்கள் அல்லவா? அந்த ஆராய்ச்சியின் முடிவுகளைப் பயன்படுத்துவதிலும் அரசினர் தக்க கவனம் செலுத்தி உதவிபுரிகிறார்கள். பூமியின் கணச் சத்தை அதிகரிக்க வழி செய்திருப்பது இந்த வகையில் குறிப்பிடத் தக்க ஒரு திட்டமாகும்.

நிலங்களில் பூசாரம் குறைந்தால் தழை உரப் பயிர்கள் செழித்து வளர்வதில்லை. இக் குறையை நீக்கிப் பூமியின்

தழைச் சத்தைப் பெருக்குவதற்காகப் பாக்டிரியாக் கிருமிகளைச் சேர்த்துப் பயிரிடும் முறை ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இதற்கான பாக்டிரியா கிருமிகள் கோயம்புத்தூரிலுள்ள அரசாங்க பூ சண நிபுணர்களால் தயாரித்து வழங்கப்படுகின்றன.

30 ராத்தல் விதைக்கு ஒரு குடுவை பாக்டிரியாக் கிருமி தேவை. குடுவை ஒன்று ரூ 2 வீதம் கட்டணம் கொடுத்து வாங்க வேண்டும். வாங்கிய 10—15 நாட்களுக்குள் அதைப் பயன்படுத்தி விடவேண்டும். இல்லையேல் அந்தக் கிருமிகள் செத்துவிடும். பாக்டிரியா கிருமி குடுவைகள் அனுப்பும்போது விதைகளுடன் இணைத்துக் கலப்பதற்கான "மானோ கால்சியம் பாஸ்பேட்" என்ற ரசாயனப் பொருள்களையும் சிறிதளவு அனுப்பி வைப்பார்கள். விதைகளைத் தெளிப்பதற்கு முதல் நாள் மாலையில் விதைகளை வாயகன்ற பாத்திரத்தில் போட்டு "மானோ கால்சியம் பாஸ்பேட்டை" மூன்று கோப்பைத் தண்ணீர் விட்டு நன்ருகக் கலந்து, இக்கலவையை, பாக்டிரியாக் கிருமி குடுவையில் விட்டுக் கலக்கவேண்டும். பிறகு இக்கரைசலை விதைகளின் மீது ஊற்றிக் கையால் கிளறவேண்டும். பின்பு அந்த விதைகள் முரட்டுக் காகிதம் அல்லது துணியின்மேல் நிழலில் உலர்த்தப்பட்டு, மறுநாள் விதைக்கப்பட வேண்டும்.

பாடுபட்டால் பலன் கிடைக்கும் என்பது இயற்கை நியதி. நமது வாழ்வு செழிக்க வேண்டுமானுல், நிலத்தின் மீது நமது உழைப்பு இன்னும் பலமடங்கு அதிகரிக்கவேண்டும். அன்பைக் கொடுத்துத் தான் அன்பைப் பெற முடிவதுபோல, நிலத்துக்கு வழங்கித்தான் நிலத்திலிருந்த பெரு வளத்தை நாம் பெறமுடியும்.

ஒரு மணியை ஊன்றினுல் ஆயிரம் மணி விளைகின்றது. அந்த ஒரு மணிக்குச் சிறிது ஊட்டம், ஈரம் தரவேண்டியது எவ்வளவு முக்கியம் என்பதைத் தேர்ந்து உணரவேண்டும்.

அறிவு அரசோச்சும் காலம் இது. தெய்வத்தைக் கூட அறிவான தெய்வம் என்று சொல்லுகிருேம். நமக்கு உணவு தருகின்ற நிலத்துக்கு நாம் தரவேண்டிய பொருள் என்ன என்பதை நாம் அறிந்து உணரத் தவறினுல் நிலமே நம்மைக் கைவிட்டுவிடும். முயற்சி செய்யாமல் இருந்துவிட்டு, "இல்லையே! இல்லையே!" என்று அழுவோரைப் பார்த்து நிலம் எனும் நல்லாள் நகும். அந்த நகைப்புக்கு இடம் தராமல் நாம் முனைந்து உழைப்போமாக! ஃ

—நன்றி அமுதசுரபி.

ஜேன் போர்ட்டர் எழுதிய ...

# ஸ்காட்லாந்து வீரர்கள்

தமிழில் தருபவர் :




ஜேன் போர்ட்டர் (1776-1850) ஆங்கில நாட்டு நாவலாசிரியை. இவர் ஒரு ராணுவ ரண வைத்தியரின் மகள். இங்கிலாந்தில் பிறந்து வளர்ந்த இந்தப் பெண்மணி தமது தந்தையின் மரணத்துக்குப் பின்னர் தமது குடும்பத்தாரோடு ஸ்காட்லாந்தில் குடியேறி வசித்துவந்தார். ஸ்காட்லாந்து வாசத்தின்போது இவரது குடும்பத்தாருக்குப் பிரபல சரித்திர நாவலாசிரியரான சர் வால்ட்டர் ஸ்காட்டின் நெருங்கிய நட்புறவு கிட்டியது. வீரசாகசம் மிகுந்த விறுவிறுப்பான சரித்திரக் கதைகளை எழுதுவதில் வால்ட்டர் ஸ்காட் திறமை மிக்கவர் என்பது உலகப் பிரசித்தம். ஸ்காட்டுடன் தமது குடும்பத்துக்கு ஏற்பட்ட நட்புறவால், ஜேன் போர்ட்டருக்கும் வீரசாகசம் மிகுந்த கதைகளில் பெரும் ஈடுபாடு ஏற்பட்டது. இந்த ஈடுபாடே ஜேனையும் ஒரு நாவலாசிரியையாக மாற்றியது.

இவர் எழுதிய முதல் நாவல் "வார்ஸாவின் தாடியஸ்" (THADDEUS OF WARSAW) என்பதாகும். எடுத்த எடுப்பிலேயே நல்ல புகழைப் பெற்ற இந்த நாவல் பலமொழிகளிலும் மொழிபெயர்க்கப் பெற்றது. இதனை அடுத்து இவர் "ஸ்காட்லாந்து வீரர்"களை எழுதினர். இந்நாவலில்தான் இவர் தமது திறமையையெல்லாம் புலப்படுத்தினர். இந்த நாவலில் ஸ்காட்லாந்தைப் பற்றிய சரித்திர விவரங்கள் ஓரளவுக்கு அதிகம்தான் என்றாலும், நாவலில் வரும் பாத்திரங்களும், சம்பவங்களும் உயிர்த்துடிப்போடு அமைந்து, இறுதி வரையிலும் நல்ல வேகத்தையும் விறுவிறுப்பையும் வழங்கியுள்ளன. தேசபக்தியின் உத்வேகத்தைப் புலப்

SCOTTISH CHIEFS—*By Jane Porter.*

படுத்தும் நாவல் இது. இந்த நாவல் வெளிவந்த சமயத்தில் நெப்போலியன் இந்த நாவலுக்குத் தடை விதித்தான். பல்வேறு நாடுகளைத் தன்கீழ் அடிமைப் படுத்தி வைத்திருந்த நெப்போலியன், இந்த நாவலைப் படிப்பதன் மூலம் அடிமைப் பட்டிருந்த அந்நாட்டு மக்கள் வீறுகொண்டெழுந்து தனது ஆட்சிக் கெதிராகக் கலகக்கொடி தூக்கி விடக் கூடாதே என்ற அச்சம்தான் அவன் தடைவிதித்ததற்குக் காரணம். இந்த நாவலின் வலுவுக்கும் கவர்ச்சிக்கும் இதைக் காட்டிலும் வேறென்ன அத்தாட்சி வேண்டும்?

காதல், வீரம், கடமை முதலிய மகோந்நதமான உணர்ச்சிகளையும், அவற்றால் எழும் லட்சிய வேட்கைகளையும் அடிப் படையாகக் கொண்டு படைக்கப்பட்ட இந்த விறுவிறுப்பான வீரசாகசம் மிகுந்த சரித்திர நாவல் இங்கு சுவை குன்றாத கதைச் சுருக்கமாகத் தரப்படுகிறது.

  

அன்று பாத்வெல் கோட்டையில் ஒரே பரபரப்பாக இருந்தது. நடந்தது இதுதான்:

பாத்வெல் கோட்டையைத் தனது மைத்துனரானபாத்வெல் பிரபுக்காகப் பாதுகாத்து வந்தார் மார் பிரபு. அவர் தமது வீரர்களோடு லானார்க் நகரத்து வீதியில் சென்றபோது, ஆங்கிலேயப் போர்வீரர்கள் அவரை வழிமறித்துத் தாக்கினார்கள். அதனால் மார் பிரபு பலத்த காயமடைந்தார். நல்ல வேளையாக, அந்தக் கைகலப்பு நடந்து கொண்டிருந்த சமயத்தில் எல்லெர்ஸ்லியைச் சேர்ந்த சிறந்த வீரரான வில்லியம் வாலஸ் தக்க தருணத்தில் தமது ஆட்களுடன் அங்கு தோன்றி, அந்தச் சண்டையில் தலையிட்டு, மார் பிரபுவை மீட்டுக் காப்பாற்றினார். ஜான் மாண்டீத் பிரபு மர்மமான ரகசியப் பேழையொன்றை வாலஸிடம் ஒப்படைத்து, அதனைக் கண்ணே போல் காத்து வரும்படி கூறியிருந்தார். அந்தப் பேழையைப் பெற்றுக்கொண்டு வாலஸ் பிரபு திரும்பி வரும் வழியில்தான் அவர் மார் பிரபுவைக் காப்பாற்றினார்; மேலும் காயமுற்றிருந்த மார் பிரபுவைத் தமது மாளிகைக்கே பாதுகாப்போடு அனுப்பி வைத்தார்.

அந்தக் காலத்தில் இங்கிலாந்து ஸ்காட்லாந்தை அடிமை கொண்டு, ஆதிக்கம் செலுத்தி வந்தது. எனவே வாலஸின் இந்தத் துணிகரமான செய்கை ஆங்கிலேயக் கவர்னரான ஹெஸெல்ரிகுக்கு மிகுந்த ஆத்திரத்தையும் பழிவாங்கும் எண்ணத்தையும் தூண்டிவிட்டது. அவன் தனது படைவீரர்களோடு வாலஸையும் அவரது ஆட்களையும் பின் தொடர்ந்து சென்று, எல்லெர்ஸ்லி மாளிகையையே தாக்க முனைந்தான்.

அந்த மிருகத்தனமான தாக்குதலுக்கு வாலஸின் அருமை மனைவியான மரியோன் பலியானுள்; கர்ப்பவதியான அந்தச் சீமாட்டியை, அவளது மாளிகைக் கூடத்திலேயே, அந்த கவர்னர் தன் கையாலேயே கொன்று தள்ளினுன். பின்னர் அவன் அந்த மாளிகையையும் தீக்கிரையாக்கினுன். இந்த மூர்க்கமான தாக்குதலால், வாலஸ் பிரபுவும் கார்ட்லேன் கிரெய்க்ஸ் பகுதியைச் சேர்ந்த காடுகளுக்குள் அடைக்கலம் தேடி ஓடி ஒளிய நேர்ந்தது. காயமுற்றிருந்த மார் பிரபுவோ தூர்ந்துபோன ஒரு பழங்கிணற்றுக்கடியில் மறைத்துவைக்கப் பட்டிருந்தார்; அதன் காரணமாக, அவர் தமது எதிரிகளின் கையில் சிக்காமல் தப்பினுர். வெறிபிடித்த அந்த ஆங்கிலேயப் போர்வீரர்கள் அனைவரும் அகன்று சென்ற பின்னர், வாலஸின் மாளிகையைச் சேர்ந்த வீணைவித்வானுன ஹால்பெர்ட் என்ற கிழவன் காயமுற்றிருந்த மார் பிரபுவை அவரது பாத்வெல் கோட்டைக்குக் கொண்டு போய்ச் சேர்த்தான். பாத்வெல் கோட்டையில் நிலவிய பரபரப்புக்கு இதுதான் காரணம்.

மார் பிரபு வயதில் முதிர்ந்தவர்தான். எனினும் அவரது உத்வேகத்திலும் உணர்ச்சியிலும் முதுமை தட்டிவிடவில்லை. ஆங்கிலேயப் போர் வீரர்கள் நடத்திய அக்கிரமங்களையும் அநியாயங்களையும் கண்டுணர்ந்த அவர் மிகுந்த ஆவேசமும் ஆத்திரமும் கொண்டார்: ஆங்கிலேயப் போர் வீரர்கள் மீது எப்படியும் வஞ்சம் தீர்த்தே ஆகவேண்டுமென வன்மம் கூறினுர். தம்மையும் தமது மைத்துனரையும் பின்பற்றுபவர்களெல்லாம் ஆயுதம் தாங்க வேண்டுமென்றும், பின்னர் லானுர்க்கைச் சேர்ந்த வீரர்களுடன் காட்டில் மறைந்திருக்கும் வாலஸோடு அவர்கள் ஒன்றுசேர்ந்துகொள்ளவேண்டுமென்றும் அவர் யோசனை கூறினுர். அதன்பின் அவர் தம் மருமகனும், பாத்வெல் பிரபுவின் மகனுமான மர்ரே என்ற வாலிபனை நோக்கிப் பின்வருமாறு கூறினுர்; "ஆதிக்க வேட்டைக்காரர்களிடம் அகப்பட்டு, நாம் நிரந்தரமாக அழிந்துபோகக் கூடாது என்பது உறுதியானுல், ஸ்காட்லாந்து தனது சுதந்திரப் போரைத் தொடங்குவதற்கு இதுவே தருணம், உனது அருமைத் தந்தை பாத்வெல் பிரபு இங்கு இருந்திருந்தால் அவரும் நான் கூறுவதை ஆமோதிப்பார்."

இதனைக் கேட்டதும் அந்த இளைஞனும், "ஆம், மாமா. ஸ்காட்லாந்தின் விடுதலைக்கான காலம் வந்தேவிட்டது. எனது தந்தையின் பரிவாரங்களை நானே வாலஸ் பிரபுவிடம் வழி நடத்திச் செல்கிறேன். நமக்கும் நமது நாட்டுக்கும் இழைத்த கொடுமைகளுக்கெல்லாம் ஆங்கி

லேயரைப் பழி வாங்குகி றேன்!'' என்று மிகுந்த உற்சாகத்தோடு பதிலளித்தான்.

சீக்கிரத்திலே தூதுவன் ஒருவன் நல்ல செய்தி யொன்றைக் கொண்டு வந்தான். செய்தி இது தான்; ஹெசெல்ரிக் வசமிருந்த கோட்டைமீது வாலஸ் தம் வீரர்களோடு தாக்குதல் நடத்தி, அங்கிருந்த பட்டாளத்தையும் அழித்து, பாசறைக்குத் தீ வைத்துவிட்டார். மேலும் தமது மனைவி மரியோனைக்



கொன்று தள்ளிய அந்த ஆங்கிலேயக் கவர்னரையும் தமது கையாலேயே கொன்று பழி தீர்த்துக் கொன்றுவிட்டார்!

இவ்வாருக, ஸ்காட்லாந்தின் சுதந்திரத்தை மீட்க, அங்கு மீண்டும் ஒரு வீர புருஷர்—வாலஸ்—தோன்றிவிட்டார்!



இதன் பின்னர் பாத்வெல் கோட்டையைச் சார்ந்த பரிவாரங்களை யெல்லாம் மறுநாட் காலையில் பாத்வெல் கோட்டை மைதானத்தில் ஒன்றுகூடுமாறு மார் பிரபு உத்தரவு பிறப்பித்தார். ஸ்காட்லாந்தின் விடுதலைப் பதாகையை மீண்டும் ஏந்திப் போராடுவதற்கு எல்லோரும் மிகவும் ஊக்கத்தோடும் உற்சாகத்தோடும் முன்வந்தார்கள். எனினும் அவர்கள் அத்தனை பேரின் உற்சாகத்தைக் காட்டிலும் மார் பிரபுவின் மகளான ஹெலனின் உற்சாகமே அதிகமாக இருந்தது. மார் பிரபுவின் மருமகனுன மர்ரே வாலிபத்தின் கம்பீரமும் வடிவத்தின் வனப்பும் கொண்டு விளங்கினுனென்றுல், அவரது மகளான ஹெலனே பெண்மையின் கனிவும் பேரெழிலின் கவர்ச்சியும் நிறைந்த கன்னியாக விளங்கினுள். அந்தக் கனிவையும் கவர்ச்சியையும் நாணத்தையும் நளினத்தையும் கண்டவர்கள் யாரும் ஒருக்கணமேனும் மயங்காமல் இருக்க முடியாது. அத்தனை எழிலும் இனிமையும் நிறைந்த வாலைக்குமரி ஹெலன்.

மார் பிரவு தம் மகளை நோக்கிப் பின்வருமாறுகூறினுர்:

"ஹெலன்! இதோ பார்த்தாயா? நமக்குச் செய்தி கொண்டுவந்த தூதுவன் வாலஸிடமிருந்துதான் வருகிருன் என்பதை நிச்சயப்படுத்துவதற்காக, ஸர் வாலஸ் தமது தலை முடியில் சிறிதளவை எனக்குப் பரிசாக வெட்டியனுப்பியிருக்கிருர். அது மட்டுமல்ல, தமது மனைவியின் ரத்தத்தில் தோய்ந்த ஈரம்கூடக் காயாத அந்த ஹெசெல்ரிகின் வாளை அவனிடமிருந்து பறித்து அதனைக் கொண்டே இந்த முடியை வெட்டியனுப்பியுள்ளதாகவும் அவர் எனக்குக் கடிதம் எழுதியிருக்கிருர். இதோ இந்த முடியின்மீது ரத்தக் கறை கூடப் படிந்திருக்கிறது, பார்த்தாயா? சரி, நீ இந்த முடியைக் கொண்டே நமது சுதந்திரப் பதாகையை உருவாக்கு. அந்தப் பதாகைமீது, 'ஆண்டவன் என்னை ஆயுத பாணியாக்குகிருர்' என்ற வாசகத்தையும் நீ பின்னல் தையலால் பொறித்துவிடு. இது வாலஸின் வாசகம். இந்த வாசகம் பொறித்த பதாகையை ஏந்திக் கொண்டு, மர்ரே கார்ட்லேன் காட்டுக்குச் செல்லட்டும்."

தந்தையின் ஆணைப்படி அந்தப் பதாகையை உருவாக்குவதற்காக, ஹெலன் தனது அறையை நோக்கி விரைவாகச்

சென்றாள். அவள் செல்லும் அழகை மார் வைத்த கண் வாங்காமல் பார்த்தான். அப்போது அவனது வழக்கமான பாச உணர்ச்சிக்கும் மேலான, அதுவரையிலும் அவன் உணராத ஒரு புதிய நேச உணர்ச்சி அவனது இதயத்தில் பொங்கிப் பிரவகிக்கும் புதுமையை அவன் உணர்ந்தான்.

ஆனால்நாட்டின்விடுதலைக்காக நடைபெறும் இந்த ஏற்பாடுகள் அந்த மாளிகை வாசிகளில் ஒரே ஒரு நபருக்கு மட்டும் பிடிக்கவில்லை; அவை அந்த நபரின் உள்ளத்தில் வெறுப்பையும், பீதியையும் கிளறிவிட்டன. அந்த நபர் மார் பிரபுவின் இரண்டாம் தாரமும், ஹெலனின் சிற்றன்னையும், ஆர்க்லி இளவரசியுமான ஜோஹன்னா தான்! ஜோஹன்னா ஆங்கிலேய ஆதரவாளர்களான கம்மின், சோலிஸ், மார்ச் ஆகிய பிரபுக்களின் குடும்பங்களோடு நெருங்கிய உறவும் நேசமும் கொண்டவள். புரூசுக்கும், பாலியோலுக்கும் எதிராக இந்தப் பிரபுக்கள் புரிந்த தேசத்துரோகமான நடவடிக்கைகள்தான் ஸ்காட்லாந்து நாட்டையே ஆங்கிலேயர்களுக்கு அடிமையாக்க உதவின. இத்தகைய தேசத்துரோகிகளோடு நேச உறவு கொண்டிருந்த ஜோஹன்னாவுக்கு இந்த ஏற்பாடுகள் பிடிக்கவில்லை. பேராசையும் கர்வமும் மிகுந்தவளான ஜோஹன்னா இதனால் தன் கணவரை நோக்கிப் பின்வருமாறு கூறினாள்; ''நன்றாக ஆலோசித்துப் பாருங்கள், பிரபு. உங்கள் திட்டம் மிகவும் மூர்க்கமானது; தேவையும் அற்றது. இப்போது பாலியோல் தமது மகுடத்தை எட்வர்ட் மன்னரிடம் ஒப்படைந்து விட்டார். இந்தச் சரணாகதிக்குப் பின்னர் ஸ்காட்லாந்து நிம்மதியாக இருக்கிறது. இந்த நிம்மதியையும் சாந்தியையும் குலைக்க வேண்டுமா? நன்றாக ஆலோசித்துப் பாருங்கள்.''

மார் பிரபுவோ இந்தப் பேச்சினால் மதிமயங்கி விடவில்லை. அவர் அவளுக்குப் பின்வருமாறு ஆக்ரோஷத்தோடு பதில் கூறினார்: ''நல்ல நிம்மதி, ஜோஹன்னா! இந்த நிம்மதி—கொள்ளையாலும்,கொலையாலும் நிறுவப்பட்ட இந்த நிம்மதி—இங்கே யாருக்கு வேண்டும்? எட்வர்ட் மன்னரின் ஆட்சியின் இனிமையை யெல்லாம் நானும் வேண்டுமட்டும் கண்டுணர்ந்திருக்கிறேன். இனியும் நான் தாங்கிக்கொண்டிருக்க முடியாது; ஸ்காட்லாந்து விழித்தெழுந்தே ஆகவேண்டும்; வாலஸைப்போல் விழித்தெழவேண்டும். ஆம். ஒன்று நாம் விடுதலை பெறவேண்டும்; அல்லது சாக வேண்டும்! வேறு முடிவே இல்லை.''

ஜோஹன்னா அங்கிருந்து அகன்று தனது அறைக்குச் சென்றதுமே, தனது உறவுக்காரரான சோலிஸ் பிரபுவுக்கு

நடந்தன பற்றியெல்லாம் ரகசியமாகத் தகவல் எழுதி அனுப்பிவிட்டாள்!

மறுநாட் காலையில் பாத்வெல் கோட்டை மைதானத்தில் கூடியுள்ள பரிவாரங்களைத் தலைமை தாங்கி நடத்திச் செல்ல வேண்டிய ஐம்பது வீரத் தளபதிகளுக்கு, மார் பிரபு தமது கட்டளைகளை எடுத்துக் கூறிக் கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் திடீரென்று அவரிருந்த அறைக் கதவு படாரென்று திறந்தது! அதனைத் தொடர்ந்து சோலிஸ் பிரபு உள்ளே வந்தார். அந்தத் தேசத் துரோகியைத் தொடர்ந்து, பளிச்சிடும் ஆங்கிலேயப் போர்க் கவசம் தரித்த ஒரு மனிதனும், ஆங்கிலேயப் போர் வீரர்களும் உள்ளே வந்தார்கள். மார் பிரபு தமது ஆசனத்திலிருந்து திடுக்கிட்டு எழுந்தவராய், சோலிஸ் பிரபுவை நோக்கிப் பின்வருமாறு கேட்டார்: "சோலிஸ் பிரபு! இந்த எதிர்பாராத வருகைக்கு என்ன அர்த்தம்?"

சோலிஸ் பிரபு இந்தக் கேள்விக்கு அகம்பாவத்தோடும் ஆணவத்தோடும் பதிலளித்தார்: "நான் ஸ்காட்லாந்தின் ராஜப் பிரதிநிதியின் உத்தரவோடு வந்திருக்கிறேன். இங்கிலாந்து மன்னரின் பேரால் இப்போது நீங்கள் எனது கைதி, பாத்வெல் மைதானத்தில் கூடியிருந்த உங்கள் பரிவாரங்களை மூவாயிரம் ஆங்கிலேயப் போர்வீரர்கள் மடக்கிவிட்டார்கள். உங்கள் கோட்டை முற்றுகையிடப் பட்டாகிவிட்டது. எதிர்த்துப் போராடுவதென்பது இனியும் உங்களுக்குச் சாத்தியமில்லை. எனவே கூடியிருக்கும் நீங்கள் எல்லோரும் கயிற்றிலேதான் தொங்குவீர்கள்!"

இந்தப்பேச்சைக் கேட்டதும், அங்குகூடியிருந்த ஸ்காட்லாந்து வீரர்கள் கோபாவேசத்தோடு கத்தினார்கள். அவர்கள் சோலிஸ் பிரபுவின் ஆணைக்குப் பணியவில்லை; மாறாக, அவர்கள் தமது உடைவாட்களைத் தான் உருவினார்கள். மறுகணமே காயப் பட்டுக்கிடந்த மார் பிரபுவின் ஆசனத்தைச் சுற்றிலும் மூர்க்கமும் உத்வேகமும் மிகுந்த வாட்போர் தொடங்கியது. ஸ்காட்லாந்து வீரர்கள் சிறிது நேரம் வரையில் ஆங்கிலேயர்களைச் சமாளித்து வீரப்போர் புரிந்தார்கள்; பல ஆங்கிலேய வீரர்களையும் வெட்டித்தள்ளினார்கள். எனினும் வெளியிலிருந்து ஏராளமான ஆங்கிலேய வீரர்கள் அந்த அறைக்குள்ளும், கோட்டையின் பிற பகுதிகளிலும் வந்து புகுந்துவிட்டார்கள். எனவே ஸ்காட்லாந்து வீரர்கள் ஆங்கிலேயர்களை அதிக நேரம் தாக்குப் பிடிக்க முடியவில்லை. சீக்கிரத்திலேயே அந்தக் கோட்டை சோலிஸ் பிரபு, அவருடன் வந்த ஆங்கிலேயத் தளகர்த்தனை வாலன்ஸ் பிரவு ஆகியோரின் வசமாகிவிட்டது.



அங்கு நடந்த போரில் உயிர் பிழைத்திருந்த ஸ்காட்லாந்துப் போர்வீரர்களும், தப்பியோட முடியாது போனவர்களும், மார் பிரபுவும் ஆங்கிலேயர்களிடம் கைதிகள் ஆனுர்கள்.

அங்கு நடந்த போரின் பயங்கரமான போக்கையும், அதனுல் நேரக்கூடிய விளைவையும் சட்டென்று உணர்ந்துகொண்ட மர்ரே போர் நடந்துகொண்டிருக்கும்போதே, மார் பிரபுவின் படுக்கைக்குப் பின்னுலிருந்த திரைகளுக்குப் பின்னுல் மெல்ல நழுவிவிட்டான்; பின்னர் அவன் அங்கிருந்த ஓர் ரகசியப் பாதையின் வழியாக, ஹெலனின் அந்தப்புரத்துக்கு வந்து சேர்ந்தான். ஹெலனும் கோட்டையில் நடைபெறும் போரை அறிந்து, மிகவும் பயந்து போயிருந்தாள். மர்ரேயும் அவளது பாதுகாப்பைப் பற்றித்தான் பெரிதும் கவலையும் பயமும் கொண்டான். ஏனெனில் மூர்க்கமான பேர்வழிகளான சோலிஸ் பிரபு, வாலன்ஸ் பிரபு ஆகிய இருவரும் ஹெலனை மணக்க வேண்டும் என்று விரும்பி, அந்த முயற்சியில் தோற்றுப் போனவர்கள். அவளை அடைவதில் இருவருமே ஒருவருக்கொருவர் போட்டியும் பூசலும் புரிந்து கொண்டவர்கள். மேலும் அவளை எப்படியேனும் பலாத்காரத்தாலோ அல்லது ஏமாற்ருலோ, எந்த வழியிலேனும் அடைந்தே தீருவேன் என்று இருவருமே தனித்தனியாகச் சபதம் வேறு செய்திருந்தார்கள்.

இத்தகைய சூழ்நிலையில் ஹெலனைக் காப்பாற்றுவது மர்ரேயின் முதற்பெரும் கடமையாயிற்று. கலவரத்தாலும் பயத்தாலும் கலங்கிப் போயிருந்த ஹெலனை அவன் ஓர் ரகசியப் பாதையின் மூலமாக, அருகிலிருந்த புனிதர் ஃபில்லியனின் சாமியார் மடத்துக்குக் கூட்டிச் சென்ருன். அந்தச் சாமியார் மடத்தில் அவளை அடைக்கலமாக விட்டுவைத்தால், ஆங்கிலேயப் போர்வீரர்கள்கூட அந்தச் சரணுலயத்தினுள் புகுந்து சச்சரவு விளைவிக்கத் துணியமாட்டார்கள் என்ற எண்ணம் அவனுக்கு. மேலும் மாண்டீத் பிரபு வாலஸிடம் ஒப்படைத்திருந்த அந்த மர்மமான பேழையையும் மார் பிரபு எல்லெர்ஸ்லியிலிருந்து திரும்பி வந்தபொழுது தம்மோடு கொண்டுவந்து விட்டார்; அந்தப் பேழையை ஒளித்துவைத்திருந்த இடத்தையும் அவர் தம் மருகன் மர்ரேயிடம் தெரிவித்திருந்தார். எனவே அந்தச் சாமியார் மடத்துக்குச் சென்றபோது, மர்ரே அந்த ரகசியப் பேழையையும் தன்னேடு எடுத்துச் சென்ருன்.

வியப்புற்று விழித்து நின்ற அந்த மடத்தின் தலைவரிடம் மர்ரே நடந்தவை யனைத்தையும் அவசர அவசரமாகச் சொல்லி முடித்தான்; அத்துடன் எதிர்பாராத விருந்தாளியாக வந்துள்ள ஹெலனைப் பாதுகாத்துத்

தரவும் வேண்டிக்கொண்டான். அதன்பின் தான் கொண்டுவந்திருந்த ரகசியப் பேழையையும் அவரிடம் ஒப்படைத்துவிட்டு, அந்தப் பேழையைப் பற்றிய விவரத்தையும் அவரிடம் சொன்ஞன். அந்த விவரம் வருமாறு: கைதாகிச் சிறைப்பட்டுக் கிடக்கும் டக்ளஸ் பிரபுதான் அந்தப் பேழையை ஸ்காட்லாந்துக்கு அனுப்பி வைத்திருந்தார். எந்தக் காரணத்திஞலும் அந்தப் பேழை ஆங்கிலேயர்களின் கைகளில் சிக்கிவிடக் கூடாதென்றும், ஸ்காட்லாந்து விடுதலை பெற்று, அதன் அரசுரிமைக்குரிய மன்னர் அந்நாட்டின் சிம்மாசனத்தில் அமரும் வரையிலும் அந்தப் பேழையை எவரும் திறந்து பார்க்கக் கூடாதென்றும், அவ்வாறு திறந்து பார்த்தால், அவர்கள் ஒரு சாபத்துக்குப் பலியாவார்களென்றும் டக்ளஸ் பிரபு கூறியிருந்தார்!

கலவரத்திலிருந்தும் கவலையிலிருந்தும் மீண்டு தன்னுணர்வு பெற்ற ஹெலன் மீண்டும் தனது வழக்கமான தைரியத்தையும், துணிச்சலையும் பெற்ருள், உடனே அவள் பின்வருமாறு பேசிஞள்: ''நானும் போர்க் கவசத்தைத் தாங்கி, ஸ்காட்லாந்துக்காகப் போரிடத் தான் விரும்புகிறேன். ஆஞல் அந்த வாய்ப்பை இப்போது எனக்கில்லாது பண்ணிவிட்டீர்கள். எனவே நான் இந்தப் புனிதமான இடத்தில் தங்கி, எனது தாய் நாட்டுக்காகவும், அதன் விடுதலைக்காகப் போராடும் வீரர்களின் க்ஷேமத்துக்காகவும் பிரார்த்தனை செய்வேன். ஆஞல், என் அருமைத் தந்தை-அவர் என்ன வாஞர்? அவரது கதி என்ன என்பதையேனும் சொல்லுங்கள்.''

மர்ரே அவளுக்குத் தான் கண்டறிந்த விஷயத்தைக் கூறிஞன். அதாவது அவன் அந்த ரகசியப் பேழையை அது மறைத்து வைக்கப்பட்டிருந்த தேவாலயத்திலிருந்து எடுத்துக் கொண்டு வரும்போது, வெளிமுற்றத்தில் சோலிஸ் பிரபுவும், வாலன்ஸ் பிரபுவும் உரத்த குரலில் பேசிக்கொண்டிருப்பதை அவன் கேட்டான். கோட்டைக்குள்ளே எங்கு தேடியும் ஹெலனைக் கண்டுபிடிக்க முடியாததால், மார் பிரபுவையும் அவரது மனைவியையும் டம்பர்ட்டன் கோட்டைக்குக் கொண்டு சென்று, அங்கே அவர்களைக் கடுமையான காவலில் வைத்திருக்குமாறு அவர்கள் தமது படைவீரர்களுக்கு ஆணையிட்டார்கள். மர்ரே இந்த விவரத்தைக் கூறி முடித்த பின், பின்வருமாறு ஹெலனிடம் கூறிஞன்: ''ஹெலன்! ஸ்காட்லாந்துக்காக வாலஸோடு சேர்ந்து ஆயுதம் தாங்கி நிற்கும் அந்த வீரப் பெருமக்களிடம் நானும் விரைந்து செல்ல வேண்டும். சரி நான் வருகிறேன். அருமை ஹெலன்! நீ இந்த ஏழை மர்ரேக்காகவும் பிரார்த்தனை செய்ய மறந்து விடாதே.''

இதன் பின்னர் மர்ரே ஒரு பாதிரியாரைப் போல் மாறு வேடம் தரித்துக்கொண்டு, ஆங் கிலேயப் போர் வீரர்களின் அணிகளைக் கடந்து, ஒரு மட்டுக் கும் வாலஸிடம் போய்ச் சேர்ந் தான். வாலஸோ அதற்குள் கார்ட்டுலேன் காட்டைச் சூழ்ந்து கொண்டிருந்த ஆங்கிலேயப் படைகளின் முற்றுகையைத் தகர்த்து வெளியேறி, வடதிசை நோக்கித் தமது வீரர்களோடு போய்விட்டார்; அங்கு ஸ்காட் லாந்தின் சகல பகுதிகளிலிருந் தும் வந்திருந்த தளபதிகளும் பரிவாரங்களும் ஒன்று திரண் டிருந்தார்கள்; அவர்கள் அனை வரும் இப்போது வாலஸின் பதாகையின்கீழ் படை திரண்டு வந்து சேர்ந்துகொண்டிருந் தார்கள்.



மர்ரே அந்த மடத்தைவிட் டுச் சென்று மூன்று நாட்களாகி விட்டன. அதற்கடுத்த நாள் அந்த மடத்துக்கு இரண்டு பேர் வந்தார்கள். அவர்களில் ஒருவர் ஆங்கிலேயப் பிரபுவின் போர்க் கவசத்தை அணிந்திருந்தார்; இன்னொருவன் ஸ்காட்லாந்து உடை தரித்திருந்தான் அந்த ஆங்கிலேயப் பிரபு தமது தலைக் கவசத்தின் முகமூடியையும் விலக்கவில்லை; வாய் திறந்து பேசவும் இல்லை. ஸ்காட்லாந்து உடையணிந்தவன் மட்டும் ஹெலனிடம் ஒரு முத்திரை மோதிரத்தை எடுத்துக் கொடுத் தான். அந்த மோதிரத்தைப் பார்த்தவுடனேயே அது தனது சிற்றன்னையின் மோதிரம்தான் என்பதை அவள் அடையாளம் கண்டுகொண்டாள். ஹெலனின் தந்தை ஹெலனை டம்பர்ட்டன் கோட்டைக்கு அழைத்து வரு மாறு தன்னை அனுப்பியுள்ள தாகவும், அவரும், ஹெலனின் சிற்றன்னையும் ஹெலனின் வரவை ஆவலோடு எதிர்பார்த் திருப்பதாகவும், மார் பிரபுவுக்கு ஏற்பட்டிருந்த காயங்கள் மீண் டும் மோசமாகி ரத்தம் கொட் டத் தொடங்கிவிட்டதால், அவர் பிராணபத்தான நிலையில் இருப்பதாகவும், எனவே அவர் இறுதியாகத் தமது மகளை ஆசீர் வாதம் செய்துவிட்டுக் கண்ணை மூடுவதற்காக ஹெலனை அழைத்துவரச் சொன்னதாக வும் அந்த ஸ்காட்லாந்து உடை யணிந்த மனிதன் ஹெலனிடம் சொன்னான். அவனது பேச் சைக் கேட்டு ஹெலன் ஆறாத் துயரம் அடைந்தாள்; அந்தத் துயர வேதனையில் அவள் அவ னது பேச்சில் எந்தவிதமான சூதும் இருப்பதாக உணர வில்லை. எனவே அவள் அந்த இரு மனிதர்களோடும் மடத்தை விட்டுப் புறப்பட்டாள். மடத் துக்கு வெளியே அவர்கள் அவ ளுக்காக ஒரு மூடு பல்லக்கையும், அதனைக் கொண்டு செல்வதற் காகச் சில பணியாட்களையும் நிறுத்தி வைத்திருந்தார்கள். அவள் அந்த வாகனத்தில் ஏறி யமர்ந்ததும், அவர்கள் அவளை மலைகளின் பள்ளத்தாக்குகளின்

வழியே கொண்டு சென்ருர்கள். அவளை ஒரு குகையில் கொண்டு போய்ச் சேர்த்தார்கள்; அந்தக் குகையிலிருந்த ஒரு பெண்ணிடத்தில் அவளை ஒப்படைத்தார்கள். அந்தப் பெண் ஹெலனிடம் முத்திரை மோதிரத்தைக் கொடுத்த அந்த ஸ்காட்லாந்து வேடதாரியின் மனைவிதான் என்ற உண்மை விரைவிலேயே வெளிப்பட்டது.

ஹெலனைக் கொண்டு வந்து சேர்த்த பணியாட்கள் போய் விட்டார்கள். பின்னர் அவள் அந்தக் குகையில் தன்னந்தனியாக அமர்ந்திருந்த வேளையில், ஆங்கிலப் பிரபுவின் போர்க் கவசம் தரித்த அந்த மனிதர் அங்கு வந்தார். அவர் தமது தலைக் கவசத்தின் முகமூடியைத் தூக்கித் தமது முகத்தைக் காட்டினர். அது வேறு யாருமல்ல சோலிஸ் பிரபுதான்!

ஹெலன் வஞ்சனைக்கு இரையாகிவிட்டாள். அவளை வஞ்சகமாகக் கடத்திக் கொண்டுவந்த சோலிஸ் பிரபுவோ அவளை நோக்கிப் பின்வருமாறு பேசினுர்: "நீ என்னை அலட்சியப் படுத்தினய்; அவமானப்படுத்தினய். இப்போதோ நீ எனது ஆதிக்கத்தில் அகப்பட்டுக் கொண்டாய், உன்னை இதோ இந்தக் கைகளுக்கு உரிமையாக்கத்தான் நான் இந்தத் தந்திரத்தைக் கையாள நேர்ந்தது. இனியும் நீ என் கைகளிலிருந்து என்றும் தப்பித்துப் போக முடியாது." அவர் இவ்வாறு பேசியவாறு தன்னை நெருங்கி வருவதைக் கண்டதும், ஹெலனுக்கு மயக்கம் வந்தது, மயங்கிச் சோர்ந்த ஹெலனை அவர் தமது கைகளால் பற்றிப் பிடித்து, அவளைத் தமது மார்போடு சேர்த்தணைத்தார். இந்தப் பரிதாபகரமான நிலையைத் தாங்கமாட்டாமல், ஹெலன் வாய்விட்டுக் கத்தினுள். அதே கணத்தில் சோலிஸ் பிரபுவின் இரும்புப் பிடியும் தளர்ந்து விடுபட்டது. அவரது உடம்பிலிருந்து வெளிப்பட்ட ரத்தம் தனது முகத்தின்மீது தெறித்திருப்பதை ஹெலன் உணர்ந்தாள். மறுகணம் அந்தக் குகைக்குள்ளே ஒரு மூர்க்கமான சண்டை நடப்பதை அங்கிருந்த தீப்பந்தங்களின் ஒளியாட்டத்தினிடையே அவள் கண்டாள். யாரோ ஓர் அன்னியப் பிரபு சோலிஸின் ஆட்களோடு தன்னந்தனியராக வீராவேசமாக வாட்போர் புரிந்தார். அவரது அசகாய சூரத்தனமான வாள் வீச்சினுல் அங்கு நடந்த போரில் அவரே வெற்றி பெற்ருர். அவரது எதிரிகள் அனைவரும் தோற்ருேடி விட்டார்கள், பின்னர் அவர் தமது வாளையூன்றி அதன்மீது சாய்ந்து நின்றவராக, பயந்து பீதியுற்றுப் போயிருந்த அந்தக் கன்னியைப் பார்த்தார். அவரது பார்வை சோகமும், அதே சமயம் கம்பீரமும் நிறைந்ததாகத் தோற்றியது. அத்தகையதொரு பார்வையை ஹெலன் அதற்குமுன் யாரிடத்திலுமே கண்டதில்லை.

அந்தப் பிரபு அவளை மெல்லத் தாங்கலாகத் தூக்கி, பக்கத்தி லிருந்த ஒரு துறவியின் குடி சைக்கு வழி நடத்திச் சென்றார். அங்கிருந்த துறவியிடம் அவர் அவளை ஒப்படைத்தார்; மேலும் போர்த்துக்கு அருகிலுள்ள அவ னது அத்தை ரூத்வென் சீமாட் டியின் கோட்டைக்கு அவளைத் தக்க துணையோடு அனுப்பி வைக்குமாறும் அந்தத் துறவி யிடம் அவர் கூறினார்:



இவ்வாறு கூறி முடித்து விட்டு அந்த ஆபத்சகாயரான அன்னியப் பிரபு புறப்பட முனைந்த சமயத்தில், ஹெலன் அவரை நோக்கி, "என்னைக் காப்பாற்றிய புண்ணியவானின் பெயரை நான் தெரிந்து கொள்ளலாமா?" என்று கனிந்த குரலில் கேட்டாள்.

"இப்போதில்லை. ஸ்காட்லாந்து நாட்டில் உருவப்பெற்றுள்ள இதோ இந்தக் கை வாள் வெற்றிபெறவேண்டும்; அல்லது விழுந்து நொறுங்க வேண்டும். அழகியே! இந்த வாள் வெற்றிபெறுமானால், அப்போது நீ என் பெயரைத் தெரிந்து கொள்வாய்!" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார் அந்த மனிதர்.

ஹெலன் தனது அத்தையின் கோட்டையிலேயே சில காலம் தங்கியிருந்தாள். இந்தக் காலத்தில் வீரமும் தீரமும் மிக்க வாலஸின் தலைமையின் கீழ் ஸ்காட்லாந்தின் வீரர்கள் நாள் தோறும் எய்திவரும் வெற்றிச் செய்திகளெல்லாம் அவளை வந்து எட்டின. அவள் அந்தச் செய்திகளையெல்லாம் ஆர்வத்தோடும் உணர்ச்சி வேகத்தோடும் கேட்டறிந்தாள். இப்போதோ வாலஸின் புகழ் எங்கும் பரவிவிட்டது. அவரது வீரத்தைப் புகழாத வாயில்லை; வீடில்லை. ஸ்காட்லாந்து வீரர்களுக்குள்ளேயே வாலஸ்தான் தன்னிகரற்ற வீராதி வீரனாகவும், தர்ம சீலம் படைத்த குணவானாகவும் எங்கும் பாராட்டப் பட்டார்.



வாலஸின் படைகள் பல்வேறு சிறுசிறு வெற்றிகளை எய்தி, ஒரு மாபெரும் போராட்டத்தை நடத்துவதற்கான பலத்தையும் பக்குவத்தையும் பெற்றவுடனே, வாலஸ் டம்பார்ட்டன் கோட்டைமீது தாக்குதல் நடத்தி, அங்கு சிறைப்பட்டுக் கிடந்த மார் பிரபுவை மீட்பதையே தமது முதற்கடமையாகக் கொண்டார்; அவ்வாறே அந்தத் தாக்குதலை நடத்தி வெற்றியும் கண்டார். டம்பார்ட்டன் கோட்டையைக் கைப்பற்றி, அதன் கூடகோபுரத்தின்மீது ஸ்காட்லாந்தின் பதாகையைப் பறக்கவிட்டார்; பின்னர் அந்தக் கோட்டையில் போதுமான படைவீரர்களைப் பாதுகாவலுக்கு நிறுத்திவிட்டு, ஸ்காட்லாந்து மன்னர்களின் புராதன பீடமான ஸ்டெர்லிங் கோட்டையைக் கைப்பற்றுவதற்காக, தமது படைகளை முன்னேறிச் செல்லுமாறு ஆணையிட்டார்.

டம்பார்ட்டன் கோட்டையைக் கைப்பற்றி, மார் பிரபுவையும் அவரது இளம் மனைவி ஜோஹன்னாவையும் சிறை மீட்ட சமயத்தில், ஜோகன்னா வாலஸை நேரில் கண்டாள். வாலஸின் ஆண்மை மிகுந்த அழகையும், ராஜ கம்பீரத்தை

யும் கண்ட ஜோஹன்ன அவற்றில் தன் உள்ளத்தைப் பறிகொடுத்தாள். வாலஸின் சோகம் கலந்த எனினும் கவர்ச்சி மிகுந்த பேச்சைக் கேட்டபோது அவள் தன்னையே மறந்தாள். அப்போது அவளது இதயத்தில் என்னென்னவோ ஆனந்த எண்ணங்களெல்லாம் பொங்கி யெழுந்தன. அந்தப் புதிய எண்ணங்களால் எதற்கும் துணிந்த அந்த இளவரசி நாணத்தால் தலை குனிந்தாள்; அவளது கன்னங்கள் கூடக் கன்றிச் சிவந்தன. அவளது உறவுக்காரரான சோலிஸ் பிரபு ஹெலனைத் தமது கையில் சிக்காமல் தப்பவிட்டு விட்டதற்காக அவளையும் சிறைப்படுத்திவிட்டார். அந்த நன்றிகெட்ட சோலிஸ் பிரபுக்காக, இந்த நாணயமான மனிதருக்கெதிராய் நாம் நடந்து கொண்டோமே என்று ஜோஹன்ன தனக்குள் தானே நொந்து புழுங்கினள். அதே சமயம் அவள் தனது எதிர்காலம் பற்றியும் ஆசைக் கனவுகள் காணத் தொடங்கி விட்டாள். அவளது உள்ளத்திலே காதல் வேட்கையும் பேராசையும் குடிகொண்டு அவளை நெருப்பாய்த் தகித்தன. வாலஸோடு, அவருகில் தானும் ஒரு சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கும் திருக்கட்சியை அவள் தன் மனத்தில் கற்பனை பண்ணிப் பார்த்தாள்! ஆனல் வாலஸோ அவளிடம் உணர்ச்சியற்ற முறையில்தான் பழகினர்; பேசினர். அவரது இந்த அலட்சியமோ அவளது ஆசையை மேலும் மேலும் தூண்டிவிடத்தான் செய்தது; எப்படியும் அவரைத் தன் வசமாக்கி வெற்றிகண்டுவிடவேண்டும் என்ற வெறியும் வேட்கையுமே அவள் உள்ளத்தில் அதிகரித்தன.

இதன் பின்னர் பற்பல பெரும் போர்கள் தொடர்ந்து நடந்தன. திட்டமிட்டபடியே ஸ்டெர்லிங் கோட்டையும் பிடிபட்டுவிட்டது. அந்த மாளிகையின் புராதனமான அரசவைக் கூடத்திலே ஸ்காட்லாந்தின் பாராளுமன்றம் ஒன்று கூட்டப்பட்டது. அந்தப்பாராளுமன்றம் வாலஸ் மீட்டுத் தந்த பிரதேசத்துக்கு வாலஸே ராஜப் பிரதிநிதியாக இருந்துவரவேண்டும் என்று தீர்மானித்தது; பிரகடனம் செய்தது. அப்போது மார் பிரபுவும் அவரது மனைவியும் ஸ்டெர்லிங் கோட்டையில் தான் இருந்தார்கள்; ஹெலனும் அங்கு போய்ச் சேர்ந்தாள். அத்தனை நாட்களாகப் பிரிந்திருந்த தன் தந்தையை அவள் ஆர்வத்தோடு தழுவிக் கொண்டாள். பின்னர் மார் பிரபு அவளை ஸ்காட்லாந்தின் வீரர்கள் கூடியிருந்த அந்த மாபெரும் அரசவைக் கூடத்துக்கு அழைத்துச் சென்றார், அங்கு சென்று அங்கே கொலு பீடத்தில் அமர்ந்திருந்த ராஜப் பிரதிநிதியைக் கண்டதும், ஹெலன் அப்படியே மயங்கிச் சாய்ந்து, விட்டாள். மலைக் குகையில்

அடைபட்டுக் கிடந்த தன்னை சோலிஸ் பிரபுவிடமிருந்து காப்பாற்றியஅந்த ஆபத் சகாயரான அன்னியப் பிரபு வேறு யாருமல்ல — வாலஸ் பிரபுதான்!

ஹெலன் மயங்கிச் சோர்ந்த பின்னர் ஜோஹன்னு நடந்தவற்றையெல்லாம் கேட்டறிந்தாள். அவற்றைக் கேட்க, அவளுக்கு நெஞ்சில் ஆத்திரமும் ஆதங்கமும் பொங்கியெழுந்தன. மாற்றானின் மகளா... ஹெலனின்மீது அவளுக்குப் பொருமையுணர்ச்சியே அளவு கடந்து தோன்றிற்று. அதிலும், தம்மைக் கண்டதும் மயங்கிச் சோர்ந்த அந்த அழகி ஹெலனை, வாலஸ் பிரபு தமது இருகைகளாலும் தாங்கிப் பிடித்ததையும், அவளிடத்தில் பரிவோடும் பாசத்தோடும் பேசியதையும், அவளது முகத்தை அன்போடும் ஆர்வத்தோடும் பார்த்ததையும் ஜோஹன்னு கண்ணுல் கண்டபோது, அவளுக்குச் சர்வாங்கமுமே பற்றியெரிந்தது. அந்தக் காட்சியைக் காணச் சகிக்காத புழுக்கத்தால் அவள் தன் உதட்டை வெறிவேகத்தோடு கடித்தாள்; அதனுல் அவளது உதட்டில் ரத்தம் கூடக் கசிந்துவிட்டது. வாலஸ் பிரபுவை அடைய முனையும் தனக்கு முட்டுக்கட்டையாக நிற்கக்கூடிய ஒரே தடையை— அதாவது தனது கணவரை— விஷம் வைத்துக்•கொன்றுவிடுவதென அவள் ஏற்கெனவே தனக்குள் தீர்மானித்திருந்தாள்• இப்போதோ புதிய தடையொன்றும் இருக்கிறது என்பதை உணர்ந்தாள் அவள். அந்தப் புதிய தடையான, தனது கணவரின் மகளான ஹெலனை அங்கேயே அந்தக் கணத்திலேயே கொன்றுதள்ள முடிந்தால் எவ்வளவு நன்றுயிருக்கும் என்று எண்ணமிட்டாள் ஜோஹன்னு!

ஸ்டெர்லிங் கோட்டையில் சிறைப்பட்டிருந்த ஆங்கிலேயர்கள் மத்தியில் வாலன்ஸ் பிரபுவும் இருந்தார். ஹெலனை எந்த விதத்திலும் அடைந்தே தீருவது என்ற விரதத்தில் சோலிஸ் பிரபுவோடு தாமும் போட்டியிட்டுத் தோற்றுப் போயிருந்த ஆணவக்காரப் பிரபு அவர். சோலிஸ் பிரபுவை எவ்வாறு ஹெலன் தனது கணவராக ஏற்க மறுத்துவிட்டாளோ, அதைப் போலவே வாலன்ஸ் பிரபுவையும் அவள் ஏற்கெனவே ஏற்க மறுத்துவிட்டாள். இதனுல் நிராசையுற்றிருந்த வாலன்ஸ் இப்போதோ உண்மையைக் கண்டார்; அல்லது கண்டதாகக் கருதினுர். அதாவது மார் பிரபுவின் மனைவியான ஜோஹன்னுவின் பொருமை கொப்பளிக்கும் கண்கள் புலப்படுத்திய உணர்ச்சி என்ன என்பதுதான் அந்த உண்மை. வாலஸ் பிரபுவும், ஹெலனும் ஒருவரையொருவர் அன்னியோன்னியத்தோடு நேசிப்பதாகவும், அந்த நேச

உணர்ச்சி நட்புறவைக் காட்டிலும் வலிமை வாய்ந்த பாச உணர்ச்சியாகப் பரிணமித்திருப்பதாகவும் கருதியதே அந்த உண்மை!



ஒருநாள் இரவில் ஸ்டெர்லிங்கிலுள்ள மாளிகைக் கூடத்தில், ஜோஹன்னு எல்லோருக்கும் பெரியதொரு விருந்தளித்தாள். விருந்தின் போது அங்கு நிலவிய கும்மாளத்தையும், கொண்டாட்டத்தையும் விட்டு விலகி, வாலஸ் தேவாலயத்தை நோக்கித் தன்னந்தனியராகக் கிளம்பிச் சென்றார். ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருந்த அவர் கால் போன போக்கில் நடந்து தமது வழியைத் தவறவிட்டு விட்டார். பின்னர் பற்பல வழிகளையும் சுற்றித் திரிந்து,இறுதியில் ஒரு மட்டுக்கும் தேவாலயத்துக்கு வந்து சேர்ந்தார். தேவாலயத்தின் பிராத்தனைப் பீடத்தில் சில மெழுகுவர்த்திகள் மங்கிய ஒளி சிதறி எரிந்து கொண்டிருந்தன. அதன் முன்னால் ஒரு பெண் முழங்காலிட்டு வணங்கிக் கொண்டிருந்தாள். அவள் ஹெலன்தான், வாலஸின் க்ஷேமநலத்துக்காக அவள் வாய்விட்டுப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தாள். வாலஸ் அவளருகில் சென்று தாமும் முழங்காலிட்டுப் பணிந்தவாறு பின்வருமாறு கூறினார்:

"பூலோகக் கன்னிகளில் புனிதமானவளே! எனக்காக நீ சொன்ன பிரார்த்தனை மொழிகளை நான் இப்போது கேட்டேன்; எனவே இந்தத் தனிமையான நேரத்தில், இந்தப் புனிதமான ஸ்தலத்தில் நீ எனது ஆத்மாவின் நன்றியை அங்கீகரித்துக்கொள். ஸ்காட்லாந்து தேசம் எனக்களித்துள்ள பதவியைக் காட்டிலும், எனது தாயகம் வழங்கிய பாராட்டைக் காட்டிலும், உனது பிரார்த்தனை எனக்கு மேலானது. ஏனெனில் அது எனக்குப் பரமண்டலத்தின் பாதுகாப்பையே பெற்றுத் தருகிறது.

இந்த மொழிகளைக் கேட்டவாறே, தனது கரங்களைப் பற்றிப் பிடித்த வாலஸின் கரத்தின்மீது ஹெலன் தலையைச் சாய்த்தாள். வாலஸ் தமது கரத்தின்மீது அந்தப் பெண்ணின் கண்ணீர்த்துளிகள் வழிந்து நனைப்பதை உணர்ந்தார்; மேலும் அவர் வானை நோக்கிக் கண்களை உயர்த்திய போதோ, இறந்துபோன அவரது மனைவியான மரியோனின் ஆவி மேலே வட்டமிட்டு, தம்மையும் ஹெலனையும் ஆசீர்வதிப்பதாகவும் அவர் எண்ணமிட்டார். இத்தகைய பரவசமான நேரத்தில் ஹெலன் லேசாகத் தலையை உயர்த்திப் பார்த்தாள்; அவ்வாறு பார்த்த கணத்திலேயே அவள் ஆவென்று வாய்விட்டு அலறினாள்!

வாலஸ் பிரபுவுக்குப் பின்னால், முகத்தைத் தனது அங்கி

யினால் மூடி மறைந்திருந்த ஒரு மனிதன் ஓங்கிய கத்தியோடு நின்றான். ஹெலனின் அலறலைக் கேட்டு வாலஸ் திரும்பிப் பார்ப்பதற்குள், அந்த ஓங்கிய கத்தி கீழ்நோக்கிப் பாய்ந்தது; மறு கணம் வாலஸ் ரத்தம் கொட்டிய வாறு தரையில் சாய்ந்தார். ஹெலனும் அங்கு ரத்த வெள்ளத்திலேயே சாய்ந்து கிடந்தாள். ஏனெனில் வாலஸின் மீது பாய வந்த கத்தியை அவள் தடுத்து நிறுத்துவதற்காகத் தனது கையை நீட்டினாள்; ஆனால் அந்தக் கத்தியோ அவளது கையையும் ஆழமாகப் பதம் பார்த்து விட்டுத்தான் வாலஸின் மீது பாய்ந்தது.

எதிர்பாராத தாக்குதலால் மயங்கிச் சாய்ந்த வாலஸ் சீக்கிரத்திலேயே தன் உணர்வு பெற்றார்; உடனே அவர் எழுந்து, ஹெலனின் காயத்தின்மீது அவளது தலைக் கச்சையைக் கொண்டு கட்டுப் போட்டார். பின்னர் அவர் அவளைத் தமது கரங்களில் அள்ளி யணைத்துத் தூக்கியவாறு, நீண்டு கிடக்கும் நடை கூடங்களையெல்லாம் கடந்து, விருந்துக்கு வந்திருந்திருந்தவர்கள் முன்னிலையில் திடீரென்று வந்து சேர்ந்தார். வாலஸ் பிரபுவும் ஹெலனும் வந்த கோலத்தைக் கண்டதும், மார் பிரபு திடுக்கிட்டுப் போனார்.

"யார் செய்த அநியாயம் இது?" என்று கத்தினார் மார் பிரபு.

"எனக்குத் தெரியாது" என்றார் வாலஸ்.

"வாலன்ஸ் பிரபு எங்கே?" என்று மீண்டும் கர்ஜித்தார் மார் பிரபு; வாலஸ் பிரபுவின் மீது வஞ்சம் தீர்க்கப் போவதாக, வாலன்ஸ் மறைமுகமாகப் பலமுறை பயமுறுத்தியதும், அவரது நடவடிக்கைகள் சந்தேகத்துக் கிடமாக இருந்ததும் அவருக்கு நினைவு வந்தன.

"இதோ இங்கே இருக்கிறேன். கொலைகாரனைத் தேடிப் பிடிக்கட்டுமா?" என்று ஓர் அமைதியான, அழுத்தமான குரல் பதில் அளித்தது.

வாலன்ஸ் இவ்வாறு பேசும் போதே, ரத்த சேதத்தின் காரணமாக வாலஸ் பலமிழந்து போய் தரையில் மயங்கிச் சாய்ந்தார்; இதனைக் கண்டதும் வாலன்ஸ் பிரபு தம்மையும் மறந்தவராய் அருகில் நின்ற வாரன் பிரபுவின் காதில் பின்வருமாறு கிசுகிசுத்தார், "ஆசாமி நிச்சயம் தீர்ந்து போவான்! எட்வர்ட் மன்னர் நீடூழி வாழ்க!"

இந்தக் கூற்றைக் கேட்டதும் வாரன் பிரபு பீதியும் பிரமிப்பும் மிகுந்தவராய் வாலன்ஸ் பிரபுவின் பக்கம் திரும்பினார், கொலைகாரன் யார் என்ற உண்மை அவருக்குப் புரிந்துவிட்டது. என்றாலும், வாலன்ஸ் பிரபுவைக் காட்டிக் கொடுப்பதென்றால், இங்கிலாந்தின் கௌரவத்துக்கும் இழுக்குத் தேடிக்

கொள்ளாமல், அதனைச் செய்ய முடியாது என்பதை உணர்ந்தார் அவர். எனவே இனியும் தாம் இத்தகையதொரு கொலைகாரப் பாவியோடு கூட்டுறவு வைத்துக் கொள்ளக் கூடாது என்று மட்டும் அவர் முடிவு செய்துகொண்டார்.

❋ ❋ ❋

வாலஸ் பிரபுவும் ஹெலனும் தமக்கு ஏற்பட்ட ரத்தக் காயங்களிலிருந்து சீக்கிரமே குணம் பெற்று எழுந்து விட்டார்கள்.

தம்மை அந்தக் கொலைக்காரனிடமிருந்து காப்பாற்றுவதற்காக, ஹெலன் தானும் குறுக்கே பாய்ந்து காயம் பட்டதைக் கண்டு, வாலஸ் பிரபுவுக்கு ஹெலன் மீதிருந்த மதிப்பும் அன்பும் பன்மடங்காக உயர்ந்து விட்டன. இதனால் தனது மாற்றாளின் மகளான ஹெலனின் மீது ஜோஹன்னு கொண்டிருந்த அசூயையும் குரோதமும் மேலும் அதிகரித்தன; அவை அவளது உள்ளத்திலே கொழுத்துவிட்டெறிந்து அவளைச் சுட்டுப் பொசுக்கின. எனவே அவள் ஹெலனை, அவசியப் பட்டால் வாலஸையே ஒழித்துக் கட்டுவதற்கு விரும்பினுள்; அதற்கான புதிய சூழ்ச்சிகளையும் திட்டமிட முனைந்தாள்.

வாலஸைக் குத்தி கொல்ல வந்த அந்தக் கொலைக்காரனின் முகத்தை ஹெலன் பார்க்கவில்லை; எனினும் அந்த நபர் வாலன்ஸ் பிரபுதான் என்று அவள் திடமாக நம்பினுள்; வாலஸ் பிரபுவும் அவ்வாறே கருதினுர். என்றுலும் தக்க சாட்சியம் எதுவும் இல்லாத காரணத்தால், அவர்கள் இருவரும் வாலன்ஸ் பிரபுவின் மீது நேரடியாகக் குற்றம் சாட்ட முடியவில்லை; இறுதியாக, ஒரு நாள் கைதிகளைப் பரிமாற்றிக் கொள்ளும் காரியம் நடந்தது. அதனுல் ஆங்கிலேயக் கைதிகள் ஸ்டெர்லிங் கோட்டையை விட்டு வெளியேறினுர்கள்; அவர்களோடு வாலன்ஸ் பிரபுவும் சென்றுவிட்டார். வாலன்ஸ் பிரபுவிடம் அப்போது வாலஸ் வெறுப்போடுதான் நடந்து கொண்டார். எவ்வாருயினும் தான் வேம்பாய் வெறுத்து வந்த வாலன்ஸ் பிரபு அங்கிருந்து அகன்று கண் மறைந்து சென்ற சம்பவம் ஹெலனுக்குப் பெருத்த நிம்மதியையும் மகிழ்ச்சியையும் அளித்தது.

இப்போது வாலஸ் தமது நாட்டின் சுதந்திரத்தை உறுதிப் படுத்திவிட்டார்; எனவே அவர் சுதந்திரத்துக்காகப் போராடிய காலத்தில், அது வெற்றி பெறுமோ, பெருதோ என்ற சந்தேகத்தில், அதில் பங்கு பெறத் தயங்கி ஒதுங்கி நின்ற பிரபுக்களும், அவருக்கு எதிராக ஆங்கிலேயருக்குத் துதி பாடி நின்ற பிரபுக்களும் இப்போது வாலஸ் பிரபுவை அணுகத் தொடங்கினுர்கள்; அவருக்கு விசுவாசமாக இருப்பதாக உறுதி கூறினுர்கள்; அவரது ஆட்சியில் தமக்குப் பட்டம்

பதவிகளைக் கோரினார்கள். அந்தப் பிரபுக்களில் பெரும்பாலோர் ஜோஹன்னாவின் உறவினர்கள். எனவே அவர்கள் அவனது ஆலோசனையின்படி, நாட்டின் பிரதான வாயில்களாக விளங்கும் பலம் வாய்ந்த கோட்டை கொத்தளங்கள் பலவற்றையும் தமது கண்காணிப்பில் விடுமாறு வேண்டினார்கள்; வெற்றியும் பெற்றார்கள். வாலஸ் பிரபு ஸ்காட்லாந்து நாட்டின் சிம்மாசனத்துக்கே ஆசைப்படுகிறாரென்றும், இறுதியில் சந்தர்ப்பம் வரும்போது, அவரே அந்தச் சிம்மாசனத்தில் மன்னராக ஏறியமர்வாரென்றும் ஜோஹன்னா தனக்குள் கணக்குப் போட்டாள். மேலும் தான் ஒருத்தி மட்டுமே தனது செல்வாக்கினாலும், தனக்குள்ள குடும்ப உறவுகளாலும், அந்தப் பிரபுக்களைச் சிம்மாசனாதிபதிக்கு விசுவாசமாக நடந்துகொள்ளச் செய்ய முடியும் என்றும் அவள் நம்பினாள்; இந்த நம்பிக்கையை வாலஸின் உள்ளத்திலும் பதிய வைக்க அவள் விரும்பினாள்; எனவே இந்த எண்ணத்தோடு அவள் வாலஸ் பிரபுவிடம் நாசூக்காகப் பேசிப் பார்த்தாள்; ஆனால் அவரோ அவளது பேச்சையும் காது கொடுத்துக் கேட்கவில்லை; அவள் எதிர்பார்த்தது போல் பதிலும் அளிக்கவில்லை. ஜோஹன்னா பெருத்த ஏமாற்றம் அடைந்தாள்.



இத்தனை நாட்களாக ஆரவாரம் அடங்கியிருந்த ஸ்காட்லாந்து நாட்டில் திடீரென்று ஒரு புதிய புயல் வீசத் தொடங்கியது.

எட்வர்ட் மன்னர் குயென்னிலிருந்து திரும்பிவிட்டார். திரும்பியதும் அவர் ஒரு பெரிய ராணுவத்தைத் திரட்டிக்கொண்டு, வடதிசையை நோக்கி வெகு வேகமாக முன்னேறினார்; ஸ்காட்லாந்து நாட்டின் பிரதான நுழை வாயில்களான கோட்டைகளைக் காத்து நின்ற பிரபுக்கள் எட்வர்டின் வருகைக்குக் கதவுகளைத் திறந்து விட்டுவிட்டார்கள். ஆத்திரமும், ஆவேசமும் பொங்க, தூதுவர்கள் ஸ்டெர்லிங் கோட்டைக்கு ஓடோடியும் வந்தார்கள். ஆங்கிலேய மன்னரின் தங்கு தடையற்ற முன்னேற்றத்தைக் குறித்தும், தேசத் துரோகிகளான பிரபுக்கள் செய்த வஞ்சனையாலும், துணையாலும் ஆங்கிலேயரின் சேனாபலம் வெள்ளம்போல் அதிகரித்து விட்டதைக் குறித்தும், ஸ்காட்லாந்து அரசியல் பீடத்தைப் பறிக்கும் நோக்கத்தோடு, அந்த ராணுவம் முன்னேறி வருவதைக் குறித்தும் செய்திகளைத் தெரிவித்தார்கள்.

எனினும் வாலஸ் மனம் தளரவில்லை. அவர் தமது படைகளோடு ஆங்கிலேயப் படைகளை எதிர்ச்சென்று தாக்கி அற்புதமாகப் போர் புரிந்தார். என்றாலும், தேசத் துரோகிகளாக மாறிவிட்ட ஸ்காட்லாந்து பிரபுக்களின் சதியால்,

அந்தப் போர் ஸ்காட்லாந்துக்குப் பாதகமாகவே மாறியது. தோல்வியுற்ற நிலையிலும்கூட எப்படியும் மீண்டும் வெற்றி கண்டாக வேண்டும் என்றே வாலஸ் தீர்மானித்தார். எனவே அன்றைய வெற்றியை ஆங்கிலேய ராணுவம் ஆரவாரமாகக் கொண்டாடும் அதே இரவிலேயே, ஆங்கிலேயரின் முகாமைத் திடீரென்று தாக்குவதென அவர் திட்டமிட்டார். இந்தத் திட்டத்தோடு அவர் ஆங்கிலேயரின் காவல் நிலையங்களுக்கருகே வேவு பார்த்துத் திரிந்து வந்த வேளையில், அவர் முன்னல் பேரழகு வாய்ந்த ஒரு வாலிபன் திடீரென்று எதிர்ப்பட்டான். அவன் தங்க வேலைப்பாடுகள் நிறைந்த வெள்ளிக் கவசம் தரித்திருந்தான்; அவனது தலைக் கவசமும்கூட அதே உலோகத்தாலேயே செய்யப்பட்டிருந்தது.

அந்த அழகிய வாலிபன் வாலஸை வரவேற்று வணங்கியலாகவமும், கம்பீரமும் வாலஸின் நெஞ்சைக் கவர்ந்தன; திடீரென்று பிரசன்னமான அந்த இளைஞன் யாராயிருக்கலாம் என்று வியப்போடு பார்த்தார் வாலஸ். பின்னர் அந்த இளைஞன் பின்வருமாறு பேசினன்: "வீரருள் வீரரே! எதிர்பாராத இந்தக் குறுக்கீட்டுக்கு என்னை மன்னியுங்கள். நான் எனது வாழ்வையும் இதயத்தையும் ஸ்காட்லாந்துக்காக அர்ப்பணிக்க வந்திருக்கிறேன். புரூஸ் மன்னரின் பெயருக்கு ஏற்பட்ட களங்கத்தை அவரது எதிரிகளின் ரத்தத்தாலேயே கழுவ வந்திருக்கிறேன்!" அந்த இளைஞன்தான் ராபர்ட் புரூஸ்! அவன்தான் வாலஸ் தொடங்கி வைத்த பணியைப் பிற்காலத்தில் முடித்து வைத்தான்; அவனே பின்னர் ஸ்காட்லாந்தின் மன்னரானுன். எனினும் அந்த இளைஞன் தனது தாய் நாட்டின் விடுதலைப்போரில் நேரடியாகப் பங்கு கொண்டு போராடுவதற்கான பக்குவமான காலம் இன்னும் வரவில்லை. அவனது தந்தையோ இன்னும் உயிரோடிருந்தார்; அவர் ஒரு விதத்தில் கைதியாகவும், மறு விதத்தில் எட்வர்ட் மன்னரின் ஆதரவாளராகவும் இருந்துவந்தார். எனவே தனது தந்தையின் பிரஜைகளுக்கு முன்னல் தன்னை இன்னன் என்று பிரகடனப் படுத்திக் கொள்வதற்கு முன்னர், அந்த இளைஞன் முதலில் வாலஸின் கீழிருந்து பணியாற்றிவர விரும்பினன். எனவே, வாலஸ் ஆங்கிலேயரின் ராணுவ முகாமின்மீது தாக்குதல் நடத்திய பிறகு, இளைஞனை ராபர்ட் புரூஸ் எட்வர்ட் மன்னரின் ஆட்சிக்குட்பட்ட பிரதேசத்துக்குத் திரும்பி, தனது தந்தையிடம் போய்ச் சேர்ந்து கொண்டான்.

வாலஸ் எதிர்த் தாக்குதல் நடத்தியதும், அதனல் ஆங்கிலேயர்கள் கலங்கிப் போனதும் உண்மைதான்; என்ருலும்,

வாலஸின் முன்னைய வெற்றிகளைப்போல், இந்தப் போரில் பெற்ற வெற்றி முடிவான வெற்றியாக இருக்கவில்லை. ஸ்காட்லாந்தை அந்நாட்டின் எதிரிகளிடமிருந்து மீண்டும் மீட்பதற்குள் எத்தனை எத்தனையோ பயங்கரமான போர்களைத் தொடர்ந்து நடத்த வேண்டி இருந்தது. வாலஸ் தமக்கு உற்ற துணைவர்களாகவும், கூட்டாளிகளாகவும் கொண்டிருந்த மார் பிரபுவும், வேறு பல பெரிய வீரர்களும் கொல்லப்பட்டு விட்டார்கள். மேலும், ஸ்காட்லாந்தின் பாராளுமன்றத்திலேயே மாறுபட்ட அபிப்பிராயங்களும், குரோத விரோதங்களும் வெடிக்கத் தொடங்கின. எனவே இத்தகைய சூழ்நிலையில் புரூஸ் மன்னரை நேரில் கொண்டுவந்து அவர்கள் முன்னால் நிறுத்தினாலன்றி, நாட்டை ஒன்றுபடுத்தி ஒருமுகமாகச் செயலாற்றத் தூண்டுவது இயலாத காரியம் என்பதை உணர்ந்தார் ராஜப் பிரதிநிதியான வாலஸ் பிரபு.

மார் பிரபு இறந்துவிட்டதால், ஜோஹன்னாவுக்கு வாலஸைத் தான் அடைய எண்ணியிருந்த திட்டம் மேலும் வலுப்பெற்றது; அவளுக்கு நம்பிக்கை அதிகரித்தது. அவளோ அவரோடு நெருங்கிப் பழகவும், ஸ்காட்லாந்து நாட்டுக்கு ஏற்பட்டுள்ள நெருக்கடியைத் தான் ஒருத்தி மட்டுமே தவிர்க்க முடியும் என்று அவரிடம் சொல்லவும் துணிந்தாள். வாலஸ் பிரபுவோ அவளையோ அவளது பேச்சையோ சட்டை செய்யவில்லை; அவளை அவர் உதறித் தள்ளினார். மேலும் அவர் தமது ராஜப் பிரதிநிதிப் பதவியை ராஜிநாமா செய்துவிட்டு, புரூஸ் மன்னரைத் தேடிக் கண்டுபிடிக்கவும், அவரை எப்படியேனும் கெஞ்சிக் கூத்தாடி நாட்டுக்குத் திரும்பி வரச் செய்யவும், நாட்டின் ஆட்சியை ஏற்று அதனை உறுதிப்படுத்தவும் திட்டமிட்டார். இந்தத் திட்டத்தின்படி, அவர் அங்கிருந்து புறப்பட்டுச் செல்லு முன்னர், ஸ்டெர்லிங் மாளிகையில் கூடி நின்ற சீமாட்டிகளின் மத்தியில் ஹெலனைக் கண்டு பேச நினைத்தார், ஆனால் அந்தக் கூட்டத்தாரிடையே ஹெலனை மட்டும் காணவில்லை. பின்னர் ஜோஹன்னாதான் அவருக்கு நடந்த விஷயத்தைச் சொன்னாள். அதாவது, ஹெலன் இறந்து கொண்டிருந்த தன் தந்தையைக் காண்பதற்காக விரைந்து சென்றபோது வாலன்ஸ் பிரபுவின் தலைமையில் வந்த ஆங்கிலேயக் குதிரை வீரர்கள் சிலர் அவளைக் கைப்பற்றி, இங்கிலாந்துக்குத் தூக்கிச் சென்று விட்டார்கள் என்ற விவரத்தைச் சொன்னாள்.

மார் பிரபு இறந்து பட்ட காலத்தில், அவரது மகளான ஹெலனைத் தான் எப்படியும் காத்து வருவதாக மரணத் தறுவாயில் அவருக்கு வாலஸ் பிரபு

வாக்களித்திருந்தார். எனவே இந்தச் செய்தி அவருக்குக் கவலையை அளித்தது. எனினும் இதனால் இங்கிலாந்துக்குச் செல்லும் அவரது திட்டம் மேலும் வலுப்பெற்றது. இங்கிலாந்தில் புரூஸ் மன்னரும், அவரது மகனை ராபர்ட் புரூசும் அரசாங்கக் கைதிகளாக இருந்தார்கள்; எனவே இங்கிலாந்தின் எட்வர்ட் மன்னரின் அரண்மனைக்குச் செல்லவேண்டியது அவசியமாயிற்று; மேலும், அங்கு சென்றால், ஹெலனின் கதி என்ன வாயிற்று என்பதையும் தெரிந்து கொள்ளலாம் என்று நம்பினார் வாலஸ் பிரபு

அவருக்கு எதிராகக் கலகக் குரல் எழுப்பி, அவரது உயிரையே பருகிவிடத் துடித்த ஸ்காட்லாந்து நாட்டின் குழப்பவாதிகளான பிரபுக்களை நோக்கி, வாலஸ் பிரபு கம்பீரமாகப் பேசினார்; "நான் எனது வாக்கைக் காப்பாற்றிவிட்டேன். சொன்னபடி ஸ்காட்லாந்து நாட்டை விடுவித்து விட்டேன். இப்போதோ நான் எனக்களித்த அதிகாரத்தையும் விட்டுக் கொடுக்கிறேன். நான் எப்படி இந்த நாட்டை நேர்மையோடு ஆண்டு வந்தேனோ, அதேபோல் நீங்களும் ஆண்டு, • பெய்ரைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்!"



இதன் பின்னர் வாலஸ் ஒரு நாடோடிப் பாடகனைப்போல் வேடம் தரித்துக்கொண்டு, டர்ஹாம் கோட்டைக்குப் புறப்பட்டுச் சென்றார்; கோட்டைக்குள் போவதற்கும் அவருக்கு லகுவில் அனுமதி கிடைத்துவிட்டது. அவரது மாறுவேடத்தை யாரும் கண்டு கொள்ளவில்லை. தமக்கு ஏற்பட்டிருந்த காயங்களால் இன்னும் பலவீனமான நிலையிலேயே மன்னர் இருந்தார்; அவர் தமது ஆலோசனை சபையையும் அங்கேயே கூட்டியிருந்தார். வாலஸ் தமது வாத்தியத்தை மீட்டி, மன்னரின் முன்னிலையில் இனிமையாகப் பாடினார். பின்னர் அவர் ராபர்ட் புரூசையும் அங்கு சீக்கிரத்திலேயே கண்டு கொண்டு விட்டார்; அந்த இளைஞனின் தந்தையான ஸ்காட்லாந்து மன்னர் சில நாட்களுக்கு முன்னர் இறந்து போய்விட்டார்; எனவே ஸ்காட்லாந்தின் அரச பீடத்துக்குரிய ஒரே வாரிசாக ராபர்ட் புரூஸ் மட்டுமே மிஞ்சி நிற்பதையும் வாலஸ் கண்டறிந்தார். மேலும் ஹெலனைத் தூக்கிவந்த வாலன்ஸ் பிரபு அவளைக் குயென்னிக்குக் கொண்டு சென்று, எப்படியேனும் அவளைத் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்ற விருப்பத்தால், அவளோடு பிரான்சுக்குப் புறப்பட்டுப் போய்விட்ட செய்தியையும் வாலஸ் அறியவந்தார். வாலன்ஸ் பிரபு ஹெலனை ஒரு கைதியைப் போலவே நடத்தி வந்த போதிலும், அவர் அவளை வேறு எந்த விதமான அவமானத்துக்கோ,

பலாத்காரத்துக்கோ ஆளாக்கி விடவில்லை. சொல்லப்போனால் மார்பிரபுவின் குடும்பத்தோடு சட்டபூர்வமான திருமண உறவு கொள்வதே அவரது நோக்கமாக இருந்தது, ஏனெனில், எட்வர்ட் மன்னர் மீண்டும் ஸ்காட்லாந்து நாட்டை வெற்றி கொள்ளும் காலத்தில், அந்த நாட்டின் ராஜப் பிரதிநிதியாகத் தாம் வர முடியும் என்ற நம்பிக்கையே இந்த நோக்கத்துக்குக் காரணம்.

நாடோடிப் பாடகன் போல் வேடமிட்டு வந்திருந்த வாலஸின் நடமாட்டங்களும் நடவடிக்கைகளும் சீக்கிரத்திலேயே எட்வர்ட் மன்னரின் அரசவை ஊழியர்களின் சந்தேகக் கண்ணுக்கு ஆளாயின. எனவே அவர்கள் அந்தப் பாடகனை ரகசியமாகக் கண்காணித்து வந்தார்கள். இதன் விளைவாக, வாலஸ் ராபர்ட் புரூசுடன் ஆலோசனைகள் நடத்தும் விஷயம் அவர்களுக்குத் தெரிந்து விட்டது; இந்த ரகசியம் வெளிப்பட்டதும், எட்வர்ட் மன்னர் வாலஸை உடனே கைது செய்யுமாறு உத்தரவிட்டார். கைதான பின்னர் வாலஸ் பிரபுவுக்கு மரண தண்டனையே கிடைத்திருக்கும். ஆனால் தக்க உதவியால் வாலஸ் தப்பிப் பிழைத்தார். அதாவது, எட்வர்ட் மன்னரின் மருமகனை கிளௌசெஸ்டர் பிரபுவின் உயிரை வாலஸ் ஒருமுறை காப்பாற்றியிருந்தார்; பெர்விக் கோட்டையைக் கைப்பற்றிய காலத்தில் பிடிபட்ட அந்தப் பிரபுவை வாலஸ் பெருந் தன்மையோடு உயிர் தப்பிப் போக விடுத்தார். அந்த நன்றிக்குக் கைம்மாறாக, கிளௌசெஸ்டர் பிரபு வாலஸின் உயிரைக் காப்பாற்ற முன் வந்தார். அவர் வாலஸைச் சிறையிலிருந்து ஓர் ரகசியப் பாதை வழியாகக் கூட்டிச் சென்று, கோட்டைக்கு வெளியே கொண்டுவந்து விட்டு விட்டார்.

வாலஸ் விடை பெற்றுக் கொண்டு செல்லும் சமயத்தில் ராபர்ட் புரூஸிடம் பின்வருமாறு சொன்னார்: "நான் பிரான்சுக்குச் செல்கிறேன். நீ இங்கிருந்து தப்பித்து வெளியேறிய பின்னால், என்னை ரோவனில் வந்து சந்திக்க வேண்டும்."

ஸ்காட்லாந்து நாட்டின் தலைவிதியையே நிர்ணயிக்கும் பொறுப்பையும், கடமையையும் மேற்கொண்டிருந்த இந்த இரண்டு பேரும் இறுதியில் புராதனமான நார்மன் தலைநகரமான ரோவனில் சந்தித்தார்கள்; பின்னர் அவர்கள் பாரீஸ் நகரத்துக்குச் சென்று, தமது நாட்டின் விடுதலைக்காகப் பிரஞ்சு மன்னரின் உதவியைப் பெறுவது எனத் தீர்மானித்தார்கள். இந்தத் தீர்மானத்துடன் செல்லும் வழியில் அவர்கள் இருவரும் ஒரு கோட்டையில் தங்கினார்கள். அந்தக் கோட்டையில் அரச பதவியை இழந்துவிட்ட பாலியோல் மன்னர் வசித்து வந்தார்; அவர் அப்

போது பிரஞ்சு மன்னரின் புண்ணியத்தால் உபகாரச் சம்பளம் பெற்று வந்தார். அவர்கள் அங்கு சென்றபோது, அதே கோட்டைக்கு அதற்கு முந்திய நாளில்தான் ஓர் ஆங்கிலேயப் பிரபு வந்ததாகவும், அவர் தமது பரிவாரங்களோடு அங்கு தங்கியிருப்பதாகவும், அந்தப் பிரபு ஒரு பெண்ணையும் ரகசியமான பாதுகாப்பில் கைதிபோல வைத்திருப்பதாகவும் அவர்களுக்குத் தெரிய வந்தது. அந்தப் பிரபு வாலன்ஸ்தான்; அந்தப் பெண் ஹெலன்தான். இதனைத் தெரிய வந்ததும் வாலஸ், புரூசு ஆகிய இருவரும் அன்றிரவே ஹெலனை அவர்களது காவலிலிருந்து காப்பாற்றி வெளிக் கொணர்ந்து, அவளை ஒரு சேவகன் மாதிரி உடை மாற்றச் செய்து, அவளோடு உடனேயே பாரிஸ் நகரத்தை நோக்கிப் புறப்பட்டு விட்டார்கள். பாரிசுக்குச் சென்றதும், அவர்கள் திட்டமிட்டதைப் போலவே, பிரஞ்சு மன்னரிடமிருந்து தமக்கு வேண்டிய உதவியையும் ஒத்துழைப்பையும் பெற்றார்கள்; இந்த உதவியும் தக்க தருணத்தில் அவர்களுக்குக் கிட்டியது. ஏனெனில் எட்வர்ட் மன்னர் விரைவிலேயே மீண்டும் ஸ்காட்லாந்தின் மீது படையெடுக்க முனைந்து விட்டார்.

வாலஸ் பிரபு, புரூஸ், ஹெலன் ஆகிய மூவரும் மீண்டும் சீக்கிரத்திலேயே தமது தாயகம் திரும்பினார்கள். மீண்டும் வாலஸ் தமது சுதந்திரப் பதாகையை உயர்த்தினர்; உடனே மீண்டும் ஸ்காட்லாந்துக்காரர்கள் அந்தப் பதாகையின் கீழ் அணி திரண்டார்கள். அவரது பெயரே ஸ்காட்லாந்து மக்களின் உத்வேகத்தையும் உணர்ச்சியையும் தூண்டிவிடப் போதுமானதாயிருந்தது; அதேபோல் அவரது பெயரைக் கேட்டதுமே ஆங்கிலேயப் போர் வீரர்கள் தைரியம் இழந்து பின் வாங்கினார்கள்.

ஸ்காட்லாந்தின் பூரண விடுதலையையும் வெற்றியையும் காணும் வரையிலும் ராபர்ட் புரூஸ் அந் நாட்டின் மணி மகுடத்தையும் சிம்மாசனத்தையும் ஏற்கத் தயாராக இல்லை. எனவே அவன் தன்னை இன்னாரென்று புலப்படுத்திக்கொள்ளாமல், வாலஸ் பிரபுவின் கீழ் லாங்வில்லி பிரபு என்ற பெயரோடு பணியாற்றி வந்தான். மேலும், வாலஸின் போர்த் தளபதிகளின் மத்தியில் வலியவந்து பணியாற்றிய ஒரு பிரபுவும் இருந்தார்; லாகவம் மிகுந்த வடிவமும், அதே சமயம் போர் புரிவதில் துணிச்சலும் மிகுந்து விளங்கிய அந்தப் பிரபு அவர்கள் மத்தியில் பச்சைநிறப் பிரபு என்ற பெயரால் அழைக்கப்பட்டார். அவர் அணிந்திருந்த கவசம் பச்சை நிறமாக இருந்தது; மேலும், அவர் அணிந்திருந்த தலைக் கவசத்தின் உச்சியிலும் ஒரு பச்சை இறகு அசைந்தாடியது. எனவேதான் அவருக்கு

இந்தப் பெயர் உண்டாயிற்று. அவர் தமது முகத்தை வெளிக் காட்டாமல், எப்போதும் அதனைக் கவசத்தால் மூடியே இருந்தார். தாம் இன்னர் என்பதை இப்போது இனம் காட்ட முடியாதென்றும், ஆங்கிலேயப் படைகளை ஸ்காட்லாந்து நாட்டின் எல்லைக் கப்பால் விரட்டியடித்த பின்னுல், தாமே தம்மை இன்னுரென்று வெளிப்படுத்துவதாகவும், அதுவும் வாலஸ் பிரபுவுக்கு மட்டும்தான் தம் பெயரை வெளிப்படுத்த முடியுமென்றும் அவர் தெரிவித்திருந்தார். அவ்வாறே இறுதியில் ஆங்கிலேயப் படைகளும் விரட்டியடிக்கப் பட்டன. மூன்ரும் முறையாக வாலஸ் தமது தாய்நாட்டை அன்னியப் படையெடுப்பிலிருந்து காப்பாற்றினுர். என்ருலும் தாம் அடைந்த இந்த இறுதி வெற்றியைத் தம்மோடு சேர்ந்து கண்டுகளிக்க, பங்கு பெற, புரூஸ் தம்முடன் இல்லையே என்ற வருத்தமும் அவரது இதயத்தில் இருக்கத்தான் செய்தது. இளவரசனுன புரூஸ் ஒரு போராட்டத்தில் மிகவும் மோசமாகக் காயப்பட்டு விட்டான்; எனவே அவன் அப்போது மிகவும் மோசமான நிலையில் ஹண்டிங்-டவர் என்ற கோட்டையில் படுத்துக் கிடந்தான்.

ஆங்கிலேயப் படைகள் அனைத்தையும் எல்லைக்கப்பால் விரட்டியடித்து முடித்த அன்று மாலையில் வாலஸ் பிரபு தமது கூடாரத்தில் அமர்ந்திருந்தார்; அப்போது அங்கே அந்தப் பச்சை நிறப் பிரபு வந்தார். அவர் வாலஸை நோக்கிப் பின்வருவாறு பேசினுர்: ''வாலஸ் பிரபு! நான் உங்களோடு சேர்ந்து போராடினேன். போர்க்களத்தில் உங்கள் உயிரைக் காப்பாற்ற நேர்ந்திருந்தால், என் உயிரையும் கொடுத்து உங்களை மகிழ்ச்சியோடு காத்திருப்பேன். ஏனெனில் எனது வாழ்க்கையே, எனது வாழ்வும் தாழ்வும் உங்கள் கையில்தான் இருக்கிறது. என்னை ஏறெடுத்துப் பாருங்கள். நான் இருப்பதா, இறப்பதா என்பதை இப்போதே சொல்லுங்கள். ஏனென்ருல், உங்களுடைய அன்பும் ஆதரவுமில்லாமல், என்னுல் வாழவே முடியாது!'' இவ்வாறு கூறியவாறு, அந்தப் பிரபு தமது கவசத்தின் முகமூடியை உயர்த்தினுர். அந்தப் பிரபு யார் தெரியுமா? சாக்ஷாத் ஜோகன்னுதான்!

இதன் பின் அவள் வாலஸ் பிரபுவை நோக்கிப் பின்வருமாறு அழுது புலம்பினுள்; ''வாலஸ் பிரபு! என்னை மணந்து கொள்ளுங்கள்; உங்கள் மனைவியாக்கிக் கொள்ளுங்கள். உங்களது ஆசை, எனது காதல் ஆகியவற்றின் சந்நிதியில் எல்லா உரிமைகளும் அழிந்து போகட்டும். இதோ இந்த ஜோஹன்னுவை முதன் முதலாக நீங்கள் பார்த்த அந்தப் புண்ணியத்தை, இதோ எனது கரங்களின் அரவணைப்

புக்குள்ளாகி நிறைவு பெறச் செய்யுங்கள்!"

அவளது இத்தகைய பேச்சைக் கேட்டதும், வாலஸ் பிரபு "துர்ப்பாக்கியசாலியே! பேச்சை நிறுத்து போதும். என்றென்றைக்கும் இன்பத்தை இழந்து போன எனது இதயத்தின் முடிவு என்ன என்பதை நீயே அறிவாய்!" என்றார்.

ஜோஹன்னா அவரையே சிறிது நேரம் வெறித்து நோக்கினாள். பின்னர், "அப்படியானால், இதோ எனது இறுதியான முடிவையும் ஏற்றுக்கொள்ளுங்கள்!" என்று கத்தியால் திடீரென்று அவர் மார்பில் ஓங்கிக் குத்தினாள். அவரது மார்பிலிருந்து ரத்தம் பொங்கி வழியத்தான் செய்தது! அவளோ இதனைக் கண்டதும். "அகம்பாவம் பிடித்த மனிதரே! உம்மை நான் கொன்றுவிட்டேன்!" என்று கூறியவாறே, திரும்பிச் செல்ல முனைந்தாள். ஆனால் அவள் எதிர்பார்த்தபடி வாலஸ் ஒன்றும் படுகாயம் அடைந்துவிடவில்லை. அவர் தமது கைக்குட்டையினால் காயத்தை மூடி, ரத்தத்தைத் தடுத்து நிறுத்தியவாறே பின்வருமாறு கூறினார்:

"மார் சிமாட்டியே! போ, இந்த முகாமை விட்டு உடனே போய்விடு. போய் உனக்குரிய பெண்ணுடையைத் தரித்துக் கொள். இங்கு நமக்குள் என்ன நடந்தது என்பதை நான் எவருக்கும் சொல்லமாட்டேன். அந்த உறுதியோடு நீ போகலாம்!"

அவளோ அப்போதும் பணியவில்லை. "கர்வம் பிடித்தவரே! உமது தலை கொலைக்களத்தில் வெட்டுண்டு கிடப்பதை நான் காண்பேன். கொலைக்களத்துக்குப் படியேறிச் செல்லும் வேளையிலேனும் இந்த ஜோஹன்னாவை நினைத்துப் பாரும்!" என்று அகந்தையுடன் சொன்னாள்.

இதன் பின்னர் அந்தப் பச்சை நிறப் பிரபு ஸ்காட்லாந்துப் போர் வீரர்களின் பாசறையில் என்றுமே காணப்படவில்லை.



ஸ்காட்லாந்து விடுதலை பெற்றது. பெரும்பாலோர் வாலஸ் பிரபுவையே ஆங்கிலேயர்களிடம் கைதியாக்கிப் பிடித்துக் கொடுத்துவிட திட்டமிட்டனர். ஜான் மாண்டீத்பிரபுவே ஆங்கிலேயர்கள் தமக்களித்த பொன்னுக்கு ஆசைப்பட்டு, வாலஸை அவரது எதிரிகளிடம் காட்டிக் கொடுத்துவிட்டார். லண்டன் கோபுரத்தில் அவர் கைதியாக அடைபட்டுக் கிடந்தார்.

வாலஸ் பிரபு ஆங்கிலேயரின் கையில் அகப்பட்டுக் கொண்ட செய்தி ஹண்டிங்-டவரிலுள்ள ஹெலனுக்கு எட்டியது; செய்தியைக் கேட்டதும் அவள் துடியாய்த் துடித்தாள். பின்னர் வாலஸ் பிரபுவின் காவலிலிருந்து தான் தப்பியோடி வந்த காலத்தில், தான் அணிந்து

கொண்ட அதே சேவகன் உடையைத் தரித்துக்கொண்டு, அவள் ஒரு துறைமுகத்தை நோக்கிச் சென்றாள்; அங்கு நின்ற சிறு கப்பலின் தளபதிக்கு லஞ்சம் கொடுத்துத் தன்னை லண்டன்மாநகருக்குக் கொண்டு செல்லுமாறு செய்தாள். லண்டனுக்குச் சென்று லண்டன் கோபுரத்தில் சிறைப்பட்டிருந்த வாலஸ் பிரபுவிடம் சாமர்த்தியமாகப் போய்ச் சேர்ந்தாள்; அவரைக் கண்டதும் அவரது காலடியில் போய்த் தொப்பென்று விழுந்தாள். அதனைக் கண்டு வாலஸ் பிரபு பெரும் வியப்படைந்தார். அவருக்கோ மரண தண்டனை விதித்தாகிவிட்டது. மறுநாட் காலையில் அந்தத் தண்டனை நிறைவேற்றப்பட விருந்தது. இத்தகைய சூழ்நிலையில் அன்பினால் கட்டுண்ட அந்த இரு உள்ளங்களும் ஒன்றுக்கொன்று பாசமும் பரிவும் கலந்த வார்த்தைகளைப் பரிமாறிக்கொண்டன. காலஞ்சென்ற தமது அருமை மனைவி மரியோனின் அருகில் தாமிருந்த காலத்தில் தமது இதயத்தில் எத்தகைய ஆனந்தமும் அமைதியும் பொங்கியதோ, அதே ஆனந்தமும் அமைதியும் ஹெலனின் அருகில் இருக்கும்போதும் தம்முள் பொங்குவதாக அவர் குறிப்பிட்டார். அது மட்டுமல்ல. அந்தச் சந்திப்புக்குப் பின்னர் தாம் தமது மரண தண்டனையைச் சிரித்த முகத்தோடும் மன அமைதியோடும் வரவேற்க முடியும் என்றும் கூறினார்.

இந்தச் சந்திப்புக்குப் பின்னர் வாலஸின்பால் நீங்காத நட்புரிமையும் நல்லெண்ணமும் கொண்ட, மன்னரின் மருமகனை கிளௌ செஸ்டர் பிரபுவின் முயற்சியால் அன்றே அங்கு ஒரு பாதிரியார் வந்து சேர்ந்தார். வாலஸின் மரண தண்டனை நிறைவேற்றப்படுவதற்கு முன்னால், அவர் வாலஸ் பிரபுவையும் ஹெலனையும் சட்டபூர்வமான தம்பதிகளாக மணம் முடித்து வைத்தார். இவ்வாறு அந்தக் காதலர்கள் மரணத்தின் வாயிலில் மணமக்களானார்கள்.



வாலஸ் பிரபுவின் மரணத்துக்குப் பின்னர் ராபர்ட் புரூஸ் ஸ்காட்லாந்து மக்களைக் கிளர்ந்தெழச் செய்து, மீண்டும் எட்வர்ட் மன்னரின் மீது போர் தொடுத்ததும், பான்னேக்பர்ன் என்ற இடத்தில் நடந்த போரில் ஆங்கிலேயர்களை இறுதியாகவும் உறுதியாகவும் முறியடித்து வெற்றி கண்டதும் சரித்திரப் பிரசித்தமான சம்பவங்கள். இதேபோல் ஆங்கிலேயர்கள் வாலஸைத் தூக்கிலிட்டுக் கொல்லுமாறும், அவ்வாறே கொன்ற பின்பு அவரது சடலத்தைச் சின்னா பின்னமாக்கி வெட்டி யெறியுமாறும் உத்தரவிட்டதும் நாடறிந்த செய்திதான். எனினும் ஸ்காட்லாந்து மக்கள் இந்த நிகழ்ச்சியைப் பற்றி வேறு விதமாகக் கூறுகிறார்கள். அதாவது வாலஸ்

தூக்கிலிடப்பெற்றது உண்மை தான் என்றாலும், அதன்பின் அவரது சடலத்துக்கு நேர்ந்த தாகச் சொல்லப்படும் அவமானங்கள் உண்மையல்ல என்றும், அத்தகைய அவமானங்களுக்கு உள்ளாக்கப்பட்டது சாதாரணக் குற்றவாளி ஒருவனின் சடலம் தான் என்றும், வாலஸின் சடலமோ தூக்கிலிடப்பெற்ற பின்னர் ரகசியமாக ஸ்காட்லாந்து நாட்டுக்குக் கொண்டுவரப்பட்டு, காம்பஸ்—கென்னத் என்ற இடத்தில் அடக்கம் செய்யப்பட்டது என்றும் கூறுகிறார்கள்.

அந்தச் சவ அடக்க வைபவத்தின்போது, புனிதர் ஃபில்லியன் சாமியார் மடத்தில் ஒப்படைத்திருந்த அந்த ரகசியமான பேழையை, மடத்துத் தலைவர் கையோடு கொண்டு வந்து, அதனை வாலஸ் பிரபுவின் சவப்பெட்டி மீது வைத்தார்; அந்தப் பேழை அங்கு எல்லோரது முன்னிலையிலும் திறக்கப்பட்டது.

அதனுள்ளே ஸ்காட்லாந்து நாட்டின் ராஜமகுடம் ஜகஜ்ஜோதியாய்ப் பளிச்சிட்டுக் கொண்டிருந்தது!

"வாலஸ் பிரபு இந்த மணிமகுடத்தை உங்களுக்கு வழங்குகிறார்!" என்று கூறியவாறே, அந்தத் தலைவர் மகுடத்தை எடுத்து, ராபர்ட் புரூஸின் தலையில் சூட்டினார். உடனே எல்லோரும் ஆரவாரம் செய்தார்கள்; வாழ்த்தொலி எழுப்பினார்கள். இந்த வாழ்த்தொலிகளெல்லாம் அடங்கிய பின்னர், வாலஸ் பிரபுவின் சவப்பெட்டியின் அருகில் முழங்காலிட்டுப் பிரார்த்தித்துக் கொண்டிருந்த ஹெலனை ஸ்காட்லாந்தின் மன்னரான ராபர்ட் புரூஸ் தொட்டுத் தூக்கித் தேற்றுவதற்கு முனைந்தார். அவர் அவளிடம் மெல்லக் குனிந்து ஏதோ பேசினார்; ஆனால் அவள் எவ்விதப் பதிலும் சொல்லவில்லை. பின்னர் அவர் அவளை மெல்லத் தொட்டார்; ஆனால் அவளது உடம்பில் அசைவே இல்லை, ஆம். அவளது ஆத்மா வாலஸின் ஆத்மாவைக் கூடிக் கலப்பதற்காகப் பறந்தோடிப் போய்விட்டது! அந்தக் காதலர்களின் தியாக வரலாறு இவ்வாறு முடிவு கண்டுவிட்டது.

வாலஸின்மீது மூர்க்காவேசத்தோடு காதல் கொண்டிருந்த ஜோஹன்னா வாலஸின் மரணத்தைக் கண்டு புலம்பினாள்; அவரது மரணத்துக்குத் தானே காரணம் என்றுணர்ந்து தன்னைத்தானே நொந்து சலித்துக் கொண்டாள்; இவ்வாறு தான் செய்த தீவினையின் பயனைத் தானே அனுபவித்துப் புலம்பிப் புலம்பி அவளுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது. பைத்தியம் பிடித்து அலைந்த ஜோஹன்னாவும் சின்னாட்களில் பரிதாபகரமாக அகால மரணம் அடைந்துவிட்டாள்!

---

ஆசிரியரும், வெளியிடுபவரும்: கண. இராமநாதன்,
66, பெரியதெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5. தொலைபேசி 84989.
அச்சிட்டோர்: ஐடியல் பிரிண்டர்ஸ், 97, பிராட்வே, சென்னை-1.

## ரகுநாதன்

எழுதிய

# இறவாத இலக்கியங்கள்

"இலக்கியம் என்பது விஞ்சிய மீனல் கோடும் அல்ல; மனுநீதி சாஸ்திரமும் அல்ல. அது வம்புகளைக் கடந்து நின்று **இதய நீதி** கூறுவது. ஒப்புக்கொள்ளப்பட்ட, விரும்பப்பட்ட அபிப்ராயம் என்பதையும் கடந்து நின்று புதுப் புது விஷயங்களை புரட்சிகரமான கருத்துக்களைப் படைக்கக் கூடியது. ஆகவே, நிரூபணம் செய்யப்பட்ட விஷயங்களுக்கு அப்பாற்பட்ட விஷயங்களை லகுவில் ஒதுக்கிவிட முடியாது. அந்த விஷயத்தின் தன்மையை, பாரபட்சமற்று உணர்ந்து அதற்குரிய மதிப்பைச் செலுத்தியே ஆகவேண்டும்."

இவ்வுண்மையை நினைவில் வைத்துக்கொண்டு திரு. **ரகுநாதன்** அவர்களின் புத்தகங்களைப் படிக்கத் தொடங்கினால் இலக்கியத்தில் ரகுநாதனுக்கு உள்ள தனித் தன்மையைத் தெளிவாக உணர முடியும்.

| | | | |
|---|---|---|---|
| இலக்கிய விமர்சனம் | ... | 2 | 50 |
| ரகுநாதன் கவிதைகள் | ... | 3 | 00 |
| கன்னிகா | ... | 2 | 00 |
| சிலை பேசிற்று | ... | 3 | 00 |
| புயல் | ... | 1 | 50 |
| நான் இருவர் (மொழிபெயர்ப்பு) | ... | 1 | 50 |
| பஞ்சும் பசியும் | ... | 4 | 50 |
| சேற்றில் மலர்ந்த செந்தாமரை | ... | 2 | 00 |
| புதுமைப்பித்தன் வரலாறு | ... | 3 | 00 |
| மருது பாண்டியன் | ... | 2 | 00 |



த. பெ. எண். 423 போன்: 84989

ஸ்டார் பிரசுரம்

66, பெரிய தெரு,

திருவல்லிக்கேணி :: சென்னை-5.

# தலைசிறந்த நாவல்கள்

| | | |
|---|---|---|
| இதய நாதம் | ந. சிதம்பர சுப்ரமண்யன் | 3-00 |
| நாகமணி | | 2-50 |
| கன்னிகா | ரகுநாதன் | 2-00 |
| புயல் | ,, | 1-50 |
| பஞ்சும் பசியும் | ,, | 4-50 |
| ஜெய சோமநாத் | முன்ஷி | 7-00 |
| வீர சுதந்திரம் | தர்ஷக் | 5-00 |
| ராஜ நர்த்தகி | இராமச்சந்திர தாகூர் | 5-50 |
| மாலதி | சரத்சந்திரர் | 3-50 |
| நாடகக்காரி | துறைவன் | 3-00 |
| தந்தையும் மகளும் | சாவி | 1-50 |
| இதயத்தில் ஓர் இடம் | ஏடி. ரங்கமணி | 1-50 |
| சிற்றன்னை | புதுமைப்பித்தன் | 1-25 |
| நாரத ராமாயணம் | ,, | 1-00 |
| பிரேத மனிதன் | ,, | 1-00 |
| காதல் உள்ளம் | ஜே. எஸ். ரவீந்திரா | 3-50 |
| ஒப்பிலாள் | மணிவண்ணன் | 2-00 |
| இசையரசி சொர்ணவல்லி | ,, | 2-00 |




த பெ. எண். 423 போன்: 84989

ஸ்டார் பிரசுரம்

66, பெரிய தெரு,

திருவல்லிக்கேணி : : சென்னை-5.



டிசம்பர், 1964 : : மலர் 3 – இதழ் 9

# அயராத உழைப்பாளி

'நம்ப முடியாத செய்தி,' என்று பலர் கூறினர். 'தாங்கமுடியாத நஷ்டம்,' என்று பலர் கூறினர். தமிழ்நாட்டின் தவப்புதல்வர்களுள் ஒருவராகத் திகழ்ந்த திரு ராஜகோபாலன் அவர்களின் மறைவு குறித்துத்தான் பலரும் பலவிதமாகக் கூறினார்கள். எல்லோருடைய குரலிலும் பிரிவுக்குரிய பரிவையே கேட்க முடிந்தது. அதுதான் பெரிய மனிதனின் பிரிவினால் ஏற்படும் விளைவு ஆகும்.

பிரதம மந்திரி லால்பகதூர் சாஸ்திரி சொன்னார்.

"திரு ராஜகோபாலனின் அகால மரணத்தைப் பற்றிய செய்தி கேட்டு மிகவும் அதிர்ச்சி உற்றேன். காங்கிரஸ் மீது அவர் மிகவும் பற்றுதல் கொண்ட ஊழியர். அவரின் பிரிவு எனக்குச் சொந்தத்தில் ஏற்ற பெரு நஷ்டமாகும். காங்கிரஸ் ஸ்தாபனத்தில் மிகவும் ஈடுபாடு கண்ட ஓர் ஊழியர் ஸ்தாபனத்துக்கு தம்மை மிகவும் இன்றியமை யாதவராக ஆக்கிக் கொண்டவர். அவரின் சாவை என்னால் நம்ப முடியவில்லை. நம்பியபின் வேதனையைத் தாங்க முடியவில்லை."

முதல் மந்திரி பக்தவத்சலம் கூறினார்.

"ராஜகோபாலனின் மறைவுச் செய்தி ஒரு மிகப்பெரிய அதிர்ச்சி. அவர் மாணவராக இருந்தபோதே 1942 ல் வெள்ளையனே வெளியேறு இயக்கத்தில் சேர்ந்தார். அதிலிருந்து காங்கிரஸில் தீவிரமான அங்கத்தினராகவே இருந்துவந்தார். தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி யுடன் நெருங்கிய தொடர்புகொண்டிருந்தார் ஸ்தாபனம், பார்லி மென்டரி வேலை என்ற இரண்டிலும் இந்தியாவின் எல்லா ராஜ்யங் களுடனும் நல்ல தொடர்பு கொண்டிருந்தார். அவர் பார்லிமென்ட் உறுப்பினரில் சரளமாகப் பழகும் சுபாவம் வாய்ந்தவர். இளம் வயதி

லேயே வருங்காலத்தைப் பற்றி இனியகனவுகளைக் காண்பதற்கான விஷயத்தில் சுமுகமாகப் பழகிய அவரது திடீர் மரணத்தினால் ஏற்பட்டுள்ள ஆழ்ந்த துயரத்தை நாம் அனைவரும் பகிர்ந்துகொள் வோமாக. காங்கிரஸ் தலைவர் காமராஜர் வேதனையை வெளியே சொல்லத் தனக்கு வார்த்தைகள் தெரியாது என்பது போல கடுந் துயர்கொண்டார்.

காங்கிரஸ் தொண்டர்களாலும் தலைவர்களாலும் 'ராஜு' என்று அழைக்கப்பட்டு, இன்று அவர்களைத் துக்கக் கடலில் ஆழ்த்திவிட்டு மறைந்த திரு ஜி. ராஜகோபாலன் 1921 செப்டம்பர் 21உ பிறந்தார். தகப்பனார் பெயர் திரு சீனுவாசாச்சாரி. திரு ராஜகோபாலனுக்கு வயது 43. மனைவியும் மூன்று பெண்குழந்தைகளும், தாயாரும் இரண்டு சகோதரர்களும் இருக்கிறார்கள்.

திருவல்லிக்கேணி ஹிந்துஹைஸ்கூலில் படித்து பிரசிடென்சி கல்லூரியில் பி. ஏ. பட்டம் பெற்ற திரு. ராஜகோபாலன் சட்டக் கல்லூரியிலும் படித்தார்.

1939-லிருந்து அவர் காங்கிரஸ் ஸ்தாபனத்தில் சேர்ந்து அல்லும் பகலும் தேசப் பணியாற்றிவந்தார். 1942-ல் ''வெள்ளையனே வெளியேறு'' இயக்கத்தில் கலந்துகொண்டு சத்தியாக்கிரகம் செய்து நான்குமாதச் சிறைத் தண்டனை அடைந்தார்.

1945-ம் ஆண்டில் அவர் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக் காரியாலயக் காரியதரிசியானார். 1948-ல் ஊர்காவல் படைக்கு ஆள் திரட்டும் கமிட்டி மெம்பரானார். சினிமாப்பட தணிக்கை போர்டு மெம்பராகவும், மதுவிலக்கு பிரசாரகர்கள் தேர்வுக்கமிட்டி மெம்பராகவும் தென் இந்திய பத்திரிகையாளர் பெடரேஷன் மெம்பராகவும் அவர் பணியாற்றினார்.

1952-ல் ராஜ்யசபை மெம்பராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, தகவல்-ஒலிபரப்பு இலாகா மந்திரியின் பாராளுமன்றக் காரியதரிசியாகப் பணியாற்றினார். 1953 டிசம்பரிலிருந்து 1960 ஜனவரி வரை இப் பொறுப்பில் இருந்தார். 1958-ல் மறுமுறை ராஜ்யசபைக்குத் தேர்ந் தெடுக்கப்பட்டார்.

1960 ல் அகிலஇந்திய காங்கிரஸ் கமிட்டி காரியதரிசியாகி, சில ஆண்டுகள் பணியாற்றினார். தலைவர் திரு காமராஜ் அகில இந்திய காங்கிரஸ் தலைவர் ஆனதும் திரு ராஜகோபாலன் அகில இந்திய காங்கிரஸ் பொதுக்காரியதரிசியானார்.

# சிங்கள இலக்கியங்களில் தமிழ் உறவு

சிங்களக் கவிஞர் "நெணருவன்" டி. எஸ். எல்.

**யான்** பிறப்பிலே சிங்களவராக இருந்தாலும், எனக்குத் தமிழ் மொழியின்பால் ஒரு தனிப் பற்று என்றுமே உண்டு.

தமிழரும், சிங்களவரும், அதிகமாக ஒற்றுமையுடனே ஒன்று பட்டு வாழ்ந்திருக்கின்றனர் என்பது இலங்கை இதிகாசங்களான "மகாவம்சம்" முதலியவற்றில் காணப்படுகின்றது. பல பழைய சிங்கள இலக்கியங்களை நான் ஆராய்ந்தபோது, பல உண்மை நிலைகள் காணப்பட்டன. அவற்றையெல்லாம் ஒரு சீராகத் தொகுத்து, கீழே எழுதியிருக்கிறேன், இலங்கை அக்காலத்தில் மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவை மாயா ரட்டை, மலய ரட்டை, ருகுனு ரட்டை என்பவைகள். மாயா ரட்டை பகுதியில் உள்ள, வன்னிய என்ற ஊரில் விஜயமல்ல என்பவர் வசித்துவந்தார். அவருடைய மகன்தான் விஜயபாகு என்பவன். இவன் நல்ல பலசாலி, இவன் முகத்தில் ராஜகளை வடிந்தது. விஜயபாகு தனது ஊரிலுள்ள பெரிய அதிகாரிகளை, அந்தஸ்தில் உயர்ந்தவர்களை, தனது பேச்சின் மூலமும், அவர்கள் இட்ட வேலைகளை நொடிப் பொழுதில் செய்து முடிக்கும் மூலமும் கவனத்தைக் கவர்ந்தான். பிறகு மெல்ல மெல்ல, தன் பக்கம் இழுத்து தனது உடல் வலிமையால், அவர்களை அடிபணியச் செய்தான். அவர்களும் தங்களுக்கு இப்படிப்பட்ட ஒரு தைரியசாலி தேவைதான் என்று அக்கால சூழ்நிலைகளின்படி ஏற்றுக் கொண்டனர். நாளாக ஆக, விஜயபாகு, தான் அவர்களுக்கெல்லாம் பெரிய தலைவனாக விளங்கினான். அதன்பின் அரசனாக தம்பதெனி புரய என்ற இடத்தில் தன் அரசை அமைத்துக்கொண்டு மாயாரட்டை முழுவதும் அரசாண்டான். இது நடந்தது கி. மு. 1220 வருடங்களுக்குமுன் என ஆராய்ச்சியாளர்கள் கணக்கெடுத்திருக்கின்றனர். தம்பதெனி புரய, மாயா ரட்டைக்கு தலைநகராக விளங்கியது. இங்கிருந்துதான் "தம்பதெனி புரய" ஊரின் அரசாட்சி துவங்குகிறது. இப்படியாக இது நடக்கும்பொழுது இடையே "வன்னிய" என்ற ஊரின் மக்கள் விஜயபாகு தங்களுக்கு அரசனாவதை எதிர்த்தனர். தான் பிறந்த ஊரே தனக்கு எதிராக வரும் என்று விஜயபாகு கனவிலும் கருதவில்லை. ஆனால் விஜயபாகுவின் அதிர்ஷ்டந்தான், தம்பதெனிபுரய அருகிலுள்ள வாகிரிகல என்ற ஊரின் மக்கள் விஜயபாகு மாயாரட்டை முழுவதும் அரசனாவதை மனப்பூர்வமாய் ஒருமுகத்துடன் வரவேற்றனர். அரசனாகாமல் எதிர்த்த வன்னிய மக்களை "வாகிரிகல" மக்கள் தடுத்து அவர்களை அடக்கினர். அக்காலத்தில் வாகிரிகல மக்கள் "மாயர்

துன்ன'' என்ற புகழ்பெற்ற பெய ரால் அழைக்கப்பட்டனர். அவர் கள் வீரத்திற்குப் பெயர் பெற்ற வர்கள். நல்ல உடல் வலிமை வாய்ந்தவர்கள். இதனால் வன் னிய மக்கள், வாகிரிகல மக்க ளுக்கு அடிபணிந்ததில் ஆச்சரிய மில்லை. வன்னிய மக்கள் விஜய பாகுவின் ஆட்சிக்குக் கீழ்க் கொண்டு வரப்பட்டனர். இந்தச் சமயத்தில் மலயரட்டை, ருகுனு ரட்டை, முதலிய பகுதிகளில் உள்ள மக்கள் ஒவ்வொரு இடத் திம், கோட்டைகள்கட்டி, அரண் கள் அமைத்து, ஒவ்வொரு பாளை யங்களாகப் பிரிந்தன. தென் னகத்திலுள்ள கேரள-தமிழ் அரசர்களும், இப்பாளையங் களுக்கு வேண்டிய உதவிகள் அளித்துச் சிறப்புற மக்கள் வாழ வழி வகைகளை செய்தனர். இதே நேரத்தில் மாயாரட்டை பகுதிக் குள்ள வன்னிய மக்களும், விஜய பாகு அரசனுக்குக் கட்டுப்பட்டு, ஒரு சண்டை சச்சரவில்லாமல், சந்தோஷமாக வாழ்ந்து வந்த னர். இனித்தான் நாம் கட்டுரை யின் முக்கிய இடத்திற்கு வர வேண்டியவர்களாகிறோம்.

மாயாரட்டை முழுவதும் அரச னாக இருந்த விஜயபாகு வன்னிய ஊரில் வசித்தாலும், அவனது தந்தையான விஜயமல்ல என்பவ ரின் பூர்வகுடிகள், பரம்பரைகள் உற்பத்தியானது தென்னகத்தி லுள்ள கலிங்க தேசத்திர்தான். கலிங்க நாட்டில் வசிக்கும் மக்க ளுக்கு மலலயோ என்ற ஒரு பெயரும் உண்டு. இதனால் கலிங்க நாட்டுப் பரம்பரையில் வந்த விஜயபாகுக்கு ''கலிங்க விஜயபாகு'' என்ற பரம்பரைப் பெயரும் உண்டாயிற்று. இந்த விதமாக நாம் நன்றாக ஆராய்ந்து பார்க்கும்பொழுது, இவர்களும் தமிழர்கள்தான என்பது நன்கு புலனாகின்றது. அப்படியானால் விஜயபாகு அரசாண்ட மாயா ரட்டையில் சிங்களவராக மாறின தமிழரும் இருந்தார்கள் என்பது வெள்ளிடைமலை. இத்தமிழர் களுடன் மணம் முடித்து, வாழ்ந்த சிங்களவர்களும் அநேகர் இருந் தனர். இப்படியாகத் தமிழர், சிங்களவர் உறவு அங்கே ஒன்று பட்டு ஐக்யமாய் வாழ்ந்து வந்தது. நாவடையில் இவர்கள் பேசிய மொழியும் தமிழும் சிங்களமும், கலந்ததாக இருந்தது. தமிழர் களின் உறவினால் சிங்கள மொழி யில் தமிழும் இரண்டறக் கலந் தது. பேசும் மொழியில் தமிழ் கலந்ததனால், எழுதும் வாக்கியங் களில் சமஸ்கிருதம் கலந்தது. இதனால் வித்தியாசம் ஏற்பட்டது. பேசும் மொழியை அறிந்த மாயா ரட்டை மக்களுக்கு எழுதும் சிங்கள, சமஸ்கிருதம் கலந்த மொழியை அவ்வளவாக அறிய வில்லை. இதற்கிடையில் மாயா ரட்டை இருந்த புத்தபிட்சுகளும், அவ்வளவு படித்தவர்கள் அல்லர். ஆனாலும் மாயாரட்டை பகுதிக் குள்ளிட்ட ஊர்களில் உள்ள குழந்தைகளுக்கு ஆரம்பக் கல்வி போதிப்பது இந்தப் பிட்சுகளுக் குத்தான் கிடைத்தது. இப்படி யிருக்கும்பொழுது மலயரட்டை, ருகுனுரட்டை பகுதிகள் மாயா ரட்டையோடு அதிக துவேஷம் கொண்டிருந்தன. மூன்று நாடு களும் ஒன்றையொன்று எதிர்த்த வண்ணம் இருந்தன. அன்னிய நாட்டு ஆதிக்கக்காரர்கள் அதா வது மலயரட்டை, ருகுனுரட்டை யைச் சேர்ந்தவர்கள், மாயா ரட்டையில் உள்ள பழைய ஏட்டுச் சுவடிகளை எரித்தனர். இவர்கள் இப்படி ஏடுகளை நாசப்படுத்து வதைக் கண்ட, மாயாரட்டை புத்தபிட்சுகளும், வெளிநாடு சென்றிருந்த புத்தபிட்சுகளும், ஏட்டில் உள்ள விஷயங்களை நன் றாக வாய்ப்பாடம் செய்தனர். இத னால் மாயாரட்டைப் பகுதிக்குள்,

அதாவது விஜயபாகு ஆட்சிக்கு உட்பட்டிருந்த பகுதிக்குள் மாத்திரம் புத்தபிட்சுகள் மக்களுக்கு வாய்ப்பாடமாகக் கல்வி போதித்தனர். தனது நாட்டிலுள்ள பிரஜைகளுக்கு கொஞ்சமேயாயினும் கல்வி கற்றுக் கொடுப்பதற்கு விஜயபாகு அதிக முயற்சிகளில் ஈடுபட்டான். அவன் தனது பிரஜைகளைப் பெரிய அறிஞர்களாகவோ, பண்டிதர்களாகவோ, ஆக்க நினைக்கவில்லை. ஏதோ அவர்கள் எழுதப் படிக்க தெரிந்தால் போதும், என்ற நினைப்புடன் விஜயபாகு, துதலுபியஸ என்ற ஊரில் உள்ள இன்னும் கொஞ்சம் படித்த புத்தபிட்சுகளை, வரவழைக்து, தன் மக்கள் கல்வி பெற வழி வகைகள் செய்தான். இப்படிச் செய்தும், கல்வி போதிக்கும் குருமார்கள் பற்றுக்காரணத்தாலும், கல்வி கற்க வேண்டிய கருவிகளான, ஏடுகள் எழுத்தாணிகள், குறைவினாலும், தென்னகத்திலுள்ள சோழ அரசாட்சியிலிருந்து, கல்வி, கற்ற புத்தபிட்சுகளும், ஏடுகள், சுவடிகள், எழுத்தாணிகள் முதலியவைகளையும் வரவழைத்தான்; சோழர்களும் விஜயபாகுவின் வேண்டுகோளுக்கிணங்க, அவன் விரும்பியவைகளை அனுப்பிவைத்தார்கள். இப்படியாகத் தமிழகத்திலிருந்து வந்த புத்தபிட்சுகள் தமிழும், சமஸ்கிருதமும், கற்றிருந்தனரே தவிர, சிங்களம் அறவே இவர்களுக்குத் தெரியாது. முன்பு இங்கேயிருந்து தமிழகத்திற்குச் சென்றிருந்த புத்தபிட்சுகளும், மறுபடியும் ஈழத்துக்குத திரும்பி வந்தனர். இவர்கள் தமிழ் மொழியை நன்றாகக் கற்றிருந்தனர். இதனால் இவர்களுடைய சிங்கள மொழியில் தமிழ்மொழியும் கலந்திருந்தது. மொழி இவ்வாறாகக் கலப்படம் ஆனாலும் புத்தமதம் மட்டும் இந்தியாவுக்கும், இலங்கைக்கும், ஒரு வித்தியாசமில்லாமல் ஒரே சீராக இருந்தது. இந்தச் சமயத்தில் மொழியைவிட மக்களுக்கு மதம்தான் முக்கியமாகப்பட்டது. இதனால் விஜயபாகு தன் இரண்டு புதல்வர்களுக்கும், மொழியைவிட, மதத்தைப் பற்றிய போதனைகளை விசேடமாக கற்பித்தான். இனி அரசன் விஜயபாகுவின் விருப்பப்படி மாயாரட்டை ராஜ்யம் முழுவதும், இன்னும் ஏராளமான ஏடுகளும், எழுத்தாணிகளும் வாங்கி கல்வி வளர வழிகள் செய்யப்பட்டது. இதன் பின்னால் கல்வியில் சிறிது முன்னேற்றம் காணப்பட்டது. இன்னும் கொஞ்ச நாள் சென்றதும், மாயாரட்டையில் ஆங்காங்கு உள்ள இடங்களில், கல்வி போதிக்க ஆசிரமங்கள் அமைக்க விஜயபாகு முயற்சி எடுத்தான். இதனால் தமிழர்களின் உறவும் முயற்சியும், வளர்பிறை போல் வளர்ந்தது. நாளடையில் பேச்சு மொழியிலிருந்த தமிழும் எழுது மொழியிலிருந்த சமஸ்கிருதமும், எழுது மொழியில் சிங்களத்துடன் கலந்தது.

தமிழ்ச்சொற்கள் எத்தனையோ சிங்களத்துடன் கலந்துள்ளதை இன்றும் சிங்களவர்கள், சிங்கள மொழியைப் பேசும்போது காணலார். உதாரணமாக:—அக்காலத்திலிருந்த தர்மபதத்தைப் போதிக்கும் "சத்தர்ம ரத்னாவளி" என்னும் பழைய ஏட்டுச் சுவடியில் வரும் தமிழ்ச்சொற்கள் பின்வருமாறு: முசிப்பு, முற்று, சும்மாடி, முதலி, அடுக்கு, புறமட்டு, அட்டாலை, உருட்டு முதலியவைகளாகும். இன்னும் எந்த விதமான, ஏடுகளில் ஆடை, அணிகள், சங்கீதக் கருவிகள், எழுதும்போதும் தமிழ்மொழியுடன் சம்பந்தப்பட்ட இவ்வாக்கியங்கள் போடாமல் எழுத முடியாத அளவுக்கு வந்துவிட்டார்கள் அக்காலத்திய ஆசிரியர்கள்.

# தென்றல் தந்த தொல்லே

சுப. இளங்கோவன்

தென்றல் வந்தது!—என்
சிந்தை நொந்தது!

தேடிவரும் வண்டின்று ஓடிவர விலேயென்று
சேதிசொல்லும் தூதுவன்போல் தேன்நிறைந்த பூவருகே
— தென்றல்

காமன் கணைக்குப் பொலிவைத் தந்தது
கன்னி எனக்கு மெலிவைத் தந்தது
தாமரைக் கண்ணியோ மயக்கந் தந்தது
சந்தன மேனியில் தீயாய் எரிந்தது
— தென்றல்

கொஞ்சும் அவன்முகம் நினைவில் வந்தது
கோதையென் பார்வையில் ஏக்கம் நிறைந்தது
நெஞ்சம் கலங்கி உருகுகின்றது
நிலேவுச் சுழலில் அமைதி சென்றது
— தென்றல்

மெல்லிய இதழ்கள் குவிந்து கொண்டன
மிடுக்கும் துடிப்பும் எங்கோ சென்றன
வெல்லமாய் இனிக்கும் துணைவன் பிரிவினல்
வேதனை வெள்ளம் அணைகட்டி நின்றது
— தென்றல்

---

உதாரணமாக ஆபரணங்களுக்கு, 'சவடி,' 'கொண்டமால்,' 'கைவடம்,' 'கைப்பொட்டு' என்றும், ஆடைகளுக்கு 'சட்ட,' 'ஒசரி,' 'வக்காரி' என்றும், சங்கீதக்கருவிகளுக்கு 'தலப்பற,' 'அனுகத்தாவி,' 'தப்பு,' 'டக்கி,' 'உடக்கி' என்றும் 'தூபாவன்ச,' என்ற ஏடுகளிலும் காணப்படும். இதனல் நாம் கடைசியாகத் தெரிந்து கொள்வது என்னவெனில் தமிழர்களின் உறவினலும், தமிழ்மொழியின் தரத்தினலும், சிங்கள கலாச்சாரம், நல்ல, நன்மைகளே அடைந்திருக்கிறது. இன்னும் சிங்கள மொழி வளரவும், தமிழ் மொழி வழிவகுத்திருக்கிறது. இன்னும் பல்லாண்டு காலம் தமிழர், சிங்களவர் உறவு நீடித்து வளருமாக.

# மதிப்புரை

## தெய்வம் நீ

*விலை ரூ. 3-50. ஆசிரியர்: 'ராஜ்குமார்' ஸ்டார் பிரசுரம், 66, பெரிய தெரு, சென்னை-5.*

"அழுவதிலே இத்தனை ஆறுதல் இருந்தால், இன்னும் எத்தனை முறை வேண்டுமானாலும் அழலாம் என்று நினைத்தாள் கங்கா.

அந்தக் கங்காதான் எப்படிப் பட்ட உயிர்ச்சித்திரமாக உருவாகியிருக்கிறாள்! தன் சொந்த அத்தைக்கு மருமகளாக வாழ வேண்டுமென்று அவள் கண்டிருந்த கனவு தன்னைப் பெற்றவளின் விருப்பத்தால் நனவாகாமல் போயிற்று. அன்புருவமான டாக்டர் ஜான்சன் அவள் வாழ்க்கைத் துணைவனானான்.

அத்தான் ராஜாவுக்குத் தன் கணவன் மூலமாக வேலைவாங்கித் தருவதாக அக்கறையுடன் கங்கா சொன்னபோது, அவள் வாயில் விரலை வைத்தாள் அத்தை அன்னம்மா. "எங்கேயோ அவன் நன்றாக இருப்பான். அவனைப் பற்றி நீ கவலைப்படக்கூடாது!" என்று தத்துவபோதனை புரிந்தாளே அன்னம்மா, அதைக் கேட்டுக் கங்காவால் சும்மாவா இருக்க முடிந்தது?

தன் ஆசை நிறைவேறாததை எண்ணிக் குமுறிக் கனன்ற ராஜா, ஆசை நிறைவேறாவிட்டாலும் மனத்தை அடக்கித் தெய்வ ரூபமாக நின்ற அன்னம்மா—இருவரையும் அந்த ஆசை உருக்கி உருக்கித் தெய்வமாக்கி விட்டதே!

உள்ளத்தின் உள்ளுணர்வைத் தொட்டு உணர்ச்சிக்கு அடிமையாக்கக் கூடிய எழுத்துவண்ணத்தால் திரு. ராஜ்குமார் படைத்திருக்கும் இந்த நாவல் அதியற்புதமான படைப்பாகும். அடக்கமே உருவமாக நிற்கும் அன்னம்மா—அன்பின் வடிவமாக விளங்கும் கங்கா—கோபதாபம், பிடிவாதம், விளையாட்டுத்தனம் இவற்றை உடன் பிறப்பாகக் கொண்ட ராஜா—இந்த மூன்று பாத்திரங்களையும் அருமையான குணச் சித்திரங்களாக உருவாக்கி யிருக்கிறார் ஆசிரியர்.

இதயத்தைத் தொட்டுத் தொட்டுப் பேசும் எழுத்து நடையை ஆசிரியர் ராஜ்குமார் இயல்பாகக் கொண்டிருக்கிறார்.

பொங்கும் நினைவிற்குப் போக்கிடம் வேண்டாமா? என்று கேட்டு அதை எழுத்து வடிவில் செலுத்தி யிருக்கிறார். அது படிப்பவர் இதயத்தைத் தன் இருப்பிடமாகக் கொள்ளும் ஆற்றல் பெற்றுள்ளது என்று உறுதியாகக் கூறலாம்.

'தெய்வம் நீ'—நல்ல குடும்பச் சித்திரம். திருநெல்வேலிப் பக்கத்துக் கிறுத்துவக் குடும்பங்களின் சூழலைப் பின்னணியாகக் கொண்ட கதையானாலும், தமிழ்ப் பண்பு மிளிரும் கதையாகவே விளங்குகிறது.

## மலைக்கோயில்

*விலை ரூ 6-00 ஆசிரியர்: புலவர் நாக சண்முகம். விற்பனை உரிமை: வலம்புரிப் பதிப்பகம் 17, உஸ்மான் ரோடு, சென்னை-17.*

மனக் கோயிலிலே தெய்வமாக வீற்றிருப்பவன் விஜயன். விஜயனை ஒரு மனித தெய்வமாகவே படைத்திருக்கிறார் நாவலாசிரியர், மனதாரக் காதலித்த ஒருத்தியை அருமை நண்பன் சங்கரும் காதலிக்கிறான் என்று தெரிந்தவுடன், தன் காதலைக் கட்டுப்படுத்திக் கொள்ளும் பண்பு விஜயனைத் தவிர வேறு யாருக்கு வரும்? அத்தையின் உருக்கமான வேண்டுகோளுக்கு இணங்கி அவர்கள் மகள் பார்வதிக்குத் தன் வாழ்வில் பங்கு கொடுக்க இசைந்தான். ஆனால் அந்த வாக்குறுதி நிறைவேறியதோ? அந்த அத்தை மகள் சங்கரைக் காதலிக்க நேரும் என்று அவன் அறிவானா? பார்வதிக்கு சங்கர் மேல் காதல்—சங்கருக்கு வாணியின் மேல் காதல்—வாணிக்கு விஜயன் மேல் காதல்—விஜயன் பார்வதியை மணக்கச் சம்மதித்தான். சங்கர் விஜயன் மேல் சந்தேகம் கொண்டான்—வாணி சங்கரிடம் வெறுப்புக் கொண்டாள். இப்படிச் சிக்கல் மேல் சிக்கலாகப் படர்ந்து கதை விரிந்துகொண்டு போகிறது. கடைசியில் வாழ்வு மேலும் பின்னப்படாமல் இருப்பதற்காகச் சிக்கலை அவிழ்த்து வைத்துச் சீமைக்குப் புறப்படுகிறான் விஜயன்.

வெளிநாடு சென்ற விஜயன் எத்தனை பேரை அழவைத்து விட்டான். ஆனால், அந்த அழுகை முழுவதும், சந்தேகக் கறைகளைத் துடைக்கும் கண்ணீர் அருவியையல்லவா ஊற்றெடுத்துப் பெருக வைத்துவிட்டது.

ஆசிரியர் நாக சண்முகம் தமக்கே உரிய சிறந்த தமிழ் நடையில் விறு விறுப்பாகவும், மேலும் என்ன நடக்குமோ என்ற ஆவலைத் தூண்டும் முறையிலும் நாவலை எழுதியிருக்கிறார். இடையிடையே, நல்ல கருத்துரைகளையும், தங்கச் சரட்டிலே முத்துக் கோத்தது போல் கோத்துத் தந்திருக்கிறார்.

அதற்கு ஓர் எடுத்துக் காட்டு பின்வருவது: 'தன்னைத் தூக்குபவள் அழகாக இருக்க வேண்டுமென்று குழந்தை நினைப்பதில்லை; தன்னுடைய அன்னையாக இருக்க வேண்டும் என்றுதான் விரும்புகிறது.'

இன்பச் சுவைக்கும் நகைச் சுவைக்கும் பல கட்டங்களை ஆங்காங்கே ஆசிரியர் படைத்துக் கொடுத்திருக்கிறார்.

## தமிழ் நாட்டின் தவப்புதல்வர்கள்

பகுதி I விலை ரூ. 1-50 பகுதி II விலை ரூ 1-25. ஆசிரியர்: கவிஞர் மு. உலகநாதன். தொல்காப்பியர் நூலகம், 107, கனகசபை நகர், சிதம்பரம்.

விடுதலை வீரர் வ. உ. சிதம்பரனார், மகாகவி பாரதியார், கவிமணி தேசிக விநாயகம் ஆகியோரைப் பற்றி முதற்பகுதியிலும் தமிழ்த் தென்றல் திரு. வி. க. தமிழ்த் தாத்தா உ. வே. சா. தமிழறிஞர் மறை மலையடிகள் ஆகியோரைப் பற்றி இரண்டாம் பகுதியிலும் எழுதப் பெற்றுள்ளன.

மாமா ஒருவர் தம்மோடு குழந்தைகளைக் கூட்டிக் கொண்டு செல்வது போலவும், அக்குழந்தைகளின் ஐயவினாக்களுக்கு விடையளிப்பது போலவும், உரையாடல் மூலமாக தமிழ் நாட்டின் தவப்புதல்வர்களைப் பற்றிக் கூறுவதாகவும், இடையிடையே மாமா பல அரிய கருத்துக்களையும் உவமானங்களையும் குழந்தைகளுக்கு எடுத்துச் சொல்வது போலவும் ஆசிரியர் கற்பனை

அட்டைப்படம் :

## போப்பாண்டவர் ஆருவது பால்

இத்தாலி நாட்டின் ரோமாபுரி நகரின் பகுதியான வாடிகன் என்னும் ஊரில் வாழ்ந்துவரும் புனிதர் போப்பாண்டவர் ஆருவது பால். அவர் பல பெரியோர்களின் மத்தியில் மன்னரென வாழ்ந்து வருகிருர். கத்தோலிக்க மக்களின் ஆன்மீக நலத்தையும், உலக மக்களின் ஒழுக்க வாழ்வையும் கிருத்துவ மத அடிப்படையில் அழகுறக் காப்பதுதான் போப்பாண்டவரின் புனிதப் பணியாகும். அவருடைய கருத்துக்களை உலக மக்கள் உணர்ந்து உயர்வடைவதற்கு உரிய பணிகளைச் செய்வதற்கென்றே சொந்தமான பத்திரிகை ஒன்றும், ஒலிபரப்பு நிலையம் ஒன்றும், பிரசார இலாகா ஒன்றும் செயல் புரிந்து வருகின்றன.

வேறுாூர் செல்லும் பழக்கம் போப்பாண்டவருக்கு இல்லை. ஆனால் புண்ணியத்தலமாக கருதி பாலஸ்தீனத்திற்கு ஒரு தடவை சென்றுள்ள அப்புனிதமகன் இந்தியாவையும் புனித நாடாகவே கருதி நம் நாட்டுக்கு அண்மையில் வந்து சென்றுள்ளார்.

அவரது வருகையால் இந்திய நாட்டுக் கிருத்துவர்கள் மட்டுமன்றி எல்லா மதத்தினரும் ஆனந்தங் கொண்டனர்.

அவரது திருவுருவை இவ்விதழின் அட்டை தாங்கி வெளி வருகிறது.

செய்து எழுதி யிருக்கும் முறை பாராட்டத் தக்கது.

இலட்சிய நாயகர்களான இப் பெரியோர்கள், தம் இளமைப் பருவத்திலும், சில நேரங்களிலும் செய்த தவறுன செயல்களைச் சுட்டிக் காட்டி இது போல் செய்யக்கூடாதென்று சொல்லவும் மாமா பின்வாங்கவில்லை. அத் தவருன செயல்களினிடையிலும், அப்பெரியோர்களின் இலட்சிய வேட்கை பரிமளிப்பதையும் இந்த மாமா சுட்டிக் காட்டத் தவற வில்லை. ஆகவே திரு உலக நாதன் அவர்கள் படைத்துக் கொடுத்திருக்கும் மாமா கண்ணிய மானவர் மட்டுமின்றி, குழந்தைகளின் எண்ணங் கவர்ந்தவராகவும் விளங்குகிருர் என்று சொல்லலாம்.

வாழ்க்கை வரலாறுகளைப் படிப்போர், சுவைத்துப் படிக்கத் தக்கவாறு ஒரு மாற்றம் செய்து கொண்டு எழுதியிருக்கும் ஆசிரியரைப் பாராட்டுகிறோம்.

—நாரா நாச்சியப்பன்

# செய்திக் குறிப்புகள்

**வாடிப்பட்டி ப. யூனியன்**

வாடிப்பட்டி வட்டாரத்தைச் சேர்ந்த விராலிப்பட்டியில் 2-10-64ல் காலையில் திரு கே. வீரத்தேவர் தலைமையில் நடந்த காந்தி ஜெயந்தி விழாவை யொட்டி, தேசீய துப்புரவு தினம், வனமகோத்சவ வாரம் ஆகியவை கொண்டாடப்பட்டன. சுகாதார ஆய்வாளர் திரு வி. முத்துசாமி மற்றும் கல்லுப்பட்டி கிராம சேவக் பயிற்சியாளர்கள் திரு விக்டர் ஜெயமணி, வெயிலுவந்தான், ஆகியோர் விழாவின் முக்கியத்துவம் குறித்துப் பேசினர்.

தேசீய ஒருமைப்பாடு பத்திரங்களில் கையொப்பம் பெற்றும் 51 கிளிரிசீடியா 5 வேம்புகள் நடப்பட்டும், தெருக்கள் சுத்தம் செய்யப்பட்டும், அன்றைய விழாவை சிறப்பித்தனர். அன்று மாலை நீரேத்தானில் நடைபெற்ற விழாவில் குழந்தைகளுக்கு இனிப்பு வழங்கப்பட்டது.

தேசீய கீதத்துடன் விழா இனிதே நிறைவுற்றது.



வாடிப்பட்டி வட்டாரத்தைச் சேர்ந்த 45 விவசாயிகள் அடங்கிய கல்விச் சுற்றுலா தலைவர் திரு வி. பாலகுருவா ரெட்டியார் தலைமையில் 26-9-64ல் புறப்பட்டு 1-10-64ல் திரும்பியது. குறிப்பாக கன்னியாகுமரியில் பழச்சாகுபடி, கோவை விவசாய ஆராய்ச்சிப் பண்ணை, மார்த்தாண்டம் கோழிப்பண்ணை கொச்சித் துறைமுகம், மலம்புழா, அலியார், பரம்புக்குளம் அணைக்கட்டுகள் இவற்றைப் பார்வையிட்டதில் இந்தியாவின் வளர்ச்சித் திட்டங்களை நேரில் பார்க்கும் வாய்ப்பைப் பெற்றதாகப் பூரிப்படைந்துள்ளனர்.

விவசாய வளர்ச்சி அலுவலர் திரு ஆர். குருசாமி பி. எஸ்ஸி. (அக்) மற்றும் கல்வி வளர்ச்சி அலுவலர் திரு கெங்காதரன் ஆகியோரும் உடன் சென்று விளக்கினர்.



வாடிப்பட்டி வட்டாரத்தைச் சேர்ந்த நெடுங்குளம் மற்றும் இதர கிராமங்களிலும் திடீரென்று கால்நடைகளுக்குப் பரவிய வெக்கை நோயைத் தடுப்பதில் தலைவர் திரு பாலகுருவா ரெட்டியார், ஆணையர் திரு எஸ். பழனிச்சாமி ஆகியோர் உடனடியான நடவடிக்கையைத் தொடர்ந்து மாவட்டக் கால்நடை அதிகாரி திரு கே. வி. பார்த்தசாரதி அவர்களுக்கு அறிவித்ததின் பேரில் மேற்படி மாவட்டக் கால்நடை அதிகாரி மாநில நோய் ஆராய்ச்சித் துறையினர் துணையேடு நோயைக் கண்டுபிடித்து தடுப்பு ஊசிகள் போடப்பட்டன. ஜூலை ஆகஸ்ட் மாதங்களில் இரண்டு வாரங்கள் 14000 கால்நடைகளுக்கு வெக்கை தடுப்பு ஊசிகள் போடப்பட்டும் இரவு பகலாக கிராமப்புறங்களில் எங்கிருந்தும் கிடைக்கப்பெறும் செய்தி கேட்டு கால்நடை மருத்துவர்கள் விரைந்து சென்று நோயைத் தடுப்பதில் முனைந்ததில் சேதம்

வெகுவாகக் குறைக்கப்பட்டதும் விவசாயிகள் ஒத்துழைப்பு பாராட்டத் தக்கது. மாவட்டக் கால்நடை அதிகாரி திரு கே. வி. பார்த்தசாரதி இரண்டு வாரங்கள் முகாம் செய்து மதுரை திண்டுக்கல், திருச்சி, அரியலூர் கேந்திர கிராம கால்நடை ஆய்வாளர்களை வரவழைத்து நோயைக் கட்டுப்படுத்துவதில் தீவிர நடவடிக்கைகளை எடுத்தமை விவசாயிகளை மிகவும் திருப்திப்படுத்தியுள்ளது.

※ ※ ※

## துரிஞ்சாபுரம் யூனியன்

துரிஞ்சாபுரம் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த சிறுகிளாம்பாடி கிராமத்தில் 22-10-64ம் தேதி மாலை 4-00 மணிக்கு ஓர் புதிய ஆரம்பப் பள்ளிக் கட்டிடம் வட ஆர்க்காடு மாவட்ட ஆட்சித் தலைவர் திரு பி. விஜயராகவன், ஐ. ஏ. எஸ் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. திரு எஸ். முருகையன் எம். எல். ஏ. அவர்கள் தலைமை தாங்கினார்கள். பஞ்சாயத்து தலைவர் திரு பெ. சு. திருவேங்கடம் அவர்கள் அனைவரையும் வரவேற்றார். துரிஞ்சாபுரம் பஞ்சாயத்து யூனியன் பெருந்தலைவர் திரு பி. சீனிவாச ரெட்டியார் அவர்கள் காந்திஜியின் படத்தையும் திரு இரா. தர்மலிங்கம் எம். பி. அவர்கள் நேருஜியின் படத்தையும், திருவண்ணாமலை கோட்டாட்சித் தலைவர் திரு எஸ். ஆர். சுப்ரமணியம் அவர்கள் ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் படத்தையும் பஞ்சாயத்து யூனியன் உபதலைவர் திரு ஏ. நடேச கவுண்டர் அவர்கள் திருவள்ளுவர் படத்தையும் திருவண்ணாமலை நெடுஞ்சாலை கோட்டப் பொறியாளர் திரு வி. சுப்ரமண்யம் பி. இ. அவர்கள் பாரதியார் படத்தையும் திறந்து வைத்துச் சொற்பொழிவாற்றினார்கள். பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் திரு டி. திருவரங்கம் நன்றி கூற தேசீய கீதத்துடன் விழா நிகழ்ச்சிகள் முடிவுற்றன.

※ ※ ※

## சின்னசேலம் யூனியன்

சின்னசேலம்: தென்னார்க்காடு மாவட்ட ஆட்சித் தலைவர் திரு வி. எஸ். சுப்பையா ஐ. ஏ. எஸ். அவர்கள் 17-ம் தேதி சின்ன சேலம் வட்டாரத்திலுள்ள கீழ்க் குப்பம் கிராமப்பள்ளிக் கட்டிடத்தைத் திறந்து வைத்தார். அன்று மாலை 6 மணி யளவில் சின்னசேலம் பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்தில் சின்ன சேலம் வட்டாரத்தில் கிராம நெல் விளைச்சல் போட்டிப் பரிசளிப்பு விழாவில் கலந்துகொண்டு 63-64-ல் விளைச்சல் போட்டியில் வெற்றியடைந்தவர்களுக்கு பரிசுகள் வழங்கியதுடன் சர்வோதய பாத்திரங்களும் வழங்கி குடும்பக் கட்டு பற்றியும் இன்றைய சூழ் நிலையில் ஏன் சர்வோதய பாத்திரங்களை வழங்க வேண்டும் என்றும் எடுத்துரைத்தார். அவ் வமயம் மாவட்ட விவசாய அலுவலர் திரு. ஞானவரம் அவர்கள் தென்னார்க்காடு மாவட்டத்தில் அரிசி தட்டுப்பாடு பிற மாவட்டங்களை போன்றில்லாமல் பிற மாவட்டங்களுக்கு இங்கிருந்து அனுப்பும் நிலையிலிருக்கின்றோம், இருப்பினும் உற்பத்தியை இன்னும் அதிகரிக்கச் செய்யவேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார். விழாவிற்கு கூட்டுறவு மன்றத் தலைவர் திரு வி. டி. இளையாப்பிள்ளை தலைமை வகித்தார். ஆணையர் திரு டி.எஸ். கிருஷ்ணமூர்த்தி அவர்கள் வரவேற்புரை வழங்கினார். கூட்டம் பஞ்சாயத்து விஸ்தரிப்பு அலுவலர் திரு. எஸ். குப்புசாமி அவர்களது நன்றியுரையுடன் இனிது முடிவுற்றது.

## திருச்செங்கோடு யூனியன்

திருச்செங்கோடு பஞ்சாயத்து யூனியனுல் கட்டப்பட்ட பெண் ஆசிரியைக்கான குடியிருப்பு வீட்டை 30-10-64 அன்று திரு ஜி. ராமச்சந்திரன், பஞ்சாயத்து யூனியன் சேர்மன் அவர்கள் தலைமையில், திரு ஏ. வி. நரசிம்மன், பி. ஏ. சங்ககிரி கோட்டாட்சித் தலைவர் அவர்கள் திறந்து வைத்தார்கள். மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் அரசாங்கம் கிராம மக்களின் கல்வி வளர்ச்சிக்காக என்னென்ன திட்டங்கள் வகுத்து நடத்திக் கொண்டிருக்கிறது என்பதைப் பற்றி விபரமாக எடுத்துரைத்தார்கள். திரு சு. சண்முகம், பி. ஏ. ஆணையாளர், பஞ்சாயத்து ராஜ்யம் வந்த பிறகு ஆரம்பக் கல்வி, கிராமத்தில் மிக வேகமாகவும் நன்ருகவும் பரவுவதற்கான வழி வகைகள் அரசாங்கத்தார் ஏற்படுத்திக் கொடுத்திருப்பதைப் பற்றி விளக்கினுர். திரு வி. வி. செங்கோடு, ஆலங்கூர் பஞ்சாயத்துத் தலைவர் எல்லோருக்கும் நன்றி கூறினுர். தேசீய கீதத்துடன் விழா இனிது முடிவடைந்தது.



## அச்சிறுபாக்கம் யூனியன்

அச்சிறுபாக்கம் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த மாத்தூர் பஞ்சாயத்தில் 30-10-64ம் தேதி மாலை 5-மணிக்கு திருவாளர் மு. வே. ஜானகிராம் ரெட்டியார் அவர்கள் தலைமையில் ஹரிஜன தினவிழா நடந்தது.

அதுசமயம் யூனியன் தமிஷனர் உயர்திரு என். முத்துகுமார் அவர்களும், கல்வி விஸ்தரிப்பு அதிகாரி திரு வி. ஆர். ஞானப்பிரகாசம், கால்நடை அபிவிருத்தி அதிகாரி, திரு நந்தகோபால் ஆகியோர்களும், சிறப்புரை ஆற்றினர்.

ஏற்கனவே 120 கம்போஸ்டு குழிகள் வெட்டி மூடியுள்ளதைப் பார்வையிடப்பட்டது. 25 போன் கலப்பைகளும், நாட்டுச்சேவல் மாற்று முறையில் 20 உயர்ந்தரக வெள்ளைச் சேவலும் விநியோகிக்கப்பட்டது.

விவசாய அபிவிருத்திக்காக கிராமத்திலும் ஹரிஜன காலனியிலும், 1000-கிளைரிசிடியா கன்றுகளும், 200 தழை உர போத்துகளும் நடப்பட்டது.

குழந்தைகள் கண்காட்சி நடத்தப்பட்டதில், திடகாத்திரமான குழந்தைகள் இருவருக்கு தலைவரால் பரிசு வழங்கப்பட்டது.

கிராம நல ஊழியர் திரு எல். சகாதேவன், அவர்கள் நன்றிகூற தேசீய கீதத்துடன் விழா இனிது முடிவுற்றது.



## பென்னுகரம் யூனியன்

அன்னை பூந்த பென்னுகரம்
பெண்கள் அஞ்சலி.

2-10-64ம் தேதி மாலை இவ்வட்டார மாதர் மன்றங்களின் பிரதிநிதிப் பெண்கள் பென்னுகரம் பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்தில் கூடி காந்தி ஜெயந்தியை விமரிசையாக கொண்டாடினர். கைராட்டை நூற்பதில் வல்லுனராக பெண்களுக்கு ஒரு நூற்புப் போட்டி நடத்தப்பட்டது. காந்திஜி பெண்களுக்குச் செய்த நன்மைகளையும், அவரது நிர்மாணத் திட்டங்களையும் பற்றி ஆணையாளர் திரு. சுப்பிரமணியம், முக்கிய சேவிகா, அலுவலக மேலாளர் திரு குப்புசாமி, கணக்கர் திரு சிவன் முதலியோரால் விளக்கிக் கூறப்பட்டன. பெண்கள் பயபக்தியோடு எழுந்து நின்று

தேசிய ஒருமைப்பாடு உறுதி மொழியை நவின்றனர். பென்னு கரம் மாதர் மன்றப் பெண்மணி களால் ஒரு கோலாட்டக்கலை நிகழ்ச்சி நடத்தப்பட்டது. பிரதம நீதிபதியாய் விளங்கிய திருமதி ராஜம் சிவசுப்பிரமணியம் உப நீதிபதிகள் உதவியுடன் பரிசுக்கு உரியோரைத் தேர்ந்தெடுத்தனர். பெருர்பாலை மன்றத்தைச் சேர்ந்த திருமதி சுப்புலக்ஷமி முதல் பரிசுக் குரியோராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். உள்ளத்தைத் தொடும் சர்வோதய பிரார்த்தனையுடன் விழா முடிவுற்றது. விழாவுக்கான ஏற்பாடுகளை இருகிராம சேவிகை களும் சிறப்பாகச் செய்தனர்.



## உடுமலைப்பேட்டை யூனியன்

எலையமுத்தூர் கூட்டுறவு சங் கத்தில் 16-11-64-ல் மாலை 4 மணி யளவில் ஷெ யூர் பஞ்சாயத்துத் தலைவர் திரு நாராயணசாமிக் கவுண்டர் தலைமையில் "அகில இந்தியக் கூட்டுறவு வார விழா"க் கொண்டாடப்பட்டது. கூட்டுறவு பற்றி கூட்டுறவு விஸ்தரிப்பு அதி காரி R. சொக்கலிங்கம் அவர் களும் மெம்பர்களின் கடமைபற்றி சொசைட்டித் தலைவர் திரு R. கருப்புசாமி அவர்களும், உணவு உற்பத்தி பற்றி கிராமசேவக் M. முத்துக்குமாரசாமி அவர் களும் சொற்பொழிவாற்ற, கிளார்க் திரு ரத்தினம் அவர்கள் நன்றிகூற கூட்டம் இனிது முடிந் தது. பத்து மெம்பர்கள் சேர்க்கப் பட்டு பணமும் வசூல் செய்யப் பட்டது.



## குழந்தைகள் தினவிழா

14-11-1964 தென்னார்க்காடு மாவட்டம் கண்டமங்கலம் பஞ் சாயத்து யூனியனைச் சேர்ந்த நல் லப்பரெட்டி பாளையம் துவக்கப் பாடசாலையில் இவ்வூர் பஞ்சா யத்துத் தலைவர் திரு வெ. வேணு கோபால் அவர்களின் தலைமை யில் ஊர்வலம் ஆரம்பமாகி சர் வோதயப் பாத்திரம் மூலம் கிடைத்த 91 லிட்டர் அரிசியைப் பெற்று வந்து மதிய உணவு மையத்திற்கு அளித்தனர். பள்ளி யில் சிறார்களுக்கு மதிய உணவு அளிக்கப்பட்டது. பின் மாலை 4½ மணி அளவில் கூட்டம் ஆரம்ப மாயிற்று. அவ்வமயம் இப்பாட சாலை உதவி ஆசிரியர் திரு, த. குமாரசாமி அவர்கள் கூட்டத் திற்கு வந்த அனைவரையும் வர வேற்றார். பின் தலைவர் நேருஜி படத்தையும், தலைமை ஆசிரியர் திரு அ. நாமதேவ் அவர்கள் நேரு நேன்னடி இருவரும் தோன்றும் படத்தையும், சொரப் பூர் தொகுதி கிராமசேவக் திரு சி. சந்திரப்பிரகாசம் அவர்கள் அண் ணல் காந்தியடிகளின் உருவப் படத்தையும் திறந்து வைத்தார் கள். பல அறிஞர்கள் நேருஜியும் குழந்தைகளும், என்பதைப் பற்றி சொற்பொழிவு ஆற்றிய பின் நன்றி நவிலப்பட்டு பள்ளி மாண வர்களால் நாட்டுப்பண்பாடப் பெற்று கூட்டம் இனிதுமுடிந்தது. பின் எல்லோருக்கும் இனிப்பு வழங்கப்பட்டு பள்ளி மாணவர் களுக்கு விசேஷ உணவு இரவு அளிக்கப் பட்டது.



## தூக்கநாயக்கன் பாளையம் பஞ்சாயத்து யூனியன்

கள்ளிப்பட்டி ஆரம்ப ஆசிரி யர் சங்கக் கூட்டம் 24-10-64ல் கொண்டையம் பாளையம் உதவி திரு எஸ். சேசாத்ரி தலைமையில் நடைபெற்றது. அது சமயம் கள்ளிப்பட்டி உதவி திரு. ஜி. எஸ். சிவராம கிருஷ்ணன் இறை வணக்கம் பாடினர். கணக்கம் பாளையம் ஆரம்பப்

பள்ளித்தலைமை யாசிரியரும் சங்கச் செயலாளருமான திரு. வா. தனசேகரன் சென்ற கூட்ட அறிக்கையையும் சுற்றறிக்கைகளையும் வாசித்தார். அடசப்பாளையம் தலைமை திரு. பி. சதாசிவம் செய்திகளை வாசித்தார். திருக்குறள் 'நட்பாராய்தல்' பற்றி பெருமுகைப்புதூர் தலைமை திரு. கே. எஸ் இராஜ மாணிக்கமும், 'காந்திஜியின் அறிவுரை' பற்றி வளையபாளையம் உதவி திரு. அ. குப்புசாமியும், 'நிர்வாகம் கைத்தொழில்' பற்றி வளைய பாளையம் தலைமை திரு. க. ப முத்துசாமியும் பேசினர்கள். மூன்றாம் வகுப்பிற்கு நூல்நூற்றலை திரு பி. சதாசிவம் பயிற்றுவித்தார். செயலாளர் திரு. வா. தனசேகரன் அடுத்த கூட்ட நிகழ்ச்சிகளை அறிவித்த பின் நன்றி நவில நாட்டுப் பண்ணுடன் கூட்டம் இனிது முடிவடைந்தது.



## பென்னாகரம் பஞ்சாயத்து யூனியன்

கடந்த விஜயதசமி தினத்தன்று தமது விஷமக் குழந்தைகளிடமிருந்து இவ்வூர் பெற்றோர் விடுதலை பெற்றனர். அன்றைய தினம் 3 வயது முதல் 5 வயதுக்குட்பட்ட பாலகர்களுக்கு ஒரு பள்ளி ஆரம்பிக்கப்பட்டதே அதற்குக் காரணமாகும். பென்னாகரம் உயர்நிலைப்பள்ளி தலைமையாசிரியர் திரு காளியப்பச் செட்டியார் தலைமையில், இளஞ்சிறார் ஆடிப்பாடி மகிழ்ந்து, கல்வி கற்பதற்கேற்ற அழகிய மனையில், திருமதி ராஜம் சிவசுப்பிரமணியம் குத்துவிளக்கேற்றி இக்கல்விக் கூடத்தைத் துவக்கினர்.

ஆணையாளர் திரு சிவசுப்பிரமணியம், பஞ்சாயத்தலைவர் திரு பூபால், கல்வி தணிக்கை அதிகாரி திரு ராமலிங்கம் மூவரும், ஆரம்பப்பள்ளிக்கும் முன்னதாக அளிக்கப்பட விருக்கும் இந்த அடிப்படைக் கல்வியின் அவசியத்தை, அருமை பெருமைகளை குழுமியிருந்த குழவிகளின் பெற்றோருக்கு எடுத்துக் கூறினர்கள்.

கண்ணீர்மல்க மருண்டுபோய் வந்த 30 பிள்ளைக்கனியமுதுகள், வகுப்பறையிலுள்ள வண்ண வண்ணப் படங்களையும், விதவிதமான விளையாட்டு சாதனங்களையும் ஆசிரியையின் அன்புப் பார்வையையும் கண்டுமுகம் மலர்ந்து பேசும் பொற் சித்திரங்களாயினர்.

விழாவிற்குப் பின் மருத்துவ அதிகாரி திரு குமரன் முதன் முதலில் தமது நன்கொடையை வழங்கி முன் மாதிரி காட்டினர். அதன் பின் ஆணையாளர் தலைமையில் புறப்பட்ட தொண்டர்குழு அரசாங்க மான்யமற்ற இப்பள்ளிக்கு ஊர்ப் பெரியோரிட மிருந்து ரூ. 200 நன்கொடை வசூலித்தது.

மாதர்சங்கத்தின் சார்பில் நடமாடும் தெய்வங்களான இக்குழந்தைகள் திருப்பணியைத் துவக்க முள்ளுவாடி பள்ளித்தலைமையாசிரியர் திரு முனுசாமி இவ்வட்டார மாதர்நல ஊழியர்களுக்கு அதிகம் உதவிபுரிந்தார். 50க்கும் மேற்பட்ட இன்னும் அநேக இளம்பிள்ளைகளையும் இப்பள்ளி கவர்ந்து மருத்துவக் கல்லூரிக்கு இடம் கோருவதைவிட அதிக சிபாரிசுகளுடன் தாய்தந்தையரிடமிருந்து விண்ணப்பங்களை வரவழைக்கிறது. ஆகவே நவம்பர் 14-ம் தேதி குழந்தைகள் தினத்தன்று இப்பள்ளியில் இன்னொரு பிரிவு வகுப்பும் ஆரம்பிக்க ஆலோசிக்கப் பட்டிருக்கிறது. ஆசிரியை, குழந்தைகளைக்கூட்டி வரும் ஆயா இருவர் சம்பளப் பொறுப்பையும் பெற்றோரையே ஏற்றுக் கொள்ளச்செய்து செயல்

படும் இப்பாலர்பள்ளி இவ்வட்டா ரத்தின் மிகச்சிறந்த சாதனை யாகும்.

❋ ❋ ❋

### திருமருகல் பஞ்சாயத்து யூனியன்

திருமருகல் பஞ்சாயத்து வட்டாரத்தில் 26-10-61 மாலையில் திருமருகல் பஞ்சாயத்து கூட்டுமன்றத்திற்கு மத்திய உதவி மந்திரி திருமதி. மரகதம் சந்திரசேகர் அவர்கள் விஜயம் செய்தார். அன்னாருக்கு இக்கூட்டுமன்ற சார்பில் ஒரு வரவேற்பு, அளிக்கப்பட்டது. அதுபோது உயர்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்களும், நன்னிலம் கொரடாச்சரி கூட்டுமன்றத் தலைவர்களும், நாகை கோட்டாட்சித் தலைவரும், குடவாயில் தொகுதி எம். எல். ஏ. திரு. பி. ஜெயராஜ் மற்றும் பல பெரியோர்களும் வந்திருந்தார்கள். மத்திய துணை மந்திரி அவர்களுக்கு இக்கூட்டுமன்றசார்பிலும் கூட்டுமன்றத்தைச் சேர்ந்த பண்டாரவாடை மாதர் சங்கம் சார்பிலும் வரவேற்புரைகள் வாசித்து அளிக்கப்பட்டன. குன்றக்குடி அடிகளால் அவர்கள் கூட்டு மன்றத்தின் நோக்கம், தலைவர்கள் அலுவலர்கள் பொறுப்பு, இவைகள் பற்றித் தெளிவாக எடுத்துரைத்தார். மேலும் நாட்டின் ஏழ்மை நிலை சமாளிப்பதற்கான வழிமுறைகளை உயர்ந்த சான்றுகளுடன் எளிய நடையில் மக்களுக்கு எடுத்துரைத்தார். பள்ளிச் சிறுவர்களை 15 வயதுவரை நன்முறையில்பேணிப்பாதுகாத்து கல்வி பயில்விப்பது அவர்களுடைய பெற்றோர், ஆசிரியர் இவர்களது கடமை என்றும் கூறினர்.

இரண்டாவதாக மந்திரி அவர்கள் இக்கூட்டு மன்றத்தின் பொறுப்பான வேலைகள் பற்றியும் மாதர் சங்கங்கள் நன்முறையில் நடத்துவது பற்றியும் விரிவாக் கூறினர். இக்கூட்டுமன்ற ஆணையர் அவர்கள் நன்றிநல்க, தேசீய கீதத்துடன் கூட்டம் இனிது முடிவுற்றது.

❋ ❋ ❋

### வாழப்பாடி பஞ்சாயத்து யூனியன்

இந்திய அரசினரது வேண்டுகோள்படி 20-10-64 அன்று தேசீய ஒருமைப்பாடு தினம் (Solidarity day) கொண்டாடப்பட்டது. எல்லா அலுவலர்களும் கூடிய கூட்டத்திற்கு, வாழப்பாடி பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் திரு எம். பி. செல்லையா பி. ஏ., அவர்கள் தலைமை வகித்தார்கள். யூனியன் இணை ஆணையாளர் திரு என். எஸ். ஆர். சாலமன் ராஜ் பி. எஸ். ஸி., அவர்கள் தேசீய ஐக்கியத்தையும் உறுதியையும் பேணுவதின் அவசியத்தை விளக்கிப் பேசிய பின்னர் கூடியிருந்த எல்லோரும், உறுதிமொழி எடுத்துக் கொண்டனர். உறுதி மொழியை இணை ஆணையாளர் படிக்க மற்ற எல்லா அலுவலர்களும் சேர்ந்து உரைத்தனர்.

கிராமத்தொண்டர்படை பயிற்சி முகாம்.

இம்மன்றத்தைச் சேர்ந்த கீழ்க்கண்ட பஞ்சாயத்துகளில் கிராமத் தொண்டர் படை பயிற்சி முகாம் நடத்தப்பட்டது.

1. சிறுநகர் 2. சின்னகயப்பாக்கம். 3.. ஈசூர். 4. புத்திரன் கோட்டை., 5. புளியனி. 6. பெருக்கரணை. 7. பொறையூர். 8. பொலப்பாக்கம். 9. பெரிய களக்காடி. 10. பருக்கல். 11. போரூர். 12. போந்தூர்.

தொண்டர்படையின் சாதனைகள்.

கடுக்கலூர் கிராமத்தொண்டர் படையினர் பாசனக்கால் வழியை

சரி செய்தனர். உழைப்பு தானம் செய்தவர்கள் இருபது நபர்கள். வேலையின் மதிப்பு ரூபாய்: நாற்பது.

**காடுவளர்க்கும் திட்டம்**

புத்திரன் கோட்டை, பெருக்கரனே, அரும்பல் பஞ்சாயத்துகளில் காடுவளர்க்கும் திட்டத்தின் பள்ளிப்பிள்ளைகளின் உதவியினால் சீமைக்கருவேலன் 16 ஏக்கர்கள் விதைக்கப்பட்டது.

**ஹரிஜன தினம்:**

30-10-64 அன்று செங்கதேவன் குப்பம் கிராமத்தில் ஹரிஜன தினம் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

**தேசிய ஒருமைப்பாடு தினம்.**

யூனியன் தலைமையிடத்திலும், நாற்பத்தி ஒன்று பஞ்சாயத்துகளிலும் 2-10-64 அன்று தேசிய ஒருமைப்பாடு தினம் கொண்டாடப்பட்டது.

**தேசீய ஒற்றுமை தினம்.**

யூனியன் தலைமையிடத்தில் ஆணையாளர் திரு ஏ. வெங்கடேசன், பி. ஏ., அவர்கள் தலைமையில் தேசீய ஒற்றுமை தினம் 20-10-64 அன்று சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அலுவலக ஊழியர்கள் அனைவரும் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டனர். கல்வி வளர்ச்சி அலுவலர் திரு எஸ். ஆனுச்சாமி நன்றி கூறினர்.

—o—

## மிக அனுகூலம் உண்டு

ஐரோப்பாவில் ஹங்கேரி என்ற ஒரு நாடு இருக்கிறது. ஓர் உலகப் பிரசித்தி பெற்ற டாக்டரிருந்தார். அவர் பெயர் டாக்டர் பேரன். அறுவைச் சிகிச்சைகள் செய்வதில் ரொம்பக் கைதேர்ந்தவர். பெருந்தொகை கொடுத்தாலொழிய அவர் ஆபரேஷன் செய்ய மாட்டார். கையில் கத்தி எடுத்துவிட்டாரென்றால் ஆயிர ரூபாய்க்குக் குறையாமல் எண்ணி வைக்கவேண்டும்.

அப்பேர்ப்பட்ட ஆசாமியிடம் ஓர் ஆலை முதலாளி வந்தார். தமக்கு ஆபரேஷன் செய்து விடும்படி கேட்டுக் கொண்டார்.

''ஆயிரம் கிரவுன் (சுமார் 2500 ரூபாய்) பீஸ்வேண்டும்'' என்றார் கொஞ்சமும் கூசாது டாக்டர்.

''அவ்வளவு பணமா? மிக அதிகமாயிற்றே'' என்று பிரமித்து விட்டார் முதலாளி.

''அப்படியா? இது அதிகமாகத் தோன்றினால் வேறு டாக்டரைப் பார்த்துக் கொள்ளுங்கள். அவர் இதில் அரைக்கால்வாசி—எட்டிலொருபங்கு—தொகையைப் பெற்றுக்கொண்டு ஆபரேஷன் செய்வார். மேலும் அந்தத் தொகையைக்கூட நீங்கள் செலுத்த வேண்டிய அவசியமிருக்காது; ஏனென்றால் உங்கள் சந்ததியார்கள் தாமே செலுத்தவேண்டும்; மிக அனுகூலம் உண்டு. போய்வாருங்கள்'' என்று சொல்லி அனுப்பிவிட்டார்.

விவசாய உற்பத்தி பெருக வேண்டும். கிராம வாழ்வு வளமும் சிறப்பும் உடைய தாக இருக்க வேண்டும். காந்தியடிகள் கண்ட இந்தக் கனவு முழு நனவாக வேண்டுமானுல், அரசாங்கம் தனது நிலக் கொள்கையைத் தெளிவு படுத்திக் கொள்ள வேண்டும்; அதன்பின் மன உறுதியோடு அந்தக் கொள்கையைச் செயற் படுத்தவும் வேண்டும்.

# ஒருமைப்பட்ட செயல் முறையின் அவசியம்

எழுதியவர் : கோ. வைத்யநாதன்
இயக்குநர் - முழுவளர்ச்சித்திட்டம்
கதர் - கிராமக் கைத்தொழில் கமிஷன், பம்பாய்

மொழி பெயர்ப்பு: சு. கிருஷ்ணமூர்த்தி
பிராந்திய அமைப்பாளர், சென்னை

**நம்** பாரதப் பிரதமர் ஸ்ரீ லால் பகதூர் சாஸ்திரிஜீ அவர்கள், புது டில்லியில் தல்கதரா தோட்டத்தில் நடைபெற்ற ஒன்பதாவது அகில உலக பல்கலைக்கழக மாணவர் விழாவைத் துவக்கி வைத்துப் பேசுங்கால், பல்கலைக்கழக மாணவர்கள், நம் நாட்டிலுள்ள விவசாயிகளுடைய நிலைமையை உயர்த்தவும் நம் நாட்டு மக்களிடையே கல்வியறிவைப் பெருமளவு பரப்பவும் பாடுபடவேண்டுமென அறிவுரை வழங்கினுர்கள். அவர் மேலும் பேசுகையில், தற்போது பாரதத்தில் ஏற்பட்டுள்ள பிரச்சினைகளுக்கு முக்கிய காரணம், விவசாய உற்பத்தியை அதிகப்படுத்தத் தவறியதே எனக் குறிப்பிட்டார். இதனுல், கடந்த ஆண்டுகளில் கிராம மக்களிடையே சர்க்காரின் கொள்கைகளையும், நவீன விஞ்ஞான முறைகள் தரமுள்ள விதைகள், அதிக உர உபயோக அவசியம் பற்றியும் சொல்லப்படவில்லை என்பது பொருளல்ல.

இவையெல்லாம் சொல்லப்பட்டும், அனுஷ்டிக்கப்பட்டும் வந்துள்ள போதிலும், ஒரு ஏக்கராவில் விளையும் நெல் மகசூல் போற்றத்தக்க வகையில் அதிகரிக்கவில்லை. உலகத்திலுள்ள

பல்வேறு தேசங்களில் ஏக்கரா ஒன்றில் விளையும் அளவைப் பார்த்தால் இந்தியா கடைசி ஸ்தானத்தையே வகிக்கின்றது. இதற்குக் காரணம் நம் பூமி வளங்குன்றியுள்ள தென்பதல்ல. மற்ற பல நாடுகளிலில்லாத பல இயற்கை வசதிகளைக் கடவுள் நமக்கு அளித்திருந்தும் நம் நாட்டு விவசாய வளம் மிகக் குறைவாக இருந்து வருவது நமக்குப் பெருத்த வேதனை தருகிறது. இந்த ஆபத்து மிகவும் கடுமையானது. இதற்குத் தீவிர மானதோர் தீர்வு காணவேண் டும். இதுவரை இதுபற்றி முயற்சி யெடுக்கப்பட்டிருக்கின்ற தென் பது உண்மைதான். அவ்வப் போது இந்தப் பிரச்னையைப் பற்றி விவாதித்து நடவடிக்கை களும் எடுக்கப்பட்டன. ஆனால் நம் நடவடிக்கைகளைத் தொடர்ந்து மேற்கொண்டு தீர்வு காணும் வகையில் நாம் சொல்ல வில்லை யென்பதை நாம் ஒப்புக் கொண்டுதானாக வேண்டும். ஏதாவதொரு காரத்தினால் இந் திய சர்க்கார், தன் நிலக் கொள் கைகளைத் தீர்மானமாகத் தெளிவு படுத்தவோ அதை, தீவிரமாகக் கையாளவோ இல்லை. நிலச் சுவான்தார்களிடையேயும் விவ சாய மக்களிடமும் ஒரு அதிருப்தி மனப்பான்மையும் ஸ்திரமற்ற தன்மையும் உண்டாகியிருக் கிறது. ஆகவே இந்த இரு வகுப் பினருமே தங்கள் முழு சக்தியை யும் உற்பத்தியைப் பெருக்குவதில் உபயோகிக்கவில்லை. இந்த நிலைமை நீடிக்கும் வரையில் விவ சாயத்தில் மாறுதல் ஏற்படுத்து தோ அல்லது விவசாய உற்பத் தியை அதிகப்படுத்துவதோ சாத் தியமானதல்ல.

விவசாய உற்பத்தி குறைந் திருப்பதற்கு மற்றொரு முக்கிய காரணம் கிராம மக்களின் சக்தியை நாள்தோறும் திட்ட வட்டமாக உறிஞ்சி வரும் கிராமப் பொருளாதார நிலைமையேயாகும். பிரிட்டிஷ் அரசாங்கம் ஏற்பட்டதி லிருந்தே, அதிலும் சுமார் 100 ஆண்டுகளாகக் கிராம மக்க ளுக்கு வேண்டிய தேவைகளைப் பெருமளவுக்கு பூர்த்தி செய்து வந்த கிராமக் கைத் தொழில்கள் அழிக்கப்பட்டு கிராமக் கைத் தொழிலாளர்கள் தொழில்களை விட்டுவிட்டுப் போய்க்கொண் டிருக்கின்றனர்.

கிராமக் கைத்தொழில்கள் தற் போது அநேகமாகச் சீரழியும் நிலையிலிருக்கின்றன. ஆகவே தற்போதைய கிராமப் பொருளா தாரம் விவசாயத்தை மட்டுமே சார்ந்திருக்கிறது. இதன் விளை வாக விவசாயிகள் தங்களுக்கு வேண்டிய சகல தேவைப் பொருட்களையும் வாங்க வேண் டித் தங்களிடமுள்ள உணவுப் பொருட்களைச் செலவழிக்க வேண் டியிருக்கிறது. இதுமட்டுமல்லாமல் தற்போதைய நவ நாகரிகத்தின் காரணமாகத் தெரிந்தோ தெரி யாமலோ பல்வேறு நாகரிகப் பொருட்கள் கிராமப் புறங்களில் குவிக்கப்பட்டுள்ளன. இதனால் விவசாயிகள் தங்களிடமுள்ள உணவுப் பொருட்களையும் இழக்க வேண்டி வருகிறது. இத்தகைய ஆடம்பரப் பொருட்களை உப யோகப்படுத்துவதை சத்துள்ள பொருட்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கவேண்டியாவது தவிர்க் கலாம். மேற்கூறிய காரணங் களால் விவசாயிகள் தங்கள் உணவுக்குத் தேவையான அளவு கூட உணவு தானியங்கள் வைத் துக்கொள்ள இயலவில்லை.

ஆகவே சுமார் ஒரு நூற்றாண் டுக் காலமாகவே விவசாயிக்குப் போதுமான அளவு உணவு கிடைப்பதில்லை. சத்துள்ள

போதிய அளவு உணவு கிடைக்கப் பெறாத வறுமையில் வாடும் விவசாயிகளும் அவர்கள் சந்ததிகளும் தான் தற்காலத்தில் ஏர் பிடித்து விவசாயம் செய்து வருகின்றனர். அவர்கள் தான், ஒரு ஜோடி எருதுகள் பூட்டிய ஏர் கலப்பையை பிடித்துச் செல்லும் எஜமானர்கள். மேற்கூறிய எஜமானர்களின் நிலைமையே இவ்வாறு இருக்க எருதுகள் நிலை எப்படி இருக்குமென நாம் ஊகித்துக் கொள்ளலாம்.

பசு பரிபாலனம் (Go-Seva) நம் நாட்டில் இன்றும் என்றும் விவசாயத்துடன் இணைந்தே இருந்து வரும்.

முதியோர் கல்வி, எழுத்தறிவிப்பு இயக்கம், போன்றவைகள் மூலம் எவ்வளவுதான் அறிவுக்கு விருந்தளித்தபோதிலும், அவைகள் பட்டினியால் வாடும் மக்களுக்கு உதவி தராது; உற்சாகமளிக்காது. கிராம மக்கள் தாங்கள் உற்பத்தி செய்யும் பொருட்களைத் தங்களின் போதிய தேவைக்காக சேமித்து வைத்துக்கொண்டு, மிகுதியையே மற்றவர்கட்கு விற்கும்படி வழிவகுக்கப்படவேண்டும். இவ்வாறு செய்தால் தான் அவர்களுடைய மூளைக் குழாய்களும் நன்கு அபிவிருத்தி அடைந்து நல்ல முறையில் வேலை செய்யும். நாம் சொல்லும் பல விஷயங்களும் அவர்கள் மனத்திலே பட்டு, பதிந்திருக்கும். இது இல்லாவிட்டால், எவ்வளவு தான் பிரசாரம் செய்தாலும், சொல்லிக் கொடுத்தாலும் அவர்கள் மனத்தில் ஏறாது. ''பசி வந்திடப் பத்தும் பறந்து போகும்'' என்ற பழமொழிப்படி, கிராம மக்களுக்குத் தேவையான தேவைப் பொருட்களான முடிவுப் பொருட்களாக மாற்றும் வகையில்-கிராமக் கைத் தொழில்களை ஊக்குவிப்பது மிகவும் அவசியமாகிறது.

தற்போதுள்ள நாட்டின் நிலைமை அத்தகையதொரு மாற்றத்தையுண்டுபண்ண சாதகமாயிருப்பதாகத் தோன்றவில்லை. மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களும், கிராமப் பொருளாதாரத்தை உயர்த்தும் வகையில் வெற்றிபெறவில்லை. இது பற்றியே பூஜ்ய விநோபாஜீ அவர்கள் அவருக்கே உரித்தான வகையில், விவசாயத்தை சீதாப்பிராட்டிக்கும், கிராமக் கைத் தொழில்களை இராமபிரானுக்கும் ஒப்பிட்டுச் சொல்லியிருக்கிறார். கிராமக் கைத் தொழில்களின்றிய விவசாயம் இலங்கையில் அசோக வனத்திலிருந்த சீதைக் கொப்பாகும். ஆகவே இவைகளிரண்டையும் ஒன்று சேர்ப்பது மிக அவசியமும் அவசரமானதுமாகும்.

தேசிய மாதிரி சர்வே பிரசுரித்த சில புள்ளி விபரங்கள் எதிர்ப் பக்கத்தில் தரப்பட்டுள்ளன.

மேலும் சேகரித்த புள்ளிவிபரங்களின்படி, நம் நாட்டு மக்களில் சுமார் 200 மில்லியன் நபர்கள், அதாவது மக்கள் தொகையில் பாதிப்பேர், நபர் ஒருவர் மாதம் ஒன்றிற்கு ரூ 14-6 செலவிலேயே அதாவது — நாளொன்றுக்கு 50 பைசாவுக்குக் குறைவான தொகையிலேயே ஜீவிக்க வேண்டியிருக்கிறது. இந்திய நாட்டு மக்கள் தொகையில் 10, (அ) 11 சதவிகித மக்களே நாளொன்றுக்கு ரூபாய் ஒன்றுக்கு மேல் செலவு செய்யக்கூடிய நிலைமையிலிருக்கின்றனர். மேற்குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள நபர்கள் மாத்திரம் அதாவது சுமார் 200 மில்லியன் மக்கள் மட்டுமே, தத்தம் வீடுகளிலிருந்தே மணி 1க்குக் குறைந்தது 6 பை (அ)

| வேலை வாய்ப்பு | ஈடுபட்டுள்ள மக்களின் எண்ணிக்கை கோடிக்கணக்கில் | | |
|---|---|---|---|
| ஒரு நாளில் | கிராமப் புறம் | நகரப் புறம் | மொத்தம் |
| 1. 1 மணியும் அதற்குக் குறைவாகவும் | 1.9 | 0.2 | 2.1 |
| 2. ஒரு நாளில் இரண்டு மணியும் அதற்குக் குறைவாகவும் | 2.4 | 0.3 | 2.7 |
| 3. ஒரு நாளில் 4 நான்கு மணியும் அதற்குக் குறைவாகவும் | 4.0 | 0.5 | 4.5 |

9 பை சம்பாதித்தால்கூட, அவர்களுடைய வாழ்க்கைத்தரம் பாதிக்கு மேல் உயர்ந்துவிடும். சர்க்கார் புள்ளி விபரங்களின் படி, 1960-61ல் உத்தரபிரதேத்தில், கிராம மக்களின் நபர் ஒருவரின் வருடாந்திர வருமானம் ரூ 205 ஆகவே இருந்தது. அதே சமயத்தில் நகர மக்களின் சராசரி வருமானம் ரூ 686 ஆக இருந்தது. இந்த நிலைமையில் ஏழை விவசாயிகள் தங்கள் வருவாயில் பெரும் பகுதியை உணவிற்காகச் செலவிட வேண்டியிருக்கிறது. இதன் நிமித்தம் கிராம மக்களின் வாழ்க்கைத்தரம் மிகவும் குறைந்து போயிருக்கிறது.

பேராசிரியர் மஹலனுபிஸ், அவர்களால் இரண்டாவது ஐந்தாண்டுத்திட்டம் வகுக்கும்போது சமர்ப்பிக்கப்பட்ட சிபார்சுகள் இங்கு குறிப்பிடத்தக்கவையாகும். நாட்டில் வேலையின்மையை அறவே ஒழிக்கும் வரையில் அல்லது வேலையில்லாத் திண்டாட்டத்தைக் கட்டுப்படுத்தும் வரையில் தொழிற்சாலைகள் மூலம் உற்பத்தியாகும் பொருட்களுக்கும் கைத்தொழில்களினால் உற்பத்தி செய்யப்படும் பொருட்களுக்கும் இடையே ஏற்படும் போட்டியைத் தடுக்கவேண்டும். சிறு கைத்தொழில்கள் மூலம் வேலை வாய்ப்பளிக்கவேண்டி, மக்கள் தேவைகளுக்கான அத்தியாவசியமான பொருட்களை உற்பத்தி செய்யும் பெரும் தொழிற்சாலைகளுக்கு அளிக்கும் முதலீடுகளைக் குறைக்கவேண்டும். துரதிர்ஷ்டவசமாக இதுவரையில் இந்தத் துறையில் குறிப்பிடத்தக்க வகையில் யாதொன்றும் செய்யப்படவில்லை. அதோடன்றி நாளுக்கு நாள் கிராமக் கைத்தொழில்களை அழிக்கும் வகையில் பெரிய பெரிய கனரகத் தொழில்களும், நடுரகத் தொழில்களும் ஏற்படுத்தப்படவே அதன் நிமித்தம் வேலையை இழக்க நேரிட்ட மக்களுக்கு வேறுவித வேலை வாய்ப்பும் அளிக்கப்படுவதில்லை.

நம் அன்பிற்குரிய காலஞ்சென்ற பண்டித ஜவாஹர்லால்ஜீ அவர்கள் "சீனா ஜனநாயகத்தை உருவாக்குகிறது" என்ற நூலின் முகவுரையில் கூறியதை இங்கு குறிப்பிடுகிறேன்.

"கிராமக்கைத்தொழில்களுக்கு முக்யத்துவம் அளித்ததன் மூலம் காந்திஜீ அவர்கள் மகத்தான சேவை செய்திருக்கிறார். மனித

சக்தியை வீணுக்குவதாகவோ அல்லது மக்களை வேலையை இழக்கச் செய்வதாகவோ உள்ள எந்தத் திட்டமும் நாட்டிற்குக் கேட்டை விளைவிக்கும். பெரும்பாலான மக்களை வேலையில்லாமல் வைத்திருப்பதைவிட அதிகப்படியான மக்களுக்குக் குறைந்த அளவாவது வருமானம் கிடைக்கும்படி செய்வது மிகவும் நல்லதாகும். நமது நோக்கம் அதிக உற்பத்தியையும் சம விநியோகமும், வேலையின்மை யென்பதைப் போக்கிவிடுவதுமேயாகும். நாம் எடுத்தவுடனேயே சிறு தொழில்களை மேற்கொள்ளலாகாது. அதற்குக் காரணம் நம்மிடமுள்ள மூலதனம் கனரகத் தொழில்களுக்குத் தேவைப்படுகிறது என்பதோடு அத்தகைய சிறு தொழில்கள் குடிசைத் தொழில்களுக்கு முரண்பாடாக நேர்ந்து, வேலையின்மையை உண்டாக்கிவிடும் என்பதே.

இதே சமயத்தில் தொழில் நுட்பம் மிக அதிகமாக வளர்ந்து வரும் இந்நாளில் விஞ்ஞான அறிவு, உற்பத்தியைப் பெருக்குவதில் எவ்வளவு தூரம் செயல்பட்டு வருகிறது என்பதையும் அதன் அவசியத்தையும் யாரும் புறக்கணிக்கவும் முடியாது. ஆனால் அதைக் கையாள்வதென்பது அநேக இதர விஷயங்களையும் பொறுத்துள்ளது. அதாவது நாட்டில் கிடைக்கும் மூலப் பொருட்களும் அதை உபயோகித்துத் தொழில் நடத்தக்கூடிய திறமை வாய்ந்த தொழிலாளர்கள் கிடைக்கப் பெறுதலையும் பொறுத்துள்ளது. நம் நாட்டுத் தொழிலாளர்கள் போதிய கல்வியறிவு பெற்று நவீன உபகரணங்களை உபயோகிக்க சில காலம் பிடிக்கும். நமக்கு அதுவரையில் தற்போதுள்ள முறைகளைக் கையாண்டு நாளடைவில் புது முறைகளைப் புகுத்துவதைத் தவிர வேறுவழியில்லை. அதுபற்றித்தான் ஸ்ரீ. ஜெயப்பிரகாஷ் நாராயணன் அவர்கள் சமீபகாலமாக "கிராமிய தைத்தொழில் கமிஷன்" (Rural-Industrialisation Commission) ஏற்படுத்தவேண்டுமெனக் கூறிவருகிருர். அதை சமீபத்தில் நடைபெற்ற அகில-இந்திய கதர் கிராமக் கைத்தொழில் போர்டும் அங்கீகரித்துள்ளது.

1962-ஆம் ஆண்டில் திரு V.L. மேத்தா அவர்கள் பின்வருமாறு கூறியிருக்கிருர்.

"கதர் கிராமக் கைத்தொழில் கமிஷனே அல்லது அது போன்ற இதர போர்டுகளோ செய்துவரும் வேலைகள் பல்வேறு அம்சங்களும் அடங்கிய பரந்ததொரு முழு வளர்ச்சித் திட்டம் தயாரிக்கப்பட வேண்டுமென்ருல் கிராமங்களைத் தொழில் மயமாக்கத்தக்கதொரு வகையில் ஒன்றுபட்ட நோக்கம் கொள்ளவேண்டியது மிகவும் அவசியம். அதோடுகூட நாட்டில் தொழில்களை வளரச் செய்யும் திட்டமானது ஒருமைப்பட்ட கிராம அபிவிருத்தித் திட்டத்தின் ஒரு பாகமாக இருக்க வேண்டுமேயன்றி தனித்தனியாக ஒன்றுக்கொன்று சம்பந்தமின்றி வகுக்கப்பட்ட திட்டங்களின் தொகுப்பாக மட்டுமே இருக்கக்கூடாது."

இந்த அடிப்படையில்தான் கதர் கிராமக் கைத்தொழில் கமிஷனின் "இணைந்த அபிவிருத்தித் திட்டம்" முக்யத்வம் பெறுகிறது. 1960ஆம் ஆண்டு ஜெய்பூர் தீர்மானங்களை பரிசீலனை செய்து திரு. V. L. மேத்தா அவர்கள் எழுதியதாவது: "மிகவும் முக்கியமாக வற்புறுத்தப்பட்ட

விஷயம் நாட்டின் சுபிட்சத்திற்கு தற்போள்ள விவசாயத்தையே முழுதும் நம்பி இருக்கும் நிலைமை குறையவேண்டும். அதற்கு மிக வும் வேண்டப்படுவது விவசா யத்தை ஒட்டிய கிராம கைத் தொழில்களைக்கொண்டவகையில் கிராமப் பொருளாதாரம் திருத்தி அமைக்கப்படல் வேண்டும். அது ஏற்பட்டால்தான் லட்சோப லட் சம் மக்கள் வேலையற்று அவர் களுடைய சக்தி திறமை முதலா னவைகள் வீணாக்கப்படுவது தடுக்கப்பட்டு, அவர்களும் நாட் டின் உற்பத்தியைப் பெருக்க சந் தர்ப்பம் அடைவார்கள். அதை விட முக்கியமான விஷயம், அத் தகைய நிலை ஏற்பட்டால்தான் கிராமங்களில் வாழும் ஆண் களும் பெண்களும், தாங்களும் தேச நிர்மாணப் பணிகளில் ஈடு பட்டு தத்தம் பங்கைச் செலுத்து கிறோம் என்ற மன நிறைவு அடைவர். கிராம சமுதாயம், தங்கள் கிராமங்களிலுள்ள மூல தனத்தின் மூலம் கிராம மக்கள் ஒவ்வொருவருக்கும்வாழ்க்கைக்கு வேண்டிய அடிப்படைத் தேவை களைப்பூர்த்தி செய்வதையே தன் முதற் கடமையாகவும் பொறுப் பாகவும் கொள்ளச் செய்வதே, புதிய திருப்பம் '(இணைந்த அபி விருத்தி') என்ற திட்டத்தின் முக்கிய நோக்கமாகும்.

ஆகவே இணைந்த அபிவிருத்தி திட்டத்தின் முக்கிய கொள்கை, கிராம சமுதாயமே. கிராமத்தி லுள்ள சகல மக்களும் நல்வாழ்வு வாழ நல்லதொரு திட்டம் தீட்டி, அதை வெற்றிபெற நடத்திக் கொடுக்கவேண்டும் என்பதே.

இதை நிறைவேற்ற கிராம அபிவிருத்தி வேலைகளில் ஈடுபாடு கொண்டுள்ள சகலருடைய (சர்க் கார் உள்பட) ஒத்துழைப்பும் கோரப்படுகிறது. ஆகவே சர்க் கார் "கிராமிய தொழில் கமி ஷனை" ஏற்படுத்தி, மேற்படி கமிஷன், கைத்தொழில்கள் மட்டு மின்றி விவசாயம், கல்வி, சமூக பொருளாதாரத் திட்டங்களையும் தீட்டி செயல்படுத்த உதவி செய் தல் வேண்டும்.

இத்தகைய முழு வளர்ச்சித் திட்டங்கள் வகுக்கும் வகையில் கூட்டுறவு சங்கங்களும், தங்கள் பெரும்பங்கை நிறைவேற்றலாம். ஆனால் துரதிருஷ்டவசமாக இன் றைய தினத்தில் கூட்டுறவு சங் கங்கள் அத்தகையதொரு ஒருமை பட்ட திட்டத்தை நிறைவேற்றும் வகையில் நடவடிக்கைகளை மேற் கொள்ள முன்வரும் தைரியம் கொண்டனவாக இல்லை.

கூட்டுறவு வங்கிகள், தொழில் அபிவிருத்திக்குக் கடன் வசதி அளிக்க கூச்சப்படுகிறது. கூட்டு றவு சங்கங்கள் அத்தகைய கொள் கைகளை வகுத்தத்தக்க முறையில் சர்க்காரும் உதவி செய்ய முன்வர வேண்டும். இது செய்யப்படாவிட் டால் விவசாய அபிவிருத்தி ஏற் படும் என்று சொல்வதற்கில்லை. இந்திய நாடு ஒரு விவசாய நாடாக இருந்தும் விவசாய அபி விருத்தியின் பொறுப்பு விவசாயத் தில் ஈடுபட்டுள்ள மக்களால் பெரும்பான்மையாக நடத்தப்படா மல் இருப்பது பரிதாபத்திற்குரிய விஷயம். சர்க்காரும், வங்கிகளும், விவசாயத்தை ஒரு லாபம் தரும் தொழிலாக எடுத்துக் கொள்ள வில்லை. ஒவ்வொரு விவசாயியும், விவசாயம் செய்ய போதியஅளவு பண வசதி கொண்டிருக்க வேண் டும். அதற்கேற்ப விவசாயிக்கு உதவியும் அளிக்கப்பட வேண் டும்.

ஆகவே விவசாய உற்பத்தி பெருகி கிராம வாழ்வு, வளம் பெற்று சீரும் சிறப்பும் கொண்டு திகழவேண்டி என்னென்ன செய் யப்படவேண்டும்,

1. சர்க்கார் தன்னுடைய நிலக் கொள்கையை தெளிவுபடுத்திக் கூறி அதை உறுதியோடு செயல் படுத்தல்வேண்டும்.

2. விவசாய உற்பத்தியை பசு பரிபாலனத்துடன் இணைக்க வேண்டும்.

3. சர்க்கார் தன்னுடைய தொழில் கொள்கையைத் தெளிவு படுத்தி நாட்டிலுள்ள வேலை செய்ய விரும்பும், வேலையற்றிருக் கும் அனைவருக்கும் வேலை வாய்ப் பளிக்கும் வகையில் கிராமக் கைத் தொழில்களை அபிவிருத்தி செய் தல் வேண்டும்.

4. தன்னுடைய ஆராய்ச்சி நிலையங்களை முடுக்கிவிட்டு பரவல் முறையில் மேற்கொள்ளப்பட வேண்டிய கிராம கைத்தொழில் களைதிறம்படச்செய்ய நவீன விஞ் ஞான முறை கருவிகளை எவ்வளவு அதிகமாக முடியுமோ அவ்வளவு புகுத்துதல் வேண்டும்.

5. ''கிராமிய தொழில் கமி ஷனை'' ஏற்படுத்தி அது தன் வேலைகளைத் திறம்படச் செய்யும் வகையில் அதற்குத்தேவையான அதிகாரங்களை சர்க்கார் வழங்கு தல் வேண்டும்.

6. தொழில் அபிவிருத்தி வேலை களுக்குத்தரப்படுவதைப்போன்று விவசாயிகளுக்கும் கூட்டுறவு சங் கங்கள் மூலமும், வங்கிகள் மூல மும், தேவையான அளவு கடன் வசதி அளித்தல் மிகமிக அவசி யம்.

7. எல்லாவற்றிலும் முக்கிய மாக, கிராமசமுதாயமே ஒருமைப் பட்ட அபிவிருத்திக்கான திட்டங் கள் வகுப்பதில் அதை வெற்றி கரமாக நிறைவேற்ற கிராம மக்களுக்கு சகல விதங்களிலும் உதவி அளிக்கப்படவேண்டும்.



## அன்பு வழி

ஸ்டோன் என்பவர் ஒரு சிறு ரயில்வே ஸ்டேஷனில் சாமான் ஏற்றும் ஏஜண்டாக இருந்தார். ஒருநாள் இரண்டு நீக்ரோக்கள், ரயிலில் ஒரு சாமானை ஏற்றவந்தார்கள். அவர்கள் கேட்ட கேள்விக்கு ஒன்றன்பின் ஒன்ருகப் பதில் சொல்லி அலுத்துப் போனுர் ஸ்டோன். அவர் சீறிவிழ ஆரம்பித்ததும், நீக்ரோக்கள் கேள்வி கேட்பதை நிறுத்திக் கொண்டு, அப்பால் சென்று குசுகுசு என்று பேசிக் கொண் டார்கள்.

''இப்படித்தான் எங்கும் இருக்கிறது. ஸ்டேஷன் எவ்வளவுக் கெவ்வளவு சின்னதாக இருக்கிறதோ, அவ்வளவுக் கவ்வளவு அந்த ஸ்டேஷன் மாஸ்டரின் வாய் பெரிதாக இருக்கிறது''

ஸ்டோன் அவர்கள் பேசியதைக் கவனித்துக் கொண்டிருந் தார். அன்றிலிருந்து யார் என்ன கேள்வி கேட்டாலும் அன்புடன் சலிப்பில்லாமல் பதில் சொல்லி வந்தார்.

இந்த அன்புவழியே பிற்காலத்தில், மிசிசிபி மாகாணத்தின் கவர்னராகும் சிறப்பை அவருக்குத் தேடித் தந்தது.

**இரண்டு தலைமுறைக்கு முன்னே வாழ்ந்த புலவர்கள், எழுச்சியும் வேகமும் நிறைந்த பாடல்களைப் பாடினார்கள். அவர்கள் வாக்கிலே ஒரு துடிப்பும், துணிச்சலும் இருந்தன. மொழி தங்களுக்கு வசமாகி விட்டது என்ற பூரிப்பிலே அவர்களுக்கு ஏற்பட்ட பெருமிதத்திற்கு ஈடு சொல்லமுடியாது. சிறந்த தெய்வ இலக்கியங்கள் பலவற்றை ஆக்கியருளிய பாடுவார் முத்தப்பர் அந்தத் தலைமுறையைச் சேர்ந்தவர்.**

# பாடுவார் முத்தப்பர்

**நாக முத்தையா**

இசை பாடுபவர்கள் அத்தனை பேர்களுமே பாடுவார் என்றுதான் அழைக்கப்படுவர். பாட்டுக்களை நினைத்த மாத்திரத்தானே இயற்றிப் பாடுவார் என்ற சிறப்புப் பெயரை அடைந்த பெருமை பாடுவார் முத்தப்பர் ஒருவருக்கே உரித்து. இன்று, கவிதை எழுதுபவர்களைக் கவிஞர் என்று, அழைப்பதைப் போல அன்று முத்தப்பரைப் புலவர் பெருமக்கள் பாடுவார் என்று அழைத்தனரே தவிரக் கவிஞர் என்று அடையிட்டுக் கூறவில்லை.

கோயிலூரில் மடங்கட்டி, மத சம்பந்தமான உண்மைகளை மக்களுக்குப் பரப்பி வந்த முத்து ராமலிங்க அடிகளார்தாம், முத்தப்பருக்குப் பாடுவார் என்ற பட்டப் பெயரைச் சூடியதாக அறிய இடமிருக்கிறது. முத்தப்பரின் சம காலப் புலவர்களாக வாழ்ந்தவர்கள் செவ்வூர் அழகுப் புலவர், சிவகங்கை முத்தழகுப் பிள்ளை, ஞானாசிரியரான பாதரக்குடி சேனாபதி அடிகள்—மிதிலைப்பட்டி வேலு கவிராயர், இராங்கியம் முத்து வீரப்பப் பிள்ளை—வெண்பாப்புலி வீரகவிராயர், முதலியோர் அவர்.

முத்தப்பர் நாட்டுக்கோட்டை நகரத்தார் இனத்தைச் சார்ந்தவர். தந்தையார் பெயர் அழகப்ப செட்டியார்; தாயார் இலட்சு ஆச்சி. பிறந்த ஆண்டு 1760. பெற்றோர்களுக்கு ஒரேபிள்ளை—ஒப்பற்ற பிள்ளையுங் கூட! நேமங் கோயில் பிரிவைச் சேர்ந்தவர். பிறந்த ஊர் கீழச்சிவல்பட்டி.

அந்தக் காலத்தில்—பதினெட்டாம் நூற்றாண்டில்-செட்டிநாட்டு மக்கள் கூரைக் குடிசைகளில் தாம் வாழ்ந்து வந்தனர். பணத்தையே பொருளாகக் கொண்டு வணிகஞ் செய்து வந்தமையால் தான் அவர்கள் 'தன வணிகர்' என்று அழைக்கப் பட்டனர் போலும். அக்காலச்செட்டிநாட்டு

எல்லை கீழே காண்பது போலப் பரந்து கிடந்தது என்பதைப் பாடுவாரின் பாட்டு ஒன்றிலேயே அறிய முடிகின்றனது.

‘வெள்ளா றதுவடக்காம்;
 மேற்குப் பிரான்மலையாம்;
தெள்ளார் புனல்வையை
 தெற்காகும்—ஒள்ளியநீர்
எட்டிக்கடல் கிழக்காம்;
 இஃதன்றோ நாட்டரண்சேர்
செட்டி நாட் டெல்லையெனச்
 செப்பு.’

பாடுவார் முத்தப்ப செட்டியார் செட்டிநாடு முழுதும் சுற்றிப் பார்த்து, நாட்டு மக்கள் நிலையை நன்கு உணர்ந்து, ‘செட்டிமார் வரலாறு’ என ஒரு நூல் எழுதி இருப்பதாக ஒரு செய்தி இன்னும் வழங்கி வரக் காணுகிறோமே யன்றி நூலைக் காண இயல வில்லை. போக்குவரத்துச் சாதனங்கள் இன்றிருப்பதுபோல அன்று இல்லை. இந்தநிலையில் பல ஊர்களையும் பாடுவார் முத்தப்பர் போய்ப் பார்த்து வந்துள்ளார் என்றால் அவருக்கு நாட்டுமக்களிடத்து இருந்த நன்மதிப்பை என்னென்று கூறுவது?

ஒருமுறை செவ்வூருக்குப்போய் இருந்தார். அங்கு கிடைத்தது நல்ல வெயில். நல்லபசி. நல்ல களைப்பு. ஆனால் கிடையாதது நல்ல உணவு. எனவே கிடைத்ததை மறக்கக் கிடைக்காததை எதிர்பார்த்தார். கிட்டவில்லை. ஏற்கனவே இருந்த பசியை, உபசரிப்பார் இல்லை என்ற எண்ணம் கிள்ளிப் பெருகச் செய்து விட்டது. ஆத்திரம் வெளிப்படும்போது சொற்களாகப் பிறக்கும் சாமானிய மக்களைப் பொறுத்த மட்டில். ஆனால் பாடுவாரைப் பொறுத்த மட்டில் அது பாட்டாகவே வெளிக்கிளம்பியது.

‘எவ்வூரிற் போனாலும்
 எவ்வுலகில் சென்றாலும்
செவ்வூரில் போகமனம்
 செல்லாதே—அவ்வூரார்
பார்த்திருக்கத் தின்பர்;
 பசித்தார் முகம்பாரார்
கோத்திரத்துக் குள்ள
 குணம்.’

இப்பாட்டை வழியில் போய்க் கொண்டிருந்த ஒரு செட்டியார் கேட்டுவிட்டார். அவருக்குப் பாடுவார் முத்தப்பரின் பெயர் தெரியுமே அல்லாமல் ஆள் தெரியாது. இருப்பினும் அவர் பாடுவார் முத்தப்பராகத் தான் இருக்க வேண்டும் என்பதை ஊகித்துக் கொண்டு, ஓடோடிச் சென்று, உபசரித்து வரவேற்று, உள்ளே அழைத்துப் போய் உளமார உணவளித்தார்.

விருந்து முடிந்ததும் செவ்வூரின் சிறப்பைப் பற்றி பாடித் தரும்படி பணிவோடு கேட்டுக் கொண்டார். வேண்டுகோளுக் கிணங்கிய வித்தகர் முத்தப்பர் கீழே காண்பதுபோல முன்னர்ப் பாடிய பாட்டைச் சிறிது மாற்றிச் சிறப்பித்துப் பாடினார்.

எவ்வூரில் போனாலும்
 எவ்வுலகிற் சென்றாலும்
செவ்வூரில் போகமனம்
 செல்லுமே—அவ்வூரார்
பார்த்திருக்கத் தின்னார்;
 பசித்தார் முகம்பார்ப்பர்
கோத்திரத்துக் குள்ள
 குணம்.

மற்றொரு முறை அரியக்குடியென்ற சிற்றூருக்குச் சென்றார். அவ்வூர் மக்கள் முத்தப்பரை முன் வந்தழைத்துப் போற்ற வில்லை. முத்தப்பருக்குக் கோபம் வந்து விட்டது.

‘அரியக் குடிநகரம் அத்தனை பேர் அத்தனையும்’ என்று பாடத்

தொடங்கினர். ஊர்மக்கள் உண்மையை உணர்ந்துகொண்டனர். வந்தவரை உபசரிக்காமல் வருந்தச் செய்து பரம்பரைக்குச் சொந்தமென வசைப்பாடலை வாரிக் கட்டிக் கொள்ளுதல் பெரும்பழியாகும் என்பதெண்ணி பாடுவாரைப் பரிவோடு வரவேற்றுப் போற்றினர். போற்றிப் புகழ்ந்த பிறகு தொடங்கிய வசைப்பாடலை, இசைப்பாடலாக முடித்துத் தரும்படி வேண்டிக் கொண்டனர். முத்தப்பரும் அவர்கள் எண்ணத்தை ஈடேற்றித் தந்தார்.

"அரியக் குடிநகரம்
அத்தனைபேர் சுற்று
வரிசைக் குடியாக
வாழ்க—பெரிய
தெரியாரைப் போன்றிருந்தார்
தேடிவந்தார் பின்னர்
உரியாரைப் போன்றார்
உகந்து!"

அன்றிலிருந்து இன்றுவரை அரியக் குடிச் செட்டியார்கள் வரிசையாகக் கூடுதலும் குறைதலும் இன்றி ஒரே அளவினராக வாழ்ந்து வருகின்றனர் என்ற செய்தி வழங்கி வருகிறது. கோட்டையூருக்குப் பிறிதொரு முறை சென்றார். பாடுவாரின் பீடும், பெருமையும் உணர்ந்த கோட்டையூர் நகரத்தார் அவரை அன்போடு அழைத்து, அறுசுவை உணவு தந்து போற்றினர். உடனே அவ்வூர் மக்களைப் புகழ்ந்து இரு பாட்டுக்கள் பாடினார் முத்தப்பர்.

பாடல் இதுதான்:

"கோட்டையூர் மாவணிகர்
கொண்டு விற்றுக்
கொண்டு வந்த
ஏட்டையெலாம் கண்டே
இயம்பினோம்- கோட்டையூர்
நாட்டைவிட்டுச் சென்ற
நகரத்தார் யாவரும்பொன்
கோட்டையுடன் வருவர்
கொண்டு."

"நீர்பெருகி ஊற்றெடுக்கும்
நீண்டபுகழ்க் கோட்டை
ஊர்பெருகி ஊற்றெடுக்கும்
ஊருணிகள்—சீர்பெருகி
அன்னஊ ரன்ன
அருஞ்செல்வம் வீற்றிருக்கும்
பின்னுமோர் ஊழிபேர்
இட்டு."

சாதிச் சண்டை, சமயப் பூசல் தலைவிரித்தாடிய நேரத்தில் பாடுவார் நாகூர் சென்று 'சுவாமி தரிசனம்' செய்ய விரும்பினார். நாகூரில் இருந்த சில முஸ்லிம் சிறுவர்கள் செட்டியாரின் மீது கல்லையும் மண்ணையும் எறிந்து விரட்ட முன்வந்தனர். எதிர்ப்பைச் சமாளித்துக் கொண்டு ஆண்டவனை வழிபட்ட முத்தப்பர் பின்வரும் பாடலைப் பாடினார்:

மன்னர்புகழ் நாகூரில்
திருமாலே!
நினைக்காண
வருங் காலத்தில்
என்ன சொல்வோம்,
சில பயல்கள்
எங்கள்மேல் மண்வாரி
இறைத்துப் பின்னும்
சொன்ன சொன்ன
உதாசினங்கள்
மெத்தவுள; ஆகையினால்
துரையே! நீதான்
உன்னிடத்தில் ஞாயம்
நடுவிருந்தால் கேட்பாய்!
உலகளந்தாய்! இதுகடமை
உனக்குத்தானே?"

முத்தப்பரின் துயரப் பாடலைச் செவியுற்ற முஸ்லிம் பெரியவர்கள், செட்டியாரிடம் சென்று சிறு

பிள்ளைகள் செய்த சிறுமைகளுக்காக மன்னிப்புக் கேட்டுக் கொண்டனர். செட்டியாரும் முஸ்லீம் பெரியோர்களின் செய்கையைப் பாராட்டி அவர்களோடு பேசி அளாவளாவி விட்டு வீடு திரும்பினர். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகுதான், நாகூரில் செட்டியார்களுக்காகவே ஒரு குருக்கள் கோவிலில் நியமிக்கப்பட்டார். அந்த குருக்கள்வேலை பார்த்து வரும் முஸ்லிம் பெரியவர்க்கு இன்றும் 'செட்டியார் சாகிப்' என்றுதான் பெயர். இப்போது நாகூர் இந்து—முஸ்லீம்களின் இணைப்புக் கூடமாகத்திகழ்கிறது என்ருல் அதற்குப் பல நாட்களுக்கு முன்னரே வித்திட்ட பெருமை முத்தப்பரையே சாரும்.

முருகக் கடவுளின் முக்கிய தலங்களுக்குள் ஒன்ருக விளங்கும் சிக்கலில் ஒரு சிறந்த சம்பவம் நடந்ததாகக் கூறிகின்ருர்கள். சேனுபதியாருடன் முத்தப்பர் சிக்கல் என்ற ஊருக்குச் சென்றிருந்தார். நல்ல இருட்டு நேரம், மழையோ 'சோ'வெனக் கொட்டிக் கொண்டிருந்தது. மடத்தில் தங்கி இருந்த செட்டியாருக்கு உறக்கமே வரவில்லை. வெற்றிலை போட்டுப் போட்டுப் பழக்கப்பட்ட செட்டியாருக்கு அத்தியாவசியத் தேவையாக இருந்தது வெற்றிலை, யாரிடமாவது வெற்றிலை இருக்கிறதா என்று வினவினர். எல்லோரும் கையை விரித்து விட்டனர். என்ன செய்வார் செட்டியார்? செய்வதறியாமல் விழித்துக் கொண்டிருந்தார்.

அப்போது மழைக்காக மடத்து வாசலில் நின்று கொண்டிருந்த சிறுபெண், 'செட்டியாருக்கு நான் தருகிறேன் வெற்றிலை,' எனக் கூறி ஒரு கவுளிக்கும் மேலான வெற்றிலையை அள்ளிக் கொடுத்து விட்டு அங்கிருந்து மறைந்து விட்டாளாம். 'ஆண்டவனின் அருள் திறம் இது,' என்பதாக இச்செய்தி நம்பப்படுகிறது.

ஒருமுறை முத்தப்பர் பாதரக்குடிக்குச் சென்ருர். ஊர் எல்லாம் சுற்றித் திரிந்துவிட்டு உறங்குதற்காகத்தான் சேனுபதி அடிகளின் சிற்றிலை நாடிச் செட்டியார் சென்ருர். முத்தப்பரின் முகத்தைப் பார்த்துச், சோர்வை உணர்ந்து கொண்ட சேனுபதி அடிகளார், சோறு உண்டிருக்க மாட்டார் என்பதைப் புரிந்து கொண்டு, 'பழங்கஞ்சி இருக்கிறது. அதையேனும் சாப்பிட்லாம்,' என்று அழைத்துச் சென்று அமுதிட்டார். கஞ்சியைக் குடித்ததும் செட்டியாரின் நன்றி யறிதல் நல்லதொரு கவிதையாக உருப்பெற்று விட்டது.

'தலஞ் சேரு மூவேந்தர்
  புவிவரை ஞானமுடி
  தரித்தோன் கீர்த்தி
நலஞ்சேர்ந்ததனக்கிணையான்
  வணிகேசர்க் கைந்தெழுத்தை
  நவிலுங் கோமான்
வளர்சேரும் புனவாயற்
  பாதரக்குடிச் சேனுபதி தன்
  மடத்தில் உண்ணும்
பழஞ்சோற்றுக் கிணை வருமோ
  மற்ற மடபதிகள் செயும்
  பவிசுதானே?'

பழஞ் சோருக இருந்தாலும், காலமறிந்து செய்யும் உதவி ஞாலத்தின் பெரிதல்லவா? அதனுல்தான் சேனுபதி அடிகளாரை அவ்வளவு உயர்வாகப் புகழ்ந்து பாடினுர் புலவர்.

பாடுவார் முத்தப்ப செட்டியாருக்குப் பழனி போகவேண்டும் என்ற ஆசை இருந்தது. ஒருமுறை அதற்காகப் புறப்பட்டுப் போனுர். போகும் வழியில் எரசு நகரம் என்ற சிற்றூர் ஒன்று உண்டு. அவ்வூரில் ஒரு ஜமீன்

தார் வாழ்ந்து வந்தார். அவர் பெயர் இம்முடி லிங்கேந்திரர். அவர் கொடுமையின் குடியிருப் பாக, தீமைகளின் திருவிடமாகத் திகழ்ந்தார். மிகமிகப் பொல்லா தவர். 'தொப்பவீரன்' என்ற செல்வந்தனைக் கொன்று பெரும் பொருளை அபகரித்துக் கொண்ட தாக இம்முடி லிங்கேந்திரர்க்கு ஒரு பழி உண்டு. அத்தகைய கொடியவனைப் புகழ்ந்து வெண் பாப்புலிக் கவிராயர் என்பவர் ஒரு பாடலை எழுதி இருந்தார். பணத்துக்காக எழுதப்பட்ட பாடல் அது.

'இம்முடிலிங் கேந்திரதுரைக்
கேற்க நடந்தோர்கள் எல்லாம்
தம்முடிகொண் டேஉலகில்
தாம்வாழ்வார்.'

இப்பாடலை மூலை முடுக்கெல்லாம் எழுதிப் பரப்பி இருந்தார்கள். முத்தப்பரும் இப்பாடலைப் படித் துப் பார்த்தார். நெஞ்சம் பதறி யது. கரித்துண்டைத் தேடி எடுத்தார். அப்பாடலின் கீழே எழுதத் தொடங்கினார்.

"—சும்மாவோ ?
தப்பில் தலையிழப்பார்;
காட்சியொன்று வேண்டு
மெனில்
சுப்பனெனும் தொப்பை வீர
னும்."

பாட்டை எழுதி முற்றுப் பெறச் செய்துவிட்டு பழனிக்குப் போய் சுவாமி தரிசனம் செய்தார். பின் வீடு திரும்பினார். வீட்டுக்குப் போனதும் அவருக்கு ஒரு பயம் பிறந்துவிட்டது. வெண்பாப் புலி யாரின் கோபத்துக்கு ஆளாகி இருக்கக்கூடாது என்று பலமுறை சிந்தனை செய்தார். மேலும் கொடியவனின் கோபம் உயி ருக்கே ஊறாக மாறக் கூடும் என உன்னி உன்னி உருகினார். மிது லைப்பட்டி வேலுக் கவிராயரின் நினைவு வந்தது. அவர் முத்தப்ப ருக்கு நெருங்கிய நண்பர். மேலும் வெண்பாப் புலியின் நெருங்கிய உறவினருங்கூட! எனவே வேலுக் கவிராயரின் வீட்டுக்கு விரைந் தார் செட்டியார்.

வெண்பாப்புலி வீரகவிராயர் முத்தப்பரைவிடப் பத்து ஆண்டு கள் மூத்தவர். மணப்பச்சேரி என்ற ஊரில் பிறந்தவர். மிதுலைப் பட்டியில் திருமணஞ் செய்து கொண்டவர். திருமண உறவால் வேலுக்கவிராயரை மருமகனாக அடைந்தவர். வெண்பாப் பாடு வதில் ஈடு இணையற்றவர். வசை பாடுவதில் நசை மிக்குற்றவர். வெண்பாப் பாட்டுக்களுக்காக வெள்ளியாலும் தங்கத்தாலும் பரி சுகள் பலப்பல பெற்ற பேறுடைய வர். முன் கோபக்காரர்.

பாடுவார் முத்தப்பரின் பாடலை அறிந்ததும் வெண்பாப்புலிக் குக் கோபம் வந்து விட்டது. விரைந்து சென்றார் கீழச்சிவல் பட்டிக்கு! செட்டியார் மிதுலைப் பட்டியில் இருக்கிறார் என்பதை அறிந்ததும், நேராக மிதுலைப்பட் டிக்கே வந்து சேர்ந்தார். வேலுக் கவிராயரின் வீட்டில் இறங்கினார். புலியை விரட்ட வேல் இருக் கிறது என்ற தைரியத்தில்— வெண்பாப்புலியை விரட்ட வேலுக் கவிராயர் இருக்கிறார் என்ற எண்ணத்தில்—செட்டியார் வீட்டுக்குள் பதுங்கிக் கொண் டார். 'மூத்தவனான என்னை முத் தப்பன் எப்படி வெல்ல முடியும்?' என்று சிரித்துக் கொண்டே கரு வத்தோடு கேட்டார் வெண்பாப் புலியார்.

செட்டியார் உள்ளே இருந்த படியே பதில் சொன்னார்: 'முன்னே முளைத்த காதைக் காட் டிலும் பின்னே முளைத்த கொம்பு வலியுடையதாகும்.'

வெண்பாப்புலிக்குக் கோபம் எல்லைமீறி விட்டது. செட்டியாரை

வெளியே வரும்படி கட்டளை யிட்டார். வேலுக்கவிராயர் முத் தப்பரை அழைத்து வந்தார். தர்க்கம் பலமாக நடந்தது. அப் போது ஆட்டுக் கடாவை தலையை வெடிக்கப் பாடினார் வெண்பாப் புலி என்றும், தலையை ஒட்டப் பாடினார் முத்தப்பர் என்றும் கதை கள் பேசப்படுகின்றன. முத்தப் பரின் முதிர்ந்த அறிவை மெச்சிய வெண்பாப் புலியார் முத்தப்ப ரிடம் தோற்றுவிட்டார் என்பதை,

'காட்டுப் புலிபோல் கவிபுகலும்
நும்மிடத்தோர்
வீட்டுப் புலியானார் வெண்பாப்
புலியாரே!'

என்ற அடிகள் மெய்ப்பிக்கின்றன. மேலும் வெண்பாப் புலியார் முத் தப்பரைப் புகழ்ந்து பாடிய பாடல் ஒன்றும் இச் சம்பவத்தை உறுதிப் படுத்துகின்றது.

"கற்றவர் கல்விக்கு
உரையாணி! நீதங்கக்
கட்டி! நின்னைப்
பெற்றவளே செல்வப்
பேறுள்ள தாய்!
நின்பிதா முன் செய்த
நற்றவமே தவம்!
நாட்டார் வணிகர்க்கோர்
ரத்தினம் நீ
கொற்றவரும் புகழ்
முத்தப்பப் பூப!
குண ரத்னமே!'

படித்தவர்களிடையே பாடுவார் முத்தப்பரின் பெருமை பன்மடங்கு ஓங்கி நின்றது. பாவலர்கள் பலரும் பாடுவாரைக் கண்டு வணங்கிப் பணிந்து செல்லுதல் உண்டு. இயன்ற அளவு உதவி யும் உபசரிப்பும் தந்து புலவர் களைப் போற்றி வந்தார் முத்தப்பர் என்பதை வரலாறு காட்டுகிறது.

மார்த்தாண்டப் புலவர் என் ஞெரு தமிழ்க்கவிஞர் பாடுவாரைத் தேடிவந்து உதவி பெற்றுச் செல்ல விரும்பினார். புலவரின் ஊரோ வேம்பத்தூர். வேம்பத் தூரில் இருந்து வெகு தொலைவு நடந்து கீழச்சிவல்பட்டிக்கு வந்து சேர்ந்த புலவருக்குப் பாடுவார் வயிறார உணவுதந்து, நேமங் கோயில் நகரத்தாருக்குக் கடிதம் கொடுத்து உதவி புரியும்படி கேட்டுக் கொண்டார்.

நேமங் கோயில் நகரத்தார்க்கு எழுதிக்கொடுத்த சீட்டுக்கவி இதுதான்.

"இத்தரை முழுதும்
இசைபெறு நம்மீர்!
முத்தப்பன் யான்
மொழிவது கேண்மின்!
செந்தமிழ்ச் செல்வர்
சீமான் இவர்தாம்
வளம்பெறு வேம்பை
மார்த்தாண்டப் புலவர்
மடப்புளி அடுப்பு
மறந்தது தொழில்; அதில்
ஆம்பி பூத்ததாம்;
ஆதவி னால்இவர்
நம்பால் உற்றனர்.
நாவலர் இவர்க்கே
வேண்டும் பரிசில்
விரும்புவ தளித்தும்
ஆண்டிவர் வறுமைநோய்
அறவே களைந்தும்
சிறப்புற அனுப்புவீர்
சீரார் நேம
நகரில் குபேர
நலம்படைத் தோரே"

இக்கவிதையைப் படித்த நேமங் கோயில் நேர்மையாளர்கள் புலவ ருக்கு வேண்டிய பொருளை விருப் புடன் தந்து சிறப்புச் செய்தனர்.

ஒரு புலவர் பாடுவாரைப் பார்த்து பாழாகத் தக்கன எவை எனக் கேட்க, பாடுவார் தந்த பதில் பழமொழியாகிவிட்டது.

"தும்பி இருந்த தூண் பாழ்;
கும்பி இருந்த குளம் பாழ்;
வம்பி இருந்த மனை பாழ்;
நம்பி இருந்த கடன் பாழ்!"

இங்ஙனம் விரும்பும் புலவர்களுக்கு விருந்தாகவும், வேண்டாப் புலவர்களுக்கு மருத்தாகவும் விளங்கிய பாடுவார் முத்தப்பர் பொல்லாத வியாதிக்குப் பொகப் பாகி தமது எழுபத்து மூன்ருவது ஆண்டில், சுபானு வருடம் ஐப்பசித் திங்கள் ஆறும் நாளில், இவ் வுலக வாழ்வை உதறித் தள்ளிவிட்டனர். அவர் விட்டுச் சென்ற மக்கள் செல்வங்கள் ஐவர்.

"சர்க்கரைக் கருப்பஞ் செட்டி;
சவ்வாது மெய்யஞ் செட்டி;
சீனி அளகன் செட்டி;
செவத்த ராமன் செட்டி;
எங்கும் பராபரம் ஏகப்ப
செட்டி"

என இவ்வைவரையும் முத்தப்பரே அழைப்பது வழக்கம். அவர் விட்ட நூற் செல்வங்கள் பல. அவற்றுள் சிறப்புடையன :

1. திருமுக விலாசம்.
2. நேமக் கலம்பகம்.
3. செட்டிமார் வரலாறு.
4. செயங்கொண்டார் சதகம்.
5. செயங்கொண்ட சோழீசர் பிள்ளைத் தமிழ்.
6. கலித்துறை யந்தாதி.
7. செயங்கொண்ட சோழீசர் ஊசல் திருநாமம்.
8. பதிற்றுப்பத் தந்தாதி.
9. குன்றக்குடி முருகன் பாடல்.
10. நடுவாற்று மருதம் பிள்ளையார் விருத்தம்.
11. முத்துமாரி அம்மன் தோத்திரப் பாடல்கள்.
12. தனிப் பாடல்கள்.

முத்தப்பரின் உடல் அழிந்ததே எனினும் உயர்வு அழியாது. அவரின் உருவப்படம் கிடைத்திலது எனினும் உருவச்சிலை ஒன்று உருக்கால் செய்யப்பட்டது, இன்றும் சேவினிப்பட்டி என்ற சிற்றூரில் இருந்து வருகிறது.

'கூடுவார்க் கின்பம்
கொடுக்கும் தமிழ்அளித்த
பாடுவார் முத்தப்பப்
பாவலர்சீர்'—தேடுதல்

சிறப்பாக இன்றையத் தமிழ் உலகின் இன்றியமையாத கடனும் கடமையுமாகும்.



பாடுவார் முத்தப்பர் பாட்டெல்லாங் கேட்டிருப்பார்
கூடுவார் இன்பம்; குறைவிலா—நீடுவாழ்
வெய்திடுவார்; செல்வி இலக்குமியின் ஆசிமழை
பெய்திடுமே வாழ்விற் பெரிது!

பழங் கோயில்களும், கட்டிடங்களும், சிற்பங்களும் ஓவியங்களும் நாட்டின் கலாசாரத்தையும் பழங்காலப் பண்பாட்டையும் எடுத்துக் காட்டிக் கொண்டு நிற்கும் செல்வங்களாகும்.

# புராதனச் சின்னங்கள்

[ டாக்டர் பி. பி. லால் ]

இந்தியாவில், தொல் பொருள் ஆராய்ச்சி இலாகா: கலாசார சின்னங்களைப் பாதுகாத்துப் பேணும் முயற்சியை 1917-ம் ஆண்டு முதலே மேற் கொண்டுள்ளது. உலோகம், உலோகக் கலவை, கண்ணாடி, தந்தம், ஆகியவற்ருலான செப்பேடுகள், புராதனச் சின்னங்கள் சிற்பங்கள், ஓவியங்கள் முதலியவற்றைப் பராமரிப்பதில் விஞ்ஞான முறைகளைப் பின்பற்றி வருகிறது அவ்விலாகா. இந்தியத் தொல் பொருள் ஆராய்ச்சி இலாகா மேற்கொண்ட ஆராய்ச்சிகளும். விரிவான முயற்சிகளும் பழைமை மிக்க பல கலாசாரச் சின்னங்களை நமக்குக் கண்டெடுத்துத் தந்தள்ளன. அவற்றை அவ்விலாகா நவீன விஞ்ஞான முறைகளில் பாதுகாத்துப் பேணி வருகின்றது.

## இந்தியக் கோவில்கள்

ரசாயன முறையில் கோவில்கள், கற்பாறைக் குகைகள், கல்வெட்டுகள், சிற்பங்கள், விகாரங்கள், சமாதிகள், முதலியவற்றைப் பாதுகாப்பதற்கான விரிவான பணி கடந்த இருபதாண்டு காலமாக இந்தியாவில் நடைபெற்று வந்துள்ளது. புவனேஸ்வரிலுள்ள லிங்கராஜா கோவிலும். முக்தேஸ்வரர் ராஜாராணி பிரம்மேஸ்வரர் கோவில்களும் விஞ்ஞான முறையில் பேணப்பட்டு வருகின்றன. காஞ்சிபுரத்திலுள்ள கைலாசநாதர் கோவில், அல்மோரா, பட்டடக்கல், அமர்நாத் முதலிய விடங்களிலுள்ள கோவில்களும் ரசாயன முறைகளில் பராமரிக்கப்பட்டு வருகின்றன.மகாபலிபுரத்தில்கடற்கரைக் கோவிலேயும். கோனராக்கில் சூரிய பகவான் ஆலயத்தையும் விஞ்ஞான ரீதியில் பாதுகாப்பது சிக்கல் மிகுந்த பிரச்னை. கடல் நீரிலுள்ள உப்புக் காரணமாக பாதிக்கப்பட்டுள்ள இந்த சின்னங்கள் சிதைந்து வருவதைத் தடுப்பதற்காக முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன.

பழங்காலச் சின்னங்களில் செடிகள், பாசி முதலியன வளர்வதை அறவே ஒழிப்பதற்காக இந்தியாவில் பிரத்யேகமாக மேற்கொள்ளப்பட்ட விஞ்ஞான முறைகள் வெற்றி கண்டுள்ளன. பாசி செடிகளை ஒழிப்பதில் சில ரசாயனப் பொருள்கள் பலன் அளித்துள்ளன. லிங்கராஜர், ராஜாராணி, முக்தேஸ்வரர் போன்ற பெரிய கோவில்களில் ரசாயன முறையைப் பயன்படுத்தி பாசி படர்வதையும், செடி கொடிகள் வளர்வதையும் அறவே ஒழித்தாகிவிட்டது.

### வர்ண ஓவியங்கள்

புராதனக் கலைச் சின்னங்களில் காணப்படும் சுவரோவியங்கள் விரிவான விஞ்ஞான வழிகள் மூலம் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. ஓவியங்கள் மென்மையானவை.பலகாரணங்களினாலும் அவை அழிந்து போகக்கூடும்.

அஜந்தா எல்லோரா முதலிய மலைக் குகைகளிலுள்ள வர்ணச் சித்திரங்கள் நிலையான கண்காணிப்பில் இருந்து வருகின்றன. விஞ்ஞான முறைகளையும் ரசாயனப் பொருள்களையும் பயன்படுத்தி அச்சித்திரங்களை மறைத்திருந்த கறைகளும், அசுத்தங்களும் ஓவியங்களுக்குப் பழுதேற்படாதவாறு நீக்கப்பட்டன. சித்திரங்கள் முதன்முதலில் பெற்றிருந்த அழகை, ரசாயன முறையில் சுத்தப் படுத்துவதன் மூலம் மீண்டும் ஊட்டியிருக்கின்றனர். பாக், பாதாமி, சித்தன்னவாசல் முதலிய விடங்களிலுள்ள ஓவியங்கள் விஞ்ஞான முறையில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. காஞ்சிபுரம், தஞ்சாவூர், சோமபல்லி, சந்தா, தால்பெஹத் ஆகிய இடங்களிலுள்ள கோயில்களிலும் விஞ்ஞான முறைகளைப் பயன்படுத்தி ஓவியங்கள் பாதுகாக்கப்படுகின்றன.

### கோட்டைகள்

ஆக்ராவில், இத்மத்-உத்தௌலா, சினி — காரெவஸா முதலிய விடங்களிலும் படே பூர் சிக்ரி, சிகந்தராவிலுமுள்ள ஓவியங்களும், டில்லியில் ,செங்கோட்டை அலகாபர்த்தில் குஸ்ரேபாக், பரோடாவில் தம்பேகர் வாடா முதலிய விடங்களிலுமுள்ள ஓவியங்களும் விஞ்ஞான முறைகள் மூலம் பாதுகாக்கப் பட்டு வருகின்றன.

அதிக வெப்பமும். காற்றில் அதிக ஈரமும் உள்ள வானிலையில் சிற்ப சித்திர வேலைப்பாடுகளைப் பராமரிப்பது மிகவும் கடினம். சுவரோவியங்கள், எண்ணெய் ஓவியங்கள், சிறிய காகிதத்தில் தீட்டப்பட்ட ஓவியங்கள் முதலியன வெப்பத்தினாலும் காற்று ஈரத்தினாலும் பாதிக்கப்படுகின்றன. இத்தகைய ஓவியங்களைப் பாதுகாக்க விஞ்ஞான முறைகளும், விஞ்ஞானப் பொருள்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

### புதை பொருள்கள்

புராதனச் சின்னங்களையும் ஓவியங்களையும் பாதுகாப்பதில் மட்டும் விஞ்ஞான முறைகள் பயன்படுத்தப்படவில்லை. தோண்டியெடுக்கப்பட்ட புதைபொருள்கள், பழைய ஓலைச்சுவடிகள், காகிதத்தில் வரைப்பட்ட ஓவியங்கள், கான்வாஸ் பட்டுத் துணிகளில் தீட்டப்பட்ட சித்திரங்கள் ஆகியவற்றைப் பராமரிப்பதிலும் விஞ்ஞான முறைகளைக் கையாண்டு வருகிறது, இந்திய தொல்பொருள் ஆராய்ச்சி இலாகா. பழங்கால நாணயங்கள், வெங்கலச் சிலைகள், மற்ற உலோகச் சின்னங்கள் ஆகியவை ரசாயன முறைகளில் சுத்தம் செய்யப்படுகின்றன. மண் சுண்ணம்பு, களிமண் ஆகியவற்றினலான பொருள்களும் விஞ்ஞான முறைப்படியே பாதுகாக்கப்பட்டு வருகின்றன. புராதனக் கலாசாரத்தைப் பிரதிபலிக்கும் சின்னங்களைப் பராமரித்துப் பேணுவதில் விஞ்ஞானம் பெரும் பங்கு வகித்துவருகிறது.



# பேச்சு ஒரு கலை

"என்னைப் பேசக் கூப்பிடுகிறார்கள். நான் போகலாமா?"

"போயேன்! மேடையென்ன புலிக்கூண்டா? அதற்குள் கூட எத்தனைபேர் போய் வருகிறார்கள்! என்னைக் கேட்டால் நான் என்னைச் சிலர் அழைக்கட்டும் என்று காத்திருக்க மாட்டேன். நானே சந்தர்ப்பத்தை உண்டாக்கிக்கொள்வேன்! அலுவலக விருந்தா? பேரவைக் கூட்டமா? சங்க ஆண்டு விழாவா? பள்ளிக் கூட மன்ற நிகழ்ச்சியா? எங்கே அழைத்தாலும் பேசு! பொது மேடையில் மட்டும் நீ வெற்றிக் கொடி நாட்டிவிட்டால்போதும் ஊருக்கே நீ தலைவனாகி விடுவாய். ஐந்து ஆண்டுகள் நீ வேறு வழிகளில் முயல்வதை விட, ஐந்து நிமிடம் நீ பேசும் பேச்சு, பெரும் பெரும் செயல்களைச் சாதிக்கும்! எடுத்த எடுப்பிலேயே உன்னால் அலங்காரமாகப் பேச முடியாதென்றெண்ணுகிறாயா? யாருக்குக் கவலை? பேச்சில் அலங்காரமில்லை முக்கியம்; சொல்கின்ற முறைதான் முக்கியம். நீ சொல்வது பிறருக்கு விளங்கினால் போதும்."

"இதுவரை நான் ஒரு கூட்டத்தின் முன்னும் நின்றதே கிடையாதே! மேடையில் ஏறினால் மயங்கி விழுந்து விடுவேன் போலிருக்கிறதே!"

"இம் ... இம் .... அதுதான் கிடையாது. என் கண்ணெதிரில் நடந்த பேச்சுக்களைக் கணக்கிட்டிருக்கிறேன். கடந்த 20 ஆண்டுகளில், முதன் முதலாக மேடையேறிய ஆண்களும் பெண்களுமாகப் பத்தாயிரம் பேரைக் கண்டிருக்கிறேன். அவர்களுள் ஒரே ஒருவர் தான் மயங்கி விழுந்திருக்கிறார். அவரும் என்னால் தேற்றப்பட்டார். பின்னால் பெரும் பேச்சாளராஞர்.

முதல் சில மேடைகளில் பலருக்கும் நடுக்கம் இருக்கத்தான் செய்யும். அரசர் ஆறும் சார்சென்ன, இலாயிட் சார்சென்ன, தியோடர் ரூசுவெல்ட்டென்ன, முசோலினியென்ன; இவர்களெல்லாம் தமது தொடக்க மேடைகளில் நடுங்கத் தான் செய்தனர். பின்னர் பெரிய பேச்சாளர்களாகி விட்டனரே! எல்லா வெற்றிக்கும் ஒன்று தான் அடிப்படை! பயிற்சி! பயிற்சி! பயிற்சி! நான் பேசப் பழகியபோது, எங்கே, யாரிடம் பேசுகிறோம் என்று கூடப் பார்க்க வில்லை. குதிரைகளிடமும் புறாக்களிடமும் போய்ப் பேசினேன். அவை மிரளக்

கூடச் செய்தன. ஆனாலும் பேசினேன். நீயும் கூடப் பேசலாம், நடக்கையில்; பூங்காவில் இருக்கையில்; சவாரி போகையில் உன் பேச்சைக் கேட்டுக் குதிரை மிரண்டோடினால், அதுவும் ஒரு வகையில் உனக்கு இலாபம்தானே! சவாரி நேரம் மிச்சமாகிறதல்லவா?

எமர்சன் சொன்னபடி எது உனக்கு அச்சமாயிருக்கிறதோ, அதைச் செய். அதே உனக்கு வெற்றியை வகுத்துக் கொடுக்கும்."

"எதைப் பற்றிப் பேசுவது?"

"அதற்கா பிரச்னைகள் இல்லை! கண்ணைத் திறந்து பார். கூட்டுப் புழுவிலிருந்து மாண்ட சீசர்வரை எத்தனை பொருள்கள்! தெருவில் போகின்ற மாட்டில் இருந்து, அரசில் இருக்கிற மந்திரி வரை எல்லாம் உனக்கு ஒன்றுதான்! எந்தப் பொருளைப் பற்றி நீ பேசினாலும் முழு அக்கறையோடு பேசு! அதுவே போதும், உன் பேச்சை எல்லோரும் கேட்பதற்கு! நான் என் வாழ்க்கையில் ஆயிரம் முறை கண்ட உண்மை இது.

ஒரு மனிதர் தான் கீழை நாடுகளில் சேகரித்த பொருள்களை வைத்து மணிக்கணக்கில் பேசினார். 500 மேற்பட்ட மக்களை கேட்க வைக்கும் ஆற்றல் அவர் பேச்சிலிருந்தது. தலைப்புக்களுக்காக, நீ செய்தித்தாள்களையும் கலைக் களஞ்சியங்களையும் தேடிக்கொண்டிருக்க வேண்டியதில்லை. எதாகிலும் ஒருபொருள் கூட்டத்திலிருப்பவர்களை விட உனக்கு நன்றாய்த் தெரிந்திருக்கும். அதை நீ சொன்னாலே போதும். நடைபாதை விதிகளைப் பற்றி ஓர் அரசியல் வாதிக்குத் தெரியாததைக்கூட, ஒரு போலீசுக்காரர் பேசமுடியும். நெசவாளனா நீ? அரசியல் வாதியைவிட அதிகமான அனுபவ உண்மைகளை நீ சொல்ல முடியும். தறியைப்பற்றி' நான் ஒரு சர்வகட்சிக்கூட்டத்திற்குப் போனேன். பலவித அரசியல் வாதிகளும் மேடையில்முழங்கிக் கிழித்தார்கள். ஆனால் பிரச்னையின் வரலாறு எதையுமே, எவருமே சொல்லவில்லை. ஏனென்றால் அவர்களுக்கும் அது தெளிவாய்த் தெரியாது. நன்றி சொல்ல வந்த கூட்ட அமைப்பாளர் பிரச்னையின் வரலாற்றைத் தொகுத்துச் சொன்னார். அவர் பேச்சில் ஆர்ப்பாட்டம் இல்லை. மணியோ இரவு பத்துக்குமேல். (அனைவரும் கேட்டனர்.) இது எதைக் காட்டுகிறது?

"பேசும் பொருள் சுவையானதாயிருந்தால், எவர் பேசினாலும் கேட்பர்."

"முன்கூட்டித் தயாரிக்காமல் பேசப் போகலாமா?"

"பயிற்சி இல்லாது போருக்குப் போகின்றவன் வெற்றி

பெறுகின்ருனு? எதிரியைச் சந்திக்கும் இடமறிந்து அதற்கேற்ற ஆயத்தங்களோடு மறவன் புறப்படுவது போல. நீயும் பேசும் பொருள் பற்றித் தக்க ஏற்பாடுகளோடும் தெளிந்த அறிவோடும் போ!

''எந்தெந்த வழிகளில் உன் பேச்சைத் தயாரிக்க முடியுமோ அந்தந்த வழிகளிலெல்லாம் நீ தயார் செய்.''

''நான் மனப்பாடம் செய்யலாமா?''

''நீ என்ன? யாருமே மனப்பாடம் செய்து கொள்ளக் கூடாது, தம் பேச்சை! மனப்பாடம் செய்தவன் பின்னர் இடையில் மறந்து விட்டுத் திண்டாடுவான். மனப் பாடத்திஞல் உன் சொற்கள் உண்மையான உணர்ச்சியோடு வந்து விழுவது கெட்டுவிடும். சொல்லை மறந்து விட்டு விழிக்கும் உன் முகத்தைப் பார்க்கப் பரிதாபமாயிருக்கும்!

''நான் எந்தத் தோற்றத்தோடு மேடையில் பேசலாம்?''

''அலங்கார ஆடைகள் இருந்தால்தான் பேச்செடுக்கும் என்றெண்ண வேண்டாம்; தூய்மையான ஆடை போதும்.''

உடலசைவைப் பற்றி நீ அதிக கவனம் செலுத்த வேண்டும்! அனுவசியமாக நீ உன் கைகால்களை ஆட்ட வேண்டாம். நீ மேடையிலிருப்பது, பேசத்தானே ஒழிய, நாட்டியம் ஆட அல்ல!

''என் பேச்சை எந்த அளவு ஒலியோடு நிகழ்த்தலாம்?''

''நீ பேசுவது கூட்டத்தின் கடைசியிலிருக்கும் ஆளுக்கும் நன்ருகக் கேட்கிறதா என்று பார்!

''முதல் வரிசையிலிருப்போர் போலவே இறுதி வரிசையிலிருப்போரும் உன் பேச்சைக் கேட்கும்படி பேசுவதே வெற்றி தருவது!''

''எவ்வளவு நேரம் பேசலாம்?''

''படிப்படியாகச் சூடு பிடித்து, பேச்சு உச்சக்கட்டத்திற் ச் செல்ல வேண்டும். பேச்சாளர் இன்னும் என்னென்ன சொல்வார் என மக்கள் எதிர்பார்க்க வேண்டும். அப்போது திடீரென உன் பேச்சை முடித்துவிடு! அடுத்து நீ என்று பேசுவாய் என்று காத்திருப்பர்!''

''இன்னும் எதேனும்...''

''எப்போதும், நீ எதைப் பேசினுலும், நீ பேசுவதை நன்ருகவும் தெளிவாகவும் உணர்ந்திருக்கிருய் என்று கேட்போர் மனத்தில் படும்படிசெய்! அவர்கள் உள்ளத்தில் அந்த எண்ணம் மலரும்போது, மேடையில் வெற்றி தானே முழங்கும்!''

(உளவியலார் ஏட்டில் வந்த கட்டுரையொன்றின் சாரம்.)

# சிறுவர் பகுதி





## பூனை

பூனை நல்ல பூனை—எங்கள்
பூனை வெள்ளைப் பூனை
பானை மேலே ஏறி—ஓடும்
பால் குடிக்கும் பூனை.

மீசை உள்ள பூனை—தட்டில்
தோசை திருடும் பூனை
ஆசை உள்ள பூனை—எங்கள்
அழகு மிக்க பூனை.



பஞ்சு போன்ற பூனை—எலியைப்
பாய்ந்து பிடிக்கும் பூனை
அஞ்சிடாத பூனை—எங்கள்
அருமையான பூனை.



கண்ணைக் கண்ணை உருட்டும்—வீட்டில்
கண்ட பொருளை உருட்டும்
மண்ணைத் தள்ளிப் புரளும்—அடுப்பு
மண்ணில் தூங்கும் பூனை!

— பி. வி. கிரி









# சிங்கம் தந்த பரிசு

ரேடியோ அண்ணு

இமயமலையில் வடக்குச் சரிவில், திபேத்து என்ற நாடு இருக்கிறது. அது மிகவும் உயரமான இடத்தில் இருப்பதால், அதற்கு உலகத்தின் கூரை எனவும் பெயர் உண்டு.

பல ஆண்டுகளுக்கு முன், அங்கே அண்ணன் தம்பி இருவர் வசித்து வந்தனர். அவர்களுடைய வீடு ஒரு செழிப்பான பள்ளத்தாக்கில் இருந்தது.

மூத்தவன் சுயநலம் படைத்தவன். இளையவன் அதற்கு நேர் மாருனவன். அவன் பிறரிடம் அன்பு மிகுந்தவன்.

ஒருநாள், அண்ணனுக்குப் கோபம் வந்துவிட்டது. "தம்பி நீ ஒன்றுக்கும் உதவாதவன். இனிமேல் நான் உனக்கு வீண் சோறு போடமாட்டேன். இந்த வீட்டிலும் உனக்கு இடம் கொடுக்கமாட்டேன்," என்று கத்தினன்.

தம்பியின் மனம் நொந்தது. ஆயினும், அண்ணனை எதிர்த்துப் பேச அவனுக்குத் துணிவு வரவில்லை. தன் துணிமணிகளை எடுத்து ஒரு மூட்டையாகக் கட்டிக்கொண்டு, அவன் வீட்டை விட்டு வெளியேறினன்.

அந்தக் காட்சியைக் கண்டு. அவனுடைய தாய் வருந்தினள். அவளும் அவனுடன் கிளம்பினள்.

தாயும் மகனும் நாள் முழுதும் நடந்தனர். மாலைநேரம் ஓர் உயர்ந்த மலையின் அடிவாரத்தை அடைந்தனர். அங்கே ஓர் ஊர் இருந்தது. ஊரின் எல்லையில், ஒரு பழைய வீடு பூட்டிக் கிடந்தது. இளைஞன் அதைத் திறந்தான். தாயையும் உள்ளே அழைத்தான். இருவரும் கூடத்தில் படுத்து உறங்கினர்.

மறுநாள், பொழுது விடிந்ததும், இளைஞன் மலைச்சரிவில் ஏறிச் சென்ருன். அங்கே நல்ல விறகு இருக்கக் கண்டான். ஒரு பெருஞ்சுமை வெட்டி எடுத்துக் கொண்டு, கீழே இறங்கினன். ஊரில் அதை விற்ருன். ஓரளவு நிறையப் பணம் பெற்ருன்.

தாய் மகிழ்ந்தாள். தனக்கும் மகனுக்குமாக இனிய விருந்து சமைத்தாள்.

அடுத்த நாளும் இளைஞன் மலைமீது ஏறினன். மேலே செல்லச் செல்ல, ஒரு மரக் கூட்டம் வந்தது. அதைத் தாண்டியதும், அவன் எதிரே ஒரு பெரிய சிங்கம் தென்பட்டது. அது ஒரு சிலை. கற்சிலை.

இளைஞன் அதன் முன் விழுந்து வணங்கினான். அதை ஒரு தெய்வமாக மதித்தான்.

மறுநாள் விறகு விற்றபின், அவன் இரண்டு அகல் விளக்குகளை வாங்கினான். அவற்றை எடுத்துக்கொண்டு மீண்டும் மலை ஏறினான். சிங்கத்தின் இரு புறத்திலும் அவற்றை ஏற்றி வைத்தான். அடி பணிந்து எழுந்து நின்றான்.

சிங்கம் வாய் திறந்தது. கற்சிலையும் பேசத் தொடங்கியது.

இளைஞன் முதலில் திடுக்கிட்டான். ஆனால் சற்று நேரத்திலேயே அமைதி அடைந்தான்.

"தம்பி, அஞ்சாதே. உன் துயரம் எனக்குத் தெரியும். உன்னுடைய அண்ணன் உனக்கு இழைத்த கொடுமையும் எனக்குத் தெரியும். நீ என்னை மதித்துப் போற்றினாய். ஆகவே உன்னைக் கைதூக்கி விட விரும்புகிறேன், நான் சொல்வதுபோல் நடந்து கொள்வாயா?" என்று கேட்டது சிங்கம்.

"சரி" என்றான் இளைஞன்.

சிங்கம் மகிழ்ச்சி கொண்டது. "நாளைய தினம் நீ இங்கே வரும்போது, ஒரு பெரிய பானையை எடுத்துக்கொண்டு வா," என்று ஆணையிட்டது.

இளைஞன் மீண்டும் வணங்கினான். வீடு திரும்பியதும், தன் அன்னையிடம் எல்லா விவரமும் சொன்னான். "சிங்கமே நமது கண் கண்ட தெய்வம்," என்றான்.

பொழுது புலர்ந்ததும், அவன் கடைத்தெருவுக்குச் சென்றான். பானையொன்று, தேடி எடுத்தான். அதைத் தலைமேல் வைத்துக்கொண்டு சிங்கத்தை நோக்கி நடந்தான்.

"வா, தம்பி, வா," என்று வரவேற்றது சிங்கம்.

இளைஞன் அதன் எதிரே அடங்கி ஒடுங்கி நின்றான்.

சிங்கம் அவனை நோக்கி ஒரு கட்டளையிட்டது. "பானையை எடுத்து என் வாய்க்குக் கீழே வை. நான் அதில் தங்கக் காசுகளாக உமிழ்வேன். பானை நிறைந்தும் நீ எனக்குச் சொல்லவேண்டும். கணநேரம் கூடத் தாமதம் செய்யக்கூடாது. ஏனென்றால், ஒரு காசு நிலத்தில் சிதறி விழுந்தாலும் விபரீதம் ஏற்பட்டுவிடும்" என்றது.

இளைஞனும் அவ்வாறே செய்தான். பானையில் தங்கக்காசுகள் கலகலவென்று விழுந்தன. விளிம்பு வரை நிறைந்ததும் அவன் எச்சரிக்கை விடுத்தான். "பானை நிறையப் போகிறது" என்றான். உடனே சிங்கம் வாயை மூடிக்கொண்டது.

இளைஞன் ஒரு சும்மாடு கட்டிப், பானையைத் தலைமேல் எடுத்து வைத்துக்கொண்டான். மெதுவாக மலைச்சரிவில் இறங்கி வீடு வந்து சேர்ந்தான்.

மறுநாள் தாயும் மகனும் ஒரு வீட்டை விலைபேசினர். செழிப்

பான பூமியொன்றையும் பொன் கொடுத்து வாங்கினர். மிகவும் மகிழ்ச்சியுடன் வாழத் தொடங் கினர்.

இளைஞன் முன்போலவே உழைத்தான். வயலில் நல்ல விளைச்சல் கண்டது. கன்று காலிகளும் நிறைந்தன.

அண்ணனுக்குச் செய்தி எட்டியது தம்பியைப் பார்த்து விவரம் அறிந்துகொள்ள விரும் பினான்.

ஆகவே ஒரு நாள் மாலை, அவ னும் அவன் மனைவியும் ஊரை விட்டுப் புறப்பட்டனர். கால் நடையாகவே தம்பியின் வீட்டை அடைந்தனர்.

மூத்த மகனைக் கண்டதும், தாய் மகிழ்ந்தாள். அன்புடன் வரவேற்றாள்.

தம்பியும் முகம் கோணாமல் உபசாரம் செய்தான். பழைய நிகழ்ச்சிகளை அவன் அடியோடு மறந்து போனான். அண்ணன் செய்த கொடுமையை அவன் நினைத்துப் பார்க்கவில்லை. அவன் அன்பு மிகுந்தவன் அல்லவா?

அனைவரும் சாப்பிட்டு முடித்த பின், முற்றத்தில் உட் கார்ந்து பேசிக்கொண்டிருந்த னர். அப்போது, தம்பி தனக் குச் செல்வம் கிடைத்த வரலாற் றையும் விளக்கமாகக் கூறினான்.

அண்ணனுக்கு அப்போதே ஆசை பெருகியது.

மறுநாள் அதிகாலையில், அவன் கடைத்தெருவுக்குப் போய், மிகப்பெரிய பானை யொன்று வாங்கினான். அதை எடுத்துக்கொண்டு மலையேறி னான். சிங்கம் இருந்த இடத்தை அடைந்ததும், நின்று வணங்கி னான்.

"நீ யார்" என்றது சிங்கம்.

அண்ணன் உண்மையைச் சொன்னான். "என் தம்பியைக் கைதூக்கி விட்டீர்கள். எனக் கும் அருள் புரியுங்கள்," என்று விண்ணப்பம் செய்தான்.

சிங்கம், "சரி" என்றது. உடனே, வழக்கமான கட்டளை யும் இட்டது.

"பானையை எடுத்து என் வாய்க்குக் கீழே வை. நான் அதில் தங்கக் காசுகளாக உமிழ் வேன். பானை நிறைந்ததும் நீ எனக்குச் சொல்ல வேண்டும். கணநேரம் கூடத் தாமதம் செய் யக்கூடாது. ஏனென்றால், ஒரு காசு நிலத்தில் சிதறி விழுந்தா லும் விபரீதம் ஏற்பட்டுவிடும்," என்றது.

"அப்படியே செய்கிறேன்" என்றான் அண்ணன்.

பானையில் தங்கக் காசுகள் கொட்டின. அது விளிம்பு வரையிலும் நிறைந்துவிட்டது. ஆனால் அண்ணன் வாய் திறக்க வில்லை. வாக்குறுதியை மறந் தான். பேராசை அவனைப் பற் றிக்கொண்டது.

பானையைக் குலுக்கினான். இன்னும் காசுகள் விழ இடம் செய்தான்,

சிங்கத்தின் வாயிலிருந்து தங்கக் காசுகள் உதிர்ந்துகொண்டே இருந்தன. பானை நிறைந்துவிட்டது. சில காசுகள் நிலத்திலும் சிதறி விழுந்தன. உடனே திடீரென்று காசுகள் நின்று போயின.

சிங்கத்தின் குரல் மட்டும் ஒலித்தது. "ஐயோ வலிக்கிறதே, ஒரு பெரிய தங்கக் கட்டி என் தொண்டையில் சிக்கிக் கொண்டதே," என்று முனகியது.

அண்ணன் பாய்ந்து வந்தான். தொண்டையில் சிக்கிய தங்கக் கட்டியையும் எடுத்துக்கொள்ள விரும்பினான். சிங்கத்தின் வாயில் கையை நுழைத்தான்.

சிங்கம் அதைத்தான் எதிர்பார்த்தது. உடனே வாயை இறுக மூடிக்கொண்டது.

அண்ணனுடைய கை அகப்பட்டுக்கொண்டது. இழுக்க முடியவில்லை. கற்சிலை அசைந்து கொடுக்குமா?

அவன் துடித்தான், அலறினான்; அழுதான்.

பானையில் இருந்த தங்கமும் மாயமாய் மறைந்து போயிற்று. அதற்குப் பதிலாக, மண்ணும் கல்லுமே அங்கே காட்சி அளித்தன.

நேரம் சென்றது. பகல் கழிந்தது. அந்தி வந்தது. அண்ணனுடைய மனைவிக்கு வீட்டில் இருக்க முடியவில்லை, கணவனைக் காணாமல் அவள் கலங்கினாள்.

ஆகவே அவளும் மலைமீது ஏறிச் சென்றாள். சிங்கத்தின் அருகே வந்ததும் கணவனைக் கண்டாள். ஆனால் அவனுடைய நிலைமையை அறிந்து கதறினாள். பாவம், அவள் வேறு என்ன செய்ய முடியும்!

இரவு முழுவதும் அவள் அங்கேயே இருந்தாள். கணவனுக்குத் துணையாகக் காவல் புரிந்தாள். மறுநாள் கீழே இறங்கிப் போய், யாருக்கும் தெரியாமல் அவனுக்குக் கொஞ்சம் உணவு கொண்டுவந்தாள். தண்ணீரும் குடிக்கக் கொடுத்தாள்

நாட்கள் நகர்ந்தன. மனைவியின் கையில் இருந்த பணமெல்லாம் செலவாகிவிட்டது. கூலி வேலை செய்யவும் இடம் கிடைக்கவில்லை. பிறர் கண்ணிற்படாமல் எத்தனை காலம் தான் இருக்க முடியும்?

கணவன் இளைத்தான். மனைவியும் இளைத்தாள். அவளுக்குத் துக்கம் பொறுக்க முடியவில்லை. ஒருநாள் கணவனுடைய கையைத் தொட்டுத் தொட்டுப் பார்த்துக்கொண்டு புலம்பினாள். மலையும் காடும் அதிரும்படி ஓலமிட்டாள். கணவனும் அரற்றினான் இருவரும் முறை வைத்து அழுதனர்.

சிங்கத்துக்கு அது வேடிக்கையாக இருந்தது; நகைப்பும் வந்தது. உடனே அது "ஹ ஹ் ஹ ஹ் ஹ ஹா!" என்று வாய் விட்டுச் சிரித்தது.

சிங்கம் வாய் திறந்ததும் கண வன் வெடுக்கென்று கையை இழுத்தான்.

"தப்பினோம், பிழைத்தோம்," என்று கணவனும் மனைவியும் ஓடினார்கள்.

தம்பியின் வீடு சேரும் வரை யில், அவர்கள் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை.

முன்போலவே, அவர்களை அன்புடன் வரவேற்றான் தம்பி. "இத்தனை நாள் எங்கே போயிருந்தீர்கள்?" என்று கேட் டான்.

அண்ணன் நடந்ததைச் சொன்னான்.

"இனி எனக்கு அறிவு வந்து விட்டது. பொறுமை கொள்ள மாட்டேன். பேராசைப்பட மாட்டேன்" என்றான்.

தம்பி மனம் இரங்கினான். "சிங்கத்தை ஏமாற்றப் பார்த் தீர்கள். தங்கத்தைக் கண்டு நிலைகுலைந்தீர்கள். அதனாலேயே நீங்கள் இருவரும் அவதிப்பட் டீர்கள்" என்றான்.

பிறகு அண்ணனும் அண்ணி யும் வாழ, அவன் ஒரு புது வீடு கட்டிக் கொடுத்தான். ஒரு துண்டு நிலமும் பரிசாக வழங் கினான்.

அதை உழுது பயிரிட்டான் அண்ணன். குறையின்றி வாழ வும் தொடங்கினான்.

தம்பி பெரும் புகழ் பெற்றான். பலருக்கும் ஒத்தாசையாக, நெடு நாள் வாழ்ந்து மகிழ்ந்தான்.

# ஆல்சியோன் அரசியின் கனவு

சீக்ஸ் என்று ஓர் அரசன் இருந்தான். அவன் மனைவியின் பெயர் ஆல்சியோன். இருவரும் ஒருவரை யொருவர் மிகவும் அன்புடன் நேசித்தார்கள். பல ஆண்டுகள் அவர்களுடைய வாழ்வு இன்பமாக நடைபெற்று வந்தது. கடைசியில் ஒரு நாள் அரசன் சீக்ஸ் வெளிநாடு போக வேண்டி வந்தது. தொலை தூரத்தில் இருக்கும் அந்த நாட் டில் போய் அவன் ஒரு குறி கேட்டு வர எண்ணியிருந் தான்.

அந்த நாட்டுக்குப் போய் வரு வதென்றால் நாட்கள் பல ஆகும். அரசி ஆல்சியோனை விட்டுப் பிரிந்து அத்தனை நாட்கள் இருப் பது அவனுக்குத் துன்பமாகவே இருந்தது. அவளுக்கும் அர சனைப் பிரிந்திருப்பது மிகவும் துன்பமாகத் தோன்றியது. ஆகவே அவள், வெளிநாடு போக வேண்டாமென்று அர சனைக் கேட்டுக் கொண்டாள். கடல் வழியாகப் போவதில் உள்ள ஆபத்துக்களை யெல்லாம் எடுத்துக் காட்டி அரசன் பய

ணத்தை அவள் நிறுத்த முயன்றாள். ஆனால், எப்படியும்போய்க் குறிகேட்டுக் கொண்டு வந்து விடவேண்டுமென்ற ஆவல் அரசனிடமிருந்தது. அவளைத் தடுத்து நிறுத்த முடியாது என்று கண்ட பின், அவள் தானும் உடன் வருவதாகக் கூறினாள். ஆனால், ஆபத்துக்கள் பல நிறைந்த பயணத்தில் அவளும் கலந்து கொள்வதை அரசன் விரும்பவில்லை. தன் வேலை முடிந்தவுடனே சிறிதும் தங்காமல் தாமதியாமல் உடனே வந்து விடுவதாகக் கூறினான் சீக்ஸ்.

கடற்கரையில் பாய்மரக் கப்பல் ஒன்று ஆயத்தமாக நின்று



கொண்டிருந்தது. அரசனும் அரசியும் கை கோர்த்துக் கொண்டு கடற்கரைக்கு வந்தார்கள். கப்பல் புறப்படு முன்னால் அவர்கள் நெடு நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். முட்டிக் கொண்டு நிற்கும் கண்ணீர் நிறைந்த கண்களோடு, "விரைவில் திரும்பிவந்துவிடுங்கள்" என்று வேண்டிக் கொண்டு, ஆல்சியோன் அரசி பிரியமாட்டாமல் விடைகொடுத்துப் பிரிந்தாள்.

அரசன் கப்பலேறினான். பாய்களை விரித்துக் கொண்டு கப்பல் புறப்பட்டது. அது கண்ணுக்கு மறையும் வரை கையை ஆட்டி விடை கொடுத்துக் கொண்டு நின்றாள் அரசி. பிறகு அவள் தன் அரண்மனைக்குத் திரும்பி வந்தாள்.

சீக்ஸ் அரசன் சென்ற கப்பல், அலைகளில் ஏறி ஏறி இறங்கிக் காற்றின் வேகத்தில் ஆனந்தமாகச் சென்று கொண்டிருந்தது. கப்பல் மாலுமிகள் இனிய கடற் பாட்டுக்கள் பாடி அந்தப் பயணத்தை இனிதாக்கினார்கள். நான்கு நாட்கள் வரை கப்பல் ஒழுங்காகப் போய்க் கொண்டிருந்தது.

ஐந்தாவது நாள் மாலையில், வானில் கார் மேகங்கள் ஒன்று

சூடின. ஊதல் காற்று ஒன்று எழுந்தது. அலைகள் மலைகளைப் போல் உயர்ந்து உயர்ந்து விழுந்தன. கப்பல் பேராட்டம் கண்டது. அது கவிழ்ந்து விடாமல் இருக்க அலைகளோடு போராட்டம் நடத்தியது. இரவு வந்ததும் புயல் காற்றுப் பலமாக வீசத் தொடங்கியது. நிலவும், நட்சத்திரங்களும் கண்ணுக்குத் தெரியவில்லை. பளிச் பளிச் சென்று மின்னல் விட்டு விட்டடித்தது. அலைகளின் சீற்றமும் இடியின் உறுமலும் அதிகமாயின.

திடீரென்று பாய்மரம் சாய்ந்து கப்பல் உடைந்தது. தண்ணீர் குபு குபு என்று புகுந்து உள்ளே நிறைந்தது. இடையில் மேலும் ஒரு வெடிப்பு ஏற்பட்டது. கப்பல் நீரினுள் அமிழத் தொடங்கியது. அரசனைத் தவிர எல்லோரும் மூழ்கிப் போனார்கள். மரத் துண்டு ஒன்றைப் பிடித்துக் கொண்டு அவன் கடலில் மிதந்து கொண்டிருந்தான். கடைசியல் ஒரு பெரிய அலை எழுந்து அவனையும் சுருட்டி மடக்கிக் கடலின் அடியில் தள்ளி விட்டது. கடலில் அமிழும் போது அவன் உதடுகள் ஆல்சியோன்! ஆல்சியோன்! என்று இடைவிடாது கூவிக் கொண்டிருந்தன.

அரசனைப் பிரிந்தது முதல் ஆல்சியோன் அவனையே நினைத்துக் கொண்டிருந்தாள். அவன் திரும்பி வரும் நாளை எதிர்பார்த்து ஏங்கிக் கொண்டிருந்தாள். ஒவ்வொரு நாளும் ஜுனோ தேவதையின் கோவிலுக்குச் சென்று வழிபாடு செய்து வந்தாள். அரசரைக் காப்பாற்றித் தன்னிடம் பாதுகாப்பாகக் கொண்டு வந்து சேர்க்க வேண்டுமென்று அவள் இடைவிடாது வேண்டிக் கொண்டிருந்தாள்.

இறந்து போய்விட்ட ஒரு மனிதனைக் காப்பாற்ற வேண்டுமென்று, இடைவிடாது இந்தப் பெண்ணரசி தன்னை வேண்டுவதைக் கேட்டுக்கேட்டு ஜுனோ தேவிக்குச் சலித்துப் போய் விட்டது. இரிஸ் என்ற தன் தாதியை அழைத்தாள். தூக்க தேவனுடைய இருப்பிடத்திற்குச் சென்று, அரசிஆல்சியோனுக்கு சீக்ஸ் அரசன் இறந்துவிட்ட செய்தியைக் கனவாகக் காட்டுமாறு கேட்டு வரும்படி கூறி அனுப்பினாள்.

இரிஸ் என்பவள் ஒரு தேவ தாதி. அவள் ஜுனோ தேவியின் அந்தரங்கத் தாதி. வான



வில்லின் ஏழு வண்ணங்களையும் ஆடையாகக் கொண்ட அவள் சென்றவிட மெல்லாம் ஒரு புதிய ஒளி பிறக்கும். அவள் காற்றில் கடுவேகமாகப் புறப்பட்டு, தூக்க தேவனாகிய சோமுனஸ் இருந்த இருட்டுக் குகைக்கு வந்து சேர்ந்தாள்.

சோமுனசின் இருட்டுக் குகையில் கதிரவனுடைய ஒரு சிறிய கதிர் கூட நுழைய இடமில்லை. ஆகவே, இரவும் பகலும் அது இருட்டு மண்டபமாகவேயிருந்தது. பறவைகளின் கீச்சொலியும் நாய்களின் குரைப்பொலியும் வேறு எவ்விதமான ஓசையும் இன்றி அங்கு எப்போதும் அமைதியே நிறைந்திருந்தது. அந்த இருட்டுக் குகையின் வாயிலில், மருந்துப் பூண்டுகளும் கொடிகளும் அடர்த்தியாக வளர்ந்திருந்தன. அவற்றின் வாசனை பட்டாலே மனிதர்களுக்கும் மிருகங்களுக்கும் உறக்கம் வந்து விடும். இப்படிப்பட்ட இருட்டுக் குகையின் நடு மண்டபத்தில், கருங்காலி மரத்தால் செய்த கட்டில் ஒன்றின் மேல் சோமுனஸ் தேவன் நீண்ட தூக்கத்தில் ஆழ்ந்திருந்தான். அவனைச் சுற்றிலும் நிழல் வடிவான கனவுகளும் தோற்றங்களும் ஆவியைப் போல் நிறைந்து சூழ்ந்திருந்தன.

தேவ தூதியான இரிஸ் அந்த இருட்டு மண்டபத்தினுள் நுழைந்தவுடன், அந்த மண்டப முழுவதும் வண்ண வண்ணமான ஒளிகள் நிறைந்தன. உறங்கிக் கொண்டிருந்த சோமுனஸ் தேவன், ஒளிவீச்சினைத் தாங்க மாட்டாமல் தூக்கம் கலைந்து, சோம்பலாகத் தன் தலையைத் தூக்கினான்.

"அலுத்துக் களைத்திருக்கும் மனத்திற்கும் உடலுக்கும் அமைதியும் ஓய்வும் அருளுகின்ற சோமுனஸ் தேவனே, ஜூனோ மாதேவியின் ஆணையால் நான் இங்கே வந்திருக்கிறேன்" என்று கூறினாள் இரிஸ்.

சோமுனஸ் தேவன் முற்றிலும் நீங்காத அரைகுறையான தூக்கத்துடனேயே, "என்ன காரணம்?" என்று கேட்டான்.

"ஜூனோ தேவியார், 'சீக்ஸ் என்ற அரசன் கப்பல்உடைந்து மாண்ட கதையைக் கனவாக்கி அரசி ஆல்சியோனுக்கு அறிவிக்கும்படி உன்னைக் கேட்டுக் கொள்ளச் சொன்னார்கள்" என்று கூறினாள் இரிஸ்.

"சரி" என்று தூக்க தேவன் கூறியவுடன் அழகி இரிஸ் அந்த இருட்டுக் குகையை விட்டு வெளியேறி வானுலகம் நோக்கிப் பறந்து சென்றாள்.

அவள் சென்றவுடன் மீண்டும் அந்தக் குகைமண்டபத்துள் இருள் அடர்ந்து சூழ்ந்துகொண்டது. சோமுனஸ் தேவன் தன்னைச் சுற்றிச்சூழ்ந்துள்ள தோற்றங்களில் மிகவும் அமைதியான குணம் படைத்த ஒரு தோற்றத்தை அழைத்தான். கப்பல் உடைப்பில் மாண்ட சீக்ஸ் அர

சன் வடிவம் கொண்டு இரவில் அரசி ஆல்சியோனைக் கண்டு வருமாறு கட்டளை யிட்டான்.

தூக்க தேவனின் தூதனுகிய அந்தத் தோற்றம் என்பவன், ஓசை எழுப்பாத தன் இறக்கை களை விரித்துப் பறந்து வேக மாகச் சென்று அரசி ஆல்சியோ னின் அந்தப்புரத்தை அடைந் தான். சீக்ஸ் அரசன் உரு வத்தை எடுத்துக் கொண்டு, நனைந்த தலையும் சொட்டுகின்ற தண்ணீருமாக கடற் பூண்டு களும், சிப்பிகளும் ஒட்டிக் கொண்டிருக்கும் உடையோடு அவள் படுக்கை யருகே போய் நின்றான். துயரந் தோய்ந்த குரலில் கப்பல் உடைந்த கதை யைக் கூறி, "இறந்து போன ஒருவனை நினைத்து இனியும் அழுது கொண்டிராதே" என்று சொல்லி முடித்தான்.

அரசி ஆல்சியோன் பயங்கர மாகக் கூச்சலிட்டுக் கொண்டு கண் விழித்தாள். அவள் கன வில் தோன்றிய தோற்றம் அப் படியே உண்மையாகக் காண் பது போல் தோன்றியது. ஆகவே அவள் தன் கணவன் அடிச் சுவடுகள் தென்படுகின் றனவா என்று தரையை நோக்கினாள். ஆனால், நிழல்வடி வான தோற்றங்கள் எவ்வித மான குறிகளையும் ஏற்படுத்தி விட்டுச் செல்வதில்லை. அவள் கண் விழித்த உடனே தோற் றம் மறைந்து விட்டது. அறை முன் போலவே வெறுமையாக இருந்தது.

இந்தக் கனவு கண்டபின் அரசியால் தூங்க முடியவில்லை. அவள் எழுந்து உடையணிந்து கொண்டாள். கடல் துறை முகத்தை நோக்கி நடந்தாள். அவள் துறைமுகம் வந்து சேர்ந்த போது கதிரவனும் தன் இளங் கதிர்களை நீட்டிக் கொண்டு கீழ்த் திசையில் தோன்றினான்.

கணவனைக் கடைசியாக விடை கொடுத்தனுப்பிய அந்த இடத்தில் நின்று அவள் அந்தக் கடலையே பார்த்துக் கொண்டி ருந்தாள். தொலை தூரத்தில் ஏதோ ஒரு பொருளை அலைகள் கழற்றிக் கொண்டு வருவதைத்

---

## கெடிகாரமயம்

தாமஸ் எடிசன் என்ற பிரபல விஞ்ஞானி தமது முதல் தொழிற் சாலையைத் துவங்கினார். அதில் ஒரே ஒரு கெடிகாரத்தை வாங்கி வைத்தார். மணிபார்ப்பதற்காக தொழிலாளர்கள் எல்லோரும் அந்தக் கெடிகாரத்தையே ஓயாமல் பார்த்துக்கொண்டிருந்தனர். அதனால் வேலை மிகவும் பாதிக்கப்பட்டது. வேலையில் குறியாக உள்ள எடிசனுக்கு இது பிடிக்கவில்லை.

ஒரு நாள் பலகெடிகாரங்களை வாங்கித் தன் தொழிற்சாலைகளின் பல மூலை முடுக்குகளிலும் மாட்டிவிட்டார். அப்பாடா! கெடிகாரத்தில் மணி பார்ப்பது ஓய்ந்தது. வேலையில் எல்லோரும் அக்கறை காட்டி னார்கள்.

அவள் கவனித்தாள். கரையை நோக்கி அந்தப் பொருள் நெருங்கி நெருங்கி வந்து கொண்டிருந்தது. அந்தப் பொருள் நெருங்கி வருவதையே பார்த்துக் கொண்டிருந்த போது காரணம் தெரியாமல் அவள் மனம் துடித்தது.

கடைசியாக ஒரு பெரிய அலை, சிக்ஸ் அரசனுடைய பிணத்தை அவள் காலடியிலே கொண்டு வந்து ஒதுக்கியது. அவன் தலை நனைந்து தண்ணீர் சொட்டிக் கொண்டிருந்தது. அவன் உடலில் அணிந்திருந்த ஆடைகளின் மேல் கடல் பூண்டு களும் சிப்பிகளும் ஒட்டிக் கொண்டிருந்தன. எல்லாம் கனவில் பார்த்தபடியே இருந் தது.

தன் கணவனின் பிணத்தின் மீது விழுந்து அவள் கண்ணீர் கலங்கக் கதறினாள். "கடைசி யில் நம் இன்ப வாழ்வு கன வாகி விட்டது. கனவு தான் உண்மையாகி விட்டது" என்று சொல்லிச் சொல்லி அழுதாள். "அரசே, இனி நானும் உங்க ளோடு பாதாள உலகத்திற்கு வந்து சேர்ந்து விடுகிறேன்" என்று சொல்லிக் கடற்கரை யோரத்தில் இருந்த செங்குத் தான பாறை ஒன்றின் மேல் ஏறினாள். அதன் உச்சியி லிருந்து கடலில் குதித்தாள்.

ஆனால் அவள் கடலில் விழ வில்லை. அவளுடைய துன்பத் தைக் கண்டு ஆற்றாத தெய்வங் கள் அவளையும் அவள் கணவனை யும் கடல் மீன்கொத்திகளாக மாற்றி விட்டார்கள்.

கடல் அமைதியாக இருக்கும் காலங்களில் இந்தமீன்கொத்திப் பறவைகளின் பரம்பரைகளை இன்றும் நாம் காணலாம். இவை கடலில் அமுங்குவ தில்லை. கடல் அலைகளின் மேல் அமர்ந்து மிதந்து கொண்டும், பறந்து கொண்டும் இன்பமாகத் திரிகின்றன. ஆண்டு முழு வதும் புயல் நிறைந்த கடல்களி லும் கூட ஆண்டில் ஏழு நாட் கள் அமைதி நிலவுமாம். அந்த அமைதி நாட்களில் அங்கே போய்ப் பார்த்தாலும், இந்த மீன்கொத்திப் பறவைகள் காணப்படுமாம். இந்த ஏழுநாட் களை மாலுமிகள் "ஆல்சியோன் நாட்கள்" என்கிறார்கள். ஆல்சி யோன் என்றால் அமைதி என்று பொருள்.

—நாரா நாச்சியப்பன்






## 10. கள்ளிடமில்லாக் களிப்பினைத் தருபவள்!

"முல்லைச் சரத்தை யொத்த பல் வரிசை!

முகம் முழு மதியோ? அதற்கும் களங்கம் உண்டே! பின் எதைத் தான் அந்த எழிலரசிக்கு ஒப்புவமை கூறுவது?

ஆம், இதைக் கூறலாம்-எழில் குலுங்கும் ரோஜா! சே, அதையும் தோற்கடித்து விடுமே பொன் மேனி கொண்ட அப் பெண்ணுருவம்!

தடாகத்துத் தாமரை போன்ற அவள் முகமும்-தேன் சுவைக்கப் பண்பாடி வந்திருக்கும் கருவண்டு களைப் போன்ற அவளுடைய கண்களும்-வில் போன்று நீண்டு வளைந்த புருவமும்-தேனைவிட இனிக்கும் அவளுடைய அதர பானமும்-ஆகா! சுவைக்கச் சுவைக்க இனிப்பேறும் இன்பத் தமிழாயிற்றே அவள்!"

—என்றெல்லாம் தன் இன்பவல்லியைப் பற்றி எண்ணமிட்டுக் கொண்டு-நெஞ்சில் இன்ப ஊற்றுப் பெருக்கெடுக்க வந்துகொண்டிருக்கிறன் ஒரு கட்டிளங் காளை!

அவன் எண்ணத்திலே இதுகாறும் நிழலாடிக் கொண்டிருந்த ஏந்திழையாள்-அசைந்தாடிவரும் அழகு மயிலைப் போல்-தென்றல் நடை போட்டு வந்து கொண்டிருந்தாள்!

கண் கொள்ளா அக் காட்சியினைக் கண்டு விட்டான் காதலன்—அடுத்தக் கணம் மதுரத் தேனுண்ட வண்டானன்!

"ஆகா! கொஞ்சுகின்ற பருவத்தோடு நெஞ்சை யள்ளும் நேரிழை வந்து விட்டாள்—அஞ்சும் இனி நாணம்—மிஞ்சும் இனி இன்பம்—அஞ்சுகமே! இதோ, நான் தஞ் ம்...தஞ்சம்..!" என்று கூறி மகிழ்ச்சி வெள்ளத்திலே மிதந்தவனாய் ஓடுகின்றனும்—எண்ணி மகிழ்ந்து — கண்டு களித்த அந்தக் காதலன்!

நினைத்ததும் நெஞ்சம் இனிப்பதும்—கண்டதும் உள்ளம் களிப்பதும் காமத்திற்குத்தான் உண்டு-ஆனல், கள்ளுக்கோ அது இல்லை. கள்—உண்ட போது மட்டுமே மயக்க மகிழ்ச்சியைத் தரவல்லது ஆனல், காமமோ-நினைத்ததும் நெஞ்சம் இனிக்கும்-கண்டதும் களிப்பை யூட்டும் தன்மை வாய்ந்ததாகும்!

உள்ளக் களித்தலும் காண
மகிழ்தலும்
கள்ளுக்குஇல் காமத்திற்த
உண்டு.



## 11. கண்டதும் மறப்பவள்!

சோலைக்குள் வந்த சுந்தரி, தன் காதலனை எதிர்பார்த்து ஏங்கிக் கொண்டிருந்தாள்!

அவனோ வரவேயில்லை!

உற்சாகத்தில் மிதந்து கொண்டிருந்த அவள் உள்ளம்-ஆத்திர உணர்ச்சிக்கு அடிமையாகிக் கொண்டிருந்தது. சிறுகச் சிறுக!

அங்குமிங்குமாக உலவ ஆரம்பித்தாள் கோபத்தின் உச்சியில் நின்று கொண்டு!

காதலன்பால் எழுந்த கோபம் அடங்க வில்லை; அது வளர்ந்து கொண்டிருந்தது வளர்பிறை போல!

நேரம் போய்க் கொண்டிருந்தது. அந்த நேரிழையின் வேதனையை அறியாது!

" வருகிறேன் " என்றவன் வராமல் ஏமாற்றி நம்மை ஏங்க விடுவதா? என்று நினைக்கும் போது, அவள் எண்ணத்தில் கலந்து நின்றவனின் மீது ஆத்திர மழையைப் பொழியத் தயங்க வில்லை அவளுடைய நெஞ்சம்!

கன்னி எத்தனை நேரம் காத்திருப்பாள்? தன் கால்கள் வலிப்பதை உணர்ந்தாள்; அங்கிருந்து புறப்பட்டு விட்டாள் அப் பொல்லாதவனின் மீது ஆத்திரத்தை உமிழ்ந்து கொண்டே!

நிகழ்ந்துவிட்ட தோல்வியால் அவள் நெருப்பாகக் காட்சியளித்தாள்; அவளைப் புரிந்து கொண்ட அவளின் தாயும் அவளிடம் பேசவில்லை!

இல்லத்துள் சென்றும் அவள் உள்ளம் ஒரு நிலையிலில்லை; தனிமையை நாடினாள் அத் தளிர்க் கொடியாள்; அங்கோ அவளின் தோழி ஒருத்தி தேடி வந்தாள்!

தன் தோழியைக் கண்டதும் உள்ளத்தில் சிறிது அமைதி ஏற்பட்டது. உள்ளக் குமுறலை வெளிக் கொட்டினாலல்லவா ஆத்திரத்தின் அலைகள் சிறிது ஓயும்? எனவே, தன் நிலையைத் தோழியிடம் சொல்லலானாள்:

"தோழீ! என் காதலன் என்னை ஒதுக்கி விட்டு, தனக்கு விருப்பமான வற்றையே செய்து கொண்டிருந்தாலும், என்னுடைய கண்கள் அவனைக் காணாமல் ஒரு நிலையில் பொருந்த மறுக்கின்றன!

என் காதலரை நான் காணாத போது, அவருடைய காரியங்கள் எல்லாமே எனக்குத் தவறானவைகளாகவே படுகின்றன! அவரை நேரில் காணும் போதோ, அவருடைய செயல்களில் தவறானவற்றையே காண முடிவதில்லை! இது எப்படி யென்றும் எனக்குப் புரியவில்லை.

காமம் மலரை விட மென்மை உடையதாகும்; அந்த உண்மை அறிந்து அதன் நல்ல பலனைப் பெறக் கூடியவர் உலகத்தில் சிலரே! இந் நிலையில் என்னை அலைக்கழித்து வேடிக்கைப் பார்க்கும் என் காதலனை நேரில் காணும் போது, அவன் புரியும் குற்றங்களை யெல்லாம் மறந்து விடுகின்றேன்! எப்படி யென்றால் கண்ணுக்கு மை தீட்டுகின்ற வேளையில், அக் கோலைக்காணாத கண்களைப் போல்!" என்று முடித்தாள்.

எழுதுங்கால் கோல் காணாக்
கண்ணே போல் கொணகன்
பழிகாணேன் கண்ட விடத்து.

✱ ✱ ✱

## 12. மலர் நாணும் கண்ணுடையாள்!

கட்டிளங் காளை யொருவன் — பட்டினும் மேலாய் மின்னி அழ

கைக் கொட்டிடும் பூங்கா ஒன்றில் புகுந்தனன் பூாப்பாடு!

எங்கெங்கும் இன்பக் காட்சி—கண்களிலோ களிப்பின் ஆட்சி—உள்ளத்திலோ உவகை பாய்ச்ச மலர்ந்த அவன் முகமே சாட்சி!

குதித்தோடி வந்தான்-இன்பக் குதூகலத்தில் தன்னை ஆழ்த்தி—அங்கோ மண்ணை மிதித்தோடிப் பாயும் மான் போல்-மதிமுக வதனியொருத்தி உதித்திட்டாள் எழிலை உதிர்த்து நின்ருள்!

கண்டான்—அக்கட்டாணி
முத்தை!
நெஞ்சில் கொண்டான்
இனிப்பான சத்தை!

அவளைப் பற்றிக் கிடக்கும் பருவ அழகைப் பக்குவத்துடன் பருகியதோடு — ஏக்கத்தால் — நெஞ்சின் வீக்கத்தால்—உள்ளம் உருகி நின்ருன்!

"ஆகா! என்ன அழகு...என்ன அழகு! பெண்தானே இவள்? இல்லை, பேரழகின் பிறப்பிடமோ?"

—என்று எண்ணியவனுய், அழகு நிரம்பிய அவளின் அங்கங்களைக் கண்டு—கடைசியாக அவளின் கண்களைக் கண்டான்—திடீரென்று ஆச்சரியத்தில் வீழ்ந்தான்!

"குவளை மலரைவிட அழகாக இருக்கின்றனவே இவளுடைய கண்கள்! அந்த மலருக்குக் கண்களிருந்து இவளுடைய கண்களை காணுமானல்—அதற்கு ஒப்பாக நம்மால் இருக்க முடியவில்லையே என்று நாணும்! நாணியதோடு மட்டுமின்றி — ஆபரணங்களை உடையவளான 'அவளைக் காணவும் கண் கூசி-நிலத்தை நோக்க அதன் கண்கள் கோணும்!"

— என்று எண்ணுகிருன்!

காணிற் குவளை கவிழ்ந்து
நிலன் நோக்கும்
மாணிழை கண்ணொவ்வேம்
என்று.

※ ※ ※

### 13. நெஞ்சைக் கேட்பவள்!

அவளுக்கு அவன்தான் உயிர். அவனுக்கும் அவள்தான் உணர்ச்சி!

அவளுக்கு அவன்தான் இதயம் அவனுக்கும் அவள்தான் இன்பம்!

அவளுக்கு அவன்தான் வேண்டும்—அவனுக்கும் அவள்தான் வேண்டும்!

இவ்விதமாய், எண்ணத்தால்—எழுச்சியால் — நினைப்பால் — பிணைப்பால்—ஒன்றுபட்டு விட்ட உயிர்க் காதலர்கள்—உல்லாசப் பயணம் நடத்திக் கொண்டிருந்தனர் தங்கள் காதல் பாதையிலே!

நாட்கள் ஓடின!

திடீரென்று அவர்கள் பயணத்திற்குத் தடை!

காதலுக்குத் தடை போடத்தான் சாதி—சமூகம்—பணம்—அந்தஸ்து—அறியாமை என்னும் பஞ்ச பூதங்கள் காத்துக் கொண்டிருக்கின்றனவே!

ஒட்டிய இரு உள்ளங்கள் வெட்டப்பட்டன!

துடித்துக் கிடந்த இரு உணர்ச்சிகள் துண்டாக்கப்பட்டன!

இதயங்கள் வெடிக்கின்ற நிலையில் பிரிவு!

எண்ணங்கள் துடிக்கின்ற நிலையில் உறவின் முறிவு!

காலம் பறந்து கொண்டிருந்தது வான்பறவை போல!

அவன் மறந்தான் அவளை—ஆனால் அவள்? முடிய வில்லை அவளால் அவனை மறக்க!

என்னென்னமோ செய்து பார்த்தாள்—அந்த நெஞ்சம்கேட்டால் தானே!

கெஞ்சினாள் — கொஞ்சினாள்—மிஞ்சியும் பார்த்தாள் அந்த வஞ்சி—கிஞ்சித்தும் பயனில்லை!

அவனை மறக்க மறுக்கிறது நெஞ்சு—என் செய்வாள் பூங்கொடியாள் —துடித்தாள்-துவண்டாள்—பொறுமையையும் இழந்தாள்!

அவள் நெஞ்சத்தைத் திட்ட ஆரம்பிக்கிறாள்: "ஏ, வஞ்சக நெஞ்சே! உனக்கேன் இந்த ஆணவம்? எனக்காக அல்லவோ நீ இருக்கின்றாய்? அதனால், நீ எனக்குத்தானே உதவியாக இருக்க வேண்டும்? நீ என் மாட்டு நில்லாது இன்னுமேன் அவரையே துதி செய்து கொண்டிருக்கின்றாய்? உனக்குச் சிறிதளவும் நன்றியுணர்ச்சியே கிடையாதா? உனக்கு நான் என்ன தீங்கு செய்தேன்? ஏன் என்னை இப்படி வாட்டுகிறாய்? அவர் என்னை மறந்திருக்க அவருடைய நெஞ்சம் துணை புரிவதைக் கண்டும்—நீ எதற்காக எனக்குத் துணை புரிய மறுக்கிறாய்? ஒரு காரியத்தைத் தானே உணர்ந்து செய்யும் ஆற்றலற்றவர்கள்—பிறர் செய்து காட்டும் முறையைக் கண்டேனும் செய்து முடிப்பர்! ஆனால், நீயோ, கண்டும் செயலாற்றாது என்னைக் கொன்று வருகின்றனையே எதற்காக?"

என்று கேட்கின்றாளாம் காதலிலே தோல்வி கண்ட ஒரு தோகை மயில்!

அவர் நெஞ்சு அவர்க்கு ஆதல்
கண்டும் எவன்நெஞ்சே
நீஎமக்கு ஆகா தது.

✻ ✻ ✻

## 14. மார்பில் மயங்கியவள்!

'அன்பே'—என்றாள் அவள்!
'அழகே'—என்றான் அவன்!
கரங்கள் கரங்களைப் பற்றின!
கண்ணிமைகள் தானாக மூடின!
எண்ணங்கள் எங்கெங்கோ
பறந்தன!

அவன் மணிமார்பில் அப்படியே சாய்ந்தாள்—மயக்கம்—என்றாலும் பேசலானாள்:—

"ஏன் இத்தனை நேரம் உங்களுக்கு? நான் எத்தனை நேரமாகக் காத்துக் கொண்டிருக்கிறேன் தெரியுமா? என்ன இருந்தாலும் என்னை அலைக்கழிக்கும் குறும்பு இன்னும் உங்களைவிட்டுப் போக வில்லையே! உங்களுடன் பேசக் கூடாது என்றுதான் இருந்தேன்—ஆனால்—என்னால் அது முடியவில்லை! என் இதயத்தைக் கொள்ளைகொண்ட கள்வரே! நம் காதல் பயணத்தில் நீங்கள் இன்னல் பல விளைவித்து இடர்கள் பல புரிந்தாலும்—உங்களிடம் வெறுப்பேற்படுவதற்குப் பதிலாக இதய நாத மெழுப்பும் தங்கள் மணி மார்பு என்னை மயக்கி விடுகின்றதே! இது எதைப் போன்று இருக்கிறது என்றால் — இழிவு தரத்தக்க இன்னல்களை விளைவித்தாலும்—கள்ளினை உண்பவர்க்கு மேன்மேலும் அதன் மீது விருப்பம் வளர்வதைப் போன்றிருக்கிறது!"

— என்றாள் அவள்.

அவன் உணர்விலிருந்தால் அல்லவா அவள் சொன்னது புரியப் போகிறது. அவன் மார்பில் அவள் தலை சாய்த்த போதே அவன் மயங்கி விட்டானே!

இனித்தக்க இன்னா செயினும்
களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு.

✻ ✻ ✻

## 15. கண்களுக்கு அஞ்சுபவன்!

அவளுக்கு அவனைப்பற்றியே நினைவு—அவனை மறக்கலாமென்றாலோ முடியவில்லை!

மறக்க முயற்சித்தாலும் முடியாமையாய்ப் போகும் நினைவு—என்ன நினைவாயிருக்கும்?

பிணைந்துவிட்ட அன்பு!
பிணைக்கப்பட்ட காதல்!

இவ்விரண்டில் ஏதாவது ஒன்றாகத்தான் இருக்க முடியும்!

பிரிவுத்துயர் கொல்லும்புலியை விடக் கொடிதன்றோ?

பொருள் தேடச் சென்று விட்டவனை எண்ணிப் புலம்புகிறான் அவள்!

அவன் சென்றுவிட்டான் நிம்மதியாக—ஆனால், அவளின் நிலை? பரிதாபத்தைப்பரவவிட்டுக் கொண்டிருந்தது!

என்னதான் தடுத்து நிறுத்த முயற்சித்தாலும், நெஞ்சம் அவனிடம் தஞ்சம் புகத் துடித்துக் கொண்டு நிற்கின்றது!

பார்த்தாள் பாவை—அவன் நினைவைப் பூட்டி வைக்கும் நெஞ்சிடம் — நேரிழைக்குக் கோபம் குடிகொண்டு விட்டது!

"நாம் நினைக்க மறுத்தாலும் அவர் நினைவையே நாடி நிற்கும் இந் நெஞ்சத்தின் வஞ்சகத்தை என்னவென்பது? அவரிடம் ஓடிச் சென்று அவரைக் கைதியாக்கி—நெஞ்சின் சிறையில் அடைப்பதாலன்றோ — அவரைக் காண நம் கண்கள் துடிக்கின்றன!" என எண்ணியெண்ணி தன் நெஞ்சுக்கு ஒரு வேண்டுகோள் விடுக்கிறாள்.

"ஏ, வஞ்சக நெஞ்சமே! ஏன் என்னை இப்படி வருத்தி வாட்டுகின்றாய்? நான் உனக்கு ஒரு தீங்கும் இழைத்திலேன்-இருப்பினும் என்னை அணு அணுவாய்க் கொல்வதிலேயே குறியாய் இருக்கின்றாயே! அவரை நினைக்க நான் மறுக்கிறேன்—என்றாலும், நீ அவரையேநாடி கூடிக் குலவத் துடிக்கின்றாய்! உன் செய்கையால் நீ என்னை மட்டும் சித்திரவதைச் செய்யவில்லை—என் கண்களுக்கும் வெறியூட்டி விடுகின்றாய்! நீ மூட்டி விடும் வெறிக்கு அடிமையாகும் அந்தக் கண்களுக்கு என்னால் பதில் சொல்ல முடியுமா? அவை விநாடிக்கு விநாடி என்னைப் பயமுறுத்திக் கொண்டேயிருக்கின்றன! ஒன்று செய்—உன் விருப்பம் போலவே நீ அவரை நாடிச் செல்! ஆனால், நீ மட்டும் தனியே சென்று விடாதே! என் கண்களையும் உன்னோடு அழைத்துச் சென்று விடு! அப்படி நீ கண்களை என்னிடமே விட்டுச் சென்று விடுவாயானால். அவை என்னைச் சிறுகச் சிறுகத் தின்றே தீர்த்து விடும்!" என்று தன் கண்களுக்கு அஞ்சி நெஞ்சிடம் கெஞ்சுகிறாள் இவ்வஞ்சி!

கண்ணும் கொளச்சேறி நெஞ்சே இவை என்னைத்
தின்னும் அவர்காணல் உற்று.



"அவள் அழகாக இருக்கிறாள்; நன்றாகப் பாடுகிறாள்; அருமையாகச் சமையல் செய்கிறாள் என்றெல்லாம் எண்ணித்தானே நான் அவளைக் காதலித்தேன். அவள் ஏன் என்னைக் காதலிக்கமாட்டேனென்கிறாள்?"

—"அன்புள்ள நண்பா, கண்ணாடியின் முன்னே போய்நில். காரணம் தெரியும்."

—ஜான் பபெலா.

ரிச்சர்ட் பிளாக்மோர் எழுதிய...

# காட்டு ராணி

தமிழில் தருபவர் :

## ரகுநாதன்

இந்த நாவலின் ஆசிரியரான ரிச்சர்ட் டாட்ரிட்ஜ் பிளாக்மோர் (1825-1900) ஓர் ஆங்கிலேயர். இங்கிலாந்தி லுள்ள சிறு கிராமமொன்றில் குட்டிப்பாதிரியார் ஒருவரின் மகனாகப் பிறந்த இவர் எக்ஸ்டர் கல்லூரியில் சட்டக்கல்வி பயின்று பட்டம் பெற்றார். எனினும் இவர் வழக்கறிஞராக அதிக காலம் தொழில் புரியவில்லை. சில ஆண்டுகளிலேயே இவர் அத்தொழிலைக் கைவிட்டு, முழுநேரத்தையும் எழுத்துத் துறையிலேயே செலவிட்டார்.

இவரது முதல்நாவலான 'கிளாரா வாஹன்' வெளிவந்த போது, அதனால் இவருக்குப் பேரும் புகழும் கிட்டாவிட்டாலும், எழுத்துலகில் இவரது திறமை புலப்பட்டது. இதனைத் தொடர்ந்து இவர் வேறுசில நாவல்களும் எழுதினார். எனினும் 'காட்டு ராணி' என இங்குக் குறிப்பிடப் பெறும் 'லோர்னா டூன்' என்ற நாவலை இவர் வெளியிட்ட பின்னர் தான் இவரது புகழ் திடீரென்று மேலோங்கியது. காட்டுராணிதான் இவருக்கு நிரந்தரமான புகழையும் தேடித் தந்தது. காட்டுராணியின் ஆசிரியர் என்றே இலக்கிய உலகம் இவரை அன்றும் இன்றும் நினைவுகூர்ந்து வருகிறது.

காட்டுராணி கற்பனாலங்காரக் கதைகளின் பரம்பரையைப் புதுப்பிக்கும் காரியத்தைத் தொடங்கிவைத்தது என்று சில விமர்சகர்கள் இதனை மதிப்பிடுகிறார்கள். கற்பனை வளமும், கவர்ச்சியும், வீரசாகசமும், விறுவிறுப்பான சம்பவங்களும் நிறைந்து விளங்கும் சிறந்த கதை இது.

இந்த நாவலில் காணப்படும் கதாம்சமே இங்கு சுவை குன்றாத சுருக்கமாகத் தரப்படுகிறது.

---

LORNA DOONE—*By R. D. Blackmore*

அது இரண்டாம் சார்லஸ் மன்னரின் ஆட்சிக்காலம்...

அப்போது டேவன், சாமர்செட் ஆகிய பிரதேசங்களின் எல்லைப் புறத்திலுள்ள பயங்கரமான பள்ளத்தாக்கை ஒரு கொள்ளைக் கூட்டத்தார் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களைச் சுற்று வட்டாரத்திலுள்ள மக்கள் 'டூன்கள்' என்று அழைத்துவந்தார்கள். அந்தப் பள்ளத்தாக்கு மனிதர்கள் சாமானியமாகப் போய்வந்து விட முடியாத அளவுக்குப் பயங்கரமான பாறைகளும் பள்ளங்களும் மலிந்த ஆபத்தான பிரதேசமாகும். அந்தக் கொள்ளைக் கூட்டத்தாரின் பலம் வாய்ந்த கோட்டை எனக் கருதப்பட்ட பகுதிக்கு டூன் பள்ளத்தாக்கு என்றே பெயருண்டாகி விட்டது. டூன் பள்ளத்தாக்கில் செங்குத்தான பாறைகளும், அபாயகரமான சரிவுகளும், பயங்கரமான கடவுகளும் நிறைந்திருந்தன. அந்தப் பகுதிக்குள் அவ்வளவு லகுவில் யாரும் புகுந்துவிட முடியாது. சொல்லப்போனால் அதன் ஒரு கோடியில் மட்டும் தான் அதற்குள் நுழையக் கூடிய வழி இருந்தது. ஏனைய திசைகளெல்லாம் ஏறத்தாழ அடைபட்டுப்போன மாதிரி தான். அந்த ஒரு வழியும் பெரும் பாறைகளால் இயற்கையில் அமைந்த குகைவாயிற் கோட்டை போலிருந்தது. அந்தக் குகைவாயிலில் பாது காவலுக்கு ஒரு பீரங்கி நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. அத்துடன் அங்கு டூன் காவலாளி ஒருவனும் எந்நேரமும் வேவு பார்த்துக் காவல் புரிந்து வந்தான்.

அந்தப் பள்ளத்தாக்கின் வழியே பாக்வோர்த்தி என்ற சிற்றாறும் ஓடியது. அந்தச் சிற்றாறு பாறைகளால் அமைந்த ஒடுங்கிய இடுக்கொன்றின் வழியாக ஓடி, வழவழப்பும் அகாதமான சரிவும் கொண்ட ஒரு பெரும் பாறைக்கு மேலிருந்து அருவியாகப் பொங்கிப் பாய்ந்து கீழிறங்கியது. எனவே குறுகிய அணைவாயிலிருந்து பொங்கிப் பாயும் வெள்ளத்தைப்போல், அந்த அருவி பயங்கரமான அசுரவேகம் கொண்டதாக இருந்தது. இதனால், அந்தச் சிற்றாறு பாயும் வழியாகவும் அந்தப் பள்ளத்தாக்கினுள் மனிதர்கள்பிரவேசிப்பதென்பது அசாத்தியம்தான். இந்தப் பகுதியை டூன்கள் எவரும் காவல் புரியவில்லை. உண்மையில், அந்தப் பள்ளத்தாக்கைக் காவல் புரியவேண்டிய அவசியமே டூன்களுக்கு எழவில்லை. ஏனெனில் சுற்றுவட்டாரத்திலுள்ள ஏழை யெளிய விவசாய மக்களும் சரி, நிலச்சுவான்தார்களும் சரி, டூன்களைக் கண்டு பெட்டிப் பாம்பாய் அஞ்சியடங்கிக் கிடந்தார்கள். அவர்களின் ஆக்கிரமிப்பையும் அக்கிரமங்களையும் விதியென்று ஏற்றுக்கொண்டு போவதைத் தவிர வேறு

போக்கில்லை என்றே அந்த மக்கள் கருதினார்கள். ஏனெனில் அந்த டூன்கள் அவர்களுக்குப் 'பெரிய மனிதர்'களாகவே காட்சியளித்தார்கள்.

டூன்கள் அனைவரும் பல்லாண்டுகளுக்கு முன்பே ஸ்காட்லாந்திலிருந்து வெளியேறி வந்தவர்கள். ஸ்காட்லாந்திலுள்ள தமது பெரிய நிலபுலன்களையும் சொத்துச் சுகங்களையும் பறிமுதலுக்குப் பலியாக்கிவிட்டு, அங்கிருந்து வெளியேறிய அவர்கள், அந்தப் பள்ளத்தாக்குப் பிரதேசத்தில் வல்லான் வகுத்ததே வாய்க்கால் என்ற நியதியைப் பின்பற்றிக் கொள்ளைக் கூட்டமாகக் குடியேறிவிட்டார்கள். அவர்கள் எல்லோரும்லோர்னைச் சேர்ந்த பெரும் பிரபுக்களின் வம்ச பரம்பரையைச் சேர்ந்தவர்கள். எல்லோருமே தலைக்கு மிஞ்சிய தன்னங்காரமும் கொடிய குணமும் மிக்கவர்கள். அத்தனை பேரும் அழகும் பலமும் நெடிய தோற்றமும் கொண்டவர்கள். அவர்களில் எவருக்கும் பயம் என்பதே கிடையாது. எனவே அவர்கள் தமது மனம்போன போக்கிலெல்லாம் அங்குள்ள மக்களிடம் தண்டம் வசூலித்தார்கள்; கொள்ளையடித்தார்கள்; கொலைகள் புரிந்தார்கள்; பெண்களைக் கவர்ந்து சிறையெடுத்துச் சென்றார்கள். ஆயினும் இவற்றையெல்லாம் தட்டிக்கேட்க அங்கு யாரையில்லை; எதிர்த்துப் போராடி அங்கு நாதியில்லை.

டூன்களையெல்லாம் ஸர் என்ஸர் என்ற முதுபெருங்கிழவர் ஆண்டு வந்தார். அவருக்கு ஒரு மகன். அந்த மகனுக்கும் முதுமை தோன்றி வயது முற்றிவிட்டது. அந்தக் கூட்டத்தாரின் மத்தியில் அவன் ஒருவன் மட்டுமே நெடிய உயரமும் நிமிர்ந்த தோற்றமும் அற்றவனாக இருந்தான். எனினும் உடல் வலுவிலும் வனப்பிலும் குன்றியிருந்த அவனை, தனது குள்ளநரிப் புத்தியிலும் குயுக்தியிலும் திறமை மிக்கவனாக விளங்கினான். அந்தக் கொள்ளைக் கூட்டத்தாருக்குத் தேவையான சூழ்ச்சித் திட்டங்களையும் போர்த் தந்திரங்களையும் வகுத்துக் கொடுக்கும் ராஜ தந்திரியாகவும் ராணுவ மந்திரியாகவும் அவனே விளங்கினான். எனவே அவர்கள் அவனைக் 'கவுன்செலர்' (ஆலோசகர்) என்றே அழைத்து வந்தார்கள்.

சுற்று வட்டாரத்திலுள்ள எந்தவொரு குடும்பமும் டூன்களின் அக்கிரமங்களுக்குப் பலியாகாமல் தப்பவில்லை. அந்தப் பிரதேசத்திலேயே மிகப்பெரும் பண்ணையாராகவும், அந்தக் காலத்துப் பிரமுகர்களில் ஒருவராகவும் விளங்கிய ஜான் ரிட் என்பவரையும்கூட அவர்கள் கொலை செய்து விட்டார்கள். இந்த அநீதியை எதிர்த்துப் போராடவோ, அதற்குப் பழி வாங்கவோ அப்போது அந்தக் குடும்பத்தில் யாரும் இல்லை; அந்தக் குடும்பத்தில் ஜான்

ரிடின் மனைவியும் அவளது பெண் மக்களான ஆன்லியும் எலிஸாவும், ஒரே மகனான இளைய ஜானும்தான் இருந்தார்கள். அந்தச் சிறுவனுக்கும் அப்போது வயது பன்னிரண்டு தான்.



ஜான் ரிடின் மகனான இளைய ஜான் ரிடுக்குப் பதினான்கு வயது முடிந்த பருவத்தில், அந்த இளைஞன் ஒரு நாள் பாக்வொர்த்தி ஆற்றங்கரைக்கு மீன் பிடிக்கச் சென்றான். ஆற்றின் கரை வழியாக மேலேறிச் சென்ற ஜான் இறுதியில் டூன் பள்ளத்தாக்கின் வழ வழப்பும் சரிவும் மிகுந்த பாறையின் மீது அந்த ஆறு அசுரவேகத்தில் அருவியாகப் பாய்ந்து விழும் இடத்தினருகே வந்து சேர்ந்தான். இளமையின் குறுகுறுப்பாலும், அசட்டுத் துணிச்சலாலும் தூண்டப்பெற்ற ஜான், தனது உயிருக்கு நேரக்கூடிய பேராபத்தையும் எண்ணிப் பார்க்காமல், அந்த அருவிக்கரை வழியாக, அந்தப் பயங்கரமான பாறை மீது ஏறிமேலே சென்றான். மேலே சென்றதும் தனக்கு ஏற்பட்ட பெருத்த ஆயாசத்தாலும் சோர்வாலும், அவன் அங்கிருந்த புல்லந்தரையில் மூர்ச்சை போட்டு விழுந்துவிட்டான்.

அவன் மூர்ச்சை தெளிந்து கண் விழித்துப் பார்த்தபோதோ அங்கோர் அதிசயத்தைக் கண்டான். அதுவரையிலும் அவன் கண்டிராத அத்தனை இனிமையும் அழகும் நிறைந்த சிறுமியொருத்தி தனது ஈரம் தோய்ந்த கைக்குட்டையால் அவனது நெற்றியைத் தடவிக் குளிரவைத்தவாறு, அவனையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டிருப்பதை அவன் கண்டான். சிறிது நேரத்திலேயே அந்த இளம் உள்ளங்கள் இரண்டும் பழக்கமாகிவிட்டன. குழந்தைகளுக்குரிய குறு குறுப்போடு இருவரும் ஒருவருக்கொருவர் மனம் விட்டுப் பல கேள்விகளைக் கேட்டு, ஒருவரையொருவர் அறிந்து கொண்டார்கள். அவர்கள் இருவரும் இவ்வாறு உரையாடிக் களித்துக்கொண்டிருந்த சமயத்தில் பள்ளத்தாக்கின் பக்கமிருந்து ஆளரவமும் மனிதர்களின் உரத்த குரலும் கேட்டன. உடனே அந்தச் சிறுமி ஜானை ஓர் ரகசியப் பாதை வழியே கூட்டிச் சென்று, பள்ளத்தாக்குக்கு வெளியே கொண்டுவந்து விட்டாள். அவளை விட்டுப் பிரிந்து வரும் சமயத்தில் ஜான் தன் இளம் இதயத்தையே அவளிடம் விட்டுவிட்டு வந்துவிட்டான். அதே சமயம் அவனையறியாமல் அந்தச் சிறுமியின் பிஞ்சு இதயத்தையும் தன்னோடு பறித்தெடுத்து வந்துவிட்டான்.

அந்தச் சிறுமிதான் லோர்னா டூன். ஸர் என்ஸர் அவளைத் தமது பேத்திப் பெண் எனக்

கூறி வந்தார். அவரது ஆட்சியின் கீழிருந்த டூன்களும் அவளை அந்தக் காட்டுப் பிரதேசத்தில் கண்ணும் கருத்துமாய்ப் பேணிப் பாதுகாத்து வந்தார்கள்; அவளைத் தமது காட்டு ராணி' யாகவே மதித்தார்கள்; அவ்வாறே அழைத்தார்கள்.

ஆண்டுகள் சில சென்றன. இப்போது ஜான் நல்ல வாலிபப் பருவத்தை எய்திவிட்டான். அவனது தோற்றத்தில் கம்பீரமும் நிமிர்வும் குடிகொண்டன; உடம்பிலே வலிமையும் இளமையும் முறுக்கேறின; இத்தகைய நிலையில் அவன் தனக்குச் சொந்தமான பிளாவர்ஸ் பாரோஸ் பண்ணை நிலத்தில் உழுது பயிரிட்டு அயராது உழைத்தான். அதனால் அந்தப் பண்ணை அந்த வட்டாரத்திலேயே அதிகப்படியான மகசூலையும் லாபத்தையும் தந்தது. இளமையாலும் உழைப்பாலும் அவனது திரேகம் வஜ்ரம்போல் உறுதி பெற்றது; மார்பும் தோள்களும் அகன்று விம்மிப் புடைத்திருந்தன; அவன் ஆஜானுபாகுவான கட்டிளங்காளையாய்க் காட்சியளித்தான். மேலும் அந்த வட்டாரத்திலேயே மல்யுத்தத்திலே அவனை மிஞ்சுவதற்கு யாருமில்லை; அந்த அளவுககு அவன் வலிமையும் திறமையும் பெற்று விளங்கினான்.

இவ்வாறு ஆண்டுகள் பல சென்ற போதிலும்,லோர்னவை மட்டும் அவன் மறக்கவில்லை. எந்நேரமும் அவளைப் பற்றிய சிந்தனைதான் அவனுக்கு. அவனுக்கு இருபது வயதான பின்னர் அவன் ஒருநாள் மீண்டும் அந்த டூன் பள்ளத்தாக்கின் அருவிக் கரைக்குச் சென்று முன்னைப் போலவே மேலேறிச் சென்றான். அப்போது அங்கு ஆற்றங்கரையருகே லோர்னா உலவிக் கொண்டிருப்பதைக் கண்டான். அவளும் அவனை உடனே இனம் கண்டு கொண்டாள். இந்தச் சந்திப்பு அவர்களுக்குப் பெருத்த மகிழ்ச்சியையும் பரவசத்தையும் அளித்தது. அவர்கள் இருவரும் வெகுநேரம் பேசினார்கள். எனினும் பழைய சிறுபிள்ளைக் குணத்தோடு பேசவில்லை. மாறாகப் பருவத்துக்கேற்ற நாணத்தோடும் நளினத்தோடும் பேசி மகிழ்ந்தார்கள். லோர்னா அவனிடம் ஒரு விஷயத்தைத் தெளிவாக்கினாள். அது அவனுக்கும் தெள்ளத் தெளிவாகத் தெரிந்தவிஷயம்தான். அதாவது அந்தப் பள்ளத்தாக்குக்கு அவன் வரும்போதெல்லாம்எந்த நேரமும் அவனது உயிருக்கு ஆபத்து நேரக்கூடும் என்பதே அந்த விஷயம். ஏனெனில் அவன் அங்குவந்து செல்வதை டூன்களில் யாரேனும் கண்டுவிட்டால், பிறகு அவர்கள் அவனை நிச்சயம் உயிருடன் விட்டு வைக்க மாட்டார்கள். இந்த ஆபத்தை அவர்கள் இருவருமே உணர்ந்தார்கள். எனினும் இதற்குப் பயந்து அவர்கள் தமது சந்திப்பை நிறுத்திக்

கொள்ள வேண்டும் என்று எண்ணவில்லை. காதலர் உள்ளம் கஷ்டத்துக்கும் நஷ்டத்துக்கும் அஞ்சுமா என்ன? எனவே அவர்கள் தமது சந்திப்புக்கான வழி வகைகளைப் பற்றித் தான் சிந்தித்தார்கள். அன்று அவர்கள் இருவரும் ஒருவருக்கொருவர் பிரியாவிடை பெற்றுப் பிரிந்து செல்லு முன்பு, லோர்னு அவனிடம் ஒரு வாக்குறுதி வாங்கிக் கொண்டாள். அதன்படி, அந்தப் பள்ளத் தாக்கிலுள்ள குறிப்பிட்ட பாறையொன்றின்மீது அவள் தனது மேற் சட்டையொன்றை விரித்துக் காயப் போட்டிருப்பதைக் கண்டால் மட்டுமே, அவன் அவளைக் காண வர வேண்டும் என்பதே அந்த வாக்குறுதி. இந்த அடையாளத்தின் மூலம் அவனது உயிருக்கு ஆபத்து நேரக்கூடிய சூழ்நிலை அங்கில்லை என்பதை அவன் புரிந்து கொள்ளலாம். இந்த ஏற்பாட்டின்படியே அவர்களது சந்திப்பு நடந்து வந்தது.

என்றாலும், அந்தப் பள்ளத் தாக்கில் டூன்களின் கட்டும் காவலும் அதிகமாகத் தான் இருந்தன. அவர்களின் மத்தியில் ராக்ஷஸன்போல் விளங்கிய கார்வேர் டூன் என்பவனைப் பற்றியும் ஜானிடம் லோர்னு எச்சரித்திருந்தாள். கார்வேர் டூனை அவள் மணந்து கொள்ள வேண்டுமென்று கிழவரான ஸர் என்ஸர் அவளை நிர்ப்பந்தித்து வருவதைப் பற்றியும் அவள் அவனிடம் தெரிவித்தாள். எனவே கார்வெர் டூனின் கண்களில் ஜான் தட்டுப்பட நேர்ந்தால், அவன் நிச்சயம் உயிர் தப்பமுடியாது என்று லோர்னு அஞ்சினாள். இத்தகைய இடர்ப்பாடுகளுக்கு மத்தியில், ஜான் அந்தப் பள்ளத்தாக்குக்குச் சென்று அவளை அடிக்கடி சந்திக்க முடியவில்லை. இதனால் அவன் அடிக்கடி தனக்குள் தானே புழுங்கித் தவித்தான்.

* * *

நிலைமைகள் இவ்வாறு இருந்து வரும் சமயத்தில்...

ஜானுக்கு மாஸ்டர் ஹக்கா பேக் என ஒரு மாமா இருந்தார். டல்வெர்ட்டன் பிரதேசத்திலேயே அவர்தான் பெரும் பணக்காரர். ஒரு நாள் அவர் பிளாவர்ஸ் பாரோஸ் பண்ணையை நோக்கி வந்து கொண்டிருந்த சமயத்தில், டூன்கள் அவரை வழிமறித்துக்கொள்ளையடித்து விட்டார்கள். இந்த அநியாயத்தை எதிர்த்து அவர் அங்குள்ள உள்ளூர் நீதிபதிகளிடம் முறையிட்டுக் கொண்டார். ஆனால் அவர்களோ டூன்களுக்கெதிராக, எந்த நடவடிக்கையையும் எடுக்கத் துணியவில்லை. எனினும் ஹக்காபேக் இதனால் சோர்ந்துபோய் விடவில்லை அவர் நல்ல பணக்காரர் ஆதலால், தமக்கு ஏற்பட்ட இன்னல்களை லண்டன் நகரத்துக்குத் தெரிவிக்க ஏற்

பாடு செய்தார்: தமது பணபலத்தால் லண்டன் சென்று அங்குள்ள பிரதம நீதிபதி ஜெப்ரேஸ் பிரபுவிடம் தமது முறையை முறையிட்டார். மேலும் மேற்றிசைப் பிராந்தியங்களில் உயிருக்கும் உடமைக்கும் பாதுகாவலற்ற அராஜக நிலை தாண்டவமாடுவதையும் விளக்கிக் கூறினர். அவரது முயற்சி பலனளித்தது. எனவே மன்னரின் பிரதிநிதியாக ஜெரிமி ஸ்டிக்கில்ஸ் என்ற அதிகாரி பிளாவர் பாரோசுக்கு வருகை தந்தார்; அங்குள்ள நிலைமைகளைக் குறித்து, வெஸ்ட் மின்ஸ்டரிலுள்ள மன்னரின் நீதிமன்றத்துக்கு ஆஜராகிச் சாட்சியம் அளிக்க வேண்டும் என்று அவர் ஜானுக்கு உத்தரவிட்டார்.

அந்த வட்டாரத்தில் வாழ்ந்து வந்த விவசாயிகள், நிலச்சுவான்தார்கள் மத்தியில் ஏதோ ஓர் அதிருப்தியுணர்ச்சி நிலவுவதாகவும், அவர்களது மனப்போக்கு மான்மவுத் பிரபுவுக்கு ஆதரவாகவும், புராட்டெஸ்டெண்ட் மதச் சார்பாகவும் மாறி வருகிறது என்ற சூசகம் தென்படுவதாகவும் மன்னரின் அரசாங்கம் ஏற்கெனவே கருதியது. எனவே அந்த மக்களைக் கண்காணிக்கவும், அவர்களைப் பற்றிய தகவல்களை அரசாங்கத்துக்குத் தெரிவித்து வரவும் ஜானை ஓர் அரசாங்க ஒற்றனைப் பயன்படுத்தலாம் என்பது நீதிபதி ஜெப்ரேஸின் எண்ணம். எனவேதான் ஜானை லண்டனுக்கு வரவழைக்க உத்தேசித்தார்.

அந்தக் காலத்தில் கிராமாந்திரப் பகுதி மக்களில் மிகவும் வளம் படைத்த மனிதர்களே லண்டனுக்குப் பயணம் மேற்கொள்வது வழக்கம். அவ்வாறு அவர்கள் தமது வாழ்க்கையில் ஒரே ஒரு முறை லண்டனுக்குச் சென்று வந்தாலே அது பெரிய விஷயம்தான். அந்தக் காலத்தில் அது அத்தனை பயங்கரமான, சிரமமான பயணமாக இருந்தது. எனினும் இத்தகைய சிரமமான பயணத்தை மேற்கொண்டு, ஜான் எப்படியோ லண்டன் போய்ச் சேர்ந்தான்; அங்கு சென்றதும், அந்தப் பெருநகரத்தின் அதிசயங்களையும் அழகையும் அவன் கண்டு களித்தான். ராஜ்யத் தலைநகரான அந்தப்பெருநகருக்கு வந்ததுமே, அவன் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்குத் தனது வருகையைத் தெரிவித்துவிட்டான். எனினும் நீதிபதிகளின் முன்னிலையில் ஆஜராகும்படி அவனுக்குப் பல நாட்களாகியும் உத்தரவு வந்தபாடில்லை. எனவே வேறு வழியின்றி அவன் அங்கேயே பல நாட்கள் தங்கியிருக்க நேர்ந்தது. அவனுக்கோ அங்கிருக்கவே பிடிக்கவில்லை. அவனது மனம் பிளாவர் பாரோஸ் பண்ணையையும் பிறந்த மண்ணையும் எண்ணி ஏங்கியது. மேலும் லோர்னா தனக்குத் தெரிவித்தபடி மலை மீது அடையாளம் காட்டியிருப்

பாளோ, காட்டிய பின்னரும் அவன் அவளைச் சந்திக்க வராததைக் கண்டு அவள் என்னென்ன எண்ணி மருகியிருப்பாளோ என்றும் அவன் கவலை கொண்டான்; கலங்கித் தவித்தான்.

கடைசியில் அவனது கையிலிருந்த பணமும் வெகுவாகக் கரைந்து விட்டது. இந்த நிலையில் அவன் வேறு வழியும் யோசனையுமின்றி, வெஸ்ட்மின்ஸ்டர் நீதி மன்றத்தை நோக்கி நடந்தான்; அங்கு தமது இரு கூட்டாளிகளுடன் அமர்ந்திருந்த பிரதம நீதிபதியான ஜெப்ரேஸ் பிரபுவின் முன்னால் சமனில்லாமலே ஆஜராகி, அவரை நோக்கிச் சென்றான். "யாரப்பா நீ? எங்கேவந்தாய்?" என்று அவர் அவனை நோக்கிக் கூத்தினார். அவரது சிவந்த முகத்தில் இரண்டு சின்னஞ் சிறிய கண்கள் கனன்றெரிந்து பளபளத்தன. ஜான் அவரிடம் தான் வந்த விவரத்தைச் சொன்னான்; பின்னர், தான் மீண்டும் ஊருக்குத் திரும்பிப் போகலாமா என்பதைக் கேட்பதற்காகவே வந்ததாகவும் தெரிவித்தான். அவன் கொஞ்சம் கூடப் பயமோ தயக்கமோ கொள்ள வில்லை. நீதிபதி ஜெப்ரேஸின் பயங்கரமான கண்களை பயமின்றி நேருக்கு நேர் பார்த்தவாறே வெட்டொன்று துண்டொன்றாகத் தான் சொல்ல வந்ததைச் சொல்லி முடித்தான். அவனது இந்தப் பேச்சைக் கேட்ட ஜெப்ரேஸ் அவனோடு தமாஷாகச் சிறிது நேரம் பேசினார். பின்னர் தமது தமாஷை விடுத்து அவனை விசாரிக்கத் தொடங்கினார். டூன்களைப் பற்றியும், அவனது பிரதேசத்தில் நடந்து வரும் சதி வேலைகளையும் பிற காரியங்களையும் பற்றியும் அவர் அவனுக்குத் தெரிந்த விவரங்களையெல்லாம் பல கேள்விகளைப் போட்டு, அவனிடமிருந்து கேட்டறிய முயன்றார். இறுதியில் அவர் அவனை நோக்கிப் பின்வருமாறு கூறினார்: "ஜான், அங்கு நடைபெறும் சதித் திட்டங்களைக் குறித்து உனக்கு எதுவுமே தெரியாது என்றே நினைக்கிறேன். எனினும் அவற்றைப் பற்றி அரசாங்கம் சீக்கிரத்திலேயே அறிந்து கொள்ளும். ஜான், உன்னை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. உன்னைப் போல் இத்தனை ஆண்மையோடும் அச்சமின்மையோடும் உண்மையைச் சொன்ன மனிதனை நான் இது வரையிலும் கண்டதில்லை. சரி, நீ டூன்களிடமிருந்து விலகியிரு. உனது புத்திக்குப் புலப்படாத, புரியாத காரியங்கள் எதிலும் தலை கொடுக்காதே. உன்னை எனக்கொரு கருவியாகப் பயன்படுத்தலாம் என நினைத்தேன். அதற்கு நீ லாயக்கில்லை. உனக்கு அந்த அளவுக்குப் புத்திக்கூர்மை போதாது. நீ மிகுந்த வெகுளியாகவும் நேர்மையானவனாகவும் இருக்கிறாய். எனவே நீ, இப்போது உன் ஊருக்குப் போகலாம்."

இவ்வாறு கூறிவிட்டு, அவர் அவனை வெறித்து நோக்கினர்; அந்த வெறித்த பார்வையை ஜான் தனது ஆயுட்காலம் வரையிலும் மறக்கவில்லை.

* * *

ஜான் வீடு திரும்பினன். வீடு திரும்பியதும் அவன் தனது லண்டன் விஜயத்தைப் பற்றி ஊர் மக்களிடம் கதையளந்து வீண் பொழுது போக்க வில்லை. அது பற்றிச் சொல்வதற்கும் அவனிடம் அதிகமான விஷயம் ஏதும் இல்லை. எனவே அவன் திரும்பி வந்ததும் லோர்னவைச் சந்திப்பதில் தான் கவனம் செலுத்தினன். அவ்வாறே அவன் டூன் பள்ளத்தாக்குக்குச் சென்று அவளைச் சந்தித்தான். அவளைச் சந்தித்த பின்னர், அவளுக்கும் கார்வெர் டூனுக்கும் மணம் முடிக்கும் யோசனையை, டூன்கள் சீக்கிரமே நிறைவேற்றி வைக்க முயற்சி செய்வதாக அவன் அறிய வந்தான். ஸர் என்ஸர் உயிரோடிருக்கும் வரையிலும் தன்னை யாரும் அந்தத் திருமணத்துக்கு நிர்ப்பந்தப்படுத்திப் பணிய வைக்க முடியாதுஎன்றே லோர்ன நம்பியிருந்தாள். ஆனல் இப்போதோ அந்தக் கிழவருக்குத் தள்ளாத வயதாகி விட்டது; அத்துடன் அவரது அந்திம காலமும் அதிக தூரத்தில் இல்லை எனத் தெரிந்தது. அவர் இறந்து போய் விட்டால், அப்புறம் கார்வெர்டூனின் இஷ்டத்துக்கு மாருகத் தான் எதுவும் செய்ய இயலாது போய் விடும் என்று பயந்தாள் லோர்ன.

இதற்கிடையில், ஜானை லண்டனுக்கு வருமாறு உத்தர விட்ட ஜெரிமி ஸ்டிக்கில்ஸ் என்பவர் பிளாவர் பாரோசுக்கு வந்தார்; அவர் அங்கேயே தங்கி உண்டியும் மதுவும் உண்டு களித்தவாறு நாட்களைப் போக்கத் தொடங்கி விட்டார். அவர் மிகவும் சுறுசுறுப்போடுதான் அங்குமிங்கும் அலைந்து திரிந்தார்; அரசாங்க சம்பந்தமான ஏதோ ஓர் ரகசிய அலுவலாக வந்திருப்பதாய்ச் சொல்லிக் கொண்டார்; அதனல் அவர் அந்தப் பிராந்தியம் முழுவதிலும் குதிரையில் ஏறிச் சுற்றிய வண்ணமே இருந்தார். ஒரு முறை அவரைத் தாக்குவதற்காக டூன்கள் ஓரிடத்தில் பதியிட்டுக் காத்திருந்தார்கள். இதனைத் தெரிய வந்த ஜான் அவருக்கு முன்னதாகவே எச்சரிக்கை யளித்து, அவரது உயிரைக் காப்பாற்றினன். இதனல் அவருக்கு ஜான்மீது மிகுந்த நல்லெண்ணம் ஏற்பட்டது.

பின்னர் மாரிக்காலம் வந்தது. அது மிகவும் பயங்கரமான மாரிக்காலம். அந்தக் காலத்தில் பெய்ததைப் போன்ற பனிமழை எந்தக் காலத்திலும் பெய்ததில்லை என்று அந்தப் பிராந்தியத்திலுள்ள முதியவர்கள் எல்லாரும் பேசிக் கொண்டார்கள். அந்தக் கொடிய

உறைபனிக் காலம் அவர்கள் நெஞ்சை விட்டு என்றென் றைக்கும் மறக்க முடியாத அள வுக்கு அத்தனை குளிரும் கொடு மையும் நிறைந்ததாக இருந்தது. ஆனால் இந்தக் குளிரும் பனியும் ஜானின் ஆர்வத்தைக் குன்ற வைத்து விடவில்லை. அவன் பனியிலும் நடந்து செல்வதற் கேற்ப கால்ஜோடுகளைத் தயார் செய்து கொண்டான்; அவற் றைத தரித்துக் கொண்டு டீன் பள்ளத்தாக்குக்கு மேலாக வுள்ள உயர்ந்த சிகரங்களின் மீது அடிக்கடி ஏறிச்சென்று, அங்கே லோர்னு வழக்கமாகக் காட்டும் அடையாளம் தென் படுகிறதா என்று பார்த்தான். ஆனால் அத்தகையஅடையாளம் எதுவுமே காணவில்லை. பல முறை பார்த்தும் அடையாளத் தைக் காணுததால் அவன் பர பரப்பும் மனப் பதைப்பும் அடைந்தான்; இன்னது செய்வ தெனத் தெரியாமல் தவித்தான். இந்தச் சமயத்தில் லோர்னுவுக்கு வேலைக்காரியாக இருந்த குவென்னி என்ற சிறு பெண் ணொருத்தி அவனைத் தேடி வந் தாள்; கிழவர் என்ஸர் சாகக் கிடப்பதாகவும், ஜானை நேரில் கண்டு பேசினுலன்றி அவர் சாக மாட்டாரெனவும், அவர் அவ னைப் பார்க்க விருப்புவதாகவும் அவள் ஜானிடம் தெரிவித்தாள்.

இதன்பேரில் குவென்னி அவனைப் பள்ளத்தாக்குக்கு அழைத்துச் சென்றுள். அவனது வருகையைக் கண்டு ஏனைய டூன்களெல்லாம் மனம் கறுவி முறைத்து நோக்கினுர்கள்; எனி னும் அவர்கள் என்ஸரின் உத் தரவுக்கஞ்சி, அவனுக்கு எவ் வித ஆபத்தும் விளைவிக்கத் துணியாதிருந்தார்கள். அந்தக் கிழவர் தமது ஆசனத்தில் அமர்ந்தவாறு, ஆஜானுபாகு வாகத் தோற்றமளித்த ஜானைக் குறுகுறுப்போடு மேலும் கீழும் நோக்கினுர். ஜானின் மீது தான் கொண்டுள்ள காதலைப் பற்றி லோர்னு அவரிடம் ஏற்கெனவே தெரிவித்துவிட்டாள்; மேலும், எந்தக் காரணத்தைக் கொண் டும் தான் கார்வெர்டூனை மணக்க முடியாது என்றும் கூறிவிட்டாள்.

மரணவாயிலில் நின்ற அந் தக் கிழவர் ஜானை நோக்கிப் பின்வருமாறு கேட்டார்: "இந் தக் கன்னி உனது அந்தஸ் துக்கு மிகவும் மேலானவள் என்பது உனக்குத் தெரியுமா? வட ஐரோப்பாவில் மிஞ்சி யுள்ள மிகப் பழம் பெரும் குடும்பங்கள் ஒன்றில் இவள் பிறந்தவள் என்பது உனக்குத் தெரியுமா? மேலும், உனது பரம்பரைதான் என்ன என்று நீ அறிவாயா?"

இதனைக் கேட்டதும் ஜான் நிமிர்ந்து நின்று துடிப்போடு பதில் கூறினுன்: "டூன்கள் எந்த அளவுக்கு அயோக்கியர் களாக இருந்திருக்கிறுர்களோ, அதைக் காட்டிலும் இருமடங் கான யோக்கியர்கள்தான் ரிட்

குடும்பப் பரம்பரையினர் என்பதை நான் அறிவேன்.''

''சரி, அதைப்பற்றி எனது கருத்து வேறாக இருக்கலாம்'' என்றார் கிழவர் என்ஸர். அவரது ஒளிமங்கிப்போன கண்களில் அந்த நேரம் ஒரு பிரகாசம்கூடப் பளிச்சிட்டது. ''அவ்வாருயின், ஐரோப்பாவிலேயே உனது குடும்பம் தான் மிகவும் பழமையானதாக இருக்கும்.''

இதன் பின்னர் அந்தக் கிழவர் வாய் பேசாமல் லோர்னுவையும் ஜானையும் வெறித்துப் பார்த்தவாறே அமர்ந்திருந்தார்; பின்னர் ''அசட்டுப் பிள்ளைகளே! அசட்டுப் பிள்ளைகளே!'' என்று முணுமுணுத்தார்.

''நாங்கள் ஒன்றும் அசடுகளில்லை. அப்படியே நாங்கள் அசடாக இருந்தாலும், இரண்டு அசடுகளும் ஒன்றாகச் சேர்ந்திருக்கிற வரையில் எங்களுக்கு அதைப்பற்றிக் கவலையும் இல்லை!'' என்று பதிலளித்தான் ஜான்.

''அசடுகள்தான்! என்றென்றைக்கும் அசடுகள்தான்!'' என்று கத்தினார் கிழவர். பின்னர் அவர் பின்வருமாறு சொன்னார்: ''நீங்கள் அப்படி இருக்க வேண்டும் என்றே நானும் விரும்புகிறேன். சிறுவனும் சிறுமியுமாகவே இருங்கள். நீங்கள் பேரன் பேத்திகள் எடுக்கிற வரையிலும் சிறுவனும் சிறுமியுமாகவே இருந்து வாழ்க்கையை அனுபவியுங்கள்!''

இதன் பின்னர் ஜான் விடைபெற்றுக் கொண்டான். அவன் விடைபெற்றுச் செல்லும் போது நீன்கள் எல்லோரும் அவனைக் கொடூரமாகப் பார்த்தார்கள்; அதிலும் கொடுமை நிறைந்த கண்களும் கரிய தாடியும் கொண்டவனுகத்தோன்றிய கார்வெர்டூனின் பார்வையோ அவனைச் சுட்டுப் பொசுக்கி விடுவதுபோலவே இருந்தது. ஆனால், அவன் விடைபெற்றுச் செல்வதற்கு முன்னர், லோர்னு அவனுக்குப் புதியதொரு அடையாளத்தைக் குறிப்பிட்டாள்; அவளுக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்தால், அதனை அவன் அறிந்துகொள்வதற்கான அடையாளம் அது. அந்தப் பள்ளத்தாக்கிலிருந்த ஒரு குறிப்பிட்ட மரத்தில் நான்கு காக்கைக் கூடுகள் இருந்தன; லோர்னுவுக்கு ஏதாவது ஆபத்து நேரும் போலிருந்தால், குவென்னி அந்தக் கூடுகளில் ஒன்றை மரத்தில் ஏறி எடுத்தெறிந்துவிடவேண்டும் என்பதே அந்த அடையாளம். அந்தக் கூடுகளில் ஒன்று காணவிட்டால், ஜான் லோர்னுவின் உதவிக்கு வர வேண்டும் என்பது ஏற்பாடு.

⁂ ⁂ ⁂

சில நாட்களில் கிழவர் என்ஸர் காலமாகிவிட்டார். அதன்

பின் சில நாட்கள் கழித்து, ஜான் மலைச்சிகரங்களின் மீது ஏறிப்பார்த்தபோது, அந்தக் காக்கைக் கூடுகளில் ஒன்றைக் காணவில்லை! எனவே அவன் முதன் முதலில் லோர்னுவைச் சந்திப்பதற்காக ஏறிச் சென்ற அதே அருவிக்கரைப் பாறைக்கு அன்றிரவே சென்றான்; அதன் மீது கவனமாக ஏறி மேலே சென்றான்; அங்கிருந்து லோர்னு தங்கியிருந்த வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான். அங்கு சென்றதும், லோர்னு அந்த வீட்டில் சிறைவைக்கப் பட்டிருக்கிருள் என்பதையும், கார்வெர்டூனை மணக்க அவள் சம்மதம் தெரிவிக்கிறவரையில், அவளுக்கு உணவு எதுவும் கொடுக்காமல் பட்டினிபோடும் கொடுமைக்கு அவள் ஆளாக்கப் பட்டிருக்கிருள் என்பதையும் அவன் தெரிந்து கொண்டான்.

மறுநாட் காலையில் டூன் பள்ளத்தாக்கில் ஒரே பரபரப்பு. அவர்களது காட்டுராணியான லோர்னுவை அங்கு காணவில்லை! லோர்னு பிளாவர்ஸ் பாரோசிலுள்ள வீட்டுக்குப் பத்திரமாக வந்து சேர்ந்துவிட்டாள். லோர்னுவின் மீது தான் கொண்டுள்ள காதலைப் பற்றி ஜான் தன் தாயிடம் கூறிய போது, அவள் முதலில் மிகவும் வருத்தப்பட்டாள். ஆனல் லோர்னுவை அவள் நேரில் கண்டதுமோ, அவள் மனம் மாறிவிட்டது; அவள் தன் மகனின் எண்ணத்தை வரவேற்ருள்; லோர்னுவையும் தன் சொந்தப் பிள்ளை போல நேசிக்கத் தொடங்கினுள். லோர்னுவைக் காணவில்லை என்றதும் டூன்கள் சும்மா இருந்துவிடவில்லை. தங்கள் அத்தனை பேரையும் ஏமாற்றிவிட்டு, அவளைக் கடத்திக் கொண்டு போனதற்கு அவர்கள் பழி வாங்கத்தான் திட்டமிட்டிருந்தார்கள். லோர்னு எங்கு போய்ச் சேர்ந்திருந்தாள் என்பதையும் அவர்கள் ஊகித்து அறிந்து கொண்டார்கள். எனவே ஒருநாள் இரவு அவர்கள் தமது குதிரைகளில் ஏறிக் கொண்டு, படை திரண்டு வந்தார்கள்; ஜானின் வீட்டுக்குத் தீவைப்பதும், ஜானின் குடும்பத்தார் அனைவரையும் கொன்று தள்ளி, தமது காட்டு ராணி லோர்னுவை மீட்டுச் செல்வதும் தான் அவர்கள் திட்டம்.

ஆனல் இத்தகையதொரு தாக்குதல் நேரக்கூடும் என்பதை முன்னதாகவே உணர்ந்து, ஜெரிமி ஸ்டிக்கில்ஸ் அத்தகைய தாக்குதலைச் சமாளிக்கும் எண்ணத்தோடு, டல்விச்சிலிருந்து தமது ஆணைக்குட்பட்ட நான்கு குதிரைவீரர்களை வரவழைத்துத் தயாராக வைத்திருந்தார். ஜானும் தனது அண்டை அயலார்களில் வீரம் பொருந்தியவர்கள் சிலரை ஒன்று திரட்டியிருந்தான்; மேலும் தனது பண்ணையாட்களில் பயப்படாத உள்ளம்

படைத்த சிலரைத் தேர்ந் தெடுத்து அவர்களுக்கு ஆயுதங் களும் வழங்கியிருந்தான். எனவே டூன்கள் எதிர்பார்த்த படி எதுவும் நடக்கவில்லை; மேலும், அவர்கள் நடத்திய தாக்குதலுக்குக் கிடைத்த பதிலடி மிகவும் பலமாக இருந்த தால், அவர்கள் தப்பிப் பிழைத்து வாபஸாகி ஓடிவிட் டார்கள். அவர்களில் இரண்டு பேரை ஜான் தனது கைத்தடி யாலும், கைளாலுமே அடித் துக் கொன்றுவிட்டான். அந்தப் பிணங்களைக்கூட எடுத்துச் செல்லாமல் அவர்கள் ஓடிவிட் டார்கள்.

டூன் பள்ளத்தாக்கிலிருந்து வந்த சமயத்தில் லோர்னு ஓர் அட்டிகையையும் கையோடு கொண்டு வந்திருந்தாள்; கிழவர் என்ஸர் தாம் சாகப்போவதற்கு முன்னுல் அவளை அழைத்து அந்த அட்டிகையை அவளிடம் கொடுத்து, ஏனைய டூன்கள் எவர் கண்ணிலும் பட்டுவிடாத படி அதனை ஒளித்துவைத்துக் கொள்ளுமாறு சொல்லியிருந் தார். அந்த அட்டிகை சாதார ணக் கண்ணுடிப் பாசிமணி களால் ஆனது என்றுதான் லோர்னுநம்பியிருந்தாள். ஆனுல், ஜானின் மைத்துனனுன டாம் பாக்ஸ் என்பவன் அந்த அட்டி கையைப் பார்த்ததுடன் அது அற்புதமான கிடைத்தற்கரிய வைரங்களால் ஆனதென்றும், அதன் மதிப்பு லக்ஷம் பவுன் பெறும் என்றும் கூறினுன்.

டாம்பாகஸ் சொன்னது உண் மையாகத்தான் இருக்கும். ஏனெனில் அவன் சில ஆண்டு களுக்கு முன்னுல் கைதேர்ந்த, பிரபலமான வழிப்பறிக் கொள் ளைக்காரனுக இருந்தான். அந் தக் கொள்ளையின் மூலம் போது மான செல்வத்தைத் தேடிய பின்னர், அவன் எப்படியோ மன்னரின் மன்னிப்பைப் பெற வழி தேடினுன்; அதனைப் பெற்றதும் கையிலுள்ள செல்வத்தோடு வழிப்பறியை விட்டுவிட்டு, பெரிய மனிதனுக வாழ்ந்து வந்தான். அந்தஸ்தும் வசதியும் பெற்றுப் பெரிய மனிதனுக மாறிவிட்ட காரணத் தால், அவன் ஜானின் சகோதரி யான ஆன்னியை மணந்து கொள்ள முன் வந்தான்; அதன் படி நிச்சயதார்த்தமும் நடந்து விட்டது. இதனுல் நேர்மையும் நாணயமும் மிகுந்த ஜானும் கூட, வழிப்பறிக் கொள்ளைக் காரனுக விளங்கிய டாம் பாகஸை வெறுத்ததுபோல், பெரிய மனிதர் டாம் பாகஸை வெறுத்தொதுக்க முடியவில்லை. லோர்னுவின் அட்டிகையின் விலையை டாம் பாகஸ் லட்சம் பவுன் என்று மதிப்பிட்டதைக் கண்டு, ஜானின் குடும்பத்திலுள் ளவர்கள் முதலில் சிரிக்கத்தான் செய்தார்கள். ஆனுல் அவன் சொல்வதிலும் உண்மை இருக்க லாம் என்று அவர்களுக்குப் பின்னரே புலப்பட்டது. எனவே அவர்கள் அந்த அட்டிகையைப் பத்திரமாக வைத்திருக்கும்படி லோர்னுவிடம் சொன்னுர்கள்.

லோர்னவும் அதனை ஒரு சிறு பையில் போட்டுக்கட்டி, தன் படுக்கையின் தலைமாட்டில் பத்திரமாக வைத்துக் கொண்டாள்.

❋ ❋ ❋

நூன்கள் நடத்திய தாக்குதலைக் கண்டும், அந்த அட்டிகையின் விலை மதிப்பை அறிந்தும் அந்தக் குடும்பத்தில் ஏற்பட்ட பரபரப்பு அடங்குவதற்குள்ளேயே, அங்கு வேருெரு பரபரப்பு ஏற்பட்டது. கிழவர் என்ஸரின் மகனை அந்தக் கவுன்செலர் அங்கு வந்தது தான் அதற்குக் காரணம். நயவஞ்சகமான புத்தியும், நாகூக்கான பேச்சும் கொண்ட அந்தக கவுன்செலர் நூன்களுக்கும் ஜான் குடும்பத்தாருக்கும் சமாசம் செய்யும் முயற்சி காரணமாகவே தான் வந்ததாகத் தெரிவித்தான். உண்மையில் ஏனைய நூன்களைப் போலவே அவனும் தங்கள் காட்டுராணியைத் தந்திரமாக மீட்டுக் கொண்டுபோக வேண்டும் என்றே விரும்பினன். ஆனல் லோர்னவை அவ்வளவு லகுவில் ஏமாற்றிவிட முடியாது என அவன் கண்டுகொண்டான். ஆம், உண்மையான காதலை யார்தான் தடுத்து நிறுத்த முடியும்? தான் வந்த காரியம் நடவாது எனத் தெரிந்ததும், அவன் அங்குள்ளவர்களிடம் அனுசரணையாகவே பழகினன். ஜான் குடும்பத்தாரும் அவனைப் பற்றித் தாங்கள் தவருக மதித்துவிட்டதாகக் கருதி, அவனை நன்கு உபசரித்தார்கள். அவனும் நன்ருக உண்டு குடித்துவிட்டு, உறங்கிக் கழித்தான். அவனுக்காக ஜான் நல்ல படுக்கையறையைக்கூட ஒதுக்கிக் கொடுத்தான்.

இரவிலே நன்ருகக் குடித்துவிட்டுப் படுத்த போதிலும்கூட, அந்தக் கவுன்செலர் காலையில் தெளிவோடு விழித்தெழுந்தான்; பின்னர் அங்குள்ள பால் பண்ணையை ஜானின் சகோதரியான ஆன்னி எப்படிக் கவனித்துக் கொள்கிருள் என்பதைப் பார்க்கச் சென்ருன். ஆன்னி ஒரு வெகுளி; எதையும் நம்பி விடுவாள். அதனைக் கண்டு ணர்ந்த கவுன்செலர் அவளிடம் பின்வருமாறு கூறினன்; "உனக்கு ஒரு விஷயம் தெரியுமா? பால் பாத்திரத்துக்கு மேலாக, பிரகாசமான கண்ணுடிக் கற்களாலமைத்த அட்டிகை யொன்றைமூன்று முறை ஆட்டினுல், பாலேடு அடர்த்தியாகவும் செழிப்பாகவும் இருக்கும், தெரியுமா உனக்கு?"

ஆன்னி இதனைக் கேட்டு வியப்புற்ருள். தனது பேதைக் கண்களை விழித்து நோக்கியவாறு, "தெரியாதே! அப்படியா நடக்கும்? நானும் அதே மாதிரி செய்து பார்க்கலாமோ? பார்த்தால் தவறில்லையே?" என்று கேட்டாள்.

"தவறென்றுமில்லை. ஆனல் உன்னிடம் அப்படியொரு அட்டிகை இருக்கிறதா?"

"என்னிடமில்லே. ஆனல் லோர்னுவிடம் இருக்கிறது. பாகஸ் அதிலுள்ள கற்கள் கண்ணுடி மணிகளல்லவென்றும், வேறு ஏதோ என்றும் சொல்கிருர். அந்தப் பெயர் நினைவுக்கு வரவில்லே. அதனே லோர்னு எங்கே வைத்திருக்கிருள் என்பது எனக்குத் தெரியும். நீங்கள் சொல்லும் அந்த மந்திரத்தைப் பரீட்சித்துப் பார்க்கலாமே!"

ஆன்னி இவ்வாறு கூறிவிட்டு, வீட்டுக்குள் ஓடிச் சென்று லோர்னுவின் வைர அட்டிகையை எடுத்துக் கொண்டு வந்தாள்.

அதைக் கண்டதும் கவுன் செலரின் கண்கள் பளபளத்தன! அவன் தன்னுள் எழுந்த சிரிப்பை உள்ளடக்கிக் கொண்டான். பின்னர் அந்தப் பளபளக்கும் அட்டிகையைப் பால் பாத்திரத்துக்கு மேலாக மூன்று முறை ஆடவிட்டு, 'கிரிங்கிலம், கிரிங்கலம்' என்று மந்திர உச்சாடனம் செய்வதுபோல் முணுமுணுத்தான். பிறகு, அவன் ஆன்னியை நோக்கிப் பின்வருமாறு ரகசியம் பேசினுன்: "இதோ பார். இந்த விஷயத்தைப் பற்றி நீ யாரிடமும் வாயைத் திறக்கக்கூடாது. இந்த அறைக்குள்ளும் நீ இன்னும் மூன்று மணி நேரத்துக்கு வரக்கூடாது. இந்தக் கண்ணுடி அட்டிகையை இந்தக் குவளேக்குள்ளே போட்டு வைத்து விடுவோம்."

அவனது கூற்றைக் கேட்டு ஆன்னி பயந்தே போனுள்; அவனது சொற்படியே அவள் பால்பண்ணேயிலிருந்து வெளியேறினுள். மறு நிமிஷமே அந்தக் கவுன்செலரும் பிளாவர் பாரோசிலிருந்து சொல்லாமற் கொள்ளாமல் கம்பி நீட்டி விட்டான்—வைர அட்டிகையோடுதான். அட்டிகை காணுமற் போனதைக்கண்டு அந்த வீட்டில் ஒரே தடபுடலும் பரபரப்பும் ஏற்பட்டன. அதன் பின் அன்னி வேறு வழியின்றித் தனது அசட்டுத் தனத்தை வெளியிட்டு அட்டிகை காணுமற் போனதற்குத் தானே காரணம் என்பதை விளக்கினுள். ஆனல் லோர்னுவுக்கோ ஒரே கோபம். அட்டிகை காணுமற்போனதற்காகவா அத்தனே ஆர்ப்பாட்டமும் கவலேயும் என்று புழுங்கினுள். அந்த அட்டிகைக்காகத்தானு ஜான் அவளேக் காதலித்தான் என்று அவள் ஜானிடமே வாய்திறந்து கேட்டு விட்டாள்.

இதன்பின் அன்றிரவு ஜெர்மிஸ்டிக்கில்ஸ் அங்கு திரும்பி வந்தார். நடந்ததைக் கேட்டு அவர் முதலில் வயிறு குலுங்கச் சிரித்தபோதிலும், அட்டிகை களவு போனதைக் குறித்து வருத்தமும் அடைந்தார். பிறகு அவர் ஜானே மட்டும் தனியே அழைத்துச் சென்று, அன்றைக்குத் தாம் தெரிந்துகொண்டு வந்திருந்த முக்கியமான செய்தி ஒன்றைச் சொன்னுர். அவர்

வெகுநேரம் தாம் போனது, வந்தது, தெரிந்தது எல்லாவற்றையும் விவரமாகச் சொன்னர். மொத்தத்தில் அந்தச்செய்தியின் சாரம் இதுதான்; உண்மையில் லோர்ஞ நூனுக்கும் நூன்களுக்கும் எவ்விதமான ரத்த பந்தமுமே இல்லை. அவள் நூன் வம்சப் பெண்ணேயல்ல. நூன்கள் கொன்று தள்ளிவிட்ட, ஓர் உயர் குடியைச் சேர்ந்த விதவைச் சீமாட்டியின் மகளே லோர்ஞ!



உண்மையில் லோர்ஞ ஒரு சீமாட்டிதான்; அதனுடன் பெருஞ்செல்வத்துக்கும் அவள்தான் வாரிசு. லோர்ஞவின் தாயைக் கொன்றுதள்ளுவதற்கு முன்பே, நூன்கள் லோர்ஞவை அவளது தாயிடமிருந்து திருடிக் கொண்டு வந்துவிட்டார்கள்; லோர்ஞவோடு அவள் அணிந்திருந்த வைர அட்டிகையையும் கொண்டு வந்துவிட்டார்கள். இவ்வாறு அவர்கள் திருடிக் கொண்டு வந்த அந்தச் சிறுமியை, அவர்கள் வளர்த்து வந்ததற்கும் காரணம் உண்டு. அவளை வளர்த்து ஆளாக்கி, தமது குலத்தைச் சேர்ந்த ஒருவனுக்கு மணம்முடித்துவைத்து விட்டால், அவர்கள் அவளது பெருத்த செல்வத்தையும் அடையலாம், அதன் மூலம் தாம் செய்த எத்தனை எத்தனையோ குற்றங்களுக்கெல்லாம் நஷ்டஈடு கொடுத்து, மன்னரின் மன்னிப்பை விலைக்கு வாங்கலாம் என்பதே அந்தக் காரணம்.

லோர்ஞ தனது தந்தையைக் கொன்ற வம்சத்தில் பிறந்தவளல்ல என்பதையும், அந்தக் கவுன்செலர் பொய்யாகக் கூறிய மாதிரி, லோர்ஞவின் தந்தையைக் கொன்றதும் தன் தந்தையல்ல என்பதையும் அறிந்தபோது, ஜானுக்குப் பெரும் நிம்மதி பிறந்தது. ஆனாலும் இதனாலெல்லாம் அவனது காதல் கூடவோ, குறையவோ இல்லை, அது எப்போதும் போல் உறுதியாகவே இருந்தது.

லோர்ஞ கத்தோலிக்க மதச் சார்பான குடும்பத்தில் பிறந்தவள்; அந்த மதாசாரப்படியே வளர்க்கவும் பட்டவள். எனவே ஜானின்தாய் அவளை உடனே புராட்டெஸ்டெண்ட் மதத்துக்கு மாற்றிவிடவேண்டும் என்று திட்டமிட்டாள். ஆனால் லோர்ஞவுக்கோ தான் மதம் மாறுவதிலோ, அல்லது ஜானைத் தனது மதத்துக்கு மாறச் செய்வதிலோ அக்கறையில்லை; அதைப்பற்றிய சிந்தனையும் இல்லை. இந்த உலகத்திலே அவர்கள் இருவரும் ஒன்ருக இணைந்து வாழும் வரையிலும், இருவரும் பரலோக சாம்ராஜ்யத்துக்குச் செல்லும் மார்க்கங்களில் தனித்தனிப் பாதைகளைக் கடைப்பிடிப்பதைப் பற்றி அவர்களுக்குள் எவ்விதமான அபிப்பிராய பேதமோ, ஆட்சேபணையோ இல்லை. எனவே

ஜானின் தாயின் எண்ணம் நிறைவேறவில்லை. ஆனுல் ஜானுக்கும் லோர்னுவுக்கும் திருமணம் நடப்பதற்கு முன்னுல், லண்டன் உயர்நீதி மன்றத்திலிருந்து பிளாவர்ஸ் பாரோசுக்கு இரண்டு அதிகாரிகள் வந்து சேர்ந்தார்கள்; அவர்கள் அரசாங்க உத்தரவுப்படி, லோர்னுவின் சட்டபூர்வமான கார்டியனுன பிராண்டிர் பிரபு என்பவரின் பராமரிப்பில் லோர்னுவைக் கொண்டு சேர்ப்பதற்காக அவளைக் கூட்டிக்கொண்டு சென்றுவிட்டார்கள். அந்தக் காட்டுராணியைப் பற்றித் தாம் கண்டறிந்த உண்மைகளை ஜெரிமி ஸ்டிக்கில்ஸ் தமது மேலதிகாரிகளுக்குத் தெரிவித்ததன் விளைவாகத்தான் இந்தச் சம்பவம் நடந்தது.

இப்போதோ லோர்னு பெரிய சீமாட்டியாகிவிட்டாள்; அத்துடன் பணக்காரியும் ஆகிவிட்டாள். எனவே அவளை இனித் தான் இழந்துவிட நேருமோ என்ற பெரும் பயம் ஜானின் மனத்தை அறுத்துக் கொண்டிருந்தது. அவனது தாயோ நடந்ததையெண்ணி மனக் கசப்பும் வெறுப்பும் அடைந்தாள்; ஜானின் தங்கையான எலிஸாவோ அதனைக் குறித்துக் குத்தலான கிண்டலாகப் பேசினுள். இருவரும் நடந்ததையெண்ணி வருந்துவதில் பயனில்லை எனவும், வந்ததை ஏற்கவேண்டியது தான் எனவும், இனிமேல் சீமாட்டி லோர்னுவைப்பற்றி எந்தச் செய்தியும் தமக்குத் தெரியவரப்போவதில்லை எனவும் கூறினுர்கள். இதனைக் கேட்கக் கேட்க ஜானுக்கு ஆத்திரமும் கோபமும் தான் வந்தன. இப்போது ஆன்னிக்கும் டாம் பாகசுக்கும் திருமணம் ஆகிவிட்டது; திருமணத்துக்கு முன்பே ஜான், டாமை நோக்கி, 'உனது கொள்ளையடிக்கும் புத்தியையும், குடியானவத் தொழிலையும் ஒன்ருக்கப் பார்க்காதே. இரண்டையும் உன்னுல் சேர்த்துச் செய்ய முடியாது' என்று எச்சரித்திருந்தான். லோர்னு சென்ற பின்பு, அந்தக் குடும்பத்தில் ஆன்னி ஒருத்திதான் அவனுக்கு ஆறுதல் கூறினுள். லோர்னு சென்றது முதல் அவளிடமிருந்து ஒரு கடிதம் கூட வரவில்லை. என்ருலும் ஜானுல் அவளை மறக்க முடியவில்லை. மேலும் அவளும் தன்னை மறந்திருக்கக்கூடும் என்று நினைத்துப்பார்க்கவோ, அவ்வாறு நம்பவோகூட அவனுல் முடியவில்லை.



கிழவர் என்ஸர் இறந்ததற்குப் பின்னர் டூன்களின் அட்டகாசமும் அக்கிரமங்களும் நாளுக்குநாள் அதிகரித்தன. எனவே ஜெரிமி ஸ்டிக்கில்ஸ் சில குதிரைப்படை வீரர்களை வரவழைத்தார். மேலும், மன்னரின் ஆணையின் பேரில், டேவன், சாமர்செட் ஆகிய

பகுதிகளிலிருந்த ராணுவங்களை யும், டூன் பள்ளத்தாக்கின் பலம் வாய்ந்த கோட்டைப் பகுதியின் மேல் தாக்குதல் தொடுக்குமாறு உத்தரவிட்டார். லோர்னு அந்தக் கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்தவளல்ல என்பதைத் தெரிந்தபின், ஜானும் டூன்களுக்கெதிரான போராட்டத்தில் புயல் வேகத்தோடும் ஊக்கத்தோடும் ஈடுபட்டான். ஆனுல், டேவன், சாமர்செட் ஆகிய இரு பகுதிகளையும் சேர்ந்த மக்களிடையே தகராறு கிளம்பி விட்டது. அவர்கள் தத்தம் பகுதிகளிலிருந்துதான் போராட வேண்டும் என்று இருபக்கத்து ராணுவமும் கூறியது. எனவே இந்த இரு பகுதிகளுக்கும் உரிய எல்லை டூன் பள்ளத்தாக்கே என்றும், டேவன் பகுதியிலுள்ள மனிதர்கள் அவர்கள் பக்கமுள்ள மலைச் சிகரங்களிலிருந்தும், சாமர்செட் பகுதியிலுள்ளவர்கள் அதற்கு எதிர்த்திசையிலுள்ள மலைச் சிகரங்களிலிருந்தும் தாக்குவது என்றும், அதே சமயம் விவசாயிகளையும் குதிரைப்படை வீரர்களையும் கொண்ட ஒரு பட்டாளம் டூன் பள்ளத்தாக்கின் குகை வாயிற்புறத்தில் நின்று போரிடுவது என்றும் ஏற்பாடு செய்யப்பட்டது.

ஆனுல் இந்த ஏற்பாடு துரதிருஷ்டவசமாக அவர்களுக்குப் பாதகமாக முடிந்தது. சாமர்செட் பகுதியிலுள்ளவர்கள் தமது பீரங்கியை மாணுங்காணியாய்த் திருப்பி, பள்ளத்தாக்குக்கு அப்பாலுள்ள டேவன் பகுதியினரை நோக்கிச் சுட்டுத் தள்ளினுர்கள்; டேவன் பகுதியிலுள்ளவர்களும் பள்ளத்தாக்கிலுள்ள தமது பொது எதிரியான டூன்களை மறந்துவிட்டு, சாமர்செட் பகுதியை நோக்கிப் பதிலுக்குச் சுட்டார்கள். எனவே இந்த நிலைமையைப் பயன்படுத்திக் கொண்டு, டூன்கள் தமது குகை வாயிலில் கூடியிருந்த சிறிய பட்டாளத்தை விரட்டியடித்து, படுவேகத்தோடு பள்ளத்தாக்கிலிருந்து வெளியேறி, சாமர்செட் பகுதி வீரர்களைப் பின்புறமாக வந்து தாக்கி, அவர்களிற் பலரைக் கொன்றுதள்ளி, விரட்டியடித்தார்கள். இதனுல் டேவன் பகுதி வீரர்கள் தமக்குக் கிட்டிய வெற்றியைப் பற்றிப் பெருமை பேசிக்கொண்டு தமது பீரங்கியையும் இழுத்துக் கொண்டு வீடு திரும்பிவிட்டார்கள்.

குதிரைப்படை வீரர்களெல்லாம் பிளாவர்ஸ் பாரோஸ் பண்ணையில்தான் தங்கியிருந்தார்கள்; மேலும் ஜானின் போராவேசம் டூன்களின் மனத்தில் பயத்தையும் கலக்கத்தையும் உண்டுபண்ணியிருந்தது. எனவே, அந்தப் பண்ணையைத் தாக்கிப் பழிதீர்த்துக்கொள்ள டூன்கள் முனையவில்லை. எனினும் சுற்று வட்டாரத்திலுள்ள பிற விவசாயிகளெல்லாம் டூன்களுக்குப் போதுமான தானியமும் மாமிசமும் கப்பம்போன்று

ந்துதவச் சம்மதித்தார்கள்; எனவே டூன்களும் கொஞ்ச காலத்துக்குக் கொள்ளையெதுவும் அடிக்காமல் அடங்கியிருந்தார்கள், ஆனால் டூன்களைக் காட்டிலும் பேராபத்தான அபாயம் இங்கிலாந்தின் மேற்குப் பகுதியில் தலைதூக்கியது. சார்ல்ஸ் மன்னர் இறந்துவிட்டார்; அவருக்குப் பதிலாக அவரது ஸ்தானத்தில் ஜேம்ஸ்மன்னர் ஆண்டுவந்தார். ஆனால் மான்மவுத் பிரபுவோ தமக்குரிய உரிமைகளை நிலைநாட்டப் போவதாகக் கூறிக்கொண்டு, அந்தப் பகுதியிலுள்ள மக்களை ஆயுதமேந்திக் கலகம் செய்யுமாறு தூண்டத் தொடங்கினர். தம்மை "மன்ன"ராகப் பிரகடனப்படுத்திக்கொண்ட மான்மவுத் பிரவுக்கு ஆதரவாக, பல நகரங்கள் வழி திறந்துவிட்டன; மேலும் ஆயிரக்கணக்கான விவசாயிகளும், நிலச்சுவான்தார்களும் அவருக்கு ஆதரவாக, அவரது பதாகையின்கீழ் போர்க்கோலம் பூண்டு திரண்டார்கள். அந்தக் கூட்டம் கட்டுப்பாடற்றதாக இருந்தாலும், எண்ணிக்கையில் அதிகமாக இருந்தது. இந்தக் கலகக்காரர்களை எதிர்த்து "கிர்க்கியின் ஆட்டுக்குட்டிகள்" எனப்பெயர்பெற்ற மன்னர் ஜேம்ஸின் படைகள் போர் தொடுத்தன. இந்தப் படையில் டான்ஞ்சியரிலிருந்து புதிதாக வந்த பிரபலமான ராணுவ வீரர்களும், ஜாக் சர்ச்சில் என்பவரின் தலைமையிலுள்ள கட்டுப்பாடான உள்நாட்டு வீரர்களும் இருந்தார்கள்.

"மன்னர் மான்மவுத்"தின் ராணுவம் வந்து சென்ற பின்னர், ஆன்னி துயரக்கோலத்தில் தனது பிறந்தகத்துக்குத் திரும்பி வந்தாள். அவளது கணவனை டாம் பாகசுக்கு அபாயகரமான காரியங்களில் ஈடுபடும் பழைய வெறிவேகம் மீண்டும் தோன்றியது; எனவே அதற்கொரு போக்குக் காணும் நோக்கத்தோடு அவன் கலகக்காரர்களோடு சேர்ந்துவிட்டான். அவனை எப்படியாவது அதிலிருந்து மீட்டு வரவேண்டும் என்று ஆன்னி விரும்பினாள். இந்தக் காரியத்தைச் செய்யக்கூடிய திறமைசாலி ஜான்தான் என்றும், அவன் ஒருவனது பேச்சை மட்டுமே டாம்பாகஸ் தட்டிப் பேச மாட்டான் என்றும் அவள் திட்டமாக நம்பினாள். ஆன்னியின் வேண்டுகோளின்படி, ஜான் குதிரை மீது ஏறி, செட்ஜ்மூர் போர்க்களத்தை நோக்கி விரைந்தான். அதற்குள் அந்தக் கலகப்படை கட்டும்பாடிழந்து சிதறுண்டு ஓடிக்கொண்டிருந்தது. ஆனால் டாம் பாகஸ் படுகாயமுற்ற நிலையில் களத்திலே விழுந்து கிடப்பதை ஜான் கண்டான். உடனே ஜான் அவனைத் தூக்கித் தனது விசுவாசம் மிக்க குதிரை மீது வைத்துக் கட்டி, அதனைத் தட்டிவிட்டான். அந்தக் குதிரையும் டாம் பாகஸைச் சுமந்தவண்ணம் ஓட்டமாக ஓடி,

அவனைப் பத்திரமாக வீடு கொண்டுபோய்ச் சேர்த்தது. அதே சமயம், ஜான் மட்டும் உடனே தப்பி வந்துவிடவில்லை. ஜேம்ஸ் மன்னரின் படைவீரர்கள் சிலர் அவனைக் களத்தில் பிடித்துக் கொண்டார்கள்; அவனும் ஒரு கலகக்காரன் தான் என்று அவர்கள் சாதித்தார்கள். எனவே, அவர்கள் அவனைத் தூக்கிலிட்டுக் கொல்ல முனைந்தார்கள். நல்லவேளையாக இந்தச் சமயத்தில் அங்கு ஜெரிமி ஸ்டிக்கில்ஸ் வந்தார்; அந்தப் பேராபத்திலிருந்து அவர் ஜானைக் காப்பாற்றினார். அவர் இப்போது மன்னரின் படையில் ஒரு காப்டனாக இருந்தார். ஜானைப் பற்றிய விவரங்களைத் தளபதி ஜாக் சர்ச்சில் கேட்டறிந்தார்; ஜெரிமி ஸ்டிக்கில்ஸ் அளித்த சாட்சியத்தாலும், பிளாவர்ஸ் பாரோஸிலுள்ள குதிரைப் படைவீரர்களின் தலைவன் அளித்த சாட்சியத்தாலும், ஜான் நிரபராதி என்றே ஜாக் சர்ச்சிலுக்குப் புலப்பட்டது. எனினும் அவர் முறைப்படி, ஜானை ஜெரிமி ஸ்டிக்கில்ஸின் பாதுகாப்பில் லண்டன் நகரத்துக்கு அனுப்பிவைத்தார். அங்கும் தனது நிரபராதத் தன்மையை நிலைநாட்டுவதில் ஜானுக்குச் சிரமமேதும் ஏற்படவில்லை. எனவே அவன் விடுவிக்கப்பட்டான். ஆனால், லண்டன் நகரத்துக்குத் தான் வர நேர்ந்ததால், அங்கு வசித்து வரும் தன் காதலி லோர்னாவையும் கட்டாயம் காணவேண்டும் என்று அவன் தீர்மானித்தான்.



இதற்குள் ஜானின் பேரும் புகழும் அரண்மனை வட்டாரத்தில் பேச்சுக்குரிய விஷயமாகி விட்டன. அவனது ஆஜானுபாகுவான கம்பீரத் தோற்றம், மல்யுத்தத்தில் அவனுக்குள்ள பேராற்றல், டூன்களுக்கெதிராக அவன் நடத்திய வீர சாகசச் செயல்கள், சீமாட்டி லோர்னாவை அவர்கள் மத்தியிலிருந்து சாமர்த்தியமாகக் கடத்தி வெளிக் கொணர்ந்த சாகசம், அந்தச் சீமாட்டியின் மீது அவன் கொண்டிருக்கும் காதல் எல்லாமே அரண்மனையில் தெரிந்த விஷயங்களாக இருந்தன. இப்போதோ லோர்னா மகாராணியின் பிரத்தியேகமான ஆதரவின்கீழ் இருந்துவந்தாள். ஜான் அவளைக் காண்பதற்காக, பிராண்டிர் பிரபுவின் இல்லத்துக்குச் சென்றான். லோர்னா அவனிருந்த அறைக்குள் மின்னல் வேகத்தில் பிரவேசித்தாள்; இப்போதோ அவள் அற்புதமான அழகும், அந்தஸ்துக்கேற்ற பெருமிதமும் பெற்று விளங்கினாள். ஜானைக் கண்டதும் அவள் ஓடோடியும் வந்து அவனது மார்பின்மீது தனது முகத்தைப் புதைத்துக் கொண்டாள். இந்தச் செயலைக் கண்டு, ஜான் முதலில் திடுக்கிட்டுப் போனான்.

பின்னர் அவன் அவளது முகத்தைத் தனது உதடுகளுக்கு

நேராக நிமிர்த்தியவாறு, "கண்ணே லோர்னு! சீமாட்டி லோர்னு! நான் உன்னை இவ்வளவு தூரம் காதலித்தாலும், நீ இப்படி நடந்துகொள்ளக் கூடாது" என்று வாய்விட்டுக் கூறினன்.

"இப்படித்தான் நடக்க வேண்டும்!" என்று கூறியவாறே அவள் அவனது மார்போடு மேலும் அரவணைத்துத் தோய்ந்து சாய்ந்தாள். "வேறு எதுவும் நடக்கக்கூடாது. சரி, நீங்கள் மட்டும் அப்படி ஏன் நடந்து கொண்டீர்களாம்?" என்று குழைந்தாள் அவள்.

"எப்படி நடந்து கொண்டேன்? என்னல் முடிந்தவரையிலும் ஒழுங்காகத்தான் நடந்து வருகிறேன். உன்னை இந்த மாதிரி பிடித்துக் கொண்டு முத்தமிடாதிருக்க, உலகில் வேறு ஒருவருமே இல்லை" என்ருன் ஜான்.

"பின்னே ஏன் நீங்கள் அப்படிச் செய்யவில்லை?" என்று குதூகலத்தோடு கேட்டாள் லோர்னு.

ஜானின் நடத்தையைப்பற்றி லோர்னு ஏன் குறைப்பட்டுக் கொண்டாள் என்பது பின்னர் தான் புலனுயிற்று. அவள் எழுதிய கடிதங்களுக்கெல்லாம் அவன் பதிலே எழுதவில்லை என்பதுதான் அவளது முறையீடு. இதன்பின் விசாரித்துப் பார்த்ததில் தான் உண்மை வெளியாயிற்று. அவன் எழுதிய எந்தக் கடிதமுமே அவனுக்கு அனுப்பப்படவில்லை. அவையனைத்தையும் லோர்னுவின் பணிப் பெண்ணுன குவெனி அனுப்பாது மறைத்துவிட்டாள். உயர் குடும்பத்துச் சீமாட்டியாகிவிட்ட தனது எஜமானி ஒரு சாதாரண கிராமத்து இளைஞனை இன்னும் நினைத்துக் கொண்டிருப்பது சரியல்ல என்று அவள் நினைத்ததே, அவளது இந்தச் செய்கைக்குக் காரணம்.

பிராண்டிர் பிரபுவுக்கு வயதும் அதிகமாகிவிட்டது; அத்துடன் அவன் ஒரு முழுச் செவிடு. எனவே அவர் ஜானைச் சாதாரணமாகத்தான் வரவேற்ருர்; அதாவது, தமது பாதுகாப்பில் இருக்கவேண்டிய மைனர் பெண்ணெருத்தியை, ரூன்களிடமிருந்து எந்தவொரு கிராமவாசி காப்பாற்றியிருந்தாலும், அவர் அவனை எப்படி வரவேற்பாரோ, அத்தகைய சாதாரண நன்றியுணர்வுடன் வரவேற்ருர். ஆனல், அந்த இளம் பிள்ளைகள் இருவரும் ஒருவரையொருவர் காதலிப்பார்கள் என்று அவர் எதிர்பார்க்கவுமில்லை; அதுபற்றிச் சிந்திக்கவும் இல்லை. சொல்லப்போனல், ஒரு சாதாரண விவசாயிக்கும், மன்னர் குலத்துக் கன்னிக்குமிடையே காதல் தோன்றக் கூடும் என்ற எண்ணமே அவருக்கு உதிக்கவில்லை. அந்தக்

காதலர்களும் அதனைப்பற்றி அவரிடம் சொல்ல முனைய வில்லை. அவர் அந்த அளவுக்குச் செவிடாக இருந்தார்.



இதன் பின்னர் ஜானுக்குத் திடீரென்று ஒருநாள் அதிருஷ்டம் பொத்துக் கொண்டு வந்தது.

ஒருநாள் இரவில் அவன் பிராண்டிர் பிரபுவின் இல்லத்துக்கருகில் சுற்றித் திரிந்து கொண்டிருந்தான். தன் இதயங் கவர்ந்த காதலியைத் தன்னுட் கொண்டுள்ள அந்த இல்லத்தின் அருகே சுற்றித் திரிவதில் ஓர் இன்பம் அவனுக்கு. அவ்வாறு திரியும்போது, அந்த இல்லத்தின் ஜன்னலொன்றின் வழியே மூன்று திருடர்கள் உள்ளே நுழைவதை அவன் கண்டு விட்டான். உடனே அவன் அவர்களைப் பின்தொடர்ந்து உள்ளே சென்றான். அதற்குள் அந்தத் திருடர்கள் பிராண்டிர் பிரபுவின் படுக்கையறைக்குள் நுழைந்து, அவரது இரும்புப் பெட்டிக்குரிய சாவியைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்; சாவியைத் தராவிட்டால், அவரைக் கொன்று தள்ளிவிடப் போவதாகவும் பயமுறுத்தினார்கள். இந்தச் சமயத்தில் ஜான் அங்கு போய்ச்சேர்ந்தான். லண்டன் நகரத்தில் இரவில் சுற்றும்போது அவன் எப்போதும் தன் கையில் ஒரு பெரிய தடியைத் தூக்கிச் செல்வது வழக்கம். அவ்வாறு தன் கையிலிருந்த தடியினால், அவன் அந்தத் திருடர்களில் ஒருவனது மண்டையை ஓங்கியடித்துப் பிளந்தான்; மற்ற இருவரையும் மூர்ச்சை போட்டு விழும் வண்ணம் ஓங்கியறைந்தான். பின்னர் அவர்களைக் கயிற்றால் கட்டிப் போட்டுவிட்டு, அவர்களை அங்கிருந்த காவல்காரனிடம் ஒப்படைத்தான். அந்த இரண்டு திருடர்களும் மன்னரால் வெகு காலமாகத் தேடப்பட்டு வந்தும், அதுவரை அகப்படாமல் திரிந்த ஆசாமிகள் என்பது சீக்கிரமே புலனாயிற்று. அத்தகைய திருடர்களைப் பிடித்துக் கொடுத்த ஜானுக்கு மன்னரிடமிருந்து அழைப்பு வந்தது; அதன்படி ஜான் அரண்மனைக்குச் சென்று, ஸ்டூவர்ட் வம்சத்தின் கடைசி இங்கிலாந்து மன்னரின் முன்னால் ஆஜரானான். அங்கு குழுமியிருந்த ராஜப் பிரமுகர்கள் முன்னிலையில் அவன் திக்பிரமை பிடித்தவன் போல் வியப்புற்று நின்றிருந்த சமயத்தில், அங்கு மகாராணியே நேரில் வந்து அவனைப் பாராட்டினாள்.

"இவன்தான் பிரபலமான வீரன் ஜான் ரிட். இவனைப் பற்றி எனது பிரியத்துக்குரிய லோர்னாவின் மூலம் எவ்வளவோ கேள்விப்பட்டிருக்கிறேன். அவள் ஒன்றும் இந்த நாட்டின் பிறவியல்ல; அவள் இத்தாலியப் பேரழகிகளின் பரம்பரையில் வந்தவள்" என்று சொன்னாள் மகாராணி.

மன்னரும் இதன்பின் ஜானை நோக்கிப் பின்வருமாறு கூறினுர்: "ஜான்! நீ இந்த ராஜ்யத்துக்கும், இதன் மதத்துக்கும் மகத்தான சேவை செய்துள்ளாய். ராஜவிசுவாசமிக்க, கத்தோலிக்கப் பிரபுவான பிராண்டிரை நீ காப்பாற்றியது மட்டுமல்ல, வேட்டை நாய்களைப் போல் திரிந்த, மதத்துரோகிகளின் கையாட்களான இரண்டு திருடர்களையும் பிடித்துக் கொடுத்து விட்டாய். உனது சேவை மிகப் பெரியது, சரி, இப்போது நீ எம்மிடம் எதையும் கேட்கலாம். நீ ஹெர்க்குலஸைப் போல் என்றென்றைக்கும் உன் கைத்தடியைக் கொண்டே, உனது புகழை நிலை நாட்டிக் கொள்ளப் போகிருயா? உனக்கு வேறு முக்கியமான ஆசை எதுவும் இல்லையா? உன் விருப்பம் என்ன? சொல்."

இதற்குள் தனது வியப்புணர்ச்சியிலிருந்து ஜான் விடுபட்டு விட்டான். எனவே அவன் மன்னரை நோக்கிப் பின்வருமாறு பேசினுன்: "எங்களுக்கென்று ஒரு படைக்கலம் பெறவேண்டுமென்று என் தாய் எப்போதும் சொல்வாள். ஆல்பிரெட் மன்னரின் காலத்திலிருந்து நாங்கள் பண்ணையார்களாக இருந்து வருகிறோம். எங்களுக்கு நல்ல விளைச்சலும் கிட்டுகிறது; எனவே படைக்கலத்தை வைத்துக் காப்பாற்றவும் எங்களால் முடியும். ஆனால் இது என் அம்மாவின் விருப்பம் தான். எனக்கு அதில் இஷ்டமில்லை."

"நல்ல பையன் நீ!" என்று கத்தினுர் மன்னர்: "உனக்குப் படைக்கலம் தருகிறோம். ஆனுல் அது உனக்கேற்றபடி பெரிதாகவே இருக்கும்." இவ்வாறு கூறிய வண்ணம் அவர் தமது பணியாள் ஒருவனைக் கை காட்டி அழைத்தார்; அவன் அவரிடம் ஓர் உடைவாளைக் கொண்டு வந்து நீட்டினுன். அதனை மன்னர் பெற்றுக் கொண்டதும், அவர் ஜானை நோக்கி, 'ஜான்! முழந்தாளிடு!' என்று கூறினுர். ஜான் முழந்தாளிட்டுவணங்கினுன். உடனே மன்னர் அந்த உடைவாளினுல் ஜானின் தோளில் மூன்று முறை தட்டி விட்டு, பின்வருமாறு சொன்னுர், "ஸர் ஜான் ரிட் பிரபுவே! எழுந்திரும்!"

"ஸர் பட்டமா?" என்று வியப்போடு துள்ளியெழுந்து நின்றுன் ஜான்: "உங்கள் அன்புக்கு நான் மிகவும் நன்றி செலுத்துகிறேன். ஆனுல் இதனைக் கொண்டு நான் என்ன செய்வது?"

இந்தக் கேள்விக்கு மன்னர் பதிலளிக்கவில்லை. மாருக, மன்னரின் பிரதானிகள் பதிலளித்தார்கள். அதாவது ஸர் ஜான் ரிட் தனது வீடு நோக்கிச் செல்லும் போது, பிரபுக்களுக்குரியராஜமுத்திரை

தாங்கிய படைக்கலத்தோடும் பரிவாரத்தோடும் மரியாதைகளோடும் புறப்பட்டுச் சென்ருன்.



ஜான் வீடு திரும்பி விட்டான். ஆனல் அங்குள்ள மக்கள் நோர்மன்களின் அட்டகாசம் பொறுக்காமல் ஆத்திரமுற்றுப் போயிருந்தார்கள். அந்தக் கொள்ளைக்காரர்கள் மீண்டும் அங்கு வந்து கொள்ளையடித்திருந்தார்கள்; மேலும், அவர்கள் அவ்வாறு தாக்குதல் நடத்திய காலத்தில் அங்குள்ள ஒரு சாதாரண விவசாயியின் மனைவியையும் தூக்கிச் சென்றுவிட்டார்கள்; அத்துடன் அவளது குழந்தையை அவளது கண்முன்னலேயே கொன்று விட்டார்கள். இதனல், இத்தனை காலமும் உள்ளுக்குள்ளேயே குமுறிப் புழுங்கித் தவித்த கிராம வாசிகளின் கோபமும் ஆத்திரமும் அணைகடந்த வெள்ளம் போல் பொங்கி வெளிப்பட்டது; எனவே இது வரையிலும் மன்னரின் குதிரை வீரர்களும் சேனை வீரர்களும் சாதிக்க முடியாது போன காரியத்தை, மக்களாகிய தாமே சாதிப்பது என உறுதிபூண்டு ஒன்று திரண்டார்கள்; நோர்மன்களின் குலத்தையே கருவறுத்து ஒழித்துக் கட்டி விடுவது எனத் தீர்மானித்தார்கள்.

ஸர்பட்டம் பேற்று வந்துள்ள ஜானைக் கண்டதும், அவர்களெல்லாம் அந்த வட்டாரத்திலேயே அவர்களது நம்பிக்கைக்கு மிகவும் பாத்திரமான அவன்தான் அந்தப் போராட்டத்துக்குத் தலைமை தாங்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள். ஜானும் ஒரு நிபந்தனையின் பேரில் அதற்கு ஒப்புக் கொண்டான். அதாவது முதலில் கார்வெர் நோனைச் சந்தித்து, அவர்கள் கடத்திச் சென்ற பெண்ணைத் திரும்ப ஒப்படைக்கவும், அவளது குழந்தையைக் கொன்ற நோனைச் சட்டப்படி நடவடிக்கை எடுப்பதற்காகத் தம்மிடம் ஒப்படைக்கவும் கோருவது என்றும் அதற்கு சம்மதிக்காவிட்டால் சண்டை போடுவது என்பதும் தான் அந்த நிபந்தனை. இதனை அவர்களும் ஒப்புக் கொண்டார்கள். எனவே ஜான் சமாதானக் கொடி யொன்றைத் தாங்கிக் கொண்டு, நோன் பள்ளத்தாக்கின் வாயிலுக்குச் சென்று, கார்வெர் நோனைச் சந்தித்துப் பேச வேண்டுமென்று கோரினன். கரிய தாடி கொண்ட ராக்ஷஸனை கார்வெர் நோனும் அதன்படி வெளியே வந்தான். ஜான் தனது கோரிக்கையைக் கூறியதும், அவன் ஏளனம் ததும்பப் புன்னகை புரிந்தவாறு பின்வருமாறு பதில் சொன்னன்: "ஸர் ஜான்! புதிய பட்டமும் அந்தஸ்தும் வந்தவுடன் உனக்குப் புத்தியே மாறிப்போய்; தலைக்கனம் ஏறி விட்டது. இல்லையா? எதிர்பார்க்கக் கூடியதுதான். இந்தப் பிராந்தியத்திலேயே எங்களைக்

கேவலப்படுத்திய ஒருவன் உண்டென்றால், அந்த அயோக்கியன் நீதான். எங்களுக்கு உடமையாகி விட்ட எதையும் திருப்பிக் கொடுக்கும் வழக்கம் இந்த நீக்ரோக்களிடம் கிடையாது. உனது வீட்டைச் சுட்டுப் பொசுக்கி, உன்னையும் நாங்கள் கொன்று தள்ளியிருக்க வேண்டும். அதைச் செய்யாததாலன்றோ நீ இப்படிக் கேட்கிறாய்! நன்றி கெட்ட பதரே."

ஜானும் அஞ்சவில்லை. அவன் பின் வருமாறு பதிலளித்தான்; "கார்வெர் நீக்ரோ! நியாயம் யார் பக்கமிருக்கிறது என்பதை உன்னையும் என்னையும் காட்டிலும் ஆண்டவன் நன்றாக அறிவார். நீ தான் கொடியவன்; கீழ்த்தரமானவன். ஆம். நாம் இருவரும் கணக்குத் தீர்த்துக் கொள்ளும் நாள் நெருங்கி விட்டது!"

"முட்டாளே! அந்த நாள் இதோ வந்து விட்டது பார்!" என்று கத்தியவாறே, கார்வெர் நீக்ரோ ஒரு பக்கமாகத் துள்ளிப் பாய்ந்தான். மறுகணமே அந்தக் குகை வாயிலுக்குள்ளிருந்து சரமாரியான குண்டுகள் வாயிலுக்கு வெளியே படபடத்துப் பறந்து வந்தன. ஆனால் ஜான் பழைய ஜானாகவே இருந்தான்; கார்வெர் நீக்ரோ துள்ளிப் பாய்ந்த அதே கணத்தில் ஜானும் மறுபக்கமாகத் துள்ளித் தாவி, ஒரு குத்துப் பாறையின் மறைவில் ஒதுங்கி விட்டான். எனவே பாய்ந்து வந்த குண்டுகள் எதுவும் அவன்மீது பட்டுவிடவில்லை. இந்த நிகழ்ச்சி நீக்ரோக்களுக்கு எமனாக முடிந்தது. இவ்வாறு குண்டுகள் பாயத் தொடங்கியதும், ஆயுதந்தாங்கிகளாக வந்திருந்த கிராம வாசிகளின் பெரும்படை நீக்ரோக்களின் மீது வெள்ளம் போல் பாய்ந்தது; அவர்களைச் சுணக்காடு பிணக்காடாக வெட்டியும் கொன்றும் தள்ளியது. அவர்களில் கண்ணில்பட்ட எவருமே உயிரோடு தப்பவில்லை சிறிது நேரத்தில் அந்தப் பள்ளத்தாக்கே நீக்ரோக்களைக் காணாமல் வெறிச்சோடிப் போய் விட்டது நீக்ரோக்களில் கார்வெர் நீக்ரோவும், என்ஸரின் மகனான கவுன்செலரும் மட்டுமே தப்பிவிட்டார்கள். கார்வெர் நீக்ரோ தனது அசுரபலத்தாலும், வாயுவேகமாகச் செல்லும் தனது குதிரையின் துணையாலும் உயிர் தப்பி ஓடி விட்டான். கவுன்செலரை ஜானே இரக்கப்பட்டு உயிர் பிழைத்துப் போக விட்டான்.

அங்கு சண்டை நடந்து கொண்டிருந்த நேரத்தில், குள்ளநரிக் குணம் படைத்த குள்ளக் கிழவனான அந்தக் கவுன்செலர் நீண்டு வளர்ந்த கோரைப் புற்களுக்கிடையே ஊர்ந்து ஒளிந்து மறைந்து ஓடுவதை ஜான் கண்டான். எனினும் அவனால் அந்தக் கிழவனைக் கொல்ல முடியவில்லை. ஒரு மனிதனை அனாவசியமாய்க் கொன்று தள்ளுவது அவனுக்

குப் பிடிக்க வில்லை. எனவே அந்தக் கவுன்செலர் தன்னிடம் திருடி ஒளித்து வைத்திருந்த லோர்னுவின் வைர அட்டிகையை மட்டும் அவனிடமிருந்து பறித்துக் கொண்டு, அவனை ஜான் போகவிட்டு விட்டான். அவ்வாறு தப்பிப் பிழைத்து ஓடிய அந்தக் கவுன்செலர் பிறகு என்ன ஆனுனே? அதைப் பற்றித் தகவலே இல்லை.



நீண்களையெல்லாம் அநேகமாக ஒழித்துக் கட்டிய பின்னர், அந்தப் பிராந்தியத்தில் அமைதி நிலவியது; மக்களும் தத்தம் காரியங்களைப் பயமின்றிக் கவனித்து வந்தார்கள். இவ்வாறிருக்கும்போது ஒருநாள் ஜான் தனது பண்ணை நிலத்துககுச் சென்றுவிட்டு வீடு திரும்பி வந்தபோது அங்கோர் அதிசயத்தைக் கண்டான். அங்கே அவனது அறையில் சீமாட்டி லோர்னு அமர்ந்திருந்தாள்; அவனது தாயும், தங்கை எலிஸாவும் அவனருகே பரபரப்போடும், பரவசத்தோடும் காணப்பட்டார்கள்.

ஜானின் வருகையையும் வரவேற்பையும் கண்டு பிரமித்த லோர்னுஅந்தப்பிரமிப்பிலிருந்து மீண்டவளாய், "இனி, எனக்கு நானே அதிகாரி, எனவே வந்து விட்டேன். திரும்பவும் இங்கு வந்து சேர்ந்தது எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறது, தெரியுமா?" என்று பரவசத்தோடு சொன்னுள்.

"ஊஹூம், உனக்கு நீயே அதிகாரியாக ரொம்ப நாள் இருக்க முடியாது. ஆமாம்! கண்ணே லோர்னு! இனி உனக்கு நான்தான் அதிகாரியாக இருப்பேன்" என்முன் ஜான்.

இதனைக் கேட்டதும்,லோர்னு கண்களில் கண்ணீரும் இதழ்களில் புன்னகையும் பொங்கித் ததும்ப, அவனது மார்பில் முகத்தைப் புதைத்துக்கொண்டு ஆனந்தக் கண்ணீர் பெருக்கினுள். இதன் பின்னர் அந்தப் பண்ணையில் எல்லாம் நல்லபடியாகவும் மகிழ்ச்சிகரமாகவும் நடக்கத் தொடங்கின. இறுதியில் லோர்னுவுக்கும் ஜானுக்கும் திருமணம் நடக்கும் தேதியும் வந்தது. அன்று சுற்று வட்டாரத்தில்பலமைல் தூரத்திலுள்ள மக்களும், ஏன் பெரிய மனிதர்களும் கூட, அங்குவந்து குழுமிவிட்டார்கள். தேவாலயத்தில் ஒரே கூட்டம். பாதிரியார் மணமக்களைக் கணவன் மனைவியராகப் பிரகடனம் செய்தார்; அவர் அவ்வாறு பிரகடனம் செய்து வாய்மூடு முன்னர், படார் என்று ஒரு வேட்டுச் சப்தம் தேவாலயத்தையே அதிர வைத்தது! மறுகணம் மணமகளான லோர்னு தன் கணவனின் கரங்களில் சோர்ந்து சாய்ந்தாள். வெண்பனியொத்த அவளது திருமண ஆடைகளின் மீது

குங்குமச் சிவப்பான ரத்தம் பொழிந்து வழிந்தது. ஜான் வேட்டுச் சப்தம் வந்த திசையைத் திரும்பிப் பார்த்தான். அதே நேரத்தில் கார்வெர் டூன் தனது கரிய பெரிய குதிரையின்மீது அமர்ந்தவாறு அதனை வேகமாகத் தட்டி விட்டான்!

ஜானின் மனத்தில் ஒரே எண்ணம்தான் நிறைந்திருந்தது: இங்கோ அவனது காதலி, அவனது மனைவி, அவனது கண்மணி லோர்னு குண்டடி பட்டுப் பிணமாகக் கிடக்கிருள். அங்கோ அவளைக் கொன்ற அந்தப் பாவி பறந்தோடுகிருன்! இந்நிலையில் என்ன செய்வது? அவன் அதிக நேரம் சிந்திக்கவில்லை. மறுநிமிஷமே தேவாலயத்தின் வாசலில் நின்ற தனது குதிரையை நோக்கி அவன் ஓடினுன்; அதன் மீது தாவியேறி, அந்தப் பழிகாரன் கார்வெர் டூனை நோக்கிக் குதிரையை விரட்டினுன். வெகு நேரமாகியும்கார்வெரை அவனுல்எட்டிப் பிடிக்க முடியவில்லை. கார்வர் டூனின் குதிரை நல்ல திடகாத்திரமான புதுக்குதிரை. மேலும் ஆரம்பத்திலேயே அவன் வெகு தொலைவுக்குச் சென்று விட்டான். எனினும் இறுதியில் கார்வெர் டூன் 'மாயப் படுகுழி' என்று அந்த வட்டாரத்தில் அழைக்கப்பட்ட, மரங்கள் செறிந்த ஒரு பள்ளத்தாக்கினுள் தன் குதிரையைச் செலுத்தினுன். அங்கு சென்று விட்டால், மீண்டு வரமுடியாது என்று ஜானுக்குத் தெரியும். ஏனெனில் அந்த ஒடுங்கிய பள்ளத்தாக்கின் மத்தியில் ஒரு பேராபத்தான புதைமணற் படுகுழி இருந்தது; அந்தப் படுகுழியைக் சுற்றிலுமுள்ள கெட்டியான நிலப் பரப்பும் மிகவும் சொற்பம். ஜான் குதிரையில் ஏறிச் சென்றுனே தவிர, அவன் கையில் ஆயுதம் எதுவும் இல்லை. எனினும் அவன் குதிரையில் சென்ற அதே வேகத்தில், பாதையில் திருகி வளைந்து நின்ற, காய்ந்த ஓக் மரத்தின் கிளையொன்றைக் கையோடு ஒடித்தெடுத்து, அதையேதனது ஆயுதமாக ஏந்திச் சென்றுன்.

அந்தப் பள்ளத்தாக்கினுள் தன்னைத் துரத்திக் கொண்டு ஜான் வருவதைக் கண்டதும், கார்வெர் தனது குதிரையைத் திருப்பியவனுய் ஜானை நோக்கிப் பின்வருமாறு கத்தினுன்: "ஜான்! நான் உன்னை ஒன்றும் செய்ய மாட்டேன். உனது ஆணவத்துக்கும் அகந்தைக்கும் ஏற்ற தண்டனையைஅப்போதே அளித்து விட்டேன்!" எனினும் கார்வெர் டூனின் கையில் அவனது துப்பாக்கி இருந்தது. இந்தப் பேச்சைக் கேட்ட ஜான் பதிலே பேசாமல் மேலும் முன்னேறி வந்தான். உடனே கார்வெர் டூன் தன் கைத்துப்பாக்கியால் ஜானை நோக்கிச் சுட்டான். அந்தக் குண்டு ஜானின் உடம்பைத் தாக்கியது, எனினும் ஜான் அதனைப் பொருட்படுத்தவில்லை. தன் கையிலிருந்த

ஙர்த்தடியால் கார்வெர் ரூனின் குதிரையின் நெற்றியில் ஓங்கி யறைந்தான். மறுகணமே அந்தக் குதிரை கோடரியால் வெட்டுண்டது போல் சுருண்டு விழுந்தது.

குதிரையோடு கீழே விழுந்த கார்வெர் ரூன் தட்டுத் தடுமாறி எழுந்தான்; அதற்குள் ஜான் தனது குதிரையை விட்டுக் குதித்திறங்கி, கார்வெர் ரூனின் முன்னுல் போய் நின்று, அவனுக்குக் கோபம்வரும் வண்ணம் அவனது கன்னத்திலே மெல்லத் தட்டினுன். மறுகணம் பலசாலிகளான அவர்கள் இருவரும் ஒருவரையொருவர் பற்றிப் பிடித்தார்கள். ஜானின் உடம்பில் ஏற்பட்டிருந்த காயத்திலிருந்து ரத்தம் பொங்கி வழிந்தது. ஆனுல் காதல் வேகத்தாலும் கோபாவேசத்தாலும் அவனது பலம் அசுரசக்தி படைத்ததாக விளங்கியது. அவன் கார்வெர் ரூனின் கர

## பயனுள்ள புத்தகங்கள்

மார்க் ட்வெயின் ஒரு நகைச்சுவைக் காதாசிரியர். அவர் வீட்டுக்குச் கிறிஸ்மஸ் பண்டிகைச் சமயத்தில் ஒரு நண்பர்வந்துசேர்ந்தார். வந்தவரும் ஒரு புத்தக ஆசிரியரே.

வீடு நிறையப் புத்தகங்கள் அடுக்கடுக்காக இருந்தன. அவற்றைக் கண்ட நண்பர் மார்க் ட்வெயினை நோக்கிக் கேட்டார்.

''இவைகள் எல்லாம் என்ன? உங்களுக்கு வந்த கிறிஸ்மஸ் பரிசுகளா?''

''ஆமாம்'' என்று தலையசைத்தார் ட்வெயின்.

''புத்தகம் எழுதுபவருக்கு மற்றவர்கள் எழுதிய புத்தகங்களைப் பரிசளிக்கிருர்களே! ஏன்? புத்தகங்களைத் தவிர, வேறு எதுவும் நமக்குத் தேவையில்லை என்பது அவர்கள் கருத்தா?'' என்று சலித்துக் கொண்டார் நண்பர்.

''அதனுல் என்ன? புத்தமென்ருல் எனக்கு மிகப் பிடிக்கும். கனமான புத்தகங்கள் பூனைகளை விரட்டப் பயன்படுகின்றன. இலேசானவற்றை மேசை நாற்காலிகளின் காலுக்கடியில் போட்டால் அவை ஆடாமல் அசையாமல் இருக்க உதவுகின்றன. தோல் பைண்டு செய்த புத்தகங்கள் சவரக் கத்தி தீட்டுவதற்கு நன்ருகப் பயன்படுகின்றன. அது மாதிரிப் புத்தகங்களை நிறைய அனுப்ப மாட்டேனென்கிருர்களே என்று தான் எனக்குக் கவலையாக இருக்கிறது. என்ருர் மார்க் ட்வெயின்.

வந்த நண்பர் இதைக் கேட்டு வெட்கித் தலை குனிந்தார்.

மொன்றை, ஏதோ ஒரு பொம் மையின் கரத்தைத் திருகிப் பிடுங்குவது போல், அநாயாச மாக முறித்தெடுத்து விட்டான். கார்வெர் டூனும் களைக்காமல் ஜானைச் சுற்றி வளைக்கப் பார்த் தான்; ஆனால் அதற்குள் தனது விலா எலும்பொன்று நொறுங் கும் சப்தத்தை அவனே கேட் டான். இரண்டே நிமிஷத்தில் டூன்களுக்கு மத்தியில் ராக்ஷஸ ஞக விளங்கிய கார்வெர் டூன் கண் விழிகள் பிதுங்கிப்போய்ச் செயலிழந்து விழுந்தான்.

"இனியும் நான் உன்னைச் சித் திரவதை செய்ய விரும்ப வில்லை. போ, முறிந்துபோன உடம்போடு சென்று, உனது பாவங்களுக்காக வருந்தி யழு!" என்றான் ஜான்.

ஆனால் அதற்குள் காரியம் மிஞ்சி விட்டது. இருவரும் துவந்த யுத்தம் புரிந்த அந்த நேரத்தில், அவர்கள் அந்தப் புதைமணற் படுகுழிக்குள் கால்டி எடுத்து வைத்து விட் டார்கள். அந்தப் புதை மணலோ அவர்களைக் கொஞ்சங் கொஞ்சமாகத் தன்னுள் இழுத்து விழுங்கத் தொடங்கி விட்டது. ஜான் நிமிர்ந்து நேராக நின்றவனாய், அந்தக் குழியின் கரையிலிருந்த கெட்டி யான தரையை எப்படியோ மிகவும் கஷ்டப்பட்டு எட்டிப் பிடித்து விட்டான். ஆனால், கார்வெர் டூன் அதில் சிக்கிக் கொண்டு விட்டான். நாற்றமும் குழைவும் நிறைந்த சேறுபடிந்த தன் கைகளை அவன் நிராதர வான நிலையில் மேலே தூக்கி ஞன்; அந்தப்படுகுழி அவனை விழுங்கிக் கொண்டிருந்தது. ஜானும் கூட, அவனைக் காப் பாற்ற நினைத்தான்; முயன்றான். எனினும் கார்வெர் டூனைக் காப் பாற்ற முடியவில்லை. சிறிது நேரத்தில் அந்தப் புதைமணல் கார்வெர் டூனை விழுங்கிப் பசி யாறிவிட்டுஅமைதிகொண்டது.

ஜான் குற்றுயிரும் குலை உயி ருமாக வீடு வந்து சேர்ந்தான். அவர்கள் அவனை அவனது படுக் கையிற் கொண்டு போய்க் கிடத்தினர்கள். அவனுக் கேற்பட்ட குண்டுக் காயம் பல மானதுதான். எனவே அவன் பிழைப்பான மாட்டான என் பதே தெரியவில்லை. வாரக் கணக்காக, அவன் மரணத் தோடு போராடினன். இறுதி யில் அவனே வெற்றி கண் டான். அவனது காயம் ஆறி, உடம்பிலும் ஓரளவு தெம்பும் ரத்தமும் ஊறிய பின்னர், ஒரு நாள் அவனது குடும்பத்தார் அவன் முன்னல் ஒருபெண்ணைக் கொண்டு வந்து நிறுத்தினர்கள். ஆம். அவள் லோர்னதான் அவளும் பிழைத்துக் கொண்டு விட்டாள்! பின்னர் அந்தக் காதலர்கள் நெடுங்காலம் ஆனந்தமாக வாழ்ந்தார்கள்.

---

ஆசிரியரும், வெளியிடுபவரும்: கண. இராமநாதன்,
66, பெரியதெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5. தொலைபேசி 84989
அச்சிட்டோர்: ஐடியல் பிரிண்டர்ஸ், 97, பிராட்வே, சென்னை-1.

# இலக்கியப் புத்தகங்கள்

இலக்கியம் என்பது சிறந்த கருத்துக்களின் அழகிய எழுத்து வடிவமாகும். படிப்போர் மனத்தை விரிவாக்கி குறைகளைப் போக்கி நல்வழிப்படுத்தும் இயல்புள்ளது இலக்கியமாகும். மக்களை நல்வழிப்படுத்தும் நன்னூற்கள் இலக்கியமாகும். இப்படியாகப் பல கருத்துக்கள் உலவி வருகின்றன. இவற்றை இலக்கணமாகக்கொண்டு இலங்கும் இலக்கியப் புத்தகங்களில் சிலவற்றைக் கீழே தந்துள்ளோம்.

| | | | |
|---|---|---|---|
| கீதாஞ்சலி | தாகூர் | 2 | 00 |
| காதற் கண்கள் | ,, | 2 | 00 |
| அஞ்சிறைத்தும்பி | மயிலை சீனி வேங்கடசாமி | 2 | 50 |
| கௌதம புத்தர் | ,, | 3 | 50 |
| திருக்குறள் பொருள் விளக்கம் | சாமி சிதம்பரனர் | 4 | 50 |
| கம்பன் கண்ட தமிழகம் | ,, | 2 | 50 |
| தொல்காப்பியத் தமிழர் | ,, | 2 | 50 |
| பத்துப்பாட்டும் பண்டைத் தமிழரும் | ,, | 3 | 50 |
| எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும் | ,, | 3 | 50 |
| பதினெண் கீழ்க்கணக்கும் தமிழர் வாழ்வும் | ,, | 3 | 50 |
| சிலப்பதிகாரத் தமிழகம் | ,, | 4 | 50 |
| மணிமேகலை காட்டும் மனித வாழ்வு | ,, | 4 | 00 |
| இலக்கியச் சோலை | ,, | 3 | 50 |
| வடலூரார் வாய்மொழி | ,, | 3 | 50 |
| பழந்தமிழர் அரசியல் | ,, | 3 | 00 |



த பெ. எண். 423 போன் : 84989

ஸ்டார் பிரசுரம்

66, பெரிய தெரு,

திருவல்லிக்கேணி : : சென்னை-5.

# தலைசிறந்த நாவல்கள்

| | | |
|---|---|---|
| இதய நாதம் | ந. சிதம்பர சுப்ரமண்யன் | 3-00 |
| நாகமணி | ,, | 2-50 |
| கன்னிகா | ரகுநாதன் | 2-00 |
| புயல் | ,, | 1-50 |
| பஞ்சும் பசியும் | ,, | 4-50 |
| ஜெய சோமநாத் | முன்ஷி | 7-00 |
| வீர சுதந்திரம் | தர்ஷக் | 5-00 |
| ராஜ நர்த்தகி | இராமச்சந்திர தாகூர் | 5-50 |
| மாலதி | சரத்சந்திரர் | 3-50 |
| நாடகக்காரி | துறைவன் | 3-00 |
| தந்தையும் மகளும் | சாவி | 1-50 |
| இதயத்தில் ஓர் இடம் | ஏடி. ரங்கமணி | 1-50 |
| சிற்றன்னை | புதுமைப்பித்தன் | 1-25 |
| நாரத ராமாயணம் | ,, | 1-00 |
| பிரேத மனிதன் | ,, | 1-00 |
| காதல் உள்ளம் | ஜே. எஸ். ரவீந்திரா | 3-50 |
| ஒப்பிலாள் | மணிவண்ணன் | 2-00 |
| இசையரசி சொர்ணவல்லி | ,, | 2-00 |




த பெ எண். 423 போன்: 84989

ஸ்டார் பிரசுரம்

66, பெரிய தெரு,

திருவல்லிக்கேணி : : சென்னை-5.



ஜனவரி, 1965 : : மலர் 3 – இதழ் 10

# புதிய சமுதாயத்தில் பஞ்சாயத்துக்கள்

சிறிய கிராமங்களாயினும் சரி, பெரிய கிராமங்களாயினும் சரி பஞ்சாயத்துச் சபைகள் இருந்தே ஆக வேண்டும். புதிய சமுதாயம் புகழ் நிரம்பியதாக அமைய வேண்டுமானால் பஞ்சாயத்துச் சபைகள் திறமையோடும் நேர்மையோடும் செயல்புரிதல் அவசியமாகும்.

"யாரோ சிலர் பஞ்சாயத்து உறுப்பினர்களாக ஆகப் போகின்றனர். அப்போது ஊர்ப் பெரிய மனிதன் என்ற பட்டம் கிடைக்கும். வசதி படைத்தவர்கள் பஞ்சாயத்துத் தலைவர்களாக வருதல் கூடும்," என்பன போன்ற பேச்சுக்களுக்கு இடம் தராத வகையில் பொது மக்களின் பொதுப்பணி நிலையமாகப் பஞ்சாயத்துக்கள் நிலவ வேண்டும்.

பஞ்சாயத்துக்களுக்கும் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களுக்கும் நடைபெறும் தேர்தல்களில் பெரும்பாலும் போட்டி இல்லாமல் இருத்தல் மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். ஊராக் குழைத்தலில் நமக்கும் பங்கு உண்டு என்ற கருத்தின் அடிப்படையில் போட்டி மனப்பான்மை இருத்தல் பெருமைக்குரிய செய்தி ஆகும்.

தேர்தலோடு போட்டி நின்று விட வேண்டும். செயலில் ஒற்றுமை நிலவ வேண்டும். தோல்விக்கு தளர்ச்சியோ, வெற்றிக்கு மலர்ச்சியோ கொள்ளுதல் வேண்டாம். செயலுக்கு மகிழ்ச்சி கொள்ளும் மனப் பண்பு நன்றாகும்.

பொதுத் தொண்டு புனிதத் தொண்டாகும். நாட்டுக்கு நல்லது செய்ய எண்ணுபவன் பஞ்சாயத்துப் பணிகளைப் பிழையறச் செய்தானேல் அது பெருமைக்குரியதாகும்.

பொதுத் தொண்டு விளையாட்டு அல்ல; வீர உணர்வாகும். இதை நினைவில் கொண்டு பஞ்சாயத்துத் தலைவர்கள் பணியாற்ற முன் வந்தால் நாடு நன்மையுறும்; நல்லன விளைவுறும். இதுவே நம் தலைவர் திரு காமராசரின் கருத்து. இக் கருத்து வளர நாம் பாடுபடுவோமாக.

உலகம் போற்றும் உத்தமர் காந்தி அடிகள். அன்னாரின் நூற்றாண்டு விழாவை அருமையான முறையில் கொண்டாட வேண்டும் என்பதற்காக எடுக்கப்பட்டுள்ள நடவடிக்கைகளைக் குறித்து இக் கட்டுரையாளர் விமர்சனம் செய்துள்ளார். பயனுள்ள திட்டங்கள் இன்னும் இருக்குமாயின் அவற்றை ஆசிரியருக்கு அனுப்பித் தந்தால் விழா அமைப்புக் குழுவினருக்கு அவற்றை அனுப்பி வைத்து ஆவன செய்ய ஏதுவாக இருக்கும்.

# காந்தி அடிகளின் நூற்றாண்டு விழா

**எஸ். கிருஷ்ணமூர்த்தி,**
கதர் கிராமக் கைத்தொழில் கமிஷன்,
கிராம முழு வளர்ச்சித் திட்டப் பிராந்திய அமைப்பாளர்.

1969-ஆம் ஆண்டில் நம் தேசப்பிதா மகாத்மா காந்தியடிகளின் பிறந்தநாள் நூற்றாண்டு விழாவினை மிகச் சிறப்பாகக் கொண்டாட மனித குலம் முழுவதுமே சிந்திக்கத் தொடங்கி விட்டது. நம் பாரத அரசாங்கம் சில திட்டங்களை வகுத்துச் செயலாக்க முடிவு செய்திருக்கிறது. முக்கியமாக அவைகளில் 1969-ஆம் ஆண்டுக்குள், பாசன வசதிக்குள் 100 மிலியன் ஏகரா நிலங்களைக் கொண்டு வந்து, 100 மிலியன் அளவு உணவு தானியங்களை உற்பத்தி செய்ய வேண்டுமென்பதும், நம் பாரதத்தில் 1 லக்ஷம் கிராமங்களுக்கு மின் வசதி அளித்து விட வேண்டுமென்பதும் குறிப்பிடத் தக்கனவாகும். அஃதே போன்று, அகில இந்திய காந்தி நினைவு நிதியும், காந்தியடிகளின் பிறந்தநாள் நூற்றாண்டு விழாவை மிகச் சிறந்த முறையில் நடத்த வேண்டி, ஒரு ஐந்தாண்டுத் திட்டத்தையே தயாரித்துள்ளது. குறிப்பாக நூற்றாண்டை, அந்த ஆண்டு முழுதும் 2—10—1968 முதல் 2—10—69 வரை சீரிய வகை

யில் கொண்டாடுவதற்கும், அந்தச் சந்தர்ப்பத்தில் அவருடைய கருத்துக்களைப் பரப்புவதற்கும், நாட்டின் பல பாகங்களிலிருந்தும், தகுந்த ஏற்பாடுகள் செய்து வருகிறார்கள். தமிழ்நாடு, மகாத்மாஜீயின் போதனைகளையும் கொள்கைகளையும் பின்பற்றுவதில் என்றுமே முதன்மையாக இருந்து வருகிறது. இதே தன்மையில் நூற்றாண்டு விழாவையும் மிகச் சிறப்பாகக் கொண்டாடுவதில் பின்னடையாது என்பது உறுதி.

1968—69-ல் செய்ய வேண்டிய வேலைகள் 68-69 வரையில் செய்யப்பட வேண்டிய நீண்ட கால வேலைத் திட்டங்கள் ஆகியவைகளைப்பற்றி ஆலோசிக்க இந்த மாதம் 1, 2 தேதிகளில், சர்வோதய இயக்கங்களில் ஈடுபட்டுள்ள ஊழியர்கள், காந்தி நினைவு நிதி, தமிழ்நாடு சர்வோதய சங்கம், கதர்—கிராமக் கைத் தொழில் கமிஷன் போர்டு முதலான ஸ்தாபனங்களில் பணி புரியும் ஊழியர்கள் முதலானவர்களைக் கொண்ட கூட்டம், சென்னை மைலாப்பூர் 82-ஏ லஸ் ரோட்டிலுள்ள காந்தி மன்றத்தில் கூடியது. இந்தக் கூட்டத்திற்குக் காந்தி நினைவு நிதியின், தமிழ் நாட்டுக் கிளைத் தலைவரும், மாநில முதலமைச்சருமான திரு எம். பக்தவத்சலம் அவர்கள் தலைமை தாங்கினார்கள். ஆனால் அவருக்கு மிக அவசரமான அரசாங்க அலுவலிருந்ததினால், கூட்டத்தை தமிழ் நாட்டு காந்தி நினைவு நிதி காரியதரிசி திரு. க. அருணாசலம் அவர்கள் தலைமை வகித்து தொடர்ந்து நடத்தித் தந்தார்கள்.

மேற்படி கூட்டத்தில், தமிழ்நாடு சர்வோதய சங்கத்தின் தலைவர் திரு. கோ. வேங்கடாசலபதி அவர்களும், சென்னை மாநிலக் கதர்—கிராமக் கைத் தொழில் போர்டு காரியதரிசி திரு. வெ. பத்மநாபன் அவர்களும், உப தலைவி திருமதி ராம சுப்ரமண்யம் அவர்களும், கல்லுப்பட்டி காந்தி நிகேதன் காரியதரிசி திரு. ரா. குருசாமி அவர்களும், திரு. பெ. தூரன் அவர்களும், ஆசியப் பகுதி சாந்தி சேனைத் தலைவர் டாக்டர். மு. அறம் அவர்களும், குஷ்ட நிவாரண சங்க திரு. ஜகதீசன் அவர்களும் மற்றும் பலரும் பங்கு கொண்டனர்.

திரு. க. அருணாசலம் அவர்கள் பேசுகையில், மகாத்மாஜீயின் நூற்றாண்டு விழாவினை மிகச் சிறப்பாகக் கொண்டாடும் பொருட்டு எல்லா மாநிலங்களும், கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளன என்றும், இதையொட்டி சில திட்டங்களும் அனுப்பப்பட்டுள்ளன எனவும் குறிப்பிட்டார். அவர் மேலும் பேசுகையில் நூற்றாண்டு விழாவினை தேசீய அளவிலும், மாநில ரீதியிலும், ஸ்தாபனங்கள் வகையிலும், தனிப்பட்டவர்கள் மூலமும் கொண்டாடப்பட வேண்டுமெனக் குறிப்பிட்டார்.

நாம் மேற்கொள்ளும் திட்டங்கள், அகில உலகத்திற்கே ஒரு எடுத்துக் காட்டாக விளங்க வேண்டுமெனக் கேட்டுக்கொண்டார்கள்.

அடுத்துப் பேசிய திரு. பெ. தூரன் அவர்கள், காந்திஜி அவர்கள் உலக சமாதானத்திற்கு ஆற்றிய பெரும் பணியைப் பற்றிக் குறிப்பிட்டு, அனைவரும் அறியும் பொருட்டு அவர்களின் தத்துவங்களை மாணவர் சமூகம், முக்கியமாக உயர் நிலைப் பள்ளியில் கல்வி பயிலுவோர்க்குக் காந்திஜீயைப் பற்றிய நூல்கள் கட்டாயப் பாடமாக வைக்கப்பட வேண்டுமென்றும், கல்லூரி மாணவர்களுக்குத் துணைப் பாடமாக இருக்க வேண்டுமெனவும் யோசனை கூறினார். அவர் மேலும் பேசுகையில் ஹரிஜனங்கள் அனைவருக்கும் கதராடை விநியோகிக்கப்பட வேண்டுமென்றும் காந்திஜீயைப்பற்றிய முழு நேரத் திரைப்படம் வெளியிடப்பட வேண்டும் என்றும், காந்தியடிகளின் புகைப்படம் தமிழ் நாட்டிலுள்ள அத்தனை இல்லங்களிலும் இருக்கும்படி செய்ய வேண்டுமென்றும், காந்திஜீயின் கருத்துக்களை வில்லுப்பாட்டு, ஒயில் கும்மி, பொம்மலாட்டம், உடுக்கை ஆட்டம் முதலானவைகள் மூலமும் நாடெங்கிலும் பரவச் செய்ய வேண்டுமென்றும் கூறினார். காந்திஜீயுடன் நெருங்கிப் பழகி வாழ்ந்த பெரியோர்கள் மூலம் காந்திஜீயைப் பற்றிய சம்பவங்கள் வெளியிடப்பட வேண்டுமென்றும், வானொலியை நன்கு பயன்படுத்திக் கொள்ள வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். அதோடு காந்தி அடிகள் விரும்பியபடி, தன்னிறைவு பெற்ற ஒரு சிறு குடியரசைப் போன்று விளங்கும் மாதிரிக் கிராம மொன்றையும் உண்டாக்க வேண்டு மென்றார்.

அதற்கடுத்துப் பேசிய அகில இந்தியக் குஷ்ட நிவாரண சங்கக் காரியதரிசி திரு டி. என் ஜகதீசன் அவர்கள், கொடிய குஷ்ட நோய் தமிழ் நாட்டில் தான் மிகவும் அதிகம் பரவியுள்ளது என்றும், காந்தியடிகள், இந்தக் கொடிய நோயை ஒழிக்க அதை நிர்மாணத் திட்டங்களிலேயே ஒன்றாகச் சேர்த்துக் கொண்டார் என்பதையும் குறிப்பிட்டு, நூற்றாண்டு விழாவிற்குள், இந்தத் துறையில் நிறைவேற்றத் தக்கதொரு திட்டத்தைத் தான் தயாரித்துத் தருவதாக வாக்களித்தார்.

அடுத்துப் பேசிய திரு. நீலகண்டன் அவர்கள், அமெரிக்க விடுதலை வீரர் திரு அபிரஹாம் லிங்கனைக் குறிப்பிட்டு நம் நாட்டிலும் காந்தியடிகளைப் பற்றி மலிவுப் பதிப்பு புத்தகங்கள் பெருவாரியாக அச்சடித்து வழங்கப்பட வேண்டுமென்றார். லிங்கனைப் போன்று இந்தியாவிலும், காந்தி அடிகளுடைய அழகான சிறு பொம்மையொன்று வீடு தோறும் இருக்கும்படி

செய்யப்பட வேண்டுமெனக் கூறி, லிங்கனுடைய பொம்மை யொன்றையும் கூட்டத்தில் காண்பித்தார்கள்.

ஸ்ரீமதி அமிர்தா ராம சுப்ர மண்யம் பேசுகையில், காந்தி யடிகளைப் பற்றி மேனாட்டவர் எழுதிய ஆங்கிலப் புத்தகங் களைத் தமிழில் மொழி பெயர்க்க வேண்டுமெனவும், காந்தி யடிகளைப் பற்றிய நாட்டுப் பாடல்கள் இயற்றப்படவேண்டு மெனவும் கூறினார்கள். மரண தண்டனை ஒழிப்பு பற்றியும் நாம் அனைவரும் சிந்திக்க வேண்டுமென்றார்.

இந்தச் சந்தர்ப்பத்தில், தலைவர் திரு. எம். பக்தவத் ஸலம் அவர்கள் பேசுகையில் நாம் அனைவரும் மிகுந்த பாக்கிய சாலிகள் எனவும், காந்தியடி களைப் பார்க்கவும், அவருடைய அரிய போதனைகளைக் கேட்க வும் கொடுத்து வைத்தவர்கள் எனவும் குறிப்பிட்டார். நமது பிற்கால சந்ததிகள் காந்தி அடி களைப்பற்றி நன்கு தெரிந்து கொள்ளும்படி செய்வதுமிகவும் அவசிய மென்றார். காந்தியடி களின் பல்வேறு நிர்மாணத் திட்டங்களைப் பற்றிப் பேசுகை யில், அவைகளில் பொதிந்திருக் கும் அடிப்படைத் தத்துவங் களையும், குறிக்கோள்களையும் நாம் அறிந்து செயல்படவேண்டு மென்றார். காந்திஜிக்கும், பண்டித நேருவுக்கும் தகுந்த முறையில் விளங்கும் ஓர் நினைவுச் சின்னமாக சங்கர ஹாலயம் (Museum) ஒன் றைச் சென்னையில் நிறுவ வேண்டுமெனத் தன் கருத் தைத் தெரிவித்தார். மாணவர் கள் அனைவரும் காந்தியடி களைப்பற்றி நன்கு அறிய வேண்டியது அவசியம் என்பது பற்றிக் குறிப்பிட்டு, மாணவர் களிடையே முக்கியமாகத் தேவைப்படுவது ஒழுக்கம் என் பதையும் வலியுறுத்தினார். ஈரோடு டாக்டர் திரு. எல். கே. முத்துசாமி அவர்கள் தமிழ் நாட்டிலுள்ள சுமார் 30,000 பள்ளிகளிலாவது கக்கூஸ்களும், மூத்திரக் குழிகளும் அமைக்கப் பட வேண்டும் என்றார். அடுத்தபடி பேசிய டாக்டர் திரு. அறம் அவர்கள் சாந்தி சேனையைப் பற்றி விளக்கினார். காந்தியடிகளுடைய சாந்தி சேனைக் கருத்துக்கள் நாடெங் கிலும் பரவும்படி செய்ய வேண்டுமென்றும், குறிப்பாக உயர்நிலைப் பள்ளிகளில் 100 நபர்களுக்குக் குறையாமல் 100 இடங்களிலாவது சாந்தி சேனை அமைக்கப்பட வேண்டுமென் றார். தற்போது அமெரிக்க சமாதானப்படை உலகமெங் கிலும் சேவை புரிவதைக் குறிப் பிட்டு, சாந்தி சேனை விவசாய உற்பத்தி, பொதுத் துப்புரவு போன்ற திட்டங்களிலும் ஈடு படும் என்று அறிவித்தார்.

அவருக்கு அடுத்தபடியாகப் பேசிய தமிழ்நாடு சர்வோதய சங்கத் தலைவர் திரு. கோ. வேங்கடாசலபதி அவர்கள்

தமிழ் நாட்டில் நிர்மாணத் திட்டத்தில் ஈடுபட்டுள்ள பல்வேறு ஸ்தாபனங்களையும் பலப்படுத்த வேண்டுமென்றும், தமிழ்நாட்டிலுள்ள சுமார் 50,000 கிராமங்களில் ஒவ்வொரு கிராமத்திலும் சுமார் இரண்டுஊழியர்களாவது காந்தியடிகளைப் பற்றிச் சிந்திக்கவும், பேசவும், செயலாற்றவும் வேண்டுமென்ருர்.

தமிழ் நாட்டில் சுமார் ஒரு லக்ஷம் வீடுகளிலாவது காந்தியடிகளின் புத்தகங்களும், புகைப்படமும் விநியோகிக்கப் படவேண்டுமென்ருர். முக்கியமாக சத்திய சோதனை, கீதா போதனை உத்தம வாழ்க்கை போன்ற புத்தகங்களை எல்லோரும் எப்போதும்படித்துப் பயன் பெறும்படி செய்ய வண்டுமென்ருர். காந்தியடிகளின் நிர்மாணப் பணிகளை நாம் எப்பொழுதும் கடைப்பிடித்து அநுஷ்டிக்க வேண்டியது என்றும், நூற்றுண்டோடு நிறுத்தி விடுவதல்ல வென்றும், மனித குலம் உள்ளளவும் காந்தி யடிகளின் போதனைகள் இருந்து வரும் என்றும் கூறினர்.

மதுரை மாவட்ட வத்தலகுண்டு சட்டசபை அங்கத்தினர் திரு. அஜீஸ் அவர்கள் பேசிய போது உலக சமாதானத்திற்குக் காந்தியடிகள் ஆற்றிய அரும் பணியை உலகம் என்றென்றும் மறக்க முடியாது என்ருர். மீண்டும் பிற்பகல் கூடிய கூட்டத்தில் தலைமை வகித்துப் பேசிய திரு. க. அருணசலம் அவர்கள் சாந்தி சேனையில் ஈடுபட ஊழியர்களுக்கு தகுந்த பயிற்சி அளிக்கவும் ஒவ்வொரு பயிற்சி நிலையங்கள் ஆராய்ச்சிக் கூடங்களாகத் திகழவும் வேண்டுமென்ருர்.

அடுத்தபடி பேசிய இயற்கை வைத்திய டாக்டர் திரு லக்ஷ்மி நாராயணன் அவர்கள் தற்போது தமிழ்நாட்டில் இயற்கை வைத்திய ஸ்தாபனம் இல்லாதது ஒரு பெரும் குறையெனக் குறிப்பிட்டு, ஓர் ஸ்தாபனம் அமைக்க அனைவரும் ஒத்துழைக்கும்படி கேட்டுக்கொண்டார். இயற்கை வைத்தியத்தில் காந்தியடிகள் வைத்திருந்த நம்பிக்கையைப் பற்றித் தான் நடத்தி வரும், திட்டங்களைப் பற்றியும் குறிப்பிட்டார்.

அடுத்தபடியாக, கோயம்புத்தூர் மாவட்டத்திலுள்ள நாய்க்கன் பாளையம் கிராமத்தைச் சேர்ந்த திரு. காளை கவுண்டர் பேசுகையில் நாம் செயல்பட விரும்பும் திட்டங்கள் நம் சிந்தனைகளைத் தாண்டி, உள்ளத்தைத் தூய்மைப் படுத்தும் வகையிலிருக்க வேண்டுமென்ருர். கிராமங்களில் சுகாதாரம் ஏற்பட, கக்கூசுகள் கட்டுவதின் அவசியம் பற்றிப் பேசினர்.

காந்தி நினைவு நிதி ஊழியர்களான காரடாந்தக்குடி திரு. முத்தையா, சத்ரபட்டி திரு. சின்னசாமி பேசுகையில் தற்போது தமிழ்நாட்டில் நடைபெறும் கிராம முழு வளர்ச்சித் திட்ட வேலைகளை நன்கு திறம்

படச் செயலாற்றினால் அதுவே காந்தியடிகளுக்குச் சிறந்த நினைவுச் சின்னங்களாகுமென்றார்கள்.

கிராம ராஜ்யப் பத்திரிகை ஆசிரியர் திரு இராமசாமி பேசுகையில் காந்தியடிகளின் போதனைகள் நாடெங்கிலும் பரவப் பத்திரிகைகள் மிக அவசியமென்றும், நம் இயக்கங்கள் கூடுமானவரை நம் சக்தியைக் கொண்டே நடைபெற வேண்டுமென்றும் கூறினார்.

வயலூர் கிராம தான ஊழியர் திரு. மாணிக்கம் அவர்கள், தற்போதுள்ள பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் நீங்க, சாத்வீகப் போராட்டம் தேவையெனக் குறிப்பிட்டார்.

அடுத்துப் பேசிய திரு. S. R. சுப்ரமண்யம் அவர்கள் முழுநேர ஊழியர்கள் அவசியமெனவும், எழுத்தாளர்கள் பெரும்பாலும் ஏதோ ஊதியத்திற்காகவே வேலை செய்கின்றனர் எனவும், கொள்கையுடையவர்களுக்குப் பத்திரிகைத் தொழிலில் வாய்ப்பில்லையெனவும் குறிப்பிட்டார். காந்தீயக் கொள்கைகளையுடைய எழுத்தாளர்களை அணுகி காந்தியடிகளைப் பற்றிய நூல்களை வெளியிட முயற்சிக்க வேண்டுமென்றார். காந்தீயக் கருத்துக்களைக் கொண்டவர்களது காலனி ஒன்று அமைக்கப்பட வேண்டுமென்றும் அவர் கேட்டுக் கொண்டார்.

மறுநாள் கூடிய கூட்டத்தில் சத்ரபட்டி திரு. வள்ளிகாளை, திரு. பெரியசாமி, மதுரைத் தத்துவப் பிரசாரகர் ஸ்ரீ முத்துராமலிங்கம், திரு. திருமால் முதலானோர் பேசினார்கள்.

வேதாரண்யம் கன்யா குருகுலம், திரு. அப்பாகுட்டி அவர்கள் பேசுகையில், காந்தீயப் பணியில் பெண்கள் அதிக பங்கு கொள்ள வேண்டுமென்றும், அதற்கென ஓர் பிரிவு ஏற்படுத்தப்பட வேண்டுமெனவும் கூறினார். அடுத்து திரு. ப. ராதாகிருஷ்ணன் அவர்கள் பேசுகையில் விழாவிற்கு நிதி வசூலிக்க, பம்பாய் போன்ற நகரங்களில் தேசீய பாதுகாப்புக்கு வசூலித்த ஓட்டு முறையை விளக்கி, அவ்வாறே நாமும் தமிழ் நாட்டில் சென்னை, மதுரை, கோயம்புத்தூர், திருச்சி முதலான இடங்களில் செய்யலாம் என்றும் யோசனை கூறினார்.

சர்வோதயப் பத்திரிகை ஆசிரியர் திரு. என். ராமசாமி பேசுகையில், நாட்டில் யோக சக்தி அதிகம் உண்டாக வேண்டும் என்றும், சர்வோதய இலக்கியங்கள் அதிகம் பரவ வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார்.

காதி-கிராம உத்யோகபவன் திரு. ராகவலு அவர்கள் பேசுகையில் நாம் ஒவ்வொருவரும் நம் வீட்டிலேயே ஓர் உண்டியல் வைத்து, நம்மாலான அளவு தினந்தோறும் அதில் பணம் போட்டு காந்தி நினைவு நிதிக்கு வழங்கலாமென்றார்.

அதற்கடுத்தபடியாகப் பேசிய கதர்—கிராமக் கைத்தொழில் கமிஷன், கிராம முழு வளர்ச்சித் திட்ட பிராந்திய அமைப்பாளர் திரு. எஸ். கிருஷ்ணமூர்த்தி, தமிழ் நாட்டிலுள்ள சுமார் 200 கிராம எகாயிப் பகுதிகளிலும், அடுத்து வரும் ஐந்தாண்டுகளில் வேலை முறைகள் தீவிரமாக்கப்பட்டு, காந்தியடிகள் விரும்பிய கிராமராஜ்யம் ஏற்படத் தக்க வகையில் திட்டங்களை மேற்கொள்ள வேண்டுமென்றார்.

திரு. க. அருணாசலம் அவர்கள் தன் முடிவுரையில் தமிழ் நாட்டில் நிர்மாண வேலைகளை விரிவாக்க வேண்டுமென்றும், தற்போது சங்கங்கள் இல்லாத நிர்மாண வேலைகளுக்குச் சங்கங்கள் உடனே அமைக்க வேண்டுமென்றும் கூறினார், சென்னையிலுள்ள பல்வேறு ஸ்தாபனங்களையும் இணைத்து, நூற்றாண்டு விழா பற்றித் திட்டம் வகுக்க திரு. குமரப்பா நினைவு நிதிக் காரியதரிசி திரு. என். சிவராமகிருஷ்ணனை கன்வீனராக இருந்து வேலை செய்யக் கேட்டுக் கொள்ள முடிவு செய்யப்பட்டது. காந்தியடிகள் உருவம் பொறித்த பாட்ஜ் ஒன்றைக் குறைந்த செலவில், பெருத்த அளவில் தயார் செய்து தமிழ் நாட்டில் குறைந்தது 5 லக்ஷமாவது விற்பனை செய்ய வேண்டுமெனவும் முடிவு செய்யப்பட்டது. அதற்கெனவும் குழு ஒன்று அமைக்கப்பட்டது.

நூற்றாண்டு விழாவைப் பற்றித் தகுந்த முறையில் பிரசாரம் செய்ய சென்னைக்கு தனிக் குழு ஒன்று அமைப்பதெனவும் முடிவு செய்யப்பட்ட பின் கூட்டம் நாட்டு வாழ்த்துடன் இனிது முடிந்தது.

இந்தக் கூட்டத்தைத் தொடர்ந்து பல குழுக்கள் அமைக்கப்பட்டு மேலும் பல கூட்டங்கள் நடைபெறும் என்றும், 1965-இல் செய்யப்பட வேண்டிய உடனடி வேலைகள் முடிவு செய்யப்படும் என்றும் அறிவிக்கப்பட்டது.

சென்னையில் நடைபெற்ற இத்தகைய கூட்டத்தை நல்ல முறையில் நடத்திக் கொடுத்த காந்தி நினைவு நிதி மானேஜர் திரு. விஸ்வநாதன், தத்வப் பிரசாரகர் திரு. கந்தசாமி, சர்வோதயப் பாத்திர இயக்கத்தில் ஈடுபட்டுள்ள பெண் ஊழியர்கள் முதலானோர்களை நாம் என்றும் பாராட்டக் கடமைப்பட்டுள்ளோம்.

தமிழ் நாட்டு மக்கள் அனைவரும் இப்பொழுதிலிருந்தே காந்தி நூற்றாண்டு விழா பற்றிச் சிந்தித்துக் காந்தியடிகளின் நிர்மாணத் திட்ட வேலைகளில் தங்களாலியன்றளவு ஈடுபட்டுப் பங்கு கொண்டு தேசப்பிதா அவர்களுக்கு அஞ்சலி செய்யுமாறு பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

ஜேய் ஜகத்.

சிற்பி கல்லை உபயோகப் படுத்துவது போல், ஓவியன் வண்ண மையை உபயோகிப்பதுபோல், மற்ற எழுத்தாளர்கள் சொற்களைச் சொற்களாகவே பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள் — அதாவது பொருளுக்குச் சாதனமாக. கவிஞனோ, கலைக்கு உரிய சாதனமாகச் சொற்களை உபயோகப்படுத்துகிறான்.

# கவிதை அனுபவம்

பி. ஸ்ரீ.

அழகி என்று புகழப்பெற்ற ஒரு பெண் ஏன் அப்படித் தன்னைப் புகழ்கிறார்கள் என்பதை அறிந்தாளில்லை.

'காரணம் என் நிறம் தானா?' என்று காதலனைக் கேட்டாள்.

'இல்லை.'

'என் உருவமா?'

'இல்லை.'

'என் முகப் பொலிவு?'

'இல்லை.'

'என்றால் ஒன்றும் சொல்வதற்கில்லை.'

'அது தான் உன் அழகு!'

கவிதையைக் குறித்தும் இப்படி ஒரு 'வினாவிடை' தயாரிக்கலாம்.

'கவிதை பொருளிலா?'

'இல்லை.'

'மனோபாவத்திலா?'

'இல்லை.'

'அழகுணர்ச்சியிலா?'

'இல்லை.'

'இசையின்பத்திலா?'

'அது கூட இல்லை.'

அப்படியானால் கவிதையைக் குறித்து என்ன தான் சொல்வதற்கு இருக்கிறது? 'கவிஞன் செய்வது கவிதை' என்று சொல்லி விட்டால் போதுமா? 'கவிஞன் யார்?' என்ற கேள்விக்கும் 'கவிதை செய்கிறவன்' என்று தானே பதில் சொல்ல வேண்டியிருக்கும்?

கவிதை சொற்களால் ஆனது என்பதில் ஒருவருக்கும் சந்தேகம் இல்லை. ஆனால் சாதாரணப் பேச்சும் சொற்களால் ஆனதுதானே. நான் எழுதும் இந்த வாக்கியங்களும் சொற்களால் ஆக்கப் பட்டவையே. வசனம் என்று சொல்லப்படும் இலக்கியம் முழுவதும் இப்படித் தான்; செய்தித்தாளும் இப்படித்

தான், கவிதை யென்பது சொற்களால் ஆக்கப்பட்ட தொன்று என்றால், செய்தித்தாள் கவிதையாகாதது ஏன்?

திறமையாகவும் அழகாகவும் இன் சொற்களை அதாவது, இசையழகு வாய்ந்த சொற்களைக் கோத்து ஒழுங்கு செய்வது கவிதை என்று கூறுவதுண்டு. இக்கருத்தை,

பாமாலை கட்ட இன்சொல்
பாவாணர் தேடுதல்போல்
பூமாலை கட்டமலர்
போய்எடுக்கும் பாங்கியர்கள்

என்ற கவிஞன் வாக்கிலே காணலாம். அழகிய நறு மலர்களைத் தேடிக்கொண்டு வந்து பூமாலை கட்டுவது போன்றதுதானா பாமாலை கட்டும் கவிதைக்கலையும்? அப்படியானால் கவிதைக்கு உரிய அழகிய இன்சொற்களின் அகராதி ஒன்றைக் தொகுத்து வைக்கலாமே!

கவிதையைச் சிற்பக்கலையுடன் ஒப்பிட்டுப் பேசுவதும் உண்டு. கல்லையோ கற்பாறையையோ பார்க்கும் சிற்பி தன் கனவைக் கற்களினூடே கண்டு கொள்கிறான். அந்த அழகுக் கனவு அக்கல்லிலே சிறைப்பட்டிருக்கக் காண்கிறான். ஒவ்வோர் உளி அடியும் அந்த அழகை விடுவிக்க உதவுகிறது என்ற குதூகலத்தில் செதுக்கிக் கொண்டே போகிறான். அப்படியே கவிதை என்ற சொற்சிற்பத்தில் கழிக்கவேண்டிய சொற் பகுதிகள் கொஞ்சமும் தாட்சணியம் இன்றி உடனே கழிக்கப்படுகின்றன என்று கூறுவோர் உண்டு. ஆனால் சிறந்த வசனத்தையும் மேதாவிகள் இத்தகைய சொற்சிற்ப நிலைக்கு உயர்த்துவதும் அரிதன்று.

எனவே, சொல்லும் பொருள் கவிதை என்று இன்றைய ரஸிகர்கள் கூறுகிறார்கள். இவர்கள். பல்வகைதாதுவின்,

உயிர்க்(கு)உடல் போல், பல
சொல்லால் பொருட்(கு)இட—
னாக, உணர்வினின்
வல்லோர் அணிபெறச்
செய்வன செய்யுள்

என்று நன்னூல் ஆசிரியர் கூறுவதை அப்படியே ஒப்புக்கொள்ள மாட்டார்கள். பொருளை உயிராகக் கொண்டு சொற்களை உடலாகக் கொண்டிருப்பது கவிதை என்றல்லவா இந்த இலக்கண ஆசிரியர் சொல்லுகிறார்?

கவிதைக் கலை ஸாராம்சத்தில் சொற்கலை தான். அதாவது சொல்லைக் கவிஞன் உபயோகப் படுத்தும் முறை அல்லது வழி தான். சிற்பி கல்லை உபயோகப் படுத்துவது போல், ஓவியன் வண்ணமையை உபயோகிப்பது போல், மற்ற எழுத்தாளர்கள் சொற்களைச் சொற்களாகவே பயன் படுத்திக் கொள்ளுகிறார்கள்—அதாவது பொருளுக்குச் சாதனமாக. கவிஞனோ கலைக்கு உரிய சாதனமாகச் சொற்களை உபயோகப் படுத்துகிறான். ஆகவே, சொல்லை உபயோகப் படுத்தும் விதத்தில் வசனத்திற்

கும் கவிதைக்கும் வேற்றுமை காணலாம் என்று கருதுவோர் உண்டு. இதுவும் முழு உண்மை யன்று.

சிறந்த வசனகர்த்தர்கள் சில சமயங்களில் தங்கள் சொற்களைக் கலைக்குச் சாதனமாக உபயோகிப்பதையும் காண்கிறோம்; கவிஞர்கள் பொருளுக்குச் சாதனமாகச் சொற்களை உபயோகித்துக் கொள்வதையும் பார்க்கத்தான் செய்கிறோம். எனவே சொற்கள் கவிதையில் உபயோகிக்கப்படும் வழிக்கும், வசனத்தில் உபயோகிக்கப்படும் வழிக்கும் என்ன வேற்றுமை தான் இருக்க முடியும் என்பதைக் கண்டுபிடிப்பதற்கு ஏதாவதொரு பாட்டையோ அதன் பகுதியையோ உதாரணமாக எடுத்துக்கொண்டு சோதித்துப் பார்ப்பதே நலமாகும்.

வால்அடித்து மேல்பதுங்கி
வாய்பிளக்க வாய்நிழிக்க
வேர்பிடித்து வீரர்குத்த,
வீழ்புலிக்கு மேல்துடிக்க...

என்ற செய்யுளடிகளை வாசித்துப் பாருங்கள். அல்லது கேட்டுப் பாருங்கள். பாட்டைத் தாமாகவே படிக்கிறவர்களும் மானஸீகமாய் அதைக் கேட்டுத் தான் அனுபவிக்க வேண்டும். இப்படி மானஸீகமாய்க் கேட்டு அனுபவிப்பதற்குப் பாட்டைப் பாடிப் பார்ப்பதே நலம். கர்நாடக சங்கீதத்திலோ, வேறு சங்கீதத்திலோ அல்ல: கவிதைக்கு உரிய ஓசைப் பொலிவைப் புலப்படுத்தும் இசையில் தான். பாட்டை உரக்க ஓதினாலும் போதும்.

மேலே சொன்ன செய்யுளடிகளின் ஓசை நயமே வேட்டையின் பரபரப்பையும், ஆத்திரமாகவும் குறி தவறாமலும் செயல்கள் செய்யும் சாகஸத்தையும் நினைவூட்டுகின்றது. புலி வேட்டையின் அபாயங்களும் அகக்கண் முன் வருகின்றன. ஏன், வேடர்களின் பறைக் கொட்டையும் நினைவூட்டுகிறது பாட்டின் ஓசை நயம்.

வால், மேல், வேல் என்ற தனிச்சொற்களிலோ, வேறு எந்தத் தனிச்சொல்லிலோ இல்லை கவிதை என்பது உடனே புலனாகிவிடுகிறது. தமிழ்மொழிக்குச் சாதாரணமாக உரிய சொற்களே இவை; வசனத்திலும் வரக்கூடிய சொற்களே. இந்தச் சொற்கள ஒன்றோடொன்று கலந்து உறவாடும் அந்த உறவில் இருக்கிறது கவிதை. அப்படியானால் அந்த உறவுதான் என்ன?

யாப்பிலக்கண முறையில் பாட்டைப் பார்க்கலாம். மோனை முறியவில்லை, பிராசம் பிசகவில்லை எனலாம். யாப்பிலக்கணம் சரியாகிவிட்டால் கவிதை வந்துவிடுகிறதா? புலிகள் பதி போட்டுவாலை அடித்துத் தின்ன வேண்டுமென்று வாயைப் பிளப்பதையும், அந்தப் பிளந்த வாய்க்குள் பெரும் பயத்தால் தலையைக் கொடுப்பதற்கு மாறாகத் தங்கள் வேலைப் பாய்ச்சுவதை

யும், பிளந்த வாய்கிழிந்து இரத்தம் கக்கியவண்ணம் புலிகள் கீழே விழுந்து துடிப்பதையும் மேலும் பல விவரங்களுடன் யாப்பிலக்கணம் தெரிந்தவர் எவரும் ஒரு செய்யுளாகப் பாடி வைக்கலாம். ஆனால் இந்தச் செய்யுள் கவிதையாக அமைய வேண்டும் என்பதில்லை. யாப்பிலக்கணம் சிறிதும் குன்றாத செய்யுட்கள் பல்லாயிரக்கணக்காக இருக்கின்றன. அவற்றுள் கவிதையோ அபூர்வமான சரக்கு. ஆனால் மேலே காட்டிய செய்யுளடிகளில் கவிதை எப்படி வந்துவிட்டது?

புலி வேட்டையின் ஒரு முழுமையுணர்வு நமக்குக் கிடைத்து விடுகிறது இந்தச் செய்யுளடிகளிலே. சொற்களால் பெற முடியாத இந்த உணர்வைச் சொற்களின் ஒரு வகைச் சேர்த்தி உறவால் பெற்றுவிடுகிறோம். இது எப்படி என்பதைக் கண்டு பிடிக்க யாப்பிலக்கணம் துணைபுரிவதில்லை. சொற்களில் சப்தங்கள் ஒன்றோடொன்று இசைந்து உறவாடும் ஒரு முறையைப் புலி வேட்டை குறித்து எழுதப்படும் வசனத்தைக் காட்டிலும் இக் கவிதையில் காண்கிறோம். வசனத்திலுள்ள சொல்லோசைகளின் உறவைக் காட்டிலும் இக்கவிதையின் சொல்லோசை உறவு அதிக அளவில் ஒழுங்கு பட்டிருப்பதையும்காண்கிறோம்.

மீண்டும் ஒரு முறை 'புலி வேட்டை'ச் செய்யுளடிகளை ஓதிப்பாருங்கள். ஏதோ கண்டிப்பான ஒருவகை ஒழுங்கிற்கு இச் சொல்லோசை—உறவு உட்பட்டிருப்பது போலவும் தோன்றக்கூடும். சந்தம் அமைத்துக் கொண்டு பாடுவதால் மட்டும் இந்த ஒழுங்கு வந்துவிடும் என்று சொல்வதற்கில்லை. கடலின் அலைகள் ஒரு வகை ஒழுங்கைப் பின்பற்றுவதுபோல் கவிதையின் சப்த ஜாலங்களும் வந்து நம் காதில் விழுகின்றன. 'முறை தவறு வேகத் திரைகளினால் வேதப்பொருள் பாடி' என்று பாரதி பாடியிருக்கிறாரே, அந்தக் கண்டிப்பான 'முறை தவறாமை' என்ற நியதியை உண்மைக் கவிதைகளில் எல்லாம் காண்கிறோம்.

இந்த ஓசைப்பொலிவு என்ற உறவு முறைக்கு யாப்பிலக்கணம் துணை செய்கிறது ஓர் உண்மைக் கவிஞன் விஷயத்திலே. போலிக் கவி அல்லது சாமானியக் கவி விஷயத்திலோ இலக்கணம், கைவிலங்கு கால் விலங்காகிக் கவிதைக்கு 'உரிய உயிர்—இயக்கத்தையே தடைப்படுத்திவிடுகிறது.

இந்தப் 'புலி வேட்டை'ப் பாட்டில் நாம் காண்பதுபோல் பொருள் சரியாகவும் இருக்கலாம்; அல்லது தவறாகவும் இருக்கலாம். பகுத்தறிவுக்குப் பொருத்தம் இல்லாத பொருளும் ஒரு கவிதைக்குள்ளே உண்மைப் பொருள் தான்; உறுதிப்பொருள் தான். கவிதைக்கு வெளியே தனியாக

எடுத்துப் பார்த்தால் கவிதைக் கூற்று உண்மையாக இருக்க வேண்டிய அவசியம் இல்லை. கவிஞன் கூறும் பொருள் உண்மையிலேயே அழகுப்பொருள் தானு என்ற ஐயப்பாடும் நிகழலாம். கவிஞன் மிகைபடக் கூறியிருக்கலாம்; கற்பனை வானில் சிறகடித்துத் திரியலாம். எனினும் கவிதை உண்மைக் கவிதையென்றல், சாதாரணப் பேச்சில் காணும் சொற்களின் உறவுகளைக் காட்டிலும் ஒழுங்கு விதிக்குக் கட்டுப்பட்டிருக்கும் சப்தஜாலங்களையே காண்கிறோம்

சொல் என்பது பொருளோடு கூடிய ஒலிதானே? இந்த ஒலிகள் எண்ணிறந்த வழிகளில் ஒன்ருேடொன்று உறவாடக் கூடுமே. சாமர்த்தியசாலிகள், சொற்சிலம்ப வித்தையாடிகள் சொல்லுக்கு இடமாக இருக்கும் ஒலியின் தனிச்சிறப்பை உணர்ந்து கொள்ளாமல் சப்தசாகஸங்கள் காட்டிக் கவிதைக்கு உரிய பாராட்டும் பெறக்கூடும். ஆனல் உண்மைக் கவிதையைக் கேட்டுக் கேட்டுப் பண்பட்டிருக்கும் செவி எந்தப் போலிச் செவியுணவையும் கண்டு மறுத்துவிடும்.

கவிதை ஸாராம்சத்திலே செவிச்செல்வம். கவிதைக்கு உரிய பாஷைச் சொற்களையும் அவற்றின் நயங்களையும் செவிப் பழக்கமாக அனுபவித்திருப்பவர்கள் பொருளும் ஒலியும் பின்னிப் பிணைந்து கிடக்கும் சொற்கலையின் சிறப்பியல்புகளைக் கவிதையில் எளிதாகக் கண்டு கொள்ள முடியும். எனவே, 'பிறமொழிகளின் மூலமாகக் கவியின் உயிர் நிலையை அறியப்படுவது, காதலியின் அருள் முறுவலைப் பெறுவதற்காக வக்கிலுக்கு வக்காலத்துக் கொடுக்கிற அழகுதான்' என்ற கவி ரவீந்திரரின் கருத்தையும், அதை இவ்வளவு அழுத்தமாகத் தமிழாக்கம் செய்திருக்கும் ரஸிகமணி டி. கே. சி யின் கொள்கையையும் நான் பெரும்பாலும் ஆதரிக்கிறேன்.

தக்க அளவில் தாய்மொழிப் பயிற்சியோ பழக்கமோ இல்லாதவர்கள் தமிழ்க் கவிதையை அனுபவிப்பது என்பது சற்றுச் சிரமமான காரியந்தான். தர்க்க முறையில் தமிழ் வார்த்தைகளை அமைத்து இவர்கள் பேசக் கூடும். எழுதக்கூடும். இவர்கள் தமிழ் வசனத்தைப் போற்றி அனுபவிக்கவும் கூடும். ஆங்கிலப் பயிற்சி உள்ள இவர்களுக்குத் தர்க்கரீதியான ஒழுங்குதான் சாதாரண மனப்பழக்கமாயிற்றே. இந்தத் தர்க்க ஒழுங்கு நிலை அடிக்கடி மீறப்படும் கவிதை--அதிலும் தமிழ்க் கவிதை--இவர்களுக்கு அநாவசியமாக மூளையைக் குழப்பிக் கொள்ளும் ஒருவகைப் புதிர்.

ஸ்தூலமாகப் பார்க்கும் போது, கவிதையில் வரும் சொற்கள் சாதாரணப் பேச்சில் வரும் அல்லது எழுத்தில் வரும் சொற்களைக் காட்டிலும் ஒழுங்கின

மாக அமைந்திருப்பது போலவே தோன்றும். எனினும் பொருளைக் காட்டிலும் அதிக அளவில் சப்தத்தைக் கவனிக்கும் போது, வசன ஒழுங்கிற்கு அதீதமான ஒருவகை ஒழுங்கைக் கவிதையில் தான் காண்கிறோம் என்பது புலனாகும். அதே சமயம் பொருளில் ஒழுங்கின்மையும் புலனாகக்கூடும். பொருளிலே ஒழுங்கின்மை என்று இங்கே நான் சொல்லும் போது, உணர்ச்சியை நம்பாத உள்ளம் அப்படிச் சொல்லுகிறது என்பதுதான் என் குறிப்பு. உண்மையில் இந்த 'ஒழுங்கின்மை' பொருள் அளவு மீறித் தன்னைப் புலப்படுத்தும் நிலைமைதான்.

கண்டிப்பாய்க் கட்டு அல்லது ஒழுங்கிற்கு உட்பட்ட சப்த ஜாலத்தையும், கட்டுக்கு அடங்காது விடுதலை பெற்றிருக்கும் பொருள் வளத்தையும் ஒருங்கே காண்கிறோம் கவிதையில். இந்த முரண்பாடுதான் சிலருக்கு மூளையைக் குழப்பும்புதிராகத் தோன்றவும் கூடும். இந்த இரண்டு முரண்பாடுகளும் சேராத சேர்த்தி அல்ல என்பதில்தான் கவிதையின் இரகசியம் இருக்கிறது. ஏன், கண்டிப்பாய்க் கட்டுப்பட்ட சப்தஜாலம் அளவு மீறி விடுதலை பெற்றிருக்கும் பொருளைத் திருமணம் புரிந்து கொஞ்சிக் குலாவும்பொழுது கவிதை பிறக்கிறது. இதை ஆராய்ச்சி முறையில் சுட்டிக் காட்ட இயலாது. உத்தமக் கவிதைகளை மேல்வரிச் சட்டமாகக் காட்டித்தான் கவிதைக் கலையின் மர்மத்தை உணர்த்த முடியும்.

இத்தகைய கவிதை தரும் அறிவு வேறு; விஞ்ஞானம் தரும் அறிவு வேறு. கவிதை பேசுவது சாதாரண மனித அனுபவத்தைத்தான். விஞ்ஞானியைப் போல் பகுத்தறிவைத் துணையாகக் கொண்டு விஷயங்களைத் தூண்டித் துளைத்து ஆராய்ச்சி செய்வதில்லை. பகுத்தறிவைக் கொண்டு ஒரு கவிதையையும் புரிந்துகொள்ள முடியாது. உள்ளொளியைத்தூண்டுவதுதான் கவிதை, இதுபோதிக்கும் அறிவு விஞ்ஞானி கருதும் வகையில் அமைவதில்லை. கவிஞன் வெளியிடுவது அனுபவமாகிய அறிவுதான்.

கவிஞன் உபதேசம் செய்வதும் இல்லை. கவிஞனும் நம்மைப் போல் பார்க்கிறான்; விஞ்ஞானிபோல் உற்றுப் பார்க்கவும் கூடும்; ஒரு மெய்ஞ்ஞானி போல் ஊடுருவிப் பார்க்கவும் கூடும். எனினும் தான் காணும் உலகத்தை, வாழ்க்கையை அனுபவமாய்க் காட்டுகிறான். அனுபவிக்கப்பட்ட பொருளைப் பேசுவதில்லை; அனுபவத்தையே பேசி விடுகிறான். ஓர் அனுபவத்தின் முடிந்த முடிவு வரையில் போய் விடுகிறான் கவிஞன்—வேறொருவனும் அதற்குமேல் போகமுடியாது என்ற அந்த எல்லை வரை. இப்படி எவ்வளவுதூரம் போகி

அட்டைப்படம் :

## அமைச்சர் திரு இராமையா

அனுபவத்தால் நல்ல திறனும் தீர்க்கதரிசனமும் கொண்டு பலரும் போற்றுமளவுக்குப் பணிபுரிந்துவரும் பெருமைக்கு உரியவர் கனம் அமைச்சர் திரு இராமையா ஆவர்.

அண்மையில் இயற்கையின் சீற்றத்தால் பாதிக்கப்பட்ட இராமேஸ்வரம்—தனுஷ்கோடி பகுதிகளுக்கு நேரில் சென்று தக்க தருணத்தில் தகுந்த உதவிகள் செய்து மக்களின் போற்றுதலுக்கு ஆளாகி விளங்கும் திரு இராமையா அவர்கள் இன்னும் பல்லாண்டு வாழ்ந்து பல்கும் பெருமை கொண்டு விளங்க இறையருளை இறைஞ்சுகின்றோம்.

---

ருனே அவ்வளவிற்கு அனுபவம் சொந்தமாகி விடுகிறது.

விஞ்ஞானம் அனுபவத்தைப் பற்றிய அறிவை வெளியிடுகிறது என்றால், கவிதை வெளியிடுவது அனுபவத்தைப் பற்றியல்ல, அனுபவத்தின் அறிவே தான். இந்த அனுபவம் உயிரோடு வாசகர் இதயத்தில் பாய்கிறது, கவிதை வாயிலாக.

கவிதை ' தன் சொந்த விதிகளுக்கு இணங்க வார்த்தைகளைக் கொண்டே அனுபவத்திலும் அனுபவத்திலிருந்து ஒரு க்ஷணத்திற்கு நித்தியத்துவம் கொடுத்துவிடுகிறது. எனவே, கவிதையில் கிடைக்கும் அனுபவம் சொந்த அனுபவத்தைக் காட்டிலும் உண்மையான அனுபவமாகிவிடுகிறது. மிகவும் இருண்ட மனப்பகுதியில் கிடைக்கும் அனுபவங்களுக்கும் கவிதை வடிவம் தருகிறது.

கவிஞனுடைய அனுபவத்தை நாமும் அபூர்வமாக அடையத் தான் செய்கிறோம்—மிகவும் அபூர்வமாக ஆனால், இந்த அனுபவங்களுக்குப் பாஷை கவிதை தான். வசனத்தை ஊமையாக்கும் வாழ்க்கையனுபவம் கவிதையில்தான் பேசுகிறது.

கவிதையனுபவம் ஒருவகை மனோபாவ முலாம்பூசி நமது அனுபவங்களுக்கும் ஒளி தருகிறது. எனவே கவிதையை இயற்கைக்கும் வாழ்க்கைக்கும் பொருள் காட்டி விமர்சிக்கும் ஒரு தனிப் பெருங்கலை என்பர்.

இந்திர ஜாலமெல்லாம் கவியில்
இயற்றிக் காட்டிடுவோன்,
மந்திரச் சொல்லாலே உள்ளம்
மயங்கச் செய்திடுவோன்

என்று போற்றப்பெறும் கவிஞன் கவிதை வாயிலாகக் காட்டும் வாழ்க்கை ஒளியையும் அழகையும் வேறு எந்தச் சாதனத்தாலும் நாம் அடைவதில்லை யென்றே தோன்றுகிறது.

ஜாதகா கதைகள்:

# "தீயோரைக் காண்பதும்..."

ஏ. வி. ஜயச்சந்திரன்

காசியில் ஒரு சமயம் கலாபூ என்ற அரசன் ஆண்டு வந்தான். அப்போது குந்தகா என்ற ஒரு பிராமணச் சிறுவன் வேதம், தர்க்கம், நியாயம், போன்ற சாத்திரங்களில் வல்லமை பெற்றுத் திகழ்ந்தான். அரசாங்கத்தில் அவனுடைய பெற்றோர், பாட்டனர் ஈடுபாடு உடையவர்களாக இருந்தமையால், பெரும் பொருள் ஈட்டினர். அவர்களுக்கு சுமார் எண்பது லக்ஷம் பொற்காசு மதிப்புள்ள சொத்து இருந்ததாகப் பேசிக் கொண்டனர்.

பெற்றோர் இறந்ததும், குந்தகாவிற்கு பொறுப்பு அதிகமாயிற்று. அவனுடைய செல்வங்களையும், நில புலன்களையும் பார்த்து ஒரு விரக்தி கொண்டான். "இவ்வளவு பொருள் ஈட்டியும், கடைசியில் விட்டுத் தானே சென்றனர், நமது பாட்டனர், பெற்றோர்கள். நம்முடன் இறந்த பின்னும் தொடராத செல்வத்தால் என்ன பயன்" என்று எண்ணினான். தானமும், தவமும் தான் இறந்த பின்னும் தன்னுடன் வரும் என்ற தெளிந்த ஞானம் பெற்றான். தன்னுடைய செல்வம் முழுமையும் தானமாக அளித்து விட்டு, துறவியாக வாழ ஆரம்பித்தான். தன்னுடைய உணவிற்குப் பிச்சையெடுப்பது போக எஞ்சிய பொழுதைத் தவத்தில் போக்கினான்.

ஒரு நாள் அவன் காசிப்பட்டினத்துப் படைத்தலைவன் வீட்டிற்கு பிச்சை எடுக்கப் போனான். படைத் தலைவன் இந்த இளைஞனின் கவர்ச்சியான முகத்தையும், மதுரமான மொழிகளையும், எளிய தன்மையையும் கண்டு அவனிடம் தனது மனத்தை இழந்தான். குந்தகாவைத் தன் வீட்டிற்குள் அழைத்து உணவு அருந்த வற்புறுத்தினான். குந்தகாவின் மனம் தவத்தை நாடுகிறது என்று கண்டதும், அவனை அரசனின் உத்தியான வனத்தில் தங்கித் தவம் புரியுமாறு வேண்டினான். அந்த இடம் குந்தகாவிற்கு மிகவும் பிடித்திருந்தது.

ஒரு நாள் அரசன் கலாபூ மதுபானம் அதிகமாகத் தலைக்கேறி தன்னுடைய அந்தப்புரப் பெண்களுடன் உத்தியான வனத்திற்கு வந்தான். அவர்களுடன் பல லீலைகள் புரிந்து

ஓய்ந்து தன் பிரிய நாயகி ஒருத்தியின் தொடையிலே தலையை வைத்து அங்குள்ள கல்லின் மேல் படுத்துக் கொண்டான். மற்றைய பெண்கள் கீதம் பாடினர். அரசன் உறங்கின உடன் எல்லோரும் எழுந்து உத்தியான வனத்தைச் சுற்ற ஆரம்பித்தனர்.

அவர்கள் ஆடிப்பாடி திரிந்திருக்கையில், ஒருத்தி குந்தகாவைப் பார்த்துவிட்டாள். அவனுடைய தோற்றம் அந்தப் பெண்களைக் கவர்ந்தது. "வாங்கடி, யெல்லாரும் இம்மகானிடம் சற்று உட்கார்ந்து போகலாம்" என்றாள் ஒருத்தி. "ஐயா! எங்களுக்கு ஏதாவது அறவுரைகள் கூறுங்கள்" என்றாள் மற்றொருத்தி.

இதைப் பார்த்திருந்த அரசனின் பிரிய நாயகி பொறாமை கொண்டாள். தனது தொடையைச் சற்று நகர்த்தியதால், அதில் தலை வைத்துப் படுத்திருந்த அரசன் விழித்துக் கொண்டான். "எங்கே மற்ற பணிப் பெண்கள்?" என்று வெகுண்டான். மன்னனின் பிரிய நாயகி அப் பெண்கள் இருக்குமிடத்தைச் சுட்டிக் காட்டினாள். தன்னுடைய வாளை உருவி வெகு கோபத்துடன் வரும் மன்னனைக் கண்ட பெண்கள் பயந்தனர். அதில் சாதுர்யமான ஒருத்தி மன்னனைத்தழுவிக் கொண்டாள். மற்றொருத்தி வாளை அவன் கையிலிருந்து வாங்கிக் கொண்டாள்.

அரசன் குந்தகாவின் அருகே வந்து "இங்கு என்ன செய்கிறாய்?" என்றான். "தவம் செய்கிறேன், என்னை நானே அறிந்துகொள்ள" என்றான். "எதற்காக" என்றான் மன்னன். "பந்த பாசத்தினின்று விடுதலை பெற்று இறைவனடி சேர" என்றான் குந்தகா.

"இப்படிப் பட்ட போலிச் சாமியார்களைத்தொலைக்க வேண்டும். கூட்டி வாருங்கள் ஒரு வீரனை" என்றான் மன்னன்.

உடனே வாள் உருவி ஒரு வீரன்வந்துசேர்ந்தான். "இவனை இழுத்துக் கொண்டு போய் கூரிய முட்களாலும் பிரம்பாலும் அடியுங்கள்" என்றான் மன்னன்.

குந்தகாவை நன்றாக நையப் புடைத்தனர். அவன் அழவில்லை, முனகவும் இல்லை. இரத்தம் அவன் உடல் முழுவதிலுமிருந்து பீறிட்டு வந்தது. "என்ன போலிச் சாமியாரே உம்மை அறிந்து கொண்டீரா?" என்றான் அரசன்.

"அரசே அதை அறியத்தான் பழகுகிறேன்" என்றான் குந்தகா.

மன்னன் அவனுடைய கைகள், கால்களைத் துண்டிக்கச் செய்துவிட்டுப் போய்விட்டான்.

குந்தகா குற்றுயிராகக் கிடந்தான். இரத்த வெள்ளத்தில் மிதந்தான். இதைக் கேள்விப் பட்ட படைத்தலைவன் ஓடோடி வந்தான். குந்தகாவின் நிலை

யைப் பார்த்து வருந்தினன். தன்னுடைய வற்புறுத்தலினல் தானே குந்தகா உத்தியான வனத்தில் தங்க ஒத்துக்கொண்டார், என்று படைத்தலைவன் எண்ணி வருத்தப்பட்டான்.

குந்தகா, படைத்தலைவனை நோக்கி "ஐயா, சென்றவைக்கு வருத்தப்பட்டுப் பலன் இல்லை. துஷ்டனைக் கண்டால் தூர விலகு என்பார்கள். உம்முடைய மன்னன் உத்தியான வனத்தில் தங்கின பலன். தர்மம் வீண்போகாது" என்று கூறினன்.

குந்தகாவின் உயிர் உடலினின்று பிரிந்தது. அன்றிரவு மன்னன் தனது அரண்மனையில் உலாவிக் கொண்டிருக்கும் போது, ஆராய்ச்சி மணி அவன் தலையில் விழுந்து அவன் தலை சுக்கு நூருக ஆகியது. அந்த இடத்திலேயே மன்னன் மாண்டான்.

---

<u>சிறுவர் பகுதி:</u>

# பனைமரம்

பி. வி. கிரி

பனைமரம் என்றன் பெயராகும்
பயனே என்னுல் மிகவாகும்
துணைநான் ஆவேன் உங்களுக்கே
துன்பம் யாவும் போக்கிடுவேன்!

வீடுகள் கட்ட உதவிடுவேன்
வேயும் கூரையும் நானுவேன்
மாடுகள் கட்டக் கொட்டகையாய்
மகிழ்ந்து சாப்பிட நுங்காவேன்!

காற்றுக்கு விசிறி என்னுலே
காதுக்கு ஓலை என்னுலே
ஏற்றம் இறைப்பதும் என்னுலே
எரியும் விறகும் என்னுலே!

வீட்டுக்கு நல்ல தூணுவேன்
வீதிக்கு நல்ல அழகாவேன்
மாட்டுக்கு ஏற்ற கயிருவேன்
மக்கள் நண்பன் நானுவேன்!

இந்தியக் குழந்தைகளுக்கு மட்டுமல்லாமல் உலகக் குழந்தைகள் அனைவருக்குமே நேருஜி அன்புக்குரியவராக இருந்தார். குழந்தைகளோடு குழந்தையாக அவர் வாழ்ந்த கதையைச் சுவையாக எழுதியிருக்கிறார் குழந்தைக் கவிஞர்.

# நேருஜியும் குழந்தைகளும்

குழந்தைக் கவிஞர் **அழ. வள்ளியப்பா**

நேரு மாமா உங்களுக்கு ஆண் குழந்தைகளை ரொம்பப் பிடிக்குமா? பெண் குழந்தைகளை ரொம்பப் பிடிக்குமா?

"மாமா, நீங்கள் எத்தனையோ குழுக்களை அயல் நாடுகளுக்கு அனுப்பி வருகிறீர்களே. குழந்தைகள் குழு ஒன்றை அனுப்பினால் என்ன?"

"நீங்கள், சிறையிலிருந்து உங்கள் மகளுக்குக் கடிதம் எழுதினீர்களே, அதற்குப் பிறகு நடந்த மிகவும் முக்கியமான மாறுதல்கள் என்னென்ன?"

இந்த மாதிரிக் கேள்விமேல் கேள்வி போட ஆரம்பித்து விட்டார்கள் நேருஜியைச் சுற்றியிருந்த குழந்தைகள். நகைச்சுவை ததும்பச் சிரித்துக் கொண்டே ஒவ்வொரு கேள்விக்கும் நேருஜி பதிலளித்தார். அவருடைய பதில்களைக் கேட்டுக் குழந்தைகள் மட்டில்லாத மகிழ்ச்சியடைந்தார்கள். அளவு கடந்த ஆரவாரம் செய்தார்கள். நேருஜியின் பிறந்த நாளிலே அவரது மாளிகையிலே நடந்த இந்த நிகழ்ச்சியை அகில இந்திய வானொலி உலக மெங்கும் ஒலி பரப்பியது. நேருஜியிடம் குழந்தைகள் எத்தகைய பேரன்பு கொண்டிருந்தார்கள் என்பதையும் அந்நிகழ்ச்சியைக் கேட்டவர்கள் நன்கு உணர்ந்திருப்பார்கள்.

அதே சமயம், "அவர் மாணவர்களாயிருக்கும்போது நீங்கள் நேரத்தை வீணாக்கக் கூடாது. நான் மாஸ்கோ சென்றிருந்த சமயம் சுவரில் தீட்டப்பட்டிருந்த ஓர் ஓவியத்தைப் பார்த்தேன். குழந்தைகளுக்கு லெனினின் அறிவுரை கூறுகின்ற காட்சிதான் அது. அதில், மாணவர்களாகிய நீங்கள் செய்ய வேண்டிய முதல் காரியம் நன்றாகப் படிக்கவேண்டும்; இரண்டாவது காரியம் நன்றாகப் படிக்க வேண்டும்; மூன்றாவது

காரியமும் நன்றாகப் படிக்க வேண்டும்' என்று லெனின் கூறுவதாக எழுதப்பட்டிருந்தது'' என்றார்.

### சிறுமி தந்த ரோஜா

1962-ம் ஆண்டு சென்னை மாநகரில் சுமார் அரை லட்சம் குழந்தைகள் நேருஜிக்கு ஒரு பெரிய வரவேற்பு அளித்தார்கள். 'நேரு மாமா வாழ்க, நேரு மாமா வாழ்க' என்று வானம் அதிர வாழ்த்தொலி எழுப்பினர். நேருஜி மேடையில் ஏறிப் பேசப்போகும் சமயம் ஒரு சின்னஞ் சிறு பெண் அவர் அருகிலே ஓடினாள். நேருஜி அவளைப் பார்த்தார். அவளது மலர் போன்ற கரங்களில் ஒரு மலர் இருப்பதைக் கண்டார். என்ன மலர்? நேருஜிக்கு மிகவும் பிடித்த ரோஜா மலரேதான். அதை அவள் நேருஜியிடம் நீட்டியபோது அவரது முகம் மலர்ந்தது. உடனே அதை மகிழ்ச்சியோடு வாங்கித் தமது மேல் அங்கியில் செருகிக் கொண்டார். பிறகு அந்தச் சிறுமியை அன்புடன் தட்டிக் கொடுத்தார்.

அந்தக் காட்சியைக் கண்டு, ''ஆஹா அவள் எவ்வளவு அதிர்ஷ்டசாலி! நமக்கும் இப்படி ஒரு பாக்கியம் கிடைக்கவில்லையே!'' என்று எத்தனையோ குழந்தைகள் ஏங்கித்தான் இருந்திருப்பார்கள்.

நேருஜி அந்தக் கூட்டத்தில் பேசுகையில், ''நீங்கள் பாரத மாதாவுக்கு ஜே!'' என்று கோஷம் போடுகிறீர்கள். பாரத மாதா என்றால் என்ன? நீங்கள், நான், நம்மைப்போன்ற கோடிக் கணக்கான மக்கள் எல்லோரும் சேர்ந்துதான் பாரதமாதா. நாம் ஒவ்வொருவரும் இந்தியாவின் ஒவ்வொரு துண்டு. ஒரு பெரிய பொருளின் சிறுசிறு துண்டுகளாக நாம் இருக்கிறோம். ஆனால், எல்லோருமே இந்தியாவின் சமமான துண்டுகள் ஆகையால் நாம் எல்லோரும் ஒன்றுசேர்ந்து நாடு வளம்பெற உழைக்கவேண்டும்'' என்று எளிய நடையில், தெளிவாக, அவர்கள் மனத்திலே பதியும்படி கூறினார்.

### குழந்தை உள்ளம்

புதுடில்லியில் குழந்தைகள் சங்கம் வெள்ளி விழாக் கொண்டாடியது. விழாவிற்கு நேருஜியை அழைத்திருந்தார்கள். குழந்தைகளின் ஆடல்பாடல்களை நேருஜி பெரிதும் ரசித்தார். பிறகு அவர் பேசவேண்டிய கட்டம் வந்தது பேசுவதற்காக அவர் எழுந்தார்; குறைந்தது அரைமணி நேரமாவது அவர் பேசுவார் என்றே எல்லோரும் எதிர்பார்த்தார்கள். ஆனால் நாலே நிமிஷத்தில் தம் பேச்சுக்கு அவர் முற்றுப்புள்ளி வைத்து விட்டார். மறு வினாடி திடீரென்று மேடையிலிருந்து கீழே குதித்தார். அங்கிருந்த ஒரு சிறுமியின் கையைப்பிடித்துக் கொண்டார். 'பாப்பா, நாம் விளையாடலாமா?' என்றார். அவ்வளவுதான், உடனே எல்லாக் குழந்தைகளும் எழுந்துவந்து

அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். அவர்களுடன் வேடிக்கையாய் பேசிச் சிரித்து விளையாடத் தொடங்கிவிட்டார் நேருஜி. விளையாட்டு மும்முரத்தில் நேரம் போனதே தெரியவில்லை. அரைமணி நேரம் சென்றபிறகு தான், "அடடே, மணியாகி விட்டதே!" என்றார் நேருஜி.

அவருடைய குழந்தை உள்ளத்தைக் கண்டு அங்கு வந்திருந்த அயல்நாட்டுத் தூதுவர்கள் பாராளுமன்ற உறுப்பினர்கள், பத்திரிகை நிருபர்கள் எல்லோருமே வியப்படைந்தார்கள்.

"குழந்தைகளுடன் கூடியிருப்பதற்கு அவர்களுடன் பேசுவதற்கு எல்லாவற்றையும்விட அவர்களுடன் விளையாடுவதற்கு நான் ஆசைப்படுகிறேன். எனக்கோ வயதாகிவிட்டது. நான் குழந்தையாயிருந்த நாட்கள் வெகுகாலத்துக்கு முன்பே மறைந்து விட்டன என்பதை இந்த சமயம் முற்றிலும் மறந்திருக்கிறேன்" என்று 'சங்கர் வீக்லி' வெளியிட்ட சிறுவர் மலர் ஒன்றில் நேருஜி எழுதியிருக்கிறார். மேற்கண்ட நிகழ்ச்சியே இதற்குச் சான்று.

### குழந்தைகள் ஆசை

நேருஜிக்கு நம் நாட்டில் மட்டுமல்ல வெளி நாடுகளிலும் குழந்தை நண்பர்கள் அதிகம். அவர் ஜப்பான் சிறுவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி 1959-ல் யானை அனுப்பினரல்லவா, அதன் பிறகு அமெரிக்கா ரஷ்யா, ஆஸ்திரேலியா போன்ற பல நாட்டுக் குழந்தைகளும் யானை கேட்டு நேரு மாமாவுக்குக் கடிதம் எழுதினார்கள். நேருஜி அவர்கள் விருப்பத்தை உடனுக்குடன் நிறைவேற்றி வைத்தார். இதனால் குழந்தைகளிடம் அவர் கொண்டிருந்த பேரன்பை உலகம் நன்குணர்ந்தது. அவரை நேரிலே காண வேண்டுமென்று எல்லா நாட்டுக் குழந்தைகளும் ஆசைப்பட்டனர்.

1961-ல் நேருஜி ரஷ்யா சென்றிருந்த சமயம், அவரை ஆவலோடு வரவேற்றார்கள். அப்போது அவர் பல முன்னணி இளைஞர் முகாம்களுக்குச் சென்றிருந்தார். அங்கிருந்த சிறு பிள்ளைகளுடன் சேர்ந்து சுற்றுவதிலும், ஆடல், பாடல்களில் கலந்து கொள்வதிலும் தம்மை மறந்து ஈடுபட்டார். நேருஜியிடம் அவர்களுக்கு அளவு கடந்த பாசம் ஏற்பட்டது. தங்கள் முகாம்களின் கௌரவ அங்கத்தினராக இருக்கவேண்டும் என்று அவரைக் கேட்டுக் கொண்டார்கள். அவரும் 'சரி' என்றார். உடனே அவர் கழுத்திலே சிவப்புக் கழுத்துக் குட்டை ஒன்றை அவர்கள் அணிவித்தார்கள். முன்னணி இளைஞர்களுக்கான அடையாளச் சின்னம் அதுதான். நேருஜிக்கு அதை அணிவித்த போது, வெகுநேரம் விடாமல் கை தட்டித் தங்கள் மகிழ்ச்சிப் பெருக்கை வெளிப்படுத்தினர் ரஷ்யக் குழந்தைகள்.

**நேருஜியும் சார்லஸும்**

இங்கிலாந்துக் குழந்தைகளுக்கும் நேருஜி என்றால் மிக விருப்பம். 1948ல் எலிஜபெத்துக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. எலிஜபெத்துக்குப் பிறகு இங்கிலாந்தின் மன்னராகப் போவது அந்தக் குழந்தையாதலால், அதன் பிறந்த நாளை மிகவும் முக்கியமாகக் கருதினார்கள். பட்டத்துக்குரிய அந்த இளவரசர் பிறந்த மாதமும், தேதியும் நேருஜிபிறந்த மாதமும்தேதியும் ஒன்றாகவே இருந்தன. ஆம் நவம்பவர் 14தான்! முடி சூடா மன்னராக விளங்கிய நேருஜிக்கும், முடி சூட்டிக்கொள்ள விருக்கும்சார்லஸுக்கும் உள்ள பிறந்தநாள் பொருத்தம் பற்றிச் சில ஆங்கிலக் குழந்தைகள் அடிக்கடி கூறிப் பெருமைப் படுவதுண்டாம்.

**குழந்தைகள் நகர்**

1961-ல் நேருஜி அமெரிக்கா சென்றிருந்தார். மிக்கி மௌஸ் மூன்று இளம்பன்றிகள் போன் பல கார்ட்டூன் திரைப்படங்களை எடுத்துக் கோடிக்கணக்கான குழந்தைகளை மகிழ்வித்து வரும் ஓவியரான வால்ட்டிஸ்னி அமைத்துள்ள குழந்தைகள் நகருக்கு நேருஜி விஜயம் செய்திருந்தார். டிஸ்னிலாண்டு என்ற அந்த நகருக்கு நேருஜி சென்றிருந்த நாள் மிகவும் விசேஷமான நாள். நேருஜி பிறந்த நாள்தான் அது! அதனால் அங்கிருந்த குழந்தைகளுக்கு இரட்டிப்பு மகிழ்ச்சி!

"மகிழ்ச்சி மிக்க பிறந்தநாள்,
வருக, வருக, வருகவே!"

என்று உற்சாகமாகப் பாடி வரவேற்புக் கொடுத்தார்கள். அப்போது குழந்தைகளுடன் சேர்ந்து வால்ட்டிஸ்னியும் பாடிப் பரவசமுற்றார்!

**பிராணிகளிடத்தில் அன்பு**

ஒரு நாள் காலைநேரம் நேருஜியைக் காண 13 வயது அமெரிக்கச் சிறுமி ஒருத்தி அவரது மாளிகைக்குச் சென்றிருந்தாள். நேருஜி அவளை அன்பாக வரவேற்று, சிறிது நேரம் சிரித்துப் பேசிக்கொண்டிருந்தார். அவளுடன் சேர்ந்து சிற்றுண்டி அருந்தினார். "மது!" "பெபிடா!" என்று குரல் கொடுத்தார். உடனே அவர் அன்பாக வளர்த்துவந்த இரண்டு அழகான நாய்கள் அங்கு ஓடி வந்தன. அவற்றை அவர் தட்டிக் கொடுத்தார். சில நிமிஷங்கள் அவற்றுடன் விளையாடினார். பிறகு "இங்கே அர்ஜுனன் பீமன் என்று இரண்டு பேர் இருக்கிறார்கள். நீ அவர்களைப் பார்க்கவில்லையே! வா, காட்டுகிறேன்" என்று கூறி அந்தச் சிறுமியைஅழைத்துக் கொண்டு சென்றார். 'அர்ஜுனனும் பீமனும் யாராக இருக்கும்?' என்று அவள் யோசித்துக் கொண்டே சென்றபோது, "இதோ பார். இவன்தான் பீமன்; அவன் தான் அர்ஜுனன்" என்று கூறி அங்கிருந்த இரண்டு புலிக் குட்டிகளைக் காட்டினார். அவற்றுடன் சிறிது நேரம் பேசினார்.

அப்புறம், சிறிது தூரத்திலிருந்த நாலைந்து பிராணிகளைக் காட்டினார். பார்ப்பதற்கு அவை விநோதமாயிருந்தன. பூனை முகமும், கரடி உடலும் நரி வாலும் இருந்தன அந்தப் பிராணிகளுக்கு.

"இவை இமயத்தில் வசிக்கும் பிராணிகள். 'பண்டா' என்று பெயர்" என்றார் நேருஜி.

நேருஜியையும் அவரது அன்புக்குரிய பிராணிகளையும் பார்த்ததில் அச்சிறுமிக்கு அளவில்லாத ஆனந்தம். அவள் விடைபெறும்போது நேருஜி அவளுக்குத்தாம் எழுதியஉலகசரித்திரம் 'Glimpses of World History' என்ற புத்தகத்தைப் பரிசாகக் கொடுத்தார். சிறையில் இருந்தபோது பத்து வயதுப் பெண்ணாயிருந்த இந்திராவுக்கு அவர் எழுதிய கடிதங்களின் தொகுப்பே அந்த புத்தகம். அதனுடன் ஒரு சிறு பொம்மையையும் அவர் பரிசாக வழங்கினார். மகாத்மா காந்தி, அவர் அருகிலே ஒரு வெள்ளாடு, இரண்டு மரங்கள், சுற்றிலும் வேலி, ஒரு சிறு வீடு, அந்த வீட்டுக்கூரைமேல் ஒரு பறவை—இவ்வளவும் அந்தச் சிறு பொம்மைக்குள் அடங்கியிருந்தன.

அச்சிறுமி அமெரிக்கா சென்றதும் நேருஜி குழந்தைகளிடத்திலும் பிராணிகளிடத்திலும் எவ்வளவு பிரியமாக இருக்கிறார் என்பதை அமெரிக்கப் பத்திரிகை ஒன்றில் எழுதியிருந்தாள். அதைப் படித்த அமெரிக்கக் குழந்தைகளுக்கு நேருவைக் காணவேண்டும் என்ற ஆசை மேலும் அதிகரித்தது.

## குழந்தைகளுக்கு ஆதரவு

குழந்தைகளுக்காக எந்த நல்ல காரியம் செய்தாலும் நேரு அதற்கு ஆதரவு தந்தார். நேரம் கிடைத்தால், தாமும் அதிலே கலந்து கொள்வார்.

1957-ல் புதுடில்லியில் குழந்தைகள் பூங்காவை அவர் துவக்கி வைத்தார். விளையாட்டு ரயில் வண்டி ஒன்று அங்கு விடப்பட்டது. அதில் குழந்தைகளோடு குழந்தையாக நேருஜியும் ஏறி உட்கார்ந்து சுற்றிச் சுற்றி வந்தார்.

'குழந்தைகளுக்கான திரைப் படங்கள் ஏராளமாக வெளிவர வேண்டும்' குழந்தைகளுக்காக கண்ணையும் கருத்தையும் கவரக் கூடிய புத்தகங்கள் நிறைய நிறைய இந்திய மொழிகளில் வெளிவரவேண்டும்' என்று நேருஜி அடிக்கடி கூறுவார். 14 மொழிகளிலும் வெளிவந்துள்ள சிறந்த குழந்தைப் புத்தகங்களுக்கு அவர் பிறந்த நாளில் மத்திய அரசினர் பரிசளித்துப் பாராட்டி வருகின்றனர். சென்னையில் குழந்தை எழுத்தாளர் சங்கம் அவரது பிறந்த நாளைக் குழந்தைப் புத்தகங்கள் வெளியிட்டுக் கொண்டாடி வருகிறது. அச்சங்க வேண்டுகோளுக்கிணங்கிப் பல பதிப்பாளர்களும் நல்ல நல்ல குழந்தைப் புத்தகங்களைத் தயாரிக்கின்றனர். சங்கம் ஏற்பாடு செய்யும்

நேருஜி பிறந்த நாள் விழாவில் அப்புத்தகங்கள் வெளியிடப் படுகின்றன. இப்படி இதுவரை தமிழில் வெளியான குழந்தைப் புத்தகங்கள் சுமார் 300! ஆந்திராவிலும், கேரளத்திலும் இதே போல் குழந்தைப் புத்தகங்கள் வெளியிட்டு நேருஜியின் பிறந்த நாளைச் சில ஆண்டுகளாகக் கொண்டாடி வருகிறார்கள் பதிப்பாளர்கள்.

### குழந்தைகள் தினம்

காந்திஜியின் வாரிசாகவும் மக்களுக்குள் மாணிக்கமாகவும் விளங்கிவந்த நேருஜியின் பிறந்த நாளை ஆண்டுதோறும் சிறப்பாகக் கொண்டாட வேண்டும் என்று இந்தியமக்கள் ஆசைப் பட்டார்கள். நேருஜி இதை விரும்பவில்லை. பலர் விடாமல் வற்புறுத்தவே கடைசியாக, "என் பிறந்த நாளைக் குழந்தைகள் தினமாகக் கொண்டாடினால், அதுவே எனக்கு மகிழ்ச்சி தரும்" என்று கூறினார். அந்த நாளில் குழந்தைகள் நலனில் அக்கறை காட்டி, அவர்களுக்குத் தேவையானவற்றைச் செய்ய எல்லோரும் முன்வர வேண்டும் என்பதே அவரது நோக்கம்.

அவரது நோக்கம் நிறைவேறப் பாடுபடுவோமாக!



## சிரிப்பாய்ச் சிரித்த சிரிப்பு

யாரோ ஒரு விகடத்துணுக்கைச் சொன்னார்கள். ஓக்லண்குட் நகரத்து பில்லி பெஹ்ரிங்கர் என்ற பதினெட்டு வயசுப் பெண் சிரிக்கத் தொடங்கினாள். 2மணி நேரம் சென்றும் அவள் சிரிப்பு நிற்கவில்லை. 30 நிமிடங்கள் கழித்து மூர்ச்சை போட்டுப் போனாள்.

ஆம்புலன்ஸ் படையினர் வந்து மூர்ச்சை தெளிவித்தார்கள். உடனே அவள் மறுபடியும் தொடர்ந்து சிரித்தாள். ஆஸ்பத்திரியில் கொண்டுபோய்ப் போட்டார்கள். 1-30 மணிநேரம் சென்றும் சிரித்துக்கொண்டே இருந்தாள். ஹிஸ்டீரியாவுக்கு வைத்தியம் நடந்தது. கடைசியில் அவள் சிரிப்பு ஓய்ந்தது.

அவள் கேட்ட விகடத்துணுக்கு என்ன ஆயிற்று? அது அவளுக்கு ஞாபகம் இல்லை.

—'ஓக்லாண்ட்'போஸ்ட் என்கொயரர்

# செய்திக் குறிப்புகள்

குறிப்பு :

பஞ்சாயத்து யூனியன் பற்றிய செய்திகளை அனுப்பும் யூனியன் அலுவர்களைக் கீழே காணும் குறிப்புகளில் கவனம் செலுத்துமாறு அன்போடு கேட்டுக் கொள்ளுகிறோம்.

1. தெளிவாகப் புரியும்படியாக எழுதி அனுப்புதல் வேண்டும்.

2. தாளின் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுதி அனுப்புதல் நன்று.

3. செய்திகளைச் சுருக்கமாகவும், சிறு சிறு வாக்கியங்களாகவும் எழுதி அனுப்புதல் நன்று.

4. ஆணையாளர்களின் ஒப்புதல் பெற்றுச் செய்திகளை அனுப்பு தல் சிறப்புடையதாகும்.

### துரிஞ்சாபுரம் யூனியன் குழந்தைகள் தினவிழாக் கொண்டாட்டம்.

துரிஞ்சாபுரம் பஞ்சாயத்து யூனியன் தலைமை இடத்தில் 14-11-64-ம் தேதி காலை 9-00 மணிக்கு குழந்தைகள் தின விழா சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. பஞ்சாயத்து யூனியன் பெருந்தலைவர் திரு பா. சீனு வாச ரெட்டியார் அவர்கள் அனைவரையும் வரவேற்றார். மாவட்ட கல்வி அதிகாரி திரு. எம். சுல்தான் மொஹீதீன் பி. ஏ. எல். டி. அவர்கள் தலைமை தாங்கி குழந்தைகள் திருவிழாவின் சிறப்பியல்பு களைப் பற்றியும் பஞ்சாயத்து களுக்கு மதிய உணவு திட்டம் செயல்பட நிலதானம் வழங்கு வதின் அவசியத்தைப் பற்றியும் விளக்கிச் சொற்பொழிவாற்றி னார்கள். ஆர்பாக்கம் கிராமத் தைச் சேர்ந்த திரு பி. துரை சாமி ரெட்டியார், திரு வி. சதா சிவரெட்டியார் நாயுடு மங்கலத் தைச் சேர்ந்த திரு டி. நாரா யணசாமி உடையார் ஆகிய பெரியோர்கள் முறையே 4. 03 ஏக்கர் 1. 09 ஏக்கர் 0 14 நிலத்தை சம்மந்தப்பட்ட பஞ் சாயத்துக்களில் மதிய உணவு நிலையம் செயல்பட தானமாக வழங்கினார்கள்.

குழந்தைகள் தினவிழாவில் நடைபெற்ற போட்டிகளில் வெற்றிபெற்ற குழந்தைகளுக்கு கொத்தந்தவாடி பஞ்சாயத்து

தலைவர் திரு ஜி. சிவராமரெட்டியார் அவர்கள் பரிசுகள் வழங்கினார்.



## தொண்டாமுத்தூர் யூனியன்

தொண்டாமுத்தூர் பஞ்சாயத்து யூனியன் சார்பில் **14-11-64**-ந் தேதியன்று குழந்தைகள் தின விழா வெகு விமரிசையாக நடத்தப்பட்டது. திரு வி. எல்லமநாயுடு, எம்.எல்.ஏ., அவர்கள் தேசீயக் கொடியினை ஏற்றி வைத்தார். விழாவிற்கு பஞ்சாயத்து யூனியன் சேர்மன் திரு டி. டி. எஸ். திப்பையா அவர்கள் தலைமை தாங்க, கோவை மாவட்ட ஜாயிண்ட் கலெக்டர் திரு கே. எஸ். நரசிம்ம முதலியார் அவர்கள் விளையாட்டு விழாவினைத் துவக்கி வைத்தார்கள். கோவை கலெக்டர் அவர்களின் நேர்முக உதவியாளர் திரு மிருத்யூஞ்ஜயன் அவர்கள் நேருஜி படத்தினைத் திறந்து வைத்தார். எல்லோரையும், வைஸ் சேர்மன் திரு அட்டிமுத்து அவர்கள் வரவேற்றார். அனைவரும் சிறந்த முறையில் சொற்பொழிவாற்றினர்.

நன்முறையில் செயலாற்றிய பள்ளிகளுக்கு திரு மத்தி கவுடர் அவர்கள் பரிசு வழங்கினார். ஆணையாளர் திரு எஸ். சுப்பையா அவர்கள் நன்றி கூற, விழா இனிது முடிவுற்றது. இரவு நேருஜியின் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்ட நாடகம் பள்ளி ஆசிரியர்களால் நடத்தப்பட்டது.



## பள்ளிபட்டு யூனியன்

பள்ளிபட்டு பஞ்சாயத்து யூனியன் திருத்தணி வட்டம் 28-11-64 அன்று 6 மணிக்கு நெடியம் கிராமத்தில் திரு செங்கா ரெட்டி பஞ்சாயத்து தலைவர் அவர்கள் தலைமையிலும் 27—11—64 சனிக்கிழமை மாலை 6-30 மணியளவில் அத்திமான்சேரி ப. யூ. பள்ளியில் டாக்டர் கிருஷ்ணமூர்த்தி தலைமையிலும் குடும்பக் கட்டுப்பாடு கூட்டங்கள் நடைபெற்றன. ஆணையாளர் திரு ஆ. சிதம்பரம் பி. ஏ. திரு மீனாட்சி சுந்தரம் மாவட்ட குடும்பக் கட்டுப்பாடு அதிகாரி, திரு ஜெயராஜ் பி. ஏ. பி. எல்., கல்வி விரிவினை அலுவலர், திரு செந்தில்வேலன் பி. எல். சி. பயிர் விரிவினை அலுவர், திரு சரோஜினி முக்கிய சேவிகா, திரு வி. முனிசாமி, திரு. எஸ் கணபதி சமூக நல ஊழியர்கள் குடும்பக்கட்டுப்பாடு பற்றி விரிவாக சொற்பொழிவாற்றினர்.



## தென் ஆற்காடு மாவட்ட சமூக நல ஊழியர்கள் சங்கம்

10-10-64 அன்று தென் ஆற்காடு மாவட்ட சமூக நல ஊழியர்களின் பொதுக் கூட்டம் விழுப்புரத்தில் திரு எம். எம். முகுந்த ராமானுஜம் அவர்கள்

தலைமையில் கூடி கீழ்க் கண்ட வாறு தென் ஆற்காடு மாவட்ட சமூக நல ஊழியர்கள் சங்கம் அமைக்கப்பட்டது. தலைவராக கண்ட மங்கலம் திரு கே. எஸ். அர்த்த நாரீசன் அவர்களையும், உபதலைவராக கள்ளக்குறிச்சி திரு வி. கே. முத்து நாராயணன் அவர்களையும், காரியதரிசியாக ஒலக்கூர் திரு வி. கே. பதஞ்சலி அவர்களையும், பொக்கிஷதார ராக கடலூர் திரு வி. ராமானு ஜம் அவர்களையும் மற்றும் 12 நிர்வாகக் கமிட்டி உறுப்பினர் களையும் கொண்டதாக மாவட்ட சமூக நல ஊழியர்கள் சங்கம் அமைக்கப்பட்டது.



**கண்டமங்கலம் யூனியன்**

14-11-64 அன்று கண்டமங் கலம் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த கண்டமங்கலம், சித்த லம்பட்டு, பாக்கம், ராம்பாக்கம், கொத்தாம்பாக்கம்முதலிய பேறு கால நிலையங்களில் குழந்தை கள் தின விழாவை முன்னிட்டு நடந்த, குழந்தைகள் காட்சி யில் ஆரோக்கியமும், திடகாத் திரமும் கொண்ட அரிஜனக் குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டது.

அன்று கண்டமங்கலம் பஞ் சாயத்து யூனியன் பள்ளியில் பஞ்சாயத்துத் தலைவர் திரு எம். சிங்காரக் கவுண்டர் அவர்கள் தலைமையில் குழந்தைகள் தின விழா நடைபெற்றது. அவ்வம யம் யூனியன் ஆணையர் திரு கே. தாசப்பன், பி. ஏ., யூனியன் பொறியர் திரு ஆர். மயிலாசலம், டாக்டர் வேணுகோபால், சுக தார ஆய்வர் திரு நாகராஜ ராவ் ஆகியவர்களால் நேருஜி வாழ்க் கை பற்றியும், குழந்தைகள் தினமாகக் கொண்டாடுவதின் நோக்கம் பற்றியும் விளக்கமாக சொற்பொழிவாற்றினர்கள்.



**குழந்தைகள் தின விழா**

வேதாரண்யம் 3-ம் தெரு யூனியன் பள்ளியில் அண்ணல் நேருஜியின் பிறந்த தின விழா வை "குழந்தைகள் தினமாக" சீரிய முறையில் கொண்டாடப் பட்டது. காலையில் கூட்டு மன்ற ஆணையர் திரு த. கன் னையா, பி. எஸ். ஸி. (உழ) அவர்கள் கொடியேற்றுவித்தார் கள். பின்பு பொதுக்கூட்டம் நடைபெற்றது. தலைமை ஆசிரி யர் திரு சொக்கனுதன் அவர் கள் அனைவரையும் வரவேற்ருர் கள். ஆணையர் அவர்கள் தலை மையில் முக்கிய சேவிகா, குமாரி சு. நாகலெட்சுமி; சமூக நல ஊழியர், திரு ஆ. ஞானசுந்த ரம் ஆகியோர் சொற்பொழி வாற்றினர்கள். மாணவமாணவி களின் சொற்பொழிவும், கலை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன. ஆசிரியர் திரு வி. மணியன் நன்றி கூறினர். அனைவருக்கும் இனிப்பு வழங்கப்பட்டது.

14-11-64-ம் நாள் பஞ்சரதிக் குளம் கீழச்சேத்தி யூனியன் உயர் தொடக்கப்பள்ளியில் குழந்தைகள் தின விழாவும்,

சீருடை வழங்கு விழாவும் திரு உலகனாத தேவர் தலைமையில் நடைபெற்றது. காலையில் திரு சொ. சாம்பசிவ தேவர் அவர்கள் கொடியேற்றுவித்தார்கள். தலைமை ஆசிரியர் திரு பரஞ்சோதி அனைவரையும் வரவேற்றார். கூட்டுமன்ற ஆணையர் திரு த. கன்னையா, பி. எஸ். ஸி. (உழ) அவர்கள் நேருஜியின் திருவுருவப்படத்தை திறந்து வைத்தார்கள். கிராமக்கர்ணம் திரு தாயுமானத் தேவர் நேதாஜியின் படத்தைத்திறந்துவைத்தார்கள். சமூக நல ஊழியர் திரு ஆ. ஞானசுந்தரம், ஆயக்காரன் புலம் கழக உயர்நிலைப்பள்ளி தமிழாசிரியர் திரு. வி. அமிர்தலிங்கம் ஆகியோர் சொற்பொழி வாற்றினார்கள். ஊராட்சி மன்றத் தலைவர் திரு வயி. நா. கோவிந்தசாமித் தேவர் அவர்கள் மாணவ, மாணவிகளுக்கு சீருடையும், குழந்தைகள் கண்காட்சியில் பங்கு கொண்ட குழந்தைகளுக்குப் பரிசுகளும் வழங்கினார்கள்.

### நாடக அரங்கு

21-11-64-ந் தேதி யன்று இரவு 9மணிக்கு நிலக்கோட்டை பஞ்சாயத்து யூனியன் ஜவஹர் கலா மன்றத்தாரால் ''மலர்ந்த வாழ்வு'' என்ற சமூக திட்டப் பிரச்சார நாடகம், தமிழ்நாடு சர்வோதய மண்டலின் ஆதரவில் வத்தலக்குண்டு டவுன் பஞ்சாயத்து அலுவலகத்தின் அண்மையில் அமைத்துள்ள கலை அரங்கில் நடைபெற்றது. சென்னை மாநில கிராம அபிவிருத்திஸ்தல ஸ்தாபனத்துறை அமைச்சர் உயர்திரு. ஜனாப், எஸ். ஏ. மஜீத் அவர்கள் நாடகத்தைக் கண்டு களித்ததோடு திறமையுடன் நடித்தவர்களுக்கு ரொக்கப் பரிசும் கொடுத்தார்கள். தொகுதி சட்டமன்ற உறுப்பினர் ஜனாப் ஹாஜி அஜீஸ் சோழவந்தான் தொகுதி சட்டமன்ற உறுப்பினர் திரு. எம். பி. மலைச்சாமி ஆகியவர்கள் உள்பட ஏராளமானபொது ஜனங்கள் நாடகத்தைக் கண்டு களித்தனர்.



### அவிநாசி யூனியன்

அவிநாசி பஞ்சாயத்து யூனியன் வெள்ளாண்டி பாளையம் கிராமத் தொண்டர் படையினரால் ஸ்தாபிக்கப் பெற்ற 36க்கு 12 சதுர அடி பரப்புள்ள சுமார் 2000 - ரூ இரண்டாயிரம் மதிப்புள்ள பள்ளிக் கட்டிடத் திறப்பு விழா 9-12-64 தேதி அவிநாசி பஞ்சாயத்து யூனியன் பெருந்தலைவர் திரு கே. எம். ராமசாமி அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அது சமயம் பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் திரு டி. எஸ், கிருஷ்ணசாமி, அவர்கள் கட்டிடத்தைத் திறந்து வைத்துத் தொண்டர் படையினர் சாதனையைச் சிறப்பித்துப் பேசினார். கல்வி விஸ்தரிப்பாளர் திரு ஏ. அவிநாசியப்பன், அவர்கள் சமூகக் கல்வியும் மக்கள் பங்கும் என்னும் பொருள் பற்றிப் பேசினார்.



காட்டான் குளத்தூர் பஞ்சாயத்து யூனியன்

ஹிமாசல பிரதேசத்திலிருந்து 6 சட்ட மன்ற உறுப்பினர்களும், 4 காரியதரிசிகளும் காட்டாங் கொளத்தூர் பஞ்சாயத்து யூனியனுக்கு சென்னை மாநிலத்தில் பஞ்சாயத்து ராஜ்யம் இயங்கும் முறை பற்றி அறிந்து கொள்வதற்கு வருகை புரிந்தனர். பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்தில் காலை 9 மணிக்கு பஞ்சாயத்து தலைவர்களுடனும் அலுவலக ஆணையருடனும் இதர விஸ்தரிப்பு அலுவலர்களுடனும் நடைமுறைபற்றி விவாதித்தனர். பின்னர் காட்டுப்பாக்கம் கோழிப் பண்ணை, ஆடுவளர்ப்புப் பண்ணையையும் சிங்கபெருமாள் கோயில் பஞ்சாயத்து அலுவலகம், பள்ளிக்கூடம், விவசாய பாங்கு, மாதர் சங்கம், பஞ்சாயத்து பழத்தோட்டம், உரத்திடல் முதலியவற்றை பார்வையிட்டு மகிழ்ந்தனர். பஞ்சாயத்து யூனியன் தலைவர் திரு பா. கா. கனபதி அவர்கள் உடனிருந்து வரவேற்று சுற்றிக்காட்டினர். ஆணையர் திரு ரயன் நன்றி கூறி வழியனுப்பிவைத்தார்.

 

கோதையர் கொண்டாடிய குழந்தைகள் தினவிழா.

பென்னகரம் மாதர் மன்றப் பெண்கள் 14-11-64ம் தேதி காலை இவ்வூர்பாலர் பள்ளியில் குழந்தைகள் தினத்தைக் கொண்டாடினர். முதலில் பாலர் பள்ளிக் குழந்தைகள் நேருஜியைப் புகழ்ந்து அபிநயப் பாடல்கள் மூலம் அழகாக நடித்தனர். வட்டார ஆணையாளர் திருசிவசுப்ரமணியம், தாசில்தார் திருலூர்து மரியநாதன் முதலியோரால் விழா உரைகள் நிகழ்த்தப்பட்டபின் குழந்தைகளுக்கு விளையாட்டுப் போட்டிகள் நடத்தப்பட்டு, இனிப்புகள் வழங்கப்பட்டன.

பெரும்பாலை மாதர் மன்றத்தில் குழந்தைகள் தினம் பச்சண்ணசெட்டியார் தலைமையில் கொண்டாடப்பட்டது. உயர்நிலைப்பள்ளி தலைமை ஆசிரியர் திரு துரைசாமி, தமிழாசியர், கிராமசேவிகா, கிராமநல ஊழியர் முதலியோர் நேருஜி குழந்தைகள் நலன் பற்றிச் சொற்பொழிவாற்றினர்.

பிளியனூரில் குழந்தைக் கண்காட்சி ஒன்று நடத்தப்பட்டது. சிறந்த ஆரோக்யமுள்ள குழந்தைகளுக்கு திருமதி ராஜம் சிவசுப்ரமணியம் பரிசுகளை வழங்கிருர்.

 

பிளியனூர் மாதர் மன்ற முதலாண்டு விழா.

14-11-64ம் தேதி பென்னகரம் வட்டார பிளியனூர் மாதர் மன்ற ஓராண்டு முடிவுவிழா வைபவங்கள் திருமதி தங்கம்மாளின் இறைவணக்கப்பாடலுடன் துவங்கின. மாதர் மன்ற நிர்வாகக் குழு அறிமுகம், வர

வேற்புரைக்குப் பின் தலைவி திருமதி நாராயணி தமது மன்றத்தின் ஓராண்டு சாதனைகளை அறிக்கையாக படித்தார். "இம்மன்றம் ஹிந்து, முஸ்லிம் ஒற்றுமைக்கு எடுத்துக்காட்டாக ஒருபாதி கோஷாப் பெண்டிரையும், மற்ற பாதி ஜாதிவேறுபாடின்றி மற்ற அங்கத்தினருமாக மொத்தம் 46 பேரைக் கொண்டது." தமது மண் குடங்களுக்கு பதிலாக பித்தளை அண்டாக்கள் வாங்குவதற்காக இம்மன்றத்தினர் சேமிப்பு சீட்டு மூலம்ரூ.700 வரை சேர்த்துள்ளனர். மாதர் சங்கத்தின் சார்பில் ஒரு காய்கறித் தோட்டம் போடப்பட்டிருக்கிறது. இதன் முஸ்லீம்அங்கத்தினர்கள்ஜிகினு வேலைப்பாடுகள் செய்யத் தெரிந்தவர்கள் என்பதே அந்த அறிக்கையின் முக்கிய குறிப்புகளாகும். விழாவிற்குத் தலைமை வகித்த ஆணையாளர் திரு சிவசுப்பிரமணியம் அவர்கள் சங்கத்தின் சிறப்புகளைப் பாராட்டி, இன்னும் மன்றம் நிறைவேற்ற வேண்டிய மாதர்நலப் பணிகளை விளக்கினர்.



**குடிமங்கலம் பஞ்சாயத்து யூனியன் குழந்தைகள் தினவிழா.**

குடிமங்கலம் கிராமத்தில் 14-11-64-ஆம் தேதி காலை 10-மணியளவில் நேருஜெயந்தி—குழந்தைகள் தினவிழா, கூட்டுறவு சங்கத்தலைவர் திரு. கந்தசாமிகவுண்டர் தலைமையில் நடைபெற்றது. அன்று காலை 9-மணிக்கு பள்ளிமாணவர்கள், ஊர்ப் பொதுமக்களுடன் ஊர் வலம் வரப்பட்டது. பள்ளி மைதானத்தில் நம் தேசியமூவர்ணக்கொடியை, ஷை பஞ்சாயத்து தலைவர் திரு. K. பழனிச்சாமிக்கவுண்டர் ஏற்றுவித்தார். அவ்வமயம், பண்டித ஜவஹர்லால் நேருஜி நாட்டுக்குச் செய்துள்ள நற்சேவை பற்றி, ஆணையாளர் டி. எப். ஜார்ஜ் B. A. அவர்கள் சொற்பொழிவாற்றினார்கள்.



**சேலம் மாவட்டம், பள்ளிபாளையம் பஞ்சாயத்து யூனியன்.**

14-11-64-ம் தேதியன்று பள்ளிபாளையம் பஞ்சாயத்து யூனியனுக்குட்பட்ட ஆலாம்பாளையம் ஊராட்சியில் குழந்தைகள் தினவிழா வெகு சிறப்பான முறையில் கொண்டாடப்பட்டது. பள்ளிபாளையம் பஞ்சாயத்து யூனியன் பெருந்தலைவர் திரு கே. பழனிசாமி அவர்கள் தேசீயக்கொடியை ஏற்றிவைத்தார், ஆசிய ஜோதி ஜவஹர்லால் நேரு அவர்கள் திருவுருப் படத்தை மலர்களால் அலங்கரிக்கப்பட்டு, ஊர் பொது மக்களாலும், பள்ளி மாணவ, மாணவிகளாலும் ஊர்வலம் வரப்பட்டது. மாலை 4-00 மனியளவில் குழந்தைகளுக்கு விளையாட்டு விழா நடைபெற்றது. விழாவிற்கு சங்ககிரி கோட்டாட்சித் தலைவர் உயர்திரு அ. வீ. நரசிம்மன், பி,ஏ., அவர்கள் தலைமை வகித்தார். பள்ளிபாளையம் பஞ்

சாயத்து யூனியன் ஆணையாளர் உயர்திரு எஸ். பாரிஜாதம், பி.ஏ, பி.டி., அவர்கள் எல்லோரையும் வரவேற்றார், விளையாட்டுப் போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்கு பள்ளிபாளையம் பஞ்சாயத்து யூனியன் பெருந்தலைவர் திரு கே. பழனிசாமி அவர்கள் பரிசு வழங்கினார்.

 

**திருநாவலூர் பஞ்சாயத்து யூனியன் குழந்தைகள் தினவிழா.**

திருநாவலூர் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த சோமாசிப்பாளையம் பஞ்சாயத்தில் 14-11-64ல் குழந்தைகள் தினம் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. சோமாசிப்பாளையப் பஞ்சாயத்துத் தலைவர் திரு சக்கரபாணி நாயுடு விழாவிற்குத் தலைமை தாங்கினார். திருநாவலூர் பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் திரு என். சி. சடகோபன், தேசீயக் கொடி ஏற்றுவித்து, குழந்தைகள் தினவிழாவின் நோக்கங்கள் குறித்தும், குழந்தைகளின் நலன், கல்வி முதலியவை குறித்தும் காலஞ்சென்ற பாரதப் பிரதமர் திரு ஜவஹர்லால் நேரு அவர்களின் வாழ்க்கை குறித்தும் சொற்பொழிவாற்றினார்.

 

**வேதாரண்யம், பஞ்சாயத்து யூனியன்**

வேதாரண்யம் வட்டாரத்தைச் சேர்ந்த மூலக்கரை யூனியன் பள்ளியில் 21-11-64அன்று உரவிழா தீவிர விவசாய திட்ட விவசாய நிபுணர் (அக்ரானமிஸ்ட்) திரு காசி வில்வநாதன், பி. எல். ஸி (அக்ரி) அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தலைவர் அவர்கள் விவசாயிகளுக்குத் தேவையான உரங்கள் வழங்கியபின் உரத்தின் அவசியம் என்பது பற்றிச் சிறப்புரை ஆற்றினார்கள். தீவிர விவசாய திட்ட விசேஷ துணை இயக்குநர் (பண்ணைத்திட்டம்) திரு என் ரெங்கநாதாச்சாரி, பி. எஸ். ஸி (விவ), எம். எஸ். ஸி. அவர்கள் விவசாயிகளின் கடமை, இயற்கை எரு, இரசாயன உரம் என்பன பற்றி விரிவாக எடுத்துரைத்தார்கள். கூட்டு மன்ற ஆணையர் திரு த. கன்னையா, பி. எஸ். ஸி (விவ) அவர்கள் வேதாரண்யத்தில் நிறைவேறி வரும் தீவிர விவசாய திட்டத்தைப்பற்றி தெளிவாக எடுத்துக் கூறினார்கள். "விவசாயத்தில் பஞ்சாயத்தின் பணி" என்ற தலைப்பில் திரு எம். வைத்திலிங்கம், எம். ஏ., பஞ்சாயத்து விஸ்தரிப்பு அதிகாரி, வேதாரண்யம் அவர்கள் பேசினார்கள். விவசாய விஸ்தரிப்பு அலுவலர்கள் திரு எஸ். இராமு, பி. எஸ். ஸி (வின்), திரு எல். இராமகிருஷ்ணன், பி. எஸ். ஸி (விவ) ஆகியோர் "உர மிடுமுறைகள்" கம்போஸ்ட் தயாரிப்பு என்பன பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள்.

 

சின்ன சேலம் பஞ்சாயத்து யூனியன்.

கோமுகி நீர்த்தேக்கத் திட்டத்தின் அருகில் குடியேற்றப்பட்டிருக்கும் பர்மாவிலிருந்து தமிழகம் திரும்ப வந்துள்ள 75 பர்மா அகதிகள் குடும்பங்களுக்கு சின்ன சேலம் பஞ்சாயத்து யூனியனிலிருந்தும் கள்ளக்குரிச்சி பஞ்சாயத்து யூனியனிலிருந்தும் மற்றும் தென்னாற்காடு மாவட்ட பொதுமக்களிடமிருந்தும் நன்கொடை சேகரிக்கப் பட்டதில் ஒவ்வொரு குடும்பத்தினருக்கும் தேவையான உடை பாத்திரங்கள் மற்றும் சிறு பணமுடிப்பு ஒன்றும் நன்கொடையாக தென்னாற்காடு மாவட்ட ஆட்சித்தலைவர் திரு வி. எஸ். சுப்பையா ஐ ஏ. எஸ், அவர்கள் முன்னிலையில் திருமதி மரகதம் சுப்பையா அவர்களால் வழங்கப்பட்டது. "விழாவிற்கு தலைமை தாங்கிய வி. டி. இளையாப்பிள்ளை அவர்கள் தீபாளியை முன்னிட்டு 75 குடும்பங்களுக்கும் குடும்பம் ஒன்றுக்கு ரூ. 5 வீதம் நன்கொடை வழங்கினார். அவ்வமயம் சென்னை சட்ட மன்ற உதவி சபாநாயகர் திரு கே. பார்த்தசாரதி பி. ஏ. பி. எல்., சிறப்புச் சொற்பொழிவாற்றினார். தென்னாற்காடு மாவட்ட ஆட்சித் தலைவரின் தனி உதவியாளர் திரு. கே. பழனிவேலு பி. ஏ., அவர்களும் சொற்பொழிவு ஆற்றினார். சின்னசேலம் பஞ்சாயத்து யூனியன் ஆணையர் திரு தி. சி. கிருஷ்ணமூர்த்தி, கள்ளக்குரிச்சி பஞ்சாயத்து யூனியன் ஆணையர் எல். சுப்ரமணியம் ஆகியோரும் முக்கிய பங்கு எடுத்துக் கொண்டார்கள்.

❖ ❖

தொண்டர்படை

இம்மாதத்தில் கிராமத்தொண்டர் படைப் பயிற்சி முகாம்கள் முடிக்கப் பட்டன. பெருக்கரணை கிராமத்தொண்டர் படையினர் பாசனக்கால்வாயை செம்மைப்படுத்தினர். தானம் செய்த உழைப்பு தினங்கள். 15. வேலையில் மதிப்பு ரூபாய். நாற்பது.

❖ ❖

ஹரிஜன தினம்.

30-11-64ல் பொறையூர் கிராமத்தில் ஹரிஜன தினம் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. ஊராட்சித் தலைவர் திரு கந்தசாமி கவுண்டர் தலைமை பூண்டார். கல்வி வளர்ச்சி அலுவலரும், டிப்டி சேலக்கும் ஹரிஜன் நலன் பற்றியும், தீண்டாமை விலக்கலின் அவசியம் பற்றியும், விளக்கினார்கள். சுத்தமான வீட்டிற்கும், சிறுவர்களுக்கு விளையாட்டில் வெற்றி பெற்றவர்கட்கும் பரிசுகள் வழங்கப்பட்டன.

❖ ❖

கிராமிய விளையாட்டுப் போட்டி.

30-11-64ல் பொறையூர் கிராமத்தில் கிராமிய விளையாட்டுப் போட்டிகள் நடத்தப்பட்டு வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன.

——

காவடிச் சிந்து இயற்றிப் புகழ்பெற்ற மேதை அண்ணாமலை ரெட்டியார். தமிழ்க் கவிதை யுலகில் காவடிச் சிந்து ஒரு புதுவழி வகுத்தது. இனிய சந்தமும் ஒத்த தாளமும் அமைந்து கவிநயம் பொருந்தி இதயங்குளிர்விக்கும் தன்மை வாய்ந்தது காவடிச் சிந்து. மகாகவி பாரதியார் முதலிய பெருங்கவிஞர்களும் பின் பற்றி எழுதும் பெருமையைப் பெற்றது காவடிச் சிந்து. காவடிச்சிந்தைப் போலவே அதை இயற்றிய கவிஞரின் வாழ்க்கையும் சுவை மலிந்து காணப்படுகிறது.

# அண்ணாமலை ரெட்டியார்

---

**நாக முத்தையா**

'அண்ணாமலை ரெட்டியாரைத் தமிழர்கள் காவடிச் சிந்து பாடிய புலவன் என்றுதான் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். அந்தச் சிந்துப் பாட்டுக்கள் அவனுக்கு ஒரு இம்மி மாத்திரந்தான்; அவன் ஒரு பெரிய 'ஜீனியஸ்' (மேதை) என்பதைத் தமிழர்கள் இன்னும் தெரிந்து கொள்ளவில்லை. யமகம் திரிபாகவே அவன் கவிதைகள் எழுதிக் குவித்தாலும் உண்மையான கவிதையின் சாயல் அவனுடைய பாட்டுக்களில் நிரம்ப இருக்கு.'

முதுபெரும் புலவராகிய திரு வெ. ப. சுப்பிரமணிய முதலியாரின் இவ் வார்த்தைகளைப் படிக்க நேரிட்ட காலத்திலிருந்து எனக்கு அண்ணாமலை ரெட்டியாரைப் பற்றி அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆசை அளவுக்கு மீறி எழுந்தது. இன்னுஞ் சொல்லப்போனால் அண்ணாமலை ரெட்டியாரின் கவிதைகளைப் படிக்காமல் காலத்தைக் கழித்துவிடக் கூடாது என்ற ஆர்வம் என்னை அடிக்கடி அவருடைய கவிதைகளைத் தேடித் திரிவதில் மூழ்கடித்து விட்டது. பலரிடம் இதுபற்றிப் பேசி உள்ளேன். பலரிடம் ரெட்டியாரின் நூற்களை வாங்கி உள்ளேன். பல பதிப்புக்களை விலை கொடுத்துச் சேகரித்துள்ளேன். அதன் பயனே இக் கட்டுரை.

'அண்ணாமலை ரெட்டியார் பாடிய காவடிச் சிந்தைத் தெரி

யாத தமிழர் இல்லை. இந்தக் காவடிச் சிந்து வெறும் அர்த்த மற்ற சொல்லடுக்கு அல்ல. உயி ரும் உணர்வும் நிறைந்த செஞ் சொற்களால் ஆக்கப்பட்டவை யாகும். 'கரும்புபோல இனித்து மருந்துபோல் வடித்த' சொற் கள் என்று கூடச் சொல்லலாம்' என இன்றையப் பெரும் புலவர் திரு தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் முன் மொழிந்ததை நானும் அப் படியே பின்மொழியக் கடமைப் பட்டிருக்கின்றேன். இந்தக் கடமை, அண்ணுமலை ரெட்டி யாரின் காவடிச் சிந்தைப் படித் ததன் பிறகு எழுந்த உரிமை உணர்வாகும்.

அண்ணுமலை ரெட்டியார் திரு நெல்வேலி ஜில்லாவைச் சேர்ந் தவர். சென்னிகுளம் என்பது அவர் பிறந்த ஊர். 1865 ஆம் ஆண்டு பிறந்தார். பெற்ருேரின் பெயர்கள், சென்னவ ரெட்டி யார், ஓவு அம்மாள் ஆகும். ஐந்து பெண்களோடு ஆருவ தாகப் பிறந்த ஒரே ஆண் மகன் தான் அண்ணுமலை ரெட்டியார்.

அண்ணுமலை ரெட்டியார் இயற்கையாகவே ஓடி ஆடித் திரியும் இயல்பினர். அலங்கரித் துக் கொள்வதிலும், அலங்கரிக் கப்பட்ட பொருள்களை ஆர்வ முடன் சுற்றித் திரிவதிலும் அபார ஆசை கொண்டவர். சுட்டித்தனங்கள் நிறையப் படைத்தவர். குறும்பு செய் [illegible] குலத்தொழிலாகக் கொண்டவர். இத்தகையவர் எப்படிப் பள்ளிக்கூடங்களில் வாத்தியாருக்கு அடங்கி நடுங் கிப் படிப்பார் என எதிர்பார்க்க முடியும்?

ரெட்டியாரின் மீது தாயா ருக்கு இருந்த தயையும் தாட் சண்யமும் தந்தையாருக்குக் கிடையாது என அறிய இட மிருக்கிறது. ஒருநாள் ரெட்டி யார் பள்ளிக்கூடத்துக்கே போக வில்லை. ஊரின் ஓதுப்புறத்தே ஓடி ஆடித் திரிந்துவிட்டு வீடு திரும்பினுர். தந்தையாருக்குச் சொல்ல முடியாத கோபம். ஆசிரியர் அடிக்கடி மகனைப் பற்றிப் புகார் சொல்லிக் கொண்டே இருந்தார். இருட்டு கிற நேரத்தில் இல்லந் தேடி வந்த ரெட்டியாரைத் தந்தை யார் தகுந்தபடி தண்டித்து விட்டார். மறுநாள் 'திருந்திய பிள்ளை'யாகி விட்ட ரெட்டியார் நேராகப் பள்ளிக்குச் சென்ருர். ஆசிரியரிடம் தன் கோபத்தைக் காட்டிக் கொள்ள விரும்பினுர். ஆசிரியரின் அருகே சென்று நின்ருர்.

'ஏன் நேற்றுப் பள்ளிக்கூடத் துக்கு வரவில்லை?'

'பள்ளிக்கூடத்துக்கு எதற் காக வரவேண்டும்?'

'பாடம் படிப்பதற்காகத் தான்!'

'நேற்று என்ன பாடம் நடந் தது? அதனை அரை நொடியில் படித்து விடுகின்றேன்.'

வாத்தியார் 'வாக்குண்டாம்' சொல்லிக் கொடுத்ததாகக் கூறி நூல் முழுவதையும் ஒரு முறை படித்துக் காட்டினார். உன்னிப்பாகக் கவனித்துக்கொண்டிருந்த ரெட்டியார், நூலை ஒருமுறையேனும் படியாமலேயே, காதில் கேட்ட அளவானே, செய்யுள் அனைத்தையும் ஒரு பிழை கூட இல்லாது ஒப்புவித்து விட்டார். ஆசிரியர், மாணவரின் அதிசய அறிவை அறிந்து பிரமித்து விட்டார்.

அண்ணாமலை ரெட்டியாரிடம் பல குறைகள் இருப்பதாக அறிகிறோம். இருப்பினும் சிறந்த அறிவும், நிறைந்த ஞாபக சக்தியுமே அவரை இன்று ஒரு பெரு மனிதராக மதிப்பிடுதற்குத் துணை நிற்கின்றன. குணம் நாடி, குற்றமும் நாடி அவற்றுள் மிகுந்து விளங்குகின்ற அறிவையும் நினைவுச் சக்தியையும் நாடித் தெளிந்த பிறகு அவரை ஒரு 'ஜீனியஸ்' (மேதை) என்று சொல்லுவதில் என்ன தவறு இருக்க முடியும்?

அண்ணாமலை ரெட்டியாருக்கு ஆசிரியராக விளங்கிய பேறு சிவகிரி சுப்பிரமணிய பிள்ளை அவர்களுக்கும் முகவூர் மீனாட்சி சுந்தரக் கவிராயருக்கும், டாக்டர் உ. வே. சாமிநாத அய்யர் அவர்கட்கும் சேற்றூர் சமஸ்தானத்துப் புலவர் இராமசாமிக் கவிராயர் என்பவருக்கும் கிட்டியது. இலக்கிய நூற்களில் இருந்த அக்கரை இலக்கண நூற்களில் ரெட்டியாருக்கு இல்லை. டாக்டர் உ. வே. சா., அண்ணாமலை ரெட்டியாருக்கு 'நன்னூல்' சொல்லிக் கொடுக்க முன்வந்தார். டாக்டருக்கும், இலக்கணத்துக்கும் கும்பிடு போட்டுவிட்டு ஊருக்குப் புறப்பட்டுப் போய்விட்டார். திருவாவடுதுறை பண்டார சந்நிதியாகிய ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர்தான் டாக்டர் உ. வே. சா.வை ரெட்டியாருக்குத் தமிழ் கற்றுக் கொடுக்கும்படி கேட்டுக் கொண்டார். ரெட்டியாரின் கெட்டிக்காரத்தனம் இலக்கணத்துக்குப் பயன்பட வில்லை என்பதில் டாக்டருக்குப் பெரும் வருத்தந்தான்!

திருவாவடுதுறையில் இரண்டு மாத காலம் தங்கி இருந்த ரெட்டியார், இலக்கணம் படிக்க வில்லையே தவிர, இசைக்கலையை நிறையப் படித்துக்கொண்டு தான் ஊர் திரும்பினார். அதன் பயன்தான் காவடிச் சிந்துப் பாடல்கள், 'தமிழ் மொழியில் புதிய சந்தத்தில் முதலாவதாகத் தோன்றிய காவடிச் சிந்து' என்று புலவர்கள் புகழ்ந்து பேசுகிற அளவுக்கு இசைப் பாடல்கள் இயற்றும் திறமை பெற்றிருந்தார் என்றால் அதற்குப் பெருந்துணையாய் நின்றது திருவாவடுதுறை ஆதீனமே யாகும்.

பழங்காலப் புலவர்களைப் போல, வள்ளல்களை நாடி வாயாரப் புகழ்ந்து பாடி வாழ்வைத் தேடிக்கொள்ள வேண்டிய நிலைமை ரெட்டியாருக்கும்

வந்து சேர்ந்தது. அறிவாளிக ளோடு உறவாடும் பண்பை வறுமை எந்தக் காலத்திலும் மறந்ததே இல்லை. அதனால் தான் புரவலரை நாடும் பண்பு புலவர்களுக்கு அறிந்தோ அறியாமலோ பிறவிலேயே அமைந்து விடுகிறது. ஊற்றுமலை ஜமீன் தாரின் அன்பைச் சம்பாதித்துக் கொண்டு, அவரின் ஆதரவிலேயே சில நாள் தங்கி இருந்தார் ரெட்டியார். அவருக்குப் புரவலராக விளங்கும் பேறு வள்ளல் முத்துசாமி பிள்ளை, நெல்லையப்ப பிள்ளை, முதலியோருக்குக் கிடைத்தது.

'அரசன்' என்று தன்னையும், அரசன் என்று ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரையும் விளித்து ஒரு பாட்டை எழுதி, ரெட்டியார் தேசிகரிடம் தந்தார். தற்புகழ்ச்சியைப் புரிந்துகொள்ள முடியாமல் தேசிகர் சிறிதுநேரம் திகைத்தார். பிறகு ரெட்டியாரை அழைத்து, 'அரசன்' என்று உன்னையே பாடி இருக்கிறாயே அதன் பொருள் என்ன?' என்று கேட்டார். ரெட்டியார் சிரித்துக்கொண்டே சொன்னார்: 'ரசமில்லாத என்னை அரசன் என்று சொன்னதில் என்ன தவறு?' ரெட்டியாரின் கெட்டிக்காரத்தனத்தைப் புகழ்ந்து மெச்சிய தேசிகர், 'நீர் சாதியிலும் ரெட்டி; புத்தியிலும் ரெட்டி' என்று கூறினார்.

ரெட்டியாரின் வாழ்நாளில் இதுபோன்று பல ரசமான சம்பவங்கள் நடந்திருப்பதாக அறிகிறோம். ரெட்டியார் பார்வைக்குப் பகட்டாகவும், எழிலான தோற்றத்தோடும் இருப்பார். உல்லாசப் பிரியர் என்பது ஊர் அறிந்த செய்தி. கேலி செய்வதில் ரொம்பவும் கெட்டிக்காரர். இரு பொருள்படப் பேசுவதில் நிபுணர்.

ஒரு நாள் வீதி வழியே ஒரு அழகிய பெண் சிவந்திப் பூமாலையைக் கையில் ஏந்தியபடியே நடந்து சென்றாள். அவளோடு பேச்சுக் கொடுக்க விரும்பினார் புலவர். அவளோ இளையவள். எனவே, அவளைப் பார்த்து, 'தங்கச்சி வந்தியா?' என்று கேட்டார். பெண்ணுக்குக் கோபம் வந்துவிட்டது. பெரிய கூச்சல் போட்டுப் பெருங் கூட்டத்தைக் கூட்டிவிட்டாள் குமரிப் பெண். கூட்டங்கூடியவர்களிடமிருந்து தப்பித்துக் கொள்ள விரும்பிய புலவர் புத்திசாலித்தனமாகப் பேசத் தொடங்கினார்: 'நண்பர்களே, நான் அப் பெண்ணைப் பார்த்து உன் கையில் இருப்பது தங்கத்தால் செய்த சிவந்திப் பூவா என்பதைத்தான் 'தங்கச் சிவந்தியா?' என்று கேட்டேன். அவளோ தவறாகப் புரிந்துகொண்டு கூப்பாடு போடுகின்றாள்."

புலவரின் துஷ்டத்தனத்தை மறந்துவிட்டு, புத்திக் கூர்மையைப் புகழ்ந்தபடியே கூட்டத்தார் கலைந்துவிட்டனர்.

மற்றொரு சம்பவம்.

ஒருமுறை ரெட்டியார், தன் நண்பருடன் நடந்து போய்க்

கொண்டிருந்தார். மெதுவாக நடந்து வந்த ரெட்டியாரைப் பார்த்து நண்பர் கேட்டார். 'ஏன் மெதுவாக நடக்கின்றீர்கள்?' ரெட்டியார் சொன்னார்: 'முட்டாளுடன் புறப்பட்டதால் தான்.' நண்பர் மூர்ச்சித்து விட்டார். கோபமோ சொல்லி முடியாது. ரெட்டியார். நண்பரின் கோபத்திற்கு ஆளாக விரும்பாமல் விளக்கஞ் சொல்லத் தொடங்கினார். 'புறப்படுகையில் முள் குத்திய தாளுடன் (பாதத்துடன்) இருந்தேன். அதனால்தான் நடக்கமுடியாது மெதுவாக நடக்கின்றேன்.'

ரெட்டியார் முட்டாள் என்றது முள் தாள் என்பதைத் தான் என அறிந்ததும் நண்பர் தன்னுடைய முட்டாள் தனத்தை எண்ணி முன்கோபம் அடைந்தமைக்காகப் பெரிதும் நாணினார்.

இன்னொரு சம்பவம்.

ஜமீன்தாரின் வீட்டில் தற்செயலாக ரெட்டியார் தங்கி இருந்தார். அப்போது ஒரு சோதிடர் வந்து ஜமீன்தாரிடம் சன்மானம் கேட்டார். ஜமீன்தார் தன்னுடைய சாதகத்தைக் கொண்டுவரச் சொல்லி, சோதிடரிடம் தந்து, பார்க்கச் சொன்னார். ரெட்டியார் சிரித்துக்கொண்டே சென்னார்.

'சாதகம் சொன்னால்தான்
சன்மானம் கிடைக்கும்.'

ஜமீன்தார் 'ஆமாம்' என்று சொல்லிவிட்டுச் சிரித்துக் கொண்டார். பொருளைப் புரிந்துகொள்ளாமலே 'ஆமாம்' போடுகிருர் ஜமீன்தார் என்பதைப் புரிந்து கொண்ட ரெட்டியார் தான் சொன்னதையே திரும்பச் சொன்னார்.

'சாதகம் சொன்னால்தான்
சன்மானம் கிடைக்கும்.'

ஜமீன்தார் விழித்துக் கொண்டார். புலவரை விளித்து, 'நீங்கள் சொல்லுவதின் பொருள் என்ன?' என்று கேட்டார்.

'சோதிடன் சாதகமாகச் சொன்னால்தான் உங்களிடமிருந்து பொருள் கிடைக்கும்; பாதகமாகச் சொன்னால் பணமே கிடைக்காதல்லவா?' என்று கேட்டார் ரெட்டியார்.

பொருளைப் புரிந்துகொண்ட ஜமீன்தார், ரெட்டியாருக்கு இரண்டு மடங்கு சன்மானமும், சோதிடருக்கு ஒரு மடங்கு சன்மானமும் தந்தார். என்னே சாதுர்யப் பேச்சுக்குரிய சிறப்பு?

இன்னும் இதுபோன்ற பல சம்பவங்கள் நடந்திருக்கக் கூடும். மேலே கூறிய சம்பவங்களில் சில வேறு புலவர்களோடு தொடர்புடையன என்பதாகக் கூறுகிறவர்களும் உண்டு. உண்மை எது என்பதை உறுதியாகக் கூற வரலாறு கிடையாது. கேட்பவர்களையும் சொல்லுபவர்களையும் கொண்டு தான் சம்பவங்களின் உண்மையை ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும்.

அண்ணுமலை ரெட்டியார் பாடிய புத்தகங்கள் வீரைத்தல புராணம், வீரை நவநீத கிருஷ்ணசாமி பதிகம், வீரை அந்தாதி, வீரைச் சிலேடை வெண்பா, வீரைபிள்ளைத் தமிழ், காவடிச் சிந்து முதலியனவாம். வீரை என்பது வீரகேரளம் புதூரைக் குறிப்ப தாகும். ஊற்றுமலை ஜமீன்தாராகிய இருதயாலய மருதப்பத் தேவரின் உறைவிடமே வீரகேரளம் புதூராம். இது தென்காசித் தாலுகாவில் இருக்கிறது.

ரெட்டியாரின் நூற்களில் தலைசிறந்தது காவடிச் சிந்தேயாம். காவடிச் சிந்து எப்படிப் பிறந்தது என்பதைப் பற்றிக் குறிப்பிடும்போது டாக்டர் உ. வே. சா. கீழே காண்பது போலச் சொல்லி உள்ளார்.

'இவரிடத்து ஊற்றுமலை ஜமீன்தாராக இருந்த இருதயாலய மருதப்பத்தேவர் என்பவர் ஈடுபட்டுத் தம்மிடம் இருக்கும்படி செய்து மிக்க ஆதரவு அளித்தனர். இவருக்கு அவரால் கொடுக்கப்பட்ட ஆடையாபாரணங்கள் மிக அதிகம். அது கண்டு மற்றையோரும் இவருக்கு ஸம்மானம் அதிகம் செய்வாராயினர். மேற்படி ஊற்றுமலையார் கழுகுமலைக்குக் காவடி எடுத்துச் சென்றபொழுது அவருக்குச் சிரம பரிகாரமாக இவரால் பாடப்பட்டதுதான் காவடிச் சிந்து என்பது. காவடிச் சிந்தின் முறை ஏற்பட்டது இவராலேதான்.'

காவடிச் சிந்து முழுக்க முழுக்க இசைப்பாடலேயாம். இசை அமைப்பை யார் அமைத்தது என்பதை எளிதில் தீர்மானிக்க இயலவில்லை. கரிவலம் வந்த நல்லூரில் வாழ்ந்து வந்த உருத்திர கணிகையாகிய பொன்னம்மாள் என்பவளே இசை அமைத்தாள் என்றும், ரெட்டியாரே இசை அமைத்தார் என்றும் சில கருத்துக்கள் அறிஞர்களிடையே பரவி இருக்கிறது.

காவடிச் சிந்தைப் பின்பற்றி எழுந்த நூற்கள் பல. பூவடிச் சிந்து என்ற ஒன்றை முகமதியத் தோழர்களுக்காகக் காலை அசன் அலிப் பாவலர் இயற்றி இருக்கிறுர். 'ஆறுமுக வடிவேலவனே,' 'தொன்று நிகழ்ந்த தனைத்தும் உணர்ந்திடும்,' முதலிய பாரதியாரின் பாடல்களும் காவடிச் சிந்தைப் பின்பற்றி எழுந்தனவே.

இங்ஙனம் படித்தோரும் பிறரும், பின்பற்றுவதற்கு ஏற்ற அளவில் காவடி சிந்து அமைந்திருக்கிறது என்பது ஒன்றே அண்ணுமலை ரெட்டியாரின் அறிவுக் கூர்மைக்குப் போதிய சான்று ஆகும்.

ரெட்டியாரிடம் இருந்த குறைபாடுகளுள் மிகப்பெரியது கூத்தியர் தொடர்பாகும். மணமாகிய பின்னருங்கூட பரத்தையரின் தொடர்பை விட்டுவிட இயலாமல் வருந்திஞர் ரெட்டியார். ரெட்டியாரின் மனைவி

பெயர் குருவம்மாள். மண வாழ்வு தொடங்கி இரண்டு ஆண்டுகள் கூட நிறைவேற வில்லை; ரெட்டியார் பொல்லாத வியாதிகளுக்கு ஆளாகிவிட்டார். பெண் நோயால் அவர் பட்ட பாட்டைப் பேசுதல் எளிதன்று.

கொடிய நோய் ஒருபுறம் கொன்று கொண்டு இருக்கும் போதுகூட தமிழ்த்தாயின்மீது இருந்த பற்று அவருக்குக் குறை யவே இல்லை. அந்தச் சமயம் அவர் பாடிய பாட்டு இது தான்:

“ஆதி இலக் கணப்படியே
உத்திரண்டிற் கடங்காத்துன்
பாக்கி மூன்றை
மேதினியில் பலவிதமாச்
செலவு செயு மாறுபுரி
வித்த நாலில்
பாதியினுல் யான்பட்ட
பாடு சொலமுடியாது
பஞ்சமென்ப
தேதுமில்லை யோதுமில்லை
உகந்துதெரு உலவுதற்கும்
ஏதுவில்லை!”

‘முதல் இலக்கணமாகிய தலை எழுத்தின்படி உலகில் பிறந்து, இரண்டாவது இலக்கணமாகிய சொல்லுக்கு அடங்காமல் திரிந்து தொல்லைகள் அடைந்து, மூன்றுவது இலக்கணமாகிய பொருளைக் கண்டபடி செலவு செய்து, நான்காவது இலக்கண மாகிய யாப்பில் பாதியாகிய அரையாப்பிஞல் நான் பட்ட பாட்டைச் சொல்ல இயலாது, ஐந்தாவது இலக்கணமாகிய அலங்காரம் என்பது எனக்குக் கிடையாது. என்ஞல் எழுந்து நடமாடக்கூட முடியவில்லை.’

இதுதான் மேலே கண்ட கவிதையின் கருத்து.

அரையாப்பு என்னும் முழுத் தாக்கு நோயிஞல் பாதிக்கப் பட்டு ஆறுமாத காலம் அவதிப் பட்ட ரெட்டியார் கடுமை யான ஜுரத்துக்கு ஆளாகி 1891-ஆம் ஆண்டு தைத்திங்கள் அமாவாசை நாளன்று இறந்து பட்டார். இறக்கும்போது அவ ருக்கு வயது இருபத்தாறு! தன்னை அழியும் இன்பத்திற்கு ஆளாக்கி அழித்துக் கொண்ட அண்ணமலை ரெட்டியார் தமிழர் களை அழியா இன்பத்திற்கு ஆளாக்கி அழியாத வாழ்வு பெற்றுத் திகழ்கின்ருர்.

வாழ்க அவர் புகழ்!



அண்ணு மலைரெட்டி யாரளித்த காவடிச்சிந்
துண்ணுச் செவியும் செவியாமோ?—பண்ணுரும்
செந்தமிழ்த்தாய் வண்ணத் திருவடிக்கோர் புத்தணியே
சிந்துக் கவியென்று தேர்.

மிளகுக்குள்ளே பலமூலிகைகளின் சத்துக்கள் அடங்கியிருக்கின்றன. இந்தச் சிறு கட்டுரைக்குள்ளே, மிளகின் அருமை பெருமை, வரலாறு, கதை முதலிய பல அடங்கியிருப்பதைக் காணலாம்.

# மிளகுப் பயிர்

"வெண்மதி"

மிளகு வாசனைத் திரவியங்களில் தலைசிறந்த பொருள். சுக்கு, திப்பிலி, ஏலம், கிராம்பு, வால் மிளகு, என்னும் இதர வாசனைத் திரவியங்களும் மிளகைப் போன்று மதிப்புடையவைகள். சுக்கு, மிளகு, திப்பிலி என்னும் மூன்று திரவியங்களும் ஒன்று சேர்ந்துவிட்டால் எந்த வியாதியும் அவைகள் முன் நிற்காது.

சுமார் 5,000 வருடங்களுக்கு முன் கிரேக்க நாட்டிலே லுக்மான் என்னும் ஓர் பெரியார் வாழ்ந்து வந்தார். அவர் ஓர் தெய்வீக வைத்தியர். அகில உலகமும் அவரைப் போற்றி வந்தது. மூலிகைகள் அவரிடம் பேசினவாம். இன்ன மூலிகைகள் இன்ன வியாதியைத் தீர்க்கும் என்று கண்டறிந்தவர் அவர். அநேக வருடங்கள் உலகத்தில் ஜீவித்து விட்டு இறக்கும் தருவாயில் அன்னாரின் சிஷ்யர்கள் ஒன்று கூடி லுக்மான் அவர்களைச் சிலகேள்விகள் வினவினர். 'உங்களுக்குப் பிறகு மக்களுக்கு வைத்திய வழி காட்ட யாருமில்லையே, ஏதாவது ஒரு முறை சொல்லிப் போனால் நலமாயிருக்குமே' என்று கேட்டனர். அப்போது லுக்மான் அவர்கள் தமது பல ரகமருந்துகளிலுமிருந்தும் ஒவ்வோர் துளி எடுத்து ஒன்று திரட்டி ஒரு குழியில் நட்டாராம். அது கொடியாகப் படர்ந்து காய்த்ததாகவும், அக்காய் எவ்வியாதியையும் குணப்படுத்தி விடும் என்று சொன்னதாகவும், அது தான் விலை மதியாத மருந்துப் பொருளும், வாசனைத் திரவியமுமான மிளகு என்பதாகவும் பழங்கதைகள் கூறுகின்றன.

மிளகு நம்மிந்திய நாட்டின் பண்டைக் காலத்து விளை பொருள். சரித்திர சம்பந்தமானது. பல்லாண்டுகளுக்குமுன் தென்னாடுகளிலுள்ள மலைச் சாரல்களில் காட்டுக் கொடிகளாய் வளர்ந்து வந்திருக்கின்றது. மிளகின் குணங்களையும் உபயோகங்களையும் கண்டறிந்த அக்காலத்து மக்கள்,

திருவாங்கூர், கொச்சி, மலையாளம், தென்கன்னடம், குடகு, முதலான நாடுகளில் கடற்கரையோரங்களிலும், மலைச்சாரல்களிலுமுள்ள காடுகளிலும், தங்கள், தங்கள் வாசஸ்தலங்களிலும் பயிர் செய்து அபிவிருத்தி செய்ய ஆரம்பித்து விட்டனர். முற்காலத்து 'உரோமர்கள்' இந்திய நாட்டில் விளையும் மிளகை ரொம்பவும் பெருமை பாராட்டி வந்தனர். ஐரோப்பாக் கண்டத்திற்கும் இந்திய நாட்டிற்கும் மிளகு வியாபாரம் அக்காலத்திலேயே ஓர் தொடர்பை உண்டு பண்ணியிருக்கிறதென்றால் இக்காலத்தில் சொல்லவாவேண்டும். மிளகு வியாபாரத்திற்காக வந்த ஐரோப்பிய மக்களைத் துணைப் பிடித்து, ஐரோப்பாவிலிருந்து இந்தியாவிற்குப் பாதிரிமார்கள் வந்ததாக நமது நாட்டுச் சரித்திரம் கூறுகிறது. மிளகு அக்காலத்திலும் கூட பணவிடைப் பண்டமாகக் கருதப்பட்டு வந்திருக்கிறது. அந்நிய நாடுகளுக்குச் செலுத்த வேண்டிய கப்பம், வாடகை, வரி முதலானவைகள் எல்லாவற்றிற்கும், தங்கம், வெள்ளி கொடுப்பதற்குப் பதிலாக மிளகு கொடுக்கப்பட்டு வந்ததாகத் தெரிகிறது.

ஆதியில், திருவாங்கூர், கொச்சி, மலையாள தேசங்கள் தாம் மிளகின் இருப்பிடமாயிருந்தன. ஆனால் போர்த்துக்கீசிய மக்களும், டச்சு தேசத்தவரும், நமது நாட்டிற்கு வந்த போது, மிளகு விவசாயத்தில் ஆசை ஏற்பட்டு நம் தேசத்திலிருந்து ஏராளமான மிளகுக் கொடிகளை எடுத்துச் சென்று, ஜாவா, சுமத்ரா, போர்னியோ என்னும் இந்தோனேஷியா தீவுகளிலும் சியம், பிலிப்பைன், மலாய் தேசங்களிலும் பயிரிட்டு மிளகு விவசாயத்தை வெகு விரைவில் பரப்பி விட்டார்கள். அத்தேசங்களில் மிளகு அபாரமாகவும் விளைய ஆரம்பித்து விட்டது. உலகச் சந்தையில் முதன்மை ஸ்தானமும் பெற்று விட்டது. இதனால் போர்த்துக்கீசியருக்கு பதினேழாம் நூற்றாண்டு வரை மகோன்னதமான பெருமையும் செல்வாக்கும் உலகில் உண்டாகிவிட்டது ஆனால். இப்போதைய இரண்டாவது மகா யுத்தம் அந்நாட்டு மிளகு விவசாயத்தைக் குலைத்து விட்டது. ஜப்பானியர் படை எடுத்துக் கிழக்கிந்தியத் தீவுகளை ஆக்கிரமிப்புச் செய்திருந்த போது, அநேகமாக மிளகு விவசாயத்தை அழித்து விட்டனர். இப்போது நம்மிந்திய நாட்டிற்கே பிரதானம் ஏற்பட்டிருக்கிறது.



# கற்கும் பாடம் பலவுண்டு

வலம்புரி அண்ணாமலை



கற்கத் தெரிந்த காரணத்தால்
கர்வங் கொள்ளும் மானிடரே!
கற்கத் தெரியா உயிர்களிடம் — நாம்
கற்கும் பாடம் பலவுண்டு

பொதியைச் சுமக்கும் கழுதையிடம்
பொறுமையை நாமும் கற்றிடுவோம்
வீட்டைக் காக்கும் நாயினிடம்
விளங்கும் நன்றியைக் கற்றிடுவோம்;
—(கற்கத் தெரிந்த)

எங்கும் திரியும் காக்கையிடம்
இனத்தோ டுண்ணக் கற்றிடுவோம்;
ஊர்ந்து திரியும் எறும்பினிடம்
ஒழுங்கு முறையைக் கற்றிடுவோம்;
—(கற்கத் தெரிந்த)

தேனைத் தேடும் வண்டினிடம்
திகழும் உழைப்பைக் கற்றிடுவோம்;
சோடி பிரியாப் புறுவினிடம்
துணையுடன் வாழக் கற்றிடுவோம்.
—(கற்கத் தெரிந்த)

# என்ன உண்டு?

**சுப. இளங்கோவன்.**

—o—

அறிவுண்டு; காதலனென் வரவு கண்டால்
அகம்பொங்க அவளின்பம் அடைவ துண்டு!
திறமுண்டு; நெஞ்சுநிறை எழில்மிக் குண்டு;
தித்திக்கும் சொல்லுண்டு; தீரத் தாலே
உறவாடும் பண்புண்டாம் என்ற போதும்
'ஊற்றெடுக்கும் தேனடைநீ! துளைக்கும் வண்டாய்த்
திரிவேன்நான்' என்றவளின் தோள்பி டித்தால்
திகைப்புண்டு! தீப்பொழியும் முகமே உண்டு!

நல்லுறுதி நெஞ்சுண்டு; என்னைக் காணில்
நகைசிந்தும் இதழ்களில்தேன் கசிவ துண்டு!
வில்லுமிழும் அம்பொத்த கண்கள் பாய்ச்சி
விரகத்தை என்னகத்தே விதைப்ப துண்டு
எல்லொளிசேர் மேனியெழில் விரித்துக் காட்டும்
இன்பநடைத் துள்ளலுண்டு 'மதுத்து ளிர்க்கும்
முல்லைநீ! நான்தும்பி!' எனநெ ருங்கில்
முனிவுண்டு; அவளோடத் தனிமை உண்டு!

அடுத்தோடும் குதிபோடும் ஆற்றில் நீந்தும்
ஆவலொடு விரைவாய்நான் நடைவி ரித்தால்
குடத்தோடே மின்னலிடை ஆடப் பின்னே
குதித்துவரும் பண்புண்டு; குளுமை உண்டு;
மடக்கொடியே இன்பமெனும் ஆற்றில் நீந்த
வருகவெனக் கைப்பிடித்தால் ஆற்றைச் சுட்டி
வெடுக்கென்றே சிறுமீனைப் பெரிய மீன்தான்
விழுங்குவதைக் காட்டுகிறாள்! நடுக்க முண்டே!

ஒருவன் பேசவேண்டுமானுல் முக்கிய மாக எதைப் பேசவேண்டுமென்பதைத் தீர்மானித்துவிட்டால் குறித்தகாலத்தில் பேச முடியும். முக்கியமாக பேசுபவர் ஒருவர், கேட்பவர்கள் மனத்தில் புரியும் படியும், பதியும்படியும் இரண்டொரு செய்திகள் சொன்னுலே போதும்.

# பேச்சுக் கலை

பி. டி. இராசன்

மனிதனின் பேச்சு குழந்தையின் மழலைச் சொல்லிலிருந்து உதித்தது. குழந்தைப் பேச்சையேதான் வள்ளுவர் பெருமையாகப் பேசுகிருர்.

"குழலினிது யாழினிது
என்பதம் மக்கள்
மழலைச் சொல் கேள்ாதவர்."

மழலைச் சொல்லின் இனிமை மனிதன் சொல்லில் இருக்குமா? சாதாரணமாக இராது. ஆனுல், ஆனந்தப் பெருக்கெடுத்த நிலையில்; மனிதன் ஆடவும் பாடவும், பேசவும் செய்கிருன். பேச்சு இனிமையுள்ளதாயின், அதுவே பாட்டுப் போல் ஒலிப்பதை நாம் உணர்கிருேம்.

நடனம், ஓவியம், பாடல், சமையல், உடுத்துதல் முதலியவைகளைப்போல் பேச்சும் ஒரு கலைதான். மற்றவைகளுக்கு எத்தகைய பயிற்சி தேவையோ, அத்தகைய பயிற்சி பேச்சுக்கும் வேண்டும். ஆதலால் ஒருவரின் பேச்சின் திறமையும், பெருமையும் அவரது பயிற்சியின் தன்மையைப் பொருத்ததாகிறது.

பேச்சு இருவகைப்படும்:—

1. மக்கள் தமக்குள் இயல்பாகப் பேசும் பேச்சு.

2. மேடைப் பேச்சு.

1. பேசவேண்டிய பொருள் பற்றி நன்குணர்ந்து, எடுத்துச் செல்லுவதில் பிறரைக் கவரும் முறையிலும் அவர்கள் அறியும் வகையிலும் எளிய விதத்தில் வேடிக்கையும், உல்லாசமும் கலந்து எழுச்சியும் இன்பமும் உண்டாகுமாறு பேசும் சீரிய பேச்சாளனே உரையாடலில் முதல் வரிசையில் கருதத்தக்கவனுவான். அத்தகைய பேச்சையே உரையாடல் என்றும், பேச்சாளனை உரையாடலில் வல்

லவன் என்றும் ஆங்கிலத்தில் வழங்குவார்கள். உரையாடலின் போது, ஆண்கள் மிதமிஞ்சிய உற்சாகத்தில் மனம்போன போக்கில் அளவிற்கு மீறிப் பேசாதிருப்பதற்கு மேல்நாட்டில், குறிப்பாக பிரான்சுதேசத்தைச் சேர்ந்த கல்வித் திறமையுள்ள பெருங் குடும்பத் தாய்மார்கள், அடிக்கடி படித்தவர்களை விருந்திற்கழைத்து, அவ் விருந்தில் அவர்களை உயர்வான பேச்சையே பேசும்படியான சூழ்நிலையை ஏற்படுத்தி வந்தார்கள். அத்தகைய கூட்டத்திற்குத் தான் "சலாங்" என்பது பெயர்.

இம்மாதிரிக் கூட்டங்களில் கலந்துகொண்ட வழக்கத்தால், கலையளவில் நின்ற உரையாடலானது, நுண்கலையாக உயர்ந்துவிட்டது. உயர் குடும்பப் பெண்களின் முன்மாதிரியைக் கண்ட பிற குடும்பப் பெண்களும் படித்தவர்களை விருந்திற்கழைத்து, ஆண்களும் பெண்களும் சரிநிகரான நிலையை எய்தினர். இதனால் ஆடவர்கள் பெண்களுக்கு உயர்மதிப்பை அளிக்கும் வாய்ப்பு ஏற்பட்டது; பேச்சில் செம்மையும், செழிப்பும் மிளிர்ந்தன.

மேற்சொன்ன விருந்தரங்கங்களின் மூலம் உரையாடல், நுண்கலையாக உயர்ந்ததுடன், ஆடவர்களின் பேச்சில் செம்மையும், செழுமையும் வளர்ந்தன.

2. மேடைப் பேச்சு: கிரேக்கர்களுடைய அரசியல் மக்கள் ஆட்சியை ஒட்டியது. ஒவ்வொரு நகரத்திலும், தனி ஜனநாயக ஆட்சி நிலவிவந்தது. நகரமக்களின் ஆதரவால்தான் காரியங்கள் முடிவெய்தின. அவ்வாதரவு பெற மேடைப் பேச்சு இன்றியமையாத கருவியாக விளங்கியது. இது மேடைப் பேச்சு என்றும், அத்தகைய பேச்சாளரைப் பெரும் பேச்சாளர் என்றும், சொல்லப்பட்டது. இக் கலைக்குப் பிதா என்று சொல்லப்படுபவரும், வழிகாட்டியவரும் டெமாஸ்தனிஸ் என்பவர் ஆவார்.

கிரேக்கர் காலத்துக்குப் பின்னால் ரோமாபுரியிலும், சீசர்கள் காலத்திற்குமுன் கிரேக்கர் பழக்கத்தை ஒட்டியே அவர்களுடைய அரசாங்கம் நடைபெற்று வந்தது. ரோமாபுரியில் பேசுவதில் புகழ்பெற்றவர் சிசரோ, மார்க் அந்தோணி என்று சொல்லலாம்.

தளபதியான சீசர்வெற்றிக்கு மேல் வெற்றி பெற்று ரோமாபுரிக்குள் நுழைந்தபோது, ஜன ஆட்சிக்கு எதிராகத் தன் ஆட்சியை நிலைநாட்டிவிடுவாரெனப் பயந்த மக்களுடைய பிரதிநிதிகளில் சிலர் அவரைக் கொலை செய்தார்கள். அதுசமயம் மார்க் அந்தோணி, சீசரின் சவத்தை மக்கள் முன்வைத்துத் தம்முடைய பேச்சுவன்மையினால் கொலை புரிந்தவர்களைக் கொலைகாரர்கள் என்று எடுத்துக் காட்டி, இறந்துபோன சீசருக்குப் பெரும் புகழையும் கீர்த்தி

யையும் ஏற்படுத்தினர். அதன் பயனாகத்தான் ரோமாபுரியில் குடியாட்சி மறைந்து (முடியாட்சி) சீசர்களுடைய ஆட்சி ஆரம்பமாயிற்று. ரோமின் முதல் மன்னர் அகஸ்டஸ் சீசர்.

கிறிஸ்து காலத்திற்குப்பின் பேச்சில் வல்லவர்கள் மதபோதகர்களாக் கிறிஸ்துவக் கோயில்களில் பேசுபவர்களானார்கள். கிறிஸ்து காலத்திலிருந்து முக்கியமாகப் படித்தவர்களே மதபோதகர்கள். கிறிஸ்துவின் போதனைகளை எடுத்துப் பேசுவதற்கு அவர்கட்கு வாய்ப்பு ஏற்பட்டது. அவர்களில் சிலர் பேச்சுத் திறனில் பெயர் பெற்றவர்களானார்கள். அதற்குப் பின்னால் பேச்சாளர்களுக்கு அவசியம் ஏற்பட்டது இங்கிலாந்தில் தான்.

முதலாவது சார்லஸ் அரசர் கொலையுண்டபின் ஆங்கிலேயப் பாராளுமன்றத்துக்குத் தளபதி கிராம்வெல் மூலம் ஜனநாயக முறையில் அதிக அதிகாரம் ஏற்பட்டது. அவர் காலத்திற்குப்பின் முடியரசு திரும்பிவந்த போதிலும், பாராளுமன்ற அதிகாரம் குறையவில்லை. பல காரணங்களைக் கொண்டே அதன் அதிகாரம் நாளடைவில் மேலோங்கி வந்தது. அந்தச் சமயங்களில்தான் அரும்பெரும் பேச்சாளர்கள் தோன்றினார்கள். அவர்களில் ஒருவரான எட்மண்டு பர்க்கை எந்நாளும் நாம் மறக்கமுடியாது. ஏனென்றால் அவர் கிழக்கிந்தியக் கம்பெனி காலத்தில் கவர்னர் ஜெனரலாக இருந்த வாரன் ஹேஸ்டிங்ஸ் மீது, இந்தியர்களைக் கொடுமைப் படுத்தி ஆங்கில மக்களுக்குக் கெட்ட பெயரை ஏற்படுத்தினாரென்று குற்றம் சாட்டி ஓர் இரவு முழுவதும் தீவிரமாகப் பேசினார்.

முதல் உலகயுத்தத்தில் ஆங்கிலப் பிரதமர் லாயிட் ஜியார்ஜ் பெரும் பேச்சாளி என்று பெயர் பெற்றார். இரண்டாவது உலக மகாயுத்தகாலத்தில் ஆங்கிலப் பிரதமர் வின்ஸ்டன் சர்ச்சில் தன் பேச்சுவன்மையினால் தம் நாட்டைக் காப்பாற்றியதும் அல்லாமல், மேல்நாட்டு நாகரிகத்தைக் காப்பாற்றியதன்மூலம் ஜனநாயக ஆட்சியையும், மக்கள் உரிமையையும் காப்பாற்றினார்.

நம் நாட்டைக் கவனிக்கும் போது திறமையான பேச்சாளர்கள் பலர் இருந்திருக்கிறார்கள். அவர்களில் முக்கியமானவர்கள் தாதாபாய் நௌரோஜி, பிரேஸ்ஷா மேத்தா, பிபின் சந்திரபால், சுரேந்திரநாத் பானர்ஜி, சுவாமி விவேகானந்தா, விநாயக தாமோதர சவர்க்கார், வலங்கைமான் சீனிவாச சாஸ்திரிகள், வ. உ. சிதம்பரம் பிள்ளை, சி. ஆர். தாஸ், புலாபாய் தேசாய், போஸ் சகோதரர்கள், சி. ஆர். ரெட்டி, ஆர். கே. ஷண்முகம் செட்டியார் முதலியவர்கள்.

ஒரு நாட்டிற்குக் கஷ்டம் ஏற்படும் காலத்தில்தான் இத்தகைய திறமை மிக்க பேச்

சாளர்கள் தோன்றினர்கள் என்று சொல்லலாம். சாதாரண காலங்களில் தீவிரமாகப் பேச வேண்டிய அவசியமில்லை. சென்ற ஐம்பது, அறுபது வருட காலங்களில் ஆங்கிலப் பாராளு மன்றத்தில் அலங்கார, ஆரவார மில்லாத, விஷயத்தை ஒட்டிய பேச்சுக்களே நிகழ்த்தப்பட்டி ருந்தன. ஏனென்ருல் காலத்தை வீணுக்காமல் கருத்தை ஒட்டிப் பேசினுல் தான் காரியம் நடை பெறும்; முக்கியமான அதிகச் சட்டங்கள் நிறைவேற முடியும் என்பதனுல்தான் காரியார்த்த மான பேச்சுக்களே பேசப்பட்டு வந்தன.

மேடைப் பேச்சுக்குச் சில விதிகள் உண்டு. பேச்சாளர்கள் விஷயத்தைத் தெளிவாகவும், சுருக்கமாகவும் விளக்கமாகவும் பேசவேண்டும், சிலர் பேசும் போது தங்கள் மனத்தில் உள் ளதை மறைத்தே பேசுகிருர் கள். அத்தகையோர் பேசும் போது அவர்கள் என்ன பேசுகி கிருர்கள் என்பதை மக்கள் புரிந்துகொள்ள முடியாமற் போய்விடுகிறது. நன்ருகப் பேசி ஞர்கள் என்பதைத் தவிர என்ன பேசினுர்கள் என்பதைக் கூறமுடிவதில்லை. பேசியவர் களைக் கேட்டாலோ அவர்கள் கதியும் அதேகதி தான். என்ன பேசினுர்கள் என்பதை அவர் களாலும் கூறமுடியாமற் போய் விடுகிறது. சிலர் நீண்டநேரம் பேசினுல் தான் அது பேச்சாகும் என்று நினைக்கிருர்கள். சில வருடங்களுக்குமுன், ஏதாவ தொரு கூட்டத்திற்கு நான் தலைமை வகிக்கும்படி நேர்ந் தால், உள்ளூறவாவது என்னைத் திட்டாமலிருந்த தமிழ்ப் பேச் சாளர்களே இருந்திருக்கமாட் டார்களென்றே நினைக்கிறேன். காரணம், நான் பேச்சின் நேரத்தை நிர்ணயிப்பது தான். அரைமணி நேரம்தான் பேச வேண்டுமென்று சொன்னுல் அவர்களைக் கொலைசெய்பவனு கவே அவர்கள் என்னைக் கருதிய துண்டு. தூக்குமேடையில் ஏறு என்று சொன்னுல்கூட மகிழ்ச்சி யுடன் ஏறச் சம்மதிப்பார்கள்; சுருங்கப் பேசவேண்டுமென்று சொன்னுல் பேச இயலாது என்ற பயம் காரணமாக வருத் தப்படுவார்கள். பேச்சின் இரக சியத்தை அறியாதவர்களென்று தான் அவர்களைக் கூறவேண் டும்.

ஒருவன் பேசவேண்டுமானுல் முக்கியமாகஎதைப்பேசவேண்டு மென்பதைத் தீர்மானித்துவிட் டால் குறித்த காலத்தில் பேச முடியும். அதிர்ஷ்டவசமாக வானெலி நிலையங்களின் நடை முறை நான் சொல்வதைஉறுதிப் படுத்தும். எத்தகைய சிறந்த பேச்சாளராக இருந்தாலும் வானெலியில் 15 நிமிடத்துக்கு மேல் பேச அனுமதிப்பதில்லை. முக்கியமாக, பேசுபவர் ஒருவர் கேட்பவர்கள் மனத்தில் புரியும் படியும், பதியும்படியும் இரண் டொரு சங்கதிகள் சொன்னுலே போதும். அவைகளைக் கேட்

போர் சீக்கிரம் மறந்துவிடவும் முடியாது; நினைத்துப் பார்ப்பதற்கும் வசதியளிக்கும். மேடைக்குப் பேச முன்வரும் ஒருவருக்கு, பேசப்படும் பொருளின் தெளிவில்பூரணநம்பிக்கை வேண்டும். அவ்விதம் பொருள் தெரிந்து பேசும் பேச்சில் மரியாதைக் குறைவான பேச்சுக்கே இடம் ஏற்படாது. கேட்பவர்களுக்கு ஒன்றும் தெரியாது என்று நினைத்துப் பேசுவது, பேசுவோர்களின்அறியாமையை வெளிப்படுத்தும்.

சாதாரணமாகப் பொதுக் கூட்டம் கூட்டவேண்டுமென்று சொன்னால் கூட்டத்தைஇரண்டு மணி நேரத்திற்குமேல் நடத்தக் கூடாது. நிகழ்ச்சி குறிப்பிட்ட நேரத்தில் தொடங்கவேண்டும். அக்குறிப்பிட்ட நேரத்திற்குள் இரண்டு மூன்று பேச்சாளர்களுக்குமேல்அழைக்கக்கூடாது. ஒருவர் கூறுவதையே மற்றவர் கூறும் நிலை ஏற்படாது. நிகழ்ச்சிகள் வெகு துரிதமாக நடைபெறும். இக்காலத்தில் ஒரு மனிதனை இரண்டு மணி நேரத்திற்கு மேல்இருக்கச்செய்துகவனத்தை ஒருமுகப்படுத்தச் சொல்லி, அவனுக்குத் தெரியாததைப் பற்றியும், எடுத்துக்கூறி அவன் ஊக்கத்தையும், உற்சாகத்தையும் இழக்கச் செய்வது உடலையும், மனத்தையும் வருத்துவதாகும். கூட்டத்தில் உள்ள அனைவரும் எவ்விதத் தடையுமின்றிக் கேட்பதற்கு வசதியாக ஒலிபெருக்கி அமைக்கவேண்டும். கூட்டஆரம்பத்தில் மக்கள் மனத்தை ஒருமுகப்படுத்தஇறை வணக்கம் சுருக்கமாகச் சொல்ல வேண்டும். கூட்ட இறுதியில் கூட்டத்தினர் ஒழுங்காகவும், கட்டுப்பாடாகவும் அமைதியுடனும் கலைவதற்கு ஏதுவாகத் தேசியகீதம் பாடவேண்டும். அது சமயம் யாவரும் எழுந்து நின்று கீதம் முடிந்தபின் கலைந்துபோதல் சிறந்த பண்பாகும்.



## மைனாவின் முடிவு.

ஹாலிவுட் பட முதலாளி ஒருவர் தம் தாயின் பிறந்தநாள் பரிசாகக் காடில்லாக் கார் ஒன்று வாங்கிக் கொடுத்தார். அவருடைய தம்பியும் ஒரு பட முதலாளிதான். அண்ணனை மிஞ்சி விட வேண்டும் என்பதற்காக 10,000 டாலருக்கு ஒரு மைனா வாங்கி, அம்மாவுக்குப் பரிசாக அனுப்பினார். அந்த மைனா 11 பாஷைகள் பேசும், ஒரு பெரிய கிராண்ட் ஆபெரா கீர்த்தனமே பாடும். இதனால் தான் அதற்கு அவ்வளவு விலை.

அம்மாவின் பிறந்த நாள் அன்று தம்பி ட்ரங்க் டெலிபோன் போட்டார். "அம்மா, மைனா எப்படி?" என்று விசாரித்தார்.

"ரொம்ப ருசி! ரொம்ப ருசி!" என்று அம்மாவின் பதில் வந்தது.

—"ரெஜினல்ட் கார்டினர்"




16. தொல்லை கொடுப்பவள்!

'சல சல' வென ஓடிக்கொண்டிருக்கும் அருவி!

'சிலு சிலு' என வீசிக் கொண்டிருந்தது தென்றல்!

சுதந்திரப் பறவைகளாய்ச் சுற்றி வந்த இருவண்ணக் காதலர்கள்—வானத்திலே பறந்து செல்லுகின்ற வானம்பாடிகளைப் போன்ற மகிழ்ச்சியில் அந்த அருவியோரத்திலே அமர்ந்து—தென்றலின் இனிமையை அனுபவித்துக் கொண்டிருந்தனர்!

தலைவியின் பேரழகில் மயங்கியவனாய்ச் சிறிது நேரம் அவளை உற்றுப் பார்த்தான்!

அவன் பார்வை அவளை நாணச் செய்தது!

அப்போது தலைவன் சொன்னான்:

"அன்பே! உன்னையடைய நான் எத்தனை எத்தனை இன்னல்களையெல்லாம் தாங்கிக் கொள்ள வேண்டிய நிர்பந்த நிலை ஏற்பட்டிருக்கிறது என்பதைக் கண்டாயா?" என்று தன் காதலுக்கிடையேயிருந்த இடையூறுகளை அவளுக்கு உணர்த்தினான்.

இதைக் கேட்ட தலைவி, "அன்பரே! காதலுக்கிடையே அப்படி இன்னல்கள் உருவானால்தான் அது உறுதிப்படும் என்றும்—அதுவே காதலுக்குச் சுவையூட்டும் விருந்தாக அமையுமென்றும் சொல்லக் கேட்டிருக்கிறேன்." என்று அவனுக்குப் பதில் கூறினாள்.

துன்பத்தைத் தவிர ஒரு போதும் இன்பத்தைத் தொட்டும் பாராதவரின் வரட்டு வேதாந்தமாய் இருக்கலாம்! ஆனால், ஒன்று மட்டும் உறுதியாகக் கூறுவேன். யாரையும் விட நாம் அன்பால் பிணைக்கப்பட்டு—உள்ளத்தால் ஒன்றி—காதலிலே கட்டுண்டவர்களாவோம்!" என்றுதான் கூறினான் தலைவன்.



தங்கவயல்
லோகிதாசன்

யாருக்கோ நம் காதலை எடைபோட்டுப் பார்க்கிருன் காதலன் என்றெண்ணி விட்டாள் தலைவி!

நம்மைப் போல் வேறொரு பெண்ணையும் இவன் காதலித்திருப்பானே? என்கின்ற சந்தேகம் வேறு இடையே!

பின்னர் விளக்க வேண்டுமா என்ன நிலைமையை?

அவளுடைய கண்கள் கனலைக் கக்கின!

பார்வை கடூரமாக மாறியது!

கோபம் கொந்தளித்தது!

தீயைத் தீண்டியவள் போல் துடித்து, "யாரை விட? யாரை விட?" என்று கேட்டுத் தலைவனைத் தொல்லைக் குள்ளாக்கி விட்டாள்!

யாரென்று சொல்வான் அவன்?

எதையும் சொல்ல முடியாமல் விழித்தான்—இத்தனைச் சந்தேகமா இவளுக்கு என்றெண்ணி!

யாரினும் காதலம் என்றேனு, ஊடினுள்
யாரினும் யாரினும் என்று.

※ ※ ※

## 17. வாழ்ந்து கொண்டிருப்பவள்!

பகையரசுக்கும்—பாவையின் குடியரசுக்கும் மூண்டு விட்டது போர்!

அவள் கணவனே தீரன்!

தாய் நாட்டின் மானத்தைக் காக்கத் தயங்காதவன்!

போர் என்றவுடன் புன்னகை புரிபவன் — புறமுதுகிட்டறியாதவன் — புலிநிகர் வீரன்!

வாள் சுழலும் களத்திடையே வேல் தாங்கி வேங்கையெனப் பாயும் சூரன்!

அவன் இதற்கு முன் சந்தித்த வெற்றிகளை நாடறியும்!

அன்றும் புறப்பட்டு விட்டான் தன் உள்ள உரத்தினையே ஆயுதமாகக் கொண்டு!

நாட்கள் ஓடிக் கொண்டேயிருந்தன!

போரும் நீடித்த வண்ணமேயிருந்தது!

அவனை நம்பி யிருக்கும் நங்கை எதிர்பார்த்து எதிர்பார்த்து ஏங்கினுள்—எண்ணம் ஈடேற வில்லை!

போரும் முடிய வில்லை— போனவனும் திரும்ப வில்லை!

மங்கை சோகச் சிலையானுள்!

வழக்கமாக வந்து போகும் தோழி அன்றும் வந்தாள்-உரு மாறிக் கிடக்கும் தன் தோழியின் நிலையைக் கண்டு மிகவும் வேதனைப் பட்டாள்.

சுமையா என்ன? சிறிது நேரம் நான் தாங்கிக் கொள்கிறேன் என்று உதவி புரியி? அவரவர்களுடைய உள்ளச் சுமையை அவரவர்களாகத் தானே தாங்கித் தீர வேண்டும்?

கணவனைப் பிரிந்து உருகி உருமாறிக் கிடக்கின்ற தன் தோழிக்கு எத்தனையோ ஆறுதல் மொழிகளைக் கூறினாள்.

அத்தனையும் அவள் கேட்டு விட்டு, "தோழீ! அன்று கோட்டுப்பூச் சூடி என் கொண்டையை அலங்கரித்துக் குதூகலம் தாங்காது போகவே—என் அழகை அள்ளிப் பருக ஆவலுடன் அருகிழுத்து—விழியாலே மொழி பேசி—கொள்ளை ஆசையை என் உள்ளத்தில் பாய்ச்சி இன்பத் திளைப்பில் மூழ்கடித்த என் அன்புக் கணவர்—இன்று உள்ளத்தை ஊக்கத்தின் உறைவிடமாக்கிக் கொண்டு—இவ் வையத்தை வாகை சூடி வர வாளேந்திச் சென்று விட்டார்! என்று வருவார்? என்பதே என் நெஞ்சு செய்யும் துதி! ஏக்கமெல்லாம் ஒன்று சேர்ந்து என் தூக்கத்தையும் துரத்தி விரட்டுகின்றன! என் செய்வேன்? இதனால் ஊணும் மறந்தேன்—உடல் திடமும் குறைந்தேன்—சொல்லுவதற்கொண்ணாத் துன்பச் சுமையை உள்ளத்திலே சுமந்து கிடக்கின்றேன்! இந் நிலையிலும் என் உயிர் உடலை விட்டு நீங்காதிருப்பதற்குக் காரணம் என்ன தெரியுமா? இன்பத்தை விரும்பாமல்—வெற்றி இன்பத்தையே நாடிச் சென்றுவிட்ட அவர் வருகையை விரும்பியே நான் இன்னும் உயிர் வாழ்ந்துகொண்டிருக்கின்றேன்! வாகை சூடி வந்திறங்கும் சுந்தராங்கதனைக் காணவே—கண்டு மகிழவே—மகிழ்ந்தாடவே இன்னும் உயிர் என் உடலை விட்டுப் பிரியாமல் ஒட்டிக் கொண்டிருக்கின்றது!" என்றாள்.

உரன்நசைஇ உள்ளம்
துணையாகச் சென்றார்
வரல்நசைஇ இன்னும் உளேன்.

※ ※ ※

## 18. பயமுறுத்திப் பார்ப்பவள்!

அவனுக்குத் தன் காதலியைப் பிரிய வேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது!

எப்படி இதை அவளிடம் கூறுவது? என்று யோசித்துக் கொண்டிருந்தான்!

அவனையும் அந்தப் பிரிவுத் துயர் வாட்டாமலில்லை! எனவே அவளுடைய அழகை எண்ணி யெண்ணி மலரிடமும்—மதியிடமும் வாயில் வந்ததைப் பேச ஆரம்பிக்கின்றான்.

"அனிச்சம்பூவே! நல்ல மென்மையான தன்மையைப் பெற்றிருக்கின்றாய்—நீ வாழ்க! நான் விரும்பும் காதலி உன்னைவிட மெல்லிய தன்மையுடையவள், அவளை நான் பிரியும் காலம் வந்து விட்டது! மூங்கில் போன்ற தோளுடைய அவளுக்குத் தளிரே மேனி—முத்தே பற்கள்—இயற்கை மணமே மணம்—வேலை மையுண்ட கண்கள்! விண்மீன்கள் திங்களுக்கும்இவளுடைய முகத்திற்கும் வேறுபாடு கண்டறிய முடி

யாமல் தவிக்கின்றானே! இத்தகைய அழகு வாய்ந்த என் காதலியை எப்படித்தான் என்னால் பிரிந்து செல்ல முடியப் போகிறதோ? திங்களே! மலர் போன்ற கண்களையுடைய முகத்தை ஒத்திருக்க விரும்பினால்—நீ பலரும் காணும்படியாகத் தோன்றுதே! குறைந்த இடமெல்லாம் படிப்படியாக நிறைந்து விளங்குகின்ற இந்த மதியிடம் உள்ளதுபோல்—என் காதலியினிடத்தில் களங்கமுண்டோ? இல்லையே.''

— என்றெல்லாம் காதலியின் எழிலைப் போற்றிப் பூரித்தவாறும்—பிரிவை நினைந்து சஞ்சலத்தோடும் விரைகின்றான் அந்த வேல்விழியாளிடம் விடை பெற!

தன்னை விட்டுப் பிரியப் போகிறான் தன் பிரியத்திற்குரியவன் என்பதை முன்னமேயே அறிந்திருந்த அவள்—அவனைக் கண்டதும் பிணங்கி நின்றாள்.

"ஆருயிரே!" என்றான்.

பதிலில்லை!

அத்துடனும் நிற்கவில்லை அவள்—இருவருக்கும் இருந்த இடைவெளியை அதிகப்படுத்திக் காட்டினாள்!

விடவில்லை அவன்; தொடர்ந்தான் தோகையை; மீண்டும் உதிர்த்தான் வார்த்தையை!

"கண்ணே! உன்னைப் பிரியும் வேதனை எனக்கு மட்டும் இல்லையா என்ன?"

— என்று கேட்டு நின்றான் அவன்.

இத்தனை நேரம் பேசாமல் நின்று கோபக்கனல் வீசி நின்ற அந்தக் கோதை—இப்போது தான் பேச ஆரம்பித்தாள்!

"இந்தக் குழைவும் நெளிவும் நடிப்பா? இந்த அன்புப் பேச்சும் ஆதரவான வார்த்தையும் ஏமாற்று வித்தையா? யாரிடம் இம் மாதிரியான பேச்சுக்களைப் பேசுவது? உங்களுடைய பேச்சுக்கள் எதுவும் எனக்குத் தேவையில்லை! எங்கும் என்னை விட்டுப் பிரிந்து செல்லவில்லையென்றால்—அதைப் பற்றி எவ்வளவு வேண்டுமானாலும் என்னிடம் பேசுங்கள்! ஆனால், நீங்கள் போகப் போவதையும்—போய்த் திரும்பி வருவதையும்—வந்து செய்யப் போவதையும் பேசுவதானால்—இங்கு உயிருடனிருப்பவர்களிடம் அதைப் பற்றிப் பேசி ஆனந்தங் கொள்ளுங்கள்!"

— என்றாள் அந்தத் துணிச்சலானவள்.

நீ என்னைப் பிரிந்து சென்றால்—என் உயிரும் உடனே பிரிந்து செல்லும்! என்று சொல்லாமற் சொல்கிறாள் அவள்.

வஞ்சியின் இவ் வார்த்தையைக் கேட்ட பிறகு அவனெங்கே போவது?

செல்லாமை உண்டேல்
எனக்குஉரை; மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க்கு உரை,

சார்லோட் பிராண்ட்டி எழுதிய....

# ஜேன் அயர்

தமிழில் தருபவர் :

## ரகுநாதன்

இந்த நாவலின் ஆசிரியையான சார்லோட் பிராண்ட்டி (1816-1855) ஆங்கிலேயப் பாதிரியார் ஒருவரின் மூன்று புத்திரிகளில் மூத்தவர். இளமையிலேயே தாயை இழந்து விட்ட இந்தச் சகோதரிகள் மூவரும் படிப்பதிலும் எழுது வதிலுமே பெரும் பொழுதைச் செலவிட்டார்கள். மூவரும் சேர்ந்தும், தனித்தனியாகவும் இலக்கியம் படைக்கும் முயற்சிகளில் ஈடுபட்டார்கள். எனவே இலக்கிய உலகில் இவர்களை பிராண்ட்டி சகோதரிகள் எனக் குறிப்பிடுவது வழக்கமாகிவிட்டது. இவர்களில் சார்லோட்டும், தங்கையான எமிலியும் இலக்கிய உலகில் நிரந்தரமான புகழைச் சம்பாதித்துக்கொண்டு விட்டார்கள். ஜேன் அயரைப் போலவே, எமிலி பிராண்ட்டி எழுதிய 'உதரிங் ஹைட்ஸ்' (Wuthering Heights) என்ற நாவலும் மிகப் பிரசித்தி பெற்ற சிறந்த படைப்பாகும். (இந்நாவலின் கதையைப் பிறிதொரு சமயம் அறிமுகம் செய்வோம்).

சார்லோட் பிராண்ட்டி தமது வீட்டிலும் அக்கம் பக்கத்திலுள்ள பள்ளிகளிலும்தான் கல்வி பயின்றார் : அதன்பின் சிறிது காலம் பள்ளி யாசிரியைத் தொழிலும் பார்த்தார். பதினைந்து வயதிலேயே இவர் இருபதுக்கு மேற்பட்ட நாவல்களை எழுதிவிட்டார். ஆனால், அவை சிறப்பாக அமையவும் இல்லை; பிரசுரத்துக்கு ஏற்கப்படவும் இல்லை. முதன் முதலில் வெளிவந்த இவரது நூல் இவர் தமது சகோதரிகளுடன் கூட்டாகச் சேர்ந்து எழுதிய ஒரு

---

JANE EYRE—*By Charlotte Bronte.*

கவிதைத் தொகுதிதான். இவர் ஒன்றும் பெரிய கவிஞ ரல்ல; எனினும் இவரது படைப்புக்களில் கவிதையம்சம் குடிகொண்டிருக்கவே செய்கிறது. இவரது பல நாவல் களும் பிரசுரத்துக்கு ஏற்கப்படாமற் போனபின்பு, முதலில் ஜேன் அயர் ஏற்கப்பட்டுப் பிரசுரமாயிற்று. இந்நாவல் வெளிவந்தவுடனேயே இவருக்குப் பெரு வெற்றியும், புகழும் கிட்டின. இவர் எழுதி வெளிவந்த நாவல்களில் இரண்டு அல்லது மூன்றே குறிப்பிடத்தக்கவை. அவற்றிலும் ஜேன் அயர்தான் தலை சிறந்தது; இலக்கிய உலகில் நிரந்தர ஸ்தானத்தை அளிப்பதும் இதுவே.

ஜேன் அயரின் அமைப்பில் அவசியமற்ற வளர்த்தலும், குறைபாடுகளும் உண்டென விமர்சகர்கள் கருதினாலும், இந்நாவலிலுள்ள பாத்திரங்கள் பலவும் உயிர்த்துடிப்பு மிக்கவை. ஆழமான உணர்ச்சிகள் கொண்ட ஜீவனுள்ள பாத்திரங்கள். மேலும் உள்ளத்தை உருக்கும், இதயத்தைத் தொடும் உணர்ச்சிகளும் நிகழ்ச்சிகளும் நிறைந்தது இந் நாவல். இந்த உணர்ச்சிகரமான உன்னத நாவலின் கதைச் சுருக்கமே இங்கு கூடியவரையிலும் சுவை குன்றா மல் தரப்படுகிறது.

  

*பாவம், ஜேன் அயர்!*

அநியாகக் குழந்தையாக இருக்கும் போதே ஜேன் அயர் அரைக்காசுக்கும் விதியற்ற அனாதையாகி விட்டாள். அவளது தாயும் தந்தையும் அவளை ஆதரவற்ற அனாதையாக்கி விட்டு, ஜுரத்தால் மாண்டு விட்டார்கள். அவளது தாய் மாமனான ரீட் என்பவர் தான் ஜேனைத் தமது வீட்டுக்குக் கொண்டுபோய் வளர்த்தார். அவர் நல்லவர்தான்; ஆனால் அவரது மனைவி திருமதி ரீட் ஒரு கொடுமைக்காரி. அவள் ஜேனை அடியோடு வெறுத்தாள். ஜேனின் துர்ப்பாக்கியம்! அவள் அங்கு வந்த சிறிது காலத்தில் அவளது மாமனும் இறந்து விட்டார். இறப்பதற்குமுன் அவர் தம் மனைவியிடம் வாங்கிய சத்தியத்துக்குக் கட்டுப்பட்டுத்தான் அந்தக் கொடுமைக்காரி ஜேனை வீட்டை விட்டு விரட்டாமல், வேண்டா வெறுப்பாக வளர்த்து வந்தாள். எனினும் அவள் ஜேனை ஈவிரக்கமற்றுப் பல விதத்திலும் கொடுமைப்படுத் தினாள். மேலும் அவளோடு அவளது மூன்று பிள்ளைகளும் சேர்ந்து கொண்டார்கள். அந்த சிறு பிள்ளைகளும் அனாதையான ஜேனைப் பல விதத்திலும் சித்

திரவதை செய்தார்கள். இவ்வாறு பல்வேறு கொடுமைகளுக்கிரையாகி, ஜேன் எப்படியோ வளர்ந்து வந்தாள்.

இயல்பாகவே ஜேன் தர்மாவேச உணர்ச்சியும், வாழ்க்கைத் தாகமும் கொண்ட பிறவியாகத்தான் இருந்தாள். எனவே அவளுக்குப் பத்து வயதான பருவத்தில் அவள் தனக்கிழைக்கப்படும் கொடுமைகளை எதிர்த்து, ஆத்திரத்தோடும் கோபத்தோடும் தன் அத்தையிடம் சில தடவை போராடத் துணிந்தாள். இதனைக் கண்டதும் அந்த அத்தைக்காரி ஜேனை வீட்டை விட்டு வெளியேற்றி விட வேண்டியதுதான் எனத் தீர்மானித்தாள்; அதன் படி லோவுட் என்னுமிடத்திலுள்ள தர்மப் பள்ளிக்கூடத்துக்கு ஜேனை அனுப்பி வைத்தாள். இவ்வாறு செய்வது தனது கணவனுக்குத்தான் செய்துகொடுத்த சத்தியத்தையும் மீறியதாகாது என அவள் கருதினாள். லோவுடிலுள்ள அந்தப் பள்ளிக்கூடம் ஒரு கொடிய சிறைக்கூடம் தான். பிள்ளைகளுக்கு அங்கு நல்ல உணவு கூடக் கிடையாது. கட்டுப்பாடும், கண்டிப்பும், தண்டனையும் அங்கே மிகவும் அதிகம். எனினும் அத்தை வீட்டைக் காட்டிலும், அங்கிருப்பது ஜேனுக்கு ஓரளவு மகிழ்ச்சி தருவதாகத்தான் இருந்தது. ஜேன் அந்தப் பள்ளியில் எட்டாண்டுக் காலம் படித்தாள்; பின்னர் அங்கேயே ஓர் ஆசிரியையாகவும் ஆனாள். இந்த எட்டாண்டுக் காலத்தில் அவள் ஊட்டமும் உஷ்ணமும் பெறாத கொடியைப் போல், வற்றி மெலிந்து பசலை பாய்ந்திருந்த கன்னியாகத்தான்வளர்ந்தாள். என்றாலும் இந்தக் காலத்தில் அவளது அறிவு மட்டும் பல விதத்திலும் செழுமையுற்றது. அவள் எவ்வளவோ கற்றுக் கொண்டாள்; தெரிந்து கொண்டாள். நல்ல புத்திக் கூர்மையும்,கச்சிதமான பேச்சுத் திறனும், அடக்கமும் அமைதியும் கொண்ட சுபாவமும் பழக்கமும் அவளிடம் தென்பட்டன. எனினும் அவள் இதயம் மட்டும் நல்லதொரு வாழ்க்கைக்கு ஏங்கித் தவித்தது. அவளது இதயத்தின் அடியாழத்தில் அன்பும் ஆர்வமும் நிறைந்த பெண்மை ஆழ்ந்த துயிலில் அமிழ்ந்து கிடந்தது. சொல்லப் போனால், அந்தப் பெண்மை கற்பனைக் கதைகளில் வரும் ராஜகுமாரனின் ஸ்பரிசம் பெற்று விழித்துக் கொள்ளக் காத்திருக்கிருக்கும் ராஜகுமாரியைப் போலத்தான் இருந்து வந்தது.

லோவுடை விட்டுப் பிரிந்து, தார்ன்பீல்ட் மாளிகை என்ற இடத்துக்கு வந்து, அங்கு ஒரு குழந்தைக்கு ட்யூஷன் ஆசிரியையாக அவள் வேலைக்கமர்ந்த காலத்தில் ஜேன் மேற்குறித்த மனோ நிலையில்தான் இருந்தாள். லோவுடில் இருந்த காலத்திலேயே அவள் அத்தகையதொரு வேலையை விரும்பிப் பத்திரிகை

யில் விளம்பரம் செய்தாள். விளம்பரம் பலனளித்தது, திருமதி பேர்பாக்ஸ் என்பவளிடமிருந்து நல்ல சம்பளத்துடன் அழைப்பு வந்தது. ஜேனும் உடனே போய் அந்த வேலையை ஒப்புக் கொண்டாள். தார்ன்பீல்ட் மாளிகை பழமையானது; எனினும் நல்ல இடமாக இருந்தது. திருமதி பேர்பாக்ஸ் அந்த மாளிகையின் சொந்தக்காரியல்ல; சொந்தக் காரருக்கு அவள் உறவுதான்; அவருக்காக அவள் அந்த வீட்டை மேற்பார்வை பார்த்து வந்தாள். மாளிகையின் சொந்தக்காரர் எட்வர்ட் ரோச்செஸ்டர் என்பவர். அவர் எப்போதாவதுதான் அங்கு வந்து போவார் என்று திருமதி பேர்பாக்ஸ் ஜேனிடம் தெரிவித்தாள். அங்கு அடெலி என்ற ஏழு வயதுச் சிறுமியொருத்தி இருந்தாள். அவளது தாய் ஒரு பிரஞ்சு நாட்டியக்காரி. ரோச்செஸ்டர் தமது வாழ்க்கையின் மோசமான காலமொன்றில் அவளுக்கு ஆதரவளித்து வந்தார். அந்த நாட்டியக்காரி சில மாதங்களுக்கு முன்னர் இறந்து போனாள். அதன்பின் அவளது குழந்தைக்குத் தாமே போஷகராகி, அதனைத் தமது மாளிகைக்குக் கொண்டு வந்து வளர்த்தார் ரோச்செஸ்டர். அடெலி துறுதுறுப்பான சிறுமி, அந்தச் சிறுமிக்குக் கல்வி போதிப்பதே ஜேனுக்கு அளிக்கப்பட்ட வேலை.

தார்ன்பீல்ட் மாளிகைக்கு ஜேன் புறப்பட்டுப் போவதற்கு முன், அவளது அத்தை வீட்டுத் தாதியான பெஸ்ஸி என்ற கிழவி அவளைப் பார்க்க வந்திருந்தாள்; வந்தவள் ஜேனிடம் ஒரு தகவலைக் கூறினாள். அதாவது சில நாட்களுக்கு முன்னர் மதிராவிலிருந்து மிஸ்டர் அயர் என்பவர் திருமதி ரீடைக் காண வந்ததாகவும், அவர் தம்மை ஜேனின் சித்தப்பா என்று சொல்லிக் கொண்டதாகவும் தெரிவித்தாள். அந்த வீட்டில் ஜேனைக் காண முடியாதது குறித்து அவர் மிகவும் வருந்தினார்; மேலும் அவர் மறுதினமே இங்கிலாந்தை விட்டு வெளிநாடு செல்வதாக இருந்ததால், அவரால் லோவுடுக்கும் போக முடியவில்லை. இந்தத் தகவலை பெஸ்ஸி தெரிவித்ததும், ஜேன் வியப்படைந்தாள். ஏனெனில் தனது தந்தை வழியில் தனக்கும் உறவினர்கள் இருக்கும் தகவலை ஜேன் தன் வாழ்நாளிலேயே இப்போதுதான் முதன் முறையாகக் கேள்விப்பட்டாள். அப்படி யாரேனும் உண்டா என்று அவள் திருமதி ரீடிடம் முன்னர் கேட்ட சமயத்திலெல்லாம் அவள் அப்படி யாரும் உயிரோடு இருப்பதாகத் தெரியவில்லை. அப்படியே தப்பித் தவறி யாரேனும் இருந்தாலும் அவர்களும் பஞ்சைப் பனாதிகளாகத்தான் இருப்பார்கள் என்றே தெரிவித்து வந்தாள். இப்போது தனது சித்தப்பா ஒருவர் இருப்பதைக் கேள்விப்

பட்டதும், ஜேன் அன்று முழுவதும் அதைப் பற்றியே சிந்தித்தாள். ஆனால் மறுநாள் அதனை மறந்து விட்டாள். தார்ன்பீல்ட் மாளிகையில் அவளுக்கேற்பட்டு வந்த புதிய அனுபவங்களில் அவள் அதனை மறந்தே போய் விட்டாள்.

தார்ன்பீல்ட் மாளிகையில் வேலைக்கமர்ந்து, அடெலிக்கு முதல் நாள் பாடங்களைச் சொல்லிக் கொடுத்த பின்னர், திருமதி பேர்பாக்ஸ் அந்த மாளிகையை ஜேனுக்குச் சுற்றிக் காட்டினாள். அவ்வாறு பார்த்து வந்த சமயத்தில், திடீரென்று ஒரு விசித்திரமான, வறண்ட பேய்ச் சிரிப்பின் சப்தம் மாளிகையின் மூன்றாவது மாடியிலுள்ள ஓர் அறையினின்றும் எழுந்தது. அந்தச் சிரிப்பொலியைக் கேட்டு ஜேன் திடுக்கிட்டாள்.

"அது கிரேஸ் பூலாகத்தான் இருக்க வேண்டும். கிரேஸ் பூல் இந்த வீட்டு வேலைக்காரிகளில் ஒருத்தி. 'அவள் அந்த அறையில் தையல் வேலைபார்க்கிறாள்" என்று உடனே முந்திக் கொண்டு விளக்கம் கூறினாள் திருமதி பேர்பாக்ஸ். ஆனாலும் அந்தச் சிரிப்பு ஜேனின் உடம்பையே புல்லரிக்கச் செய்து உலுக்கி விட்டது. "இந்த கிரேஸ் பூல் என்ன பிறவியோ?" என்று தனக்குள் எண்ணிக் கொண்டாள் ஜேன்.

※ ※ ※

ஜேன் அந்த மாளிகைக்கு வந்து சிலமாதங்களாகிவிட்டன. அதன்பின் ஒரு நாள் அவள் பக்கத்துக் கிராமம் வரையிலும் சென்று விட்டுத் திரும்பி வரும் வழியில், வேலிப் புறத்தின் படிக்கட்டொன்றில் காலாற அமர்ந்து, மாரிக்காலத்தின் அஸ்தமன வேளையின் அழகைக் கண்டு ஆனந்தித்துக் கொண்டிருந்தாள். திடீரென்று வேகமாக ஓடி வரும் ஒரு குதிரையின் காலடி யோசை கேட்டது; பின்னர் குதிரையை வேகமாக முடுக்கியவாறே, தார்ன்பீல்ட் மாளிகையிருந்த திசை நோக்கிச் செல்லும் ஒரு மனிதரை அவள் கண்டாள். அந்தக் குதிரை அவளைத் தாண்டி அப்பால் சென்ற சமயத்தில் திடீரென்று கால் வழுக்கிக் கீழே விழுந்து விட்டது: அத்துடன் அந்த மனிதரும் விழுந்து விட்டார். உடனே அவள் அந்த விபத்து நடந்த இடத்துக்கு ஓடினாள்; அங்கு அந்த மனிதர் வாய்க்கு வந்தபடி குதிரையைத் திட்டியவாறு, குதிரைக்கடியில்மாட்டிக் கொண்ட தமது காலை விடுவித்து, எழுந்து நிற்க முயன்று கொண்டிருந்தார்.

"நான் உங்களுக்கு உதவட்டுமா?" என்று கேட்டாள் ஜேன்.

"வேண்டாம் நீ ஒதுங்கி நின்றால் போதும்" என்று அந்த மனிதர் கூறினார்; பின்னர் அவர் எழுந்து நின்றுகொண்டு,

குதிரையையும் எழுப்பி விட முனைந்தார். அந்த மனிதருக்குக் காலில் அடிபட்டு விட்டது; எனவே அவர் வேதனையோடு நொண்டி நொண்டி நடந்தார். இதனைக் கண்டதும், ஜேன் மீண்டும் அவருக்கு உதவ முன் வந்தாள். அவரும், "ஹூம்! நிர்ப்பந்தம் உன் உதவியையும் ஏற்கச் சொல்கிறது" என்று கூறியவாறே, அவளது உதவியை ஏற்றுக் கொண்டார். பின்னர் அவளது உதவியுடன் அவர் தமது குதிரையின்மீது மீண்டும் ஏறி, மேற்கொண்டு எதுவும் பேசாமல் புறப்பட்டுச் சென்று விட்டார்,

மாளிகைக்குத் திரும்பி வந்ததும், மாளிகையின் சொந்தக்கரமான ரோச்செஸ்டர் எதிர்பாராத விதமாகச் சிறிது நேரத்துக்கு முன்னர் அங்குவந்துள்ள செய்தியை ஜேன் கேள்விப்பட்டாள். அன்று இரவில் அவளது எஜமானரிடமிருந்து ஜேனுக்கு அழைப்பு வந்தது. அவள் அவரிருந்த புத்தகசாலைக்குள் நுழைந்த போது, அவர் கணப்பு நெருப்புக் கெதிரே, ஒரு சோபாவில் ஒருச்சாய்த்துக் சாய்ந்தவாறு படுத்திருந்தார். அவரைப் பார்த்ததுமே, அன்று மாலையில் குதிரையிலிருந்து விழுந்த மனிதர்தான், அவர் என்பதை அவள் அடையாளம் கண்டுகொண்டாள். அவரது கன்னங்கரிய, அகன்ற புருவங்கள், விசாலமான நெற்றி, அதன் விசாலத்தைத் துடிப்பாக எடுத்துக் காட்டும் வாளிப்பான, இருண்ட தலைமயிர் ஆகியவற்றை அவள் கவனித்தாள். அவரது கூரிய மூக்கு அழகைக் காட்டிலும், அவரது குணபாவத்தைப் பிரதிபலிப்பதாகத் தோன்றியது; நாசித் துவாரங்கள் கோபக் குறியைப் புலப்படுத்தின; அவரது வாய், மோவாய் எல்லாம் அவரது அழுத்த பாவத்தைச் சுட்டிக் காட்டின. அவரது அகன்ற தோற்றம் அவரது உடம்போடு இணைந்து பொருந்தியிருந்தது.

"இதோ மிஸ் ஜேன் அயர் வந்திருக்கிருள், ஐயா" என்று திருமதி பேர்பாக்ஸ் ஜேனின் வருகையை அவருக்குணர்த்தினுள்.

"அவள் அப்படி உட்காரட்டும்" என்று விறைப்பும் வெறுப்பும் கொண்ட தலை வணக்கத்தோடு கடுத்த குரலில் சொன்ஞர் ரோச்செஸ்டர். அவரது தொனியோ 'அவள் வந்தால் எனக்கென்னவாம்?' என்று கூறுவது போலிருந்தது.

தன் எஜமானரின் போக்கைக் கண்டு ஜேன் ஆரம்பத்தில் சிறிது கலவரமடைந்தாள்; ஆனுல் பின்னர் அவள் தெளிந்து அங்கு அமர்ந்தாள். சம்பிரதாயமான குழைவும் கும்பிடும் நிறைந்த வரவேற்பு கிட்டியிருந்தால்தான் அவள் பெரிதும் குழம்பியிருப்பாள்; ஆனுல் இத்தகைய வறண்ட, உணர்ச்சி

யற்ற வரவேற்பினால் அவளும் சம்பிரதாயமாக முகமன் விசாரிக்கும் சங்கடத்துக்கு ஆளாக வில்லை. அந்த வரவேற்பு அவளுக்கு ஒரு குறுகுறுப்பைத் தான் ஏற்படுத்தியது. தன் எஜமானரின் போக்கு எப்படியிருக்கிறது பார்க்கலாம் என்ற ஓர் எண்ணம்தான் அவளுக்கு உண்டாயிற்று. ஆனால் முதலில் அவர் எதுவுமே பேச வில்லை. திருமதி பேர்பாக்ஸ் அவருக்கு ஏற்பட்ட துன்பத்தைக் கண்டு, தனது வருத்தத்தைச் சரமாரியாகத் தெரிவிக்கத் தொடங்கியதும், அவர் அதனைத் தடுத்து நிறுத்துவதற்காக, ''அம்மா, எனக்குக் கொஞ்சம் தேநீர் வேண்டும்'' என்று சட்டென்று கூறிப் பேச்சை மாற்றினார்.

சிறுமி அடெலி அவரிடம் சென்று தனது பிள்ளைத்தனத்தின் பேதைமையோடு, தனக்கும் தனது ஆசிரியை ஜேன் அயருக்கும் அவர் ஏதாவது பரிசுகள் கொண்டு வந்திருக்கிறாரா என்று கேட்டாள்.

''பரிசுகளைப் பற்றி யார் பேசுவது?'' என்று ரோச்செஸ்டர் கரகரத்த குரலில் கேட்டார். பின்னர் அவர் ஜேனை நோக்கி, ''மிஸ் ஜேன் நீ பரிசை எதிர் பார்த்தாயா? உனக்குப் பரி சென்றால் பிடிக்குமா?'' என்று கேட்டார். அவரது கண்கள் அந்தக் கேள்விக்குப் பதிலைத் தேடுவது போல் ஜேனின் முகத்தைக் கூர்ந்து நோக்கின.

''நீங்கள் ஏற்றுக்கொள்ளக் கூடிய பதிலை நான் சொல்வதெனில், அதற்கு எனக்கு இன்னும் கொஞ்சம் காலம் வேண்டும். ஐயா, பரிசு என்று சொன்னால் அதில் எத்தனையோ அம்சங்கள் அடக்கம். இல்லையா?'' என்று பதில் சொன்னாள் ஜேன்.

''நீ அடெலி மாதிரி மனம் விட்டுப் பேச வில்லை. அவள் பரிசைப் பற்றி வெளிப்படையாகவே சொல்லி விட்டாள். நீயோ சுற்றி வளைத்துப் பேசுகிறாய். அத்துமீறிய தன்னடக்கத்துக்கு ஆளாகாதே'' என்றார் அவர். பின்னர் ஜேனைப்பற்றிய விபரங்களை-அவள் எங்கிருந்து வருகிறாள். அவளது உற்றார் உறவினர் யார், அவளுக்கு என்னென்ன தெரியும் என்பன போன்ற விபரங்களை - அவர் நறுக்குத் தெடுத்தாற் போன்ற கேள்விகளின் மூலம் கேட்டுத் தெரிந்து கொண்டார்.

பிறகு ஜேன் வரைந்திருந்த சில படங்களை அவர் கொண்டு வருமாறு பணித்தார்; அவற்றை பார்த்ததும், அவை நன்றாயிருக்கின்றன என்று பாராட்டினார். பின்னர் அவர் ஜேனை அடுத்த அறைக்குள் சென்று அங்குள்ள பியானோ வாத்தியத்தைச் சிறிது நேரம் வாசிக்கச் சொன்னார். அவள் சில நிமிஷ

நேரம் அதனை வாசித்தாள். அதற்குள் அவர் குறுக்கிட்டுப் பின்வருமாறு கத்தினார்: "வாசித்தது போதும், நீயும் பள்ளிப் பிள்ளைகளைப் போலத்தான் வாசிக்கிறாய். அவர்களைக் காட்டிலும் பரவாயில்லை. ஆனாலும் சுமாரான வாசிப்புத்தான்."

※ ※ ※

ரோச்செஸ்டர் தார்ன்பீல்ட் மாளிகையிலேயே தங்கியிருந்தார். எனினும் ஆரம்பத்தில் ஜேன் அவரை எப்போதாவதுதான் சந்தித்தாள். சில நாட்களுக்குப் பின்னர் அவள் அவரைத் தினமும் சந்தித்து வந்தாள். அவரே மாலை நேரத்தில் அவளைக் கூப்பிட்டு அனுப்புவார். இருவரும் சந்தித்துப் பேசும் சமயங்களில் அவர் அதே வழக்கமான முறையில்தான் பேசுவார்; அதாவது வெளிப்படையான, விசித்திரமான முறையில், நறுக்குத் தெளித்தாற்போன்ற நாலு வார்த்தைகளோடு, இங்கித மற்று முரட்டுத்தனமாகவே பேசுவார். ஜேனும் தனது பதிலை அளந்து பார்த்துக் கவனத்தோடுதான் கூறுவாள். சிலசமயங்களில் மட்டும், அவள் அவரது கருத்துக்கள் தனது கருத்துக்களுக்கு மாறுபட்டதாக இருந்தால், சட்டென்று அவற்றை நேரடியாகவே மறுத்துக் கூறிவிடுவாள். அவருக்கு ஜேனின் சந்திப்பும் உறவும் பிடித்துப்போய்விட்டது; அவளுக்கும் தனது எஜமானரின் தனித்தன்மையில் ஒரு கவர்ச்சி ஏற்பட்டது. இருவருக்கும் இத்தகைய ஈடுபாடு ஏற்பட்டிருந்தது சீக்கிரமே புலனாயிற்று.

ஒருநாள் இரவில் அவர்கள் இருவரும் கணப்பு நெருப்பருகே வெகுநேரம் எதுவுமே பேசாமல் மௌனமாக அமர்ந்திருந்தார்கள். பின்னர் ரோச்செஸ்டர் திடீரென்று அவளை நோக்கி, "மிஸ் ஜேன், நான் அழகாயிருக்கிறேனா? நீ என்ன நினைக்கிறாய்?" என்று கேட்டார்.

"அப்படி நினைக்கவில்லை" என்று சட்டென்று பதிலளித்தாள் ஜேன்.

அதன்பின் ரோச்செஸ்டர் அவளை நோக்கிப் பின்வருமாறு கூறினார்: "உண்மையாகச் சொல்கிறேன். நீ ஓர் அலாதியான பேர்வழிதான். இங்கு நீ அமைதியாகவும் அடக்கமாகவும் எளிமையாகவும் ஒரு துறவி போல அமர்ந்து கொண்டு, கேட்கிற கேள்விக்கு அல்லது சொல்கிற விஷயத்துக்குப் பட்டென்று நிர்விசாரமாக ஒரு பதிலைச் சொல்லிவிடுகிறாய். இவ்வாறு கூறினால் அதற்கு என்ன அர்த்தம்?"

"மன்னியுங்கள். நான் ரொம்பவும் வெளிப்படையாகப் பேசிவிட்டேன். தோற்றத்தைப் பற்றிய கேள்விக்கு எடுத்த எடுப்பில் அவ்வளவு லகுவில் பதில் சொல்லிவிட முடியுமா?

ஒவ்வொருவரின் அழகுணர்ச்சியும் ருசியும் வெவ்வேறு. மேலும் அழகு என்ன அவ்வளவு முக்கியமானதா—என்று ஏதாவதொரு முறையில்தான் நான் பதிலளித்திருக்கவேண்டும்" என்று அமைதியாகச் சொன்னாள் ஜேன்.

ஆனால் ரோச்செஸ்டரோ அதனை மறுத்து, "நீ அப்படி எதுவும் சொல்லியிருக்கக் கூடாது' என்று கூறினார். பின்னர் சிறிது நேரம் கழித்து, தாம் எப்படி அழகாயில்லையோ அதேபோல் அவளும் அப்படியொன்றும் அழகானவளல்ல என்ற விஷயத்தையும் வாய் விட்டுக் கூறிவிட்டார்.

அவர்கள் இப்படியெல்லாம் பேசிக்கொண்டாலும்கூட, அவர்கள் சுமுகமாகத்தான் பழகிக் கொண்டார்கள்; இரவில் வெகு நேரம் வரையில் பேசிக் களித்தார்கள். அவர்களது அன்றாடப் பேச்சும் சந்திப்பும் அநேகமாக இப்படித்தான் இருந்தன. அதில் அவர்கள் மகிழ்ச்சி கொள்வதாகவே தோன்றியது. இந்தச் சந்திப்புக்களின் மூலம் விசித்திரமான அந்தப் பிறவிகள் இருவரும் தத்தமக்கே உரிய விசித்திரமான போக்கில், தம்மையறியாமலே ஒருவரையொருவர் காதலிக்கத் தொடங்கிவிட்டார்கள்.

ரோச்செஸ்டரின் கடந்தகால வாழ்க்கையைப் பொறுத்தவரையிலும் அதில் ஏதோ மர்மம் இருந்தது; அவர் அந்த மாளிகைக்கு வந்த பின்னர், திருமதி பேர்பாக்ஸிடம் பல கேள்விகளைக் கேட்டுவிட்டு அதனை உணர்ந்திருந்தாள் ஜேன் திருமதி பேர்பாக்சும் அதிகப்படியாக ஒன்றும் சொல்லிவிடவில்லை. ரோச்செஸ்டர் இளைஞனாக இருந்த காலத்தில் அவரது தந்தையும், தமையனும் செய்த ஒரு காரியத்தால் அவர் மோசம் போய்விட்டார்; அவருக்கு மோசம் செய்த அந்தத் தந்தையும் தமையனும் இறந்தும் போய்விட்டார்கள். என்றாலும், தாம் ஒரு காலத்தில் பிறரால் மோசம் செய்யப்பட்டுப் போனவர் என்ற விஷயத்தை ரோச்செஸ்டரே அடிக்கடி வாய் திறந்து குறிப்பிடுவதுண்டு. அந்த மர்மத்தைப் பற்றி ஜேன் இவ்வளவே தெரிந்துகொள்ள முடிந்தது.

ரோச்செஸ்டர் ஐரோப்பாவில் வாழ்ந்த காலத்தில், அங்கு தாம் நடத்திய தான்தோன்றித்தனமான, தாமாதாரமான வாழ்க்கையைப் பற்றியெல்லாம் கூட ஜேனிடம் பட்டவர்த்தனமாகச் சொன்னார். எங்கெங்கு, எந்தத் தேதியில் அவர் என்ன செய்தார் • என்பதையெல்லாம் கூட, ஒளிவு மறைவற்று விவரங்களோடு கூறினார். இவ்வளவையும் கூறிவிட்டு, அவர் ஜேனை நோக்கி, இனியும் தமக்கு வாழ்க்கையில் நம்பிக்கை இருக்க முடியுமா, இனியும் தாம் சீர்

திருந்துவதற்கு இடமுண்டா, இனியேனும் தாம் உண்மையான ஆனந்தத்தை உணர்ந்து வாழ வழியுண்டா, இனியும் தமக்கு விமோசனமுண்டா என்றெல்லாம் கேட்பார். தன்மீது நம்பிக்கை வைத்து அவர் இவ்வாறு கேட்கும் கேள்விக்கு ஜேன் ஒருமுறை பின்வருமாறு பதிலளித்தாள்: "உண்டு. நீங்கள் மட்டும் தீவிரமாக முயற்சி செய்தால், காலக் கிரமத்தில் நீங்களே ஏற்றுக்கொள்ளக் கூடிய ஒரு வாழ்க்கை அமைய வழியுண்டு; உங்களது எண்ணங்களையும் செய்கைகளையும் இன்று முதலே திட்டவட்டமான உறுதியோடு திருத்த முனைந்தால், சில வருஷ காலத்தில் நீங்களே ஆனந்தத்தோடு எண்ணிப் பார்க்கக்கூடிய அளவுக்கு, மாசுமருவற்ற புதிய வாழ்க்கையின் அனுபவங்கள் உங்களுக்குக் கிட்டுவதற்கு இன்னும் வாய்ப்புண்டு."

ஞானோபதேசம் போன்ற இந்த வார்த்தைகள் ரோச்செஸ்டரின் இதயத்தில் ஆழமாகப் பதிந்தன. அவர் உடனே பின்வருமாறு சொன்னார்: "நன்ருகச் சிந்தித்துத் தான் பதில் சொல்லியிருக்கிருய். எனது கூட்டுறவுகளும், முயற்சிகளும் இதுவரையில் எப்படி இருந்து வந்தனவோ, அதுபோல் இனியும் இராது. நிச்சயம் இருக்காது."

ஒருநாள் இரவில் ஏதோ தீப்பிடித்துக் கருகும் நாற்றம் வருவதை யுணர்ந்து, ஜேன் தூக்கத்திலிருந்து திடுக்கிட்டு விழித்தெழுந்தாள். உடனே அவள் ஒரு போர்வையை எடுத்து அவசர அவசரமாகப் போர்த்திக் கொண்டு, மாளிகையின் கூடத்துக்குச் சென்ருள். அப்போது ரோச்செஸ்டரின் அறைக்குள்ளிருந்து புகை மண்டலம் வெளியேறுவதை அவள் கண்டாள். உடனே அங்கு சென்று பார்த்தபோது, ரோச்செஸ்டர் தமது படுக்கையின் மீது அயர்ந்து தூங்கிக் கொண்டிருப்பதையும், அதே சமயம் அவரது படுக்கையின் திரைகள் அவருக்கு மேலாகத் தீப்பற்றி எரிந்து கொண்டிருப்பதையும் ஜேன் கண்டாள். ஜேன் இயல்பாகவே உறுதியான குணம் படைத்தவள். எனவே அவள் அதனைக் கண்டதும், பதறிப்போய் உதவி கோரி வாய்விட்டு கத்திவிடவில்லை; அதேபோல் தூங்கிக் கொண்டிருக்கும் எஜமானரையும் எழுப்பிவிட முனையவில்லை. மாருக, ரோச்செஸ்டரின் அறையில் மேஜைமீதிருந்த தண்ணீர்ப் பாத்திரத்தை எடுத்தும், தனது அறையிலிருந்த தண்ணீரைக் கொண்டுவந்தும், அவள் அந்தத் தீயை விரைவில் அணைத்து முடித்தாள். அவள் இவ்வாறு தண்ணீரை அள்ளிக் கொட்டித் தீயை அணைத்த வேளையில் ரோச்செஸ்டர் தம்மீது பட்ட ஈரத்தால் உடனே விழித்துக் கொண்டு விட்டார். அங்கு நிகழ்ந்த விபத்தைப் பற்றி

அவர் கேள்விப் பட்டதும், அவர் ஜேனை அங்கேயே இருக்கச் சொல்லிவிட்டு, ஒரு மெழுகு வத்தியை ஏற்றிக் கையில் எடுத்துக் கொண்டு, மாளிகையின் மூன்றாவது மாடிக்குச் சென்றார். சிறிது நேரத்தில் திரும்பி வந்துவிட்டார்.

"எல்லாவற்றையும் நான் கண்டுபிடித்துவிட்டேன். எல்லாம் நான் சந்தேகப்பட்ட மாதிரிதான்" என்றார் அவர்.

"எப்படி?" என்று ஆர்வத்தோடு கேட்டாள் ஜேன். அதற்கு ரோச்செஸ்டர் பதிலளிக்கவில்லை. மாறாக, அன்றிரவு நடந்த அந்தச் சம்பவங்களைப் பற்றி அவள் யாரிடமும் பேசக்கூடாது என உத்தர விட்டுவிட்டு, அவளைப் படுக்கப் போகுமாறு கேட்டுக் கொண்டார்.



மறுநாள் ரோச்செஸ்டர் சுற்றுவட்டாரத்திலுள்ள ஒரு கிராமாந்திர வீட்டில் இரண்டு வாரப் பொழுதைக் கழித்துவிட்டுவரச் சென்றுவிட்டார். அவர் திரும்பவும் வந்தபொழுது, அவரோடு ஆண்களும் பெண்களுமாய்க் குதூகலம் மிகுந்த ஒரு விருந்தினர் கும்பலே வந்து சேர்ந்தது; அதன்பின் தார்ன்பீல்ட் மாளிகையில் இரண்டு வார காலத்துக்கும் பல்வேறு விருந்தும் வேடிக்கையும் விழாவுமாகப் பொழுது கழிந்தது.

அந்த விருந்தினர்களின் மத்தியில் பிளாங்கி இங்ராம் என்ற பெண்ணொருத்தியும் இருந்தாள். அவள் சீமாட்டி இங்ராமின் மகள். அவள் நல்ல அழகி, எனினும் அகந்தையும் ஆணவமும் தற்பெருமையும் மிக்கவள். அவளும் ரோச்செஸ்டரும் திருமணம் புரிந்து கொள்ளப் போவதாக வதந்திகள் உலாவின; அந்த வதந்தி ஜேனின் காதுக்கும் எட்டியது.

அப்போதுதான் ஜேன் உறுதியும் கட்டுப்பாடும் மிகுந்த மனத்தின் அவசியத்தையும் மதிப்பையும் உணர்ந்தாள். அவள் தன் காதில் விழுந்த செய்தியைப் பரிசீலனை செய்து பார்த்தாள்; மேலும் தனது இதயத்தின் அடியாழத்தையும் துருவி ஆராய்ந்தாள். திக்குத் திசாந்திர மற்ற, எல்லையும் முடிவு மற்ற எண்ணப் பரப்பில் எப்படியெப்படியோ கற்பனா சஞ்சாரம் செய்து களித்த சிந்தனைகளையும் உணர்ச்சிகளையும் பரிசீலனை செய்து பார்த்து, அவற்றை நடைமுறை சாத்தியப்பாடுகளின் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர முனைந்தாள். எட்டாத பழத்துக்குக் கொட்டாவி விட்ட கதையாகத் தனது எண்ணங்கள் ஆகிவிடக்கூடும் என்பதையும் அவள் உணர்ந்தாள். ரோச்செஸ்டர் தன்னிடம் காட்டிவந்த பரிவிலும் பாசத்திலும் சலுகையிலும், தான் தலைக்கு மீறிய ஆனந்தம் கண்டு அகமகிழ்ந்து போனதைத்

பெண்ணித் தன்னைத்தானே நொந்துகொண்டாள்; கடிந்து கோபித்துக்கொண்டாள். பின்னர் நிலைக் கண்ணுடியில் தன் உருவத்தையும் பார்த்தாள். கண்ணைக் கவரும் பேரழகியான பிளாங்கி தம்மெதிரே இருக்கும் போது, தார்ன்பீல்ட் மாளிகையின் சொந்தக்காரரான ரோச்செஸ்டர் போன்ற ஒரு செல்வந்தப் பிரபு அழகும் அந்தஸ்தும் இல்லாத ஜேனைப் போன்ற ஒரு பெண்ணை எப்படிக் காதலிக்க முடியும் என்று தனக்குத் தானே அவள் கேட்டுக் கொண்டாள். தம்மிடம் வேலை பார்க்கும் ஒரு சாதாரண அனுதைப் பெண்ணையா ரோச்செஸ்டர் பிரபு காதலிக்க முனைவார்? சே! நினைத்துப் பார்த்தால் அத்தனையும் அபத்தம்! அப்படிப்பட்ட ஒரு நிகழ்ச்சியைக் கற்பனை கூடப் பண்ண முடியாதே! ஜேன் அயர் இவ்வாறெல்லாம் சிந்தித்துப் பார்த்தபோது, தன்னைப் போன்ற முட்டாள் வேறு யாரும் இருக்கமுடியாது என்ற தீர்மானத்துக்கே வந்தாள்.

சீமாட்டி பிளாங்கியைப் பொறுத்தவரையில், அவள் தான் ரோச்செஸ்டரையே மணந்து கொள்ளப்போவதாக எல்லோரிடமும் சொல்லிவந்தாள்; யாவரையும் நம்பவைத்தாள்; மேலும் ரோச்செஸ்டரும் கூட அதனை மறுத்துப் பேசவில்லை. அவரது போக்கும் பேச்சும் அவளது எண்ணத்தை உறுதிப்படுத்துவது போலவே தோன்றின. தார்ன்பீல்ட் மாளிகையில் கூடியிருந்த விருந்தினர் கூட்டம் விடைபெற்றுச் செல்லும் சமயத்தில், அங்கு மிஸ்டர் மேஸன் என்ற பெயருள்ள ஒரு மனிதர் வந்தார். அவர் அன்னிய நாட்டினர் போல் காணப்பட்டார். அந்த மனிதரின் வருகையைக் கண்டு, ரோச்செஸ்டர் உள்ளுக்குள் மனம் புழுங்கினுர் என்றே தெரிந்தது; எனினும் அவர் அந்த மனிதரை அன்போடு முகமன்கூறிவரவேற்றுர். பின்னர் அந்த மனிதரை ஜமைக்கா தீவிலிருந்து வந்துள்ள தமது பழைய வெளிநாட்டு நண்பர் எனக்கூறி, விருந்தினர்களிடம் அறிமுகம் செய்து வைத்தார்.

மேஸன் அங்கு வந்து சேர்ந்த அன்றிரவில், திடீரென்று எழுந்த ஒரு கூச்சலைக் கேட்டு ஜேன் விழித்தெழுந்தாள். அந்தக் கூச்சல் எலும்புக் குருத்தையே குளிரவைத்து நடுக்கும் காட்டுமிராண்டித்தனமாக கத்தலாக ஒலித்தது; அந்தப் பயங்கரமான சப்தம் தார்ன்பீல்ட் மாளிகை முழுவதிலுமே எதிரொலித்தது. அதன் பின்னர் மாளிகையின் மூன்ருவது மாடியிலிருந்து அபயம் கோரிக் கத்தும் ஒரு குரல் எழுந்தது; அதனைத் தொடர்ந்து, ரோச்செஸ்டரின் பெயரைச் சொல்லி அழைக்கும் கம்மியுடைந்த, கலவரம் மிகுந்த குரல் ஒன்றும் கேட்டது. உடனே ஜேன் தனது உடம்பின்மீது கைக்

கட்டிய துணியை எடுத்துப் போர்த்திக் கொண்டு, தனது அறையை விட்டுப் பரபரப் போடு வெளிவந்தாள். அப்போது மாளிகையின் கூடத்தில் கூடியிருந்த விருந்தினர்களெல்லாம் திடுக்கிட்டுப் போன நிலையில். "யாரது?—என்ன நடந்தது?—தீப் பிடித்து விட்டதா? —திருடர்களா?—நாம் எங்கே ஓடுவது?" என்று பற்பல கேள்விகளை ஒருவரையொருவர் கேட்டுக் கொண்டிருப்பதைக் கண்டாள்.

அப்போது மூன்றுவது மாடியிலிருந்து ரோச்செஸ்டர் கையில் ஒரு மெழுகுவத்தி விளக்கோடு கீழே இறங்கி வந்தார். வரும்போதே, "ஒன்று மில்லை. எல்லாம் சரியாகி விட்டது. வேலைக்காரி ஒருத்தி பேய்க் கனவு கண்டு அலறி யிருக்கிருள். அவ்வளவுதான். சரி. எல்லோரும் படுக்கப் போகலாம்." என்று கூறினுர்.

விருந்தினர்கள் எல்லோரும் படுக்கப் போய்விட்டார்கள். ஜேனும் தனது அறைக்குத் திரும்பிவிட்டாள். அப்போது அவளது அறைக் கதவைத் தட்டும் ஓசை கேட்டது; தொடர்ந்து ரோச்செஸ்டர் அவளைப் பின்வருமாறு அழைக்கும் குரலும் கேட்டது: "ஜேன்! விழித்திருக்கிருயா? உன்னிடம் பஞ்சு இருக்கிறதா? இருந்தால் அதனை எடுத்துக் கொண்டு, என்னோடு வா." ஜேனும் அதன் படி பஞ்சை எடுத்துக்கொண்டு, ரோச்செஸ்டருடன் மேல் மாடிக்குச் சென்ருள். அங்கு அவளது அறைக்கு நேர்மேலாக அந்த மாடியில் இருந்த அறையில், மேஸன் பலத்த காயங்களுற்ற நிலையில் இருந்தார். அவர் உடம்பில் குத்துக் காயம் தென்பட்டது; மேலும் அவரது ஒரு பக்கத்துத் தோளிலும், கரத்திலும் ஏதோ ஒரு காட்டு மிருகம் கடித்துக் குதறியது போல் சதை பிய்ந்து ரத்தம் கொட்டிக் கொண்டிருந்தது. அந்த அறையின் சுவர்ப் பக்கமாகத் தொங்கவிடப்பட்டிருந்த திரை ஒரு பக்கமாக இழுத்துக் கட்டப்பெற்றிருந்தது; அதன் பின்புறத்தில் அடுத்த அறைக்குள் செல்லும் வாசற்கதவு இருந்தது. அந்தக் கதவுக் கப்பாலிருந்து விசித்திரமான உறுமல் சப்தமும், அதனைத் தொடர்ந்து காட்டுத்தனமான சிரிப்பொலியும் வந்தன. அவ்வாறு சப்தம் போடுவது வேலைக்காரியான கிரேஸ் பூல் என்றுதான் ஜேன் எண்ணினுள்.

ரோச்செஸ்டர் அந்தக் கதவை நன்ருக இழுத்துமூடிப் பூட்டினுர். பின்னர் மேஸனுக்கு ஏற்பட்டிருந்தகாயங்களைக்குளிர்ந்த தண்ணீரால் கழுவித் துடைக்குமாறு ஜேனிடம் கூறிவிட்டு, அவர் ஒரு டாக்டரை அழைத்து வர வெளியே சென்ருர்; சிறிது நேரத்தில் டாக்டருடன் திரும்பி வந்தார். டாக்டரும் ஏதோ ரகசியம் போல வந்தார்; அங்கு

நடந்ததைப் பற்றி அவர் எதுவும் கேட்கவில்லை; அவர் எவ்வித வியப்பும் அடையவில்லை. அவர் ஒன்றுமே பேசாமல் மேஸனுக்குக் கட்டுக்களைப் போட்டுவிட்டுச் சென்றுவிட்டார். மேஸன் மட்டும் "அவள் என்னைப் புலிபோல் பாய்ந்து தாக்கி விட்டாள்!" என்று கூறினார்.

சீக்கிரத்திலேயே அவர் நிதானமடைந்து நடமாடும் சக்தியைப் பெற்றார். பின்னர் அவருக்குத் தெம்பூட்டும் நல்ல மது கொடுக்கப்பட்டது. அதன் பின் அவர் பின் வாசற்படிக் கட்டின் வழியே இறங்கி, அங்கு நின்ற வண்டியில் ஏறிப் போய்விட்டார்.

"இந்தக் கொடுமையைச் செய்தது யார்?" என்று ஜேன் ரோச்செஸ்டரிடம் கேட்டாள்.

"அவளாகத்தான் இருக்க வேண்டும்—ஆமாம். கிரேஸ் பூல் தான் இப்படிச் செய்து விட்டாள்" என்று பதிலளித்தார் அவர்.

என்றாலும் அதன் பின்னரும் கிரேஸ் பூல் வேலையைவிட்டு நீக்கப் படவும் இல்லை; அவளும் புத்தித் தெளிவோடு நிதானத்தோடு காரியங்களைக் கவனித்துத் தான் வந்தாள். இதைக் கண்ட ஜேன் எதுவுமே புரியாமல் திகைத்தாள். மேலும், அங்கு தங்கியிருந்த விருந்தினரிடமும், மேஸனுக்கு மிகவும் முக்கியமானதொரு வேலையின் காரணமாகத் திடீரென்று அழைப்பு வந்ததால், அவர் உடனே சொல்லாமற் கொள்ளாமல் புறப்பட நேர்ந்ததாகவும், அதனால் அவர் அதிகாலையிலேயே அங்கிருந்து போய் விட்டதாகவும் தகவல் கூறப் பட்டது.



அந்த மாளிகைக்கு வந்திருந்த விருந்தினர்கள் எல்லோரும் புறப்பட்டுச் சென்ற பின், ஜேனின் பழைய தாதியான பெஸ்ஸியிடமிருந்து ஜேனுக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் திருமதி ரீட் மரணப் படுக்கையில் இருப்பதாகவும், சாவதற்குமுன் அவள் ஜேனைக் காண விரும்புவதாகவும் கண்டிருந்தது. இந்தத் தகவலை அறிந்ததும், தன் அத்தையின் மீது வெறுப்பும் கசப்பும் ஒருபுறமிருந்தாலும், ஜேன் உடனே புறப்பட்டுச் சென்று, அவளைக் கண்டு திரும்பத் தீர்மானித்தாள். தனது தீர்மானத்தைப் பற்றி அவள் ரோச்செஸ்டரிடம் கூறியபோது, அவர் அவள் அங்கு செல்வதையே பலமாக ஆட்சேபித்தார். பின்னர் அவள் அங்கு சென்றுவிட்டு, சீக்கிரமே திரும்பி வருவதாக உறுதி கூறினால் அவளைப் போகவிடுவதாகக் கூறினார். அவளும் அவ்வாறே உறுதிகூறி விட்டுப் புறப்பட்டுச் சென்றாள்.

ஜேன் தனது அத்தையின் வீட்டுக்குச்சென்றபோது அவள் மரணப் படுக்கையில் தான் இருந்தாள்; எனினும் அதன் பின் சில வாரங்கள் கழித்துத் தான் மரணம் சம்பவித்தது. மரணப்படுக்கையில் கிடந்த திருமதி ரீட் தனக்குப் புத்தி தெளிவாகவிருந்த ஒருநேரத்தில் ஜேனிடம் சில விஷயங்களைக் கூறினாள். அதாவது, ஜேனின் சித்தப்பாவான அயர் என்பவரிடமிருந்து முன்னமொரு முறை ஒரு கடிதம் வந்ததாகவும். அந்தக் கடிதத்தில் அவர் ஜேனைத் தமது சொத்துக்கு வாரிசாக்கும் விருப்பத்தைத் தெரிவித்து, அவளது விலாசத்தைக் கோரியிருந்ததாகவும், ஆனால் திருமதி ரீட் அவருக்கு ஜேன் இறந்துபோய் விட்டதாகப் பதிலெழுதிவிட்டதாகவும் தெரிவித்தாள். இதனைக் கூறிவிட்டு, தான் செய்த மாபெரும் துரோகத்துக்காக, ஜேனிடம் தன்னை மன்னித்து விடும்படி வேண்டினாள்.

அத்தையின் மரணத்துக்குப் பின்னர் ஜேன் மீண்டும் தார்ன் பீல்டுக்குத் திரும்பினாள். அவ்வாறு திரும்பி வரும்போது, அவள் முதன்முதல் ரோச்செஸ்டரைச் சந்தித்த அதே இடத்தில், அதே வேலிப்புறத்துப் படிக்கட்டில் ரோச்செஸ்டர் அமர்ந்திருப்பதை அவள் கண்டாள். அவளைக் கண்டதும் அவரும் "வந்துவிட்டாயா? வா" என்று மகிழ்ச்சி பொங்கக் கத்தினார்.

அவர்கள் இருவரும் அவள் ஊருக்குப் போய்வந்த விஷயத்தைக் குறித்துச் சிறிது நேரம் உரையாடினார்கள்; பின்னர் அவள் அங்கில்லாத சமயத்தில், அவர் லண்டனுக்குப் போய் விட்டு வந்த செய்தி தெரியுமா என்று அவர் அவரிடம் திடீரென்று கேட்டார். 'தெரியுமே!' என்று பதிலளித்தாள் ஜேன். பின்னர் அவள் அதனை அவரிடம் பின்வருமாறு விளக்கினாள்: "நீங்கள் லண்டனுக்குப் போயிருக்கிறீர்கள் என்று திருமதி பேர்பாக்ஸின் கடிதம் மூலம் அறிந்தேன்: நீங்கள் எதற்காகப் போனீர்கள் என்பதும் எல்லோருக்கும் தெரியும். நீங்கள் கல்யாணம் பண்ண ஏற்பாடு செய்து வருகிறீர்கள்."

மறுநாள் ரோச்செஸ்டர் ஜேனிடம் பேசும்போது பின்வருமாறு சொன்னார்: "ஜேன்! இந்த மாளிகையிலுள்ளவர்களிடம் நீ மிகவும் பழகிப் போய் விட்டாய். அடெலியிடமும் திருமதி பேர்பாக்ஸிடமும்கூட உனக்கு மிகுந்த பாசம். இல்லையா? பரிதாபம் தான்! ஆனால் இந்த உலக வாழ்க்கையின் விசித்திரம் அதுதான். இங்கிருந்து உன்னை யாரும் போகும்படிச் சொல்வதற்கு முன் நீயே விரைவில் வேறோர் இடத்துக்குப் போய்விடுவது நல்லது."

"நான் போகத் தான் வேண்டுமா?" என்று கேட்டாள் ஜேன்.

"அப்படித்தான் நேரும் என்று நான் நம்புகிறேன். இன்றிரவே நான் அதைப்பற்றி உன்னிடம் சொல்லவிருந்தேன். எனக்கும் விரைவில் திருமணம் ஆகப்போகிறது. மேலும் அடெலியும் இனிப் பள்ளிக் கூடத்துக்குச் சென்றே படிக் கப் போகிருள்."

ரோச்செஸ்டரின் இந்தப் பேச்சு ஜேனுக்கு இடி விழுந் தாற்போலத்தான் இருந்தது; எனினும் அவள் அதை என்றும் எதிர்பார்த்திருந்தாள். எனவே இந்தப் பேச்சைக் கேட்டதும், அவள் புதியதோர் இடத்தில் வேலை தேடுவதற்காக, விளம் பரம் செய்யவேண்டியதுதான் என்று மட்டும் பதில் கூறினாள்.

ரோச்செஸ்டர் திடீரென்று பின்வருமாறு பேசினார்: "வேண் டாம். யோசித்துப் பார்த்ததில் நீ போகவேண்டாம் என்றே படுகிறது, நீ இங்கேயே இருக்க லாம்."

ஆனால் ஜேனோ உணர்ச்சி பொங்கப் பின்வருமாறு பதி லளித்தாள்: "இல்லை, நான் போகத்தான் வேண்டும்; போகத் தான் போகிறேன். உங்களுக்கு எவ்விதப் பயனும் இல்லாமல், நான் இங்கேயே தங்கியிருப் பதில் என்ன பயன்? நீங்களே சொல்லுங்கள். நான் ஏழையாக வும் எளிமையாகவும் இருப்ப தால்எனக்கு ஆசாபாசங்களோ, இதயமோ இல்லையென்று நீங் கள் நினைத்துவிட்டீர்களா? எனக்கு மட்டும் கடவுள் இன் னும் கொஞ்சம் அழகையும் ஏராளமான சொத்தையும் வழங்கியிருந்தால், உங்களை விட்டுப் பிரிந்து செல்வது எனக்கு எவ்வளவு சிரமமாக இருக்கிறதோ, அதைக்காட்டி லும் என்னைவிட்டு நீங்கள் பிரிய நேர்வதை அதிகச் சிரம மானதாக நான் ஆக்கியிருப் பேன். நான் ஒன்றும் உங்களி டம் உடலிச்சையின் காரண மாகவோ, அல்லது பழக்கம், வழக்கம், சம்பிரதாயம் என்ற காரணங்களைக் கொண்டோ பேசவில்லை. எனது ஆத்மா தான் உங்கள் ஆத்மாவோடு பேசுகிறது. நாம் இருவரும் மரணத்தைக் கடந்து, ஆண்ட வனின் திருவடிகளுக்கெதிரே சரிசமமாக நிற்பது போன்ற எண்ணத்துடன்தான் நான் பேசுகிறேன்."

ஜேனின் இந்தப் பேச்சைக் கேட்டதும், ரோச்செஸ்டர் அவளைத் தம் இருகரங்களாலும் வாரியணைத்தவாறு, "ஜேன்! நீ சொன்னது போலவே ஆகட் டும், ஜேன்!" என்று சொன்னார்.

ஜேன் அவரது அரவணைப்பி லிருந்து விடுபடத் திமிறிய வளாய், அவரெதிரே நிமிர்ந்து நின்றாள். அவரோ அவளை நோக்கிப் பின்வருமாறு கூறி னார்: "ஜேன்! உனது விருப் பமே உனது வாழ்வைத் தீர்

மாளிக்கும். என்னைப் பொறுத்த வரை என்னையும் என் இதயத்தையும் உனக்கே அர்ப்பணிக்கிறேன். வாழ்நாள் முழுவதும் நீ என்னோடிணைந்து எனக்குத் துணை நிற்கவேண்டும் என்றே உன்னை நான் வேண்டுகிறேன்.'' இதன் பின்னர் அவர் இங்ராமை மணந்துகொள்ளும் எண்ணம் தமக்கு என்றும் இருந்ததில்லை என்பதையும், அவர் ஜேனையே, ஜேனை மட்டுமே என்றும் விரும்பியதாகவும் அவளிடம் விளக்கிக் கூறினார்.

''அப்படியானல், நானும் உங்களை மணந்து கொள்கிறேன்'' என்ருள் ஜேன்.



திருமணத்துக்கு விரைவிலேயே நாள் குறிக்கப்பட்டது; திருமண நாளும் விழுந்தடித்துக் கொண்டு நெருங்கி வந்தது. திருமணத்தைப் பூங்காவுக்கு அருகிலுள்ள சிறிய தேவாலயத்தில், சுருக்கமாகவும் அந்தரங்கமாகவும் முடித்துக் கொள்வதென்றும், திருமணத்துக்குப் பின்னர் தம்பதிகள் இருவரும் அங்கு தங்கியிராமல் அயல்நாடுகளுக்கு உல்லாசப் பயணம் செய்வதென்றும் அவர்கள் முடிவு கட்டினார்கள்.

திருமணத்துக்கு முந்திய நாள் இரவில் ஜேனுக்கு ஒரு பயங்கரமான அனுபவம் ஏற்பட்டது. அது அவளது உள்ளத்தில் பயபீதியையும் சந்தேகத்தையும் ஏற்படுத்தியது. அன்று நடுராத்திரிவேளையில் ஜேன் திடுக்கிட்டு விழித்தெழுந்தாள். எழுந்தபோது அவளது அறையிலுள்ள அலங்கார மேஜையெதிரே கையில் மெழுகுவத்தியை ஏந்திக் கொண்டு நிற்கும் ஒரு பெண்ணுருவத்தைக் கண்டாள். அந்த உருவம் ஜேனின் பக்கமாகத் திரும்பியபோது, அதன் கறுத்து வீங்கிய, பயங்கரமான முகத்தை ஜேன் கண்டாள். அந்த உருவம் நாற்காலியின் மீது கிடந்த ஜேனின் திருமண உடையை எடுத்து, அதைத் துப்புதுப்பாகக் கிழித்துத் தன் காலடியிற் போட்டு மிதித்தது. பின்னர் அந்த உருவம் ஜேனை நோக்கி நெருங்கி வந்து, மெழுகுவத்திச் சுடரை அவளது முகத்துக்கு நேரே ஏந்திப் பிடித்தது, ஜேனைவெறித்து நோக்கியது; பின்னர் அந்த மெழுகுவத்திச் சுடரை அது ஊதியணைத்து விட்டு, அந்த அறையை விட்டு வெளியேறி மறைந்தது.

இந்த அனுபவத்தால் ஜேன் பயபீதி கொண்டு, அப்படியே படுக்கையில் செயலற்றுக் கிடந்து விட்டாள். மறுநாட் காலையில் அவள் முந்திய இரவில் தான் பெற்ற அனுபவத்தை ரோச்செஸ்டரிடம்விளக்கினாள். அவரோ அவ்வாறு வந்தது கிரேஸ் பூலாகத்தான் இருக்குமென்றும், ஜேன் தூக்கக் கலக்கம் கலையாத கண்களோடு

பார்த்தால்தான் கிரேஸ் பூலின் முகம் வித்தியாசமானதாகவும் பயங்கரமானதாகவும் தோற்றியிருக்கிறதென்றும் கூறினார். என்றாலும் இப்படிப்பட்ட விசித்திரமான பிறவியான கிரேஸ் பூலே அங்கு இன்னும் வேலைக்கு வைத்திருக்க வேண்டிய காரணம் என்ன என்பதை அவர் விளக்க வில்லை. அது ஓர் ரகசியம் என்றும், அதனைத் திருமணம் முடிந்து, ஒரு வருஷம் கழித்தவுடன் தெரிவிப்பதாகவும், அதற்கு முன் தெரிவிக்க இயலாது எனவும் அவர் கூறிவிட்டார்.

ரோச்செஸ்டரின் விளக்கமும் பேச்சும் ஜேனுக்குத் திருப்தியளிக்கவில்லைதான். என்றாலும் அவர்மீது கொண்டிருந்த காதலின் விளைவால், அவள் அதனை மறு வார்த்தையின்றி ஏற்றுக் கொண்டவாறு, அவரை நோக்கித் திருப்தியுணர்ச்சியோடு புன்னகை புரிந்தாள்.

பின்னர் ரோச்செஸ்டரும் ஜேனும் ஒருவர் கையை ஒருவர் பிடித்தவாறு, அந்தச் சிறிய தேவாலயத்தை நோக்கி நடந்து சென்றார்கள். அங்கு பாதிரியாரும், திருமணப்பதிவு செய்யும் குமாஸ்தாவும் காத்து நின்றார்கள். இவர்கள் இருவரும் போய்ச் சேர்ந்தவுடன், திருமணச் சடங்குகள் தொடங்கின. அப்போது, தேவாலயத்தின் இருண்ட மூலையொன்றில் ஒதுங்கி நின்று கொண்டிருந்த இரண்டு மனிதர்கள் முன்னால் வந்தார்கள் அவர்களில் ஒருவர் பின்வருமாறு சத்தமிட்டார்; "இந்தத் திருமணம் நடைபெறக் கூடாது!"

அந்த மனிதர்களில் ஒருவர் மிஸ்டர் மேஸன்; மற்றவர் லண்டன் நகரத்து வழக்கறிஞர் ஒருவர். வழக்கறிஞரே அவ்வாறு சத்தமிட்டார். பாதிரியாரும் குமாஸ்தாவும் அந்தக் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டவர்களாய், அந்த மனிதர்கள் இருவரையும் பார்த்தார்கள்; அவர்களது வாயும் தாமாகவே செயலிழந்து விட்டன.

ரோச்செஸ்டர் லேசாகத் தடுமாறினார்; எனினும் மறுகணமே உறுதியாக நின்றுகொண்டு, தமது தலையைத் திருப்பாமலே "திருமணம் நடக்கட்டும்" என்று குரல் கொடுத்தார்.

பாதிரியாரோ, "மேற்கொண்டு விசாரிக்காமல் நான் எதையும் நடத்தி வைக்க முடியாது" என்று பதிலளித்தார். பின்னர் அவர் அந்த வழக்கறிஞரிடம் திரும்பி, "உங்கள் ஆட்சேபணைக்குக் காரணம் என்ன?" என்று கேட்டார்.

"காரணமா? ஏற்கெனவே ரோச்செஸ்டருக்குத் திருமணமாகி விட்டதுதான் காரணம். மேலும் அவரது மனைவி இன்னும் உயிரோடிருக்கிறாள்" என்றார் வழக்கறிஞர்.

ஜேனுக்கு இதயத்தில் ஈட்டியைக் கொண்டு சொருகியது போலிருந்தது. இதயமே பட்டென்று நின்று விடும்போலிருந்தது. எனினும் அவள் மயங்கி விழுந்து விடவில்லை. அவள் தன்னைத்தானே சுதாரித்துக் கொண்டு, ரோச்செஸ்டரை ஏறிட்டுப் பார்த்தாள். அவரது முகமோ உணர்ச்சியற்று வெளுத்துப் போயிருந்தது. பின்னர் அந்த வழக்கறிஞர் மேஸனால் கையெழுத்திடப் பெற்ற அத்தாட்சி பூர்வமான, நீதி மன்றத்தில் தாக்கல் செய்யப்பெற்ற ஒரு பத்திரத்தை எடுத்து நீட்டினார். அதில் பதினைந்து வருடங்களுக்கு முன்னால், ரோச்செஸ்டர் மேஸனின் சகோதரியான பெர்த்தா மேஸனை, ஜமைக்காகாவில் திருமணம் புரிந்து கொண்டதாகவும், அந்த பெர்த்தா மேஸன் உயிரோடிருப்பதைச் சமீபத்தில் மேஸன் கண்ணால் கண்டதாகவும் வாக்குமூலம் அளிக்கப்பட்டிருந்தது. இந்த வாக்குமூலத்தை உறுதிப் படுத்த மேஸன் முன்னால் வந்தார்; மேஸனைக் கண்டதும் ரோச்செஸ்டரின் சர்வாங்கமும் அதிர்ந்து நடுங்கியது.

"நீங்கள் அவளை எங்கே பார்த்தீர்கள்?" என்று மேஸனை நோக்கிக் கேட்டார் பாதியார்.

"தார்ன் பீல்ட் மாளிகையில் தான்!" என்றார் மேஸன்.

"இருக்கவே முடியாது!" என்று பாதிரியாரே பதிலளித்தார்; "நானும் இந்த ஊரில் பல வருடங்களாகக் குடியிருக்கிறேன், தார்ன் பீல்ட் மாளிகையில் ரோச்செஸ்டரின் மனைவி ஒருத்தி இருப்பதாக நான் என்றும் கேள்விப்பட்டதில்லை."

"உண்மை அதுவல்ல" என்று கத்தினார் ரோச்செஸ்டர். பின்னர் அவரே எல்லாவற்றையும் விளக்கத் தொடங்கினார்; "அதைப் பற்றி எவர் காதிலும் விழக்கூடாது என்று நான்தான் கவனத்தோடு ஏற்பாடு செய்திருந்தேன். என்வீட்டில் பைத்தியம் பிடித்த பெண்ணொருத்தி இருக்கிறாள் என்பதை என் வேலைக்காரர்கள் அறிவார்கள்; ஆனால் அவள் யார் என்பதை அவர்கள் அறியமாட்டார்கள். பாதிரியாரே! உங்கள் புத்தகத்தை மூடுங்கள்; உங்கள் சடங்கு அங்கியையும் கழற்றி விடுங்கள், இன்று இங்கு இந்தத் திருமணம் நடைபெறப் போவதில்லை. மறுதார மணம் என்பது மோசமானதுதான். என்றாலும் நான் மறுதார மணமே செய்ய விரும்பினேன். ஆனால் விதி என்னை வென்று விட்டது. ஆண்டவன் என்னைத் தடுத்து விட்டார். பெர்த்தா மேஸன் ஒருபைத்தியக்காரி-அவளதுகுடும்பமே பைத்தியக்காரக் குடும்பம், பைத்தியம் அவளது குடும்பத்தின் பரம்பரை வியாதி, அவளுடைய தாயும் ஒரு பைத்தியம்; அத்துடன் பெரிய குடிகாரி. திருமணத்துக்குப் பின்னர்தான் எனக்கு இது தெரிய

வந்தது. பெர்த்தா தன் பெற்றோர்களின் வெறித்தனத்தையும் கெட்ட பழக்கங்களையும் பின்பற்றினாள்; பல விதத்தில் அவர்களையும் அவள் மிஞ்சிவிட்டாள்! அடடா எனக்குஎப்படிப் பட்ட மனைவி வந்து வாய்த்தாள் தெரியுமா? வாருங்கள்! எல்லாரும் வாருங்கள் என் வீட்டுக்கு வந்து எனது வேலைக்காரிகிரேஸ் பூலின் பராமரிப்பிலிருக்கும் அந்தப் பிசாசை - என்மனைவியைப் பாருங்கள் இதோ இங்கு என்னருகில் நிற்கும் இந்தக் கன்னிப் பெண்ணுக்கு இதெல்லாம் ஒன்றும் தெரியாது. ஆம், ஏமாற்றத்துக்கு இரையாகி, வெறிபிடித்த காட்டுப் பிறவியான ஒரு மிருகத்தை மனைவியாகக் கைப் பிடிக்க நேர்ந்த இந்தத் துர்ப்பாக்கிய சாலியோடு சாஸ்திர சம்மதமற்ற திருமண பந்தம் செய்ய நேரும் என்று இவள் கனவு கூடக் கண்டிருக்க மாட்டாள்.''

இதன் பின்னர் அவர் ஜேனின் கையை இறுகப் பிடித்திருந்தவாறு, அங்கிருந்து வெளியேறினார். மற்றவர்களும் அவரைப் பின் தொடர்ந்து சென்றார்கள். அவர் வேக வேகமாகத் தமது மாளிகையை நோக்கி நடந்தார்; மாளிகையின் மூன்றாவது மாடியை—கிரேஸ் பூலின் அறை எனச் சொல்லப்பட்டு வந்த அறையை—நோக்கிச் சென்றார். அவர் அந்த அறையின் கதவைப் படாரென்று திறந்து காட்டினார். அங்கே அந்தக் காட்டுமிராண்டித்தனமான, மூர்க்கமான வெறி பிடித்த உருவம் தென்பட்டது. அந்த உருவத்தைத்தான் முந்திய நாள் இரவில் ஜேன் தன் அறையில் கண்டிருந்தாள். அங்கு கிரேஸ் பூலும் இருந்தாள். அவள் ரோச்செஸ்டரை எச்சரிப்பதற்காகத் திடீரென்று வாய் விட்டுக் கத்தினாள். மறு கணத்திலேயே அந்தப் பயங்கரமான உருவம் -- மனிதத் தன்மையைக் காட்டிலும் மிருகத் தன்மையே அதிகமாகத் தோற்றிய அந்தப் பிராணி—ரோச்செஸ்டரின்மீது மூர்க்கத்தனமாகப் பாய்ந்தது. ஆனால் அவரோ அவளைத் தமது பலங்கொண்ட மட்டும் பிடித்து, அறைக்குள் தள்ளினார்; பின்னர் தம்மோடு வந்தவர்களையும் அழைத்துக்கொண்டு, கீழிறங்கினார்.

மாடியிலிருந்து இறங்கிவரும் சமயம் அந்த வக்கீல் ஜேனை நோக்கிப்பின்வருமாறு கூறினார்: ''ஜேன்,உன்மீது எந்தப் பழியும் நேரவில்லை என்பதை உனது சித்தப்பா அயர் அறியவந்தால், அவர் மிகவும் மகிழ்ச்சியடைவார். ஆனால், மிஸ்டர் மேஸன் மதீராவுக்குத் திரும்பிச் செல்லும் வரையிலும், அவர் சாகாமல் பிழைத்திருக்க வேண்டும்.''

தனக்கும் ரோச்செஸ்டருக்கும் திருமணம் நடக்கப்போகும் செய்தியை, ஜேன் மதீராவிலிருந்து தன் சித்தப்பாவுக்குக் கடிதம் மூலம் தெரிவித்திருந்

தாள்; அவருக்கும் அந்த விஷயம் தெரிந்திருக்கட்டும் என்று அவள் நினைத்தாள். ஆனால் இப்போதோ அந்த வழக்கறிஞர் கூறிய விவரங்களிலிருந்து, அவளது கடிதம் அங்கு போய்ச் சேர்ந்த சமயத்தில், மிஸ்டர் மேஸன் அவளது சித்தப்பாவைப் பார்க்கப் போயிருந்ததாகவும், தனது அண்ணன் மகளுக்குத் திருமணம் நடக்கவிருக்கும் செய்தியை அறிந்தும், அவள் இன்னும் உயிரோடிருக்கும் உண்மையை அறிந்தும், அவளது சித்தப்பா மிகுந்த மகிழ்ச்சி கொண்டதாகவும், அந்த மகிழ்ச்சியில் அவர் கடிதத்திலுள்ள விஷயங்களைத் தம்மைக் காண வந்திருந்த மிஸ்டர் மேஸனிடம் தெரிவித்ததாகவும் புலனாயிற்று. அந்த விஷயத்தைத் தெரிய வந்ததுமே, மேஸன் அவரிடம் ரோச்செஸ்டருக்கு ஏற்கெனவே திருமணமாகியுள்ள விஷயத்தைத் தெரிவித்தார். உடனே ஜேனின் சித்தப்பா அவரை அப்போதே லண்டனுக்குச் சென்று, ஒரு வழக்கறிஞரை அமர்த்திக் கொண்டு போய், அந்தத் திருமணத்தைத் தடுத்து நிறுத்துமாறு வேண்டிக் கொண்டார். அதன்படித்தான் திருமணம் தடைபட்டுப் போயிற்று: வழக்கறிஞரின் கூற்றிலிருந்து இத்தனை விஷயங்களும் அம்பலமாயின.

* * *

எல்லோரும் போய் விட்டார்கள். அதன்பின் ரோச்செஸ்டரும் ஜேனும் மட்டும் தனித்திருந்த நேரத்தில், அவர் அவளை நோக்கிப் பின் வருமாறு கேட்டார்: "இப்போது உனக்கு எல்லாம் தெரிந்து போய்விட்டது. எனினும் நீ என்னை மன்னிப்பாயா?"

ஜேன் அவரை ஏற்கெனவே மன்னித்து விட்டாள். அதனைத் தெரிந்ததும், அவர் அவளைத் தம்மோடு ஓடிவந்து விடும்படியும், மத்தியதரைக் கடலின் கரையருகே தமக்குச் சொந்தமாயுள்ள ஒரு மாளிகையில் சென்று இருவரும் ஆனந்தமாக வாழலாமென்றும் அவளிடம் கூறினார். மேலும் பெர்த்தா மேஸனோடு தமக்கு நடந்த திருமணம் தமது தந்தையும் தமையனும் ஏற்பாடு செய்ததுதான் என்றும், அவர்கள் செய்த மோசத்தாலேயே தாம் இவ்வளவு துூரம் அல்லற்பட நேர்ந்தது என்றும் அவர் தெரிவித்தார். மூன்றும் மாடியிலுள்ள அந்தப் பைத்தியம் பிடித்த பெண்ணை அவர் தம் மனைவி என்றே கருதவில்லை. மேலும் அவர் ஜேனை நோக்கி, அவளைச் சந்திக்கும் வரையிலும் தம் வாழ்வில் தாம் காதல் என்பதையே உண்மையில் உணரவில்லை என்றும், காதலின் வலிமையையும் வனப்பையும் அவள் உறவிலேயே கண்டதாகவும் கூறி, தம்மை அவள் ஏற்றுக் கொள்ளும்படி மிகவும் மன்றாடினார். அத்துடன் அவர் அவளைத் தம்மோடு ஆரத் தழுவவும் முனைந்தார்;

ஆனால் ஜேனே அவரது அரவணைப்பில் சிக்காமல் அந்த அறையை விட்டே ஓடிப்போய் விட்டாள்.

அன்றிரவு அவளுக்கு ஒரு விசித்திரமான எண்ணம் தோன்றியது. அதாவது அவளது தாயின் ஆவி வந்து, "மகளே! சபலத்துக்கு இரையாகி விடாதே, ஓடிப் போய்விடு!" என்று உபதேசிப்பதுபோல் அவள் உணர்ந்தாள். எனவே அன்றிரவு அர்த்தராத்திரியில் அவள் தன்னிடமிருந்த சாதாரண உடையொன்றை எடுத்து மாட்டிக் கொண்டு, மூச்சுப் பேச்சுக் காட்டாமல் அந்த மாளிகையை விட்டு வெளியேறி விட்டாள். பொழுது விடிந்த பின்னர் அவள் நடந்து சென்ற பாதையில் எதிர்ப்பட்ட ஒரு கோச்சு வண்டியை நிறுத்தி, தன்னிடமுள்ள மிகக் குறைந்த பணத்துக்கு அந்த வண்டிக்காரன் எவ்வளவு தொலைக்கு அவளைக் கொண்டு சேர்க்க இயலுமோ அந்தத் தொலைக்கு வண்டியை ஓட்டுமாறு வேண்டிக் கொண்டாள். அதன்பின் அந்த வண்டியில் ஏறிச் சென்றாள். பின்னர் அவள் எங்கோ இறங்கி, இரண்டு நாட்களாக நாட்டுப்புறத்தில் கால்போன போக்கில் சுற்றித் திரிந்தாள். அவளுக்கு உண்பதற்கு உணவும் இல்லை; கையில் காசும் இல்லை. மேலும் அலைந்து திரிந்த களைப்பு வேறு, பசியும் பட்டினியும் ஒரு பக்கம். இந்நிலையில் அவள் வாடி மெலிந்து, தாங்கமுடியாத பசிக் கொடுமையால் அங்கு மிங்கும் உணவுப் பிச்சை கேட்டாள். பின்னர் மழையும் பிடித்துக் கொண்டது. அந்த மழையில் அவள் தெப்பமாக நனைந்து, மாற்றுடை கூட இல்லாது குளிரில் வெடவெடத்து நடுங்கினாள். கடைசியாக ஒருநாள் இரவில் தூரத்தில் ஒரு பழைய சிறு வீட்டில் விளக்கெரியும் ஒளியைக் கண்டாள்; அந்த வீட்டுக்குச் சென்று கதவைத் தட்டினாள். அவளுக்குப் பிராணனே போய்விடும் போலிருந்தது, எனவே கதவைத்திறந்த வேலைக்காரியிடம் இரவில் தங்குவதற்கு இடம் கேட்டாள். அவளோ இவளை விரட்டியடிக்கவே முனைந்தாள்.

ஆனால் ஜேனுக்கு அப்பால் நடந்து செல்லககூடத் தெம்பில்லை. எனவே அவள் அந்த வீட்டின் வாசற்படியிலேயே தன்னை மீறிய களைப்பாலும் ஆயாசத்தாலும் சோர்ந்து சாய்ந்தாள். அவ்வாறு சாயும்போது, "இனி நான் சாவதைத் தவிர வேறு வழியில்லை" என்று வாய் விட்டுக்கூறினாள். அந்தச் சமயத்தில் அவளுக்குப் பின்னால் நிலவிய இருளுக்குள்ளிருந்து யாரோ ஒருவரின் குரல் அசரீரி போலப்பின் வருமாறு கூறிற்று: "எல்லாரும் சாகவேண்டியவர்கள்தான். என்றாலும் எவரும் பட்டினி கிடந்து சாகக் கூடாது." அது ஜான் ரிவர்ஸ் என்பவனின் குரல்தான்; அவன்

அந்தக்கிராமத்தின் பாதிரியார். அந்த வீடு அவனது சகோதரிகள் இருவருக்கும் உரிய வீடு. அவர்களது தந்தை சமீபத்தில் தான் காலமாகி விட்டார். எனவே அவன் தன் சகோதரிகளோடு தாற்காலிகமாக அந்த வீட்டில் தங்கியிருந்தான்.

அவன் ஜேனை அந்த வீட்டுக்குள் அழைத்துச் சென்றான்; அங்கு அவர்கள் அவளைக் கவனமாகப் பராமரித்தார்கள்; ஒன்றிரண்டு நாட்களில் ஜேன் மீண்டும் தன் உடம்பில் தெம்பு பெற்றாள். இதற்கிடையில் அவள் அந்த அன்புள்ளம் மிகுந்த நபர்களிடம் தனது கதையையெல்லாம் சொன்னாள்; எனினும் அவள் ஆசிரியை வேலை பார்த்து வந்த அந்த மாளிகையின் பெயரையும், அதனை விட்டுத் தான் வெளியேற நேர்ந்ததற்கான காரணங்களையும் அவர்களிடம் கூறாமல் மூடி மறைத்து விட்டாள்.

கடைசியில் அவர்கள் எல்லோரும் தம்மைப் பற்றியும் அவளிடம் கூறிப் பரஸ்பரம் ஒருவரை யொருவர் அறிமுகம் செய்து கொள்ளும் சமயத்தில் ஓர் அதிசயமான, எதிர்பாராத உண்மை வெளிப்பட்டது. அதாவது ஜான் ரிவர்சும் அவனது சகோதரிகளும் ஜேனின் தாய் மாமன் மக்கள்தான் என்பது புலனாயிற்று. ஆம். அவர்கள் ஜேனின் தாயாருடன் பிறந்த சகோதரர் மக்கள்தான். எனவே ஜேன் அந்த வீட்டிலேயே தங்கினாள்; இதற்கிடையில் மதீராவிலிருந்த ஜேனின் சித்தப்பாவும் இறந்து போனார். அவர் இறந்ததற்குப் பின்பு ஜேன் மேலும் சில உண்மைகளைத் தெரியவந்தாள். அதாவது ஜான் ரிவெர்சும் அவனது சகோதரிகளும் உண்மையில் மிகவும் ஏழ்மைப்பட்ட நிலையில்தான் இருக்கிறார்கள் என்பதையும், அவர்களது தந்தை, இறந்துபோன ஜேனின் சித்தப்பாவின் யோசனைப்படி வியாபாரம் பண்ணியதால் தம்மிடமிருந்த பணத்தையெல்லாம் இழந்து விட்டார் என்பதையும் அவள் தெரிந்து கொண்டாள், எனவே காலஞ்சென்ற தனது சித்தப்பா எழுதி வைத்துவிட்டுப் போன உயிலின் மூலம் தனக்குக் கிட்டிய செல்வத்தை, ஜேன் தனது மாமன் மக்களுக்கும் பகிர்ந்து கொடுக்க முன் வந்து, அவர்களையும் அதனை ஏற்றுக் கொள்ளும்படி வற்புறுத்தினாள்.

இவ்வாறாகக் கிட்டத்தட்ட ஒரு வருட காலம் ஓடி விட்டது. இந்த ஒரு வருட காலத்திலும் ஜேன் எல்லாவற்றையும் மறந்து விட்டு, மகிழ்ச்சியாக இருக்க முயன்றாள்; என்றாலும் அவளது இதயம் மட்டும் எதிலும் மகிழ்ச்சி காணாமல், நிறைவு காணாத சூனிய மண்டலமாகவே இருந்தது. இதற்கிடையில் ஜான் ரிவர்ஸ் இந்தியாவுக்கு ஒரு சமயப் பிரசாரகனாகச் செல்வதற்கிருந்தான். அவ்வாறு

செல்வதற்கு முன்னர், அவன் தன்னை மணந்து கொள்ளுமாறு ஜேனை வேண்டினான். அப்போது அவர்கள் இருவரும் இரவு நேரத்தில், புத்தக அறையில் தனித்து இருந்தார்கள். இந்தச் சூழ்நிலையில் அவன் அவளை மிகவும் வற்புறுத்தித் திருமணத்துக்குச் சம்மதம் கேட்டு நின்ற காலத்தில், ஜேனும் கூட மனவுறுதி தளர்ந்து அவனுக்குச் சம்மதம் தெரிவித்துவிடக் கூடிய சபல நிலைக்கே ஆளானாள். ஆனாலும் அவள் திடீரென்று தன்னுள் ஒரு விசித்திரமான உணர்ச்சி குடிபுகுவதை உணர்ந்தாள். அது அதிர்ச்சி தருவதாக இல்லாவிட்டாலும், திடுக்கிடச் செய்வது போன்ற விசித்திரமும் வேகமும் கொண்டதாக இருந்தது. அதாவது தன்னை நோக்கி ஏதோ ஓர் அசரீரியான குரல் "ஜேன்! ஜேன்!" என்று வருந்தியழைப்பதுபோல் அவள் உணர்ந்தாள். அந்தக் குரல் ரோச்செஸ்டருடையதுதான் என்பதையும் அவள் உணர்ந்தாள். உடனே அவள் அந்த அறைக் கதவைத் திறந்துகொண்டு, எங்கும் நிலா வெளிச்சம் பரவியிருந்த அந்த இரவில் வெளியே ஓடிவந்தாள். "இதோ நான் வந்துவிட்டேன். நில்லுங்கள், எனக்காக நில்லுங்கள். நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்?" என்று வாய்விட்டுக் கத்தினாள்.

ஆனால், அந்த நிலாவொளியிலும் அவள் கண்ணில் யாரும் படவில்லை. எங்கும் நிச்சுவாசமான பேரமைதியும், அத்துவானமான சூனியமும்தான் பரவிக் கிடந்தன. பின்னர் அவள் வீட்டுக்குள் திரும்பி வந்து, அங்கு நின்ற ஜான் ரிவர்ஸையும் கடந்து, தனது அறைக்குச் சென்றுவிட்டாள். ஜான் ரிவர்ஸ் அவளது செய்கையைக் கண்டு ஒன்றும் புரியாதவனாகத் திகைப்பும் வியப்பும் கொண்டவனாக நின்றிருந்தான். ஏனெனில் அவன் காதில் எந்தக் கூப்பிடு குரலுமே விழவில்லை.



மறுநாட் காலையில் ஜேன் தார்ன்பீல்ட் மாளிகையை நோக்கிச் சென்றுகொண்டிருந்தாள். ரோச்செஸ்டரின் குரலில் அவளைப் பெயர் சொல்லி அழைத்த அந்த மர்மமான விசித்திரமான அர்த்த ராத்திரி அசரீரிக் குரல் அவள் இதயத்தில் இன்னும் எதிரொலித்துக் கொண்டிருந்தது. அவள் ஒன்றே ஒன்றை மட்டும் தெளிவாக உணர்ந்தாள்: அதாவது தான் காதலித்த அந்த மனிதருக்கு ஏதோ ஆபத்து நேர்ந்திருப்பதாகவும், எனவே அவருக்குத் தனது உதவி தேவைப்படுவதாகவும், அதனால் தான் அவரிடம் கட்டாயம் சென்றாக வேண்டுமென்றும் அவளுக்குத் தோன்றியது. கடைசியாக அவள் ஒரு மட்டும் தார்ன்பீல்ட் மாளிகையை நெருங்கிவிட்டாள். ஆனால் தார்ன்பீல்ட் மாளிகையைக் காணத் துடித்து

வந்த அவளது கண்களுக்கு அந்த மாளிகை தென்படவில்லை. மாருக, ஒருகாலத்தில் ராஜ கோலாகலமாகக் காட்சியளித்த அந்த மாளிகை இருந்த இடத்தில் ஆட்டம் கண்டு விழத் தயாராயிருக்கும் கரி படிந்து இருண்ட சில சுவர்கள் மட்டுமே நிற்கக் கண்டாள். அவற்றைக் கண்டு அவள் திகைப்பும் அதிர்ச்சியும் கொண்டாள். இந்தச் சீரழிவு எப்படி நேர்ந்தது? இதற்கு அர்த்தம் என்ன? அங்கு என்னதான் நேர்ந்தது? இப்படிப் பல்வேறு கேள்விகள் அவளது மூளையைக் குடைந்தன. இதனுல் அவளது தலையே கிறுகிறுத்துச் சுழன்றது.

பின்னர் அவள் பக்கத்துக் கிராமத்திலுள்ள ஒரு சத்திரத்துக்கு வேகம் வேகமாகச் சென்ருள்; அந்தச் சத்திரக்காரனிடம் தார்ன்பீல்ட் மாளிகைக்கு நேர்ந்த கதியைப் பற்றி விசாரித்தாள்.

"அதுவா? அது எரிந்துபோய் விட்டது. அந்த மாளிகையின் சொந்தக்காரரான ரோச்செஸ்டர் என்பவருக்கு ஒரு பைத்தியம் பிடித்த மனைவி இருந்தாள்; அவளும் அந்த மாளிகையில் தான் இருந்திருக்கிருள். அப்படி ஒருத்தி இருந்ததை, நாங்கள் விசித்திரமான முறையில் தான் தெரியவந்தோம். அந்த மாளிகையில் ஒரு வாத்தியாரம்மாவும் இருந்தாள்..." என்று சொல்லத் தொடங்கினுன் சத்திரக்காரன்.

வாத்தியாரம்மாவைப் பற்றிக் குறிப்பிட்டதும், ஜேன் தன்னைப் பற்றிய கதையைத்தான் அவன் கூறப்போகிருன் என்பதைத் தெரிந்துகொண்டாள். எனவே இடையில் குறுக்கிட்டுப் பின்வருமாறு கேட்டாள்: "வாத்தியாரம்மா கிடக்கட்டும். மாளிகையில்எப்படித்தீப்பிடித்தது?"

"அதுவா? ரோச்செஸ்டர் தமது மனைவிக்குக் காவலாக, கிரேஸ்பூல் என்ற வேலைக்காரியை அமர்த்தியிருந்தார். அவள் ரொம்பவும் நல்லவள் தான். என்ருலும் சமயங்களில் அவள் தலைகால் தெரியாமல் குடித்துவிடுவதுண்டு. அப்படிப்பட்ட சமயங்களில் அந்தப் பைத்தியக்காரி அவளது காவலிலிருந்து தப்பித்து, வெளியே வந்துவிடுவாள். அன்றும் இப்படித்தான் அந்தப் பைத்தியக்காரி அறையை விட்டு வெளியே வந்து, மாளிகைக்கே தீ வைத்துவிட்டாள். அப்போது நல்ல நடுநிசி நேரம். தீப் பிடித்துக் கொண்டதை மற்றவர்கள் உணருமுன்பே, அந்த நெருப்பு கட்டுக்கடங்காமல் எங்கும் பரவிவிட்டது. அந்தச் சமயத்தில் அந்தப் பைத்தியம் மாளிகையின் மொட்டை மாடிக்கே ஏறிச் சென்றுவிட்டது. அவளைக் கீழே இழுத்து வருவதற்காக, ரோச்செஸ்டர் மேலே ஏறிச் சென்ருர். ஆனுல் அவர் வருவதைக் கண்டதும் அந்தப் பைத்தியம் மாடியின் உச்சியிலிருந்து கீழே குதித்துவிட்டது; அத்

தோடு அதன் ஆயுளும் முடிந் தது. இப்பற்றி யெரியும் அந்த மாளிகையிலிருந்து ரோச்செஸ் டரை உயிரோடு வெளியே கொண்டு வருவதே பெரும் பாடாகிவிட்டது. ஓர் உத்திரக் கட்டை அவர் மீது விழுந்ததில், அவரது கண்ணொன்று வெளிப் பிதுங்கிக் குருடாகிவிட்டது. மற்றொரு கண்ணும் வெக்காட்டி னால் பாதிக்கப்பட்டுக் குருடாகத் தொடங்கியது. இப்போதோ அவர் இரு கண்ணையும் இழந்த முழுக் குருடாகப் போய்விட் டார். இப்போது அவர் அத்து வானமான காட்டுப் பிரதேசத் தில் பெர்ன்டீன் என்ற இடத் தில் தமக்குச் சொந்தமாயுள்ள ஒரு பழைய வீட்டில் வசித்து வருகிறார்......"

"அந்த இடத்துக்குப் போவ தற்கு உங்களிடம் ஏதாவது வாகன வசதி இருக்கிறதா?" என்று உடனே கேட்டாள் ஜேன்.

"ஆம். ஒரு வண்டி இருக் கிறது. நல்ல அழகான வண்டி" என்று பதிலளித்தான் சத்திரக் காரன்.

"சரி, அப்படியென்றால் அந்த வண்டியை உடனே தயார் செய் யுங்கள். இன்று மாலைக்குள் உங்கள் வண்டிக்காரன் என்னை பெர்ன்டீனுக்குக் கொண்டு போய்ச் சேர்த்துவிட்டால், அவ னுக்கு மட்டுமல்ல உங்களுக்கும் சேர்த்து நான் இரண்டு மடங்கு வாடகை தரத் தயார்!" என் றாள் ஜேன்.

அந்தி சாயும் நேரத்தில் ஜேன் பெர்ன்டீனிலுள்ள அந்தத் தனிமையான பழம் வீட்டை நெருங்கிவிட்டாள். அதனருகே சென்றதும் வீட்டின் கதவைத் திறந்துகொண்டு ஓர் உருவம் வெளியே வருவதை அவள் கண் டாள். அந்த உருவம் வீட்டின் வெளிவாசற் படிக்கட்டில் நின்றுகொண்டு, வெளியே மழை பெய்கிறதா என்று கையை நீட் டிப் பார்த்தது. அது யாரு மல்ல, ரோச்செஸ்டர்தான். அவ ரது உருவம் பழைய அகன்று விரிந்த ஆஜானுபாகுவான தோற்றமாகத்தான் இருந்தது; தலைமயிரும் முன்மாதிரியே கன் னங்கரேலென்றுதான் இருந் தது; பொதுவாக அவரது தோற் றம் எதுவும் மாறிப்போய்விட வில்லை. எனினும் முகத்தில் மட்டும் பெருத்த மாறுதல் தென் பட்டது. அதில் ஆவேசமும் துன்பமும் மிகுந்த ஒரு முக் பாவம் புலப்பட்டது. அதாவது விலங்கிட்டுக் கட்டப்பெற்றுச் சித்திரவதைக்கு ஆளான மிரு கத்தின் மூர்க்கமும் முறைப்பும் அதில் தென்படுவது போல் தோன்றியது; தம்மருகே யாரை யும் வரவிட விரும்பாத, சகிக் காத ஒரு முகபாவமே அதில் பிரதிபலித்தது.

இந்தச் சமயத்தில் வேலைக் காரனொருவன் வெளியே வந்து அவரைக் கையைப் பிடித்து

உள்ளே அழைத்துச் சென்ருன். ஜேனும் வீட்டை நெருங்கி, சமையலறைக்குச் சென்ருள். அங்கு தார்ன்பீல்ட் மாளிகையில் வேலை பார்த்த பழைய வேலைக்காரர்கள் சிலர் இருந்தார்கள். ஜேனின் வரவைக் கண்டதும் அவர்கள் பெரிதும் வியப்புற்ருர்கள்; அதே சமயம் மிகுந்த மகிழ்ச்சியும் அடைந்தார்கள். பின்னர் அங்குள்ள வேலைக்காரி ஒருத்தி ரோச்செஸ்டருக்கு ஒரு தம்ளரில் தண்ணீர் எடுத்துக்கொண்டு செல்ல முனைந்தாள். உடனே ஜேன் அவளிடமிருந்து தம்ளரை வாங்கிக்கொண்டு, தண்ணீரைத் தானே அவரிடம் கொண்டு கொடுப்பதாகச் சொன்னுள். ஜேன் உள்ளே சென்று தண்ணீர்த் தம்ளரை அவரிடம் நீட்டினுள். உடனே அவர் "யாரது? மேரியா?" என்று குரல் கொடுத்தார்: ஜேன் பதிலுக்கு "இல்லை. மேரி சமையலறையில் இருக்கிருள்" என்று பதிலளித்தாள். ஜேனின் குரலைக் கேட்டதும் அந்தக் குருட்டு மனிதர் திடுக்கிட்டுப் போனுர்,

"யாரது? யாரது?" என்று வியப்புடன் கூறியவாறே, அந்தக் குரலுக்குரியவளைத் தட்டுத்தடுமாறி எட்டிப் பிடிக்க இருளில் துழாவினுர். உடனே ஜேன் அவரது கையை எட்டிப் பிடித்து, அதனைத் தன் இரு



## யார் தொப்பி?

எதிரி ஒரு நாட்டுப்புறத்தான். நாணயமான ஆளாகத் தோன்றினுன். ஏதோ திருடிவிட்டதாக அவன் மேல் வழக்கு. ஒரே ஒரு தொப்பி தான் அவனுக்கு விரோதமான சாட்சியமாகக் கிடைத்தது. அது திருட்டு நடந்த இடத்தில் அகப்பட்டதாகும்.

எதிரி வக்கில் ஜூரர்களைப் பார்த்து வாதித்தார்: "இது சர்வ சாதாரணமான தொப்பி. இதைப்போல் ஆயிரக்கணக்கான தொப்பியை வருடந்தோறும் செய்கிருர்கள். இது எதிரியின் தொப்பிதான் என்று என்று எப்படிச் சொல்லமுடியும்? இந்த அற்ப சாட்சியத்தைக் கொண்டு அவனைக் குற்றவாளி என்று எப்படி தீர்மானிக்க முடியும்?"

வழக்கு மிகவும் சிக்கலானதாக ஜூரர்களுக்குத் தோன்றியது. தனியறைக்குள் புகுந்து இரண்டு மணிநேரம் தங்களுக்குள் விவாதித்து ஆலோசித்துவிட்டு வெளியே வந்தார்கள் எதிரி குற்றவாளி அல்ல என்று தீர்ப்புக் கூறினுர்கள்.

இந்த நற்செய்தியைக் கேட்ட எதிரி என்ன காரணத்தாலோ தயங்கித் தயங்கிக் கூண்டிலேயே நின்ருன். "உன்மேல் ஒரு குற்றமுமில்லை. நீ நிரபராதி என்று தீர்ப்பாகி விட்டது. யாரும் உன்னைப் பழிக்கமாட்டார்கள். நீ போகலாம்" என்று ஜட்ஜி ஆறுதலாகச் சொன்னுர். அப்படியும் அவன் நகரவில்லை. மென்று விழுங்கிக் கொண்டே நின்ருன்.

கடைசியில் துணிந்து, மேஜை மீது சாட்சியமாகக் கிடந்த தொப்பியை சுட்டிக் காட்டி. ஜட்சியைப் பார்த்து "எல்லாம் சரி, எஜமான். என் தொப்பியைத் திருப்பிக் கொடுப்பீர்களா?" என்று கேட்டான்.

—மைக்கேல் தாமஸ், "திக்வீன்"

கரங்களுக்குள்ளும் புதைத்துக் கொண்டாள்.

"ஜேன்! ஜேன்!" என்று கத்தினார் அவர்.

"இதோ இருக்கிறேன். ஜேனும் அவள் இதயமும் இதோ இருக்கின்றன" என்று பதிலளித்தாள் ஜேன்.

எனினும் ரோச்செஸ்டருக்கு நம்பிக்கை பிறந்துவிடவில்லை. தாம் உணர்ந்தது கனவா, நனவா என்று அவருக்கு ஒரே வியப்பு. எனவே அவர் திரும்பத் திரும்பக் கேட்டு வந்திருப்பது ஜேன் தான் என்பதை உறுதி செய்து கொண்டார்.

பின்னர் அவரை விட்டு அவள் பிரிந்து சென்றது முதல் அவள் எங்கெங்கே சென்றாள், என்னென்ன செய்தாள் என்ற விவரத்தையெல்லாம் அவர் அவளிடம் கேட்டறிந்தார். அவளை இழந்த பின்னர் அவர் அவளுக்காக இரவும் பகலும் எப்படி ஏங்கித் தவித்தார் என்பதையெல்லாம் அவளிடம் எடுத்துக் கூறினார். மேலும், முந்தின நாள் இரவில் தாம் ஜேனின் பிரிவைத் தாங்கமாட்டாமல், இதய வேதனையோடு எப்படி "ஜேன்! ஜேன்!" என்று வாய் விட்டுக் கத்த நேர்ந்தது என்பதையும், அவ்வாறு கத்திய போது, அந்தக் குரலை ஜேனும் கேட்டு, அவருக்குப் பதிலளித்ததுபோல் தாம் உணர நேர்ந்ததையும் அவர் தெரிவித்தார். உண்மையில் அவர் குறிப்பிட்ட அதே நேரத்தில்தான் பல மைல் தூரத்துக்கப்பால் ஜான் ரிவர்சுடன் இருந்த ஜேனுக்கு ரோச்செஸ்டரின் அந்த அபயக்குரல் கேட்டது!

இவ்வாறாக எல்லாவிதமான சம்பிரதாயங்களையும், சந்தர்ப்ப பேதங்களையும் காட்டிலும் வலிமை வாய்ந்ததாக விளங்கிய காதல் அவர்கள் இருவரையும் மீண்டும் இணைத்துவிட்டது. இனி அந்தக் காதலர்கள் என்றும் பிரிய மாட்டார்கள். சில நாட்களில் அவர்கள் இருவருக்கும் முறைப்படி திருமணம் நடந்தது. அதன் பின் ஓராண்டுக் காலத்துக்குப் பின்னர் வேக்காட்டினால் பார்வையிழந்த ரோச்செஸ்டரின் கண் சிறிது சிறிதாகப் பார்வையைத் திரும்பப் பெறுவதாகத் தோன்றியது. பின்னர் அவர் லண்டனுக்குச் சென்று வைத்தியம் செய்ததில் அந்தக் கண் தன் முழுப் பார்வையையும் மீண்டும் பெற்றுவிட்டது. அதன்பின் அந்தத் தம்பதிகளுக்குச் சில நாட்களில் ஓர் ஆண் குழந்தையும் பிறந்தது....

இவ்வாறாக, ஜேனும் ரோச்செஸ்டரும் இன்பகரமான இல்லற வாழ்க்கை நடத்தினார்கள்; இதன்பின் அவர்களது எதிர்காலத்தில் எந்த இருளும் சூழவில்லை.



ஆசிரியரும், வெளியிடுபவரும் : கண. இராமநாதன்,
66, பெரியதெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5. தொலைபேசி 84989.
அச்சிட்டோர் : ஐடியல் பிரிண்டர்ஸ், 97, பிராட்வே, சென்னை-1.

# இலக்கியப் புத்தகங்கள்

இலக்கியம் என்பது சிறந்த கருத்துக்களின் அழகிய எழுத்து வடிவமாகும். படிப்போர் மனத்தை விரிவாக்கி குறைகளைப் போக்கி நல்வழிப்படுத்தும் இயல்புள்ளது இலக்கியமாகும். மக்களை நல்வழிப்படுத்தும் நன்னூற்கள் இலக்கியமாகும். இப்படியாகப் பல கருத்துக்கள் உலவி வருகின்றன. இவற்றை இலக்கணமாகக் கொண்டு இலங்கும் இலக்கியப் புத்தகங்களில் சிலவற்றைக் கீழே தந்துள்ளோம்.

| | | | |
|---|---|---|---|
| கீதாஞ்சலி | தாகூர் | 2 | 00 |
| காதற் கண்கள் | ,, | 2 | 00 |
| அஞ்சிறைத்தும்பி | மயிலை சீனி வேங்கடசாமி | 2 | 50 |
| கௌதம புத்தர் | ,, | 3 | 50 |
| திருக்குறள் பொருள் விளக்கம் | சாமி சிதம்பரனார் | 4 | 50 |
| கம்பன் கண்ட தமிழகம் | ,, | 2 | 50 |
| தொல்காப்பியத் தமிழர் | ,, | 2 | 50 |
| பத்துப்பாட்டும் பண்டைத் தமிழரும் | ,, | 3 | 50 |
| எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும் | ,, | 3 | 50 |
| பதினெண் கீழ்க்கணக்கும் தமிழர் வாழ்வும் | ,, | 3 | 50 |
| சிலப்பதிகாரத் தமிழகம் | ,, | 4 | 50 |
| மணிமேகலை காட்டும் மனித வாழ்வு | ,, | 4 | 00 |
| இலக்கியச் சோலை | ,, | 3 | 50 |
| வடலூரார் வாய்மொழி | ,, | 3 | 50 |
| பழந்தமிழர் அரசியல் | ,, | 3 | 00 |



# இலக்கியப் புத்தகங்கள்

இலக்கியம் என்பது சிறந்த கருத்துக்களின் அழகிய எழுத்து வடிவமாகும். படிப்போர் மனத்தை விரிவாக்கி குறைகளைப் போக்கி நல்வழிப்படுத்தும் இயல்புள்ளது இலக்கியமாகும். மக்களை நல்வழிப்படுத்தும் நன்னூற்கள் இலக்கியமாகும். இப்படியாகப் பல கருத்துக்கள் உலவி வருகின்றன. இவற்றை இலக்கணமாகக்கொண்டு இலங்கும் இலக்கியப் புத்தகங்களில் சிலவற்றைக் கீழே தந்துள்ளோம்.

| | | | |
|---|---|---|---|
| கீதாஞ்சலி | தாகூர் | 2 | 00 |
| காதற் கனிகள் | ,, | 2 | 00 |
| அஞ்சிறைத்தும்பி | மயிலை சீனி வேங்கடசாமி | 2 | 50 |
| கௌதம புத்தர் | ,, | 3 | 50 |
| திருக்குறள் பொருள் விளக்கம் | சாமி சிதம்பரனார் | 4 | 50 |
| கம்பன் கண்ட தமிழகம் | ,, | 2 | 50 |
| தொல்காப்பியத் தமிழர் | ,, | 2 | 50 |
| பத்துப்பாட்டும் பண்டைத் தமிழரும் | ,, | 3 | 50 |
| எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும் | ,, | 3 | 50 |
| பதினெண் கீழ்க்கணக்கும் தமிழர் வாழ்வும் | ,, | 3 | 50 |
| சிலப்பதிகாரத் தமிழகம் | ,, | 4 | 50 |
| மணிமேகலை காட்டும் மனித வாழ்வு | ,, | 4 | 00 |
| இலக்கியச் சோலை | ,, | 3 | 50 |
| வடலூரார் வாய்மொழி | ,, | 3 | 50 |
| பழந்தமிழர் அரசியல் | ,, | 3 | 00 |

த பெ. எண். 423 — போன்: 84989

ஸ்டார் பிரசுரம்

66, பெரிய தெரு,

திருவல்லிக்கேணி :: சென்னை-5.



பிப்ரவரி, 1965 : : மலர் 3 – இதழ் 11

# மொழிப் பிரச்னை

தமிழ்நாட்டின் சமீப காலத்திய நிகழ்ச்சிகள் மிகவும் பரங்கர மானவையாகும். உயிர்ச்சேதம், பொருட்சேதம், முதலியவை மிக அதிகமானதாகும். இவ்வமைதிக் குலைவுக்குக் காரணம் மொழிப்பிரச்சினையாகும். மொழிப் பிரச்சினை என்பது மொழி தோன்றிய காலந்தொட்டு இருந்து வருகிறது. சில சமயங்களில் அது வெறி கொண்டு அசம்பாவித சம்பவங்கள் நிகழக் காரணமாக ஆகிவிடுகின்றன.

வடநாட்டிலும், தென்னுட்டிலும் ஒரேமாதிரியான வெறியூட் டும் சக்திகள் வேலைசெய்து வருகின்றன என்பதற்குச் சமீபகாலத் திய நிகழ்ச்சிகள் சான்று பகர்கின்றன. தங்கள் தங்கள் மொழி களின் பெருமையையே பெரிதாக எண்ணி அதன் பலனாக தேசத் தின் ஒற்றுமை, பெருமை, முன்னேற்றம் இவற்றைச் சீர்குலைக்கும் போக்கில் உணர்ச்சிகள் திருப்பிவிடப்படுகின்றன. இவை ஆபத் தானவையாகும்.

மொழிப் பிரச்சினை ஒருவழியாக ஒரு நல்ல முடிவுக்கு வந் துள்ளது. தமிழ்மக்களும், ஏனைய இந்திபேசாத மக்களும் தங்களு டைய நியாயமான கோரிக்கையில் வெற்றி கண்டுவிட்டனர். முதன் மந்திரிகள் மகாநாடும், காங்கிரஸ் மேலிடமும் அவ்வகையில் ஒரு முக்கியமான சாதனையைச் சாதித்துள்ளது.

நேருவுக்குப்பின் நடந்த தலைமைத் தேர்தலில் பெற்ற மகத் தான வெற்றியைப் போலவே இதிலும் தலைவர் காமராஜ் வெற்றி பெற்றுள்ளார். எந்தப் பகுதியினரையும் புண்படுத்தாமல், தேச ஒற்றுமை, திட்டமிட்ட முன்னேற்றம் இவற்றை மனத்திற்கொண்டு யாருக்கும் வெறுப்போ வேதனையோ இல்லாத வகையில் இப்பிரச்

சினைக்கு ஒரு முடிவு தேடித்தந்த திரு. காமராஜ் அவர்களைத் தமிழகமும், ஏனைய இந்தியப் பகுதியினரும் தலைதாழ்த்திப் பாராட்டுவார்கள் என நம்புகிறேன்.

இப்போராட்டத்திலே இருதலைக்கொள்ளி இடையிட்ட எறும்பு போல அவதிப்பட்டு, மீண்டவர் முதன் மந்திரி பக்தவத்தலம் அவர்கள். ஒருபக்கம் மக்களின் நியாயமான உரிமைக்குரலுக்குச் செவிசாய்க்க வேண்டும். மறுபுறம் இந்தச் சந்தர்ப்பத்தைத் தங்கள் சுயநல உணர்வுக்குப் பயன்படுத்தி மக்களைத் தீயவழிகளில் ஈடுபடுத்திய தீய சக்திகளை அடக்கிக் கட்டுப்படுத்தியாக வேண்டும்.

அமிர்தத்தைத் தேடி தேவர்கள் கடல் கடைந்தார்கள். அதில் அசுரர்களும் கலந்துகொண்டு விட்டார்கள். அதனால் அமிர்தம் மட்டுமின்றி விஷமும் கிளம்பிவிட்டது. விஷம் உலகை அழித்து விடும். அதன் தன்மையை அடக்கச் சிவபெருமான் அதை எடுத்து உண்டார். உலகம் காப்பாற்றப்பட்டது. தேவர்கட்கும் அமிர்தம் கிடைத்தது. இது இன்றைய மொழிப் போராட்டத்திற்கும் பொருந்தும். மாணவர்கள் துவக்கிய மொழிப் போராட்டத்தில் அசுரசக்திகள் தலையிட்டு, தங்கள் தங்கள் சுயநல காரியங்களைச் சாதித்துக் கொள்ள முயன்றன. அதன் விளைவுதான் தீ வைத்தல், கொள்ளை, கொலை முதலிய அராஜகச் செயல்கள். இவை நாட்டை அழிக்கும், தமிழ் மக்களின் பண்பாட்டை பெருமையைச் சீரழிக்கும் விஷமாக அமைந்துள்ளன. இவற்றைக் கட்டுப்படுத்தி நல்லதைத் தமிழ்மக்களுக்கு தந்து தீயபயனை அடக்கி, அதனால் ஏற்பட்ட அநாவசியமான பழியைத் தாங்கிநிற்கிறார் தமிழக முதன்மந்திரி பக்தவத்தலம் அவர்கள். விடமுண்ட கண்டனைப்போல பழியை ஏற்று, தமிழ் மக்களை ரக்ஷித்து நிற்கும் பக்தவத்தலம் அவர்களை இச்சமயம் நாம் மனமாரப் பாராட்டுகிறோம்.

நல்லகாரியம் செய்வதற்குப் பாடுபடலாம், தியாகம் செய்யலாம். அதிலே பெருமையும் புகழும் உண்டு. அதேபோல சுயநலத்திற்காகக் கெட்டகாரியங்கள் செய்து பயன் அடைபவர்களும் உண்டு. ஆனால் பலனற்ற பழியைத் தாங்கிக்கொண்டு, நல்ல காரியத்தைச் சாதிப்பதற்கு மிகப்பெரிய மனத்திட்பமும், ஆழ்ந்த சகிப்புத்தன்மையும், மனங்கலங்காத நேர்மைத்திறமும் தேவை. அவை முதன்மந்திரி பக்தவத்சலம் அவர்களிடம் நிறைந்திருக்கின்றன. இது சாதாரணமாக அமையக்கூடிய ஒரு சக்தியன்று. அபூர்வமான ஒரு தன்மை. அத்தன்மை பெற்றுள்ள திரு. பக்தவத்சலம் அவர்கட்கு நீண்ட ஆயுளும், நல்ல உடல்நலமும் பெற்று வாழ அருளுமாறு விடமுண்ட கண்டனையே இறைஞ்சுகிறோம்.

# கதரும் கிராமக் கைத்தொழில்களும் ஏன்?

மூலம்: U. N. தேபர் தமிழில்: எஸ். கிருஷ்ணமூர்த்தி
(தென்பிராந்திய அபிவிருத்தி அதிகாரி,
அகில இந்திய காதி - கிராமக் கைத்தொழில் கமிஷன்)

நமது நாட்டை எதிர் நோக்கியுள்ள பிரச்னைகள் பலவற்றிலும் மிகவும் முக்யத்வம் வாய்ந்தது, மக்கள் எப்படி உயிர் வாழ்வது என்பதேயாகும். 250 ஆண்டுகள் அந்நிய ஆதிக்கமும், அதன் மூலம் சுரண்டலும், நம்மிடையே அழியாத் துன்பத்தை விட்டுச் சென்றிருக்கிறது. ஆகவே நம் நாட்டின் அபிவிருத்தியே நமது மிக முக்கியமான பிரச்னையாகும்.

### திட்டமிட்ட அபிவிருத்தியின் நோக்கம்.

நாம் திட்டமிட்ட அபிவிருத்தியைப்பற்றி நினைத்தது மிகச் சரியானகாரியமென்றேஎண்ணுகின்றேன். நம்வசமுள்ள மூலப் பொருட்கள் குறைந்த அளவில் இருக்கும் போது, அதைச் சிறந்த வகையில் உபயோகப் படுத்துவதற்கு, திட்டமிட்ட செயல் முறையே புத்திசாலித் தனமான செயலாகும். பல ஆண்டுகள் தயக்கத்திற்கும், பீதிக்கும் பிறகு, மேற்கத்திய நாடுகள் கூட, நம் நாட்டின் நிலைமையில், திட்டமிட்ட அபிவிருத்தி தவிர்க்க முடியாதது என்று உணர்ந்து விட்டன. அவர்களிடம் ஆதியிலிருந்த பயம் போய்விட்டது. 'ஏக போக சந்தை' கொள்கையை நாம் அனுஷ்டித்திருந்தால் நம் கதி என்னவாயிருக்கும் என நினைக்கவே நமக்கு அச்சமுண்டாகின்றது. வரையறுக்கப் பட்ட திட்டங்களை நாம் மேற்கொண்டிருக்கும் போதே, நாட்டில் எண்ணற்ற நெருக்கடிகள் ஏற்பட்டிருக்கின்றன. குறைந்த மூலப் பொருட்களும், நெருக்கடியின் காரணமாக ஏற்படும் தேவைகளும் நாட்டின் ஸ்திரத் தன்மையையே பயப்படுத்துகின்றது. எவரும், தான் விரும்பினால், இந்தச் சந்தர்ப்பத்தைத் தமக்குச் சாதகமாகப் பயன் படுத்திக் கொள்ள ஏதுவாகின்றது.

### கதர் ஊழியர்கள் முன் நிற்கும் பிரச்னைகள்

நமது திட்டமிட்ட முயற்சிகளில் கதர்—கிராமக் கைத் தொழில்கள் ஒரு சிறு பாகமாகவே இருந்து வருகிறது.

ஆயினும் இது பற்றி அநேகக் கேள்விகள் எழுப்பப்படுகின் றன. நாம் சுதந்திரம் அடைந்த பிறகு கனரகத் தொழில்களை மேற்கொள்ள வாய்ப்பிருக்கை யில் கதர்-கிராமக்கைத்தொழில் களுக்கு அவசியம் என்ன? தற் போதைய நவீன பொருளாதா ரத்தில், இத்தகைய தொழில் களுக்கு இடமுண்டா? இவை கள் அளிக்கும் பலனைவிட இவைகளுக்கு வேண்டிய மூலப் பொருட்கள் அதிகம் அல்லவா? இது போன்ற கேள்விகள், நம் நாட்டின் அறிவாளிகள் மனத் தில் கூட உறுத்திக்கொண்டே இருப்பதால், தற்போதைய நவீன சூழ்நிலையில் கூட கதர்—கிராமக் கைத்தொழில்கள்பற்றி நாம் வற்புறுத்துவதின் கார ணத்தை நாம் அறிந்துகொள்ள வேண்டும்.

**சீரான முன்னேற்றத்திற்கான இரு சக்கரங்கள் உபயோகத்திற் கான உற்பத்தியும், சம விநி யோகமும்.**

"பொருளாதார முன்னேற்ற மென்பதே ஒரு தனித்த செயல் முறையாகும். இதன் முதற் படி, மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்ய நாட்டிற்குத் தேவையான பொருட்களை உற் பத்தி செய்ய மூலப் பொருட் களை, முடிவுப் பொருட்களாக மாற்றுவது. எந்த ஒரு நாடும் தனக்கு வேண்டிய பொருட் களை உற்பத்தி செய்வதால் மட் டுமே நிலைத்திருக்க முடியாது. நாட்டிலுள்ள அதிகப்படியான மக்கள், உற்பத்தியை அதிகரிப் பதில் பங்கு கொள்ளும் வகை யில் சந்தர்ப்பங்கள் வசதிகள் அளிக்கப்பட வேண்டும்.

இது விநியோகம் செய்வதைப் பற்றிய வேலைமுறை. அத்யாவ சியமான பண்டங்கள் உற்பத்தி யும், சம விநியோகமும் பொரு ளாதார முன்னேற்றத்தை விரைவாகவும், சௌஜன்யமாக வும் இருக்கச் செய்யும். இதுவே சோஷலிஸ முன்னேற்றம் அல் லது சர்வோதயத்தின் சாராம்ச மாகும்.

நம் திட்டமிட்ட அபிவிருத்தி இத்தகையதொரு பெரு நோக் கத்தைத் தன்முன் வைத்துள் ளது. ஆகவே விநியோகம் செய்வதற்கு முன்பாக, உற் பத்தி செய்தல் அவசியமாகின் றது. அதற்கடுத்து முக்கிய மானது உற்பத்தி விரைவாக வும், சுமுகமாகவும் இருக்க வேண்டின், தேசம் முழுவதி லும், எவை உற்பத்தியாயினும், அவை சமமாக விநியோகிக்கப் படுகின்றது என்ற நம்பிக்கை ஏற்பட்டு, அதைக்காரியத்திலும் காணவேண்டும். உற்பத்தி யைப்பற்றி இந்த இரண்டு அம் சங்களையும் விளக்க ஒரு உதா ரணம் போதும். ஒருக்கால், நாம் உற்பத்தி செய்கிறோம், ஆனால் வாங்குவாரில்லை. அல் லது வாங்குவாருள்ளனர். அவர் களிடத்தில் வாங்கப் பணவசதி இல்லை. அல்லது ஒரு சிலரிடத் தில் மட்டுமே வாங்கும் சக்தி உள்ளது. பிறரிடத்தில் இல்லை

என்ற நிலைமை வந்தால் நாம் உற்பத்தி செய்யும் பண்டங்கள் விற்பனையாகாது போய் விடும். அல்லது விற்பனையாகி விட்டாலும் கூட தேவையானவர்களுக்குக் கிடைக்காமல் போய் விடும். ஆகவே மார்க்கட்டில் மந்தம் ஏற்பட்டு உற்பத்தியையே அழித்துவிடும். அல்லது பொருள் வசதியில்லாதவர்கள் அல்லது போதிய பண வசதியில்லாதவர்களுக்கு உற்பத்தியிலேயே பங்கு கொள்ளும் சக்தி மறுக்கப்பட்டு அதன்மூலம், அதிருப்தியும், ஏற்றத்தாழ்வும் ஏற்பட்டு விடும். சமூக ரீதியில் சொல்லப் போனால் உற்பத்தி அதிகம் என்பது உற்பத்தி செய்வதில் மக்களுக்கு கிடைக்கும் வாய்ப்பைப் பொறுத்தே சமூக சுபீட்சம் அதிகரிக்கிறது. உற்பத்தி அதிகரிக்கச் செய்வதன் மூலம் சமூகம் முழுவதுமே சுபீட்சம் அடைய வேண்டும் என்றநிலை ஏற்பட வேண்டுமானால் அதற்குச், சிறந்தவழி, பெரும்பான்மையான மக்களுக்கு வேலை வாய்ப்பளித்தும், நிலவி வரும் விலை, உற்பத்தியாக்கப்பட்ட பொருட்கள் இவைகளுக்கேற்ப வேலை செய்பவர்களின் கூலி பிரதிகூலமாகப் போய் விடாமல் பார்த்துக் கொள்வதே யாகும்.

ஆகவே அடிப்படையில் உற்பத்திக்கும், விநியோகத்திற்கும், வேலை வாய்ப்பிற்கும் அளிக்கப்படும் கூலித் தொகைக்கும், விலை வாசிக்கும் நெருங்கிய சம்பந்தம் இருந்து வருகிறது. இந்த நீண்ட பொருளாதாரச் சங்கிலியில் ஏதாவது ஒரு இடம் அறுபட்டுப் போனால் பொருளாதாரச் சீர்குலைவு ஏற்பட்டு விடும். மக்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கே உற்பத்தி மேற்கொள்ளப் பட வேண்டும். உற்பத்தி போதுமான அளவுள்ளதாகவும் இருக்க வேண்டும். கூடுமான வரையில் பெரும்பான்மையான மக்கள், ஏற்படும் பயனில் பங்கு கொள்ள வாய்ப்புள்ள வகையில் விநியோகம் சமமானதாக இருக்க வேண்டும். இந்த நோக்கத்தை அடைய மிகச் சிறந்த வழி நியாயமான ஊதியம் கிடைக்கும் வேலை வாய்ப்பை அளிப்பதொன்றேயாகும். நியாயமான கூலி அல்லது ஊதியம் வழங்குவதன் மூலம் சம விநியோகம் உண்டாகும் வகையில் விலைகள் நிரந்தரமாக இருக்க வேண்டும். நம் திட்டங்கள் இத்தகைய தொரு உறவை ஏற்படுத்துவதற்காகத் தான் பாடுபடுகின்றன. இது வரையில் நம் திட்டங்கள் அத்தகையதொரு உறவை ஏற்படுத்தத் தவறி இருந்தால் அது திட்டத்தின் மேல் குற்றமல்ல. உண்மையிலேயே இத்தகைய குறையை திட்டங்கள்தான் நமக்குவெளிப்படுத்துகின்றன. நாம் வெற்றி காணும் வகையில் நமது முயற்சிகளைத் தொடர்ந்து செய்து வர வேண்டும்.

தேவையான உற்பத்தி

ஒருவன் நாட்டின் பொருளாதார அபிவிருத்தியைக் கனரகத் தொழில்கள் மூலமாகவோ அல்லது சிறு தொழில்கள் மூலமாகவோ அல்லது இவையிரண்டின் மூலமாகவோ அடைய முயற்சித்தாலும், அபிவிருத்தியைச் செயல் முறையில் அமல் செய்ய மேற்கொள்ள வேண்டிய முதல் வேலை தேவையான அளவு உற்பத்தியைப் பெருக்கத் திட்டமிடுவதே. உற்பத்தியின்றி விநியோகம் என்பது இருக்க முடியாது. ஒருவன் முதலாளியாக இருப்பினும், சோஷலிஸ்டாக இருந்தாலும், அல்லது கம்யூனிஸ்டாக இருந்தாலும் அவன் உருப்படியான வேலை செய்பவனாக இருந்தால், அவன் தொடர்ந்து இந்த முதல் வேலையான உற்பத்தியைப் பெருக்குவதில் தன் முழு சக்தியையும் உபயோகிக்க வேண்டும். இதை மிகவும் வற்புத்திச் சொல்லியாக வேண்டிய தன் அவசியம் ஏனென்றால், இரு பக்கங்களிலும் அதி தீவிரவாதிகள் இருந்து வருவதினால் தான். சில சமயங்களில் மக்கள் கதரும்—கிராமக் கைத்தொழில்களும் தான் தேசத்தின் பிணியைப் போக்க வல்ல ஒரே மார்க்கம் எனப் பொறுப்பில்லாமல் பேசுகின்றனர். இது காந்தியடிகள் நமக்குக் கூறியதை நாம் மிகச் சுலபமாகப் புரிந்து கொள்வதினால்தான். அவர் கொள்கைப்படி கதரும் — கிராமக் கைத் தொழில்களும், பல அம்சங்களில் மிகவும் வேண்டப்படுவனவே. கதரும் — கிராமக் கைத் தொழில்களும் தேவையானவர்களுக்கு வேலைகிடைக்கவும், பொருள்களை உற்பத்தி செய்யவும், ஊதியத்தை ஓரளவு அதிகப்படுத்தவும், கிராம மக்களுக்குப் பாதுகாப்பளிக்கவும், இவை எல்லாவற்றையும் விட, அஹிம்சையை அடிப்படையாகக் கொண்டதொரு சமுதாயத்தை உருவாக்கவும், வேண்டி இருந்து வருகின்றன. ஆனால் காந்திஜீ அவர்கள் சுபீட்சமும், சந்தோஷமும் கொண்டதொரு வாழ்வைக், கதரும்—கிராமக் கைத்தொழில்கள் மட்டுமே, நிறைவேற்றி வைக்க இயலும் என்பதை உணர்ந்திருந்தார்.

சுயராஜ்யம் என்பது நாம் தவிர்க்க முடியாததொன்றாகும். நில அபிவிருத்தி, கால்நடைப் பராமரிப்பு முதலானவைகளும் மிக முக்கியமானவை. அதே போன்று ஆதாரக் கல்வி போன்ற பல இதர முக்கியமான விஷயங்களெனக் கருதிய ஒரு நீண்ட பட்டியலையே காந்தியடிகள் நமக்குத் தந்ததோடு, அவரே அவைகளை நல்ல கவனத்துடன் திறம்பட நடத்தியும், காண்பித்துத் தந்தார்.

அவர் கதரைக் கதரைமையமாக வைத்தார் என்பது உண்மைதான். அவர் அப்படிச் செய்ததன் காரணம், அவர் விரும்பியதோர் நாகரிகத்தின் அஸ்திவாரத்தை பலப்படுத்தவேதான். காந்திஜி, நாம்

மேற்கத்திய நாடுகளைப் பார்த்து நம் இந்தியக்கிராமவாழ்க்கையை அழிக்கா வண்ணம் பார்த்துக் கொள்ள விரும்பினர். இந்திய நாகரிகத்தின் சாரம் கிராம வாழ்வும், கிராமச் சூழ்நிலையுமே என்பதாக அவர் கருதினர். அவர் பின் வருமாறு கூறினர் :-

''கிராமம் அழிந்தால், இந்தியாவும் அழியும்.'' மேற் கூறிய சூழ்நிலையன்றி, அஹிம்சா பூர்வமான சமுதாயம், சாத்தியமல்ல என்று கருதினர் காந்தியடிகள். ஆனாலும், அவர் மற்றவைகளின் முக்யத்துவத்தைக் குறைக்கவில்லை. கனரகத் தொழில்கள் இருந்து வந்தன. தொழிலாளர்கள் சங்கங்களின் நடவடிக்கைகளில் அவர் மிகுந்த அக்கரை காட்டி வந்தார். நில அபிவிருத்தியைப் பற்றிய பிரச்னை இருந்து வந்தது. அதைப்பற்றியும் அவர் ஏராளமாக எழுதி வந்தார். பின் பசு பரிபாலனம். நல்ல பசுவானது ஒரு நல்ல தாயைப் போன்றதென்றதோர் உணர்ச்சியை மக்களிடையே பரப்ப அவர் பெரும்பாடுபட்டார். இத்தகைய நடவடிக்கைகளை மிகவும் மதித்து அது பற்றி ஓயாது உழைத்தார்.

கிராம முன்னேற்றத்தின் மையமாக உள்ள கைராட்டையை நிலம், காடு, முதலானவைகளிலிருந்தும் கால்நடை, மற்றும் இதர உபரி தொழில்களிலிருந்தும் பிரித்துவிட நினைப்பது, காந்தியடிகளினுடைய நாட்டின் பொருளாதாரப் புணருத்தாரணத்திற்கு ஒரு குறுகிய வியாக்யானம் கொள்வதாகவே ஆகும்.

கதர் கிராமக் கைத்தொழில்கள் மூலம் உண்டாகும் உற்பத்தியையும், தேசீய வருமானத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால் நாம் மேற்சொன்ன விஷயம் மிகத் தெளிவாகத் தெரிய வரும்.

### அட்டவணை I

**சிறு தொழில்கள் மூலம் வருமானமும், தேசீய வருமானத்தில் அதன் விகிதமும்**

| வருடம் | மொத்த தேசீய வருமானம் (கோடிக்கணக்கில் ரூ) | சிறுதொழில்கள்மூலம் வருமானம் (கோடிக்கணக்கில் ரூ) | விகிதம் 2 ல் 3 |
|---|---|---|---|
| 1950—51 | 9,350 | 910 | 9.6 |
| 1955—56 | 9,980 | 970 | 9.7 |
| 1960—61 | 14,140 | — | 7.9 |
| 1962—63 | 15,900 | 1210 | 7.8 |

மேற்கூறிய அட்டவணையிலிருந்து தேசிய வருமானத்தில் கதர் கிராமக் கைத்தொழில்கள், கைத்தறி போன்ற சிறு கைத்தொழில்கள் (5 லட்சம் ரூபாய்க்கும் உட்பட்ட மூலதனத்தைக் கொண்டவைகளின் பங்கு) மிகவும் குறைவானது என்பது தெரியவரும். 100 ரூபாய் வருமானம் தேவைப்படுபவன் 10 ரூபாய் வருமானத்தில் எப்படி வாழ்க்கை நடத்த முடியாதோ அதேபோன்று பரந்த இந்திய தேசம் 15,900 கோடி ரூபாய் தேசிய வருமானத்தில் சமாளிக்க முடியாதபோது சிறு கைத்தொழில் மூலம் 1210 கோடி ரூபாய் வருமானத்தில் திருப்திப்படமுடியும் என்பது நான் எதிர்பார்க்கக் கூடாத விஷயமாகும். கிராமக் கைத்தொழில்கள் மூலம் நம் நாட்டின் பொருளாதாரக் குறைபாடுகள் அனைத்தையும் திருத்திவிட முடியும் என்று நாம் நினைத்தால் அது மகாத்மா காந்திஜி நாட்டின் விடுதலைக்காக நமக்களித்த நிர்மாண திட்டத்தை நாம் தவறுகப் புரிந்து கொண்டதாகவே ஆகும். நம் நாடு நிலைத்திருக்க, நாம் மேன் மேலும் உழைத்துச் சகல பொருளாதாரத் துறைகளிலும் எவ்வளவு அதிக உற்பத்தி செய்ய முடியுமோ அவ்வளவையும் செய்தாக வேண்டும்., சுபிட்சம் அடைந்த மற்ற நாடுகளின் கதையும் இப்படித்தான் இருந்து வந்திருக்கிறது. இந்திய மக்கள் மட்டும் இதற்கு விதிவிலக்காக இருக்க முடியாது.

**சம விநியோகம்**

நாம் ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல் உற்பத்தி என்பது பொருளாதாரத்தின் ஒரு சக்கரமே ஆகும். மற்றொன்று சம விநியோகம். காந்திஜீயின் தத்துவம் இங்கு மிகப் பொருத்தமாக இருக்கிறது. நாட்டின் நிர்வாகத்தில் உள்ளவர்கள் உற்பத்தியைப் பெருக்குவதில் அவர்களுக்கு உள்ள பொறுப்பை உணர்ந்துள்ளனர் என்பதை காந்தியடிகள் அறிந்திருந்தார். ஆனல், காந்தியடிகள் சம விநியோகத்தை ஏற்படுத்த நம்மவர்கள் கையாளும் முறைதாம் தெளிவானவைகளாஎன்ற விஷயத்தில் முழு நம்பிக்கையும் கொண்டிருந்தாரில்லை. அவர்கள் உற்பத்தியை அதிகரிக்க வேண்டும் என்ற அவாவில் பெருத்த அளவில் உற்பத்தியை உண்டாக்கத்தக்க சாதனங்கள் மட்டுமே மனத்தில் கொண்டிருந்தார்கள் என்று பயந்திருந்தார். அத்தகைய முறைகளில் புதைந்திருந்த அபாய'த்தை அவர் கண்டிருந்தார்.

பெருத்த அளவில் உற்பத்தி சாதனங்களைக் கொண்டு துரிதமான தொழில் மயமாக்கும் செயலின் மூலம், நாட்டின் பொருளாதாரம், சமமற்ற விநியோகத்தை உண்டாக்கி அதன் மூலம் வருமானமும் செல்வமும் சமூகத்தில் ஒரு சிறு பிரிவினர் கையிலேயே தேங்கச் செய்து விடும் என்றும் அவர்கள் கையிலேயே உற்பத்திச் சாதனங்கள்

அனைத்தும் தங்கிவிடும் என்றும் காந்தியடிகள் கருதினர். இதன் மூலம் வேற்றுமை, துன்பம், அதிருப்தி முதலானவைகள் ஏற்படும். மேலும் இத்தகைய ஒரு நிலை நமது நாட்டில் பொருளாதார ஏற்றத் தாழ்வை ஏற்படுத்தி, ஒழுங்கான முன்னேற்றத்தினின்று நாட்டை விலக்கிக் கொண்டு போய்விடும் என்று, ஒருசிலர் நினைத்ததுபோல் காந்தியடிகளும் நம்பினர்கள்.

காந்தியடிகளின் மனதில் மற்ருெரு பயமும் இருந்தது. அதாவது பெருமளவில் உற்பத்தி செய்யும் சாதனங்களினுல், ஆயிரக்கணக்கான மக்களுக்கு வேலை வாய்ப்பு மறுக்கப்பட்டு விடும் என்பதே. அதுபற்றி அவர் அவ்வளவு அக்கரை கொண்டிருந்ததன் காரணம், பெருமளவு உற்பத்தியென்பதினுல், பொருளாதார ஏணியின் அடித்தளத்திலிருக்கும் ஏழை மக்கள் மிகவும் அதிகமாகப் பாதிக்கப்படுவார்கள் என்பதினுல்தான். அவ்வாருன ஏழை மக்கள் பெரும்பான்மையோர் கிராமங்களில் வாழ்ந்து வருவதால், அத்தகையதொரு அபிவிருத்தி இந்திய நாட்டின் நாகரிகத்திற்கும், பண்பாட்டிற்குமே சாரமாக இருக்கும் கிராம வாழ்வின் அஸ்திவாரத்திற்கும் அதன் அபிவிருத்திக்குமே ஆபத்தாக முடியும் எனக் காந்தியடிகள் நம்பினர்.

அவர் மனத்திலிருந்த மூன்ருவது பயம், இவைகளெல்லாம் நாட்டின் அபிவிருத்திக்குத் தவருன மார்க்கத்திலிருந்து முயற்சிப்பதாக இருக்கிறது என்ற கருத்தேயாகும். அவர் விரும்பியது, இந்திய நாடு எந்தக் கொள்கைகளிற்காகப் பாடுபடுகின்றதோ, அதை அடிப்படை

யாகக் கொண்டு செயல்பட வேண்டுமென்பதே.

அவர் விரும்பியது, அபி விருத்தி, முன்னேற்றமென்ப தெல்லாம் கடைசி மனிதனிட மிருந்து, அதிலும் பெரும் பாலும் கிராமங்களிலேயே இருந்து வரும் கடைசி மனிதனி னின்று, ஆரம்பமாக வேண்டு மென்பதே. இதுபற்றியே அவர், கதர்—கிராமக் கைத் தொழில்களை மேன்மேலும் வற் புறுத்தி வந்தார். கதர் - கிராமக் கைத்தொழில்கள்தான் மஹாத் மாஜி அவர்களின் கருத்தை, அதாவது இந்திய நாட்டின் அபிவிருத்தி வேலைகள், இந்திய நாட்டிலுள்ள மிகவும் தாழ்ந் திருக்கும் மனிதனிடமிருந்து ஆரம்பமாகி அடியிலிருந்துஅதா வது கிராமத்தினின்று உயர்ந்து போக வேண்டுமென்றதைப் பிரத்தியட்சமாகத் தெளிவு படுத்துகின்றன. நம் நாட்டி லுள்ள சாதாரண ஆண்களும், பெண்களும், தங்களுடைய உழைப்பின் மூலம் நாட்டின் அபிவிருத்திக்குத் தங்கள் தங் கள் பங்கைச் செலுத்த வேண்டு மென்ற காந்தியடிகளின் விருப் பத்தைக் கதர்—கிராமக் கைத் தொழில்கள் தான் உருவகப் படுத்துகின்றன. அதுவே, அவர் கருத்துப்படி, தன்னம் பிக்கையும், தன் மானமும் கவுர மும் தரக்கூடியவையாகும். அவர் மனத்திலிருந்த மற்றொரு எண்ணம், சமூகத்திலுள்ள, ஏற்றத்தாழ்வுகள் அதிகரிக்கக் கூடாது என்பதும், இந்திய சமு கத்தின் சீரான அபிவிருத்தி யைக் கெடுக்கத்தக்க வகையில், எத்தகைய அதிருப்தியும், ஏற் பட்டு விடக் கூடாது என்பதும் ஆகும்.

(தொடரும்)



## இரண்டே கேள்வி

ஆருடக்காரன் ஒரு பவுன் கட்டணம் வாங்கிக்கொண்டான்.

"அம்மணி, இந்தக் கட்டணத்துக்குள் நீங்கள் இரண்டு கேள்வி கள் கேட்க உரிமை உண்டு."

பணம் கொடுத்த பெண்மணி திடுக்கிட்டாள். "இரண்டே கேள்விகளுக்கு இது ரொம்ப அதிகமான கட்டணம் இல்லையா?" என்று கேட்டாள்.

"ஆமாம், அம்மணி; ஆமாம். இனி நீங்கள் உங்களுடைய இரண்டாவது கேள்வியைக் கேட்கலாம்."

—ஹி-கோர்ட்

'தாய் தனக்கு எதிராக இல்லை' தனக்கு ஒற்றுமையாகத்தா னிருக்கிருள் என்பதைக் குழந்தை உணருமாறு காட்டிக் கொண்டால் குழந்தையும் தாயை நன்கு புரிந்து கொள்வான். இதற்குப் பொறுமைதான் மிக மிக அவசிய மாகும்.

# குழந்தைகளின் கடமை உணர்வு

'கிருஷ்ணு'

பெரியவர்களாகிய நமக்குச் சில இன்றியமையாத கடமை கள் இருப்பதுபோலக் குழந்தை களுக்கும் சில கடமைகள் இருக் கின்றன. தன் கடமையைத் தானே செய்யவேண்டும் என்ற உணர்வும் மன எழுச்சியும் குழந்தைக்குத் தாகுகவே இயற்கை கற்றுக் கொடுத்து விடுகிறது. கடமையைச்செய்யும் பணியில் பெரியவர்களாகிய நாமாவது சற்றுச் சோம்பல் காட்டுவோம். குழந்தைகள் அவ்வாறு இருப்பதில்லை.

இயற்கையாகவே தானே பல் தேய்ப்பது, தாகுகவே செம்பில் ஜலத்தை எடுத்து மேல்ஊற்றிக் குளிப்பது, உடை உடுத்துக் கொள்வது, பெரியவர்கள் செய் யும் காரியங்களைப் பார்த்து தானும் அது போலச் செய்வது எல்லாம் குழந்தையின் தணிக்க முடியாத ஆசையாகும்.

கை கால்களை நன்கு உப யோகிக்கத் தெரிந்து விட்ட ஒரு சுறுசுறுப்புள்ள குழந்தை யின் உடல் ஒரு விநாடி கூடச் சும்மா இருக்காது. எதையாவது செய்து கொண்டேதான் இருக் கும்; அதனுடைய செயலார் வத்தைத் தாயார் சரியான வழி யில், சாதகமான முறையில் திருப்பி விட வேண்டும்.

தாயார் பெருக்குவதைப்பார்த் துக் கொண்டேயிருந்த குழந்தை சரோஜா, தாயார் பெருக்கி விட்டு அப்பால் சென்றதும் தானும் விளக்குமாறை எடுத்து அறையைக் கூட்டிச் சுத்தம் செய்கிருள். எத்தனையோ ஆண்டு கள் வேலைசெய்து பழகியவளைப் போன்ற பாவனையில் சரோஜா அழகாகக் குனிந்து பெருக்கினு லும், அந்தப் பாழாப் போகிற விளக்குமாறு அந்தச் சிறு கைக் குள் அடங்கினுல் தானே!... பலன்? தாயார் திரும்ப வந்ததும் அறை முழுவதும் விளக்கு மாற்றுக் குச்சி சிதறியிருக்கும். இப்பொழுது அவைகளை ஒவ்

வொன்றாக ஓடித்துக் கொத்த வரங்காய் கூறுகட்டிவியாபாரம் செய்யும் விளையாட்டில் வெகு ஆர்வமுடன் சரோஜா ஈடுபட்டிருப்பாள்.

தாயாருக்குக் கூட இருந்து பாத்திரம் தேய்ப்பது, அவளைப் போலவே துணி துவைப்பது முதலிய காரியங்களில் குழந்தை தன் செயலார்வத்திறல் ஈடுபட்டிருப்பதோடு, பெரியவர்களுக்கு நாம் உதவ வேண்டும் என்ற ஆசையும் மலிந்து இருக்கிறது. இந்த உதவி மனப்பான்மையால் •குழந்தை செய்யும் காரியங்கள் சில சமயம் தாயாருக்கு உபத்திரவமாகி விடுவதுமுண்டு.

தாய்க்குத் துணி துவைப்பதில் ஊதவ ராஜு விரும்புகிறான்.

தாயார் துணி துவைத்து விட்டு அப்பால் சென்றவுடன் தன் சட்டையைத் தானே தோய்த்து விடவேண்டுமென்ற ஆர்வமும், உதவி மனப்பான்மையும் கொண்ட ராஜு தன் சட்டையைத் தானே கழட்டி நனைத்துத் துணி துவைக்கும் கல்லில் மோதுகிறான். கல்லில் 'பட் பட்' என்று பட்டாசு வெடிப்பது போன்ற சப்தமும், பொறிகள் பறப்பது போல ஓங்கும் துணியிலிருந்து ஜலத்திவலைகள் தெறிப்பதும் ராஜுவுக்கு ஒரு கண் கொள்ளாக்காட்சியாக இருக்கிறது. அங்கேயே தீபாவளி பண்டிகை கொண்டாட ஆரம்பித்து விடுகிறான். மாசுமறுவில்லாமல் தாய் துவைத்துக் காயப்போட்ட துணிகள் எல்லாம் இப்பொழுது ராஜுவின் பிஞ்சுக் கரங்களில் அகப்பட்டுக் கொண்டு டப் டபார் பட்...டர் ...என்று கல்லில் அறைபட்டு ஓசைப்படுத்துகின்றன. மேனி முழுவதிலும் தன்னைச்சுற்றிலும் ஜம்பு கேசுவாரர் போல் ஜலம், சூழ்ந்திருக்க, உற்சாகம் மிகுந்த முகத்துடன் தன் காரியத்திலே கண்ணுயிருக்கிறான் ராஜு.

பின்னால் வந்து நின்று கொண்டு இதைக் கவனிக்கும் தாயார், தன் மைந்தன் தனக்குச் செய்யும் உதவியைக் கண்டு மகிழ்வாளா? அல்லது, தான் துவைத்து உலர்த்திய துணிகளுக்கு நேர்ந்தகதியை நினைத்து அழுவாளா?

இந்த மாதிரிச் சமயங்களில் தாய் குழந்தையைத் துன்புறுத்தாமலும், பயப்படுத்தாலும்,இத மான முறையில் சரியானபடி திருத்தி வளர்ப்பாளே யாகில், அவன் பெரியவனுக வளருகையில் பெற்ரேரின் , உத்திரவுகளுக்குக், அன்புக் கட்டளைகளுக்குக்கீழ்ப்படிந்து, எவ்வகையிலும் அவர்களுக்குத் திருப்தியளிக்கும் உத்தம புதல்வனுகத் திகழுவான் என்பதில் ஐயமேயில்லை.

மூன்று வயது தாண்டிவிட்ட ஒரு குழந்தை தனதுசட்டையை அணிந்து கொண்டு பித்தான்களையும் நாடாக்களையும் கூடத் தானுகவே போட்டுக் கொண்டு பெருமை யடைகிறது. செம்பில் ஜலத்தை முகர்ந்து தானுகவே மேலே ஊற்றிக் கொண்டு,

சோப்பை எடுத்து, முகம், இரு கைகள், வயிறு முதலிய பாகங்களில் தேய்த்துக் கொண்டு குளிப்பதாலும் மிக மிகப் பெருமையை யடைகிறது. குழந்தை தானகச் செய்து கொள்ளும் வேலைகளுக்குச் சற்றேனும் சந்தர்ப்பம் அளிக்காது தாயார் நான் செய்து விடுகிறேன்!'' என்று குறுக்கிடும் பொழுதெல்லாம் குழந்தை கோபம் அடைகிறது. அதோடு மட்டுமல்லாமல் தானகச் செய்து கொள்ள வேண்டும் என்ற 'ஆசை'யையும் இழந்து விடுகிறது.

இந்தப் பருவத்தில் குழந்தை ஆசைப் படுகிறது. ஓரளவு செய்து கொள்ளவும் செய்கிறது. ஆனாலும் தாயின் ஒத்துழைப்பின்றிக் குழந்தைக்கு தனியாக எதையும் சாதித்துக் கொள்ளவும்.முடியாது ஆகவே, குழந்தை விரும்பும் காரியங்களை அவனைக் கொண்டேசெய்வித்து விட்டால்,' ''தன்னால் முடியவில்லை'' என்பதைத் தானகவே உணர்ந்து பின்பு தாயின் உதவியை நாடி வருவான். முன்பே உதவப் போனால் தன் பெருமைக்கு ஏதோ பங்கம் வந்து விட்டது போலக் கூச்சலிடுவான்.

குழந்தைக்கு ஒத்தாசை செய்வது போல, அவனோடு இருந்து கொண்டே, ''அப்படியில்லை, இப்படிச்செய்! இவ்வாறு செய்தால்தான் சரியாக இருக்கும்!'' என்று அவனைக் கொண்டே செய்விக்கலாம்.

'தாய் தனக்கு எதிராக இல்லை' தனக்கு ஒற்றுமையாகத் தானிருக்கிறாள் என்பதைக் குழந்தை உணருமாறு காட்டிக் கொண்டால் குழந்தையும் தாயை நன்கு புரிந்து கொள்வான். இதற்குப் பொறுமை தான் மிக மிக அவசியமாகும்.

தாய் அறியும் பிள்ளைதானே தாயையும் தானறியும் என்பது ஆன்றோர் வாக்கல்லவா!

விளையாடி அலுப்படைந்த ஒரு குழந்தை தன் சாமான்களைக் கண்டபடி எறிந்து விட்டு அங்கேயே இளைப்பாறப் படுத்து விடுவதுண்டு. அதை அதை அந்தந்த இடத்தில் எடுத்து வைப்பது என்பது குழந்தை தானகச் செய்யும் என்று எதிர்பார்க்க முடியாது. நாமாகத்தான் அதை கற்றுக் கொடுக்க வேண்டும். அதையும் வற்புறுத்திக் கற்று கொடுக்காமல் விளையாட்டுப் போக்கிலேயே கற்றுக் கொடுப்பது நல்லது.

ஐந்து வயதானவுடன் குழந்தை தன் சாமான்களை உற்சாகத்துடனும், சாமர்த்தியத்துடனும் அழகுணர்ச்சியோடும்ஒழுங்காக அடுக்கி வைப்பதில் இன்பம் காண்பான். இது தாய் பழக்கி வைக்கும் நற்பழக்கத்தைப் பொறுத்திருக்கிறது.

நன்றி—காதல்



# கக்குவான் இருமல்

வெகு எளிதில் பரவக்கூடிய தொற்று நோயாகிய கக்குவான் இருமல் ஹெமோபிலியால் பெர்ட்டுஸிஸ் என்னும் கிருமிகளால் பரப்பப்படுகிறது.

பெரும்பாலும் சிறுவர்களிடையே காணப்படுகிற இந்நோய் பிறந்து ஆறு மாதமாகாத குழந்தைகளையும் கூட விடுவதில்லை. இது சுவாசக் குழாயைப் பாதித்துக் கடுமையான இருமல் தோன்றும்போது குழந்தைகள் மூச்சு விடமுடியாதபடி தவிக்கின்றன; அப்போது இந்த இருமலுக்கே உரிய இழுப்பு சத்தம் கேட்கும்.

நோய் ஆரம்பத்தில் 'கக்குவான்' இல்லாமலிருக்கலாம்; நோயாளிகள் இருமும்போது முகம் சிவந்து, கண்கள் நீர் பெருகிக் கடுமையாகச் சிவந்து விடும். கக்குவான் இருமல்பிடித்துள்ள குழந்தைகள் அடிக்கடி வாந்தியெடுப்பதால் உணவு தங்காமல், ஊட்டக் குறைவு ஏற்பட்டு, வேறு நோய்களை எதிர்க்கும் சக்தியையும் இழந்து விடுகின்றன.

இந்நோய், பாதிக்கப்பட்டிருப்பவர் மூலமே நேரடியாகப் பரவுகிறது. நோயாளிகளின் மூக்கிலிருந்தும் தொண்டையிலிருந்தும் வரும் சளியும், அதுபட்ட பொருள்களும் நோயைப் பரப்புகின்றன. இவர்கள் பலமாக இருமும் போது வெளிப்படுகிற சளி தெறித்து நோய் பரவுகிறது; இந்நோய் பள்ளிகளிலும் வேறிடங்களிலும் பரவுவதை விட வீட்டிலேயே அதிகமாகப் பரவுகிறது. இதுகக்குவான் இருமலாக மாறுவதற்குமுன்வெறும் இருமலாக இருக்கும்போது, ஆரம்ப கட்டத்தில், நோயாளிகளுடன் விளையாடும் பிள்ளைகளுக்கும் தாவுகிறது; நோய்க் கிருமிகள் தொண்டையிலும் மூக்கிலும் இருப்பதால்நோயாளி ஒவ்வொரு தடவை தும்மும் போதும் இருமும் போதும் கிருமிகள் வெளியே வருகின்றன.

இந்நோய் பீடித்த குழந்தைகள் உபயோகித்த பாத்திரங்களை உபயோகிப்பது அல்லது அவர்களின் எச்சில்பட்ட பென்சில்களையும் பொம்மைகளையும் தொடுவது ஆகியவையும் இந்நோயைப் பரப்பும்; இவர்களின் ஆடைகள் மூலமாகவும் துணிகளின் மூலமாகவும் பரவுகிறது.

## குழந்தை நோய்

கக்குவான் இருமல் பெரும்பாலும் குழந்தைப் பருவநோயாகும். இது ஆறு வயதுக்குக் குறைந்த குழந்தைகளிடையே தான் அதிகமாகப் பரவுகிறது; இரண்டு வயதுக்குட்பட்ட

குழந்தைகளுக்கு இந்நோய் கண்டால் அபாயமாகக்கூடும். ஆறு மாதக் குழந்தைகளையும் இந்நோய் விடாது; இக்குழந்தைகளுக்கு இது மிகவும் அபாயகரமானதாகும். பத்து வயதுக்குப் பிறகு இந்நோய் அதிகமாகத் தோன்றுவதில்லை. ஒரு தடவை இந் நோய் தோன்றினால் மீண்டும் இவை சாதாரணமாகத் தோன்றுவதேயில்லை. ஆண் குழந்தைகளைவிடப் பெண் குழந்தைகளைத்தான் இந்நோய் அதிகமாகப் பாதிக்கிறது. பெண் குழந்தைகளிடையே மரணமும் அதிகமாகச் சம்பவிக்கிறது!

குளிரில்பாதிக்கப்பட்ட பத்து தினங்களில் இந்நோயின் அறிகுறிகள் தென்படத் தொடங்கும்; இது ஏழு நாள் முதல் 21 நாள் வரையிலிருக்கும் நோயின் ஆரம்பக் கட்டத்தில்தான்,அதாவது கக்குவான் இருமல் ஆரம்பமாவதற்குமுன், சாதாரண இருமலாக இருக்கையில், இது வெகு எளிதில் தொற்றும். இந்த சமயத்தில் இந்நோயின் தன்மை பற்றி யாரும் கவனிப்பதில்லை.

இந்நோய் தொடங்கிய ஏழு நாட்களிலிருந்து கக்குவான் தோன்றிய 21 நாட்கள் வரை இது பரவக்கூடிய நோயாகக் கருதப்பட வேண்டும்.

### நோயின் அறிகுறிகள்

இந்நோய் மூன்று கட்டங்களாக வளருகிறது.

தடுமன்; முதலில் தடுமன் ஒன்று முதல் இரண்டு வாரங்கள் வரை நீடிக்கும்; நோயாளிக்கு லேசான காய்ச்சலிருப்பதோடு நெஞ்சில் சளியும் பிடித்திருக்கும். ஓயாத இருமலிருக்கும், இரவில் இது பலமாக இருக்கும். இந்நோய் எளிதில் பரவும். இரண்டு வாரம் கழிந்த பிறகு இரவில் இருமல் அதிகரித்து, வலிப்புக் கூறுகள் தென்படும். சில வேளைகளில் வாந்தி யெடுக்கும்.

வலிப்புக்கூறு:-வலிப்புக்கூறுகள் இரண்டு அல்லது நான்கு வாரங்கள் வரையிலிருக்கும்; இருமல், வலிப்பு நோய் போல வரும்; படுத்துக் கிடக்கும் குழந்தை எழுந்து தன் தாயை இறுகப் பற்றிக் கொள்ளும். சிறிது நேரம் மூச்சு இழுத்தவுடன் தொடர்ந்து இருமும். வாய் திறந்து நாக்கு வெளியே தள்ளிக் கொண்டிருக்கும். நெஞ்சு உலருவது வரையில் இருமுவது நிற்காது; கண்களில் நீர் நிறைந்து, விழிகள் பிதுங்கிக் காணப்படும்; குழந்தைகள் மூச்சு விடுவதற்குக்கூட முடியாமல் திணறும்.

இருமல் நின்று மூச்சு இழுக்கத்தொடங்கும் போது இருமற்குரிய இழுப்பு சத்தம் கேட்கும்; குழந்தை வேர்த்துத் துவண்டுவிடும். வாயிலிருந்தும் மூக்கிலிருந்தும் நுரையும் சளியும் வருவதோடு அடிக்கடி வாந்தியெடுக்கவும் செய்யும்; குழந்தை தன்னையறியாமல் சிறுநீர் கழிக்கும்.

இந்த இருமல் 10 அல்லது 15 தடவை ஏற்படும்.

குணமாகும் நிலை :—

குணமாகும் நிலையில் இருமல் சிறிது சிறிதாக நின்று குணமடையும். குளிர், குளிர்ந்த தண்ணீர் முதலியவை இருமலை விளைவிப்பதால் இவற்றைத் தவிர்க்க வேண்டும்.

அதிகமாக வாந்தியெடுத்தால் குழந்தை சோர்வடைந்து சில வேளைகளில் வலிப்பு ஏற்படும். 'பிராங்கோ நிமோனியா நோய் தாக்குவதும் சுவாசப் பை திடீரென்று சுருங்குவதும் இயல்பான நிகழ்ச்சியாகும். கண்களிலும் மூக்கிலும் இரத்தம் கசியும். குடலிறக்கமும் ஏற்படக் கூடும்.

திடீரென்று ஏற்படுகிற இருமலின் விளைவாக கழுத்திலும், தலையிலும் மூளையிலும் உள்ள ரத்த நாளங்கள் சுருங்கி ரத்தம் கசியத் தொடங்கும்.

கக்குவான் இருமல் ஆரம்பித்து மூன்று வாரங்கள் வரையில் ஒதுக்குப் புறமான இடத்தில் படுக்க வைக்க வேண்டும். இதனுல், இந்நோய் வேறெவருக்கும் பரவாது! அதோடு வேறு நோயும் குழந்தையைப் பாதிக்காது. இரண்டு வயதுக்கு மேற்பட்ட குழந்தைகளைத் தனியாக வைத்திருப்பது முடியாத காரியம்; இரண்டு வயதுக்குட்பட்ட குழந்தையைக்கூட தனியாக வைத்திருக்க வேண்டிய அவசியமில்லை; அதற்குத்திறந்த வெளிக் காற்று அவசியமாகும்.

கக்குவான் இரவுவேளைகளில் வந்து குழந்தைகளின் தூக்கத்தைக் கெடுப்பதால் பிற்பகலில் குழந்தைகளைத் தூங்க வைப்பது நல்லது.

காற்ருேட்டமுள்ள அறையில் குழந்தை இருக்கவேண்டும்; ஆனுல், குளிர் காற்று படக் கூடாது. அறையைச் சுத்தமாக்க வேண்டும்.

நோயாளி உபயோகித்த பாத்திரங்களை அவ்வப்போது சுடு தண்ணீரில் சுத்தம் பண்ண வேண்டும்; உபயோகித்த துணிகளும் கொதிக்கும் வெந்நீரில் சுத்தமாக்கப்பட வேண்டும்.

கக்குவான் இருமலைத் தடுக்க மருந்து கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது; ஆறுமாதக் குழந்தைகளுக்கும் அதற்கு மேற்பட்ட வயதுக் குழந்தைகளுக்கும் கக்குவான் தடுப்புமருந்து குத்தி வைக்கப்பட வேண்டும், இம் மருந்தை 'டிப்திரியா' 'டெட்டான்ஸ்' ஆகிய நோய்த் தடுப்பு மருந்துகளுடன் கலந்து மூன்று மாதம் முதல் ஆறுமாதம் வரையுள்ள குழந்தைகளுக்கு நான்கு தடவை, வாரத்துக்கொருமுறை குத்தி வந்தால் இம்மூன்று நோய்களிலிருந்தும் முழுப்பாது காப்புக் கிடைக்கும்; தொற்று நோய்க் காலத்தின் போது குழந்தைகளுக்கு மீண்டும் ஊசி குத்தி வைப்பது நல்லது.

—(இந்திய அரசாங்கச் செய்தி பரப்பு இலாகா)

# விவசாயிகளுக்கு வசதிகள்

ஏ. ஜே. நைட், பி.எஸ்ஸி. (ஏஜி.) டி.எச்., எம்.எஸ். (கார்னல்),
வானொலி விவசாய அலுவலர், விவசாய செய்தி நிலையம், சென்னை.

விவசாயம் வளர்ந்தோங்கினாலே கிராம மக்களின் பொருளாதார நிலை உயரும். தமிழ் நாட்டு விவசாயப் பெருமக்களே! இதனை அறிந்தே நம் அரசாங்கம் விவசாய உற்பத்திக்காக உங்களுக்கென்று பல அரிய திட்டங்களைத் தீட்டியுள்ளது. விவசாய உற்பத்தியைப் பெருக்க நாம் நவீன விவசாய முறைகளை மேற்கொள்ளுவது மிகவும் அவசியம். இந்த வகையில் அரசாங்கம் நமக்குப் பல வழிகளிலும் உதவி செய்து வருகிறது. நிலங்களைச் சீர் திருத்தவும், கிணறுகள் அமைக்கவும், உழவடைச் செலவிற்கும், இன்னும் அனேக வகைகளில் அரசாங்கம் கடன் வசதி அளித்து வருகிறது. அரசாங்கம் உங்களுக்கென அளிக்கும்கடன் மற்றும் சலுகைகள் பற்றிச் சொல்ல விரும்புகிறேன்.

விவசாயிகளுக்கு அரசாங்கத்தின் மூலமாகக்கிடைக்கக் கூடிய கடன் வசதிகளில் பல, தங்கள் பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்திலிருந்து பெறக்கூடியவையாகும். சில கடன் வசதிகளை தங்கள் மாவட்ட விவசாய அலுவலரிடமிருந்து பெறலாம். வேறு சிலவற்றை உதவி விவசாய பொறியாளர் மூலமாகப் பெறலாம்.

இப்பொழுது, உதவி விவசாய பொறியாளர் மூலம்பெறக் கூடிய கடன் வசதிகளைக் கவனிப்போம்.

அதிகமான நிலத்தைக் குறுகியநேரத்தில் ஆழமாக உழக் கூடிய டிராக்டர்களும், அதன் உபகரணங்களும் தவணை முறையில் வழங்கப்படுகின்றன. டிராக்டர்களும் அதன் உபகரணங்களும் வாங்குவதற்கு ரூ. 20,000 வரை கடன் வசதி அளிக்கப்படுகிறது. இந்த ரூ. 20,000 ஏழு வருட சமதவணைகளில் வசூலிக்கப்படும். இக் கடன் வசதி பெற விரும்பும் விவசாயிகளுக்கு ரூ. 30,000 மேல் மதிப்புள்ள வில்லங்க மற்ற நிலச்சொத்து மதிப்பு இருக்கவேண்டும்.

டிராக்டர்களை வாங்குவதற்கான கடன் வசதி பெற உங்கள் உதவி விவசாய பொறியாளர் மூலமாக தமிழ் நாடு விவசாயத் துறை நெறியாளருக்கு விண்ணப்பித்துக் கொள்ளுங்கள்.

நீர்ப்பாசன வசதிக்கென வடிமுனைக் குழாய்க் கிணறுகள்

(Filter point tube wells) இறக்கி அதற்கான என்ஜின் அல்லது மோட்டார், பம்பு செட்டுகள் வாங்க ரூ. 8,000 வரை கடன் வசதியளிக்கப்படுகிறது. இக் கடன் ஐந்து வருடத் தவணைகளில் வசூலிக்கப்படும். இதையும் உங்கள் உதவி விவசாய பொறியாளருக்கு விண்ணப்பித்துப்பெற்றுக்கொள்ளுங்கள்.

**குழாய்க் கிணறுகள் (Bore wells) :—**

இவைகளை அமைக்க அதிக பட்சம் ரூ. 6.000 வரை கடன் வழங்கப்படுகிறது. இதற்காகும் செலவில் 10 சதவிதம் வரை, ரூ. 500-க்கு மேற்படாமல் சலுகைத் தொகையாக வழங்கப்படும். இத்தொகை ஐந்து சம வருட தவணைகளில் வசூலிக்க படும். இந்தக் கடனையும் உதவி விவசாயபொறியாளரிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

மண் அரிப்பைத் தடுத்து மண் வளத்தைப் பாதுகாக்க சரிவான நிலங்களில் வரப்புகளையும், மலைச் சரிவுகளில் படிவு மட்டங்கள் (Terraces) போன்றவைகளையும் விவசாயத் துறையே அமைத்துக் கொடுக்கிறது. வரப்புகளை அமைக்க 25 சதவீத மான்யமும், படிவு மட்டங்களாயிருப்பின் 50 சதவீத மான்யமும்விவசாயிகளுக்கு வழங்கப்படுகிறது. மீதி செலவு தொகையை 20 வருட சம தவணைகளில் வசூலிக்கப்படும். மண்வளப்பாதுகாப்பு வேலைகளை அந்தந்த பிராந்திய மண் வளப் பாதுகாப்பு உதவி விவசாயப் பொறியாளர் மேற்கொள்ளுவார்.

அடுத்தபடியாக, உங்கள் பஞ்சாயத்து யூனியன் அலுவலகம் மூலம் பெறக்கூடிய கடன் வசதிகளைக் கவனிப்போம்.

**நெல். சிறு தானியம் பயிரிடும் விவசாயிகளுக்கு :—**

நெல். சிறுதானியப் பயிர்களுக்கு உரமிட வழங்கப்படும் கடன் வசதியாவது, அமோனியம் சல்பேட் போன்ற தழைச் சத்து இரசாயன உரங்கள் வாங்க ஒரு ஏக்கருக்கு ரூ. 35 வீதம் அதிக பட்சம் ரூ. 500 வரை ஒரு நபருக்குக் கொடுக்கப்படுகிறது. சூப்பர் பாஸ்பேட் போன்ற தானியச் சத்து உரங்கள் வாங்க ஒரு ஏக்கருக்கு ரூ. 15 வீதம் அதிக பட்சம் ரூ. 250 வரை கொடுக்கப்படுகிறது. கலப்பு உரங்கள் நெ. 1-ம், நெ. 2-ம் வாங்க ஏக்கருக்கு ரூ 50 வீதம் அதிக பட்சம் ரூ. 500 வரையில் கடன் வாங்கலாம்,

மேலே சொன்ன இரசாயன உரக் கடன்கள் ஒரு வருடத்திலேயே வசூலிக்கப்படும்.

**பருத்தி சாகுபடி செய்யும் விவசாயிகளுக்கு :—**

பருத்திக்கு உரமிட, தீவிர உரமிடும் திட்டத்தின்கீழ் ஒரு ஏக்கருக்கு ரூ. 50 வீதம் அதிக பட்சம் ரூ. 500 வரை இறைவைப் பருத்திக்கும், மானவாரி

பருத்திக்கு உரமிட ஏக்கருக்கு ரூ. 30 வீதம் அதிகப்பட்சம் ரூ. 300 வரை குறுகிய காலக் கடன் வழங்கப்படுகிறது.

**கரும்பு சாகுபடி செய்யும் விவசாயிகளுக்கு :—**

கரும்புக்கு உரமிட, தீவிர உரமிடும் திட்டத்தின்கீழ் ஒரு ஏக்கருக்கு ரூ. 100 வீதம் அதிக பட்சம் ரூ. 750 வரை குறுகிய காலக் கடன் வழங்கப்படுகிறது. இக்கடன் தொகை ஒரு வருடத்தில் வசூலிக்கப்படும்.

**நிலக்கடலை, எள்ளு சாகுபடி செய்யும் விவசாயிகளுக்கு :—**

முழுப் பண உதவி திட்டம் செயல்படாத இடங்களில் நிலக் கடலைக்கும் எள்ளுக்கும் மான வாரி பயிராயிருப்பின் ஒரு ஏக் கருக்கு ரூ. 25-ம் இறைவைப் பயிராயிருப்பின் ரூ. 50, அதிக பட்சம் ரூ. 500 வரை குறுகிய காலக் கடனுக வழங்கப்படுகிறது.

இதில் ஒரு குறிப்பைக் கவனிக்கவும். முழுப்பண உதவி திட்டம் செயல்படுமிடங்களில் கூட்டுறவு சங்கங்கள் மூலமாக இக்கடன் அளிக்கப்படுகிறது.

**தென்னை சாகுபடி செய்யும் விவசாயிகளுக்கு :—**

தென்னை சாகுபடியில் இரசாயன உரமிட ஒரு ஏக்கருக்கு ரூ. 100 வீதம் ரூ. 500 வரை குறுகிய காலக் கடனுக விநியோகிக்கப்படுகிறது.

அடுத்தபடியாக, மாவட்ட விவசாய அலுவலகரிடமிருந்து விவசாயிகள் பெறக்கூடிய கடன் வசதிகளைப் பற்றிப் பார்ப்போம்.

**பழச் சாகுபடி செய்யும் விவசாயிகளே!**

நீங்கள் புதிய தோட்டங்கள் அமைக்க ரூ. 300 வீதம் அதிக பட்சம் ரூ. 2,000 வரை நீண்ட காலக் கடனுகப் பெற்றுக் கொள்ளலாம். இதற்குக் கடன் வாங்கும் பணத் தொகையின் $1\frac{1}{2}$ மடங்கு தொகைக்கு மதிப்புள்ள வில்லங்க மற்ற நிலச் சொத்து மதிப்பு இருக்கவேண்டும். இக்கடன் ஆறும் வருட ஆரம்பத்திலிருந்து 10 வருடங்களில், அதாவது 16-வதுவருட ஆரம்பம் வரை வசூலிக்கப்படும்.

**திராட்சைத் தோட்டம் அமைக்க விரும்பும் விவசாயிகளுக்கு :—**

திராட்சைத் தோட்டம் அமைப்பதற்கு, இதர பழச் செடிகளை நட்டு பராமரிப்பதை விட அதிக செலவாகும். ஆதலால் திராட்சைத் தோட்டம் அமைக்க ஏக்கர் ஒன்றுக்கு ரூ. 600 வீதம் அதிக பட்சம் ரூ. 2,000 வரை நீண்டகாலக் கடன் கொடுக்கப்படுகிறது.

இக்கடன் தொகை 6-ம் வருடத்திலிருந்து 5 வருட தவணைகளில் வசூலிக்கப்படும்.

மேற்கூறிய அத்தனைக் கடன் தொகைகளும் வருடத்திற்கு

5½ சத வட்டியுடன் வசூலிக்கப் படும்.

குறுகிய காலக் கடன்கள் அத்தனையும் ஒரு வருடத்திலேயேவசூலிக்கப்படுகின்றன. இவை தவிர ஒரு சில விசேஷ திட்டங்களின் மூலம் ஆங்காங்கே விசேஷக் கடன் வசதி அளிக்கப்படுகிறது. அவைகளில் இரண்டு முக்கியமான விசேஷ கடன் வசதிகளைப்பற்றி இங்கு குறிப்பிடுகின்றேன்.

ஒன்று, நிலக்கடலை தீவிர சாகுபடி திட்டப் பகுதிகளாகிய கோவை, ஈரோடு, விழுப்புரம், கடலூர், போரூர், கரூர், திருச்சி, பட்டுக்கோட்டை, தஞ்சை, சைதாப்பேட்டை செங்கற்பட்டு, சேலம் ஆகிய விவசாயப் பிரிவுகளில் அமுலில் உள்ள ஒரு திட்டமாகும். இந்த திட்டத்தின்படி சிவப்புக் கம்பளிப் பூச்சியை ஒழிப்பதற்கு அந்தந்த இடத்திலேயே "உடனடிக் கடன்" (Spot loan) வழங்கப்படும். இந்தக் கடன் கூட்டுறவு சங்கங்கள் மூலமாக வழங்கப்படுகிறது.

இந்த திட்டத்தின்படி, நிலக்கடலை சாகுபடி செய்துள்ள ஒவ்வொரு விவசாயிக்கும், உடனுக்குடன் அந்தந்த கிராமத்திலேயே, ஒரு பிரத்தியேக கடன் விண்ணப்ப பாரத்தில் கையொப்பம் வாங்கிக்கொண்டு பி. எச். சி. 10 சதவீதம், அல்லது பாலிடால், அல்லது என்டிரின் போன்ற பூச்சி மருந்துகள் கடனாக வழங்கப்படுகின்றன. இந்தக் கடன் வசதி நிலச் சொந்தக்காரர்களுக்கும், எந்தவித தாமதமுமின்றி கடன் மனுவில் கையொப்பமிட்ட ஒரு சில நிமிட நேரத்திலேயே வழங்கப்படுகிறது. கடன் விண்ணப்பங்களில் கிராமக் கர்ணம், பஞ்சாயத்துத் தலைவர்களின் கையொப்பம் பெறுவதில் விவசாயிகளுக்கு எந்த விதமான சிரமமும் இல்லாதபடி அவர்கள் முன்னிலையிலேயே கடன் வழங்கப்படுகிறது. இதனால் காலா காலத்தில் பூச்சி மருந்து கொடுக்க முடிகிறது. இத்திட்டத்தின்கீழ் வழங்கப்படும் பணம் நிலவரியோடு வசூல் செய்யப்படுகிறது.

இரண்டாவது விசேஷக்கடன் வசதி காய்கறி அபிவிருத்திக்காக சில நகரங்களிலும், அதன் சுற்றுப்புறங்களில் வழங்கப்படுகிறது. சென்னை, கோயம்புத்தூர், மதுரை, திருச்சிராப்பள்ளி, திருநெல்வேலி நகரங்களிலும், அதைச் சுற்றி 30மைல் சுற்று வட்டாரத்தில் இருக்கும் காய் கறித் தோட்டக்காரர்களுக்கு ஒரு ஏக்கருக்கு ரூ. 120 காய்கறிச் சாகுப்படிக்கென கடன் கொடுத்து உதவப்படுகிறது. இக்கடன் பஞ்சாயத்து யூனியன் அலுவலகரிடமிருந்து கிடைக்கப் பெறலாம்,

இத்தகைய கடன் வசதிகளைக் காலா காலத்தில் பெற்று முழுப் பலனைப்பெற விவசாயப் பெரு மக்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

இப்பொழுது அரசாங்கம் வழங்கும் இதர சலுகைகளைப் குறித்துப் பார்ப்போம்.

**நவீன சாகுபடிக் கருவிக்காக வழங்கும் சலுகைகள் :—**

மேலூர் கலப்பைகள் 25 சத வீதம் குறைந்த விலையிலும், இறக்கைக் கலப்பைகள் மூன்றில் ஒரு பங்கு குறைந்த விலையிலும், இதர திருந்திய விவசாயக் கருவிகள் பாதி விலையிலும், விவசாயவிஸ்தரிப்பு அலுவலகங்களிலிருந்து பெறலாம்.

**உயர்தர விதைக்காக வழங்கும் சலுகைகள்**

1. நெல், சிறு தானிய விதை உற்பத்தி செய்து தரும் "கிராம சகாயக்"களுக்கு 100 கிலோ விதைக்கு ரூ. 5 வீதம் மான்யத் தொகையாக, பஞ்சாயத்து யூனியன் மூலம் வழங்கப் படுகிறது.

2. பசுந்தாள் உரப்பயிர் விதைகள் 15 சதவீதம் குறைந்த விலையில் விவசாய கிடங்குகளில் வழங்கப்படுகின்றன.

3. பசுந்தாள் உரப்பயிர் விதை தயாரித்துக் கொடுக்கும் விவசாயிகளுக்கு 100 கிலோ விதைக்கு ரூ. 5 வீதம் மான்யத் தொகையாக பஞ்சாயத்து யூனியன் மூலம் வழங்கப்படுகிறது.

4. காய்கறி விதைகள், பழச் செடிகள் விவசாய டிப்போக்களில் பாதி விலையில் வழங்கப் படுகின்றன.

5. உள்ளூர் எரு அபிவிருத்திக்காக விவசாயிகள் வெட்டும் கம்போஸ்ட் குழி ஒன்றுக்கு ரூ. 6 வீதம் பஞ்சாயத்து யூனியன் மூலம் வழங்கப்படுகிறது.

**பயிர்களில் பூச்சி, பூஞ்சண நோய்களின் தடுப்பிற்காக அரசாங்கம் அளிக்கும் சலுகைகள்**

1. உணவுப் பயிர்களுக்கு 25 சதமானிய விலையில் பூச்சி, பூஞ்சண மருந்துகள் வழங்கப் படுகிறது.

2. எண்ணெய் வித்துப் பயிர்களுக்கு கோயம்புத்தூர், சேலம், தென் ஆற்காடு, மதுரை மாவட்டங்களில் 50 சத மான்ய விலையில் பூச்சி மருந்து வழங்கப் படுகிறது.

3. காய்கறிகளுக்கும் பருத்திக்கும் 50 சத மான்ய விலையில் பூச்சி, பூஞ்சண மருந்துகள் வழங்கப்படுகிறது.

4. பாக்கு மரங்களில் பூச்சி, பூஞ்சண நோய்கள் தடுப்பிற்காக கோயம்புத்தூர், சேலம், கன்னியாகுமரி மாவட்டங்களில் பூச்சி, பூஞ்சண மருந்துகளை முக்கால் விலையில் வழங்கப்படுகிறது.

5. கரும்புப் பயிருக்கு 50 சத விலையில் பூச்சி, பூஞ்சண மருந்துகள் வழங்கப்படுகிறது.

6. தென்னை மரத்தைத் தாக்கும் பூச்சி, பூஞ்சண நோய்களைத் தடுக்க 50 சத மான்ய விலையில் பூச்சி, பூஞ்சண மருந்துகள் வழங்கப்படுகிறது.

7. நீலகிரி மாவட்டத்தில் மட்டும், உருளைக்கிழங்குப் பயிரைத் தாக்கும் பூஞ்சண நோயைத் தடுக்க 50 சத விலையில் மருந்து வழங்கப்படுகிறது.

8. தென்னை, கமுகுத்தோட்டக்காரர்களுக்கு ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கை, கையால் இயக்கும் மருந்து தெளிப்பான்கள் 50 சத மான்ய விலையில் வழங்கப் படுகின்றன. மான்யத் தொகை ரூ. 100-க்கு மேற்படாது வழங்கப்படுகிறது.

இத்தகைய கடன் வசதிகளையும் சலுகைகளையும் காலாகாலத்தில் பெற்று முழுப் பலனையும் அனுபவிக்குமாறு விவசாயப் பெருமக்களைக் கேட்டுக்கொள்கிறேன். இந்தக் கடன் வசதிகளைக் காலதாமதமின்றிப் பெற விவசாயிகள் முன்னதாகவே சம்பந்தப்பட்ட அலுவலருக்கு விண்ணப்பிக்கக் கேட்டுக் கொள்ளுகிறேன். கேளுங்கள் கொடுக்கப்படும். வாங்கிய கடன் தொகையை விவசாயிகள் சீரிய முறையில் பயன்படுத்தி உணவு உற்பத்தியைப் பெருக்குவீர்.

(29—5—64 அன்று கிராம வானொலி மன்ற நிகழ்ச்சியில் ஒலி பரப்பப்பட்டது)

**நன்றி—மேழிச்செல்வம்**



## தங்கக் குவியல்!

ஒரு சமயம் இன்றைய இங்கிலாந்தின் ராணி எலிஜபெத்தும் அவள் தங்கை மார்க்கரெட்டும் ராயல் மிண்ட் என்ற பிரிட்டிஷ் நாணய வார்ப்புச்சாலையைப் பார்க்கச் சென்றார்கள். அங்கே தங்கக்கட்டிகளை ஏராளமாக அடுக்கி வைத்திருந்தார்கள்.

செங்கல் குவியல் போல் இருந்த தங்கக் கட்டிகளைப் பார்த்ததும் மலைப்பு ஏற்பட்டு விட்டது. இவ்வளவும் தங்கமா? என்று கேட்டாள் எலிஜபெத். ''ஆமாம் நீயும் உன் தங்கையும் உங்களால் தூக்க முடிந்த தங்கக் கட்டிகளை எடுத்துச் செல்லலாம்'' என்று பாங்குத் தலைவர் நார்மன் மாண்டேகு இளவரசிகளிடம் சொன்னார்.

அக்காளும் தங்கையும் ரொம்பச் சந்தோசமடைந்தார்கள். ஆவலோடு சென்று ஆளுக்கொரு கட்டியாகத் தூக்கிச் செல்லலாம் என எண்ணிச் செயலில் முனைந்தார்கள். ஒரு கட்டியைக் கூட அசைக்க முடியவில்லை. பிறகு இருவருமாகச் சேர்ந்து ஒரு கட்டியைத் தூக்கினார்கள், கட்டி அசையவேவில்லை. அவ்வளவு பெரிய கட்டியை—அதுவும் தங்கக் கட்டியை—அந்தச் சிறுமிகளால் எப்படித் தூக்கிவிட முடியும். சகோதரிகளின் செயலைக்கண்டு மாண்டேகு சிரித்துக் கொண்டிருந்தார்.

# அருள் வாக்கு

திரு. அ. ச. ஞானசம்பந்தன் எம். ஏ.

மக்களில் எத்தனையோ வகையுண்டு. எவ்விதமான கொள்கையும் இல்லாமல் கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்ற கருத்தில், வெந்ததைத் தின்று காலம் வந்தபொழுது உயிரை விடுகின்றவர்கள் ஒரு சிலர். இதன் எதிராக வாழ்க்கையில் எல்லாவற்றிலுமே வெறுப்புக்கொண்டு எப்பொழுதும், எதன் மேலும் வெறுப்பு உடையவராய் முணுமுணுக்கின்ற இயல்புடையவர் ஒரு சிலர். இவ்விரண்டு கூட்டத்தார்களுக்கும் எதிராக மூன்றுவது ஒருவகைக்கூட்டம் உண்டு. இவர்கள் ஆழ்ந்து அமைதியுடன் வாழ்பவர்கள். இந்தப் பூனையும் இந்தப் பாலைக் குடிக்குமா என்ற முறையில் எவ்விதமான படாடோபமும் இல்லாமல் வாழ்பவர்கள். ஆனால், இத்தகையவர்கள் ஏதாவது ஒரு முடிவு எடுத்துக் கொண்டார்களேயானால் அவர்களை அந்த முடிவில் இருந்து மாற்றுதல் இயலாத காரியம். நம்மில் சிலரைப் போன்று இவர்கள் திடீர் என்ற ஒரு முடிவுக்கு வந்து, தேவை ஏற்படும் பொழுது திடீர் என்று அந்த முடிவைக் காற்றில் பறக்க விடுவது மில்லை. அதன் மறுதலையாக, இவர்கள் நன்கு ஆராய்ந்து அதன் பின்னரே முடிவு எடுப்பார்கள். அவ்வாறு முடிவு எடுத்த பிறகு தாம் எடுத்த முடிவு காரணமாகத் துயரம் ஏற்படுவதாயினும், தம் உயிரே போவதாயினும் தம் முடிவை இவர்கள் மாற்றிக் கொள்பவர் அல்லர்.

திருவள்ளுவர் கூறிய 'எண்ணித் துணிககருமம் துணிந்தபின், எண்ணுவம் என்பது இழுக்கு' என்ற குறளுக்கு இலக்கியமாக வாழ்கின்ற இவர்கள் மானிட வர்க்கத்தில் மிக உயர்ந்த இடத்தில் இருப்பவர்கள். ஏயர்கோன் கலிக்காம நாயனர் என்பவர் சுந்தரமூர்த்தி சுவாமிகளிடம் பகையைப் பாராட்டினர். அவருடைய பகையைப் போக்க ஆண்டவன் அவருக்கு ஒரு வயிற்று வலியைத் தந்தான். எந்த மருந்தினாலும் நோயைப் போக்க முடியாமல் அவர் இடர்ப்பட்டிருக்கும்பொழுது, இரவில் அவருடைய கனவில் வந்து சுந்தரமூர்த்தி சுவாமிகள் வந்தால் தான் அவருடைய வயிற்றுவலியைப் போக்க முடியும் என்று இறைவனே கூறினன். ஆனால், துணிந்த பிறகு திரும்பிப் போவது இல்லை என்ற முடிவையுடைய ஏயர்கோன் கலிக்காம நாயனர், முழுமுதற் பொருளான ஆண்டவனைக்கூட, தம் கொள்கையில் எதிரே எறிந்து விடுகிருர். "ஆண்டவனே;

பரம்பரை, பரம்பரையாக நீயே என்னுடைய தலைவன் என்றும், உனக்கு அடிமை செய்வதே எங்களுக்குப் பெரும் பாக்கியம் என்றும், எம் முன்னோர்களும் நானும் வாழ்ந்து வருகிறோம். அப்படி இருக்க நீரே வலியச் சென்று ஆட்கொள்ளப்பெற்ற இந்த சுந்தரமூர்த்தி வந்து என் வலியைத் தீர்ப்பதைக் காட்டிலும், "இவ்வலி தீராமலேயே நான் உயிரைவிட்டால் கூடத் தவறு இல்லை" என்று கூறிவிடுகிறார். இறுதியில் சுந்தரமூர்த்திகள் தம்மைப் பார்க்க வருகிறார் என்பதை அறிந்த ஏயர்கோன் கலிக்காம நாயனார், அவர் முகத்தில் விழிப்பதைக் காட்டிலும் உயிரை விடுவதே சாலச் சிறந்தது என்ற கருத்தில் கத்தியால் தம் வயிற்றைக் கிழித்துக் கொண்டு, உயிரையே விட்டு விடுகின்றார்.

இப்பெரியவர்களுடைய நெஞ்சு உரம் இருந்தவாறு என்னே; ஆண்டவன் வந்து கூறினாலும் அக்கூற்றுத் தம்முடைய கொள்கைக்கு எதிராக இருக்குமானால் அந்த ஆண்டவனையும் எட்டி நில் என்று சொல்கின்ற அளவுக்கு இரும்பு நெஞ்சம் படைத்தவர்களாக இருககின்றார்கள். தாம் அறிந்து தேர்ந்தெடுத்த கொள்கையின் மேல் உண்மையான நம்பிக்கை உடையவர்கள், அக் கொள்கைக்கு இடையூறு வருமானால், உயிரை விடுவதை அல்லாமல், கொள்கையை விடுபவர் அல்லர். தனிப்பட்ட மனிதர்களுடைய வாழ்க்கையிலும் சமுதாயத்தின் வாழ்க்கையிலும் ஏன், எந்த ஒரு வாழ்க்கையிலேயும் கூட இக் கருத்து விரும்பி மேற்கொள்ளப்பட வேண்டிய ஒன்றாகும். கொண்ட கொள்கையினிடத்து உறுதிப்பாடு இல்லாத ஒரு மனிதன். வாழ்வதும் வீழ்வதும் ஒன்றுதான். எந்த ஒரு கொள்கையையும் மேற்கொள்ளு முன்னர் நன்கு ஆராய்ந்து, சீர்தூக்கி அதன் பின்னரே மேற்கொள்ள வேண்டும். அவ்வாறு மேற்கொண்ட பின்னர். இடையில் அதனைக் காற்றில் பறக்க விடுவதும், அல்லது அந்த நேரத்திற்கு ஓர் இலாபம் ஏற்படுகிறது என்பதற்காகக் கொள்கையைக் பறக்க விடுவதும், அறிவுடையார் செய்கின்ற செயல் அன்று. எந்த ஒரு கொள்கையும் அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட வேண்டும் என்று கூறமுடியாது. ஒரு சிலர் அதனைப் போற்றிக்கூற முற்படுவார்களேயானால் அதனைத் தீயது என்று ஒரு சிலர் தூற்ற நேரிடும் அன்றோ. எனவே, நலம் தீங்குகளை ஆராய்ந்து, தனி மனிதனோ ஒரு நாடோ ஏற்றுக்கொண்ட ஒரு கொள்கையை ஏதோ ஒரு காரணம் அல்லது அந்த நேரத்தில் ஒரு லாபம் அல்லது ஆபத்து வருகிறது என்று கருதி, விட்டு விட்டு, புதியதாக ஒரு கொள்கையை மேற்கொள்ளத் தொடங்கினால், அது அறிவுடைமையும்ஆகாது, சிறப்பும்ஆகாது.

நன்றி—குருகுலம்

வீட்டில் மூலை மூலையாகக் குப்பைகள் குவித்து வைப்பதை நிறுத்திக் கொள்ளவேண்டும். அது போன்றே கொல்லைகளில் குப்பை சேர்ப்பதையும் ஒழிக்க வேண்டும். கூரைகளில் ஒட்டடை சேராமல் துப்புரவாக வைத்துக் கொள்ள வேண்டும். புத்தக அலமாரிகளை அடிக்கடி கவனித்துத் துப்புரவு செய்ய வேண்டும்.

# தேளோ தேள்!

ஹாரி மில்லர்

கொடுமையான விஷத்தைக் கொட்டும் கொடுமையான தேள், பிராணிகளுள் எந்த இனத்தைச் சேர்ந்தது தெரியுமா? பூச்சிகள் இனத்தைச் சேர்ந்தது என்று பெரும் பாலோர் கருதுகின்றனர். ஆனால், இதற்கும் பூச்சி இனத்துக்கும் தொடர்பு இல்லை. கொடுக்கால் விஷத்தைக் கொட்டும் திறனுள்ள அது, தேகத்தினின்றும் ரத்தத்தை ''உறிஞ்சும்'' திறனுள்ள உண்ணி இனத்தைச் சார்ந்ததாகும். பூச்சிகள் ஆறு காலிகள்; தேள்கள் எட்டுக் காலிகள். 'எட்டுக்கால் பூச்சி' என்று அழைக்கப்படும் சிலந்தி வர்க்கத்துடன் தேளுக்கு உறவு முறை உண்டு. இவ்வாறு இதற்குள்ள கால்களின் எண்ணிக்கை, பூச்சி இனத்தினின்றும் இதைப் பிரித்து அறிவதற்குப் பயன்படுகிறது.

**அனுகூல சத்துரு**

ஆனால், தேள்கள் பூச்சிகளையே தம் இரையாகக் கொண்டு வாழ்கின்றன என்பது உண்மை. வாகான தனது முன்னங் கைகளால் பூச்சிகளைப் பிடித்துக் கொண்டு, ஆற அமர ரசித்து உண்கிறது தேள். பிடிக்குள் அகப்பட முடியாததாகவும், வலுமிகுந்ததாகவும் உள்ள இரையைத் தன் வசமாக்கிக் கொள்வதற்கு முக்கியமாக அதன் கொடுக்கே உபயோகமாகிறது. அத்தகைய இரையை 'வெடுக், வெடுக்' கென்று கொட்டிச் செயலற்றதாக்குவதன் மூலம் தான், தன் வசமாக்கிக் கொள்கிறது அது. இவ்வகையில், மிகப் பெரும் பகையான பூச்சிகளை அழித்து இரையாக்கிக் கொள்வதன் மூலம் தேள் மனிதனுக்கு அனுகூலமாக இருக்கிறது. என்றாலும், மனிதன் பாசத்துடனும் பட்சத்துடனும், அதைக் காப்பாற்றுவதற்கில்லை; கண்ட இடத்தில் அடித்து ஒழிப்பது தான், இந்த 'அனுகூல சத்துரு' வின் கொடுமையான கொடுக்குக்கு அகப்படாமல் அவன் மீள்வதற்கு ஏற்ற வழியாகும்.

**தேளோ? தெள்ளுப் பூச்சியோ?**

"கொட்டினால் தேள்; கொட்டாவிட்டால் தெள்ளுப் பூச்சி" என்று ஒரு பழமொழி உண்டு. தேள் இனத்திடையே 'தேள்', 'தெள்ளுப் பூச்சி' என்ற இரண்டு வகை இயல்புள்ளவற்றையும் காணலாம். பொதுவாக, நம் சென்னையைச் சுற்றிக் காணப்படும் தேள்கள் இரண்டு வகைகளாகும். அவற்றுள் ஒன்று, கன்னங்கரேல் என்று ஆறு அங்குல நீளத்துக்கும் அதிகமாக இருக்கும்; மற்றொரு ரகம், சின்னஞ் சிறிதாக, இளமஞ்சள் நிறத்தில் இருக்கும். பெரிய தேளைக் கண்டால் "ஐயோ, கருந் தேள்!" என்று அலமந்து போகிறோமல்லவா? ஆனால் இந்தப் பெரிய தேளால் அவ்வளவாகத் தீங்கு நேராது. அது அவ்வளவு சீக்கிரம் கொட்டவும் கொட்டாது. சீக்கிரம் கோபம் கொண்டு கொட்டுவதற்கு அதற்குச் சுரத்தில்லை. மகா மந்த சுபாவம் உள்ளது அது. சிறு அளவிலுள்ள மற்றதோ, மிகவும் பொல்லாதது; 'வெடுக்' கென்று கொட்டிவிட்டு ஓடிவிடும். பெரிய கருந் தேள் மனிதனுக்குக் கெடுதல் செய்யக்கூடிய இடங்களில் கூடப் பெரும்பாலும் வசிப்பதில்லை. பூமிக்கடியில் ஆழமாகத் தோண்டிக் கொண்ட பள்ளத்திலேயே அது வசிக்கிறது. கற்களுக்கு அடியிலும், ஓடுகளுக்குக் கீழும், குப்பை கூளங்களிலும், இருட்டு மூலைகளிலும் ஒடுங்கி யிருந்து, வீட்டோடு வசித்துத் தொல்லை கொடுப்பதெல்லாம் சிறிய அளவுத் தேள்கள் தாம். இவை சின்னஞ்சிறு கொடுமைச் சின்னங்கள். இவை எப்போதும் ஜரூராகவும் சுறுசுறுப்பாகவும் உள்ளவைகளாகும்.

பூச்சிகள் சேரக்கூடிய ஒடுக்கமான இடங்களெல்லாம் தேள்கள் வசிப்பதற்கு வாகான வாசஸ்தலங்களாகும். வீட்டில் மூலை மூலையாகக் குப்பைகள் குவித்துவைப்பதை நிறுத்திக் கொள்ள வேண்டும். அது போன்றே கொல்லைகளில் குப்பை சேர்ப்பதையும் ஒழிக்க வேண்டும். கூரைகளில் ஒட்டடை சேராமல் துப்புரவாக வைத்துக் கொள்ள வேண்டும், புத்தக அலமாரிகளை அடிக்கடி கவனித்துத் துப்புரவு செய்ய வேண்டும். இம்மாதிரி கவனித்துக் கொண்டால், தேள்கள் சேர்ந்து தொல்லை கொடுப்பதினின்றும் நாம் மீளலாம். பொதுவாக, பூச்சிகள் சேரக்கூடிய இயல்புள்ள இடங்களை யெல்லாம் சுத்தமாக வைத்துக் கொள்ளவேண்டும்.

**இராச் சுற்றிகள்**

தேள்கள் இரவில் சுறுசுறுப்பாக இயங்கும் பிராணி இனத்தைச் சேர்ந்தவைகளாகும். தேள்கடிகள் பெரும்பாலும் இரவுகளில் நிகழ்வதற்கு அவற்றின் இராச் சுற்றும் இயல்பே காரணமாகும். அதிலும் கிராமங்களில் பாதைகளில் நடக்கும்

மக்கள் இவ்வாறு காலில் தேளால் கொட்டுண்பது சர்வ சாதாரண நிகழ்ச்சியாகும். இதையே அவர்கள் பாம்பு கடித்துவிட்டது என்று பிரமாதப் படுத்தி விடுகிறார்கள். இதற்குக் காரணம், தேள் கொட்டுவதும், அது பரபரவென்று ஓடிவிடுவதும் கண்ணிமைக்கும் நேரத்துக்குள் நடந்துவிடுவதும், அதைக் கொட்டுண்டவர் பார்க்க முடியாமல் போய்விடுவதுமே யாகும்.

*சிறு துளி; பெரும் வலி !*

தேள் விஷம் நம்மைத் தள்ளாடச் செய்யுமளவுக்குக் கடுமையான இயல்புடையதாகும். தேள் கொட்டும் போது தசைக்குள் விஷம் செலுத்துவது கண்ணுக்குத் தெரியாத அளவு நுண் துளிதான். ஆனால், அந் நுண் துளியே அவ்வளவு கடுமையான வலியைக் கொடுக்கிறது. இவ்வளவு வீர்யமுள்ள இந்த விஷத்தைப் பற்றி இளம் ரசாயனிகள் தீவிரமாக ஆராய்ச்சி செய்ய வேண்டும். இந்தத் துறையில் ஆராய்ச்சி செய்தல் மிகவும் ஆதாய முள்ளதாக இருக்கக்கூடும். வலுமிக்க இத்தகைய விஷம், வைத்தியத் துறையில் அளவுமிக்க பயனுடைய மருந்தாகப் பயன்படக் கூடும். தேள்கடிக்கு வலுவான மாற்று மருந்து இன்னமும் கண்டுபிடிக்கப் படவில்லை.

*தேள் கடி சிகிச்சை*

தேள் கொட்டி விட்டால், அதற்குச் சிகிச்சை என்ன? வலியை மறத்துப் போகச் செய்யும் உணர்ச்சியளிக்கும் மருந்து ஒன்றைக் கொட்டிய இடத்தில் பிரயோகிப்பதே மிக நல்ல முதல் சிகிச்சையாகும். ஆச்சரியப் படும்படியான நிவாரணம் பெரும்பாலோர் விஷயத்தில் ஏற்படுகிற தென்றாலும், சிலர் விஷயத்தில் உணர்ச்சி அழிக்கும் மருந்தை ஊசி மூலம் உட்செலுத்துவதில் திட்டமான பலனைக் கொடுப்பதில்லை. இதற்குக் காரணம், கொட்டுவாய் உள்ள இடத்தைச் சரியாகக் கண்டுபிடித்து சுறாராக ஊசியைக் குத்தும் வாய்ப்பு ஏற்படுவதைப் பொறுத்தே இத்தகைய உடனடி நிவாரணம் ஏற்படுவதால் இருக்கக் கூடும். இத்துடன், ஆண்டி இஸ்டாமின் இஞ்ஜெக்ஷன்களையும் மற்றும் வாய் மூலம் உட்கொள்ளும் வலியை சமனப்படுத்தும் மருந்தையும் இரண்டாவது ரக மனிதர்களுக்கு உபயோகிக்கலாம். தேள்கடி ஏற்பட்டு, அதைச் சிகிச்சை செய்யா விட்டிருந்தால், அது இருபத்து நான்கு மணி நேரத்துக்கும் மேல் வலித்துக் கொண்டே இருக்கக் கூடும். இந்த வலியைத் தவிர்த்து, நிரந்தரமான தீங்கு எதையும் தேள் விஷம் செய்வது அரிதாகும். என்றாலும் மிகச் சிறிய குழந்தைகள், கிழவர்கள், இதய உபாதையுற்றவர்கள் ஆகியோரே, தேள் கொட்டுவதனால் ஏற்படும் அதிர்ச்சியால் மரணத்திற்கு ஆளாகக்கூடும்.

நன்றி - தினமணி

# தை மகள்

நாவுக்கரசன்

தைமகள் வந்தாள் தரணியெலாம் பொன்விளைய
பையப் பனிநீக்கித் தைப்பெண் பவனிவந்தாள்.

ஆடல் மகளிரைப்போல் வாழை, இலைவிரித்து
நீடுமடல் ஆட நிமிர்ந்திருக்கும் தோப்பெல்லாம்!
பச்சை முடிபரப்பிப் பந்துக் கருங்குலைகள்
உச்சியிலே தொங்க ஓங்கி வளர்ந்தபனை
நட்டுவைத்த தூண்போல நாற்புறமும் காட்சிதரும்!
மொட்டவிழ்ந்த முல்லை முறுவலிக்க, முள்ளிப்பூ
தென்றலுக்கு நன்மணத்தைச் சேர்த்து மகிழ்ந்தாடும்!
கன்றுகள் துள்ளக் கழுத்துமணி தாளமிடும்!
இத்தனையும் மின்ன இயற்கை சிரிக்கின்ற
புத்தழகுச் சிற்றூர்ப் புறத்தே அறுவடைகள்!

கட்டுக் குலையாக் கறுப்பழகி, கார்கூந்தல்
தொட்டு நிலம்புரளத் தொய்ந்த இடைதுவளக்
கட்டியகால் தண்டை கணக்காய் ஒலியிசைக்க
வெட்டும் நெளிமின்னல் வந்ததுபோல், கால்விரலின்
மிஞ்சி வரப்புப்புல் மேற்பதிய நெல்தூக்கி
வஞ்சி உழத்தியவள் வந்தாள் மனைதிரும்பி
சேற்றில் வியர்வையைச் சிந்தி உரமாக்கி
நாற்றைப் பயிர்கண்டு நாளும் உழைத்தபலன்
கண்டனர் உழவர்! பண்ணைக் குடிமக்கள்
மண்டியது இன்பம்! மன்மெல்லாம் பூரிப்பு!
ஊருக்காய் வாழும் உழவர் படைவாழ்க!
பாருக்குள் மூத்த பழந்தமிழர் பொன்னுளாம்
பொங்கல் விழாப்பொலியப் புத்தாடை இன்பங்கள்
தங்கப் பவனிவந்தாள் தை!

பெண்மை பெருமை வாய்ந்தது. அந்தப் பெருமை நம்மோடு, நம் தலைமுறையோடு அழிந்து ஒழிந்து போவது இல்லை. உலகம் உள்ளளவும் நிலைத்து நிற்பது. அது ஒரு வைரக் கல். அதன் ஒளியை நாம் மங்கச் செய்து விடக் கூடாது.

# பெண்ணின் பெருமை

குமாரி டி. சுலோச்சனா பி.ஏ., பி.டி., எம்.எல்.ஏ.

பெண். இந்த இரண்டு எழுத்துக்குள் அன்பு, ஆசை பண்பு, பாசம், ஏன் இந்த உலகமே அடங்கி இருக்கிறது. பெண்ணுக்கு ஆக்கவும், தெரியும். அவளால் அழிக்கவும் முடியும். பெண்ணால் முடியாதது எதுவுமே இல்லை. இன்று அண்டவெளியில் கூட அவள் பறந்துவிட்டாள்.

பெண் இனம் முற்காலத்தில் பெருமையுடன் இருந்தது. பெண்மைக்கு நம் முன்னோர் பெருமை தந்தனர். ஔவையும், காக்கைப் பாடினியாரும் எங்களால் இலக்கியத்திலும் புகழ்பெற முடியும் என்பதை எடுத்துக்காட்டினார்கள். ஜான்சி ராணி வீறிட்டெழுந்து வெள்ளையரை விரட்டியடித்து வீரத்தை நிலை நாட்டினார். கற்பிற் சிறந்த கண்ணகி தன் கணவனைக் கொன்ற பாண்டிய மன்னனைப் பழி வாங்கி மதுரை மாநகரத்தையே தீக்கிரையாக்கி நீதி நெறி தவறாதவர்கள் பெண்கள் என்பதைச் சுட்டிக் காட்டினாள். கணவன் செத்து விட்டதைக் கண்ட கோப்பெருந்தேவி அவன் காலடியிலேயே வீழ்ந்து உயிர் நீத்துக் கற்பின் மகிமையைப் பறைசாற்றினாள். பால் மணம் மாறாப் பச்சிளங்குழந்தைகளைப் போருக்கு அனுப்பி நாடுகாக்கத் தங்கள் தியாகத்தை எடுத்துக் காட்டியவர்களும் எத்தனையோ பேர் பெண்களில் உண்டு.

பெருமை பெற்றிருந்த பெண்ணினம் இடைக் காலத்திலே சுயநலக் கும்பல்களால் பின்னுக்குத் தள்ளப்பட்டது. பெண்ணா அய்யய்யோ...அவள் காற்றே படக் கூடாதென்று ஒதுக்கி வைத்தனர். இந்தப் பேதைமையைக் கண்ட பாரதியார் சினந்தெழுந்தார். நாட்டு வாழ்விலே பெண்ணுக்கும் நல்லதொரு பங்குண்டு என்று பாட்டிலே பாடிக் காட்டினார். ஆணுக்குப் பெண் தாழ்ந்தவளல்ல என்று அழுத்தம் திருத்தமாக, ஆணித்தரமாகச் சொன்

னர். பெண்ணே! அடிமையாக வாழவே பிறந்த அவளுக்கு என்ன உரிமை என்று கேட்ட சமுதாயத்தைச் சாடினர் பாரதியார். நம்மைப் பெற்றவள் பெண். பாலூட்டித் தாலாட்டிப் பேணி வளர்த்தவள், பெற்றெடுத்த பெண்ணினத்தின் பெருமையை அழித்திடுவதோ என்று பொங்கிப் பொறுமினர். அடிமை என்று நினைத்த அகங்காரர்களின் அகத்திரையைக் கிழித்து எறிந்து சமுதாயத்திலே பெண்ணுக்கும் சரிநிகர் உரிமை கொடு என்று முழங்கினர்.

இடைக்காலத்திலே இழந்த பெருமையைப் பெண்ணினம் இப்போதுதான் பெற்று வருகிறது. பெண் படிப்பது என்றாலே முகம் சுளித்தவர்கள் இன்று தங்கள் பெண்களைப் படிக்க வைக்க வேண்டும் என்று துடிக்கிறார்கள், அவர்களுக்காகத் தனிப் பள்ளிக்கூடங்கள், பயிற்சி சாலைகள், கல்லூரிகள், கலைக் கூடங்கள் இன்று ஏராளம், ஏராளம். பெண்மை மீண்டும் பெருமை பெற்றது. ஒளித்து மறைத்து வைக்கப் பட்ட பெண்ணினம் மெல்ல, மெல்லத் தலைநீட்டியது. "பெண்களுக்கு எதற்கைய்யா படிப்பு ஏதோ எழுதப் படிக்க இலேசாகத் தெரிந்தால் போதாதா?" என்று கேட்டவர்கள் எல்லாம் இன்று குறைந்தது கல்லூரி வரையாவது படிக்க வைத்து விட வேண்டும் என்று கங்கணம் கட்டிவிட்டார்கள்.

"வீட்டிலே முடங்கிக்கிடந்த பெண்கள் வெளியிலே வந்தார்கள். பள்ளியிலும், கல்லூரியிலும், சேர்ந்து கல்வி அறிவை வளர்த்தார்கள். ஆணுக்குப் பெண் சளைத்தவளல்ல, அவளுக்கும் சம உரிமை கொடுக்க வேண்டும் என்று அரசாங்கம் சட்ட மியற்றியது. பலன்... இன்று பெண்கள் டாக்டர்களாக, எஞ்சினீயர்களாக கலை வல்லுநர்களாகப் பவனிவரத் தொடங்கி விட்டார்கள்.

கல்வி அறிவைப் பெற்றப் பெண்ணினம் மெல்ல மெல்ல முன்னேறியது. பழைய சட்ட திட்டங்கள், விதிமுறைகள், கிழித்தெறியப் பட்டன. அலுவலகங்களில் ஆண்களுடன் சேர்ந்து பணி புரியத்தொடங்கி விட்டனர் பெண்கள். அரசாங்க வேலைகளில் அவர்களுக்கென்றே தனி இடம் ஒதுக்க வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது.

வீட்டை ஆண்ட எங்களால் நாட்டையும் ஆள முடியும் என்பதையும் நிரூபித்துக் காட்டி விட்டார்கள். இன்று நேருவின் தங்கை விசயலெட்சுமி பண்டிட் அவர்கள் பம்பாய் கவர்னராக பதவி ஏற்றுள்ளார். என்றோ நாட்டை யாண்டு விட்டு, இடைக் காலத்தில் வீட்டுக்குள் இழுத்து மூடப்பட்டவர்கள் இன்று மீண்டும் நாட்டையாளத் தொடங்கிவிட்டார்கள். வீரத்திலும். பெண்கள் சளைத்தவர்கள் அல்லர் என்

பதை, ருசிய வானவெளி வீராங்கனை வாலண்டினு தெரெஸ்கோவா எடுத்துக் காட்டி விட்டார். அண்டவெளியில் பறந்து அகண்ட பூமியைச் சுற்றி பெண்ணினத்தின் வெற்றிக் கொடியை உலகெங்கும் பறக்க விட்டுவிட்டார்.

இவ்வளவு பெருமை பெற்றிருந்தும் தற்காலப் பெண்கள் சிலர் நகரிகம் என்ற நச்சுப் பாம்புக்கு இரையாகிப் பெண்மையின் பெருமையை மாசு படுத்தத் தொடங்கி இருக்கிறுர்கள். அவர்கள் நல்லவர்கள் தான். நாலும் தெரிந்தவர்கள் தான். ஆனுலும் அவர்களை அறியாமலே நாகரிகத்திற்கு அடிமையாகி விட்டார்கள். அந்தத் தவறு அவர்களுக்குத் தெரியவில்லை. தெரிந்தால் நிச்சயமாகத் திருந்தி விடுவார்கள்.

நாகரிகம், நாகரிகம் என்று சொல்லிப் பணத்தை வீணுக்கி வருமானம் போதாமல் வருந்துவோர் எத்தனையோ பேர் இருந்தாலும், நாகரிகப் பேய் அவர்களை விட்டு நகரமாட்டேன் என்கிறது. முதலில் இது ஒழிய வேண்டும். இதை ஒழிக்க ஒரே வழி எளிமையைக் கையாளுவதுதான். எளிய உடை அணிவோம். இதனுல் யாரும் நம்மை இகழ்ந்து பேச மாட்டார்கள். எளிய முறையில் வாழ்க்கையை அமைப்போம். இதைக் கண்டு யாரும் எள்ளி நகையாடமாட்டார்கள். எளிமையாக இருக்க விரும்பும் நாம் எண்ணத்தால் எளியவர்கள் இல்லையே. பிறகு யார் நம்மைப் பார்த்து இகழ்ந்துரைக்கத் துணிவர்.

“தற்காத்து தற்கொண்டான் பேணி, தகை சான்ற சொற்காத்து சோர்விலாள் பெண்” என்று பெண்ணுக்கு இலக்கணம் வகுத்து இருக்கிறுர் திருவள்ளுவர். அதை ஒரு முறை நினைவுப் படுத்திப் பாருங்கள். நம்மை, நம் உயிரினும், மேலான கற்பைக் காத்துக் கொள்வோம். கடவுளென மதிக்கப்படும் நம் துணைவரைக் குறையின்றிப் பேணுவோம்? பேசுவதை உணர்ந்து நாலு வார்த்தை பேசினுலும் நல்லவையாக இருப்பவற்றையே பேசுவோம். நாம் வாழப் பிறந்தவர்கள். பலரை வாழ வைக்க வேண்டியவர்கள். சோர்வு நம்மிடம் அண்டக் கூடாது. அது நம்மை நெருங்க விடாமல் பார்த்துக் கொள்வோம்.

இத்துடன், நம் வேலை முடிந்துவிடவில்லை. இன்னும் எத்தனையோ இருக்கிறது. வீட்டுக்குப் பாடு படுவதோடு நம் வேலைக்கு முற்றுப்புள்ளி விழுந்து விடவில்லை. நம்மால் இயன்ற அளவு நாட்டுக்காகவும் பாடுபடுவோம். நம் வீட்டுப் பிள்ளைகள் மட்டும் படித்தால் போதுமா? வாழ்வதற்கே வழியின்றிப் போராடும் போது கல்வி கற்க வசதியின்றி வாடும் குழந்தைகள் இவ்வுலகில் எத்தனையோ பேர். நம் சக்திக்கு

இயன்ற வரை பிற குழந்தைகளுக்கும் கல்வி புகட்டுவோம். பெண்மையை மூட நம்பிக்கை என்ற புதை குழிக்குள் போட்டு புதைக்கும் கும்பல் இன்னும் இருக்கத்தான் செய்கிறது. பூண்டோடு அழிந்து விடவில்லை. அவர்களுக்கும் புத்தி சொல்லி பெண்மைக்கு மேலும் பெருமை கொடுக்க வேண்டும். இதற்குச் சிறந்த வழி சமூக சேவை செய்வதுதான். ஓய்வு கிடைத்த போது சமுதாயத்தை உயர்த்த நம் பங்கைக் கொடுக்கத் தவறி விடக் கூடாது.

நாட்டைக் காக்க வேண்டுமா? அதற்கும் நாம் தயங்கக்கூடாது. அதற்காகப்போர்க்களம் புகுந்து போரிட்டுத்தான் " காக்கவேண்டும் என்று அவசியம் இல்லை. நாடுகாக்கத் தோள் துடிக்கப் புறப்படும் நம்மவர்களுக்கு ஆர் வமூட்டி வீரமூட்டி அவர்களுக்குப் 'பக்கபலமாக இருப்போம். நீதிக்காகப் போராடுவோம்.

இறுதியாக ஒரு சொல். பெண்மை பெருமை வாய்ந்தது. அந்தப் பெருமை நம்மோடு, நம் தலைமுறையோடு அழிந்து ஒழிந்து போவது இல்லை. உலகம் உள்ளளவும் நிலைத்து நிற்பது. அது ஒரு வைரக் கல். அதன் ஒளியை நாம் மங்கச் செய்து விடக்கூடாது. நம்மால் இயன்ற வரை பாடுபட்டுப்பட்டை தீட்டி அதை மேலும் பிரகாசிக்கச் செய்யவேண்டும். அந்த ஒளி உலகெங்கும் இருள் நீக்கி ஒப்பின்றிப் பிரகாசிக்க வேண்டும்.

—நன்றி - தமிழ் நாடு



## விஷம் ஏறிச் செத்த பாம்பு

ஐக்கிய அமெரிக்காவில் ஸான் அண்டோனிஞே என்னுமிடத்தில் கெல்லி விமானப்படைத்தளத்தில், மெருகு கொடுக்கும் தொழிற்சாலை அதிகாரியான 'டிமெட்ரியோ கோம்ஸ்' என்பவரை 'ராட்டில் ஸ்நேக்' என்ற கொடிய விஷப்பாம்பு ஒன்று கடித்துவிட்டது. அதிகாரி திகைப்புடன் அங்கே நின்று கொண்டிருந்தார். அவரைக் கடித்த பாம்பு துடியாய்த்துடித்து சிறிது நேரத்தில் செத்துவிட்டது.

பாம்பின் விஷம் அதிகாரிக்கு எவ்விதத் தீங்குமே செய்யவில்லை. காரணமென்ன தெரியுமா? அதிகாரி பல வருடங்கள் 'ஸோடியம் ஸயனைடு' என்ற விஷமருந்தை மெருகிடும் வேலை சம்பந்தமாக ஏராளமாய் புழங்கிப் புழங்கி அந்த விஷம் அவர் உடம்பிலேயே ஊறிவிட்டது. ஆகவே பாம்பின் விஷம் அவரை ஒன்றும் செய்யவில்லை. ஆனால் அவர் உடம்பின் விஷம் பாம்புக்கு ஏறிவிட்டது !

ஆயிரமாயிரம் நூல்கள் நூலகத்தின் அலமாரியில் தூங்கலாம். அவற்றில் என்ன இருக்கிறது என்று தெரியாவிட்டால் பயன் என்ன? கோடிக்கணக்கான ரூபாய் உங்களிடம் இருக்கலாம். பணம் எந்த இடத்தில் இருக்கிறது என்பதை நீங்கள் மறந்து விட்டால் இலாபம் என்ன? எனவே மறவாமை வாழ்க்கைக்கு மிக மிகத் தேவையானது. அதைப்பெறும் சக்தி உங்களிடமே இருக்கிறது.

# மறவாமை கோடிபெறும்

நினைவு ஆற்றல் மனிதனுக்கு மிக மிகத் தேவையானது. வாழ்க்கையில் வெற்றி பெற்ற பலர் சிறந்த நினைவு ஆற்றல் படைத்தவர்களாக இருக்கிறார்கள். தொழில் துறையில் உள்ளவர்கள் தங்கள் தொழிற்சாலையில் பணிபுரியும் காவலர் வரை அனைவர் பெயரையும் தெரிந்து வைத்திருந்தால் அது சிறந்த நிருவாகத்துக்கு வழிகோலும். ஆசிரியர், நினைவு ஆற்றல் மிக்கவராய், இருந்து விரிவுரை ஆற்றினால் மாணவர் அப்படியே மயங்கிக் கேட்பர். அரசியல் வாதியும் அப்படியே. நினைவு ஆற்றல் இல்லாதவர்கள் எந்தத் துறையிலும் வெற்றி பெறுவது எளிதல்ல. பெரிய மேதைகள் பலர், சிறு விஷயங்களில் மறதி கொண்டவர்கள் போல் தோன்றினும் அவர்களும் நினைவு ஆற்றல் பெற்றவர்களே. அவர்கள் குறிப்பிட்ட துறையில் அந்த ஆற்றலை வளர்த்து இருப்பார்கள்.

நினைவு ஆற்றல் பலருக்குப் பிறப்பிலேயே வந்து விடுகிறது. எதையும் தொடர்பு படுத்திப் பார்க்கும் பழக்கத்தால் அந்த அரிய ஆற்றலை வளர்த்து இருப்பார்கள். ஆனால் மிகப்பலர் நினைவு ஆற்றல் இல்லாமையால் மிகவும் துன்பப் படுகிறார்கள். அன்றாட வாழ்க்கையில் அல்லல் படுகிறார்கள். வீட்டுச் சாவி எங்கே என்பதை மறந்து விடுதல், அஞ்சலில் சேர்க்கும் தபாலை வீட்டிலேயே வைத்து விடுதல், பஸ்ஸில் ஏறிய பிறகு பணம் எடுத்து வரவில்லையே என்று ஏங்குதல், தெருவில் சந்தித்த நண்பன் யார் என்று உணர்ந்து கொள்ளாமை இது போன்ற சிக்கல்கள் அடிக்கடி ஏற்படும்.

இத்தகையவர்கள் நினைவு ஆற்றல் இல்லையே என்று கவலைகொள்ளத் தேவையில்லை. சிறிது முயற்சி, பயிற்சி எடுத்துக் கொண்டால் எல்லோரும் நினைவு ஆற்றல் பெற முடியும்.

### ஆர்வம்

உள நூல் அறிஞர்கள் கூற்றுப்படி, ஒரு விஷயத்தில் ஒருவருக்கு இருக்கும் உண்மையான பற்றுத்தான், அதை நினைவு கொள்ளும் அடிப்படைச் சக்தி ஆகும். கலை ஆர்வம் கொண்டவர் கணிதம் பற்றிய ஒரு சொற்பொழிவு கேட்டால் அந்தச் சொற்பொழிவின் ஒரு சிறு சொல்லைக்கூட நினைவு கொள்ள முடியாது. காரணம் அது அவர் நினைவில் பதியாதது தான். ஒரு குழந்தை வரலாற்றில் மிகவும் ஆர்வம் கொண்டது என்றால், அக்பர் பதவிக்கு வந்த ஆண்டையும், அலக்சாண்டர் படைஎடுப்பையும் அது மறக்கவே முடியாது. ஆர்வம் உள்ள நெஞ்சில் ஒரு செய்தி பதிந்து விட்டால் அது ஆண்டுக் கணக்கில் சாகும்வரை நினைவை விட்டு அகலாது. மூளையின் ஒரு பகுதியில் அப்படியே படிந்து இருக்கும். தேவையான போது உடனே நினைவுக்கு வரும். எனவே நினைவாற்றலின் முதல் அடிப்படை அந்தச் செய்தியில் உள்ள ஆர்வம் தான்.

### மிக எளிது

நினைவு ஆற்றல் பெற விரும்புபவர்கள் சிலவற்றை 'மறக்கவும் செய்ய வேண்டும். ஒன்றைச் சுமக்க வேண்டும் என்றால் மற்றொன்றை இழக்கவும் வேண்டும். ஆயிரம் பாடல்களை எழுத்து எழுத்தாக மனப்பாடம் செய்வதைவிட இலட்சம் பாடல்கள் என்ன சொல்கிறது? எங்கு இருக்கிறது? என்பதைத் தெரிந்து வைத்து இருத்தல் இன்னும் சிறப்புத்தானே? எனவே வேண்டாத வற்றை மறப்பதற்கு முதலில் பழக வேண்டும். மனிதரோ, நிகழ்ச்சியோ எதுவோ முதலில் அதை மனதில் வைத்துக் கொள்வது அவசியம்தானா என்று எண்ண வேண்டும். தேவை இல்லை என்றால் உடனே மறந்துவிட வேண்டும். ஆனால் மறப்பதிலும் சிறிது கவனமாக இருக்க வேண்டும். வழக்குரைஞராக இருந்தால் தேவையானவர்கள், தேவையற்றவர்கள் என்று பிரிப்பதும் துன்பம். சிலநேரம் தேவையற்றவர்கள் நினைவுக்கு வந்துதான் பின்னர் தேவையானவர்கள் நினைவுக்கு வருவார்கள். எனவே ஒவ்வொரு நிகழ்ச்சியையும் ஆழ்ந்து கவனிக்க வேண்டும். ஒருவருடன் கைகுலுக்கினால் அது பெண்ணின் கையா ஆணின் கையா? மெலிந்ததா? தடித்ததா? கருப்பா? சிவப்பா? கைக்கு உரியவர் யார்? பெயர் என்ன? என்பன வற்றை உணர்ந்து கொண்டே செய்ய வேண்டும்.

ஒவ்வொரு செயலுக்கும் முன்னே அதுபற்றிச் சிறிது எண்ண வேண்டும். கட்டுரை எழுத வேண்டுமா? எதுபற்றி எழுதுகிறோம்? அதுபற்றிய உண்மைகள் என்ன? தேவையானவை எல்லாம் இருக்கின்றனவா? என்று சில நிமிடம்

எண்ணிஞல் அது பல மணி நேரம் இலாபமாக முடியும்.

சிறு சிறு விஷயங்களிலிருந்து உங்கள் நினைவாற்றல் பயிற்சியைத் தொடங்க வேண்டும். கடைக்குப் போய் பொருள் வாங்கப் போகிறீர்களா? வீட்டு வாசலை விட்டு இறங்கும் முன்பு ஒரே ஒரு நிமிடம் நில்லுங்கள். மூளைக்கு வேலை கொடுங்கள். எங்கு போகிறேம்? கடைக்கா? என்ன வாங்கப் போகிறேம்? பணம் எடுத்துக் கொண்டோமா? என்று எண்ணிப் பார்க்க வேண்டும். இப்படியே ஒவ்வொரு செயலுக்கு முன்பும் சிறிது தொடர்பு படுத்தி எண்ண வேண்டும். சங்கிலிக் கோவை போல ஒவ்வொன்றையும் தொடர்பு படுத்தி எண்ணத் தொடங்கிஞல் நீங்கள் ஒரு நாளும் மறதி நோயில் சிக்க முடியாது. இத்தகைய பயிற்சி தான் நினைவு ஆற்றலை வளர்க்க முடியும்.

அறிஞர்கள் அனைவரும் சிறந்த நினைவு ஆற்றல் மிக்கவர்கள் தான். நீங்களும் அந்த ஆற்றலைப் பெறுவது பெரிய வித்தையல்ல. சிறிது கவனம், ஆர்வம், சிந்தனை எடுத்துக்கொண்டால் போதும். உங்களுக்குத் தெரியாமலே உங்களிடம் ஒளிந்திருக்கும் சக்தி உங்களைக் கைதூக்கி விடும்.

ஆயிரமாயிரம் நூல்கள், நூலகத்தில் அலமாரியில் தூங்கலாம். அவற்றில் என்ன இருக்கிறது என்று தெரியாவிட்டால் பயன் என்ன? கோடிக் கணக்கான ரூபாய் உங்களிடம் இருக்கலாம். பணம் எந்த இடத்தில் இருக்கிறது என்பதை நீங்கள் மறந்து விட்டால் இலாபம் என்ன? எனவே மறவாமை வாழ்க்கைக்கு மிக மிகத் தேவையானது. அதைப் பெறும் சக்தி உங்களிடமே இருக்கிறது.



## கற்றுக் குட்டி.

க்ஷவர சலூன் ஒன்றுக்குள் ஒரு கனவான் நுழைந்தார். “முக்க்ஷவரம் செய்து விடுவீர்களா?” என்று கேட்டார்.

அங்கே இருந்த ஒரு வாலிபன், கடைச் சொந்தக்காரரைப் பார்த்து, “முதலாளி, இவருக்கு நான் செய்து விடட்டுமா? நானும் பழக வேண்டும் இல்லையா?” என்றுன்.

“செய், செய், ஆனுல், ஜாக்கிரதை! உன் கையை அறுத்துக் கொண்டு விடாதே,” என்று அந்த முதலாளி எச்சரித்தார்.

—‘ஒஸேடா ஸன்.

# தாய்ப்பால்

குழந்தை பிறந்த பின்னர் சில தாய்மார்களுக்குப்போதியதாய்ப் பால் ஊறுமல் குறைவு ஏற்படு வது உண்டு. இதற்கு 'அக ஷியா' என்று பெயர்.

***காரணங்கள் :—***

தாய் போதிய சத்துள்ள ஆகாரங்கள் உண்ணுதிருத்தல், தேக வாசிக்குப் பொருந்தாத உணவுகள், போதிய ஓய் வின்மை,போதியதூக்கமின்மை காரியங்களில் மூனேந்திருக்கும் அவசரங்களில் நீர் குடிக்கவும் மறந்து தண்ணீர் தாகத்தை அடக்கிக் கொண்டிருத்தல், உடல் சோர்வு, தேக பலவீனம், மனக் கோளாறுகள், டாக்ஸோ மியா, அனிமியாபோன்ற நோய் கள், பிரசவசமயத்தில் போதிய கவனம் செலுத்தாததால் ஏற் பட்ட சுருக்கங்கள், வீக்கங்கள் போன்ற கோளாறுகள், அடிக் கடி மாத விலக்கு ஒழுங்காக ஆகாதிருத்தல், பருவ காலம் கடந்து குழந்தை பிரசவித்தல், எட்டோ ஒன்பதோ மாதங் களுக்கு முன்பே அதாவது தாய்ப்பால் கொடுத்துவரவேண் டிய காலத்துக்கு முன்யே அவ சரப்பட்டுக் குழந்தைக்குப் பால் கொடுப்பதை •மறக்கச் செய் வதால் ஏற்படும் பின் விளேவு, முன் பெற்ற குழந்தைகளுக்கு ஒழுங்காகக் கவனித்து தாய்ப் பால் கொடுக்காத குறை, முன் பெற்ற குழந்தைகள் தேவைக்கு அதிகமாகவே அளவு கடந்த காலத்துக்குப் பால் குடித்ததால் ஏற்பட்ட குறை, முதலான பல காரணங்களாலும் போதிய தாய்ப்பால் ஊறுமல் போகிறது.

வமிச பரம்பரைக் குணத் தின் காரணமாகவும், தாய்க்குப் போதிய பால் ஊறுமல் இருப் பது உண்டு. ஆனுல் அது வெகு அபூர்வம்.

***சிகிச்சை :—***

பால் ஊறுவது குறைவாக இருக்கிறது என்று தெரிந்ததும் தாயானவள் உடனே தான் உண்ண வேண்டிய சத்தான உணவுகளில் கவனம் செலுத்த வேண்டும். காரியங்களேப் பார்ப்பதில் தாகத்தை அடக்கிக் கொண்டிராமல் வேண்டிய அளவு நீர் பருக வேண்டும். மலச்சிக்கல் இருப்பதாகத்தெரிந் தால் உடனே அதை நிவர்த்தி செய்தாக வேண்டும். தாய் சத் துள்ள ஆகாரங்கள் சாப்பிட வேண்டும்.குழந்தையின்எலும்பு வளர்ச்சிக்கு அவசியமான கால் ஷியம். சத்துள்ள உணவைத் தாய் அதிகமாக உண்ண வேண் டும். நிறையக்காய்கறிகள், கனி வர்க்கங்கள், உருளேக் கிழங்கு அரிசி, மீன், முதலியவை சாப் பிடலாம். புரத வஸ்து நிறையக் கிடைப்பதற்காக அசைவர்

களாக இருந்தால் ஒரு முட்டை சாப்பிடலாம்.

குழந்தைகளுக்குப் பால் கொடுப்பதற்கு முன் ஒருடம்ளர் நீரோ, பார்லி தண்ணீரோ குடிக்கலாம். குழந்தை சரியாகப் பால் குடித்துக் காலியாக்காமல் மிச்சம் வைத்திருந்தால், பாலைச் செயற்கை முறையிலாவது உடனே எடுத்துவிட வேண்டும். இதற்குக் கூடிய வரை, பாலைப் பீச்சி எடுக்கும் கருவியை உபயோகப்படுத்தாமல் கை விரல்களாலேயே மேலிருந்து கீழ் நோக்கிப் பால் கறப்பது போல் மிருதுவாகத் தாய்ப் பால் முழுவதையும் எடுத்து விடுவது நல்லது. இரண்டொரு வேளைகளில் தாய்ப்பால் ஊறும் பகுதிகளில் சுற்றிலும் தேய்த்து விட்டுக் கொள்வது நல்லது. அமுதத்தின் சுழற்சி பொங்கி மேல் நோக்கிச் செல்லும் பட்சத்தில் தாய்ப்பால் ஊறும் பகுதிகளில் குளிர்ந்த தண்ணீர் ஒத்தடமும் வெந்நீர் ஒத்தடமும் மாற்றி மாற்றிக் கொடுக்கலாம். அல்லது அப்பகுதிகளைக் குளிர்ந்த நீர்த்தொட்டியிலும், சூடான நீர்த் தொட்டியிலும், மாறி மாறி அமிழ்த்திக் கொள்ளலாம். இவ்வாறு 8 அல்லது 10 நிமிஷங்கள் செய்த பின்னர் கடைசியாகக் குளிர்ந்த ஜலத்தில் நன்றாக அழுத்தி விட்டுக்கொண்டு, நன்றாக டர்க்கி டவலால் துடைத்து விட்டுக் கொள்வதும் நல்லது.

கடைசியாக இந்த முறைகளாலும் பயனில்லை யென்றால் உடனே உங்கள் குடும்ப டாக்டரைக் கலந்தாலோசியுங்கள்.

—o—

## பாட்டியும் பேரனும்

அப்பாவும், அம்மாவும் சினிமாவுக்குப் போனார்கள். "நான் குழந்தையைத் தூங்கப் பண்ணிவிடுகிறேன்" என்றாள் பாட்டி.

நாலு வயசுச் சிறுவனுக்குப் படுக்கைபோட்டு, அதிலே அவனைப் படுக்கவிட்டாள்.

"கதை சொல்லுகிறேன், கேட்கிறாயா?" என்று கேட்டாள் கிழவி.

"இன்றைக்கு வேண்டாம்."

"தாலாட்டுப் பாடட்டுமா?"

"வேண்டாம்" என்று கொட்டாவிவிட்டான் குழந்தை.

"பின்னே நான் என்ன செய்யலாம், கண்ணு" என்று கிழவி கேட்டாள்.

"என்னவா? கொஞ்சம் வெளியே போய் உலாத்திவிட்டு வாயேன்; நான் சற்று நிம்மதியாகத் தூங்குகிறேன்" என்றான் சிறுவன்.

—'வுமன்ஸ் லைப்', தென்ஆப்பிரிக்கா




## 19. மைதீட்டா மங்கை!

ஆற்றங்கரையை நோக்கி இளங் கன்னியரின் கூட்டம் விரைந்து கொண்டிருந்தது!

இடையிலே குடமெடுத்து— கூந்தலிலே மலர் தொடுத்து— இடை யொடிய—நடை குலுங்க அவர்கள் சென்று கொண்டிருந்த பின்னழகு காண்பவரின் நெஞ்சை வாட்டி வதைக்கும் நிலையில் அமைந்திருந்தது!

நீல விழியால் கோல மொழி பேசும் அந்த அழகிகள் வழியெல்லாம் அடித்துச் சென்ற கும்மாளமோ சொல்லி முடியாது! அத்தனை அமர்க்களமும், ஆர்ப்பாட்டமும் நிறைந்ததாயிருந்தது அது!

அச்சமயம் அவர்கள் எதிரே மணப் பெண்ணும் மாப்பிள்ளையுமாக இளந்தம்பதிகள் இருவர் வந்து கொண்டிருந்தனர்!

அவர்களைக் கண்டதும் இந்தக் குமரிகள் கூட்டம் சும்மாவா இருக்கும்?

"மணப்பெண் எதற்கடி அப்படிச் சாய்ந்து சாய்ந்து நடக்கிறாள்?" என்று ஒரு கொண்டைக்காரியைப் பார்த்து ஒரு கிண்டல்காரி கேட்டாள்.

"அதற்குத்தான் மாப்பிள்ளை பெண்ணின் கையைப் பிடித்தபடியே போகிறாரே தெரியவில்லை? அப்படி அவள் கீழே விழுந்தாலும், அவர் தாங்கிக் கொள்வார். உனக்கு வேண்டாம் அந்தக் கவலை!" என்று பதிலுரைத்தாள் கொண்டைக்காரி.

இப்படிக் கேலியும் கிண்டலுமாகப் பேசிக்கொண்டு, ஆற்றங்கரையை வந்தடைந்தனர் அந்தக் குமரிகள்!

ஆடு துறை அறிந்தவர்கள் ஆடிமகிழ்ந்தனர்—பாடு துறை அறிந்தவர்கள் பாடி மகிழ்ந்தனர்—இடையிடையே கூடு துறையைப் பற்றியும் பேச்சுக்கள் கேட்டு வந்தன!

ஆடல் பாடல்—குதூகலம் கும்மாளம்—கேலி கிண்டல்—



தங்கவயல்
லோகிதாசன்

இவையாவையுமே சொந்தமாக்கிக் கொண்டனர் அந்தச் சேல் விழியினர்.

அக் கூட்டத்தில் ஒருத்தி மட்டும் கண்களுக்கு மை தீட்டவில்லை! இதைக் கண்டுவிட்டாள் ஒரு குறும்புக்காரி! உடனே அவளைப் பார்த்து, "எதற்காக நீ கண்களுக்கு மை தீட்டிக் கொள்ளவில்லை?" என்று கேட்டாள்.

அவளோ அக் கேள்விக்கு உடனே பதில் சொல்ல முடியாமல் தயங்கினாள். என்றாலும் தன்னை ஒருவாறு சமாளித்துக் கொண்டு, "அது ஒரு இரகசியம்!" என்றாள்.

"என்ன! இரகசியமா? இது என்னடி இது—மையிலிருக்கும் புது இரகசியம்? இதுவரையில் நான் கேட்டதேயில்லையே! எனக்கும் அந்த இரகசியத்தைக் கொஞ்சம் சொல்லேன்!" என்று கெஞ்ச ஆரம்பித்தாள் அந்தக் குறும்புக்காரி.

இவள் கெஞ்ச ஆரம்பித்ததும், மை தீட்டா மங்கை கொஞ்சம் மிஞ்ச ஆரம்பித்தாள்.

"பொறு பொறு! இத்தனை அவசரமா உனக்கு? நான் இந்த இரகசியத்தைச் சொன்னால், நீ ஒருவரிடமும் சொல்லக் கூடாது!" என்று ஒப்பந்தம் பேசினாள்.

ஆகட்டும் என்று ஒப்புக் கொண்டாள் அந்தக் குறும்புக்காரி. மை தீட்டா மங்கையும் இரகசியத்தைச்சொல்லலானாள்!

"என் உள்ளத்தைத் திருடிக் கொண்ட காதலர், எப்போதும் என் கண்களிலேயே இருக்கிறார் அல்லவா? அப்படியிருக்க, அவரைக் கண்ணில் வைத்துக் கொண்டு, என் அழகிற்காக மை தீட்டிக்கொண்டால், அம்மையினால் மறைக்கப்பட்டு விடுவாரன்றோ? எனவேதான் நான் எந்நாளும் மை தீட்டிக் கொள்வதில்லை!" என்று கூறி முடித்தாள்.

இதைக் கேட்டதும், எல்லோர் பார்வையும் தன்பால் விழுமளவிற்குக் குலுங்கக் குலுங்கச் சிரித்தாள் அந்தக் குறும்புக்காரி!

சிரித்ததோடு நின்றிருந்தாலும் பரவாயில்லையே—அந்தச் சிரிப்புக்குக் காரணங் கேட்டவர்களுக்கு விபரஞ் சொல்லவும் ஓடிக்கொண்டிருந்தாள் அவள்!

"ஏய்...சொல்லாதே! சொல்லாதே!" என்று கேட்டுக் கொண்டே அவள் பின்னால் ஓடிக்கொண்டிருந்தாள் மை தீட்டா மங்கை!

எல்லோருக்கும் சொல்லாமலா விட்டிருக்கப் போகிறாள் அந்தக் குறும்புக்காரி!

கண்ணுள்ளார் காத
லவராகக் கண்ணும்
எழுதேம் கரப்பாக்கு அறிந்து.

## 20. சொல்லி வைத்தவள்

அவன் புறப்பட்டான்!

எங்கே?

பிறநாடு சென்று பிழைப்பை நடத்த!

அந்நேரத்தில் பெரும் பிரச்னை யாக அமைவது?

பிரிவு...!

அவன் உயிரோடு பின்னிக் கிடக்கும் மற்றுமோர் உயிர் அந்தப் பிரிவைச் சகித்துக் கொள்ள முடியுமா?

அவனே அவளிடம் அந்தச் செய்தியைச் சொல்லவே தயங்கினான்! தடுமாற்றத்துடன் அவளின் முன் வந்து நின்றான்!

அவளுக்கோ ஆத்திரம் அளவு கடந்தது; அவளின் குமுறும் உள்ளத்தினின்று வெடிக்கும் எரிமலையாக வார்த்தைகள் வெளிவரலாயின!

"புறப்பட்டுச் செல்ல தீர்மானித்து விட்டீர்கள் இல்லையா? புறப்படுங்கள்...புறப்படுங்கள். பூரிப்போடு புறப்படுங்கள்! ஆனால் ஒன்று—இரு திங்களுக்குள் மீண்டும் நீங்கள் என்னை வந்து சந்திக்கவில்லை யெனில், அதற்குப் பின்னர் நீங்கள் இங்கு வரவே தேவை யிருக்காது! இந்த இரு திங்களாக உங்களை நினைத்து ஏங்கி ஏங்கிச்—சிறுகச் சிறுகச் செத்துக் கொண்டிருக்கும் நான்—சுலபமாக என் உயிரை யிழந்து விடுவேன்! அதன் பின்னர் நீங்கள் ஏன் இங்கு வரவேண்டும்? வந்தால் என்ன பயனை யடைய முடியும்? இதை நீங்கள் "நினைவில் வைக்கவே முன்னதாகவே சொல்லி வைத்தேன்!"

—என்று கூறி முடித்தாள் கண்களிலே நீர்மல்க.

அவளின் வேதனை வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டிருப்பதன்றி அவனால் என்ன செய்ய முடியும்? எப்பக்கம் பார்த்தாலும் சங்கடமான நிலை. முடிவில் உறுதிமொழி வழங்கலானான் அவளிடம்.

"அன்பே! நான் வெளியூர் செல்லினும் உன் நினைவை நெஞ்சம் மறக்குமோ? கவலையுறாதே! விரைந்து வருவேன், சிறந்த பொருள்களை உனக்கு அன்பளிப்பாக அள்ளிக்கொண்டு! கண்களிலே நீரேதற்குக் கண்ணே? காலமெல்லாமோ பிரிவைத் தாங்கும்படி செய்யப் போகிறேன்? காரியம் முடிந்ததும் கணப் பொழுதில் இங்கு தோன்றுவேன். இதயத்தை இளக விடாதே-திடப்படுத்திக் கொள்!"

—என்றெல்லாம் ஆறுதல் மொழி கூறிவிட்டு அவளைப் பிரிந்தான்.

போனவிடத்தில் பொருள்களைத் திரட்டிக் கொண்டிருந்தான்; நாட்கள் விரைந்தன!

அன்று அவள் சொல்லி வைத்த சொற்கள் நினைவுக்கு வந்து அவன் முன்னால் நிழலாடின!

அதற்குப் பின்னரும் அவனால் சும்மாவிருக்க முடியுமோ?

'இரு திங்களுக்குப் பின் தன்னைக் காண முடியாது என்றாளே! அவள் எதற்கும் துணிந்தவள். ஏதாகிலும் நினைக்கத் தகாத நிகழ்ச்சிகள் நிகழ்ந்து

விட்டால்? அவளின் உள்ளம் உடைந்து உயிர் அழிந்துபோன பின்பு—நம்மைப் பெறுவதால் என்ன? பெற்ருல்தான் என்ன? பெற்றுத் தழுவினும் என்ன? அவளைக் காண்பதிலோ—கண்டு அடைவதிலோ — அடைந்து தழுவுவதிலோ எந்தப் பயனு மில்லை?'

—என்பதை எண்ணிஞன். அடுத்த கணமே விரைந்தான்- ஊர் சென்ருன்—உள்ளத்தைக் கவர்ந்தவளைக் கண்டான்— உவகை கொண்டான்—உல்லா சத்தில் மிதந்தான்!

பெறின் என்னும் பெற்றக்கால்
என்னும், உறின் என்னும்
உள்ளம் உடைந்து உக்கக் கால்.

## 21. ஓவியமானவள்!

தலைவனும் தலைவியும் ஒன்று சேருகின்றனர். அவர்கள் கூடு மிடம் குப்பைமேடாகவா இருக் கும்? குளிர்ந்த மென்காற்று மேனியிலே தவழும் பூங்கமழ்ச் சோலைக்குள், புகுந்தனர்.

அங்கிருக்கும் ஒரு தடாகத் திற்குப் பக்கத்தில் வந்து அமர்ந் தனர்.

இருவரிடையேயும் மௌனம் நிலவியது.

தடாகத்திற்கு எழிலூட்டிக் கொண்டிருந்த வண்ணத் தாமரையைக் காணுகின்ருன் தலைவன். அம் மலர்களைப் போலவே அவன் உள்ளமும் மலர்கின்றது.

அதிலே நீந்தியோடும் அன் னங்களைக் கண்டான்—உடனே விதவிதமான எண்ணக் குவியல் கள் எழும்பிய வண்ணமிருந்தன அவன் உள்ளத்திலே!

கானமிசைத்தோடும் வானம் பாடிகள்—'இதோ அக் கானத் திற்குப் பக்கவாத்தியங்கள்', என்று சொல்வதைப் போன்று பறவையினங்களின் 'கீச்...சீச்', என்ற ஒலிகள்!

இவை மட்டுமல்ல இப்பொழு தில்—"இங்கே பாருங்கள் என் எழில் குலுங்கும் தோகையை! நான் அதை விரித்தாடிஞல் இமைகொட்டமாட்டீர்கள் விழி களிலே!" என்று கூறுவதுபோல் அங்கு வந்து நின்ற மயில்!

இக் காட்சிகளையெல்லாம் கண்ட அந்தத் தலைவனின் நிலை எப்படியிருந்திருக்கும்? போதாக் குறைக்குப் பக்கத்திலே ஒரு பாவை!

உள்ளத்திலே சோலைக் காட்சி கள் கிளப்பிவிட்ட இன்பத் தீ கொஞ்சம் கொஞ்சமாகக் கொழுந்துவிட ஆரம்பிக்கும் நிலையில்—குளிர்ச்சிகாண அருகி லிருக்கும் அழகு நிலவைப் பார்க்கின்ருன்!

தடாகத்திலே கண்ட தாமரை அவளின் முகத்திலே தெரிகின் றது அவனுக்கு! இதைக் கண்டு அவ் வெண்ணிறச் சேலை யணிந்த வேல்விழி மாதானவள் —நாணத்தை உமிழ்ந்துகொண் டிருந்தாள் கன்னத்தில்!

நீரில் நீந்திய அன்னம் நிலத் தில் அமர்ந்திருப்பதாக நினைக் கின்ருன்!

இப்படி இயற்கையின் புது மையை ஒவ்வொன்றாக அந்தத் தங்கநிகர் மேனியாளிடத்தில் காணுகின்றான், தலைவன்!

கட்டாணி முத்தவளைக் காணுந்தோறும் களிப்புக் கொந் தளிக்க—அவள் அங்கத்தின் ஒவ்வொரு அசைவையும் அமைதியோடு ரசித்துக் கொண் டிருந்தான்!

"எழுதாத ஓவியமே! என் விழியால் உன் அழகை என் ஆயுள் பூராவும் எழுதிக் கொண்டே யிருக்கின்றேன்! அரை விநாடியும் என்னை விட் டகலாதே!" என்று கூறுவதைப் போன்று விழிமூலம் அவள் எழிலை விழுங்கிக் கொண்டிருந் தான் அவன்!

தலைவனின் மெய்மறந்த இந் நிலையைத் தலைவி கண்டாள்!

உடனே அவள் உள்ளத்தில் ஒரு சந்தேகம் தலைதூக்கி நின் றது! அவனிடம் அதைக் கேட் கவும் ஆரம்பித்தாள்! "எதற் காக என்னை இப்படி இமை கொட்டாமல் பார்த்துக் கொண் டிருக்கின்றீர்கள்? எவளோ உங்கள் உள்ளத்தில் இடம் பிடித்துக் கொண்ட ஒருத்திக்கு என்னை ஒப்பிட்டுப் பார்க்கிறீர் கள் இல்லையா? அதனால்தான் சிந்தனையை எங்கோ செலுத்தி விட்டுப்—பார்வையை மட்டும் என்பால் திருப்பிவிட்டிருக் கிறீர்கள்!"

—என்று கூறிவிட்டுச் சிணுங்க ஆரம்பித்துவிட்டாள் தொட்டதற்கெல்லாம் தொல் லைப்படும் அந்தத் தோகைமயில்!

பாவம் அந்தப் பரிதாபத்திற் குரியவன் என்ன செய்வான்?

நினைத்து இருந்து நோக்கினும்
காயும் அனைத்தும் நீர்
யார்உள்ளி நோக்கினீர் என்று.

## சர்ச்சிலின் பதில்

அரசியல்வாதிகள் நிறைந்த ஒரு விருந்தில் சர்ச்சிலும் அவர் மாப்பிள்ளையும் கலந்துகொண்டனர். மாப்பிள்ளை சர்ச்சிலின் மகளை மணவிலக்குச் செய்திருந்த சமயம் அது. மாப்பிள்ளை சர்ச்சிலை மட்டந்தட்ட விரும்பினார்.

"போர் முடிவில் யார் மிகுந்த பெயர் பெறுவார்கள்?" என்று பொதுவாக ஒரு கேள்வி கேட்டார் மாப்பிள்ளை.

"முசோலினி" என்று சர்ச்சிலே அதற்கு விடை கூறினார். அதற்குக் காரணத்தையும் அவரே சொன்னார். "மகளை ஒழுங்காக நடத்தவில்லையென்று முசோலினி தன் மாப்பிள்ளையைச் சுட்டு விட்டார். ஆனால் நான் அப்படிச் செய்யவில்லையே!" என்று கூறிச் சிரித்தார் சர்ச்சில்.

மாப்பிள்ளை வாயை மூடிக்கொண்டார்.

புளித்தாலும் தின்னும் ஆசையை யுண்டாக்கும் அழகுவடிவம் பெற்றது. திராட்சை. அது கிடைக்காதபோதுதான் "சீச்சீ இந்தப் பழம் புளிக்கும்!" என்று சொல்லத் தோன்றும். அந்தப் பழமே இனிக்கக் கூடியதாகவும் இருந்துவிட்டால்......? ஆகா!

# திராட்சை சாகுபடி

பார்ப்பதற்கு அழகாகவும், சுவைப்பதற்கு ருசியாகவும் உள்ள திராட்சையைப் பயிர் செய்வதில் இந்திய விவசாயிகள் தற்போது அதிக அக்கறை காட்டி வருகிறார்கள். தமிழ் நாடு, ஆந்திரப் பிரதேசம், மைசூர், மகாராஷ்டிரம் ஆகிய ராஜ்யங்களில் பெருமளவில் திராட்சை பயிர் செய்யப்பட்டு வருகிறது. பஞ்சாப், டெல்லி, ஹிமாசலப் பிரதேசம் ஆகிய பிராந்தியங்களிலும் இதன் சாகுபடிக்குப் பெருந் தோது உள்ளது. சிறந்த ரகங்களை உருவாக்குவதற்கென ஆராய்ச்சியும் நடைபெற்று வருகிறது. இந்த ரகங்கள் பயிர் செய்ய ஆரம்பிக்கப்பட்ட பிறகு, திராட்சை விஷயத்தில் இந்தியா சுயதேவைப் பூர்த்தி நிலையை எட்டிவிடுமென்று எதிர் பார்க்கலாம்.

இந்தியாவில் 10,000 ஏக்கர் நிலப் பரப்பில் திராட்சை சாகுபடி செய்யப்படுகிறது. ஆனாலும் நாளுக்கு நாள் அதிகரித்து வரும் தேவையைப் பூர்த்தி செய்யும் அளவுக்கு அது போதுமானதாக இல்லை. எனவே ஆண்டு தோறும் நான்கு கோடி ரூபாய்க்கு திராட்சைப் பழங்கள் அயல்நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படுகிறது.

தற்போதைய நிலையில் திராட்சை சாகுபடிக்கு நாட்டில் நல்ல வாய்ப்பு இருக்கிறது என்று கூறலாம். ஏற்கெனவே தமிழ்நாடு, ஆந்திரப் பிரதேசம், மைசூர் ஆகிய ராஜ்யங்களிலுள்ள திராட்சைத் தோட்டங்கள் நல்ல பலனளித்திருக்கின்றன. உதாரணமாக, அனுப்-இ-ஷாஹி என்ற ரகத்திலும் பச்சைத் திராட்சை ரகத்திலும் ஆண்டொன்றுக்கு ஏக்கர் ஒன்றுக்கு 16 ஆயிரம் முதல் 32 ஆயிரம் கிலோ கிராம் வரையிலும், பங்களூர் கறுப்புத் திராட்சை, ஏக்கரா ஒன்றுக்கு 5 ஆயிரம் கிலோ கிராம் வரையிலும், மாசூல் கிடைக்கிறது.

திராட்சை சாகுபடியில் ஏகரா விகித மாசூல் அளவு மிகவும் அதிகமாக இருப்பதுடன், அதன் மூலம் நல்ல வருவாயும் கிடைக்கிறது என்பதும் குறிப்பிடத் தக்கதாகும். நன்கு அபிவிருத்தி செய்யப்பட்ட திராட்சைத் தோட்டங்களிலிருந்து ஆண்டொன்றுக்குப் பதினைந்தாயிரம் ரூபாய் முதல் முப்பதாயிரம் ரூபாய் வரையில் வருமானம் கிடைக்கிறது.

திராட்சை, தெம்பும் புத்துணர்ச்சியும் ஊட்டும் சுவை மிக்கதொரு பழவகையாகும். அது சுலபமாகவும் ஜீரணமாகக் கூடியது. ஏராளமான அளவில் சார்க்கரைச் சத்தும், கால்ஷியம், இரும்பு ஆகிய கனிச் சத்துக்களும், வைட்டமின் பி-யும் அதில் அடங்கி யிருக்கின்றன. ‘இந்தப் பழம் புளிக்கும்’ என்று எல்லாவற்றையும் ஒதுக்கித் தள்ளிவிடவும் முடியாது. பல பல ரகங்கள் வாய்க்கு இனிப்பாகவும் உள்ளன.

பச்சையாகச் சாப்பிடக்கூடிய திராட்சைப் பழங்களைத் தவிர, உலர்த்தி உபயோகப்படுத்துவதற்கு உகந்த திராட்சை ரகங்களும் கூட உள்ளன. பழரசமும்,பானமும் தயாரிக்க உதவும் திராட்சை ரகங்களும் கூட உள்ளன. திராட்சை பானம் தாகத்தைத் தணிப்பதுடன், மூத்திரக் காய்கள் திறனுடன் செயல்பட அவற்றை ஊக்குவிக்கும் பொருளாகவும், மலமிளக்கியாகவும் பயன்படுகிறது.

திராட்சை சாகுபடியில் முன்னணியில் நிற்கும் ராஜ்யங்கள் தமிழ்நாடு, மகாராஷ்டிரம், மைசூர், ஆந்திரப் பிரதேசம் ஆகியவையாகும்.

மத்திய இந்தியாவிலும் தென்னிந்தியாவிலும், குறிப்பாக தமிழ்நாடு, ஆந்திரப் பிரதேசம், மைசூர், ஆகிய ராஜ்யங்களிலுள்ள திராட்சைத் தோட்டங்கள் குறிப்பிடும்படியான அளவுக்குப் பலனளித்திருக்கின்றன. டெல்லி, பஞ்சாப், ஹிமாசலப் பிரதேசம் ஆகிய இடங்களில் திராட்சை சாகுபடிக்கான தோதுகள் இருந்த போதிலும் இத் துறையில் அங்கெல்லாம் அவ்வளவாக அபிவிருத்தி செய்யப்படவில்லை என்றுதான் கூற வேண்டும். சிறந்த முறையில் திராட்சைச் சாகுபடியை மேற்கொள்ளும் வகையில் பருவ நிலைகள் இல்லாததே இதற்கு முக்கிய காரணமாகும். உயர்ந்த ரகப் பழங்கள் கிடைக்க வேண்டுமானால், பழம் முதிரும் காலத்தில் வறட்சியான சீதோஷ்ண நிலை இருக்க வேண்டியது அவசியமாகும். மழை, பழங்களையும் பயிரையும் பாழாக்கி விடும். ஈரமான சீதோஷ்ண நிலை காளான் நோய்களை உண்டாக்கி, பழங்கள் இனிப்படையாதபடி செய்து விடுகிறது.

ஆகவே, அங்கெல்லாம் மழைக் காலத்துக்கு முன் முதிர்ச்சி

யடையக் கூடிய ரகங்களையே வெற்றிகரமாகப் பயிர் செய்ய முடியும். உண்பதற்கு லாயக்கான திராட்சைப் பயிர் ரகங்களைப் பயிர் செய்வதற்கு அவ்விடங்களில் வர்த்தக ரீதியில் நல்ல தோதுள்ளதென்பதற்கு இந்திய விவசாய ஆராய்ச்சி நிலையம் உத்தரப் பிரதேசத்தில் சஹாரான்பூரிலும், பஞ்சாபில் அத்தாரி, பாடியாலா ஆகிய இடங்களிலும் நிறுவியுள்ள பரீட்சார்த்த திராட்சைத் தோட்டங்கள் சிறப்பான வகையில் பலனளித்திருப்பதே தக்க சான்றாகும்.

உலர்த்தி உபயோகப்படுத்துவதற்கு லாயக்கான திராட்சைப் பழ ரகங்களின் சாகுபடிக்கு வட மேற்கு ஹிமாலயப் பிரதேசம், அதிலும் குறிப்பாக சின்னூர் ஜில்லா மிகவும் உகந்ததாகும். இந்திய விவசாய ஆராய்ச்சி நிலையம் உலர்ந்த திராட்சைப் பழ வகைகளை உருவாக்குவதற்கும், வியாபார ரீதியில் அவற்றை அபிவிருத்தி செய்தவற்குமென ஹிமாசலப் பிரதேசத்தில் சினி என்னுமிடத்தில் ஆராய்ச்சிநிலையம் ஒன்றையும் நிறுவியிருக்கிறது.

எத்தகைய மண்ணிலும் திராட்சைப் பயிர் வளரும். ஆனால் மணற்பாங்கான பூமியிலும், செம்மண் பூமியிலும் அது மிகவும் நன்றாகப் பயிராகும். செழிப்பான பூமியும், மிகுந்த ஈரப் பதனும் வடிகால் வசதியும் இந்தப் பயிருக்கு அத்தியாவசியமானவையாகும்.

திராட்சைக் கொடியைப் பதியன் முறையிலும் ஒட்டு முறையிலும் பயிர் செய்யலாம். முந்தைய பருவப் பயிரிலிருந்து மூன்று அல்லது நான்கு பொட்டுக்கள் கொண்ட துண்டுக் கொடியின் மூலமும் இதைப் பயிராக்கலாம். கொடியின் மூன்றில் இரண்டு பாகம் மண்ணில் புதைத்திருக்கும் படியும், ஒரே ஒரு மொட்டு மட்டும் பூமிக்கு வெளியே தலைநீட்டிக் கொண்டிருக்கும்படியும் நடப்படுகிறது. ஒன்றுக்கும் மற்றொன்றுக்கும் இடையில் 10 அல்லது 15 சென்டி மீட்டர் இடைவெளி இருக்கும்படியும், நெட்டுக்குத்தலாகவும் அதை நட வேண்டும்.

ஒரு வருடத்துக்குப் பிறகு அவற்றைப் பெயர்த்து நிரந்தரமாகக் குழிகளிலோ அல்லது சிறு பள்ளங்களிலோ நட வேண்டும். இப்படிச் செய்வதற்கு நவம்பர் முதல் ஜனவரி வரை சிறந்த காலமாகும்.

திராட்சைக் கொடிகள் மண்ணின் சாரத்தைப் பெருமளவில் உறிஞ்சி விடுகின்றன. அதை ஈடுசெய்வதற்காக, உரம்போட வேண்டியது மிக அவசியமாகும். நைட்ரஜன், பாஸ்பரஸ், போட்டாசியம் இம்மூன்றும் 4: 8: 4: என்ற விகிதத்திலோ 4: 8: 6 என்ற விகிதத்திலோ கலந்து உபயோகிக்கப்பட வேண்டும்.

கோடைக் காலத்தில் திராட்சைக் கொடிகள் வளரும் பருவத்தில், மண்ணில் ஈரம் தங்கியிருப்பதற்காக அடிக்கடி தண்ணீர் பாய்ச்ச வேண்டியது அவசியமாகும்.

திராட்சைக் கொடிகளிலிருந்து பெறப்படும் பழங்கள், அக்கொடிகளைச் சரியானமுறையில் பயிராக்குவதையும், அவற்றை அவ்வப்போது கத்தரித்து வருவதையும் பொறுத்துள்ளது. பயிர் வளர்ச்சியையும் பழங்களின் தரத்தையும் ஒழுங்குபடுத்துவதற்காகவும், நல்ல அமைப்பு கொடுப்பதற்காகவுமே கொடிகள் அவ்வப்போது கத்தரித்துவிடப்படுகின்றன.

தென்னாட்டைப் போலல்லாமல், வடநாட்டில் கோடைக் காலங்களில் தான் திராட்சைப் பயிர் வளர்கிறது. எனவே, வசந்த காலம் ஆரம்பிப்பதற்கு முன்பு, ஒரே ஒரு தரம்தான் கொடிகள் கத்தரித்துவிடப் படுகின்றன. ஜனவரி மாத மத்தியில் தான் இதற்குச் சரியான காலம் என்றும்கருதப்படுகிறது.

பழங்கள் நன்றாகப் பழுப்பதற்கு முன் அவற்றைப் பறிப்பது கூடாது. ஏனென்றால், பறித்து வைத்ததற்குப் பின்னர் அவற்றின் ருசியோ அல்லது மணமோ அதிகரிப்பதில்லை. ஆனால், பழங்கள் பல நாட்கள் வரை கொடிகளிலேயே இருக்கும்படியும் விட்டு விடக் கூடாது.

நன்றாகப் பழுத்த திராட்சைக் குலைகளைக் கத்தியாலோ, கத்திரியாலோ வெட்டி எடுக்க வேண்டும். கொடிகளும் பழங்களும் ஈரம் இல்லாத பதத்தில் பனியும், மழையும் இல்லாத பருவங்களில் வெட்டி எடுக்க வேண்டும். அப்படிச் செய்யவில்லை என்றால், பழங்கள் சீக்கிரமே அழுகிப்போய் விடும்.

நன்றாகப் பழுக்காத பழங்களையும், அடிபட்ட பழங்களையும், நோயினால் பாதிக்கப்பட்ட பழங்களையும் எடுத்தெறிந்து விட்டு, நல்ல பழங்களைக் கூடைகளிலோ, மரப் பெட்டிகளிலோ சேகரித்து வைக்கலாம். மரத்தூள் கொண்ட பெட்டிகளில் பழங்களை வைப்பது, அவை சீக்கிரம் கெட்டுப் போகாமல் இருக்க உதவுகிறது. ஊசியிலை மரத்தூளும் இவ்வகையில் உபயோகமாகிறது.

திராட்சைப் பயிரைத் தாக்கும் பூச்சியினங்களும், நோய்களும் பல இருக்கின்றன.

—நன்றி—சிவாஜி.



# செய்திக் குறிப்புகள்

**குறிப்பு :**

பஞ்சாயத்து யூனியன் பற்றிய செய்திகளை அனுப்பும் யூனியன் அலுவலர்களைக் கீழே காணும் குறிப்புக்களில் கவனம் செலுத்துமாறு அன்போடு கேட்டுக் கொள்ளுகிறோம்.

1. தெளிவாகப் புரியும்படியாக எழுதி அனுப்புதல் வேண்டும்.
2. தாளின் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுதி அனுப்புதல் நன்று.
3. செய்திகளைச் சுருக்கமாகவும், சிறு சிறு வாக்கியங்களாகவும் எழுதி அனுப்புதல் நன்று.
4. ஆணையாளர்களின் ஒப்புதல் பெற்றுச் செய்திகளை அனுப்புதல் சிறப்புடையதாகும்.

### அன்னூர் பஞ்சாயத்து யூனியன்

18-12-64 அன்னூர் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த குன்னத்தூர் பஞ்சாயத்து குன்னத்தூர் புதூரில் பஞ்சாயத்து யூனியன் தலைவர் திரு கே. நஞ்சப்ப கவுண்டர் அவர்கள் தலைமையில் கூட்டம் நடந்தது. பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் திரு டி.கே. ரங்கராஜன், அவர்களும், யூனியன் கல்வி விஸ்தரிப்பு அலுவலர் திரு என். பி. ராமசாமி, சமூக நல ஊழியர்கள் திரு கே. தங்கவேலு, திரு எம். கே. வீரப்பன் ஆகியவர்களும் குடும்பக்கட்டுப்பாடு திட்டத்தின் அவசியம், அவசரம், நன்மை, பலவிதமான திட்டத்தின்முறைகள் ஆகியவை பற்றி விளக்கமாகக் கூறினார்கள். குன்னத்தூர் பஞ்சாயத்துத் தலைவர் திரு பி. எ. கிருஷ்ண செட்டியார் நன்றி நவில நாட்டுப்பண்ணுடன் கூட்டம் இனிது கலைந்தது.



### தர்மபுரி பஞ்சாயத்து யூனியன்

தர்மபுரி பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த ஒன்னிரம்பட்டி கிராமத்தில் குடும்பக்கட்டுப்பாடு தினம் யூனியன் ஆணையாளர் திரு. என். எஸ். ஆர். சாலமன் ராஜ் அவர்கள் தலைமையில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. மாதர் சங்க அங்கத்தினர்களும் இதர இளைஞர்களும் கலந்து கொண்ட இக்கூட்டத்

தில் திரு. பி. கிருஷ்ணசாமி பஞ்சாயத்து விஸ்தரிப்பு அதிகாரி திருமதி பி. சிவகாமி, முக்கிய சேவிகா, திரு. எஸ். ஆர். ராஜமாணிக்கம், விவசாய விஸ்தரிப்பு அதிகாரி முதலானோர் குடும்பக்கட்டுப்பாடு பற்றி விளக்கிக் கூறினர். திரு. பி. சரகப் பிள்ளை கிராம சேவக் நன்றி கூற நாட்டு வாழ்த்துடன் கூட்டம் முடிவுற்றது.



வேதாரண்யம் பஞ்சாயத்து யூனியன்

வேதாரண்யம் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த புஷ்பவனம், செம்போடை, நாகக்குடையான் ஆகிய இடங்களில் டிசம்பர் 12, 13, 14 தேதிகளில் குழந்தைகள் கண்காட்சிகள் நடத்தப்பட்டன. ஊராட்சி மன்றத் தலைவர்கள் திரு சு. குமாரசாமிக்கவுண்டர், திரு மா. வைத்தியநாதன், பி. காம்., யூனியன் ஆணையர் திரு த. கன்னையா, பி. எஸ். வி. (விவ), பஞ்சாயத்து விஸ்தரிப்பு அலுவலர் திரு மா.வைத்தியலிங்கம் எம். ஏ., சமூக நல ஊழியர் திரு க. சாமித்துரை, முக்கிய சேவிகா குமாரி சு. நாகலெட்சுமி, கிராம நல ஊழியர்கள் திரு அந்தோணிசாமி, திரு கணேசன் மற்றும் பலரும் விழாவில் கலந்து கொண்டு, குழந்தை வளர்ப்பு, சுத்தம், சுகாதாரம், கல்வி என்பன பற்றிச் சொற்பெருக்காற்றினார்கள். திருமதி மீனாட்சி, திருமதி அம்மாக்கண்ணு ஆகிய இருவரும் குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கினார்கள்,



பள்ளி பட்டுப் பஞ்சாயத்து யூனியன்

30-12-64 அன்று கீழப்பூடி ஹரிஜன காலனியில் பஞ்சாயத்து உதவித் தலைவர் திரு முனுசாமி ரெட்டியார் தலைமையில் ஹரிஜன விழாக்கொண்டாடப்பட்டது. திரு ஆ. சிதம்பரம் பி. ஏ. (ஆணையாளர் ப. யூ. பள்ளிபட்டு) அவர்கள் ஹரிஜன முன்னேற்றத்தைப் பற்றியும் அரசினர் ஹரிஜனங்களுக்கு அளிக்கும் உதவிகளையும், அவர்கள் அதனைப் பெற வழிவகைகளையும் தெளிவாக விளக்கிப் பேசினார்.

திரு. வி. முனுசாமி நன்றி கூற விழா இனிது முடிந்தது.



பள்ளிப் பட்டு பஞ்சாயத்து யூனியன்

கொடிவலசா பஞ்சாயத்து அலுவலகக் கட்டடமும், கிளை நூலகமும் திருவாளர் T. புருஷோத்தம முதலியார் அவர்கள் தலைமையில் மாநில முதலமைச்சர் திரு M. பக்தவத்சலம் அவர்கள் திறந்து வைத்தார்கள்.

உயர் திருவாளர்கள் V.K. இராமசாமி முதலியார், எஸ். கிருஷ்ணசாமி I-A.S. செங்கை மாவட்ட ஆட்சித் தலைவர் ES. தியாகராசன், பள்ளிபட்டு பஞ்

சாயத்து யூனியன் ஆணையாளர் ஆ. சிதம்பரம் முதலியோர் பேசினார்கள்.

பஞ்சாயத்து சார்பிலும் மண்டல காங்கிரஸ் கமிட்டி சார்பிலும் வரவேற்பிதழ்கள் வாசித்தளிக்கப்பட்டன.



### திருமருகல் கூட்டுமன்றம்

திருமருகல் பஞ்சாயத்துக் கூட்டுமன்றத்திலிருந்து பஞ்சாயத்துத் தலைவர்கள், விவசாயிகள் அடங்கிய 38 நபர்கள் திருச்சி, கோயம்புத்தூர் விவசாயக் கல்லூரி, மலம்புழா அணை, கொச்சி, திருவனந்தபுரம், கன்னியாகுமரி திருக்குற்ருலம், கல்லுப்பட்டி, மதுரை, புதுக்கோட்டை ஆகிய ஊர்களுக்கு 15-12-64 முதல் 20-12-64 முடிய 6 நாட்கள் கல்விச் சுற்றுலா சென்று வந்தனர். விவசாயக் கல்லூரி, நீர்த் தேக்கம், கைத்தொழில் கூடம், பழ ஆராய்ச்சி, கிராமிய பயிற்சி நிலையம், கால்நடைப் பண்ணை ஆகியவைகளைப் பார்த்து வந்தனர். இச்சுற்றுலாவைக் கல்வி விஸ்தரிப்பு அதிகாரி திரு. இராமநாதன் பொறுப்பேற்று நடத்தினர்.



### அச்சரபாக்கம் பஞ்சாயத்து யூனியன்

அச்சரபாக்கம் பஞ்சாயத்து யூனியன் மன்ற சாதாரணக் கூட்டம் 29-12-64-ம் தேதி பகல் 1-மணிக்கு மன்ற கூடத்தில் சேர்மன் உயர்திருவாளர் மு.ஸ்ரீராமுலு ரெட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தனுஷ்கோடியில் புயலால் இறந்தவர்களுக்கு இரண்டு நிமிடம் எழுந்து நின்று அனுதாபம் தெரிவிக்கப்பட்டது.

அது சமயம் யூனியன் கமிஷனர் திரு. என். முத்துமார், பி.ஏ. அவர்கள் முக்கியமான அரசாங்க அறிக்கைகளை மன்றத்தில் வாசித்தார். சுமார் 130 தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன.



### அவிநாசி ஊராட்சி ஒன்றிப்பு

அவிநாசி ஊராட்சி ஒன்றிப்பைச் சார்ந்த ஆசிரியர்கள் சங்க ஆண்டு விழாவும், இலவசச் சீருடை விழாவும் 16-12-1964ம் நாள் அவிநாசி விஜயா டாக்கீசில் அவிநாசி தொகுதி தமிழக சட்டமன்ற உறுப்பினர் திரு.K. மாரப்பகவுண்டர் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தமிழகப் பொதுக் கல்வி இயக்குநர் பத்மஸ்ரீ நெ.து. சுந்தரவடிவேல் M.A.L.T. அவர்கள் இலவசச் சீருடையை வழங்கினர். பின் மற்ற நாட்டில் இருக்கும் கல்விக்கும் நம் நாட்டில் இருக்கும் கல்வித் தரத்தைப்பற்றியும் ஆசிரியர்களைப் பற்றியும் பாராட்டிப் பேசினர். மாவட்டக் கல்வி அதிகாரி திரு கோபாலன் அவர்கள் அறிக்கை வாசித்தார். அவிநாசி சரக பள்ளித்துணை ஆய்வாளர் அவர்கள் திரு

P. இராமலிங்கம் விழாவிற்கு வந்த அனைவரையும் வரவேற்று வரவேற்புரை வழங்கினார்.



**பெருந்துறை பஞ்சாயத்து யூனியன்**

*21-12-1964*-ஆம் தேதி காலை *9-00* மணிக்கு பெருந்துறை பஞ்சாயத்து யூனியன் ஆணையாளர் திரு. பி.ஏ. எஸ், சாலமோன்பி., ஏ., அவர்களால் இந்திய தேசியக் கொடி ஏற்றுவிக்கப்பட்டது. பயிற்சி முகாமில் திறப்பாளர் டாக்டர். எஸ். முத்துசாமி, முதல்வர் ஆர். டி. சானிடோரியம் அவர்களையும், சென்னிமலை மருத்துவமனை அதிகாரி டாக்டர் சாரி ஜி. சி. ஐ. எம். அவர்களையும், பயிற்சி பெறவந்திருந்த 65 பயிற்சியாளர்களையும் மற்றும் அனைவரையும் கோவை மாவட்ட குடும்பக்கட்டுப்பாட்டு குழு அங்கத்தினரும் சுள்ளிப்பாளையம் பஞ்சாயத்துத் தலைவருமான திரு. கே. எம். துரைராஜ் அவர்கள் வரவேற்று அறிக்கை வாசித்தார்.

பயிற்சி முகாம் திறப்பாளர் டாக்டர். எஸ். முத்துசாமி அவர்கள் பெருகி வரும் ஜனத்தொகைக்குக் குடும்பக்கட்டுப்பாடு அவசியமென்றும், "நல்ல முறையில்குழந்தைகளைப்பேணுவதற்கும், படிக்க வைக்கவும் இத்திட்டத்தைக் கடைப்பிடிக்க வேண்டுமென்று கூறினார். பல விதமான கட்டுப்பாடு முறைகளில் அறுவை சிகிச்சை முறையே சிறந்ததெனக் கூறினார்.

சென்னிமலை சுகாதார ஆய்வாளர் திரு. துரைசாமி அவர்கள் திட்டமிட்ட குடும்பமே சிறந்ததென்று கூறி எல்லோரும் குடும்பக்கட்டுப்பாடு திட்டத்தை மேற்கொள்ளுமாறு கேட்டுக் கொண்டார்.

சென்னிமலை மருத்துவ அதிகாரி டாக்டர் சாரி அவர்கள் பேசுகையில் குடும்பக்கட்டுப்பாடு முறைகளில் அறுவை சிகிச்சை சிறந்தது என்றும் மூன்று குழந்தைகள் இருப்பவர்களுக்குத்தான் செய்யப்படுகிறது என்றும் கூறினார்.

சென்னிமலை மருத்துவ பார்மஸிஸ்ட் திரு. கணேசன் அவர்கள் தமது உரையில் தான் அறுவை சிகிச்சை செய்து கொண்டு சுகமுடன் இருப்பதாகவும் குடும்பத்தில் உடல் உறவில் எவ்விதக்குறைவு பாடில்லை எனவும், பெண்களைக் காட்டிலும் ஆண்கள் அறுவை சிகிச்சை செய்துகொள்வது நலமெனக் கூறினார்.



**கடம்பத்தூர் பஞ்சாயத்து யூனியன்**

கடம்பத்தூரில் உள்ள வெண்மணம் பூதூரில் இளைஞர் கலை மன்றத் துவக்க விழா, பஞ்சாயத்து யூனியன் தலைவர் திரு. கே. சுப்பராய முதலியார் தலைமையில் நடைபெற்றது.

திரு. வி. எஸ். அருணாசலம் எம். எல். ஏ. மன்றத்தைத் துவக்கி வைத்தார். திருவாளர்கள் ம. நெடுஞ்சேரலாதன், வித்துவான் ஜானகி ராமன், பி.வி.கிரி, கவிஞர் கார்முகிலன், செல்வமணி, இரத்தினவேலு, திருமதி எம். கனகவல்லி எம்.சி. ஆகியோர் பேசினர்.

திரு. ஏ. செல்வராசன் நன்றி கூறினார்.

 

### வானூர் பஞ்சாயத்து யூனியன்

குடும்பநல பயிற்சி முகாம் ஒன்று வானூரில் ஒன்றிப்பு மன்றத் தலைவர் திரு எ. வி. நாராயணசாமி நாயுடு அவர்கள் தலைமையில் 21-12-64 முதல் 23-12-64 முடிய மூன்று தினங்கள் நடத்தப்பட்டன. ஆரம்ப தினத்தன்று ஆணையாளர் திரு ஒய். சாமுவேல் அவர்கள் அனைவரையும் வரவேற்றுக் குடும்பக் கட்டுப்பாட்டை வலியுறுத்தினார். திரு இ. சுப்ரமணியம், நல்வாவூர் பஞ்சாயத்துத் தலைவர் அவர்கள் பயிற்சி முகாமைத் திறந்து வைத்தார். பயிற்சியில் பங்கு பெற்றவர்களுக்கும், பொது மக்களுக்கும் மூன்று தினங்களிலும் மருத்துவ இலாகா டாக்டர்களாலும், சுகாதார ஆய்வாளர் அவர்களாலும், குடும்பக்கட்டுப் பாட்டில் அவசியம் பற்றியும், அதை எப்படி நடைமுறைக்குக் கொண்டு வருவது என்பது பற்றியும் நம் நாட்டிற்கு இம்முறையினால் என்ன நன்மை என்பது பற்றியும் நன்கு விளங்கும்படியும், புள்ளி விபரங்களுடன் எடுத்துக் கூறினார்கள்.

தமிழக உள்துறை அமைச்சர் திரு பி. கக்கன் அவர்கள் 3-1-65ல் திண்டிவனம் தாலுகா பூத்துறையில் நடந்த ஹரிஜன வீக் மகா நாட்டில் கலந்து கொண்டு விட்டு அன்று மாலை 3 மணிக்கு வானூர் ஊராட்சி ஒன்றிப்பு மன்றத்திற்கு வருகை தந்தபோது மன்றத்தலைவர் திரு ஆ. வே. நாராயணசாமி நாயுடு அவர்கள் தலைமையில் மன்ற உறுப்பினர்களாலும், பொது மக்களாலும் ஓர் மாபெரும் வரவேற்பு கொடுக்கப்பட்டது. மக்கள் குழுமியிருந்து அமைச்சர் அவர்களை வரவேற்றது குறிப்பிடத்தக்கது. மன்றத்தில் வரவேற்பிற்கு அமைச்சர் அவர்கள் நன்றி தெரிவித்துச் சமுதாய நல திட்டத்தில் மக்களின் பொறுப்பை வலியுறுத்தினார். திரு கே. எஸ். ராமமூர்த்தி ரெட்டியார் அவர்களின் நன்றி நவிலலுடன் வரவேற்புவிழா இனிது முடிந்தது.

### வாழப்பாடி பஞ்சாயத்து யூனியன்

21-12-64-ல் சேஷன்சாவடி பஞ்சாயத்தில் ரூ. 17,000 செலவில் கட்டப்பட்ட கால்நடை மருத்துவ மனையை கனம் சுகாதார அமைச்சர் திரு ஜோதி வெங்கடாசலம் திறந்து வைத்தார்கள். ஷை விழாவிற்கு வாழப்பாடி தொகுதி சட்ட

மன்ற உறுப்பினர் திரு என். ராமசாமி உடையார் அவர்கள் தலைமை தாங்கிக் கால்நடை மருத்துவ மனையின் அவசியத்தைப்பற்றிப்பேசினார். யூனியன் சேர்மன் திரு வி. எஸ். பெரியசாமி அனைவரையும் வரவேற்று வாழப்பாடி மருத்துவமனையை அரசாங்கமே ஏற்று நடத்த வேண்டும் என்றும், பேளூரில் ஒரு ஆரம்ப சுகாதார நிலையம் ஏற்படுத்த வேண்டும் என்றும் தனது வரவேற்புரையில் சொன்னார்கள்.

சேலம் சட்ட மன்ற உறுப்பினர் திரு ஜி. வெங்கட்ராமன் எம். ஏ., பி. காம். எம். எல். ஏ. காந்திஜி உருவப் படத்தையும், சேலம் கோட்ட ஆட்சித்தலைவத் திரு ஆர். பத்மநாபன் நேருஜி உருவப் படத்தையும் ஷை ஆஸ்பத்திரியில் திறந்து வைத்து உரையாற்றினார்கள்.

*1964*,ம் டிசம்பர் *30*-ந் தேதியன்று வாழப்பாடி பஞ்சாயத்து யூனியனை சேர்ந்த தேக்கல்பட்டி பஞ்சாயத்தில் தொண்டர் படையினால் கட்டப்பட்ட பஞ்சாயத்து அலுவலகக் கட்டிடத்தை வாழப்பாடி தொகுதி சட்ட மன்ற உறுப்பினர் திரு என், ராமசாமி உடையார் தலைமையில் சேலம் கோட்ட ஆட்சித் தலைவர் திரு ஆர். பத்மநாபன் அவர்கள் திறந்து வைத்தார்கள். விழாவில் பஞ்சாயத்துத் தலைவர் திரு. கருப்பண்ண பூசாரி எல்லோரையும் வரவேற்றார். ஷை விழாவில் யூனியன் சேர்மன் திருவி. எஸ். பெரியசாமி அவர்கள் தேசியக் கொடியை ஏற்றி வைத்து கொடியின் முக்கியத்தை எடுத்துச்சொன்னார்கள். தலைவர் தனது தலைமை உரையில் நமது நாட்டில் பஞ்சாயத்தின் சாதனையைப்பற்றிப் பேச, கோட்ட ஆட்சித் தலைவர், தொண்டர் படையின் சிறந்த வேலையைப்பாராட்டிப்பேசினார்.

**கண்டமங்கலம் பஞ்சாயத்து யூனியன்**

குடும்பக் கட்டுப்பாடு வார விழாவையொட்டி *18-12-64*-ல் கண்டமங்கலம் மாரியம்மன் கோவில் மைதானத்தில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. பஞ்சாயத்து யூனியன்—கிராம சுகாதார நிலையம் ஆகியவற்றின் சார்பில் குடும்பக் கட்டுப்பாடு பற்றிய படக் காட்சி ஒன்றுநடத்தப்பட்டது. சிறுவந்தாடு பிரதம சுகாதார நிலையத்தில் ஒரு கண்காட்சி *13-12-64* முதல் *24-12-64* வரை ஏற்பாடு செய்யப்பட்டது. மேலும் குடும்பக்கட்டுப்பாடுபற்றி *40* கிராமத் தலைவர்களுக்குப் பயிற்சி முகாம் ஒன்று *22-12-64* முதல் *24-12-64* வரை சிறுவந்தாடு பஞ்சாயத்து யூனியன்பள்ளியில் நடைபெற்றது, முகாமில் பிரதம சுகாதார நிலைய வைத்திய அதிகாரி திரு இராமமூர்த்தி எம் பி. பி. எஸ்., சுகாதாரஆய்வர் திரு விஸ்வநாதன், யூனியன் ஆணையர் திரு தாசப்பன், பி.ஏ., ஆகியோர் குடும்பக் கட்டுப்

பாட்டின் அவசியம் பற்றியும், முறைகள் பற்றியும், அறுவை சிகிச்சை பற்றியும் விளக்க வுரையாற்றினார்கள். பயிற்சி முகாமிற்கு மோட்சகுளம் பஞ்சாயத்து உப-தலைவர் திரு. பலராம செட்டியார் தலைமை வகித்தார். சினிமாக் காட்சிகளும் நடத்தப்பட்டன. பயிற்சியாளர்களுக்கு நற்சான்றிதழ்கள் வழங்கப்பட்டன. இறுதி நாளன்று பயிற்சியாளர் சார்பில் திரு வெங்கடசாமி பேசியபின் நாட்டு வாழ்த்துடன் முகாம் இனிது நிறைவேறியது.

### ஒட்டன்சத்திரம் பஞ்சாயத்து யூனியன்

யூனியன் சார்பில் வேலூரில் குடும்ப நலத்திட்டப் பயிற்சி முகாம் நடைபெற்றது. முதல் நாள் 29-12-64 அன்று வேலூர் அன்னப்பட்டி பஞ்சாயத்து உப தலைவர் திரு கே. ராமசாமிக் கவுண்டர் அவர்கள் தலைமையில், பயிற்சி முகாமைக் கூட்டுறவு வளர்ச்சி அதிகாரி திரு டி. தில்லையம்பலம் துவக்கி வைத்தார். முகாமிற்கு வந்திருந்தோரை கிராம நல ஊழியர் திரு. ச. முத்துசாமி வரவேற்றார். பின்னர் சுகாதார ஆய்வாளர் திரு டி. ரெங்கசாமி, தொழில் வளர்ச்சி அதிகாரி திரு கே. செந்தூர் பாண்டியன், காந்தி நிதி ஊழியர்கள் திரு. வீ. சின்னச்சாமி, மா. வன்னிக்காளை ஆகியோர் சொற்பொழிவாற்றினார்கள். இரவு 9 மணியளவில் வேலூர் மனமகிழ் மன்றத்தாரால் குடும்ப நலத் திட்டம் பற்றிய "குத்து விளக்கு" என்னும் நாடகம் நடைபெற்றது.

### சித்தாமூர் பஞ்சாயத்து யூனியன்

பழவூர் கிராமத்தில் 30-12-64-ல் திரு சுப்பராயலுரெட்டியார், சித்தாமூர் பஞ்சாயத்து உப தலைவர் அவர்கள் தலைமையில் வெகு சிறப்பாக ஹரிஜன தினம் கொண்டாடப்பட்டது. ஆணையர் திரு ஏ. வெங்கடேசன். பி. ஏ. அவர்களும் கல்வி விஸ்தரிப்பு அதிகாரி திரு என். ஆறுச்சாமி அவர்களும் தீண்டாமையின் கொடுமை பற்றியும், ஹரிஜனசேவையைப் பற்றியும் சொற்பொழிவாற்றினார்கள்.

சமூகநல ஊழியர் திரு கே. ராமச்சந்திரன் நன்றி கூறினார்.

### குழந்தைகள் தினம்

பழவூர் கிராமத்தில் 30-12-64-ல் குழந்தைகள் காட்சிநடத்தப்பட்டுச் சிறந்த குழந்தைகளுக்கு ஆணையர் திரு ஏ. வெங்கடேசன். பி. ஏ., அவர்களால் பரிசுகள் வழங்கப்பட்டன.

### துரிஞ்சாபுரம் பஞ்சாயத்து யூனியன்

துரிஞ்சாபுரம் பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த 7 மாதர் சங்கங்களுக்கு மாதர் குழந்தைகள் நலத் திட்டத்தின் கீழ் தையல் மிஷின்கள் வழங்கும் விழா 10-1-65-ம் தேதி துரிஞ்சாபுரம்

பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்தில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. திருவண்ணுமலே காங்கிரஸ் கமிட்டித் தலேவர் திரு அண்ணுமலே அவர்கள் தேசியக் கொடியை ஏற்றுவித்தார். திரு எஸ். காளிதாஸ் நாயுடு அவர்கள் (வடஆற்காடு மாவட்ட ரெவின்யூ அதிகாரி) தலைமை தாங்கினுர்கள் யூனியன் பெருந்தலேவர் திரு பா. சீனுவாச ரெட்டியார் அவர்கள் வரவேற்புரை வாசித்தளித்தார். சென்னே மாநில சுகாதார அமைச்சர் கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம் அவர்கள் மாதர் சங்கங்களுக்குத் தையல் மிஷின்கள் வழங்கி மாதர் சங்கங்களின் நோக்கம், அவை செயல்பட வேண்டிய முறை ஆகியவை பற்றி அறிவுரை வழங்கினுர்கள். திரு. எஸ். முருகையன். எம். எல். ஏ. அவர்கள் திருவள்ளுவர் படத்தையும், திரு கோபால் ரெட்டியார் அவர்கள் பாரதியார் படத்தையும் குமாரி எஸ். சீதா லட்சுமி அவர்கள் (வடஆற்காடு மாவட்ட மாதர் நல அதிகாரி) அன்னே கஸ்தூரிபாய் அவர்கள் படத்தையும் திறந்து வைத்துச் சொற்பொழிவாற்றினுர்கள். திரு. ஆறுமுகம், எம் எல். ஏ. அவர்கள் சிறப்புச் சொற் பொழிவாற்றினுர்கள். யூனியன் ஆணேயாளர் திரு. டி. திருவரங்கம் அவர்கள் நன்றி கூற விழா நிகழ்ச்சிகள் தேசீய கீதத்துடன் இனிது முடிவடைந்தன.

### திருப்பூர் பஞ்சாயத்து யூனியன்

சிறுசேமிப்பு தீவிர இயக்க விழா திருப்பூர் பஞ்சாயத்து யூனியனேச் சேர்ந்த அனுப்பர் பாளேயத்தில் 13-1-65 ஆம் தேதி சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. ஈரோடு சிறுசேமிப்பு அமைப்பாளர் திரு ஸ்ரீ ராமுலு அவர்கள் வீடு வீடாகச் சென்று சிறுசேமிப்புப் பற்றிய பிரச்சாரம் செய்வதில் பங்கு கொண்டனர். பஞ்சாயத்து யூனியன் அலுவலர்களும்,விஸ்தரிப்பாளர்களும், கிராம நல ஊழியர்களும், அனுப்பர்பாளேயம்பள்ளி ஆசிரியர்களும், இதில் தீவிரமாகப் பணியாற்றினர். இந்த ஒரு நாளில் (13-1-65-ல்) அனுப்பர்பாளேயம் கிராமத்தில் மட்டும் சாதாரண மக்களிடமிருந்து வளரும் சேமிப்புத் திட்டக் கணக்குகளுக்கு ரூ. 180-பெறப்பெற்று கணக்குகள் ஆரம்பிக்கப்பட்டன. மற்றும் தேசீயப்பாதுகாப்புபத்திரங்கள் ரூ. 2805-க்கு விற்பனே செய்யப்பட்டன.

இரவில் சேலம் எம். ஏ. டி. கலேக் குழுவினரால் "பணம் பத்திரம்" என்னும் நாடகம் நடத்தப்பெற்றது. இன்னும் அனுப்பர் பாளேயம் வீரமாருதி குழுவினரால் குடும்பக் கட்டுப்பாடு பற்றிய நாடகம் ஒன்றும் நடத்தப்பட்டது. ஆயிரத்திற்கு மேற்பட்ட மக்கள் வந்திருந்தனர். இரவு 1 மணிக்கு நாடகம் இனிது முடிந்தது.

அராபிய இரவுக் கதைகள் வழங்கும்

# மாலுமி சிந்துபாத்

தமிழில் தருபவர் :



"அராபிய இரவுக் கதைகள்" அகில உலகப் பிரசித்தி பெற்றவை. அரபி மொழி மூலத்திலுள்ள இந்தக் கதைகள் சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தொகுக்கப் பட்டவை யாகும். தொகுத்தவர்களின் விவரம், பெயர் எதுவும் தெரிய வில்லை. அரபி மொழியில் இருந்தாலும் இந்தக் கதைகள் கீழை நாடுகளான பாரசீகம், இந்தியா, சீனு முதலிய பல நாடுகளிலும் வழங்கப்பட்டு வந்த நாடோடிக் கதைகள் தான். இந்த அற்புதமான கதைகள் காலம் காலமாகப் பெரியோர்களுக்கும் பிள்ளைகளுக்கும் ஒருங்கே களிப்பைத் தருபவை. அழகான கற்பனைகளும், அரிய நீதிகளும் அடங்கிய கதைகள் இவை. சாதாரண மக்களிடமிருந்து எத்தனை அற்புதமான கற்பனைகளும் கருத்துக்களும் தோன்ற முடியும் என்பதற்கு இந்தக் கதைகள் நல்ல உதாரணம், இந்தக் கதைகளில் பல, பலமொழிகளிலும் திரைப்படங்களாகவும் உருவாகியுள்ளன. இன்று இந்தக் கதைகளை அறியாத நாடே உலகத்தில் இல்லை எனலாம்.

இந்தக் கதைகளை ஐரோப்பாவில் அண்டொய்ன் காலண்ட் என்ற பிரஞ்சு நாட்டுக் கீழையுலக ஆராய்ச்சியாளர் முதன் முதலில் பிரஞ்சு மொழியில் மொழி பெயர்த்தார். பின்னர் இவை ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கப்பட்டது. ஆங்கிலத்தில் ரிச்சர்ட் பர்ட்டன், வில்லியம் லேன், போவிஸ் மாத்தாஸ் ஆகியோர் மொழி பெயர்த்திருக்கிருர்கள். மூவர் மொழி பெயர்ப்பும் ஒவ்வொரு விதத்தில் சிறந்தது. பர்ட்டனின் மொழி பெயர்ப்பே சிறந்தது எனச் சில விமர்சகர்கள் கூறுவார்கள். இந்தக் கதைகள் தமிழிலும் வெளி வந்துள்ளன. இவற்றில் சக்தி வெளியீடாக

SINDBAD THE SAILOR—*From Arabian Nights*.

வந்த அ. லெ. நடராஜனின் மொழி பெயர்ப்பு சிறப்பானது எனலாம்.

அராபிய இரவுக் கதைகளில் 'மாலுமி சிந்துபாத்' அதியற்புதமான கதையாகும். இந்தக் கதைக்குள் காணப்படும் கதைகள் பலவும் வண்ணத் திரைப் படங்களாகவும் வெளி வந்துள்ளன. இந்தச் சிறந்த கதை ஆங்கில மொழி பெயர்ப்புக்களின் துணை கொண்டு, இங்கு சுவை குன்றாத சுருக்கமாகத் தரப் படுகிறது.

  

**பா**க்தாத் நகரத்தில் மாட்சிமை தங்கிய மன்னர் பிரான் ஹரூன் அல்ரஷித் ஆண்டு வந்த காலம் அது...

அன்றொரு நாள் அந்நகரத்தில் வெயில் பழுக்கக் காய்ந்து கொண்டிருந்தது. சூடு மிகுந்த சூரியக் கதிர்கள் பாக்தாத் நகரத்தின் மாட மாளிகைள், கூட கோபுரங்கள் ஆகியவற்றின் பொற் கலசங்களின் மீதும், பழுப்பும் பச்சையுமாய்ச் செழித்து வளர்ந்திருந்த காவனங்களின் மீதும் கொதிப்பை வாரிக் கொட்டிக் கொண்டிருந்தன. அப்போது அந்நகரத்தில் சுமை தூக்கிப் பிழைத்து வந்த ஹிந்துபாத் என்பவன் அங்கு தென்பட்ட பெரிய மாளிகையொன்றின் நிழலிலே ஒதுங்கி, தன் தலையிலிருந்த சுமையைக் கீழே இறக்கி வைத்து விட்டு, உடம்பில் வழிந்த வியர்வையைத் துடைத்தான். அந்த மாளிகை உயரமாகவும்வெள்ளை வெளேரென்றும் காட்சி யளித்தது; அதன் சுவர்களில் ஆங்காங்கே அலங்காரமான ஜன்னல்களும், சில உப்பரிகைகளும் தென்பட்டன. மாளிகைக்கு வட புறத்தில் பெரியதோட்டம் ஒன்றிருந்தது. அந்தத் தோட்டத்தில் நீண்டு வளர்ந்த ஈச்சை மரங்களும், மற்றும் ஆரஞ்சு, பாதாம், மாதுளை முதலிய மரங்களும் இருந்தன; அவற்றுக்கப் பால், நறுமணம் கமழும் மலர்ச் செடிகளும், பச்சிலைச் செடிகளும் இருந்தன. அவற்றின் நறுமணம் எங்கும் பரவிக் கமழ்ந்தது. இன்னொரு பக்கத்தில் ஓர் அலங்கார நீர்க்குழாய் சலவைக் கல்லாலான தொட்டியின் மத்தியில் நீர்த் தாரையை மேல் நோக்கி உமிழ்ந்து சிதறிக் கொண்டிருந்தது. அந்தத் தோட்டத்திலுள்ள புல்வெளியின் வழியே ஒரு சிற்றாறு கல கலத்து ஓடிக் கொண்டிருந்தது. தோட்டத்து மரங்களிலிருந்து குயில்களும், புல்புல் பறவைகளும் இனிய கீதம் இசைத்துக் கொண்டிருந்தன. மாளிகையின் உள்ளிருந்து கானமிர்தமான சங்கீத நாதம் பொங்கிப் பிரவகித்தது. ஹிந்துபாத்தின் தலைக்கு மேலாக இருந்த சிறிய ஜன்னலின் வழியாக, மசாலா மணங்கமழும் மாமிச உணவின் சுவையான மணம் வெளியே

மிதந்து வந்தது. நாக்கில் நீரூறச் செய்யும் அந்தப் புலவு மணத்தை நுகர்ந்த ஹிந்துபாத் மாளிகையினுள் பெரிய விருந்து நடந்து கொண்டிருப்பதை ஊகித்தறிந்தான்.

பின்னர் அந்த மாளிகையின் வாசலில் அங்கு வேலை பார்க்கும் இரு வேலைக்காரர்கள் எதிர்ப்பட்டார்கள். அவர்கள் இருவரும் அழகான உடை தரித்திருந்தார்கள். ஹிந்துபாத் அவர்களை அணுகி, அந்த மாளிகையில் வசிக்கும் சீமான் யாரென விசாரித்தான். அந்த வேலைக்காரர்களில் ஒருவன் இந்தக் கேள்வியைக் கண்டு வியப்புற்று, ''பாக்தாதில் வசிப்பவன் தானா நீ? இங்கு வசித்துக் கொண்டா, இது மாலுமி சிந்துபாத்தின் மாளிகை எனத் தெரியாமல் இருக்கிறாய்? அகில உலகையும் சுற்றி வந்த பிரபலமான மாலுமியாயிற்றே அவர்!'' என்று கூறினான். இதனைக் கேட்டதும், ஹிந்துபாத் வானை நோக்கிக் கண்களையும் கைகளையும் உயர்த்தி, ''அல்லா! ஹிந்துபாத்துக்கும் சிந்துபாத்துக்கும் நீர் எவ்வளவு பெரிய வேற்றுமையை உண்டாக்கி யிருக்கிறீர். எனக்கோ ஒரு வேளைக்குக் கூட வயிறார உண்ண ரொட்டி கிடைக்க வில்லை; என் குடும்பத்தையும் என்னால் காப்பாற்ற இயல வில்லை. ஆனால் சிந்துபாத்தோ செல்வத்தில் மிதக்கிறார்; வாழ்க்கையின் இன்பங்களையெல்லாம் வாரி வாரி அனுபவிக்கிறார். அவருக்கு மட்டும் அத்தகைய போக பாக்கியங்களை நீர் வழங்கியது ஏன்? நான் மட்டும் ஏன் இப்படி வாட வேண்டும்? அவ்வாறு வாடுவதற்கு நான் என்ன பாவம் செய்தேன்?'' என்று அழாக் குறையாக ஆண்டவனை நோக்கி முறையிட்டுக் கொண்டான்.

சிறிது நேரத்தில் அந்த மாளிகைக்குள்ளிருந்து ஒரு சேவகன் வெளியே வந்தான். அவன் ஹிந்துபாத்தை நோக்கித் தனது தலை விதியை நொந்து ஆண்டவனிடம் முறையிட்டுக்கொண்ட ஹிந்துபாத் என்பவன் அவன் தானா என்று கேட்டான். ஆமாம், அந்தத் துர்ப்பாக்கிய சாலி நான் தான் என்று ஹிந்துபாத் பதிலளித்ததும், அந்தச் சேவகன் அவனைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு அந்தத் தோட்டத்தின் வழியாக அந்த மாளிகைக்குக் கூட்டிச் சென்றான்.

அங்கு ஒரு பெரிய கூடம் இருந்தது; அந்த விசாலமான கூடத்தில் அழகான தூண்கள் இருந்தன; அந்தக் கூடத்தின் விதானம் வளைவாகவும் வண்ண வேலைப்பாடுகள் மிகுந்ததாகவும் இருந்தது; அது நீலம், பச்சை, சிவப்பு, பழுப்பு, மஞ்சள் முதலிய பல்வேறு வர்ணங்களாலும் தீட்டப் பெற்ற கொடிச் சித்திரங்கள் நிரம்பியதாகஇருந்தது. சுவர்களெல்லாம் விலையுயர்ந்த சலவைக் கற்களால் சமைக்கப்பட்டிருந்தன; அந்தக்

கற்களின்மீது இஸ்லாமியப் புனித நூலான குரானின் திரு வாசகங்கள் பொன்னெழுத்துக் களால் பொறிக்கப் பெற்றிருந் தன. சுவரோரமாகத் தொங்கிய விலையுயர்ந்த பட்டுத் திரை களில் அரிய மணிகளும், கற் களும் பதிக்கப் பெற்றிருந்தன. அந்தக் கூடத்தின் ஒரு புறத் தில் அலங்காரமான ஒரு திறந்த வெளி நடைகூடம் இருந்தது. அதன்மூலம் அங்கு விருந்தாடிக் களிக்கும் விருந்தினர்கள் அங் கிருந்தவாறே தோட்டத்தின் அழகைக் கண்டு அனுபவிக்க முடிந்தது; மேலும், அந்தத் தோட்டத்திலிருந்து நறுமண மும் குளிர்ச்சியும் பொருந்திய இளம்பூங்காற்று கூடத்தினுள் மெல்லென்றும் ஜில்லென்றும் வீசிக் கொண்டிருந்தது. கூடத் தில் போடப் பெற்றிருந்த பெரிய அகன்ற மேஜையின் முன்னால் ஏராளமான விருந்தி னர்கள் அமர்ந்திருந்தார்கள்; அவர்களெல்லோரும் மிருது வான சீனத்துப் பட்டுடைகளை யும், இந்திய நாட்டின் அரிய சால்வைகளையும் தரித்து, கண்ணைக் கவரும் தோற்றத் தோடு அமர்ந்திருந்தார்கள். அவர்களது இடுப்பிலே சுற்றப் பட்டிருந்த அகன்ற இடைவார் களில் பொன்னும் மணியும் கண்ணைப்பறித்தன; அவர்களது தலைப்பாகைகளில் அரிய மணி களும், கற்களும் பளிச்சிட்டன. அவர்களில் சிலர் முத்து மாலை களையும், மரகதக் கற்கள் பதித்த மாலைகளையும் கழுத்தில் தரித்திருந்தார்கள். கருநீல நிற மாகப் பளபளக்கும் அவர்களின் வளைந்தஉடைவாள்களின் கைப் பிடிகளில் வைரக் கற்களும், கெம்புக் கற்களும் பதிக்கப் பெற்றிருந்தன.

மேஜையின்மீது அற்புத மான வேலைப்பாடுகள் மிகுந்த வெள்ளிப்பாத்திரங் களும் தங்கப் பாத்திரங்களும் நிறைந்திருந்தன. அந்தப் பாத்தி ரங்களில் நறுமணம் கமழும் எண்ணற்ற பண்ட வகைகள் குவிந்திருந்தன. பிஸ்தாப் பருப்புடன் விரவி வேக வைத்த ஆட்டுக் குட்டியின் வறுத்த கறி, மணங்கமழும் நெய்யில் மிதக்கும் மான் குட்டி யின் கறித் துண்டங்கள், மற் றும் கானங் கோழி, புறா, குயில் போன்ற பறவைகளின் கறிகள், உண்ண உண்ணத் தெவிட்டாத இனிய கனி வர்க் கங்கள் முதலியன எல்லாம் கோபுரம் போல் குவித்து வைக் கப்பட்டிருந்தன. மேலும், அந்த மேஜை மீதிருந்த சித்திரவேலைப் பாடு மிகுந்த படிகக் கிண்ணங் களில் இனிமையும் மணமும் பொருந்திய ஷர்பத் பானங்கள் நிரப்பப்பட்டிருந்தன. அந்தப் பான வகைகளெல்லாம் இமாச லத்திலிருந்து கொண்டு வந்த பனிக் கட்டியினால் குளிர வைக் கப்பட்டிருந்தன. அந்த மேஜை யின் தலைப் பகுதியில், மேஜை முன்னால் கண்ணியமான தோற் றம் கொண்ட ஒரு முதியவர் அலங்காரமான ஆசனமொன்

றில் அமர்ந்திருந்தார். அவரது வெள்ளை நிறமான நீண்ட தாடி அவரது மார்பின்மீது விழுந்து புரண்டது. அவருக்குப் பின்னுல் அவரது ஏவலை எதிர் நோக்கி, ஏராளமான வேலைக்காரர்கள் கைகட்டி நின்ருர்கள்.

அங்கு குழுமியிருந்த பெரிய மனிதர்கள், பிரமுகர்கள் ஆகியோரின்சந்நிதியில் தான் போய் நிற்க நேர்ந்ததும், ஹிந்துபாத் பயந்து நடுங்கினுன்; அவர்களுக்கு அவன் சலாம் போடும் போது அவனது சர்வாங்கமுமே நடுங்கியது. அந்த மேஜையின் தலைப் பகுதியில் அமர்ந்திருந்த முதியவர்தான் சிந்துபாத். அவர் சுமை கூலிக்காரனுன ஹிந்துபாத்தை அந்த விருந்தில் கலந்து கொள்ளுமாறு பரிவோடு அழைத்தார்; அவனைத் தமக்கருகிலுள்ள ஆசனத்தில் அமர்ந்து விருந்துண்டு களிக்குமாறு வேண்டிக் கொண்டார். அதே சமயம் அங்கு வாத்திய சங்கீதமும் நிகழத் தொடங்கியது; அதற்கேற்ருற்போல் அழகான அடிமைப் பெண்கள் பலர் ஆடியும் பாடியும் விருந்தினரை மகிழ்வித்தார்கள். மேலும் மலர் மணம் கமழும் பூந்தோட்டத்திலிருந்து பறவையினங்களும் தமது இன்னிசையைப் பொழிந்தன. ஹிந்துபாத்தும் மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கியவனுய் அந்த விருந்தில் கலந்து கொண்டு, அங்கிருந்த உணவுப் பண்டங்களை வயிருர உண்டு களித்தான்.

ஹிந்துபாத் அந்த மாளிகையின் வாசலில் நின்று, ஆண்டவனை நோக்கித் தன் தலைவிதியை நொந்து முறையிட்டுக் கொண்டதை, சிந்துபாத் தமது மாளிகையின் ஜன்னல்வழியாகக் கவனித்து விட்டார்; எனவே தான் அவர் அவனை விருந்துக்கு அழைத்து வரச் செய்தார். விருந்தெல்லாம் முடிந்த பின்பு அவர் ஹிந்துபாத்திடம் திரும்பி "வாசலில் நிற்கும் போது நீ வாய் விட்டு ஏதோ முறையிட்டுக் கொண்டாயே. அதனை நான் திரும்பவும் கேட்க விரும்புகிறேன்" என்ருர். இதனைக் கேட்டதும் ஹிந்துபாத் திடுக்கிட்டுப் போனுன். "எஜமான்! என்னை மன்னித்து விடுங்கள். வெயிலின் கொடுமையும் களைப்பும் தாங்க மாட்டாமல் நான் ஏதோ வாய்க்கு வந்தபடி பேசி விட்டேன். அப்படிப் பேசியதற்கு வருந்துகிறேன். என்னை மன்னியுங்கள்" என்ருன். சிந்துபாத்தோ அதனைக் கேட்டு விட்டுப் பின்வருமாறு சொன்னுர். "நீ அவ்வாறுமுறையிட்டுக் கொண்டதைப் பற்றி, ஆண்டவன் உன்மீது கோபம் கொள்ள மாட்டார். உன் முறையீடு நியாயமானதுதான். ஆனுல், என்னைப் பொறுத்த வரையில் நீ கொண்டுள்ள கருத்தை மாற்றுவது எனது கடமை. நான் இப்போது அடைந்து அனுபவிக்கும் இந்தச் சொத்துச் சுகமெல்லாம் திடீரென்று அதிருஷ்டவசமாக எனக்கு வந்து விடவில்லை. இவற்றை

அடைவதற்கு நான் பட்ட கஷ்டமும் நஷ்டமும் கொஞ்சமன்று.'' இவ்வாறு கூறி விட்டு, சிந்துபாத் விருந்தினர்களை நோக்கித் திரும்பினர். அவர்களை நோக்கி அவர் பின் வருமாறு பேசினர்: ''கனவான்களே! இந்த உலகத்தில் எவருக்கும் ஏற்படாத துன்பங்களும், ஆபத்துக்களும் எனக்கு நேர்ந்துள்ளன. இத்தகைய துன்பங்களையும் ஆபத்துக்களையும் நான் பல்லாண்டுக் காலமாகச் சகித்துச் சமாளித்து வந்திருக்கிறேன். எனக்குக் கிட்டிய அனுபவங்கள் பணத்தாசை பிடித்த எந்தவொரு கஞ்சப் பிரபுக்கேனும் ஏற்பட்டிருக்குமானல், அவன் பணத்தாசையையே கை விட்டிருப்பான். எனக்கேற்பட்ட பயங்கரமான அநுபவங்களைப் பற்றிக் கூற இதுவொரு நல்ல சந்தர்ப்பம். அதனை நீங்கள் எல்லோரும் அறிய விரும்புவீர்கள் என்று நம்புகிறேன். நான் பல முறை கடல்மீது பயணம் சென்றிருக்கிறேன். ஒவ்வொரு பயணமும் ஓர் அற்புதமான அனுபவம். ஆபத்தான அனுபவமும்தான். அந்த ஆபத்தான அனுபவங்களை உங்களால் நம்பக்கூட முடியாது. அவ்வளவு அதிசயமானவை. அவற்றை இந்தச் சந்தர்ப்பத்தில் உங்களுக்கெல்லாம் கூறவிரும்புகிறேன்.''

இவ்வாறு கூறிவிட்டு, சிந்துபாத் தமது முதலாவது கடற் பயணம் பற்றிக் கூறத் தொடங்கினர்!

## முதற் பயணம்

என் தந்தை பெரிய தனவந்தர்; வணிகர். நான் சிறுவனுயிருக்கும் போதே அவர் இறந்து விட்டார். எனினும் பெருத்த செல்வத்தை அவர் எனக்கு விட்டுப் போயிருந்தார். நான் வளர்ந்து பெரியவனுனதும், அந்தச் செல்வத்தை ஆடம்பரமான உணவிலும் உடையிலும் குடியிலும் கூத்தியிலும் வீணுகச் செலவிட்டேன். அதனுல் அந்தச் செல்வம் கரைந்தது. மேலும் அந்தச் செல்வத்தைக் காட்டிலும் மேலான என் வாழ்நாட்களிலும் பெரும் பகுதியை வீணடித்து விட்டேன். இந்த உண்மையை நான் உணர்ந்த காலத்தில் என்னிடம் சிறிதளவு செல்வமே இருந்தது. எனினும் அதனையே முதலாகக் கொண்டு, திரை கடலோடித் திரவியம் தேடுவதற்காகச் சில வியாபாரிகளோடு சேர்ந்து புறப்பட்டேன்; பஸ்ஸோராவிலிருந்து செல்லும் கப்பலில் அவர்களோடு புறப்பட்டுச் சென்றேன். அந்தக் கப்பல் பாரசீகக் கடலைத் தாண்டி, செல்வவளம் மிக்க இந்திய நாட்டின் பல துறை முகங்களுக்கும் சென்றது. அங்கெல்லாம் அந்த வியாபாரிகள் தம்மிடமிருந்த சரக்குகளை விற்றுவிட்டு, அங்கிருந்து மிளகு, ஏலம், சந்தனம், தந்தம் மாணிக்கம், பட்டுத் துணிகள், தங்க ஜரிகை வேலைப்பாடு மிகுந்த மஸ்லின் துணிகள், காசிப்பட்டுகள், ஆக்ரா நகரத்

தின் ரத்னக்கம்பளங்கள், காஷ்மீரத்துச் சால்வைகள் முதலிய பல பொருள்களேயும் வாங்கிக் கொண்டார்கள். பின்னர் இந்தியக் கடற்கரையை விட்டு எங்கள் கப்பல் வெகு தூரம் வந்து விட்டது. அப்போது கடலில் காற்றே இல்லாமல் அமைதி குடி வேண்டிருந்தது. எனவே கப்பலின் தலைவன் பாய் மரங்களையெல்லாம் சுருட்டிக் கட்டும்படி உத்தர விட்டான். அந்தக் கப்பல் நின்ற இடத்துக்குச் சிறிது தூரத்தில் ஒரு சின்னத் தீவு தென்பட்டது. அந்தத் தீவுக்குப் போய் வர விரும்புபவர்கள் அங்கு போய் விட்டுச் சீக்கிரம் திரும்பி விடவேண்டும் என்றும் அந்தத் தலைவன் கூறினன். இதனைக் கேட்டதும் மாலுமிகளிற் சிலர் தமது படகொன்றில் ஏறி, அங்கு சென்ருர்கள்; அவர்களோடு நானும் புறப்பட்டுச் சென்றேன். அவர்கள் அந்தத் தீவில் இறங்கி, அலைகளோடு நித்த நித்தம் போராடிய அலுப்புத் தீர நன்ருகக் குடித்தும் கும்மாளமிட்டும் குதூகலித்தார்கள்; ஆடிப் பாடினுர்கள்.

ஆனுல் திடீரென்று அந்தத் தீவு அசைந்து கொடுத்து நடுங்கத் தொடங்கியது. இதைக் கண்டு நாங்கள் திடுக்கிட்டோம். இதற்குள் கப்பல் தலைவன் தீவிலிருப்பவர்களை நோக்கி, உடனே படகிலேறித் தப்பித்து விடும்படியும், இல்லாவிட்டால் நாங்கள் எல்லோரும் அழிந்து போக நேரும் என்றும் எச்சரிக்கை செய்தான். உடனே அந்த மாலுமிகள் அனைவரும் படகிலே தாவியேறி, அதனை வேகமாகச் செலுத்த முனைந்தார்கள். ஆனுல் நான்மட்டும் அதில் ஏறவில்லை; நான் ஏறுவதற்குள்ளாகவே படகு புறப்பட்டு விட்டது. இதற்குள் அந்தத் தீவு திடீரென்று நீருக்குள் மூழ்கத் தொடங்கியது. உண்மையில் அது தீவே யல்ல. அது ஓர் ராக்ஷஸத் திமிங்கிலம். அதன் முதுகைத்தான் நாங்கள் தீவென்று எண்ணி ஏமாந்து விட்டோம். அந்தத் திமிங்கிலம் மூழ்கத் தொடங்கியதும், கடல் நீரும் பொங்கிச் சுழலத்தொடங்கியது. நான் தப்பிப்பதற்கு வழியே யில்லை. அந்தத் திமிங்கிலம் நீருக்குள் சூழ்ந்து மூழ்கி விட்டால், அதனுல் ஏற்படும் நீர்ச் சுழிப்பில் சிக்கி நானும் அழிய வேண்டியதுதான். இந்த சமயத்தில் அங்கு நெருப்பு மூட்டுவதற்காக நாங்கள் கொண்டு சென்ற கட்டை என் கையில் சிக்கியது; நான்அதனைப் பற்றிப் பிடித்துக் கொண்டேன். அதனுல் அந்தத் திமிங்கிலம் மூழ்கிய பின்னர், நான் சுழிப்பிலே சிக்கித் தவித்தபோதிலும், மூழ்கி விடவில்லை. ஆனுல், இதற்குள் நல்ல காற்று வீசத் தொடங்கி விட்டதால், நாங்கள் வந்த கப்பல் பாய் மரத்தை விரித்துப் புறப்பட்டு விட்டது. நான் ஒருவன் மாட்டிக் கொண்டதோ, எனது கூக்குரலோ கப்பலுக்கு எட்ட

வில்லை. எனவே நான் அனாதையாக விடப்பட்டேன். அந்தக் கட்டையையே ஆதாரமாகப் பற்றிக் கொண்டேன். கடலலைகள் என்னை இரவும் பகலும் எங்கெங்கோ அடித்துச் சென்றன. கடைசியில் நானும் மயக்கமுற்று விட்டேன். என்றாலும் நான் காலைச் சூரியனின் வெளிச்சம்பட்டுக் கண்விழித்துப் பார்த்தபோது, ஏதோ ஓர் இனந்தெரியாத தீவில், பாறைகள் மலிந்த கடற்கரையோரத்தில் குற்றுயிராய்க் கிடப்பதை உணர்ந்தேன். பின்னர் நான் எப்படியோ தெம்பு பெற்று எழுந்து நடந்தேன்; அந்தக் கடற்கரை வழியே நடந்து, அங்கு தென்பட்ட பாசிபச்சைகளைப் பறித்துண்டு என் பசியைத் தீர்த்தேன். நல்ல வேளையாக, அந்தக் கடற்கரையோரத்தில் நல்ல நீர்ச்சுனையொன்றும் இருந்தது. அதனால் என் தாகத்தையும் தீர்த்துக் கொண்டேன்.

இவ்வாறு எனது பசியையும் தாகத்தையும் ஒருவாறு தணித்த பின்பு, நான் அந்தத் தீவின் உட்பகுதிக்கு நடந்தேன். வெகு தூரம் நடந்ததன் பின்னால் அங்கு ஒரு பெரிய பச்சைப் புல்வெளி இருப்பதைக் கண்டேன். அதில் பல குதிரைகள் புல் மேய்ந்து கொண்டிருந்தன. நான் அதனைப் பார்த்துக் கொண்டிருந்த போது, அங்கிருந்த புதரொன்றிலிருந்து திடீரென்று ஒரு மனிதன் வெளிப்பட்டான்; அவன் என்னை யாரென்று கேட்டான். நான் அவனிடம் எனது வரலாற்றைச் சொன்னேன். பின்னர் அந்த மனிதன் என்னை ஒரு குகைக்கு அழைத்துக் கொண்டு போனான்; அங்கு வேறு சில மனிதர்களும் இருந்தார்கள்; அவர்களும் என்னை வரவேற்றார்கள். அவர்களிடமும் நான் என் கதையைச் சொன்னேன். அதனைக் கேட்டு அவர்கள் என்மீது இரக்கம் கொண்டு, அவர்களிடமிருந்த உணவுப் பொருளில் எனக்கும் ஏராளமாகத் தந்தார்கள். அவர்கள் அந்தத் தீவுக்குரிய மன்னரின் வேலைக்காரர்கள். அவர்கள் ஆண்டுக்கொருமுறை அந்தச் செழிப்பான புல்வெளிக்கு மன்னரின் குதிரைகளைக் கொண்டு வந்து மேய விடுவது வழக்கமெனச் சொன்னார்கள். அந்த மேய்ச்சல் காலமும் அன்றோடு முடிவடைய இருந்தது. எனவே அவர்கள் மறுநாள் தீவின் தலைநகருக்குப் புறப்பட்டுச் சென்ற போது, என்னையும் அவர்களோடு அழைத்துச் சென்று, அவர்களின் மன்னர் முன் நிறுத்தினார்கள். அந்தத் தீவின் மன்னரிடம் நான் எனது துயரக் கதையைச் சொன்னேன். அதனைக் கேட்டு மனமுருகிய அந்த மன்னர் எனக்கு எல்லா விதமான வசதியும் செய்து கொடுக்கும்படி உத்தரவிட்டார்; மேலும் என்னை அவரது சமூகத்துக்குப் பலமுறை வரவழைத்து எனது நாட்டைப் பற்றியும் நாட்டின் பழக்க வழக்கங்களையும் பற்றி விசாரித்தார்.

அந்தத் தலைநகரின் துறை முகத்துக்கு எத்தனையெத்தனை யோ கப்பல்கள் வாரம்தோறும் வந்துபோய்க் கொண்டிருந்தன. எனவே நான் தினம்தினம் அந்தத் துறைமுகத்துக்குச் சென்று, கப்பல்களைப்பற்றி விசாரித்து வந்தேன். பாரசீகத்துக்கோ, அல்லது அதன் அருகிலுள்ள வேறு நாட்டுக்கோ செல்லக் கூடிய கப்பல் எதுவும் வந்தால் அதில் ஏறித் தாயகம் திரும்பி விடலாமே என்ற எண்ணம் எனக்கு. ஆனால் நெடு நாட்களாக அப்படிப்பட்ட கப்பல் வரவேயில்லை. வந்த கப்பல் களெல்லாம் எனக்குத் தெரியாத ஏதேதோ தொலை நாடுகளுக்கும் தீவுகளுக்கும்தான் செல்வதாக இருந்தன. கடைசியில் ஒருநாள் நான் ஒரு கப்பலைக் கண்டேன். அதனைக் கண்டதும் எனக்கு ஒரே மகிழ்ச்சி. ஆம். பஸ்ஸோராவிலிருந்து நான் ஏறி வந்த, என்னை நடுக்கடலில் தவிக்கவிட்டுச் சென்ற அதே கப்பல்தான் அது!

அந்தக் கப்பலின் தலைவன் கரைக்கு இறங்கி வந்ததும், நான் அவனிடம் சென்று, "உங்கள் கப்பலிலுள்ள எனது சரக்குகளை நான் எடுத்துக்கொள்ள விரும்புகிறேன்" என்று சொன்னேன். ஆனால் அந்தத் தீவுக்கு வந்தபின்னர், நான் அந்தத் தீவிலுள்ள வியாபாரிகளைப் போலவே உடை உடுத்தியிருந்ததால், அந்தத் தலைவன் என்னை அடையாளம் காண இயலாமல் திகைத்தான். "நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று வியப்புடன் கேட்டான். நானே "உள்ளதைத்தான் சொல்கிறேன். உங்கள் கப்பலிலுள்ள என் பெயர் எழுதப்பெற்றுள்ள சரக்கு மூட்டைகள் எனக்குத் தேவை" என்று பதில் சொன்னேன். "உங்கள் பெயரென்ன?" என்று கேட்டான் அவன். "நான்தான் சிந்துபாத்" என்றேன் நான். இதனைக் கேட்டதும், அந்தத் தலைவன் மேலும் திகைப்புற்றவனாய் என்னைக் கூர்ந்து நோக்கியவாறு, "இருக்கவே முடியாது. பாவம்! சிந்துபாத் கடலுக்குள் மூழ்கி மறைந்து போனதை என் கண்களாலேயே பார்த்தேன்" என்றான்.

பின்னர் நான் நடந்தவற்றையெல்லாம் அந்தத் தலைவனுக்கு விளக்கமாக எடுத்துக் கூறினேன். அவன் முதலில் நம்பவில்லைதான். எனினும் எல்லாவற்றையும் தெளிவுபடுத்திய பின், அவன் என்னை அப்படியே ஆரத் தழுவிக் கொண்டான்; அத்துடன் எனது சரக்குகளையும் என்னிடம் திருப்பிக் கொடுத்தான். இதன்பின் நான் அந்தத் தலைவனை அந்தத் தீவிலுள்ள வியாபாரிகளிடம் அறிமுகம் செய்து வைத்தேன். அதனால் அவனுக்கு அந்தத் தீவில் நல்ல வியாபாரமும் நடந்தது. பின்னர் நான் எனது சரக்குகளில் மிகவும் சிறந்த விலையுயர்ந்த பொருள்களைத் தீவின் மன்னரிடம் கொண்டு சென்று

அவர் எனக்குச் செய்த உதவிக்கு நன்றிக் கடனுகக் காணிக்கை செலுத்தினேன். மன்னரும் இதனைக் கண்டு மகிழ்ந்து, நான் அவருக்களித்ததைக் காட்டிலும் அரிய பெரிய பொருள்கள் பலவற்றை எனக்குப் பரிசாக அளித்தார். பின்னர் அந்தக் கப்பலில் வந்த வியாபாரிகள் அந்த் தீவில் தமது வியாபாரத்தை முடித்துக்கொண்டு, பஸ்ஸோராவுக்குப் புறப்பட்டார்கள். நானும் என்னிடமிருந்த சரக்குகளைக் கொடுத்துவிட்டு, அத்ற்குப் பிரதியாக அகில், சந்தனம், மிளகு, இஞ்சி, மற்றும் பற்பல பொருள்களை அங்கிருந்து வாங்கிக்கொண்டு, ஊருக்குக் கிளம்பினேன். மீண்டும் கப்பலில் பயணப்பட்டு, நான் வீடுவந்து சேர்ந்தேன். இந்த முதற்பயணத்தில் நான் பல கஷ்ட நஷ்டங்களை அடைந்தாலும், இதன்மூலம் நான் லட்சம் தங்கமோகராத் தொகையை லாபமாகப் பெற்றேன்.

## இரண்டாம் பயணம்

சிந்துபாத் தமது முதற் பயணத்தைப் பற்றிக் கூறிமுடித்ததும், அதுவரை நிறுத்திவைக்கப்பட்டிருந்த சங்கீதத்தை மீண்டும் தொடங்குமாறு ஆணையிட்டார். இதற்குள் மாலைப் பொழுதும் நெருங்கியது. உடனே அவர் ஹிந்துபாத்துக்கு நூறு தங்கமோகராக்களைப் பரிசளித்துவிட்டு, அவனை மறுநாள் வந்து ஏனைய பயணங்களின் வரலாற்றைக் கேட்டுப் போகும்படி கூறினர். மறுநாள் ஹிந்துபாத் நல்ல உடைகள் தரித்துக்கொண்டு, குறித்த நேரத்தில் அங்கு வந்து சேர்ந்தான்; அன்றும் முந்திய நாளைப் போலவே விருந்து நடந்தது. அந்த விருந்தில் ஹிந்துபாத் சிந்துபாத்துக்கு வலப்புறத்திலிருந்த ஆசனத்தில் அமர்ந்தான். விருந்துண்டு முடிந்தபின்னர், சிந்துபாத் தமது இரண்டாவது கடற்பயணம் பற்றிப் பின்வருமாறு கூறத் தொடங்கினர்:

முதலாவது பயணத்தை முடித்துக் கொண்டு வந்ததும், அதன்மூலம் கிடைத்த பெருத்த செல்வத்தோடு, நான் குறை நாட்களையும் அமைதியாக உண்டு உறங்கிக் கழிப்பதென்றும், பாக்தாத் நகரத்திலேயே அமைதியாக் கண்ணை மூடுவதென்றும் தான் எண்ணினேன். ஆனல் பிரயாணவேட்கை என்னை நன்ருகப்பற்றிப் பிடித்துக்கொண்டுவிட்டது. எனவே என்னல் பாக்தாத் நகரத்தில் கட்டுண்டு இருக்க முடியவில்லை. நான் மீண்டும் வியாபாரிகளோடு சேர்ந்து, கப்பலேறிச் சென்று, பல நாடுகளுக்கும் தீவுகளுக்கும் போனேன்; நல்ல வியாபாரமும் செய்தேன். ஒருநாள் நாங்கள் எல்லோரும் கனிவர்க்கங்கள் குலுங்கும் மரங்கள் செறிந்த ஒரு தீவில் இறங்க நேர்ந்தது; அந்தத் தீவில் மனித நடமாட்டமோ, பிராணிகளின் நடமாட்டமோ தென்படவில்லை. என்னேடு வந்தவர்களெல்லாம்

அங்குமிங்கும் ஓடிச்சென்று ஏராளமான பழங்களையும் பூக்களையும் சேகரித்துக் கொண்டிருந்தார்கள். நானோ அவர்களை விட்டு விலகி, படிகம்போன்று தெளிவாக ஓடிய ஒரு சிற்றோடையருகே, இரண்டு மரங்களுக்கிடையில் அமர்ந்து, என்னிடமிருந்த உணவுப்பொருள்களை வயிறார உண்டு தீர்த்தேன். பின்னர் அங்கு வீசிய இளங்காற்றிலும், சிற்றோடையின் இனிய ஒலியிலும் ஈடுபட்டவனாய், தரையில் படுத்துக் கிடந்தேன். ஆனால் தரையில் படுத்த நான் என்னையுமறியாமல் நன்றாகத் தூங்கிவிட்டேன். நான் கண்விழித்துப் பார்த்தபோது, என்னோடு வந்தவர்கள் எவரையும் காணவில்லை. உடனே நான் கடற்கரைக்குச் சென்றேன். ஆனால், அந்தோ, நான் வந்த கப்பல் புறப்பட்டுச் சென்றுவிட்டது. அந்தக் கப்பல் அடிவான வளைவில் கொஞ்சங் கொஞ்சமாகக் கண் மறைந்து போவதைத்தான் நான் பரிதாபமாகப் பார்த்தேன்.

அப்போது எனக்கு என்மீதே எரிச்சலும் கோபமும் வந்தது. தன்னை மறந்து தூங்கியதற்காக என்னை நானே கடிந்து கொண்டேன். பாக்தாத் நகரத்தில் அமைதியாக வாழ்ந்து வந்ததை விடுத்து, ஆசையின் காரணமாகப் புறப்பட்டு வந்து, இப்படி அகப்பட்டுக் கொண்டதை எண்ணி நொந்தேன். பின்னர் என்னிடம் மிஞ்சியிருந்த உணவுப் பண்டங்களை எடுத்துக் கொண்டு, அந்தத் தீவில் மனிதர்கள் வசிக்கிறார்களா என்பதைக் கண்டறியும் பொருட்டு, தீவினுள் வெகு தூரம் நடந்தேன். ஆனால் அங்கு யாருமே தென்படவில்லை. இவ்வாறு நான் நடந்து நடந்து ஒரு பெரிய சமவெளிப் பிரதேசத்துக்கு வந்து சேர்ந்தேன். அங்கு மாபெரும் உருளைக்கல்லைப் போன்று ஏதோ ஒன்று தரைமீது கிடப்பதைக் கண்டேன். உடனே அதனருகே சென்று அதனைத் தொட்டுப் பார்த்தேன். அதன் மேற்பாகம் வழவழப்பாக இருந்தது; எனவே அதன்மீது ஏறிப் பார்க்கவும் முடியவில்லை. பின்னர் நான் அதனைச் சுற்றி வந்தேன். அதன் சுற்றளவு நூறு அடிக்குக் குறையாது. எனினும் அதில் எந்தப் பக்கத்திலும் உள்ளே சென்று பார்ப்பதற்கான வாசலோ வழியோ இல்லை. அப்படி அத்தனை பெரிய குழவிக் கல் போன்று கிடக்கும் அந்தப் பொருள்தான் என்ன என்று புரியாமல் நான் வியப்புற்று நிற்கும்போது, திடீரென்று வானமண்டலத்தில் கருமேகங்கள் கூடியதுபோல் இருள் சூழ்ந்தது. நான் ஏறிட்டு மேலே பார்த்தேன். வானத்தில் சூரியனையே தனது இறக்கைகளால் மேகம்போல் மறைத்துக் கொண்டு, ஓர் ராக்ஷஸப் பறவை பறந்து வருவதை நான் கண்டேன். உடனேயே நான் அந்த வெள்ளை நிறமான மாபெரும்

யவை அவை. ஆனால் நான் பார்த்தபோது அந்தப் பாம்புக ளெல்லாம் அந்தப் பாறைகளுக் கிடையேயுள்ள குகைகளில் மறைந்துகொள்ள வேகமாகச் சென்று கொண்டிருந்தன. அவை இரவில்தான் அந்தக் குகைகளை விட்டு வெளியேவரும் போலிருந்தது, அப்போது பொழுது விடிந்துவிட்டதால் அவை ஓடி மறையத் தொடங் கின. அந்தப் பாம்புகளைக் கண்டு எனக்குப் பயம் ஏற்பட்டது. ஆனால் அந்தப் பள்ளத்தாக்கைக் கூர்ந்து நோக்கியபோது நான் பெருத்த வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தேன். ஏனெனில் அந் தப் பள்ளத்தாக்கு முழுவதும் கூழாங் கற்களைப்போல் வைர மணிகள் பரவிக் கிடந்தன. அவற்றில் சில மிகவும் பெரிய னவாக இருந்தன. ஆம். அங்கு கிடந்த கற்கள் அத்தனையும் வைரக்கற்கள்! மன்னர்களின் செல்வத்தையும் மிஞ்சிய மதிப் புள்ள அந்த வைரக்கற்களின் மீது நடந்து செல்லக் கூடிய வாய்ப்பு எனக்கிருந்தது. எனி னும் அத்தகைய வைரக்கற் களின்மீது நடந்து செல்வதைக் காட்டிலும், பாக்தாத் நகரத்து வீதிகளில் கிடக்கும் சரற்கற் களின்மீது நடந்து செல்வதையே நான் அந்நேரம் பெரிதாகவும், பாக்கியமாகவும் நினைத்தேன். ஏனெனில் என்னைச் சுற்றிலும் அத்தனை ஆபத்துக்கள் இருந் தன. இருந்தும், அத்தனை ஆபத் துக்களுக்கு மத்தியிலும் நான் அலுப்பாலும் ஆயாசத்தாலும் அயர்ந்து தூங்கி விட்டேன்.

நான் திடுக்கிட்டுக் கண் விழித்தபோது, என்னருகே ஏதோ ஒன்று தொப்பென்று விழுந்து கிடப்பதைக் கண் டேன். அது ஒரு மாமிசத்துண் டம். மலையுச்சியிலிருந்து யாரோ விட்டெறிந்திருந்தார்கள். அப் போதுதான் நான் எங்கு வந்து சேர்ந்திருக்கிறேன் என்பதை ஊகித்தறிந்தேன். அதுதான் வைர மாணிக்கப் பள்ளத்தாக்கு. அந்தப் பள்ளத்தாக்குக்குச் சில வியாபாரிகள் ஆண்டுதோறும் செல்வார்களென்றும், அங்கு சென்று அந்தப் பள்ளத்தாக் கின் ஓரத்தில் பெரிய மாமிசத் துண்டங்களை விட்டெறிவார்க ளென்றும், அந்த மாமிசத் துண் டங்களில் அங்கு கிடக்கும் வைரக்கற்கள் ஒட்டிக் கொள்ளு மென்றும், பின்னர் அங்கு பறந்து வரும் பெரிய பெரிய கழுகுகள் அந்த மாமிசத் துண் டங்களைக் கொத்தி எடுத்துக் கொண்டு, தமது கூடுகளுக்குச் செல்லுமென்றும், உடனே அந்த வியாபாரிகள் அந்தக் கழுகுகளைத் துரத்திச் சென்று, அவற்றைக் கூட்டை விட்டு விரட்டிவிட்டு அந்த வைரக் கற்களை எடுத்து வருவார்க ளென்றும் பலர்கூறக் கேட்டி ருந்தேன். மேலும் அந்தப் பள் ளத்தாக்கைப்பற்றி இப்படிக் கதை கதையாய்க் கேள்விப்பட் டிருந்தேன். அந்தக் கதைகளை யெல்லாம் நான் நம்பியதில்லை. ஆனால் நானே அப்போது அந்தப்

பள்ளத்தாக்கில் இருந்தேன். இதையெல்லாம் எண்ணிப் பார்த்ததும், அந்தப் பள்ளத் தாக்கை விட்டுத் தப்பித்துச் செல்ல எனக்கும் ஒரு வழி புலப் பட்டது. அதன்படி நான் என்னிடமிருந்த பையில் அந்த வைரக்கற்களைக் கொள்ளுமட்டும் நிரப்பிக் கொண்டேன். பின்னர் அங்கு வந்து விழுந்த மாமிசத் துண்டத்தில் மிகவும் பெரியதாக ஒன்றையெடுத்து, அதனை என் முதுகோடு சேர்த்துக் கட்டிக் கொண்டு, முகம் குப்புற விழுந்து படுத்துக் கொண்டேன்.

ஒரு மாபெரும் கழுகு வீச் சென்று கீழிறங்கி,என் முதுகில் கட்டியிருந்த மாமிசத்தைக் காலால் பற்றியெடுத்துக் கொண்டு, தனது கூட்டைநோக் கிப் பறந்தது; அதனோடு நானும் பறந்தேன். அங்கு வரும் வியா பாரிகள் ஒவ்வொருவரும் ஒவ் வொரு கழுகுக் கூட்டைத் தமக் கென்று உரிமை கொண்டாடு வது வழக்கம். அதன்படி என்னைக் கொண்டு சேர்த்த கூட் டுக்கு உரிமை கொண்டாடிய வியாபாரி கழுகை விரட்டி விட் டுக் கூட்டருகே வந்து பார்த்த போது திகைப்பும் வியப்பும் அடைந்தார். ஆம், என்னை அந் தக் கூட்டில் கண்டதே அவரது வியப்புக்கு காரணம். பின்னர் அவர் என்னை வியாபாரிகளின் முகாமுக்குக் கூட்டிச் சென்றார். நான் நடந்த கதை முழுவதை யும் சொன்னேன். அதைக் கேட்டு அவர்கள் எல்லோரும் பெரு வியப்பு அடைந்தார்கள். பின்னர் நான் அந்தக் கூட்டுக் குச் சொந்தக்காரரான வியா பாரிக்கு நான் அள்ளி வந்திருந்த வைரங்களில் பாதியை அன் பளிப்பாகக் கொடுக்க முன் வந் தேன். ஆனால் அவரோ அந்தக் கற்களில் மிகவும் பெரியதான ஒரு வைரத்தை மட்டும் எடுத் துக் கொள்ளச் சம்மதித்தார்; அந்த ஒரு வைரமே வாழ்நாள் முழுவதும் எவ்விதக் கவலையு மற்றுச் சுகபோகத்தோடு வாழ் வதற்குப் போதுமானது என்று தெரிவித்து விட்டார்.

மறுநாள் அந்த வியாபாரிகள் அனைவரும் அருகிலுள்ள துறை முகத்துக்குச் சென்று, தத்தம் நாடுகளுக்கும் ஊர்களுக்கும் கப்பல் ஏறினார்கள். நானும் கப் பல் ஏறினேன். வருகிற வழியில் எனது கப்பல் ரோஹா என்னும் தீவை யடைந்தது. அங்கு கற் பூர மரங்கள் அதிகம். நான் அந் தத் தீவில் என்னிடமிருந்த வைரங்களில் சிலவற்றை விட்டு விட்டு,அங்கிருந்து லாபகரமான வேறு பல பண்டங்களை வாங் கிக் கொண்டேன். பின்னர் நான் பாக்தாதுக்கு மீண்டும் வந்து சேர்ந்தேன். அங்குள்ள ஏழை யெளியவர்களுக்கெல்லாம் ஏரா ளமான தான தர்மங்கள் செய் தேன்; எனது வாழ்நாளின் குறையையும் நிம்மதியோடு கழித்துவிட எண்ணினேன். எனது இரண்டாவது கடற் பயணம் இவ்வாறு முடிந்தது.

## மூன்றும் பயணம்

சிந்துபாத் தமது இரண்டாவது கடற்பயணம் பற்றிக் கூறி முடித்ததும், விருந்தினர்கள் எல்லோரும் அங்கிருந்து எழுந்து, தோட்டத்திலுள்ள குளிர்ந்த நந்தவனப் பாதைகளில் நடந்தார்கள்; சிலர் பழுத்த பழங்களைப் பறித்துத் தின்றூர்கள்; வேறு சிலர் அங்குள்ள பூங்கொடிகள் கூரை போல் படர்ந்த தன்மையும் மணமும் நிறைந்த லதாக் கிருஹங்களிலே ஓய்வு கொண்டார்கள். அந்த லதாக் கிருஹங்களில் ரத்தினங்கள் பதித்த கோப்பைகளில் மணமும் குளிர்ச்சியும் இனிமையும் நிறைந்த பானகங்கள் வழங்கப்பட்டன. சங்கீத வித்வான்கள் இன்னிசை மாரி பொழிந்தார்கள்; மேலும், அந்தி நேரத்துப் பறவையினங்களும் இன்னொலி எழுப்பின. அந்த லதாக் கிருஹத்தின், மத்தியிலுள்ள சலவைக் கல்லாலான நீர்த் தொட்டிக்கு மேல், அலங்கார நீர்க் குழாய் தண்ணீர்த் திவலைகளை நாலாபக்கமும் சிதறிக் கொண்டிருந்தது. அந்தத் திவலைகள் கீழ்த்திசையில் எழுந்து வந்த பூர்ணச்சந்திரனின் நிலாவொளியில் பளபளத்து மின்னின. சிந்துபாத் வழக்கம்போல் ஹிந்துபாத்துக்குத் தங்க மோகராக்கள் நிறைந்த பணப் பையைப் பரிசளித்து, அவனை மறுநாளும் விருந்துக்கு வருமாறு கூறி வழியனுப்பி வைத்தார்.

மறுநாளும் அதே கூட்டம் கூடியது; விருந்தும் நடந்தது, விருந்து முடிந்த பின்னர் சிந்துபாத் தமது மூன்றுவது கடற்பயணத்தைப் பற்றிப் பின் வருமாறு கூறத் தொடங்கினூர் :

நான் பாக்தாதுக்கு வந்து அமைதியாக வாழ நினைத்தாலும், ஆபத்துக்களும் அபாயங்களும் நிறைந்த கடற் பயணங்களை மேற்கொள்ளுவதில் என்னுள் ஒரு தணியாத வேட்கையே தோன்றி விட்டது. அதை என்னுல் தடுத்து நிறுத்த முடியவில்லை. எனவே நான் கொஞ்சகாலம் மட்டும் பாக்தாத்தில் தங்கிவிட்டு, மீண்டும் சில வியாபாரிகளோடு சேர்ந்து, தூரதொலைக் கண்டங்களுக்கும், தீவுகளுக்கும் சென்றுவரத் திட்டமிட்டேன். பாரசீகத்துக்குச் சென்று, அங்கு ஒரு கப்பலை வாடகைக்கு அமர்த்திக் கொண்டு மீண்டும் பயணத்தைத் தொடங்கினேன். நாங்கள் பல துறைமுகங்களில் இறங்கி வாணிபம் செய்தோம். பிறகு ஒரு நாள் கடலில் பெரும் புயல் அடித்ததால், நாங்கள் பக்கத்திலுள்ள துறைமுகம் ஒன்றுக்குச் செல்ல விரும்பினேம். ஆனுல் கப்பலின் தலைவனுக்கு அந்தத் துறைமுகத்துக்குச் செல்லவே விருப்பமில்லை. என்றுலும் வேறு வழியின்றி அந்தத் துறைமுகத்துக்கே நாங்கள் செல்ல நேர்ந்தது. அங்கு வாழும் மனிதர்கள் குள்ளர்கள் என்றும்,

அவர்கள் மிகவும் மூர்க்கமானவர்களென்றும், மேலும் அவர்கள் எண்ணிக்கையிலும் அதிகம் என்றும் கப்பல் தலைவன் கூறினுன். நாங்கள் அந்தத் துறைமுகத்துக்குச் சென்று நங்கூரம் பாய்ச்சி முடிவதற்குள்ளாகவே, கப்பல் தலைவன் சொன்ன அந்தக் குள்ளர்கள் புற்றீசல்போல் கிளம்பி எங்கள் கப்பலின் மேல்தளத்தில் ஏறிவிட்டார்கள். அவர்கள் எல்லோரும் இரண்டடி உயரம் தான் இருந்தார்கள்; அவர்களது உடம்பில் செக்கச் சிவந்த நீண்ட ரோமம் அடர்த்தியாக வளர்ந்திருந்தது, அவர்கள் வந்தவுடன் கப்பலின் தலைவன் எங்களை நோக்கி, "அவர்களில் யாரையும் அடித்து விடாதீர்கள். அடித்தால் அவர்கள் நம்மில் யாரையும் உயிரோடு விட்டு வைக்க மாட்டார்கள்" என்று எச்சரிக்கை செய்தான்.

அந்தக் குள்ளர்கள் கப்பலைக் கட்டியிருந்த கயிறுகளை யெல்லாம் அறுத் தெறிந்தார்கள்; பாய்மரங்களை யெல்லாம் அகற்றினுர்கள்; கப்பலில் இருந்தவர்களையும் கரையில் இறக்கி விட்டார்கள். பின்னர் அந்தக் கப்பலை ஒரு ஜலசந்தியின் வழியாக, ஒரு தீவுக்கு இழுத்துச் சென்ருர்கள். இந்தக் காரியங்களை யெல்லாம் அவர்கள் புரியாத பாஷையில் ஏதேதோ பேசிக் கொண்டும், பயமுறுத்தும் வக்கணைகள் காட்டிக் கொண்டும் செய்து முடித்தார்கள். அந்தத் தீவுதான் அவர்களின் வாசஸ்தலம். கப்பலை இழந்துவிட்ட நாங்களெல்லாம் தனிமையில் விடப்பட்டோம். பின்னர் நாங்கள் தூரத்தில் மேல்நோக்கித் தெரியும் கோபுரங்களைக் கொண்ட ஒரு பெரிய கட்டிடத்தைக் கண்டோம்; அதனை நோக்கிச் சென்ருேம். நாங்கள் அதனருகில் சென்று பார்த்தபோது, அது ஓர் அழகான, மிகப் பெரிதான அரண்மனை என்பதை அறிந்தோம். அதன் கதவு கருங்காலிக் கட்டையினுல் ஆக்கப்பட்டிருந்தது. நாங்கள் அந்தக் கதவைத் திறந்து கொண்டு, உள்ளே தென்பட்ட உயரமான வளைந்த விதானம் கொண்ட விசாலமான கூடத்துக்குள் புகுந்தோம். அந்தக் கூடத்தின் ஒரு புறத்தில் ஒரு பெரிய அடுப்பு எரிந்து கொண்டிருந்தது; அதனருகே மாமிசத்தை வறுப்பதற்குப் பயன்படும் கம்பிகள் போன்று பல கம்பிகள் தென்பட்டன. அந்தக் கூடத்தின் மற்ருெரு புறத்தில் மனித எலும்புகள் குவியலாகக் கிடந்தன. இந்தக் காட்சியை நாங்கள் பயபீதியோடு பார்த்துக் கொண்டிருந்த வேளையில், அங்குள்ள ஒரு பெரிய கதவு திறந்தது, உள்ளேயிருந்து ஓர் ராக்ஷஸன் வெளி வந்தான்.

அவன் கன்னங் கரேலென்று பனைமரமளவுக்கு உயரமாக இருந்தான். அவனுக்கு ஒரேஒரு கண்தான் இருந்தது; அதுவும்

நெற்றிக்கு நடுவே இருந்தது. அந்தக் கண் அக்கினித் துண்டம் போல் ஜ்வாலை வீசியது. அவனது பற்கள் நீளமாகவும் கூர்மையாகவும் இருந்தன. அவனது மேலுதடு மார்பு வரையிலும் கீழே தொங்கியது. காதுகள் இரண்டும் யானைக் காதுகள் போல் பெரியவையாகவும் அகலமாகவும் இருந்தன. அந்த ராக்ஷஸன் அங்கு வந்திருந்தவர்களை, ஒவ்வொருவராகக் கையில் பற்றிப் பிடித்து, அவர்கள் நன்ருகக் கொழுத்தவர்களா என்று சோதனை செய்தான். அங்கு சென்றிருந்தவர்களில் கப்பலின் தலைவன்தான் மற்றவர்களைக் காட்டிலும் கொழுத்த உடம்பு உடையவன். எனவே அவன் மற்றவர்களை விட்டு விட்டு, அந்தத் தலைவனை மட்டும் பிடித்து, அவனை அந்தக் கம்பியில் குத்திச் சொருகி, நெருப்பிலே வாட்டி, எங்கள் கண் முன்னுலேயே அவனது உடம்பைத் • தின்ருன். இதனைக் க்ண்டு நாங்கள் இன்னது செய்வதெனத் தெரியாமல் பயமும் பீதியும் அடித்துப் போய் நின்ரேும். பொழுது சாய்ந்து இரவான வுடன், அந்த ராக்ஷஸன் எங்களில் எவரும் தப்பித்துப் போய்விடாதபடி, அந்த வாசலினருகே வாசலை அடைத்தாற் போல் மலைபோல் படுத்துக் கொண்டான்; இரவு முழுவதும் அவன் பயங்கரமான குறட்டை விட்டவாறு தூங்கினுன்.

காலையில் அந்த ராக்ஷஸன் கண்விழித்தெழுந்ததும், அந்த அரண்மனையைப் பூட்டிவிட்டு வெளியே சென்றுவிட்டான். அவன் சென்ற பின்பு அங்கு அடைபட்டிருந்த நாங்கள் அனைவரும் அந்த ராக்ஷஸனைத் தொலைப்பது எப்படி என்று ஆலோசித்தோம். பின்னர் நான் ஒரு திட்டத்தைக் கூறினேன்; அதன்படி அன்றிரவில் அந்த ராக்ஷஸனைத் தண்டிப்பது என்று முடிவு கட்டினேம். பொழுது சாயும் நேரத்தில் அந்த ராக்ஷஸன் திரும்பி வந்தான். அவன் மீண்டும் எங்களில் ஒருவனைத் தேர்ந்தெடுத்து, முன்னைப் போலவே நெருப்பில் வாட்டி வறுத்துத் தின்ருன். பின்னர் அவன் தூங்கிவிட்டான் அதன்பின் எங்களில் தைரியசாலிகளான சிலர் ஒன்று சேர்ந்து, அந்தக் கம்பிகளை நெருப்பில் பழுக்கக் காய்ச்சி எடுத்துக்கொண்டு, தூங்கிக் கொண்டிருந்த ராக்ஷஸனின் அருகில் சேர்ந்தாற்போல் சென்று, அவனது ஒற்றைக் கண்ணில் அத்தனை கம்பிகளையும் ஒரே நேரத்தில் குத்திச் செலுத்தினேம். அந்த ராக்ஷஸன் வேதனை தாங்கமாட்டாமல் கர்ஜித்தான். இருந்த கண்ணும் குருடாகி விட்டதால், அவனுல் எங்களை லகுவில் எட்டிப் பிடிக்க முடியவில்லை; எனினும் அவன் தன் இரு கைகளாலும் அங்குமிங்கும் துழாவிப் பார்த்தான். அவனது கர்ஜனையால் அந்த அரண்மனையே நடுங்கி யதிர்ந்து எதி

ரொலித்தது. கடைசியில் அவன் அந்த அரண்மனையை விட்டு வெளியேறி ஓடினான்; அவன் உதவிக்கு ஆட்களை அழைத்து வரத்தான் சென்றிருக்கிறான் என்று 'நாங்கள் பயந்தோம். எனவே நாங்களும் ஓட்டமாக ஓடிக் கடற்கரையை அடைந் தோம்; அங்கே கிடந்த ஏராள மான கட்டைகளைக் கொண்டு, நாங்கள் பல கட்டுமரங்களை அவசர அவசரமாகக் கட்டி முடித்தோம். ஒவ்வொரு கட்டு மரத்திலும் மூன்றுபேர் ஏறிக் கொள்ள இடமிருந்தது.

பின்னர் அங்கேயே நாங்கள் பொழுது புலரும் வரையில் காத்திருந்தோம்; பொழுது புலர்ந்து, கீழ்த்திசையில் ஒளி பரவத் தொடங்கிய சமயத்தில், அந்தக் கண்ணிழந்த ராக்ஷஸன் ஏனைய இரண்டு ராக்ஷஸர்களின் துணையோடு கரையை நோக்கி வருவதை நாங்கள் கண்டோம். அவர்களுக்குப் பின்னால் இன் னும் ஏராளமான ராக்ஷஸர்கள் வருவதையும் கண்டோம். உடனே நாங்கள் எங்கள் கட்டு மரங்களைக்கடலில் தள்ளினோம். துடுப்புக்களுக்கெனத் தேர்ந் தெடுத்திருந்த பலகைகளைக் கொண்டு, அவற்றைக் கரைக் கப்பால் வெகு தொலைவுக்கு வலித்துக்கொண்டு சென்றோம். நாங்கள் இவ்வாறு தப்பித்துச் செல்வதைக் கண்ட அந்த ராக்ஷ ஸர்கள் பெரிய பெரிய பாறாங் கற்களைத் தூக்கி எங்கள் கட்டு மரங்களை நோக்கி எறிந்தார் கள். அவர்கள் அந்தக் கட்டு மரங்களைச் சரியாகக் குறி பார்த்து எறிந்ததால், நானும் எனது சகாக்கள் இருவரும் சென்ற கட்டுமரமொன்றைத் தவிர, ஏனைய கட்டுமரங்கள் அனைத்தும் மூழ்கி விட்டன. அதில் இருந்தவர்களும் மாண் டொழிந்தார்கள். நான் இருந்த கட்டுமரம் மட்டும் அவர்களின் தாக்குதலுக்குத் தப்பி நடுக் கடலுக்கு வந்து விட்டது; ஆயினும் நாங்கள் இரவும் பகலும் கடலின் அலைவீச்சுக்கும் கொந்தளிப்புக்கும் ஆளாகி; கடைசியில் எப்படியோ தப்பிப் பிழைத்து ஒரு விசித்திரமான தீவின் கரையில் ஒதுக்கப் பட் டோம்.

அந்தத் தீவில் நல்ல பழங்கள் இருந்தன; அத்துடன் நல்ல நீரூற்றும் இருந்தது. அந்தப் பழங்களைத் தின்று, நீரைக் குடித்து நாங்கள் பசியாறி னோம். இரவில் நாங்களெல் லோரும் கடற்கரையில் படுத் துறங்கச் சென்றோம். அப் போது திடீரென்று உஸ் ஸென்ற பேரிரைச்சல் கேட்டு நாங்கள் விழித்துக் கொண் டோம். அங்கே நான் கண்ட காட்சி! எங்களை நோக்கி மா பெறும் பாம்பொன்று உஸ் ஸென்று இரைந்து கொண்டு முன்னே வந்தது; மறுகணமே அந்தப் பாம்பு எங்களில் ஒரு வனைக் கவ்வி, அவனை உயி ரோடு விழுங்கிவிட்டு, காட்டுக் குள் புகுந்து மறைந்தது. மறு

நாள் முழுவதும் நாங்கள் கடற்கரையிலேயே நின்று, கப்பல் ஏதேனும் வருகிறதா என்று கண்கள் பூத்துப் போகும்வரை அலசி அலசிப் பார்த்தோம். ஆனால் கப்பல் எதுவும் தென்படவில்லை. இரவும் வந்தது. அன்றிரவிலும் அந்தப் பாம்பு வந்துவிடுமோ என்று மிஞ்சியிருந்த எங்கள் 'இருவருக்கும்' பயம். எனவே நாங்கள் உயரமான மரத்தின்மீது ஏறி உட்கார்ந்து கொண்டோம். இரவில் வெகுநேரம் கழித்து, மீண்டும் அந்த உஸ்ஸென்ற சப்தம் கேட்டது; அதனைத் தொடர்ந்து அந்தப் பாம்பும் வந்தது அது நாங்கள் இருந்த மரத்தின்மீது சுற்றி வளைந்து ஏறியது; நான் இருந்த கிளைக்குக் கீழேயுள்ள கிளையிலிருந்த எனது சகாவைக் கவ்விக்கொண்டு போய்விட்டது நானே தனியனாகி விட்டேன். எனவே எப்போதடா பொழுது விடியும் என்று கண்களைக் கொட்டக் கொட்ட விழித்தவாறு காத்திருந்தேன். பொழுதும் விடிந்தது. ஆனால் அகன்று விரிந்து எல்லையற்றுக் கிடக்கும் கடலைப் பார்த்தால், அங்கு கப்பல் எதுவும் வருவதாகவே தென்படவில்லை. அன்று முழுவதும் நான் எப்படியேனும் ஒரு கப்பல் வந்து விடாதா என்ற ஏக்கத்துடன் கடற்கரையிலேயே திரிந்தேன், ஆனால் கப்பல் வரக்காணோம். பொழுது போகப் போக, இரவைப் பற்றிய பயமும், அந்தப் பாம்பைப் பற்றிய பீதியும், அதே சமயம் அந்தப் பாம்பிடமிருந்து எப்படித் தப்பிப்பது என்ற எண்ணமும் எனக்கு ஏற்பட்டன. பின்னர் நான் கடற்கரையில் கிடந்த மரக் கட்டைகளைப் பொறுக்கி வந்தேன்; அத்துடன் காட்டுக் கொடிகள் பலவற்றையும் பிடுங்கி வந்தேன். அவற்றைக் கொண்டு, என்னைச் சுற்றிலும் அந்தக் கட்டைகளைக் காட்டுக் கொடிகளால் பின்னிப் பிணைத்துக் கட்டி, ஒரு கூண்டை உருவாக்கிக் கொண்டு, அதனுள் இருந்துகொண்டேன்.

பொழுதும் இருண்டது. இருட்டிச் சில நாழிகை கழிந்ததும், அந்தப் பாம்பு மீண்டும் உஸ்ஸென்று இரைந்து கொண்டு, நானிருந்த கூட்டை நோக்கி வந்தது. பின்னர் அது என்னை எப்படியும் கவ்வி விழுங்கி விடவேண்டும் என்று கூட்டைச் சுற்றிச் சுற்றி வந்தது; எனினும் அந்த நீண்ட நெருக்கமான கட்டைகள் அந்தப் பாம்புக்கு உள்ளே புக இடமளிக்கவில்லை. இருந்தும் அந்தப் பாம்பு விடியும் வரையிலும் முயற்சி செய்து பார்த்துவிட்டு. அதன்பின் தோற்றுப் போன கோபாவேசத்தோடு காட்டுக்குள் சென்று மறைந்தது. நானும் உயிர் பிழைத்தேன். பின்னர் நான் அந்தக் கூட்டின் கட்டை அவிழ்த்துக்கொண்டு வெளியே வந்தேன்; வந்தவுடனேயே கண்ணெட்டுந் தூரத்தில் ஒரு கப்பல் தென்படுவ

தைக் கண்டு மகிழ்ச்சியால் துள்ளினேன். பின்னர் நான் ஒரு பெரிய மரக்கிளையை ஒடித்தெடுத்து, அந்தக் கப்பலிலுள்ளவர்களின் கவனத்தைக் கவரும் பொருட்டு, அதனை வீசி யாட்டினேன். அதனைக் கண்ட அவர்களும் நான் அங்கு நிற்பதைக் கண்டறிந்து, எனக்கு ஒரு படகை அனுப்பி வைத்தார்கள். நானும் படகிலேறிக் கப்பலுக்குச் சென்றேன். அந்தக் கப்பலின் தலைவன் யார் தெரியுமா? நான் எனது இரண்டாவது பயணத்தின்போது கடற்கரையில் படுத்துத் தூங்கிவிட்ட காலத்தில், என்னைக் கூட்டிப் போக மறந்து, அந்தத் தீவிலே விட்டு விட்டுச் சென்றானே, அதே தலைவன்தான். என்னைக் கண்டதும் அவனுக்கு ஒரே மகிழ்ச்சி. "நீங்கள் எங்கோ திசைதவறிப்போய் இறந்து விட்டதாக அல்லவா எண்ணியிருந்தோம்! நீங்கள் உயிரோடிருப்பதை அறிந்து எனக்கு மிகுந்த மகிழ்ச்சி, இதோ உங்கள் சரக்குகள் எல்லாம் எங்கள் கப்பலில் இன்னும் பத்திரமாக இருக்கின்றன. ஒருவேளை நீங்கள் உயிர்பிழைத்து எப்போதாவது வந்து சேர்ந்தால் அவற்றை உங்களிடம் ஒப்படைக்க வேண்டும் என்றே அதனை வைத்திருந்தோம். உண்மையில் எனக்குமட்டும் ஏதோ ஒரு நம்பிக்கை நீங்கள் என்றேனும் வருவீர்களென்று!" என்று அந்தத் தலைவன் என்னிடம் கூறினான்.

பிறகு நான் அந்தக் கப்பலில் ஏறி, பற்பல துறைமுகங்களுக்கும் சென்றேன்; வியாபாரம் செய்தேன்; பொன்னும் பொருளும் பெற்றேன்; மீண்டும் பாக்தாத் நகருக்கு ஏராளமான செல்வத்தோடு திரும்பி வந்தேன். எனது மூன்றாவது கடற் பயணம் இவ்வாறுதான் முடிந்தது.

## நான்காம் பயணம்

சிந்துபாத் தமது மூன்றாவது கடற் பயணத்தைப் பற்றிக் கூறிவிட்டு, ஹிந்துபாத்துக்கு நூறு தங்க மோகராக்களை வழக்கம்போல் வழங்கினார்; பின்னர் தமது நான்காவது கடற் பயணத்தைப் பற்றிக் கேட்பதற்காக அவனை மறுநாள் வரச் சொன்னார். அவனும் மகிழ்ச்சியோடு புறப்பட்டுச் சென்றான். அவ்வாறு செல்லும்போது அவனது இதயமெல்லாம் அங்கு பொழிந்த இசை வெள்ளத்தைச் சுமந்து கொண்டிருப்பதுபோல் அவனுக்குத் தோன்றியது. மறுநாள் ஹிந்துபாத் குறித்த நேரத்துக்கு விருந்துக்கு வந்து சேர்ந்தான். அன்றைய விருந்து நடந்து முடிந்ததும் சிந்துபாத் தமது நான்காவது கடற் பயணம் பற்றிப் பின்வருமாறு கூறத் தொடங்கினார்:

எனது மூன்றாவது பயணத்துக்குப் பின்னர் நான் இனியும் பயணம் மேற்கொள்வதில்லை என்று விரதம்கூட மேற்கொண்டேன். ஆனால் அந்த விரதம்

நிலைக்கவில்லை. நான் மீண்டும் வியாபாரிகளோடு சேர்ந்து பயணத்தை மேற்கொண்டேன். இம்முறையோ நாங்கள் கடலில் வெகு தொலைவுக்குக் கூடச் செல்லவில்லை. அதற்குள் எங்கள் கப்பல் ஒரு பெரும்புயலில் சிக்கிக்கொண்டது. அந்தப் புயல் எங்கள் கப்பலையே சின்னாபின்னப் படுத்தி மூழ்கடித்து விட்டது. அதனால் பலர் மூழ்கி இறந்தார்கள். நானும் வேறு சிலரும் மட்டும் சில கட்டைகளைப் பற்றிப் பிடித்துக்கொண்டதால் மூழ்காமல் தப்பித்து, எங்கோ ஒரு கரையில் போய்ச் சேர்ந்தோம். அதுவும் ஒரு தீவு தான். அந்தத் தீவில் வசித்தவர்களோ நரமாமிச பட்சணிகள்; அந்தக் காட்டுமிராண்டிகளிடம் நாங்கள் சிக்கிக் கொண்டோம். அவர்களோ எங்களுக்கு வயிறு புடைக்க உண்பதற்கு உணவு கொடுத்தார்கள்; அத்துடன் ஏதேதோ மூலிகைகளிலிருந்து வடித் தெடுக்கப் பெற்ற ஒரு பானகத்தையும் குடிக்கத் தந்தார்கள். அந்தப் பானகத்தைக் குடித்தால், அது மனித உடம்பின் புலனுணர்ச்சிகளையே மழுக்கி, அவனைச் சுரணை யற்றவனாக்கி விடும். எனக்கு ஆரம்பத்திலேயே அந்தப் பானகத்தின் மீதுசந்தேகம். எனவே அந்தப் பானகத்தை நான் அருந்தவே யில்லை; மேலும் அவர்கள் வழங்கிய உணவையும் நான் அப்படியே முழுதும் உண்டுவிடவில்லை. என் உடலில் உயிர் ஓட்டிக் கொண்டிருக்கும் அளவுக்கு மட்டும், எவ்வளவு குறைத்துச் சாப்பிட முடியுமோ அவ்வளவே சாப்பிட்டேன். எனவே எனது உணர்ச்சிகள் மரத்துப் போகவில்லை; அத்துடன் என் உடம்பும் நாளுக்கு நாள் மெலிந்து கொண்டும் வந்தது. ஆனால் மற்றவர்களோ கிடைத்ததையெல்லாம் உண்டார்கள்; அதனால் கொழுத்துத் தடித்தார்கள் இவ்வாறு கொழுத்துத் தடித்தவர்களை யெல்லாம் அந்தக் காட்டுமிராண்டிகள் நாளைக்கு ஒருவராகக் கொன்று, அவர்களைத் தின்று வந்தார்கள். ஆனால் மிகவும் மெலிந்து எலும்பும் தோலுமாய் இருந்ததால், அவர்கள் என்னைத் தின்பதற்குத் தேர்ந்தெடுக்க வில்லை. மற்றவர்கள் அனைவரையும் தின்று தீர்த்த பின்பு நான் ஒருவன் மட்டுமே மிஞ்சி யிருந்தேன். ஆனால் நான் மிகவும் நோஞ்சானாகஇருந்ததால்,என்றாவது ஒருநாள் நான் கொழுத்துத் தடிப்பேன் என்ற நம்பிக்கையில் அவர்கள் என்னை அங்கு சுதந்திரமாக நடமாடித் திரிய அனுமதித்து விட்டார்கள்.

இவ்வாறு நான் சுதந்திரமாக அலைந்து திரியும் காலத்தில் ஒரு நாள் கடற்கரைப் பக்கம் சென்றேன். அங்கே சில வெள்ளை மனிதர்கள் மிளகைச் சேகரித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் தமதுகப்பலில் புறப்பட்டுச் செல்லும் போது, என்னையும் அவர்களோடு அழைத்துச்

சென்று, அவர்களது மன்னரின் முன் கொண்டு நிறுத்தினார்கள். அந்த மன்னர் எனது வாழ்க்கை வரலாற்றையும் நான் பெற்ற அனுபவங்களையும் என்னிடமிருந்து கேட்டு மகிழ்ந்தார்; அதனால் எனக்கு எல்லாவிதமான வசதிகளையும் செய்து கொடுத்தார். அந்தத்தீவிலுள்ள மக்கள் குதிரைக்குக் கடிவாளமோ சேணமோ இன்றிக் குதிரைச் சவாரி செய்து வந்தார்கள். இதனைக் கண்ட நான் குதிரைக்குப் பயன்படும் சேணம், கடிவாளம் ஆகியவற்றைச் செய்து, அவற்றை மன்னரிடம் எடுத்துச் சென்றேன். அவர் அந்தச் சேணத்தையும் கடிவாளத்தையும் தமக்குப் பிரியமான ஜாதிக் குதிரைமீது பூட்டச் சொன்னார் பூட்டிய பின்னர் அவரே அதில் ஏறிச் சவாரி செய்து பார்த்தார். அதன்பின் மன்னருக்கு அவற்றின் உபயோகம் நன்கு புரிந்து விட்டது; அவர்மிகுந்த மகிழ்ச்சியடைந்தார். மேலும் அவரது பரிவாரங்களின் குதிரைகள் அனைத்துக்கும் தேவையான சேணம், கடிவாளம் ஆகியவற்றைத் தயாரிக்குமாறுஎன்னிடம் சொன்னார். அவற்றையும் நான் செய்து கொடுத்தேன். அதன் பின்னர் மன்னர் என்னை நோக்கி,'' சிந்துபாத்! நீ எனக்கு இன்னும் ஒரு காரியம் செய்ய வேண்டும்'' என்று சொன்னார். என்ன காரியம் என்று கேட்டேன். அவ்ரோ, ''நான்உனக்கு அளிக்க விரும்பும் பணக்காரப் பெண்ணை நீ மணந்து கொள்ள வேண்டும்?'' என்றார்!

எனக்கும் எனது தாய்நாட்டுக்குத் திரும்பி வந்து சேர்வோம் என்ற நம்பிக்கை யில்லை. எனவே அந்தத் திருமணத்துக்கு நானும் சம்மதித்தேன். ஆனால் அந்த நாட்டில் ஒரு விசித்திரமான பழக்கம்உண்டு. அதாவது ஒருவனின் மனைவி இறந்து விட்டால், அவளது கணவனையும் அவளோடு சேர்த்து உயிரோடு புதைத்து விடுவார்கள். இந்த வழக்கத்தைப் பற்றி நான் திருமணத்துக்குப் பின்னரே தெரிய வந்தேன்; திடுக்கிட்டேன். இதனால் என் மனைவிக்கு நோய் நொடி எதுவும் வந்து விடாமல் மிகவும் கவனமாகப் பார்த்து வந்தேன். இருந்தாலும் விதி யாரை விட்டது? அவள் எப்படியோ நோய் வாய்ப்பட்டுச் சீக்கிரமே இறந்து போனாள். அவர்கள் இறந்தவர்களை ஒரு குகையில்தான் புதைப்பது வழக்கம்; அந்தக் குகைக்குள் பிணத்தை வைத்து வெளிப்புறத்தை மூடி விடுவார்கள். அதே போல் அவர்கள் என் மனைவியின் பிணத்தையும் அங்கே கொண்டு போய்க் கிடத்தினார்கள். என்னையும் அவர்கள் வழக்கப்படி உள்ளே விட்டு, குகை வாயிலை மூடி விட்டார்கள். எனினும் அவர்கள் என்னிடம் ஏழு ரொட்டிகளையும் ஒரு ஜாடித் தண்ணீரையும் தந்திருந்தார்கள். நான் அந்தக் குகைச் சிறையில் அடைபட்டு,என்னிட

மிருந்த ரொட்டியையும்தண்ணீரையும் அருந்தி உயிர் வாழ்ந்து வந்தேன். அவையும் தீர்ந்து போகக் கூடிய பருவத்தில், அங்கே ஏதோ ஒரு பிராணி நடமாடுவது போன்ற சப்தத்தை உணர்ந்தேன். அந்தச் சப்தத்தைத் தொடர்ந்து நான் சென்ற போது, அந்தப் பிராணி என்னைக் கண்டு ஓடியது. நானும் அதனைத் தொடர்ந்து குகைக்குள் ஓடினேன். கடைசியில் அந்த இருண்ட குகைக்குள் மேல் முகட்டிலிருந்து ஓரிடத்தில் ஒளி வருவதைக் கண்டேன். அதனை ஏறிட்டுப் பார்த்த போது, அது அந்தக் குகைக்கு வெளியிலுள்ள உலகை, அதற்குச் செல்லும் வழியைக் காட்டுகிறது என்பதை நான் கண்டுகொண்டேன். அதன் வழியாக நான் வெளியேறித் தப்பிவிடமுடியும் என்ற நம்பிக்கையும் எனக்குப் பிறந்தது.

இதன் பின்னர் நான் அந்தக் குகையில் இறந்தவர்களோடு சேர்த்துப் புதைக்கப்படும் தங்கமும், வெள்ளியும், நவரத்தினங்களும் ஆங்காங்கே ஏராளமாகச் சிதறிக் கிடப்பதைக் கண்டேன். அவற்றை ஒரு கோணிப் பை நிறைய அள்ளிக் கட்டிக் கொண்டு, நான் குகையின் முகட்டில் தெரிந்த ஓட்டை வழியாக மேலேறிக் குகையை விட்டு வெளியே வந்தேன்; பின்னர் எவர் கண்ணிலும் படாமல் கடற்கரைக்கு வந்து சேர்ந்தேன். அங்கே ஒரு கப்பல் கரைக்கு மிகவும் சமீபமாகத் தென்பட்டது. உடனே என் தலைப்பாகையை எடுத்து ஆட்டி அந்தக் கப்பலிலுள்ளவர்களின் கவனத்தை இழுத்தேன். பின்னர் அந்தக் கப்பலில் ஏறி, ஏதோ ஒரு பெரிய துறைமுகத்துக்கு வந்து சேர்ந்தேன்; அங்கிருந்து பாக்தாத் நகரத்துக்கும் அந்தச்செல்வத்தோடு விரைவில் திரும்பி வந்துவிட்டேன். எனது நான்காவது கடற் பயணம் இப்படித்தான் முடிந்தது.

## ஐந்தாம் பயணம்

தமது நான்காவது கடற் பயணத்தைப் பற்றிக் கூறிமுடித்த சிந்துபாத் வழக்கம்போல் ஹிந்துபாத்துக்கு மேலும் நூறு மோகராக்களைப் பரிசளித்தார்; மறுநாளும் அவனை வரச் சொன்னார். மறுநாள் ஹிந்துபாத் குறிப்பிட்ட நேரத்தில் அங்கு போய்ச் சேர்ந்தான். அன்று அவன் சிந்துபாத்துக்கு அருகிலுள்ள ஆசனத்தில் அமர்ந்து, அந்த ஆடம்பரமான விருந்தில் பங்குகொண்டான். எல்லோரும் வயிறுர உண்டு களித்த பின்னர், சிந்துபாத் தமது ஐந்தாவது கடற் பயணம் பற்றிய விபரத்தைப் பின் வருமாறு கூறத் தொடங்கினார் :

இவ்வளவு வயதாகியும், கடற் பயணங்களால் எவ்வளவோ ஆபத்துக்களுக்கு ஆளாகியும் கூட, கடற் பயணத்தை மேற்கொள்ளும் என் தாகமும் வேக

மும் குறையக் காணேம். எனவே நான் மீண்டும் வியாபாரிகளோடு சேர்ந்து பயணப்பட்டுச் சென்றேன். இவ்வாறு செல்லும் போது ஒரு நாள் நாங்கள் மனித சஞ்சாரமற்ற ஒரு தீவில் இறங்கிஞேம்; அங்கே மற்றவர்களெல்லாம் ஓர் அதிசயமான பெரும் குழவிக் கல்லைக் கண்டு வியப்புற்ருர்கள்: ஆனுல் நான் வியப்படையவில்லை. நான் ஏற்கெனவே முன்னர் பார்த்துள்ள ராக்ஷஸப் பறவையின் முட்டைதான் அது. அந்த முட்டை கிட்டத்தட்டப் பொரித்துக் குஞ்சை வெளிப்படுத்தும் நிலையில் இருந்தது. எனவே நான் அந்த முட்டையினருகில் செல்ல வேண்டாமென்று எனது சகாக்களை எச்சரித்தேன். ஆனுல் அவர்களோ அந்த முட்டையை உடைத்துப்பார்க்கத் தொடங்கி விட்டார்கள். இந்தச் சமயத்தில் திடீரென்று ஆணும் பெண்ணுமான இரண்டு ராக்ஷஸப் பறவைகள் தமது பெரிய இறக்கைகளை வீசியாட்டிக் கொண்டு வேகமாகப் பறந்து வருவதை நாங்கள்கண்டோம். அவற்றைக் கண்டதும் நாங்கள் எல்லோரும் ஓட்டமாக ஓடி, எங்கள் கப்பலில் ஏறிஞேம்; பாய் மரங்களை விரித்துக் கடலில் புறப்பட்டுச் செல்ல முனைந்து விட்டோம். ஆனுல் அந்த ராக்ஷஸப் பறவைகளில் தாய்ப் பறவை தனது கால் நகங்களால் பெரிய பெரிய கற்களைத் தூக்கிக் கொண்டு வந்து, எங்கள் கப்பலுக்குமேல் வெகு உயரத்திலிருந்து, அவற்றைக் கப்பலுக்குள் போட்டது. அதனுல் எங்கள் கப்பல் உடைந்து பிளந்து மூழ்கத் தொடங்கியது. அந்த விபத்தில் என்னைத் தவிர, மற்றெல்லோருமே மூழ்கி இறந்து விட்டார்கள்.

நான் மட்டும் உடைந்து சிதறிய கப்பலின் கட்டையொன்றைப் பற்றிப் பிடித்து, எப்படியோ உயிர் தப்பிக் கரை சேர்ந்தேன். நான் கரை சேர்ந்த இடத்தில் அழகிய தோட்டங்களும், மலர்ச் செடிகளும், கனி மரங்களும் மலிந்திருந்தன; அத்துடன் அங்கு குளிர்ந்த தெள்ளிய நீரோடைகளும் பல இருந்தன. அத்தகைய நீரோடையின் கரையொன்றில் பற்றி மெலிந்த கிழவனெருவன் அமர்ந்திருப்பதை நான் கண்டேன். அந்தக் கிழவன் கையைக் காட்டி, என்னைத் தன் பக்கம் அழைத்தான். பின்னர் அவனை முதுகிலே தூக்கிக் கொண்டு, அந்த நீரோடையைத் தாண்டி அக்கரை சேர்க்க வேண்டும் என்றும் சைகையின்மூலம் தெரிவித்தான். அவனது பரிதாபகரமான நிலையைக் கண்டு இரக்கமுற்ற நான், அந்தக் கிழவனை என் தோள்களின் மீது ஏற்றிக் கொண்டேன். ஆனுல் அவ்வாறு நான் ஏற்றியதுமே, அந்தக் கிழவன் தன் கால்கள் இரண்டையும் பின்னிப் பிணைத்து அவற்ருல் என் கழுத்தை நெரித்தான். அதனுல் நான்

மூச்சு முட்டி மயங்கிக் கீழே விழுந்து விட்டேன். நான் மயக்கம் தெளிந்து எழுந்த போதும், அந்தக் கிழவன் கழுத்தைப் பின்னிய கால்களை நெகிழச் செய்யக் காணேம்; அது மட்டுமல்லாமல், அவன் தனது காலால் என் விலாவில் உதைத்தான்; அதனுல் நான் மிகவும் சிரமப்பட்டு எழுந்து, அவனைத் தூக்கிக் கொண்டு நடக்கலானேன். ஆனுல் அந்தக் கிழவனே என்னை விட்டு இறங்குவதாக இல்லை. இப்படியே பல நாட்கள் கழிந்தன. நான் எங்கெங்கோ நடந்தேன்; அந்தக் கிழவனே என்னை ஓய விடாமல் விலாவில் உதைத்து என்னை முடுக்கிக் கொண்டேயிருந்தான். மேலும் என் முதுகில் இருந்தவாறே அவன் கனிவர்க்கங்களைப் பறித்துத் தின்ருன். இரவில் தூங்கும் போதும் கூட அவன் கால்களைக் கழற்ற வில்லை. எனவே நான் அவனைச் சுமந்து கொண்டே, எனக்கு வேண்டிய பழங்களை உணவாகப் பறித்துத் தின்ன நேர்ந்தது. ஆனுல் எவ்வளவு நாட்கள்தான் என்றுல் அவனைத் தூக்கிச் சுமக்க முடியும்? இறுதியில் நான் களைப்பால் மிகவும் அயர்ந்து போய் விட்டேன். இந்தச் சமயத்தில் நான் அங்கொரு பெரிய சுரைக்காய் காய்த்துத் தொங்குவதைக் கண்டேன்; அதனைப் பறித்து, அதன் உட்புறத்தைக் குடைந்தெடுத்து விட்டு, அதனை ஒரு குடுவையாக்கினேன்; பின்னர் அந்தக் குடுவைக்குள் திராக்ஷைப் பழங்களைப் பிழிந்து, அவற்றின் சாற்றை ஊற்றி நிரப்பினேன்; அதன்பின் அந்தக் குடுவையைக் குளிர்ச்சியானதோர் இடத்தில் புதைத்து, அதனைப் புளித்து நுரைக்க வைத்தேன்,

சில நாட்கள் கழித்து, அதே வழியாக நான் அந்தக் கிழவனைச் சுமந்து கொண்டு திரும்பி வரும் போது, அந்தக் குடுவையிலுள்ள திராக்ஷை ரசம் போதை வெறியூட்டும் வேகம் மிகுந்த மதுவாக மாறிவிட்டதைக் கண்டேன். உடனே நான் அந்த மதுவைச் சிறிது அருந்தி விட்டு, ஆடிப் பாடத் தொடங்கினேன். இதனைக் கண்டதும், அந்தக் கிழவனும் அந்த மதுவில் தனக்கும் கொஞ்சம் தருமாறு சைகை காட்டினுன். நானே அந்தக் குடுவையையே அவன் கையில் கொடுத்து விட்டேன்; அந்தக் கிழவன் அதிலிருந்த மதுவையெல்லாம் சொட்டு விடாமல் குடித்துத் தீர்த்து விட்டான். அவ்வளவு மதுவும் அவனது வயிற்றுக்குள் போனதும் அவன் சுயநினைவை இழக்கத் தொடங்கினுன்; என் கழுத்தைப் பிணைத்திருந்த அவனது கால்களும் தளரத் தொடங்கின; சிறிது நேரத்தில் அவன் நினைவிழந்து என் முதுகிலிருந்து கீழே விழுந்து விட்டான். உடனே நான் ஒரு பெரிய பாறுங்கல்லைத் தூக்கி அவன் மீது போட்டு, அவனைக் கொன்று தீர்த்தேன். இதன் பின் நான் கடற்கரைக்கு ஓடி

வந்தேன். அங்கு ஒரு கப்பல் தண்ணீர் பிடிப்பதற்காகக் கரைக்கு வந்திருந்தது. நான் அந்தக் கப்பலில் ஏறினேன். அவர்களிடம் நான் நடந்தவற்றையெல்லாம் கூறினேன். அந்தக் கப்பலில் இருந்த மாலுமிகளோ நான் தப்பிர்துவந்ததைக் கண்டு பெரிதும் வியப்புற்றார்கள். "அந்தக் கடற் கிழவனிடமிருந்து தப்பித்து வந்த ஒரே நபர் நீங்கள்தான். அவன் இப்படியே பல பேரின்மீது சவாரி செய்து அவர்களைக் கொன்று தள்ளியிருக்கிறான்" என்று கூறினார்கள்.

அதன்பின் அந்தக் கப்பல் வேறொரு தீவுக்குச் சென்றது. அந்தத் தீவில் ஏராளமான தென்னை மரங்கள் இருந்தன. அவர்கள் அவற்றிலிருந்து பல தேங்காய்களைப் பறித்துச் சேகரித்தார்கள். நானும் கொஞ்சம் தேங்காய்களைப் பறித்துக் கொண்டேன். பின்னர் அந்தக் கப்பலிலேயே சென்று, தேங்காய்களையே முதலாகக்கொண்டு வாணிபம் செய்து, வேறு பல பொருள்களையும் சம்பாதித்துக் கொண்டு, மீண்டும் பாக்தாத் நகரத்துக்குத் திரும்பி வந்தேன். பின்னர் நான் சம்பாதித்துக் கொண்டு வந்த செல்வத்தால் ஏழை யெளியவர்களுக்குத் தானதருமம் செய்தேன். எனது களஞ்சியங்களிலும் அரிய பல பொருள்களைச் சேர்த்து வைத்தேன்; கடந்த காலத்தில் அனுபவித்த கஷ்டங்களையும் நஷ்டங்களையும் மறந்து நிம்மதியாக வாழத் தொடங்கினேன். இது தான் நான் ஐந்தாம் முறையாகக் கடற்பயணம் செய்து வந்த கதை.

## முடிவுரை

சிந்துபாத் இவ்வாறு தமது கடற் பயணங்களைப் பற்றிய கதைகளைக் கூறி முடித்து விட்டு, மாலை விருந்துக்கு உத்தரவிட்டார். விருந்தில் எல்லோரும் உண்டு களித்த பின்னர் அவர் ஹிந்துபாத்துக்கு வழக்கம் போல் நூறு மோகராக்களை இனாமாக வழங்கினார்; மேலும் அவனுக்கு வேறு பல பரிசுகளையும் வழங்கினார். ஹிந்துபாதும் தான் கேட்ட வரலாற்றை யெல்லாம் எண்ணி வியந்தவனாய் வீடு திரும்பினான். அன்று முதல் ஹிந்துபாத்தும் சிந்துபாத்தும் தமது வாழ்நாள் முழுவதும் நெருங்கிய நண்பர்களாக வாழ்ந்து மகிழ்ந்தார்கள்.



ஆசிரியரும், வெளியிடுபவரும்: கண. இராமநாதன்,
66, பெரியதெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5. தொலைபேசி 84989
அச்சிட்டோர்: ஐடியல் பிரிண்டர்ஸ், 97, பிராட்வே, சென்னை-1.

# வரலாற்று நூற்கள்

பெரியோர்களின் வரலாற்றைப் படிப்பதால் வருங்கால இளைஞர்களின் வாழ்வு இளம் நிறைந்ததாக அமைவது திண்ணம். முன்னோர்களின் வாழ்வும், வார்த்தைகளும் பின்னவர்கள் தொடர்ந்து செல்லுதற்குரிய நெறியை உணர்த்துவதாகும்.

## மகாத்மாவின் கதை

இந்திய நாட்டின் தவப்புதல்வர்களுள் தலையாய பெருமையை உடையவர். தெய்வத்தின் அவதாரம் என்று சிறப்பித்துப் பேசப்படுபவர். சிறந்த சான்றோர். அவருடைய வரலாற்றை விவரிக்கும் நூல் இது.

## நேருவின் கதை

மகாத்மாவின் வாரிசு என்று மகாத்மாவின் வாயாலேயே அழைக்கப்பட்ட அருந்தவப் புதல்வர். அகில உலகும் ஒருமுகமாகப் புகழ்ந்து பேசும் பெற்றிமை கொண்ட அரசியல் ஜோதி. அவருடைய வரலாற்றை விவரிக்கின்றது இந் நூல்.

## காமராஜரின் கதை

நேருஜின் வாரிசு என்று நீணிலத்தார் போற்றிப் பேசிவரும் பெருமையைப் பெற்றவர். நாட்டு நலமே தன்னலம் எனக் கொண்டு அல்லும் பகலும் நாட்டுக்கே பாடுபட்டுவரும் பெருமகன். அவருடைய வரலாறு இந் நூல்.

**ஒவ்வொரு புத்தகமும் விலை ரூபாய் ஒன்றுதான்**




த. பெ. எண் 423 போன்: 84989

ஸ்டார் பிரசுரம்

66, பெரிய தெரு,

திருவல்லிக்கேணி :: சென்னை-5.



மார்ச், 1965 மலர் 3 – இதழ் 12

# நாடு வளரப் பாடுபடும் நல்லார்

மனிதன் ஒரு சமூகப் பிராணி. எந்த மனிதனும் தனித்து வாழ முடியாது. இன உணர்வும், சமூக உணர்வும், நாட்டு உணர்வும் கொண்ட மனிதர்களால்தான் நாடு செழிப்புற்று விளங்கும். தான்மட்டும் வாழ வேண்டும் என்று எண்ணுமல் தம்மவர்கள் வாழ வேண்டும் என்று எண்ணுபவன் எடுத்துக் காட்டாக விளங்கும் தகுதி உடையவனுவான்.

உலகம் இன்பம் எய்திருலொழிய தனிப்பட்டவனின் இன்பம் தழைத்தோங்க முடியாது. பொதுநலப் பணிக்குத் தன்னை அர்ப்பணித்து விட்டவர்கள் எங்கெங்கு வாழ்கின்ருர் களோ அங்கெல்லாம் இன்பவெள்ளம் பாய்ந்தோடுவது உறுதி.

தான், தான் என்றும் தனக்குத் தனக்கு என்றும் எண்ணி பொருளையும் உணவையும் ஒளித்து வாழும் மக்களால் ஒழுக்கம் கெடுவதோடு உண்மையான ஆக்கங்களும் அழிந்துபடுவது திண்ணம். ஊரான் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும் என்று நாட்டுப்புற மக்கள் கூறுவதின் உண்மை என்னவென்ருல், தன்னலம் பேணுமல் பிறர்நலம் காண வேண்டும் எண்பதுதான்.

எவன் உள்ளத்தில் ஊக்கமும் உழைப்பும் உறுதியும் உண்மையும் ஊற்றமும் வறண்டு பசையற்று இருக்கிறதோ, அவன் மனிதனுக வாழமாட்டான்-என்பது உறுதி.

திரு. கக்கன் அவர்கள் அயராத உழைப்பும், அசையாத உறுதியும், அறிவுக் கூர்மையும், அனுபவமும் நிறைந்தவர்.

நாட்டு நலமே தன்னலம் எனக் கொண்டு நாள்தோறும் பணிபுரிந்து வரும் திரு. கக்கன் அவர்கள் பன்னெடு நாள் வாழ்ந்து பலர் போற்றும் புகழ் பெற்றுச் சிறக்க எல்லாம் வல்ல இறையருளை இறைஞ்சுகின்ருேம்.

# உழுதலும்
# அதன் நவீன கருத்துக்களும்

எஸ். குழந்தைசாமி, எம். எஸ்ஸி. (விவ.),
எஸ். ராஜரத்தினம், பி. எஸ்ஸி. (விவ.),
பயிரியல் பிரிவு, விவசாயக் கல்லூரி, கோயமுத்தூர்-3.

''ஏரினும் நன்ரும் எருவிடுதல் நட்டபின்
நீரினும் நன்றதன் காப்பு''

என வள்ளுவப் பெருந்தகையார் கூறிப்போந்தார். உழவின் பெருமையையும் அதன் முக்கியத்துவத்தையும் உணராத விவசாயப் பெருங்குடி மக்கள் யாருமிலர். உழவின் அவசியத்தையும், அதன் நோக்கத்தையும் கீழ்க் கண்ட காரணங்களால் நன்கு அறியலாம்:—

(1) களைகளைக் களைந்தெறியவும், மீண்டும் வராமல் தடுக்கவும்

(2, விதைக்கும் விதை நன்கு முளைப்பதற்கும் மீண்டும் அது நன்கு செழித்து வளர்ந்தோங்கவும் வசதியளித்தலும்;

(3) உழவு செய்யும் பகுதியில் கெட்டியாக உள்ள பாகங்களில் மண்ணை உடைத்துவிடுதலும், அதன்காரணமாக நிலத்தில் வடிகால் வசதியையும் காற்ருேட்டத்தையும் உண்டாக்கித் தருதலும்;

(4) பெய்த மழை நீரை உறிஞ்சி வைத்துக்கொள்ள ஏதுவாக்குதலும், இட்ட உரத்தை நன்கு கலக்கச் செய்தலும், மற்றும்,

(5) இட்ட உரத்தை பயிர்களுக்கு வேண்டிய உணவாக்கித் தரும் நுண்கிருமிகள் வாழ்வதற்கான நிலைமையை உண்டாக்கித் தருதலு மாகும்.

உழவுசெய்தல் முறை எல்லா இடங்களிலும் எல்லாப் பயிர்களுக்கும் ஒரே மாதிரி அமைவதில்லை. உதாரணமாக மானுவாரிப் பிரதேசங்களில் கோடையிலோ, விதைக்கு முன்போ ஓரிருமுறை உழவுசெய்து சாகுபடி செய்வதைக் காண்கிருேம். நஞ்சை நிலத்தில் நீர்பாய்ச்சி உழுது சாகுபடி செய்வதைப் பார்க்கிருேம். தோட்டக்காலிலும், மலைப்பிரதேசங்களிலும், பயிரிடுமுன் உழுதோ அல்லது கொத்திவிட்டோ சாகுபடி செய்தலைக் காண்கிருேம். ஆகவே, உழும்முறை பயிரிடும் பிரதேசத்தையும் சாகுபடி செய்யும் பயிரையும் பொறுத்து மாறுபடுகிறது. ஆங்காங்கு உபயோகிக்கும் உழவுக்கருவிகளிலும் மாறுதலைக் காண்கிருேம்.

### 1. உழுதல் தேவைதானு?

கோவில்பட்டி, கோயமுத்தூர், ஹகரி (ஆந்திர) ஆகிய இடங்களில் உழுத பகுதியைஉழவிடாத பகுதியோடு ஒப்பிட்டுப்பார்த்த போது வித்தியாசம் ஏதும் தென்படவில்லை. ஆனல் இதில் கவனிக்கத்தக்கது யாதெனில் களைகளைக் களைந்தெரியவும்,விதைத்த விதை நன்கு முளைத்து வளர்

வதற்கு வேண்டிய நிலையை உண்டாக்குவதைத் தவிர உழவினால் இதர உபயோகமில்லை. ஆகவே, நிலத்தில் களைகளில்லாமலிருப்பின் விதை விதைக்கத் தேவையான உழவே போதும்.

## 2. இரும்புக் கலப்பை உழவினால் பயனுண்டா?

இரும்புக் கலப்பையிட்டு உழுவதனால் சாகுபடி செய்யப்படவிருக்கும் நிலத்தில் மண் புரட்டிக் கொடுக்கப்படுகிறது. தொடர்ந்து முளைத்துவரும் அருகு, கோரை முதலான புற்களின் தண்டுகளும் வேர்களும் வெட்டப்படுகின்றன. இரும்புக் கலப்பையிட்டு உழுவதனால், அதிக பலனுண்டா என்ற ஆராய்ச்சி பல இடங்களிலும் நடத்தப்பட்டதில் ஆழமான சத்து நிறைந்த மண் பிரதேசங்களிலெல்லாம் நல்ல பலனைக் கொடுத்திருக்கிறது. ஆகவே, இரும்புக் கலப்பையின் உபயோகம் சத்துள்ள மண் நிறைந்த பிரதேசத்திலும் கோரை, அருகு போன்றவற்றை எளிதாக நீக்கவும் பயனுள்ளதாகவிருக்கிறது. மண் ஆழமற்ற பகுதியிலும், சத்துக்குறைவான பூமியிலும் உபயோகிக்குங்கால் கீழுள்ள தரமற்ற மண்ணும், கற்களும் மேலே வந்து தீங்கிழைக்க ஏதுவாகிறது. ஆனால் களைகளைத் தகர்க்க அது போன்ற அற்புதக் கருவி வேறில்லை!

டிராக்டர் உழவு மக்கள் மனதைக் கவர்ந்திருப்பது நமக்கு நன்கு தெரியும். புதிதாக ஓரிடத்தைச் சாகுபடிக்குக் கொண்டு வரும்போதும், சாகுபடி செய்யுமிடம் மிகவும் கெட்டித் தன்மையாயிருப்பின் அதை இளமாக்கவும் மற்றும் தேவையான அளவு ஆழத்திற்கு அதிக விஸ்தீரணமுள்ள நிலத்தை குறைந்த நேரத்தில் உழுது சாகுபடி செய்வதற்கும் டிராக்டர் பெரிதும் பயன்படுகிறது. டிராக்டர் உழவு செய்யுங்கால் சாகுபடி செய்யப்படவிருக்கும் மண்ணின் தரம், ஆழம், இவற்றை நன்குணர்ந்து செய்தல் வேண்டும். ஆழமாக உழும்போது கீழுள்ள தரமற்றதும் கற்கள் நிறைந்ததுமான மண் மேலே கொண்டுவரப்படாமல் பார்த்துக் கொள்ளுதல் மிக அவசியம்.

## 3. எப்போது உழவேண்டும்?

பயிரிடுமுன்பே உழவேண்டுமா அல்லது பயிரிடும்போது உழுதல் போதுமா என்பது பிரச்னை. இதனுடைய அநுகூலத்தையறிய கோவில்பட்டி, ஆடுதுறை மற்றும் ஆந்திரப் பிரதேசத்தில் சில இடங்களில் சோதனை செய்து பார்த்ததில் மானாவாரி நிலத்திலும் தோட்டக்கால் பிரதேசத்திலும் பயிரிடுமுன் உழுவதற்கும், பயிரிடும்போது உழுவதற்கும் வித்தியாசம் ஏதும் காணப்படவில்லை. ஆனால், களைகளின் தொல்லையை ஒழிக்க மானாவாரி மற்றும் தோட்டக்கால் பிரதேசங்களில் கோடையுழவு மிகவும் பயன்படும். நஞ்சை நிலத்தைக் கோடையில் அல்லது பயிரிடுமுன் உழுவதால் தீமையேயொழிய நன்மையேதுமில்லை. அதன் காரணமாக சுமார் 16 சதவிகிதம் விளைச்சல் குறைகிறது என்று ஆடுதுறை, சாமல்கோட்டை முதலான இடங்களில் நடத்திய சோதனையிலிருந்து தெரியவருகிறது. ஆகவே, களைகளில்லாமலிருப்பின் மானாவாரி, தோட்டக்கால் நிலங்களிலும் நஞ்சை நிலத்திலும் சாகுபடி செய்யும்போது உழுது 'பயிர்' செய்தலே போதுமானது.

## 4. எத்தனை தடவை உழவேண்டும்?

நிலத்தை விதைக்குமுன் எத்தனை தடவை உழவேண்டுமென்

பது அந்த நிலத்தின் தன்மையை யும் நாம் பயிரிடப்போகும் பயிரை யும் பொருத்ததாகும். ஆகவே இத்தனை உழவு இந்த நிலத்தில் இந்தப் பயிருக்கு என்று எளிதில் அறுதியிட்டுக் கூறுதல் இயலாது. எனினும் விதை நன்கு முளைத்து மேலோங்கி வளருவதற்கான வழி செய்தல் அவசியமாகும். இது பற்றிய சோதனைகள் கோயமுத்தூர், கோவில்பட்டி, ஆடுதுறை மற்றும் இந்தியாவில் பல விவசாய ஆராய்ச்சி நிலையங்களிலும் நடத்தப்பட்டன. இந்த சோதனை களில் எட்டுத் தடவை உழுததற்கும், நான்குதடவை உழுததற்கும் வித்தியாசம் தட்டுப்பட வில்லை. ஆகவே, நிலத்தில் விதை விதைத்தால் நன்கு செழித்து வளர்ச்சி பெறுவதற்கு உண்டான நிலைமையை உண் டாக்கும் அளவிற்கே உழவு செய்யவேண்டும். அடுத்து மனத்தில் கொள்ளவேண்டியது நிலத்தைப் பக்குவமான சமயத்தில் அதாவது தக்க அளவு ஈரப்பசை யுள்ள சமயம் உழுவது முக்கியம்.

## 5. எவ்வளவு ஆழம் உழவேண்டும் ?

சாதாரணமாக எல்லாப் பயிர்களும் உழவு செய்யும்போது சுமார் 6 அங்குலம் முதல் 8 அங்குலத்திற்குமேல் ஆழமாகச் செய்வதில்லை. எவ்வளவு ஆழம் உழ வேண்டுமென்பது அந்த நிலத்தின் தன்மையையும், விதைக்கும் பயிரையும் பொருத்ததாகும். கிழங்கு வகையறப் பயிர்களும் நிலத்தைப் பொலபொலப்பாக்கித் தர கொஞ்சம் ஆழமாகவேஉழுது விடுவது அவசியம். ஆனால் கம்பு, சோளம் போன்ற பயிர் களின் வேர்கள் ஆழமாக செல்வதில்லையாகையால் இவைகளுக்கு அதிக ஆழம் உழத்தேவையில்லை.

மழை குறைவான பிராந்தியங்களில் சற்று ஆழமாக உழவு செய்வதனால் மழை நீரை கிரகித்து வைத்துக்கொள்ளும் தன்மை அதிகரிக்கிறது. ஆனால் அதே சமயத்தில் அதிக ஆழமாக உழவு செய்யும்போது மண்புரட்சியின் காரணமாக கீழேயுள்ள தரமற்ற மண்மேலே கொண்டுவரப்பட்டு, அதன் காரணமாக விளைவுக்குத் தீமை நேரலாம். இதுவரை செய்யப்பட்ட சோதனைகளிலிருந்து ஆழமாக உழவு செய்வதனால் ஏதும் அதிகப்படியான அநுகூலமில்லை என்றே தெரிய வருகிறது. ஆனால் தொடர்ந்து வளர்ந்துவரும் கோரை, அருகு முதலான களையை வேரறுக்கவும் சாகுபடி பூமியில் சற்று ஆழத்தில் அடிமண் இறுகி கெட்டியாகியிருந்தால் அதை நீக்கி நிலத்தில் பொலபொலப்புத் தன்மையையும் நீரை கிரகித்தலுடன் நல்ல வடிகால் வசதியையும் உண்டாக்கித் தர உதவியாயிருக்கும். ஆகவே இத்தகைய காரியங்களுக்குத் தவிர சாதாரணமாக அதிகஆழம் உழுவதால் செலவுஅதிகரிக்குமே தவிர அதிக அநுகூலத்தைக் காணமுடியாது என்பதை நாம் உணரவேண்டும்.

ஆகவே, உழவிடுதலின் பேரிலான நவீன கருத்துக்கள் யாதெனில்—

*களைகளை அகற்றி விதை முளைத்து வளரப் போதுமான வசதியை அளிப்பதும்,

*சத்துள்ள மண்ணுயிருப்பின் அதைப் புரட்டி விடுதலும்,

*பலதடவை உழுவதனால் அதிக பலனில்லையென்பதும்,

*தக்க அளவு ஈரப்பசையுள்ள சமயத்தில் உழவேண்டு மென் பதும்,

*அதிக ஆழமாக வுழச் செய்வதில் ஏதும் அநுகூலமில்லை என் பதுமே யாகும்.

—நன்றி மேழிச் செல்வம்

விஞ்ஞானம் வெகுவாக முன்னேறி வரு கிறது. உடலில் உள்ள எல்லா வியாதி களையும் குணப்படுத்தும் அளவுக்கு மருத் துவம் வளர்ச்சி அடைந்து வரும்போது, சோவியத் நாட்டில் மனித உறுப்புக் களுக்கு மாற்று உறுப்புக்கள் கண்டு பிடிக்கும் அளவுக்கு விஞ்ஞானிகள் முன் னேற்றப் பாதைகளை வகுத்து வரு கின்றனர்.

# இருதயத்தின் பாதுகாப்பு

பேராசிரியர் அலெக்ஸாண்டர் கொலெஸ்னிகோவ்

மருத்துவம், இரண சிகிச்சை, இவற்றிற்கும், தத்வார்த்த விஞ் ஞானத்திற்கும் இடையே இன்று ஒரு நெருங்கிய தொடர்பு ஏற்பட் டுள்ளது. மனித அங்கத்தின் திசு அமைவு சாதனங்கள், இருதய நோய்களின் தோற்றமும், வளர்ச்சியும், மருத்துவச்சாலை மரணத்திற்குப்பின் ஏற்படும் புத் துயிர்ப்பு, குறைவான தேக உஷ்ணநிலை, நோய்களின் நிர்ண யம், சிகிச்சை இவற்றிற்கு புதிய சாதானங்களைப் பயன்படுத்தல், செயற்கை இரத்த ஓட்டம், முத லிய பல பிரச்சனைகளைப் பற்றி மேலைநாட்டு ஆய்வுக் கூடத்திலே ஆராய்ச்சிகள் செய்யப்படு கின்றன.

இயைபு இயல் இரண சிகிச் சைக்குத் துணைநிற்கிறது. இரண சிகிச்சைக்கு முன்னும், சிகிச்சை யின் போதும், அதற்குப்பின்னும் நோயாளிகளுக்குப் பல உயரி யைபு சோதனைகள் செய்யப்படு கின்றன. நோய்களால் பாதிக்கப் பட்ட இருதயத் தடுப்பிதழ்களுக் கும், இரத்தக் குழாய்களுக்கும் பதிலாக, செயற்கைப் பொருட் கள் பயன்படுத்தப்படுகின்றன. இதற்குத் தேவையான புதிய கூட்டுப் பொருட்களைக் கண்டு பிடிக்க விஞ்ஞானிகள் இடை விடாது முயற்சித்து வருகிறார்கள்.

இதற்கென இதுவரை "காப் ரான்" "நைலான்" என்ற இரு கூட்டுப் பொருட்கள் பயன்படுத் தப்பட்டு வந்தன. ஆனால் இப் பொருட்களின் பௌதிக இரசா யன குணங்கள் நாளாவட்டத்தில் மாறுபாடு அடைகின்றன என்று கண்டு பிடித்து விட்டனர். ஆகவே இவற்றைத் தொடர்ந்து உபயோகித்தால் விரும்பத்தகாத விளைவுகள் ஏற்படலாம்.

உதாரணமாக இரத்தக் குழா யின் ஒரு பகுதியைச் சரிசெய்யப் பயன் படுத்தப்படும் கூட்டுப் பொருள் மிகவும் தடிமனாக இருந் தால், அதன்மூலம் இணைப்புத்திசு வளர முடியாது. அப்போது செயற்கைக் குழாயின் உட்பரப்

பில் உயிருள்ள, நெகிழ்வான படலம் தோன்ற முடியாது போய் விடும். இதன் விளைவாக இரத்தத்தின் அமைப்பு மாறுதலடையும். அதற்கு மாறாகக் கூட்டுப் பொருள் நுண்துளை உடையதாக இருந்தால் அதன் மூலம் ரத்தக் கசிவு ஏற்பட்டு நோயாளியின் உயிருக்கு ஆபத்துண்டாகும். சோவியத் ஆராய்ச்சியாளர்கள் ஒரு புதிய கூட்டுப் பொருளைக் கண்டு பிடித்துள்ளனர். இந்தப் பொருளின் ஒரு பகுதி நார்கள் நாளாவட்டத்தில் கரைந்து விடுகின்றன. அப்போது இணைப்புத் திசு, அவற்றுள்ளே ஊடுருவிச் சென்று அதை இயற்கை இரத்தக் குழாயைப் போலச் செய்கிறது. எங்கள் ஆய்வுகூடம், நார் கழகத்தின் லெனின் கிராட்கிளை, காஞஸ் பஞ்சாலை, மூன்றுங் கூட்டாக இந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளன. இப்போது புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்ட பொருட்களில், 'டெப்லான்', 'டாக்ரான்' இவ்விரண்டும் இரண சிகிச்சையாளர்களால் பெரிதும் பாராட்டப்பட்டுள்ளன. அவை அதிக நாள் இருக்கக் கூடியவை. உயிரியக்கங்களுக்குத் தேவையான நுண்துளைகள் அவற்றில் உள்ளன. அவற்றின் திரவ இயக்கக் குணங்கள் மிகவும் சிறப்பாக உள்ளன. அவற்றின் பௌதிக—இரசாயன குணங்கள் நாளடைவில் மாறுதல் அடைவதில்லை.

அகாடெமிஷியன் அலெக்ஸாண்டர் பாகுலேவின் தலைமையில் சில இரண சிகிச்சையாளர்களும் பொறியியலாளர்களும் சேர்ந்து ஒரு மின்சார இருதய ஊக்கி யந்திரத்தைக் கண்டு பிடித்துள்ளனர். இதயத்துடிப்பு குறைந்து போகும்போது, (ஒரு நிமிஷத்திற்கு 30—35 துடிப்பே இருக்கும் போது) இருதயத்தை மீண்டும் சரியாக இயக்குவதற்கு இந்தக் கருவியை உபயோகிக்கலாம். நோயாளியைப் பரிசோதித்து, முதற் சிகிச்சைகளைச் செய்தபின், இந்தக் கருவியின் மின்துருவங்களோடு இணைந்த சிறிய மின்சார பாட்டரியும், நோயாளியின் தோலுக்குக்கீழே வைத்துத் தைக்கப்படுகிறது. இந்தக் கருவி பல ஆண்டுகள் வேலை செய்யும். நோயாளியின் தோலிலே ஒரு கீறல் போட்டு, இந்த சாதனத்தை எடுத்து விட்டுப் புதிய சாதனத்தை வைக்கலாம்.

இரத்தச் சிரைகளிலே செய்யப்படும் இரண சிகிச்சைகள் எல்லாம் அபாயகரமானவை. தமனிகளில் செல்வதைக் காட்டிலும், சிரைகளில் இரத்தம் மெதுவாகவே செல்கிறது. எனவே, இரத்தம் உறைவதற்கான வாய்ப்புக்கள் அதிகமாக உள்ளன. ஒரு நோயாளியின் உடலிலுள்ள, நோயுற்ற சிரையை எடுத்து விட்டு, அதற்குப் பதிலாக அவர் உடலின் வேறு பகுதியிலிருந்து சிரைகளை எடுத்துப் பொருத்துவதற்கான ஒரு முறை கண்டு பிடிக்கப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட்டது. உதாரணமாக மேல் பெருஞ்சிரை நோய்பட்டால் அதை எடுத்து விட்டுக் கீழ் பெருஞ்சிரையின் பகுதியைப் பொருத்தலாம். இத்தகைய இரண சிகிச்சைகள், இப்போதுதான் ரஷ்யாவில் ஆரம்பிக்கப்பட்டுள்ளன. இன்னும் சில நாட்களில் பல நகரங்களிலும் உள்ள வைத்திய சாலைகளில் இந்த இரண சிகிச்சைகள் செய்யப்படும்.

இருதய-இரத்த ஓட்ட நோய்களை நிர்ணயிக்கப் பல புதிய முறைகள் கையாளப்பட்டு வருகின்றன. இரத்த ஓட்டம் எனும் நுண்ணிய நிகழ்ச்சியைச் சோதனை செய்ய 'ரான்ட்ஜெனோ

## திரு. தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

தமிழ் நாட்டின் தவப்புதல்வரும், தமிழ் வளர்ச்சியைத் தன் வளர்ச்சியாகக் கருதிப் பாடுபட்டவருமாகிய திரு. தொண்டைமான் அவர்கள் மறைந்த செய்தி அறிந்து பெரிதும் வருந்துகிறோம்.

இறையன்பும் தமிழன்பும் இரண்டறக் கலந்து அல்லும் பகலும் நல்லுளத்தோடு உழைத்து உயர்ந்த உத்தமராகிய திரு. தொண்டைமான் எழுத்துத் திறத்தாலும் பேச்சுத் திறத்தாலும் பெருவாரியான மக்களின் அன்புக்குப் பாத்திரமானவராவர். அவரது பிரிவு தமிழ் நாட்டு மக்களுக்குத் தாங்கொணுத துயரச் செய்தி ஆகும்.

துயரத்தால் வாடும் தமிழ் அன்பர்களுக்கும், துன்பத்தால் வருந்தும் திரு. தொண்டைமான் அவர்களின் குடும்பத்தார்க்கும் எங்களின் அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

கிராபி', எனும் முறைபயன்படுத்தப் படுகிறது. சினிமாப் படம் பிடிக்கும் முறையும் பயன்படுத்தப் படுகிறது. நோயாளியின் இரத்த ஓட்டத்திலே ஒரு புதிய பொருள் செலுத்தப்படுகிறது. இந்தப் பொருள் செல்லும் பாதையை எக்ஸ்-ரே படம் எடுப்பதோடு, அதை சினிமாப் படமாகவும் எடுத்து விடுகிறார்கள். இந்தப் படத்தைப் பின்னர், குறைந்த வேகத்தில் திரையிட்டு, இரத்த ஓட்டத்தைக் காணலாம். இருதயம், தடுப்பு இதழ்கள் இவற்றின் இயக்கத்தையும், இருதயம், இரத்தக்குழாய் இவற்றிலுள்ள குறைகளையும் துல்லியமாகக் காணலாம். இந்த 'ரான்ட்ஜெனோ சினிமா' முறை மூலம் இரணசிகிச்சையின் விளைவுகளையும் பரிசோதித்துப் பார்க்கலாம். இது தவிர 'இருதய ஒலிவரைப் பட' முறையும் பயன்படுத்தப் படுகிறது.

இவ்விதம் விஞ்ஞானமும், இருதய இரண சிகிச்சை முறைகளும், இணைந்து வளர்ந்து ஒன்றுக்கொன்று உதவியாக இருக்கின்றன. இருதயம், ரத்தக்குழாய்களின் இரண சிகிச்சையில் ஈடுபட்டுள்ள எல்லா சிகிச்சைசாலைகளிலும் இந்த முன்னேற்றங்கள் கையாளப்படுகின்றன.

# கதரும் கிராமக் கைத்தொழில்களும் ஏன்?

## திட்டங்களின் பெருங்குறைகளும் அவற்றால் விளையும் ஏற்றத்தாழ்வுகளும்

நாட்டில் நடந்த நிகழ்ச்சிகளை நோக்கின், காந்தியடிகளுக்கு, ஏற்பட்டிருந்த பீதி நியாயமற்றதென சொல்லக்கூடவில்லை. நாட்டின் பொருளாதாரத்தைத் துரிதப்படுத்த வேண்டுமென்ற அவாவில், தேசியத் திட்டங்கள், நாட்டைப் பெரும் தொழில் மயமாக்கும் வகையில், தீட்டப்பட்டு செயல்படவே, திட்டங்கள் மூலம் ஏற்படும் பலன் சமமாக விநியோகிக்கப்பட வேண்டும் என்ற விஷயம் பின்னுக்குத் தள்ளப்பட்டு விட்டது. நம் திட்டங்கள் மூலம், செல்வம் அதிகரித்தது என்பது என்னவோ உண்மைதான். நம் தேசீய உற்பத்தி 1950-51ல் 8850 நூறு கோடியாயிருந்தது. 1960-61ல் 12750 நூறு கோடியாகச் சுமார் 42 சதவிகிதம் உயர்ந்துவிட்டது. இந்த அதிக அளவு உற்பத்தி மற்ற பல கோணங்களையும் ஏற்படுத்திவிட்டது. இவைகள் நாட்டின் நலனுக்கும், ஏன் நாட்டின் பொருளாதார மேம்பாட்டிற்கும், மக்களின் சுபீட்சத்திற்கும், உகந்ததாயில்லையென்பதும், நமக்குத் தெரிந்துவிட்டது.

திட்டங்கள் மூலம் ஏற்பட்ட திரிபுகள் மிகவும் வெளிப்படையானவைகள்கூட. வெளி நாடுகளிலிருந்து இறக்குமதிகளுக்காக வேண்டி சுமார் 4000 கோடி ரூபாய் செலவழித்திருக்கிறோம். அதன்மூலம் நமக்கு ஏற்பட்ட கடன்மட்டும் சுமார் 2500 கோடி. அதன் வகையில் மட்டுமே வருடந்தோறும், வட்டிக்கும், டிவிடண்டுக்கும் ரூ. 500 கோடி செலுத்தவேண்டி உள்ளது. நம் நாட்டின் பிரத்யேக நிலைமையில் இத்தகைய இறக்குமதிகள் அவசியம் என்ற போதிலும் நம் நாட்டில் நாம் விரும்பும் சம விநியோகம் என்ற கொள்கைக்கு, உகந்ததாக இல்லை.

இஃதே போன்று நாம் 40, 50 லக்ஷம் டன் அளவு உணவுப் பொருட்களை இறக்குமதி செய்கிறோம். ஒருகால் வரப்போகும் ஆண்டுகளில் இன்னும் அதிகமாக இறக்குமதி செய்யவேண்டிய நிலைமையும் ஏற்படலாம். 65 கோடி பெருமான அந்நிய துணி இறக்குமதியை எதிர்த்து ஒரு மாபெரும் இயக்கத்தை நடத்திய நம் தேசம், இன்று அதைப்போல் 4, 5 மடங்கு அதிகமான உணவுப் பொருட்களை இறக்குமதி செய்துவருகிறது.

மூன்ருவது. கிராம மக்களின் வருமானம் அதிகரித்துள்ளபோதிலும், நகர்ப்புற வருமானத்திற்கும், கிராம மக்கள் வருமானத்திற்கும் உள்ள வித்தியாசம் அதிகமாய்விட்டது. அதுமாத்திரமன்றி, கிராமங்களிலும் சரி, நகரங்களிலும் சரி, ஒரு பகுதி மக்களுடைய வருமானத்திற்கும், மற்ற பகுதி மக்களுடைய வருமானத்திற்கும், உள்ள வித்தியாசம் அதிகரித்துவிட்டது. இரண்டாவது அட்டவணையில் கொடுக்கப்பட்டிருக்கும் புள்ளி விபரங்கள் மூலம் கிராம வருமானத்திற்கும், நகர வருமானத்திற்கும், கிராமங்களிலும், நகரங்களிலும் ஒரு பகுதி மக்களுக்கும், மற்ற மக்களுக்குமிடையே உள்ள வித்தியாசத்தையும் காணலாம்.

ஏற்றத் தாழ்வென்பது, ஆரம்ப காலத்திலிருந்தே நாட்டிலுள்ள செல்வம் பிரிக்கப்பட்டுள்ள ரீதியிலேயே தொடர்ந்து இருந்து வருகிறது. கிராமத்தில் கீழ் நிலையிலுள்ள 20% மக்கள், 0·87% நிலத்தை உடையவர்களாயிருக்க, உயர்ந்த நிலையிலுள்ள 20% மக்கள் 69·97% நிலத்திற்கு உடையவர்களாகவும், அதற்கும் மேலாக 5% மக்களிடத்தில் 37·24 சதவிகித நிலமும் இருந்து வருகிறது.

நகரங்களில் கதை வேறுவிதமாக இருந்துவிடவில்லை. கடைசி அந்தஸ்துள்ள 20% மக்கள் 0·12% நிலத்தை உடையவர்களாகவும், உயர்ந்த அந்தஸ்துள்ள 20% மக்கள் 93·15% நிலங்களை உடையவர்களாகவும் அதற்கும் மேலாக உள்ள 5% மக்கள், 52·18% நிலங்களை உடையவர்களாகவும் இருக்கின்றனர்.

## அட்டவணை - 2

கிராம நகரப் பகுதிகளில் காணப்படும் ஏற்றத் தாழ்வின் அளவுகள்

| வரிசை எண் | குறைந்த 10% முதல் உயர்ந்த வகுப்பு வரை | வரி விதிப்பதற்கு முன் ஒரு குடும்பத்தின் சராசரி வருமானம் | | வரி விதிக்கப்பட்ட பின்பு ஒரு குடும்பத்தின் சராசரி வருமானம் |
|---|---|---|---|---|
| | | கிராமங்களில் ரூ. | நகரங்களில் ரூ. | நகரங்களில் ரூ. |
| 1 | 0—10 | 85 | 243 | 243 |
| 2 | 10—20 | 376 | 523 | 523 |
| 3 | 20—30 | 508 | 703 | 703 |
| 4 | 30—40 | 618 | 872 | 871 |
| 5 | 40—50 | 743 | 1041 | 1040 |
| 6 | 50—60 | 870 | 1245 | 1243 |
| 7 | 60—70 | 1076 | 1555 | 1552 |
| 8 | 70—80 | 1350 | 2004 | 2000 |
| 9 | 80—90 | 1841 | 2943 | 2933 |
| 10 | 90—95 | — | 4430 | 4380 |
| 11 | 95-100 | 3,764 | 12,143 | 10,612 |
| 12 | எல்லா வகுப்புகளும் | 1,126 | 1,913 | 1,862 |

கிராம நகரப் பகுதிகளில் காணப்படும் ஏற்றத் தாழ்வின் அளவுகள்.

ஐந்தாவதாகக் கூறப்படவேண்டிய கோணல், விலைவாசிகளைப் பொறுத்தவரை யேற்பட்ட நிலைமையேயாகும். விலைவாசிகள் அதிகரித்துவிட்டன. விலைவாசிகள் உயர்வை ஈடுசெய்ய சர்க்கார் எவ்வளவுதான் கிராக்கிப்படியைக் கொடுத்த போதிலும், உண்மையான அளவு கூலி கொடுத்ததாக ஆகாது. ஸ்தாபன வரம்புக்குள் வராத கிராமத் துறைகளில் இதுபற்றி கேள்வி கேட்கப்படக் கூடியதாகவும் இல்லை.

கடைசியாக முதல் ஐந்தாண்டுத்திட்ட இறுதியில் நம் நாட்டில் 50 லக்ஷம் மக்கள் வேலையற்றிருந்தனர். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவில் 80 லக்ஷம் வேலையற்ற மக்கள் நம் நாட்டிலிருந்தனர். மூன்றுவது திட்ட முடிவில் நம் நாட்டில் வேலையற்ரேரின் எண்ணிக்கை 120 லக்ஷமிருக்குமென மதிப்பிடப்படுகிறது.

சமீபத்தில் தேசீய பொருளாதார ஆராய்ச்சிக் கவுன்ஸில் வெளியிட்ட புள்ளி விபரங்கள் கூறுபவை பின்வருமாறு:—

''கிராமங்களிலுள்ள முழு நேர வேலையின்மையும், போதிய அளவு வேலையற்ற, பகுதி வேலையின்மைப் பிரச்னையும்தான் இரண்டாவது முக்கியமான விஷயமாகும். நம் நாட்டின் முழு நேர வேலையற்ரேர், பகுதி வேலையற்ரேர் முதலானேரின் சரியான எண்ணிக்கை வேறுபட்ட போதிலும், தற்போதைய விவசாய உற்பத்தி அளவிற்கும் எதிர்காலத்தின் விவசாய அபிவிருத்தித் தேவைக்குமாகச் சேர்த்தாலும் கூட, சுமார் 20 முதல் 25% கிராமமக்கள் தேவைப்பட மாட்டார்கள் என்பது எல்லோரும் பொதுவாக ஒப்புக்கொள்ளும் விஷயமாகும்.''

இந்தப் புள்ளி விபரப்படி 20 முதல் 25% கிராம மக்கள் வாழ வகையின்றி அஸ்திவாரமற்றவர்களாய் விடுகின்றனர்.

ஆகவே உற்பத்தியைப் பெருக்கும் விஷயத்தில் நம்முடைய தவருன முறையினுல், நாமே நம்மை மிகுந்த கஷ்டத்திற்கு உள்ளாக்கிக் கொண்டு விட்டோம். நமக்கு வேண்டிய அத்யாவசியமான பண்டங்கள் போதிய அளவு உற்பத்தி செய்யப்படவில்லை. மஹலனேபிஸ் அறிக்கைப்படி, நாட்டில் ஏற்றத் தாழ்வுகள் அதிகரித்துவிட்டன. நம்முடைய விலை நிர்ணய அடிப்படை ஸ்திரமானதாகவில்லை. உண்மையான கூலி குறைந்து விட்டது. வேலை இன்மை அதிகரித்து விட்டது. போதிய அளவு வேலை கிடைப்பதுவுமில்லை. சம விநியோகம் என்ற கொள்கை பின்னுக்குத் தள்ளப்பட்டுவிட்டதில் ஆச்சரியமில்லை. இதன் பயின் என்னவென்ருல், பொருளாதாரச் சக்கரங்கள், வேகமாகவோ அல்லது ஒழுங்காகவோ சுழலவில்லை. நமது தேசத்தில் பெருத்த அளவு வேற்றுமையும் அதிருப்தியும் ஏற்பட்டு, தவிர்க்கப்படக் கூடிய, துன்பமும், ஏழ்மையும், நமது சமுகத்தின் ஒரு பகுதியிலும் நமது நாட்டின் சில பிராந்தியங்களிலும் உண்டாகி விட்டன.

## செய்யப்படவேண்டிய திருத்தங்கள்

நல்ல திட்டங்களையும், திறமை வாய்ந்த தலைமையையும் நாம்

பெருதிருந்தால், நமது பொருளாதாரத்தின் போக்கை நாம் அறிந்து கொள்ள இயலாது போய் விட்டிருக்கும். நாட்டின் திட்டமிட்ட பொருளாதாரமும் தன்னைத் தானே அர்ப்பணித்துக் கொண்டு பணிபுரியும் தலைமையும் எவ்வளவு தூரம் நன்மை பயக்கும் என்பது வெளிப்படை. 1963ம் ஆண்டு, அக்டோபர் மாதம் 2-ம் தேதி பண்டித ஜவஹர்லால்ஜீ அவர்கள் இந்த விஷயத்தில் ஒரு புதிய கருத்தைத் தைரியமாக வெளியிட்டார். அவர் நம்முடைய திட்டங்களிலுள்ள குறைபாடுகளை ஒப்புக்கொண்டு நாம் காந்தீய முறைக்கே திரும்பிச் செல்ல வேண்டு மென்பதையும் அங்கீகரித்தார். அவர் கூறியதாவது :—

''விவசாயம் தொழில் போன்ற நாட்டின் பொருளாதார அபிவிருத்திப் பிரச்னைகளே யன்றி நாட்டிலுள்ள ஏழை மக்களின் வாழ்க்கைத் தரத்தை எப்படி உயர்த்துவது என்றதோர் தனிப் பிரச்னையும் நமக்கிருக்கிறது. நம் சமூகத்திலுள்ள ஏழை எளிய மக்களின் முன்னேற்றம் திருப்திகரமாக இல்லை. ஏழை மக்களின் முன்னேற்றத்தை நாம் தீவிரமாக்கா'விட்டால், நாமே புதிய பிரச்னைகளையும், அதிகக் கஷ்டங்களையும் உண்டாக்கிக் கொள்பவர்களாவோம். இந்த விஷயத்தில், நமக்குள்ள பெரிய பிரச்னைகளில் ஒன்று நாட்டிலுள்ள ஏழை மக்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்க வேண்டியது என்பது. பெருத்த அளவு வேலையின்மை என்ற சுமையைக் காட்டிலும் மோசமான வேறொன்று எந்த நாட்டிற்கும் இருக்க முடியாது. வேலையில்லாதவர்களும், உண்ண வேண்டும், உயிர் வாழ வேண்டும். ஆகவே வேலையின்மையென்பது, வேலையற்றவர்களுக்கு மட்டுமின்றி, நாட்டிற்குமே கேடு விளைவிக்கும். நாடு 2 விதமான சுமைகளைத் தாங்கவேண்டி யுள்ளது. ஒன்று உற்பத்தி செய்யாமல் உபயோகிப்போர்கள். இரண்டாவது உற்பத்தி செய்பவர்கள், ஆனால் உபயோகிப்பவர்களாக முடியாதவர்கள்.

நம்மிடம் வேறொரு முறையும் உள்ளது. அதுதான் அடித்தளத்திலிருந்து, உயரே செல்வது; எத்தகைய முரண்பாடும் இல்லாதது. அதுவே காந்திஜீ அவர்களால் வற்புறுத்தப்பட்டது. உள்ள சூழ்நிலையில் மிகவும் முக்யமான தெனக் கருதி மகாத்மா காந்திஜீயினால் வலியுறுத்தப் பட்டது. நானோ அல்லது மற்ற எவரோ, தற்போதைய நிலைமையில், காந்திஜீயின் கருத்து எவ்வாறிருக்கும் என்று கூற முடியாது. ஆனால் ஒன்று மாத்திரம் உறுதி. அவர் கட்டாயம் சமூகத்தில் கடை நிலையிலுள்ளவர்களின் தரத்தை உயர்த்த, உடனுக்குடனே இப்பொழுதே, ஏதாவ தொன்றை செய்யச் சொல்லியிருப்பார். நம் இந்திய நாட்டின் தற்போதைய நிலைமையில் இது வெகு முக்கியமானதாகும். பின்னால் ஏதோ மிக அதிகமாக நன்மைகள் ஏற்படும் என்று காத்திராமல் தற்போதே செய்யவேண்டிய சரியான காரியம் ஆகும். இப்போதே சரியான காரியத்தைச் செய்யத் தவறினால், பின்னால் எல்லாவிதமான நெருக்கடிகளும், முரண்பாடுகளும் ஏற்படும். ஆகவே இந்திய நாட்டை, முன்னேறச் செய்யும் அடிப்படை விஷயங்களில், அதாவது, தொழில்கள் பெரிய நீர்ப்பாசனத் திட்டங்கள் போன்றவைகளில் நாம் கவனம் செலுத்தி வற்புறுத்தினாலும், அதே சமயத்தில், சமூகத்தில் பெருமளவு கீழ் நிலையிலுள்ள கிராம விவசாயிகள், கிரா

மத் தொழிலாளிகளுக்கு உடனடி யாக எத்தகைய திட்டங்கள் நன்மை பயக்குமோ அவைகளை மேற்கொள்வது மிகவும் முக்கிய மாகும். நாம், நமது தொழில் களை, விவசாயத்தை, கால்நடை களை, வனவளத்தை, ஏன் மற்ற பலவற்றை அபிவிருத்தி செய்யத் தான் வேண்டும்"

மீண்டும் 1963ம் ஆண்டு டிசம் பர் மாதம் 11ந் தேதி, மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தின் விளக் கத்தின் பேரில் மக்கள் சபையில் நிகழ்ந்த விவாதத்திற்குப் பதி லளிக்கையில் அவர் சொன்ன தாவது :

"நான் மேலும் மேலும் மஹாத் மாஜீயின் முறைகளை நினைக்க முற்படுகிறேன். நான் நவீன இயந்திரங்களை, சிறந்த இயந்தி ரங்களை, சிறந்த நிபுணத்து வத்தை பாராட்டுபவன் என்பதி னுல் இந்தச் சந்தர்ப்பத்தில், அவ ருடைய பெயரைக் குறிப்பிடுவது சற்றுச் சாதாரண மானதாகத் தோன்றலாம். ஆனுல் இன்று நம் நாட்டில் இருக்கும் பிரத்யட்ச நிலைமையைப் பார்க்கும் போது, இயந்திர காலத்தில், சகாப்தத் தில், நாம் எவ்வளவுதான் முன் னேறிய போதிலும், இன்னும் முன்னேறுவோம் என்ருலும் நாம் நம் நாட்டிலுள்ள பெரும்பான்மை யான மக்களை நம் திட்டங்கள் மூலம் அணுகவில்லை. இன்னும் வெகு காலத்திற்கு அணுக இயல வும் போவதில்லை என்ற உண் மை நிலவுகிறது. அவர்களின் உற்பத்தி சாதனம், நவீன முறை களுக்குச் சமமாக இல்லாவிடி னும், அத்தகைய கைத் தொழி லாளிகளும் நாட்டின் உற்பத்தி யில் பங்குதாரர்களாகத் தக்க தொரு முறையை நாம் கண்டு பிடித்தாக வேண்டும். அத்த கைய சாதனங்களை நாம் உப யோகப்படுத்தவும் வேண்டும். இல்லாவிடின் அவைகள் விரய மாகப் போய்விடுகின்றன. இந்த எண்ணத்தை நாம் மனத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். நம் நாட்டிலுள்ள இத்தகைய ஏழை மக்களைப்பற்றி நாம் அதி கம் சிந்திக்கவேண்டும். எவ்வ ளவு சீக்கிரமாக முடியுமோ அவ் வளவு சீக்கிரம் அவர்களுடைய நிலையை உயர்த்த நாம் ஏதாவது உடனே செய்தாக வேண்டும்.

(தொடரும்)



## நல்ல நிலம்

மழை நன்கு பெய்து நிலம் செழிக்க விளைந்து செல்வம் கொழித்து விளங்கினுலும் ஒரு நாடு நல்ல நடாகிவிட முடியாது. ஒரு நல்ல நாடாவது, அந் நாட்டு மக்களின் குண நலனைப் பொறுத்தே இருக் கிறது. நிலம் திருந்தி நாடாய். இருப்பினும் காடாய்க் கிடப்பினும் பள்ளமாகவோ மலைப் பாங் காகவோ இருப்பினும் அந் நிலத்து வாழும் மக்க ளைப் பொறுத்தே அது நல்ல நிலம் கெட்ட நிலம் என்று மதிப்பிடப்படும். தீயோர் வாழும் நல்நிலம் மதிப்பிழக்கும். நல்லோர் வாழும் தீ நிலம் மதிப்புப் பெறும்.

ஆயுள் தண்டனை, மரண தண்டனை இவற்றில் எது அனுபவிக்க எளிமையானது; எது தேர்ந்தெடுக்கத் தக்கது? இந்த விவாதம் ஒரு விருந்திலே தொடங்கியது. ஆயுள் தண்டனையை அனுபவித்துத் தீர்ப்பளிக்க ஒருவர் முன்வந்தார். அவர் கண்ட முடிவு என்ன?

# ஆயுள் தண்டனை

**நாக. முத்தையா**

இலையுதிர் காலத்தில் இருள் படர்ந்த இரவு. பதினைந்து ஆண்டுகட்கு முன்பு இலையுதிர் காலத்தில் தான் அளித்த விருந்தினை நினைவிற்குக் கொண்டு வந்தபடியே அந்தப் பணக்காரக் கிழவன் படிக்கும் அறையில் ஒரு மூலையிலிருந்து மறுமூலைக்கு நடையளந்துகொண்டிருந்தான். அந்த விருந்தில் அநேக அறிவுடைய பெருமக்கள் இருந்தனர். சுவை மிகுந்த உரையாடலும் இருந்தது. அநேக விஷயங்களின் ஊடாக, அவர்கள் மரண தண்டனை குறித்தும் பேசினர். நிபுணர்களும் எழுத்தாளர்களும் நீங்கலாக ஏனைய விருந்தினர்களில் பெரும் பகுதியினர் மரண தண்டனையை ஆதரிக்கவே இல்லை. அவர்கள் அதனைக் காலத்திற் கொவ்வாத தண்டனைக்குரிய வகை என்றும் கிருஸ்துவ உலகிற்குப் பொருந்தாதது என்றும் நேர்மையற்றது என்றும் கருதினர். உலகெங்கும் மரண தண்டனையை நீக்கிவிட்டு ஆயுள் தண்டனையை அமுலுக்குக் கொண்டு வரலாம் என்றும் சிலர் எண்ணினர்.

'உங்களோடு நான் ஒத்துக் கொள்ள முடியாது,' என்றார் விருந்தளித்தவர். 'நான் என்னைப் பொறுத்த வரையில் மரண தண்டனையையோ ஆயுள் தண்டனையையோ அனுபவித்ததே இல்லை. ஆனால் பாரபட்சமில்லாமல் தீர்மானிக்க வேண்டுமானால், அப்போது என் அபிப்பிராயத்தில் ஆயுள் தண்டனையை விட மரண தண்டனை மிகவும் நேர்மையானது; மனிதத்தன்மையானது என்றுதான் படுகிறது. மரண தண்டனை உடனே கொல்லுகிறது; ஆயுள் தண்டனை படிப்படியாகக் கொல்லுகிறது. சில விநாடிகளில் கொன்றுவிடுகிறவனா அல்லது வருடக் கணக்காக உன்னிடமிருந்து உயிரைப் பறிப்பவனா எவன் அதிக மனிதத் தன்மையுள்ளவன்?'

'இருவருமே சமமாக நேர்மையற்றவர்கள் தாம். ஏனெனில் அவர்களின் குறிக்கோள் ஒன்றேயாகும். அதாவது உயிரை எடுத்துவிட வேண்டும்;' என்று விருந்தினர்களில் ஒருவர் குறிப்பிட்டார். அரசு என்பது கடவுள் அல்ல. தான் அப்படிச் செய்ய வேண்டும் என்று நினைத்தபோது திருப்பித் தர இயலாத ஒன்றை

எடுத்து விடுவதற்கு மட்டும் அதற்கு உரிமையே கிடையாது'

அந்தக் கூட்டத்தில் வழக்கறிஞர் ஒருவர் இருந்தார். இளைஞர். இருபத்தைந்து வயதினர். அவருடைய அபிப்பிராயத்தைக் கேட்ட தன் பேரில் அவர் கூறினார்:

''ஆயுள் தண்டனையும் மரண தண்டனையும் ஒரே மாதிரியாக நேர்மை யற்றவைதாம். இவற்றுள் தேர்ந்தெடுக்கும் வாய்ப்பை எனக்குத் தந்தால் நான் நிச்சயமாக இரண்டாவதைத்தான் தேர்ந்தெடுப்பேன். ஒரேயடியாக வாழாமல் இருப்பதைவிட ஏதோ ஒரு மாதிரி வாழ்வதுதான் சிறந்தது.''

இப்படியாக உயிருள்ள உரையாடல் தொடர்ந்தது. அப்போது இளைஞராகவும், அதிக உணர்ச்சி உள்ளவராகவும் இருந்த இந்தப் பணக்காரர் உடனே நிதான மிகுந்தவராய் மேஜையின்மீது முஷ்டியால் ஓங்கிக் குத்தினார். இளைஞராகிய வக்கீலின் பக்கம் திரும்பிக்கொண்டு கூப்பாடு போட்டார்:

''அது பெரும் புளுகு. ஐந்து வருடங்களுக்குக் கூட உங்களால் ஒரு சிறு அறையில் வாழ முடியாது. நான் இருபது லட்சம் பந்தயம் கட்டுகிறேன்.''

''நீங்கள் அதனைக் கடுமையாக உணர்ந்து பேசுவதாக இருந்தால் நான் ஐந்தல்ல பதினைந்து ஆண்டுகள் என்று பந்தயங் கட்டுகிறேன்.''

''பதினைந்து! முடியாது! கனவானே, நான் இருபது லட்சம் பந்தயங்கட்டுகிறேன்.

'' ஒப்புக் கொள்ளுகிறேன். நீங்கள் இருபது லட்சம் பந்தயங் கட்டி உள்ளீர்கள். நான் என் வாழ்வைப் பந்தயங் கட்டி உள்ளேன்,'' என்றார் வக்கீல்.

இப்படியாக இந்தப் பயங்கரமான கேலிக் கிடமளிக்கும் பந்தயம் நடைமுறைக்கு வந்தது. அந்தத் தருணத்தில் எண்ணிப் பார்ப்பதற்கு ஏராளமான பணம் வைத்திருந்த அந்தப் பணக்காரன் பேராசையோடு மகிழ்ச்சிகரமாக விளங்கினான். இரவு விருந்தின்போது அவன்வக்கீலைப் பார்த்து வேடிக்கையாகச் சொன்னான்:

'இளைஞரே, அதிக காலதாமதமாகி விடுவதற்கு முன்னர் நிதானமாக யோசித்துச் சொல்லுங்கள். இருபது லட்சம் என்பது எனக்குப் பிரமாதமில்லை. ஆனால் நீங்கள் உங்கள் வாழ்நாளில் சிறப்புடைய மூன்று அல்லது நான்கு ஆண்டுகளை இழந்து விடப் போகிறீர்கள். நான் மூன்று அல்லது நான்கு என்றுதான் சொல்லுகிறேன். ஏனெனில் நீங்கள் அதற்கு மேல் அதனைக் (வைராக்யத்தை) கடைப்பிடிக்கமுடியாது. வற்புறுத்தப்பட்ட சிறைத் தண்டனையைவிட வலிய ஏற்றுக் கொள்ளும் சிறைத் தண்டனை அதிகச் சுமையுள்ளது என்பதை மறந்துவிட வேண்டாம், வருத்தத்திற்குரிய மனிதரே! எந்தச் சணத்திலும் நீங்களாகவே விடுதலையாகிக் கொள்ளும் உரிமை உங்களிடமே இருக்கிறது என்ற எண்ணம் சிறைச்சாலையில் உங்களின் வாழ்நாள் முழுவதையும் நஞ்சாக்கி விடும். நான் உங்களுக்காக இரங்குகிறேன்.''

இப்போது அந்தப் பணக்காரர் ஒரு மூலையிலிருந்து மறு மூலைக்கு நடையளந்தபடியே இவை அனைத்தையும் திரும்ப மனத்திற்குள்

கொண்டு வந்தார்; தன்னைத் தானே கேட்டுக் கொண்டார்.

"நான் எதற்காக இந்தப் பந்தயத்தைக் கட்டினேன்? இதிலென்ன நன்மை? வக்கீல் வாழ்வில் பதினைந்து வருட வாழ்க்கையை இழக்கிறார். நான் இருபது லட்சத்தைத் தூக்கி எறிகிறேன். மரண தண்டனையைவிட ஆயுட் தண்டனை மோசமானது அல்லது சிறந்தது என்பதை இப்பந்தயம் மக்களிடம் காட்டி அமைதிபெறச் செய்யுமா? இல்லவே இல்லை! எல்லாம் மோசம்; பைத்தியக்காரத்தனம். என்னைப் பொறுத்த வரையில், இப்பந்தயம் நன்கு வளர்க்கப்பட்டமனிதனின் பேராசை ஆகும்; வக்கீலைப் பொறுத்த மட்டில் பொன்னாசையாகும்!"

மாலை விருந்திற்குப் பிறகு என்ன நடந்தது என்பதை அவர் திரும்பவுஞ் சிந்தித்துப்பார்த்தார். பணக்காரனுடைய வீட்டின் தோட்டப் புறத்தில் கடுமையான கண்காணிப்பின் கீழ் வக்கீல் சிறைத்தண்டனையை அனுபவித்து ஆகவேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. தோட்ட எல்லையைக் கடந்து செல்லும் உரிமையையும் வாழும் மக்களைப் பார்ப்பதையும், மனித ஒலியைக் கேட்பதையும், கடிதங்களையும் பத்திரிகைகளையும்பெறுவதையும் அவர் தண்டனைக் காலத்தே இழந்துவிட வேண்டும் என்று ஒப்புக் கொள்ளப்பட்டது. இசைக் கருவியை வைத்துக் கொள்வதற்கும், புத்தகங்கள் படிப்பதற்கும், கடிதங்கள் எழுதுவதற்கும்,ஒயின் குடிப்பதற்கும், புகையிலை பிடிப்பதற்கும் அவர் அனுமதிக்கப் பட்டார். ஏற்பாட்டின்படி வெளி உலகத்தோடு அந்தக் காரியத்திற்கென்றே குறிப்பாகக் கட்டப் பட்டிருந்த சிறிய சன்னல் வழியாக அவர் தொடர்பு வைத்துக் கொள்ளலாம்—ஆனால் அதுவும் மௌனமாகத்தான்! தேவையான அனைத்தையும் — புத்தகங்கள், சங்கீதம், ஒயின்—அவர் எந்த அளவுக்கு வேண்டுமெனினும் சன்னல் வழியாக ஒரு குறிப்பை அனுப்புவதன் மூலம் பெற்றுக் கொள்ளலாம். சிறை வாசத்தைக் கடுமையான தனி வாசகமாக ஆக்கக் கூடிய எல்லாச் சிறிய விஷயங்களுக்கும் ஒப்பந்தத்தில் இடம் இருந்தது. 1870-ஆம் ஆண்டு நவம்பர் 14-ந்தேதி பன்னிரண்டு மணியிலிருந்து 1885-ம் ஆண்டு நவம்பர் 14-ந் தேதி பன்னிரண்டு மணி வரை வக்கீலைச் (சிறையிலேயே) தங்கி இருக்க வேண்டும் என்று கட்டுப்படுத்தப் பட்டது. குறிப்பிட்ட காலத்திற்கு இரண்டுநிமிடங்களேனும் முன்னதாகக் கட்டுப்பாடுகளை மீறிவிட வேண்டும்என்ற இழிந்த முயற்சி, பணக்காரரை அவருக்கு, இருபது லட்சங்கள் கொடுக்கவேண்டிய கடமையிலிருந்து விடுவித்து விடும்.

சிறைவாசத்தின் முதலாண்டிலேயே அவருடைய சிறு குறிப்புக்களிலிருந்து நம்மால்முடிந்தவரை தீர்மானிக்கும்போது — வக்கீல் ஏகாந்தத்தாலும் இறுக்கத்தாலும் வெகுவாகப் பாடுபட்டு விட்டார். பியானோ வாசிக்கும் ஒலி இரவும் பகலும் அவர் வாழ்ந்த பகுதியிலிருந்து வந்தது. ஒயினையும் புகையிலையையும் அவர் ஒதுக்கித் தள்ளிவிட்டார். அவர் எழுதினார்: 'ஒயின் ஆசைகளை எழுப்பி விடுகிறது. சிறை வாசிக்கு முக்கியமான எதிரிகள் ஆசைகளேயாம். இன்னும், நல்ல ஒயினைத் தனிமையிலே குடிப்பதைவிடச் சலிப்பானது வேறொன்றுமே இல்லை.' அவருடைய அறையிலிருந்த காற்றைப் புகையிலை கெடுத்து விட்டது.

எளிய பாத்திரங்கள் உள்ள புத்தகங்களும், குழம்பிய காதற் சுவை பொருந்திய நவீனங்களும் குற்றமும் குறுகுறுப்பும் உள்ள கதைகளும், நன்முடிவுப் புத்தகங்களும், இன்னும் பிறவும் வக்கீலுக்கு முதலாண்டுக் காலத்தே அனுப்பப்பட்டன.

இரண்டாம் வருடத்தில் பியானோவின் ஒலிமேலும் கேட்கப்படவில்லை. வக்கீல் இலக்கியமே கேட்டார். ஐந்தாவது வருடத்தில் இசையொலி திரும்பவும் கேட்கப்பட்டது; சிறைவாசி ஒயின் கேட்டார். அந்த ஆண்டு முழுதும் அவர் சாப்பிடுவதும், குடிப்பதும் படுக்கையில் படுத்துக் கிடப்பதுமாகவே இருந்தார் என்று அவரைக் கவனித்து வந்தவர்கள் சொன்னார்கள். அவர் அடிக்கடி சோம்பல் முறித்தார். தனக்குத் தானே கோபமாகப் பேசினார். புத்தகங்களை அவர் படிக்கவில்லை. சில சமயங்களில் இரவுகளில் எழுதுவதற்காக அவர் கீழே உட்காருவார். நெடுநேரத்திற்கு எழுதுவார்; காலையில் அவை அனைத்தையும் கிழித்து எறிந்து விடுவார். ஒருதடவைக்கு மேலாக அவர் அழுதுகொண்டிருப்பது கேட்கப்பட்டது.

மொழி நூல், தத்துவ நூல், வரலாற்று நூல் இவற்றை வெறியோடு ஆறாவது ஆண்டில் பின் ஆறுமாத காலத்தில் அவர் படித்தார். அவர் வேட்கையோடு இந்த விஷயங்களைப் படித்தார். பணக்காரருக்கு, அவருக்குத் தேவையான புத்தகங்களை வாங்கிக் கொடுக்க நேரமே கிடையாது.

நான்கு வருட காலத்திற்குள்ளாக, அவருடைய வேண்டுகோளின் பேரில் ஏறத்தாழ அறுநூறு புத்தகங்கள் வாங்கப்பட்டன. இந்த வேட்கை நீடித்திருக்கும்போதுதான் பணக்காரர்கீழே காணும் கடிதத்தைச் சிறைவாசியிடம் இருந்து பெற்றார். "என் பிரியமான சிறைப்படுத்தியவரே நான் இந்த வரிகளை ஆறு மொழிகளில் எழுதி இருக்கிறேன். நிபுணர்களிடம் இதைக் காட்டுங்கள். அவர்கள் இதைப் படிக்கட்டும், அவர்கள் ஒரு தனிக் குற்றத்தையும் கண்டு பிடிக்கவில்லையானால் நான் இரங்கிக் கேட்டுக்கொள்ளுகிறேன். தோட்டத்தில் ஒரு குண்டு வெடிப்பதற்கு உத்தரவு கொடுங்கள். அந்த ஒலியைக் கேட்டு, என்னுடைய முயற்சிகள் வீண்போகவில்லை என்று நான் அறிந்து கொள்ளுகிறேன். எல்லாக் காலத்தும் எல்லாத் தேசத்தும் கெட்டிக்காரர்கள் வேறு வகையான மொழிகளில் தாம் பேசுகிறார்கள். ஆனால் எல்லாவற்றிலும் ஒரே மாதிரியான கொழுந்துதான் எரிகிறது. என்னுடைய அமரத்துவ மகிழ்ச்சியை உங்களால் புரிந்து கொள்ள முடியுமானால் நான் அவற்றை அறிந்து கொள்ள இயலும்!" சிறைவாசியின் விருப்பம் நிறைவேற்றப்பட்டது, பணக்காரரின் கட்டளையின் பேரில் தோட்டத்தில் இரு குண்டுகள் சுடப்பட்டன. பின்பு பத்து ஆண்டுகளுக்குப்பிறகு, வக்கீல் நகராமல் மேசையின்முன் உட்கார்ந்தார். 'புதிய கட்டளை'யே படித்தார். நான்கு ஆண்டுகளுக்குள்ளாக அறுநூறு சிறந்த புத்தகங்களைக் கற்றுத்தேறிய ஒருமனிதர். பருமன் இல்லாததும், அறிந்து கொள்ளுதற்கு எளிதானதுமான ஓர் புத்தகத்திற்கு ஏறத்தாள ஓர் ஆண்டு செலவு செய்துள்ளார் என்பது கண்டு பணக்காரர் ஆச்சரியங் கொண்டார். மதத்தின் வரலாறும், தத்துவ நூலும் 'புதிய கட்டளை'யின் இடத்தை ஆக்கிரமித்துக்கொண்டன. சிறைவாசத்தின் கடைசி இரண்டு ஆண்

டுகளில் சிறைவாசி முற்றும் குழம்பிய நிலையில் அசாதாரணமான அளவுக்குப் படித்தார். இப்போது அவர் தன்னைத்தானே இயற்கை விஞ்ஞான நூற்களில் ஈடுபடுத்த இயலும். அதன் பிறகு பைரன் அல்லது ஷேக்ஸ்பியரைப் படிக்கலாம். ரசாயனப் புத்தகம், மருத்துவப் பாடப் புத்தகம் நவீனம், தத்துவத்தில் சில விளக்கக் கட்டுரைகள், இவையனைத்தும் ஒரே சமயத்தில் அனுப்பப்பட வேண்டும் என்று விரும்பிக்கேட்ட குறிப்புகள் அவரிடம் இருந்து வரத்துவங்கின. உடைந்துபோனதுண்டு கட்டைகளோடு கடலில் நீச்சடிப்பதுபோல அவர் படித்தார். தன்னுடைய உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்ற ஆசையில், ஒன்றை அடுத்து மற்ருெரு துண்டை ஆவலோடு கைப்பற்றினுர்.

பணக்காரர் இதையெல்லாம் திரும்ப மனதில் சேகரித்தார் சிந்தித்தார்.

'நாளை பனிரெண்டு மணிக்கு அவர் தன்னுடைய விடுதலையை அடைகிருர், உடன்பாட்டின்படி நான் அவருக்கு இருபது லட்சம் கொடுத்தாக வேண்டும். நான் கொடுத்து விட்டால் என்னைப் பொருத்த மட்டில் எல்லாம் முடிந்துவிட்டது. நான் என்றென்றும் சீரழிந்து விடுவேன்.''

பதினைந்து ஆண்டுகட்கு முன்னர் பணக்காரரிடம் எண்ணிப் பார்ப்பதற்கு அநேக இலட்சங்கள் இருந்தன. ஆனுல் இப்போது தன்னிடம் அதிகமாக இருப்பது கடனு பணமா என்று தன்னைத்தானே கேட்டுக் கொள்ள அவர் அஞ்சினுர். தள்ளாத வயதில் விபத்துக்கள்நிறைந்த சூதாட்டத்தனமான ஸ்டாக் எக்சேஞ்சில் இறங்கி அதிலிருந்து வெளியேற முடியாமல் சிக்கிச் சுழன்று படிப்படியாகத் தன் தொழிலுக்கு இழிவைத் தேடிக் கொண்டார். உலக அரங்கில் உள்ள ஒவ்வொரு விலைவாசிகளின் ஏற்றத்தாழ்வும் அவரைப் பெரிதும் பாதித்தன. பெரும் பணக்காரர் சாதாரண மனிதராகவே ஆகி விட்டார்!

'பாழாய்ப்போன பந்தயம்' என்று தனக்குள்ளேயே சொல்லிகொண்டார். 'ஏன் அந்த வக்கீல் செத்துத் தொலையக் கூடாதா? விடுதலையாகி வெளியே வந்தால் என் வீடு மொட்டை வீடாகிவிடும். என்சொத்து சுகம் அனைத்தையும் அபகரித்துக் கொண்டு விடுவான். அப்புறம் நான் அவன் தயவில் வாழ வேண்டிய நிலைமை ஏற்படும். இதைவிடத் தூக்கில் மாட்டிக் கொண்டு சாவது மேல்......?'

பணக்காரர் இப்படி ஏதேதோ எண்ணினுர்.

இரவு மணி மூன்று. தோட்டத்து வீட்டின் சாவியை எடுத்துக்கொண்டு, சந்தடி இல்லாமல் பையப்பைய நடந்தார் பணக்காரர். மழை பெய்து கொண்டிருந்தது. காற்று பலமாக அடித்துக் கொண்டிருந்தது. தோட்டக்காரன் குளிர் காய்வதற்காகவோ தூங்குவதற்காகவோ பதுங்கிக் கொண்டிருந்தான் எங்கோ எப்போவோ! ஆள் அந்தச் சமயம் அங்கு அறவே இல்லை.

'இந்தச் சூழ்நிலையைப் பயன்படுத்திக்கொண்டு வக்கீலைக் கொன்று தீர்த்து விட்டால் பழி தோட்டக்காரன் மீதுதான் விழும்...'

இப்படியொரு பழிகார எண்ணம் பணக்காரர் உள்ளத்தே உறுத்திக் கொண்டிருந்தது!

பதினைந்து ஆண்டுகளாகத் திறக்கப்படாத பூட்டுத் திறக்கப் பட்டது! பணக்காரர் பூனைமாதிரி உள்ளே புகுந்தார். வக்கீல் எலும்பும் தோலுமாக ஆடாது அசையாது வீற்றிருந்தார். புத்தகங்கள் கன்னுபின்னுவென்று சிதறிக்கிடந்தன. பார்க்கவே அருவெறுக்கத்தக்க காட்சியாக இருந்தது அது.

தன்னைப் பார்க்கட்டும் என்று ஐந்து நிமிடங்கள் நின்றபடியே இருந்தார் பணக்காரர். வக்கீல் திரும்பிப் பார்க்கவே இல்லை. கை தட்டினார்—கதவைத் தட்டினார். வக்கீல் அசையவே இல்லை. பதினைந்து ஆண்டுச் சிறைவாசத்தின் பலன் இது! 'இன்னும் கூடிய சீக்கிரத்தில் கிடைக்கப் போகிற இருபது லட்சத்தை எண்ணி எண்ணி உருகிக் கொண்டிருக்கிருன் போலும். பாவம்; உலகம் அறியாத பேதை,' என்று தனக்குள்ளாகக் கூறியபடியே அங்கிருந்து நடந்தார் பணக்காரர்.

மேஜையின் மீது ஒரு கடிதம் இருந்தது. அதை எடுத்துப் படிக்கவே யோசித்தார் பணக்காரர். இருப்பினும் படிக்கத் துவங்கினார்:

"நாளை பனிரண்டு மணிக்கு நள்ளிரவில் நான் விடுதலை ஆகப் போகிறேன். இந்த அறையை விட்டு வெளியேறுவதற்கு முன் நான் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். உலக வாழ்வை-சொத்தைச் சுகத்தைச் சுதந்திரத்தை நான் மனமார வெறுக்கிறேன்—என்னைப் பொறுத்த வரையில் உதறித் தள்ளிவிடத் தயாராக இருக்கிறேன்!

புத்தகங்கள் தாம் உலகத்தின் அழியாத செல்வங்கள், நீங்கள் தந்த புத்தகங்கள் எனக்கு நிறைய அறிவைத் தந்துள்ளன. உங்கள்எல்லோரையும்விட நான் இப்போது சிறந்த புத்திசாலி என்று தெளிவாக உணர்கிறேன். பணத்தின் மூலம் சுகமாக வாழ முடியும் என நீங்கள் எண்ணலாம்—அறிவிலேதான் இது இயலும் என உறுதியாகக் கருதுகிறேன். எனவே நான் நீங்கள் தர இருக்கும் அல்லது தரக் கடமைப்பட்டுள்ள—இருபது லட்சத்தையும் உதறித் தள்ளி விடுகிறேன். எனக்கு அத்தொகை தேவையற்றதாகும்.

பந்தயத்தின் வெற்றி உங்களுக்கும் தோல்வி எனக்கும் இருக்க வேண்டும் என்பதற்காகக் குறிப்பிட்ட கால அளவுக்கு ஐந்து நிமிடங்கள் முன்னதாக இங்கிருந்து தப்பியோடப் போகிறேன்; எனவே இக் கடிதத்தை ஆதாரமாக வைத்துக் கொண்டு உங்களின் வெற்றியை ஊர்ஜிதம் செய்து கொண்டு உவகையோடு வாழ வேண்டுகிறேன்."

இக் கடிதத்தைப் படித்ததும் பணக்காரர், பைத்தியக்கார நிலையில் இருந்த வக்கீலை இரு கைகளாலும் தூக்கி முத்தமிட்டார். பின்பு அங்கிருந்து வெளியேறி விட்டார். அவரது கண்களில் நீர் ஊற்றுப்போலக் கண்ணீர்தாரை தாரையாகப் பெருகிக்கொண்டே இருந்தது. அந்தச் சமயத்தில், தோட்டக்காரன் ஓடி வந்து 'ஐயா தோட்ட வீடு திறந்துகிடக்கிறது. உள்ளே இருந்த ஆசாமி ஓடி விட்டான்,' என்று தகவலைத் தெரிவித்தான்.

'வாழட்டும் அந்தப் பெரிய மனிதன்!' என்று வாயார வாழ்த்தி விட்டுக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டார் பணக்காரப் பெரிய மனிதர்!

**(ருஷ்யக் கதை)**

# பாரதி கண்ட பாரதம்

## பொருளாதாரம்

### திருச்சிற்றம்பலக் கவிராயர்

*எங்கள் குலத்தலைவன், இந்தியத்தின் இருள்கடியப்*
*பொங்கிவந்த இரவியெனும் புலவர் திருக்கோமான்,*
*மங்கி, மாண்பிழந்து, மடிந்திருந்த நம்மையெலாம்*
*சிங்கேறு போலெழுந்து சிரமுயர்த்த, நமைப்பிணித்த*
*வெங்கொடுமைப் புல்லடிமை விலங்கொடிக்க வீறளித்த*
*தங்கமகன் பாரதியார் தன்கவிதா தரிசனத்தால்*
*கண்டுரைத்த பாரத்ததுக் காட்சிகளைப் பற்பலவாய்*
*விண்டுரைக்க எம்மையெலாம் வேண்டிநிற்கும் வானொலியே!*
*கவியரங்கில் பாடவந்த கவிஞர்களே! எம்கவியைச்*
*செவிமடுக்கும் என்னருமைச் செந்தமிழ்நன் னாட்டோரே!*
*கவிஞனவன் பரம்பரையில் வந்ததொரு கடைக்குட்டிக்*
*கவிராயன் நானும்மைக் கைதொழுதேன். மற்றினிமேல்*
*எங்கவிஞன் கண்டுரைத்த இந்தியத்தின் பொருளியலை*
*உங்களின்முன் சற்றேயான் உரைக்கத் தொடங்குகின்றேன்.*

**2**

*பாரதத்தில் நிலவிவந்த பண்டைப் பெருமைகளை*
*ஓர்சிறிதே நாமெல்லாம் உளத்தெண்ணிப் பார்ப்போமேல்,,*
*எத்தனையோ திருக்காட்சி எழுந்தோங்கும் நம்மனத்தில்!*
*அத்தனையும் காண்பதற்கே அவகாசம் நமக்கேது?*
*என்றாலும், அந்நாளின் இந்தியத்துச் செல்வவளம்*
*ஒன்றேயோ? இரண்டேயோ? ஓராயிரம்தானோ?*
*குன்றுமால், மலையாமால், கோவர்த்த கிரியாமால்,*
*என்றாலும் சொல்லொக்கும் பொருளொவ்வா இயல்பாமே!*

*கான்வளமும், கடல்வளமும், கவினோங்கும் மலைவளமும்*
*தான்வழங்கச் சலியாநம் தாயகத்தே, அந்நாளில்*

முப்புறத்தும் சூழ்ந்தகடல் மூலையெல்லாம் நம்மவர்தம்
கப்பல்பல வலந்திரியக் கண்டதுண்டு! காவிரிப்பூம்
பட்டினத்துக் கடற்கரையில், பாண்டியனூர் கொற்கையினில்
தட்டின்றிக் குவிந்துவரும் தரளத்தை, சேரத்துத்
தந்தத்தை, கருமிளகை, சந்தனத்தை, தம்நாட்டுச்
சந்தைக்கே வாங்கியுளத் தருக்கோடு செல்வதற்காய்,
எவனர்களும், ரோமர்களும், எகிப்தியரும், அரபியரும்
புவனத்து வேறுதிசைப் புறத்தவரும் நம்மிடத்தே
நன்றான பல்பொருளும் நயந்தும் அருள்வேட்டும்
நின்றதுவும், கையேந்த நேர்ந்ததுவும் கண்டதுண்டு!

இந்தியத்துத் தொழிலாளர் இயற்றுகின்ற செய்பொருளின்
விந்தையெலாம் கண்டயலார் வியப்புற்றுப் போனதுண்டு!
மஞ்சொக்கும் நாட்டின் மஸ்லின் துகிலுடுத்த
மிஞ்சிவரும் பெரும்வேட்கை விஞ்சியதால், வெளிநாட்டுக்
காதலிள மங்கையரும் காதலர்பால் ஊடி,மனம்
பேதலித்து நின்றதுண்டு; பிணக்காடி வென்றதுண்டு!
ஆசையுடன் கேட்டணிந்த ஆடையதன் மென்மைகண்டு
கூசியவர் காதலர்முன் கண்புதைத்தும் கொண்டதுண்டு!
சேரத்துச் சந்தனத்தின் சீதளத்தைத் தானிழந்த
நாரியர்கள் தம்முடம்பை நஞ்சாய் வெறுத்ததுண்டு!
அரிசிருசி கண்டறிந்த ஆசையினால், அந்நாட்டின்
அரசியரும் மசக்கையினால் ஆயாசம் கொண்டதுண்டு!

## 3

இவ்வாறாய்—
அந்நாளில் நம்நாட்டார் அடைந்திருந்த பெருமையெலாம்
பின்னாளில் மண்ணாகிப் பெயர்ந்தழிந்து போனதன்றோ?
பாரதத்து மன்னர்தம்முள் பகைத்துநின்ற காரணத்தால்
வேறொருவன் நம்மையெலாம் வென்றடிமை கொண்டுநந்தம்
சொந்தப் பொருளையெலாம் சுருட்டியெடுத் தவற்றைச்
சந்தைச் சரக்காக்கிச் சந்தியிலே நம்மைவிட்டான்!
இந்தக் கொடுமையினால் இந்தியநன் னாட்டினர்தம்
முந்தைத் தொழில்வளமும், மூலப் பொருள்வளமும்

மந்தமுற்றுப் பின் தங்கி மதிப்பிழந்து, மக்களெலாம்
கொந்தும், உயிர்குடிக்கும் கொடிய வறுமையினல்
வெந்துபட்டு நீறிநின்ற வேளையிலே, நம்கவிஞன்
வந்துதித்தான் பாரதத்தாய் மணிவயிற்றின் தவத்தாலே!

தொழில்வளமும், சுதந்திரமும், தோள்வலியும் தோற்றுலகில்
எழிலிழந்து நின்றிருந்த இந்தியத்தில் பிறந்தகவி
விழிதிறந்தான்! நம்நாட்டின் விடுதலைக்கே
போர்தொடுத்தான்!
இழிநிலையைப் போக்கிடவும், இந்தியநன் னுடிதனைக்
களிசிறக்கச் செய்திடவும் கங்கணமே கட்டிநின்று
வழிபலவும் நமக்குரைத்தான்! வளங்கொழித்த பழங்காலச்
சிறப்பையெலாம் எடுத்துரைத்துச் சிந்தனையைத்
தூண்டிவிட்டான்!
'வரப்பெடுத்த வயற்பரப்பும், வற்ருத நதிப்பெருக்கும்
இருக்கையிலே நமக்கேனே இவ்வறுமை?' என்றவனும்
தருக்கிநின்று கேட்டுவிட்டான்! தாய்நாட்டின் விடுதலைக்கும்
பொருட்துறையில் பாரதத்தின் புகழோங்கிப் பொலிவதற்கும்
அருட்கவியால் பலப்பலவாம் அறிவுரைகள் அவன்புகன்ருன்
பாரதியின் வழிநின்ருேம்; பாடுபட்டோம்; நம்மருமைப்
பாரதத்தைச் சுதந்திரமாம் பதவிபெறச் செய்துவிட்டோம்!

## 4

(வேறு)

சுதந்திரமடைந்த பாரதம்இந்நாள்
சுபீட்சவழியில் நடக்குது—நம்
சோம்பலும்சோர்வும் நீங்கிடப்பற்பல
தொழில்களை யெங்கும்தொடக்குது!
இதந்தரு மின்பம் வாழ்கையிலெய்த
இந்தியம்நாளும் உழைக்குது—அதில்
இன்னல்வந்துற்ற போதிலுமஞ்சா
தென்றும்நாடு தழைக்குது!

காட்டுநதிகளைப் பூட்டியடைத்துக்
கல்லணைபலப்பல எழும்புது—அதன்
காவலுட்பட்டெம் ஏவலின்படிநீர்
கால்வாய்பாய்ந்து ததும்புது!
மேட்டுநிலத்தும் நீர்தொகையேறி
வெள்ளம்போலே பாயுது—அங்கு
விளைந்திடும்கதிர்கள் வளைந்திடச்
செந்நெல்விம்மித்தலையும் சாயுது!

காட்டுநதிகளின் நீர்த்தொகைவேகம்
கனமின்சாரம் வழங்குது—அந்தக்
கனமின்சாரத்துணையால் நாட்டில்
கனரகத்தொழில்கள் முழங்குது!
தீட்டியதிட்டம் காட்டியவழியில்
ஈட்டியசெல்வம் பெருகுது—பிற
தேசத்தோடு சேர்ந்திணைநிற்கும்
ஆசைபலித்தும் வருகுது!

நட்புறவாடும் பற்பலநாடும்
முற்பட்டுதவிகள் நல்குது—அந்த
நல்லவர்துணையால் பல்விதத்தொழிலும்
வல்லமைகாட்டிப் பல்குது!
பெட்புறநந்தொழில் நுட்பங்கள்நாளும்
பெருகிப்பெருகிச் சிறக்குது—நமைப்
பிடிக்கும்வறுமைப் பிணியும்பிறவும்
பின்னிட்டோடிப் பறக்குது!

ஆலைகளும்தொழிற் சாலைகளும்தினம்
அயராமல்கண கணக்குது—அதில்
அல்லும்பகலும் எழும்புகைநமக்கோ
அகிற்புகைபோலே மணக்குது!
வேலைமுடித்த பற்பலபொருள்நாம்
வேண்டியவெல்லாம் வழங்குது—அவை
வேற்றுவர்நாடும் சென்றேநந்தம்
வேலைத்திறனை முழங்குது!

வாழைப்பழமும் அயலவர் நாட்டில்
வாடிக்கைதேடிச் சிறக்குது—அங்கு
வாங்கும்எந்திர வளமோ நந்தம்
வாழ்வினைப்பெருக்கி நிறைக்குது!
ஊழையும்உப்பும் ஆள்வினையாண்மை
நாளும்பலனை அளிக்குது—நாம்
உற்றிடும்துயரம் வற்றிடவறுமை
அற்றிட இன்பம் கொழிக்குது!

உருக்குலையாலை நெருப்பிடைக்கனியும்
இரும்பும்சிவந்து ஜொலிக்குது—அதில்
உருப்பெறும்பொருளின் திருப்பெருக்கதனால்
ஊரவர் உள்ளம் களிக்குது!
இருப்புப்பாதையும் இஞ்சினும்ரயிலும்
இங்கேயேஉரு வாகுது—நாம்
ஏழையரென்ற பாழாம்பழிச்சொல்
ஆழப்புதைந்தே போகுது!

மண்ணகம்கருணைக் கண் திறந்தென்ன
எண்ணெய்க்கிணறுகள் சுரக்குது—அதன்
வளத்தால்நந்தம் வாகனவசதி
மளமளமளவெனச் சிறக்குது!
விண்ணவர்போலே விசும்பிடை நந்தம்
விமானம்பலவும் பறக்குது—அவை
வெளிநாட்டாரை விருந்தாய்க்கொணர்ந்தே
அழியாநட்பைப் பெருக்குது!

திக்கஜம்போலே முக்கடற்பரப்பும்
கப்பல்கள்திரிந்து முழங்குது—எண்
திசையும்சென்றத் தேசத்தார்க்கும்
வசையறுவாணிபம் வழங்குது!
மக்களின்வாழ்க்கை சிறப்புறநந்தம்
பொருளியல்வளருது, வளருது! —அந்த
வளர்ச்சியில்நந்தம் தளர்ச்சியும்தாழ்ச்சியும்
வரவரத் தளருது, தளருது!

## 5

(வேறு)

இவ்வாறாய்—

பாரதியார் கண்டநவ பாரதமும் படிப்படியாய்ச்
சீரழகு பெற்றுயர்ந்து சிறந்தாலும், அன்னியர்கள்
ஆளுகையால் நமக்குற்ற அவல நிலைபலவும்
மாளவில்லை! மக்கள்துயர் முற்றாக மாறவில்லை!
வறுமை ஒழியவில்லை! வளம்படைத்தார் கல்நெஞ்சச்
சிறுமைக் குணமின்னும் சீர்திருந்தக் காணவில்லை!
எல்லையிலே தொல்லைதரும் எதிரியரின் புல்லாண்மைச்
சல்லியங்கள் தீராதச் சமயத்தும், பதுங்குற்ற
கள்ளப் பணத்தாலும், கரந்திருக்கும் பொன்னாலும்
கொள்ளை யடிக்கின்ற கூட்டம் குலையவில்லை!
ஏட்டுக் கணக்கதனில் எத்துசித்து வேலைசெய்து
காட்டும் கணக்கென்னும் கயமை தொலையவில்லை!
உண்ணும் உணவினுக்காய் ஊரவரைத் தட்டழியப்
பண்ணுகின்ற களவாணிப் பதுக்கல் ஒழியவில்லை!
இத்தகைய தொல்லைபல இருக்கின்ற காரணத்தால்
வித்தகனும் பாரதியார் வேண்டிநின்ற பாரதத்தின்
மொத்தத் திருவடிவின் மூர்த்தத்தை, லட்சியத்தின்
சித்திரத்தைப் பூரணமாய்ச் சித்திபெறக் காணவில்லை.

## 6

(வேறு)

ஆதலினால்—

சமத்துவமேநம் சாதனைமார்க்கம்
என்றேசகலரும் தேர்ந்தால்—அந்தச்
சத்தியசித்தி இத்தரையெய்த
நித்தியவிரதமும் நேர்ந்தால்

அமைத்திடும் புதிய சமுதாயத்தில்
அரும்பெரும்பாரத நாட்டின்—பொருள்
அனைத்தும் அனைவரும் அடைந்திடச்செய்யும்
அறநெறிதன்னைச் சார்ந்தால்

நேருவின் பாதை நேர்முகப்பாதை
என்பதும்நெஞ்சினில் ஓர்ந்தால்—அந்த
நேரியவழியில் சீரியமுறையில்
நிற்போமென்பதும் சேர்ந்தால்
பாரதிகண்ட பாரதம்நம்முன்
நேருறவேயுரு வாகும்—எனப்
பாடிமுடித்தேன்; விடையும்கொண்டேன்;
பாரதம்வாழ்க! வாழ்க!

*(14-1-1965 பொங்கல் திருநாளன்று திருச்சி வானொலி நிலையக் கவியரங்கத்தில் கவிராயரால் அரங்கேற்றப்பட்டு ஒலிபரப்பானது)*



## எது செல்வம் ?

பதவியைக் குறிக்கும் நீண்ட பட்டங்களைப் பெறுவதும், விரைந்த செலவினையுடைய ஊர்திகளிலே ஏறிச் செல்வதும் முதலாயின செல்வமுடைமையைக் குறிக்கும். ஆனால் இத்தகைய செல்வம் முன்பு தாம் செய்த வினைப்பயனால் எய்தப் படுவதாகும். சான்றோராலே மதித்து உயர்த்திக் கூறப்படும் செல்வம் யாதெனில், தம்மை நம்பி வந்தடைந்தவர்க்கு உண்டாகிய துன்பத்தை அஞ்சி அத்துன்பத்தைப் போக்கி அவரைக் கைவிடாமல் காக்கும் இனிய தன்மையே ஆகும்.

# சந்தேகப் புயல்

## சரித்திர நாடகம்

### உறுப்பினர்கள்

1. இராசராசக் காடவராயன்
2. ஆதிகேசவ அரசநாராயணன்
3. குலோத்துங்க சோழன்
4. புவனம் முழுடையாள்
5. வாணகோ வரையன்
6. கரிகாலன்
7. ஒப்பிலாள் நங்கை
8. கோதை (தோழி)

### காட்சி—1

**உறுப்பினர்:** *இராசராசக் காடவ ராயனும் ஆதிகேசவ அரச நாராயணனும்.*

**இ. கா:** *யார் அரச நாராயணனு, வர வேண்டும் வர வேண்டும்! எத்தனை நேரமாக நான் உனக்காகக் காத்துக் கொண்டிருப்பது?*

**அ. நா:** *மணவாளப் பெருமாள் இராசராசக் காடவராயரைப் பார்ப்பதென்றால், அவ்வளவு சீக்கிரத்தில் பார்த்துவிட முடிகிறதா?*

**இ. கா:** *ஏன், உன்னை யாராவது தடுத்தார்களா?*

**அ. நா:** *அவ்வளவு நெஞ்சத் துணிவு எவருக்கு இருக்கிறது, இந்த அரண்மனையில்?*

**இ. கா:** *அதுதானே கேட்டேன்!*

**அ. நா:** *நானெதற்குச் சொல்ல வந்தேனென்றால், சோழர் குலத்திலகம் குலோத்துங்கரின் மருமகனுயிற்றே தாங்கள்?*

**இ. கா:** *அ...அரச நாராயணு! எல்லாமறிந்த நீயும் என் உள்ளப் புண்ணைக் குத்திக்காட்டுகிருயா?*

**அ. நா:** *அரசே! தவறாக எடுத்துக் கொள்ளாதீர்கள். தங்களுக்குள்ள பெருமை—புகழ்—பதவி அந்தஸ்து யாவையும் மனத்தில் வைத்து சொன்னது அது!*

---

**மேற்கோள் நூற்கள்**

1. *திரு. நீலகண்ட சாஸ்திரியாரின் 'சோழர்கள்'*
2. *திரு. சதாசிவப் பண்டாரத்தாரின் 'பிற்காலச் சோழர் சரித்திரம்'*
3. *டாக்டர். மா. இராசமாணிக்கனாரின் 'சோழர் வரலாறு'*
4. *பெருந்தொகை செய்யுள்—1188*

இ. கா: எதுஇருந்து என்ன பயன் நாராயணு? அத்தனையும்தான் அடி கலங்கிப் போய்விட்டதே! மனைவி நடத்தை கெட்டவள் என்று அறிய நெஞ்சு துடிக்கிறது; தோள்கள் விம்மிப் புடைக்கின்றன!

அ. நா: அவசரப் படாதீர்கள் அரசே!

இ. கா: சாமர்த்தியமாகத் தன்னுடைய ஒழுங்கற்ற பெண்ணை என் தலையில் கட்டி விட்டதாக எண்ணியிருக்கிருன் குலோத்துங்கன்! அவன் எண்ணத்தைப் பொடிப் பொடியாக்கி விடுகிறேன் பார்!

அ. நா: தாங்களே விரும்பிப் பெற்ற விருதுதானே அரசே அது!

இ. கா: ஆம், அரச நாராயணு! இல்லையென்று சொல்ல வில்லை நான்! நெட்டூர்ப் போரிலே என் வீரத்தைக் காட்டிக் குலோத்துங்கனுக்கு வெற்றியைத் தேடித்தந்தேன்! அதன்காரணமாக நானே விரும்பிக் கேட்டவள்தான் ஒப்பிலாள் நங்கை!

அ. நா: அப்படியிருக்க......

இ. கா: அதற்காக, பதிக்கு ஒருவன் பாசத்திற்கு மற்றெருவன் என்று நினைக்கும் ஒழுக்கங்கெட்டவளை எனக்கு மனைவியாக்க வேண்டுமா?

அ. நா: நடந்தது நடந்து விட்டது; இனி நாம் நடக்க வேண்டியதைப் பற்றித்தான் யோசிக்க வேண்டும்.

இ. கா: அதைப்பற்றிதான் நான் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன்; அதற்காகத்தான் உன்னையும் இங்கு வரச்சொன்னேன். என் அவமானத்தைக் கழுவுவதற்கு எப்படியும் குலோத்துங்கனைப் பழிக்குப்பழி வாங்கியே தீரவேண்டும்.

அ. நா: குலோத்துங்கனை வீழ்த்த நாம் கேட்ட எந்த உதவிகளையும் சிற்றரசர்கள் செய்ய மறுத்து விட்டார்களே!

இ. கா: அவர்கள் அனைவருமே துணை நிற்காவிடினும், தனித்து நின்றே வீழ்த்த எனக்குத் தைரியமுண்டு! இறுதியில் ஒரு புலன் கிடைத்திருக்கிறது.

அ. நா: என்ன அது?

இ. கா: மதுரையில் இப்போது பட்டத்திற்கு வந்திருக்கிருனே.

அ. நா: சடையவர்மன் குலசேகரப் பாண்டியன்!

இ. கா: ஆம். அவனைத்தான்குறிப்பிடுகிறேன். அவன் யார் யாருடனே சேர்ந்து எப்படியும் குலோத்துங்கனை வீழ்த்த பல முயற்சிகளைச் செய்து கொண்டிருக்கிருனும்! அவனையணுகி நம் திட்டத்தை விளக்கினுல், எப்படியும் அவன் நம் வலையில் வீழ்ந்து விடுவான்!

அ. நா: இதற்குத்தான் என்னை இவ்வளவு அவசரமாக அழைத்தீர்களோ?

இ. கா: ஆமாம், அரச நாராயணு! எனக்காக இந்த உதவியை நீ செய்து முடிப்பாய் என்று நம்புகிறேன்!

அ. நா: தங்கள் வார்த்தைக்கு மறுவார்த்தை நான் என்ருகிலும் பேசியதுண்டா!

இ. கா: சரி, நாம் சிறிதும் காலம் கடத்தக் கூடாது! இப்போதே புறப்படு; சடையவர்மனை நம் பக்கம் எப்படியாகிலும்சாய்த்து விடு; அன்றே குலோத்துங்கனை நான் வீழ்த்திக் காட்டுகிறேன்!

அ. நா: உத்தரவு. இன்றே புறப்படுகிறேன்!

இ. கா: சொல்லியது யாவும் நினைவிலிருக்கட்டும். சென்று வா. வென்று வா.

(போகும் காலடி ஓசை)

## 2. காட்சி

உறுப்பினர்: குலோத்துங்க சோழன்—புவனம் முழுதுடையாள்.

குலோ: குலோத்துங்கனை என்னை காணப் பலர் காத்திருக்கும் நேரத்தில் என் பட்டத்தரசி புவனமுழுதுடையாளை அந்தப் புரமெல்லாம் அலசி விட்டு வருகிறேன்; அந்த அழகுச் சிலையோ சோலைக் கிளிகளிடையே கொஞ்சிக் கொண்டிருக்கிறது!

பு. மு: ஓ...மன்னரா, வாருங்கள்; மனம் ஒரு நிலையிலில்லை. நிம்மதிக்காகப் பூங்கா வந்தேன்!

குலோ: என் வருகை அதைக் குலைத்திருக்குமோ?

பு. மு: அப்படி யேதுமில்லை அரசே!

குலோ: அப்படியானால், சோழப் பேரரசின் பட்டத்து ராணி புவனம் முழுதுடையாரின் நிம்மதியைக் குலைத்தது எதுவோ?

பு. மு: எல்லாம் நம்அருமை மகள் ஒப்பிலாள் நங்கையைப் பற்றித் தான்! சீரோடும் சிறப்போடும் இருக்கவேண்டிய அவளுடைய இல்வாழ்க்கை, துன்பம்சூழ்ந்ததாய் மாறி விட்டதே என்று நினைக்கும் போது...

குலோ: கவலையுறுதே புவனம்; எப்படியும் இராசராசக் காடவராயனின் மனத்தை மாற்றுவேன்!

பு. மு: ஒப்பிலாளுடன் அண்ணன் போல் பழகிய வாணகோவரையனைப்பற்றி இப்படித் தப்புக் கணக்குப் போட்டு விட்டிருக்கிறரே அவர்?

குலோ: அதோடு மட்டுமல்ல, நம் அருமை மகள் ஒப்பிலாள் நங்கையை ஒதுக்கி வைத்துவிட்டு, திருமுனைப்பாடியில் எவளோ ஒருத்தியை மனைவியாக்கிக் கொண்டு கும்மாளமடித்துக் கொண்டிருக்கிறனும்!

பு. மு: அவ்வளவு தூரத்திற்கு மிஞ்சி விட்டதா காரியம்?

குலோ: இது மட்டுமா? நம் அரசையே கவிழ்க்கத் திட்டமல்லவா தீட்டிக் கொண்டிருக்கிறன்!

பு. மு: அப்படியா?

குலோ: ஆமாம், கிளியூர்மலையமானிடம் தஞ்சமடைந்து உதவி கேட்டிருக்கிறன்; அவன் மறுத்து விட்டான். பிறகு ஆடையூர் நாடாள்வானை அணுகிக் கேட்டிருக்கிறன்! அவனும் அசைந்து கொடுக்கவில்லை. எனவே விடுகாதழகிய பெருமானை வேண்டிக் கேட்டிருக்கிறனும்! அவன் ஒரே வார்த்தையில் 'வெளியேறு' என்று கூறி விட்டானும்!

பு. மு: இத்தனைப் பேரும் முடியாது என்று சொல்லியுமா அவனுக்குப் புத்தி வரவில்லை?

குலோ: இன்னும் சீயகங்கன், சம்புவராயனையும் கேட்டுத் தோல்வி யடைந்து, முடிவில் மதுரையிலிருக்கும் சடையவர்மனைத் துணைக்கழைக்க தூது அனுப்பி யிருக்கிறனும்!

பு. மு: இவ்வளவும் தெரிந்திருந்தும், நீங்கள் வாணகோ வரையனை விரட்டியது நியாயமா?

குலோ: தவறுதான்! நானும் முதலில் காடவராயனின் பேச்சை நம்பி அவனைக் கோபித்து விட்டேன்! இப்போது அவன் இங்கு வரப்போகிருன்!

பு. மு: உண்மையாகவா! செய்தி யனுப்பி யிருக்கிறீர்களா?

குலோ: ஆமாம், அவன் வந்த பிறகுதான் நாம் இவ்விஷயத்தில் ஒரு முடிவுக்கு வர வேண்டும்!

பு. மு: சரி புறப்படுங்கள்; வானம் மின்னலைக் காட்டி பயமுறுத்துகிறது!

(இடியோசை)

## 3. காட்சி

உறுப்பினர்: இராசராச காடவராயன்—அரச நாராயணன்.

இ. கா: யார்! அரச நாராயணு! வா...வா! ஏது, காரியத்தை வெகு சீக்கிரமாக முடித்து விட்டு ஓடோடியும் வருகிருய் போல் தெரிகிறது!

அ. நா: ஆமாம் அரசே! தங்களைக் காண வேண்டும் என்றுதான் ஓடோடியும் வருகிறேன்!

இ. கா: எனக்கு அப்போதே தெரியும்; காரியத்தை வெகு கச்சிதமாய் முடிப்பாய் என்று! சம்மதித்து விட்டாஞு சடையவர்மன்?

அ. நா: இல்லை அரசே!

இ. கா: என்ன...இல்லையா?

அ. நா: ஆம், அரசே! அவனும் ஏனையோரைப் போல் அஞ்சி நடுங்குகிருன்! நாம் இருவரும் சேர்ந்து பயனில்லை. இன்னும் பல அரசர்கள் ஒன்றுகூடினாலன்றி குலோத்துங்கனைவீழ்த்துவது கடினம் என்று மறுத்து விட்டான்! இந்த அதிர்ச்சியை தாங்க முடியாமல்தான் ஓடோடியும் வந்து கொண்டிருக்கிறேன்!

இ. கா: எல்லாம் குலோத்துங்கனுக்குச் சாதகமாகவேமுடிகின்றன! நம் திட்டங்கள் எதுவுமே வெற்றி பெறப் போவதில்லையோ!

அ. நா: அப்படியும் சொல்வதற்கில்லை!

இ. கா: என்ன எண்ணியிருக்கிருய் செயல்படுத்த?

அ. நா: வழியிலேயே வகுத்து விட்டேன் ஒரு வளமான திட்டத்தை!

இ. கா: என்ன அது?

அ. நா: நாம் இருவருமே சென்று இரவோடு இரவாக, குலோத்துங்கனுக்குக் குழி தோண்டி விடுவது!'' என்பதுதான் அது.

இ. கா: இதுவும் பரவாயில்லை; ஆனுல், நாம் செல்லுவதால் அவர்கள் சந்தேகத்திற்குள்ளாகி விட்டால்?

அ. நா: அதைச் சமாளிக்கத்தாஞு முடியாது?

இ. கா: அப்படியானுல் நாளைக்கே புறப்பட வேண்டியதுதான்!

அ. நா: ஆமாம், இதிலெல்லாம் காலதாமதம் இருக்கவே கூடாது! பிறகு ஆபத்துக்கள் நம்மைச் சூழ்ந்து விடும்.

இ. கா : சரி, நாளை காலையில் எல்லாவற்றிக்கும் ஆயத்தப் படுத்தி விட்டு, எனக்கு வந்து அறிவி!

அ. நா : உத்தரவு. நான் சென்று வருகிறேன்.

(காலடியோசை)

## 4. காட்சி

உறுப்பினர் : ஒப்பிலாள் நங்கை, கோதை எனும் தோழி.

(கதவைத் தட்டும் ஓசை)

கோதை : அரசி...அரசி...!

ஒப்பிலாள் : யார் கோதையா! என்னடி இது இவ்வளவு அவசரம்; என் கணவர் ஏதோ என்னை வேண்டி அழைப் பதைப் போல்

கோ : அவர் உங்களை எங்கே அழைக்கப் போகிறார்! உன் தந்தையின் உயிரையல்லவா அழைக்கப் பாடுபட்டுக் கொண் டிருக்கிறார்!

ஒப்பி : ஆ...!

கோ: ஆச்சரியத்திற்கு ஒன்று மில்லையம்மா! இது அவர் நெஞ் சத்தில் பதிந்து விட்ட நீக்க முடியாத தீவிரமான எண்ணம்! நாளைக்குக் கூட இரவில் சென்று உமது தந்தையாரைக் கொல்லத் திட்டம் தீட்டிக் கொண்டிருக்கிறார்கள்!

ஒப்பி : உண்மையாகவா!

கோ : அதை இந்த ஒப்பிலாள் ஒருபோதும் அனுமதிக்க மாட் டாள்! என் பொருட்டு என் தந் தையின் உயிர் போவதை என்னால் பார்த்துக்கொண் டிருக்க முடியாது! அதற்கு நான் பழிக்குப் பழி வாங்கியே தீருவேன்! என்று கொல்லப் போகிறார்களாம்?

கோ : நாளை காலை!

ஒப்பி : அப்படியானால் நாம் இப் போதே புறப்பட்டுத் தயாராக இருப்போம் வா!

கோ : எங்கே அம்மா?

ஒப்பி : பேசாமல் வா! எல்லாம் போகப் போகத் தெரியும்!

கோ : வழியா? அல்லது வழியில் நடக்கும் சம்பவங்களா?

ஒப் : விளையாட்டுக்கு இது நேர மில்லை; புறப்படு...புறப்படு!

(காலடி யோசை)

## 5. காட்சி

இடம் : பூங்கா :

உறுப்பினர் : குலோத்துங்கன் வாணகோவரையன். இராச ராசக் காடவராயன் - அரச நாராயணன் - ஒப்பிலாள் நங்கை - கோதை.

குலோ : வாணகோவரையா! ஒற் றன் கூறியதைக் கேட்டாயா?

வா : யாவும் கேட்டுக்கொண்டு தான் இருந்தேன் அரசே!

குலோ : இந்தக் குலோத்துங்க னின் உயிருக்கே ஆபத்தை விளைவிக்கும் அளவுக்குக் காட வராயனின் கல் நெஞ்சம், சந் தேகப் புயலில் சிக்கிக்கொண் டிருக்கிறது!

வா : எல்லாம் நான் கவனித்துக் கொள்கிறேன்.

குலோ : அவனுக்கு எந்த ஆபத்துமில்லாமல் பார்த்துக் கொள்!

வா : அதைப்பற்றி உங்களுக்குக் கவலே வேண்டாம் அரசே! காடவராயனுக்கு எந்தவித மான ஆபத்துமில்லாமல் நான் பார்த்துக்கொள்கிறேன்! சரி, நீங்கள் அரண்மனைக்குச் செல் லுங்கள்; அவர்கள் வரும் நேர மாயிற்று!

குலோ : சரி, ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள் நான் வரு கிறேன்!

(போகும் காலடி யோசை)

வா : என் உடன் பிறந்த தங்கை யைப் போல் பழகிவந்தேன் ஒப்பலாளிடம்! அதைத் தவருக எடுத்துக்கொண்டு பயங்கர மானத் தவறுகளை யெல்லாம் செய்து கொண்டிருக்கிருனே இந்தக் காடவராயன்! மாமன் னர் குலோத்துங்கரைக் குத்திக் கொல்லவும் துணிந்திருக்கிரு னென்ருல், அவன் முட்டாள் தனத்தை என்னவென்பது? அதோ! அவர்கள்போல்தான் தெரிகிறது! ஆமாம், காடவ ராயனேதான்! உடன் வருவது ...? வேறு யார், அரச நாரா யணனுக இருக்கும்! வரட்டும்... வரட்டும்...!

இ. கா : என்ன வாணகோ வனையா! இந்நேரத்தில் இங்கு உலவிக்கொண்டிருக்கிருய்?

வா : மனத்தில் ஒரே குழப்பம்! எனவே தூக்கம் வரவில்லே! அதுதான் இப்படி...

இ. கா : மனச்சாட்சிக்குவிரோத மான காரியங்களில் ஈடுபட் டாலே இந்தத் தொல்லேதான்!

வா : உள்ளமிருக்கிறதே, அது ஒரு அரக்குமாளிகை! அதில் சந்தேகமென்னும் சிறு நெருப் புப் பொறி பட்டாலும் போதும்! எரிய ஆரம்பித்து விடும்!

வா : என்ன காடவராயரே! அதோ அப்பக்கமாக இருவர் வருகின்றனரே அவர்கள் உங் கள் ஆட்களா?

கா : இல்லே...இல்லே! நாங்கள் இருவர் மட்டுந்தான் அரசரை அவசரமாகக் காணலாமென்று வந்தோம்.

வா . அப்படியா! அதற்கென்ன பார்த்தால் போகிறது! இருங் கள் அவர்களே யாரென்று விசா ரிப்போம்! ஐயா தாங்கள் யார் இந்த இரவு வேளேயில் இங்கு ஏன் வந்திருக்கிறீர்கள்?

ஒப் : நாங்கள் வழிப்போக்கர்கள் பூங்கா தென்பட்டது. சற்று புழுக்கத்தைத் தீர்க்கலா மென்று வந்தோம்! உங்கள் உடன் நிற்பவர்களேப் பார்த் தால் சந்தேகப் பேர்வழிகள் போல் தெரிகிறதே!

கா : யாரையடா சொல்லுகிருய் அதிகப் பிரசங்கி! உன்னே என்ன செய்கிறேன் பார்!

(வாளேயுருவும் ஓசை)

வா : பொறுங்கள்... பொறுங்கள்!

ஒப் : இல்லே...இல்லே...! பொறுப் பதற்கு இது நேரமில்லே! இவர் களேப் பார்த்தாலே கொலே செய்ய வந்தவர்களேப் போல் தெரிகிறது!

இ. கா : ஓய்...! என்ன சொன் ஞய்? (வாளேயுருவும் ஓசை) பிடியுங்கள்! குத்திவிட்டான்!

வா : அடப்பாவி! யாரடா நீ? என் தங்கையின் வாழ்க்கை யைப் பாழ்படுத்திவிட்டாயே பாதகா! அவளுக்கு என்ன பதில் சொல்லுவேன்? இல்லே மன்னருக்குத்தான் என்ன சொல்லுவேன்! ஐயோ ஒப்பி லாள்!

இ. கா : என்ன...என்ன... ஒப்பி லாள் உன் தங்கையா...அப்... படியா பழகினுய்!

வா: ஆமாம்...நாங்கள் அண் ணன் தங்கையைப்போல்தான் பழகினேம் இதுநாள் வரை!

இ. கா : ஆ...நான்தான் ஏமாளி! நான்தான் சந்தேகப் புயலில் சிக்கிக்கொண்டவன்! எனக்கு இந்தத் தண்டனை வேண்டியது தான்! வாணகோவரையா இந் தக் காடவராயனை மன்னித்து விடு! உன்னைத் தவருகப் புரிந்துகொண்டு மன்னரைக் கொல்லவும் துணிந்தேன்! என்னை மன்னிப்பாயா?

வா : அப்படியெல்லாம் சொல்லா தீர்கள்!

ஒப் : ஆ......!

வா : என்ன...என்ன...

அ. நா : அவனே தன்னைக் குத் திக் கொண்டான்!

ஒப் : அத்தான்! என்னை மன் னித்து விடுங்கள்! உங்களைக் கொன்ற பாதகியை மன்னித்து விடுங்கள் அத்தான்!

வா : யார்...ஒப்பிலாளா! என்ன காரியம் செய்துவிட்டாயம்மா! பதியைக் கொன்று, நீயும் மாய்ந்துவிட்டாயே அம்மா!

ஒப் : என்னண்ணு செய்வது, வாழ்வில்லாதவளுக்கு உயிர் ஒரு கேடா?

இ. கா : ஒப்பிலாளா! நீதான் எனக்குச் சரியான தண்ட னையை அளித்தாய்! உனக்கு நான் செய்த இன்னல்களுக்கு நான் அனுபவிக்கிறேன்! நீ எதற்காகக் கண்ணே மாண் டாய்! சரி...சந்தேகப் புயல் நம் இருவரையுமே சூழ்ந்துகொண் டது! ஆ......

(இருவரும் இறத்தல்)

வா : ஐயோ...! ஒப்பிலாள்! போய் விட்டாயா அம்மா! உன் கணவனையும் அழைத்துக் கொண்டு போய்விட்டாயா?

(முற்றும்)



## ஈயேன்

இல்லையே என்று பிறரிடம் சென்று பல்லெல் லாம் தெரியக் காட்டி இரத்தல் இழிவாகும். அவ் விதம் தன்னிலை கெட்டு, ஒருவனிடம் வந்து இரப் பவனுக்கு 'ஈயேன்' என்பது, இரத்தலைவிட இழிந் ததாகும். ஈ என்ற தமிழ்ச் சொல்லைப் பல்லை வெளியே காட்டாமல் உச்சரிக்க முடியாது. 'ஈ' என்பவன் ஒரு முறை பல்லைக் காட்டுகிருன். 'ஈ யேன்' என்பவன் இருமுறை பல்லைக் காட்டுகிருன். ஆதலின் அது மிகமிக இழிந்ததாகும்.

